ஸ்ரீ

ஹரிஓம்.

பதினெண்புராணங்களிலும், ஆறுவேதங்களிலும் ஒன்ருகிய




ஸ்ரீவேதவியாசமகாமுனிவர்
திருவாய்மலர்ந்தருளியது.

---

இஃது,
ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளை சதாகாலமும் பஜிக்கும்
சிலபாகவதோத்தமர்கள் அத்தியந்தவேண்டுகோளின்படி
திருவனந்தபுரம் பாகவதோத்தமராகிய

# ஸ்ரீமத்வேணுகோபாலாசாரியர்

அவர்களால்
சமஸ்கிர்த பாகவதத்திற்கிணங்க
பிரதமஸ்கந்தமுதல் துவாதசஸ்கந்தம்வரையிலும் பரிசோதித்து
அவ்வவ்வத்தியாயங்களிற்கூறிய சரித்திரத்திற்கிசைந்த செய்யுட்களும்
வசனகாவியங்களும் அவ்வவற்றிற்குறிய சித்ரவிசித்ராலங்கார
திருவுருப்படங்களுமமைத்ததன்றி
தசமஸ்கந்தத்தில்-௪௭-௪௮-௪௯-௯0-வது, அத்தியாயங்களில்
விசேஷசரித்திரங்களும் அட்டவணைமுதலிய கிளவிகளும் சேர்த்துப்
பதிப்பித்த பிரதிக்கிணங்க

## தி-ஊ-இராகவாசாரியரவர்களால்

பிழையறப் பரிசோதித்து

காஞ்சிபுரம்.
வீராசாமிமுதலியார்-குமாரர்

# திருவேங்கடமுதலியாரவர்களால்

பிரதமஸ்கந்தமுதல் ஒன்பதாவதுஸ்கந்தம்வரைக்கும் முதற்புத்தகமாகவும்
தசமஸ்கந்தமுதல் பனிரண்டாவது ஸ்கந்தம்வரையில் இரண்டாம்புத்தகமாகவும்,
தமது

## இயற்றமிழ்விளக்க அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.
பார்த்திவ ௵
முதற்புத்தகம்.

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீமகாபாகவதபுராண சரித்திரக்குறிப்பின் அட்டவணை.

நாலாவதுஸ்கந்தம்.

# சரித்திரக்குறிப்பின் அட்டவணை

| குறிப்பின்பெயர். | அத். | பக்க |
|---|---|---|
| [illegible] ஆராதனத்துக்கு விக்கினத்தினாலும் மானை [illegible] இறந்தினாலும் வந்தமிருக ஜென்மமும் யோ[illegible]னவனுக்குப் பிராணிகளிடத்தில் தயையினால் [illegible]யப்பட்ட சகவாசகமும் பரலோகத்துக்கு [illegible]மாகுமென்று இந்தஅர்த்தத்தைப்பாப்பத [illegible] பரதனுடையமிருகராட்சணைஞ்சொல்லியது | அ | உகக |
| [illegible]திதாவால்ஆத்மக்கியானியானபரதனபிரார[illegible]கருமவேகத்தினால் மிருகமாய்ப்பிறந்து திரும்[illegible]கருமட்சயத்தில் உன்மத்தபிராமணனாயுதி[illegible]த்துவேஷாதிக ளில்லாமையால் பத்ரகா[illegible]ப்பெலியாகும்போது நிருவிகாரனாயிருக்கை | கூ | உகங |
| அனுதரவுசெய்தரகுகணனென்கிறராசாவா[illegible]ன்பல்லக்கைச் சுமக்கின்றபரதனை ஏன்செ[illegible]மையாயெடுக்கவில்லையென்று கேட்டதற்குபர[illegible]சொல்லியஉத்தரவால்அவனைமகாபிரமநிஷ்ட[illegible]னறிந்துசீக்கிரமாக க்ஷமைகொள்ளப்பட்டா[illegible] இந்தப்ரகாரம் மகாஆபத்தினால்மனதிலே விகாரத்தையடையாமலிருக்கிறது அக்கியானிக்கு [illegible]வக்கியானிக்கும் சரியாயிருக்குமென்றெண்[illegible] அந்தப்பரதர்சர்வக்கியமென்றெண்ணி அந்தப் பரதர் சர்வக்கியரென்று தெரிவதற்காகரகுகண[illegible]யஉபக்கியானத்தைச்சொல்லியது | ய | உகசு |
| ரகுகணராஜனால்கேட்கப்பட்ட அந்தச்சடபரதமுனி அந்தராஜாவுக்குப் பரமான ஆத்துமக்கியானத்தை உபதேசித்தது. | யக | உகஎ |
| திரும்பவும் ரகுகணராஜாவானவர் கேட்கப்பட்சந்தேகங்களைச் சடபரதமுனியானவர் நிவர்த்திசெய்தது. | யஉ | உகஅ |
| விரக்தி யில்லாதவனுக்குக்கியானோபதேசம் வியர்த்தமென்று வயிராக்கியம் உண்டாவன்பொருட்டுச்சங்கார அரண்ணியவர்ணிப்பு. | யங | உஉய |
| சங்காரவனத்தின் ஆகாரமானது திருடர்நரிகள் கொசுக்கள்ஸதிரீகள் துற்சனர்கள இதுகளால்சொல்லப்பட்ட அர்த்தங்களுக்குப்பிரஸதுதமானசமாசாரத்தி உசிதார்த்த கல்பனையினால் நிரூபிக்கப்படுவதைச் சொல்லியது. | யச | உஉக |
| பரதனுடைய வம்சத்திற்பிறந்த இராஜாக்களுடை கீர்த்திகளை வர்ணித்தல். | யரு | உஉங |
| சகலதீவுகளுக்கு மத்தியிலிருக்கின்ற மகம் மேருவினிலையும் பூமியாகிரதாமரைக்கமலத்தினுடையமொகுட்டும் வர்ணித்தல். | யசு | உஉச |
| மேருவுக்கு நான்குக்கிலும் கங்கையின்வரவும்இளாவிருதவருஷத்தில் ருத்திரனால் செய்யப்பட்ட சங்கருஷண வியூகோபாசனமும். | யஎ | உஉசு |
| நாலுபாரிசங்களிலும் அந்தந்த வருஷங்களி[illegible]நின்ற உபாசியங்களானபகவன்மூர்த்திகளு[illegible]சகாள இன்னாரின்னாரென்பதும். | யஅ | உஉஎ |
| [illegible]ம்புருடவருடத்தில்ஸ்ரீராமமூர்த்தியானபகவானானவர் அனுமாரால் உபாசித்தாரென்றும்பார[illegible]ஷத்தில் ஸ்ரீமந்நாராயணரானவர் நாரதமகாமுனியினால் உபாசிக்கப்படுகிறாரென்றும்பார[illegible]ஷதத்துக்குச் சிரேஷ்டமுஞ் சொல்லியது | யகூ | உஉகூ |
| சமுத்திரங்களோடுபிலக்ஷத்தீபமுதலான ஆறு[illegible]ளுடையவிலையும்அதற்குட்பட்டபிரதேசங்[illegible]வெளிப்பட்டபிரதேசங்களையும் சொல்லி | உய | உஙய |
| நாள்தோறும் காலசக்கரத்தினால்சுழலுகின்ற [illegible]னுடையராசிசஞ்சாரங்களோடுகூடினசெ[illegible]யினால் லோகயாத்திரை கூறியது | உக | உஙங |
| சந்திரன்சுக்கிரன் புதன் [illegible]களுடைய [illegible]த்திரமான ஸ்தானங்களையும் அவைகளு[illegible]சுகதிரிருணயத்தினாலேமனுஷியர்களுடைய | | |

| குறிப்பின்பெயர். | அத். | பக்க. |
|---|---|---|
| இஷ்டானிஷ்டங்களையுங்கூறியது. | உஉ | உஙரு |
| சோதிசக்கிரத்துக்கு இருப்பிடமானதுருவஸ்தானமும்சிங்சுமாரரூபியானஸ்ரீஅரியினுடையஸ்திதியும். | உங | உஙசு |
| அதலமுதலான ஏழுலோகங் களினுடையமரியாதைகளை வர்ணித்தல். | உச | உஙஎ |
| பிரளயகாலத்தில்இந்தலோகத்தைச்சங்கரிக்கவேணுமென்றிச்சியாநின்றஆதிசேடனிடத்தினின்றும்காலாக்கினிருத்திரனுண்டாகிறானே அப்படிப்பட்டஆதிசேடனுடையஸ்தானத்தைகூறியது | உரு | உசய |
| பாபிகள்நரகங்களில் எமதூதர்களால்தண்டிக்கப்படுகிற பாதாளமூலதத்துக்குங்கீழானநரகங்களுடையஸததி. | உசு | உசக |
| **ஆறாவது ஸ்கந்தம்.** | | |
| விஷ்ணுதூதர்களால் பாபிகளை விடுவிக்கிறநிமித்தியம் எமகிங்கரர்கள் அந்தப்பாபிகளுடையபாபத்தை வெளியிடுவதின்பொருட்டுதர்மமுதலியசுவரூபமுஞ்சொல்லியது, | க | உசசு |
| விஷ்ணுகிங்கரர்கள் எமதூதர்களுக்கு ஸ்ரீஅரிநாமசங்கீர்த்தனைப் பிரபாவங்களைத் தெரிவித்து அசாமேளனென்கிற பிராமணனை விஷ்ணுலோகத்தையடையச்செய்தது | உ | உசஎ |
| இயமனானவன் தனதுதூதர்களுக்கு விஷ்ணுபக்தர்களுடைய பிரபாவங்களைத்தெரிவித்து அவர்களைச் சமாதானஞ்செய்து விஷ்ணுபக்தர்கள்விஷயத்தில் நீங்கள் பிரவேசிக்க வேண்டாமென்று சொன்னது. | ங | உசகூ |
| விஸ்வரூபஉற்பத்தியைச் சொல்லவேணுமென்கிறஇச்சையால் பிரசேசுககளுடையபிள்ளையானதெக்ஷனதுவம்சம்விஸதரிக்கப்படுகிறதென்பது | ச | உருக |
| நாரதருடையகபடவசனங்களால் நசித்துப்போனதனதுபிள்ளைகளுடைய சோகத்தினால் தெட்சப்பிரஜாபதியானவன் நாரதனைச்சபித்தது. | ரு | உருங |
| தெட்சனால்சிருஷ்டிக்கத அறுபது பெண்களுடையவம்சமும் வெவ்வேறாகக் கீர்த்திக்கப்பட்ட தெட்சகன்னியாவம்சத்தில் அதிதிபுத்திரனான துவஷ்டாவினிடத்தில் நின்றும் விசுவரூபன்பிறந்தவம்சங்களும். | சு | உருரு |
| குருவான பிரகஸபதியால்விடப்பட்டதேவதைகளாலே புரோகிதகர்மத்தில வரிக்கப்பட்டவிசுவரூபன் தேவதைகளுக்குப்பௌரோக்கியத்தைசெய்தது. | எ | உருஎ |
| இந்திரன் நாராயணகவசத்தினால்இரட்சிக்கப்பட்டுதெயித்தியாளை ஜெயித்தானே அப்படிப்பட்டநாராயணகவசத்தை இந்திரனுக்குவிஸவரூபன்உபதேசித்தது | அ | உருஅ |
| இந்திரன்கோபத்தினால் விஸவரூபன் அடிக்கப்பட்டு பின்புதுவஷ்டாவினால்அக்கினி முகத்திலேவிருத்திராசுரனையுண்டாக்கி அவனிடத்திலநின்றும்பயந்ததேவதைகளால ஸ்ரீஅரியினுடையஸதோத்திரஞ்செய்தது- | கூ | உருகூ |
| ஸ்ரீபகவானால்ஆக்கியாபித்த இந்திரனானவன் தயித்தியனுடைய அஸதிகளையடைந்து அசனால்விஸவகர்மாவினாலே நிர்மிக்கப்பட்ட வச்சிரத்தைக்கொண்டு விருத்திராசுரனை ஜெயித்தது. | ய | உசுக |
| இந்திரனுடனே யுத்தஞ்செய்யாநின்றவிருத்திராசுரனுடைய-பக்தி-ஞானம்-பெலன்முதலிய [illegible] மருணித்தல். | [illegible] | [illegible] |
| [illegible]கேந்திரன் [illegible] யுத்தத்தில் விருத்திராசுரனுடையவதம். | [illegible] | [illegible] |

# சரித்திரக்குறிப்பின் அட்டவணை



சவுனகாதிகளுக்கு சூதபுராணிகர்சொல்லுதல்.



வியாசநாரதசம்வாதம்-



பரிக்ஷித்து-



தருமர்



பீமர்



அருச்சுனர்



நகுலர்



சகாதேவர்



திரௌபதி



குந்தியம்மாள்-










நன்றாக. குருவாழ்க. குருவேதுணை.

# ஸ்ரீமகாபாகவதபுராணம்.

## பிரதமஸ்கந்தம்.

கடவுள்துதி=கலிவிருத்தம்.

நீதவேதக் களஞ்சியனீணெறிச்
சூதவேதச் சிகாமணிசொற்றிய
போதவேதன் பிதாவிசைப்பூமிசை
யோதவேதக்க தேவருளோங்குமால்,

(என்பது) பரிசுத்தம்பொருந்திய நான்குவேதங்களுக்கும் ஒருபொக்கிஷம்போலும் மேலானதுறவறவொழுக்கத்தில்நின்றும் மிகுந்தகீர்த்திவகித்த சூதமாமுனிவரெனச் சிறந்தவேதோத்தமரால் திருவாய்மலர்ந்தருளியதாமரைக்கமலத்தில் வீற்றிருக்கும் பிரமனையளித்ததந்தையாகிய ஸ்ரீயப்பதியினது திருவிளையாடல்களின்லொன்றாகிய (ஸ்ரீமகா பாகவதபிரதமஸ்கந்தத்தை) கடல்சூழ்ந்தவுலகவாசிகள் உஜ்ஜீவிக்கும்படி எடுத்துச்சொல்ல சர்வேசுரனது கிருபையானது குறைவற மேன்மேலு மோங்குமென்பதாம்,

## முதலாவது - அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்,

பிறந்தபொழு தேதுறந்து பிழைக்குழவி போனடிப்பப் பின்போய்த்தொன்னூ
லறைந்தபுகழ் வியாதமுனி யாதரத்தான் மதலாயென் றழைப்பச்செவ்வாய்
திறந்துநறை பொழியுமலர்ச் செழுந்தருவு மேனென்ன வுயிர்களியாவு
நிறைந்துறையுஞ் சுகமுனிவ னிரையிதட்டா மரைமலர்த்தா ணிணைதல்செய்வாம்;

சுலோகம்,

வியாசம் வசிஷ்டநப்தாரம்
சக்தேபௌத்ர மகல்மஷம்
பராசராத் மஜம்வந்தே
சுகதாதம் தபோநிதிம்,

ஸ்ரீமகாபாகவத கிரந்தத்தில் உபோ உத்காதமென்னப்பட்ட பீடிகாரூபமான பிரதமஸ்கந்தத்தினுடைய பிரதம அத்தியாயத்திலே நைமிசாரண்ணிய வாசிகளான சவுனகாதி முனீஸ்வராள், பிராதகாலத்திலே பண்ணத்தக்க அக்கினிஹோத்திரமுதலான வைதீக கருமத்தையுடையவர்களாய் சூதபுராணி கோத்தமரை நன்றாகக் கொண்டாடி அந்தந்தஇதிகாசபுராணங்களிலே உம்மாலேபுருஷர்களுக்கு சிரேசாதனமாக எதுநிச்சயிக்கப்பட்டதோ அதைச் சொல்ல வேண்டுமென்று மனுஷியாளுக்குத் திரளாகச் சேழ்க்கத்தக்கதுகளுக்குள்ளே சாரமாயிருக்கப்பட்டதை புத்தியினாலே நன்றாகக் கிரகித்துச்சொல்லவேண்டுமென்றும் முமூட்சுக்களானவர்களுக்கு மோட்சத்தைக்குறித்துச் சாஷ்டானியதசாதன மேதென்றும் யாதொருபகவானுடைய அவதாரம்பிராணிகளுடைய பாலனத்தின் பொருட்டும் - ஐசுவரியத்தின் பொருட்டுமாகக்கடவதோ அப்படிக்கொத்தமகாபுருஷனுடைய அவதார கதாசரித்திரங்களேதென்றும்ஸ்ரீகிருஷ்ணப்கவான்தேவகியினிடத்திலேஎதுக்காக அவதரித்தாரென்றும் கிருஷ்ணன் லோகாந்தரத்தை அடைக்

திருந்துள்ளளவில் தருமம் யாரைச் சரணமாகப்பற்றித்
தென்றும் இதுமுதலான ஆறுபிரசினங்களைப்பண்ணி
னுரென்றும் சொல்லப்பட்டது,

ஸ்ரீவேதவியாசமுனீஸ்வரர்ஒன்றோடொன்றுகலந்து
உபயோகமில்லாமலிருந்த வேதங்களை வெவ்வேறாகப்
பிரித்து அவர் அதின்பொருளைச் சகல சீவாத்மாக்களு
ம்அறிந்து கடைத்தேறவேண்டி புராணங்களாகவும் இ
திகாசங்களாகவும் இரண்டுவகையாக வெளியிட்டுத்தம்
முடைய வர்ணுசிரமங்களுக்கு யோக்கியமான நித்திய
நைமித்திய கருமங்களினுலே ஸ்ரீபகவானை ஆராதனம்
செய்து பரிபூரணராக விருந்தபோதைக்கும் உலகத்து
க்குத் தாம்செய்யவேண்டிய உபகாரம்இன்னமுஞ் சில
துகுறையுண்டாக இருக்குதென்றும் தாமே தெரிந்துக்
கொண்டு அதின் விபரங்காணுமற் சிந்தித்துக்கொண்டி
ருந்தசமயத்தில் பிரமலோகத்தி லிருந்து நாரதமுனீஸ்
வராவந்து இவரைப்பார்த்து ஓ வியாசமுனியே உம்மு
டையமனதிலே என்னமோ சிந்தித்துக்கொண் டிருக்கி
ன்றீர் அதைச் சொல்லுமென்று கேழ்க்க வேதவியாசர்
நாரதமுனீஸ்வரரைப்பார்த்துச் சொன்னது ஓநாரதமுனீ
ஸ்வரரே நான் இதுவரைக்கும் நடந்துக்கொள்ளவேண்
டிய வர்ணுசிரமதருமங்களை நடத்தினேன் வேதங்களைப்
பிரித்து அவற்றின் பொருள்களையும் வெளியிட்டேன்,
பிராகிருததர்மங்களைப் பிரகாசம்பண்ணின தோஷபரி
காரநிமித்தியமாகப் பாரதத்தினுடைய முடிவிலே ஹ
ரிவம்சத்தினுலே ஸ்ரீமந்நாராயணருடைய திவ்யகுணுதி
சயங்களையும் வெளியிட்டு லோகோபகாரத்தையுங் கற்
பித்தேன் நான் இப்படியெல்லாஞ்செய்திருந்தும் இன்
னமும் லோகோபகாரஞ்செய்யவேண்டிய துண்டென்
றுதோற்றியும் அஃதின்னதென்று தெரியாமலிருக்கை
யினுலேசிந்தித்துக்கொண்டிருக்கிறேன் அதை தேவரீர
றிந்து இன்னதென்றுசொல்லவேண்டுமென்றுவினுவிய
தற்குநாரதர்சொல்லுகின்றார்,

ஓவியாசமுனியே நீர்செய்ததெல்லாம் இயல்பாயினு
ம்பிராகிருததர்மங்களையும் பிராகிருதரான ராஜாக்களை
யும் மிகவும்விஸ்தாரமாகச்சொன்னீர் மோட்சதருமமு
முத்திப்பிரதனுன பரமாத்மாவையும்மோட்சத்தையே
புருஷார்த்தமாகக் கோரியிருக்கிற ஸ்ரீபாகவதாளுடைய
மகிமையு மிதமாகச்சொன்னீர் அதுகளைப்பார்த்த ஜன
ங்களுக்கு விபரீதக்கியானம் வருகிறதேயல்லாமல் தத்
வக்கியானம் பிறக்கமாட்டாது ஆகையினுலே இதுவே
உம்முடையமனது குறைவுக்கு ஏதுவானதென்றுசொ
ல்லி இனிமேற்செய்யவேண்டிய தத்வத்தைச்சொல்லு
கிறேனென்று ஸ்ரீமந்நாராயணரிடத்தில் தன்னுடையபி
தாவான பிரம்மாவுக்கு உபதேசமாகவந்த ஸ்ரீ பாகவத
கதையைத் தான் பிரமாவினிடத்தி லிருந்து தெரிந்துக்
கொண்டபடி வியாசருக்குச் சங்கிரகமாகவுபதேசஞ்செ
ய்தார், அந்தவியாசரும் நாரதர் சத்தியலோகத்துக்குப்
போனபிற்பாடு சரஸ்வதிநதிதீர்த்தகத்தில்ஸ்நானமுதலா
ன நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு நாரதர் உப
தேசித்த பிரமதத்வத்தை யோகத்தியானத்தினுலே சா
ட்சாத்கரித்து விஸதாரமாக ஸ்ரீ பாகவத புராணத்தைச்
செய்யத்தொடங்கினுர், தொடங்குங்காலத்தில் இந்தப்
பாகவத புராணத்திற் சொல்லப்படுகிற பிரமசொரூபத்
தையும்-பிரம்மத்தினுடைய குணங்களையும்- முக்தரான
சீவாத்மாக்களையும் செகத்தினுடைய சிருஷ்டிமுதலான
துகளையும், பிரமஞ் செய்யுங்காலத்தில் அந்தப் பிரம்ம
ப்பிரிவில்லாத காரணமாகியும், பிரிவுண்டான காரண
மாகியு மிருக்கு மிருப்பையும் சங்கிரமாகக்காண்பித்து
பிரமலட்சணமாகிய சென்மாதி காரணத்துவத்தைச்செ
கத்துக்குச் சொல்லுகிற உபநிஷத்தைப் பிரகாசம்பண்
ணுகிற பிரமசூத்திரத்தாற் றொடங்கிக் காயத்திரிபதங்
களுடனே கலந்தகிரந்தபதங்களால் சேர்மானஞ்செய்து
பிரமத்தினுடைய சொரூபத்தைத் தெளியவுரைக்கிற ச
த்தியபதத்தால் முடிவைக் காண்பித்து திமகியென்கிற
காயத்திரிபதத்தால் முடித்தபடியினுலே பிரமம்செகத்
துக்குக்காரணமென்றும், சர்வக்கியமென்றும், தனக்கு
ஒத்தாரு மிக்காருமில்லாம லிருக்கப்பட்டதென்றும். த
ன்னை முத்தர்க ளடைகிறகாலத்திலு மவர்களிற் கலந்தி
ருந்துந் தான்வேறாகவிருந்து அவர்களுக்கு ஆனந்தத்
தைக் கொடுக்குமென்றும், இப்படிக்கெல்லா முதற் சு
லோகத்திலே சொல்லியிருக்கையால் இந்தப்பாகவதம்
விரோதமான பொருள்களைச்சொல்லாது இந்த முதற்
சுலோகத்திலே சொல்லியிருக்கிற பொரு ளென்னவெ
ன்றால் சென்மாதியாகிய இந்த வுலகத்தினுடைய சிரு
ஷ்டியும், பாலனமும், சங்காரமும், எவனுடைய செய
லோ இதுகளைச்சொல்லுகின்ற காரணவாக்கியங்கள் ம
ற்றொருவ ரிடத்திலே பொருந்தாமல் எவனிடத்திலே
யியல்பாகப் பொருந்தி விளங்குதோ இந்த வலசங்களு
டைய சிருஷ்டிமுதலான காரியங்களைத் தலைக்கூடும்ப
டி சாதகமாகிய அறிவையுடைத்தானவ னெவனோ எவ
னுக்கு உயர்ந்தவரும் சரியானவரும் மற்றொருவரில்லை
யோ, எவன் ஆதிகவியான பிரம்மாவுக்கு இந்த வுலக
சிருஷ்டிக்குப் பழையமார்க்கமான வேதத்தை அறியும்
படி தன்மனதினுலே தானே நினைத்தானோ எவனைக்
காலமு மிந்தமாய்கைக்குள் வெளிப்படாநித்தியசூரிகளு
மிவ்வளவென்று முழுவது மறியமாட்டாம லிருக்கின்
றார்களோ பஞ்சபூதங்களுமாதிகாலத்தில் ஒன்றோடொ
ன்று கலக்கமாட்டாமலிருந்ததை எவன் அதுகளில்புகு

ந்து சேர்ப்பித்தானே பிரிவில்லாத காரணமாகிய எவனிடத்தில் சத்துவமுதலான மூன்று குணங்களையுடைய கருமக்கள் உலகத்திற்சத்தியமாக விளங்குகின்றதோ இப்படி சூட்சும ஸ்தூலமாகியசேதனுசேதனங்களிலே யுட்புகுந்து அவையும் அவற்றின் கருமங்களும் அவற்றின் கருத்தாவு மாகியிருந்தாலும் அதுகளிலுண்டான தோஷங்களைத்தன்னிடத்திலே எப்போதுப் சேரவொட்டாம லிருக்கிற மகிமையை உடைத்தானவனெவனோ அந்தப் பரமசத்திய மூர்த்தியை தியானம்பண்ணுகிறேனென்று முதற் சுலோகத்தால் வணங்கினா இப்படி தம்மாலே செய்யப்படுகிற பாகவதபுராணத்தை மற்ற இராசத தாமச தருமங்களைச் சொல்லுகிற புராணங்களோடே சரியென்றும் அதுகளில் சொல்லப்படுகிற அருத்தங்க ளிந்தபுராணத்திற்சொல்லுகிற அருத்தங்களைப்போல எதார்த்தமானதருமமென்று நினைக்கவேண்டியதில்லை ஆகையால் மோக்ஷமாகிற பதத்தைக்கோரினவர்களுக்கு இந்தப்பாகவதமே முக்கியமென்று இரண்டாவதுசுலோகத்தால் வெளியிட்டார்.

அதெப்படியென்றால். இந்தப்புராணத்திற்சொல்லுகிற தருமங்கள் மற்றவிடத்திற் சொல்லுகிற தருமங்களைப்போல் சொர்க்காதிபோகங்களைக் கொடுத்துசிலகாலம் அவ்விடத்தில் புருஷனுக்கு ஆசையைஉண்டுபண்ணி அவனை அவனுமறியாமல்தலைகீழாகத்தள்ளுகிறவஞ்சனைவிட்ட பரமதருமமாகையினாலேயும் இதில் வர்ணிக்கப்படுகிறதேவன் தன்னையறிந்து தன்னை அடுத்தபேருக்கு தாபத்திரயங்களையும்ஒழுத்து ஒருகாலத்திலும் ஏற்றக்குறைச்சலும் அழிவுமில்லாமலிருக்கிற ஆனந்தசமுத்திரமாகிய நிரதிசய இன்பத்தைத் தன்பக்தருக்குக்கொடுக்கும் புருஷோத்தமனென்றும், இந்தப்புராணவிஷயங்களைச்சொல்லவும் படிக்கவும் யோக்கியரானவரெவரென்றால் பரதேவதையினுடைய மகிமையைச்சகிக்கமாட்டாமையாகிற அசூயையு மாச்சரியமும் விட்டஉத்தமபுருஷரென்றும், இந்தப்புராணத்தைஉபதேசித்தவர் ஆதிகர்த்தாவான ஸ்ரீமந்நாராயணமுனிபென்றும் இன்னம் இந்தப் புராணத்தைக் கேட்கவேண்டுமென்று இச்சித்த மகாபுண்யசாலிகளுக்கு இந்தகதைகளைக்கேட்கையிற்றானே சர்வசுதந்திரரானபரமாத்துமா இவர்களுடைய செஞ்சிற்புகுந்து அதிசஞ்சலமாகிய இவர்களுடையமனதைத் தன்னிடத்திற்சேர்த்து இடைவிடாமல் ஒருமைபண்ணுவதுபோல மற்றப்புராணங்களிலுண்டாகாதென்றுசொல்லி மூன்றாஞ் சுலோகத்தால் வேதமாகிற கர்ப்பகவிருட்சத்திற் பழுத்தபழமானதுபவித்து பிரமாவும் நாரதரும் தாமுமாகிறதுளிரும் பூவுமாய்க்கழைத்த கிளைகளில்தங்கி மெள்ளபூமியிலிழிந்து சுகமுனியாகிற கிளிமுகத்தால்கோதப்பட்டுமோக்ஷமாகிற மதுரரசத்தைப்பெருகவிடுகிறதோலும் கொட்டையும் நாருமில்லாத பாகவதமாகிற பழத்தை ஓயிரமாசானுபவம் பண்ணவல்லவர்களே நீங்கள் இந்த வுலகத்திலேதானே அந்தஆனந்தத்தை அடிக்கடி அனுபவம்பண்ணுங்கள் இந்தஆனந்தானுபவம் உங்களுக்கு இவடத்தில்மாத்திரமல்ல மோட்சதிசையிலும் இதுவேபலனாகப்பெறுவீரென்றுசொல்லி இந்தப்புராணத்தைப்படித்து இதனுடையஅருத்தத்தை அனுபவிக்கும் ஜனங்களினுடையசுகிர்தத்தைத் தாமேசந்தோஷித்துஆச்சரியப்பட்டுக்கொண்டார் இப்படி மூன்றுசுலோகத்தால் பாகவதத்திற்சொல்லுகிறவயிலட்சணியத்தைக்காண்பித்துத்தாம்செய்த புராணத்தைத்தம்முடையவேதபாராயணமாகிற தபோகர்ப்பத்தில்பிறந்து தமக்குபுத்திரனாகிய சுகமுனிக்கு அருளிச்செய்தார் அவரும்பிறவிமுதல்பிரமநிஷ்டராஞலும் தம்முடையமனதில்பிரத்தியட்சமாகஅனுபவித்துவருகிற வாசுதேவனுடையமகிமையைச்சொல்லுகிற புராணரத்னமாகையால் இந்தப் புராணத்தைப்படித்து மனதில்தரித்துஇதைக்கேட்கமற்றொருயோக்கியரில்லாமையால் தம்முடையஆசிரமத்துக்குஉரித்தாகியமவுனத்தைத்தரித்து ஓரிடத்திலும் ஒருபசுகறக்கிற நேரமுமிராமல்சகலமும் வாசுதேவசொரூபமென்றுபிரத்தியட்சமாய்த்தெரிந்துகொண்டு இந்தவுலகத்தில்சஞ்சரிக்கிறகாலத்தில் பிரமசாபத்தால் தன்காலந் தெரிந்து வயிராக்கியம்பிறந்து கங்கையில்பிராயோபவேசம்பண்ணி பரகதிக்குவழிகாண்பிக்கும்பரமபாகவதரைக்காணமல் கவிந்திருந்த பரிட்சித்துமகாராஜாவுக்கு உபதேசித்திருக்கிறசமையத்தில் நாரதர்முதலான சகல முனிவர்களும் அந்தக்காலமறிந்து தங்களிருதயத்தி லிருக்கிற கதாதரனை சுவாமியால் சகலதீர்த்தங்களையும்பரிசுத்தம்பண்ணவேண்டி தீர்த்தயாத்திரைநிமித்தியமாய் எழுந்தருளி இந்த உபதேசங்கேட்டு உவந்தார்கள் இந்தப் புராணத்தை ஸ்ரீவேதவியாசமுனீஸ்வரரிடத்தில் படித்து வியாசரனுக்கிரகத்தினால்சகலமான இதிகாசபுராணங்களையும் தருமங்களையும் சகலமானபிராணிகளுக்கும் தெளியவுரைத்து லோகரட்சணம் பண்ணிவருகிற சூதபுராணிகரிடத்தில் சவுனகர்முதலான ரிஷிகள் தெரிந்துக்கொண்ட பாகவதத்தைத் தமிழ்வசனமாகச் செய்கின்றோம், இதில்வியாசமுனீஸ்வரருடையகருத்தைத் தெரியாமலெழுதின கிரந்தங்களைப் பார்த்தபேருக்கு மனது நிலைக்கமாட்டாது ஆனாலும் சமஸ்கிருத பாகவதத்தையும் இதன்வியாக்கியானங்களையும் மிகவும் சோதித்துப் பிரமாணங்களிலும் பரதேவதையிடத்திலும் அசூயையில்லாமலிருக்கின்ற மஹாபுருஷருக்கு மனதுஒப்புகிறத்தில் சமியமில்லையென்பது முன்னொருகாலத்தில் சக

லமானதேவர்களும் முனிவர்களுங் கூடிசதுர்முகனை அ
டுத்து ஓபிதாமகனே இந்தக்கருமபூமியில் கலிபுருஷன்
எந்தமட்டும் கைக்கொண்டு கலிதருமங்களை விர்த்திப
ண்ணி வைதீககருமங்களைக் கெடுப்பானென்று கேட்டத
ற்கு அந்தக்கமலாசனன் அவர்களைப்பார்த்துத் தேசோ
மயமான ஒருசக்கரத்தைக்கற்பித்து ஓய் தேவர்களேமு
னிவர்களே இந்தச்சக்கிரத்தின்முனை யெவ்விடத்தில்மு
றிந்துவிழுகிறதோ அதுக்கப்பால் கலிதருமமிகுதியாகி
வைதீகதருமங்களைக் கெடுக்குமென்று அந்தச் சக்கரத்
தைப் பிரயோகித்தபின்பு அதன்முனை எந்த விடத்தில்
முறிந்துவிழுந்ததோ அந்தஆரண்யத்துக்கு நைமிசார
ண்ணியமென்று பெயர்விளங்கிற்று இதல்லாமல் முன்
னொருகால் ஸ்ரீமஹாவிஷ்ணு அசுரரை அந்த ஆரண்
யத்தில் நிமிஷமாகிய கண்ணிமைப்பாடென்கிற ஆயுத
த்தினால் சங்காரம் பண்ணினபடியினாலே நைமிசாரண்
ணியமென்று சொல்லப்பட்டது, இந்தக்ஷேத்திரத்தி
ல் ஸ்ரீமஹாவிஷ்ணு நரநாராயணஅவதாரம்பண்ணி த
பசுசெய்தபடியினாலே ஸ்ரீமஹாவிஷ்ணு க்ஷேத்திரமா
யிற்று இப்படி இரண்டுவகையாகவிளங்கின பெயரையு
டைத்தான ஸ்ரீவைஷ்ணவக்ஷேத்திரத்தில் சவுனகர் மு
தலாகியரிஷிகள் சகலமானபுண்ணியலோகங்களிலும் பு
கழப்பட்டு தன்சாட்சாத்காரத்தினால் தன்னைஅடுத்தபக்
தருக்கு முக்திகொடுக்கிற ஸ்ரீமஹாவிஷ்ணுவைக்குறித்
து ஆயிரம்வருஷத்தால் முடிகிற சத்திரயாக தீக்ஷை
யைப்பண்ணிக்கொண்டிருந்த அந்தமுனிவர்கள்ஒருநா
ள்காலையில் தங்களுடைய நித்தியநைமித்தியங்களைத் தீ
ர்த்துக்கொண்டு அக்கினி சந்தோஷமும் செய்துக்கொ
ண்டிருக்கையில் அவ்விடத்தில் வந்த சூதபுராணிகருக்
கு உபசாரங்கள்பண்ணி உயர்ந்த ஆசனமுங் கொடுத்
தார்கள் அவரும்அந்த ஆசனத்திலிருந்தபின்பு அவரை
க்குறித்து மிகவும்ஆதரவுடனே கேட்டார்கள் ஓபரிசுத்
தஆத்மாவே, நீர்வியாசரிடத்திலிருந்து சகலமான புரா
ணங்களையும் இதிகாசங்களையும் தருமசாஸ்திரங்களையு
ம்படித்தீர், இப்படிக்கொத்த உம்மை அடுத்தபுண்ணி
யசாலிகளுக்குச் சகலதருமங்களையும் தெரியச்சொல்ல
அறிவீரல்லவோ, வேதவித்துக்களுக்குள் சிரேஷ்டரா
ன வியாசமுனீஸ்வரரும் சேதனுசேதனங்களிலு நிறை
ந்தபரமபுருஷனை அறிந்த மற்றமுனீஸ்வரர்களும் ஜன
ங்களுக்கு நித்தியகலியாணமாகிய சூட்சும தருமங்களை
எவ்வளவு அறிவார்களோ அவ்வளவு தருமங்களையும்
அவர்களுடைய அனுக்கிரகத்தினால் நிச்சயமாகத்தெரி
ந்துக்கொண்டிருக்கிற சூதரே, நீர் தீர்க்காயசு சம்பாதி
த்துக்கொண்டு பெரியோர்களிடத்தில் பக்தியுடனே ப
ணிவிடை செய்து கேட்டிருந்த தருமங்களை அந்தப்
பெரியோர்கள் மிகவும் கோப்பியமாகவிருந்தாலும்உம
க்குச்சொல்லி யிருப்பார்களல்லவோ ஆகையினால் அந்
தச்சுபமாகிய சூட்சுமதருமங்களை நீர்எங்களுக்குச்சொ
ல்லவேணும் ஓசாதுஜனங்களுக்கெல்லா முதன்மையா
னவரோ இந்தக்கலியுகத்தில் ஜனித்திருக்கிற ஜனங்கள்
கொஞ்சமானஆயுசுண்டாகியும், புண்ணியங்குறைந்து
ம் பாவமிகுதியாகியு மிருக்கையில் புத்தியீனர்களாகியு
ம் ரோகபீடிதர்களாகியு மிருக்கிற இவர்களுக்கு அறிய
வேண்டிய தருமங்களும் அவைகளுடையவைலட்சணி
யங்களும்அளவில்லை அவைகளை அனேகந்தரம் கேட்
டாலல்லாமல் தெரியக்கூடாதுஆகையினால் இவைகளி
ல் சாரமானதருமங்களை உம்முடையபுத்தியினால் திரட்
டியெடுத்து ஒருக்கால் கேள்விசெய்தமாத்திரத்தால் பி
ராணிகளுடையமனதிலேயிருக்கிற ரசோகுண தமோ
குணங்களைக்கழித்து மிகுதியான சத்துவகுணத்தை உ
ண்டுபண்ணுகிற தருமங்களை எங்களுக்குச்சொல்லவே
ண்டும் சூதரே, உமக்கு நித்தியகலியாணமே யிருக்கின்
றது, அஃதேனென்றால் ஷட்குணபரிபூரணனை வாசு
தேவன் சாத்துதனென்கிற ராஜாவினுடைய குலத்தில்
வசுதேவனுக்கு தேவகிகருபத்தில் ஸ்ரீகிருஷ்ண னென்
று எந்தக்காரியம் செய்யவேண்டி ஜெனித்தானோ, அ
தை நீரறிவீரே ஆகையால் அதைக்கேட்கவேணுமென்
றுஇச்சித்திருக்கிற எங்களுக்குச் சொல்லவேண்டும் எ
ந்ததேவனுடைய அவதாரங்கள் ஜனங்களுக்குத்தீவினை
யைவிலக்கியிருக்கிறசம்பத்தை நிலைநிறுத்தி அதிகமாகி
யசெல்வத்தைக்கொடுக்கும் அதிக பயங்கரமானசமுசா
ரத்தை அடைந்தவர்களுக்கு அவர்களையு மறியாமல்அ
வர்கள் நாவிலேபிறந்த எவனுடையநாமம் அந்தச்சமு
சாரத்தைவிலக்கும்எல்லாருக்கும் பயத்தைஉண்டுபண்
ணுகிற மிருத்தியுவானவ னெவனுக்குப்பயந்து நடந்து
க்கொள்ளுகிறானோ எவனுடைய பாதசம்பந்தத்தினால்
பரமசாந்திபிறந்த முனிவர்களும் புண்ணிய நதியாகிய
கங்காசலங்களும் தங்களைப் பரிசித்தமாத்திரத்தில் அப்
பொழுதே பாவனஞ்செய்யக்கூடுமோ அப்படிப்பட்ட
மகிமையையுடைய இதுகளை இடைவிடாமல் அனுசரி
த்தவர்கள் கடைத்தேறுகிறதைச்சொல்லவேண்டுமோ
பாப நிவர்த்தியாகிற பரிசுத்தத்தைக் கோறினவர்களில்
கலிதோஷத்தைப் பரிகரிக்கிற ஷட்குணபரிபூரணரான
பரமாத்துமாவுடைய லீலைகள் வெகுபுண்ய பலனானகை
யால் அந்தத்தோத்திரத்தைக் கேட்கின்றதற்கு எவனு
க்குத்தான் ருசி பிறவாது, அவனுடைய இச்சையினா
ல் அவன்அங்கிசமான அவதாரங்களைச் செய்கின்ற அ
வனுடைய நடத்தைகள் இவ்வள வென்றும் இன்னபடி
யென்றும் அறியக்கூடாதென்று பிரகிருதி சம்பந்தம்
நீங்கின ஞானிகள் ஸ்தோத்திரம்பண்ணுகையால் அது
களைக் கேட்டவர்களுக்குப் பலனுண்டென்கிறதில்லைசர்

தேக மில்லையென்று நிச்சயித்திருக்கிற எங்களுக்கு நீர் அந்தச் சரித்திரங்களைச் சொல்லவேண்டும்,பிற்பாடுதானினைத்தபடிமுடிக்கிற சுதந்தரனாகிய தனக்குசுவாதீனமாகிய பிரகிருதியினால் தன் விளையாட்டை நடத்துகிற ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் ஸ்ரீ அரிதருமங்களை நிலைநிறுத்துவதாகச்செய்த அவதாரகதைகளைச் சொல்லவேண்டும், யாதொருகாரணத்தினால் உத்தம சுலோகனானஸ்ரீகிருஷ்ணனுடைய பராக்கிரமங்களைக் கேள்விப்பட்டு அதனுடையஇரசத்தை யறிந்தபேர்களுக்கு அடிக்கடி மதுரமாகியிருக்கிறதோ அதுகாரணத்தினால் நாங்களும் கேள்வியாகியும் திருப்தியடையவில்லை ஞானசத்தியாதிகளிலே பரிபூரணனான கேசவன் மனுஷியரூபமாகிற வஞ்சனையால் தன்னைமறந்து மனுஷராலே செய்யப்படாத காரியங்களைச்செய்து பலராமருடனே கூடினாரல்லவோ கலிபுருஷன் வந்தானென்றுமிகவும்தெரிந்து நாங்கள் இந்த வைஷ்ணவமாகிய க்ஷேத்திரத்தில்வந்து வெகுகாலம்சாத்தியமாகிய சத்திரயாகத்தைப் பண்ணும்படியான தீட்சைவகித்து ஸ்ரீ ஹரியினுடைய கதைகளைக் கேட்கிறதில் சாக்கிரதையா யிருக்கிறோம் புருஷருடையசத்துவத்தை அரிக்கிற கலியாகிற கரையில்லாதசமுத்திரத்தைக் கடக்கவேண்டுமென்று நினைத்திருக்கிறஎங்களுக்கு நீர் தெய்வ யத்தினத்தினால் மாலுமிபோலக் காண்பிக்கப்பட்டீர் ஆகையால் சர்வ தருமங்களுக்கும் ஸ்வாமியாகியும் பிராமண்யதேவனாகியும் தருமகவசனாகியுமிருக்கிற ஸ்ரீகிருஷ்ணன் தன்னிசரூபத்தையடைந்தபின்பு தருமமானது எவனைச்சரண மடைந்தது என்று வணங்கி வினவினார்கள்,

கேசவாயநம,

---

## ௨-வது, அத்தியாயம்

கலிவிருத்தம்,

கவனவாசிக ளென்றுயர்காசிலாச்
சவுனகாதி யருந்தவர்தங்களாற்
புவனமல்கு வினவுஷட்கேள்விக்குத்
தவனிசைத்த சதுர்ப்பிரசன்னங்களே,

சூதர் சவுனகாதிரிஷீஸ்வரர்களால் பண்ணப்பட்ட ஆறுபிரசனங்களுக்குள் நாலு பிரசனங்களுக்கு உத்தரஞ்சொன்னதொன்று சொல்லப்படுகின்றது,

இப்படி சவுனகர்முதலான முனிவர்களால் கேட்கப்பட்ட சூதபுராணிகர் மிகவுஞ்சந்தோஷத்துடனே அவர்கள் கேட்டவைகளுக்குப் பதிலுத்தரவு சொல்லுகிறார்,இந்தப் பாகவதத்தைத் தொடங்குங்காலத்தில்இதனுடைய விளக்கமாகிய மகோபகாரத்தைச் செய்த சுகபிரமரிஷிக்கு இரண்டுசுலோகத்தால் வந்தனஞ்செய்கிறார், அது எப்படியென்றால் உபநயன மில்லாத காலத்தில் தனக்குச் செய்யவேண்டியதான கருமமொன்றுமில்லாமல் துறந்துசொல்லுகிற எவருடையபிரிவைச்சகிக்கமாட்டாமல் வியாசமுனீஸ்வரர் புத்திராவென்று அழைத்தசமயத்தில் தாபரங்களெல்லாம் ஏனென்று பதிலுத்தரங்கொடுத்ததோ சர்வபூதங்களுடைய இருதயங்களையும்அடைந்த அந்தமகாமுனியை நான்சாஷ்டாங்கமாகவந்தனஞ்செய்கிறேனென்றும், தனக்குஅந்தரியாமியான பரமாத்மாவினுடைய மகிமையை விளங்கச்சொல்லுகிறதாயும், சகலமான வேதாந்தங்களுடையசாரமாகியும் தனக்குநிகர் மற்றொன்றுமில்லாமலும் பரமாத்மாவினுடைய சொரூபத்தைப் பிரகாசம் பண்ணுகிறதாகவுமிருக்கிற கோப்பியமான இந்தஸ்ரீபாகவதத்தைச் சமுசாரத்தில்முழுகி அந்தந்த மசுமுதலான நரகங்களைக் கடக்கநினையாத சனங்களிடத்தில் தயவினால் எவர்வெளியிட்டாரோ அந்தவியாசகுமாரரான சகல முனிவர்களுக்கும் குருவைச்சரணமாக அடைகிறேனென்றும் வந்தனஞ்செய்து பின்புஸ்ரீமந்நாராயணனுக்கும் நரோத்தமனானநரனுக்கும் சரஸ்வதிதேவிக்கும் வியாசருக்கும்வணக்கஞ்செய்து சமுசாரத்தைவிலக்குகிற ஸ்ரீமகா பாகவதத்தைச்சொல்லுகிறேனென்று பின்னையும்அவர்களைப்பார்த்துச்சொல்லுகிறார், ஓய்முனீந்திரர்களே எந்த அவதாரத்தினுடையகதையைக்கேட்டால் பரமாத்துமா பிரசாதஞ்செய்கிறாரோ அந்தக்கிருஷ்ணனுடையலீலைகளைக்கேட்டீர்களாகையால்,இப்போதுநீங்கள்கேட்டபிரசனம்உலகங்களுக்கெல்லாம் சுபமாகையால் அந்தக்கேள்வி எல்லாருக்கும்,சிலாக்கியமானதுபரமமாகியதருமத்தைச்சொல்லவேண்டுமென்றுகேட்டீர்களல்லவோ அந்தத் தருமமேதெனில் பரமாத்துமாவினுடைய அருளுக்குக் காரணமாகியும் பரிபூரணமாகியும்பலாபேட்சையில்லாமலுமிருக்கிற யோகசாட்சாத்காரத்தினால் அறியத்தக்கவனென்கிறபெயராகிய அதோக்ஷனுடைய பக்தியொன்றுமே பரமதருமமென்றுசொல்லப்படும் பரமாத்துமாவினிடத்திற்செய்கிற பக்தி சீக்கிரமா விஷயத்தில் வயிராக்கியத்தை யுண்டாக்கும் அந்த வயிராக்கியத்தால் பலாபேட்சைநீங்கும் இப்படி ஒரு காரணத்தையுங் குறியாதபக்தியால் பரமாத்துமப் பிரசாத முண்டாகும் இதைவிட மற்றதருமங்களெல்லாம் சாங்கமாகச் செய்யப்பட்டிருந்தாலும் ஸ்ரீஹரிகதையில் பிரீதியைப் பிறப்பியாமற்போனால் சரீரவருத்தமாத்திர மல்லாமல் பலன் பெறமாட்டார்கள் அந்தப்பிரயாசம் செய்வதற்கு விபலமாகவே யிருக்கும் உபநிஷத்துக்களுடைய அருத்தங்களுடைய கேள்வியும் ஸ்ரீஅரிகதையாகிற அமிர்தத்துக்

குச் சரியாகவந்து நிற்கமாட்டாமல் வெகுதூரத்தில் விலகிநிற்கும் அதேனென்றால் ஸ்ரீஹரி கதாசிரவணம் பண்ணுகிறபேருக்கு மனதுகரைந்து நேத்திரத்தில் ஆனந்தபாஷ்பஞ்செனித்துச் சரீரமும் புளகிக்குமாப்போல் கடினமான வேதாந்தசிரவணம் செய்தபேருக்கில்லையாகையால் சகலசீவாத்துமாக்களுங் கடைத்தேறவேண்டி கருமத்துக்குமோட்சமும் அர்த்தத்துக்குத் தருமமும் காமமாகிற இச்சைக்குத் தத்துவக்கியானமும்பலனாகநிச்சயித்த அநாதியானபகவானுடைய சங்கற்பத்தையறியாமல் அர்த்தத்தைக்குறித்துத் கருமங்களையும் காமத்தைக்குறித்து அர்த்தங்களையும் இந்திரியசுகங்களைக்குறித்துக் காமத்தையும் சங்கற்பித்துக்கொண்டவர்கள் சுவர்க்கநரகமாகிற துக்கசாதனமாகிய பிறவிச்சமுசாரத்தை யொருகாலத்திலும் தவிரமாட்டார்க ளாகையால்சகல கருமங்களையுந் தத்துவக் கியானத்தைக் குறித்தே செய்யவேண்டும் தத்துவமாவது கியானசொரூபமாகையாலும் கியானமே குணமாக வுடைத்தாயிருக்கையினாலும் சேதனசேதனங்களைச் சரீரமாகவுடைத்தா யிருக்கையினாலும் அந்த வசிஷ்டரூபத்தாலே பிரமமென்றும் பரமாத்துமாவென்றும் பகவானென்றும் சொல்லப்படுகிறவஸ்துவென்று அதனிட உண்மையை யறிந்தவர்கள் நிச்சயித்துச்சொல்லுகிறார்கள், அப்படியேதேர்ந்து ஆராய்ந்து விசுவசித்து நிச்சயித்தமுனிஸ்வரர்கள் கியான வயிராக்கியங்களுடனே தாங்கள் கேள்விப்பட்டபடி செய்கிறபக்தியால் கியானஸ்வரூபனான ஆத்துமா தன்னிடத்தில் கியானஸ்வரூபனாகியும்கியானகுணனாகியும் பரிபூரணனாகியு மிருக்கிற பரமாத்துமாவைத் தன்னுடைய திரேகத்துக்குத் தான் ஆத்துமாவானதுபோல தனக்குஆத்துமாவாகி சாக்ஷாத்கரிக்கிறான் ஆகையால் ஓப்பிராமணசிரேஷ்டர்களே வர்ணாசிரமதருமவிபரங்களால் சாங்கமாக அனுஷ்டித்ததருமவிசேஷங்களைஸ்ரீஹரிக்குப்பிரீதியாகவே செய்யவேண்டுமாகையால் மனதை மற்றவிடத்திற் போகவொட்டாமல் ஷட்குணபரிபூரணனான ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் நிறுத்தி அவன் ஸ்வரூப ஸ்வபாவங்களையுங்கேட்டு கீர்த்தனஞ்செய்து தியானயுக்தனாகி ஒருநிமிஷமாகிலும் இடைவிடாமல் சிந்திக்கவேண்டும் யாதொரு கிஷ்ணனுடைய தியானமாகிற கத்தியைக்கைக்கொண்ட கியானிகள் கருமமாகிறபந்தத்தைச்சேதிக்கிறார்களோ அந்தப்பகவானுடையகதையில் பிரீதியை எவன்தான்செய்யான்ஸ்ரீவாசுதேவனிடத்தில் அன்புபிறக்க வேணுமென்றால் அதற்குச் சாதனஞ்சொல்லுகிறோம் புண்ணியதீர்த்தங்களில்வெகுகாலம் ஸ்நாநாதிகள்செய்த புண்ணியத்தால் பரமபாகவதாளுடைய சங்கங்கிடைத்து அவர்கள் அனுக்கிரகத்தினால் இந்தகதையைக்கேட்க இச்சையுண்டாகும் பின்பு கதாசிரவணஞ்செய்துஅந்தக்கதையில் சிரத்தைபிறந்து பகவானிடத்தில் அதிகப் பிரீதியுண்டாகும் இப்படி யன்புடனே தன்னுடைய கதையைக் கேட்கிறவர்கள்இருதயத்திலிருக்கிற புண்ணியசிரவண கீர்த்தனனான ஸ்ரீகிருஷ்ணன்-சாதுசன பந்துவாகையால் அந்த இருதயத்திலுண்டான பாவங்களை யுதறிவிடுவான் இப்படி இருதயத்திலுண்டான பாவங்களை பரிகாரமான பின்பு இடைவிடாமல் பாகவதாளுடைய சேர்வைபண்ணுகையால் உத்தமசுலோகனான பரமாத்துமாவிடத்தில் சலியாத பக்திபிறக்கும் அப்போது ரசோகுண தமோகுணங்களிடத்திற்பிறந்த காமக்குரோதாதிமுதலான அறுவகைக்குற்றங்களும் அரிஷ்டவர்க்கங்களும் இந்தமனதைப் பற்றமாட்டாதாகையால் இந்தமனதுதன்னுடைய சஞ்சலத்தை விட்டுத் தத்துவ சம்பன்னமாகிய கியானத்தால் சமிசயவிபரீதங்களைத் தவிர்ந்திருக்கும் வகவானிடத்தி லிப்படி தீவரமான பக்திசெய்கையால் பிரசன்னமான மனதையுடைத்தான புண்ணியசாலிக்கு விஷயசங்கந் தவிர்ந்து பகவானுடைய தத்துவமாகிற சாட்சாத்காரம்பிறக்கும் இப்படி சகல சேதனசேதனங்களுக்கும் ஸ்வாமியான பரமாத்மாவைத்தன்னிடத்தில்கண்ட மாத்திரத்தால் கருமமாகிற முடிச்சு அறுந்து சமிசயவிபரீதங்களுந்தவிர்ந்து பூர்வசஞ்சிதமான கருமங்களெல்லாம் அதன் வாசனைகளுடனே தீரும் ஆகையால்கியானிகள் ஷட்குண பரிபூரணனான வாசுதேவனிடத்தில் பரமசந்தோஷத்தினால் மனதினுடைய பிரசாதத்துக் காரணமானபக்தியை யிடை விடாமல்செய்வார்கள், இந்தப்பக்தியை ஸ்ரீஹரியிடத்தில் செய்தால் மோட்சமாகிற பலன் பெறுவார்களென்றும் மற்றொருவரில்செய்தால் மோட்கம்பெறமாட்டா ரென்றும்மேற்சொல்லுகிறார் அதெப்படியென்றால் பிரகிருதியென்றும், புருஷனென்றும், பரமபுருஷனென்றும், மூன்றுவகையான தத்துவங்களில் பரமபுருஷன் பிரகிருதியுடைய மூன்றுவகை ஞானகுணங்களிற்கலந்துமூன்றுவகையானபேரினால் விளங்கின மூன்றுசரீரத்தைத்தரித்தான் அவைகளில் சத்துவத்திற் கலந்து விளங்கின பரமபுருஷன் அரியென்று ரசோகுணத்தில் விளங்கின பரமபுருஷன் விரிஞ்சனென்றும் தமோகுணத்திற் கலந்துவிளங்கின பரமபுருஷன் அரனென்றும் இப்படி மூன்றுவகையாய் உருவையெடுத்து விரிஞ்சனாகிறவுருவாலே இந்தவுலகங்களைச் சிருஷ்டித்துப் அரியென்னும்ரூபத்தாலே இரட்சித்தும் அரனென்னும் தேகத்தாலே சங்கரித்தும் தன்னுடையலீலைகளை நடப்பிக்கிற பரமபுருஷனுடைய ரூபங்களிலே சத்துவமூர்த்தியான ஸ்ரீஅரியிடத்திலிருந்து சதுர்விதபுருஷார்த்தங்களும் நாலுவகைதருமங்களும் சனங்களுக்கு லபிக்கும் அதென்னெ

ன்றால் வேதமயனான அக்கினியானவன் அரணியான கட்டையில் நிறைந்து மறைந் திருக்கிறான் அந்த அரணியை மதனஞ்செய்யுங்காலத்தில் புகைத்துகொண்டிருக்கிறான் இப்படி மூன்றுவகையான உருவையெடுத்த அக்கினிக்கு அந்தஅரணியைக்காட்டிலும் புகைக்கிற கட்டைபெரியது என்றும் அதிலும் சொலிக்கிற தணற்பெரிதென்றும் உலகத்திலனைவரும் ஒப்பும்படியா யிருக்குதோ அப்படி தாமதசரீரகனான அரனைக்காட்டிலும் ராசதசரீரகனான விரிஞ்சியும் அவனைக்காட்டிலும் சத்வசரீரகனான அரியும் மேன்மேலும் அதிகமாகையால் சத்வமயமான கியானமே பிரமமென்றும் சொல்லப்படும் இப்படி சுத்தமாகியசத்துவத்தில் பிரவேசித்த ஸ்ரீஹரியைஇந்திரியங்களால் அறியக்கூடாமலிருந்தாலும் ஷட்குணபரிபூரணனாகவேநிச்சயித்து முனிவர்கள் முன்னுபாசித்தார்கள் இப்பாலந்த ரிஷிகளைப்போல மற்றரிஷிகளும் இந்தஅரியிடத்திலேதானே பக்தி பண்ணுகிறார்கள் மோட்சத்தை இச்சித்தவர்க ளெல்லாம் அசூசையில்லாதவர்களானாலும் அதி கோரமான தேகத்தையுடைத்தாகிய பிரமாதிகளான பூதபதிகளைக்கழித்துநாராயணனுடைய அமிசங்களான அவதாரங்களையே யுபாசிப்பார்கள்=ராஜதமும்=தாமதமும் = கலந்த ரசோதமோ=சரீரத்தை யெடுத்த பிராணிகள் தங்களுக்குச் சமானமானசிலத்தையுடைத்தாகிய பிதுர்ப்பதியான ஆதித்தியாதிகளையும் பூதபதியான ருத்திராதிகளையும்பிரசாதிபதியானபிரமாதிகளையும்சம்பத்தைக்குறித்தும்ஆதிபத்தியத்தைக் குறித்தும் சந்தானங்களைக் குறித்தும் உபாசிப்பார்களாகையால் சகலவேதங்களும்வாசுதேவனிடத்தில் கருத்தையுடைத்தானதுகள் சகலஎக்கியங்களும் வாசுதேவனாகிற தேவனிடத்திலே தானே விளங்கும் வர்ணாசிரமதருமங்களெல்லாம் வாசுதேவனைத் தானேகுறித்துச் செய்யத் தக்கதுகள்= கியானமெல்லாம் வாசுதேவனிடத்திலே தானே சம்பாதிக்கத்தக்கது சகலமான தபசுகளுக்கும் பலமாகிறவன்வாசுதேவன்சகல தருமங்களும் வாசுதேவப் பிரீதியாகவே செய்யவேண்டும் இவற்றின் பலனைக்கொடுக்கிறவனும்வாசுதேவனே ஆதிகாலத்திலே ஷட்குண பரிபூரணனானவாசுதேவன் ஒருவனே தனக்குசுவாதீனமான பிரகிருதியினால் இந்தவுலகங்களைச் சிருஷ்டித்தான் திரிகுணமயமானஇந்தப்பிரகிருதியை சரீரமாக அபிமானித்திருக்குங் காலத்திலும் இந்தப் பிரகிருதி சூட்சுமமாயிருக்குங் காலத்தில்தான் காரணமாகவும் இது ஸ்தூலமா யிருக்குங்காலத்தில தானே காரியமாகவும் இருந்தாலும் இந்தப் பிரகிருதிகுணங்கள் தன்னிடத்தில பொருந்தாமல்விளங்குகிறான் அந்தப்பிரகிருதியினாலேசெய்யப்பட்ட இந்த குணங்களிலு தான் புகுந்திருக்கையால அந்தப்பிரகிருதியினுடைய குணங்களை உடைத்தானவன்போல் விளங்குவான் அக்கினிஒருவனாகயிருந்தாலும் தனக்குஆசிரயமானமரங்களில் வெவ்வேறாகத் தோன்றுகிறாப்போல சகலசேதனாசேதனங்களிலும் நிறைந் திருக்கிற பரமபுருஷன் வெவ்வேறாகத்தோன்றுவான் ஆகையால இந்தப்பகவான் திரிகுண மயங்களான தன்மாத்திரைகளும் பூதங்களும் இந்திரியங்களுமாகிய இவற்றால் கற்பிக்கப்பட்ட காரியங்களிலும் தன்சங்கற்பத்தினாலே நிறைந்து அதனுடையகுணங்களை அனுபவிக்கிறான் உலகசிருஷ்டிக்கெல்லாம் கர்த்தாவான இவன் சத்வகுணத்தைசரீரமாகநினைத்து லீலாவதாரங்களில் திருவுளம்பற்றி தேவமனுஷியாதி ரூபங்களைத்தரித்து இந்தவுலகங்களைரட்சிக்கிறான்.

நாராயணாயநம;

~~~~~~

## ௩-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்,

பெருக்கவின்புற வெம்பெருமானவி
லிருக்குணர்த்து மிறையவதாரத்தைச்
சுருக்கமெய்திடச் சொற்றனன்கன்றென
உருக்கமாகவுயர் முனியோதுவாம்;

மகாபுருஷனுடைய அவதார கதாப் பிரசனத்துக்கு அந்தந்த சரித்திரங்களினால் பகவத் அவதாரங்களைச் சுருக்கமாகஎடுத்துச்சொல்லுகையால் சூதராலே உத்தரஞ்சொல்லப்பட்டது.

இப்படிஷட்குண பரிபூரணனான பரமாத்மா ஆதிகாலத்தில் உலகங்களைச் சிருஷ்டிக்கவேண்டுமென்றுஇச்சையினால் அகங்காரம் ஒன்றும் சூட்சும பூதங்களைந்தும் பூதங்களைந்தும் இந்திரியங்களைந்தும் ஆகப்பதினாறுகலையுடனே கூடிய மகத்துவமாகிய சரீரத்தைசங்கற்பித்து புருஷாகாரமாகிய உருவையெடுத்தான் அந்தரூபம் எப்படிப்பட்டதென்றால் பரிபூரணமான சலத்துக்குள்ளே யோகநித்திரைசெய்கிற காரணத்தாலே,யோகத்தைச்செய்கிற அந்தமூர்த்தி விசிஷ்டமான ஸ்வாமியினுடைய நாபியாகிற மடுவிலுண்டானகமலத்திற் பிறந்தசதுர்முகனானவன் மற்றப் பிரஜாபதிகளுக் கெல்லாம் சிரேஷ்டனாகவிளங்கி பரமாத்மாவினுடைய சரீர அவயவங்களாகிறஸ்தானவிசேஷத்தால் பதினாலு லோகங்களையுடைய விஸ்தாரத்தைக் கற்பித்தானே அந்தரூபம் சத்வமதிகமாகி அதிகபெலமானது இந்தரூபத்தைப் பிரம்மாவானவன் அநேகங் கண்களுடனேயும் பாதங்களுடனேயும்,தொடைகளுடனேயும்,புஜங்களுடனேயும்சிரசுகளுடனேயும், காதுகளுடனேயும், மூக்குகளுடனேயும்
~~~~~~

கிரீடங்களுடனேயும்-குண்டலங்களுடனேயும்;- பீதாம்பரங்களுடனேயும், கூடிவிளங்கிஆச்சரியகரமாகியிருக்கிற இந்தரூபத்தைக்கண்டான் ஸ்வாமியினுடைய அவதாரங்களில் இதுவேமுதலான அவதாரம் இந்தஅவதாரத்திலிருந்து மற்ற அவதாரங்களெல்லாம் உண்டாயிற்று இந்தஅவதாரத்தினுடைய லேசலேசத்தாலேதேவதைகளும் மானிட மிருகபட்சி செந்துக்களையெல்லாம்கற்பிககப்பட்டது, இந்த விராட்புருஷன் ஆதிகாலமான கவுமாரசருக்கத்தில்தானே பிரமசரியத்தைத் தரித்து துஷ்கரமான தபசைச்செய்தான் இப்பால் இரண்டாம்அவதாரத்தில்அந்தபகவான் இந்தவுலகங்களுடைய க்ஷேமத்தைக்குறித்து பாதாளத்தில் முழுகியிருந்த பூமியை உத்தரிக்கவேண்டி எக்கிய ஸ்வரூபமான வராகரூபத்தைத்தரித்தார், அப்பால் மூன்றும் அவதாரத்தில் ரிஷிசருக்கத்தில் நாரதரூபமான அவதாரத்தை யெடுத்து பலத்தையிச்சியாத கருமானுஷ்டானமே முக்கியமென்று கருமஞ்செய்தவனை அந்தக் கருமபலன்துடராதென்பதையும் வெளிவிடவேண்டிசாத்வதசங்கீதையானபாஞ்சராத்திரசாஸ்திரத்தைஅருளிச்செய்தார்,

நாலாவது தருமகலாசருக்கத்தில்,நரநாராயணர்களென்கிற ரிஷிரூபங்களைத்தரித்து சகல இந்திரிய நிக்கிரகங்களைச்செய்து மற்றொருவராலே செய்ய அசக்கியமான தபசைச்செய்தார் ஐந்தாவது கபிலாவதாரத்தைத் தரித்து யோகசித்தி சிரேஷ்டனுகி வெகுகாலமாயிருக்கிற சாங்கியசாஸ்திரத்தைத் தனக்குமாதாவான தேவகிக்கு உபதேசித்துத் தத்துவமுகங்களை நிச்சயஞ்செய்தார் ஆறுவது அனுசூபாதேவியால் பிரார்த்திக்கப்பட்டு அத்திரிமகாரிஷிக்குப் புத்திரனுகச்செனித்துத் தெத்தாதிரையனென்று பெயரையுடைத்தாகி அன்றகனுக்கும்பிரகலாதர் முதலானவர்களுக்கும் தத்துவஉபதேசஞ்செய்தார் ஏழாவது சருக்கத்தில் ருசிப்பிரஜாபதிக்கு ஆகுனுதிதேவியிடத்தில் அவதாரஞ்செய்து ஸ்ரீ எக்கியமூர்த்தியென்று திருநாமந்தரித்து சுயாமாதிகளான தேவகணங்களோடுகூடி சுவாயம்பு மன்வந்தரத்தை இரட்சித்தார், எட்டாவது சருக்கத்தில் நரப்பிரசாபதிக்கு மேருதேவியிடத்தில் அவதரித்து உருக்கிரயனென்கிற திவ்யநாமத்தாலே பிரகாசித்துச் சகலமான ஆசிரமங்களும் வந்தனஞ்செய்யும்படியான கியானிகளுடைய மார்க்கத்தைப் பிரகாசஞ்செய்தார், வாரீர் சவுனகாதி ரிஷிகளே ஒன்பதாம் சருக்கத்தில் முனிவர்களாலே பிரார்த்திக்கப்பட்டு பிருது சக்கிரவர்த்தியென்கிற பெயராலே விளங்கி ஒன்பதாம் அவதாரத்தை யெடுத்துப் பசுவேஷத்தையெடுத்திருந்த இந்தப் பூமியைக்கறந்து அதிமாத்திரமானகீர்த்தியைப் பிரகாசஞ்செயதார்,பத்தாவதுசாக்ஷசுமன்வந்தரத்திலே ஏகார்னவமானசலத்தில் மச்சியரூபத்தைத்தரித்து ஓடத்தைக்கற்பித்து வைவசுத மனுவைப்பாலனஞ்செய்து பூமியைஉத்தரித்தார்,

பதினொன்றுவதுசருக்கத்தில் தேவதைகளும்அசுரர்களும் மந்திரகிரியை மத்தாகநாட்டிபாற்கடலில் அமுதங்கடைகிறசமயத்தில் பாதாளத்திலமிழ்ந்து அழுந்தின மந்தரத்தைக் கூர்மரூபந்தரித்து முதுகிலே தரித்தார், பனிரண்டாம் அவதாரம் தன்வந்திரியாய் அவுஷதங்களாலேரட்சித்தார், பதின்மூன்றும்அவதாரம் மோகினிரூபந்தரித்து அசுரர்களைமோகிப்பித்து தேவர்களுக்கு அமுதபானஞ்செய்வித்தார் பதினுலாவது நரசிங்கஅவதாரத்தில் அதிபலாட்டியனான இரணியகசிபுவை வச்சிரசமானமான நகங்களினுலே கோரைப் பிளந்தாப்போல் அவன்மார்பைப்பிளந்தார், பதினைந்தாவது அவதாரம் வாமனவதாரத்தைச்செய்து மாபலியினுடைய எக்கியபூமியில்வந்து மூன்றடிநிலத்தை யாசித்து பதினுலுலோகங்களையும் ஈரடியாயளந்து மற்றோரடியால் அவனையுங்கைக்கொண்டு தேவர்களுக்குச்சகாயஞ்செய்தார் பதினுறுவது பரசுராமஅவதாரத்தில் பிராமண துரோகிகளான ராஜாக்களைப்பார்த்துக் கோபஞ்செய்துஇருபத்தொருதரம் க்ஷத்திரியர்களைச்சங்கரித்து பூமியில் க்ஷத்திரியர்களைக் கருவறுத்தார்,

பதினேழாஞ்சருக்கத்தில் சத்தியவதியிடத்தில் பராசரமுனீஸ்வரருக்குச்செனித்து தம்முடையநடத்தையால் வியாசனென்று திருநாமந் தரித்து வேதமாகிற மகாவிருட்சத்தினுடைய சாகைகளைக்கண்டுஅதுகளுடையசிக்கைப் பற்றறப்பரிகரித்தார், பதினெட்டாவது தசரதமகாராஜாவுக்கு ஸ்ரீராமநாமத்தாலே புத்திரனுகச் செனித்து தேவதைகளுடைய காரியசித்தி நிமித்தியமாக சமுத்திர நிக்கிரகஞ்செய்து சேதுபந்தனம் பண்ணிவெகு பராக்கிரமங்களைக் காண்பித்தார், பத்தொன்பதாவது அவதாரத்திலே விருஷ்ணி வமிசத்திலே செனித்து ராமகிருஷ்ணுளென்கிற திருநாமங்களைத் தரித்து பூமிபாரத்தைதீர்த்தார், இருபதாவது அவதாரத்தில் கலிவந்தபின்பு தேவத்துரோகிகளான அசுரப்பிரகிருதிகளுக்கு மோகஞ்செய்விக்கவேண்டி கீகடதேசத்தில் சினனுக்குப் புத்தனென்றும் புத்திரனுகச்செனித்து வேதவிருத்தமார்க்கங்களை வெளியிட்டார் இப்பால் சகலலோகஸ்வாமியான இவர்யுகசந்தியிலேராசவர்க்கங்கள் சுவதருமங்களைவிட்டுத் திருடரைப்போல்சனங்களை அடித்துப் பறிக்குங்காலத்தில் விஷ்ணயெச்சென்கிற பிராமணனுக்குக் கற்கியென்னுந் திருநாமந்தரித்துபுத்திரனுகச் செனிக்கப்போகிறுர் ஓய்பிராமணசிரேஷ்டர்களே பெரிதானந்தி ஏரியிலேயிருந்துஉபகாரார்த்தமாகப் பிறந்த கால்வாய்களைப்போல் உலக வுபகாரமாகச்

சத்வசம்பூரணனான ஸ்ரீ அரியினுடைய அவதாரங்களை யெண்ணிமுடியாது அந்தஅவதாரங்கள்ளதுகளென்று ஸ்ரிஷிகளும், மனுக்களும்-தேவதைகளும்-மற்றுமுள்ள மிகவுந் தேயசையுடைத்தான மனுகுமாரர்களும்பிரசாபதிகளும் இவர்களெல்லாம்பகவத்அமிசங்களல்லாமல் வேறல்ல எந்தெந்தக்காலங்களில் இந்திர சத்துருக்களானஅசுரர்களும் ராட்சதர்களும் மற்றுமுள்ள துஷ்டர்களும் லோகங்களைப் பீடிக்குங்காலத்தில் இந்த வுலகங்களுக்குச் சுகங்களை உண்டு பண்ணவேண்டி இவர்களிடத்தில் பகவதமிசம் அநுப்பிரவேசமாயிருக்கும்ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியோவென்றால் பரிபூரணனான பரமாத்மஸ்வரூபம் இந்த ஷட்குண பரிபூரணனான பரமபுருஷனுடைய அவதார ரகசியத்தை யாதொருமனுஷன்உபயசந்தியா காலங்களிலேயும் பரிசுத்தனாகி பக்தியுடனே ஸ்தோத்திரம்பண்ணுகிறானோ அவன் சமஸ்தமானதுக்கசமுத்திரத்தையும் நீங்குவான்கருமாதீனமான சரீரங்களில்லாமல் கியானஸ்வரூபனான பரமாத்மாவுக்குமுன் சொன்ன ஸ்வரூபங்கள் பிரகிருதி குணங்களால் கற்பிதமான மகதத்வாதிகளினாலேதன்னிடத்தில் தன்இச்சையினால் உண்டாக்கிக்கொண்ட ரூபங்கள் ஆகாசத்திலே மேகங்கள் ஒட்டாமலிருந்தாப்போலவும் வாயுவிலே பூபாரகமொட்டாம லிருக்கிறது போலவும் கியானாசிரியனான பரமாத்மாவிலே ஒட்டாமல் சம்பந்தித் திருக்கிற இந்தரூபங்களை புத்தியீனர்கள் சேதனங்களுக்கு கருமத்தினாலே வந்தசரீரம்போல் கருமாதீனமான சரீரமென்று நினைப்பார்கள் இந்த விராட்புருஷ ரூபத்தைக்காட்டிலும் உத்கிருஷ்டமாகியும் வேறாகியுமிருக்கிற ரூபம்ஒன்றுண்டு அதன்ஸ்வரூபம் என்னவென்றால் ஏற்றக்குறைவிலில்லாதான சத்வாதிகுணங்களாலே விருத்தியடையாம லிருக்கையால் ஒருவராலேயுங் காணப்படாமலும் கேட்கப்படாமலுமிருக்கிற ஸ்வரூபத்தை யுடைத்தாயிருக்கையால் அவ்வியக்தமென்றுசொல்லப்படும் அந்தரூபத்தைத்தரித்த பரமாத்மாவினிடத்தில் பிரமப்பிரளயகாலத்திலே சகல ஜீவசமுகங்களும் சூட்சுமமென்று சொல்லப்படுகிறவர் சச்சரீரங்களுடனே கூடி மறைந்திருந்து பின்பு மற்றொரு பிரமரிஷி காலத்திலே வேறாகவருகையால் சகலசீவன்களும்பிறப்பார்களென்றுசொல்லுவார்கள் இந்தவஸ்துவினிடத்தில் பிரகிருதிகற்பிதமான இந்தஇரண்டுரூபங்களும்கர்மா:தீனமாகவந்ததல்ல அவனிச்சையால் ஒப்ப வந்ததென்று தன்னுடையபுத்தியினாலே நிச்சயமாகத் தெரிந்துகொள்ளுகிற கியானமே பிரமக்கியானமென்றுசொல்லப்படும் இந்தக்கியானம் மேர்கசெனகமான இந்த மாய்கை தவிர்ந்தாலேஅல்லாமல் சமிசய விபரியாயங்களைத்தவிரமாட்டாது அப்படி தெளிந்த கியான முடையவனே சம்பூரணனென்றுசொல்லுவார்கள் அந்தபுருஷன் ஜீவனுக்குமுக்திதிசையில் காணும்படியான குணஷ்டகங்களை உடைத்தான தன்னிடத்திலேநிறைந்த ஆத்மாவான ஷட்குண பரிபூரணனை அனுபவித்துசிலாக்கியனாவன் கருமாதீனமான கற்றுறுத்தவமுங் கருமாதீனமான ஜென்மமுந்திவிர்ந்த சர்வபூதாந்திரியாமியாகிற பரமாத்மாவினுடைய அவதாரங்களும்-லீலைகளும்-அவனிச்சையினாலேயுண்டானதேயல்லாமல் கருமத்தினாலே வந்ததல்லவென்று வேதங்களிலே கோப்பியங்களாகவிருந்ததைத் தத்வக்கியானிகள்சொல்லுகிறார்கள்இப்படி கியானஸ்வரூபனும் கியானகுணகனுமாகி தன் னிச்சையினாலே சேதனாசேதனங்களைச் சரீரமாகத் தனக்குசங்கற்பித்து அவ்வியக்த சரீரகனும் மகத்துவசரீரகனுமாகிய பரமபுருஷன்தான் நினைத்தபடிமுடிக்கும் வல்லமையை உடைத்தானவனாகையால்இந்தவுலகங்களைச்சிருஷ்டித்தும் பாலனஞ்செய்தும் சிலந்திப்பூச்சிபோல தானேவிழுங்கிறான்இந்தவுலகங்களை இரட்சிக்குங்காலத்திலும் சகலபூதங்களிலும் தான்உட்கலந்து அதன்குணங்கள்தன்னையண்டாமல்தானே சுதந்தரனாகயிருந்து ஜீவராசிக ளஷ்டவர்க்கங்களை அனுபவிக்குங்காலத்திலும் அதன்கெந்தத்தைத்தான்ஆக்கிராணஞ்செய்கிறதேயல்லாமல் பொசிக்கவில்லை இப்படிஷட்குணபரிபூரணனான பரமாத்மாவினுடைய மகிமைகளைச்செனித்திருக்கிற சீவாத்துமாக்களெல்லாம் கருமத்தினால்குறைந்தும் விபரீதமாகியுமிருக்கிற கியானத்தைஉடைத்தானவராகையால் தெளிவாக அறியமாட்டார்கள்வேஷதாரியானவன் பலவேஷந் தரித்தாப்போலவே தானும்தன்சங்கற்பத்தால் வெகுவிதரூபங்களையும்நாமங்களையுந்தரித்திருக்கிற இவனைநிசமாக அறிந்தேனென்றும் ஸ்துதிசெய்தேனென்றும் நினைத்தவன் அறிந்தவனல்லயாதொருபுருஷன் கபடமில்லாமலும்இடைவிடாமலிருக்கிற நினைவினாலேஅளவிடப்படாதமகிமையைஉடைத்தாகியும் இந்தவுலகங்களுடையசிருஷ்டிமுதலானதுகளையுஞ்செய்கிற சக்கிரபாணியினுடையபாதபத்மகெந்தத்தை அநுபவிக்கிறானோ அவனுடையமகிமையையறிவான்-ஓய்தன்னியரான சவுனகாதிரிஷிகளே மகானுபாவர்களான நீங்கள் சகலலோகநாதனான இந்த வாசுதேவ னிடத்தில் சர்வசரீரகனாக நினைத்து இப்படி ஆத்மபாவத்தை நினைக்கிறீர்களோ இதனால் இந்தவுக்கிரமான சமுசார சாக்கிரம் எந்த வஸ்துவிடத்தி லில்லையோ அந்தவஸ்துவைச் சேருவீர்கள் சமிசயமில்லை வியாசபகவான் வேதசமானமான இந்தஸ்ரீபாகவதபுராணத்தைஉத்தமமாகிய கீர்த்தியையுடைத்தான ஸ்ரீ அரியினுடைய லீலாவண்ணமாகியே செய்தார், சகலலோகங்களுடைய சிரேயசைக்குறித்துச் செய்யப்படும், க்ஷேம

ங்களுக்கு இருப்பிடமாகியு மிருக்கிற மகத்தான இந்த
புண்ணியசரித்திரத்தைச் சாந்திசியான தன்புத்திரனு
க்குஉபதேசித்தார் அவருஞ் சகலவேதங்களிலும். இதி
காசங்களிலும் எடுக்கப்பட்ட சாரமாகிய இந்தப்புராண
த்தை யுத்தமனுகிய பரிட்சித்துமகாராசாவுக்குச்சொன்
னுர். கங்கையில் பிரயோபவேசஞ் செய்திருந்த பரிட்சி
த்துமகாராசாவுக்கு சுகமுனி இந்தபாகவத வுபதேசஞ்
செய்யுங்காலத்தில் பிர்மரிஷிகள் அனைவரும் கேள்விப்
பட்டிருந்தார்கள், ஸ்ரீகிருஷ்ணன் தருமங்களுடனேயும்
கியானங்களுடனேயும், கூடவேபரமபதஞ்சேர்ந்தபின்
பு இந்தக்கலியுகத்தில் தருமக்கியானங்களாகிற கண்களி
ழந்த பிராணிகளுக்கு உண்மையானபொருளை விளங்க
வேண்டிஇந்தப்புராணமானது ஆதித்யவுதயம்போலே
உண்டாச்சுது வாரீர் பிராமணர்களே அந்தக் கங்கையி
லே பரிட்சித்து மகாராசாவுக்கு உபதேசம்பண்ணுகிற
பிரம்மதேஜோநிதியான சுகமுனிவர் என்னை யனுக்கிர
கித்துக் கிட்டவைத்துக்கொண்டு உபதேசித்தார் அவரி
டத்தில்நானும்அதிகரித்தேன் அப்படி அதிகரித்தநான்
தெரிந்துகொண்டபடி என்புத்திஅனுசாரமாகிஉங்களு
க்குஅறியப்பண்ணுகிறேன் அன்புடன்கேளுங்கள்,

மாதவாயநம.

## ௪-வது, அத்தியாயம்

கலிவிருத்தம்,

பொன்பலிக்குணச் சூதபுராணிகர்
முன்பயிற்றரத் தாலும்புராணத்தான்
மின்பணிச்சடை வேதவியாதனுக்
கின்பிலாமை யெடுத்தினிதேத்துவாம்,

பகவத்சாஸ்திரத்தினுடைய ஆரம்பத்துக் காரணமா
வது தபசினுலேயும்-இதிகாசபுராண யுக்திகளினுலேயு
ம்-வியாசருக்குச் சந்தோஷ மில்லாமையை வர்ணிக்கப்
படுகிறது.

தபோநிதியான சூதபுராணிகரைப்பார்த்துதீர்க்கசத்
திரயாகத்தில் தீட்சதாளான முனீஸ்வரர்களில் பெரிய
வராகியுமிருக்கிற இருக்குவேத பாரங்கதரான சவுனக
ரென்கிற குலபதிமிகவுந்துதிசெய்து ஒருவார்த்தைசொ
ல்லுகிறுர் மகானுபாவராகிய சூதரே-தத்வங்களை யுரை
க்கிறவர்களுக்குள்ளே சிரேஷ்டரே புண்ணியமான இந்
தபாகவதக்கதையை மகானுபாவரான சுகமுனீஸ்வரர்எ
ப்படிச்சொன்னுரோ அப்படியே நீரும் எங்களுக்குச்
சொல்லவேண்டும் எந்தயுகத்திலேயிருந்த ஸ்ரீமகாபாக
வதம் பூலோகத்திலேவந்தது எந்தஸ்தானத்திலே எந்த
காரணத்தினுலே எவராலேஆக்கியாபிக்கப்பட்டுவியாச
முனீஸ்வரர் இந்தச்சங்கிதையைச்செய்தார் அவருக்குக்
குமாரரான சுகமுனீஸ்வரர் யோகீஸ்பராளுக்கெல்லாம்
சிரேஷ்டராகி சகலவஸ்துக்களிலும் நிறைந்த பரமாத்ம
ஸ்வரூபத்தை யேகரூபமாகி நினைத்துத் தன்னிடத்தில்
பிரகாசிக்கிற பரமாத்மாவினிடத்தில் வைத்த மனதைச்
சலிக்கவொட்டாமல் நிறுத்தி பிறருக்குத்தெரியாமல்மூ
டவேஷத்தால் நின்றவிடத்திலே நில்லாமல் சஞ்சரிக்கி
றவர் நகரவாசிகளான ஜனங்களாலே எப்படிக்காணப்ப
ட்டார் குருசாங்கலதேசங்களிலே யேன்வந்தீர் உன்மத்
தனைப்போலவும் ஊமையைப் போலவும் சஞ்சரிக்கிற
வர் அஸ்தினுபுரத்திலேன்வந்தார் ஒரு காலவிசேஷத்தி
ல்சுகமுனிவரைப் பின்றொடர்ந்து ரிஷி யோக்கியமான
வஸ்திரந்தரித்து வருகிற வியாசரைக்கண்டு வஸ்திரங்க
ளில்லாமல் ஜலக்கிரீடை செய்துகொண்டிருந்ததேவக
ன்னிகள் சீக்கிரமாக லச்சையாலேவஸ்திரந்தரித்த ஆச்
சரியத்தைக்கண்டு அந்தத் தேவஸ்திரீகளை வியாசமுனீ
ஸ்வரர்பார்த்து ஓய் கன்னிகைகளே என்மகன் எவ்வர்
ணமுள்ள புருஷன் வஸ்திரமில்லாமல்வருகையில் நீங்க
ளும்வஸ்திரமில்லாமல் கேளிவிலாசமாகயிருந்தீர்களே
வஸ்திரந்தரித்தும் விர்த்தனுமாகிய என்னைக்கண்டுஏன்
வஸ்திரந்தரித்தீர்களென்றுகேட்க அந்தக்கன்னிகைகள்
வியாசரே யுமக்குஸ்திரீயென்றும் புருஷனென்றும் இர
ண்டுவிபாகமுண்டு உம்முடையமகனுக்கு பரிபூரணமா
ன பிரமஸ்வரூப விவேகமொன்றேயல்லாமல்வேறில்லை
யென்று சொன்னுர்களல்லவோ அப்படிப்பட்டபரமமு
னீந்திரருடனேபாண்டுகுலத்தில்ஜனித்த பரிட்சித்தென்
றுபெயரையுடைத்தான ராஜரிஷி அந்தமுனீந்திரரைக்கே
ட்கவும் அவனுக்கு அந்தமுனீந்திரன்தெளியவுரைக்கவு
மான சம்வாதம்எப்படிஉண்டாச்சுது அந்தசம்வாதத்தி
லல்லவோ இந்தசாத்வதனுனஸ்ரீகிருஷ்ணனுடையகதை
கள்நடந்தது அந்தசுகமுனீந்திரன் கிரகஸதாசிர்மத்திலி
ருக்கிறஜனங்கள் அந்தஆசிர்மத்தைப்பரிசுத்தஞ்செய்ய
வேண்டுமென்றுபிரார்த்தித்தால் அவர்களிடத்தில் தய
வினுலே ஒருபசுபால்கறக்குங்காலம் அவ்விடத்திலிருந்
துஅவர்களாலே வந்தனஞ்செய்யப்படுவார், அப்படிப்ப
ட்டசுகமுனி வெகுகாலம் அவ்விடத்தி லெப்படியிருந்
தார் சூதரேஅபிமன்னன்குமாரனுன பரிட்சித்துமகாரா
ஜாவை பாகவதோத்தமனென்று சொல்லியிருக்கிறுர்க
ள்அவனுடையஜெனனமும் கருமங்களும் ஆச்சரியமா
னதுகள் அதுகளையும்எங்களுக்கு நீர்சொல்லவேண்டும்
அந்தபரிட்சித்துசக்கிரவர்த்திபாண்டுகுமாரர்களுடைய
பெருமையைவிர்த்திபண்ணிஇந்தப்பூமண்டலமெல்லா
ம்நிறைத்தவன்அவன் எந்தக்காரணத்தினுல் மகாராஜச

ம்பத்தை எண்ணுமல்கங்கையிலே பிரயோபவேசஞ்செய்தார் சகல சத்துருவர்க்கங்களும் தங்களுடைய க்ஷேமத்தைக்கோறி தங்கள்சம்பத்துகளைச்சமர்ப்பித்து எவன் பாதபீடத்தைவணங்கினார்கள் அந்தத் தீரன்தான் எவ்வர்னமாயும் தனக்கு அதிக சிலாக்கியமான சம்பத்தையடைந்தும் பிராணனைவிடவேண்டுமென்று எப்படிநினைத்தான் இது ஆச்சரியமாயிருக்கின்றதுஉத்தமசுலோகனை பரமாத்மாவினிடத்திலேபற்றின சித்தவிருத்தி யுண்டான சாதுஜனங்கள்-சகலசீவன்களும்அசுபங்களைநீக்கிச் சுபங்களைக்கற்பித்து பின்பும் அவர்கள்உத்தமகதியடையும்படி இதத்தைச்செய்யவேண்டி தாங்கள் சீவிக்கிறதேயல்லாமல் தங்கள் பிரயோசனத்தைக்கோறுகிறதில்லை ஆகையால், காமக்குரோதாதிகளுக்கு வசமாகாமலிருக்கிற தன்சரீரத்தை வெறுத்து பரிட்சித்து மகாராஜா ஏன்சரீரத்தைவிட நினைத்தான் வேதார்த்தத்தைவெளியிட்ட ஸ்வரூபமில்லாதபுராணங்களும் தருமசாஸ்திரங்களும் இதிகாசங்களுமாகிற வாக்குகளுக்கு விஷயமான தருமதத்வங்களிலே தேவரீர் சிரேஷ்டராகையால் நாங்கள்கேட்ட இந்த சூட்சுமமான அர்த்தங்களை எங்களுக்குச் சம்பூரணமாகச் சொல்லவேண்டுமென்றுசொன்ன சவுனகாதிரிஷிகளைப்பார்த்துசூதபுராணிகர் சொல்லுகிருர்,

கேளுங்கள் சவுனகாதிரிஷிகளே மூன்ரும் யுகமாகிய துவாபரயுகத்திலே ஸ்ரீபராசமுனீந்திரனுக்கு வாசவிதேவியிடத்திலே ஸ்ரீஹரியினுடைய அங்கிசமாகி ஸ்ரீவியாசமுனீந்திரர்ஒருகாலத்திலேசரஸ்வதிநதியில்ஸ்நானஞ்செய்து சரியைமுதலானதுகள் முடித்துக்கொண்டு பரிசுத்தராகி ஜனமில்லாதயிடத்தில் தாம் ஒருவராயிருந்துக்கொண்டு சூரியவுதையமானபின்பு தருமாதருமங்கள் அறிந்தவராகையால்அறியக்கூடாமலிருக்கிறசூரியவேகத்தை யுடைத்தான காலத்தினுலே உண்டாகி யுகதருமங்களுடைய சங்கற்பத்தை அந்தந்த யுகத்தில்கண்டு அந்தந்த யுகதருங்களுடைய யுகப்பிரமாணத்திலே பூமியில்பிறந்த சேதனுசேதனங்களுடைய சாமர்த்தியக் குறைவுபாட்டையும் அந்தச்சனங்களுக்குச்சிரத்தையில்லாமையும் ஈனபலமாயிருக்கையும், துற்புத்திகளையும், அல்ப்பாயுக்களையும், இவர்களுக்குண்டான ரோகபீடைகளையும் திவ்வியகியானத்தினுலேகண்டு சகலவர்னங்களுக்கும், சமஸ்த, வாசிர்மங்களுக்கும், இதமானதெதுவென்று தியானம்பண்ணி வேதத்தினுலேவிதிக்கபட்டஎக்கியகருமம் நாலுஹோதாவினுலேசெய்யப்பாட்டிருந்தாலும் பிரஜைகளுக்குப் பரிசுத்தமாகவே யிருக்குமென்றுநினைத்து அப்படியேசங்கற்பித்து எக்கியம் விருத்தியடையவேண்டி ஒன்ருகக்கலந்திருந்த வேதத்தை நாலாக ருக்குவேதமென்றும், எசுர்வேதமென்றும். சாமவேதமென்றும், அதர்வணவேதமென்றும். பிரித்து இதுகளுடனே இதிகாச புராணங்களை அஞ்சாம் வேதமாகக்கற்பித்து பயிலனென்கிற ரிஷிக்கு ருக்குவேதத்தை உபதேசித்தார் கியானியான ஜயமுனிக்கு சாமவேதத்தைச் சொல்லி வைசம்பாயனனென்கிறமுனிசிரேஷ்டருக்கு எசுர்வேதத்தைத்தெளியவுறைத்துகுரூரரான சுமந்துவென்கிற முனிக்கு அதர்வண வேதத்தை அப்பியாசம்பண்ணிவைத்து இதிகாச புராணங்களை என்னுடையபிதாவான ரோமஅருஷணற்கு அனுக்கிரகித்தார்.

இப்படி சிஷியர்களானபயிலாதிமுனிவர்கள் தங்களுக்கு உபதேசித்தவேதங்களை அனேகவிதங்களாகப் பிரித்து தங்கள் சிஷர்களுக்கும் அவர்கள் தங்களுடைய சிஷியருக்கும் இப்படி பரம்பரையாக உபதேசஞ்செய்வித்ததினுலே அந்தவேதங்கள் சாகைகளாகப் பிரிந்தது ஆகையாலே அந்தவேதங்கள் சிற்றறிவான மனுஷயர்களாலேயும் தரிக்கும்படி யோக்கியமாக வியாசபகவான் தீனவர்ச்சலராகையாலே அனுக்கிரகித்தார், இப்பால் ஸ்திரீகளுக்கும், சூத்திராளுக்கும், பிரமபந்துக்களுக்கும், காதினுலேயுங் கேட்கக்கூடாத வேதவிகித கருமங்கள் தன்னுடைய சிரேயசை அறியமாட்டாமலிருக்கிற பிராணிகளுக்கு சிரேயசுக்களை உண்டுபண்ணவேணுமென்றுநினைத்துக் கிருபையினுலே அந்தவியாசர் இதிகாசமான பாரதத்தைச்செய்தார் இப்படிசர்வபிரகாரத்தினுலேயும் அந்தப்பிராணிகளுடைய இதத்தைசிந்தித்திருக்கிறவியாசருக்கு சர்வாத்துமகனுன பரமாத்துமாவை தன்இருதயத்தில் சார்வதாநினைத்திருந்தும் மனதிலேசந்தோஷமில்லாமல் போயிற்று இப்படிமிகுந்தசந்தோஷமில்லாத இருதயத்தையுடைத்தான வியாசயோகிபரிசுத்தமான சரஸவதிநதிதீரத்தில் ஏகாந்தமாக இருந்துக்கொண்டு ஆலோசனைபண்ணி தருமங்களை அறிந்தவராகையாலே தனக்குள்ளேதானே சிந்திக்கின்ருர்உபநயனமுதல் விருதயுக்தனுகி வேதங்களை அத்தியயனஞ்செய்தேன் குருக்களுக்கும் அக்கினிகளுக்கும் சந்தோஷம்பண்ணிவைத்தேன் சாஸ்திர விகிததருமங்களை வழுவுதலில்லாமல் கபடமில்லாமல் நடத்தினேன் பாரதமென்றும் நிமித்தத்தாலே வேதார்த்தங்களை வெளியிட்டேன் ஸ்திரீ சூத்திரர்களுக்கு தெரியும்படி தருமங்களைவெளியிட்டு இப்படியெல்லாஞ்செய்திருந்தும் இந்த தேகத்தில் வசிக்கிற ஆத்மாவுக்கு என்னுடைய ஆத்மாவிலே நிறைந்திருக்கிற அந்த ராத்மாவினுலே வருகிற ஆனந்தானுபவமும் மனதினுலேவருகிற சந்தோஷமும். அதிதுஷடனுக்குண்டான பிரமதேஜசுபோல பரிபூரணமாகாமைக்கு நிமித்தந்தெரியவில்லை இல்லகவிட்டால் பகவானுக்குப் பிரீதிகரங்களானபாகவததருமங்க

ளை மிகுதியாகச் சொல்லாமலிருந்தேன் அந்ததருமங்க ளல்லவோ பரமஅம்சாளுக்கும் பரமாத்துமாவுக்கும், அதிப்பிரியமானதென்றும் சகலபிராணிகளுடையசுகத் தைக்குறித்து வியசனத்தைஅடைந்து சிந்தித்திருக்கிற வியாசமுனியினுடைய ஆசிரமத்திலேநாரதமுனிஸ்வர ரெழுந்தருளினர் தேவபூசிதரான அவரைஎதிர்க்கொண்டு சீக்கிரமாக அர்க்கியபாத்தியாசமனியங்களைபூசித்து குசலப்பிரசினம் பண்ணினர்,

கோவிந்தாயநம,

## ரு வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

சீரதர்மங்க டன்னிலுஞ்சீதரன்
சாரக்கீர்த்தன மேதக்கதாமென
வீரவேத முனிக்குமிளிர்த்தியாழ்
நாரதமுனி நன்குபதேசிப்பாம்.

சர்வ தருமங்களைப்பார்க்கிலும் ஹரிகீர்த்தனத்தினுடைய கௌரவம் வியாசருடைய சித்தப்பிரசாதத்தின் பொருட்டு நாரதராலே உபதேசிக்கப்படுகின்றது.

அதிகீர்த்திசாலியான நாரதமுனீஸ்வரரும் தமக்குஉபசாரங்கள்பண்ணின வியாசமுனீஸ்வரர் சுகாசனமாகத் தம்முடையகையிலிருக்கிற வீணையினாலே கானஞ் செய்துக்கொண்டு புன்சிரிப்புடனே மந்தஆசத்துடனே கூடினவர்போல ஒருவார்த்தை சொல்லுகிறர், வாரீர் பராசர்குமாரரே மஹானுபாவரேஉம்முடையசரீரத்தில் பிரகாசிக்கிற சீவாத்மாவினிடத்தில் இருக்கிற அந்தரியாமியான பரமாத்துமாவினுடைய அனுபவத்தினாலே அவனுக்குச் சரீரமாகிய-சீவாத்மாவுக்குஆனந்தமுண்டாயிருக்குதா மனதினாலே கற்பிதமான சகலவிந்திரிய விசிஷ்டமாகிய தேகத்துக்குச் சகல தருமவிரதஅனுஷ்டானங்களாலே சந்தோஷமிருக்குதா ஆச்சரியகரமாகியும், மகத்தாயுமிருக்கிற வஸ்துவை அறியவேண்டுமென்று நினைத்திருந்தீரோ அதை யறிந்தீரா, தருமார்த்த காமமோக்ஷங்களுக்கும் சாதகமாகியதருமங்களினாலே மிகுதியாகிய பாரதமென்றும் இதிகாசத்தைச்செய்யவேண்டுமென்று நினைத்திருந்தீரோ அதைச்செய்தீரா ஆதிமத்தியாந்த ரகிதமான பரப்பிரம்மத்தைஅறியவேண்டுமென்று நினைத்திருந்தபடி நிச்சயமாகத்தெரிந்துகொண்டீரோ, இப்படியிருந்தாலும் ஒரு பிரயோசனத் தைக்குறித்து வெகுபிரயாசஞ்செய்தவன் அந்தப் பலனையிழந்தால் எப்படியோ அப்படி உம்மைக்குறித்து நீரே சுகப்படுகிறீரோ வென்றுசொன்ன நாரதமுனீந்திரனைப்பார்த்து வியாசமுனிவர் சொல்லுகிறர், ஓய்தேவமுனீஸ்வரனே, என்னிடத்தில் நீர்சொன்னபடி நடத்தையுள்ளதுதான் சத்தியமாகவே சொன்னீர், இப்படியெல்லாம் உபகாரஞ்செய்திருந்தே னானும் என்னுடையஆத்துமா சந்தோஷம்அடையவில்லை அதன்காரணத்தையும் அறியவில்லை ஆகையால்பிரமதேவனுடைய சரீரத்தில்செனித்து அளவிடப்படாத கியானநிதியான தேவரீரைக்கேட்கிறேன் செனித்தவர்களில் ஆதிபுருஷனாகியும் உயர்ச்சி தாழ்ச்சி அபகிருஷங்களானசகல வஸ்துக்களுக்கும் ஸ்வாமியாகியும் பிரகிருதியை சரீரமாகபரிக்கிரகித்தும் மனதிலேதானே இந்தவுலகங்களைக்கற்பித்து, ரட்சித்தும், சங்கரித்தும், அந்தப்பிரகிருதியினுடையசங்கந்தவிர்த்திருக்கிறசதுர்முகனுடையசமீபத்தில் வசித்து அவருடையதயவினாலேபரமசூட்சுமமான சகலதருமங்களையுந்தெரிந்த தேவரீர்ஆத்தித்தியனைப்போல மூன்றுலோகமும் சஞ்சரித்து சீவாத்மசாட்சியான பிராணவாயுவைப்போலே யோகப்பிரவாகத்தினாலே சகலசீவாத்மாக்களுடையமனதிலுஞ் சஞ்சரிக்கிற சக்தியையுடைத்தானவராகையால் கேட்கிறேன் பலத்தைஇச்சியாம லூரியதருமங்களாலே அணுவுக்கும் அணுவாய் மகத்துக்கு மகத்தாகிய பரமாத்மாவினிடத்திலும் நியம அத்திய யனாதிகளானவிரதங்களாலே வேதங்களிலும்நிஷ்டைபொருந்தினஎனக்குஉண்டானகுறைவைச்சொல்லவேண்டுமென்று வினயத்துடனேவிக்கியாபனம்பண்ணின வியாசரைப்பார்த்து வேதமுனியான நாரதமுனிசொல்லுகிறர் ஷட்குணபரிபூரணனான பரமபுருஷனுடைய அகளங்கமானகீர்த்தியை நீர்பரிபூரணமாகச்சொல்லவில்லை அந்த காரணத்தினாலேஉம்மிடஆத்மாவுக்குச் சந்தோஷம் பிறக்கவில்லையென்று நினைக்கிறேன் மிகுதியாக பரமாத்மாவினுடைய குணங்களை நீர்ஸ்துதிபண்ணாமற்போனதினாலே முன்சொன்ன உம்முடைய பரிபூரணக்கியானங்களும்குறைந்ததுவாரீர் முனிசிரேஷ்டரே தருமமுதலான புருஷார்த்தங்களும் அதன்சாதனங்களும் விஸ்தாரமாக எப்படி வர்ணிக்கப்பட்டதோ அப்படிசர்வத்திரபரிபூரணனான வாசுதேவனுடையமகிமையைவிஸ்தாரமாகவர்ணிக்கப் படவில்லை யாதொருசொற்கள் மிகுதியான ஆச்சரியங்களுக்கு இடமாகியிருந்தாலும் உலகங்களுக்கெல்லாம் பாவமானஸ்ரீஹரியினுடைய புகழைஸ்துதிசெய்யவில்லையோ அந்தச்சொல்லை மனதிலேபரமாத்மானுபவம்பண்ணுகிற ஜனங்கள் காகங்களிறங்குந்துறையென்று சொல்லுவார்கள், அதேதென்றால் அதிமனோகரமானகிரமத்தினிடத்தில்விகரிக்கிற பரமஅம்சமுனிவர்களாகிறராஜஹம்சங்கள்அவிடத்தில்விகரிக்கமாட்டாது ஆகையால்யாதொருபிரபந்தத்தில் சுலோகப்பிரதி சுலோகங்களும்இலக்க

ணப்பழுதான சொற்களாலு மிருந்தாலும் அனந்தனுடைய கீர்த்திகளுக்குக் குறியாகியநாமங்களைஒருவர்சொல்லுகிறகாலத்தில் தாங்கள்கேட்டும் கேட்கிறஜனங்களிருந்த காலத்தில் தாங்கள் தியானஞ்செய்தும் மற்றொருவருமில்லாதகாலத்தில் தாங்களேபடித்தும் சாதுஜனங்கள் சுகத்தையடைகிறார்களோ சகலஜனங்களையும் பாவனஞ்செய்கிற அந்தப்பிரபந்தமே சிலாக்கியமானதுபலாபேக்ஷையில்லாமற்செய்த கருமங்களும் அச்சுதனிடத்தில் பக்தியில்லாமற்போனால் பிரகாசிக்கமாட்டாது பிரகிருதி சம்பந்தரகிதமான சீவஸ்வரூப சாக்ஷாத்தகாரமும் சீவசரீரகனானபிரமோபாசனத்துக்கு அங்கமாகாமற்போனால் அதுமிகவும்பலமில்லாததேயாம் இப்படி தன்னை யனுஷ்டிக்குங் காலத்திலும் தான்பலன்களைக் கொடுக்குங் காலத்திலும் வெகுசிரமத்தைக்கொடுக்கிற கருமங்கள் அச்சுதனிடத்தில் சமர்ப்பிக்கப்படாதபடியினாலே ரசோகுண தமோகுணங்களை விலக்கிச் சத்வவிருத்தியை செனிப்பிக்கமாட்டா மற்போனபின்பு ஏன்பிரகாசிக்கும் ஆகையால்வாரீர் மகானுபாவரே அமோகமானகியானத்தை உடைத்தாகியும், பரிசுத்தமானகீர்த்தியையுடைத்தாகியும், எதார்த்தத்திலே விருப்பமுண்டாகியும், சத்தியத்தில் மெய்ஞ்ஞானத்தில் ருசியுண்டாகியும். உசிதவிரதங்களை அனுஷ்டித்து மிருக்கிற தேவரீர்சகலமான சமுசாரங்களுடைய பந்தங்களை விலக்கப்பட்ட திருவிக்கிரமனுடைய திவ்யலீலைகளைத் தியானஞ்செய்து சாக்ஷாத்காரஞ் செய்யவேண்டும் இந்தப்பகவானுடைய லீலைகளைப்பார்க்கிலும் வேறான தருமங்களை நினைத்தும்விரும்பியும் சொல்லுகையால் அந்தந்த தருமங்களை நிச்சயித்த ஜனங்களுக்கு அந்த யீனதருமங்களுடைய போகங்களிலேயும் ஸ்வரூபக் கியானங்களினாலேயும் தேறித்தெளிந்தவர்களுக்கு ஓரிடத்திலும்நிலைகொள்ளாமலிருக்கிறபுத்தியானது பெருங்காற்றில்அடிபட்ட கப்பல்போல் தன்னிலையில் ஒருகாலத்திலும் நிற்கமாட்டாது சுபாவமாகி ஆசையுள்ள ஜனங்களுக்கு தருமத்தைப் போதிக்கவேண்டி இழிவான விதிகளைச் சொல்லுகிறது மிகவும் கரைகடந்த சொல்லுகள் அந்தச்சொற்களாலே சொல்லப்படுகிறதே தருமமென்றுநிச்சயித்த ஜனங்கள் அது ஈனதருமமென்று அதைத்தவிர்ந்து சிலாக்கியதருமமான ஹரிசரித்திரங்களை விரும்பமாட்டார்கள் சகலலோகநாதனுடைய ஆதியந்தமில்லாதமகிமையை நினைத்து அவன்கயிங்கிரியரூபமாக அனுஷ்டிக்கிற நிவிருத்திதருமங்களாலே வருகிறசுகத்தை அறிந்து வயிலக்ஷணியந்தெரிந்தவன் எவன்தான் விரும்பமாட்டுவான் பிரகிருதிகுணங்களாலே பரவசமாகிஅபிமானத்துடனே கூடிய ஜனங்களுக்கு உபயவிபூதிநாயகனாகிய ஸ்ரீஹரியுடைய திவ்யசரித்திரங்களைத் தெரியச்சொல்லவேண்டும் ஸ்வாமியென்றுசொல்லிமறுபடியும்சொல்லுகிறார்.

அபக்குவமான மனதையுடைத்தானவன் வர்ணாசிரமத்துக்கு யோக்கியமான தருமங்களை ஸ்ரீஹரியுடையசரணகமலங்களை பஜனஞ்செய்தவன் அந்தசென்மத்தைவிட்டு நிகிருஷ்டமான சென்மத்தை எடுக்கையிலும் ஏதாகிலும் ஒருசென்மத்தில் அந்த அசுபத்தைத் தவிர்ந்து உத்தமகதியை யடைந்தானாகில் தனக்கு உசிதமான வர்ணாசிரமதருமங்களை பலாபேக்ஷையைவிட்டு அனுஷ்டித்து ஸ்ரீஹரிபஜனஞ்செய்கிறபேர்கள் அற்புதமானபரமபதத்தை அடைகிறதற்குச் சொல்லவேண்டிய தென்ன அவரவர்செய்த புண்ணியபாவங்களினால் சொர்க்கநரகங்களென்கிறது உயர்ந்ததும் தாழ்ந்ததுமான விடங்களிற் சுழன்றுதிரிகிற பிராணிகளுக்கு துற்பலமாகிய தருமம் உலகத்தில் யாதொன்றுண்டோ அதனுடைய சம்பாதனத்தி லெத்தனஞ்செய்யவேண்டும் சகல லோகங்களிலும் அளவிட்டு அறியக்கூடாதவேகத்தையுடைத்தான காலசக்கரத்தினாலேவருகிற பிரவதுக்கங்களுண்டாகிறுப்போலே புண்ணியங்களாலே சுகங்களும்தான் வேண்டாமலிருந்தாலும் வருமாகையால் அந்தச்சுகிர்தக்கியானியானவன் வேண்டான் வாரீர் சிரேஷ்டரே ஸ்ரீமுகுந்தனுடைய பஜனஞ்செய்கிறவன் இதரஜனங்களைப்போல சமுசாரத்தை எத்தனைப்பிரயாசத்திலும் ஒருகாலத்திலும் சேர சம்மதிக்கமாட்டான் அந்த ஸ்ரீமுகுந்த சரணாம்புஜ ரசமறிந்தவன் அவன் திருவடிகளுடைய சம்சிலேஷத்தை நினைத்துநினைத்து கோரமான சமுசாரத்தைத் தள்ளவேண்டுமென்றே நினைப்பான்எந்தப்பகவானிடத்திலே இந்த வுலகங்கள் செனித்ததோ எவனிடத்தில் லயத்தையுடையதுகளோ அந்தப்பிரிவில்லாத காரணனான அந்தவாசுதேவனிடத்தில் நிலைபொருந்தியிருக்கிற சேதனாசேதன சமுகமாகிய இந்தவுலகம் அந்தவாசுதேவஸ்வ ரூபமேயல்லாமல் வேறல்ல சூக்ஷமமாகி சேதனாசேதன சரீரகனான வாசுதேவ ஸ்வரூபமாகிய காரியமான உலகமென்று அறிவில்லாத ஜனங்களுக்கு இந்தவுலகங்கள் வேறுபோலேகாணப்படும் இதை தேவரீரும்அறிவீர், ஆனாலும் வெகுதூரத்திலிருக்கிற நகரத்துக்கு இதுவேவழியென்று குறித்துக் கைகாட்டுகிறுப்போலே சொல்லுகிறேன்ஓய்மஹானுபாவரே கருமவசமாகிய் சென்னமில்லாமலும் இச்சையினாலே அநேக அவதாரங்களைத் தரிக்கிற பரமபுருஷனாகிய பரமாத்மாவினுடைய அம்சத்தைப் பரிபூரணக்கியானியான தேவரீர் உமக்குஆத்மாவாக நீரேஅறிந்துகொண்டு இந்தப் பிராணிகளுடைய க்ஷேமத்தைக்குறித்து இதுக்குச்சாதனமான தருமத்தை நினைத்து எத்தனஞ்செய்யவேண்டும் இப்படிக்கொத்த சுகிர்தம் எதென்று

ல் உலகத்தில் புருஷாள்செய்கிற வேதாந்தசிரவணத்தினாலேயும், பூரணதக்ஷிணையுடனே அனுஷ்டித்தயக்கியங்களாலும், தவசுகளாலும், சூக்தபாராயணங்களாலும் தடாகங்களுடைய நிர்மாணமாகிற அர்த்தங்களாலும், தானங்களாலுமுண்டாகிய புண்ணியபலத்தினாலே வரத்தக்கது அந்தப் பலன்களுக்கு உயர்ந்தபலனாகிவிசாரித்துநிச்சயித்து புண்ணியசுலோகனாகிய பகவானுடைய கீர்த்தனமன்றி வேறில்லை நான் முன்சென்மத்தில் வேதாந்த வித்துக்களான பிராமணனுடைய வீட்டுவேலைக் காரியாகிற கிரகதாசியினுடைய புத்திரனாக ஜனித்திருந்தேன். வாரீர் வியாசரே இந்தரகசியத்தைசாக்கிரதையாகக்கேளும் அப்போது வருஷாகாலத்தில் தீர்த்தயாத்திரையில் ருசிபெற்ற யதிகள் அந்தப்பிராமணனுடைய கிரகத்தில்வந்து சாதுர்வருஷரிது சரத்ரிதுவென்கிற இரண்டு மாசங்களிலும்வழிநடக்கிறது அரிதாகையினாலே அந்தப்பிராமணகிரகத்திலே வாசஞ்செய்தார்கள், அவர்கள் பரமயோகிகளாகையால் பரமாத்மாவினுடைய திவ்யகுணங்களை மிகவுஞ் சொல்லத் தொடங்கினார்கள். அப்போது நான் நன்றாகப்பேசத்தெரியாமல் மெத்தவும் பாலனாகயிருக்கையிலும் அவர்களுடைய முகாரவிந்தத்தில் சனித்த ஹரிகுணாமிருதகதையைக் கேட்க வேண்டுமென்று பகவத்சங்கற்பத்தினால் அன்புபெற்றிருந்தபடியினாலே அவர்களும் இவன்அதிபாலகன் தன் விளையாட்டிற்கு உசிதமான பரமபாவைமுதலானதுதரித்திருக்கையிலும் இந்திரிய சாபல்லியங்களை விட்டிருக்கிறானென்றும், இதுவுமல்லாமல் நாம்சொல்லுகிறபரமபுருஷனுடைய கதைகளைக்கேட்க நினைத்து நாமிருந்த இடத்திலிருந்து நாம் திரிந்தவிடத்தில் திரிந்துகொண் டிருக்கிறானென்று நினைத்து மிகுதியுந் தயவுபண்ணி யனுக்கிரகஞ் செய்தவர்களுக்கு முன்பாக மழலைச் சொல்லுடனே கூடியிருந்தாலும்அவர்கள்சொல்லுகிற கதைகளைக் கேட்டுக்கொண் டிருந்தேன், ஒருநாள்அவர்கள் போசனம்பண்ணின இலைகளைத்தொட்டு அந்தஎச்சிலை என் உடம்பெல்லாம் பூசிக்கொண்டதைக்கண்டு வேண்டாமென்று அவர்கள் விலக்கும்போது சூட்சுமமாகக் கையிலகப்பட்ட பிரசாதத்தை ஒருதரம் நான் பொசித்தமாத்திரத்தில் சகலமான பாதகங்களையுந்தவிர்ந்தேன் இப்படிப்பட்ட என் னடத்தையாலே ரசோகுண தமோகுணங்களைவிலக்கி சத்வகுணமிகுதியாகிமனதுக்கு சம்சயங்களைவிலக்கி நிச்சயத்தைப் பிறப்பிக்கையாலே அந்தயோகிகளுக்குப்பிரியமாகியகருமங்களிலே யெனக்கும் அன்புபிறந்தது அவ்விடத்தில் சமஸ்தகாலங்களிலும் அதிமனோகரங்களான ஸ்ரீகிருஷ்ணன் கதைகளைத் தியானம்பண்ணுகிற யோகிகளுடைய அனுக்கிரகத்தினாலே அந்தக் கதாசிரவணத்திலே சிறத்தைபிறந்து திரிகாலங்களிலும் சிரவணம்பண்ணிக்கொண்டு அதில் அதிப்பிரீதியாகவே யிருந்தேன் வாரீர் அதிபுத்திசாலியே, ஸ்ரீஹரிகதையில் மிகவும் பிரீதிபிறந்ததால் கதாசிரவணங் கிடைக்கிறவிடத்தில் நினைவுண்டாயிருக்கிறஎனக்கு விஷயங்களில் சுழன்றுதிரிகிற என்மனதுஸ்ரீஹரிகதையில் மறிபட்டுநின்றது அந்த ஸ்ரீ ஹரிகதையில் பிரீதியினால் தனக்கு வசவர்த்தியான மாயையினாலே கற்பிதமான சூட்சுமஸ்தூலமாகிய பிரபஞ்சத்தை சகலசேதனாசேதன சரீரகமான பிரமத்திலொன்றாகிக் கலந்த என்னிடத்தில் நான்பார்க்கிறேன் இப்படி வருஷரிதுவிலேயும், சரத்ரிதுவிலேயும், அந்த யதீஸ்வரர் களிடத்திலிருந்து அடிக்கடிநிர்மலமான ஹரிலீலைகளைக்கேள்விப்பட்ட எனக்கு அந்த மகாத்மாக்களுடையஅனுக்கிரகத்தினாலே ஸ்ரீஹரியிடத்தில் பக்திபிறந்து அதனாலே என்னுடையமனதிலேயிருக்கிற ரசோகுண தமோகுணங்கள்நீங்கி பக்தியானது விருத்தியடைந்து சிரத்தையுமுண்டாயிற்று. இதுகளாலே பாவங்கள்கழிந்தது இப்பால் இந்திரியசாபல்யங்களைவிட்டு விசுவாசத்துடனே கூடியிருக்கிற பாலனாகியஎன்னை அவர்கள் உத்தமபாத்திரமென்று அனுக்கிரகித்துசாக்ஷாத்ஸ்ரீமந்நாராயணனால் அனுக்கிரகிக்கப்பட்ட அதிகோப்பியமானபிரமக்கியானத்தை யருளிச்செய்தார்கள். அவர்கள் பிரயாணம் புறப்படுகிற காலத்திலும் மிகுதியான கிருபையினாலேஉபதேசித்தகியானத்தினுடைய பிரபாவத்தினாலே சகலபிராணிகளையும் சிருஷ்டித்த வாசுதேவனுடைய சங்கற்பபிரபாவத்தையும் யாதொரு பிரமக்கியானிகள் பிரமபதத்தை யடைகிறார்களோ அந்தப்பிரபாவத்தையும் அப்பொழுதே யறிந்தேன் - ஓய் பிராமணோத்தமனே தாபத்திரயங்களாகிறரோகத்துக்கு அவுஷதம் ஏதென்றால் ஷட்குணபரிபூரணனான பரமாத்மாவினிடத்தில் விகிதகருமங்களை பலத்தையிச்சியாமற் செய்து பிர்மார்ப்பணமென்று சமர்ப்பிக்கிறதேயல்லாமல் வேறில்லை சகல சாஸ்திரங்களாலேயும் இப்படியே நிச்சயிக்கப்பட்டது, எந்தவஸ்துக்களாலே ரோகங்கள் பிறக்குமோ அந்தவஸ்துக்களாலே அந்தரோகங்கள்எப்படியானால் தீரமாட்டாதோ அப்படி மனுஷியருக்குச் சமுசாரங்களைக்கொடுக்கிற பலஇச்சையால் செய்தகருமங்கள் அந்தசமுசாரங்களைப் பரிகரிக்கமாட்டாது அந்தக்கருமங்கள் தானேபலனைக்கோராமல் சுதந்தரத்தை விட்டு செய்யப்பட்டு ஹரியிடத்தில் தியானம்பண்ணப்படுமாகில் அந்தச்சமுசாரங்களை வேரறப்பரிகரிக்கும் இந்தசமுசாரத்திலிருக்குங்காலத்தில் உசிதமாகிய கருமங்களெல்லாம் பகவானுடையபிரீதியைஉண்டாக்கும்படிசெய்தால் ஸ்ரீஹரியுடையதத்வக்கியானமும்பக்தியுமுண்டாக்கும் ஆகையால் தங்களுக்கு உசிதமானகரு

மங்களைச்செய்கிற கியானிகள் பகவானிடத்தில் சித்தத்தைவைத்து கருமங்களையும் அநுஷ்டித்த பின்பு அந்த கருமங்கள் பகவத்பிரசாதமாகிற பலனைப் பரிபூரணமாகக்கொடுக்கவேண்டி. ஸ்ரீபகவானுடைய குணமகிமையால் பிறந்துவிளங்குகிறநாமங்களை யடிக்கடி நினைக்கிறார்கள் ஷட்குணபரிபூரணனான உனக்கு வந்தனம் சர்வ பூதங்களிலும் உள்ளும்வெளியும் நிறைந்திருக்கிற வுன்னை மனதிலே தியானம்பண்ணுகிறோமென்று வாசுதேவனுக்குவிக்கியாபனம்பண்ணிபிரத்யுமனனென்றும், அனிருத்தனென்றும், சங்கருஷணனென்றும், நித்தியமாகிய திவ்வியமங்கள விகிரகத்தைத் தரித்திருக்கிறஉனக்குநமஸ்காரம் பண்ணுகிறோமென்று மூர்த்தி பேதங்களைச் சொல்லி தன்சங்கற்பத்தினலே தரிக்கப்பட்ட மூர்த்திகளையுடைத்தானமந்திரமே மூர்த்தியாகிய யக்கியபுருஷனை சகலமுந்தெரிந்தவன் எசிப்பான், ஆகையால் நானும்சகலகருமங்களையும் பிர்மார்ப்பணமாகச் செய்துவருகிறேன், ஆகையாலிதையறிந்த சர்வக்கியனான பரமாத்மா எனக்குத் தன்னுடையஸ்வரூப ஸ்வபாவகோசரமாகிய கியானஐசுவரியத்தையும் தன்னிடத்தில்பக்தியையுங்கொடுத்தார், பிராம்மணோத்தமனே யாதொருவஸ்துவை சகலதுக்கங்களுடைய நிவர்த்திக்குச்சாதகமென்றும் சமுசாரநிவர்த்திக்கு மற்றொன்றில்லையென்றும்கியானிகள்சொல்லுகிறார்களோ தத்துவத்தைஅறியவேண்டுமென்றுநினைத்திருக்கிற பெரியோர்கள்எந்தப்பொருளை எத்தையறிந்தபின்பு இனிக்கேட்கவேண்டிய தில்லையென்று ஒழிந்திருக்கிறார்களோ சகலவேதங்களும் எந்தவஸ்துவை நிச்சயமாய்ச் சொல்லுகின்றனவோ அந்தபரமானஸ்வரூபத்தை இந்த துக்கத்திலடிப்பட்டு இருக்கிற ஜனங்களுக்கு ரசாயனமாகச்சொல்லும்.

விஷ்ணுவேநம.

## ௬-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

நம்புமாறு நயந்துவியாதனுக்
கெம்பிரானருட் கீர்த்தனமென்னது
மும்பிறப்பி லிசைத்திடுமேன்மையான்
இம்பரிற்பெறுஞ் செல்வமுற்றேனென்றான்.

வியாசருக்கு நம்பிக்கைநிமித்தியமாக நாரதர்சன்மாந்தரத்தில் கிருஷ்ணசங்கிரதனத்திலே யுண்டான தம்முடைய பாக்கியத்தைச் சொன்னாரென்று சொல்லப்படுகிறது.

இப்படி வியாசருக்கு நாரதமுனீஸ்வரர் உபதேசித்த பாகவதரகசியத்தை நைமிசாரண்ய வாசிகளான சவுனகாதிகளுக்குச் சொல்லிப் பின்னையும்நாரதர் ஸ்ரீவேதவியாசர்கேட்ட வர்த்தமானத்தைச்சொல்லத்தொடங்கினார். சத்தியவதியுடைய புத்திரனான ஸ்ரீவியாசபகவான் தேவமுனியான நாரதருடைய சன்மத்தையும் கருமத்தையுங்கேட்டபின்பு ஓய் பிராம்மணோத்தமனான சவுனகரேயென்று மறுபடியும் பிரஸ்னம்பண்ணுகிறார், வாரீர் பிர்மகுமாரரே தேவரீருடைய விக்கியாபனத்துக்கு உபதேசஞ்செய்தருளின யோகீஸ்வரர்களாகிய அந்தச் சந்நியாசிகள்போனபின்பு பாலனாகியிருந்த தேவரீர் என்னசெய்தீர் அந்தசென்மத்தில் பாலபருவத்துக்குமேலான பருவங்களிலெப்படி காலங்கழித்தீர் அந்த சரீரத்தைவிடுகிற பரிபக்குவகாலத்தில் தாசி குமாரனான அந்ததேகத்தை யெப்படிவிட்டீர் ஓய் முனிசிரேஷ்டரே காலமானது அறிந்தவஸ்துக்களுடைய நினைவைமறித்துமதியைத் தானேகெடுக்குமல்லவோ அப்படியிருக்க, இப்போ உமக்குப்போனசன்மத்தில் நீர் அநுபவித்த நடத்தைகளை எப்படி நினைத்துக்கொண் டிருக்கிறீர், என்ற வியாசரைப்பார்த்து நாரதர்சொல்லுகிறார், ஓய் வியாசரே அந்தயதீஸ்வரர்கள் எனக்குக்கியானோபதேசஞ்செய்துபோனபின்பு அந்த பாலரூபமாயிருந்த நான் என்தாயாருக்கு ஒரேபிள்ளையாகையாலும் அவளும் ஸ்திரீசாதிஅறிவுமில்லாதவள் பிராமணாள்வீட்டுவேலைக்காரியானவள் எனக்குவேறுதிக்கில்லையென்று என்னிடத்திலேயதிகமாகிய பாசமுடைத்தானவளாகிஎன்னுடையயோககேஷமத்தை நினைத்து நினைத்துதன்னாலேயொன்றுமாகாதபடியினாலே ஒருதேறுதலுங் காணாமலிருந்தாள். ஈஸ்வரனுடைய இந்தவுலகத்தி லாதீனமான ஸ்திரீசன்மமானது மரப்பாவையோ லல்லாமல் வேறல்லவென்று நினைத்து நான் அந்த மாதாவிடத்தில் அந்தப்பிராமணனுடைய வீட்டிலேதானே காத்திருந்தேன் கிழக்குமேற்குமுதலான திக்குகளையும் வருஷமாசமுதலான காலங்களையும் அறியும்படியான வயது ஐந்தானபின்பு என்னுடைய மாதாவானவள் ஒருநாள்பிராமணனுடையபசுமந்தையில் பால்கறந்துகொண்டுவருகிறவழியில் சர்ப்பம்அவள்காலில்கடித்தது அவளுங் காலதருமத்தையடைந்தாள். ஸ்ரீபகவானனவர் தன் பக்தாளுடையசாந்தியைக்கோருவானாகையால் இது என்னிடத்தில்ஸ்ரீஹரியினுடைய அநுக்கிரகமென்று தெரிந்துகொண்டு பின்பு வடதிசையைநோக்கிப் போகையால் சம்பூரணமான தேசங்களையும், பட்டணம் கிராமங்கள் ரூத்திரவாடங்கள்வனங்கள் உத்தியானவனங்களையும், நானாவிதமான வர்னங்களான காவிக்கல்லுகளாலும், மரங்களாலும், நிறைந்தமலைகளையும், மலர்ந்தகமலங்களால் விளங்கியும் தேவதாஜனங்கள் கிரீடிக்கப்பட்டுமிருக்கிற தாமனாத் தடாகங்களையும் விசித்திரமான நாதங்களுடனேகூடிய பட்சி

களாலும் மதுரமானகீதஞ்செய்கிற வண்டுகளாலும் நிறைந்தும், பெருமூங்கில்களாலும் நாணல்களாலும்குசங்களாலும் சிறுமூங்கில்களாலும் நிறைந்தமகத்தானஅடவியையும் கண்ணாலேகண்டேன், அப்பால் அதிகோரமாகிய பாம்புகள்கோட்டான்கள் நரிகளாலும்நிறைந்த பயங்கரமானவனத்தைக்கண்டேன், பின்புதேகத்தில்இளப்பையடைந்து இந்திரியங்கள் வசவிருத்தியாகாமல்பசியுந் தாகமும் மிகுதியாக இருந்ததினாலே அங்கேயிருந்தநதியில் ஸ்நானம்பண்ணி ஜலபானஞ்செய்து சிரமத்தைப்பரிகரித்துக்கொண்டு அந்த நிர்மானுஷமான ஆரணியத்தில்ஒருஅரசமரத்தினடியின்கீழிருந்துகொண்டு அந்தயோகிகள் உபதேசஞ் செய்தபடி என்னிடத்தில் அந்தரியாமியா யிருக்கிற பரமாத்மாவை அறிவினாலே நினைத்து சிந்தித்து பக்தியினாலேமனதைநிறுத்தி கமலங்கள்போலிருக்கிற ஹரிசரணங்களை தியானம் பண்ணி அந்த ஹரிசரணங்களைப் பிரத்தியட்சமாகக்காணவேண்டுமென்கிற ஆசை அதிகமாகையாலே கண்களிலே ஆனந்தபாஷ்பங்கள்பெருகின ஸ்ரீஅரியும் என்னுடையஇருதயத்தில் மெள்ளமெள்ளஆவிற்பவித்தார். அதனாலே மிகுதியான பக்தியுண்டாய் ஆனந்த பரவசமாகிய என்னுடையதேகத்தில் புளகாங்கித முண்டாயிற்று, வாரீர் வியாசமுனீஸ்வரரே அப்போது ஆனந்தமாகிற சமுத்திரத்தில் மூழ்கிய நான் மற்றொன்றையுங்காணமற்போனேன் பின்பு என்மனதை மற்றொருவிடத்தில் போகவொட்டாமல் நிறுத்தி தன்வசம் செய்துகொண்டஸ்ரீஅரியினுடைய திவ்விய மங்களஸ்வரூபத்தைக் காணாமல் அதனால்பிறந்த ஆந்தசுகத்தையிழந்து என்னுடைய இருதயமும் சூனியமா யிருக்கையால் திடுக்கிட் டவனைப்போலே எழுந்திருந்து பின்னையும் அந்தஹரிரூபத்தைக்காணவேண்டுமென்றுநினைத்து மனதைஇருதயத்தில் நிறுத்தியும் புத்தியினாலே முன்போல்காணமாட்டாமற்போனேன், ரோகியானவன் இச்சையானபடி வயிறுநிறைகிறமட்டுக்கும் போசனம்பண்ணக்கூடாமல்எப்படி தவிப்பானோ அப்படிஅந்தரூபத்தைக்கண்டு திருப்தியடையவேண்டுமென்றுநினைத்து ஜனங்களில்லாத அந்த வனத்தில் தப்பித் திரிகிற என்னை வேதார்த்தகளாலும் அளவிடப்படாதமகிமையை உடைத்தாகிய பகவான்என்னுடையசுகத்தை மிகுதியும் பரிகரிக்கிறவன்போல் கம்பீரமாகியும் வழுவில்லாத எழுத்துக்களாயும்இருக்கிறவார்த்தையைச்சொன்னார். பிள்ளாய் நீஇந்தஜன்மத்திலேஎன்னைப்பார்க்கிறதற்கு யோக்கியனல்ல,ரசோகுண தமோகுணங்கள் தவிர்ந்து சுத்தசத்வமாகிய மனதையுடைத்தான யோகிகளாலேயும் பார்க்கிறதற்கரிதான நான் அந்தகுணங்கள்தவிராத உன்னைப்போலொத்தயோகிகளுக்கு பிரத்தியட்ச மாகமாட்டேன், நீ பண்ணுகின்றசாகசம் எனக்கு ஆச்சரியமா யிருக்கிறன, இப்போது ஒருதரம் என்னை நீகாணும்படியாக நான் சங்கல்ப் பித்ததேனென்றால் இந்த ரூபத்தைக்கண்ட உனக்குமிகுதியான ஆசை பிறக்கவேண்டு மென்று காண்பித்ததேயல்லாமல் வேறல்ல, ஆகையால் உன்னுடைய இருதயத்தின் பிரத்தியக்ஷத்தில் இப்போதுகண்டஎன் திவ்ய மங்கள விக்கிரகத்தை மிகவும் இச்சித்துக் கொண்டிருஎன் ஸ்வரூபத்தைநினைத்தும் இச்சித்து மிருக்கிறவனுடைய பாவங்கள் பரிகாரமாகும் சாத்விகளான யோகிகளிடத்தில் சிலராலஞ்சேவைபண்ணி அவர்கள்அனுக்கிரகம்பெற்ற உன்புத்தியானது என்னிடத்தில் நிலையாய்நின்றபடியினாலே இடைவிடாமலிருக்கிற அரிஷ்டவர்க்கங்களுடனே கூடிய இந்த சரீரத்தைவிட்டுப் பரமபாகவதனான சரீரத்தை எடுக்கப்போகிறாய்அப்போது என்னை எப்பொழுதும்காண்பாய் உன்புத்தியானது இப்போது என்னிடத்தில் நிலைபாய்நின்றபடியினாலே இனிமேல் ஒருகாலத்திலும் உனக்குத்தீங்கில்லைஇந்தவுலகங்களுக்குப் பிரளயங்கள் தந்தபின்பு நீமற்றொருசெனனம்எடுத்திருக்கையிலும் என் அனுக்கிரகத்தினாலே என்னுடையஸ்மரணம் உனக்குமறக்கமாட்டாது என்றுசொல்லிப் பின்பு ஆகாசரூபமான அந்தப்பரமேசுவரன் அந்தரத்தானமாய் எழுந்தருளினார், நானுமீமகத்துக்களுக்கெல்லாம்மகானுபாவனாகிய அந்தப்பரமபுருஷனைக்குறித்து திக்குநோக்கி சாஷ்டாங்கமாகவந்தனஞ்செய்தேன் அன்றுமுதல் அபிமானத்தைவிட்டு அந்த அனந்தனுடைய நாமங்களை உச்சரித்துக்கொண்டு அந்தபகவான் உலகோபகார நிமித்தியமாகச்செய்த அதிகாப்பியமானலீலைகளை நினைத்துக்கொண்டு மற்றொருவஸ்துவிலும் ஆசையில்லாமல் என்மனதிலேதானேசந்தோஷப்பட்டுக்கொண்டு நின்றவிடத்தில் நில்லாமல் பூமியெல்லாம் திரிந்துக்கொண்டு மதத்தையும்மாச்சரியத்தையும்விட்டு ஸ்வாமிநியமித்த காலத்தைக்குறித்துக்காத்திருந்தேனென்று நாரதபகவான் வியாச முனீஸ்வரருக்குச்சொன்ன தம்முடைய சென்மதருமங்களைச் சூதபுராணிகர் சவுனகாதிகளுக்குச் சொல்லிப் பின்னையும் ஓய்பிராமணோத்தமர்களே மற்ற விரதங்களையும் சொல்லுகிறேன் கேளும் அந்தவியாசனைப்பார்த்துநாரதர்மறுபடியும் சொல்லுகிறார் இப்படி ஸ்ரீகிருஷ்ணனிடத்தில்பற்றினமனது எனக்கு மற்றொரு விடத்தில் இச்சையில்லாமலிருக்கையாலேபிரசன்னமானமனதையுடைத்தான எனக்குப் பரிபக்குவகாலம்வந்தது மழையில்லாமல் தாபத்தினாலே தபிக்கப்பட்ட ஜனங்களுடைய மனத்துக்குச் சந்தோஷ முண்டாகவேண்டிவெகுமழைக்கு ஏதுவான மிகுதியும் பிரகாசமாகிய மின்னல் போல்நெருங்கிவந்த பரிபக்குவகாலத்தைநினைத்து பர

மபாகவதரூபமான சரீரத்தை யடையவேண்டுமென்று மிருதியும் நினைத்தேன் எனக்குப்பிராப்தகருமத்தாலே வந்திருந்த பஞ்சபூதியமாகிய தேகமானதுவிழுந்துபோனபின்பு பிரளயகாலத்தில் இவ்வுலகங்களை தன்னிடத்தில்வைத்துக்கொண்டு சமுத்திரஜலத்தில் பள்ளிகொண்டிருக்கிற பரமாத்மாவிடத்திலசேர்ந்த நித்திரைசெய்வதாகநினைத்து நித்திரைபண்ணுகிற பிர்மாவினுடைய மூச்சுக்காற்றுடன் அவனுடனே பிரவேசித்திருந்தேன். சதுரயுகசகஸ்திரமானபின்பு எழுந்திருந்து இந்தவுலகத்தை முன்போலசிருஷ்டிக்க நினைத்த சதுர்முகனுடைய பிராணவாயுவினிடத்திலிருந்தும்மரீசிமுதலான ரிஷிகள் ஜனித்தபோது அவர்களுடனே நானும் ஜனித்தேன், அன்றுமுதல் மூன்றுவகையாகப் பிறக்கப்பட்ட இந்த பதினாலுலோகங்களிலும் உள்ளும்புறமும்சஞ்சரித்தாலும் ஸ்ரீமஹாவிஷ்ணுவினுடைய அனுக்கிரகத்தினாலே என்னுடைய விரதங்களுக்குக் குறைவில்லை பிரமதேவனாலே கொடுக்கப்பட்ட இந்த வீணையைமீட்டி நாதபிரமத்தாலே அலங்கரித்து ஸ்ரீஹரிகதைகளைக் கானஞ்செய்துகொண்டு சஞ்சரிக்கிறேன் தன்னுடைய திருவடியிலே சர்வலோகபாவன தீர்த்தமான கங்கையை ஜனிப்பித்தும், தன்னுடைய லீலா சிரவணத்தால் பிரசன்னனாகிற ஸ்ரீகோவிந்தன் தன்மகிமைகளைக் கானஞ்செய்கிற என்னிட இருதயத்தில் அழைக்கப்பட்டவனைப்போல சீக்கிரமாகப்பிரகாசித்துத் தரிசனத்தைக்கொடுக்கிறான்.

விஷயசம்பந்தத்தினாலே அடிக்கடிகலங்கி அச்சுதனிடத்தில் மதியைநிறுத்தமாட்டாத பிராணிகளுடைய சமுசாரமாகிற சமுத்திரத்தைத்தாண்டுவித்துஅவர்களைக் கரைசேர்க்கவேண்டுமென்று நினைத்தால் ஸ்ரீஹரிதியானஞ்செய்கிற பாகவதனாலே செய்யப்படுகிற ஹரிலீலாவர்ணமாகிறதெப்பமேயல்லாமல்வேறில்லைகாமலோபாதிகளாலே கலங்கின மதியையுடைய ஆத்மாவானவன் ஸ்ரீமுகுந்தசேவையினாலே எப்படியானால்சீக்கிரமாக சாந்திபெறுகிறானோ அப்படியே இயமநியமாதிகளான யோகங்களினாலே சாந்திபெறமாட்டான்.

வாரீர் பரிசுத்தமூர்த்தியே யாதொரு அர்த்தங்களைப் பிரஸனஞ்செய்கிறீரோ அதுகளைச் சம்பூரணமாகச் சொன்னேன் என்னுடையசனனத்தையும் ரகசியத்தையும், நடத்தையையும், உம்முடையஜன்மத்தையும், உம்முடையசீலத்தையும், நீரினிமேல் செய்யவேண்டிய காரியத்தையும் பரமாத்மாவினுடைய முகவுல்லாசஜனகமாகவேசொன்னேன் என்றுசொன்ன நாரதரிஷியினுடையவார்த்தையை சவுனகாதிகளுக்குச்சொல்லிப்பின்னையும் சவுனகாதிகளைப்பார்த்துச் சூதர்சொல்லுகிறார். ஓய் சவுனகாதிகளே ஸ்ரீநாரதபகவான்வாசவிபுத்திரனான வியாசனைப்பார்த்து இப்படிசொல்லி வியாசராலே அனுப்புவித்துக்கொண்டு தாம்கோரிவந்தகாரியம்தலைகூடினதினாலே மிகுதியும் சந்தோஷமடைந்து வீணையைமீட்டி கானஞ்செய்துகொண்டு தம்முடையசித்தமுவந்தவிடத்தில் நடந்தார், தன்னியரான இந்ததேவரிஷி சார்ங்கமென்ற வில்லைத் தரித்து விளங்கின ஸ்ரீஹரியினுடைய கீர்த்தியை கானஞ்செய்துமகித்து தன்கையிலிருக்கிற வீணையினால் சமுசாரமாகிறபிராணிகளை அந்தத் துன்பத்தைவிலக்கி சுகத்தைக்கொடுக்கிறான் இது என்னஆச்சரியம் இது என்னகிருபைஎன்று சொன்ன சூதனைப்பார்த்து சவுனகர்கேட்கிறார்.

மதுசூதனயநம:

## எ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பண்டபிமன் பயந்தபரிட்சித்து
கொண்டஜன்மங் குறிக்கத்துயில்புரிந்
தண்டுமக்கள் வயிற்ருலஸ்வத்தமன்
தெண்டனையின்ன தென்றுதெரித்திடும்.

பாகவதத்துக்குச்சுரோதாவான பரிட்சித்துவினுடைய ஜன்மத்தைச் சொல்லுகைக்குத் தூங்காநின்றபிள்ளைகளினுடையபயத்தினாலே அசுவத்தாமாவினுடையதெண்டனை சொல்லப்படுகின்றது.

வாரீர் சூதரோ? நாரதர்புறப்பட்டுப்போனபின்பு அவர் அபிப்பிராயத்தை அறிந்துகொண்ட வியாசபகவான் அப்பால் என்னசெய்தாரென்றுகேட்கிற சவுனகரைப்பார்த்துச் சூதர் சொல்லுகிறார். பிராமணராலே நிறைந்த சரஸ்வதிநதியினுடைய மேலண்டைக்கரையில் சம்மியாப்பிராசகமென்ற பெயரால் விளங்கின க்ஷேத்திரத்தில் ரிஷிகள் சத்திரயாகஞ்செய்த புண்ணிய பூமியாகையால் கற்பிக்கப்பட்டும், அவ்விடத்தில் நிரந்தரமாகிய இலந்தைக்காட்டினால் சூழப்பட்டிருக்கிற தம்முடைய ஆசிர்மத்தில் அஸ்தபாதப்பிரக்ஷாளனஞ்செய்து ஆசமனமுஞ்செய்து யோகத்துக்குயோக்கியமான ஆசனங்கெட்டிசெய்துகொண்டு சித்தத்தை மற்றொருவிடத்திற்போகாமல் மறித்துத் தியானஞ்செய்தார். பக்தியோகத்தினால் நிர்மலமான மனதை பரமாத்மாவினிடத்தில் சலியாமல் நிறுத்தினவுடனே சுபகுணபரிபூரணனானபரமபுருஷனையும் அவன் அவலம்பலத்தால் உலகங்களை மயக்கிறமாயையும் பிரத்தியக்ஷமாகக்கண்டார், அறிவினால் தன்னைக்காட்டிலும் உத்தமனாகிய சீவாத்மாவைத் தான் சூழ்ந்து அவனை மோகிப்பித்து அவனையும் தன்னைப்போல திரிகுணாத்மகனென்று போதஞ்செய்வித்து

த் தன்னுல் கற்பிக்கப்பட்ட சனனமரண சுவர்க்கநரகங்
களாகிற அனர்த்தங்களை அவன் தன்னுடையதென்று
நிச்சயிக்கும்படியான மகிமையுடைய மாயையும் அந்த
மாயா நிவர்த்தகனுன பரமாத்மாவையும் பிரத்தியக்ஷ
மாகக் கண்டபின்பு அனர்த்தமான சமுசாரத்துக்குநிவ
ர்த்தகமானது கியானகருமேந்திரியங்களால் அறியக்கூ
டாத ஸ்ரீஹரியிடத்தில் பக்தியோகமேயல்லாமல் வேறி
ல்லையென்று நிச்சயஅறிவில்லாத இந்தவுலகங்களுடை
யஉச்சிவனுர்த்தமாகசாத்வதகுலத்தில் அவதரித்தஸ்ரீகி
ருஷ்ணனுடைய சரித்திரத்தைக் கீதமாகப்பாடினுர். இ
ந்தக்கதையைக்காதினுலே கேட்கையிலேதானேபரமபு
ருஷனுன ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் பக்திபிறந்து சமுசா
ரிகளுடைய அக்கியானங்களையும் பயசுகங்களையும் பரி
கரிக்கும் இப்படி பகவானுடையமகிமையைச்சொல்லு
கிறதாகவும் நாரதரால் உபதேசிக்கப்பட்டுமிருக்கிற சா
த்வசங்கீதையை ஆதிமுதல்தொடங்கி பரிபூர்ணமாகச்
செய்து நிவிர்த்திதருமமே முக்கியமாகநினைத்திருக்கிற
ஸ்ரீசுகயோகிக்கு உபதேசஞ்செய்தாரென்றுசொல்லுகி
றசூதரைப்பார்த்து சவுனகர்கேட்கிறுர்,ஓய்சூதரே! அந்
தசுகயோகிநிவிர்த்தி தருமங்களில் ருசியுண்டாகி சகல
வஸ்துக்களிலும் ருசியில்லாமல் உபேட்சித்தவர் எந்த
க்காரணத்தினுல் அதிகவிஸ்தாரமாகிய இந்தபாகவதசங்
கீதையைப் பரமாத்மாவிடத்திலிருக்கிற மனதைத்திரு
ப்பி எப்படிபடித்தாரென்றுகேட்ட சவுனகருக்குச்சொ
ல்லுகிறுர்.

ஓய் சவுனகரே, பரமாத்மாவிடத்தில் தங்கள் மதியி
னுல்நிறுத்தின மனதையுடைத்தாகி அந்தசுகத்தை அ
னுபவித்தும் மற்றொருவிடத்தில் ஆசையில்லாமலு மி
ருக்கிற யோகிகளும் சர்வாந்திரியாமியான பரமாத்மா
விடத்தில் ஒருபலனைக்கோராமல் பக்திபண்ணுவார்கள்
அது எதினுலென்றுல் அந்தஸ்ரீஹரி அப்படிப்பட்ட தி
வ்யகுணங்களால் வசிகரிக்கப்பட்ட புத்தியையுடைத்தா
னபடியினுலே அந்த சுகபகவானும் இப்படி அதிமகத்
தாகிய இந்தபாகவதமென்கிற சங்கீதையைப் படித்துத்
தம்முடைய இருதயத்தில் தரித்து ஸ்ரீஹரிபக்தருக்கு
உபதேசிக்க வேண்டுமென்று நிரந்தரமாய் நினைத்திருந்
தார். ஓய் சவுனகரே, சுகமுனி ஸ்ரீபாகவதத்தை ஏன்ப
டித்தாரென்று நீர்கேட்டதற்கு நானும் உத்தரஞ்சொன்
னேன். ஸ்ரீகிருஷ்ணனுடைய கதைகளைச் சொல்லவே
ண்டுமென்று நீங்கள் கேள்விசெய்ததற்குஅந்தங்கதைக்
குச் சங்கிநியாகியபரிட்சித்துமகாராஜாவினுடைய ஜன்
மமும் அவன்நடத்தையும்முடிவில்அவன் கதியடைந்த
தும். பாண்டுகுமாரராளான தருமராஜா முதலானபேர்
சொர்க்காரோகணம் பண்ணுங்காலத்தில் நடந்தவிருத்
தாந்தங்களையும் ஸ்ரீகிருஷ்ணனுடைய கீர்த்திகளுக்குக்

காரணமாகையால் சொல்லுகிறேன் சாவதானமாய்க்கே
ளுங்கள். எப்போயுத்தத்தில் கௌரவாளிலேயும் ஸ்ரு
ஞ்சயாளிலேயும் அதிவீரர்களான ராஜாக்கள் யுத்தங்க
ள்செய்து வீரலோகத்தைஅடைந்தார்களோ அப்போ
பீமசேனனுடையகதையில் அடிப்பட்டுமுறிந்த தொடை
டையையுடைத்தானதுரியோதனன்இந்தப்பூமியில் ஈன
சத்வனுகி விழுந்திறந்தசமையத்தில் அவனுக்கு இதஞ்
செய்யவேண்டுமென்று நினைத்த அசுவத்தாமா துரோ
பதை குமாரராளான உபபாண்டவர்கள்ஐவரையும் நித்
திரைபண்ணுகிற சமையத்தில்பாண்டவர்களென்று பி
ரமித்து சிரசுகளை அறுத்தானே, அந்த ஈனகிருத்திய
த்தைத் திரியோதனன் தனக்குப் பிரியமாகநினைக்கவில்
லை சகலஜனங்களும் துரோணகுமாரன் நிஷேதமான
வேலையைச் செய்தானென்று நிந்தித்தார்கள். அந்தச்ச
மையத்தில் உபபாண்டவர்களுக்கு மாதாவானதுரோப
தைதேவி தன்னுடைய சிசுக்களுடையபயங்கரமான ம
ரணத்தைக்கண்டு பரிதாபப்பட்டு கண்களில் தாரைதா
ரையாகக் கண்ணீர்பெருகவிட்டுக்கொண்டு அழுகிறசம
யத்தில் கிரீடமாலியானஅர்ச்சுனன் அவளைச்சமாதான
ஞ்செய்தான். வாராய் துரோபதை காண்டீபமென்கிற
வில்லிலிருந்து விடப்பட்ட தீட்சணமான பாணங்களா
ல் பிராமணஅதமனுன அசுவத்தாமனுடையசிரசை அ
றுத்து உன்மனதில்இருக்கிற சோகத்திலுண்டானகண்
ணீரைமாற்றுகிறேன். அந்தச்சிரசின்மேல் உன்பாதத்
தைவைத்து உன்புத்திராளுக்குச் சமுஸ்காரம்பண்ணி
னபின்பு ஸ்நானம்பண்ணப்போகிறுயென்று தனக்குப்
பிராணநாயகியான துரோபதையைப்பார்த்து விசித்திர
மாகியும் சமரசமாகியுமிருக்கிற வார்த்தைகளால் சமா
தானஞ்செய்து தனக்கு மித்திரரான அச்சுதனைச் சார
தியாக முன்னிட்டுக்கொண்டு கவசத்தைத் தொடுத்துக்
கொண்டு பயங்கரமான காண்டீபமென்கிற தனுசைக்
கையில்தரித்துஆஞ்சநேயனுகிய துவசத்தினு லலங்க
ரிக்கப்பட்ட ரதத்திலேறிக்கொண்டு தனக்குத்துரோகி
யான குருபுத்திரனைத்துரத்திப்போயினுன். இப்படிது
ரத்திக்கொண்டுவருகிற குமாரரூபியானஅர்ச்சுனனை அ
ந்த அசுவத்தாமாவெகுதூரத்தில் கண்டுபயந்து தன்பி
ராணனை ரட்சித்துக்கொள்ள வேண்டுமென்று ருத்திர
னைக்கண்டு பயந்து ஓடின ஆதித்தியன்போல இந்தப்பூ
மியில் தன்னோட்டத்துக்கு எவ்வளவு விசாலங்கொடுத்
ததோ அவ்வளவுதூரம் ரதத்துடனேஓடினுன். துரோ
ணகுமாரனுன அசுவத்தாமாதன்ரதத்தில்கட்டின குதி
ரைகள் நடக்கமாட்டாமல் இளப்படைந்தபின்பு தன்னை
ரட்சிக்க மற்றொருவரில்லாமையிருக்கையால் அதற்கு
பிரமாஸ்திரமேகதியல்லாமல் வேறில்லையென்றுநினைத்
துக் கையினுல் ஜலத்தை ஸ்பரிசித்து மனதினுல் தியா

னஞ்செய்துகொண்டு அந்த அஸ்திரத்தினுடைய வுபச
ங்காரத்தைத் தானறியாமலிருந்தாலும் தன்னுடையபி
ராணனுக்குச் சங்கடமானசமையமாகையால் அதைப்
பிரயோகஞ்செய்தான். அந்தஅஸ்திரத்திலிருந்து அதி
பயங்கரமான ஒருதேஜசுபிறந்துசகல திக்குகளையும் மூ
டிக்கொண்டு சுவாலாமயமா யெரிகின்றதைக்கண்டுஅர்
ச்சுனன் தன்பிராணனுக்கு ஆபத்துவந்ததென்று நினை
த்து ஸ்ரீகிருஷ்ணனைப்பார்த்து ஒருவார்த்தைசொன்னா
னென்று ஆச்சரியத்துடனே சவுனகரைப்பார்த்துச்சூத
தர்சொல்லுகிறார். வாரீர்சவுனகாதி ரிஷிகளே? அர்ச்சு
னன்சொன்னவார்த்தையைச் சொல்லுகிறேன். ஓய்கிரு
ஷ்ணமஹாவாகுவே பக்தாளுடையபயத்தைப் பரிகார
ஞ்செய்கிறவரே சமுசாரத்தில் தாபத்திரையங்களால் த
பிக்கப்படுகிற பிராணிகளுக்கு அந்த தாபத்திரயங்களை
நிவர்த்திசெய்து மோட்சத்தைக்கொடுக்கிறவர்நீர்ஒருவ
ரேயல்லாமல் வேறில்லை பிரகிருதிக்கு நியந்தாவாகியும்
தனக்குத்தானே சுவாமியாகியும்ஜெகத்காரணமாகியும்
இருக்கிற புருஷனும் தேவரீரேயல்லாமல் வேறில்லை,
தேவரீர்யொனசக்தியினல் மாயாப்பிரகிருதியை உம்மி
டத்தில்சம்மதிக்கவொட்டாமல் தூரத்தில்விலக்கி கியா
னனந்தமாகிய நிசரூபத்தில்விளங்கிக்கொண்டு அந்தமா
யையினல் சூழப்பட்டு மோகத்தையடைந்திருக்கிறசீவ
சமுகங்களுக்கு உன்மகிமையால் தருமார்த்த காமமோ
ட்சங்களாகிற சிரேயசுக்களைக்கொடுக்கிறீர் உம்முடைய
இந்தஅவதாரம்பூபாரத்தைபரிகரிக்க வேண்டுமென்று
இச்சையினல் சங்கல்பிக்கப்பட்டிருந்தாலும் கியானனை
ந்த ஸ்வரூபமாகையினல்மற்றென்றையும் நினையாமலி
ருக்கிற உன்னடியார்கள் அடிக்கடிநினைத்துத் தியானஞ்
செய்து கடைத்தேறவேண்டுமென்று சங்கல்பித்ததே
யல்லாமல்வேறில்லை, இப்போது அதிபயங்கரமாகியஒ
ருதேஜசுநாலுபக்கமும் சுற்றிக்கொண்டுவருகுது ஓய்
தேவதேவனே இது இப்படிப்பட்டது இந்தவிடத்திலி
ருந்துவருகுதென்று நானறியேனென்று விக்கியாபனம்
பண்ணின அர்ச்சுனனுக்கு ஸ்ரீபகவான் அருளிச்செய்
கிறார். வாராய்அர்ச்சுனதுரோணபுத்திரன் பிரயோகித்
தபிரமாஸ்திரத்தினுடைய தேஜசு என்று தெரிந்துகொ
ள்ளும் அவன் இந்த அஸ்திரத்துக்கு உபசங்காரத்தை
யறியா மலிருந்தாலும் தனக்குமரணகாலம் வந்ததெ
ன்றுதெரிந்து பிரயோகித்தான் மற்றொருஅஸ்திரங்கள்
இந்த அஸ்திரத்தைத் தடுக்கமாட்டாது. இந்தஅஸ்திர
த்தினுடையமகிமையைநீயறிந்தவனகையால் உலகமெ
ல்லாம் பரவிவருகிற இந்தஅஸ்திரதேஜசை பதில் இந்
தஅஸ்திரத்தினல் நீதடுக்கவேண்டுமென்று சொன்ன
ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய வார்த்தையைச் சூதர்ச
வுனகாதிரிஷிகளுக்குச் சொல்லிப்பின்னையுஞ் சொல்லு

கிறார். இப்படிபகவான்சொன்ன வார்த்தையைக் கேள்
விசெய்து அர்ச்சுனன்எதிரியான வீரரைச்செயிக்கும்வ
ல்லமையுள்ளவனகையால் தன்னுடைய அஸ்திரத்துக்
குப் பிரதக்ஷணம்பண்ணி ஆசமனஞ்செய்து தானும்பி
ரமாஸ்திரத்தைப் பிரயோகித்தான் அந்தஇரண்டு அஸ்
திரங்களும் சுவாலைகளை யுண்டுபண்ணி எங்கும்வியாபி
த்து ஒன்றோடொன்று அடித்துக்கொண்டு பூமியையு
ம்ஆகாசத்தையும் சுவர்க்கத்தையும் சூரியாக்கினிகளை
ப்போல நிறைந்ததுகள். அந்தஇரண்டு அஸ்திரங்களு
டையசுவாலைகளால் தபிக்கப்படுகிற பிராணிகள்பிரள
யகாலம்வந்ததென்று நினைத்தார்கள். இப்படிபிரஜைக
ளுக்கு உபத்திரவஞ்செய்கிற அஸ்திரசுவாலைகளால் உ
ண்டாகிய சங்கடத்தையும், ஸ்ரீவாசுதேவனுடைய அபி
ப்பிராயத்தையும் தெரிந்துகொண்டுஅர்ச்சுனன் உபசங்
காரமந்திரத்தால் இரண்டு அஸ்திரங்களையும் உபசங்கா
ரஞ்செய்தான், அப்போதுகுரூரமாகிய கருமத்தைச்செ
ய்த கௌதமிகுமாரனன அசுவத்தாமாவை அர்ச்சுன
ன்கோபத்துடனே சிவந்தகண்களால் பார்த்துப்பிடித்
துப் பசுவைக்கட்டுமாப்போல் பாசத்தால் கட்டினன்.
இப்படிசத்துருவைக் கயிற்றால்கட்டி தன்னுடைய இ
ருப்பிடத்துக்குக் கொண்டுபோகவேண்டுமென்று நினை
த்த அர்ச்சுனனைப்பார்த்து ஸ்ரீபுண்டரீகாக்ஷனன கிரு
ஷ்ணன் கோபத்துடனே ஒருவார்த்தைசொல்லுகிறார்.
வாராய் குந்திகுமாரனே, இந்தப் பிராமணோத்தமனை
பிராணனோடே விடுகிறதாகநினையாமல் சங்காரம்பண்
ணு அதேனென்றால் தனக்கு ஒரு அபகாரஞ்செய்யாம
லிருந்த பாலரைராத்திரியில் தூங்குகிறசமயத்தில் சங்
கரித்தவனகையால் வேறொருநினைவினல்நினைத்துத்தா
ன்செய்யவேண்டியகருமத்தில் நினைவு விட்டிருந்தவனை
யும், மூர்ச்சித்தவனையும், பித்தனையும், நித்திரை பண்
ணுகிறவனையும், பாலனையும், ஸ்திரீகளையும், காரியாகா
ரியங்களைதெரியாத அறிவில்லாதவனையும், சரணமடை
ந்தவனையும், இரதமிழந்தவனையும், பயந்தவனையும், இ
வர்கள் எத்தனை சத்துருவானலும், க்ஷத்திரிய தரும
ம்தெரிந்தவர்கள் கொல்லலாகாது. யாதொரு துஷ்டன்
தன்பிராணனை ரட்சிக்கவேண்டி மற்றொருவர் பிராண
னைவாங்குகிற பாபிஷ்டன் அந்ததோஷத்தால் அதோ
கதியைஅடைவான். ஆகையினல் தயவில்லாதவனைச்ச
ங்கரித்தால் அது பாபிக்கு சிரேயசேயாம் இதுவல்லா
மல் நீ துரோபதையைப்பார்த்து வாராய் மானவதியே
யாதொருவன் உன்புத்திரரைச்சங்கரித்தானேஅவன்த
லையைக்கொண்டுவருகிறேனென்றதை நானுங்கேட்டிரு
க்கையில் பிரதிக்கினைபண்ணினவன் நீயாகையால்நல்ல
குலத்திற்பிறந்து அந்த குலாசாரத்தைத்தவிர்ந்தும் த
ன்னுடையசுவாமிக்கு விருத்தமான கருமத்தைச்செய்

றும் உன்னுடையபுத்திரர்களைச் சயகாரம்பண்ணியும்இப்போது உன்னைக்கொல்லவேண்டுமென்று பிரமாஸ்திரத்தைப் பிரயோகித்துமிருக்கிற இந்தப்பாவியைவீரரில்சிரேஷ்டனான நீ கொல்லுகிறதேஞாயமென்று அர்ச்சுனனைப்பார்த்து ஸ்ரீகிருஷ்ணமூர்த்திசொன்னவார்த்தையைச் சூதர்சவுனகாதிகளுக்குச்சொல்லிப் பின்னையுஞ்சொல்லுகிறார்.

இப்படி குந்திகுமாரனைப்பார்த்து மனோதரும நிச்சம் எப்படிப்பட்டதென்று சோதிக்கவேண்டி சொன்ன கிருஷ்ணன் வசனத்தை அர்ச்சுனன்கேட்டு அவன்மக்களைக்கொன்றவனானாலும் தன்னுடைய குரு குமாரனாகையால் அசுவத்தாமாவைக் கொல்லுவதற்கு மனதில்லாமல் தான் இறங்கியிருக்கிறவிடத்தில் ஸ்நேகிதனாகவும் சாரதியாகவுமிருக்கிற கோவிந்தனுடனேவந்து மக்களுடைய மரணத்தால் சோகித்திருக்கிற பிராணநாயகியானதுரோபதைமுன்னே அசுவத்தாமாவை நிறுத்தினான். பசுவைப்பிடித்துக் கயிற்றினாற் கட்டினாற்போல் கட்டியிருக்கிற அசுவத்தாமன் தான்செய்த அநீதத்தினால் தலையை இறங்கிச்கொண்டிருக்கிற குருகுமாரனை துரோபதைதேவியானவள் மிகவும் தயவுடனே நமஸ்காரஞ்செய்து - அர்ச்சுனனைப்பார்த்து குருகுமாரனான இவனைக் கட்டிக்கொண்டு வருகிறது ஞாயமாவென்று சொல்லிக் கட்டைவிடுவிடு இவர்பிராமணோத்தமர்இதுவுமல்லாமல் உனக்குக்குருவானவரென்றுசொல்லி அந்த அசுவத்தாமாவிடத்தில் குருபக்தி செய்யவேண்டியது ஏனென்றால் ரகசியமாகத் தனுர்வேதத்தைப் பிரயோகத்துடனேயும் உபசங்காரத்துடனேயும் சகல அஸ்திரங்களையும் யாதொரு துரோணாசாரியருடைய அனுக்கிரகத்தினால்அப்பியாசஞ்செய்தீரோ அந்தத்துரோணாசாரியார் தம்முடைய புத்திரனான அசுவத்தாமாவுடையரூபமாகவிருக்கிறார் இதுவுமல்லாமல் துரோணாசாரியருடைய தங்கையான கௌதமிவீரனைப் பெற்றவளாகையால் தன்மகனுக்கு இந்தசிரமத்தைக்கண்டு தன் சரீரத்தை நிறுத்தமாட்டாள். அவளுக்கு இந்தத்துன்பம்வரும்படிக்கு நாம்நடக்கலாகாது, ஆகையால் சகலதருமங்களையும் தெரிந்தமகானுபாவனே உங்களால்மகத்தாகிய கவுரவத்தை அடைந்து விளங்கின இந்தக்கவுரவகுலத்துக்கு இப்போது இப்படிப்பட்டபாவம் வருகிறகாரியம்உத்தமமல்ல உலகத்தில் கவுரவாளுடைய குலத்தைக்கேட்டவர்களெல்லாம் கைகூப்பிவந்தனஞ்செய்யும்படியாகிப் பிரகாசித்துவந்த இந்தக்குலத்துக்குஅபகீர்த்திவராமல் ரட்சிக்கவேண்டும் இதுவுமல்லாமல்இந்த அசுவத்தாமாவினுடைய மாதாவாகிய கவுதமிமகாபதிவிரதையாகையால் அவள் புத்திரசோகத்தினால் என்னைப்போல்கண்ணுங் கண்ணீருமாய் அழுகிறது உசிதமல்ல யாதொருராஜாக்கள் கோபத்தை உண்டுபண்ணினால் அந்தராஜவம்சம்பிராமணகோபத்தினால் தன்வர்க்கத்துடனே சோகத்தைஅடையும்என்று துரோபதைதேவி அர்ச்சுனனைப்பார்த்து விபாசங்கத்துடனே சொன்ன விருத்தாந்தத்தை சவுனகாதிகளுக்குச்சொல்லிப் பின்னையுஞ்சொல்லுகிறார். இப்படி தருமத்துடனேயும் ஞாயத்துடனேயும், தயையுடனேயும், சத்தியமாகவும், வைஷம்மியமில்லாமலும் துரோபதைதேவி சொன்ன மகத்தானவார்த்தையை தருமராஜாவானவர்கேட்டு மிகவுஞ்சந்தோஷத்துடனே துரோபதையைசிலாக்கித்தார்பிராமணர்களே கேளுங்களென்றுசொல்லி சூதர்சொல்லுகிறார்.

அப்படியே நகுலனும், சகாதேவனும், யுயூதானனும் அர்ச்சுனனும், தேவகிகுமாரனான ஸ்ரீகிருஷ்ணபகவானும்மற்றுமுள்ள ராஜஸ்திரீகளும் அந்தவார்த்தைக்குசந்தோஷித்தார்கள். அந்தச்சமையத்தில் வீமசேனன் சொல்லுகிறான் தனக்குப்பிரபுவான ராஜாவுக்கும் தனக்கும் ஒரு பிரயோசனமில்லாமல் நித்திரைபண்ணுகிற சிசுக்களைக்கொன்ற இந்தப்பாபிஷ்டனைச் சங்காரஞ்செய்தால் அதுஅவனுக்கு க்ஷேமமாகவேயிருக்கும்என்று பொருமையுடனே சொன்னவார்த்தையைக் கேள்விசெய்த ஸ்ரீகிருஷ்ணன் தமக்குமித்திரனாகிய அர்ச்சுனனைப்பார்த்து மந்தகாசஞ்செய்தவர்போல்ஒருவார்த்தைசொல்லுகிறார். வீராய் அர்ச்சுனனே வதம்செய்கிறதற்கு யோக்கியனான பிராமணஅதமனாகவிருந்தானாகிலும் அவனைக்கொல்லலாகாதென்றும்மகத்தாயியானவனைச்சீக்கிரமாகக் கொல்லவேண்டுமென்றும் இந்த இரண்டுசாஸ்திரங்களையும் நானேசொன்னேன் ஆகையால் இரண்டையும் நீபரிபாலனஞ் செய்யவேண்டும் உன்னுடைய நாயகியாகிய பாஞ்சாலியைசமாதானஞ்செய்கிறபோது உன்மகனைக்கொன்றவன் றலையை அறுத்துக்கொண்டு வருகிறேனென்றுநீசெய்தபிரதிக்கினையும், பீமசேனனுடைய வசனத்தையும் சத்தியமாகநிறுத்திஎனக்கும் பாஞ்சாலிக்கும் இஷ்டமானகாரியத்தைப் பண்ணவேண்டுமென்று ஸ்ரீகிருஷ்ணன் நேமித்ததை சூதர் சவுனகாதிகளுக்குச்சொல்லிப் பின்னையுஞ்சொல்லுகிறார்.

இப்படிபகவானால் ஆக்கியாபிக்கப்பட்ட அர்ச்சுனன் ஸ்ரீஹரியினுடையகருத்தை அறிந்துகொண்டு அசுவத்தாமாவுடைய சிரசில்தானே பிறந்துவிளங்குகின்ற சூடாமணியைத் தலைமயிர்களுடனே சேர்த்துப்பிடித்துத் தன்கத்தியினால் அறுத்து எடுத்துக்கொண்டு கட்டையும் அவிழ்த்துவிட்டுசிசுஅத்தியினால் தேஜசையும்மணியையும் இழந்திருக்கிற அசுவத்தாமாவை அர்ச்சுனன் தன்னுடையசேனைக்கு வெளியில்துரத்தினான், பிராமணஅதமன்அபராதஞ்செய்தானாகில்அவனுக்குச்செய்ய

வேண்டிய தெண்டனையானதுவிசாரமாகத் தலையைக்ஷ வரஞ்செயவிக்கிறதும், அவனுக்குள்ளதனங்களை விசேஷமில்லாமல் அபகரித்துக்கொள்ளுகிறதும், அந்தஸ்தானத்தைவிட்டுஓட்டிவிடுகிறதுமேயல்லாமல் அவன்பிராணனைவாங்குகிறவிதத்தைச் சாஸ்திரஞ் சொல்லவில்லை ஆகையால் அசுவத்தாமாவுக்குஇப்படிசிக்ஷைசெய்தபின்பு பாண்டவர்களெல்லாருந்துரோபதை யுடனேபுத்திரர்களை நினைத்துதுக்கித்துக்கொண்டு காலகதியடைந்தபந்துக்களுக்கெல்லாம் சமஸ்காரஞ்செய்தார்கள். அப்பால்முன்னல்தன்பாதத்தில்விழுந்து அழுதுகொண்டிருந்த துரோபதைக்குத் தான்சொன்னபிரதிக்கினையை விமசேனனுடைய கதையினல் துடையொடிந்தும்மார் புபிளந்துமிருக்கிற தங்கள்தங்கள் நாயகர்களைத்தழுவிக்கொண்டும் தலைமயிர்களைவிரிந்துக்கொண்டும் அழுகிற சத்துருபத்தினிகளையும் ராஜமகிஷியைப்பாரென்றுஸ்ரீ கிருஷ்ணன்காண்பித்தார்.

வாமநாயநம.

## அ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பத்தவற்சலன் பண்டுத்துரைக்கருப்
பத்தைரக்ஷணை செய்ததும்பாவைகுந்
தித்துதித்ததுஞ் செம்மறன்சோகமுஞ்
சித்தமொத்துச் சிறப்பிக்கும்பார்மினே.

கோபியான அசுவத்தாமாவினுடைய அஸ்திரத்தினின்றும்உத்தரையினுடையகர்ப்பத்தை ஸ்ரீகிருஷ்ணனல்பண்ணப்பட்டரக்ஷணமும், குந்திதேவியினுடையஸ்தோத்திரமும், ராஜாவினுடையசோகமும், கீர்த்திக்கப்படுகின்றது.

இப்படி சவுனகாதிகளைக்குறித்துச்சொன்ன சூதர் மறுபடியுஞ்சொல்லுகிருர். யுத்தத்தில்மாணமடைந்த பந்துக்களுக்கு உதகதானஞ்செய்யவேண்டி ஸ்ரீகிருஷ்ணனுடனேகூடப் பாண்டவர்கள் இறந்துபோனவர்களுடைய ஸ்திரீகளைமுன்னிட்டுக்கொண்டு கங்கையிலே ஸ்நானஞ்செய்து உதகங்களைக்கொடுத்துப் பிரலாபித்துப் புனஸ்நானஞ்செய்து அவ்விடத்திலிருக்கிறகுருவம்சசிரேஷ்டனுகிய திருதராக்ஷ்டனையும், விதுரனையும் புத்திரசோகத்தையுடைத்தாகிய காந்தாரியையுங்குந்திதேவியையும், துரோபதையையும் துக்கிக்க வேண்டாமென்று ஸ்ரீகிருஷ்ணதேவர் முனிகளுடனேகூட சமாதானஞ்செய்து பிராணிகளிடத்தில் வருகிற காலகதியானது ஒருவரையேயும் பரிகரிக்கக்கூடாதென்று அவர்களுக்குத் தெளியவுரைத்து அஜாதசத்துருவான தர்மராஜாவுடைய ராச்சியத்தைச்சூதினல் கட்டிக்கொண்ட துஷ்டர்களைப் பதிவிரதையான துரோபதையுடைய தலைமயிரைப் பரிசித்ததால் உண்டானபாதகத்தினல் சங்காரஞ்செய்வித்து உத்தமகருமங்களான மூன்று அஸ்வமேத யாகங்களைத் தருமராஜாகையினல் செய்வித்து, இந்திரனுடையகீர்த்தியைப்போல தருமராஜாவினுடையபுகழைச் சகலதிக்குகளிலும் நிறைப்பித்துப் பாண்டுகுமாரர்கள் கையில் அனுப்புவித்துக்கொண்டு சாத்தகியுடனே துவாரகைக்குப்போகவேண்டுமென்றுரதத்தின்மேலேறியிருக்கிற ஸ்ரீகிருஷ்ணன் மிகவும்பயத்தினல் நடுங்கிக்கொண்டு ஓடிவருகிற உத்தரையைச்சமீபத்தில் கண்டார்.

அந்தஉத்தரை ஸ்ரீகிருஷ்ணனைப்பார்த்துச் சொல்லுகிருள், ஓய்மகாயோகியே, தேவதேவனேஜகத்பதியே ரட்சியும் ரட்சியும் ஒன்றுக்கொன்று சத்துருவாயிருக்கிற இந்த வுலகத்துக்கு உம்மைவிட அபயம்கொடுக்கிறவர் மற்றொருவரில்லை ஓய்ஸ்வாமியே, காய்ச்சினமழுப்போல் குரூரமாகிய பாணமானது என்னைத் துரத்துகிறது ஓய் விபுவே அந்தபாணம் என்னைமிகவும் தகித்தாலும் தகிக்கட்டும் என் கர்ப்பமாத்திரம் விச்சின்னமாகாமல் காக்கவேண்டும்பிரபுவே என்றும் உத்தரை ஸ்ரீபகவானைக்குறித்து பிரார்த்தித்துதுதிசெய்ததைசவுனகாதிகளுக்குச்சொல்லி, சூதர்பின்னையுஞ் சொல்லுகிருர், இப்படிஉத்தரைசொன்ன வார்த்தையைக்கேட்ட ஸ்ரீபகவான்பக்தவச்சலராகையால் துரோணகுமாரனல் பிரயோகிக்கப்பட்ட அபாண்டவாஸ்திர மிதுவென்றறிந்துகொண்டிருக்கிற அந்தச்சமயத்தில்ஐந்துபாணங்கள் சுவாலைகளுடனே பாண்டவர்களுக் கெதிராக வருகிறதைக்கண்டு தங்கள் அஸ்திரத்தைக் கையிலெடுத்தார்கள். ஓய் சவுனகாதிகளே! என்றுபின்னையுஞ் சொல்லுகிருர், அப்போது ஜகத்பிரபுவான ஸ்ரீகிருஷ்ணன்தன்னைவிட மற்றொருவரை நினையாமல் தன்னிடத்தில் பக்திசெய்கிற பாண்டவர்களுக்குவந்திருக்கிற இந்தமஹாவிசனத்தைப்பார்த்து தன்னையே தேவதையாக வுடைத்தாயிருக்கிற சுதரிசினஸ்திரத்தினல் தனக்குமித்திரர்களாயிருக்கிற பாண்வவர்களை ரட்சித்தார். சர்வபிராணிகளுக்கும் அந்தரியாமியாகியு மாத்மாவாகியும் உள்ளும்புறம்பும் வியாபித்திருக்கிற சக்தியையுடைத்தானஸ்ரீ ஹரியானவர் கவரவசந்தானத்தை ரட்சிக்கவேண்டிதன் சங்கல்பத்தினல் விராடபுத்திரியினுடைய கர்ப்பத்தைச் சூழ்ந்துகொண்டார். ஓய்பிருகுவம்சோத்பவரானசவுனகரே பிரமசிரமென்கிற அஸ்திரமானது வியர்த்தமாக மாட்டாது மற்றொரு அஸ்திரத்தினல் தடுக்கவுங்கூடாது ஆனலும் ஸ்ரீவிஷ்ணுதேஜசினல் லயத்தையடைந்தது. யாதொரு ஸ்ரீவிஷ்ணுதேவன் தன்விளையாட்டுக்குச்

சாதனமாகிய பிரகிருதியால் இந்தவுலகத்தைக்கற்பித்து அதினுட்புகுந்து அதைரட்சித்துப் பின்புசங்காரஞ்செய்தும் தான்பிறவாமலுமிருக்கிறானோ அந்தசர்வாந்திரியஙிதிபாகிய அச்சுதரிடத்தில் இதுவொரு ஆச்சரியமென்று நினைக்கவேண்டாம் இப்படி பிரமாஸ்திரமாகிறநெருப்பில்நின்றும்விடுபட்ட பாண்டவர்களுடனேயும் துரோபதையுடனேயுங் கூடியிருக்கிற குந்திதேவியானவள் துவாரகைக்கு எழுந்தருளவேண்டுமென்று பயணமாயிருக்கிற ஸ்ரீகிருஷ்ணதேவனைக்குறித்து பிரார்த்திக்கிறாள்.

இந்தவுலகங்களுக்கு ஆதிகாரணமாகியும் ஸ்வாமியாகியும் பிரகிருதிக்குநியாமகனாகியும் சமஸ்தஜீவவர்க்கங்களாலேயும் அறியப்படாமலும் இதுகளுடைய உள்ளும்புறம்பும் வியாபித்திருக்கிறவனாகவும் மாயையாகிறதிரையினால்மறைந்து கியானங்குறைந்த பிராணிகளுடைய இந்திரியங்களால் அறியப்படாதவனும் அவ்வியயனாகியுமிருக்கிற உன்னைவந்தனஞ்செய்கிறேன் உன்னிச்சையில் உண்டாக்கிக்கொண்ட உன்னுடையஅவதாரத்தைத்தியானஞ்செய்கிற பரமஅம்சாளாகிய முனிவர்களும் அறியமாட்டாமலிருக்கின்ற உன்னைஸ்திரீஸ்வபாவமான நான் எப்படிஅறியப்போகிறேன் வாசுதேவகுமாரனாகி தேவகிகர்ப்பத்தில் அவதரித்து ஸ்ரீகிருஷ்ணனென்று திவ்யநாமத்தைத் தரித்தும் நந்தகோபனுக்குக் குமாரனாகி கோவிந்தனென்றும் நாமத்தைத்தரித்த தேவரீருக்கு நமஸ்காரஞ்செய்கிறேன் ஓய்ரிஷிகேசனே ? அதிதுஷ்டனான கம்சனால்சிறையிலகப்பட்ட தேவகிதேவிவெகுகாலம்அனுபவித்த சோகத்தைப் பரிகரித்தாற்போல் மிகுதியும் துக்கத்தையடைந்த என்னையும் அடிக்கடிவந்த விபத்துகளைப் பரிகரித்து அந்த சோகங்களைத் தேவரீரே நீக்கினீர் துரியோதனன் பீமசேனனுக்குவிஷங்கலந்தமோகத்தை யிட்டபோதும் அரக்குமாளிகையில் நெருப்பை வைத்தபோதும், இடும்பாசுரனைக் கண்டபோதும், அதிதுஷ்டனான துர்ச்சாதனாதிகளுடனேகூடின துரியோதனனுடைய சபையில் அவமானம் வந்தபோதும் வனவாசத்தில்சங்கடங்கள்வந்தபோதும் உயுத்தியங்கள்தோறும் மகாரதிகாளுடைய அநேகவிதமான அஸதிரபயங்களிலும் துரோணகுமாரனாகிய அசுவத்தாமாவினுடைய அபாண்டவஸ்திரத்திலும் நிரே சாந்தம்பண்ணினீர். ஸ்ரீஹரியே துரியோதனனால் ஆக்கியாபிக்கப்பட்ட துருவாசர் எங்களுக்குச் சாபங்கொடுக்கவேண்டுமென்றுநினைத்து அக்காலத்தில் அதிதிபூசை பண்ணிவைக்கச்சொல்லி வந்தபோது அந்தவனத்தில் எழுந்தருளி என்புத்திரரால் மூன்றுலோகத்துடனே யந்தரிஷிக்குத் திருப்திசெய்வித்தீர். உன்தரிசனஞ்செய்தவர்களுக்கு மறுபடியும்பிறப்பில்லை ஆதையால் அப்படிப்பட்ட உன்தரிசனத்தைக் கொடுக்கிற ஆபத்துகள் எங்களுக்கு அடிக்கடிவரட்டும் ஜெகத்குருவேகுலத்தினாலேயும் ஐஸ்வரியத்தினாலேயும் சாஸ்திரங்களினாலேயும், அழகினாலேயும் மிகுந்த மதத்தையுடைத்தானவன் சகலத்தையுந் துறந்தஞானிகளுக்கு யோககியனான உன்னுடைய நாமத்தை நினைக்கமாட்டான் எப்பொழுதும்சகலத்தையுந் துறந்தவனை நினைக்கிறவனாகவும் குணங்களுடைய விருத்தி யில்லாதவனாகியும் தன்னிடத்தில் தானே விவகரிக்கிறவனாகவும், உலகங்களில்ஆசையொழிந்தவனாகவும், கைவல்யபதியாகியு மிருக்கிறஉனக்கு வந்தனஞ்செய்கிறேன் உன்னை ஆதியந்தங்களில்லாமலும் சுதந்திரனாகியும், சர்வபிராணிகளிலேயும்சமமாகச் சம்பந்தித்தும், காலசரீரனாகியுமிருக்கிற ஈசானனென்றுநினைக்கிறேன், அல்லாமற்போனால் இந்தப் பூதங்களுக்கு ஒன்றுக்கொன்று கலகங்கள்வரக்காரணமென்ன இந்தப்பூலோகத்தில் ஜனங்களுடைய நடத்தையைத் தானும் நடத்திக்காண்பிக்கிற நீ செய்யவேண்டுமென்று நினைத்தகருமத்தை மற்றொருவ ரறியமாட்டார்கள் உனக்குவேண்டியபேரொருவருமில்லைஉன்னுடையவேஷத்துக்கு யோக்கியமானவ ரொருவருமில்லைஅவரவர்கருமத்தை யனுபவிக்குங்காலத்தில் அவரவர்மதிமாத்திர முன்னிடத்தில்விஷமமாகியிருக்கும் ஓய்விஸ்வாத்மகனே ? கருமாதீனமாகிய சனனமும் கர்த்தத்துவமுமில்லாத உனக்குத் திரியக்குசாதிகளிலும், ரிஷிகளிலும் ஜலஜந்துக்களிலும் ஜனனமும் கருமமும்,அந்தந்தசாதிகளுடைய நடத்தைகளைச்செய்து காண்பிக்கவேண்டி செய்ததேயல்லாமல் வேறல்ல ஆனாலும் நீதுடுக்குசெய்தாயென்று அசோதைஉன்னைக் கட்டவேண்டுமென்றுகயிறெடுத்தசமயத்தில் மைகளுடனே கலந்துநிறைந்தகண்ணீருடனே திருமுகமண்டலத்தைக்காண்பித்துப் பயந்தவனைப்போல் நடனஞ்செய்துகொண்டு அசோதை முன்னே நின்றிருந்த உன்வேஷம்என்னைஇப்பவும் மோகிக்கப்பண்ணுகிறது, சனனமில்லாத பரமாத்மாவானவன் புண்ணியசுலோகனாகியும் தனக்குப்பிரீதிமாத்திர மிகவுமிருக்கிற ஏதுவினுடைய கீர்த்திகளை விஸ்தாரஞ்செய்யவேண்டி அவனுடைய வமிசத்தில்மலைய பர்வதத்தில் சந்தனவிருக்ஷம்போல் ஜனித்தானென்று சிலர்சொல்லுகிறார்கள்வாசுதேவனுடையக்ஷேத்திரமாகிய தேவகியிடத்தில்தேவதைகளால்யாசிக்கப்பட்டதேவரீர் இந்தவுலகங்களை ரட்சிக்கவேண்டிய நிமித்தியமாக தேவதுரோகிகளைச் சங்காரஞ் செய்யவேண்டிஅவதரித்தீரென்று சிலர்சொல்லுவார்கள். பூமியினுடையபாரத்தைத் தீர்க்கவேண்டுமென்றுயாசித்த சதுர்முகனுடைய கோரிக்கையை யீடேற்றவிக்கிரக கருமத்தைத் தரித்தீரென்றுசிலர் சொல்லுகிறார்கள், இந்தச

முசாரத்தில் அக்கியானத்தினுலேதுக்கித்திருக்கிறபிராணிகள் உன்னுடையலீலைகளைக் கேள்விசெய்தும் ஸ்மரணஞ்செய்தும் கடைத்தேறும்படி ஆவிற்பவித்தி ரென்று சிலர்சொல்லுகிருர்கள்.

ஓய் சுவாமியே? தேவரீர் உம்முடைய இஷ்டப்பிரயோசனத்தைஇச்சித்து இஷ்டராளாகியும்தேவரீரையே அடுத்தும் சேவித்துக்கொண்டிருக்கிற எங்களைப் பிரிந்திராகில் சுஜனவத டாதகமென்று நினைத்து சகிக்கமாட்டாத தருமராஜா சரீரத்தையே தரிக்கமாட்டாரென்று நினைத்துக்கொண்டிருக்கிற எங்களுக்கு உன்னுடைய சரணகமலங்களேயல்லாமல் மற்றொருகதியில்லை இந்திரியங்களுக்குசுவாமியான சிவனுடைய தரிசனம்போல் தேவரீருடைய சரீரங்கிடைத்தபோது நாங்களும் யாதவர்களென்றும், பாண்டவர்களென்றும், சரீரமும் நிலைபெற்று விக்கிரகங்களைத்தரித்து பிரசித்தியுடனேகூடிய பேர்களையு முடைத்தாயிருக்கிறோ மல்லாமல் உன்தரிசனமில்லாமற்போனுல் எங்களுடைய ரூபங்களும், நாமங்களும் இந்தவுலகத்தில் பிரகாசிக்க மாட்டாது, ஓய் கதாதரனே இப்போது இந்தப்பூமியானது சங்கு சக்கிராதிகளான திவ்யரேகைகளுடனேகூடிய உம்முடைய பாதங்களாலலங்கரிக்கப்பட்டும் கடாட்சத்தால் பரிபக்குவமான பயிர்கள் கொடிகள் விருட்சங்கள் பர்வதங்கள் சமுத்திரங்கள் முதலியதுகளால் பிரகாசித்து விருத்தியடைந்திருக்கிறதோ, அப்படி தேவரீர்துவாரகைக்குளெழுந்தருளினுல் வர்த்திக்கமாட்டாது. ஓய்சர்வலோக நாயகனே, சர்வாந்திரியாமியே சர்வமூர்த்தியேதேவரீரை ஒருயாசனைபிரார்த்திக்கின்றேன் இந்தவிருஷ்ணிக ளிடத்திலேயும் பாண்டவர்களிடத்திலேயும் எனக்கு இருக்கிற சிநேகமாகிறபாசத்தை நீயேநீக்கவேண்டும் இதுவுமல்லாமல் என்னுடைய மனது மற்றொருவரிடத்தில் பொருந்தாமல் உன்னிடத்தில் சீக்கிரமாகப் பிரீதியையடையவேண்டி உன்னைச்சரணமடைகிறேனென்று குந்திதேவிசரணமடைந்து யாசித்தகிரமத்தைச் சூதர்சவுனகாதிகளுக்குச்சொல்லி அந்தக்குந்தியிடத்தில் ஸ்ரீகிருஷ்ணன்செய்த பிரசாதத்தையுஞ்சொல்லுகிருர்.

சகலசுபநிதியான ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி குந்தியுடைய ஸ்தோத்திரங்களைத் திருவுளம்பற்றி மந்தகாசஞ்செய்து துவாரகைக்குளெழுந்தருளவேண்டுமென்று சங்கற்பித்தவர் குந்திதேவிபிரார்த்தித்தபடியினுலேயும்தருமராஜா பிரீதியுடனே நிறுத்தியபடியினுலேயும் சம்மதித்துப்பாண்டவர்களுடனே குந்திதேவியும் மற்றுமுள்ள ஸ்திரீகளையும் அழைத்துக்கொண்டு அஸ்தினபுரத்துக்குளெழுந்தருளினுர். பின்பு தருமராஜாவுக்குப் பகவத் சங்கல்பத்தையறிந்த வியாசாதிகளாலேயும் அற்புதமான சரீரத்தையுடைத்தாகிய ஸ்ரீ கிருஷ்ணனுலேயும், தெளியும்படி போதிக்கப்பட்டும் புராதனமான இதிகாசங்களை இவர்கள்தெளியவுரைத்தும் அவருக்குந் தெளிவுபிறவாமல்துக்கத்தை யடைந்து சொல்லுகிருர், கருமாதீனமான இந்த தேகத்தினுடைய நிமித்தியமாகி வெகு அக்ஷோஹிணிசேனைகளைச் சங்காரஞ் செய்வித்த பாலர்களையும், பிராமணர்களையும், துணைவரையும், மித்திரர்களையும், பிதுர்ஜனங்களையும், பிராதுரு வர்க்கங்களையும், குருஜனங்களையும், சங்காரஞ்செய்வித்த எனக்கு நரகங்களில் அநேககாலம் அனுபவம்பண்ணினுலும் அந்தப்பாவங்கள் தொலையமாட்டாது தருமமான உயுத்தித்தில் பிரஜைகளைச் சங்காரம்பண்ணின ராஜாவுக்குப் பாவமில்லையென்று சொல்லுகிற தரும சாஸ்திரத்தை எத்தனையறிந்திருந்தாலும் மோகத்தினுல் எனக்குத்தெளிவுபிறக்கவில்லை அமர்க்களத்தில் மடிந்துபோனவர்களுடைய பந்துக்களான ஸ்திரீதுரோகத்தைக்கிரகஸ்தாசிரமத்தில் செய்யத்தக்கதான நித்தியநைமித்தியகத்தைக் கருமங்களால் பரிகரிக்கிற சாமர்த்தியமு மெனக்கில்லையென்றுர்.



கோவிந்தாயநம ः

## கூ-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

அரையறமகற் காயணிபீஷ்மரா<br>
ணிறைய்சொற்றரு மத்திநெறிகளும்<br>
இறையவன்றுதிப்பு மெழில்வீட்டுமன்<br>
குறைவில்முத்தியுங் கோதறக்கூறுவாம்.

தருமராஜாவின்பொருட்டு பீஷ்மரால் சொல்லப்பட்ட சர்வதருமங்களுடைய நிருபணமும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஸ்தோத்திரமும் வீட்டுமருடைய முக்தியும் வர்ணிக்கப்படுகிறது.

இப்படித் தருமராஜா பிரஜைகளுக்கும் தாம்செய்த துன்பத்தினுல் பாதகமுண்டென்றும் அதைப் பரிகரிக்கிறதற்கு யோக்கியமான தருமத்தை நாம் செய்யவேண்டுமென்றுநினைத்து வீட்டுமரானவர் உத்தராயணகாலத்தை யபேக்ஷித்து சரதல்ப்பத்தில் படுத்திருக்கிறகுருக்ஷேத்திரத்துக்குப் பயணம்புறப்பட்டார். அப்போதுஅவருடைய பிராதாவாகிய பீமாதிகளும் நல்லலக்ஷணங்களுடனேகூடிய அசுவங்களி லேறிக்கொண்டுபின் செல்லவியாசர்- தவுமியர் முதலான பிராமணோத்தமர்கள் திவ்யமான ரதங்களி லேறிக்கொண்டு கூடவேநடந்தார்கள், ஓய் பிரமரிஷியே ? ஷட்குண பரிபூரணனுன ஸ்ரீகிருஷ்ணனும் அர்ச்சுனனுடனேகூட ரதத்திலேறிப் பின்னே யெழுந்தருளினுர். இப்படி குருக்ஷேத்திரத்தி

ல்சேர்ந்த தருமராஜா அவ்விடத்தில் சொர்க்கலோகத்
தில் போகத்தையனுபவித்து சேஷத்துடனே பூமியில்
விழுந்த தேவனைப்போல் விழுந்திருக்கிற வீஷ்மனைக்
கண்டு வந்தனஞ்செய்தார். அவருடனே யவர்தம்பிகளு
ம் ஸ்ரீகிருஷ்ணனும் வந்த மற்றுமுள்ளவர்களும் நமஸ்
காரம்பண்ணினர்கள். அந்தச்சமையத்தில் அந்த குரு
க்ஷேத்திரத்தில் சகலமானபிரமரிஷிகளும் உத்தமாளா
னதேவரிஷிகளும் சிலாக்கியாளான ராஜரிஷிகளும் பா
ரதசிரேஷ்டரான வீஷ்மனைக் காணவேண்டுமென்று த
ங்கள்தங்கள் சிஷியர்களுடனே கூடிக்கொண்டுவந்தார்க
ள். அப்படியே காசிபரும், பிரகஸ்பதியும், இவர்களுட
னே இன்னம் சிலதேவரிஷிகள் சிஷியவர்க்கங்களுடனே
வந்தார்கள் இப்படிவந்த பிரமநிஷ்டராளாகிய முனிகண
ங்களை வசுக்களில் உத்தமமானபீஷ்மர்கண்டு உபசாரஞ்
சொல்லி அவர்களுக்குயோக்கியமான பூசைசெய்துஸ்ரீ
கிருஷ்ணனையும் உபசரித்து சிலாக்கியமான ஆசனத்தி
லிருந்தபின்பு அந்தகிருஷ்ணனுடைய பிரபாவத்தைஅ
றிந்தபீஷ்மர் திவ்யமங்கள விக்கிரகத்தை தன் இச்சை
யினுல் தன்முன் எழுந்தளிருயிருக்கிறஸ்ரீகிருஷ்ணனை
தன்இருதயத்தில் தியானம்பண்ணிவிசுவாசத்துடனே
யும்,பிரீதியுடனேயும் மானதமஹாபூசைசெய்தார். பின்
பு தம்முடைய சமீபத்திலிருக்கிற பாண்டுகுமாரனைத்
தம்மிட ஆனந்தபாஷ்பத்தினுல் நிறைந்தகண்களால்பிரீ
தியுடனேபார்த்து ஒருவார்த்தைசொல்லுகிருர்.

ஓய் தருமநந்தனனே, நீங்கள் மகத்தானகஷ்டங்களை
அனுபவித்தீர்கள் அந்தக் கிரமங்கள் உம்முடைய பிர
திக்கினையால் வந்ததாகையால் அது ஞாயமென்று சகி
த்தீர்கள் அது மகத்தானஆச்சரியம் ஆனுல் ராச்சியமி
ழந்து பிராமணனைப்போல் பிக்ஷமுதலானத்தினுலு
ம் சீவனம்பண்ணினீர்கள் அதுவும்ஆச்சரியந்தான் இப்
படிப்பட்டகிலேசங்கள் உங்களுக்குவருகிறது யுக்தமல்
ல இதுவுமல்லாமல் உங்களுடையபிதாவான பாண்டும
ஹாராஜா சுவர்க்கத்தை யடைந்தபோது உம்முடைய
மாதாவான குந்திதேவி சிசுக்களானஉங்களை சம்ரட்சிக்
கவேண்டி யுங்களுடனே வெகு கிலேசங்களை யடிக்கடி
அனுபவித்தாள் காலமும்இந்தலோகமும் உங்களுடை
யஆதீனமாகஇருக்கையினுல் உங்களுக்கு எந்தெந்த சி
ரமங்கள்வந்ததோ அதுகளெல்லாம் காலத்தினுடையம
கிமையென்று நினைக்கிறேன்.

ஓய் பிரபுவே, தத்வங்களைத்தெளிந்த கியானிகளும்
யாதொருகாலத்தினுடையஸ்வரூபத்தை அறியவேண்
டுமென்றுநினைத்துத் தியானஞ்செய்தும் அறியமாட்டா
மல் மோகித்திருக்கிருர்களோ அந்தக்காலத்தினுடைய
ஆதீனமாயிருக்கும் பிராணிகளுடைய சுகதுக்கங்களெ
ன்று தெரிந்துகொண்டு அந்தக்காலத்தை அனுசரித்து
இப்போது அனுதாராளாயிருக்கிற பிரஜைகளுக்குநீ்ந
தனுகி பரிபாலனஞ் செய்யவேண்டும் பரதகுலத்திற்பி
றந்தபேர்களிற் சிரேஷ்டரானபிரபுவே இந்த ஸ்ரீகிருஷ்
ணன் உலகங்களுக்கெல்லாம் ஆதிகாரணமாகியும் ஷட்
குணபரிபூரணமாயிருக்கிற புருஷசிரேஷ்டனுன ஸ்ரீமந்
நாராயணனே யல்லாமல் வேறல்ல இந்த வுலகங்களை
மோகிப்பிக்கவேண்டி இந்தஸ்ரீகிருஷ்ணன் வேஷத்தை
த்தரித்து விருஷ்ணிவமிசத்தில் அவதரித்து ஒருவர்க்
குந் தெரியாமல் சஞ்சரிக்கிருன் இவனுடைய மகிமை
யைமஹானுபாவனுன சிவன் அறிவார் அதிகோப்பிய
மான இவன்மகத்துவத்தைத் தேவரிஷியான நாரதர்அ
றிவார் இவருடைய அவதாரமாகிய கபிலர் அறிவார் ந
ரேந்திரனே யாதொருகிருஷ்ணன் அம்மான்குமாரனெ
ன்றும்மித்திரனென்றும் உத்தமமான துணைவனென்று
ம்நினைத்து சுகிர்தபாவத்தினுல் மந்திரியாகவும் தூதனு
கவும் சாரதியாகவுங்கற்பித்தாய் இந்தகிருஷ்ணன்சமஸ்
தங்களுக்கும் ஆத்மாவானவனும் சரீரவிசிஷ்டனுன த
ன்னைக்காட்டிலும்மற்ெருன்றில்லாதவனும்தனக்கொரு
குறைவில்லாதவனுமாகையினுல் நீங்கள் செய்யவேண்
டுமென்று வேண்டிக்கொண்ட சாரத்தியம் முதலானக
ருமங்களால் அவர்மனதில் ஒருவைஷம்மியமு மில்லை
யானுலும் ஓய்ராஜாவே அந்தரங்கபக்தர்களிடத்தில் இ
ந்தஸ்வாமியுடைய தயவு மிகுதியாக இருக்குமென்று
அறியும்.

அதெப்படியென்ருல் பிராணனை விடவேண்டுமென்
று நினைத்திருக்கிற எனக்கு இந்த ஸ்ரீகிருஷணன் பிரத்
தியக்ஷமாகஎழுந்தருளினர். யோகியானவன் யாதொரு
கிருஷ்ணனிடத்தில் பக்தியினுல் மனதைநிறுத்திவாக்கி
னுல் இவன்நாமத்தைத் தோத்திரஞ்செய்துகொண்டுச
ரீரத்தை விடுகிருனே அவன் கருமபந்தங்களைத் தவிர்
வானுகையால் தேவர்களுக்கெல்லாம்தேவனுன இந்தப
கவான் சதுர்ப்புஜனுகியும் பிரசன்னமாகிய புன்சிரிப்பி
னுலேயும் செந்தாமரையைப் போலொத்த நேத்திரங்க
ளாலேயும் சந்திரசமானமாக விளங்குகிற முகத்தையு
டைத்தாகியுமிருந்துக்கொண்டுஎன்னுடையதியானத்து
க்குமார்க்கமாகிறுன் நான்சரீரத்தைவிடுகிற மட்டுக்கும்
என்னிடத்தில் கிருபைசெய்துஎன்முன்னே காத்திருக்
கவேண்டுமென்று பீஷ்மர் பிரார்த்தனை செய்ததைச்சூ
தர் சவுனகாதிகளுக்குச்சொல்லிப் பின்பு தருமராஜாஅ
ந்தபீஷ்மரைக்கேட்ட வயணத்தைச் சொல்லுகிருர்.

ஓய்சவுனகாதிகளே யுதிஷ்டிரர் தல்பத்தில்படுத்தி
ருக்கிற பீஷ்மர் ஸ்ரீகிருஷ்ணனைப் பிரார்த்தித்ததையுங்
கேட்டுதானும் சகலதருமங்களையும் பீஷ்மரிடத்திலிரு
ந்து தெரியவேண்டுமென்று நினைத்துக்கேட்டார். அது
யாதென்ருல் பூமியில்பிரமக்ஷத்திரிய-வைசிய- சூத்திர

ரென்றும் உயர்ச்சிதாழ்ச்சியானவர்னங்களுடைய சிருஷ்டிக்கு மூலமான கருமங்களெது அந்தந்தவர்னங்களுக்குத் தருமங்களெது பிரமசாரி கிரகஸ்தன் வானப்பிரஸ்தன் சந்நியாசி என்கிற நாலு ஆசிரமத்தாருக்குஞ்செய்யவேண்டிய தருமங்களெதுவயிராக்கியமுள்ளவன்செய்யவேண்டிய தருமங்களும் ஆசையுள்ளவன்செய்யவேண்டிய தருமங்களும் எப்படிப்பட்டதென்று வேதஞ் சொல்லுகின்றது தானத்தினுல்வருகிற தருமங்களையும் ராஜாக்கள் செய்யவேண்டிய தருமங்களையும் மோக்ஷங்களுக்குச் சாதகமாகிய தருமங்களையும் பிரித்து என்மனதில் பொருந்தவும், ஸ்திரீ தருமங்களையும், பகவத்தருமங்களையும், விஸ்தாரமாகவும், சுருக்கமாகவும், தருமார்த்த காமமோக்ஷங்களையும், அதுகளுடையகாரணங்களாகிய உபாயங்களையும், எனக்குத்தெரியும்படியாய் உபதேசிக்கவேண்டுமென்றுகேட்க பீஷ்மர் இந்ததருமங்களையெல்லாம், அனேகவிதமான கதைகளை யுடைத்தான இதிகாசங்களில் காண்பித்து தெளியஉரைத்தார். இப்படி பீஷ்மருக்குத் தனக்கு மனசுவந்தபோது சரீரத்தியாகம்பண்ணும்படியான சக்தியுண்டாக் கிஅதற்குரிய உத்தராயணமான காலத்தைக் குறித்துக்கொண்டிருக்கிற காலம்யாதொன்றுண்டோ அதுவந்ததுயுத்தத்தில் தம்முடனேகூடவந்திருக்கிற ரதிகர்களில் ஆயிரம் ரதிகர்களை சம்ரக்ஷணைபண்ணுகிற வல்லமையுண்டாகிய பீஷ்மரானவர் அந்த உத்தராயணம்வந்தவுடனே மவுனத்தைத்தரித்துத் தன்மனதை இந்தஉலகவியாபாரத்திற்செலுத்தாமல் திருப்பி திஆபுருஷனுசியும்சதுர்ப்புஜனுகியும் தன்முன்னேயிருக்கிற ஸ்ரீகிருஷ்ணனைதன்னிருதயத்தில் தாரணஞ்செய்து கண்களைமூடிக்கொண்டு மற்றொன்றையும் நினையாமற்செய்கிற தாரணத்தினுல் சகலமான அசுபங்களையுந்தவிர்ந்து அந்த ஸ்ரீகிருஷ்ணனுடைய கடாட்சத்தினுல் ஆயுதவேதனைகளையும் பரிகரிக்கப்பட்டு சகலமாகிய இந்திரியவிருத்திகளையும் விட்டு சரீரத்தையும் விடத்தக்கவராகி ஸ்ரீஜனார்த்தனனை ஸ்துதிசெய்தார்.

குறைவில்லாதஇன்பத்தை யுடைத்தாகிய தான் விளையாடவேண்டி பிரகிருதியை அடைந்துதேவமனுஷாதிகளான நானுரூபங்களைத்தரித்து அளவிறந்த மகிமையையுடைய பரமாத்மஸ்வரூபமான சாத்வதபுங்கவனுகிய ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில் பீஷ்மர் வேறொருபலனைக்கோராமல் தன்மதியைநிறுத்தி பதினுலுலோகங்களுங் கோரும்படியாகிய திவ்யமங்கள விக்கிரகரூபத்தைத்தரித்த அர்ச்சுனன் சகனிடத்தில் என்னுடைய மதியானது சலியாமலிருக்கவேண்டும். உயுத்தியத்தில்நாலுபக்கத்திலும் அவிழ்ந்துபுரளுகிற கேசங்களோடேகலந்தவேர்வையுமுண்டான திருமுகமண்டலத்தையும், என்னுடைய தீக்ஷணமாகிய பாணங்களினுல் பிளக்கப்பட்ட சரீரத்தையும் அந்தபாணங்களினுல் துளைக்கப்பட்டகவசத்துடனேயும்விளங்கின ஸ்ரீகிருஷ்ணனிடத்தில்என்மனதானது சலியாமலிருக்க வேண்டும் அர்ச்சுனனுடைய வார்த்தையைக்கேட்டுதன் சேனைகளுக்கும் சத்துருசேனைகளுக்கும் நடுவேரதத்தைநிறுத்தி அதின்மேலே யிருந்துகொண்டு சேனைகளுடைய ஆயுளைத்தன்கண்களால் கிரகித்துக்கொண்டு மிருந்த அர்ச்சுனன் மித்திரனுனஸ்ரீகிருஷ்ணனிடத்தில் என்னுடைய பிரீதியானது இடைவிடாமலிருக்கவேண்டும் அதிவிஸ்தாரமாகியசேனைகளுக்குமுன்னேயிருக்கிற சேனுதிபதிகளைப்பார்த்து சுஜனங்களைவதஞ்செய்கிறது தோஷமென்று உயுத்தியஞ் செய்கிறதில்லையென்று பின்னிடைந்த அர்ச்சுனனுடைய துர்ப்புத்தியைத் தத்வஉபதேசத்தினுல் எவன்பரிகரித்தானே அந்தபரமபுருஷனுடையதிருவடிகளில் எனக்குப்பிரீதிநிரந்தரமாக இருக்கவேண்டும்யாதொருவன்தன்னுடைய நிச்சயத்தைத் தவிர்ந்துஎன்னுடைய பிரதிக்கினையை நிறைவேற்ற சக்கிராயுதத்தையும் தரித்துரதத்திலிருந்து பூமியிற்குதித்து சிங்கம்போல் துரையாய்வந்தவனெவனே அந்தஷட்குணபரிபூரணனுன முகுந்தன் எனக்குக் கதியாகக்கடவர், ஒருகையில்சாட்டியைப்பிடித்தும், மற்றொருகையில் குதிரைகளுடைய கயிற்றைப்பிடித்தும், விஜயனுக்குச்சாரத்தியஞ்செய்த ஷட்குணபரிபூரணனுன ஸ்ரீஹரியிடத்தில்மரணத்தைஇச்சித்திருக்கிற என்னுடைய மதியானதுநிலைத்திருக்கவேண்டும் அதிமனேக்கியமான நடைகளுடையவினேதங்களாலேயும் சிலாக்கியமான புன்சிரிப்புகளாலேயும் பிரீதிபூர்வகமானகடாக்ஷங்களாலேயும் உண்டாகிய வெகுமானங்களையுடைத்தான மதத்தினுல் தங்களுடம்புமறந்து தங்களைக் கிருஷ்ணனுக நினைத்து கோபஸ்திரீகள் எந்தகிருஷ்ணனுடையலீலைகளைத்தாங்களும்செய்து நிசப்பிரகிருதிகளை அடைந்தார்களோஇதுவுமல்லாமல் யுதிஷ்டிரருடையராஜசூயயாகத்தில்முனிவர்களாலேயும், அரசர்களாலேயும், நிறைந்தசபைநடுவேசகலஜனங்களுக்கும்ரமணீயமானதரிசனங்கொடுத்து அவர்களிடத்திலிருந்து வெகுமானம்படைத்த இந்தகிருஷ்ணரூபியான பரமாத்மாஎன்னுடைய புத்தியில்பிரத்தியக்ஷமாகக்கோசரிக்கவேண்டும் யாதொருவன் மூங்கிற்காடானது காற்றினுல் ஒன்றுக்கொன்று இழைந்ததினுற்பிறந்த காட்டுத்தீயைப்போல் கவுரவர்களில் சூதைப்பிறப்பித்தானே தன்னைஅடுத்தவர்களுடைய சிரமத்தைப்பரிகரிக்கிற பாதபத்மங்களையுடைத்தான அந்தகிருஷ்ணமூர்த்தியைஎன்னுடைய இருதயத்தில்நினைத்து அவனுடனேகலந்து இந்தமனுஷசரீரமாகிறகூண்டைப்பரித்தியாகஞ்செய்கிறேன் ஒருவனுகிய தான்தன்

னுல்கற்பிக்கப்பட்ட சரீரத்தைவிலட்சணமாக உடைத்தானசீவாத்மாக்கள்தோறும் வெவ்வேறாய் சரீரங்களைத்தரித்து சீவாகளுடைய இருதயங்கள்தோறும் வாசஞ்செய்துகொண் டிருந்தாலும் கருமாதீனமாகிய ஜனனமில்லாத பரமபுருஷனை நானடைந்து அவனையன்றி வேறென்று நினைக்கிற மோகத்தைத்தவிர்ந்தேன் இப்படி ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில் பரமாத்ம புத்தியினுல்மனதினுடைய கருமமான நினைவுடனேயும், கண்களுடைய காரியமான பிரத்தியக்ஷத்துடனேயும், வாக்கினுடைய வியாபாரமாகிய ஸ்தோத்திரங்களுடனேயும், தன்னுடைய ஆத்மாவைத் தன்மனதினுல் சரீரமாகக்கலந்து சுவாசத்தையுண்டாக்கி இந்தச்சரீரத்தை விட்டார் அங்கேயிருந்தரிஷிகளும், ராஜாக்களும், மற்றுமுள்ள பேர்களும் பிரகிருதிசம்பந்தமில்லாத பரப்பிரமத்தினிடத்தில் கலந்தவராகப்பீஷ்மரைத் தெரிந்துகொண்டு மவுனமாயிருந்தார்கள் அப்போது தேவதைகளாலேயும் மனிதர்களாலேயும், அடிபட்டதுந்துமி வாத்தியங்கள் இரண்டுலோகங்களிலு முழங்கினதுகள் சத்புருஷர்கள் பீஷ்மருடையசாமயாத்திரையைமிகவுஞ்சிலாகித்தார்கள்ஆகாசத்திலிருந்துபுஷ்பவருஷங்கள் பொழிந்ததுபின் யுதிஷ்டிரர் பரமபதஞ்சேர்ந்தபீஷ்ம சரீரத்துக்குசமஸ்காரமுதலாகிய அபரகிருத்தியங்கள் செய்வித்து துக்கப்பட்டுக்கொண்டிருந்தார். அங்கேயிருந்த முனிவர்களெல்லாம் சந்துஷ்டராகி ஸ்ரீகிருஷ்ணனை அதிகோப்பியங்களான அவன்நாமங்களால் ஸ்தோத்திரஞ் செய்து அந்தஸ்ரீகிருஷ்ணனைத் தங்களிருதயத்தில்தியானஞ்செய்துகொண்டுஅவரவராசிரமங்களுக்குப்போனுர்கள். அதன்பின்பு யுதிஷ்டிரர் ஸ்ரீகிருஷ்ணனுடனே அஸ்தினபுரஞ்சேர்ந்து தனக்குப்பிதாவான திருதராஷ்டிரனையும் வெகுதபசையுடைத்தான காந்தாரியையும் சமாதானஞ்செய்து பிதாவான திருதராஷ்டிரனலேயும் ஸ்ரீவாசுதேவனலேயும் சிலாக்கியம்பண்ணப்பட்டு ராச்சியத்தைதருமத்துடனே பரிபாலனஞ்செய்தார்.



ஸ்ரீதராயநம:.

## ௰-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

அந்தமாதிபி லான்றமதாடல்கள்
விந்தையாகப்புரிந்துமினர்தொழ
தொந்தவஸ்தினபுரி நின்றுதுவாரகை
வந்தவாறு மெடுத்துவழுத்துவாம்

ஸ்ரீகிருஷ்ணன் செய்யத்தக்க காரியங்களெல்லாம்செய்தவராய்ஸ்திரீகளினல் ஸ்துதிக்கப்பட்டு அஸ்தினபுரத்திலிநின்றும் துவாரகாபட்டணத்திற்குவந்ததைச்சொல்லப்படுகின்றது.

இப்படி தருமராஜாவுடைய ராச்சியபரிபாலனத்தைக் கேள்விப்பட்ட சவுனகர் சூதரைக்கேட்கிறார் ஓய் சூதரே; தருமசாலிகளுக்குள்சிரேட்டரானயுதிட்டிரர் தம்முடைய அர்த்தங்களையும்அபகரித்துத் தங்களையும் அக்கினிவிஷாதிகளால் கொல்லவேண்டுமென்று நினைத்த துரியோதனுதிகளைச் சங்காரஞ்செய்தபின்புதம்பிமார்களுடனேகூட ஆகாரத்தைவிட்டுத்தாம்செய்வித்த சனவதையால் தமக்குப்பாதகமுண்டென்று நினைத்தவர் எப்படி ராச்சியபரிபாலனஞ்செய்தாரென்று கேட்ட சவுனகருக்குச் சூதர்சொல்லுகிறார். ஓய்சவுனகரே,சமுசாரத்தைப் பரிபாலனஞ்செய்யவேண்டுமென்று திருவுளம்பற்றின ஸ்ரீகிருட்டினன் தான்சுதந்தாஞகையால் சவுரவர்களுடைய வம்சத்தில் மூங்கிற்காட்டில் தனக்குள்ளேதானேபிறந்து பற்றிக்கொண்ட காட்டுத்தீயைப்போல் அந்தவம்சத்திற்பிறந்த கலகமாகிற அக்கினியினல் அவர்களைக் கொல்லுவித்துமிகுதியான பாண்டவர்களில் தருமராஜாவை அந்தராச்சியத்தில் பட்டாபிஷேகஞ் செய்வித்து மிகவும் சந்தோஷமடைந்தபின்பு அந்தயுதிட்டிரர்கையால் உத்தமகற்பமாகிய மூன்று அஸ்வமேதங்களைச்செய்வித்து அவருடைய அதிபாவனமான கீர்த்திகளைச் சகலதிக்குகளிலும் இந்திரனுடைய கீர்த்தியைப்போல் விருத்திபண்ணிவைத்தார். சரதல்ப்பத்தில்படுத்திருந்த வீட்டுமருடைய உபதேசமாகிய தருமசிரவணகாலத்தில் ராஜதருமங்களை வீட்டுமருபதேசித்து அவரை ராச்சியபரிபாலனஞ்செய்யச்சொல்லி ஆக்கியாபித்ததினுலேயும்ஸ்ரீ அச்சுதனுடையஉபதேசத்தினுலேயும் சகலபிரமைகளையுந் தவிர்ந்து அந்ததருமராஜா அபார்ஜிதனை ஸ்ரீகிருட்டினனுடைய வுதவினுல் சமுத்திரஞ்சூழப்பட்ட பூமண்டலத்தை தனக்கு வசவிர்த்தியான தம்பிகளுடனேகூட ராச்சியபரிபாலனஞ் செய்யுங்காலத்தில் பர்ஜன்னியபகவான் மிகவும் வருஷித்தான், பூமி சகலமானபலன்களையும்கொடுத்தது. பசுக்கள் க்ஷீர சமூர்த்தியான மடிகளுண்டாகி இடையர்பாளையங்களில் பால்கனைத்ததுகள் நதிகளும் சமுத்திரங்களும், மலைகளும், வனஸ்திரீகளுடனே கூடிய கொடிகளும், தானியங்கள் விளைகிற பயிர்களும் அந்தந்தருதுக்களில் தத்தமக்கு யோக்கியபலன்களை மிகவுங்கொடுத்ததுகள். அஜாத சத்துருவானவர் பிராணிகளுக்கு ராஜாவாயிருந்தபோது சனங்களிலொருவருக்குந் தேகவியாதிகளும் மனோவியாதிகளுமில்லை தெய்வத்தினுலேயும் பிராணிகளாலேயும்,பூதத்தினுலேயும்,ஆத்மாவினுலேயும் உண்டாகிற கிலேசங்களும் தாபத்திரயங்களுமில்லை.

ஸ்ரீஹரியும் தமக்குச் சுகுர்த்துக்களான பாண்டவாதி

களுடையசோகத்தை விலக்கவேண்டியும் தங்கையான சுபத்திரையுடைய பிரீதியைக்கோரியும், அந்த அஸ்தினுபுரத்தில் சிறிதுநாளிருந்து அவர்கள் கிருட்டினனைப் பார்த்து பாண்டவர்கள் ஓய்கிருட்டினனே? எங்களிடத்தில் அனுக்கிரகத்தினுல் இங்கேவெகுகாலமாக எழுந்தருளியிருந்து துவாரகாவாசிகளான பிரியவர்க்கங்களை விட்டிருக்கிறீர். இப்போதும் அவர்களைக் கடாட்சிக்கவேண்டுமென்று திருவுள்ளத்தில்நினைத்து எழுந்தருளி அவர்களைக் கடாட்சித்துப் பாலனமுஞ்செய்து துரிதமாகஅடியேங்களுக்குப் புனர்தரிசனங்கிருபைசெய்யவேண்டுமென்று அந்தப் பாண்டவர்கள் சிலவுகொடுக்கப்பட்டுப்பின்பு கிருட்டினன் தருமராஜாவைஆலிங்கனமுஞ்செய்து நமஸ்காரமும்பண்ணி ரதத்திலேறுகிற சமயத்தில்சிறிதுபேர்களால் ஆலிங்கனம் சிறிதுபேர்களால் அபிவாதனமுஞ்செய்யப்பட்டு ரதத்திலேறினபின்பு சுபத்திராதேவியும்,துரோபதையும்,குந்திதேவியும், விராடகன்னிகையான உத்தரையும்,காந்தாரியும், திருதராட்டிரனும்,திருதராட்டிரனுக்குத் தாசியிடத்திற்பிறந்த யுயுச்சுவும்,கிருபாசாரியரும்,நகுலசகாதேவர்களும்,பீமனும்,தவுமியனென்கிறரிஷியும், அபலையான ஸ்திரீசனங்களும், சார்ங்கபாணியான கிருட்டினனுடைய பிரிவைச்சகிக்கமாட்டாமல்மோகித்தார்கள். கியானசூன்யன் சாதுசங்கத்தினுல் எவனுடையபுகழை ஒருதரம்கேள்விப்பட்டமாத்திரத்தில் தன்னுடையதுர்ச்செய்கைகளை விட்டுப் பக்தியையுடையனுவனே அப்படிப்பட்ட மகிமையைவாய்ந்த ஸ்ரீகிருட்டினனுடைய பிரிவைக் குந்திமார்கள் எப்படிசகிப்பார்கள். பாண்டவர்விஷயங்களில்பொருந்தாத மனதுடையவர்களாகிச் சிநேகித சம்பந்தத்தால்பார்த்துக்கொண்டும் கூடசஞ்சரித்தார்களல்லவோ பந்துக்களாகிய ஸ்திரீஜனங்களெல்லா மந்ததேவகிசுதனிடத்தில் அதிகஆசையினுல் அவன்பயணம்புறப்பட்டு நடக்கிறசமையத்தில் தம்முடையகண்களில்ஜலங்களுண்டாகிறது சுபமல்லவென்று நினைத்து அதுகளைத் தடுத்துக்கொண்டிருந்தார்கள். அந்தச்சமயத்தில் மிருதங்கங்களும், சங்கங்களும், பேரிகைகளும், வீணைகளும், பணவவாத்தியங்களும், கோமுக வாத்தியங்களும்,துந்துமிவாத்தியங்களும், ஆனகவாத்தியங்களும், கெண்டாரவமுதலானதுகளும், மிகவும் முழங்கினதுகள் இந்தஸ்வாமியைக்காணவேண்டுமென்று நினைத்த கவுரவஸ்திரீகள் உப்பரிகைகளுடைய சிகரங்களிலேறிப்பிரீதிகளுடனேஸ்ரீகிருட்டினனிடத்தில் புட்பமாரிபொழிந்தார்கள்.

ஸ்ரீகிருட்டின்னுக்குச் சிநேகிதனுன அர்ச்சுனன் தங்கத்தினுல்செய்யப்பட்ட கம்பையுடையவெள்ளைக்குடைகவிக்க உத்தவரும் சாத்தகியும் இரண்டு பக்கங்களிலேயும்அதிமனேகரங்களான வெண்சாமரைகளிரட்ட விளங்கினர். பிராமணர்கள்செய்த ஆசீர்வாதஓசைகள் பரவியது ஸ்திரீகளில்ஒருத்தியுடனேயொருத்திசொல்லுகிற வார்த்தையாவது ஓய்சகிகளே யாதொருபுராணபுருஷன்சத்வாதிகுணங்கள் ஒன்ருேடொன்று கலக்கிறதற்கு முன்னே காலத்தில் தேவமனுஷியாதிதருக்களும்மகதகங்காராதி விகாரங்களுமில்லாத சூட்சுமப் பிரகிருதியையும் ஜீவவர்க்கங்களையும் தனக்குச்சரீரமாகப்பரிக்கிரகித்துப் பிரளயகாலத்திலும் கியானுதிசக்திகளை யிழந்தசேதனுசேதனங்களும் ஆத்மாவாகி ஈஸ்வரனுன தன்னிடத்தில் லயமடைந் திருக்கும்போதும் தானெருவனேயாகியிருந்தானே அவனேஇந்தக் கிருட்டினனென்றறியுங்கள். அந்தப்புராணபுருஷன்நாமரூபங்களில்லாத தன்னிடத்தில் நாமரூபங்களைக் கற்பிக்கவேண்டுமென்று நினைத்துத் தன்சங்கற்பத்தால் ஆக்கியாபிக்கப்பட்டும் சிருட்டித்தும் ஜீவராசிகளைமயக்கிக்கொண்டுமிருக்கிற தனக்குச் சுவாதீனமாகிய பிரகிருதியை அனுசரித்துவெகுரூபநாமங்களைத் தரித்தும் ஸ்திதிகாலத்தில் தனக்குச்சரீரமாகிய பிராணிகள்செய்யுங் கருமங்களுடைய அவஸ்தைகளைக் கற்பிக்கவேண்டி வேதஸ்வரூபங்களாகியசாஸ்திரங்களை வெளியிட்டானே அவ னிவனேயென்றறியுங்கள். ஓய்சகிகளே? இந்தச் சம்சாரத்தில் மஹானுபாவர்களானகியானிகள் இந்திரியங்களைச்சயித்துப்பிராணவாயுகளை வசிகரித்துத் தங்கள்பக்தியினுலேமிகுந்தும் சம்சயாதிகளைக்கடந்துமிருக்கிற கியானங்களால் பரிபூரணர்களாகி எவனுடைய பாதபத்மங்களைச் சாக்ஷாத்காரஞ்செய்கிருர்களோ அந்தப்பரமபுருஷனுகிய ஸ்ரீகிருட்டினன் நம்முடைய சத்வகுணத்தை ரசோகுண தமோகுணங்களுடனே சேராமல் செய்கிறவனல்லவோ யாதொருமகானுபாவன் வேதங்களிலேயும், வேதாந்தங்களிலேயும் ரகசியகோப்பியமான வஸ்துவை அறிந்தவர்களால் அடிக்கடிகானஞ்செய்யப்பட்ட பாவனமாகிய கீர்த்தியை யுடைத்தாகியும் தானெருவனே யிந்தவுலகத்துக்கு ஸ்வாமியாகியும் தன்விளையாட்டினுல் சேதனுசேதனஸ்வரூபமாகிய இந்த உலகத்தை சிருட்டித்தும், ரட்சித்தும், சங்கரித்தும், அதுகளில் தான்வேண்டாமலும்பிரகாசிக்கிருனே அவனே இந்தமாதவன்.

எந்தக்காலத்தில் தங்களுடை அதர்மங்களால் மிகுதியான தமோகுணத்தால்மறைக்கப்பட்டும் விபரீதமாகக்கிரகித்துக்கொண்டு மிருக்கிற அறிவை யுடைத்தான ராஜவர்க்கங்கள் இந்தப்பூமியை யுபத்திரஞ்செய்கிருர்களோ அந்தந்தயுகங்களில் இவனல்லவோசத்வமயமான அவதாரங்களைத்தரித்துப் பிராணிகளுடைய சுகத்தைக்குறித்துச் சத்தியமாகிய கியானுதிகளையும், தயவையும்,

கீர்த்தியையும் தரிப்பிக்கிருன். யாதொருகாரணத்தால் புருஷசிரேட்டனுகிய இந்தலட்சுமிபதியானவன் யதுகுலத்தில்அவதரித்தும் மதுவனத்தில் தன்திருவடிகளால் சஞ்சரித்தானே அதுகாரணத்தால் யதுகுலமானதுஅதிசிலாக்கியமாச்சுது மதுவனத்துக்குச் சிலாக்கியமானது மற்றென்றில்லாமற் பெருமையுடையவாயிற்று. இதுஎன்னபாக்கியம் இதென்னஆச்சரியம் தன்னனுக்கிரகத்தினல் யாதொரு துவாரகாபுரத்தில் வாசஞ்செய்தும் மந்தகாசத்துடனே கடாட்சம் செய்துகொண்டும், எழுந்தருளியிருக்கிற தங்களுடைய ஸ்வாமியான ஸ்ரீகிருட்டினனை துவாரகாபுரத்தில் வாசஞ்செய்கிற பிரஜைகள் நித்தியம் சாக்ஷாத்காரமாகக் காண்கிருர்களோ அதனுல் அந்தத்துவாரகாபுரியானது சொர்க்கலோகத்தினுடையகீர்த்தியைத் திரஸ்காரஞ்செய்துகொண்டுபூமிக்குப்புண்ணியமாகிய கீர்த்தியைக்கற்பிக்கின்றது.

ஓகோ என்னஆச்சரியம் வாராய் சகியே? யாதொரு ஸ்திரீகள்இந்தஸ்ரீகிருட்டினனுடைய அதராமிருதத்தை அடிக்கடிபானஞ் செய்யப்படும் இவனுல் பாணிக்கிரகணஞ்செய்யப்பட்டு மிருக்கிற அந்த மகானுபாவர்களாலே ஈஸ்வரனுகிய இந்தஸ்ரீகிருட்டினன்விரதங்களாலேயும்,தீர்த்தஸ்நானங்களாலேயும், ஓமங்களாலேயும், மற்றுமுள்ளசாத்வீகதருமங்களாலேயும், அனேகசன்மங்களில் நன்றாகப்பூசிக்கப்பட்டான்என்று ஸ்திரீகள்சொல்லுகிறதைக்கேட்டுச் சிலாகித்து ஸ்ரீகிருட்டினன் புன்னகையோடேநடந்தார். தருமராஜாவும் மதுவைரியினுடையரட்சணத்தைக்கோரிச் சிநேகாதிசயத்தினல் ஸ்ரீகிருட்டினனைச் சத்துருக்கள்மோசஞ்செய்யப்போகிருர்களென்று நினைத்துச் சதுரங்கசேனையையனுப்பினர்அப்பால் சவுரியான ஸ்ரீகிருட்டினன் வெகுதூரந்தொடர்ந்துவந்த சிநேகிதாயுக்தாளான விதுரனுடனேவந்திருக்கிறகவுரவர்களைநிறுத்தித் தம்முடைய இட்டசனங்களுடனேதுவாரகையைக்குறித்துப்போகிற மார்க்கத்தில் குருதேசமுதலாகிய தேசங்களைக்கடந்து அந்தந்தத்தேசத்துச்சனங்கள் கொண்டுவந்த காணிக்கைகளை யங்கீகரித்துப்போகிறபோது அசுவங்கள் கொஞ்சம் இளப்படைந்ததைக்கண்டு சுதந்தரனை ஸ்ரீஹரிமத்தியான சமயத்தில் மேற்குத்திக்கில் ரதத்தைவிட்டுப் பூமியிலிழிந்து ஜலநிறைந்த தடாகக்கரையில் எழுந்தருளினர்.

இருஷிகேசாயநம:

## யக-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

ஏதமேதி லெதுகுலமேத்திடும்
யாதவேந்திர னுகுங்கிருட்டினன்
போதவேதுவனைப்பதிபோந்தெழில்
மாதரோடு மணத்தல்வழுத்துவாம்

ஆனர்த்தாளால் ஸ்துதிக்கப்படும் யாதவேந்திரனை ஸ்ரீகிருட்டினன் பட்டணத்தில் பிரவேசித்துப் பந்துக்களோடேகூடிக்கொண்டு கிரீடித்ததை நன்றாகவர்ணிக்கப்படுகின்றது.

இந்தப்பிரகாரம் ஸ்ரீஹரிகதையைச் சவுனகாதிகளுக்குச்சொல்லிச் சூதர்பின்னையுஞ்சொல்லுகிருர். ஸ்ரீகிருட்டினன் ஆனந்ததேசத்தையடைந்து சனங்களுக்குத் தம்மைப்பிரிந்த துக்கத்தைவிலக்கச்செய்பவர்போல்பாஞ்சசன்யத்தைப்பூரித்தார், வெளுத்தவயிற்றை யுடையவுருக்கிரமனுல் ஊதப்பட்ட பாஞ்சசன்னியமானது ஸ்ரீஹரியினுடைய அதரங்களிலிருக்கிற சிவப்பினுல் சிவந்து அவருடைய கமலங்கள்போன்ற கைகளிற்பிடித்திருக்கிறபோது அதிகமாகிய நாதத்தையுடைத்தான அன்னமானது பத்மங்களுடைய கூட்டத்தி லிருந்தாற்போல்விளங்கியது. அவ்விடத்தி லிருக்கிற பிரசைகள் அதிபயத்தைக்கொடுக்கிற அந்தச்சங்கத்தொனியைசமீபத்தில்கேட்டு தங்களுக்கு ஸ்வாமியாகிய ஸ்ரீகிருஷ்ணனைக்காணவேண்டுமென்று இச்சித்து எதிர்கொண்டுவந்தார்கள் அவ்விடத்துஜனங்க ளாதரவுடனே காணிக்கைகளைக்கொண்டுவந்து எப்பொழுதுங்குறைவில்லாத ஆனந்தஸ்வரூபமாகிய பரமாத்மாவை யுபசரித்து மலர்ந்தமுகங்களையுடைத்தாகிஸ்ரீகிருஷ்ணனைப்பார்த்து ஆனந்தபாஷ்பங்களுடனே பிதாவிடத்தில் குழந்தைகள் பேசுவதுபோல் தங்கள் மழலைச்சொற்களாகிய வார்த்தைகளால்சொல்லுகின்றுர்கள். ஓய் சுவாமியே அதிசுபமாகிய அந்தபரமமானநிலையை இச்சித்தவர்களுக்கு இந்தசமுசாரத்தில் சம்பந்தப்பட்டிருக்கிற பிர்மாவினுலேயும், அவன்குமாரர்களான சனகாதிகளாலேயும், வந்தனஞ்செய்யப்பட்டும், கமலங்களுக்குச் சரியாகியுமிருக்கிற உம்முடைய திருவடியை வணங்கினேம்ஓய் சமஸ்தங்களையுங்கற்பித்த மஹானுபாவனே எங்களுக்கு ஆத்மாவும், சுகிர்தமும், பிதாவும், ஸ்வாமியும்,சற்குருவும், சர்வோத்கிருஷ்டமான தேவதையும் தேவரீரேயல்லாமல் வேறில்லைஓய்ஸ்வாமி, சொர்க்கவாசிகளான தேவர்களுக்குங்கிடையாத பிரீதியால்உண்டாகிய புன்சிரிப்பினுல் ரமணீயமான கடாக்ஷங்களை உடைத்தாகியும்சர்வ அவயவங்களிலுஞ் சவுந்தரிய சம்பன்னமாகியுமிருக்கிற தேவரீருடைய திவ்வியமங்கள விக்கிரகத்தை அடியேங்கள்பிரத்தியக்ஷமாகக் காண்கிறதினுலே கதிபெற்றேம். ஓய் பங்கஜாக்ஷனே, தேவரீர் பக்தர்களைக்காணவேண்டுமென்று நினைத்துக் குருதேசங்களிலும் மதுராதேசங்களிலும் எழுந்தருளியிருந்தபோது எங்களுக்கு ஒரு க்ஷணக்காலமானது ஒருகோடிவருஷ

மாகவே யிருந்ததென்று துதித்ததைக்கேட்டுக்கொண்டு அவர்களுக்குஅனுக்கிரகஞ்செய்தவனுகிப்போகவதிபட்டனம்போல்யதுவம்சத்தாராலே ரட்சிக்கப்பட்டும் சகல ருதுக்களிலுண்டான பழங்களையும், புஷ்பங்களையும்,தளிர்களையுந்தரித்து புண்ணியமானமரங்களாலேயும், கொடிகளாலேயும், அலங்கரிக்கப்பட்ட வூரைச்சேர்ந்த தோப்புகளாலேயும் கொல்லைப்புறங்களிலிருக்கிற தோட்டங்களாலேயும், ராஜாக்கள்-மந்திரிகள்- விளையாடயோக்கியமான சிங்காரவனங்களாலேயும், விளங்கிய தாமரைத்தடாகங்களாலே நிறைந்தும், கோபுரத்துவாரமார்க்கங்களிலேவிஞேதமான நிலைகளை யுடைத்தாகியும், விசித்திரமாகிய துஜஸ்தம்பங்களிற் கட்டியிருக்கிறகொடிகளினுலே நிறைந்த நிழல்களையுடைத்தாகியும் பரிமளஜலங்களினுல் தெளிக்கப்பட்டுமிருக்கிற ராஜமார்க்கங்கள் ஆவ்ணங்கள் கடைவீதிகள் நாற்சந்திகள் இவைகளால் சிலாக்கியமாகியும், கிரகங்களுடையவாசல்கள்தோறும் தயிர்களாலேயும் அக்ஷதைகளினுலேயும் பழங்களினுலேயும் கரும்புகளாலேயும்,பூரணகும்பங்களாலேயும் பலிகளாலேயும் தூபதீபங்களாலேயும் பிரகாசித்துக்கொண்டுமிருக்கிற துவாரகாபுரியில் ஸ்ரீகிருஷ்ணன் பிரவேசித்தார். அப்போது அதிப்பிரியரான கோவிந்தனெழுந்தருளுகிறுனென்று கேள்விசெய்துமகத்தாகிய சந்தோஷத்துடனே வசுதேவரும் அக்ரூரரும் உக்கிரசேனமஹாராஜாவும் அற்புதபராக்கிரமசாலியான பலராமனும், பிரத்தியுமனனும், சாறுதெட்சணனும், சாறுவும், சாம்பனும்,மறுமகேதன் முதலானவர்களும், தங்கள்தங்கள் செய்கையைவிட்டுப்பட்டத்தானையைமுன்னிட்டுக்கொண்டு சோபனங்களான சூக்தங்களை ஜபித்துக்கொண்டுவருகின்ற பிராமணர்களுடைய வேதகோஷ்டங்களுடனேயும், பலவாத்தியங்களுடனேயும், ரதங்களிலேறிக்கொண்டு பயபக்தியுடனே எதிர்கொண்டார்கள்.

அழகிய குண்டலங்களணிந்த முககாந்திகளையுடைத்தானமுக்கியவர்னஸ்திரீகள் ரதங்களி லேறிக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணனுடைய தரிசனத்தைக் கோறினவர்களாகி கும்புகும்பா யெதிர்கொண்டு நடனஞ்செய்கிறபேர்களும்ஸ்ரீஹரியுடைய அற்புதங்களாகியசத்சரித்திரங்களைக் கானஞ்செய்தார்கள். ஸ்ரீபகவானுனவர் வந்தடைந்துஜனங்களெல்லோருக்கும் முறைமைப்படிஅவரவர்களுக்கு வந்தனங்களாலேயும். ஆசிலேஷங்களாலேயும், ஸ்பரிசங்களாலேயும், மந்தஹாசங்களாலேயும், கடைக்கண்பார்வைகளாலும், சன்மானஞ்செய்து தாமும்பிரதிவிஷயர்களான அவர்களால் வெகுமானஞ் செய்யப்பட்டு இப்படி சுவதந்திரனுனஸ்வாமி துவாரகாபுரத்தில் பிரவேசித்தார். ஒய் பிராமணசிரேஷ்டர்களே ஸ்ரீகிருஷ்ணன்துவாரகையில் ராஜமார்க்கத்தில் எழுந்தருளினஅளவில் அந்தத்துவாரகையிலுள்ள குலஸ்திரீகளெல்லாம் பிரதிதினமும் கிருஷ்ணனைச்சேவித்துத் தங்கள் நேத்திரங்களுக்குத் திர்ப்தியாகவில்லை அதேதெனெனில் ஸ்ரீமகாலட்சுமிதேவியும் மோகித்துப் புத்தியானது மற்றொருஅவயவங்களிற்செல்லாமல் அந்தமார்பையேவீடாக இடைவிடாமல் வாசஞ்செய்தால் மற்றபேர் திர்ப்திக்கு அளவில்லையென்று சொல்லுகிறது அதிசயமல்ல, அப்படி அந்தஅச்சுதன் அவர்கள்நேத்திரங்களுக்குத் திர்ப்தியில்லாமலிருக்கிறது விகிதமென்றே நினைக்கவேண்டும் இப்படிராஜவீதியில் எழுந்தருளுகிற கிருஷ்ணனுக்குமேலேகவிக்கப்பட்ட வெள்ளைக் குடையானது சூரியமண்டலம்போலவும் இரண்டுபக்கங்களிலேயும், இடைவிடாமல் வீசப்படுகிற வெண்சாமரைகள் சந்திரமண்டலம்போலவும், உப்பரிகைகளின்மேலிருந்து புரஸ்திரீகள்பொழிந்த புஷ்பவருஷங்கள் நட்சத்திரங்கள் போலவும் திருமேனியில் தரித்திருக்கிற பீதாம்பர மின்னலைப்போலவும், திருமேனியிலணிந்த வனமாலை இந்திரதனுசுபோலவும், இந்திரநீல மாணிக்கவர்னமான ஸ்வாமியுடையதிருமேனி இருண்டமேகம்போலவும் பிரகாசிக்கிறபடியால் மிகவும்அற்புதமாக விருந்தது இப்படி திவ்யஅலங்காரத்துடனே தம்முடையகிரகத்திலேஎழுந்தருளி தமக்குப்பிதாவாகிய வசுதேவராலேயும், மாதுருவர்க்கங்களாலேயும், ஆலிங்கனஞ்செய்யப்பட்டுத்தாம் வசுதேவருக்கும் தேவகிமுதலாகிய தாய்மார்கள் எழுபேருக்கும், சாஷ்டாங்கமாகவந்தனஞ்செய்தார் அந்தத் தாய்மார்களும் புத்திரனுகிய கிருஷ்ணனை மடியில்வைத்துக்கொண்டு பிரீதியினுல் பால்சுரந்த ஸ்தனங்களை உடைத்தாகியும் புத்திரவாஞ்சல்யத்தினுல் ஆனந்தபரவசமாகிய புத்தியையுடைத்தாகியும் கண்களிற்சொரிந்தஆனந்தபாஷ்பங்களால்அபிஷேகஞ்செய்தார்கள். அப்பால் தம்முடையபாரியாளான ஸ்திரீகள் பதினறுயிரவரும் அலங்கரிக்கப்பட்டும் சர்வ சம்பத்துகளை உடைத்தாகி நிகரில்லாமலிருக்கிற தம்மிட திருமாளிகையிலெழுந்தருளினர். அந்தக்கிரகங்களிலிருக்கிற கிருஷ்ணனுடைய பத்தினிகள் வெகுநாளாய்ப்போயிருந்து திரும்பவும்எழுந்தருளிக் கிரகத்தில் தரிசனத்தைக்கொடுக்கிற வல்லபனைக்கண்டுமகிழ்ந்து இதைவிடமகத்தாகிய வேறுஉச்சவமில்லையென்றுநினைத்துத் தூரத்தில்வருகிறபோதே தங்கள் தங்கள் ஆசனங்களைவிட்டெழுந்திருந்துநாணத்துடனேயும், முகவிலாசத்துடனேயும், எதிர் சென்று அந்தக் கிருஷ்ணனைக் கண்களாலேயும், அறிவினுலேயும், தங்களுடைய ஆத்துமஸ்வரூபங்களாலேயும், அளவிடப்படாத அன்புடைத்தானவர்களாகி மிகவும் ஆலிங்கனஞ்செய்துகொண்டார்கள். இப்படிப்பட்ட மகிமை

யையுடைய பகவான் இந்தவுலகத்தில் தன்னுடைய சங்கற்பத்தினால் அவதரித்து ஸ்திரீரத்தினங்களுடைய ராசிகளிலேகலந்து பிராகிருதனைமனுஷனைப்போல் கிரீடித்துக்கொண்டிருக்கிறபோது உலகங்களையெல்லாம்மோகிப்பிக்கிற மன்மதனை இவர்களையும் மோகிப்பிக்கவந்து அதிகமாகிய சாமார்த்தியத்தை யுடைத்தாகியும், மனோக்கியமாகிய சாதுரியத்துடனே கூடியுமிருக்கிற புன்சிரிப்பினாலேயும், நாணத்துடனேகூடிய கடாட்சத்தினாலேயும், அடிபட்டு மோகிப்பித்து அபஜயத்தை அடைந்து தானும்மோகித்து தன்கைவில்லையு மெறிந்துவிட்டான் அந்தஉத்தமமாகிய ஸ்திரீகளும்தங்களுடையநயங்களாகியலீலைகளால் இந்தஹரியுன்டயமனதைச்சலிப்பிக்கமாட்டாமற்போனார்கள். அந்தப்பரமபுருஷனை ஒன்றிலும் பற்றில்லாதவனென்றுநினையாமல் தங்களைப்போல் பிரகிருதியிலுழன்றவனாகநினைத்திருக்கிற இந்த உலகமெல்லாம் மிகவும்அறிவில்லாதவர்களென் றறியும் பிரகிருதிசம்பந்தனை பிராகிருதனைப்போல்நடக்கிற ஸ்ரீஹரியைச் சுத்தசத்வமாகிய திவ்யமங்களவிக்கிரகத்தை யுடைத்தாகியும் ஞானசத்தியாதிகளுடனேயும் நிறைந்துமிருக்கிற பரமபுருஷனிடத்தில் பற்றின பரிசுத்தமான அறிவைப்போல் பிரகிருதி அவனைத்தொடரமாட்டாதுஇப்படிப்பட்ட மகிமையைவாய்ந்த ஸ்ரீகிருஷ்ணனுடையபிரமாணத்தை இந்தஸ்திரீகள் அறியமாட்டாமல் தங்களுடையபேதைமையினால் தங்களிடத்தில்மோகிதனாய்தாங்களிருக்கிறவிடத்தில் ஏகாந்தமாகத்தொடர்ந்துவருகிறவனென்று நிச்சயித்திருந்தார்கள்.

---

பத்மநாபாயநம.

## யஉ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

இப்புவிக்குள் நிறைதவமெய்திய
தப்பிலாவஸ்வத் தாமன்றன்றண்டனை
செப்பமாவெதற் காச்சொலப்பட்டதே
அப்பரிச்சித்து சென்மமறைகுவாம்.

யாதொருபரிட்சித்துவினுடைய ஜன்மப் பிரசங்கத்தின்பொருட்டு விஸ்தரித்து அசுவத்தாமாவினுடைய தெண்டனை முன்னே சொல்லப்பட்டதோ அப்படிப்பட்ட பரிட்சித்துவினுடைய ஜனனத்தைச் சொல்லப்படுகின்றது.

இப்பால்சவுனகர் சூதரைக் கேட்கிறார். ஓய்சூதரே அசுவத்தாமாவால் பிரயோகிக்கப்பட்ட பிரமசிரமென்கிற அஸ்திரத்தினுடைய அக்கினிச்சுவாலைகளினால்உத்தரையினுடைய கர்ப்பமானது ஜகத்பதியான ஸ்ரீகிருஷ்ணனால் ஜீவித்ததல்லவோ அந்தச்சிசுவானது பூமியில் பிறந்ததும்ராச்சியபாரம் செய்யுங்காலத்தில் அவன்செய்தகருமங்களையும். சரீரத்தியாகஞ்செய்ததையும், பின்புசுகப்பிரமரிஷியிடத்தில் கியானவுபதேசம் பெற்றுஎந்தவஸ்துவைஅடைந்தானோ அந்த மகானுபாவனுடைசரித்திரங்களைச் சொல்லவேண்டுமென்ற சவுனகரைப்பார்த்துச்சூதர் சொல்லுகிறார். ஓய்சவுனகரே? தருமராஜாவானவர் கிருஷ்ணனுடையதிருவடிகளை அடிக்கடிசேவித்துக்கொண்டு மற்றொருவஸ்துக்களிலேயும் ஆசையில்லாமல் பிரஜைகளைச்சந்தோஷமாக ஆக்கினைபண்ணிக்கொண்டு பிதாவைப்போல் பாலனஞ்செய்தார் ஐஸ்வரியங்களும் யக்கியங்களும்,ஜனங்களும் பட்டமகிஷியும்,பிராதாக்களும், பூமியும், சம்பூத்வீபாதிபத்தியமும்சொர்க்கத்தையளாவினகீர்த்தியும்பொருந்தி இவையெல்லாந்தேவர்கள்கோரும்படியாகவிருந்தாலும் முகுந்தனிடத்தில் நிலைபெற்ற மனமுண்டாகிய தருமராஜா, அதுகளில் இச்சையில்லாமலிருந்தார். பிராமணோத்தமர்களே இப்படிராச்சிய பரிபாலனத்தை யுதிஷ்டிரர்செய்துவருங்காலத்தில் மாதாவினுடையகர்ப்பத்திலிருந்த வீரனாகிய பரிக்ஷித்துவான சிசு நிர்மலஸ்வரூபனாகியும் சொர்னகிரீடமும் அதிசுந்தரமும் கறுத்ததேகமும், மின்னலைப்போல்விளங்குகிற பீதாம்பரமும், நீண்டசதுர்ப்புஜங்களும், குண்டலங்களும், சிவந்தகண்களும்வாய்ந்துகதாபாணியான அச்சுதனால்அஸ்திரசுவாலையைப்பரிகரித்துக்கொண்டு தன்னுடைய சமீபத்திலேயிருக்கிற ஸ்ரீஹரியைக் கர்ப்பத்திலிருக்கிற பரிட்சித்து பார்த்துக்கொண்டிருக்கையிற்றானே பத்துமாதஞ் சென்றபிற்பாடுபகவான் அந்தர்த்தானமானார்.

அப்பால் சகலநன்மைகளுக்கும் ஏதுவாகியும் அனுகூலமாகியகிரகவுதயங்களுடனே கூடியுருமிருக்கிறசுபலக்கினத்தில் பாண்டுமகாராஜாவுடைய வமிசபாலனாகியபுத்திரன் பாண்டுவேமறுபடியும் பிறந்தானென்று தோன்றும்படியாக ஜனித்தான். தருமராஜா, தவுமியர் கிருபர்முதலாகிய பிராமணர்களாலேஅந்தப்புத்திரனுக்குச் சாதககருமத்தைச்செய்வித்து மங்களமாகியஆசிர்வாதத்தைச் செய்வித்தார். அந்தத்தருமராஜா இந்தப்பிரகோற்பத்தியாகிற புண்ணியகாலத்தில் பிராமணர்களுக்குச் சுவர்னங்களையும், பசுக்களையும்,கிராமங்களையும், அசுவங்களையும், ரதங்களையும், அபரிமிதமாகவழங்கிப் பின்பு பிராமணாளை விசுவாசத்துடனே யஞ்சலிவந்தனஞ்செய்கிற யுதிஷ்டிரரைப்பார்த்து அவர்கள்மிகவுஞ் சந்தோஷத்துடனே ஓய் கௌரவசிரேஷ்டனே!இந்தப்பிள்ளை விஷ்ணுராதனென்று உலகத்தில் நாமதேயத்தைத்தரித்து மிகுதியான கீர்த்திசாலியாயும், பாகவதாளுக்குள்ளே யுயர்ந்தமஹானுபாவனாகவுமிருப்பான்

சந்தேகமில்லையென்று சொல்லத் தருமநந்தனன் ஓய்பி
ராமண சிரேஷ்டர்களே? இந்தக்குமாரன் ராஜரிஷிகளா
கியும் புண்ணியமான நல்லகீர்த்திகளையுமுடையமஹா
த்மாக்களையனுசரித்து சத்புருஷனென்கிறசொல்லுண்
டாக அனுசரித்து நடப்பானேவென்றுகேட்கப் பிராம
ணர்கள் இவன் இட்சுவாகைப்போல் பிரஜைகளைப் பரி
பாலனஞ்செய்யவும்தசரதபுத்திரனான ஸ்ரீராமனைப்போ
லச் சத்தியசந்தனாகவும், உசீநரபுத்திரனான சிபிச்சக்
கிரவர்த்திக்குச் சமானமானதாதுருத்துவத்தையும். து
ஷ்டியந்தன் புத்திரனாகிய பரதனுக்கு நிகராக யக்கியசீ
லரான ஜோகியர்களுக்குக் கீர்த்திகரனாகவும், அர்ச்சுன
னைப்போலவும், கார்த்தவீரியார்ச்சுனனைப் போலவும்,
வில்லாளிகளில் சிரேஷ்டனாகவும், சிங்கத்தைப்போல்ப
ராக்கிரமத்தையும்,பூமியைப்போல்பொறுமையும்;சது
ர்முகனைப்போல் சாந்தியையும்; பிரசாதத்தில்சிவனைப்
போலவும், சமஸ்தமாகிய சற்குணங்களுடைய மகத்து
வத்தில் ஸ்ரீகிருஷ்ணனை யனுசரித்தும், ரந்திதேவனைப்
போல் அவதாரியுமுண்டாகியும், தயிரியத்தில்மகாபெ
லியைப்போலவும், ஸ்ரீஹரிபக்தியில்பிரகலாதனைப்போ
லவும், அநேகமாகிய அசுவமேதங்களைஅனுஷ்டித்தும்
கியானத்தில் முதிர்ந்தவர்கள்வயோவிருத்தர்கள் சீலவி
ருத்தர்கள் இவர்களுடைய சகவாசஞ்செய்தும், ஜனக
னைப்போல்ராஜரிஷியாகியும், சாஸ்திரமரியாதையை அ
திக்கிரமித்து நடக்கிற சனங்களுக்குச் சிக்ஷகனாகவும்,
பூமிநிமித்தியமாகவும், தருமநிமித்தியமாகவும், கலிபு
ருஷனை நிக்கிரகஞ்செய்தும் பிரகாசித்திருப்பான் பின்
பு பிராமணகுமாரனுடைய சாபத்தினால் தக்ஷகனாலே
தான்மரணத்தை யடையப்போகிறவனாகி அந்தச் சாப
த்தைக்கேட்டுச் சர்வசங்கபரித்தியாகஞ்செய்து ஸ்ரீஹரி
யினுடையபாதத்தையேநினைத்து ஆத்மதத்வக்கியானத்
தைக்கோரி வியாசகுமாரனான சுகப்பிர்மரிஷியிடத்திலி
ருந்து பிரமக்கியானத்தையடைந்து கங்கையில்பிரயோ
பவேசஞ்செய்து இந்தச்சரீரத்தைவிட்டு நிர்மயமாகிய
ஹரிசரணத்தை யடையப்போகிறானென்று ஜாதகபாக
த்தில் சமர்த்தராகிய பிராமணர்கள்ரகசியமாகச் சொல்
லிஅந்த தருமராஜாவிடத்திலிருந்துசகல வெகுமானங்
களையும்வாங்கிக்கொண்டு அவரவர்வீட்டுக்குப்போனார்
கள். இந்தப்புருஷன்தான் கெர்ப்பத்திலிருக்கும்போது
பரமபுருஷனைப் பிரத்தியக்ஷமாகக்கண்டவன்ராச்சிய ப
ரிபாலனஞ்செய்யும்போது பூமியில்காணுகிற சனங்களி
டத்திற் பரிட்சித்தபடியினாலேபரிட்சித்தென்றுநாமதே
யம்விளங்கியது. இப்படிச்சுக்கிலபட்சத்தில் பிதுர்த்தே
வதைகள் தங்களுடையகலைகளாலேநாள்தோறும்விர்த்
திபண்ணப்பட்ட சந்திரனைப்போலப் பரிட்சித்தும்தன
க்குப் பிதுர்வர்க்கங்களான யுதிஷ்டிரர் முதலானவர்க
ளால் விர்த்திசெய்யப்பட்டான். இப்பால்தருமராஜாவு
ம் தம்முடைய தாயாதிகளுக்குத் தாம்செய்ததுரோகத்
தைப் பரிகரிக்கவும் நிக்கிரகத்தையும் கப்பம்வாங்குகிற
தையும்விட்டு மற்ற சாத்விதமானவகையால் தனத்தை
யாசிக்கவேண்டியும் நினைத்ததை யவர்தம்பிமார்களறிந்
து அச்சுதனிடத்தில் அந்த நிச்சயத்தைச்சொல்லிஅந்
த ஸ்ரீஹரியுடையசாசனத்தினால்உத்தரத்திக்கில்பூர்வத்
திலிருந்தராஜாக்கள் மிகவும்யாகஞ்செய்து மீந்துபோய்
புதைத்திருந்த சேஷமான தனத்தை அபரிமிதமாகக்
கொண்டு வந்து அந்ததனத்தினால் சகலசாமக்கிரியைக
ளும் கற்பித்துக்கொண்டு சந்தோஷத்துடனே யக்கியே
சனாகிய ஸ்ரீஹரியைமூன்றுஅசுவமேதங்களால் ஆராத
னஞ்செய்தார். தருமராஜாவினால் அழைப்பிக்கப்பட்ட
கிருஷ்ணபகவான் அசுவமேதவிதானத்தையறிந்தபிரா
மணமுகத்தால் யுதிஷ்டிரரையாசிப்பித்துச் சுகிர்துக்க
ளான பாண்டவாதிகளுக்குப்பிரியத்தைச்செய்விக்கவே
ண்டுமென்று சிறிதுமாசங்கள்பரியந்தம் அவ்விடத்திலி
ருந்து அப்பால் தருமராஜாவினாலேயும் துரோபதையி
னாலேயும் மற்றுமுண்டான பந்துக்களாலேயும்அனுப்
ரிவிக்கப்பட்டு அர்ச்சுனனுடனேயும் யாதவர்களுடனே
யும் துவாராவதிபுரத்துக்கு எழுந்தருளினார்.



தாமோதராயநம:

## ௰௩-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பரிச்சித்துக்கிசை பட்டாபிஷேகத்திற்
குரிசிற்றன்மன்பிர ஸ்தானங்கள்கூறிடச்
சுரிகைவில்விது ரன்சொல்வசனத்தாற்
றிரிதாரட்டிரன் நிர்ச்சமஞ்சொல்லுவாம்.

பரிட்சித்துவினுடைய பட்டாபிஷேகத்தினால் ராஜா
வான யுதிஷ்டிரருடையமகாபிரஸ்தானத்தைச்சொல்லு
கைக்கு விதுரனுடையவசனத்தினால் திருதராஷ்டிரனு
டைய நிர்ச்சமம் சொல்லப்படுகின்றது.

இப்படி சூதர்சவுனகாதிகளைப்பார்த்துப் பின்னையும்
சொல்லுகிறார். ஓய்சவுனகாதிகளே? விதுரர் யாத்திரை
போனவிடத்தில் மைத்திரேயனைக்கண்டு அவரால் பர
மாத்மாவான ஸ்ரீகிருஷ்ணனுடைய நடக்கையை அறிந்
து பின்னையுந் தான்கேட்கவேண்டிய தத்வங்களு மவரி
டத்திலிருந்து தெளிந்துகொண்டு அஸ்தினாபுரத்துக்கு
வருவதை தருமராஜாகண்டு தம்பிகளுடனே எதிர்கொ
ண்டார். அப்படியே திருதராஷ்டிரனும், யுயுச்சுவும், கி
ருபாசாரியரும், குந்திதேவியரும், காந்தாரியும் துரோ
பதையும், சுபத்திராதேவியும், உத்தரையும், கிருபியும்

மற்றுமுள்ள ராஜஸ்திரீகளும், கியாதிகளும், கியாதிபத்தினிகளுந் தங்கள் தங்கள் புத்திரர்களுடனே எதிர்கொண்டு சந்தோஷத்தையடைந்து ஆனந்தபாஷ்பங்களைப்பொழிந்தார்கள், தருமராஜா விதுரருக்கு ஆசனத்தைக்கொடுத்துப்பூசித்துப் போசனஞ்செய்வித்து சிரமந்தீர்ந்தபின்பு சுகமாகவிருந்த விதுரரைப்பார்த்து விசுவாசத்துடனேயும், வினயத்துடனேயும், தருமராஜா தம்முடைய பந்துஜனங்கள் கேட்டுக்கொண்டிருக்க ஒருவார்த்தைசொல்லுகிறார். விதுரரே தேவரீருடையநிழலில்வளர்ந்தபலத்தினால் விஷங்கள்-அக்கினிகள் முதலான ஆபத்துகளைத்தவிர்ந்து மாதாவுடனே நிருபத்திரவமாகி அந்தந்தக்காலங்களில் சஞ்சரித்தோம், தாங்கள் இந்தப்பூமண்டலத்திலிருக்கிற தீர்த்தங்களில் ஸ்நானாதிகளைச்செய்து முக்கியக்ஷேத்திரங்களைத் தரிசனம்பண்ணிக்கொண்டுவந்த சரித்திரங்களைச் சொல்லவேண்டுமென்றுகேட்ட தருமராஜனுக்கு யாதவாளுடைய குலக்ஷயம் நீங்கலாய் சகலசங்கதிகளையும் பிரீதியாய்ச் சொல்லிஅவரால்பூசிக்கப்பட்டு (எமதருமராஜாவான சூரியகுமாரன் தனதுதொழிலைப் பிதாவானவர் நடத்தும்படியாயும், தான்ரிஷிசாபத்தினால் சூத்திரசன்மத்தை யெடுத்திருக்கும்) விதுரனானவர் பாண்டவர்களுக்குக் கிடைத்தற்கரிதான காலகதியையறிந்து திருதராஷ்டிரனைப்பார்த்துச்சொல்லுகிறார். ஓய் ராஜாவே? இந்தவீட்டைவிட்டுச் சீக்கிரமாகப்புறப்படவேண்டும் மகத்தானபயமானதுவந்தது. வாரும் ஓய் பிரபுவே! இந்த லோகத்தில் சனித்தவர்கள் எந்தக்காரணத்தினாலே விபத்தை யடைந்து மிகவும்பிரியமாகிய பிராணங்களை விடுகிறார்களோ அந்தமகிமைசாலியான காலசரீரக பரமாத்மா நமக்கெல்லாம் ஒருமிக்கவந்தார். இந்தசமயத்தில் தேகானுபந்தியானசனங்களையும் தனாதிகளையும் நாம் விடவேண்டுமென்கிறதில் எத்தனந்தேவையில்லை பிதுர்சனங்களும் பிராதுவர்க்கங்களும், சிநேகிதர்களும், புத்திரர்களும், சங்கரிக்கப்பட்டார்கள். உமக்குவயதுஞ் சென்றுபோச்சுது உம்முடையசரீரமும் நரைதிரையால்மூடப்பட்டது சத்துருகிரகத்திலும் வாசஞ்செய்கிறீர் பூமியில்சனித்தபிராணிகளுக்கு எவ்வளவுகாலஞ் சென்றாலும், எந்தவிபத்து வந்தாலும், பிழைக்கவேண்டுமென்றே இச்சையானையால் தேவரீர் பீமன்கையினால் எறிந்த பிண்டத்தைப் பட்சித்துக்கொண் டிருக்கிறீர். எவர்களுக்கு அக்கினியையும் விஷத்தையுங் கற்பித்தீரோ எவர்களுடைய பாரியை யகாலத்தில் சபையில் அவமானஞ் செய்வித்தீரோ க்ஷேத்திரத்தையும், தனத்தையும், அபகரித்துக்கொண்டு ராச்சியப் பிரஷ்டராக அலைவதாகவுஞ் செய்வித்தீரோ அவர்களால் கொடுக்கப்பட்ட அன்னங்களைப் புசித்துக்கொண்டு பிராணனை எவ்வளவுகாலம்தரிப்பீர். இந்தத்தேகம்சீர்ணவஸ்திரங்களைப்போல் நரையில் சீர்ணித்து இதைவிடக்கூடாதென்று நினைத்திருந்தாலும் நாசமடைகிறதில் சந்தேகமில்லை. ஆகையால் வைராக்கியம்பிறந்தவன் இந்தத்தேகத்தில் தனக்குப்பிரயோசனமில்லாத தசையைப்பார்த்து சமுசாரபந்தத்தைஇச்சியாமல் தான்போனவழிதெரியாமல் சரீரத்தைவிட்டானாகில் அவனேதீரனென்றுசொல்லப்பட்டவன்யாதொருவன் மனோசயஞ்செய்துகொண்டு தன் புத்தியினாலேயாவது பிறராலேயாவதுஇந்தச்சமுசாரத்தில் அருசியைபிறந்தபின்பு தன்மனதில் ஸ்ரீஹரியைநினைத்துத் தன்வீட்டைவிட்டு வெளியில்புறப்பட்டுநடக்கிறானோ அவனேநரோத்தமன் இப்பால் தேவரீர் சுசனங்களி லொருவருக்குந்தெரியாமல்வடக்குத் திக்கிலே நடக்கவேண்டும். இனிமேல்காலமானதுஜனங்களுடைய சத்வாதிகுணங்களையும், தைரிய சந்தோஷாதிகளையும், அபகரிக்கிறதில்சம்சயமில்லையென்று சொல்லத் திருதராட்டிரன் தன்தம்பியானவிதுரரால் போதிக்கப்பட்டுத் தான்கியானமாகிய நேத்திரத்தையுடைத்தானவனாகிச் சனங்களிடத்திலிருக்கிற உறுதியான சிநேகபாசங்களையறுத்து விதுரர்காண்பித்தமார்க்கத்தில் நடந்தான். அவனுடனே சிலாக்கிய சீலத்தையுடைத்தாகியும், பதிவிரதையாகியு மிருக்கிற காந்தாரியுங் கூடவேநடந்தாள். இப்படியிந்த மூன்றுபேர்களும் சந்தோஷத்தைக்கொடுக்கிற இமவத்பர்வதத்தை யடைந்தார்கள் பின்பு தருமராஜா பிராதக்காலத்திற் சந்தியாவந்தனம்முதலான நித்தியகருமமும் ஆதித்தியோபாஸ்தானஞ்செய்து பிராமணர்களுக்குத் தானமுங்கொடுத்துத் திரிதராஷ்டிரனையும், விதுரரையும், காந்தாரியையும் வந்தனஞ்செய்யவேண்டுமென்று கிரகத்தில்வந்து அவர்களைக்காணாமல் மனோதுக்கத்துடனே அவ்விடத்திலிருந்த சஞ்சயனைக்கேட்கின்றார்.

வாராய் கவதக்கினிபுத்திரனான சஞ்சயனே, விருத்தராகியும்நேத்திரங்களுமில்லாமலுமிருக்கிறநம்முடைய பிதாவானதிரிதராஷ்டிரனும்துக்கத்தை யுடைத்தாகிய நமக்குமாதாவான காந்தாரியும்சிறியதகப்பனும் உபகாரியுமாகியவிதுரரும் எவ்விடத்துக்குப்போனார்கள். பந்துக்களையிழந்த திரிதராஷ்டிரன் பத்தினியுடனே கூட என்னிடத்தில் தோஷத்தைச்சங்கித்து மிகவும் துக்கித்துக்கொண்டு கங்கையில்விழுந்தாரோ எங்களுக்கு ஜனகபிதாவான பாண்டுமகாராஜா சொர்க்கத்தை யடைந்தபின்புஎங்களுக்குஉபகாரியர்களாகி அந்தவிசனம் தெரியாமல் ரட்சித்த பிதுர்சகோதராளால்விதுரர் திருதராஷ்டிரரும்இவ்விடத்தைவிட்டு எவ்விடத்துக்குப்போனார்களென்று கேட்கதயவினாலேயும் சிநேகத்தாலுண்டாகிய இரக்கத்தினாலேயும்திருதராஷ்டிரனைவிட்டுப் பிரிந்

தனிருலேயும், வாடிகைசரீரத்தையுடைத்தானசஞ்சயனும் தனக்குஸ்வாமியாகிய திரிதராட்டிரனைக் காணுதபடியினுல் துக்கபீடிதனுகிய பிரதியுத்தரஞ்சொல்லமாட்டாமலிருந்தான். பின்பு ஆலோசனைசெய்துகொண்டு தன்மதியால் மனதைவுறுதிசெய்துகொண்டு தன்க்குப்பிரபுவான திரிதராஷ்டிரனுடைய பாதங்களை நினைத்து அஜாதசத்துருவைப்பார்த்து ஓய் குலநந்தனனே? உங்கள் பிதாக்களுடைய நினைவையும் நானறியேன் பதிவிரதையான காந்தாரியினுடைய இருதயத்தையும் அறியேன் அவர்களென்னைவஞ்சித்து எனக்குத்தெரியாமல் நடந்துவிட்டார்கள் அறிவுடையவரேயென்று சஞ்சயன்சொன்னவார்த்தையைச் சவுனகாதிகளுக்குச்சொல்லி சூதர் பின்னையுஞ்சொல்லுகிருர்· ஓய் சவுனகாதிகளே? ராசாவுடனே சஞ்சயன்சொல்லும்போது வீணைநாதஞ்செய்வித்துக்கொண்டு பகவானுன நாரதர்தும்புருவுடனேகூடக்காணப்பட்டார்· அவருக்குப் புருவம்சத்திற்பிறந்த தருமராஜா எதிர்கொண்டு அர்க்கியம் சமர்ப்பித்து அபிவாதனஞ்செய்து ஆசனத்திலிருந்தபின்பு ஓய்பகவானே எம்முடையபிதாக்கள் போனவிடமும் பிள்ளைகளையெல்லாம் நாங்கள்கொன்றபடியினுல் ஆர்த்தியையடைந்த காந்தாரியும் போனவிடந்தெரியவில்லை இந்தச் சோகசமுத்திரத்தி லமிழ்ந்துபோகிற எங்களுக்கு மீகாமனைப்போல் தேவரீர்எழுந்தருளினீர்· அதை யருளவேண்டுமென்றுகேட்க நாரதர்சொல்லுகிருர் ஓய்ராஜாவே சகலபிரபஞ்சமும் ஈஸ்வராதீநமென்று நினைத்திராகில் ஒருவரையுங்குறித்து நீர்சோகப்படவேண்டியதில்லை குழந்தைகளுடைய இச்சையினுல் விளையாட்டுக்குத் தருதியான மரப்பாவைகளுடையகூட்டமும் நீக்கமும்போல் ஈஸ்வரனுடைய இச்சையினுல் மனிதருக்கு சுஜனங்களுடனே செறிதலும் பிறிதலும் உண்டாயின ஓய்தர்மபுத்திரனே இந்த லோகர்களை என்றைக்கும் அழிவில்லாததென்றுநினைத்தாலும் இதற்கு அழியுந்தன்மை இயல்பென்று நிச்சயித்தாலும் இரண்டுமில்லாதனவென்றுந் தெளிந்துகொண்டாலும் அவர்களைக் குறித்து அக்கியானத்தால் சுகப்படுகிறதேயல்லாமல் ஒருகாலத்திலும் அவர்கள்விஷயத்தில் விதனப்படத் தேவையில்லை ஆகையால் ஓய்சிரேஷ்டரே, திக்கில்லாத தீனர்களான திரிதராஷ்டிராதியர்கள் என்னைவிட்டு எப்படியிருக்கப்போகிருர்களென்று அக்கியானத்தி லுண்டாகிய அவலத்தைப் பரித்தியாகம் பண்ணுங்காலத்திலேயும் பிராரப்த கருமத்தினுலேயும் பிரகிருதிகுணங்களினுலேயும் பரிணமித்த பஞ்சபூத விகாரமானது இந்த தேகம் சர்ப்பத்தினுலே சூழப்பட்ட புருஷன் மற்றொருவனை ரட்சிக்குமாப்போல் இதரப் பிராணிகளை எப்படி பாலனஞ்செய்யும் கைகளில்லாத ஜந்துக்கள் கைகளுண்டான பிராணிகளுக்கும் கால்களில்லாதசீவன்கள் நாலுகாலுகளுடனேகூடின வுயிர்களுக்கும் கொஞ்சம்பலமானசீவன்கள் கொஞ்சம்பலசாலிகளான பிராணிகளுக்கும் ஆகாரமாகவேயிருக்கின்றனுகள் அப்படிப்பட்ட இந்தவுலகங்களைச் சரீரமாகப்படைத்த ஷட்குணபரிபூரணனுனபரமாத்மா சுயம்பிரகாசனுகியும் சீவவர்க்கங்களுக்கு அந்தராத்மாவாகியும் இந்தச்சேதனுசேதனங்களுடனேகலந்து ஒன்றுகியுந்தன் சங்கற்பத்தினுல்வெருவாகியும் உள்ளும்புறம்பும் பிரகாசித்திருக்கிருனென்றறியுங்ஓய் மகாராஜாவே சகலபூதங்களையுங்கற்பித்த அந்தபகவான் இந்தப்பூமியில் தேவத்துரோகிகளான அசுரர்களைக் கருவறுக்கவேண்டிக் காலசரீரனுகி இப்போது அவதரித்துஅவன்தேவதைகளுக்குச்செய்யவேண்டிய உபகாரங்களைச்செய்ததுபோகமிகுந்தகருமத்தைச் செய்கிறதற்குப்பார்த்துக்கொண்டிருக்கிருன் நீங்களும் இந்தப்பூமியில் செகதீஸ்வரன் எவ்வளவுகாலம்இருக்கிருனே அவ்வளவுக்குள் உங்கள்கருமத்தை யோசித்துக் கொள்ளுங்கள். திரிதராஷ்டிரனும் விதுரனும், காந்தாரியும், இமோத்கிரிக்குத் தென்பாகத்தில் ரிஷிகளுடைய ஆசிரமத்தைச் சேர்ந்தார்கள். யாதொரு ஆகாசகங்கையானது சப்தரிஷிகளுடைய பிரீதியைச்சம்பாதிக்கவேண்டுமென்று ஏழுபிரிவாகப்பிரிந்து சப்தசுரோதாவென்றுபெயரையுடைத்தாகியிருக்கிறதோ அந்தக்கங்கையில் திரிதராஷ்டிரன்மூன்றுகாலத்திலும் ஸ்நானஞ்செய்து ஓமாதிகள்செய்து ஜலத்தை ஆகாரமாகச்செய்துகொண்டு சாந்தியுக்தனுகி யீஷணத்திரயைத்தையும்விட்டு ஆசனஞ்செய்துகொண்டுசுவாசத்தையும் ஜயித்து ஷட்டிந்திரியங்களையும் விஷயங்களிற் செல்லாமல்நிவர்த்திசெய்துகொண்டு ஸ்ரீஹரியுடைய தியானத்தினுல் ஆணவம்-மாயை-காமியமுமாகிய மூன்றுமலங்களையும் தவிர்ந்து மனதைப்புத்தியுடனே கூட்டி அந்தக்கியானத்தைச் சீவாத்மாவுடனே சேர்த்துஅந்தச்சீவனைச்சர்வாதாரமான பிர்ம்மத்தினிடத்தில் கடாகாசம் மகாஆகாசத்தில் கலக்குமாப்போற்கலந்து பிரகிருதிகுணங்களுடைய பரிணமமாகியவிகாரங்களைவிட்டு இந்திரியங்களையும் சித்தத்தையும் பரமாத்மாவிடத்தில் நிறுத்தி சகலமான ஆகாரங்களையும்விட்டு கிளைகளைக்கழித்தமரத்தைப்போல் சலியாமலிருக்கிருர்

சகலமான காரியங்களையும் விட்டிருக்கிற அவருக்கு நீர் விக்கினஞ்செய்யவேண்டாம் அந்தத் திரிதராஷ்டிரன் இன்றுமுதல் ஐந்தாநாளையில் தன்னுடைய சரீரத்தைவிட்டுப்போகிருன் ராஜனே பர்ணகசாலையிலிருந்து தியானஞ்செய்கிறதிரிதராஷ்டிரனுடையதேகத்திலுண்டாகிற யோகாக்கினியுடனே கலந்து தேகாக்கினியிலே பர்ணகசாலையுடனே திரிதராஷ்டிரன்தேகமும்பஸ்மமா

கப்போகிறது அதை அந்த பர்ணகசாலைக்குவெளியில் இ
ருந்துபார்த்துக்கொண்டிருக்கிறபதிவிரதையானகாந்தா
ரியும் அந்த அக்கினியில் பிரவேசிக்கப்போகிறாள். வி
துரரும் அந்த ஆச்சரியத்தைக்கண்ணால் பார்த்தபின்பு
இவர்களுக்கு இந்தகதி கிடைத்ததல்லவோவென்று ச
ந்தோஷத்துடனேயும், பிராதாவையும் பிராதுர்பத்தி
னியையும் இழந்தோமேயென்று சோகத்துடனேயும்
தீர்த்தயாத்திரை செய்யப்போகிறாரென்று சூதர்சவுன
காதிகளுக்குச் சொல்லிப் பின்னையுஞ் சொல்லுகிறார்,
இந்தப் பிரகாரம் யுதிஷ்டருக்குத் தெளியச் சொல்லி
நாரதர் சொர்க்கலோகத்துக்குப்போனார். யுதிஷ்டிரரும்
நாரதருடைய வார்த்தையை நினைத்துக்கொண்டுசோக
த்தைவிட்டார்.

வாசுதேவாயநம.

## ௰௪-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பொங்குதர்ம சுபுத்திரன் துர்நிமித்
தங்கண்டர்ச்சுனன் றன்னிடஞ்சார்ந்துநின்
றங்கண்மெய்யன் லோகாந்த்ரகமனத்தைச்
சங்கையின்றிக்கேட்டானென்றுசாற்றுவாம்.

இராஜாவான தருமபுத்திரர் துர்நிமித்தங்களைப்பார்த்
துச்சங்கித்தவராய் அர்ச்சுனனிடத்தில்நின்றும் கிருஷ்
ணனுடைய லோகாந்தரகமனத்தைக் கேட்டாரென்று
சொல்லப்படுகின்றது.

ஓய் சவுனகாதிகளே ஜபசீலனான அர்ச்சுனன் பந்து
ஜனங்களைக் காணவேண்டுமென்றும், ஸ்ரீகிருஷ்ணனு
டைய சரித்திரங்களை அறியவேண்டுமென்றும், துவார
காபுரத்துக்குப்போய் அவ்விடத்திலிருக்கிறபோது சில
நாள் அதிக்கிரமித்ததுகள் அப்பாலும், அர்ச்சுனன்வ
ரவில்லை அந்தச்சமையத்தில் இவ்விடத்தில் கவுரவவம்
சோத்தாரகனான தருமராஜா அதிகோரங்களான துர்க்
குணங்களைக்கண்டார். அப்படியேமாறுபாடாக நடக்கி
றகுரூரமாகிய காலகதியையும். வெகுபாவரூபமாகிய
ஜனங்கள் வார்த்தைகளையும், குரோதலோபங்களையும்,
அசத்தியங்களையும் உலகத்தில் நடக்கிறதெல்லாம் கு
டிலமானவார்த்தையும் புத்திரர்களுக்கு மாதாபிதாக்க
ளிடத்தில் கலகத்தையும், மாதாபிதாக்களுக்கு புத்திர
ரிடத்தில் துவேஷத்தையும், பிராதாக்களுக்கும், தம்ப
திகளுக்கும் ஒன்றுக்கொன்று விரோதமாக இருக்கிற
தையும் மிக்வும் அனிஷ்டமானநிமித்தியங்களையும்ஜன
ங்களுடையஅதருமத்தில் பிரீதியையுங்கண்டு தமக்குத்
தம்பியான பீமசேனனைப்பார்த்துச்சொல்லுகிறார், வா
ராய் பீமசேனனே பந்துக்களைக் காணவேண்டுமென்று
இச்சையினாலேயும் புண்ணிய சுலோகனான ஸ்ரீகிருஷ்
ணனுடைய நடத்தைகளைத்தெரிய வேண்டுமென்றும்அ
ர்ச்சுனனை துவாரகைக்குஅனுப்பியிருந்தோமேபீமசே
னா இப்போது ஏழுமாதமாச்சுது உன்தம்பியானல்வர
க்காணேன் இதற்குக்காரணமென்னமோ தெரியவில்லை
தேவரிஷியால்சொல்லப்பட்ட குரூரமாகிய காலந்தான்
வந்ததோ யாதொருசம்பத்துகளும், ராச்சியமும், பாரி
யையும், பிராமணர்களும், குலமும், பிரஜைகளும், சத்
துருவிஷயமும், இந்தஜனங்களும், எவனுடைய அனுக்
கிரகத்தினாலே லபித்ததுகளோ அந்தப் பகவான் தனக்
குலீலார்த்தமாகத்தரித்த அங்கத்தை இப்போது விட
வேண்டுமென்று நினைத்தானோ நரசிரேஷ்டனே ஆகா
சத்திலும், பூமியிலும், தேசத்திலும், உற்பாதங்களாகி
றதுகள் பாரும் துடையும் கண்ணும் பாகுவும் அடிக்க
டிதுடிக்கிறதுகள் இவை நம்முடைய புத்திக்கு மோக
ஜெனகமாகிய பயத்தை யுண்டாக்கவந்ததென்று சொல்
லுகிறதுகள் என்மனதிலுண்டாகிய நடுக்கமானது துன்
பமாகியகாலம் சமீபமாக நெருங்கிவந்ததாகச் சொல்லு
கிறது. இந்தப்பெண்ணரியானது உதிக்கிற ஆதித்தியனை
ப்பார்த்துக்கொண்டு தன்வாயினால் நெருப்புகளைக் கக்கி
க்கொண்டு ஊளையிடுகிறது வாராய்சிரேஷ்டனே இந்த
நாயானது என்னைப்பார்த்துப் பயமில்லாமல் எதிரேகு
லைக்கிறது பசுமுதலான சுபமிருகங்கள் இடஞ்செய்கிற
துகள். கழுதைமுதலான அசுபமிருகங்கள் வலஞ்செய்
கிறதுகள் வாராய்புருஷசிரேஷ்டனே என்னுடையகுதி
ரைகளை அழுகிறமுகத்தோடே கூடினதுகளாகக்காணு
கிறேன். மிருத்தியுடைய தூதனாக இந்தக் கபோதமும்,
கோட்டானும் நித்திரையில்லாமல் ஒன்றுக்கொன்று எ
திராகஇடைவிட்டு கூகூவென்று கூப்பிடுகிற ஓசைகள்
இவ்விடங்கள் சூன்னியமாகவேண்டுமென்று இச்சிக்கிற
தாகஇருக்கிறதுகள். திக்குகளுடையமுடிவுகளெல்லாம்
புகைசூழ்ந்ததுகள் தங்களுடனேகூடின பூமியானது ந
டுங்குகிறது மகத்தான இடிகள் விழுகிறது மேகங்களு
டனேகூடி சகிக்கக்கூடாத பெருங்காற்று தூளிகளை வ
ருஷித்து இருளைக்கற்பிக்கிறது. எங்கேபார்த்தாலும் அ
சங்கியமாய் மேகங்கள் ரத்தங்களைவருஷித்ததுகள், சூரி
யன் காந்தியில்லாமல் மழுங்கியிருக்கிறான் சிகரங்களு
க்கு ஒன்றுக்கொன்று உயித்தியங்கள் செய்கிறாப்போல்
காணுகிறது அலைந்துக்கொண் டிருக்கிற பூதகணங்களா
ல் ஆகாசமும் பூமியும் கொளுத்தப்பட்டாற்போல்விள
ங்குகிறது கிழக்கேபெருகிற நதிகளும் மேற்கேபெருகி
றநதிகளும் ஓடைகளும் ஜனங்களுடைய மனதுகளும்,
கலங்கிறதுகள் அக்கினியானது ஆச்சியாகுதிபண்ணின
லும்சுவலிக்கவில்லை இப்படிப்பட்டகாலம் என்னசெய்யு

மோதெரியவில்லை குழந்தைகள் ஸ்தன்னியபானஞ்செய்யவில்லை மாதாக்களுக்கு ஸ்தன்னியத்தில்பால்சுரக்கவில்லை பசுக்கள் கண்ணீர்களுடனே ரோதனஞ்செய்கிறதுகள் ரிஷபங்கள் சந்தோஷமாக இருக்கவில்லை தேவதாவிக்கிரகங்கள் அழுகிறதுகள்போல் வேர்வைகள் பெருகவிட்டுக்கொண்டு இருந்தவிடத்தை விட்டுப்பேர்ந்திருக்கிறதுகள். இத்தேசங்களும், கிராமங்களும் பட்டணங்களும், உத்தியாவனங்களும், தபசிகளுடைய ஆசிரமங்களும், ரத்தினம்பிறக்கும் பூமிகளும், காந்தியில்லாமல்வளத்தையிழந்து சோபியாமலு மிருக்கிறதுகள். இவை நமக்கு என்னதுன்பத்தைக் காண்பிக்கிறதுகளோ, இந்த மிகுதியான உற்பாதங்களைக் காணுகிற நான் சொர்க்கலோகத்தாரும் புகழப்பட்ட மகிமையுடைத்தான இந்தப்பூமி சங்குசக்கரமுதலான ஒப்பில்லாதரேகைகளுடனே பிரகாசிக்கிற பாதபத்மங்களை யுடைத்தானஸ்ரீகிருஷ்ணனுடைய திருவடிசம்பந்தத்தை யிழந்ததென்று எண்ணுகிறேனென்று தருமராஜா தான்கண்ட அரிஷ்டங்களை நினைத்துத் துக்கித்துக்கொண்டிருக்கும்போது துவாரகையிலிருந்து அனுமத்துவஜனான அர்ச்சுனன்வந்து தருமராஜாவினுடைய பாதங்களில்விழுந்துசந்தோஷமில்லாமல் சோகத்துடனேகண்களில்பெருகிற தண்ணீருடனேயும். தேகத்தில்முன்னிருந்தவண்ணத்தையிழந்து மாறுவண்ணமுமாக நிற்கின்றஅர்ச்சுனனைக்கண்ட தருமராஜா நடுங்கினமனதுடனே தம்முடைய துணைவர்களிடத்தில் நாரதருடைய வார்த்தையை நினைத்துக்கொண்டுகேட்கிறார் வாராய், அர்ச்சுனா ஆனர்த்ததேசத்துக்குஅலங்காரமாகியபட்டணத்தில் நம்முடையசுஜனங்களெல்லாரும் சுகமாக இருக்கிறார்களா யதுக்களும் போஜாளும்தாசாருகாளும் சாத்வதாளும், அந்தகாளும் விருஷ்ணிகளும் சூரகுமாரராயும் பெரியவராயுமிருக்கிற நம்முடையமாதாமகனும்சுகமாக இருக்கிறார்களாநம்முடைய அம்மானான வசுதேவரும் தம்பிகளுடனே சுகமாக இருக்கிறாரா அவருடனே பிறந்தஸ்திரீசாதிகளும், அவருடைய பாரியைகளும் அவரவர்களுடைய புத்திரர்களும்குசலமாக இருக்கிறார்களாதேவகிமுதலானஸ்திரீகள் அவரவர்கள் மருமக்கமாருடனே குசலமாக இருக்கிறார்களா துஷ்டனானபுத்திரனைப்படைத்த உக்கிரசேனமகாராஜா அவன்தம்பியுடனே க்ஷேமமாகயிருக்கிறானாஇருதிகனுடையசுதனான அக்குரூரனும் ஜயந்தனும் கதனும்சாரணனும்குசலமாக யிருக்கிறார்களா இன்னும் சத்துருசனமுதலானவர்களும்சாத்வதாளுக்கெல்லாம்சிரேஷ்டனாகியும் ஷட்குண்பரிபூரணனாகியுமிருக்கிற பலராமனும் விருஷ்ணிகளுக்குள்ளே மகாரதனான பிரத்தியும்னனும்கம்பீரமான கரவேகத்தையுடையவனாகிய அனிருத்தபகவானும் சுசேஷணனும் சாருதேக்ஷணனும் ஜாம்பவதிகுமாரனான ஜாம்பனும் ரிஷிபன்முதலாகிய மற்றுமுள்ள ஸ்ரீகிருஷ்ண குமார சிரேஷ்டர்களும் அவரவர் புத்திரர்களுடனே சுகமாயிருக்கிறார்களா கிருஷ்ணனை யனுசரித்துநடக்கிற சுருததேவனும் உத்தமன் முதலான்பேர்களும் சுனந்தனும்-நந்தனும்-சிருஷ்டணியனும் மற்றுமுள்ள சாத்வசிரேஷ்டர்களும் சுகமா யிருக்கிறார்களா ஸ்ரீராமகிருஷ்ணர்களுடைய புஜங்களை ஆதரித்தவர்கள் நம்முடைய இடத்திலுண்டாயிருக்கிற சிநேகதருமத்தைவிடாமல் குசலத்தை நினைக்கிறார்களா பிரம்மண்ணியதேவனாகியும் பக்தவச்சலனாகியும் ஷட்குணபரிபூரணனாகியுமிருக்கிற கோவிந்தன் தன்னுடைய சுகுர்துக்களுடனே துவாரகாபுரத்தில் சுதருமமென்கிற சபையில் சுகமாகஎழுந்தருளியிருக்கிறாரா ஆதிகாரணனாகியும் அந்தமில்லாமலும் ஸ்வரூபனுமாகிய பரமபுருஷன் லோகங்களுடைய க்ஷேமங்களைக்குறித்தும் விர்த்திபண்ணவேண்டியல்லவோ யதுகுலமாகிற சமுத்திரத்தில்அவதரித்தான், யாதொருகிருஷ்ணனுடைய பாகுதண்டங்களால் ரட்சிக்கப்பட்டதுவாரகாபுரியில் யாதவர்கள் சகலபிராணிகளாலேயும் பூசிக்கப்பட்டு மஹாபுருஷனைப்போல் பரமானந்தமாகக் கிரீடிக்கிறார்களா யாதொருகிருஷ்ணனுடைய சரணகமலங்களைச் சிசுவிடையாகிற சிலாக்கியகிராமத்தினால் சத்தியபாமா முதலான பதினாறாயிரம் ஸ்திரீகளும் உயுத்தியத்தில் தேவதைகளைசெயித்து வச்சிராயுதம்பிடித்த இந்திரனுடையபட்டமகிஷியான இந்திராணிதேவிக்குயோக்கியமாகியபோகங்களைப் பறித்துவந்தார்களா யாதொரு கிருஷ்ணனுடைய பாகுதண்டமாகிற சிரேயசை யனுசரித்த யாதவவீரர்கள் பயலேசமுமில்லாமல் பராக்கிரமத்தினால் தேவசிரேஷ்டர்களுக்குஉசிதமாகிய சுதருமமென்கிறசபையை யடிக்கடித் தங்கள் கால்களால்மிதிக்க ஆசிரயித்தார்களா அந்தக்கிருஷ்ணன் சுகமாயெழுந்தருளி யிருக்கிறாரா அப்பனே யுனக்கு ஆரோக்கிய முண்டா, தேஜசையிழந்தவன்போற் காணுகின்றது உனக்குச் சன்மானம்நடக்கவில்லையோ, வெகுகால மிருந்ததினால் அசட்டைபண்ணினார்களோ பாவிகளால் தூஷிக்கப்பட்டுமனவருத்தமடைந்தையோ அரசர்களுக்குக் கொடுக்கிறேனென்று ஆசையைக்கற்பித்துப் பிரதிக்கினைசெய்தபொருளைக் கொடாமலிருந்தையோ நீ பிராமணனாவது பாலனாவது-பசுவாவது-விருத்தனாவது ரோகிகளாவது ஸ்திரீகளாவது-ரட்சிக்கவேண்டுமென்று உன்னையடைந்தபிராணிகளை ரட்சியாமல் தள்ளிவிட்டையோ யோக்கியமாகாத ஸ்திரீசங்கமத்தைச்செய்தையோ சங்கமஞ் செய்யயோக்கியமாகிய ஸ்திரீகளைப்பரித்தியாகஞ்செய்தையோமார்க்கத்தில்வருகிறபோது உத்தமனாகியநீ அதரு

மிகளால் அபசெயப் பட்டையோ வழிநடந்து வருகிற போது போஜனஞ்செய்கைக்கு யோக்கியரானபாலவிருத்தர்களைப் போசனஞ் செய்வியாம லிருந்தையோ அயோக்கியமாகியும் நிஷித்தமாகியு மிருக்கிற கருமத்தை அநுஷ்டித்தையோ இல்லாவிட்டால் அத்தியந்தம் இஷ்டனாகியும் ஆத்துமபந்துவாயு மிருக்கிற ஸ்ரீகிருஷ்ணனைவிட்டுப் பிரிந்தேனென்று நினைத்திருக்கிறையோ இல்லாவிட்டால் இந்தச்சோகம் உனக்கு வரமாட்டாதென்று யுதிஷ்டிரர்செய்த பிரஸ்னத்தைச் சூதர் சவுனகாதிகளுக்குச்சொல்லிப் பின்னையுஞ்சொல்லுகிறார்.

அநிருத்தாயநம.

## ௰௫-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

கலிபுறந்ததைக் கண்டயுதிஷ்டிரன்
வலுமைசேர்பரீச் சித்தெனுமன்னவற்
கலைவிலாத வரசையளித்துத்தான்
நலிவிலாதுயர் சுவர்க்கத்தைநாடினன்.

கலியினுடைய பிரவேசத்தைப் பார்த்துப் பரீட்சித்துவினிடத்தில் ராச்சியபாரத்தை வைத்துத் தருமபுத்திரர் சொர்க்கத்தை யடைந்தாரென்று சொல்லப்படுகின்றது.

இப்படி அர்ச்சுனன் நானாவிதமாகிய சம்சயத்துக்கு இடமான தன்ஸ்வரூபத்தைக்கண்ட பிராதாவாகிய தருமராஜாவால் மிகவும்விகற்பிக்கப்பட்டு ஸ்ரீகிருஷ்ணனை நினைத்துக்கொண்டு தனக்குத்தமையனாகிய ராஜாவைப் பார்த்துப் பாஷ்பத்துடனே விம்மிக்கொண்டு சொல்லுகின்றான்.

ஓய் மஹாராஜாவே? கோவிந்தனுடைய தரிசனமிருந்தகாலத்தில் நம்மை மிகவும்விரும்பும்படியாக இருந்த இந்தஉலகமே யவன்தரிசனத்தையிழந்ததினால் வர்ச்சிக்கும்படியாயிற்று எந்த ஸ்ரீகிருஷ்ணனுடைய அவலம்பத்தினால் துருபதமகாராஜாவினுடைய கிரகத்தில் சுயம்வரோச்சவத்தில் மன்மதனுடைய வேகத்தினால் அறிவழிந்த ராஜாக்களுடைய தேஜசுகளையும் அபகரித்து நாணேறிட்டதனுசினால் லட்சியமானமச்சியத்தையும் அடித்துத் துரோபதையையும் படைத்தோமே, யாதொரு ஹரியுடையசார்பினாலே சகலதேவதைகளுடனே கூடியஇந்திரனைச்சயித்துக் காண்டவ வனத்தை அக்கினிபகவானுக்குச் சமர்ப்பித்தேனோ மாயமயமாகியும் மயனால்கற்பிக்கப்பட்டுமிருக்கிற சபையை அடைந்தோமே ராஜசூயயாகத்தில் பூமண்டலத்திலிருக்கிற ராஜவர்க்கங்களெல்லாம் பகுதி கொடுத்தார்களோ எவன்பிறப்பினால்ராசவர்க்கங்களுடைய சிரோமாணிக்கங்களால் பிரகாசிக்கப்பட்ட பாதத்தையுடைத்தாகியும் பதினாயிரம்யானைபலத்தோடேகூடியுமிருந்த சராசந்தனை பீமசேனன்சங்கரித்துப்பிரமதகணங்களுக்கெல்லாம் அதிபதியாகிய ஈஸ்வரனைக்குறித்துச் செய்கிற யக்கியத்துக்குப் பசுவாகிச் சம்பாதிக்கப்பட்டராஜாக்களை விடுதலைசெய்ய அவர்களும் தேவரீர்செய்தயக்கியத்தில்திறை கொண்டுவந்தார்களோ, ஓய்அண்ணாவே உமமுடைய பட்டமகிஷியான துரோபதையுடைய பட்டாபிஷேகத்தால் சிலாக்கியமாகியு மனோக்கியமாகியுமிருக்கிற தலைமயிரை துராத்மரான துர்ச்சாதனாதிகள் சபையில்பிடித்த நிமித்தியமாக அவர்களைச்சங்கரித்து அவர்களுடையஸ்திரீகளை என்றைக்கும் விரித்தகூந்தலையுடைத்தானவர்களாகச்செய்திந்தானோ நம்முடைய சத்துருவான துரியோதனனால் ஏவப்பட்ட துருவாசர்வனத்தில் வந்தபோது கிருஷ்ணனானவன் எழுந்தருளிப் பாத்திரத்திலொட்டிக்கொண்டிருந்த அன்னத்தைச் சாப்பிட்டதினாலேயோ அகமர்ஷண ஸ்நானத்திற்குச்சென்ற ரிஷிசமுகமானது திருப்தியடைந்து தங்களுக்குப்போசனம் தேவையில்லையென்று சொல்லாமல் நடக்கும்படி செய்தானோ யாதொருபகவானுடையதேஜசினால் பார்வதிசமேதனாகியும் ஷட்குணங்கள்பொருந்தியுமிருக்கிற சூலபாணியான சங்கரன் பாசுபதாஸ்திரத்தை எனக்குத் தயவுசெய்தாரோ. பின்னையுமற்றுமுள்ள தேவர்க்களும் தங்கள் தங்கள் அஸ்திரங்களைக்கொடுத்தார்களோ எவன்மகிமையால் இந்தச்சரீரத்துடனே இந்திரலோகத்திலமகேந்திரனுடைய அர்த்தாசனத்தை யடைந்துஅவ்விடத்தில் விளையாடிக் கொண்டிருக்கிற என்னுடைய காண்டிபத்துடனே அலங்கிருதமான இரண்டுபுஜங்களையும்ஆசிரயித்து இந்திராதிகளான தேவதைகள் நிவாதகவசாளை பயமில்லாமல் சுகித்தார்களோ, ஓய் சந்திரகுலோத்பவனே வெல்லுதற்கரிதான பலத்துடனே கூடிய கவுரவசேனையாகிறசமுத்திரத்தைநான் ஒருவனாகியே ரதத்திலேறிக்கொண்டு அந்தச்சயின்யத்திலிருக்கிற வீரர்களை ஜயித்தேனோ, எண்ணிக்கையில்லாத ராஜசிரேஷ்டர்களுடைய ரதசமூகங்களால் சூழப்பட்டும் அலங்கரிக்கப்பட்டு மிருக்கிற பீஷ்மர் - கர்னன் துரோணர் - சல்லியன் இவர்களுடைய சேனைகளில் எனக்குமுன்னே நடந்து அந்தச்சேனாபதிகளுடைய ஆயுசையும் மனசுகளையும் பராக்கிரமங்களையும் தன்னுடைய பார்வையினால் அபகரித்தானோ, யாதொருவன் புசங்களில் சமர்ப்பிதனான என்னை துராணர்-பீஷ்மர்-கர்னன் - அசுவத்தாமா -சயித்திரன்-சல்லியன் - சந்தனுசகோதரனானபாகலீகன்- இவர்கள்பிரயோகித்த அமோகங்களாகிய அஸ்திரங்களானது பரிசிக்கவில்லையோ, வெகு புண்ணியசாலிகள் எவ

னுடைய பாதபத்மங்களை மோட்சத்தைக்குறித்துப் பஜ
னஞ்செய்கிறார்களோ, அந்த சகதீஸ்வரனைஸ்வாமி பு
த்திரினாகிய நான் சூதனாகவேண்டுமென்று கோறின
தற்கும் சம்மதித்துச் சாரத்தியஞ்செய்தபோது என்ரத
த்தினுடைய குதிரைகள் இளைத்துச் சலதிமித்தியமாகச்
சிரமமுற்றிருந்ததற்காக நான்ரதத்தை விட்டு நிலத்தில்
றங்கிப் பிரயோகித்த பாணத்தினால் பூமியைப் பிளந்து
பாதாளத்திலிருந்துவந்தசலத்தை குதிரைகள் குடித்த
க்கொண்டிருக்கையில் எவன்மகிமையால் சத்துருக்கள்
மதிமயங்கி என்னையடிக்கமாட்டாமல்நின்றார்களோ· வா
ரீர்ராஜாவே தாத்பரியத்தை யறியக்கூடாமலும் மனோ
க்கியமாகவும் புன்சிரிப்புடனேகூடியும் சிலாக்கியமாகி
யும் பார்த்தனே யர்ச்சுனனே சகாவே குருநந்தனனே
என்று· ஸ்ரீமகாலட்சுமிப்பிரியான் ஸ்ரீகிருஷ்ணனுடைய
விசுவாசமாய்ச் சொல்லப்பட்ட வார்த்தைகள் இப்போ
தும் என்மனதைக் கலங்கச்செய்கிறதே படுக்கைகளிலே
யும் நடக்கையிலேயும், கூட சகபோஜனாதிகளிலேயும்,
பேதமில்லாமலிருக்கையால் சகாவே நீசத்தியசந்தனன்
உனக்குத் தெய்வசகாயம் உண்டென்று பரியாசமாகச்
சொல்லப்பட்டவனானாலும், அவன் மகத்தான மகிமை
யுடைத்தானவனாகையால் புத்திரனுக்குப் பிதாவானவ
ன்போல் மதியீனனான என்னுடையபாவங்களையெல்லா
ம்சகித்தான்·

ஓய் ராஜேந்திரனே? அப்படி நிரந்தரமாகச் சகவாச
மும் பரிபாலனமுஞ்செய்யப்பட்ட புருஷோத்தமனைப்
பிரிந்து என்னுடைய அறிவையுமிழந்து வழியில் வரு
கையில் திரிவிக்கிரமனுடைய ஸ்திரீகளைரட்சிக்கையில்
துஷ்டாளான கோபாலாள் என்னை ஸ்திரீசாதியைப் ப
லாத்கரித்தாற்போல் நிக்கிரகித்தார்கள்.

ஐயாசிரேஷ்டரே? சகலமான ராஜாக்களும் சிலாகித்
ததனுசும், பாணங்களும், ரதமும், குதிரைகளும்,ரதிக
னாகியநானும், இப்போது அந்தஸ்ரீஹரியைப் பிரிந்தப
டியினாலே சகலமும் ஒருக்ஷணத்திலேதானே பஸ்மந்
திற்செய்த ஆகுதிபோலவும் ஊஷரத்தில் விதைத்த வி
தைபோலவும் வியல்மேயாயிற்று.

ஓய் ராஜாவே? நீர்கேட்கப்பட்ட சுகிர்துக்கள் துவார
கையில் பிராமணசாபத்தினால் அறிவழிந்து வாருணி
யான மத்தியத்தைப் பானஞ்செய்து மதத்தினாலே மன
துகலங்கி வாள்போன்ற கோரைகளாலேயும், முஷ்டிக
ளாலேயும், அறிவில்லாமல் ஒருவருக்கொருவர் அடித்
துக்கொண்டு நாசமடைந்தார்கள். அதிலேபாலேந்துபே
ர்மீந்தார்கள். யாதொருகாரணத்தினால் பிராணிகளொ
ன்றுக்கொன்று அடித்துக்கொண்டு நாசமடைந்தும்உப
காரத்தால் பாலனமும், செய்கின்றனவு மாகிய இவை
ஷட்குண பரிபூரணனான ஜகதீஸ்வரனுடைய லீலையே
யல்லாமல் வேறல்ல, ஜலத்தில் வளருகிற மச்சியங்களி
ற் சிறுமீன்களை பெரியமச்சியங்கள் பக்ஷிக்கிறாப்போல்
பூமியிலேயும் துர்ப்பலமான ஜந்துக்களை பலசாலிகளா
னஜந்துக்கள் தாங்களே ஒன்றுக்கொன்று அடித்துக்கொ
ண்டிருக்கிறதுபோல் பலசாலிகளாகியும் மஹாதேஜபா
வாளாகியுமிருக்கிற யாதவர்களாலே அன்னியவீரர்களை
ச்சங்காரஞ்செய்வித்த விபுவானவன் பிற்பாடு யாதவர்க
ளையும் அவர்களாலே அவர்களை மடியச்செய்து பூமிபா
ரத்தைப் பரிகரித்தான். நான் சந்தாப மடைந்தபோது
காலதேசங்களையும் பிரயோசனங்களையுங் காண்பித்து
என்மனதுக்குச் சமாதானஞ்செய்த ஸ்ரீகோவிந்தன் வச
னங்களைநினைத்தால் அதுகள் என்மனதைத் தகிக்கின்ற
துகளென்று அர்ச்சுனன் தருமராஜாவைப்பார்த்துசொ
ன்னவார்த்தையைச் சூதர் சவுனகாதிகளுக்குச்சொல்லி
ப்பின்னையும் அவன்மகிமையைச்சொல்லுகின்றார்.

வாரீர் சவுனகாதிகளே! இப்படி ஸ்ரீகிருஷ்ணனுடை
யபாதமத்மங்களை நினைக்குந்நினைத்து அக்குலந்தை யுற்ற
அர்ச்சுனனுக்கு மிகுதியான பக்தியினால் மதியானது
மோகங்களைவிட்டுப் பரிசுத்தமாயிற்று பின்பு ஸ்ரீவாசு
தேவனுடையதிருவடித்தியானத்தினால் சகலபாவங்களு
ம்தவிர்ந்தவனாகி பாரதயுத்தியத்திற் றனக்கு இதமாக
ஸ்ரீஹரியுபதேசித்த பரமபுருஷவிக்கியானமானது கால
விளம்பமானதினாலேயும் கருமாதீனமாகிய தமோகுண
த்தால் மறைந்திருக்கிறபடியினால் மறுபடியும் அதிகரி
த்துப்பெற்ற பிர்மக்கியானத்தினால் சோகத்தைவிட்டுத்
தான்சுதந்தரனென்கிற சம்சயத்தைத் தவிர்ந்து பிரகிரு
திகுணங்களில் ஒன்றுமல் பந்தத்தைவிட்டுநீங்கினான் யு
திஷ்டிரரும் பகவானுடையகதியைக் கேள்விப்பட்டு ய
துகுலநாசத்தையுமறிந்து மனோஜெயஞ்செய்துகொண்
டு சொர்க்கமார்க்கத்தைக் குறித்து யுத்தேசித்தார். குந்
தியும் தனஞ்செயனால் சொல்லப்பட்ட யாதவபலத்தை
யும் ஸ்ரீஹரியுடைய கமனத்தையும் அறிந்துகொண்டு
இந்திரியங்களினால் அறியக்கூடாத அதோக்ஷசனான ஸ்ரீ
பகவானிடத்தில் மனதைநிறுத்தி ஏகாந்தபக்தியினால் ச
முசாரத்தைநிவர்த்திசெய்தார்.

ஓய்சவுனகாதிகளே, எந்தச்சரீரத்தையெடுத்து முள்
ளினால் முள்ளைவாங்கினாற்போல் பூபாரத்தைத்தீர்த்தா
ரோ அந்தச்சரீரத்தை விட்டுவிட்டார். அந்தப் பகவா
னுக்குத் தன்திருமேனியும் மற்ற சரீரங்களும் சமான
மேயல்லாமல் வேறில்லை, வேஷதாரியானவன் வேஷத்
தைத்தரிக்குங்காலத்தில் தன் நிஜரூபத்தைவிடாமல் அந்
தயாறுவேஷத்தைத்தரித்து அதற்குள்ள நடனத்தையு
ஞ்செய்து பிற்பாடு அந்தவேஷத்தைவிட்டுத் தன்நிஜரூ
புடனே வெளிப்பட் டிருக்கிறவனைப்போல் மச்சியாதி

ரூபங்களைத்தரித்த முகுந்தன் பூபாரத்தைத் தீர்க்கவேண்டித் தன்னிச்சையாலெடுத்த களேபரத்தை விட்டுத் தன்நிஜரூபத்துடனே தன்பதத்தி லிருந்தான். எப்போதுஜனங்கள் அனுசரித்துக் கடைத்தேறும்படியாகச் சிலாக்கியமாகியலீலைகளைச்செய்த ஷட்குண பரிபூரணனாகிய ஸ்ரீமுகுந்தனுடைய திருவடிகள்விட்டு நீங்கினவோ அப்பொழுதே ஸ்ரீஹரியிடத்தில்அறிவில்லாதஜனங்களின் தருமங்களுக்கெல்லாம் ஏதுவான கலிபுருஷன்வந் தடுத்தானென்று சூதர்சவுனகாதிகளுக்குச்சொல்லிப் பின்புயுதிஷ்டிரருடையநடத்தைகளையுஞ்சொல்லுகிறார்.

ஓய்சவுனகாதியர்களே,யுதிஷ்டிரர்தம்முடைய நகரத்திலேயும், ராச்சியத்திலேயும், கிரகத்திலேயும், ஜீவவர்க்கங்களிலேயும்,அந்தக்கலியுடைய சஞ்சாரத்தினால்லோபமும்,அசத்தியமும்,குடிலமும்,இம்சையும், இதுமுதலான அதருமங்களுடைய சமூகங்களைக்கண்டு ஆலோசனைசெய்துகொண்டு பயணத்தைக்குறித்து யத்தனஞ்செய்தார், சக்கிரவர்த்தியான அந்தத் தருமராஜா குணங்களால் தமக்குச்சமானமாகியும் விநயசாலியாகவுமிருக்கிற பவுத்திரனாகிய பரிட்சித்தை நாலு சமுத்திரத்தையும் பவித்திரமாகத்தரித்த பூமண்டலத்துக்கு நாதனாக அஸ்தினபுரத்தி லாரோபணஞ்செய்து தான்தரித்துக்கொண்டிருந்த வெண்பட்டுகளையும், கடக மகுடமுதலான ஆபரணங்களையும் அவ்விடத்தில்தானே நிவர்த்தித்து நம்மதென்றும், நானென்றும், உண்ணப்படுகிற அகங்கார மமகாரங்களைவிட்டு சகலபந்தங்களையு மறுத்து வாக்குமுதலான பத்துஇந்திரியங்களையும் மனதி லடக்கி அந்தமனதைப் பிராணவாயுவிலொடுக்கி அந்தப் பிராணனை அபானவாயுவிற்சேர்த்து அந்த அபானவாயுவை அதின்கருமமான உச்சரத்துடனே அபானதேவதையாகிய மிருத்தியுவிடத்தில் இணைத்து அந்த மிருத்தியுவைப் பஞ்சபூதவிகாரமாகிய சரீரத்திற்கூட்டி சரீரத்தைப் பிராகிருதகுணங்களில்சமர்ப்பித்து குணங்களைப்பிரகிருதியிற்பொருத்தி அந்தப் பிரகிருதியைச் சீவாத்துமாவிற் செலுத்தி அந்தச் சீவனை அழிவில்லாத பிரம்மத்தி லொன்றாகப் பொருத்தி வைத்துக்கொண்டு மரவுரியைத் தரித்து ஆகாரத்தை விட்டு மவுனத்துடனே தலையை விரித்துக்கொண்டு அறிவில்லாதவனைப் போலவும், பித்தனைப்போலவும், பேயனைப்போலவும், தன்னை யெல்லாரும்பார்க்க ஒருபொருளையுங் கண்ணுற்பாராமலும், செவிடனைப்போல் ஒன்றையுங் கேளாமலும், வெளிப்பட்டு மஹானுபாவர்கள் முன்னடந்த வழியான வடக்குத்திக்கைக்குறித்து, மனதில் பிரமத்தைத் தியானஞ் செய்துகொண்டு எந்தவழியிற் போனவர்கள் திரும்பிவந்ததில்லையோ அந்த மார்க்கத்தைஅடைந்தார்.

அவருடனே அவர் தம்பிமார்களும் கலிபுருஷனால் பரிசிக்கப்பட்ட பிரசைகளினால் நிறைந்தவுலகத்தைப்பார்த்துத் தங்களுடைய வர்ணாசிரமங்களுக்கு யோக்கியமாகிய தருமார்த்தகாமங்களைப் பரமபுருஷனுடைய பிரசாதநிமித்தியமாக அனுஷ்டித் திருக்கையால் ஸ்ரீவைகுந்தனுடைய சரணகமலங்களைத் தியானஞ்செய்துகொண்டு அந்தத்தியானத்தால் மிகுதியான பக்தியைச்செய்து அதினால் ரசோகுண தமோகுணங்களைப் பரிகரித்துச் சுத்தமாகிய புத்தியால் புருஷோத்தமனாகிய ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளில் கட்டப்பட்டமதியையுடைத்தானவர்களாகிய சகல கல்மஷங்களையும்போக்கி சத்புருஷர்களால் அடையப்படுங் கதியை அடைந்தார்கள்.

மனோஜயத்தையுடைத்தான விதுரரும் பிரபாசக்ஷேத்திரத்தில் தேகத்தைவிட்டு ஸ்ரீகிருஷ்ணனிடத்தில்சித்தத்தை இடைவிடாமல் நிறுத்திக்கொண்டு தம்மை அழைக்கவந்த பிதுர்தேவதைகளுடனேதம்முடையலோகத்தைஅடைந்தார், துரோபதையும் தன்பதிகளுக்குத் தன்னிடத்தில் அபேக்ஷையில்லாமையிருக்கிறதை நன்றாகஅறிந்து குணபரிபூரணனான ஸ்ரீவாசுதேவனிடத்திற்பொருந்திய மதியை யுடைத்தாகி அவனையேநிலையாக அடைந்தாள்.

இயாதொருவன் சிந்தையுடனே பகவானுடைய பயணத்தையும் பாண்டவர்களுடைய மஹா பிரஸ்தானத்தையும் கேட்கிறானோ அவனுக்குப் பாவனமாகியும் மிகவும் மங்களகரமாகியு மிருக்கிற இந்தக்கேள்வியானது ஸ்ரீஹரியிடத்தில் பத்தியைக்கொடுத்து அவருடைய சித்தியையுங்கொடுக்கும்.

---

சர்வேசுவராயநமஃ

## ௰௯-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

கோமமான கலியாற்கிந்நாளனுந்
தாலமாம்புவித் தன்மப்பிராப்தியும்
பாலனேர்பரிச் சித்துசம்வாதமும்
சாலவீதிற் சரமெனச்சாற்றுவாம்.

கலியினாலே கின்னமான பூமிதருமங்களுடைய பிராப்தியும் பாலனாகிய பரிட்சித்துவினுடைய சம்வாதமும் சொல்லப்படுகின்றது.

இந்தப்பிரகாரம் பாண்டவர்களுடையமஹாபிரஸ்தானத்தை வர்னஞ்செய்தசூதர் பின்னையுஞ் சவுனகாதிகளுக்குச்சொல்லுகிறார். பரம பாகவதனான பரிட்சித்து மஹாராஜா தன் ஜனனகாலத்தில் சாதகத்தினுடையவி

தானத்தைஅறிந்தவர்கள் சொன்னபடிசிலாக்கியமாகிய குணங்களை யுடைத்தாகியும், பிராமண சிரேஷ்டர்களுடையசிக்ஷைபால் தருமமாகராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டு அந்தப் பரிட்சித்து மஹாராஜா உத்தரனுடைய புத்திரியான இராவதியைக் கலியாணஞ்செய்து, அவளிடத்தில் ஜநமேஜயன்முதலானநாலுபுத்திரர்களை ஜனிப்பித்து மிகுதியான தக்ஷிணைகளுடனே கூடின மூன்று அசுவமேதங்களைச்செய்தான். ஓய்சவுனகாதிகளே அப்படிகிருபாசாரியனை ஆசாரியாகநேமித்துக்கொண்டு அவன்நிக்ஷைசெய்த அசுவமேதங்களில் இந்திராதி தேவதைகள் பிரத்தியக்ஷமாகவந்து பாகம்வாங்கிக்கொண்டார்கள். அந்தவீரன் திக்குவிஜயஞ் செய்யும்போது ராஜலக்ஷணத்தைத்தரித்தும் ஸ்திரீமானுகஇருந்த இரண்டுகோக்களைத்தன்னுடையகாலினல் உதைத்துக்கொண்டுமிருந்த சூத்திரனை நிக்கிரகித்து தன்பராக்கிரமத்தினல் கலிபுருஷனை நிக்கிரகித்தானென்று சூதர்சொன்னவார்த்தையைக் கேட்ட சவுனகர் சூதரைப்பார்த்துக் கேட்கிறார்.

ஓய் சூதரே, அந்தப் பரிட்சித்துமஹாராஜா திக்குவிஜையஞ் செய்தபோது எந்தநிமித்தியமாகக் கலிபுருஷனைநிக்கிரகஞ்செய்தார். யாதொருசூத்திரன் ராஜவேஷத்தைத்தரித்துக் கோக்களைக் காலினல் உதைத்தானே அவன்யார்அந்நடத்தை ஸ்ரீவிஷ்ணுவினுடைய கதைகளுக்கு இடமாகவிருந்தால் சொல்லத்தக்கது. பிரயோசனமில்லாக்கதை கேட்கிறகாலங்கள் ஆயுக்ஷயமேயல்லாமல் சபலமாகாது. ஓய் சூதரே மிதமாகிய ஆயுசும், இடைவிடாத மரணமுமான தன்மையைக்குறித்து அமிர்தமாகிறமோக்ஷத்தையிச்சித்துக் கொண்டிருக்கிறமனுஷாளுடைய இதத்தைச்சிந்தித்து இந்தச் சத்திரயாகத்தில் பசுவாலம்பமாகிறகருமத்தைச்செய்ய மருத்தியுபகவானை இங்கே யழைப்பித்திருக்கிறோம், இவ்விடத்தில்எவ்வளவுகாலம் வாசஞ்செய்கிறானே அவ்வளவும ட்டுக்கும் ஒருவனு மிறக்கமாட்டான். லோகத்தில் ஸ்ரீஹரிலீலையாகிற அமிர்தத்தைப் பொழிகிற கதைகளை ஜனங்கள் கேள்வி செய்யக்கூடவர்கள். சோம்பலாகியும், மந்தமதியாகியும் ஆயுவில்லாமலுமிருக்கிற இந்தஜனங்கள் மனுஷசரீரமெடுத்திருந்தும் இராக்காலமெல்லாம் நித்திரையாலேயும் பகற்காலமெல்லாம் பிரயோசனமில்லாதகருமங்களாலேயும், ஆயுள்கழிந்து போகுதல்லவோவென்றுநினையாமலிருக்கிறதென்னஆச்சரியமென்றுசொன்னசவுனகரைக்குறித்துச்சூதர் சொல்லுகிறார் பரிட்சித்துமகாராஜா குருசாங்கலதேசங்களில் வாசஞ்செய்துகொண்டு தன்னுடைய ஆக்கினையினுல் சிட்சிதமானதேசத்தில் கலிபுருஷன் பிரவேசித்தானென்கிற வார்த்தையைக் கேள்விப்பட்டவுடன் அதினிடத்தில்மிகுர்தகோபத்துடனே வில்லைக்கையிலெடுத்துக் கொண்டுநீலவர்னக்குதிரைகளுடனேயும் சிங்கக்கொடியால்விளங்கிக்கொண்டு மிருக்கிறரதத்திலேறிப் பட்டணத்தைவிட்டுப் புறப்பட்டு ரதகஜதுரகபதாதிகளென்கிற சதுரங்கசேனைகளுடனேதிக்குவிஜயத்தைக்குறித்துப் புறப்பட்டான். மேருவுக்குக்கீழ்ப்புறமான பத்திராசுவவருஷத்தையும் மேற்புறமானசேதுமால் வருஷத்தையும்தென்புறமானபாரதவருஷத்தையும், உத்தரமானகுருவருஷத்தையும், மேருவிற்சேர்ந்த இளாவிரதம், ரம்மியகம், இரண்யமயம், ஹரிவருஷம், கிம்புருஷமென்னும் பெயரால்விளங்கின வருஷங்களைச்சயித்து அங்கேயிருக்கிற ராஜாக்களிடத்திலிருந்து பகுதிவாங்கிக்கொண்டு அந்தந்தவிடங்களில் ஸ்ரீகிருஷ்ணனுடைய மகத்துவத்துக்குக் வியாபகமாகிய பாண்டவர்களுடைய கதைகளைக்கேள்விசெய்தும், அசுவத்தாமாவுடைய அஸ்திரவொளியினல் தனக்குவந்த சங்கடத்தை ஸ்ரீகிருஷ்ணன்பரிகரித்துப் பாண்டவர்களிடத்தில்செய்த சிநேகத்தையும் பாண்டவர்கள் ஸ்ரீகேசவனிடத்தில் அனுஷ்டித்த பக்தியையுங்கேள்விசெய்து பரமசந்தோஷத்துடனே துதிசெய்த அந்தஜனங்களிடத்திலுண்டாயிருக்கிற பிரீதியினல்கடாட்சஞ்செய்துமகாவுதாரனுகையாலேயும் விஸ்தாரமானமன முடையவனுகையாலேயும், அவரவர்களுக்கு மிகுந்ததனங்களையும், வஸ்திரங்களையும், ஆபரணங்களையும்கொடுத்தான். ஸ்ரீகிருஷ்ணன் பாண்டவர்கள்நிமித்தியமாகச்செய்த சாரத்தியத்தையும், சபாநாயகனுக விருந்ததையும், அவர்கள்சொற்படி நடந்துகொண்டதையும், சகாவாகவிருந்ததையும். தூதுநடந்ததையும், ராத்திரிகாலங்களில் அவர்களை ரட்சிக்கவேண்டியுருவினகத்தியைக் கையில் பிடித்துக்கொண் டிருந்ததையும், வனத்தில்சஞ்சரிக்கிறபோது அடிக்கடிஅவர்களையடுத்து ரட்சணஞ்செய்ததையும் அவர்களைத் தோத்திரஞ்செய்ததையும், சிநேகிதனுனவர்களுக்கு வந்தனஞ்செய்ததையும், அப்படியே யுலகமெல்லாம் அந்தவிஷ்ணுவை நமஸ்கரித்ததையும், கேள்விசெய்து பரிட்சித்துமகாராஜா ஸ்ரீஹரியுடைய சரணரவிந்தங்களில் பக்திசெய்தான்.

ஓய் சவுனகாதிகளே தன்னுடைய பெரியோர்கள்நடந்நடத்தையை எப்போதும் அனுசரித்து நடந்துகொள்ளுகிறஅந்தப் பரிட்சித்துமகாராஜா வருகிறவழியில் ஒரு ஆச்சரியம்நடந்தது. அதைச்சொல்லுகிறேன் கேளுங்கள் தருமமான து ஒருஎருதுருபத்தையெடுத்து ஒருகாலால்நடந்துகொண்டு கன்றையிழந்த தாயைப்போலக்கதறியுங் கண்ணீர் சொரிந்துகொண்டும் மாறுவர்னத்துடனேமிருக்கிற பூமிதேவியாகிய பசுவைஅடுத்துக் கேட்கின்றது.

வாராய் மங்களரூபத்தையுடைத்தானவளே, உனக்கு ஆரோக்கிய முண்டாயிருக்கிறதா எந்தக்காரணத்தினால்வாடின முகத்துடனே உம்முடைய நிசவர்னத்தையிழந்து இருக்கிறையோ, அந்தக் காரணத்தினால் உன்மனதில் ஒருகிலேசத்தை யனுபவித்துக்கொண் டிருக்கிறாயென்றும், உனக்குப் பந்துவான சனம் வெகுதூரமாகப்போயிருக்கிறபடியால் அந்தசனத்தை நினைத்துச் சோகப்படுகிறாயென்றும் நான்நிச்சயிருக்கிறேன்.

ஓய் அம்மா, நான்மூன்றுகால்களை யிழந்து ஒருகாலால்நடக்கிறேனென்று துக்கப்படுகிறையோ இல்லாவிட்டால் உன்னைச் சூத்திராளனுபவிப்பார்களென்று கேதப்படுகிறையோ தேவதைகள் யக்கியபாகத்தை யிழந்தார்களென்று விசனப்படுகிறையோ இந்திரன் காலங்களில் வருஷங்களை நடத்தவில்லையென்று கேதப்படுகிறையோ ஸ்திரீகளைப்புருஷர்கள்ரட்சியாமல் -கைவிடுவார்களென்று சங்கடப்படுகிறையோ. ஓய் பூமிதேவியே பாலரை மாதாபிதாக்கள் ரட்சியார்களென்றோ அந்தச்சிசுக்களை ராட்சதர்களைப்போற் பீடிப்பார்களென்றோ பிராமணர்கள் வேதவிருத்தமாகிய கருமங்களைச் செய்வார்களென்று வேதங்களைக்குறித்துச் சிரமப்படுகிறையோ. ராசவர்க்கங்கள்பிராமணபக்தி யில்லாமலிருக்கிறபடியால் பிராமணருக்கு எப்படியென்று துக்கிக்கிறையோ. கலிபுருஷன் க்ஷத்திரியபந்துக்களைப் பிறப்பிப்பானென்றும், அவர்கள் ராச்சியத்தை ஞாயமாகப் பாலனஞ்செய்யமாட்டார்களென்றும் சோகானுபவம் பண்ணுகிறையோ. இந்தக்கலியில் சிவவர்க்கங்கள் போசனங்களிலும், பானங்களிலும், இருப்பிடங்களிலேயும்சம்பிரமங்களிலேயும், விரும்பியிருக்கிறார்களென்று தான் கிலேசப் படுகிறையோ உன்னுடைய மிகுந்தபாரத்தைப்பரிகரிக்கவேண்டி யவதாரஞ்செய்த ஸ்ரீஹரியுடைய அந்தர்த்தானத்தைநினைத்துச்சந்தாபப்படுகிறையோ, சகலகருமங்களும் மோட்சத்துக்கு விலக்கமாச்சுதென்று கஷ்டப்படுகிறையோ, ஓய் வசுந்தரையே உன்னுடைய இளைப்பிற்கு ஏதுவான இந்த உன் மனோ வியாதியை எனக்குச் சொல்லவேண்டும். பலவானான காலமாலேயுன்னுடைய தேவ சிலாக்கியமாகிய பாக்கியம் அபகரிக்கப்பட்டதென்று சங்கடப்படுகிறையோ வென்று ரிஷபரூபமாகிய தருமம் கேள்விசெய்ததற்குப் பசுரூபத்தைத்தரித்திருக்கிற பூமிதேவி உத்தரஞ்சொல்லுகிறாள்.

ஓ தருமதேவதையே யாதொருகாரணத்தைக் கேட்கிறீரோ அதையெல்லாம் நீரறிவீர். எவனால் உலகங்களுக்கெல்லாம் சுகத்தைக்கொடுக்கிற நாலுகால்களால்நீர் சஞ்சரிக்கிறீரோ எவனிடத்தில் சத்தியமும்சவுசமும், தயையும், சாந்தியும், தியாகமும், சந்தோஷமும்குடிலமைத்திருக்கிறதையும், மனோசயமும், இந்திரியநிக்கிரகமும், தபசும், சர்வசமமாக இருக்கிறதையும் பொறுமையும், வைராக்கியமும், சாஸ்திரசிரவணமும், ஞானமும், ஒழிவும், ஐசுவரியமும், சவுரியமும், பராக்கிரமமும், தைரியமும் லாவண்ணியமும். சுவாதந்திரமும் சாமர்த்தியமும், காந்தியும், பாக்கியமும் மிருதுபாஷணமும், விசுவாசமும், சீலமும், பலமும், அகங்காரமில்லாமலிருக்கிறதையும். இதுமுதலான குணங்களெல்லாம் இடைவிடாமலிருக்கிறதுக்ளோமகா புருஷர்களால்பிரார்த்திக்கும்படியான இந்தமகாகுணங்கள் எவனிடத்தில் ஒருகாலத்திலும் குறைவில்லாமல் விளங்குமோ, குணபாத்திரமாகியும் லட்சுமிநிவாசனாகியுமிருக்கிற அந்த ஸ்ரீஹரியினுடைய விரகத்தைக் குறித்துத் துக்கிக்கிறேனேயல்லாமல் பாபஹேதுவானகலியால்வியாபிக்கப்பட்ட ஜனங்களையும்-என்னையும், அமரேசுவரனாகிய உம்மையும், தேவர்களையும், ரிஷிகளையும், பிதுர்வர்க்கங்களையும் சாதுசனங்களையும், பிராமணாதி வர்க்கங்களையும், பிரமசரியாதி ஆசிரமங்களையும் நினைத்துநான்சோகப்படவில்லை,

ஓய் தருமதேவதையே, மிருதியான கியானிகளுக்கு ஆசிரமாகிய பிரமாதிகளான தேவதைகளும் பகவானுடைய திருவடிகளை அடுத்து நம்பிக்கொண் டிருக்கையிலும் அநேககாலம்எவளுடையகடாட்சம்வேண்டுமென்று இச்சித்துத் தவசுகளைச்செய்தார்களோ, அந்தலட்சுமிதேவியும் தனக்குவீடாகிய கமலங்களுடைய பரிமளத்தை ஆக்கிராணஞ் செய்து அதுகளில் ஆசைபிறந்து மற்றவிடங்களை நினையாமல் அதுகளின்றானே நிலையாகின்றாளோ அந்த முகுந்தனுடைய பத்மரூபமாகியும், வச்சிரகரமாகியும், அங்குசசமானமாகவும், துவஜரூபமாகவும் விளங்குகிற ரேகைகளால் பிரகாசித்தும், செவந்துமிருக்கிற திருவடிகளால் அலங்கரிக்கப் பட்ட சரீரத்தை யுடைத்தாகி அவருடைய சம்பந்தத்தையும் அடைந்துபதினான்குலோகங்களுக்குள்ளே நான்சிரேஷ்டமென்றுநினைத்திருந்த என்னுடையகர்வத்தால் முடிவில் என்னை நிவர்த்தித்தானோ யாதொரு மூரவயிரியான ராசவேஷத்தையெடுத்த அசுரர்களுடைய எண்ணிக்கையில்லாத அக்ஷோணியாகிறஎன்சுமையைத் தன்சுதந்தரத்தினால் பரிகரித்தானோ யாதொரு ஸ்ரீவாசுதேவன் யதுவம்சத்தில் அவதாரத்தைச் சங்கற்பித்து இந்தலோகத்தில் பாதங்களைவைத்து நடக்கிறதற்குச் சங்கடமடைந்துகொண்டிருக்கிற உன்னைத் தன் சகாயமாத்திரத்தால் என்னிடத்தில் பரிபூரணமான பாதங்களால் சஞ்சரிக்கும்படி செய்தானோ யாதொரு காமஜனகன்சத்தியபாமைமுதலானஸ்திரீகளுடைய தைரியத்தைக்கர்வத்துடனே தன்னுடைய பிரீதியுடனேகூடிய கடாட்சங்களாலேயும், மனோக்கியமாகிய புன்சிரிப்புகளாலே

யும், சமத்காரமான வார்த்தைகளினாலேயும், பரிகரித்தானே, அந்தப் புருஷோத்தமனுடையதிருவடிகளால் அலங்கரிக்கப்பட்டு அந்தச் சுகத்தால் பரவசமாகி புளகாங்கிதையாகவிருந்தவள், அவனுடையவிரகத்தை எவள்தான் சகிப்பாளென்று பூமிதேவியும் தரும தேவதையும் ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டிருக்கிறசமையத்தில் பரிட்சித்தென்கிற ராஜரிஷியானவன் கிழக்குமுகமாகிப் பிரவாகத்தையடைந்திருக்கிற சரஸ்வதிநதியையடைந்தான்.

பிரத்தியும்நாயகமம்.



# ௰எ-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

மாபராக்கிரம சாலியபிமன்பிர
தாபபுத்திரன் பரிச்சித்துவாற்றழைந்
தேபொருந்து பெருங்களிக்கிரக
மாம்பருங்கதை வாகுடனோதுவாம்.

மகாபராக்கிரமசாலியான பரிட்சித்துவினால் செய்யப்பட்ட கலியினுடைய நிக்கிரகம்சொல்லபபடுகின்றது

இந்தப்பிரகாரம் அவ்விடத்தில் ஸ்ரீபுமான்களாயிருக்கிற அந்தப்பசுக்களையடிக்கிற ராஜலக்ஷணமுடைய சூத்திரனையும், தாமரைவளையம்போல் வெளுத்தும் மூத்திரத்தைவிட்டுக்கொண்டும், நடுக்கத்துடனே ஒருகாலால் பயப்படுகிறாற்போலேயுமிருக்கிற ரிஷபத்தையு மிகவும் சூத்திரன்காலாலே யுதைக்கப்பட்டுக்கொண்டிருந்தும், கன்றில்லாமலும், கண்ணிலிருந்தும் தண்ணீர்களைப்பெருகவிட்டு அழுதுக்கொண்டும், இளைத்தும்பசியால் திரணத்தையிச்சித்துக்கொண்டும், தருமமூலமாகியும் பசுரூபத்தையெடுத்த பூமியையுங்கண்டு பரிட்சித்துமகாராஜாகையில் வில்லைவணக்கி நாணேறிட்டு அதில் பாணத்தைத் தொடுத்துக்கொண்டு மேகம்போல் கம்பீரமாகிய வாக்கினால்கேட்கிறான். ஆரடா நீஎன்னாலேரட்சிக்கப்பட்ட வுலகத்தில் ஸ்திரீரூபமாகிய பசுவைக் கொல்லுகிறாய் உன் வேஷத்தைப் பார்க்கையில் ராஜாவாகவிருக்கிறாய், உன்கருத்தைப்பார்க்கையில் சூத்திரவேஷதாரிபோலிருக்கிறாய், காண்டீபத்தைத்தரித்த அர்ச்சுனனுடனே ஸ்ரீகிருஷ்ணதேவன்போனதினால் எவர்களுக்குச்சோகம்வரும்படி செய்யலாகாதோ அவர்களுக்கு ரோகத்தைக்கொடுக்கிற நீயேசோகத்துக்குயோக்கியனாகையால் உனக்கு வதத்தைக்கொடுக்கலாம் நீதான் தாமரைவளையம்போல வெளுத்தும், மூன்றுகால்களையிழந்தும், ஒருகாலால் சஞ்சரித்துக்கொண்டிருக்கிற ரிஷபவேஷத்தைத் தரித்திருக்கிறாய், எங்களைக் கேதப்படுத்தவேண்டுமென்று ரிஷபரூபத்தைத் தரித்த தேவதையோ, ஆர்சொல்லு கவுரவவமிசத்திற்பிறந்த ராஜாந்திரர்களுடைய பாகுதண்டங்களாலே ரட்சிதமாகியஇந்தப்பூமண்டலத்தில் ஒருகாலத்திலும் உன்னைவிடமற்றொருபிராணிகளுக்கும் கண்ணீர்கள் நிலத்தில்விழுந்ததில்லை வாராய் காமதேனுசந்ததியிற்பிறந்த ரிஷபமே,இந்த சூத்திரனிடத்திலிருந்து உனக்குப் பயந்தேவையில்லை இதுநிமித்தியம் நீசோகப்படவேண்டாம்.

வாராய் மாதாவே? உனக்கு க்ஷேமம் துஷ்டர்களை நிக்கிரகஞ்செய்கிறநான் சாக்கிரதையாயிருக்குகையில் நீ அழவேண்டியதில்லை எந்தராஜாவுடைய ராச்சியத்தில் பிரஜைகள் துஷ்டர்களால் பீடிக்கப்படுகிறார்களோ மதித்திருக்கிற அந்தராஜாவுடையகீர்த்தியும், ஆயுசும்,பாக்கியமும், அவனுடைய பரலோககதியும் நாசமடையும், ராஜாவுக்குத் தன்ராச்சியத்தில் ஆர்த்தியடைந்த சனங்களுடைய ஆராசத்தைப்பரிகரிக்கிறதே பரமதருமம் ஆகையால் பிராணிகளுக்குத் துரோகத்தைச்செய்கிற இந்தமிருகத்துஷ்டனை நான்வதைக்கிறேன்.

ஓய்சுரபிவம்சோத்பவனே, நாலுகாலால்நடக்கிற உன்னுடைய மூன்றுகால்களை வெட்டினவன்எவனெவன் ஸ்ரீகிருஷ்ணனுடைய திருவடிகளை நம்பின ராஜாக்களுடைய ராசசியத்தில் உன்னைப்போலொத்தபேருக்கு இப்படிகால்களுடைய இழப்புவரலாகாது.

ஓய்ரிஷபமே? உனக்குக்ஷேமம் கிரபாதிகளான சாதுஜனங்களுக்குத் துரோகத்தைச் செய்தவன் குருகுமாரர்களுடைய குலத்திற்பிறந்தபேர்களுடைய கீர்த்தியைக்கொடுத்தவன் உனக்கு அபாதியான அந்தத் துரோகியைச்சொல்லும் அபராதமில்லாத ஜனத்தினிடத்தில் அபராதத்தைச்செய்கிறவனுக்கு என்னுடைய பயம் அவனுக்குஎங்கேபோனாலுந் தீராது அபராதமில்லாதபிராணிகளிடத்தில் துரோகத்தைஎவன்பயமில்லாமற்செய்கிறானோ அவன்தேவனாகியிருந்தாலும் அவனுடைய தோள்வளைகளுடனே பாகுவைப் பிரத்தியக்ஷமாக அறுத்துக்கொண்டுவருவேன் ராஜாக்களுக்கு சுவதருமத்தினுடையபரிபாலனமே உத்தமமானதருமமென்று பிரசித்தமாகையால் ராஜாவானவன் தனக்குச் சங்கடமில்லாத காலத்தில் மரியாதையை அதிக்கிரமித்து அதருமங்களைச்செய்கிற ஜனங்களுக்கு சாஸ்திரவிகிதமாகிய சிக்ஷைகளைச் செய்யவேண்டுமென்று சொல்லுகிற பரிட்சித்துமஹாராஜாவுடைய வார்த்தையைக் கேள்விசெய்த ரிஷபரூபமாகிய தருமதேவதை சொல்லுகின்றது.

ஓய்ராஜாவே? எவர்களுடைய குணசமுகங்களால்ஷட்குணபரிபூரணனாகிய ஸ்ரீகிருஷ்ணன் தூதுமுதலாகிய கருமங்களைச் செய்தானோ, அப்படிப்பட்ட பாண்டவர்

களுடைய குலத்திற்சனித்த உங்களுக்கு இப்போது சொன்ன அபயவாக்கியம் புக்தந்தான்.

ஓய்புருஷசிரேஷ்டனே, வாக்கியபேதங்களால்மோகத்தையடைந்தநாங்கள்; இந்தக் கிலேசங்களுக்குக் காரணங்களையும், இந்தத்துக்கத்தைக்கற்பித்த புருஷனையும் அறியமாட்டோம். ஒருவர் சொன்னபடி மற்றொருவர் சொல்லாமல் பலவகையாகச்சொல்லுகிறதையும், வேதபுருஷன் கருத்துக்கு விரோதமாகிய மதத்தில் நிலைத்த மனதையுடைத்தாயிருக்கிறதையும், சிலபேர்கள் தனக்குத்தானே பிரபுவென்றுசொல்லுகிறார்கள். சிலர் நவக்கிரகங்களே தெய்வமென்று சொல்லுகிறார்கள். யாகங்களையல்லாமல் மற்றொருநாதனில்லையென்று சொல்லுகிறார்கள். இந்தவுலகங்களிப்படிபிறந்தும் நடத்தைக்கு ஒருமையாயிருந்தும், பின்பு இறந்துபோறதெல்லாம்இதின்சுபாவமேயல்லாமல் மற்றொருவர் தருமமல்லவென்றுசொல்லுகிறார்கள். சிலர் பிரயாசமில்லாமல் ஒருவருக்கும்பயமில்லை பிரயாசமும் தன்கருமமாகையால் இந்தவுடலமே மூலதெய்வமென்று நாஸ்திகர்சொல்லுகிறார்கள் தான்செய்யும்யோகாப்பியாசமே பிரதானமென்றுஅதில் தன்ஏழமைப்புத்தியாலும் தனக்குத்தானேமித்துருவுஞ் சத்துருவுமென்றும் நிரீஸ்வரசாங்கியர்சொல்லுகிறார்கள் இப்படிப்பட்ட மகிமையை யுடைத்தானவனென்றும், இவன்ஸ்வரூபமிதுவென்றும் மனதினால் அளவிடக்கூடாமலும் வாக்கினால்சொல்விமுடியாமலுமிருக்கிற பரமபுருஷனேஅல்லாமல் மற்றொருவரல்லவென்று சிலபேர்நிச்சயித்தார்கள்.

ஓய்ராஜரிஷியே இவர்களில் எவர்கள் எங்கள் துக்கத்துக்குக்காரணமாகியிருப்பார்களோ அவர்களை உசிதமாகியஉம்முடையமனதில் நிச்சயித்துக்கொள்ளுமென்று தருமதேவதைசொல்லியவார்த்தையைக்கேள்விசெய்த பரிட்சித்துச்சக்கிரவர்த்தியானவன் மனதை நிறுத்திக்கொண்டு தியானித்துத்தெளிந்துகொண்டு மனதிலிருந்தசோகத்தைவிட்டு ஒருவார்த்தைசொல்லுகிறான்.

ஓய்தருமக்கியானனே? அதருமத்தைச்செய்தவர் அடையத்தக்கநரகங்களை அதை வாக்கினால் சொன்னவர்களுமடைவர் ஆகையால் அறிந்திருக்கையிலும் நிச்சயமாகச்சொல்லாமல் மதபேதங்களைக்குறித்தீர். இந்தத்தருமத்தைஎனக்குச்சொல்லவேண்டியும் பரியாயத்தினால்சொன்னீர். ஆகையால் நீதருமதேவதையேரிஷபரூபத்தைத்தரித்துக்கொண்டு தருமத்தைச் சொல்லுகிறீர். இல்லாவிட்டால் பகவானுடைய சங்கல்பத்தால் நடக்கிறபிராணிகளுடைய கொல்லப்படுகிற தன்மையும் கொல்லுகிறதன்மையுமாகிற கதியை ஒருவருமறியமாட்டார். ஆகையால் மனதுக்குத் தெரியாத கருமத்தை வாக்கினால் சொல்லுகிறது அரிது கிருதயுகத்தில் தவசும், சுசித்துவமும், தயவும், சத்தியமும், இந்நான்கும் உனக்கு நாலுபாதங்களாக இருந்ததுகள், உனக்குவிரோதியாகிய அதருமத்தினுடைய அம்சங்களான கர்வமும், ஈனசங்கமும், மதமும், அசத்தியமும், உன்னுடைய பாதங்களுக்குச்சத்துருவாகையால் அசத்தியம்நீங்கலாக மற்ற மூன்றுகளால் யுகக்கிரமத்தினால் உன்னுடையமூன்றுபாதங்களும் இந்தக்கலியுகத்தில் கழிந்ததுகள். இப்போது உன்னுடைய நாலத்தொருஅம்சமாகிய சத்தியமொன்றே ஒழிந்திருக்கிறது இந்தப்பாதத்தால்தான் நீயுன்னைத் தரிசிக்கவேண்டும், புருஷனும் உன்னை அடையவேண்டும் அதருமமாகிய இந்தக் கலிபுருஷன் அசத்தியத்தால் மிகவும்வளர்ந்து அந்தப்பாதத்தையும்வாங்கிவைக்கவேண்டுமென்று நினைத்துக்கொண்டிருக்கிறான். இந்தப்பசுவேஷத்தைத்தரித்தவள் பூமிவேவி இவளிதுவரைக்கும் சிலாக்கியமாகிய தவசுமுதலான உன்னுடைய பாதங்களால் வினோதமாகியசம்பத்தையடைந்து ஸ்ரீஹரியுடைய பாதலாஞ்சனங்களாகிற அலங்காரத்தைத் தரித்துசகலபாரங்களையும் ஸ்ரீஹரியால் தவிர்ந்து சுகித்திருந்தாள் இப்போது இந்தச்சம்பத்தையுமிழந்து ஸ்ரீஹரியையும் கைவிட்டு அதருமஅம்சங்களாகிய கர்வசங்கமதங்களால் மிகுந்தபாரத்தை யெடுக்கமாட்டாமல் கண்களிலிருந்து கண்ணீர்களைச்சொரியவிட்டுக்கொண்டு நாயகனைப்பிரிந்தபதிவிரதையைப்போல் பிராமணபக்தி யில்லாமல் ராஜவேஷத்தைத்தரித்த சூத்திரர்கள் தன்னை அனுபவிப்பார்களல்லவோவென்று இப்படிதருமதேவதையையும் பூமிதேவியையும் நல்லவார்த்தையால் சமாதானங்கள் செய்த பரிட்சித்துமஹாராஜா அதருமமூலமாகிய கலிபுருஷனைச் சிக்ஷைசெய்யவேண்டித் தீக்ஷண்ணியமாகிய கத்தியையெடுத்து உருவினான் அப்போது தன்னைக் கொல்லவேண்டுமென்றுநினைத்து கட்கத்தைக் கையில் பிடித்திருக்கிற பரிட்சித்துவினுடைய மனதையறிந்த கலிபுருஷன்பயத்தினால் நடுங்கிக்கொண்டு தான்தரித்திருந்த ராஜவேஷத்தைவிட்டு அவன்பாதமூலத்தில் தன்சிரசினால்வணங்கினான் அப்போது அதிவீரனாகியும்சரணாகதரக்ஷணவிரதத்தைத் தரித்தவர்களில் பிரசித்தனாகியும் ஏழைகளிடத்தில் இரக்கமுள்ளவனுமாகியிருக்கிறஅந்தத்தேவராதன் தயாசாலி யாகையால் அவனைக் கொல்லாமல் கொஞ்சம் நகைத்தவன்போல் ஒருவார்த்தைசொன்னான்.

வாராய்கலிபுருஷனே, குடாகேசனுடையகீர்த்தியைப் பரிபாலனஞ்செய்கிறபேருக்குக் கைகூப்பி அஞ்சலிபந்தம்செய்த வுனக்கு ஒருவிடத்திலும்பயமில்லை. ஆனாலும் அதருமபந்துவாகையால் என்தேசங்களில் நீவாசஞ்செய்யாமல் நமக்கு உசிதமில்லாத மற்ற தேசங்களிற்

போய்விடு ராசக்கிரகங்களில் நீவாசஞ்செய்கிறவயணங் தெரிந்துகொண்டு லோபமும், பொய்யும், திருட்டும், இளப்பமாகிய வர்ணசிரம தருமத்தியாகமும், மூத்தவ ரும்,வஞ்சனையும்,கலகமும்,டம்பமுங்கலந்த அதருமக் கூட்டமும் அடுத்துவந்தது.

அடா அதருமபந்துவே,பிரத்தியக்ஷமாகிற தருமத் துடனே வாசஞ்செய்யவேண்டிய இந்தப் பிரமாவரத க்ஷேத்திரத்தில் யக்கியவிசக்ஷணன யக்கியசரீரகனை, ஸ்ரீஹரியை ஸ்தாவரங்களிலும், சங்கமங்களிலும்,வாயு வானவன்போல் உட்புகுந்து வெளியிலும்நிறைந்து ஆ த்மாவாகி இப்படி யக்கியம் செய்கிற சனங்களுடையஇ ச்சாவிஷயமான வஸ்துக்களை அமோகங்களாகக் கெடுக் கிறாயென்று கலிபுருஷனைப்பார்த்துப் பரிட்சித்துமகா ராஜாசொன்ன வார்த்தையைக்கேட்ட அந்தக்கலியான வன் நடுக்கத்துடனேகூட அந்தராஜாவை காலதண்ட த்தைத் தரித்திருக்கிறயமனைப்போல் நிச்சயித்துக்கொ ண்டு சார்வபூபனே உம்முடையஆக்கினையினல்எங்கே யாகிலும் ஒருவிடத்தில்நான்போவேணுகில்அவ்விடங்களெ ல்லாம் பாணமேறிட்ட வில்லையுடைத்தான உம்மைக்கா ணுகிறேன்.

ஓய் தருமத்தைச் செய்கிறபேர்களுக்குள் சிரேஷ்ட ரே எந்தவிடத்தில் சஞ்சலமில்லாமல் உம்முடையஆக் கினையைச் சிரசினல்தரித்துக்கொண்டு நான்வாசஞ்செ ய்வனே அந்தஸ்தலத்தை நீர்ஆக்கியாபிக்கவேண்டுமெ ன்று கலிபுருஷன்சொன்ன வார்த்தையைக்கேட்ட பரிட் சித்து அந்தக்கலிக்கு வாசஞ்செய்கிறதற்கு இடங்களை க்கற்பித்தான் எந்தவிடத்தில் சூதும், சுருபானமும்,ஸ் திரீஜனங்களும், பிராணிவதைகளுமாகிய இந்த நாலு அதருமங்களையுங் கொடுத்தபின்பு அதில்திர்ப்தியில்லா மல் மறுபடியுங் கலிகேட்டுக்கொண்டபடியினல் சுதந்த ரனை தேவராதன் அவனுக்கு ஸ்தானமாக சுவர்னத் தைக்கொடுத்தான் அதினல்பொய்யும்,மதமும்,காமமு ம் ரசோகுணமும்,ஐந்தாவதானவைரமும் அடையப்ப ட்டபடியினல் அதருமகேதுவானகலிபுருஷன் இந்தஸ் தானங்களையடைந்து உத்தரைகுமாரன்கொடுத்த இந்த ஸ்தானங்களில் அவனுக்கினையைச் சிரசினல் பாலனஞ் செய்துக்கொண்டு வாசஞ்செய்தான்.

இப்பால் நல்லகதிவேண்டுமென்று நினைத்தவன் இந் தஸ்தானங்களை ஒருகாலத்திலேயும் இச்சிக்கலாகாதெ ன்று சூதர் நைமிசாரண்ணியவாசிகளுக்குச் சொல்லிப் பின்னையுஞ்சொல்லுகிறார்.

ஓய் பிராமணர்களே, சகல தருமங்களையும் நடப்பிக் கிற அந்தராஜேந்திரன் அந்தஎருதுகளுடைய நஷ்டங் களாயிருக்கிறதபசும், சத்தியமும், தயவுமாகிறமூன்று பாதங்களையுந் திரும்பவும் கூட்டினன். பின்பு அந்தப் பூமிதேவியையும் சமாதானஞ்செய்து விருத்திசெய்து வைத்தான்.

அந்தப் பரிட்சித்துமகாராஜன் இப்போது ராஜயோ க்கியமாகியும், தனக்குப் பிதாமகனுகிய தருமராஜன்ஆ ரண்ணியப்பிரவேசம் செய்யவேண்டுமென்று நினைத்த காலத்தில் கொடுக்கப்பட்டுமிருக்கிற சிம்மாசனத்தை ஆரோகணஞ்செய்து வாசஞ்செய்கிறான்.

ராஜரிஷியாகியும், மகானுபாவனுகியும்சக்கிரவர்த்தி யாகியும், அபிமேககீர்த்தி சம்பன்னனுகியுமிருக்கிற அ ந்த கவுரவேந்திரன் காந்தியுடனேயும், சம்பத்துடனே யும் இப்போது வாசஞ்செய்கிறான்.

ஓய் விப்பிரசிரேஷ்டர்களே, யாதொருவன் பரிபால னஞ்செய்தபூமியில் நீங்கள் சத்திரயாகஞ்செய்ய நிர்மித் திருக்கிறீர்களோ அந்த அபிமன்யு குமாரனை ராஜா வானவன் இப்படிப்பட்டமகிமை யுடைத்தானவனென் று சூதர் பின்னையுஞ்சொல்லுகிறார்.

ஸ்ரீகிருஷ்ணயநம.

## ய அ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பிரமசாபம் பரிச்சித்தனைதலும்
விரைமலர்த்தார் மிளிர்த்தணிவாகுயர்
அரசனுக்குவை ராக்கியமுற்றிப்பின்
பெரிதனுக்கிரக மானதும்பேசுவாம்.

பரிட்சித்துவுக்குவந்த பிரமசாபமும் அந்தப்பிரமசா பமே ராஜாவுக்குவைராக்கியத்தைப்பண்ணுகின்றும்அ னுக்கிரகமாச்சுதென்றும் சொல்லப்படுகின்றது.

வாரீர் பிராமணசிரேஷ்டர்களே, யாவனொருவன் து ரோணகுமாரனுடைய அஸ்திரத்தினல் தகிக்கப்பட்டி ருந்தாலும், ஷட்குண பரிபூரணனுகியும், அற்புதசரித் திரனுகியுமிருக்கிற ஸ்ரீகிருஷ்ணனுடைய அனுக்கிரகத் தினல் மாதாவினுடையகர்ப்பத்தில் மரிக்காமல் பகவா னிடத்தில்சமர்ப்பிக்கப்பட்ட மனதையுடைத்தாயிருக்கி றபடியால் பிராமணகோபத்தினல் வந்திருக்கிற தட்சக னிடத்திலிருந்துண்டான பிராமணசாபவிஷயத்தி லிரு ந்து மோகமடையவில்லையோ சுகப்பிரமரிஷியினுடைய சிஷியனுகிய அந்த அபிமன்னியுகுமாரன் சமஸ்த தத் துவங்களையுமறிந்து சர்வசங்கப் பரித்தியாகஞ்செய்து, அசிதனை ஸ்ரீபரமாத்வாவிடத்தில் நிஷ்டையைப்பொ ருந்திக் கங்காநதியில் தன்சரீரத்தைநிவர்த்தித்தான், ஆ கையால் உத்தமசுலோகனுகியஸ்ரீவாசுதேவனுடையவா ர்த்தைகளைச்சொல்லி அவனுடைய கதைகளாகிற அமி ர்தத்தைப் பானஞ் செய்து அவன் பாத பத்மங் களை

ஸ்மரித்திருக்கிற சனங்களுக்கு மரணகாலத்திலும்மோசம்வரமாட்டாது. அபிமன்யு குமாரனாகிய இந்த மகாராஜன் ஏகச்சக்கிராதிபதியாகி இந்தப்பூமிக்கு எவ்வளவுகாலம் நாயகனாகவிருக்கிறானோ அவ்வளவு காலமும் இந்தக்கலியானவன் பூமண்டலமெல்லாம் பிரவேசித்திருந்தாலும் விருத்தியடையவில்லை எந்தச் சமையத்தில் இந்தப்பூமியை இந்தக்கிருஷ்ணன் சோதித்தாரோ அந்தச் சமையத்தில்தானே யனுசரித்துவந்தான். அதருமஏதுவான இந்தக்கலிபுருஷனை இந்தமகாராஜன் இப்பூமியில்வராமல் ஏன்துவேஷிக்கவில்லையென்றால் சாரத்தைக்கிரகிக்கிற வண்டானதுபோல் சாரமறிந்தவனாகையால் அவன்வாசத்தை உபேட்சித்தான். ஓய்சவுனகாதிகளே அதிபுண்ணியமான பரிட்சித்துவினுடைய உபாக்கியானம் ஸ்ரீவாசுதேவனுடைய கதைகளுடனே நீங்கள் பிரஸ்னஞ்செய்தபடி என்றாற்சொல்லப்பட்டது. அநேக சரித்திரசம்பன்னனாகிய ஸ்ரீபகவானுடைய குணங்களாலேயும், லீலைகளாலேயும், பரிபூரணங்களான கதைகள் எவ்வளவுண்டோ அவ்வளவையும் சமுசாரநிவர்த்தியை இச்சித்தவர்கள் கேட்கவேண்டுமென்று சொல்லுகிற சூதனைப்பார்த்து நைமிசாரண்ணியவாசிகளான ரிஷிகள்சொல்லுகிறார்கள்.

ஓய் சூதரே, அநேகமாயிரவருடம் ஜீவித்திருக்கவேண்டுமென்றும், நீர் ஸ்ரீகிருஷ்ணனுடையநிர்மலமானகீர்த்தியைச்சொல்லுகிறீர். அது மரணயோக்கியாளான மனுஷருக்கு அமிர்தமல்லவோ அதிமாத்திரமாகிய உபத்திரவங்களால் விசுவாசஞ்செய்கிறதற்கு அயோக்கியமாகிய இந்தச்சத்திரயாகத்தில் புகைகளால் மலினமாகிய சரீரத்தையுடைத்தான எங்களுக்கு ஸ்ரீகோவிந்தனுடைய பாதபத்மங்களில் பிறந்தும் மதுரமாகியுமிருக்கிற மதுவைப் பானஞ்செய்விக்கிறீர்.

ஓய் சூதரே, பாகவதாளுடைய சகவாசலேசத்துக்குச் சுவர்க்கமும், கைவல்லியமும், சமமென்று நாங்கள்நினைக்கவில்லை யாகையால் மரணசீலராகியஜனங்களுடையஆசைக்கு விஷயமாகிய பசுபுத்திரர்களைச் சமமல்லவென்று நினைக்கிறதில் சம்சயமில்லை, சாரத்தையறிந்தவன் எவன்தான் மகானுபாவாளுடைய இருதயநிவாசியான ஸ்ரீஹரியினுடைய கதையில் திர்ப்தியடையான். யோகீஷ்வரர்களான யாதொருஜீவப்பிரமாதிகளும்ஹேயகுணரகிதனாகிய இவனுடைய கல்யாண குணங்களுடைய முடிவையறிந்தவர்களில்லை ஆகையால் கியானசத்தியாதி சம்பன்னராகிய தேவரீர் மஹானுபாவாளுடைய ஏகாந்தவசனத்துக்கு யோக்கியனாகிய ஹரியினுடைய விசித்திரமான்சரித்திரத்தைக் கேள்விசெய்யவேண்டுமென்று இச்சித்திருக்கிற எங்களுக்குக்கேள்விசெய்விக்கவேண்டும், வித்தியாநிதியேகுறைவில்லாத புத்திசாலியான அந்தப்பரிட்சித்து என்கிறவன் பரமபாகவதன் - வியாசகுமாரராகிய சுகப்பிரமரிஷியினால் உபதேசிக்கப்பட்ட எந்தக்கியானத்தினால்கருடத்துவசபாதபத்மத்தையடைந்தானோ, மிகவும் அற்புதமாகியயோகநிஷ்டையை வர்ணித்தும், மிகுந்தபுண்ணியமாகியும், பாகவதாளுடைய மனசுகளுக்கு அபிராமமாகியும், அனந்தனுடைய சரித்திரவர்னமாகியுமிருக்கிற அந்தப் பரிட்சித்து வுபாக்கியானத்தை எங்களுக்குச் சொல்லுமையாவென்று பிரஸ்னஞ்செய்த சவுனகாதிகளைப்பார்த்துப் பரமசந்தோஷத்துடனே சொல்லுகிறார். நாங்கள் கியானவயதில் கியானவிருத்தரான ஸ்ரீசுகருடையசேவையாலும், அனுவிர்த்தியாலும் தலாக்கியமான சன்மத்தை யுடைத்தானவர்களானோம், அதிசிலாக்கியனான தேவரீர்களுடைய ஆக்கியாபனமாவது சீக்கிரமாகத்துஷ்குலத்திற்பிறந்த மனோரோகத்தை யுதறிப்போடுகிறது ஏகாந்தபாராயணனாகிய பரமாத்மாவினுடைய நாமங்களைப் பாராயணஞ் செய்கிறவர்களுக்கு, அந்தநாமம் துஷ்குல சன்மத்தைப்பரிகரிக்குமென்கிறதில் சொல்லவேண்டியதென்ன. அனந்தபகவான் அளவிடப்படாத மகத்தான குணத்தையுடைத்தாகி யிருக்கிறபடியினால் ஸ்ரீலட்சுமிதேவியானவள் தன்னைப் பிரார்த்திக்கிற மற்றதேவதைகளைச் சேதித்துச் சமானமாகியும், அதிசயமாகியுமில்லாமலும், தன்னை அடையவேண்டுமென்று இச்சியாலுமிருக்கிற யாதொரு அனந்தனுடைய சரணகமலரேணுவையடைந்தாளோ, பிரம்தேவனால் சமர்ப்பிக்கப்பட்ட பூஜாசலிலமானது யாதொருவனுடைய பாதங்களில்நின்றும் ஜனித்து லோகங்களைப் பாலனஞ்செய்ததோ, அந்த முகுந்தனைகாட்டிலும் பகவானென்ற பதத்துக்கு முக்கியார்த்தமாகிய சர்வேஸ்வரன் லோகத்தில் எவன்தானிருக்கிறான். யாதொருமுகுந்தனிடத்தில் அனுராகயுக்தரான கியானிகள் தேகாதிகளில் உறுதியாயிருக்கிற சங்கத்தைவிட்டு அஹிம்சையும் உபசாந்தியுமாகிற சிலாக்கியதருமங்களுக்கு ஆதாரமாகிய பரம ஹம்சாசிரமத்தையடைகிறார்களோ, அந்தமகானுபாவருடைய மகிமையைச்சொல்லவேண்டுமென்று பிரஸ்னஞ்செய்தீர்களல்லவோ.

ஓய்வேதமூர்த்திகளே, எனக்கு அறிவுஎவ்வளவுண்டோ அவ்வளவும் சொல்லுகிறேன். பட்சிகளானதுகள் எங்கும்பரந்த ஆகாசத்தை முடிவிலும் சஞ்சரிக்கமாட்டாமல் தன்சக்தியுள்ளமட்டும் பறக்கிறாற்போல் கியானிகளும் ஸ்ரீவிஷ்ணு லீலைகளை முற்றும் அறியமாட்டாமையினால் உள்ளமட்டும் சொல்லமாட்டார்கள்.

அந்தப்பரிட்சித்து ஒருகாலத்தில் தனுசையெடுத்துக்கொண்டு வனத்தில் வேட்டைசெய்ய வேண்டுமென்று மிருகங்களையடித்துச் சஞ்சரித்து இளப்பை யடைந்து

மிகவும் பசிதாகங்களுடனே சலாதாரமான எரிமுதலானதுகளைக் காணுமல் ஒரு ரிஷியாசிர்மத்தை அடைந்தான்.

அந்த ஆசிரமத்தில் ஒருஆசனத்திலிருந்துகொண்டு சாந்தராகி கண்களை மூடிக்கொண்டு இந்திரியங்களைப் புறம்போகாமல் நிறுத்திக்கொண்டு சாக்கிரசொப்பன சுழுத்தியென்கிற மூன்று அவஸ்தைகளையும் தவிர்ந்து, துரியாசிரமத்வதயடைந்து பிரமத்தைச் சாக்ஷாத்கரித்து விகாரரகிதனுகியும் அவிழ்ந்து தொங்குகிற சடைகளாலேயும், மான்றேலினுலேயும், மறைக்கப்பட்டசரீரத்தையுடைத்தாகியும்இருக்கிற ஒருரிஷியைக்கண்டுஉலர்ந்துபோகிற கபோலங்களை யுடைத்தானவனுகிப் பிரமநிஷ்டரானமுனியை உதகம்வேண்டுமென்று யாசித்தான். அப்போது அந்தரிஷியினுல் உபசாரங்கள்லபியாமற்போனபடியினுலே தன்னை அந்தமுனீஸ்வரன் அசட்டைசெய்தானென்று நினைத்துக்கொண்டு கோபத்தையடைந்து அந்தப் பிர்மரிஷியினுடையதோளில் பிராணனில்லாதசர்ப்பத்தை வில்நுனியாலெடுத்துப்போட்டுப் பட்டணத்தைச்சேர்ந்தான்.

அவனப்படி செய்யவேண்டிய கருமமேனென்றால், இந்தரிஷியானவர் சகலமாகியஇந்திரியங்களையும் சயித்துக்கண்களைமூடியிருக்கிருரா, இல்லையென்றுபொய்யாகிய சமாதியையடைந்து க்ஷத்திரியர் பாசற்களால் ஆகவேண்டியதென்னவென்று நினைத்திருக்கிருராவென்று அறியவேண்டி இப்படிச்செய்தான்.

பின்பு அதிதேஜஸையுடைத்தான அந்தரிஷிகுமாரனுன சிரிங்கியானவன் சிறுபிள்ளைகளுடனே விளையாடிக்கொண்டிருக்கையில் தன்பிதாவிடத்தில்ராஜாசெய்தபாவத்தைக்கேட்டு மரியாதையை அக்கிரமித்துநடக்கிற சனங்களுக்குச் சிக்ஷகனுகியும் குணபரிபூரணனுகியுமிருக்கிற ஸ்ரீகிருஷ்ணன் ஸ்ரீவைகுந்தநகரத்திற்கு எழுந்தருளினபின்பு மரியாதையைக்கெடுத்த இந்சத் துஷ்டனை இப்போது நான் நிக்கிரகஞ்செய்கிறேன். என்தபோபலத்தைப்பாருங்களென்று சொல்லிப்போட்டு ரோஷத்தினுல் சிவந்தகண்களையுடைத்தான அந்தரிஷிகுமாரன்சிநேகிதாள்பார்த்திருக்கையில் கவுசிகைநதியினுடைய வுதகத்தைப்பரிசித்து வாக்காகிறவச்சிரத்தைக்கற்பித்தான்.

தன்குலக்கொள்ளியாகியும் என்பிதுர்த்துரோகியாகியுமிருக்கிறஇவனை இன்றுமுதல் ஏழாநாள்என்னுல்ஆக்கியாபிக்கப்பட்ட தக்ஷகன் தகிக்கப்போகிருன் என்றிப்படி சாபங்கொடுத்தபின்பு ஆசிர்மத்தில்வந்துதோளில் விழுந்திருக்கிற சர்ப்பத்துடனே கூடிய தன்பிதாவைக் கண்டு துக்கத்தினுல் குரல்விட்டழுதானல்லவோ ஆங்கீரசனுடைய கோத்திரத்திற்பிறந்த அந்த சமிகரிஷீஸ்வரன் தம்முடையகுமாரன் அழுகிற குரலைக்கேட்டுக்கண்களைத்திறந்து தம்முடைய தோளில் விழுந்திருக்கிற சர்ப்பசவத்தைத்தள்ளிப்போட்டு வாராய்புத்திரனேஎந்தக்காரணத்தினுல் அழுகிருயென்று கேட்கப்பட்டவனுகி அந்தரிஷிகுமாரன் நடந்த நடத்தையெல்லாம் தன்னுடையபிதாவானசமிகருக்குச்சொன்னுன். அப்போதுஅந்தப்பிரமநிஷ்டரானவர் சபிக்கத்தகாதநரேந்திரனுக்குச் சாபங்கொடுத்தோமென்று சொன்ன புத்திரனைப்பார்த்து வாராய்மூடனே கொஞ்சமான துரோகநிமித்தியமாகமகத்தாகியநிக்கிரகத்தைச்செய்தாய் பரமபுருஷனென்றுபெயரை யுடைத்தான நரதேவனை மற்றநரருக்குச்சமானமாகஎண்ணக்கூடாது வாராய் புத்திரனே நரதேவனென்றுபெயரையுடைத்தாகிய ஸ்ரீசக்கிரவர்த்தியானவன், ஜனங்களுடையகண்ணினுல்காணப்படாமலிருந்தானுகில் இந்தலோகமானதுரட்சிக்கப்படாத செம்புலியாட்டுமந்தையைப்போல் சோரராளால் உபத்திரவிக்கப்பட்டு க்ஷணமாத்திரத்தில்நசித்துப்போகும், இந்தப்பரிட்சித்துமகாராஜாவானவன் தருமத்தைப்பாலனஞ்செய்கிறதில் திருஷ்டியடைந்தவன் சகலமானபூமிக்கும் பிரபுவாகியும் மிகுந்தகீர்த்திசாலியாகியும் ராஜாவாயிருக்கையிலும், ரிஷிநடத்தையுடைத்தானவனுகியும், அசுவமேதங்களைச்செய்து அதினுல்பிரகாசித்தும்பிரத்தியட்சமாகப்பரமாத்மாவைச் சாக்ஷாத்கரித்துமிருக்கிற மகாபாகவதன் இவன்பசிதாகங்களால் இளப்பைஅடைந்து தீனனுகிநம்முடையஆசிர்மத்தில்வந்தவன் இவனுக்கு நாம் சாபங்கொடுப்பது உசிதமல்ல பாபரகிதனுனநம்முடையதாசரிடங்களில் புத்திபரிபக்குவமில்லாதபாலனுல்செய்யப்பட்டபாவத்துக்குப் பிராயச்சித்தம் துர்லபமாகையால் சர்வாந்திரியாமியான ஸ்ரீபகவான்க்ஷமித்தருளவேண்டுமென்று தன்புத்திரன்செய்த பாவத்தினுல் அந்தரிஷிஅனுதாபத்தையடைந்து தனக்குராஜா அபகாரஞ்செய்திருந்தாலும் அந்தஅபகாரத்தை மனதினுல் நினைக்கவில்லை அதுஏனென்றால் சத்புருஷரால் உலகத்தில்பித்தராலே சீதவுஷ்ணசுகதுக்கங்களை அடைவிக்கப்பட்டிருந்தாலும் விசனத்தைஅடையவில்லை சந்தோஷத்தையுமடையவில்லை இதுவெகுவிடத்தில்கண்டதுதான் யாதொருகாரணத்தினுல் சீவாத்மாவானவன்சுகதுக்காதிகுணங்களுக்கு ஆசிரியமல்லவோவென்று சூதர்சவுனகாதிகளுக்குச்சொல்லிப் பின்னையுஞ்சொல்லுகிருர்.

சிவாயநமஃ



## ௰௯-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

துங்கயோகிசர் சூழும்பரிட்சித்து
கங்கைமூழ்கிப் பிராஹோமவேசஞ்செய்

தங்கிருந்து மகிழ்கொள்ளமையத்திற்
பொங்கும்வேத சுகமுனிபுல்லினார்.

யோகிஜனங்களினால்சூழப்பட்ட பரிட்சித்துகங்காதீர்த்தத்தில் பிரயோபவேசஞ்செய்திருந்தசமயத்தில்மஹாபாகவதரானசுகருடையநல்வரவு சொல்லப்படுகின்றது.

ஓய்சவுனகாதிகளே, அப்பால் அந்தராஜாவானவன் ஒருவருமறியாமல் ரகசியமாகத்தான்செய்த அந்த யீனமாகிய கருமத்தை நினைத்துக்கொண்டு விசனாக்கிராந்தனாகியிருக்கிறசமயத்தில் முனிகுமாரனால் சொல்லப்பட்டும் தக்ஷகனிடத்தில்நின்றும்உண்டாகிறமரணத்தைஅந்தரிஷியினுடைய சிஷியமுகத்தால் கேள்விப்பட்டு ராச்சியஞ்செய்யுங்காலத்திலேதானே இந்தலோகத்தையும், சொர்க்காதிலோகங்களையும் நிகிருஷ்டமாக நிச்சயித்தவனாகையால் சமுசாரத்தில்ஆசைபிறந்தவனுடைய வைராக்கியத்துக்குக்காரணமாகிய தக்ஷகாக்கினியானது சீக்கிரத்துக்குவருகிறதே நன்மையென்றுநினைத்து ஸ்ரீகிருஷ்ணனுடைய திருவடிசேவையைச் சகலபுருஷார்த்தங்களிலும் சிரேஷ்டமென்று நிச்சயித்து ஸ்ரீதுளசியினால் விளங்குகிற ஸ்ரீகிருஷ்ணசரணங்களுடைய தூளிகளுடனேபிரகாசிக்கின்ற ஜலங்களுடைய பிரவாகத்தையுடைத்தான தேவநதியில்பிரயோபவேசஞ்செய்தான்.

யாதொருகங்கையானது சகலலோகங்களையும், உள்ளும்புறம்பும் பாவனஞ்செய்கிறதோ அந்தக்கதையைஎவன்தான்பஜனஞ்செய்வான், இப்படி அந்தப்பாண்டுகுலோத்பவன் ஸ்ரீவிஷ்ணுபாதத்தில் பிறந்தகங்கையில் பிரயோபவேசத்தைச்சங்கல்பித்து சகலசங்கங்களையும்விட்டு முனிவேஷத்தைத்தரித்து மனதை மற்றவிடங்களிற்செல்லாமல் நிறுத்திக்கொண்டு ஸ்ரீமுகுந்தனுடையதிருவடிகளில் தியானஞ்செய்தான், அவ்விடத்தில் சகலலோகங்களையும் பாவனஞ்செய்கிறவர்களாகவும்மகத்தாகிய மகிமையுடைத்தாகியுமிருக்கிறரிஷிகள், தங்கள்சிஷ்யர்களுடனேகூட தீர்த்தயாத்திரையென்கிற வியாஜத்தினால்வந்தார்கள். அவர்களாரென்றால் அத்திரி-வசிஷ்டர்-சவுனகர்-சாரத்துவான்-அரிஷ்டநேமி-பிருகு- ஆங்கீரசர்-பராசர்-விஸ்வாமித்திரர்-பரசுராமர்-உசத்தியர் - இந்திரப்பிரதமர்-இத்துமவாகர்-மேதை- அதிதி-தேவலர்-ஆரக்ஷணர்-பரத்துவாசர்-கவுதமர்-பிரபிலாதர்- மைத்திரேயர்-அவுசவர்-கமஷ்டர்-அகஸ்தியர்-வியர்சர்-நாரதபகவான்-பற்றுமுள்ள உயர்ந்ததேவரிஷிகளும் - பிரமரிஷிகளும்-ராஜரிஷிகளும் அருணாதிகளானகாண்டரிஷிகளும், நானாவிதமான ரிஷிவர்க்கங்களிற்பிறந்து ரிஷிசரியையுடனேவிளங்குகிற இந்தரிஷிகளுக்கு அர்க்கியபாத்தியாசமனியங்களை யுக்தமாகக்கொடுத்துஅந்தராஜாஇவர்களை சிரசினால் வணங்கினான். அப்பால் அந்தரிஷிகள்சுகமாக ஆசனங்களிலிருந்தபின்பு திரும்பவும் அவர்களுக்குவந்தனஞ்செய்துகொண்டு மற்றொருவிடத்தில் மனதைச்சலிக்கவொட்டாமல் நிறுத்திக்கொண்டு தனக்குச் செய்யவேண்டியகாரியத்தை விக்கியாபனஞ்செய்தான்.

மஹானுபாவர்களால் அனுக்கிரகிக்கப்படும் நாங்கள் ராஜாவர்க்கங்களுக்குள்ளே மிகவும்தன்னியாளாகிறோம் ஈனமாகிய கருமத்தையுடைத்தான ராஜகுலமானது பிராமணாளுடைய பாதசவுஜலத்துக்கு விலக்கமல்லவோ அப்படிபாபியாகியும், சர்வகாலங்களிலும் கிரகங்களில் ஆசக்தியுண்டான சித்தத்தையுடைத்தாகியுமிருக்கின்ற என்னுடைய பாபபரிகார நிமித்தமாகி ஸ்ரீஹரியானவர் என்வயிராக்கியத்துக்குமூலமாகி பிராமணசாபஸ்வரூபமாக ஆவிர்ப்பவித்தான். இல்லாவிட்டால் இந்தச் சமுசாரத்தில் ஒழிவில்லாத நான் சீக்கிரமாகப் பயத்தையடைவேனல்லவோ, ஓய்பிராமணோத்தமர்களே? என்னை நீங்கள்சரணாகதனாக நிச்சயஞ்செய்யவேண்டும் இந்தக்கங்காதேவியும் ஸ்வாமியிடத்தில் சமர்ப்பிக்கப்பட்ட மனதையுடைத்தானவனாக நிச்சயிக்கட்டும் பிராமணனால்ஆக்கியாபிக்கப்பட்ட குடிலனானதக்ஷகன்கடித்தாலும் கடியாமலிருந்தாலும் ஸ்ரீவிஷ்ணுவினுடைய கதைகளைக் கானஞ்செய்யுங்கள் இனிமேல்நான்எந்தெந்தஜன்மங்களையெடுப்பேனோ அந்தந்தஜன்மங்களிலேயும் பெரியவர்களிடங்களிலே மித்திரத்துவமேயிருக்கவேண்டுமென்று தன்னுடையகுமாரனான ஜனமேஜயனிடத்தில் ராச்சியபாரத்தைவைத்துக் கங்கையினுடைய தென்கரையில் கிழக்குநாணலான குசப்புல்லுகளில் வடக்குமுகமாயிருந்தபின்பு ஆகாசத்தில் தேவர்கள் சிலாகித்துச் சந்தோஷத்துடனே அவனிருந்தபக்கத்தில் அடிக்கடி புஷ்பங்களைவருஷித்துத் துந்துமி வாத்தியங்கள் முழக்கினார்கள், அவனைக்கிட்டிவந்த மஹாரிஷிகளெல்லாரும்சாதுசாதுவென்றுகொண்டாடிசிலாகனஞ்செய்துகொண்டுபிரஜைகளிடத்தில் அனுக்கிரகஞ்செய்கிற சீலத்தையுடைத்தானவர்களாகி உத்தமசுலோகனான ஸ்ரீகிருஷ்ணனுடைய கலியாணகுணங்களால் மனோக்கியமாகவிருக்கும்படி ஒருவார்த்தைசொன்னார்கள்.

ஓய்ராஜசிரேஷ்டனே? ஸ்ரீகிருஷ்ணனை அனுசரித்து நடக்கிற உங்களிடத்தில் யாதொருகாரணத்தினால்உங்களுடைய பெரியோர்களான தருமபுத்திராதியர் இராஜாக்களுடைய கிரீடங்களால் அலங்கரிக்கப்பட்ட சிம்மாதனத்தை அந்தட்சணத்தில்தானேவிட்டாற்போல் இந்தப்பரிட்சித்துமஹாராஜாவும் சர்வசங்கபரித்தியாகஞ்செய்து இப்போதுரசோகுண தமோகுணங்களில்லாமையினால் சோகமில்லாமலும்ஆனந்தமயமுமாகியபரலோகத்தை அடைகிறகாலம் நாம் இவ்விடத்தி லிருக்கக்கடவோமென்றுசொல்லப்படும் பக்ஷபாத மில்லாமலும், தேனைப்போல் மதுரமாகவும், வெகு தாத்பரியகெர்ப்ப

மாகவும், யதார்த்தமாகவுமிருக்கிறவார்த்தையைக்கேள்விப்பட்ட பரீட்சித்தானவன் அந்த வார்த்தையால் சந்தோஷமடைந்து ஸ்ரீவிஷ்ணுவினுடைய சரித்திரங்களைக்கேட்கத்தக்கவனாகி ஒருவார்த்தைசொன்னான் மூன்றுஉலகங்களுக்கும்மேலான மூர்த்தியைத் தரித்திருக்கிற வேதங்களைப்போல் தேவரீர்களும் எழுந்தருளினீர்கள் இவ்விடத்திலும் லோகாந்தரங்களிலும் தேவரீர்களுக்குயோக்கியமான பிரயோசனமில்லை பரானுக்கிரகமில்லாமல் மற்றொருபலத்தைக் கோராமலிருக்கிறது உங்களுக்குத்தலமாகையால் வேண்டியகாரியங்களை நான்செய்யத்தக்கவனாகி உங்களிடத்தில் விசுவசித்துக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஓய்கியானாதிகளே? மரணத்தைஅடைகிற ஜனங்களுக்குத் திரிகரணங்களாகியும், செய்யப்படுவதாகியும்,சுத்தமாகியுமிருக்கிற கிருத்தியத்தைநிச்சயித்துச்சொல்லுங்களென்று கேட்டராஜாவுக்குநிச்சயமாகச்சொல்லவேண்டி யாகமென்றும்,யோகமென்றும் தானமென்றும், ஒருவருக்கொருவர் விவாதஞ்செய்துகொண்டிருக்கிற அந்தரிஷிகளிருக்கிறவிடத்தில் வியாசகுமாரனான சுகப்பிர்மரிஷி தங்கிடையாய்ப் பூமியில் சஞ்சரித்துக்கொண்டு மற்றொருவஸ்துவையும் பாராமல் வர்ணாசிரமங்களுடைய அடையாளங்களில்லாமலும் அவதூத வேஷமாகியும் பாலாளால்சூழப்பட்டும் எழுந்தருளினார். பதினாறுவயதுள்ளசிறுவனாகியும், மிகவும்மிருதுவாகிய கரங்களும், பாதங்களும், தொடைகளும், புஜங்களும், கழுத்தினுடையபக்கங்களும், கபோல ஸ்தலங்களும், பிரகாசிக்கும்படியான காத்திரத்தைஉடைத்தாகியும், விசாலமாகியும், அழகாகியுமிருக்கிற நேத்திரங்களும், உயர்ந்துநீண்டமுகமும், சமமாகியகண்களும், அக்ங்காரமாகிய புருவங்களால் விளங்குகின்றமுகமும் சங்கம்போல் திரண்டகழுத்தும், மாம்சங்களால் மறைக்கப்பட்ட கழுத்துக்குக் கீழ்ப்பட்டஎலும்புகளும், பெருத்தும் உயர்ந்துமிருக்கிற மார்பும், நதிப்பிரவாகத்தி லிருக்கிற சுழிபோல்விளங்குகிற உந்தியும், மூன்று ரேகைகளால் மனோக்கியமாகிய உதரமும், திக்குகளாகிற அம்பரத்தைத்தரித்தும், ஒன்றோடொன்றுகலந்தும் சிதறியுமிருக்கிற கேசங்களும், முழங்கால்வரைக்கும் தொங்குகின்ற பாகுகளும். சிலாக்கியமாகிய அமரோத்தமனாகியஉபேந்திரனுக்குச்சமானமாகிய காந்தியும், சியாமள வர்னமும், அழகானயவ்வனம்பொருந்தின அவயவ காந்தியாலும் சிலாக்கியமாகிய மந்தஹாசத்தாலும் எப்பொழுதும் ஸ்திரீகளுடையமனசுகளை அபகரித்தும்வருகிறசுகப்பிரமரிஷியைக்கண்டரிஷிகளெல்லாரும் தங்களாசனங்களைவிட்டு எழுந்திருந்து எதிர்கொண்டு அவர்மறைக்கப்பட்ட மகிமையை யுடைத்தாயிருந்தாலும் அவருடையலக்ஷணங்களை அறிந்தவர்களாகையால்மரியாதைசெய்தார்கள். அந்தப்பரீட்சித்துவும் அதிதியாகி வந்திருக்கிறஅந்தசுகமுனியைக்குறித்துத் தன்சிரசினால்பூஜித்தான் அப்பால்அவருடையமகிமையை அறியாதஸ்திரீகளும் பாலாளும்ஒழிந்தார்கள் அந்தராஜா அவனைமிகவும்பூசித்து ஒரு ஆசனத்திலெழுந்தருளச்செய்தான். மஹானுபாவரான சுகமுனியானவர் சிலாக்கியர்களான பிர்மரிஷி தேவரிஷிராஜரிஷிகளுடையசமூகத்தால் சூழப்பட்டிருக்கும்போது நவக்கிரகங்களாலேயும் அசுவனியாதிநக்ஷத்திரங்களாலேயும், சூழப்பட்ட சந்திரபகவான்போல்விளங்கினார் அளவிடப்படாதபுத்தியையுடைத்தாகியும் சாந்திநிலயமாகியும்எழுந்தருளியிருக்கிறஅந்தசுகமுனியைப்பரமபாகவதனான அந்தராஜாவானவன் அடுத்துச்சிரசினால்வணங்கி வந்தனஞ்செய்து அஞ்சலிபந்தஞ்செய்துகொண்டு நல்லவார்த்தையால் வினயத்துடனே பிரஸ்னஞ்செய்தான்.

ஓய்பிராமணோத்தமனே? நாங்கள் க்ஷத்திரியர்களாயிருந்தாலும் இப்போதுசத்புருஷாளுடைய ஆசிரயத்துக்குப் பாத்திரமானோம் யாதொருகாரணத்தினால் அதிதிரூபமாகிய தேவரீர்களுடையகிருபையினால் தேவரீர்களுடையதரிசனமும், ஸ்பரிசமும், ஸ்ரீபாததீர்த்தமும், அடியேனுக்குக் கிடைத்தபின்பு யோக்கியரானோம் பாண்டுகுமாரர்களிடத்தில் பிரியமுள்ளவனாகியிருக்கிறஸ்ரீகிருஷ்ணன் தமது அத்தைப்பிள்ளைகளுடைய பிரீதிநிமித்தமாக அந்தக்கோத்திரத்திற்பிறந்தஎனக்கு இந்தரூபமாகத் தரிசனங்கொடுத்துப் பிரபாவத்தினால்ஒருவராலேயும் அறியக்கூடாதகதியையுடைத்தானதேவரீருடையதரிசனம் மனுஷப்பிராணிகளான எங்களுக்குக்கிடைத்தது, ஆகையால்சகலயோகிகளுக்கும் பரமகுருவான தேவரீரை இந்தலோகத்தில் எப்பொழுதும் மரணத்தை அடையத்தக்கதானஜனங்களுக்கு இதமான காரியத்தைக்கேட்கிறேன்.

ஓய்ஸ்வாமியே, எதைக்கேள்விசெய்யவேண்டும், எதைஜபிக்கவேண்டும். யாதொன்றைச் செய்யவேண்டும் எதைஸ்மரிக்கவேண்டும், அடையவேண்டியதெது, அதை வித்தியாசமின்றிச்சொல்லும்,ஓய்பிராமணோத்தமனே?சுகுணபூரணனாகியதேவரீர்கள்கிரகஸ்தாளுடைய கிரகங்களில் ஒருநிமிஷகாலமாகிலும் ஒருவிடத்தில்வாசஞ்செய்ததைக் கண்டவர்களில்லையென்றுசொன்ன பரீட்சித்துமஹாராஜாவைப்பார்த்துச் சகலசாரங்களை அறிந்தும் சிலாக்கியதருமங்களை நிச்சயித்துமிருக்கிற வியாசகுமாரரான சுகபகவான் சிலாக்கியமான வார்த்தையினால் பிரதியுத்தரஞ்சொல்லுகிறாரென்று சூதர்சவுனகாதிகளுக்குச்சொன்னார்.

## பிரதமஸ்கந்தம்.

முற்றுப்பெற்றது.



நன்ருக. குருவாழ்க. குருவேதுணை.

# ஸ்ரீ மகாபாகவதபுராணம்.

## துவிதியஸ்கந்தம்.

## முதலாவது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பூர்வஸ்கந்தத்திற் சாஸ்ரபோத்காதமும்
சோர்விலாப்ர சங்கஞ்சுகர்வாரதும்
பேரிரண்டாம்ஸ்கந்த ப்ரதமத்தியாயத்திற்
நேர்பரிச்சித்துத் தன்ஞல்நிகழ்த்தினர்.

பூர்வஸ்கந்தத்தில் சாஸ்திரஉபோத்காதமும், பிரசங்கிகமான சுகருடையவரவு சொல்லப்பட்டது.

இனிமேல் இரண்டாம்ஸ்கந்தத்தில் பிரதமஅத்தியாயத்தில் சுகமகாமுனியானவர்பரிட்சித்துவினல் கேட்கப்பட்டமனுஷியாளுடைய கிருத்தியத்தைச் சொல்லுகின்ருர்.

### சுகர்வாக்கியம்.

ஓய்இராஜாவே? லோகஹிதமாகிய உன்னுடையபிரஸ்னமானது மிகவும் சிலாக்கியமாகையால் ஆத்மதத்வமறிந்தவர்களுக்குச் சம்மதமானது மனிதர்கள் கேட்கவேண்டிய அர்த்தங்களில்ள துசிரேஷ்டமோ அதையே கேட்கிருய். ஆத்மதத்வமறியாமல்கிரகங்களில்மோகித்துக்கொண்டிருக்கிற கிரகஸ்தாளான சனங்களுக்குக்கேள்விசெய்ய வேண்டியது, அளவிடக்கூடாத ஆசையுடைத்தாகிய சனங்களுக்கு இராத்திரிகாலமெல்லாம் நித்திரையால் கழிந்துபோகிறதுயௌவனகாலமெல்லாம் காமத்தினுலும், பகற்காலமெல்லாம் பணத்தாசையாலும், சுஜனங்களுக்கு வஸ்துக்களுடையசம்பாதனத்தினுலும், நாள் கழிந்துபோகிறதுகள் தான் பார்த்திருக்கையில் அநித்தியமாகிய தன் சரீரத்திலும், களத்திர புத்திராதிகளிலும், ஆசக்தனுகித் தன்னுடையமரணத்தைத்தானறியாமல் சகலசேதனுசேதனங்களுக்கும் ஆத்மாவாகியும், நியந்தாவாயுமிருக்கிற ஸ்ரீஹரியைவேதாந்தங்களாலறிந்து கீர்த்தனஞ்செய்யவேண்டும், இந்தச்சம்சாரபயங் தவிரவேண்டுமென்று இச்சித்தவர்களுக்கு அவனையப்படியே சிந்திக்கவேண்டும். தன்னைத் தானே யறிகிறதாகிற ஞான யோகத்தினுலேயும், அஷ்டாங்க யோகமாகிற பக்தியோகத்தினுலேயும், வர்ணுசிரம தருமங்கள் பலனையிச்சியாமற்செய்கிறதாகிற தருமநிஷ்டையாலேயும், பிராணிகளுக்குச் சிலாக்கியமானபலன் என்னவென்ருல் அந்தியத்தில் நாராயணத்தியானமே சிலாக்கியமாகியபலமாகும். இதற்குமேற்பட்ட பலன் ஒன்றுமில்லை ஓய்ராஜாவே? வேதசமானமாகியும், பகவானுடைய குணவர்னமாகியும், அநாதியாகியுமிருக்கிற ஸ்ரீமகாபாகவதபுராணத்தைத் துவாபரயுகாதியில் பிதாவானவியாசரிடத்திலிருந்து நான்அத்தியயனஞ்செய்தேன். நீர்மகாபுருஷனை ஸ்ரீஹரியை ஆசிரயித்தவராகையால் இந்தக்கதையை யுமக்குச் சொல்லுகின்றேன் ஸ்ரத்தையுள்ளவர்களுக்கு ஸ்ரீமுகுந்த னிடத்தில் சலியாத மதியுண்டாகும்.

ஓய்ராஜாவே? சம்சாரங்களில் விசனத்தினுல் ஒழிவுபிறந்தும் எந்தக்காலத்திலும் யாதொரு காரணத்தாலும்பயமில்லாத நிலையாகிறமோட்சத்தைஇச்சித்துக்கொண்டுமிருக்கிற யோகிஜனங்கள் ஸ்ரீஹரிநாமங்களுடைய கீர்த்தனத்தை யடிக்கடிசெய்கிறதேயல்லாமல் வேறில்லை,சம்சாரத்தையிச்சித்துத் தன்னுடையஆயுசை அறியாமலிருக்கிறவர்களுக்கு வெகுகாலம் இந்தப் பூமியில்




சுகமஹாமுனிவரால்பரிக்ஷித்துமஹாராஜருக்கு ஸ்ரீமத்பாகவதத்தைச்சொல்லப்பட்ட

ஆயுசிருந்தும்பிரயோசனமில்லை தனக்குமோட்சமாகிற
சம்பத்தைக்கொடுக்கிறதற்குச் சாதனமானகாலஞ் சொ
ற்பமாகவிருந்தாலும் அதுதன்னால்நிச்சயிக்கப்பட்டவொரு
முகூர்த்தமாகிலும் சிலாக்கியமாகும். அதெப்படி யெ
ன்றால் பூர்வகாலத்தில் கட்டுவாங்கனென்கிற ராஜரிஷி
தேவதைகளுக்கு அசுரயுத்தத்தில் சகாயஞ்செய்து சந்
தோஷித்திருக்கிறதேவர்களிடத்தில் மற்றொருவரத்தை
க்கோராமல் அவர்களால்தன்னுடைய ஆயுசுநிலையைய
றிந்துகொண்டு சர்வசங்க பரித்தியாகஞ்செய்து ஒருமு
கூர்த்தத்தில் பயமில்லாதநிலையான ஸ்ரீஹரியாகிறபதவி
யையடைந்தான்.

ஓய் குருவம்சோத்பவனே, உனக்கு இப்படிப்பட்ட
சாபம்வந்திருந்தாலும், ஜீவித்திருக்கிறகாலம்ஏழுநாளி
ருக்கிறது இவ்வளவுகாலத்தில் பரலோகசாதனமானக
ருமங்களையெல்லாம் செய்துகொள்ளலாம் புருஷனா
வன்தனக்கு அந்தியகாலம் வந்ததாகில் பயத்தைவிட்டு
வைராக்கியமாகிற கத்தியினால் தேகத்திலும் தேகானு
பந்தியான வஸ்துக்களிலும் பற்றின ஆசையை யறுக்க
வேண்டும் இவன்கியாணியாகிக் கிரகத்தைவிட்டுப் புண்
ணியதீர்த்தங்களுடைய சலங்களில் ஸ்நானஞ்செய்து,சு
சியாகி மற்றொருவருமில்லாமலுமிருக்கிறவிடத்தில் வி
கிதப்பிரகாரமாகக் கற்பிக்கப்பட்ட ஆசனத்தி லிருந்து
கொண்டு பரிசுத்தமாகியு மூன்றுஅக்ஷரமாகியுமிருக்கி
றசிலாக்கியமானபிரணவத்தை மனதினால் சபித்துக்கொ
ண்டு சுவாசத்தைச்செயித்து மனதைநிக்கிரகித்துப் பிர
ணவத்தைமறவாமல் புத்தியாகிற சாரதியால் இந்திரிய
ங்களை விஷயங்களிலிருந்து திருப்பி நிக்கிரகித்துக்கொ
ண்டு கருமங்களால் இழுக்கப்படுகிற மனதை தன்மதி
யினால் சுபமானவஸதுவில்நிறுத்தி அதில்மனதுக்குமு
ன்பழக்கமில்லாமையால் ஒவ்வொரு அவயவமாகத் தி
யானஞ்செய்யவேண்டும், ரூபரசாதிகளானவிஷயங்களை
யொழித்த மனதைச் சுபாசிரயத்தில் பொருத்திவைத்த
பின்பு மற்றொன்றையும் நினைக்கலாகாது. யாதொரு சு
பாசிரயத்தில் ஆசிரயித்தபின்பு முன்னால் ரசோகுணத
மோகுணங்களால் மூடமாகி யீனமாகியகருமங்களில் ஓ
டித்திரிந்த தன்மனது அந்தரசோகுண தமோகுண கா
ரியங்களையொழித்துத் தெளிவாகி நிற்கையால் ஸ்ரீமகா
விஷ்ணுவினுடைய அந்த சுபாசிரயமே சுபாலனம்பன
மாகும். அந்தஆசிரயத்தில் புத்தியால் நிறுத்தப்பட்டு
மனோயோகமாகிற தாரணையால் அந்தமனதினால்,முற்
காலத்தில் சம்பாதிக்கப்பட்ட பாவத்தைப் பரிகரிக்கவே
ண்டும். யாதொரு தாரணையைச்செய்யுங்காலத்தில் அ
ந்தயோகிக்கு மங்களமான ஆசிரயத்தைப் பார்க்கையா
ல் யோகமானது சீக்கிரத்திலே சித்திக்குமென்று உப
தேசிக்கிற சுகப்பிரம்ம ரிஷியினுடைய வார்த்தையை
க் கேள்விசெய்த பரிட்சித்துமகாராஜா பிரஸ்னஞ்செய்
கிறார்.

ஓயபிரமரிஷியே, தாரணையையெப்படிசெய்யவேண்
டும் யோகிசம்மதமான தாரணையானது எந்தஆசிரயத்
திற்செய்யப்பட்டது. அதுஎப்படிப்பட்டதாகிப் புருஷ
னுடைய மனோமலத்தைச்சீக்கிரத்தில் பரிகாரஞ்செய்யு
மென்று பிரஸ்னஞ்செய்த பரிட்சின்மகீபதிக்கு ஸ்ரீசுகப்
பிர்மரிஷி யுபதேசஞ்செய்கிறார். ஓய்ராஜாவே! ஆசனத்
தையும் சுவாசத்தையும்செயித்து விஷயங்களிற் சங்கத்
தைவிட்டுக் கியான கருமேந்திரியங்களையும் ஜயம்செய்
து புத்தியால்மகத்தான பகவத்ரூபத்தில் மனதைநிறுத்
தவேண்டும். இதுவே தாரணமென்று சொல்லப்படும்.
யாதொருவிடத்தில் அதீதமும், வர்த்தமானமும் வரப்
போகிறதுமாகிறபிரபஞ்சமெல்லாங்காணப்படுகிறதோ
பெரிதுக்கெல்லாம் பெரிதான அந்தவஸ்துவானது பர
மாத்மாவுக்கு அதிசயமாகியதேகமாகும், அதுஏதென்
றால் இந்தப்பிர்மாண்டத்துக்குள் ளடங்கினவிடம். இத
ற்குஏழுவிதமாகிய ஆவரணங்களுண்டு இதைச்சரீரமா
கிப்படைத்தும், தாரணைக்குஆதாரமாகியுமிருக்கிற இந்
தப்புருஷன் எவனென்றால் குணபரிபூரணனாகிய பரம
புருஷன் இந்தப்பரமபுருஷனுக்குப் பாதாளமானதுஅ
டிக்கால்களென்றும், ரசாதலமானதுஅடிகளுடையமே
ற்புறமும், அதின்பக்கங்களென்றும், சகலவஸ்துக்களை
யுஞ்சிருஷ்டிசெய்கிற இந்தப்பகவானுக்கும்கரதலமான
து கணுக்காலுக்குமேற்பட்டும் முழங்காலுக்குக்கீழ்ப்ப
ட்டவிடங்களென்றும் விசுவமூர்த்தியானஇவனுக்குச்சு
தலமானது இரண்டு முழங்கால்களென்றும், விதலமு
ம், அதலமும், இரண்டு துடைகளென்றும், மகிதலமா
னதுமுன்பின் இடுப்பென்றும், சொர்க்கபரியந்தமான
ஆகாசதலமானது நாபியாகிறசரசென்றும் சொல்லுகி
றார்கள்.

ஓய்பூபதியே, இவனுக்குசோதிமண்டலமானது மா
ர்பென்றும், அதலலோகமானதுகழுத்தென்றும், ஜன
லோகமானது இவனுக்கு முகமென்றும், தபோலோக
மானது ஆதிபுருஷனாகிய இவனுடைய நெற்றியென்று
ம், சகஸ்ரசிரசையுடைத்தாகிய புருஷோத்தமனுக்குச்
சத்தியலோகமே சிரசுகளென்றும், தேவதைகளெல்லா
ம்புசங்களென்றும், சப்தமானதுஇவனுக்குச் சுரோத்தி
ரேந்திரியமென்றும், அசுவனிதேவதைகள் இந்தப்பரம
புருஷனுக்குநாசிகளென்றும், கந்தமானதுகிராணேந்தி
ரியமென்றும், வாயானது ஜ்வலிக்கிற அக்கினியென்று
ம், சூரியன் இரண்டு நேத்திரங்களென்றும், இந்தவிஷ்
ணுவுக்கு ராத்திரிபகற்காலங்கள் இரண்டுஇமைகளென்
றும், இவன்புருவநெரிப்புப்பிர்மதேவன் பதமென்றும்
உதகங்களே இவனுக்குத் தாளுக்களென்றும், ரசமே

ரசனேந்திரியமென்றும், வேதங்களெல்லாம் அனந்தனுடைய பிரமரந்திரங்களென்றும், யமன் கோரப்பல்லும், மற்றப்பல்லுகளென்றும்; ஜனங்களை மயக்குகிற மாயையானது அவனுடையமுறுவலென்றும், அளவில்லாமலிருக்கிற சிருஷ்டியானது அவர் கடைக்கண்பார்வையென்றும், லச்சையானது மேலுதடென்றும், ஆசையானது கீழுதடென்றும், தருமமேஸ்தனமென்றும், அதருமமார்க்கமே முதுகென்றும், பிர்ம்மதேவர் லிங்கமென்றும், மித்திராவருணாள் விருஷணமென்றும், சமுத்திரங்களெல்லாம் குட்சியென்றும், மலைகளெல்லாம் எலும்புகளுடையசமூகங்களென்றும், நதிகளெல்லாம் இவனுடைய நாடிகளென்றும், உலகத்தைச் சரீரமாகவுடைத்தான இவனுக்குப்பூமியில் ஜனிக்கிறமரம்-செடி- கொடிகளெல்லாம்-சரீரரோமங்களென்றும், அளவிடப்படாத பராக்கிரமத்தையுடைத்தான வாயுவானவன் சுவாசமென்றும், காலங்களெல்லாம் நடைகளென்றும், குணவைஷம்மியமானது கருமமென்றும், ஜகத்பதியான அந்தஸ்வாமிக்கு மேகங்கள் கேசங்களென்றும், அளவிடப்படாத அவனுக்குச் சகலபிராணிகளும் வாசஸ்தானமென்றும், சூட்சுமபிரகிருதியானது இருதயமென்றும், சந்திரனே சகலவிகாரங்களுக்கும் ஆதாரமாகியமனதென்றும், மகதத்துவமே விக்கியான சத்தியென்றும், சர்வாத்மாவான ஸ்ரீஹரிக்கு கிரீசனே அந்தக்கரணமென்றும், அசுவங்களும், உஸ்டிரங்களும், கஜங்களும் நகங்களென்றும், மற்றமிருகங்களும், பசுக்களும், ஜகனமென்றும், பட்சிகளெல்லாம் சிற்பசாமர்த்தியமென்றும், சுவாயம்புமனுவானவன் புத்தியென்றும், மனுபுத்திராளான மனுஷியாள் வீற்றிருக்குமிடமென்றும், கந்தருவர்களும் வித்தியாதரர்களும், சாரணரும், அப்சரசுகளும், ஆறுவிதமானசுரங்களென்றும், அசுரசிலாக்கியனான பிரகலாதன் நினைப்பென்றும் தெரிந்துக்கொள்ளவேண்டும்.

ஓய் ராஜரிஷியே, அந்தப்பரமாத்மாவுக்கு பிராமணாள் முகமாகவும். க்ஷத்திரியாள் புஜமாகவும், வைசியாள் உரகமாகவும், சூத்திராள் திருவடிகளாகவும், அநேகரூபமாகிய வசுருத்திராதித்திய ஸ்வரூபதேவதகணங்களுடனேயும், சோமாதிகளான திரவியங்களுடனேயுங் கூடின யோக்கியபரம்பரையானது அவன்கருமமாகவும், பிர்ம்மாண்டத்தில் கற்பிக்கப்பட்டிருக்கிற லோகாதிகளெல்லாம் அவனுக்கு அவயங்களாகும் இந்தவிராட்புருஷனுடைய விக்கிரக அவயவங்களெல்லாம் என்னால் உனக்குச்சொல்லப்பட்டது.

யாதொரு விக்கிரகத்தைக் காட்டிலும் வேறான வஸ்துவில்லையோ, எந்த அதிமகத்தானசரீரத்தில் புத்தியுடனேகூடமனது தரிக்கப்படுகிறதோ, சமஸ்தமான கியானங்களிலும் விஷயமாகியிருக்கிற அந்தப்பரமாத்மாவானவன் சொற்பனத்தில் தனக்கநேகசரீரங்களைக் காணுகிற ஜீவாத்மாவுக்கு அந்தச்சரீரங்கள் எப்படிப்பந்தங்களல்லவோ, அப்படிபந்தமாகாத இந்தச்சரீரத்தையுடைத்தாகியிருப்பான், ஒருகாலத்திலும் இல்லையென்கிற சொல்லுக்கு விஷயமாகாமலும், ஆனந்தக்கடலாகியுமிருக்கிற அவனையே தியானஞ்செய்யவேண்டுமேயல்லாமல் மற்றப்பிரகிருதியிலும் பிராகிருதரான புருஷரிடங்களிலும், ஆசையைச்செய்யலாகாது, அல்லவென்று செய்தால் அந்தசீவாத்மாவானவன் சமுசாரியாகுவனென்று சுகப்பிரமரிஷியானவர் பரிட்சித்துமகாராஜாவுக்கு உபதேசித்துப் பின்னையும் இந்தத்தாரணையினுடைய அவாந்தரபலத்தையுங்காண்பித்து இந்தத்தாரணஞ் செய்யாமல் சமுசாரத்திலிருக்கிற ஜனங்களுடைய பாவத்தை நிந்திக்கிறார்.



பரமாத்துமனநம.

## உ-வது- அத்தியாயம்.

கலிவிருத்தம்.

சாலநம்பன சாலயோகத்தினல்
மேலுஞ்சாதிக்கத் தக்கமிகுதியாம்
ஏலுஞ்சர்வாந்திரி யாமியினனுடை
சாலதாரணை சாற்றப்படுதலாம்.

சாலநம்பனயோகத்தினல் சாதிக்கத்தக்கதான சர்வாந்திரியாமியினுடைய தாரணைசொல்லப்படுகின்றது.

ஓய் ராஜாவே! பிர்மாவானவன் முன்னிப்படிப்பட்ட பிர்மாண்டசரீரகனான பரமாத்மாவுடைய தாரணையால் சந்தோஷமடைந்த ஸ்ரீஹரியிடத்திலிருந்து பிரளயத்தில் நஷ்டமாயிருந்தபுத்தியை அடைந்து சகலமானவீட்சணத்தைத்தரித்து முன்கல்பத்திலிருந்தபடி வஸ்துக்களை நிச்சயித்து இந்தத்தாரணைக்கு அவாந்தர பலமாகியசிருஷ்டியை முன்போல்செய்தான், சப்தபிர்ம்மமாகியவேதபுருஷன்சொல்லுகிற மார்க்கமோவென்றால்ஈனபலமாகிய சொர்க்காதிகளை ஸ்துதிசெய்கிற நாமதேயங்களால் அந்தவஸ்துக்களைத் தியானஞ்செய்துகொண்டு அதற்குச் சாதனமாகிய கருமங்களில் கடிதாகிய பிரயாசங்களையடைந்து அனுபவகாலத்தில் சிலாக்கியமில்லாத அந்தந்தப்பலன்களையடைந்து கபடமாகிய அந்தவழியில்சுகமென்கிறவாசனையால் அறிவில்லாமல் நித்திரைபண்ணுகிறவன் முன்வாசனையால் சொற்பனங்களைக் கண்டு அந்தவஸ்துக்களை யடையமாட்டாமலிருக்கிறாப்போல் அலைந்துகொண்டுதிரிவான், ஆகையால்கியானியானவன் போக்கியவஸ்துக்களில் தனக்கு எவ்வளவு

இல்லாவிட்டால் நிராதோ அவ்வளவும்பரிக்கிரகித்து அ
தில்ஆசக்திசெய்யாமல் அதுவும் அநேகமென்று நிச்சயி
த்துஅந்தபோகங்களும் கருமாதீனமாகையால் அதைத்
தோறுகிறது மிகவும்அலேச்சலென்றுபார்த்து அந்தயத்
தனத்தைத் தவிரவேண்டும், ஆனால் சரீரசம்ரக்ஷணம்
எப்படிநடக்குமென்று கேழ்க்கிறீரா, சொல்லுகின்றே
ம், இந்தப்பூமியானது விசாலமாயிருக்கையில் தன்நித்
திரைசெய்ய மெத்தைமுதலானவஸ்துக்கள் சம்பாதிக்கி
றபிரயாசமென்னத்துக்கு தனக்குச்சுவாதீனமாகிய புஜ
ங்களிருக்கையில் தலையணைகள் தேடவேண்டியதென்ன
தன்னுடைய கரமிடமகிறஅஞ்சலியிருக்கப் பெரிதான
பானபோசன பாத்திரங்களேதுக்கு திக்குகளாகிற மர
வுரிகளிருந்தபின்பு வெண்பட்டுக்களால்பிரயோசனமெ
ன்ன வழிகளில் சீர்ணவஸ்திரங்க ளிராதோவென்ன பி
ச்சைவேண்டுமென்றால் மரங்கள் தான்கொடாதோவெ
ன்ன வாசஞ்செய்ய மலைகளில் குகைகள் அடைபட்டு
தோவென்ன, நதிகளில்ஜலங்கள் பானஞ்செய்யவற்றித்
தோவென்ன. இதுகளுங்கிடையாதகாலங்களில் ஸ்ரீஹ
ரியானவர் தன்னடிகளைச்சரணமடைந்தவனைக்காக்காம
ல்கைவிடுவாரோவென்ன எந்தக்காரணத்தால் கியானிக
ளும், தன்மதத்தால்அறிவில்லாத ஜனங்களை அனுசரிக்
கிறார்கள். இப்படி தன்இருதயத்தில் தன்னலறியப்பட்
டும், தனக்குமிகவும் பிரீதிவிஷயனாகவும், குணபரிபூர
ணனாகவும், அனந்தனாகவுமிருக்கிற பரமாத்மா யிருந்த
பின்பு அவனிடத்தில் சுகித்து மற்றொன்றைநினையாமல்
அவனையேயுபாசித்தால் சமுசாரயேதுவான பிரகிருதி
லயத்தையடையும் வைதரணீநதிக்குச் சமானமாகியச
முசாரபரம்பரையில் விழுந்துதான்செய்த கருமங்களு
டையபரிபாகமாகிறதாபங்களை அடைந்திருக்கிற ஜனத்
தைக்கண்ணாலேபார்த்துக்கொண்டிருக்கிறவனெவன்தா
ன்அந்தப்பரமாத்மாவினிடத்தில் தியானத்தை அதரவு
செய்யாமல் அறிவில்லாதபிராணியைப்போல் அசத்தா
கியவிஷயாதிசிந்தையை அவலம்பிப்பான். சிறிதுமஹா
புருஷாள் தன்னுடைய தேகத்துக்குள் இருதய பரமா
காசத்தில் அங்குஷ்டமாத்திரமாசி வாசஞ்செய்துகொ
ண்டும், நாலுபுஜங்களுடனேயும் அந்தப்புஜங்களில் சங்
குசக்கரங்களையும், கதாகட்கங்களையும் தரித்துக்கொண்
டும் விளங்குகிற பகவானிடத்தில் மனதைநிறுத்திச்சிந்
திக்கிறார்கள், அந்தப்பகவானுடைய திவ்யமங்கள விக்கி
ரகத்தைச்சொல்லுகிறோம்.

கேளும் பிரசன்னமான வதனமும், கமல தளங்கள்
போல் விசாலமான நேத்திரங்களும், கதம்பபுஷபத்தி
னுடைய தாதுக்கள்போல் பொன்வர்னமாகிய அம்பர
மும், அதன்காந்தியால்விளங்குகிற ஆரமும், ஜாம்பூன
தமாகிய தோள்வளைகளும், இரண்டுகபோலங்களையும்
பிரகாசஞ்செய்கிற மஹாரத்தினகசிதமாகிய திருமகரக்
குழையும் ஜோதிமயமானகிரீடமும் மிகவும்மலர்ந்தஇ
ருதயகமலத்தினுடையநடுவில் யோகீஸ்வரராளால் ஸ்தா
பிக்கப்பட்டும், துளிர்கள்போல்விளங்குகிறதிருவடிகளு
ம், ஸ்ரீதேவியால் அலங்கரிக்கப்பட்ட மார்பில்அவளழ
குக் கண்ணாடியாகிய கௌஸ்துவா பரணத்தால் பிரகா
சிக்கிறகந்தரமும், ஒருகாலத்திலும் வாடாமலிருக்கிற
வனமாலையுடனே கூடிக்கொண்டும் விலையிடக் கூடாம
லிருக்கிற அரைநாணாலும், மோதிரங்களாலும், நூபு
ரங்களாலும், கங்கணங்களாலும், அலங்கரிக்கப்பட்டும்,
மாசில்லாமலும்மிருதுவாகியும்கறுத்தும்கொஞ்சம்சுரு
ளுடனேயும்கூடி முன்னெற்றிமயிர்களுடனேயும் விள
ங்குகிற மந்தஹாசத்தால் மனோக்கியமாகிய திருமுகம
ண்டலமும், கம்பீரமாகியும், விநோதமாகியுமிருக்கிறபு
ன்சிரிப்பினாலேயும், கடைக்கண்பார்வைகளாலேயும்மிக
வும்விளங்குகிற புருவங்களுடைய வணக்கத்தால் அறி
விக்கப்பட்ட மிகுதியான அனுக்கிரகத்தை யுடைத்தாகி
யும் விநோதமாகியுமிருக்கிற மனதானது எவ்வளவுகா
லம்தாரணையில்நிற்கிறதோ அவ்வளவுகாலமும்தியான
கல்பிதமான இந்தத் திவ்யமங்கள விக்கிரகத்தில் பரிபூ
ரணனாகிய பரமேஸ்வரனை பிரத்தியக்ஷமாக சாக்ஷாத்க
ரிக்கவேண்டும்.

இப்படிதிவ்ய அவயசம்பூரணனான பரமாத்மாவை
சாக்ஷாத்காரஞ்செய்கிற உபாயத்தைச்சொல்லுகிறேன்
நீகளும் தன்மதியால்பாதமுதலாகிய அவயவங்களைச்சி
ந்திக்கவேண்டும் கதாதரனுடைய மந்தஹாசவரைக்கும்
சிந்திக்குங்காலத்தில் எந்தெந்த அவயவத்தில் மனது
பொருந்தி தெளிவையடைகிறதோ அந்தந்த அவயவ
த்தைவிட்டு மற்ற அவயவத்தைத் தியானஞ் செய்தால்
புத்தி தெளிவையடையும் எவ்வளவுகாலம்மகத்துக்கெ
ல்லாம் மகத்தாய்அணுவுக்கெல்லாம் அணுவாய் இவை
இரண்டிற்கு நியந்தாவாகியுமிருக்கிற இந்தஜகத்பதியி
டத்தில் யோகமானது பரிணதமாகவில்லையோ அதுவ
ரைக்கும் பரமபுருஷனுடைய பிரமாண்டமாகிற விக்கி
ரகத்தை தங்கள்தங்கள் வர்ணாசிரமதருமத்தைச் செய்து
முடிவில் சிந்திக்கவேண்டும்.

ஓய் ராஜாவே? இப்படிதியானஞ் செய்கிற முனி
யானவன் எப்போது இந்தச்சரீரத்தை விடவேண்டுமெ
ன்று நினைக்கிறானோ, அப்போதிது புண்ணியக்ஷேத்தி
ரமென்றும்இதுஉத்தராயணமென்றும், காலதேசங்களை
க்குறித்து விளம்பரஞ்செய்யாமல்சுகமாகியஆசனத்தை
யடைந்து சுவாசங்களைஜயித்து கும்பகப்பிராணாயாமத்
தைச்செய்யவேண்டும் அதினால்நிர்மலமாகியபுத்தியை
க்கொண்டு மனதைநிக்கிரகித்து ஜீவாத்மாவிடத்தில்சே

ர்த்து அந்தசிவனை தனக்குஆத்மாவான பரமாத்மாவிடத்தில் நிறுத்தித் தைரியத்துடனே உபசாந்தியடைந்துசகலகருமங்களையும் விட்டுவிடுவான் பரமமான எந்தஇடத்தில் சகலமாகியதேவதைகளையுந் தன்வசஞ்செய்யப்பட்ட சிரேஷ்டமாகிய காலத்துக்கு ஆக்கியாபிக்கிறசக்தியில்லையோ அந்தவிடத்தில் ஜகங்களுக்கு ஈஸ்வரராகிய தேவர்கள் சுதந்திரர்களல்லவென்கிறத்தில்சொல்லவேண்டியதென்ன அந்தயிடத்தில் ரசோகுண தமோகுண சத்வகுணங்களுடைய காரியமாகியவிகாரமும், மகதத்துவமும், மூலப்பிரகிருதியும்,ஒருகாலத்திலும்சம்பந்திக்மாட்டாது, பிரமத்தைக்காட்டிலும் வேறாகிய பிரபஞ்சமில்லையென்று நிச்சயித்து அந்தப் பிர்மத்தையே சம்பந்தமில்லாமல் அனுபவஞ் செய்யவேண்டிதங்கள் தேகத்தைவிடவேண்டுமென்று நினைத்தயோகிகள் இந்தவிடத்தை விஷ்ணுபதமென்றுசொல்லி இந்தத்தேகத்தில் ஆத்மாவென்கிற பிரமையைவிட்டுமற்றவிடத்தில் பிரிதியில்லாமல் சிலாக்கியமாகிய இந்தப்பதத்தை இடைவிடாமல் ஆலிங்கனஞ்செய்கிறார்கள் ஆகையால்விக்கியானமாகிற கண்ணையுடைத்தான முனியானவன்தன்யோகபலத்தால் விஷயவாசனைகளைத் தவிர்ந்து வியவஸதையிலிருந்துகொண்டு இப்படி இந்தச்சரீரத்தையொழிக்கவேண்டும் இவன்இந்தச்சரீரத்தைநிவர்த்திக்கும்வகையெப்படியென்றால் தன்அடிக்காலால் குதஸ்தானத்தை அழுத்திக்கொண்டு அவ்விடத்திலிருந்து பிராணவாய்வை யதற்குமேலாகியஆறுசக்கரஸ்தானங்களிலேயும் சிரமத்தையெண்ணாமல்எழுப்பவேண்டும், அதெப்படியென்றால் கும்பகத்தினால் இருதயஸ்தானத்திலிருக்கிற பிராணவாயுவை மூலாதாரத்திலிருக்கிற அபானவாயுவுடனேகூட்டி நிறுத்திக்கொண்டுமூலாதாரத்திலிருந்துசுவாதிஷடானவழியால்மணி பூரகத்திலெழுப்பிஅங்கேயிருந்து அனாகதசக்கரத்திலெழுப்பிப்பின்பு விசுத்தசக்கரத்தில் சம்பந்திப்பித்து அந்தவிடத்திலிருந்து ஏழுவிதமான பிராணமார்க்கங்களையும் பந்தனஞ்செய்துக்கொண்டு அதன்பின்பு ஆக்கியாசக்கிரத்தினைநினைத்து மற்றொன்றையும்நினையாமல் அரைமுகூர்த்தம்அவ்விடத்தில்நின்று தன்புத்தியைச் சலிக்கவொட்டாமல் பிரமரந்திரத்தைப் பேதித்துசிலாக்கியமாகியபதத்தையடையவேண்டும் இப்படியோக சித்தியானவன் சதுர்முகனுடைய பதத்தையடைய வேண்டுமென்றுஇச்சித்தாலும் அணிமாதியஷ்ட ஐஸ்வரியங்களையுமுடைத்தாகிய தேவதைகளுடைய விலாஸ்தானங்களையிச்சித்தாலும் திரிகுணமிசிரதமாகிய அவ்விரண்டிலுஞ் சஞ்சரிப்பான் சஞ்சரிக்குங்காலத்தில் மனேந்திரியங்களுடனேகூடவேருடப்பான்.

உபாசனமாகிற வித்தையையும்பகவத் தருமங்களாகிறதவசையும், அஷ்டாங்கயோகங்களையும் விக்கியானங்களையும்அடைந்தும், வாயுவைப்போல் சூட்சுமமாகிய புண்ணியசரீரத்தையுடைத்தாகியு மிருக்கிறயோகீஸ்வரர்களுக்கு இந்தப் பிரமாணத்தி னுள்ளடங்கிய லோகங்களிலும் இந்த அண்டத்துக்குப் புறம்பாகிய இடங்களிலும் உண்டாயிருக்கிறகதியை மற்றவர்கள் கருமங்களால் அடையமாட்டார்கள். தேஜோமயமாகியும் வியாபகமார்க்கமாகியும், பரமாகாசரூபமாகியுமிருக்கிற சுழிமுனைநாடிமார்க்கத்தால் நடந்தவர்கள் சகலபாவங்களையும் உதறிஅக்கினியை அடைந்து உயர்ந்தஸ்தானமாகியும் சுமுசுமாரசக்கரமென்னும் பெயரையுடைத்தாகியுமிருக்கிறஸ்ரீஹரிபதத்தைஅதிக்கிரவித்து சூட்சுமமாகியும், ரசோகுணதமோகுணங்களுமில்லாமலுமிருக்கிறசுத்தசத்வமாகிய சரீரத்துடனே தானொருவனாகிசகல தேவர்களாலேயும் வந்தனஞ்செய்யப்படும்கற்பபரியந்தம்சீவித்திருக்கிற பிருகுரிஷிமுதலானவர்கள் விகரிக்கிறஸ்தானமாகியுமிருக்கிற மகாலோகத்தையடைந்துகற்பாந்தரத்தில் ஸ்ரீ அனந்தனுடைய முகாக்கினியால் தகிக்கப்படுகிற சொர்க்கபரியந்தமான லோகங்களையும் அந்தச்சுவாலையால் வெப்பமடைந்திருக்கிற மகாலோகத்தையும்பார்த்து நித்தர்களில் சிரேஷ்டர்களாயிருக்கப்பட்ட விமானங்களால் விளங்கப்பட்டுமிருக்கிற சதுர்முகபதமான சத்தியலோகத்தையடைவான்.

எந்தச் சத்தியலோகத்தில் வாசஞ்செய்கிற சுகிர்துகளுக்கு இந்தப்பிரமதத்துவத்தை அறியாதவர்களுடைய அளவிடப்படாம லுண்டாகிய துக்கங்கள் தரிசனத்தினாலேயும், தயையினாலேயும்,அடிக்கடிமனோவேதனையல்லாமல்மற்றசோகமும்,மூப்பும்,மரணமும்,ஆர்த்தியும், பயமும், உண்டாகாதோ அந்தச்சத்தியலோகத்தில் வாசஞ்செய்கிற சனங்களுடைய கதியானது மூன்றுவிதமாயிருக்கும். மிகுந்தபுண்ணியத்தால் இந்தலோகத்தையடைந்த சனங்கள்கற்பாந்தத்தில் தங்களுடையபுண்ணியதார தம்மியத்தினால்திரும்பவும் அதிகாரிகளாய் ஜனிப்பார்கள். கமலாசன சரீரனாகிய பரமாத்மாவுடைய வுபாசனத்தைச் செய்தவர்கள் அந்தப்பலந்தால் அந்தஇரண்ணியகற்பனுடனே முக்தியையடைவார்கள்

ஸ்ரீஹரியைத்தானே உபாசித்தவர்கள் தாங்கள் நினைத்தபொழுதே பிர்மாண்டத்தைப்பேதித் துக் கொண்டு ஸ்ரீவிஷ்ணுபதமான வைகுந்தத்தையடைவார்கள்.

இவர்களில் ஸ்ரீஹரியைசாக்ஷாத்காரமாக வுபாசித்து முக்தியடைகிறவர்கள் பிர்மாண்டத்தைப்பேதித்து நடக்கிறவகையைச்சொல்லுகிறேன்.

கேளும் ராஜாவே, அந்தச்சத்தியலோகத்திலிருந்து அண்டாவரணமாகிய பிரீதியையடைந்து பயமில்லாமல்அந்தப்பிருதிவி சரீரனாகியிருந்துஜலமாகிற ஆவரண

த்தையடைந்து அந்த சலசரீரத்துடனே அக்கினிமண்டலத்தைச்சேர்ந்து அந்தஜோதிசரீரத்துடனே வாயுமண்டலத்தைச்சேர்ந்து வாசுவுமயனாகிஆகாசமண்டலத்தைச்சேர்ந்து ஆகாசமயனாகிகிராணேந்திரியத்துடனே கந்த தன்மாத்திரையையடைந்து அதன்பிற்பாடு சட்சுரிந்திரியத்துடனே ரூபதன்மாத்திரையையடைந்து அதன்பின்பு தொக்கென்னு மிந்திரியத்துடனே பரிசதன்மாத்திரையையடைந்து அதன்மேல் சுரோத்திரேந்திரியத்துடனே சப்ததன்மாத்திரையை யடைந்து பிராணனுடனே யந்தந்தக் கருமங்களையடைந்த அந்த யோகியானவன் பூதசூட்சுமேந்திரியங்களுடைய சங்கோசத்தால் மனோமயமாகியும் தேவமயமாகியுமிருக்கிற அகங்காரத்தையடைந்து அந்தச்சரீரத்துடனே விக்கியானமயமாகி மகத்துவத்தையடைந்து அந்தச்சரீரத்தையுடைத்தாகிக் குணத்திரயத்தினுடைய லயஸ்தானமாகிய பிரகிருதியையடைந்து அந்தப்பிரகிருதியாகிறசரீரத்துடனேயிருந்து பின்பு சாந்தமாகியும் ஆனந்தமயனாகியுமிருக்கிற பரமாத்மாவை முடிவில் தானும் ஆனந்தஸ்வரூபனாகிப் பொருந்துவான் யாதொருவன் இந்தப்பகவத்கதியடைந்தானோ அவன்திரும்பவும் இந்தச்சமுசாரத்தையடையமாட்டான்.

ஓய் ராஜாவே? உன்னால்கேட்கப்பட்ட இந்த இரண்டுகதியும், அநாதியாகிய வேதங்களால் சொல்லப்பட்டிருக்கிறதுகள். முன்காலத்தில் இரண்யகர்ப்பனால் பூஜிக்கப்பட்ட ஸ்ரீவாசுதேவ னந்த சதுராननனுக்குஇந்தஇரண்டுகதியையும்உபதேசித்திருந்தார். இந்தவுலகத்தில் சமுசாரத்தி லுழன்று திரிகிற ஜனங்களுக்குங் குணபரிபூரணனான வாசுதேவனிடத்தில் பக்தியோகமானது எந்தக்காரணத்தால் உண்டாகுமோ, அதைவிட்டுச்சுபமானவழி மற்றொன்றில்லை கமலாசனனும் நிர்விகாரசித்தனாகி வேதங்களையெல்லாம் அநேகமாகவிரித்து, தன்புத்தியால் ஆலோசித்து பரமாத்மாவினிடத்திலுண்டாகிற பக்தியோககாரணத்தை நிச்சயித்தார். கியானதிகுணபரிபூரணனான அந்தவிதாதா எப்படி நிச்சயித்தாரென்றால் காணப்படுகிற வஸ்துக்களுடைய தரிசனமானது காணுகிறவனையல்லாமல் கூடாதென்றும்; அவனுக்கும் காணுகிற சக்திசுதந்தரனாகிய பரமாத்மாவினுடைய ஆதீனமென்றும் புத்திமுதலானதுகள் ஒருகர்த்தாவினால் கற்பிக்கப்பட்டதுகள், அதுவென்னென்றால்வாச்சிமுதலான ஆயுதம்போல் கரணமாகையாலென்றும், நிரூபிக்கப்படுகிற அனுமானங்களாலும், அதன்பின்புதான்செய்த நிரந்தரசிந்தனமாகிற தியானத்தினாலும் சர்வபூதங்களிலும் ஸ்ரீஹரியானவர் சாட்சாத்கரிக்கப்பட்டாராகையால் ஓய் தேவராதனே. இப்படி நிச்சயிக்கப்பட்டிருக்கையில் சர்வத்திரபரிபூரணனான ஸ்ரீஹரியைச்சர்வகாலத்திலும் சர்வபிரளயகாலத்திலும் சிரவணஞ்செய்தும், கீர்த்தனஞ்செய்தும், ஸ்மரணஞ்செய்தும்,சனங்கள் கடைத்தேறவேண்டும்.

யாதொரு ஜனங்கள் சர்வாத்மாவாகிய ஸ்ரீஹரியினுடைய கதையாகிற அமிர்தத்தைக் காதுகளாகிற சம்புடத்தில் சச்சனமுகத்தால் நிறைத்து பானஞ்செய்கிறார்களோ அவர்கள்விஷயசம்பந்தத்தால் தூஷிக்கப்பட்டமனதை பாவனஞ்செய்துகொண்டு அந்த ஸ்ரீஹரியுடைய சரணாம்புஜசமீபத்தை யடைவார்கள்.



அச்சுதாயநம.

## ௩-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

விஷ்ணுபக்தி விசேடங்கேளாநின்ற
நஷ்டமிச்சுகர் பக்திநடத்தையால்
விஷ்ணுவின்கருமத்தின்சிரவணத்திற்
கஷ்டவாத ரவுகள்கழறுவாம்.

விஷ்ணுபக்தியினுடைய விசேஷத்தைக் கேளாநின்ற சுகமுனியினுடைய பக்தி அதிசயத்தினால் அந்த விஷ்ணுவின்கருமங்களின் சிரவணத்தி லாதரவுசொல்லப்படுகிறது,

இந்தப்பிரகாரம் மோட்சத்துக்குச்சாதகமாகியும், பக்தியோகத்திற்குக்காரணமாகிய ஹரிகதாசிரவணத்தையும், இதின்கீர்த்தனத்தையும், சிந்திக்கிறதையும் உபதேசித்த சுகப்பிர்மரிஷியானவர் மறுபடியும் இந்தஹரிபக்தியினுடைய மகிமையைத்தெரியச்சொல்லவேண்டிக் காமியபலன்களைக் கோரினவர்களுக்கு அந்தப் பலனைக்கொடுக்கிற கருமங்களைப்போல் சர்வபலன்களைக் கோரினவர்களுக்கும் ஒருபலனையுங்கோராமல்மோட்சபலத்தைக்குறித்தவர்களுக்கும் இந்தஹரிபக்தியே யல்லாமல் மற்றொருகாரணமில்லையென்று சொல்லத்தொடங்கினார்.

ஓய் மஹாராஜாவே? யாதொரு முக்திசாதனத்தைச் சொல்லவேண்டுமென்று நீயென்னைக்கேட்டீரோ, அந்தக்காரணமானது முன்னால் பெரியவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது அதுஏதென்றால் சன்மாந்தர சுகிர்தங்களால் மனுஷசரீரத்தையெடுத்து அதிலும்புத்தியுண்டாகியிருந்தவர்களுக்கு மரணகாலம் சமீபித்தபோது, ஸ்ரீஹரியுடைய காதமிருதசிரவணாதிகளேதாரகமாகும் அதெப்படியென்றால் பிர்மதேஜசைவிரும்பினவன் வேதத்துக்குச் சுவாமியாகிய பிர்மாவைக்குறித்து யக்கியஞ்செய்யவேண்டும். இந்திரியங்களைக்கோரினவன் இந்திரனைக்குறித்து யாகஞ்செய்யவேண்டும் பிரசைகளை வே

ண்டினவன் தக்ஷன்முதலானபிரசாபதிகளையர்ஜிக்கவேண்டும் ஐஸ்வரியத்தைக்கோறினவன் துர்க்காதேவியைக்குறித்துக் கர்மானுஷ்டானஞ் செய்யவேண்டும் தேஜஸைக்கோரினவன் சூரியனையஜிக்கவேண்டும், திரவியத்தைக்கோரினவஸ் அஷ்டவசுக்களைப் பூசைபண்ணவேண்டும் வீரத்தைக்கோரினவன் ஏகாதசருத்திரார்களையஜிக்கவேண்டும் அன்னமுதலான போசனத்தை இச்சித்தவன் அதிதி தேவதையையும், மகவர்க்கத்தைக் கோரினவன் அதிதிகுமாரர்களான தேவர்களையும்ராச்சியத்தைக்கோரினவன் சகலமானதேவர்களையும் பூஜிக்கவேண்டும். திக்குவிஜயத்தை இச்சித்தவன் சாத்தியாளையும், ஆசையைக்கோரினவன் அசுவனிதேவர்களையும், புஷ்டியைக்கோரினவன் பூமிதேவியையும் பூசிக்கவேண்டும். தன்னுடைய ஸ்தானத்தைவிட்டுச் சலியாமலிருக்கவேண்டுமென்று கோரினபுருஷன் ஆகாசத்தையும்பூமியையும் உபாசிக்கவேண்டும். அழகைக்கோரினவன் கந்தர்வர்களையும், ஸ்திரீகளிடத்தில் ஆசையுண்டானவன் ஊர்வசியென்ற அப்சரசைஉபாசிக்கவேண்டும். சர்வாதிபத்தியம் வேண்டுமென்று கோரினவன்சகலதேவர்களுக்கும் சிரேஷ்டனாகிய சதுர்முகனைப் பூஜிக்கவேண்டும் கீர்த்தியைக்கோரினவன் யக்கியசரீரனாகிய ஸ்ரீவிஷ்ணுவை யஜிக்கவேண்டும் பொக்கிஷங்களுடைய சமுகத்தைக்கோரினவன் பிரசேஜஸை யஜிக்கவேண்டும் பொக்கிஷங்களுடைய வித்தையைக் கோரினவன்,சிவனையும் தம்பதிகளுடைய அனுகூலத்தைக்கோரினவன் உமாபதியையும், தருமத்தைக் குறித்தவன் உத்தமசுலோகனான ஸ்ரீஹரியையும், சந்தானத்தை இச்சித்தவன் பிதுர்தேவதைகளையும் யஜிக்கவேண்டும், ரக்ஷணத்தைக்கோரினவன் ராக்ஷதர்களையும் பராக்கிரமத்தைக் கோரினவன் வாயுகணங்களையும், ராச்சியத்தைஇச்சித்தவன் பதினாலுமனுக்களையும் தேவர்களையும், சத்துருவதத்தை அபிலாக்ஷைசெய்தவர் நிருதிதேவனைபூசிக்கவேண்டும்,போகத்தைஇச்சித்தவன் சோமனைப்பூஜிக்கவேண்டும் வயிராக்கியத்தைக்கோரினவன் பரமபுருஷனை ஆராதிக்கவேண்டும் இப்படியே ஏகாந்தபத்தியைக் கோரினவனும், சகலபலன்களைக்கோரினவனும்மோக்ஷத்தைஇச்சித்த உதாரபுத்திசாலியும் தீவரமான பக்தியோகத்தால் பரமபுருஷனையே ஆராதிக்கவேண்டுமேயல்லாமல்வேறில்லை, பாகவதர்களால் நிச்சயிக்கப்படும் குணபரிபூரணனான பரமாத்மாவினிடத்திலுண்டாகியுமிருக்கிற பக்தியோகம்யாதொன்றுண்டோ அதுவேஇந்தப் பூமண்டலத்திற்செய்கிற தபசுகளுக்கு பலோதயமாகியிருக்கும் யாதொருஹரிகதையால்கியானமும்,காமக்குரோதாதிநிவர்த்தியைக் கொடுக்கிற பரமாத்மப்பிரசாதமும்,இகபரத்திலுண்டாகிய குணங்களில் வைராக்கியமும்,கைவல்லியத்திற்குமார்க்கமென்று நிச்சயிக்கப்பட்ட பக்தியோகமும்உண்டாகுதோ அந்தஹரிகதையிற்சுகித்தவன் எவன்தான் அதில் பிரீதிசெய்யானென்றுசொன்ன சுகமுனியுடையவார்த்தைகளைசவுனகாதிகளுக்குச் சொல்லிக்கொண்டுவருகிற சூதரைப்பார்த்துசவுனகர்கேட்கிறார்.

ஓய் சூதரே? இப்படிசுகமுனியால் நன்றாகவுரைக்கப்பட்ட ரகசியத்தைக்கேள்விசெய்த பரதசிரேஷ்டனான பரிட்சித்து வியாசகுமாரராகியும், ஞானநிதியாகியுமிருக்கிற சுகமுனியை மறுபடியும் இப்போது சொன்னதல்லாமல் எதைக்கேட்டார்.

எங்களுடையமனதிற்கு அனுகூலமாகியவார்த்தைகளைச்சொல்லுகிறீர் பாகவதசிரேஷ்டரான வியாசகுமாரர் ஆத்மவித்தையில் சமர்த்தராகையால் நல்ல வார்த்தையால் கேள்விசெய்த பரிட்சித்துமகாராஜனுக்குஉபதேசித்த கோப்பியமான அர்த்தந்தைச் சொல்லவேண்டும்.

---

அக்ஷாரயநம.

## ௪-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

ஸ்ரீயரியின் சிருஷ்டிமுதலான
மாயகதையை மன்னும்பரிச்சித்தினல்
தூயபிரசனஞ் செயுஞ்சுகரானவர்
ஆயனாரத சம்வாதமரற்றினர்.

ஸ்ரீஹரியினுடைய சிருஷ்டிமுதலானகதைகளைப் பரிட்சித்தாவினல் பிரஸ்னம்பண்ணப்பட்டசுகரானவர் பிர்ம்ம நாரத சம்வாதத்தைவெளியிடுகிறார்.

இப்படி பிரஸ்னஞ்செய்த சவுனகரைப்பார்த்துச் சூதர்சொல்லுகிறார்.

ஓய் சவுனகரே! அந்தஉத்தரைகுமாரன் வியாசகுமாரரிடத்திலிருந்து ஆத்மதத்துவம் நிச்சயித்ததற்குக் காரணமாகிய முன்சொன்ன வார்த்தையைக் கேள்விசெய்து சிலாக்கியமானமதியை ஸ்ரீகிருஷ்ணனிடத்தில்நிறுத்தி தன்சரீரத்திலும் பாரியையிடத்திலும் தன்புத்திரர்களிடங்களிலும் கிரகங்களிலும் பசுக்களிலும்திரவியங்களிலும் பந்துக்களிலும் குறைவில்லாத ராச்சியத்திலும்உறுதியாயிருந்த மமதையைவிட்டான்.

ஓய் சிரேஷ்டர்களே? இந்தமகாகீர்த்திசாலியானவன் ஸ்ரீகிருஷ்ண மகாத்மசிரவணத்தில் சிரத்தையுண்டானவனாகி நீங்களென்னைக்கேட்கிறாப்போல் இந்த ஸ்ரீஹரிலீலையாகிற அர்த்தத்தையே ஸ்ரீசுகசந்நிதியில் கேள்விசெய்தான். பின்பு தன்மரணகாலத்தையறிந்து தருமா

ர்த்தகாமங்களுக்குச் சாதகமாகிய திரிவர்க்ககருமத்தைத்தியாகஞ்செய்து ஷட்குணபரி பூரணனாகிய ஸ்ரீவாசுதேவனை தனக்குஆத்மாவென்று லக்ஷியமாகிய நிச்சயத்தையடைந்த பரிட்சித்தானவன் அந்தச்சுகமுனியைப்பார்த்துச்சொல்லுகிறான்.

ஓய் பிராமணோத்தமனே? சர்வக்கியனாகியஉம்முடையவசனமே லக்ஷியமானது. ஓய் அனகரே ? தேவரீர் சாதிக்கிற ஸ்ரீஹரிகதையால் பாபங்களெல்லாம் சிதறித்தது - ஆனாலும் ஸ்ரீ பகவான் தன்னுடைய சங்கற்பாதினையாளபிரகிருதியால் சமஸ்தமானபுவனங்களையும் சிருஷ்டிசெய்கிறதை லோகாதீஸ்வரர்களாகிய பிரமருத்திராதியர்கள் மனதினாலேயும் நினைக்கமாட்டார்கள். இப்படி சிருஷ்டிசெய்த பிரபஞ்சத்தை எப்படி சவரட்சிக்கிறானோசுதந்தரனாகிய அந்தப்பிரபுவானவன் திரும்பவும்எப்படி சங்காரஞ்செய்கிறானோ அமுதசக்தியுண்டாகிய இந்தப் பரமபுருஷன் பிரம ருத்திராதிகளான எந்தெந்தசக்தியை அவலம்பித்து இவர்களைக்கொண்டு லீலையைச் செய்விக்கிறவனாகி விவிதங்களான கருமங்களைச்செய்து தானும்விளையாடிக்கொண்டிருக்கிறானோ, அதை விசேஷமாக அறியவேண்டுமென்று இச்சிக்கின்றேன்,

ஓய் பிராமணோத்தமனே ? ஆச்சரியகரமான கருமங்களைச்செய்கிற பகவானுடைய லீலையானது ஞானிகளாலேயும் சிந்திக்கக்கூடாதென்று தோற்றுகிறது,ஒருவனாகிய பரமபுருஷன் அமுதமாகியஜனங்களால் பிரகிருதியினுடைய குணங்களைத்தரித்து அந்தந்த ஜன்மத்தில் அனுஷ்டிக்கப்பட்ட கருமங்களால் லீலையைச்செய்கிறானோ இல்லையென்றுகிரமக் கிரமமாக இந்தக்குணங்களை அவலம்பித்து இப்படிலீலாயுக்தனாக யிருக்கிறானோவென்று உண்டாகியிருக்கிற இந்த என்னுடைய சமிசயத்தைப் பரிகரிக்கவேண்டி அடியேனுக்குத்தேவரீர் வேதாந்தவித்தையில் நிபுணராகியும் நிரந்தரத்தியானமாகிற அநினானுபவத்திலும்சமர்த்தரல்லவோவென்று பிரசினஞ்செய்த பரிட்சித்தைப்பார்த்து சுகமுனியானவர் சொல்லத்துடங்கினதை சவுனகாதிகளுக்கு சூதர் சொல்லுகிறார்.

ஓய் சவுனகாதிகளே?ஸ்ரீஹரியுடையகுண கீர்த்தனத்தை பிரார்த்திக்கப்பட்ட சுகமுனியானவர் ஸ்ரீரிஷிகேசனைச் சிந்தித்துக்கொண்டு ஸ்ரீ ஹரியை வந்தனஞ்செய்யத்துடங்கினார். அதெப்படியென்றால் அபரிமித சக்தியாகியும், பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி ஸ்திதி சங்காரங்களாகிறலீலாநிமித்தமாகிப்-பிர்மா-விஷ்ணு- ருத்திராளென்கிறமூன்றுமூர்த்திகளை அவலம்பித்து, சகலஜீவராசிகளுடைய அந்தரியாமியாகியும்; ஒருவராலேயும்அறியக்கூடாததன்னடத்தையை யுடைத்தாகியு மிருக்கிறபரமபுருஷன்பொருட்டு வந்தனஞ்செய்கின்றேன், சத்புருஷாளுடைய சஞ்சிதபாபவாசனைகளைச் சேதித்துக்கொண்டும், பாலன்நிமித்தமாகி சகலசேதன சேதனங்களைச் சரீரமாகிப்பரிக்கிரகித்தும் பரம்அம்சாசிரமத்தில் நிஷ்டையபொருந்திய ஜனங்களால் அடிக்கடிதேடப்படுகிறஆத்மதத்துவத்தைக்கொடுத்துக்கொண்டுமிருக்கிற பரமபுருஷன்பொருட்டு வணக்கஞ்செய்கிறேன் சாத்வதகுலத்திற் பிறந்தவர்களுக்குச் சிரேஷ்டனாகியும், கபடயோகிகளுக்கு அத்தியந்ததூரமாகிய நிஜஸ்வரூபத்தை யுடைத்தாகியும். தன்னுடைய ஐஸ்வரியத்துக்கு அதிகமாகியும் சமமாகியுமிருக்கிறமற்றொருஐஸ்வரியமில்லாமலும், சுயம்பிரகாசமாகியும் ஸ்வரூபத்தினாலேயும் ஸ்வபாவத்தினாலேயும் பரிபூரணனாகி என்னிடத்தில்விளையாடிக்கொண்டிருக்கிற பரமபுருஷனைக் குறித்து வந்தனஞ்செய்கிறேன் எவனுடைய கீர்த்தனமும் ஸ்மரணமும் எவனிடத்தில்செய்த சமர்ப்பணமும் எவனுக்குச்செய்தவந்தனமும், எவனுடையசிரவணமும், எவன்பூசனமும்;ஜனங்களுடையகல்மஷத்தை அப்பொழுதே பரிகாரஞ்செய்கிறதோ, அந்தமஹா மங்களமாகியகீர்த்தியையுடைத்தான பரமபுருஷனைக் குறித்து அடிக்கடி நமஸ்காரஞ் செகிறேன் ஞானிகளானவர்கள் எவனுடைய சரணாரவிந்தபஜனத்தால் இகபரங்களாகிய விஷயங்களில் தங்களுடையமனதுக்கு சங்கடத்தைப்பரிகரித்து சகலசிரமங்களையுந் தவிர்ந்து பரமமாகிற கதியையடைகிறார்களோமிகவும் மங்களமாகிய கீர்த்திசம்பன்னனான அந்தப் பரமபுருஷனைக்குறித்து அநேகம் பிரணாமஞ்செய்கிறேன்தவசுகளைச்செய்கிறவர்களும் தானம்பண்ணுகிறவர்களும்கீர்த்திசம்பாதித்தவர்களும்யோகத்தைஅனுஷ்டித்தவர்களும் மந்திரங்களைஜபிக்கிறபேர்களும்சத்கருமங்களைச் செய்கிறவர்களும் எவனிடத்தில்சமர்ப்பணம்பண்ணாமற்போனால் க்ஷேமத்தையடையவில்லையோ மிகுந்தமங்களகீர்த்தியான அவன்பொருட்டுவெகுவாகிய வந்தனஞ்செய்கிறேன்

பாபஜாதிகளான கிராதர்களும் ஊனஜாதிகளும்புளிமந்தஜாதிகளும் புலக்கச்சாதிகளும்,ஆபிரகஜாதிகளும் யவனாளும், சகாளும்அதிநிஷித்தமாகிய குரூரகருமங்களையுடைத்தான மற்றப்பாவிகளும் எவனுடைய திருவடிகளில்பக்திசெய்கிற பாகவதாளுடையபக்தியைச் சேர்ந்தமாத்திரத்தில் பரிசுத்தர்களாகிறார்களோ அந்த மங்களகீர்த்தியான பரமாத்மாவினுடைய திருவடிகளை வணங்குகிறேன், தீரர்களுக்கு ஸ்வாமியாகியும் வேதமயனாகியும் விளங்குகிற அந்தமதிவிஷயனாகிய பரமாத்மா ஒருவனைய் நிஜமாகிய பக்தியையுடைத்தான பிரமசங்கராதிகளால் ஆச்சரியத்துடனே பார்க்கப்படுவதானமூர்த்தியையுடைத்தாகி விளங்குகிறானோ அந்தப்பகவான்

என்னிடத்தில் பிரசாதஞ்செய்யவேண்டும் சிருஷ்டிக்கு முன்காலத்தில் பிரமதேவனுடைய இருதயத்தில் சிலர்க்கியமாகியதினைவைகற்பிக்கவேண்டுமென்று யத்தனஞ்செய்துக்கொண்டிருக்கிற எவனால் ஆக்கியாபிக்கப்பட்ட சரஸ்வதிதேவியானவள் தன்னுடைய அங்கமாகிய சிக்ஷாதிகளுடனே எவன்முகத்திலிருந்து ஆவிற்பவித்தாளோ ரிஷிகளுக்கெல்லாம் சிரேஷ்டனாகிய அந்தப்பரமபுருஷன்பிரசாதம்பண்ணக்கடவன்.

யாதொருவிபுவானவன் பூர்வத்தில் பஞ்சமகாபூதங்களால் இந்தச்சரீரங்களையெல்லாங் கற்பித்து அதுகளில் தான் சார்ந்துயில்லாமல்சயனம்பண்ணுகையால் புருஷனென்றுசொல்லப்பட்டு கியான கருமேந்திரியங்களும், பஞ்சமகாபூதங்களுமாகியபதினாறுகலைகளை அவலம்பித்துஅதுகளுடைய குணங்களைப்புசிக்கிறானோ அந்தமதிவிஷயனாகிய பகவான் என்வார்த்தைகளை அலங்கரிக்கக்கடவன், சாந்தியுக்தாளாகிய புருஷாள் கியானமயமாகியும், எவன் முகாம்புஜத்தில் பிறந்துயிருக்கிற மதுவைப் பானஞ்செய்தார்களோ குணபரிபூரணனாகியும், சகல சேதனாசேதனங்களையும், தான் தரித்தும், அதுகளில் வாசஞ்செய்துக்கொண்டு யிருக்கிற அந்த விதாதாவின்பொருட்டு வந்தனஞ் செய்கிறேனென்று இஷ்டதேவதா நமஸ்காரஞ்செய்த சுகமுனியானவர் பரீட்சித்துமஹா ராஜாவைப்பார்த்து இந்தவிஷயத்தில் முன்னடந்திருக்கிற உபாக்கியானத்தைச்சொல்லத்தொடங்கினார்.

ஓய் ராஜாவே, நீர் என்னைக்கேள்விசெய்த இந்தப்பிரஸ்னவிஷயத்தைபூர்வத்தில் பிர்ம்மாவைப் பார்த்துநாரதர் பிரஸ்னஞ்செய்திருந்தார் அந்தப் பிரஸ்னத்துக்கு வேதகற்பனாகிய சதுர்முகன் ஸ்ரீ ஹரியினிடத்திலிருந்து ஏகாக்கிரசித்தனாகி தான்உபதேசம்பெற்றபடி பிரதியுத்தரஞ்சொன்னார் அந்தஅர்த்தத்தைநானுமக்குச்சொல்லுகிறேனென்று சொல்லிப் பின்னையும் ஆதரவாதசயத்தினால் ஸ்ரீ ஹரிபிரசாதத்தைப் பிரார்த்திக்கிறார். அதெப்படியென்றால் ஸ்ரீ மகாலட்சுமிபதியாகியும், யக்ஞபதியாகியும் புத்திபதியாகியும், லோகபதியாகியும், பூபதியாகியும், அந்தகர்களுக்கும்,விருஷ்ணிகளுக்கும்சாத்வதர்களுக்கும் பதியாகியும், கதியாகியும்சச்சனங்களுக்கெல்லாம் பதியாகியுமிருக்கிறபகவான் என்னிடத்தில் பிரசாதஞ்செய்யக்கடவர்.

யாதொருவனுடைய திருவடிகளையிடைவிடாமற்செய்கிற தியானமாகிற சமாதியால் ஆராயப்பட்டபுத்தியால்ஆத்மதத்துவத்தை யறிந்தகியானிகள் அவரவருடையயிச்சைக்கு அனுசாரமாகச்சொல்லுகிறார்களோஅந்த முகுந்தன் என்பொருட்டுப் பிரசாதஞ் செய்யக்கடவனென்று பிரார்த்தனஞ்செய்துகொண்டு சதுர்முகனைப்பார்த்து நாரதர்பிரஸ்னஞ்செய்த பூர்வகதையைச்சொல்லத்தொடங்கினார்.

---

லீலாமானுஷவிக்கிரகாயநம.

## ௫-வது-அத்தியாயம்.



கலிவிருத்தம்.

லீலாவதாரமான விராட்டனோர்
காலநற் கருமமுதலாகிய
எலாந்சிருட்டியாதி சிருட்டித்தனனென்று
மேலும்பிர்மா நாரதற்குவிளம்பினார்,

லீலாஅவதாரமான விராட்டானவர்காலகருமமுதலானசக்திகளில் சிருஷ்டிக்கப்பட்டவஸ்துக்களைச் சிருஷ்டித்தாரென்று பிர்மா நாரதருக்குச்சொன்னாரென்றுசொல்லப்படுகிறது.

ஓய்ராஜாவே ? சதுர்முகனைப்பார்த்து நாதர் பிரஸ்னஞ்செய்த கிரமமென்னவென்றால் ஓய் தேவதேவனே சகலபிராணிகளையுஞ் சிருஷ்டிசெய்கிற பிரமகணங்களுக்கெல்லாம் ஆதியாகி சனித்தவனே உமக்குநான்வந்தனஞ்செய்கிறேன் ஆத்மதத்வத்தைப்பிரகாசஞ்செய்கிறவான் சாதனத்தை எனக்குஉபதேசிக்கவேண்டும்.

ஓய்சுவாமியே ஆத்மஸ்வருபக்கியானத்துக்குச் சாதனமாகிய இந்தப்பிரபஞ்சமானது எந்தத் தருமத்தையுடைத்தானது எவனிடத்திலிருக்கிறது எவனால் சிருஷ்டிக்கப்பட்டது. பிற்காலம் எவனிடத்தில் லயமடைகிறது எவன் ஆதீனமானது இதின்ஸ்வரூபம் எப்படிப்பட்டது. இந்தத் தத்துவத்தை எனக்கு அருளிச்செய்யவேண்டும் முன்பிறந்தும் இப்போதிருந்துப் பிற்காலம் வருகிறதாகவுமிருக்கிற சகலவஸ்துக்களுக்கும் ஸ்வாமியாகிய தேவரீர் இந்தரகசியத்தையறிவீர் உள்ளங்கைநெல்லிக்கனியைப்போல் உம்முடைய விசிஷ்டகியானத்தினால் நிச்சயிக்கப்பட்டிருக்கின்ற தேவரீர் எவரிடத்திலிருந்து விக்கியானத்தைச் சம்பாதித்தீர் உமக்கு ஆதாரமானவஸ்து எது உமக்குஉயர்ச்சியானவர்எவர். நீர் எவனுடைய ஆதீனர். உம்முடைய ஸ்வருபமென்ன உம்முடைய பிரகிருதியால்நீர்ஒருவராயிருந்துகொண்டுபஞ்சமகாபூதங்களால் பிராணிகளைச் சிருஷ்டிசெய்கிறீர்உம்முடையஇடத்தில்தானே அந்தப்பூதங்களைப்பாலனஞ்செய்கிறீர் நீரோ அதுகளுக்குப்பாபவத்தைஅடைவிப்பித்தும் பிரயாசையில்லாமல்சிலந்திபூச்சியைப்போல் உம்முடையசக்தியையவலம்பித்துக்கொண்டு சிருஷ்டிசெய்கிறீர் இந்தப்பிரபஞ்சத்திலேஉத்தமமத்திமகனிஷ்டங்களாகியும், மனுஷ்யாதிகளான வுருவாகியும்,சுக்கிலாதிவர்னங்களுடனேவிளங்கிக்கொண்டு யிருக்

கிறகாரியங்களும், இவைகளுக்குக்காரணமாகிய சூட்சுமவஸ்துக்களும், தேவரீரைவிடமற்றொருவராலுண்டாகிறதென்று நான் அறிந்துகொள்ளவில்லை அப்படிப்பட்டதேவரீர் மனோசையஞ்செய்துகொண்டு துஷ்கரமாகிய தபசைச்செய்கையால் அடியேனுக்கு மோகத்தையுண்டுபண்ணி மற்றொருநாயகனுண்டென்கிற சங்கையைக்கற்பிக்கிறீர்.

ஓய் சர்வசுவாமியே? எனக்குஇந்தத்தத்வத்தை நன்றாகஅறியும்படி அருளிச்செய்யவேண்டுமென்று பிரஸ்னஞ்செய்தநாரதமகாமுனியைக்குறித்துஅந்தசரஸ்வதிவல்லபன் சொல்லுகிறான் வாராய்குழந்தாய் மிகவுங்கருணாசாலியாகையால் உனக்கு இந்தசிலாக்கியமாகியசம்சயம் பிறந்தது. வாராய் சவுமியனே, எந்தக்காரணத்தால் ஸ்ரீபகவானுடைய மகிமையாகிற லீலைகளைச் சொல்லும்படி யென்னைக்குறித்துயாதொருவார்த்தையைச் சொன்னையோ அதுமிகவும் அரிதானது ஸ்ரீபகவானுடையமகிமையால் எனக்குஅவ்வளவுசக்தியுமுண்டு ஆதித்தியனும், அக்கினியும், சோமனும், கிரகங்களும்மற்றுமுள்ள நக்ஷத்திரங்களும் சுயம்பிரகாசமாகிய பிரமஸ்வரூபத்தால் பிரகாசிக்கப்பட்ட பிரபஞ்சத்தைநானும் பிரகாசஞ்செய்விக்கிறேன் யாதொருவனுடையதுர்ச்செயமாகிய மாயையால்என்னைச் சகத்துக்குக்குருவென்று சொல்லுகிறார்களோ குணபரிபூரணனாகிய அந்தவாசுதேவனைக்குறித்துத் தியானஞ்செய்கிறேன்.

யாதொருவனுடைய சிருஷ்டிபதத்தில் நிற்கிறதற்கும் லச்சையடைந்திருக்கிற அந்தமாயையால் மோகிக்கப்பட்ட துர்ப்புத்தியான சனங்கள்நானென்றும், என்னதென்றும்இல்லாதமகிமையைச்சிலாகிக்கிறார்களோ பஞ்சமகா பூதங்களும் சிருஷ்டியேதுவாகிய ஜீவகருமங்களும்காலமும், திரிகுணங்களுடைய வீஷமமாகியசம்பிரகரும் ஜீவவர்க்கங்களும் தத்வமாகவிசாரித்தால் ஸ்ரீவாசுதேவனைக்காட்டிலும் வேறல்ல.

வாராய் பிரமனிஷ்டனே; வேதங்களெல்லாம் ஸ்ரீமந்நாராயணனிடத்தில்பிறந்ததுகள் தேவர்களெல்லாம்நாராயணனுடைய அங்கத்திற்சனித்தார்கள் சொர்க்காதிலோகங்களெல்லாம் நாராயணனுடைய ஆனந்தஸ்வரூபங்கள் சகலயக்கியங்களும் அந்தநாராயணனுடைய ஆனந்த சாதனமானதுகள். பிராணாயாமாதி ரூபமாகிய யோகமும், சித்தத்துக்குத் தைரியமாகிற தபசும் இதின்பலமாகிய கியானமும் இதுகளால் அடையும்படியானதியும், அவனுடையபிராப்தியும், அதின் சாதனங்களாகியுமாகவேயிருக்கும், நிர்விகாரனாகியும், சகலசரீரனாகியும், சுதந்தரனாகியும், சிருஷ்டிநிமித்தியமாகியதிருஷ்டியைப்பரிக்கிரகித்துமிருக்கிற அந்தநாராயணனுடையசிருஷ்டிக்கு விஷயமாகிய பிரபஞ்சத்தை அவனாற்சிருஷ்டிக்கப்பட்டநான் அவன்கடாட்சத்தால் ஆக்கியாபிக்கப்பட்டவனாகிச் சிருஷ்டியைச்செய்கிறேன். ஏயகுணரகிதனாகியு மிருக்கிற அந்த சுவாமிக்குத் தன்சங்கல்பத்தால் சிருஷ்டி -திதி-சங்காரநிமித்தமாகிப் பரிக்கிரகிக்கப்பட்டிருக்கிற சத்வரசோதமசென்கிற குணங்கள்மூன்றுண்டுஅந்தக்குணங்கள் பஞ்சமகா பூதங்களுக்கும், இந்திரியாபிமான தேவதைகளுக்கும்இந்திரியங்களுக்குங்காரணங்களாகி யிருந்துகொண்டு ஒருகாலத்திலும் பந்தமில்லாமலிருக்கிற ஸ்வரூபத்தையுடைத்தாகியிருந்தாலும், மாயாசம்பந்தத்தை யுடைத்தாகியிருக்கிற ஜீவாத்மாக்களிடத்தில் காரியமாகியும் காரணமாகியும், கர்த்தாவாகியுமிருக்கிறதை இணக்கியதுகள் இப்போதுநம்முடைய மதியிற்றோன்றியும் அதோக்ஷமாகியு மிருக்கிற யந்தக் குணபரிபூரணன் இந்த மூன்றுகுணங்களாகிற அடையாளங்களால் தன்னுடையஅடியார்களால் காணப்பட்ட தனதுமகிமையையுடைத்தாகி யிருந்துகொண்டு சகலமானவுயிர்களுக்கு மெனக்கும் சுவாமியாகி மாய்கைக்கு ஈசனாகையால் தன்னாதீனமாகிய மாய்கையால்விசேஷமாகித் தான்வெகு ரூபமாகவேண்டுமென்றுஇச்சித்தவுடனே தன்னிடத்தில்சுய இச்சையால்வந்திருக்கிற காலத்தையும், ஜீவகருமங்களையும் குணவயிஷம்மியத்தையும், தன்னையடுத்த மாய்கையில் அங்கீகரித்தான். பின்பு புருஷோத்தமனால், அவலம்பிக்கப்பட்ட காலத்தினாலும், குணவைஷம்மியத்தினாலும்ஆகாரபேதத்தையடைந்திருக்கிற சீவகருமத்தினாலும், மகத்துவம்பிறந்து ரசோகுணத்தினாலும், சத்வகுணத்தினாலும் வளர்ந்திருக்கிற அந்தமகத்துவத்தினுடைய விகாரத்தால் தனக்குத்தானேசுவாமியாகியுமிருக்கிற அந்தப்பரமபுருஷன் சிலந்தியைப்போல் சிருஷ்டியைச் செய்துகொண்டும் செய்தசிருஷ்டியையரித்துக்கொண்டு மிருப்பார். அகங்காரமென்றுஞ் சொல்லப்படுகிற அந்த மகத்துவவிகாரமானது தானும்விகாரத்தையடைந்துமூன்றுவிதமாகவிருந்து அந்கவிதங்களை வைகாரிகமென்றும், தைசசமென்றும், தாமசமென்றும்,அதன்உண்மையறிந்தவர்கள் சொல்லுவார்கள்.

ஓய் அறிவல்லவனே?தாமச அகங்காரமானது திரவியசக்தியென்றும், அதைச்சகங்காரமானது கியானசக்தியென்றுஞ் சொல்லப்படுகிறது பூதாதியாகிய தாமச அகங்காரம் விகரித்ததால் ஆகாசம் பிறந்தது அறிந்தவனுக்கும், அறியப்படுகிற பொருளுக்கும், லிங்கமாகியும், குணமாகியுமிருக்கிற சப்தமானது அந்த ஆகாசத்தின் பூர்வரூபமாகி அதிலட்சமாக விருக்கும் அப்பால் விகாரத்தையடைந்த ஆகாசத்திலிருந்து ஸ்பரிசமாகிற குணத்தையுடைத்தான மாருதம்பிறந்தது அந்தவாயுவானது தன்க்குக்காரணமாகிய ஆகாசத்துடனேசம்பந்

தித்திருக்கையால் சப்தமாகிற குணத்தையும், உடைத்தாயிருக்கும். இதுவுமன்றிக் கெதகதாரணமாகிற பிராணனுக்கும் பராக்கிரமத்துக்கும்; இந்திரியமன சரீரங்களுடைய சாமர்த்தியமாகிற பலன்களுக்கும் சகனங்களுக்கும் ஏதுவாகவேயிருக்கும், காலத்தினுலும் பிராணிகருமத்தினுலும், குணவைஷம்மியத்தினுலும், விகாரத்தையடைந்திருக்கிற அந்தச் சமீரணனிடத்தி லிருந்து ரூபதன்மத்திராகிரமத்தினுல் தேஜசுபிறந்தது அதற்குசுதசித்தமாகியரூபமும், காரணமாகிய வாயுவு சம்பந்தத்தால் உண்டாயிருக்கிற ஸ்பரிசமும், ஆகாசத்தினுண்டாயிருக்கிறசப்தமும் அதின்குணங்களாகவே யிருக்கும் பின்புவிகாரத்தையடைந்த தேஜசிலேயிருந்து ரசதன்மாத்திரைமுகமாக வுதகம்பிறந்தது. அந்தசலமானது நிசமான ரசமாகிற குணத்தினுலும் தன்னுடைய காரணங்களால்வந்த ரூபஸ்பரிச கோஷங்களாலும் பிரகாசித்திருக்கும் விசேஷமாகி விகாரமடைந்த சலிலத்திருந்துகந்த தன்மாத்திரைமார்க்கத்தால் பிரிதிவிபிறந்தது. அந்தப்பூமியானது நிஜமான கந்தகுணத்தையும் பராதீனமாகிய ரசரூபஸ்பரிச சப்தகுணங்களையும், உடைத்தாயிருக்கும். வைகாரிக அகங்காரத்திலிருந்து மனதும், அதற்குத்தேவதையான சந்திரனும் பிறந்தார்கள். அப்படியே யதிலிருந்துதிக்கும், வாய்வும், சூரியனும், வருணனும், அசுவனிதேவர்களும், அக்கினியும், இந்திரனும், உபேந்திரனும், மித்திரனும், பிரமதேவனுமாகிற இந்திராபிமானிதேவதைகள் பதின்மரும்சனித்தார்கள். அதன்பின்பு தைச்ச அங்காரத்தினுடைய விகாரத்தால் கிராணேந்திரியமும், ரசனேந்திரியமும், சட்சுரிந்திரியமும், சுரோத்திரேந்திரியமும், தொக்கிந்திரியமுமாகிற கியானேந்திரியமைந்தும், வாகிந்திரியமும், அஸ்தேந்திரியமும்-பாதேந்திரியமும்-பாயுவிந்திரியுமும் - உபஸ்தேந்திரியமுமாகிற கருமேந்திரியங்களைந்தும் உற்பவித்ததுகள் - இதுகளில் சுரோத்திரியங்களுக்குத்திக்கும்-தொக்கிந்திரியத்துக்குவாயுவும் - சட்சுரிந்திரியங்களுக்குச் சூரியனும்-ரசனேந்திரியத்துக்கு வருணனும்-கிராணேந்திரியங்களுக்கு அசுவனிதேவர்களும், வாகிந்திரியத்துக்கு அக்கினியும்-பாணியாகிற இந்திரியங்களுக்கு இந்திரனும், பாதமாகிற இந்திரியங்களுக்கு உபேந்திரனும், பாயுவென்கிற இந்திரியத்துக்கு மித்திரனும், உபஸ்தேந்திரியத்துக்குப் பிரசாபதியும், அதிஷ்டானதேவதைகளானுர்கள் அப்படியே கியானசத்தியானபுத்தியும்-கிரியாசத்தியானபிராணனும்- தைச்சஅகங்காரத்தில் சனித்ததென்று நாரதருக்குச்சொன்ன சதுரானனன் உபதேசத்தைப் பரிட்சித்துமகாராஜனுக்கு ஸ்ரீசுகமுனி உபதேசித்த தத்துவத்தைச்சூகர் சவுனகாதிகளுக்குச்சொல்லிப்பின்னையுஞ்சொல்லுகிருர்

ஓய் பிர்ம்மவித்துக்களில்சிரேஷ்டர்களே, பின்புஇந்த தேஜேந்திரியங்களும் ஒன்ருேடொன்று கலக்கமாட்டாமலிருக்கிறபடியால் அந்தப் பூதங்களுடனேயும், மனோபுத்தி பிராதிரிகுணங்களுடனேயும் கலந்துக்கொண்டு எப்போது ஈசனுக்குவீடாகிய சரீரத்தை நிர்மாணஞ் செய்யமாட்டாமற் போச்சுதுகளோ அப்போது அந்தப் பகவானுடைய சக்தி அனுப்பிரவேசத்தால் ஆக்கியாபிக்கப்பட்டஇவைகள் ஒன்ருேடொன்று கலந்து பிரகிருதிகாரியமாகி யிருந்துக்கொண்டு சமஷ்டிவியஷ்டிரூபமாகிய இந்தச் சரீரத்தைக் கற்பித்ததுகள் கற்பிக்கப்பட்ட அந்தச்சரீரம் ஒருஅண்டமாகி ஜலத்தில் அநேகமாயிரம்வருஷம் இருந்தபின்பு அதற்கு சீவப்பிரதனை பரமாத்மாகாலத்திலும், பிராணி கருமத்திலும் குணவைஷம்மியத்திலும் அனுப்பிரவேசஞ் செய்திருந்தவன் இந்தஅண்டத்திலும்அனுப்பிரவேசஞ்செய்துசீவமில்லாமலிருந்தஇந்தஅண்டத்தைசீவிப்பித்தான், அப்படிப்பட்ட இந்தபரமாத்மா அண்டமாகிய புறத்தில் வசிக்கிறபடியால் புருஷசப்தவாச்சியனுகி அந்தஅண்டத்தில்நிறைந்து அதைத் தனக்கு வேருகவைத்துக்கொண்டு ஆயிரம் சிரசுகளும், ஆயிரமுகங்களும், ஆயிரங்கண்களும், ஆயிரம்பாகுக்களும், ஆயிரந்துடைகளும், ஆயிரந்திருவடிகளுமாகவேயிருந்தான்.

யாதொருவனுடைய அவயவங்களால் உலகங்களைத் தியானபராள் கற்பிக்கிருர்களோ அவனுடையகடிப்பிரதேசத்துக்குக் கீழ்ப்பட்ட அவயவங்களால்மேலே ஏழுஉலகங்களும் கற்பிக்கப்பட்டதுகள். அப்படியே அந்தப்புருஷனுடைய முகத்திற்பிறந்தபிராமணுள் அவனுக்குவதனமாகவும் பாகுவிற்செனித்த க்ஷத்திரியாள் அவனுக்குப்புஜமாகவும் ஊருவிலுற்பவித்த வைசியாள் அவனுக்குத் துடைசளாவும் பாதங்களில்சம்பவித்தசூத்திராள்அவனுக்குத்திருவடிகளாகவும், அறிந்துக்கொள்ளவேண்டும்பாதாளலோகமுதல் பூலோகவரைக்கும் கடிபரியந்தமான அவன்பாதங்களிலிருந்து பிறந்ததென்றும், புவலோகமானது அவன்நாபியில் ஜனித்ததென்றும், சொர்க்கலோகமானது அவன்இருதயத்தில் உற்பவித்ததென்றும் மகல்லோகமானது அந்த மஹாத்மனுடைய மார்பிற் சம்பவித்ததென்றும். ஜனலோகமானது அவன் ஸ்தனத்துவயிற்றிற் சம்பவித்ததென்றும், தபலோகமானது அவன்கண்டத்திற் பிறந்ததென்றும், சத்தியலோகமானது அவன்சிரசுகளில் ஆவிற்பவித்ததென்றும், அதற்குமேற்பட்ட பிரமலோகமான வைகுந்தமானது நித்தியமாகையால் அவனே இப்படிசப்தலோகசரீரகனை சிலபேர்உபாசனஞ்செய்கிருர்கள் இந்தஉலகங்கள் பதினுலென்று நிச்சயித்தஜனங்கள் அதல்லோகமானது அவன்கடியில்பிறந்ததென்றும விதல

மானது அந்தவிபுவினுடைய ஊருக்களால் கற்பிக்கப்பட்டதென்று, பரிசுத்தமானசுதலமானது அவன்ஜானுக்களால் ஜனித்ததென்றும், தலாதலமானது சிங்காரப்பிரதேசத்தில் உற்பவித்ததென்றும், மகாதலமோவென்றால் கணுக்கால்களால் உதித்ததென்றும் ரசாதலமானது புறங்கால்களால் ஆவிற்பவித்ததென்றும் பாதாளமானது அடிக்கால்களால்சம்பவித்ததென்றும், பூமிமுதலான மேலேழுலோகங்களும், ஜகனம்முதலான அவயவங்களாற் சம்பவித்ததுகளென்றும், இப்படி அந்தப்புருஷன் லோகமயனாகி யிருக்கிறானென்று உபாசிக்கிறார்கள் இல்லாவிட்டால்பாதாளமுதல்பூலோகம்வரைக்கும் கடிபரியந்தமான பாதங்களாலும் புவலோகமானது நாபியாலும் சத்தியலோகபரியந்தமானசொர்க்கலோகமானது சிரசினாலும் ஜனித்ததுகளென்றும், இப்படியாக லோககற்பனஞ்செய்துதியானஞ்செய்பலாமென்று பிர்ம்மாவானவர் நாரதருக்குஉபதேசித்தபடி சுகமுனி பரிட்சித்துமகாராஜாவுக்குஉபதேசித்ததைசூதர் நைமிசாரண்ணியவாசிகளான சவுனகாதிகளுக்குச்சொல்லிப் பின்னையும்நாரதருக்கு அந்தசதுரானனன் உபதேசித்த வகையைச் சொல்லுகிறார்.

சர்வேசுவராயநம.

## சு-வது- அத்தியாயம்.

கலிவிருத்தம்.

அத்தியாத்மாதி பேதத்தினலந்த
நித்யராட்பூதியும் நிகழ்த்தப்பட்டு
சுத்தபூர்வோக்த மானசமஸ்தாதா
ரத்வமும்புருஷ சூக்தம்தனிலுவாம்.

அத்தியாத்மாதிபேதத்தினால் விராட்விபூதியும் சொல்லப்பட்டு பூர்வோக்தமான சமஸ்தாதாரத்வமும் புருஷசூக்தத்தினால்நிரஸ்கரிக்கப்பட்டது.

வாராய் குமாரனே! நான் முதலான ஜனங்களுடைய வாகிந்திரியங்களுக்கு அதிதேவதையான அக்கினிக்கும் இந்த விராட்டுபுருஷனுடைய முகமானதுக்ஷேத்திரமாகியிருக்கும், காயத்திரிமுதலான யேழுவிதமாகிய சந்தசுக்களுக்கு இவனுடையதொக்குமுதலானசப்த தாதுக்களும் க்ஷேத்திரமாகியிருக்கும், தேவதைகளுக்கு அன்னமாகிய ஹவ்விதயத்துக்கும் - பிதுர்களுடைய அன்னமாகிய கவ்வியத்துக்கும், இந்தஇரண்டுக்கும் புறம்பான மானுஷான்னத்துக்கும் ஆறுவிதமான ரசங்களுக்கும் நம்முடைய ரசனேந்திரியங்களுக்கும், இதுகளுக்கு அதிதேவதையான வருணனுக்கும் அந்தவிராட்புருஷனுடைய நாக்குவுற்பத்திஸ்தானமாகி யிருக்கும் அவனுடைய நாசிகளானதுகள் சகலபிராணங்களுக்கும் வாயுதேவனுக்கும் உற்பத்திஸ்தானமாகியிருக்கும் அசுவனிதேவர்களுக்கும் சகலமான ஒஷதிகளுக்கும் பரிமளத்துக்கும் சிலாக்கியமான அவனுடையகிராணேந்திரியமானது ஜன்மபூமியாகவிருக்கும், சுக்குலாதிரூபங்களுக்கும் இதுகளைப்பிரகாசஞ்செய்விக்கிற தேஜசுகளுக்கும் அவனுடைய சட்சுரிந்தியம் உற்பவஸ்தானமாகவேயிருக்கும் பகலுக்கும் சூரியனுக்கும், அவன்கண்கள் ஜன்மபூமியாயிருக்கும் அவன்காதுகள் திக்குகளுக்கும் தீர்த்தங்களுக்கும் அவன் சுரோத்திரேந்திரியங்கள் ஆகாசங்களுக்கும் சப்தங்களுக்கும் அவதாரஸ்தலமாகவிருக்கும், அவனுடையதேகமானது சகலவஸ்துக்களிலுண்டாகிய சராசரங்களுக்கும் அழகுக்கும்பாத்திரமாயிருக்கும் இவனுடையதொக்கிந்திரியமானது ஸ்பரிசத்துக்கும் வாயுவுக்கும் சகலபாக்கியங்களுக்கும்உற்பவஸ்தலமாக விருக்கும் எதுகளால்யக்கியமானது பரிபூரணமாகிய கற்பிக்கப்படுகிறதோ பூமியைப்பிளந்துக்கொண்டு ஜனிக்கிற அந்தவிருக்ஷங்களுக்கெல்லாம்இவனுடையரோமங்களே பரமகாரணமாகவிருக்கும், இவன்கேசங்கள் மேகங்களுக்கும் இவன்தாடிமீசை மயிர்கள் மின்னல்களுக்கும் இவன்கரங்களும் பாதநகங்களும் எழுகுமுதலானலோகங்களுக்கும்கல்லுகளுக்கும் ஜனன்பூமியாகவிருக்கும், அவன்பாகுகள் இந்திராதிகளான லோகபாலகர்களுக்கும் சுபகருமங்களுக்கும் அவன்விக்கிரமமானது பூலோக-புவலோக- சுவல்லோகங்களுக்கும், க்ஷேமங்களுக்கும் ரக்ஷணத்துக்கும் சாதனங்களாகவிருக்கும். சகலமாகிய அபிஷ்டங்களுடையபிரார்த்தனைகளுக்கும். இந்த ஸ்ரீஹரியினுடையதிருவடிகளே ஆஸ்பதமாகியிருக்கும் ஜலங்களுக்கும்- வீரியத்துக்கும்அதனுடையமோக்ஷத்துக்கும் பர்ஜன்னியனென்கிற பிரஜாபதிக்கும் அந்தமஹாபுருஷனுடைய லிங்கமே பிறப்புக்கிடமாகவிருக்கும் அவனுடைய உபஸ்தமோவென்றால் சந்தானநிமித்தமாகிய சம்போகத்தால் உண்டான நித்திரையில்லாமலிருக்கிறதற்கு ஸ்தலமாகியுமிருக்கும் அவருடைய பாயுவென்கிற கருமேந்திரியமானது யமனுக்கும் மித்திரனுக்கும் மலவிசர்ஜனத்துக்கும், ஸ்தலமாகியிருக்கும் வாராய்நாரதனே அவனுடைய குதமானது இம்சைக்கும் கிறிதிக்கும் மிருத்தியுவுக்கும், நரகத்துக்கும், உற்பத்திஸ்தானமென்று சொல்லப்பட்டது. அவருடையபின்பக்கமானது அவமானத்துக்கும்அதருமத்துக்கும். அக்கியானத்துக்கும், ஜன்மபூமியாகவிருக்கும், 'அவனுடையநாடிகள் மேற்கேபெருகிற நதிகளுக்கும், கிழக்கேபெருகிறநதிகளுக்கும், அவதாரபூமியாகவிருக்கும்,அவனுடைய எலும்புகளின் சமூகமானது மலைகளுக்குங் காரணங்களாகவிருக்கும். அந்த புரு

ஷோத்தமனுடைய பிரகிருதியானதுச்சங்களில் சிலாக்கியமாகிய அன்னமுதலானதுகளுக்குஎதுவாகியிருக்கும், பிராணிகளுடைய மரணத்துக்கும் சமுத்திரங்களுக்கும், அவனுடையஉதரம் சாதகமென்று பிரசித்தமானது அவன் இருதயமானது மனதுக்கு ஸ்தானமாகியிருக்கும்தருமத்துக்கும். எனக்கும்,உனக்கும் என்குமாரளாகிய சனகாதிகளுக்கும்,பவனுக்கும். விக்கியானதத்துவத்துக்கும் அந்தப்பரமபுருஷனுடைய மனதேபரமஸ்தானமாகியிருக்கும், ஆகையால் நானும்,நீயும்ருத்திரனும்,உனக்குமுன்னேஜனித்த சனகாதிகளும மரீசிபிரகிருதிகளும்,தேவகணங்களும், அசுரசமுகங்களும் நாகங்களும்,பட்சிகளும் மிருகங்களும், கந்தருவர்களும் அப்சரசுகளும்,யக்ஷர்களும் ராட்சசர்களும், பூதகணங்களும்-மலைப்பாம்புகளும பசுக்களும் - பிதுர்தேவதைகளும-சித்தர்களும்- வித்தியாதரர்களும் - சாரணர்களும் தருக்களும் மற்றும்நானாவிதமாகிய ஜலநிவாசிகளாகவும்-ஸ்தலவாசிகளாகவும் ஆகாசநிவாசிகளாகவு மிருக்கிற சிவவர்க்கங்களும்,நவக்கிரகங்களும்- அசுவனிமுதலான நட்சத்திரங்களும் - மற்றுமுள்ள தாராகணங்களும் தூமகேதுக்களும், மின்னல்களும் - மேகங்களும் முன்பிறந்துபோனதும்-இப்போதுஜனித்திருப்பதும்இனிமேல்சம்பவிக்கப்போகிறதுமாகிற மற்று முள்ளஇந்தச்சகலமும்-அந்தப்பரமபுருஷனேயல்லாமல் வேறில்லைஇந்தப்பிரபஞ்சைக்காட்டிலும் வளர்ந்து பத்துஅங்குலம் உயர்ந்து வாசஞ்செய்கிறஇவனால்இந்தப்பிரபஞ்சமெல்லாம் வியாபிக்கப்பட்டது, தன்னுடைய மண்டலத்தில் வசித்துக்கொண்டு தபிக்கிற இந்த ஆதித்தியனானவன் எப்படி அந்தமண்டலத்தின்வெளியிலும் பிரகாசிக்கிறானோ அப்படியே விராட்டுபுருஷதேகத்திற்பிரதாபத்துடனே விளங்குகிற பரமபுருஷனும் அந்தவிராட்டுத்தேகத்தினுடைய உள்ளும்புறம்பிலும் பிரகாசிக்கின்றான். அந்தப் பரமபுருஷன் யாதொருகாரணத்தால் மரணத்தைக்கொடுப்பதான கர்மபலமாகிறஅன்னத்தைஅதிக்கிரமித்தானோ அந்தக்காரணத்தினால்ஸ்வருபகுணாவிற்பாவமாகி இரண்டுவிதமாகின்ற மோக்ஷத்துக்கும்அதிபதியானான்.

வாராய் பிர்மகுலோத்பவனே, அந்தப் புருஷோத்தமன் லயமில்லாமலும் பிரபஞ்சசரீரனாகவுமிருக்கிற இந்தமகிமை அபரிமிதமானது லோகங்களுடைய ஸ்வருப ஸ்வபாவங்களை அறிந்தவர்கள் இந்தவிராட்டு புருஷனுடைய அவயவங்களாகிய இந்த உலகங்களில் சகலபிராணிகளும் வாசஞ்செய்கிறதுகளென்று அறிந்திருக்கிறார்கள் கிருதகமென்றும அகிருதகமென்றும கிருதாக்கிருதகமென்றும மூன்றுவிதமாகச்சொல்லப்படுகிற இந்தப்பதினாலு உலகங்களுடைய உபரிபாகத்திலிருக்கிற கைவல்லியத்துக்கும் மேலாகியிருக்கிற திரிபாதவிபூதிகளில் லயமில்லாமலும்பயமில்லாமலு மிருக்கிறக்ஷேமமானது நிலைநின்றது இந்தக்ஷேமத்தை திரிபாதவிபூதியான ஸ்ரீவைகுந்தத்தில் புத்திமோக்ஷணுதிகளைத்தவிர்ந்துநிஷ்டைபொருந்தின நயிஷ்டிகபிரமசாரியும்வானப்பிரஸ்தனும், சந்நியாசியும், ஆஸ்ரமநிஷ்டர்கள்அடைகிறார்கள், இவர்களைக்காட்டிலும், வேறாகியும், சிலாக்கியமாகிய நிஷ்டையிலுமிருக்கிற கிரகஸ்தாசிரமம்பொருந்தினவர்களுக்கு இந்தப்பதினாலுலோகங்களிலுண்டாகியக்ஷேமமேயல்லாமல்வேறில்லை நானாவிதஜன்மங்களையெடுக்கிற சிவனானவன்போகத்துக்கும்மோக்ஷத்துக்கும்ஏதுவாகியும், தக்ஷணோத்தரங்களாயுமிருக்கிறஇரண்டுவழிகளையும்அனுசரிப்பான். அந்தமார்க்கங்களில்போகசாதனமாகிய மார்க்கமானது கருமத்தினாலும்மோக்ஷசாதனமாகியகதியானது பக்திமுதலாகிய வித்தையினாலும் சாதிக்கப்பட்டிருக்கும் புருஷோத்தமனேவென்றால் இந்த இரண்டுவழிகளுக்கும் தான்ஆஸ்ரயமேயல்லாமல் இவைகளைஆஸ்ரயித்ததில்லை அந்தப்புருஷோத்தமனுடைய அபிமானவித விராட்டுபுருஷன் பூதங்களுக்கும்,இந்திரியங்களுக்கும், திரிகுணங்களுக்கும்ஆத்மாவாகி விஷயமாகியஅண்டத்திற்ஜனித்து,அந்தஅண்டத்தையும் அதினுட்பட்டபிரபஞ்சத்தையும் பிரகாசஞ்செய்துகொண்டு தபிக்கிறஆதித்தியன்போல் விளங்குகிறார், அந்த மகாத்துமாவினுடைய நாபியிற்பிறந்த நளினத்தில் நான்ஜனித்தேன், இந்தவிராட்புருஷனுடைய அவயவங்களைக்காட்டிலும் வேறாகிய யக்கிய சாதனங்களைச் சாதிக்கவேண்டுமென்று யத்தனஞ்செய்த சமயத்தில் அந்தப் புருஷனுடைய அவயங்களால் தானேயக்கியபோக்கியமாகிய பசுக்களையும்,அதுகளைக்கட்டுகிறத்துக்கு யோக்கியமாகியயூபஸ்தம்பங்களையும், இப்போது நாமிருக்கிற யக்கியபூமியையும், சிலாக்கியமாகிய வசந்தாதிகாலங்களையும், யக்கியபாத்திரங்களையும் நெல்லுமுதலான ஓஷதிகளையும், நெய்முதலான சிநேகவர்க்கங்களையும், மதுராதிரசங்களையும், சுவர்ணாதி லோகங்களையும், மிருத்திகையும், சலத்தையும், இருக்கு-யசுசுக்களையும், சாமங்களையும் அவத்திகாரதியையும், கருமநாமதேயங்களையும், சுவாகாரமுதலான மந்திரங்களையும், தக்ஷணைகளையும, விரதங்களையும,தேவதைகளுடைய நாமநிர்த்தேசங்களையும், கற்பக சூத்திரத்தையும், சங்கற்பத்தையும், அனுஷ்டானவகையையும். விஷ்ணுகிரமாதிகதிகளையும, தேவதைகளுடைய தியானமுதலாகிய மதியையும, பிராயச்சித்தத்தையும், செய்தகருமங்களை ஸ்ரீபகவானிடத்தில் சமர்ப்பிக்கிறதையும், சம்பாதித்தேன், இப்படி யக்கியசாதனங்களைப் பரிபூரணமாகச் சம்பாதித்த நான் யக்கியஸ்வரூபியாகியும், நியந்தா

வாகியுமிருக்கிற அந்தப்புருஷனை யக்கியத்தினாலேயே யஜித்தேன்.

வாராய் நிர்த்தோஷனே, அப்பால்உன்னுடையபிராதாக்களான பிரசாபதிகளெல்லாரும் இந்திராதி ரூபத்தால் பிரகாசமாகியும், நிஜரூபத்தால் ஒருவராலேயும் அறியக்கூடாமலுமிருக்கிற அந்தப்புருஷனை யேகாக்கிரசித்தர்களாகி பூஜித்தார்கள் பின்பு யோக்கியமாகிய காலத்தில் மனுக்களும், ரிஷிகளும், பிதுர்தேவதைகளும் தேவர்களும், அசுரர்களும்,மனுஷர்களும்,சுதந்திரப்பிரபுவாகிய அந்தப்பரமபுருஷனை இந்தக்கிருதுக்களால், பூசித்தார்கள்,

யாதொருவன் சிருஷ்டிக்கு முற்காலத்தில் மிகுதியான பிரகிருதிகுணங்களைத் தரித்த ஸ்ரீமந்நாராயணனென்னுஞ் சொல்லுக்கு விஷயமாகிய அந்தப்பகவானிடத்தில் இந்தசமஸ்தபிரபஞ்சமும் ஸ்திரமாயிருக்கிறதோ அந்தப்பகவானால் ஆக்கியாபிக்கப்பட்ட நான் சிருஷ்டிசெய்கிறேன் அவன்வசவர்த்தியான அரனும் இந்த உலகத்தை சங்காரஞ்செய்கிறான், சிருஷ்டி ஸ்திதி சங்காரங்களுக்கும் காரணமாகிய மூன்றுசக்தியையும் படைத்த அந்தப்பரமபுருஷன் விஷ்ணுரூபத்தைத்தரித்து இந்தஉலகங்களை ரட்சணஞ்செய்கிறான்,

வாராய் ஐயனே? என்னைக்குறித்து எப்படிநீபிரஸ்னஞ்செய்தையோ அப்படியே விசிதமாகச்சொன்னேன் காரிய காரணஸ்வரூபமாகிய சிருஷ்டி யோக்கியமானவஸ்துக்களிலொன்றும் குணபரிபூரணனான ஸ்ரீமந்நாயணனைக்காட்டிலும் வேறல்ல.

வாராய் சிரேஷ்டனே?யாதொருகாரணத்தால்ஸ்ரீஹரியானவர் பக்தி யதிசயத்துடனே கூடிய மனதையுடைத்தாகிய வென்னால் தியானஞ்செய்யப்படுகிறாரோ அந்தமகிமையாகி என்னுடையதேசேந்திரியங்கள் அசத்தாகிய விஷயங்களில் சம்பந்திக்கவில்லை என்மனதும் ஒருகாலத்திலும் வியர்த்தசிந்தையைச் செய்யவில்லை என் வார்த்தையும் ஒருசமயத்திலும் அபத்தமாகிய தில்லை அப்படிப்பட்ட இந்திரிய மனோவாக்கு விருத்திகளையுடைத்தாகியும், வேதமயனாகியும், தபோமயனாகியும், பிராஜாபதிகளுக்கெல்லாம் சிரேஷ்டனாகியும், அவர்களுடைய வந்தனையோக்கியனாகியுமிருக்கிறநான்மனோசயஞ்செய்துகொண்டு சிலாக்கியமாகிய யோகத்திலிருந்து தியானஞ்செய்துகொண்டிருந்தாலும்எவனிடத்திற்சனித்தேனோ அவனையும் அந்தசன்னத்தையும்அறிந்ததில்லை யாதொருவன் தனக்கு முடிவையடையமாட்டாதஆகாசத்தைப்போல் தன்னதானசங்கல்பத்தினுடையஅளவிடப்படாத விபவத்தைத் தானே அறியமாட்டானோ, அந்தமகிமையை மற்றவர்களெப்படிதான் அறியப்போகிறார்கள், தன்னை யடைந்தவர்களுடைய சன்னமரணமாகிய சமுசாரத்தைச் சேதித்துக்கொண்டும், க்ஷேமகாரணமாகியும் க்ஷேமமாகியுமிருக்கிற அவன்திருவடிகளை வணங்கினேன், நானும் ருத்திரனும்,நீங்களும்சத்தியமாகியஅவனுடையகதியைஅறிந்ததில்லை இப்படியிருக்கையில் மற்றதேவர்கள் எப்படி யறியப்போகிறார்கள். ஆனாலும் அவனுடைய பிரகிருதியென்று சொல்லப்படுகிற மாயையால் மோகிக்கப்பட்ட புத்தியையுடைத்தானபேர்களாகி நிர்மிக்கப்பட்டிருக்கிற இந்தப் பிரபஞ்சத்தை நம்முடைய மதியுள்ளமட்டுக்கும் அறிந்துகொள்ளுகிறோம் யாதொருவனைத் தத்துவமாக அறியமாட்டாத நாமெல்லாரும் எவனுடையஅவதார லீலைகளைக் கானஞ்செய்கிறோமோ அந்தப்பகவானுக்கு வந்தனஞ்செய்கிறேன் அப்படிப்பட்டமகிமையுடைத்தாகிஉந்தன் அவதாரலீலைகளால் நம்முடையமதிவிஷயனாகியும்பிரபஞ்சகாரணனாகியுமிருக்கிற பரமபுருஷன் கற்பங்கள்தோறும் தனக்குச் சனனமில்லாம லிருக்கையிலும் தன்சங்கற்பத்தால் தன்னிடத்தில்தானே ஜனித்தும் ஜனித்ததைரட்சித்தும் பின்பு சங்காரத்தையும் செய்கிறானே அந்தப்பரமபுருஷனுடைய தத்துவம்ஏதென்றால் பரமாத்தசத்தியமாகியும் சர்வாந்திரியாமியாகியும், பரிபூரணமாகியும், ஆதியந்தங்களில்லாமலும், ஏயகுணரகிதமாகியும், சரீரமயத்தால் அத்துவயமாகியும், சலனமில்லாமலும் நிச்சயமாகியுமிருக்கிறகியானஸ்வரூபனேயல்லாமல்வேறல்ல.

வாராய் முனியே? இந்தபரமாத்மஸ்வரூபத்தை இந்திரியங்களையும் மனதையும் அகங்காரத்தையும்சயித்து சாந்தியுடைத்தாகிய முனிவர்கள் அந்த சாந்திபொருந்தியகாலத்தில்அறிந்திருப்பார்கள் அவர்களே அசத்துக்களான வாதிகளுடைய தர்க்கங்களால் மனதில் கலக்கத்தையுடைத்தான்போது அறியமாட்டார்கள், அவ்வியக்தமான பிரகிருதியுடனே சம்பந்தித்து அந்தப்பிரகிருதியாகிற புறத்தில் வாசஞ்செய்கிறபடியால் புருஷனென்றுசொல்லப்படுகிற அந்தஸ்வரூபமானது பரமாத்மாவுக்கு முதலானஅவதாரமாகும் குண வைஷம்மியமும் காரணகாரியஸ்வரூபமாகிய, பிரகிருதியும் அவனுடைய சக்திஸ்வரூபமான அவதாரங்களும்,மகத்துவமும்,பஞ்சமகாபூதங்களும், சத்வாதிகுணங்களும், ஏகாதசேந்திரியங்களும், விராட்டென்று சொல்லப்படுகிறஇவைகளுடைய சமுகமாகிறசரீரமும்,ஸ்தாவரங்களும்,சங்கமங்களும்-நானும்-சிவனும்-உபேந்திரனும் - தக்ஷன் முதலான இந்தப்பிரஜாபதிகளும்-நீ முதலான பிரமரிஷிகளும்-சொர்க்கபோகநாயகர்களும், பட்சிசிரேஷ்டர்களும்,நரேந்திரர்களும், பாதாளாதிபதிகளும், கந்தர்வாதீஸ்வரர்களும், வித்தியாதரசிரேஷ்டர்களும். சாரணசிலாக்கியர்களும்,யக்ஷாதிகளும், ராட்சதமூர்த்தன்னிய

ர்களும், சர்ப்பாதிபர்களும்,நாகமவுலிகளும்,பிதுர்சிரே ஷ்டர்களும்,மனுஷ்யசிரேஷ்டர்களும், தைத்தியேந்திரர் களும் சிததேசுவரர்களும்.தானவாதியர்களும், மற்றுமு ள்ள பிரேதபிசாச பூதகூஷ்மாண்ட சலசந்துமிருக பசு க்களில்சிரேஷ்டங்களும், அவனுடையகாரியரூபமானஅ வதாரங்கள் இதுவுமன்றியில் யாதொருவஸ்து இந்தஉ லகங்களில் அந்தப்பகவானுடைய ஐஸ்வரியத்தையும், தேஜசையும்,கனத்தையும், பராக்கிரமத்தையும், இந்தி ரியமனதுகளுடைய பலத்தையும், சம்பத்தையும், அதி காரியத்தில் லச்சையும்.காந்தியையும்,புத்தியையும்,ஆச் சரியமானவர்னத்தையும் உடைத்தா யிருக்குமோ, இ வையெல்லாம் உருவையெடுத்திருக்கிற அந்தப்பரமாத் மஸ்வரூபமேயல்லாமல் வேறல்ல,

வாராய் ரிஷியே! ஜகத்வியாபகமான அந்தப்பரமாத் மாவுடைய எந்தமுக்கியமாகி லீலாவதாரங்களை யறிந் தவர்கள் சொல்லுகிறார்களோ காதுகளிலுண்டாகியபா வங்களைச்சொலிப்பிக்கிற அந்தஅவதாரகதைகளைக் கிர மமாகச் சொல்லத்தொடங்குகிறேன், அதிமனோக்கியங் களாகிய இந்தக்கதைகளாகிற அமுதங்களை உன்காதுக ளாகிற பானபாத்திரங்களால் பானஞ்செய்யும்.

---

ஆதித்தியாயநம.

## எ-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

அந்தசாமிலீ லாவதாரமெல்லாம்
அந்தந்தவவதாரப் பிரயோசனம்
உந்துமித்துடன் கூடவுலந்துமே
சந்தபிர்மாநா ரதருக்குச்சாற்றினர்.

பகவானுடைய லீலாவதாரங்களெல்லாம்அந்தந்தஅ வதாரக்கிரமங்கள் அந்தந்தப் பிரயோசனங்கள் இதுக ளுடனேகூடப் பிர்மாவினல் நாரதருக்குச் சொல்லப்ப ட்டதென்று சொல்லப்படுகின்றது,

இந்தப்பிரகாரம் வியஷ்டி-சமஷ்டிரூபமாகிய ஸ்ரீஹ ரிசிருஷ்டியை நாரதருக்குஉபதேசஞ்செய்த இரண்ணி யகர்ப்பன் அந்தஹரியுடைய லீலார்த்தமாகியும் சுத்தச த்வமாகியுமிருக்கிற பகவத்அவதாரங்களைச் சொல்லத் தொடங்கினர்.

வாராய் நாரதனே? எப்போது இந்தப் பூமண்டலத் தைத்தைத்தியனை இரண்ணியாக்ஷன் சுருட்டியெடுத்து க்கொண்டு மகாசமுத்திரத்தில் பிரவேசித்தானே அப் போது இந்தப்பூமண்டலத்தை உத்தரிக்கவேண்டிச்சக ல யக்கியமயமாகியும் வராகரூபமாகியுமிருக்கிற சரீரத் தைத்தரித்தவனுகி அவதரித்து மகார்ணவமத்தியிலிரு க்கிற அந்தஇரண்ணியாட்சனை யக்கியோத்தாரகனுகிய அனந்தன் தன்கோரைப்பல்லால் மலையைப் பிளந்தாற் போல் பிளந்தான்,

இப்பால் ருசிப்பிரஜாபதியிடத்திலிருந்து ஆகுதியெ ன்கிறதேவிக்குக் குமாரனுகிச்சனித்துச் சுயக்கியனென் கிறபெயரால் விளங்கின பரமபுருஷருன் தன்னுடையபா ரியையான தக்ஷணாதேவியிடத்தில்சுயாமாளென்றுபெ யரையுடைத்தாகிய தேவர்களைச் சனிப்பித்து மூன்று லோகங்களுடைய மகத்தாகிய சிரமத்தைப் பரிகரித்தா ன், அப்பால் தனக்குமாதாமகனுகிய சுவாயம்புமனுவா ல் ஹரியென்று அடிக்கடிசொல்லப்பட்டான் கர்த்தமப் பிரஜாதியினுடைய கிரகத்தில் அவருடைய பாரியை யான தேவவூதியிடத்தில் ஒன்பது கன்னிகைகளுடனே யுற்பவித்து ஸ்ரீகபிலனென்று நாமதேயத்தைத் தரித்து தனக்குமாதாவாகிய தேவவூதிக்கு ஆத்மதத்துவத்தை உபதேசித்தான், பின்பு அந்ததேவவூதியானவள் அந்த வித்தையால் திரிகுணசங்கமாகிறமலத்தை அந்தஜன்ம த்தில்தானே தன்னுத்மாவிடத்தில் வேண்டாமலுதறிப் போட்டு கபிலருக்குயோக்கியமாகிய கதியையடைந்தா ள், பின்பு புத்திரனிமித்தியமாகத் தபசுசெய்தஅத்திரி மஹாரிஷியுடைய தபசினல் சந்தோஷத்தையடைந்தப ரமபுருஷன் அந்த அத்திரியைப்பார்த்து ஓய்அத்திரிம ஹாரிஷியே? உம்முடையதபசுக்குப்பலனுக என்னை உ மக்குத் தத்தஞ்செய்தேனென்றுசொல்லி அந்தரிஷிக்கு த் தான் குமாரனுக அவதரித்ததினல் தத்தாத்திரேய னென்று பிரகாசமாகிய நாமதேயத்தைத்தரித்தான், அ ந்த பகவானுடைய பாதபங்கஜங்களுடைய பாரகங்களா ல் பரிசுத்தமாகிய மூர்த்திகளையுடைத்தான யதுக்களு ம், ஏயாள்முதலானபேர்களும், யோகசம்பத்தையடை ந்து திருஷ்டாதிருஷ்டருமாகியஉபயசம்பத்தையும் அ டைந்தார்கள், அப்பால் அநேகவிதமாகிய லோகங்களை சிருஷ்டிக்கவேண்டுமென்கிற இச்சையால்செய்த என் தபசினுடைய சமர்ப்பணத்தால் சனகனென்றும் சனந் தனென்றும், சனத்குமாரனென்றும், சனச்சுஜாதனெ ன்றும், சனபதத்துடனேகூடிய நாலுவிதமாகிய நாம தேயங்களைத்தரித்து நாலுரூபமாகஅவதரித்து முன் க ற்பத்தில்விளங்கின ஆத்மவித்தைபிரளயத்தில் வினஷ் டமாயிருக்கிறபடியால் அதைஇந்தக்கற்பத்தில்அநேக மாகிய முனிவர்களுக்குஉபதேசித்தார், அந்தஉபதேச த்தால் அந்தரிஷிகள்தங்கள்மனதில் பிரமஸ்வரூபத்தை சாக்ஷாத்கரித்தார்கள், இப்பால் தக்ஷகன்னிகையான மூர்த்திதேவியிடத்தில் தருமப்பிரஜாபதிக்கு நாராய ணனென்றும், நரனென்றும், இரண்டுரூபமாகக்குமார னுகி அவதரித்து தபசைச்செய்யுங்காலத்தில் விக்கின ஞ்செய்யவேண்டுமென்று அவ்விடத்தில்வந்த மன்மத

சேனையாகிய அப்சரஸ்திரீகள் அந்தப்பகவானுடையநி யமலோபத்தைக் காணமலும், தங்களுடைய தபோவி காதமாகிய நியமலோபத்தாலும், தங்களைக்காட்டிலும், மிகுதியாகிய சவுந்தரியாதிகளுடனே கூடிய அவன் துடையிற் பிறந்த அப்சரஸைக்கண்டும் லச்சைப் பட்டுக் கொண்டு மன்மதனுடைய சேனைகளை நிக்கிரகிக்கமாட்டாமற் போனார்கள், காமனைத்தகித்த அபிக்கியாதிகளான மஹாநுபாவர்களும் சகிக்கக்கூடாமலும் தன்னைத் தகிக்கிற சக்தியையுடைத்தாகியு மிருக்கிற ரோஷத்தை த்தோஷமென்று நினைத்து தகிக்கமாட்டாமற் போனார்களே அந்தரோஷமும் நிர்மலமாகிய நாராயணன் இருதயத்தைப் பிரவேசிக்க வேண்டுமென்று நினைத்தபொழுதேதான் பயந்துதோ அப்படிப்பட்ட மஹாபுருஷனுடையமனதை காமமானது எப்படிதான் அனுசரிக்கும் இப்பால்யாதொருவன்பாலனுகியிருந்தாலும் உத்தானபாதனென்கிறராஜாசமீபத்தில் மகத்தானதாயுடையவார்த்தையாகிற பாணங்களால் போக்கப்பட்டவனுகி தபசைக்குறித்து வணங்களையடைந்து தபசைச் செய்து திவ்யமாகிய தோத்திரங்களையுஞ் செயகிற அவன்பொருட்டு பிரசன்னனுகிய ஸ்ரீஹரியானவர் துருவகதியைக் கொடுத்தபின்பு அவனுடையநிலையாகிய சிமுசுமாரசக்கரத்துக்கு மேலாகிய ஜனலோகத்தில் வாசஞ்செய்கிற பிருகுமுதலாகிய முனிவர்களும்அதின்கீழ்ப்பட்டசொர்க்கத்திலிருக்கிற சப்தரிஷிகளும் அவனைத் தோத்திரஞ்செய்கிறார்களோ அவனே துருவனென்று சொல்லப்படுகிற பரமபுருஷன் அப்பால் வேனனென்கிற ராஜா சாஸ்திரமரியாதிகளை அதிக்கிரமித்தத்தா லுண்டாகிய பிராமண சாபமாகிய வச்சிராயுதத்தால் பஸ்பமாகியபராக்கிரமத்தையுஞ் சம்பத்தையும் உடைத்தாகி நரகத்தில்விழாகின்றுமிருக்கிற அந்தவேனனைரட்சிக்கவேண்டுமென்று ரிஷிகளுடைய பிரார்த்தனையால் அவனையும் ரட்சித்து அவனுக்குமகனுகஜனித்து இந்தப் பூமியாகிற தேனுவிடத்திலிருந்து சகலமாகிய பலன்களையும் கறந்தாரே. அவன் பிருது சக்கிரவர்த்தியென்றும் பரமபுருஷன் பின்பு ஆக்கினீத்திரசுதனுகிய நாபியிடத்திலிருந்துசுதேவியென்றும், பெயரையுடைத்தாகியமேருதேவிக்குக்குமாரனுக அவதரித்த இந்தஹரியானவர் விருஷபயோகியென்று நாமதேயத்தையடைந்துசகலவிஷயங்களிலும்ஆசையையொழிந்து மிகவும்சாந்தியையடைந்த இந்திரியங்களுடனே சர்வசரீரகனுகிய பரமாத்மஸ்வரூபத்தில் நிலையாகின்று மூடனைப்போல் தன்னை நினைக்கும்படி செய்தான். அப்போது ரிஷிகள் இவனுடையபரம அம்சாசிரமத்தை பரமோத் கிருஷ்டமென்றுதோத்திரஞ்செய்தார்கள்.

அப்பால் என்னுடைய சத்திரயாகத்தில்இந்த ஆதிபுருஷனானவன் ஹயக்கிரீவனுக அவதரித்து வேதமயனுகியும் சகலதேவர்களுக்கும் அந்தராத்மாவாகியும் உருக்கினதங்கத்துக்குச்சமானமாகிய தேககாந்தியுடனேபிரகாசித்த இந்தயக்கியபுருஷனுடைய மூச்சுக்காற்றையுடைத்தாகிய நாசாரந்திரங்களிலிருந்து அதிபாவனமாகிய சப்தரூபங்களான வேதங்கள் பிரகாசித்ததுகள், அப்பால் பிரளயகாலத்திற் சகலபிராணிகளுடையசமூகங்களுக்கும் ஆதாரமாகிய பூமிஸ்வரூபமாகியும் மச்சியரூபமாகியும், சுவாயம்புமனுவால் காணப்பட்ட இந்தப்புருஷோத்தமனானவன் நான்பயந்தசமையத்தில் நழுவின வேதமார்க்கங்களைத் தான் அறிந்துகொண்டு அந்தஜலத்தில் விளையாடினனல்லவோ பின்பு க்ஷீர சமுத்திரத்தில் அமரசிரேஷ்டர்களும், அசுராதிபதிகளும்அமிர்தத்தைக் கடையும்போது இந்த ஆதிபுருஷன் கூர்மரூபத்தைத்தரித்து தன்முதுகால் மத்தான மந்தரபர்வதத்தையெடுக்குங்காலத்தில் அந்தமலையுடையவுரஞ்சுதலால் பரிகரிக்கப்பட்ட நினைவையுடைத்தாகி நித்திரையாகிறமகோச்சவத்தையடைந்தான்.

பின்பு சொர்க்கநிவாசிகளான தேவதைகளுடைய பயநிவர்த்தமாகிய நரசிம்மரூபத்தைக் கற்பித்து சுழன்றுக்கொண்டிருக்கிறபுருவநெறிப்பினுலும், தம்முஷ்டிறைகளாலும் விகடமாகிய முகத்தையுடைத்தாகியும், வெகுதூரத்திலிருந்து சமீபத்தையடைந்து பிரகாசித்துகதையைத் தரித்துமிருக்கிற தயித்தியேந்திரனுகிய இரண்ணியகசிபுவைத்தள்ளி நகங்களாற்பிளந்தார், பின்பு சரசுனுடைய நடுவிலே மிகவும்பலத்தை யுடைத்தாகிய முதலையால்பிடிக்கப்பட்ட பாதத்தையுடைத்தாகி யிருக்கிற கஜேந்திரனானவன் தன்மதமடங்கின பின்பு ஓய் ஆதிபுருஷனே அகிலலோகநாயகனே அதிபாவனமாகிய கீர்த்தியுடையவனே சிரவணமங்களமான நாமதேயங்களைத்தரித்தவனேயென்றுஉயர்ந்த தொனியையுடைத்தாகிய துதியைச்செய்து சரணுகதனுகிய கஜயூதனை அப்பிரமேயனுகிய அந்தச் சக்கிராயுதன் பக்ஷிராஜனுனகருடனுடைய புஜத்திலேறிதுறையாகி யெழுந்தருளி தன்சக்கிராயுதத்தால் அந்த முதலையுடைய வாயைப்பிளந்து அதின்முகத்தில் அகப்பட்டிருந்த கஜசிரேஷ்டத்தைத் தன்கையால்அவலம்பித்து தயாதிசயத்தால் அவனை உத்தாரஞ்செய்தவன் குணபரிபூரணனை ஸ்ரீஹரியேயல்லாமல் வேறல்ல, யக்கியமத்தியில் ஸ்ரீவிஷ்ணுவானவர் அதிதிதேவிக்குக் குமாரர்களான துவாதசாதித்தியாளுக்கு அபகிருஷ்டராணுலும் சுபகுணங்களால் மிகவும்சிரேஷ்டராகவே விளங்குகிறார்.

யாதொரு காரணத்தால் இந்தப்பதினுலு லோகங்களையும் வாமனரூபமாகிய தன்னுடைய பதன்னியாசங்களால் மூன்றடியென்றும் வியாஜத்தால் மகாபலிபிரதி

க்கினை பண்ணின உத்தரக்ஷணத்தில் ஆக்கிரமித்தான் சகலலோகநாயகனுகிய பரமபுருஷன்யாசனையைச்செய்யலாமோவென்ருல் நியாயமார்க்கத்திலிருக்கிற புருஷனை யாசனையைத்தவிர்ந்து மற்றவழிகளால் ஸ்தானப்பிரம்சஞ்செய்விக்கிறது சுவாமிக்கு உசிதமல்ல பக்தனுகியபலியை யாசனைபாலாகிலும் ஸ்தானப்பிரம்சம் செய்விக்கிறதும் உசிதமோவென்ருல் தன்னுடைய ஸ்ரீ பாததீர்த்தங்களை மிகவும் சிரசில்தரித்தும் தன்குருவாகிய சுக்கிராசாரியனுடைய வசனத்தையுமெண்ணுமல் அவன்வார்த்தைப் படிக்குத் தன்னுடையவிபவத்துக்கு இளப்பம்வந்திருக்கையிலும் தான்கொடுத்த மூன்ருமடி வைக்கிறதற்கிடமாகி தன்னையேகொடுத்தும் வேறே மனதிலொன்றும் நினையாதபலிக்கு இப்போது அவன்பலாத்காரத்தால் வந்திருக்கிற திரிலோகாதிபத்தியமும், முன்னவன் கோறிக்கையால் வருகிறமூன்றுலோக விபவமும் சரியானபிரயோசனமல்லவென்றுதன்சாலோக்கியமாகிய விபவத்தைக்கொடுக்கவேண்டுமென்று நினைத்துச்செய்த யாசனையும் அனுக்கிரகமேயல்லாமல்அவனுக்குநிக்கிரகமல்ல.

வாராய் நாரதனே, ஸ்ரீவாசுதேவனை சரணமாகவரித்தமகானுபாவர்கள் யாதொன்றை நன்ருய்த் துரிதமாக அறிவார்களோ, ஆத்மதத்வப்பிரகாசமாகியும்ஸ்ரீபாகவதமென்று நாமதேயத்தைத்தரித்துமிருக்கிற கியானசாதனத்தையும் பத்தியோகத்தையும் மிகுந்தபக்தியையுடைத்தாகிய உன்னுல் மிகவுமாதரவுடனே கேள்விசெய்யப்பட்டது, இப்பால் மன்வந்தரங்கள்தோறும், அததரித்து பத்துதிக்குகளிலும் வியாபித்திருக்கிற தன்னுடைய பராக்கிரமமாகிற சக்கரத்தைத்தரித்து மற்ற இராஜவர்க்கங்களுக்கு நிக்கிரகத்தைக் கற்பித்துத் தன்னுடைய திவ்வியசரித்திரங்களால் மூன்றுலோகங்களுக்கும்உயர்ச்சியான சத்தியலோகங்களிலேயும் தன் கீர்த்தியைவிர்த்திசெய்தான். பின்பு ஸ்ரீஹரியானவர் உலகத்தில் அவதரித்துத் தன்வந்திரியென்று திவ்யநாமதேயத்தைத்தரித்து மிகுந்தகீர்த்தி சம்பன்னராகி அதிகமாகியரோகங்களையுடைத்தான நரருடையவியாதிகளை தன் திருநாமத்தால் சீக்கிரத்தில் பரிகரித்து துர்மரணமில்லாத ஆயசுடைய சமுர்த்தியையுங்கொடுத்து தயித்தியரால் தள்ளப்பட்டிருந்த யக்கியபாகத்தையு மடைந்து ஆயர்வேதத்தையும் பிரகாசஞ்செய்து மறுபடியும் உக்கிரவீரியனுன பரசுராமருபத்தைத்தரித்து உலகத்தினுடைய ஜயத்தைக்குறித்துத் தெய்வத்தால் சம்பாதிக்கப்பட்டும் பிராமணுளிடத்தில் துரோகத்தால் வேதமார்க்கங்களையிழந்தும் நரகவேதுமாகிய கருமங்களை இச்சித்தும் பூமிக்குக் கண்டகம்போலவு மிருக்கிற க்ஷத்திரியகுலத்தைத்திக்ஷணமாகிய பரசுதாரையால்இருபத்தொருதலைமுறை சங்கரித்தான்,

பின்பு மாயேசனுனவன் தன்னுடையஅமிசமாகியலட்சுமணுதிகளான பிராதாக்களுடனே இட்சுவாகு வமிசத்தில் அவதரித்து தன்பிதாவாகிய தசரதனுடையசாதனத்திலிருந்து தன்னுடைய பாரியையாகிய சீதையுடனேயும், தம்பியாகிய லட்சுமணனுடனேயும் வனப்பிரவேசமாகி பத்துசிரசுடனேகூடிய ராவணனை விரோதஞ்செய்து அவன்பொருட்டு சமுத்திரத்தைப் பந்தித்து திரிபுரத்தைத்தகிக்கவேண்டுமென்று இச்சித்திருந்தஅரனைப்போல் தன்சத்துருவினுடைய பட்டணத்தைத்தகிக்கவேண்டுமென்று நினைத்திருக்கிற ஸ்ரீராமனிடத்திலிருந்து பயத்தையடைந்து நடுக்கமுண்டாகிவெகுதூரத்திலிருக்கிற சுகுர்தஜனமாகிய சீதாதேவிபால் கலக்கப்பட்ட ரோஷத்தினுல் சிவந்திருக்கிற வீக்ஷணத்தால் மிகவும் தாபத்தையடைந்த மகாமச்சியங்களையும், சர்ப்பங்களையும், முதளைகளையும்உடைத்தாகியு மிருக்கிறசமுத்திரராஜன் மார்க்கத்தைக் கொடுத்தான். இந்ததாசரதியானவர் சயின்னியமத்தியில் சஞ்சரிக்கிற பாரியாபகாரியான தெசகந்தனுடைய மார்பிலேமுறிந்து மிருக்கிற மகேந்திரவாகனமாகிய ஐராவதத்தினுடைய தந்தங்கள் போல் கீர்த்தியால்வெளுத்த திக்குகளுடைய விஜயத்தால்உண்டாகிய நகைப்பை இவன்பிராணங்களுடனே கூடதன்தனுசுடைய நாஞேசைகலால் அப்பொழுதே அபகரித்தார் பின்பு தன்மாயையால் தன்னம்சமானது கறுத்தும் வெளுத்துமிருக்கிற கெசங்களாகக் காண்பித்தஇந்தமாயன். அசுராமிசமாகிய அரசர்களுடைய சமுகத்தால் பிடிக்கப்பட்ட பூமியின்கிலேசத்தைப் பரிகரிக்கவேண்டி பலராமருடனே ஸ்ரீகிருஷ்ணனுக அவதரித்து ஜனங்களால் அறியப்படாத நடத்தையை யுடையவனுகி தன்னுடையமகிமைக்கு அனுகுணமாகிய கருமங்களைச் செய்யப்போகிருர். அதிபாலனுலே யுண்டான பூதனுமரணமும். அவதரித்த மூன்ருமாதத்தில் பாதத்தாலுண்டாகிய சகடபேதனமும், தவழ்ந்துவிளையாடுங்காலத்தில் ஆகாசத்தையளாவின மருதமரங்களுடைய நடுவிற்புகுந்த இவனுல்சனித்த அர்ச்சுனவிருக்ஷங்களுடைய பேதனமும் இடைச்சேரியிலிருக்கிறபசுக்களையும், பசுபாலர்களையும், விஷசலபானத்தால் மரித்த சமயத்தில் அனுக்கிரக நிமித்தியமாகிய அமுர்ததிருஷ்டி-வருஷத்தால் ஜீவனஞ்செய்விக்கப்போகிருன் இதுவுமல்லாமல், கோக்களும், கோபாலர்களும், ஜலபானஞ்செய்த யமுனுமடுவில் விளையாடிக்கொண்டு விஷசோதனுரதமாக ஆலகாலவீரியத்தால் அலைந்துகொண்டிருக்கிற நாக்கையுடைத்தாகிய காளியனை யுச்சாடனஞ்செய்யப்போகிருர். ஒருவராலேயும் அறியக்கூடாத

வீரியத்தை யுடைத்தாகிய ஸ்ரீகிருஷ்ணன் பலராமருடனேகூடக் காளியனைநிக்கிரகித்த தினத்தின்ராத்திரியில் யமுனாதீரத்தில் கிரீஷ்மருதுவால் மிகவும்உலர்ந்தமரங்களையுடைத்தாகிய முஞ்சாடவியில்அயர்ந்து நித்திரையடைந்திருக்கையில்காட்டுத்தீயாற்றகிக்கப்படுகிறபொழுது அந்தஜனங்களைக் கண்களைமூடச்சொல்லி உத்தரஞ்செய்யப்போகிறதை ஜனங்கள் சொல்லப்போகிறார்கள். இந்த ஸ்ரீகிருஷ்ணனுடையதாயான அசோதை இந்தக்குமாரனுடைய பந்தனநிமித்தமாக எங்கெங்கிருந்தக்கயிற்றையெடுப்பாளோ அந்தப்பாசமெல்லாங் குறைவாகவேயிருக்கும். மறுபடியும் மாதாவான கோபிகையானவள் கொட்டாவிவிடுகிற இவனுடையவதனத்தில் ஈரேழுலகங்களையுங்கண்டு தன்மனதிற்சங்கித்து, இவன்பரமபுருஷனென்று நிச்சயிக்கப்போகிறாள். வருணபாசத்தாற்சனித்தபயத்திலிருந்து நந்தகோபனையும், வியோமனென்றுபெயரையுடைய மயன்குமாரனால் பிலத்தில்மறைக்கப்பட்டகோபாலர்களையும் விடுவிக்கப்போகிறான். அக்கினியால்பரிக்கப்பட்டும் ராத்திரியில்மிகவும்சிரமத்தில் நித்திரையடைந்து மிருக்கிற கோகுலவாசியான சனத்தை ஸ்ரீவைகுந்தநகரத்தையடையச்செய்விப்பான். இந்தஸ்ரீகிருஷ்ணன் ஏழுவயதாயிருக்கையில் கோபாலாள் இந்திரனுக்குச்செய்கிறயக்கியமானது கெடுக்கப்பட்டளவில் விரகத்தினுடைய க்ஷயத்தின்பொருட்டு இந்திரனானவன் வருஷத்தைக் கற்பவித்தசமயத்தில் பசுக்களைரட்சிக்கவேண்டுமென்று இச்சித்து பரிசுத்தமாகியும் ஒன்றாகியுமிருக்கிற கரத்தில்கோவர்த்தன பருவதத்தைமேலேயெடுத்து ஏழுநாள்வரைக்கும் லீலையுடனே தரிக்கப்போகிறான் வனத்திற் சந்திரகிரணத்தால் வெளுத்திருக்கிற ராத்திரியில்விளையாடிக்கொண்டும்ராஜக்கிரீடாநிமித்தமாகக்கோபிகளுடையமார்க்கங்களை நிரீக்ஷித்துக்கொண்டு மிருக்கிற இந்தவாசுதேவன் அவியக்தமதுரமாகியுமிருக்கிறசுரபி சேஷத்தையுடைத்தான கியானத்தால்விர்த்திபண்ணப்பட்ட காமரோகத்தை யுடைத்தாகியஸ்திரீகளை அபகரிக்க நினைத்துவந்த குபேரன்தம்பியாகியசங்கசூடனுடைய சிரசையரிக்கப்போகிறார்.

பிரலம்பாசுரனும், தேனுகனும், பகனும், கெதியும், அரிஷ்டனும் முஷ்டிகனும் சாணூரனும், குவலையாபீடமென்கிறயானையும் சம்சனும், காலயவனனும் நரகாசுரனும், பவுண்டிரீகன் முதலானபேர்களும், மற்றுமுள்ளசால்வனும், துவிதனும், பல்வலனும். தந்தவக்கிரனும், ஏழு எருதுகளும், சம்பாசுரனும், விடூரதனும் ருக்குமி முதலானபேர்களும், காம்போஜனும், குருகுலத்திற் பிறந்தவர்களும், சிரஞ்சயனும், கேகயன் முதலானபேர்களும், எவர்கள் யுத்தபூமியில் ரணத்தைச்சிலாகித்துக்கொண்டு கையில்பிடித்த வில்லுகளுடனேசஞ்சரிப்பார்களோ, அவர்களெல்லாரும் பலராமனென்றும்வீமனென்றும், அர்ச்சுனனென்றும், பரியாயமாகியநாமதேயங்களையுடைத்தான ஸ்ரீஹரியால்ஒருவராலேயுங்காணக்கூடாமலும் அரிநிலையமாகியுமிருக்கிறவைகுந்தத்தைக்காலாந்தரத்தில் அடையப் போகிறார்கள் இவையெல்லாம் திவ்யசரித்திரமென்றேநினைக்கவேண்டுமேயல்லால் மற்றதெல்லாம்பின்பு யுகங்கள்தோறும்காலத்தினால் லயத்தையடைந்த புத்தியையுடைத்தாகியும் சொல்பமாகிய ஆசையடைந்துமிருக்கிற நரருக்குத்தன்னதான வேதங்களுடையமுடிவைக்காணுகிறதுமிகவும் அரிதென்றுநிச்சயித்து சத்தியவதியிடத்தில் வியாசராகஆவிற்பவித்து வேதமாகிற விருக்ஷத்தைச்சாகையென்கிறகிளையாக விபாகஞ்செய்யப்போகிறார், பின்பு மயனால் நிர்மிக்கப்பட்டும் அறியக்கூடாத வேகத்தையுடைத்தாகியுமிருக்கிற புரங்களால்லோகங்களைச் சங்கரித்துத்தேவதுவேஷிகளாகியும் வேதோத்தங்களாகிய தர்மானிஷ்டானத்தில் நிரதராகியுமிருக்கிறபாஷண்ட ஜனங்களுக்கு யோக்கியமாகிய விஷயங்களைநிவர்த்தித்து அயோக்கியமாகிய வஸ்துக்களைப் பரிக்கிரகித்தும் விகாரமாகியமதியைக் கற்பிக்கவேண்டி அதற்குச்சித்தமாகிய வேஷத்தைத்தரித்துப் பாஷண்ட தருமங்களை மிகவுஞ்சொல்லப்போகிறார்.

எந்தக்காலத்தில் சத்புருஷாளுடையகிரகங்களில்ஸ்ரீஹரி கதைகளில்லாமற்போகுமோ அந்தக்கிரகங்களில் ஜனித்த பிராமணாள் பாஷண்டிகளாகிறார்கள் சூத்திரகுலத்திற்பிறந்தபேர்கள்எந்தக்காலத்தில் ராச்சியபாரஞ்செய்வார்களோ எப்போது சுவாகவென்றும், சுவதாவென்றும், வஷ்டென்றும்- சொல்லப்படுகிறசப்தங்கள் க்ஷயிக்குதோ அந்தக்கலியுகாந்தத்தில் இவைகளைச்சிருஷ்டிக்கவேண்டிக் குணபரிபூரணனானபகவான் அவதரிக்கப்போகிறார் சிருஷ்டிகாலத்தில் தபசும்,நானும். ரிஷிகளும்,ஸ்ரீவிஷ்ணுவும்,மனுக்களும்அமரர்களும்,ராஜாக்களும் வியகாலத்தில்அதருமமும்,அரனும்,கோபப்பிரதானங்களானசர்ப்பங்களும்,அசுராதிகளும், மிகுந்தசக்தியையுடைத்தாகிய இந்தப்பகவானுடைய மாயா விபூதிகளே கியானியாயிருந்தாலும் யாதொருவன் பூமிரேணுக்களைஎண்ணி நிச்சயிப்பானோஅவன்விஷ்ணுவுடையவீரியங்களைக் கமனஞ்செய்கிறதற்குச் சமர்த்தனாவான் பரமபுருஷனுடைய மாயாபிலத்தின் முடிவை நானறியேன் உனக்குமுன்னமேபிறந்து அன்றுமுதல் இன்றையவரைக்கும் தியானஞ்செய்கிறசனகாதிகளும்அறியமாட்டார்கள். ஆதிதேவனாகியும் ஆயிரமுகங்களைத் தரித்து மிருக்கிறசுசேஷனும் இவனுடையசுகுணங்களை இது

வரைக்கும் கானஞ்செய்துகொண்டிருந்தாலும்முடிவை ஒருகாலத்திலும்அறியமாட்டார்கள், அப்படிக்கொத்த மகிமையையுடைத்தானஇந்தப்பகவான் எவர்களிடத்தில் தயவுசெய்வாரோ அந்தப்புருஷர் சர்வப்பிரகாரத்தாலும் இந்தஅனந்தனுடைய திருவடிகளைநிஷ்டகப்படமாக ஆசிரயிப்பார்கள் இப்படி ஆசிரயித்த சாதுசனங்களே அசக்கியமான ஸ்ரீவாசுதேவனுடையமாயை மிகவும்அதிக்கிரமிப்பார்கள் இப்படி மாயையைக் கடந்த சனங்களுக்கும்நாய்நரிகளுக்குப்பட்சணமாகியஇந்தத்தேகத்தில் ஆத்மபுத்தியானது சனிக்கமாட்டாது.

முனிகள் யாதொன்றைப்பிரமமென்று நிச்சயித்திருக்கிறார்களோ அதுவே பரமபுருஷனாகிய பகவானுடையஸ்வரூபமென்றுதெரியவேண்டும்,பிரமமாவது நித்தியமாகியும் எப்போதும்சுகமாகியும் சோகமில்லாமலும் இருக்கிறவஸ்துவாம் அது சர்வகாலத்திலும் சாந்தமாகியிருக்கிறபடியால் எப்பொழுதும்சுகமாகுமென்று எப்பொழுதும் சுகமாகையால் நித்தியசுகமா யிருக்குமென்று பயமில்லாமலிருக்கிறபடியால்சோகமில்லாமலிருக்குமென்று சகலசேதனசேதனங்களிலும் வேண்டாமலிருக்கிறபடியால் பயமில்லையென்றும்கியானரசமாகையாலும், மற்றொன்றிலும் ஒன்றுதென்றும் பிரகிருதிசம்பந்தமில்லாமையில்லை சர்வசமமாகையாலும் காரியாகாரணங்களைக்காட்டிலும் பரமாகையாலும்ஆத்மதத்துவமென்றுஞ்சொல்லப்பட்டது ஆனால் இந்தஆத்மஸ்வரூபம் இவ்வளவென்றுநிச்சயிக்கலாமோவென்றால்வேதாந்தசுருதிகளும் அந்தஸ்ரூபஸ்வபாவங்களை அளவிட்டு அறியமாட்டாதுகள் வேதங்களால் புகழப்பட்ட யக்கியாதிகருமங்களும் தனக்குப் பலமாக அவனைப் பரிசிக்கமாட்டாது. மாய்கையும் அவன்எதிரே நிற்கிறதற்கு லஜ்ஜித்துக்கொண்டு விலகிநிற்கும் விஷயங்களில் தொடர்ந்து திரிகிறமனதைஇந்தப் பரப்பிரமத்தினிடத்தில் நியமித்தமுனிவர்கள் விதிஷ்டாபேதமாகியகாரணத்தைத்தரித்திரனாகியிருந்தவன் ஐஸ்வரியசம்பன்னனானபின்பு ஜலானுபவதிசையில்கூபசாதனமாகியஆயுதத்தைத் தரிக்கிறுப்போல் பரிகரிப்பார்கள்.

மகத்வாதிகளுடைய ஸ்வபாவத்தினால் ஜனித்தகாரியங்களுக்குப் பிரசித்தியானது எவனுடையஆதீனமோ அவனே முத்திதிசையில்அனுபவிக்கிற சகல சுபங்களுக்கும் சுவாமியாகியும் தாதாவாகியுமிருப்பான் இந்தத் தேகமானது தனக்குப்பிரிவிலாக் காரணமாகியபஞ்சபூதங்களும் லயித்தவுடனே தானும்லயத்தையடையுங்காலத்தில் இந்தத்தேகத்திலிருக்கிற சிவசரீரகனாகியபரமபுருஷன் தான் ஜனியாதவனாகையால் - ஆகாசத்தைப்போல் லயத்தையடையமாட்டான்,

வாராய் வத்சனே, விசுவத்தையும் பிறப்பித்த குண பரிபூரணனை வேதங்கள்சொல்லுகிறபடிக்கு உனக்குநான்சொன்னேன் இவனுடையமகிமையைச் சொல்லவேண்டுமென்றால் ஒருவராலேயும் சொல்லிமுடியாது சூட்சுமமாகியும், ஸ்தூலமாகியும், காரியமாகியும், காரணமாகியுமிருக்கிற வஸ்துக்களெல்லாம் ஸ்ரீஹரியைக்காட்டிலும் வேறல்ல இந்தவிருத்தாந்தமானதுபகவானுடைய ஸ்வரூபஸ்வபாவங்களை அவலம்பித்திருக்கையால்ஸ்ரீபாகவதமென்று நாமதேயத்தை யுடைத்தானது எனக்குப் பகவானால்உபதேசிக்கப்பட்ட இந்தஸ்ரீபாகவதமானது ஸ்ரீபகவானுடைய விபூதிகளுக்குச்சங்கிரகமாயிருக்கிறபடியால் இதைநீவிஸ்தாரமாகப் பிரகாசஞ்செய்யவேண்டும் சகல சேதன சேதனங்களுக்கும் ஆத்மாவாகியும் இவைகளுக்குஆதாரமாகியும்சுகுணபரிபூரணனாகியும்மிருக்கிற ஸ்ரீஹரியிடத்தில் நரருக்குப்பக்தியானது எப்படிவிருத்தியாகுமோ அப்படிசங்கற்பித்து வர்ணிக்கத்தக்கது சுதந்தரனாகிய இந்தப்பரம புருஷனுடைய சங்கற்பத்தைவர்ணித்தவனும் இதைக்கேள்விசெய்துசந்தோஷித்தவனும் நித்தியமும்சிரத்தையால்கேள்விசெய்கிறவனும் பிரகிருதிமகிமையால் மோகத்தை யடையமாட்டார்கள்.

---

சாக்ஷிணேநம.

## அ-வது- அத்தியாயம்.



கலிவிருத்தம்.

மன்னுநற்பரிச் சித்துமகாராஜன்
துன்னுஜீவர்க்குத் தோற்றுந்தேகபந்தம்
என்னமாய்க்கூடுமென் றேயாட்சேபித்து
பன்னிடும்புராண பிரசனஞ்செய்தாரரோ

பரிட்சித்தானவன் ஜீவேஸ்வராளுக்குத் தேகசம்பந்தம் எப்படிகூடுமென்று ஆட்சேபித்து மற்றும் அறியவேண்டியதுகளாய் வெகு பிரகாரங்களான புராணஅற்புதங்களைப் பிரஸ்னஞ் செய்தானென்று சொல்லப்படுகின்றது,

இப்படி நாரதருக்குப் பிரமஉபதேசத்தால் அவதரித்த ஸ்ரீபகவத் சங்கிரகத்தை உபதேசித்த ஸ்ரீசுகமுனியைப்பார்த்து பரிட்சித்துமகாராஜன் பிரஸ்னஞ்செய்கிறான். ஓய் பிரமரிஷியே! ஹேயகுணரகிதனாகியஸ்ரீஹரியினுடைய கல்யாணகுணங்களை வர்ணிக்கசொல்லிகமலாசனனால் ஆக்கியாபிக்கப்பட்ட ஸ்ரீநாரதமுனீந்திரன் எவரெவருக்கு எப்படிச்சொன்னாரோ அதை யறியவேண்டுமென்று இச்சித்திருக்கிறேன் ஓய்வேதாந்த கியானிகளில் சிரேஷ்டனான மகானுபாவனே அற்புதமாகிய பராக்கிரமத்தையுடைத்தாகிய ஸ்ரீஹரியுடைய க்ஷேம

கரங்களான கதைகளைச் சொல்லவேண்டும், எப்படியானால் நான் அகிலாத்மாவாகிய ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் சங்கரசிதமாகிய மனதைநியமித்துஇந்தக் களேபரத்தைத்தரிசிப்பேனோ அப்படியேவர்ணிக்கவேண்டும், சிரத்தையினால் நித்தியமுங் கேள்விசெய்தும் தான் சரித்திரத்தைக் கானஞ் செய்துகொண்டு மிருக்கிற புருஷனுடைய இருதயத்தில் கர்னரந்திரத்தால் சீக்கிரமாகப் பிரவேசித்து, அந்த இருதயகமலத்தில் வாசஞ்செய்துக்கொண்டு அவர்களுடைய பாபத்தைச் சரருதுவானது ஜலத்தினுடைய மலத்தை அரிக்குமாப்போல் உதறிப்போடுவார்.

இப்படி கழுவப்பட்ட பாபத்தையுடைத்தான புருஷன் ஸ்ரீகிருஷ்ணனுடைய பாதமூலத்தை விடமாட்டான் இங்கத்திருவடிபஜனத்தால் விஷயசங்கங்களால்வந்த கிலேசங்களைத்தவிர்ந்து வழிநடக்கிறவன்வீட்டையடைவதுபோல் ஸ்ரீகிருஷ்ணனுடைய சிரவணாதிகளைத் தவிர்ந்து மற்றொன்றை நினைக்கமாட்டான் ஓய் பிர்மநிஷ்டரே பிராகிருதசம்பந்தமில்லாத இந்தச் சீவாத்மாவுக்கு பிரிதிவிமுதலான பூதங்களானது தனதுகருமமாகிறகாரணத்தால் உண்டாச்சுதோ, இல்லையென்று நிர்மித்தமாகவேயிருக்குமோ இதையும்இந்தலோகங்களுடைய வின்னியாசம்போலிருக்கிற லக்ஷணத்தை யுடைத்தான பத்மமானது எவனுடைய உதரத்திலிருந்து ஜனித்ததோ, தன்னிடத்திலிருக்கிற அவயவங்களை ஆசிரயித்த அந்தப்பரமபுருஷனும் உலகத்தில்சஞ்சரித்தும் காணப்பட்டுக்கொண்டு மிருக்கிறஜீவனுக்கு வேறுவேறாகிய அவயவங்கள்எவ்வளவுண்டோ அவ்வளவையும் உடைத்தாகியிருக்கிறானென்று சொல்லப்பட்ட இங்கச்சரீரத்தினுடைய ஸ்வரூபத்தையும்வெளியிட்டுச் சொல்லவேண்டும் பஞ்சமஹாபூதங்களுக்கும், நியந்தாவாகியும்,பிரபஞ்சங்களுடைய சிருஷ்டியும், திதியும், லயமும் பிறந்தபுருஷன்தன்மாய்கைக்குஈசனாகவும்சகல சுகுணங்களுக்கும் ஆசிரயமாகி தன்னுடைய சிருஷ்டிசங்கற்பத்தை நிவர்த்திந்து எவடத்தில் சயனஞ்செய்கிறான் லோகபாலர்களுடனே சகலலோகங்களும் பரமபுருஷனுடைய அவயவங்களால் கற்பிக்கப்பட்டதென்றும், லோகபாலர்களுடனேகூடிய உலகங்களால் இந்தப்பரமபுருஷனுடைய அவயவங்கள் கற்பிக்கப்பட்டதென்றும் கேட்டிருக்கிறோம் இதனால்மனதுக்கு நிலையில்லை இதுவுமல்லாமல் அறியவேண்டிய அர்த்தங்கள் விஸ்தாரமுண்டு அதுஎப்படியென்றால் மகாகல்பமும், அவாந்தரகல்பமும் எவ்வளவுகாலமாகவிருக்கும், பூதமென்றும், பவிஷியமென்றும், பவத்தென்றும் சொல்லப்படுகிற சப்தங்களைப் பேராகவுடைத்தான காலத்தைஅனுமானப் பிரமாணத்தால் அறியும்வகை எப்படி மனுஷரென்றும், தேவரென்றும், பிதுர்க்களென்றும், சொல்லப்படுகிற சீவராசிகளுடைய ஆயுட்பிரமாணம் எவ்வளவு இந்தப் பூமியில் ஜனிக்கிற பிராணிகளுக்கு இவர்களுடைய காலானுசரணம் சொல்பமாகியும் மகத்தாகியு மிருக்கிறதைஎப்படிஅறியலாம். வருகிறகருமமாகிறகதிகள் எவ்வளவு அந்தக்கருமகதிகள் எப்படிக்கொத்தபலன்களைக் கொடுக்கும்,

ஓய்பிராமணோத்தமனே ? எந்தவர்னத்திற்ஜனித்தவனுக்கும் எந்தக்கருமம் விகிதமாகவிருக்கும், அந்தக்கருமத்தை அவன் எப்படிஅனுஷ்டிக்கவேண்டும் அனுஷ்டித்தகருமம் அவனுக்குஎப்படிப்பட்ட பலனைக்கொடுக்கும் அந்தக் கருமங்களிலுண்டாகிய குணவிஸ்தாரத்தையும், குணியானகருமத்தினுடைய விஸ்தாரத்தையும், பூமி பிறந்ததையும், பாதாளஞ் ஜனித்ததையும், திக்குகள் உண்டானதையும் ஆகாசத்தினுடைய ஆவிற்பவத்தையும், நவக்கிரகங்களும், நக்ஷத்திரங்களும், மலைகளும், நதிகளும், சமுத்திரங்களும், தீவுகளும் பிறந்தவிபரத்தையும் இதுகளில்வாசஞ்செய்கிற பிராணிகளுடைய உற்பத்தியையும், அண்டகடாகத்தினுடைய அளவையும் இதின்உள்ளும்புறமும் இருக்கிறவஸ்துக்களுடைய ஜனனத்தையும் மகாபுருஷாளுடைய சரித்திரத்தையும், வர்ணாசிரமங்களுடைய நிச்சயத்தையும், மிகவும் ஆச்சரியகரமாகிய ஸ்ரீஹரியுடைய அவதாரசரித்திரங்களையும், யுகங்களையும், யுகப்பிரமாணங்களையும் அந்தயுகங்களிற் செய்யவேண்டியதருமங்களையும், மனுஷாள்எல்லாரும் செய்யவேண்டியதருமங்களையும், அந்தந்த வர்ணாசிரமத்தார் விசேஷமாகச் செய்துக்கொள்ளவேண்டிய தருமங்களையும், சகலஜாதிகளும்அவரவர்கள்விருத்தியால் ஜீவிக்கவேண்டிய தருமங்களையும், ராஜரிஷிகளுடைய தருமங்களையும், ஆபத்தையடைந்தவர்கள் அனுஷ்டிக்கவேண்டிய தருமங்களையும், பிரகிருதிமுதலான தத்வங்களுடைய ஸ்வரூபங்களையும், அதுகளுடைய பிரமாணங்களையும், அதுகளால் நடக்கிற கருமங்களையும் பரமபுருஷனுடைய ஆராதனை விதியையும், யோகலட்சணத்தையும்ஆத்மக்கியானஸ்வரூபத்தையும், யோகேஸ்வரர்களுடைய அணிமாதியஷ்ட ஐஸ்வரியங்களையும், யோகிகள் முக்தியடையுங்காலத்தில்அவர்களுடைய லிங்கசரீரவர்த்தியையும் நாலு வேதங்களையும்; ஆயுர்வேதமுதலான வுபதேசங்களையும் தருமசாஸ்திரங்களையும்,இதுகளிற்சேர்ந்த இதிகாச புராணங்களையும் சர்வபூதங்களுடைய வுற்பத்தியையும், ஸ்திதியையும், பிரளயத்தையும், வேதோக்தமானகருமங்களையும்; ஸ்மிருதிகளாற் சொல்லப்படுகிற கருமங்களையும், நித்தியங்களாகியும், மகமியங்களாகியுமிருக்கிற அக்கினிசோத்திரங்களுடைய விதிகளையும், தருமார்த்த காமங்

களுடைய கதியையும், நிஜமான தருமங்களைத் தேஜித்தவர்களுடைய ஸ்திதியையும், பாஷண்டோற்பத்தியையும், சீவாத்மாவுடைய பந்ததிசையையும் மோக்ஷஸ்திதியையும், இந்தஇரண்டையுந் தவிர்ந்தசமையத்தில் இந்த சீவனுடையநிலையையும் சுதந்திரனான பரமாத்மன் தனக்குச் சுவாதீனமாகிய பிரகிருதியுடனே விளையாடுகிறலீலையும், இந்தமாயைவிட்டு இவன் அறியாதவன்போல் சாட்சியாகவிருக்கிற இருப்பையும், எனக்குக்கிரமமாகவெளியிட்டு தேவரீர் அருளிச்செய்யவேண்டும், ஓப் முனீந்திரனே ? தேவரீருடையதிருவடிகளைநம்பின அடியேனுக்கு இந்த அர்த்தங்களைவெளியிட்டு அடியேன் கிரதார்த்தனாகும்படிசெய்கிற பாரம் தேவரீருடையதேயல்லாமல்மற்றொன்றில்லை இன்னம்வெகுபெயர்கள் எழுந்தருளியிருக்கிறார்கள் இவர்களெல்லாரும் தங்கள் தங்களுடைய பெரியோர்கள் அனுஷ்டித்ததருமங்களைத்தாங்களும் அனுஷ்டிக்கிறார்களே யல்லாமல் தேவரீரைப்போல் அறியமாட்டார்கள்.

வாரீர் பிராமணோத்தமனே ? அனசனவிருதத்தாலும், பிராமணசாபத்தினாலும், மிகவுந்தேகத்தை யடைந்திருந்தாலும், ஸ்ரீஅச்சுதனுடைய கதாமிருதத்தைப்பானஞ்செய்கிற என்னுடையபிராணங்கள் பராதீனமாகவில்லையென்றுசொல்லுகிற தேவராதனால்சச்செனபதியான ஸ்ரீ ஹரியுடைய கதாமிருதத்தைச் சொல்லவேண்டுமென்று சதசிலேவரிக்கப்பட்ட சுகரானவர் அந்தப்பரிட்சித்தைக்குறித்து பிரமகற்பமானது வந்தசமயத்தில் ஷட்குணபரிபூரணனாகிய ஸ்ரீபகவானால் சதுர்முகனுக்குஉபதேசமாகிவந்தும் வேதாந்தசமானமாகியுமிருக்கிறஸ்ரீபாகவதபுராணத்தைச் சொல்லத்தொடங்கினார் பாண்டுகுலத்திற்ஜனித்தவர்களிற் சிரேஷ்டனாகிய பரிட்சித்துப்பிரசனஞ்செய்த அர்த்தங்களைக்கிரமமாகவேசொல்லவேண்டுமென்று உபக்கிரமித்தார்.

---

ஆ ஜா ய ந ம.

## கூ-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

துரிதமாகச் சுகப்பிரமரிஷி
அரியினாற்பிர்ம தேவற்கருளிய
விரிவாம்பாகவ தத்தைவிபரமாய்
அரியம்சப்ரிச் சித்துக்கருளினார்,

சுகப்பிரமரிஷி ஸ்ரீ ஹரியினாலே பிரமதேவனுக்குச் சொல்லப்பட்ட பாகவதத்தைபரிட்சித்துவுக்குச்சொன்னாரென்று சொல்லப்படுகின்றது.

வாராய் பரிட்சித்துமகாராஜனே பஞ்சமகா பூதங்களுடனே சம்பந்தமில்லாத சீவனுக்கு இந்தப்பூதங்களால்நிற்கப்பட்ட சரீரசம்பந்தம்எப்படியுண்டாகுமென்று பிரஸ்னஞ் செய்ததற்குப் பிரதியுத்தரம் ஸ்ரீமந்நாராயண சதுரரான நாரதவியாசபரம்பரைகளால் நானறிந்தபடிசொல்லுகிறேன்கேளும், பிரகிருதியைப்பார்க்கிலும்உத்கிருஷ்டனாகியும் அனுபவஸ்வரூபனாகியு மிருக்கிறசீவனுக்குப் பரமாத்மாவினுடையசம்பந்தம்வந்தபின்பு மூலகாரணமாகிய பிரகிருதியானது தேவமனுஷியாதி ரூபமாகவேவிளங்கி இந்தச்சரீரங்களில் ரமித்து என்னுதென்றும் நானென்றும் எண்ணிக் கொள்ளுகிறான். எப்போதும் பரமபுருஷனிடத்தில் பத்திசெய்கிறானே அந்தச்சமயத்தில் சகலமோகங்களையுந் தவிர்ந்து தன்னிடத்திலிருக்கிற குணாஷ்டக ஆவிற்பாவத்தை யடைந்து ஹேயகுணரகிதனாகியிருக்கிற பரமபுருஷானுபவத்தில் நிலையாகிநிற்பான் ஈஸ்வரனுக்கும், சீவனுக்கும் உண்டாகிய சரீரசம்பந்தம்போல் அவயவசம்பந்தமிருந்தால் அவனுக்குச் சீவர்களைப்பார்க்கிலும் விசேஷமில்லையாகையால் அவனிடத்திற்செய்தபக்தியால் சீவர்கள் எப்படிகடைத்தேறுதலென்று பிரஸ்னஞ் செய்ததற்குப் பிரதியுத்தரஞ்சொல்லுகிறேன் கேளும்நிஷ்கபடமாகிய பிரமதேவனால் பூஜிக்கப்பட்ட ஸ்ரீமந்நாராயணன் அந்தச்சதுரானனைக்குறித்துப் பிரகாசஞ் செய்தகியானானந்த ஸ்வரூபமாகியும், சத்தியமாகியு மிருக்கிற தனனுடைய திவ்யமங்கள விக்கிரகத்தைக் காண்பித்துதபசுமுதலான சிலாக்கியசரித்திரங்களால் தன்னிடத்தில் பக்திசெய்யவேண்டுமென்றுஉபதேசஞ் செய்தபடியினால் அந்தப்பரமபுருஷனிடத்திற் செய்தபக்தியோகம் சீவாத்மவர்க்கங்களுடைய முக்திக்குச்சாதனமாகிய தத்வக்கியானத்தை ஜனிப்பிக்கிறதிற் சம்சயமில்லை ஆனால்இவ்விடத்தில் என்னசொல்லப்பட்டதென்றால்ஈரேமூலகமாகிய அவயவங்களுடைத்தான பரமபுருஷதியானத்தால் கியானானந்தஸ்வரூபமாகிய லீலாவிக்கிரகவிஷயகமான பக்திபிறந்தபின்பு முக்திசாதகமாகிய தத்வக்கியானம் பிறக்குமென்று சொல்லுகையால் இந்தப் பக்திவிஷயமாகிய திவ்யமங்களவிக்கிரகம் கியானானந்தஸ்வரூபமாகையால் சீவசரீரங்களைப் பார்க்கிலும் விலக்ஷணமென்று வியக்கமாகவேசொல்லப்பட்டது பிரமதேவனுக்கு அந்த ஆதிபுருஷன் எந்தக்காலத்திலுபதேசஞ்செய்தாரென்றால் தேவர்களுக்கெல்லாம்ஆதிதேவனாகியும், பக்தியைச்செய்கிற பேர்களுக்கெல்லாம்பரமகுருவாகியு மிருக்கிற அந்த பத்மசம்பவன் தனக்கு ஆசனமாகிய கமலநாளத்தின்வழியாக சிலதுதூரமிறங்கி அதனுடைய அசைவினாலேவந்துதனக்காதாரமாகிய அந்த அம்புஜத்தில் சலியாமலிருந்துக்கொண்டு சிருஷ்டி செய்யவேண்டுமென்று சங்கற்பித்து இந்தப்பிர

பந்தங்களுடைய பிர்மாணமாகிற கருமம் எப்படியானால் தலைக்கட்டுமோ அப்படிப்பட்ட சங்கற்பபூர்த்தியில்லாமையினால் அது நிமித்தமாகச் சிந்தித்திருக்கிற சமயத்தில் இரண்டக்ஷரமாகிய சப்தமானது இருந்தா லுச்சரிக்கப்படாததாகிய ரூபத்தில் ஆவிர்பவித்தது. அந்தவார்த்தையவன் கேள்விசெய்தான்

ஓய் ராஜாவே! ஸ்பரிசங்களாகிய வர்ணங்களில்பதினாறும் வர்ணமும், இருபத்தொன்றும் வர்ணமுங் கூடிய இந்தச்சப்தந்தன் அர்த்தத்தை அகிஞ்சனருக்குத்தனமாயிருக்குமென்றுசொல்லுவார்கள்இந்தச்சப்தத்தை ஆகாவுடனே கேள்விசெய்த அந்தச் சுரசிரேஷ்டன் அந்தச்சப்தத்தை யுச்சரித்த புருஷனைக்காணவேண்டுமென்று இச்சைபட்டு பத்துத்திக்குகளிலும் தன்கண்களை விஸ்தாரமாகப்புகட்டி அதுகளில் தன்னைவிட மற்றொருவனைக்காணாமல் அந்தப்பீடமத்தியில் உறுதியாகவிருந்து தான் கேள்விசெய்த சப்தத்தைத்தனக்கு இதமாக நிச்சயித்து தபசைச்செய்ய வேண்டுமென்று நிச்சயித்தான் அப்பால் தபதபவென்று கேட்கப்பட்ட சப்தத்தில் விகாதமில்லாத நிச்சயத்தை உடைத்தாகியும், பிராணதிவாயுக்களையும், மனதையும், ஞானேந்திரியங்களையும், கருமேந்திரியங்களையும், நிக்கிரகித்துத்தவசுசெய்தவர்களுக்குள்ளே உறுதியான தவசையுடைத்தாகியுமிருக்கிற அந்தப்பாரதவல்லபன் ஏகாக்கிரசித்தனாகி சகலலோகங்களுக்கும் பிரகாசமாகிய தவசைஆயிரந் திவ்யவருஷம் அனுஷ்டித்தான். இப்படி தவநிலைபெற்ற மனதையுடைத்தான பிர்மதேவனாலே யர்ச்சிக்கப்பட்ட குணபரிபூரணன் குமிதியாகியாகிய புண்ணியத்தையுடைத்தாகிய தேவர்க்களால் ஸ்தோத்திரஞ் செய்யப்பட்ட தன்னதான அந்தவுலகத்தை யந்த இரண்யகர்ப்பனுக்குக் காண்பித்தார். அவ்விடத்தில் மாயாவிகாரங்களாகிய காமக்குரோதமுதலானதுகள்இல்லை. அவ்விடத்தில் ஸ்ரீஹரியுடைய நித்தியகயிங்கரியத்தில் நிரதராகியும், தேவர்களாலேயும், அசுரர்களாலேயும், அர்ச்சிக்கப்பட்டும் சில மகானுபாவர்கள் வாசஞ்செய்கிறார்கள் அவர்கள் எப்படியிருக்கிறார்களென்றால் காசாம்பூவினுடைய நிறம்போலிருக்கிற வர்ணத்தையுடைத்தாகியும், கமலதளம்போலிருக்கிற கண்களுடனேயும், பீதாம்பரங்களைத் தரித்துச்சிலாக்கியமாகியகாந்திகளுடனேயும், மிருதுவான சரீரங்களுடனேயும், நாலுபுஜங்களால் பிரகாசித்தும் மிகுதியான்வொளியுடனேயும், சிலாக்கியமான ரத்தினங்களைத்தரித்து மிருக்கிற பதக்கங்களையும் முத்தாரங்களைத்தரித்து மிருக்கிறார்கள் இப்படியே பவளவர்ணம்போன்ற சிவந்தசரீரமும், வைடூரிய நிறம்போலிருக்கிறசரீரங்களும், தாமரைவளையத்துக்கு நிகரான சுப்பிரமாகிய காயங்களுடனேயும், பிரகாசிக்கிற சில நித்தியசூரியர்கள்பத்துத்திக்கிலும்ஒளியினால்விளங்குகிற குண்டலங்களையும், கிரீடங்களையும், வனமாலைகளையுந்தரித்து விளங்குகிறார்கள். சமஸ்ததிக்கிலேயும் பிரகாசித் துக்கொண்டிருக்கிற திவ்யமாகிய விமான வரிசைகளில் விளங்குகிற மகாபுருஷரால் அற்புதமாகியும் தங்களுடையகாந்திகளால் பிரகாசிக்கிற சரீரங்களைத்தரித்த உத்தமஸ்திரீகளுடைய காந்திப்பிரபாவத்தால் மின்னல்களுடனே கூடிய மேகங்களால் நிறைந்த ஆகாசம்போல் எப்பொழுதும் பிரகாசித்தும் ஸ்ரீதேவியானவள் திவ்யமானரூபத்தைத் தரித்துக்கொண்டு சகல சம்பத்துகளுடனேயும்வெகுவிதமாகிய ஸ்துதிக்குப் பாத்திரமான ஸ்ரீஹரியுடைய பாதங்களில் வெகுபிரகாரமாப் பூசைசெய்தும், தன்னுடைய ஆந்தோளியையனுசரித்த வசந்தனாலேயும் அவனைஅனுசரித்து நடக்கின்ற மற்றருதுக்களாலேயும் நானாவித தியானஞ்செயயப்பட்டிருந்தாலும் தனக்குச் சுவாமியாகியும் தன்பிரீதிக்குப் பாத்திரமாகியுமிருக்கிற ஸ்ரீஹரியுடைய விசித்திரலீலைகளால் தியானஞ்செய்துமிருக்கிற ஸ்ரீராமதேவிக்கும் யக்கியங்களுக்கும் சகல சேதனாசேதனங்களுக்கும் பதியாகிய பரவாசுதேவனைப் பத்மசம்பவன்சாக்ஷாத்கரித்தான் சுனந்தனந்தன் முதலாகியும் சிலாக்கியமாகிய கயிங்கரியத்தில் ருசிபெற்றுமிருக்கிற கிங்கரளால் நாலுபுறத்திலும் உபசரிக்கப்பட்டும், தம்முடைய பிரத்தியாளிடங்களில் செய்கிற பிரசாதத்தினால் அபிமுகனாகவும் அபாங்கங்களாகிற மதுவினால்சம்பன்னராகவும் பிரசன்னமாகிய ஆசனத்துடனேயும் செந்தாமரைபோலிருக்கிற கண்களுடனேயும் கூடியதிருமுகமண்டலத்தை யுடைத்தாகியும் கிரீடத்தையும் குண்டலங்களையும் தரித்தும் நாலுபுஜங்களுடனே பிரகாசித்தும் பீதாம்பரங்களால் அலங்கரிக்கப்பட்டும் தன்மார்பிலிருக்கிற ஸ்ரீதேவியால் பூஷிதனாகியும் பிரகிருதியும் புருஷனும் மகத்வமும் அகங்காரமும் ஏகாதசேந்திரியங்களும் பஞ்சமகாபூதங்களும் பஞ்சதன்மாத்திரைகளுமாகிற இருபத்தைந்துதத்வங்களுடனேயும் மற்றவிடங்களில் ஸ்திரமில்லாமலும் தன்னுடையதாகியுமிருக்கிற ஐஸ்வரியங்களுடனே கூடியிருக்கிற பரமபுருஷனை அதிசிலாக்கியமாகிய உயர்ந்த சிம்மாசனத்தில்கண்டு அந்த தரிசனத்தில்உண்டான ஆனந்தரசத்தினால் நனைக்கப்பட்ட அந்தக் கரணத்தையுடைத்தாகியும் சரீரமெங்கும்நிறைந்தரோமாஞ்சங்களுடனேயும், பிரேமாதிசயத்தால் ஜனித்த ஆனந்தபாஷ்பங்களால் நிறைந்தகண்களுடனேயும் அந்தவிசுவசிருஷ்டி கர்த்தாவானபரமபுருஷனுடைய பாதபத்மங்களை வணங்கினான்,

அப்படி தன்திருவடிகளில் மிகுதியான பக்தியைஅனுஷ்டித்துக்கொண்டும் தன்சங்கல்பத்தால் விஷயமா

ன் பிரஜாசிருஸ்டிசெய்கிற சாசனத்துக்குயோக்கியனுகியுமிருக்கிற அந்தப்பிரமதேவனைக்குறித்துப் புன்சிரிப்புடைய வார்த்தையைச்சொல்லிச் சந்தோஷத்துடனேகூடின பரமபுருஷன் அந்தவிதாதாவைத்தன்திருக்கைகளால்ஸ்பரிசித்து ஒருவார்த்தையைச்சொல்லுகிறார்.

வாராய் வேதகற்பனே கபடயோகிகளால் சந்தோஷம் செய்விக்கப்படாத நான்சிருஷ்டி செய்யவேண்டுமென்று வெகுகாலம் அனுஷ்டித்த உன்னுடைய தவசினுல் மிகவும் சந்தோஷத்தை யடைந்தேன் உன்மனதில் அபிஷ்டமாகிய வரத்தைக்கேள் உனக்குக்ஷேமமாகட்டும். வாராய்சதுர்முகனே; புருஷர்கள்சிரேயசையடையவேண்டுமென்றுசெய்கிற பிரயாசமெல்லாம்உன்னுடைய தரிசனமாகிற மட்டுந்தான். இப்போது உனக்குக்கிடைத்த என்னுடைய திவ்யலோகதரிசனமானது உனக்கு உண்டாகவேண்டுமென்று நாம்சங்கல்பித்தசங்கல்பமகிமையே அல்லாமல்வேறல்ல இந்தத்தரிசனம் நான் செய்ததபசுக்குப் பலமாயிருக்கக் கூடாதோவென்றால், தபதபவென்று நான்சொன்னசொல்லை ரகசியத்தில்கேள்விசெய்து மற்றொருவரால் செய்யக்கூடாத தபசைச் செய்தாயாகையால் கருமங்களையறியாமல் மோகித்திருக்கிற உன்னைக்குறித்து அந்தத்தவசை செய்யும்படி நானே ஆக்கியாபித்தேனாகையால் அதுவும்என்சங்கல்பமகிமையேயல்லாமல் வேறல்ல தவசானது என்னுடைய இருதயமேயல்லாமல் வேறல்ல நானும்அந்தத்தவசுக்கு ஒன்றான ஆத்துமாவாகிறேன்.

வாராய் நிர்த்தோஷனே? அந்தத்தபசு எனக்கு இருதயமாயிருக்குமென்கிறதைத் தெளியச்சொல்லுகிறேன் கேள். இந்தப் பிரபஞ்சத்தைத் தபசினுல்தான் சிருஷ்டி செய்கிறேன். திரும்பவும் தபசினுலேயே சங்காரஞ் செய்கிறேன் - பாலனம் செய்யுங்காலத்தில் இந்தத் தபோபலத்தினுன் பரிபாலனஞ்செய்கிறேன். தவசானது மற்றொருவராலே அதிக்கிரமிக்கக் கூடாத என் சக்தியென்று தெளிந்துகொள்ளவேண்டுமென்று ஸ்ரீபரமாத்மாவானவர் பிர்மதேவனுக்கு உபதேசஞ் செய்தபோது அந்த இரண்யகற்பன் சொல்லுகிறுன்: ஓய் ஷட்குணபரிபூரணனே பரமாத்மாவே சர்வப் பிராணிகளுடைய புத்தியிலேயும் பிரவேசித்துச்சாட்சியாயிருக்கிற தேவரீர் ஒருவிஷயத்திலும் விகாதமில்லாத விக்கியான சக்தியால் பிராணிகள் செய்யவேண்டுமென்று இச்சித்திருக்கிறகருமத்தை யறிவீரன்றோ யாசனைசெய்கிற அடியேனுடைய அபீஷ்டபலத்தை யனுக்கிரகஞ் செய்யவேண்டும்.

ஓய் நாதனே; ரூபமில்லாமலும்,ஸ்தூலமாகியும், சூட்சுமமாகியுமிருக்கிற தேவரீருடைய ரூபங்களை அடியேன்அறியவேண்டும். தேவரீருக்குச்சுவானமாகிய பிரகிருதியையுடைய சம்பந்தத்தால் மகதகங்காரமுதலாகியசக்திகளால் பெருகின பிரபஞ்சத்தைத் தேவரீரேபிர்மாதிரூபத்தைப் பரிக்கிரகித்தும் சிருஷ்டித்தும் ரக்ஷித்தும் சங்கரித்தும் சிலந்திப்பூச்சியானது தன் வாய்நூலால்கட்டப்பட்ட மண்டலம்போல் விவரமாகாசசங்கல்பத்துடனே விளையாடுகிறீர். ஓய் மாதவனே! அந்தச்சிருஷ்டியாதிவிஷயமான புத்தியை என்னிடத்தில் கல்பிக்கவேண்டும் இப்படியறிந்துகொண்ட அடியேன் தேவரீர்களால் சிருஷ்டிப்பிக்கப்பட்ட அர்த்தத்தைச் சோம்பலில்லாமல் செய்துகொண்டு வருகிறேன். தேவரீருடையஅனுக்கிரகத்தால் பிரஜாசிருஷ்டியை இச்சித்துச் செய்துகொண்டுவந்தாலும் அதனுல்அடியேனுக்கு அகங்காரபந்தம்வரவேண்டாம் ஓய்சர்வேஸ்வரனே தேவரீரால் லௌகீகனுன சிநேகிதனுடைய சிநேகம்போல்காயஸ்பரிசங்களால் பிரஜாசிருஷ்டியாகி சயிங்கரியத்தில் ஆக்கியாபிக்கப்பட்ட அடியேனெவ்வளவுகாலம் ஜனங்களை உத்தமமத்திய மாதிபேதத்தால் பிரித்து வியாகுல சித்தனுகாமல் சிருஷ்டிசெய்கிறுனே அவ்வளவு காலமும் தேவரீர்செய்தருளின வெகுமானத்தால் நான்சுதந்திரனென்று நினைக்கிற அடியேனுக்கு மிகுதியானகர்வமானது வராமலிருக்கவேண்டுமென்று பிரார்த்தனஞ்செய்த பிரமதேவனைக்குறித்து ஸ்ரீபகவான்அருளிச்செய்கிறார்.

வாராய்சதுர்முகனே! என்னுல்சொல்லப்பட்ட சாஸ்திர சன்னியமான என்விஷயமாகும் கியானத்தையும், அதினனுகுணமானஅனுபவத்தையும் அதிகேப்பியமாகிய பக்தியையும் அந்தப்பக்தியோகத்தினுடையசாதனத்தையுங்கொடுத்தேன். நான் எந்தஸ்வரூபத்தையுடைத்தானவனோ எப்படிப்பட்டசத்துவத்தை யுடைத்தானவனோ எந்தஸ்வரூபமான குணங்களையுங் கருமங்களையுமுடைத்தானவனோ அப்படிப்பட்ட தத்வக்கியானமானது உனக்கு என்அனுகிரகத்தா லுண்டாகட்டும். சிருஷ்டிக்கு முன்காலத்தில் நானொருவனே யிருந்தேன். சூட்சுமமான வஸ்துவும் ஸ்தூலமானவஸ்துவும் இவைகளுக்குக்காரணமாகிய பிரகிருதியும் என்னைக்காட்டிலும் வேருகவிருக்கவில்லை.

இப்பால் சிருஷ்டியான காலத்திலும் நானே யிருக்கிறேன். பிரத்தியட்சமாகிய இந்தப்பிரபஞ்சமும் நானென்று தெரிந்துகொள்ளவேண்டும் இனிமேல் பிரளயகாலத்தில் லயமில்லாமலிருக்கிற இந்தவஸ்துவும் நானேயாகிறேன், யாதென்றால் ஆத்மஸ்வரூபம்நிச்சயமில்லாதகாலத்தில் ஸ்வாதந்திரியமாகிய அந்தமில்லாம லிருக்கையிலும் ஒருவனுகிய இந்தவிடத்தில் இரண்டுசந்திரனென்கிறமதிபோல் சுவாதந்திரயந்தோற்றுகிறதோ,ஆத்தஸ்வரூபம் பிரகாசமானவுடனேமுன்தோற்றினசுவா

தந்திரியபத்மத்தைப்போல் தோற்றவில்லையோ - அதுவேஎனக்கு வசியையானமாய்கையென்று நிச்சயஞ்செயதுகொள்ளலாம் எப்படியானால் பிருதிவிமுதலான பூதங்கள் அதின்காரியமான பவுதிகங்களில் பிரவேசித்தும்இதற்குமுன்காலத்தில்பிரவேசியாமலு மிருக்கிறதோ அப்படியே பூதபவுதிகங்கள் சனித்தபின்பு அதுகளில் நான்பிரவேசித்தும் அதின்முற்காலத்தில் பிரவேசியாமலுமிருப்பேன் யாதொன்றுசகலகாரியங்களிலேயும்சம்பந்தித்தும் காரியங்களுடைய முற்காலத்தில் சம்பந்தியாமலும் சர்வகாலங்களிலும் சம்பந்தித்துமிருக்குமோ அதுவே பரமாத்மாவினுடைய ஸ்வரூப தத்வமென்று அறியவேண்டுமென்று இச்சித்தவாகு அறியத்தக்கது இதுவேஎன்னுடைய அபிமதமென்று நிச்சயித்துசிலாக்கியமாகிய மான்சவிருத்தியுடனே யிருக்கக்கடவாய் இப்படியிருக்கிறநீ கல்பங்கள்தோறும் கற்பிக்கிறசிருஷ்டிகளிலே நானேகர்த்தாவென்று மோகத்தை ஒருகாலத்திலும் அடையமாட்டாயென்று சதுர்முகனுக்கு ஸ்ரீபகவான்உபதேசித்ததை பரிட்சித்து மஹாராஜாவுக்கு உபதேசித்த சுகமுனீஸ்வரர் பின்னையுஞ் சொல்லுகிறார்.

ஸ்ரீபகவான் சகலஜனங்களுக்கும் அதிபதியான பரமேஷ்டியைக்குறித்து இந்தப்பிரகாரம் ஆக்கியாபித்து அந்தப் பிரமதேவன்பார்த்துக்கொண் டிருக்கையிற்றானே தம்முடையகியானானந்தமயமாகிய அந்தத்திவ்யமங்களவிககிரகத்தை அந்தர்த்தானஞ்செய்வித்தார்

பின்பு அந்தப்பிரஜேசன் மறைந்துபோன ஸ்ரீஹரியைக்குறித்து அஞ்சலிபந்தஞ்செய்துகொண்டு சர்வபூதங்களிலும் அனுப்பிரவேசித்து முன்னடந்த பிரமசிருஷ்டியைப்போல் சமஸ்தங்களையுஞ் சிருஷ்டிசெய்தான்.

கர்மானுகுணமாகச் சிருஷ்டிசெய்கிற அந்தப்பிரஜாபதியானவர் பிரஜைகளுடைய க்ஷேமத்தை இச்சித்தவராகி ஒருகாலத்தில் ஏமநியமப்பிராணாயாம முதலான சுகசாதனங்களை அனுஷ்டித்தார். இப்படி யோகத்திலிருக்கிறபிர்மதேவனைக்குறித்துப் புத்திரர்களுக்குள்ளே மிகவும் பிரீதிவிஷயனாகிய நாரதமுனீஸ்வரன் சீலத்தினாலேயும்,விசுவாசத்தினாலேயும், இந்திரிய நிக்கிரகத்தினாலேயும், அவனையநுசரித்துச் சிஷ்ருஷையைச்செய்தார். ஓய் பரிட்சித்துமஹாராஜனே பிரகிருதிக்கு சுவாமியாகியஸ்ரீவிஷ்ணுவுடைய மாய்கையென்று சொல்லப்படுகிற பிரகிருதியையறியவேண்டுமென்று இச்சித்தமஹாபாகவதராகிய அந்தமகாமுனி தன்பிதாவான பரமேஷ்டியைச் சந்தோஷஞ்செய்வித்தார்.

பின்பு சர்வலோகபிதாமகனாகிய தன்பிதா சந்துருஷ்டராகியிருக்கிறாரென்றுபார்த்து நீ இப்போது என்னைக்குறித்துக்கேட்ட பிரஸ்னத்தை அந்தத்தேவரிஷி மிகவும்பிரஸ்னஞ்செய்த நாதனைக்குறித்து சகலபிராணிகளையும்சிருஷ்டிசெய்த சதுராননன்ஸ்ரீபகவானால்நாலுசுலோகரூபமாகத்தனக்குஉபதேசிக்கப்பட்டும் தசலக்ஷணத்துடனே கூடியபாகவதமென்றும் சொல்லப்படுகிற இந்தப்புராணத்தை நன்றாகச்சொன்னார்.

ஓய்ராஜாவே ? சரஸ்வதிநதிதீரத்தில் பரப்பிர்மத்தை த்தியானஞ்செய்து அமுதமாகிய தேஜசுடனேயுங்கூடிய வியாசமுனியைக்குறித்து அந்தநாரதர் இந்தப்புராணத்தை உபதேசித்ததை ஸ்ரீசுகர் அந்தக்கிரமங்களைவிபரமாகச்சொல்லத்தொடங்கினார்

---

புண்டரீகாக்ஷாயந:

## ய-வது-அத்தியாயம்

கலிவிருத்தம்.

அந்தநற்பாத ராயணியரான
சுந்தரச்சுமு கப்பிர்மசுகரிஷி
விந்தைபாகவத வியாக்யானத்தில்
அந்தராஜ னறைந்ததாற்றினார்.

பாதராயணியானசுகப்பிரமரிஷிபாகவதம்வியாக்கியானத்துவாரத்தினால் ராஜாவினாற்செய்யப்பட்டபிர்ஸ்னத்துக்குஉத்தரஞ்சொல்லத்தொடங்கினார்.

ஸ்ரீசுகர்வாக்கியம், ஓய் விஷ்ணுராதனே? இந்தப்பாகவதபுராணத்திற் சொல்லப்படுகிற லக்ஷணங்களை அதினதின்பெயரால்சொல்லுகிறோம்கேளும், அதுகள்யாதென்றால் சற்கமென்றும்,விசற்கமென்றும்,ஸ்தானமென்றும், போஷணமென்றும், ஊதியென்றும், மன்வந்தரமென்றும், ஸ்ரீஹரிகதையுடனே கூடியஹரிபக்தாளுடைய கதையென்றும், நீரோதமென்றும், முக்தியென்றும்,ஆசிரியமென்றும், பத்துவிதமாகவிருக்கும்ஆனால்விலக்ஷணமாகியஅர்த்தங்களைச்சொல்லுகிறபடியால்இதுஸ்ரீபகவானுடையகுணவர்னமாகிய ஸ்ரீமஹாபாகவதமாகுமோவென்று சங்கிக்கவேண்டியதில்லை உபதேசமான ஆசிரியத்தினுடைய தத்துவக்கியான நிமித்தமாகமற்றஒன்பதையுஞ் சொல்லவேண்டி யிருக்கிறபடியால்அதுகளுடைய லக்ஷணங்களும் இந்தப் புராணத்திற்சொல்லவேணும், இதுயுக்தமாகி யிருக்கின்றதைப் பற்றிதத்துவக்கியானிகள் வேதாந்தவாக்கிய சிரவணத்தாற்பிறந்த அர்த்தக்கியானத்தை முன்னிட்டுக்கொண்டு ஜகத்காரணமாகிய பிரமத்தை நிருபிக்குமிடத்தில் இவைகளையும் இந்தவிடத்தில் பிரதானமாக வசனிக்கிறார்கள் மகா பூதங்களைந்தும் அதின்தன்மாத்திரைகளும் ஏகாதசேந்திரியங்களும், மகத்துவமும்; அகங்காரமுமாகிற இந்த இருபத்துமூன்றுகளுடைய சிருஷ்டியானது சறகமென்று சொல்லப்படுகிறது பரப்பிரமத்தினுடைய அ

னுப்பிரவேசத்தால் வைஷம்மியத்தையடைந்து திரிகுணங்களாலும் பரமேசுவரனுகிற விராட்டுபுருஷனாலும் ஜனித்தசரா சரசிருஷ்டியானது விசற்கமென்று சொல்லப்படும், ஸ்ரீவைகுந்தனுடைய விஜயமானது ஸ்தானமென்றும், அவன்அனுக்கிரகமே போஷணமென்றும், நிச்சயிக்கப் பட்டிருக்கிறது மனுவந்தரங்களும், அவயவங்களுக்கு ஈசாளரகியசத்புருஷாளுடைய தருமங்களும், சிலாக்கியமாகியதரும கருமங்களுடைய வாசனைகளும், ஊதியாகும், ஸ்ரீஹரியுடைய திவ்யஅவதாரசரித்திரங்களும், அங்குடையபக்தானான மஹா பாகவதாளுடைய சரித்திரங்களும், அனேகவிதமாகிய கிளைக்கதைகளால் விருத்தியடைந்தசக்கதைகளென்று சொல்லப்படும். ஸ்ரீஹரியானவர் யோகநித்திரையை யடைந்தபின்பு இந்தச் சீவாத்மாக்களுடைய கர்னகளேபரங்களுடனே கூடவருகிறலயத்தை நீரோதமென்று சொல்லுவார்கள். அனுதிகர்மவாசனையால் வந்திருக்கிற சுவாதந்திரிய தேவதத்துவ மனுஷியத்துவாதிகளை விட்டு நிஜரூபமாகிய கியானஸ்வரூபனாகியும், பாமபுருஷாதீனனாகியும், பிராரப்த கருமத்தைத் தவிர்ந்திருக்கையு முதலான குணஷ்டகத்தை யுடைத்தாகியு மிருக்கிறபடியேமுக்தியென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது இந்தப் பிரபஞ்சசிருஷ்டியும் ஸ்திதியும் லயமும்எந்தவஸ்து வினிடத்திலிருந்து பிரகாசிக்கின்றதோ பரப்பிர்மமென்றும் பரமாத்மாவென்றும் நிச்சயித்துக் கொள்ளலாம். இந்தப் பரமபுருஷன் எப்போது அண்டத்தைப் பிளந்துக்கொண்டு வேறாகநின்றானோ அப்போது தனக்கு ஒருநிலையை இச்சித்த இந்தப்பரிசுத்தமானபுருஷன் சுப்பிரங்களான உலகங்களைச் சிருஷ்டிசெய்து நாரமென்று சொல்லப்படுகிற அந்தஜலத்தைஸ்தானமாக வுடைத்தாயிருக்கிறபடியால் நாராயணனென்று நினைக்கப்படுகிறான் பிரகிருதியும் சிருஷ்டியாதிகளுக்குக் காரணமாகிய பிராணிகருமமும் - காலமும் - குணவைஷம்மியமும், போக்தாவாகியஜீவனும் எவனுடைய அனுக்கிரகத்தால் தன்தன் கருமங்களுக்கு யோக்கியமாகியிருக்கின்றதுகளோ அந்தஜகதீஸ்வரன் தன்அபேக்ஷையால் சகலமும் தன்னிடத்தில் லயத்தையடைந்து தானொருவனாகியிருந்து வெகுரூபனாக வேண்டுமென்று இச்சித்துயோகமாகிற படுக்கையிலிருந்து எழுந்திருந்து அந்தத்தேவன் சுவர்ணம்போல் மிகவும்பிரகாசிக்கின்ற கெர்ப்பரூபமாகியசக்தியைத் தனக்குவசியையாகிய மாயையால்ஏகரூபமாகிய அந்தப்புருஷசக்தியானது எப்படிவேறாச்சுதோ அதைச்சொல்லுகிறேன்கேளும், அந்தச்சரீரமத்தியத்திலிருக்கிற ஆகாசத்திலிருந்து கியாசத்தியால் இதாகிதங்களைச்செய்கிற பரமபுருஷனிடத்திலிருந்து இந்திரியசக்தியும் மனதினுடைய சக்தியும்தேகசக்தியும் ஜனித்ததுகள் இந்தமூன்றுசக்தியாகிய சூட்சுமரூபத்திலிருந்துசூத்திரமாகியும் மகத்தாகியும்அசுவென்றும்சொல்லப்படுகிற பிராணசக்தியானது சம்பவித்துராஜாவுடனேதொடர்ந்துதிரிகிற பிரத்தியாள்போல் சர்வசந்துக்களிலும் இதுசெய்கிறசேஷ்டையால் இந்திரியங்களும் சேஷ்டிக்கையாலும் இதுசேஷ்டையநிவர்த்திக்குங்காலத்தில் அவையும் சேஷ்டையை விட்டுவிடுகிற படியினாலேஇவைகளுக்கெல்லாம் மகத்துவ முண்டென்று விவேகசாலிகள்அறிந்துகொள்ளலாம். அந்தவிபுவுடைய சரீரநடுவிலே இந்திரியங்களை அலைக்கிறானோ அந்தப்பிராணனாலேபசியும் தாகமும்ஜனித்ததுகள், பானஞ்செய்யவேண்டுமென்கிறஇச்சையினாலேயும்பட்சிக்கவேண்டுமென்கிறதினாலேயும் முன்னேமுகமானது பிறந்தது அந்த அகத்திலிருந்து ரசேந்திரியத்துக்கு அதிஷ்டானமாய் தாலுவானது ஜனித்தது. அதிலே ஜிஃவேந்திரியமுண்டாச்சுது, அதின்தேவதையான வருணனுஞ்ஜனித்தான் ஜிஃவேந்திரியத்தால் அறியப்படுகிறசமஸ்தரசங்களும்அதிலிருந்தே ஜனித்ததுகள் பின்புசொல்லவேணுமென்றுஇச்சித்தஅளவில்லாத அந்தப்பரமபுருஷனுடைய முகத்திலிருந்து வன்னியும்வாக்கும்இந்திரியமும்ஜனித்தபின்பு இதுகளிலிருந்து சொற்கள்பிறந்தது, இந்தவாக்கிந்திரியத்துக்கு பலமே அதிஷ்டானமாச்சுது, அதற்குஅதரோஷ்டிரதந்தங்களாகிற மறைவுமுண்டாச்சுது, பிராணவாயுவானதுமிகவுஞ் சலித்தபோதுநாசிகைகள்உண்டாச்சுதுகள்,அந்தநாசிகையிலிருந்து கிராணேந்திரியமும்அதின்தேவதையானவாயுவும்கந்தமும்சம்பவித்தநுகள் எப்போது தன்னிடத்திற்பிரகாசமில்லாமலிருந்ததோ அப்போதுதான் தேகத்தையும்மற்றதுகளையும்நேத்திரங்களால் பார்க்கவேண்டுமென்று இச்சையுடைத்தான அந்தப்புருஷனுக்குக் கண்களுண்டாச்சுதுகள், அதுகளில்சட்சுஇந்திரியமும் அதின்தேவதையான ஆதித்தியனும் அதற்குவிஷயமாகிய ரூபமாகிறகுணமும்ஆவிர்ப்பவித்ததுகள், தேவதைகள்சொல்லுகிறசொல்லுகளால் தனக்குஅறியவேண்டுமென்று இச்சித்தவிராசபுருஷனுக்குக் கர்ணங்கள் பிறந்ததுகள், சுரோத்திரமாகிற இந்திரியமும் அதின்தேவதையான திக்குகளும்அதற்குவிஷயமாகிய சப்தங்களும் உதித்ததுகள், பின்பு வஸ்துக்களிலிருக்கிற மிருதுவாகிய தன்மையும் கடினமாகியதன்மையும் லகுவாகியதன்மையும் குருவாகியதன்மையும் உஷ்ணமாகியதன்மையும் சீதமாகியதன்மையும்,அறியவேண்டுமென்று இச்சித்தவிராசபுருஷனுக்கு தொக்கிந்திரியஞ்ஜனித்தது. அதற்குச்சர்மமேஅதிஷ்டமானமாச்சுதுஅந்தத்தொக்கு இந்திரியமும் அதிருஷ்டானமாகியசர்மத்தினுடைய வெளியில் வியாபித்ததுகண்டு தீயையும் ஸ்பரிசத்தையும், கிரகித்

துக்கொண்டு லோகமென்று சொல்லப்படுகின்றது; இவ்விடத்தில் விருக்ஷங்களே தேவதையாச்சுது. இந்தச் சர்மத்தினுள்ளே வியாபித்த தொக்கிந்திரியம் ஸ்பரிசங்களைக் கிரகிக்கிறதனால் தொக்கென்றுசொல்லப்பட்டது அவ்விடத்தில் வாயுவே தேவதையாச்சுது பின்பு நானுவிதமாகிய கருமங்களைச்செய்யவேண்டுமென்றுஇச்சையுண்டானதால் அந்தப் புருஷனுக்கு இரண்டுகைகளுமுண்டாச்சுதுகள். அதுகளில் பலமாகிற இந்திரியமும் இந்திரனென்கிற தேவதையும் ஜனித்தபின்பு இவரால்கிரகணமாகிறகருமம் ஜனித்தது அத்தியந்தமிஷ்டமாகிய கமனத்தை இச்சித்த அந்தச்சுவாமிக்கு இரண்டுபாதம் ஜனித்ததுகள். அந்தப்பாதங்களிலிருந்து பிறந்த கமனசக்தியாகிற இந்திரியத்துக்கு ஸ்ரீஹரியேதேவதையாகியிருந்தார் அந்த இதங்களால் மனுஷர்சுபகருமங்களைச் செய்து க்ஷேமங்களைக் கற்பித்துக்கொள்ளுகிறார்கள் பின்பு புத்திரவர்க்கங்களையும் ரதிஆனந்தங்களையும் சொர்க்காதி ஸ்தானங்களையும் இச்சித்த அந்தப் பரமேஸ்வரனுக்கு சிஸ்னம்பிரகாசித்தது அதில் உபஸ்தமென்கிற இந்திரியம்ஜனித்தது. அதற்குப் பிரஜாபதியேதேவதையானார்.

இந்த இந்திரியத்தையும் அனுசரித்துவருகிற சுகமானது ஸ்திரீகளுடைய போகமாகிறகாமங்களைச்சம்பந்தித்திருக்கும் பிறகுபோகித்த ஆகாரங்களுடைய ஆசாரமாகிய அம்சங்களைப் பரிகரிக்கவேணுமென்று இச்சித்த அந்தஉத்தமனுக்கு குதமானதுபிறந்தது அதிலிருந்து பாயுவென்கிற இந்திரியம்ஜனித்ததுமித்திரன்தேவதையானன் இந்த இரண்டுபேர்களையும்ஆசிரயித்து மலவிசர்க்கமென்கிற காரியமுண்டாயிற்று.

பின்பு இருந்ததேகத்தைவிட்டுத் தேசாந்தரங்களைவியாபிக்கவேணுமென்றுஇச்சித்த பரமபுருஷனுக்கு நாபித்துவாரமானது உதித்தது அவ்விடத்தில் அபானமென்கிறவாய்வும் அதற்கு அதிதேவதையான மிருத்தியுமுண்டாயிற்று. பிராணவாயுவைப்பிரிந்த அபானவாயுவாலும் அதின்தேவதையான மிருத்தியுவாலும் மரணமுண்டாயிற்று அதன்பின்பு அன்னத்தையும், ஜலத்தையும் கிரகிக்கவேணுமென்று இச்சித்த விராட்புருஷனுக்கு இவற்றிற்குஅதிஷ்டானமாகிய குட்சியும், அன்னசங்கிரகத்தில் காரணமாகிய ஆத்திரமென்றுசொல்லப்படுகிறதையும் ஜலசங்கிரத்துக்கு எதுவாகிய நாடிகளும் ஜனித்தததுகள் அந்தநாடிகளிடத்தில் நதிகளும் ஆந்திரத்தில் சமுத்திரங்களும் உதித்ததுகள். அந்தநதிகளால் துஷ்டியும் சமுத்திரங்களால் புஷ்டியும் பிரகாசித்ததுகள்.

பின்பு தன்னுடையமாய்கையை தியானஞ்செய்யவேண்டுமென்றுயிச்சித்த அந்தசுவாமிக்கு இருதயமாகிற அதிஷ்டானம் ஜனித்தது. அதிலிருந்து மனதும் அதின்தேவதையானசந்திரனும் கருமமாகியசங்கல்பமும் காமமென்கிற அபிலாஷையும்பிறந்ததுகள். ஜலத்தினுலும் வாய்வினுலும், ஆகாசத்தினுலும், விருத்தியடைந்திருக்கையால் பிரிதிவிஜலதேஜோமயங்களாகியதொக்கென்றுசொல்லப்படுகிற அதிஷ்டானமாகியகனத்தோலும் அதின்மேல் சூட்சுமமாயிருக்கிறதோலும் மாங்கிஷமும்,உதிரமும்,மேதசும்,மச்சையும் எலும்புமாகிற ஏழுதாதுக்களும் அகங்காரத்திற்பிறந்த சப்தமுதலான குணங்களில் பிரீதிபொருந்திய இந்திரியங்களும் உற்பவித்ததுகள் இவைகளில் மனது சகலவிகாரங்களுக்கும் எதுவாகியிருக்கும் புத்தியானது விக்கியானரூபமாகியிருக்கும், வாராய் தேவாதனே? வெளியில் பிருதிவிமுதலாகிய அஷ்டவர்ணங்களையுடைத்தான பெரிதாகிய பகவத்ரூபத்தை உனக்குச்சொன்னேன் இந்தச் சரீரத்திற்குக்காரணமாகியும் இந்திரியங்களால் கிரகிக்கப்படாமலிருக்கிறபடியால் அவ்வியக்தமாகியும் ஆதிமத்தியாந்தங்களில்லாமையால் ஒருவிசேஷமு மில்லாமலும் க்ஷயவினசங்களைத் தவிர்ந்திருக்கையால் வாக்கிந்திரியத்திற்கும் மனேவிந்திரியத்திற்கும் விஷயமாகாமலு மிருக்கிற லிங்கசரீரமென்கிற மற்றொருரூபம் இந்தப்பகவானுக்கு உண்டாயிருக்கிறது. இந்தப் பகவானுடைய ஸ்தூலசூட்சுமமாகிய இரண்டுரூபங்களையும்உனக்குத்தெரியச்சொன்னேன் சகலத்தையும் அறிந்தஞானிகள் மாயாகற்பிதமாகிய இந்த இரண்டுரூபங்களையும் அனுசரித்து ஸ்ரீஹரியைத் தியானஞ்செய்யார்கள் நிஜரூபத்தால் ஒருகருமங்களில்லாமலும் மாய்கையால்அனேக கருமங்களைச்செய்துகொண்டும் குணபரிபூர்ணனாகியும் மிகவும் பெரிதான சுரூபத்தையுடைத்தாகியும், தன்னனுப்பிரவேசத்தால் மற்றவஸ்துவை பெரிதாகக்கற்பித்தும் விளங்குகிற அந்தப்பரமபுருஷன் தனக்கு நாமமாகிய சப்தங்களையும், அதின்கருமங்களையும், வகிக்கிறான் அதெப்படியென்றால் பிரஜாபதிகளையும், மனுக்களையும், தேவர்களையும், ரிஷிகளையும், பிதுர்க்கணங்களையும், வெவ்வேறாகக்கற்பித்து அப்படியே சித்தர்களையும் சாரணர்களையும், கந்தர்வர்களையும்வித்தியாதரர்களையும் அசுரர்களையும், குய்பகர்களையும், கின்னரர்களையும், அப்சரசுகளையும், நாகர்களையும், கிம்புருடர்களையும், மாதருகணங்களையும், ராக்ஷதர்களையும், பிசாசுகணங்களையும், பிரேதங்களையும், பூதங்களையும்விநாயகர்களையும், கூஷ்மாண்டகணங்களையும், உன்மாதகணங்களையும்பேதாளங்களையும், யாதுதானர்களையும், கிரககணங்களையும். பட்சிகணங்களையும், மிருககணங்களையும், பசுக்களையும், விருட்சங்களையும், மலைகளையும், ஓய்ராஜாவே - மலைப்பாம்புமுதலானதுகளையும், மசகம்ஸ்தாபரரூபத்தால் இரண்டுவ

வகையாகியும், சராயுஜமென்றும், அண்டஜமென்றும், சுவேதஜமென்றும், உற்பீஜமென்றும், நாலுவகையாகியும், ஜலங்களில்வசித்தும், நிலங்களில்வசித்தும் ஆகாசத்தில் வசித்துமிருக்கிற இப்படிப்பட்ட சிருஷ்டிகளைச் செய்து அதுகளில் அனுப்பிரவேசித்து அவற்றின்பேர்களால் கீர்த்திக்கப்பட்டு அதுகளுக்குயோக்கியமாகிய கருமங்களைச்செய்கிறான் இப்பால் கருமங்களுடைய கதிபேதங்களைச் சொல்லத்தொடங்கினார்.

ஓய் ராஜாவே? உத்தமங்களாகியும் நிக்ருஷ்டங்களாகியும் மிசுரங்களாகியும் கருமகதிகள் மூன்றுவிதமாகவிருக்கும், அதெப்படியென்றால் சத்துவமென்றும் ராஜசமென்றும், தமசென்றும் மூன்றுவகையாகிய குணங்களால் இந்தகதிகளும் திரிவிதமாகவேயிருக்கும், அதுகளில் சத்துவமானசொர்க்கமாகியும், அதில்வாசஞ்செய்கிற தேவதைகளாகியும் அதற்குப்பலனாகிய சுகங்களாகவும், விளங்குகிறது ரஜோகுணமானதுபூலோகமாகவும் இதில்வசிக்கிற மனுஷியனாகவும் இவர்களுடைய சுகதுக்கானுபவமாகிய போகமாகவும் பரிணமித்தது. தமோகுணமானதுநரகமாகவும் அங்கேஅனுபவிக்கிற ஜீவவர்க்கங்களாகவும் அங்குள்ளயாதனைகளாகவும் பிரகாசித்தது. அந்தமூன்றுகதிகளும் ஒவ்வொருவகையாயிருந்தாலும் வேறொருகுணத்தால் மூன்றுவகையாகவேயிருக்கும் அதெப்படியென்றால்ஒவ்வொரு குணசுபாவம்மற்றஇரண்டுகுணங்களுடையசுபாவங்களுடனேகலந்திருக்கையால் கலந்தவஸ்துவுடைய பேதத்தால்மூன்றுவகை விகாரபேதத்தைஅடையும் இப்படிசதுர்முகாதிரூபத்தால் சிருஷ்டியைச்செய்த அந்தபகவானே இந்த ஜகத்தை ஸ்தாபிக்கவேண்டுமென்று இச்சித்துத் தருமஸ்வரூபியாகிய விக்கிரகத்தைத்தரித்து ஜகத்தை தேவமனுஷிய திரியக்குஸ்வரூபங்களால் ஸ்தாபனஞ்செய்துகொண்டு போஷணஞ்செய்கிறான். அப்பால் தன்னிடத்திலிருந்து சிருஷ்டிக்கப்பட்டசமஸ்தவஸ்துவையும்காலாக்கினிருத்திரரூபத்தால் பிரளயகாலத்திலே 'மேகமண்டலத்தைப்பெருங்காற்றடித்ததுபோல் சங்காரஞ்செய்கிறான். சுப்குணபரிபூரணர்க்கெல்லாம் சிரேஷ்டனாகியும் தோஷதூரகனாகியுமிருக்கிற அந்தப்பரிபூரணனான அந்தஜகசிருஷ்டியாதிகளால் சொல்லப்பட்டவனானாலும், கியானிகள் இந்தரூபத்தோடேகூடினவனாகவே அவனை சாக்ஷாத்காரஞ்செய்கிறதற்கு இச்சிக்கமாட்டார்கள் அதேனென்றால் இந்தஜகத்தினுடையசனனமுதலாகிய கருமங்களுண்டாகுகையில் அந்தப் பரமபுருஷன் இதுகளில் பிரிவில்லாமையிருக்கிறபடியாலும்சன்மாதிகளையடைந்தவனல்லாமையாலே அவனிடத்தில்காரணத்துவாதிகளை சுருதிகள்சொல்வதென்றால் அவனுக்குக் கருமகர்த்துருத்துவம்வந்திருக்கிறபடியால் ஸ்வரூபத்திலுண்டாகியகாத்திருத்துவத்தைநிஷேதிக்கவேண்டிமாயாதீனமான கர்த்துருத்துவம் அடிக்கடிசொல்லப்படுகிறது இப்போது பரப்பிரமசம்பந்தியான மஹாகல்பமும் அவாந்தரகல்பமும் சூசனையாய் உனக்குச்சொல்லப்பட்டது. அந்தமஹாகல்பத்திலுண்டான பிராகிருதசிருஷ்டிகளுடையபிரகாரமும் இவ்விரண்டுக்கும்சாதாரணமாகிய ரூபமும்காலத்தினுடைய பரிமாணமும்கல்பலக்ஷணங்களும் அதின்ஸ்வரூபங்களும்எப்படிசொல்லவேண்டுமோ அப்படியேஇனிமேல்சொல்லப்படும் இப்போது பரத்துவசம்பந்தியான கல்பத்தைச்சொல்லுகிறேன்கேளுமென்று ஸ்ரீசுகர்தேவராதனுக்குஉபதேசித்தகதையைசூதர் நைமிசாரண்யவாசிகளுக்குச்சொன்னபின்புசவுனகர்சூதனைப்பார்த்துக் கேட்கிறார்.

ஓய்சூதரோபாகவதசிரோஷ்டரான விதுரர்இராச்சியத்தைத்தியஜித்து பந்துக்களையும்தனங்களையும் தியாகஞ்செய்துதீர்த்தயாத்திரை செய்தாரென்று எங்களுக்குத் தேவரீர்சொன்னீரல்லவோ, அந்தவிதுரருக்கும் மைத்திரேயருக்கும்ஆத்துமவிசாரப் பிரஸ்தாபம்நடந்ததே அதுஎந்தவிடத்தில்நடந்தது, இல்லாவிட்டால் சாக்ஷாத்ஸ்ரீகிருஷ்ணபகவானே மைத்திரேயர்பிரஸ்னஞ்செய்ததற்குஅந்தப்பகவான் தானேமைத்திரேயருக்கு ஆத்துமதத்துவத்தை உபதேசித்தாரன்றோஅந்தவிருத்தாந்தத்தைஎங்களுக்குச் சொல்லவேண்டும், ஓய்சாந்தமூர்த்தியேவிதுராருடைய நடத்தையையும்அவர்பந்துசனங்களைத்தியாகஞ்செய்தற்குக் காரணத்தையும்தீர்த்தயாத்திரைசெய்துவந்ததையும் சொல்லவேண்டுமென்றுபிரஸ்னஞ்செய்தசவுனகரைப்பார்த்துசூதர்சொல்லுகிறார்.

ஓய்சவுனகரே பரிட்சித்துமஹாராஜாவும் சுகமுனியைக்குறித்துஇப்படியே பிரஸ்னஞ்செய்தார்அதற்குஅந்தசுகயோகிஎப்படிபிரதி உத்தரஞ்சொன்னரோஅப்படியேநான்உங்களுக்குச் சொல்லுகிறேன்.

# துவிதியஸ்கந்தம்.

முற்றுப்பெற்றது.





விதுரமஹாராஜருக்கும்- மைத்ரேயருக்கும்சமவாதம்-



ஹிரண்யகசிபுவதம்-யஅ-அ-



சுவாமியின்கபிலாவதாரம்- கர்த்தமப்பிரஜாபதி- தேவவிபூதி-உச-அ-









நன்றாக. குருவாழ்க. குருவேதுணை.

# ஸ்ரீமகாபாகவதபுராணம்.

## திரிதியஸ்கந்தம்.

### முதலாவது அத்தியாயம்.

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

ஆலிலைமேற்பள்ளிகொண்ட வகிலநாதன்
அரியபிர்மநாரத சம்ரூபமாக
மேலுமிந்த துவிதியஸ்கந்தத்திற்சொல்லும்
மிகுபாகவதம்சேடன் முகத்தினாலே
சாலவுமேசொல்லி யிருக்கின்றதென்றும்
சதுர்த்தவத்தியாயம்விதுரசம்வாதத்தும்
கோலவிருந்தப்படியாய் முப்பத்துமூன்றிற்
குவலயத்தின் சிருட்டிமுதற்குறித்தநாமே.

ஸ்ரீமந்நாராயணன், பிரமநாரதசம்வாதரூபமாகதுவியஸ்கந்தத்தில்சொல்லப்பட்டிருக்கிற இந்தப்பாகவதமே ஆதிசேஷருடையமுகத்தினாலே விஸ்தரிக்கப்பட்ட தென்றுமூன்றாவது ஸ்கந்தமுதற்கொண்டு விஸ்தாரமாகச் சொல்லப்படுகின்றது இதிலே ஆதியில்நாலு அத்தியாயம்விதுரமைத்திரேயசம்வாதமும்மேல்எட்டு அத்தியாயம் பிரபஞ்சத்தினுவடய சிருஷ்டிலயங்களும், மேலேஏழு அத்தியாயம்வராகஅவதாரமும், மேலேஒருஅத்தியாயம்பிரபஞ்சத்தினுடைய உபசங்காரமும்அதற்குமேல்நாலு அத்தியாயம்கபிலர்அவதாரமும், அதற்குமேல் ஒன்பது அத்தியாயம்கபிலோபாக்கியானமும்,இந்தப்பிரகாரம் முப்பத்துமூன்று அத்தியாயங்களினாலேஇந்தப் பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டிமுதலானது வர்ணிக்கப்படுகின்றது.

#### ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் பரிட்சித்துமஹாராஜனே என்னைக்குறித்து யாதொரு பிரஸ்னம்பண்ணினையோ இந்த அர்த்தந்தானே உன்னுடையபிதாமகரான பாண்டவர்களுக்கு மந்திரியாகியும் சமஸ்தலோகநாயகராகியுமிருக்கிற ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் அஸ்தினாபுரத்திலே பிரவேசிக்கும்போது துரியோதனனுடைய கிரஹத்தை விட்டுச்சர்வசம்பத்துகளினாலேயும், சம்பூர்ணமாயிராநின்ற விதுரருடையகிரகத்தைத் தம்முடையகிரகமாகஎண்ணிப்பிரவேசிக்க அப்படிப்பட்ட கிரகத்தைவிட்டுக் காட்டிலேபோன விதுரரால்பூதபௌஷிய வர்த்தமானக்கியானத்தையுடையவரான மைத்திரேயமகாரிஷியானவர் கேட்கப்பட்டாரென்றுசொல்லாநின்றசுகப்பிரமரிஷியைப்பார்த்துப் பரிட்சித்துவினவுகின்றான்.

வாரீர்பிர்மரிஷியே?விதுரருக்கு மைத்திரேயமகாரிஷியுடனே எப்போதுசம்வாதமுண்டாச்சுது இதைஎனக்குவிசேஷமாகச்சொல்லவேண்டுமென்று கேட்டபரிட்சித்துமகாராஜாவுக்குச்சர்வக்கியராகியும் பிரமரிஷிசிரேஷ்டராகியுமிருக்கிறசுகப்பிர்மரிஷியானவர் அதிகசந்தோஷமுடையவராய்அந்தராஜாவைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினார்.

வாராய் ராஜனே! எப்போதுதிரிதராஷ்டிரனானவன் அதருமத்தினாலேவிவேக மில்லாதவனாய்த் துஷ்டர்களானதன்னுடைய பிள்ளைகளைப்போஷித்து தன்தம்பி பாண்டுமகாராஜனுடைய பிள்ளைகளாகிய பாண்டவர்களை அரக்குமாளிகையிலே பிரவேசிப்பித்துத்தகிப்பித்துசபையிலேதனக்குமருமகளாகிய துரோபதியினுடையமயிரைப்பிடித்திழுத்த துற்சாதனனுடைய நிந்திதமானகருமத்தைநிறுத்தாமலும், சூதத்திலேயதருமமாகவுங்கபடமாகவும் சயிக்கப்பட்டவராகியும், சாதுவாகியு

ம் சத்தியசந்தராகியும், பதினறுவருஷம் வனவாசஞ்செய்து திரும்பிவந்துதம்முடையபாகத்தைக்கேட்கிறதருமபுத்திரருக்குக்கொடாமற்போனதினலும்சகலலோகநாயகரான ஸ்ரீ கிருஷ்ணரானவர் தரும புத்திரராலே அனுப்புவிக்கப்பட்டவராய் சபையிலேபீஷ்மர் முதலானபேர்களுக்குஅமிர்தம்போல் ஆனந்தகரங்களா யிருக்கிற வார்த்தைகளைச்சொல்ல புண்ணியவர்ச்சிதனனதிருதராஷ்டிரனனவன் சிலாக்கியங்களாக எண்ணமற்போனபடியினலும், மந்திரிகளுக்குள்ளே சிரேஷ்டரான விதுரரானவர் மிகவும் பிரசித்தமான வார்த்தையால் திருதராஷ்டிரனை நோக்கி வாராய் மகாராஜனே சகிக்கக்கூடாத உன்னுடைய அபராதத்தைச் சகித்துக்கேட்கிற தருமபுத்திரருடைய அங்கிசத்தைக் கொடுக்கக்கடவாய்அர்ச்சுனன்முதலான பிராதாக்களுடனே கூடிக்கொண்டிருக்கிற பீமசேனன்முதலான பாண்டவர்களைப் பகவானன ஸ்ரீகிருஷ்ணரானவர் தன்னவர்களாக்கிரகித்திருக்கிறர், துரியோதனனைப் பிள்ளையென்கிறபுத்தியினலேபோஷிக்கிறய். ஸ்ரீகிருஷ்ணருக்கு விரோதியான பாபமானது சரீரத்தைத்தரித்துக்கொண்டு உன்னுடைய கிரகத்திலேவந்துபிரவேசித்து வாசம்பண்ணிக்கொண்டிருக்கின்றது- ஆகையினலே அந்தப்புத்திரனைக்குலத்திற்கு க்ஷேமத்தின் பொருட்டுச் சீக்கிரமாக விட்டுவிடக்கடவீரென்று சொன்னவிதுரர் வார்த்தையைக்கேட்ட துரியோதனனனவன் மிகவும்திரஸ் கரித்ததெப்படியெனில்தாசிபுத்திரனகியும் கபடனகியுமிருக்கிற இவனை இந்தச்சபையிலேஎவன் அழைத்தான் இவன்யாதொருத்தருடைய அன்னத்தினலே போஷிக்கப்பட்டானே அவனுக்குப் பிரதிகூலனகியும் சத்துருக்களுடைய காரியத்திலே முக்கியனகியு மிருக்கிறன், மசானம்போலேஅமங்களரூபியான இவனை, தனமுதலானசம்பத்தைக் கிரகித்துக்கொண்டு பிராணனேடேமாத்திரம்பட்டணத்துக்கு வெளியிலே சீக்கிரமாகத்துரத்திவிடப்படக் கடவனென்று துரியோதனனுடைய கர்னகடூரங்களானவாக்குகளாகிற பாணங்களாலே யடிக்கப்பட்டவராயிருந்தாலும், அந்தவிதுரரானவர்விசனமில்லாதவராய்க்கொண்டு, ஈசுவரனுடைய மாயாவைபவத்தையென்னசொல்லப் போகிறேமென்று அந்தமாயையைக்கொண்டாடி, அவன்போகச்சொல்லுவதற்கு முன்னேயேதாம் தானேராஜத்துவாரத்திலே தனுசைவைத்துப்போட்டுகவுரவர்களுடையபுண்ணிய பரிபாகத்தினலே அடையப்பட்டிருக்கிற அந்தவிதுரரானவர் அஸ்தினபுரத்தில்நின்றும் புறப்பட்டவராகக்கொண்டு, பூமியிலே பிரமருத்திராதி அனேக மூர்த்திகளையுடைய திவ்யக்ஷேத்திரங்களைத்தரிசித்துப், புண்ணியத்தைச் சம்பாதித்துக்கொள்ளவேணுமென்கிற இச்சையினலேதாம் ஒருவராய்அனந்தருடைய மூர்த்திகளாலேயலங்கரிக்கப்பட்டிருக்கிறபட்டணங்களிலேயும் புண்ணியங்களான வுத்தியானவனங்களிலேயும், பருவதங்களிலேயும், ஆரணியங்களிலேயும், நிர்மலமானதீர்த்தத்தையுடையதுகளான சரசுக்கள்நதிகள்இதுகளிலேயும், திவ்வியங்களானக்ஷேத்திரங்களிலேயும் சஞ்சரித்தார். பவித்திரமாகியும்ஏகவாகமாகியுமிருக்கிற ஜீவனவிருத்தியை யுடையவராகியும்புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானமும், பூமியிலேசயனித்தும், தேகாபிமானத்தைவிட்டுத்தம்முடையபந்துக்களாலேகாணப்படாமல், மரவுரிகிருஷ்ணஜினங்களைத்தரித்து, ஸ்ரீஹரிக்குச்சந்தோஷகரங்களான விரதங்களை ஆசரித்தார். இந்தப்பிரகாரம்இந்தப்பாரதவருஷத்தைப்பிரதட்சணமாகச் சஞ்சாரம்பண்ணிக்கொண்டுஎவ்வளவுகாலத்திலே பிரபாசதீர்த்தம்வந்து சேர்ந்தாரோ, அப்போதருமபுத்திரானவர் ஸ்ரீகிருஷ்ணசகாயத்தினலே ஏகசசகக்ராதிபத்தியத்தை யுடையதாகியு மிருக்கிறபூமியைப்பரிபாலனம் பண்ணிக்கொண்டிருப்பதையும், மூங்கில்கள்ஒன்றேடொன் றிழைந்துஉண்டாகாநின்றஅக்கினியோடே கூடிக்கொண்டிருக்கிற வனமானது தகிக்கப்படுவதுபோலஒருவருக்கொருவர் விரோதத்தினலேஅடிப்பட்டுப்போன கவுரவர்களுடையநாசத்தைக்கேட்டுமிகவும்விசனப்பட்டு, அவ்விடத்திலிருந்துமேற்குமுகமாகப்போய்ச்சரஸ்வதி நதியைஅடைந்து, அந்தநதியிலேயும், சுக்கிரதீர்த்தம், மனுதீர்த்தம், பிருதிதீர்த்தம், அக்கினிதீர்த்தம், அசிததீர்த்தம், வாயுதீர்த்தம் சுநாபதீர்த்தம், கோதீர்த்தம், குகதீர்த்தம், யமதீர்த்தம் இதுகளில்தீர்த்தமாடி அவ்விடத்தில்பிராமணர்களாலும் ரிஷிகளாலும், தேவர்களாலும், பிரதிஷ்டை செய்யப்பட்டும், ஆயுதங்களிலே முக்கியமானசக்கிரஸ்தாபிதஞ்செய்யப்பட்டுமிருக்கிற ஸ்ரீஹரியுடையநானவிதங்களானக்ஷேத்திரங்களையும் சேவித்துத் தனதான்யசமருத்தமானசௌராஷ்டிரதேசம், சவ்வீரதேசம், மச்சதேசம், குருதேசம், ஜாங்கலதேசம் இதுகளைத்தாண்டியமுனநதியைவந்தடைந்து, அவ்விடத்திலேபாகவதோத்தமராயும்வாசுதேவருடைய பக்தராயும், சமாதிகுணங்களையுடையவராகியும், பிரகஸ்பதியினிடத்தில்நின்று சகலநீதிசாஸ்திரங்களையும் அறிந்தவராகியும், மிகவும் பிரசித்தராகியுமிருக்கிறஉத்தமனைக்கண்டு ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு, பகவானலேரட்சிக்கப்படாநின்றதம்முடையபந்துக்களின்குலத்தைக்கேட்டார்.

வாரீர்உத்தமரே, புராணபுருஷராகியும்; தம்முடையநாபிக்கமலத்திலுண்டாகாநின்றபிரமாவினுடையபிரார்த்தனையினலேஇந்தப்பூமியிலேயவதரியாநின்று மிருக்கிறஅந்தஸ்ரீராமகிருஷ்ணரிருவரும் சுகமாக இருக்கிறர்களா பரமசுகிர்தராகியும் பூச்சியருகியு மிருக்கிற

வசுதேவரானவர்சுகமாக இருக்கிருரா. யாதவர்களுடைய சேனைகளுக்கு நாயகனுகியும் வீரனுகியுமிருக்கிற பிரத்தியும்னனானவன் சுகமாக இருக்கிருனு கமலம்போலொத்த நேத்திரங்களை யுடைத்தாகிய ஸ்ரீகிருஷ்ணரானவர் ராச்சியத்திலே பட்டாபிஷேகம்பண்ணி ஸ்தாபித்தாரா. உக்கிரசேனரானவர்சுகமாயிருக்கிருரா பூர்வசன்மத்திலே பார்வதிகருப்பத்திலே தரிக்கப்பட்டிருந்த குமாரசுவாமியை ஜாம்பவதியானவள் அனேகவிரதங்களை ஆசியிரத்துப் புத்திரனுகப்பெற்றும் ஸ்ரீஹரிக்குச் சமானமாகியும் மகாரதிகர்களுக்கும் சிரேஷ்டனுகியுமிருக்கிற சாம்பன சுகமாகஇருக்கிருனு அர்ச்சுனனிடத்திலிருந்து சமஸ்ததனுர்வேத ரஹசியங்களையடைந்து கிருஷ்ணருடைய சேவையினலே யாதவர்களாலே அடையக்கூடாத கதியையடைந்த சாத்தகியானவர் சுகமாகஇருக்கிருரா. வித்துவானுகியும், பாபசூன்யராகியும், பகவத்பக்தராகியுமிருக்கிற அக்குரூரரானவர் சுகமாகஇருக்கிருரா. ஸ்ரீமகாவிஷ்ணுவைப் புத்திரனுகவுடைய தேவகிதேவியானவள் தேவமாதாவான அதிதிதேவியைப்போலும் யக்கியங்களுடைய ஸ்வரூபமான அர்த்தத்தைத் தரித்துக்கொண்டிருக்கிறவேதத்தைப்போலும் சுகமாகஇருக்கிருளா, சித்தம்,அகங்காரம்,புத்தி,மனதுஎன்று நாலுவிதங்களான அந்தக்கரணத்துக்கு அதிதெய்வமாகியுமிருக்கிற யாதொரு அனிருத்தனைச் சகலசாஸ்திரங்களுக்கும் காரணமாகச்சொல்லுகிறதுகளோ அந்த அனிருத்தன்சுகமாகஇருக்கிருனுசத்தியபாமாவினுடைய புத்திரன் சாருதேஷ்ணன் கதன்இவர்கள்முதலானபேர்களும் சுகமாய்ச்சஞ்சரித்துக்கொண்டிருக்கிருர்களா தருமபுத்திரருக்குக் கைகள்போலேயிருக்கிற அர்ச்சுனன் கிருஷ்ணன் இவர்களுடனேகூட கருமமார்க்கமாக மரியாதையைப் பரிபாலனம்பண்ணிக்கொண்டிருக்கிருரா. சபையிலே துரியோதனனானவன் சாம்பிராச்சிய சம்பத்தையும் அர்ச்சுனன்முதலான பிராதாக்களுடைய அனுவிருத்தியையும்பார்த்து மிகவும், தபிக்கும்படியான ஐஸ்வரியத்தையுடைய தருமபுத்திரர் சுகமாகஇருக்கிருரா. மிகவும் கோபத்தையுடையவனுனபீமசேனன் வெகுகாலமாய் அடக்கிக்கொண்டிருந்த கோபமாகிறவிஷத்தை மகாஅபராதத்தைப் பண்ணியிராநின்ற கவுரவர்களிடத்திலே விட்டுவிட்டானு. கதையினுடைய விசித்திரமான மார்க்கங்களை அப்பியாசம் பண்ணின பீமசேனனுடைய பாதஸ்பரிசத்தைப் பூமியானது சகிக்கமாட்டாமல் போச்சுதோ. அந்தப்பீமசேனன் சுகமாகஇருக்கிருனு. மகாரதிகளுடைய சமூகத்திலே கீர்த்திவகித்தவனுகியும், சகலசத்துருக்களையும் சங்காரம்பண்ணுகிறவனுயும், மாயாகிராதரூபியாயிருக்கப்பட்டருத்திரனுனவர் எவனுடைய சரக்கூடத்தினுலே மறைக்கப்பட்டுக் காணப்படாதவராய் எவனுடையபராக்கிரமத்துக்குச் சந்தோஷப்பட்டாரோ. அந்த அர்ச்சுனன் சுகமாகஇருக்கிருனு சபத்தினிபுத்திரர்களா யிருந்தாலும் குந்திதேவிக்குப் புத்திரர்கள்போலவே யிராநின்ற நகுலசகாதேவர்களிருவரும் இரப்பைகளாலே ரட்சிக்கப்படாநின்ற நேத்திரங்கள்போல் பாண்டவர்களாலே ரட்சிக்கப்பட்டவர்களாய்க்கொண்டு வச்சிராயுததாரியான. தேவேந்திரனுடைய முகத்தில்நின்றும் அமிர்தத்தையடைந்த கருடன்போல யுத்தத்திலே துரியோதனனிடத்தில்நின்றும் தங்கள் ராச்சியத்தைப்பிடுங்கிக்கொண்டு சுகமாக ரமித்துக்கொண்டிருக்கிருர்களாபுத்திரர்கள் நிமித்தமாகவே பிராணனைவைத்துக்கொண்டிருக்கிற குந்திதேவியும், ராஜோத்தமனும், ஏகவீரனுகியும், அதிரதனுகியுமிருக்கிற பாண்டுமகாராஜனைவிட்டுப் பிராணனைத்தரித்துக்கொண்டிருக்கிறது ஆச்சரியமே வாரீர் சௌமியரேதிரிதராஷ்டிரனுனவன் மரித்துப்போன பாண்டுமகாராஜனுக்குத் துரோகத்தைப்பண்ணித் தன்னுடைய புத்திரர்களான துரியோதனன்முதலானபேர்களை யனுவர்த்தியாநின்ற திரிதராஷ்டிரனுக்குச் சுகிர்த்தாகியும் பிராதாவாகியுமிருக்கிற நானும் பட்டணத்தைவிட்டுத் துரத்திவிடப்பட்டேன் அதோகதியையடைந்துபோன அந்தத்திரிதராஷ்டிரனுக்கு விசனப்படுகிறேன். அப்படிக்கெல்லாமிருந்த நான் தம்முடைய திவ்யஐஸ்வரியங்களை மறைத்து மானுஷ்யலீலைகளினுலே மனுஷாளுடைய சித்தவிருத்திகளை அபகரித்துக்கொண்டு சகலலோக நாயகராயிருக்கிற ஸ்ரீஹரியினுடைய மாயாமகத்துவத்தைப் பார்த்து ஆச்சரியப்படாதவனுகி இந்தப்பூமியிலே யொருவராலேயுங் காணப்படாதவனுய்ச் சுகமாகச்சஞ்சரித்துக்கொண் டிருக்கிறேன், எமக்குத்துரியோதனுதிகள் அபராதம்பண்ணினகாலத்திலே பகவான் அவர்களைச் சங்கரிக்கத்தக்கவராயிருந்தாலும் அவர்களுடையஅபராதத்தைஅப்போது உபேட்சைபண்ணினது ஏனென்றுல் அனேகம்சேனைகள் வித்தியாமதம்,தனமதம், குலமதம், இந்தமதங்களாலே மரியாதைகடந்தும், மிகவும் கருவத்தையுடையவர்களாகியுமிருக்கிற ராஜாக்களுடையவதஞ்செய்யவேண்டுமென்று தம்மைச்சரணமாகஅடைந்தபூமியினுடைய பாரத்தைத் தீர்க்கவேணுமென்கிற இச்சையினுலே கவுரவர்களுடைய அபராதத்தைச்சகித்தார். வாரீர் சகாவே தம்மைச் சரணமாக அடையாநின்றபிர்மாமுதலானசமஸ்தலோகபாலாளுக்கும் தம்முடையஆக்கினையைத் தப்பாமல்நடக்கின்றபேர்களுக்கும், சர்வப்பிரயோஜனத்தின்பொருட்டும் யாதவகுலத்திலே யவதரித்து ஜன்மரகிதராகியும்,பவித்திரமான கீர்த்தியையுடையவராகியுமிருக்கிற அந்தப் பகவானுடைய வார்த்தையை எனக்குச் சொல்லக்கடவீர்.

சித்தயேநம.

## உ-வ-து அத்தியாயம்

கலிவிருத்தம்.

சித்தமொத்திடு ஸ்ரீகிருஷ்ணவியோகத்தால்
உத்தவராஞே ருள்ளங்கலங்கியே
அத்தன்பால சரித்திரமனைத்தையும்
சுத்தனும்விதுரற்குச் சொன்னாரோ.

ஸ்ரீகிருஷ்ணவியோகத்தினலே மிகவும் வியசனப்படுகின்ற உத்தவரானவர் பெருமூச்சுவிட்டுக்கொண்டுவிதுரருக்கு ஸ்ரீகிருஷணருடையபாலசரித்திரங்களை வர்ணித்தாரென்று சொல்லப்படுகின்றது.

வாராய் மகாராஜனே? ஐந்துவயதில் அந்தஉத்தவரானவர் ஸ்ரீகிருஷ்ணர்போலே பிரதமையைப் பண்ணிவைத்துக்கொண்டு அவருக்குப் பூசைபண்ணிக்கொண்டிருக்கையில் பிராதக்கால போஜனர்த்தமாய் மாதாவினலே பிரார்த்தித்து அழகைப்பட்டாலும் அந்தப்போசனத்தை விரும்பாமல்ஸ்ரீகிருஷ்ணனுடையசேவையே மேன்மையாகவெண்ணி வார்த்திகத்தை அடைந்திராநின்ற அந்த உத்தவரானவர் பகவானுடைய வார்த்தையைக்குறித்து விதுரரால் கேட்கப்பட்டவராய் அந்தப் பகவானுடைவ திருவடிகளைஸ்மரித்துக்கொண்டுஅதைரியத்தையுடையவாராய்ப்பிரதிவசனஞ்சொல்லமாட்டாமல் ஸ்ரீகிருஷ்ணருடைய திருவடித்தியானமாகிற அமிர்தத்தினலே ஒருமுகூர்த்தகாலம் முழுகினவராய் புளகாங்கித சர்வஅவயவங்களை யுடையவராய் பிற்பாடுமெள்ளமெள்ள பகவத்தியானமாகிற லோகத்தில் நின்றும் திரும்பி தேகாதிகியானத்தையுடைய அந்த உத்தவரானவர் நேத்திரங்களைத் துடைத்துக்கொண்டு யாதவகுலத்தைஉபசங்காரம்பண்ணது முதலானபகவானுடைய லீலைகளை நினைத்துக்கொண்டதினலே மிகவும்ஆச்சரியத்தையுடையவராய் அந்தவிதுரரைப்பார்த்துப் பிரதிவசனம் சொல்லுகிறார்.

வாரீர் விதுரரே! ஸ்ரீகிருஷ்ணராகிற சூரியனுனவர் அஸ்தமானத்தையடைகிறபடியால் காலமாகிறமலைப்பாம்பினலே விழுங்கப்பட்டுச் சம்பத்தையிழந்திருக்கிறநம்முடைய பந்துகளுக்கு எப்படி சேஷமுண்டென்று சொல்லுவேன் லோகத்திலேயிராநின்றஜனமானதுமிகவும் பாக்கியவீனமாகி யிருக்கிறது. அதிலும்யாதவாள் மிகவும் பாக்கியவீனர் யாதவர்கள் கிருஷ்ணரோடேகூட வாசம்பண்ணிக்கொண்டிருந்தாலும்இவன்சாக்ஷாத்ஸ்ரீமந்நாராயணனென்று அறியாமற்போனது. க்ஷீரசமுத்திரத்திலே யிருக்கின்ற மச்சியங்கள் அதிலேபிறவாநின்றசந்திரனைச் சந்திரனென்றுஅறியாமல் இதுவும்மஞேங்கியமான ஒருசலசந்துவென்றேஅறிந்ததுபோல் சமஸ்தயாதவர்களும் சர்வலோகஅரசராயிருக்கிற ஸ்ரீகிருஷ்ணரை யாதவசிரேஷ்டனென் றெண்ணிக்கொண்டிருந்தார்கள். சிசுபாலர் முதலானபேர்கள் மிகவும் வைரத்தையே ஆசிரயித்தவர்களாய் நிந்தித்துக்கொண் டிருந்தார்கள், அவர்களுடையவசனங்களைக்கேட்டஜனங்கள் பரமாத்துமாவான ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் வைக்கப்பட்டசித்தம் மாறி மிகவும் மூடர்களாகநிற்கிறார்கள் பகவானுனர் தபசுபண்ணுதவர்களாகியும் தம்முடையதிவ்யமூர்த்தியைப்பார்த்துத் திருப்திபடையாமலிருக்கிற நேத்திரங்களையுடைய மனுஷியாளுக்கு இவ்வளவுகாலம் திவ்யமூர்த்தியைக்காண்பித்துச் சனங்களுடையநேத்திரங்களைப் பிடுங்கிப்போட்டாற்போல் அந்தரத்தானத்தையடைந்தார். தம்முடைய யோகமாயாபலத்தைக்காண்பியாநின்ற பகவானலே கிரகிக்கப்பட்டும், மனுஷியாவதாரலீலைகளுக்கு யோக்கியமாகியும், ஆச்சரியகரமாகியும்,சகலவுபாக்கியங்களுக்கு ஸ்தானமாகியும்,பூஷணங்களுக்குப் பூஷணங்களாகியுமிருக்கிற அவயவங்களையுடையதாகியும் தருமபுத்திரருடையராசசூயயாகத்திலே நேத்திரங்களுக்குப் பரமானந்தகரமாயிருந்ததிருமேனியைப்பார்த்து சனங்கள் பிரமாவுக்கு மனுஷ்யதேக நிர்மாணத்திலே இதற்குமேல் சாமர்த்தியமில்லையென்று எண்ணிக்கொண்டார்கள்.

கோபஸ்திரீகள் பிரீதியினலே அந்தஸ்ரீகிருஷ்ணரையே யனுவர்த்தித்துச் செய்யப்படுகின்ற காரியங்களை முடியாமல்விட்டிருந்து, சாந்தரூபர்களாகியும் தம்முடைய அங்கிசங்களாகியுமிருக்கிற சாதுக்கள் பிடிக்கப்படுகையில் மிகவும் கிருபாசாலியான சித்தத்தையுடையவராகியும், பிர்மாதி சகலலோகங்களுக்கும் ஈசுவராகியுமிருக்கிற பகவானுனவர் சன்மமில்லாதவராயிருந்தாலும் அக்கினியானது காஷ்டங்களிலே ஆவிர்ப்விக்குறதுபோல் அவதரியாதிருக்கிறார். அந்தப்பகவான் வசுதேவருடையகிரகத்திலே அவதரித்துக் கம்சனிடத்தில்நின்றும் பயந்தாற்போல் கோகுலத்திலேவாசமும்,காலயவனன்முதலிய சத்துருக்களுக்குப் பயந்தாற்போல் மதுராபட்டணத்தில் நின்றும் ஓடிப்போனதும் மாதாபிதாக்களுடைய பாதங்களில் பிரணமம்பண்ணி கம்சனிடத்தில் நின்றும் மிகவும் பயப்பட்ட உங்களுக்குச் சிசுருஷையைப் பண்ணுதவர்களாகியு மிருக்கிற எங்களை அநுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று சொன்னதுகளை நினைத்து என்னுடையசித்தமானது மிகவும் துக்கிப்பிக்கிறது. பகவானுனவர் தமது புருவநெரிப்பாகிற காலத்தினலே பூபாரத்தைப்போக்கடித்த அவருடைய ஸ்ரீபாதரேணுக்களை எவன்தான் மறந்துபோகச் சமர்த்தனுவான். யோகீஸ்வரர்களானபேர்கள் தீவிரமான யோகாப்பி

யாசத்தினல் சித்தியையடைகிறதற்கு இச்சிக்கிறபகவானுடைய வியோகத்தை யெவன்தான்சகிப்பான். யுத்தத்திலோராஜாக்கள் அர்ச்சுனனுடைய பாணமாகிற ஜலத்தினலே யவம்பப்பட்டுப் பரிசுத்தர்களாய் நேத்திரங்களுக்கு ஆனந்தகரமான ஸ்ரீகிருஷ்ணனுடைய முகாரவிந்தத்தைப் பார்த்து அவருடைய பதவியையடைந்தார்கள்.

திரிமூர்த்திகளுக்குமீசுவரராகியும், தம்முடையபரமானந்த ஸ்வரூபத்தினலெ யடையப்பட்ட சமஸ்தபோகங்களையும்உடைய உக்கிரசேனனிடத்திலே பண்ணப்பட்ட கைங்கரியமானது பிரத்தியாளான நம்மை மிகவும் விசனப்படுத்துகிறது பூதனையானவள் அந்தப்பகவானைக்கொல்லத் தன்னுடையஸ்தனங்களின் வழியாகக்காளகூடவிஷத்தைப் பானம்பண்ணுவித்தவளா யிருந்தாலும், மாதாவானயசோதையாலே யடையத்தக்கதான கதியையடைந்தாள் அப்படிப்பட்ட கிருபாசாலி யான அந்தபகவானைத்தவிர அன்னியனை எவனைச் சரணமாகஅுடையப்போகிறேன் வேதங்களுக்குஈசுவரனுகியும், சர்வலோகேஸ்வரனுகியு மிருக்கிற ஸ்ரீஹரியினிடத்திலேகோபாவேசமார்க்கத்தினலே வைக்கப்பட்ட சித்தத்தை யுடையவர்களான அசுரர்கள் சக்கராயுதரான ஸ்ரீஹரியை கெருடாரூட்னுகப்பார்த்த அசுரர்களும்பாகவதாளென்றேயெண்ணுகிறேன். அந்தப்பகவானுனவர் பிர்மாவினலே பிரார்த்திக்கப்பட்டு இந்தப்பூமிக்குச் சுகத்தைப் பண்ணவேணுமென்று இச்சித்து வசுதேவருக்குத் தேவகியினிடத்திலே அவதரித்துக் கம்சனிடத்திற் பயப்படுகின்ற பிதாவான வசுதேவராலே கோகுலத்தை யடைவிக்கப்பட்டவராய் அவிடத்திலே பலராமரோடேகூட அப்பிரகாசமான தேஜசையுடையவராய் பதினெருவருஷம் வாசம்பண்ணிப் பட்சிகளாலேசூழப்பட்டிருக்கிற விருக்ஷங்களையுடையதான யமுனதீரத்திலுள்ள வனத்திலே கோபகுமாரர்களோடே கன்றுகளைமேய்த்து விளையாடிக்கொண்டும், பார்க்கப்பார்க்கரமணீயமாயிருக்கிற தம்முடையகவுமாரலீலையை அந்த வனத்திலுள்ள பிராணிகளுக்குக் காண்பித்து அழுகிறவர்போலு மிருந்துகொண்டு சுந்தர மூர்த்தியாகியும் பாலசிம்ஹம்போன்ற பார்வையை யுடையவராகியுமிருக்கிற அந்தப்பகவான், சம்பத்திற்குஸ்தானமாகியும் வெளுமையான பசுக்களை யுடையதாகியுமிருக்கிற கோகுலத்தில்நின்று வேணுகானம்பண்ணித் தம்மை அனுவர்த்திக்கின்ற கோபாலர்களை ரமிப்பித்துக் கொண்டிருந்தார். கம்சனலேயேவப்பட்ட மகாமாயாவிகளான சத்துருக்களை விளையாட்டாகச் சிம்மாதிகளைப்போல் சம்கரித்தார்,

யமுனநதியிலேவெகுகாலமாய் வாசம்பண்ணிக்கொண்டிருந்த காளியனைநிக்கிரகித்து அதினுடைய விஷஜலத்தினலே மரித்துப்போன கோபாலர்களையும், பசுக்களையும், திரும்பியெழுப்பி தம்முடைய கடாக்ஷத்தினலே விஷதோஷம்போய் சுபத்தையடைந்த ஜலத்தைக் கோபாலர்களையும், கோக்களையும், பானம்பண்ணிவைத்தார், அளவில்லாமற் சேர்ந்திருக்கின்ற தனத்துக்குச் சன்மார்க்கமாய் விரயத்தைப் பண்ணுவிக்க வேணுமென்றும், தேவேந்திரனுடைய கருவபங்கம் பண்ணவேணுமென்றும் இச்சித்தபகவானுனவர் நந்தகோபனைக் கொண்டு பிராமணமுகமாய்ப் பூஜைபண்ணு வித்தார், தன்னுடைய பூஜானுபங்கத்தினலே மிகவும் அவமானத்தையுடையவனுன இந்திரனுனவன் கோபத்தினலே கோகுல நாசார்த்தமாக வருஷிக்கையில் அந்தமகாவருஷத்தினலே மிகவும் பீடிக்கப்பட்ட கோகுலமானது லீலையினலே தரிக்கப்பட்ட பர்வதமாகிற குடையினலே ரட்சிக்கப்பட்டது. வாரீர்விதுரரே ஸ்ரீகிருஷ்ணரானவர்சரற்காலச் சந்திரனுடைய கிரணங்களாலேமிகவும் விளங்காநின்ற சாயங்காலத்தைப்பார்த்துச் சந்தோஷமாய் ஸ்திரீகளுடைய மண்டலத்துக்குப் பூஷணமாகவிருந்துமதுரமாகக் கானம் பண்ணிக்கொண்டு லீலைபண்ணினர்.



அச்சுதாயநம.

## ௩-வது-அத்தியாயம்.

கருவிருத்தம்.

சுத்தகோகுலந் தன்னிலுறவிருந்
தெத்துமாமது ரைப்பதிக்கேகியே
கத்தன்கம்சன் வதைமுதல்துவாரையில்
உற்றலீலை புரிந்ததுமோதுவாம்

ஸ்ரீகிருஷ்ணரானவர் கோகுலத்திலிருந்து மதுரையிலேபோய்க் கம்சவதை முதலானதைப் பண்ணினதும் துவாரகையில் லீலைகளைப்பண்ணினதும் வர்ணிக்கப்படுகின்றது.

வாரீர் விதுரரே ஸ்ரீகிருஷ்ணன் பலராமரோடே தம்முடையமாதா பிதாக்களுக்குச்சகத்தைப்பண்ண இச்சித்து மதுராபட்டணத்திலேவந்து பராக்கிரமத்தினலேசத்துருக்களுக்குள்ளே சிரேஷ்டனன கம்சனைஉன்னதமான மஞ்சத்தில்நின்றும் கீழேதள்ளிக்கொன்றுபூமியிலேயிழுத்துப்போட்டு சாந்தீபினியென்கிறகுருவினிடத்தில்சமஸ்தவேதங்களையுஞ்சாங்கோபாங்கமாகஅத்தியயனம்பண்ணி அந்தக்குருவின் மரித்துப்போனபுத்திரனைக்கொண்டுவந்து கொடுத்தார், ருக்குமணிவிவாகநிமித்தியமாக அழைக்கப்பட்ட சிசுபாலன், ஜராசந்த

ன்முதலான அந்தராஜாக்கள் பார்த்துக் கொண்டிருக்கத் தம்முடைய அங்கிசமான ருக்குமணிதேவியைக்கருடனனவர் அமிர்தத்தை அபகரித்தாற்போல் அபகரித்தார். ஒருவராலேயுங் கட்டுப்படாமலிருந்த ரிஷபங்களைப் பிடித்து மூக்காங்கயிறுபோட்டு அடக்கி சுயம்வரத்திலே நக்னசித்துவினுடையகுமாரத்தியைக் கோராநின்றும் மூடர்களாகியும், சஸ்திரபாணிகளாகியு மிருக்கிற ராஜாக்களை அஸ்திரங்களாலே சங்கரித்துக் கல்யாணம்பண்ணினர். நரகாசுரனைக்கொன்று அவனுடைய புத்திரனை பகதத்தனுக்கு ராச்சியத்தைக் கொடுத்து அவிடத்திலிருந்த அதிதிதேவியினுடைய குண்டலங்களைக் கொடுக்குகைக்குச் சொர்க்கத்திற்குப்போய்ச்சத்தியபாமைக்குப் பிரியத்தைப் பண்ணவேண்டுமென்றுபாரிசாதவிருட்சத்தைத் துவாரகைக்குக் கொண்டுவந்துநரகாசுரனலே அபகரிக்கப்பட்டிருந்தகன்னிகைகளுக்குயோக்கியமானரூபத்தை யுடையவராய் ஒருமுகூர்த்தத்திலே விவாகம்பண்ணிக்கொண்டு அந்தஸ்திரீகளிடத்திலே தமக்குச்சமானர்களான பத்துப்பிள்ளைகளைப் பெற்றார். சம்பராசுரன், துவிதன், பாணாசுரன், முரன், பல்வலன் இவர்கள்முதலானமற்றவர்களை பிரத்தியும்னன், பலராமன் முதலானபேர்களாலே சங்காரம் பண்ணுவித்தார். தந்தவக்கிரன் முதலானபேர்களைத் தாம்தானேசங்காரஞ்செய்து உம்முடைய பிராதாக்காளான பாண்டு மகாராஜன் திருதராட்டிரன் இவர்களுடைய புத்திரர்களின்பட்சமான ராஜாக்களைச் சம்மாரஞ்செய்வித்துச்சந்தோஷப்படாமல் பிரத்தியும்னன் முதலானபேர்களாலே சம்பூர்ணமாகி ஒருத்தராலேயும் ஜயிக்கக்கூடாததாயிருக்கிறயாதவவதத்துக்குஉபாயமானது என்னவெனில் மத்தியபானத்தினல் ஒருவர்க்கொருவர் விவாதமானது உண்டாச்சுதேயானுல் அதுவே இவர்களுடையவதத்துக்கு உபாயம் இதைப்பார்க்கிலும் வேறில்லை தாமே நசித்துப்போவார்களென்று சிந்தித்து அபிமன்னியுவினல் புருவம்ச விருத்திகரமான உத்தரையினுடைய கற்பத்தைரட்சித்துத்தருமபுத்திரனை மூன்று அஸ்வமேதங்களாலே யஜிப்பித்தார். அந்தத்தரும புத்திரரும் பிதாக்களோடேகூட ஸ்ரீகிருஷ்ணனை அனுவர்த்தித்துப்பூமியைத்தருமமாகப்பரிபாலனம்பண்ணிக்கொண்டிருந்தார் விசுவரூபியான பகவானும் சாங்கியயோகத்தை ஆஸ்ரயித்தவராய்த் துவாரகா பட்டணத்திலே புன்சிரிப்புடனே கூடிக்கொண்டிருக்கிற கடைக்கண்பார்வையினலேயும், அமிர்தத்திற்குச் சமானமானவாக்கினலேயும், நிர்த்துஷ்டமான சரித்திரத்தினலேயும், மகாலட்சுமிக்கு இருப்பிடமான திருமேனியினலேயும், இந்தலோகத்திலேயிருக்கிற ஜனங்களையும் ரமிப்பித்துக்கொண்டிருந்தார். அந்தப்பகவானுக்குக் கிரகஸ்தகருமங்களிலேயும் காமபோகங்களிலேயும், வைராக்கியமானதுஉண்டாயிற்று ஒருக்கால்துவாரகா பட்டணத்திலேகிரீடித்துக் கொண்டிருக்கிற யாதவகுமாரர்களாலேகோபித்துக் கொண்டவர்களாய் ரிஷிகள்பகவானுடைய அபிப்பிராயத்தை யறிந்தபேர்களாய்ச் சாபத்தைக்கொடுத்தார்கள் சிலமாதங்கள் போனபிற்பாடுபோஜர்கள்விருஷ்ணிகள் அந்தகர்கள் முதலானயாதவர்கள்மிகவும்சந்துருஷ்டாகளாய்த் தெய்வமாய்கையினலே மோகிக்கப்பட்டவர்களாய்ப் பிரபாசதீர்த்தத்தைப்போயடைந்து அதிலேஸ்நானம்பண்ணி தேவரிஷிபிதுர்தர்ப்பணம் பண்ணிப் பிராமணர்களுக்கு வெகுபாலுள்ள சாதுக்களானஇளவயதுள்ள பசுக்களையும் சுவர்னங்கள் ரசிதங்கள் கட்டில்மெத்தைகள் வஸ்திரங்கள் கிருஷ்ணசனங்கள்ரத்தினக்கம்பளங்கள் அசுவங்கள் யானைகள் ரதங்கள் கன்னிகைகளையும் ஜீவனப்பிரதான பூமி முதலியதுகளைத் தானம் பண்ணிப் பின்னும்திவ்யமாகியும் நானுரசங்களோடேகூடிக்கொண்டிருக்கிற அன்னங்களைக் கொடுத்துச் சாஷ்டாங்கமாகப் பிரணமம்பண்ணினர்கள்.

---

ஆத்துமனேநம.

## ச-வது-அத்தியாயம்.

---

கலிவிருத்தம்

கண்ணும்பந்துக்கள் நாசமடைந்ததை  
அண்ணலாம்நல் விதுரவரசன்கேட்  
டெண்ணியுத்தவ ரொழிலுபதேசத்தால்  
தண்ணுமைத்திரர் தமையடைந்தாரன்றே.

விதுரரானவர் பந்துக்களுடையநாசத்தைக்கேட்டு உத்தவருடைய வுபதேசத்தினலே ஆத்துமக்கியானத்தின்பொருட்டு மையித்திரேயமகாரிஷியைப்போ யடைந்தாரென்றுசொல்லப்படுகின்றது.

வாரீர் விதுரரே? அந்தயாதவர்கள் பிராமணர்களாலேஅனுக்கிரகம் பண்ணப்பட்டவர்களாய் போஜனம்பண்ணி மத்தியபானஞ்செய்து அந்தமயக்கத்தினலே விவேகமில்லாதவர்களாய்ஒருவருக்கொருவர்மர்ம பேதிகளான துர்வசனங்களாலேஅடிக்துக்கொண்டார்கள் அந்தமத்தியபானதோஷத்தினலே விவேகஹீனர்களாயிருக்கிற அந்தயாதவர்களுக்குச் சூரியன்அஸ்தமானத்தையடைந்துபோகையில் அப்போதுமூங்கில்கள் ஒன்றுக்கொன்றிழைந்து தகிக்கப்பட்டுப் போகிறாற்போல் நாசமானது உண்டாயிற்று ஸ்ரீகிருஷ்ணரும் தம்முடைய மாய்கையின் வைப்வத்தைப்பார்த்துச் சரசுவதி நதியிலேபோய் ஆசமனம்பண்ணி அசுவத்தவிருக்ஷ மூலத்திலேயோகாப்பியாசத்திலேயிருந்தார்பிரபன்னுளுடை

யஃ துக்கத்தைப் போக்கடிக்கிறவராகியும் தம்முடையபலத்தை உபசங்காரம் பண்ணவேணுமென்று இச்சித்த அந்தபகவானாலே நான் பூர்வமே துவாராகையைவிட்டுப் பதரிகாசிரமத்திற்குப்போகும்படி நியமிக்கப்பட்டேன். அப்படி அந்தப்பகவானுடையஅபிப்பிராயத்தையறிந்தவனாயிருந்தாலும் அவருடைய திருவடிகளின் வியோகத்தைச் சகியாதவனாய்ப்பின்னேபோனேன். சரசுவதிதீர்த்தத்திலே ஒருவராகவும் எனக்கு இஷ்டராகியும் பிரபுவாகியும், லட்சுமிநிவாசராகியும், சர்வபரிபூரணராகியும், நீலமேகசியாமளராகியும் நிர்மலராகியும்மலர்ந்து சிவந்திருக்கிற பத்மம்போலொத்த நேத்திரங்களையுடையவராகியும், நான்குபுஜங்களுடனே காணப்படாநின்ற பீதாம்பரதாரியாகியும், தாமரைப்புஷ்பம்போலொத்த வலதுதிருவடியை இடதுஇடையின்பேரிலேவைத்துக்கொண்டு மனோக்கியமான அசுவத்தவிருக்ஷத்தின் பேரிலே சார்ந்துகொண்டும், விஷயசுகஅபிலாஷையை விட்டவராகியும், ஆனந்தபரிபூரணராகியுமிருக்கிற பகவானைக்கண்டேன். அப்போது அவ்விடத்திலே மகாபாகவதராகியும், வியாசருக்கு சிநேகிதராகியுமிருக்கிறமைத்திரேயரிஷியானவர் லோகங்களைச்சஞ்சரித்துச்சுயஇச்சையாக அவ்விடத்துக்குவந்த அந்தரிஷியானவர் கேட்டுக்கொண்டிருக்கையில் ஸ்ரீமுகுந்தனானவர் என்னைப்பிரீதியினாலே கடாட்சித்து ஒருவார்த்தைசொன்னார்.

வாரீர் உத்தவரே! உம்முடையமனதுக்குள்ளேயிருக்கின்ற அபீஷ்டத்தை நான்அறிவேன். பூர்வஜன்மத்திலே வசுவாகவிருந்த நீரும், விசுவகர்த்தாக்களான பிரஜாபதிகளும் ஏகமாகச்சேர்ந்துயக்கியம்பண்ணி அந்தயக்கியத்தில் என்னுடையசித்தியை அடையவேணுமென்று உம்மாலேயக்கியம்பண்ணப்பட்டு நன்றாகஆதரிக்கப்பட்டேன். ஆகையாலே இதாராளாலேயடையக்கூடாத என்னுடைய ஸ்தானத்தை உமக்குக் கொடுக்கப்போகிறேன். இந்த சன்மத்திலே என்னை ஏகாந்தபக்தியிலே பார்க்கின்ற உமக்கு மங்களகரமாகாநிற்கிறது. பூர்வத்திலே என்னுடைய நாபிக்கமலத்திலே சனித்த பிரமதேவரின்பொருட்டுப் பரமக்கியானமானது என்னாற்சொல்லப்பட்டது அதைச் சொல்லுகிறேன் கேளென்று சொல்லக்கேட்டுப் பரமபுருஷருடைய கிருபாகடாட்சானுக்கிரகத்துக்குப் பாத்திரனாகியும்சினேகிதத்தினாலேபுளகாங்கித தேகனாகியுமிருக்கிற நான்கண்ணீர்களைப்பெருக்கிக்கொண்டு அஞ்சலிபந்தம்பண்ணி தட்டுத்தடங்கலில்லாத சப்தங்களையுடையவனாய் அந்தப் பகவானைப்பார்த்து ஒருவார்த்தைசொன்னேன். வாரீர் ஈசனே? தேவரீருடைய பாதபத்மங்களை ஆசரியாநின்றபேர்களுக்குத் தருமார்த்த காமமோட்சரூபங்களான நான்கு புருஷார்த்தங்களுக்குள்ளே எந்தப் புருஷார்த்தந்தான் மிகவும் துர்லபமாகவிருக்கும், தேவரீருடைய சரணாரவிந்தசேவைகளிலே மிகவும் ஆசையையுடைய நான் அந்தப் புருஷார்த்தங்களைக் கோறவில்லை இச்சையில்லாதவராகியும் கிரியாசூனியராகவுமிக்கிற உமக்குக்கருமங்களும் சென்மமில்லாதவராகியுமிருக்கிற உமக்கு ஜன்மமும், காலஸ்வரூபியான உமக்குக் சத்துருக்களில்நின்றும்பயத்தினாலே துக்கத்தை ஆசரித்ததும், அதைவிட்டுஓடிப்போனதும், ஆத்துமானந்தபூரணரான வுமக்கு அனேகமாயிரம் ஸ்திரீகளாலேசூழப்பட்டவராய்க் கிரகஸ்தாசிரமதருமம் யாதொன்றுண்டோ இந்த விஷயத்திலே வித்துவாம்சாளுடைய புத்தியும் சம்சயத்தையடையாநிற்கிறது. தேவரீர் தேசகாலங்களாலே மறைக்கப்படாமலும் சம்சயமில்லாமலும், நிச்சயரூபமாகியுமிருக்கிற கியானசத்தியையுடையவரா யிருந்தாலும், அக்கியன்போலவே சாவதானத்தையுடையவராய்யாதொருயோசனையைக் கேட்டீரோ. அதானது என்னுடையமனதை மோகிப்பிக்கிறது. வாரீர் சுவாமி தேவரீருடைய தத்துவஸ்வரூபப்பிரகாசகமாகியும், பரமமாகியுமிருக்கிறயாதொருகியானத்தைப் பிர்மதேவரின்பொருட்டுச்சொன்னீரோ. அதைநான்கேட்கிறதற்கு யோக்கியமானால்உபதேசிக்கக்கடவீரென்று கேட்ட என்பொருட்டுப் பரமபுருஷராகியும். அரவிந்தம்போன்ற நேத்திரங்களையுடையவராயும், ஆசாரியரூபியாகியுமிருக்கிற அந்தப் பகவானிடத்தில்நின்றும் அத்தியயனம்பண்ணப்பட்ட பரமாத்துமதத்துவக்கியானமார்க்கத்தையுடையவனாய்அவரைப் பிரதக்ஷணம்பண்ணி அநேகபிரணாமங்களைச்செய்து அவருடைய வியோகத்தினாலே வியசனப்படுகின்றமனதையுடையவனாய் இவ்விடத்திலேவந்தேன். தேவதேவோத்தமர்களாகியும், நித்தியக்கியானைசுவரியாதிகளையுடையவர்களாகியும் இருக்கிறநரநாராயணரிஷிகள்பராளுக்குஉபத்திரவகரமாகாமலும் ஒருத்தராலேயும்பண்ணக்கூடாமலும் எண்ணிக்கையில்லாமலும் தபசைப்பண்ணிக்கொண்டிருக்கிற பதிரிகாசிரமத்தைக்குறித்துப் போகப்போகிறேனென்று சொன்னஉத்தவனை நோக்கி ஸ்ரீகிருஷ்ணபகவானாலே கிரகிக்கப்பட்ட ஜனங்களுக்குள்ளே முக்கியராகியும் மகாபாகவதராகியுமிருக்கிற விதுரர் ஒருவார்த்தைசொன்னார்.

வாரீர் உத்தவரே? யோகீஸ்வரராகி அந்த ஸ்ரீகிருஷ்ணராலேயுபதேசிக்கப்பட்டதத்வக்கியானத்தைச்சொல்லக்கடவீரென்று பிரார்த்தியாநின்ற விதுரரைப் பார்த்து வாரீர் விதுரரே, தத்வக்கியான உபதேசத்தின்பொருட்டு இந்த மைத்திரேய மகாரிஷியானவர் தம்மால்ஆராதிக்கப்படத்தக்கவரென்று பகவானாலேஆக்கியாபிக்கப்பட்டிருக்கிறாரென்று உத்தவரானவர் இந்தப்பிரகாரம் விதுரருடனேகூட விசுவமூர்த்தியான ஸ்ரீஹரியினு

டைய குணகீர்த்தனமாகிற அமிர்தத்தினலே சகலபாபங்களேயும் போக்கடித்தவராய் அந்தயமுனநதியினுடைய மணற்குன்றிலே யக்தராத்திரியைலக்ஷணம்போலே போக்கடித்து பிற்பாடு அவ்விடத்திலின்று புறப்பட்ட பதரிகாசிரமத்துக்குப் போனுரென்றுசொல்லுகிறசுகப்பிர்மரிஷியைப்பார்த்து வாரீர் பிர்மரிஷியே அதிரதமகாரதர்களுக்குள்ளே உத்தமர்களான விருஷ்ணிகள், போஜாள் முதலான யாதவாள் பிராமணசாபத்தினலே நாசமடைந்தும், ஸ்ரீஹரியும், அந்த மனுஷ்யதேகத்தை விட்டுவிட்டாரோ, அப்படிப்பட்டசாபத்தில் இந்த உத்தவர்மாத்திரம் என்னமாகத்தப்பினர். இந்த ரகசியத்தைச் சொல்லக்கடவீரென்று பிரஸ்னம்பண்ணுகிற ராஜாவைப்பார்த்துச் சுகர் சொல்லுகிறர். வாராய்மகாராஜனே சத்தியசங்கற்பரான அந்தப்பகவானுனவர், பிராமணசாபமென்கிற வியாஜத்தையுடையதாகியும் தம்முடைய சத்திரூபமாகியுமிருக்கிற காலத்தினலே பரிபூரணமான தம்முடையகுலத்தை உபசங்காரம்பண்ணித் தேகத்தையும் விட்டுவிடப்போகிறவராகி இந்தப்பிரகாரம் சிந்தித்தார். என்னவென்றல் நாம் இந்தமனுஷ்யலோகத்தில்நின்றும் ஒழிந்தால் பரமாத்மதத்வப்பிரகாசகரமான கியானத்துக்குள்ளேஉத்தமரான உத்தவரேயோக்கியராகாநிற்கின்றர் நம்முடைய தத்வக்கியானத்தை ஜனங்களுக்கு உபதேசம்பண்ணிக்கொண்டு இந்த லோகத்திலேயே சந்துருஷ்டராயிருக்கட்டுமென்கிறஅபிப்பிராயமுடையவராகியும்,சகலவேதங்களுக்கும் காரணராகியும்,திரிலோகநாயகராகியுமிருக்கிறஸ்ரீஹரியினலே ஆக்கியாபிக்கப்பட்டவராய் அந்த உத்தவரானவர் பதரிகாசிரமத்தையடைந்து அவ்விடத்திற் சமாதியினலே ஸ்ரீஹரியையாராதித்துக்கொண்டிருந்தார். வாராய் மகாராஜனே பிற்பாடு அந்தவிதுரரும் லீலையினலே கிரகிக்கப்பட்ட தேகத்தையுடையவராகியும், பரமாத்மாவாகியுமிருக்கிற ஸ்ரீகிருஷ்ணருடைய சிலாக்கியங்களான லீலேகளே உத்தவரிடத்தில்நின்று கேட்டுப் புத்திமான்களுக்குத் தைரியவிருத்தி கரமாகியும், பசுவுக்குச் சமானுளாகியும், அதைரிய சித்தாளாகியுமிருக்கிற பேர்களுக்குச் சகிக்கக்கூடாததாகியு மிருக்கிற அந்ததிவ்வியமூர்த்தியினுடைய உபசங்காரத்தையுங் கேட்டு மிகவும் பிரீதியினலே தைரியமில்லாதவராய் மனவருத்தமடைந்து அந்த யமுனநதியில்நின்றும் கங்காதீரத்திலேயிருக்கிற மைத்திரேய மகாரிஷியிடத்திலே வந்துசேர்ந்தார். பதமினேமை.

## ரு-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பகவன்லீலே பரிந்துவிதுரரால்
அகமகிழ்ந்துகேட் டானந்தமாகவே,
ஜலம்புகழ்மயித் திரேயர்ஜனர்த்தனன்
சுகஸ்திதியையுஞ் சொல்லினதாமரோ

விதுரராலே ஸ்ரீபகவானுடைய லீலேகளைக்குறித்துக் கேட்கப்பட்டவராய் மைத்திரேயமகாரிஷியானவர் மகத்வமுதலான தத்வங்களுடைய சிருஷ்டியையும், அந்த தத்வங்களாலே பண்ணப்பட்ட ஸ்ரீஹரியினுடையஸ்தோத்திரத்தையுஞ் சொன்னரென்று சொல்லப்படுகிறது.

வாரீர் மகாராஜனே? அச்சுதரிடத்தில் பக்தியினலே பரிசுத்தராகியும், நல்லசீலம் கிருபைமுதலான குணங்களாலே சந்துருஷ்டராகியுமிருக்கிற விதுரரானவர்கங்காதீரத்திலேயிராநின்றும் அளவிடக்கூடாத கியானத்தை யுடையவராகியும், சீலம்-தயைமுதலான குணங்களாலே பூர்ணராகியுமிருக்கிற மைத்திரேயமகாரிஷியையடைந்து இந்தப்பிரகாரம் பிரஸ்னம்பண்ணினர். வாரீர் மைத்திரேயமகாரிஷியே லோகத்திலே ஜனமானதுசுகத்தின்பொருட்டுக் கருமங்களேப்பண்ணுகிறது அந்தக் கருமங்களாலே சுகதுக்கசாந்தியை ஒன்றும்அடையவில்லே அந்தக்கருமங்களாலே பின்னேயும் மகத்தான துக்கத்தையேயடைகிறது ஆகையினலே இப்படிப்பட்டஇந்தச் சமுசாரத்திலே யெங்களுக்குள துயுக்தமோஅதைச்சொல்லக்கடவீர், தன்னுடைய புராதன கருமத்தினலே கிருஷ்ணரிடத்திலே பக்தியில்லாதவனகியும், அதருமசிலனகியும், துக்கத்தையுடையவனகியுமிருக்கிற ஜனத்தினுடைய அனுக்கிரகத்தின்பொருட்டு மங்களகர்களாகியும், கிருஷ்ணருடைய பக்தர்களாகியு மிருக்கிற மகானுபாவர்கள்,இந்தலோகத்திலேசஞ்சரித்துக்கொண்டிருக்கிறர்கள், ஆகையினலே வாரீர்சாதுகளுக்குள்ளே உத்தமரே, சுகசொரூபமாயிருக்கிறமார்க்கத்தையெங்களுக்குச் சொல்லக்கடவீர், யாதொரு மார்க்கத்தினலே யாராதிக்கப்படுகிற பகவான் புருஷாளுடையபக்தியினலேபரிசுத்தமான இருதயத்திலே யிருந்துகொண்டுவேதங்களாலே சொல்லப்படும், பரமாத்தும சாக்ஷாத்காரத்தோடே கூடிக்கொண்டுமிருக்கிற கியானத்தைக்கொடுப்பாரோ அந்தமார்க்கத்தைச் சொல்லக்கடவீர், சத்வாதிகுணங்களுடைய மாய்கைக்கு நியந்தாவாகியும் சுதந்திரராகியுமிருக்கிறபகவானுனவர் யாதொருபுருஷரூபமாக அவதரித்து எந்தலீலேகளேப் பண்ணினரோ அந்தப் பகவானுனவர் இந்தப்பிரபஞ்சத்தை எப்படிசிருஷ்டித்து எப்படி ஸ்தாபித்தாரோ இந்தச்செகத்திற்குச் சீவனத்தை எந்தப்பிரகாரமாகக் கற்பித்தாரோதிரும்பியும் யோகமாயையினலே இந்தப் பிரபஞ்சத்தையெந்தப் பிரகாரமாக வைத்துக்கொண்டு சயனித்திருக்கிறர், இந்தப்பிரபஞ்சத்திலே அனுப்பிரவேசித்திருந்துகொண்டு எந்தப்பிரகாரமாய்ப் பிரமருத்திராதி ரூப

மாக ஆனர். பிராமணர்கள்-தேவர்கள்-பசுக்கள்-இவர்களுக்குக்ஷேமத்தின்பொருட்டு மச்சியகூர்மாதிஅவதார பேதங்களாலே கருமங்களையெத்தப்பிரகாரமாகப் பண்ணினர், புண்ணியமானகீர்த்தியையுடையபேர்களுக்குள்ளே உத்தமரான அந்தப்புருஷோத்தமருடைய சரித்திரங்களை அடிக்கடி கேளாநின்றிருந்தாலும், எங்களுடையமனதானது திருப்தியடையவில்லை லோகநாதர்களுக்கும் ஈஸ்வரனன அந்தப்பகவானானவர் யாதொரு தத்துவ பேதங்களாலே இந்தலோகங்களையும், லோகாலோகபருவதங்களுக்கு வெளிப்பிரதேசங்களையும்லோகபாலர்களையும்நிர்மாணம்பண்ணிவேறுவேறுகச்சமஸ்தபிராணிகளுடைய சமுகமானது தன்தன் கருமானுரூபமான அதிகாரத்தையுடையதாய்க் காணப்பட்டுக்கொண்டிருக்கிறதுகளோ, அந்த ஸ்ரீமந்நாராயண ரானவர்கருமங்கள் அதனாலே பண்ணப்பட்டரூபம், அதினாலே பண்ணப்பட்ட நாமதேயம் இதுகளை யுடையவர்களான ஜீவர்களுக்குப்பேதத்தைப்பண்ணினர். இதுகளைச்சவிஸ்தாரமாக என்பொருட்டு வர்ணிக்கக்கடவீர்.

வாரீர் சர்வக்கியரே? பிராமணர்முதலான வர்னங்களுடைய தருமங்களான துகள். என்னாலேமகா பாரதத்திலே வியாசருடைய முகத்தில்நின்றும் அடிக்கடி நன்றாகக்கேட்கப்பட்டதுகள்கிருஷ்ணருடையகதாமிர்தபிரவாகத்தைத்தவிர அல்பசுகத்தைப் பண்ணுகின்ற அந்தக்கருமங்களுடைய சிரவணத்தினாலே நாங்கள் திருப்தியைஅடைந்தோம். ஸ்ரீகிருஷ்ணருடைய கதாமிர்தப்பிரவாகத்தினாலே திருப்தியை அடையவில்லை உங்களுடைய யக்கியங்களிலே இந்திராதிதேவர்களாலேவர்ணிக்கப்படுகின்றஸ்ரீகிருஷ்ணருடையகதாமிர்தத்தில் நின்றும் எவன்தான்திருப்தியையடையான். உமக்குச் சிநேகிதரான வியாசமகா ரிஷியானவர் ஸ்ரீபகவானுடைய குணகீர்த்தனம் மோக்ஷசாதனமென்றுசொல்ல இச்சித்தவராய்த் தருமார்த்தகாமங்களை மிகவும்சொன்னர்மனுஷியாளுடைய சித்தமானதுஸ்ரீஹரியினுடைய கதாசிரவணத்திலே பிரவேசிக்கப்பட்டுப் பாரதத்தைச் சொல்லாநின்ற வியாசமகாரிஷிக்கும் ஸ்ரீஹரி கதாசிரவணத்திலேயே தாற்பரியம் அப்படிப்பட்ட ஸ்ரீஹரியினுடைய கதாசிரவணமானது சிரத்தையையுடையவனுகியும் ஸ்ரீஹரியினுடைய பாதபத்மங்களுடைய தியானத்திலேமிகவும் சுகத்தையுடையவனுகியுமிருக்கிற புருஷனுக்குமிகவும் விருத்தியடையா நின்றுகொண்டு துச்சங்களான விஷயசுகங்களிலே வைராக்கியத்தை யுண்டாக்கும்படியான ஸ்ரீஹரியினுடையகதையிலேசிரத்தையில்லாதவர்களிடத்திலும் அக்கியாளாகியுமிருக்கிற அவர்களைக்குறித்து விசனப்படுகிறேன் விருதாவானமனே வாக்குகளின் வியாபாரத்தை யுடையபேர்களின் ஆயுசை காலமானது கொண்டுபோவதைக் குறித்து வியசனப்படுகிறேன்.

வாரீர் தீனபந்துவான மைத்திரேயமகாரிஷியே புஷ்பங்களில்நின்றும்சாரத்தைக்கிரகிப்பதுபோல் புண்ணியமானகீர்த்தியையுடையவராகியும் சமஸ்தபிராணிகளுக்கு சுகத்தைக்கொடாநின்றுமிருக்கிற ஸ்ரீஹரியினுடையகதைகளுக்குள்ளே உத்தமமானதாயும்இந்தப்பிரபஞ்சத்தினுடையசிருஷ்டிஸ்திதிசங்காரநிமித்தமாகவிசித்திரசக்திகளைகிரகித்திருக்கிற அந்தப்பகவான் தானேமனுஷியனக அவதரித்துஅதிமானுஷங்களான லீலைகளைப்பண்ணினதை யெனக்குச்சொல்லவேண்டுமென்று விதுரராலே பிரஸ்னம்பண்ணப்பட்டவராகிச் சர்வக்கியராகியுமிருக்கிற அந்தமைத்திரேயமகாரிஷியானவர் அந்தவிதுரரைநோக்கி வாரீர்சாதுவே-ஸ்ரீகிருஷ்ணரிடத்திலே மிகவும் மனதையுடையவரான உம்மாலேநன்றாகப்பிரஸ்னம்பண்ணப்பட்டது. பிரஜாசங்காரகர்த்தாவாயிருக்கிறயமதருமராஜனனவன்மாண்டவியமகாரிஷியினுடையசாபத்தினாலே விசித்திரவீரியனுடைய ஸ்திரீயாகக்கிரகித்திருந்த தாசியினிடத்திலே வியாசரிடத்தில் நின்றும்பிறந்தநீர் பகவானுக்கும் பாகவதாளுக்கும்சம்மதமானவர், அப்படிப்பட்டஉமக்குஏகமாயையினாலே விருத்தியடையாநின்றும் பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டிஸ்திதிசங்காரங்களைப்பண்ணுகின்று மிருக்கிற பகவானுடையலீலைகளைக்கிரமமாகச் சொல்லுகிறேன்

வாரீர் மகானுபாவரே, அந்தபகவானானவர் இந்தப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தவருடைய காரியகாரணஸ்வரூபமான காலசக்தியினாலே சத்வாதி குணங்களின்கிரியையுடைய மாயாப்பிரகிருதியிலே தம்முடைய அம்கிசபூதனுகியும் பிரகிருதிக்குஅதிபதியான ஆத்மாவாகியுமிருக்கிற புருஷரூபத்தினாலே சித்துவினுடையஆபாசரூபமான வீரியத்தைத் தரித்தார் பிற்பாடு காலத்தினாலேபிரேரணைபண்ணப்பட்ட அந்தப்பிர கிருதியில்நின்றும் தத்வமானதுஉண்டாச்சுது சத்வகுணப் பிரதானமானபடியினாலே அக்கினியானதுநிவர்த்தமாகியும்விக்கியான ஸ்வரூபியாகியுமிருக்கிற அந்த மகதத்வமானது தன்னுடையதேகத்துக்குள்ளேயிராநின்ற பிரபஞ்சத்தைப் பிரகாசியாநின்றுகொண்டுஉண்டாச்சுது சித்துவினுடையஆபாசம் சத்வாதிகுணங்கள் பிரயோகமான காலம்இதுகளுடைய ரூபமாகியும் மகதத்வ சரீரியாகியுமிருக்கிற அந்தவிக்கியானஆத்மாவானவன் சர்வாத்தியக்ஷனன பகவானுடைய சிருஷ்டிக்கு விஷயனுய்க்கொண்டு இந்தப்பிரபஞ்சத்தை சிருஷ்டிக்க வேணுமென்கிறஇச்சையினாலேதன்னுடையஆத்மாவை வேறொருகாரிய ரூபத்தையடைந்ததாகப் பண்ணினன் சிருஷ்டிகா

ரியத்தை யுடையதான அந்தமகதத்வத்தில் நின்றும்காரியமான அதிபூதகாரணமான அத்தியாயத்தும்கர்த்தாவான அதிதெய்வம் இதுகளுக்கு ஆசிரயனாகியும் பஞ்சமகாபூதங்கள், தஜேந்திரியங்கள், இந்திரியங்களுக்கு அபிமானதேவாள்மனது இதுகளுடையசுவரூபமான அகங்காரமானதுஉண்டாச்சுது, அந்தஅகங்காரமானதுசாத்விகமென்றும் ராஜசமென்றும் தாமசமென்றும்மூன்றுவிதமாயிருக்கும், சிருஷ்டிக்கிரியையுடையதான அந்தசாத்விக அகங்காரத்தில்நின்றும்மனதும் இந்திரியஅதிஷ்டர்களான தேவர்களும்உண்டானார்கள். கியானேந்திரிய கருமேந்திரியங்கள்ராஜச அகங்காரத்தில்நின்றும் உண்டாச்சுதுகள்சப்தத்தில்நின்றும்ஆகாசமானதுஉண்டாய்ப்பகவானாலே கடாட்சிக்கப்பட்ட அந்தஆகாசமானது,காலம்,மாய்கை,புருஷன்,இதுகளுடைய சம்பந்தத்தினாலே கிரியையுடையதாகக் கொண்டு ஸ்பரிசத்தைப்பிறப்பித்தது, ஆகாசத்தில்நின்றும்உண்டான அந்தஸ்பரிசமானது கிரியையுடையதாகக்கொண்டு வாயுவைப்பிறப்பித்தது ஆகாசத்துடனே கூடிக்கொண்டு மகாபலத்தையுடையதாகியு மிருக்கிற அந்தவாயுவானது கிரியையுடையதாகக்கொண்டு ரூபதன்மாத்திரையைஉண்டாக்கிற்றது;அந்தரூபத்தில்நின்றும்லோகத்துக்குப்பிரகாசகரமானதேஜசானதுஉண்டாச்சுது, வாயுவுடனேகூடிக்கொண்டிருக்கிற அந்ததேசசானது பரமபுருஷராலேகடாட்சிக்கப்பட்டுக்கிரியையையுடைய தாகக்கொண்டு,காலம், மாய்கை,புருஷன்இதுகளுடையசம்பந்தத்தினாலேரசகுணத்தையுடையதான ஜலத்தைசிருஷ்டித்தது தேசசுடனேகூடிக்கொண்டிருக்கிற அந்தஜலமானது பரமபுருஷராலேகடாட்சிக்கப்பட்டுக் கிரியையையுடையதாகக்கொண்டு, காலம்,மாய்கை,புருஷன், இவர்களுடையசம்பந்தத்தினாலே கந்தகுணத்தையுடையதான பூமியைச்சிருஷ்டித்தது.

வாரீர் விதுரரே. ஆகாசமுதலானபஞ்சபூதங்களுக்குள்ளே எதில்நின்றும்எதுஉண்டாச்சுதோ அந்தக்காரியங்களுக்குக் காரணகுணங்களுடையசம்பந்தத்தினாலேஒன்றுக்கொன்று உயர்த்தியானகுணங்களை யுடையதாய்ச்சொல்லுவார்கள் அதெப்படியென்றால் ஆகாசத்துக்குச்சப்தகுணம் ஒன்றே,வாயுவுக்கு ஆகாசசம்பந்தத்தால் சப்தம், ஸ்பரிசம்இரண்டுகுணங்கள், தேஜசுக்குச், சப்தம், ஸ்பரிசம்,ரூபம் இந்தமூன்றுகுணங்கள் ஜலத்துக்கு சப்தம், ஸ்_ரிசம்-ரூபம்-ரசம்-இந்தநாலுகுணங்கள்பூமிக்குச்சப்தம்-ஸ்பரிசம்-ரூபம்-ரசம்-கந்தம்-இந்த ஐந்துகுணங்களென்று இப்படிஅறியத்தக்கது ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய அங்கிசங்களாகியும், காலசின்னமானபரிணமம். மாயாசின்னமான கிரியை, புருஷசின்னமான கியானம்இதுகளுடனேகூடிக்கொண்டு மிருக்கிற மகத்துவமுதலானதுகளுக்கு அபிமானிகளான இந்ததேவாள்ஒன்றுக்கொன்று வேறுவேறுகளான குணங்களையுடையதுகளானபடியினாலே ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாததினாலே பிரமாண்டசிருஷ்டியிலேசாமர்த்தியமில்லாததுகளாய் அஞ்சலிபந்தம்பண்ணிக்கொண்டுபரமாத்துமாவைக்குறித்து ஸ்தோத்திரம்பண்ணினதுகள்.

தத்துவாபிமானி தேவர்களுடைய

ஸ்தோத்திரம்.

வாரீர் தேவதேவனே பிரபன்னருடைய தாபத்தைப்போக்கடிக்கிறதிலே குடைபோலேயிராநின்றதேவரீருடைய ஸ்ரீபாதபத்மங்களைக்குறித்துப் பிரணாமம்பண்ணுகிறோம் யாதொரு ஸ்ரீபாதபத்மங்களை ஆசிரயமாகவுடையவாளான யோகீஸ்வராள் மகத்தானசம்சாரதுக்கத்தைசிக்கிரமாகத்தூரவிட்டுவிடுகிறார்களோ,அந்தபரமாத்மாவே யிந்தசம்சாரத்திலேதாபத்திரையத்தினாலே திரஸ்கரிக்கப்படாநின்ற சீவாள்பரமாத்ம தத்வக்கியானஜனகமானதேவரீருடைய ஸ்ரீபாதபத்மசாயையைஆசரயிக்கிறதற்குக்கோருகிறோம்வாரீர்பகவானே பட்சிகளானதுகள் கூண்டில்நின்றும் வெளிப்புறப்பட்டு நாலுதிக்கிலேயும்சஞ்சரித்துத்திரும்பவும்அந்தக் கூண்டிலேதானேபிரவேசிப்பதுபோல் சகலவேதங்களும்உம்முடையமுகாரவிந்தத்தில் நின்றுஉண்டாகிக்கியான கருமங்களைப்பிரகாசிப்பித்து உம்மிடத்திலேயே அடயாநிற்கிறதுகள் ஆகையினாலேரிஷீஸ்வராளானபேர்கள்அப்படிப்பட்டவேதங்களாலே விஷயங்களில் ஆசக்தியில்லாமலிருக்கிற மனதினால்தேடத்தக்கதுகளாகியும் சமஸ்தபாபங்களையும்போக்கத்தக்கினநதிகளுக்குள்ளேசிரேஷ்டமானகங்கைக்கு உற்பத்தி ஸ்தானமாயுமிருக்கிறபுண்ணியகரமான பாதாரவிந்தத்தை யுடையதேவரீரை சரணமடைகிறோம், யோகிகளானபேர்கள்சதா இருதயத்தில்தியானம்பண்ணி வயிராக்கியபலத்தையுடையதான கியானத்தினாலே பரமாத்மசாக்ஷாத்காரத்தை அடைகிறதேவரீருடையபாதபத்மத்தைச்சரணமாக அடைகிறோம்,

வாரீர்பரேசனே, மகாகீர்த்தியையுடைய தேவரீரதுஸ்வரூபக் கியானத்தினால் உண்டாகிற அக்கியானகாமகர்ம சம்சாரங்களுடைய நிவர்த்தியினால் உண்டாகின்றமோக்ஷலட்சுமியினாலே நித்தியமுக்தாளாயிருக்கிறவர்கள்விஷயங்களிலே ஆசக்தியையுடையதுகளான இந்திரியங்களாலே மிகவும்தியானம் பண்ணிக்கொண்டிருக்கின்ற மகானுபாவாள் தேவரீருடைய கதையாகிற அமிர்தபானத்தினாலே விர்த்தியடைகின்றபக்தியினால்நிர்மலமான இருதயத்தை யுடையவர்களாய் வைராக்கிய

பலத்தையுடையதான தேவரீருடைய ஸ்வரூபக்கியானத்தையடைந்து அனுபாசமாக வைகுந்தலோகத்தை அடைவார்கள். அப்படியாகாப்பியாசத்தினாலே அடைகிறபேர்களுக்கு மிகவும்சிரமமானது உண்டாகாநிற்கிறது, தேவரீருடைய கதாசிரவணாதிகளாலே அனுயாசமாகவே தேவரீரை அடைகிறார்கள், சிரமம், தேகம், முதலானதுகளிலே நான் என்னதென்கிற அகங்காரத்தையுடையபேர்களுக்குத் தேவரீருடைய பலப்பிராப்தியானது ஒருக்காலுமில்லை, பிரத்தியாளான நாங்கள் லோகங்களைச் சிருஷ்டிக்கவேணுமென்கிற இச்சையினால் தேவரீராலே சத்வரசதமோகுணங்களாலே சிருஷ்டிக்கப்பட்டு விருத்தமான ஸ்வபாவத்தை யுடையவர்கள் ஒன்றோடொன்று கூடாதவர்களாய் எதுநிமித்தமாகச் சிருஷ்டிக்கப் பட்டோமோ அதற்கு சமர்த்தர்களாகாமற் போகிறோம்.

வாரீர் ஜனனமில்லாதவரே, நாங்கள்பூஜாபாகத்தைச் சம்பூர்ணமாகத் தேவரீரின்பொருட்டு எப்படிபிறப்பித்தும் எந்தப்பிரகாரமாக கருமபலத்தை அனுபவித்தும் எந்தப்பிரகாரமாக இந்தச்சீவாள் எவ்விடத்தி லிருந்துகொண்டு விக்கினமில்லாமலும் சமயமில்லாதவர்களாகக்கொண்டு தேவரீருக்கும் எங்களுக்கும், பூஜாபாகத்தைசமர்ப்பியாநின்றுகொண்டு கருமபலத்தைஅனுபவிப்பார்களோ அப்படிப்பட்ட பிரமாண்டத்தை சிருஷ்டிக்க எங்களுக்குச் சாமர்த்தியத்தைக் கற்பிக்கக் கடவீர், சர்வகாரணராகியும் விகாரசூனியராகியும், ஆசிரயராகியும், அனாதியாகியுமிருக்கிற தேவரீர்காரியங்களுடனே கூடிக்கொண் டிருக்கிற எங்களுக்குக் காரணராகா நிற்கிறீர்,

வாரீர் தேவதேவனே ஜென்மரகிதரான தேவரீர்சத்வாதிகுணங்களுக்கும் கருமங்களுக்கும் காரணமாகியும் தேவரீருடைய சக்திரூபமாகியும், மாய்கையிலே மகத்துவரூபமாகியு மிருக்கிற வீரியத்தை முன்னாலே வைத்தீர்;

வாரீர் பரமாத்துமாவே காரியாபிபூதாளாயிருக்கிற மகதத்வமுதலான நாங்கள் தேவரீரிடத்தினின்றும் என்னநிமித்தமாக உண்டானோம் தேவரீருக்கு எந்தக்காரியத்தைச்செய்வோம்.

வாரீர் தேவதேவனே, தேவரீருடைய அனுக்கிரகத்தையுடையவர்களான எங்களுக்குக் கிரியா நிமித்தத்திலே தேவரீர் சக்தியோடேகூடத் தமதுஞானத்தைக் கொடுக்கக்கடவீர், தேவரீருடைய ஞானகிரியாசக்திகளாலேயே சிருஷ்டியிலே நாங்கள்சமர்த்தர்களாகா நிற்கிறோம் இல்லாவிட்டால் சமர்த்தாளன்று,

---

அச்சுதாயநம.

## ௬-வது, அத்தியாயம்,

கலிவிருத்தம்.

தண்ணுமீசுரன் றன்னாலேவப்பட்ட
நண்ணுதத்வங்கள் நாடும்விராட்டுவின்
பண்ணும்சிருஷ்டி பகவான்செய்யப்பட்ட
ஒண்ணுந்தெய்வாதி பேதமுரைத்தனர்.

ஈஸ்வரனாலே யேவப்பட்ட அந்தத்தத்வங்களால் விராட்டுசரீரத்தினுடைய சிருஷ்டியையும், அந்தவிராட்டுசரீரத்தில் பகவானாலேபண்ணப்பட்ட அதிதெய்வாதி பேதத்தையுஞ் சொல்லுகிறார்.

மைத்திரேய மகாரிஷியினுடைய
வாக்கியம்,

வாரீர்விதுரரே, அந்த ஈசுவரனானவர் இந்தப்பிரகாரம் ஒன்றோடொன்றுகூடாமலிருந்தும் லோகசிருஷ்டி சாமர்த்தியமில்லாததுகளாகியுமிருக்கிற தம்முடையசக்திகளான மகத்வமுதலான தத்வங்களுடையஸ்திதியைப்பார்த்துப் பிற்பாடுஉருக்கிரமானஅந்தப்பகவானனவர்சிருஷ்டியாதிகளிலே விகாரியாநின்றும்,காலமென்றும் பெயரையுடையதாகியுமிருக்கிற பிரகிருதியென்கிற சக்தியைத் தரித்து அந்த இருபத்துமூன்று தத்துவங்களுடையகூட்டத்திலே ஏககாலத்தில் அந்தரியாமியாகப்பிரவேசித்து கிரியாசக்தியினாலேஜீவாளுடையவியாபாரரகிதமாயிருக்கிற அதிருஷ்டத்தை யெழுப்பி ஒன்றோடொன்று கூடாமலிருக்கிற அந்தத்தத்வங்களுடைய கணத்தைக் கூட்டிவைத்தார், அந்த இருபத்து மூன்றாயிருக்கிற தத்வகணமானது ஈசுவரனா லேவப்பட்டதாய் தங்களுடைய அம்சங்களாலே விராட்டுசரீரமாகிற அண்டத்தைச் சிருஷ்டித்ததுகள். அனுப்பிரவேசித்த அந்த ஈசுவரனாலே விசுவ காரணங்களான தத்துவங்களுடைய கணமானது தங்களுடைய அம்சங்களாலே ஒன்றுக்கொன்று சேர்ந்து விராட்டு சரீரமாகப் பரிணமித்தது, அந்த விராட்டுசரீரத்திலே ஸ்தாவர ஜங்கமரூபங்களான இந்தலோகங்களானதுக ளிருக்கிறதுகள் சுவர்ணமயமா யிருக்கிற அந்த விராட்டுசரீர அபிமானியான புருஷனானவன் அந்தப்பிரமாண்டமத்தியத்திலேபிரதான கருமசேஷத்தை யுடையவர்களான சகலஜீவர்களோடே கூடிக்கொண்டு அனேகமாயிரம் சம்வச்சரம் சலத்திலே வாசம்பண்ணிக்கொண்டிருந்தார், அந்த விராட்டுபுருஷனானவன் ஞானசக்தி-போகசக்தி-இதுகளையுடையவனாய் தன்னுடையஆத்துமாவைக் ஞானசக்தியினாலே யிருதயத்துக்குள்ளே யிராநின்ற சைதன்னியரூபமாகியும், யோகரூபமாகியும், கிரியாசத்தியினாலேத

சவிதபிராணரூபமாகவும் போகசக்தியினாலேஅத்தியாத்துமம்,அதிதெய்வம்,அதிபூதமான மூன்றுரூபமாகவும்பிரித்தான். இந்தவிராட்டுபுருஷனனவன் சமஸ்த பிராணிகளுக்கும் அந்தரியாமியாகியும், சிலபுருஷனுகியும்,பரமாத்துமாவினுடைய ஆதிஅவதாரமாகியுமாகாநிற்கிருன் விராட்புருஷனிடத்திலே சராசரரூபமானஅத்தியாத்தும மென்று சொல்லப்பட்ட இந்திரியங்களோடே கூடிக்கொண்டிருக்கிற விராட்டென்றும், ஆதிபூத மென்றுசொல்லப்பட்ட தேகங்களோடேகூடிக்கொண்டிருக்கிற விராட்டென்றும், அதிதெய்வமென்னப்பட்ட அபிமானதேவர்களோடே கூடிக்கொண்டிருக்கிற விராட்டென்றும், இந்தப்பிரகாரம் மூன்றுவிதமாகியும்பிராணரூபமாகப் பத்துவிதமாகியும், இருதயத்துக்குள்ளேயிராநின்ற சைதன்னியத்தினாலே ஏகரூபமாகியு மிருக்கிருன், ஈசுவரனான அந்தவிராட்டுப்புருஷனவன் விசுவகாரணங்களான அந்தத்தத்துவங்களுடைய தேவரீருக்கு நாங்கள் பூசையையெப்படிசமர்ப்பிப்போம்அதையனுக்கிரகிக்கக் கடவீரென்று சொல்லியிருந்த வசனத்தைஸ்மரித்து அந்தத் தத்துவங்களுக்கு நானாவிதமான விருத்தி லாபத்தின்பொருட்டுத் தம்முடைய தேஜசினாலேஅந்தவிராட்ரூபத்தை யிந்தப்பிரகாரஞ்செய்வோமென்று ஆலோசனைபண்ணினார்.

இந்தப்பிரகாரம் ஆலோசனைபண்ணுகிற விராட்டுபுருஷனுக்குத் தேகத்திலே பிரகாசமாகச் சிலதுஸ்தானங்க ளுண்டாயிற்று தத்துவங்களுக்கு ஆசிரயங்களான அந்தஸ்தானங்களைச் சொல்லுகிறேன் கேட்கக்கடவீர், அந்தவிராட்டுபுருஷனுக்கு முகமானது பிரகாசமாகஉண்டாயிற்று ஜீவனனவன் வாக்கேந்திரியத்தினாலேசபதத்தையுச்சரித்து லோகபாலகனயிருக்கிற அக்கினி தன்னுடைய அம்சமான அந்த வாக்கேந்திரியத்தோடே அந்தமுகத்தை ஸ்தானமாகஅடைந்தான், அந்தவிராட்டுபுருஷனுக்குத் தாலுவான து உண்டாயிற்று ஜீவனனவன் ரசனேந்திரியத்தினாலே ரசங்களைக் கிரகிக்கிருன், லோகபாலகனனவருணனனவன்தன்னுடையஅம்சமான அந்தரசனேந்திரியத்தோடேகூட அந்தத்தாலுவை ஸ்தானமாக அடைந்தான், அந்த விராட்டுபுருஷனுக்கு நாசிகைகள் பிரகாசமாக உண்டாயிற்றுகள். ஜீவனனவன்கிராணேந்திரியத்தினாலேகந்தத்தையறிகிருன்,அசுவனிதேவர்கள் தங்களுடையஅம்சமான அந்தகிராணேந்திரியத்தோடே கூட அந் நாசிகையை ஸ்தானமாக அடைந்தார்கள், அவ்விராட்டுபுருஷனுக்கு நேத்திரங்களானதுகள் பிரகாசமாகவுண்டாயிற்றுகள் சீவனுக்கு நேத்திரேந்திரியத்தினாலே ரூபக் கியானமானது உண்டாகிறதுகள். சூரியனனவன் தன்னுடையஅம்சமான அந்த நேத்திரேந்திரியத்தோடேகூட அந்தநேத்திரங்களை ஸ்தானமாகஅடைந்தான். அவ்விராட்புருஷனுக்குச் சர்மங்களானதுகள் பிரகாசங்களாகஉண்டாயிற்றுகள் ஜீவனனவன் யாதொரு தொக்கிந்திரியத்தினாலே ஸ்பரிசக்கியானத்தை யடைகிருனே லோகபாலனனவாயுவானவன்தன்னுடைய அம்சமான அத்தொக்கிந்திரியத்தோடேகூட அந்தச்சர்மத்தை ஸ்தானமாக அடைந்தான் அவ் விராட்புருஷனுக்குக் காதுகளானதுகள் பிரகாசங்களாக உண்டாயிற்றுகள், ஜீவனனவன் சுரோத்திரேந்திரியத்தினாலே சப்தக்கியானத்தை யடைகிருன் திக்குகளானதுகள் தங்களுடைய அம்சமான அந்தசுரோத்திரேந்திரியத்தோடேகூட அக்காதுகளை ஸ்தானமாக அடைந்ததுகள். அந்தவிராட்டுபுருஷனுக்குச்சர்மமானது பிரகாசமாக வுண்டாயிற்று. ஜீவனனவன் ரோமங்களாலேதினவினுடையகியானத்தையறிகிருன்,ஒஷதிகளானதுகள்தங்களம்சமான அந்தரோமங்களோடேகூடஅச்சர்மத்தை ஸ்தானமாகஅடைந்ததுகள். அவ்விராட்டுபுருஷனுக்கு விருஷணமானது பிரகாசமாக உண்டாயிற்று, இந்தச் சீவனனவன் ரேதசினாலே ஆனந்தத்தையடைகிருன், பிர்மாவானவர் தன்னுடைய அம்சமான அந்தரேதசோடேகூட அவ்விருஷணத்தை ஸ்தானமாகஅடைந்தார்,

அந்த விராட்புருஷனுக்குக் குதமானது பிரகாசமாக உண்டாயிற்று. ஜீவனனவன் பாயுவென்கிற இந்திரியத்தினாலே மலவிசர்க்கத்தையடைகிருன் லோகபாலனனமித்திரனனவன் தன்னுடைய அம்சமான அந்தப்பாயுவிந்திரியத்தோடேகூட அந்தக்குதத்தை ஸ்தானமாக அடைந்தான். அவ் விராட்புருஷனுக்கு அஸ்தங்களானதுகள் பிரகாசமாக உண்டாயிற்றுகள். ஜீவனனவன் கிரைய விற்கிரையாதி சக்திகளோடேகூட அவ்வஸ்தங்களை ஸ்தானமாகஅடைந்தான் அவ் விராட்புருஷனுக்குப் பாதங்களானதுகள் பிரகாசமாகவுண்டாயிற்றுகள்; ஜீவனனவன் கதிசக்தியினாலே யடையத்தக்க தேகங்களை அடைகிருன், லோகேசுவரனன ஸ்ரீவிஷ்ணுவானவர்தம்முடைய அம்சமான அந்தக்கதிசக்தியோடேகூட அப்பாதங்களை ஸ்தானமாக அடைந்தார். அவ்விராட்புருஷனுக்கு இருதயமானது பிரகாசமாக உண்டாயிற்று. சீவனனவன் மனதினாலே சங்கற்பாதி ரூபமான விகாரத்தையடைகிருன். சந்திரனனவன் தன்னுடைய அம்சமான அந்த மனதோடே கூட அந்த இருதயத்தை ஸ்தானமாகஅடைந்தான். அவ் விராட்புருஷனுக்குப் புத்தியானது பிரகாசமாகஉண்டாயிற்று, சீவனுக்கு அறிவினாலே அறியத்தக்க விஷயங்களுடைய கியானமானது உண்டாகிறது. பிரகஸ்பதியானவர் தன்னுடைய அம்சமான அந்த அறிவோடேகூட அப்புத்தியை ஸ்தானமாக அடைந்தார். அவ் விராட்புருஷனுக்கு அகங்கா

ரமானது பிரகாசமாக உண்டாயிற்று, சீவனானவன் அகம்விருத்தியினாலே கிரியை அடைகிறான், ருத்திரனானவன் தன்னுடைய அம்சமான அந்த அகம் விருத்தியோடேகூட அவ்வகங்காரத்தை ஸ்தானமாக அடைந்தான் அவ்விராட்புருஷனுக்குப் புத்தியானது பிரகாசமாக உண்டாயிற்று, இந்தச் சீவனானவன் யாதொரு பிரக்ஞையினாலே விக்ஞானத்தையடைகிறான் பிரமாவானவர் தன்னுடைய அம்சமான பிரக்ஞையோடேகூட அந்தப்புத்தியைஸ்தானமாக அடைந்தான், விராட்புருஷனுடைய சிரசில்நின்றும் சுவர்க்கமும், பாதங்களில்நின்றும் பூமியும், நாபியில்நின்றும் அந்தரிக்ஷமும் உண்டாயிற்று மிகவும் அதிசயித்திரா நின்ற சத்வகுணத்தினாலே தேவர்களானபேர்கள் சுவர்க்கத்தை ஸ்தானமாக அடைந்தார்கள் மனுஷியாளும், அவர்களுக்குச் சகாயங்களாயிருக்கிறபசுமுதலான பிராணிகளும் ராஜச சுபாவத்தினாலே பூமியைஸ்தானமாக அடைந்தார்கள். ருத்திரனுடைய பாரிஷதகணங்களான பூதங்களானதுகள் தாமச சுபாவத்தினாலே பகவானுடைய நாபியாகியும், பூலோக சுவர்க்க லோகங்களுக்கு மத்தியமாகியுமிருக்கிற அந்தரிக்ஷத்தை ஸ்தானமாக அடைந்ததுகள்.

வாராய் ராஜசிரேஷ்டனே அந்தவிராட்புருஷனுடையமுகத்தில்நின்றும் வேதங்களும் பிராமண வர்னமும் உண்டானார்கள். அங்கங்களுக்குள்ளே முகமானது சிறந்ததுபோல மற்றவர்னங்களுக்குள்ளே பிராமணனானவன் குருவாகநிற்கிறான். அவனுக்கு வேதாத்தியயன முதலானது விருத்தியாகாநிற்கிறது, அந்தப் புருஷனுடைய பாகுக்களினின்றும், பாலனரூபமானவிருத்தியும் க்ஷத்திரியவர்னமும் உண்டாயிற்று, அந்த விராட்புருஷனுடைய துடைகளிலேயிருந்து லோகத்துக்குச்சீவனஹேதுக்களான கிருஷிமுதலான வியாபாரங்களானதுகள் உண்டாயிற்று, அப்புருஷனுடைய பாதங்களில் நின்றும் சிசுருஷையானது தருமசித்தியின்பொருட்டு சூத்திரவர்னத்துடன் உண்டாயிற்று, அந்தச்சூத்திரனுடைய சிசுருஷாவிர்த்தியினாலே ஸ்ரீஹரியானவர் மிகவுஞ் சந்தோஷிக்கிறார், பிராமணாள் முதலான நாலுவர்னமும் தங்கள்விர்த்திகளோடேகூட பரமபுருஷரான ஸ்ரீஹரியுடையமுகம்முதலான அங்கங்களில் நின்றும் உண்டானார்களாகையினாலே இந்நாலுவர்னங்களும் ஆத்துமசுத்தியார்த்தமாகச் சுவதர்மத்தினாலே சிரத்தையுடனேகூடத்தங்களுக்குச் சீவனப்பிரதராகியுங் கர்த்தாவாகியுமிருக்கிற அந்தஸ்ரீஹரியை ஆராதிக்கிறார்கள்.

வாரீர் விதுரரே, காலம்-கர்மம்-சுவபாவம்- இதுகளுடையரூபமான சக்தியையுடைய அந்தவிராட்புருஷனை வர்ணிக்குகைக்கு எவன்தான்இச்சியான் அந்தஸ்ரீ ஹரியைத்தவிர இதரவஸ்துக்களுடைய கீர்த்தனத்தினால் துஷ்டமாயிருக்கிற என்னுடைய வாக்கைப் பவித்திரம்பண்ணுகிற ஸ்ரீஹரியினுடையகீர்த்தியைக் குருமுகத்தில்நின்றும்கேட்டபடிக்கு என்புத்தி சக்தியானுசாரமாகச் சொல்லுகிறேன்.

==(*)==

ஆத்துமனேநம.

## எ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

ஐயங்கொண்ட தகலச்செய்யாநின்ற
மையித்திரேய மகாரிஷிவாக்கியம்
உய்யுமாறுகொண் டாடியுவந்துமே
பையநல்விது ரர்செயப்பட்டதாம்.

சம்சயத்தைப் போக்கடியாநின்ற மைத்திரேய மகாரிஷியினுடைய வசனத்தைக் கொண்டாடித் திரும்பவும் நானாவிதப்பிரஸ்னங்கள் விதுரராலே பண்ணப்பட்டதுகளென்று சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்மகாராஜனே வியாசருடைய புத்திரராகியும் ஞானியாகியுமிருக்கிற விதுரரானவர் மைத்திரேயமகாரிஷியைப் பிரார்த்தனாரூபமான வாக்கினாலே சந்தோஷிப்பித்து ஒருவார்த்தைசொன்னார்.

விதுரருடையவாக்கியம்,

வாரீர் பிரமரிஷியே, ஞானஸ்வரூபியான பகவானுக்குக் குணங்கள் லீலையினாலே யெப்படிகூடும், பிரவிர்த்திஜனமான யிச்சையானது பாலனுக்கு விளையாட்டிலே யேதுவாகயிருக்கிறது மற்றொருபாலாளை லீலையிலே பிரவிர்த்திப்பிக்கிற நிமித்தமாகவாகிலும் பாலனுக்கு லீலையிலேயிச்சையுண்டாகாநிற்கிறது ஏகாகியிருக்கிற ஈசுவரனுக்கு லீலைபண்ணவேணுமென்கிற இச்சை எப்படிஉண்டாகாநிற்கிறது பகவானானவர் சத்துவாதிகுணமாகியும் ஜீவனுக்குக் கர்த்திருத்துவபோகத் திருத்துவதோகத் திருத்துவாதிமோகத்தைப் பண்ணுநின்ற மாய்கையினாலே இந்தப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தும் பாலனம்பண்ணி மறுபடியும் தம்மிடத்திலே லயம்பண்ணுநின்று மிருக்கிறார், தேசகால ஜாகரணாதி அவஸ்தைகளாலே தள்ளப்படாமலிருக்கிற ஞானஸ்வரூபத்தையுடையவரான அந்தப் பகவானானவர் மாய்கையுடனே எப்படிக்கூடுவர், சராசரரூபங்களான சமஸ்த தேகங்களிலேயும் அந்தரியாமியாகவும் ஆனந்தாதிசுவரூபத்துக்கு நாசமும் எப்படிஉண்டாகும் என்னுடையமனதிலே உண்டாகாநின்ற மகத்தான இந்த மோகத்தைப்

போக்கடிக்கக் கடவீரென்று ஆக்ஷேபிக்கப்பட்ட அந்த விதுரரைப்பார்த்து மைத்திரேயமகாரிஷியானவர் சிரித்து ஒருவார்த்தைசொன்னார்,

மையித்திரேயர்வாக்கியம்.

வாரீர் விதுரரே, அந்தஈஸ்வரனுக்குமாய்கையுடனே சம்பந்தமும் இச்சையென்கிறதும், இதுவேமாய்கையாகாநிற்கிறது நித்திரையிலே சொப்பனங் காண்கிற புருஷனுக்குச் சிரச்சேதமுதலானது இல்லாமலிருந்துஞ்சிரசானது சேதிக்கப்பட்டுப் போயிற்றென்று ஆத்மாவுக்கு அனர்த்தமானதில்லாமலேகாணப்படுவதுபோல்அந்தஈஸ்வரனுக்கும் மாய்கைமுதலானதுஇல்லாமலேகாணப்படுகிறது ஜலத்திலே பிரதிபலிக்கின்ற சந்திரனுக்குஅந்தஜலத்தினாலே பண்ணப்படாநின்ற சாஞ்சல்லியமுதலான குணமானது காணப்படுவதுபோல் தேகத்தினுடைய கர்ம்மானது அசத்தாயிருந்தாலும் தேகத்திலே அபிமானத்தையுடைய சீவனுக்குக் காணப்படுகிறது, பரமாத்துமாவான ஈஸ்வரனுடையகுணமன்றுஅந்தஜீவனுக்கும் தேகத்தினுடைய குணமான ஜனன மரணமுதலானது நிவர்த்திமார்க்கத்தினாலேயும், வாசுதேவருடைய கிருபையினாலேயும், உண்டாகாநின்ற பக்தியோகத்தினாலே ஸ்ரீஹரியினிடத்தில் சமஸ்த இந்திரியங்களுக்கும் சலியாமலிருக்குகை உண்டாகிறபோதுசமஸ்தசங்காரக் கிலேசங்களும் மகா நித்திரையில் சகலதுக்கங்களும் லயத்தையடைந்திருக்கிறாப்போல்லயத்தையடையும், மனதிலே உண்டாகாநின்ற அந்த ஸ்ரீஹரியினுடைய சரணாரவிந்த பராகத்தினுடைய சேவையிலே பிரீதியானது சகலகிலேசங்களுடைய நாசத்தைப் பண்ணுமென்கிறதுக்குக் கேட்கவேண்டிய தென்னவென்று சொல்லாநின்ற மைத்திரேயமஹாரிஷியினுடையவசனத்தைக்கேட்டு விதுரர்சொல்லுகிறார்,

விதுரர்வாக்கியம்,

வாரீர் மைத்திரேயமஹாரிஷியே, எனக்குண்டானசம்சயமானது உம்முடைய வாக்கியமாகிற கத்தியினாலே சேதிக்கப்பட்டுப்போயிற்று, சீவாத்துமாபரதந்திரனென்றும் ஈசுவரன் சுவாதந்திரனென்றும் உம்மாலே நன்றாகச்சொல்லப்பட்டது, இந்தத்தேகாதி பிரபஞ்சத்துக்குமூலமான அக்கியானத்தைத் தவிர வெளியிலே வேறொன்றுமில்லை. ஆகையினாலே சீவனைமூடிக்கொண்டிருக்கின்ற ஸ்ரீஹரியினுடைய சக்திரூபமானமாய்கையை ஆசிரயமாகவுடைய இந்தப் பிரபஞ்சமானது தோற்றிக்கொண்டிருக்கின்றது, இதைச்சொப்பனத்தில்காணப்படாநின்ற தன்னுடையசிரச்சேதமுதலானது போலவேயில்லாததாகியும் மூலசூனியமாகியு மாகாநிற்கிறதுதேகாதியில் ஆசக்தியையுடையவனாகியும் மிகவும்மூடனாகியுமிருக்கிற புருஷனும், பிரகிருதியை யதிக்கிரமித்தவனாகி மிகவும்விவேகியாகியு மிருக்கிற புருஷனும் இவர்களிருவரும் சமுசயகிலேசங்க ளில்லாததினாலே மிகவுஞ்சுகியாநிற்கிறார்கள், இந்தப்பிரபஞ்சத்தைத் துக்கரூபமாகவெண்ணி இதைவிட்டுவிடவேணுமென்று இச்சித்திருக்கிற புருஷன் ஆத்மானந்தானுபவ மில்லாததினாலே பிரபஞ்சத்தை விடுகைக்கு சமர்த்த னாகாதவனாய்க் கொண்டு மிகவும்கிலேசத்தை யடையாநிற்கிறான், அகங்காரமுதலான இந்தப் பிரபஞ்சமானது தோற்றப்பட்டுக்கொண்டிருந்தாலும் பிரபஞ்சமென்கிறதுஇல்லை கேவலம் தோற்றிக்கொண்டிருக்கிறது மாத்திரமே யல்லாமல் வஸ்துவன்றென்று, தேவரீருடைய திருவடிச் சேவையினாலே நிச்சயித்து இந்தத் தோற்றுதலையும் தான் விட்டுவிடப்போகிறேன்.

ஸ்ரீஹரியினிடத்தில் அசஞ்சலமான பக்தியில்லாதவர்களுக்குப் பாகவதசேவையுந் துர்லபமாகவே யிருக்கும் பெரியவர்களுடைய கோஷ்டியிலே தேவதேவரான ஜனார்த்தன ரானவர் நித்தியமாகக் கீர்த்திக்கப் படுகிறாரோ அப்படிப்பட்ட பாகவதாளுடைய சேவையினாலே ஸ்ரீபகவத் கதாசிரவணமும் அதினாலே அசஞ்சலமான பத்தியும் உண்டாகித் தேகாதிகளிலே ஆசக்தியானது நிவர்த்தியாகும்,

வாரீர் மைத்திரேயமகாரிஷியே, அந்தபரமாத்மாவானவர் முன்னேஇந்திரியங்களுடனே கூடிக்கொண்டிருக்கிற மகதத்துவமுதலான தத்துவங்களைக் கிரமமாகச் சிருஷ்டித்து அதுகளுடைய அங்கிசங்களாலேவிராட்டுரூபத்தைச் சிருஷ்டித்து அதுக்குள்ளே அனும்பிரவேசம்பண்ணியிருக்கிற விராட்புருஷனுடையசரீரத்திலே இந்தப்பிரஜைகளானதுகள் விசித்திரங்களான ரூபங்களுடையதுகளாய்ப் புத்திராள்-பவுத்திராள்- நப்திராள்-ஆதிகள் பந்துக்களுடனேகூட வுண்டாகா நிற்கிறார்களோ யாரொருபிரஜைகளாலே இந்தப் பிரபஞ்சமானது வியாபிக்கப்பட்டிருக்கிறதோ பிர்மாமுதலானபேர்களுக்கும் ஈசுவரனான அந்த விராட்புருஷனானவர் எவர்களைச்சிருஷ்டித்தார் அவராலேசிருஷ்டிக்கப்படாநின்ற பிரஜாபதிகளையும் பிராகிருத சிருஷ்டிகள் ஆறும் வைகிருதசிருஷ்டிகள்மூன்றும், ஆகவொன்பதுசிருஷ்டிகளையும் அதன்பின்னாலேவுண்டாகாநின்ற சிருஷ்டிபேதங்களையும், மனுக்களையும், மனுவந்தராதிபர்களான இந்திரன் முதலானபேர்களையும், அவர்களுடைய வம்சங்களையும், அந்தவம்சங்களிலேபிறந்த பிரசித்த புருஷாளுடைய சரித்திரங்களையும், இந்தப்பூமிக்கு மேலேயிருக்கிற லோகங்களையும், கீழேயிருக்கிற லோகங்களையும், அந்தலோகங்க ளுடைய இருப்பையும் பிரமாணங்களையும், பூலோகத்தினுடைய பிரமாணத்தையும், மிருகங்கள் - மனுஷியாள் - தேவாள் - சர்ப்பங்கள் - பட்சிகள்..

இதுகளுடையசிருஷ்டியையும் ரிஷீஸ்வராளுடையஜன்மங்களையும், கருமங்களையும், வேதத்தினுடைய விபாகத்தையும், யக்கியத்தினுடைய விஸ்தாரங்களையும், போகசமாதியினுடையமார்க்கத்தையும்,கியானத்தினுடைய மார்க்கத்தையும், அதற்குஉபாயமானசாங்கியக்கியானத்தினுடைய மார்க்கத்தையும், பகவானாலேசொல்லப்பட்டபாஞ்சராத்திராதிதந்திரத்தையும், பாஷண்டாளுடையமார்க்கவைஷம்மியத்தையும், ஈனசாதிகளுடைய சிருஷ்டியையும், சத்வாதிகுணங்களாலேயும், அதின்மூலங்களான கருமங்களாலேயும், உண்டாகாநின்றும்நானாவிதங்களாகியும், கணக்கில்லாமலு மிருக்கிற ஜீவனுடைய கதிகளையும் தருமார்த்த காம மோட்சங்களொன்றுக்கொன்று விரோதமில்லாமலுமிருக்கிறவுபாயங்களையும் விருத்தியினுடைய சுவரூபத்தையும் நீதியினுடைய சுவரூபத்தையும் சாத்திரத்தினுடைய சித்தாந்தத்தையும். சிரார்த்தத்தினுடைய விதினையும், பிதுர்தேவதைகளுடையசிருஷ்டியையும், நவக்கிரகங்கள் அஸ்வனிமுதலான நட்சத்திரங்களின் சிருஷ்டியையும், காலசக்கிரத்தினுடைய சமஸ்தானத்தையும் தானத்தினுடையபலத்தையும், பசுவினுடையபலத்தையும், யாகாதிதருமத்தினுடையபலத்தையும், தடாகப்பிரதிஷ்டைமுதலான தர்மத்தினுடையபலத்தையும், தேசாந்திரங்களை யடைந்திராநின்ற புருஷனுடைய தர்மத்தையும், ஆபத்துக்காலத்திலே செய்யவேண்டிய தர்மத்தையும், தீனாளிடத்திலே வாச்சல்லியத்தையுடைய மகானுபாவர்கள்மிகவும் பக்தியுடனே அனுவர்த்திக்கின்ற சிஷியாளுக்கும், புத்திராளுக்கும் மிகவும் அரிதாயிருக்கிற அர்த்தத்தையும்சொல்லுவார்கள்,

பிரளயத்திலே சயனித்துக்கொண்டிராநின்ற பரமேஸ்வரனை யெவர்கள் உபாசித்துக்கொண்டிருக்கிறாகள் எவர்கள் லயத்தை யடைந்திருக்கிறார்கள் ஜீவனுடைய தத்துவத்தையும்,பரமாத்துமாவினுடைய சுவரூபத்தையும் உபநிஷத்தினாலே அறியப்படுகிற கியானத்தையும் குருசிஷியாளுடைய பிரயோசனத்தையும், அவர்களாலே உண்டாக்கப்படுகிற பலத்தையும், அந்தக்கியானத்துக்குப் பாகியங்களாகியும் அந்தரங்களாகியு மிருக்கிற சாதனங்களையும், கியானம்,பக்தி, வைராக்கியம், இதுகளுக்குச் சாதனங்களையும், ஸ்ரீஅரியினுடைய லீலைகளை அறியவேணுமென்கிற இச்சையினாலே பிரஸ்னம்பண்ணுகின்ற எனக்குச் சினேகிதரானபடியினாலேவிசிதமாகச் சொல்லக்கடவீரென்று குருசிரேஷ்டரானவிதுரராலே பிரஸ்னம்பண்ணப்பட்ட புராணார்த்தங்களை யுடையவராகியும், பகவானுடைய கதையிலே பிரவிர்த்திப்பிக்கப்பட்டவராய் மிகவும் விர்த்தியடையாநின்ற சந்தோஷத்தையுடையவராகியுமிருக்கிறஅந்தமைத்திரேயமகாரிஷியானவர் அந்த விதுரனைப்பார்த்துஇந்தப்பிரகாரஞ்சொன்னார்.

## அ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

சிந்துவின்னிடை நித்திரைசெயுமரி
உந்தியிலுற் பவித்தசதுர்முகன்
அந்தநல்லரி யையறியாமலே
சிந்தைகூர்ந்து தபத்தாற்சிறப்பித்தார்,

பிரளயோததியிலே சயனித்துக்கொண்டிராநின்றஸ்ரீமந்நாராயணருடைய நாபிக்கமலத்திலே உண்டாயிருக்கின்ற பிர்மாவானவர் அந்தஸ்ரீமந்நாராயணனை அறியாதவராய்ப் பயப்பட்டவராய்க் கொண்டு தபசினாலே ஸ்ரீஹரியைச் சந்தோஷிப் பித்தாரென்று சொல்லப் படுகின்றது.

வாரீர்விதுரரே, இந்தலோகத்திலே புருச்சக்கிரவர்த்தியினுடைய இந்தவம்சமானது சத்புருஷாளுக்குச்சிலாகிக்க யோக்கியமாகவிருக்கின்றது. இந்த வங்கிஷத்திலே பகவத்பக்தனாகியும், லோகபாலகனாயுமிருக்கிறயமதர்மராஜனான உமக்குப் பாகவதமென்னப்பட்ட புராணத்தை சாக்ஷாத்பகவானானவர் சனற்குமாரர்முதலானரிஷிகளுக்குச்சொன்னபடி உமக்குச்சொல்லுகிறேன் கேளும், சனற்குமாரன்முதலான யோகீஸ்வராள் பாதாளத்திலேயிருக்கிற கியானத்தையுடையவராகியும்பிரகாசிக்கப்பட்ட சங்கர்ஷணமூர்த்தியை யடைந்து அவருடையதிருவடிகளைச் சுவர்க்க கங்காசலத்தில் ஸ்நானம் பண்ணி மிகவும் ஈரமாயிருக்கிற தங்களுடைய ஜடாமுடிகளாலேஸ்பரித்துச் சாஷ்டாங்கமாகப் பிரணமம்பண்ணி அந்தசங்கர்ஷணமூர்த்தியினுடைய லீலைகளைஅடிக்கடிஸ்தோத்திரம்பண்ணி நித்தியக்கியானைஸ்வரியாதிகுணங்களை யுடையவரான அந்தசங்கர்ஷணமூர்த்தியினாலே நிவிர்த்திமார்க்கத்திலே மிகவும் இச்சையை யுடையவரான சனற்குமார யோகியின்பொருட்டு இந்தப் பாகவதமானது சொல்லப்பட்டது. மகா தபசுவியா யிருக்கிற சாங்கியாயன முனியானவர் பகவானுடைய இந்தலீலாவிபூதிகளைப் பிரகாசஞ்செய்யவேணுமென்று இச்சையுடையவராய்த் தம்மை அனுவர்த்தியாநின்றும் எனக்கு ஆசாரியனாகியுமிருக்கிற பராசரமகாரிஷிக்கும் பிரகஸ்பதிக்கும்சொன்னார், மிகவும் கிருபாசாலியான அந்தப் பராசரரானவர் புலஸ்தியமகா ரிஷியினாலே புராணகர்த்தாவாகப் போகிறீரென்று அனுக்கிரகிக்கப் பட்டவராய் உத்தமமான இந்தப்பாகவதபுராணத்தைஎனக்குச்சொன்னார். மிகவும் சிரத்தையுடையவராகியும், நித்தியமாக

அனுவர்த்தியாநின்றுமிருக்கிற உமக்கு இந்தப்புராண த்தைச்சொல்லுகிறேன், எப்போதும்லொன்றினலேயும்தி ரஸ்கரிக்கப்படாத கியானசக்தியை யுடையவரான ஸ்ரீம ந்நாராயணரானவர் தம்முடைய மாயாவினோதங்களைவி ட்டு சுவரூபானந்தானுபவத்திலே மிகவும்ஆனந்தத்தை யுடையவராகியும், கிரியாசூனியராகி யொருவராய் ஆ திசேஷனிடத்திலே சயனித்து நித்திரையினலே நேத் திரங்களைமூடிக்கொண்டாரோ அப்போது சமஸ்த பிர பஞ்சமும் உதகத்தினல்வியாபிக்கப்பட்டு அந்த ஸ்ரீமந் நாராயணரானவர் தமக்குள்ளே தரிக்கப்பட்ட சமஸ்த பிராணிகளையுந்திரும்பிச் சிருஷ்டிக்கிற நிமித்தியமாய்க் காலசுவரூபியான தம்முடையசக்தியைப்பிரோணபண் ணுநின்றுகொண்டு தமக்குஸ்தானமான அந்தப்பிரளய வுதகத்திலிருந்ததுஎப்படியானல்அக்கினியானதுகாஷ் டத்திற்குள் அடங்கியிருக்குமாப்போலடங்கி அந்தஜல த்திலே ஆயிரம்சதுர்யுகம் யோகநித்திரைபண்ணி திரு ம்பவும் சிருஷ்டிநிமித்தமாகப் பூர்வமேபிரோணபண் ணப்பட்ட காலசுவரூபமானதம்முடையசக்தியினலேகி ரியாகலாபங்களை அடைந்தவராய்க்கொண்டு தம்முடை யதிவ்யமங்கள விக்கிரகத்தில் லயித்திராநின்ற லோகங் களைப்பார்த்து சூட்சுமரூபங்களாயிருக்கிற அந்தப்பதா ர்த்தங்களிலே வைக்கப்பட்ட திருஷ்டியை யுடையவரா ய்தமது தேகத்துக்குள்ளே யிராநின்றும் அதி சூட்சும மாகியுமிருக்கிற அந்தப் பிரபஞ்சரூப பதார்த்தமானது காலானுசாரியாயிருக்கிற சுவகுணத்தினலே சலிப்பிக்க ப்பட்டதாய்க்கொண்டுஉண்டாகப்போகிறதாய்அப்போ து பகவானுடைய நாபிதேசத்தில் நின்றும்உண்டாயிற் று அந்தச் சூட்சுமப் பிரபஞ்சரூபமான அர்த்தமானது ஜீவாளுடைய அதிருஷ்டத்தைப் பிரகாசிப்பியா நின்ற காலத்திலே பத்மரூபமாக நின்றுகொண்டு பரமாத்து வைக் காரணமாக வுடையதாய் சூரியன்போல் தன்னு டைய தேஜசினலே விஸ்தாரமான அந்தஜலத்தைப்பி ரகாசிப்பியாநின்றுகொண்டு சீக்கிரமாக வுண்டாயிற்று ஜீவாளுக்கு அனுபவ யோக்கியங்களான பதார்த்தங்க ளைப் பிரகாசிப்பியாநின்றும் லோகஸ்வரூபமாகியு மிரு க்கிற அந்தபத்மத்திலே ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் தாமே அந்தரியாமியாகப் பிரவேசித்தார். ஸ்ரீஹரியினலே பிர வேசிக்கப்பட்ட அந்த பத்மத்திலே சுவயமாகவே சகல வேத சுவரூபரான பிரமாவானவர் உண்டானர். அந்த பத்மத்தினுடைய மொகுட்டிலேயிருந்து லோகங்களைப் பார்க்கிறநிமித்தம் நாலு முகங்களையடைந்து மகா வாயு வினலே உண்டாகாநின்ற அலைகளினது சமூகத்தை யு டைய அந்தசலத்தில் உண்டான அந்த பத்மத்தையும், லோகங்களுடைய தத்துவத்தையும் தன்னுடைய ஆத் துமாவையும்அறியாமல் இந்தக்கமலமானதுஎவ்விடத் தில்நின்றும் உண்டாயிற்றோவென்று வெகுகாலம்யோ சனைபண்ணி அந்தக்கமலத்தினுடைய கொடியின் ரந்தி ரமார்க்கத்தினலே அந்தஜலத்துக்குள்ளே தலைகீழாகப் பாதாளத்திலேபோய்த் தேடியும் அந்த மூலத்தையறி யாமற்போனன்.

வாரீர் விதுரரே, கரையில்லாத அந்தக் காரணத்துக் குள்ளேபோய்த் தமக்குக் காரணவஸ்துவைத் தேடாநி ன்ற அந்தப்பிரம்மாவுக்கு ஸ்ரீஹரியினுடைய ஆயுதரூப மான காலசக்கிரமானது சமஸ்தபிராணிகளுக்கும் பய த்தையுண்டாக்கி ஆயுக்ஷயத்தைப் பண்ணிக்கொண் டி ருக்கிற அந்தக் காலசக்கரமானது ஆவிர்ப்பவித்தது அ ந்தப் பிர்மாவானவர் அந்தக்கால சக்கரத்தைப்பார்த்து, மனோரதசித்தியில்லாதவராய்த் தேடுகிற வியாபாரத்தி ல்நின்றும் நிவர்த்திப்பித்தவராய்த் திரும்பவும் தமக்கு ஆசிரயமான அந்தக்கமலத்திலேயேயிருந்து மெள்ளஜ யிக்கப்பட்ட சுவாசத்தினலே சமாதியோகத்தை ஆஸ்ர யித்து அனேகவருஷங்கள்பண்ணப்பட்ட சமாதியோக த்திலே யுண்டாகாநின்ற தியானத்தையுடையவராய்த்த மதுஇருதயத்துங்குள்ளே குடைபோன்ற அனேகம் ப டங்களையுடைய சிரசுக்களில் ஒலிக்கிற ரத்தின காந்திக ளாலே அந்தகார நாசத்தையுடைய தாமரைக் கிழங்கு போலே மிகவும் தவளமாகியும் மகாதீர்க்கமாகியு மிரு க்கிற ஆதிசேஷனுடைய சரீரமாகிற பரியங்கத்திலே ச யனித்து ஒருவராகியும் சந்தியாகாலத்திற்குநிகர்த்தசிவ ந்த வஸ்திரத்தை யுடையதாகியும் சுவர்ன மயமான அ னேகம் சிரங்களையுடையதாகியும், அநேகரத்தினங்கள் உதகதாரைகள் ஓஷதிகள்-புஷ்பங்கள்-இதுகளுடையமா லைகளையுடையதாகியும், மூங்கில்களாகிறபுஜங்கள்- விரு க்ஷங்களாகிற பாதங்கள் இதுகளையுடையதாகியும்,மரக தரத்தின மயமாயிருக்கிற பருவத்தினுடைய காந்தியை யளவினலேயும், விஸ்தாரத்தினலேயும், உபமானமில் லாமல் விளங்காநின்றும், மூன்றுலோகங்களுக்கும் ஆ ஸ்ரயமாகியும்- நானவிதங்களாகியும், திவ்வியங்களாகியு மிருக்கிற ஆபரணங்கள், வஸ்திரங்கள், இதுகளுடைய காந்தியை யுடையதாகியு மிருக்கிற தேகத்தினலே திர ஸ்கரியாநின்றும் அங்கீகரிக்கப்பட்ட திவ்வியமங்கள ரூ பத்தை யுடையவராகியும, தங்களுக்கு இஷ்டங்களாயி ருக்கிற பலன்களை யடைகிறதின் பொருட்டுப் பரிசுத்த மான உபாசன மார்க்கங்களாலே அர்ச்சியாநின்ற புரு ஷாளுக்குச் சர்வாபீஷ்டங்களையும் கரவாநின்றும்நகங்க ளாகிற சந்திராளுடைய கிரணங்களோடே கூடிக்கொ ண்டும் விரல்களாகிற மனோக்கியங்களான இதழுகளையு டையதுகளாயுமிருக்கிற ஸ்ரீபாதபத்மத்தைக் கிருபையி னலே கொஞ்சம் உயரவெடுத்துக் காண்பியா நின்றும் மூன்றுலோகத்தினுடைய துக்கத்தைப்போக்கடியாநின்

ற புன்சிரிப்பையுடையதாகியும்மிகவும்விளங்காநின்ற குண்டலங்களாலே யலங்கரிக்கப்பட்டும் கோவைப்பழம் போலொத்த அதரத்தினுடைய காந்தியினாலே சிவந்த வர்ணத்தை யுடையதாகியும் கோபமான நாசிகையையுடையதாகியும் சுந்தரமான புருவங்களையுடையதாகியுமிருக்கிற திருமுகமண்டலத்தினாலே பக்தர்களைக் குறித்துக்கிருபைசெய்துகொண் டிராநின்ற அந்தப்புருஷனைப்பார்த்தார்.

வாரீர் விதுரரே, பீதாம்பரத்தினாலேயும் நவரத்தின கசிதமான அரைநூல்மாலையினாலேயும் நிதம்பபாகத்திலேயலங்கரிக்கப்படாநின்றும் ஸ்ரீவச்சர சின்னத்தை யுடையமார்பிலேவிளங்காநின்றும் மகாவிலைபெற்ற ஆரத்தினாலே யலங்கரிக்கப்பட்டும் சிரேஷ்டங்களான தோள்வளைகளிலேயிராநின்ற உத்தமங்களான ரத்தினகாந்திகளாலே வியாபிக்கப்படாநின்ற பாகுதண்டங்களாகிற அனந்தசாகைகளையுடையதாகியும் பிரதானத்தை மூலமாகவுடையதாகியும் சர்ப்ப சிரேஷ்டங்களுடைய சரீரங்களாலே சூழப்படாநின்ற சாகைகளை யுடையதாகியும், லோகசுவரூபமாகியும் சந்தன விருக்ஷம்போலே யிராநிற்கிறவரும் ஆதிசேஷனைச் சகாயமாயுடையவராகியும் பிரகாசமாகக் காணப்படாநின்ற கவுஸ்துவாபரணத்தை மார்பில்உடையவராகியும், ஸ்தாவரசங்கமங்களுக்கு ஸ்தானமாகியும் வேதங்களாகிற பிரமரங்களாலே காந்தியையுடையதாகியும் தம்முடைய கீர்த்தி சுவரூபமாகியுமிருக்கிற வனமாலிகையினாலே சூழப்படாநின்றும் சூரியன்-சந்திரன்-வாயு-அக்கினி இவர்களாலேயும் அடையக்கூடாதவராகியும் மூன்று லோகத்தினாலேயும் பிரகாசத்தையுடையதுகளாயும் சமஸ்தலோகங்களிலேயும் சஞ்சரித்துக்கொண்டிராநின்ற சுதரிசனமுதலான ஆயுதங்களாலே ஒருத்தராலேயும் அண்டக்கூடாதவராகியுமிருக்கிற ஸ்ரீஹரியைப்பார்த்தார், சகத் கர்த்தாவான அந்தப் பிரமாவானவர் எப்போது ஸ்ரீஹரியைப் பார்த்தாரோ அப்போதே லோகசிருஷ்டியை யுடையவராய் அந்தப்பகவானுடைய நாபியாகிறசரசிலே கமலத்தையும் அதிலேதன்னையும் சலத்தையும் பிரளயகாலவாயுவையும் ஆகாசத்தையும்பார்த்து அந்தப் பிர்மாவானவர் பிரசைகளைச்சிருஷ்டிக்க இச்சையையுடையவராய் அந்தப் பகவானைக்குறித்து ஸ்தோத்திரம்பண்ணினர்.

=()=(*=()=

# கூவது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

எஞ்சலில்பிர்மா யேகார்ணவமான
ஒஞ்சுசீரி னுலோகசிருஷ்டியாய்
மிஞ்சுமாசையி னாலேமிகுதியாய்க்
கஞ்சமஞ்சிடுங் கண்ணனையேத்தினர்.

பிர்மாவானவர் ஏகார்ணவமான சலத்திலே லோகசிருஷ்டியைப் பண்ணவேணுமென்கிற இச்சையினாலேயும் தபசினாலேயும் சந்துருஷ்டரான ஸ்ரீமந்நாராயணனைப்பார்த்து ஸ்தோத்திரம் பண்ணினாரென்று சொல்லப்படுகின்றது.

பிரமஸ்துதி,

வாரீர்பகவானே வெகுகாலம்பண்ணின வுபாசனையில் இப்போது என்னாலேஅறியப்பட்டீர் பிராணிகளுக்குத் தேவரீருடைய தத்துவமானது அறியப்படுகிற தில்லையென்பது தோஷமாகவிருக்கிறது தேவரீரே சுத்த சத்துவரூபமான தேவரீருடைய ரூபமானது அனேக அவதாரங்களுக்குக் காரணமென்று காண்பிக்கிற நிமித்தியமாகக் கிரகிக்கப்பட்டது வாரீர் பரமபுருஷரே ஒன்றினாலேயும் மறைக்கப்படாத பிரகாசத்தை யுடையதாகியும் விகற்பசூனியமாகியும் ஆனந்தமாத்திர மாகியும் இருக்கிற தேவரீருடைய ரூபமானது இந்த ரூபத்தைக் காட்டிலும் வேறன்று.

வாரீர் பரமாத்மாவே, உபாசியாளுக்குள்ளேமுக்கியமாகியும், பிரபஞ்சத்துக்குக் காரணமாகியும், பிரபஞ்சத்தைக்காட்டிலும் வேறாகியும், பிருதிவிமுதலான பூதங்கள்இந்திரியங்கள் இதுகளுக்குக்காரணமாகியுமிருக்கிற இந்தரூபத்தையே உபாசிக்கிறேன் வாரீர்புவன மங்களரே தேவரீரை உபாசிக்கிற எங்களுக்கு மங்களத்தின் பொருட்டுக் காண்பிக்கப்படுகிற இதுவே நிருபாதிக ரூபமாகாநிற்கிறது ஈஸ்வரன் இல்லையென்றும் நிந்திதமானதர்க்கத்தையே ஆஸ்ரயித்து நரகத்தை யடையாநின்று மிருக்கிறபேர்களாலே உபாசிக்கப்படாத தேவரீரின்பொருட்டு அடிக்கடிப் பிரணமம்பண்ணுகிறேன் தேவரீருடைய திருவடிகளையே ஆசிரயித்து வேதங்களாகிறவாயினாலே சமர்ப்பிக்கப்படாநின்ற தேவரீருடைய சரணாரவிந்தங்களில் கர்னரந்திரங்களாலே ஆக்கிராணம்பண்ணியும் தேவரீருடைய கதாசிரவணத்தையே பண்ணிக்கொண்டிருக்கிற பக்தாளுடைய இருதயகமலத்தில்நின்றும் ஒழியாமல் பிரகாசிக்கிறீர் வாரீர் அச்சுதரே பசி-தாகம்-வாதம் - பித்தம் - சேஷ்மம் - இதுகளாலேயும், சீதம்-உஷ்ணம் - வாதம்- வருஷம் - இதுகளாலேயும், ஒன்றுக்கொன்று பூதங்களாலேயும், மிகவும்சகிக்கக்கூடாதான காமாக்கினியினாலேயும், ஒழியாதகோபத்தினாலேயும், அடிக்கடிபீடிக்கப்படாநின்ற பிரசைகளைப்பார்க்கின்ற என்னுடையமனதானது மிகவும்துக்கிக்கின்றது, தேவரீருடைய மாயாவிலாசத்தை யுடையதான இந்தப்பிரபஞ்சத்தைத் தேவரீரைக்காட்டிலும் வேறாக எந்தமட்டுக்கும் பார்க்கிறதோ அந்தமட்டுக்கும் அசத்

தாயிருந்தாலும்இந்த சம்சாரமானது துக்கங்களைக்கொடுத்துக் கர்மபலத்தையுடையதாய் ஒழியாமலேயிருக்கின்றது,தேவரீருடைய கதாசிரவணம் கீர்த்தனம் இதுகளிலே பிரீதியில்லாதவர்களா யிருக்கிறவர்கள் ரிஷிகளாக விருந்தாலும் சம்சாரதுக்கத்தையே யடையாநிற்கிறார்கள்.

வாரீர்நாதனே, தேவரீருடைய அனந்தகலியாணகுணங்களுடைய கேள்வியினாலே பார்க்கப்பட்ட சுவரூபத்தையுடையவரான தேவரீர் பக்தாளுடைய பக்தியோகத்தினாலே நன்றாகச்சோதிக்கப்பட்டிருக்கிற இருதயகமலத்திலே யிருக்கிறீரன்றோ. வாரீர்பகவானே நானாவித பிராணிகளிடத்திலே அந்தராத்துமாவா யிருக்கிற தேவரீரிடத்தில் பக்தியில்லாதபேர்களுக்குத் துர்லபமான தேவரீருடைய ஆராதனமே சிரேஷ்டமாகியும்ஒருகாலத்திலேயும் நாசத்தையடைகிறதில்லை.பலயிச்சையினாலே செய்யப்பட்ட தருமமானது கோரப்பட்டபலத்தைக் கொடுத்துவிட்டு நசித்துப்போகும். ஆகையினாலே சர்வகால சுவரூபமானகியானத்தினாலேசமஸ்தபேதமோகங்களையும் போக்கடியாநின்றும் கியானஸ்வரூபவராகியும்பிரபஞ்சத்தினுடைய சிருஷடி ஸ்திதிசங்காரங்களிலே காரணமாகியிருக்கிற மாயையினுடையவிலாசத்தினாலே கிரீடையையுடையவராகியும்,ஈஸ்வரனாகியும். பரம புருஷராகியுமிருக்கிற தேவரீர்பொருட்டுப் பிரணமம் பண்ணுகிறேன். பகவானுடைய அவதாரங்களின் அனந்த கலியாணகுண லீலைகளையுடையநாமங்களைப்பிராணவியோககாலத்திலேஉச்சரிக்கிறவர்கள் அனேக ஜன்மங்களிலே பண்ணப்பட்ட பாவத்தை தக்ஷணத்திலேவிட்டு ஆவரணமில்லாம லிருக்கிறபிர்மத்தையேயடைகிறார்கள். திரிமூர்த்திகளை வேர்களாகஉடையராகியும், மரீசி, பிரஜாபதி, மனுமுதலானபேர்களை யனே சாகைகளாக உடையவர்களாகியும், தம்மை ஆஸ்ரயமாக உடையதானபிரகிருதியை சத்துவாதிகுணபேதத்தினாலே பிரித்துச்சிருஷ்டி, ஸ்திதி, பிரளயங்களுக்கு ஏதுக்களானநான், ருத்திரன், ஸ்ரீமஹாவிஷ்ணு என்று இந்தப்பிரகாரம் மூன்றுரூபத்தை யுடையவராய் பிரபஞ்சமாகிற விருக்ஷத்துக்குக் காரணமாகியு மிருக்கிற தேவரீர்பொருட்டு பிரணமம்பண்ணுகிறேன், பிரளயஜலத்திலே யிராநின்றும் அனந்த சக்திகளையுடையவராகியுமிருக்கிற யாதொருபகவானுடைய நாபிக்கமலத்தில்நின்றும் இவிடத்திலே மகதத்துவ ரூபமான சித்தத்துக்கு அபிமானிதேவதையாயிருக்கிற நான் உண்டானேனே அந்தப்பகவானுடைய ஆச்சரியகரமானஇந்தரூபத்தைவிஸ்தாரம்பண்ணாநின்ற எனக்கு வேதவசனங்களுடைய வுச்சாரணமானது நாசத்தை யடையாமலிருக்கக்கடவது. மிகவும் கிருபாசாலியாகியும் புராணபுருஷராகியு மிருக்கிற பகவானானவர். மிகவும்விருத்தியடையாநின்ற பிரீதியையுடைய புன்சிரிப்புடனே கூட நேத்திரகமலத்தை விகாசம்செய்யாநின்றுகொண்டு பிரபஞ்சத்தினுடைய ஆவிர்ப்பாவத்தின் பொருட்டும்அனுக்கிரகத்தின் பொருட்டும் எழுந்திருந்து மதுரமான வாக்கினாலே என்னுடைய விசனத்தைப் போக்கடிக்கக்கடவர்.

வாரீர் விதுரரே அந்தப்பிர்மாவானவர் தமக்குக்காரணமான அந்தப்பகவானுடைய தபசினாலேயும் உபாசனையினாலேயும் சித்தசமாதியினாலேயும் பார்த்துத்தன்னுடைய மனோவாக்குகளின் சக்தியெவ்வளவோ அவ்வளவு தோத்திரம்பண்ணிமிகவும் இளப்பையடைந்தவன்போலவொழிந்தார். பிற்பாடு மதுசூதனானவர் கம்பீரமானவாக்கினாலே அவருடைய மோகந்தணிய ஒருவார்த்தைசொன்னார், வாரீர்வேதகற்பனே நீர் என்னையாதொரு சிஷடியைக்குறித்துப் பிரார்த்தித்தீரோ, அது பூர்வமே உம்மாலே சம்பாதிக்கப்பட்டிருக்கின்றது, என்னை ஆஸ்ரயமாகவுடைய வேதவித்தையைப்பரிசீலனம்பண்ணித் திரும்பவும் தவசைச்செய்து அந்தவித்தையினாலேயும் தவசினாலேயும் உம்முடைய இருதயத்துக்குள்ளே மிகவும் பிரகாசமாயிருக்கிற லோகங்களைப்பார்க்கப்போகிறீர்.

வாரீர்பிர்மாவே பிற்பாடு நீர்மிகவும் பக்தியையுடையவராகியும் சித்தசமாதானத்தை யுடையவராகியு மிருந்து உம்மிடத்திலேயும் லோகங்களிலேயும்வியாபித்துக்கொண்டிருக்கின்ற என்னையும் என்னிடத்திலேயிராநின்றலோகங்களையும்ஜீவாத்துமாக்களையும்பார்க்கப்போகிறீர், காஷ்டங்களிலே யிருக்கின்ற அக்கினியைப்போல்சர்வபூதங்களிலேயும் அந்தரியாமியா யிருக்கின்றஎன்னைப்பார்க்கிறபோதே சமஸ்தமோகத்தையும் விட்டுநானாவிதங்களான கர்மசமூகத்துடனே கூடின பிராணிகளைச்சிருஷ்டிக்க வேணுமென்று இச்சிக்கின்ற உம்முடைய அந்தக்கரணமானதுஇந்தவிஷயத்திலே விசனத்தையடையாம லிருக்கப்போகிறது. என்னுடைய அனுக்கிரகமானது உண்டாயிருக்கிற படியினாலே ஆதிரிஷியாயிருக்கிறவும்மை பாபிஷ்டமான ரஜோகுணமானது பற்றப்போகிறதில்லை, பிரஜைகளைச் சிருஷ்டிக்கவேணுமென்று யத்தனித்த உம்முடைய மனது என்னிடத்திலேயே ஸ்திரமாக வைக்கப்பட்டதினாலே நீர் பிராணிகளுக்கு மிகவும் அறியக்கூடாதவரா யிருக்கிற நான் உம்மாலே அறியப்பட்டேன், தவசிலே மிகவும் நிஷ்டையும் என்னிடத்திலே அசஞ்சலமானபக்தியும் தத்துவக்கியானமும் என்னுடைய சுவரூபதரிசனமும் இதுவெல்லாம் என்னுடைய அனுக்கிரகமே ஆகாநிற்கிறது. உமக்குமங்களம் உண்டாகக்கடவது.

யாதொருபுருஷனானவன் உம்மாலே பண்ணப்பட்ட ஸ்தோத்திரத்தினாலே நித்தியமாக ஸ்தோத்திரஞ்செய்துஎன்னைவுபாசிக்கிறானே அந்தப்புருஷனுக்கு சீக்கிரமாகப் பிரசன்னனாய்விடுவேன் தடாகம் ஆருமம் முதலான தர்மங்களாலேயும் தபசு யக்கியங்கள் தானங்கள் யோகாப்பியாசங்கள் சித்தசமாதியினாலே புருஷாளுக்கு யாதொருபலம்சித்திக்குமோ அந்தபலத்தில் என்னுடையபிரீதியே காரணமென்று தத்துவத்தையறிந்தபேர்களுடையசித்தாந்தம் ஆகையினாலேஎன்னிடத்திலே பக்தியைப்பண்ணக்கடவன் சர்வவேதமயராகியும், என்னைக்காரணமாக வுடையவராகியுமிருக்கிற நீர்தானேயிந்தமூன்றுலோகத்தையும் சிருஷ்டிக்கக்கடவீர் என்னிடத்திலேயேயிருக்கிற பிராணிகளைச் சிருஷ்டிபண்ணக்கடவீரென்று அந்தபகவானானவர் பிர்மாவின்பொருட்டுச்சிருஷ்டிக்கத்தக்கதான இந்தஜகத்தை சுவரூபத்தினாலேபிரகாசம்பண்ணுவித்து அந்தரத்தானமானார்.

## ௰-வது, அத்தியாயம்,

கலிவிருத்தம்,

கிரமமாகச் சிருட்டிகளத்தற்கு
அரியபிராகிருத மார்ந்தவிபாகத்தால்
உரியசிருஷ்டி யொளித்திருந்தசவிதம்
தெரியவேசொல்லப் பட்டிருக்கின்றதே,

கிரமமாகச் சிருஷ்டியைச்சொல்லுகைக்குபிராகிருதமுதலான விபாகத்தினாலே சிருஷ்டியானது பத்துவிதமாகச் சொல்லப்படுகின்றது.

விதுரருடையவாக்கியம்.

வாரீர் மைத்திரேயமகாரிஷியே பகவான் அந்தர்த்தானத்தையடைந்தபிற்பாடு பிர்மாவானவர் பிரஜைகளை எத்தனைவிதமாகச் சிருஷ்டித்தார். அதைக்கிரமமாக எனக்குச்சொல்லக்கடவீரென்று விதுரராலே பிரார்த்திக்கப்பட்டவராய் மைத்திரேயமகாரிஷியானவர் யதாக்கிரமமாகச்சொன்னார்,

மைத்திரேயர்வாக்கியம்.

வாரீர்விதுரரே, அந்தப்பிர்மாவும் ஜன்மரகிதரான பகவானாலேவப்பட்டவராய்த் தமக்கிருப்பிடமான பத்மமுகளத்திலேபிரவேசித்து அந்த ஒருகமலத்தையே மூன்றுலோகரூபமாக விபாகம்பண்ணினார், வாரீர் விதுரரே, மூன்றுலோகரூபமான நாள்தோறும்சிருஷ்டிக்கத்தக்கதான ஜீவாளுடைய போகஸ்தானத்தின் சிருஷ்டியானதுசொல்லப்பட்டது, மகாலோகமுதல் பிரமலோகபரியந்தமான லோகங்கள் பலாபேட்சையில்லாமல்செய்யப்பட்ட தர்மத்தினுடைய சுவரூபமானபடியினாலே பிரம்மாவினுடைய துவிபரார்த்தகாலபரியந்தம்நாசமில்லாமலேயிருக்கும், பூலோக-புவர்லோக - சுவர்லோக இந்தமூன்றுலோகங்கள் காமியகர்மத்தினுடைய பலமானபடியினாலே கல்பங்கள்தோறும் உற்பத்திநாசங்களை யுடையதுகளாயிருக்குமென்று சொல்லுகின்ற மைத்திரேயமகாரிஷியைப்பார்த்து நானாவித விசித்திரரூபத்தையுடைய ஸ்ரீஹரியின்துகாலமென்று சொன்ன அந்தக்காலமானது எப்படி கற்பிக்கப்படுகிறது, அதை விஸ்தாரமாக எனக்குச் சொல்லக்கடவீரென்று பிரார்த்தியாநின்ற விதுரரைப்பார்த்து மைத்திரேயர் சொல்கிறார்,

வாரீர்விதுரரே, சத்வாதிகுணங்களுடைய விகாரமானமகதத்துவமுதலான தத்துவங்களுடைய பரிணமத்தினாலேயே ஆதியந்தமில்லாமலிருக்கிற அந்தக் காலத்தை நிமித்தமாகவுடைய பகவானானவர் தம்முடைய சுவரூபத்தை லீலையினாலே பிரபஞ்சரூபமாகச் சிருஷ்டித்தார், பிர்மமயமாயிருக்கிற இந்தப் பிரபஞ்சமானது கர்த்தாவான ஈசுவரனாலேயும் காலமென்கிற நிமித்தத்தினாலேயும் வேறாகக்காணப்படுகிறது, இந்தப் பிரபஞ்சமிப்போதிருந்தபடியே பூர்வமுமிருந்தது,இனிமேலும் இப்படியேயிருக்கப்போகிறது, இந்தப்பிரபஞ்சத்துக்கு பிராகிருதமென்றும், வைகிருதமென்றும், இந்தப் பேதங்களாலே சிருஷ்டியானது ஒன்பதுவிதமாகச் சொல்லப்படும். அது பத்தாவதாகவுமிருக்கிறது இந்தப் பிரபஞ்சத்துக்குக் காலத்தினால் நித்தியப்பிரளயமும் சங்கருஷ்ணருடைய முகத்தில்நின்றும் உண்டாகாநின்ற பிரளயாக்கினியினாலே நைமித்திகப் பிரளயமும், தன்தன் காரியங்களைக் கிரகியாநின்ற சத்துவாதி குணங்களாலே பிராகிருதமென்றும் இந்தப்பிரகாரம்பிரளயமானதுமூன்றுவிதமாகச் சொல்லப்படாநிற்கிறது. தசவிதசிருஷ்டியாவது எப்படியென்றால் ஸ்ரீ அரியினுடைய சமீபத்தில்நின்றும், சத்வாதிகுணங்களுடைய சாஞ்சல்லியமானது மகதத்துவத்தினுடைய சிருஷ்டியான பிரதமசிருஷ்டியாகாநிற்கிறது, அகங்காரத்தினுடைய சிருஷ்டியானது இரண்டாவதுசிருஷ்டியாகாநிற்கிறது, அகங்காரசிருஷ்டியிலே திரவியங்கள்-இந்திரியங்கள்-கிரியை-இதுகளுடைய சிருஷ்டி யுண்டாக்கி அந்த அகங்காரத்தினுடைய சிருஷ்டி இரண்டாம்சிருஷ்டி பூதசூட்சும சொரூபமாகியும், மகாபூதங்களுக்குச் சனகமாகியுமிருக்கிற பூதசிருஷ்டியானது மூன்றும்சிருஷ்டியென்றுசொல்லப்படும், ஞானேந்திரிய கர்மேந்திரியஸ்வரூபமான இந்திரிய சிருஷ்டியானது நாலாம்சிருஷ்டி யாகாநிற்கிறது, மனதானது யாதொருசத்துவகுணப் பிரதானமாகாநிற்கிறதோ, அந்தச்சத்துவகுண சுவரூபமான இந்திரியாபிமனி தேவர்களுடைய சிருஷ்டியானது ஐந்தாம் சிருஷ்டியாகாநிற்கிறது ஜீவாளுக்கு ஆவரணத்தையும், நா

னென்கிற விக்ஷேபசக்தியையும்பண்ணுகின்ற அக்கியானத்தினுடைய சிருஷ்டியானது ஆறாம்சிருஷ்டியாகாநிற்கிறது இந்த ஆறுசிருஷ்டிகளும் பிராகிருத சிருஷ்டிகளாகாநிற்கிறது இது சம்சாரதுக்கத்தை நிவிர்த்திப்பியாநின்ற புத்தியையுடைய ஸ்ரீஹரியினது லீலையாகாநிற்கிறது, ஸ்தாவரங்களுடைய ஆறுவித சிருஷ்டியானது ஏழாம்சிருஷ்டியாகாநிற்கிறது எப்படியென்றால் புஷ்பமன்றியிலே பலிக்கிற விருக்ஷங்கள் பலபாகத்தினாலே அந்தத்தையடையாநின்ற ஓஷதிகள் ஏறிப்படருகிறகொடிகள்-மூங்கில் முதலானதுகள் பூமியிலேபடருகிறகொடிகள் - புஷ்பித்துப் பலிக்கப்பட்ட விருட்சங்கள், இதுகளுடையசிருஷ்டியானது ஆறுவிதமாகாநிற்கிறது இந்தஆறும் ஊர்த்துவசஞ்சாரத்தை யுடையதுகளாகியும், கியானப்பிரகாச மில்லாததுகளாகியும், இருதயத்துக்குள்ளேயே சீதோஷ்ண ரூபஸ்பரிசத்தை யறியாநின்றுகொண்டு அநேகபேதங்களை யுடையதுகளாகியுமாகவிருக்கும். பட்சி மிருகசாதிகளுடைய சிருஷ்டியானது எட்டாம் சிருஷ்டியாகாநிற்கிறது. அச்சிருஷ்டியானது இருபத்தெட்டுவிதமாயிருக்கும், இருபத்தெட்டுவிதங்களான அந்தப்பிராணிகள் நாளைக்கு வரப்போகிறதை அறியாதுகளாகியும், ஆகாராதி மாத்திரத்தையேயுடையதுகளாகியும், ஆக்கிராணத்தினாலேயே வஸ்துக்களை யறியாநின்றும், இருதயத்திலே விவேக சூனியங்களாகவுமிருக்கும், இருபத்தெட்டு விதங்க ளெப்படியென்றால் - பசு-ஆடு-எருமை-மாடு-மான்-பன்றி-கவையம்-றுறுமான்-வெள்ளாடு-ஒட்டகம்-இந்த வொன்பதுகளும், இரண்டு குளம்புகளுடைய மிருகங்கள்-கழுதை அசுவம்-கோவேறுகழுதை-கவுரமிருகம்-சரபம் - சவுரிமான் இந்தஆறும் ஒருகுளம்பையுடைய மிருகங்கள் ஐந்துநகங்களையுடைய மிருகங்களைச் சொல்லுகிறேன் நாய்-நரி-செந்நாய்-புலி-பூனை-முசல் - முள்ளம்பன்றி-சிங்கம்-குரங்கு-யானை-உடும்பு-ஆமை - இந்தப் பனிரண்டும் ஐந்துநகங்களையுடையதுகள், முதலை முதலான சலசெந்துக்களும், கழுகு-பருந்து-கூளி-டேகை - காடை-பல்லூகம்-மயில்-அம்சம்-சாரசம்-சக்கிரவாகம்-காக்கைகோட்டான்-கோகிலம்முதலானதுகள் ஆகாசசஞ்சாரிகள்.

வாரீர்விதுரரே, பூமியிலே ஆகார சஞ்சாரத்தை யுடையதான மனுஷியாளுடைய சிருஷ்டி ஒன்பதாவதாகவிருக்கிறது, அது ஏகரூபமாகவும் ரசோகுணத்தையுடையவர்களாகியும் காமத்திலேயே ஆசக்தியையுடையவர்களாகியும், துக்கத்திலேசுகபுத்தியையுடையவர்களாகியுமிருப்பார்கள், ஸ்தாவரம்-திரியக்கு-மனுஷியர்கள் இந்தமூன்றுசிருஷ்டிகளும், வைகிருதசிருஷ்டியென்றுசொல்லப்படும், சனற்குமாரர் முதலான பேர்களுடைய சிருஷ்டியானது பிராகிருதமென்றும் வைகிருதமென்றும் இரண்டு விதமாகச் சொல்லப்படும், தேவசிருஷ்டி எட்டுவிதம்-அதாவது-தேவர்கள்-பிதுரர்கள் - அசுரர்கள்-கந்தருவர்கள்-அப்சரசுக்கள்-சித்தர்கள்-யக்ஷர்கள்-ராட்சசர்கள்-சாரணர்கள்-பூதப்பிரேதபசாசுகள்-வித்தியாதரர்கள்-கின்னரர்கள்-கிம்புருடர்கள்முதலான எட்டுவிதமென்றுசொல்லப்படும். இந்தப் பத்து சிருஷ்டிகளும் பிரமரூபியான ஸ்ரீஹரியினாலே பண்ணப்பட்டதுகள் இதற்குமேல் மனுக்களையும் மனுவந்தரங்களையும் சொல்லுகிறேன் கேட்கக்கடவீர்,

வாரீர்விதுரரே, ஸ்ரீஹரியானவர் இந்தப்பிரகாரம் கல்பாதிகளிலே சிருஷ்டித்தது, இந்த சிருஷ்டிமுன்னேயுண்டாயிற்று பின்னேயுண்டாயிற்றென்கிற விவகாரத்தைச் சுருதிமுதலானதுகள் பாரமார்த்திகமாகச்சொல்லப் பிரவர்த்திகளன்று, அதுகளுக்குஅந்தப்பரமாத்துமாவினுடைய சுவரூபத்தைச் சொல்லுகிறதிலேயேதாத்பரியம் நதியிலேசுழலாநின்ற சுழலுக்கு முன்பின்என்கிற வியவஸ்தையில்லாததுபோலும் சொற்பனமுதலானசிருஷ்டிகளிலே சுவரூபம்முதலான வியவஸ்தையில்லாததுபோல் ஈசுவரன் மாயாவியானபடியினாலே அவரால் பண்ணப்படுகின்ற சிருஷ்டிகளுக்கு முன்பின் என்கிற வியவஸ்தையில்லை,

வாரீர்விதுரரே, இந்தக்கல்பத்திலும், மன்வந்தரத்திலேயும், தேவாசுரர்கள்முதலானபேர்கள் காமரூபங்களாலே சொல்லப்படுகிறவர்களே கல்பாந்தரத்திலேயும் மன்வந்தரத்திலேயும் இந்த நாமரூபங்களாலேயே சொல்லப்படாநிற்பார்கள்,

## ௰க-வது-அத்தியாயம்.

கலி - விருத்தம்,

முந்திடும்பர மாணுமுதலான
அந்தமாகு மவயவங்களாலே
உந்துகால மொளிர்யுகக்கல்பத்தின்
விந்தையாம்பிர மாணம்விளம்புதும்

பரமாணுமுதலான அவயவங்களாலேகாலமும், யுகமும், மன்வந்தராதிகளாலே கல்பத்தினுடைய பிரமாணாதிகளும் சொல்லப்படுகின்றது,

மைத்திரேயமகாரிஷியினுடைய வாக்கியம்,

வாரீர்விதுரரே, பிறவாநின்ற வஸ்துவினுடைய காரணங்களுக்குள்ளே கடைசியாயிராநின்ற அவயவத்துக்கு அவயவ மாகாமலும், அநேகமா யிருந்தும், காரியாவஸ்தையை அடையாமலும் ஒன்றோடொன்று கூடாமலும், யாதொன்று இருக்கிறதோ, அது பரமாணுவென்று அறியத்தக்கது ஏகமாய்ச்சேராநின்ற பரமாணுக்களாலே மனுஷியாளுக்கு அவயவியென்கிற புத்தியான

துஉண்டாகிறது. அந்தப்பரமாணுவாதி வியவஸ்தைக ளுடைய பிராப்தியினல் பிரபஞ்சத்தை அளவிடாநின் றும், பகவானுடைய சக்திசுவரூபமாகவும், மிகவும் சூட்சுமமாகியும், சிருஷ்டிஸ்திதிலயங்களுக்குக்காரணமாகியுமிராநின்றகாலமும் ஸ்தூலசூட்சும பேதங்களாலே அறியப்படா நிற்கிறது பிரபஞ்சத்தினுடைய பரமாணு அவஸ்தையை அனுபவிக்கிறகாலமானது பரமாணுவென்றுசொல்லப்படும் அந்தக்காலமானது பரமமகாகாலமாகச்சொல்லப்படும் இரண்டுபரமாணுக்கள் ஒருஅணுவென்றுசொல்லப்படும் மூன்றுஅணுக்கள் ஒருதிரசரேணுவென்றுசொல்லப்படும்,கவாக்ஷத்திலேபிரவேசியாநின்ற சூரியகிரணங்களிலே அனுவர்த்தித்தும் ஆகாசத்திலேபறந்துகொண்டும் பூமியையடையாமலுமிருக்கிற அப்படிப்பட்ட மூன்று திரசரேணுக்களை அடைகிறகாலமானது துடிகாலமென்று சொல்லப்படும், நூறுதுடிகாலமானது ஒருவேதகாலமென்று சொல்லப்படும் மூன்றுவேதகாலம்கூடினல் ஒருலவகாலமென்று சொல்லப்படும். மூன்றுலவம்கூடினல் ஒரு நிமிஷமென்று சொல்லப்படும், மூன்றுநிமிஷமானதுஒருக்ஷணமென்றுசொல்லப்படும், ஐந்துக்ஷணமானல்ஒருகாஷ்டையென்றுசொல்லுவார்கள், பதினைந்து காஷ்டைகளை ஒருலகுவென்று சொல்லுவார்கள், பதினைந்துலகுக்களை ஒருநாழிகையென்றுசொல்லுவார்கள்; இரண்டுநாழிகையை ஒருமுகூர்த்தமென்று சொல்லுவார்கள், ஆறுநாழிகையாகட்டும் ஏழுநாழிகையாகட்டும் மனுஷியாளுக்குஒருஜாமமாகாநிற்கும் ஐந்து குண்டுமணியிடைபொன்னனது ஒருமாஷமென்றுசொல்லப்படும், நாலுவிரற்கடை அளவாகப் பண்ணப்பட்டிருக்கிற நாலு மாஷப்பொன்னுலே யடியிலேபண்ணப்பட்ட ரந்திரத்தையுடையதாகியும்,ஆறுபலம் தாம்பரத்தாலே பண்ணப்பட்ட பாத்திரமானது நாழிஜலத்திநுலே அந்தரந்திரத்தினுலேபிரவேசிக்கப்பட்ட எவ்வளவிலே முழுகிப் போகிறதோ அந்தக்காலமானதுஒருநாழிகையென்றுசொல்லப்படும் மனுஷியாளுக்குப் பகலிலேநாலுஜாமமும் இராத்திரியிலேநாலுஜாமமுமுண்டாகாநிற்கும், அதுவேஅகோராத்திரமாகாநிற்கிறது, பதினைந்து அகோராத்திரம்ஒருபட்சமென்றுசொல்லப்படும், அந்தப்பட்சமானதுசுக்லபட்சம்-கிருஷ்ணபட்சமென்று இரண்டுவிதமாகாநிற்கும் அந்தஇரண்டுபட்சமும் பூர்ணமானல் மனுஷியாளுக்கு ஒருமாதமாகாநிற்கும் அந்தமாதமானதுபிதுர்தேவர்களுக்கு ஒருஅகோராத்திரமென்றுசொல்லப்படும், இரண்டுமாதங்கள் ஒருருதுவென்றுசொல்லப்பட்டும் ஆறுமாதங்கள் ஒருஅயனமென்றுசொல்லப்படும் அந்த அயனமானதுஉத்தராயணம் தட்சிணயனமென்றுஇரண்டுவிதமாகாநிற்கும் அந்தஇரண்டுஅயனங்களைச் சொர்க்கத்திலே தேவர்களுக்கு ஒருஅகோராத்திரமென்று சொல்லுவார்கள் பனிரண்டுமாதங்கள் ஒருவருஷமாகாநிற்கும் இப்படிநூறுவருஷமானது மனுஷியாளுக்குப் பரமமான ஆயுசாகச் சொல்லப்படாநிற்கிறது, சந்திராதிகிரகங்கள் அசுவனிமுதலான நட்சத்திரங்கள், இதுகளோடேகூடிக்கொண்டிருக்கிற காலசக்கிரத்தினுலேயிரானின்றும் காலஸ்வரூபியாகியும் ஈஸ்வரனுகியுமிருக்கிறசூரியனுனவன் பரமாணுமுதலாகியும் வருஷத்தைஅந்தமாக வுடையதாகியு மிருக்கிறகாலத்தினுலே பனிரண்டுராசி சுவரூபமான புவனகோசத்தைச் சுற்றிக்கொண்டிராநிற்கிருன்.

வாரீர்விதுரரே,சௌரமானம் பாரஹஸ்மத்தியமானம்,சாந்திரமானம் இதுமுதலான பேதத்தினுலே சம்வச்சரமென்றும், பரிவச்சரமென்றும், இதரவச்சரமென்றும் அனுவச்சரமென்றும், வச்சரமென்றும் இந்தப்பிரகாரம் சொல்லப்படாநிற்கிறது, தேஜோமண்டலரூபமானயாதொருசூரியனுன்வன் சிருஷ்டிக்கத்தக்கதுகளானகாரியசக்தியை காலரூபமான தன்னுடைய சக்தியினுலேஅனேகப்பிரகாரமாகக் காரியாபிமுகமாகப் பண்ணுநின்றுகொண்டுபுருஷனுக்கு மோகவிர்த்தியின்பொருட்டும்பல இச்சையையுடையபேர்களுக்குச் சொர்க்காதிபலத்தையக்கியங்களாலே விஸ்தாரமாகப்பண்ணிக்கொண்டும்ஆகாசத்திலேசஞ்சரித்துக்கொண்டிருக்கிறுனே வருஷம்முதலான ஐந்துக்கும் பிரவர்த்தகனுக இருக்கிறஅந்தச் சூரியன்பொருட்டுப் பூசையைப் பண்ணக்கடவீர்கள்என்று சொல்லாநின்ற மைத்திரேயமஹா ரிஷியைப்பார்த்து விதுரர் கேட்கிறுர்,

வாரீர் மைத்திரேயமகாரிஷியே, பிதுர்க்கள்- தேவர்கள்,மனுஷியாள் இவர்களுக்குத் தங்கள்தங்கள் மானத்திலுலேநூறுவருஷமென்று கணிதமானபரமாயுசினுடையபிரமாணமானது சொல்லப்பட்டது பிர்மாவுக்குநாள்தோறும்சிருட்டிக்க தக்கதானஇந்தமூன்றுலோகத்தைக்காட்டிலும் வெளிப்பட்டவர்களாய் யாதொருயோனிகளிருக்கிறுர்களோ அவர்களுடையகதியைச் சொல்லக்கடவீர்,யோனிகளானபேர்கள் யோகசித்தமாயிருக்கிறநேத்திரத்தினுலே அறியக்கூடாதபதார்த்தத்தையும் அறிவார்களன்றேவென்கிற விதுரனைப்பார்த்து மைத்திரேயர் சொல்லுகிறுர்.

வாரீர்விதுரரே, கிருதயுகம்-திரேதாயுகம்-துவாபரயுகம்-கலியுகம்- சந்தியை சந்தியாம்சம் இதுகளுடனேகூடிக்கொண் டிருக்கிற இந்தநான்குயுகமும் பன்னீராயிரம் திவ்யவருஷங்களை யுடையவாகச் சொல்லப்படுகிறது கிருதயுக சந்தியென்று சொல்லப்பட்ட யுகத்தினுடையஆதியிலே நானூறுவருஷம் சந்தியாம்சமென்று சொல்லப்பட்ட யுகத்தினுடைய அந்தத்திலேநானூறு

வருஷம். இந்தஎண்ணூறு வருஷங்களுக்கு மத்தியிலே கிருதயுகம் நாலாயிர வருஷமென்று சொல்லப்படும். திரேதாயுகசந்தியென்று சொல்லப்பட்ட யுகத்தினுடைய ஆதியிலேமுன்னூறு வருஷமும், அந்தத்திலேமுன்னூறுவருஷமும், இந்தஅறுநூறுவருஷங்களுக்கு மத்தியிலே திரேதாயுகம் மூவாயிரம் வருஷமென்று சொல்லப்படும்; துவாபரயுகசந்தியென்றுசொல்லப்பட்ட யுகத்தினுடைய ஆதியிலே இருநூறு வருஷமும், அந்தத்திலேஇருநூறுவருஷமும், இந்தநானூறுவருஷங்களுக்கு மத்தியிலே துவாபரயுகம், இரண்டாயிரம் வருஷமென்றுசொல்லப்படும், கலியுகசந்தியென்றுசொல்லப்பட்ட யுகத்தினுடைய ஆதியிலே நூறு வருஷமும், அந்தத்திலேநூறுவருஷமும், இந்தஇருநூறுவருஷங்களுக்கு மத்தியிலே கலியுகம்ஆயிரம் வருஷமென்று சொல்லப்படும், யுகங்களுக்குள்ளே கிருதயுகமானது ஆதியுகமாய் உத்தமமாயும் கலியுகமானது அந்தியமாகி லயஏதுவாகியுமிருக்கும். சந்தியைசந்தியாங்கிசம் இதுகள் மத்தியகாலத்திலே கவாலம்பனம் முதலானதர்மமானது பண்ணப்படுகிறதென்று காலத்தையறிந்த பெரியவர்கள் அதையுகமென்றுசொல்லுவார்கள், கிருதயுகத்திலேதர்மமானது நான்குபாதத்தையுடையதாய்க்கொண்டு மனுஷ்யாளையாஸ்ரயித்திருக்கும் அந்தத்தர்மந்தானேமற்றயுகங்களிலே விருத்தியடைகின்ற அதர்மமென்கிறபாதத்தினாலேகுறைந்துபோகும் இந்தமூன்று லோகத்துக்கும் வெளியிலே மகாலோகமுதலாகிய பிரமலோகபரியந்தங்களான லோகங்களிலே ஆயிரம்சதுர்யுகம் ஒருபகலும் ஆயிரம்சதுர்யுகம் ஒருராத்திரியுமாக இரண்டுஞ்சேர்ந்துஒருநாளாகாநிற்கும் அந்தராத்திரியிலே விசுவகர்த்தாவான பிர்மாவானவர் சயனித்து நித்திரைபண்ணிஅந்தராத்திரிமுடிவிலே ஆரம்பிக்கப்பட்டு லோக சிருஷ்டியானது ஒருபகல்முப்பதுநாழிகையிலேபதினாலுமனுக்களை அனுபவித்துக்கொண்டு உண்டாகாநிற்கும் ஒரு மனுவந்தரம் எத்தனையுகமென்றால் திவ்ய வருடங்களிலே ஐபாயிரத்திருநூற்றி ஞம்பத்திரண்டு வருஷமும் பத்துமாதமும் எட்டுநாளும் நாலு ஜாமமும் இரண்டு முகூர்த்தமும் காலேஅரைக்காலேகாணி அரைக்காணி நாழிகையும் இவ்வளவுகாலத்தோடே கூடிக்கொண்டிருக்கிற எழுபத்தொருசதுர்யுகபரியந்தம்மனுவானவன் தன்தன்காலத்தைப் பரிபாலனம்பண்ணுநிற்பன் மனுவந்தரங்களிலே அந்தந்தமனுக்களுடைய புத்திரர்களானபேர்கள் கிரமமாய்ராஜாவாகநிற்பார்கள் மனுக்களும் சப்தரிஷிகளும் தேவர்க்களும் ஏககாலத்திலேயே யிருப்பார்கள் இந்திரர்களும் அவர்களை அனுவர்த்தியாநின்றகந்தருவாள் முதலானபேர்களும் ஏககாலத்திலேயே உண்டாயிருப்பார்கள் பக்ஷி மிருகாதிகள் மனுஷ்யாள் பிதுர்க்கள்-தேவர்கள்- இவர்களுக்குத் தன்தன் கர்மங்களாலே சிருஷ்டிக்கிறது பிர்மாவுக்குநாள்தோறும் பண்ணப்படுகிற சிருஷ்டியாகவிருக்கும் மனுவந்தரங்களிலே பகவானானவர் சத்துவகுணத்தைத்தரித்துத் தம்முடையமூர்த்திகளான மனுமுதலான பேர்களாலே பிரகாசிக்கப்பட்ட பவுர்ஷத்தையுடைய ஜகத்தைரட்சிக்கிறபகவானனவர் சாயங்காலத்திலே தமோகுணலேசத்தைக் கிரகித்து நிக்கிரகிக்கப்பட்ட பவுர்ஷத்தையுடையவராய் தம்மிடத்திலேயே பிரவேசிக்கின்ற பிராணிகளையுமுடையவராய் வியாபாரசூனியரா யிருப்பார் இராத்திரியானது உண்டாயிருக்கையில் பூலோகமுதலான மூன்றுலோகங்களும் சந்திரசூரியாளுடையபிரகாசமில்லாதுகளாய் வியாபாரத்திலேநின்றும் ஒழிந்திராநின்ற அந்தபிர்மாவையே அடையாநிற்கும் பகவானுடையசத்திசுவரூபமானசங்கருஷ்ணருடைய முகாக்கினியினாலே மூன்றுலோகமும் தகிக்கப்பட்டுப்போகையில் பிருகுமகாரிஷி முதலானபேர்கள் அக்கினிச்சுவாலையினாலே மிகவும் பீடிக்கப்பட்டவர்களாய்க்கொண்டு மகாலோகத்தைவிட்டு ஜனலோகத்தைஅடைவார்கள் அப்போது கற்பாந்தகாலத்திலே மிகவும்விர்த்தியடையாநின்ற சமுத்திரங்களானதுகள் மிகவுஞ் சாஞ்சல்யத்தையுடையதுகளாகி மகாவாயுக்களாலே யுண்டாக்கப்பட்ட அலைகளையுடையதுகளாய் இந்தமூன்றுலோகத்தையுஞ் சூழ்ந்துகொள்ளும் அந்தஜலமத்தியிலே ஸ்ரீஹரியானவர் அனந்தசயனராகி யோக நித்திரையினாலே மூடப்பட்ட நேத்திரங்களையுடையவராய் ஜனலோகவாசிகளானமஹாரிஷிகளினாலே ஸ்தோத்திரம்பண்ணப்பட்டுக்கொண்டிருப்பார்.

வாரீர்விதுரரே, காலகதியினாலே காணப்படாநின்றுமிருக்கிற அகோராத்திரி இந்தப்பிர்மாவுக்குப் பரமமானஆயுசானது நூறுவருஷமாகாநிற்கும் மனுஷியாளுக்குப்போலவே அந்தஆயுசும் க்ஷயத்தையடையும் பிர்ம்மாவுக்கு நூறுயுசிலேபாதிஆயுசுபரார்த்தமென்றுசொல்லப்படும். இந்தப்பிர்மாவுக்குப பூர்வமான பரார்த்தமானது நடந்துபோயிற்று. இரண்டாம்பரார்த்தமானது இப்போது நடவாநிற்கிறது அந்தப்பூர்வபரார்த்தத்தினுடையஆதியிலே பிரமமென்னப்பட்ட மகாகற்பத்திலேசப்தபிர்மமென்று சொல்லுகிற பிர்ம்மாவானவர் உண்டானார் அந்தப்பூர்வபரார்த்தத்தினுடைய அந்தத்திலேயே பாத்மகற்பமானது உண்டாயிற்று.

ஸ்ரீஹரியினுடையநாபிசரசில்நின்றும்லோகாகாரமானதுஉண்டானதைப் பத்மகற்பமென்று சொல்லுவார்கள். அதைப்பிர்ம்மாவுக்கு இரண்டாம்பரார்த்தத்தினுடைய ஆதியிலேஸ்ரீஹரியானவர் வராகஅவதாரஞ் செய்ததினாலே இந்தக்கற்பம்வராககற்பமென்று சொல்லப்படுகின்றது. இரண்டுபரார்த்தமென்றுபெயரையுடைய

தாகியும் பிரம்மாவுக்கு நூறு ஆயுசாகியுமிருக்கிற இந்தக்காலமானது காரியோபாதிருனியராகியும், அனந்தராகியும், அநாதியாகியும், ஜகத்ரூபியாகியுமிருக்கிற ஸ்ரீஅரிகுருனிமிஷமென்று உபசாரமாகச் சொல்லப்படுகின்றது. பரமாணுகாலத்தை ஆதியாக வுடையதாகியும், இரண்டுபரார்த்தத்தை அந்தமாகவுடையதாகியு மிருக்கிற இந்தக்காலமானது மிகவும்சமர்த்தமாயிருந்தாலும் அந்தஈஸ்வரனுக்குசமர்த்தமென்று தேகாதிகளிலே அபிமானத்தையுடைய பேர்களுக்கே சமர்த்தமாகா நிற்கும். சோடசவிகாரங்களாலே பண்ணப்படும் ஒன்றுக்கொன்றுபத்தத்தனே உயர்த்திகளாயிருக்கிறபிருதிவிமுதலான ஏழு-ஆவரணங்களாலே வெளியிலேசூழப்பட்டும் உள்ளேஐம்பதுகோடி விஸ்தாரங்களாயிருக்கிற இந்தப்பிரமாண்டமானது யாதொரு ஸ்ரீஅரியினுடைய சுவரூபத்திலே பரமாணுபோலே காணப்படாமலும் அனேகம் கோடிபிர்மாண்டராசிகள் ரோமாந்தரத்திலே அடங்கினதுகளாய் காணப்படுகிற பரம புருஷராகியும், மகாத்துமாவாகியுமிருக்கிற அந்த ஸ்ரீமஹாவிஷ்ணுவினுடையசமஸ்தகாரணங்களுக்குங் காரணமான அந்தசுவரூபத்தை ஆதியந்தசூனியமான சாட்சாத் பரப்பிரம்மமென்றுசொல்லுவார்கள்,

## யஉ-வது- அத்தியாயம்.

கலிவிருத்தம்,

மதுரமாகிய மானசிகமான
சிதைவிலாக்கும ராதிகளின்சிருட்டி
விதமதாகவே வீர்த்தியடையாமல்
மதமனுஷ்யரின் சிருஷ்டியைவர்னிப்பாம்.

மானசிகமான குமாரத்திகளுடைய சிருஷ்டியானது விர்த்திபடையாமலே ஸ்திரீபுருஷசரீரத்தினாலே பண்ணப்படாநின்ற மனுஷசிருஷ்டியானது வர்னிக்கப்படுகின்றது,

மைத்திரேயமகாரிஷியினுடைய வாக்கியம்,

வாரீர் விதுரரே பரமாத்துமாவினுடையகாலஸ்வரூபமான மகிமையானது உமக்குச்சொல்லப்பட்டது, பிரமாவானவர் இப்பிரபஞ்சத்தை எப்படி சிருஷ்டித்தாரோ அதைச்சொல்லுகிறேன்கேளும் லோககர்த்தாவான அந்தப் பிர்மாவானவர் பிரமத்தினுடைய அப்பிரகாசரூபமான அந்தகாரத்தையும் நான் என்கிற புத்திரூபமான மோகத்தையும் விஷயபோகங்களிலே இச்சாரூபமான மகாபோகத்தையும் சிருஷ்டித்து மிகவும் பாபிஷ்டமான அந்தச்சிருஷ்டியைப்பார்த்துத் தன்னை மிகவும் கொண்டாடிக்கொள்ளாமற் போனார், பிற்பாடு பகவானுடைய தியானத்தினாலே மிகவும் பரிசுத்தமான மனதினாலே சனகரையும்-சனந்தனரையும்- சனதசுஜாதரையும்-சனற்குமாரரையும்-கிரியா சூனியர்களாகியும்-ஜிதேந்திரியர்களாகியும்-ஊர்த்துவ ரேதசுக்களாகியு மிருக்கிற முனிகளைச் சிருஷ்டித்து அந்தமுனிகளைப்பார்த்து வாருங்கள்புத்திரர்களே பிரஜைகளை சிருஷ்டிக்கக்கடவீர்களென்று சொல்லாநின்றஅந்தப்பிரம்மாவினுடையஆக்கினையை மோட்சசாதனமான தர்மத்தையுடையவர்களாகியும் வாசுதேவ பாராயணர்களாகியுமிருக்கிற அம்முனிகள் ஒப்பாமற்போனார்கள் அந்தப் பிரம்மாவானவர் இந்தப்பிரகாரம் தம்முடையஆக்கினையைஅங்கீகரியாமலிருக்கிற அந்தப் புத்திரர்களாலே அவமானம்பண்ணப்பட்டவராய் அதினாலேமிகவும் சகிக்கக்கூடாமலிருக்கிற கோபத்தைஅடக்குதற்கு ஆரம்பித்துண்டாகிஅது புத்தியினாலே மிகவும்அடக்கப்பட்டிருந்தாலும் பிர்மாவினுடைய புருவமத்தியில் நின்றும் நீலலோகிதனென்கிறகுமாரனை ஆவிர்ப்பவித்தது. தேவர்களுக்கு முன்னே பிறந்தவராகியும் பகவானாகியு மிருக்கிற அந்தருத்திரனனவர் மிகவும் ரோதனம்பண்ணிக்கொண்டு பிரம்மாவைநோக்கி வாரீர் ஜகத்குருவே எனக்கு நாமதேயங்களையும் ஸ்தானங்களையும்கல்பிக்கக்கடவீரென்றுசொல்லுகின்ற அந்த உருத்திரனைநோக்கி மனோக்கியமான ஒருவார்த்தை சொன்னார்,

வாராய் சுரசிரேஷ்டனே நீ ரோதனம்பண்ணவேண்டாம் உனக்குஅப்படியே ஸ்தானங்களையும் நாமங்களையுங்கற்பிக்கிறேன் நீமிகவும் பரபரப்பையுடைய பாலனனவன்போல் ரோதனை பண்ணினபடியினாலே பிரஜைகள் உன்னை ருத்திரனென்று சொல்லப் போகிறார்கள். இருதயம்-இந்திரியங்கள்-ஆகாசம்-வாயுவு-அக்கினி-ஜலம்-பூமி-சூரியன்-சந்திரன்-தபசு-இதுகள் உனக்கு ஸ்தானங்களாகப் பூர்வமே நம்மாலேகற்பிக்கப்பட்டிருக்கிறதுகள், மன்னியுவென்றும்-மனுவென்றும்-மகாகாளனென்றும் மகானென்றும்-பீமனென்றும்- ரிஷத்துவஜனென்றும், ஊர்த்தரேதசென்றும், பவனென்றும்,காலனென்றும், வாமதேவ னென்றும், திருதவிருதனென்றும், இந்த நாமங்களையுடையவனைப் புத்தியென்றும், திருதியென்றும், ரசானையென்றும், உமையென்றும், நியத்தென்றும், சற்பியென்றும்,இளையென்றும்,அம்பிகை என்றும், இளாவதியென்றும்,சதையென்றும், தீக்ஷையென்றும்,ருத்திராணியென்றும், உமக்குஸ்திரீகள்கற்பிக்கப்பட்டிருக்கிறார்கள். இந்தஸ்திரீகளோடே கூடினவராய்க்கொண்டு பிரஜைகளுக்குப் பதியாகாநிற்கிறபடியினாலே பிரஜைகளை சிருஷ்டிக்கக் கடவீரென்று இந்தப்பிரகாரம் பிதாவான பிர்மாவினாலே ஆக்கியாபிக்கப்பட்டவராய் அந்தருத்திரனனவர் தம்முடையபலம்ஆகிருதி-சுபாவம்- இதற்கு அனுரூபமாக தமக்கு சமானர்களாயிருக்கிற பிரஜைகளைச் சிருஷ்டித்தார். ருத்திரனாலே

சிருஷ்டிக்கப் பட்டவளாகியும் ஜகத்தை நாலுபக்கமும் ஆக்கிரமியாநின்றுமிருக்கிற ருத்திராளுடைய கூட்டங்களைப்பார்த்துப் பிரம்மாவானவர் சங்கையுடையவராய் ஒருவார்த்தைசொன்னர்.

வாராய் சுரோத்தமனே, இப்படிப்பட்ட பிரஜைகளைச்சிருஷ்டிபண்ணினதுபோதும் உன்னாலே சிருஷ்டிக்கப்பட்ட இவர்கள் என்னோடேகூட லோகங்களைத் தகிக்கிறவர்கள்போல் மிகவும் சகிக்கக்கூடாதவர்களாகியு மிருக்கிற இப்படிப்பட்ட பிரஜைகளாலே திக்குகள்மிகவும் சந்தாபத்தை யடைந்ததுகள், உனக்கு மங்கள முண்டாகக்கடவது, சமஸ்த பிராணிகளுக்கும் சுபகரமான தவசைப்பண்ணிப் பூர்வகல்பத்திலே யிருந்த பிராணிகளைப்போலவே நீ-இந்தப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கப்போகிறாய் புருஷனானவன் தவசினாலேயே பரஞ்சோதிஸ்வராகியும் சர்வபிராணிகளுடைய இருதயத்திலே வாசம்பண்ணாநின்று மிருக்கிற ஸ்ரீஅரியை ஆயாசமன்றியிலேயடையாநிற்கிறான். ஆனகையால் அப்படிப்பட்ட தவத்தைப்பண்ணக்கடவாயென்று பிர்மாவினாலேயாக்கியாபிக்கப்பட்டவராய் அந்த ருத்திரரானவர் அப்படியேசெய்கிறேனென்று அங்கீகரித்து வாணிபதியானஅந்தப்பிர்மாவைப் பிரதட்சணம்பண்ணிஅவர்கையிலனுமதிபெற்றுக்கொண்டு தவசு செய்கிறதின்பொருட்டு வனத்தையடைந்தார்,

பிற்பாடு ஸ்ரீபகவானுடையசக்திகளோடேகூடிக்கொண்டுமிருக்கிற அந்தப்பிர்மாவுக்கு லோகசிருஷ்டிக்குஏதுக்களான மரீசி-அத்திரி-ஆங்கிரசு-புலஸ்தியர்- புலகர் கிருது-பிருகு-வசிஷ்டர்-தட்சன் - நாரதர்-இந்தப் பத்துப்பேர்களும் பிறந்தார்கள். நாரதமுனியானவர் அந்தப் பிரம்மாவினுடைய மடியில்நின்றும் பிறந்தார், தட்சப்பிரஜாபதியானவர் கட்டைவிரலில்நின்றும் பிறந்தார்,வசிஷ்டர் பிராணத்தில்நின்றும்பிறந்தார். பிருகுமகாரிஷி தொக்கில்நின்றும்பிறந்தார், கிருதுவானவர் கையில்நின்றும்பிறந்தார். புலகர் நாபியில்நின்றும் பிறந்தார். புலஸ்தியரிஷி காதில்நின்றும் பிறந்தார். ஆங்கிரசு முகத்தில்நின்றும் பிறந்தார், அத்தியமஹாரிஷி நேத்திரத்தில்னின்றும் பிறந்தார். மரீசிரிஷியானவர் மனதில்நின்றும்பிறந்தார், யாதொரு தர்மத்திலே சாட்சாத் ஸ்ரீமந்நாராயணர் பிரசன்னமா யிருக்கிறாரோ அந்தத்தர்மமானது பிரம்மாவினுடைய வலதுஸ்தனத்தில்நின்றும் உண்டாயிற்று,

யாதொருஅதர்மத்திலே லோகபயங்கரமான மிருத்தியுஉண்டாயிற்றோ அந்தஅதர்மமானதுபிரம்மாவினுடையமுதுகில்னின்றும் உண்டாயிற்று இருதயத்தில்நின்றும்காமமும் புருவங்களில்நின்றும் கோபமும்-அதரத்தில்னின்றும் லோபமும் முகத்தில்நின்றும்வாக்கும், சிசுனத்தில்னின்றும் சமுத்திரங்களும்,சாயையில்னின்றும் தேவஹூதிக்குப்பதியான கர்த்தமப் பிரஜாபதியுமுண்டானார்கள். விசுவகர்த்தாவான அந்தப்பிரம்மாவினுடையதேகத்தில்நின்றும் மனதில்நின்றும் இந்தப் பிரபஞ்சமானது இந்தப்பிரகாரம் உண்டாயிற்று.

வாரீர்விதுரரே,அந்தப்பிரம்மாவானவர் தம்முடைய பெண்ணாகியும்,பாலையாகியும் இச்சையில்லாதவளாகியுமிருக்கிற வாக்கு தேவியைப்பார்த்துக் காமத்தையுடையவராய்க்கொண்டு இச்சித்தாரென்று நாம்கேள்விப்பட்டிருக்கிறோம் தம்முடைய புத்திரராளாகியும், மரீசி-பிரஜாபதி முதலாகியுமிருக்கிற அந்தரிஷிகள் அதர்மத்தைச்செய்யப் புத்தியையுடையவராயிருக்கிற பிதாவான அந்தப்பிரம்மாவைப்பார்த்து விசுவாசத்தினாலே இந்தப் பிரகாரம் தர்மத்தை யறிவித்தார்கள்.

வாரீர் சகந்கர்த்தாவே, உம்மைக்காட்டிலும் பூர்வம் உண்டாயிருந்த பிர்மாக்களாலேயும் இப்படிப்பட்ட அதர்மமானது பண்ணப்படவில்லை, இனிமேல்யாதொரு பேர்கள் உண்டாகப்போகிறார்களோ அவர்களும்இப்படிப்பட்ட அதர்மத்தைப் பண்ணப் போகிறதில்லை சமர்த்தனாகவிருக்கிற எந்தப்புருஷன்தான் காமனை நிக்கிரகியாமல் தன்னுடையபெண்ணைத்தானேயிச்சித்துஅடைகுவான், மகாதேஜசுவிகளாயிருக்கிற மகாபுருஷர்களுக்கும் இப்படிப்பட்டகாரியமானது கீர்த்திப்பிரதமாகமாட்டாது.

யாதொருபேர்களுடையநடத்தையை யனுவர்த்தியாநின்ற லோகமானது க்ஷேமத்தையடைகிறதோ அப்படிப்பட்ட மகாபுருஷாள் இப்படிப்பட்டகாரியத்தைப் பண்ணுகிறது யுக்தமன்று யாதொரு பகவானானவர் தம்முடைய பிரகாசத்தினாலே தம்மிடத்திலேயே யிராநின்ற இந்தப் பிரபஞ்சத்தைப் பிரகாசம்பண்ணாநிற்கிறாரோ அந்தப்பகவானானவர் இந்தத் தர்மத்தை ரட்சிக்கிறதற்கு யோக்கியராகவு மிருக்கிறார், அந்தப் பகவான் பொருட்டுப் பிரணாமம்பண்ணுகிறோமென்றுசொல்லாநின்ற தம்முடைய புத்திரர்கள் வார்த்தையைக்கேட்டுப் பிர்மாவானவர் மிகவும் லச்சையை யுடையவராகி அப்போது அந்தச் சரீரத்தை விட்டுவிட்டார் திக்குகளானதுகள் கோரரூபமான அந்தச்சரீரத்தைக்கிரகித்ததுகள் அந்தச்சரீரமெதுவென்றால் மூடுபனியினாலே யாதொருஇருளுண்டாகிறதோ அதுவே அந்தச் சரீரமென்று சொல்லுவார்கள்.

பிற்பாடு இந்தச்சனங்களைப் பூர்வம்போல எந்தப்பிரகாரமாகச் சிருஷ்டிக்கப் போகிறேனென்று தியானம்பண்ணாநின்ற அந்தப்பிர்மாவினுடைய நான்குமுகத்தில்நின்றும்,நான்குவேதங்களும்,யக்கியங்களுடையவிஸ்தாரங்களும், உபவேதங்களும்,நியாயங்களும், இதுகளோ

டே கூட பிர்மசரியாதி ஆசிர்மங்களும், அதுகளுடையவி ர்த்திகளும்-தபசு-சவுசம்-பூததயை-சத்தியவசனம்- என்னப்பட்ட தர்மத்தினுடைய நாலுபாதங்களு முண்டாயி னதுகள் என்றுசொல்லாநின்ற மைத்திரேயமகா ரிஷியைப்பார்த்து விதுரரானவர் வாரீர்மைத்திரேய மகாரிஷியே தட்சன்முதலான பிரஜாபதிகளுக்குப் பிரபுவான அந்தப்பிரம்மாவானவர் வேதமுதலான துகளை என்னமாகச்சிருஷ்டித்தார், அதையெனக்குச் சொல்லக்கடவீரென்று பிரார்த்தியாநின்ற விதுரரைப்பார்த்துமைத்திரேயமகாரிஷியானவர் சொல்லுகிறார்.

வாரீர்விதுரரே, அந்தப்பிரம்மாவானவர்தர்மமுதலானமுகங்களாலே நான்குவேதங்களையும், நான்குருதுக்களுடைய கர்மமாகச்சிருஷ்டித்தார். அதெப்படியெனில் ருக்கு வேதத்தைச் சஸ்திர மென்னப்பட்ட ஹோதாவினுடையகர்மமாகவும் யசுர்வேதத்தை திறஜியை என்னப்பட்ட அத்துவரியுவினுடையகர்மமாகவும், சாமவேதத்தை ஸ்ததுதிஸ்தமோம் என்னப்பட்ட உத்காதாவினுடைய கர்மமாகவும், அதர்வண வேதத்தைப் பிராசிதமென்னப்பட்ட பிர்மாவினுடைய கர்மமாகவும் இந்தப் பிரகாரம் கிரமமாக நான்குவேதங்களையும்பண்ணிமறுபடியும்கிழக்குமுகத்தினலே ஆயுர்வேதத்தையும்தக்ஷணமுகத்தினதே தனுர் வேதத்தையும் மேற்குமுகத்தினலே கந்தர்வவேதத்தையும், உத்தரமுகத்தினலே விசுவகர்ம சாஸ்திரவேதத்தையும் சமஸ்தமுகங்களில்நின்றும், இதிகாசபுராண மென்னப்பட்ட ஐந்தாம் வேதத்தையும், பூர்வமுகத்தில்நின்றும் ஷோடசியென்றும்உக்தியமென்றும் சொல்லப்பட்ட கர்மங்களையும் தட்சணமுகத்தினலே சயனம் அக்கினிஷ்டோம மென்னப்பட்டகர்மங்களையும், பச்சிமமுகத்தினலே அப்தோரியாமம் அதிராத்திர மென்னப்பட்ட கர்மங்களையும், உத்தரமுகத்தினலே வாசபேயம், கோவசமென்னப்பட்ட கர்மங்களையும்-சவுசம்-பூதபயதானம்-தபசு-சத்திய மென்கிற தர்மத்தினுடைய நான்கு பாதங்களையும், ஆசிரமங்களையும், அதினுடைய விர்த்திகளையும், உபநயனம் ஆரம்பித்துச் செய்யத்தக்கதான பிர்மசரியத்தையும், பிரஜாபத்திய விரதத்தையும், வேதாத்தியயன பரியந்தம் செய்யத்தக்கதான விரதத்தையும், நைஷ்டிகப் பிர்மசரியத்தையும் கிரகஸ்தாசிரமத்திலே நிவிர்த்தி மன்றியிலேயிருக்கிற கிருஷிமுதலான விர்த்தியையும் யாசனமுதலான விர்த்தியையும் யாசனைசெய்கையில் சம்பவியாநின்ற விர்த்தியையும் க்ஷேத்திரத்திலே யுதிர்ந்துபோன தானியங்களைப் பொறுக்கிற ரூபமானசிலோஞ்சவிர்த்தியையும் வானப்பிரஸ்தாசிரமத்தையும் நான்குவிதமாகச் சிருஷ்டித்தார். அதெப்படியெனில் உழுது பயிரிடாமல் தானேவிளையாநின்ற தானியங்களாலே ஜீவனம்பண்ணாநின்ற வைகானசாளும் புதிய தானியம் அகப்பட்டவுடனே பூர்வம் சேர்ந்திருந்த தானியத்தைவிட்டுவிடுகிறபேர்களான வாலகில்லியர்களும், பொழுதுவிடியச்சேயெழுந்திருந்து எந்தத்திக்கைப்பார்க்கிறுனே அந்தத்திக்கிலேயே சம்பாதிக்கப்பட்ட பலமுதலானதுகளாலே ஜீவனம்பண்ணாநின்ற ஔதும்பராளும்தானே மரத்தில்நின்றும் விழாநின்ற பல முதலானதுகளாலே ஜீவனம் பண்ணாநின்ற பெண்பாலும் இந்தப்பிரகாரம் நான்கு விதமாக வானப்பிரஸ்தாள் சிருஷ்டிக்கப்பட்டார்கள், சன்னியாசாசிர்மத்திலேயும் தன்னுடைய ஆசிர்மதர்மத்தையே பிரதானமாகவுடைய குடீசகனும் கர்மத்தை யப்பிரதானமாகவெண்ணிக் கியானத்தையேபிரதானமாக வுடையவனுன பெகூதனும் கியானப்பியாசத்திலே நிஷ்டையையுடையவனுன அம்சனும்தத்துவக்கியானத்தை யுடையவனுன நிஷக்கிறியனும் இந்தப் பிரகாரம் நான்கு விதமாகச் சிருஷ்டிக்கப்பட்டார்கள். ஆத்துமாநாத்தும விவேகரூபமான மோட்சத்தைப் பலமாகவுடைய வித்தையும் சொர்க்காதி பலத்தையுடைய தான திறவியத்தையும் கிருஷியாதிரூபமாகியும் ஜீவன ஹேதுவாகியு மிருக்கிற விர்த்தியும் அர்த்தபரமான தண்டநீதிவித்தையும் இந்தப்பிரகாரமே வியாகிருதிகளும்-பிரணவமும்-அந்தப்பிரம்மாவினுடையஇருதயஆகாசத்தில்நின்றும் உண்டாயினதுகள் அவருடையரோமங்களில் னின்றும் உஷ்ணிகு யென்னப்பட்ட சந்தசும் தொக்கில்னின்றும் காயத்திரிஎன்னப்பட்டசந்தசும் மாங்கிசத்தில்னின்றும் திருஷ்டுபு யென்னப்பட்ட சந்தசும் பித்தநாடியில்னின்றும் அநுஷ்டுபுயென்னப்பட்ட சந்தசும் அஸ்தியில் னின்றும் ஜகதியென்னப்பட்ட சந்தசும் மச்சையென்னப்பட்டசாரத்தில்னின்றும்பங்கிதிஎன்னப்பட்டசந்தசும் பிராணனில்னின்றும்பிரகிருதியென்னப்பட்ட சந்தசும் உண்டாயிற்று,

அந்தப் பிரமாவினுடைய ஜீவனானது ககரமுதலாய் இருபத்தைந்து அட்சரமாகியும் தேகமானது அகாரமுதலான வர்னங்களாகியும் இந்திரியங்க ளானதுகள் ச-ஷ ஸ-ஹ-யென்று நாலுவர்னங்களாகியும் பலமானது-ய-ர ல-வ-யென்று நாலுவர்னங்களாகியும் நிஷாத முதலான சப்தசுரங்களும் அவருடையலீலையினலேயும் உண்டாயினதுகள்.

வாரீர் விதுரரே, வியக்தங்களான அட்சரங்களையும் அவ்வியக்தமான பிரணவத்தையும் சுவரூபமாக வுடையவராகியும், சப்தபிரமரூபியாகியுமிருக்கிற அந்தப் பிரம்மாவுக்குப் பரமாத்துமாவானவர் பரிபூரணமானபிர்ம சுவரூபமாகியும் இந்திராதி ரூபமான நாநு சக்தி[illegible]யு டையவராகவுமாகப் [illegible]

பின்பு அந்தப்பிர்மாவானவர் வேறொரு சரீரத்தைக் கிரகித்துச் சிருஷ்டியின்பொருட்டு மனதைத்தரித்து மகா வீரியத்தை யுடையவர்களான ரிஷீஸ்வரர்களுடைய விஸ்தரிக்கப் படாமலிருக்கிற சிருஷ்டியையும் அறிந்து இருதயத்திலே மறுபடியுஞ்சிந்தித்தார் அதெப்படியென்றால் இதுமிகவும் ஆச்சரியமா யிருக்கின்றது நித்தியமாகச் சிருஷ்டிவியாபாரத்தையுடையவனாயிருந்தாலும் எனக்குப் பிரசைகள் விர்த்தியடையவில்லை இந்தவிஷயத்திலே தெய்வமானது பிரதிபந்தமாகாநிற்கிறது இது நிச்சயமென்று இந்தப்பிரகாரம் யுகத்தைச்செய்யாநின்றும் தெய்வஅனுகூலத்தையும்அபேட்சியாநின்றுமிருக்கிற அந்தப்பிர்மாவினுடைய ரூபமானது இரண்டுபிரகாரமாகஆயிற்று, அந்த இரண்டு ரூபங்களிலினின்றும் பெண்ணும்பிள்ளையுமாய் இரண்டு சிசு உண்டாயிற்று அந்தச்சிசுக்களிலே புருஷசிசுவானது திரிலோகபதியான சுவாயம்புமனுவாயிற்று அந்தஸ்திரீ சிசுவான சதருபையென்று பெயரை யுடையவளாய் அந்த மனுவுக்கு ஸ்திரீயாகஆயிற்று அப்போது ஸ்திரீ புருஷாளுடைய தர்மத்தினாலே பிரஜைகளானதுகள் விர்த்தியடைந்ததுகள், அதெப்படியென்றால் வாரீர் விதுரரே அந்தசுவாயம்புமனுவானவன் சதருபை என்னப்பட்ட ஸ்திரீயினிடத்திலே ஐந்து பிள்ளைகளைப் பெற்றான் பிரிய விரதன் உத்தானபாதனென்று இரண்டுபிள்ளைகளையும் ஆவூதி என்றும்-தேவவூதியென்றும்-பிரசூதியென்றும் மூன்று பெண்களையும் இந்தஐந்துபேரையும்பெற்றான். ஆவூதி என்கிறபெண்ணை ருசுப்பிரஜாபதிக்கும் தேவவூதியை கர்தமபிரஜாபதிக்கும் பிரசூதியை தட்சப்பிரஜாபதிக்கும்கொடுத்தான், அவர்களுடைய சந்ததிகளாலே இந்தஜகம் பூரிக்கப்பட்டதாயிற்று.

## ய௩-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

மனுப்பிரஜாபதி மக்களைச்சிருஷ்டிக்கப்
புனலிலேமுழு கிப்போனபூமியை
நனிவராக ரூபியானநாதனாற்
கனமுடன்செய்சங்காரங்கழறுவாம்,

மனுப்பிரஜாபதி பிரஜைகளைச் சிருஷ்டிக்க இச்சிக்குகையில் ஆகஸ்தியமாகஜலத்திலே முழுகிப்போகாநின்றபூமியைஉத்தாரணம்பண்ணுகைக்குஅவதரியாநின்ற வராகரூபியான சுவாமியினாலே பண்ணப்பட்ட தைத்தியசங்காரமானது சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகருடையவாக்கியம்,

வாராய்ராஜனே இந்தப் பிரகாரம் சொல்லுகின்ற மைத்திரேயமகாரிஷியினுடைய வசனத்தைக்கேட்டு வாசுதேவருடையகதையிலே மிகவும் ஆதரவையுடையவரான அந்த விதுரரானவர் மறுபடியும் பிரஸ்னம் பண்ணினார்,

வாரீர் மைத்திரேயமகாரிஷியே பிர்மாவுக்கு இஷ்டபுத்திரனாகியும் திரிலோகபதியாயுமிருக்கிற அந்த சுவாயம்புமனுவானவன் அனுகூலையான பத்தினியைஅடைந்தபிற்பாடு என்னபண்ணினார்.

வாரீர் மகாரிஷியே அந்தசுவாயம்புமனுவானவர் விட்சுவசேனரையே ஆசிரமாக வுடையவரன்றோ ஆகையினாலே ஆதிராஜனாகியும் மகானுபாவனாகியு மிருக்கிற அந்தசுவாயம்புமனுவினுடையசரித்திரத்தைக்கேட்கச் சிரத்தையை யுடையவனான என்பொருட்டுசொல்லக்கடவீர்,

யாதொருபேர்களுடைய இருதயத்திலே ஸ்ரீமுகுந்தருடைய பாதாரவிந்தமானது நித்தியமாகவிருக்கிறதோ அந்தமகாபாகவதாளுடைய குணங்களைக் கேள்வி செய்கிறது யாதொன்றுண்டோ இதுவேபுருஷாளுக்கு வெகுகாலம் கிரமப்பட்டு அறியப்படாநின்ற வேதாந்தக்கியானத்தினுடைய அர்த்தமாய்க் கியானிகளாலே சிலாகிக்கப்படாநிற்கிறதன்றோ.

வாராய் மகாராசனே இந்தப்பிரகாரம்சொல்லாநின்றும் மிகவும் வணக்கத்தையுடையவராகியும் சஹஸ்திரசிரசுகளையுடையவரான ஸ்ரீகிருஷ்ணருடைய திருவடிகளை இருதயத்திலே தரிக்காநின்றுமிருக்கிற விதுரரைப் பார்த்து பகவானுடைய கதையிலே பிரவிர்த்திப்பிக்கப் பட்டவராகியும் புளகாங்கிததேகராகியுமிருக்கிற அந்த மைத்திரேயமகாரிஷியானவர் ஒருவார்த்தைசொன்னார்.

வாரீர்விதுரரே, தன்னுடைய பாரியையோடேகூடப்பிர்மாவினிடத்திலினின்றும் உண்டாகாநின்ற சுவாயம்புமனுவானவர் அஞ்சலிபந்தத்துடன் சாஷ்டாங்கப்பிரணாமம்பண்ணிக்கொண்டு அந்தப்பிரமாவைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்.

வாரீர்பிரபுவே, நீர்-சமஸ்த பிராணிகளுக்கும் பிதாவாகவிருக்கிற உம்முடைய பிரஜைகளான எங்களுக்கு உம்முடையசிசுருஷையானது எந்தக்கர்மத்தினாலே உண்டாமோ அந்தக்கர்மத்தை எங்களுக்குச்சொல்லவேண்டுமென்றுகேட்கின்ற சுவாயம்புமனுவைப்பார்த்துப் பிர்மாவானவர் வாராய்குழந்தாய் பூபதியேஉனக்குமங்களமுண்டாகக்கடவது நீ கபடமில்லாமலிருக்கிறமனதினாலே என்னைரட்சிக்கக்கடவீரென்று சுவயமாகவே பிரார்த்திக்கப்பட்டபடியினாலே உன்பொருட்டு மிகவுஞ்சந்துஷடனானேன்.

பிரமாதமில்லாதவர்களாகியும் துவேஷமில்லாதவர்களாகியு மிருக்கிற புத்திராளாலே யதாசத்தி பிதாவினுடைய ஆக்கியையானது ஆதரவுடனேகூடக்கிரகிக்கப்படுகிறது, இதுவே புத்திராளாலே பிதாவினிடத்திலே

பண்ணப்படுகிறபூசைபாகாயிற்கிறது ஆகையினுலேநீஇ ந்தஸ்திரீயினிடத்திலே உனக்குச்சமானுளாயிருக்கிறபு த்திராளேயுண்டுபண்ணித் தர்மமார்க்கமாகப் பூமியைப் பரிபாலனம்பண்ணக்கடவாய் புருஷோத்தமரான ஸ்ரீஹ ரியையும் யக்கியங்களாலே யஜிக்கக்கடவாய்.

வாராய்ராஜனே, பிரஜாசம்ரக்ஷணத்தினுலேயேஎன் பொருட்டுப் பரமமான சிசுருஷையானது பண்ணப்ப ட்டதாகவிருக்கும் பிரஜைகளை ரக்ஷிக்கின்ற உனக்கு பக வானுன ரிஷிகேசரும் பிரசன்னராகவிருப்பார், யக்கிய மூர்த்தியாகியும் ஸனுதனராகியுமிருக்கிறபகவானுனவர் யாதொருபேர்களுக்குச் சந்துருஷ்டராகவில்லையோ அ வர்களுடையசிரமமானது வியர்த்தமானதாயிருக்குமெ ன்றுசொல்லுகின்ற பிர்மதேவரைப்பார்த்துச் சுவாயம் புமனுவானவர் வாரீர் பாபநாசரே, உம்முடைய ஆக்கி னையை நான்பரிபாலனம்பண்ணப்போகிறேன் பிரஜை களுக்கும் எனக்கும் இருக்கத்தக்க ஸ்தானத்தைக்காண் பித்து அனுக்ஞைபண்ணக்கடவீர்,

சகலபிராணிகளுக்கும் இருப்பிடமான பூமியானது பிரளயமகாஜலத்திலே முழுகியிருக்கிறதன்றோ, இந்த ப்பூதேவியினுடைய வுத்தாரணத்திலே யெத்தனமான துபண்ணவேண்டியதென்று சொல்லுகின்ற சுவாயம்பு மனுவினுடைய வார்த்தையைக்கேட்டுப் பிர்மாவானவ ர்பூர்வம் பானம்பண்ணப்பட்டிருந்தபூமி திரும்பவும்அ காரணமாக முழுகியிருக்கின்ற பூமியைப்பார்த்து இந்த பூமியைஎந்தப்பிரகாரம் உத்தாரணம் பண்ணப்போகி றேனென்று வெகுகாலம்சிந்தித்து ஈஸ்வரனுலேசிருஷ் டிகாரியத்திலே ஆக்கியாபிக்கப்பட்டிருக்கிற நம்மாலே இப்போது இந்தவிஷயத்திலே என்னசெய்யத் தக்கது நான்யாதொருபகவானுடைய இருதயத்தில்நின்றும் உ ண்டானேனே அந்த ஈஸ்வரனுனவன் என்னுடைய ம னோரதத்தை பூர்த்திபண்ணக் கடவரென்று தியானம்ப ண்ணுகின்ற பிர்மாவினுடைய நாசிகாரந்திரத்தில் நின் றும் அந்தக்ஷணத்திலே அங்குஷ்டப்பிரமாணமான ஒ ருவராகச் சிசுவானதுவெளியிலேபுறப்பட்டு ஒருக்ஷண காலத்திலே மகாதேசப்பிரமாணமாக விர்த்தியையடை ந்தது இப்படிமிகவும் ஆச்சரியகரமாயிருக்கிற வராகரு பத்தை அந்தப்பிர்மாவானவர் மரிசி-பிரஜாபதி-முதலா னபுத்திராளோடேயும் ஜனற்குமாரர்முதலானயோகீஸ் வராளோடேயும் மனுவோடேயும் கூடயிருந்து பார்த் து இதென்னஆச்சரியம் வராகமென்கிற வியாஜத்தையு டைய இந்தப்பிராணியானது நம்முடைய நாசிகையில் நின்றும் உண்டாய் அங்குஷ்டமுனைப் பிரமாணமாகக் காணப்பட்டு ஒருக்ஷணத்திலே பெரியபர்வதசிகரத்திற் குச்சமானமாக ஆய்விட்டது.

இந்தவராகமானது யக்கியமூர்த்தியானஅந்தப்பகவா ன்தம்முடைய நிஜரூபத்தைமறைத்து என்னுடைய ம னதைத்துக்கிப்பிக்க ஆவிர்ப்பவித்தாரோவென்று இந் தப்பிரகாரம் அந்தப்பிர்மாவானவர் சிந்தித்துக்கொண் டிருக்கையில் பர்வதத்துக்குச்சமானமாகியும் யக்கியமூ ர்த்தியாகியுமிருக்கிற அந்தப்பகவானுனவர் கர்ச்சித்தார் அந்தக் கர்ச்சனையினுலே பிர்மாவையும் ஜனத்குமாரர் முதலானயோகிகளும் ஜனலோகம்-தபோலோகம்-சத் தியலோகம் இதுகளிலே வாசம்பண்ணுகின்ற மகாரிஷி களானபேர்கள் மாயாமயமான அந்தவராகத்தைபூர்வம் பகவானென்றுநிச்சயமில்லாமல் உண்டாயிருந்ததங்களு டைய துக்கத்தைப் போக்கடியாநின்ற அந்த கர்ச்சனத் தைக்கேட்டு மிகவும் சந்துருஷ்டாளாய் பவித்திரங்களா ன இருக்குவேதம், யசுர்வேதம், சாமவேதங்களாலே ஸ்தோத்திரம்பண்ணினுர்கள் வேதங்களாலே ஸ்தோத் திரம்பண்ணப்படுகின்ற அந்தப் பகவானுனவர் தம்மு டையகுணங்களைச் சொல்லுகின்றதைக்கேட்டுப் பிர்மா முதலானதேவர்களுக்கு மங்களத்தின்பொருட்டு திரும் பவும் கர்ச்சித்துக் கஜேந்திரத்தினுடைய லீலைபோன்ற லீலையையுடையவராய் உயரவெடுக்கப்பட்டவாலையுடை யவராகி ஆகாசத்திலேசஞ்சரியாநின்றும் திடகாத்திரரா கியும் பிடரிமயிர்களையுதறி தீக்ஷணங்களான ரோமங்க ளையுடைய தொக்கை யுடையவராகியும் குளம்பினுலே அடிக்கப்பட்ட மேகங்களை யுடையவராகியும் மிகவும் வெளுத்திருக்கிற கோரைப் பற்களை யுடையவ ராகிப் பொறிபோலொத்த நேத்திரங்களுடன் பூமியைஉத்தா ரணம்பண்ணுகின்ற அந்தவராகமூர்த்தியானவர் தாம்ய க்கியமூர்த்தியாயிருந்தாலும் பசுஜாதியைப்போல் கிரா ணேந்திரியத்தினுலே பூமியினுடைய மார்க்கத்தை முக ர்ந்து மகாகோரமான கோரப்பற்களையுடையவராய் கிரு பாபூரணங்களான நேத்திரங்களாலே ஸ்தோத்திரம் ப ண்ணுகின்ற ரிஷிகளைப் பார்த்துக்கொண்டு ஜலத்திலே பிரவேசித்தார் வச்சிரமயமானபர்வதம்போன்ற சரீரத் தையுடைத்தான பகவானுடைய பிரவேசத்தினுலே உ ண்டாகாநின்ற வேகத்தினுல் பிறக்கப்பட்ட குட்சியை யுடையவனுகி மிகவும் சபதித்தும் வெகுதூரம் பரவித் நீர்க்கங்களாகியுமிருக்கிற கைகளோடுகூடி மிகவுந் துக் காக்கிரந்தமாகியுமிருக்கிற அலைகளாகிற சமுத்திரமான து எக்கியேசுவரனை நோக்கி என்னைப் பிளந்துபோடாம ல் ரட்சிக்கக்கடவீரென்று கூப்பிட்டாற்போலிருந்தது அப்போதுபகவானுனவர் நாவிதன் கத்திபோல் மகாதீ க்ஷணங்களான குளம்புகளாலே கரையில்லாத அந்தஜ லத்தைப்பிளந்து உள்ளேபிரவேசித்து பிரளயசமையத் தில் சயனித்துக்கொள்ளவேண்டுமென்று சகலஜீவாளு க்கும் ஆதாரமான பூமியைத் தம்முடைய குட்சியிடத்த ரித்திருந்த பூமியைப் பாதாளத்திலேகண்டு தம்முடைய

கோரைப்பல்லினாலே பூமியை யெடுத்துப் பாதாளத்தில்நின்றும் வெளியிலேபுறப்பட்டுவிளங்கினர் அந்தஜலத்திலே அப்போது கதையை யெடுத்துக்கொண்டு எதிராகவந்து தகையுகின்றஆதிதயித்தியனுகியும் சகிக்கக்கூடாதபராக்கிரமத்தை யுடையவனுகியுமிருக்கிற இரணியாக்ஷனேச்சக்கரம்போல்ஜொலித்துத் தீவரமானகோபத்தையுடைய அந்தப் பகவானுனவர் லீலையாகச் சிம்பமானது யானையைச் சங்கரிப்பதுபோலும் கஜேந்திரமானது மலையடிபூமியை லீலையாகப்பிளந்து கையிரிகாதிதாதுக்களாலே சிவந்துபோன கண்டஸ்தளம், முகம்இதுகளேயுடையதுபோல் அந்தஅசுரனேச்சங்கரித்து அவனுடைய இரத்தமயமாகிய சேற்றினலே பூசப்பட்டும் நீலவர்னமான திருமேனியும் வெளுத்ததந்தத்தினுடையநுனியினலே லீலையாய்ப் பூமியை உத்தாரணம் பண்ணின ஈசனேப்பார்த்துப் பிர்மாமுதலான சமஸ்தமான ரிஷிகளும் அஞ்சலிபத்தம் பண்ணிக்கொண்டு வேதவாக்கியங்களுக்குச் சமானங்களான ஸ்தோத்திரங்களாலே ஸ்துதிபண்ணினர்கள்.

வாரீர் தயாநிதியே, ஒருவராலும் செயிக்கப்படாதவராகியும் யக்கியங்களாலே ஆராதிக்கப்படுகிறவராகியும், வேதஸ்வரூபமான திருமேனியை உதறுகின்றவராகியும் ரோமங்களுடைய பள்ளங்களிலே சமஸ்த சமுத்திரங்களும் அடங்கிப் போகும்படியான திருமேனியை யுடைய வராகரூபியான உமக்குப் பிரணமம் பண்ணுகிறேரும்.

வாரீர் தேவதேவனே, தேவரீருடைய இந்த ரூபமானது பாவசித்தர்களாயிருக்கிறபேர்களுக்குத் தரிசனமாகாதாகியும் தொக்கிலே காயத்திரிமுதலான சந்தசுகளும் ரோமங்களிலேதர்ப்பைகளும் நேத்திரத்திலேஆச்சியமும் நான்குதிருவடிகளில் அத்வரியூஹோதா உத்காதா பிர்மா இவர்களுடையகருமங்களுமிருக்கிற தேவரீரதுமுகத்தினுடைய நுனியில் சறுக்குஎன்கிற யக்கியபாத்திரமும் நாசிகைகளில் சுறுவம்என்கிறயக்கியபாத்திரமும் உதரத்திலே இடையென்கிற பட்சணபாத்திரமும் சமசமஎன்கிற சோமபாத்திரங்களும்காதுகளுடைய ரந்தரங்களிலே பிராசித்திரமென்னப்பட்ட பிர்மபாகபாத்திரமானது முகத்திலேயும் கிரகம்என்னப்பட்டபாத்திரங்கள் முகத்துக்குள்ளேயும் அக்கினிஸ்தோத்திரமானது உம்முடைய பட்சணமாகவும் ஆகாநிற்கிறது தீக்ஷணியஇஷ்டியானது தேவரீருடைய அவதாரமாகவும் ஆச்சியமாகிற அவிசை யுடையதுகளான உபசது என்னப்பட்ட மூன்று இஷ்டிகளும் உம்முடைய கழுத்தாகவும், பிராயணியம், உதயமனியம் என்னப்பட்ட இஷ்டிகள் உம்முடைய கோரைப்பல்லுகளாகவும் பிரவர்க்கியமானது உம்முடைய நாக்காகவும் சப்பியம், அவசக்தியம் என்னப்பட்ட அக்கினிகள் தேவரீருடையசிரசாகவும், செங்கற்களால் பண்ணப்படாநின்ற யக்கியவேதிகைகள் தேவரீருடைய பிராணன்களாகவும்சோமரசமானது ரேதசுஆகவும், பிராதசவன் முதலானதுகள் பாலியாதி அவஸ்தைகளாகவும், அக்கினிஷ்டோமம், அத்தியக்கினிஷ்டோமம், உத்தியமஷோடசிவாஜபேயம், அதிராத்திரம், அப்தோரியாமம் என்னப்பட்ட ஏழுயக்கியங்களும் தேவரீருடைய தொக்குமாமிசம்முதலான சப்ததாதுக்களாகவும், துவாதசாகம்முதலானசமஸ்தயக்கியங்களும் தேவரீருடைய சரீர சந்திகளாகவும், அனுஷ்டானமாகிற பெந்தனத்தையுடையவரானதேவரீர் சமஸ்தங்களான சோமமில்லாத எக்கிய ஸ்வரூபராகவும்சோமங்களேயுடையதுகளானகிருதுஸ்வரூபராகவுமாகாநிற்கிறீர் சமஸ்தமான மந்திரங்கள் தேவதைகள்திரவியங்கள் இதுகளுடைய ஸ்வரூபராகவும் சமஸ்தகிறுதுஸ்வரூபராகியும் கர்மஸ்வரூபராகியுமிருக்கிற தேவரீர்பொருட்டுப் பிரணமம் வைராக்கியத்துடனே கூடிக்கொண்டும் நிஷகாமமாகச்செய்யப்பட்ட கர்மபலமாகியுமிருக்கிற சித்தசுத்தியினலே உண்டாகாநின்ற பக்தியினலே சாக்ஷாத்காரமாக அறியப்படாநின்றகியானஸ்வரூபராகியும் கியானப்பிரதராகியும் ஆசாரிய ரூபியாகியுமிருக்கிற தேவரீர்பொருட்டுப் பிரணமம்

வாரீர் பகவானே, தேவரீர் கோரைப்பல்லி னுனியினலே தரிக்கப்பட்டும் பர்வதங்களுடனே கூடிக்கொண்டுமிருக்கிற இந்தப்பூமியானது ஜலத்தினின்றும் வெளிப்படுவது மகாகஜேந்திரத்தினுடைய தந்தத்தினலேசேற்றேடே போகப்படுகிற தாமரைபோலும் குலாசலத்தினுடைய சிகரத்தினலே தரிக்கப்படுகின்ற மகத்தாகியமேகத்தைப்போலும் விளங்குகிற தேவரீருடையபத்தினியாகியும் சகன்மாதாவாயுமிருக்கிற இந்தப் பூமியை யக்கியஜீவாளான பிராமணுள் மந்திரத்தினலே அக்கினியை யரணியில் வைத்திருக்கிறுற்போல் ஸ்தாபித்து அத்தியந்தம் ஆச்சரியகரமான இந்தப்பிரபஞ்சத்தைஉம்முடைய சங்கற்பத்தினலே சிருஷடிபண்ணுகிறதேவரீரிடத்திலே இந்தப்பூமியினுடைய உத்தாரணமானது ஆச்சரியகரமன்று வேதஸ்வரூபமாயிருக்கின்ற இந்தச்சரீரத்தை உதறுகின்ற தேவரீருடைய பிடரிமயிர்களின்நுனிகளாலுண்டாகின்ற சலபிந்துக்களாலே சனலோக தபலோக சத்தியலோகங்களிலே வாசம்பண்ணுகின்றநாங்கள் மிகவும் பவித்திராளாகப் பண்ணப்பட்டோம் தேவரீருடைய லீலைகளின்கரையை அறியவேணுமென்றுஇச்சிக்கிறபுருஷன் மிகவும் விவேகமில்லாதவனுகிறு

வாரீர் பகவானே, சமஸ்தபிரபஞ்சமும் உம்முடைய யோகமாய்கையினுடைய யோகசக்தியினலே மிகவும்

மோகிக்கும்படிசெய்கிறதேவரீர் மங்களத்தைப்பண்ணக்கடவீரென்று பிர்மாதிகளானரிஷீசுவரராளாலேஸ்தோத்திரம் பண்ணப்படுகிற அந்தப் பகவானானவர் தம்முடையகுளம்பினாலே பாதாளத்தில் நின்றும் லீலையாய்ப் பூமியை யுத்தாரணம்பண்ணி அந்த ஜலத்தின்பேரில் வைத்துப்போட்டு அந்தர்த்தானமானார்.

வாரீர் விதுரரே, இந்தப்பிரகாரம் பூமியை உத்தாரணம்பண்ணுகின்றவராகியும் சம்சாரதுக்கத்தை யபகரிக்கிறவராகியும் சிலாக்கியங்களாகியும் மாயையினாலேபண்ணப்பட்ட சரித்திரங்களையுடையவராகியும் பகவானாகியுமிருக்கிற ஸ்ரீஹரியினுடைய கதையை யாதொரு புருஷனானவன் பக்தியினாலேகேட்கிறானோ கேள்விசெயவிக்கிறானோ அந்தப்புருஷனுக்குசீக்கிரமாகப்பிரசன்னராய்ச் சகலமான அபிஷ்டங்களைக் கொடுத்துப்புருஷார்த்தங்களுக்குள்ளே சாரத்தையுடைய மோட்சத்தை அடைகுவன்.

## ௰௪-வது, அத்தியாயம்,

கலிவிருத்தம்,

கதியிலாத்திதி தேவிகாமத்தினாற்
சதியதாய்நின்றுஞ் சந்தியாகாலத்தில்
முதுமைகாசிபர் முன்னிற்காப்போற்பத்தி
அதினதுகா ரணமுமறைகுவாம்.

திதிதேவிக்குக் காமத்தினாலேசந்தியாகாலத்திலேகாசிபரிடத்தில்நின்றும் கெர்ப்போற்பத்தியும் அதினுடையவதத்திலே காரணமுஞ்சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகருடைய வாக்கியம்.

வாராய்மகாராஜனே, மைத்திரேய மகாரிஷியினாலே வராகரூபியான ஸ்ரீஹரியினுடைய கதையைக் கேட்டுத் திருப்தியில்லாதவராய் விதுரரானவர் அஞ்சலி பத்தம் பண்ணிக்கொண்டு திரும்பவும் பிரஸ்னம் பண்ணினார்.

வாரீர் முனிசிரேஷ்டரே, யக்கியவராகரூபியாலே பூமியானது உத்தாரணம் பண்ணப்பட்டதென்றும், இரணியாக்ஷதனானவன்சங்கரிக்கப்பட்டானென்றும்தேவரீராலேகேட்கப்பட்டது அந்தப் பகவானுக்கும், தயித்தியராஜனான இரணியாக்ஷதனுக்கும் எந்தஏதுவினாலே யுத்தமுண்டாயிற்று அதையும் அந்த இரணியாக்ஷதனுடைய சென்மத்தையும் அடியேனுக்கு விஸ்தாரமாகச்சொல்லவேண்டுமென்று பிரார்த்திக்கின்றவிதுரரைப் பார்த்து மைத்திரேய மஹாரிஷியானவர் வாரீர் விதுரரே, உத்தானபாதனுடைய புத்திரனான துருவனானவன் நாரதமகாரிஷியினாலே சொல்லப்பட்ட ஸ்ரீஹரியினுடையகதையைக்கேட்ட மகத்துவத்தினால் மிருத்தியுவினுடையசிரசிலே பாதத்தை வைத்துக்கொண்டே விமானரூடனாய் ஸ்ரீஹரியினுடைய பரமபதத்தை யடைந்தான் அப்படிப்பட்டகதையைப் பிரஸ்னம்பண்ணுகிறீர் பூர்வத்திலே தேவதேவரான பிர்மாவினாலே தேவதைகளுக்குச்சொன்ன இதிகாசமானது என்னாலேயுங் கேட்கப்பட்டிருக்கிறது அதைச்சொல்லுகிறேன் கேளும் தக்ஷப்பிரஜாபதியினுடைய புத்திரியான திதிதேவியானவள் மன்மதனாலே பீடிக்கப்பட்டவளாய்ச் சந்தியாகாலத்திலே சூரியன் அஸ்தமானத்தை யடையும்போது அக்கினியை நாக்காகவுடையவராகியும் யக்கியங்களுக்குப்பதியாகியுமிருக்கிற புருஷோத்தமனைக் குறித்துப் பாலினாலேஹோமம்பண்ணி அக்கினிஹோத்திரசாலையிலே சித்தசமாதானத்தை யுடையவராகியிருக்கிற பதியைப் பிரார்த்திக்கிறான்.

வாரீர் வித்துவானே, மன்மதனானவன் உம்மிடநிமித்தமாகத் தீனையானஎன்னை வாழைமரத்தை மகாகஜமானது பீடிப்பதுபோல்பீடிக்கிறான் ஆகையினாலே என்னிடத்திலே இந்தவேளை நீர்நன்றாக அனுக்கிரகிக்கவேண்டும் பெண்களிடத்திலே வாஞ்சையையுடைய எங்கள்பிதாவாகிய தக்ஷப்பிரஜாபதியானவர் எங்களைப் பார்த்து வாருங்கள் புத்திரிகளே நீங்கள்என்வார்த்தையைக்கேட்கக்கடவீர்களென்று எங்களைப்பார்த்துத் தனித்தனியேகேட்டுத்தன்னுடையபெண்களுக்குள்ளேயாதொருபேர்கள் தம்முடைய அபிப்பிராயத்தை யறிந்திருந்தார்களோ அந்தப்பதின்மூன்றுபெண்களையும் உமக்குக்கொடுத்தாராகையினாலே என்னுடையமனோரதத்தைப் பரிபூரணமாகப்பண்ணி உமதுநிரதிசய மகிமையை ஆசிரயித்து துக்கித சனனமானது வியர்த்தமாகப்போகாதன்றோவென்று இந்தப்பிரகாரம் வெகு வார்த்தைகளைச்சொல்லுகின்றதீனையாயிருக்கிறஅந்தப்பத்தினியைப்பார்த்து காசிபப்பிரஜாபதியானவர் சமாதானமாகப்பிரதியுக்தாரஞ்சொன்னார்.

வாராய் ஸ்திரீயே, நீயேன்சோகிக்கிறாய் உன்னுடையஇஷ்டத்தை நான்பூர்ணமாகப்பண்ணுகிறேன் புருஷனுக்குத் தர்மார்த்தகாம சித்தியானது உண்டாக்கிறஸ்திரீயினுடைய மனோரதத்தை எந்தப்புருஷன்தான் சபலமாகப்பண்ணான் சமஸ்தாசிரமங்களையும் அன்னதானமுதல்னாலே திருப்திசெய்து அந்தப்பிரபாவத்தினால் தானும்வியசனமாகிற சமுத்திரத்தை யெளிதாகத்தாண்டுகிறான்.

வாராய்மானினி, சிரேயசைக்கோருகின்ற புருஷனுக்கு ஸ்திரீயைத் தன்தேகத்தினுடைய பாதியாகவேதங்கள்சொல்லுகிறதுகள் ஸ்திரீயினிடத்திலே இகபரலோகசாதனமான கர்மபாரத்தை வைத்துப்போட்டுவியசனமில்லாதவனாய்ச் சம்சாரத்தில்நின்றும், விமுக்தனாய்இதரமானஆசிரமங்களாலே சயிக்கக்கூடாதுகளான இந்திரியங்களாகிற சத்துருக்களைத் துர்க்கத்தை ஆசிரயித்

திருக்கிற ராஜாக்களைப்போல லீலையாகச்சயிக்கிறேம் அப்படிப்பட்ட அனேக உபகாரங்களைப் பண்ணுகின்ற உனக்கு எனதுபுருஷாயுசு உபகாரஞ்செய்தாலும் அதற்கிணையாகமாட்டாது ஆனாலும் புத்திரோற்பத்தியின் பொருட்டு உண்டாகானின்ற உன்னுடைய மனோரதத்தைப் பரிபூரணமாகப் பண்ணுகிறேன், என்னை நிந்தியாமல் ஒருமுகூர்த்தகாலமாத்திரம் சகித்துக்கொண்டிரு இந்தச்சமயத்தில் பூதபதியான சிவனுடையகிங்கரான பூதங்கள் சஞ்சரிக்கிறகாலம் இந்தச்சந்தியாகாலத்திலே பகவானுகியருத்திரனைவன் ரிஷபாரூடனைப் பிரமதகணங்களாலே சூழப்பட்டு மசானதூளியினாலே புகைசூழ்ந்தவர்ணமாகி நாலுபாகமும் விரித்தசடாகலாபத்தை யுடையவராகியும், பஸ்மத்தினாலே பூசப்பட்டு ரசிதம்போலே வெளுத்துமிருக்கிற தேகத்தையுடையவராய் உனக்குமைத்துனனுகியும், சோமன்-சூரியன்-அக்கினிரூபங்களாயிருக்கிற நேத்திரங்களையுடையருத்திரனுக்குச் சுவசனமென்றும்,பரஜனமென்றும்,ஆப்தனென்றும், நிந்திதனென்றும் இல்லை சுவதந்திரா சாரத்தினாலே நிர்மாலியம்போலே தூரவிடப்படும்,அவராலே அனுபவிக்கப்பட்ட போகத்தையுடையதாகியுமிருக்கிற மாயாவிபூதியை அவருடைய மகாப்பிரசாதமென்றுநாம் விரதங்களாலேகோருகிறேம், அக்கியானஆவரணத்தைப் போக்கடிக்கவேணுமென்று இச்சையை யுடையவர்களான கியானிகள் விஷயங்களிலே-ஆசக்தியில்லாமலிருக்கிற அந்தருத்திரனுடையசரித்திரத்தைக்கீர்த்திக்கிறுர்கள் சத்புருஷாளுக்குக் கதியான ருத்திரனைவர் தமக்குச் சமனும்அதிகனுமில்லாதவராயிருந்தாலும்தாம் பிஜாசசரியையை ஆசரிக்கிறுர்.

நாய்களுக்குப்பக்ஷிபமான இந்தச்சரீரத்தையே ஆத்துமாவென்கிறபுத்தியினாலே வஸ்திரம்-மாலைகள்-ஆபரணங்கள்-திவ்வியகந்தங்கள் இதுகளாலே கொண்டாடப்பட்டிருக்கிற அக்கியானிகள் சர்வக்கியராயும் தன்னுத்துமாவிலேயே ரமித்துக்கொண்டு மிருக்கிற ருத்திரனுடைய லோகசிக்ஷாரூபமான ஆசாரத்தைப்பரியாசம்பண்ணுகிறுர்கள். பிர்மாமுதலானபேர்கள் ருத்திரனாலே பண்ணப்பட்ட தங்களுடைய அதிகாரங்களையும் வர்ணுசிரம ஆசார மரியாதைகளையும் பரிபாலனம் பண்ணிக்கொண்டிருக்கிறுர்கள். இந்தப்பிரபஞ்சமானது ருத்திரனாலே சிருஷ்டிக்கப்பட்ட மாயையானது அவருடைய ஆக்கினையின்படி செய்துகொண்டிருக்கிறது, அப்படிப்பட்ட பரமேஸ்வரனைச் சூழ்ந்திருக்கிற பிசாசிகைசஞ்சரிக்கிற காலமென்றுசொல்லுகிற பர்த்தாவான காசிபரிஷியினுடைய வார்த்தையைக்கேட்டு மனதினாலே அலைக்கப்பட்ட இந்திரியங்களை யுடையவளான - அந்தத் திதிதேவியானவள் வேசியாஸ்திரீயானவள்போல் லச்சையில்லாதவளாய் அந்தப் பிரம்மரிஷியினுடைய வஸ்திரத்தைப் பிடித்துக்கொண்டா ளிப்படி நிஷிதகர்மத்திலே புத்தியையுடைய தன்பாரியையின் நிற்பந்தத்தைய றிந்து ஈசுவரன் பொருட்டுப் பிரணமம்பண்ணிப் பிற்பாடு ரகஸ்யத்தலத்திலே அவளோடேகூட பிரவேசித்துஅவளுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்து பிற்பாடு பாதப்பிரக்ஷாளனம் ஸ்நானம்சுத்தாசமனங்களைப்பண்ணிப் பிராணுயாமஞ்செய்து வாக்குநியமத்தை யுடையவராய் நிர்மலமாகியும் சனுதனமாகியுமிருக்கிற பிர்மத்தை பிரணவபூர்வமாகத் தியானம்பண்ணிக்கொண்டிருந்தார்.

வாரீர்விதுரரே, பிறகு திதிதேவியானவள்அந்தநிஷித்தகர்மதோஷத்தினாலே மிகவும் லச்சையையுடையவளாய்ப் பிர்மரிஷியான பர்த்தாவையடைந்து தலையை வணங்கிக்கொண்டு ஒருவார்த்தைசொன்னுள்.

வாரீர் பிரமரிஷியே, என்னுடையஇந்தக்கர்ப்பத்தை பூதபதியான ருத்திரனைவர் இங்கிசியாமலிருக்கவேண்டும், அவருக்கு மகா அபராதத்தைப்பண்ணினேன் அவர் பூதங்களுக்குபிரபுவாயும் துக்கத்தைப்போக்கடியாநின்றும் மகாதேவராகியும் ஒருவராலேயும் அதிக்கிரமிக்கக்கூடாதவராகியும் கோரப்பட்ட பலப்பிரதராகியும் நிஷ்கர்மாளுக்கு மங்கள சுவரூபராகியும், சுபாவமாக வொருவரையும் பீடியாதவராகியும், துஷ்டா ளிடத்திலே தெண்டனையையுடையவராகியும், சங்காரகாலத்திலே கோபத்தையுடையவராகியும்,பகவானுகியும், மகத்தான அனுக்கிரகத்தையுடையவராகியும் எனதுதங்கையினுடைய பர்த்தாவாகியுமிருக்கிற அந்த ருத்திரனைவர் பிரசன்னராய் நிர்த்தயனுன வேடனுக்கும், தயைபண்ணத்தக்கவர்களா யிருக்கிற ஸ்திரீகளுடைய சுபாவத்தை நன்ருய்அறிந்திருக்கிற அந்தஈசுவரன்பொருட்டு நமஸ்கரிக்கிறேனென்றுசொல்லுகிற பாரியையைநோக்கிச் சந்தியா காலத்திலே செய்யத்தக்கதான நியமத்தை நிறைவேற்றுநின்ற அந்தக்காசிபப் பிரஜாபதியானவர்ஒருவார்த்தை சொன்னுர்.

வாராய்துஷ்டையே உனக்குச் சித்தசுத்தி இல்லாமல் என்னுடையஆக்கினையை அதிக்கிரமித்துச் சந்தியாகாலதோஷத்தில் அடைந்தகர்ப்பம் மிகவும்துஷ்டாளான இரண்டுபிள்ளைகள்பிறக்கப்போகிறுர்கள் அந்தபுத்திராதமாள் லோகபாலாளோடே கூடிக்கொண்டிருக்கிற மூன்றுலோகங்களையும் அடிக்கடி உபத்திரவம்பண்ணப்போகிறுர்கள். தீனுளாகியும் நிரபராதிகளாகியு மிருக்கிற ஸ்திரீகளையும்,புருஷர்களையும், நிக்கிரகிக்கையில் அதனாலே மகானுபாவாளான ரிஷிகள் கோபத்தையடையுகையில் விசுவேசுவரராகியும் சகலலோக சரணியராகியுமிருக்கிற பகவானுனவர் மிகவும்கோபத்தையடைந்த

வராய் அவதாரம்பண்ணி வச்சிரபாணியான இந்திரனானவன் பர்வதங்களைக் கண்டிப்பதுபோல் அவர்களிருவரையும் சங்கரிக்கப்போகிறார். என்றுசொல்லுகின்ற பர்த்தாவைப்பார்த்துத் திதிதேவியானவள் வாரீர் பிர்மரிஷியே என்னுடையபுத்திராளுக்குச்சக்கிரபாணியாயும் கம்பீரமாகியுமிருக்கின்ற பாகுக்களுடையவரான ஸ்ரீமந்நாராயணராலே வதத்தைக் கோருகிறேன். மற்றப்பிராமணரிடத்தில் நின்றும் வதமானது உண்டாகவேண்டாம் பிராமணசாபத்தினாலே தகிக்கப் பட்டவனுக்கும், பிராணிகளுக்குப் பயத்தைக்கொடுத்துக்கொண்டிருக்கிறவனுக்கும் நரகத்திலேயிருக்கிறபிராணிகளும் அனுக்கிரகம்பண்ணமாட்டார்கள். அந்தப்புருஷன் எந்த ஜன்மத்தையடைகிறானோ அந்தஜாதிப்பிராணிகளும், அவனுக்கு கிருபையைப்பண்ணமாட்டார்களென்றுபிரார்த்திக்கின்ற பாரியையைப்பார்த்துக் காசிபப்பிரஜாபதியானவர் திதிதேவியைப்பார்த்துச் சொல்லுகின்றார்.

வாராய்திதிதேவியே, அப்படிப்பட்ட உன்னுடைய இரண்டு புத்திராளுக்குள்ளே ஒருபுத்திரனுக்கு லோகோத்தமனாய் பகவானான ஸ்ரீ ஹரியிடத்திலும் ருத்திரனிடத்திலும் என்னிடத்திலும் மிகவும்பக்தியையுடையவனாய் ஒருபுத்திரனானவன் சத்புருஷாளுக்குசிலாக்கியனாக உண்டாகப்போகிறான். அந்தப் பவுத்திரனுடைய பரிசுத்தமான யசசைப்பகவானுடைய யசசோடேகூட கானம்பண்ணப்போகிறார்கள். கட்டைமாற்றானபொன்னானது அக்கினிப்புடமுதலான உபாயங்களாலேசோதிக்கப்படுவதுபோல் சத்புருஷாளான பேர்கள் உனது பவுத்திரனுடைய சுபாவத்தை அனுவர்த்திகைக்கு நீர்வயிரமுதலான யோகங்களாலே சித்தத்தை சோதிக்கப் போகிறார்கள். சர்வக்கியராகியும், சர்வாந்திரியாமியாகியும் சாட்சியாகியுமிருக்கிற பகவானானவர் உன் பவுத்திரனுக்குத் தானேசத்தியமென்கிற கியானத்தினாலே பிரசன்னரானவர் அளவில்லாத கியானத்தை யுடையவனாகியும் மகாபிரபாவத்தையுடையவனாகியும், மகத்துக்களுடையமத்தியத்திலே மிகவும்மகாகியானனாகியும்மகாபாகவதனாகியுமிருக்கிற அந்தப்பவுத்திரனானவன் மிகவும் விர்த்தியடைகின்ற பக்தியினாலே பரிசோதிக்கப்பட்டுநிர்மலமானசித்தத்திலே ஸ்ரீஹரியைஸ்தாபித்து தேகாதிகளிலே அபிமானத்தைவிட்டுவிடப்போகிறான். ஆலஸ்யமில்லாதவனாகியும், நல்லசுபாவத்தை யுடையவனாகியும், தைரியமுதலான குணங்களுக்கு உற்பத்திபூமியாகியும், பிறத்தியாருடையசம்பத்தினாலேசந்துஷ்டராகியும் பிறத்தியார் வியசனப்பட்டார்களேயாகில் மிகவும் வியசனத்தை யுடையவனாகியும், சத்துருவே யில்லாதவனாகியும், நட்சத்திரராஜனான சந்திரனானவன் கிரீஷ்மகாலத்திலே உண்டாகாநின்ற தாபத்தைப் போக்கடிக்கிறாற்போல் ஜகத்தினுடைய சோகத்தைப் போக்கடிக்கிறவனாக உண்டாகி உள்ளும்வெளியும் நிர்மலராகியும், கமலம்போலொத்த நேத்திரத்தையுடையவராகியும் தம்முடைய பக்தாளுடைய இச்சானுகுணமாகக் கிரகிக்கப்பட்ட திவ்வியமங்கள விக்கிரகரூபத்தை யுடையவராகியும், ஸ்ரீமகா லட்சுமியாகிற ஸ்திரீக்கு பூஷணராகியும், மிகவும் பிரகாசித்துக்கொண் டிருக்கிற மகர குண்டலங்களாலே அலங்கரிக்கப்பட்ட திருமுக மண்டலத்தை யுடையவராகியு மிருக்கிற ஸ்ரீ ஹரியை உள்ளிலேயும் வெளியிலேயும், பார்த்துக்கொண் டிருக்கப் போகிறானென்று சொன்னதைக்கேட்டுத் திதிதேவியானவள் தன்னுடையபவுத்திரனைமகாபாகவதனாகவும், தன்னுடையபுத்திராளுக்குஸ்ரீகிருஷ்ணரிடத்தில்நின்றும்வதத்தையுங்கேட்டு அந்த ஸ்ரீ ஹரியுடனேகூட யுத்தஞ்செய்கிற புத்திராளுக்கு மரணத்திலே மகத்தானகீர்த்தியும்உத்தமகதியுமுண்டாகுமென்று மிகவும் உச்சாகத்தையுடையவளுமானாள்.

## ௰௫ வது அத்தியாயம்,

கலிவிருத்தம்.

அண்டுசூரியா ளானதேவாளராலே
கண்டுகேட்கப்பட்ட கண்ணன்கான்முளை
மண்டுமாவிஷ்ணுமாபாரிஷாதாட்கு
ஒண்டுபிராமண சாபமுரைத்ததே.

கியானசூரியாளான தேவாளராலே கேட்கப்பட்டவராய்ப் பிர்மாவானவர் ஸ்ரீவைகுண்டத்திலே ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய பாரிஷாதாளுக்கு பிராமணசாபம் முதலானதையும் அதற்குக்காரணத்தையும்சொல்லுகிறாரென்று சொல்லப்படுகின்றது,

மைத்திரேய மகாரிஷியினுடைய
வாக்கியம்,

வாரீர்விதுரரே, அந்தத் திதிதேவியானவள் தன்னுடைய புத்திராளாலே பண்ணப்படப்போகிறதான தேவாளுடைய உபத்திரவத்தில்நின்றும்சங்கையையுடையவளாய்ப் பிறத்தியாளுடையதேஜசை நாசம்பண்ணுகின்றும் காசிபப்பிரஜாபதி சம்பந்தமாகியுமிருக்கிறஅந்தவீரியத்தை நூறுவருஷம்தரித்தாள் அந்தக்கர்ப்பதேஜசினாலே சமஸ்தலோகமும் சூரியாதிபிரகாசமில்லாமல்அந்தகாரம் மூடியிருக்கிறதை தேவர்கள்விசுவகர்த்தாவான பிர்மாவுக்குச் சொன்னார்கள்,

வாரீர்பிரபுவே, யாதொருகாரணத்தினாலே நாங்கள் மிகவும் பயந்திருக்கிறோமோ இதை தேவரீரே அறிந்திருக்கிறீர், தேவரீர் ஸ்தூலங்களாகியும் சூட்சுமங்களாகியு மிருக்கிற பிராணிகளுடைய அபிப்பிராயத்தை யறிந்து கியானத்தையே பலமாகவுடையவராகியும் தன்சங

கல்பத்தால் இந்த பிர்மதேகத்தை யடைந்திராநின்றும் இரகிக்கப்பட்ட ரஜோகுணத்தை யுடையவராகியும் பிரபஞ்சத்துக்குக் காரணராகியு மிருக்கிற தேவரீரின்பெருட்டுப் பிரணாமம்பண்ணுகிறோம். சேதனுசேதனரூபமான பிரபஞ்சத்துக்குக்காரணராகியும் காரியகாரணசுவரூபராகியும், காரிய காரணங்களைக்காட்டிலும், பரராகியுமிருக்கிற உம்மை யாதொரு பேர்கள் நிஷ்காமமான பக்திரினலே தியானம்பண்ணுகிறார்களோ அப்படிப்பட்டபேர்களுக்கு ஒருவிடத்திலேயும், அவமானமானது உண்டாகிறதில்லை காசிபப்பிரஜாபதி சம்பந்தமானவீரியமாயிருக்கிற திதி தவியினுடைய கர்ப்பமானதுசமஸ்ததிக்குகளையும் அந்தகாரத்தினலே பகல் ராத்திரியென்கிற விபாகமில்லாமல் போனபடியினலே கர்மலோபத்தையுடையவரான எங்களுக்குச் சுகத்தைவிதிக்கக்கடவீர். இப்போதுகாஷ்டத்தினலே விருத்தியடைகிறஅக்கினியானதுபோல் விருத்தி யடைந்து கொண்டிருக்கிறதென்று விக்கியாபனஞ்செய்த தேவதைகளை நோக்கிப் பிர்மாவானவர்சிரித்து ஒருவார்த்தைசொன்னர்.

வாருங்கள்தேவர்களே உங்களுக்கும் பூர்வமேபிறந்தவர்களாகியும், என்னுடைய மானச புத்திரா ளாகியும், லோகங்களிலே இச்சையில்லாதவர்களாகியுமிருக்கிற சனகாதியோகீசுவராள் ஆகாசமார்க்கமாக சமஸ்தலோகங்களிலேயும் சஞ்சரித்துக்கொண்டிருந்து ஒருக்கால்நிர்மலமான மனதையுடையவராகியும் பகவானுகியு மிருக்கிற ஸ்ரீஹரிக்கு நித்திய வாசஸ்தான மாகியும் சமஸ்த லோகங்களாலும்நமஸ்கரிக்கப்பட்டும்ஸ்ரீவைகுண்டமென்றும் பெயரையுடையதாகியும் நிஷ்காமமாகச்செய்யப்பட்ட தர்மத்தினலேவிளங்குகிற பாகவதாள் அந்த ஸ்ரீ வைகுண்டனுக்குச் சமானமான திவ்விய தேகங்களையுடையவர்களாய் வாசம் பண்ணத்தக்கதாகியும் தர்மமூர்த்தியாகியும் பகவானுகியுமிருக்கிற பரம புருஷரானவர் சுத்தசத்துவமயமான திவ்வியமங்களமூர்த்தியைத் தரித்துக்கொண்டு தம்முடைய பக்தாளானநம்மைச்சுகிப்பித்திருக்கிற ஸ்தானமாகியும், சரீரத்தைக் தரித்துக்கொண்டிருக்கிற மோட்சமானது போல் ஷட்ருதுக்களிலேயும் பலபுஷ்பமுதலிய இஷ்டங்களைக் கொடுக்கின்ற விருட்சங்களாலே விளங்குகிறதாயும், நிசிரேயசமாவென்றபெயரையுடைய உத்தியானவனத்தில் சரசுகளுடைய மத்தியத்திலே பெருகாநின்ற புஷ்பரசங்கள்வசந்தகாலத்திலே உண்டாகின்றபுஷ்பங்கள் இதுகளுடைய கந்தத்துடன்வீசுகிற வாயுவை அபேட்சியாமல் திரஸ்கரித்து விமானசாரிகளான பகவத்பாரிஷதாள் ஸ்திரீகளோடே கூடினவர்களாய் லோகங்களுடைய பாபங்களைநாசம்பண்ணத்தக்கின பகவானுடைய சரித்திரங்களை வண்டானதுபோல் கானம்பண்ணிக்கொண் டிருக்குகையில் கபோதபட்சிகள்-கோகிலங்கள்-சாரச பட்சிகள் - சக்கிரவாகப்பட்சிகள்=சாதகப்பட்சிகள்=அம்சங்கள்=கிளிகள் தித்திரிபட்சிகள்=மயில்கள்=இதுகளும் அந்தஸ்ரீபகவானுடைய திவ்வியசரித்திரத்தைக் கேட்பதுபோல் தங்களுடைய கோலாகலமான சப்தமானது ஒரு க்ஷணமாத்திரமாகிலும் ஒழியாமலிருக்கிறதாயும் மந்தாரபுஷ்பம் குருக்கத்திபுஷ்பம்=கருநெய்தல்=சண்பகம்= அரணம்-புன்னை=நாகம்=மல்லிகை=மகிழ்=அம்புஜம்= பாரிஜாதம்முதலிய புஷ்பங்கள் ஸ்ரீ துளசி இவை ஆபரணமாகவுடையவரான ஸ்ரீஹரியினலே அந்ததுளசியினுடைய கெந்தமானது விசேஷமாக அங்கீகரிக்கப்பட்டிருக்குகையில் அந்தத்துளசியினுடைய தபசை மற்றப்புஷ்பங்களால் சிலாகிக்கப் படுகிறதாயும் வைரீயங்களாகியும் மரகத மயங்களாகியும், சுவர்ணமயங்களாகியு மிருக்கிற பக்தாளுடைய விமானங்களாலே சூழப்பட்டும் ஸ்ரீகிருஷ்ணரிடத்திலேயே மனதையுடையவர்களானபேர்களுக்குப் பெரிதான கடிபச்சாபாகங்களையுடையவளாகியும் மந்த ஹாசத்தினலே விளங்காநின்ற முகங்களையுடையவளாகியு மிருக்கிற ஸ்திரீகள் பரிஹாசம் முதலானதுகளாலே காமத்தையுண்டாக்காமலும் அந்தபக்தாளுடையவிமானங்களாலே சூழப்பட்டிருக்கிறதாயும் ஸ்ரீ மகாலட்சுமியினுடைய அனுக்கிரக நிமித்தமாகப் பிரமாதிகள் மகாபிரயத்தினத்தைப் பண்ணத் தக்கதாயும் அந்த ஸ்ரீமகாலட்சுமியானவள் மனேகரமான ரூபத்தையுடையவளாய் மனேக்கியங்களான நூபுரங்களாலே தன்னுடைய சரணர விந்தத்தைச் சப்தித்துக்கொண்டு சாஞ்சல்லியாதி தோஷங்களைவிட்டவளாய் ஸ்படிகமயமான சுவர்களையுடையதாகியும் மத்தியிலே சுவர்ணகலசங்களையுடையதாகியுமிருக்கிற ஸ்ரீ ஹரியினுடைய திவ்விய கிரகத்திலே லீலாதாமரைப் புஷ்பத்தில் விளங்கிக்கொண்டிருக்கிறவள்போல் தன்னுடைய பரிசனங்களோடேகூடிக்கொண்டு துளசிகளாலே ஸ்ரீ ஹரியைப் பூசித்துப் பவளமயமான கரைகளையுடையதுகளாகியும் நிர்மலமாகியும், அமிர்தம்போலே மதுரமாகியும், தீர்த்தத்தை யுடையதாகியுமிருக்கிற நடபாவிகளின் ஜலத்திலே பிரதிபலியாநின்றும் சோபனங்களான முன்னெற்றிமயிர்களையும் உன்னதமான நாசிகையையுடையதாகியு மிருக்கிற தன்னுடைய திருமுக மண்டலத்தைப்பார்த்துப் பகவானலே சும்பனம் பண்ணப்பட்டதாக எண்ணிக்கொள்ளத்தக்கதாயும் தேவ தேவோத்தமரான ஸ்ரீஅரியினுடைய அனுவிர்த்தியினலே யமனை நிராகரித்தவர்களாகியும் அகங்கார மில்லாதவர்களாகியும், இச்சிக்கத் தக்கதான கிருபை முதலான சுபாவத்தை யுடையவர்களாகியும், அந்த எம்பெருமா னுடைய சோபமான யசசை யெ

ருவருக்கொருவர் சொல்லிக்கொள்ளுகிறதிலே உண்டா
கிற பிரீதியினாலே பரவசராய் அதனாலே புளகாங்கித
தேகராகியுமிருக்கிற மகாபாகவதாள் அடையத்தக்க
தாகியும் விசுவகர்த்தாவான ஸ்ரீஅரியினாலே வாசம்பண்
ணப்பட்டும் சமஸ்தலோகங்களுக்கும் முக்கியமாகியும்
சேவிக்கத்தக்கதாகியும், அப்பிராகிருதமாகியும், விசித்
திரங்களாகியும். தேவோத்தமாளுடையவிமானங்களின்
காந்திகளையுடையதுகளாகியும், அபூர்வமாகியுமிருக்கிற
அந்த ஸ்ரீவைகுண்டத்தைச் சனகாதியோகிகள் யோக
மாயாபலத்தினாலே அடைந்து மர்மமான சந்தோஷத்
தை யடைந்தவர்களாய் ஆறுபிராகாரங்களைத்தடையில்
லாமல் தாண்டி ஏழாம்பிராகாரத்திலேசமான மானவ
யதையுடையவர்களாகியும்,கதாபாணிகளாயுகிம்உத்தம
ங்களான தோள்வளைகள் குண்டலங்கள் கிரீடங்கள்இது
களாலே சுந்தரமான அலங்காரத்தை யுடையவாளாகியு
ம், மதித்த வண்டுகளாலே சூழப்பட்ட வனமாலையினா
லே நீலவர்ணங்களான நான்குபுஜங்களுடைய மத்திய
னமார்பிலே சூழப்பட்டவாளாகியும்,நெறிக்கப்பட் டிரு
க்கிற புருவத்தினாலேயும், தீர்க்கங்களான சுவாசத்தை
யுடைய நாசிகைகளாலேயும், மிகவும் சிவந்தநேத்திரத்
தினாலேயும், கொஞ்சம் கோபத்தையுடையதுபோல் க
லங்கியிருக்கிற திருமுகத்தையுடைய அந்தத்துவாரபா
லாள் இருவரும் பார்த்துக்கொண் டிருக்கச்சே யவர்க
ளை லட்சியஞ்செய்து கேளாமலே பூர்வம்சுவர்ணமயமா
கியும், வச்சிரமயமாகியுமிருக்கிற கதவுகளையுடையதுக
ளான ஆறுவாசல்களைத் தாண்டினபடியே ஏழாம்பிர
காரத்தினுடைய வாசலிலேயும்,பிரவேசித்தார்கள்அப்
போது அந்தத் துவாரபாலரான பேர்கள் இவ்விடத்
திலேயும் இவர்களுக்கு இத்தனை தைரியமாவென்று அ
வர்களுடைய தேஜசைப்பார்த்துச் சிரித்துப் பிரம்மணி
யதேவரான பகவானுக்குப்பிரதிகூலமானநடத்தையை
யுடையவர்வளாய்த்திகம்பராளாயும்,விருத்தாளா யிருந்
தாலும் ஐந்துவயது பாலர்போலே காணப்படுகின்ற
பரமாத்து மதத்துவத்தை யறிந்தவர்களாகியும் இருக்கி
ற அந்தநான்குகுமாரர்களையும்பார்த்துத் தடைக்கு அ
யோக்கியாளாயிருந்தாலும் அந்தக்குமாரர்களைப் பிரம்
பினாலேதடுத்தார்களிப்படி சமஸ்ததேவாளும்பார்த்து
க்கொண்டிருக்கையில் ஸ்ரீமந் நாராயணனுடைய துவா
ரபாலர்களாலே தடுக்கப்பட்ட அந்த ரிஷிகளானவர்கள்
மிகவும் சுதுர்த்தான ஸ்ரீஹரியைத்தரிசனம்பண்ணவே
ணுமென்கிற யிச்சைக்குப் பங்கம்உண்டாயிற்றேயென்
று கொஞ்சம் கோபத்தினாலேகலங்கின நேத்திரங்களை
யுடையவர்களாய்க் கொண்டு ஒருவார்த்தைசொன்னார்
கள்.

அந்தப் பகவானைப்போலவே சமஸ்த பிராணிகளி-
த்திலேயும் சமபுத்தியாகியு மிருக்கிறபாகவதாளுக்குள்
ளே உங்களிருவருக்கு மாத்திரம் இவ்விடத்தில் சிலது
பேர்பிரவேசிக்கலாம் சிலதுபேர்பிரவேசிக்கக்கூடாதெ
ன்கிறஇப்படிப்பட்ட வீஷ்மமானசுபாவம்எப்படி உண்
டாச்சுது. இவ்விடத்திலே பகவானிடத்தில்பக்தியில்லா
மல் ஒருத்தனும்வரமாட்டானல்லவோ, புருஷோத்தம
ராகியும் எங்கும்தடையில்லாதவராகியும்இருக்கிறஅந்
தப்பகவான் விஷயத்திலே எந்தப்புருஷன் சங்கிக்கத்த
க்கவன் சமஸ்தபிரபஞ்சத்தையும் குட்சியிலேதரித்துக்
கொண்டிருக்கிற இந்தப்பகவானிடத்திலே வித்துவா
மிசாளானபேர்கள் பேதத்தைப்பார்க்காமல் கடாகாசத்
தைப்போலத் தங்கள்ஆத்துமாவில் அந்தர்ப்பூதமாகப்
பார்க்கிறார்கள். அப்படிப்பட்ட பகவானிடத்திலே பே
தமில்லையன்றோ ராஜாமுதலானபேர்களுக்குப் பேதபு
த்தியிருக்கிறபடியினாலே பயம்உண்டாயிற்று, அப்படி
போல் பேதபுத்தியில்லாத ஸ்ரீஹரிக்குப்பயமானது யா
தொருகாரணத்தினாலே உண்டாயிற்று, தேவாள்போ
லேவேஷத்தை யுடையவர்களான உங்களுக்கு எப்படி
தெரிந்தது. ஸ்ரீவைகுண்டநாதரான இந்தப்பரமபுருஷ
ருக்கும் பிரத்தியாளாகியும் மந்தபுத்திகளாகியு மிருக்கி
றஉங்களுக்குஇருதயத்திலேபேதபுத்தியிருந்ததினாலே
இந்தவைகுண்டத்தில்நின்று பூலோகத்தை யடையக்க
டவீர்கள்.

எந்தலோகங்களிலே இப்படிபேதபுத்தியை யுடைய
பாவிக்குக்காமக்குரோதலோபமென்கிற மூன்றுசத்து
ருக்கள் உண்டாயிருக்கிறார்களோ - அந்தப் பாபிஷ்ட
லோகங்களை யடையக்கடவீர்களென்று சொல்லுகின்ற
அந்தரிஷிகளுடைய கோரமான வார்த்தையைக்கேட்டு
அந்தப் பிரமசாபத்தை அனேகம் அஸ்திரசமுகங்களா
லேயும் தடைபண்ணக்கூடாதாகவும் அறிந்து ஸ்ரீஹரி
யினுடைய துவாரபாலரானபேர்கள்மிகவும்பயத்தினா
லே அந்தரிஷீஸ்வராளுடையதிருவடிகளைக்கெட்டியாக
ப் பிடித்துக் கொண்டவர்களாய்த் தண்டாகாரமாய் வி
ழுந்து பிராணமம்பண்ணி ஒருவார்த்தை சொன்னார்
கள்,

கேளீர் மகாயோகிகளே, மாக அபராதத்தைப் பண்
ணினவனுக்கு யாதொருதண்டனையுண்டோ அந்தத் த
ண்டனை உங்களாலேபண்ணப்பட்டது. அந்தத் தண்ட
னையும் எங்களுக்கு உண்டாகட்டும் ஆனாலும்இந்தவிட
யத்திலே நாங்கள் மிகவும் நிக்ருஷ்டமான ஜன்மங்
களை யடைந்திருந்தாலும், பகவானுடைய ஸ்மரணத்
தை நாசம் பண்ணுகிற மோகமானது உண்டாகவேண்
டாமென்றுசொல்லிக்கொண்டிருக்கிற சமயத்தில்பெ
ரியவாளுக்குப் பூச்சியராகியும், அரவிந்தநாபராகியுமி
ருக்கிற பகவானானவர் பாகவதாளிடத்திலேசெய்க...

முடையபக்தாளுடைய அபராதத்தை அந்தக்ஷணத்திலேயறிந்து பரமாம்சாளான அந்தமகாரிஷிகள்கண்டு பிடிக்க அரிதானதம்முடையதிருவடிகளைத் தரிசிக்கவந்தவர்களைத தடுத்ததினு லுண்டான அந்த ரிஷீஸ்வராளுடைய கோபத்தையறிந்து தாம்லட்சுமீசமேதராய் அவர்கட்குக்காட்சிகொடுத்து அவர்களுடைய கோபத்தைப் போக்கடிக்கவேண்டுமென்கிற அருளுள்ளவராய்த்தாமரைபோன்ற திருவடிகளாலே நடந்து ஸ்ரீமகாலட்சுமிசமேதராகச் சஞ்சாரத்துக்கு யோக்கியமாகியிருக்கிற இரண்டுபாரிசத்திலேயும் அம்சங்கள்போல்விளங்கிச் ஜவலித்துக்கொண்டிருக்கிற சாமரங்களும் வாயுவினாலே அசைகின்ற தவளமானகுடையும், சந்திரன்போன்ற மிகவும் சுப்பிரமான முத்துமாலைகளில் நின்றும் நழுவுகின்றஜலத்தின் திவலைகளையுடையவராகியும் அந்த ரிஷீயீஸ்வராள் துவாரபாலாள் இவர்களையனுக்கிரகிக்கிறநிமித்தமாகச் சோபனமான திருமுகமண்டலத்தையுடையவராய்க் கோரத்தக்க கிருபைமுதலானகுணங்களுக்கு இருப்பிடமாகியும், பிரீதியோடே கூடிக்கொண் டிருக்கிற கடாட்சத்தினாலே மிகவும் மனோகராகியும், நீலவர்ணமான லக்ஷஸ்தலத்திலே விளங்குகின்ற ஸ்ரீமகாலட்சுமியுடன் தமக்குநித்தியமான ஸ்ரீவைகுண்டத்தில்நின்றும் வருகிறவராயும் மிகவும் பருத்தகடிபச்சாப்பாக்கத்திலே தரிக்கப்பட்டிருக்கின்ற பீதாம்பரத்தில் பிரகாசியாநின்ற அரைநூன் மாலையினாலேயும், வண்டுகளாலே சப்திக்கப்பட்ட வனமாலையினாலேயும் மணிக்கட்டு கைகளிலே மனோக்கியமான கடகங்களை யுடையவராகியும், கருடாழ்வாருடையதோளிலே வைக்கப்பட்ட ஒருஅஸ்தத்தை யுடை யவராகியும், மற்றொரு அஸ்தத்தினாலே தாமரைப்புஷ்பத்தை சுழற்றிக்கொண்டிராநின்றும் மின்னலைத் திரஸ்கரிக்கின்ற மகரகுண்டலங்களாலே யலங்கரிக்கப்பட்ட கபோலங்களை யுடையவராகியும் உன்னதமான நாசிகையையுடையதிருமுகமண்டலத்தையுடையவராகியும் நவரத்தினங்களிழைத்த கிரீடத்தையுடையவராகியும் பாகுதண்டங்களுடையமத்தியத்திலே மனோக்கியமாகியும், மிகவும் விலைபெற்றதாகியு மிருக்கிறமுத்துமாலையினாலேயும், கண்டத்திலே தரிக்கப்பட்டிருக்கின்ற கவுஸ்துவமாலையினாலேயும் நானே சவுந்தரிய நிதியென்று எண்ணியிருந்த ஸ்ரீமகாலட்சுமியினுடைய அகங்காரமானது இந்தப்பகவானுடைய சவுந்தரியத்திற்கு முன்னே ஓங்காமல் அடங்கிப்போனதாகவும் அளவில்லாத சவுந்தரியத்திற்குநிதியாகியும் எனக்கும், ருத்திரனுக்கும்,உங்களுக்கும், அனுக்கிரகார்த்தமாக திவ்வியமங்களவிக்கிரகத்தைத்தரியாநின்றுமிருக்கிற அந்தஸ்ரீமந்நாராயணரானவர் பிரத்தியக்ஷமாகினர் அவரைப் பார்த்துஅந்தஜனகாதியோகிகள் மிகவும் திருப்தியடையாமலிருக்கிற நேத்திரங்களையுடையவர்களாய்க்கொண்டு சந்தோஷத்தினாலே சாஷ்டாங்கமாகப் பிரணமம்பண்ணினார்கள்.

அரவிந்தம்போன்ற நேத்திரங்களையுடையவரான அந்தப்பகவானுடைய திருவடித்தாமரைகளில் அர்ச்சித்திருக்கிறஸ்ரீதுளசியினுடைய மதுரசத்துடனேகூடிக்கொண்டிருக்கிற பரிமளத்தை ஆக்ராணித்து பிர்மானந்தத்தையடைந்து மிகவும்மனோகரமாகியும், தவளமாகியுமிருக்கிற புன்சிரிப்பையுடையதான அந்தப் பகவானுடைய திருமுகமண்டலத்தைப்பார்த்து ஸ்தோத்திரம்பண்ணஆரம்பித்தார்.

ஜனகாதியோகிகளுடைய ஸ்துதி,

வாரீர் அனந்தரே, தேவரீர் இருதயத்திலே நித்தியமாகவிருந்தாலும் கியானமில்லாதவர்களுக்குக் காணப்படாதவராகவேவிளங்குகிற தேவரீர் எங்களுடையநேத்திரங்களுக்குப் பிரத்தியட்சமாக விருக்கிறீர் தேவரீருடையநாபிக்கமலத்தில் நின்றும் உண்டாகி யிருக்கின்ற எங்களுக்குப்பிதாவான பிர்மாவினாலே தேவரீருடைய பரமரகசியமான சரித்திரமானது உபதேசிக்கப் பட்டபோதே எங்களுடைய சிரவணமார்க்கத்தினாலே புத்தியையடைந்துபோனீர்.

வாரீர்பகவானே, தேவரீருடையபக்தாள் எங்களால் சபிக்கப்பட்டபடியினாலே எங்களுக்குநரகங்களிலே மிகவும் ஜென்மிக்கும்படி உண்டாகுமன்றோ, ஆனாலும்வண்டானது முள்ளுகளாலே அடிக்கப்பட்டாலும் புஷ்பங்களிலேயே ரமிக்கிறதுபோல் எங்களுடையசித்தத்திற்குவிக்கினங்கள்சம்பவித்தாலும் அதை யெண்ணாமல் தேவரீருடைய திருவடிகளிலேயே ரமிக்கின்றது ஸ்ரீதுளசியானது தேவரீருடைய திருவடி சம்பந்தத்தினாலேயேசோபிக்கிறதுபோல் எங்களுடையவாக்குகள்தேவரீருடைய திருவடிபஜனத்தினால்பரிசுத்தமாகும்படிஅனுக்கிரகிக்கவேண்டும்.

வாரீர் அனந்தமானகீர்த்தியையுடையவரே, தேவரீருடைய இந்தத்திவ்வியமங்களரூபத்தைச்சேவித்ததினாலே எங்களுடைய நேத்திரங்களானதுகள் மிகவும்ஆனந்தத்தையடைந்ததுகள்,

## ௰௬-வது-அத்தியாயம்.

கலி - விருத்தம்,

வேதவேதியர்க் கும்மெட்டாவிஷ்ணுவால்
போதவேசமா தானஞ்செய்யப்பட்டுக்
கோதிலாரிஷி யீசக்குழாங்களால்
ஆசுரஜன்மத்த னு கிரகஞ்செய்திட்டார்.

ஸ்ரீஹரியினாலே சமாதானம் பண்ணப்பட்டு மிகவும் பச்சாத்தாபத்தை யுடையவர்களாகி அந்தரிஷியீஸ்வரர்

ள்ளாலே அந்தஜயவிஜயர்களுக்கு அசுரஜன்மத்திலேயும் அனுக்கிரகம்பண்ணப்பட்டதென்று சொல்லப்படுகின்றது.

பிர்மதேவன்வாக்கியம்.

வாருங்கள் தேவர்களே, ஸ்ரீவைகுண்டவாசியானபகவானனவர் இந்தப்பிரகாரம் ஸ்தோத்திரம்பண்ணுகின்ற அந்தரிஷிகளுடைய வாக்கியத்தைக்கொண்டாடிஅவர்களைப்பார்த்து ஒருவார்த்தைசொன்னர்.

வாருங்கள் யோகீஸ்வரர்களே, என்னுடைய பாரிஷதாளான ஜயன் விஜயனென்கிற இவர்களிருவரும் என்னை அனுதரவுபண்ணி உங்களுக்கு வெகுவாகஅதிக்கிரமத்தைப்பண்ணினர்கள், அதனல் என்னைஅனுவர்த்தியாநின்ற உங்களாலே இவாளிருவருக்கும் தண்டனையானதுபண்ணப்பட்டபடி நம்மாலேயும் அனுமதிபண்ணப்பட்டது, பிராமணுளேஎனக்குப்பரமமானதெய்வமாகையினலே இப்போது உங்களைக்ஷமிப்பிக்கிறேன், உலகத்தில்பிரத்தியனுனவன் அபராதத்தைப் பண்ணினல் சனமானது யஜமானன் பண்ணதாய்ச் சொல்லுகிருற்போல் என்னுடையதுவாரபாலகர் அபராதஞ்செய்தது தான்செய்ததேதவிர வேறல்ல அந்த அபவாதமானது என்னுடையகீர்த்தியைச் சுவேதகுஷ்டமானது தேகத்தினுடையசமர்த்தை வியாபித்துக் கெடுத்துப்போகிறுற்போல் நாசம்பண்ணிப்போடும்,

என்னுடையநிர்மலமான எசஸாகிற அமிர்தத்திலே தியானம்பண்ணின சண்டாளன் முதற்கொண்டு சமஸ்தஜகத்தையும் பாவனமாகப்பண்ணுகிறது உங்களிடத்தில்நின்றும் அடையப்பட்ட சோபனமாகியும, பவித்திரமாகியும், ஸ்ரீவைகுண்டநாதனுகியுமிருக்கிற என்னுடையபாகுவானலும் உங்களுக்குப்பிரதிகூலமான வியாபாரத்தைச்செய்தால் அதைச்சேதித்துப்போடுவேன், உங்களுடையசேவையினலே ஸ்ரீபாதபத்மங்களிலேயிராநின்றும் பவித்திரமாகியுமிருக்கிற ரேணுக்களையுடைய என்னலே சமஸ்தலோகங்களுடைய மலத்தையும் போக்கடிக்கிறவனுகியும், நல்ல சீலத்தையடைந்து மிருக்கிற எனக்குஇந்தக்குணங்கள் உங்களாலேஉண்டாச்சுதுகள் மிகவும்விரக்தனுயிருந்தாலும், என்னை ஸ்ரீமகாலட்சுமியானவள் விடாமலேயிருக்கிறுள், ஸ்ரீமகாலட்சுமியினுடையகடாட்சம் வேண்டுமென்று பிர்ம்மாமுதலானபேர்களும் மகாதீட்சணமான நியமங்களைப்பண்ணுகிறுர்கள், அப்படிப்பட்டலட்சுமி என்னை விடாமலிருக்கிறுள், நிஷ்காமனுகியிருக்கிற பிராமணனுக்குக்கவுளங்கள்தோறும் ஆச்சியத்தினலே நனைக்கப்பட்டிருக்கிற பாயசமுதலானஅன்னத்தைப் புஜிப்பிக்கின்ற பிராமணனுடைய முகத்தினலே நான்திருப்தியடைவதுபோல் யாகஞ்செய்வதில் நான் திருப்தியடையமாட்டேன், என்னுடைய ஸ்ரீபாததீர்த்தமானது சந்திரசேகரனனருத்திரனுடனே கூடிக்கொண்டிருக்கிற சமஸ்தலோகங்களையும் பவித்திரமாகப்பண்ணுகிறது, அப்படிப்பட்டமகிமையையுடையானனும், பிராமணர்களுடைய நிர்மலமான ஸ்ரீபாதரேணுவைக் கிரீடங்களாலேதரிக்கிறேன், எனக்குச்சரீரங்களாயிருக்கிற பிராமணர்களையும், என்னுடைய சரீரத்தில்நின்றும், உண்டாகாநின்றபசுக்களையும், அனுதாளாகியும், என்னையேஆசிரயதாக உடையவர்களான பிராணிகளையும், என்னைக்காட்டிலும் வேறென்கிற பேதபுத்தியினலே எவன்பார்க்கிறுனே அவனை யமனுடையதூதர்கள் கண்டங்கண்டமாய்ச்சேதிப்பார்கள், யாதொருபேர்கள் பிராமணர்களை ஸ்ரீவாசுதேவனென்கிற புத்தியினலேபூசித்துச் சந்துருஷ்டமான இருதயத்தை யுடையவர்களாய் நல்லவாக்கினலே ஸ்தோத்திரம் பண்ணுகிறுர்களோ அவர்களாலேநான் வசீகரிக்கப்பட்டவனுகிறேன் ஆகையினலே என்னுடைய அபிப்பிராயத்தை அறியாதவர்களான இந்தஜயவிஜயாளிருவரும் தங்களுடையஅதிக்கிரமத்தினலேவராநின்ற அபராதத்துக்கு யோக்கியமானகதியைச் சீக்கிரமாகஅடைந்து மறுபடியும் என்னுடைய சமீபத்திலேயேவந்து அடையக்கடவர்கள். பிரத்தியாளானஇவர்களுக்கு ஸ்ரீவைகுண்டலோக வியோகமானது சீக்கிரமாக முடிவையடையும்படி அனுக்கிரகிக்கவேண்டுமென்று வேதமந்திரங்களுக்குச் சமானமாகியிருக்கின்ற வாக்கினுடைய சாதுரியத்தைக்கேட்டும் அந்தரிஷீஸ்வரர்களானபேர்கள் மிகவும் சிரேஷ்டமாகியும் மிகமான அட்சரங்களையுடையதுகளாகியும் அர்த்தத்தினலே விஸ்தாரமாகியும் கெம்பீரமான அபிப்பிராயத்தையுடையதாகியுமிருக்கிற அந்தப்பகவானுடையவசனத்தைக் காதுகொண்டுகேட்டு அர்த்தவிசாரம்பண்ணியும் நம்மைச்சிலாகிக்கிறுரென்றும் நம்மாலேபண்ணப்பட்டதண்டனையை சங்கோசமாகப்பண்ணுகிறுரென்றும் அந்தப்பகவானுடைய அபிப்பிராயத்தையறியாமல் தங்களைக்கொண்டாடுகிறுரென்றும் தம்முடையபிரபுத்தவத்தை பிரகாசிப்பித்து ராஜாக்களைசிட்சிப்பிக்கநிமித்தமாய் பிராமணர்களை சமாதானம்பண்ணுகிறுரென்றும் அறிந்து அஞ்சலி பத்தத்தை யுடையவர்களாய் அந்தப்பகவானைப்பார்த்து ஒருவார்த்தைசொன்னர்கள். தேவதேவனன தேவரீர் என்னுடையபிரத்தியாளாலே பண்ணப்பட்ட அபராதமானது என்னலேயே பண்ணப்பட்டதென்றும் உங்களாலே அந்தஜயவிஜயாளுக்குப் பண்ணப்பட்டதண்டனை எனக்குஅனுக்கிரகமே ஆகிறதென்றும் சொல்லுகிறபடியினலே நாங்கள் தேவரீருடைய அபிப்பிராயத்தையறியோம்.

வாரீர் பிரபுவே, பிர்மண்ணியரான தேவரீருக்குப்பிராமணர்கள் பரமமான தெய்வமன்றேதேவர்களுக்கும்

பூச்சியாளாயிருக்கிற பிராமணர்களுக்கும் பகவானுன தேவரீரே பரமாத்துமாவாகியும், தெய்வமாகியுமிருக்கிறீர் சாசுவதமான தர்மமானது தேவரீரிடத்தில்நின்றும் உண்டாகித் தேவரீருடைய அவதாரங்களாலே ரட்சிக்கப்பட்டுமிருக்கிறது அந்த தர்மத்துக்கு பரராகியும் விகாரசூனியராகியும், பலசுரூபராகியுமிருக்கிறீர் பிராணிகள்தேவரீருடைய அனுக்கிரகத்தினுலே வைராக்கியத்தையடைந்து பரமமானயோகத்தையுடையவர்களாய்அனுயாசமாக சம்சாரத்தைத் தாண்டுகிருர்கள் சாரக்கியராகியாயிருக்கிறவண்டானது தேவரீருடைய திருவடிகளிலே பக்தாளாலே சமர்ப்பிக்கப்பட்ட ஸ்ரீதுளசியிலே நிச்சலமாகரமிக்கிறபடியினுலே அந்தத்திருவடிகளுடையசௌந்தரியம் மிகவும்அதிகமென்றெண்ணி வக்ஷஸ்தலத்திலேயேயிருந்து ஸ்ரீதுளசியோடேகூட அந்தத் திருவடிஸ்தானத்தையே பெறவேண்டுமென்கிற ஆசையினுல் பரிசுத்தங்களான உபசாரங்களாலேமிகவும் சேவித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீமகாலட்சுமியைத் தேவரீர்மிகவும்அபேட்சிக்கவில்லை.

அப்படிப்பட்ட தேவரீர் பிராமணர்களுடைய புண்ணியகரமான ஸ்ரீபாதரேணுவினுலே பவித்திரனுனேனென்கிறதும் பிராமணுளுடைய பிரசாதத்தினுலேயே ஸ்ரீமகாலட்சுமி என்னைவிடாமலிருக்கிருளென்கிறதும் உசிதமன்ரோ வாரீர்பகவானே, தபசு-சவுசம்-தயை என்றுபெயரையுடையதுகளான பாதங்களினுலேஎங்களுக்குச் சகலஅபீஷ்டத்தையுங்கொடுக்கிற நிமித்தமாகச்சத்துவமூர்த்தியான தேவரீராலே ஸ்தாவரஜங்கம சுவரூபமான இந்தப்பிரபஞ்சமானது தரிக்கப்படுகிறது. அப்படியிருக்க இந்தப்பிராமணகுலத்தைப் பிரகாசமாகரட்சியாமற்போனீரேயாகில் அப்போதே மங்களகரமான தேவரீருடைய ஆக்கியாரூபமான வேதமார்க்கமானது நாசத்தையடைந்துபோம்.

தேவரீருடைய அந்தஆசாரத்தையே பிரமாணமாக இந்தலோகமும்கிரகிக்கும் தர்மத்தைரட்சிக்கிற நிமித்தமாகப் பிராமணர்களுக்குவணங்குகிற தேவரீருடையபிரபாவமானது குறைந்துபோகிறதில்லை. அந்தவணக்கம் தேவரீருக்கு விநோதமாயிருக்கிறது தேவரீர்இந்த ஜயவிஜயாளுக்கு வேறேதண்டனைவிதித்தாலும்உசிதமான சீவனத்தைவிதித்தாலும் அதையெல்லாம்நாங்கள் யோக்கியமாகவே ஒப்புக்கொள்ளுகிறேம். இல்லாவிட்டாலும் நாங்கள் நிராபராதிகளான இந்தஜயவிஜயாளை சாபத்துடனேகூட்டிவைத்தோமென்று எங்களிடத்திலேயாகிலும் உசிதமானதண்டனமானது பண்ணப்படட்டுமென்றுசொல்லுகின்ற ஜனகாதியோகிகளைப் பார்த்து ஸ்ரீபகவானுனவர்சொல்லுகிருர்.

வாருங்கள் பிராமணோத்தமர்களே, இந்த ஜயவிஜயாளிருவரும் கோபாவேசமுடைய மனமுடையவர்களாய் அசுரஜன்மத்தையடைந்து சீக்கிரமாகஎன்னுடைய சமீபத்தையேவந்து அடையப்போகிருர்கள் உங்களாலே யாதொருசாபமானது செய்யப்பட்டதோ அந்தச் சாபமானது நம்மாலேயேசெய்யப்பட்டதென்று அறியக்கடவீர்களென்று அருளிச்செய்கிற பகவத் வாக்கியத்தைக் கேட்டு அந்தஜனகாதியோகிகள் நேத்திரங்களுக்கு ஆனந்தகரமாகியும் சுவயம்பிரகாசமாகியுமிருக்கிற அந்தஸ்ரீவைகுண்டலோகத்தையும்ஸ்ரீவைகுண்டவாசியான ஸ்ரீஹரியையும்பார்த்து மிகவுஞ்சந்துஷ்டாளாய்க்கொண்டு அந்தப்பகவானை அனேகம் பிரதட்சணம்பண்ணிச் சேவித்து அவர்கையில்அனுப்புவித்துக்கொண்டுபகவானுடைய ஐசுவரியத்தைக்கொண்டாடிக்கொண்டு போனுர்கள். பிற்பாடுஸ்ரீபகவானுனவர் தம்முடைய பாரிஷ்தாளான ஜயவிஜயாளைப்பார்த்து நீங்கள் அதோலோகத்தையடையுங்கள் பயப்படவேண்டாம் உங்களுக்கு மங்களமுண்டாகக்கடவது. பிராமணசாபத்தை நிக்கிரகிக்க சமர்த்தனுனுலும் அதைநிக்கிரகிக்க இச்சிக்கிறதில்லைஅதுஎனக்குஇஷ்டந்தான் நான்யோகநித்திரையை யடைந்திருந்தபோது துவாரகையிலே ஸ்ரீமகா லட்சுமியானவள் உங்களாலேதகையப்பட்டு மிகவும் கோபத்தையடைந்த ஸ்ரீமகாலட்சுமியினுலேயும், ஜபிக்கப்பட்டீர்கள்,இப்போது பிராமணர்களாலேயும,ஜபிக்கப்பட்டீர்கள். என்னிடத்திலே தீவரமான பக்தியோகத்தினுலே அந்தப்பிர்மசாபத்தைக்கடந்து கொஞ்சகாலத்திலேயே திரும்பவும் என்னுடையசமீபத்தைவந்துஅடையப்போகிறீர்களென்று தம்முடைய துவாரபாலர்களானஜயவிஜயாளைக்குறித்து ஆக்கியாபித்துப் பகவானுனவர் தம்முடைய ஸ்தானத்தையடைந்தார் பிற்பாடுஅந்த பாரிஷதோத்தமாளானஜயவிஜயாள்பரிக்கக்கூடாதபிர்மசாபத்தினுலே நஷ்டஸ்ரீகளாகியும் கருவமில்லாதவர்களுமாய் ஸ்ரீவைகுண்டத்தில்நின்றும் விழுந்துவிட்டார்கள்.

வாருங்கள் புத்திரர்களான தேவர்களே, அப்போது அந்த ஸ்ரீவைகுண்டத்தில்நின்றும் விழுகையில்விமானத்தின்நுனிகளிலே யிருக்கின்றபேர்களாலே ஆஹாகார சப்தமானது மிகவும்உண்டாயிற்று ஸ்ரீஹரியினுடைய பாரிஷதோத்தமாளான இந்தஜயவிஜயாளிருவரும் இப்போது திதியினுடைய கர்ப்பத்திலே வைக்கப்படுகின்ற காசியபருடைய வீரியத்தையடைந்தார்கள் அந்த அசுரர்கள் தேஜசினுலே விருத்தியடையப் போகிருர்கள் அவர்களை பகவான்தானே பிரதிசிகிச்சை பண்ண வேண்டுமென்று இச்சித் திருக்கிருர் ஆகையினுலே

இந்த விஷயத்திலே நம்முடைய யோசனையினாலே எவ்வளவுகாரிய மாகப்போகிறது.

# ௰எ-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

சேய்களான ஜெயாவிஜயாளுடை
ஓய்விலாப்புவி யாகுமுற்பத்தியும்
ஆய்ந்திடிமிரண் யாக்கனவனுடை
காய்ந்திடப்பிர பாவங்கழறுவாம்.

அந்த ஜயவிஜயாளுடைய லோகபயங்கரமான உற்பத்தியும் இரணியாட்சனுடைய திக்குவிஜயத்திலேஉண்டான அற்புதமானபிரபாவமும் சொல்லப்படுகின்றது.

மைத்திரேயர்வாக்கியம்.

வாரீர்விதுரரே, பிற்பாடு சமஸ்தமான தேவர்களும் பிர்ம்மாவினாலே சொல்லப்பட்ட வசனத்தைக்கேட்டு சங்கையைவிட்டுத்திரும்பவும்சுவர்க்கம்வந்துசேர்ந்தார்கள் பதிவிர்தையான அந்த திதிதேவியும் பர்த்தாவினுடைய ஆக்கினையினாலே தன்னுடைய புத்திராளிடத்தில்நின்றும், தேவர்களுக்கு உபத்திரவத்தையெண்ணினவளாய் நூறுவருஷம் கெர்ப்பமானது பூரணமான பிற்பாடு இரட்டைப்பிள்ளைகளைப் பெற்றாள், அந்தப் பிள்ளைகள் பிறந்த சமையத்தில் அவ்விடத்திலே ஆகாசத்திலேயும், பூமியிலேயும்,சொர்க்கத்திலேயும்,சமஸ்தலோகங்களுக்கும் பயங்கரங்களான வுற்பாதங்கள் வெகுவாகவுண்டாயிற்றுகள், அதாவது பர்வதங்களுடனே,கூடிக்கொண்டிருக்கிற பூமியானது நடுங்கிற்றது. சமஸ்ததிக்குகளும் சொலித்ததுகள், குறைக்கொள்ளிகளோடேகூட இடிகள்விழுந்ததுகள் சமஸ்தமான பிராணிகளுக்கும் பயங்கரமான தூமகேதுகள் உண்டாயிற்றதுகள், மிகவும் சகிக்கக்கூடாதாகியும், மகா வேகத்தினாலே படீரென்கிற சப்தத்தை அடிக்கடியுண்ணுனின்றும்,மகா விருட்சங்களை வேரோடே பிடுங்கிப் போடாகின்றும், சுழல்களுடைய சமுகத்தையுடையதாகியும், புழுதியைத்தானே துவஜமாக வுடையதாகிப் பெருங்காற்றானது வீசி மிகவும் பிரகாசிக்கின்ற மின்னல்களையுடையமேகக்கூட்டத்தினாலே காணப்படாமலிருக்கிற சூரியன்முதலான கிரகநட்சத்திரங்களையுடைய ஆகாசத்திலே வியாபிக்கின்ற அந்தகாரத்தினாலே ஒரு நட்சத்திரங்களுடையஸ்தானமும், ஈஷித்துக் காணப்படாமற்போயிற்று மிகவும் விர்த்திபடையானின்ற அலைகளும், மகரமுதலான ஜந்துக்களையுடைய சமுத்திரமானது - மகாவிசனத்தையுடையதுபோல் மிகவும் சப்தித்தது கிணறு நடபாயிமுதலானதுகள் உலர்ந்துபோகின்ற தாமரைப் புஷ்பங்களை யுடையதுகளாகி நதிகளும் கலங்கிப்போயிற்றுகள். ராகுவினாலே பீடிக்கப்பட்ட சந்திர சூரியர்களுக்கு அடிக்கடி பரிவேஷங்களுண்டாயிற்றுகள், மேகங்களில்லாமல் சப்தங்கள் ரதத்துவனிகள் போல் பர்வதங்களுடைய குகையில்நின்றும் உண்டாயிற்றுகள் பெண்ணரிகளானதுகள் கிராமங்களுடைய மத்தியில் முகத்திலே சொலித்துக்கொண்டிருக்கிற அக்கினியைக் கக்கிக்கொண்டு அமங்கலமாக மிகவும் கூப்பிட்டதுகள். நாய்களானதுகள் கழுத்தை யுயரவெடுத்துக்கொண்டு பாடுகிறதுபோலவும் அழுகிறதுபோலவும்,நாலுதிக்கிலேயும்,நானுவிதங்களாகியும், பயங்கரங்களாகியும் கூவினதுகள்,கழுதைகளும்,குதிரைகளும், கூர்மையான குளம்புகளாலே பூமியைஉதைத்துக்கொண்டு கும்புகும்பாய் ஓடிக்கொண்டிருந்ததுகள். அந்தக்கழுதைகளுடைய சப்தங்களாலே மிகவும்பயப்படுகின்ற பட்சிகள்கூண்டுகளில்நின்றும் எழும்பிப் போச்சுதுகள். அந்த கோஷங்களாலே மற்றை பசுமிருகஜாதிகளும் மூத்திரமலங்களை விட்டுக்கொண்டதுகள். பசுக்கள் இரத்தங்களைக் கறந்துகொண்டுமிகவும் பயப்பட்டதுகள். மேகங்கள் இரத்தமாங்கிசங்களை வருஷித்ததுகள், தேவதாவிக்கிரகங்கள் கண்ணில்நின்றும் ஜலத்தைப் பெருக்கிக்கொண்டு அழுததுகள். விருட்சங்கள் காற்றன்றியில் அடியோடேவிழுந்துபோச்சுதுகள். குரூரங்களான கிரகங்களானதுகள் பூச்சியான குரு-புதன்முதலான சுபக்கிரகங்களையும், நட்சத்திரகணங்களையும், மிகவும்பீடித்து வக்கிரகதியாகச்சஞ்சரித்ததுகள், இன்னும் இதரங்களான மகோத்பாதங்களையும் பார்த்து அதனுடைய தத்துவத்தை யறியாதவர்களான ஜனங்கள் ஜனகாதிகளைத்தவிர மற்றைப்பேர் பயந்தவர்களாய்ப் பிரபஞ்சத்துக்குப்பிரளயம்வந்ததோவென்று எண்ணிக்கொண்டார்கள். ஆதிதயித்தியர்களான அவர்களிருவரும் சிலபோன்றதிடமானசரீரத்தினாலே பர்வதசிரோஷ்டங்கள்போல விருத்தியடைந்துசுவர்ணமயங்களான கிரீடங்களின் நுனிகளாலேசுவர்க்கத்தைத் தொடும்படியாயும் பருமனாலே திக்குகளை வியாபிக்கும்படியான தோள்வளைகளுடனே கூடிக்கொண்டிருக்கிற புசங்களை யுடையவர்களாகியும் அடிக்கடி பாதங்களாலே பூமியை அலைத்துப் போகும்படி செய்கிறவர்களாகியும் மனோக்கியமான அரைநூல்மாலையினாலேசூரியமண்டலத்தை அதிசயித்திருந்த அவர்களில் காசிபப்பிரஜாபதியானவர் முன்னே ஜனித்தவனை இரணியகசிபுவென்றும் பின்னேஜனித்தவனை இரணியாட்சனென்றும் நாமகரணம்பண்ணினார். அந்த இரணிய கசிபுவானவன் தன்னுடைய பாகுபலத்தினாலேயும் பிரம்மாவினுடைய வரத்தினாலேயும், மிகவும் பயமில்லாதவனாய் லோகபாலர்களுடன்கூடிக்கொண்டிருக்கிறமூன்றுலோகங்களையும் தன்வசமாகப்பண்ணிக்கொண்டாஅன் வனு

க்குத்தம்பியான இரணியாட்சதனனவன்கதாபாணியா யுத்தம் பண்ணவேணுமென்கிற இச்சை யுடையவனாய் மிகவும் சகிக்கக்கூடாதவேகத்தையுடையவனாகியும் சப்திக்கிற கதையையுடையவனாகியும்,பலத்திலேயும்,வரத்திலேயும், மிகவும்கர்விதனாகியும், தட்டுத்தடையில்லாமல் எங்கும் சஞ்சரிக்கத்தக்கவனாகியுமிருக்கிற அந்தஇரணியாட்சதனைப் பார்த்துக் கருடனைக்கண்டு பயப்படுகின்ற சர்ப்பங்கள்போலமறைந்துபோனார்கள் அப்போது இரணியாட்சனானவன் தன்னுடையதேஜசினாலேமறைந்துபோன இந்திரன்முதலான தேவர்களை யெங்குந்தேடிக்காணாதவனாய் மிகவும் அட்டகாசஞ்செய்துசொர்க்கத்தில் நின்றும் புறப்பட்டு ஜலக்கிரீடைபண்ணக் கம்பீரமாகியும், பயங்கரமான சப்தத்தை யுடையதாகியுமிருக்கிற சமுத்திரத்தில் மதித்திருக்கிற யானையானது போல் பிரவேசிக்குகையில் வருணனுடையசேனைகளான ஜலஜந்துக்களுடைய கூட்டங்கள் மிகவும்பயத்தையுடையதுகளாகி அவனாலே அடிக்கப்படாததுகளாயிருந்தாலும் அவனுடைய தேஜசினாலே மிகவும் திரஸ்கரிக்கப்பட்டதுகளாய் வெகுதூரம் ஓடிப்போய்விட்டதுகள் பலவானான அந்த அசுரனானவன் அந்த சமுத்திரத்திலே அனேகவருஷங்கள் சஞ்சரித்து வாயுவினாலே யெழுப்பப்பட்ட மகத்தான அலைகளை இரும்புமயமான கதையினாலே அடித்துக்கொண்டு வருணனுடைய விபாவரியென்னப்பட்ட பட்டணத்தை யடைந்து ஜலஜந்துக்களுடைய கூட்டங்களுக்கு ராஜாவா யிருக்கிற வருணனைச்சேர்ந்து நகைத்து அவனைப் பரிகாசமாய்த் தாழ்ந்தவன்போல் பிராணமம்பண்ணி அவனை நோக்கி நீபூர்வத்தில் சமஸ்ததைத்தியதானவர்களையும் ஜயித்து ராசசூயயாகம்பண்ணிச் சமஸ்தலோகபாலர்களுக்கும் அதிபதியாகிப் பிரசித்தமான கீர்த்தியை யுடையவனாகி நானே வீரியவானென்று அகங்காரத்தையுடைத்தானபேர்களுடைய கர்வத்தை அடக்கிறவனாகியிருக்கிறாய், ஆகையினாலே எனக்கும யுத்தத்தைக்கொடுவென்று மிகவும் கர்வத்தையுடைய சத்ருவினாலே திரஸ்கரிக்கப்பட்டவனாகி அந்தவருணனானவன் தனக்குள்ளேஉண்டான கோபத்தையடக்கிக்கொண்டுஒருவார்த்தைசொன்னான்.

வாராய் அசுர சிரேஷ்டனே நாங்கள் யுத்தம்பண்ணவேணுமென்கிற உச்சாகத்தில்நின்றும் ஒழிவையடைந்திருக்கிறோம். யுத்தமார்க்கத்திலே மிகவும் சமர்த்தனான உன்னைச்சந்தோஷிப்பிக்கச்சனார்த்தனரானபுருஷோத்தமனைக்காட்டிலும் ஒருவனையும் நான் பார்க்கவில்லை, ஆகையினாலேநீ-அந்தப்பகவானைஸ்தோத்திரம்பண்ணியடையக்கடவாய்.

அவர் உன்னைப்போலொத்த துஷ்டர்களை நாசம்பண்ணுகிறதற்காகவும், சத்புருஷரை அனுக்கிரகம்பண்ண வேணுமென்று அனேகம் அவதாரங்களைப் பண்ணுகிறார், அந்தப் பகவானையடைந்து சீக்கிரமாகக் கர்வபங்கத்தையுடையவனாய் நாய்களாலே சூழப்பட்டு யுத்தபூமியிலே விழுந்துகிடக்கப்போகிறாயென்றான்.

## ௰அ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

அந்தமான விரணியாக்கதனுக்கும்
சொந்தமாகவே யுத்தாரணஞ்செயும்
தொந்தயுத்தந் தொடர்ந்தவிரிதனக்
கந்தயுத்த மனைத்துஞ்சொல்வாமரோ,

இரணியாட்சனுக்கும் பூமியை உத்தாரணம்பண்ணுகின்ற வராகரூபியானபகவானுக்கும் உண்டானயுத்தமானது சொல்லப்படுகின்றது,

மைத்திரேயர்வாக்கியம்.

வாரீர்விதுரரே, மிகவும் மதத்தையுடைய அந்தஇரணியாட்சனானவன் வருணனாலே சொல்லப்பட்ட யுத்தபூமியிலேஅடிபட்டு விழப்போகிறாயென்கிறவார்த்தையையெண்ணாமல் நாரதமகாரிஷியினிடத்தில் நின்றும், ஸ்ரீஹரியினுடைய கதியைப் பார்க்கவேணுமென்றுமிகவும்துறையாகப் பாதாளத்திலே பிரவேசித்து அவிடத்திலே வாராகரூபியாய்ப் பூமியைத் தம்முடையகோரைப்பல்லினுனியினாலே உயர யெடுக்கப்பட்டும் சிவந்தகாந்தியோடே கூடிக்கொண்டு மிருக்கிற நேத்திரத்தினாலே தன்னுடைய தேஜசுக்களைத்திரஸ்கரிக்கிற அந்தஸ்ரீஹரியைப்பார்த்து காட்டிலேசஞ்சரிக்கின்ற இந்தவராகமானது சலத்திலே சஞ்சரிக்கிறதென்று ஆச்சரியததையுடையவனாய்ச்சிரித்து அந்தவராகரூபியானபகவானைக்குறித்து ஒருவார்த்தை சொன்னான்,

வாராய் அக்கியனே, இந்தப் பூமியானது பிரம்மாவினாலே பாதாளலோகவாசிகளான எங்களுக்குக்கொடுக்கப்பட்டிருக்கிறது, அதைவிட்டுவிடு நான் பார்த்துக்கொண்டிருக்கச்சே இந்தப்பூமியுடனேகூட க்ஷேமமாக நீ போகப்போகிறதில்லையென்று அந்தச்சமுத்திரசலத்தில்நின்றும் வெளிப்புறப்படுகின்ற அந்தஸ்ரீஹரியைச் சுவர்ன வர்னங்களான மயிர்களை யுடைய மச்சியமானது யானையைப் பின்தொடர்ந்தாற்போல் பின்தொடர்ந்துபயங்கரமான கோரைப்பல்லுகளையுடையவனாகி இடிசப்தம்போலே சப்தத்தை யுடைய அந்த இரணியாட்சனானவன் லச்சையில்லாதவர்களாயிருக்கிற துஷ்டர்களுக்குநிந்தாபயமில்லையன்றோ வென்றுசொன்னான். அந்தப்பகவானானவர் விசுவகர்த்தாவானபிரமாவினாலேஸ்தோத்திரம்பண்ணப்பட்டும் தேவர்களாலே புஷ்பங்கள்வருஷிக்கப்பட்டவராய் அந்தசத்துரு பார்த்துக்கொண்டிரு

க்கச்சே பூமியைச் சலத்தின்பேரிலேவைத்துஅந்தப்பூமியினிடத்திலே தம்முடைய ஆதாரசக்தியை ஸ்தாபித்துபின்னேடே அனுவர்த்தித்துக்கொண்டு வருகின்றஅந்தஇர்ணியாக்ஷனேப்பார்த்துமிகவும் கோபத்தையுடையவராய் ஒருவார்த்தைசொன்னர்.

வாராய் அசுரசிரேஷ்டனே நாங்கள் வனசரங்களானமிருகங்களென்று சொன்னது யதார்த்தமேஉன்னைப்போலொத்த நாய்களைத் தேடிக்கொண் ருக்கிறோம்மிருத்தியுவின் பாசத்திலே கட்டப்பட்டிருக்கின்ற உன்னுடைய அமங்கலமானவார்த்தையைச்சூரர்கள்ஙிலாகிக்கமாட்டார்கள். பாதாளலோகவாசிகளான அசுரர்களுடைய நிக்ஷேபமான பூமியை அபகரித்தபடியால் லச்சையில்லாமல் உன்னுடைய கதையினுலே துரத்திவிடப்பட்டவர்களானாலும் யுத்தத்திலே மகாப்பிரயாசப்பட்டு பலவானுகயிருக்கிற உன்னுடனே வயிரத்தை யுண்டாக்கிப்போட்டுஎங்கேபோகப்போகிறோம் நீபாதசாரிகளானஅசுரசேனபதிகளுக்குப்பிரபுவாகவிருந்துயோசனேபண்ணுதவனுபநம்மை அவமானம்பண்ணுகிறுயாதலால் எங்களைச்சங்காரம் பண்ணிப்போட்டுஉன்பந்துக்களுடைய கண்ணீரைத்துடைத்து உன்பிரதிக்கினையைப்பூர்த்திசெய்து கொள்ளென்றுசொல்லுகிற பகவானைப்பார்த்து மகாசர்ப்பமானதுபோல் தீவரமானகோபத்தையடைந்து பெருமூச்சுவிட்டுக் கலங்கின இந்திரியங்களை யுடையவனுகிஅந்த அசுரனனவன் மகாவேகத்துடன் கிட்டப்போய்க் கதையினுலே ஸ்ரீஹரியை அடித்தான். பகவானும் தம்முடையமார்பிலே சத்துருவினுலேவிடப்பட்ட கதையினுடையவேகத்தை யோகியானவன் மிருத்தியுவை லட்சியஞ்செய்யாதுபோல் தள்ளிப்போட்டார், திரும்பவும் அந்தக்கதையையெடுத்து அடிக்கடி சுழற்றிக்கொண்டிருக்கிற அந்தச் சத்துருவை ஸ்ரீஹரியானவர் மிகவுங் கோபத்தை யுடையவராய்க்கொண்டு எதிர்த்தார். அந்த அசுரனனவன் தன்னுடைய கதையினுலே ஸ்ரீஹரியினுடைய வலதுபுருவத்திலே அடித்தான்.

வாரீர்விதுரரே கதாயுதத்திலே மிகவுஞ் சமர்த்தரான ஸ்ரீஹரியானவரும் தம்முடையகதையினுலே சத்துருவினுடைய கதையை மேலேவிழுகிறதற்கு முன்னமே அடித்துப்போட்டார் அந்தஸ்ரீஹரியும் இரணியாட்சனும் இருவரும் மகாபெரியதுகளான கதைகளாலே ஒருத்தரையொருத்தர் சயிக்கவேண்டுமென்கின்ற இச்சைகளினுலே ஒருத்தருக்கொருத்தர் அடித்துக்கொண்டார்கள், இந்தப்பிரகாரம் மகாகுரூரங்களான கதைகளாலே யடிக்கப்பட்டுப் பெருகுகின்றஇரத்தங்களை ஆக்கிராணம் பண்ணுகிறதினுலே மிகவும் விருத்தியடைகின்ற கோபத்தையுடையவர்களாகிஒருத்தரையொருத்தர் சயிக்கவேண்டுமென்கிற இச்சையினுலே விசித்திரங்களான யுத்தமார்க்கங்களை ஆஸ்ரயித்துயுத்தம்பண்ணினர்கள்,

வாரீர்விதுரரே, பூமிநிமித்தமாகச் சண்டைபோடுகின்றஇவர்களுடைய யுத்தத்தைப் பார்க்வேண்டுமென்கிற இச்சையுடையவராய்ப் பிர்மாவானவர் ரிஷிகளாலேசூழப்பட்டு ஆதிவராகமூர்த்தியானஸ்ரீமந்நாராயணரைப்பார்த்துஒருவார்த்தைசொன்னர்,

வாரீர் தேவதேவரே, அடியேனிடத்தில் நின்றும்அடையப்பட்ட வரத்தையுடையவனன இந்த அசுரனனவன் தேவரீருடையதிருவடிகளை அடுத்திருக்கின்ற நிரபராதிகளான தேவர்களுக்கும், பிராமணர்களுக்கும் பசுக்களுக்கும் பயத்தைப்பண்ணி பிராணன்முதலானதுகளை அபகரித்துத் தனக்கு எதிரில்லாதவனுயிருக்கிற இந்தஅசுரனனவன்தனக்கு எதிரியைத் தேடிக்கொண்டு லோகங்களிலே சஞ்சரித்துக்கொண்டிருக்கிறுன், மிகவும் மாயாவியாகியும்,கர்விதனுகியும், எங்குந்தடையில்லாதவனுகியும், மிகவும் துஷ்டனுகியுமிருக்கிறஇந்தஅசுரனைக் கோபத்தினுலே கலங்கியிருக்கிற சர்ப்பத்தை வால்முதலானதைவிளையாட்டுக்குப்பிடித்து இழுக்கிற பாலனனவன்போல விளையாடாமல் அசுராள் விருத்தியை யடைகிறசந்தியாகாலம்வருவதற்கு முன்னேயே இவனைச் சயிக்கவேண்டும் லோகங்களுக்கு விநாசகரமாகியும் அசுராளுக்கு சயத்தைக்கொடுக்கத்தக்கதாகியும் மிகவும் கோரமாகியும்மிருக்கிறசந்தியாகாலமானது கிட்டியிருக்கிறது. இப்போது அபிசித்துவென்று பெயரையுடைய சுபகாலமானதுபோயிற்று,அந்தமுகூர்த்தசேஷத்திலேயே தேவரீருடைய பக்தாளான எங்களுக்கு க்ஷேமத்தின்பொருட்டு ஒருத்தராலேயும் சயிக்கக்கூடாதவனன இந்தச்சத்துருவைச் சீக்கிரமாகச்சங்கரிக்கவேண்டும், தெய்வாதீனமாக இவனுக்கு மிருத்தியுவாக விதிக்கப்பட்ட தேவரீரை இந்த அசுரனனவன் சுவயமாகவே அடைந்தானதலால் இவனைச் சீக்கிரத்திலேயே சங்கரித்து லோகங்களை ஸ்தாபிக்கக்கடவீர்.

## ௰௯வது அத்தியாயம்,

கலிவிருத்தம்.

தேர்ந்தபிர்ம்மா முதலாந்தேவர்களால்
ஆர்ந்துபிரார்த்திக்கு மணிபன்றிருபியாம்
போந்திடும்அரி யாம்புண்ணியன்றன்னல்
காந்திடச்சங் கரித்தல்கழறுவாம்.

பிர்மா முதலானதேவர்களாலே பிரார்த்திக்கப்படுகின்ற வராகரூபியான ஸ்ரீஹரியினுலே இரணியாட்சன் சங்கரிக்கப்பட்டானென்று சொல்லப்படுகின்றது,

மைத்திரேயமகாரிஷியினுடைய வாக்கியம்

வாரீர்விதுரரே, அந்தப்பகவானானவர் பிரமாவினுடைய நிஷ்கபடமாகியும் அமிர்தம்போலேயு மிருக்கின்ற வசனத்தைக் கேட்டுச்சிரித்துப் பிரீதியுடனே கூடிக்கொண்டிருக்கிற கடைக்கண்பார்வையினாலே அந்தவார்த்தையை அங்கீகரித்து எதிரேநிற்பவனாகிச்சஞ்சரித்துக்கொண்டிருக்கிற அந்தச் சத்துருவான அசுரனுடைய கபோலப்பிரதேசத்திலே அடித்தார் அந்த அசுரனானவன் தனதுகதையினாலே பகவானுடைய கதையானது கையில்நின்றும் நழுவிச் சுழன்று விழுந்துபோகும்படி அடித்தது மிகவும் ஆச்சரியகரமாயிழிந்து,அந்த அசுரனானவன் நிராயுதரான ஸ்ரீஹரியை பாதிக்காமல் தர்மத்தை அனுசரித்துக் கொண்டிருந்தான், அப்போது பகவானானவர் தம்முடைய கதை அடிபட்டுப்போனதற்குச் சமஸ்தமானபேர்களுடன்தாமும்-ஆ-ஆ,ஹாரம்பண்ணி அவனுடைய தர்மத்தைக்கொண்டாடி தம்முடைய சக்கரத்தை ஸ்மரித்தார், தட்சணம் மிகவும்பரபரப்புடனே சுவாமியினுடைய திருக்கையில்நின்றது. பிறகு சக்கிராயுதத்தை யுடையவராகி அசுரனென்றுபெயரை யுடைத்தான தம்முடைய பாரிஷத சிரேஷ்டனுடனே யுத்தம்பண்ணுகிற அந்தப் பகவானுடைய பிரபாவத்தை அறியாதபேர்களான தேவர்க்கள் இந்த அசுரனைச் சங்கரிக்கக்கடவீரென்று நாலுபக்கமும்சொல்லிக்கொண்டார்கள அந்தஅசுரனானவன் சக்கிரபாணியாயும் பத்மதளம்போலொத்த நேத்திரங்களை யுடையவரான அந்தஸ்ரீபகவான் எதிரேயிழிக்கிறதைப் பார்த்துக் கோபத்தினாலே கலங்கின இந்திரியங்களை யுடையவனாய்ப் பெருமூச்சுவிட்டுஉதடுகளைக் கடித்துக்கொண்டு மகாபயங்கரங்களான கோரைப்பல்லுகளையுடையஅந்தஅசுரனானவன் நேத்திரங்களினாலே தகித்துப்போடுகிறவன்போல்பார்த்து இந்தத்தப்பலோடேநீமாண்டாயென்றுசொல்லித் தன்னுடைய கதையினாலேஅந்தஸ்ரீஹரியை அடித்தான்.

அப்போது யக்கியவராகமூர்த்தியான அந்தப்பகவானனவர்தம்முடையஇடதுகாலினாலேலீலையாகவேமகாவாயுவேகத்தையுடைய அந்த கதையைப்பிரகரித்துஅவனைப்பார்த்து ஒருவார்த்தைசொன்னார், வாராய்அசுரனே என்னை சயிக்கவேண்டுமென்று இச்சையையுடைய நீஆயுதத்தை யெடுத்துக்கொள்ளென்றுசொல்லப்பட்டவனாய் அந்தஅசுரனானவன் திரும்பவும் அந்தகதையினாலே பகவானை அடித்து மிகவும் அட்டகாசம்பண்ணினான். அப்போது பகவானும் தம்முடையபேரிலே வந்துவிழுகின்ற அந்த கதையைக் கருடனானவர் சர்ப்பத்வதைப் பிடிப்பதுபோல் பிடித்துக்கொண்டார். அப்போது அந்த அசுரனானவன் தன்னுடையபவுரஷம்திரஸ்கரிக்கப்பட்டுக் கர்வ பங்கத்தை யுடையவனாய் அந்த ஸ்ரீஹரியினாலே திரும்பவும் கொடுக்கப்படுகின்ற கதையை கிரகிக்க இச்சியாதவனாய்ச் சொலித்துக்கொண்டிருக்கிற அக்கினிபோலே கவளீகரியாநின்றும், மூன்று சிகைகளையுடையதாகியு மிருக்கிற சூலத்தை ஸ்ரீஹரியின்பொருட்டுப் பிராணனை யுத்தேசித்துப் பிரயோகித்தான் அநதச் சூலத்தைத் தீட்சணமான கூர்மையையுடைய சக்கரத்தினாலே பூர்வத்தில் அமிர்த கலசத்தைக் கொண்டுவருகின்ற கருடன்மீது பிரயோகிக்கப்பட்ட வச்சிராயுதத்தை அமோகமாகப் பண்ணுகைக்குக் கருடனால்விடப்பட்ட ஒருஇறகைஇந்திரனானவன் சேதித்தாற்போல் சேதித்துப் போட்டார் அந்த அசுரனானவன் விருத்தியடைகின்ற கோபத்தை யுடையவனாய் எதிரேவந்து விசாலமாகியும் ஸ்ரீமகா இலட்சுமிக்கு வாசஸ்தானமாகியு மிருக்கிற ஸ்ரீஹரியினுடைய மார்பைமுஷ்டியினாலே பிரகரித்து அந்தர்த் தானத்தை யடைந்தான், பகவானும் மாலையினாலே அடிக்கப்பட்டகஜமானதுபோல்அந்தத்தப்பலைக் கொஞ்சமாகிலும் லட்சியஞ்செய்யாமலிருந்தார். பிற்பாடு அந்த அசுரனானவன் யோகமாயைக்கு ஈசுவரனான ஸ்ரீஅரியினிடத்திலேயனேகபிரகாரமான மாயையைச்செய்ய ஆரம்பித்தான், அதாவதும காவேகத்தையுடைய வாயுக்கள் வீசியும், புழுதிவருஷத்தினாலே அந்தகாரமாகச் செய்தும், கவண்க ளாலேயெறியப்பட்ட கல்லுகளானதுபோல் நாலுதிக்குகளில்நின்றும் விழுந்ததுகள், மகத்தான மின்னல்கள் இடிசப்தங்கள் இதுகளோடே கூடியமேகங்கள், அடிக்கடிமாங்கிசங்கள், கேசங்கள், இரத்தங்கள், மல மூத்திரங்கள், எலும்புகள் இதுகளை வருஷித்து ஆகாசமானது சந்திரசூரியநட்சத்திரங்கள் முதலானதுகள் பிரகாசியாமல் வியாபிக்கப்பட்ட தாச்சுது.

வாரீர் விதுரரே பருவதங்களானதுகள் நானாவிதங்களான ஆயுதங்களை வருஷிக்கிறதாகக் காணப் பட்டதுகள், திகம்பரராளாகியும், சூலத்தையுடையவர்களாகியும், தலைமயிர்களை விரித்துக்கொண்டுமிருக்கிற ராட்சசிகள் காணப்பட்டார்கள். ரதகஜதுரகபதாதிகளுடனே யட்சராட்சசராலே வெட்டு குத்தென்று மிகவும் உக்கிரங்களாகச் சொல்லப்பட்டதுகள். அப்போது சமஸ்த பிரஜைகளும் மிகவும் பயந்தவர்களாய், இந்தப் பிரபஞ்சத்திற்குப் பிரளயகாலந்தான் வந்ததென்று நடுங்கினார்கள். அப்போது பகவானனவர் அசுரமாயைகளை நாசம்பண்ணத் தமக்கு மிகவும் இஷ்டமான சுதரிசனாஸ்திரத்தைப் பிரயோகம்பண்ணினார். அப்போது திதிதேவியானவள் தனது பர்த்தாவினுடைய ஆக்கினையை ஸ்மரித்துக்கொண்டு, சரீரத்தில் நடுக்கமுண்டாய், ஸ்தனத்தில் நின்றும் இரத்தமானது பெருகிற்று அந்த அசுரனன

வன் திரும்பவும் ஸ்ரீஹரியைக்கோபத்தினாலே வச்சிராயுதம் போலத் திடங்களான முஷ்டிகளாலே இந்திரன் விருத்திராசுரனை யடித்தாற்போல அவனுடைய கபோலத்திலேயடித்தனர். விசுவகர்த்தாவான்பகவானாலேஅடிபட்டு நாலுபக்கமும் சுழலாநின்ற சரீரத்தை யுடையவனாகி கண்முன்னைகள் பிதுங்கி, கை, கால், கழுத்து இதுகள் சூர்ணமாய் மகாவாயுவினாலே வேறோடேபிடுங்கப்பட்ட விருட்சமானதுபோல் விழுந்தான், இப்படி பூமியிலேவிழுந்து குரூரமான கோரைப் பல்லுகளால் உதடுகளைக் கடித்துக்கொண்டிருக்கிற அசுரனைப்பார்த்து அங்கேவந்திருந்த பிர்மா முதலானபேர்கள் இப்படிப்பட்டிருக்கிற மரணத்தை யெவன்தான் அடைகுவனென்று கொண்டாடி வியப்பை யடைந்து யோகீசுவரர்களானபேர்கள் மோட்சத்தை யடையவேண்டுமென்கிற இச்சையினாலே யாதொருபகவானையேகாந்தத்திலே தியானம் பண்ணிக்கொண் டிருக்கிறார்களோ அந்தப்பகவானுடைய திருவடியினாலேயேஅடிக்கப்பட்டவனாய் அவருடைய திருமுகமண்டலத்தைப் பார்த்துக்கொண்டேசரீரத்தைவிட்டுவிட்டானன்றோ ஸ்ரீபகவானுடைய பாரிஷதாளா யிருக்கிற இவர்கள் பிராமண சாபத்தினாலே அசுர சன்மத்தையடைந்தார்கள், திரும்பவும் சிறிதுசன்மங்களாலே சாபத்தில் நின்றும் முக்தாளாய் ஸ்ரீவைகுண்ட ஸ்தானத்தையே யடையப்போகிறார்களென்றுசொல்லி அந்த பகவானைப்பார்த்துத் தேவதைகள் தோத்திரம் பண்ணுகிறார்கள். சமஸ்தயக்கியங்களுக்கும் காரணரூபராகியும் பிரபஞ்சத்தின் பரிபாலன காலத்திலே கிரகிக்கப்பட்ட சத்துவமூர்த்தியாகியு மிருக்கிற தேவரீர்பொருட்டு அனேகம் பிரணாமம், மர்மபேதியாயிருக்கிற இந்த அசுரனானவன் அதமாய்ப் போனானே நாங்களும் தேவரீருடைய திருவடிகளிலேபக்தியினாலே மிகவும் சுகிர்தாளானோமென்று பிர்மாமுதலானதேவர்களாலே ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவராய்க் கொண்டுஅளவில்லாத உச்சவத்தை யுடையதான தம்முடைய ஸ்ரீவைகுண்டலோகத்தை யடைந்தார்.

மகாகம்பீரமான பராக்கிரமத்தையுடைய இரணியாட்சனானவன் ஸ்ரீஹரியினாலே கிரீடார்த்தமான மரப்பாவைபோலவே திரஸ்கரிக்கப்பட்ட சரித்திரமானது கேட்கப்பட்ட படிக்கு உமக்குச் சொல்லப்பட்டதென்று மைத்திரேயமகாரிஷி சொன்னபகவானுடையகதையைக்கேட்டு மகாபாகவதரான விதுரரானவர் பரமமானஆனந்தத்தை யடைந்தார்.

வாராய் மகாராஜனே, மிகவும்புண்ணியகரமாகியும், பவித்திரமாகியும்;தனகரமாகியும்,எச்சுகரமாகியும் ஆயுசு இஷ்டங்கள் இதுகளுக்கு ஸ்தானமாகியும் பிராணன் இந்திரியங்கள் இதுகளுக்கு ரட்சிதமாகியும்இருதயத்திலே சௌரியத்தை விருத்திபண்ணாநின்றுமிருக்கிறஇந்த இரணியாட்சவதத்தைக் கேட்கிறபேர்களுக்கு அந்தியகாலத்திலே ஸ்ரீமந்நாராயணனே கதியாகவிருப்பார்.

## ௨௰-வது, அத்தியாயம்.

கலிவிருத்தம்,

வேதமாய்ந்து விளங்கும்விதுரரால்
சூதிலாச்சு முகமயித்திரேயற்கு
ஓதினகியா பகத்தினுயர்ச்சியை
பேதமின்றிப் பிதற்றலுரைசெய்வாம்.

பூர்வம் உபக்கிரமித்துச்சொல்லப்பட்டிருந்த சிருஷ்டியானது திரும்பவும்சொல்லுகைக்கு விதுரராலேமயித்திரேயமகாரிஷிக்கு ஞாபகம் பண்ணப்பட்டதைச்சொல்லப்படுகின்றது.

சவுனகமகாரிஷியினுடையவாக்கியம்.

வாரீர்சூதபுராணிகரே, சுவாயம்புமனுவானவர் பூமியினுடைய பிரதிஷ்டையை அடைந்து ஈசுவரனிடத்திலே லயத்தையடைந்திராநின்ற பிராணிகளைத் திரும்பவும் எந்தவுபாயங்களினாலே சிருஷ்டித்தார். மகாபாகவதராகியும் ஸ்ரீகிருஷ்ணருக்கு ஏகாந்தசுகிர்தராகியும் ஸ்ரீகிருஷ்ணருடையவார்த்தையை அனாதரவுபண்ணினதிருதராஷ்டிரனை மிகவும்அபராதியென்று விட்டுவிட்டவராகியும் சாட்சாத் ஸ்ரீவியாசருக்குச்சமானராகியும்அவருடைய புத்திரராகியும்சர்வபிரகாரத்தினாலேயும் ஸ்ரீகிருஷ்ணனை ஆஸ்ரயித்தவராகியும் மகா பாகவதாளை அனுவர்த்தித்துமிருக்கிற விதுரரானவர் தீர்த்தயாத்திரையைப் பண்ணிக்கொண்டு கங்கா துவாரத்திலே சகல தத்துவங்களையும் அறிந்திருக்கிற மைத்திரேய மகாரிஷியை யெந்த விருத்தாந்தத்தைக்கேட்டார் அதை யெங்களுக்குச் சொல்லவேண்டுமென்று கேட்கிற ரிஷிகளைப் பார்த்துச் சூதர்சொன்னார்,

வாருங்கள் சவுனகாதி மகா ரிஷிகளே, தம்முடைய மாயையினாலேதரிக்கப்பட்ட ஸ்ரீ அரியானவர் பூமியினுடையவுத்தாரணஞ்செய்து அவராலே அடிக்கபபட்டுப்போன இரணியாட்சனையுங்கேட்டு விதுரரானவர்மிகவும்சந்தோஷத்தையுடையவராய்க்கொண்டு மைத்திரேய மகாரிஷியைப்பார்த்துத் திரும்பவும்ஒருவார்த்தைசொன்னார்,

வாரீர் பிர்மரிஷியே பிரஜாபதிகளுக்கும் பதியான அந்தப் பிரம்மாவானவர் பிரதமத்திலே பிரசாசிருஷ்டியிலே மரீசிப்பிரஜாபதி முதலானபேர்களும் சுவாயம்புமனுவும், பிரம்மாவினுடைய ஆக்கினையினாலேபாரியைகளுடனேகூடிக்கொண்டு இந்தப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தார்களா இல்லாவிட்டால் பாரியைகளில்லாமல் சுதந்திராளாகவே சிருஷ்டித்தார்களா யெல்லாரும் ஏக

மாய்ச்சேர்ந்துகொண்டு இந்தப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தார்களா அதைச்சொல்லவேணுமென்று கேட்கிற விதுரனைப்பார்த்துமைத்திரேயமகாரிஷிசொல்லுகிறார்,

வாரீர்விதுரரே, மிகவும் சிந்திக்கக் கூடாதாகியும் ஜீவர்களுடைய அதிர்ஷ்டரூபமாகியும் பிரகிருதிக்கு ஆசிரயமாகியுமிருக்கிற பகவானுடைய குணத்திரயரூபமான பிரகிருதியில்நின்றும் மகத்துவ முண்டாச்சுது, ரஜோ குணத்தைப் பிரதானமாக வுடைய அந்த மகத்துவத்தில்நின்றும் சப்தாதி மூன்றுகுணத்தையுடைய அகங்காரமுண்டாச்சுது, அந்த அகங்காரமானது சப்தாதிவிஷயங்களையும் ஆகாசமுதலான மகா பூதங்களையும், கியானேந்திரியங்களையும், கர்மேந்திரியங்களையும், அதினபிமானதேவர்களையும் சிருஷ்டித்தது இந்திரியங்கள் அகங்காரத்தினுடைய அம்சங்கள் இந்திரியாபிமானிதேவர்களும்,மனதும் சத்துவகுணத்தினுடைய அம்சங்கள் தனித்தனியே இருந்துகொண்டு இந்தப்பிரமாண்டத்தைச்சிருஷ்டித்ததுகள், பரமாத்மாவினுடைய சம்பந்தமில்லாதான அந்தப்பிர்மாண்டகோசமானது சலத்தின்பேரிலே அனேகமாயிரம்வருஷங்கள் மிதந்துகொண்டிருந்தது. பிற்பாடு பகவானான ஈசுவரனானவர் அந்தப் பிரமாண்டத்தையும் பிரவேசித்தார். அந்தப் பிரமாண்டசரீரியான பரமபுருஷருடைய நாபியில்னின்றும்அனேகமாயிரம் சூரியாள்போல மிகவும் தேஜசையுடையதாகியும் சமஸ்தஜீவாளுடையசமுகத்துக்குநிவாசஸ்தானமாகியு மிருக்கிற கமலமான்து உண்டாச்சுது அந்தக் கமலத்திலே பிரம்மா சுவயமாகவேயுண்டானார், அந்தப் பிரமாவானவர் அந்த ஜலத்துக்குள்ளே சயனித்துக்கொண்டிருக்கின்ற பகவானாலே பிரயோகிக்கப் பட்டவராய்க்கொண்டு யதாபூர்வீகமாக இந்தலோகமரியாதைகளை நாமரூபாதி விபாகங்களாலேசிருஷ்டித்தார பிரதமத்திலே அபுத்திபூர்வகமாக தாமிசிரமென்றும் அந்தத்தாமிசிரமென்றும், தமசென்றும், மோகமென்றும், மகாமோகமென்றும், ஐந்து பருவங்களையுடையதான அவித்தையைச்சிருஷ்டித்து அதனிடத்திலே சந்தோஷப்படாதவராய்க்கொண்டு அந்தச்சரீரத்தை விட்டுவிட்டார் அந்தச் சரீரத்தில்நின்றும்யட்சராட்சசாளுண்டாகிப் பசிதாகங்களினாலே பீடிக்கப்பட்டவர்களாய் அந்தப்பிரமாவைப்பட்சித்துப்போடுங்களென்றுசொன்னார்கள் அப்போது பிரம்மாவானவர் மிகவும்பயந்தவராய் அவர்களைப்பார்த்து ஒருவார்த்தைசொன்னார் நீங்கள் என்னைப் பட்சிக்கவேண்டாம் ரட்சிக்கக் கடவீர்கள், எனக்குப் புத்திராளாக வுண்டானவர்களிலே எவாகள் பட்சித்துப்போடுங்களென்று சொன்னார்களோ அவர்கள்யட்சராளாகவும் எவர்கள் இரட்சிக்கவேண்டுமென்று சொன்னார்களோ அவர்கள் ராட்சசாளாகவுமானார்கள், பிரதானமாகச்சிருஷ்டித்ததேவர்கள் அந்தப்பிரம்மாவாலேவிடப்பட்டுப் பகல்ரூபமாகிய அந்தச்சரீரத்தை லீலைபண்ண இச்சையை யுடையவர்களாய்க் கிரகித்தார்கள், அந்தப்பிரம்மாவானவர் தம்முடைய ஜகனப்பிரதேசத்தில்னின்றும் ஸ்திரீகளிடத்திலே ஆசக்தியை யுடையவர்களான அசுரர்களைச்சிருஷ்டித்தார். அந்தஅசுராள்மிகவும்ஆசையையுடையவர்களானபடியினாலே ரதிக்கிரீடையின்பொருட்டு அந்தப்பிரம்மாவை அடைந்தார்கள்பிரம்மாவானவர்லச்சையில்லாதவர்களான அசுரர்களாலே அனுசரிக்கப்பட்டவராய் மிகவுங் கோபத்தையும் பயத்தையும்அடைந்து ஓடிப்போய் வரப்பிரதராயிருக்கிறஸ்ரீ அரியைச் சரணமாகஅடைந்து தேவரீருடைய கடாட்சத்தினாலே பிரஜைகளைச் சிருஷ்டித்துக்கொண்டிருக்கிறேன் பாபிஷ்டாளான இந்தப்பிரஜைகள்ரதிக்கிரீடைபண்ணுகைக்குஎன்னையடைந்து தொந்தரைசெய்கிறார்களென்று விசனப்படுகிற அந்தப்பிரமாவைப் பார்த்துக் கோரமான இந்தச்சரீரத்தை விட்டுவிடுமென்றுபகவானாலே சொல்லப்பட்டவராய் அந்தப் பிரம்மாவானவர் சரீரத்தை விட்டுவிட்டார்,

வாரீர்விதுரரே சமஸ்தமான அசுராளானபேர்கள் சந்தியாகாலரூபமாயிருக்கிற அந்தப் பிரம்மாவினுடைய சரீரத்தைச் சகலாபரணபூஷிதைகளான ஸ்திரீயாக வெண்ணி அந்தச்சரீரத்தை நூபுரங்களால்மிகவும்மோசத்தையடைந்து இந்தப்பிரகாரங் கேட்டார்கள்,

வாராய் வாழைமரம்போன்ற துடைகளை யுடையவளே, நீ-யார்-ஆருடையபெண் இவ்விடத்திலேஉனக்கென்னகாரியம் உன்னுடையரூபமாகிற விலையில்லாதவஸ்துவினாலே பாக்கியவீனாளான எங்களைமிகவும்பாதிக்கிறாய் உன்னுடைய ஜாதிகுல முதலானதைக்கேட்கிறதினாலே பிரயோசனமென்ன உன்னுடைய பார்வையினாலே எங்களுடைய மனதை யலையச்செய்கிறாய் கையினாலேஅடிக்கடி யெழும்பிவிழுகின்ற பந்தையடிக்கின்றஉன்னுடைய பாதபத்மமானது ஓரிடத்திலேஸ்திரமாகஇருக்கவில்லை மிகவும் பெரியதுகளாயிருக்கிறஸ்தனங்களையுடைய பாரத்தினாலே பயப்படுகின்ற உன்னுடைய இடையானது இளப்பையடைகிறது, உனது கடைக்கண் பார்வையானது மகா ஆலசியத்தையுடையதாகவிருக்கிறது. சோபனமானமயிர்களுடைய சமுகமானது மிகவும்நிர்மலமாக விளங்குகிறதென்று அந்தச் சந்தியாகாலமாகிறஸ்திரீக்கு சூரியனே பந்தாகவும், மேகங்களுடையபிரிவை இடையாகவும், நட்சத்திரங்களுடைய பிரகாசத்தைக் கடைக்கண் பார்வையாகவும், அந்தகாரத்தை அவளுடைய கேசங்களாகவும், மூடபுத்தியையுடைய அந்த அசுராளானபேர்கள் எண்ணிக் கிரகித்தார்கள், பிற்பாடு அந்தப் பிரம்மாவானவர் கம்பீரமான அபிப்பி

ராயத்தையுடையவராய்ச் சிரித்துத் தம்முடைய சரீரத்தைத்தாமே ஆக்கிராணம்பண்ணிக்கொண்டு சௌந்தரியத்தினாலேகெந்தருவாள் அப்சரசுக்களுடைய கூட்டங்களைச்சிருஷ்டித்தார், பிற்பாடுமிகவும் காந்தியையுடையதாயும் நீலரூபமாயுமிருக்கிற அந்தச் சரீரத்தையும் விட்டுவிட்டார். அதைவிசுவாவசுமுதலான கந்தருவாள் பிரீதியினாலேகிரகித்தார்கள். பின்னையும் அந்தப்பிரம்மாவானவர் தம்முடையஆலசியத்தினாலேபூதபிசாசங்களைச்சிருஷ்டித்துத் திகம்பராளாய் மயிர்களைவிரித்துக்கொண்டிருக்கிற அவர்களைப்பார்த்துக் கண்களை மூடிக்கொண்டார். அந்தப்பூதபிசாசங்களானதுகள் பிர்மாவினாலே விடப்பட்டும் சிவனையென்றும் பெயரையுடையதான சரீரத்தையடைந்தார்கள், இந்திரியங்களுக்குத் துர்ப்பலமானசரீரத்தை நித்திரையென்று சொல்லுவார்கள். பூதகணங்களானதுகள் இந்திரியவாட்டத்தினாலே அசுசியாயிருக்கிறபேர்களைப்பிரமிக்கப்பண்ணுகிறதுகள். அந்தப்பூரணத்தை வெறியுள்ளதென்றும்சொல்லுவார்கள் பிறகு பிரம்மாவானவர் அப்பிரத்தியட்சமாக அன்னத்தைப்புசிக்கிற சாத்திய கணங்களையும் பிதுர்கணங்களையும் சிருஷ்டித்தார் கர்மசிலாளானபேர்கள் சாத்தியாள்பொருட்டும் பிதுர்கள்பொருட்டும் சிரத்தையாகஅவ்வியகவ்வியங்களைக்கொடுக்கிறார்கள். பிறகு பிர்மாவானவர் அந்தர்த்தானசக்தியினாலேசித்தர்களையும், வித்தியாதரர்களையும்சிருஷ்டித்து ஆச்சரியகரமான அந்தர்த்தானமென்று பெயரையுடையதானசரீரத்தை அவர்களுக்குக்கொடுத்துத் தம்முடைய பிரதிபிம்பத்தில்நின்றும்கின்னரர்களையும் கிம்புருடர்களையுஞ்சிருஷ்டித்தார். அந்தக் கின்னரர்கிம்புருடரானவர்கள் ஸ்திரியும்புருடரூபமாயிருந்துகொண்டு அருணோதயகாலத்திலே அந்தப் பிரம்மாவையே கானம்பண்ணிக்கொண்டு-பிரதிபிம்பரூபமான அந்தச்சரீரத்தையே கிரகித்தார்கள்.

வாரீர்விதுரரே, அவருடையகேசங்களில்நின்றும் அசியென்னப்பட்டும்விசாலமானபடத்தினாலேபெருத்தமுத்துகளையுடையதுகளாகியும், மிகவும்வேகத்தையுடையதுகளாகியும், மகாகோபத்தை யுடையதுகளாகியுமிருக்கிற சர்ப்பங்களுண்டாச்சுதுகள் பிறகு தம்முடையகுணத்தினாலேயே லோககர்த்தாக்களான மனுக்களைச் சிருஷ்டித்து அவர்கள்பொருட்டு புருஷரூபமான தம்முடைய சரீரத்தைக் கொடுத்தார். அப்போது பூர்வத்திலேசிருஷ்டிக்கப்பட்டபெயர்கள் அந்தமனுக்களைப்பார்த்துப் பிரம்மாவைக்கொண்டாடி இனி அக்கினிஹோத்திரமுதலான கிரியைகளினாலே நாங்களெல்லோரும் அவிற்பாகமுதலானதைப் புசித்துக்கொண்டிருப்போமென்றுகொண்டாடினார்கள், பின்னையும் அந்தப் பிரம்மாவானவர் சுவசமான இந்திரியங்களையுடையவராய்த்தபசுடனேயும், உபாசனையுடனேயும், ஆசனமுதலானயோகத்துடனேயும், வைராக்கியசம்பத்துடனேயுங் கூடினரிஷிகளானபுத்திராளைச் சிருஷ்டித்துத் தம்முடையதேகத்தின் அம்சமானசமாதியும், யோகமும், ஐசுவரியமும், தபசும், வித்தையும், வைராக்கியமும், இதுகளை அந்தரிஷிகளின்பொருட்டு அம்சமாய்க்கொடுத்தார்.

## உக-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

கர்த்தமப்பிர ஜாபதிசுண்ணிய
சுத்தன்செய்திடுஞ் சேர்விற்றபசுக்கும்
கர்த்தன்மாமகிழ்ச்சி கொண்டுசுவாயம்பு
வித்தகன்பெண் விவாகம்விளம்புவாம்,

கர்த்தமப்பிரஜாபதியினுடைய தபசுக்கும் உபாசனைக்கும்சந்தோஷித்து ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் அந்தகர்த்தமப்பிரஜாபதிக்கு சுவாயம்புமனுபெண் விவாகஉடனேயானது சொல்லப்படுகின்றது,

இப்படிசொல்லுகிற மைத்ரேயமகா ரிஷியைப்பார்த்து விதுரர் சொல்லுகிறார்,

வாரீர்பிரம்மரிஷியே, அந்தச்சுவாயம்புமனுவினுடையபுத்திராளான பிரியவிரதனும் உத்தானபாதனும் தர்மத்தையும்சப்ததீவுகளோடே கூடிக்கொண்டிருக்கிறபூமியையும் ரட்சித்தார்களென்றும் அவருடையபெண் கர்த்தமப் பிரஜாபதியினுடைய பத்தினியென்கிறதாய் உம்மாலே சொல்லப்பட்டாள். அந்தக் கர்த்தமப்பிரஜாபதியானவர் இயமநியமாதி யோகங்களுடனே கூடிக்கொண்டிருக்கிற அந்தப்பத்தினியிடத்திலே எத்தனை புத்திராளைப்பெற்றார், அதையும்பிரம்மபுத்திராளான ருசிப்பிரஜாபதியும், தட்சப்பிரஜாபதியும், மனுவினுடையபுத்திரிகளான ஆவூதிபிரசூதியென்கிற பாரியைகளிடத்தில் பிரஜைகளை எப்படிசிருஷ்டிபண்ணினார்கள் அதையுஞ் சொல்லவேண்டுமென்று பிரசினம்பண்ணுகின்ற விதுரரைப்பார்த்து மைத்திரேய மகாரிஷியானவர் சொல்லுகிறார்,

வாரீர்விதுரரே, கர்த்தமப்பிரஜாபதியானவர் பிரஜைகளைச் சிருஷ்டிபண்ணச்சொல்லி பிரம்மாவினாலே ஆக்கியாபிக்கப்பட்டவராய்ச் சரஸ்வதிநதிதீரத்திலேபதினாயிரம்வருஷம் தவசுபண்ணிப பக்தாளுக்குச்சர்வாபீஷ்டத்தையும் கொடுக்கின்ற ஸ்ரீஅரியைப்பக்தியினாலே ஆராதித்துக்கொண்டிருந்தார். அப்போது அவருடையதவத்திற்குமெச்சி வேதாந்தங்களாலே அறியத்தக்கதானபிரம்மஸ்வரூபத்தைக்காண்பித்தார், அந்தக்கர்த்தமப்பிரஜாபதியானவர் ஸ்ரீமகாலட்சுமிசமேதராய்க் கருடரூடராய் ஆகாசத்திலே விளங்குகின்ற பகவானைப் பார்த்து மிகவுஞ்சந்தோஷத்தையுடையவராய் சாஷ்டாங்கமாகப்

பிரணமம் அஞ்சலிபத்தம் பண்ணிக்கொண்டுஸ்தோத்திரம் பண்ணினர்,

கர்த்தமப்பிரஜாபதியினுடைய
ஸ்தோத்திரம்,

வாரீர்பிரபுவே, சமஸ்தஜீவாத்துமாக்களுக்கும்ஆசாரியரானயோகீஸ்வரராளாலுங் காணவொண்ணாததேவரீருடைய தரிசனத்தினாலே என்னுடையநேத்திரங்கள் சபலமாச்சுது சம்சாரமாகிற சமுத்திரத்துக்குத் தெப்பமாகவிருக்கின்ற தேவரீருடைய திருவடித்தாமரைகளையுபாசிக்கிறவர்களுக்கு இஷ்டங்களைக்கொடுக்கிறவராலும் நான் கிரகஸ்தாசிரமத்திலே காமதேனுவைப்போல்தர்மார்த்தகாமங்களைக் கற்கின்ற சீலத்தையுடைய பாரியை விவாகம்பண்ணவேண்டுமென்றும்விர்த்துஷ்டமான இருதயத்தை யுடையவனாய்ச் சர்வா பீஷ்டங்களைக் கொடுக்கிறதற்கு கற்பகவிருட்சம்போ லிருக்கின்ற தேவரீருடைய திருவடியையுபாசிக்கிறேன், சகலலோகநாயகரான தேவரீருடைய வாக்காகிற மூக்காங்கயிற்றிலே எருதாகிய இந்தஜனமானது கட்டப்பட் டிருக்கிறபடியினாலே கர்மமயமான தேவரீருடைய ஆக்கினையை பரிபாலனம்பண்ணுகிறநிமித்தமாக பாரியையை இச்சிக்கிறேன் காமத்தினாலே திரஸ்கரிக்கப் படுகின்றபேர்க ளாகியும், தேவரீரது கலியாண குணங்களையுடைய கீர்த்தனமாகிறமதுரமான அமிர்தத்தினாலேபசிதாகமுதலானதுகளைப் போக்கடித்தவர்களாகியுமிருக்கிற பாகவதாளுடைய ஆயுசைக் காலரூபமான சக்கிரமானது அபகரிக்கமாட்டாது. சிலந்திப்பூச்சியானது வேறேருசாதனத்தைஅபேட்சியாமல் நூலை சிருஷ்டிப்பதுபோல நிர்பேட்சராய்ப் பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டித் திதிசங்காரங்களைப்பண்ணுகிறீர்,ஒருக்கால் பூஜிக்தபுருஷரிடத்திலேவெகு அபீஷ்டங்களைவருஷித்துப் புத்திமுக்திகளைக்கொடுக்கப்பட்ட தேவரீரைச் சரணமாக அடைகிறேனென்று அந்த கர்த்தமப்பிரஜாபதியினாலே மிகவும்ஸ்தோத்திரம்பண்ணப்பட்டுப் பத்மநாபரானவர் மந்தஹாசங்களுடனே ஆனந்தகரமானவாக்கினாலே அந்தக் கர்த்தமப் பிரஜாபதியைப் பார்த்து ஒருவார்த்தை சொன்னர்,

வாரீர் கர்த்தமப்பிரஜாபதியே என்னுடையஆராதனமானது ஒருக்காலும்வியர்த்தமாப் போகிறதில்லை அதிலேயும் என்னிடத்திலே சமர்ப்பிக்கப்பட்ட சித்தத்தையுடையபேர்களுக்குள்ளே உம்மைப்போ லொத்தவர்களிடங்களிலே சர்வப்பிரகாரத்தினாலேயும் வியர்த்தமாய்ப்போகிறதில்லை,'பிரம்மாவினுடையபுத்திரனாகியும்சார்வபூமனாகியும் பிரசித்தமான சதாசாரலட்சணங்களையுடையவனாகியுமிருக்கிறமனுவானவன் சப்தசமுத்திரங்களுடனே கூடிக்கொண்டிருக்கிற இந்தப்பூமியைரட்சித்துக்கொண்டிருக்கிறான்.சகலதருமங்களையும்அறிந்தஅந்தமனுவானவன் சதரூபையென்கிற பாரியுடனேகூடஉம்மைப்பார்க்கவேண்டுமென்கிற இச்சையை யுடையவனாய் நாளையன்றைக்கு இவிடத்திலே வரப்போகிறான் கறுத்தகடைக்கண்களையுடையவர்களாயும் யௌவனவயதும் நல்லசீலமும் நல்லகுணங்களுடனே யோக்கியமானபர்த்தாவைக் கோரிக்கொண்டி ருக்கிற தன்னுடையபெண்ணை அனுரூபரான உமக்குக் கொடுக்கப்போகிறான், அந்தஸ்திரீயினிடத்திலேஒன்பதுபிரகாரமாகவைக்கப்போகிற உம்முடையவீரியத்திலே பிறவாநின்றகன்னிகைகளிடத்தில் ரிஷீஸ்வரர்களும் சீக்கிரமாகப்புத்திரர்களையுண்டாக்கப்போகிறார்கள் நீரும் என்னுடைய ஆக்கினையைநன்றாகப்பரிபாலனம்பண்ணிப் பரிசுத்தமான இருதயத்தையுடையவனாய் என்னையே அடையப்போகிறீர் கிரகஸ்தாசிரமத்திலே சகலபிராணிகளிடத்திலேயும் கிருபையைச்செய்து சன்னியாச ஆசிரமத்திலேஆத்துமக்கியானத்தை யுடையவனாய்ச் சகலசகத்துடனே கூடியஎன்னை உம்முடைய ஆத்துமாவிலே பார்க்கப்போகிறீர் நானும் உம்முடையவீரியத்துடனே உமது பாரியையான தேவஹூதியினிடத்திலே அவதாரம் பண்ணித் தத்துவத்தைவெளிப்படுத்தப் போகிறேனென்று சொல்லி அந்தப்பகவானனவர் ஸ்ரீவைகுந்தத்தைக்குறித்து எழுந்தருளினர்,

பிற்பாடு அந்தப்பகவான் அருளிச்செய்தபடிகர்த்தமப்பிரஜாபதியானவர் அந்த மனுவரவுக்காக அந்தப்பிந்துசரசிலேயே வாசம்பண்ணிக்கொண்டிருந்தார். அப்போதுமனுவானவர் சுவர்னத்தினாலேஅலங்கரிக்கப்பட்டரதத்தின்பேரிலேயேறிக்கொண்டு தன்னுடையபெண்ணையும் பாரியையும் அந்தரதத்தின்பேரிலே வைத்துக்கொண்டு பெண்ணுக்குவரன்தேடுகிற நிமித்தமாய்ப்பூமியெல்லாம் சஞ்சாரம்பண்ணிச் சாந்தநிதியானஅந்தக் கர்த்தமப்பிரஜாபதியினுடைய ஆசிரமத்தை வந்தடைந்தார். பிரபன்னரான கர்த்தமப்பிரஜாபதியி னிடத்திலே மிகவுங்கிருபையுடனேகூடிக்கொண்டிருக்கிற பகவானுடைய நேத்திரத்தில்நின்றும் ஆனந்தபாஷ்பப் பிந்துக்கள்விழுந்தபடியால் அந்த ஆசிரமத்திலேயிருக்கிறசரசானது பிந்துசரசென்றுபிரசித்தமாயும் சரஸ்வதிநதியால் சூழப்பட்டும் புண்ணிய கரமாகியும் மகா குளிர்ச்சியுடனேகூடி அமிர்தத்திற்குச் சமானமான செல்வத்தையுடைத்தாகியும் மகாரிஷிகளுடைய சமூகத்தினாலேசேவிக்கப்பட்டும் மதுரமாகச் சப்திக்கிற மிருகங்களாலும்பட்சிகளாலும் ஷட்ருதுவிலேயும் உண்டாகாநின்ற பலங்கள் புஷ்பங்களினாலே சம்பூர்ணமான விருட்சங்கள் கொடிகள் இதுகளால் சம்பூர்ணமான வனபங்கியி னுடைய காந்திகளுடனே கூடிக்கொண்டும் மதித்திருக்கிறபட்சிகள் வண்டுகளுடைய விநோதத்தையும், மயில்

களில் நாட்டிய லீலைகளை யுடைய தாகியும், ஒன்றுக்கொன்று அழைத்துக்கொள்ளுகின்றதானவிதமாயியும் மனோக்கியமாயும் விருக்ஷங்களையுடையதாகியுமிருக்கிற ஆசிரமத்திலே ஆதிராஜனான அந்தச்சுவாயம்புமனுவானவன் தன்னுடையபரிஜனங்களுடனே பிரவேசித்து அந்தஆசிரமத்தின் தவசிலேவெகுகாலம்உக்கிரமானயோகத்தையுடையவராயும், ஸ்ரீபகவானுடைய பிரீதிக்குப் பாத்திராராகியும், மகாதேஜஜசையுடையவராகியும், பத்மதளம்போலொத்த நேத்திரங்களையுடையவராகியும், ஜடாதாரியாகியும், மரவுரியைவஸ்திரமாக வுடையவராகியும், அழுக்குமூடிக்கொண்டிருக்கிற மகாரத்தினம்போல்மலினராகியும், பிர்ம்சாரியாகியும், அக்கினியில் ஹோமஞ்செய்கிறவராகியுமிருக்கிற அந்தமகாரிஷியினுடைய சமீபத்தில்போய்ச் சாஷ்டாங்கமாகப்பிரணமஞ்செய்துநிற்கிற அந்தமனுவை ஆசிர்வாதங்களாலேயும்யோக்கியமான பூசையினாலேயும் உபசரித்து மவுனத்துடனே கூடிக்கொண்டுமிருக்கிற அந்தமனுவைக்குறித்து ஸ்ரீபகவானுடைய ஆக்கினையை ஸ்மரித்துக்கொண்டு மதுரமானவாக்கினாலேயிந்தப் பிரகாரஞ்சொன்னர்.

கர்த்தமப்பிரஜாபதியினுடைய வாக்கியம்.

வர்ராய்நரதேவனே, சாதுக்களைரட்சிக்கிறதற்கும்துஷ்டர்களைச்சங்கரிக்கும்பொருட்டும், சஞ்சரிக்கிறஉன்னுடையபாவமான சக்தியானது சூரியன், சந்திரன், அக்கினி, இந்திரன்வாயுயமகர்மன்வருணன் இவர்களுடையரூபத்தை அந்தந்தக்காரியகாலத்திலேதரிக்கிற அப்படிப்பட்டமகிமையையுடையஸ்ரீஅரியானஉம்மைப்பிரணமம் பண்ணுகிறேன், ஜயசீலமாகியும் நவரத்தினங்களுடையசமூகங்களுடனே கூடிக்கொண்டு மிருக்கிற ரதத்தின்பேரிலேறிக்கொண்டு மேகத்தொளிபோல் கம்பிரமாகச்சப்திக்கின்ற நாணொசையினாலே சத்துருக்களைபயப்படச்செய்துகொண்டு சூரியனனவன்போல் பூசஞ்சாரம் பண்ணமல்போனையோனல்அப்போதேபகவானலே சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற சமஸ்தமானவர்ணசிரமமரியாதைகளானதுகளும் விருத்தியடையும் நீ இந்தலோகமும்சோராளாலே ஆக்கிரமிக்கப்பட்டதாய்க்கொண்டுநாசத்தையடைந்துபோகும் அப்படிப்பட்டநீர் என்னநிமித்தமாக இங்கேவந்திரோ அந்தப்பிரயோசனத்தைச்சொல்லும் நாம்அங்கீகரிக்கிறோம்,

---

## உ௨-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

அந்தமாமனுவானே னரியினல்
சிந்தைகூர்ந்து செப்பும்படிக்கேதான்
பந்தமர்ம்தேவ வூதியென்னப்பட்ட
சொந்தபெண்ணைக் கொடுத்ததுரைப்பதாம்.

அந்தமனுவானவன் பகவானலே ஆக்கியாபிக்கப்பட்டபடி தேவவூதியென்னப்பட்ட தன்னுடையபெண்ணைக்கர்த்தமப்பிரஜாபதிக்குக் கொடுத்தானென்று சொல்லப்படுகின்றது,

மைத்திரேயர்வாக்கியம்,

வாரீர்விதுரரே, இந்தப்பிரகாரம் சமஸ்தமான குணகர்மங்களையுடைய அந்தமனுவானவன் மிகவும் லச்சையையுடையவன்போல் நிவிர்த்திமார்க்கபரரான அந்தரிஷியைப்பார்த்து ஒருவார்த்தைசொன்னர்,

வாரீர் பிர்மரிஷியே, வேதமூர்த்தியாகியும் பிர்மரூபியாகியுமிருக்கிற பகவானனவர் சகலவேதங்களையும் பிரகாசிப்பித்துப் பரிபாலனம்பண்ணுவிக்கவேண்டித் தம்முடையமுகத்தில்நின்றும் தவசு-வித்தை-யோகம்-இதுகளுடனே கூடினவர்களாகியும் ஆலசிய மில்லாதவர்களாகியுமிருக்கிற பிராமணளான உங்களைச்சிருஷ்டித்து அவர்களைரட்சிக்கும் பொருட்டுத் தம்முடைய ஆயிரங்கைகளில்நின்றும் எங்களைச்சிருஷ்டித்தார் பிராமணஜாதியானது பிர்மாவுக்கிருதயமும், க்ஷத்திரியஜாதி பிர்மாவினுடைய அங்கமாகவும் சொல்லப்படுகிறதுகள் பிராமணசாதியும் க்ஷத்திரியஜாதியும் ஒருவர்க்கொருவர்ரட்சித்துக்கொண்டிருக்கிறார்கள் பகவானனவர் சர்வசுவரூபியாயிருந்தாலும் நிர்விகாரராயிருந்துசமஸ்தத்தையும் ரட்சிக்கிறார்,

வாரீர்மகாரிஷியே, நீர்பிரீதியினலேரட்சிக்கவேண்டுமென்கிற இச்சையையுடையவராய் எனக்குச்சகலதர்மத்தைச்சொல்லி உம்முடைய சத்தரிசதனத்தினலே என்னுடையசம்சயங்களெல்லாம் சேதிக்கப்பட்டுப் போச்சுதுகள், மனோநிச்சயமில்லாதபேர்களுக்குக் காட்சிகொடாதபகவானனவர் என்னலே காணப்பட்டு மங்களகரமானதேவரீருடைய வசனங்கள் என்னுடையகர்னரந்திரங்களாலே கிரகிக்கப்பட்டதுகள்,

ஆனலும்தீனனகியிருக்கிற என்னுடைய விக்கியாபனத்தைக் கேள்விசெய்கைக்கு யோக்கியராயிருக்கிறீர்என்னுடையபுத்திரியாகிய இந்தக்கன்னியானவள்யௌவனவயதும் சதாசாரமும் கலியாணகுணங்கள் இதுமுதலானதுகளுடனே கூடிக்கொண்டிருக்கிற பர்த்தாவைக்கோருகிற இந்தக்கன்னிகையானவள் உம்முடையசீலம்கியானம் - ரூபம்-வயது - கலியாணகுணங்கள் இதுகளைநாரதமகாரிஷியினிடத்தில் நின்றும் கேட்டு அன்றுமுதல் உம்மிடத்திலேயே மிகவும் ஆசக்தியை யுடையவளாகவிருக்கிறள் சர்வப்பிரகாரத்தினலேயும் கிரகஸ்தாசிரமதர்மங்களுக்கு யோக்கியதையாகியிருக்கிறஇந்தக் கன்னிகையை அங்கீகரிக்க வேண்டும், நிஷ்காமனு

ருக்கிறவனுக்கும் தனக்குத்தானே பிராப்தமானவிஷயத்தைத் திரஸ்கரிக்கிறது உசிதமல்ல ஆசக்தனாயிருக்கிறவனுக்குக்கேட்கவேண்டியதில்லை. புருஷனானவன் சுவயமாகவந்து கொடுக்கிறோமென்கிறதாதாவை யனாதரவுபண்ணி லுத்தனைப்போய் யாசிக்கிறானே அவனுடையபிரசித்தமான கீர்த்தியானது க்ஷீணித்துப்போகும்,

வாரீர் வித்துவானே, நான்உம்மைவிவாகார்த்தமாக யத்தனம்பண்ணிக்கொண் டிருக்கிறவராகக் கேள்விப்பட்டிருக்கிறேன், பிர்மசரியத்துக்குமுடிவையுடையவரான நீர் என்னாலேகொடுக்கப்படுகின்ற இந்தக்கன்னிகையை யங்கீகரிக்கவேண்டுமென்றுவிக்கியாபனம் பண்ணுகின்றசுவாயம்புமனுவைப்பார்த்துக் கர்த்தமப்பிரஜாபதிஒருவார்த்தை சொல்லுகிறார், வாராய்மனுவே, நான் விவாகம்பண்ணிக்கொள்ள வேண்டுமென்றுகோரியிருக்கிறதுயதார்த்தமே, உன்னுடைய புத்திரியானஇந்தக் கன்னிகையும் என்னிடத்திலேயேஆசக்தியையுடையவளானபடியினாலே மற்றஒருவனுக்கும்கொடுக்கிறோமென்றுபிரதிக்கினை பண்ணப்பட்டவளன்று. ஆகையினாலேஎங்களிருவருக்கும் முக்கியமானஇந்தவிவாகமானதுமிகவும் யோக்கியமாகவிருக்கிறது,

வாராய்ராஜனே; என்னுடைய புத்திரியான இந்தக் கன்னிகையினுடைய விவாகத்தினால் உன்னுடைய மனோரதமானது சபலமாகக்கடவது தன்னுடையதேககாந்தியினாலே பூஷணங்களுடைய காந்தியைத்திரஸ்கரிக்கின்றஇந்தப்பெண்ணை எவன்தான்ஆதரியாமற் போவன். உப்பரிகையின்பேரிலே சதங்கைகள்சப்திக்கப்பந்தாண்டிக்கொண்டிருக்கிறஅந்தப்பந்திலேயேசுழன்றுக்கொண்டிருக்கிற கண்களையுடையவளான இவளைப்பார்த்து விசுவாவசு வென்கிறகந்தருவனாகிறவன் மோகத்தினாலே மூடமானமனதையுடையவனாய்த் தன்னுடையவிமானத்தில் நின்றும் விழுந்துவிட்டானன்றோ ஸ்ரீமகாலட்சுமியினுடைய சரணசேவை பண்ணாதவர்களாலேபார்க்கிறதற்கு யோக்கியதையா யரிதானவளாகியும் உத்தானபாதனுடையதங்கையாகியும்சுவயமாகவே வரிக்கிறவாகியுமிருக்கிற இந்தஸ்திரீயை எவன்தான்கிரகியாதேபோவன் ஆகையினாலே பதிவிரதையானஇவளை யங்கீகரிக்கிறேன்இந்தஸ்திரீயானவள் என்னுடையவீரியத்தைபரிக்கிரமட்டுக்கும் கிரகஸ்ததர்மங்களை யனுட்டானம்பண்ணித் தேவருணம் பிதுருணம் பூதருணங்களைத்தீர்த்துப் பிற்பாடுபரமஹம்சாளான யோகிகளுக்கும் அரிதாகியு பகவானாலே சொல்லப்பட்டிருக்கிறசந்நியாசத்தை அடைவேனென்றுசொல்லிப்போட்டு மவுனத்தையடைந்தவராய்ப் புத்தியினாலேபத்மநாபனைத்தியானம் பண்ணிக்கொண்டுஅந்தத்தேவஹூதியினுடையமனதை ஆசையையுடையதாகப் பண்ணினார்.

பிற்பாடு அந்தமனுவானவன் தன்னுடையபாரியையான சதரூபியினுடைய அபிப்பிராயத்தையும் பெண்ணான தேவஹூதியினுடைய அபிப்பிரா த்தையும் அறிந்து சந்தோஷத்தையுடையவனாய்ச்சகலகுணபரிபூரணரான அந்தக்கர்த்தமப் பிரஜாபதியின் பொருட்டுஅந்தக்கன்னியைவிவாகம் பண்ணிக்கொடுத்தான் மகானுபாவையான அந்தச்சதரூபையானவள் விவாககாலத்திலே கொடுக்கத்தக்கதுகளான மகாவிலைபெற்றபூஷணங்கள் வஸ்திரங்கள் கிரகோபகரணங்கள் இதுகளைப்பிரீதியினாலேஅந்தத் தம்பதிகளுக்குக்கொடுத்தாள் அந்தமனுவானவன் அந்தப்பெண்ணைக் கைகளினாலேகட்டிக்கொண்டு விசனந்தீர்ந்தவனாய் அந்தக்கர்த்தமப் பிரஜாபதிகையிலே அனுக்ஞைவாங்கிக்கொண்டு தன்னுடையபரிவார சனங்களுடனே கூடபாரியைசமேதனாய ரதத்தின்பேரிலே யேறிக்கொண்டு தன்னுடையபட்டணத்தைக்குறித்துப் புரப்பட்டு வருகிறபோது அந்தசரஸ்வதிநதியினுடைய விரண்டுகரைகளிலேயும் சதமாதிகுணங்களை யுடையவர்களான ரிஷியீஸ்வராளுடைய ஆசிரமங்களைப்பார்த்துக்கொண்டு வருகிற ராஜாவைப்பார்த்துப் பிரஜைகள்மிகவும் சந்துர்ஷ்டாளாய் நிர்த்தகீதவாத்தியங்களுடனேகூட எதிர்கொண்டார்கள்.

மகாவிபவத்துடனேபெறிகிஷ்மதியென்றுபெயரையுடையதான தன்னுடைய பட்டணத்திற் பிரவேசித்துஆதியாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதிதெய்வீகம் என்னப்பட்டதாபத்திரயத்தையும் நாசம்பண்ணத்தக்கின கிரகத்திலே பிரவேசித்துத் தன்னுடைய பாரியைபிரஜைகள்இவர்களுடனே தர்மார்த்தங்களுக்கு விரோதமில்லாமலும் அருணோதய காலங்களிலே ஸ்திரீகளுடனேகூடிக்கொண்டிருக்கிற கந்தர்வாளாலேகானம்பண்ணப்பட்டபிரசித்தமானகீர்த்தியையுடையவனாய்நித்திரையை விட்டுநீங்கி யிருதயத்திலேஸ்ரீஹரியினுடையகதைகளைக்கேட்டுத்தியானஞ்செய்துகொண்டும் துர்லபங்களானபோகங்களை யுண்டுபண்ணுகிறதிலேமிகவும்சமர்த்தனாகியும்பகவத் பரனாகியும் தியானயோகத்தை யுடையவனாகியுமிருக்கிற அந்தச்சுவாயம்புமனுவைப் போகங்களானதுகள் ஒரு காரணத்தினாலேயும் திரஸ்கரிக்கச் சமர்த்தங்களாகாமற் போனபடியினாலே அந்தமனுவானவன் ஸ்ரீவாசுதேவருடைய தியானம்முதலானதுகளாலே கரசரணாதி அவஸ்தைகளையும் சத்வமுதலான குணங்களையும் திரஸ்கரித்து எழுபத்தொரு சதுர்யுகரூபமான தன்னுடையமனுவந்தரத்தைப் போக்கினான்,

வாரீர் விதுரரே அந்தசுவாயம்புமனுவானவன் ரிஷிகளாலே கேட்கப்பட்டு நித்தியமாய்ச் சமஸ்த பிராணிகளுக்கும் இதத்தைக்கோரினவனாய்த் தன்னாலேபண்ணப்பட்ட ஸ்மிருதியிலே மனுஷ்யாளுக்கும். பிராமணாதி

வர்ணங்களுக்கும்ஆச்ரமங்களுக்கும் சுபகரங்களாகியும் நானுவிதங்களாகியுமிருக்கிற தர்மங்களைச் சொன்னவனுகியும் ஆதிராஜனுகியும் கீர்த்திக்கத்தக்கவனுகியுமிருக்கிறஅந்தமனுவினுடைய ஆச்சரியகரமான இந்தச்சரித்திரமானது உமக்குச்சொல்லப்பட்டது அவனுடைய புத்திரியான தேவஹூதியினுடைய சந்ததியைக் கேட்கக்கடவீர்.

## உங-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

காதல்கொள்கர்த் தமப்பிரஜாபதி
ஏதமில்தேவ ஹூதியிருவரின்
நீதமாந்தப யோகநிர்மித்ததும்
லீவிம்லீலைக ளுற்றதுமோதுவாய்

அந்தக்கர்த்தமப்பிரஜாபதி தேவஹூதிஇருவருடைய தபோயோகபலத்தினுலே நிர்மிக்கபட்டும் சர்வசம்பத்துகளுடனேகூடிக்கொண்டும் இச்சானுகுணமாகச்சஞ்சரிக்கத்தக்கின விமானத்திலேசெய்த லீலைகள்சொல்லப்படுகின்றது.

மைத்திரேயம்காரிஷியினுடைய
வாக்கியம்.

வாரீர் விதுரரே மாதாபிதாக்களான சுவாயம்புமனுவும்அவருடைய ஸ்திரீயும்புறப்பட்டுப் போனபிற்பாடு இங்கிதங்களையறிந்து நடக்கத்தக்கவளாயும் பதிவிரதையாயு மிருக்கிற அந்ததேவஹூதியானவள்பார்வதிபரமேசுவரனைப் பூஜிப்பதுபோல், காமம் டம்பம் துவேஷம் லோபம்இதுகளில்லாமல் பிரீதியினுலேயும் அந்தரங்க பகிரங்கசவுசத்தினுலேயும் கவுரவத்தினுலேயும் மனோநிக்கிரகத்தினுலேயும் சிசுரூஷையினுலேயும் பக்தியினுலேயும் சிநேகத்தினுலேயும் மதுரமான வாக்கினுலேயும் உடம்புமறந்திராமலும் ஆலசியமில்லாதவளாய் மிகவும்தேஜசுவியான பர்த்தாவை சந்தோஷிப்பித்துக்கொண்டிருந்தாள், அந்ததேவரிஷிசிரேஷ்டரான கர்த்தமப்பிரஜாபதியானவர் தன்னைமிகவும் அனுவர்த்தித்து வெகுகாலம் விரதங்களையாசரிக்கிறதினுலே யிளைத்திராநின்றும்மிகவும்துர்ப்பலையாகியுமிருக்கிற அந்தஸ்திரீயைப்பார்த்துக் கிருபையுடனேயொருவார்த்தைசொன்னுர்

வாராய் மானினி உன்னுடையபக்தியினுலேயும் பரமமான சிசுரூஷையினுலேயும் அத்தியந்தம் நான்சந்துஷ்டனுனேன். பிராணிகளுக்குத் தேகமானது மிகவும் இஷ்டமானதாயிருந்தாலும் அதைஎண்ணுமல் என்னுடையசேவையினுலே ஆசக்தியையுடையவளான உன்னை என்னுலேகஷ்டப்படுத்தி யுபேட்சைப் பண்ணப்பட்டது ஆதலால்மனுஷ்யாளாலே அடையக்கூடாதவிபவங்களை அனுபவிக்கக்கடவாயென்று சொல்லுகின்றபர்த்தாவைப்பார்த்து அந்தஸ்திரீயானவள்வியசனமில்லாதவளாய்மிகவும்வணக்கமும் பிரீதியும்கொஞ்சம்லச்சையுடனேகூடிக்கொண்டிருக்கிற கடைக்கண்பார்வையினுலேவிளங்குகின்ற புன்னகையுடைய முகமுடையவளாய்ஒருவார்த்தைசொன்னுள்.

தேவஹூதியினுடைய வாக்கியம்,

வாரீர்பிராமணேத்தமரானபர்த்தாவே யோகமாயைக்குஈசுவரனுகியும் சமர்த்தராகியுமிருக்கிற உம்மிடத்தில் சித்தமாகவிருக்கிறதென்று நானறிவேன். பர்த்தாவினிடத்தில் ஸ்திரீகளுக்கு பிரசவவுற்பத்தியடைகிறதுமிகவும்தர்மமானது, அந்தஅமிசத்திற்கு நிமித்தமானகாமசாஸ்திரப்படிக்கு சங்கற்பிக்கக்கடவீர் மன்மதனுலே திரஸ்கரிக்கப்பட்டு மிகவும் தேவரீருடனே ரமிக்கவேணுமென்கின்ற இச்சையினுலேகிரகமாகப்பண்ணப்பட்டு தீனமாயிருக்கிறஅடியேனுக்குக்கிரீடைக்குயோக்கியமானபோஜனம் பானம்முதலானதுகளுடன் கூடினகிரகத்தையும் யோசனைசெய்யவேண்டுமென்று வினவுகிற பாரியினுடைய வார்த்தையைக்கேட்டுக் கர்த்தமப்பிரஜாபதியானவர் தன்னுடையஸ்திரீக்குப் பிரியத்தைக்கோறியோகபலத்தை ஆஸ்ரயித்தவராகி அந்தக்ஷணத்திலேஇச்சானுரூபமாகச்சஞ்சரிக்கத்தக்கதாகியும்சமஸ்தகோரிக்கைகளையும் உண்டாக்காநின்றும் திவ்யமாகியும் சமஸ்தரத்தினங்களுடனே கூடிக்கொண்டும்சமஸ்தசம்பத்துகளையும் உத்திரோத்காமான அபிவிர்த்திகளையுமுடையதாகியும் ரத்தினமயங்களான ஸ்தம்பங்களினுலேஅலங்கரிக்கப்பட்டும் திவ்யங்களான சாமக்கிரிகைகளுடனேகூடிக்கொண்டும் சர்வகாலத்திலேயும் சுபகரமாகியும் பட்டுவஸ்திரங்களாலேயும் விசித்திரங்களான துவஜங்களால் அலங்கரிக்கப்பட்டும் விசித்திரங்களான புஷ்பங்களையுடையதுகளாயும் மதுரமாகச் சப்திக்கின்றவண்டுகளையுடைய மாலைகளாலே அலங்கரிக்கப்பட்டும்வெண்பட்டுபீதாம்பர முதலானதிவ்ய வஸ்திரங்களாலேவிளங்கியும் மேனமேலும்உப்பரிகைகளிலேவேறுவேறுன சயனகிரகங்களிலே வைக்கப்பட்டிருக்கிறமெத்தை, கட்டில் விசிறி ஆசனம்இதுகளாலே மிகவும்மனேக்கியமாகியும் அந்தந்த விடங்களிலேநானுவிதவிசித்திரங்களான சில்பங்களினுல் சோபிக்கப்பட்டும் மரகதமாணிக்கப் பிரதேசங்களாலேயும் பவளமயங்களான திண்ணைகளாலேயும் வாசற்படிகளிலே பவளமயங்களானகீழ்ப்படி மேற்படிகளினுலே விளங்கியும் வச்சிரமயங்களான கதவுகளையுடையதாகியும் இந்திரநீலரத்தினமயங்களான உப்பரிகைகளிலேசுவர்னகலசங்களுடனே கூடிக்கொண்டும் சகடரூசுவென்கிற த்வீபத்திலேயுண்டானதுகளாகியும் நேத்திரங்களை யுடையதுகள்போல் விளங்குகின்ற வச்சிரமயங்களான சுவர்களிலேயிழைக்

கப்பட்ட கெம்புரத்தினங்களுடனே கூடிக்கொண்டும்விசித்திரங்களான மேல்கட்டுவஸ்திரசமூகங்காளாலேயும் மிகவும்விலைபெற்ற சுவர்னமயங்களான தோரணங்களாலேவிளங்கியும்அங்கங்கேஅன்னங்கள் மாடப்புருக்கள் இதுகளுடைய கூட்டங்களாலே மதுரமாகச் சப்திக்கப்பட்டும் சித்திரங்களாகப்பண்ணப்பட்டிருக்கிற அம்சமுதலானதுகளைத் தன்சுவஜாதியென்றெண்ணி அதுகள்பேரிலேயேறி இறங்கிக்கொண்டிருக்கிற அம்சங்களாலேசப்திக்கப்பட்டும் கிரீடாபிரதேசங்கள் சயனகிரகங்கள்பிராகாரத்துக்கு வெளிப்பிரதேசங்கள் ஆத்துமாவுக்கள்பிராகாரத்துக்குவெளிப்பிரதேசங்கள் ஆத்துமாவுக்குஎப்படிசுகமுண்டாகுமோ அந்தப்படிக்குநிர்மிக்கப்பட்டிருக்கிற பிரதேசங்களாலே சோபிதமாகியு ம்மிகவும்ஆச்சரிய ஜனகமாயிருக்கிற விமானத்தைப்பார்க்கின்றதன்னுடைய ஸ்திரீயைப்பார்த்துச் சகலபிராணிகளுடையஇருதயத்தையும் அறிந்தவரான கர்த்தமப்பிரஜாபதியானவர் ஒருவார்த்தைசொன்னார்.

வாராய்ஸ்திரீயே இந்தபிந்துசரசிலே ஸ்தானம்பண்ணிஇந்தவிமானத்திலேயேறக்கடவாய் ஸ்ரீஹரியினாலே நிர்மிக்கப்பட்டிருக்கின்ற இந்தசரசானது மனுஷியாளுடைய சமஸ்தஇஷ்டங்களையுங் கொடுக்கத்தக்கதென்று சொல்லுகின்ற பர்த்தாவினுடைய வசனத்தைக்கேட்டுக் கருநெய்தல் புஷ்பம்போன்ற நேத்திரங்களையுடையவளாயும் மிகவும்அழுக்கடைந்தவஸ்திரத்தையும்சடைபற்றியிருக்கிறகேசங்களையும் உடையதேவஹூதியானவள் மங்களகரங்களான செல்வங்களையுடையதான சரசுவதிநதியினுடைய ஜலத்திலேபிரவேசித்தாள் அந்தசரசுக்குள்ளே யௌவனவயதையுடையவர்களாகியும்பத்மகந்தம்போன்ற கந்தத்தையுடையவர்களாகியு மிருக்கிற ஆயிரம்கன்னிகைகளைக் கண்டாள் அவர்கள் இவளைப் பார்த்துச் சீக்கிரமாக வெழுந்திருந்து அஞ்சலிபத்தம் பண்ணிக்கொண்டு ஒருவார்த்தைசொன்னார்கள் நாங்கள் உனக்குப் பரிசாரகாள்உனதாக்கினையின்படி நடக்கத்தக்கவர்களென்று சொல்லிமகாவிலைபெற்றசம்பங்கித்தயில முதலானதுகளாலே அப்பியங்கஸ்நானம்பண்ணுவித்து நூதனங்களாகியும்மகாவிலைபெற்றதுகளாகியுமிருக்கிறவெண்பட்டு வஸ்திரங்களையும் மிகவும்சிரேஷ்டங்களாகியும் இஷ்டங்களாகியும் காந்தியையுடையதுகளாகியுமிருக்கின்றபூஷணங்களையும் அணியச்செய்துசர்வகுணங்களுடனேயும் கூடிக்கொண்டிருக்கிற அன்னத்தையும் அமிர்தம்போல்மதுரமாயிருக்கிற தீர்த்தத்தையுங்கொடுத்தார்கள், பிற்பாடு அந்த தேவஹூதியானவள் தன்னுடையதேகத்தைக் கண்ணாடியிலேபார்த்தாள், அந்தத்தேகமெப்படி இருக்கிறதென்றால்நன்றாகஅழுக்குப்போக அப்பியங்கன ஸ்நானத்தைப் பண்ணுவிக்கப்பட்டும் சர்வாபரணங்களினாலேயும் அலங்கரிக்கப்பட்டும் கண்டத்திலேபதக்கங்களை யுடையதாகியும் கைகளிலே வளையல்களையுடையதாகியும் சப்தியாநின்றசுவர்ணமயமான நூபுரங்களையுடையதாகியும் கடிபச்சா பாகங்களிலேதரிக்கப்பட்டும் சுவர்னமயமாகியும் அனேக ரத்தினங்களையுடையதாகியு மிருக்கிற அரைநூல்மாலையினாலேயும் மகாவிலைபெற்ற ஆரத்தினாலேயும் குங்குமமுதலான மங்கள திரவியத்தினாலேயும் அலங்கரிக்கப்பட்டும் சோபனங்களான புருவங்களினாலேயும்தந்தங்களினாலேயும் மனோக்கியமான கடைக்கண்பார்வைகளாலேயும் நீலங்களான முன்னெற்றி மயிர்களாலேயும் விளங்காநின்றமுகத்தையுடையதாகியுமிருக்கிற தன்னுடைய தேகத்தைக் கண்ணாடியிலேபார்த்துப்பர்த்தாவைக்கட்டியணையஉகந்தவளாயிருக்கிறோமென்று நிச்சயித்து ரிஷிசிரேஷ்டராகியும் இஷ்டராகியு மிருக்கிற தன்னுடையபர்த்தாவைநினைத்தாள். அப்போதுகர்த்தமப்பிரஜாபதியிருக்கிறவிடத்தில் அந்தஸ்திரீகளுடனேகூடத் தானுமிருக்கக்கண்டு இதென்னவென்று மிகவும் ஆச்சரியத்தையடைந்தாள். அந்தரிஷியானவர் நன்றாய் மங்களஸ்நானம் பண்ணி யலங்கரிக்கப்பட்டவளாகியும்நூதனமாகவந்தாற்போல் விளங்குகின்றவளாகியும் விவாகத்துக்குமுன்னேயிருந்தரூபத்தை அடைந்தவளாகியும்வஸ்திரங்களாலேமறைக்கப்பட்ட மனோக்கியமான ஸ்தனங்களையுடையவளாகியும் அனேகம்வித்தியாதரஸ்திரீகளாலேசேவிக்கப்பட்டும் மகாவிலைபெற்ற வஸ்திரத்தையுடையவளாகியுமிருக்கிற பாரியையைப்பார்த்து பிரீதியையுடையவராய் அந்தவிமானத்தின்பேரிலே யேற்றிவைத்துக்கொண்டு அந்தஸ்திரீகளாலே சிசுரூஷைபண்ணப்பட்ட சரீரத்தையுடையவராய் மிகவும் சுந்தரமாகியும் நட்சத்திரங்களாலேசூழப்பட்ட சந்திரன்போல் விளங்கினார். மன்மதனுக்குச்சகாவான மந்தமாருதத்தினாலே சவுந்தரியத்தையுடையதுகளாகியும் ஆகாசகங்கைவிழுகிறதினாலே மங்களகரங்களானசப்தங்களை யுடையதுகளாகியும் அஷ்டதிக்குப்பாலகர்களுடைய லீலைகளை யுடையதுகளாகியுமிருக்கிற குலாசலங்களுடைய குகைகளிலேயிருக்கின்ற சித்தாளாலே ஸ்தோத்திரம்பண்ணப்பட்டவராய் குபேரன்போல வெகுகாலம் வைசர்மபீகம் சுவசனம் நந்தனம்புஷ்பபத்திரிகம், சயித்திராத மென்னப்பட்ட தேவவுத்தியானவனங்களிலேயும், வானசசரசிலேயும், ரமித்துக்கொண்டும் இச்சானு குணமாக வாயுவானவன்போல் சகலலோகங்களிலேயும் சஞ்சரித்துக் கொண்டும் தேவர்களை அதிசயித்தார், சமுசார வியசனத்தைப் போக்கடிக்கப்பட்ட ஸ்ரீஹரியினுடைய திவ்விய திருவடிகளை ஆராதிக்கப்பட்ட புருஷாளுக்கு எதுதான் துர்லபமாகும். அப்படிப்பட்ட பகவத்பக்தரான கர்த்தமப்பி

ரஜாபதியானவர் தீவுகள் முதலானசமஸ்தபூமண்டலத்தையும் தம்முடையஸ்திரீக்குக்காண்பித்துத் திரும்பவும்ஆச்ரமத்தின்பொருட்டுத்திரும்பினர். அந்தஸ்திரீயானவள் மிகவும்சுந்தரரான அந்தபர்த்தாவுடனேகூடினவளாய்க்கொண்டு, அந்தவிமானத்திலே மிகவும் உத்கிருஷ்டமாகியும் பிரீதிகரமாகியுமிருக்கிற சயனத்தையே ஆசிரயித்தவளாய் யோகப்பிரபாவத்தினலே ரமித்துச் சம்பத்தினலே சம்பூர்ணளாகியுமிருக்கிற அந்தத்தம்பதிகளுக்குநூறுசம்வச்சரங்கள் கொஞ்சகாலம்போலவே அதிக்கிரமித்ததுகள். சர்வ சங்கற்பத்தையும் அறிந்தவரான அந்தக் கர்த்தமப் பிரஜாபதியானவர் அந்தஸ்திரீயைத்தம்முடைய அர்த்த சரீரரூபமாகப் பாவனை பண்ணிக்கொண்டு தமமுடையரூபத்தை ஒன்பது விதமாகப்பிரித்து அந்தஸ்திரீயினிடத்திலே தம்முடையவீரியத்தைவைத்தார்.

பிற்பாடு அந்ததேவஹூதியானவள்ஒருநாளையிலேயே ஸ்திரீபிரஜைகளைப்பெற்ருள். அந்தக்கன்னிகைகள் சமஸ்தமானபேர்களும் சுந்தரமானசரீரங்களையுடையவர்களாகியும், பத்மத்தினுடையகந்தம்போலொத்த கந்தங்களையுடையவர்களாகவுமிருந்தார்கள் அப்போதுசன்னியசித்துக்கொண்டு போகப்போகிறவரா யிருக்கிற பர்த்தாவைப்பார்த்துத் தேவஹூதியானவள் வெளிக்குச் சிரித்துக்கொண்டு உள்ளேவியாகூலமான சித்தத்துடனே கூடினவளாய் நகங்களுடையரத்தினகாந்திகளுடனேகூடிக்கொண்டிருக்கிற பாதத்தினலே பூமியைக்கிழித்துத் தலையைவணங்கி அதோமுகமாய்நின்றுகொண்டுமெள்ளமெள்ளக் கண்ணீர்த்துளிகளைநிறுததி மதுரமாக ஒருவார்த்தை சொன்னள்.

வாரீர்பகவானே, என்பொருட்டுஉம்மாலேபிரதிக்கினைபண்ணப்பட்டதானலும், சரணமாகவடைந்த எனக்குஅபயப்பிரதானம் பண்ணவேண்டும், உம்முடையபுத்திரிகள் தங்களுக்கு யோக்கியாளான பர்த்தாக்களைத் தேடத்தக்கதாகவிருக்கிருர்கள், நீர்சன்னியசித்துக்கொண்டு வனத்தையடைந்து இருக்குகையில்எனக்குக்கியானஉபதேசம் யார்செய்வார்கள். இவ்வளவுகாலமும் விஷயங்களிலே ஆசக்தியாய்ப் பரமாத்துமசித்தியை விட்டவளாய் உம்முடைய அபிப்பிராயத்தை யறியாமலிருந்தவென்னலே உம்மிடத்திலேபண்ணப்பட்ட சங்கமமானது எனக்குஅபயத்தின்பொருட்டு ஆகக்கடவது துஷ்டர்களிடத்தில் அக்கியானத்தினல் பண்ணப்படுகிற சங்கமமானது சம்சாரத்துக்கு ஏதுவாகவிருக்கும். சாதுக்களிடத்திலே செய்யப்படுகின்ற சங்கமம் மோட்சத்தின் பொருட்டு ஏதுவாகவிருக்கும், இந்தலோகத்திலே புருஷனுடைய கர்மமானது தர்மாபி முகமாகியும் வைராக்கியத்துக்கு ஏதுவாகியும், அந்த வைராக்கிய முகமாய் ஸ்ரீஹரியினுடையசேவையின்பொருட்டு உறுதியில்லாதபுருஷன் பிராணனுடனே யிருந்தாலும் மரித்தவனுக்கொப்பாவன், நான் பகவானுடையமாயையினலே மிகவும்வஞ்சிக்கப்பட்டவளானேன், மோட்சத்தைக்கொடுக்கின்ற உம்மையடைந்து சம்சாரபந்தத்தில் னின்றும் மோட்சத்தைக் கோராமற்போனபடியினலே பகவான் மாயையினலே வஞ்சிக்கப்பட்டேன்.

---

## உ௪ வது அத்தியாயம்,

கலிவிருத்தம்.

கண்ணன்செய்த கபிலாவதாரமும்
நண்ணுமன்னேன் பிதாவிடத்தில்நின்றும்
துண்ணெனவிடுபட் டுக்ரகாசிரமம்
எண்ணுமார்க்கத் தடைந்ததியம்புவாம்

பகவானுடைய கபிலாவதாரமும் அவருடைய பிதாவான கர்த்தமப்பிரஜாபதியினுடைய குணத்திரயத்தில் நின்றும் விடுபட்டுக்கிரகஸ்தாசிரமத்தில் நின்றும் நிவர்த்திமார்க்கத்தை யடைந்ததுஞ் சொல்லப்படுகின்றது.

மைத்திரேய மகாரிஷியினுடைய வாக்கியம்.

வாரீர்விதுரரே, அந்தக் கர்த்தமப்பிரஜாபதியானவர் இந்தப்பிரகாரம் மகாதுக்கத்துடனே சொல்லுகின்ற மனுவினுடையபெண்ணகிய அந்த தேவஹூதியைப்பார்த்துத்தயைபண்ணிஸ்ரீஹரியினலேசொல்லப்பட்டவார்த்தையை ஸ்மரித்துக்கொண்டு ஒருவார்த்தைசொன்னர்.

வாராய் சிலாக்கியமானவளே, பாக்கியசாலியென்றுநீ விசனப்படவேண்டாம் நாசரகிதனன பகவானனவர் உன்னுடைய கர்ப்பத்தைச் சீக்கிரமாகஅடையப்போகிருர், இந்திரியநிக்கிரகத்தினலேயும், சுவதர்மத்தினலேயும்,தபசுகளாலேயும், திரவியதான முதலானதுகளாலேயும்,சிரத்தையினலேயும், ஈஸ்வரனை பஜிக்கக்கடவாய், அந்தப்பகவானனவர் உன்னலே யாராதிக்கப்பட்டவராய் என்னுடைய எசசைவிஸ்தாரமாகப்பண்ணி உனக்குப்புத்திரனுக அவதரித்துப் பிரம்ம வுபதேசம்பண்ணி உன்னுடைய அகங்காரரூபமான பந்தத்தைச் சேதித்துப்போடப்போகிருரென்று சொன்னபர்த்தாவினுடைய வார்த்தையைக்கேட்டு அந்தத் தேவஹூதியானவள் கூடஸ்தராகியும், சகத்குருவாகியுமிருக்கிற பரம புருஷனைப்பஜித்தாள், இப்படி யநேக நாள்களையுடைய காலமானது அதிக்கிரமிக்குகையில் மதுசூதனரான பகவானனவர் அந்தத்தேவஹூதியி னிடத்திலே கர்த்தமப் பிரஜாபதியினுடைய வீரியத்தையாசிரயித்தவராய்க்கொண்டு தாறுவிலே யக்கினியானது பற்றுவதுபோல்ஆவிற்பவித்தார், அப்போது ஆகாசத்திலே மேகங்களானதுகள் மங்களவாத்தியங்களைச் சப்திப்பித்ததுகள், கந்தருவாள்

அந்தப்பகவானேக்குறித்துக் கானம்பண்ணினர்கள், அப்சரஸ்திரீகள் சந்தோஷத்தினலேநர்த்தனம்பண்ணினர்கள், ஆகாசத்திலேசஞ்சரிக்கின்ற தேவர்களாலே வருஷிக்கப்பட்டதுகளாகியும் திவ்யங்களாகியுமிருக்கப்பட்ட புஷ்பங்கள்விழுந்ததுகள், சமஸ்தமான திக்குகளும் சலங்களும் சத்புருஷாளுடைய மனசுகளும் நன்ருகத்தெளிந்ததுகள், அப்போதுபிரமமாவானவர் மரீசிப்பிரஜாபதிமுதலான ரிஷீகளாலே சூழப்பட்டவராய்க்கொண்டு சரஸ்வதிநதியிலே சூழப்படுகின்ற அந்தக்கர்த்தமப்பிரஜாபதியினுடைய ஆசிர்மத்தைக்குறித்து வந்தார்,

வாரீர்விதுரரே, சர்வக்கியரான அந்தப்பிரம்மாவானவர் பரப்பிரம்மரூபமானபகவானேச் சாங்கியக் கியானத்தை யுபதேசிக்கிறதின் பொருட்டுச் சத்துவாம்சத்தினலேஅவதரித்தவராக அறிந்து அந்தப்பகவானுடைய சங்கல்பத்தைப்பூசித்துப் பரிசுத்தமான இருதயத்துடனே கர்த்தமப்பிரஜாபதியையும் தேவஹூதியையும்பார்த்து ஒருவார்த்தை சொன்னர்,

பிரம்மாவினுடையவாக்கியம்,

வாராய்குழந்தாய் நீ,என்னுடைய வாக்கியத்யைக் கிரகித்துக் கபடமில்லாமற்படிக்கு என்னேப்பூசித்தாய் இந்தப்பிரகாரம்லோகத்தில்புத்திரனுனவன் தகப்பனுடைய வசனத்தைக் கவுரவத்தினலே யங்கீகரித்துப் பண்ணத்தக்கது, வாராய்குழந்தாய் சோபனமானஇடையையுடையவர்களாகியும் பதிவிரதைகளாகியு மிருக்கிற இந்த உன்னுடைய பெண்கள் தங்களுடையவம்சங்களாலேஇந்தச்சிருஷ்டியை அனேகவிதமாக விர்த்திபண்ணுவிக்கப்போகிறுர்கள், ஆகையினலே நீ-மரீசிமுதலான ரிஷிஸ்வர்களுக்கு இந்தப்பெண்களேக்காலமதிக்கிரமியாமல் இப்போதே கொடுத்து யசசைத் தரிப்பிக்கக் கடவாய், இப்போது உன்னிடத்தில் அவதரிக்கப்போகிற குமாரன்சகலஜீவதயாபரமூர்த்தியான ஸ்ரீமந் நாராயணனென்றறிகிறே னென்று கர்த்தமப் பிரஜாபதியைப் பார்த்துச் சொல்லித் தேவஹூதியைப்பார்த்துச் சொல்லுகிருர்,

வாராய் மனுபுத்திரியே சுவர்னவர்னமான கேசங்களே யுடையவராகியும், பத்மம்போலொத்த நேத்திரங்களே யுடையவராகியும், பத்ம முத்திரையோடே கூடிக்கொண்டிருக்கிற ஸ்ரீபாதபத்மங்களே யுடையவராகியும், கயிடாசுரனேச் சங்கரித்தவராகியுமிருக்கிற இந்தப்பகவானுனவர் சாஸ்திரக்கியானம் பரமாத்மக்கியானம் இதுகளாகிற வுபாயத்தினலே கர்மங்களுடைய வாசனேகளே வேருடனேபிடுங்கிப்போடப்போகிறவராய் உன்னுடையகர்ப்பத்திலே யவதரித்துப்பகவத்சுரூபத்தையறியாமல் மித்தியாக்ஞானத்தையுடைய அகங்காரக் கிரந்தியைச்சேதித்துப்போட்டுயோகசித்தாளுடைய கூட்டங்களுக்குஈசுவரனுயும், சாங்கியக் கியானத்திற்கு ஆசாரியராயும், மிகவும் பூசிதராயும், உன்னுடைய கீர்த்தியை விருத்திபண்ணி லோகத்திலே கபிலமகாரிஷியென்றுபிரசித்தமான நாமத்தையடையப்போகிருரென்று ஜகத்கர்த்தாவான பிர்மாவானவர் கொண்டாடிச் சனற்குமாரர்முதலான ரிஷிகளுடனேயும், நாரதமகாரிஷியுடனேயும், கூடினவராய்க்கொண்டு அம்சவாகனத்தினலேசத்தியலோகத்தைக்குறித்துப்போனர்.

பிற்பாடு கர்த்தமப்பிரஜாபதியானவர்பிர்மாசொன்னபடிக்குத்தன்னுடையகன்னிகைகளே விசுவகர்த்தாக்களானநவப்பிரஜாபதிகளுக்கும் விவாகம் பண்ணிக்கொடுக்கநிச்சயித்துக் கலேயென்கிறபெண்ணே மரீசிமகாரிஷிக்கும் அனுசூயையை அத்திரிமகாரிஷிக்கும், சிரத்தையைஆங்கீரசுக்கும், அவிற்பூவென்கிறபெண்ணேப் புலஸ்தியருக்கும், கதியென்கிறகன்னிகையைப்புலகருக்கும் கிரியையென்கிறபெண்ணேக் கிருதமகாரிஷிக்கும், கியாதியென்கிறவளேப் பிருகுமகாரிஷிக்கும், அருந்ததியைவசிஷ்டருக்கும்கொடுத்தார். யாகசாந்திக்குமுடிவானதேவதையானசாந்தியென்பவளே அதர்வணரிஷியின்பொருட்டுக்கொடுத்து அந்தப்பிர்மரிஷிகளே மிகவும்சந்தோஷிப்பித்தார்.

வாரீர்விதுரரே, பிற்பாடு அந்தரிஷிகளானபேர்கள் கலியாணம்பண்ணிக்கொண்டு மிகவும்சந்தோஷத்தை யடைந்தவர்களாய் அந்தக்கர்த்தமப்பிரஜாபதியையில் விடைபெற்றுக்கொண்டுதங்கள்தங்கள் ஆசிரமங்களேயடைந்தார்கள்.

அந்தக்கர்த்தமப்பிரஜாபதியானவர் அவதரிக்கின்றவரைச்சாட்சாத் ஸ்ரீமகாவிஷ்ணுவாகஅறிந்து ஏகாந்தத்திலேபோய்ச்சாஷ்டாங்கமாகப் பிரணமம்பண்ணிஒருவார்த்தைசொன்னர். ஆச்சரியம் தங்கள்தங்களுடைய பாவங்களாலேசம்சாரத்திலே மிகவும்தகிக்கப்படுகின்றபேர்களுக்கு வெகுகாலத்திற்குப் பிற்பாடு சமஸ்ததேவர்களும் பிரசன்னுளாவார்கள் யதீசுவராளானபேர்கள் வெகுசன்மங்களிலே பரிபக்குவமான பக்தியோகத்தினலேயுண்டான சித்தசமாதியினலே தேவரீருடையதிருவடியைப்பாக்குகைக்கு யத்தனம்பண்ணுகிருர்கள்.வாரீர்பகவானே, பக்தாளுடையமகிமையை விருத்திபண்ணுவிக்கிறதேவரீர் அடியேனுக்கு புத்திரனுகஅவதரிக்கப்போகிறேனென்று சொன்னவசனத்தை யதார்த்தமாகப்பண்ணுகைக்குக் கியானசாதனமானசாங்கியசாஸ்திரத்தைப் பண்ணப்போகிறவராய்க்கொண்டு அவதரிக்கிறீர்.

பிராகிருதரூபரகிதரான தேவரீருடைய இந்த மனுஷ்யரூபங்கள் பக்தாளுக்கு இஷ்டங்களாயிருக்கிறதுகள் வித்துவாம்சாளானவர்கள் தத்துவத்தை யறியவேண்டு

மென்கிறஇச்சையினலே சர்வகாலமும்சேவிக்கப்படுகி றதிலரு ...ளையுடையவராகியும்ஐசுவரியம் வைராக்கிய ம் யசசு கியானம்வீரியம் ஸ்ரீ இந்தஆறுகுணங்களாலே சம்பூர்ணராயுமிருக்கிற தேவரீரைச்சரணமாக வடைகி றேன்சுவா தீனங்களானசக்திகளையுடையவரானபரமேசு வரராகியும்,பிரகிருதிக்குஆசிரயமான புருஷரூபராகியு ம்மகதத்துவரூபராகியும் இதுகளுக்குக் கிரியாஜனகரா னகாலரூபராகியும் திரிகுணாத்மகமான அகங்காரரூபரா கியும் இந்திரியாதிரூபராகியும் அதுகளுக்குஅபிமானி யானதேவதாரூபராகியும் சுவானந்தானுபவத்தினலே தம்மிடத்திலேயே லயித்திருக்கின்ற பிரபஞ்சத்தையு டையவராகியும் கபிலரூபராகியுமிருக்கிற தேவரீரைச் சரணமாகஅடைகிறேன் வாரீர்பகவானே பிரஜைகளு க்கெல்லாம்பதியான தேவரீரைக்குறித்துஒருவிக்கியாப னம்பண்ணிக்கொள்ளுகிறேன் புத்திரனாக அவதரிக்கி ன்றதேவரீராலே குணத்திரயத்தையும் நிறைவேற்றி னவனாகியும் பரிபூரணகாமனாகியு மிருக்கிறஅடியேன் சன்னியாசிகளுடைய மார்க்கத்தை ஆசிரயித்தவனாய்இ ருதயத்திலே தேவரீரைஸ்மரித்துக்கொண்டு சோகமில் லாதவனாய்ச் சஞ்சரிக்கப்போகிறேனென்று விக்யாபன ம்பண்ணுகின்ற கர்த்தமப்பிரஜாபதியைப்பார்த்துப் ப கவான் ஒருவார்த்தைசொல்லுகிறார்,

வாரீர் மகாரிஷியே வைதீககிருத்தியத்திலேயும் லவு கீககிருத்தியத்திலேயும் பிரமாணம்வார்த்தை தவிரக் கூடாதென்று என்னலேசொல்லப்பட்டிருக்கிறபடிக்கு உமக்குப் புத்திரனாக அவதரிக்கிறேனென்று சொன்ன படியினலே அந்தவார்த்தை யதார்த்தமாகும்படியாய் அவதரிக்கப்பட்டது இந்தஅவதாரத்தை மோக்ஷத்தை க்கோருகின்றபேர்களுக்கு ஆத்மக்கியானத்திலேசம்ம தமான தத்வக்கியான வுபதேசத்திற்காகவென்று அறி யக்கடவாய் சூக்ஷுமமானஇந்த ஆத்மக்கியானமார்க்க மானதுவெகுகாலமாக நஷ்டமாய்ப்போயிருப்பதைத்தி ரும்பவும்தரிக்கச்செய்யப்போகிறஎன்னலேஅனுக்ஞை பண்ணப்பட்டவராகக் கர்மத்தினலேஜயிக்கக்கூடாததா ன சம்சாரமாகிறமிருத்தியுவைஜயித்து மோக்ஷத்தின் பொருட்டுஎன்னை யதேச்சா சஞ்சாரத்துடன்பஜித்துப் பரஞ்சோதியாயும் சர்வபூதங்களுடையஇருதயத்திலே அந்தரியாமியாக இருக்கின்றஎன்னை உம்முடையஆத் மாவிலேயேபார்த்து க்ஷேபமில்லாதவராய்மோக்ஷத் தையடையப்போகிறீர் நான்மாதாவான தேவஹூதிக்கு ச்சர்வகர்மங்களையும் மூலத்துடனேநாசம்பண்ணி ஆத் மவித்தையையுபதேசித்துச் சம்சாரபயத்தைத்தாண்டி ஆநந்தத்தையடையும்படி செய்யப்போகிறேனென்றுப கவானலேசொல்லப்பட்ட அந்தக்கர்த்தமப் பிரஜாபதி யானவர்மகாசந்துஷ்டராய் அந்தக்கபிலமகாரிஷியைப்பி ரதக்ஷணம்பண்ணி ரிஷிகளானவராலுடைய விரதமாகியும் அம்சாதிதர்மத்தை ஆசிரயித்தவராகியும். பரமாத்மா வையே சரணமாகவுடையவராகியும், இகபரசாதனமா னகாமியகர்மங்களை விட்டவராகியும் நிராசிரயராகியும் காரியகாரணரூபமான இந்தப்பிரபஞ்சத்தைக்காட்டிலு ம் பரமாயிருக்கிறபரப்பிர்மத்தினிடத்திலே மனதைஸ் திரமாகவைக்கப்பட்டும் அகங்காரசூனியராகியும் இர ண்டுமுதலான துகளிலேமமதையில்லாதவராகியும்சிதோ ஷ்ணமுதலினதுகளிடத்தில் சமபுத்தியையுடையவராகி யும் ஆத்மக்கியானத்தை யுடையவராகியும் அலையொ ழிந்திருக்கிற சமுத்திரமானதுபோல் நிர்ச்சலராய் ஸ்ரீ வாசுதேவனிடத்திலே சமர்ப்பிக்கப்பட்ட சித்தத்தையு டையவராயும் அக்கியானபந்தத்தைவிட்டவராயும், ய தேச்சா சஞ்சாரியாகியும், பரமாத்மாவினிடத்திலேசம ஸ்தபிராணிகளையும் சாக்ஷாத்கரித்தவராயும், காமக்கு ரோதசூனியராகியும் சர்வப்பிராணிகளிலேயும் சமபு த்தியையுடையவராகியுமிருக்கிறஅந்தக் கர்த்தமமகாரி ஷியானவர் பகவத்பக்தியோகத்தினலேமிகவும் சிலாக்கி யமானபரமபதமானது அடையப்பட்டது.

## ௨௫-வது,அத்தியாயம்.

கலிவிருத்தம்,

கான்முளையாங் கபிலமகாரிஷி
தேன்துளிக்குந்தாய் தேவஹூதியினல்
வானணையசம் சாரமோட்சத்தினல்
மேனாளிற்சொன்ன பக்திவிளம்புவாம்.

புத்திரரான கபிலமகாரிஷியானவர் மாதாவானதேவ ஹூதியினலே சம்சாரபந்தமோட்சத்தைக்குறித்துக் கே ட்கப்பட்டவராய் ஆதியிலேபக்திமார்க்கத்தைச் சொன் னாரென்று சொல்லப்படுகின்றது.

சவுனகமகாரிஷியினுடையவாக்கியம்.

வாரீர் சூதபுராணிகரே தம்முடைய மாயையினலே தத்வங்களைப் பிரவிர்த்திப்பிக்கிறதற்கு ஜன்மரகிதராகி யசாக்ஷாத்பகவான்தானே மனுஷியாளுக்குஆத்மக்கியா னத்தைக் காண்பிக்கிறதின்பொருட்டுக் கபிலமகாரிஷி யாகஅவதரித்தானென்று அருளிச்செய்தீரோஅந்தப்பக வானுடைய குணங்களைக்கேட்டுஎனக்குத் திருப்தியை யடையவில்லை பக்தானுக்கிரகார்த்தமாக அந்தப்பகவா னனவர்யாதொரு கர்மங்களைச்செய்தாரோ அந்தக்கர்ம ங்களைக்கேட்கச் சிரத்தையையுடைய எனக்குச்சொல்ல வேண்டுமென்று பிரஸ்னம்பண்ணுகின்ற சவுனகாதிம காரிஷிகளைப்பார்த்துச் சூதபுராணிகர் சொல்லுகிறார்,

வாருங்கள் சவுனகாதிரிஷிகளே வியாசருக்குச்சிநே கிதராகியிருக்கிற மைத்திரேயமகாரிஷியானவர் இந்தப் பிரகாரமே ஆத்மவித்தையிலே விதுரராலேபிரஸ்னம்

பண்ணப்பட்டவராய்க்கொண்டு மிகவும்சந்துஷ்டராய் அந்தவிதுரரைக்குறித்து இந்தப்பிரகாரம் சொன்னார்.

வாரீர் விதுரரே, பிதாவனகர்த்தமப்பிரஜாபதியான வர்வனத்தையடைந்தபிற்பாடு பகவானனகபிலமகாரிஷியானவர் மாதாவுக்குப்பிரீதியைப்பண்ணவேண்டுமென்கிறஇச்சையினாலே அந்தபிந்துசரசிலேயே வாசம்பண்ணிக்கொண்டிருக்கிறவராகியும் நிவிர்த்திபராகியும், தத்வமார்க்கத்தைக் கரைகண்டவராகியும் தன்னுடையபுத்திரனாகியுமிருக்கிற அந்தக்கபிலமகாரிஷியைப்பார்த்து த்தேவஹூதியானவள் கர்த்தமப்பிரஜாபதியினுடையவசனத்தைஸ்மரித்துக்கொண்டு ஒருவார்த்தைசொன்னாள்.

வாரீர் நிரதிசயமகிமையை யுடையவரே, அசத்துக்களான இந்திரியங்களுடைய விஷயாபிலாஷையினாலே மிகவும்இளப்பையடைந்து பூரிக்கப்படுகின்ற காமத்தினாலே அந்தத் தமசுஎன்னப்பட்டநரகத்தை வெகுஜன்மங்களா அடையப்பட்டிருக்கிற அடியேனுக்குஇந்தஜன்மத்தில்உமதருளினால் உம்முடையசேவையானதுஎன்னாலேஅடையப்பட்டது,ஜகத்காரணராகியும் பகவானாகியுமிருக்கிற தேவரீர் அக்ஞானத்தினாலேகுருடாயிருக்கிற இந்தலோகத்திற்குச் சூரியனானவன்போல் நேத்திரஸ்வரூபமாக ஆவிர்ப்பவித்தீர் ஆகையினாலேஇந்தச்சரீரத்திலே நானென்றும்என்னதென்றும் இப்படிப்பட்டராகத்வேஷாதிகளுடனே கூடிக்கொண்டிருக்கிற என்னுடைய அந்தமோகத்தைப் போக்கடிக்குகைக்குத் தேவரீரே யோக்கியர்சகலலோக ரட்சகராகியும் பக்தானுடையசம்சாரமாகிற விருட்சத்திற்குக் கோடாலியாகவும் உத்தமதர்மங்களை அறிந்தபேர்களுக்குச் சிரேஷ்டராகியுமிருக்கிற உம்மைப்பிரகிருதிபுருஷாளை நன்றாகஅறியவேண்டுமென்கிற இச்சையினாலேசரணமாக அடைகிறேனென்று பிரார்த்திக்கின்ற மாதாவினுடைய கோரிக்கையைக்கேட்டு மந்தஹாசத்தினாலே விளங்குகின்ற திருமுகமண்டலத்தையுடையவராய்ஒருவார்த்தை சொன்னார்,

ஸ்ரீபகவானுடையவாக்கியம்,

வாராய் மாதாவே சுகதுக்கத்தை நிவர்த்திசெய்யத் தக்கதாயும் மோக்ஷசாதனமாகியுமிருக்கிற அத்தியாத்துமயோகத்தை உனக்குச்சொல்லுகிறேன்கேள். முகத்திற்கும் பாபத்திற்கும்சாதகமான இந்தமனதானதுசுகதுக்கத்தைசமமாகவெண்ணிவைராக்கியத்துடன்சுயவசம் பிரகாசராகியும் சமஸ்தசுவரூபியாயுமிருக்கின்ற பரமாத்துமாவினிடத்திலே சலியாமல்பக்தி செலுத்துவதைக்காட்டிலும் வேறேமார்க்கமில்லை. யோகிகளான பேர்கள் அசத்தான விஷயங்களில்செலுத்துகிறமனதை ஜீவனுக்குப் பாசபந்தமாகச்சொல்லுவார்கள் சன்மார்க்கத்தில் செலுத்துகிறமனதை மோட்சத்திற்குரித்தாகச்சொல்லுவார்கள் மிகவும்பொறுமையை யுடையவர்களாகியும் கிருபையையுடையவர்களாகியும் சமஸ்தபிராணிகளுக்கும் சுகிர்துக்களாகியும் சத்துருவில்லாதவர்களாகியும் சமதமாதிகுணங்களை யுடையவர்களாகியும்சீலத்தையே பூஷணமாக வுடையவர்களாகியும். சாதுக்களாகியும் என்னிமித்தமாகச் சகலதர்மங்களையும் சுவஜனங்களையும்விட்டவர்களாகியும் சந்துஷ்டர்களாகியும்.என்னுடையஅவதாரசம்பந்தங்களான கதைகளைக்கேட்டுக்கீர்த்தனஞ்செய்கிறவர்களை நானாவிதங்களான தாபங்கள்பாதிக்கமாட்டாதுகள் வாராய்பதிவிரதையே சர்வசங்கத்தையும் விட்டிருக்கின்றசாதுக்களுடைய சங்கமத்தினாலே சமஸ்ததோஷங்களையும்போக்கி என்னுடைய கதைகளைநித்தியமாக ஜபித்துச்சீக்கிரமாக அக்ஞானத்தைநிவர்த்தித்து என்னையேயடைவனென்று சொல்லுகின்றபகவானுடைய வசனத்தைக்கேட்டு தேவஹூதியானவள் சொல்லுகிறாள்.

வாரீர் பகவானே, ஸ்திரியானஎனக்குயோக்கியமான எந்தபக்தியினாலே மோக்ஷஸ்வரூபியான தேவரீருடையபதத்தைச் சீக்கிரமாகஅடைவேனே அதைமந்தபுத்தியானஎனக்கு விஸ்தாரமாகச் சொல்லவேண்டுமென்று பிரார்த்திக்கின்ற மாதாவினுடைய அபிப்பிராயத்தை அறிந்து சாங்கியசாஸ்திரத்தைச்சொன்னார்,

ஸ்ரீபகவானுடையவாக்கியம்,

வாராய் மாதாவே, வேதோக்தமங்களான கர்மங்களையும் சப்தாதிவிஷயங்களையும் அறிகிறஇந்திரியங்களுக்கு ஸ்ரீபகவானிடத்திலே உண்டாயிருக்கிறநிலையான பக்தியானது ஜாடராக்கினியானதுபோலச் சரீரத்தைநாசம்பண்ணிப்போட்டும் அப்படிப்பட்டபக்தியையுடைய பாகவதாளானபேர்கள் என்னுடைய ஸ்ரீபாதபத்மசேவையினாலே ஆசக்தியுடையவர்களாகி என்னுடையசாயுச்சியத்தைக்கோராமல்என்னதுருபங்களாலேஅபகரிக்கப்பட்ட சித்தத்தையுடையவர்களாகிச்சத்தியலோகமுதலானதுகளிலே யிருக்கின்ற அணிமாதிஅஷ்டஐஸ்வரியத்தையும் விரும்பாமல்ஸ்ரீவைகுண்டஸ்தானத்திலே உண்டாகின்ற சகலசம்பத்தையும் அடைகிறார்கள்,

வாராய் சாந்தமான ரூபத்தையுடையவளே அந்தபாகவதர்கள் என்னையே சரணமாகஅடைந்து ஒருக்காலும்போகவில்லாதவர்களாகவும் ஆகிறதுமில்லை மிகவும் சாகிருதையையுடையதான என்னுடைய காலசக்கிரமும்அவர்களைத் தரிசிக்கிறதுமில்லை இகபரலோகங்களையடைகின்றஆத்துமாவை அனுவர்த்தித்துக் கொண்டிருக்கின்றபுத்திர மித்திரகளத்திராதிகளையும்பசுமுதலானதனங்களையும் கிரகங்களையும் மற்றுமுள்ளதுகளையும் விட்டு விசுவமுகனான என்னை ஏகாந்தபக்தியினாலே ஆசரிக்கிறவர்களைச் சம்சாரத்தில்நின்றும் மிகவும்தரிப்

பிப்போல், என்னைவிட்டால் பின்னையொன்றினலேதீவிரமானஇந்தச்சம்சாரபயமானது நிவர்த்திக்கமாட்டாது, என்னுடைய ஆக்கினையால் வாயுவானவன் வீசிக்கொண்டிருக்கிறவனுமவன் பிரகாசிப்பித்துக்கொண்டும் இந்திரனானவன்ஜலத்தை வருஷித்துக்கொண்டும் அக்கினியானவன் தகித்துக்கொண்டும் மிருத்தியுவானவன் காலந்தப்பாமல் பிராணிகளிடத்திலேசஞ்சரித்துக்கொண்டும் யோகீஸ்வரர்களானபேர்கள் கியானவைராக்கியங்களுடனே கூடிக்கொண்டிருக்கிறபக்தியோகத்தினலே என்னுடைய திருவடிகளை ஆஸ்ரயித்துக்கொண்டுமிருக்கிறார்கள்.

வாராய் மாதாவே தீவிரமான பக்தியோகத்தினலே என்னிடத்திலே நிர்ச்சலமாகவைக்கப்பட்டிருக்கிற மனதுடையவர்களுக்குச் சதுர்விதபுருஷார்த்தங்களிற்சிறந்த மோட்சத்திற்கு யாதொருதடையில்லை,

## உசு-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்;

சுத்தப்பிராணிகள் தூயவிவேகத்திற்
கொத்தசாஸ்திர தத்வவுணர்ச்சியும்
பெற்றலட்சண பேறங்களுமிதி
லுற்றிருக்கின்ற தென்றுயுரைப்பதே

பிராணிகளுடைய விவேகத்திற்குச் சாங்கிய சாஸ்திரத்தினலேசமஸ்ததத்வங்களுடைய ஜன்மமும்லட்சண பேதங்களும் சொல்லப்படுகின்றது,

ஸ்ரீபகவானுடைய வாக்கியம்,

வாராய்மாதாவே புருடனானவன் பிரகிருதி குணங்களைப் போக்கடிக்கின்ற தத்வங்களுடைய லட்சணத்தையும், அகங்காரங்களைப்போக்கடிக்கின்ற மோட்சசாதனமான கியானத்தையும் உனக்குச் சொல்லுகிறேன் பிரபஞ்சத்துடன் கூடினவனுகியும் இந்திரியங்களுக்கு அவிஷயமான பிரகாசத்தையுடையவனுகியும் பிரகிருதியைக்காட்டிலும் வேறுபட்டவனுகியும் சத்துவாதிகுணாதிதனுகியும், சுவயம்பிரகாசனுகியுமிருக்கிற ஆத்துமாவானவன் பிறப்பு மரிப்பற்றவனுய்ச்சொப்பனங்கண்டுகொண்டிருக்கிற புருடனைப்போலச் சனனமரணங்களையுடையதுகளான தேகமுதலிய உபாதிகளுடனேகூடிக்கொண்டும், சூட்சுமமாகியும் பகவானுடைய சக்தியாகியும் திரிகுணஸ்வரூபமாகியுமிருக்கிற பிரகிருதியினலே தன்சுபாவத்தைமறந்து அதின்செய்கையைத் தன்னதாகவெண்ணியிருக்கிற ஆத்துமாவுக்குச் சரீரம்இந்திரியங்கள் இந்திரியாபிமானி தேவவர்க்கங்கள் இதுகளுடனே அயிக்கப்பட்டிருக்கிறதிலே பிரகிருதியைக் காரணமென்று சொல்லுவார்கள் சுகதுக்கங்களுடைய போகத்திலே பிரகிருதியைக்காட்டிலும்பரனுயிருக்கிற ஆத்துமாவைக் காரணமாகச் சொல்லுவார்களென்று சொல்லுகின்ற ஸ்ரீபகவானைப்பார்த்துத் தேவஹூதி வினவுகிறாள்,

வாரீர் புருஷோத்தமரே. இந்தப்பிரபஞ்சத்துக்குக் காரணமானபிரகிருதி புருஷர்களுடையலக்ஷணத்தை நன்றாகச் சொல்லவேண்டுமென்றுகேட்கிற தேவஹூதியைப்பார்த்துப் பகவான்சொல்லுகிறார்,

வாராய் மாதாவே விசேஷசூனியமாகியும் விசேஷங்களுக்குஆசிரயமாகியும் சத்வாதி குணங்களையுடையதாகியும், அகாரியமாகியும். காரியகாரணஸ்வரூபமாகியும் நித்தியமாகியுமிருக்கிற பிரதானத்தையே பிரகிருதியென்றுசொல்லுவார்கள் பிருதிவு அப்பு தேயுவாயு ஆகாசமென்று மகாபூதங்கள்ஐந்து கந்தம் ரசம், ரூபம் ஸ்பரிசம் சப்தமென்று அதின்குணங்கள் ஐந்து சுரோத்திரம், தொக்கு, நேத்திரம், கிராணம் ரசனை வாக்கு. கைகள், பாதங்கள் மெட்டிறம் குகம் என்று இந்திரியங்கள்பத்து, மனது புத்தி. அகங்காரம், சித்தம்நான்கு ஆகஇருபத்துநான்குதத்வமாகத் தத்வத்தையறிந்தபேர்களாலே பண்ணப்பட்டிருக்கிறது. இருபத்தைந்தாம்தத்வமாகியும் பிரகிருதிபாவசனுகியும் தேகாதிகளிலே அகங்காரத்தினலே மூடனுகியுமிருக்கிற சீவனுக்குப்பயமானது உண்டாகிறகாலத்தை ஈஸ்வரனுடைய பராக்கிரமமாகச் சிலபேர்கள்சொல்லுவார்கள் அந்தக்காலரூபரான ஸ்ரீபகவானனவர் தம்முடையமாயையினலேபிராணிகளுடைய தேகத்திற்குள்ளே புருடரூபராகியும் வெளியிலேகாலரூபராகியும் விடாமல்வியாபித்துக்கொண்டுஜீவர்களுடைய அதிர்ஷ்டத்தினலெ சலியாநின்ற சத்வாதிகுணங்களையுடையதான பிரகிருதியினிடத்திலே தம்முடையசக்தியைப்பிரளயகாலத்திலேலயம்பண்ணிவைத்திருந்ததாயும் பகவானுடையஆவிற்பாவத்துக்கு ஸ்தானமாகியும் ஆதிபூதரூபத்தினலே மகதத்வமென்றும் அத்தியாத்மரூபத்தினலேசித்தமென்றும் உபாசியதேவதாரூபத்தினலே வாசுதேவனென்றும்சொல்லுகின்ற அந்த சித்தமென்றுசொல்லப்படுகிற மகதத்துவத்தில்நின்றும் உண்டான வைகாரிகமென்றும் தைசதமென்றும் தாமசமென்றும் மூன்றுவிதமாகச்சொல்லப்படுகிற அகங்காரத்தை ஆயிரம்சிரசுகளையுடைய அனந்தபுருடராகச் சொல்லுகிறார்கள் அகங்காரத்திலேசங்கர்ஷண உபாசனதேவதையாகியும் ருத்திரன் அதிஷ்டானதேவதையென்று தாத்பரியம் அந்த அகங்காரத்திற்குத் தேவதாரூபத்தினலே காத்ருத்வமும் இந்திரியரூபத்தினலே காரணத்வமும் பஞ்சபூதரூபத்தினலே காரியத்வமும் சத்வாதிகுணரூபத்தினலே சாந்தத்வமும் கோரத்வமும் மூடத்வமும் லட்சணமாகவிருக்கிறது வைகாரிகாகங்காரத்தில் நின்றும் மனது உ

ண்டாச்சுது. மனதினுடையசங்கல்ப விகல்பங்களாலே இச்சாரூபவிருத்தியான மனதை இந்திரியங்களுக்கு ஈசுவரனுகவும், அனிருத்தனென்று பெயரையுடையதாகவும், அனிருத்தவியூகம் உபாசிய தேவதையென்றும், சந்திரன்அதிஷ்டாதாவாகியும், அந்யத்தக்கது. அந்தமனதுசரத்காலத்திலே உண்டாகின்ற கருநெய்தல்புஷ்பம்போலச் சியாமளவர்னமாகியும், ரிஷிகளாலேமெள்ளமெள்ளவசீகரிக்க யோக்கியமாகியுமிருக்கிறது.

வாராய்மாதாவே, தைசசஅகங்காரத்தில்நின்றும்,புத்தியானதுஉண்டாச்சுது. பிருதிவிமுதலான திரவியங்களுடைய பிரகாசரூபமானவிக்கியானமும், இந்திரியங்களுக்குச் சகாயமாயிருக்குகையும், சந்தேகமும்,பொய்யானகியானமும், நிச்சயமும்,ஸ்மரணமும், நித்திரையும், இதுகள்வேறுவேறுன விருத்திகளாலே புத்தியினுடையலட்சணமாகவிருக்கும், பிராணனுக்குக் கிரியாசக்தியும்,புத்திக்குவிக்தியானசக்தியு மிருக்கிறபடியினுலே இதுகளுடையகிரியாசக்தி, கியானசக்திகளையுடையதுகளாகியும்,கியானேந்திரியங்கள், கர்மேந்திரியங்களென்று இரண்டுபிரகாரமாயிருக்கிற இந்திரியங்கள், தைசசஅகங்காரத்தில்நின்றும்உண்டாச்சுதுகள். தாமச அகங்காரத்தில்நின்றும் சப்தமாத்திரையானது உண்டாச்சுது அதில்நின்றும் ஆகாசமானதுஉண்டாச்சுது;சுரோத்திரேந்திரியமானது அந்தசப்தத்தையடைகிறதுபிராணிகளுக்குஉள்ளென்றும் வெளியென்றும் என்கிறவிவகாரத்துக்குஇடமாயும்,பிராணன்இந்திரியங்கள்மனது இதுகளுக்குஇருப்பிடமாயும், ஆகாசத்தினுடையகாரியமானலட்சணமாகவிருக்கிறது. காலகதியினுலே வேறொரு ரூபத்தையடையாமல் சப்தகுணத்தையேயுடையதாயிருக்கிற அந்தஆகாசத்திலேநின்றும் ஸ்பரிசமும்அந்தஸ்பரிசத்தில்நின்றும் வாயுவானதுஉண்டாச்சுது தொக்கிந்திரியம் அந்தஸ்பரிசத்தைகிரகிக்கிறது மிருதுவும் கடினமும் சீதளமும் உஷ்ணமும் இதுகள்ஸ்பரிசத்தினுடைய லட்சணமாகவிருக்கும், பின்னும் அந்தஸ்பரிசம், வாயுவினுடையகுணமாகவிருந்துவிருட்சசாகைமுதலானதுகளைச்சலிப்பிக்கிறதும், திரணம்முதலானதுகளை ஒன்றேடொன்றுசேர்க்கிறதும்கந்தமுள்ளதிரவியத்தைக் கிராணேந்திரியத்தைக்குறித்தும், சீதளமுள்ள திரவியத்தைத் தொக்கிரியந்தத்தைக்குறித்தும், சபதத்தைச் சுரோத்திரேந்திரியத்தைக் குறித்தும் அடைவிப்பித்துச் சமஸ்தஇந்திரியங்களுக்கும்பலமாகி வாயுவினுடையகாரியத்தினுலே லட்சணமாகாநிற்கும் அந்தவாயுவில்நின்றும் ரூபம் அந்தரூபத்தில்நின்றும் தேஜசும்உண்டாச்சுது, அந்தரூபமானதுவஸ்துவினுடைய ஆகிருதியாயும் வஸ்துவுக்கு விசேடணமாகியும் நேத்திரேந்திரியத்தினுலேகிரகிக்கப்பட்டும் தேஜசினுடைய அசாதாரணதர்மமாயிருக்கும்.

வாராய் மாதாவே, பிரகாசமாகத்தண்டுல முதலானதைப் பாகம்பண்ணுகிறதும் உலர்த்திப் போடுகிறதும், பசிதாகங்களையுண்டாக்குகிறதும், தேஜசினுடைய காரியமாகாநிற்கிறது அந்தத்தேஜசில்நின்றும் ரசமும் அதில்நின்றும் சலமுமுண்டாச்சுது மதுரமான ஒருரசந்தானே தன்னுடனேகூடுகின்ற திரவியங்களுடைய விகாரத்தினுலே கஷாயமாகியும், மதுரமாகியும் புளிப்பாகியும் கைப்பாகியும் துவர்ப்பாகியும் உவர்ப்பாகியும்ரசனேந்திரியத்தினுல் கிரகிக்கப்பட்டும் அனேகவிதமாகப் பேதிக்கப்படுகிறது. சலமானதுஈரமாய் மண்முதலானதைப்பிண்டமாகப்பண்ணுகையும் திருப்தியைக் கொடுக்கிறதும், ஜீவனமாகவிருக்கிறதும், தாகத்தைப் போக்கடிக்கடிக்கிறதும், மிருதுவாகப் பண்ணுகிறதும், தாபத்தைப்போக்கடிக்கிறதும் கிணறுமுதலானதில்எடுக்கஎடுக்கத்திரும்பசுரக்கிறதும், இதுகள்சலத்தினுடைய காரியங்கள் அந்தச்சலத்தில்நின்றும் கந்தமும் அதில்நின்றும்பூமியும்உண்டாச்சுது. அந்தக்கந்தமானதுபத்மம்முதலானதினுடையபரிமளமும், உள்ளிப்பூண்டு முதலானதினுடைய நாற்றத்தையும் அடைந்து கிராணேந்திரியத்தால் கிரகிக்கப்பட்டிருக்கும் பத்மம் முதலானதினுடையபூமியானது பிரமாதிரூபத்தினுலே பரப்பிரம்மத்துக்குச் சரீரரூபத்தைப்பண்ணுகையும், வேறொருஆதரவை அபேட்சியாமல் தானுகவிருந்து ஜலாதிகளுக்கு ஆதாரமாகியும், ஆகாசமுதலானதுக்குஇடமாகியும்;சமஸ்தபிராணிகளுடைய புருஷத்வமுதலானகுணங்களுக்குப்பிரகாசம்பண்ணுகிறதும் பூமியினுடைய காரியமாகஇருக்கிறது ஆகாசத்தினுடையகுணமான சப்தமானது கிரகிக்கப்படுகிற இந்திரியத்திற்குச் சுரோத்திரேந்திரியமென்றும், வாயுவினுடைய குணமான ஸ்பரிசமானது கிரகிக்கப்படுகிறஇந்திரியத்துக்கு தொக்கேந்திரியமென்றும் தேஜசினுடையகுணமான ரூபமானது கிரகிக்கப்படுகிறஇந்திரியத்திற்கு நேத்திரேந்திரியமென்று,ஜலத்தினுடையகுணமானரசமானது கிரகிக்கப்படுகிற இந்திரியத்திற்குரசமென்றும், பூமியினுடைய குணமான கந்தமானதுகிரகிக்கப்படுகிற இந்திரியத்திற்குக் கிராணேந்திரியமென்றுஞ்சொல்லப்படுகிறது.காரணமான ஆகாசமுதலானதினுடையகுணமானசப்தமுதலானது காரியமானவாயுமுதலானதில் சம்பந்தமிருக்கிறபடியினுலேஅந்தச்சப்தமுதலானது பூமியில்காணப்படுகிறது. மகத்தத்வமுதலான இந்தஎழுதத்வங்களும் ஒன்றேடொன்றுகூடாமலிருந்தபோதுஈஸ்வரனுனவர்காலகர்மங்களுடனேகூடினவராய் அதுகளிலேபிரவேசித்து அசேதனமானது பிர்மாண்டமானதுஉண்டாகி அந்த அண்டத்தில் நின்றும் விராட்புருஷனுனவர் உண்டானர்.

அதினாலே அந்தபிரம்மாண்டமானதுவிசேஷமென்றுபெயரையுடையதாயிற்று, பகவானானவர் சுவர்ணமயமாகியும்,ஜலத்தையேயாதாரமாகவுடையதாகியுமிருக்கிற அந்தப் பிரம்மாண்டகோசத்தில் கிரியைப்பற்றிப்பிரவேசித்து இந்திரியஸ்தானங்களைப்பிரித்து முன்னேமுகத்தையுண்டுபண்ண வாக்கானது உண்டாச்சுது அந்த வாக்குடனேகூட அக்கினியானது அந்தமுகத்தைப்பிரவேசித்தது, பிற்பாடுநாசிகைகளுண்டாச்சுதுகள், பிராணனுடனேகூடினதாகக்கொண்டுகிராணேந்திரியமானது அந்தநாசிகைகளிலேபிரவேசித்தது, பிற்பாடுநேத்திரங்களுண்டாச்சுதுகள்,சட்சுரிந்திரியமும்சூரியனும்பிராணனோடேகூடினதாகக்கொண்டு நேத்திரங்களிலேபிரவேசித்தார்கள். பிற்பாடு செவிகளுண்டாச்சுதுகள். திக்குகளும், சுரோத்திரேந்திரியமும், பிராணனுடனேகூடினதாகக்கண்டு அந்தச்செவிகளிலேபிரவேசித்ததுகள்பிற்பாடு தொக்கிந்திரியம், ரோமம்,மீசை, கேசம்முதலானதுகளும் உண்டாச்சுதுகள், அந்தரோமகேசங்களில்நின்றும், ஓஷதிகள், சிசுனமும், அதில்நின்றும் வீரியமும், அதில்நின்றும் ஜலங்களும், பிற்பாடு குமுதமும், அதில்நின்றும் அபானமும், அந்த அபானத்தில்நின்றும் லோகபயங்கரனான மிருத்தியுவுனுண்டானான், பிற்பாடு அஸ்தங்களும், அந்தஅஸ்தங்களில்நின்றும்பலமும்உண்டாச்சுது, அந்த அஸ்தங்களைப் பலத்துடனேகூடஇந்திரன்அனுப்பிரவேசித்தான். பிற்பாடுபாதங்கள் பிரிந்துகதியுண்டாச்சுது. அந்தப் பாதங்களில்நின்றும் ரந்திரங்களோடேகூடினதான நரம்புகளும், அதின்பிற்பாடு இரத்தம்உண்டாச்சுது, அந்த நாடிகளிலே நதிகளுண்டாச்சுதுகள். பிற்பாடு குட்சியுண்டாச்சுது, அதில்னின்றும் பசிதாகமுண்டாச்சுதுகள். அதில்நின்றும்சமுத்திரமுண்டாச்சுது. பிற்பாடு அந்தவிராட்புருஷனுக்கு இருதயகமலமுண்டாச்சுது இருதயத்தில்நின்றும் மனது உண்டாச்சுது மனதில்நின்றும் சந்திரனுண்டானான்,புத்தியுண்டாச்சுது, புத்தியில்நின்றும் பிரம்மா வுண்டானான், பிற்பாடு அக்ங்காரமுண்டாச்சுது, அகங்காரத்தில்நின்றும் ருத்திரனுண்டானான், பிற்பாடு சித்தமுண்டாச்சுது,அதில்நின்றும் க்ஷேத்திரக்கியனுண்டானான்.

இந்தப்பிரகாரம் உண்டாகாநின்ற இந்தத் தேவர்கள் அந்தவிராட்புருஷனை எழுப்புகிறதிலே சமர்த்தாளாகாதவர்களாய்த்திரும்பவும் அந்தவிராட்புருஷனைஎழுப்புகைக்குக் கிரமமாகஅந்தந்த இந்திரியங்களிலே பிரவேசித்தார்கள். அக்கினியானவன் வாக்கேந்திரியத்தோடே முகத்தை யடைந்தும், வாயுவானவன் கிராணேந்திரியத்தோடேகூட நாசிகைகளை யடைந்தும், சட்சுரிந்திரியத்தோடேகூட சூரியனானவன் நேத்திரேந்திரியங்களையடைந்தும், மிருத்தியு வானவன் அபானேந்திரியத்தோடேகூட குதத்தைப்பிரவேசித்தும், இந்திரனானவன்பலத்துடனேகூட அஸ்தங்களையடைந்தும், ஸ்ரீ விஷ்ணுவானவர் கதியோடேகூட சரணங்களையடைந்தும்,சமுத்திரமானது பசிதாகங்களோடே குட்சியைப்பிரவேசித்தும், சந்திரனானவன் மனதோடேகூட இருதயத்தைப்பிரவேசித்தும், பிரம்மாவானவன் புத்தியோடேகூட இருதயத்தையடைந்தும், ருத்திரனானவன் அகங்காரத்தோடேகூட இருதயத்தையடைந்தும், அந்தவிராட்புருஷன்எழுந்திருக்கவில்லை சயித்தியனான க்ஷேத்திரக்கியனானவன் சித்தத்தோடேகூட இருதயத்தைப் பிரவேசித்தபோதே அந்த விராட்புருஷனானவன் அந்தஜலத்தில்னின்றும்எழும்பினான். நித்திரைபண்ணுகின்ற புருஷனைப்பிராணன்-இந்திரியம்-மனது-புத்தி-இதுகள்தங்களுடையசக்தியினாலே க்ஷேத்திரக்கியானன்றியிலே எழுப்புகைக்குச் சமர்த்தங்களாக வில்லாததுகள் போல் அந்தத்தேவர்களும் சமர்த்தாளாகாமற்போனார்கள். அப்படிப்பட்ட க்ஷேத்திரக்கியானத்தினாலேகாரியகாரணயனைக் கியானத்தினாலே நன்றாகவிவரித்துச்சிந்திக்கவேண்டும்,

## உஎ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

சுத்ததத்துவக் கியானசுகமான
மெத்தசாதன யோகமென்மேலினால்
பெற்றிடும்பிர கிர்திபுருஷாளுடை
சுத்தமாம்விவே கத்தினாற்சொல்லினார்.

தத்வக்கியானமுதலானவெகுசாதனயோகத்தினாலேயும், பிரகிருதி புருஷாளுடைய விவேகத்தினாலேயும், மோட்சரீதியானது நிரூபிக்கப்படுகின்றது,

ஸ்ரீபகவானுடையவாக்கியம்,

வாராய்மாதாவே, ஜலத்திலேபிரதிபலிக்கின்ற சூரியனானவன் அந்தச்ஜலதர்மங்களாலே யதார்த்தமாகச்சம்மதிக்கப்படாததுபோல் புருஷனானவன் தேகத்திலேயிருந்தாலும் விகாரசூனியனாயும், சத்வாதிகுணசூனியனாயும், கர்த்ருத்வசூனியனாயும் இருக்கிறபடியினாலே அந்தப்பிராகிருதங்களான சுகதுக்காதிகளாலே சம்பந்திக்கப்படவில்லை. அவன் அயிக்கப்பட்டானேயானாலப்போது அதனாலேயுண்டாயிருக்கின்ற அகங்காரத்தினாலேமிகவும் மூடமானமனதையுடையவனாய் நான்கர்த்தாவாகிறேனென்றுஎண்ணி அதனால்மனதில் துக்கத்தையுடையவனாய்ப்பிரகிருதி சம்பந்தத்தினாலே பண்ணப்படுகின்ற தர்மார்த்தகாமங்களாலேயும்.ராகத்துவேஷாதிகளாலேயும்,தேவதிரியக்கு நராள்முதலானஜன்மங்களில்சம்சாரமார்க்கத்தை யடைகிறான், நித்திரை பண்ணுகிறவன் சொப்பனத்திலே பதார்த்தங்க ளில்லாம லிருந்தாலும்

யதார்த்தம்போல் உண்டாய்க்காணப்படுகிறதுபோல்விஷயங்களைச் சிந்திக்கின்ற புருஷனுக்கு யதார்த்தமில்லாத சம்சாரரூபஅர்த்தமானது நிவிர்த்திக்கிறதில்லை, அசத்துக்களான விஷயங்களுடைய மார்க்கத்திலே விழுகின்றசித்தத்தை மெள்ளமெள்ளத் தீவரமானபக்தியோகத்தினாலேயும், வைராக்கியத்தினாலேயும் வசப்படுத்திக்கொள்ளவேண்டும், யமநியமமுதலான யோகமார்க்கங்களினால் என்னிடத்திலேயேவைக்கப்பட்டசித்தத்தையுடையவனாய் என்னுடையகதாசிரவணஞ்செய்து சகலபிராணிகளிடத்திலும் சமபுத்தி யுடையவனாய் வயிரமில்லாமலும், சத்சங்கத்துடன்கூடி நிஷ்காமமாய் ஈசுவரார்ப்பணம்பண்ணப்படுகிற சுவதர்மத்தையுடையவனாயும் யதேச்சா லாபத்தில் சந்துர்ஷ்டனாகியும், சிரத்தையோடே கூடினவனாகியும், ஏகாந்தவாசியாகிச் சமதமாதிகுணங்களையுடையவனாகியும், சகலபிராணிகளுக்கும் சுகிர்த்தாயும், தயையுடையவனாகியும்,பரமாத்துமக்கியானத்தையுடையவனாகியும், புத்திரமித்திராதிஅனுபந்தங்களுடனே கூடிக்கொண்டிருக்கிற இந்தத்தேகத்தினிடத்தில் அசத்தானமமதையைப் பண்ணாதவனாகியும், நேத்திரத்தினாலே சூரியனைப்பார்க்கிறாற்போல்மனதினாலே பரமாத்துமாவைஅறிந்து ஆத்துமக்கியானத்தை யுடையவனாய்க்கொண்டு சகத்திற்கு நேத்திரமானதுபோல்பிரகாசமாகியும், சமஸ்தகாரியங்களிலேயும் காரணங்களிலேயும் இணைபிரியாமலு மிருக்கிறவன் பரிபூரணமான பிரமத்தையடைகுவன். ஜலத்திலே பிரதிபலிக்கின்ற சூரியனுடையபிம்பமானது கிரகமத்தியி லிருக்கின்ற சுவரிலேபிரகாசிப்பதைக் கிரகத்திலேயிருக்கின்ற புருஷன் பார்த்துச் சுவரிலே பிரகாசிக்கின்ற அந்தப் பிரதிபிம்பத்தைக்கொண்டு ஜலத்திலே யிருக்கிற பிரதிபிம்பமாக அறிந்து அந்த ஜலத்திலேயிருக்கின்ற பிரதிபிம்ப மூலமாக ஆகாசத்திலேயிருக்கின்ற சூரியனைப் பார்க்கிறாற்போல் தேகேந்திரியமனதுகளிலே அந்தரியாமியா யிருக்கின்ற பிரதிபிம்பங்களினாலே திரிகுணாத்துமகனான அகங்காரமானது காணப்படுகிறது, அந்தஆத்துமாவினாலே சத்தியக்கியான சுவரூபரான பரமாத்துமாவானவர் காணப்படுகிறார், இந்திரியங்கள்முதலானதுகள் நித்திரையினாலே பிரகிருதியிலே லயித்திருக்குகையில் பரமாத்துமாவானவர் அப்போது ஆத்மாவைநாசத்தையடைந்தவன்போல எண்ணிக்கொண் டிருக்கிறார்.

அதெப்படிபோலவென்றால் திரவியநாசத்தை யுடையமனிதனானவன் தானே நாசமடைந்ததாக விசனப்படுவதுபோலஎண்ணிக்கொண்டிருக்கிறார். தேகத்துக்குப் பிரகாசகனாகியிருக்கிற ஆத்துமாவைத் தேகாதிகளைக்காட்டிலும்வேறாகிச்சர்வசாட்சியாயிருக்கிறவனாகஅறிந்து அவனையே அடைவனென்றுசொல்லுகிறபகவானுடையவசனத்தைக்கேட்டுத் தேவஹூதிகேட்கிறாள். வாரீர்பிரம்மநிஷ்டரே, புருஷனையன்றிப் பிரகிருதிக்குப் பிரகாசமில்லாமலும், பிரகிருதியையன்றிப் புருஷனுக்குப் பிரகாசமில்லாமலும், கந்தத்தைவிட்டுப்பூமியும் பூமியைவிட்டுக்கந்தமும் விடாததுபோலும்,ஜலத்தைவிட்டுரசமும், ரசத்தைவிட்டுச்ஜலமும், விடாததுபோலும், பிரகிருதியைவிட்டுப் புருஷனும், புருஷனைவிட்டுப் பிரகிருதியும் பிரகாசிக்கிறதில்லை, அப்படியிருக்கக்கர்த்துருத்வமில்லாதபுருஷனுக்குக் கர்மபந்தமுள்ளசத்வாதிகுணங்களுடையசம்பந்தம் எப்படிஉண்டாகாமலிருக்கும், அதை அடியேனுக்குச் சொல்லவேண்டுமென்று கேட்கிற தேவஹூதியைப்பார்த்துஸ்ரீபகவா னருளிச்செய்கிறார்.

வாராய்மாதாவே, சுவ தர்மத்தினாலும், நிர்மலமான மனதினாலும் சர்வகாலமும்என்னுடைய கதாசிரவணத்தினாலே விருத்தியடைகின்ற புருஷனுடைய பிரகிருதியானது அக்கினியையுண்டாக்குகிறஅரணியானதுஅந்தஅக்கினியினாலேயே தகிக்கப்பட்டுப்போகிறாற்போல் மெள்ள நாசத்தையடைந்துவிடும், புசிக்கப்பட்டபோகங்களையும், நித்தியமாகக்காணப்பட்ட தோஷங்களையுமுடையஅந்தப்பிரகிருதியானது சுவானத்தினிடத்திலேயிருந்தும் ஈஸ்வரனாகியுமிருக்கிற பரமாத்மாவுக்கு அசுபத்தைச்செய்யமாட்டாது. நித்திரைபண்ணுகிறபுருஷனுக்குச்சொப்பனமானது வெகுஅனர்த்தங்களை யுண்டாக்கி விழித்துக்கொண்டபின்பு புத்தியில் தோன்றிக்கொண்டிருந்தாலும், மோகத்தைச்செய்யாதுபோல்பிரகிருதியும் தத்துவக்கியானத்தையறிந்த புருஷனுக்கு ஒருக்காலும் அபகாரத்தைச்செய்யாது பரமாத்துமாவினிடத்திலே பிரீதியை யுடையவனானவன் என்னுடைய பிரசாதத்தினாலே கைவல்லியமென்றுபெயராயுடையமோட்சத்தைச் சீக்கிரமாக அடைவார்.

## உ அ-வது- அத்தியாயம்.

கலிவிருத்தம்.

துல்யகியானத்தி னாலேதுலங்கின்ற
நல்லயோகத்தி னால்நனிகுன்றிடும்
வல்லநற்பர மாத்மஸ்வரூபமாம்
அல்லல்யாவு மிதில்றைந்திட்டதே

தியானத்தினாலே விளங்குகின்ற அஷ்டாங்கயோகத்தினாலே சர்வவுபாதிசூனியரான பரமாத்ம சுவரூபக்கியானமானது சொல்லப்படுகின்றது.

ஸ்ரீபகவானுடைய வாக்கியம்,

வாராய்ராஜபுத்திரியே, மனதுதெளிவாகிச் ஜன்மார்க்கத்துடன் ஸ்ரீபகவானைத் தியானிக்கத்தக்க யோகாப்பியாசத்தினுடைய லட்சணத்தைச்சொல்லுகிறேன் தன்னுடையசக்தியுள்ளமட்டும் சுவதர்மானுஷ்டானமும்,வி

ருத்திதர்மத்தில் நிவர்த்தியும், அதிஷ்டானரூபமாகக்கிடைத்ததைக்கண்டு சந்தோஷப்படுகையும் ஆத்மவித்துக்களான பாகவதாளுடையதிருவடிகளை அர்ச்சிக்குகையும் தர்மார்த்தகாமங்களில்நின்றும் நிவர்த்தியும்மோட்சாதனதர்மத்திலேஆசக்தியும், அல்பமாயும்பரிசுத்தமாயுமிருக்கிற அன்னத்தினுடையபோசனமும், சர்வகாலமும்அஹிம்சையும், சத்தியவசனமும் திருடாமலிருக்குகையும் மவுனமும் சர்வகாலமும் பகவானிடத்திலே மனதை அசஞ்சலமாக நிறுத்தி யிருக்குகையும் விஷயங்களில்நின்றும் இந்திரியங்களுடைய நிரோதமும், இருதயத்திலே பிராணனுடையஸ்தானங்களான மூலாதாரமுதலானத்திற்குள்ளே ஒரு பிரதேசத்திலே மனதுடனே கூடபிராணனுடைய தாரணமும், ஸ்ரீவைகுந்தருடைய லீலைகளானதியானமும் மனதுக்கு பரமாத்மாவினுடையசுவரூபத்தைச்சம்பாதிக்குகையும் இதுகளில் மிகவும் சமர்த்தனன புருஷனானவன் தனது புத்தியினாலேமனதைமெள்ள ஆத்மாவினிடத்திலே நிறுத்தக்கடவன்பரிசுத்தமானவிடத்திலே தெர்ப்பாசனம், கிருஷ்ணாசனம் வஸ்திரம் இதுகளைமேலேபோட்டுக்கொண்டு அந்தஆசனத்திலே சொஸ்திசாசனத்தை யுடையவனாகிப் பிராணனை நிரோதம்பண்ணக்கடவன். சொஸ்திசாசனமாவது துடைகளைக்கணைக்கால்களுக்கு உள்ளாகப்பண்ணிக்கொண்டு பாதநுனிகளை முழங்கால்களுடைய மத்தியத்திலேவைத்துக்கொண்டிருக்கிற யோகியினுடையஅந்த ஆசனத்தைச் சொஸ்திகமென்று வித்துவாம்சாள் சொல்லுவார்கள்.

இப்படிப்பட்ட ஆசனத்தி லிருந்துகொண்டு பிராணனுடையமார்க்கத்தைப் பூரக கும்பக ரேசகங்களாலே சோதிக்கக்கடவன், பூரகமாவது வெளியிலேவந்த வாயுவைத்திரும்பவும் உள்ளே பிரவேசிப்பிக்கிறது கும்பகமாவது பிரவேசித்தவாயுவை நிறுத்தித்தரிக்கிறது ரேசகமாவது தரிக்கப்பட்டவாயுவை வெளியிலேவிடுகிறது, இதுகளினாலேயாவது இடையென்கிறநாடியினாலேபூரித்துப் பிங்கலையென்கிற நாடியினாலேவிடுகிறதும் பிங்கலைநாடியினாலேபூரித்துஇடைநாடியினாலேவிடுகிறதுமானபிரதிகூலமாயாகிலும் சோதிகக்க் கடவன் சித்தமானதுஸ்திரமாகவிருக்கும்படி சோதிக்கக்கடவன் ஊதிஉருக்கப்பட்டசொர்னமானதுமலத்தைவிட்டுவிடுகிறதுபோலசுவாசசயத்தையுடையயோகிக்கு மனதுசீக்கிரமாகநிர்மலமாய் ஸ்திரப்பட்டுப் பிராணநிரோதங்களால் வாதபித்தசிலேஷ்மங்களையும், தாரணைகளால்பாவத்தையும்இந்திரியநிக்கிரகத்தினாலே விஷய சங்கங்களையும், பரமாத்மத்தியானத்தினாலே ராகத்துவேஷாதிகுணங்களையும் தஹிக்கக்கடவன் மனதானது யோகாபயியாசத்தினாலே நிர்மலமாயும், ஸ்திரமாயு மிருக்கிற போதுதன்னுடையமூக்குநுனியிலேவைக்கப்பட்டதிருஷ்டியையுடையவனாய்ப் பகவத்பக்தியைத்தியானம்பண்ணக்கடவன் பிரசன்னமான பத்மம்போன்ற திருமுகமண்டலத்தை யுடையவராகியும் பத்மகற்பம்போல் சிவந்த நேத்திரங்களை யுடையவராகியும், நீலோற்பலதளம்போன்ற திருமேனியையுடையவராகியும், பொன்வர்னமான பீதாம்பரத்தையுடையவராகியும், மார்பிலே ஸ்ரீ வச்சத்தை யுடையவராகியும், கவுஸ்துவா பரணத்துடனே கூடிக்கொண்டிருக்கிறகண்டத்தையுடையவராகியும், மதித்த வண்டுகளுடைய மதுரமான தொனியையுடையதான துளசிமாலையினாலே சூழப்பட்டவராகியும், விலையில்லாதான ஆரம், வலையம், கிரீடம், தோள்வளை நூபுரம் இதுகளையுடையவராகியும், அரைநூல்மாலையினால்விளங்குகின்ற கடிப்பிரதேசத்தை யுடையவராகியும், பக்தாளுடைய இருதயகமலத்தை ஆசனமாகவுடையவராகியும், மனோக்கியமான ரூபத்தை யுடையவராகியும், சாந்தராகியும், பக்தாளுடையமனதையும், நேத்திரங்களையும் சந்தோஷிப்பிக்கிறவராகியும், அடிக்கடி அதிசுந்தரமான தரிசனத்தை யுடையவராகியும், சமஸ்தலோகங்களாலேயும் நமஸ்கரிக்கப் படுகிறவராகியும், பவித்திரமாகியிருக்கிற யசசையுடையவராகியும், புண்ணியசுலோகாளான பலி, பீஷ்மர்முதலானபேர்களுக்குளசசைப்பண்ணியும், சம்பூர்னங்களான அவயவங்களையுடையவராகியுமிருக்கிற ஸ்ரீமந் நாராயணனை மிகவும்பரிசுத்தமானமனதினாலே தியானம்பண்ணி அவருடையசமஸ்த அவயவங்களையும் பார்த்தபிற்பாடு அந்தப்பகவானுடைய ஒரு அவயவமாயும், வச்சிரம், அங்குசம், துவசம், பத்மம், இதுகளாகிறரேகைகளுடனேகூடிக்கொண்டும், மிகவும் உன்னதங்களாகித் தாமரை இதழ்போல்சிவந்தும், நிலவைப்போலொத்த நகங்களையுடையதாகியும், தியானம்பண்ணுகிற பேர்களுடைய இருதயத்திலுள்ள அந்தகாரத்தை நாசம்பண்ணுகிறதாயு மிருக்கிற பகவானுடைய சரணாரவிந்தத்தை நன்றாகச் சிந்திக்கக்கடவன். அந்தத் திருவடிகளை அலம்புகிற பிரபாவத்தினாலே பரிசுத்தமாய்ச் சகலநதிகளுக்கும் சிரேஷ்டமாயிருக்கிற கங்கையைச் சிரசிலேதரித்தபடியினாலே சிவனானவன் பரிசுத்தனானன், தியானம்பண்ணுகிறவனுடைய மனதிலிருக்கின்ற மலமாகிறபர்வதத்திலேவிடப்பட்ட வச்சிராயுதம்போன்ற பகவானுடைய சரணாரவிந்தத்தைத் தியானம் பண்ணக்கடவன்,

ஜன்மரகிதராகியும், பரிபூரணராகியு மிருக்கிற பகவானுடைய இரண்டுமுழங்காலானது சமஸ்தலோக கர்த்தாவான பிர்மாவுக்கு மாதாவாகியும், தேவர்களாலேயும் சேவிக்கப்பட்டும், பத்மம்போன்ற நேத்திரங்களை யுடையவர்களாகியுமிருக்கிற ஸ்ரீமகாலட்சுமியானவள்தன

து துடைகள் பேரிலே வைத்துக்கொண்டு துளிர்போலொத்த கைகளினாலே பிடித்து உபசரிக்கப்படுகிற இரண்டுமுழங்காலையும் இருதயத்திலே தியானம்பண்ணக்கடவன் கறுத்த மானுடைய தோள்கள்பேரிலே விளங்கியும். பலத்துக்கு நிதியாகியும், காசாம் புஷ்பம்போன்ற காந்தி யுடையதுகளாகியுமிருக்கிற பகவானுடைய துடைகளைத் தியானம்பண்ணக்கடவன். பாதங்கள்வரையில்தொங்குகின்ற பீதாம்பரத்திலே அரைநூல் மாலையினாலே சூழப்பட்டிருக்கிற கடிபச்சாபாகத்தைத் தியானம்பண்ணக்கடவன் பிரம்மாவுக்குஸ்தானமான பத்மத்திற்கு உற்பத்திகாரணமாயிருக்கிற நாபியைத் தியானம்பண்ணக்கடவன் ஸ்ரீஹரியினுடைய இந்திரநீலமணிபோலவும், நிர்மலமான ஆரங்களுடையகாந்தியினாலே வெளுத்திராநின்றுமிருக்கிற ஸ்தனங்களுடைய இரண்டையும் தியானம்பண்ணக்கடவன், ஸ்ரீமகாலட்சுமிக்கு இருப்பிடமாகியும், ஸ்மரித்தும் தரிசனம்பண்ணுகிறபுருஷாளுடையமனதுக்கும் நேத்திரங்களுக்கும் மிகவும்ஆனந்தத்தைபண்ணுகிறமார்பைத் தியானம்பண்ணக்கடவன்,

கவுஸ்துவமணியைப்பூஷணமாகவுடையகண்டத்தைத்தியானம்பண்ணக்கடவன், க்ஷீராப்திமதனசமையத்திலே தம்மாலேதரிக்கப்பட்ட மந்தர பர்வதத்தினுடைய சுழலினாலே மிகவும் பிரகாசமாகப்பண்ணப்பட்ட தோள்வளைகளையுடைய பாகுகளையும், சகிக்கக்கூடாத தேஜசையுடைய சுதரிசனத்தையும், தாமரைப் புஷ்பம்போலும் ராஜஅம்சம்போலுமிருக்கிற சங்கத்தையும்நன்றாகத்தியானம்பண்ணக்கடவன். சத்துருபடாளுடைய இரத்தமாகிற சேற்றினாலே பூசப்பட்டும், மிகவும் இஷ்டமாகியுமிருக்கிற கதையைத் தியானம் பண்ணக்கடவன், வண்டுகளின்கூட்டத்தினுடைய சப்தத்தினாலே சப்தித்துக்கொண்டிருக்கிற வனமாலையையும் தியானம்பண்ணக்கடவன் பக்தாளிடங்களிலே கிருபையோடேகூடியதிருமுகமண்டலத்தைச் சிந்திக்கக்கடவன், வக்கிரங்களாகியும், முன்னெற்றிமயிர்களுடைய சமுகத்தினாலே சூழப்பட்டும், ஸ்ரீமகாலட்சுமிக்கு ஸ்தானமாகிய பத்மத்தைத்திரஸ்கரிக்கத் தக்கதாயுமிருக்கிற நேத்திரங்களையுடைய புருவங்களை ஆலசிய மில்லாதவனாய்த் தியானம்பண்ணக்கடவன், அதிகோரமான தாபத்திரியத்தை நாசம்பண்ணத்தக்கதாகியும், மனோக்கியமான மந்தஹாசத்துடனே கூடிக்கொண்டும், கிருபைக்கு இருப்பிடமாகியுமிருக்கிற கடாட்சத்தைச் சர்வகாலமும் தியானம்பண்ணக்கடவன் பிரபன்னளான பக்தாளுடைய தீவரமான சோகத்தினாலே யுண்டாகிக் கண்ணீராகிற சமுத்திரத்தை யுலர்த்திப்போடத் தக்கதாகியும், மிகவும் கெம்பீரமாகியு மிருக்கிற புன்னகையையும், தன்னுடைய இருதயாகாசத்திலே பார்க்கப்படுகின்ற ஸ்ரீ ஹரியினுடைய அதரோஷ்டரங்களுடையகாந்தியினாலே சிவந்ததுகளாகியும், சூட்சுமங்களாகியும், குருக்கத்திமொக்குகளுடையவரிசைபோல்விளங்குகிற பல்வரிசைகளையுந் தியானம்பண்ணக்கடவன்,

இந்தப்பிரகாரம்பகவானுன ஸ்ரீஹரியினிடத்திலே அடையப்பட்ட பிரேமரசத்தை யுடையவனாகியும் பக்தியினாலேஉருகுகின்ற இருதயத்தை யுடையவனாகியும் சந்தோஷத்தினாலேயுண்டாகின்ற மயிர்க்கூச்சையுடையவனாகியும் மிகவும்ஆசையினாலேயுண்டாகின்ற ஆனந்தபாஷ்பத்தினால் வியாபிக்கப்பட்டும், ஆனந்தப் பிரவாகத்திலேமுழுகினவனாய் அந்தரூபதாரணையிலே பிரயத்தனமில்லாதவனாய்விடுவன் அப்போது ஆசிரயமானகாஷ்டத்தைவிட்டிருக்கின்ற அக்கினிச் சுவாலையானது சாந்தியையடைகிறாற்போல் சாந்தியையடைந்து தேகமுதலான உபாதிசூனியனாய்க்கொண்டு அக்கியானசூனியமாகியிருக்கிறமனதினுடைய நிவர்த்தியினாலேசுகதுக்கங்களுக்கு வெளிப்பட்டவரான அந்தபரமாத்மாவினிடத்திலே நிஷ்டையையடைந்தவனாய்ப் பூர்வம்அனுபவித்த சுகதுக்கங்களை அகங்காரத்திலே வைத்துப்போட்டுப் பரமாத்மசாட்சாத்காரத்தையுடையவனாயிருப்பன் இந்தப்படிக்குயோகசித்தியையுடைய புருஷனானவன் எந்தத்தேகத்தில்நின்றும் பரமாத்மஸ்வரூபத்தையடைந்தானோ அந்தத்தேகத்தையும்பாரான்மத்தியபானத்திலேயுண்டானமதத்தினாலே ஒன்றுந்தெரியாமலிருக்கிற புருஷனானவன் வஸ்திரம்தன்சரீரத்திலே சுற்றப்பட்டிருக்கிறதையும் நழுவிவிழுந்துபோனதையும் அறியாததுபோல் பூர்விகமான புண்ணியபாபவாசனையினாலே சஞ்சரித்துக்கொண்டுதனதுபிராரத்தகர்மம் இருக்கிறமட்டுக்கும் சஞ்சரித்துக்கொண்டு புத்திர மித்திராதிகளையும் தன்னுடைய தேகத்தையும் சொப்பனத்துக்குச் சமானமாகநினைத்து நானென்றும் என்னுதென்றும் அபிமானப்படான் அக்கினியானது சொலிக்கின்றகாஷ்டத்தைக்காட்டிலும் தன்னிடத்தில்நின்றும் பிறவாநின்ற பொறிகளைக்காட்டிலும் புகையைக்காட்டிலும் வேறாகச்சொல்லப்படுகிறாற்போல் ஆத்மாவென்கிற அபிமானத்திற்குவிஷயமானதேகம் இந்திரியங்கள் மனது இதுகளைக்காட்டிலும் புருஷனானவன்வேறாகச்சொல்லப்படுகிறான் சிவனென்றுபெயரையுடையவனான அந்தப்புருஷனைக்காட்டிலும் பரப்பிரம்மமென்றுசொல்லப்பட்டபகவானானவர் வேறாகநிற்கிறார் சராயுசமுதலான சதுர்விதப்பிராணிகளிலேயும் அந்தப்பரமாத்மாவையும் அந்தப் பரமாத்மாவினிடத்திலே நாலுவிதப்பிராணிகளையும் அந்தநாலுவிதப் பிராணிகளிலே பஞ்சபூதசுவரூபமென்று அடையும் பகவானிடத்திலே யசஞ்சலமாகஇராநின்றபுத்தியினாலேபார்க்கக்

கடவன் அக்கினியானது காஷ்டங்களுக்குத் தீர்க்கமென்றும் சின்னதென்றும் நானாவிதமாகப் பேதங்காணப்படுவதுபோல் தேகத்திலேயிருக்கின்றபுருஷனும் நானாவிதமாக அறியப்படுகிறான் ஆகையினாலே பரமாத்மாவினுடைய அம்சமானசீவனுக்குப்பந்துவேதுவாகியும், ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய சக்தியாகியும் காரியகாரண சுவரூபமாகியும் இப்படிப்பட்டதென்று சிந்திக்கக்கூடாமலுமிருக்கிற பிரகிருதியை அந்தப்பகவானனுக்கிரகத்தினாலேஜயித்துப் பரமாத்மசுவரூபானுபவத்துடனே கூடியிருக்கக்கடவன்,

## உ௯-வது, அத்தியாயம்.

கலிவிருத்தம்,

சுத்தபக்தியும் யோகமுஞ்சோர்விலாத்
தத்காலத்தின் றளர்ச்சியிலாப்பலம்
வெற்றிகொள்விர கத்தின்பொருட்டினால்
பத்திகோரசம் சாரம்பயிலுவாம்

பக்தியோகமும் காலத்தினுடையபலமும் விரக்தியின்பொருட்டுக்கோரமானசம்சாரமும் வெகுபிரகாசமாகச்சொல்லப்படுகின்றது,

இப்படி அருளிச்செய்கிறபகவானைப்பார்த்துத் தேவஹூதிகேட்கிறாள் வாரீர்பகவானே மகதத்வமுதலானதத்வங்கள் பிரகிருதிபுருஷாளுடைய லக்ஷணம் சாங்கியசாஸ்திரங்களிலே சொல்லியிருக்கிற மகதத்வ முதலானதுகளுக்கு வேறுவேறாகக்காணப்படுகிற லட்சணமுஞ்சொல்லப்பட்டது இந்தலக்ஷணத்தைச்சொல்லுகிறதற்கு மூலமானபக்தியினுடையமார்க்கத்தையுஞ் சம்சாரசுவரூபத்தையுங் காலத்தினுடையசுவரூபத்தையுஞ் சொல்லவேண்டுமென்று கேளாநின்ற மாதாவினுடைய வசனத்தைக்கொண்டாடி கிருபையுடையவராய் மாதாவைப்பார்த்து ஒருவார்த்தைசொன்னார்.

ஸ்ரீபகவானுடைய வாக்கியம்.

வாராய் மாதாவே பக்தியோகமானது அனேகவிதமானமார்க்கங்களாலேவெகுவிதமாகச்சொல்லப்படுகிறது, புருஷாளுக்குச்சுபாவமானசத்வாதிகுணங்களுடைய விருத்திபேதத்தினாலே அபிப்பிராயம்வேறாகவிருப்பதுபோல் பக்தியும்வேறுவேறாகக்காணப்படுகிறது ஹிம்சை டம்பம் த்வேஷம் இதுகளைச்சங்கற்பித்துக்கொண்டு கோபத்தையும் பேதபுத்தியையும் உடையவனாகி என்னிடத்திலேபக்தியைப்பண்ணுகிறபுருஷன்தாமசனென்றும் விஷயசவுக்கியங் களையும் யசசையும் ஐசுவரியத்தையுங்கோரிக்கொண்டுபேதபுத்தியையுடையவனாய் அர்ச்சாதிவிக்கிரகங்களிலே என்னை அர்ச்சிக்கிறபுருஷன் ராஜசனென்றும் பாபக்ஷயத்தையுத்தேசித்தாகிலும் பகவத்பிரீதியை யுத்தேசித்தாகிலும். யக்கியம்பண்ணுகின்றவிதியை யுத்தேசித்தாகிலும்,அர்ச்சாசவிக்கிரகத்திலே என்னை ஆராதிக்கிறபுருஷனானவன் சாத்மிகனென்றுஞ் சொல்லப்படுவன் என்னுடைய கல்யாணகுணங்களைக் கேட்டமாத்திரத்திலே சமுத்திரப்பிரவேசம்பண்ணுகிற நீங்காத கங்காப்பிரவாகமானதுபோல்என்னிடத்திலே அசஞ்சலமாய்ப்பக்திசெலுத்துகிற அந்தநிற்குணபக்தியையுடைய பரமபாகவதாள் என்னுடையசேவையையன்றியிலே சாலோக்கியமென்கிற-எனதுவைகுண்டலோகவாசத்தையும்சாமீப்பியமென்கிற என்னுடைய சமீபவாசத்தையும் சாருப்பியமென்கிற எனதுசமானரூபத்தையும் சாயுச்சியமென்றஐக்கியத்தையும் என்னாலேகொடுக்கப்பட்டாலும் இதுகளைக்கிரகிக்கிறதில்லை இந்தத்திரிகுணத்தையும் விட்டு என்னுடையசுவரூபானுபவத்திற்குபக்தனானவன்யோகமென்றுபெயரையுடையதான அந்தபக்தியை மோக்ஷமென்றுசொல்லப்படும் பலஇச்சையில்லாமலும் சிரத்தையுடனேகூடிக்கொண்டுமிருக்கிற சுவதர்மத்தினாலேயும் நிஷ்காமனாகியும் ஹிம்சாரகிதமாயுமிருக்கிற பாஞ்சராத்திரிகளிலேசொல்லப்பட்ட பூஜாகிரமத்தினாலேயும் எனதுவிக்கிரகத்தினுடைய தரிசனம் ஸ்பரிசனம் பூசை ஸ்தோத்திரம் பிரணமம்இதுகளாலேயும் சகலபிராணிகளிடங்களிலும்ஈசுவரபுத்தியினாலேயும் தைரியம் வைராக்கியம் மகத்துக்களுடைய சன்மானம் தீனாளிடங்களில்கிருபையும் தனக்குச் சமானமானபேர்களிடத்திலே சிநேகமும் இயமநியமங்களாலும் வேதாந்தமுதலானத்தினுடைய சிரவணங்கள்எனது நாமகீர்த்தனம் கபடமில்லாமலிருக்குகை விஷயசங்கமும் அகங்காரமில்லாமலிருக்கை இந்தக்குணங்களினாலேமிகவும் பரிசுத்தனாய் என்னுடை தர்மங்களை அனுஷ்டானம் பண்ணுகின்ற புருஷனுடைய சித்தமானதுபிரயத்தனமன்றியில் எனதுகுணங்களைக் கேள்விசெய்தமாத்திரத்தில் வாயுவினாலே அடைவிக்கப்படுகின்ற கந்தமானதுபுஷ்பாதிஸ்தானத்தில்நின்றும் கிராணேந்திரியத்தையடைகிறதுபோல பரமாத்துமாவையடையும் யாதொருபுருஷனானவன் பரமாத்மாவாகியும் சர்வநியந்தாவாகியுமிருக்கிற என்னை உபேக்ஷைபண்ணிஅவிவேகத்தினாலே அர்ச்சாதிவிக்கிரகத்தைப்பரிகிக்கிறபுருஷன்பஸ்மத்திலேஹோமம்பண்ணினவனுக்குச்சமானமாவான்.

வாராய் மாதாவே பிராணிசமூகங்களை நிந்திக்கின்றபுருஷனிடத்தில் நான்சந்தோஷப்படுகிறதில்லை. சுவதர்மத்தை அனுஷ்டானம்பண்ணிக்கொண்டிருக்கின்ற புருஷனானவன் சமஸ்தபிராணிகளிலேயுமிருக்கின்ற என்னைத் தன்னுடைய இருதயத்திலேகாணுகிறவரையில்என்னை அர்ச்சாதிவிக்கிரகத்திலே அர்ச்சிக்கக்கடவன், தனக்கும் அன்னியபிராணிகளுக்கும் கொஞ்சமாகிலும்

பேதமாய்ப்பார்க்கிற புருஷனுக்கு மிருத்தியுருபியான நான் மகத்தானபயத்தைப்பண்ணுவேன் ஆகையினலே என்னைதானத்தினலேயும், சன்மானத்தினலேயும்சிநேகத்தினலேயும்,சமதிருஷ்டியினலேயும்பூசிக்கக்கடவன்.

வாராய் சுபத்தையுடையவளே, அசேதனங்களைக்காட்டிலும் ஜீவாள்சிரேஷ்டாள், அந்த ஜீவாளிலும் பிராண விருத்தியையுடையவாள் உத்தமாள், அவாளிலும், அறிவையுடையவாள் சிலாக்கியாள், அவர்களிலும் இந்திரியவிருத்திகளையுடையவாள் சிரேஷ்டாள். அதிலேயும்ஸ்பரிசக்கியானத்தை யுடையதுகள் சிரேஷ்டம், அதிலும் ரசக்கியானத்தை யுடையதுகள் சிரேஷ்டம், அதிலும் கந்தக்கியானததை யுடையதுகள், உத்தமம், அதிலும் சப்தக்கியானத்தையுடையதுகள் சிலாக்கியம் அதிலும், ரூபக்கியானத்தை யுடையதுகள் சிரேஷ்டம், அதிலும் கீழுமேலும் பல்லை யுடையதுகள் சிரேஷ்டம், பாதமில்லாததுகளான அதுகளிலும்வெகுபாதங்களையுடையதுகள் சிரேஷ்டம். அதுகளைக்காட்டிலும் நான்கு பாதத்தையுடையதுகள் சிரேஷ்டம், அதிலும் இரண்டு பாதத்தையுடைய மனுஷியசாதி சிரேஷ்டம், அதிலும் பிராமணாதி நான்குவர்னங்கள் சிரேஷ்டம், அதிலும் பிராமணவர்னம் சிரேஷ்டம், பிராமணளிலேயும்வேதத்தையறிந்தவன் சிரேஷ்டன், அவனிலும் வேதார்த்தத்தையறிந்தவன் சிரேஷ்டன், அவனிலும் சம்சயங்களைப் போக்கடிக்கிறவன் சிரேஷ்டன். அவனைக்காட்டிலும் சுவதர்மத்தை அனுஷ்டானம் பண்ணுகிறவன் சிரேஷ்டன், அவனிலும் தர்மார்த்தபலன்களைக் கோராமல் வைராக்கியத்தையுடையவன் சிரேஷ்டன், அவனிலும்தேகம்கிரியாபலன்கள் இதுகளை என்னிடத்திலே சமர்ப்பித்தவன் சிரேஷ்டன், என்னிடத்திலே சமர்ப்பிக்கப்பட்ட சித்தத்தையும் கர்மபலத்தையும்யுடையவனகிச் சகலபிராணிகளிடத்திலும் சமபத்தியையுடைய புருஷனைக்காட்டிலும் சிரேஷ்டனனபிராணியை நான்பார்க்கவில்லை.

வாராய்மனு புத்திரியே, பக்தி யோகமும் அஷ்டாங்கயோகமும்சொல்லப்பட்டது, வஸ்துகளுடையரூபங்களுக்கு ஆசிரயராகியும், அற்புதப்பிரபாவத்தையுடையதாகியுமிருக்கிற பகவானுடைய ரூபமே காலமென்று சொல்லப்படும்' அந்தக் காலரூபியாயிருக்கிற பகவானுக்கு இஷ்டனென்றும் த்வேஷியென்றும் பந்துவென்றுமில்லை. அந்தப்பகவானுடைய ஆக்கினையால்வாயுவானவன்வீசுகிறதும், சூரியனனவன் பிரகாசிக்கிறதும், இந்திரன் வருஷிக்கிறதும், சந்திரனனவன் பிரகாசிக்கிறதும்,விருட்சங்களும் ஔஷதிகொடிகளும், தன்தன்காலத்தில்புஷ்பங்களையும், பலன்களையும்கிரகிக்கிறதும், நதிகள் பிரவகிக்கிறதுகளும், சமுத்திரமானது கரையை அதிக்கிரமியாமலிருக்கிறதும், அக்கினியானது பிரவேசிக்கிறதும், பர்வதங்களோடே கூட பூமியானது முழுகிப் போகாமலிருக்கிறதும்ஆகாசமானதுபிராணிகளுக்குமார்க்கத்தைக் கொடுக்கிறதும் மகதத்வமானது தேகத்தை ஏழாவரணங்களாலே சூழப்பட்டிருக்கிற லோகமாகப்பண்ணுகிறதும், சத்வாதிகுணாபியந்தாக்களான பிர்மாமுதலானதேவர்களும் இந்தப்பிரபஞ்சத்தினுடையசிருஷ்டிமுதலானதுகளிலே அடிக்கடி ஜாக்கிரதையாகக் காத்துக்கொண்டிருக்கிறதும், ஸ்தாவரஜங்கம ரூபமான இந்தப் பிரபஞ்சமானது பிர்மாதிகளுடைய வசமாயிருக்கிறதும், அந்த பிர்மாதிகளும் இந்தப் பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டியாதிகளைப்பண்ணுகிறதும், பிறர்ரூபமாயிருந்து புத்திராதிகளைச் சிருஷ்டிபண்ணிக்கொண்டும் மிருத்தியுரூபமாயிருந்து இயமனையும் சங்கரித்துக்கொண்டும், சுவயம்நாசரகிதராகியும், விகாரமில்லாதவராகியுமாக இருக்கிறர்.

## ௩௰ வது அத்தியாயம்.

கலிவிருத்தம்;

தேகம்ஸ்திரீமுத லானவகைகளில்
சேகராசக்த மானசித்தத்தினைப்
பாகமில்லாக் காமிகள்தன்பாவத்தால்
சோகதாமசஞ் சொல்லிடுவாமரோ.

தேகம் ஸ்திரீமுதலானதுகளிலே ஆசக்தமான சித்தத்தையுடையவாளான காமிகளுடையபாவத்தினலேதாமசமான அதோகதியானது சொல்லப்படுகின்றது,

கபிலமகாரிஷியினுடைய வாக்கியம்.

வாராய்மாதாவே, பலவானனகாலத்திலே சலிப்பிக்கப்பட்டாலும் இந்த ஜெனமானது அந்த இந்தகாலத்தினுடைய மகத்தானபராக்கிரமத்தை வாயுவினுடைய பராக்கிரமத்தை மேகபந்தியானது அறியாததுபோல ஜனமானது காலரூபியானபகவானல் நாசம்பண்ணப்படுவதறியாமல் அநிக சுகத்தின்பொருட்டு அர்த்தத்தைச் சம்பாதிக்கிறதற்காக வெகு பிரயாசைப்பட்டு அனித்தியராகியும் புத்திரகளத்திராதிகளோடே கூடிக்கொண்டுமிருக்கிற தேகமான தனமுதலானதுகளை அவிவேகத்தினலே நித்தியமாக எண்ணிக்கொண்டும் சுகத்தையும் வைராக்கியத்தையும் அடையாமல் நரகத்திற்குரிய பாபங்களைச் சம்பாதித்து நரக வாதனையை அனுபவிக்கச் செய்யும் பகவானுடைய மாயையால் மோகிக்கப்பட்டு அந்த நரகவாதனையில்கிடைக்கிற ஆகாராதிகளில் அன்புடையவனய் அந்தத் தேகத்தையும் விட்டுவிடுகைக்கு இச்சிக்கிறதில்லை மேலும அந்த ஜனமானது துஷ்டர்களானஸ்திரீகளுடைய ஏகாந்தத்திலே பண்ணப்படுகிற சமபோகாதி ரூபமாயிருக்கிறமாயையினலேயும் மதுர

மான மழலைச்சொற்களையுடைய சிசுக்களின் வார்த்தைகளாலேயும் அபகரிக்கப்பட்ட மனதுகளையுடையவனும் இரகங்களிலே சோம்பலில்லாமல் துக்கத்தைச்சுகம்போலேயெண்ணி வெகு பெயரைஹிம்சித்து வெகுவழியாய்ச் சம்பாதிக்கப்பட்ட பொருள்களாலே அவர்களைப் போஷித்துக்கொண்டிருந்து தனக்கு வயதுதளர்ந்தபிற்பாடு அசக்தனுகிப் பிரத்தியாளுடையதனத்திலேஆசையையுடையவனும்ச் சம்சாரத்தைக்காப்பாற்றுவதில் சமர்த்தியமில்லாதவனும் வியர்த்தமான பிரயத்தனத்தையுடைய அந்தப்புருஷனை பாரியைமுதலானபேர்கள் சமர்த்தனுயிருந்தகாலத்திலே ஆதரவுபண்ணினற்போல் ஆதரவு செய்யாமல் மிகவும் அநாதரவுடன் நாய்க்கும் பூனைக்கும் ஆகாரம் போடுவதுபோலப்போடுகிற ஆகாரத்தைப் புசித்துக்கொண்டும் வார்த்திகத்தினலே வைரூப்பியத்தை யுடையவனுகியும், ரோகத்தை யுடையவனுகியும், மிகவும்ஜொலிக்கின்ற ஜாடராக்கினியையுடையவனுகியும், அல்பமான ஆகாரத்தையும் வியாபாரங்களையுமுடையவனுகியும், அசக்தனுகியும், மரணத்திற்குச்சமீபித்தவனுகியும், சேஷ்பத்தினுலே தகையப்பட்ட நாடிமார்க்கங்க ளுடையவனுகியும்,பிராணவாயுவினலே வெளிப்பட்டுபோன கண்களையுடையவனுகியும், இளைப்பு பெருமூச்சுகளாலே பண்ணப்பட்ட ஆயாசத்தையுடையவனும்க் கண்டத்திலே குரு குருவென்கிற சப்தத்தையுடையவனும் மிகவும்சகிக்கக்கூடாதான மரணவேதனையினுலே பந்துக்களழுதுகொண்டிருக்கச்சே மரணத்தை அடைகிற சமையத்தில் பயங்கராளாயும், கோபத்தினுலே சிவந்த கண்களை யுடையவளாகியுமிருக்கிறயிரண்டு யமதூதர்களைப் பார்த்துப் பயந்த இருதயத்தையுடையவனுகி மல மூத்திரங்களை விட்டுக்கொண்டு அந்தயமதூதர்கள் கையிலகப்பட்டு அவர்களுடைய மிரட்டுகளாலே பிளந்துபோகின்ற இருதயத்தை யுடையவனுகியும். மார்க்கத்திலே சுவானங்களாலே பிடுங்கப்பட்டவனுகியும், மிகவும் துக்கத்தை யுடையவனுகியும், தான்பண்ணின பாபத்தைஸ்மரித்தும், பசி தாகங்களாலே பிடிக்கப்பட்டவனுகியும், சூரியன் காட்டுத்தீ பெருங்காற்று இதுகளாலே பீடிக்கப்பட்டவனும், வறுக்கப்பட்ட மணல்களை யுடையதுக ளாகியும், இளைப்பாறிக்கொள்ளத்தக்க இடமில்லாதாகியும், உதகமில்லாதாகியுமிருக்கிற மார்க்கத்திலே அசத்தனுயிருந்தாலும், முதுகிலே குறடாவினல் அடிக்கப்பட்டவனும் மிகவும் பிரயாசத்தினுலே மூர்ச்சை யடைந்தவனுகியும், திரும்பவும் எழுந்திருந்து பாபிஷ்டமான மார்க்கத்தினுடைய தொண்ணூற்றொன்பதினுயிரம் யோசனங்களை மூன்று முகூர்த்தங்களாலே யாவது, இரண்டு முகூர்த்தங்களாலேயாவது தாண்டி யமலோகத்தை யடைந்தவனுக்கொண்டு, மிகவுங்கோரங்களான நரகவாதனைகளை அடைகிறன் ஓரிடத்திலே தன்னுடைய கைகால்கள் முதலான அவயவங்களுக்குத்துணிகளைச்சுற்றிக்குளைக்கொள்ளிகளாலே கொளுத்தி விடுகிறதையும், மற்றோரிடத்திலே தன்னாலேயாவது மற்றொருத்தனலே யாவது சேதிக்கப்பட்டிருக்கிற தன்னுடைய மாம்ஷத்தைப் பட்சித்தும் அந்த யமலோகத்திலே சுவானங்கள், பருந்துகள்=பாம்புகள்=தேள்கள்= கொசுக்கள் முதலானதுகளாலே சரீரபீடையையும் அடைந்து அவயவங்களைக் கண்டங் கண்டமாகச் சேதிக்கிறதையும். கேசம்முதலானதுகளாலேகிழிபடுகிறதையும்,பர்வதசிகரங்களில்நின்றுந் தள்ளப்படுகிறதையும், ஜலத்துக்குள்ளே போட்டு மிதித்துவைக்கிறதையும், பள்ளத்திலேபோட்டுவைக்கிறதையும் அடைகுவன், அந்தத்தாமிசிரம் ரவுரமுதலான நரகவாதனைகளை அனுபவிப்பான்,

வாராய்மாதாவே, இந்தச்சன்மத்தில்நரகத்திலேயுண்டாகின்ற வாதனைகள்யாவும் இந்தச் சமுசாரத்திலேயுங் காணப் படுகிறதுகள், பிராணிகளுக்குத் துரோகங்களைச்செய்து அதனலே போஷிக்கப்பட்ட சரீரத்தை இங்கேயேவிட்டுத் தான்செய்த பாவத்தை மார்க்கத்திற்குக் கட்டமுதாக வுடையவனுகித் தனத்தைப் பறிகொடுத்தவன்போல் மிகவும் வியசனப் பட்டுக்கொண்டு நரகத்திலே ஈசுவரனலே யடைவிக்கப்பட்டுத் தன்னலேசெய்யப்பட்டிருககிற குடும்ப போஷணத்தினுடைய பாவத்தை அனுபவித்து மனுஷ்யசென்மத்துக்குக் கீழ்ப்பட்டதுகளான யாதனைசன்மங்கள் எத்தனை யுண்டோ அதுகளையும் கிரமமாகஅடைந்து பாபத்தைப் போக்கிக்கொண்டு திரும்பவும் மனுஷ்யதேகத்தையடைகிறன்,

## ௩௧-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

மிச்சமில்லா மிசிரங்களாகிடும்
அச்சபுண்ணிய பாவமதனினல்
பிச்சமாமனுஷ்யப் பிராப்திரூபமாம்
வைச்சிடும்ரஜோ குணகதிவர்ணிப்பாம்,

மிசிரங்களாயிருக்கிற புண்ணிய பாவங்களாலே மனுஷியசன்மப் பிராப்தி ரூபமான ரஜோகுண கதியானது சொல்லப்படுகின்றது,

ஸ்ரீபகவானுடையவாக்கியம்,

வாராய்மாதாவே, பிராணியானது ஈசுவரனலே பிரவிர்த்திக்கப்படுகின்ற பூர்வகர்மத்திலே திரும்பவும்தேகத்தை யடைகிறதின்பொருட்டுப் புருஷனுடையவீரியத்தின் பிந்துவை ஆஸ்ரயித்ததாய்க் கொண்டு ஸ்திரீயினுடைய கர்ப்பத்தைப் பிரவேசித்து ஒரு நாள் சுக்கில சோணிதரூபமாகியும், ஐந்து நாளிலே குமளிரூபமாகி

யும் பத்துநாளில் இலந்தைப்பழம்போலவும் பிற்பாடு மாங்கிசபிண்டாகாரமாகியும், ஒருமாசத்திலே சிரசும் இரண்டுமாசத்திலே கைகால்முதலான அவயவங்களுடனே கூடினசரீரமும் மூன்றுமாசத்திலே நகம்ரோமங்கள் அஸ்திகள் கண் சர்மங்கள்காதுமுதலான இந்திரியத்துவாரங்களுடைய வுற்பத்தியும் நாலுமாசத்தில் சப்த தாதுக்களும் ஐந்துமாசத்தில் பசிதாகங்களும் ஆறுமாசத்தில் சராயு என்னப்பட்டபையிலே தாயாருடையவலதுபாரிசமான வயிற்றிலே சுழன்றுகொண்டும்,மாதா பட்சிக்கப்பட்ட அன்னபானாதிகளிலே விருத்தியடைகின்ற தாதுக்களையுடையதாய் அனேகசந்துக்களுக்கும் மலமூத்திரங்களுக்கும் ஸ்தானமான அந்தக்குட்சியிலே புழுக்களினலே கடிக்கப்பட்டு மிகுந்தகிலேசத்தையுடையவனய் அடிக்கடிமூர்ச்சையடைந்தும்மாதாவினலே பட்சிக்கப்படுகிறதுவர்ப்பு கைப்புகடுகைஉப்பு காரம் புளிப்பு முதலானதுகளாலே சமஸ்த அவயவங்களிலேயும்உண்டானவேதனையையுடையவனய்ச்சராயுவென்னப்பட்ட பையினலேயும்தாயாருடையகுடல்காளாலேயும் சூழப்பட்டவனய்ச்சிரசைக் குட்சியிலே வைத்துக்கொண்டு வணக்கப்பட்ட முதுகுகழுத்து இதுகளை யுடையனக்கொண்டு அந்தக்கர்ப்பத்திலேவாசம்பண்ணுகிருன் அந்தக் கர்ப்பத்திலேயிருந்துசன்மாந்தரகர்மவசத்தினலே யுண்டாகிற கியானத்தை யுடைவனய் அனேகஜன்மங்களிலே செய்யப்பட்டகர்மத்தை நினைத்துக்கொண்டு சுவாசம் விடக்கூடாமல்வெகுசங்கடத்துடன் ஏழாமாதமுதற்கொண்டு அடையப்பட்டகியானத்தையுடையனய்ப் பிரசவஹேதுக்களான வாயுக்களாலே யலைக்கப்பட்டவனய் மலத்திலேபிறந்திருக்கின்ற புழுக்களுடனேகூடப்பிறந்த புழுவானதுபோல் இருந்தவிடத்திலேயிராமல் பிர்மித்து மிகவும் தபிக்கப்பட்டும் தேகாத்மக்கியானத்தை யுடையவனகித்திரும்பவும் கர்ப்பவாசத்தில் பயத்தை யுடையவனகிஏழுபந்தனதாதுக்களை யுடையவனகியு மிருக்கிற அந்தச் சீவனனவன் ஈசுவரனை யஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டும், வியாகூலமான வாக்கினலே ஸ்தோத்திரம் பண்ணுகிருன்,

துஷ்டனன்னனக்கு யோக்கியமான கர்ப்பவாசரூபமானகதியானது காண்பிக்கப்பட்டு மிகவும் சிரமத்தை அடைந்திருக்கின்ற ஜகத்தை ரட்சிக்குகைக்கு உமதிச்சையினலே கிரகிக்கப்பட்ட நானவித ஸ்வரூபத்தை யுடையவராயும் விகாரசூனியராகியும் உபாதிசூனியராகியும பரிபூரணமான கியானத்தை யுடையவராகியு மிருக்கிற அந்தப் பரமாத்துவைப் பிரணமம் பண்ணுகிறேன்.

பஞ்சபூதங்களாலே நிர்மிக்கப்பட்ட சரீரத்திலேஅபத்தமாகவே மறைக்கப்பட்டவனகியும், சங்கமில்லாதவனகியும், இந்திரியங்கள் பூதங்கள் விஷயங்கள் அகங்காரம் இதுகளேஸ்வரூபமாகவுடையவனயிருக்கிறநான் அப்படிப்பட்ட சரீரமில்லாதவராகியும் அளவில்லாதமகிமையையுடையவராகியும் சர்வக்கியராகியும் பிரகிருதி புருஷர்களுக்குப் பரராகியுமிருக்கிற அந்தப் பரமபுருஷனுக்குத் தண்டன்சமர்ப்பிக்கிறேன், தேவரீருடைய மாயையினலே சுவரூபக்கியான மில்லாதவனய்ச் சத்வாதிகுணங்களை நிமித்தமாகவுடையதான கர்ம பந்தனத்தையுடைய இந்தச்சம்சாரமார்க்கத்தினலே பண்ணப்படுகின்ற கிலேசத்துடனே சஞ்சரித்துக்கொண் டிருக்கின்ற நான் மகானுபாவரான அந்த ஈசுவரனுடைய அனுக்கிரகத்தையன்றிஎந்தயுக்தியினலே நிஜஸ்வரூபத்தையடைவன் பூதபவிஷியவர்த்தமான விஷயமான கியானத்தை அந்தப்பகவானைத்தவிர மற்றொருவன்எவன்தான் கொடுப்பன் அந்தஈசுவரனனவர் ஸ்தாவரங்களிலேயும் சங்கமங்களிலேயும் அந்தரியாமியாகவிருக்கிற அந்தஈசுவரனை ஜீவரூபமான கர்மமார்க்கத்தை அனுவர்த்திக்கின்ற நாங்கள் தாபத்திரையசாந்தியின்பொருட்டுச் சரணமாக அடைகிறோம். மாதாவினுடையகுட்சியிலே யிருக்கின்றஇரத்தம் மலமூத்திரங்கள் இதுகளாகிறகிணற்றிலேவிழுந்தும் ஜாடராக்கினியினலேமிகவும்தபிக்கப்படுகின்ற தேகத்தை யுடையவனகியும் அதனலே மிகவும்சினனமானபுத்தியை யுடையவனகியுமிருக்கிற என்னை இந்தக்கர்ப்பத்தில்நின்றும் பாழுங்கிணற்றுக்குச்சமானமான வெளியிலேபுறப்படுகைக்கு இச்சிக்கவில்லை வெளிப்புறப்படுகையிற்றனே தேவரீருடையமாயையால் மோகிக்கப்பட்டு நானென்றும் என்னதென்றுமென்கிற புத்தியுண்டாய்த் திரும்பவும் புத்திரமித்திர களத்திராதிகளென்கிற சம்சாரத்தில்சிக்கிக்கொண்டு தேவரீருடையதிருவடிக்கும் புறம்பாய்ப்போவேன் ஆதலால் இந்தக் கர்ப்பத்தில்நின்றும் வெளிப்பட்டுக்கெட்டுப்போகாம லிருக்கும்படி கிருபைசெய்யவேண்டுமென்று நிச்சயிக்கப்பட்டபுத்தியையும் பத்துமாதங்களையுடையவனகியுமிருக்கிற அந்தஜீவனைத்தக்ஷணத்திலே பிரசவத்துக்கு ஏதுவானவாயுவினலே தள்ளப்பட்டவனய்ச்சிரசைஅதோமுகமாகப்பண்ணிக்கொண்டு மிகவுங்கிரகத்துடன் சுவாசமுங்கியானமில்லாதவனக் கொண்டு மகாபிரயாசத்தினலேவெளிப்பட்டுப் பூமியிலேவிழுந்து இரத்தங்களாலும் மலங்களாலும்பூசப்பட்டுத் தத்துவக் கியானத்தையிழந்து விபரீதபுத்தியை யடைந்தவனய் அழுதுகொண்டிருந்து அன்னியனுடைய அபிப்பிராயத்தை யறியாத சனத்தினலே போஷிக்கப்படுகின்ற அந்தச்சீவனனவன் ஸ்தன்னியபானர்த்தமாகஅழுகையில் வயிற்றுநோயினலேயழுகிறதென்று வேப்பிலைரசத்தைப்பானம்பண்ணி

வைப்பார்கள். வயிற்றுநோயினாலழுதால்பசித்தழுகிறானென்று ஸ்தன்னியபானத்தைப்பண்ணிவைப்பார்கள் இதுமுதலான அனிஷ்டத்தையடைந்து அதைநிவர்த்தித்துக்கொள்ளச் சக்தியற்றவனாய் எறும்புகொசுமுதலான ஜந்துக்களாலே ஹிம்சிக்கப்பட்டும், அசுசியான சயனத்திலே படுத்துக்கொண்டும், தன் அவயவங்களைச்சொரிந்துகொள்ளவும் எழுந்துஉட்கார்ந்துநடக்கிறதுமுதலானதினாலேயும் சாமார்த்தியமில்லாதவனாய்த் துக்கரமானஐந்துவயதுவரைக்கும் பாலியத்தையும், யௌவனத்துக்குக்கீழ்ப்பட்ட பவுகண்டவயதையுமனுபவித்தான்.

பிற்பாடு காமத்தையுடையவனாய் அகங்காரத்தினாலும், கோபத்தினாலும் ஆத்மநாசத்தின் பொருட்டுக் காமிகளிடத்திலே விரோதத்தைச் செய்துகொண்டு விவேகஈனனாகியும், துர்ப்புத்தியாகியும், பஞ்ச பூதங்களாலே செய்யப்பட்ட தேகத்திலே அசத்தான ஆக்கிரகத்தையுடையவனாய் அடிக்கடி நான்என்னதென்கிற புத்தியுடன் அக்கியானகர்மங்களினால் ரூபிகரித்திருக்கிறதேகத்தினாலே கட்டப்பட்டவனாய் சம்சாரத்தையடைந்து சிசினவுதிர திருப்தியின் பொருட்டுப் பிரயத்தனத்தை யுடையவனாய் துன்மார்க்கத்திலே ரமித்துக்கொண்டிருந்து திரும்பவும் பூர்வம்போலவே நரகத்திற்குரியவனாகிறான். சத்தியம்-சவுசம்-தபசு-மவுனம்-பரமார்த்தக்கியானம்-லச்சை-சம்பத்து-எசசு-பொறுமை-மனோநிக்கிரகம்-பெரியவனென்கிறது இதுகள் அசத்துக்க ளானதால் சகவாசஞ்செய்யாம லிருக்கவேண்டும் புருஷனுக்குஸ்திரீகளுடைய சங்கதியினாலேயும், ஸ்திரீசங்கதி செய்கிறபேர்களுடைய சங்கதியினாலேயும்,மோகமும், பந்தமு முண்டாகிறபடிக்கு மற்றொருவருடைய சங்கதியினாலேஉண்டாகமாட்டாது. பிரம்மாவும் தம்முடைய பெண்ணைப் பார்த்துமோகித்து மான்பேடுரூபமான அவளை லச்சையில்லாதவராகித் தானும்மான்ரூபியாகப் பின்சென்றார் அந்தப் பிரம்மாவினாலே மரீசிப் பிரஜாபதி முதலான பேர்கள் சிருஷ்டிக்கப்பட்டார்கள், ஸ்ரீமந்நாராயணனைத் தவிர மற்ற எந்தப்புருஷன்தான் ஸ்திரீரூபமானமாயையினாலே யிழுக்கப்படாமலிருக்கிறான், யோகாப்பியாசத்தினுடைய கரையைஅடைய இச்சிக்கிறவனும், பரமாத்துமஸ்வரூபத்தை யடைய இச்சிக்கிறவனும், ஒருக்காலும் ஸ்திரீகளிடத்திலேசங்கதியைப்பண்ணமலிருக்கக்கடவன். மோட்சத்தைக்கோறுகின்ற புருஷனுக்கு ஸ்திரீகளை நரகத்துவாரமாகச் சொல்லுவார்கள், ஸ்ரீஹரியினாலே நிர்மிக்கப்பட்டும், சிசுருஷைக்குக் காரணமாகியுமிருக்கிற அந்த ஸ்திரீரூபமான மாயையைத் தனக்குப் பிரதிகூலமான மிருத்தியுவைப்போலவும் திரணங்களாலேமூடப்பட்ட கிணற்றைப்போல் தனம்-புத்திரன்-கிரகம்-இதுகள்- தெய்வத்தினாலே நிருமிக்கப்பட்ட மிருத்தியுவாக அறியக்கடவன். வேடனுடைய கனமானது அனுக்கூலமாக அறியப்பட்டிருந்தாலும் மிருகத்துக்கு மரணவேதுவானதுபோல் கியானியானவன் இதுகளை மிருத்தியுவென்று அறிந்து விஷயசங்கத்தைவிட்டுமிகவும் தத்வவிசாரத்தை யுடையதாகியும், யோகவைராக்கியங்களோடேகூடிக்கொண்டுமிருக்கிற புத்தியினால் மாயையினாலே பண்ணப்பட்ட லோகத்திலே தேகாபிமானத்தைவிட்டுச் சஞ்சரிக்கக்கடவன்.

---

## ௩௨-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

சுத்தசாத்வீகஞ் சொல்லிடுந்தர்மத்தால்
உற்றயூர்த்வ கதியின்தத்வக்கியான
மற்றவர்க்கந்த லோகங்களினின்றும்
ஒத்திடுஞ்சென்ம முறைத்ததுஞ்சொல்லுவாம்.

சாத்வீகதாமங்களாலே ஊர்த்துவ கதியும், தத்வக்கியானமில்லாதவனுக்கு அந்தலோகங்களில்நின்றுதிரும்பஜனனமும் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்,

வாராய் மாதாவே, கிரகஸ்தாசிர்மத்தில் தர்மார்த்தகாமரூபங்களான தர்மங்களைச்செய்கிற புருஷனானவன் பகவதாராதன ரூபமான தர்ம்மத்தை விட்டுப் பிராகிருத தேவாளையும், பிதுர்க்களையும் கிருதுக்களாலே சிரத்தையோடேகூடி யஜிக்கிறவன்சத்தியலோகத்தையடைந்து திரும்பவும் சன்மத்தையடைவன் அனந்தசயனரானஸ்ரீஹரியானவர் பிரளயத்திலேசேஷதலப்பத்திலேசயனித்துக்கொள்ளுகிறபோது யாகாதிதர்மங்களையனுஷ்டானம்பண்ணின கிரகஸ்தாளுக்கு இந்தலோகங்கள் லயத்தையடைகிறதுகள் பிரம்மாவினுடைய ஆயுசுக்குமுடிவான அந்தப்பிரளயபரியந்தம் பிர்மாவைப் பரமேஸ்வராகத் தியானம்பண்ணுகிறபேர்கள்அந்தப்பிர்மலோகத்தையடைந்திருந்து அந்தப் பிரம்மாவானவர் தம்முடையகாலத்தை அனுபவித்துப் பிருதிவி-அப்பு- தேயு-வாயு-ஆகாயம்-மனது-இந்திரியங்கள்-சப்தாதி விஷயங்கள்-அகங்காரம்-இதுகளினாலேசூழப்பட்ட பிர்மாண்டத்தை உபசங்காரம்பண்ண இச்சித்தவராகக்கொண்டுபரமாத்மாவை யடைகிறபோது அவர்களு மந்தப்பிர்ம்மாவுடனேகூடவே பரமானந்தரூபராகியும், சர்வோத்கிருஷ்டராகியும்,பரப்பிரம்மமாகியுமிருக்கிற புராணபுருஷனைஅடைவர்கள். பகவானை யுபாசிக்கிறவர்கள் சாட்சாத்தாகவே அந்தப் பகவானை அடைவர்கள். ஆகையினாலே சமஸ்தபிராணிகளுடைய இருதயகமலங்களிலேஅ

ந்தரியாமியாகவும், பிரசித்தமான பிரபாவத்தையுடையவராகியுமிருக்கிற பகவானை ஏகாந்தபக்தியினாலே சரணமாகஅடையக்கடவாய், ஸ்தாவரசங்கமங்களுக்குக் கர்த்தாவாகியும், வேதகற்பராயுமிருக்கிறபிரம்மாவானவர்யோகசித்தியையுடைய சனத்குமாரர்முதலான யோகீசுவரர்கள் மரீசிமுதலானரிஷிகள் இவர்களுடனே கூடபேதபுத்தியினாலேயும், அகங்காரத்தினாலேயும், நிஷ்காமமானகர்மத்தினாலேயும், கர்த்துருத்துவத்தினாலேயும், பிர்மலோகாதி பத்தியரூபமாகியும், தர்மபலரூபமாகியுமிருக்கிற ஐசுவரியத்தை யனுபவித்துப் பிரளயகாலத்திலே சகுணப்பிர்மரூபியான பரமபுருஷனைஅடைந்து ஈஸ்வரரூபமானகாலத்தினாலே சத்வாதிகுணங்களுக்குலயமுண்டாயிருக்குகையில் திரும்பவும்சிருஷ்டியிலே முன்போலவே தன்தன் அதிகாரத்துடனேகூட உண்டாகிறார்கள். கர்மங்களிலேஆசக்தியை யுடையவர்களாகியும் சிரத்தையுடனேகூடி விகிதகர்மங்களையும் காமியகர்மங்களையும். நித்திய கர்மங்களையும், ரசோகுணத்தினாலே சூழப்பட்ட காமத்திலேயே மனதையுடையவர்களாகியும், இந்திரியநிக்கிரகமில்லாதவர்களாகியும். தர்மார்த்தகாமியங்களைக் கோரினவர்களாகியு மிருக்கிற புருஷாள் சம்சாரத்தை அபகரிக்கின்ற புத்தியையுடையவர்களாகி மகாவிக்ரமங்களையுடைய ஸ்ரீ ஹரியினதுகதையிலே இச்சையில்லாதவர்களாய் மலத்தைப்புசியாநின்ற செந்துக்கள் மலத்தையே கோருகிறாற்போல் பாக்கியவீனாளாகிறார்கள். கர்ப்பாதான முதலாய்ச் சாமக்கிரியைபரியந்தங்களான கர்மங்களை யதாவதாகச்செய்கிறவர்கள் சூரியனுடைய தட்சண மார்க்கமான தூமாதிமார்க்கத்தினாலே பிதுர்லோகத்தையடைந்து திரும்பவும் புத்திராள் முதலானபேர்களிடத்திலே பிறக்கிறார்கள்,

வாராய்மாதாவே, சுகிர்தக்ஷயத்தை யுடையவர்களாகி அந்தலோகத்தில்நின்றும் இந்தலோகத்தைக் குறித்துவிழுகிறார்கள், ஆகையினாலே நீயானவள்பகவத்குணங்களை ஆஸ்ரயித்துப் பக்தியினாலே அந்தபரமேஸ்வரனைப்பஜிக்கக்கடவாய் அந்த ஸ்ரீ வாசுதேவனிடத்திலே செய்யப்படுகின்ற பக்தியோகமானது வைராக்கியத்தையும் பிரமசாட்சாத்காரரூபமான கியானத்தையும் உண்டாக்கும். சித்தத்தைப் பகவத்குணங்களில் லயிக்கச்செய்கிற புருஷனானவன் அந்த சுவயம்பிரகாச ரூபமாகிய பரமபதத்தைப்பார்த்து மகதத்வம் தத்வாதி திரிகுணசுவரூபமாகியும், மகாபூதரூபமாய் ஐந்துவிதமாகியும் இந்திரியரூபமாய்ப் பதினொரு விதமாகியுமிருக்கிற அகங்காரமும்=சிவரூபமும்=அந்த சிவனுக்குச் சரீரமாகிய இந்தப் பிரம்மாண்டமான ஜகத்தும், இந்தப்படிக்குநானாரூபமாகஇருக்கின்ற பிர்மத்தினிடத்திலேயே சமர்ப்பிக்கப்பட்ட மனதையுடையவனாகியும் பிரபஞ்சவிஷயசங்கமில்லாதவனாகியும், வைராக்கியத்தை யுடையவனாகியுமிருக்கிற புருஷனானவன் சிரத்தையினாலேயும் பக்தியினாலேயும், யோகாப்பியாசத்தினாலேயும், நித்தியமாக அந்தப்பிரம்மத்தையே எங்கும்பார்க்கிறான் வாராய்பூச்சியையே பிர்மசாட்சாத்காரரூபமான இந்தக்கியானமானது நம்மாலேசொல்லப்பட்டது. இந்தக் கியானத்தினாலே பிரகிருதிபுருஷாளுடைய தத்வமானகியானயோகமும், பக்தியோகசுவரூபமானபிரபத்தியும் இந்தஇரண்டுக்கும் பரமாத்மா வொருவரே யடையத்தக்கவராக விருக்கிறார், அனேகரூப ரசாதி குணங்களுக்கு ஆஸ்ரயமான வெல்லம் பால்முதலான ஒரு வஸ்துதானே நேத்திரத்திற்குவெளுப்பாகவும். ரசனேந்திரியத்திற்கு மதுரமாகவும், ஸ்பரிசஇந்திரியத்திற்குச் சீதமாகவும் இப்படி நானாவிதமாக அறியப்படுகிறதுபோல் அந்தப் பகவான் ஒருவரே தடாகப் பிரதிஷ்டைமுதலான கிரியைகள்யாகங்கள் தானங்கள் தவசு அத்தியயனம் வேதார்த்தவிசாரணை இந்திரியநிக்கிரகங்கள் கர்மசன்னியாசம்நானாவிதஅங்கங்களையுடைய பக்தி யோகங்கள் நிஷ்காமரூபமான தர்மங்கள் இதுகளினாலேஅறியப்படுகிறார்,

வாராய்மாதாவே, பக்தியோகத்தினுடைய நான்குவிதமான சுவரூபத்தையும் சமஸ்தபிராணிகளிலேயும் உள்ளும்புறம்பும் ஓடிக்கொண்டும், அறியக்கூடாத சக்தியையுடையதான காலத்தினுடையகதியையும். சம்சாரகதிகளையும்சொன்னேன், இந்தத் தத்வக்கியானத்தை வணக்கமில்லாதவன் சோம்பலை யுடையவன் துராசாரன் டாம்பீகன் விஷயங்களிலே ஆசக்தியையுடையவன், புத்திராதிகிரகங்களிலே ஆசக்தியை யுடையவன் என்னுடையபக்தியில்லாதவன் எனதுபக்தாளுக்கு த்வேஷியாயிருக்கிறவன் இவர்களுக்கு ஒருக்காலும் உபதேசிக்காமலிருக்கவேண்டும் சிரத்தையை யுடையவன் பக்தியையுடையவன், வணக்கத்தையுடையவன், அசூசையில்லாதவன், சகலபிராணிகளிடத்திலேயும், சிநேகத்தையுடையவனாகியும். வைராக்கியத்தையுடையவனாகியும், சமதமாதிகுணங்களையுடையவனாகியும், புத்திமானாகியும், த்வேஷமில்லாதவனாகியும், சதாசாரசம்பன்னனாகியுமிருக்கிறவன் இவர்களுக்கு இந்தக்கியானத்தை உபதேசிக்கக்கடவன்.

வாராய்மாதாவே, சிரத்தையுடனே இந்தஉபாக்கியானத்தைக்கேட்டுப் பாராயணம்பண்ணுகிற புருஷன்என்னுடைய பரமபதத்தை அடைவன்,

## நந-வது- அத்தியாயம்.

கலிவிருத்தம்.

கபிலமாமுனி ஈழறுபதேசத்தால்
சுகமுண்டாகிற சுத்தக்கியானத்தால்

பவமதற்றதன் மாதாமணித்திடும்
நவசிவன்முத் தியானதாகவிலுவாம்.

அந்தக்கபிலமகாரிஷியினுடைய உபதேசத்தினால் உண்டாகிற கியானத்தினாலே அவருடையமாதாவானதேவஹூதியினுடைய சிவன் முத்தியானது சொல்லப்படுகின்றது.

மயித்திரேயமகாரிஷியினுடைய வாக்கியம்.

வாரீர்விதுரரே, இந்தப்பிரகாரம் கபிலமகாரிஷியினுடையவசனத்தைக்கேட்டு அவருடையமாதாவாகியும், கர்த்தமப் பிரஜாபதியினுடைய பாரியையாகியு மிருக்கிற அந்தத்தேவஹூதியானவள் அக்கியானநாசத்தையுடையவளாய்க்கொண்டு அந்தப்பகவானைப் பிரணாமம்பண்ணி ஸ்தோத்திரம்பண்ணினாள்.

வாரீர்பகவானே, இந்தப்பிர்மாவும் பிரளயசல மத்தியிலேசயனித்துக்கொண்டும் பஞ்சமகா பூதங்களுக்கும் சமஸ்தசகத்துக்குங் காரணராய் ஜகத்ரூபியாயுமிருக்கிற தேவரீருடைய சரீரத்தைத் தியானம்பண்ணினாரேயல்லாமல் பார்க்கவில்லை அந்தப்பிர்மாவுக்கு உற்பத்திகாரணராகியும் சத்வாதிகுணப்பிரவாகரூபமான சக்தியையுடையவராகியும் கிரியாசூனியராகியும், சத்திய சங்கற்பராகியும் சீவாளுக்கு நியந்தாவாகியும் சிந்திக்கக்கூடாமலும் அனேகங்களாகியுமிருக்கிற சக்திகளை யுடையவராகியும் இந்தப்பிரபஞ்சத்தை யுதரத்தில் வகிக்கிறவராகியும் யுகாந்தத்திலே வடபத்திரசாயியாய் பாதாங்குஷ்டத்தைப்பானம்பண்ணித் திருக்கண்வளர்ந்துகொண்டிருக்கின்ற மாயாசிசுவானதேவரீர் என்னுடைய குட்சியில் என்னமாய்த்தரிக்கப்பட்டீர். துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனஞ்செய்வதற்காக வராகமுதலான அவதாரங்கள் செய்ததுபோலவே ஆத்மக்கியான மார்க்கத்தை வெளிப்படுத்துகிறதற்காகச் சுவயஇச்சையினாலே கிரகிக்கப்பட்ட இந்தஅவதாரமும் என்னாலேதரிக்கப்பட்டது தேவரீருடையநாமதேயத்தைக் கேட்டதினாலேயும் கீர்த்தனம்பண்ணினதினாலேயும் சேவையினாலேயும் ஒருக்கால்ஸ்மரித்ததினாலேயும் சண்டாளனும் அந்தட்சணத்திலேயாகஞ்செய்தவனுக்கொப்பாகிறபோது அடியேன்கடைத்தேறுகிறதற்குக் கேட்கவேண்டியதென்னதேவரீருடையநாமத்தைக் கீர்த்திக்கிறவர்களே மகாதவசையும் யோகங்களையும் கங்காதீர்த்தங்களில் ஸ்நானத்தையும் சதாசாரத்தையும் சகலவேதங்களையும் அத்தியயனஞ்செய்தவர்களாயும்ஆவார்கள். அப்படிப்பட்டமகிமையுள்ள பரமபுருஷராகியும் தேஜசினாலே அவித்யாகாம கர்மமூலமானசம்சாரத்தை நாசம்பண்ணுகிறவராகியும், வேதகர்ப்பராகியும், ஸ்ரீமகாவிஷ்ணுவாகியும், கபிலரூபமாகியுமிருக்கிற தேவரீரை நான்சரணமாகஅடைகிறேன்.

வாரீர்விதுரரே, இந்தப்பிரகாரம் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவராகியும், கபிலனென்றுபெயரையுடையவராகியும், பகவானாகியும், மாதாவினிடத்திலே வாற்சல்லியத்தையுடையவராகியுமிருக்கிற அந்தப் பரமபுருஷரானவர்கம்பீரமானவாக்கினாலே ஒருவார்த்தைசொன்னார் வாராய்மாதாவே, நம்மாலேசொல்லப்பட்டபக்திமார்க்கத்தினாலே அபயஸ்தானமான என்னை யடையப்போகிறாய், எனக்கிஷ்டமானஇந்தமதத்தை அறியாதபேர்கள் சம்சாரத்தையடைந்துகொண்டிருப்பார்களென்று சிலாக்கியமுள்ள தம்முடைய தத்துவக்கியான மார்க்கத்தை வெளியிட்டு பிர்ம்மநிஷ்டையான தம்முடைய மாதாவினாலே அநுக்ஞையைப் பண்ணப் பட்டவராய்ப் புறப்பட்டுப்போனார். பிற்பாடு அந்தத்தேவஹூதியும் புத்திரனானபகவானாலேசொல்லப்பட்ட பக்தியான யோகத்தையுடையவளாய்க்கொண்டு சரஸ்வதிநதியினுடையதீரமானபிந்துசிரசிலே கர்த்தமப்பிரஜாபதியினுடைய தபோயோகத்தினாலேநிர்மிக்கப்பட்டும், தேவர்க்களால்பிரார்த்திக்கத்தக்கதாகியும், உபமானமில்லாமலும் பால்நுரைக்குச்சமானங்களான தந்தங்களாலேயிழைக்கப்பட்டும், சுவர்னமயங்களாகியும், சக்கரங்களாகியுமிருக்கிற பீடம்-சயனம் முதலானசாமக்கிரியைகளை யுடையதுகளாகியும், நிர்மலங்களான ஸ்படிகம் மரகதமாகியுமிருக்கிற சுவர்களிலே ரத்னமயமான தீபங்களுடைய காந்தியினாலும், ஸ்திரீகளினாலே பிரகாசிக்கப்பட்டும், புஷ்பங்களோடே கூடிக்கொண்டிருக்கிற அனேகதேவ விருக்ஷங்களாலே ரமணீயமாகியும், மதுரமாகச்சப்திக்கின்ற பட்சிமிதுனங்களையுடையதாகியும், மதித்துமிருக்கிற பிர்மாந்தரங்களையுடைத்தான உத்தியானவனத்தையுடைய கிரகத்தில் பத்மகந்தங்களுள்ளநடபாவியில் கர்த்தமப்பிரஜாபதியினாலே உப்லாலனைப்ண்ணப்பட்டிருக்கிற தன்னைத்தேவர்களும்ஸ்தோத்திரம்பண்ணி தேவேந்திரனுடையஸ்திரீகளுக்கும் பிரார்த்திக்கத்தக்கதான கிரகசம்பத்தைவிட்டு புத்திர வியோகத்தினாலே துக்கத்தை யுடையவளான அந்தத்தேவஹூதியானவள் தத்வக்கியானத்தையறிந்தவளாயிருந்தாலும், நசித்துப்போயிருக்கின்றகன்றினிடத்திலே வாற்சல்லியத்தையுடைய பசுவானதுபோல் மிகவும்வாற்சல்லியத்தையடைந்திருந்தாள்.

வாரீர்விதுரரே, தேவதேவராகியும், புத்திரனாகியும் கபிலரூபியாகியுமிருக்கிற அந்த ஸ்ரீஹரியைத்தானே தியானம்பண்ணிக்கொண்டும், மகாசம்பத்தை யுடையதானகிரகத்திலே ஆசையற்று வைராக்கியத்தி னாலேயும், யோகானுஷ்டானத்தினாலே உண்டாகின்றபிரமசாக்ஷாத்காரத்துக்குஏதுவாகியும், பரிசுத்தமர்கியுமிருக்கிற கியானத்தினாலே பொன்வர்னமான கேசங்களை யுடைய

ஜடையையவாய்ந்து, தபசினல்மெலிந்ததேகத்தையுடையவளாய் மரவுரியைத்தரித்துக்கொண்டு தெளிவுபொருந்தியமுகத்துடன் தனதுபுத்திரனைப் பரமாத்துமாவாக வெண்ணித் தியானஞ்செய்துகொண்டு தூங்கியெழுந்த புருஷன் சொப்பனத்தில் காணப்பட்டதேகத்தை மறந்தாற்போல் தன்னுடையதேகத்தை மறந்தாள். அந்தத் தேகம் மனோவியாசங்கமில்லாமையால் இளையாமல்புஷ்டியாய் நீறுபூத்தநெருப்புப்போல் பிரகாசித்துத்தபோயோகமயமாகியும், விரியப்பட்டதலைமயிர்களை யுடையவளாகியும், பகவத்சங்கற்பத்தினலே ரட்சிக்கப்பட்டு மிருக்கிற அந்தத்தேவஹூதியானவள் வாசுதேவ ரிடத்திலே பிரவேசிக்கப்பட்ட புத்தியையுடையவளாய்க் கொண்டு தேகத்தை ஸ்மரிக்காமல் கபிலராலே உபதேசிக்கப்பட்டபக்திமார்க்கத்தினல்பரப்பிர்மமாகியும், அந்தராத்மாவாகியும், ஆனந்தரூபமாகியுமிருக்கிற பகவானை அடைந்து திரைலோக்கியத்திலேயும் பிரசித்தமாய்ச் சித்தபதமென்றுபேர்பெற்று சித்தர்களாலே சேவிக்கப்பட்டு சித்தியைக்கொடுக்கத்தக்கதான நதியாச்சுது. மகாயோகியானகபிலரும் சித்தாசிரமத்தில்நின்றும் மாதாவினுடைய அனுமதிகொண்டு வடக்குத்திக்கிலேபோனர். சித்தசாரண கந்தருவாளாலேயும்,முனிகளாலேயும், அப்சரஸ்திரீகளினலேயும், ஸ்தோத்திரஞ்செய்யப்பட்டவராய்ச் சமுத்திரராஜனலேகொடுக்கப்பட்ட பூஜாஸ்தானங்களையுடையவராய்ச் சாங்கியாசாரியாளாலே ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவராய் யோகத்தை யடைந்து திரைலோக்கியத்தினுடைய சாந்தியின்பொருட்டுச் சமாகிதராகக் கொண்டிருக்கிருர்.

வாரீர்விதுரரே, உம்மாலேநான்என்னகேள்விப்பட்டேனே அந்தக்கபிலதேவஹூதி சம்வாதமுஞ்சொல்லப்பட்டது. இந்தக்கபிலமுனிவனுடையமதமாகியும்,ஆத்மயோகரகசியமான இந்தக்கபிலோபாக்கியானத்தை எவன்சொல்லுகிருனே, எவன்கேட்கிருனே, பகவானகைருடத்துவசனிடத்திலே வைக்கப்பட்ட புத்தியையுடையவனகக்கொண்டு அவருடைய பாதாரவிந்தத்தையடைவன்.

==(*)==

# திரிதியஸ்கந்தம்

முற்றுப்பெற்றது.











# ஸ்ரீமகாபாகவதபுராணம்.

## நாலாவதுஸ்கந்தம்,

## முதலாவது அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்

சுந்தரமாம் பாகவதபுராணந்தன்னில்
சோர்வில்சதுர்த்தஸ்கந்தமிருபத்தொன்பான்
தொந்தபிர்ம்மமனுக்களினால்விசர்க்கமென்ற
சோரதசிருஷ்டிசெய்யப்பட்டதற்குள்
முந்துபிரதமவத்தியாயந்தன்னில்
முனிந்தகன்னியாவம்சம்பிறந்ததற்காய்
உந்துயக்ஞாதிமூர்த்திகளினாலே
யுற்றஹரியவதாரமுரைத்ததாமே.

ஸ்ரீமத்பாகவதபுராணத்தில் சதுர்த்தஸ்கந்தத்தில் இருபத்தொன்பது அத்தியாயங்களினாலே துரியமான விசர்க்கஞ் சொல்லப்படுகின்றது. அதில் ஈஸ்வராதீனுளான பிர்மமனுவாதிகளாலே விசர்க்கமென்கிறவிசேஷசிருஷ்டிபண்ணப்பட்டது அதுகளுக்குள்ளே பிரதம அத்தியாயத்தில் மனுவினுடைய கன்னியாவம்சம்பிறந்ததற்காகச் சொல்லப்படுகின்றது அந்தமனு கன்னியாவம்சத்திலே யக்கியமூர்த்திகளினாலே ஸ்ரீஹரியினுடைய அவதாரங்களுஞ் சொல்லப்படுகின்றது.

மைத்திரேயர்வாக்கியம்,

வாரீர் விதுரரே சுவாயம்புமனுவுக்கு சதரூபையென்கிற ஸ்திரீயினிடத்திலே ஆவூதியென்றும் தேவஹூதியென்றும் பிரசூதியென்றும் மூன்றுபெண்களும் இரண்டு பிள்ளைகளும் பிறந்தார்கள் தனக்கிரண்டு புத்திரர்களிருக்கச்சேயும் அந்தஆவூதியென்கிற பெண்ணிடத்தில் வாட்சையினாலே அவளுக்குப் பிறக்கிறபிள்ளை தனக்குப் புத்திரனாக வேண்டுமென்கிற விருப்பத்துடன்கேட்கிற சதரூபையென்கிற தனது பாரியையினால் கேட்கப்பட்டுக்கொண்டு ருசிப்பிரசாதிக்குக் கொடுத்தான் அந்தருசி ஆவூதியென்கிற தம்முடைய ஸ்திரீயினிடத்திலே பிர்மதேஜசுடனேகூடின மிதுனமென்கிற ஸ்திரீ புமான்களை ஈசுவர தியானத்தினாலேயுண்டாக்கினார் அதுகளில் யாக்கிய மூர்த்தியான விஷ்ணு பிள்ளையாயும்ஸ்ரீமகாலட்சுமியே பெண்ணாகவும் பிறந்தார்கள் சுவாயம்பு மனுவானவர் சந்தோஷத்துடன் தவுத்தியரூபமான எக்கியமூர்த்தியைச் சுவக்கிரகத்தைஅடைவிப்பித்துக்கொண்டான் ருசிப்பிரஜாபதியும் அந்தத்தக்ஷணையென்கிறபெண்ணை வேதமந்திரங்களுக்குப் பதியான விஷ்ணு விவாகம்பண்ணிக்கொண்டார் அந்த யக்கியதக்ஷணைகளுக்கு யாமாளென்று பிரசித்தாளாய்மகாபலசாலிகளாய்த் தோஷனென்றும் பிரதோஷனென்றும் சந்தோஷனென்றும் பத்திரனென்றும் சாந்தியென்றும் இடஸ்பதியென்றும் இதமனென்றும் கபியென்றும் விபுவென்றும் சுகர்னனென்றும் சுவேதனென்றும், ரோசனனென்றும், பனிரண்டுபிள்ளைகள், பிறந்தார்கள் மனுவும் தேவர்களும் மனுப்புத்திரர்களும் சுரேசுவரனான இந்திரனும் ரிஷிகளும் ஹரியினுடைய அம்சாவதாரமும் ஆக இந்தஆறும் கூடினகாலமே மனுவந்தரமென்றுசொல்லப்படும் சுவாயம்புமனுவந்தரத்திலேசுவாயம்புவேமனுவாகியும் ஆஷதாளெனப்பட்ட தேவர்களும் மரீசிப்பிரமுகாளான சப்தரிஷிகளும் ஹரியினுடைய அம்சாவதாரமானஎக்கியரும் எக்கியராயிருக்கிற இந்திரனும் பிரியவிரதன் உத்தானபாதனென்கிற பிருதிவிபாலகாளான மனுப்புத்திரர்களும் உண்டானர்கள் அந்தப்பிரியவிரதன்உத்தானபாதனென்கிற

மனுப் புத்திரர்களுடைய புத்திரபவித்திர இரண்டாம்பேரர்களாலே அந்தச்சுவாயம்புமனுவந்தரம் பாலிக்கப்பட்டது,

வாரீர் விதுரரே தேவஹூதியென்கிற பெண்ணைச் சுவாயம்புமனு கர்த்தமருக்குக்கொடுத்தான் அந்தமனுவினுடைய சம்பந்தமானவம்சம் விஸ்தரித்து உம்மாலேசொல்லப்பட்டது பிர்மபுத்திரரான தக்ஷப்பிரஜாபதிக்குச் சுவாயம்புமனுவானவர் தமது பிரசூதியென்கிற பெண்ணைக்கொடுத்தான் அந்தத்தக்ஷப்பிரஜாபதியினாலே யுண்டாக்கப்பட்டவம்சம்மூன்றுலோகத்திலேயுந் திரளாகப்பரம்பிற்று கர்த்தமப் பிறஜாபதியினுடையபெண்களது வம்சபரம்பரையைச்சொல்லுகிறேன் கேளும் கர்த்தமருடையபெண்ணுன கலையென்கிறவள் மரீசிமகாரிஷிக்குக் காசியபனென்றும் பூர்ணிமாவென்றும் இரண்டுபிள்ளைகளைப் பெற்ருள் அந்தப் பூரணிமாவானவர் விரஜையென்றும் விசுவகாயென்றும் தேவகுல்லியாவென்றும் மூன்றுபெண்களைப்பெற்ருர் அவர்களுக்குள்ளே தேவகுல்லியாவென்கிறவள்ஜன்மாந்தரத்திலே அரியினுடைய பாதப்பிரக்ஷாளனதினாலே தேவகங்கையானுள் அத்திரியினுடைய பத்தினியான அனுசூயையென்கிறவள் தத்தாதிரேயரென்றும் தூறுவாசரென்றும் சோமரென்றும் விஷ்ணுருத்திரபிர்மாக்களினுடைய அமிசங்களினலேபெற்ருளென்று சொல்லுகின்ற மைத்திரேயமகாரிஷியைப்பார்த்துவிதுரரானவர் சிருஷ்டி திதி சங்காரகர்த்தாக்களான பிர்மாவிஷ்ணுருத்திரர்களென்ன காரணத்திற்காக அந்த அனுசூயையென்பவளிடத்தில் புத்திராளாகப் பிறந்தார்கள் அதை யெனக்குச் சொல்லவேண்டுமென்று பிரசனம்பண்ணுகிற விதுரரைப்பார்த்து மைத்திரேயர் சொல்லுகிருர்.

வாரீர்விதுரரே பிர்மாவினலே சிருஷ்டிசெய்யச் சொல்லி ஆக்கியாபிக்கப்பட்டஅத்திரிமகாரிஷியானவர் பத்தினியுடனேகூட ரிஷியமென்கிற குலபர்வதத்தையடைந்து பூங்கொத்துகளுடனேகூடின பலாசவிருக்ஷம் அசோகவிருக்ஷம் இதுகளோடுசேர்ந்த கானகத்திலே நிறவுந்தியென்னப்பட்ட நதியினுடைய ஜலப்பிரவாகங்களினலே கோஷிக்கப்பட்ட ஒருஆசிர்மத்திலேபிராணயாமத்தினலேமனதைக்கட்டி காத்துவெய்யில் குளிர் இதுகளைச்சகித்து வாயுபக்ஷணஞ்செய்து ஒருபாதத்தினலே நின்றுக்கொண்டு நூறுவருஷமிருந்தார் ஜகத்துக்கு அதீஸ்வரரானவரைச் சரணமாகவடைகிறேன் அவர் நமக்குச் சந்தோஷிக்கத்தக்கின பிள்ளையைக் கொடுக்கவேண்டுமென்று பிராணயாமமாகிற எரிகரும்பினலே அத்திரிமுனியினுடையசிரசில் நின்றும் வெளிப்பட்டு சுவலிக்கின்ற அக்கினியினலே தபித்துக்கொண்டிருக்கின்ற மூன்றுலோகத்தையும் பிர்மா விஷ்ணுருத்திரர்களான பிரபுக்கள்பார்த்து அந்த அத்திரியினுடைய ஆசிர்மத்தையடைய அவருமிந்த அரிகர பிர்ம்மாக்களைக்கண்டு பூமியிலே தண்டவத்பிரணமம்பண்ணித்தங்கள்தங்கள் வாகனங்களுடனும் சக்கிரம் சூலம் கமண்டலமுதலான ஆயுதங்களுடனும் பிரத்தியக்ஷமான அம்மூவர்களைப் புஷ்பமுதலியதுகளால் அர்ச்சித்து பூசைசெய்து தயாநிதியாகிய அவர்களுடைய தேஜசினலேசிதறப்பட்ட நேத்திரங்களைமூடி மனதை அவர்களிடத்திலே பிரணவமாகப் பண்ணிக்கொண்டு அஞ்சலிபந்தத்துடனேகூட கம்பீரமாயியும் மதுரமாகியு மிருக்கிற வாக்கினலே சர்வலோகசிரேஷ்டர்களான திரிமூர்த்திகளை ஸ்தோத்திரம்பண்ணினர்.

அத்திரிமுனிவாக்கியம்,

கல்ப்பங்கள்தோறும் ஜகத்தினுடையசிருஷ்டி திதி சங்கார நிமித்தமாகப் பிரிக்கப்பட்ட சாத்துவீகராஜசதாமசகுணரூபமான தேகத்தையுடைய பிர்மாவிஷ்ணுருத்திரர்களான உங்களை நமஸ்கரிக்கிறேன் உங்களுக்குள்ளே நம்மாலே அழைக்கப்பட்டவர்களார் அதைஉங்களாலேசொல்லத்தக்கது புத்திரசந்தானர்த்தமாகத் தேவப்பிரதானனுகியும் பகவானுகியுமிருக்கிற ஒருவனையே இவிடத்தில் நம்மாலே சித்தத்தில்வைக்கப்பட்டார் அடியேனுடைய மனதுக்கும் வெகுதூரமானநீங்கள்மூன்றுபேரும் இவிடத்திலே எப்படிவந்தீர்கள் நம்மிடத்திலே தயைபண்ணிச்சொல்லுங்கள் இதிலே எனக்குங்கத்தான ஆச்சிரியமாயிருக்கிறதென்று சொல்லுகிற அத்திரிமுனியினுடைய வாக்கியத்தைக்கேட்டு தேவசிரேஷ்டர்களான திரிமூர்த்திகள் அத்திரிமுனியைப்பார்த்து சிரித்துமதுரமானவாக்கினலேபிரதியுத்தரஞ் சொன்னர்கள்.

வாரீர் சத்தமரே உம்மாலே எப்படி சங்கல்பம்பண்ணப்பட்டதோ அப்படியேஉண்டாகத்தக்கதுவேறே ஒரு பிரகாரத்தினலே உண்டாகத்தக்கதில்லை சத்தியசங்கல்பரான நீர் முக்கியமாய் ஆரைக்குறித்துத் தியானஞ்செய்திரோ அவர்களே நாங்கள் ஆனபடியினலேநம்முடைய அமிசபூதாளாகி லோகப்பிரசித்தாளாய் மூன்றுபிள்ளைகள் பிறக்கப்போகிருர்கள் அவர்களால்உம்முடைய யசசுகியாதி யடையப்போகிறதென்று இஷ்டமானவரத்தைக்கொடுத்துத் தேவசிரேஷ்டர்களான திரிமூர்த்திகள் அந்தத்தம்பதிகளாலே பூசிக்கப்பட்டவர்களாகக்கொண்டு அந்தர்த்தானமாய்ப்போனர்கள் அப்பால் பிர்மாவினுடைய அமிசமாகச் சந்திரனும்விஷ்ணுவினுடையஅம்சமாக யோகவித்தான தத்தாத்திரேயரும்சங்கரனுடையஅமிசமாகத் தூறுவாசரும் உண்டானர் அங்கிரசனுடைய சந்தானத்தைக்கேளும்,

சிரத்தையென்கிற அங்கீரசனுடைய பத்தினியானவள் சினிவாலியென்றும் குகூவென்றும்,ராகாவென்றும்,அநுமதியென்றும் நான்குபெண்களையும்சுவாரோசிஷமன்வந்தரத்திலேஉசகத்தியனென்றும்பிரகஸ்பதிஎன்றும்பிரசித்தாளான இரண்டுபிள்ளைகளையும் பெற்றாள்

புலஸ்தியப்பிர்மாவானவர் அவிற்பூவென்கிறபத்தியினிடத்திலே அகஸ்தியனையும் விசிரவசுயென்கிற பிரஜாபதியையும்பெற்றார், அந்த அகஸ்தியரோ ஜன்மாந்தரத்திலே தக்ஷணுக்கினியென்கிற ஜாடராக்கினி யானார் மகாதவசியான விசிரவசுயென்கிற பிரசாபதியும் இளைபிளையென்கிறஸ்திரீயிடத்திலே குபேரனையும் கேகசியென்கிறஸ்திரீயினிடத்திலே ராவணகும்பகர்ண விபீஷணர்களும்பிறந்தார்கள். புலகனென்கிறரிஷிக்குப்பாரியையானகெதியென்பவள் கர்மசேடனென்றும், வரியானென்றும், சஹிஷ்ணுவென்றும், மூன்றுபிள்ளைகளைப் பெற்றாள், கிருதுவினுடையபாரியையான கிரியையென்பவள் வாலபில்லியாளென்று பிரசித்தாளாய்ப் பிர்மதேஜசினாலே பிரகாசித்துக்கொண் டிருக்கிற அறுபதினாயிரம் ரிஷிகளைப்பெற்றாள். வசிஷ்டருக்கு அருந்ததியிடத்தில் சக்திமுதலான்பிள்ளைகள்பிறந்தார்கள். மற்றொருஸ்திரீயான ஊற்சையென்கிறவ ளிடத்திலே சித்திரகேதுவென்றும், சுரோசியென்றும்,விரசனென்றும்,மித்திரனென்றும், உப்பணனென்றும், வசுபிரத்தியா னென்றும், தியுமானென்றும், ஏழுரிஷிகள் பிறந்தார்கள். அதரவாயென்கிறரிஷியினுடைய பத்தினியான சாந்தியானவள் விரதங்களையுடையவனாகிய அஸ்வசிரசாகியுமிருக்கிற தத்தியங்குயென்கிறபிள்ளையைஅடைந்தாள். பிருகுவானவர்கியாதியென்கிற ஸ்திரீயினிடத்திலே தாதாவென்றும், விதாதாவென்றும், இரண்டு பிள்ளைகளையும் பகவானிடத்திலேவிருப்பமுள்ள பாற்கவியென்கிறபிரசித்தையான லட்சுமியையும்பெற்றார் மேருவானவன் ஆயதியென்றும், நியதியென்றும் இரண்டு பெண்களை தாதா விதாதாஇவர்களுக்குக்கொடுத்தான் அந்ததாதாவிதாக்களாலே ஆயதிநியதி இவர்களுக்கு மிருகண்டுவென்றும், பிராணனென்றும், இரண்டுபிள்ளைகள்பிறந்தார்கள், மிருகண்டுவினிடத்தில்நின்றும், மார்க்கண்டேயரும்,பிராணனிடத்தில்நின்றும் வேதசிரசையென்கிற ரிஷியும் பிறந்தார்கள். அந்தவேதசிரசையென்கிறரிஷிக்கு உசனசென்றும், பார்க்கவனென்றும், பிரசித்தான இரண்டுபுத்திரர்க ளுண்டானார்கள். அந்த உசனசென்கிறவருக்கு சுக்ராசாரியர்புத்திரரானார் வாரீர் விதுரரே, லோகங்களைச்சற்கங்களினாலேஉண்டாக்கினார்கள். பாபகரமாகியும் பரமமாகியுமிருக்கிற கர்த்தமருடைய தவுஹித்திரசந்தானத்தை சிரத்தையுடனேகூடின உமக்குச்சொல்லப்பட்டது. சுவாயம்புமனுவினுடையபெண்ணான பிரசூதியை பிர்மகுமாரரான தட்சன்விவாகம்பண்ணிக்கொண்டு அவளிடத்திலேநிர்மலங்களான கண்களையுடையபதினாறுபெண்களைப்பெற்று யமனுக்குப் பதின்மூன்றுபெண்களையும் அக்கினிக்கு ஒருபெண்ணையும், பிதுர்தேவதைகளுக்கெல்லாம்ஒருபெண்ணையும்,சம்காரசசேதியானபகவனென்கிறருத்திரனுக்கு ஒருபெண்ணையுங்கொடுத்தான் யமதர்மனுக்குக்கொடுத்த பெண்களுடைய பெயர்கள் சிரத்தை-மைத்திரி-தயை-சாந்தி-துஷ்டி- புஷ்டி-கிரியை-உன்னதி-புத்தி-மேதை-திதிக்ஷை - இறுமூர்த்தியென்றும் பதின்மூவர் அவர்களில் சிரத்தை சுபனென்கிறவனையும் மைத்திரி பிரசாதனையும், தயை அபயனையும், சாந்தி சுகனையும், துஷ்டி முத்துஎன்பவனையும்,புஷ்டி ஸ்துமயனையும், கிரியை யோகனையும், உன்னதி தற்பனையும், புத்தி அர்த்தனையும், மேதை ஸ்மிருதியையும், திதிக்ஷை க்ஷேமனையும், இறி பிரஸ்தரோயனையும் மூர்த்தி சர்வகுணாகராளான நரநாராயண ரிஷிகளையும் பெற்றார்கள் அந்தநரநாராயணருடையஅவதாரகாலத்திலே சத்புருஷாளுடையமனதுகளும், திக்குகளும்நதிகளும் தெளிவாகஆச்சுதுகள். ஆகாசத்திலே தூரியவாத்தியங்கள்முழங்கினதுகள் பூமியிலேபுஷ்யமாரிபொழிந்ததுகள் முனிகள்சந்தோஷித்து ஸ்தோத்திரம்பண்ணவும், கந்தருவகின்னரர்களும் கானம்பண்ணவும், தேவஸ்திரீகள் நர்த்தனம்பண்ணவு மிப்படிப் பரமமான மங்களமுண்டாச்சுது. பிர்மாமுதலான தேவதைகளெல்லாம் இந்தஜகன்மரியாதை குலையாமைக்கு சத்வகுணத்தினாலேசிருஷ்டிக்கப்பட்ட தேவகணங்களான எங்களை ஸ்ரீமகாலட்சுமிக்குஇருப்பிடமாயும், நிர்மலமாகியும்,தாமரசபுஷ்பத்தை திரஸ்கரிக்கத்தக்கதாகியும், கருணாபூரணமாகியுமிருக்கிற திருக்கண்களினால் பார்க்கக்கடவரென்று தேவகணங்களினாலே ஸ்தோத்திரஞ்செய்து பூஜிக்கப்பட்டவர்களாய்க்கொண்டுஅந்தநாராயணரிஷிகள் கந்தமாதனபர்வதத்தை யடைந்தார்கள். பகவதம்சபூதாளான அவர்களேஇந்தப்பூமியிலே துஷ்டநிக்கிரகம்பண்ணுகைக்கு யதுகுலத்துக்கும் குருகுலத்துக்கும் நாதாளாகி கிருஷ்ணார்ச்சுனாளாக அவதரித்தார்கள் சுவாகாவென்கிற அக்கினியினுடைய பாரியையானவள் பாவகனென்றும், பவமானனென்றும், சுசியென்றும்,மூன்றுபிள்ளைகளைப்பெற்றாள். அந்தமூன்றுபேரிடத்தில் நின்றும் அக்கினி அபிமானி தேவதைகள் நாற்பத்தைந்துபேர்கள்பிறந்தார்கள்,அந்தஅக்கினி அபிமானிதேவதைகள் பிதுர் பிதாமகாளுடனேகூட நாற்பத்தொன்பதுபிர்மவாதிகளான அந்தஅக்கினிகள் சவுமியாளென்கிற சுயம்பாகிகளாகியும் ஆச்சியபதாதிகைகளாகியு மிருக்கிற

பிதுர்க்கள் யசசுவர்க்கஎன்றியில் அனற்கினிகளாய் அக்கினிசுவர்த்தாக்களென்றும், யசசுவர்க்காளாகக்கொண்டு சாக்கினிகளான பருகிஷத்துக்களென்றும் இரண்டு வாக்கம் அவர்களுக்குதட்சபுத்திரியான சுதையென்கிறவள் பத்தினியாய் அவர்களிடத்தில் நின்றும் மேதாவியென்றும், தரணியென்றும், இரண்டுபெண்களைப் பெற்றுள் பிர்மவாதினிகளாகியும் சுபாளாகியுமிருக்கிற அந்த இரண்டுபெண்களும் கியானவிக்யான பாரங்கதாளாகி சந்ததிசூனியாளாயிருந்தார்கள் சிவனுடைய பத்தினியாகியும் தட்சனுடையபெண்ணுகியுமிருக்கிறசதியானவள் ஆத்மகுணங்களினுலேயும் நடத்தையினுலேயும் தனக்குபதியானசிவனை அனுசரித்தவளாய் புத்திரனை அடையாமல் நிரபராதியான சிவனிடத்திலே பிரதிகூலனுகியும் தனக்குப்பிதாவாயுமிருக்கிற தட்சனிடத்தில் கோபத்தினுலே தான்தானேதன்னுடைய தேகத்தை யோகத்தினுல் போக்கடித்துக்கொண்டாள்.

## ௨-வது, அத்தியாயம்.

கலிவிருத்தம்,

வீசுந்தக்ஷப்பிர ஜாபதிதன்னிட
மாசிலாவிசு வஜித்தியாகமும்
காசிலாவவற் கும்மகாதேவற்கும்
நீசத்துவேஷத்தி னிர்நயமோதுவாம்.

தக்ஷப்பிரஜாபதியினுடைய விசுவசித்தியாகமும் அவருக்கும் மகாதேவனுக்கும் துவேஷமுண்டான காரணத்தையும் சொல்லப்படுகின்றது.

விதுரர்வாக்கியம்.

தக்ஷப்பிரஜாபதியானவன் தன்னுடைய பெண்ணுன சதியைஅனுதரித்து சாசரகுருவாகியும், நிர்வைரனுகியும், சாந்தமூர்த்தியாகியும், ஆத்மாராமனுகியும் ஜகத்துககு மகாதெய்வமாகியுமிருக்கிறசிவனை என்னநிமித்தமாகத்துவேஷித்தான், அதைஎனக்குச்சொல்லவேண்டுமென்று பிரசனம் பண்ணுகின்ற விதுரரைப் பார்த்து மைத்திரேயர்சொல்லுகிருர்,

வாரீர்விதுரரே, பூர்வத்திலே விசுவகர்த்தாக்களான பிரஜாபதிகளுடைய யக்கியத்தில் சமஸ்த தேவகணங்களும் சிஷியவர்க்கங்களுடன்கூடின சூரியன்போன்றரிஷீஸ்வரர்களால் பிரகாசிதமாயிருக்கின்ற அந்தச்சபையில் அநேககோடி சூரியனுக்கொப்பான தேஜசுள்ள தட்சப்பிரஜாபதியைப்பார்த்து சதசிலேயிருக்கின்ற பிர்மாவையும் ருத்திரனையுந்தவிர மற்றப்பேர்கள் யாவரும்தங்கள் ஆசனங்களில்நின்றும் எழுந்திருந்து அவரையதாவக்தர்க்கு பூசித்தார்கள் அப்போது தக்ஷனுனவன் அவர்களாலே நன்ருகப் பூசிக்கப்பட்டவராய் லோக குருவான பிர்மாவை நமஸ்காரம்பண்ணி அவருடைய ஆக்கினையினுலே ஆசனத்திலேயிருந்து தன்னைப்பூசியாதவனுகியும் மருமகனுகியுமிருக்கின்றருத்திரனை குரூர திருஷ்டிகளாலே தகித்துப்போடுகிறவன்போல் பார்த்துக்கொண்டு ஒருவார்த்தைசொன்னுன்,

வாருங்கள்சதசியரளே, சாதுக்களுடைய ஆசாரத்தைச்சொல்லுகின்ற என்னுடையவசனத்தைக்கேட்கத்தக்கது அக்கியானததினுலும் துவேஷத்தினுலும் சொல்லவில்லை அதாவது லோகபாலாளுக்குள்ளே ஒருவனுகியும், லச்சையில்லாதவனுகியும், சதாசாரசூனியனுகியும், சத்புருஷாளாலே ஆசரிக்கப்பட்ட சன்மார்க்கத்தைத்தூஷிக்கப்பட்டவனுயும்,எனக்குச்சிஷியனுகியும் குரங்குபோலொத்த நேத்திரங்களையுடையவனுகியும் சத்கிரியா சூனியனுகியும் அசுசியாகியும் அகங்காரத்தையுடையவனுகியும் மரியாதையில்லாதவனுகியும் சூத்திரன் பொருட்டு வேதமந்திரத்தைப்போல் இச்சையில்லாதவனுயிருந்தாலும் பெண்ணைக்கொடுத்தேன் யாதொரு ருத்திரனுனவன் பிரேதங்களுக்கு வாசபூமியான மசானங்களினுலே கோரங்களான பூதப்பிரேதபிசாசங்களாலேசூழப்பட்டவனுயும் உன்மாதம்பிடித்தவன்போல் அம்மணனுகியும் விரிக்கப்பட்டதலைமயிர்களை யுடையவனுகியும், மசானபஸ்பத்தினுலேபண்ணப்பட்ட அபிஷேகத்தையுடையவனுகியும் நாராளுடைய அஸ்திகளைப்பூஷணமாகவுடையவனுகியும் உன்மத்தனுகியும் உன்மத்த ஜனப்பிரியனுகியும் தமோகுணசுவரூபாளான பிரமதபூதகணங்களுக்குப் பதியாகியுமிருக்கிற இந்த ருத்திரனுக்கு சிவனென்கிறபெயர்தகாது இப்படிப்பட்ட சவுசாசார சூன்னியனுயிருக்கின்ற இந்ததுஷ்டனுக்குமான்விழிகள்போன்ற நேத்திரங்களையுடையவளாகியுமிருக்கின்ற எனதுகன்னிகையையுங்கொடுத்து கேவலம் மரியாதைக்குரியவனுனஎன்னை அவமதித்தானுகலால் தேவாத்மனுன இந்தருத்திரன் தெய்வயக்கியத்திலே இந்திரன்உபேந்திரன் முதலான தேவர்களுடனேகூட யக்யெபாகத்தையடையாமல்போகக்கடவனென்று சாபத்தைக்கொடுத்து மிகவும்விர்த்தியடைகின்ற கோபத்தை யுடையவனுய்க்கொண்டு அந்தசதசிலேநின்றும்புறப்பட்டு தன்கிரகத்தையடைந்தான் அப்போதுருத்திரனுடையசேவகாளுக்குள்ளே சிரேஷ்டனுன நந்திகேசுரனுனவன் அந்தச் சாபத்தையறிந்து ரோஷத்தினுலே கலங்கினநேத்திரங்களையுடையவனுயந்ததக்ஷனையுமவன்சபித்ததைக்கேட்டு சந்தோஷித்தபிராமணர்களையும்சபித்தான் இந்ததக்ஷனுனவன்கியானசூனியனுயும் பேததிருஷ்டியை யுடையவனுயும் தத்வக்கியானசூனியனுகவும் புத்தியீனனுய்கர்ம

மார்க்கத்தையேஅநுஷ்டிக்கதக்கவனும்பரமாத்மகியானசூனியனும்பசுவுக்குசமானனும்மிகவும்ஸ்திரீகளிடத்திலே ஆசக்தியையுடையவனும் சீக்கிரமாகஆட்டினுடைய முகம்போலொத்த முகத்தை யுடையவனுகியுமாகக்கடவனென்றுசபித்து பிற்பாடு பிராம்மணர்களை உத்தேசித்து ஜநநமரணாதிதுக்கங்களையே அநுபவித்துக்கொண்டு தேகபோஷணைக்காக வித்தை-தபசு-விரதம்-இதுகளையுடையவர்களாகியும்=தனம்=தேகம்=இந்திரியங்கள் இதுகளிலே மிகவும் பிரீதியை யுடைவர்களாகியும் யாசகாள்ாகியுமே இந்தலோகத்திலே இருக்கக்கடவர்களென்று சபித்த நந்தியினுடையவார்த்தையைக்கேட்டு பிருகுமகாரிஷியானவர் மிகவும்குரூரமாகியும பரிகரிக்கக்கூடாததாகியுமிருக்கிற சாபமான பிரமதண்டத்தைப் பிரயோகம்பண்ணினர்.

ருத்திரனுடைய விரகத்தையும், சைவாளையும், அநுவர்த்திக்கிற அவர்கள் பாஷாண்டிகளாகவும், சாஸ்திரமார்க்க விரோதிகளாகவும், சவுசாசார வர்ச்சிதாளாகியும், விவேகசூனியாளாகியும், ஜடை-பஸ்பம் - அஸ்தி-இதுகளைத் தரித்தவர்களாகியும், தெய்வம்போலே மத்தியமாங்கிசங்கள் புசிக்கத்தக்கதாயிருக்கிற அமங்களமான தீட்சையிலே பிரவேசிக்கத் தக்கவர்களாகியும், மரியாதா ரூபமாகியும், வர்ணச்ரமாசாரங்களை யுடையவர்களான புருஷாளுக்கு ஆசிரமாயிருக்கிற வேதத்தையும் பிராமணாளையும், தூஷித்தபடியினலே பாஷாண்டமார்க்கத்தையே ஆஸ்ரயித்தவர்களாகக்கடவர்களென்றுசொல்லுகின்ற பிருகுமகாரிஷியினுடைய சாபத்தைக் கேட்டுருத்திரனைவர்கொஞ்சம் விசனத்தையுடையவர்போல் அந்தசதசில்நின்றும் புறப்பட்டுப்போனர்,

வாரீர்விதுரரே, விசுவகர்த்தாக்களானஅந்தப் பிரசாபதிகள் யக்கிய மூர்த்தியான ஸ்ரீஹரியை உத்தேசித்து ஆயிரம் சம்வச்சரத்தையுடைய யக்கியத்தை நிறைவேற்றிக் கங்கையும் யமுனையுங் கூடியிருக்கிற பிரவாகத்திலே அவப்பிருதஸ்நானம்பண்ணி சமன்தமானபேர்களும்பரிசுத்தமானமனதோடேகூடினவர்களாய்அவ்விடத்தில்நின்றும் தங்கள்தங்கள்ஸ்தானத்தையடைந்தார்கள்.

## ௩-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

அந்ததக்ஷன்ற னார்ந்தயெக்யோற்சவ
விந்தையைக்காண வேண்டுமென்னிச்சையாற்
சந்தநேர்ந்த சதீதேவியானவள்
பந்தமாகேச னல்மறுக்கப்பட்டாள்.

தட்சனுடைய யக்கியோச்சவத்தைப் பார்க்கவேணுமென்கிற இச்சையினலே போகப்போகிறவளா யிருக்கிற சதீதேவியானவள்மகேசனலே யேதுக்களால்தகையப்பட்டாளென்று சொல்லப்படுகின்றது,

மைத்திரேயமகாரிஷியினுடையவாக்கியம்.

வாரீர்விதுரரே, இந்தப்பிரகாரம் ருத்திரனுக்கும் தட்சனுக்கும் சார்வகாலமும் துவேஷமானது அதிக்கிரமித்தது, சர்வலோககுருவான பிரம்மாவினலேதட்சனனவன் சமஸ்த பிரஜாபதிகளுக்கும் அதிபதியாய்ப் பட்டாபிஷேகம் பண்ணப்பட்டதுமுதல் மகத்தான கர்வமுண்டாய் அதினலே ஈசுவரன் முதலான பிரம்மநிஷ்டாளை திரஸ்கரித்து வாஜபேயமென்கிற யக்கியத்தைச் செய்து பிற்பாடு பிரகஸ்பதி யக்கியமென்கிற உத்தமமான கிருதுவுக்கு ஆரம்பித்தான் அந்தக் கிருதுவிலே சமஸ்தமான பிரம்மரிஷிகளும், தேவரிஷிகளும், பிதுர்தேவாளும், அவர்களுடையபத்தினிகளுடனே மிகவும் பூஜிக்கப்பட்டார்கள். ஆகாசத்திலே இந்த ஆச்சரியத்தைச் சொல்லிக் கொள்ளுகின்ற தேவர்களுடைய வசனத்தைக்கேட்டு தட்சனுடைய புத்திரியான சதீதேவியானவள் பிதாவினுடைய யக்கியமகோற்சவத்தைக் குறித்துச் சகலாலங்காரங்களுடன் போகிற தேவதாஸ்திரீகளைக் கைலாசத்திலிருந்துபார்த்து பூதபதியான தன்னுடைய பர்த்தாவைக்குறித்து ஒருவார்த்தைசொன்னள்,

வாரீர் தேவனே, உம்முடையமாமனரான தக்ஷப்பிரசாபதியினுடையஎக்கிபமகோற்சவமானதுஇப்போதுநிறைவேற்றப்படுகிறது அதற்கு சமஸ்ததேவர்களும் போகிருர்கள் அந்த யக்கியத்திலே பர்த்தாக்களுடனே கூடிக்கொண்டிருக்கிற என்னுடன்பிறந்தபெண்களையும் சிறியதாயார்களையும் விசனப்பட்டுக்கொண்டிருக்கிறதாயாரையும் ரிஷீஸ்வராளாலே நிறைவேற்றப்படுகின்ற கிருதுசிரேஷ்டமான யக்கியத்தையும் வெகுகாலமாயிச்சித்துக்கொண்டிருக்கிற மனதை யுடையவளான நானும் அந்தயக்கியத்திலே உம்முடனேகூடபிதாவினலேகொடுக்கப்பட்ட அலங்காரமுதலான திரவியத்தைஅங்கீகரிக்கக்கோருகிறேன். ஆச்சரிய ரூபமாகியுந் திரிகுணஸ்வரூபமாகியுமிருக்கிற இந்த ஜகமானது உம்முடைய மாயையினலே பண்ணப்பட்டதாயிருந்தாலும் நான்ஸ்திரீசாதியாகையால் உம்முடைய தத்துவத்தை யறியாதவளாயிருக்கிறேன். மிகவும் தீவினையாய்க் கொண்டு என்னுடைய பிறந்தவிடத்தைப் பார்க்கவேண்டுமென்று இச்சிக்கிறேன்.

அந்த யக்கியதரிசனர்த்தமாய்க் கூட்டங்கூட்டமாகப்போகிற சர்வாபரண பூஷிதர்களாகியும் பர்த்தாக்களுடனே கூடிக்கொண்டுமிருக்கிற ஸ்திரீகளைப் பாரும், பிதாவினுடைய கிரகத்திலேநடக்கும் மகோச்சவத்தைக்கேட்டு எனதுமனம் பதைக்கின்றது சத்புருஷாளான பேர்கள் அழைக்கப்படாதவர்களா யிருந்தாலும் சினே

கிதன்விட்டிற்கும் பர்த்தாவினுடையகிரகத்திற்கும் பேதமில்லாமற் போவார்களாதலால் கிருபாசாலியாயும் மகத்தான வியானத்தை யுடையவராகியும், அடியேனைப் பாதிநேகத்தில் தரிக்கப்பட் டிருக்கிறதாலும் அடியேனால் பிரார்த்திக்கப்பட்ட கோரிக்கையைச் சபலமாகச் செய்யவேண்டுமென்று கோருகிற சதீதேவியின் வார்த்தையைக்கேட்டு சிவனானவர் விசுவகர்த்தாக்களான பிரஜாபதிகள் முன்னிலைக்குத் தன்னை தட்சப்பிரஜாபதியானவர் மர்ம்மபேதிகளான துர்ப்பாஷைகள் சொன்னதை நினைத்து புன்னகையுடன் அந்தசதீதேவியைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்,

வாராய்சோபனையே பந்துக்களானபேர்கள்அழைக்கப்படாதவர்களா யிருந்தாலும் விவேகிகள் சிநேகிதன் முதலானவர்களுடைய கிரகத்தைக் குறித்து போவார்களென்பது யதார்த்தமானாலும் அந்தப்பந்துக்கள் பலவானையும் தேகாதி அகங்காரத்தினாலும் கோபத்தினாலுந்தோஷத்தை ஆருபிக்கப் படாமல் இஷ்டர்களாயிருந்தால் விவேகிகள் அவனுடைய கிரகத்தைக் குறித்துப் போவதற்குத் தடையிராது துஷ்டர்களுக்குத் தோஷபூதங்களாயிருக்கிற வித்தை-பசு-தனம் - சவுந்தரியம்-யவ்வனவயது-குலம் இந்த ஆறுகுணங்களினாலேயும் விவேகமானது நசிக்கப்பட்டு அகங்காரத்தையுடையவளாய்மகத்துக்களுடைய தேஜசைப்பாராமல் அவமதிப்பார்கள் குரூரங்களான பாணங்களினாலே பீடிக்கப்பட்ட சரீரத்தையுடையவன் விசனப்படாமல் சுகமாக நித்திரை பண்ணுவன் பந்துக்களுடைய துர்வசனங்களினாலே அவமானப்பட்டவன் அகோத்திரமும்நித்திரைபிடியாமல் விசனப்பட்டுக்கொண் டிருப்பன்.

வாராய் சோபனமான புருவத்தையுடையவளே உத்தமமான ஸ்திதியை யுடைத்தான தட்சப்பிரஜாபதியினுடைய பெண்களுக்குள்ளே மிகவு மிஷ்டமானவளென்று எனக்கு நன்றாய்த்தெரிந்திருக்கின்றது, ஆனாலும் அந்த தட்சனானவன் என்னிடத்திலே துவேஷம்வைத்து மிகவும் தபித்துக்கொண் டிருக்கிறபடியினாலே என்னுடையநிமித்தியம் உன்னையும் அவமானஞ்செய்வான் உலகத்தில் ஒருவர்க்கொருவர் எதிர்கொண்டு வணக்கத்துடன் தண்டன்சமர்ப்பித்துக்கொள்ளுகிறது சர்வாந்தரியாமியான அந்த ஸ்ரீ வாசுதேவன்பொருட்டே தவிர வேறில்லை அப்படிப்பட்ட பரமபுருஷரான ஸ்ரீமந்நாராயணனைச் சதாதியானஞ் செய்துகொண்டு நிரபராதியாயிருக்கிற என்னை துர்வசனங்களினாலே திரஸ்கரித்த அந்தத் தட்சனானவன் உன்னாலே பிதாவென்றும் உன்னைப் போஷித்தவனாகவும் பார்க்கத்தக்கவனன்று அவனை அனுவர்த்தித்துக்கொண் டிருக்கிறவர்களும் பந்துவாகப் பார்க்கத்தக்கவர்களன்று ஆகலால் என்னுடைய வார்த்தையைத் தள்ளிப்போனையேயானால்உனக்கு மரணஹேதுவான அவமானம் நேரிடுமென்றுசொன்னார்.

---

## ௪-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்;

சார்ந்தநாதனை விட்டசதீதேவி
ஆர்ந்திடுந்தன் பிதாவாலவமானம்
நேர்ந்திடுங்கோபத் தால்நீங்கிதட்சனை
போந்தயக்கியத்திற் புகுந்தாளரோ,

பர்த்தாவைவிட்டுப்போன சதீதேவியானவள்பிதாவினாலேஅவமானம் பண்ணப்பட்டவளாகக்கொண்டுகோபத்தினாலே அந்ததட்சனைத்திரஸ்கரித்து அந்தயக்கியத்திலேயே சரீரத்தைவிட்டுவிட்டாளென்று சொல்லப்படுகின்றது,

மைத்திரேயமகா ரிஷியினுடைய வாக்கியம்.

வாரீர்விதுரரே அந்தருத்திரன் இப்படிக்குச் சொல்லி நாமனுக்கிரையைப்பண்ணி அனுப்பினால் அவிடத்தில் நம்மிடநிமித்தம் அவமானம் நேரிடுவதைச் சகிக்காமல் சரீரத்தியாகஞ்செய்வள் அனுப்பாமல் நிறுத்தினால் இவிடத்திலே சரீரத்தியாகஞ் செய்வள் இப்படி இரண்டு விதத்திலுஞ் சரீரத்தியாகந் செய்வதற்கு ஹேதுவாயிருப்பதைச் சிந்தித்துக் கொண் டிருக்கையில் சதீதேவியானவள் பந்துக்களைப் பார்க்கவேண்டுமென்கிறஇச்சைக்கு விகாதத்தினாலே மிகவும் விசனத்தையுடையவளாகி நேத்திர ஜலங்களுடைய திவலைகளாலே சூழப்பட்டு நடுக்கந்துடனிருக்கிற அந்தப் பவானியானவள்;அந்தருத்திரனைக் கோபத்தினாலே தகிந்துப்போடுகிறவள்போல் பார்த்துக்கொண்டிருந்து பின்பு பெருமூச்சுடன் ஸ்திரீசுபாவத்தினாலே மூடமான புத்தியை யுடையவளாய்ப் பிரீதியினாலே தேகத்தினுடைய அர்த்தபாகத்தைக் கொடுத்த அந்தப்பதியை விட்டுவிட்டு சோகத்தினாலுங் கோபத்தினாலும் துக்கத்தையுடைய இருதயத்தோடே கூடப் பிதாவினுடைய கிரகத்தைக்குறித்துப்போனாள் அப்படி ஏகாங்கியாகப்போகிற அந்தச் சதிதேவியைப் பார்த்துத் திருநேத்திரனுடைய கிங்கராளான மணிமான்=மதன்=நந்தி=முதலானபேர்கள் பின்சென்று அவளை ரிஷபத்தினபேரிலே வைத்துக்கொண்டு லீலார்த்தமான கிளி=பந்து=கண்ணாடி=பத்மம்=வெண்குடை=சாமரம்=பஷபமாலை முதலானதுகளாலேயும்,துந்துமி சங்கம்=வேணுமுதலான வாத்தியங்களாலேயும்;கீதங்களாலேயும், பிரகாசிப் பித்துக்கொண்டு எங்கும் வேத

கோஷங்களாலும், தேவர்களாலேயும், பிரம்மரிஷிகளாலேயும், சூழப்பட்டும் யக்ஞபசுவுடனே கூடிக்கொண்டும்-மிருத்திகை-தாரு-அலிசு-சுவர்னம்- தற்பம்-சாமம்-இதுகளாலே நிர்மிக்கப்பட்ட பாத்திரங்களை யுடையதாகியுமிருக்கிற அந்தயக்கியசாலையைப்போலே யடைந்தார்கள் அவளைக்கண்டு அவளுடன் கூடப்பிறந்த பெண்கள்பிரீதியினால் ஆனந்த பாஷ்பத்தை உடையவர்களாய் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டார்கள், தாயாரும் அவளுடைய சிறியதாயாரும் அவளுக்குத் தக்கபடி ஆதரித்து சன்மானத்துடன் ஆதனங்கொடுத்தார்கள், இவர்களைத் தவிர மற்றெருசனமும் யக்கிய கர்த்தாவான தட்சனிடத்தில் நின்றும் பயத்தினலே ஆதரியாமற்போனர்கள் பிரீதியாய் விசாரித்தவர்களையுங் குசலங்கேளாமல் ருத்திரபாகத்தை யுடைய தாகாமலிருக்கிற அந்த யக்கியத்தையும் தேவதேவராகியும் பிரபுவாகியு மிருக்கிற ருத்திரனிடத்திலே பண்ணப்பட்ட அவமானத்தையும் சிவத்துவேஷியான அந்தத்தட்சனை வதஞ்செய்ய யத்தவஞ் செய்த பிரமதகணங்களையும்பார்த்து அவர்களைத் தன்னுடைய ஆக்கினையால் தகைந்து சகலருங்கேட்ககோபத்தினல் தழுதழுத்தவாக்குடன் நிந்தித்தாள்,

சகலஜீவகோடிகளிடத்திலும் பிரியாப்பிரியங்களில்லாதவராகியும், ஆத்துமாவாகியு மிருக்கிற அந்த சிவனிடத்திலே உன்னைத்தவிர எவன்தான் பிரதிகூலமாக நடப்பன் சாதுக்களானவர்கள் எதிரியினுடைய குணங்களையேகிரகிப்பார்கள் மகத்துக்கள் குணதோஷங்களைச் சமமாகக்கிரகிப்பார்கள், மத்தியமர்கள் குணங்களிலிருக்கின்ற தோஷங்களைக்கிரகிப்பார்கள் அதமனுய் உன்னைப்போலொத்த அசூசையுடையபுருஷன் குணங்களையே தோஷமாகக்கிரகிப்பன் ஜடமானசரீரத்தை ஆத்மாவென்று சொல்லுகிறவனுகியும் மகத்துக்களிடத்திலே அசூயையுடன் அசத்துக்களிடத்திலே சர்வகாலமும்நிந்திக்கிறவனுயு மிருக்கிறாய் இரண்டட்சரமாகியும், பிரசித்தமாகியுமிருக்கிற சிவாயென்கிற நாமமானது வாக்கினலே ஒருக்கால் சொல்லப்பட்டதாகில் அந்த மனுஷியாளுடையபாவத்தை அந்த க்ஷணத்திலேயே நாசம்பண்ணும் அப்படிப்பட்ட மகிமையுள்ள சிவனை அமங்களரூபியான நீயானவன் துவேஷிக்கிறாய் பிரமானந்த மாகிற மகரந்தரத்தைப் பிரார்த்திக்கின்றமகத்துக்களுடைய மனதாகிற வண்டுகளாலே சிவனுடையபாதபத்மமானது சேவிக்கப்படுகிறது ஜடைகளை விரித்துக்கொண்டு மசானத்தினுடைய மாலைகளையும் பஸ்பங்களையும் மனுஷியாளுடைய தலையோடுகளையும் பூஷணமாகவுடையவராகி பிரகாசங்களுடனேகூட மசானத்திலே வாசம்பண்ணுகிற அந்தச் சிவனுடைய பாதாரவிந்தத்தில்நின்றும் நழுவுகின்ற நிர்மால்யத்தை சிரசுகளாலேதரித்து மேன்மையை யடைகிறார்கள் மரியாதை யில்லாதவர்களானபுருஷாளாலே தூஷிக்கப்பட்டாரேயானல் அதைக்கேட்டபுருஷனனவன் தான்மரிக்கவும் அவர்களைசிட்சிக்கவுஞ் சாமர்த்தியமில்லாதவனனல் காதுகளை மூடிக்கொண்டு அவிடத்தைவிட்டு அப்பாலே போய்விடுவன் சமர்த்தனேயானல் அந்த துஷ்டாளுடைய நாவை பலாத்காரமாக அடியோடே சேதித்துப்போடுவன் அதைப்பார்க்கிலும் தன்பிராணனைவிட்டுவிடுவன் ஆதலால்நீலகண்டனை தூஷிக்கிற உன்னிடத்திலே நின்றும் உண்டான இந்தச் சரீரத்தை வைத்துக்கொண் டிருக்கப்போகிறதில்லை.

வாராய்பிதாவே எங்களாலே ஆஸ்ரயிக்கப்படுகின்ற அணிமாதிசம்பத்துகளானதுகள் உமக்குண்டாயிருக்கவில்லை உங்களுடைய சம்பத்துகள் யக்கிய சாலைகளிலேயே உண்டாயிருக்கிறதுகள் பிராணன்முதலானதுகளிலே மிகவும்பிரீதியையுடையவர்களாயிருக்கிறபெயர்களாலே சிலாகிக்கப் படுகிறதுகளாயும் தூமமார்க்கங்களாலே யஜிக்கப்படுகிறதுகளாயு மிருக்கிற அந்தச்சம்பத்துக்களே உங்களுக்கிருக்கிறதுகள் எங்களுடையசம்பத்துக்கள் அறியப்படாத காரணங்களை யுடையதுகளாகியும் பிர்மம்வித்துக்களாலே சேவிக்கப்பட்டதாகியு மிருக்கிறதுகள் ஆகையினலே நான்ஆட்டியனென்றும் ருத்திரன் தரித்திரனென்றும் கர்வத்தையடைய வேண்டாம்அந்த ஈஸ்வரனிடத்திலே பண்ணப்பட்ட அபராதத்தையுடையவனனஉன்னுடைய தேகத்தில்நின்று முண்டான இந்தச் சரீரத்தினலே பிரயோசனமில்லை இந்த தேகத்தைத் தரித்ததுபோதும் மகாபுருஷாளுக்கு அபப்பிரியத்தைப் பண்ணுகிற உன்னுடைய சம்பந்தமான இந்தத் தேகத்தைச் சுடவேண்டாமா பகவானன ரிஷபத்துவஜரானவர் பரிஹாசம் முதலானதுகளிலே விநோதமாக தாட்சாயணியென்று அழைத்துக்கொண்டு உன்னுடைய நாமத்தைச் சொல்லுகிறபோது அந்தவிளையாட்டினலேஉண்டான சந்தோஷத்தைவிட்டுமிகவும் துக்கத்தையுடையவளாயிருப்பேன் ஆகையினலேசவலத்துக்குச்சமானமாகியும் உன்னுடையதேகத்தில்நின்றும் உண்டானதாகியுமிருக்கிற இந்தத்தேகத்தை விட்டு விடுகிறேன்,

சுகப்பிர்மரிஷியினுடைய வாக்கியம்.

வாராய் காமக்குரோதாதிகளை ஜயித்த பரிட்சித்து மஹாராஜனே அந்த சதிதேவியானவள் இந்தப் பிரகாரம் அந்தயக்கியத்திலே தட்சனைக்குறித்துச்சொல்லி மவுனத்தையடைந்தவளாய் பூமியிலே வடக்குமுகமாகஇருந்து ஆசமனம்பண்ணி நேத்திரங்களை மூடிக்கொண்டு பீதாம்பரத்தினலே சூழப்பட்டவளாகி யோகாசனத்தையுடையவளாய் பிராண அபானவாயுக்களை நாலு

பக்கமும் வியாபியாமல் தகைஞ்சு ஏகரூபமாகப் பண்ணி நாபிச்சக்கரத்தினாலே நிறுத்தி அவிடத்தில் நின்றும்உதானவாயுவை யெழுப்பி புத்தியோடேகூட மெள்ளமெள்ள இருதயத்திலே ஸ்தாபித்து அதில் நின்றுங் கண்டத்திலே ஸ்தாபித்துக் கண்டமார்க்கமாய்ப்புருவங்களுடைய மத்தியத்திலே அடைவிப்பித்தாள் மகத்துக்களுக்குப் பூச்சியரான ருத்திரனாலே அடிக்கடி ஆதரவினாலே மடியிலேயேற்றி வைத்திருக்கப்பட்டதன்னுடையதேகத்தைவிட இச்சித்தவளாகக் கொண்டு சரீரங்களிலே பிராணநிரோதனமாகிற அக்கினியைத்தரித்து ஜகத்குருவான தன்னுடைய பர்த்தாவினுடைய பாதாரவிந்தத்தைச் சிந்தித்துக்கொண்டுபர்த்தாவைவிட 'மற்றொன்றையும் தன்னுடையதேகத்தையும்பார்க்கவில்லை அந்தட்சணத்திலே அந்தத் தேகமானது சமாதியினாலுண்டான அக்கினியிலே பஸ்பமாய்விட்டது அந்தஆச்சரியத்தைப்பார்த்தபேர்களுடைய ஹாஹாரவென்கிற சப்தமானது ஆகாசத்திலேயும் பூமியிலேயுமுண்டாச்சுது தேவர்களுக்குள்ளே மிகவும்பூச்சியரான ருத்திரனுடைய இஷ்டையான தேவியானவள் தட்சனாலே சோபித்துக்கொள்ளப்பட்டவளாகக்கொண்டு பிராணனை விட்டுவிடாநிற்கிறாள் ஸ்தாவரசங்கமரூபமான இந்தப்பிரபஞ்சத்திற்குக் காரணபூதனான இந்த தட்சப்பிரஜாபதியினுடைய துர்ஜனஸ்வபாவத்தைப்பாருங்கள் எங்கும்பூஜிக்கயோக்கியையான இந்த சதீதேவியானவ ளிந்தட்சணத்திலே அவமானம்பண்ணப்பட்டவளாய் பிராணனைவிட்டுவிட்டாள் தயாசூனியமான இருதயத்தை யுடையவனாகியும் அதமனாகியுமிருக்கிற இந்த தட்சனானவன் ஜனங்களுடைய மத்தியிலே மகத்தானஅபகீர்த்தியையும் நரகத்தையு மடையப்போகிறான் ஈஸ்வரத் துவேஷியான இந்ததட்சனானவன் தன்னுடையபெண்ணானசதீதேவி மரணத்திற்கு யத்தனம்பண்ணுகிறபோது அவளைத் தகையாமல் உபேட்சைசெய்ததா லுண்டான அபகீர்த்தியையும் நரகத்தையும் அடையப்போகிறானென்று ஜனமானது சொல்லிக் கொள்ளுகையில் ருத்திரப்பாரிஷிதாளானபேர்கள் சதீதேவியினுடைய அற்புதமான பிராணத்தியாகத்தைப்பார்த்து அந்த தட்சனைக்கொல்லுகைக்கு ஆயுத பாணிகளாகப் புறப்பட்டு ஓடிவருகின்ற அந்தப் பிரமதகணங்களுடைய வேகத்தைப்பார்த்து பிருகுமஹாரிஷியானவர் யக்கியவிக்ர்தம் பண்ணுகிற பெயர்களை நாசம்பண்ணுகின்ற மந்திரத்தினாலேதட்சிணாக்கினியினாலே ஹோமம்பண்ணினார் அதில்னின்றும் பிருகுவென்று பெயரையுடையவாளான அந்த தேவாள் பராக்கிரமத்திலே வெகுப்பிரகாரமாகப் புறப்பட்டு பிரம்மதேஜசினாலே பிரகாசிதமாய் குறைக் கொள்ளியை ஆயுதமாகவுடையவளாய் அந்த குப்பகாளுட்ளே கூடியிருக்கிற அந்த பிரமதகணங்களை நான்கு திக்கிலேயும் அடித்துத் துரத்தினார்கள்,

## ரு-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

மாதைவாமபா கத்தினில்வைத்திடும்
தாதையானோர் சதீதேவியாகத்தை
கோதிலாத குணமணிவீரனால்
போதுதட்ச னுயிர்தனைப்போக்கினார்

சங்கரனானவர் சதீ தேவியினுடைய தேகத் தியாகத்தைக்கேட்டு கோபத்தினாலே வீரபத்திரனையுண்டாக்கி அவனாலே தட்சனைக் கொல்லுவித்ததாசொன்று சொல்லப்படுகின்றது.

மைத்திரேயமகாரிஷியினுடையவாக்கியம்.

வாரீர்விதுரரே, ருத்திரனானவர் தட்சப்பிரஜாபதியினாலே அவமானம் பண்ணப்பட்ட சதீதேவியினுடையநாசத்தையும் அந்ததட்சனுடைய யக்கியத்திலுண்டானதேவர்களாலே தம்முடைய பாரிஷதசேனை துரத்திவிடப்பட்டதையும் நாரதமகாரிஷியினிடத்தில் நின்றுங் கேட்டு அபாரமானகோபத்தையடைந்துகடிக்கப்பட்டவுதடுகளையுடையவராகி அந்தருத்திரனானவர் அக்கினியினுடைய சுவாலைபோல் உக்கிரமான காந்தியையுடையதான சடையைப்பிடுங்கி சீக்கிரமாக எழுந்திருந்து நகைத்து கம்பீரமான சப்தத்தை யுடையவராய் ஜடையைபூமியிலேவிட அதில்னின்றும் தேகத்தினாலேசுவர்க்கத்தை ஸ்பரிசித்தும் ஆயிரம்பாகுகளை யுடையவனாகியும் மேகம்போல் காந்தியை யுடையவனாகியும் மூன்று சூரியாள்போலொத்த கண்களையுடையவனாகியும் மிகவும்உன்னதங்களான பற்களை யுடையவனாகியும் ஜ்சொலித்துக்கொண்டிருக்கிற அக்கினிபோலொத்த மயிர்களையுடையவனாகியும் கபாலமாலைகளையுடையவனாகியும் நானாவிதங்களாகியும் உயர வெடுக்கப்பட்டுமிருக்கிற ஆயுதங்களையுடையவனாகியுமிருக்கிற வீரபத்திரனானவர் உண்டாய் ருத்திரனைநோக்கி (அஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டுநான்செய்யவேண்டியதென்னவென்றுகேட்கிறஅந்தவீரபத்திரனைப் பார்த்து) ஒருவார்த்தை சொன்னார்,

வாராய் படனே நீஎன்னுடைய பாடாளுக்கு நாயகனாகிய யக்கியத்துடனேகூடிக்கொண்டிருக்கிற தட்சனைநாசம்பண்ணு பிரம்மதேஜசானது ஜயிக்கத்தக்கதன்றெண்ணவேண்டாம் நீயென் அம்சமாகவிருக்கிறாயென்று ருத்திரனாலே ஆக்கியாபிக்கப்பட்டவனாய் அந்தவீரபத்திரனானவன் தேவதேவராகியும் பிரபுவாகியு மிருக்கிற அந்தருத்திரனை பிரதட்சணம்பண்ணி அப்போது தன்னை பலசாலிகளுடைய பலத்தைஜயிக்கத்தக்கவனாகவெண்ணிக்கொண்டான்.

வாரீர்விதுரரே அந்தவீரபத்திரனானவர் மிகவும் அட்டகாசம்பண்ணி பிரமதகணங்களாலேபின்செல்லப்பட்டவனாய் சப்தியாநின்றநூபுரமுதலான பூஷணங்களையுடையதான மாதங்களையுடையவனாகியவனுக்கு யமன்போல் பயங்கரமானசூலத்தை யெடுத்துக்கொண்டு ஓடிவந்தான் இப்படிஓடிவருகிறவீரபத்திரனை ரித்துக்குகள் சதசியாள்பிராமணாள் பிராமணபத்தினிகள்சமஸ்தமானபேர்களும்பார்த்து வடக்குத்திக்கிலே இதென்ன அந்தகாரமோவென்று பிர்மித்துப்பிற்பாடு புழுதியென்றறிந்து இந்தத்தூளானது எங்கிருந்துண்டாச்சுதென்றுசிந்தித்தார்கள் இவ்விடத்திலே பெருங்காற்றுகளும் வீசவில்லையே சோராளுமில்லையே இப்போதிராநின்ற பிராசீனபரிசிஎன்னப்பட்ட ராஜாவானவன் உக்கிரமான ஆக்கினையுடையவனாகக்கொண்டுஜீவித்திருக்கிறானே பசுக்களும் மிகவும் வேகத்துடனே தூரத்திக்கொண்டு போகப்படவில்லையே இந்தப்புழுதியானது எதினாலே யுண்டாச்சுது இப்போதுலோகந்தான் பிரளயத்தையடைந்துபோகுதோ என்னவென்றும் பிரசூதியென்கிற தக்ஷனுடையபத்தினியுடனே கூடிக்கொண்டிருக்கிற சமஸ்த ஸ்திரீகளும்பயந்த சித்தத்தையுடையவளாய்இந்த தக்ஷப்பிரசாபதியானவன் சமஸ்தமானபெண்களும் பார்த்துக்கொண்டிருக்கச்சே புத்திரியாகியும்நிரபாராதியாகியுமிருக்கிற சதீதேவியை அவமானம் பண்ணின பாபத்தினுடைய பலமிதுவென்று சொல்லிக்கொண்டார்கள்.

பிரளயகாலத்திலே நாலுபக்கமும்சிதறுகின்ற ஜடாகபாலத்தையுடையவராகியும் தன்னுடையசூலநுனியிலே கோர்க்கப்பட்டதிக்கஜங்களையுடையவராகியும் மிகுந்தஅட்டகாசமாகிய மேகசப்தத்தினாலே பிளக்கப்பட்ட திக்குகளையுடையவராகியும் உயரவெடுக்கப்பட்ட அஸ்திரங்களையுடையதுகளான பாகுக்களாகிற துவசங்களை நாலுபக்கமும்பரப்பிக்கொண்டு சந்தோஷத்தினாலே நர்த்தனம்பண்ணுகிறவராயும் சகிக்கக்கூடாததேசசையுடையவராகியும் பயங்கரங்களான கோரப்பல்லுகளாலே தள்ளப்பட்ட நக்ஷத்திரகணங்களையுடையவராகியுமிருக்கிற அந்தருத்திரனைப் பொறுமையையுடையவராகப்பண்ணி கோபித்துக்கொள்ளும்படிசெய்ததக்ஷப்பிரஜாபதிக்கு க்ஷேமமானது எப்படியுண்டாகப்போகிறதென்று மிகுந்தபயத்தையடைந்த ஜனத்தினாலேவெகுப்பிரகாரமாக அந்தருத்திரன்விஷயத்திலே சொல்லப்படுகையில் அப்போதுமகானுபாவனான அந்தத்தக்ஷனுக்குப் பயங்கரங்களான மகோற்பாதங்களானதுகள் அனேகப்பிரகாரமாகப் பூமியிலேயும் ஆகாசத்திலேயும்நான்குபக்கங்களிலேயும் உண்டாச்சுதுகள் அப்போது நானாவிதமான ஆயுதங்களையுடையவாளாகியும், வாமனருபிகளாகியும் எடுக்கப்பட்ட ஆயுதங்களையுடையவர்களாகியும் பொன்வர்னங்களாகியும் பச்சைவர்னங்களாகியும் முதலையினுடைய முகம்போலவும் வயிறுபோலவும் மான்முகங்களையும் வயிறுகளையு முடையவர்களாகியும் நாலுபக்கமும்ஓடிவருகிற அந்தருத்திரபடாளாலே அந்தஎக்கியமானது சுற்றிக்கொள்ளப்பட்டு சிலபேர்கள் பிருகுவம்சத்தைமுறித்துப்போட்டார்கள்சிலபேர்கள் பத்தினிசாலையை நாசம்பண்ணிப் போட்டார்கள் சிலபேர்கள் சதசியாளிருக்கிறமண்டபத்தை அழித்துப்போட்டார்கள் சிலபேர்கள் அக்கினிஹோத்திரசாலையை அழித்துப்போட்டார்கள் சிலபேர்கள் மடப்பள்ளியை நாசம்பண்ணிப்போட்டார்கள் சிலபேர்கள் எக்கியபாத்திரங்களைத் தூம்சம்பண்ணிப்போட்டார்கள் சிலபேர்கள் அக்கினிகளைநாசம்பண்ணிப் போட்டார்கள் சிலபேர்கள் குண்டலங்களிலே சிறுநீரைவிட்டார்கள் சிலபேர்கள்யக்கியவேதிகைகளை யிடித்துப்போட்டார்கள்சிலபேர்கள் ரிஷீஸ்வராளைப்பிடித்தார்கள்சிலபேர்கள் பத்தினிகளைமிரட்டினார்கள் சிலபேர்கள் கிட்டியும்ஓடிப்போயுமிருக்கிறதேவர்களைப்பிடித்துக் கொண்டார்கள் மணிமானானவன் பிருகுமகாரிஷியையும் வீரபத்திரனானவன் தக்ஷப்பிரஜாபதியையும் சண்டேசனானவன் பூஷாவென்னப்பட்டதேவனையும் நந்தீஸ்வரனானவன்பவனையும் பிடித்துக்கொண்டார்கள் சமஸ்தரித்துக்களும் சதசியாளும் தேவாளும் வந்தப்பிரமதகணங்களால்கல்லுக்களாலே அனேகப்பிரகாரமாகமிகவும் பிடிக்கப்பட்டவர்களாய்க்கொண்டு ஓடிப்போனார்கள்.

சதசிலே மீசைகளையுருவிசிரித்தும் ஓமம்பண்ணுகின்ற யக்கியபாத்திரத்தைக் கையிலேயுடையவராகியுமிருக்கிற அந்தப்பிருகுமகாரிஷியினுடைய மீசைகளை வீரபத்திரனானவன் பிடுங்கிப்போட்டான் சிவனிந்தையைப்பண்ணுகின்ற தக்ஷனைகண்சாடைகாட்டின பகனுடையநேத்திரங்களை நந்தீஸ்வரனானவர் பிடுங்கிப்போட்டார் மகாதேவரானவர் தக்ஷனாலேநிந்திக்கப்படுகையில் சிரித்தபூஷாவினுடைய பற்களை சண்டேசனானவன் பிடுங்கிப்போட்டான்.

வீரபத்திரனானவன தக்ஷனுடையமார்பிலேஏறிக்கொண்டு தீக்ஷணமான நுனியையுடைய ஆயுதத்தினாலேயும் அனேகஅஸ்திரசஸ்திரங்களாலும் சேதிக்கப்படாமலிருக்கிற சர்மத்தையுடையவனான அந்ததக்ஷனைப்பார்த்துமிகவும்ஆச்சரியத்தையடைந்து வெகுகாலஞ்சிந்தித்து அந்தவீரபத்திரனானவன் யக்கியத்திலேபசுக்களுடைய பீடாதிருபமான மரணவுபாயத்தைப்பார்த்து அந்தஉபாயத்தினாலேயசமானனாகிற பசுவினுடையசரீரத்தில்நின்றும் சிரசைசேதித்துப்போட்டான் அப்போதுருத்திரனுடையஅந்தக்காரியத்தைப் பார்த்துமிக

வுங்கொண்டாடி அந்தப்பூதப்பிரேதபிசாசங்களுடைய சாதுவாதமும் மற்றைப்பிராமணருடைய அசாதுவாதமு முண்டாச்சுதுருத்திரனானவன் கோபத்தினாலேஅந்தச்சிரசை தக்ஷணாக்கினியிலே ஹோமம்பண்ணிப் போட்டான் அந்தப்பிரமதகணங்கள் அந்தயக்கியத்தை ப்பஸ்பமாகப் பண்ணிப்போட்டு கைலாயத்தைக் குறித்துப்போனார்கள்.

## ௬-வது-அத்தியாயம்

கலிவிருத்தம்,

வேதன்தேவ கணங்களுடன்விரைந்
தோதுபூமி யடைந்துவுயிர்ப்பிச்சை
தீதிலாம லளித்துத்தக்ஷன்முதற்
சேதமின்றிச் செய்தாரதைச்செப்புவாம்,

பிர்மதேவரானவர் தேவகணங்களுடனேகூட பூமியைஅடைந்துதக்ஷன்முதலானபேர்களைபிழைக்கச்செய்து சமாதனம் பண்ணினரென்று சொல்லப்படுகின்றது,

மைத்திரேயர் வாக்கியம்.

வாரீர்விதுரரே பிற்பாடுசமஸ்த தேவகணங்களும் ருத்திரசேனைகளாலே அபஜயப்பட்டவர்களான ரித்துக்கள்சதசியாள் முதலானவர்கள் பயத்தையுடையவர்களாய்க்கொண்டுபிர்மதேவரையடைந்துநமஸ்காரம்பண்ணி சமஸ்தவிருத்தாந்தத்தையுஞ்சொன்னார்கள் பூர்வம்தானே இப்படிவரப்போகிறதையறிந்து தக்ஷனுடைய யக்கியத்தைக்குறித்துப் போகாமலிருந்த பிர்மதேவரானவர் ஒருவார்த்தைசொன்னார், மிகவும்தேஜசையுடையபுருஷன் அபராதம்பண்ணியிருந்தாலும் அவனிடத்திலே துவேஷிக்கிறபேர்களுக்குக்ஷேம முண்டாகமாட்டாது யக்கியபாகத்திற்குரிய ருத்திரனைதிரஸ்கரித்துநடத்தியபடியால் இவ்வளவுதொந்தரைநேர்ந்ததுஇப்பவும் தயாநிதியானஅந்தருத்திரனுடைய பாதாரவிந்தங்களைப்பிடித்துக்கொண்டு க்ஷமிப்பியுங்கள் அவர்கோபித்துக்கொண்டால்லோகபாலாளுடனே கூடிக்கொண்டிருக்கிற சமஸ்தலோகங்களும்நாசத்தையடைந்துபோகும் பாரியையினாலேபிரிவுபட்டவராகியும் இருதயத்தில் துர்ப்பாஷைகளினாலே அடக்கப்பட்டு மிருக்கிறஅந்தருத்திரதேவனை சீக்கிரமாகநீங்கள் எக்கியத்துக்குப்புனச்சந்தானத்தைக்கோறி க்ஷமிப்பியுங்களென்று ஆக்கியாபித்து பிதுர்க்கள்பிரசாபதிகள் வேதர்கள்இவர்களுடனே தம்முடயலோகத்தில்நின்றும் திரிபுரவைரியான ருத்திரனுக்கு ஸ்தானமாகியும்இஷ்டமாகியும் ஔஷதிகளுக்குவுற்பத்தி ஸ்தானமாகியும்தவசு யோகம்மந்திரங்களினாலே சித்தாள்சேவிக்கப்பட்டும் கின்னராள் கந்தருவாள் அப்சரஸ்திரீகள் இவர்களாலேசார்வகாலமும சூழப்பட்டும்நானாவிதங்களான ரத்தினங்கள் தாதுக்கள் விருட்சங்கள் லதைகள் புதறுகள் இதுகளையுடையதுகளாகியும் நானாவிதக்களானமிருககணங்களாலே சூழப்பட்டும்நிர்மலங்களாகிய மலையருவிகள் குகைகள் தாழ்வரைகளை யுடையதுகளாகியுமிருக்கிற சிகரங்களிலேநாயகாளுடனே கூடவிளையாடிக்கொண்டிருக்கின்ற தேவஸ்திரீகளுக்குப்பிரீதியைப்பண்ணுகிறதாயும் மயில்களாலேசப்திக்கப்பட்டும் மதாந்தங்களாயிருக்கிறவண்டுகளுடையராகத்தையுடையதாகியும் கோகுலங்களுடைய சப்தங்களாலேயும் உன்னதசாகைகளாகியும்இஷ்டத்தைக்கொடாநின்றுமிருக்கிற விருக்ஷங்களாலேபக்ஷிகளைஅழைக்கிறதுபோலுமிருக்கிற வனத்தை யுடையதாயும் ஆம்பல்,செங்கழுநீர்,பத்மம் இதுகளாலேசூழப்பட்டும் மதுரமாகச்சப்திக்கின்ற பக்ஷிக்கூட்டங்களாலே விளங்கிக்கொண்டுமிருக்கின்ற தடாகங்களையுடையதாகியும் கங்கையினாலேசூழப்பட்டும் பவித்திரமாகியும் சுகந்தமாகியும் சலத்தையுடையதாகியுமிருக்கிற கைலாசகிரியையும் அந்தப்பர்வதத்திலேமிகவும் மனோக்கியமாகியும் அளகை யென்றுபெயரையுடையதாகியும் சௌகந்திகமென்னப்பட்ட பத்மவனத்தையுடையதாகியும்ருத்திர பகவானுடைய பாதாரவிந்ததூளினாலேமிகவும் பாவனங்களான நந்தையென்றும் அளகந்தையென்றுஞ்சொல்லப்பட்ட இரண்டுநதிகளால்சூழப்பட்டும் வெள்ளி சுவர்னம் மகாரத்தினங்கள் இதுகள்மயமானஅனேகவிமானங்களாலும் யக்ஷஸ்திரீகளாலுஞ் சூழப்பட்டுமின்னல்களோடேகூடிக்கொண்டிருக்கிற மேகம்போலவிளங்குகிற குபேரனுடையஅந்தப்பட்டணத்தையும் அபீஷ்டத்தைக்கொடுத்துக்கொண்டும் ஆச்சரியகரங்களாயுமிருக்குற இலை காய் கனிவர்க்கங்களையுடைய விருக்ஷங்களாலே சுபகரமாகியும் இசாதகண்டங்களாயும் வண்டினங்களினது சுவரத்தையுடையதாகியுமிருக்கிற அம்சங்களுடையகூட்டத்துக்கு இஷ்டமாகியும்திடமானகொடித்தண்டுகளையுடைய பத்மங்களாலேசூழப்பட்ட சரசுகளையுடையதாகியும் நூதனமான அரிசந்தன விருக்ஷங்களுடையகரத்தினாலே யட்சஸ்திரீகளுடையமனதை அடிக்கடிமிகவும் சலிப்பிக்கிறசௌகந்திகமென்னப்பட்டவனத்தையும் பத்மங்களுடையசமூகங்களையுடையதாகியும் கிம்புருஷளாலே சூழப்பட்டும்வயிடூரியங்களாலேபண்ணப்பட்டபடிகளையுடைய நடபாவிகளையும் நூறுயோசனைதூரம்உன்னதமாகியும் நான்குபக்கமும்எழுபத்தைந்துயோசனைதூரம் சாகைகளினாலே விஸ்தாரமாகியும் நான்குபக்கமும் ஸ்திரமான நிழலையும் பட்சிகளுடைய கூண்டுகளையுமுடையதாகியும் தாபத்தைப்போக்கடிக்கத்தக்கதாகியும் மோட்சத்தைக் கோருகிபேர்களுக்குயு இருப்பிடமாகியும் மகாயோகஸ்வருபமாகியு மிருக்கிற

ஆலமரத்தின்கீழே கோபத்தைவிட்டிருக்கிறயமன்போ
லும் சாந்தாளானமகாசித்தர்களாலேயும் குபேரனாலே
யும் குய்யகாள் இராட்சசாள் இவர்களாலேபூசிக்கப்பட்
டவராகியும், உபாசனை-தபசு-சமாதி-இதுகளுடைய மா
ர்க்கத்தையுடையவராகியும் லோகோஸ்வரராகியும் பிர
பஞ்சத்திற்குஇஷ்டராகியும் சந்தியாகாலமேகம்போன்
றசரீரகதில் பஸ்பத்தினாலேபூசப்பட்டும் சடை- சர்மம்-
சந்திரகலைமுதலான சின்னங்களைத் தரித்தும் தர்ப்பைம
யமான ஆசனத்திலேயிருந்தும் ரிஷீஸ்வராள் கேட்டுக்
கொண்டிருக்கப் பிரசனம்பண்ணுகின்ற நாரதமகாரிஷி
க்கு பரப்பிர்மத்தைஉபதேசிக்கிறவராயு மிடதுபாதபத்
மத்தை வலத்துடையின்பேரிலேவைத்துக்கொண்டுஇ
டதுமுழங்காலின்பேரிலே இடக்கையை வைத்துக்கொ
ண்டு வலதுகையினுடைய மணிக்கட்டிலேசபமாலையை
த்தரித்துக்கொண்டு வலதுகையினால்பண்ணப்பட்டதத்
வமுத்திரையினாலே காணப்படாநின்றும் பிர்மானந்தத்
திலேயேகாக்கிற சித்தராயிருக்கின்றவராயும் யோகப்ப
ட்டையை ஆசிரயித்திருக்கின்ற தியானசீலாளான மனு
க்களுக்கு ஆதிமனுவாகியுமிருக்கிற அந்தக்கிரீசனைலோ
கபாலாளுடனே கூடிக்கொண்டிருக்கிற சமஸ்தமுனிக
ளும்அடைந்துஅஞ்சலிபந்தம்பண்ணிக்கொண்டுதெண்
டனிட்டார்கள். அந்தக்கிரீசனும் சித்தமகாரிஷிகளுடன்
அவ்விடத்திலேவருகின்ற பிர்மாவைப்பார்த்து எழுந்தி
ருந்து வாமனமூர்த்தியான ஸ்ரீமஹாவிஷ்ணுவானவர்கா
சியப்பிரஜாபதிக்குப் பிரணாமம் பண்ணினாற்போல் சா
ஷ்டாங்கமாகத் தண்டன்சமர்ப்பித்துநிற்கின்ற அந்தச்ச
ந்திரசேகரனைப் பார்த்து சிரித்துக்கொண்டு ஒருவார்த்
தைசொன்னார்.

பிர்மாவினுடைய வாக்கியம்,

வாரீர்ஈசனே உம்மைச்சர்வசகத்துக்கும் சக்திபீஜ
சுவரூபாளான பிரகிருதிபுருஷாளுக்கும்காரணராகவும்
பேதசூனியமாகியும் பரப்பிர்மமாகியும் அறிகிறேன் உ
ம்முடையஅம்சாளான பிரகிருதிபுருஷாளிடத்தி லிருந்
துசிலந்திபூச்சிபோல் இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்து
ம் இரட்சித்தும் சங்கரித்துக்கொண்டுமிருக்கிறீர் தர்மா
ர்த்தங்களைக்கொடுக்கின்ற வேதத்தினுடைய ரட்சணைக்
கு தட்சனை நிமித்திகரித்து யக்கியத்தைச்சிருஷ்டித்தீர்
பிராமணாள்மரியாதைகளுடன் அனுட்டானஞ் செய்கிற
வர்ணாசிரமதர்மங்களும் உம்மாலேயே நிர்ணயம்பண்ண
ப்பட்டது சுபகர்மத்தைப்பண்ணுகின்ற புருஷனுக்குப்
பலமாகச் சொர்க்கமோட்சங்களைக் கொடுக்கின்றீர் அக்
கிரமங்களைப் பண்ணுகின்ற புருஷனுக்குக் கோரமான
நரகத்தைப் பண்ணுகிறீர் ஒருவராலேயும் உல்லங்கன
ம் பண்ணக்கூடாத பத்மநாபருடைய மாயையி னாலே
மோகிக்கப்பட்ட சித்தத்தையுடையவர்களாகியும் பேத
புத்தியையுடையவர்களாகியுமாக இருக்கிறவர்களிடத்தி
லேயும் சாதுக்களானபேர்கள் கிருபையைப்பண்ணுவா
ர்கள் தெய்வத்தினாலே அடிக்கப்பட்டவனிடத்திலே ப
ராக்கிரமத்தைப்பண்ணார்கள் ஆகையினால் அந்தமாயை
யினாலே மோகிக்கப்பட்ட மனதையுடையவர்களாகியும்
கர்மத்திலேயே பிரவர்த்திககின்ற சித்தத்தையுடையவர்
களாகியு மிருக்கிறபேர்களால் செய்யப்படுகிற அபராத
த்தைப்பொறுத்து அந்தத் தட்சப்பிரஜாபதியினுடைய
யக்கியத்தைப்பூர்த்திசெய்யவேண்டும் யக்கியத்திலேபா
கத்தைக்கொடாமற்போகிறவர்கள் நிஷித்தமானயக்கியம்
பண்ணினவர்களாகஆகிறார்கள் யஜமானனானதட்சனையு
ம்பிழைப்பித்து பகதேவனுடையகண்களையும் கொடுத்
து பிருகுமகாரிஷிக்கு மீசைகளும்உண்டுபண்ணிபூஷா
வுக்கும் பூர்வம்போலத்தந்தங்களும் உண்டாகட்டும் உ
ம்மாலே அனுக்கிரகிக்கப்பட்ட ஆயுதங்களினாலேயும்,
கற்களினாலேயும், பிளக்கப்பட்ட சரீரத்தையுடைய தே
வாளுக்கும் ரித்துக்களுக்கும் சீக்கிரமாகஆரோக்கியமு
ண்டாகப்படும் யக்கியத்திலேயிருக்கிறபதார்த்தங்கள்யா
வும் உம்முடைய பாகமாக விருக்கட்டும் அந்தயக்கியத்
தைப் பூர்த்திசெய்யவேண்டுமென்று பிர்மதேவன்சொ
ன்னார்.

## ௭-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

அல்லல்நீக்கு மரன்தக்ஷன்தங்களால்
மெல்லவேயழைக் கும்மிகுபாலனோர்
நல்லதக்ஷனுல் யாகம்நடத்தியோர்
சொல்லுமற்புதம் செப்பியதாகுமால்.

தக்ஷன்ருத்திரன்முதலானபேர்களாலேஅழைக்கப்ப
டுகின்ற ஸ்ரீமகாவிஷ்ணுவானவரந்தட்சனாலேயக்கியத்
தைநிறைவேற்றிவைத்தாரென்று சொல்லப்படுகின்றது.

மைத்திரேயமகாரிஷியினுடையவாக்கியம்.

வாரீர் மகாபாகுவே, இந்தப்பிரகாரம் பிர்மதேவரா
லேபிரார்த்திக்கப்பட்டருத்திரனானவர் சிரித்துப் பிர்மா
வைப்பார்த்து ஒருவார்த்தையானதுசொல்லப்பட்டது.

வாரீர்பரோசனே, பரமாத்மாவினுடைய மாயையி
னாலே மோகிக்கப்படுகின்ற அக்கியானிகளுடைய அப
ராதத்திற்குத்தக்கபடி என்னாலேதண்டனையானதுசெய்
யப்பட்டது. அந்த தட்சப்பிரஜாபதி ஆட்டினுடையமு
கத்தை யடையும்படி யாயும் பகதேவன் மித்திரதேவ
னுடைய நேத்திரத்தை யுடையவனாகவும் பூஷாவான
வன்மான்வ யசமானனுடையபற்களாலே பட்சிக்கத்தக்
கவனாகவும் எனக்கு யக்கியசேஷத்தைக் கொடுத்தவர்

களாயும் முறிக்கப்பட்ட அவயவங்களையுடைய தேவர்களும் மற்றரித்துகளும் அசுவனி தேவர்களுடைய கைகளாலேயும் பூஷாவினுடைய அஸ்தங்களாலேயும் பாகுகளையுடையவர்களாகவும் பிருகுமகாரிஷியானவர் ஆட்டினுடையமீசையை மீசையாக உடையவராகத்தக்கவரென்று அனுக்கிரகித்தார்.

வாரீர்விதுரரே, அப்போது சமஸ்த பிராணிகளும் சிவனாலேசொல்லப்பட்டிருக்கிற வார்த்தையைக்கேட்டு சந்துஷ்டமான மனதினாலே சாது சாது வென்று சொன்னார்கள், பிற்பாடு ரிஷிகளுடனே கூடிக்கொண்டிருக்கிற சமஸ்ததேவர்களும் நீரேவந்துசமஸ்தமும்பண்ணப்படத்தக்கவரென்று சிவனைப்பிரார்த்தித்து அந்தச் சிவனுடனேயும் பிர்மாவினுடனேயும் கூடினவர்களாய் அந்தயக்கியசாலையைவந்தடைந்து ருத்திரனுடையசொற்படிக்கு அந்தயக்கியபசுவினுடையசிரசை தட்சனுடையசரீரத்துடனேகூடக்கூட்டி ருத்திரனால் கடாட்சிக்கப்படுகையில் தட்சனானவன் அந்தட்சணத்திலேநித்திரைபண்ணினவன்போல் எழுந்திருந்து எதிரேயிருக்கின்ற சிவனுடையதரிசனத்தினாலே சரத்காலத்துமடுவானதுபோல் நிர்மலனாகியிருக்கையில் மரித்துப்போன பெண்ணை நினைத்துக்கொண்டு துக்கத்தினால்கண்களில்நீர்சொரிய ருத்திரனைஸ்தோத்திரம்பண்ணத்தோணாமல்வெகு பிரயாசத்தினால் மனதைநிறுத்தி ஈசனைஸ்தோத்திரம்பண்ணினான்.

தட்சன் வாக்கியம்.

வாரீர் ஈசனே, நம்மாலே நீர் பழிக்கப்பட்ட போதே உம்மாலே சிட்சைபண்ணப்பட்டேன் அதுவேயெனக்குஅனுக்கிரகமாயிற்று நீர்முன்னே பிர்மமாயிருந்துகொண்டு வித்தை-தபசு-விரதம்- இதுகளாலே ஆசத்தாளான பிராமணனை முதலில் முகத்தினாலே ஜீவகத்துவத்தை ரட்சிக்கிறதற்காகவும் சம்பிரதாய பிரவர்த்தனத்தினாலே ஆக்கியாபிக்கிற தற்காகவும் சிருஷ்டித்தீர் பசுபாலனானவன் பசுக்களை ரட்சிப்பதுபோல் பிராம்மணனை ஆபத்துக்களில் ரட்சிக்கிறீர் தத்வக்கியானசூனியனான அடியேன் துர்வார்த்தைக ளாகிற பாணங்களினாலே தேவரீரைவெறுக்கப்பேசினேன் அதைமறந்து அதோகதியிலேவிழுகிறவென்னைகிருபாரசத்தினாலேநனைந்திருக்கிற திருஷ்டியினாலே ரட்சித்தீர் அப்படிப்பட்ட மகிமையுள்ள உமக்குஅடியேனால் செய்யத்தக்கதானபிரதியுபகாரம் ஒன்றுமில்லையென்று ருத்திரனை க்ஷமைகொண்டு அந்த தட்சனானவன் பிர்மாவினாலே அனுக்ஞைபண்ணப்பட்டு உபாத்தியாயர் ரித்துக்களுடனேகூடயக்கியத்தைவிஸ்தரிப்பித்து விஷ்ணுதேவதையை அழைப்பிவிக்கத்தக்கதாகியும் மூன்றுகபாலங்களிலே சேர்மானிக்கப்பட்ட புரோட்சத்தை வீராளான பிரமதகணங்களுடைய சப்சற்க தோஷத்தினுடைய சுத்தியின் பொருட்டும் யக்கியசந்தானத்தின் பொருட்டும் அவிசையுடையவரான அத்துவரியுடனே தக்ஷன் விசுத்தபுத்தியினாலே ஸ்ரீமந்நாராயணனைக்குறித்துத் தியானம்பண்ணினபோதே அந்த ஸ்ரீஹரியானவர் பத்துத் திக்குகளையும் பிரகாசிப்பிக்கிற பிரபையினாலே சதசிலிருக்கிறபேர்களுடைய தேஜசை அபகரிக்கத்தக்கதாகியும்பிறகத்திர தந்திரமென்னப்பட்டஸ்தோத்திரங்களை இறகுகளாகவுடைய கருடனாலே சமீபத்தைஅடைவிக்கப்பட்டவராயும், காளமேகசியாமளராகியும், பீதாம்பரத்தையுடையவராகியும் சூரியனைப்போல பிரகாசிக்கின்ற கிரீடத்துடனே கூடினவராகியும் நீலங்களான கேசங்களாகிற வண்டுகளினாலே அலங்கரிக்கப்பட்டு குண்டலத்துடனேகூடின திருமுகமண்டலத்தை யுடையவராகியும் சங்குசக்கிரகதாகட்க சார்ங்கங்களினால் ரட்சிக்கிறதிலே பராபக்கையுடனே கூடினவராகியும் வக்ஷசிலே வாசம்பண்ணப்பட்ட லட்சுமியையுடையவராகியும் கம்பீரமான புன்சிரிப்புடனே கூடின காடாட்சத்தினுடையலேசத்தினாலே லோகத்தையெல்லாம் சந்தோஷிப்பிக்கிறவராகியும் வனமாலியாயும் பக்கத்திலேசுழலாகின்ற ஆலவட்டம் சாமரசிரேஷ்டம் இதுகளை யுடையவராகியும் சந்திரமண்டலம்போன்ற வெள்ளைக் குடையினாலே மேலே சோபாசயத்தையடைந்தவராகியும் கோடிசூரியப் பிரகாசம்போலப் பிரத்தியட்சமான அந்த லக்ஷ்மீவல்லபனைப்பார்த்துபிர்மா - இந்திரன்-ருத்திரன் இவர்களை முக்கியராகவுடையவரான சமஸ்தமானதேவகணங்களும் சிக்கிரமாகவெழுந்திருந்து சாஷ்டாங்கப் பிரணமம்பண்ணி ஸ்தோத்திரம்பண்ணினார்கள் யக்கியேசுரமாகியும் விசுவ சிருஷ்டிகளுக்கெல்லாம் பரமகுருவாகியும் சநந்தநாதிகளாலேசூழப்பட்ட வரதகியுமிருக்கிறசுவாமியை தக்ஷப்பிரஜாபதியானவன் சந்தோஷத்தினாலே கிருதாஞ்சலியாய் சரணமடைந்து ஸ்தோத்திரஞ்செய்கிறான் ஒருத்தராலேயும் பயமில்லாதவ ராகியும் மாயையைத்திரஸ்கரித்துப்போட்டு இருக்கிறவராகியுமிருக்கிர தேவரீருக்கு நமஸ்காரமென்று சொன்னபின்பு ரித்துவிக்குகள் ஸ்தோத்திரஞ்செய்கிறார்கள்,

ரித்துவிக்குகளுடையஸ்துதி

வாரீர் அனஞ்சனனே யாங்கள்நந்திசுரனுடையசாபத்தினாலே கர்மாசக்தபுத்திகளாய்உம்முடையசுவரூபத்தையறியமாட்டாமல்உம்முடைய பிரசாதத்துக்குக்காரணமாகியும் திரிகுணாத்மகமாயுமிருக்கிற யக்கியமுகத்தாலே உம்மையறிந்துகொண்டோமென்று சொன்னபின்பு சதசியாள் ஸ்தோத்திரஞ்செய்கிறார்கள்,

சதசியாள்ஸ்துதி.

ரக்ஷகாந்தரசூனியமாயுப்அதிக துக்கத்தை யுடைய

தாகியும் அனந்தனுகிற மகாசர்ப்பத்தினுலேகவியப்பட்டதாகியும் சுகதுக்கங்கள் சிதோஷணங்களாகிற பள்ளத்தையுடையதாயும் காலாளாகிற மிருகங்களுடையபயத்தையுடையதாயும் சோகமாகிற காட்டுத்தீயை யுடையதாயும் விஷயங்களாகிற கானல்சலத்தையுடையதாயு மிருக்கிற சம்சாரமார்க்கத்திலே யிருக்கப்பட்ட அகங்கார மமகாராஸ்பதங்களான மகாசுமையுடனேகூடின அக்கியானசந்து களுடைய கூட்டமான நாங்கள் காமத்தினுலேவிடப்பட்டவர்களாய் எப்போதும் உம்முடையபாத மூலத்தையடையப்போகிறதென்றுபிரார்த்தித்தார்கள்.

ருத்திரன் ஸ்துதி.

வாரீர் வரத்தைக் கொடுக்கப்பட்ட சுவாமியே அவர்ப்தசமஸ்தகாமமாகியும் நிஷ்காமாளான ரிஷிகளினுலே மிகவும் பூசிக்கத்தக்கதாகியுமிருக்கிற அபீஷ்டபிரதமான பாதாரவிந்தத்திலே பண்ணப்பட்ட புத்தியையுடையனுன உன்னை வித்தியாசனமான இந்தலோகம்ஆசாரப்ரஷ்டனென்று சொல்லுவதை நான்உம்முடையஅனுக்கிரகத்தினுலேயும் பெரியவாளுடைய அனுக்கிரகத்தினுலேயும் அதைவித்தியாசமாய் எண்ணுகிறதில்லையென்று சொன்னுர்.

பிருகுமகாரிஷி ஸ்துதி.

அதிபிரயாசத்தினுலே பிரவேசிக்கத்தக்கதானதேவரீருடையமாயையினுலே அபகரிக்கப்பட்ட ஆத்மசத்தையுடையவர்களாயும் பிர்மாதிகளான சரீரிகளெல்லாம்தம்சுஎன்னப்பட்ட மூலப்பிரகிருதியிலே சுபாவம்என்னப்பட்டநித்திரையை அடைந்தவளாய்க்கொண்டு சீவாத்மாவினிடத்திலே வியாபிக்கப்பட்டஉம்முடையசுவரூபத்தை இப்போதும் அறியவில்லை ஆசிரதாளுக் கெல்லாம் ஆத்மாவாகியும் பந்துவாகியுமிருக்கிறபகவான் பிரசன்னமாகக்கடவரென்று ஸ்தோத்திரஞ்செய்தான்.

பிர்மா ஸ்துதி.

பதார்த்தங்களுடைய பேதங்களைக்கிரகிக்கிறஇந்திரியங்களினுலேபார்க்கிறது உம்முடைய நிஜசுவரூபமன்று கியானத்துக்கும் கியானவிஷயமான அர்த்தத்துக்கும்காரணமான சத்வாதிகுணங்களை ஆசிரயமாகவுடைய பிரகிருதி பிராகிருதங்களைக்காட்டிலும விலட்சணமாகவிருக்கிறவர் நீரேயன்றி வேறில்லையென்று ஸ்தோத்திரஞ் செய்தார்.

இந்திரன் ஸ்துதி,

வாரீர் அச்சுதனே, இந்த விசுவங்களுக்கெல்லாம் உற்பத்திஸ்தானமாகியும். மனதுக்குங் கண்களுக்கும்ஆனந்த வர்த்தகமாகியுமிருக்கிற உம்முடையரூபம் சுரதுவேஷிகளைப்போக்கடிக்க உயரவெடுக்கப்பட்ட ஆயுதங்களையுடையதுகளாகியும் அஷ்டவிதங்களாகியுமிருக்கிற தண்டங்கள்போலொத்த புசங்களோடே கூடினதாகக்கொண்டு உற்பவித்திருக்கிறதென்று ஸ்தோத்திரஞ்செய்தான்.

ரித்துவிக்குப்பத்தினிகள் ஸ்துதி.

வாரீர் யக்கியமூர்த்தியே உம்மைஆராதிக்கிறநின்பொருட்டு பிர்மாவினுலே உண்டாக்கப்பட்ட இந்தயக்கியம் தட்சப்பிரஜாபதியினுடைய அபராதத்தினுல்பசுபதியினுலே த்வம்சிக்கப்பட்டது பசுவிம்சாலட்சணமான உச்சவத்தையுடைய இந்தயக்கியத்தைச்செந்தாமரைக்கண்களினுலேபாவனம்பண்ணுமென்றுதுதித்தார்கள்

ரிஷிகள்ஸ்துதி.

வாரீர் ஹெயப்பிரத்தியாகனுன பகவானே காமத்தை அனுஷ்டிக்கிற கர்மத்தினுடைய பலத்தோடே நீர் சம்பந்திக்கிறதில்லை சிலபேர் ஐசுவரியத்தின்பொருட்டு ஸ்ரீமகாலட்சுமியை உபாசிக்கிருர்கள் உம்மைஉபசத்திதானேபண்ணுகிற அந்தலட்சுமியை நீர்ஆதரிக்கவில்லை ஆனபடியினுலே உம்முடைய திவ்யசேஷ்டிதம்அகடிதகடனுரூபமாக இருக்கிறதென்று துதிசெய்தார்கள்,

சித்தர்கள் ஸ்துதி.

சம்சாரக்கிலேசமாகிற தாவாக்கினியிலே தகிக்கப்பட்டுவிஷயதிருஷ்ணையாகிறதாகத்திலே பீடிக்கப்பட்ட எங்களுடைய மனதாகிய கசமானது உம்முடையகதையாகிறஅமிர்தமயமானநதியிலே பிரவேசித்ததாய்க்கொண்டு பிர்மானந்தமக்கினனுன மூத்தனைப்போலே அழிந்துபோச்சுதென்று துதித்தார்கள்.

தட்சபத்தினி ஸ்துதி,

வாரீர்ஈசனே, உமக்குப் பிரணுமம்பண்ணுகிறேன்தலையில்லாமல் உடல்மாத்திரமுள்ள புருஷன் சோபியாதுபோல் தம்முடையயாகமானது உம்மையன்றி பிரகாசிக்கவில்லை ஆனபடியினுலே காந்தையான ஸ்ரீயுடனேகூட நம்மைரட்சியுமென்று பிரார்த்தித்தாள்,

லோகபாலாள் ஸ்துதி,

வாரீர் நிரதிசயமான ஐசுவரியத்துடனேகூடினவரோ நீர், தேகாபிமானிகளாலே காணப்படுவரன்றுகியான திருஷ்டியினுலேயும் காணத்தக்கவரன்று பஞ்சபூதங்களைக்காட்டிலும் விலட்சணமான நீர் பஞ்சபூதங்களுடனேயும் கூடினவராகக்கொண்டு பிரகாசிப்பதும் உம்முடையமாயைதானென்று துதித்தார்கள்,

யோகீஸ்வராள் ஸ்துதி,

வாரீர்பிரபுவே விசுவரூபியான உம்மிடத்திலே யிருக்கின்ற சீவாத்துமாக்களைச் சுதந்தரங்களாகப் பார்க்கத்தக்கவனைக்காட்டிலும் உமக்கு இஷ்டனுனவன் ஒருத்தனுமில்லை இதரதேவதாபசனம் பண்ணுமல் பக்தியினுலே உம்மை பசனைபண்ணினபேர்களுக்கு அனுக்கிரகத்தைப்பண்ணும் சகத்தினுடைய உற்பத்தி ஸ்திதி- சங்காரநிமித்தியமாக உம்முடையசங்கற்பத்தினுலே பேதி

க்கப்பட்ட சத்வாதிகுணங்களையுடைய ஆத்ம மாயையி னுலேபண்ணப்பட்ட பிர்மாதிபேதபுத்தியையுடையஉ மக்குப் பிரணுமமென்று துதிசெய்தார்கள்,

சப்தப்பிர்மமான வேதபுருஷன்ஸ்துதி,

அங்கீகரிக்கப்பட்ட சத்வகுணத்தையுடையவராகி யும்அதினுலேதானே தர்மாதிபுருஷார்த்தங்களைக்கொ டுக்கிறவராகியுமிருக்கிற உம்முடையநிலையை நானும்இ ந்திராதிதேவதைகளும் அறியமாட்டோம், அப்படிப்ப ட்டஉமக்குப் பிரணுமம்பண்ணுகிறேனென்று துதிசெ ய்தான்,

அக்கினிபுருஷன் ஸ்துதி,

பகவானேஉம்முடையதேஜசினுலே மிகவும்விரு த்தியடைகின்ற தேஜசையுடைய நான்பிரசித்தமானயக் கியாதிகர்மங்களிலே தேவதைகள்பொருட்டு எனதுவா யினுல்கொடுக்கப்பட்ட அவிசைவசிக்கிற அந்தயக்கியரட் சகராகியும், பஞ்சவிதயக்கியமூர்த்தியாகியும் பஞ்சவித ங்களான யசுர்மந்திரங்களினுலே ஆராதிக்கப்பட்டவரா கியுமிருக்கிற எக்கியபகவானுன உம்மைச் சேவிக்கிறே னென்று துதிசெய்தான்,

தேவதைகள் ஸ்துதி,

முன்னே கற்பாந்தத்திலே ஜகத்தைக் கர்ப்பத்திலே வைத்துக்கொண்டு ஆதிபுருஷனுன நீர் ஜலத்திலேநாக பரியங்கத்திலே சயனித்துக்கொண்டுசித்தாளாலேதியா னம்பண்ணப்பட்ட யோகமார்க்கத்தை யுடையவரான நீர் இப்போது கண்முன்னேசஞ்சரிக்கிறீர் தாசாளான எங்களையும் ரட்சிக்கவேண்டுமென்று துதிசெய்தார்கள்,

கந்தர்வஅப்சரசுக்கள்ஸ்துதி,

வாரீர்தேவனே, மரீசுமுதலான இந்தநவப்பிரஜா பதிகளும் பிர்மேந்திராதிகளும் ருத்திரனை முன்னிட்டு க்கொண்டிருக்கிற முப்பத்துமுக்கோடிதேவதைகளும் உம்முடைய அம்சாஅம்சங்களாகவிருக்கிறுர்கள் இந்த ஜகத்தை லீலாஸ்தானமாகவுடைய உமக்குப் பிரணுமத் தை நித்தியமாகப்பண்ணுகிறுேமென்று பிரார்த்தித்தா ர்கள்,

வித்தியாதரர்கள் ஸ்துதி,

புருஷார்த்தசாதனமான சரீரத்தையடைந்து புத் தியில்லாதவன் உம்முடைய மாயையினுலே நான் என் னுடையதுயென்கிற அபிமானத்தைப்பண்ணி தனக்கு அனுகூலியாத பாரியா புத்திராதிகளாலே நிராகரிக்கப் பட்டிருந்தாலும் நிசமாகாத சப்தாதிவிஷயங்களிலே ஆ சையையுடையவனுகியிருக்கிறுன் உம்முடையகதாமிர் தத்தைப் பானம்பண்ணுகிறவன் அக்கியானத்தைத் தூ ரத்திலேவிட்டவனுயிருக்கிறுனென்றுதுதிசெய்தார்கள்

பிராமணுள் ஸ்துதி,

யாகம்-அவிசு-அக்கினிஹோத்திரம்-மந்திரம்- சமி த்துகள்-தர்ப்பங்கள்-பாத்திரங்கள்-சதசியாள்-ரித்துவிக்கு கள்-தம்பதிகள்-தேவதைகள்-சோமலதை-ஆச்சியம்-பசு வும்நீரே முன்னேநீர் பாதாளத்தில் னின்றும் பூமியை வராகரூபியாய்கஜசிரேஷ்டமானது தாமரைக்கொடியை யெடுப்பதுபோல் கோரப் பல்லினுலே சப்தித்துக்கொ ண்டவாக்கே லீலையினுலேயெடுத்தீர். அப்படிப்பட்டஉ ம்முடைய சந்தரிசனத்தைக் கோருகின்ற எங்களுக்குப் பிரசன்னமாகக் கடவீரென்று பிரார்த்தித்தார்கள்.

மைத்திரேயர்வாக்கியம்,

வாரீர்விதுரரே, இந்தப்பிரகாரம் சமஸ்தமானபே ராலேயும் ஸ்தோத்திரஞ் செய்யப்பட்டுக்கொண்டிருக் கையில் ருத்திரனுலேநாசம்பண்ணப்பட்ட யக்கியத்தை ப்பிரம்மகுமாரனுனதட்சன்நடப்பித்தான்,சர்வாத்மாவா ய்க்கொண்டு சர்வபாவங்களையும்புசிக்கின்றபகவான் தம் முடையபாகமான திரிகபாலபுரோடசக்தியிலே பிரியப் பட்டவர்போல் தட்சனையழைத்து ஒருவார்த்தை சொ ன்னுர்,

ஜகத்துக்குப் பரமகாரணனுகியும், ஆத்மேசுவாரு கியும்,சர்வசாட்சியாகியும், சுயம்பிரகாசனுகியும்,நிருபா தியாகியும், ஜகத்தைச்சிருஷ்டிக்கிறவனுகியும், ரட்சிக்கி றவனுகியும், சங்கரிக்கிறவனுகியுமிருந்து அந்தந்தக்கரி யங்களுக்கு யோக்கியமானபேரைத்தரிக்கிறேன், அப்ப டிப்பட்ட பரப்பிரம்மமான என்னைச்சிரசுஅஸ்தமுதலா ன அங்கங்களையுடையபுருஷனைச் சரீரத்திற்கு வேறுபா டானவனென்று சொல்லககூடாதுபோல் என்னிடத்தி லேபக்தியையுடையவன் பிராணிக ளிடங்களிலேயிருக் கிறஎன்னைவேறென்கிற புத்தியைப்பண்ணுமலிருக்கவே ண்டும் ரஜோகுணரூபியாயும், சிருஷ்டிகர்த்தாவான பி ரம்மாவும், சத்துவகுணரூபியானரட்சணகர்த்தாவாகிய விஷ்ணுவும், தமோகுணரூபியான சம்ஹாரகர்த்தாவா னசிவனும், இம்மூன்றுபிரகாரமாக இருக்கிற என்னைப் பேதகமாக எண்ணுதவன் சுகத்தையடைவனென்றுபக வானுலே ஆக்கியாபிக்கப்பட்டு பிரஜாபதிகளுக்கெல்லா ம்பதியானதட்சன் ஹரியை திரிகபாலபுரோடாசமென் கிற கிருதுவினுலேபூசித்து ருத்திரன்முதலான தேவா ளையும்பூசித்து அவபிருத ஸ்தானமென்கிற யாகத்தினு டையமுடிவிலே சோபமாளானதேவதைகளையும், இத ரதேவதைகளையும்பூசித்துப் பிற்பாடு ரித்துவிக்குகளுட னேகூட கர்மத்தைமுடித்து அவபிருத ஸ்தானத்தைப் பண்ணி தன்னுடையதான பிரபாவத்தினுலே கர்மசித்தி யடைந்த தட்சப் பிரஜாபதிக்குத் தர்மத்திலேயே புத்தி யைக்கொடுத்து அந்தத்தேவதைகளும் சுவர்க்கத்தை ய டைந்தார்கள்,

இந்தப்பிரகாரம் தட்சகுமாரியான சதிசரீரத்தை விட்டுஹிமவானுடையபாரியையான மேனையென்கிறஸ்திரீயினிடத்திலே திரும்பவும்பிறந்தாளென்று கேட்டிருந்தோம், அந்தப்பார்வதியானவள் திரும்பவும்வேறே ஒருவனிடத்திலே மனதில்லாமல் பிரளயகாலத்தில்நித்திரையையடைந்த யோகமாயையானது ஸ்ரீமகாவிஷ்ணுவைஅடைந்தாற்போல அந்த ருத்திரனையே புருஷனாக அடைந்தாள்,

இந்தப்பிரகாரம் தட்சனுடைய யாகத்தை நாசம்பண்ணின ருத்திரனது சரித்திரம் பிரகஸ்பதியினுடைய சிஷியரான உத்தவரிடத்தில் னின்றும் நம்மாலேகேட்கப்பட்டது இந்தப்பரிசுத்தகரமாகியும், கீர்த்திகரமாகியும் ஆயுர்விருத்திகரமாகியும், பாபராசிகளைநாசம்பண்ணுகிற ஈசனுடையசரித்திரத்தை நித்தியமாகக்கேட்டு அந்தப்பிரகாரம்கீர்த்திக்கிறவன் பக்திக்கெல்லாம் உற்பத்திஸ்தானமானபக்தியுடையவனாய் சகல பாவங்களையும் போக்கிச் சுகமாயிருப்பன்,

---

## அ-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்;

இதுவரைக்கு மியலுமனுவின்றன்
கதுமெனுங்கன்னி யாவமிசத்தினிற்
சதியில்பிராப்தமான தட்சயக்யத்தின்
கதையின்சாரங்கழறினதாமரோ,

இதுவரைக்கும் மனுவினுடைய கன்னியா வம்மிசத்திலே பிராப்தமான தட்சயக்கியத்தினுடைய கதைசொல்லப்பட்டது.

இனிமேல் மனுவினுடையபுத்திரவம்மிசத்தில்பிராப்தமான துருவனுடையசரித்திரம் ஐந்துஅத்தியாயங்களினாலே சொல்லப்படுகின்றது,

குருவினுடைய சந்நிதானத்திலேசபத்தினி மாதாவினுடைய ரோஷவசனத்தினாலே பட்டணத்தில்நின்றும் வெளிப்புறப்பட்ட துருவனுடையதவசினாலே ஸ்ரீமந்நாராயணனைச் சந்தோஷிப்பித்ததைச் சொல்லுகின்றது.

மைத்திரேயர் வாக்கியம்.

வாரீர்விதுரரே, சனகசனந்தனாதிரிஷிகளும்- நாரதரும்-ருபுவும்- அருசனும்=அருணியும்=எதியும்=பிரம்மபுத்திராளான இவர்களெல்லாம்ஊர்த்தரேதஸ்சுகளாய் நயிஷ்டிகபிரம்சரியத்திலேயிருந்துகொண்டு கிரகஸ்தாசிரமத்திலே வாசம்பண்ணவில்லை அதர்மத்தினுடையபாரியையான மிருஷையானவள் டம்பனென்றுஒருபிள்ளையையும், மாயையென்றுஒருபெண்ணையும், இரண்டுபேரையும்பெற்றாள், அந்தஇரண்டுபேரையும் அபுத்திரனான நிருதியானவன் வாங்கிக்கொண்டான் அந்தடம்பமாயைகளுக்குலோபம் நிகிர்த்தியும்உண்டாச்சுது அவர்களிடங்களில்நின்றும் குரோதமும் ஹிச்சையும்உண்டாச்சுது, அதுகளில்நின்றும் துர்க்கதியும்கலியும்உண்டாச்சுது, அந்தத்துர்க்கத்தியினிடத்திலேகலியானவன்பயத்தையும் மிருத்தியையும் உண்டாக்கினான் அதுகளில் நின்றும்யாதனையென்றும் நிரையமென்றும்ஒருஸ்திரீபுருஷ மிதுனமுண்டாச்சுது இவர்களெல்லாம்அதர்மவிருட்சத்தினுடைய சம்சாரஹேதுக்களானசாகைகள்இந்தசாகைகளைச் சிரேயசைக்கோருகின்ற புருஷனானவன் ஆசரியாம லிருக்கக்கடவன் பிரதிசற்கம் என்னப்பட்ட பிரளயஞ் சொல்லப்பட்டது புண்ணியகரமான இந்தப் பிரதிசற்கத்தைக்கேட்டு புருஷன் தன்னுடைய சம்சார துக்கத்தை விட்டுவிடுகிறான்,

வாரீர் குருவம்சசிரேஷ்டரே, இனிமேல் புண்ணிய கீர்த்தியாகியும் ஹரியினுடையஅம்சமானபிரம்மாவினுடைய தேகாந்திரத்தில்நின்றும் பிறப்பையுடையவனான சுவாயம்புமனுவினுடைய புத்திரவமிசத்தைச்சொல்லுகிறேன், சதரூபையென்னப்பட்ட ஸ்திரீக்குப்பதியான மனுவினுடைய பிள்ளைகளான பிரியவிருதன் உத்தானபாதன் இவர்க ளிரண்டுபேரும் வாசுதேவமூர்த்தியினுடைய அம்சமாகையினாலே ஜகத்தைரட்சித்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்குள்ளே உத்தானபாதனுக்குச்சனீயென்றும்-சுருதியென்றும் இரண்டுஸ்திரீகள்அவர்களுக்குள்ளே சுருசியென்கிறவள் பதிக்கு அத்தியந்த இஷ்டையாயும் சனீதியென்பவள்பதிக்கு இஷ்டமில்லாதவளாயுமிருந்தாள், அந்தச்சுனீதையினுடைய பிள்ளையானது துருவன் தனது சக்களத்தித் தாயாகிய சுருசியின்பிள்ளையான உத்தமனைச் சீராட்டிக்கொண் டிருக்கிறதகப்பனுடைய மடியிலேறவேண்டுமென்றுஉத்தானபாதன்அருகிற்சென்றதுருவனைப்பார்த்து ராஜாசந்தோஷப்படவில்லை, அந்தச்சமயத்தில் சுருசியானவள் சக்களத்திப்பிள்ளையான துருவனைப்பார்த்து ராஜாகேட்டுக்கொண்டிருக்கப் பொறாமையுடனே கர்வத்தினாலே ஒருவார்த்தை சொல்லுகிறாள்.

வாராய்குழந்தாய், நீராஜகுமாரனாயிருந்தாலும்என்கர்ப்பத்திலேபிறவாததால் உனக்குராஜாசனங் கிடைக்கமாட்டாது ராஜாவுடைய சிங்காதனத்தை இச்சிக்கிறவனேயானால் தபதினாலேபரமபுருஷனை ஆராதித்துஅவருடைய அனுக்கிரகத்தினாலே என்னுடையகர்ப்பத்திலே பிறப்பை சம்பாதிக்கக்கடவாயென்று சபத்தினிமாதாவுடைய துர்வார்த்தைகளினாலே அடிக்கப்பட்டவனாய்த்தண்டத்தினாலே அடிக்கப்பட்டு சர்ப்பம்போல்ரோஷத்தினாலே பெருமூச்சுவிட்டுக்கொண்டு அழுகையுடன் தாயாருடையசந்நிதானத்திலேபோய் துடிக்கின்றஉதட்டையுடைய அந்தக் குழந்தையை சுனீதியானவள் மடியிலேயெடுத்துவைத்துக்கொண்டு சுபத்தினியான சுரு

சிசொன்னவார்த்தையை அந்தப்புறஜனமுகமாய்க்கேட்டுசோகமாகிற காட்டுத்தியிலே வாடின கொடிபோலே தைரியத்தைவிட்டு தாமரைப் புஷ்பம்போலொத்த நேத்திரங்களினுலே கண்ணீரைவிட்டு தீர்க்கமானபெருமூச்சுடன் சோகத்தினுடைய கரையைக்காணமாட்டாமல் தன்னுடையகுழந்தையைப்பார்த்து ஒருவார்த்தைசொன்னுள்,

வாராய் குழந்தாய், பராளிடங்களிலே அபராதத்தையெண்ணுதே பரனைத்துதிக்கப்படுகிறவன்தானே அந்தத்துக்கத்தையனுபவிக்கிறுன் பாக்கியஈனையான என் உதரத்திலேதரிக்கப்பட்டு என்னுடைய ஸ்தன்னியத்தினுலேவிருத்தியும்அடைந்தாயென்றுசுருசிசொன்னவார்த்தை யதார்த்தமே ராஜாவானவன் என்னைப் பாரியையென்றும் தான்தாசியென்றும் அங்கீகாரம்பண்ணுகைக்குச்சங்கோசப்படுகிறுன் ஆனபடியினுலே நீ துவேஷத்தைவிட்டவனுய்க்கொண்டு சுருசியின்குமாரனுன உத்தமனைப்போல் ராஜாசனத்தை இச்சிக்கிறவனுனுல் அதோட்சஜனுன சுவாமியினுடையபாதாரவிந்தத்தை ஆராதிக்கக்கடவாயென்று அவள்சொன்னவண்ணம் செய்யத்தக்கதுயதார்த்தமே பிரம்மாவானவர் சத்துவாதிகுணங்களையுடையவரான பகவானுடைய பாதபத்மத்தைப்பூசித்து யோகிகளாலே சேவிக்கத்தக்கதான பராமேஷ்டியபதத்தையடைந்தார். உனக்குப்பாட்டனுகியும் பூச்சியனுகியு மிருக்கிற மனுச்சக்ரவர்த்தியானவன் அந்த பகவானை சாவாந்திரியாமியென்கிற புத்தியினுல் அதிகமான தட்சணையையுடைய யக்கியங்களினுலே பூஜித்து அன்னியர்களாலே அடையக்கூடாமலிருக்கிற அகண்டமண்டலாதிபத்தியத்தையும் அந்தத்திலேமோட்சசுகத்தையும் அடைந்தான்.

வாராய்குழந்தாய், பக்தாளிடங்களிலே வாற்சல்லியத்தையுடையவராகியும் மோட்சத்தைஇச்சித்தபேர்களாலேதேடத்தக்கதான பாதாரவிந்தத்தையுடையவராகியும் பிர்மாதிகளாலேதேடப்பட்டும் அஸ்தத்திலேபத்மத்தை தரித்துக்கொண்டு மிருக்கிற ஸ்ரீமகா லட்சுமியினுலேதேடப்படுகிற அவனைவிட வேறொருவன் உன்துக்கத்தைப்போக்கடிக்கிறவனைக் காணேனென்று சொல்லுகிற தாயாருடையவார்த்தையைக்கேட்டு தைரியத்தினுலே மனதை நிக்கிரகித்து துருவனுனவன் பிதாவினுடைய பட்டணத்தில்நின்றும் வெளிப்புறப்பட்டான் அந்தவிருத்தாந்தத்தை நாரதர்கேட்டு அவனிடத்துக்குவந்து அவனுடையசெயலைஅறிந்து பாவத்தைப் போக்கடிக்கின்றகையினுலேசிரசிலேஸ்பரிசித்து ஆச்சரியத்துடனே ஒருவார்த்தைசொன்னுர்,

இவன் சிறுபிள்ளை யாயிருந்தாலும் தன்மாற்றுன் தாயாருடைய மானக் குறைவான துஷ்டவார்த்தைகளைக்கேட்டுசகியாத க்ஷத்திரியாளுடைய ஆச்சரியகரமாயிருக்கிறபிரபாவத்தை என்ன சொல்லப்போகிறேனென்றுதமக்குளளேஆச்சரியத்தையடைந்து அவனைநோக்கி வாராய்குழந்தாய் சர்வசம்பத்துடனே கூடினதகப்பனுருடையகிரகத்தைவிட்டு நீ ஒருவனுய்எங்கேபோகிறுய் உனதுசுவஜனத்தில்நின்றும் உண்டானஅவமானத்தினுலே தபித்துக்கொண்டிருக்கிறவனுகத் தோணுகிறதென்றுசொன்ன நாரதருடையவார்த்தையைக்கேட்டு துருவன்சொல்லுகிறுன்,

பகவத்தியானத்தைப்பார்க்கிலும் இந்தஐசுவரியம் எவ்வளவென்றுசொல்லுகிற அவனுடையகருத்தை அறிந்து மாற்றுள்தாயாரான சுருசியினுடையமர்மபேதியான வார்த்தைகளால் நொந்திருக்கிற மனதையுடைய இவன்சமாதானத்திற் குட்பட மாட்டானென்று தெரிந்துகொண்டு நாரதர் அவனைநோக்கி ஒருவார்த்தைசொன்னுர்,

வாராய்குழந்தாய், விளையாட்டிலே ஆசத்தியுடையவனுகியும் சிறுபிள்ளையாகியுமிருக்கிற உனக்கு அவமானமும் சன்மானமும் இப்போதுயோக்கியமாகப் பார்க்கவேண்டியதில்லை மானம்அவமானமென்கிற விவேகமிருந்தாலும் புருஷனுக்கு மோகத்தைவிட்டால் விசனத்துக்குவேறேயேதுக்களில்லை வித்துவானுனவன் ஈஸ்வரனுடைய அனுகூலத்தையன்றி நம்முடைய வியாபாரங்கள்பலயேதுக்கள் ஆகமாட்டாதென் றறிந்து பகவத்சங்கற்பத்தினுல் உண்டானமட்டுக்கும் சந்தோஷத்தையடைவன் நீ தாயாராலேஉபதேசிக்கப்பட்டயோகத்தினுலே பகவானுடையபிரகாசத்தையடையவேணுமென்று இச்சிக்கின்றுய் அந்தபகவானை ஆராதிக்கிறதும்காப்பிரயாசையென்று என்னுடைய நிச்சயம்மனனசீலாளான ரிஷிகள் நானுப்பிரகாரங்களாகக் காமலோகங்களினுலேயும் சமாதியினுலேயும்தேடிக்கண்டுபிடிக்கவில்லை ஆனபடியினுலேஇந்தநிஷ்பலமான கோறிக்கையையொழிக்கத்தக்கது புருஷார்த்தங்களுக்குயோக்கியமானவயசுவந்தபோது எத்தனம்பண்ணப்போகிறுய்குணசிரேஷ்டனுன புருஷனைக்கண்டு சந்தோஷிக்கவும் குணமில்லாத புருஷனைக்கண்டு தயைபண்ணவும் சமானமான்புருஷனிடத்திலே சினேகம்பண்ணவும்வேண்டும்அவர்களிடங்களில் அசூயையும் அவமானத்தையும் விரோதத்தையும் பண்ணக்கூடாதென்றுசொன்ன நாரத மகாமுனியின்வார்த்தையைக்கேட்டு துருவன்சொல்லுகிறுன்,

வாரீர் பகவானே, சுகதுக்கங்களிலே சமமானமனதையுடைத்தான மகாத்துமாக்களுக்கு இந்தச்சாந்தியானதுசொல்லத்தக்கது க்ஷாத்திரசுபாவத்தை யடைந்து வினயமில்லாத என்னுடையமனதிலே சுருதியினுடையதுர்வார்த்தைகளாகிற பாணங்களினுல் பிளக்கப்பட்டி

ருக்கிறபடியினாலே இந்தச்சாந்தியானது மனதில்தரிக்
கவில்லை எனது பிதுர்பிதாமகாதிகளினாலேயும் அன்னி
யாளாலேயும் அடையப்படாமலிருக்கிற மூன்றுலோக
த்தைக்காட்டிலும் உத்கிருஷ்டமாயிருக்கிற ஸ்தானத்
தையடையவேண்டுமென்று இச்சையையுடையஎனக்கு
நல்வழியைச்சொல்லுமென்று துருவனாலேசொல்லப்ப
ட்ட வசனத்தைக்கேட்டு நாரதமகாமுனியானவர் சந்
தோஷப்பட்டு பாலனாயிருக்கிற துருவனைப்பார்த்து த
யையுடன் ஒருவார்த்தைசொல்லுகிறார்.

வாராய்குழந்தாய் உன்னுடைய அபீஷ்டத்துக்கு
தாயாராலே சொல்லப்பட்டமார்க்கம் ஷாட்குண்யபரிபூ
ரணரான வாசுதேவனே காரணராகையினாலே அவரிட
த்தில் அசஞ்சலமான மனதினாலேபஜனை பண்ணவேண்
டும் தர்மார்த்தகாம மோக்ஷங்களென்கிறபுருஷார்த்தங்
களுக்கு ஸ்ரீஹரியினுடைய பாதபஜனமே முக்கியம் உ
னக்குக்ஷேமமுண்டாகப்போகிறதுயமுனையினுடையதீ
ரத்திலிருக்கின்ற மதுவனத்திலே அந்த ஸ்ரீஹரியானவ
ர் முக்கியமாய்வாசஞ்செய்வர் அந்தவனத்தைக்குறித்து
ப்போய் யமுனையின் மங்களகரமானதீர்த்தத்திலே திரி
காலமும் ஸ்நானம்பண்ணி உனக்கு உசிதங்களான தே
வதாநமஸ்காராதி நித்தியகர்மங்களைச்செய்து தர்ப்பை
களால்பண்ணப்பட்ட ஆசனத்திலே யிருந்துகொண்டு
ரேசகபூரக கும்பகமென்கிற மூன்றுபிரகாரமான பிர
ாணாயாமத்தினாலே பிராணவாயு இந்திரியங்கள்மனது இ
துகளுடைய சஞ்சலத்தை மெள்ளத் தள்ளிப்போட்டு
தைரியத்துடனே ஆதிகுருவான ஸ்ரீமந் நாராயணனைத்
தியானம்பண்ணி பக்தாளிடங்களிலே சர்வகாலமும்அ
னுக்கிரகத்தைப்பண்ணுகிறவராகியும்வரங்களைக்கொடுக்
கின்றபேர்களுக்குள்ளே சிரேஷ்டராகியு மிருக்கின்ற ப
கவானை ஏகாக்கிரமானமனதினாலே தியானம்பண்ணுகி
றவன் அந்த பகவத்தியானத்தில்நின்றும் திரும்புகிறதி
ல்லை சிரேஷ்டமாகியும் ரகசியமாகியுமிருக்கிற அந்ததி
யானமந்திரத்தை ஏழுநாளைக்குஜபிக்கிறபுருஷன் தே
வதைகளையெல்லாம் காண்பான் அப்படிப்பட்டதுவாத
சாக்ஷரிக்கொப்பான பூஜையைச் சொல்லுகிறேன்கேள்
பரிசுத்தங்களான தீர்த்தங்களினாலேயும் புஷ்பமாலைக
ளினாலேயும் கந்தமூலபலங்களினாலேயும் சிலாக்கியமா
ன அறுகினாலேயும் தளிர்களினாலேயும் பிரியமானது
ளசியினாலேயும் பூச்சிய பாத்திராதிகளினாலேயும்சுவர்
ணம் வெள்ளிமுதலான பகவத்பிரதமை அல்லதுபிறிதி
விஜலாதிகளிலேயாகிலும் பூஜித்து விஷயங்களிலேநிர
வர்த்தியாமலிருக்கிற மனதையுடையவனாய் தியானசீல
னாய் சாந்தனாய் மௌனத்தோடேகூடினவனாய் மிதமாக
கந்த மூலபலங்களைப் புசித்து பெரியோர்களால்விதிக்
கப்பட்டபடி பூஜைகளையும் மந்திரஇருதயமானதுவாத
சஅக்ஷரியினாலே மந்திரமூர்த்தியானபகவான்பொரு
ட்டு பண்ணக்கடவாய் மனோவாக்கு காயங்களால் பக்தி
யுடனேகூடி பூஜிக்கிறபேர்களுக்கு பக்தியைவிருத்திப
ண்ணுகிறதாய்கொண்டு பிராணிகளுக்குதர்மார்த்தகா
மமோக்ஷங்களிலே இஷ்டமானதைக்கொடுக்கிறார் இந்
திரியசுகங்களிலே விரக்தனானவன் அதிகமான பக்தியி
னாலே அந்தப்பகவானை ஆத்மாவினுடைய மோக்ஷத்தி
ன்பொருட்டு பஜனைபண்ணவேண்டுமென்று நாரதரா
லேசொல்லப்பட்டவார்த்தையை ராஜகுமாரனான துரு
வன்கேட்டு நாரதனைப் பிரதக்ஷணம்பண்ணிசேவித்து
ஹரியினுடைய சரணங்களினாலே அலங்கரிக்கப்பட்டி
ருக்கிறமனோகரமான மதுவனத்தைக்குறித்துப்போனா
ன்பிற்பாடு நாரதர் உத்தானபாதராஜாவினுடைய அந்
தப்புரத்திலேபிரவேசித்து அந்தராஜாவினாலேபூஜிக்க
ப்பட்டவராய் சுகமாக ஆசனத்திலே யிருந்துகொண்டு
ஒருவார்த்தைசொன்னார்,

வாராய் ராஜாவே வாட்டத்துடன்கூடின முகத்
தோடே தீர்க்கமாக என்னயோசனை பண்ணுகிறாய்உன்
னுடைய தர்மார்த்தகாமங்களுக்கு இழிவோவென்று
பிரச்சனைபண்ணுகின்ற நாரதமுனியைப்பார்த்துராஜா
சொல்லுகிறார் வாரீர் பிர்மநிஷ்டரே என்னுடையகுழ
ந்தை ஐந்துவயதிலே மகாபுத்திமானாய் திருஷ்டிப்பிரி
யனாயிருக்கிறவன் தன்தாயாருடனே தயையில்லாத ஸ்
திரீசனத்தினாலே துரத்திவிடப்பட்டான் இளப்பையடைந்து பசியுடனேவாடுகின்ற முகாரவிந்தத்தையுடை
யவனாய் அநாதனாய் வனத்திலே படுத்துக்கொண்டிருக்
கின்ற யெனதுக்குழந்தையை மிருகங்கள் பட்சியாமலிரு
க்குமா ஸ்திரீமோகத்திலே துர்ச்சனருக்கெல்லாஞ் சி
ரேஷ்டனாயிருக்கிற நான் பிரீதியினாலே மடியிலேயேற
வந்தபிள்ளையைப்பார்த்துச் சந்தோஷியாமற்போனஎன்
னுடைய துஷ்டபாவத்தைப்பாருமென்று சொல்லுகிற
ராஜாவைப்பார்த்து நாரதர்சொல்லுகிறார்.

வாரும்பிள்ளாய்ராஜாவே ஜகத்தையெல்லாம் வி
யாபிக்கத்தக்கின கீர்த்திசம்பாதிக்கப்போகிறபிள்ளையி
னுடைய பிரபாவத்தையறியாமல் தெய்வத்தினாலேரட்
சிக்கப்படத்தக்கின அந்தப்பிள்ளையைக்குறித்து நீ விய
சனப்படவேண்டாம் லோகபாலாளாலேயுஞ்செய்யக்கூ
டாத தபசுமுதலான கர்மத்தைப்பண்ணி உன்னுடைய
கீர்த்தியை விஸ்தரிப்பித்துக்கொண்டு சீக்கிரமாக வரப்
போகிறானென்று தேவரிஷியான நாரதராலே சொல்ல
ப்பட்டவார்த்தையை விசுவாசத்துடனே கேட்ட ராஜா
வானவன் ராச்சியலட்சுமியிலே அநாதரவுபண்ணிப் பி
ள்ளையைத்தானே சிந்தித்துக்கொண்டிருந்தான் துருவ
னானவன் அந்தமதுவனத்திலேபோய் புண்ணியதீர்த்த
த்திலேஸ்நானம்பண்ணி சுசியாய்அந்தராத்திரிஉபவாச

மாகவிருந்து புத்திரசமாதானத்துடனே கூடினவனாய் நாரதருடைய ஆக்கியாப்பிரகாரம் பரமபுஷனை ஆராதித்துச் சரீரமிருக்கிறதற்காக மூன்றுநாளைக்கொருதரம் விளாமபழம் இலந்தைப்பழம் இதுகளைப் பட்சித்துக்கொண்டு ஹரியைப் பூஜித்தவனாய் ஒருமாசத்தைப் போக்கி மறுமாசம் ஆறுநாளைக்கொருதரம் பழுத்துஉதிர்ந்தஇலை திரணங்களைப்பட்சித்தும் மூன்றுமாசம் ஒன்பதுநாளைக்கொருதரம் தீர்த்தத்தைப் பட்சிததும் புண்ணியகீர்த்தியானசுவாமியைச்சமாதியோகத்தினாலே பூசித்தும் நான்காமாசத்திலே பனிரண்டுநாளைக்கொருதரம் வாயுவைப்பட்சித்துக்கொண்டு சுவாசநிரோதனம் பண்ணவராய் சுவாமியைத்தானே தியானம்பண்ணிக்கொண்டும் ஐந்தாமாதத்திலே சுவாச நிரோதமுடையவனாய்ப் பிர்மத்தைத் தியானம்பண்ணிக்கொண்டு ஒருபாதத்தினாலேசலியாமல் ஸ்தாணுவானதுபோலேயிருந்துகொண்டும் பூதேந்திரியங்களுக்கு இருப்பிடமான மனதை சப்த திவிஷங்களில்நின்றும் ஆக்ருஷித்துப் பகவானுடையரூபத்தைத் தியானம்பண்ணிக்கொண்டும் மகதகங்காரங்கள்முதலானதத்துவங்களுக்கெல்லாம் இருப்பிடமாகியும் பிரகிருதிஜீவாளுக்கு ஈசுவரனாகியுமிருக்கிற பிரமத்தைத்தரிக்கின்ற துருவனுக்குமூன்றுலோகங்களும் நடுங்கினதுகள் துருவனுடையபாதாங்குட்டத்தினாலே ஊணப்பட்டபூமியானது கஜேந்திரன்ஏறியிருக்கின்ற ஓடமானது அடிக்கடி இடம் வலமாக வணங்குவதுபோல் பூமியானதுபாதிமட்டும்வணங்கிற்று அந்தத்துருவனானவன் தன்னுடைய இந்திரியத் துவாரங்களையும் பிராணவாயுவையும் விஷயங்களிலே ஓடாமல்நிறுத்தி ஏகாந்தபக்தியினாலே விசுவரூபியானபகவானைத்தியானம்பண்ணிக்கொண்டிருக்கையில்லோகபாலாளுடனே கூடினலோகங்களெல்லாம் மூச்சடங்கி உபத்திரவத்துடனே பகவானைச் சரணமாக அடைந்து விக்கியாபனம்பண்ணுகிறார்கள்.

வாரீர் பகவானே சராசராத்மகமான சர்வப்பிராணிசரீரத்துக்கும் இப்படிப்பட்ட பிராணசங்கட தசையை ஒருக்காலும் அறியோம் ஆனபடியினாலேஎங்களை இந்தத் துக்கத்தில்நின்றும் ரட்சிக்க வேண்டுமென்று சொல்லுகின்ற தேவதைகளைப்பார்த்துப் பகவான்சொல்லுகிறார்.

வாருங்கள் தேவதைகளே இந்தப்பாலனை துருவன் அரிதானதபசுசெய்கிறதினாலே உங்களுக்குப்பிராணவாயுவினுடைய தடைகவுஉண்டாச்சுது இவன்என்னிடத்திலே நிறுத்தப்பட்டமனதையுடையவனாய் இருக்கிறான் அவனை நிவர்த்திப்பிக்கிறேன்நீங்கள்பயப்படாமல் சொஸ்தஸ்தானத்துக்குப் போங்களென்று அளிருச்செய்தார்.

## கூ-வது, அத்தியாயம்.

கலிவிருத்தம்,

துரியமாமன துள்ள துருவனும்
ஹரியைஸ்தோத்திரஞ் செய்தேயவரிடத்
தரியநல்வர மெல்லாமடைந்துதன்
னுரியராச்சிய மாண்டதுரைசெய்வாம்

துருவனானவன் ஹரியைஸ்தோத்திரம்பண்ணியவரிடத்தில்நின்றும் அபீஷ்டமானவரங்களெல்லாம் அடைந்து பிரீதியினாலே பிதாவினாலேகொடுக்கப்பட்டராச்சியத்தைப் பரிபாலனம்பண்ணுனென்று சொல்லப்படுகின்றது.

மைத்திரேயர்வாக்கியம்.

வாரீர் விதுரரே பகவத்வாக்கியத்தினாலேபயத்தைவிட்ட தேவதைகள் பகவானை நமஸ்கரித்துச் சுவர்க்கத்தையடைந்தார்கள் பிற்பாடு ஆயிரஞ்சிரசுடைய பகவானும் கருடாரூடராய்ப் பக்தனானதுருவனைப்பார்க்கவேண்டுமென்கிற இச்சையினாலே மதுவனத்தைக்குறித்துப்போனார் அந்தத்துருவன் யோகபரிபக்குவத்தினாலே திரமானபுத்தியினால் தன்னுடைய இருதயபுண்டரீகத்திலே கருடாரூடராய் மின்னலைப்போல்பிரகாசித்து மறைந்தபகவானைச் சீக்கிரமாக வெளியிலே அந்தப் பிரகாரமேகண்டுபயந்தவனாய்ச்சரீரத்தைத் தண்டத்தைப் போலேவணங்கிப் பூமியிலேநமஸ்கரித்து அந்த பகவானைக் கண்களினாலேபார்த்துபானம்பண்ணுகிறவன்போலவும் கையினாலேஆலிங்கனம்பண்ணிக்கொள்ளுகிறவன்போலவுமிருந்தான் அதைக்கண்டு பகவான் தன்னுடையகுணங்களைத் தோத்திரம் பண்ணவேண்டுமென்றுஇச்சித்துத்தோத்திரம்பண்ணத்தெரியாமல் கையைக்கூப்பிக்கொண்டிருக்கிற துருவனைப்பார்த்து வேதமயமான சங்கத்தினாலே கிருபையோடே அவன்கபாலத்தில்பரிசித்தார் அந்தக்ஷணத்திலேதானே வேதமயமான சரஸ்வதியைபடைந்து சிவேச்சுவர சுபரூபத்தின்நிச்சயத்தை யறிந்தவனாகியும் பக்தியினாலேயுண்டான பிரீதியையுடையவனாகியும் சாசுவதஸ்தானத்தையடையப்போகிறவனாகியுமிருக்கிற துருவனானவன் பகவானைத்தோத்திரம்பண்ணினான்,

சமஸ்தசக்தியையுடையவராயும் பிரகாசியாமலிருந்த என்னுடையவாக்கிந்திரியமுதலானத்தைப்பிரகாசிப்பிக்கச்செய்தவராகியுமிருக்கிற உமக்குப்பிரணாமம்பண்ணுகிறேன் வாரீர்பகவானே சத்வாதி குணங்களையுடையதாகியும் மாயையென்றுஞ்சொல்லப்படுகின்ற உம்முடையசக்தியினாலே மகதகங்காரங்கள்முதலான சர்வபிரபஞ்சத்தையுஞ்சிருஷ்டித்து அதிலே அனுப்பிரவேசித்து அந்தரியாமியாயிருந்துகொண்டு அந்தமாயாவிகார

ங்களான இந்திரியங்களினாலே தாருக்களிலே ஒரு அக்கினிதானே நானாவிதமாகப்பிரகாசிக்கிறாற்போல் நானாரூபமாகப்பிரகாசிக்கிற உம்மாலேகொடுக்கப்பட்ட கியானத்தினாலே சரணமாகஅடைந்த பிர்மாவானவன் தூங்கியெழுந்தபுருஷனைப்போலே இந்தப்பிரபஞ்சத்தைப் பார்த்தார் முக்தாளுக்கெல்லாம் ரட்சகமானஉம்முடையபாதமூலமானது செய்நன்றிமறவாத புருஷனாலேஎப்படிநான்மறக்கப்படும் சமுசாரத்துக்கு ஒழிவையும் மோட்சத்தையும்கொடுக்கின்ற உம்மை அர்த்தகாமநிமித்தமாகஉபாசிக்கிறவர்கள் நிச்சயமாக உம்முடைய மாயையினாலே வஞ்சிக்கப்பட்ட புத்தியையுடையவர்கள்சவத்தோடே சமானமான தேகத்தினாலே அனுபவிக்கத்தக்கதான சுகத்தைக்கோறி கற்பகவிருட்சமான உம்மை அர்ச்சிக்கின்றார்கள் விஷயசம்பந்தத்திலே உண்டாகத்தக்கசுகம் நரகத்திலேயும்உண்டாகும் அது கோரத்தக்கதன்று அவர்கள் அப்படிப்பட்ட தேகபோக்கியமான சொல்பசுகத்தைக்கோருகிறதினாலேஉம்முடையமாயையினாலே வஞ்சிக்கப்பட்டவர்களே பிராணிகளுக்கு உம்முடையபாதாரவிந்தத் தியானத்தினாலும் உம்முடைய பக்தாளுடையசத்கதையைக்கேட்கிறதினாலும், உண்டாகிறசுகம் தன்னுடைய ஆனந்தரூபமான பிர்மானுபவத்திலேஉண்டாகமாட்டாது உம்மிடத்திலே சார்வதாபக்தியையுடையவர்களாகியும், நிர்மலமானஇருதயத்தையுடையவர்களாகியும் மகான்களாகியு மிருக்கிறபேர்களுடையசகவாசமானது எனக்குஇடைவிடாம லிருக்கும்படிஅனுக்கிரகிக்கவேண்டும் அவர்களுடைய சகவாசத்தினாலும் உம்முடையகுணகதையாகிற அமிர்தபானத்தினாலும் பயங்கரமாகியும் அதிகமானதுக்கத்தையுடையதாகியுமிருக்கிற சமுசாரசமுத்திரத்தினுடையகரையைச்சீக்கிரமாகஏறுவேன் ஸ்தாவரசங்கம ரூபங்களாயிருக்கிறபிரபஞ்சத்துடன் கூடினதாகியும் தூலமாகியு மிருக்கின்ற இந்தவிராட்டுரூபத்தை நான்அறிவேன் இதைப் பார்க்கிலும் வேறுபட்டதாகியும் மனவாக்குகளினாலே எட்டப்படாமலுமிருக்கிற உம்முடையநிசசுவரூபத்தை நான்அறியேன் பிரபஞ்சத்திலும் கர்மத்திலும் அகப்படாதவராகியும் அளவில்லாதகியானமுடையவராகியும், பரிபூரணராகியும் விகாரமில்லாதவராகியும் சர்வத்துக்குங் காரணமாகியும் ஷட்குண பரிபூரணராகியும் திரிகுணத்தில் அகப்படாதவராகியும் சங்கற்பக் கியானத்தினாலே அகப்பட்டதாயும் நிபந்தனையுடைத்தானமரியாதையையுடையதாகியுமிருக்கிற சர்வத்தையும் பூரணமான கியானத்தினாலே பார்த்துக்கொண்டு பிரபஞ்ச விலட்சணமாக யக்கியரூபியாகியும் விசுவகாரணராகியும் ஆத்தியந்தசூனியராகியும் ஆனந்தசுவரூபராகியும்நிர்விகாரராகியுமிருக்கிற உம்மைச்சரணமாக அடைகிறேன் இச்சிக்கப்படுகின்ற பசுபுத்திராதிபலன்களைச் சிந்திக்கச் செய்கின்ற உம்முடையபாதபத்மத்தைஅர்த்தகாமாதிஅபேட்சையினாலே பசனைபண்ணுகின்ற தீனாளான எங்களையும் புருஷார்த்தசுவரூபியானநீர் கன்றைவிட்டுத்திரும்புகின்ற பசுவானதுபோலே ரட்சிக்கிறீரென்றுபுத்திமானானதுருவனாலே தோத்திரம்பண்ணப்பட்டவராய் பக்தாளிடத்திலே பிரீதியையுடையவரானபகவான்அந்ததுருவனைப்பார்த்துசந்தோஷித்துஒருவார்த்தைசொல்லுனார்

வாராய்ராஜகுமாரனே, உன்னுடையமனதிலேயிருக்கிறஇஷ்டத்தைநான்அறிவேன் போசனமான விரதத்தையுடையவனான நீ அன்னியவர்களாலே அடையப்படாமலும் தேஜோமயமாயும் சூரியாதி நவக்கிரகங்கள் அசுவனியாதிநட்சத்திரக்கூட்டமும் செக்கிலே பிணைக்கப்பட்ட சுழல்மர மானதுபோல் சுழலத்தக்க தாகியும் அவாந்தரகல்பவாசிகளுக்குப் பிற்பாடு இருக்கிறதாகியும்நட்சத்திரரூபாளானயமன், அக்கினி, காசியபர், சப்தரிஷிகள்முதலானபேர்களும் பிரதட்சணமாகச்சஞ்சரித்துக்கொண்டிருக்கிறபதத்தைஉனக்குக்கொடுக்கிறேன் உன்னுடையதகப்பன் உன்வசத்திலேராச்சியத்தைவைத்துப்போட்டு தபசுக்குவனத்தையடைந்த பிற்பாடு தர்மத்தை ஆசிரயித்தவனாய்ச் சித்திக்கப்பட்ட இந்திரிய போகத்தையுடையவனாய் இருபத்தாறாயிரம்வருஷம்பூமியைரட்சிக்கப்போகிறாய் உன்னுடையபிராதாவானஉத்தமனானவன் வேட்டைக்குப்போனவிடத்திலே நாசத்தையடைந்திருக்கையில் அவனிடத்திலே பிரீதியையுடைய அவன்தாயாரான சுருசியானவள் அவனைத்தேடிக்கொண்டு காட்டுத்தீயிலேபிரவேசிக்கப்போகிறாள் நீயக்கியமூர்த்தியானஎன்னைபூரணமானதட்சணையையுடையயக்கியங்களினாலேபூசித்து தேகாந்தத்திலே என்னைநினைத்து மறுபடியும் ஜன்மத்தையடையாத யதிகளுடையஉயர்ந்த ஸ்தானத்தைப்போலும் சப்தரிஷிகளுடைய பதத்தைக்காட்டிலும் மேலானதாயும் சர்வலோகங்களினாலும் நமஸ்கரிக்கப்பட்டதாயு மிருக்கிற ஸ்தானத்தையடையப்போகிறாயென்று அனுக்கிரகித்து அவன் பார்த்துக்கொண்டிருக்க தம்முடையஸ்தானத்தை யடைந்தார் அந்தத்துருவனும் அற்பசுகத்தை யடைந்தோமென்றுசந்தோஷமில்லாதவனாய் பட்டணத்தை யடைந்தானென்றுசொல்லுகிற மைத்திரேயரைப்பார்த்துவிதுரர் சொல்லுகிறார்.

வாரீர்பிர்மரிஷிடரே, பரமபுருஷார்த்த ஸ்வரூபத்தையறிந்த துருவன் அடையககூடாதஉத்தமமானஹரியினுடைய பரமமானஸ்தானத்தை ஒருஜன்மத்திலேதானே அடைந்திருந்தும் எப்படி திருப்தியில்லாதவனானு

னென்றுகேட்கிற விதுரனைப்பார்த்து மைத்திரேயர் சொல்லுகிறார்.

வாரீர்விதுரரே சபத்தினிமாதாவினுடைய வசனமாகிறபாணங்களினாலே அடிக்கப்பட்டதற்குத் தக்கபயனை அடைந்தோமேயன்றி மோட்சத்தை இச்சியாமற்போனேனேயென்றும் விசனத்தையடைந்தான்.

## துருவன் வாக்கியம்.

ஜிதேந்திரியாளான சனந்தர் முதலானரிஷிகள் அனேகஜன்மங்கள் யோகாப்பியாசஞ்செய்து அறியப்படாதபகவானுடைய பாதாரவிந்தச் சாசையை ஆறுமாசங்களில் அடைந்தும் பேதபுத்தியால் அக்கினியானிகளுக்கெல்லாம் தலைவனானநான் நாரதருடையவசனத்தை யதார்த்தமாகக்கிரகிக்காமல் எனக்குங்கீழ்ப்பட்ட ஸ்தானத்தையடைய தேவதைகளினாலே மோசம்போய்நம்மாலேபிரார்த்திக்கப்பட்ட இந்தஸ்தானமானதுஆயசில்லாதபுருஷனிடத்திலே வயித்தியஞ்செய்ததுபோல்வியர்த்தமாயிற்று சமுசாரதுக்கத்தைப்போக்கடிக்கின்ற ஜகத்ரூபியானபகவானைத் தபசினாலே பிரசன்னராகப்பண்ணிவித்துக்கொண்டும் மோட்சத்தைவிரும்பாமல் பாக்கியஈனனான நான் தரித்திரனானவன் சக்கரவர்த்தியானராஜாவினிடத்தில்நின்றும் உமிநூக்கை யாசித்ததுபோலதிரும்பவும் சம்சாரத்தையே யாசித்தேனென்று தன்னைத்தானே வெறுத்துக்கொண்டு வருகின்ற துருவனை அங்கிருக்கிறவர்கள்கண்டு உத்தானபாத ராஜாவண்டையிற்சென்று இச்சேதிஉரைக்க அவன்மரித்துப்போனபிள்ளை பிழைத்துவந்ததுபோல்நினைத்து இந்தச் சந்தோஷசமாச்சாரஞ்சொன்னவனுக்குமகத்தாகியவிலைபெற்ற முத்தாரத்தைக்கொடுத்து உத்தமமான அசுவங்களை யுடையதாகியும் சொர்ன பட்டங்களினால் அலங்கரிக்கப்பட்டுமிருக்கிற ரதத்தின்பேரி லேறிக்கொண்டு பிராமணாள்பெரியவர்களாயிருக்கிற பந்துக்களாலேயும் மந்திரிகளாலேயும் சூழப்பட்டவனாய் சங்கத்தொனிபேரிவாத்தியம் மத்தளம் வேதகோஷம் புள்ளாங்குழல் இதுகளுடனேபட்டணத்தில்நின்றும்வெளிப்புறப்பட்டான்அவனுடையபட்டமகிஷிகளான சுனிதையும் சுருசியும்சொர்னத்தினாலே அலங்கரிக்கப்பட்ட பல்லக்கின்பேரிலே உத்தமனென்கிறபிள்ளையுடனே யேறிக்கொண்டுபோய்பட்டணத்துக்குவெளியிலேயிருக்கின்ற உத்தியான வனத்தினுடைய சமீபத்திலே வருகின்ற துருவனைப் பார்த்து உத்தானபாதராஜா ரதத்தில்நின்றும் சீக்கிரமாகஇறங்கி மவுனத்துடனேகிட்டப்போய் உடம்புதெரியாத ஆசையையுடையவனாய்ப் பிள்ளையைக் கைகளினாலே ஆலிங்கனம்பண்ணி அடிக்கடிஉச்சியில்முகந்துகொண்டு குளிர்ச்சியான ஆனந்தபாஷ்பங்களினாலே ஸ்நானம்பண்ணுவித்தான் சற்ஜனருக்கெல்லாம் சிரேஷ்டனான துருவனானவன் தகப்பனாருடைய பாதங்களிலே நமஸ்கரித்து அவருடையஅனுக்கிரகம்பெற்று மாதாவான சுநீதியையும் சுருசியையும் நமஸ்காரம்பண்ண மாற்றாந்தாயானசுருசியானவள் பிள்ளையான அந்தத்துருவனை யெடுத்துக்கட்டிக்கொண்டு ஆனந்தபாஷ்பங்களினாலே தடுக்கப்பட்டவார்த்தையுடன் சிரஞ்சீவியிருக்கக்கடவையென்று அனுக்கிரகம்பண்ணினாள் சகலபிராணிகளும் ஜலங்கள் பள்ளத்தில் பாய்கிறாற்போல் துருவனை வணங்கினார்கள் உத்தமனும் துருவனும்இரண்டுபேரும்ஒருத்தருக்கொருத்தர் பிரீதியையுடையவர்களாகக்கட்டிக்கொண்டு சரீரசம்பந்தத்தினால் ரோமாஞ்சங்களுடனே பொருந்தினவர்களாக மிகவும்சந்தோஷத்தையடைந்தார்கள் துருவனுடைய தாயாரான சுநீதியானவள் தன்னுடையபிராணனைப்பார்க்கிலும் இஷ்டனான பிள்ளையை ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு அவனுடைய சரீரசம்பந்தத்தினாலே சுகத்தையடைந்தவளாகமனவியாதியைவிட்டுவிட்டாள்.

வாரீர் விதுரரே, ஆனந்தபாஷ்பங்களினாலே நனைக்கப்படுகின்ற வீரமாதாவானசுநீதியினுடைய ஸ்தனங்களில்நின்றும் புத்திரவாச்சல்லியத்தினாலே பாலானது அடிக்கடிபெருகிற்று அந்தச்சமயத்தில் ஜனங்கள் சுநீதியைப்பார்த்து தெய்வாதீனமாக உன்னுடையபிள்ளையானவன் வெகுகாலம்காணாமற்போய்திரும்பவும் உன்னையடைந்து உன்னுடையமனோவியாதியையெல்லாம்போக்கடித்தநதுந்தவிர இப்பூமண்டலத்தையும் இரட்சிக்கப்போகிறானென்று சொல்லி துருவனைப்பார்த்துப் பக்தாளுடையதுக்கத்தைப் போக்கடிக்கின்றவராயும் தீராளானபுருஷாளால் பூஜிக்கப்பட்டவராயுமிருக்கின்ற பகவான் உன்னாலே நன்றாகப் பூசிக்கப்பட்டாரென் றிந்தப்பிரகாரம் ஜனங்களினாலே கொண்டாடப்பட்டவனாகிப்பிராதாவுடனேகூடியிருக்கிற துருவனை உத்தானபாதராஜாவானவர் பட்டணத்துயானையின்பேரிலேற்றிக்கொண்டு சந்துஷ்டனாகவும் ஜனங்களினாலே தோத்திரம்பண்ணப்பட்டவனாகவும் பட்டணத்தைப்பிரவேசித்தான் அந்தப்பட்டணத்திலே அந்தந்தவீதிகள்தோறுங் கட்டப்பட்டிருக்கின்ற மகரதோரணங்கள் பலபுஷ்பங்களுடனேகூடினவாழைமரங்கள் கமுகமரங்கள் மாந்தளிர்கள் நூதனவஸ்திரங்கள் புஷ்பமாலிகைகள் முத்துமாலைகள் இவைகளினால் கட்டப்பட்டதோரணங்களாலும் வாசல்கள்தோறும் அலங்கரிக்கப்பட்டதீபஸ்தம்பங்களுடனே கூடின பூரணகும்பங்கள் சொர்ணமயங்களானஉபகரணங்களுடனேகூடின மெத்தைகளினாலும் நான்கு திக்குகளிலும் அலங்கரிக்கப்பட்ட சம்பத்துகளுடனே கூடின விமானங்களுடைய காந்திகளினாலே விளங்குகின்றநாற்சந்தி வீதிகளுடன் பூரணமாய் மார்க்கங்களில்

சந்தனக்குழம்பினுலே.ஙனைக்கப்பட்டு பொறிகள் அக்ஷதைகள் புஷ்பங்களினுலும் வெகுபிரகாரமான அலங்காரங்கள்செய்திருக்கிற பட்டணத்திலே பிரவேசமாய்வருகிற துருவனைப்பார்த்துப் புரஸ்திரீகள் மங்களதிரவியங்களான அட்சதைகள்-வெள்ளைக்கடுகுகள்- தீர்த்தம்-அறுகம்புல்-புஷ்பங்கள்-பழங்கள்-இவைகளையெல்லாம்ஆசிர்வாதங்களைப்பண்ணி இறைக்க இப்படி சகலவைபவத்துடனே மனேகரமான கீதங்களைக் கேட்டுக்கொண்டு விலையில்லாதரத்தினமயமாயும் பால்நுரைகளுக்குச் சமானமாகியபடுக்கைகளும் சுவர்னமயங்களாகியும் தந்தமயங்களாகியுமிருக்கிற வுபகரணங்களும் விலையில்லாத ஆசனங்களுள்ளதாயும் ஸ்படிக மயமாயும் மரகதமயமாகியுமிருக்கிற சுவர்களிலே ரத்தினதீபங்கள் ஸ்திரீபிரதமைகளுடன் விளங்குகிறதாயும் ரமணியமான உத்தியானவனங்களிலேயும் நானுவிதங்களான திவ்யதருக்களினுலேயும் மதுரமாகச்சப்திக்கின்ற பட்சிமிருகங்களினுலும் மதுரமாகக் கானம்பண்ணு நின்ற வண்டுகளினுலும் வைடூரியமயமான படிக்கட்டுகளை யுடையதான நடபாவிகள் பத்மங்கள்= கருநெய்தல்=ஆம்பல்=இவைகளையும்அம்சங்கள்=நீர்க்காக்கைகள் முதலானபட்சிக்கூட்டங்களினுலே ரமணியமான கோஷங்களையுடையதாயும் சுவர்க்கம்போல் மனேக்கியமாயிருக்கிற பிதாவினுடைய கிரகத்தில் பிரவேசித்து வெகுபிரகாரமாகப் பிதாவினுல் உபலாலனம்பண்ணப்பெற்று ஜயந்தனைப்போலச் சுகமாகவிருந்தான். அப்படிப்பட்டகிரகத்திலே துருவன் வாசம்பண்ணிக்கொண்டிருக்கையில் ராஜரிஷியான உத்தானபாதனும் தன்பிள்ளையான துருவனுடைய ஆச்சரியமானபிரபாவத்தைக்கேட்டுமிகவும்மகிழ்ச்சியையடைந்து யவ்வனத்தை யடைந்தவனுகியும் பிராணிகளுக்கெல்லாம் சம்மதனுகியுமிருக்கிற துருவனைப் பூமிக்குஅதிபதியாகப்பண்ணி விஷயபோகங்களில் விரக்தியடைந்தவனுய் உத்தமமானகதிக்குயோசனைபண்ணிக்கொண்டு தவசுநிமித்தியம்வனத்தையடைந்தான்.

---

## ய-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

துணையிலாமற் றுருவனெருவனுய்
அணிகொளுமள காபுரிக்கேகியே
தணிவிலாததன் றமையனைக்கொன்றவன்
மணிசிரம்முடி மண்ணினிற்போக்கினுன்

துருவனெருவனுகவே அளகாபுரிபட்டணத்துக்குப் போய் பிராதாவான உத்தமனைக்கொன்ற யட்சாளை வதைத்தானென்று அவனுடையபராக்கிரமஞ் சொல்லப்படுகின்றது,

மைத்திரேயர்வாக்கியம்,

வாரீர்விதுரரே அந்தத்துருவனுனவன்பிரசாபதியானசிம்சிமாரனுடைய பெண்ணுகியபிரமியையவிவாகம்பண்ணி அவளிடத்தி நின்றும் கல்பனென்று வற்சரனென்றும் இரண்டு பிள்ளைகளையும் வாயுவினுடைய பெண் இளையென்கிற பாரியினிடத்தில் உற்பவனென்கிறபிள்ளையையும் ஸ்திரீசாதிக்கெல்லாம் ரத்தினம்போலொத்த ஒருபெண்ணையும்பெற்றுன், உத்தமன் விவாமில்லாதவனுகி வேட்டைமார்க்கம் போன விடத்தில் பலவானுன ஒருயட்சனுலே இமோற்பர்வதத்திலே அடிப்பட்டான் அந்த உத்தமனுடையமாதாவான சுருசியும்அந்தப்பிள்ளையினுடைய கதியை யடைந்தாள், அதைக்கேட்டு துருவன் பிராதாவினுடையவதத்தைச் சகியதவனுகி ஜயப்பிரதமான ரதத்தின்பேரி லேறிக்கொண் புண்ணியஜனங்களுக்கிருப்பிடமாகியும் இமோத்பர்வதத்தாழ்வாயிலே ருத்திர சேவகர்களான பூதங்களினுலும் குய்யகாளாலும் பூரணமாயிருக்கிறஅளகாபுரியைப்பார்த்து ஆகாயத்தையும் திக்குகளையும் சப்திக்கும்படியான சங்கத்தைப் பூரிப்பிக்க அந்தத் தொனியினுலே யட்சஸ்திரீகள் பயத்தையடைய் யட்சாள் அந்த சப்தத்தைச் சகியாதவர்களாகி ஆயுதங்களை எடுத்துக்கொண்டு பட்டணத்தில்நின்றும் வெளிப்புறப்பட்டு ஓடிவந்துதத்ள், அவர்களைப்பார்த்து உக்கிரமானதனுவையுடையரனுகியும்மகாரதனுகியுமிருக்கிற துருவனுனவன்ஒவ்வொருத்தனை மூன்றுமூன்றுபாணங்களிலே ஏககாலத்தியே யாவரையும்அடித்தான் இப்படி யாவருக்கும் நெற்றியில்புதைந்திருக்கிற பாணங்களைப்பார்த்து அவனுடைய கரலாகவத்திற்குக் கொண்டாடி அவனுடைய பராக்கிரமத்தைச் சகிக்கமாட்டாமல் அந்த லட்சத்துமுப்பதினுயிரம்பேர்களும்ஏககாலத்தில் துருவன்பேரிலே உழலைத்தட்டி-பட்டைக்கத்தி-எரியீட்டி-சூலம்-கோடாலிசத்திதடி-உலக்கை-சித்திரமான இறகுகளையுடைய பாணங்கள்இவைகளினுலே கோபத்தையடைந்தவர்களாய்க்கொண்டு வருஷித்தார்கள்.

அப்போதுஅந்தத்துருவனுனவன் வருஷதாரையினுலே மறைக்கப்பட்ட பர்வதம்போல் காணப்படவில்லை ஆகாசத்திலிருந்து பார்த்துக்கொண்டிருக்கின்ற சித்தர்கள் சூரியனுக்குச்சமனுகியிருக்கின்ற துருவன்யட்சாளாகிற சாகரத்திலே முழுகிப்போய்விட்டானென்றுஆஹாகாரஞ்செய்தார்கள் அந்தச் சமயத்திலே பனிக்கூட்டத்தைப்பேதித்துக்கொண்டு பிரகாசியாநின்ற சூரியனுனவன்போல் அந்த அஸ்திரங்களுடைய சமூகத்தை தன்னுடைய பாணங்களினுலே சூரணமாகப்பண்ணி அவர்களுடைய கவசங்களையும் வச்சிராயுதத்தால்பிளக்க

ப்பட்ட பர்வதம்போல் பேதித்துக்கொண்டு சரீரங்களிலேபிரவேசிக்கும்படி பாணங்களை வருஷித்தான்.

இப்படிசேதிக்கப்பட்ட யட்சபாடாளுடையசுந்தரமான குண்டலங்களையுடைய சிரசுக்கள் சொர்னமயமான பனைமரம்போன்றதுடைகள் அஸ்தகடகங்களோடேகூடிய கைகள் முத்தாரங்கள் தோள்வளைகள்=கிரீடங்கள் மகாவிலைபெற்றபாகைகள் இவைகளினாலே பரப்பப்பட்ட அந்தயுத்தபூமியானதுகள் வீராளுக்கு சிலாக்கியமாக விளங்கினதுகள், அந்த ராஜசிரேஷ்டனான துருவனுடையபாணங்களினாலே அடிபட்டவர்கள் போகமிகுந்த யட்சகணங்கள் பாணங்களினாலே திரளாகஅறுக்கப்பட்ட அங்கங்களை யுடையவர்களாய்க் கொண்டு சிம்மத்தினாலே யடிக்கப்பட்ட யானைகளானதுகள்போல் அந்த யுத்தபூமியைவிட்டு ஓடிப்போய்விட்டார்கள் மானவோத்தமனான துருவன் அந்தமகாயுத்தத்திலே ஒரு ஆயுதபாணியையும் பாராதவனாய் சத்துருக்களுடைய பட்டணத்தைத் தகிக்கத்தக்கவனா யிருந்தாலும் மாயாவிகளுடையநடத்தையை அறியாதவனாகையால் அந்தப்பட்டணத்திலே பிரவேசிக்காமல் சத்துருக்கள்திரும்பவும் எதிர்த்துவருவார்களென்றுசங்கையுற்றவனாய்சாக்கிரதையுடனிருக்கையில் பெருங்காற்றினாலே அலைக்கப்பட்டசமுத்திரகோஷத்தைப்போல் மகத்தாகிய சப்தத்தையும் நான்கு திக்குகளிலேயும் தூளெழும்புகிறதையும் பார்த்துக்கொண்டிருக்கையில் நான்குதிக்கிலும் பிரகாசமானமின்னல்களை யுடையதாகியும் பயங்கரமான சப்தங்களையுடையதாகியுமிருக்கிற மேகக்கூட்டங்களினாலே ஆகாசமானது வியாபிக்கப்பட்டும் இரத்தமாம்சங்கள் மலமூத்திரங்கள்=கோழைகள்=தலையில்லாதவுடல்கள்=பர்வதங்கள்=கதை=பரிசம்=கத்தி=உலக்கைகள் முதலான அனேக ஆயுதங்களையும் வருஷித்துக்கொண்டு ஓடிவந்ததுகள் மதகஜங்களும், சிங்கங்களும்,வியாக்கிரகங்களும், கும்புகும்பாகவோடிவந்ததுகள், சமுத்திரமும் பயங்கரமான அலைகளினாலே பூமியை நான்கு பாரிசத்திலும்கவிந்து, பிரளயகாலத்தைப்போல் பயங்கரமான மகாசப்தமுண்டாச்சுது, இப்படி அதைரியசாலிகளுக்குப்பயங்கரங்களான நடத்தையை யுடைய அசுரர்களால் பிரயோகிக்கப்பட்ட மாயையைப்பார்த்து பிரமரிஷிகளெல்லோருங்கூடி அந்த துருவனைநோக்கி வாரும்பிள்ளாய் துருவனே சாரங்கமென்கிற தனுசையுடையவராகியும் தேவராகியும் ஆசிரதாளுடைய துக்கத்தைப் போக்கடிக்கிறவராகியு மிருக்கின்ற சுவாமியானவர் உன்னுடைய சத்துருக்களை நாசம்பண்ணக்கடவரென்று அனுக்கிரகித்தார்கள்.

---

# ௰௧வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

துண்ணெனத்தலைப் போக்குந்துருவனால்
நண்ணும்யட்சாளின் நாசந்தனைக்கண்டு
மண்ணில்சுவாயம்பு மனுவானவர்வந்து
எண்ணில்தத்வ மியம்பிநிவர்த்தித்தார்

துருவனாலேசெய்யப்பட்ட யட்சாளுடைய நாசத்தைப்பார்த்து சுவாயம்பு மனுவானவர் தாமேவந்து துருவனைத் தத்துவவுபதேசத்தினாலே அந்த யுத்தத்தில்னின்றும் நிவர்த்திப்பித்தாரென்று சொல்லப்படுகின்றது,

மைத்திரோயர்வாக்கியம்,

வாரீர்விதுரரே, இந்தப்பிரகாரஞ்சொல்லப்பட்டரிஷிகளுடையவாக்கியத்தை உபதேசம்போல்கேட்டுஆசமனம்பண்ணி பகசுத்தனாய் தனுசிலே நாராயணாஸ்திரத்தைச் சந்தானம்பண்ண தட்சணத்தில் குய்யகர்களால்நிர்மிக்கப்பட்ட மாயைகள் ஞானம்பிறந்தவனுக்கு சம்சாரக்கிலேசங்கள் நாசமடைவதுபோல் நசித்ததுகள், அந்தத்திவ்வியமான நாராயணாஸ்திரத்தைப் பிரயோகியாநின்ற துருவனுடைய தனுசிலிருந்து சுவர்னமயங்களான கட்டுகளையும் அம்சங்களின்இறகுகளையும் பயங்கரமான சப்தங்களையு முடைய பாணங்கள் வெளிப்புறப்பட்டு சத்துருக்களுடைய சேனையிலே மயில்கள் வனத்திலே பிரவேசிக்கிறாற்போல் பிரவேசித்து திட்சணமான முனையையுடைய அந்தப்பாணங்கள் நான்குபக்கத்திலேயும் பீடிக்க அதைச் சகிக்கமாட்டாமல் யட்சாள் கோபத்தை யடைந்தவர்களாய் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு படத்தைவிரித்துக்கொண்டு சீறுகின்ற சர்ப்பங்கள் கருடனைஎதிர்க்கிறாற்போல் எதிர்த்தயட்சபடாளைச்சந்நியாசிகள் சூரியமண்டலத்தைப் பேதித்துக்கொண்டுஅடைகிறபரலோகத்தை யடைவிப்பித்தான்,

இப்படி சித்திரரதனை துருவனாலே அடிக்கப்பட்டயட்சபடாளை பிதாமகனான சுவாயம்புமனுவானவர்பார்த்து ரிஷிகளுடனே அந்தத்துருவனையடைந்துகிருபையினாலே ஒருவார்த்தை சொன்னார்,

வாராய் குழந்தாய் நிரபராதிகளான இந்த யட்சபடாளையடிக்க யேதுவாகியும் நரகத்துவாரமாகியு மிருக்கிற கோபத்தைவிட்டுவிட்டு சத்புருஷாளாலே நிந்திக்கப்படுகின்ற இந்தக்காரியம் நம்முடைய குலத்துக்கு யோக்கியமன்று உன்பிரதாவை ஒருயட்சன் சங்கரித்திருக்க அவன்நிமித்தம் உன்னாலே வெகுபேர் அடிக்கப்பட்டார்கள் பரமாத்மாவில்னின்றும்உண்டான இந்தஜடமான தேகத்தை ஆத்மாவென்று நினைத்து பசுக்கள்போலே ஒருத்தனை இம்சிக்கிறது பகவானையேசரணமாகவடைந்த சாதுக்களுக்கு மார்க்க மன்று நீ பர்வேயத்திலே

ஆராதிக்க அசக்கியராகியும் சராசராத்மகமான பூதங்க
ளுக்கெல்லாம் வாசஸ்தானமாயிருக்கிற பகவானை ஆரா
தித்து சிரேஷ்டமானபதத்தையடைந்த நீர்-சர்வகாலமு
ம்ஹறிதாசாளுக்கு அசம்மதமாயிருக்கிற இப்படிப்பட்
ட ஹிம்சையை எப்படிப் பண்ணுய் பெரியவாளிடங்க
ளிலே பொறுமையும் தனக்குத் தாழ்ந்தவா ளிடங்களி
லேதயையும் சமானமானபேர்களிடங்களிலேசிநேகமு
ம் சமஸ்தபிராணிகளிடங்களிலே சமபுத்தியும் உபாசிக்
கிறபேருக்கு சர்வாந்திரியாமியான பகவான் பிரசன்ன
ராவார்,

அவர் பிரசன்னரானதினலே பிரகிருதி காரியங்க
ளான சத்வாதிகுணங்களினலே விடப்பட்ட ஸ்தூலசூ
ட்சுமதேக பந்தமென்கிற ஜீவபாதத்தினலும்விடபபட்
டவனய் ஆனந்தருபமானபிரம்மத்தையடைவன், ஒன்றி
லொன்று கலந்திருக்கிற கிருதிவிமுதலான பஞ்சபூதங்
களினல் உண்டாகப்பட்ட சரீரம் ஸ்திரீயென்றும் புரு
ஷனென்றுஞ் சொல்லப்படுகிறது. அந்தஸ்திரீ புருஷா
ளுடையசம்பந்தத்தினலே வேறே சிலஸ்திரீபுருஷசரீர
ங்கள் இந்தச்சமுசாரத்தி லுண்டாகிறதுகள் பரமாத்மா
வின்மாயையினது சத்துவாதிகுணங்களுடைய உற்பவ
த்தினலே சிருஷ்டி-திதி-சங்காரம் உண்டா யிருக்கிறது
கள். அதுகளிலே சத்வாதிகுணசூனியரான பரமாத்மா
வினல் காரியகாரணருபமான இந்தப்பிரபஞ்சம் காந்த
சந்நிதானத்தினல் லோகமயமான ஊசியானது சுழலு
கிறுற்போல்சுவயமாகவே சிருஷ்டிஸ்திதிசங்காரங்களை
யடைகிறது அந்தப்பகவான் காலசத்தியினல்கிரமமாக
வுண்டாக்கப்பட்ட சத்துவாச தமோ குணங்களுடைய
சாஞ்சல்லியத்தினல் பிரிக்கப்பட்ட சிருஷ்டி ஸ்திதிசங்
காரசக்திகளையுடையவனக இந்தப் பிரபஞ்சத்தைச் சி
ருஷ்டித்தாலும் சங்கரித்தாலும் கர்த்தா வாகாதவராயு
மிருக்கிறுர், சிருஷ்டிசங்காரங்களை ஏககாலத்தில்தானே
செய்யாமலிருக்கிறது, அந்தப்பகவானுடைய காலசக்தி
அப்படிப்பட்டதாகையால் அறியக்கூடாத அந்தக் கால
மானது தாய்தகப்பனென்கிறஜனனத்தினல்புத்திரனெ
ன்கிற ஜனனத்தையுண்டாக்கி சிருஷ்டியைப் பண்ணுகி
றதுதான் உற்பத்தியுடையதன்றுவிநாசயேதுவானசொ
ர்னமுதலிய ஜனனத்தையும் பிறப்பித்து அதையும்நாச
ம்பண்ணுகிறது ஒழிவில்லாத சக்தியை யுடையவர் பக
வான் சிருஷ்டியேதுவாகியும் விநாச ஏதுவாகியு, பிரா
ணிகளிற் சமமாகப் பிரவேசித்திருக்கிற அந்தப் பரமா
த்மாவுக்குத்தன்னவனென்றும் சத்துருவென்றுமில்லை
இந்தப்பிரகாரம் சமமாகவிருக்கின்ற அந்தஈஸ்வரனை ஒ
டுகின்றகாற்றைத் தூள்கள் அனுசரிக்கிறுற்போல் கர்மா
தீனளானபிராணிகள் அனுசரிக்கிறுர்கள் விருத்திக்ஷய
மில்லாதவராகியும் ஏகருபியாயுமிருக்கிற இந்த விபுவா
னஈஸ்வரன் கர்மாதீனமாகிய பிராணிகளுக்கு ஆயசுக்ஷ
யத்தையும், அந்தப்பிரகாரமே ஆயசுவிருத்தியையும்ப
ண்ணுகிறுர், இப்படிப்பட்ட ஈஸ்வரனைச்சிலபேர் கர்ம
மென்றும், சிலபேர் சுவாசமென்றும், சிலபேர்காலமெ
ன்றும்,சிலபேர்அதிர்ஷ்டமென்றும்நானுவிதமாகச்சொ
ல்லுகிறுர்கள். கண்ணுலே பார்க்கப்படாதவராகியும்,பி
ரமாணத்தில்அகப்படாதவராகியும்,: நானுவிதசக்திகளை
யுடையவராகியுமிருக்கிற அந்தஈஸ்வரனுடையசெயலை
ஒருத்தனும்அறியமாட்டான்,

வாராய்குழந்தாய், அப்படிப்பட்ட பரமாத்மாவை
எவன்தான்நிச்சயமாக அறியப்போகிறுன் இந்தயட்சப
டாள் உன்னுடைய பிராதாவான உத்தமனைக் கொன்ற
வாளன்று புருஷனுக்கு உற்பத்திநாசங்களில் சுபாவமா
கஈஸ்வரனேகாரணம் அந்தப்பரமாத்மாவே இந்தப்பிர
பஞ்சத்தைச் சிருஷ்டிக்கிறவனகியும், இரட்சிக்கிறவன
கியும், சங்கரிக்கிறவனகியுமிருக்கிறுன், ஆனலும் நான்
செய்கிறேனென்கிற அகங்கார மில்லாமையினலே பிர
கிருதிகுணகர்மங்களில் அகப்பட்டவரன்று பூதங்களுக்
கெல்லாம் அந்தரியாமியாகியும். நியந்தாவாகியும், பூத
ங்களுக்கு உற்பத்தி ஸ்தானமாகியும், விரோதிகளுக்கு
மிருதியுவாகியும், பக்தாளுக்கெல்லாம்மோட்சப்பிரத
ராகியும், ஜகத்துக்கெல்லாம் இருப்பிடமாகியுமிருக்கிற
அந்த ஈஸ்வரனைத்தானே நீ சர்வப் பிரகாரத்தினலும்,
சரணமாகவடை நீ ஐந்துவயதில் தாயாரைவிட்டுச் சத்
தினிமாதாவினுடையதுர்வார்த்தைகளினலே பிளக்கப்
பட்ட இருதயத்தை யுடையவனகக் கொண்டு தபோவ
னத்தையடைந்து தபசினலே இந்திரியங்களினல் அறி
யக்கூடாதவரான ஸ்ரீபகவானைஆராதித்து மூன்றுலோ
கத்துக்கும் உயர்ந்தஸ்தானத்தையடைந்தாய் சிரேயசுக்
களுக்கு மிகவும்விரோதியான கோபத்தை ஔஷதத்தி
னல் வியாதியைஅடக்கிறுப்போல் விவேகத்தினல்நீஅ
டக்கு உனக்குநன்மையுண்டாகிறதுரோஷத்துடன்கூடி
னபுருஷனுக்கு லோகமானது மிகவும்நடுங்கும், மோட்
சத்தைக்கோருகின்ற வித்துவான்கோபத்தையடக்கவே
ண்டும் சிவனுக்குச்சகாவானகுபேரன் உன்னுடைய பி
ராதாவைக் கொன்றவர்களாயிருக்கிற யட்சாளைக்கோப
த்தினற்கொன்றபடியால் உன்னலவமானஞ்செய்யப்பட்
டான். அவனை க்ஷமைபண்ணிக்கொள்ளாவிடில்உன்னு
டையவம்சந்திரஸ்கரிக்கப்படும்அதற்குமுன்னம்க்ஷமை
பண்ணிக்கொள்ளென்று மனுவினலே உபதேசிக்கப்ப
ட்டவனகத் துருவன் அந்தமனுவைவணங்கி ஒருவார்த்
தை சொன்னன்.

வாரீர்பகவானே. நான் உம்முடையஆக்கினையிலி
ருக்கிறேன் பிராதாமாதாயிவர்கள்நிமித்தியம் துக்கிக்கி
ன்ற என்னுடைய அபராதம் குபேரன் க்ஷமிக்கத்தக்க

தென்று மனுவைக்குறித்துச்சொன்னான், அதுகேட்டுசுவாயம்புமனுவானவர் குபேரனை துருவனை ஆக்கியாபித்து அவனாலேசேவிக்கப்பட்டவராகரிஷிகளுடனேகூடதம்முடைய ஸ்தானத்தைக்குறித்துப் போனார்,

## ௰௨-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்;

குரிசிலென்னுங் குபேரனாற்சந்தோஷம்
துரிதமாகவே கொண்டதுருவன்றன்
அரியபட்டண மார்ந்துயக்கியாதியா
லரியையாராதித் தேற்றியமர்ந்தனன்.

குபேரனாலே சந்தோஷிக்கப்பட்டவனாகக்கொண்டுதுருவன்பட்டணத்தையடைந்து யக்கியங்களினாலே ஸ்ரீஹரியையாராதித்து உத்தமமாகியஸ்தானத்தையேறினானென்று சொல்லப்படுகின்றது,

மைத்திரேயர்வாக்கியம்,

வாரீர்விதுரரே, இந்தப்பிரகாரம் மனுவினுடைய உபதேசத்தால் கோபத்தைவிட்டு துருவன் யுத்தத்தில் நின்றும் ஒழிந்திருக்கிறானென்று அறிந்து குபேரனானவன் சாரணயட்சகின்னரர்களாலே ஸ்தோத்திரம்பண்ணப்பட்டவனாக அந்தயுத்தபூமியில்வந்து அஞ்சலிபந்தத்துடனே கூடின துருவனைப்பார்த்து ஒரு வார்த்தை சொன்னார்,

வாராய் க்ஷத்திரியகுமாரனே, நீ பிதாமகனான மனுவினுடையவசனத்தினால் விடக்கூடாதவைரத்தைவிட்டுவிட்ட உன்னிடத்தில் பிரீதியையடைந்தேன்நீயும்யட்சாளைக்கொல்லவில்லை உன்னுடையபிராதாவானஉத்தமனையட்சனுங் கொல்லவில்லை காலமன்றோ பூதங்களுடைய ஜனனமரணங்களுக்குக்காரணம் தேகாபிமானவாஞ்சையினால் கர்மசம்பந்தமும் கர்மபலமான துக்கமும் நான்நீ என்கிற வியர்த்தமானபுத்தியும் அக்கியானத்தினால் உண்டாகிறது,

அக்கியானத்தைப் போக்கடிக்கின்ற ஸ்ரீ பகவானையேபஜனைசெய் உனக்குச் சிரேயசுண்டாகும் என்னாலுனக்கேதாகிலும் அடையத்தக்கவர முண்டாயிருந்தால் சங்கையில்லாமற்கேள்,கொடுக்கிறேனென்றுசொல்லுகிறகுபேரனுடைய வார்த்தையைக் கேட்டுப் புத்திமானான துருவன் அக்கியானநிவர்த்தகமானஹரிபக்தியுண்டாகவேண்டுமென்று கேட்டான் குபேரனானவன் சந்தோஷத்துடனே கூடினமனதுடன் அந்தத்துருவனுக்கு அசஞ்சலமான பக்தியைக்கொடுத்து அவன் பார்த்துக்கொண்டிருக்கச்சே அந்தரத்தானமாய் விட்டான் அந்தத்துருவனும் தன்னுடையபட்டணத்தையடைந்து புண்ணியபாவபலப்பிரதாராகியும் திரவிய தேவதாகிரியாரூபங்களான எக்கியங்களுக்கெல்லாஞ் சுவாமியாகியு மிருக்கிற பகவானைவெகுவான தக்ஷிணைகளையுடைய யக்கியங்களினால் ஆராதித்துச்சதஸ்தசராசங்களும் பகவத்சுவரூபமென்று தியானித்துக்கொண்டு ஆசாரகுணசம்பன்னனாகியும் பிராமணாளையேதேவதையாகவெண்ணுகிறவனாகியும் தீனவச்சலனாகியுமிருக்கிற அந்தத்துருவனைப் பிரஜைகள்பிதாவாக எண்ணினார்கள் சுகானுபவங்களினால் புண்ணியக்ஷயத்தையும் யக்கியாதிஅனுஷ்டானத்தினால் பாபக்ஷயத்தையும் பண்ணிக்கொண்டு இருபத்தாறாயிரவருஷம் பூமண்டலத்தைப்பரிபாலனஞ்செய்துபிறகு புத்திரனுக்கு ராக்கியாபிஷேகம் பண்ணிப்போட்டு பெண்பெண்டீர் முதலானசகலஐசுவரியமுந்துச்சமென்றுதிரஸ்கரித்து தபசுசெய்யபதரிகாசிரமத்திக்குப்போய்சிதேந்திரியனாகச்சுத்தோதகத்தில்ஸ்நானம்பண்ணி ஆசனத்திலேயிருந்துகொண்டுஜயிக்கப்பட்டபிராணவாயுவையுடைய மனதினால் அரிக்கப்பட்ட இந்திரியங்களையுடையவனாய் சமதமாதிகுணங்களுடன்ஸ்தூலமானவிராட்ரூபத்தையும் சமாதியில் நிஷ்டையுடனேவிட்டுவிட்டு திவ்யஆத்மஸ்வரூபத்தை தியானம் பண்ணினான் பகவானானஸ்ரீஹரியினிடத்தில் சர்வகாலமும் பக்தியைப்பண்ணுகிறதினாலுண்டான ஆநந்தபாஷப திவலைகளையுடையவனாக உருகுகின்றஇருதயத்தையுடையவனாய் பத்துதிக்குகளையும் பூரணச்சந்திரனைப்போல்பிரகாசமாய்விளங்கியும்ஆகாசத்தில்நின்றும்இறங்கியும்வருகின்றசிரேஷ்டமாகியவிமானத்திலேசதுர்ப்புஜாளாகியும் சியாமள நிறமாகியும் யுவாக்களாகியும், செந்தாமரைப் புஷ்பம்போலொத்த நேத்திரங்களையுடையவர்களாகியும் கதையையூன்றிக்கொண்டு நிற்கிறவர்களாகியும் நல்லவஸ்திரங்களையுடையவர்களாகியும்கிரீடம்ஆரம் தோள்வளை குண்டலம் இதுகளை யுடையவர்களாகியுமிருக்கிற தேவசிரேஷ்டாளைப்பார்த்து அவாளை புண்ணியசுலோகரானபகவானுடையகிங்கிரர்களென்றறிந்து சேரப்போய் பரபரப்பினால் பூசாக்கிரமங்களை மறந்தவராக பகவானுடைய நாமங்களை மாத்திரம் சொல்லிக்கொண்டு அஞ்சலிபந்தத்துடனே நமஸ்கரித்தான்.

ஸ்ரீகிருஷ்ணனுடைய பாதாரவிந்தத்தில் வைக்கப்பட்ட மனதையுடையவனாகியும் கையைக்கூப்பிக்கொண்டு விநயத்தினால்வணங்கின கழுத்தை யுடையவனாகியுமிருக்கிற அந்தத்துருவனைக்குறித்து புண்டரீகாட்சனுக்குஇஷ்டர்களான சுனந்தனந்தாளானவர்கள் சமீபத்தில்போய் பிரீதியினாலேபுன்சிரிப்புடன்கூட ஒருவார்த்தைசொன்னார்கள்.

வாராய் ராஜாவே உனக்கு மங்கள முண்டாகக்கடவது நீ ஐந்துவயதிலே தபசினால் பகவானைசந்தோஷிப்பித்ததினால் அந்தபகவானுடைய கிங்கராளான நாங்

கள் இவ்விடத்தில்நின்றும் உன்னை பகவத் பதத்தைய டைவிப்பிக்கிறதற்குவந்தோம் ஜயிக்கக்கூடாதவிஷ்ணு பதம் உன்னாலேஜயிக்கப்பட்டது சப்தரிஷிகளும் விஷ்ணுபதத்தையடையாமல் கீழேயிருந்து பார்த்துக்கொண்டிருக்கிறார்கள் விஷ்ணுபதத்தைச் சந்திராதித்தாள் முதலாகிய நவக்கிரகங்களும்அசுவினியாதி நக்ஷத்திரங்களும் பிரதக்ஷணமாகச்சுழல்கிறதுகள் அப்படிப்பட்ட அந்தவிஷ்ணுபதத்தை யடைவிப்பதற்கு உத்தமரான பகவானால் அனுபவிக்கப்பட்டுவந்தோம் இந்தச் சிரேஷ்டமாகிய விமானத்தில் ஏறிக்கொள்ளென்று அமுர்தம்போன்றசுனந்தனந்தாளுடையவார்த்தையைக்கேட்டு விஷ்ணுவுக்குப் பிரியபக்தனை துருவனானவன்ஸ்நானம்பண்ணி நித்யகர்மங்களைச் செய்து அலங்கிர்தனாக ரிஷிகளைநமஸ்கரித்து ஆசிர்வாதத்தைப்பெற்று சிரேஷ்டமாகிய அந்தவிமானத்தைப் பிரதக்ஷணம்பண்ணி பூசித்து பகவத்கிங்கிரர்களான சுனந்தனந்தாளை நமஸ்கரித்து திவ்யதேகத்தை யுடையவனாகி அந்த விமானத்திலேறினான் அப்போது துந்துபிவாத்தியங்கள் மத்தளங்கள் பணவங்கள் இதுமுதலாகியவாத்தியங்களைச்சப்தித்தார்கள் கந்தர்வசிரேஷ்டர்கள் கானம்பண்ணி புஷ்பவருஷங்களைவருஷித்தார்கள் இப்படி சகல சம்பிரமத்துடன் விஷ்ணுபதத்தையடையப்போகிறதுருவன்தீவினையாகிற தாயாராகியசுநீதையை நினைத்தான்.

அந்தத்துருவனுடைய அபிப்பிராயத்தை அறிந்த தேவசிரேஷ்டர்களான சுனந்தனந்தாள் விமானத்திலேறிக்கொண்டுதேவயாளமென்கிறமார்க்கத்தால் போகின்றதாயாரை அந்தத்துருவனுக்குக்காண்பித்தார்கள்அவளைப்பார்த்து சந்தோஷத்துடன் மார்க்கத்தில் அங்கங்குதேவதைகளால் புஷ்பங்களினாலும் ஸ்தோத்திரங்களாலும் பூஜிக்கப்பட்டுக்கொண்டு நவக்கிரகஸ்தானங்களையும் மூன்றுலோகத்தையும் சப்தரிஷிகள் ஸ்தானத்தையும் விமானத்தினால்தாண்டி அதற்கும்மேலானதாயும் தன்னுடையகாந்தியினாலேமூன்றுலோகங்களும்பிரகாசிக்கிறதுகளாயும் பிராணிகளிடத்தில் தயையில்லாதபேர்கள் அடையக்கூடாதாகியும் சாந்தாளாயும் சமதிருஷ்டியையுடையவாளாயும் பரிசுத்தாளாயும் சர்வபிராணிகளையும் சந்தோஷிப்பிக்கிறவளாய் யிருக்கிறபேர்களாலடையத்தக்கதாகியுமிருக்கின்ற விஷ்ணு பதத்தை அடைந்து மூன்றுலோகத்துக்கும் நிர்பலமானசூடாமணிபோலேவிளங்கினான் பிணையெருதுகளுடைய கூட்டத்திற்கு ஆதாரமாய் மத்தியில்நட்டிருக்கின்ற ஸ்தம்பமானதுபோல் சகலமானஜோதிங்கணங்களுடையகூட்டங்கள் அந்தத்துருவனையே ஆதாரமாகவுடையதுகளாய்ச்சுழலுகிறதுகள் இப்படிச்சுழலுகிறது நாரதரிஷியானவர்பார்த்துசந்தோஷத்தையுடையவராய்தம்முடைய வீணையைமீட்டிக்கொண்டுபிறசேதசுக்களுடையயெக்கியத்திலே பகவன் மகாத்மியத்துடன் இந்தத் துருவனுடையசரித்திரத்தைக் கானம்பண்ணினார்.

வாரீர் விதுரரே உம்மாலேபிரசனம்பண்ணப்பட்ட துருவனுடையசரித்திரம் உமக்குச்சொல்லப்பட்டது இந்தசரித்திரத்தைச் சூரியஉதயகாலத்திலும்சாயங்காலத்திலும் இந்தச்சரித்திரத்திலே சிரத்தையுடனே கூடினபேர்களுக்கு உபதேசித்தவனுக்கு தேவதைகளும் அனுக்கிரகிப்பார்கள்.

## ௰௩-வது-அத்தியாயம்

கலிவிருத்தம்,

ஆர்ந்தயேகா தசவத்தியாயத்தால்
சார்ந்திடும்பிருது சக்கிரவர்த்தியின்
நேர்ந்திடுநற் சரித்திரமனைத்தையும்
போந்திடவே புகலுவதாமரோ.

இனி பதினொரு அத்தியாயங்களிலே பிருதுசக்கிரவர்த்தியினுடையசரித்திரம் சொல்லப்படுகிறது.

சூதர்வாக்கியம்.

வாருங்கள் சவுனகாதிரிஷிகளே இந்தப்பிரகாரம் விதுரரானவர் மைத்திரேயராலேசொல்லப்பட்ட துருவன்சரித்திரத்தைக்கேட்டு பகவானான அதோக்ஷஜனிடத்திலே திடமான பக்தியையுடையவராய்க் கொண்டு திரும்பவும் மைத்திரேயரைப்பார்த்துக் கேட்கத்துடங்கினார்.

வாரீர் பிராமணோத்தமரே பிர்மநிஷ்டாளானபிறசேதசுக்களுடைய சத்திரமென்கிறயக்கியத்திலே பகவன் மகாத்துமியத்துடன் துருவசரித்திரத்தை நாரதர் கானம்பண்ணினாரென்று உம்மாலேசொல்லப்பட்டது அந்தப்பிறசேதசுக்கள்யார் யாருடைய பிள்ளைகள் எவனுடையவம்சத்திலேபிறந்தார்கள் எவ்விடத்திலேசத்திரயாகஞ்செய்தார்கள் அந்தப் பிறசேதசுக்களுடைய யக்கியத்திலே தேவரிஷியானநாரதர் பகவத்கதைகள் சொன்னதையும் அடியேனுக்குச் சொல்லவேண்டுமென்று கேட்கிற விதுரரைநோக்கிமைத்திரேயர் சொல்லுகிறார்

வாரீர் விதுரரே துருவனுடையபிள்ளையான உத்கலனானவன்தகப்பன் தபோவனத்தை அடைந்தபிற்பாடு அகண்டமண்டலாதிபத்தியத்தை இச்சியாமல் பிறந்தநாள்முதல் உபசாந்தமானமனதையுடையவனாய்ராகத்துவேஷாதிகளில்லாமல் ஞானசுரூபனாயும் பிர்மமாயுமிருக்கிற பரமாத்மாவை அனுசந்தானம் பண்ணிக்கொண்டு பயித்திக்காரனைப்போல் திரிகிறவனை க்ஷத்திரியவிருத்தாள் மந்திரிகளுடன்யோசித்து அவனுக்குத்தம்பியான பிரமியினுடைய பிள்ளை வச்சிரனை ராஜாவகாப்பண்ணினார்கள் அந்த வச்சிரனுடைய பாரியை

யான சுவதிதியானவள் புட்சிபாரனென்றும் திக்மகேதுவென்றும் இஷ்டனென்றும் ஊற்சனென்றும் வசுவென்றும் ஜயனென்றும் ஆறுபிள்ளைகளைப்பெற்றாள் அவர்களுக்குள்ளே புட்சிபாரனுக்கு பிரபாவென்றும், தோஷாவென்றும் இரண்டு பாரியைகளுக்குள்ளேபிரபாஎன்கிறவளுக்கு பிராதஹவென்றும் மத்தியந்தனமென்றும் சாயமென்றும் மூன்றுபிள்ளைகள்உண்டானார்கள் தோஷாஎன்கிறவளுக்கு பிரதோஷமென்றும் நிசிதனென்றும் வியுஷ்டியென்றும் மூன்று பிள்ளைகளுண்டானார்கள்,

அவர்களுக்குள்ளே வியுஷ்டியென்கிறவன் புஷ்கரணியென்கிற ஸ்திரீயினிடத்திலே சர்வதேஜசுஎன்றபிள்ளையைப்பெற்றான் அவன் ஆகுதியென்கிற ஸ்திரீயினிடத்திலே சாக்ஷுசுஎன்கிற மனுவைப்பெற்றான் மனுவினுடையமகிஷியான நடவலையானவள் புருவனென்றும், குச்சனென்றும் திரடனென்றும் துய்ம்நனென்றும், சத்தியவந்தனனென்றும் ரீதனென்றும் விறுகனென்றும் அக்கினிஷ்டோமனென்றும் அதிராத்திரனென்றும் பிரத்தியும் மனென்றும் சிபியென்றும் உன்முகனென்றும் சுத்தாளான பன்னிரண்டுபிள்ளைகளைப்பெற்றாள் உன்முகனென்கிறவன் பிரீதகேசியென்கிறஸ்திரீயினிடத்திலே அங்கனென்றும் சுமந்திதுவென்றும் சுவாவவென்றும் கிறுதுவென்றும் அங்கிரசுவென்றும் கேயனென்றும் உத்தமர்களானஆறுபிள்ளைகளைப்பெற்றாள் அங்கனுடைய ஸ்திரீயான சுனிதையானவள் மாககுரூரனை வேனனென்கிற பிள்ளையைப்பெற்றாள் அந்தவேனனுடைய துர்நடத்தையினாலே அந்த ராஜரிஷியான அங்கனானவன் கிலேசத்தையடைந்தவனாய்ப் பட்டணத்தில் நின்றும் வெளிப்புறப்பட்டுப் போய்விட்டான்,

வாரீர் விதுரரே யாதொரு குரூரனானவேனனை வச்சிராயுதமான வாக்கையுடையரிஷிகளால் சபிக்கப்பட்டு மிருதனானன் அப்போது ராச்சியத்திலே ராஜாஇல்லாமல்சோரராளாலே உபத்திரவப்படுகின்றபிரஜைகளைப்பார்த்து அந்தவேனனுடைய வலதுகையைக் கடைந்தார்கள் அதில்நின்றும் நாராயணஅம்சனான ஆதிசக்கிரவர்த்தியான பிருதுவானவனுண்டானானென்றுசொல்லுகின்ற மைத்திரேயனைப்பார்த்து சதாசாரநிதியாயும் பிராமணனையே தெய்வமாகவெண்ணுகிறவனாயும் மகானுபாவனாயுமிருக்கிற அந்தராஜாவுக்கு துஷ்டபுத்திரன் என்னமாயுண்டானான் அங்கவேனனிடத்திலேசகலதர்மமும்அறிந்தரிஷீஸ்வரர்கள் எந்த அபராதத்தைப்பார்த்து சாரத்தைப்பிரயோகித்தார்கள் பிரஜைகளைரட்சியாநின்ற ராஜாவானவன பாபியாயிருந்தாலும் இந்திரலோகபாலாளுடைய சக்தியைத் தரிக்கிறதினாலே அவனை நிராகரிக்கிறது யுக்தமன்றே ஆதலால் இந்தச்சரித்திரத்தைக் கேட்கவேணுமென்று இச்சிக்கின்றஎனக்குச்சொல்லவேணுமென்று பிரார்த்திக்கின்றவிதுரரைப்பார்த்து மைத்திரேயர்சொல்லுகிறார்,

வாரீர் விதுரரே ராஜரிஷியான அங்கமகாராஜா மகாகிருதுவான அசுவமேகத்தைப்பண்ணி அந்த யாகத்திலே அவிசைவாங்கிக்கொள்ள தேவதைகள் வாராமற்போனார்கள் அந்த ரித்விக்குகள் ஆச்சரியத்துடனே அங்கனைப்பார்த்து வாரும்பிள்ளாய் ராஜாவே ஓமம் பண்ணவில்லையென்று சொல்லுகின்ற ரித்விக்குகள் வார்த்தையைக்கேட்டு அங்கன் மிகவும்விசனப்பட்டுக்கொண்டு தேவதைகள்வாராமற்போனதுக்குக் காரணத்தைக் கேட்குகைக்கு மவுனத்தைவிட்டு ஒருவார்த்தைசொன்னான் வாருங்கள் சதசியாளே தேவதைகள்வந்துஅவிசுக்களை ஏன்வாங்கிக்கொள்ளவில்லை நம்மாலே பண்ணப்பட்ட அபராதமென்ன அதைச் சொல்லுங்களென்று கேட்கிற ராஜாவைப்பார்த்துசதசியாளானவர்கள்வாரும்பிள்ளாய் நரதேவனே இந்தயக்கியத்திலே உன்னாலே பண்ணப்பட்டதோஷம் ஒன்றுமில்லை ஆனாலும் நீஅபுத்திரனாயிருப்பதுஒருதோஷம் கற்பகத்தருபோல் விரும்பினதை அளிக்கின்ற ஸ்ரீயப்பதியான ஸ்ரீ பகவானைப்பிரார்த்தித்தால் சதபுத்திரனுண்டாய் அதினாலேதேவதைகள் தங்கள்பாகத்தை வாங்கிக்கொள்ளுவார்களென்றுசொல்லி அந்தராஜாவுக்கு புத்திரோற்பத்தியைக்கோரி யக்கியரூபியான விஷ்ணுவின்பொருட்டு புரோடாசத்தை ஓமம்பண்ணினார்கள் அந்த அக்கினியில்நின்றும் சுவர்ணாபரணங்கள் நிர்மலமானவஸ்திரங்கள் இதுகளையுடைய ஒருபுருஷன் சுவர்னபாத்திரத்திலே திவ்வியமான பாயசத்தைஎடுத்துக்கொண்டு ராஜாகையில்கொடுத்தார் அந்தராஜாவானவன் பிராமணாளாலே அனுக்கையைப்பண்ணப்பட்டவனாய் இரண்டுகையினாலேயும் அந்த பாயசத்தை வாங்கிக்கொண்டு முகந்துசந்தோஷத்துடன் கம்பீரமான புத்தியையுடையவனாய் தன்னுடைய பத்தினிகையிலே அந்தப் பாயசத்தைக்கொடுத்தான் அவளும்அந்தப்பாயசத்தைப்புசித்துருதுக்காலத்திலே பர்த்தாவினிடத்தில்நின்றும் கர்ப்பத்தைத்தரித்து புத்திரனைப்பெற்றாள்.

அந்தப்பிள்ளையானவன்பாலனாயிருக்கச்சேதானே தனக்குத் தாயைப்பெற்றபாட்டானாயும் அதர்மத்தினுடையஅம்சத்தினாலேயுண்டானவனாயுமிருக்கிற மிருத்தியுவினுடைய மார்க்கத்தைப்பிடித்துஅதர்மத்திலே புத்தியுடையவனாய் வில்லைஎடுத்து வேடன்போல் வனங்களிலேசஞ்சரித்துக்கொண்டு ஒருத்தருக்கும் உபத்திரவத்தைப்பண்ணாமலும் தீனங்களாயுமிருக்கிற மிருகஜாதியையெல்லாம் அடிக்கத்தொடங்கினான்இப்படிஅ

டிக்கிறவேனனைக் கண்டமாத்திரத்தில் ஜனமானது இதோவேனன்வந்தானென்று பயத்தினாலே கூப்பிடத் தலைப்பட்டதுகள். அத்தியந்தம் குரூரனான அந்தவேனன் தன்னுடன்விளையாடுகிற பாலரையெல்லாம் பசுவைஇம்சிக்கிறாற்போலே இம்சித்தான் அப்படிப்பட்டதுஷ்டனான புத்திரனைப்பார்த்து அங்கராஜாவானவன் தண்டனைபண்ணுகிறதற்குச் சமர்த்தனாகாதவனாய்ப் புத்திரனில்லாதகாலத்தில் எம்பெருமானை வெகுபிரகாரமாகப் பூசித்துக் கஷ்டப்பட்டதையும் புத்திரனுண்டானபின்பு உண்டானதுக்கத்தையும்பார்த்து சகிக்கமாட்டாமல் அளவில்லாத அயிசுவரியங்களுக் கிருப்பிடமான தன்னுடையகிரகத்தைவிட்டு அர்த்தராத்திரியிலே எழுந்திருந்து மனுஷியாளாலேகாணப்படாதவனாய்ப்போனான் பிற்பாடு புரோகிதாள் மந்திரிகள்சினேகிதாள்முதலானபேர்களும் ராஜாவானவன் மிகவும்விசனத்தினாலே வைராக்கியத்தையடைந்து புறப்பட்டுப்போனவனாக அறிந்து யோகமார்க்கந்தெரியாதவர்கள் இருதயத்திலே மறைந்திருக்கிற பரமாத்மாவையறியாமல் தேடுவதுபோல் பூமியெங்குந்தேடிக்காணாமல் திரும்பவும் பட்டணத்தே வந்து ஓரிடத்திலேகூடியிருக்கிற ரிஷிகளை நமஸ்கரித்து கண்ணீருடனே கூடினவர்களாய் ராஜா தென்படாமற் போனதைச் சொன்னார்கள்.

## ௰௪-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

அங்கமார்ந்திடு மங்கராஜாவானோன்
சொந்ததுஷ்டபுத் ரன்றன்பயத்தினால்
வெந்தமாமனத் தால்வெளிப்போனபின்
அந்தப்ராமணாள் தாம்சபித்தாரரோ,

அங்கராஜாவானவன் துஷ்டபுத்திரனுடையபயத்தினாலே வெளிப்புறப்பட்டுப்போனபின்பு பிராமணாளாலே பட்டாபிஷேகம்பண்ணப்பட்ட வேனனைத் திரும்பவும் அந்தப்பிராமணாள்தானேசபித்ததுசொல்லப்படுகிறது.

மைத்திரேயர் வாக்கியம்.

வாரீர் விதுரரே, பிர்மநிஷ்டாளாலே பிருகுமுதலான ரிஷிகளெல்லாம் லோகங்களுக்கு க்ஷேமத்தைச்சிந்தித்தவர்களாய் வீரமாதாவான சுனிதையையழைத்து ப்பிராணிகளுக்கெல்லாஞ் சம்மதிப்படாதவனான வேனனைப் பூமிக்குராஜாவாகப் பட்டாபிஷேகம்பண்ணினார்கள் அதிஉக்கிரமான ஆக்கினையையுடைய வேனன் ராஜாவாய்ச் சிங்காசனத்தை ஏறினானென்று கேட்டு சோராளெல்லாம் அந்தக்ஷணத்தில் சர்ப்பத்தினாலேபட்சிக்கப்பட்ட எலிகள்மறைவதுபோல் மறைந்துபோனார்கள்அஷ்டஅயிசுவரியங்களினால் கர்வத்தை யடைந்தவனும் தர்மமாய் ராச்சியத்தை ரட்சிக்கிறதை விட்டவனாகியும், தன்னைத்தானே யுகந்துகொள்ளுகிறவனுமிருக்கிறவேனன் அங்குசமில்லாதகஜம்போலே ரதத்திலேறிப்பூமியையும், ஆகாசத்தையும், அலைக்கிறவன்போல் சஞ்சரித்துக்கொண்டு பிராமணாளைப்பார்த்து நீங்கள் ஒருவிடத்திலேயும் யக்கியங்கள்-தானங்கள்-ஓமங்கள்பண்ணவேண்டாமென்று நாலண்டையிலேயும் பேரிசப்தத்தினாலேதகைந்து தர்மத்தை நிறுத்திப்போட்டான் இப்படி துர்நடத்தையையுடைத்தான வேனனுடைய சேஷ்டையும் ஜனங்களுடையவசனத்தையும் ரிஷிகள்பார்த்துஇரண்டுமுனையிலேயும் அக்கினிபற்றிக்கொண்டு எரிகிற மரத்துநடுவில் அகப்பட்ட பிராணிகளைப்போல் சோராளால்பிடிக்கப்பட்ட இந்தராஜா இல்லாமையால் ராச்சியங்கெட்டுப்போமென்கிற பயத்தினாலே ராச்சியத்திற்கு இந்தவேனனானவன் ராஜாவாகப்பண்ணப்பட்டான்இவனாலும் ஜனங்களுக்குப்பயமுண்டாச்சுது. பால்புகட்டி வளர்க்கப்பட்டபாம்பானது வளர்த்தவனுக்கே அனர்த்தத்தைப்பண்ணுவதுபோல் நம்மாலே ராஜாவாகப்பண்ணப்பட்டவேனன் பிரஜைகளுக்கே அனர்த்தத்தைப்பண்ணுகிறான் ஆனாலும் நம்மாலேராஜாவாகப்பண்ணப்பட்டதினாலே அந்தப்பாபம் தம்மைச்சேராமலிருக்கிறதற்காக அவனைநல்லவார்த்தையாய்ப் பிரார்த்திப்போம் நம்முடையவார்த்தையைக் கேளாமற்போனானாகில் முன்னையே லோகத்தைப்பிடித்ததினாலே கெட்டுப்போன அவனைநம்முடைய தேஜசினாலேயும் தகித்துப்போடுவோமென் றிந்தப்பிரகாரம்நிச்சயித்து அந்தவேனனையடைந்து இஷ்ட வசனங்களினாலேயும் நல்ல வார்த்தைகளினாலேயும் சமாதானம்பண்ணி இதமான வார்த்தையைச்சொன்னார்கள்.

வாராய்ராஜசிரேஷ்டனே, சமஸ்தமான லோகங்களுக்கும், லோகபாலாளானதேவர்களுக்கும்,தேவபோகங்களைக்கொடுக்கின்ற யக்கியங்களுக்கும், நியந்தாவாகியும் வேதசுரூபியாயும், தர்மசுரூபியாயும், தபசினாலே ஆராதிக்கத்தக்கவராயுமிருக்கிற பகவானை நானாவிதங்களான எக்கியங்களினாலே உனக்குக்ஷேமத்தின்பொருட்டுஆராதித்துக்கொண்டு உன்னுடையதேசத்திலேயிருக்கிறஎங்களை தர்மத்தைப்பண்ணவேண்டாமென்றுதகையவேண்டாம் உன்னுடைய தேசத்திலே பிராமணாளாலேபண்ணப்பட்ட யக்கியத்தினாலே ஆராதிக்கப்பட்டவர்களாயும் அரியினுடைய அம்சங்களாயமிருக்கிற தேவதைகள் சந்துஷ்டாளாய் உன்னுடையஇஷ்டத்தைக்கொடுப்பார்கள் அந்தத் தேவதைகளை அவமானம்பண்ணவேண்டாமென்று சொல்லுகின்ற ரிஷிகளைப்பார்த்து வேனன்சொல்லுகிறான் வாருங்கள்பிராமணாளேநீங்கள் தெரியாதவர்கள் அதர்மத்தைத்தர்மமென்று அறிந்தவர்

கள் விர்த்திகளைக்கொடுத்து ரட்சிக்கின்றராஜாவைவிட்டு
அன்னியனைப்பூசிப்பது சகலபேர்களையுங் கொடுக்கின்ற
பர்த்தாவைவிட்டுப் பரபுருஷனைப் பூசிக்கிற ஸ்திரீகள்
போலாயிற்று அப்படிப்பட்டவர்கள்இந்தலோகத்திலே
யும் லோகாந்தரத்திலேயும் சுகத்தையடையமாட்டார்க
ள் அந்தஎக்கியபுருஷனை விஷ்ணு-பிர்மா-ருத்திரன்-இ
ந்திரன்-வாய்வு-எமன்-சூரியன்-பர்சன்னியன்-குபேரன்-
சோமன்-பூமி-அக்கினி-வருணன் மற்றுமுள்ளதேவதை
களும் ராஜாவினுடையதேகத்திலேயே இருக்கிறார்கள்.
ராஜாசர்வதேவமயன் ஆனபடியினாலே நீங்கள் என்னை
யக்கியாதிகர்மங்களினாலே துவேஷத்தை விட்டவர்களா
ய்க்கொண்டு ஆராதியுங்களென்று அந்தவேனனால்அவ
மானம்பண்ணப்பட்டபிராமணாள் மங்களமானதங்கள்பி
ரார்த்தனை பலியாமற்போனதினாலே அந்தவேனன்பொ
ருட்டு கோபித்துக்கொண்டு பகவன்நிந்தனையினாலே மு
ன்னமே கெட்டுப்போயிருக்கிற வேனனை உங்காரங்களி
னாலே மிருதனாகப்போகும்படி சபித்துப்போட்டுரிஷிக
ள்தங்களுடைய ஆசிரமத்திற்குப் போனபிற்பாடு சுனி
தையானவள் துக்கித்துக்கொண்டு மந்திர பூர்வகமானபு
த்திசாதுரியத்தினாலேஅந்தப்புத்திரனுடைய சரீரத்தை
க்காப்பாற்றிக்கொண் டிருந்தாள் இப்படியிருக்க ஒருக்
கால் அந்தப்பிருகுமுதலான ரிஷிகளெல்லாம் சரஸ்வதி
தீர்த்தத்திலே ஸ்நானம்பண்ணிஅக்கினிகோத்திரங்களு
டன் சத்கதைகளைச் சொல்லிக்கொண்டிருக்கையில் பய
ங்கரமான தூளியானது பூமியில்நின்றும்எழும்பி திகந்
தங்களில் வியாபிக்கத்தக்கின மகோத்பாதங்க ளுடன்
லோகத்தினுடையதனத்தை அபகரிக்கிறவர்க ளாகியும்
ராஜாவில்லாமையாலே ஒருத்தரையொருத்தர் இம்சிக்
கிறவர்களாயுமிருக்கிற சோராளுடைய அந்த உபத்திர
வத்தையறிந்து இந்தராச்சியத்திற்கு ராஜாவில்லாவிடில்
கெட்டுப்போமென்றும் தர்மிஷ்டனான அங்கமகாராஜா
வினுடையவம்சமும் நசிக்கத் தகாதென்றும் ஆபத்தை
யடைந்தஜனத்தைப்பார்த்து உபேக்ஷயா யிருக்கிறவ
னுடையதபசு உடைந்தபாண்டத்திலேயிருக்கின்ற ஜல
மானதுபோல் ஒழுகிப்போகுமென்றுயோசித்து ரிஷிக
ள்மிருதனாயிருக்கிற அந்தவேனனுடைய துடையைச்சீக்
கிரமாகக்கடைந்தார்கள்அப்போது அந்தத்துடையிலே
பாகுகனென்றுஒருபுருஷன் காகத்தைப்போலே கறுத்
தும் குட்சையான அங்கத்தையும் புருவ நெருப்பினாலே
வக்கிரமானமுகத்தையும் குட்டைகளான பாதத்தையும்
பள்ளமானமூக்கினுனியையும் நீண்டகபோலங்களையும்
சிவந்தகண்களையும் சிவந்த தலைமயிர்களையும் உடையவ
னாயுமிருக்கிற புருஷனுண்டானான் அவன் ரிஷிகளுடை
யபாதங்களிலேவணங்கி தயிரியத்துடனே நான் என்ன
செய்கிறதென்று கேட்கின்ற அந்தப்புருஷனைப்பார்த்து
அந்தவேனன்செய்திருந்த பாபமெல்லாம் இந்தஉருவ
மாய்ப் பிறந்தபடியா லிவனை ரிஷிகள் நிஷிதமாவென்று
சொன்னார்கள்.

ஆகையினாலே அவன் ரிஷிதனானான் அவனுடைய
வமிசத்திலே பிறந்தவர்களெல்லாம் நிஷிதாளென்று கு
ரூரஜாதிகளாய் பர்வதங்கள் காடுகள் இதுகளை யிருப்பி
டமாகஉடையவர்களானார்கள், திரும்பவும் அந்த ரிஷிக
ளாலேகடையப்பட்ட அந்தராஜாவினுடையபாகுக்களி
ல்நின்றும் பகவதம்சங்களாய் ஸ்திரீபுருஷாளான இர
ண்டுபேர்கள்பிறந்தார்கள். அவர்களைப்பார்த்து அந்தரி
ஷிகள் பகவானுடையஅமிசமென்று அறிந்துமிகவும்சந்
தோஷத்தையுடையவளாய் ஒருவார்த்தை சொன்னார்க
ள் கேசவசுவரூபியான இந்தமகாபுருஷன் ராஜாக்களுக்
குமுந்தினவனாகவும் கீர்த்தியை விஸ்திரிப்பிக்கிறவனாயு
ம் பிருதுவென்று பிரசித்தமான பெயரை யுடையவனா
கஆகப்போகிறான். சோபங்களான தந்தங்களையுடையவ
ளாகியும் குணங்களையே பூஷணமாகவுடையவளாகியும்
லட்சுமிஅம்சமாயிருக்கிற இந்தஸ்திரீயானவள்அர்ச்சிசு
என்றுபெயரையுடையவளாய் இந்தபிருதுவைத்தானே
பர்த்தாவாகஅடைந்து உத்தமஸ்திரீயா யிருக்கப்போகி
றாளென்று பிராமணாள்ஸ்தோத்திரம்பண்ணார்கள்,கந்த
ர்வசிரேஷ்டாள் கானம்பண்ணார்கள், சித்தாள் புஷ்பவ
ருஷங்களை வருஷித்தார்கள், அப்சரஸ்திரீகள் நர்த்தன
ம்பண்ணார்கள், சங்கம்-மத்தளம்-தேவதுந்துமி முதலா
னதெல்லாம் ஆகாயத்திலேமுழங்கினதுகள் அவிடத்தி
லேசமஸ்தமானதேவதைகள் ரிஷிகள் பிதுர்க்கள் இவர்
களோடே ஜகத்குருவான பிரமதேவனானவன்வந்துவே
னனுடையபிள்ளையாயும் ஸ்ரீஹரியினுடைய அடையா
ளமான சக்கிரத்தை வலதுகையில்ரேகையாகஉடையவ
னாயுமிருக்கின்ற பிருதுவுக்கு பிராமணாள் பட்டாபிஷே
கமானது ஆரம்பிக்கப் பட்டது அப்போது நாலுதிக்கி
லேயுமிருந்து ஜனங்கள்அபிஷேக சாதனமான சாமக்கி
ரிகைகளைக் கொண்டுவந்தார்கள்,

இதல்லாமல் ஆறுகள்-சமுத்திரங்கள்- பர்வதங்கள்
சர்ப்பங்கள்-பசுக்கள்-பட்சிகள்-மிருகங்கள்-ஆகாசம்-பூமி
இன்னம் இதரமானபிராணிகள் இதுகளெல்லாங்கப்பங்
களைக் கொண்டுவந்து கொடுத்ததுகள் இந்தப்பிரகாரம்
பிராமணாளாலே அபிஷேகம் பண்ணம்பட்டவனாய் நல்
லவஸ்திரங்களினாலும் சர்வாபரணங்களினாலேயும்அல
ங்கரிக்கப்பட்ட அர்ச்சிசுஎன்கிறபத்தினியுடனே வேறே
ஒரு அக்கினிபோலே விளங்கினான் அந்தப்பிருதுமகா
ராஜாவுக்குப் பிர்மாவானவர் வேதமயமான கவசத்தை
யும் - குபேரன் - சொர்ன மயமாகியும், சிரேஷ்டமா
கியுமிருக்கிற ஒரு சிங்காசனத்தையும் வருணன் செல்

வத்தைப் பெறுகாநின்றும், சந்திரவர்ணமாயு மிருக்கிற குடையையும், வாயுவானவன் இரண்டுசாமரங்களையும் தர்மபுருஷன் கீர்த்தியைப்போ லொத்த மாலையையும், இந்திரன் உத்தமமான கிரீடத்தையும், யமன் ஆக்கியாசாதனமான தண்டத்தையும், சரஸ்வதி உத்தமமான ஆரத்தையும், உபேந்திரரான பகவான் சுதரிசன ஆங்கிசமான சக்கிரத்தையும், ஸ்ரீபகவானுடைய பத்தினியான இலட்சுமி நித்தியமாயிருக்கிற சம்பத்தையும், ருத்திரன் தேஜோசிதியான உறையையுடைய கத்தியையும், பார்வதி சந்திராகாரங்களை யுடைத்தான கேடயமும், சந்திரன் அமிர்தமயங்களான அசுவங்களையும், விசுவகர்மா சவுந்தரியங்களுக்கு இருப்பிடமான இரதத்தையு ், அக்கினி அஜகவமென்று பெயரையுடைய தனுசையும், சூரியன் கிரணமயங்களான பாணங்களையும், பூமிதேவியானவள் நினைத்த விடத்திலே கொண்டுபோய் விடத்தக்கதான பாதுகைகளையும், ஆகாசம் நாள்தோறும்புஷ்பவருஷத்தையும், சித்தாள் நாட்டிய கீதவாத்தியங்களிலே சாமர்த்தியத்தையும், அந்தர்த்தான சக்தியையும், ரிஷிகள் சத்தியங்களான ஆசீர் வசனங்களையும், சமுத்திரந் தன்னிடத்திலே பிறந்த சங்கத்தையுங் கொடுத்ததுகள், பின்னும்-சமுத்திரங்கள், பர்வதங்கள், நதிகள், மகாத்துமாவான பிருதுசக்கிரவர்த்திக்குஇரதத்துக்கு மார்க்கத்தைக்கொடுத்ததுகள். வேனனுடைய பிள்ளையாயும் பிரதாபசாலியாயு மிருக்கிற பிருதுவை ஸ்தோத்திரம்பண்ணவந்தவர்களான சூதமகா தவந்திகளைப்பார்த்து மேகம்போலே கம்பீரமானவாக்கினாலே புன்சிரிப்புடனேஒருவார்த்தை சொன்னான்,

வாராய் சூதமகாதவந்திகளே, லோகத்தில் பிரசித்தமாகாமலிருக்கிற குணங்களையுடைய என்னைக் குறித்து எந்தக்குணத்தை ஆசரித்து ஸ்தோத்திரஞ் செய்யப்போதீர்கள் என்னிடத்திலே உங்களுடைய வாக்குகள் வியர்த்தங்களாகவேண்டாம் இந்த ஸ்தோத்திரம் புண்ணியசுலோகரான பகவானுடையகுணகீர்த்தனத்திற்கு யோக்கியமாகவிருக்க அதைவிட்டுப் பெரியவாளுடைய கிருபைக்குப் பாத்திரனாப் மகத்துக்களுடைய குணங்களைச் சம்பாதித்துக்கொள்ளவேணுமென்று இச்சையையுடையநான் உங்கள் ஸ்தோத்திரத்திற் கு -ன்பட்டேன் நான் லோகத்திலே சிலாக்கியமான கர்மங்களினாலேபிரசித்தியை அடைந்தவனன்று ஆகையால்யென்னை எப்படி ஸ்தோத்திரம் பண்ணுவித்துக் கொள்ளுவேனென்று சொல்லுகின்ற பிருதுமகாராசாவினுடையவார்த்தையைக்கேட்டு சூதமாகதாள் ரிஷிகளினாலேயேவப்பட்டவர்களாய் ராஜாவினுடைய வாக்காகிற அமிர்தபானத்தினாலே சந்தோஷத்தை யடைந்தவர்களாய் அந்தராஜாவைக்குறித்துத் தேவசிரேஷ்டனானபகவான் தம்முடையசங்கற்பத்தினாலே பிருதுவாக அவதரித்தஉன்னுடைய மகத்துவத்தை வர்ணிக்கிறதற்குப் பிரம்மாதிகளுடையபுத்திகளும்பிரமிக்கும் அப்படியிருக்க நாங்கள்ஸ்தோத்திரம் பண்ணுகிறதற்கு எப்படி சமர்த்தாளாகப் போகிறோம் ஆனாலும் கம்பீரமானகீர்த்தியை யுடையவனாயும் ஸ்ரீஅரியினுடைய அங்கிசாவதாரமாகியு மிருக்கிற உன்னுடைய கதாமிர்த பானத்திலே ஆதாரவையுடையவர்களானரிஷிகளினாலேவப்பட்டவளாய்அவர்களுடைய ஆக்கினையைத் தள்ளிப்போடாமல் கொண்டாடத்தகதுகளான உன்னுடைய சரித்திரங்களை நாங்கள்ஸ்தோத்திரம் பண்ணுகிறோம், இந்தப் பிருதுமகாராஜா தர்மிஷ்டாளுக்குள்ளேசிரேஷ்டனாயும், தர்மத்தினாலேஜனங்களைப் பிரீதியை யுடையவர்களாகப் பண்ணுகிறவனாயும், தர்மமரியாதைகளை ரட்சிக்கிறவனாயும், தர்மத்தைக்கெடுக்கிற பேர்களை நிக்கிரகிக்கிரவனாயும், தன்னுடைய தேகத்திலே இந்திராதி லோக பாலாளுடைய அம்சங்களை அந்தந்த அம்சத்தை அதிக்கிரமியாமல் அந்தந்தக் காலத்திலே பரிக்கிறான் பாலனபோஷணாதிகளிலே பூலோகம் சொர்க்கலோகம் இவ்விரண்டுக்கும் அனுகூலமான காரியத்தைப் பண்ணுகிறவனாயும், இந்தராஜா சகல பிராணிகளிடங்களிலேயும், சமனா யிருந்துகொண்டு சூரியன்போலே தேஜசினாலே பிரகாசித்தவனாய் கப்பம் வாங்குகிற காலத்திலே அர்த்தத்தைக் கிரகிக்கிரவனாயும், க்ஷாமகாலங்களிலே அர்த்தத்தைக் கொடுக்கிறவனாயும்- நிற்கிறான் மிகவும் பொறுமையையுந் தயையுமுடையவனாகியும், இந்திரன் வருஷியாமற்போனாலுஞ் சீக்கிரமாக வருஷத்தை யுண்டாக்குவித்து கஷ்டத்தை அடைந்திருக்கிற பிராணிகளை ரட்சிக்கப்போகிறவனாயும், பிரீதியை கடாட்சத்துடனேயும், பிரகாசமான புன்சிரிப்பினாலேயும், மனோகரமா யிருக்கிற தன்னுடைய முகசந்திரனாலே லோகத்துக்குத் திருப்திபண்ணுவிக்கப்போகிறவனாயும், சமுத்திர ராஜன்போலே ஒருவருக்குந் தெரியாம லிருக்கிற நடத்தையை யுடையவனாயும, இதராளாலே அறியப்படாமலிருக்கிற காரியசித்தியை யுடையவனாயும், கம்பீரமான புத்தியையுடையவனாயும் தனராசிகளை ரட்சிக்கிறவனாயும், அனந்தமான மகத்துவங்களை யுடையவனாயும், கலியாணகுணங்களை யுடையவனாயும், சார்வகாலமும் அரிக்கு இருப்பிடமான இருதயத்தையுடையவனாயும், ஒருவராலேயும் அறியப்படாத இங்கிதங்களை யுடையவனாயும், சத்துருக்களுக்கு மனசினாலேயும் அடையக் கூடாதவனாகியும், சத்துருக்களினால் யுத்தத்தினாலே சயிக்கக் கூடாதவனாகியும். சேரவிருந்தாலும் தூரமிருக்கிறவன்போலேயும், வேனனாகிற அரணியில் நின்றும் உண்டான இந்தப்பிருதுவாகிற அக்கினி ஒருவராலேயும், பராக்கிரமத்தினாலே அவ

மானம்பண்ணப்படாதவனாகவும், பிராணிகளுக்குள்ளே வாசம்பண்ணுகின்ற பரமாத்மாவைப்போல ஜனங்களினாலே வெளியாகப் பண்ணப்பட்ட கர்மங்களையும், அந்தரங்கமாகச் செய்விக்கப்பட்ட கர்மங்களையும்-சாராள்முகமாக அறிந்திருந்தாலும், அறியாதவன் போலேயே யிருக்கிறவனாயும், தர்மமார்க்கத்தை அனுசரித்தவனாய்க்கொண்டு தனது சத்துருவினுடைய பிள்ளையானாலுந் தண்டிக்க யோக்கியனாகாதவனைத்தண்டிக்காதவனாயும், தனது புத்திரனானாலுந் தண்டிக்கத் தக்கவனைத் தண்டிக்கிறவனாயும், சூரியன் தன்னுடையகிரணங்களினாலே எவ்வளவு பூமிமட்டுக்கும் பிரகாசிக்கிறானோ அவ்வளவு பூமிமட்டுக்கும் தன்னுடைய ஆக்கினையையுடையவனாய் தனது நடத்தைகளினாலே சனங்களைச் சந்தோஷிப்பிக்கிறவனாயும், திடமான விரதத்தை யுடையவனாயும், சத்தியசந்தனாயும், பிராமணர்களையே தெய்வமாக எண்ணுகிறவனாயும். பெரியவாளை உபாசிக்கிறவனாயும், சகலபிராணிகளுக்குநும் ரட்சகனாகியும், தீனாளிடத்திலே வார்ச்சல்லியத்தை யுடையவனாகியும். மரியாதை பண்ணுகிறவனாகியும், பரஸ்திரீகளை மாதாவைப்போல் பார்க்கிறவனாகியும், தன்னுடைய ஸ்திரீயைத் தன் சரீரத்தில் பாதியைப்போலேயும், பிரஜைகளிடத்திலே பிதாவைப்போலே சினேகத்தையுடையவனாகியும், பிர்மவாதிகளானரிஷிகளுக்குத் தாசனாகியும், பிராணிகளுக்குத் தன்னுடையஆத்மாவைப்போலே யிஷ்டனாயும், சினேகிதாளுக்குச் சந்தோஷத்தைச்செய்கிறவனாயும், துஷ்டர்களைத் தண்டிக்கிறவனாயும், சகல ஔஷதிகளையும் தனக்குள்ளே அடக்கிவைத்துக்கொண்டிருக்கிற சொரூபியானபூமியைப் பராக்கிரமத்தினாலே கரக்கப் போகிறவனாயும்,தன்னுடைய தனுசுமுனையினாலே மேடுபள்ளமாயிருக்கிற இந்தப்பூமியை நாலு பக்கத்திலேயும் சமமாகச் செய்யப் போகிறவனாயும, திரிலோகாதிபதியாய் நிர்விகாரனாயும், அனந்தகல்யாணகுணகரனாயும், பரமாத்துமாவினுடைய அங்கிசாவதாரமென்று சொல்லப்படுகிறவனாகியும், தனிவீரனாய்க் கொண்டு உதயகிரிபரியந்தமான பூமண்டலத்தை ரட்சிக்கப்போகிறவனாயும், ஜயப்பிரதமான இரதத்திலேறிக்கொண்டு வில்லுங்கையுமாய்சூரியன்போல் பூமியைரட்சிக்கிற நிமித்தியமாய்ப்பிரதட்சணமாகச் சஞ்சரிக்கப் போகிறவனாயும், லோகபாலாளுடனே கூடின இராசாக்களிடத்திலும் கப்பம்வாங்கப் போகிறவனாயும், அந்தராஜாக்களுடைய ஸ்திரீகள் இவனுடைய யசசைக்கீர்த்தனம்பண்ணி ஸ்ரீமகாவிஷ்ணுவாக எண்ணத்தக்கவனாயும், விளையாட்டினாலே பருவதங்களையெல்லாம் தனது தனுசினுடைய முனையினாலே இந்திரனைப்போலே பிளந்து பூமியைச் சமமாகப்பண்ணிப் பிரஜைகளுக்கெல்லாம் விருத்தியைப் பண்ணுகிறவனாயும், அஜகவமென்கிற தனுசையெடுத்து சப்தித்துக்கொண்டு சிங்கம்போலச் சஞ்சரிக்கிறபோது அந்தந்தத்திக்குகளிலே யிருக்கிற சோராளெல்லாம் மறையச் செய்யப்போகிறவனாயும், சரஸ்வதிசான்னித்தியமுடையவனாயும், நூறு அசுவமேதம்பண்ணி தன்னுடையகிரகசமீபத்திலே யிருக்கின்ற உத்தியானவனத்திலேசனற்குமாரரை அடைந்து பக்தியினாலே அவரை ஆராதித்து அவராலே பரப்பிரமத்தை அடையும்படியான ஞானத்தை அடையப்போகிறவனாயும், சித்தமானகீர்த்தியையுடையவனாயும், பக்தியானபராக்கிரமத்தையுடையவனாயும், அங்கங்கே தன்னுடைய ஸ்தோத்திரரூபமான சரித்திரங்களைக் கேட்கப் போகிறவனாயும், திக்குகளையெல்லாம்ஜயித்து தடங்கலில்லாம லிருக்கிற ஆக்கினையையுடையவனாயும், தன்னுடைய தேஜசினாலே லோகத்தினுடையசல்லியத்தைப் போக்கடிக்கிறவனாயும், தேவாசுராளாலே ஸ்தோத்திரம்பண்ணப் படுகிறவனாயுமிருக்கிற பிரபாவத்தை யுடையவனாய்ப்பிரசித்தனாகப்போகிறான்.

## ௰௩-வது அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்,

அந்தமாம்பிருதுசக்கிரவர்த்தியுமகிலத்தின்றன்
நிந்தையாம்பசிதாகத்தை நினைத்துப் போக்கடிப்பதற்கு
சிந்தையிலடக்கம்பூமி தேவியைச்சிதைக்கவேண்டி
தொந்தமாம்பூமிதேவி தோத்திரஞ்செய்கின்றாளே.

பிருதுசக்கிரவர்த்தியானவன் லோகத்தினுடைய பசிதாகங்களைப் போக்கடிக்கநினைத்து வித்துக்களைத் தனக்குள்ளே அடக்கியிருக்கின்றபூமியை அடிக்குகைக்கு யத்தனம்பண்ணி பிற்பாடு அந்தப்பூமியினாலேஸ்தோத்திரம்பண்ணப்பட்டானென்று சொல்லப்படுகின்றது,

மைத்திரேயர்வாக்கியம்.

வாரீர்விதுரரே இந்தப்பிரகாரம் பிருது சக்கிரவர்த்தியானவன் குணங்களினாலேயும், கர்மங்களினாலேயும் பிரகாசிக்கப்பட்டவனாய் ஸ்தோத்திரம் பண்ணுகின்ற அந்தச்சூதகமாகதவந்திகளைச் சந்தோஷிப்பித்து பிராமணாள் தன்னுடைய சேவகர்கள் மந்திரிகள் புரோகிதர்கள் பட்டணத்துஜனங்களையும தேசத்திலிருக்கிறஜனங்கள் முதலானவர்களையெல்லாம் நன்றாகப்பூசித்தானென்று சொல்லுகின்ற மைத்திரேயரைப்பார்த்து விதுரர்பிரசினம் பண்ணுகிறார்,

வாரீர் ரிஷிசிரேஷ்டரே நானாருபையான இந்தப்பூமிஎதற்காகக் கோவினுடைய ரூபத்தைத் தரித்தாள் இவளைப் பிருதுவானவன் எதைக்கன்றாகவும் எதைக்கறக்கிறதற்குப் பாத்திரமாகவுஞ் செய்துகொண்டுகறந்தான் சுவபாகமாக மேடு பள்ளமா யிருக்கின்ற பூமியை

எப்படிசமமாகச்செய்தான். அவனுடைய யக்கியசாதன மானஅசுவத்தை இந்திரன்எதற்காகஅபகரித்தான்.

பிரமவித்துக்களுக்கெல்லாம் சிரேஷ்டராயிருக்கிற சனற்குமாரனிடத்தில்நின்றும் பிர்ம சாக்ஷாத் காரத்தையுடைய கியானத்தையடைந்து எந்தகதியை அடைந்தான், அதையெனக்குச்சொல்லவேணுமென்று கேழ்க்கிற விதுரரைப்பார்த்து மைத்திரேயர்சொல்லுகிறார்,

வாரீர்விதுரரே, அந்தப்பிருதுசக்கிரவர்த்தியானவன் பிராமணாளாலே ஜனங்களுக்கெல்லாம் ராஜாவாக அபிஷேகம்பண்ணப்பட்டபின்புபசியினாலேஇளைத்துப்போனதேகத்தையுடையபிரஜைகள் பிருதுசக்கிரவர்த்தியை அடைந்து பொந்துக்குள்ளே விழுந்திருக்கிற அக்கினியினாலே தகிக்கப்பட்ட விருக்ஷங்கள்போல் ஜாடராக்கினியினாலே தகிக்கப்படுகிற எங்களுக்கு அன்னத்தைக் கொடுக்கவேண்டுமென்று விதனப்பட்டுக்கேழ்க்கிற பிரஜைகளுடையவார்த்தையைக்கேட்டு வெகுகாலம்யோசனைபண்ணி பூமியானது ஓஷதிபீஜங்களைத்தனக்குள்ளே அடக்கிப்போட்டதினால் ஜனங்கள்பசியினாலேயிளைத்துப்போனார்களென்றுநிச்சயித்து அந்தப்பிருது சக்கிரவர்த்தியானவன் பூமியின்பேரிலே கோபத்தை யடைந்தவனாய் திரிபுரங்களைச்சங்காரம்பண்ணின ருத்திரன்போல் கையிலே தனுசையெடுத்துக்கொண்டு பூமியை அடித்துப்போடுகிறேனென்று பாணத்தைச் சந்தானம்பண்ணினான், அப்போது பூமியானவள் ஆயுதபாணியான அந்தப்பிருதுவைப்பார்த்து நடுங்கினவளாய் கோரூபத்தையெடுத்துக்கொண்டு வேடனாலேதுரத்தப்பட்ட மான்பேடானதுபோல்ஓடினாள் அவள்பின்னே அந்தப்பிருதுவானவன் தனுசிலே பாணத்தைச் சந்தானம் பண்ணிக்கொண்டு கோபத்தினாலே மிகவும்சிவந்தகண்களையுடையவராய்துரத்தினான் அந்தப்பூதேவிதிக்குவிதிக்குகள் ஆகாசம்பூமி அவைகளுடையமத்தியப்பிரதேசம் இதுகளெல்லாம்ஓடியும்விடாமல் பின்னே ஆயுதத்தையெடுத்துக்கொண்டு ஓடிவருகின்ற பிருதுசக்கிரவர்த்தியைக்கண்டு மிருத்தியுவினிடத்தில்நின்றும் பயப்பட்ட பிரஜைகள்போல்விசனத்தையடைந்து அந்தப்பிருதுசக்கிரவர்த்தியைப்பார்த்து ஒருவார்த்தைசொன்னாள்,

மகானுபாவனாயும், தர்மங்களைஅறிந்தவனாயுமிருக்கிற சரணாகதவச்சலனே நீ என்னையும் ரட்சிக்க வேணும் தீனையாயும் அபராதமில்லாதவளாயும் ஸ்திரீயாயு மிருக்கிற என்னை தர்மக்கியனென்று சொல்லப்படுகின்ற நீ எப்படி கொல்லவேணுமென்று எத்தனப்படுகிறாய், மகாஅபராதத்தைப்பண்ணியிருந்தாலும் ஸ்திரீகளை ஒரு பிராணிகளும் கொல்லார்களே உன்னைப்போலொத்தமகானுபாவான்ஸ்திரீகளைக்கொல்லார்கள் என்கிறதுக்குச் சொல்லவேண்டுவதென்ன என்னிடத்திலே இந்தலோகம் வைக்கப்பட்டிருக்கிறது மகாஜலத்திலே திடமானஓடமாயிருக்கிற என்னைக் கொன்று போட்டு உன்னையும் இந்தப்பிரஜைகளையும் எப்படி தரிக்கப்போகிறாயென்றிந்தப்பிரகாரம் சொல்லுகின்ற பூமியைப்பார்த்துபிருதுசக்கிரவர்த்தி சொல்லுகிறான்,

வாராய்பூமியே, என்னுடைய ஆக்கினையைத் தள்ளிப்போட்டிருக்கிற நீ-யக்கியத்திலேஉண்டானஅவிர்ப்பாகத்தையு மடைந்து தானியாதிகளை உண்டாக்காதவளாயிருக்கிறபடியினால் உன்னைக்கொல்லுகிறேன்கோரூபமாயிருந்துகொண்டு நாள்தோறும் திரணங்களைபபட்சித்து மடியிலிருக்கின்ற பாலைக்கறவாமற்போனால்பொல்லாததாயிருக்கிற அந்தப்பசுவை தண்டிக்கிறதற்கென்னதடைமூடப்புத்தியுள்ளநீயானவள் பிரம்மாவினாலே சிருஷ்டிக்கப்பட்ட ஓஷதிபீசங்களை கர்ப்பத்திலே வைத்துக்கொண்டு வெளிப்படுத்தாம லிருக்கிறாய் பசியினால் பீடிக்கப்பட்டும் மகாதுக்கிதாளாகியு மிருக்கிற இந்தப் பிரஜைகளுடைய துக்கத்தை என்னுடைய பாணங்களினாலே பிளக்கப்பட்டிருக்கிறஉன்னுடைய மாம்சத்தினாலே போக்கடிக்கப் போகிறேன் புருஷனாகட்டும்,ஸ்திரீயாகட்டும், நபும்ஜகனாகட்டும் தன்னைத்தானே சிலாகித்துக்கொண்டு பிராணிகளிடங்களிலே தயையில்லாதவனெவனோ அவனைக் கொல்லுகிறது ராஜாக்களுக்குத் தோஷமன்று மதித்தவளாயும், யுக்தமான காரியத்தை விட்டவளாயும், கபடையாயுமிருக்கிற உன்னைப்பாணங்களினாலே கண்டங் கண்டமாகப் பண்ணி என்னுடைய யோகபலத்தினாலே இந்தப் பிரஜைகளை தரிக்கப்போகிறேனென் றிந்தப் பிரகாரம் கோபிஷ்டனாயும், யமனைப்போலே பயங்கரனாயுமிருக்கிற அந்தப்பிருதுசக்கிரவர்த்தியை ஸ்ரீமந்நாராயணராகப் பார்த்து தீனமானவசனங்களினால் ஸ்தோத்திரம் பண்ணுகிறாள் (தேவரீருடைய சம்பந்தமான) பிரகிருதியினாலே உண்டாக்கப்பட்ட நானாவிதமான தேவமனுஷியாதி சரீரங்களையும், சத்துவாதி குணங்களையும் உடையவராயும் தன்னுடைய ஆனந்தானுபவத்தினாலே ஆத்தியாத்மிகம், ஆதிபவுதிகம் ஆதி தெய்வீகமென்கிற மோககாரியங்களான ராகத்துவேஷாதிகளைவிட்டவராயும் பரமபுருஷராயு மிருக்கிற உமக்கு நமஸ்காரம்பண்ணுகிறேன் நான் பிராணிகளுக்கெல்லாம் இருப்பிடமாகவும், சுவேதசம், அண்டசம், சாயுசம். உத்பீஜமென்கிற பூதங்கள் தரிக்கப்படத் தக்கவளாயும்,அனுக்கிரகித்து இப்போது ஆயுதபாணியாய் என்னைக் கொல்லவேணுமென்று வந்தால் நான்வேறே எவனைச் சரணமாகஅடைவேன் ஆதிகாலத்திலேஇந்த ச்சராசராத்மகமான பிரபஞ்சத்தை பிரகிருதியினாலே சிருஷ்டித்த மாயையினாலே தானே ரட்சிக்கிறத்துக்கு

ஏற்பட்டிருக்கிறநீர் என்னையே கொல்லவேணுமென்று இச்சிக்கிறீர் விவேகமில்லாத ஜனங்களினாலே ஈஸ்வரனுடையஇச்சையானது அறியப்பட்டதன்று காணப்படாதவராயிருந்துகொண்டு மகதத்துவமுதலாகபிர்மபரியந்தத்தைச் சிருஷ்டித்து அந்தப்பிர்மாவைக்கொண்டு பிரபஞ்சத்தையெல்லாம்சிருஷ்டிபண்ணுவித்தபரமபுருஷரானஉமக்குநமஸ்காரம்.

வாரீர்பகவானே, பஞ்சபூதங்கள் இந்திரியங்கள் மனதுஇந்தரூபமான இந்தஜகத்தை ஸ்தாபிக்கப்போகிறவராய் ஆதிவராகரூபியாய் பாதாளத்திலிருந்த என்னை ஜலத்தில்னின்றும் எடுத்தீர். ஜலத்தில்என்னைஓடம்போலஆதாரமாகவுடைய இந்தப்பிரஜைகளைரட்சிக்கவேண்டுமென்கிற இச்சையைவாய்ந்து பிருதுவென்கிற ரூபத்தையுடையவராக அவதரித்து ஓஷதிபீஜங்கள் நிமித்தியமாக உக்கிரமானபாணத்தையுடையவராய்க்கொண்டு என்னைக்கொல்லவேணுமென்று இச்சிக்கிறீர் ஈஸ்வரனுடைய சத்துவாதிகுணரூபையான மாயையினாலேபிர்மிக்கப்பட்டநான் பாகவதாளுடையகருத்தையே அறியசக்தியில்லாமலிருக்க தேவரீருடையபிரபாவத்தைஎப்படி அறியப்போகிறேன்,

---

## ௰௯-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்;

சார்ந்திடும்பிருது சக்ரவர்த்தியால்
பேர்ந்திடும்பூமி யானதவாளவாள்
நேர்ந்திடும்போல் நிகழ்பாலினைக்கறந்
தார்ந்திருந்த தெனவறைந்திட்டதே,

பிருதுசக்கிரவர்த்தியால் அந்தப்பூமியானது அவாள் அவாளுக்கு யோக்கியமானபாலைக் கறக்கப்பட்டதென்றுசொல்லப்படுகின்றது.

மைத்திரேயர்வாக்கியம்,

வாரீர்விதுரரே, அந்தப்பூமியானவள் கோபத்திலே துடிக்கின்ற வுதட்டையுடைய பிருதுசக்கிரவர்த்தியைத்திரும்பவும் மனதைத்தைரியப்படுத்திக்கொண்டு ஒருவார்த்தைசொல்லுகிறாள்,

வாராய்பிரபுவே, கோபத்தைவிட்டு என்னுடைய விக்கியாபனத்தைக்கேள் வண்டானது புஷ்பத்திலிருக்கிற மதுவை கிரகிப்பதுபோல் விவேகியானவன் சகலவஸ்துசாரத்தையுங்கிரகிப்பான் தத்துவத்தையறிந்திருக்கிற ரிஷிகளினாலே புருஷார்த்த சாதகங்களான உபாயங்கள் காணப்பட்டுஞ் செய்யப்பட்டு மிருக்கிறதுகள் பூர்வீகாளாலேகாண்பிககப்பட்டஉபாயங்களைச்சிரத்தையுடனே செய்கிறவன் சீக்கிரமாகப்பலன்களை யடைவன் பூர்வீகாளுடையஉபாயங்களைவிட்டு யத்தினம்பண்ணுகிற அவனுக்குப் புருஷார்த்தங்களசித்திக்கிறதுகளில்லை.

வாராய் ராஜாவே, பிர்மாவினாலே சிருஷ்டிக்கப்பட்டஓஷதிகள் விரதநியமங்கள் இல்லாத துஷ்டர்களாலே புசிக்கப்படுகிறதாகவும் உன்னைப்போலொத்த ராஜாக்களாலே ரட்சிக்கப் படாததாயுங்காணப்பட்டு அந்த ஓஷதிகளை நான்பட்சித்தேன் இப்போது அந்த ஓஷதிகளெல்லாம் வெகுகாலமானதினாலே என்னிடத்தில் லயத்தையடைந்ததுகள். இப்போதுபூர்வீகளாலே காணப்பட்டவுபாயத்தினாலே அந்த ஓஷதிகளை அடைகிறத்துக்குநீவோக்கியன் பிராணிகளுக்குப் பலத்தைப்பண்ணுகிறதாயும் இஷ்டமாயுமிருக்கிற அன்னத்தைஇச்சித்தால் நான்எந்தக்கன்றினிடத்திலே வாற்சல்லியத்தையுடையவளாய் உனக்குப்பால ரூபங்களான மனோரதங்களைக்கொடுப்பனோ அப்படிப்பட்டிருக்கிறகன்றையும்கறக்கிறவனையும் கறக்கத்தக்கபாத்திரத்தையும் எனக்குநீகற்பிக்கவேண்டும்,

வருஷஜலமானது என்னிடத்திலே நிற்கும்படி சமமாகப்பண்ணவேண்டுமென்றுபிரியமாயும், இதமாயுமிருக்கிறபூமியினுடையவார்த்தையைக்கேட்டுஅந்தராஜாவானவன் மனுப்பிரஜாப யைக் கன்றாகப்பண்ணிக்கொண்டு தன்னுடையகையாகிற பாத்திரத்திலே சகல ஓஷதிகளையும்கறந்தான் பிற்பாடுரிஷிகள்முதலாகப் பதினைந்துபேர் பிருதுவினாலே வசீகரிக்கப்பட்ட பூமியிலேயிருந்து தங்கள்தங்கள்இஷ்டத்தைக் கறந்துகொண்டார்கள், அதெப்படியென்றால் ரிஷிகள்இந்திரியங்களாகிறபாத்திரங்களிலே பிரகஸ்பதியைக்கன்றாகப்பண்ணிக்கொண்டு வேதமயமான சுகியான பாலைக் கறந்துகொண்டார்கள். தேவகணங்கள் இந்திரனைக்கன்றாகப்பண்ணிக்கொண்டு சொர்னமயமானபாத்திரத்தினாலே அமிர்தபாலைக் கறந்துகொண்டார்கள், தைத்தியதானவாள் அசுரசிரேஷ்டனை பிரகலாதனைக்கன்றாகப்பண்ணிக்கொண்டு இரும்புமயமான பாத்திரத்திலே சுராமத்தியமான க்ஷீரத்தைக்கறந்துகொண்டார்கள்,கந்தருவாளும் அப்சரஸ்களும் விசுவாவசுவைக்கன்றாகப்பண்ணிக்கொண்டுபத்மமயமானபாத்திரத்திலே கானமயமானமதுவையும் சவுந்தரியத்தையும் க்ஷீரமாகக் கறந்துகொண்டார்கள்.

சிரார்த்ததேவதைகளானபிதுருக்கள் அறியமாவைக்கன்றாகப் பண்ணிக்கொண்டு பச்சை மண்பாத்திரத்திலே பிதுர்க்களுடைய அன்னமான கவ்யமாகிய க்ஷீரத்தைக்கறந்துகொண்டார்கள் சித்தாள் கபிலனைக்கன்றாகப்பண்ணிக்கொண்டு ஆகாசமென்கிறபாத்திரத்திலேஅணிமாதிசித்திரூபமான க்ஷீரத்தைக் கறந்துகொண்டார்கள், வித்தியாதராள் அந்தக்கபிலனையே கன்றாகப்பண்ணிக்கொண்டு ஆகாசமென்கிறபாத்திரத்திலே ஆகாசத்திலே சஞ்சரிக்கிற வித்தையாகிற க்ஷீரத்தைக் கறந்து

துகொண்டார்கள் மாயாவியான கிம்புருஷாள் முதலானபேர் மயனைக்கன்றாகப் பண்ணிக்கொண்டு அந்தரத்தானமாய்ப் போகிற மாயையைக் கறந்துகொண்டார்கள் யக்ஷாள், ராக்ஷசாள், பூதங்கள், பிசாசங்கள், இவர்கள் ருத்திரனைக் கன்றாகப் பண்ணிக்கொண்டு கபாலமாகிற பாத்திரத்திலே இரத்தமாகிற மத்தியத்தைக் கறந்துகொண்டார்கள் சர்ப்பங்கள் விருச்சிகமுதலான துஷ்டஜந்துக்களும் இரும்புமயமானபாத்திரத்திலே விஷமாகிறக்ஷீரத்தைக் கறந்துகொண்டார்கள், பசுக்கள் ரிஷபத்தைக் கன்றாகப்பண்ணிக்கொண்டு காடென்கிற பாத்திரத்திலே திரணமாகிற க்ஷீரத்தைக்கறந்துகொண்டார்கள் கோரைப்பற்களையுடைய மிருகங்கள் சிங்கத்தைகன்றாகப்பண்ணிக்கொண்டு தங்களுடையசரீரமென்கிறபாத்திரத்திலே மாங்கிசமயமாகிற க்ஷீரத்தைக்கறந்துகொண்டார்கள் பட்சிகள் கருடனைக் கன்றாகப்பண்ணிக்கொண்டு புழுக்கள் பழங்கள்முதலான க்ஷீரத்தைக்கறந்துகொண்டார்கள் விருக்ஷங்கள் ஆலமரத்தை கன்றாகப்பண்ணிக்கொண்டு அதற்கதற்கு வேறுவேறான வாசனையைப் பாலாகக்கறந்துகொண்டதுகள் பருவதங்கள் இமவத்பருவதத்தைக் கன்றாகப்பண்ணிக்கொண்டு தங்களுடைய தாழ்வரையிலே பொன்னருவி முதலான நாநாதாதுக்களையும் க்ஷீரமாகக் கறந்துகொண்டதுகள். இதரபிராணிகளும் தங்கள் தங்களிலே முக்கியமானவனைக் கன்றாகப்பண்ணிக்கொண்டு தங்கள்தங்களுடைய பாத்திரத்திலே வெவ்வேறான சர்வகாமங்களையும் கறந்துகொண்டார்கள்.

வாரீர் குருசிரேஷ்டனே இந்தப்பிரகாரம் பிருதுசக்கிரவர்த்திமுதலானபேர்கள் பூமியில்நின்றும், தங்கள்தங்கள் பாத்திர பேதத்தினாலேயும் கன்றுபேதத்தினாலேயும் க்ஷீரமும் பேதித்ததென்று அறியத்தக்கது பிற்பாடு அந்தப் பிருதுசக்கிரவர்த்தியானவன் சர்வாபீஷ்டத்தையும்கறந்த அந்தப் பூமியினிடத்தில் வாற்சல்லியத்தையுடையனாய்த் தனக்குப் பெண்ணாகப் பாவனைபண்ணிப் பிரஜைகளுக்குச் சீவனத்தைக் கொடுத்த அந்தப்பூமியைத் தன்னுடைய தனுசுமுனையினாலேபர்வதசிகரங்களைச் சூர்ணங்களாகப்பண்ணி நாலுபக்கமும் சமமாகச்செய்து இந்தப் பூமண்டலத்திலே அங்கங்கேயதாயோக்கியமாகப் பிரஜைகளுக்குக் கிராமங்களையும் நகரங்களையும் பட்டணங்களையும் நானாவிதங்களானகிரிதுர்க்கங்களையும் சலதுர்க்கங்களையும் வனதுர்க்கங்களையும், வேடச்சேரிகளையும், இடைச்சேரிகளையும், தண்டிருக்கஇடங்களையும் சுவர்ணமுதலான தாதுக்களுடைய வுற்பத்திஸ்தானத்தையும் உழுகிறநிலங்களும் பர்வதசமீபங்களிலேயிருக்கப்பட்ட கொல்லைகளும்இதுகளையெல்லாம்கற்பித்தான் இந்தப்பிருதுசக்கிரவர்த்தி அவதாரத்துக்குமுன்னே பட்டணம் கிராமமுதலான வாசஸ்தானங்களில்லை எவனெவனுக்கு எங்கெங்கே யிஷ்டமோ அந்தந்தஇடங்களிலே பயமில்லாமல்சுகமாகவாசம்பண்ணிக்கொண்டிருப்பார்கள்.

---

## ௰௭வது அத்தியாயம்.

கலிவிருத்தம்;

அந்தமாச்செய் யஸ்வமேதவஸ்வத்தை
இந்த்ரராஜ னொளிக்கவெண்ணங்கொண்ட
தந்தசூழ்ச்சி யறிந்துகொல்பிருதுவை
உந்திபூத்தோன் தடுத்ததுரைசெய்வாம்.

அசுவமேதத்தில் அசுவத்தைஅபகரியாநின்ற இந்திரனைக்கொல்லவேணுமென்று எத்தனித்தபிருதுசக்கிரவர்த்தியைப் பிர்மாவந்து தகைந்தானென்று சொல்லப்படுகின்றது.

மைத்திரேயர்வாக்கியம்.

வாரீர் விதுரரே பிற்பாடு ராஜரிஷியான அந்தப்பிருதுசக்கிரவர்த்தியானவன் சரஸ்வதிநதிதீரமானபிர்மாவர்தமென்கிற புண்ணியக்ஷேத்திரத்திலே அசுவமேதம்பண்ணக்கடவோமென்று தீட்சித்துத் தொண்ணூற்றொன்பது அசுவமேதஞ்செய்துநூறாவது அசுவமேதஞ்செய்ய ஆரம்பித்த பிருதுவினுடைய அந்த யக்கியமகோச்சவத்தைப்பார்த்து யக்கியங்களுக்கெல்லாம் சுவாமியாயும் பிரபுவாயுமிருக்கிற விஷ்ணுவானவர் பிர்மருத்திராதிகள் அஷ்டதிக்குப்பாலாளுடனேயும் கூடினவராய், கந்தர்வரிஷிகள, அப்சரஸ்திரீகள், சித்தவித்தியாதராள், தயித்திபதானவாள், யக்ஷாள், சுனந்தனந்தாள் முதலான அரியினுடைய பாரிஷத சிரேஷ்டர்கள் - கபிலர் - நாரதர் - தத்தாத்திரேயர் - சனக சனந்தனுள் முதலானயோகீஸ்வராளும் மற்றுமுள்ள பகவற்சேவபராளான பாகவதாளும் சேவித்துக்கொண்டு பின்சென்றார்கள, அந்தயக்கியத்தில் சர்வகாமங்களையும் கொடுக்கப்பட்ட பூமியானவள நெய்முதலான அபீஷ்டார்த்தங்களை ராஜாவுக்குக்கொடுத்து நதிகள. கரும்புரசம்-திராட்சரசமுதலான ரசங்களையும் பால் தயிர் மோர் நெய்-பாயசம்-அன்னம் இதுகளையும் பெருகிற்றதுகள, விருக்ஷங்கள், மதுரமாயிருக்கிறபலன்களை உண்டாக்கிறதுகள் சமுத்திரங்கள் ரத்தின ராசிகளைக் கொடுத்ததுகள, பருவதங்கள நாலுவகைப்பட்ட அன்னத்தைக்கொடுத்ததுகள சமஸ்தமானஜனங்களும் ராஜாக்களும்உலுப்பைகளைக் கொண்டுவந்து கொடுத்தார்கள இப்படிக்கொத்த நாராயணஅம்சமான பிருதுவினுடைய அதிகமான அயிசுவரியத்தைச் சகியாதவனாய் இந்திரன் அந்தயக்கியத்துக்கு விவாதத்தைப்பண்ண இச்சித்துபிருது

சக்கிரவர்த்தியினுடைய கண்ணுக்குத்தட்டாமல் பாஷண்டவேஷமாய் அந்த யக்கியபசுவை அபகரித்துக்கொண்டு ஆகாசத்தில் கிளம்பிப்போகிறஇந்திரனை அத்திரிமகாரிஷியானவர்கண்டு மகாரதனை பிருதுபுத்திரனுக்குக்காட்டினர் அவன் கோபத்தையடைந்தவனாய் பின்னே துரத்திக்கொண்டுபோய் நில்நில்லென்றுசொல்லிக்கொண்டு தர்மமயமான சரீரத்தையுடையவனும், ஜடாதாரியாயும் பஸ்மத்தினாலேபூசப்பட்டுமிருக்கிற தபசியாகவெண்ணி அவன்பேரில் பாணத்தைப் பிரயோகியாமல் திரும்பிவிட்டபிருது புத்திரனைப்பார்த்து அத்திரிமகாரிஷியானவர் திரும்பியும் அவனைக்கொல்லுகைக்கு ஏவினர்,

அந்தப் பிருதுகுமாரன் ஆகாசமார்க்கத்திலேஓடுகின்ற இந்திரனைத்துரத்தினன் அந்த இந்திரன் அந்த அசுவத்தையும் அந்தவேஷத்தையும்விட்டு மறைந்தான் பிருதுகுமாரன் யக்கியபசுவைக்கிரகித்துக்கொண்டு தகப்பனருடைய யக்கியத்தையடைந்தான் அவனுடைய அற்புதகாரியத்தைப்பார்த்து மகாரிஷிகள்விசித்ரசுவனென்கிறபேரைக் கொடுத்தார்கள் திரும்பவும் இந்திரன் காடாந்தகாரத்தைச் சிருஷ்டித்து அதிலேமறைந்துகொண்டு திரும்பவும் அந்த அசுவத்தை அபகரித்துக்கொண்டு ஆகாயமார்க்கத்திலேஓடுகின்ற இந்திரனைப்பார்த்துத் திரும்பவும் அத்திரிமகாரிஷியானவர் பிருதுகுமாரனுக்குக்காண்பித்தார் அந்தவிசிதாசுவன் இந்திரனைக்கொல்லாமல் விடுகிறதில்லையென்று தனுசினாலே பாணத்தைச்சந்தானம்பண்ண அந்த இந்திரன் அந்த அசுவத்தையும் அந்தவேஷத்தையும்விட்டு அவன்கண்ணிலேபடாமல் மறைந்திருந்தான் திரும்பவும்வீரனை விசிதாசுவன் அசுவத்தைக் கிரகித்துக்கொண்டு தகப்பனுடைய யக்கியத்தையடைந்தான் சத்புருஷாளாலே நிந்திக்கப்பட்ட அந்த இந்திரன்தரித்த ரூபத்தைப் பாஷண்டமென்று சொல்லப்படுகின்றது ஜயினுள் பவுத்தாள் கபாலிகாள் இவர்கள் தர்மம்போலே காணப்படுகின்ற அந்தப்பாஷாண்டவேஷத்தில் விருப்பமுள்ளவர்களாய்த் தரிக்கின்றார்கள் அதின்பிற்பாடு ஞானசக்திசம்பன்னனான பிருதுசக்கிரவர்த்தி கோபத்துடன் இந்திரனை அடித்துப்போடுகிறேனென்று தனுசிலேபாணத்தைச்சந்தானம்பண்ணின பிருது சக்கிரவர்த்தியைப் பார்த்து ரித்துவிக்குகள் அந்தஅரசனைநோக்கி இந்தயச்கியத்திலே விதிக்கப்பட்ட பசுவதமன்றி வேறொருஇம்சைசெய்யக்கூடாதென்று நிறுத்தி அந்தஇந்திரனைமகத்தாகிய சக்திகளையுடைய ஆகுதிகளினாலே இந்திரனை அக்கினியிலே ஓமம்பண்ணிப்போடுகிறோமென்றிந்தப்பிரகாரஞ்சொல்லி அவனனுமதிபெற்று சுறுக்கு என்கிற ஓமபாத்திரத்தால் ஓமம்பண்ணுகின்ற ரித்விக்குகளை நோக்கிப் பிர்மாவானவர் ஒருவார்த்தை சொல்லுகிறார்,

வாருங்கள் ரித்விக்குகளே இந்த இந்திரனானவன் பகவத்சுரூபியாயிருந்து யக்கியத்தினால் பூசிக்கப்பட்டவன் இவனைக்கொல்ல உங்களால் சக்கியப்படாதென்று நிறுத்தி இந்தப்பிருதுவானவன் ஒன்றுகுறைய நூறு அஸ்வமேதம்பண்ணினதினாலேயே கோனசதக்கிருதுவென்று பிரசித்தனாய் இந்திரனைக்காட்டிலும் அதிசயித்த கீர்த்தியையுடையவனாயிருக்கக்கடவனென்றுசொல்லி பிருதுவைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகிறார் வாரும் பிள்ளாய் பிருதுவே உன்னாலேசெய்யப்பட்டயக்கியங்கள்போதும் மோட்சதர்மத்தைஅறிந்த நீஇந்திரனிடத்தில் கோபம்வையாமல் பகவத்சுவரூபியானநீங்களிருவரும் அன்னியோன்னியமாயிருங்களென்று பிர்மமாவாலாக்கியாபிக்கப்பட்டவண்ணம் இந்திரனுடன் சினேகிதனாய் அவபிருதஸ்நானஞ்செய்து தேவதைகளால் அடையவேண்டிய வரத்தையடைந்து தட்சணைகளால்பிராமணாளுக்குத் திருப்திசெய்வித்தான்,அந்த அரசனைநோக்கி அந்தணர்கள்சொல்லுகிறார்கள்

வாராய் மகாபாகுவே,இந்தயக்கியத்திலேவந்ததேவதைகள்-ரிஷிகள்-மனுஷியாள்- சமஸ்தமானபேர்களும் உன்னாலே நன்றாய்ஆதரிக்கப்பட்டவர்களாய்தானங்களினாலேயும், வெகுமானங்களினாலேயும் பூசிக்கப்பட்டார்கள்,

## ய_அ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

எஞ்சலில்லாப் பிருதுவின்யெக்பத்தில்
அஞ்சனமேனி யானேன்பிரிதியுடன்
தஞ்சமென்ற பிர்துவுக்குத்தத்துவ
டிஞ்சியிம்படிக் கேவரமீந்தனர்,

பிருதுவினுடைய யக்கியத்தினாலேசாக்ஷாத் விஷ்ணுவானவர் பிரீதியுடன் அந்தப்பிருதுவுக்குத்தத்துவஉபதேசஞ்செய்து வரங்கொடுத்ததைச் சொல்லப்படுகின்றது.

மைத்திரேயர்வாக்கியம்,

வாரீர் விதுரரே இந்தப்பிரகாரம் பிருதுசக்கிரவர்த்தியினாலே பண்ணப்பட்ட யக்கியங்களுக்குச்சந்தோஷித்து ஸ்ரீமுகுந்தனானவர் இந்திரனுடன் பிருதுசக்கிரவர்த்தியைநோக்கி ஒருவார்த்தைசொன்னார்,

வாராய்ராஜனே,இந்தஇந்திரன் உன்னுடைய யாகத்தை விக்கினஞ்செய்ததற்கு நீ பொறுத்துக்கொள்ளவேண்டும்,சாதுக்களாயும் உத்தமாளாயுமிருக்கிற கியானிகள் பிராணிகளுக்குத் துரோகத்தைப் பண்ணார்கள் இந்ததேகத்தைக்கர்மமூலமானபுண்ணியபாபமென்கிற

கர்மங்களினலே உண்டாக்கப்பட்டதென்று அறிந்த ஆத்துமக்கியானியானவன் இந்தச் சரீரத்தில் ஆசக்தியைப்பண்ணுன். ஆத்மாவான ஜீவனைக்காட்டிலும் பரமாயுமிருக்கிறவன் ஈஸ்வரன் தேகத்தைஆஸ்ரயித்து இருக்கிற தர்மங்கள் தேகத்தை ஸ்பரிசித்துக்கொண் டிருக்கிற ஆத்மாவுக்கில்லை தேகம் பாலியாகவுமாராதி பேதத்தினலே அனேகரூபமாயும் தோஷத்துடனே கூடினதாயும், கியானசூனியுமாயும், சத்வாதி குணத்தோடே கூடினதாயும்,மாயாகுணங்களையுடையதாயும்,அல்பமாயும்,கிரகாதிகளிலே அடங்கினதாயும், ஈஸ்வரனலேகாணப்பட்டதாயும், ஆத்துமாவையுடையதுமாகியு மிருக்கிறதேகம் இந்தத்தேகத்திலே யிருக்கிற அந்தராத்மாவை அறிந்தவன் தேககுணங்களினலே அகப்படாமல்பரமாத்துமாவான என்னிடத்திலேயே இருப்பன்.

வாராய்ராஜனே சிரத்தையுடையவனய்என்னையே பஜனை பண்ணுகிறவனுடைய மனசாசுத்தமாய் பிரகாசமான ஆத்மக்கியானத்தை யுடையவனய்மோட்சத்தையடைவன், சுகதுக்கங்களிலும் உத்தம மத்திம அதமாளையும், சமமாகப்பார்க்கிறவனயும், இந்திரியங்களை ஜயித்தவனயுமிருக்கிற நீ-நம்மாலே உண்டாக்கப்பட்டமந்திரிபடாள்முதலான சமஸ்த பரிவாரங்களுடன் ராஜாக்களுக்குப் பிரஜைகளை ரட்சிக்கிறதே உத்தமமானதர்மம் ரட்சியாமற்போனுகில் பிரஜைகளினலே அரிக்கப்பட்ட புண்ணியத்தை யுடையவனய் பாபத்தை அனுபவிப்பன், பிரீதியோடேகூடின ஜனங்களையுடையநீகொஞ்சகாலத்தில் உன்னுடைய கிரகத்துக்குவருகின்ற சனகாதியோகிகளைப் பார்க்கப்போகிருய்,உனக்குவேண்டியவரத்தைக் கேளென்று பகவானு லாக்கியாபிக்கப்பட்ட பிருதுசக்கிரவர்த்தியானவன் தான் செய்த அபராதத்திற்கு வெட்கப்பட்டுக்கொண் டிருக்கின்ற இந்திரனை ஆலிங்கனஞ் செய்துகொண்டு சந்தோஷசித்தனய் முராஹரியான ஸ்ரீபகவானை நமஸ்கரித்து அஞ்சலிபதத்துடன் ஒருவார்த்தை சொன்னுன்.

வாரீர் நாதனே பெரியவாளுடைய இருதயமத்தியத்தில்நின்றும் வெளிப்புறப்படுகின்ற உம்முடையபாதார விந்தங்களின் மகத்தரமான கீர்த்தியைக் கேட்கிறத்துக்கு பதினயிரஞ்செவிகளை யருளவேண்டும் ஸாராம்சத்தை அறிந்திருக்கிறவெனக்கு அந்தயசசைக் கேட்கிறதன்றி வேறொருவரங்கள் வேண்டாம் பெரியவாளுடைய கோஷ்டியில் உம்முடைய மங்களகரமானகீர்த்தியைக் கேட்கவேணுமென்கிற யெத்தனமன்றியிற்றுனே ஒருக்கால் கேட்டானேயாகில் மூடமானபசுவைத்தவிர சாரத்தையறிந்தவன் எவன்தான் அந்தக் குணனுபவத்தில்நின்றும்ஒழிவன் கல்யாணகுணகராயும் புருஷோத்தமராயுமிருக்கிறவும்மை லட்சுமியானவள்சரணமாக அடைந்தாற்போல் நானுமடைந்தேன் எங்களிருவருக்கும் நீர்ஒருபுருஷனயிருக்கிறபடியால் எங்களுக்குக் கலகமுண்டாகாமற் போகவல்லமையுடன் எங்களுக்குச் சமமாக இதத்தைப் பண்ணுமென்று பிருதிவினல் ஸ்தோத்திரம்பண்ணப்பட்டபகவான் அந்தப்பிருதுவைக் குறித்து ஒருவார்த்தைசொல்லுகின்றுர்.

வாராய்ராஜாவே என்னிடத்தி லுனக்குத் தெய்வசங்கற்பத்தினலே பத்திபண்ணப்பட்டு சொன்னவார்த்தைநன்றுயிருக்கின்றதுஎல்லாரும் பசுவாதிபாலன்களைக்கோருகிருர்கள் நம்மிடத்திலாசக்தியுடையவர்கள்சொர்க்கமோக்ஷநரகங்களைச் சமமாகப்பார்ப்பார்கள் உன்னிடத்தில் நான்சந்தோஷித்தேன் எனது சுவரூப சிக்ஷையைவிசுவசித்து பிரகிருதிதேகாபிமான தோஷத்தைவிட்டு அர்த்தயுக்தமாய்ச் சொன்னவார்த்தைக்குச்சந்தோஷித்தேன் உனக்குமங்களமுண்டாகக்கடவதென் றனுக்கிரகித்து அவனுடையமனதை அபகரித்துக்கொண்டு தம்முடையஸ்தானத்தையடைந்தார் பிற்பாடு தேவாள் ரிஷிகள்-பிதுர்க்கள்-கந்தர்வாள்-சித்தாள்-சாரணுள்- உரகாள்-கின்னராள்-அப்சரசுகள்-மனுஷியாள்-பக்ஷிகள்- பூதங்கள்-இவர்களெல்லாரும் பகவத்சுரூபமென்று பக்திகளினலே வெகுப்பிரகாரமாகப் பூசிக்கப் பட்டவர்களாய்தங்கள்ஸ்தானத்தையடைந்தார்கள், சனகாதிகளும் ராஜாவினலே நன்றுகப்பூசிக்கப்பட்டுப் பகவானைஅனுசரித்துச் சுவஸ்தானத்தையடைந்தார்கள், ராஜாவும்அந்த வாசுதேவன்பொருட்டு பிரணமத்தைப்பண்ணி தன்னுடையபட்டணத்தைச் சேர்ந்தார்.

---

## ௰௯-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

மேவும்சந்திர மென்னும்யக்கியத்தில்
தேவதைகள் முதலானதிவ்ய
சேவும்பிருதிவி னற்செய்யும்பிரஜைகள்
மாவலங்கார சிருஷ்டிவழுத்துவாம்.

மகாசத்திரமென்னப்பட்ட யக்கியத்தில் தேவதைகள் முதலானபேருடைய மகாசதசில் பிருதிவினலே பண்ணப்பட்ட பிரஜைகளினுடைய அலங்காரசிருஷ்டிசொல்லப்படுகின்றது.

மைத்திரேயர்வாக்கியம்.

வாரீர்விதுரரே அந்தப்பிருது சக்கிரவர்த்தியானவன் முத்துமாலைகள்-புஷ்பமாலைகள்-வெண்பட்டுகள்-சுவர்னதோரணங்கள் இவைகளினல் அலங்கரிக்கப்பட்டும் மிகவும்பரிமளித்துக்கொண் டிருக்கிற அகில்கட்டை சந்தனக் குழம்புகளிலே நனைக்கப்பட்ட வீதி நல்சந்தி

களையுடையதாகியும் புஷ்பங்கள்-அக்ஷதைகள்-பலங்கள் பச்சைமேனிகளான நெற்கதிர்க் கற்றைகள்-தீபங்கள் குலைகளுடனேகூடின வாழைமரங்கள் சிறு பாக்குமரங்கள்-துளிர்களினாலே கட்டப்பட்டமாலைகள் இவைகளினால் நாலண்டையும் அலங்கரிக்கப்பட்ட பட்டணத்தில் பிரவேசித்தராஜரை சருவாபரணங்களினால் அலங்கரிக்கப்பட்ட ஸ்திரீகள் கன்னியாப்பெண்கள் தீபங்களையும், தயிர்முதலான மங்கள திரவியங்களை ஏந்தி யெதிர்கொண்டுவந்து ஸ்தோத்திரஞ்செய்யப் பிராமணாள் சுவஸ்தி வாசனங்கூற சங்கம் துந்துமி முதலானவாத்தியகோஷத்துடனே தன்னுடையகிரகத்திலே பிரவேசித்து ஜனங்களினால் பூசிக்கப்பட்டவனாய்ப் பூமண்டலத்தை இரட்சித்து நாலுபக்கமும் தன்னுடைய யஜசை வியாபிக்கும்படியாகமகாசத்திரமென்கிற யாகத்துக்குத் திட்சை பண்ணினான்.

அந்தயாகத்திற்கு வந்ததேவதைகள்- பிரமரிஷிகள் ராஜரிஷிகள்-இன்னம்பூச்சியாளாகிய சமஸ்தமானபேர்களையும், யதாயோக்கியமாகப் பூசித்தவனாகியும்,காந்தியாயும்,பருத்தும்,நீண்டுமிருக்கிற புசங்களும், பொன்வர்னமாகியும், பத்மதளம்போல் நீண்டகண்களும்,சோபனமானநாசிகளும் சுமுகனாகியும், சவுமியனாகியும், சோபனங்களாகிய தந்தங்களையுடைய புன்சிரிப்புகளும் விசாலமானமார்பும் பருத்தகடிபச்சாபக்கங்களும் மூன்று மடிப்புகளினாலே சுந்தரமான வயிறும், சூட்சுமமான இடையும், சுழிபோன்றநாபியும்,சொர்னம்போன்றதுடைகளும், உன்னதங்களான பாதங்களும் மெல்லிய சுருளுள்ள கறுத்ததலைமயிர்களும் சங்கம்போன்றகழுத்தும்மகத்தாகிய விலைபெற்றவெண்பட்டுகளை அரையிலேயும் உத்திரியமாகவும்தரித்தும் பிரகாசமான அவயவங்களினுடையகாந்தியை வாய்ந்து தீட்சாநியமத்தில் பூஷணங்களை விட்டும் கிருஷ்ணாஜினஆசனமும் தர்ப்பை பவித்திரத்தைக் கையிலேயணிந்தும்உசிதகர்மங்களைப்பண்ணினவனாகியும் கிருபையுடைய குளிர்ந்தசினேகத்துடனே கூடினகருவிழிகளை யுடைய கண்களையு முடையவனாகிய அந்தப்பிருதுசக்கிரவர்த்தியானவன் அந்தச்சத்திரயாகமத்திலிருந்து சந்திரன் உதயமானாற்போல் எழுந்திருந்து நாலுபக்கமும்பார்த்து சபையிலே யிருக்கின்றபேரைச்சந்தோஷிப்பித்துக்கொண்டு செவிக்கினிய சொல்லாகியும், கம்பீரஅர்த்தமானபதங்களையுடையதாகியுமிருக்கிற ஒருவார்த்தையைச்சொன்னான்.

வாருங்கள் சபையிலே யிருக்கிறவர்களே தர்மத்தை யறியவேணுமென்கிறபேர்கள் தங்கள்மனதில்இருக்கிற அர்த்தத்தைச் சற்புருஷா ளிடங்களிலே சொல்லிக்கொள்ளவேணும் லோககர்த்தாவான பகவானால் பிரசைகளுக்கு தண்டனையகனாக நியமிக்கப்பட்டேன் நீங்கள்பொறுமையைவிட்டு பகவானிடத்தில் மனதையுடையவர்களாய் சுவதர்மத்தை பகவத் பிரீதியாகப் பண்ணுவீர்களானால் எனக்கு அனுக்கிரகம் பண்ணப்பட்ட தாய்விடும் தர்மத்தைச்செய்கின்றவன் அதை ரட்சிக்கிறவன் அதைப்பார்த்து சந்தோஷப்படுகிறவன் இந்த மூன்றுபேருக்கும் பலன் சமானமாயிருக்குமென்று நீங்கள் ஒப்புக்கொண்டிருக்கிறபடிக்கு தர்மத்தைப் பகவத் பிரீதியாகச் செய்யத்தக்கது தர்மத்தில்மோகப்பட்டுவிசனத்தை யடைந்த வேனனும் அவனுக்குச் சமானமானவர்கள் சிலபேரும் இவர்களைத்தவிர மனுப்பிரஜாபதி,உத்தான பாதன், துருவன், பிரியவிரதன், என்னுடைய பாட்டனான அங்காசன், பிரம்மா-சிவன்-பிரகலாதனன் பலிச்சக்கிரவர்த்தி யிவர்கள் தர்மார்த்த காமங்கள் சொர்க்கம்- மோட்சம் இதுகளுக்கு ஏகரூபமான ஏதுவாகியும் கர்ம்மபலன்களைக் கொடுக்கிறவராயும், இருக்கிற பரமேஸ்வரர் ஒருவரிருக்கிறாரென்று நிச்சயம்பண்ணியிருக்கிறார்கள் அந்த ஈசுவரனுடைய பாதாங் குஷ்டத்தில்உண்டான கங்கையி னிடத்திலே ஸ்நானம் பண்ணவனுடையபாபத்தைப் போக்கடிக்கத்தக்கின திருவடிகளையுடைய பகவானைச் சேவிக்கிறவன் சம்சாரதுக்கத்தையடையான் நீங்களும் உங்களதிகாரனும் குணமான கர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு அந்தப் பகவானைத் தானே பஜனைசெய்யுங்கள் அக்கினியானது விளைவான தாருவிலிருந்தாலும் வெளிப்படப் பிரகாசிப்பதுபோல்யாகாதிக் கிரியாபலமாகவும் அறியப்படுகின்றார் சர்வகாலமும் பூமியில் திடமானவிரதத்தையுடையவர்களாய் எனக்குமிகவும் இஷ்டரென்றறியுங்கள் எக்கியத்தைப்புஜிக்கின்ற இந்திராதி தேவதைகளுக்கு அதீசுவரனையும், ஜகத்குருவாயுமிருக்கின்ற ஸ்ரீஅரியைத் தங்களுடையசுதருமயோகத்தினால் ஆராதிக்கிறவர்கள் எனக்கு அனுக்கிரகத்தைப் பண்ணுகின்றவர்கள் மகத்தான சம்பத்துகளையுடைய ராசகுலத்தின்பிரபுத்துவமானதுபொறுமையினாலும், தவசினாலும், வித்தையினாலும்-மிகவும் விளங்காநின்ற பிராமணகுலத்தினாலேயே விருத்திசெய்யப்படுகிறது புராணபுருஷராயும், பூச்சியாளுக்கெல்லாம் சிரேஷ்டராயுமிருக்கின்ற ஸ்ரீஹரியானவர் நித்தியமகாபிரமநிஷ்டராளான பிராமணாளுடையசேவையினால் ஒருக்காலும் பிரியாமலிருக்கிறலட்சுமியையும்,ஜகத்துக்குபாவனமாகிய எசஸையும், அடைந்தார்.

அப்படிப்பட்ட மகிமையை யுடைய பிராமணாளைத்தானே பகவதா கினிமை வழுவாதவர்கள் சேவிக்கத்தக்கது பிராம்மணகுலத்தை நித்தியமாய்ச் சேவிக்கிற புருஷனுக்கு கியானப்பியாசமில்லாமற்போனாலும் சு

யமாகத்தானே சீக்கிரமாகப் பரிசுத்தனாவான் அப்படிப்பட்ட பிரம்மகுலத்தைக்காட்டிலும் தேவதைகளுக்கு வேறேயென்ன விருக்கின்றது சர்வமும் பகவத்ரூபமென்று அறிந்தபேர்கள் செய்கிறயாகத்தில் கொடுக்கப்பட்ட அவிசை பிராமணாளுடைய மூலமாய்ப்புசிக்கிறார்களே யன்றி அசேதமான அக்கினியிலே ஓமம் பண்ணப்பட்ட அவிஸை புசிக்கிறதில்லை சகல பிரபஞ்சமும் கண்ணாடிபோல் பிரகாசிப்பிக்கிற வேதத்தை நித்தியமாகசிரத்தையுடன் அத்யயனஞ்செய்து பிரம்மசாட்சாத்காரத்தைஅடைகிற பிராமணாளுடையபாதாரவிந்தரேணுவைநான் கிரீடத்தின்பேரில் ஆயசுஉள்ளமட்டும் தரிக்கின்றேன் அந்தரேணுவை நித்தியமாகத்தரிக்கிறவனுக்கு சீக்கிரமாகப் பாவமெல்லாம் நசிக்கும் அவனைச்சமஸ்தமானகுணங்களும் அடையும் குணங்களுக்கெல்லாம்இருப்பிடமாயும் சீலத்தைத் தனமாகவுடையவனாயும், நன்றிமறவாதவனாயும், பெரியவாளை உபாசிக்கிறவனாகியுமிருக்கின்றவனைச் சம்பத்துகள் தானே அடைகிறதுகள்அப்படிப்பட்ட பிராம்மண குலமும் கோக்களுடையகுலமும் பக்தாளுடன்கூடின ஸ்ரீஜனார்த்தனசுவாமியும், எனக்குப் பிரசன்னமாகக் கடவர்களென்று சொல்லுகின்றஅரசனுடைய வார்த்தையைக்கேட்டு பிதுருக்கள் தேவர்கள் பிராம்மணர்கள் சந்தோஷித்து சத் புத்திரனால் லோகங்களை சயிக்கிறானென்று சொல்லுகின்றசுருதிப்பிரமாணம் சரியானதே பிராமணசாபத்தினால் அடிக்கப்பட்ட பாபியானவேனனும் பகவானைநிந்தித்ததினாலே நரகத்துக்கு யோக்கியனான இரணியகசிபுவும் பிள்ளைகளுடைய பிரபாவத்தினால் நரகத்தைத் தாண்டினார்கள் சமஸ்தலோகங்களுக்கும் முக்கியகர்த்தாவான ஸ்ரீமந்நாராயணனிடத்தில் இப்படிப்பட்ட புத்தியுண்டாயிருக்கிறபடியால் நீ-வெகுகாலஞ் சிரஞ்சீவியா யிருக்கக்கடவாய், பிராமணாளையே தெய்வமாகவுடையஸ்ரீவிஷ்ணுவின் கதையைப் பிரகாசம்பண்ணின வுன்னாலே நாங்கள் ஸ்ரீமுகுந்தனை நாதனாகவுடையவாளானோம்.

## ௨௰-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பேசிடும்பிருது சக்கிரவர்த்திக்கு
ஆசிலாதரியின்ற னாக்கினைப்படி
மாசகன்றவுபதேச மார்க்கத்தை
ஏசிலர்ச்சனற் குமாரரியம்பினார்.

பிருதுசக்கிரவர்த்திக்கு ஸ்ரீ அரியினுடைய ஆக்கினையினால் சனற்குமாரயோகியானவர் உத்தமமானகியானத்தை உபதேசித்தாரென்று சொல்லப்படுகின்றது.

மைத்திரேயர்வாக்கியம்,

வாரீர்விதுரரே, இந்தப்பிரகாரம் பிருதுசக்கிரவர்த்தியை ஜனங்கள் ஸ்தோத்திரஞ்செய்கிறபோது அந்த மகா சதசிலே சூரியனுக்குச் சமானமான தேஜசையுடைய சனகாதியோகிகள்வந்தார்கள் ஆகாசத்தில்நின்று இறங்குகின்ற அவர்களைக்கண்டு ராசாவானவர் சபையிலிருக்கின்ற சனங்களுடனே சீவாத்மாவானவன் சப்தாதிவிஷயங்களைப்பார்த்து எழும்புவதுபோல் அந்தயோகீசுவராளையெதிர்கொண்டு அர்க்கியமுதலானவுபசாரத்தால்பூசித்து ஆசனங்களில் எழுந்தருளப்பண்ணி திருவடிகளைத்துலக்கி அந்தத்தீர்த்தத்தைத் தன்னுடைய சிரசிலேதரித்துப் பிரகாசிக்கிற அக்கினிபோலும் பரமசிவனுக்குமுன்னே பிறந்தவளாயுமிருக்கிற அந்தயோகிகளைப்பார்த்து ஒருவார்த்தைசொன்னான்.

வாருங்கள் மங்களத்துக்கெல்லாம் ஸ்தானமாகி யிருக்கின்ற சனகாதியோகிகளே உங்களுடைய தரிசனங்கிடைக்கும்படி பூர்வத்திலென்னபாக்கியம்செய்தேனோ அறிகிலேன்தேவரீர்களுடைய சத்தரிசனங்கிடைத்த புருஷனுக்கென்னகுறையிருக்கின்றது. அந்தரியாமியான புருஷன் காண்கிறதற் கரிதாயிருப்பதுபோல் தேவரீர்களுங் காணுகிறதற்குத் துர்லபனாகவிருக்கிறீர்கள்பகவத்பக்தாள் நாடுகிறவிடந் தரித்திரனுடைய இடமாவிருந்தாலும் மகதைஸ்வரியமுடைய இடமாகச்சொல்லத்தக்கது சப்தாதிவிஷயங்களைப் புருஷார்த்தமாகவெண்ணி இந்தச்சம்சாரத்தில் உழலுகிறஎங்களுக்கு க்ஷேமமெப்படியுண்டாகும் அதைபகவத்சுரூபிகளான நீங்களருளிச்செய்யவேண்டுமென்று வினவுகிற அரசனைநோக்கி சனற்குமாரர் புன்சிரிப்புடனொருவார்த்தை சொல்லுகிறார், வாராய்மகாராசனே சருவபூதங்களுக்கும்சுகத்தையிச்சித்த உன்னால் நல்லபிரசனம்பண்ணப்பட்டது காமரூபமான மலத்தைப்போக்கடிக்கத்தக்கின பகவத்பாதாரவிந்தத்தினுடைய குணங்களைக்கேட்கிறத்தில் சரீரசக்தியும் சரீரகிரகாதிகளிடத்தில் விரக்தியும்உனக்குச்சார்வதா யுண்டா யிருக்கின்றது. சிரத்தையினாலும் பகவத்கைங்கர்யமும், யோகநிஷ்டையும், யோக சிரேஷ்டாளுடையசேவையும், புண்ணியகதைகளைக்கேட்கிறதும் அர்த்தகாமிகளிடத்தில் சகவாசத்தை நிவர்த்திப்பிக்கின்றதும் இதர வஸ்துக்களிலே இச்சையில்லாமல் ஆத்மதிருப்தியடைந்திருக்கிறதும்-ஏகாந்தவாசத்தில் ருசியும்,பூதஹிம்சை யில்லாமலிருக்கிறதும், சமதமாதிகுணங்களுடன் பகவத்குணானுபவஞ் செய்கிறதும், இதரதேவதைகளை நிந்திக்காமலிருக்கிறதும், இப்படிப்பட்ட அனுஷ்டானத்துட னிருந்தால் பிரம்மத்தினிடத்தில் ஸ்திரமான ஆசக்தியுண்டாகின்றது, அப்போது நல்லஆசாரியமூலமாய் அக்கினியானது தீக்கடைக்கோலைத் தகிப்பதுபோல் சுகதுக்காதிகளில் விரக்தனாய்விடுவன். அனுபவித்த சுகதுக்காதிகளில் சுவப்பனமாய்விடும்ஆதலால்மன

தைசுத்திசெய்துகொண்டு தர்மார்த்தங்களில்முதன்மையானமோட்சத்தையே விரும்பி சம்சாரமாகிற சமுத்திரத்திற்குத் தெப்பமாயிருக்கிற அகளங்கமான ஸ்ரீஅரியினுடைய பாதாரவிந்தத்தைப் பற்றக்கடவாயென்று பிரமபுத்திரரான சனற்குமாரரால் காண்பிக்கப்பட்ட மோட்சமார்க்கத்தையுடைய அந்தப் பிருதுசக்கிரவர்த்தியானவன் அவரைக்கொண்டாடி ஒருவார்த்தைசொன்னன்,

வர்ரீர் பிரம்மநிஷ்டர்களே, முன்னேதீனளிடங்களில் தயைபண்ணுகின்ற ஸ்ரீஹரியினல் அனுக்கிரகிக்கப்பட்டாற்போல் மகானுபாவாளான உங்களாலும்அனுக்கிரகிக்கப்பட்டேன்இந்த மஹோபகாரத்திற்கு இணையாய்விஷபாதிகளில் இச்சையற்றிருக்கின்ற உங்களுக்கென்னத்தைக்கொடுத்து திருப்தியடையப் போகிறேனென்று சாஷ்டாங்கமாய்த் தெண்டன் சமர்ப்பித்து அஞ்சலிகூப்பிக்கொண்டு நிற்கிற பிருதுசக்கிரவர்த்தியிடத்தில் சிலவுபெற்றுக்கொண்டு சதசி லிருக்கப்பட்டவர்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் ஆகாசமார்க்கத்தில்போய்விட்டார்கள். அப்பால் பிருதுசக்கிரவர்த்தி சாம்பிராச்சியத்தில்சம்பந்தப்பட்டிருந்தாலும் விஷயங்களில் ஆசக்தியில்லாத சூரியனைப்போல் ஆசக்திசூன்னியனுய்பிரம்மனிஷ்டையையுடையவனுயிருந்தான் அவனுக்குஅதிற்சிசுஎன்கிற பாரியையினிடத்தில்விஜிதாசுவனென்றும், தூமகேதுவென்றும், அரியசுவனென்றும், திருவணனென்றும், விருகனென்றும், தனக்குச்சமானுளான ஐந்துபிள்ளைகளைப் பெற்று ஏகராஜாவாய் அச்சுதனிடத்தில் மனதையுடையவனுய் சூரியனுனவன் பூமியிலிருக்கின்ற ஜலத்தைக்கிரகித்து மறுபடியும் பூமியில் வருஷிப்பதுபோல் பிரஜைகளிடத்தில் தனக்குண்டான கப்பத்தை வாங்கி அவர்களுக்கேஉபயோகப்படுத்திக்கொண்டுதேகாசசினுல் அக்கினிபோலும், பராக்கிரமத்தில் இந்திரன்போலும், பொறுமையில்பூமிபோலவும், அபிஷ்டத்தைக் கொடுக்கிறதில் சொர்க்கம்போலவும், இஷ்டவஸ்துக்களைக்கொடுப்பதில் பர்சன்னிய தேவன்போலும்-சமுத்திரம்போல் அகாதமான அபிப்பிராயமுடையவனுயும், தைரியத்தில் மகாமேருவைப்போலும், தண்டிக்கிறதில் யமதர்மராசாவைப்போலும், ஆச்சரிய குணத்தில் இமவானைப் போலும், பொக்கிஷத்தில் குபேரனைப்போலும் குப்தமான அர்த்தத்தில் வருணன்போலும், வியாபகத்தில் வாயுவைப்போலும், பலத்தில் ருத்திரபகவானைப்போலும், சௌந்தரியத்தில் மன்மதனைப்போலும், பெரியமனதில் சிங்கம்போலும், மனுஷியாளிடத்தில் வாற்சல்லியத்தில் மனுவைப்போலும், பிரபுத்துவத்தில்பிரம்மாவைப்போலும், வேதவாதத்தில் பிரகஸ்பதியைப்போலும், ஜிதேந்திரியத்தில் சனகாதிபோலும், போலும்,பசு-குரு-பிராமணர்களிடங்களில் பக்திவணக்கம்-லச்சை-சீலம்-இதுகளில் உபமானமில்லாதவனுகியும், திரிலோகத்திலும் அளாவியிருக்கின்ற கீர்த்தியில் சீதாபதியானவர்போல் பிரசித்தி யடைந்திருந்தான்,

## உக-வது- அத்தியாயம்.

கலிவிருத்தம்.

ஆனவானப்பிரஸ்தா சிரமந்தன்னிற்
ருனும்பாரி மாகச்சமாதியில்
வானபிருதுசக் கிரவர்த்தியானவன்
கோனும்வைகுந்தங் கொண்டதுரைசெய்வாம்,

வானப்பிரஸ்தாசிரமத்தில் பாரியையுடன்சமாதியிலிருந்த பிருதுசக்கிரவர்த்தியானவன் விமானரூடனுய்ஸ்ரீவைகுண்டத்தை யடைந்ததைச் சொல்லப்படுகின்றது.

மைத்திரேயர்வாக்கியம்.

வாரீர்விதுரரே, ஆத்மக்கியானியாகியும்,பிராணிகளுக்குச் சகல அன்னங்களையும உண்டாக்கினவனுயும், பராக்கிரமாதிகளை நிர்மாணம் பண்ணினவனுகியும், ஸ்தாவரசங்கமங்களுக்கு விருத்திகளைக் கொடுத்தவனுகியும், பெரியோர்களுடைய தர்மத்தை ஆசரிக்கிறவனுகியுமிருக்கிற பிருதுசக்கிரவர்த்தியானவன் ஒருக்கால் தன்னுடைய வார்த்திகத்தைப்பார்த்துத் தன்னுடைய பிரிவைச் சகிக்காமல் விசனப்படுகிறவளாகியும் மகளாகியுமிருக்கிற பூமியைப் புத்திரன் ஆதீனம் பண்ணிப்போட்டு [illegible] பிரஜைகளிடத்திலும் ஆசையைவிட்டவனுய்பாரியையுடனேகூட தபோவனத்தையடைந்து நியமங்களையுடையவனுய் சிறிதுநாள் கந்தமூலபலங்களையும், சிறிதுநாள் சீரணங்களான பர்ண பாணங்களையும், சிறிதுநாள் சலத்தைப்பட்சிக்கின்றதும், சிறிதுநாள் வாயுவையும் ஆகாரமாகப் பண்ணிக்கொண்டு கிரீஷ்ம ருதுவில்பஞ்சாக்கினி மத்தியிலும், வருஷகாலங்களில் வருஷதாரைகளிலிருந்தும், பனிக்காலத்தில்சமுத்திரளவு சலத்திலுமிருந்து தபசுசெய்கிறவனுயும், பூமியில் சயனிக்கிறவனுயும், க்ஷமையும் மௌனவிரதத்துடன் காமக்குரோதங்களையும் பிராணுதி வாயுக்களையும் சமித்து உத்தமமான தபசினுல் ப்ராரத்த கர்மநாசத்தையுடையவனுய் சனற்குமாரர் உபதேசித்த யோகமார்க்கத்தை அனுசரித்து குதிக்கால்களால் குதத்தை அழுத்திப் பிராணவாயுவை மூலாதாரத்தினின்றும் ஊர்த்துவமுகமாக எழுப்பி நாபியில்நிறுத்தி அவ்விடத்திலிருந்து-இருதயம்-மார்பு-கண்டம்- புருவமத்தியம் இதுகளில்நிறுத்தி அங்கேயிருந்து பிரம்மரந்திரத்தில் நிறுத்தி பூதவாயுவுடனேயும் தேகத்தினுடைய அக்கிரகாதை [illegible] பூமியிலேயும் தேஜசை தேஜசிலேயும் இந்திரியங்களை ஆகாசத்திலேயும் சரீரத்தில் இருக்கிற [illegible]

யும் சலத்திலும் பூமிதத்துவத்தை சலதத்துவத்திலும் சலதத்துவத்தை தேஜஸ்தத்துவத்திலும் தேஜசைவாயுதத்துவத்திலும் வாயுவை ஆகாசதத்துவத்திலும் மனதைஇந்திரியங்களிலும் இந்திரியங்களைப் பூதங்களுக்குக் காரணமான தாமஅகங்காரத்திலும் அதைமகத்துவத்திலும் அந்த மகதத்துவத்தைப் பிரகிருதியைஉபாதியாகவுடைய சிவனிலுஞ் சேர்த்து பிரம்மநிஷ்டனாயிருந்து கியான வைராக்கியங்களினால் சீவவுபாதியை விட்டுவிட்டான் அவனுடையபத்தினியானவள் அற்பசிசுவென்கிற சுகுமாரியான ராஜஸ்திரீயானவள்விபத்தையடைந்திருக்கிற தனதுபதியின் தேகத்தைப்பார்த்து சற்றே பிரலாபித்து பிற்பாடு மந்தா பருவதத்தின் தாழ்வரையில் சிதையைக் கல்பித்து அதிலே பர்த்தாவினுடைய தேகத்தையெடுத்துவிட்டு நதியிலே ஸ்நானம்பண்ணி மகத்தாகிய யக்கியாதிகர்மங்களைச் செய்திருக்கின்ற பர்த்தாவுக்குச்செய்யவேண்டிய கர்மங்களெல்லாஞ் செய்து ஆகாசத்திலிருக்கின்ற தேவதைகளைச்சேவித்து அக்கினியை மூன்றுதரம் பிரதட்சணம் பண்ணி பர்த்தாவினுடைய பாதங்களைத் தியானம்பண்ணிக்கொண்டு அந்தச் சிதையில்பிரவேசித்து வீர சிரேஷ்டனாகியும், பத்தியாகியுமிருக்கின்ற அந்தப் பிருது சக்கிரவர்த்தியுடனே தேவர்கள்கொண்டாட அநுகமனம் பண்ணினாள். புஷ்பங்களை வருஷித்துக்கொண்டு தேவதுந்துமி வாத்தியங்கள் முழங்கிக்கொண்டு அந்த தேவதாஸ்திரீகள் ஒருத்தருக்கொருத்தர் சொல்லிக்கொண்டார்கள். ராஜாக்களுக்கெல்லாம் இராசாவாயிருக்கின்ற பிருது சக்கிரவர்த்தியை அற்சிசானவள் ஸ்ரீவிஷ்ணுவை லட்சுமி அடைந்தாற்போல சர்வப்பிரகாரத்தினாலும்நமக்கும் மேலானலோகத்தையடைந்தாள், மனுஷியாளுக்குள் ஸ்ரீ வைகுண்டத்தைக் கொடுக்கின்ற கியானத்தை அநுஷ்டானம் பண்ணுகின்றவர்களுக்கு இதரதேவதைகளுடைய லோகங்கள் துர்லபமோ மோட்சசாதனமான மனுஷியசரீரத்தையடைந்தும விஷயங்களில் ஆசக்தியையுடையவனாயிருக்கிறவனே ஆத்துமத்துரோகியென்று சொல்லத்தக்கவனென்று தேவதாஸ்திரீகள் சொல்லிக்கொண்டிருக்கையில் ஆத்துமக்கியானிகளுக்கெல்லாம் தலைவனாகியும் பகவத்பக்தனாயுமிருக்கின்ற பிருதுசக்கிரவர்த்தி அடைந்தலோகத்தை அந்த அற்சிசென்கிற பாரியையும் அடைந்தாள். பிருதுவினுடைய சரித்திரத்தைச் சிரத்தையுடனேபடித்துங்கேட்டுங் கேட்பிக்கிறபுருஷன் பிருதுசக்கிரவர்த்தி அடைந்த லோகத்தையடைவன்.

## உ௨-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பிராசினபரி கசியென்னுமன்னிடம்
பிரசேதசுக்க ளெனும்பெரியோர்கள்தான்
அரியவுற்பத்தியும்மவர்களுக்குத்
தெரியருத்திர கீதையுஞ்சொல்லினர்,

பிராசினபரிகசியென்கிற ராஜாவினிடத்தில் நின்றும் பிரசேதசுக்களென்கிற ராஜரிஷிகளுடைய வுற்பத்தியும் அவர்களுக்கு உபதேசிக்கபபட்ட ருத்திரகீதை ஸ்தோத்திரமுஞ் சொல்லப்படுகின்றது.

மைத்திரேயர்வாக்கியம்,

வாரீர்விதுரரே, பிருதுவினுடைய புத்திரனாகியும் பிராதாக்களிடத்திலேவாற்சல்லியத்தையுடையவிசிதாசுவன் தன்தம்பிமார்களில் அரியசிவனுக்குக் கிழக்குத்திக்கையும் தூமகேதனுக்கு தட்சண திக்கையும் விருக்குமேற்குத்திக்கையும் திரவிணனுக்கு வடக்குத்திக்கையுங்கொடுத்து இந்திரனிடத்தில் நின்றும், அந்தரதானவித்தையைப்பெற்று சிகண்டினியென்கிற ஸ்திரீயினிடத்திலே பூர்வகாலத்திலே வசிஷ்டருடைய சாபத்தினாலே மனுஷியயோனியிலே ஜநிக்கும்படிஜபித்திருந்த அக்கினியானவன் பாவகனென்றும் பவமானனென்றும் சுசியென்றும் மூன்றுபிள்ளைகளாகப் பிறந்தார்கள். நபஸ்வதியென்கிற மற்றொருபாரியையிடத்தில் அவிரதர்னனென்றொருபிள்ளையைப்பெற்று கப்பம்வாங்குகிறத்திலும் தண்டிக்கிறத்திலும் ராஜதர்மத்தைக் கோரமானதாயெண்ணி தீர்க்கசத்திரமென்கிற கிருதுவைவியாஜமாகவைத்துக்கொண்டு ராச்சியத்தைத்துறந்து ஸ்ரீஅச்சுதனிடத்திலும், பாகவதாளிடத்திலும் பக்தியுள்ளவனாய் ஸ்ரீபகவானுடைய சாலோக்கியத்தையடைந்தான் அவனுடையபுத்திரனான அவிர்தானவனானவன் அவிர்தானியென்கிற ஸ்திரீயினிடத்திலே பரிகிஷித் தென்றுஞ் சேயனென்றுஞ் சுக்கிலனென்றுங் கிஷ்ணனென்றுஞ்சத்தியனென்றுஞ் சிதப்பிரபனென்றுமாறுபிள்ளைகளைப்பெற்றான் அவர்களுக்குள்ளே மகாபூச்சியனாகிய பரிகிஷித்து என்கிறவன் ராஜாவாகவிருந்துகொண்டு கர்மமார்க்கத்திலேயும் யோகமார்க்கத்திலேயுஞ் சமர்த்தனாயிருந்து அநேகயக்கியங்களைச்செய்தான் அந்த யக்கியசாலையில் கிழக்குநுனியாக இரண்டங்குலப்பிரமாணம் பூமியெல்லாந் தர்ப்பைகளினால் பரப்பப்பட்டபடியால் அவனுக்குப்பிராசீனபரிகிஷனென்று பெயரையடைந்தான் அவன் சமுத்திரராஜனுடைய பெண்ணாகிய மனோகரங்களான சருவாங்கங்களிலும் நன்றாக அலங்கரிக்கப்பட்டுமிருக்கிறசத்ததுருதியென்பவளை விவாகஞ்செய்யுங் காலையில் அக்கினிகூட மோகிக்கத்தக்கின சௌந்தரிய முள்ளவளாகியுங் கால்சிலம்பினால் திக்குகளைச் சப்திக்கின்றஅந்தச் சத்துருதியினாலே தேவாள்-அசுராள்--கந்தர்வாள் முனிகள்-சித்தாள் - மனுஷியாள் - உரகங்கள் இவர்களெல்லாரும் மோகத்தை யடைந்தார்கள் அப்படிப்பட்டமகிமையுள்ள ஸ்திரீயினிடத்திலே தனக்குச்சமானவி

ரதங்களை புடையவளாயுமிருக்கிறபிரதேசசுக்களென்றும்பத்துப்பிள்ளைகள் பிறந்தார்கள் அவர்கள் பிரஜைகளைச்சிருஷ்டிக்கும்படி பிதாவினலே ஆக்கியாபிக்கப்பட்டவர்களாய் தபசுசெய்வதற்குச் சமுத்திரத்திலே பிரவேசித்து ருத்திரனலே யுபதேசிக்கப்பட்ட ருத்திரகீத ஸ்தோத்திரத்தினல் பதினயிரவருஷம் ஸ்ரீ அரியைக்குறித்து தியானஞ் செய்தார்களென்று சொல்லுகின்ற மைத்திரேயரைப்பார்த்து பிரஸ்னம்பண்ணுகின்ருர்,பிரசேதசுக்களுக்கு ருத்திரனுடனே மார்க்கத்திலே யெப்படி சம்பந்தமுண்டாச்சுது எந்தஸ்தோத்திரத்தைச் சொன்ஞர் அதையெனக்குச்சொல்லுமென்றுகேட்கின்றவிதுரரைப்பார்த்து மைத்திரேயர்சொல்லுகிருர்.

வாரீர்விதுரரே, சத்புருஷாளான அந்தப்பிரசேதசுக்கள் பிதாவினுடையவார்த்தையைச் சிரசாய்வகித்து தபசுபண்ணவேணுமென்று ஆதரவுடனே கூடினமனதையுடையவர்களாய் மேற்குச்சமுத்திரத்தினுடைய சமீபத்திலே மிகவும்விசாலமாகியு மகத்தாகியு மகாத்மாக்களுடைய மனதுபோல மிகத் தெளிந்துஞ் செந்தாமரைகருநெய்தல் செங்கழுநீர்முதலான புஷ்பங்களுக்கெல்லாமிருப்பிடமாகியு மம்சஞ்-சக்கிரவாகம் நீர்க்காக்கைகளு மதித்திருக்கிற வண்டினங்களுடைய மதுரமான சப்தத்தினலே வியாபிக்கப்பட் டிருக்கின்ற கொடிகள் விருட்சங்களையுடைய ஒருசரசைப்பார்த்துஅதிலேமனேகரமாயிருக்கிற மிருதங்கம் பணவமுதலான வாத்தியங்களுடைய கானத்தைக்கேட்டு ஆச்சரியத்தையுடையவர்களாய் அந்தச்சரசிலே பிரவேசிக்கப்போகிறசமயத்திலே அந்தச்சரசிலேயிருந்து பரிவாரங்களுடனே வெளிப்புறப்படுகின்றருத்திரபகவானைத் தரிசித்து சந்துஷ்டாளாகியிருக்கிற அந்தப் பிரசேதசுக்களைப்பார்த்து ருத்திரன் ஒருவார்த்தைசொன்ஞன். உங்களுடைய மனதிலிருக்கின்ற அர்த்தம் நம்மாலேஅறியப்பட்டு உங்களை அனுக்கிரகிக்கிறதுக்காக வந்தேன் திரிகுணமாயிருக்கின்ற பிரகிருதியும் சீவனைப்பார்க்கிலும் வேறுபட்டிருக்கின்ற வாசுதேவனைச் சரண மடைந்தவன் எனக்குப் பிரியன் சுவதர்மத்தில் நிஷ்டையையுடைய புருஷன் நூறுஜன்மங்கள் பிரம்மாவினுடைய சாரூப்பியத்தை யடைந்தபிறகு என்னுடைய சாரூபியத்தை யடைவன் சொல்லுகிறத்துக்கு அடங்காததாகியும் பிரபஞ்சத்துக்கு வேறுபட்டுமிருக்கிற விஷ்ணு சாரூபியத்தை நானுங்வேதகைகளுமெங்கள் அதிகாரமுடிவிலே அடைவதுபோல்பரமபாகவதனன புருஷன்அடைவன் ஆனபடியினலேபாகவதாளானநீங்கள் ஸ்ரீபகவானைப்போல் எனக்குஇஷ்டாளாக விருக்கிறீர்கள் பாகவதாளுக்கும் என்னைப் பார்க்கிலு மன்னியனுய்ப் பிரியனுய் வேருெருவன் ஓரிடத்திலேயுமில்லை ஏகாந்தத்திலே ஜபிக்கத்தக்கதாகியும்; பாவனமாகியும், மங்களகரமாகியும், மிகவும்மோட்சகரமாகியுமிருக்கின்ற ஸ்தோத்திரத்தை உங்களுக்குச்சொல்லுகிறேன்கேளுங்களென்று விஷ்ணுபக்தனுகியசிவன் அஞ்சலிபத்தத்துடனே அந்தராஜரிஷிகளைப்பார்த்துச் சொல்லுகிருர்.

வாரீர் ஆத்துமக்கியானிகளுக்கெல்லாம்சிரேஷ்டாளானவர்களே சுவதர்மத்தை அனுஷ்டித்துக்கொண்டு பகவானிடத்திலே வைக்கப்பட்ட மனதை யுடையவர்களாய்விஸ்வாசத்துடனே.சர்வபூதங்களிலே அந்தரியாமியாகியும், பரமாத்மாவாகியுமிருக்கின்றஅந்தஸ்ரீஹரிக்கு மிகவும் இஷ்டமாயிருக்கின்ற ஏகாதசமென்றுபெயரையுடைய மகாமந்திரத்தை எனக்கும் பிருகுமுதலானபிள்ளைகளுக்கும் பிரம்மாவானவர் உபதேசித்தார் அதைஜபித்தபிரபாவத்தினல் அக்கியானத்தைப்போக்கிஞனரூபமான பிரஜைகளைச் சிருஷ்டித்தோம். ஆதலால் இந்தமந்திரத்தை செபிக்கின்றபுருஷன் கியானத்தைத்தெப்பமாகப்பண்ணிக்கொண்டு சம்சாரமாகிற சமுத்திரத்தைத்தாண்டி மோட்ச மடைவான்.

வாரீர்பிரசேதசுக்களே, நம்மாலேசொல்லப்பட்ட இந்த பகவத்ஸ்தோத்திரத்தை அத்தியயனம்பண்ணி எந்தெந்த புருஷார்த்தங்களைக்கோரி அந்த வாசுதேவனை ஸ்தோத்திரஞ்செய்கிறவன் எல்லாவற்றையு மடைவன் இந்த ஸ்தோத்திரத்தைப் பிராதக்கால மெழுந்திருந்து அஞ்சலிபத்தம்பண்ணி சிரத்தையுடனே கேட்டுக்கேட்பிக்கிறபுருஷன் கர்ம பந்தத்தினலே விடப்படுவன் நீங்களும் அந்தப்பரமபுருஷனுடையஸ்தோத்திரத்தையே காக்கின்றபுத்தியாய்சபித்து அத்தத்துவத்தினுடையஅந்தத்திலே இஷ்டரான அந்தப்பரமாத்துவையே அடையப்போகிறீர்களென்று ருத்திரன் அனுக்கிரகித்தார்,

## ௨௩-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பிரசேதசுக்கள் தபம்பண்ணுங்காலையில்
பிராசினபரி கசுவென்னுந்தந்தையை
அரியநாரதர் புரஞ்சனன்கியானத்தை
தெரியபஞ்சவத் தியாயத்தாற்செப்பினர்

பிரசேதசுக்கள் தபசுபண்ணிக்கொண் டிருக்கையில் அவர்களுக்குப்பிதாவான பிராசினபரிகசுவென்கிற ராஜாவைக்குறித்து நாரதர் புரஞ்சனனுடைய கதாவியாஜத்தினலே ஆத்மக்கியானத்தை ஐந்து அத்தியாயத்தினல்சொன்ஞரென்று சொல்லப்படுகின்றது.

மைத்திரேயர்வாக்கியம்.

வாரீர்விதுரரே, இந்தப்பிரகாரம் ருத்திரன் அந்த ஸ்தோத்திரத்தை யுபதேசித்து தம்முடைய பாரிஷதாளாலே சூழப்பட்டுக்கொண்டுஅந்தரத்தானமாப்போய்

ஞர். பிரசேதசுக்களும் அந்தஸ்தோத்திரத்தைச் சபித்துப் பதினு[illegible] வருஷம் சமுத்திரத்திலேயிருந்துதபசுபண்ணிக்கொண் டிருக்கும்போது கர்மத்திலேயே மனதையுடைய பிரா[illegible] [illegible]யில் தயாளுவாகியும், ஆத்துமதத்[illegible] [illegible]வராகியுமிருக்கின்ற நாரதர்எழுந்[illegible] [illegible]க்கி தக்ஷிவர்த்தியும், சுகப்பிராப்தியும் இ[illegible] [illegible] செய்கிற கர்மத்தினல் சித்திக்கமாட்[illegible] [illegible] சொல்லுகின்ற நாரதரைப்பார்த்து ராஜா கேட்[illegible]

வாரீர் [illegible]வரே, கர்மத்திலே புத்தியுடைய நான் மோட்[illegible]மான கியானத்தைஅறியேன் ஆதலால் மோட்[illegible]மான கியானத்தைஅடியேனுக்குஉபதேசித்து [illegible]செய்யவேண்டுமென்று பிரார்த்திக்கின்ற அரசனை நோக்கி நாரதர் வாரும்பிள்ளாய் இராஜாவே யாகத்திலேஉன்னலே கும்புகும்பாகக்கொல்லப்பட்ட இ[illegible]ராசிகள் தேகத்தை விட்டு லோகாந்தரத்தையடையப்போகிற உன்னைஇருப்புத்தடிகளினலே சேதிப்போமென்று சமையம்பார்த்துக்கொண் டிருக்கின்றதுகள் இந்தத்துக்கம் ஒழிகிற நிமித்தம் புரஞ்சனன் சரித்திரமான இதிகாசத்தைச்சொல்லுகிறேன்கேள்.முன்னே மகாகீர்த்திமானன புரஞ்சனனென்று பெயரையுடைய ஒருராசனிருந்தான். அவனுக்கு அவிக்கியாதியென்று பெயரையுடையலோகபிரசித்தனன வியாபாரசினேகனிருந்தான். அந்தப்புரஞ்சனன் ஏகபோக சாதனமான ஒருபுரத்தைத்தேடிக்கொண்டு பூமியெல்லாஞ் சஞ்சரித்து எங்குங்காணமல் மகாதுக்கத்தை யடைந்து ஒருக்கால் இமவத் பருவதத்தினுடைய வலதுபாரிசமானதாழ்வாயிலே நவத்வாரத்துடனேயும் பிராகாரங்கள்,உத்தியானவனங்கள், உப்பரிகைகள் உழலத்தடிகள், தவாக்ஷங்கள், வெளிவாசல்கள் வெள்ளி-பொன்-இரும்புமயங்களான சிகரங்களுள்ள கிரகங்களும், நாலுபாரிசத்தில்நெருங்கியும்-இந்திரநீலம்-ஸ்படிகம் - வச்சிரம்-முத்து-மரகதம்-மாணிக்க மிதுகளினலேசெய்யப்பட்ட உப்பரிகைப்பிரதேசத்தையும், பிரகாசமாகிய காந்தியினல் போகவதிபட்டணம்போல் மண்டபங்கள்- சந்திகள்-ராசமார்க்கங்கள்-விலாஸ்தானங்கள்-கடைகள்- சந்திச்சாவடிகள்-துவசங்கள்-பிரவாளமயங்களான திண்ணைகளுடனும், திவ்வியங்களானவிருட்சங்கள்- கொடிகள்நெருங்கினசாயும்- சப்திக்கின்ற பட்சிசாதிகள்- மிருகங்கள் இதுகளுடையகோலாகலங்களுடனே சரசுக்களையுடையதாகியும், பனிஜலங்களில்திவலைகளுடைய பக்ஷபத்தோடே சம்பந்தித்திருக்கின்றவாயுவினலே சலியாநின்றதுளிர்கள் சாகைகளையுடைய விருட்சசம்பத்தையுடையதான சரசுக்களின்தீரங்களையுடையதாகியும், ஒருத்தரையும் இம்சியாமலிருக்கின்ற மிருகங்களை யுடைய வனத்திலே தன்னைக்கூப்பிடுகிறதுபோலசப்திக்கின்ற கோகிலங்களுடைய தொனியினதுஉத்தியான வனத்திலே ஒருஉத்தமசுவயிச்சா சஞ்சாரியாகியும்,அநேகஸ்திரீகளுக்கு நாயகியாகியும், விவாகமில்லாதவளாகியும்,புருஷனைத்தேடிவருகின்றவளாகியும் சவுந்தரியமான தந்தங்களையுடையவளாகியும்,சிறுபெண்ணுகியும்,கண்ணுடிபோன்ற கபோலங்களும்,சிரேஷ்டமானமுகமும்சமமாக வைக்கப்பட்டிருக்கின்ற கன்னங்களில் குண்டலங்களுடையகாந்தியைத் தரிக்கின்றவளாகியும், பச்சை நிறமாகியும் சொர்னமயமான அரைநூல்மாலைகளையும்,கால்சிலம்புகளினலே சப்திக்கும்படி சஞ்சரிக்கின்றதேவதையைப்போ லிருக்கிறவளாகியும், தோற்றப்பட்ட இளமையையும், சமங்களாகியும், விருத்தங்களாகியுமொன்றுக்கொன்றுநெருங்கி யிருக்கின்ற ஸ்தனங்களை வஸ்திரத்தினல் மறைக்கின்றவளாகியும், யானையைப்போல நடக்கிறவளாகியும், மனேக்கியமான புன்சிரிப்புடைய ஸ்திரீயையும், அவனுக்குச்சகாவாய் முன்னே நடந்துவருகிற ஒருபுருஷனையும், பாரிசத்தில் ரட்சித்துக்கொண்டுவருகின்ற ஐந்துதலை சர்ப்பத்தைப்பார்த்துஅந்தஸ்திரீயினுடையகடைக்கண்பார்வையாகிற பாணத்தினலே அடிக்கப்பட்ட அந்தப்புரஞ்சனன் ஒருவார்த்தை சொன்னன்,

வாராய் தாமரையிதழ்போன்ற கண்களையுடையவளே நீயார் ஆருடையபெண் உன்பின்னேவருகின்றபதினெருபெயரான இந்தமகாபடாளார் இந்தஸ்திரீகளார் உனக்குமுன்னேநடக்கிறஇந்தச்சர்ப்பமார் சிவனைத்தேடுகின்றபார்வதியா பிரம்மாவைத்தேடுகின்ற சரஸ்வதியாமகாவிஷ்ணுவைத்தேடுகின்ற லட்சுமியா அபிப்பிராயத்தைத்தெரிவிக்கின்றபுன்சிரிப்புடையவுன்னலேசிருஷ்டிக்கப்பட்ட இந்தமன்மதன் உனது கடைக்கண்பார்வையாகிற பாணங்களினலே பேதிக்கப்பட்ட விந்திரியங்களையுடையவென்னைபாதிக்கிறுனகையினலேஎன்னிடத்திலே யன்பு செலுத்தி அங்கீகரிக்கவேண்டும் மனதைஹரிக்கத்தக்கின கருவிகளுடனே கூடின கண்களுள்ளவளாகியும், மனேகரமானவசனத்தையுடையவளாகியுமிருக்கின்ற உன்னுடைய முகத்தை உயரவெடுத்து எனக்குக்காண்பியென்றுதைரியமில்லாதவன்போலயாசிக்கின்ற வீரனன புரஞ்சனனைப்பார்த்துநகைத்து ஒருவார்த்தை சொல்லுகிறுள்,

வாராய் புருஷசிரேஷ்டனே நான் தாய்தந்தைமுதலானவர்களை யாரையுமறியேன் இந்தப் புருஷாள் என்னுடையசினேகிதாள் இந்தஸ்திரீகள் என்னுடையதோழிகள் இந்தச்சர்ப்பமானது நான் தூங்கும்போது இந்தப்பட்டணத்தை இரட்சித்துக்கொண்டிருக்கும்செய்வா

தீனமாய் அப்பிரயோசனனாகியும், குரூபியாயுமிருக்கிற
பர்த்தாவை அடையாமல் பிரசித்தனயுந் தானசீலனயு
ம், மகாரூபத்தையுடையவனயுமிருக்கிற உம்மைவிட்டு
நான் ஆனைத்தானடையப்போகிறேன்.

வாராய்மகாபுருஷனே, கிருபாதிசயத்தையுடைய பு
ன்சிரிப்புடனே கூடிக்கொண்டிருக்கிற காட்சத்தினலே
நீனுடைய மனேவியாகியைப் போக்கடிக்கிறதற்காக
ச்சஞ்சரித்துக்கொண் டிருக்கிற உம்மைவிட்டு நான் ஆ
னையடையப் போகிறேனென்று அவர்களிருவரும்ஒரு
வருக்கொருவர் சங்கேதம்பண்ணிக்கொண்டு அந்தப்பட்
டணத்தைப் பிரவேசித்து நாலுபக்கத்திலுங் காயகாள்
கானஞ்செய்ய நூறுசம்வற்சரம் ரமித்து சந்தோஷப்ப
ட்டிருந்தார்கள் அந்தப்பட்டணத்துக்குமேலே ஏழுவா
சலும் கீழேஇரண்டுவாசலும் உண்டாயிருக்கிறதுகள்,
அந்த நவத்துவாரங்களுடனே கூடின பட்டணத்துக்கு
ராஜாவானவன் ஒருவராலும் அறியப்பட்டவனன்று அ
ந்தப்பட்டணத்துக்குமேலான ஏழுவாசலுக்குள்கிழக்கு
த்திக்கில் ஓரிடத்தில்நிர்மிக்கப்பட்டிருக்கின்றசத்தியோ
தாவென்றும், அவிர்முகியென்றும் இரண்டுவாசல்களி
ல்துயுமத்தென்கிற சினேகிதனுடன் பிரவேசித்து விப்
பிருசிதமென்கிற தேசத்தையும், நளினி நாளினியென்
றும், இவ்விரண்டுவாசல்களுள்ள கிழக்குத்திக்கில்அவ
தூதனென்கிற சினேகிதனுடன் பிரவேசித்து வுற்பமெ
ன்கிறதேசத்தையும்அந்தக்கிழக்குத்திக்கில்மற்றொருமு
க்கியையென்றும் பெயரையுடைய துவாரத்தில் அந்தபு
ரஞ்சனனென்கிற இராஜாவானவன் ரசக்கியனென்றும்,
விபணனென்றும், இவ் விரண்டுபேர்களுடன் புறப்பட்
டு ஆபணமென்றும், பேகோதனமென்றும்,பெயரையு
டையதேசத்தையும், பிதுர்கூவென்று பெயரையுடைத்
தானவாசலானது தென்பக்கத்தில் பிதுர்கூவென்றுபெ
யரையுடையதுவாரத்தில் சுறுத்தானென்கிறவனுடன்பி
ரவேசித்து தட்சணபாஞ்சாலமென்கிற தேசத்தையும்
வடக்குவாசல்துவாரமான தேவகூவென்கிறத்தில்சுருத்
தானென்கிறவனுடன் பிரவேசித்துஉத்தரபாஞ்சாலதே
சத்தையும், மேற்குத்திக்கில்ஆசூரியென்கிறதுவாரத்தி
னுள் துர்மதனென்கிறவனுடன் பிரவேசித்து கிருமியக
மென்கிற தேசத்தையும், மேற்குத்திக்கில் நிருதியென்
கிறதுவாரத்தினுள் லுபதனென்கிறவனுடன் பிரவேசித்
து வைசசமென்கிறதேசத்தையும்அடைந்தான் அந்தப்
பட்டணத்திலிருக்கிறபேர்களுக்குள்ளே கண்ணில்லாத
வர்களாய் நிர்வாக்கியனென்றும் உபஸ்கரனென்றும் இ
ரண்டுபெயர்களை எந்தக்காரியங்களுக்கும்சகாயமாகவை
த்துக்கொண்டு எங்கேபோனாலும் எந்தக்காரியஞ் செய்
தாலும் கூட வைத்துக்கொண் டிருந்து அந்தப் புரஞ்ச
னன் விசுசின னென்கிறவனுடன் அந்தப் புரத்தில் பிர
வேசித்து தன்னுடையஸ்திரீ புத்திராளாலே உண்டாக்
கப்பட்ட விசனத்தையும், சந்தோஷத்தையும், ஆனந்த
த்தையும்அடைந்து காமங்களாலே ஆசக்தியுடையவனா
ய்மோகம்மாகிதனாகி ஸ்திரீபுத்திராதிகளினாலே வஞ்சிக்க
ப்பட்டவனாகி தன்னுடையஸ்திரீயானவள் எதைச்செய்கா
ருகிறாளோ அதற்கொருசாட்சியில்லாமல் நடத்திக்கொ
ண்டுவந்தான்,

## ௨௪ வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

வேட்டையென்கிற வியாஜமதனினற்
சேட்டைசொற்பன ஜாகரூபமாம்
கோட்டமாஞ்சமு சாரக்கொடுமையை
வாட்டமின்றி வழுத்தினதாமரோ,

வேட்டையென்கிற வியாஜத்தினலே சொற்பனஜாக
ரூபமான சமுசாரம் சொல்லப்படுகின்றது,

மைத்திரேயர்வாக்கியம்.

வாரீர்விதுரரே, அந்தப் புரஞ்சனனவன் மிகவு
ம்வேகவத்தான ஐந்துகுதிரைகள் சாரதிக்கு இருபடி
மான யீஷாதண்டங்கள்-இரண்டுசக்கிரங்கள் ஒரு அச்சு
மூன்று துவஸ்தம்பங்கள் இதுகளினலே அலங்கரிக்கப்
பட்டிருக்கின்ற சொர்னமயமான இரதத்தின்மீது தனு
ஷ்ப்பாணியாய் ஆரோகணித்துக்கொண்டு சொர்னமய
மான கவசத்தைதரித்து அட்சயமான அம்புறாத்தூணி
யையுடையவனாய் ஒருசேனநாயகனுடன் அஞ்சுபிரதே
சங்களையுடைய வனத்தையடைந்து மகாகருவதத்துடன்
வேட்டையிலே அசுரர்களைப்போல் நிர்த்தயனாய்அந்த
வனங்களிலுள்ள மிருகங்களைவதைக்க யத்தனஞ்செய்து
சிரார்த்தத்திலே உபயோகிக்கப்பட்ட மிருகங்களை இரா
ஜாக்களடிக்கத்தக்கதென்று சாஸ்திரங்களில் விதித்திரு
க்கிற அத்தநப்பிரயோனமில்லாமல் சரிப்போனபடி சி
த்திரங்களான இறகுகளையுடையபாணங்களினலேதயா
சாலிகளுக்குச் சகிக்கக்கூடாத ஜீவஇம்சைசெய்யத்தனி
த்து முசல்கள்-காட்டுப்பன்றிகள்-மான்கள்- முள்ளம்பன்
றிகள் இதுமுதலான மிருகங்களைச் சங்கரித்த சிரமத்தி
னலே பசிதாகமுடையவனாய் அந்த வனத்தைவிட்டு கி
ரகத்தையடைந்து சிரமத்தைப் போக்கடித்துக் கொண்
டுசந்தனபுஷ்ப தாம்பூலங்களினல் நன்றா யலங்கரிக்கப்
பட்டு தன்னுடைய பாரியையினிடத்தில் கியாபகங்கொ
ண்டவனாய் மன்மதனால் அபகரிக்கப்பட்ட மனதுடன்
அந்தப்புரத்தில் பிரவேசித்துப்பார்க்கையில் அவிடத்தி
ல் தன்னுடையபாரியாளைக்காணமல் அந்தப் பாஸ்திரீ
களைநோக்கி உங்களுடையயஜமானியெங்கேயிருக்கிறா
ளென்று கேட்கிற அரசனைப்பார்த்து அந்த ஸ்திரீகள்,
வாராய்ராஜனே-உன்னுடைய இஷ்டநாயகியானவள் உ

மதுபிரிவுக்கு சகிக்காமல் தேகாபிமானத்தைவிட்டு கட்டில்மெத்தை முதலானதை நிவர்த்தித்து தரையிற்படுத்துக்கொண்டிருக்கிறாளென்று காண்பிக்க அதைப்பார்த்து புரஞ்சனன் அவளுக் கினிப்பான வார்த்தைகள் சொல்லித் தேற்றவேண்டுமென்று கருத்துகொண்டு அவளைத்தூக்கி மடியில் வைத்துக்கொண்டு அவளை நோக்கி இநுவார்த்தை சொல்லுகிறான். வாராய் சோபனையே சமாஹுளாயிருப்பவர்கள் தப்புசெய்திருந்து அவர்களுக்குத்தகுந்த தண்டனைசெய்யாவிடில் அவர்களைப் புண்ணியஞ்செய்யாதவர்களென்று சொல்லத்தக்கது அவிவேகியானவன் தான்செய்ததப்பிதத்திற்குப்பதிலாய்செய்யப்பட்டதண்டனையை அனுக்கிரகமென்றறியமாட்டான் அபராதியானவயென்னிடத்தில் நீ பிரீதியினால்கோபித்துக்கொண்டதாயிருந்தாலும் திலகஞூன்யமாகியும்- பிரளயகோபத்தினாலேபயங்கரமாகிசினேகசூன்யமாகியுமிருக்கிற உன்னுடைய முகத்தையும் துக்கத்தினாலே அலைந்து சந்தனக்குங்குமசூன்யங்களாகியுமிருக்கிற ஸ்தனங்களையுடைய உன்னைப்பார்க்க என்மனந் தாளவில்லை ஆனபடியினாலே சுயயிச்சையினால் வேட்டையிலேவிசனத்தையடைந்த எனக்கு பிரசன்னமாய் மன்மதனுடைய பாணவேகத்தினாலே தைரியமிழந்திருக்கிற என்னை அங்கீகரிக்கவேண்டுமென்று சொன்னான்.

## உருவது - அத்தியாயம்.

கலிவிருத்தம்;

பாரியாபுத்தி ராதிபக்கங்களில்
நேருமாசக்தி யால்மறவாநின்ற
ஒருங்காலகன் னிகையினுபாக்யானத்
தேருஞ்சோர ரோகமுதற்செப்பினா

பாரியாபுத்திராதிகளிடங்களிலேயுஆசக்தியினாலே தன்னை மறவாநின்ற கால கன்னிகையினுடைய உபாக்கியானத்திலே சோரரோகமுதலானது சொல்லப்படுகின்றது.

மைத்திரேயர்வாக்கியம்.

வாராய்மகாராஜனேஇந்தப்பிரகாரம் புரஞ்சனியானவள் தன்னுடையவிலாசங்களினாலே புரஞ்சனனைநன்றாகவசப்படுத்திக்கொண்டு மங்கள ஸ்நானஞ்செய்து மனோக்கியமான வஸ்திராபரணங்களினால் அலங்கரிக்கப்பட்டு யௌவனத்தில் கர்விதையாகித் தன் சமீபத்திலேவந்து ஆலிங்கனம் பண்ணிக்கொண்ட ஸ்திரீயைத்தானும் ஆலிங்கனம்பண்ணி ரகசியத்திலே அனுகூலங்களாயிருக்கிற அவளுடையவார்த்தைகளினாலே மோகப்பட்டிருக்கிற விவேகத்தை யுடையவனாய் ஸ்திரீவசிகனாகிப் பகலென்றும் இராத்திரி யென்றும் அறியாமற்றன் ஸ்திரீயினுடையபுஜத்தைத் தலைக்கணையாகச்செய்து அந்தஸ்திரீயையே பரமபுருஷார்த்தமாக வெண்ணி தன்னுடையசுரூபத்தையும்- பரமாத்மாவினுடைய சுரூபத்தையும் அறியாமல் அவளிடத்தில் அனேகம்பிள்ளைகளையும்- பெண்களையும்பெற்று அவரவர்களுக்குத் தக்கபடி விவாகஞ்செய்து அவர்களுக்கும் அனேகம் பிள்ளைகளுண்டாய் மிகவும் போகசம்பத்துடன் மதாந்தகாரனைக் காலத்தினுடையகதியை அறியாதவனாகவே வெகுவிகமான கோரிக்கைகளை யுடையவனாய் பசுயிங்கிசாரூபங்களான யக்கியங்களினால் தேவர்கள்- பிதுர்க்கள்-பூதபதிகள இவர்களைப் பூசித்து அனுகூலாளா யிருக்கிற புத்திரபௌத்திரா ளிடங்களிலே ஆசக்தியுடன் விவேகவீனனாயிருக்கின்ற அந்தப் புரஞ்சனனுக்கு ஸ்திரீமோகத்தை நிவர்த்திக்கத்தக்கதான வார்த்தீகமானது வந்தது அதற்குமுன்னமே கந்தருவாளுக்கெல்லாம்அதிபதியான சண்டவேகனென்கிறவன் மகாபலசாலிகளான முந்நூற்றறுபதுபேர் கந்தருவாளும் அவர்களுடைய ஸ்திரீகள் முந்நூற்றறுபது பேர்களுடன் அந்தப் புரஞ்சனனுடைய பட்டணத்தையழிக்க யெத்தனம்பண்ணி அந்தப்பட்டணத்தைச்சுற்றிக்கொண்டு அபகரிக்க யத்தனம் பண்ணினபோது அந்தப்பட்டணத்தை இரட்சிக்கின்ற தளகர்த்தாவாகியும் பலவானாகியு மிருக்கிற பிரசாகரனவன் ஒருவனாய் கந்தருவாள் எழுநூற்றிருபது பெயருடனேயும், நூறுசம்வச்சரம் யுத்தம்பண்ணி தடைசெய்துகொண்டிருந்த ஒண்டிக்காரனாதலால் அந்தயுத்தத்திலே தனக்குப்பலட்சீணம்வந்து பந்துக்களுடனே கூடி மகாதுக்கத்தை யடைந்தவனாய்ச் சிந்தைசெய்துகொண்டிருந்தான்.

அந்தராஜாவானவன் தன்னுடையசேவகர்களாலே கொடுக்கப்பட்ட போக்கியவஸ்துக்களைக் கிரகித் துஸ்திரீவசனாகி அந்தப்பட்டணத்துக்குவந்த பயத்தையறியாமலிருக்கிறசமையத்தில் காலனுக்குப்பெண்ணான ஜரையென்கிறஸ்திரீ தனக்குப்பர்த்தாவை யிச்சித்து மூன்றுலகத்திலேயுஞ் சஞ்சரித்துக்கொண் டிருக்கிறவர்களாகியும் சந்தோஷத்துடன் புறு சக்கிரவர்த்தியினால் கிரகிக்கப்பட்டவளாய் அவனுக்கு இராச்சியத்தைக் கொடுத்தவளாயும் - அனிஷ்ட போகத்தை யுண்டாக்குகிறத்தினாலே துர்ப்பகையென்றுஞ் சொல்லப்படுகிறவளாயுமிருக்கிற அந்தச்சரையானவள் பூமியிலே சஞ்சரித்துக்கொண்டிருக்கையில் பிரமலோகத்திலிருந்து பூமியிலேவராநின்ற என்னைப் பிரமனிஷ்டனென்று அறிந்திருந்தாலும் மன்மதனாலே மோகத்தை யடைந்தவளாய் என்னைப் பர்த்தாவாகச்சொன்னாள் அவளை நான் விரும்பாமல் நிராகரித்தபடியால் எந்தவிடங்களிலேயும் நிலையா யிராமற் போகக்கடவீயென்று கோரமான சாபத்தைக் கொடுத் தெனனிடத்தில்நின்றுஞ் சித்தியாமலிருக்கிற சங்கற்பத்தை யுடையவளாய் எவனுக்கு இராஜாவாகியும் என்னாலேசொல்லப்பட்டிருக்கிற பயமென்கிறவனை நோக்

கி வாராய்விரனே எவனுளுக்குச் சிரேஷ்டராயிருக்கிற உன்னை இஷ்டனுகிய ப்ர்த்தாவாகவகிக்கிறேன் பிராணிகளுக்கு உன்னிடத்திலேபண்ணப்பட்ட சங்கல்பம் சித்தியாமற்போகிறதில்லையே உன்னேயே யடைந்திருக்கிற என்னிடத்திலே தயவுசெய்வாயென்று மிகவும்விருப்பமுடன்சொல்லுகிற காலகன்னிகையினுடையவார்த்தையைக்கேட்டு அந்த எவனேசுரனை பயனுனவன் தேவரகசியத்தைப் பண்ணவேண்டுமென்று இச்சித்திருக்கிற அந்தக் காலகன்னிகையைப் பார்த்து புன்சிரிப்புடனேகூட ஒருவார்த்தைசொல்லுகிருன்.

வாராய் காலகன்னிகையே இந்தஉலகமானதுஉனக்குப்பர்த்தாவாகவிருப்பது என்னுடைய கியானதிருஷ்டியிலறியப்பட்டது. நீயானவள் ஒருத்தராலேயுமறியப்படாத கதியையுடையவளாய் கர்மத்தினுலேநிர்மிக்கப்பட்ட இந்தவுலகத்தை என்னுடையசேனையுடனேகூடிக்கொண்டு எனதுசேனுபதியான பிரசுரமானது உன்னை இந்தவுலகத்தை யடைவிப்பிக்கும் இந்தப் பிரசுரமானது எனக்குப்பிராதா நீயும்எனக்குத்தங்கையாய்விடு உங்களிருவருரோடேயுங்கூடிநானிந்தஉலகத்திலே அறியப்படாதகதியையுடையவனுகியும்,பயங்கரமாகியசேனையை யுடையவனுகியும்சஞ்சரித்துக்கொண்டிருக்கிறேன்.

## உகூ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

சேரும்வைதற்பி யென்னும்ஸ்திரீசிந்தையால்
ஆரும்ஸ்திரீபாவந் தன்னையடைந்திடும்
ஒரியாம்புரஞ் சனனுக்கோர்காலத்திற்
சீரதாய்த்தெய்வ முக்தியுஞ்செப்பினர்.

வைதற்பியென்கிற ஸ்திரீசிந்தையால் ஸ்திரீ பாவத்தையடைந்த புரஞ்சனனுக்கு ஒருகாலத்திலே தெய்வானுகூலமாக முத்திசொல்லப்படுகின்றது.

நாரதர்வாக்கியம்.

வாராய் பிராசீனபரிகிசே, பயனென்று பெயரையுடைய எவனேஸ்வரனுடைய ஆக்கினையைச் செய்கிற சேவகர்கள் பிறசுவானகாலகன்னிகையிவர்களுடனேகூட இந்தப்பூமியெல்லாஞ் சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள்.ஒருக்கால் அந்தப்பயனுடைய சேனையிலேயிருக்கிற பேர் பலத்தில்விருத்தனை சர்ப்பத்தினுலே ரட்சிக்கப்பட்டும்பூமியிலேயுண்டானபேர்க்கிய வஸ்துக்களினுலே நிறைந்திருக்கிற புரஞ்சனனுடைய பட்டணத்தை காலகன்னிகையானஜரையுடன் பலாத்காரமாகப்பற்றி அனுபவித்தார்கள். இந்தப்பிரகாரம் அந்தஜரை அந்தப்பட்டணத்தைப்பிடிக்கையில் அந்தப்பட்டணத்துக்கு அபிமானியாகியும், சம்சாரியாகியும், மமதையினுலே வியாகூலனையுமிருக்கிற புரஞ்சனனுனவன் வெகுவிதங்களான சந்தாபங்களை அடைந்து காலகன்னிகையினுல் ஆலிங்கனம்பண்ணப்பட்டபடியால் நசித்துப்போன சம்பத்தையுடையவனுய் தீனனுய் விஷயத்திலே மனதையுடையவனுய் புத்திருக்கியனுய் கந்தருவ எவனுளாலே பலாத்காரமாக அபகரிக்கப்பட்ட அயிஸ்வரியத்தையுடையவனுன புரஞ்சனுனவன் சீரணமான தன்னுடைய பட்டணத்தைப்பார்த்து பிரதி கூலாளாகியும் தன்னிடத்திலே ஆகரவைப்பண்ணுதவளாகியு மிருக்கிற புத்திராள்-பௌத்திராள்-படாள்-மந்திரிகள்- பிரீதியில்லாதஸ்திரீ இவர்களையும்பார்த்து காலகன்னிகையினுல் ஆக்ரமிக்கப்பட்ட தன்னையும் சத்துருககளினுலே தூஷிக்கப்பட்ட பாஞ்சால தேசங்களையும் பார்த்து அபாரமான சிந்தையை யடைந்தவனுய் இதுகளுக்கெல்லாம்பிரீதிசெய்யவேண்டியதை யடையாமல் காலகன்னிகையினுலேசாரம்போயிருந்தாலும் அந்தப் பட்டணத்தை விட்டுவிட மனதில்லாமலிருக்கச்சே எவனேஸ்வரனுனபயனுக்குத் தமையனுன பிரசுவானவன் வந்து அந்தப் பட்டணத்தையெல்லாம் பிராதாவானபயனுக்குப் பிரியத்தைப் பண்ணவேண்டுமென்கிற இச்சையினுலே தகித்தான் அப்போது புரசனங்களுடனேயும், சம்பத்துடனேயும்,பிருத்தியவர்க்கங்களுடனேயும், பாரியாளுடனேயுங் கூடி சமுசாரியானபுரஞ்சனன் தபித்தான். புரபாலனுன அந்தநாகம் மிகவும் தாபத்தை யடைந்து வேக விபத்தினுலே அதிகமான நடுக்கத்தை யுடையதாய் அந்தப்பட்டணத்திலேயிருக்கமாட்டாமல் அக்கினியினுலே தகிக்கப்பட்ட விருட்சத்தினுடைய பொந்தில் நின்றும் கிளம்புகிறசர்ப்பமானதுபோல் அந்தப் பட்டணத்தை விட்டுப் போகிறதற்கு இச்சித்தது.

அந்தப் புரஞ்சனனுனவன் எப்போது துர்லபமான அவயவங்களையுடையவனுனனே அப்பொழுதேசக்தியில்லாதவனுய் வெகுபேர்களான அந்தஎவனுளாலே கழுத்தைப்பிடிக்கப்பட்டவனுகக் குறுகுறென்று விகாரமாய்க்கூப்பிட்டான். மறுபடியும்-பெண்கள்- பிள்ளைகள் பேரன்மார்கள்-மாட்டுப்பெண்கள் - மாப்பிள்ளைகள் பிருத்தியவர்க்கங்கள்-இவர்களையும் மீதியாகவிருக்கிற - விடுதனம்-முதலானதும் என்னுடையதென்று மமதையை வகித்தவனுய் ஸ்திரீக்கும் தனக்கும் பிரிந்துபோகிற காலம் வந்ததைப்பார்த்துத் தீனனுய் இந்தப்பிரகாரம் சிந்தித்துக்கொண் டிருந்தான்.

எப்படியெனில்,நான் லோகாந்தரத்தை யடைந்தேனுகில் அநாதையான இந்தஸ்திரீ தீனையாய் தீனுளான இந்தக்குழந்தைகளைவைத்து துக்கித்துக்கொண்டு எப்படியிருக்கப்போகிருள் நான் சாப்பிடாமற் போவேனுகில் இவளும் சாப்பிடுகிறதில்லையே நான்ஸ்நானம் பண்ணுவிட்டால் என்னையே கதியாக அடைந்திருக்கிற இவ

ளும் ஸ்நானம் பண்ணுகிறதில்லையே நான் கோபித்துக்
கொண்டால் மிகவும்பயப்படுவாளே நான் பிரட்டினே
னையாகில் பயத்தினால் எதிரிலொருவார்த்தையுஞ்சொ
ல்லாமலிருப்பாளே, ஒன்றுந் தோன்றாமலிருக்கிற வெ
னக்கு விவேகத்தைச் சொல்லுவாளே நான்தேசாந்தர
ம்போயிருந்தேனாகில் விசனத்தினாலே யிளைத்து துக்க
ப்பட்டுக்கொண் டிருப்பாளே, இப்படிப்பட்டவ ளாகியு
ம், வீராளுக்குத்தாயாராகியும் இருக்கிற என்னுடைய
ஸ்திரியானவள் கிரகஸ்த தர்மமான புருஷனுடனே அ
னுமரண மார்க்கத்தை யிச்சியாமற் போவாளா என்னை
யேகதியாக வுடையவளாகியும் அனாதாளாகியுமிருக்கிற
நம்முடைய பிள்ளைகளும் பெண்களும் நான் பரலோக
த்தை அடைந்த பிற்பாடு சமுத்திரத்திலே யுடைந்து
போன ஓடத்திலேயிருக்கிறவர்கள்போலே எப்படியி
ருக்கப்போகிறார்களென்று மகா தீனமான புத்தியினாலே
விசனப்படுகிற புரஞ்சனனை எவனேசுவரனென்பவன் வ
ந்துகிட்டி தங்கள்கிரகத்துக்கு வேண்டும் பசுவைப்போ
ல இழுத்துக்கொண்டு போகிறபோது அந்தப் புரஞ்ச
னனுடன் ராச்சியானுபவ காலத்திலே சகாயங்களாய்கூ
டவிருந்தவர்களும் மகாவிசனத்தையடைந்து மிகவும்ப
யந்தவர்களாகப் பின்னாலேபோனார்கள் அந்தப்பட்டண
த்தை ரட்சித்திராநின்ற ஐந்துதலைநாகமும் அந்தப் பட்
டணத்தை விட்டுப் போய்விட்டபோதே அந்தப் பட்ட
ணமானது சிரணமாய் பஞ்சபூதங்களை யடைந்துபோச்
சுது, பலவானான எவனாலே பிடிக்கப்பட்ட மகா அ
க்கியானத்தையுடைய நிர்த்தயனான அந்தப்புரஞ்சனனா
லே காமியகர்மங்களினால் யாதொருபசுக்கள் கொல்லப்
பட்டதுகளோ அந்தப்பசுக்கள் இவன்செய்த இம்சையை
நினைத்து மிகவும் கோபத்தையடைந்ததுகளாய் இந்தரா
ஜாவை கோடாலிகளாலே பிளந்ததுகள்.

அந்தப்புரஞ்சனன் கரையில்லாத தமசிலே முழுகி
னவனாய் அனேகவருஷங்கள் கோரமான வாதனைகளை
அனுபவித்து ஸ்திரீயினுடைய சங்கத்தினாலே விவேக
மில்லாதவனாய் சரீரம்விடும்போது அவளையேமனதில்
நினைத்து பிராணனை விட்டபடியினாலே பின்புவிதர்ப்ப
ராஜாவினுடைய கிரகத்திலே உத்தம ஸ்திரீயாகப் பிறந்
தாள் பின்புசுயம்வரத்திலே வீரியத்தையே பந்தயமா
கவுடைய அந்தவிதர்ப்பராஜன் பெண்ணைச் சத்துருக்க
ளைச் ஜெயித்தவனாகியும், பாகவதனாகியுமிருக்கிற பாண்
டியதேசாதிபதியான மலயத்துவசன்யுத்தத்திலேராஜா
க்களையெல்லாம் ஜெயித்து விவாகஞ்செய்துகொண்டான்
அந்தப்பாண்டியராஜாவானவன் அந்தவைதர்ப்பியினிடத்
திலே கறுப்பானகண்களையுடைய ஒருபெண்ணையும்ஏ
ழுபிள்ளைகளையும் பெற்றான், அந்தப் பிள்ளைகளுக்குள்
ளே ஒவ்வொருத்தனுக்கு அனேகம்பிள்ளைகள் பிறந்தா
ர்கள். அந்தவம்சங்களாலே பூமியானது மனுவந்தரமெ
ல்லாம் அனுபவிக்கப்படுகிறது அப்படிப்பட்டவாள் பி
றந்தார்கள், அகஸ்தியர் மலயத்துவசனுக்கு ஸ்ரீமந்த
புத்திரியாகியும், விரதத்தை யுடையவளாகியு மிருக்கிற
அந்தப்பெண்ணை விவாகஞ்செய்து அவளிடத்திலே இ
த்துமவாகனனென்கிற பெயரையுடைய திடச்சுதனென்
கிற முனியானவன்பிறந்தான் இராஜரிஷியான அந்தமல
யத்துவசன் பிள்ளைகளுக்கு இராச்சியத்தைப் பங்கிட்டு
க்கொடுத்து ஸ்ரீகிருஷ்ணனை ஆராதிக்கவேண்டுமென்று
இச்சையை யுடையவனாகி இமோறபருவதத்தைக் குறி
த்துப்போனான் மோகிப்பிக்கின்றகண்களை யுடையவை
தற்பியும், பிள்ளைகளையும், கிரகங்களையும், போகங்களை
யும், சந்திரனைச் சந்திரிகையானது அனுசரிப்பதுபோல்
பாண்டிய தேசாதிபதியான மலயத்துவசனைப்பின்செ
ன்றாள் அந்த இமோறபர்வதத்திலேதாம்பரபர்ணியெ
ன்றும், கோதனையென்றும், சந்திரவசையென்றும், நி
ர்மலமான ஜலத்தையுடைய பிரசித்தமானநதிகளினது
தீர்த்தங்கள்லேசித்திப்பாக ஸ்நானஞ்செய்து உள்ளும்
புறம்பும் நிர்மலனாகிருந்து கந்தமூலபலங்கள்புழுப்பி
லைகள்திர்ணம், உதகம், இதுகளைச்சாப்பிட்டுக்காயகிலே
சத்தை யுடையவனாகி உக்ரமான தபசைச்செய்துசமபு
த்தியுடையவனாகி சீதஉஷ்ணங்கள்காற்றுமழைகள் பசி
தாகங்கள் பிரீயம் அப்பிரீயங்கள் சுகதுக்கங்க ளென்கிற
தொந்தங்களைச்செயித்து தபசினாலேயும், உபாசனையி
னாலேயும், பாபத்தைத் தகித்தவனாய் யமநியமங்களினா
லே இந்திரியங்களையும், சுவாசத்தையும் செயித்தவனாய்
தேவமானத்தினாலே நூறுவருஷம் ஸ்தாணுபோலே ச
லியாமல் பகவானான ஸ்ரீ வாசுதேவ னிடத்திலே பக்தி
யைச்செய்தவனாகியும், வேறே ஒன்றையு மறியாதவனா
கியுமிருந்தான் தேகாதி விலட்சணனான சீவாத்மாவினி
டத்திலே பரமாத்மாவை வியாபகனாகவுஞ் சாட்சியாக
வுமறிந்து அனித்தியமான தேகவிருத்தாந்தத்தைச்சொ
ர்ப்பனத்தைப்போலப்பார்த்து அந்த விமரிசனத்தையு
ம்விட்டு மிகவும் பக்வதனுசந்தானதற்பரனான்,

வசாராய்ராஜர்வே, குருவாகியுஞ்சாட்சாத்பகவானா
கியுமிருக்கிற அரியினாலே சொல்லப்பட்டஎங்கும் பிர
காசமான விசுத்தியான தீபத்தினாலே சீவாத்மாவைப
ரப் பிரமத்தினிடத்திலேயு மந்தப் பரப்பிரமத்தைச் சீ
வாத்மாவினிடத்திலேயும்பார்த்து அந்தஉபாசனத்தை
யும் விட்டுச் சமுசாரத்தில் னின்று மொழிந்தான் அப்
போ பதிவிரதையான அந்த வைதற்பியானவள் பதியி
னிடத்திலே பிரீதியினாலே போகங்களை விட்டு பணிவி
டைக்கினிய மரவுரியை யுடுத்தி விரதத்தினாலே சிறுச
மானதேகத்தை யுடையவளாகியுஞ்சடையாய்ப்போன
தலைமயிர்களை யுடையவளாகியு மிருக்கிற அந்தவைதற்

பியானவள் பதியினுடைய சமீபத்திலே தணலான அக்கினிபோலவிளங்கினாள் ஸ்திரமான ஆசனத்தையுடையவனாகவிருக்கிற பர்த்தாவை தேகத்தைவிட்டவனாகி அறியாமல் முன்போலவே பணிவிடை செய்துகொண்டிருந்து பதியினுடையபாதங்களிலே உஷ்ணமிராமலிருக்கக்கண்டு அப்போதுதன்கூட்டத்தில்நின்றும் விடுபட்டமான்பேடானதுபோல துக்கப்படாநின்ற மனதை யுடையவளாய் பதியில்லாமல் தீனையாகவு மனாதையாகவுமிருக்கிற தனக்குவிசனப்பட்டு மிகவும் தைரியத்தையுடையவளாய்க்கண்ணீர்களினாலேதன்னுடையஸ்தனங்களைநனைத்து அந்தக்கானகத்திலே அழத்தொடங்கினாள்.

வாராய் ராஜரிஷியே எழுந்திருஎழுந்திருசோரர்களான துஷ்ட க்ஷத்திரியாளுக்குப் பயப்பட்டுக்கொண்டிருக்கிற சமுத்திரமே கலையான இந்தப்பூமியை இரட்சிகைக்கு யோக்கியனாகா நிற்கிறாயென்று இந்தப்பிரகாரங் காட்டிலேபதியை அனுசரித்தவளாகியுஞ் சிறுபெண்ணாகியுமிருக்கிற அந்த ஸ்திரீயானவள் பிரலாபித்து பதியினுடைய பாதங்களிலே வீழ்ந்து கண்ணீரைவிட்டழுது பின்புகட்டைகளினாலே சிதையையடுக்கி அந்தச்சிதையிலே புருஷனுடைய சரீரத்தை வைத்து தகித்து ரோதனஞ்செய்துஅனுமரணஞ் செய்யவேண்டுமென்றுநினைத்தாள். அப்போது பூர்வஜன்மத்திலே சிநேகிதனாகியு மாத்மக்கியானியாகியு மிருக்கிற பிராமணன் அவிடத்திலேவந்து அழுதுகொண்டிருக்கிற அந்தஸ்திரீயைப்பார்த்து சமாதானஞ்செய்து ஒருவார்த்தைசொன்னான்.

வாராய்பெண்ணே நீயார் எவருடையபெண் படுத்துக்கொண்டிருக்கிறவனார் எவனிமித்தம் ரோதனம்பண்ணுகிறாய்இந்தஜன்மத்துக்குமுன்னமேஉன்னுடனே விளையாடிக்கொண்டிருந்தசிநேகிதனென்றுஎன்னைஅறி

வாராய்சகியே என்னைஜன்மாந்தரத்திலேஅவிக்கியாதனுக்குச் சகாவென்கிறத்தைநினைத்துக்கொண்டிருக்கிறையா என்னைவிட்டுவிட்டுபூமியிலேயுண்டானபோகத்திலே ஆசையையுடையவனாய் ஓரிடத்தைஇச்சித்துப்போனாய் நீயும்நானுமிருவருஞ் சிநேகிதாளாகியுமானசசிரசிலே வாசம்பண்ணிக்கொண் டிருக்கிறவளாகியு மனேகசம்வச்சரமரண மில்லாதவளாயிருக்கிற அம்சங்களாகாநிற்கிறோம்.

வாராய்தோழியே அப்படிப்பட்டநீ என்னைவிட்டு விஷயசுகத்திலே புத்தியையுடையவராய்பூமியிலேசஞ்சரித்து ஒருஸ்திரீயினாலே பண்ணப்பட்டதா யிருக்கிற ஒரு பட்டணத்தைப்பார்த்தாயா அந்தப்பட்டண மெப்படி யிருக்குதென்றால், சப்தாதி அஞ்சு விஷயங்களே அஞ்சுதோட்டங்கள், நவத்துவாரங்களேஒன்பதுவாசல்கள் பிரிதிவி அப்பு தேசசுக்களோ மூன்று பிரகாரங்கள் பிராணனே ஒருரட்சிக்கிறசாரதி, கியானஇந்திரிய மஞ்சுமனது, இந்தஆறு மபீஷ்டத்தைச் சம்பாதிக்கிறவாள் கர்மேந்திரியங்களைந்தும் கடைத்தெருவுகள் பஞ்சமகாபூதங்களே அஞ்சுகாரணங்கள். புத்தியேபஜமானி, தேகமேபட்டணம், இந்தப்படி அறியத்தக்கது அந்த ஸ்திரீவாசனாயிஇந்துகொண்டு இந்தப்பட்டணத்திலேபிரவேசித்துக் கர்வப்படுகிறபுருஷன் ஒன்றையுமறியாதமூடனாய்ப்போகிறான்.

வாராய்விபுவே நீயானவன் இப்படிப்பட்ட பட்டணத்திலே புத்தியென்னப்பட்ட ஸ்திரீயினாலேகிரகிக்கப்பட்டவனாய் அவளுடனே ரவித்துக்கொண்டுதன்னையும்பரமாத்மாவையுமறந்தவனாய் அந்தஸ்திரீ சங்கத்தினாலே இப்படிப்பட்ட பாபிஷ்டமான ஸ்திரீஜன்மத்தைஅடைந்தாய்,ஆகையினாலே நீபசுபாவமாய் விதற்பனுடையபெண்ணுமன்று இந்தவீரனை மலையத்துவசன் உனக்குப்புருஷனுமன்று நவத்துவாரமான இந்தப்பட்டணத்திலே எந்தப்புத்திக்குப் பாவநாசமாயிருந்தையோஅந்தப்புரஞ்சனியென்னப்பட்ட புத்திக்கு நீபர்த்தாவுமன்று, எந்தக்காரணத்தினாலே புருஷனான வுன்னை ஸ்திரீயாகவெண்ணியிருக்கிறையோ இதுஎன்னாலேபண்ணப்பட்டமாயை எந்தக்காரணத்தினாலேநாமிரண்டுபேருஞ் சுத்தாளோ அந்தக்காரணத்தினாலே இந்தஇரண்டும்ஆத்மாவுக்குச் சுபாவமாகவில்லை நம்மிருவருடைய சுவரூபத்தைப்பார். நீயென்னுடைய அமிசபூதமான சுதந்திரனன்று நானுன்னை அமிசமாகவுடையவன், நம்மிருவருக்குங் கியானிகள் கிஞ்சித்தும் சம்பந்தமில்லாமை பார்ப்பவரில்லை. எந்தப்பிரகாரம் புருஷன் தன்னை ஒருவனையும் கண்ணாடியிலேயும், கண்களிலேயும், இரண்டு பிரகாரமாகப் பார்க்கிறானோ அந்தப்பிரகாரமே நம்மிருவருக்கும் பிம்பப்பிரதி பிம்பங்களுக்கும்போல பேதமுண்டாயிருக்கிறது இந்தப்பிரகாரம் அந்தமான ஸரசிலேவாசம்பண்ணுகிற அம்சத்தினாலே சுத்தனான சீவன் அப்படிப்பட்டஅம்சத்தினாலே போதிக்கப்பட்டவனாய் சுவரூபத்தையடைந்தவனாய் ஈஸ்வரனைவிட்டுப்பிரிந்ததினாலே நசித்துப்போன விவேகத்தைத் திரும்பவும் அடைந்தான், வாராய் பிராசீனபரிகிசே இந்தஆத்தும வுபதேசம் கதாரூபமாக உனக்குஎன்னாலேகாண்பிக்கப்பட்டது. எந்தக்காரணத்தினாலே விசுவகர்த்தாவான பகவான் அப்பிரத்தியட்சத்திலே பிரீதியை யுடையவனோ அந்தக்காரணத்தினாலே அப்பிரத்தியக்ஷமாகவே உனக்குச் சொல்லப்பட்டது.

## ௨௭-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

மாதர்கூட்டத்தால் மன்னும்சம்சாரமாம்
சாதுசங்கரன் சங்கத்தால்முத்தியாம்
ஓதுமாத்ம வுபதேசவுண்மைக்கு
தீதிலாதவியாக் கியானத்தைசெப்புவாம்.

ஸ்திரீசங்கத்திலே சம்சாரமென்று ஈஸ்வரசங்கத்திலே முக்தியென்றும் பிரகாசமாகக் கதாரூபமாகச் சொல்லப்பட்ட ஆத்மவுபதேசத்துக்கு வியாக்கியானம் சொல்லப்படுகின்றது;

பிராசீன பரிகிசுவினுடைய வாக்கியம்,

வாரீர் நாரதபகவானே, உமது வசனத்தினுடைய தாத்பரியம் நம்மாலே நன்ருகஅறியப்படவில்லை, கியானிகளானபேர்கள் உம்முடையவசனதாத்பரியத்தைநன்ருகஅறிவார்கள். கர்மமோகிதனை நான்அறியமாட்டேனென்று இந்தப்பிரகாரம் சொல்லாநின்ற ராஜாவைப் பார்த்து நாரதர்சொல்லுகிருர்.

வாராய்ராஜாவே, யாதொரு புரஞ்சனன் ஏகபாதமாயும்,திவிபாதமாயும், திரிபாதமாயும், சதுர்ப்பாதமாயும்,வெகுபாதமாயும்,பாதமேயில்லாமலுமிருக்கிற பட்டணமென்றுசொல்லப்பட்டதேகத்தைப்பிரகாசிப்பிக்கிருனே அப்படிப்பட்ட புரஞ்சனனேச் சீவாத்துமாவென்றறி அந்தச்சீவனுனபுரஞ்சனனுக்குச் சகாவாய் அவிக்கியாதனென்று பெயரையுடையவனுய் எந்தசகா சொல்லப்பட்டானே அவனேப்பரமாத்மாவென்றறி,யாதொருகாரணத்தினல் புருஷாளாலேயும், நாமரூபங்களினுலேயும், கிரியாகுணங்களினுலேயும், அறியப்படாததினுலே அந்தஈஸ்வரன் அவிக்கியாதனென்று சொல்லப்படுகிற புருஷன் பிரகிருதியினுடைய சமஸ்தகுணங்களையு மடையவேண்டுமென்று எப்போ திச்சித்தானே அப்போது பட்டணமென்றுசொல்லப்பட்ட ஏகபதாதி சரீரங்களுக்குள்ளே நவத்துவாரங்கள் இரண்டு கைகள் இரண்டுகால்கள் இதுகளோடேகூடின மனுஷ்பசரீரத்தையே போக்கியமெனறெண்ணுகிருன். அந்தப் பட்டணத்திலே ஸ்திரீயென்றுசொல்லப்பட்டவளே புத்தியென்றறி, எந்தப்புத்தியினுலே நானென்றும், என்னதென்றும், இந்தவிகற்பம் உண்டாக்கத்தக்கிய புத்தியை ஸ்திரீயென்றும் எந்தப்புத்தியை ஆஸ்ரயித்து இந்தச்சீவனுனவன் தேகத்தில்இந்திரியங்களினுலே ரூபரசாதிகுணங்களை யனுபவிக்கிருனே அதையே ஸ்திரீயென்று சொல்லப்பட்டன. கர்மேந்திரியங்கள் கியானேந்திரியங்கள் இதுகள் விஷயானுபவத்துக்குசகாயாளென்றுசொல்லப்பட்டதுகள். எந்தவிந்திரியங்களினுலே சீவனுக்கு ஞானமும் கர்மமும்உண்டாக்கப்படுகிறதோ அவ்விந்திரியங்களே சகாயாளென்றுசொல்லப்பட்டதுகள் அவ்விந்திரியங்களினுலே யுண்டாக்கப்பட்ட விர்த்திக்கியானங்களே அந்தப்புத்திக்குச் சகிகளென்று சொல்லப்பட்டதுகள். பஞ்சவிர்த்தியையுடையதான பிராணனே அஞ்சுதலையையுடையதானசர்ப்பமென்றுசொல்லப்பட்டது மகாபலசாலியான வொருதளவாய்சொல்லப்பட்டானே அவனேயே கியானேந்திரியங்களுக்கும் ராஜாவான மனதென்றறி. யாதொருபாஞ்சாலங்களென்னப்பட்ட தேசங்கள் சொல்லப்பட்டதுகளோ அதுகளே சப்த ஸ்பரிச ரூபரச கந்தமென்னப்பட்ட அஞ்சு விஷயங்களென்றறி அந்தத்தேசங்கள் நடுவிலே ஒன்பதுவாசலையுடையதாய் யாதொருபட்டணமென்று சொல்லப்பட்டதோ அந்தப் பட்டணத்தைத் தேகமென்றும், அந்தவாசல்களே இந்திரியரந்திரங்களென்றும்அறி. இந்த சீவாத்துமாவானவன் இந்திரியங்களே முன்னிட்டுக்கொண்டு இரண்டுகண்கள், இரண்டுகாதுகள், இரண்டுமூக்குகள், முகமொன்று சிசுனம் குதமென்னப்பட்ட இந்தவாசல்களாலேசீவாத்மாவானவன் வெளியிலேபுறப்பட்டு சப்தாதி விஷயங்களே அடைகிருன், இந்தப்பட்டணத்துக்குக் கிழக்கே அஞ்சுவாசல்கள்சொல்லப்பட்டதே அந்தவாசல்கள் கண்கள்இரண்டு மூக்கிரண்டு முகமொன்று ஆக அஞ்சுவாசல்கள்என்றுஅறி, வடக்குத்திக்கிலே யாதொருவாசல் சொல்லப்பட்டதோ அதை இடதுகாதாயும் தெற்குத்திக்கிலேசொல்லப்பட்டதை வலதுகாதாயும் அறிமேற்குத்திக்கிலே யாதொருஇரண்டுவாசல் சொல்லப்பட்டதோஅதை சிசுனமென்றும், குதமென்றும்அறி. ஒருவிடத்திலேயிருக்கப்பட்ட சத்தியோதமென்றும்,அவிர்முகியென்றும் சொல்லப்பட்ட இரண்டுவாசல்களேயும் இரண்டுகண்களென்றும்அறி சீவனுனவன் நேத்திரியவிந்திரியங்களுடனே கூடிக்கொண்டு அந்தவழியால் புறப்பட்டு விப்பிராசிதமென்றுசொல்லப்பட்ட ரூபத்தையறிகிருன் நளினி நாளினியென்றுசொல்லப்பட்டஇந்த வாசல்களேயும் இரண்டுமூக்குகளென்றறி, சவுரபமென்றுசொல்லப்பட்ட தேசத்தை கந்தமென்றறி. அவதூதமென்றுசொல்லப்பட்டவனே கிராணேந்திரியமென்றறி முக்கியமென்று சொல்லப்பட்டவாசலே முகமென்றறி. விபணமென்று சொல்லப்பட்ட தேசத்தை வாக்கென்றறி, ரகசியமென்று சொல்லப்பட்டவனே ரசனேந்திரியமென்றறி, ஆபணமென்று சொல்லப்பட்டதை விவகாரமென்றறி, பெகூதனமென்று சொல்லப்பட்டதை சித்திரான்னமென்றறி, பிதுருவுளமென்னப்பட்டதை வலக்காதென்றும் தேவவுள மென்னப்பட்டதை இடக்காதென்றும் அறி பாஞ்சாலமென்று சொல்லப்பட்டதை பிறவிர்த்தி சாஸ்திர மென்றும், நிறுக்தி சாஸ்திரமென்றும், பிதுர்யானம், தேவயானமென்றும்அறி ஆசூரி

க்கிருக்குமேயல்லாமல் இல்லாமற்போகிறதில்லே இந்த
துக்கத்தைப் பரிகரிக்க வுபாயமில்லே உபாயமுண்டாய்
செய்துகொண்டாலும் அதுவும்துக்கரூபமே எப்படியா
ஞல் தலேமேலேமகத்தான சுமையையெடுக்கிற புருஷஞ
னவன் தலேநொந்ததாஞல் தோளிலே யிறக்கிக்கொள்
ளுகிருன் அப்படியிறக்கிக்கொண்டாலும், சுமையெடுக்
கிறதுக்கம்எப்படிப் போகவில்லேயோ அப்படிபோலே
துக்கத்துக்குப்பண்ணிக்கொள்ளுகிறபரிகாரங்களும துக்கரூபமாகவேயிருக்கும் கியானமில்லாமல்செய்யப்பட்
டகர்மங்கள் கர்மங்களுக்குப்பரிகாரரூபம் ஆகமாட்டாது
கர்மமும் அதுக்குப்பிராச்சிதமானகர்மமும், இரண்டும்
அக்கியானத்திஞலேயேசெய்யப்பட்டபடியிஞலே சொ
ற்பனத்திலேகண்ட சொற்பனம் போலே ஒருகர்மத்தி
ஞலே ஒருகர்மம்பரிகரிக்கப் படமாட்டாது, புருஷனுக்
குசொற்பனத்திலே காணப்படுகிறவஸ்துக்க எப்போது
எதார்த்தமாகவில்லாமலிருந்தாலும் சொற்பனத்திலே
அந்தவஸ்து அனுபோகம்எப்படியுண்டாயிருக்கிறதோ
அப்படிபோலே பரமபுருஷார்த்த ரூபமான ஜீவாத்து
மாவுக்குஉபாதியான மனதிஞலே தேகாதிசம்பந்தமே
யதார்த்தமாயில்லாம லிருந்தாலும் சம்சாரமென்கிறது
உண்டாயிருக்கிறது ஆகையிஞலே பரமபுருஷார்த்தரூ
பனுனஇந்தசிவனுக்கு எந்தஅக்கியானத்திஞலே அனர்
த்தபரம்பரைகளேயுடையதுகளான சம்சாரரூபமாய்சே
ர்ந்திருக்கிற அந்த அக்கியானநாசமானது குருவானவா
சுதேவனிடத்திலேசெய்யப்பட்டபக்தியிஞலே வைராக்
கியத்தையும் கியானத்தையும்சிக்கிரமாகஉண்டாக்கும்.

வாராய்ராஜரிஷியே, அச்சுதனுடையகதையை ஆ
ஸ்ரயமாகவுடையதான அந்தபக்தியோகமானது அச்சுத
னுடையகதையைக் கேட்கிறவனுக்கும், சிரத்தையுடை
யவனுக்கும், நித்தியமாகப்பாராயணம் பண்ணுகிறவனு
க்கும், சீக்கிரமாகவுண்டாம். வாராய்ராஜாவே,எவ்விட
த்திலேநிர்மலமான இருதயத்தையுடையவர்களாய்சாது
க்களாய் பகவத்குணங்களேச்சொல்வதிலும், கேட்பதிலு
ம், துறையுடனேகூடின மனதையுடையவர்களானபாக
வதாளிருக்கிருர்களோ அந்தகோஷ்டியிலே மகாபாகவ
தாளாலேகீர்த்திக்கப்பட்ட பகவத்சரித்திரமாகிற அமிர்
தநதிகள் நாலண்டையிலேயும் பிரவகியா நிற்கிறதுகள்,
அப்படிப்பட்ட அமிர்தப்பிரவாகங்களேச் சிலபேர்திருப்
தியில்லாதவர்களாய்க்கொண்டு சாவதானமாய்காதுகளி
ஞலே பானம்பண்ணுகிருர்களோ அவர்களேப்-பசி- தா
கம்-பயம்-சுகம்-மோகம்- இப்படிப்பட்ட ஹேயகுணங்க
ள் அடைகிறதுகளில்லே சுபாவமாய்உண்டாயிருக்கிற இ
ப்படிப்பட்ட பசி-தாகம்-பயம்-சுகம்-மோகம-இதுகளிஞ
லேநித்தியமாகபிடிக்கப்பட்டஜெனனமானது பகவானு

டையகுணங்களாகிற அமிர்த சமுத்திரத்திலே ஆசக்தி
யைப்பண்ணுகிறதில்லே சாக்ஷாத் சதுர்முகனும் பகவா
னுனருத்திரனும் மனுச்சக்கிரவர்த்தியும் தக்ஷன்முதலா
னவைப்பிரஜாபதிகளும் நைஷ்டிகளான ஜனகாதிகளும்,
மரீசி-அத்திரி-அங்கிரசு-புலஸ்தியர்-புலகர்-சிந்து-பிருகு
வசிஷ்டர்-நான் இப்படிப்பட்ட பிர்மநிஷ்டாளும், வேத
வாதிகளும், தபசு-தியானம்-யோகம்-இதுகளிஞலேபா
ர்த்துக்கொண்டிருந்தாலும் சருவசாட்சியானபரமாத்து
மசுரூபத்தை நன்றாகஅறிந்தவர்களன்று, அபாரமாயும்
அதிகமானவிஸ்தாரத்தையுடையதாயுமிருக்கிற வேதத்
தையே அத்தியயனம்பண்ணிக்கொண்டிருக்கிறபேர்கள்
மந்திரலிங்கங்களிஞலேசொல்லப்பட்ட இந்திராதி ரூப
மான பகவத்ரூபத்தைக் கர்மமார்க்கத்திஞலே யுபாசித்
தாலும் பரமானவாசுதேவரூபத்தை யறியார்கள். எப்
போதுபகவானுனவாசுதேவன் தன்னேமனதிலேதியான
ம்பண்ணப்பட்டவனே அனுக்கிரகிக்கிறபோது அவன்
லோகவிவகாரத்தையும்வேதங்களிலேகர்மமார்க்கத்தை
யும்அனுசரிக்கின்றபுத்தியையும் விட்டுவிடுகிருன்.

வாராய்பிராசினபரிகசே, ஆனபடியிஞலே அக்கி
யானத்திஞல் பரமபுருஷார்த்தம்போலே காண்பியாநி
ன்றும் கேள்விக்குப்பிரியங்களாயும் முக்கியமான மோ
ட்சபுருஷார்த்தத்தோடே சம்பந்தியாமலுமிருக்கிற கர்
மமார்க்கங்களிலே புருஷார்த்த புத்தியைப் பண்ணவே
ண்டாம் மலினபுத்திகளான யாதாமொருவர் வேதத்தி
னுடையதாற்பரியத்தைஅறியாதபேர்களாய் வேதத்தை
க்கர்மபாகமாகச்சொல்லுகிருர்களோ அவர்கள்பகவான்
எந்தலோகத்திலே வாசம்பண்ணுகிருரோ பகவத்சொ
ரூபமான அந்தலோகத்தைஅறியமாட்டார்கள் கிழக்கு
நுனிகளாய்த் தெர்ப்பைப்புல்லிஞலே பூமியெல்லாம் ப
ரப்பி அனேகம்பசுக்களே இம்சைபண்ணிநானே வெகு
யக்கியங்களேப் பண்ணினவனென்று அகங்காரத்தை யு
டையவனும், கெர்விதனுயு மிருக்கிற நீ கர்மதத்துவத்
தையும்அறிந்தவனன்று கியானதத்துவத்தையும் அறிந்
தவனன்று எந்தகர்மம் அரியைச்சந்தோஷிப்பிக்கிறதோ
அதுவேகர்மம், எந்தவித்தைஅந்த அரியினிடத்திலே
பக்தியையுண்டாக்குகிறதோ அதுவே வித்தை அரியா
னவர்சரீரிகளுக்கெல்லாம்சுவயம்ஆத்மாவாயும்,நியந்தா
வாயும், தாமேகாரணமாயுமிருக்கிருரன்றே ஆகையிஞ
லேபிராணிகளுக்கு இந்தச்சம்சாரத்திலே யாதொருஅ
ரிபாதபஜனையிஞலே க்ஷேமம் உண்டாகிறதோ அந்த
அரியினுடைய பாதாரவிந்தமேசரணமாகஅடையத்தக்
கது யாதொருபகவானிடத்திலே அணுமாத்திரமும்பய
மில்லேயோ அந்தபகவானே இந்தசிவனுக்கு மிகவும்இ
ஷ்டமானவரென்று இந்தப்பிரகாரம்எவன்அறிகிருனே

அவனேவித்வான் எவன்வித்துவானே அவனேகுரு அவனே அரி,

வாராய்புருஷசிரேஷ்டனே, இந்தப்பிரகாரம் உன்னாலேபண்ணப்பட்ட பிரசினமானது நம்மாலே பிரகரிக்கப்பட்டது இந்தவிஷயத்திலே ரகசியமாயும்நிச்சயிக்கப்பட்டுமிருக்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறேன் கேள் வாராய்ராஜசிரேஷ்டனே மெள்ள மெள்ள சஞ்சரித்துக்கொண்டும் புஷ்பவனத்திலே ஸ்திரீயுடனே கூடிக்கொண்டும் அந்தஸ்திரீயினிடத்திலே பிரீதியுடையதாயுள்ள வண்டுகளுடையகானத்தையே காதுகளினாலேகேட்டுக்கொண்டும் எதிரேவராநின்றும் பிராணிகளைவதைத்துத்தன்பிராணனை திருப்திபண்ணுவியா நின்று மிருக்கிற செந்நாய்களையும்எண்ணமல் சஞ்சரித்துக்கொண் டிரா நின்றும் பின்பக்கத்திலே வேடனுடையபாணத்தினாலே அடிக்கப்பட்டுமிருக்கிற மிருகத்தைப்பார் இதற்குத்தாற்பரியமென்னவென்றால் கிரகஸ்தாசிரமத்திலே காமியகர்மங்களினாலேயுண்டான அற்பசுகங்களையே அனுபவித்துக்கொண்டு ஸ்திரீயோடேகூடினவனாய் அந்தஸ்திரீயினிடத்திலேயே ஆசக்தனாயும் அந்த ஸ்திரீகளுடைய மதுரமானவார்த்தைகளிலேயே ஆசையை யுடையதுகளான காதுகளையுடையவனாகியும் நாள்தோறும் தன்னுடையஆயுசை அபகரித்துக்கொண்டுபோகாநின்றஅகோராத்திரமென்னப்பட்ட காலங்களையும்அறியாமல்சஞ்சரித்துக்கொண்டிருக்கிற இந்தப்புருஷனை இவனுக்குத்தெரியாமலேயேவந்து காலனானவன் பிராணனைக் கொண்டுபோகாநிற்கிறான் இந்தத்தாற்பரியத்தை அறியத்தக்கது. ஆகையால் இந்தசீவனுடையகெதியை மிருகத்தினுடைய சேஷ்டிதம்போலே நன்றாக்விசாரித்து இருதயத்துக்குள்ளேசிந்திக்கப்பட்ட பாக்கிய வியாபாரத்தை சித்தத்திலேயே அடக்கிப்போடு விடபுருஷாளுடைய கதையையுடையதான கிரகஸ்தாசிரமத்தை விட்டுவிடு சிவாத்மாவுக்கு நியந்தாவாயிருக்கிற பரமாத்மாவை சந்தோஷிப்பித்துக்கொண்டிரு இந்தப்பிரகாரம்கிரமமாகச் சர்வவியாபாரங்களில்நின்றும் ஒழிவை அடைவென்று சொல்லுகின்றநாரதமகாரிஷியைப்பார்த்துராஜா பிரசினம்பண்ணுகிறார்,

வாரீர்பிர்மநிஷ்டரே, எந்த அர்த்தத்தைக் கேட்கவேணுமோ அதுநன்றாகக்கேட்கப்பட்டது நன்றாகவிசாரித்துமறியப்பட்டது யாதொரு ஆத்தும தத்துவத்தை நீர்சொன்னீரோ இந்தஆத்துமதத்துவத்தையுங் கர்மத்தையும்உபதேசியாநின்ற என்னுடையஆசாரியாள் அறியார்கள் அவர்கள் அறிந்திருந்தார்களேயானால் எனக்கு ஏன்சொல்லாதேபோவார்கள் வாரீர் பிர்மநிஷ்டரே ஆசாரியாளாலேபண்ணப்பட்டஆத்மதத்துவத்திலேயுண்டாயிருந்த சம்சயமானது உம்மாலே போக்கடிக்கப்பட்டது, யாதொருகர்மத்திலே இந்திரியவிர்த்திகளும் பிரவிர்த்தியாதுகளோ அந்தக்கர்மத்திலே ரிஷிகள் கூடமோகத்தை யடைந்திருந்தார்கள். அந்தக் கர்மவிஷயத்திலே சம்சயமுண்டாயிருக்கிறது அதெப்படியென்றால்புருஷனானவன் இந்தப்பூமியில் எந்தச்சரீரத்தினால்கர்மங்களைச்செய்கிறானே அந்தச்சரீரத்தையிங்கேயே விட்டுவிட்டுப்பரலோகத்தில் கர்மத்தினாலேயுண்டாக்கப்பட்டவேறே ஒருசரீரத்தினால் கர்மபலன்களை அனுபவிக்கிறான் இந்தப்பிரகாரம் வேதவாதிகளுடையவாதமானது அங்கங்கே கேட்கப்படுகிறது திரும்பவும் சாஸ்திரங்களினாலேவிதிக்கப்பட்ட வேறேகர்மமும் பண்ணப் படுகிறது செய்யப்பட்டகர்மமும் அந்தக்ஷணத்திலேதானே காணப்பட்டதாய்ப் பிரகாசிக்கிறதில்லை ஆகையால் கர்மம்நசித்துப்போயிருக்கச்சே அதினுடையபலானுபவம் எப்படிசம்பவிக்கும் இந்தச்சமுசயத்தை எனக்குத்தெளியும்படியாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்கின்ற ராஜாவைப்பார்த்து நாரதமகாரிஷி சொல்லத் தொடங்கினார்,

வாராய்ராஜாவே புருஷனானவன் இவிடத்திலே இந்தத்தேகத்தினாலே கர்மங்களைப்பண்ணுகிறானே கர்த்தாவானதேகத்துக்கும் போக்தாவானதேகத்துக்கும் வேறாகாமலிருக்கிற லிங்கசரீரமான அந்த மனதினாலேயே பரலோகத்திலே கர்மபலத்தைஅனுபவிக்கிறான் அதெப்படியென்றால் புருஷனானவன் சயனித்துக்கொண்டும் சுவாசத்தையுடையதாயுமிருக்கிற இந்தச்சரீரத்திலேஅபிமானத்தைவிட்டு நித்திரைசெய்கிற காலத்தில் இதற்கு வேறாயும் கர்மத்தினாலேயுண்டாக்கப்பட்டுமிருக்கிற இதற்குச்சமானமான சரீரத்தினாலே ஜாக்கிரத்திலனுபவிக்கப்படுகிறகிருத்தியங்கள் சொற்பனத்திலேயும் மனதிலேயிருக்கப்பட்ட தன்னுடையகர்மங்களை அனுபவிக்கிறானே அப்படியே லோகாந்தரத்திலேயும் கர்மத்தினாலேபண்ணப்பட்ட சரீராந்திரத்தினாலே கர்மபலன்களை அனுபவிக்கிறான் புருஷனானவன் இவான் என்னுடைய புத்திராதிகள் நான் பிராமணனென்றுசொல்லிக்கொண்டுமனதினாலே எந்தெந்தச்சரீரத்தைக்கிரகித்தானே அந்தந்தச்சரீரத்தினாலே செய்யப்பட்டகர்மத்தை அந்தப்புருஷன்அடைகிறான் யாதொருகர்மத்தினாலேபுனர்சென்மம்உண்டாகுதோ அந்தக்கர்மத்தை அவனேஅடைகிறான் செய்யப்பட்ட கருமம் இங்கேயே நசித்துப்போயிருக்கச்சே பரலோகத்திலே கர்மபலானுபலம்எப்படியுண்டாமென்றுகேட்டதற்கு உத்தரம் எப்படியானால் கியான கர்மேந்திரியங்களுடைய பிரவிர்த்திகளினாலே மனதுஎன்று ஒன்று அனுமிக்கப் படுகிறதோ இப்படி மனதினுடைய வியாபாரங்களினாலே பூர்வதேகத்திலே செய்யப்பட்ட கர்மமும் அனுமிக்கப்படுகிறது இந்தச்

சரீரத்தினுலே ஒருவிடத்திலேயும் அனுபவிக்கப்படாமலும்கேட்கப்படாமலும் பார்க்கப்படாமலுமிருக்கிற யாதொருவஸ்து எப்படிப்பட்டதாயிருக்கிறதோ அப்படிப்பட்டதானஅந்தவஸ்து சொற்பனத்திலேதான் இச்சையிலேதான் மனதிலேயொருநாளுந்தோணப்படாது.

வாராய்ராஜர்வே, சப்தாதிரூபமாயும்சத்துவாதிகுணமயமாயும், ஷோடசரூபமாகவும் சொல்லப்படுகிறலிங்கசரீரத்தையுடையவனுன இந்தசீவனுக்குக் கர்மபலானுபவத்திலே தேகம்உண்டென்கிறதை நிச்சயமாகஅறி ஒருக்காலும் அனுபவிக்கப்படாத வஸ்துவானது மனதிலேபிரகாசிக்கமாட்டாது வாராய்ராஜனே உனக்குமங்களமுண்டாகட்டும் உத்தமனுகஆகப்போகின்றபுருஷனுக்கும் அதமனுக ஆகப்போகின்றபுருஷனுக்கும் மனதுதானேஅவுதாரியம்லோபம்இந்தக்குணங்களைக் கல்பித்து பூர்வசன்மத்தையும் வரப்போகிற சன்மத்தையுஞ் சொல்லுகிறது ஒருவேளையிலேபார்க்கப்படாமலும்கேட்கப்படாமலுமிருக்கிறவஸ்து மனதிலேதோணப்படுகின்றது அதைஅன்னியதேசத்திலே யிருக்கிறதும், அன்னியகாலத்திலேயிருக்கிறதும் அன்னிய புருஷனிடத்திலேயிருக்கிறதும் நித்திரையினுலே சொற்பன தோஷத்தினுலேதன்னிடத்திலேதோணப்படுகிறதென்று அறியுத்தக்கது சமஸ்தமானசப்தாதிவிஷயங்களுங் கர்மானுகுணமாகஅனுபவிக்கிறதானபடியினுலே மனதிலேஅடைந்திருக்கிறதுகள் அனுபவித்தபிற்பாடு விட்டுப்போகிறதுகள்சமஸ்தமான சனங்களும் மனதையுடையவர்களன்றே சத்துவகுணப்பிரதானமாயும் பகவத்கியானத்தையுடையதாயுமிருக்கிறமனதிலே இந்தப்பிரபஞ்சமானது சந்திரனைஸ்பரிசிக்கின்றராகுவானவன்போலசம்மந்தித்திருக்கிறதாகபிரகாசிக்கிறது எந்தமட்டுக்கும் அஞுதியான-புத்தி-மனது சப்தாதிவிஷயங்கள் இதுகளுடைய சங்காதரூபமான லிங்கசரீர யிருக்கிறமட்டுக்கும் புருஷனிடத்திலே நானென்றும் என்னதென்றுமென்கிறதேகசம்பந்தம்ஒழிகிறதில்லை நித்திரை மூர்ச்சை வியாதியினுலேஉண்டான ஆயாசம் இஷடஜனங்களுடைய வியோகத்தினுலேயுண்டானதுக்கம் மரணம் இதுகளிலேஇந்திரியசக்திஅடங்கிப்போ யிருக்கிறபடியினுலே நானென்கிறஅகங்காரம் பிரகாசிக்கிறதில்லை எப்போ யவ்வனத்தையுடையபுருஷனுக்குப் பதினெரு விந்திரியங்களினுலே பிரகாசிக்கப்படாநின்ற அகங்காரமானது கர்ப்பத்திலேயும்,பாலியஅவஸ்தையிலேயும் இந்திரியங்கள்சமர்த்தங்களாகாமலிருக்கிறதினுலே அமாவாசையிலேசந்திரபிம்பம் எப்படிகாணப்படவில்லையோ அப்படிபோலகாணப்படவில்லை சப்தாதிவிஷயங்களைத் தியானம்பண்ணுகின்ற இந்தச் சீவனுக்கு லிங்கசரீரம் உள்ள மட்டுக்கும் தேகசம்பந்தமிருக்கிறபடியினுலே சொற்பனத்திலேயில்லாமலிருக்கிறவஸ்துக்கள் எப்படி காணப்படுகிறதோ அப்படிப்போலவே பரமார்த்தமாய் ஒருவிஷயமு மில்லாமலிருந்தாலும் சம்சாரம்ஒழிகிறதில்லை சப்தாதிரூபமாயும், சத்வாதிகுணமயமாயும், சோடசரூபமாகவும், லிங்கசரீரம்சொல்லப்படுகிறது. கியானசக்தியை யுடையபுருஷன் சீவாத்மாவென்றுசொல்லப்படுகிருன் இந்த லிங்கசரீரத்தோடேகூடிக்கொண்டு சீவாத்மாவானவன் ஸ்தூலதேகங்களை அடைந்து திரும்பவும்விட்டுவிடுகிருன் இந்தலிங்கசரீரததோடே கூடிக்கொண்டு சந்தோஷம்-சுகம்-பயம்-துக்கம்-சோகம் இதுகளை அனுபவிக்கிருன். எப்படியாஞல் திரணத்தைப் பிடித்துக்கொண்டிருக்கிற கிருமியானது மற்றொருதிரணத்தைப் பிடித்துக்கொண்டபிற்பாடு அந்தத்திரணத்தை எப்படிவிட்டுவிடுகிறதோ அப்படிபோலவே சீவனுனவன் மரணத்தையடையும்போது இந்தத்தேகத்தையுண்டாக்காநின்றகர்மமுடிந்ததினுலே இந்தச்சரீரத்தைப் பின்னையொருசரீரத்தைப் பற்றுகிறதற்குமுன்னே விடுகிறதில்லை யாதொருகாரணத்தினுலே இந்திரியங்களால் சப்தாதி விஷயங்களைத் தியானம்பண்ணிக்கொண்டு அடிக்கடிகர்மங்களைப்பண்ணுகிருனே ஆகையினுலே பிராணிகளுக்கு ஜன்மஹேதுவாகாநிற்கிறது. ஆத்மாவுக்குக் கர்மமூலமான அக்கியானத்தினுலே தேகாதிகளுடையகர்மபந்தமுண்டாகிறது ஆனபடியினுலே ஜன்மத்தைப்போக்கடித்துக்கொள்ளுகிற நிமித்தியமாய் இந்தப்பிரபஞ்சத்தைப் பகவத்ரூபமாகப் பார்த்துக்கொண்டு எந்தபகவானுலே இந்ப்பிரபஞ்சத்துக்கு சிருஷ்டி ஸ்திதி சங்காரங்கள் உண்டாயிருக்கிறதோ அந்தப்பகவானையே சர்வப்பிரகாரத்தினுலேயும் சரணமாகஅடையென்று நாரதர்சொன்னுர்.

மைத்திரேயர்வாக்கியம்.

வாரீர்விதுரரே, இந்தப்பிரகார்ம் பாகவத சிரேஷ்டரானநாரதர் சீவன் ஈசுவரன் இவாளுடைய ஸ்வரூபத்தைராஜாவுக்கு உபதேசித்து அவனுடைய அனுமதிகொண்டு பிற்பாடு சித்திலோகத்தையடைந்தார் ராஜரிஷியான பிராசீனபரிகசும் பிரசாரக்ஷணத்திலேபுத்திராளைநியமித்துத் தவசின் பொருட்டு கபிலாசிரமத்தை யடைந்து அவ்விடத்திலே விஷயசங்கத்தைவிட்டு ஏகாக்கிரமனதாய் பகவத் பாதாரவிந்தத்தைத் தியானம்பண்ணிக்கொண்டு அந்தபகவத்பக்தியிலே அந்தப்பகவானுடைய சாரூப்பியத்தையடைந்தான் வாரீர்விதுரரே தேவரிஷியினுலே சொல்லப்பட்ட இந்த ஆத்மக்கியானத்தை யாதாமொருத்தன் கேட்கிருனே யாதாமொருவன்கேட்பிக்கிருனே அவாளிருவரும் முக்தராவார்கள்

முகுந்தனுடைய எச்சிதனலே லோகபாவன மாகியும் தேவரிஷிசிரோஷ்டரான நாரதருடையமுகத்தில்நின்றும் உண்டானதாயும், ஆத்மபாவனமாயுமிருக்கிற இந்தஆத்மவுபதேசத்தை எவன்கீர்த்திக்கிருனே அவன் உத்தமஸ்தானத்தையடையவன்சமஸ்தகர்மபந்தங்களினுலே ஜென்மத்தையடையான்.

## உஅ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பேதமின்றிப் பிரசேதசுக்களானோர்
ஓதுங்கீதையி னுலொளிரீசனை
நீதமாய்த்தொழு துப்பின்வதுவைகின்
ருதரத்துடன் செய்ததறைகுவாம்.

பிரசேதசுக்கள் ருத்திரகீதத்தினுலே ஈஸ்வரனை மெய்ப்பித்து அவனுலே வெகுவரத்தையடைந்து பிற்பாடு அக்கிருந்துவந்த விராக்ஷியெனகிற பெண்ணைக் கலியாணம்பண்ணிக்கொண்டு ராச்சியபாரம்பண்ணினுர்களென்றுசொல்லப்படுகின்றது.

விதுரர்வாக்கியம்.

வாரீர்பிரகஸ்பதிக்குசிஷியனுனமைத்திரேயரே, பிராசினபரிஹிசுக்கள் யாதொரு பிள்ளைகள் உம்மாலே சொல்லப்பட்டார்களோ அவர்கள் ருத்திரகீதத்தினுல் ஹரியைச்சந்தோஷிப்பித்து எப்படிப்பட்ட சித்தியைஅடைந்தார்கள். அந்தப்பிரசேசுக்கள் தேவனுன கிரீசனை எதிரிச்சையாகவேயடைந்து கைவல்லியநாதராகியசுவாமிக்குப்பிரியனுன ருத்திரனுடைய அனுக்கிரகபாத்திரர்களாய் மோட்சத்தையடைந்தார்கள் அதுநிச்சயம் மோட்சத்தையடைகிறதற்குமுனனே இந்தலோகத்திலேதான்லோகாந்தரத்திலேதான் எப்படிப்பட்ட பலத்தை யடைந்தார்கள், அதைச் சொல்லவேண்டுமென்று பிரசினம்பண்ணுகின்ற விதுரரைப் பார்த்து மைத்திரேயர் சொல்லத்தொடங்கினர்,

வாரீர்விதுரரே, அந்தப்பிரசேதசுக்கள் பிதாவினுடைய ஆக்கினையைக்கடவாமல் சமுத்திரத்திலேமூழ்கிக்கொண்டு ருத்திரனுலே சொல்லப்பட்ட கீதத்தினுலே ஜபயக்கியத்தினுலும் தபசினுலும் நிர்விகாரனுனபரமாத்மாவை பதினுயிரவருஷம்தபஞ்செய்து சந்தோஷிப்பித்தார்கள். இந்தப்பிரகாரம் தபசுபண்ணிக்கொண்டிருககிற அந்தப்பிரசேதசுக்களுக்குப் பதினுயிரம்வருஷத்துக்குப்பிற்பாடு செகந்நாதரான ஸ்ரீமந்நாராயணன்தம்முடையதேஜசுகாந்தியினுலே அந்தப்பிரசேதசுக்களுடையதபசியினுலேயுண்டான கிலேசத்தைப்போக்கடிக்ககினைத்து சத்துவப்பிரதானமான மூர்த்தியினுலேபிரசன்னரானுர் மேருசிகரத்திலே யிருக்கிற காளமேகம்போலேகெருடாருடராய், பீதாம்பரதாரியாய் கவுஸ்துவமாணிக்கத்தை கண்டத்திலேயுடையவராய் அந்தகவுஸ்துவமாணிக்கத்தினுடைய தேஜசினுலே திக்குகளைப் பிரகாசப்படுத்திக்கொண்டும் ஆவிர்ப்பவித்தார். தேஜிப்பியமானசுவர்னமயமுள்ள கிரீடகுண்டலங்களினுலே விளங்குகின்ற கபோலங்களையும்வதனத்தையும்உடையவராய்பிரகாசியாகின்ற கிரீடத்தையணிந்தவராய்அஷ்டாயுதங்களினுலேயும், பக்தாளான முனிகளாலேயும் தேவசிரேஷ்டாளாலேயும் சேவிக்கப்பட்டவராய் கெருடனுகிற கின்னரனுலே இறக்கைகளுடைய தொனிகளினுலேகானம்பண்ணப்பட்ட கீர்த்தியையுடைவராய் பருத்தும் நீண்டுமிருக்கிற அஷ்டபுஜங்களினுலே சூழப்பட்ட மார்பிலேயிராகின்ற லட்சுமியுடனே சண்டைபண்ணுகின்ற காந்தியையுடைய வனமாலையினுலே சூழப்பட்டவரான ஆதிபுருஷன் கிருபாபூரணகடாட்சங்களுடனே கூடினவராய் சரணுகதமென்ற பிரசேசுக்களைக் குறித்து மேகநாதம்போலே தொனியையுடையதான வாக்கினுலே ஒருவார்த்தைஅருளிச்செய்தார்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்,

வாருங்கள்ராஜகுமாரர்களே, உங்களுக்கு நன்மையுண்டாகக்கடவது, நீங்களனைவரும்ஏகபுத்தியாயிருந்துகொண்டு ஏகவிரதாளா என்னையே ஆராதித்தீர்கள்உங்களுடைய சுகிர்தபிரபாவத்தினுலே நான் சந்தோஷத்தையடைந்தேன் உங்கள்மனதிலேயிருக்கிற கோரிக்கையை என்னிடத்தில்கின்றும் அடைவதற்குக் கேளுங்கள் எந்தப்புருஷன் நாள்தோறும் சயனகாலத்திலே உங்களைநினைக்கிருனே அவனுக்குத் தன்பிராதாக்களிடத்திலேவாச்சல்லியமும் பிராணிகளிடத்தில்தயையும்உண்டாம் எவர்கள் சித்தசமாதானத்தையுடையவர்களாய்இக்தருத்திரகீதத்தை சாயங்காலத்திலும் பிராதக்காலத்திலும் என்னைஸ்தோத்திரம்பண்ணுகிருர்களோ அவருக்குநான் இஷ்டவரங்களையும் சோபனமான புத்தியையும் கொடுப்பேன் நீங்கள்சந்தோஷத்தையுடையவர்களாய்ப் பிதாவினுடைய ஆக்கினையை எப்போது கிரகித்தீர்களோ அதினுலே உங்களுடைய மனேகரமான கீர்த்திலோகங்களையெல்லாம் வியாபிக்கப் போகிறது உங்களுக்குக் குணங்களினுல் பிர்மாவுக்குச்சமானனுகியும் பிரசித்தியையுடைய புத்திரன் உங்களுக்கு உண்டாகப் போகிருன் அந்தப்பிள்ளையானவன் இந்த மூன்றுலோகத்திலும் தன்சந்தானத்தினுலே பிரசித்தியை யடையப்போகிருன், வாருங்கள் ராஜபுத்திரர்களே கண்டுமகாரிஷிக்குப் பிரமலோசையென்கின்ற அப்சரஸ்திரீயானவள் கமலம்போலொத்த கண்ணை யுடையவளான ஒரு பெண்ணைப்பெற்ருள். அந்தப்பெண்ணை அந்தஆசிரமத்

திலேயேவிட்டுவிட்டு அவள் சுவர்க்கத்தை யடைந்தாள் பசியினாலேஅழுதுகொண்டிருக்கிற அந்தப் பெண்ணை விருக்ஷங்களெடுத்துவளர்த்தார்கள் தயாளுவாயும் ஒஷதிகளுக்கெல்லாம் ராஜாவாயுமிருக்கிற சந்திரன் அமிர்தத்தைப்பெருகாநின்ற தர்ஜனியென்னப்பட்ட விரலைபசியினாலே அழுதுகொண்டிருக்கிற அந்தப் பெண்ணினுடையவாயிலேகொடுத்தான் அதினாலேஅந்தப்பெண்விர்த்தியடைந்தது. வாருங்கள் ராஜகுமாரர்களே என்னையேயுபாசியாநின்ற உங்கள்பிதாவினாலே நீங்கள்பிரஜைகளைச்சிருஷ்டிபண்ணச்சொல்லி ஆக்கியாபிக்கப்பட்டீர்களன்றோ அந்தப்பிரசாசிருஷ்டிநிமித்தியத்திலே நீங்கள்உத்தமஸ்திரீயானஅந்தப்பெண்ணை சீக்கிரமாக விவாகம்பண்ணிக்கொள்ளுங்கள் சோபனமானஇடையையும் சமானமான்தர்மத்தையும் சீலத்தையு முடையவளாய் உங்களிடத்திலேயே வைக்கப்பட்டமனதையுற்றவளாயுமிருக்கிறஅந்தப்பெண்ணானவள் உங்களுக்குப் பத்தினியாகக்கடவள் நீங்கள்தடுக்கப்படாதபராக்ரமத்தையுடையவர்களாய் அனேகதிவ்வியவருக்ஷங்கள்பூமியிலும்சுவர்க்கத்திலும் உண்டானபோகங்களையும் விடுத்து என்னுடையஸ்தானமான பரமபதத்தை அனுபவிக்கப் போகிறீர்கள்.

எனக்குப்பிரீதியாகக் கர்மங்களைச்செய்தவர்களாயும்என்னுடையகதையினாலே காலத்தைப் போக்குகிறவர்களாயுமிருக்கிறபுருஷாள் கிரகஸ்தாசிரமத்திலேயிருந்தாலும் அந்த கிரகஸ்தாசிரமத்திலேயும் அவர்களுக்கு யெந்தயேதுஆகமாட்டாது சர்வக்கியனானநான் பிர்மநிஷ்டாளாலே கீர்த்திக்கப்பட்டவனாய் கேட்கிற பேர்களுடையஇருதயத்தையும் அடிக்கடிஅடைந்தவனாய்ப் பிரகாசிப்பேன் பரப்பிரம மென்னப்பட்டது நானேயன்றோ, அந்தப்பரப்பிர்மமானஎன்னைஅடைவர்கள் திரும்பவும் சோகம்-மோகம்-விஷயப்பிரீதி இதுகளைஅடையார்கள்.

மைத்திரேயர்வாக்கியம்.

வாரீர்விதுரரே, இந்தப்பிரகாரம் சொல்லாநின்றும் புருஷார்த்தங்களைக்கொடுக்கிறவராயு மிகவும் உபாசியராயுமிருக்கிறஜனார்த்தனனுக்குப்பிரசேதசுக்கள் அநேகபிரணாமங்களைப் பண்ணினவர்களாய் பிரசேதசுக்கள் கைகளைக்கூப்பிக்கொண்டு அந்தப்பகவத்தெரிசனத்தினாலே ரஜஸ்தமோகுணங்கள் மனோமலங்கள் இதுகளைப் போக்கடித்தவர்களாய் பக்திஅதிசயத்தினாலே பொருமலையுடையதானவாக்கினாலே அந்தப்பகவானை ஸ்தோத்திரம்பண்ணினார்கள், பிரசேதசுக்களுடையஸ்தோத்திரம்வேதங்களினாலே சர்வபுருஷார்த்தசாதனமாகச் சொல்லப்பட்டஉதாரங்களான குணங்களையும், நாமங்களையுமுடையவராய் ஆஸ்ரதாளுடைய கிலேசங்களைப்போக்கடிக்கிறவராய் மனதினாலே அறிவதற்கும், வாக்கினாலேசொல்வதற்கும் அகப்படாதவராய் சர்வேந்திரியங்களினாலேயும் அறியப்படாதகதியையுடையவராயு மிருக்கிறஉமக்குப்பிரணாமம், சுபாவமாகப் பிரகிருதிசம்பந்தமும் சோகமோகாதிகளுமில்லாதவராயும் புருஷார்த்தயான ஆத்மஸ்வரூபத்தைக் கிரகியாதமனதிலேதோனாநின்ற தேவாதிபேதத்தை யுடையவளான ஜீவாத்மாக்களுக்கு அந்தரியாமியாகியும், ஜெகத்துற்பத்திஸ்திதி சங்காரங்களிலே மாயாகுணத்தினாலேபிர்மாதிமூர்த்திகளையுடையவராயுமிருக்கிறஉமக்குப்பிரணாமம் நிர்மலமான சத்துவமூர்த்தியாயும், பாபத்தைப்போக்காநின்ற கியானத்தைக்கொடுக்கிறவராயும் வாசுதேவராயும்,கிருஷ்ணனாயும், சமஸ்தமானபக்தாளுக்கும் பிரபுவாயு மிருக்கிற உமக்குப்பிரணாமம், கமலத்தினுடைய கேசரம்போலே பொன்னிறமானபீதாம்பரத்தையுடையவராயும் சர்வபூதநிவசராயும் சர்வக்கியராயுமிருக்கிற உமக்குப்பிரணாமம், பகவானானஉம்மாலே கிலேசங்களையெல்லாம் போக்கடியாநின்றஇந்தரூபமானதுகிலேசத்தையுடையவாளசனஎங்களுக்குக்காண்பிக்கப்பட்டது இதைப்பார்க்கிலும் வேறே கிருபைபண்ணத்தக்கது என்ன விருக்கின்றது.

வாரீர்அமங்களத்தைப்போக்கடிக்கிற மங்களமூர்த்தியே, இவாள்நம்முடையவர்களென்று யோக்கியமான காலங்களிலே புத்தியினாலே நினைக்கிறது யாதொன்றுண்டோ இவ்வளவே தீனாளிடத்திலேவாச்சல்லியத்தையுடையவாளான விபுக்களாலேசெய்யத்தக்கது எப்போதும்உம்மையே தியானம் பண்ணிக்கொண்டு இருக்கிற பேர்களுடைய இருதயத்திலே சுகரூபமாயிருக்கிறீர்,அக்கியானிகளான பிராணிகளுக்கும் இருதயத்திலேஅறியப்படாதவராய் அந்தரியாமியாயிருக்கிறீர் அப்படியிருக்கிறநீர் கோரிக்கையையுடையவளாகியும் உம்முடைய உபாசகர்களான எங்களுடையஇருதயத்திலேஇராநின்றஇஷ்டங்களை எந்தக்காரணத்தினாலே அறியாமற்போவீர், வாரீர்ஜெகத்பதியே மோட்சத்தைக் கொடுக்கின்றவராயும், கதியாயுமிருக்கிற நீர் எங்களுக்குப் பிரசன்னரானீரோ இந்தவும்முடையபிரசாதமே எங்களுக்குவேண்டியவரம் வாரீர்நாதனே ஆனாலும் பிரகிருதியைக்காட்டிலும் விலட்சணனை சீவனைக்காட்டிலும் விலட்சணனை உம்மிடத்தில்லின்றும் ஒரு வார்த்தை]கேட்கிறோம் யாதொரு காரணத்தினாலே உம்முடைய அயிஸ்வரியங்களுக்கு அந்த மில்லையோ ஆகையினாலே அனந்தரென்று சொல்லப்படுகிறீர், பாரிஜாத புஷ்பமானது சுபமாகலபித்ததேயாமாகில்வண்டானதுவேறொரு புஷ்பத்தை எப்படி யடையாதோ அப்படியே நாங்களும் சாட்சாத்பரமாத்மாவான உம்முடையபாதமூலத்தையடைந்து வேறேஎதைக்கேட்கப்போகிறோம்

நாங்கள் எவ்வளவுகாலம் உம்முடைய மாய்கையினல் மோகிக்கப்பட்டவர்களாய் சம்சாரத்திலே கர்மங்களினுழன்றுகொண்டிருக்கிறகாலம்வரையில் எங்களுக்குப் பிறவிதோறும் பாகவதசகவாசம் உண்டாகக்கடவதும மனுஷியாளுக்குச் சுவர்க்கமோட்சங்களை அதிசயித்தபாகவதாளுடைய க்ஷணகால சகவாசத்துக்கும் சரியாகச் சொல்லமாட்டோம் பசுபுத்திராதி பலன்கள் சரியல்லவென்று சொல்லவேண்டியதென்ன யாதொருபாகவத சங்கத்திலே சுத்தமான பகவத்கதையானது பிரசங்கிக்கப்படுகிறதோ, யாதொருபகவத் கதையினலே சப்தாதிவிஷயஆசைக்குச் சாந்தியுண்டாமோ யாதொருபகவத்கதாப்பிரசங்கத்திலே பிராணிகளிடங்களிலே மனதுவைரத்தைவிட்டதாமோ, யாதொரு பகவத்கதையிலே ஒருபயமும் உண்டாகாதோ, யாதொருபாகவத கோஷ்டியிலே சத்கதைகளிலே முத்தசங்களாலேமுமூட்சுக்களுக்கும் கெதியானசாட்சாத் ஸ்ரீமந்நாராயணன் அடிக்கடி ஸ்தோத்திரம் பண்ணப்படுகிருரோ தீர்த்தங்களையெல்லாம் பரிசுத்தம்பண்ணவேணுமென்று இச்சையினல் காலாலேசஞ்சரியாநின்ற அப்படிப்பட்டபாகவதாளுடைய சங்கமானது சம்சாரத்தில் பயத்தையுடையவனுன எவனுக்குத்தான் ருசியாது.

வாரீர்பகவானே, உமக்குப்பிரியனுயும்,சகாவாயும் பர்கவதனுயுமிருக்கிற சாட்சாத்ருத்திரனுடைய க்ஷணகாலசங்கத்தினலே நாங்கள் ஒருசிகிச்சையுமில்லாததாகிய ஜனன மரணத்மகமான சம்சாரமாகிற வியாதிக்கு வைத்தியரான உம்மை இப்போதுகதியாகஅடைந்தோம்,வாரீர்ஈசனே, எங்களால்பண்ணப்பட்ட அத்தியயனம் யாதொன்றுண்டோ, சர்வகாலமும் சிசுருஷையினலே கியானவிருத்தாளான ஆசாரியாள், பிராமணுள்இவர்கள் சந்தோஷிக்கும்படியாய் நடந்துகொண்டது யாதொன்றுண்டோ, ஜேஷ்டாளான பிராதாக்கள், சிநேகிதாள் இவர்களைநமஸ்கரித்தது யாதொன்றுண்டோ சகல பிராணிகளிடத்திலேயும் பொருமையைவிட்டுச் சமமாகப்பார்த்ததுயாதொன்றுண்டோ, வெகுகாலம்சலத்திலேமூழ்கிக்கொண்டு அன்னமில்லாமல் எங்களாலே செய்யப்பட்டதபசு யாதொன்றுண்டோஇதெல்லாம்அனந்தமகிமையை யுடையவரான உமக்குச் சந்தோஷத்தின்பொருட்டு உண்டாகக்கடவது சுவாயம்புமனு, பிரமன்-ருத்திரன்-தபசு-கியானங்களினலே நிர்மலமானஇருதயத்தை யுடையவர்களான இவர்கெள்ல்லாம் உம்முடையமாத்துமமென்கிற கரையை அறியாதவர்களாய் இருந்தாலும் தங்களுடைய புத்தியானு சாரமாக உம்மை ஸ்தோத்திரம் பண்ணுகிருர்கள். ஆகையால் நாங்களும் ஸ்தோத்திரம்பண்ணுகிருேம் சர்வபூதசமராயும், சாந்தராயும், பரமபுருஷராயும், வாசுதேவனுயும், சத்துவமூர்த்தியாயும், ஷாட்குண்ணிய பூரணராயுமிருக்கிறஉமக்குப் பிரணுமம் பண்ணுகிருேமென்று பிரசேதசுக்களாலே ஸ்தோத்திரம்பண்ணப்பட்டவராயும் பக்தவச்சலராயுமிருக்கிற பகவானுனவர்சந்துஷ்டராய்க்கொண்டு அவர்களாலே கோரப்பட்ட அந்தவரத்தைக்கொடுத்தவராய் அனந்தமகிமையை யுடையவரான சுவாமியானவர் தம்முடையதெரிசனத்தினலேதிருப்தியில்லாதகண்களையுடையவராயும், தமது அதரிசனத்தை இச்சியாதபேரராயுமிருக்கிற அந்தப்பிரசேதசுக்கள் பார்த்துக்கொண் டிருக்கும்போது தம்முடைய ஸ்தானத்தைக் குறித்துஎழுந்தருளினர், பிற்பாடு அந்தப் பிரசேதசுக்கள்சமுத்திரசலத்திலேயிருந்துவெளிப்பட்டு சுவர்க்கத்தைத் தகையவேணுமென்கிறதுபோல் மிகவும்உயர்ந்திருக்கிறவிருட்சங்களினலே வியாபிக்கப்பட்டபூமியைப் பார்த்து கோபித்துக்கொண்டார்கள். வாராய்ராஜனே பிற்பாடு அந்தப்பிரசேதசுக்கள் பிரளயகாலத்திலே காலாக்கினிருத்திரன்போலப் பூமியிலே உள்ள விருட்சங்கள் கொடிகல் இதுகள் ஒன்றுமில்லாமற்போகப் பண்ணுகிறதற்காகக் கோபத்தினலே தங்கள்முகத்திலே யிருந்து அக்கினியையும், வாயுவையும் சிருஷ்டித்தார்கள் அந்த அக்கினியினலேபஸ்பங்களாகப்பண்ணப்பட்ட விருக்ஷங்களைப்பார்த்து பிரம்மதேவன்வந்து பிராசினபரிகசிஷினுடையபிள்ளைகளானபிரசேதசுக்களுக்கு நியாயங்களைப்போதித்துக்கோபந்தணியச்செய்து, அப்போதுமிகவும் பயப்பட்டுக்கொண்டிருக்கிற விருட்சகன்னிகையான மாரிஷையென்கிறபெண்ணை அந்தப்பிரசேதசுக்களுக்குக்கொடுப்பித்தார், அந்தபிரசேதசுக்களும்பிரம்மாவினுடையஆக்கினையினலே அந்த மாரிஷையென்கிற பெண்ணைவிவாகம்பண்ணிக்கொண்டு அவளிடத்திலேமகாதேவனுடைய அவமானத்தினலே நசித்திருந்த தட்சப்பிரஜாபதிதிரும்பவும்பிறந்தான். பிர்மாவானவர் பிரஜாசிருஷ்டியிலும்ரட்சிக்கிறதிலும் அந்ததட்சனைநியமித்தார் அவன் மரீசிமுகலான பிரஜாபதிகளைப் பிரஜாசிருஷ்டியிலே ஆக்கியாபித்தான்.

## உகூ வது அத்தியாயம்.

அறுசீராசிரியவிருத்தம்.

தன்னிடபிள்ளையானதட்சன்றன்னிடத்தில்ராச்சியம்
துன்னவேவைத்தக்காலில் துரிதமாய் வாசஞ்செய்யும்
மன்னுநற்பிரசேதசுக்குமகதயர்முநாரதேந்திரன்
நன்மையாமோட்சமார்க்கநவின்றனை நவிலுவாமே.

பிள்ளையானதட்சனிடத்திலே இராச்சியபாரத்தை வைத்துவனத்திலே வாசம்பண்ணுகின்றஅந்தப்பிரசேதசுக்களுக்கு நாரதர்முதலிசொல்லப்பட்டமார்க்கத்தை உபதேசித்துஅதனலேமோட்சத்தைஅடைந்தார்களென்றுசொல்லப்படுகின்றது.

மைத்திரேயர்வாக்கியம்.

வாரீர் விதுரரே, அந்தப்பிரசேதசுக்கள் அநேக திவ்வியவருஷந்துக்குப் பின்பு விவேகத்தை யுடையவர்களாய் சமுத்திரத்திலேபகவானாலேசொல்லப்பட்ட வார்த்தையை நினைத்துக்கொண்டு பிள்ளையானதக்ஷனிடத்திலே தங்களுடையபாரியை கிரகம் இவைமுதலியதுகளைவிட்டு சீக்கிரமாகப்புறப்பட்டு சாசிமியென்கிற ரிஷிசித்தியையடைந்த மேற்குச்சமுத்திரக்கரையிலேபரமாத்மக் கியானத்துடன் பிர்ம நிஷ்டையிலே தீட்சையுடையவர்களாய் பிராணன்-மனது-வாக்கு-கண்கள் முதலியதுகளை நிக்கிரகித்து சமானங்களாயும்,மூலாதாரமுதற்கொண்டு செம்மையாயுமிருக்கிற சரீரங்களையுடையவர்களாயும், நிர்மலமான பரமாத்மாவினிடத்திலேவைக்கப்பட்ட மனதை யுடையவர்களாயு மிருக்கிற அந்தப் பிரசேதசுக்களை அனுக்கிரகிக்க தேவாள் அசுராளாலே ஸ்தோத்திரம்பண்ணப்பட்ட நாரதமகாரிஷியானவர் வருவதை பிரசேதசுக்கள்கண்டு எழுந்திருந்துசேவித்து அபிவாதனம்பண்ணி யெதாஸ்திரமாகப் பூசித்து ஆசனம்சமர்ப்பித்து அவரதில்உட்கார்ந்தபிறகு நாரதமகாமுனியைப்பார்த்து வாரீர்தேவரிஷியே தெய்வாதீனமாகஎங்களுக்கு உம்முடைய தரிசனமுண்டாச்சுது சூரியனைப்போலவும்முடைய சஞ்சாரம் எங்களைப்போலொத்தவர்களுடைய அக்கியானத்தைப் போக்கடிக்கிறதின் பொருட்டன்றோ,சிவனாலேயும்பகவானான அதோட்சஜனாலேயும் உபதேசிக்கப்பட்ட கியானமானது பாரியாபுத்திராதிகளிலே ஆசக்தாளான எங்களுக்கு அந்தக்கியானம் வெகுகாலமாய் மறக்கப்பட்டது. பரமாத்ம சாட்சாத்காரரூபமான அந்த ஆத்மக்கியானத்தை எங்களுக்குத் தெரியப்படுத்துமென்று பிரசேதசுக்களாலே கேட்கப்பட்டநாரதமுனியானவர் புண்ணியகீர்த்தியானபகவானிடத்தில் வைக்கப்பட்ட மனதையுடையவராய் பிரசேதசுக்களைப்பார்த்துச் சொல்லுகிறார். வாருங்கள்பிரசேதசுக்களே, யாதொருசென்மத்தினாலேயும்,கர்மத்தினாலேயும்-ஆயுசினாலேயும்-மனதினாலேயும்-வாக்கினாலேயும், ஸ்ரீஹரியைச் சேவிக்கிறவனே மனுஷியன், அதுவேஜென்மம், அதுவேசத்கர்மம், அதுவேஆயுசு-அதுவேமனது,அதுவேவாக்கு, இந்தப்பூமியில் உத்தமகுலத்திற்பிறந்து உபநயனமுதலானயக்கியாதிகளைச்செய்தமூன்று வகைப்பட்ட ஜென்மங்களினாலும் என்னபிரயோசனம் வேதங்களிலேசொல்லப்பட்ட கர்மங்களிலும்,தேவதைகளைப்போல வெகுகாலமான ஆயுசைப்பெற்றதினாலும் சாஸ்திரத்தினாலும்,தபசினாலும்,வாக்காலும், சித்தவிர்த்திகளினாலும், சமர்த்தமான புத்தி இந்திரியபலத்தினாலும், என்னபிரயோசனம்,பிராணாயாமயோகத்தினாலும் சாங்கியமென்கிற தேகவிவேக ஆத்மக் கியானத்தினாலும், சன்னியாசத்தினாலும் வேதாத்தியயனத்தினாலும் மற்றுமுள்ள பசுபுத்திராதி பலன்களில் வைராக்கியர்களினாலும் பிரயோசனமில்லை சகலமான புருஷார்த்தங்களுக்குள்ளே ஆத்துமக் கியானம் சிரேஷ்டம் விருட்சத்தின்மீது ஜலம்விட்டதினால் அதினுடைய கிளைகள்-பத்திரங்கள்-புஷ்பங்களெல்லாம் திருப்தி யடைவதுபோலும், பிராணனுடையதிருப்தியினாலே இந்திரியங்கள்திருப்தியடைவதுபோலும் அச்சுதனுடையஆராதனத்தினாலே சகலபிராணிகளும் திருப்தியடையும் வருஷகாலத்தில் சூரியனிடத்தில்நின்றும் ஜலங்களுண்டாகிதிரும்பவும் கிரீஷ்மகாலத்திலே அந்தச் சூரியனிடத்திலேயே பிரவேசிப்பதுபோலும் பூமியிலே ஸ்தாவரசங்கமங்களான பூதங்களுண்டாய் அதிலேதானே லயிக்கிறதுபோலும் சராசராத்மகப் பிரபஞ்சமும் ஸ்ரீ அரியினிடத்திலுண்டாகி லயிக்கிறதுகள். சூரியனுடைய பிரபையானது ஒருக்கால்பிரகாசிப்பதும் ஒருக்கால் அப்பிரகாசமா யிருப்பதும்போல ஜகத்சரீரியான ஸ்ரீ அரியினுடயஸ்தானமான இந்தஜெகத்தும் சிருஷ்டிவேளையில் பிரகாசித்தும் லயகாலத்திலே அப்பிரகாசமாகியுமிருக்கும், இந்திரியங்களும் சாக்கிர அவஸ்தையிலே விஷயங்களைவியாபித்து பிரகாசிக்கிறது. சுழுத்தி அவஸ்தையில் விஷயங்களைவிட்டுப் பிரகாசியாமலிருக்கிறதுகள். இந்தப்பிரகாரம் பரப்பிரமத்திலிடத்திலும் ரஜஸ் தாமசத்துவமென்னப்பட்டகுணங்கள் ஒருக்கால்காணப்பட்டும் ஒருக்கால்காணப்படாமலு மிருக்கிறதுகள் ஜகத்தினுடையசுபாவம் இப்படிப்பட்டது ஆனபடியினால் சமஸ்த பிராணிகளுக்கும் பரமகாரணமாயும், பிரகிருதிசரீரகனுயும், அந்தரியாமியாயும், நியந்தாவாயுமிருக்கிற ஸ்ரீஅரியை அந்தராத்துமாவென்கிற பாவத்தினாலே நிச்சயபஜனைபண்ணுங்கள். சர்வ பிராணிகளிடங்களில் தயையும் உள்ளதைக்கொண்டு சந்தோஷிக்கையும்சர்வேந்திரியங்களுடைய நிக்கிரகமுள்ளவனுக்கு ஜனார்த்தனர் சீக்கிரமாகப் பிரசன்னமாவார்.

வாருங்கள் பக்திசுகத்தை அறிந்தவர்களே, பரமாத்மாவையே தனமாகவுடையதரித்திராளான சத்புருஷாளிடத்திலே அநுராகத்தைப் பண்ணுகிற துஷ்டபுத்தியையுடையவர்களினது பூஜையைஅங்கீகரியார் சர்வகாலமும் தன்னையேவிடாமல் அனுவர்த்தித்துக்கொண்டிருக்கிற லட்சுமியையும், அந்தஇலட்சுமிகடாட்சத்தைக் கோருகின்ற ராசாக்களையும், தேவாளையும், பகவானானவர் அனுவர்த்திக்கின்றதில்லை. உங்களுடைய வம்சத்திலே சிரேஷ்டனையும், சித்திரர்தனையும், ராஜராஜனையும், சிறுபிள்ளையாயுமிருக்கிற துருவனானவன் சக்கிரவர்த்தி [illegible] தாயினுடைய வாக்காகிற பாணங்களினாலே பிளக்கப்பட்ட இருதயத்தையுடையவனாய் அந்த [illegible]

ஸ்திரீமோகத்தையுடைய பிதாவையும்விட்டுத்தபோவனத்தையடைந்தவனாய் அவடத்திலே யென்னைக்கண்டு என்னுடையவுபதேசத்தினாலே பகவானை நன்றாகஆராதித்து சமஸ்த பதங்களுக்கும் உத்கிருஷ்டமாயும், மற்றொருவராலேயும், அடையப்படாமலு மிருக்கிற ஸ்தானத்தையடைந்தான். அந்த ஸ்தானத்தை இப்போதும் சப்தரிஷிகள்கீழேயிருந்து பார்த்துக்கொண்டிருக்கிறார்களேயல்லாமல் அந்தஸ்தானத்தையடைந்தவர்களன்று ஆனபடியினாலே நீங்கள் சர்வபூதாந்தரியாமியான ஈஸ்வரனை ருத்திரனாலேசொல்லப்பட்ட வுபதேசமாக்கத்தினாலே புனர்ஜென்மத்தையடையாம லிருக்கிறதற்காக பஜனைபண்ணுங்களென்று நாரதமுனியானவர்பிரசேதசுக்களுக்கும் மற்றும்சிலபேருக்கும் பகவத்கதைகளைக் கேட்பித்து பிரமலோகத்தையடைந்தார் அந்தப்பிரசேதசுக்களும் கலிதோஷங்களைப்போக்கடிக்கிற ஹரியினுடைய எஜசைக்கண்டு அந்தப்பகவானுடைய பாதத்தையே தியானம்பண்ணிக்கொண்டு அவரதுபதத்தையடைந்தார்கள்.

வாரீர்விதுரரே, யாதொருஅர்த்தத்தை என்னைக் கேட்டீரோ பிரசேதசுக்களுக்கும் நாரதருக்கும் சம்வாதரூபமான அரிகீர்த்தனமும் நம்மாலேஉமக்குச்சொல்லப்பட்டது.

ஸ்ரீசுகருடையவாக்கியம்.

வாராய்பரிட்சித்தே, யாதொருஇந்தமனுவினுடையபிள்ளையான உத்தானபாதம்வம்சம்சொல்லப்பட்டது எந்தபிரியவிருதன் நாரதரிடத்தில்நின்றும் ஆத்தும உபதேசத்தைப்பெற்றுப் பின்னும் வெகுகால ... யத்தை அனுபவித்து பிள்ளைகளுக்கு ... பரமபதத்தையடைந்தானோ அந்த ... உடைய சத்துக்களினாலே கொண்டாடப்ப ... த்தையும் கேளும், இந்தப்பிரகாரம் மயித்திரேயராலே சொல்லப்பட்ட உத்தானபாதனுடைய சத்கதையைக்கேட்டு விதுரரானவர் மிகவும் விருத்தியடையாநின்ற பக்தியினாலேஉண்டான ஆனந்தபாஷ்பங்களை உடையவராயும்,பகவானுடைய பாதாரவிந்தங்களை இருதயத்திலே தரித்துக்கொண்டுமிருக்கிற விதுரர் மைத்திரேயருடையபாதாரவிந்தங்களிலே பிரணாமம்பண்ணி அவரைப்பார்த்துச்சொல்லுகிறார். வாரீர் மகாயோகியே, மகாகிருபையையுடையவரான உம்மாலே யாதொரு பிரகிருதியைக்காட்டிலும் பரராயும் அகிஞ்சாள் இருதயத்தில் வாசம்பண்ணுகின்ற ஹரியானவர் எந்த்யானமார்க்கத்தினாலே அறியப்படுகிறாரோ அந்தத் தியானமார்க்கமானது காண்பிக்கப்பட்டதென்று இந்தப்பிரகாரஞ்சொல்லி மைத்திரேயரைப் பிரணாமம்பண்ணி அவருடையஅனுமதிகொண்டு பூரணமனோரதராய் தம்முடையவாளான ஞாதிகளைப்பார்க்கவேணுமென்கிற இச்சையினாலேஅஸ்தினாபுரியைக்குறித்துப்போனார். வாராய் பரிட்சித்து மகாராசனே ஹரியினிடத்திலேவைக்கப்பட்ட மனதையுடையவாளான இந்தராஜாக்களுடைய சரித்திரத்தை எவன்கேட்கிறானோ அவன்-ஆயுசு-தனம்-கீர்த்தி - அயிஸ்வரியம் மோட்சமுதலியயாவைவும் அடைவன்.

# நாலாவதுஸ்கந்தம்

முற்றுப்பெற்றது.










# ஸ்ரீமகாபாகவதபுராணம்.

## ஐந்தாவதுஸ்கந்தம்.

அஉ

### முதலாவது—அத்தியாயம்.

இரட்டையாசிரியவிருத்தம்.

மூளபாகவதநற்புராணந்தலில்
ந்தாவதுஸ்கந்தத்தில்
ருபலாவண்யவிருதன்வங்கிசமும்பிர
ஞ்சவர்ணனையுமல்லால்
ந்தவிருபதுவத்தியாயங்களிற்பிரிய
தோன்றலெனும்விருதன்முதலால்
ல்லும்பூமியிற்றாகின்றதீவுகளில்
சோர்வில்மரியாபாலனம்
ந்த்ரசூர்யாதிகளின்சோதிமேன்மூன்றத்தி
யாயங்களாற்செய்திடும்
கனிபிலாக்கீழுலோகங்களில்தயித்தியாள்
தக்கவர்களானோர்களால்
விந்தையாமிருபத்துவத்தியாயந்தனில்
வியானநிஷ்டாபனை
விறல்விருதனுக்குசமுசாரத்தில்சௌக்கியமும்
வீறுகதையுஞ்சொல்லுவாம்

ஸ்ரீமகா பாகவதபுராணத்தில் ஐந்தாவதுஸ்கந்தத்தில் அனேகப்பிரகாரங்களுடனே கூடின பிரியவிருதன் வங்கிசமும், பிரபஞ்ச மரியாதையும் வர்ணிக்கப்படுகின்றது. அதில் இருபது அத்தியாயங்களிலே பிரியவிருதன் முதலானராசாக்களாலே பூமியிலிராநின்ற தீவுகளுடையமரியாதாபாலனம் பண்ணப்பட்டதென்றும், மேல்மூன்று அத்தியாயங்களிலே சூரிய சந்திராதிகளுடைய சோதி சக்கிராதி மரியாதாபாலனம் பண்ணப்பட்டதென்றும், அதன்முதலான கீழ்லோகங்களிலேதைத்தியாள்முதலானபேராலே மரியாதாபாலனம் பண்ணப்படுகிறதென்றும், மேல்மூன்று அத்தியாயங்களிலே சொல்லப்பட்டதென்றும் ஆக இருபத்தாறு அத்தியாயம் பஞ்சமஸ்கந்தம் அதில் முதல்அத்தியாயத்திலே கியானநிஷ்டனை பிரியவிரதனுக்குச் சமுசாரத்தில் சவுக்கியமும், திரும்பவும் கியானநிஷ்டையுமென்று அற்புதமான பிரியவிருதன்கதை சொல்லப்படுகின்றது.

பரிட்சித்துவினுடைய வாக்கியம்.

வாரீர் சுகப்பிரம்மரிஷியே, கர்மபந்தமும்சுருபக்கியானமில்லாமையும்யாதொருகிரகஸ்தாசிரமத்தாலுண்டாகிறதோ அப்படிப்பட்ட கிரகஸ்தாசிரமத்திலே பாகவதனைப் பரமாத்துமஅனுபவநிஷ்டனை பிரியவிருதன் எப்படி ரமித்துக்கொண்டிருந்தான். பிராம்மணசிரேஷ்டரே பசுபுத்திராதிகளிலே ஆசக்தியை விட்டவர்களானமகாபாகவதாளுக்குக்கிரகங்களில் ஆசக்தியுண்டாகிறதில்லை அதுநிச்சயம் விப்பிரசிரேஷ்டரே, புண்ணிய கீர்த்தியான ஸ்ரீபகவானுடைய பாதாரவிந்தச்சாயையினாலே சுகியாநின்ற சித்தத்தை யுடையவர்களானமகத்துக்களுடைய புத்திசமுசாரத்தை இச்சியாதனரேபிர்மநிஷ்டரே, பாரியாபுத்திராதிவிடங்களில் ஆசக்தியையுடையவனை அந்தப் பிரியவிருதனுக்கு மோட்சசித்தியும், அதற்குமூலமான கிருஷ்ணனிடத்திலே நிரந்தரமானபக்தியும் உண்டாயிற்றென்கிற அர்த்தத்தில் எனக்கு மகாசமுசயமுண்டாயிருக்கிறதென்று கேளாநின்றபரிட்சித்துமகாராசாவைப்பார்த்து சுகர்சொல்லுகிறார்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராஜாவே, கிரகஸ்தாசிரமங்களிலே பாகவதாளுக்கு ஆசையிராதென்கிறது எதார்த்தமேயானாலும் புண்ணிய கீர்த்தியான பகவானுடைய சரணாரவிந்த மகரந்தரசங்களிலே ஆசையுடனே கூடின சித்தத்தையுடைய பாகவதாளுக்கு மிகவும் இஷ்டரான பகவானுடையகதையை ஒருவன் ஒரு விகாதத்தினாலே தடுக்கப்பட்டிருந்தாலும் மங்களகரமாயும் தங்களுடையமார்க்கமாயுமிருக்கிற அந்தப் பாகவதகதையை எந்தவிதத்தினாலும் விட்டுவிடார்கள் அந்த இராஜகுமாரனான பரமபாகவதனென்ற பிரியவிருதன் நாரதருடைய பாதசேவையினாலே சீக்கிரமாகப் பரமார்த்தத்தை யறிந்தவனாய் பிர்மசத்திரமென்னப்பட்ட தியானஎக்கியத்தினாலே தீட்சிக்கப்போகிறவனாய் சாஸ்திரங்களாலேசொல்லப்பட்ட சிரேஷ்டங்களான குணசமூகங்களுக்கு இருப்பிடமாயிருக்கையிலே தன்னுடைய பிதாவான மனுவினால் பூமியைப் பரிபாலனம்பண்ணுகிறதற்கு நேமிக்கப்பட்டிருந்தாலும் பகவானானவாசுதேவனிடத்தில் நிரந்தரமான யோகத்தினாலே சகலஇந்திரியவியாபாரங்களையும், சமர்ப்பித்தவனாய் அந்தப்பிருதுவாக்கியம் தள்ளிப்போடத்தக்கதாயிருந்தாலும் அந்த ராச்சிய அதிகாரத்திலே அசத்தான இராகாதிதுவேஷத்தினாலே ஆத்மாவுக்குத்திரஸ்காரத்தை நிச்சயித்தவனாய் அந்த அதிகாரத்தைச் சம்மதியாமலிருந்தான். பிற்பாடு பகவானாயிருக்கிறசதுர்முகனானவர் இந்தப்பிரபஞ்சசிருஷ்டி விருத்தியாகவேணுமென்கிற தியானத்தினாலே நிச்சயிக்கப்பட்ட சகலபிராணிகளுடைய அபிப்பிராயத்தை யறிந்தவராயும் சரீரத்தோடே கூடிக்கொண்டிருக்கிற சமஸ்தமானவேதங்களினாலும், ஜனகாதிதேவரிஷிகணங்களினாலுஞ் சூழப்பட்டவனாய் சத்தியலோகத்தில் நின்றும் இறங்கினார் அந்தப்பிரம்மாவானவர் ஆகாசத்தில் சந்திரனைப்போற் பிரகாசித்தவராயும், அங்கங்கே விமானசிரேணிகளினால் வாராநின்ற தேவதைகளால் மார்க்கங்கள்தோறும் பூசிக்கப்பட்டவராய் அந்தமார்க்கங்களில் கும்புகும்பாயிருக்கிற-சித்தாள்-கந்தருவாள்-சாத்தியாள்-சாரணாள்-முனிகணங்கள் இவர்களாலே தியானம்பண்ணப்பட்டவராயும்,கெந்தமாதனபர்வதத்திலிராநின்ற ஒருவனொருகுகையைப் பிரகாசிப்பியாநின்று கொண்டுவந்தார், அந்தகெந்தமாதனபர்வத குகையில் தேவரிஷியானநாரதர் அம்சவாகனத்தினாலே பகவானான இரண்ணியகர்ப்பனை தன்னுடைய பிதாவென்று அறிந்து பிதா புத்திராளான மனுப்பிரியவிருதாளுடனேகூட சீக்கிரமாகயெழுந்திருந்து அந்தசம்பந்தத்தையுடையவராய்ப்பூசித்து ஸ்தோத்திரம்பண்ணினார். வாராய் பாரதனே, பகவானானசதுர்முகனும் அவர்களாலே பூசிக்கப்பட்டவராய் அவர்களுடைய ஸ்தோத்திரத்தினாலே சந்தோஷமாய் மிகவும் ஸ்தோத்திரம்பண்ணப்பட்ட குணசமூகத்தையும், அவதாரங்களையும் விஜயங்களையு முடையவனாய் தயையுடனேயும், மந்தஆசத்துடனேயுங்கூடின கடாட்சத்தையுடையவனாய் அந்தப்பிரியவிருதனைப்பார்த்து ஒருவார்த்தை சொன்னார்.

சதுர்முகன் வாக்கியம்.

வாராய்பிரியவிருதனே, எதார்த்தமாய் ஒருவார்த்தைசொல்லுகிறேன் அதைநன்றாகத் தெரிந்துகொள்ளும் நானும்நீயும் உன்னுடைய தாய்தகப்பனமனுவும் இந்தத்தேவரிஷியான நாரதரும் எல்லாருங் கூட பராதீனராயிருந்துகொண்டு எந்தபகவானுடைய ஆக்கினையைச் செய்துகொண்டிருக்கிறோமோ அப்பிரமேயராயும், ஜகத்ருபியாயுமிருக்கிற அந்தப் பகவானிடத்திலே தோஷபுத்தியைப்பண்ணாதே-தபசு-வித்தை-யோகபலம்,ஆத்மக்கியானம், அர்த்தம்-தர்மங்களினாலும் தன்னாலே அல்லது பிரத்தியால் இதுகளினாலே யாதொருவரும் பகவானுடைய ஆக்கினையைத் தள்ளுகிறதற்கு ஒருவரும்சமர்த்தாளல்ல. வாராய் பிரியவிருதனே, ஜன்மம்-மரணம்-சோகம்-மோகம்-சுகம்- துக்கத்தின் பொருட்டும் சர்வகாலத்திலும் பயமில்லாத மோட்சத்தின் பொருட்டும் கருமத்தைப் பண்ணுகைக்குப் பகவானால் கொடுக்கப்பட்ட இந்தத்தேகத்தை ஜனசமூகமானது தரிக்கிறது. வாராய்குழந்தாய் யாதொருபகவானுடைய வேதவாக்காகிற தந்தியினாலே சத்துவாதி குணங்களால் பண்ணப்பட்டதாயும், திடங்களாயுமிருக்கிற கர்மங்களுடனேயும், நாமங்களுடனேயும், நன்றாகக் கூட்டிவைக்கப்பட்ட நாமெல்லாம் மூக்காங் கயிற்றினால் கட்டப்பட்ட எருதுகளானது புருஷனுக்கு வசியமாயிருந்துகொண்டு அவனிஷ்டப்படி நடக்கின்றதோ அப்படியாகவே ஈஸ்வரனுடைய ஆக்கியாபிரகாரம் நடக்கிறோம்.

வாராய்ராஜனே, ஈஸ்வரனானவர் அவனவன்கர்மானுகுணமாக-தேவாள்-பட்சி-மிருகங்கள்- முதலானதுகளுக்கு எப்படிப்பட்ட சரீரங்களைக்கூட்டிவைக்கிறாரோ அப்படிப்பட்ட சரீரங்களையுடையவர்களாய்க் கண்ணில்லாதவர்கள் கண்ணிருக்கிறவர்களாலே எப்படி ஓரிடத்தையடைகின்றார்களோ அப்படிப்போலவே பந்தத்திராளாயிருந்துகொண்டு ஈஸ்வரனாலே கொடுக்கப்பட்டிருக்கிற சுகதுக்கங்களை அடைகிறோம். ஆத்மக்கியானியாயிருக்கின்றவன்கூடஎவ்வளவுபரியந்தம் பிராரத்தகர்மானுபவமிருக்கிறதோ அவ்வளவு பரியந்தம் கர்ம்மபலத்தைஅனுபவித்து எப்படியானால் நித்திரைதெளிந் தெழுந் திருந்தவன் சொற்பனத்திற் காணப்பட்ட தேகத்தை அதிலே அபிமானமில்லாதவனாயிருந்துநினைத்துக் கொள்ளுகிறானோ அப்படிப்போலவேஇந்தத்தேகத்தை

அபிமானமில்லாதவனைத் தரித்துக்கொண்டிருப்பான், அந்தத்தேகத்திலே மறுபடியும்ஜெனனம் வரும்படியான கர்மங்களைப்பண்ணுகிறதில்லை யாதொருகாரணத்தினாலே எவன்இந்திரியங்களை நிக்கிரகிக்கமாட்டாதவனாய் வனத்திலேயும் காமக்குரோதாதி,அரிஷ்டவர்க்கம் மனது, புத்தி, இதுகளுடன்கூட, யிருக்கிறானோ, ஆகையினாலே இந்திரியஜெயமில்லாதவனுக்கு எங்கேயிருந்தாலும் ஜெனனமரணமென்கிற சம்சாரம்விடாது. இந்திரியஜெயத்தை யுடையவனையும், பரமாத்தும நிஷ்டனையும், விவேகத்தையுடையவனையு மிருக்கிறவனுக்குக் கிரகஸ்தாசிரமத்திலே யிருந்தாலும், அந்தக்கிரகஸ்தாசிரம ராகத்துவேஷாதி தோஷத்தைச் செய்யமாட்டாதன்றோ எப்படியானால் சத்துருக்களைச்ஜெயிக்கவேணுமென்கிற புருஷனானவன் ஒருதுக்கத்தைப்பற்றி யிருந்துகொண்டு பலவான்களான சத்துருக்களை ஜெயிக்கிறானோ அந்தச்சத்துருக்கள்அடிப்பட்டுப்போனபிற்பாடுஅந்தத்துக்கத்தினாலே தானாகட்டும், தனக்குச்சரியான மற்றொருவிடத்திலே யாகட்டும் எப்படி வாசம்பண்ணிக்கொண்டிருப்பானோ அப்படிப்போலவே எவன்காமக்குரோதமுதலான அரிஷ்டவர்க்கங்களைச் செயிக்கவேணுமென்று இச்சிக்கிறானோ அவன்கிரகஸ்தாசிரமத்திலே யிருந்துகொண்டு காமக்குரோதங்களைச் ஜெயிக்கத்தக்கவன் அதுகள்ஜெயிக்கப்பட்டபிற்பாடு கிரகஸ்தாசிரமத்திலாகட்டும் வனத்திலாகட்டும் இஷ்டமானவிடத்தி லிருக்கத்தக்கவன். நீயோவென்றால் பகவானுடைய பாதாரவிந்தங்களாகிற துக்கத்தைப்பற்றினவனாய் காமாதி அரிஷ்டவர்க்கங்களைச்ஜெயித்தாய் ஆனாலும் பகவானாலே கொடுக்கப்பட்ட போகங்களை இந்தக்கிரகஸ்தாசிரமத்தி லிருந்துகொண்டு அனுபவிக்க கடவாய், பிற்பாடு அதுகளிலே வைராக்கியத்தை யடைந்தவனாய் பகவானிடத்திலே நிஷ்டையுடையவனா யிருக்கக்கடவாய்,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்ராஜாவே, இந்தப்பிரகாரம் பிர்மாவினாலே சொல்லப்பட்ட மகாபாகவதனான பிரியவிருதன் பகவானையும் திரிலோககுருவாயு மிருக்கிற பிர்மாவினுடைய ஆக்கினையைத்தான் அவருக்குத் தாழ்ந்தவனாகையால் கௌரவத்தினாலே சிரசினால்பிரணமம் பண்ணினவனாய் அப்படியே நடந்துகொள்ளுகிறேனென்று வெகுமானத்தோடே கிரகிச்சான். பகவானானசதுர்முகனும் மனுவினாலே எதாசாஸ்திரமாகப் பண்ணப்பட்ட பூசையையுடையவனாய் பிரியவிருதனும் நாரதமுனியும் இவர்களிரண்டுபேரும் தங்கள்சங்கல்பத்துக்கு விகாதம் வந்திருந்தாலும் குடிலமன்றிப் பார்த்துக்கொண் டிருக்கையில் அவன்மானசகோசரமாய் நித்தியமாய் அன்னியாளாலே யடையப்படாத தன்னுடைய வுத்கிருஷ்டமான ஸ்தானத்தையடைந்தான் மனுவும் இந்தப் பிரகாரம் பிர்மாவினாலே கூட்டிவைக்கப்பட்ட மனோரதத்தை யுடையவனாய் தேவரிஷிசிரேஷ்டரான நாரதருடைய அனுமதியினால் பிள்ளையான பிரியவிருதனை அகிலபூமண்டலத்தையும் ரட்சிக்கிறதின்பொருட்டு ஸ்தாபித்துத் தானும் அத்தியந்தம் குரூரமான சப்தாதிவிஷயமாகிய விஷமத்தினுடைய ஆசையினின்றும் ஒழிந்தான், இந்தப்பிரகாரம் அந்தசகத்பதியான பிரியவிருதன் ஈஸ்வர இச்சையினாலே பூமிபாலன கர்மாதிகாரத்தையடைந்தனால் சகலசெகத்துக்களுடைய பந்தங்களையும் போக்கடியாநின்ற பிரபாவத்தையுடையவனான பகவானுடையபாதாரவிந்தவருளால் அனவரதத் தியானத்தினாலே ராகத்துவேஷாதிகளைப் போக்கடித்துப் பரிசுத்தனா யிருந்தாலும் மகத்துக்களைப் பூசியாநின்ற அந்தராஜாவானவன் பூமண்டலத்தை ரட்சித்தான். அதன்பிற்பாடுபிரசாபதியான விஸ்வகர்மாவினுடைய பெரிஹஷ்மதியென்கிற பிரசித்தையானபெண்ணை விவாகம் பண்ணிக்கொண்டான், அந்தபெரிகிஷ் மதியினிடத்திலே தன்னோடேசமானமான சீலம், குணம், கர்மம், ரூபம். வீரியம்,அவுதாரியம் இதுகளை யுடையவர்களான பத்து பிள்ளைகளையும் அவர்களுக்குத்தங்கையான ஊற்சல்வதியென்று ஒருபெண்ணையும் பெற்றான், அந்தப்பத்து பிள்ளைகளும் ஆக்கினியித்திரனென்றும், இத்துமசிக்குவனென்றும், எக்கியபாகுவென்றும், மாகவீரனென்றும், இரணியரேதசுவென்றும், கிருபிருஷ்டனென்றும், சவனனென்றும், மேதாதிதியென்றும், விதிகோத்திரனென்றும், கவியென்றும், அக்கினியினுடைய நாமத்தை யுடையவர்களானார்கள் இவர்களுக்குள்ளே கவி,மகாவீரன், சவனன், இவாள்மூன்றுபேரும் ஊர்த்தரேதசுக்களானார்கள், அவாள்பால்யமுதற்கொண்டு வேதாந்த வித்தையையே அப்பியாசம் பண்ணினவர்களாய்ப்பரம அம்சாளுடைய ஆசிரமமான சன்னியாசத்தை அடைந்தார்கள்,அந்தப்பரம அம்சாளுடைய ஆசிரமமான சனனியாசத்திலே சாந்திகுணத்தையே அவபாகமாகவுடையவர்களாய் பரமரிஷிகளான கவிமுதலான மூன்றுபேரும் சகலமான சீவராசிக்கும் வாசஸ்தானமாய் ஷாட்குண்ணிய அயிஸ்வரிய சம்பன்னனாய் சங்காரபிதாளுக்கெல்லாம் புகலிடமாயிருக்கிற ஸ்ரீவாசுதேவனுடைய சரணாரவிந்தத்தில் அனவாத ஸ்மரணத்தினுண்டானபரம்பக்தி ரசப்பிரபாவத்தினாலே மரிமளிக்கப்பட்டமனதில் சாட்சாத்கரிக்கப்கட்டவனாய் சமஸ்தபிராணிகளுக்கும் ஆத்துமாவாய்சிவசரீரியானபரமாத்துமாவினிடத்திலே ஆத்மகாமியத்தைப் பேதமில்லாமல் அடைந்தார்கள்,

அந்தப் பிரியவிருதனுக்கு வேறேஒரு ஸ்திரீயினிடத்தில் உத்தமனென்றும், தாபசனென்றும், ரைவதனென்றும், மன்வந்தராதிபதிகளாய் மூன்றுபிள்ளைகள் பிறந்தார்கள் இந்தப்பிரகாரம் தன்னுடையபிள்ளைகள் சாந்திகுணப் பிரதானராயிருக்கையில் பிற்பாடுமகா பரிசுத்தனை பிரியவிருதனானவன் ஓரிடத்திலேயும் தடையில்லாமலிருக்கிற சமஸ்தமான பராக்கிரமத்தினாலே விர்த்தியடையாநின்ற இரண்டுபுஜங்களினால் இழுக்கப்பட்ட கோதண்டத்தினாலேயாகின்ற நாணினுடையசப்தத்தினாலே தாம விரோதிகளைப் போக்கடித்தவனாய் நாள்தோறும்விர்த்தியாகின்ற பெரிஹிஷ்மதியென்கிற ஸ்திரீயினுடைய சந்தோஷம் யோக்கியமானமரியாதைஸ்ரீசுபாவமானலச்சையில் சங்கோசிக்கப்பட்ட மந்த ஆசம கடாட்சம் மனோகரமானநல்லவார்த்தைஇதுகளினாலே திரஸ்கரிக்கப்பட்ட விவேகத்தையுடையவனாய் சுருபத்தை யறியாதவன்போ லிருந்துகொண்டு ஜெகத்தையெல்லாம் பதினொருகோடி சம்வச்சரம் பரிபாலனம் பண்ணினான் பகவானானசூரியன் மகாமேருவைப் பிரதட்சணமாகவந்து பூமியிலே பாதியைப் பிரகாசிப்பிக்கிறான் பாதியை அந்தகாரத்தினாலே சூழப்பட்டதாகப்பண்ணுகிறான்.

அப்போதுபிரியவிருதமகாராஜாபகவத்உபாசனத்தினாலேவிர்த்தியடையாநின்றும் சகலமானபேரும்அதிசயித்திருக்கிற பிரபாவத்தை யுடையவனாய் சூரியனைப் பார்த்துச் சந்தோஷப்பட்டவனாய் அந்தச் சூரியரதத்தோடே சமமானவேகத்தை யுடையதாயும் சோதிமயமாயுமிருக்கிற ரதத்தினாலே ராத்திரியையும் பகலாகப் பண்ணுவோமென்று நினைத்தவன்போல் ஏழுதரம்சூரியனுக்குப்பின்னாக இரண்டாஞ்சூரியன்போலே சஞ்சரித்தான் அவனுடைய தேர்வண்டியினாலே புதைக்கப்பட்ட பள்ளங்களேஏழுசமுத்திரங்களாயிற்று, அந்தசப்தசமுத்திரங்களினாலே பூமியிலேசெம்புவென்றும்பிலக்ஷமென்றும், சான்மலியென்றும், குசமென்றும், கிரவுஞ்சமென்றும், சாகரமென்றும் புஷ்கரமென்றும் பேர்களையுடையதான சப்ததீவுகளுண்டானதுகள் அந்தத்தீவுகளுடைய பிரமாணத்தைச் சொல்லுகிறோம் முன்னிருக்கிறதீவுக்கு அப்பாலே யிருக்கிறதீவுகள் ஒன்றுக்கொன்று இரட்டிப்பான பிரமாணத்தை யுடையதுகளாயும்அந்தத்தீவுகளுக்குச் சமானமான பிரமாணத்தை யுடையதுகளான சமுத்திரங்களினாலே அந்தத்தீவுகளுக்குவெளியிலே சூழப்பட்டதுகளா யிருக்கிறதுகள் அந்தத்தீவுகளுக்கு அகழிகள்போலயிருக்கிற சமுத்திரங்கள்பேர் லவணம் இலட்சு சுரா சர்ப்பி ததி க்ஷீரம் சுத்தோதகமென்று பெயரையுடையதுகளாய்ப் பண்ணப்பட்டிருக்கிறதுகள் ஜெம்புத்தீவுமுதலான அந்தத்தீவுகளிலே பிரியவிருதனானவன் தன்னிடத்திலே [illegible] யையுடையவர்களான ஆக்கினியிந்திரன் இத்துமஜிகுவன் எக்கியபாகு, இரண்ணியரேதசு, கிருதபிருஷ்டன், மேதாதிதி, விதிகோத்திரனென்கிற ஏழுபிள்ளைகளை [illegible] சையாக ஒவ்வொருத்தனை ஒவ்வொருதீவுக்கு அதிபதியாகப்பண்ணினான் ஊற்சஸ்வதியென்கிறதன்னுடைய பெண்ணை சுக்கிராசாரியருக்குக் கொடுத்தான் அந்த [illegible] யினிடத்தில் சுக்கிராசாரியருக்கு தேவயானி [illegible] பெண்பிறந்தாள் பகவத்பாதாரவிந்தநாளியை [illegible] சிதாகம், மோகம், மோகம், சோரமரணம், [illegible] ஜயித்தவரான பகவத்தாசனுடைய புரபா[illegible] பட்டதென்கிறது ஆச்சரியமன்று ஏனென்றால் [illegible] ளங்களுக்கெல்லாம் அந்தியசாதியாகிய சண்டாளனும் பகவானுடைய நாமதேயத்தை ஒருக்கால் உச்சரிக்கானேயாகில் அவனைக் [illegible] த்திலே சமுசாரத்தை [illegible] தின்னும் விடப்பட்டவனாய் பரிசுத்தனாவான் [illegible] காரம் அளவிடக்கூடாத பலபராக்கிரமங்களை [illegible] அந்த ப்பிரியவிருதன் ராச்சியாதிகாரத்தினாலே [illegible] தேவரிஷியான நாரதருடைய சரணாரவிந்தசேவையினாலுண்டான வயிராக்கியத்தையுடையவனாய் தன்னை [illegible] யத்தைப் பண்ணுகிறவன்போ லெண்ணிக்கொண்டு தன்னுடைய விசனத்தைச் சொல்லுகிறான் என்னாலே [illegible] கால் என்னாலேஎன்ன அசாதுவானகாரியம் பண்ணப்பட்டது யாதொரு ராச்சியாதிகாரத்தினாலே [illegible] யையுடையவனாய் நான்இந்திரியங்களினாலேஅஞ்ஞானத்தினால் பண்ணப்பட்ட பிரதிகூலமான சப்தாதி [illegible] யமாகிற பாழுங்கிணற்றிலே தள்ளப்பட்டேனே [illegible] ராச்சியாதிகாரத்தினாலே ஒருஸ்திரீக்கு விநோத [illegible] மாகவிருக்கிற என்னைநிந்திக்க வேண்டாமாவென்று [illegible] இந்தப்பிரகாரம் தன்னை நிந்தித்துக்கொண்டான் பரதேவதையான ஸ்ரீநாராயணனுடைய பிரசாதத்தினால் அடையப்பட்ட ஆத்மஞானத்தினாலே மிகவும் நிஷ்டையை யுடையவனாய் தன்னிடத்தில்பக்தியையுடையவர்களான புத்திரர்களுக்கு இந்தப்பூமியை யெதாபாகமாகப் பங்கிட்டுக்கொடுத்து மகாபோகங்களை யநுபவித்தவர்களான தன்னுடைய ஸ்திரீயையும் மகாசம்பத்தையும் சவத்தைப்போ லெண்ணிவிட்டுவிட்டு தான்மனதிலே நிர்வேதத்தையடைந்து பகவானுடையசிலானுபவத்தில் ருசியையுடையவனாய் பரிசுத்தமானநடத்தையையுடையவனாய் பகவானானநாரதராலே உபதேசிக்கப்பட்ட அத்தியாத்மமார்க்கத்தையே திரும்பவு மடைந்தான் அவனுடைய விஷயமானது இந்தப்பிரகாரம் சொல்லப்படுகிறது பிரியவிருதனாலே பண்ணப்பட்ட காரியத்தை ஈஸ்வரன் ஒருவனன்றி மற்றெவன்தான் பண்ணமாட்டுவான் யாதொரு பிரியவிருதன் ரதங்களு

டைய வண்டி நுனிகளினாலே சப்தசாகரங்களையுண்டாக்கிப் பின்னும்தீவுகள்தோறும் பிராணிகளுக்குச்சுகத்தின்பொருட்டு நதிகள் பருவதங்கள் வனங்கள்இதுகளால் பூமியினுடைய மரியாதைகள் எல்லைகள்பண்ணப்பட்டதோ பாகவதோத்தமனான பிரியவிருதன்பூமிஇந்தரிக்ஷ சொர்க்கங்களிலே கர்மயோகத்தினாலுண்டான தன்னுடைய மகத்துவத்தைநரகதுல்லியமாகவெண்ணினானே அப்படிப்பட்ட பிரியவிருதனானவனுடைய காரியத்தை எவன்தான்பண்ணப்படுவான்.

## உ-வது - அத்தியாயம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அகமகிழுமிரண்டாமத்தியாயந்தன்னில்
அரியஸ்ரீசனசம்மதங்களான
புகலாக்கினியித்திரன்றன்சரித்ரஞ்சொன்னோம்
பூர்வசித்தியென்கிறதன்பத்னியான
நகைசெறியும்ஸ்திரீயிடத்தில்நாபியான
நனிமகவைப்பெற்றெடுத்தநடனந்தன்னை
சுகபகவான்புன்சிரிப்பையுடையோராகிச்
சுகபரிட்சித்துக்கிதனைச்சொல்லுவாரே

இரண்டாம்அத்தியாயத்தில் ஸ்ரீசனசம்மதமானஆக்கினியித்திரனுடையசரித்திரம் சொல்லப்பட்டது ஆக்கினியித்திரன் பூர்வ சித்தியென்கிற தன்னுடைய பத்தினியான அப்சரஸ்திரீயினிடத்தில்நாபிமுதலானபிள்ளைகளைப்பெற்றானே, இந்தவம்சத்திலே ஸ்ரீபாவசனானயாதொருஆக்கினியித்திரன் பிரசித்தனோ அப்படிப்பட்ட ஆக்கினியித்திரனுடைய சரித்திரத்தைச் சுகபகவான் புன்சிரிப்பையுடையவராய் பரிட்சித்துவுக்குச் சொல்லுகின்றார்.

வாராய்ராஜாவே, இந்தப்பிரகாரம் பிதாவானபிரியவிருதன் நிவர்த்திமார்க்கத்தை யடைந்தபின்பு அவனுடைய ஆக்கினையினாலிராநின்ற ஆக்கினியித்திரன் செம்புத்தீவுவாசிகளான பிரஜைகளைத் தன்வயிற்றிற் பிறந்த பிள்ளைகளைப்போல தர்மசிந்தையுடன் இரட்சித்தான்அந்தஆக்கினியித்திரன் ஒருக்கால் புத்திரன் வேணுமென்கிற இச்சைகொண்டவனாய் தேவஸ்திரீகளுக்குலீலாஸ்தானமான மந்திர பர்வதத்தினுடைய குகையில் பகவானையும் தேகாதிகளுக்கெல்லாம் பதியாயுமிருக்கிற சதுர்முகனைச்சம்பாதிக்கப்பட்ட புஷ்ப முதலான பூஜாதிரவியங்களைப்பெற்று ஏகாக்கிரசித்தத்தை யுடையவனாய் தபசினாலே ஆராதித்தான். அதைக்கண்டு ஷாட்குண்ணியஅயிஸ்வரிய சம்பன்னனாயும் ஆதிபுருஷனாயுமிருக்கிற சதுர்முகன் சதசிலே கானம் பண்ணிக்கொண்டிருக்கிற பூர்வ சித்தியென்கிற அப்சரசை அனுப்பிவைத்தார் அந்தப் பூர்வசித்தியென்கிற அப்சரசும் அப்போது அத்தியந்தரமணியமாயும், நானாவிதங்களாயும் நெருங்கியிருக்கிற விருட்சங்களின் சாகைகளுடனே கூடிக்கொண்டிருக்கிற சுவர்னவதைகள்மேலே ஏறிக்கொண்டிருக்கிற மயூர மிதுனங்களினாலே சொல்லப்பட்ட ஷட்சாதி சுவரங்களினாலே எழும்பப்பட்ட நீர்க்கோழி-நீர்க் காக்கை அம்சங்கள்முதலான பட்சிசாதிகளினாலே விசித்திரமாக்ச் சப்திக்கப்பட்ட நிர்மலங்களான மடுக்களிலிராநின்ற தாமரைப் புஷ்பங்களுக்கு இருப்பிடமான ஆசிரமவுபவனசமீபத்திலே சஞ்சரித்துக்கொண்டிருந்தாள் மிகவும் மனோகரமான கடையிலுண்டான அடிவைப்புகளாலே சிங்கார விலாசத்தை யுடையவளான அந்தப் பூர்வசித்தியென்கிற அப்சரசினுடைய அடிவைப்புகள்தோறும் கணகணவென்று மனோக்கியமாகச் சப்தியாநின்ற காற்சிலம்பினுடைய சப்தத்தைக்கேட்டு பிரியவிருதகுமாரனான ஆக்கினியித்திரன் சமாதியோகத்தினாலே மூடப்பட்ட பத்மம்போன்ற கண்களிரண்டையும் கொஞ்சந் திறந்துபார்த்தான், அப்போது சமீபத்தில்புஷ்பங்களை முகந்துகொண்டிருக்கிறபிரம்மஸ்திரீபோல் சஞ்சரித்துக்கொண்டும் தேவாள் மனுஷியாள் இவர்களுடைய மனதிற்கும் கண்களுக்குஞ் சந்தோஷத்தைக்கொடாநின்ற நடைலீலை வணக்கத்துடனே கூடினபார்வை மதுரமான சப்தத்தை யுடைய கானங்கள் நேத்திரமுதலான அவயவங்கள் இதுகளினாலே மனுஷியாளுடைய மனதில்மன்மதனுக்குப் பிரவேசத்தைப்பண்ணுகிறவளாகியும், தன்னுடைய முகத்தில்னின்றும் வராநின்ற மூச்சுக்காற்றினிட பரிமளத்தினால்மதாந்தமாயிருக்கிற பிரமரசமுகம் சூழ்ந்துகொண்டு வருகிறபடியினால் பயப்பட்டு சீக்கிரமாயிருக்கிற அடிவைப்புக்களினால் மனோகரமாக அசையாநின்ற கலசங்கள்போன்ற ஸ்தனங்கள் அளகபாரம் அரைநூன்மாலை இதுகளையுடையவளான அந்தப் பூர்வசித்தியென்கிற அப்சரசைப் பார்த்ததினால் கொடுக்கப்பட்ட சம்பத்தையுடைய பகவானான மன்மதனது வசத்தை யடைந்தவனாய் உன்மத்தனானவன்போல் அந்த ஆக்கினியித்திரன் அப்சரசைப்பார்த்துச் சொல்லுகிறான், நீயார் இந்தப் பருவதத்திலே என்னகாரியமாய் வந்தாய்வாரீர் முனிசிரேஷ்டரே, நீர் பரதேவதையானபகவானுடையமாயையோ, அன்றியும் நாணில்லாத இரண்டு தனுசுக்களை என்னநிமித்தியமாய்த் தரித்துக்கொண்டிருக்கிறாய் இந்த தனுசுகளினாலே உனக்கேதாவதுஒருகாரியம்ஆகவேண்டியிருக்கின்றதோ சிதேந்திரியாளாகாமல் காட்டில் மிருகத்துடன் சமானமாயிருக்கிற என்னைப்போன்றபேரைத் தேடுகிறையோ, நேத்திரகமலங்களை யிறகாகவுடையதுகளாயும், விசாலத்தை யுடையதுகளாயும், சொர்னக்கட்டுகளில்லாமலிருந்தாலும், மகா அழகுள்ளதாயும், அதிதீ

ட்சணங்களான நுனிகளையுடையதுகளாயு மிருக்கிற இ
ரண்டுபாணங்களைக் காட்டிலேசஞ்சரித்துக்கொண்டு எ
வன்பேரிலே பிரயோகம்பண்ணவேணுமென்று இச்சி
க்கிறையோ நாம்அறியோம். ஆகையினலே மந்தமதிக
ளான எங்களுக்குப் பகவானை உன்னுடைய பராக்கிர
மசேஷ்டிதத்தைச் சொல்லக்கடவது. பூச்சியரான உம்மு
டைய இந்தசிஷ்யர்கள் ரகசியத்துடனேகூடின இப்படிப்
பட்டசாமத்தை நாலண்டையிலேயும், கானம்பண்ணிக்
கொண்டிருக்கிறார்கள், இந்த சிஷ்யரெல்லாரும் உம்
முடைய சிகையில் நின்றும் நழுவாநின்ற புஷ்பவருஷ
ங்களை ரிஷிகணங்கள் வேதசாகைகளை கிரகிக்கிற பாவனை
யாக்க் கிரகிக்கிறார்கள்.

வாரீர்பிரம்மநிஷ்டரே, உன்னுடைய கால்களிலே
யிராநின்ற கூண்டுகளிலிருக்கிற தித்திரிப்பட்சியினுடை
யசப்தத்தைமாத்திரமே கேட்கிறோம் அந்தப்பட்சிகளு
டையரூபம்காணப்படவில்லை,கடிப்பிரதேசத்திலேககம்
பபுட்பத்தினுடைய காந்தியானதுகாணப்படுகிறது. அந்
தக்காந்தியிலே மண்டலாதாரமான குளைக்கொள்ளி கா
ந்திகாணப்படுகிறது. உமக்குத் தரிக்கத்தக்கதான மரவு
ரியெங்கே வாரீர்பிராமணனே மகா அழகாகிய வுமது
மார்பிலிருக்கிற கொம்புகளிலென்ன நிறைக்கப்பட்டிரு
க்கிறது, இளைத்திருக்கும் இடையையுடையவரான நீர்
எந்தக்கொம்புகளை மகா பிரயாசத்துடன் சுமக்கிறீரோ
அந்தக்கொம்புகளில் என்னுடைய பார்வையானது வி
ழுந்திருக்கின்றது, மேலும் உம்முடைய கொம்புகளில்
பரிமளித்துக்கொண்டும் சிவந்து மிருக்கிற சேறிருக்கிற
து, அந்தச்சேற்றினால் என்னுடைய ஆசிரமத்தை யெ
ல்லாம் பரிமளிக்கப்பண்ணுகிறீர், சுகுர்த்துக்களுக்கெல்
லாம் சிரேஷ்டரே எந்தலோகத்திலிருக்கிற ஜெனமான
து இந்தப்பிரகாரம் மார்பினால் என்னுடைய மனதைக்
கலக்காநின்ற இரண்டு கொம்புகளை தரித்திருக்கிறதோ
முகத்திலேமாதுரியம் விலாசம்இதுகளுடன்கூடிக்கொ
ண்டிருக்கிற அமிர்தமுதலான வெகுஆச்சரியங்களைத்த
ரித்திருக்கிறதோ அப்படிக்கொத்த லோகத்தை எனக்
குக்காண்பியும், உன்னுடைய தேகதாரணத்துக்குச் சா
தனமான ஆகாரமென்ன,சகா அன்னத்தைக்காட்டிலும்
வேறாகிய பதார்த்தமேஉனக்கு ஆகாரமென்று எனக்கு
த்தோணுகிறது, நீர்விஷ்ணுவினுடைய அங்கிசமாகவே
ணும், உன்னுடைய கண்கள் இமையாமலிருக்கிற மகர
ங்களையுடையதுகளா யிருக்கிறதுகள், பயந்திருக்கிற இ
ரண்டு மீன்களை யொத்ததாயும், அம்சபட்சியின் பந்திக
ளினால் விளங்காநின்றும், சமீபத்திலிராநின்ற பிரமரங்
கள் கூட்டங்களுடன் கூடிக்கொண் டிருக்கிற உன்னு
டைய முகமானது சரசுபோலவிளங்குகிறது உன்னுடை
ய தாமரைப்புஷ்பம்போலொத்த கைகளால் அடிக்கப்ப
ட்ட சூரியனானவன் திக்குகளிலே சுழன்றுகொண்டுபிர
மியாநின்ற மனதையுடையவனை என்கண்களைச் சலிப்
பிக்கிறான், உன்னுடைய வக்கிரங்களாயிருக்கிற சடாபந்
தம் அவிழ்ந்துபோயிருக்கிறதை எனினைக்கவில்லை தூர்
த்தனும் மந்தனுமிருக்கிற வாயுவானவன்உன்னுடைய
நீவியையவிழ்க்கிறான் அதையும்எனினையாமலிருக்கிறா
ய், தபசுபண்ணுகிற பேர்களுடைய தபஸை நாசம்பண்
ணாநின்ற உன்னுடைய இந்தரூபமான தெப்படிப்பட்ட
தபசுபண்ணி உன்னாலே அடையப்பட்டது.

வாரீர்சிநேகிதனே, என்னுடனேகூட தபசுபண்ணு
கிறதற்கு யோக்கியனாகிறாய் சம்சாரத்தை விர்த்திபண்
ணவையாநின்ற பிரம்மாவான எனக்குப்பிரசன்னரான
ரோபிரம்மாவினாலேகொடுக்கப்பட்ட மித்திரனாயிருக்கி
றவுன்னைநான் விடுகிறதில்லை- உன்னிடத்தில் நம்முடை
யமனதுங்கண்ணும்பற்றினதாய்க்கொண்டு அப்பாற்போ
கவில்லையோ மனோகரங்களான சிங்கங்களையுடையவரே
உனக்கிஷ்டனாகி அனுசரியாநின்றும் இருக்கிற என்னை
யுன் ஆதீனமாகப் பண்ணிக்கொள்ளக்கடவாய் உன்னு
டைய சகிகளும்அனுகூலாளரயென்னை அனுவர்த்திக்கக்
கடவர்கள்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

இந்தப்பிரகாரம் ஸ்திரீகளை நல்லவார்த்தையினால்
சுவாதீனம் பண்ணிக்கொள்ளுகிறத்தில்மிகவும்சமர்த்த
னை ஆக்கினியித்திரன்பாரியாள்சாதுரியத்தையுடைய
வார்த்தையினாலே அந்ததேவதாஸ்திரியைச்சஞ்சலபுத்
தியாய்க்கொண்டு பூசித்தான். அந்த தேவதா ஸ்திரீயும்
விர சிரேஷ்டனை அந்த ஆக்கினியித்திரனுடைய புத்
தி-சிலம்-ரூபம்-வயது-சம்பத்து- அவுதாரியம் இதுகளா
ல்இழுக்கப்பட்ட மனதையுடையவளாய் அந்தச்செம்பு
த்திபாதிபதியான ஆக்கினியித்திரனுடனேகூடி கோடி
வருஷகாலம் பூமிபோகங்களையும்,சொர்க்கபோகங்களை
யும்அனுபவித்தாள் அந்தத் தேவஸ்திரீயான பூர்வசித்
தியினிடத்தில் அந்தராஜசிரேஷ்டனை ஆக்கினியித்திர
ன்நாபியென்றும்,கிம்புருஷனென்றும்,அரியவருஷனெ
ன்றும், இளாவிரதனென்றும், இரம்மியகனென்றும்,
இரண்மயனென்றும், குருவென்றும், பத்திராசுவனெ
ன்றும், கேதுமாலனென்றும் பெயரையுடைய ஒன்பது
பிள்ளைகளைப் பெற்றான்.

அந்தப்பூர்வசித்தியும் வருஷங்கள்தோறும் ஒன்ப
து பிள்ளைகளைப்பெற்று அந்தப் பர்த்தாவினுடைய கிர
கத்திலேதானே அவர்களைவிட்டுவிட்டு மறுபடியும்தே
வனை பிரமாவையடைந்தாள். அந்த ஆக்கினியித்திர
னுடையபிள்ளைகள் மாதாவினுடைய அனுக்கிரகத்தினா
ல்பிறந்த நாள்முதற்கொண்டு நல்லரூபம், பலம் இது
களை யுடையவர்களாய் பிதாவினால் பிரிக்கப்பட்டு தங்கள்

பேரையுடையதான செம்புத்தீபவருஷங்களை பெதாபா
கமாக அனுபவித்தார்கள். ராஜாவான ஆக்கினியீத்திர
னும் காமபோகத்திலே திருப்தியில்லாதவனாய் அந்த
அப்சரசைத்தானே நாள்தோறும் மனதிலேயெண்ணி
க்கொண்டு வேதோக்தகர்மானுஷ்டானங்களினாலே அ
வளுடைய சாலோக்கியத்தை மிகவுமடைந்தான், யா
தொரு இடத்திலே பிதுர்க்களெல்லாம் சந்தோஷித்து
க்கொண்டிருக்கிறார்களோ அப்படிப்பட்ட லோகத்தை
யடைந்தான். பிதாவான ஆக்கினியீத்திரன்பிதுர்லோகத்
தையடைந்தபிற்பாடு அந்நாபிமுதலானஒன்பதுபேர்பி
ராதாக்களும் மேருவினுடைய பெண்களான மேருதே
வியென்றும், அப்ரதியென்றும், உக்கிரத மஷ்டனையெ
ன்றும், லதையென்றும், இரம்மியை யென்றும், சாந்
தையென்றும், நாரியென்றும், பத்திரையென்றும்,தே
வியென்றும்பெயரையுடைய ஒன்பதுபேரையும் விவா
கம்பண்ணிக்கொண்டார்கள்.

## ௨-வது-அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்,

மூன்றுவதத்தியாயத்தில்முளரிபோலாக்கினியீத்ரன்
ஈன்றிடும்பாலனான வெழிலுறும்நாபியென்போன்
சான்றிடுமெக்கியத்திற் கதித்தநல்ரிஷப்ரொன்று
தோன்றிடும்புத்ரன்சீரைத் தொல்புவியதனிற்கூர்வாம்

மூன்றுவது அத்தியாயத்தில் ஆக்கினியீத்திரனுடை
ய முதற்பிள்ளையான நாபிக்கு எக்கியத்தில் சந்துஷ்ட
ராய்க்கொண்டு ஸ்ரீஹரியானவர் ரிஷபரென்றுபெயரை
யுடைய புத்திரரானாரே அப்படிப்பட்ட நாபியினுடை
ய பரமங்களமானசரித்திரஞ்சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரீர்மகாராஜாவே, நாபியானவன் சந்தானத்தை யி
ச்சித்தவனாய் அபுத்திரையான மேருதேவியினுடனே
கூடபகவானான எக்கியபுருஷனைச் சாவதானமனதையு
டையவனாய் எக்கியங்களினாலே ஆராதித்தான். சிரத்
தையுடனேயும் பரிசுத்தமான மனதையுங்கொண்டு எ
க்கியத்தினால் பூசியாநின்ற நாபிமகாராஜாவுக்குப் பிரவ
ர்க்கியங்களென்கிறகர்மங்கள் நடந்துகொண்டிருக்கையி
ல் திரவியம், தேசம், காலம், மந்திரம், கிரிகை,ரித்துக்
குகள், தெட்சணையென்கிற வேதோக்தங்களான உபா
யங்களினுடைய சம்பத்தினாலே யடையக்கூடாதவராயி
ருந்தாலும்பகவான் பாகவதாளிடங்களிலேவாச்சல்லிய
த்தினாலே சோபங்களான அவயவங்களை யுடையவராய்
க்கொண்டு சுதந்தரனாயும் தமதுபக்தாளுடைய இஷ்டத்
தை நிறைவேற்றவேணுமென்கிற யிச்சையையுடையவ
ராயும், சுபகரமாயும், மனோநேத்திரங்களுக்கு ஆனந்த
கரமாயுமிருக்கிற அவயவங்களினாலேமனோக்கியமாயுமி

ருக்கிற தம்முடைய சுவரூபத்தைப் பிரகாசிப்பித்தார்,
அவ்வாறுபிரகாசித்துக் கொண்டிருக்கிற சதுர்ப்புஜங்க
ளையுடையவராயும், தேஜோமயமாயும், சுவர்ணமான பீ
தாம்பரத்தைத் தரித்தவராயும், மார்பினிலிலங்காநின்ற
ஸ்ரீவச்சசிஸ்னத்தையுடையவராயும், சங்கம், சக்கரம் ப
த்மம்,வனமாலை, கவுஸ்துவமணி, கதை இதுகளோடுக்
கூடினவராயும், பிரகாசங்களானகிரணங்களுடையசிரே
ஷ்டங்களானரத்தினங்களாலிழைக்கப்பட்ட மகுடம், கு
ண்டலம், அஸ்தகடகம், கடி, சூத்திரம், ஆரம், தோள்
வளை, கால்சிலம்புமுதலான அங்கபூஷணங்களாலே பூ
சிக்கப்பட்டவராயுமிருக்கிற அந்தப்புருஷோத்தமனை ரி
த்துக்குகள், சத்தியாள், எசமானன் இவர்களெல்லோ
ரும் தனமில்லாதவர்கள் மிகுதியானதனத்தையடைந்த
வர்கள்போலடைந்து வெகுமானத்துடன்கூட அந்தப்ப
கவானைப் பூசித்துப் பிரணாம் பண்ணினவர்களாய் ஸ்
தோத்திரம்பண்ணினார்கள், வாரீர்மிகவும்பூச்சியரா யி
ருக்கிறவரே பக்தாளாகிய எங்களுடையபூசையை அடி
க்கடி நீரேயங்கீகரிப்பதற்குயோக்கியர்நாங்கள் உம்மை
ஸ்தோத்திரம்பண்ணுதற்குச் சக்தாளன்று, (நமோ ந
மஹா) என்கிற இவ்வளவானவார்த்தையேபெரியவர்க
ளாலே எங்களுக்குக்கற்பிக்கப்பட்டது, உம்முடைய சு
ரூபம் அறியக்கூடா தாகையாலே நமோநமகாவென்று
இவ்வளவேசொல்லுவார்கள், பிரகிருதி காரியங்களான
சப்தாதிவிடயங்களிலே புத்தியையுடையவனாயும் பரா
தீனனாயுமிருக்கிற எவன்தான்சகலசீவராசிகளுடையபா
பங்களைப்போக்கடியாநின்றும் மிகவும் மங்களாகரமாயு
மிருக்கிற சிரேஷ்டங்களான குணசமுகங்களை யுடைய
தெசமாத்திரத்தைச் சொல்லுகைக்குத் தவிர பரகிருதி
புருஷாளுக்கு விலட்சணராயும்சாவயந்தாவாயுமிருக்
கிற உம்முடையசுரூபத்தைப் பிரபஞ்சத்துக்குட்பட்ட
நாமரூபாகாரங்களினாலே நிருபிக்கிறதற்கு யோக்கியனா
கா நிற்கிறான்.

வாரீர்பரமபுருஷரே, பக்தஜனங்களினால்பிரீதியுடன்
பண்ணப்பட்ட ஸ்துதிகள், சுத்தோதகம், சுத்தங்களான
புஷ்பங்கள்-துளிர்கள்-துளசி-அறுகு-இதுகளால் சம்பா
திக்கப்பட்ட பூசையினாலேயே மிகவுஞ் சந்தோஷிக்கிறீ
ர்,இப்படிப்பட்ட பூசையைத்தவிர நானாவிதமானதிரவி
யங்களினாலே சம்பாதிக்கப்பட்டும் அனேக அங்கங்க
ளையுடையதாயுமிருக்கிற காலத்திலேயும் இந்த எக்கி
யத்தினாலேயும் நீர்தானே எக்கியங்கள்தோறும்சர்வசா
ட்சாத்காரரா யிருந்துகொண்டு மிகவும் அனுபவிக்கப்ப
ட்ட சமஸ்தபுருஷார்த்த சுரூபங்களை யுடைய பரமாத்
மாவான உமக்குவேண்டியதான ஒரு பிரயோசனத்தை
யுங்கா[illegible] [illegible]ருல், நானாவித,பசு
புத்ரா[illegible]ன்றஎங்களுக்கேஇந்தயோ

க்கியரூபமான உம்முடையஆராதனம் பலசாதனமாகா
நிற்கிறது அதெப்படியென்றால் உத்தமமானசிரேயஸை
அறியாதவர்களாயும் மூடாளாயு மிருக்கிற எங்களுக்கு
மிகுதியான கிருபையினாலே மோட்சமென்னப்பட்டவு
ம்முடையமகிமையையும், எங்களுடைய இஷ்டத்தையு
ம் கொடுக்கப்போகிறவராய் எங்களாலே பூசிக்கப்படா
தவராயிருந்தாலும் பூசிக்கப்பட்டவர்போல் சுயஇச்சை
யினால்தானே எங்களுக்குப் பிரத்தியட்சரானீர், ஆகை
யால் எப்போது இந்தராஜரிஷியான நாபியினுடைய ய
க்கியத்திலே வரதசிரேஷ்டனானநீர் உமதுபக்தாளுடை
ய நேத்திரங்களுக்குப் பிரத்தியட்சமாக ஆவிர்ப்பவித்தீ
ரோ இதுவேவரமன்றோ ரிஷிகளினாலேசார்வகாலமும்
அப்பியாசம் பண்ணப்பட்ட அனந்தகலியாண குணங்க
ளையுடையவரே வயிராக்கியத்தினாலேயுண்டான மகாதீ
ட்சணமான ஞானமாகிற அக்கினியினாலே சமஸ்தமா
னமநதிலேயிருக்கப்பட்டமலங்களைத்தகித்தவர்களாயும்
பகவத்தர்மங்களையுடையவர்களாயும் ஆத்மநிஷ்டாளாயு
மிருக்கிற ரிஷிகளுக்கும், பரமமானயங்களங்களுக் கிரு
ப்பிடமான குண சமூகங்களினுடைய கீர்த்தனத்தை யு
டையவராகாநிற்கிறீர் ஆனாலும்,இடறினாலும்,துர்ப்பா
ஷணஞ்செய்தாலும்-தும்மினாலும்- காரியுமிழ்ந்தாலும்-
விழுந்தாலும், கொட்டாவிகொண்டாலுஞ்,சங்கடமான
விடத்திலே அகப்பட்டிருந்தாலும், இதுமுதலான அ
வஸ்தைகளிலேயும், சுவர மரணாதி அவஸ்தைகளினா
லேயும், உம்முடைய சரணாரவிந்தங்களை நினைக்கிறதற்
கு அசக்தாளா யிருக்கிற யெங்களுக்குச் சகல துக்கங்க
ளையும் போக்கடிப்பதான உம்முடையகுணங்களும் நா
மதேயங்களும் வாக்கினாலே உச்சரிக்கத்தக்கதாகக்கடவ
துகள். இன்னமொருபிரார்த்தனை பண்ணுகிறோம் என்
னவென்றால், புத்திரகாமனான இந்தராசரிஷியானநாபி
மகாராசன் உம்மைப்போலொத்தபிள்ளையைக் கோரின
வனாய் பசுபுத்ராதிபலன்களுக்கும் சொர்க்கமோட்சங்க
ளும ஈசுவரனாய்ஷாட்குண்ய அயிஸ்வர்யசம்பர்னரான
உம்மைஉபாசிக்கிறான். புத்திரனேபுருஷார்த்தமென்
னுபுத்தியையுடையவனாய் இந்த ராசாவானவன்உம்மை
உபாசிக்கிறது எப்படி யிருக்குதென்றால், தரித்திர
னானவன் உமி நூக்குக்காகக் குபேரனை உபாகிக்கிறது
போலிருக்கிறதுமகத்துக்களைஉபாசியாதவர்கள்யாரோ
அவர்களுக்குள்ளே இறுமாதிகளினாலேயும் செயிக்கப்
படாததாய் அவர்களால்நிச்சயிக்கப்படாதகதியையுடை
யதாயுமிருக்கிறஉம்முடையமாயையினால் இந்தசமுசா
ரத்தில்செயிக்கப்படாதவன் எவனிருக்கிறான் அந்தமா
யையினாலேசூழப்படாமலிருக்கிற புத்தியையுடையவன்
எவனிருக்கிறான்சப்தாதிவிஷயமாகிறவிவேகத்தினால்சூ
ழப்படாதசுபாவத்தையுடையவன் எவனிருக்கின்றான்,
வாரீர் வெகுலீலைகளைச்செய்கிறவரே, தேவதேவ
ரே சர்வாத்துமாவே,எந்தக்காரணத்தினாலே இந்தயக்கி
யக்கியத்தில் எங்களா லழைக்கப்பட்டீரோ அப்படிப்ப
ட்ட புத்திரனிடத்தில் புருஷார்த்தபுத்தியை யுடையவ
ளாயும். மூடாளாயுமிருக்கிற எங்களுடைய இந்த அப
ராதத்தைச்சகிக்கக்கடவீர் இந்தப்பிரகாரம்ஸ்தோத்திர
ம்பண்ணப்பட்டும்தேவதைகளுக்கெல்லாம்சிரேஷ்டரா
னபகவான் பாரதவருஷத்துக்கு அதிபதியானநாபியினா
லேயும் அவனுடையரித்துவிக்குகளினாலேயும்நமஸ்கரி
க்கப்பட்ட சரணாரவிந்தங்களையுடையவராய்தயையுடன்
ஒருவார்த்தைசொன்னார்.

வாருங்கள்ரிஷிகளே, அமோகமான வார்த்தையுடை
யவர்களான உங்களாலேஇந்தராசாவுக்குஎனக்குச்சமா
னமானபிள்ளையுண்டாகக்கடவனென்று துர்லபமானவா
ர்த்தை கேட்கப்பட்டேன் எனக்குச்சமானனாய் இரண்
டாவனில்லை, ஆனபடியினாலே நானே எனக்குச்சமான
ன்ஆனாலும், பிராமணாளுடைய வாக்கு அபத்தமாய்ப்
போகிறதில்லை ஆகிலும் எனக்குச்சமானமாகஒருவனு
மில்லாதபடியினாலே நான்தானே இந்தநாபியினுடைய
க்ஷேத்திரத்திலே அம்சாவதாரமாக அவதரிக்கப்போ
கிறேனென்று மேருதேவி கேட்டுக்கொண் டிருக்கும்
போதே நாபிமகாராசாவைப்பார்த்துச்சொல்லி பகவா
னானவர்அந்தயக்கியத்திலேஅந்தர்த்தானமாய்விட்டார்,
வாராய்விஷ்ணுநாதனே இந்தப்பிரகாரம்அந்தஎக்
கியத்திலே பகவானானவிஷ்ணு பரமரிஷிகளினாலே க்ஷ
மைகொள்ளப்பட்டவராய் நாபிமகாராசாவுக்குப் பிரிய
த்தைப்பண்ணவேணுமென்கிற இச்சையினாலேஅவனு
டைய அந்தப்புரத்தி லிருக்கும் மேருதேவியினிடத்தி
லே திகம்பராளாயும் சுபசுவிகளாயும் ஞானிகளாயும்ந
யிஷ்டிகப்பிரமசாரிகளாயுமிருக்கிறபேர்களுடைய தர்ம
ங்களைக் காண்பிக்கவேண்டு மென்கிற இச்சையையுடை
யவராய் சுத்த சத்துவமான மூர்த்தியினாலே அவதரித்
தார்.

## ௪-வது அத்தியாயம்

கலிவிருத்தம்.

அந்தநல்ரிஷப ரூபியாகிய
பந்தபாசத் தொடரையறுத்தவன்
உந்துசத்கர்மத் தொளிவும்நிவர்த்திய
அந்தமாம்பிள்ளை களையடைந்தோதுவாம்.

அந்தரிஷபரூபியான பகவானானவர் சத்கர்மமும்நிவ
ர்த்திமார்க்கமும், ராச்சியத்தில் சத்புருஷாளுடையவா
சமும் தான் நூறுபிள்ளைகளை யடைந்ததும் இதுகளைச்
சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்தே அதன்பிற்பாடு பிறக்கும்போது வச்சிராங்குசமுதலான பகவத்சின்னங்களையுடையவராய்சம்பத்துகளினாலே நாள்கள்தோறும்விர்த்தியடையாநின்ற பிரபாவத்தையுடையுவராயிருக்கிற அந்தசுவாமியை மந்திரி முதலானபேர்கள் பிரசைகள் பிராமணாள் தேவதைகள் இவர்கள்ஸ்தோத்திரம்பண்ண பிதாவான நாபிஅந்தப்பிள்ளைக்கு ரிஷபனென்று நாமகரணம்பண்ணினார் யாதொருநாபியினுடைய ராச்சியத்திலே ஆகுரையுடையவனாய் இந்திரன் வருஷியாமலிருந்தான் அதையறிந்து யோகேசுவரனாயும், பாகவதனாயு மிருக்கிற ரிஷபதேவன்சிரித்து தம்முடையயோகமாயையினாலே அசனாபமென்று பிரசித்தமான தம்முடைய மண்டபத்திலே வருஷத்தை யுண்டுபண்ணினான் நாபியோவென்றால் தன்னுடையகோரிக்கைப்படிக்கே சுபுத்திரனை அடைந்து மிகவுஞ்சந்தோஷாதி சயத்தினாலே பரவசனாய் சுயவிச்சையினாலே கிரகிக்கப்பட்ட மனுஷிய ரூபத்தையுடையவரான புராணபுருஷனை ஸ்ரீபகவானை மாயையினாலே விளங்காநின்ற புத்தியையுடையவனாய் கெற்கதசுரத்தை யுடையதான வாக்கினாலே அப்பா குழந்தாயென்று ஆசையோடு சிராட்டிக்கொண்டு மிகவும் சவுக்கியத்தையடைந்து பிற்பாடு சர்வலோகசுந்தரனை பிள்ளைக்குப் பட்டாபிஷேகம் பண்ணி பிராமணாளுடைய ஆதீனமாகவைத்துப்போட்டு மேருதேவியென்கிற தன்னுடைய ஸ்திரீயுடனேகூட பதரிகாசிரமத்திலே ஒருவருக்கும் பயத்தையுண்டாக்காமலும் மகாதீவிரமாயுமிருக்கிற தமோநிஷ்டையினாலே நரநாராயணரென்று பேரையுடையவராயும், பகவானாயுமிருக்கிற வாசுதேவரையுபாசித்தவனாய் காலஅத்தியத்திலே அவருடைய மகிமையை யடைந்தான்.

வாராய்பாண்டவபுத்திரனே யாதொருநாபிவிஷயமாய் பெரியோர்கள் இப்படிச்சொல்லுகிறார்கள். அதெப்படியென்றால் அந்நாபியினுடைய பரிசுத்தமானகர்மத்தினாலேபகவான் அவனுக்குப் புத்திரபாவத்தையடைந்தார், அப்படிப்பட்ட நாபிராஜாவாலேசெய்யப்பட்டகர்மத்தை அவனுக்குப்பிற்பாடு பூமியிலே எந்தப்புருஷன் செய்யப்போகிறான் பின்பு பகவானானரிஷபதேவனும் தம்முடையராச்சியமான பூகண்டத்தைக் கர்மக்ஷேத்திரமென்று சந்தோஷித்தவராய் காண்பிக்கப்பட்டகுருகுலவாசத்தைப்பண்ணிச் சகல வித்தைகளையும் அப்பியாசித்துத் தம்மாலேகொடுக்கப்பட்ட குருதட்சணையையுடையவாளான ஆசாரியாளாலே அனுக்ஞை பண்ணப்பட்டவராய் கிரகஸ்தாசிரம யோக்கியங்களான தர்மங்களைப்பண்ணிக்கொண்டு வேதங்களினாலே சொல்லப்பட்ட பிரவிருத்திமார்க்கம், நிவிர்த்தி மார்க்கம்இரண்டையும் அனுஷ்டித்து இந்திரனாலேகொடுக்கப்பட்ட செயந்தியென்கிற ஸ்திரீயினிடத்திலே தம்மோடேசமானமான நூறுபிள்ளைகளைப்பெற்றான் இந்த ரிஷப புத்திராளான நூறுபேருக்குள்ளே மகாயோகியாகிய ஜேஷ்டபுத்திரனான பரதன்-சிரேஷ்டகுணங்களை யுடையவனாகவிருந்தான், யாதொருபரதனாலே இந்தக் கண்டம பாரதகண்டமென்று சொல்லப்படுகிறதோ, அந்தப் பரதனுக்குப் பிற்பாடு குசாவர்தன், இளாவிரதன், பிருமாவிரதன், ஆதியாவிரதன், மலையகேது, பத்திரசெயனன், இந்திரஸ்ப்பிருகு, விதற்பன்,கிகடன்என்றுஒன்பதுபிள்ளைகள்தொண்ணூறுபேருக்குள்ளே சிரேஷ்டாளானார்கள், கவியென்றும், அரியென்றும், அந்தரிக்ஷனென்றும் பிரபுத்தனென்றும்,பிப்பிலாதனனென்றும், ஆவிர்ஹோத்திரனென்றும்,திரமிடனென்றும்,சம்சனென்றும்,மகாபாசனென்றும்,ஒன்பதுபிள்ளைகள் மகாபாகவதாளாய்பாகவதசாஸ்திரத்தையும், பகவத்தர்மத்தையுங் கரைகண்டவர்களாயுமானார்கள்,பகவான்மகாத்மியத்தினாலேவிருத்தியடைந்ததாய் சாந்திப்பிரதானமாய் வசுதேவநாரத சம்வாதரூபமான அந்தப்பாகவதாளுடையசரித்திரத்தைமேலே ஏகாதசஸ்கந்தத்தில் சொல்லுகிறோம். மற்றகனிஷ்டாளான எண்பத்தொருபேர்கள் பிதாவினுடையஆக்கினையைப்பண்ணுகிறவர்களாயும் மிகவும்வணக்கத்தையுடையவர்களாயும், மகாசுரோத்திரியர்களாய், எக்கியசீலர்களாயும், கர்மவிசுத்தர்களாயுமிருக்கிறபிராமணாளாகவானார்கள், ரிஷபரென்று பெயரை யுடையவரான அந்தப் பகவானானவர் சுதந்தரராயும், நித்தியமாகநிவிர்த்திநிஷ்டராயும், கேவலம் ஆனந்தானுபவத்தை யுடையவராயுமிருந்துகொண்டு சுவயம் ஈஸ்வரனாயிருந்தாலும் பரதந்திரனைப்போலே தர்மங்களைப் பண்ணுகிறவராய் வெகுகாலமாய் நின்றுபோனதர்மத்தைத்தாம்செய்வதினாலே தர்மத்தையறியாதவர்களுக்கும் செய்யும்படியாய் சிட்சிப்பித்துக்கொண்டு சாந்தியை யுடையவராய்ச் சகலபிராணிகளிலேயும் தயையுடையவராய்லோகங்களைக்கிரகஸ்ததர்மங்களிலேயேஆசக்தியையுடையதாகச்செய்துவேதமானது தம்மாலே அறியப்பட்டிருந்தாலும் பிராமணாளாலே காண்பிக்கப்பட்டமார்க்கத்தினாலே சாமதானாதிவுபாயங்களாலே ஜெனசமூகத்தை ரட்சித்துக்கொண்டிருந்தார்,திரவியம்-தேசம்-காலம்-எவ்வனம்-சிரத்தை-ரித்துக்குகள் நானாவிததேவதைகளுடைய வுத்தேசம் இதுகளினாலே விருத்தியடைந்திருக்கிற சமஸ்தகிருதுக்களினாலேயும் சாஸ்திரப்படிக்குநூறு ஆவர்த்தியக்கியங்களைப்பண்ணினார். பகவானானரிஷபயோகியினாலே ரட்சிக்கப்பட்டிருக்கிற இந்தப்பாரதவருஷத்திலே ஒருபுருஷனும் ராஜாவினிடத்திலே நாள்தோறும் விருத்தியடை

ந்துகொண்டிருக்கிற சிநேகர் அதிசயத்தைத் தவிரதன க்கில்லையென்று ஒருவஸ்துவை யொருவனைப்போய் ஒருவிடத்திலேயும், ஒருகாலத்திலேயும், இச்சித்ததுமில்லை, கேட்டதுமில்லை, அந்தபகவானுன ரிஷபதேவன்ஒருக்கால்பூசஞ்சாரம் பண்ணிக்கொண்டு வரச்சே பிரம்மா பாதக்ஷேத்திரத்தை அடைந்து பிரம்மரிஷிசிரேஷ்டாளுடைய சபையிலேபிரசைகளெல்லாம் பார்த்துக்கேட்டுக்கொண்டிருக்கஅவதானத்துடனேகூடினமனதையுடையவர்களாய் வணக்கம் பக்திபயம் இதுகளினுலே கட்டுப்பட்டவர்களாயுமிருக்கிற பிள்ளைகளைக்குறித்து ஒருவார்த்தைசொன்னுர்.

## ரு-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்;

சுகவிருஷப தேவராற்சொல்லிடும்
திகழுமோட்ச தர்மவுபதேசமும்
மகிழுமுஷ்ட்ணுதி மன்னுந்துக்கத்தினை
சகிக்கவங்கிச நிஷ்டையுஞ்சாற்றுவாம்.

ரிஷப தேவராலே புத்திராளுக்குச் சொல்லப்பட்ட மோட்ச தர்மவுபதேசமும் அந்தரிஷபதேவருடைய சிதஷ்ணுதிதொந்ததுக்கத்தைச் சகித்தலினு லஅந்தரிஷ தேவருடைய பரமாங்கிசநிஷ்டையுஞ்சொல்லப்படுகின்றது.

ரிஷபதேவர்வாக்கியம்,

வாருங்கள்புத்திரர்களே இந்தலோகத்திலேமனுஷியாளுடைய இந்ததேகமானது அசுத்தபொசிகளான பன்றிமுதலான பிராணிகளுக்கும்சாதாரணங்களாயும்பின்னுடே கிலேசத்தைக் கொடுக்கிறதாயும்இருக்கிறவிஷயபோகங்களைக்குறித்து யோக்கியமாகிறதில்லை சிரேஷ்டமாயும் பகவதாராதனரூபமாயும் இருக்கிற தபசுக்கு யோக்கியமாகாம லிருக்கிறது யாதொருதபசினுலேசத்துவகுணமானது பரிசுத்தமாய் விளங்குகிறதோ அப்படிப்பட்ட சுத்தசத்துவத்தினுலேஅனந்தமான பிரம்மானந்தரூபமான மோட்சமுனக்குமப்படிப்பட்டமோட்சப்பிராப்திக்குப் பெரியோர்களுடைய சேவையை யுபாயமாகச்சொல்லுவார்கள் ஸ்திரீகளிடத்திலே ஆசையையுடையவாளான விடாளுடைய சாவகாசத்தை நரகத்துக்கேதுவாகச்சொல்லுவார்கள். சதாசாரசம்பன்னுளாய்ப்பூததயையுடனே கூடினவர்களாய் கோபமில்லாதவர்களாய்-சாந்தாளாய்- பசுவாதி சகலபிராணிகளிடங்களிலேயும் கியானுனந்த மயனுன ஆத்தும கர்மவசத்தினுலே அந்தந்த சரீரத்தைப் பரிகரித் திருக்கிருனென்று சமபுத்தியை யுடையவர்களாயு மிருக்கிறவர்களைமகத்துக்களென்றறியத்தக்கதுயானவை சிலபேர்ஈசனும் அந்தரியாமியாயுமிருக்கிற பரமாத்மாவினிடத்திலேபண்ணப்பட்டபிரீதியையே பரம புருஷார்த்தமாக வுடையவர்களையும், தேகத்தைப் போஷியாநின்ற விஷய வார்த்தையை யுடையவாளான ஜெனங்களிடத்திலேயும் பாரியா புத்திராள் மித்திராள் இதுகளுடனேகூடினகிரகங்களிலேயும் பிரீதியில்லாம லிருக்கிறவர்களையும், தேகதாரணத்துக்கு வேண்டியது எவ்வளவோ அவ்வளவையே பரிக்கிரகிக்கிறபேர்களையும் மகத்துக்களென்றறியத்தக்கது.

எந்தப்புருஷன் எப்போது இந்திரியப்பிரீதிக்காக வியாபரிக்கிருனே அப்போதுவிவேகமில்லாதவனுய்நிச்சயமாக விபரீதத்தையடைகிருன் பூர்வஜென்மத்திலே செய்யப்பட்ட யாதொருகர்மத்தினுலே ஆத்துமாவுக்குதுக்கத்தைக் கொடாநின்ற அசத்தான இத்தேகம் உண்டாச்சுதோ அப்படிப்பட்டகர்மத்தைத் திரும்பவும் செய்வது நல்லதென்று நான்நினைக்கவில்லை எந்தமட்டுக்கும் ஆத்தும தத்துவத்தை யறியவேணுமென்று இச்சியாமலிருக்கிருனே அந்தமட்டுக்கும் தேகசம்பந்தத்தினுலேஅக்கியான மூலமான சுவரூபதிரஸ்கார முண்டாயிருக்கும் கர்மசுபாவமான அந்தமனதினுலே திரும்பவும் தேகசம்பந்தமுண்டாகிறது புருஷனுனவன்விவேகமில்லாதவனுய் தனக்குஉத்தமபுருஷார்த்த மோட்சத்திலே பிரமாதத்தையுடையவனுய் இந்திரிய வியாபாரங்களை புருஷார்த்தமென்று எப்போதுபார்க்கிருனே அப்போதுசொரூபக்கியானமுனிபனுய் மூடனுய் மிதுனசுகத்தையுடையதான கிரகத்தையடைந்து நானுவிததாபங்களை யடைகிருன். புருஷனுக்கு ஸ்திரீயோடே யேகாந்த சங்கத்தையே அவாளிருவருக்கும் ஏகரூபமான விருத்தியைந்தமென்று சொல்லுவார்கள். இந்த யேகாந்தசங்கரூபமான இருதயபந்தத்தினுலே ஜெனங்களுக்குக் கிரகம்க்ஷேத்திரம்-பிள்ளைகள்-பந்துக்கள்-தனம் இதுகளினுலே நானென்றும் என்னுடையதென்றும்மகாமோகம் உண்டாயிருக்கிறது எப்போது இந்தஜென்மத்துக்குக் கர்மத்தினுலே கட்டுப்பட்டும் திடமாயுமிருக்கிறமனேரூபமான இந்த இருதயகிரந்தியானது எப்போது விடுபட்டுப்போகிறதோ அப்போது ஜென்மமானவன் ஸ்திரீயோடேயேகாந்தசங்கத்தில்நின்றும்ஒழிந்துபிறபாடுஅகங்காரத்தைவிட்டு முத்தனுய் பரமாத்துமாவையடைகிருன்.

வாருங்கள்புத்திரர்களே நிர்மலனுயுங்குருவாயுமிருக்கிறஎன்னிடத்தில்பக்தியினுலேயும் நிரந்தரசேவையினுலேயும் ஆசையில்லாமையினுலேயும் சீதோஷ்ணசுகதுக்காதிகளை சகிக்கிறதினுலேயும்சமஸ்தபிராணிகளுடைய துக்கத்தைக்கண்டு துக்கிக்கையாலேயும் ஆத்தும விசாரத்தினுலேயும் தபசினுலேயும் காமியகர்மங்களைவிட்டதினுலேயும் பாகவதாராதன கர்மங்களினுலேயும்நித்

தியமாய் பாகவத சங்கத்தாலேயும் சருவபூதசாம்மியத்தினாலேயும் சாந்தியினாலேயும் சரீரம்-கிரகம்-இதுமுதலானதுகளிலே என்னுடையதென்கிறபுத்தியில்லாமையினாலேயும் வேதாந்தசாஸ்திர அப்பியாசத்தினாலேயும் பிராணஇந்திரிய மனோ ஜெயத்தினாலேயும் திருடமான சிரத்தையினாலேயும் பிரமசரியத்தினாலேயும் வாக்குநியமத்தினாலேயும் சாஸ்திரக் கியானத்தினாலே பிரகாசியாநின்றுமிருக்கிற கியானயோகத்தினாலேயும்சமர்த்தனானபுருஷன் நம்மாலே சொல்லப்பட்ட இந்தயோகத்தினாலே அகங்காரத்தில்நின்றுமொழிபக்கடவன் இந்தப்பிரகாரம் பிதாவானவன் புத்திரர்களையும் குருவானவன் சிஷ்யர்களையும்ராஜாவானவன் பிரஜைகளையும்கோபத்தை விட்டவனாயும் என்னுடைய லோகத்தை இச்சியாதவனாயும்தன்னுடைய அனுக்கிரகத்தையேயிச்சித்தவனாயு மிருந்துகொண்டு சிட்சிக்கத் தக்கவன் தத்துவத்தையறியாதவர்களாயும் பூர்வகாலத்திலே மூடர்களாயுமிருக்கிற அவர்களைத் திரும்பவுங் கர்மங்களிலே பிரவர்த்தியாமலிருக்கக்கடவன். மூடமான இந்தஜென்மமானது அல்பசுகநிமித்தியத்திலே ஒருவருக்கொருவருண்டாகிற வயிரத்தையும் அனந்தமான துக்கத்தையும், அறிகிறதில்லை அக்கியானத்துக்குள்ளே மூழ்கியிராநின்றும்,புத்தியில்லாமலுமிருக்கிற அறிந்தசெனத்தை மிகவும்அறிந்தவனாயும், கியானவானாயும், தயாளுவாயுமிருக்கிறஎவன்தான் வழியில்லாதவழியிலே போகாநின்றகுருடனைப்பார்த்துத் திரும்பவும் அந்தத் தப்புவழியிலே கொண்டுபோய்விடுகிறவன்போல் கர்மமார்க்கங்களிலே பிரவர்த்திப்பன் சமுசாரத்திலேவிழுந்து தபித்துக்கொண்டிருக்கிற புருஷனைப் பக்திமார்க்கத்தையுபதேசித்து எவன்விடுவிக்கவில்லையோ அவன் குருவுமன்று.

வாருங்கள்புத்திரர்களே, இந்தச்சரீரமானது என்னுடையஇச்சையினால் அடையப்பட்டதென்று அறியத்தக்கது நான் பிராகிருத மனுஷியனும் கர்மமூலமான தேகத்தையுடையவனுமல்ல, என்னுடைய இருதயமோவென்றால் சுத்தமான சத்துவகுணப்பிரதானமென்றறியத்தக்கது, அதினாலே என்னை ரிஷபனென்று சிரேஷ்டனாய் பெரியோர்கள் சொல்லுகிறார்கள். ஆகையினாலே சத்துவப் பிரதானமான என்னுடைய இருதயத்திலே பிறந்தவர்களான நீங்கள் சமஸ்தமானபேரும்மகாபூச்சியனாயும் ராஜாவாயுமிருக்கிற இந்தப்பரத னைமிசாரணியத்தைவிட்டு அனுவர்த்தியுங்கள். அதுவேஎனக்குச்செய்யப்பட்ட சிசுருஷை அதுவே பிரஜாபாலனஞ்சேதனாசேதனமான பிராணிகளுக்குள்ளே லதைகள்,உத்தமம் அதிலும் சர்ப்பங்கள் உத்தமம், அதிலும் அறிவுடைய ஜெந்துக்கள்உத்தமம், அதிலும் மனுஷியாள் உத்தமம், அதிலும் பூதப்பிரேத பசாசங்கள் உத்தமம், அதிலும் கெந்தருவாள்உத்தமாள், அதிலும் சித்தாள்- கின்னராள் உத்தமாள், அதிலும்அசுராள்உத்தமாள், அவர்களிலும தேவர்கள் உத்தமர்கள், அவர்களிலும் இந்திரன் உத்தமன், அவனிலும்பிரம்மபுத்திரர்களானதட்சன்முதலானபேர் உத்தமர்கள் அவர்களிலும் சிவன்-உத்தமன், அவனிலும்-பிரம்மா-உத்தமன், அந்தப்பிரம்மாவானவன் என்னையே சரணமாகஅடைந்தவன், நானோவென்றால் பிராமணர்களையே தெய்வமாகவுடையவன்,பிராமணனுக்குச் சமமாக வேறொரு பிராணியை ஒப்பாகச் சொல்லமாட்டேன் ஆகையினாலே எந்தப் பிராமணர்களிடத்திலே பரமபாவமான சத்துவகுணம்-சமதமம்- சத்தியம்-அனுக்கிரகம்-தபசு - க்ஷமை-அனுபவமென்னப்பட்ட இந்தக் குணங்களும் நித்தியமாயிருக்கிறதுகளோ அப்படிப்பட்டபிராமணர்களுக்குச்சமானமானவர்களொருவருமில்லை யாதொருபிராமணனுக்குப் பிரகிருதியைக்காட்டிலும் வேறாயும் சுவர்க்கமோட்சங்களுக்கு ஈஸ்வரனாயும் அனந்தனாயுமிருக்கிற யென்னைக்காட்டிலும் பிரார்த்திக்கத்தக்கின வஸ்து வேறொன்றுமில்லையோ என்னிடத்திலே பக்தியையுடையவர்களாயிருக்கிற அந்தப் பிராமணனுக்கு க்ஷத்திரியாளாலே ஆகவேண்டியதென்ன, வாருங்கள்பிள்ளைகளேமச்சரமுதலான பேய் குணங்களில்லாத திருஷ்டிகளை யுடைவர்களான உங்களாலே சராசரங்களான சமஸ்த பூதங்களும் என்னுடையசரீரமாக அடிக்கடி பாவிக்கத் தக்கதுகள் அதுவேஎனக்கு நித்தியமான ஆராதனம் மனது-வாக்கு-திருஷ்டி மற்றுமுண்டானவிந்திரியங்கள் இதுகளுடைய வியாபாரத்துக்கு என்னுடையஆராதனமே பிரத்தியட்சமானபலம் யாதொரு என்னுடையஆராதனத்தையன்றி மகாமோகமான சம்சார பயத்தில்நின்றும் புருஷன்தன்னைவிடுவித்துக்கொள்ளச் சமர்த்தனாகமாட்டான்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

இந்தப்பிரகாரம் சுவயமாகவே தெரிந்தவர்களாயிருந்தாலும் பிள்ளைகள்லோகசிட்சார்த்தமாகச்சிட்சித்து மகானுபாவனும் பரமசுகிர்தாய் ரிஷபனென்று பெயரையுடையவரானபகவான் பொறுமையே சீலமாகவுடையவர்களாயும் நிவர்த்திநிஷ்டர்களாகியுமிருக்கிற மகாமுனிகளுடைய பக்தி-கியானம்-வைராக்கியம்இதுகளுடையசுரூபமான பரமஅங்கிசதர்மத்தைச் சிட்சித்தவராய்த் தம்முடையபிள்ளைகளுக்குள்ளே சிரேஷ்டனாயும் பரமபாகவதனாயும் பாகவதாளையே கதியாகவுடையவனாயுமிருக்கிற பரதனைப் பூபரிபாலனத்தின்பொருட்டு பட்டாபிஷேகம்பண்ணி தாம்கிரகத்தைவிட்டுச்சரீரத்துடனே வெளிப்பட்டுப் பித்தனைப்போலே திகம்பரனாய் அவிழ்ந்திருக்கிற தலைமயிரை யுடையவராய் தம்மிடத்திலே ஆவகனியமென்கிற வைதிகாக்கினியை ஆரோகம்பண்

ணிக்கொண்டு பிரம்மாவர்த்தமென்கிற தம்முடையதேசத்தைவிட்டுவெளிப்பட்டார். மூடன்-அந்தகன்-ஊமைசெவிடன்-பிசாசம்-பித்தன்-குழந்தை- இவர்களைப்போல்அவதூதவேஷத்தையுடையவராய் ஜெனங்களினாலே அழைக்கப்பட்டாலும் மவுனவிரதத்தை யுடையவராய் வார்த்தைசொல்லாமலேயிருந்தார். அங்கங்கே வழிகள் தோறும் பட்டணங்கள் நிதிப் பிரதேசங்கள் பயிரிடுங் குடிகளுடைய ஸ்தானங்கள்-புஷ்ப வாடிகைகள்- சேனை நிவேசஸ்தானங்கள்-இடைச்சேரிகள்-செனசமோகங்கள் பர்வதங்கள்-வனங்கள்-ஆசிரமங்கள் முதலான நூகளிலே துர்ச்சனாலே அடிக்கிறது-மூத்திரத்தை விடுகிறது காறியுமிழ்கிறது-கல்லுவிட்டெறிகிறது- தூளி இறைக்கிறது-துர்ப்பாஷைகளைச் சொல்லுகிறது இதுமுதலான வியாபாரங்களினாலே அவமானம் பண்ணப்பட்டிருந்தாலும் அதை யெண்ணாதவராய்த் தானே அனித்திய தேகத்தோடே சம்மதித்துச் சம்மதியாமலுமிருக்கிற தம்முடைய மகிமையினாலே அகங்காரமமகாரங்களைவிட்டதினாலே பரிபூரணமான மனதையுடையவராய்ப் பூமியெல்லாம் ஒருவராகவே சஞ்சரித்து அமேத்தியத்திலேபுரண்டுகொண்டு அதினாலே பூசப்பட்ட அவயவங்களையுடையவராயிருந்தார். அந்தப் பகவானது மலத்தினுடைய சுகந்தத்துடனேகூடினவாயுவான தசுற்றிலும் பத்துயோசனைதூரமட்டுக்கும் பரிமளிக்கச்செய்தது இந்தப்பிரகாரம் லோகசிட்சார்த்தமாக நானாவிதங்களான யோககதிகளைப்பண்ணுகின்றுகொண்டு மோட்சப்பிரதராயும் பகவானுயு மிருக்கிற ரிஷபதேவர் ஒழிவில்லாத பரமானந்தானுபவத்தையுடையவராய் சர்வபூதங்களுக்கும் அந்தராத்துமாவாயும் ஸ்ரீபகவானுயுமிருக்கிறவாசுதேவனிடத்திலே தமக்கு அபேதமானபடியினாலேதனக்குத்தானே சித்தித்திருக்கிற சமஸ்த புருஷார்த்தங்களிலே பரிபூர்ணராய் அந்த யோகப் பிரபாவத்தினாலே தனக்குத்தானே பிராப்தங்களான ஆகாசகெமனம்மனோவேகம் அந்தர்த்தானம் பரகாயப்பிரவேசம் தூரத்திலிருக்கிற பதார்த்தத்தைப்பார்க்குதல் கேட்குதல்இதுகள் முதலான யோகஐஸ்வரியங்களைக்குறித்துமனதிலேசந்தோஷித்தவரல்ல.

## ௬-வது-அத்தியாயம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

ஆரதகாட்டுக்கீயினைகளைப்பார்த்திருந்தாலுந்தான்
பாராதவரைப்போல்நிற்கும் பசிவாகதேகாபிமான
ஏரிலாச்சூன்யரான யிருஷபதேவரின்றன்றேகத்
தாரிலாத்தியாகப்பிரகாரம் சாற்றுதுமித்னிற்கேண்மோ
தகியாநின்ற காட்டுத்தீயைப்பார்த்துக்கொண்டிருந்தாலும் பாராதவரைபபோலிருந்த அப்படிப்பட்டதேகாபிமானசூன்யரான ரிஷபதேவருடைய தேகத்தியாகப்பிரகாரம் சொல்லப்படுகின்றது.

பரிட்சித்துவினுடைய வாக்கியம்.

வாரீர்பகவானே யோகத்தினாலேபிரகாசிக்கப்பட்டஞானத்தினால் கர்மவாசனையைத்தகித்தவர்களாயபரமாத்துமானுபவ நிஷ்டாளாயிருக்கிறயோகிகளுக்குதனக்குத்தானே பிராப்தமான ஐஸ்வரியங்கள் கிலேசத்தைக்கொடுக்கிறதுகளாகமாட்டாதுகள் இதுநிச்சயமன்றோ ஆகையினாலே அப்படிப்பட்ட யோக ஐஸ்வரியங்களை ரிஷபதேவன் எதற்காகச் சந்தோஷிக்கவில்லையென்று பிரசினம்பண்ணுகின்ற ராஜாவைப் பார்த்து சுகர் சொல்லுகிறார்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராஜாவே, உன்னாலே எதார்த்தமேசொல்லப்பட்டது ஆனாலும் இந்தவுலகத்திலேசிலபுத்திமான்கள் சஞ்சலமானதை கபடபுத்தியான கிராதன மிருகத்தைப்போல நம்பார்கள் ஆனபடியினால்பெரியோர்களாலே மனதை நம்பப்போகாதென்று சொல்லப்பட்டிருக்கிறது அது எப்படியென்றால் எந்த மனோவிசுவாசத்தினாலே வெகு காலமாய் சம்பாதிக்கப்பட்ட சிவனுடைய தபசானது விஷ்ணுவினுடைய மோகினிரூபதெரிசனத்தினாலே நழுவிவிட்டதோ ஒருவிஷயத்திலேயும் நிலையில்லாத அப்படிப்பட்ட மனதில் ஒருக்காலும் சுவாசத்தைப் புத்திமான் நினையாமலிருக்கக்கடவன் மனதிலே நம்பிக்கை யுடையவனான யோகியினுடைய மன்காலனதுகாமத்துக்கும் அதின்பின்னேயுண்டாகநின்ற குரோதமோகாதிகளுக்கும் விசுவாசத்தையுடையவனான புருஷனுடையஸ்திரீயானவள் சோரபுருஷனுக்கிடங்கொடுக்கிறாற்போல் இடங்கொடாநிற்கிறது காமம் குரோதம் மதம்-லோபம்-சோகம்-மோகம்-பயம்-இதுகள் முதலான ஏயகுணங்களும் கர்மபந்தமும்யாதொருமனதைமூலமாகவுடையதுகளோ அப்படிப்பட்ட மனதைஞானியானவன் எவன்தான் சுவாதீனமெனறெண்ணிக்கொள்ளுவான் அதின்பிறகு இந்தப்பிரகாரமசமஸ்தலோகபாலர்களுக்கும் சிரோன்மணியான ரிஷபதேவன்சடன்போல் லோகவிலட்சணங்களாயும் நானாப்பிரகாரங்களாகியுமிருக்கிற அவதூதவேஷபாஷா சரித்திரங்களிலறியப்படாத பகவ தங்கிசமான பிரபாவத்தை யுடையவராய் யோகிகளுக்கு தேகத்தைவிடுகிற பிரகாரத்தை சிட்சிப்பித்துக்கொண்டு தம்முடைய சரீரத்தைவிடவேணுமென்றுஇச்சித்தவராய் தம்மைப் பரமாத்துமாவினிடத்தில்அஞ்ஞானத்தினாலே மறைக்கப்படாத சிவாத்துமசுவரூபத்தை பரமாத்துமாவுக்குச் சரீரமாகையினாலே பரமாத்துமாவினுடனே அபேதமாகப் பார்த்துக்கொண்டு தேகார்த்தமான வியாபாரத்தில்நின்றும்ஒழிந்தவரானார்

இந்தப்பிரகாரம் ஸ்தூலதேகலிங்கதேக அபிமானத்தை விட்டவராயும் பகவானாயு மிருக்கிற அந்த ரிஷபயோகியினுடையசரீரமானது யோகமாயாவாசனையினாலேகுயவனுடையசக்கரம்போல பூமியிலேசஞ்சரித்துக்கொண்டிருக்கிறது ஒருங்கால்-கொங்கதேசம்-வங்கதேசம்-குடகுதேசம்-தெட்சணகர்நாடகதேசங்களைச் சுயவிச்சையாக வடைந்தால் குடகாசலமென்கிறபர்வத சமீபத்திலே ஒருகர்மவாசனையினாலே வாயிலேகல்லைவைத்துக்கொண்டதாகப் பயித்தியம் பிடித்தவனைப்போல் தலைமயிரையும்விரித்துக்கொண்டு நக்கினமாகத் தானே சஞ்சரித்துக்கொண்டிருந்தது பிற்பாடுவாயுவேகத்தினாலே ஒன்றோடொன்று இழையாநின்ற மூங்கில்களில்உண்டான பெருங்காட்டுத்தீயானது அவ்வனத்தைவெல்லாம் கபளீகரித்துக்கொண்டு அந்த ரிஷபதேவருடைய தேகத்தோடேகூடத் தகித்தது அந்த ரிஷபதேவருடைய சரித்திரத்தைக்கேட்டு அவ்வாசாரத்துக்கு விரோதமாகக் கொங்கணதேசம்-வங்கதேசம்-லிங்கதேசம்-யெவனதேசம்-சகதேசம் இதுகளுக்கெல்லாம் ராசாவாய் அருகனென்று பேரையுடையவனான இராசாவானவன்கலியுகத்திலே அதர்மமிஞ்சியிருக்கையால் பிராணிகளுடையபாவானுகுணமாகநடக்கப்போகிறபடியினாலே புத்திமோகத்தை அடைந்தவனாய் ஓரிடத்திலேயும் பயமில்லாதசுதர்மமார்க்கத்தைவிட்டு தூஷிதமான பாஷண்டமார்க்கத்தை தன்னுடையபுத்தியினாலே மூடனாய் பிரவர்த்திக்கப்போகிறான் இப்படி பாஷாண்டமார்க்கத்தை யுண்டுபண்ணுகின்ற அந்த அருகனென்கிற இராஜாவினாலே கலியுகத்தில் மனுஷியப்பதருகள் விஷ்ணு மாயையினாலே மோகிக்கப்பட்டவராய் தங்களுக்கு அடுத்த சாஸ்திரங்களினாலேசொல்லப்பட்ட சவுசம்-ஆசாரம்-இதுகளை விட்டவராய் தேவதைகளுடைய அவமானரூபமாயிருக்கிற ஆசாரங்களைச் சுயவிச்சையினாலே கிரகித்தவர்களாய்ஸ்தானஆசமனசவுச்சங்களை விட்டவராய், தலைமயிர்கள் முகத்துமயிர்கள் இவைகளைப் பிடுங்கிப் போடுகிறவர்களாய் அகர்மவிருத்தியையுடையதான கலியினாலே தூஷிக்கப்பட்ட புத்தியை யுடையவர்களாய், வேதப் பிராமணாள் எக்கியபுருஷரானபகவான் பாகவதாள் இவர்களைத்தூஷிக்கிறவர்களாக மிகவும்உண்டாகப்போகிறார்கள் வேதத்திலே சொல்லப்படாததாயும் சுயஇச்சையினாலேஉண்டாக்கப்பட்டதாயுமிருக்கிற அந்தப் பரம்பரையான அந்தமார்க்கத்திலே விசுவாசத்தையுடையவர்களாய் நரகத்திலே தாங்களேவிழப்போகிறார்கள் இந்த ரிஷபதேவர் அவதாரம் ரசோகுணத்தையுடையவர்க்குமோட்சமார்க்கத்தைக் காண்பிக்கிறநிமித்தியமாகவுண்டானது அந்தரிஷபர் அவதாரத்துக்கு ஆறுகுணங்களானசுலோகங்களை இந்தப்பிரகாரம்சொல்லுகிறார்கள்.

என்னவென்றால் சத்தசமுத்திரங்களுடனே கூடின இந்தப்பூமியிலேஇராநின்ற தீவுகளுக்குள்ளே வருஷங்களுக்குள் இந்தப்பாரதவருஷம் அதிகமான புண்ணியத்தையுடையது யாதொரு பாரத வருஷத்திலே யிராநின்றசெனங்கள் சுவாமியினுடைய க்ஷேமகர்மங்களான ரிஷபர் அவதாரத்தைக் கானம்பண்ணிக்கொண் டிருக்கிறார்களோ பிரியவிரதனுடைய சம்பந்தமான இந்தவங்கிஷமானது கீர்த்தியிலே மகாபரிசுத்தமாய்விளங்குகிறது யாதொருபிரியவிரதனுடையவங்கிஷத்திலே புராணபுருஷனையும் ஆதிபுருஷனையுமிருக்கிற சுவாமி அவதரித்து மோட்சஹேதுவானதர்மத்தைப்பண்ணாநின்றோ எந்தயோகிதான் அந்தரிஷபயோகியினுடைய மார்க்கத்தை மனோரதமாத்திரத்தினாலேயாகிலும் அடையமாட்டுவன் எந்தயோகியானவன் அந்த ரிஷபயோகியினாலே வஸ்துஅல்லவென்று தள்ளப்பட்டுப்போனயோகசித்திகளை மகாபிரயத்தனத்தை யுடையவனாயிச்சிக்கிறானோ அந்தப்பிரகாரம் சகலமானலோகங்கள் வேதங்கள் தேவர்கள்-பிராமணாள்-பசுக்கள்-இதுகளுக்கெல்லாம் பரமகுருவான பகவானான ரிஷபதேவருடையபரிசுத்தமான சரித்திரமானது புருஷாளுடைய சமஸ்தமான பாபங்களையும் போக்கடிக்கிறது பரமமான மங்களங்களுக்கு இருப்பிடமா யிருக்கிறது.

வாராய்ராசாவே, ஸ்ரீகிருஷ்ணபகவான்பாண்டவர்களான உங்களுக்கும்,யாதவர்களுக்கும்,ரட்சகராயும் இருந்ததை யுபதேசிக்கிறவராயும், உபாசிக்கத்தக்கதெய்வமாயும், சிநேகிதராயும்,நியந்தாவாயும் இப்படியெல்லாமிருந்தார் இப்படியிருந்தாலும் மற்றப் பிராணிகளுக்கும் தம்முடையபக்தாளுக்கும் மோட்சத்தைக் கொடுக்கிறார் ஒருக்காலும்பக்தி யோகத்தைக் கொடுக்கிறதில்லை ஆகையால் அப்படிப்பட்டபக்தியைத்தானே பெரியோர்கள் இச்சிப்பார்கள் நித்தியமாய் அனுபவிக்கப்பட்ட பரமாத்தும சாட்சாத் காரத்தினால் விஷயாபிலாஷையைவிட்டவரான யாதொரு ரிஷபதேவ பகவானுடைய மாயையினால் புருஷார்த்தமான மோட்சத்திலேமூடமாகிய புத்தியையுடையதானலோகத்துக்குப் பரமகிருபையினாலே ஒருக்காலும்பயமில்லாத பரமபுருஷார்த்தமான ஆத்துமஸ்வரூபத்தை உபதேசித்தாரோ அப்படிப்பட்ட ரிஷபதேவருக்குப் பிரணமம்.

## எ-வது-அத்தியாயம்

கலிவிருத்தம்.

பரதன்ராச்சிய பரிபாலனஞ்செய்து
பரவுமெய்யங்க ளாற்பலகாலமும்
ஹரியையாராதித்துக்கொண்டதின்பின்னர்
சரியையோக சந்யாசமடைந்தனர்.

பரதன் ராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டு வெகுகாலம் எக்கியங்களினலே ஹரியையாராதித்துக்கொண்டுபிற்பாடு புலகருடைய ஆசிர்மத்திலே சந்நியாசத்தை அடைந்து ஹரியைப் பஜனைபண்ணினனென்று சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய் ராஜனே, மகாபாகவதனன பரதனேவென்றால் பகவானன ரிஷபராலே பூபரிபாலனத்தின்பொருட்டெப்போ அபிஷேகஞ்செய்யப்பட்டானே அப்போ அந்த ராச்சியாதிகாரத்திலே சாக்கிரதையுடையவனயிருந்து விசுவரூபருடைய பெண்ணன பஞ்சசேனியென்கிறஸ்திரீயை விவாகம் பண்ணினன். அந்தப் பஞ்சசேனியிடத்திலே தனக்குச் சர்வப்பிரகாரத்தினலேயும் சமானமானவர்களாய் சுமதியென்றும், ராட்சடப்பிரத்துயென்றும், சுதரிசன னென்றும், ஆவரண னென்றும், தூம்பரகேதுவென்றும் ஐந்து பிள்ளைகளைத் தாமசஅகங்காரமானது பூரசூட்சங்களென்னப்பட்ட பஞ்சதன்மாத்திரைகளைப்போலப் பெற்ருன். அசனபமென்று பிரசித்தமான இந்தவருஷத்தை யாதொருபரதன்முதற்கொண்டு பாரதவருஷமென்று சொல்லுகிருர்கள்.

அந்த சர்வக்கியனன பரதமகாராசன் பிதுர் பிதாமகாளான ரிஷபதேவன் ஆக்கினியித்திரன்முதலானவர்களைப்போல மிகவும்வாச்சல்யத்தினலே சுதர்மத்தைச்செய்துகொண்டிருக்கிற பிரஜைகளைச் சுதர்மமான ராஜதர்மத்தை அனுசரித்தவனய் ரட்சித்தான் தன்னுடைய அதிகாரானுகுணமாகச் செய்யப்பட்ட அக்கினிகோத்திரம்-தரிசம் - பூர்ணமாசம், சாதுர்மாசிய பசுசோமம் இதுகளுக்குப் பிரகிருதிகளாயும் விகுர்திகளாயுமிருக்கிற மகத்துக்களான எக்கியக் கிருதுக்களாலே எதாசாஸ்திரமாக எக்கிய புருஷனன பகவானைச் சிரத்தையுடன் ஆராதித்தான். இந்தப்பிரகாரம் செய்யப்பட்டும் பரிபூரணமான அங்கங்களையுடையதாயுமிருக்கிற இந்தஎக்கியங்களில் அபூர்னமென்னப்பட்ட ஒருபுண்ணிய முண்டாச்சுதோ அந்தப்புண்ணியத்தைப் பரப்பிரம்மமாயும் எக்கியபுருஷராயும், சகலதேவதா சபதங்களுக்கும், மந்திரங்களுக்கும் அர்த்தசுரூபரானபடியினலே சாட்சாத் கர்த்தாவாயும், பரதேவதையாயும்,பகவானுயுமிருக்கிற வாசுதேவரிடத்தில் சமர்ப்பித்தவனய் ஆத்துமநிஷ்டையினல் சகல மனேமலங்களையும் போக்கடித்தவனயுமிருக்கிற அந்தப் பரதமகாராசாவானவன் அத்துவரியுக்களினலே ஓமம் பண்ணப்பட்ட அவிசுக்களையும் அந்த அவிசுக்களைப் புசியாநின்ற தேவதைகளையும், பரமாத்துமாவினுடைய அவயவமாகப் பாவனைபண்ணினன். இ இந்தப்பிரகாரம் கர்மசுத்தியினலே பரிசுத்தமானசத்துவகுணத்தையுடைய அந்தப் பரதனது இருதயப்பிரதேசத்திலேஆகாசஅசரீரியாய்ப் பரப்பிரம்மமாய்ப் பகவானுயிருக்கிறவராய் ஸ்ரீவச்ச, கவுஸ்துவம், வனமாலை- சங்கம்-சக்கிரம்-கெதை இதுகளுடனே கூடினதாயும் தம்முடைய பக்தாளான நாரதர் முதலான பேர்களுடைய இருதயத்தில் பிரகாசியாநின்ற புருஷ ரூபத்தினலே தன் இருதயத்தில்விளங்கியிருக்கின்ற வாசுதேவனிடத்திலே அதிசயமாக நாள்தோறும் விருத்தி யடையாநின்ற பக்தியானது உண்டாச்சுது இந்தப்பிரகாரம்கோடிவருஷத்துக்குமேல் இராச்சியபோகத்துக்கு ஏற்பட்ட அதிஷ்டத்தினுடைய முடிவு காலத்தை நிச்சயித்தவனய் அனுபவிக்கப்பட்டு பிதுர் பிதாமகக்கிரமமாய் வந்து இருக்கிறதனத்தைத் தன் பிள்ளைகளுக்குச் சரிசமமாய்ப் பிரித்துக்கொடுத்து அந்தப் பரதனனவன் சர்வ சம்பத்துகளுடனேகூடின தன்னுடையகிரகத்தில்நின்றும் புறப்பட்டுப் புலகருடையஆசிர்மமான ஹரிக்ஷேத்திரத்தையடைந்தான்.

வாராய்குழந்தாய், யாதொருபுலகாசிர்மத்திலே பகவானன அரியானவர் இப்போதும்அங்கேவாசம்பண்ணநின்ற செனங்களுக்கு வாச்சல்யத்தினலே தம்முடையபக்தாளுக்கு அபேட்சிதமான ரூபத்தினல் ஆவிற்பவித்திருக்கிருரோ யாதொரு புலகாசிர்மத்தி லிராநின்ற ரிஷிகளுடைய ஆசிரமஸ்தானங்களை இருபுறமும்சக்கரத்தையுடையதுகளான சாளக்கிராம சிலைகளினலே சாக்கிரத்தி யென்று பிரசித்தமாயும் நதிகளுக்கெல்லாம் சிரேஷ்டமான கெண்டகீ நதியானது நாலண்டையிலும் பரிசுத்தமாகப் பண்ணுகிற அப்படிப்பட்ட புலகாசிரமவனத்திலே பரதன் ஒருவனய் நானவித புஷ்பங்கள்-துளிர்கள்-துளசி-சுத்தோதகம்-கந்தமூலபலங்கள் இதுகளினல் ஸ்ரீபகவதாராதனம் பண்ணவேணு மென்று இச்சித்தவனய், பரிசுத்தனயும், விஷயஅபிலாஷத்தையொழிந்தவனய், சாந்தியையடைந்தவனய்,பரமானசுகத்தை அடைந்தான், இந்தப்பிரகாரஞ் சருவகாலமும் அந்தப் பகவதாராதனத்தினல் பகவானிடத்தில் பிரதிதிஅதிசயத்தினல் உருகாநின்றமனதையுடையவனய்ச்சந்தோஷாதிசயத்தினல் சரீரமானது புளகாங்கிதமாயிருக்கையில் பக்தியினல் பெருகாநின்ற ஆனந்தபாஷ்பங்களினலே தகையப்பட்ட பார்வையுடையநேத்திரங்களுடனே கூடினவனய் தனக்குஆனந்தத்தைக்கொடாநின்ற சுவாமியினுடைய செந்தாமரைப்புஷ்பம்போல் சரணரவிந்தங்களுடைய தியானத்தினலே விருத்தியடையப்பட்ட பக்தி பிரவாகத்தினல் நாலண்டையிலும் பெருகாநின்ற பரமானந்தமாகிற கெம்பீரமான மடுவிலேமுழுகியிருக்கிற புத்தியை யுடையவனய் அந்தப் பகவதாராதனைகயின்கரியத்தையு மறந்தான். இந்தப் பிரகாரம் பகவதாராதனத்தையுடையவனய் கிருஷ்ணசன ரூபமான வஸ்

திரத்தினாலேயும், திரிசந்திய காலங்களிலும், ஸ்நானத்தினால் ஈரங்களாயும், பொறுக்கின்ற வர்ணங்களாயும், வக்கிரங்களாயுமிருக்கிற சடைகளினாலும், பிரகாசியாநின்றுகொண்டு பகவானையுதியாநின்ற சூரியமண்டலத்தில் தியானம் பண்ணிக்கொண்டு ஒருமந்திரத்தைச் சொன்னான் பிரகிருதியைக்காட்டிலும்பரனாய் ஆசிரதாளுக்குக் கர்மபலத்தைக்கொடுக்கிறதாய் சூரியாந்திரியாமியாயுமிருக்கிற யாதொருபகவானுடைய தேசசுவானதுசங்கல்பமாத்திரத்தினாலே பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கதோ சிருஷ்டிக்கப்பட்ட இந்தப்பிரபஞ்சத்தைச் சுசரீரகமான சீவனாலே அந்தரியாமியாக அனுப்பிரவேசித்து ரட்சியாநிற்கிறது இப்படிப்பட்டசீவாளுக்குப் புத்திபிரதனையும் கர்ம பரவசாளான ஜீவாளுக்குள்ளே அனுப் பிரவேசித்திருக்கும்போதும் பரிசுத்தனாயிருக்கிற பரமாத்துமாவைச் சரணமாகஅடைகிறோமென்று பரதனால் உச்சரிக்கப்பட்ட காயத்திரிமந்திரத்தினுடையஅர்த்தம்.

## ௮வது - அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பகவானையாராதிக்கும் பரதனாராதனைக்குக்
கிகலுறுமென்றும்மானை யிரட்சிப்பதாலும்வெந்த
பகைமிருகத்தின்சென்மம் பண்ணிடுஞ்சகவாசத்தின்
நகைசெறிமிருகரக்ஷணம்காட்டமாய்ச்சொல்லுகின்றார்

பகவானை ஆராதித்துக்கொண்டிருந்த பரதனுடைய ஆராதனத்துக்கு விக்கினத்தாலும்மானைரட்சிக்கிறத்தினாலும் வந்தமிருகசென்மமும் யோகியானவனுக்குப் பிராணிகளிடத்தில் த்யையினாலேபண்ணப்பட்டசகவாசமும் பரலோகத்துக்கு விகாதமாகஆகிவிடுமென்றுஇந்த அர்த்தத்தைக் காண்பிக்கிறதற்காகப் பரதனுடைய மிருகரட்சணம் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

பரதமகாராஜன் மிருகஜெனனமெடுத்தது.

வாராய்ராஜாவே, ஒருக்கால் அந்த பரதனானவன் மகாநதியிலே அவசியமாகச் செய்யத்தக்கதான நித்திய நைமித்திக கர்மமாநுஷ்டானங்களைச் செய்தவனாய் பிரணவத்தை உச்சரித்துக்கொண்டு ஒருசாமமாத்திரம்நதிதீரத்திலேயிருந்தான். அப்போது அங்கேஒருமான்பேடானது தாகத்தினாலே ஜலபானம்பண்ணவேணுமென்றிச்சையினால் நதியினுடைய சமீபத்திலேவந்து அந்நதியிலே சலத்தைப் பானம்பண்ணிக் கொண் டிருக்கையில் சமீபத்திலே சப்தியாநின்ற சிங்கத்தினுடைய லோகபயங்கரமான ஒருநாதமுண்டாச்சுது அந்தநாதத்தைக்கேட்டு சுவபாவமாய் அதைரியத்தை யுடையதாயும், சஞ்சலமான பார்வையையுடையதாயும், மிகவும்சிங்கர்ச்சனையினாலே யுண்டான பயத்தினால் அலைந்துகொண்டிருக்கிற இருதயத்தையுடையதாயும் சஞ்சலதிருஷ்டியாயுமிருக்கிற அந்த மான்பேடானது தாகமடங்காதிருக்கையிலே மிகவும்பயத்தினாலே சீக்கிரமாகஎழும்பின அந்தப்பிரகாரம் எழுந்துநின்றும்கெர்ப்பிணியாயுமிருக்கிற அந்தமான்பேடினுடைய பயத்தினால்கெர்ப்பமானதுமிகவும்நழுவி பிரவாகத்திலேவிழுந்தது அந்த கெர்ப்பம் நழுவினதினாலேயும் சலத்திலேயிருந்து உயர்ந்த கரையிலேயெழும்பி விழுந்ததினாலேயும் சிங்ககெர்ச்சனையினாலேயுண்டான பயத்தினாலேயும் மகாதுக்கத்தையுடையதான அந்தமான்பேடானது தன்னுடைய கூட்டங்களையெல்லாம் விட்டு ஒருபருவதகுகையில்விழுந்து மரித்தது அப்போ தீனமாயும் பிரவாகத்தினாலே கொண்டுபோகப்பட்டதாயும், தாயார்முதலான கூட்டத்தினாலே விடப்பட்டதாயுமிருக்கிற அந்த மான்குட்டியை இராஜரிஷியான பரதன் தயவினாலே பந்துவானவன்போலப்பார்த்து தாயாரில்லாத அந்தமான்குட்டியையெடுத்துக்கொண்டு ஆசிரமபதத்தைஅடைந்தான். அந்தமான் குட்டியினிடத்திலே மிகவும், அபிமானத்தையுடையவனான அந்தப்பரதனுக்கு மான்குட்டியைத்திரணாதிகளினாலேபோஷணமும்செந்நாய்கள்முதலானதுகளில்நின்றும்உபத்திரவம்வராமல் ரட்சிக்கிறதும்உடம்பைச்சொரிகிறதினாலே சந்தோஷம்பண்ணிவைக்கிறதும்முத்த மிட்டுக்கொண்டு லாலனை பண்ணுகிறதும் இதுகளினாலேயுண்டான ஆசக்தியினால் தன்னுடைய ஸ்நானநியமங்கள் பிராணாயாமங்கள் பகவதாராதனம் இதுமுதலான தபசுகள்நாள்தோறும் ஒவ்வொன்றாய்சிலநாளைக்குள்ளே எல்லாம்விடப்பட்டதாய் பிற்பாடு தீனமானஒருவசனத்தைச் சொன்னான். ஆச்சரியமன்றோ தீனமான இந்தமான்குட்டியானது காலசக்கிரத்தினுடையவேகத்தினாலே தன்னுடையகூட்டமான பந்துக்களினால்விடப்பட்டதாய் என்னைச் சரணமாக வடைந்து தாயென்றும், தகப்பனென்றும், பிராதாவென்றும், பந்துவென்றும், தன்னுடைய கூட்டமென்றும், எண்ணிக்கொண்டுமற்றொருவரையும் அறியாமல் என்னிடத்திலேயேமிகவும் விசுவாசத்தையுடையதாயிருக்கின்றது.

ஆனபடியினால் என்னையே கெதியாக அடைந்திருக்கிற இந்தமான்குட்டியினுடைய போஷணம் ரட்சணம் சந்தோஷிப்பிக்கிறதுமுதலான ஆதரவையில்லாதவனாயும்சரணாகதாளுடைய உபேட்சையிலேதோஷமுண்டென்றறிந்துமிருக்கிற என்னாலேசெய்யத்தக்கது சதாசாரநிஷ்டாளாயும் சாந்தியையுடையவர்களாயும் தீனவச்சலர்களாயுமிருக்கிற பெரியோர்கள்இப்படிப்பட்ட விஷயத்திலேமகத்தாயிருந்தாலும் நம்முடையபிரயோசனங்களைப்பாரார்களோ நிச்சயமல்லவாவென்று இந்தப்பிரகார

ம் அந்தமான்குட்டியினிடத்திலே ஆசக்தியையுடையவனாயிருக்கும்போதும், படுக்கும்போதும், சஞ்சரிக்கும்போதும், ஸ்நானஞ்செய்யும்போதும், போசனஞ்செய்யும்போதும், மான்குட்டியுடனேகூடவேயிருந்துகொண்டு அதனிடத்திலேமிகவும்சிநேகத்தையுடையதான இருதயத்தையுடையவனானான் தர்ப்பை-புஷ்பம்-சமித்து-பலாசம்சத்தன மூலபலங்கள் உதகம்இது முதலானதுகளைச் சம்பாதித்துக்கொண்டு வரும்போதும்-நாய்-நரிமுதலானதுகள் தன்னுடைய மான்குட்டியை உபத்திரவிக்கப்போகிறதுகளென்று பயத்தையெண்ணிக்கொண்டு மான்குட்டியுடனேகூடவேவனத்திலேபிரவேசிப்பான் மார்க்கங்கள் தோறும் குட்டியானபடியினாலே அங்கங்கேநிற்கின்ற அந்தமான்குட்டியை மிகவும்சிநேகித்துடனேகூடின இருதயத்தை யுடையவனாய் சாபல்லியத்தினாலே தோளில்வைத்துக்கொண்டுபோவான் வைதீககருமங்களைச்செய்யும்போதும் மத்தியிலே எழுந்திருந்துவந்து எப்போது இந்தமான் குட்டியைப் பார்க்கிறோனோ அப்போது வருஷபதியானபரதன் சொஸ்த சித்தனாயிருப்பான் அந்த மான்குட்டியைப்பார்த்து வாராய் குழந்தாய் உனக்கு நான்குதிக்கிலும் நன்மையுண்டாகக் கடவதென்று ஆசீர்வசனங்களைச்செய்வான் அந்தமான் குட்டியைப்பாராதபோது மிகவும்நொந்தமனதையுடையவனாய் உடைமையைப்பறிகொடுத்தவன்போலத் தீனனாய் தன்னுடன்கூடினபுத்தியையுடையவனாய் மான்குட்டியினுடைய பிரிவினால் அதைக்குறித்து துக்கித்துக்கொண்டு மகத்தானமோகத்தையடைந்தவனாய்ச் சொல்லுகிறான் அந்தமான்குட்டியானது கிராதன்போலநிர்த்தயனாயும் பாக்கியவீனனாயு மிருக்கிற என்னுடைய அனுதரவைப் பார்த்து வாராமல் போய்விட்டதோ அந்த மான்குட்டியை நான்மறுபடியும் பார்க்கப்போகிறேனா சகலசெகத்துக்கும் க்ஷேமத்தைப் பண்ணுகின்ற வுதையத்தையுடையவனாயும் வேத மூர்த்தியாயும் பகவானாயுமிருக்கிற சூரியன் அஸ்தங்கனானே இப்போதும் அந்தமான்குட்டியானது வந்து சேரவில்லையே அது வந்து சேர்ந்து பாக்கியசன்னனான என்னைச் சுகப்படுத்துமா அந்தமான்குட்டியினுடைய விளையாட்டினாலே என் துக்கத்தைப்போக்கடித்து என்னைச் சுகப்படுத்துமா இந்தப்பூமியானது சொர்க்கமோட்சங்களைக் கோருகின்ற பிராமணாளுக்கு எக்கியபூமிபாகவிருக்கிறது இந்தத்தீன வச்சலனையும், பகவானையும், நட்சத்திரங்களுக்குப் பதியாயுமிருக்கிற சந்திரன் ஆசிரமத்திலிருந்து வெளிப்பட்ட இந்தமான்குட்டியைத் தனயினாலே ரட்சிப்பனோசுயசென்மான மிருகத்தினுடையபிரிவினாலேயுண்டானசுரமாகிறகாட்டுத்தீயினுடைய சுவாலையைஅமிர்தமயங்களாகிறகிரணங்களினால் சுகப்படுத்துவானா இந்தப் பிரகாரம் சித்தியாத மனோரதத்தினாலேவியாகூலமான இருதயத்தையுடையவனான அந்தப்பரதனானவன் மான்குட்டிரூபமாயிருக்கிறதன்னுடைய பிராப்தகருமத்தினாலேயோகாப்பியாசத்தில் நின்றும்நழுவினவனாய் பகவதாராதனரூபமான தபசில்நின்றும் நழுவினான் பிராப்தகருமமாகாவிட்டால் வயிற்றிலேபிறந்த பிள்ளையும் விட்டுவிட்டிருக்கிற அந்தப்பரதனுக்கு மிருகசாதியான அந்த மான்குட்டியினிடத்திலே வாச்சல்லியமுண்டாகுமா இந்தப் பிரகாரம் விக்கினத்தினாலேயோகஅப்பியாசத்தை விட்டவனையும், அந்தமான்குட்டியை வளர்க்கிற இந்த வியாபாரத்தினாலே ஆத்மசிந்தையையும்விட்டவனாயிருக்கிற அந்தராஜரிஷியான பரதனுக்குத் தாண்டக் கூடாததாயும் மகாசுருக்கானவேகத்தை யுடையதாயுமிருக்கிற மரணகாலமானது அடைந்தது, அந்தச்சமயத்திலேயும் பக்கத்திலிராநின்ற அந்த மான்குட்டியினிடத்திலே வைக்கப்பட்டமனதையுடையவனாய் அந்தப்பரதனானவன் இந்தலோகத்தைவிட்டுப் பூர்வசென்மக்கியானத்தையுடையவனாய் அந்தயானியைப்போல வேறொருசென்மமாகிற மிருக சரீரத்தை யடைந்தான் அந்த மிருகசென்மத்திலேயும் பகவதாராதனத்தினாலேயுண்டாயிருந்த இச்சையினாலே மிகவும்பசியாதாபத்தையுடையவனாய் தனக்குத்தானே சொல்லிக்கொண்டான் என்கஷ்டதிசையை அடைந்தேன் நான்ஆத்மனிஷ்டாளுடைய மார்க்கத்தில் நின்றும் பிரஷ்டனாய்விட்டேன் சகலசங்கத்தையும்விட்டவனையும் நிர்ச்சனமாயும் மகாபுண்ணியமாயுமிருக்கிற ஆரண்ணியத்தை யடைந்தவனாயும் பரமாத்துமாவினிடத்திலே நிஷ்டையை யுடையவனாயுமிருக்கிற என்னுடையமனதானது சர்வப்பிராணிகளுக்கும் ஆத்துமாவாயும் பகவானாயுமிருக்கிற வாசுதேவனிடத்திலே ஆசக்தியையுடையவனாக என்னுடையமனதானது மான்குட்டியை அனுவர்த்திக்கிறதென்று இந்தப் பிரகாரம் மிகவும் வயிராக்கியத்தை யடைந்தவனாய் தன்னுடைய மாதாவான மிருகஸ்திரீயை விட்டுவிட்டு தன் செனமபூமியான காலஞ்சரமென்கிற தேசத்தை விட்டுத் திரும்பவும் ரிஷிகளுக்கு இஷ்டமாயும் பகவத் க்ஷேத்திரமாயுமிருக்கிற புலஸ்தியும் புலகாசிரமமான சாளக்கிராம க்ஷேத்திரத்தை அடைந்தான், அந்தச்சாளக்கிராமக்ஷேத்திரத்திலேயும் அந்தமிருகசென்மத்தினுடைய ஒழிவுகாலத்தைப்பார்த்துக்கொண்டு விஷயசங்கத்தில்நின்றும் மிகவும்நொந்தவனாய் ஒருவனாகவே சஞ்சரித்தும் சருகுலர்ந்த புல்லுகொடி முதலானதுகளைப் புசித்துக் கொண்டு அந்த மிருகசென்மத்துக்குக் காரணமான கருமத்தினுடைய ஒழிவையேசிந்தித்துக்கொண்டிருந்த அந்த மிருகரூபியாயிருக்கிற பரதனானவன் அந்த மிருக சரீரத்தை விட்டுவிட்டான்.

## கூவது-அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தன்னிடந்தையாலே தனியாத்மக்கியானியான
உன்னிடும்பரதன்பிராத் துவகருமத்தினாலே
துன்னிடுமிருகமாகித் துகளிலுன்மத்தனாகிப்
பன்னும்பத்திரகாளிக்குப் பலியானவாறுசொல்வாம்.

பிதாவினாலே ஆத்துமக்கியானியானபரதன் பிராரத்துவகருமசேஷத்தினாலே மிருகமாய்ப்பிறந்து திரும்பவும் கருமக்ஷயத்திலே உன்மத்தப்பிராமணனாய்ப்பிறந்து ராகத்துவேஷாதிக ளில்லாமையால் பத்திரகாளிக்குப்பலியாகும்போதும்நிருவிகாரனாயிருக்குகையானது சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரீர் பரிட்சித்தே, மிருகசெனனம் போனபிறகு அங்கிரசகோத்திரத்திலே பிறந்தவர்களுக்குள்ளேசிரேஷ்டனாயும், அதிதிபூசை-பொறுமை-கருமானுஷ்டானம்-ஆத்துமக்கியானம்-இதுகளுடனே கூடினவராயுமிருக்கிற ஒருபிராமணசிரேஷ்டனுக்கு தன்னுடனேசமானசாஸ்திரம்-சீலம்-சவுசம் ஆசாரம்-ரூபம்- அவதாரியம்-இதுமுதலான குணங்களையுடையவர்களாய் ஒன்பதுபிள்ளைகள் பிறந்தார்கள், அந்தப் பிராமண சிரேஷ்டனுக்கே வேறொரு கனிஷ்டபாரியினிடத்திலே ஒரு பெண்ணும்பிள்ளையும் இரட்டையாய்ப்பிறந்தது, அதிலேபுருஷப்பிரசையா லொன்றுண்டோ, அவனைப் பரமபாகவதனாயு மிருக சென்மத்தைவிட்டு கடைசிசென்மத்திலே பிராமணஜென்மத்தை யடைந்திருக்கிறராஜரிஷிசிரேஷ்டனான பரதனென்று சொல்லுவார்கள், அந்த விப்பிரசென்மத்திலேயும் சுவசெனபந்துக்களுடையசகவாசத்தில்நின்றும் மிகவும்பயந்தவனாய் பகவானுடையசரணாரவிந்த யுகளத்தை மனதிலே நினைத்துக்கொண்டு பகவதனுக்கிரகத்தினாலே பூர்வசென்மக் கியானங்களையுடையவனாய் அந்தச்சென்மத்தினுடைய ஒழிவையும் எண்ணினவனாய்த் தன்னை ஜனங்களுக்குப் பயித்தியக்காரன்போலே தோற்றுவித்துக்கொண் டிருந்தான். பிதாவான அந்தப்பிராமணன் அந்தப்பிள்ளைக்குப்புத்திரவாச்சல்லியத்தையுடையவனாய் அத்தியயனம் பண்ணி கடைசியில் பண்ணத்தக்கதான சமாவர்த்தன கருமபரியங்களான சமஸ்காரங்களை எதாசாஸ்திரமாக உபநயனம்பண்ணப்பட்ட அந்தப் பிள்ளைகளுக்குத் திரும்பவும் சவுசம் ஆசமனமுதலான கரும நியமங்களையும் புத்திரனுக்கு இஷ்டமில்லாமலிருந்தாலும் தகப்பனண்டையிலிருந்து சகல ஆசாரங்களையும் பிள்ளை சிட்சிக்கப்பட்டவனாகவேணுமென்கிற சாஸ்திரத்தையறிந்து சிட்சைபண்ணிவைத்தான். அந்தப்பிள்ளையும் பிதாவினுடையசன்னிதானத்திலேதானே தகப்பன் அலுத்து விட்டுவிடும்படிக்கு கருமங்களை ஒன்று சொல்ல ஒன்றைச்செய்துகொண்டு வித்தியாசம்பண்ணிக்கொண்டிருந்தான், திரும்பவும் வேதங்களைச் சொல்லிவைக்கவேணுமென்று தகப்பனானவன் வியாகிரதிபிரணவங்களுடனேகூடினதாயும் மூன்றுபாதங்களையுடையதாயு மிருக்கிற காயத்திரியை சயித்திராதிசிராவண மாசபரியந்தஞ் சொல்லிவைத்தாலும் அந்தப் பிள்ளையானவன் அவ்வளவு காலத்திலேயும் அந்தக்காயத்திரியைக்கிரகியாமற்போய்விட்டான், இந்தப்பிரகாரம் ஆத்மபூதனான தன்பிள்ளையினிடத்திலே பிரீதியினாலே வைக்கப்பட்ட சித்தத்தையுடையவனாய் அந்ததகப்பனானவன் சவுச்சம் அத்தியயனம் விரதநியமங்கள் குருசிசுருஷை அக்கினிசிசுருஷை இதுகள்முதலானபிரம்மச்சாரிக்கு செய்யத்தக்கதுகளானகருமங்களை புத்திரனுக்கு அசம்மதங்களாயிருந்தாலும் அந்தப்பிள்ளைக்கு நன்றாக சிட்சைசொல்லிவைத்தும் புத்திரனாலே மனோரதத்தையடையாதவனாய் ஆயுசுவரைக்கும் கிரகத்திலேயே யுழைத்தவனாய் மரித்தான், பிறகு அந்தப்பிராமணனுடைய கனிஷ்டபாரியும், தன்னுடையகெர்ப்பத்திலேபிறந்த அந்தப் பிள்ளையையும், பெண்ணையும் சக்களத்திகையிலே ஒப்புவித்து தான் அனுமரணத்தினாலே பதிசாலோக்கியத்தையடைந்தாள் தகப்பன்போய்விட்டபிறகு இந்தப் பரதனுடைய பிரபாவத்தை யறியாதவர்களாயும், வேதத்திலே கருமகாண்டத்திலேயே சிரமைப்பட்டவர்களாயும்பிரமவித்தையை அறியாதவர்களாயுமிருக்கிற அந்தப் பிராதாக்கள் இந்தப் பரதனைப் பயித்தியக்காரனென்று எண்ணினவர்களாய் அவனை சிட்சிக்காமல் விட்டுவிட்டார்கள்,

அந்தப்பரதனும் பிராகிருதாளான மனுஷிய பசுக்களினாலே எந்தெந்தவேளைகளிலே பயித்தியக்காரனென்றும்,மூடனென்றும், செவிடனென்றும்,சொல்லப்படுகிறானோ அந்தவேளையிலே மூடனைப்போலவும்-பயித்தியக்காரனைப்போலவும், செவிடனைப்போலவும், வார்த்தைகளைச்சொல்லிக்கொண்டிருப்பான் பிறத்தியாராலே பலாத்காரமாக ஏவப்பட்டவனாய் காரியங்களைச்செய்வான் செய்யப்பட்டகாரியங்களுக்குக்கூலியாகக்கிடைக்கப்பட்ட அன்னத்தை அல்பமாயிருந்தாலும், வெகுவாயிருந்தாலும் அதையேபட்சிப்பான் ரசனை ருசியைப்பார்த்து பட்சிக்கிறதில்லை மானம் அவமானங்களினாலுண்டான சுகதுக்கங்களிலே தேகாபிமானமில்லாதவனாயும் அழுக்கடைந்திருக்கிற கந்தையை அரையிலேதரித்துக்கொண் டிருக்கிறவராயும் மிகவும் கறுத்திருக்கிறஎக்கியோபவிதத்தினாலே பிராமணனென்றும் பிராமணஅதமனென்றும் இந்தப்பிரகாரம் தன்னுடைய அறியாதசின்னங்களினாலேஅவமானம்பண்ணப்பட்டவனாய்

சஞ்சரித்துக்கொண்டிருந்தான் பிற்பாடு ஒருக்கால்ஒரு சூத்திரனானவன் புத்திரன்வேணுமென்று பிரார்த்தனை பண்ணிக்கொண்டு பத்திரகாளிக்குப் புருஷனாகிற பசுவைப்பெலிகொடுக்க எத்தனம் பண்ணினான் அந்தசூத்திரன் பெலி கொடுக்கிறதற்காகக் கொண்டுவந்த புருஷன் அர்த்தராத்திரியில் தெய்வபலத்தினாலே தப்பித்துக்கொண்டுபோய்விட்டான் அந்தச்சூத்திரனுடைய படாள் தப்பித்துக்கொண்டு போன அந்தப் புருஷபசுவைத் தேடிக்கொண்டுவருகிறபோது அகஸ்மாத்தாய்ஒருவிடத்திலே பரண்போட்டு அதிலேயிருந்துகொண்டுகாட்டுப்பன்றி மிருகங்கள்வந்து விளைச்சலை அழித்துப்போடாமல் இரட்சித்துக்கொண்டிருக்கிற பரதனைப்பார்த்து அந்தப்படாள் சருவலட்சணத்துடனே கூடிக்கொண்டிருக்கிற இந்தப்புருஷனைப்பார்த்து நமது யஜமானனுடைய கருமபூர்த்திக்கு புருஷபசுகிடைத்ததென்றெண்ணிக்கொண்டு மலர்ந்தமுகத்தையுடையவர்களாகி இந்தப் பரதனைக் கயிற்றினாலே நன்றாகக்கட்டிக்கொண்டு காளிகோயில் சமீபத்திலே வந்துசேர்ந்து பரதனையும் ஸ்நானம்பண்ணிவித்து நூதன வஸ்திரத்தை தாரணம்பண்ணி நல்ல சந்தனபுஷ்பமாலை திலக முதலானதுகளினாலே அலங்கரித்து பிறஷ்டான்னபோஜனஞ் செய்வித்து அந்தப் புருஷபசுவைத் தூபதீபமாலைகள் பொரிகள் துளிர்கள் அங்குரங்கள் பலங்கள் இதுகள்முதலான பூசாதிரவியங்களுடனே கூடிக்கொண்டிருக்கிற மகத்தாகிய பலிகொடுக்கிற விதியுடனேகூட கீரத்தகீதங்கள்மத்தளங்கள் பேரிவாத்தியங்கள் இதுகளுடனே கூட அந்தப் பத்திரகாளியினுடைய எதிரேநிறுத்தினார்கள் பிறகுஅந்தச்சூத்திரனுக்குப் புரோகிதனான சோரனும் அந்தப் புருஷபசுவினுடைய இரத்தமாகிற மத்தியத்தினாலேஅந்தபத்திரகாளியைத் திருப்திசெய்து வைக்கவேணுமென்று எத்தனித்தவனாய் காளிமந்திரத்தினாலே மந்திரிக்கப்பட்டும் மகாதீட்சணமாயும் குரூரமாயு மிருக்கிற கத்தியை கையிலேயெடுத்தான், இந்தப் பிரகாரம் இராட்சசதர்ம சுபாவத்தை யுடையவர்களாயும்தம்மத்தினாலே மிகவும் கருவத்தையடைந்த மனதை யுடையவர்களாயும் பகவதங்கிஷமான ஆங்கிரசகுலத்தை திக்கிரித்து சரிபோனபடிக்கு சுயவிச்சையாய்க் கொக்கரித்து' லீலைகள் பண்ணிக்கொண்டு இங்கிசையே விளையாட்டாக வுடையவர்களாயு மிருக்கிற சோரரான சூத்திரர்களுடைய மகாகுரூரமான யாதொருகருமங்களைப் பிரம்மநிஷ்டராயும் சாட்சாத் பிரம்மரிஷியினுடைய புத்திரனாயும் வயிரமில்லாதவனாயும் சகலபிராணிகளுக்கு சுகுர்தாயும் தன்னுடைய இங்கிசையிலேயும் சந்துஷ்டனாயு மிருக்கிற அந்தப்பரதனுடைய இங்கிசாரூபமான அந்தக் கருமத்தைப்பார்த்துமிகவும் சகிக்கக்கூடாமலிருக்கிறபிரமதேஜசினால் தகிக்கப்பட்ட சரீரத்தை யுடையவளாய் அந்தப்பத்திரகாளியானவள் சீக்கிரமாக அந்தபிம்பத்தில் நின்றும்வெளிப்பட்டு அந்தசோரர்பண்ணின அபராதத்தைச் சகியாதவளாய்மிகவுங்கோபாக்கினியினாலேதகிக்கப்பட்டவளாய் மிகவும்வேகத்தினால் நெறிக்கப்பட்ட புருவங்களாகிறகிளைகள் மகாகுடிலங்கள் கோரைப்பல்லுகள் சிவந்தகண்கள் இதுகளுடைய ஆடம்பரத்தினாலே பயங்கரமான முகத்தையுடையவளாக இந்த ஜெகத்தைச் சங்காரம்பண்ணிப்போடுகிறவள்போலமகத்தான அட்டகாசத்தைப் பண்ணிக்கொண்டு கோயிலைவிட்டு வெளிப்பட்டு பாபிஷ்டர்களாயும் துஷ்டர்களாயுமிருக்கின்ற அந்த சோரபடாக்களுடைய சிரசுக்களை அந்த கத்தியினாலேதானே சேதித்து அவர்கள்கழுத்திலிருந்து பெருகாநின்றும் அதிவுஷ்ணமாயுமிருக்கிற இரத்தமாகிறமத்தியத்தைத் தன்னுடைய பூதகணங்களுடனேகூட பானம்பண்ணி அதிகமான அந்தஇரத்தபானத்தினால் உண்டான மதத்தினாலே உடம்பு தெரியாதவளாய் மிகவுந்தன்னுடையசேனைகளுடனேகூட கானம்பண்ணிக்கொண்டு கூத்தாடியும் அந்தசிரசுகளாகிற பந்துகளாலேவிளையாடினாள். வாராய் ராஜாவே இப்படிதான் மகத்துக்களிடத்திலேபண்ணின அபராதம் மிகவும் தன்னிடத்திலேயேபலிக்கும் விஷ்ணுபக்தர்களுக்கு இது ஆச்சரியமன்று என்னவென்றால் தேகாதியிலே ஆத்தும புத்தியைவிட்டவர்களாயும் சகலபிராணிகளுக்கும்சுகுர்தான ஆத்மாவை யுடையவர்களாயும், துவேஷமில்லாதவர்களாயும் சக்கிராயுதரான பகவானாலே பத்திரகாளி முதலான ருத்திர தெய்வங்களில்நின்றும் ரட்சிக்கப்படுகிறவர்களாயும் பகவானுடைய பாதாரவிந்தங்களை ஆசரித்தவர்களாயுமிருக்கிற பாகவதோத்தமளான பரமஅங்கிசாருக்கு எந்தவேளையிலேயும் பயம் விசனம் இதுகளிராதுஎன்கிறது இது மகா பாகவதாளுக்கு ஆச்சரியமன்று.

## ௰-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்;

ரகுகுணனெனும் ராஜன்பல்லக்கினைத்
தகும்படிச்சுமக் காததன்மையால்
வெகுவாய்நிந்திக்கும் வேளைபரதனும்
ரகுகுணனுபாக் யானநவிலுவாம்.

அனுதாரவுபண்ணாநின்ற ரகுகுணனென்கிறராசாவானவர் தன்பல்லக்கைச் சுமக்காநின்ற அந்த பரதரானவரை பல்லக்கை ஏன்செம்மையாயெடுக்கவில்லையென்று கேட்டதற்கு பரதர் சொல்லுகிற உத்தரவினாலே அவரைமகா பிரமநிஷ்டரென்று அறிந்துகொண்டுசீக்கிரமாகக்ஷமை கொள்ளப்பட்டாரென்று இந்தப் பிரகாரம் ம

காரூபத்தினலேயும் மனதிலே விவகாரத்தை யுடையா மலிருக்கிற அக்கியானிக்கும் சர்வக்கியானிக்கும் சரியாயிருக்குமென்றெண்ணி அந்தப்பரதர் சர்வக்கியரென்று தெரிகிறதற்காக ரகுகுணனுடைய உபாக்கியானம்சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்தே பிற்பாடுசிந்துசவ்வீர தேசாதிபதியாயும்கபிலமகாரிஷி ஆசிரமத்தைப்பற்றிப்போகாநின்ற ரகுகுணனென்கிற இராஜாவினுடைய சிவிகையாருக்கெல்லாம் எஜமானனலே பல்லக்குசுமக்க சிவிகையாளைத் தேடுகிறசமயத்தில் இட்சுமதியென்கிற நதிதீரத்திலேயிராநின்ற இந்த பரதரானவர் தேவாதீனமாய் அடையப்பட்டுஅவனலேகிரகிக்கப்பட்டார் பருமனுயும் திடனுன சரீரத்தை யுடையவனுயும் எருதைப்போலவும் கழுதைபோலவும் சுமையை எடுக்கத்தக்கவன்போலவுமெண்ணிக்கொண்டு அந்தசிவிகையினுல் முன்னலேபல்லக்குஎடுக்கிறசிவிகையாருடனேகூட பலாத்காரமாய்ப்பிடித்து சேர்க்கப்பட்டவராய் அந்தப்பல்லக்கை யெடுக்க அயோக்கியரானலும் மகானுபாவரான அந்தசடபாதர் இரண்டுஅம்பு அளவானபூமியை முன்னேபார்த்துக்கொண்டு பிறகு அடியெடுத்துவைத்து நடக்கிறபடியினலே அந்தப்பல்லக்குஎடுக்கிறசிவிகையாருடைய நடைக்கு சரியாயில்லாமற்போச்சோ அப்போது அந்த ராஜாவானவன் வித்தியாசமாய்ப் போகாநின்ற தன்னுடைய பல்லக்கைப்பார்த்து அந்தப்பல்லக்கையெடுக்கிற சிவிகையார்களுக்கு ஒருவார்த்தை சொல்லுகிறான், அடாசிவிகையர்களே செவ்வையாய்ப்பல்லக்கையெடுத்துக்கொண்டுபோங்கள் ஏன்இந்தப்பிரகாரம் பல்லக்கானது வித்தியாசமா யெடுக்கப் படுகிறதென்று வெறுத்துக்கொண்டு சொல்லுகின்ற அந்தஇராஜாவினுடையவார்த்தையைக்கேட்டுராஜா அடிக்கப்போகிறனென்றுபயப்பட்டவர்களாய் அந்தச் சிவிகையார்கள் ராஜாவைப்பார்த்து ஒருவிக்கியாபனம் பண்ணுகிறார்கள் வாரீர்மகாராஜனே உம்முடைய ஆக்கியாப்பிரகாரம் நடவாநின்ற நாங்கள் உடம்புமறந்தவர்களாய் செவ்வையாய்நடவாமலிருக்கவில்லை நாங்கள் செவ்வையாகவேஎடுத்துக்கொண்டுபோகிறோம் ஆனலும் இப்போதான் பல்லக்குஎடுக்கவைப்பட்டாலும் இந்தப்புருஷனனவன் சீக்கிரமாகஎடுத்துக்கொண்டு நடக்கவில்லை இந்தப்பல்லக்கிலே இவனுடன்கூட நாங்கள் எடுக்கமாட்டோமென்று இந்தப்பிரகாரம் மகாதைரியத்துடனேசொல்லுகின்ற சிவிகையாருடைய வார்த்தையைக்கேட்டு இந்தப்பல்லக்குச்செவ்வையாய் நடவாமலிருக்கிற தோஷம் சகவாசத்தினல் வந்ததே அதுநிச்சயம் ஒருவனுடைய தோஷமேயெல்லாரையும் பிடிக்கிறதென்று நிச்சயித்தவனுய் அந்தரகுகுணனென்கிற ராஜாவானவன் பெரியவர்களுடனேசகவாசம் பண்ணியிருந்தாலும் அந்தராஜசுபாவத்தை விடாமல் கொஞ்சங்கோபத்தை யுடையவனுய் நீறுபூத்தநெருப்பைப்போலே தெரியப்படாமலிருக்கிறபிரமதேசசையுடையவரான அந்தச் சடபரதனைப்பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறான்.

இதென்னகஷ்டம் என்ன ஆச்சரியம்வாராய்தம்பி மிகவும் இளப்பையடைந்தாய் இதுநிச்சயம்வெகுதூரம் வெகுகாலம் ஒருவனுகவேஇந்தச்சுமையைச்சுமந்தாய்நீமிகவும் பருத்திருக்கவில்லை நீ திடமான சரீரத்தையுடையவனுமன்று வார்த்திகத்தினலேயும்மிகுதியும்பீடிக்கப்படுகிறாய் இந்தச் சுமையைக்கூட எடுக்கிறதற்கும் ஒருத்தருமில்லையென்று இந்தப்பிரகாரம் வெறுப்பினலே சொல்லப்பட்டாலும் அக்கியானத்தினுல் செய்யப்பட்ட பிருதிவியாதிபூதங்கள், இந்திரியங்கள், புண்ணியபாபமான கருமங்கள் மனது இதுகளை யுடையதானதன்னுடைய கட்டியான அந்தச்சரீரத்திலே நான் என்னதென்கிற பிரானமில்லாதவராகியும் பிரம்மபூதராயுமிருக்கிற அந்த சடபரதரானவர் அந்தராஜாசொன்னதற்கு உத்தரவுசொல்லாமல் முன்போலவே பல்லக்கைசுமந்தார். திரும்பவும் அந்தப்பல்லக்கு வித்தியாசமாய்ப்போகிறதைப்பார்த்து மகா கோபத்தை யடைந்தவனுய் அந்தராஜா ஒருவார்த்தைசொன்னன் அடாதம்பி இது என்ன நீபிராணனுடனே யிருக்கச்செய்யும் மரித்தாய்ராஜாவானஎன்னையும் அப்பிரயோசனனென்றெண்ணிஎன்னுடைய ஆக்கினையுந்தள்ளி நடக்கிறாய் உடம்புதெரியாமல்நடவாநின்ற உன்னைத்தெண்டனைபண்ணுகிறேன்தெண்டிக்கப் பட்டவனுய்ப் பிறகு சுபாவத்தை அடைந்து நடப்பாயென்று இந்தப்பிரகாரம் வெகுவிதமாய் அபத்தங்களைச் சொல்லாநின்றும் இராஜாவென்றும்அகங்காரத்தையடைந்தும் ராஜச தாமசங்களினலுண்டானகருவத்தினலே பாகவதரைத் திரஸ்கரியாநின்றும் நானேசர்வக்கியனனென்றும் எண்ணிக்கொண்டிருக்கிற அந்தராஜாவைப்பார்த்துப் பிரமபூதராயும் சகல பிராணிகளுக்கும் சுகுர்தான ஆத்துமாவையுடையவராயும், பகவானுயும், கருவமில்லாதவராயுமிருக்கிற அந்தச் சடபரதரானவர் புன்சிரிப்பையுடையவராய் யோகிகளுடையநடத்தையிலே பரிசியம் பண்ணப்படாதவனன புத்தியையுடைய அந்தராசாவைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னர்,

பிராமணவாக்கியம்,

வாராய்ராஜாவே, இளைப்புமுதலான துஒன்றுமில்லையென்று உன்னலே சொல்லப்பட்டது, அதுஎதார்த்தமே கபடமாய்ச் சொல்லப்பட்ட தன்று பாரமென்கிறதுஒன்றுஉண்டாயிருந்தால் அந்தப்பாரத்தையெடாவி

ன்றதேகத்துக்கு உண்டாயிருக்கும் எனக்கு மந்தபாரமுண்டாம் அதுவேயில்லையல்லவா நடக்கிறவனுக்குஅடையத்தக்கதானவிடம் ஒன்றுண்டாயிருந்தால் மார்க்கமென்கிறதும் ஒன்றுண்டாயிருக்கும், அப்போது அது எனக்கும் உண்டாம் நீமிகவும் பருத்திருக்க வில்லையென்று யாதொன்றுசொல்லப்பட்டதோ பிருதிவிமுதலானபூதங்களுடைய கூட்டமான சரீரத்திலே பருத்திருக்குதென்கிறசப்தம் பெரியவாளாலே சொல்லப்படுகிறதுஆத்மாவிலே சொல்லப்படுகிறதில்லை ஆகையினல்நீமிகவும் பருத்திருக்கவில்லையென்று சொன்னது எதார்த்தமே பருத்திருக்கை இளைத்திருக்குகை மனே வியாதிகள் தேகத்திலேயுண்டான வியாதிகள்-பசி-தாகம்-பயம்-கலகம்-இச்சை-வார்த்திகை-நித்திரை-பிரீதி - கோபம்-அகங்காரத்தினலேயுண்டாகிற மதம் இதுகளெல்லாம் தேகாபி மானத்தை யுடையவனுக்கே தேகாபிமானமில்லாத எனக்கு இதுகள்ஒன்றுமில்லை, வாராய்இராஜனே, பிழைத்தும்செத்தவனுயிருக்கிருயென்றுயாதொன்றுசொன்னீரோ இது எனக்குமாத்திரமன்று சென்மநாசங்களை யுடையதானபடியாலே சிருஷ்டிக்கப்பட்ட சகலபிரபஞ்சத்துக்கும் உண்டாயிருக்கிறது. வாராய் பூச்சியனன்ராஜாவே, உன்னைத்தெண்டிக்கிறேனென்றுயாதொன்றுசொன்னீரே இதுவும் இராசா வென்கிறதும் சேவகனென்கிறதும்ஒருவனிடத்திலேநிலையாயிருக்கிறதானல் அப்போதெண்டிப்பேனென்றும் தெண்டிக்கப்படுவாரென்றுசொல்லுகிறதும்யுக்தமாயிருக்கும், இராஜாவென்றும், பிரத்தியனென்றும், இந்த விவஸ்தையாயிராமற்போறலும், நான் ராஜாவா யிருக்கிறமட்டுக்கும்உன்னைத் தெண்டிக்கத்தகுமென்றுசொன்னலும் ராஜாவென்றும், பிரத்தியனென்றும், இந்தவிவஸ்தையாயிராமற்போனலும், நான் ராசாவா யிருக்கிறமட்டுக்கும் உன்னைத் தெண்டிக்கத்தகுமென்று சொன்னலும்ராஜாவென்றும் பிரத்தியனென்றும் இந்தப்புத்திக்கு விவகாரத்தைவிட்டால் வேறேயொருஏதுவைக்கொஞ்சமாகிலும் காணப்படவில்லை இராஜாவென்னப்பட்டவனர் சேவகனென்னப்பட்டவனர் இதைத் தெரியச்சொல்லுநானேராஜா இவர்களே சேவகர்யென்கிற அபிமானம்உனக்கிருந்ததேயானல் நான்உனக்குச் செய்யவேண்டியதென்ன அதைச் சொல்லக்கடவாய் உன்மத்தனைப்போலும், மூடனைப்போலும், ஊமையைப்போலும்,இராநின்றும் பூதனுயிருக்கிற எனக்கு உன்னலே செய்யப்பட்ட தெண்டனையினல் ஆகவேண்டிய தென்னவிருக்கிறது, நான்பிரமநிஷ்டனன்று உடம்புமறந்து மத்தனயிருக்கிறவனென்று யெண்ணி யென்னை நிச்சயித்தாலும் உன்னலே செய்யப்படுகிறசிட்சை அரைத்தமாவையே அரைக்கிறாற்போலேவியர்த்தமாகாநிற்கிறது சுபாவமாய்ச் சடனயிருக்கிறவன் சிட்சையினலேயுஞ்சமர்த்தனகச் செய்யமாட்டானல்லவாவென்று இந்தப் பிரகாரம் அந்தராஜாசொன்னதற்கு உத்தரவு சொன்னவராய் சாந்தியே சிலமாக வுடையவராய் தேகத்துக்கு நிமித்தமானஅக்கியான மில்லாதவராயுமிருக்கிற அந்தப் பாதமுனியானவர் பிராப்தகர்மத்தையனுபோகத்தினலே நாசம்பண்ணுவித்துக்கொண்டு அந்தப்பல்லக்கைமுன்போலவேசுமந்துகொண்டு நடந்தார்.

வாராய்பரிட்சித்தே, அந்தசவ்விர தேசாதிபதியாயும் மிகவுஞ்சிரத்தையாலே தத்துவத்தை யறியவேணுமென்கிற இச்சையாலே அதிகாரத்தையுடையவனயுமிருக்கிற அந்தரகுதுணனவன் யோக சாஸ்திரங்களுக்குச்சம்மதமாயும் மனதிலுள்ள சமுசயத்தைப் போக்கடியாளின்றுமிருக்கிற அந்தப் பிராமணனுடைய வார்த்தையைக்கேட்டுச் சீக்கிரமாகப் பல்லக்கைவிட்டிறங்கிச்சிரசினலே சாஷ்டாங்கமாக அவருடைய பாதாரவிந்தங்களிலேவணங்கி நமஸ்கரித்து அவரை க்ஷமைகொண்டவனய் இராஜாவென்கிற அபிமானத்தைவிட்டுஒருவார்த்தை சொல்லுகிருன், நீர்-ஆர்-அறியப்படாத மகிமை யுடையவராய்ச் சஞ்சரிக்கிறீர், எக்கியோபவீதத்தைத் தரித்துக்கொண்டிருக்கிரீர் தெத்தாத்திரேயர் முதலான பிராமணனுக்குள்ளே அவதூதராயிருக்கின்றநீர் ஆர் ஆருடையபுத்திரர் எங்கேயிருக்கிறவர் இங்கேஎன்னகாரியமாய் வந்தீர் இல்லாவிட்டால் எனக்குட்சேமத்தின்பொருட்டாகவந்தீரோ ஆனல் கபிலமகாரிஷியோநானேவென்றுல் தேவேந்திரனுடைய வச்சிராயுதத்துக்கும் பயப்படுகிறதில்லை, ருத்திரனுடைய சூலத்துக்கும் பயப்படுகிறதில்லை, எமனுடைய தெண்டத்துக்கும் பயப்படுகிறதில்லை, அக்கினி-சூரியன் சந்திரன்- வாயுவுகுபேரன்-இவர்களுடைய அஸ்திரங்களுக்கும் பயப்படுகிறதில்லை, ஆனலும் பிராமண குலத்தினுடைய அவமானத்துக்கு மிகவும் பயப்படுவேன் ஆகையினலே நான்கேட்டதற்கு உத்தரவை யனுக்கிரகம்பண்ணும் சங்கத்தைவிட்டவராயும் சடன்போலே மூடப்பட்ட ஞானபிரபாவத்தை யுடையவராயும் அளவில்லாத மகிமையுடையவருமாயிருக்கிற நீர் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறீர் யோகசாஸ்திர சம்மதமான உம்முடைய வார்த்தைகள் என்னுடையமனதிலே அறியத்தக்கதாக என்று நானேவென்றுல் யோகேசுவரனுயும் ஆத்தும தத்துவத்தையறிந்த ரிஷிசுவரர்களுக்குள்ளே சிரேஷ்டராயும் லோட்சாத் ஸ்ரீயினுடையஞான அம்சாவதாரமா யிருக்கிற கபிலமகாரிஷியை இந்தச் சமுசாரத்திலே எதுசட்சகமாயிருக்கிறதத்துவமோ அந்தத் தத்துவத்தைக் கேட்க வேணுமென்று புறப்பட்டேன் பகவானன அந்தக் கபிலமகாரிஷிதானே லோகத்தினுடைய கெதியைப்பார்க்கவேணுமென்று தெரியப்படாத மகிமையை யுடையவராய்ச் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறீரோ கிரகாதிகளிலேஆசக்தியையுடையவனுயும்மூடபுத்தியாயு மிருக்கிற

என்னைப்போலொத்த ஜென்னமானது யோகீசுவரானுடைய கெதியை எப்படியறியும் எனக்குயுத்தமுதலான கர்மத்தினலே சிரமம்எப்படி காணப்படுகிறதோ அப்படியே இந்தப்பல்லக்கை யெடாநின்றும் நடவாநின்றுமிருக்கிற உமக்குஞ் சிரமமுண்டாயிருக்குமென்று எண்ணுகிறேன் எனக்குஞ்சிரமமில்லையென்று எப்படிச்சொல்லுவீர் விவகாரமாத்திரமேயல்லாமல் பரமார்த்தமாகவில்லையென்று சொல்லுவீரோயாகில்பிரபஞ்சத்தைத் தர்னதருமாதி காரியத்தோடேகூடி யிருக்கிறபடியினலே சத்தியமென்றே சொல்லவேணும் எப்படியானல் அக்கினியினலே தபலைதபிக்கப்பட்டால்தபலைக்குள்ளேயிருக்கிறசலமுந் தபிக்கப்படுகிறது சலத்தினுடைய தாபத்தினல் அதுக்குள்ளேயிருக்கிற அரிசிகளுந் தபிக்கப்படுகிறதுகள் அரிசியிலே தாபம்உண்டானதினல் அதனுடைய கெர்ப்பத்துக்கும் பாகமுண்டாகிறதன்ருே இதிலே ஒன்றும்அபத்தமில்லையே இப்படிதானே வெய்யல் முதலானதுகளினலே தேகம்தபிக்கப்பட்டால்பிறகு தேகத்திலுண்டான இந்திரியங்களிலும் தாபமுண்டாகிறது அந்தஇந்திரியங்களுக்குத் தாபத்தினல் பிராணனிடத்திலே தாபமுண்டாகிறது பிராணனுடைய தாபத்தினல் மனதிலேயும் தாபமுண்டாகிறது, மனதினுடைய தாபத்தினல் அதிலேயிருக்கிற ஆத்மாவுக்குத் தாபமில்லாமற்போகுமா எப்போதுஎவன்ராஜாவாயிருக்கிருனே அப்போதுஅவன் பிரஜைகளுக்குத் தெண்டநாயகனுகியும் ரட்சகனுயுமிருக்கிருன் யாதொருத்தன் அச்சுதனுடைய பக்தனே அவன்அனைத்தமாவை யனைக்கிறவன்போல வியர்த்தமான காரியத்தைச் செய்கிறதில்லை யாதொரு காரணத்தினல் அந்தப்பகவத்பக்தனனவன் சுதர்மானுஷ்டானமாகிற பகவதாராதனத்தைச் செய்துகொண்டு சகலபாபத்தில்நின்றும்விடுபடுகிருன். ஆகையினல் நான்ராஜாவென்கிற அகங்காரத்தினலே பெரியோர்களை நிராகரிக்கின்ற எனக்குச்சினேக திருஷ்டியினல் சத்துக்களுடைய அவமானருபமான பாபத்தைத்தாண்டுவேனே அப்படி அனுக்கிரகிக்கக்கடவீர் சகலபிராணிகளுக்கும் சுகுர்தாயும்,சகாவாயும், தேகாபிமான மில்லாதவராயுமிருக்கிற உமக்குச் சர்வத்திர சமதிருஷ்டியா யிருக்கையினல் என்னுடையஅனுகரவினல் ஒருவிகாரமுமில்லை ஆனாலும் தன்னலேசெய்யப்பட்டபெரியோர்களுடையஅவமானத்தினல்என்னைப்போலொத்தஜென்னமானதுஅவன்சாட்சாத் ஈஸ்வரனுயிருந்தாலும் சீக்கிரமாகநசித்துப் போவனல்லவா ஆகையினலே என்னிடத்திலே அனுக்கிரகம் பண்ணக்கடவீர்.

---

## ௰௩வது-அத்தியாயம்.

சந்தக்கலிவிருத்தம்.

குணமணிரகுகுண கொற்றவனலே
துணிவுடன்கேட்டிடும் சொற்சடபரத
மணிமுனிவரசற் குப்பரமான
அணிபெறுமாத்மக் கியானமறைந்தார்

ரகுகுணராசாவினலே கேட்கப்பட்ட அந்தசடபரதமுனிஅந்தராஜாவுக்குப்பரமான ஆத்துமக்கியானத்தை உபதேசித்தாரென்று சொல்லப்படுகின்றது,

சடபரதர்வாக்கியம்,

வாராய்ராஜாவே நீ-அவித்துவானயிருந்தாலும்வித்துவாமிசானுடைய வாதத்துக்குத்துல்லியமானவார்த்தைகளைச்சொன்னுய் யாதொருகாரணத்தினல் சுவாமிபிருத்தியாதி லெளகீகவிவகாரத்தைநிசத்தியமாகச்சொன்னையோ ஆனபடியினலே நீமிகவும் தத்துவத்தையறிந்தவர்களுக் குள்ளே சிரேஷ்டனன்று வித்துவாமிசாள் இந்தலெளகீக விவகாரத்தைத்தத்துவவிசாரத்தோடேகூடச்சொல்வார்கள். வாராய் ராஜாவே அப்படிதானே அதிகங்களாயும் கிரகஸ்தாசிரம சம்பந்தர்களாகியும் இருக்கிற யோக்கியசமுகங்களையுடையதான வித்தையினல்மிகவும் பிரகாசித்துக்கொண் டிருக்கிற கருமகாண்டமானவேதங்களிலேயும் ராகாதிசூனியராயும் இமிசாதிசூனியமாயுமிருக்கிற இந்தஆத்துமதத்துவமானது பிரகாசிக்கிறதில்லை அந்தப்புருஷனுக்குச் சொப்னதிருஷ்டாந்தத்தினலே கிரகஸ்தாசிரம செளக்கிய மானது பரமார்த்தம் அல்லவென்று அறியப்பட்டதாக ஆகவில்லையோதத்துவமான அர்த்தத்தை உபதேசிக்கிரத்திலேசமர்த்தங்களான வேதவாக்கியங்களும் அந்தப் புருஷனுக்குத் தத்துவக் கியானத்தை போதிக்க மாட்டாதுகள். புருஷனுடைய மனதானது எப்போது சத்துவராஜஸ்தமோகுணங்களினலே வஜீகரிக்கப்பட்டதாகஆகிறதோ அப்போது தட்டுத் தடையில்லாமல் இருந்துகொண்டு கியானேந்திரிய கர்மேந் திரியங்களினலே புண்ணியத்தையும் பாபத்தையும் பண்ணுனிற்கிறதுகர்மவாசனையுடனேகூடினதாயும் சப்தாதி விஷயங்களிலே ஆசக்தியுடையதாயும் சத்துவாதிகுணங்களினலே எருகும்பிரவர்த்திக்கப்பட்டதாயும் காமாதிவிகாரங்களை யுடையதாயும்கியானேந்திரிய கருமேந்திரியங்கள் பூதமாத்திரைகள் இதுகளுக் குள்ளே சிரேஷ்டமாயு மிருக்கிற அந்தமனதானது வேறுவேருன பேர்களுடனேகூட தேவதிரியக்காதி சரீரபேதத்தைத் தரித்துக்கொண்டு அந்தச்சரீரங்களினலே உத்கிருஷ்ட நிக்ருஷ்டத்தைப்புருஷனுக்குப் பண்ணுகிறது சமுசார சக்கிரத்துக்குக் காரணமான அந்தமனதானது சிவனுக்கு மாயையினல்செய்யப்பட்ட

டஉபாதி சரீரமாயிருந்துகொண்டு சிலனை ஆசரித்துக் கொண்டு துக்கரூபமாயும், சுகரூபமாயும், மோகரூபமாயும்; பரிகரிக்கக்கூடாமலும் அந்தந்தக்காலங்களிலேசம்பவியாநின்றுமிருக்கிற கருமபலத்தையுண்டாக்குகிறது பிரகாசித்துக்கொண்டும் சாக்கிரத்துப் பிரபஞ்சரூபமாயும்சொப்பனபிரபஞ்சரூபமாயும் மனதினால்செய்யப்பட்டுமிருக்கிற நானென்கிறவிவகாரமான துசார்வகாலமும்க்ஷேத்திரக்கியனைசீவனுக்குக் காணப்பட்டதாகவிருக்கிறது ஆகையினால் இந்தமனதையே சீவனுக்கு அபிமானரூபமானசமுசாரஏதுவாயும் அபிமான சூனியரூபமானமோட்சத்துக்கு ஏதுவாயும் சொல்லுகிறார்கள் இந்தமனதான துசப்தாதி குணங்களினாலே ஆசக்தியையடைந்ததேயானால் சிவனுக்குவிசனரூபமான சமுசாரத்துக்குஏதுவாகிறது அந்தசப்தாதிகுணங்களில் ஆசக்தியடையாமலிருந்தானால்மோக்ஷம்ஏதுவாகஆகிறது

அதெப்படியென்றால்தீபமானதுநெய்யிலேதுவைக்கப்பட்ட வர்த்தியையடைந்து பிரகாசிக்கிறபோது புகையையுடையதான சிகையை யடைகின்றது நெய்யில்லாமலிருக்கின்றவேளையில் சுரூபத்தையடைகின்றது அப்படிபோலவே இந்தமனதும்சப்தாதிகுணங்களையடைந்து நானாரூபமான விரத்திகளை யடைகிறது சப்தாதிகுணங்களை அடையாமலிருக்கிறகாலங்களிலே நானாவிதவிரத்திசூனியமாய் சுரூபநிஷ்டையை அடைந்திருக்கிறது அந்தமனதுக்குக்கிரியாகாரங்களாய் ஐந்துவிரத்திகளும் ஞானாகாரங்களாய் ஐந்துவிரத்திகளும் அகங்காரமென்னப்பட்டதாய் ஒன்றுமாகபதினொருவிரத்திகளுண்டாயிருக்கிறதுகள் அந்தவிரத்திகளுக்கு ரூபாதிகளையும்இந்தச்சரீரத்தையுமாகப் பதினொன்றையும் விஷயங்களென்றுசொல்லுவார்கள் கெந்தம்-ரூபம்-ஸ்பரிசம்-ரசம்- சப்தம்இந்தஐந்தும் ஞானேந்திரியவழியாய் ஞானாகாரங்களான மனோவிருத்திகளுக்குவிஷயங்கள் விசர்க்கம்- ரதிக்கிரீடை-கெமனம்-வசனம்-சில்ப்பம்-இந்தஐந்தும்கர்மேந்திரியவழியாய்க்கிரியாகாரங்களான மனோவிருத்திகளுக்கு விஷயங்கள்பதினோராம் விஷயமோவென்றால் என்னதென்று கிரகிக்கப்பட்டஇந்தச்சரீரமென்றுசொல்லப்படும் சிறிதுபேர்அகங்காரத்தைப்பன்னிரண்டாவதான மனோவிருத்திவிஷயமென்றுசொல்லுவார்கள் பூதபஞ்சகம்சப்தாதிவிஷயங்கள் சமன்காரம்புண்ணியபாவரூபமான அதிர்ஷ்டம் கிரியா ஏதுவானகாலம் இதுகளினாலே பதினொருவிதமான மனதினுடைய விகாரங்கள் நூறுபிரகாரமாகவும் ஆயிரம்பிரகாரமாகவும் கோடிப்பிரகாரமாகவும் க்ஷேத்திரக்கியனான ஈசுவரனாலே யுண்டாகிறதுகளோ வல்லாமல் சுவபாவத்திலே அனேகரூபமாயுண்டாகிறதுகளன்று ஒன்றினாலொன்று அனேகரூபங்களாயுண்டாகிறதுகளுமன்று சீவனானவன் தனக்குஉபாதிசரீரமாயும்கர்த்தாவாயுமிருக்கிறமனதினுடையசம்பத்துகளையும் சாக்கிர சொப்பனாவஸ்தைகளிலே நித்தியங்களாகப்பிரகாசியாநின்ற இந்தவிர்த்திகளைப்பார்க்கிறான் சுழுத்தி அவஸ்தைகளில் பிரகாசியாமலுமிருக்கிற இந்தவிருத்திகளைப்பார்க்கிறான் மனது நிர்விகாரமாயிருந்துதேயாகில் சுத்தமான ஆத்தும சுவரூபத்தையேபார்க்கிறான், அந்தச்சீவனாலேயறியப்படாநின்றஅந்தப்பரமாத்துமாவானவர்ஜெகத்காரணராயும் பரிபூரணராயும் சுவயப்பிரகாசராயும் ஜென்மாதிசூனியராயும் பிராணாதி யிந்திரியங்களுக்கு ஈசுவரனாயும் சீவாத்துமாவைச்சரீரமாகவுடையவராயும் ஷாட்குண்ணிய பரிபூரணராயும் சகலபிராணிகளுக்கும் ஆசிரமமாயும் சுவாதீனமானமாயையினால் சீவாத்துவாவினிடத்தில் நியந்தாவாகவிருக்கிறார்எப்படியானால் வாயுவானவன்ஸ்தாவரசங்கமங்களானபிராணிகளுக்குப் பிராணரூபமா யிருந்துகொண்டு நியந்தாவா யிருக்கிறானோ இந்தப்பிரகாரம் பகவானானவாசுதேவரும் சீவசரீரியாய் இந்தப் பிரபஞ்சத்திலேபிரவேசித்து நியநதாவாயிருக்கிறார்.

வாராய்நரேந்திரனே, புருஷனானவன் விஷயசங்கத்தைவிட்டுக் காமக்குரோதாதிகளைச்செயித்தவனாய் ஞானயோகயத்தினாலே இந்தமாய்கையை யுதறிப்போட்டுப்பரமாத்துமதத்துவத்தைப்பாராமல் எந்தமட்டுமிருக்கிறானோ அந்தமட்டுமிந்தசமுசாரத்திலே பிரமித்துக்கொண்டிருக்கிறான் சீவனுக்கு உபாதிசரீரமான இந்தமனதை சம்சாரபாதங்களுக்கு வுற்பத்திக்ஷேத்திரமாக எந்தமட்டு மறியாமலிருக்கிறானோ அந்தமட்டும் சம்சாரத்திலே பிரமித்துக்கொண்டிருக்கிறான் எந்தக்காரணத்தினாலே இந்தமனதானது புருஷனுக்குச்சோகமோகவியாதி ஆசைலோபம் வயிரம் இதுமுதலானதுகளையும் மமதையும்பண்ணுகிறது ஆகையினாலே சத்துருவாயும் உபேட்சையாலே மகாவீரியத்தை யுடையதாயும் விருத்தியடையாநின்றும் அசத்தாயும்ஆத்துமதுரோகியாயுமிருக்கிற அந்தமனதைநீயானவன் பிரமாதத்தைவிட்டவனாய் ஆசாரியனான ஸ்ரீஹரியினுடைய பாதாரவிந்தவுபாசனையாகிற அஸ்திரத்தையுடையவனாய் செய்யக்கடவாய்.

## கஉ-வது அத்தியாயம்.

சந்தக்கலிவிருத்தம்,

மீளவும்ரகுகுண வேந்தலானோரக்
காளினிற்கேட்குஞ் சந்தேகமனைத்தும்
வாள்விழிச்சடபரத முனியானோன்
தாள்தனில்விழுந்து நிவர்த்திசெய்தனரே.

திரும்பவும்ரகுகுணராஜாவானவர் கேட்கப்பட்டசந்தேகங்களைச் சடபரதமுனியானவர்நிவர்த்திசெய்தாரென்று சொல்லப்படுகின்றது.

ரகுகுணர்வாக்கியம்,

காரணமானபரமாத்துமாவினுடையலோகாநுசுகனுர்த்தமானசரீரமாயும் சுவானந்தபிரகாசத்தினாலேயேசரீரமில்லாதவராயும் அவதூதபிராமணவேஷத்தினாலே மறைக்கப்பட்ட நித்தியமானபிரபாவத்தையுடையவராயுமிருக்கிறஉமக்குப் பிரணாமம் வாரீர்பிராமணோத்தமரே சுரமாகிறவியாதியினாலே பிடிக்கப்பட்டவனுக்கு மதுரமான அவிழ்தம்போலவும் வெய்யலிலே அடிப்பட்டவனுக்குக் குளிர்ந்தசலம்போலவும் நிந்திதமான தேகாபிமானமாகிற சர்ப்பத்தினாலேகடிக்கப்பட்டும் விவேகமில்லாதவனான எனக்கு உம்முடையவசனாமிர்தமானது அவிழ்தமாகாநிற்கிறது வாரீர்பிர்மநிஷ்டரே ஆகையினாலே உம்மையெனக்குச் சந்தேகவிஷயமாகியிருக்கிற அர்த்தங்களைப் பிற்பாடுகேட்கிறேன் இப்போதுஉம்மாலே சொல்லப்பட்டவசனம் ஆத்துமக்கியான யோகத்தோடுகூடியிருக்கிறபடியினாலே நன்றாகஅறியப்படாமலிருக்கிறது அதுஎப்படிநன்றாகத்தெரியவருமோ அந்தப்பிரகாரம்ஆசையுடனேகூடினமனதையுடையஎனக்குச்சொல்லும் வாரீர்யோகீசுவரரே சுமையெடுக்கிறதினாலேயுண்டாகிற இளைப்பு பிரத்தியட்சமாகக்காணப்பட்டிருந்தாலும் இதுவிவகாரமாத்திரமேயல்லாமல் எதார்த்தமாகவிசாரிக்குமிடத்தில் இல்லையென்று சொன்னீரே அந்தஅர்த்தத்திலேயென்மனது மிகவும் பிர்மிக்கிறது இந்தப்பிர்மைதிரும்படியாய் நீர்அனுக்கிரகிக்கவேணுமென்று பிரார்த்திக்கின்ற அந்தராஜாவைப்பார்த்துச் சடபரதமுனிசொல்லுகின்றார்,

வாராய்ராஜாவே பிருதிவிமயமான இந்தத்தேகமேஒருகாரணத்தினாலேஇந்தப்பூமியிலே சஞ்சரித்துக்கொண்டிருக்கிறது சென்மமென்றுசொல்லப்படுகிறது இந்தபிருதிவிமயமான எந்ததேகம் சஞ்சரியாமலிருக்கின்றதோ அதுஸ்தாபரமென்று சொல்லப்படுகின்றதுஇந்தப்பிரிதிவி மயமான சரீரத்துக்குப் பூமியிலேபாதம் பாதத்தின்பேரிலே புறங்கால் அதன்பேரில்கணைக்கால், அதன்பேரிலேமுழங்கால், அதன்பேரிலேதுடை, அதன்பேரிலேஇடை, அதன்பேரில்மார்பு அதன்பேரில்கழுத்து அதன்பேரிலேதோள், தோளிலே தாறுமயமானபல்லக்கு அதன்பேரிலே சவ்வீரராஜாவென்கிற பேரையுடைய பிருதிவிமயமான உன்னுடையசரீரமிருக்கிறது அந்தசரீரத்தையே ஆத்துமாவென்று அபிமானத்தையுடையவனாய் நான்சிந்துதேசத்துக்கு அதிபதியென்றுமதத்தினாலே அந்தகனாயிருக்கிறாய் நீயானவன்துக்கிக்கத்தக்கவர்களாயும் மிகவுந்தீனராயுமிருக்கிற இந்தச்சிவிகையாளைப் பல்லக்கைச்சுமக்கச்சொல்லிக்கஷ்டப்படுத்திக்கொண்டு தயையில்லாதவனாகவிருக்கிறாய் ஆகையினாலேநான்செனங்களைரட்சிக்கிறேனென்றுவெறுமையாகச்சொல்லிக்கொண்டிருக்கிற கெருவிதனானநீ பெரியோர்களுடைய கோஷ்டிக்கு அருகனாகமாட்டாய் எப்போதுஞ்சராசரமான இந்தப்பிரபஞ்சத்துக்குப்பூமியிலே நித்தியமாகப்பிறப்பையும் திரும்பவும் அந்தப்பூமியிலேயே லயத்தையும் பிரத்தியட்சமாகக் காண்கிறதோஅப்போதே அந்தப்பூமியைத்தவிர வேறேயொரு விவகாரமில்லை ஆனபடியினாலே இந்தப் பிரபஞ்சமென்கிறசொல்லைத்தவிர விவகாரத்துக்கு மூலமாயும் பிறப்புஇறப்புஎன்கிற கிரிகையினாலே அறியத் தக்கதாயும் வேறேஒன்று சத்தென்று சொல்லத்தக்கதாகவிருக்கிறதா நன்றாக விசாரிக்கப்பட்டும் இப்படியே இந்தப் பூமியென்கிற சப்தார்த்தமும் தனக்குக்காரணங்களான பரமாணுக்களிலே லயத்தை யடைந்தபடியினாலே அந்தப் பரமாணுக்களைத் தவிர பூமியென்று சொல்லத்தக்கதாகச்சந்தான அர்த்தம் ஒன்றுமில்லையல்லவா இந்தப்பூமியாதொரு பரமாணுக்களுடைய கூட்டமாயிருக்குதோ அந்தப்பரமாணுக்களும் காரியவசனத்தினாலேமனதினால் அக்கியானமூலமாகக் கல்பிக்கப்பட்டிருக்கிறதுகள்,இந்தப்பிரகாரம் கியான சூனியமாகியு மிருக்கிறது வயிதமென்கிற விவகாரத்துக்கு விஷயமான யாதொரு பிரபஞ்சமுண்டோ இந்தப்பிரபஞ்சமானது திரவியமென்றும்,குணமென்றும், வாசனை யென்றும், காலமென்றும், இதுகளுடையபுத்தியினால் பிரகிருதியினாலேபண்ணப்பட்டிருக்கிறதென்று அரிசுபாவமாகக் கியான சுரூபமாயும், கர்மசம்பந்தரகிதமாயும், பரமார்த்த சுரூபமாயும், ஏகமாயும், பரிபூரணமாயும், பிரமமாயும், நித்தியமாயும், சுயப்பிரகாசமாயும்,பசிதாகமுதலான துர்க்குணங்களில்லாததாயும், பகவத்சத்தார்த்தமாயுமிருக்கிற வாசுதேவனைச் சத்தியமென்றுசொல்லுவார்கள்,வாராய்ரகுகுணனே, இப்படிப்பட்ட பரமாத்தும சுரூபத்தை மகத்துக்களுடைய சேவையல்லாமல் தபசினாலும்,எக்கியங்களினாலும், ஸ்நானங்களினாலும்,அதிதிபூசையினாலும், வேதாப்பியாசத்தினாலும் சலம், அக்கினி, சூரியன் இவர்களுடைய வுபாசனையினாலும் அடையமாட்டான், யாதொருபெரியவாளுடைய கோஷ்டியிலேஅசத்தான கதைகளுக்கு விகாதமான பகவத் குணானுவாதமானது சதா பண்ணப்படுகிற அந்தப் பகவத்குணானுவாதமானது மோட்சத்திலே இச்சையை யுடையவனான புருஷனுக்குவாசுதேவனிடத்திலே பரமார்த்தமானபுத்தியைக் கொடுக்கின்றது, அப்படிப்பட்ட மகத்துக்களுடைய சேவையினாலே அந்தப்பரமாத்தும சொரூபத்தை நான்பூர்வஜென்மத்திலே பரதனென்கிற பெயரையுடைய வ

னை ராசாவாயிருந்தேன், அப்படிப்பட்டநான் விஷய சங்கத்தை விட்டவனாய்த் தபோவனத்திலே பகவதாசராதனத்தைப்பண்ணிக்கொண்டிருந்தவன். ஒருமிருகத்தினுடைய சத்வாசத்தினாலே புருஷார்த்தத்தைக் கெடுத்துக்கொண்டவனாய்த் திரும்பவும், மிருகஜென்மமாகப் பிறந்தேன், வாராய்வீரனே, எனக்கு அந்த மிருகஜென்மத்திலேயும் கிருஷ்ணனுடைய ஆராதனப்பிரபாவத்தினால் சென்மாந்திரக்கியானம் எனக்குவிடாமல் இருந்தது ஆகையினாலே ஜென்மங்களுடைய சங்கதியினால்கெட்டுப்போவேனென்று அதற்குப் பயப்பட்டவனாய்ச் சனசங்கத்தைவிட்டு அறியப்படாத சுபரூபத்தை யுடையவனாய் அவதூத வேஷத்தினாலே சஞ்சரித்துக்கொண்டிருக்கிறேன் ஆனபடியினாலே மனுஷியன் விஷய சங்கமில்லாதபெரியோர்களுடைய சங்கதியினாலே உண்டானகியானமாகிற கத்தியினால் சேதிக்கப்பட்ட விஷயசங்கத்தையுடையவனாய்ப் பகவத்குணகீர்த்தனத்தினாலேயும், பகவத்கதாசிரவணத்தினாலேயும், அடையப்பட்டகியானத்தையுடையவனாய்ச் சம்சாரமார்க்கத்தைத் தாண்டிப்பகவானை யடைவன்,

## ௰௩-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

வாசவிரக்தியி லாதவனுக்கு
ஞேக்கியானோ ரதோரநிவர்த்தி
பேசும்வைராக்ய மாகும்பொருட்டு
ஆசில்சம்சார மதைவாணிப்பாம்.

விரக்தியில்லாதவனுக்குக் கியானோபதேசம் வியர்த்தமென்று வைராக்கியம் உண்டாகிறதின்பொருட்டுச்சம்சாரமாகிற ஆரண்யம்வர்ணிக்கப்படுகின்றது.

சடபரதர்வாக்கியம்,

வாராய்ராஜனே, தாண்டக்கூடாததான பிரவர்த்தமார்க்கத்திலே விஷ்ணுமாயையினால்தள்ளப்படாதவனும் ரஜஸ்தமஸ் சத்துவகுணங்களினால் பிரிக்கப்பட்டசுபாசுபக்கர்மங்களிலே திவிஷ்டியை யுடையதாயும் சுகத்தையிச்சியாநின்ற பிரசித்தமான இந்தச்சீவசமூகமான துவர்க்காளுடைய சங்கம்போலே சஞ்சரித்துக்கொண்டும் சாரமாகிற வனத்தைப் பிரவேசிக்கின்றது அதிலே ஒருநாளும்சுகத்தை யடைகிறதில்லை வராய் இராஜனே அந்தவனத்திலே ஆறுபேரான இந்தச்சோரராள் சாமர்த்தியமில்லாதவனும் சாரதியையுடையவனுமான இந்தப்புருஷனை யடித்துப் பிடுங்குகிறார்கள். அந்த வனத்திலேபொல்லாதநரிகளானதுகள் உடம்புமறந்திருக்கிறஅந்தப் புருஷனைச் செந்நாய்க ளானதுகள் ஆட்டுக்குட்டியைப்போலப் பிடித்துக்கொண்டு நான்கு பக்கத்திலும் யிருக்கிறதுகள் அனேகங்களான கொடிகள், கிரணங்கள், புதருகள் இதுகளினாலே பிரவேசிக்கப்படாநின்ற அந்தவனத்திலே மாகுரூரங்களான ஈக்களினாலேயும் கொசுக்களினாலேயும் மிகவும்பீடிக்கப்பட்டவனாய் சிலவிடத்திலே கெந்தருவநகரத்தையும் சிலவிடத்திலேமிகவும் வேகத்தையுடையதான கொள்ளிவாய்ப்பிசாசுக்களையும் பார்க்கிறான் வாராய்ராஜனே வாசபூமிதீர்த்தம்தனம் இதுகளினாலேயே ஆசக்தியையுடையதான புத்தியையுடையவனாய் அந்தக்காட்டிலே நாலுபக்கமும் ஓடிக்கொண்டு திரிகிறான் சிலவிடத்திலே சுழற்காற்றினாலே எழும்பப்பட்ட தூளிகளினால் வியாபிக்கப்பட்ட திக்குகளையும் அறியாமல் தூள்கள்விழுந்துகலங்கியிருக்கிறகண்களையுடையவனாய்ச் சுழற்காற்றுபோலவே சுழன்றுகொண்டிருக்கிறான் கண்ணிலேகாணப் படாமலிருக்கிற சல்லிகையென்னப்பட்ட பூச்சிகளுடையசப்தங்களினால் மிகவும்பீடையையுடையவனாய்க் கோட்டான்களுடைய சப்தங்களைக்கேட்டு விதனப்படாநின்றமனதையுடையவனாயும் அடையக்கூடாதஆசையாகிய மரங்களினது நிழல்களையெல்லாம் அடைகிறான் மிகவும்பசிதாகங்களையுடையவனாய்ச சிலவிடத்திலே கானலைவெள்ளமென்றுஎண்ணிக்கொண்டு ஓடுகிறான் சிலவிடத்திலே சலமில்லாமலிருக்கிற நதிகளைப்போயடைகிறான் மகாபசியினால்பீடிக்கப்பட்டனாய் ஒருவனைப்போய் அன்னம்வேணுமென்று யாசிக்கிறான்,

இந்தப்பிரகாரம் மகத்தாகிய சிரமங்களினாலேயும், தனநாசனங்களினாலேயும் ஒருவர்க்கொருவர் துவேஷங்களினாலேயும் மகாவிபத்தை யடைந்தவனாய்ச் செத்தவன்போல் அப்பிரயோசனாய் விடுகிறான். புருஷனானவன் அங்கங்கேயெவர்கள்விபத்தையடைந்து போகிறார்களோ அவர்களைவிட்டுவிட்டுப் புதிதாய்ப்பிறந்து உற்பத்தியானவளைச்சேர்த்து விளையாடிக்கொண்டு எவ்விடத்திலிருந்துவந்தானோ அவிடத்துக்குளெப்போதும் திரும்பிப்போனதில்லை வாராய்வீரனே. இப்படி திரிகிறவர்களுக்குள்ளே சமர்த்தனாயிருந்தாலும் ஒருவனும் அந்தமார்க்கத்தினுடையகரையை யடைந்ததில்லை மகாவீராளாயும் திக்கெஜங்களைச்செயித்தவர்களாயுமிருக்கிற சமஸ்தமானபேர்களும் இந்தப்பூமி என்னதென்று பூமிநிமித்தியத்திலே ஒருவர்க்கொருவர்மகாவயிரத்தையுடையவர்களாயும் யுத்தத்திலேஅடிபட்டு விழுந்துபோகிறார்கள் வயிரமில்லாதவனாயிருக்கிற சந்நியாசியானவன்எந்தபகவானுடைய பதத்தையடைகிறானோ அந்தப்பதத்தைவர்கள் அடைகிறதில்லை அந்தவனத்தில்ஒவ்வோரிடங்களிலே மகாஅழகாயிருக்கிற கொடிகளின் சாகைகளைப்பார்த்து அதை ஆசரித்துக்கொண்டும் அந்தக்கொடிகளிலேயிருந்து செவிகளுக்குமகாமதுரமாய்ச் சப்தியாநின்றுமிருக்கிற பட்சிகளில் ஆசையையுடையவ

னுயிருக்கிறன், வாராய்ராஜனே, இந்தப்பிரகாரம், அந்தப்பகவானுடைய மாயையினல் சம்சாரமாகிற ஆரண்ணியத்தில் தள்ளப்பட்டிருக்கிற நீயும் இந்தராச்சியப்பரிபாலனத்தை விட்டவராய்ச் சகலபிராணிகளுக்கும் சுகிர்தமாயிருந்து விஷயங்களிலே ஆசையைவிட்டவனுய்ஸ்ரீஅரியினுடைய வுபாசனையினல் மகாதீட்சணமானவியானமாகிற கத்தியைக்கொண்டு சமுசாரமாகிற காட்டைச்சேதித்து மார்க்கத்தினுடைய கரையைத் தாண்டக்கடவாயென்று இந்தப்பிரகாரம் சொல்லாநின்ற பரதயோகியைப்பார்த்து ராஜா ஒருவார்த்தை சொல்லுகிறன்.

வாரீர்பிராமணோத்தமரேசமஸ்தஜென்மங்களிலேயும் மனுஷ்யஜென்மமே மிகவும் சிரேஷ்டமாகவிருக்கிறது இதரஜென்மங்களிலேயும் சொர்க்கத்திலேதேவாதிஜென்மங்களிலேயும், என்னபிரயோசனம் எந்தஜென்மங்களிலே ரிஷிகேசவனுடைய அனுபவத்தினல்நிர்மலமான மனதையுடையவர்களான உம்மைப்போலொத்த மகாத்துமாக்களுடைய சகவாசமிகவு முண்டாகாத அப்படிப்பட்ட ஜென்மங்களினலே என்னபிரயோசனம் ஒருமுகூர்த்தகாலமான உம்முடைய சகவாசத்தினலே என்னுடைய குயுக்திமூலமான அவிவேகம்நசித்துப்போயிற்று அப்படிப்பட்ட மகாபாகவதாளுடைய சரணர விந்தத்தூளிகளினல் சகல பாவங்களையும் நாசம் பண்ணுகின்ற புருஷனுக்குப் பகவானிடத்திலே நிர்மலமான பக்தியுண்டாயிருக்கிற தென்கிறஆச்சரியமல்லவோ மகத்துக்களாயிருக்கிறபிராமணளுக்கு பிரணமம் பண்ணுகிறேன்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்தே அளவிடக்கூடாத பிரபாவத்தையுடையவரான அந்தப்பிரமரிஷிகுமாரரான பரதமுனிதன்னை அவமானம் பண்ணியிருந்தாலும் அந்தச்சிந்துபதியான ரகுகணனுக்குப் பரம கிருபையினலே ஆத்துமதத்துவத்தை உபதேசித்து அந்தரகுகணனல்பக்தியோடேவந்தனம் பண்ணப்பட்ட சரணத்தையுடையவராய்ப் பூரணமான சமுத்திரம்போலே இந்திரியகுணங்களான காமக்குரோதாதிகளிலேவிடப்பட்ட இருதயத்தையுடையவராய் பூமியிலே சஞ்சரித்துக்கொண்டிருந்தார் சவ்வீரதேசாதிபதியான ராஜவும் சருவபுருஷ சகவாசத்தினலே அறியப்பட்ட பரமாத்துமதத்துவத்தை யுடையவனுய்த் தன்னிடத்திலே அக்கியானத்தினலே பண்ணப்பட்ட தேகாத்துமபுத்தியைவிட்டுவிட்டான்வாராய்பரிட்சித்தேபாகவதாசிரதனனபரதமுனியை ஆசரியாநின்ற சவ்வீரராஜனுடைய பிரபாவம் இப்படிப்பட்டதல்லவோ பாகவதாளை ஆதரித்தபேர்களுடைய பிரபாவம் இப்படியிருக்குமல்லவா வென்று சொல்லாநின்ற சுகப்பிரம ரிஷியைப்பார்த்து பரிட்சித்துமகாராஜா சொல்லுகிறார் வாரீர்மகாபாகவதரே சர்வக்யோனை உம்மாலேசொல்லப்பட்ட சீவாத்துமாக்களுது சம்சாரமார்க்கமானது விவேகிகளுடைய புத்தியினலே கல்பிக்கப்பட்ட விஷயங்களுடையதுமூடபுத்திகளுக்கு நன்றாகஅறியமாட்டாது ஆனபடியினலே அறியக்கூடாதான இந்தச்சம்சாரமார்க்கத்தை அந்தந்தஅனுரூபமான அர்த்தகல்பனையினலே நீதெரிசனம்பண்ணுவித்து சொல்லப்படத்தக்கது.

## யசவது - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

அரியசம்சார ஆரண்யவாகாரம்
திருடர்சம்பு கொசுக்கள்ஸ்திரீ துர்ச்சனுள்
உரியவான விவைகளாற்சொல்லுமைக்
கருமைபிரஸ்துத மாகநிரூபிப்பாம்.

சம்சாரவனத்தினுடைய ஆசாரமானது திருடர் - நரிகள் -கொசுக்கள் -ஸ்திரீகள் - துர்ச்சனுள்- இதுகளாலே சொல்லப்பட்ட அர்த்தங்களுக்குப் பிரஸ்துதமான சம்சாரத்திலே உசிதார்த்த கல்பனையினலே நிரூபிக்கப் படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்ராஜாவே தேகமே ஆத்துமாவென்றெண்ணிக்கொண்டிராநின்ற பேர்களுடையஇந்தச்சீவ பிரபஞ்சமானது சத்துவாதிகுண விசேஷங்களினலே பிரிக்கப்பட்ட சுபாசுபரூபமான கர்மங்களினலேயுண்டாக்கப்படாநின்ற நானுவிதமானதேகசமூகங்களோடேகூடுகைபிரியுகை இந்தரூபமான சம்சாரஅனுபவத்துக்குத்துவாரமாயிருக்கிற ஆறு இந்திரியங்களுடனே நடக்கக்கூடாததான சம்சாரமார்க்கத்திலே நியந்தாவாயும் பகவானுயுமிருக்கிற ஸ்ரீவிஷ்ணுவினுடைய சுவாதீனமான மாய்கையினலே தள்ளப்பட்ட மகாசனம்போல அமங்களான இந்தச்சம்சாரமாகிற காட்டைஅடைந்து அந்தக்காட்டிலே யுண்டாகாநின்றதாபத்திரியங்களைப்போக்கடியாநின்றஅறியாகிற குருவினுடைய சரணரவிந்தத்துக்கு பாகவதர்களாலே செய்யப்பட்ட பக்திமார்க்கத்தைஇப்போது அடையமாட்டாமலிருக்கிறது எந்தசம்சாரமானகாட்டிலே இந்திரியமென்று பெயரையுடையவர்களானசோராள் குரூரகர்மங்களைச் செய்துகொண்டிருக்கிறர்கள் அதெப்படியென்றல் புருஷனுக்குமகாபிரயாசத்தினலே சம்பாதிக்கப்பட்ட யாதொரு தனமிருக்கிறதோ அந்தத்தனம் இந்த லோகத்திலேதர்மத்தைச்செய்கிறதற் குபயோகிக்கும் சாக்ஷாத் பரமபுருஷனுடையஆராதனசுரூபமான யாதொருதர்மமுண்டோ அந்ததர்மத்தைப் பரலோகசாதனமான தனமென்றுசொ

ஸ்வார்கள் தர்மத்தைச்செய்கிறதற் குபயோகிக்கும் சாக்ஷாத் மரமபுருஷனுடையஆராதனசுரூபமானயாதொருதர்மமுண்டோ அந்ததர்மத்தைப்பரலோகசாதனமானதனமென்று சொல்லுவார்கள் தர்மத்தைச்செய்கிறதற்குக் காரணமாயிருக்கிறதே தெரிசனஸ்பரிசனம் சிரவணம் ருசிபாதார்த்த அனுபவம் ஆக்கிராணம் சங்கல்பவிவசாயங்கள் இப்படிப்பட்ட வியாபாரங்களினாலேஇந்திரிய ஜெயமில்லாதவனும் புத்தியில்லாதவனுமிருக்கிற புருஷனுடைய காமார்த்தமாயிருக்கிற அந்தத்தனத்தை இந்திரயங்களென்று பெயரையுடையவர்களான அந்தசோராள் அபகரிக்கிறார்கள் பின்னையுங்குடும்பத்திலே ஆசக்தியையுடையவனான புருஷனுக்குப்பாரியையென்றும் புத்திரராளென்றும் சொல்லப்படுகிறார்கள் செய்கின்ற காரியத்திலேயோவென்றால் செந்நாய்போலவும் நரிபோலவும் ஆகாநிற்கிறார்கள் அதெப்படியென்றால் செந்நாய்வளர்க்கிறஆட்டையெப்படிப்பார்த்துக்கொண்டிருக்கையிலேகொண்டுபோகிறதுகளோஅப்படிப்போலவே பாரியாபுத்திரா களும் குடும்பத்திலே ஆசையையுடையவனுமாயும் மகாலுத்தனுமிருக்கிற புருஷனுடைய தர்மவேதுவான அந்த தனத்தைமகாபத்திரமாய் ரட்சிக்கப்பட்டிருந்தாலும்பார்த்துக்கொண் டிருக்கையிலேயே கொண்டுபோகிறார்கள்எப்படியானால் வருஷந்தோறும் உழப்பட்டிருந்தாலும்க்ஷேத்திரமானது அரிந்ததாளிலே கொளுத்திவிட்டு உழாமற்போனால் திரும்பவும் பயிரிடுங்காலத்திலே அனேகம் செடி கொடி புல்லுகள் இதுகளினாலே சூழப்பட்டதாகிறதோ அப்படியேகிரகஸ்தாசிரமம்'கர்மக்ஷேத்திரமென்று சொல்லப்படுகிறது இந்த கிரகஸ்தாசிரமமென்னப்பட்ட க்ஷேத்திரமானது கியான அக்கினியினாலேதகிக்கப் படாமற்போச்சுதானால் இந்தக்ஷேத்திரத்திலேகர்மங்கள் ஒருநாளும்நாசத்தை அடைகிறதில்லை எப்படியானால் கர்ப்பூரமிருந்தபாத்திரத்திலேகர்ப்பூரம்போய்விட்டாலும் பரிமளம்போகாமலிருக்கின்றதோ அப்படியே இந்தகிரகஸ்தாசிரமமான நாசத்தையடையாமலிருக்கிற கர்மவாசனைகளினால் கர்மங்களுக்கு ஆசிரியமாகவேயிருக்கும் ந்தக்கிரகஸ்தாசிரமத்திலே வாசம்பண்ணுகிற புருஷனானவன் காட்டுக்கொசுக்கள் ஈக்கள்இதுகளுக்குச் சமானர்களாயும் நீசர்களாயுமிருக்கிறஜெனங்களினாலும் விட்டிற்பூச்சிகள் பட்சிகள் சோராள் பெருச்சாளிகள் இதுகள்முதலான பேர்களாயும் அபகரிக்கப்பட்ட தனத்தையுடையவனாய் இப்படியிவர்களாலே பீடிக்கப்பட்டிருந்தாலும் ஒருவழியிலே யிருந்து இந்தசம்சாரத்திலே சுழன்றுகொண்டு அக்கியானமுதலானதுகளினாலே மிகவும் ஆசையையுடையதான மனதினால் கெந்தருவநகரம்போலே அசத்தான இந்தலோகத்தை யதார்த்தமென் றெண்ணிக்கொண்டு பிராந்தியையுடையவனாய் பார்த்துக்கொண் டிருக்கிறான் அப்படிப்பட்ட கந்தருவநகரத்துக்குச் சமானமான இந்தலோகத்திலே ஒவ்வோரிடங்களில் கானல் சலத்துக்குச்சமானமானசப்தாதிவிஷயங்களைப்பார்த்துபானம்போஜனம் மைதுனம் இதுகள்முதலான காரியத்தினாலேமிகவும்ஆசையையுடையவனாய்ஓடுகிறான் ஓரிடத்திலேசமஸ்ததோஷங்களுக்கும்இருப்பிடமானசுவர்னத்தைப்பார்த்துஅந்தசுவர்னம்போலொத்தவர்னத்தையுடையதானரஜோகுணத்தினாலேஅந்தசுவர்ன த்திலேபற்றி யிருக்கிற புத்தியையுடையவனாய் அந்தசுவர்னத்தைக்கிரகிக்கவேணுமென்று இச்சித்துஓடுகிறான் ஓரிடத்திலேகிரகம்தனம் தீர்த்தம் இதுமுதலாயும் அனேகமானபோக்கிய வஸ்துகளினால் ஆசையையுடையவனாய் இந்தச்சமுசாரமாகிற அடவியிலே இவிடத்துக்கு அவ்விடம்ஓடுகிறான் ஓரிடத்திலே சுழல்காற்றுக்குச் சமானமான ஸ்திரீயினாலே கிரகிக்கப் பட்டவனாய் அவள்மடியில் ஏறிக்கொண்டு அந்தவேளையில் உண்டா யிருக்கிற பிரீதியினாலே தமோமயனாய்மரியாதிகளைவிட்டவனாய்தூள்களினாலேவியாபிக்கப்பட்ட கண்களையுடையவன் எப்படிதிக்குகளையறியமாட்டானோ. அப்படிப்போலே தான்மரியாதையை அக்கிரமித்ததற்குச் சாட்சியான திக்குதேவதைகளையும், அறியாமலிருக்கிறான் ஓரிடத்தில் அடிக்கடிதன்பிரயத்தனம் பலியாமல்வியர்த்தமாய்ப்போனதைஅறிந்திருந்தாலும் தேகாபிமானத்தினால் அந்தநினைவில்லாதவனாய் கானல்சலம்போல்இல்லாதவிஷயங்களிலே திரும்பவும்ஓடுகிறான் ஒருவேளையில்அசத்துக்களுடைய சகவாசத்தினால் புத்தியில்லாதவனாய் ஜலமில்லாதமடுவிலே விழுந்தாற்போல் இந்த லோகத்திலேயும், பரலோகத்திலேயும், துக்கத்தைக்கொடாநின்ற, பாஷண்டாளை ஆசிரயிக்கிறான் எப்போபராளைஆசரித்தும்அவர்களையுபத்திரவமித்தும் தனக்குஅன்னம் அகப்படாமல் கஷ்டப்படுகிறானோ அப்போதன்பிதா புத்திராள்சம்பாதித்தது எவ்வளவாகிலும்எவனண்டையாகிலுமிருந்தால் அவாளைப்போய் பாதிக்கிறான் ஒருக்கால் மனோரதத்தையடைந்திருக்கிற பிதுர்பிதாமாகள்முதலானவர்களை அசத்தியங்களாயிருந்தாலும் சத்தியங்களாக எண்ணிக்கொண்டு சொப்பனசுகத்தோடும் சமானமானசுகத்தை அநுபவிக்கிறான் ஓரிடத்திலே கிரகஸ்தாசிரமத்துக்கு யோக்கியங்களான கர்மவிதிகளாகிற பர்வதங்களை ஏறவேணுமென்கிற இச்சையையுடையவனாய்லவுகீகவியாபாரத்தினால் தடுக்கப்பட்டசங்கல்பத்தை யுடையவனும், நொந்தமனதையுடையவனும், முள்ளுவுள்பாங்கட்டி இதுகளுடனேகூடினபூமியில் நடக்கிறவனைப்போலத் துக்கித்துக்கொண்டிருக்கிறான் ஓரிடத்தில்சகி

க்கக்கூடாத சடாக்கினியினல் கிரகிக்கப்பட்ட பலத்தையுடையவனுய்தன்னுடைய பாரியாபுத்திராதிகள்பேரிலே கோபத்தைப்பண்ணிக்கொள்ளுகிருன், அவன்தானேதிரும்பவும் நித்திரையாகிய மலைப்பாம்பினல்கிரகிக்கப்பட்டவனுய் மகாதமசிலேமுழுகிருனியவனத்திலே அகப்பட்டவன்போல் யெறிந்துபோட்ட சவம்போலே ஒன்றையும்அறியமாட்டாமல் விழுந்துகிடக்கிருன்; ஆகையினுல் இந்தலோகத்திலேயும், பரலோகத்தி லேயும் ஆத்மாவுக்குப் பிரவிர்த்தி மார்க்கத்திலே கர்மத்தை சம்சாரத்திற்கு உற்பத்தி க்ஷேத்திரமென்று சொல்லுகிருர்கள்,

இந்தப்பிரகாரம் பிரவிர்த்திமார்க்கத்திலேஇப்படிப்பட்டஉபத்திரங்களுண்டாகின்றதுகள் அப்படியே சுகம்-துக்கம்-ஜென்மம்-சேனை-மரணம்-இதுமுதலான ஏயகுணங்களும் உண்டாயிருக்கிறதுகள் இந்தச்சம்சாரமார்க்கத்திலே நானுக்கிலேசங்களினுலே பாதிக்கப்பட்டவனுய் ஆபத்தையடைந்தபேர்களேயும் விட்டுவிட்டுத்திரும்பவும்நூதனமாகஉண்டானபேர்களைக் கிரகித்துக்கொண்டு சோகத்தையும், மோகத்தையும், கேதத்தையும், கோலாகலத்தையும்,பயத்தையும்,ரோதனத்தையும்,சந்தோஷத்தையும், கானத்தையும்அடைந்து,சம்சாரபாசத்தினுலே கட்டுப்பட்டவனுய் சற்புருஷாளாலே விடப்பட்டவனுய் பிரவிர்த்திமார்க்கத்தில்நின்று இத்தனை துக்கத்தைஅனுபவிக்கிறபோதும்ஒழியாமலிருக்கிருன் எந்தவஸ்துவில்நின்றும் இந்தச்சராசரதமகமான பிரபஞ்சம்உண்டாகிறதோ அந்தவஸ்துவேபிரவிர்த்திமார்க்கத்துக்கு அக்கரையாகச்சொல்லுவார்கள்.

சந்நியாசிகளாயும்,முனிகளாயும், விஷயானுபவத்தில்நின்றும்ஒழிந்தமனதையுடையவர்களாயுமிருக்கிறவர்கள் அடைகிற அந்த யோகமார்க்கத்தைச் சம்சாரியானபுருஷன்அடையாமல் பிர்மித்துக்கொண்டிருக்கிருன் ராஜரிஷிகள் திக்கெஜங்களைச் செயித்தவாளானுலும் அந்தயோகமார்க்கத்தை யடைந்தவர்க ளில்லை எதினுலென்றுல் இதுஎன்னுடையபூமியென்று ஒருத்தரோடொருத்தர்விரோதித்து யுத்தபூமியிலே அடிபட்டு இறந்துபோனுர்கள் பூர்வகர்மத்தைஅனுசரித்து துக்கங்களைஅனுபவித்து அந்தத்துக்கததில்நின்றும் மகாபிரயாசையினுலே விடுபட்டவனும் திரும்பவும் இந்தப்பிரகாரமே பிரவிர்த்திமார்க்கத்திலே யிருந்துகொண்டு சம்சாரதுக்கத்தைஅடைகிருன் இந்தப்பிரகாரமே சொர்க்கலோகத்தையடைந்திருக்கிறவனும் தன்னுடையபுண்யக்ஷயத்திலேதிரும்பவும் பூலோகத்தில்சம்சாரத்திலே உற்பத்தியைஅடைகிருன் ரிஷபராஜகுமாரனுயும் ராஜரிஷியாயும்மகாத்துமாவாயுமிருக்கிறபரதனுடையமார்க்கத்தை வேருெருராஜாவானவன் மனதிலே நினைக்கவும் வல்லமையுடையவனுயிருக்கமாட்டான் அவனது மனோகரங்களாயும் விடக்கூடாதுகளாயுமிருக்கிற பாரியாபுத்திராதிகளேயும்,சுகிர்துக்களேயும், ராச்சியத்தையும்,இதுகளையெல்லாம் பகவானிடத்திலே ஆசையை யுடையவனுய் எவ்வனவயதிலேதானேவிட்டுவிட்டான் தேவதைகளாலே பிரார்த்திக்கத்தக்கவர்களாயும் தயையுடனேகூடின கடாட்சத்தையுடையவளாயு மிருக்கிற மகாலட்சுமியையும் இச்சியாமற் போனுனென்கிறது உசிதமல்லவா அதேனென்றுல் பகவானுடைய சேவையினுலே ஆசையையும் மனதையும் உடையவளாயும் மகான்களாயு மிருக்கிறபேர்களுக்கு மோட்சபலமும் அப்பிரயோசகமன்றே நியந்தாவாயிருக்கிற ஸ்ரீஅரியின்பொருட்டுப்பிரணமமென்று உதாரமானவசனத்தை யாதொருபரதன் மிருகஜென்மத்தை விட்டுவிடுகிறபோது சொன்னுரோ அப்படிப்பட்ட பரதனுடைய மார்க்கத்தை எந்தராஜாதான்அனுசரிக்கமாட்டான் யாதொருத்தன் அந்தபரதனுடைய மங்களகரமான சரித்திரத்தைக் கேட்கிருனே அவன்பரமாத்மாவினிடத்தில்நின்றும் தனக்கு வேண்டியநன்மைகளை யடைவான்,

## கரு-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

வடிவுவாய்ந்த பரதன்வம்சத்தினி
லிடியேறென்னப் பிறந்தவிராஜரின்
படியின்மீதவர் பண்பாங்கீர்த்திதனை
அடைவுடன் வருணித்ததறைகுவாம்,

அந்தபரதனுடைய வங்கிஷத்திலேபிறந்த இராஜாக்களுடையகீர்த்தனை வர்ணிக்கப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்பரிட்சித்தே பரதனுடையபிள்ளைக்குப்புத்திரனுனவன் சுமதியென்று சொல்லப்படுவன் ரிஷபதேவருடையமார்க்கத்தை யனுசரியாநின்ற சுமதியைப் பார்த்துச் சத்புருஷாளுக்குவிரோதிகளான சிலபாஷண்டிகள் பாபஏதுவான தங்களுடையபுத்தியினுலே கலியுகத்தில் வேதங்களினுலே பிரதிபாதிக்கப்படாத புத்ததேவதைஅவதாரமென்று எண்ணப்போகிருர்கள் அந்தசுமதிக்குத் துருவேசனை யென்கிற ஸ்திரீயினிடத்திலேதேவதாசித்தென்று ஒருபுத்திரன் பிறந்தான் தேவதாசித்துக்குஆசூரியென்கிற ஸ்திரீயி னிடத்தில் தேவததிமுன்னென்கிற புத்திரன் பிறந்தான் அந்த தேவததி முன்னென்கிறவனுக்குத் தேவமதியென்கிறஸ்திரீயினிடத்தில் பரமேஷ்டியென்கிற புத்திரனுண்டானன் அந்தப்பரமேஷ்டிக்குச் சுவலேயென்கிற ஸ்திரீயினிடத்தில் பிரதிகனென்கிறபுத்திரன் பிறந்தான் அந்தப் பிரதிகனென்

கிறராஜா வெருபேருக்கு வேதாந்தவிஷயத்தை உபதேசம்பண்ணி அந்தவுயதேசத்தினுல்தானும்பரிசுத்தனுய் மகாபுருஷனுன விஷ்ணுவைப்பிரத்தியட்சமாகவேயனுபவித்தான் அந்தப் பிரதிகளுக்குச் சுவர்க்கலே யென்கிற ஸ்திரீயினிடத்தில் பிரதிகர்த்தா வென்றும் எக்கிய பிரவோகத்தில்சமர்த்தர்களாய் மூன்றுபிள்ளைகள்பிறந்தார்கள் பிரதிகர்த்தாவுக்கு ஸ்துதியென்கிறஸ்திரீயினிடத்தில்வியோகமென்றும் பூமாவென்றும் இரண்டு பிள்ளைகள்பிறந்தார்கள் பூமாவுக்கு ரிஷிகுல்லியென்கிற ஸ்திரீயினிடத்திலே உதகீதன்பிறந்தான் அந்த வுத்கீதனுக்குத் தேவகுல்லியென்கிற ஸ்திரீயினிடத்தில் பிரஸ்தாவன்பிறந்தான், பிரஸ்தாவனுக்கு விகுச்சையென்கிற ஸ்திரீயினிடத்தில் விபுவென்கிற பிள்ளைபிறந்தான் விபுவுக்குப் பராகியென்கிறஸ்திரீயினிடத்தில் பிருதுஷேணன்பிறந்தான் பிருதுஷேணனுக்கு ஆகுதியென்கிறஸ்திரீயினிடத்தில் நந்தன்பிறந்தான் நந்தனுக்குப் பிரதிபுத்திரையென்கிறஸ்திரீயினிடத்தில் ஜெகத்ரட்சணார்த்தமாகக்கிரகிக்கப்பட்ட சத்துவகுணத்தையுடையவனுன சாட்சாத்பகவானுடையஅங்கிசமாக புருஷசிரோஷ்டனுனகேயனென்றுபிரசித்தனுயுமிருக்கிற ஒருபிள்ளைபிறந்தான் அந்த கேயன் பிரமானுபவத்தையுடையவனுயிருந்தாலும்அகங்காரத்தைவிட்டவனுகவே பூமியைரட்சித்தான்.

வாராய்பரிட்சித்தே அந்தக்கேயனுடையவிஷயமானகதைகளைப் பெரியோர்கள் மேன்மையாகச்சொல்லுகிறார்கள் லோகரட்சகரான பகவான் தாம்பிரதி சுருபராயிருந்தாலும் யாதொருகேயனிடத்தில் பிரீதியையடைந்தாரோ அப்படிப்பட்ட கேயனை கர்மங்களினுலே எவன்தான் அனுசரிக்கப்போகிறுன் அந்தகேயனுக்கு செயந்தியென்கிற ஸ்திரீயினிடத்திலே சித்திராதனென்றும்,மிருகசாதியென்றும் அவரோதனனென்றும் மூன்றுபிள்ளைகள்பிறந்தார்கள் சித்திராதனுக்கு ஊறணையென்கிற ஸ்ரீயினிடத்திலே சம்பிராட்டென்கிறவன் பிறந்தான் சம்பிராட்டுக்கு உதகலேயென்கிற ஸ்திரீயினிடத்திலே மரீசிபிறந்தான், மரீசிக்குப்பிந்துமதியென்கிறஸ்திரீயினிடத்திலே பிந்துமான் பிறந்தான், பிந்துமானுக்குச் சாகாயென்கிற ஸ்திரீயினிடத்திலே மதுவென்கிறவன்பிறந்தான், மதுவுக்கு சுமனசியென்கிற ஸ்திரீயினிடத்தில் வீரவிரதன்பிறந்தான், வீரவிரதனுக்குப் பொசையென்கிறஸ்திரீயினிடத்தில் மன்னியுவென்றும் பிரமன்னியுவென்றும் இரண்டுபிள்ளைகள் பிறந்தார்கள் மன்னியுவுக்குச் சத்தியனென்கிற ஸ்திரீயினிடத்தில் பவனன்பிறந்தான். பவனனுக்குத் தோஷையென்கிற ஸ்திரீயினிடத்தில் துவஷ்டாபிறந்தான் துவஷ்டாவுக்கு விரோசனையினியென்கிற ஸ்திரீயினிடத்தில் விரசன் பிறந்தான் விரசனுக்கு விஷ்டபதாவென்கிறஸ்திரீயினிடத்தில் சதசித்துமுதலான நூறுபிள்ளைகளும் ஒருகன்னிகையும்உண்டானுர்கள் அந்தவிரசன் விஷயமாக இந்த சுலோகம்சொல்லப்பட்டது பிரியவிரதனுடைய வங்கிசத்தில் கடைசியில்பிறந்த விரசனுனவன் அந்தவங்கிசத்தை மிகவும்கீர்த்தியினுலே அலங்கரித்தான்.

## ௰௬-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்;

சகலதீவுகண் மத்தியிற்றங்கிடும்
மகமேருவின்றன் மாட்சியும்பூமியாம்
மொகுட்டுத்தாமரைப் பூவின்மொக்கினது
பகட்டும்வர்ணிக்கப் படுகின்றதாமரோ

சகலதிவுகளுக்கும மத்தியிலேயிராநின்ற மகம்மேருவினுடையநிலேயும் பூமியாகிறதாமரைக்கமலத்தினுடையமொட்டும் வர்ணிக்கப்படுகின்றது.

பரிட்சித்து வாக்கியம்.

வாரீர்பகவானே யெந்தமட்டுக்கும் சூரியன்பிரகாசிக்கிறுனே சந்திரன் சுக்கில பட்சத்திலேயும், கிருஷ்ணபட்சத்திலேயும், நட்சத்திரகணங்களுடனேகூட யெந்தமட்டுக்குக் காணப்படுகிறுனே அந்தப்பூமண்டலத்தினுடைய விஸ்தாரம் அவ்வளவென்று உம்மாலேசொல்லப்பட்டது அந்தப் பூமண்டலத்திலேயும், பிரியவிரதனுடைய தேர் பண்டிகளினுலே உண்டாக்கப்பட்ட பள்ளங்களினுலே சப்தசாகரங்களும் அந்த சப்தசாகரங்களினுலே செய்யப்பட்ட தீவுக்களுடைய விபாகமும்உம்மாலே சவிஸ்தாரமாகச்சொல்லப்பட்டது, இதையெல்லாம் நான்பிரமாணங்களினுலேயும், லட்சணங்களினுலேயும்சவிஸ்தாரமாகஅறியவேணுமென்றிச்சிக்கிறேன் பகவானுடைய ஸ்தூலரூபமாயும் சுயப்பிரகாசமாயுமிருக்கிற வாசுதேவனிடத்தில் என்மனதைநிறுத்துகைக்கு யோக்கியமாகும்படி அவருடைய ஸ்தூலரூபத்தை எனக்கு விசிதமாகச் சொல்லவேணுமென்று பரிட்சித்தாவினுலே பிரஸ்னம்பண்ணப்பட்ட சுகயோகிசொல்லுகின்றார்.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய் மகாராஜனே, ஸ்ரீபகவானுடைய மாயாகுணஐஸ்வரியமாயிருக்கிற பிரபஞ்சத்தின் ஸ்தூலவிசேஷங்களுடைய நாமரூபங்களினது அவிதியை வாக்கினுலே சொல்லுகைக்கு புருஷனுனவன் தேவதைகளுடையஆயசைப்பெற்றிருந்த போதைக்கும் சமர்த்தனுகமாட்டான். ஆனபடியினுலே பிரதானங்களாயிருக்கிற பூகோளவிஷயங்களை நாமத்தினுலேயும், ரூபத்தினுலேயும், பிரமாணத்தினுலேயும், லட்சணங்களினுலேயும், வியாக்கியானம் பண்ணுகிறேும் பூமண்டலமாகிற கமலத்துக்

தினுல் சாம்புநதியென்றுபிரசித்தமான ஒருநதிபதினுயிரம்யோசனே உயர்ச்சியுடனேகூடின மேருமந்தரசிகரத்திலிருந்தும் பூமியில்விழுந்து தெற்காக இளாவிருத வருஷத்தில் எவ்வளவுதூரம் பிரவகிக்கிறதோ அந்தமட்டுக்கும் உபயதிரங்களிலேயுமிருக்கிற மிருத்திகையானது அந்தச்சாம்புநதிஜலத்தினுலே நனைக்கப்பட்டு வெய்யில் காந்தியினுடைய சம்பந்தத்தினுலேயுண்டானபாகத்தினுல் தேவஜனங்களுக்குப்பூஷணமானசாம்புநதமென்னப்பட்ட சுவர்னமாகாநிற்கிறது, அந்தச் சாம்புநதசுவர்னத்தைத் தேவர்கள்முதலானவர்கள் ஆபரணங்கள் செய்து தரித்துக்கொள்ளுகிறூர்கள்சுபராசுவமென்னப்பட்ட பர்வதத்திலே கதம்ப விருட்சமுண்டு அந்தவிருட்சத்தினுடைய பொந்துக்களில் நின்றும் பிரவகித்துக்கொண்டுஐந்துமார்பருமனேடுகூடின ஐந்துமதுதாரைகள்சுபராசுவசிகரத்தில் நின்றுவிழுந்து மேருவுக்குமேற்காகஇளாவிருதவருஷத்தைப் பரிமளிக்கச்செய்கிறதுகள் அந்தமதுதாரைகளைப் புசியாநின்ற பேர்களுடைய மூச்சினுலே நூறுயோசனே தூரம்பரிமளிக்கச்செய்கின்றது.

இந்தப்பிரகாரம் குமுதபர்வதத்திலேமுளேத்திராநின்றசதல்லிசமென்றுபிரசித்தமானவடவிருட்சமுண்டு அதினுடைய அடிக்கிளேகளில்நின்றும் பிரவகியாநின்ற பால்-தயிர்-நெய்-மது-இதுகளுடனே கூடின அன்னம் வஸ்திரம்-மஞ்சள்-ஆசனம்-ஆப்ரணம்- இது முதலான சர்வகாமியங்களேயுங்கரவாநின்ற நதங்கள் குமுதபர்வதத்தினுடைய சிகரத்தில்நின்றும்விழுந்துவடக்காகஇளாவிருதவருஷத்துக்கு வடவண்டை பக்கத்தில் இருக்கிற பேருக்கு அனுபோகத்துக்கு யோக்கியமா யிருக்கிறதுகள். அந்த மதுதாரைகளே அனுபவியா நின்ற பிரஜைகளுக்கு ஒருக்காலும்-நரை-திரை-மூப்பு- சாக்காடு-இதுகள்நீங்கி சுகமே உண்டாயிருக்கும்-குரங்கம்- குரவகம்-குசும்பம்-வைகங்கதம்-சித்திரகூடம்-சிசிரா=பதங்கம்=ருசகம்=நிஷதம்=சிகிவாசம்=கபிலம்-சங்கம்- வைடூரியம்-சாருதி-அமுசம்-ரிஷபம்-நாகம் - காளாஞ்சனம்-நாரதம்முதலான உபபர்வதங்கள்-பூமிக்குக் கர்ணிகைபோலேயிருக்கிற மேருவுக்குக் கெசரங்கள்போலே மேருவினுடைய மூலப் பிரதேசத்தில் நாலண்டையிலேயும் பண்ணப்பட்டிருக்கிறதுகள். சடாமென்றும், தேவகூடமென்றும், இரண்டுபர்வதங்கள் மேருவுக்குக் கிழக்காகப்பதினெண்ணுயிரம் யோசனேப்பிரமாணம்வடக்காக நீண்டதுகளாய் இரண்டாயிரம் யோசனேப்பருமம் உயர்ச்சியுடனே கூடினதுகளா யிருக்கிறதுகள், இந்தப்பிரகாரம் மேருவுக்கு மேற்காக நவமென்றும், பரீரியாத்திரமென்றும், இரண்டுபர்வதங்களுண்டாயிருக்கிறதுகள் மேருவுக்குத்தெற்காகக் கயிலாச மென்றும், கரவீரமென்றும்இரண்டுபர்வதங்கள் கிழக்காக நீண்டதுகளாயிருக்கிறதுகள்.

இந்தப்பிரகாரமே மேருவுக்குவடக்காகத் திரிசிருங்குமென்றும்,மகாமென்றும், இரண்டுபர்வதங்களுண்டாயிருக்கிறதுகள் இந்த எட்டுபர்வதங்களிலேயும்பரிஸ்தாணம்பண்ணப்பட்ட அக்கினிபோலேநான்குபக்கத்திலேயுஞ் சுவர்னபர்வதமான மகாமேரு பிரகாசிக்கிறது மேருவினுடையசிரசிலே பகவானுனபிரம்மாவுக்கு மத்தியதேசத்திலே செய்யப்பட்டதாய்ப்பதினுயிரம்யோசனேவிஸ்தாரத்தோடு கூடினதாய்-சமமாய்- சதுரஸ்ரமாய்-சாதகும்பியென்று ஒருபட்டணத்தைச் சொல்லுவர்கள். அந்தசாதகும்பிபட்டணத்தைச்சுற்றி நாலுபுறத்திலும் அஷ்டலோக பாலாளுக்கும் அவாளவாளுடைய ரூபத்தினுலே இரண்டாயிரத்தைஞ்ஞூறு யோசனேவிஸ்தாரத்தோடுகூடின உபநகரங்கள் பண்ணப்பட்டிருக்கிறதுகள்.

## ௰௭ வது அத்தியாயம்.

கலிவிருத்தம்,

சொர்னமேருவைச் சூழ்ந்தநாற்றிக்கினும்
வர்னகங்கை வரவுமிளாவிருத
வர்ஷத்தில்ருத்ரனுற் செய்வடிவுசங்
கர்ஷணவியூகோ பாசனமுங்கழறுவாம்.

மேருவுக்கு நாலுதிக்கிலேயும் கங்கையினுடைய வரவும்இளாவிருதவருஷத்திலே ருத்திரனுல் செய்யப்பட்டசங்கர்ஷணவியூகோபாசனமும்சொல்லப்படுகிறது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரிர்பசிட்சித்தே யாசொருசாதகும்பி யென்கிற மேருமத்தியில் இராநின்றபிரம்மாவினுடையபட்டணத்தில் பலிச்சக்கிரவர்த்தியினுடையஎக்கியத்தில்திரிவிக்கிரமாவதாரம்பண்ணி பாதத்தினுல் அளவாநின்றவிஷ்ணுவினுடைய இடதுகால்பெருவிரல் நகத்தினுல் பிளக்கப்பட்ட ஊர்த்துவமான அண்ட பித்தியினுடைய ரந்தரத்தினுல் உள்ளேபிரவேசிக்கப்பட்ட அண்டத்துக் கப்புறப்பட்ட ஜலங்களினுடைய தாரையானது அந்தபகவானுடைய பாதாரவிந்த பிரட்சாளனத்தினுல் பாத சம்பந்தியான குங்குமமாகிற செவந்தகேசரங்களினுல் ராகயுக்தமாகப் பண்ணப்பட்டு பாபங்களேப் போக்கடியாநின்ற ஸ்நான பானத்தை யுடையதாயும் நிர்மலமாயும் பகவானுடையபாதத்தில் உண்டானபடியால் விஷ்ணுபதியென்கிற நாமத்தையடைந்து யுகாயுகங்களான ஆகாயத்தினுடையசிரசில் ஆவிற்பவித்து விஷ்ணுபதத்தில்திரனுயும் பரமபாகவதனுயுமிருக்கிற உத்தானபாதனுடைய குமாரனுன துருவன் நாராயணனுடையசரணுரவிந்தோதகமென்று அந்தகங்கையைமூன்றுசந்திகளிலேயும் பக்தி

யினால்இளகிப்போகாநின்ற இருதயத்தையுடையவனாய் பத்மமுகுளம்போலொத்த இரண்டுநேத்திரங்களில் நின்றும்பெருகாநின்ற ஆனந்தபாஷ்பத்தினுடைய திவலையினால்பிரகாசிக்கப்பட்ட ரோமாஞ்சசமூகத்தையுடையவனாய் சிரசினால்பரியாநிற்கிறான் அந்த கங்கையினுடையபிரபாவத்தையறிந்த சப்தரிஷிகள்நம்முடையதபசுக்கு பலமிதுவேயென்று ஷாட்குண்ணியத்தோடு கூடினவரானவாசுதேவனிடத்தில் ஒழிவில்லாதபக்தியினாலே பலாந்தரத்தை அபேட்சியாமலிருக்கிற ஆத்மக்கியானத்தையுடையவாளாய் இப்பவும் ஜடாபரங்களால் வகிக்கின்றார்கள்.

அந்தகங்கையானது லோகத்தில் நின்றும் ஆகாசமார்க்கமாயிறங்கி பிர்மாவினுடைய கிரகத்தில்விழுந்து அவிடத்திலிருந்து நாலுப்பிரகாரமாகபேதிக்கப்பட்டுச் சிதையென்றும், அளகநந்தையென்றும், சட்சுவென்றும், பத்திரையென்றும், நாலுநாமங்களை யுடையதாய் நாலுதிக்கிலேயும்பிரவகித்துக்கொண்டு நதங்கள்நதிகள் இதுகளுக்கெல்லாம்பதியான சமுத்திரத்திற்பிரவேசிக்கின்றது அதுகளில்சிதையென்பது பிர்மாவினுடையகிரகத்துக்குக்கிழக்காக மேருவுக்குச்சமானமான கேசராதிபர்வதங்களினுடைய சிகரங்களிலிருந்துகிழக்கேபிரவகித்துக் கெந்தமாதனபர்வதத்தினுடைய சிகரங்களில்விழுந்து பத்திராசுவவருஷத்தை வியாபித்து கிழக்குத்திக்கிலேயிராநின்ற சமுத்திரத்திற்பிரவேசிக்கின்றது பத்திரையென்பது மேருசிகரத்திற்கு வடக்காகவிழுந்து நீலபர்வதத்தினுடைய சிகரத்தில்நின்றும் சுவேதபர்வதத்தினுடையசிகரத்தைத்தாண்டி சிருங்கவானுடையசிகரத்தில்நின்றும் கீழேபிரவகித்து வடக்குத்திக்கிலேலவணசமுத்திரத்திற்பிரவேசிக்கின்றது சட்சுவென்பதும் மாலியவானுடையசிகரத்தில்நின்றும் விழுந்து அங்கிருந்து கேதுமாலவருஷத்தில்விழுந்து மேற்குத்திக்கிலே லவண சமுத்திரத்திற் பிரவேசிக்கின்றது. அளகநந்தையென்பதுமேருவிலேயிராநின்ற பிர்மாவினுடைய கிரகத்திற்குத்தெற்கே அனேக பிரகாரங்களான கிரிசிகரங்களைஅதிக்கிரமித்து ஏமகூடம் இமாலயம் இதுகளுடையசிகரங்களை ஆக்கிரமித்துக்கொண்டு பாரதவருஷத்தில் விழுந்து தெட்சணதிக்கில் சமுத்திரத்திற் பிரவேசிக்கின்றது.

பாரதவருஷமே கர்ம்மசித்திக்கு க்ஷேத்திரமாகின்றது மற்ற எட்டுவருஷங்களும் புண்ணிய க்ஷேத்திரனுடைய வுபயோகஸ்தானங்களாயிருக்கின்றதுகள், அந்தபாரதவருஷம்தவிர இதரவருஷங்களில் தெய்வமானத்தினால் பதினாயிரம்வருஷம் ஆயுசை யுடையவாளாய் முடிவிலே ஒருகெர்ப்பத்தையுடையவாளானஸ்திரீகளை யுடையவளாயுமிருக்கிற புருஷாளுக்குக்காலம் திரேதாயுகத்தோடு சமானமாகவேயிருக்கும், இந்தவொன்பது வருஷங்களிலேயும்புருஷோத்தமரான ஸ்ரீமந்நாராயணன அந்தந்தபுருஷாளை அநுக்கிரகிக்கிறதின் பொருட்டு சான்னித்தியம்பண்ணிக்கொண் டிருக்கிறார் இளாவிருதவருஷத்திலேயோவென்றால் பகவானானருத்திரன் ஒருவனேபுருஷன் வேறேஒருபுருஷன் பார்வதியினுடையசாபநிமித்தியத்தை அறிந்தவனாய் அங்கே பிரவேசிக்கிறதில்லை யாதொருஇள ாவிரதத்தில்பிரவேசிக்கப்போகிறவன் ஸ்திரீஜென்மத்தை யடைவானென்று மேலே சொல்லப்போகிறோம் பார்வதிநாதனானருத்திரன் புருஷோத்தமருடைய நாலாம்வியூகமாயும் செகசிருஷ்டிக்குக்காரணமாயுமிருக்கிற சங்கர்ஷணமூர்த்தியைத் தன்னுடையசமாதியினால் சன்னிதானம் பண்ணிவைத்துக்கொண்டு இந்தமந்திரத்தைச்செபித்துப் பூஜிக்கின்றார்.

யாதொருமகாபுருஷனை வாசுதேவனை இந்தசெகத்தினுடைய வுற்பத்திஸ்திதிசங்காரங்களுக்கு ஏதுவாகவும்சொல்லுகிறார்கள், அப்படிப்பட்டபகவானுக்குப்பிரணாமம்பண்ணுகிறேன் சத்துவாதிகுணங்களினாலே பூர்ணமானவிக்கிரகத்தையுடையவனாயும் மகதத்துவஅபிமானியாயும் விக்கியானத்துக்குஇருப்பிடமாயும் அரசனாகியுமிருக்கிற பிரமாவானவர் யாதொருசங்கர்ஷணமூர்த்தியினிடத்தில்நின்றும்பிறந்தாரோ, அந்தப்பிர்மாவினிடத்தில்நின்றும் உற்பத்தியையுடையவனானான் சத்வாதிகுணத்தையுடையதான அகங்காரத்தினாலே வைகாரிகமென்னப்பட்ட இந்திரியஅபிமான தேவதைகளையும்தாமசமென்னப்பட்ட பூதவர்க்கத்தையும் சிருஷ்டிக்கிறானோ அப்படிப்பட்டபரமாத்மாவுக்குப் பிரணாமம், வலையிலேயகப்பட்டபட்சிகள்போலே மகத்துவமும்அகங்காரதத்துவமும் வைகாரிக தாமசங்கள் இதுகளான நாங்கள் எந்தப்புருஷனுடையவசத்திலே யிருந்துகொண்டு எவனுடையஅநுக்கிரகத்தினாலே யிந்தப்பிரபஞ்சத்தைச்சிருஷ்டிக்கிறோமோ அப்படிப்பட்டபகவானுக்குப்பிரணாமம், இந்தப்பிரகாரம் சங்கர்ஷணமூர்த்தியை ருத்திரனானவர் இளாவிரதவருஷத்திலேபிரதிதினம் உபாசித்துக்கொண்டிருக்கிறார்.

## ௧௮-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

உந்துநான்கு பாரிசங்களிலேயும்
அந்தந்தவருஷங்களி லார்ந்திடும்
நந்துபாசியந்த ளானநன்னுதர்கள்
இந்துநேரின்னின் னொன்றியம்புவாம்,

நாலுபாரிசங்களிலேயும் அந்தந்த வருஷங்களிலேயிராநின்ற வுபாசியர்களான பகவன்மூர்த்திகளும் உபாசகாள்இன்னாரின்னாரென்றும் சொல்லப்படுகின்றது.

எக்கிய வராக ரூபியாயிருக்கிற பகவானை உபாசித்துக் கொண்டிருக்கிறாள்,

## ௰௯-வது-அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்,

சொல்லரியகிம்புருடவருடந்தன்னிற்
சுந்தரமாம்ஸ்ரீராமமூர்த்திதன்னை
அல்லலின்றியனுமாராலுபாசித்தாரென்
றறைந்ததலாற்பாரதநன்வருடந்தன்னில்
பல்லோர்கள்துதிநாரதேந்திரராஞேர்
பகவன்நாராயணனைத்துதித்துமந்த
வல்லபாரதவருடத்துக்குச்சிரேஷ்டம்
வழுத்தியதும்வண்மையதாய்வழுத்துவோமே,

கிம்புருடவருடத்திலே ஸ்ரீராமமூர்த்தியானபகவானானவர் அனுமாராலே உபாசிக்கப்படுகிறாரென்றும்பாரதவருஷத்திலே ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் நாரதமகாரிஷியினாலே உபாசிக்கப்படுகிறாரென்றும் பாரதவருஷத்துக்குச் சிரேஷ்டமுஞ் சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

கிம்புருடவருடத்திலே கியானசக்தி முதலான குணங்களையுடையவராயும், ஆதிபுருடராயும், லட்சுமணனுக்குத் தமையனாகியுமிருக்கிற சீதா ராமமூர்த்தியினுடைய சரணாரவிந்தங்களிலே மனதை யுடையவராயும் பரமபாகவதராயுமிருக்கிற அனுமான் அந்தகிம்புருடவருடத்திலேயிராநின்ற புருஷர்களோடுகூட சர்வகாலத்திலேயும் நீங்காமலிருக்கிறபக்தியையுடைவராய்ப் பசனைபண்ணிக்கொண்டிருக்கிறார். மந்திரத்தினுடையபொருள்ராகாதிகளினாலே தூஷிக்கப்படாத விசுத்தக்கியானசுரூபமாயும் தன்னுடைய மகாத்துமத்தினால் சத்வாதிகுணகாரியங்களான சாக்கிராதி அவஸ்தைகளில்லாதவராயும், சுயம்பிரகாசராயும், மிகுந்தகாந்தியையுடையவராயும், யோகத்தினாலேபிறந்த கியானத்தினால் அறியத்தக்கவராயும், கர்ம மூலங்களான நாமரூபங்களில்லாதவராயும், அகங்காரமமகார மில்லாதவராயுமிருக்கிற அந்தஸ்ரீராமமூர்த்தியைச் சரணமாக வடைகிறேன் இந்தப்பிரகாரம் கிம்புருடவருடத்தில்ஸ்ரீராமமூர்த்தியான அரியைஅனுமார் உபாசனைபண்ணிக்கொண்டிருக்கின்றார்.

பாரதவருஷத்திலேயும் பகவானானநாராயணர்கல்ப்பாயுசானபரியந்தம் விருத்தியையடையாநின்ற தர்மக்கியானம், வயிராக்கியம், அயிஸ்வரியம், பரகேந்திரியநிக்கிரகம், மனோநிக்கிரகம், பரமாத்ம சொரூபக்கியானம் இதுகளையுடையதான தபசைதமையினால்ஆத்துமக்கியானிகளுக்கு அனுக்கிரகத்தின் பொருட்டு ஒருவராலேயும் அறியப்படாத அந்தப் பகவானைக் கியானசக்தி முதலான குணங்களையுடைவரான நாரதர் வர்ணாசிரமங்களை யுடையவர்களாயும் பாரதவருஷத்தில் இராநின்றுமிருக்கிற பிரஜைகளுடனேகூடபகவானாலேசொல்லப்பட்டதுகளான சாங்கியயோகங்களினால் பகவத்பிரபாவ உபதேசத்தை யுடையதான பாஞ்சராத்திர சாஸ்திரத்தைச் சாவர்ணிமனுவுக்கு உபதேசிக்கப்போகிறவராய்ப் பரமமானபக்தியுடனேஉபாசிக்கிறார். கியானசக்தி முதலானகுணங்களுக்கு இருப்பிடமாயும் சாந்தியைச் சுபாவமாகவுடையவராயும்,தேகாபிமானத்தையொழிந்தவராயும், அகிஞ்சனரென்னப்பட்ட ஏழைகளுக்குத் தனமாயும், கியானிகளுக்குப்பரமகுருவாயும், ஆத்மானுபவநிஷ்டாளுக்கு அதிபதியாயும், நரநாராயணரூபத்தினால் அவதரித்திருக்கிற சுவாமிக்கே பிரணாமம் இந்தபிரகாரம் பாரதவருடத்தில் ஸ்ரீமந் நாராயணரை நாரதமுனியானவர் உபாசித்துக்கொண் டிருக்கிறார்,

இந்தப்பாரதவருடத்தில் வெகுப் பிரகாரங்களான நதிகள், பர்வதங்கள் உண்டாயிருக்கிறதுகள்எப்படியென்றால் மலயமென்றும், மங்கிரப்பிரஸ்தமென்றும் மைநாகமென்றும், திரிகூடமென்றும், ரிடபமென்றும், குடகமென்றும், கோஷ்டணமென்றும், சைகமென்றும், வேதகிரியென்றும், ரிஸ்வமுகமென்றும், ஸ்ரீ சைலமென்றும், வேங்கடமென்றும், மகேந்திரமென்றும், வாரிதாரமென்றும், விந்தியமென்றும், சுகத்திமானென்றும், ரிட்சகிரியென்றும், பாரியாத்திரமென்றும், துரோணமென்றும், சித்திரகூடமென்றும், கோவர்த்தனமென்றும், ரைவதகமென்றும், கபுகமென்றும், நீலமென்றும், கோகாமுகமென்றும், இந்திரநீலகமென்றும்,இமயகிரியென்றும், இப்படிப்பட்ட பர்வதங்களும்,மற்றுஞ்சிலபர்வதங்களும் வெகுபிரகாரமாயுண்டாயிருக்கிறதுகள். அந்தப்பர்வதங்களினுடைய தாழ்வரைப்பிரதேசங்களில் உண்டாகாநின்ற நதிகளும் நதங்களும் எண்ணிக்கையில்லாமலிருக்கிறதுகள் அந்த நதிநதங்களுடைய ஜலங்கள் பாரதவருடத்தி லிராநின்ற பிரசைகளை நாமமாத்திரத் தீரத்தினால் பாவனமாகப் பண்ணாநிற்கிறதுகள் நாமத்தினாலேயும், சுரூபத்தினாலேயும், சிலநதிகள்பாவனம் பண்ணாநிற்கிறதுகள் என்ன வென்றால் சந்திர வசையென்றும், தாம்பர பரணியென்றும், அவடோதரவென்றும்,கிருதுமாலாவென்றும்,வைகாயிசியென்றும், காவேரியென்றும், பெண்ணையென்றும், கூபிரந்தியென்றும், சக்கராவதியென்றும், துங்கபத்திரையென்றும், கிருஷ்ண வேணியென்றும் பீமநதியென்றும் நிருவிந்தியாவென்றும் கோதாவிரியென்றும் பயோஷணியென்றும் தாபினியென்றும் ரேவா வென்றும் சுரசாவென்றும் நிர்மலா வென்றும் சாமணவதியென்றும், சிந்துவென்றும், சோணமென்றும் இரண்டும் நதம்

கள்-மகாநதியென்றும்-வேதஸ்மிரதியென்றும்- ரிஷிகுல்லியாவென்றும்-கவுசிகியென்றும்,மந்தாகினியென்றும்-யமுனையென்றும்- சரஸ்வதி யென்றும்- பிருஷூத்துவதியென்றும்-கோமதியென்றும்-சரையூவென்றும்- உரோம்வதியென்றும்-சுகோஷ்டாவென்றும்- குட்சமனுவென்றும்-சத்துருவென்றும் - மருத்துருதாவென்றும்- விதஸ்தாவென்றும்-அசிக்னியென்றும்- விசுவாயென்றும்-இப்படிப்பட்ட மகாநதிகள் உண்டாயிருக்கிறதுகள்.

இந்தப்பாரதவருஷத்திலேயே சென்மத்தையுடையவாளான புருஷாளாலே சாத்துவீக ராஜச தாமசமானமூன்றுபிரகாரமான காமத்தினலே சொர்க்கமென்றும் நரகமென்றும் மனுஷியலோகமென்றுஞ்சொல்லப்படுகிறவிதிகளானதுகள் சர்வப்பிராணிகளுக்குக்கர்மானுகுணமாய் உண்டாயிருக்கிறதுகள் இந்தப் பாரதவருஷத்திலேயே வர்ணுசிரமதர்மத்துக்கு அனுகுணமாய்மனுஷியாளுக்கு மோட்சமும்உண்டாயிருக்கிறதுபக்தியோகத்தைச்சுரூபமாகவுடையதாயும் அக்கியானபந்தத்தை நாசம்பண்ணியுமிருக்கிற பரம பாகவதாளுடைய சங்கமானது புருஷனுக்குஎப்போவுண்டாகிறதோ அப்போ மோட்சமும் பாரதவருஷத்திலேமனுஷியசென்மத்தையே தேவதைகளும் உத்கிருஷமாகக் கானம் பண்ணுகிருர்கள் இந்தப் பாரதவருஷத்திலே கியானம் கியானத்துக்கு ஏதுவானகர்மங்கள் கர்மங்களுக்குஏதுவானதிரவியங்கள் இதுகளினலேசம்பூர்னமாயிருக்கிற மனுஷியசென்மத்தை அடைந்திருக்கிறவர்களால் மோட்சத்தின் பொருட்டாகப்பகவானனவர் ஆராதிக்கப்படவில்லையோ அப்படிப்பட்டவர்கள் மிருகங்கள் பட்சிகள்போலத்திருமபவுஞ் சமுசாரபந்தத்தை யடைகிருர்கள்.

அவர்களால்எக்கியத்தில் சிரத்தையுடனே பாகமாகப்பண்ணப்பட்டும் சாஸ்திரப்பிரகாரமாக மந்திரங்களினல் புரோட்சமமுதலான திரவியங்களினல் ஓமம்பண்ணப்பட்டுமிருக்கிற அவிசைப்பகவானனவர் தாமொருவரோ இந்திராதி தேவதைகளுடைய நாமங்களினல் அழைக்கப்பட்டவராய்ப் பரிபூர்ணராயிருந்தாலும் சர்வாபீஷ்டங்களைக் கொடுக்கிறவராயிருந்தாலுஞ் சந்தோஷத்துடனே யங்கீகரிப்பதினல் அந்தப்புருஷாளேமகாபாக்கியத்தைப் பண்ணவர்களல்லவா பகவானனவர் பிரார்த்திக்கப்பட்ட மனுஷியாளுக்குக்கோரப்பட்ட அர்த்தத்தைச் சத்தியமாகக்கொடுக்கிருர் அந்தப் பாரதவருஷத்திலே பஜனைபண்ணுனின்றபேருக்குப்பகவான்நிரதிசயசுகமான மோட்சத்தைக் கொடுக்கிருர், அப்படிப் பட்ட பாரதவருஷத்திலே நமக்குச் சென்மமுண்டாகக் கடவதென்று தேவதைகள்பாரதவருஷத்தைச் சிரேஷ்டமென்றுகொண்டாடுகிருர்கள். வாராய்ராஜரேவே சிலபேர்இந்தஜம்புத் தீவுக்குச் சகரபுத்திரர் அசுவத்தைத்

தேடும்போது இந்தப்பூமியையெங்கும் வெட்டினதினலேபண்ணப்பட்டதுகளான எட்டுவுபத்தீபங்களிருக்குதென்றுசொல்லுகிருர்கள், அதெப்படியென்ருல் சொர்னப்பிரஸ்தமென்றும்-சந்திரவலகமென்றும்-ஆவர்த்தனமென்றும்-ரமணகமென்றும்-மந்த அரணமென்றும்-பாஞ்சசன்னியமென்றும் சிம்மளமென்றும்-லங்கையென்றும்-பெய்ணாயுடையதுகளாய் எட்டு வுபத்தீபங்களிருக்கிறதுகள் வாராய் பாரதவுத்தமனே இந்தப் பிரகாரமுனக்குஜம்புத்தீபவருஷத்தினுடையவிபரங்கள் இதோபதேசமாகச் சொல்லப்பட்டதுகள்,

## உ௰வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

சத்தசாகரங்க ளுடன்கூடவே
சுத்தபிலட்சத் தீபமுதலாகிய
சித்யவாறு தீபங்கள்நிலையையும்
வெற்றியாக விளம்பியதாமரோ,

சமுத்திரங்களுடனேகூட பிலட்சத்தீபமுதலான ஆறுதீபங்களுடைய னிலையையும்சக்கிரவாளகிரியினுடையனிலையையும்அதற்குட்பட்ட பிரதேசங்களையும் வெளிப்பட்ட பிரதேசங்களையுஞ் சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாரீர்பரிட்சித்தே இனிமேல்பிலட்சமுதலான திவுக்களுடைய அகலம்னிகளமிதுகளுடைய அளவும்- சுரூபமும் ஆகாரமும் இதுகளோடு வருஷங்களுடையவிபாகமுஞ் சாஸ்திரத்தைஅதிக்கிரமியாமல்சொல்லப்படுகிறது இந்தஜம்புத்தீவு எவ்வளவு விஸ்தாரத்தோடு கூடினதோ அவ்வளவுலட்சம் யோசனை விஸ்தாரமான லவண சமுத்திரத்தினலே சூழப்பட்டிருக்கிறது எப்படியானல் மேருவானது சம்புத்தீவினலே சூழப்பட்டிருக்கிறதோ அப்படி லவணசமுத்திரமும் இரண்டு லட்சம்யோசனை விஸ்தாரத்தோடுகூடினபிலட்சத்தீவினலே சூழப்பட்டிருக்கிறது செம்பு விருட்சத்தினுடைய பிரமாணத்தோடு சமமான பிரமாணத்தை யுடையதாயும் பிலட்சத்தீபமென்கிறபேருக்குக் காரணமாயும் சுவர்னமயமாயுமிருக்கிற பிலட்சவிருட்சமானது அந்தபிலட்சத்தீவிலே யுண்டாயிருக்கிறது அந்த பிலட்சத் தீவிலே ஏழுசுவாலையாகிற நாக்கை யுடையவனை அக்கினியானவன் சான்னித்தியம் பண்ணி யிருக்கிருன் அந்தபிலட்சத்தீவுக்குப் பிரியவிரதனுடைய பிள்ளையான இத்துமசிக்குவானவன் அதிபதி அவன்தன்னுடைய அந்தபிலட்சத்திபத்தை ஏழுவருடங்களாகப் பிரித்துஅந்தவருடநாமங்களுடன்கூடின ஏழுபிள்ளைகளுக்குங் கொடுத்துவிட்டுத் தானும் ஆத்மத் தியானத்தில் சம்சாரத்தில்னின்றும்நீங்கினன்,

சிலமென்றும்,வயசமென்றும், சுபத்திரமென்றும் சாந்தமென்றும்,ஷேமமென்றும், அபயமென்றும், ரிதமென்றும், பிலட்சத்திபவருடங்களுடையநாமங்கள் அந்தப்பிலட்சத்திபவருடங்களில்மரியாதா பர்வதங்கள்ஏழும் மகாநதிகள்ஏழுமேபிரசித்தமா யிருக்கின்றதுகள் அதென்னவென்றால் மணிகூடமென்றும். வச்சிரகூடமென்றும் இந்திரசேனமென்றும், சோதிடாமென்றும் தாம்பரவர்ணமென்றும் இரணியகிரிவமென்றும் மேசமாலமென்றும் மரியாதாபர்வதங்களுடையநாமங்கள்அருணையென்றும், ரமணையென்றும், ஆங்கிரசியென்றும் சாவித்திரியென்றும், சுப்பிரபாதாவென்றும்,ருதம்பராவென்றும், சத்தியம்பராவென்றும், மகாநதிகளுடைய நாமங்கள். இந்நதிகளுடைய செலபானத்தினால் ரஜஸ்தமோகுணங்களை விடப்பட்டவர்களாய் அம்சாளென்றும்,பதங்காளென்றும், ஊர்த்துவாயளென்றும், சத்தியங்காளென்றும், பெயரையுடையவர்களான நாலு வானத்தார் சகஸ்திரவருடபரியந்தமான ஆயுசை யுடையவர்களாய்த் தேவதைகளுக்குச் சமானமானரூபத்தையும்,பிரஜோற்பத்தியு மு[illegible]யவர்களா யிருக்கிறார்கள். அந்த நாலுவர்ணங்களும் [illegible]மயமாயிருக்கப்பட்ட சூரியனையே பரமாத்மாவாக [illegible]மார்க்கங்களினால் உபாசிக்கின்றார்கள்.

பிலட்சத்திபமுதலான அஞ்சுதீவுகளி லிராநின்ற புருஷாள் உற்பத்தியாகும்போதே பலபராக்கிரமம் ஆயுசுவிர்த்தி இதுகளெல்லாஞ்சித்தியாகவேயிருக்கும் பிலட்சத்திபமேதென்றால் தன்னோடுசமானமாக இரண்டுலட்சம்யோசனைப் பிரமாணத்தை யுடையதான இட்சுரசோதமென்கிற கருப்பஞ்சாறு சமுத்திரத்தினால் சூழப்பட்டிருக்கும் இதைப்பார்க்கிலும் இரட்டிப்பான விஸ்தாரத்தையுடையதாய் நாலுலட்சம் யோசனையோடுகூடின சால்மலித்தீபம தன்னோடுசமானமானசுராசமுத்திரத்தினால் நாலண்டையிலேயும்சூழப்பட்டிருக்கும், அந்தச்சால்மலித்தீவில் பிலட்ச விருட்சத்தோடு சமானமான உயர்ச்சியையுடையதான சால்மலவென்னப்பட்ட இலவுமரம் உண்டாயிருக்கிறது அந்தச் சால்மலிவிருட்சத்தினுடைய மூலப்பிரதேசத்தில்கியானசக்திமுதலான குணங்களையுடையவராயும் பட்சிகளுக்கெல்லாம் ராஜாவாயுமிருக்கிறகருடனுக்கு வாசஸ்தானமாகச்சொல்லுவார்கள். அந்தத்தீபமானது சால்மலி விருட்சத்தினால் சால்மலியென்று பெயரையுடையதா யிருக்கின்றது அந்தத்தீபத்துக்கு அதிபதிபிரியவிரதன் பிள்ளையான எக்கியபாகு வாகுவென்கிறவன் தன்பிள்ளைகளானஏழுபேருக்கும் அந்தத்தீபத்தை அந்தப்பிள்ளைகளுடையநாமங்களையுடையதான ஏழுவருஷங்களாகப் பிரித்துக் கொடுத்தான், சுரோசன மென்றும், சவுமனசியமென்றும். ரமணகமென்றும், தேவபெருகமென்றும், பாரிபத்திரமென்றும், ஆப்பியாயனமென்றும், அபிக்கியானமென்றும், வருஷங்களுக்குப்பேர், அந்தவருஷங்களுக்குள்ளே வருஷபர்வதங்கள்ஏழும்,நதிகள், ஏழும் பிரசித்தமாயிருக்கின்றதுகள், என்னவென்றால் சுவற்சமென்றும் சதசிருங்கமென்றும், வாமதேவமென்றும், குந்தமென்றும், குமுதமென்றும்புஷ்பவருஷமென்றும் சகசுறுதியென்றும் வருஷ பர்வதங்களினுடையபேர் அனுமதியென்றும் சினிவாலியென்றும்,சரசுவதியென்றும் குகுவென்றும் அசிக்கினியென்றும் நந்தாவென்றும் ராகாயென்றும் நதிகளுடைய நாமங்கள் சுருத்திராளென்றும் வீரியதாராளென்றும் வசுந்தராளென்றும் இஷ்டந்தரளென்றும் பிரசித்தாளான பேரையுடையவர்களான அந்தச்சால்மலிதீவிலே யிராநின்ற நாலுவர்ணங்களும் பகவானையும் வேதமயனையுமிருக்கிற சந்திரனையே பரமாத்மாவாக உபாசிக்கின்றார்கள்தன்னுடைய கிரணங்களினால் சுக்கிலபக்ஷத்திலேயும் கிருஷ்ணபக்ஷத்திலேயும் பிதுர்களுக்கும் தேவர்களுக்கும் அமிர்தரூபமான அன்னத்தைக் கொடுத்துக்கொண்டு எல்லாப்பிரஜைகளுக்கும் ராஜாவானசந்திரன் எங்களுக்கு அமிர்தத்தைக் கொடுக்கக்கடவனென்றுபொருளுடனேகூடினமந்திரத்தினாலே சந்திரனைப்பூஜிக்கிறார்கள்,

இந்தப்பிரகாரம்சுராசமுத்திரத்துக்குவெளியில் அந்தச் சுராசமுத்திரத்துக்கு இரட்டிப்பான கிருதோதகவென்கிற நெய்க்கடலினால் சூழப்பட்டதாய்க் குசத்தீபம் உண்டாயிருக்கிறது அந்தக்குசத்தீவில் தேவனால்செய்யப்பட்ட குஜஸ்தம்பமானது குஜஸ்தீபத்துக்கு நாமயேதுவா யிருந்துகொண்டுவேறொருஅக்கினிபோலே தன்னுடைய மனோக்கியமானகாந்தியினால்பத்துத்திக்குகளையும் பிரகாசிப்பிக்கின்றது அந்தத்தீபத்துக்குச்சுவாமியாயிருக்கிற பிரியவிரதபுத்திரனான இரணியரேதாவானவன் அந்தத்தீபத்தைத் தன்னுடைய புத்திரர்களான ஏழுபேருக்கும் ஏகாபாகமாய்ப்பிரித்துஏழுபிள்ளைகளுக்குங்கொடுத்துத் தான்தபசியிருந்தான். அந்தப்பிள்ளைக்குப்பேர் வசுவென்றும்,வசுதானனென்றும் திடருசியென்றும், நாபிகுப்தனென்றும் சத்தியவிரதனென்றும், விப்பிரனென்றும், வாமதேவனென்றும்பேர் அந்தவருடங்களில் வருடபர்வதங்களும் மகாநதிகள் ஏழும்பிரசித்தமா யிருக்கின்றதுகள். பெப்புறவென்றும் சதுசிறுங்கமென்றும் பிப்பலமென்றும், சித்திரகூடமென்றும், தேவாநிகமென்றும், ஊர்த்தரோமாவென்றும், திரவிணமென்றும், வருட, பர்வதங்களினுடையபேர், ரசகுல்லியையென்றும், மதுகுல்லியையென்றும், சுருறுவிந்தையென்றும், மித்துறுவிந்தை

யென்றும் தேவகொர்ப்பையென்றும் கிருதச்சுதாவென்
றும் மந்திரமாலையென்றும், நதிகளுடையபேர், அந்த
நதிகளின் தீர்த்தங்களினால் அந்தக் குசத்தீபத்திலிருந்
துகொண்டு குசலாளென்றும் கோவிதாளென்றும், அ
பியுக்தாளென்றும், குலகாளென்று, பெயரையுடைய
வர்களான பிரஜைகள் கர்மங்களினால் பகவானை அக்கி
னிமூர்த்தியைப் பூசிக்கின்றார்கள்,

இந்தப்பிரகாரம் நெய்க்கடலுக்குவெளியிலே அத
ற்கிரண்டத்தனை விசாலத்தோடுகூடின கிரவுஞ்சத்தீப
மானது தன்னோடுசமானமான பாற்கடலினாலே குசத்
தீபம்போலே நாலண்டையிலேயும்சூழப்பட்டிருக்கும்
அந்தக்கிரவுஞ்சதீபத்திலே கிரவுஞ்சமென்கிற பர்வத
ராஜனால் அந்தத்தீவுக்குகிரவுஞ்சமென்கிற பேருக்குஏ
துவாயிருக்கின்றது அந்தக்கிரவுஞ்சத்தீபம் சுப்பிரம
ணியருடைய ஆயுதத்தினாலே துளைக்கப்பட்ட தாழ்வ
ரைப்பிரதேசத்தை யுடையதாயிருந்தாலும் பாற்கடலி
னாலே நனைக்கப்பட்டு பகவானைவருணனாலே ரட்சிக்
கப்பட்டதாய் நிர்ப்பயமாயிருக்கிறது அந்தக்கிரவுஞ்சத்
தீபத்திலேயும், பிரியவிருதகுமாரனை கிருதபிருஷ்ட
ன் அதிபதியாயிருக்கிறான் ஃ அவன்தன்னுடையதீபத்தை
ஏழுவருஷங்களாகப்பிரித்து தன்புத்திராளுடைய நாம
த்தையுடையதான அந்த வருஷங்களுககுள்ளே தன்பி
ள்ளைகளை வருஷபதிகளாகஸ்தாபித்து தான்சர்வாந்திரி
யாமியான ஸ்ரீஹரியினுடைய பாதார விந்தத்தையடை
ந்தான், ஆமோதனென்றும் துவகமென்றும் மேகப்பி
ரஷ்டனென்றும், சுதர்மனென்றும், ரெஞ்சிஷ்டனென்
றும், லோகதாரணனென்றும் வனஸ்பதியென்றும், கி
ருதபிஷ்டனுடைய, பிள்ளைகளுக்குப்பேர். அவாளுடை
யவருஷங்களிலே வருஷபர்வதங்கள்ஏழும் மகாநதிகள்
ஏழும் பிரசித்தமாயிருக்கிறதுகள் ஃ அதுகளுடையபேர்
சுக்கிலமென்றும், வர்த்தமானமென்றும் போஜனமெ
ன்றும் உபபெருகணமென்றும் ஆனந்தமென்றும் நந்
தமென்றும் சர்வதோபத்திரமென்றும் வருஷபர்வத
ங்களினுடையநாமங்கள். அபையாயென்றும், அமிர்த
வுகாயென்றும் ஆரியகாயென்றும் தீர்க்கவதியென்று
ம் பாத்திராவதியென்றும் பவித்தீர்வதியென்றும் சுக்
கிலையென்றும் மகாநதிகளுக்குப்பேர் அந்தநதிகளுடை
ய பரிசுத்தமானதீர்த்தத்தைப் பானம்பண்ணியும் குரு
வென்றும் ரிஷிபனென்றும் திரவிணனென்றும் தேவ
கனென்றும் பேரையுடையவளான வருஷபுருஷாளான
வர்கள் வருணதேவனைதீர்த்தபூர்ணமான அஞ்சலியினா
லே பூசிக்கின்றார்கள்,

இந்தபபிரகாரம் பாற்கடலுக்கு வெளியிலே நால
ண்டையிலேயும் முப்பத்திரண்டு லட்சயோசனை விஸ்
தாரத்தோடுகூடினதாயிருக்கப்பட்ட சாகத்தீபமானது
தன்னுடனேசமானமான தயிர்க்கடலினாலே நாலண்டை
யிலேயும், சூழப்பட்டிருக்கும் அந்தசாகத்தீவிலே சாக
மென்னப்பட்டவிருட்சம் தன்னுடைய க்ஷேத்திரத்துக்
குநாமத்தைப் பிரசித்திபண்ணிவைக்கின்றது, அந்த சா
கத்தீபத்துக்கும் பிரியவிருதகுமாரனை மேதாதிதியே
அதிபதியாயிருக்கின்றான், அவனும் தன்னுடையதீபத்
தைப் புத்திராளுடைய நாமங்களையிட்டு ஏழாகப்பிரித்
து அந்தவருஷங்களான பூகண்டங்களிலே புரோசகனெ
ன்றும், மனோசவனென்றும், வெபமானனென்றும் தூம்
பராணிகனென்றும், சித்திராத னென்றும், வெகுருப
னென்றும் விசுவவராளென்றும் பேரை யுடையவாளா
னபுத்திராளை அதிபதிகளாகஸ்தாபித்து தானும் பகவா
னிடத்திலே மனதையுடையவனாய் தபோவனத்தைப்பி
ரவேசித்துத் தபசுபண்ணிக்கொண்டிருக்கிறான் அந்தச்
சாகத்தீபத்திலேயிராநின்ற வருஷங்களுக்குமரியாதா ப
ர்வதங்கள்ஏழும் மகாநதிகளேழும் உண்டாயிருக்கிறது
கள் ஈசானமென்றும் உருசிங்கமென்றும்பலபத்திரமெ
ன்றும் சதகோரமென்றும் சகஸ்திரசுரோதசுவென்றும்
தேவபாலமென்றும் மகாசமென்றும் பர்வதங்களுக்கு
ப்பேர் அநகாயென்றும் ஆயுர்த்தாவென்றும்உபையசி
ருஷ்டியென்றும் அமராசிதாவென்றும் பஞ்சபதியென்
றும் சகஸ்திரசுதியென்றும் நிசதுருதியென்றும் மகாந
திகளுக்குப்பேர் அந்தசாகத்தீபத்திலேயிராநின்றநிதவி
ரதாளென்றும்சத்தியவிரதாளென்றும் தானவிரதாளெ
ன்றும் அனுவிரதாளென்றும் பெயரையுடையவாளான
புருஷாள்பகவானையும் வாயுரூபியாயு மிருக்கிற சுவாமி
யைபிராணயாமத்தினாலே ரசஸ்தமசுக்களைநசிப்பித்தவர்
களாய் பரமமானசமாதியினாலே யுபாசிக்கின்றார்கள்

இந்தப்பிரகாரம் தயிர்க்கடலுக்குவெளியிலே புஷ்
கரத்தீபம் சாகத்தீவுக்கு இரட்டிப்பு விஸ்தாரத்தோடு
கூடினதாய் நாலண்டையிலேயும் தன்னுடனே சமான
மானசுத்தஜலசமுத்திரத்திலேவெளியிலே சூழப்பட்டி
ருக்கும் அந்தபுஷ்கரதீபத்திலே பெரிதாகியும் அக்கினி
யினுடைய சிகையைப்போலேநிர்மலமாயும் லட்சம் இ
தழுடனேகூடினதாயும் பகவானையும் கமலாசனனையு மி
ருக்கிற சதுர்முகனுக்கு ஆசனமாகப்பண்ணப்பட்டுமிரு
க்கிற தாமரசபுஷ்பமுண்டாயிருக்கின்றது அந்தபுஷ்கர
த்தீபத்தினடுவிலே மானசோத்திர மென்கிற பர்வதமா
னதுஒன்றே தனக்குவுட்பட்டவருஷத்துக்கும் வெளிப்
பட்டவருஷத்துக்கு மரியாதாபர்வதமாகநிற்கிறது அந்
தப்பர்வதம் பதினாயிரம்யோசனை யுயர்ச்சி விஸ்தாரங்க
ளுடனேகூடினதாயிருக்கிறது அந்தமானசோத்திரபர்
வதத்தினிடத்திலே நாலுதிக்குகளிலேயும்லோகபாலா
ளான இந்திராதிகளுடைய நாலுபட்டணங்க ளுண்ட

யிருக்கிறதுகள் அந்தமானசோத்திரபர்வதத்தின்மேலே
மேருவைச்சுற்றுநின்ற சூரியரதத்தினுடையசம்வச்சர
சுரூபமானசக்கிரமானது உத்தராயனதெட்சிணாயனமா
ர்க்கங்களினாலே சுழன்றுகொண்டிருக்கிறது அந்தபுஷ்
கரத்திபாதிபதி பிரியவிருதகுமாரனானசதிகோத்திரன்,
அவனுடையபிள்ளை ரமணகமென்றும் யாதனென்றும்,
பேரையுடையவர்களான இரண்டுபேரையும் வருடபதி
களாகநேமித்து அந்தவீதிகோத்திரன் தன்பெரியோர்க
ளைப்போல பகவத்கர்மத்தையே செய்துகொண்டிருக்கி
ருன் அந்தப்புஷ்கரத்திபத்திலிராநின்றபுருடாள்பிர்மரூ
பியானபகவானை பிர்மசாலோக்கியாதிகளுக்குச் சாதன
மாயிருக்கிற எக்கியாதிகர்மத்தினாலேஆராதிக்கிறார்கள்

அந்தச்சுத்தோதக சமுத்திரத்துக்கு வெளியிலே
லோகாலோகமென்றுபேரையுடையபர்வதமானது சூ
ரியப்பிரகாசத்தையுடையதேசத்துக்கு பிரகாசமில்லா
ததேசத்திற்கும் நடுவிலேநான்னடையிலேயும், மரியா
தாபர்வதமாகப்பண்ணப்பட்டிருக்கின்ற சோத்திரபர்வ
தத்திற்கும்மேருவுக்கும்நடுவிலே யெவ்வளவுபூமியோ
அவ்வளவுபூமி சுத்தசல சமுத்திரத்திற்கு அப்பாலே
லோகாலோகபர்வதத்திற்குஉட்புறத்திலேஉண்டாயிரு
க்கிறது அதற்கப்பாலேகண்ணாடிபோலொத்ததளையை
யுடைய காஞ்சனமயமானபூமிஉண்டாயிருக்கின்றது அ
ந்தப்பூமியின்பேரில்விழுந்தபதார்த்தமானது காண்பத
ற்குஅரிதாயிருக்கும் ஆகையினால்சமஸ்தபிராணிகளினா
லும் பரிகரிக்கப்பட்டிருக்கின்றது இந்தலோகாலோகப
ர்வதமானது ஐம்பதுகோடி விஸ்தாரத்துடனே கூடின
பூமண்டலத்துக்கு நாலிலொருபங்கான பன்னிரண்டரை
யாகோடியோசனையுடனேகூடின லோகாலோக பர்வ
தத்திற்குமேல் நாலுதிக்குகளிலேயும்அகிலலோககுரு
வானசதுர்முகனுல்ரிஷபமென்றும் புஷ்கரசூடமென்று
ம்வாமனமென்றும் அபராசிதமென்றும் பேரையுடை
யதுகளாய் சகலத்தினுடையஇருப்புகளுக்குஎதுகளா
ய்நாலுதிக்கெஜங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதுகள்,

அங்கபர்வதசிரேஷ்டமான லோகபர்வதத்தில் சக
லலோகத்தினுடைய க்ஷேமத்தின்பொருட்டு அந்தரியா
மியாயும், பரிசுத்தமானசத்துவகுணம், தர்மக்கியானம்
வைராக்கியம், அயிஸ்வரியம்முதலான அஷ்டமகா சித்
திகளையும்தரித்துக்கொண்டு விசுவக்சேனனென்று பிர
சித்தனானபகவான் தானுடையயோகமாயையினால் செ
ய்யப்பட்ட நானாவிதலோகமரியாதைகளுடையரட்சண
த்தின்பொருட்டுக் கற்பகாலபரியந்தம் பகவானானவர் ஆ
விற்பவித்திருக்கிறார் அந்தலோகாலோகபர்வதத்திற்கு
ம் அப்பாலேயோகசித்தாளாயிருக்கிறவாள் யோகேசுவ

ராளுடையகெதியைச்சொல்லுவார்கள் சூரியனானவன்
பூமிஅந்தரிட்சம் இதுகளுடையமத்திமமான அண்டம
த்தியத்தை யடைந்திருக்கிறான் சூரியனுக்கும் அண்ட
கோளத்துக்கும்நடுவே பூமி யிருபத்தஞ்சுகோடி யோச
னைவிஸ்தாரமுண்டாயிருக்கின்றது இந்தச் சூரியன் அ
சேதனமான இந்தஅண்டத்தில் ஆவிற்பவித்தானாகை
யால் மார்த்தாண்டனென்றுஞ் சொல்லப்படுவான் இர
ணியமயமான அண்டத்தில்பிறந்தவனாகையால் இரணி
யகெர்ப்பனென்றுஞ் சொல்லப்படுவான் சூரியனாலேய
ன்றோதிக்குகள் ஆகாசம்-சொர்க்கம்-பூமி- சொர்க்கமோ
ட்சநரகஸ்தானங்கள்அதலமுதலானகீழேழுலகங்களும்
பிரிக்கப்பட்டிருக்கிறதுகள் தேவாள்பட்சிகள் மனுஷிய
ள்சர்ப்பங்கள்பர்வதங்கள் லதைகள் இதுமுதலானசர்வ
சீவராசிகளுக்கும் நேத்திரத்துக்கு அதிஷ்டாதாவான
சூரியனே ஆகரவாயிருக்கின்றார்,

## உக-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

தினங்கள்தோறும் காலசக்கிரத்தினாற்
றனியனாய்ச்சுழ லாநின்றசூரியன்
இனவிராசியிற் கூடுமிதத்தினாற்
கனகயோகயாத் திரைகள்கழறுவாம்,

நாள்தோறும்காலசக்கிரத்தினாலேசுழலாநின்றசூரிய
னுடையராசி சஞ்சாரங்களுடனேகூடின கெதியினாலே
லோகயாத்திரை சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம,

பஞ்சாசதகோடிவிஸ்தாரத்துடனேகூடின பூமண்
டலத்தினுடைய சமஸ்த்தானம் பிரமாணத்தினாலேயும்
சுரூபத்தினாலேயும் வியாக்கியானம்பண்ணப்பட்டதுஇ
ந்தப்பூமண்டலப் பிரமாணத்திலே ஆகாசத்தினுடைய
பிரமாணத்தைச்சோதிடமண்டலசுரூபத்தையறிந்தபே
ரானசோதிடசாத்திர பராங்கதாள் உபதேசிக்கின்றார்க
ள். எப்படியென்றால் அவரைக்கோட்டைமுதலானதுக
ளுடைய இரண்டுதளங்களுக்குள்ளே ஒன்றினுடையபி
ரமாணமானது அறியப்பட்டதானால் அதினாலேமற்றொ
ன்றினுடைய பிரமாணமும் சொல்லப்படுகிறதுபோல்
சொல்லுவார்கள்,

சொர்க்கம்பூமி இதுகளுடையநடுவிலே ஆகாசமா
னதுஇரண்டோடும்கூடிக்கொண்டிருக்கிறது அந்த ஆ
காசமத்தியத்திலேயிருந்துகொண்டு காந்திமானாய்ப்பிர
காசியாநின்ற வஸ்துக்களுக்கெல்லாம் பதியானசூரியன்
தன்னுடையதேஜசினாலே மூன்று லோகங்களையும் பிர
காசிப்பிக்கிறான். அந்தச் சூரியனானவன் உத்தராயன
மென்றும், தட்சிணாயனமென்றும், வைசுவமென்றும்,

பெயரையுடையதுகளான மந்தசிக்கிரசமகெதிகளினால் ஏறத்தக்கதாயும் இறங்கத்தக்கதாயுமிருக்கிற ஸ்தானங்களில் காலத்தை அதிக்கிரமியால் ஏறுகிறதும் இறங்குகிறதும் மகரமுதலானமாசங்களில் பகல்களையும் இராத்திரிகளையும் தீர்க்கங்களாகவும்குறுகினதுகளாகவும் சமங்களாகவும் செய்துகொண்டிருக்கிறான் எப்போது சூரியன்மேஷராசியிலேயும் துலாராசியிலேயுமிருக்கிறானோ அப்போது பகலிரவுகள்சமமாகவிருக்கும் எப்போது விஷபமுதலான ஐந்துராசிகளில்சஞ்சரிக்கிறானோ அப்போதுபகல்கள் விர்த்தியாகவிருக்கும் மாசங்கள்தோறும் ஒவ்வொருநாழிகை ராத்திரிகளிலேகுறுகியிருக்கும் எப்போது விருச்சிகமுதலான ஐந்துராசிகளிலேயிருக்கிறானோ அப்போதுஇரவுகள்தீர்க்கங்களாயும் பகல்கள் குறுகினதுகளாயுமிருக்கும் தெட்சிணாயனத்தில்பகல்கள்எவ்வள்வு விர்த்தியடைகின்றதோ அவ்வளவுஉத்தராயனத்திலே இராத்திரிகள்விர்த்தியடையும் ஒன்பதுகோடியும் ஐம்பத்தொருலட்சம்யோசனைகளை மானசோத்திரகிரியிலே சுற்றுகின்றசூரியனுக்கு மார்க்கமென்றுசொல்லுவார்கள் இந்தமானசோத்திரபர்வதத்தில் மேருவுக்குக்கிழக்காகத் தேவயானையென்று பெயரையுடையதாய் இந்திரனுடையபட்டணம் உண்டாயிருக்கிறது. தெட்சிணபாகத்தில் சமயமனியென்று பெயரையுடையதாகஎமனுடையபட்டணம்உண்டாயிருக்கின்றது மேருவுக்குமேலண்டையாக நிபரோசனியென்றுபெயரையுடையதாய் வருணனுடையபட்டணம் உண்டாயிருக்கின்றது. உத்தரபாகத்தில்விபாரியென்று பெயரையுடையதாய்ச் சோமனுடையபட்டணம் உண்டாயிருக்கின்றது,

அந்த தேவயானைமுதலான நாலுபட்டணங்களிலேயுய் சூரியன்கிரம்மாகவந்தானேயாயாகில்மேருவைச்சுற்றி நாலுபக்கங்களிலேயும்இராநின்றபிராணிகளுக்குப்பிரவிர்த்தி நிவிர்த்திகளுக்குநிமித்தியங்களானவுதயம் மத்தியானம். அஸ்தமயம், அர்த்தராத்திரமென்கிற காலவிசேஷங்களானதுகள் சொல்லப்படுகிறதுகள். சூரியனானவன் சர்வகாலமும்பகற்காலத்தில் உருமத்தையடைந்தவனாகவேநிற்கிறான் மேருவுக்குஇடதுபாரிசத்திலேயேயிருந்துகொண்டு மேருவைப்பிரதட்சிணம்பண்ணுகின்றான் எவ்விடத்தில்சூரியனுதயமாகின்றானோ அதற்குநேரானதிக்குக்கு அஸ்தமனமாகின்றான் எவ்விடத்திலேஉச்சகாலந்தையடைந்து கிரணங்களினால்பிரகாசிக்கிறானோ அதற்குநேரானதிக்குக்கு அத்தமனமாகின்றான் எப்போதுஇந்திரனுடைய பட்டணமானதேவயானையென்கிற பட்டணத்தைவிட்டுப்புறப்படுகிறானோ அப்போது பதினைந்துநாழிகையளவிலே இரண்டேகால்கோடியோசனைகளையும் கொஞ்சமதிகமான பனிரண்டலட்சம்யோசனைகளையும்தாண்டி எமனுடைய சயமனியென்கிறபட்டணத்தையடைகின்றான் அவ்விடத்திலேயிருந்து அவ்வளவுநாழிகைக்குள்ளேதானே அவ்வளவு எண்ணிக்கையையுடையதான யோசனைகளைத்தாண்டி வருணனுடையநிமரோசனியென்கிறபட்டணத்தையடைகிறான் அவ்விடத்தைவிட்டு அவ்வளவுநாழிகையில் அவ்வளவுயோசனைகளை யதிக்கிரமித்துச்சோமனுடைய விவர்வரியென்கிறபட்டணத்தை யடைகிறான். அவ்விடத்தைவிட்டுத்திரும்பவவும் அந்தநாழிகையிலேதானே அவ்வளவுயோசனைகளைத்தாண்டித் திரும்பவும் இந்திரனுடையபட்டணத்தையடைகின்றான்.

அந்தப்பிரகாரமசந்திரன்முதாலான மற்றுமுள்ள கிரகங்களும்நட்சத்திரங்கள். சோதிடசக்கரங்களுடனேகூடவுதயமாகி யதனுடன்கூடவே அஸ்தமிக்கின்றதுகள் இந்தப்பிரகாரம் முகூர்த்தகாலத்தினாலேமுப்பத்துநாலுலட்சமும்எண்ணூறுயோசனைகளை அதிக்கிரமியாநின்றவேதமயமான சூரியனுடையரதம் நாலுபட்டணங்களிலேயும் சுழன்றுகொண்டிருக்கின்றது அந்தசூரியரதத்துக்குப் பன்னிரண்டுமாதங்களாகிற அரமென்னப்பட்ட இலைகளையுடையதாயும் ஷட்ருதுக்களாகிற நமியென்னப்பட்ட முனைகளையுடையதாயும் சாதுர்மாசியங்களென்னப்பட்ட தொப்பைகட்டைகளையுடையதாயும் சம்வச்சரசுரூபமாயுமிருக்கிறஒருசக்கிரத்தையுடையதென்றுசொல்லுகிறார்கள். அந்தரதசக்கிரத்தினுடைய இரிசுமேருவினுடைய சிரசிலே யொருமுனையுமாய்சோத்தரபர்வதத்திலே யொருமுனையுமாய்வைக்கப்பட்டிருக்கின்றது அந்த இரிசிலேகோக்கப்பட்ட சூரியனுடையரதசக்கிரம் செக்கினுடைய திருகுமரத்திலேகோக்கப்பட்ட சக்கிரம்போல்மானசோத்தரகிரியிலேசுழலுகின்றது அந்தஇரிசிலேவைக்கப்பட்ட மூலபாகத்தையுடையதானஇரண்டாம்இரிசானது முப்பத்தொன்பதுலட்சமும் முப்பத்தேழாயிரத்தைஞ்னூறுயோசனைப்பிரமாணத்தோடுகூடினதாய்ச் செக்கிலாநின்றவுலக்கைமரம்போலே துருவனிடத்தில்வைக்கப்பட்டநுனியையுடையதாயிருக்கும் ரதத்துக்குள்ளேயிருப்பிடமானமத்தியபாகமோவென்றால் முப்பத்தாறுலட்சம்யோசனைப்பிரமாணமான வுயர்ச்சியையும் அதிலேநாலிலொருபங்கான விசாலத்தையுடையதாயுமிருக்கும் அந்தரதத்தினுடைய நுகத்தடியும் அவ்வளவு பிரமாணத்தோடுகூடியிருக்கும் யாதொருநுகத்தடியில் காயத்திரி முதலான சந்தசுக்களுடையபெயரையுடையதான ஏழுஅஸ்வங்கள் அருணனனசாரதியினாலே கட்டப்பட்டதுகளாய்ச் சூரியனைவகியாநிற்கிறதுகள் சர்வகாலமும் அருணனானவன் சூரியனுக்குமுன்னே மேற்குமுகமாயிருந்துகொண்டு சாரதிகர்மத்தில் ஏவப்பட்டவனாயிருக்கிறான்

அந்தப்பிரகாரமே வாலகில்லியாளென்று பிரசித்தாளாய்ப் பெருவிரல் பிரமாணத்தை யுடையவாளான அறுபதினாயிரம்பேர் ரிஷிகள் சூரியஸ்தோத்திரத்தின் பொருட்டுகேஷிக்கப்பட்டவாளாய் முன்னேனின்றுகொண்டு ஸ்துதிபண்ணிக்கொண் டிருக்கிறார்கள் அந்தப்பிரகாரம் மற்றுஞ்சிலரிஷிகள் கெந்தருவார் அப்சரசுக்கள்-நாகங்கள்-கிராமிணிகள்-யட்சாள்-தேவாள்- இவர்கள் தனித்தனியே பதினறுபேர்களாகவும்-ஜோடுஜோடாய் ஏழு கணங்களா யிருந்துகொண்டு மாதங்கள் தோறும் நானாவிதமான நாமங்களோடுகூடின பகவானான சூரியனை வெவ்வேறான அவருடையலீலாகர்மங்களினால் உபாசிக்கிறார்கள் ஒன்பதகாக்கோடியும் இலட்சத் திராயிரம்யோசனையும் நானூறு யோசமுமான பூமண்டலத்தினுடையதேசத்தை சூக்ஷ்மகாலத்தில் தாண்டுகிறார்,

## உஉ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

சந்திரன்சுக்கிரன்முதலாகிய
உந்துகோட்களுத் தரோத்தமரமாமிடம்
அந்தமானிட ரவரவர்நிர்ணயம்
விந்தையாக வெடுத்துவிளம்பினர்

சந்திரன் சுக்கிரன் முதலான கிரகங்களுடைய வக்தரோத்தமான ஸ்தானத்தையும் - அவா ளவாளுடைய கெதிவிருணயத்தினாலே மனுஷியாளுடைய இஷ்டானிஷ்டங்களையும் சொல்லப்படுகின்றது,

பரிட்சித்துவினுடைய வாக்கியம்.

வாரீர்பிரம்மனிஷ்டரே பகவானையும் மேருவையும் துருவனையும் பிரதட்சணம்பண்ணுகிற சூரியனுடையஇராசிகெமனமும் பிரதட்சணகெமனமும் பூச்சியராவும்மாலேசொல்லப்பட்டது சூரியனுடைய இந்தகெமனத்தை நாங்களெப்படி அறியப்போகிறோமென்று பரிட்சித்துவினாலே பிரசினம்பண்ணப்பட்டவராய்ச்சுகர் சொல்லுகின்றார்,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாரீர் பரிட்சித்துமகாராசனே சுழலாநின்றகுசவனுடைய சக்கிரத்தின்மேலே இராநின்ற எறும்புமுதலான சீவராசிகளுக்குக்கெதியானது பிரதேசாந்தரத்திலே காணப்படுகிறதுபோலே சக்கிரகெதிக்கு எறும்புமுதலானதுகளுடையகெதி வேறாகவே யுண்டாயிருக்கிறதல்லவா அப்படியே நட்சத்திரராசிகளினாலே அறியப்படாநின்றும் மேருவையும்-துருவனையும்-பிரதட்சணமாகவோடாநின்ற காலச்சக்கிரத்துடனேகூட ஓடிக்கொண்டும் அந்தக்காலச்சக்கிரத்தை ஆசிரயித்துமிருக்கின்ற சூரியன்முதலான கிரகங்களுக்கும் வெவ்வேறானகெதியானது நட்சத்திரங்களிலேயும்இராசிகளிலேயும் காணப்படுகிறபடியினாலே சூரியாதிகிரகங்களுடைய கெதியானது காலசக்கிரகெதியுடைய கெதிக்கு வேறாகவுண்டாயிருக்கிறது அந்தகெதியானசக்கிரமுதலான குணங்களையுடையவராயும் ஆதி புருஷராயு மிருக்கிற சாட்சாத்நாராயணனே ஞானிகளினாலேயும்- கர்மனிஷ்டாளாலேயும் இச்சிக்கப்பட்டவராய் லோகங்களுக்குக்ஷேமத்தின்பொருட்டு அந்தக்காலனியமத்தினாலே கர்மபூர்த்திக்கு னிமித்தமாயும் வேதமயமாயுமிருக்கின்றதம்முடைய சுரூபத்தை பன்னிரண்டுபிரகாரமாகப் பிரித்து வசந்தமுதலான ருதுக்களிலேயும் - கர்மானுகுணமாக சீதவுஷ்ணமுதலான ருதுகுணங்களைப் பண்ணுகிறார் இந்தலோகத்திலே அந்தச் சூரியபகவானை வர்ணாசிரம ஆசாரங்களிலே னிஷ்டையையுடையவாளான புருஷாள் வேதங்களினாலே விதிக்கப்பட்டதாயு மிருக்கிற கர்மங்களினாலேயும்-தியான சமாதிகளினாலேயும்-சிரத்தையுடனே- பூசித்துக்கொண்டு அவரிடத்திலே யிருந்துமோட்சமுதலான அபிஷ்டத்தை அடைகின்றார்கள் அந்த லோகங்களுக்கெல்லாம் ஆத்துமாவான் சூரியாந்தரியாமியான பகவானானவர்பூலோகம்சுவர்க்கலோகம் இதுகளுக்கு நடுவிலேயிராநின்றஆகாசமத்தியத்திலே காலச்சக்கிரத்தை யடைந்தவனாய்ராசியென்றுபெயரையுடையதுகளாயும் சம்வச்சரத்துக்கு அவயவங்களாயுமிருக்கிற பன்னிரண்டு மாதங்களையும்- அடைகின்றார்- அந்தராசிகளையே சாந்திராதிமான பேதத்தினாலேருதுவென்றும் மாதமென்றும் பட்சத்துவயமென்றும், பகலென்றும் இரவென்றும் சொல்லுகிறார்கள் எவ்வளவு காலத்தினாலேசம்வச்சரத்தில் ஆறில்ஒருபங்கைஅடைகிறானோ அந்தக் காலமானது சம்வச்சரத்துக்கு அவயவமான ரிதுவென்று சொல்லப்படும் பின்னையும் சம்வச்சரத்துக்கு அர்த்தமான எவ்வளவுகாலம் ஆகாசவீதியிலே சஞ்சரிக்கிறானோ அவ்வளவுகாலத்தைஅயனமென்றுசொல்லுவார்கள் இன்னமும் அந்த ஆகாசமண்டலத்தை சுவர்க்கம் பூமிகளுடைய மண்டலங்களோடுகூடமுழுமையும்எவ்வளவுகாலத்தினாலே அடைகிறானோ அவ்வளவுகாலத்தை சம்வச்சரமென்றும் பரிவச்சரமென்றும், இதாவச்சரமென்றும், அனுவச்சர மென்றும், இத்துவச்சரமென்றும், சூரியனுடைய மந்தசீக்கிரசமகெதிகளினாலே சொல்லுகிறார்கள்.

இந்தப்பிரகாரம் சந்திரன் சூரிய கிரணங்களுக்கு மேலாக லட்சம்யோசனைப் பிரமாணத்திலே பிரகாசிக்கின்றவனாய்ச் சூரியனுடைய சம்வச்சரபுக்தியைஇரண்டுபட்சங்களினாலேயும் சூரியனுடையமாசபுக்தியைஇரண்டேகால் நட்சத்திரங்களினாலேயும் சூரியனுடைய பட்சபுக்தியை ஒருதினத்தினாலேயும் சூரியனுக்குமுன்னா

டக்கிறவனுய் அநித்துனாயான கெமனத்தை யுடையவ னுயும் தாண்டுகிறுன் திரும்பவும் அமிர்தக்களினுலே விர்த்தியடைந்தும் குறைந்துபோகின்ற கலைகளினுலே பிதுர்க்களுடைய அகோராத்திரங்களைச் சுக்கிலகிருஷ்ணபட்சங்களினுலே பண்ணிக்கொண்டும் சமஸ்தசீவராசிகளுக்கும் அன்னமயனுகையாலே பிராணபூதனுயும் சீவிப்பிக்கின்றவனுகையால் சிவசுருபனுயும் ஒவ்வொரு நட்சத்திரத்தை அறுபதுநாழிகை யிருந்துகொண்டு அனுபவிக்கிறுன் சோடசகலைகளுடனே கூடினசந்திரனே மகாபுருஷனுனபகவானும் மனேமயனும் அன்னமயனும் அமிர்தமயனும் தேவாள் பிதுர்க்கள் மனுஷியாள் பூதங்கள் பசுக்கள் பட்சிகள் . சர்ப்பங்கள் ஔஷதிகள் இதுகளுடைய பிராணன்களையெல்லாம் போஷிக்கிறன்றவனுகையால் சர்வமயமென்றும் சொல்லுவார்கள். சந்திரனுக்குமேலாக லட்சம்யோசனைப் பிரமாணத்திலே நட்சத்திரங்கள் காலசக்கிரத்தினுல் ஈஸ்வரனுலே ஸ்தாபிக்கப்பட்டதுகளாய் அபிசித்தென்கிற நட்சத்திரத்தோடேகூட இருபத்தெட்டுநட்சத்திரங்களாய் மேருவைப் பிரதட்சணம்பண்ணுகின்றதுகள், நட்சத்திர மண்டலத்துக்குமேலே சுக்கிரன் இரண்டுலட்சம் யோசனைப் பிரமாணத்திலே சூரியனுக்கு முன்னும்பின்னும்கூடவும் சீக்கிரமந்த சமகெதிகளினுலே சூரியனைப்போலே லோகங்களுக்கு என்றைக்கும் அனுகூலமாயிருந்து சஞ்சரித்துக்கொண்டிருக்கிறுன், அந்தச் சுக்கிரனுடைய ராசிசலனத்தினுலே வருஷமானது உண்டென்று அறியப்படுகின்றது. அந்தச்சுக்கிரன் வருஷப்பிரதிபந்தகனான கிரகங்களுடைய கெதியை அடைந்திருக்கிறவன் அந்தச் சுக்கிரனுக்குமேலேஇரண்டுலட்சம் யோசனைப் பிரமாணத்திலேகாணப்படாநின்றும்லோகத்துக்குத்திரளாகச்சுபத்தையேபண்ணுகிறவனுயும்சோமனுடைய பிள்ளையான புதனென்பவன் எப்போதுசூரியனேடு ஏகராசியில் நின்றும் பிரிகின்றுனே அப்போது காற்றுமழைகளினுலே பயத்தைச்சொல்லுவார்கள் அந்தப்புதனுக்குமேலே அங்காரகன் இரண்டுலட்சம்,யோசனைப்பிரமாணத்திலே காணப்படாநின்றுகொண்டு ஒவ்வொருராசியிலே நாற்பத்தைந்து நாளிருந்து பன்னிரண்டுராசியையுந் தாண்டுகின்றுன் அந்த அங்காரகன் வக்கிரிகித்தானேயாகில் மிகவும் அசுபக்கிரகமாய் லோகங்களுக்குத் துக்கத்தையே உண்டாக்குவன் அங்காரகிரகத்துக்குமேலே இரண்டுலட்சம்யோசனைப் பிரமாணத்தினுலே பகவானுனபிரகஸ்பதி ஒவ்வொரு ராசியிலே வருஷப்பரியந்தஞ் சஞ்சரித்துக்கொண்டு வக்கிரித்தானுல்திரளாகப் பிராமணகுலத்துக்குப் பிரதிகூலனுயிருப்பன் பிரகஸ்பதிக்குமேலே இரண்டுலட்சம் யோசனைப்பிரமாணத்திலே தோற்றப்படுவனுன சனியானவன் ஒவ்வொருராசியிலே முப்பதுமாதம்வரைக்கும் விளம்பித்துக்கொண்டு இந்தக்கிரகங்களையெல்லாம் பின்சென்றுகொண்டிருப்பன். பன்னிரண்டாமிடம் ஜென்மராசி இரண்டாமிடம் இதுகளிலிருக்கும்போது சகலஜெனங்களுக்குங் கஷ்டத்தையேபண்ணுவன். சனிக்கு மேலே பதினெருலட்சம் யோசனைப் பிரமாணத்தினுலே சப்தரிஷிகள்காணப்பட்டிருப்பர்கள். அவர்கள்லோகங்களுக்குச்சுகத்தை யுண்டாக்கிக்கொண்டு விஷ்ணுவினுடைய பரமமானபதத்தையும் பிரதட்சணம பண்ணிக்கொண்டிருக்கின்றுர்கள்.

## உ௲-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்,

சோதியாஞ்சக் கரத்துக்கிருப்பிடம்
ஆதியான துருவஸ்தானமதின்
மாதுநேர்சிம்சு மாரரூபியான
சீதரன்ஸ்திதி யும்சிறப்பித்திடும்,

சோதிசக்கிரத்துக்கு இருப்பிடமான துருவஸ்தானமும் சிம்சுமாரரூபியான ஸ்ரீஅரியினுடைய ஸ்திதியுஞ் சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

சப்தரிஷிமண்டலத்துக்குமேலே பதின்மூன்று லட்சம்யோசனைப் பிரமாணத்திலே விஷ்ணுவினுடைய பரமமானபதமென்றுசொல்லுகிறுர்கள். அந்தஸ்தானத்திலே மகாபாகவதனுன உத்தானபாதனுடைய புத்திரனுனதுருவனுனவன் அக்கினி-இந்திரன்-பிரசாபதி-காசிபபன்-எமன்-ஏககாலத்திலே கூடிக்கொண்டு நட்சத்திரரூபிகளான இவர்களாலேவெகுமானத்தோடேகூட பிரதட்சணம்பண்ணப்பட்டவராய் இப்போதும் கற்பகாலபரியந்தம் ஆயுசையுடையவர்களுக்கு ஆசிரயமாயிருக்கிறுன். அந்தத்துருவனுடைய பிரபாவமெல்லாம் முன்னையே வர்ணிக்கப்பட்டதல்லவா, அந்தத் துருவனேவென்றால் தேவதைகளாலேயும் அறியப்படாத வேகத்தையுடையதாய்ச் சுழற்றப்படாநின்ற நவக்கிரகங்கள் நட்சத்திரங்கள் முதலான சமஸ்தமான சோதிர் கணங்களுக்கும் மரணத்தைப்போலச் சலியாமல் ஆசிரயமாக ஈஸ்வரனுலே பண்ணப்பட்டவராய்ச் சர்வகாலமும் விளங்குகிறுர். எப்படியானுல் களத்தின் மத்தியிலே இராநின்ற பெருந்தனஸ்தம்பத்திலே கட்டப்பட்ட பிணையிலே அகப்பட்ட எருதுகள் திரிகாலத்திலேயும் அந்தஸ்தானத்தை நீங்காமல் மண்டலாகாரமாகச் சஞ்சரிக்கின்றதுகளோ அந்தப்பிரகாரம் நட்சத்திரகணம் கிரணங்கள் முதலான சோதிர்கணங்கள் துருவனுக்குஉள்ளேயும்,வெளியிலேயும், கட்டப்பட்டதுகளாயும், கால சக்கரத்தையடைந்ததுகளாயும், துருவனைத்தானே பிடித்துக்கொ

ண்டுவாயுவினாலே ஏவப்பட்டதுகளாய்க் கற்பகால பரியந்தஞ் சுழன்றுகொண்டிருக்கிறதுகள்.

எப்படியென்றால் ஆகாசத்திலிருக்கப்பட்ட மேகம்-கழுக்கள் முதலானதுகள்காத்தில்அகப்பட்டதுகளாய் தன்தன் கர்மத்தைச்சகாவாக உடையதுகளாய்ச் சுழலுகின்றதுகளோ அந்தப்பிரகாரம் சோதிர்கணங்களும் பிரகிருதி புருஷசையோகத்தையடைந்ததுகளாயும் தங்கள்கர்மங்களினாலே உண்டாக்கப்பட்டகெதியையுடையதுகளாயும் பூமியிலேவிழுந்துபோகாமல்நிற்கிறதுகள் சிலயோகிகள் இந்தச்சோதிர்கணத்தைச் சிம்சுமாரரூபியாயும் பகவானாயுமிருக்கிறவாசுதேவனுக்கு அவயவங்களாக யோகதாரணையிலே சொல்லுகிறார்கள். தலைகீழாகவிருந்தும் குண்டலாகாரமாயுமிருக்கிற அந்தச் சிம்சுமாரத்தினுடையவாலின் நுனியிலே துருவனிருக்கிறான் வாலிலேபிரஜாபதி-அக்கினி-இந்திரன்-தர்மன்-இவாளிருக்கிறார்கள், வால்அடியிலே தாதாவிதாதாக்களும்கடிப்பிரதேசத்திலே சப்தரிஷிகளுமிருக்கிறார்கள் பிரதக்ஷணமாகக்குண்டலாகாரமாகப் பண்ணப்பட்ட சரீரத்தையுடையதான அந்தச் சிம்சுமாரத்தினுடைய தெட்சிணபாரிசத்திலே உத்தராயனங்களான அபிசித்துமுதலாகப்புனர்வசு நட்சத்திரமுடிவாகஉண்டான பதினாலுநட்சத்திரங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதுகள்தெட்சிணாயனங்களானபூசமுதலானஉத்திராடம் முடிவாகவுள்ள பதினாலுநட்சத்திரங்களும் அந்தச்சிம்சுமாரத்தினுடையஇடதுபாரிசத்திலே யிருக்கிறதுகள். குண்டலாகாரமான சிம்சுமாரத்தினுடைய உபயபாரிசங்களிலேயும் அவயவங்களைப்போலச் சமானசங்கைகளையுடையதுகளாயிருக்கிறதுகள். அதைச்சொல்லுகிறோம் முதுகிலேஅசவிதியும், வயிற்றிலேஆகாசகங்கையும், வலது இடதுகளானநிதம்பப்பிரதேசங்களிலே புனர்வசுபூசங்களும்,வலக்கால்இடக்கால்களிலேதிருவாதிரையும்,ஆயிலியமும்,வலமூக்குஇடமூக்குகளிலேஅபிசித்தும் உத்திராடமும், வலக்கண் இடக்கண்களிலேதிருவோணமும்பூராடமும் வலக்காதுஇடக்காதுகளில்அவிட்டமும்,மூலமும் தெட்சிணாயனநட்சத்திரங்களானமகமுதலாய் எட்டுநட்சத்திரங்களும் இடப்பக்கமானமார்பிலேயும் அப்படிதானே உத்ராயனநட்சத்திரங்களான மிருகசீரிஷமுதலாய்த் தலைகீழாய்எண்ணப்படாநின்றஎட்டுநட்சத்திரங்கள் வலப்பக்கமானமார்பிலேயும் வலத்தோள்- இடத்தோள்களிலேசதயமும்,கேட்டையும்,ஸ்தாபிக்கப்பட்டதுகளாகிச் சிம்சுமாரரூபியானபகவானை யோகாப்பியாசத்தினாலே யறியக்கடவன்,

சிம்சுமாரத்தினுடையவலதுதாடையிலேஎமனும் இடதுதாடையிலே அகஸ்தியரும். முகத்திலே அங்காரகனும், உபஸ்தத்திலே சனியும், பிடரியிலே பிரகஸ்பதியும்; மார்பிலேசூரியனும், இருதயத்திலே நாராயணரும், மனதிலேசந்திரனும், நாபியிலேசுக்கிரனும்,ஸ்தனங்களிலேயசுவினிதேவதைகளும், பிராணாபானவாயுக்களிலேபுதனும், கழுத்திலே ராகுவும், சர்வாங்கங்களிலேகேதுக்களும், ரோமங்களிலேசமஸ்தமான நட்சத்திரகணங்களும் இந்தப் பிரகாரம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதுகள் பகவானானமகாவிஷ்ணுவினுடையசர்வதேவமயமான இந்தச்சிம்சுமாரரூபத்தை நாள்தோறும் சந்தியாகாலத்திலே சுசியாய் மவுனத்தோடு பார்த்துக்கொண்டு ஸ்தோத்திரம்பண்ணக்கடவன் சோதிர்கணங்களுக்குஆதாரமாயும் தேவதைகளுக்கெல்லாம்பிரபுவாயும்,காலசக்கிரரூபியாயும் இருக்கிறமகாபுருஷனான விஷ்ணுவின்பொருட்டுப்பிரணாமம்பண்ணுகிறேனென்று துதிக்கின்றான், சூரியன் முதலான கிரகங்கள் அசுவனி முதலான நட்சத்திரங்கள் மற்றுமுள்ள நட்சத்திரங்கள் இதுகளுடையசுரூபமாயும் அதிதேவதாளுக்குப் பிரபுவாயும் மந்திரசெபசீலாளுடையபாபத்தைப் போக்கடிக்கின்றவராயுமிருக்கிற இந்தபகவத்ரூபத்தைத் திரிகாலத்திலே சிரத்தையுடனேநினைக்கிறவனுக்கும் பிரணாமம் பண்ணுகிறவனுக்கும், அந்தந்தக்காலங்களிலேஉண்டானபாபம் அந்தட்சணத்திலேநசித்துப்போகும்.

## உ௪-வது - அத்தியாயம்.

மட்டுவிருத்தம்,

ஏழுலோகங்களென்றேயிசைத்திடும்
கீழுலோகங் களத்துவதாமரோ

அதலமுதலான ஏழுலோகங்களினுடையமரியாதைகளை வர்ணிக்கப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்ராஜாவே, சூரியமண்டலத்துக்குப் பதினாயிரம்யோசனைப்பிரமாணத்துக்குக்கீழே ராகுவானவன் நட்சத்திரம்போலே சஞ்சரிக்கிறானென்றுசிலர் சொல்லுவார்கள் அசுராத்துமனாயும் சிம்கிகைபுத்திரனாயுமிருக்கிற யாதொருராகுவானவன் தேவனாகுகைக்கும் நவக்கிரகங்களிலே யொருவனாயிருக்குகைக்கும் யோக்கியனாகாமலிருந்தாலும் பகவானுடைய கிருபையினாலே தேவனாகுகையும், கிரகங்களுக்குள்ளே ஒருவனாகுகையும்அடைந்தான், அவனுடையசென்மகர்மங்களைமேலே சொல்லுகிறோம் பிரகாசியாநின்ற சூரியனுடைய யாதொருமண்டலமுண்டோ அந்தமண்டலத்தைப்பதினாயிரம்யோசனைவிஸ்தாரமாகச் சொல்லுவார்கள். சந்திரமண்டலத்தைப் பன்னீராயிரம்யோசனைவிஸ்தாரமாகச் சொல்லுவார்கள் ராகுமண்டலத்தைப் பதின்மூவாயிரம்யோசனைவிஸ்தாரமாகச் சொல்லுவார்கள் யாதொரு ராகுவானவன் அமிர்தபானம் பண்ணும்போது சூரிய

சந்திரனிருவருக்கு மத்தியிலேயிருந்துகொண்டுஅவர்க
ளிருவரையும் மறைத்துக்கொண்டிருந்தபடியினாலே அ
வர்களுடனேவிரோதித்தவனாய் அதனாலே பாவகாலங்
களிலே சூரியசந்திராளிருவரையுங் கிரகிக்க ஓடிவருகி
ன்றான்சூரியசந்திராளுடைய அந்தஆபத்தைப்பார்த்து
அவாளைரட்சிப்பதின்பொருட்டுப் பகவானாலே பிரயோ
கிக்கப்பட்டதாயும் சுதரிசனமென்றுபெயரையுடையதா
ய்த் தேஜசினாலேசகிக்கக் கூடாததாயும் அடிக்கடி சுழ
ன்றுகொண்டுவருகின்ற பகவத்சம்பந்தியானசக்கரத்தை
ப்பார்த்து முகூர்த்தகாலம்சூரியசந்திராளுக்கு அபிமு
காளாயிருந்துகொண்டு ராகுவானவன்மிகவும்பயத்தோ
டுகூடினவனாய் நொந்தமனதை யுடையவனாய்த் தூரத்
திலேதானே திரும்பிவிடுகின்றான் அதைலோகமானது
உபராகமென்றுசொல்லும் அந்தஉபராகத்திலே அந்த
ராகுமண்டலமானது சூரியசந்திரமண்டலங்களுக்கு நே
ராகவிருந்தால் பூரணஉபராகமென்றும் பக்கசாய்வா யி
ருந்தால் குறைச்சலாயிருக்கிறஉபராகமென்றுஞ்சொல்
லுவார்கள்நடுவேவெகுதூரம்இடமிருக்கிறபடியினாலே
எதார்த்தமாகச் சூரியசந்திராளை ராகுவானவன்பிடிக்கி
றதில்லை அந்தராகுமண்டலத்துக்குக்கீழே பதினாயிரம்
யோசனைப்பிரமாணத்திலே சித்தாள்,சாரணாள், வித்தி
யாதராள் இவர்களுடைய கிரகங்கள்உண்டாயிருக்கின்ற
துகள். அதற்குங்கீழே ஆகாசமானது யக்ஷாள்-ராக்ஷசா
ள்-பிசாசங்கள்-பிரேதங்கள்-பூதகணங்கள்- இதுகளுடை
யவிகாரத்துக்கு ஸ்தானமாயிருக்கிறது எந்தமட்டுக்கும்
வாயுவீசுகிறதோ எந்தமட்டுக்கும் மேகங்கள் தெரியப்
படுகிறதோ அதைஆகாசமென்றுசொல்லுவார்கள் மே
கமண்டலத்துக்குநூறுயோசனைப் பிரமாணத்தின்கீழே
இந்தப்பூமண்டலம்உண்டாயிருக்கின்றதுஅம்சம் கெரு
டன்முதலானபட்சிசிரேஷ்டங்கள் எந்தமட்டுக்கும் உய
ரப்பறக்கிறதுகளோ அந்தமட்டுக்கும் பூமண்டல சமஸ்
தானமென்றுசொல்லப்படுகின்றது, இந்தப்பிரகாரம்பூ
மியினுடைய ஸ்திதியானது எதாப்பிரகாரமாகவர்ணிக்க
ப்படுகின்றது.

இந்தப்பூமிக்குக்கீழே ஏழுபிலங்களென்னப்பட்ட
லோகங்கள் ஒவ்வொன்றுபதினாயிரம்யோசனைவிஸ்தார
ம் உயர்த்திகளையுடையதுகளாயும் அண்டகடாக பரியந்
தம் அகன்றவிஸ்தாரத்தை யுடையதாயும் பகவானாலே
பண்ணப்பட்டிருக்கிறதுகள் அதலமென்றும்,விதலமெ
ன்றும்,சுதலமென்றும்,தராதலமென்றும், மகாதலமெ
ன்றும், ரசாதல மென்றும், பாதாள மென்றும், அந்த
லோகங்களுக்குப்பெயர்சுவர்க்கத்தைப்பார்க்கிலும்அதி
கமான சர்வசம்பத்துக்கள், காமபோகங்கள், அயிஸ்வரி
யானந்தம் இதுகளினாலேபூரணங்களான கிரகங்கள், உத்
தியானவனங்கள், கிரீடாவிகாரஸ்தானங்கள் இதுகளையு
டையதான இந்தப்பலசுவர்க்கங்களிலே தயித்தியாள்மு
தலானஎல்லாரும் நித்தியசந்தோஷிகளாயும் அனுராக
த்தையுடையவர்களாயுமிருக்கிற பாரியாபுத்திர பந்துசு
கிர்துபரிசாரகாளையுடையவர்களாயும், கிரகபதிகளாயும்
ஈஸ்வரனாலேசித்தியாநின்ற காமத்தையுடையவர்களாயு
ம் மாயாவினோதத்தை யுடையவர்களாயும் வாசம்பண்
ணுகின்றார்கள்.

வாராய்மகாராஜனே, இந்தப்பிலசுவர்க்கங்களிலே
மாயாவியான மயனாலே நிர்மிக்கப்பட்டதுகளாய் நானா
விதஇரத்தினசிரேஷ்டங்களாலே பண்ணப்பட்ட விசித்
திரங்களானகிரகங்கள், பிராகாரங்கள், கோபுரங்கள், ச
பைகள், நற்சந்திச்சாவடிகள், ராசவீதிகள் இதுமுதலா
னதுகளிலேயும், நாகதம்பதிகள்,அசுரதம்பதிகள், மாட
ப்புறாக்கள், கிளிகள்,சாரிகைகள் இதுகளினாலேவாசம்
பண்ணப்படாநின்ற உப்பரிகைகள்முதலான ஸ்தானங்
களையுடையதுகளான பிலசொர்க்காதிபதிகளுடைய உ
த்தமகிரகங்களினாலே அலங்கரிக்கப்பட்டதுகளாய்ப் ப
ட்டணங்கள்விளங்குகின்றதுகள் யாதொரு லோகங்களி
லேபூங்கொத்துகளையும் விருட்சங்களையுமுடைய உத்தி
யானவனங்களானதுகள் நானாவிதமானமிருகங்கள் பட்
சிகள், நிர்மலமானசலங்கள், மச்சங்கள், ஆம்பல், நெய்
தல்,செங்கழுநீர்,செந்தாமரை இதுமுதலானதுகளினா
லே சுவர்க்கலோகத்தினுடைய சம்பத்தை அதிசயிக்கி
ன்றதுகள், இந்தப்பிலசொர்க்கங்களிலே வாசம்பண்ணு
கின்றபேருக்கு நரை,திரை,மூப்புமுதலானதுகளும் உ
ண்டாகிறதில்லை அந்தபிலசொர்க்கங்களுக்குள்ளே அத
லமென்கிறலோகத்திலே மயனுடையபிள்ளையானசுபல
னானவன் வாசம்பண்ணிக்கொண் டிருக்கிறான். அவனா
லேயிந்தலோகத்திலே சிருட்டிக்கப்பட்டதொண்ணூற்
றாறுமாய்கைகளுக்குள்ளே சிலமாய்கைகளைஇப்போது
ம்மாயாவிகள்தரித்துக்கொண்டிருக்கிறார்கள். போகத்தி
லேஆசக்தனான அந்தசுபலனுடையமுகத்திலேயிருந்து
சுவைறிணிகளென்றும், காமினிகளென்றும், புமுஞ்சலி
களென்றும், மூன்றுவிதமான ஸ்திரீகணங்களுண்டாச்
சுதுகள். இந்தஸ்திரீகணங்களிலே தன்சாதியிலேயேவி
பசரித்திருக்கிறவர்கள் சுவைறிணியென்றும், சகலசாதி
களிலேயும் விபசரிக்கிறவள் காமினியென்றும், சகலசா
திகளிலேயும் சகலபுருஷாளுடனேயும மிகவும்காமாதுர
ையாய்விபசரிக்கிறவள் புமுஞ்சலியென்றும்சொல்லப்
படுவார்கள். அந்தஅதலத்துக்குக்கீழானவிதலலோகத்தி
லே ஆடகேசுவரனென்றும் பிரசித்தபகவானானருத் ர
ன்பாரிஷதாளானபூதகணங்களினாலேசூழப்பட்டவனாய்
ப்பிரசாவிர்த்தியின்பொருட்டுப் பார்வதியுடனேகூடகி
ரீடித்துக்கொண்டிருக்கிறார் யாதொருபார்வதிபரமேசு
வராளுடையவீரியத்தினாலே ஆடகமென்று பெயரையு

டையதானநதிசிரேட்டமானதுபிரவகித்துக்கொண்டிருக்கின்றது,

அந்தவிதல லோகத்துக்குக் கீழ்ப்பட்ட சுதலலோகத்திலே யுதாரகுணனும் புண்ணியகீர்த்தியாயுமிருக்கிற விரோசனனுடைய பிள்ளையான பெலிச்சக்கிரவர்த்தியானவன் இந்திரனுக்குப் பிரியத்தைப் பண்ணவேணுமென்கிற இச்சையினாலே அதிதிதேவியினிடத்திலே வாமனரூபமாக அவதரித்தபகவானாலே அபகரிக்கப்பட்ட தன்னுடைய லோகத்திரையத்தையும் உடையவனாய் அந்தப்பகவானுடையகிருபையினாலேதானே அந்தப்பாதாள சுவர்க்கத்திற் பிரவேசிக்கப்பட்டவனாய் இந்திராதிகளுக்குங் கிடையாத சம்பூர்ணமான அயிஸ்வரியத்தோடுகூடினவனாய்ச் சுதர்மத்தினாலே ஆராதிக்கத்தக்கவரான அந்தப்பகவானையே யாராதித்துக்கொண்டு இப்போதும் நிர்ப்பயனாகவிருக்கிறான், அந்தப்பெலிச்சக்கிரவர்த்திக்குச் சுதலராச்சியாதி பத்தியத்தைச் சிறிதுபேர் பூமிதானத்துக்குப்பலமென்று சொல்லுவார்கள் அதுவே பலமாகமாட்டாது அதெப்படியென்றால் பகவானையும் சகலபிராணிகளுக்கும் அந்தரியாமியாயுமிருக்கிறவாசுதேவருடைய பாக்கியவசத்தினாலேகிடையாநின்ற சத்பாத்திரத்திலே பரமமான சிரத்தையினாலே கொடுக்கப்பட்டதாயும் சாட்சாத் மோட்சத்துக்கு ஏதுவாயுமிருக்கிற தானத்துக்குப் பிரசித்தமான இந்தச் சுதலலோகாதி பத்தியமானது முக்கியமானபலமாகமாட்டாது யாதொருபகவானுடைய நாமத்தைப்புருஷனானவன் ஒருக்கால் சொன்னானேயாகில் அவன்சகலகர்மபந்தத்தையும் சீக்கிரமாக வுதறிப்போடுவன்,

பரமாத்துமாவான பகவானாலே பெலிச் சக்கிரவர்த்தியானவன் பிலசுவர்க்க அயிஸ்வரியத்திலே நியமிக்கப்பட்டானே யாதொருகாரணத்தினாலே ஆத்துமக்கியானத்துக்கு விக்கினமாயும் பகவானுடைய மாயாவிலாசமாயுமிருக்கிற யோக அயிஸ்வரியத்தையே திரும்பவும் பகவான் பெலிச்சக்கிரவர்த்திக்குக் கொடுத்தாரோ, ஆகையினால் அந்தப்பெலிச்சக்கிரவர்த்திக்கு நன்றாகஅநுக்கிரகித்தவரன்று பகவானாலே யாசனையென்கிற வியாசத்தினாலே அபகரிக்கப்பட்ட லோகத்திரையத்தை யுடையவனாயும் சரீரத்துடனேயும் வருணபாசங்களினாலேநன்றாகக் கட்டுப்பட்டும் பர்வதகுகையிலே தள்ளப்பட்டவனாயுமிருக்கிற பலிச்சக்கிரவர்த்தியானவன் ஒருவார்த்தை சொல்லுகின்றான்.

இந்திரனானவன் தெரிந்தவனாயிருந்தாலும் புருஷார்த்தங்களிலே சமர்த்தனன்று, அந்த இந்திரனுக்கு யோசனையின்பொருட்டு பிரகஸ்பதியானவன் மந்திரியாகக்கற்பிக்கப் பட்டிருக்கிறார் அந்தபிரகஸ்பதியை யன்றித் தான்தானே குபேந்திரனை முன்னிட்டுக்கொண்டு தன்னுடைய மனோரதமானலோகத்திரையத்தையென்னையாசித்தபடியினால் அந்தஇந்திரன் தெரிந்தவனன்று ஒருத்தராலேயும் அறியக்கூடாதவேகத்தையுடைய இந்தக்காலத்துக்கு மன்வந்தரபரியந்தம் இராநின்ற இந்தத்திரைலோக்கிய அயிஸ்வரியம் எவ்வளவுயாதொரு பகவானுடையதாசியத்தையே நம்முடைய பாட்டனான பிரகலாதனானவன் பிரார்த்தித்தானல்லவா, தன்பிதாவானவன் மரித்தபிற்பாடு பகவானாலே கொடுக்கப்பட்டும் நிர்ப்பயமாயும் தகப்பனுடையதாயுமிருக்கிற இந்தத்திரைலோக்கிய அயிஸ்வரியத்தைப் பிரார்த்தியாமற்போனானல்லவா மகானுபாவனான அவனுடையமார்க்கத்தை ராகத்துவேஷாதிகளாலே விடப்படாதவனாயும் பகவதனுக்கிரகத்தைப் படையாதவனாயுமிருக்கிற என்னைப்போலொத்தவன் எவன்தான் அடைகைக்கு இச்சிக்கப்போகிறானென்று இந்தப்பிரகாரம் பலிச்சக்கிரவர்த்தியானவன்சொன்னான் இந்தமகானுபாவனான பலிச்சக்கிரவர்த்தியினுடைய சரித்திரமேலே விஸ்தரித்துச் சொல்லப்போகிறது, அந்தப் பலிச்சக்கிர வர்த்தியினுடைய வாசலிலேபகவானாயும் அகிலலோககுருவாயுமிருக்கிறநாராயணன் கெதாபாணியாச் சுயஜெனங்களிடத்திலே தயைபண்ணப்பட்ட இருதயத்தையுடையவராய் எப்போதுமிருக்கிறார், அந்தபலிச்சக்கிரவர்த்தியினுடைய பாதாங்குஷ்டத்தினாலே இராவணனானவன் திக்குவிஜையத்திலே பதினாயிரம் யோசனைக்கும் அப்பாலே தள்ளப்பட்டான் அப்படிப்பட்ட பலிச்சக்கிரவர்த்தியினுடைய சரித்திரத்தைமேல் அஷ்டமஸ்கந்தத்தில் விஸ்தரித்துச் சொல்லப்போகிறோம்.

அந்த சுதலலோகத்துக்குக்கீழே தராதலலோகத்திலே மயனென்று பிரசித்தனாய்த்திரிபுராதிபதியானதானவேந்திரன் மகாசக்திமானாயும், திரிபுராந்தகனாயும், திரிலோகயத்தையும் சஞ்சரிக்க, வேணுமென்கிற இச்சையை யுடையவனாயுமிருக்கிற ருத்திரனாலே தகிக்கப்பட்டதன்னுடைய திரிபுரத்தை யுடையவனாய் அந்தருத்திரனுடை பிரசாதத்தினாலே அடையப்பட்ட ஸ்தானத்தையுடையவனாய் மாயாசாரியனாய்மகாதேவனாலே ரட்சிக்கப்பட்டவனாய்ச் சக்கிரபய மில்லாதவனாய்த் தானவாளாலே பூசிக்கப்பட்டிருக்கிறான்,

அந்தத்தராதல லோகத்துக்குங்கீழே மகாதலமென்கிறலோகத்திலே அனேகம்சிரசுகளோடுகூடின சர்ப்பங்களுடைய குரோதவசமென்று பிரசித்தமான கணங்களானதுகள் குளிகன் தக்ஷகன் காளியன் சுஷேணன் இதுகள்முதலான சர்ப்பங்களைப் பிரதானமாகவுடையதுகளாயும் விஷ்ணுவினுடைய வாகனமான கருடனிடத்தில்நின்றும் சர்வகாலமும் பயந்ததுகளாயும் தங்களுடையபாரியாள் புத்திராள் ஸ்நேகிதாள் முதலான

சம்சாரத்திலே ஆசக்தியினாலே சிலவிடங்களிலே மதித்ததுகளாய் விளையாடுகின்றதுகள். அந்தமகாதலத்துக்குக்கீழே ரசாதலமென்கிற லோகத்திலே தயித்தியாள் நிவாதகவசாள் இரணியனுடைய பட்டணத்திலே வாசம்பண்ணுகின்ற காலகேயாள் இவர்களெல்லாம் தேவதைகளுக்கு எதிரிகளாய்ப் பிறக்கும்போது உண்டான பராக்கிரமத்தை யுடையவர்களாய் சகலலோகங்களிலும் பிரபாவத்தையுடையவரான ஸ்ரீஹரியினுடைய தேஜஸினாலே போக்கடிக்கப்பட்ட கருவத்தையுடையவர்களாய்ச் சர்ப்பங்கள்போலே வாசம் பண்ணுகின்றார்கள்- யாதொரு காலகேயாதிகள் இந்திரனுடைய தூதியான பெண்ணாகையினாலே சொல்லப்படுகின்ற மந்திரவர்ணரூபங்களான வாக்குகளினாலே இந்திரனிடத்தில்நின்றும் பயப்படுகின்றார்கள், அந்தரசாதலத்துக்குக்கீழே பாதாளலோகத்திலே நாகலோகாதிபதிகளாயும் வாசுகிமுதலானதுகளாயும் சங்கன், குளிகன் மகாசங்கன் சுவேதன் தனஞ்சயன் திருதராஷ்டன் சங்கசூடன் கம்பளன் அசுவதரன் தேவதத்தன்முதலான மகாசர்ப்பங்கள்பெரிதான படங்களையும், விஷங்களையுடையதுகளாயும்வாசம்பண்ணுகின்றார்கள், அநேகம் சிரசுகளோடுகூடின சர்ப்பங்களினுடைய படங்களிலேயிராநின்ற மகாகாந்தியோடுங்கூடிய இரத்தினங்கள் அந்தப்பாதாள பிலத்திலேயிருக்கிற அந்தகாரத்தைத் தங்களுடையகாந்தியினாலே போக்கடிக்கின்றதுகள்,

## ௨௫-வது-அத்தியாயம்.

சந்தக்கலிவிருத்தம்,

சலப்பிரவாகமத்தினிற் சங்கரிக்கவெண்ணிடும்
குலப்ரசித்தவாதிசேடன் கொள்கைநின்றுருத்திரன்
நலம்பெறச்செனித்திருக்கு நடனவாதிசேடன்றன்
தலந்தனைக்குறைவதின்றிச் சாற்றிடத்துணிந்தனர்,

பிரளயகாலத்திலே இந்தலோகத்தைச் சங்கரிக்கவேணுமென்று இச்சியாநின்ற ஆதிசேஷனிடத்தில் நின்றும்காலாக்கினி ருத்திரனுண்டாகிறானே அப்படிப்பட்ட ஆதிசேஷனுடைய ஸ்தானம் சொல்லப்படுன்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரீர்மகாராஜாவே அந்தபாதாள லோகத்துக்கு முப்பதினாயிரம்யோசனைப் பிரமாணத்தின்கீழே பகவானுடைய தமோகுணத்தைப்பிரதானமாக வுடையதாயும்அனந்தமென்று சொல்லப்பட்ட பெயரையுடையதாயுமாய் யாதொருஅம்சம் உண்டாயிருக்கிறது அனந்தமூர்த்தியாயும் சகஸ்திரசிரசுக்களை யுடையவராயுமிருக்கிற பகவானுடைய ஒருசிரசிலே தரிக்கப்படுவதான இந்தப்பூமண்டலமானது கடுகுபோலே காணப்படுகின்றது, இந்தப்பூமண்டலத்தைக் காலவசத்தினாலே சங்கரிக்கவேணுமென்று இச்சையையுடையவரான அனந்தமூர்த்தியினுடைய கோபத்தினாலே நெரிப்பையுடையதான புருவங்களினுடையமத்தியிலே சங்கருஷணனென்கிற ருத்திரனானவன் ஏகாதச ருத்திராளென்று பதினொருரூபத்தை யுடையவனாய் மூன்றுகண்களையும் மூன் சிகையுடனே கூடினசூலத்தை உயரவெடுத்துக்கொண்டெழும்பினார் யாதொரு ஆதிசேட மூர்த்தியான சங்கருஷணருடைய பாதாரவிந்த துவயத்திலேசிவந்ததுகளாயும் நிர்மலங்களாயுமிருக்கிற நாகங்களாகிற ரத்தினங்களுடைய மண்டலங்களிலே பிரகாசியாநின்ற குண்டலங்களுடைய காந்திசமுகத்தினாலே அலங்கரிக்கப்பட்ட கண்டஸ்தனங்களை யுடையதுகளாயுமிருக்கிற தங்களுடைய சர்ப்பசிம்ஹாஷ்டங்களானதுகள் பக்தசிரோஷ்டங்களானதுகள் பக்தசிரோஷ்டங்களோடு கூடமிகவும் பக்தியோகத்தினாலே நமஸ்கரித்துக்கொண்டு நிற்கிறார்கள் நாககன்னிகைகளானவர்கள் யாதொரு அனந்தமூர்த்தியினுடைய மனோக்கியங்களான கடகங்கணங்களையுடைய புஜங்களாகிற வெள்ளிஸ்தம்பங்களிலே குங்குமக்குழம்பினாலே பூசிக்கொண்டிருக்க அந்தபுஜங்களைத் தொட்டமாத்திரத்தில் இருதயத்திலே மன்மதவேகத்தினாலே புன்சிரிப்புகளை யுடையவர்களாய் அந்தஅனந்தனுடைய பிரீதியினாலே சந்துஷ்டாளாயும் கிருபாகடாட்சத்துடனே கூடினகண்களையுடைய முகாரவிந்தத்தை மிகவும் லச்சையை யுடையவர்களாய் பார்த்துக்கொண்டு நிற்கிறார்கள்.

அந்தஅனந்தரானவர் லோகங்களினுடைய க்ஷேமத்தின்பொருட்டு உபசங்காரம்பண்ணப்பட்ட பொறாமைகோபம் இதுகளுடைய வேகத்தை யுடையவராயிருக்கின்றார் தேவர்கள் அசுரர்கள் இவர்களாலே தியானம்பண்ணப்படுகிறவராயும் அற்புதமான ஒருகுண்டலத்தையுடையவராயும் தம்முடைய வைஜெயிந்தியென்கிற வனமாலையை இந்திரனுடைய ஐராவதமானது சொர்ணமயமான கட்சியென்கப்பட்ட சொர்ணபடையைத் தரித்திருப்பதுபோலத் தரித்துக்கொண்டிருக்கிறார், யாதொ அனந்தமூர்த்தியான, பகவானானவர் இந்தப்பிரகாரம் தியானம்பண்ணப்பட்டவராய் மோட்சத்தை இச்சியாநின்றபேர்களுடைய இருதயத்துக்குள்ளே ஆவிற்பவித்துக்கொண்டிருக்கிறார், அப்படிப்பட்ட ஆதிசேஷனுடைய இந்தப்பிரபாவத்தைக் கியானசக்திமுதலான குணங்களையுடையவரான நாரதமுனியானவர் பிரமசபையிலே தும்புருவோடுகூடகீர்த்தனம்பண்ணுகிறார் இந்தப்பிரபஞ்சத்தினுடைய உற்பத்தி ஸ்திதி நாசங்களுக்குக் காரணங்களாயும் சத்துவரஜஸ் தமோரூபங்களாயுமிருக்கிற பிரகிருதி குணங்களானதுகள் யாதொரு ஆதிசேஷனுடையகடாட்சத்தினாலேசிரு

ஷ்டிக்குஞ் சமர்த்தங்களாச் [illegible]களா அப்படிப்பட்ட அனந்தசுரூப[illegible]மையைத்து எப்படிதான் அறியும் அந்த அனந்[illegible]த்விரப்[illegible]ளை யெவனைப் புருஷன் காரணமாக அ[illegible].

சகஸ்திரசிரசையுடையவரான யாதொருபகவானுடைய ஒருசிரசிலேயிருந்தும் அனேகபர்வதங்கள்- நதிகள்-சமுத்திரங்கள்-ஜீவசெந்துக்கள்-இதுகளோடு கூடிக்கொண்டிருக்கிற இந்தப் பூமண்டலமானது ஒருபரமாணுபோலே விளங்கி யிருக்கின்றது அளவில்லாத மகிமையை யுடையவரானபடியினாலே ஒருத்தராலேயும் அறியப்படாத பராக்கிரமத்தையுடையவரான அந்தஅனந்தமூர்த்தியினுடைய வீரியங்களை ஆராயிரம் நாவையுடையவனாயிருந்தாலும் எவன்தான் வர்ணிக்கச்சமர்த்தனானவன் இப்படிப்பட்ட பிரபாவத்தை யுடையவரான அனந்தமூர்த்தியானவர் பூமிமுதலான ஏழுலோகத்துக்குங்கீழே ஆதாரமாயிருந்துகொண்டு லீலையினாலே ஸ்திதியின்பொருட்டுப் பூமியைத் தரித்துக்கொண்டிருக்கிறார், மனுஷியாளாலே அடையத்தக்கதுகளான கெதிகள் இவ்வளவும் எதாசாஸ்திரமாக உனக்குச் சொல்லப்பட்டதுகள், வாராயராஜாவே இன்னம்எதைச்சொல்லவேணுமோ அதைக்கேட்கக்கடவாய்.

## உசு-வது அத்தியாயம்,

சந்தவிருத்தம்.

பாபிகளானோர்நரகங்களிலேபணிசெயும்
கோபிகளாமெமதூதர்களாலேகொடுமைந்தன்
நாபிவறண்டுபோதாளமூலத்தின்கடுவாகும்
சோபமதாநரகத்தின்ஸ்திதியைச்சொல்வோமே,

பாபிகள் நரகங்களிலே எமதூதாளாலே தடுக்கப்படுகிற பாதாளமூலத்துக்குங்கீழான அப்படிப்பட்டநரகங்களுடைய ஸ்திதி சொல்லப்படுகின்றது,

பரிட்சித்துவினுடைய வாக்கியம்.

வாரீர் மகாரிஷியே இந்தலோகங்கள் ஒன்றுக்கொன்று விசித்திரங்களாய் எப்படி உண்டாயிருக்கிறதென்று கேட்கின்ற பரிட்சித்துவுக்குச் சுகர்சொல்லுகின்றார் வாரீர்மகாராசாவே கர்ம கர்த்தாவான புருஷன் திரிகுணங்களை யுடையவனானபடியினாலே சிரத்தையும், சாத்துவிகமென்றும், தாமசமென்றும், ராஜசமென்றும்,மூன்றுபடிப்படியா யிருக்கையாலே வெவ்வேறுகளாய்ச் சமஸ்தங்களான அந்தசிரத்தாமூலங்களின் காமகதிகளும் எல்லாருக்கும் வேறுவேறாக வுண்டாகிறதுகள், இனிமேல் நிஷித்தகர்மமான அதர்மத்தினுடைய கர்த்தாவுக்கு சிரத்தாபேதத்தினால் கர்மபலமும் விருத்தமாக வுண்டாயிருக்கிறது, அக்கியானமூலமான இச்சையினால் பண்ணப்பட்ட கர்மங்களுடைய பலசுரூபங்களாயும் நானாப்பிரகாரங்களாயும் நரகங்கள் உண்டாயிருக்கிறதுகள், அதுகளையெல்லாம் நீராகவர்ணிக்கிறீரென்று சொல்லுகின்ற சுகப்பிர்ம ரிஷியைப்பார்த்துப் பரிட்சித்துமகாராசன் சொல்லுகின்றார் வாரீர்பகவானே நரகங்களான தேசவிசேஷங்களானதுதிரைலோக்கியத்துக்கும்அப்புறப்பட்டதா அல்லது உட்பட்டதா கேளாரென்று பரிட்சித்துவைப்பார்த்துச் சுகர்சொல்லுகிறார்.

வாரீர்மகாராஜாவே திரைலோக்கியத்துக்குஉள்ளே தெட்சிணதிக்கிலே பூமிக்குக் கீழேயும் அண்டஜெலத்துக்குமேலேயும் உண்டா இருக்கின்றதுகள். யாதொருதிக்கில் அக்கினிசுவர்த்தாக்கள் முதலான பிதுர்கணங்கள் தங்களுடைய குலங்களுக்குபரமமானசமாதியினால் சத்தியங்களான ஆசீர்வசனங்களைக்கோரிக்கொண்டுவாசம்பண்ணுகிறார்கள், அந்தத் திக்கிலே பகவானும் பதுற்பதியாயும் வைவசுவென்று பிரசித்தனாயு மிருக்கிற எமன் தனதுபடாளான தூதர்களாலேதன்னுடையதேசத்தை அடையச்செய்து மிருதாளானபிராணிகளிடங்களிலே அந்தந்ததுஷ்கர்மங்களுக்குக் தக்கதாகத்தாண்டக்கூடாத பகவதாக்கினையைக் கொண்டு சிட்சைசெய்கின்றான், வாராய்ராஜாவே யாதொருதிக்கிலேகியானிகள் நரகங்களை இருபத்தொரு பிரகாரங்களாகச் சொல்லுகிறார்கள், அப்படிப்பட்ட நரகங்களையெல்லாம்நாமங்களினாலேயும், சுரூபங்களினாலேயும்,உனக்குச்சொல்லுகிறோம், அதெப்படி யென்றால் தாமிசிரமென்றும், அந்த தாமிசிரமென்றும், ரவுரவமென்றும், மகாரவுரவமென்றும், கும்பிபாகமென்றும், காலசூத்திரமென்றும்,அசிபத்திரவனமென்றும், சூகரமுகமென்றும், அந்தகூபமென்றும், கிருமிபோசன மென்றும், சந்தம்சமென்றும், சூரமியென்றும், வச்சிரகண்டகமென்றும், சலமரியென்றும், வைதரணியென்றும், பூயோதமென்றும், பாணரோதமென்றும், வைச்சமென்றும், லாலாபட்சமென்றும், சாரமேயாதனமென்றும், விசிரயபானமென்றும், மற்றும்சிலநரகங்கள் ஷாரகாத்தபமென்றும் ரட்சோகண போசவமென்றும், சூலப்புரோதமென்றும், தெந்தசூகமென்றும், வடகிரோ தானமென்றும், பரியாவர்த்தனமென்றும், சூசிமுகமென்றும், நானாப்பிரகாரங்களான யாதனா அனுபவ தேசங்களான இருபத்தெட்டுப் பிரகாரங்களாக நரகங்கள் உண்டாயிருக்கிறதுகள், அந்த நரகங்களுக் குள்ளே யாதொருத்தன் பரனுடையதனம்-புத்திரன் - ஸ்திரீ இவைகளை அபகரிக்கிறானோ அவன் மிகவும் பயங்கராளான எமபுருஷாளாலே காலபாசத்தினால் கட்டப்பட்டவனாய்த் தாமிசிரமென்னப்பட்ட நரகத்தில் தள்ளப்படுகிறான், இந்தலோகத்தில் நானென்றும், எனதென்றும் எண்ணித்துரோகசிந்தையை யுடையவனாய்ச் சமுசாரத்தைப் போஷிக்கிறானோ

அவன் ரவுரவமென்ற நரகத்தில் தள்ளப்படுகிறான், இந்தப்பிரகாரமே மகாரவுர மென்னப்பட்ட நரகமும் குரூரனுப் பசுக்களையும் பட்சிகளையும்-பிராணனோடு எவன்பிடிக்கிறானோ அவனை லோகாந்தரத்திலேஎமபடாள்கும்பிபாகமென்கிற நரகத்தில் காய்ச்சப்பட்ட தயிலபூர்ணமான கொப்பறைகளிலே தளளப்படுகிறான்,எவன் இந்தலோகத்தில் மாதா பிதாக்களுக்கும் பிராமணருக்கும் ரோகம்பண்ணுகிறானோ அவன் காலசூத்திரமென்னும் பிரசித்தமாய் பதினாயிரமயோசனை விஸ்தாரமானநரகத்திலே தாம்பிரபாரத்தில்போட்டுக் கீழுமேலும் அக்கினியினால் தகிக்கப்படுகிறான் இந்தலோகத்தில் தன்னுடைய வேதமார்க்கத்தைவிட்டுப் பாபசமுகமான பாஷண்டமென்று பிரசித்தமான துர்மார்க்கத்தையடைகிறானோ அவன் அசிபத்திரவனமென்னப்பட்ட நரகத்திலே தள்ளப்படுகிறான், இராஜாவானவன் தெண்டிக்கிறதற்கு யோக்கிய னல்லாத பிராமணனிடத்திலே தான் சரீர தெண்டத்தைப் பண்ணுகிறானோ அந்தபாபியானபுருஷன் சூகரமுகமென்னும் நரகத்திலே தள்ளப்படுகிறான், யாதொருத்தன் ஈஸ்வரனாலே கற்பிக்கப்பட்ட விர்த்திகளை யுடையதுகளாயும், அறியப்படாத பரபீடையை யுடையதுகளாயுமிருக்கிற பிராணிகளுக்குத் தான் பிராமணாதி சுபாவத்தினாலே துக்கத்தைப் பண்ணுகிறானோ அவன் லோகாந்தரத்திலே அர்தகூப மென்கிறநரகத்திலே தள்ளப்படுகிறான் எந்தபுருஷன் இந்தலோகத்திலே பஞ்சமகா யெக்கியங்களைவிட்டு வாயசபெலியோடுகூடின வைசுவதேவமுதலான பெலிகர்மத்தைப்பண்ணாமல் ஏதேனும் சம்பாதிக்கப்பட்ட அன்னத்தைப்புசிக்கிறானோ அவன்லோகாந்தரத்திலே கிருமிபோசனமென்கிற நரகத்திலே தள்ளப்படுவன், எவன் இந்தலோகத்திலேயும் பெலத்தினாலேயும், எவனுடையபொருளையாவது அபகரிக்கிறானோ அவனை எமபுருஷாள் அக்கினியினாலே பழுக்கக்காய்ச்சப்பட்ட இருப்புக்காறுகளினாலேயும், தொரடுகளினாலேயும்,பிடுங்கிச்சந்தம்சமென்னும் நரகத்தில் தள்ளுவார்கள்.

இந்தலோகத்திலே தான்அடையக்கூடாத ஸ்திரீயையும் தான்அடையக்கூடாத புருஷனையும் துர்மார்க்கத்தினாலே தாங்கள் அடைகிறார்களோ அவர்கள்லோகாந்தரத்திலே தீட்சணமான ஜாட்டியினாலே அடித்து அக்கினிமயமாயிருக்கிற ஸ்தம்பத்தை ஆலிங்கனம்பண்ணுவித்துச் சூரமியென்னும் நரகத்தில் தள்ளப்படுவார்கள்,எவன்சர்வவர்ணஸ்திரீகளுடனே சங்கமத்தையுடையவனாய்ச் சமஸ்தபிராணிகளையும் உயிரோடு இம்சிக்கிறானோ அவன் லோகாந்தரத்திலே முள்ளுகளையுடைய இலவமரத்தின்மேலேற்றி வச்சிரகண்டகமென்னும் நரகத்தில்தள்ளப்படுவன் எந்த ராசாக்களாவது ராஜபடாளாவது பாஷண்டாளாய்த் தர்ம சேதுக்களான வைதிக மரியாதைகளைக் கெடுக்கிறார்களோ அவர்கள் மரித்து வைதரணிநரகமென்னும் நதியிலே தள்ளப்படுவர்கள், இந்தலோகத்திலே சிலபேர்சூத்திரஸ்திரீகளுக்குப்பதிகளாய்ச்சவுசம்-ஆசாரம்-நியமங்க ளில்லாமலிருக்கிறார்களோ அவர்களும்லோகாந்தரத்தையடைந்து மலமூத்திர சிலேஷ்மாதிகளினால் பூரணமான பூயோதமென்னும் நரகமாகிய சமுத்திரத்தில் தள்ளப்படுவர்கள். எவன்வேட்டையிலேசமர்த்தனாய் நிமித்தியமில்லாமல்மிருகங்களைக்கொல்லுகிறானோ அவன்லோகாந்தரத்திலே எமபுருஷாளுடையபாணங்களினாலேபிளந்துபாணரோதமென்னும் நரகத்தில் தள்ளப்படுவன். டம்பப்பிரதானாய் டம்பார்த்தமான எக்கியங்களிலே பசு இம்சையைப் பண்ணுகிறாகளோ அவர்கள்லோகாந்தரத்திலே வைசசமென்னும் நரகத்திலே தள்ளப்படுவர்கள், லோகத்திலே சாட்சியிலும், விற்கிரயத்திலும், அபத்தம் சொல்லுகிறார்களோ அவர்கள் லோகாந்தரத்திலே விசிரயபானமென்னும் நரகத்தில் தலைகீழாய் நூறுயோசனை உயர்ச்சியையுடைய பர்வதசிகரத்தில்னின்றும் தள்ளப்படுவர், சிலர் இவிடத்திலே புருஷ இம்சையினாலே யாகம் பண்ணுகிறவர்களையும், அசாஸ்திரியங்களான பசுக்களை இம்சிக்கிறவர்களையும் அவர்க ளிருவரையும் ரக்ஷோகணபோசனமென்னும் நரகத்தில் தள்ளுவார்கள் சிலர்இவிடத்திலே மகாகுரூரமானசுபாவத்தையுடையவர்களாய்ச்சர்ப்பங்கள்போலப்பிராணிகளைமிரட்டிப்பயமுறுத்துகிறார்களோ அவர்கள்மரித்து தெந்தசூகமென்கிறநரகத்திலேதள்ளப்படுவர்கள் சிலர் இவிடத்திலேபாலாளையும்,அக்கராளையும்-துர்ப்பலாளான இதரபிராணிகளையும், பள்ளங்களிலேயும், பாழ்வீடுமுதலானதுகளிலேயும், அடைத்துத்தகைந்துவைக்கிறார்களோ அவர்கள் லோகாந்தரத்திலே வடதிரோதானமென்னும்நரகத்தில்தள்ளப்படுவர்கள், யாதொருத்தன் இவ்விடத்திலே ஒருநாளும் வாராதவர்களாய் அன்னம் வேணுமென்று வராநின்ற அதிதிகளைகோபத்துடனேகூடினவனாய்க் குரூரமானதிருஷ்டியினால் தகித்துப்போடுகிறவன்போலப்பார்க்கிறானோ அவன்பரியாவர்த்தனமென்னும் நரகத்திலேதள்ளப்படுவன்,யாதொருத்தன் இவ்விடத்திலேநானேஅயிஸ்வரியவந்தனென்கிற அபிமானத்தோடு கூடினவனாயும், அகங்காரத்தை யுடையவனாயும், வக்கிரமாகப்பார்த்துக்கொண்டும் எல்லாரிடத்திலேயும், சங்கையையுடையவனாய்ச் சம்பாதித்த ஆர்த்தங்களுக்குவிரையநாசங்களுடைய சிந்தையினாலேஉலர்ந்துபோகாநின்ற மனதையு முகத்தையுமுடையவனாய்க் தைரியத்தைஅடையாமல் கிரகத்திலேதானேஅர்த்தத்தை இரட்சிக்கிறானோ அவனும்மரணத்தையடைந்துசூசிமுகமென்

னும் நரகத்திலேதள்ளப்படுவன் இப்படிப்பட்ட நரகங்கள் எமாலயத்திலே வெகுபிரகாரமாக வுண்டாயிருக்கின்றதுகள்.

வாராய் ராஜாவே அந்தச் சமஸ்தமான நரகங்களிலேயும் சிலபேர் அதர்மத்தைப் பண்ணி இங்கேயிருந்துபோய்விழுகிறார்களோ அவர்களெல்லாங் கிரமமாக அந்தந்த நரகத்திலேபிரவேசிப்பார்கள் அந்தப்பிரகாரமே தர்மிஷ்டாளானபேர் மேலானபுண்ணியலோகங்களிலேயும் பிரவேசிப்பார்கள் இவிடத்திலேதிரும்பவும்பிறக்கும்போது அந்தப்பாபிகளும், புண்ணியவான்களும்,பாபசேஷத்தோடும்,புண்ணியசேஷத்தோடும்பிரவேசிப்பார்கள் நிவர்த்திசுரூபமானமார்க்கம் ஆதியிலே இரண்டாவது ஸ்கந்தத்தில்வியாக்கியானம்பண்ணப்பட்டது வாராய்ராஜாவே, இந்தப் பிரம்மாண்டகோசமானது பதினாலுபிரகாரமாக விகற்பிக்கப்பட்டதுகளாய்ப் புராணங்களிலே சொல்லப்பட் டிருக்கிற அண்டகோசம் கியானசக்தி முதலான குணங்களை யுடையவராயும், மகா புருஷனுயுமிருக்கிற நாராயணனுடைய ஆத்துமமாயையென்னப்பட்ட பிரகிருதியினுடைய குணப்பிரவாகமான ஸ்தூலரூபமானதை வர்ணிக்கப்பட்டது, இதைப் பக்திசிரத்தைகளினால் நிர்மலமானபுத்தியையுடையபுருஷனானவன் பகவானுடைய ஸ்தூலசூட்சுமங்களான இந்தரூபங்களைக் கேட்டுக் கேட்டபிரகாரம் அதிலே புத்தியைச் செலுத்துகிறானே அப்படிப்பட்ட ஸ்தூலரூபத்திலே செயிக்கப்பட்ட ஆத்துமாவைச் சூட்சுமநிஷ்டையினாலேமெள்ளச் சூட்சுமரூபத்தில் புத்தியையடைவிப்பிக்கக்கடவன்.

வாராய்ராஜாவே,சகலமானசீவராசிகளையும் ஸ்தானமாகவுடைய ஈஸ்வரனது ஸ்தூலசரீரமாகப்பூமி-திவீபங்கள்-வருஷங்கள்-நதிகள்-பர்வதங்கள்-ஆகாசம்- சமுத்திரம்-பாதாளம்-திக்கு-காகம்-நட்சத்திரகணம்- லோகங்கள்-இதுகளுடையசமஸ்தானம்நம்மாலேஉனக்குச்சொல்லப்பட்டது.

## ஐந்தாவதுஸ்கந்தம்

### முற்றிற்று.





# ஸ்ரீமகாபாகவதபுராணம்,

## ஆருவதுஸ்கந்தம்.

### முதலாவது—அத்தியாயம்.

சந்தக்கலிவிருத்தம்.

ஆதிசேடன்மீதுபள்ளிகொள்ளுமையன்றூதராய்
நீதியற்றபாவிகளைவிடுவிக்குநிமித்தமாய்
ஆதவன்போதொளிருமேமகிங்கராளப்பாவிதன்
கோதுபாவந்தனைவெளியிடும்பொருட்டைக்கூறுவாம்

இதில்விஷ்ணுதூதர்களாலேபாவிகளைவிடுவிக்கிற நிமித்தியம் எமகிங்கராள்அந்தப்பாவிகளுடைய பாவத்தைவெளியிடுகிறதின்பொருட்டுத்தர்மமுதலானதுகளுடைய சுவரூபமுஞ்சொல்லப்படுகின்றது,

பரிட்சித்துவினுடைய வாக்கியம்,

வாரீர்பிரம்மகிஷ்டரோ, பூச்சியரானஉம்மால் எதாசாஸ்திரமாகக் கர்மானுஷ்டானமூலமான கியானத்தினால் சம்சாரநிவர்த்திருபமான மோட்சமென்பது யாதொன்றுண்டோ அதுமுதலானதுகள் இரண்டாம்ஸ்கந்தத்திலேசொல்லப்பட்டது.

இப்போது மனுஷியன் நானாவிதமாகியஉக்கிரமான வாதனைகளையுடையநரகங்களை எந்தஉபாயத்தினாலே தவிர்க்கலாமோ அந்தவுபாயத்தைஎனக்குச்சொல்லவேண்டுமென்றுகேட்டுக்கொள்ள வியாசருடைய குமாரனைசுகர்சொல்லுகிறார், வாராய்ராஜரவே, மனோவாக்குக்காயங்களினாற் பண்ணப்பட்ட பாபத்துக்கு இந்தலோகத்தில் மனுமுதலானவர்களால்சொல்லப்பட்ட பிராயச்சித்தம் எதாசாஸ்திரமாக அந்தமனோவாக்குக் காயங்களினாற்றானே அதிகாரியான புருஷன்பண்ணுமற்போனானில் நிச்சயமாகமரணத்தையடைந்து முன்சொல்லப்பட்ட கொடியநரகங்களையடைவன். ஆனபடியினாலேஇவ்வுலகத்தில் மரணத்தை யடைகின்றதற்கு முன்னமே துரிதமாகப் பிரபலமாயுஞ்சொற்பமாயுமிருக்கின்றபாவங்களை யறிந்து ரோகங்களினுடைய நிதானத்தையறிந்த வைத்தியன் அதற்கு அனுகுணமாயெப்படி சிகிச்சைபண்ணுவனோ அப்படிப்போல் பிராயச்சித்தஞ்செய்யஎத்தனம்பண்ணக்கடவனென்று சொல்லாநின்ற சுகப்பிரமரிஷியைப் பார்த்துச் சொல்லுகிறான். பெரியவர்களாலேபண்ணப்பட்டநிந்தையாலும், சாஸ்திரங்களினுடையகேள்வியாலும், இராஜ தண்டனையாலும் சாஸ்திரங்களிற்சொல்லும் நரகத்தில் விழுகிறதினாலும், தனக்குப் பாபமே யனர்த்தத்தைப் பண்ணுகிறதென்றறிந்தும் புருஷனானவன் திரும்பவும் பிரகிருதிபரவசனாய்ப்பாவத்தையேபண்ணுகிறானல்லவா ஆகையால்பிராயச்சித்தம் எப்படி கூடும் ஒருவன்ஓரிடத்தில்ஒருவேளையில் பிராயச்சித்தம்பண்ணிக்கொண்டு பாபத்தில்நின்றும் ஒழிந்தவனாகின்றான் ஒருவன்பிராயச்சித்தம் பண்ணிக்கொண்டிருந்தாலும் திரும்பவும்பாவத்தைச்செய்கிறவனுமிருக்கின்றான் யானைக்குஉடம்பிலுள்ள அழுக்குப்போகச் சுத்திபண்ணியிருந்தாலும் திரும்பவும்புழுதியை அள்ளிப்போட்டுக்கொள்ளுகிறதினால் அந்தஸ்நானம் எப்படிவியர்த்தமோ அப்படிப்புருஷனானவன் பிராயச்சித்தம்பண்ணிக்கொண்டு திரும்பவும்பாபத்தைப்பண்ணுகின்றதினாலே பிராயச்சித்தம் வியர்த்தமென்றெண்ணுகிறேனென்று அரசன்சொல்லச்சுகர் சொல்லுகின்றார்,

வாராய்ராஜாவே அக்கியானியானபுருஷன் அதிகாரியானபடியினாலே பிராயச்சித்தகர்மத்தினால் பாவத்

துக்கு நாசமுண்டாகிறதில்லை பிராயச்சித்த கர்மமோ
வென்றால் கியானசாதனமாயிருக்கும்பாபத்தைச் சமூ
லமாக நாசம்பண்ணக்கியானமேமுக்கியமானபிராயச்சி
த்தம்பத்தியமாய்ப் புசிக்கும்புருஷனுக்கு வியாதிகள்
எந்தப்பிரகாரம் விர்த்தியாகிறதில்லையோ அப்படியேநி
யம அனுஷ்டானத்தைப் பணணுகின்றபுருஷன் மெள்
ளமெள்ள தத்துவக்கியானத்தை யடைகின்றான் தரும
த்தை யறிந்தவர்களாயும் ஜிதேந்திரியாளாயு மிருக்கிற
பேர்கள் மனோவாக்குக் காயங்களினால் பண்ணப்பட்ட
மகத்தாயும் கலபமாயுமிருக்கிற பாபத்தைப் பிராயச்சி
த்தத்தினாலும் ஸ்திரீசம்பந்த மில்லாமையான பிரமசரி
யத்தினாலும், இந்திரிய நிக்கிரகத்தினாலும், கர்மபலத்
தைவிட்டதினாலும். சத்தியசவுசங்களினாலும், சரணாக
தியினாலும் நாசம்பண்ணுகின்றார்கள் வாசுதேவனையே
பற்றுகின்ற பிரபன்னரான சிலர்கேவலம் சரணாகதியி
னால் பாவத்தை, யுதறிப்போடுவார்கள் ஓய் அரசனே,
யெந்தப்பிரகாரம் கிருட்டினனிடத்தில் சமர்ப்பிக்கப்ப
ட்டசரீரம் அர்த்தம்பிராணன் இதுகளையுனடய புருஷ
ன் அந்தக்கிருஷ்ணபக்தாளான பாகவதாளுடைய சே
வையினால் சதாசாரிய சமாசிரோணத்தினால் சுத்தனாவ
னோ அந்தப்பிரகாரம் பாபியானவன்தபசுபிரமசரியமு
தலான பாவநிவர்த்தி சாதனங்களினாற் பரிசுத்தனாகின்
றான் யாதொரு சரணாகதிமார்க்கத்தில் நல்லசீலத்தை
யும் நாராயணனையே முக்கியமானகதியாகஉடைய சத்
புருஷாள் உண்டாயிருக்கின்றார்களோ அந்தமார்க்கமா
னது உலகத்தில் ஒருக்காலும் பயமில்லாமல் க்ஷேமசா
தனமுஞ் சிரேட்டமுமான மார்க்கமல்லவா ஆகலால்
செய்துகொள்ளப்பட்டபிராயச்சித்தங்கள் நாராயணனி
டத்தில் பக்தியில்லாத புருஷனைப் பரிசுத்தனாகப் பண்
ணப்பட்டதுகள் இந்தலோகத்தில் எவர்கள் கிருட்டின
னுடைய குணங்களில் பிரீதியை யுடையவர்களாய் அந்
தபகவானுடைய பாதாரவிந்தங்களில் ஒருக்கால் மன
தைவைத்த அந்த மகானுபாவாள் சகலபிராச்சித்தமு
ம்பண்ணிக் கொண்டவர்களாய் இயமனையும்இயமபடா
ளையும் சொப்பனத்திலேயும் பாரார்கள் இந்தச்சரணா
கதி பிரகரணத்தில் அனாதியான இந்த இதிகாசத்தைப்
பெரியோர்கள் சொல்லுவார்கள் இராஜ சிரேட்டனே,
அந்தஇதிகாசமாகியவிட்டுணு தூதர்களுக்கும் இயம
தூதர்களுக்குமுண்டான சம்வாதத்தைச்சொல்லுகின்
றேன்,

கன்னியாகுடச்சமென்கிற பட்டணத்திலே அசர
மேளனென்று பெயரையுடையவனாய்த் தாசிபதியானவொ
ருபிராமணன் வைதிகசாரங்களைவிட்டுத் தாதியினுடை
சங்கத்தினாலேதூஷிக்கப்பட்டவனாயிருந்து சொக்கட்டா

யங்களினாலேயும் நித்தியமான விருத்தியைப்பண்ணிக்
கொண்டு ஆசாரஈனனாய்ச் சம்சாரத்தைப் போஷித்து
ப்பிராணிகளைப் பிடித்துக்கொண் டிருந்தான் வாராய்
ராஜனே இந்தப்பிரகாரம் வாசம்பண்ணிக்கொண்டு அ
ந்தத்தாசிகளுடைய பிள்ளைகளையெடுத்து உபலாலனம்
பண்ணிக்கொண்டிராநின்ற அந்தஅசரமேளனுக்கு ஆ
யுசிலே யெண்பத்தெட்டுச் சம்வச்சரந்தாண்டிப்போச்
சுது வார்த்தீகத்தை யுடையவனான அந்தஅசரமேளனு
க்குப் பத்துப்பிள்ளை அந்தப்பிள்ளைகளுக்குள்ளே கடை
சிபிள்ளை நாராயணனென்று பெயரையுடையவன் தாய்
தகப்பனுக்கு மிகவும் இட்டனாயிருக்கிறவன் மழலைச்
சொல்லுகளுடனேகூடின அந்தநாராயணனென்கிறகு
ழந்தையினிடத்திலே மனதையுடைய விருத்தனான அ
ந்த அசரமேளனானவன் அந்தப்பிள்ளையினுடையவிளை
யாட்டுக்கண்ணாலே பார்த்துக்கொண்டு மிகவுஞ்சந்தோ
ஷத்துடனே தான்சாப்பிடுகிறபோதும் பானம்கண்ணு
கிறபோதும் அந்தக்குழந்தையினிடத்தில் பிரீதியுடை
யவனாய் அந்தக்குழந்தைக்கும் தான்பண்ணுகிற அந்த
ப்போஜனங்களைப் பண்ணுவித்துக்கொண்டு மூடனான
அந்தஅசரமேளன் சமீபித்திருக்கின்ற மரணகாலத்தை
யறியாமல் அந்தநாராயணனென்கிற குழந்தையினிடத்
திலே மனதைவைத்திருந்தான்,

அந்த அசரமேளனானவன் கையிலேபாசத்தை யு
டையவர்களாயும் மிகவும்பயங்கராளாயும் வக்கிரமான
முகத்தை, யுடையவர்களாயும், தன்னைக்கொண்டு, போ
குகைக்கு வந்தவர்களாகியும் இருக்கிற மூன்றுஎமகிங்க
ராளைப்பார்த்துச் சலியாநின்ற இந்திரியங்களை யுடைய
வனாய்த் தூரத்திலே விளையாடாநின்ற அந்தநாராயண
னென்கிறகுழந்தையை ஓநாரயணாவென்று உரத்தசத்
தத்துடனே அழைத்தான் வாராய் ராஜசிரேட்டனே,ம
ரியாநின்ற அந்த அசரமேளனுடைய முகத்தில்நின்று
ம் உண்டாகாநின்ற ஹரிகீர்த்தனத்தைக் கேட்டமாத்தி
ரத்திலே ஸ்ரீபகவானுடைய பாரிஷதாள் சீக்கிரமாக வ
ந்துவிட்டார்கள் தாசிபதியான அந்தஅசரமேளனை இ
ருதயப் பிரதேசத்தில்நின்றும் விழாநின்ற எமதூதா
ளை அந்தவிஷ்ணு தூதாள்தங்களுடைய பராக்கிரமத்தி
னாலே நிறுத்தினார்கள் இந்தப்பிரகாரம் விஷ்ணுதூதா
ளாலே தகையப்பட்ட அந்தஎமதூதாள் விஷ்ணுதூதா
ளைப்பார்த்து ஒருவார்த்தைசொன்னார்கள் நீங்கள் ஆர்
தர்மராஜாவினுடைய ஆக்கினையை நிராகரிக்கிறீர்கள்,
ஆருடையதூதாள் எங்கேயிருந்து வந்தீர்கள் எதற்காக
எங்களைத் தடுக்கிறீர்கள் நீங்களென்ன தேவர்களா உப
தேவர்களா அல்லது சித்தோத்தமர்களா எல்லாரும் தாம
ரைத் தளம்போலொத்த கண்களையுடையவர்களாயும்பீ

வர்களாயும் பிரகாசித்துக்கொண் டிருக்கிற தாமரை
மாலையை யுடையவர்களாயும், சங்கம், சக்கரம், கெதை,
கட்கம், சார்ஙகம், அக்ஷய தூணீரம் இதுகளையுடையவ
களாயச் சரீரகாந்தியினாலே திக்குகளை அந்தகாரசூனி
யங்களாகப் பண்ணிக்கொண்டு அன்னியாளுடைய தே
ஜசையும் அடக்கிக்கொண்டு பிரகாசிக்கிறீர்கள்.

தர்மராஜாவினுடைய கிங்கராளான எங்களை என்
னநிமித்தியமாக நிராகரிக்கிறீர்களென்று எமதூதாள்
சொல்ல வாசுதேவனுடையதூதாள் அந்தஎமதூதாளை
ப்பார்த்துச் சிரித்து மிகவும்கெம்பீரமான வாக்கினாலே
சொல்லுகின்றார்கள் நீங்கள் தாமராஜாவினுடைய சுவ
ரூபமும் பிரமாணமும் எப்படிப்பட்டது அதைஎங்க
ளுக்குச்சொல்லுங்கள் தண்டனையானது எந்தப்பிரகார
ம்பண்ணப்படுகிறது தண்டனைக்கு விஷயமானது எப்
படிப்பட்டது தர்மத்தைச் செய்கிறவர்களெல்லாருந் த
ண்டிக்கத்தக்கவர்களா இல்லாவிட்டால் மனிதர்களுக்கு
ள்ளே தண்டிக்கத்தக்கவர்களாஎன்று விஷ்ணுதூதாளா
லே கேட்கப்பட்டவர்களாய் எமதூதாள் சொல்லுகிறா
ர்கள் வேதத்திலே எதுசெய்யத்தக்கதாக விதிக்கப்பட்
டிருக்கிறதோ அதுவே தர்மமென்று அறியத்தக்கது-
வேதத்திலே எதுசெய்யலாகாதென்று நிஷேதிக்கப்பட்
டிருக்கிறதோ அதுஅதர்மமென்று அறியத்தக்கது அந்
தவேதமோவென்றால் சுவாயம்புவான சாக்ஷாத்நாராய
ணனுடைய சுவாசமென்று கேட்டிருக்கிறோம்யாதொ
ருத்தராலே தன்னுடையரூபத்திலே சத்துவராஜஸ்த
மோகுணத்தை யுடையவாளான இந்தப் பிராணிகள்
சாந்தத்துவ கோரத்துவ மூடத்துவங்களாகிற குணங்க
ள்பிராமணாதி நாமங்கள் அத்தியயனமுதலான கிரியை
கள் வர்ணாசிரமாதிரூபங்கள் இதுகளினாலே யதார்த்த
மாக அறியப்படுகிறார்களோ அவரேஸ்ரீமந்நாராயணன்
சூரியன், அக்கினி, ஆகாசம், வாயுவு சலங்கள் சந்திரன்
சந்திகள், அகோராத்திரங்கள் திக்குகள், பூமி, காலம்-எ
வன் இவர்களெல்லாம்சீவனுக்குச் சாட்சியா யிருக்கி
றார்கள் சாட்சிகளான இவர்களாலே அறியப்பட்டஅத
ர்மமே தண்டனைக்கு விஷயமாகச் சொல்லப்பட்டிருக்
கிறதுகள் கர்மத்தைப்பண்ணுகின்ற சகலபிராணிகளு
க்கும் அகங்கார மமகாரங்களினாலே உண்டாகாநின்ற
அதர்மானுகுணமாகத் தண்டனைக்கு யோக்கியாளாகவி
ருக்கிறார்கள் எவனாலே எந்தப்பிரகாரம் எவ்வளவுதா
மந்தான் அதர்மந்தான் செய்யப்படுகிறதோ அந்தப்பு
ருஷன் அப்படிதானே அந்தத்தர்மாதர்மபலத்தைலோ
காந்தரத்திலே அனுபவிக்கிறான்.

வாருங்கள் தேவசிரேஷ்டாளே பிராணிகளிடங்க
ளிலேசத்துவமுதலான குணங்களையுடையபிரிவினாலே
சாத்துவீகமாயும் ராஜசமாயும் தாமசமாயும் மூன்றுபி
ரகாரம் எப்படிகாணப்பட் டிருக்கிறதோ அப்படியே
ஜென்மாந்தரத்திலேயும். அந்தப்பிரகாரம் யூகிக்கப்பட்
டிருக்கும் வர்த்தமானமாயிராநின்ற வசந்தாதி காலமா
னதுஎப்படியானால்முன்னேபோயிருக்கிறவசந்தகாலத்
துக்கும் இனிமேல்வரப்போகிற வசந்தகாலத்துக்கும்
புஷ்பம்பல முதலானதுகளுக்குக் கியாபகமில்லாமலிரு
க்கிறதோ இந்தப்பிரகாரம் இந்தஜென்மமானது பூர்வ
ஜென்மத்துக்கும் வரப்போகிற ஜென்மத்துக்கும்தர்மா
தர்மங்களுக்குக் கியாபகமில்லாம லிருக்கிறதுபகவானா
னதர்மராஜாவோவென்றால் அந்தரியாமியான பரமாத்
துமாவைப்போல் சமயமனி பட்டணத்திலேயே யிருந்
துகொண்டு மனதினால்தானேபிராணிகளுடையதர்மா
தர்மங்களையெல்லாம் அறிந்துகொண்டு பிற்பாடு அந்த
ப்பிராணியினுடைய தர்மாதர்மத்துக்கு அனுகுணமா
கவிசாரிக்கிறான் அக்கியானியான புருஷனானவன் ஜெ
ன்மாந்தரகர்வத்தினாலே பிராப்தமாயிருக்கிற இத்தேக
த்தையே நானென் றெணணிக்கொண்டு ஜென்மாந்தர
க்கியானமில்லாதவனாய்ப் பூர்வஜென்மத்தையும், வரப்
போகிற ஜென்மத்தையும் அறியமாட்டான் ஒருசீவனா
னவன்கர்மேந்திரியங்க ளாந்துகளினாலேயும் கர்மங்களை
ப்பண்ணுகிறான் கியானேந்திரியங்க ளாந்துகளினாலேயு
ம்,சப்தாதிஐந்துவிஷயங்களையும் அறியாமலிருக்கிறான்
சோடசகலையையுடையதாயும் குணத்திரயத்தை யுடை
யதாயும் அநாதியாயுமிருக்கிற இந்தச்சரீரமானது சீவ
னிடத்திலே சந்தோஷம் துக்கம் பயம் பீடை இதுகளை
க்கொடாநின்ற சமுசாரத்தை யுண்டுபண்ணும் அக்கிய
னாயும் காமக்குரோதங்கள்முதலான அரிஷட்வர்க்கத்
தைச் ஜெயிக்கமாட்டாதவனாயு மிருக்கிற புருஷனானவ
ன்இச்சியாமலிருந்தும் இந்தச்சரீரத்தினாலே பலாத்கா
ரமாகக் கர்மங்களைப் பண்ணுவிக்கப் படுகிறான்; கோச
காரமென்று பெயரையுடையதான பூச்சியானது தான்
தானே பாதனமான கூண்டைப்பண்ணிக்கொண்டு அ
தற்குள்ளே யகப்பட்டு வெளிப்படமாட்டாம லிருக்கு
மோ அப்படிகர்மத்திலே அகப்பட்டுக்கொண்டு அந்த
க்கர்மத்தைவிட்டு வெளிப்படுகைக்கு உபாயமறியாத
வனாய் மோகித்திருக்கிறான் ஒருத்தனுங் கர்மத்தைப்
பண்ணாம லிருக்கிறவனில்லை பூர்வ கர்மானுகுணமாக
உண்டாகாநின்ற குணகாரியமான காமக்குரோதாதிகளி
னாலேசகலபிராணியும் பரவசமாயிருந்துகொண்டுபலா
த்காரமாகக் கர்மத்தைச் செய்விக்கப்படுகிறது அதிஷ்
டரூபமான நிமித்தியத்தையடைந்து அந்தஅஷ்டானரூ
பமான ஸ்தூலமாயும், சூட்சுமமாயுமிருக்கிற் தேக
மானது பலவத்தான கர்மவாசனையினாலே மாதாபிதூர்
க்களுக்குச் சமானமாகவேஉண்டாகும் இந்தப்பிரகார
ம் பிரகிருதியினுடைய சம்பந்தத்தினாலே புருஷனுக்கு

ச் சம்சாரமானது உண்டாகிறது அந்தச் சமுசாரமும்
சீக்கிரமாக ஈஸ்வரவுபாசனையினலே நசித்துப்போகும்
இந்த அசாமேளனேவென்ருல் சாஸ்திரசம்பன்னனுயு
ம்-சீலம்-சதாசாரம்- பொறுமை-இதுமுதலான குணங்
களுக் கிருப்பிடமாயும், விரதங்க ளனுஷ்டித்தவனுயும்,
சத்தியவாக்காயும், சுசித்வ குணத்தை யுடையவனுயும்,
வேதவித்தாயும்-குரு-அக்கினி-அதிதிகள் - விருந்தாள்-
பிராமணுள் இவர்களுடையசிசுவிடையிலேபிரீதியுடை
யவனுயும் அகங்கார மில்லாதவனுயும், சர்வபூதங்களுக்
கும் சுகிர்தாயும், சாதுவாயும்-மிருதபாஷியாயும்- அசூ
யையில்லாதவனுயும், பூர்வத்திலே யிருந்தான் இப்படி
ப்பட்ட ஆத்துமகுணங்களுடனேகூடின இந்தப்பிராம்
மணன் ஒருக்கால் பிதாவினுடைய ஆக்கினையினலே வ
னத்துக்குப்போய்ப் பலபுஷ்பசமித்து தெர்ப்பைஇதுக
ளைக்கொண்டு திரும்பிவரும்போது மதுமத்தியங்களைப்
பானம்பண்ணி அந்தமதுபானத்திலே சிவந்துசுழலாநி
ன்ற நேத்திரங்களையுடையவர்களான போகஸ்திரீயான
தாசியுடனேகூடக்கிரீடித்துக்கொண்டிருக்கிறகாமுகனு
ன ஒருசூத்திரனைக்கண்டான். அந்த மத்தியபானத்தினு
லேமதித்து வஸ்திரங்கள் அவிழ்ந்துபோய் லச்சையில்
லாமல் அவளுடனேகூடக்கிரீடித்துக்கொண்டும் கான
ம்பண்ணிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் அவளோடு
சமீபத்திலேயிராநின்ற அந்தக்காமுகனுன சூத்திரனையு
ம் காமவிகாரத்தோடு கைகளினலே யாலிங்கனம் பண்
ணிக்கொள்ளப்பட்ட அந்தஸ்திரீயையும்பார்த்து அந்த
ட்சணத்திலேயே மன்மதவசியனுய் மோகத்தையடைந்
து தன்னுடைய மனதைச் சாஸ்திரக் கியான பலத்தினு
லே நிறுத்தியிருந்தாலும் காமாதிசயத்தினுல்மன்மதனு
லே மிகவும் அலைக்கப்பட்ட மனதை நிறுத்துகைக்குச்
சத்தியற்றவனுகப் போனுன். அந்தப்போகஸ்திரீ காமு
கன் இருவரையும் பார்த்ததினுலே உண்டாகாநின்ற ம
ன்மதனுகிற பிசாசத்தினுலே பீடிக்கப்பட்டுவிவேகமில்
லாதவனுய் அவளையே மனதில் தியானம்பண்ணிக்கொ
ண்டு சுதர்மமான வைதீகக்கிரிகைகளைவிட்டவனுய்ப் பி
தாவினுலே சம்பாதிக்கப்பட்ட தனம் எவ்வளவுஇருந்த
தோ அவ்வளவுதனத்திலேயும் இஷ்டங்களினுல் விஷய
சுகங்களினுலேயும் அவளைச்சந்தோஷிப்பித்துக்கொண்
டிருந்தான் அந்தத் தாசியுடைய கடைக்கண் பார்வையி
னுலே விவேகசூனியனுன அந்தப் பிராமணனுனவன்சீ
க்கிரமாய் அக்கினிசாட்சியாகக் கலியாணம் பண்ணப்ப
ட்டவளாயும் பிரபுடைய நாரியாயுமிருக்கிற தன்னுடை
ய பாரியையும் விட்டுவிட்டு நியாயமாயும், அனியாயமா
யும் தனங்களைச் சம்பாதித்து அந்தப் போகஸ்திரீயினு
டைய சம்சாரத்தை மந்தபுத்தியான அந்தப்பிராம்மண
னுனவன் ரட்சித்துக்கொண்டிருந்தான், அதனுலே, யிந்
த அசாமேளனுனவன் சாஸ்திரமார்க்கங்களை விட்டுவிட்டு
த்தாசியினுடைய சகவாசத்தினுல்பெரியோர்களால் நிந்
திக்கப்பட்டவனுய் அவளுடைய அன்னத்தையேபொசி
த்துக்கொண்டு அசுசியாய் வெகுகாலம் பாபரூபமான
ஆயுசையுடையவனுயிருந்தான் ஆகையினலேமகாபாவ
த்தைப் பண்ணினவனுகவும் பண்ணபாவத்துக்குப்பிரா
யச்சித்தம் பண்ணிக்கொள்ளாம லிருக்கிற இந்த அசா
மேளனைத் தண்டபாணியான எமனுடையசமீபத்திலே
கொண்டுபோகிருேமென்று எமதூதாள்சொன்னுர்கள்.

## உ-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்,

அந்தவிஷ்ணுவின் கிங்கராளானவர்
சிந்தைகூர்ந்தெம தூதர்க்குச்செவ்வையாய்
அந்தநாமசங்கீர்த்தனை யறிவித்து
விந்தையாம்விஷ்ணு லோகத்தைச்சேர்ந்தனர்

விட்டுணுகிங்கராளானவர்கள் எமதூதாளுக்கு அற்பு
தமான அரிநாமசங்கீர்த்தனைப் பிரபாவங்களைத் தெரிவி
த்து அந்தஅசாமேளனென்கிற பிராமணனை விட்டுணு
லோகத்தை யடையச்செய்தார்களென்று சொல்லப்படு
கிறது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்மகாராஜாவே, இந்தப்பிரகாரம் அந்த எம
தூதர்களுடைய வசனத்தைக்கேட்டு ஞாயத்தையறிந்த
வர்களான அந்தபகவத்கிங்கராள் அந்தஎமதூதாளைக்கு
றித்துப் பிரதியுத்தரஞ் சொல்லுகின்ருர்கள்,

விட்டுணுதூதாள் வாக்கியம்.

ஆச்சரியம் தர்மத்தையறிந்தவர்களுடைய சபையி
லே பாவத்தைப் பண்ணுத புருஷனுனவன் விருதாவா
கத்தண்டிக்கப்பட்டால் அந்தத்தர்மசபையைஅதர்மமா
னது அடையாமலிருக்குமா இந்தத் துக்கத்தை என்ன
சொல்லப்போகிருேம்பிரசைகளுக்குப்பிதாவைப்போ
லாட்சிக்கிறவர்களாயும், சிட்சிக்கிறவர்களாயும், எல்லா
ருக்குஞ்சமானுளாயுமிருக்கிற சத்புருஷாளிடத்திலே ப
ட்சபாதமுண்டாச்சுதானுல் பிரசைகளானது எவனைச் ச
ரணமாகஅடையும் சிரேஷ்டனுயிருக்கிறவன் எந்தத்தர்
மத்தைப் பிரமாணமாக ஒப்பி நடக்கிருனே இந்தச்ஜெ
னமும் அதையேபிரமாணமாகப்பற்றி அனுவர்த்திக்கு
ம் சகலபிராணிகளும் விசுவாசிக்கத் தக்கவனுயும் தயா
ளுவாயுமிருக்கிற புருஷனுனவன் தன்னிடத்திலொப்பி
க்கப்பட்ட சரீரத்தையுடையதாயும், சிநேகத்தை யுடை
யதாயும், அக்ஞியனுயுமிருக்கிற அந்தப்பிராணியை எப்
படித்துரோகம்பண்ணுவன். இந்த அசாமேளனே வெ
ன்ருல் யாதொருகாரணத்தினுல் ஸ்ரீஅரியினுடைய மங்
களங்களுக்கெல்லாம் இருப்பிடமான நாமத்தைப்பரவ

சனுய் உச்சரிக்கின்ற இந்நாமசங் கீர்த்தனத்தினுலே கோடிஜென்மங்களிலே பண்ணப்பட்ட பாபங்களுக்கெல்லாம் பிராயச்சித்தம்பண்ணிக்கொண்டவனுனன்நாராயணு இங்கேவாவென்று நாலு அட்சரத்தையுடையதான இந்தப்பகவான் நாமத்தையுச்சரித்தானே இந்தப்பகவன்நாம உச்சாரணத்தினுலே மகாபாபியாயிருக்கிறஇந்த அசரமேளனுடையபாபங்களுக்குப் பிராயச்சித்தமானது பண்ணப்பட்டது.

சோரன்-சுராபானம்பண்ணவன்-மித்துரு துரோகம்பண்ணவன் - பிர்மஹத்தி பண்ணவன் குருஸ்திரீசம்போகம்பண்ணவன்-ஸ்திரீஹத்தி பண்ணுவன் இராஜாவைக்கொன்றவன்-மாதாபிதுரு ஹத்திபண்ணவன்இதுகள்முதலான மஹாபாதகங்களைப்பண்ணின பாபிகளுக்கெல்லாம் இந்தவிஷ்ணுவினுடையநாமசங்கீர்த்தனமே முக்கியமான பிராயச்சித்தமாயிருக்கிறது பகவானுனவர்தன்னுடையநாமத்தை இச்சிக்கிறவன்விஷயத்திலேஎன்னுடைய பக்தனென்று நாராயணனுக்கு மனது உண்டாயிருக்கிறது. மகா பாபியா யிருக்கிறவன் உச்சரிக்கப்பட்ட ஸ்ரீஹரியினுடைய நாம பாதங்களினுலே பரிசுத்தனுவதுபோல் பிர்மவித்துக்களினுல் சொல்லப்பட்டபிராயச்சித்தங்களினுலேயும், சாந்திராயணமுதலான விரதங்களினுலேயும், பரிசுத்தனுகமாட்டான் பிராயச்சித்தமானது நிசேஷமாகப் பாபபலத்தைப் போக்கடிக்கமாட்டாது பிராயச்சித்தம்பண்ணப்பட்டிருந்தும் மனதானதுதிரும்பவும் பாபத்திலே ஓடுகிறதல்லவா, நிசேஷமாகப் பாபத்தைஇச்சிக்கிறபேர்களுக்கு ஹரியினுடையகுணகீர்த்தனமே முக்கியமானபிராயச்சித்தமாகவிருக்கிறது, ஆகையினுலே சகலபாபங்களுக்கும் பிராயச்சித்தத்தைப் பண்ணிக்கொண்ட இந்த அசரமேளனைப் பாபிகளுடையமார்க்கத்திலேநீங்கள்கொண்டுபோகவேண்டாம், இந்தஅசரமேளன் மரணத்தைஅடைகிறவனுயிருந்தும் பகவான் நாமத்தை யுச்சரித்தபடியினுலே சமஸ்தபாபங்களுக்கும் பிராயச்சித்தம் பண்ணிக்கொண்டவனுனன். உன்னதப்பிரதேசங்களி னின்றும் விழுந்தாலும் மார்க்கங்களிலே யிடறினுலும் சரீரத்திற்கு எதினுலாவது பங்கமுண்டானுலும், சற்பாதிகளினுலேகடிக்கப்ப[illegible]லும், சுவரங்களிலே தபிக்கப்பட்டாலும், தண்டா[illegible]ளினு லடிக்கப்பட்டாலும் பரவசமாக அந்தப்புருஷ[illegible]யென்று பகவன்நாமத்தை யுச்சரித்தால் அவன் [illegible]க்கு [illegible] இல்லை கியானிகள்ர்னம [illegible]

[illegible]னுடைய களங்கமானது [illegible]

னத்தினுலேயும், களங்கம்நசித்து மனதிற்குச்சுத்தியுண்டாகும்.

வாருங்கள்எமபடாளே, இந்தத்தர்மத்திலே உங்களுக்குச்சமுசயமுண்டாயிருந்ததேயானுல்உங்களுடையசுவாமியைப்போய்க்கேளுங்கள் பகவானுனஎமன் அந்தத்தர்மத்தினுடைய பரமரகசியத்தை அறிவனென்று விஷ்ணுதூதாள் சொன்னுர்கள்,

வாராய்ராஜாவே, இந்தப் பிரகாரம் அந்தவிஷ்ணுகிங்கராள் பாகவததர்மத்தை நிஷ்கரித்துச்சொல்லு அந்தஅசரமேளனை எமபாசத்தில்னின்றும்விடுவித்துமரணத்தில்நின்றும் விடுவித்தார்கள்; எமதூதாளானவர்கள்விஷ்ணு தூதர்களான இந்தப்பிரகாரம் நிராகரிக்கப்பட்டவர்களாய் எமனுடைய சமீபத்திலேபோய் இந்தவிருத்தாந்தத்தைச் சொன்னுர்கள். அந்தப் பிராமணனும் மிருத்திவுபாசத்தில் நின்று விடுபட்டவனுய்ப் பயத்தை விட்டுச் சுபாவத்தையடைந்து விஷ்ணுகிங்கராளைப்பார்த்ததினுலே மிகவுஞ்சந்தோஷத்தையுடையவனுய்ச் சிரசினுலே சாஷ்டாங்கப் பிரணமம் பண்ணினன் அந்தமகாபுருஷகிங்கராளும் அந்தப் பிராமணனுடைய அபிப்பிராயத்தையறிந்து அவன்பார்த்துக்கொண் டிருக்கும்போதே அந்தர்த்தானமாய்ப்போனுர்கள். பிற்பாடுஅசரமேளனும் மூன்றுவேதங்களினுலே சொல்லப்பட்டும் சுத்தமாயும் சகல சிரேயசுக்கும் இருப்பிடமாயும் விஷ்ணுதூதாளுக்கும் எமதூதாளுக்கும் சம்வாத ரூபமாயுமிருக்கிற பகவத்தர்மத்தைக்கேட்டு ஹரியினுடையமகாத்மியத்தைக் கேட்டதினுலே சீக்கிரமாகப் பகவானிடத்தில் மிகவும்பக்திமானுய்த் தான்பண்ணபாவத்தை நினைத்து மகத்தான பசியாத்தாபமுண்டாச்சுது அந்தப்பசியாத் தாபத்தைச் சொல்லுகிறுர் அதெப்படியென்றுல் நான் சிறுபெண்ணுயும் பதிவிரதையாயு மிருக்கிற பாரியைவிட்டு மத்தியபானம் பண்ணுகிறவளாயும் விபசாரியாயுமிருக்கிற சூத்திர ஸ்திரீயையடைந்துகுசலத்துக்குக்களங்கத்தைப்பண்ணியும் மகாபாபியாயும் சத்புருஷாளாலே தூஷிக்கப்பட்டுமிருக்கிற என்னைச்சுடவேண்டாமா நான்மிகவும்பயங்கரமான இந்த நரகத்திலே நிச்சயமாகவிழப்போனேன் இது சொப்பனமோ இல்லாவிட்டால் பிரத்தியட்சமாகவே இவிடத்திலேமகத்தான ஆச்சரியமானது காணப்பட்டதல்லவா பாசபாணிகளாயிருக்கிறசிலபேர் என்னையிழுத்தார்கள் அவர்கள் இப்போயெங்கேபோனுர்கள் பாசங்களினுலேகட்டிப் பூமியின்கீழே பாதாளத்திலேகொண்டுபோகப்படாநின்ற என்னை சிலபேர்கள்விடுவித்தார்கள் மனோக்கியமான தரிசனத்தை யுடையவர்களான அந்தநாலுசித்தர்களும் இப்போது எங்கேபோனுர்கள், அந்தச்சித்தபுருஷாளுடைய [illegible]னுல் துர்ப்பாக்கியனை எனக்குப்பூர்வமா

யிருக்கிறமகத்தான புண்ணியமுண்டாயிருக்கவேணும் பூர்வபுண்ணியமில்லாமற்போனால்பாவியாயும் தாசிபதியாயும் மரணத்தையடைந்துமிருக்கிற என்னுடைய நாவானது வைகுண்டனுடைய நாமத்தையுச்சரிக்கிறதைக்கு இவிடத்திலேஎப்படியோக்கியமாகவிருக்கும் அக்கியானம்-காமம்-கர்மம்-இதுகளினாலேயுண்டாகாநின்றஇந்தச்சமுசாரபந்தத்தைவிட்டுச் சர்வப்பிராணிகளிடங்களிலேயும் சினேகத்தையுடையவனாய்ச்சாந்தி-மயித்திரி கருணை-இதுகளையுடையவனாய் ஆத்துமநிஷ்டையையுடையவனாய் யாதொருமாயையினாலே அதமனான நான் கிரீடாமிருகம்போல லீலைபண்ணப்பட்டேன் ஸ்திரீரூபமாயிருக்கிறஅந்தமாயையினாலே ஆக்கிரமிக்கப்பட்டிருக்கிற இந்தஆத்துமாவைவிடுவித்துக்கொள்ளுகிறேனென்று வயிராக்கியத்தையுடையவனாய்ப் புத்திராதிகளத்திராதிசினேகத்தைவிட்டவனாய்க் கெங்காதுவாரத்தைப் போயடைந்தான். தேவதைகளுக்கிருப்பிடமான அந்த கெங்காதுவாரத்திலேயிராநின்ற அந்தப் பிராமணனானவன்யோகமார்க்கத்திலேயிருந்துகொண்டு இந்திரியங்களை விஷயங்களில்பிரவர்த்தியாமல்நிக்கிரகித்தவனாய்மனதைப் பரமாத்துமாவினிடத்தில் கூட்டிவைத்தான்.

பிற்பாடுதேகம் இந்திரியம் இதுகளில்நின்றும்தன் ஆத்துமாவை வேறாகப்பண்ணி யேகாக்கிரமானமனதினாலே அனுபவரூபமாயும் பரப்பிர்மமாயுமிருக்கிறஅந்தப்பகவானிடத்திலே யேகப்பிரகாரமாகப்பண்ணினான் எப்போதுஅந்தப்பகவானிடத்திலே நிச்சலமானபுத்தியையுடையவனானானோ அந்தக்காலத்திலே முன்னேகாணப்படாநின்ற அந்தபகவத் கிங்கராளைக்கண்டு இவாள் முன்னே காணப்பட்டவர்களல்லவாவென்று கியாபகம் பண்ணிக்கொண்டு சிரசினாலேபிரணமம் பண்ணினான் அவர்களைக்கண்டபிறகு கங்காதீரத்திலே தன்னுடையசரீரத்தைவிட்டு அந்தட்சணத்திலே பகவானுடையபாரிசத்திலேயிராநின்றபேர்களுடைய சுரூபத்தையடைந்தவனாய்அந்தப்பிராமணனானவன் பகவத்கிங்கராளுடனே கூட ஆகாசமார்க்கமாய்ச் சொர்னவிமானத்தின்மேலே யேறிக்கொண்டு சாட்சாத்ஸ்ரீயப்பதி எந்தலோகத்திலே யிருக்கிறாரோ அந்தலோகத்தை யடைந்தான் வாராய் ராஜாவே, இந்தப்பிரகாரம் சர்வதர்மங்களை விட்டவனையும் தாசிபதியாயும் சுராபானமுதலான நிஷித்தமான கர்மங்களையுடையவனையும் நரகத்திலே தள்ளப்படுமவனையும் விரதங்களைவிட்டவனையுமிருக்கிற அந்த அசாமேளனானவன் பரவசனாய்ப் பகவன் நாமத்தை யுச்சரித்துக்கொண்டு அந்தக்ஷணத்திலேதானேமுக்தனாய்விட்டான், மோட்சத்தையடையவேணுமென்று இச்சியாநின்றபேருக்குப் பகவன்நாமோச்சாரணத்தைத் தவிர பாபபந்தத்தை நாசம்பண்ணுகிறது வேறொன்றில்லை அநிநாமகீர்த்தனமோவென்றால் சகலபாபங்களையும் நசிப்பித்துமனதுக்குச்சுத்தியையுண்டாக்குகிறது, இந்தப்பிரகாரம்பரமரகசியமாயும் பாபஹரமாயுமிருக்கிற இந்தஉபாக்கியானத்தைச் சிரத்தையுடனேகேட்கிறவனும் பக்தியினாலே கீர்த்தனம்பண்ணுகிறவனும் நரகத்தையடைகிறதில்லை. மனுஷியனானவன் மகாபாபியாயிருந்தாலும்நாமசங்கீர்த்தனப்பிரபாவத்தினாலே விஷ்ணு லோகத்திலே பூசிக்கப்பட்டிருப்பன் மரணத்தையடையாநின்ற அசாமேளனும்புத்திரனிடத்திலேஉபசரிக்கப்பட்ட ஹரிநாமத்தையுச்சரித்துக்கொண்டு உத்தமமானஸ்தானத்தையடைந்தான், சிரத்தையினாலே ஹரிநாமகீர்த்தனம் பண்ணுகிறவன் மோட்சத்தையடைவனென்பதற்குச்சந்தேகமென்ன.

## ௩-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

தொல்புவியையாளேமன்றன்றூதர்க்கு
வல்லவிஷ்ணுபக் தாளின்பிரபாவத்தைச்
சொல்லுவித்துச் சமாதானம்பண்ணிநீர்
செல்லவேண்டாமெனச்செப்பினரரோ.

எமனானவர் தன்னுடைய தூதாளுக்கு விஷ்ணுபக்தாளுடைய பிரபாவங்களைத்தெரிவித்து அவர்களைச் சமாதானம்பண்ணி விஷ்ணுபக்தாள்விஷயத்திலே நீங்கள்பிரவேசிக்கவேண்டாமென்று சொன்னதாகச் சொல்லப்படுகின்றது,

பரிட்சித்துவினுடைய வாக்கியம்,

வாராய்பிர்மநிஷ்டரே, தடுக்கப்பட்ட ஆக்கினையையுடையவனான அந்தத் தர்மராஜாவானவன் தன்னுடையபடாளாலேசொல்லப்பட்ட விருத்தாந்தத்தைக் கேட்டு விஷ்ணுதூதாளாலேநிராகரிக்கப்பட்ட அந்தபடாளைப்பார்த்துத்திரும்பி என்ன சொன்னான், தேவனான எமனுடைய ஆக்கினைக்குப் பங்கமானது ஒருத்தராலேயுஞ்சொல்லக்கேட்கப்பட்டதில்லை இந்தச்சமுசயத்தைஉம்மைத்தவிரவேறொருவன் போக்கடிக்கமாட்டானென்று பிரசினம்பண்ணாநின்ற பரிட்சித்துவைப்பார்த்துச் சுகர் சொல்லுகின்றார்,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்ராஜாவே, பகவத் கிங்கராளாலே நிராகரிக்கப்பட்ட எமதூதாள் சமயமனிப்பட்டணத்துக்[illegible]மானையும் தங்களுக்குச்சுவாமியாயுமிருக்கி[illegible]த்து விக்கியானம்பண்ணினார்கள்.

எமபடாள் வாக்கியம்,

வாரீர்பிரபுவே மனோவாக்குக்காயங்களி[illegible] மங்களைப்பண்ணுகின்றபிராணிகளுக்குக் கர்மானு[illegible]

மான பலத்தைக்காண்பிக்க ஏதுக்களாயும்சிட்சிக்கிறவாளாயும்இருக்கிறபேர் இந்தலோகத்திலே எத்தனைபேர் உண்டாயிருக்கிறார்கள் லோகத்திலேகர்மானுகுணமாகத்தண்டியாநின்றபிரபுக்கள்வெகுபேர் இருந்தார்களானல் அவர்களிலொருவருக்கொருவர் விரோதத்தினல்சுகதுக்கங்கள் ஒருபிராணிக்கும்உண்டாகமாட்டாது லோகத்திலே கர்மத்தைப்பண்ணுகிறபேர்கள் அனேகமானபடியினலே அவர்களுக்குக்கர்மானுகுணமாகச் சிட்சிக்கிறபிரபுக்களும் அனேகம்பேர்களாயிருக்கலாம் எப்படியானல் சக்கிரவர்த்தியான ராஜாவின்கீழே மண்டலாதிபத்தியம்பண்ணுகிற பிரபுக்களுக்குப் பிரபுத்துவம்உபசாரமாகச்சொல்லப்படுகிறதுபோல் அனேகம்பிரபுக்களையுடையவாளான பிராணிகளுக்கு நீர்ஒருவரேபிரபுவாயும், கர்மானுகுணமாகத் தண்டனை பண்ணுகிறவராயும் மனுஷியாளுடைய புண்ணியபாவங்களைப் பிரித்து அறிகிறவராயும்இருக்கிற உம்முடையஆக்கினையானது மனுஷியலோகத்திலே தடுக்கப்படாமலிருக்கிறதல்லவா இப்போதுஆச்சரியகராளானநாலு சித்தபுருஷாளாலே உம்முடைய ஆக்கினையானது தடுக்கப்பட்டது உம்முடையஆக்கினையினலே நாங்கள் பாபியான அசாமேளனைப் பாசத்தினலேகட்டினேம் அப்போது சித்தபுருஷாள் பலாத்காரமாகப் பாசங்களையறுத்துவிட்டுவிடுவித்தார்கள் அவாள்நாலுபேரையும் நாங்கள்உம்மிடத்தில்நின்றும்அறியுகைக்குஇச்சிக்கிறோம் எங்களுக்குச்சொல்லக்கூடுமானல் சொல்லத்தக்கதென்று தன்னுடைய படாளாலே பிரஸ்னம்பண்ணப் பட்டவனய்ப் பிரசைகளுக்கெல்லாம் நியந்தாவான எமன் சந்தோஷத்தோடுகூடினவனய் அரியினுடையபாதாரவிந்தத்தை ஸ்மரித்துக்கொண்டு தன்னுடைய தூதாளுக்குப் பிரதியுத்தரஞ்சொன்னர்;

எமனுடையவாக்கியம்,

வாருங்கள் தூதர்களே என்னைக்காட்டிலும் வேறய் ஸ்தாவரசங்கமங்களுக்குச் சிரேஷ்டனை ஈஸ்வரன்ஒருத்தன் உண்டாயிருக்கிறான் நானேவென்றால் மனுஷியாளுக்குள்ளே பாபிகளுக்குமாத்திரமே ஈஸ்வானய்அவருடையகிங்கரனயிருக்கிறேன் நாராயணனிடத்திலே இந்தப்பிரபஞ்சமானது நூலினல்நெய்யப்பட்ட வஸ்திரம்போலக் குறுக்கு நெடுக்குமாகக் கோக்கப்பட்டிருக்கிறது அவருடையஅம்சபூதாளான பிரமவிஷ்ணுருத்திராளாலேஇந்தப்பிரபஞ்சத்துக்குச் சிருஷ்டி-ஸ்திதி-சங்காரங்களுண்டாயிருக்கிறதுகள் அப்படிப்பட்ட நாராயணன் நமக்குநியந்தாவாய் அதீஸ்வரன யிருக்கிறான் அந்தப்பகவான் தம்முடையவேதரூபமான வாக்கினலேயும் பிராமணநிகாமங்களினலேயும், பிராணிகளைக் கட்டுகின்றார் அந்தப்பிராணிகள் பகவானுடைய ஆதீனமாயிருந்துகொண்டு சுதர்மத்தைப்பண்ணுகின்றார்கள் நானும் இந்திரனும், நிருதியும், வருணனும்,சோமனும் அக்கினியும்,சிவனும்,வாயுவும்,பிரமாவும்,துவாதசாதித்தியாள்,விசுவதேவகணங்கள், அஷ்டவசுக்கள்,சாத்தியாள், சத்தமருத்துக்கள்,சித்தாளுடனேகூடின ஏகாதசருத்திராள்,பிரசாபதிகளும்,ரசஸ்தமசுக்களினலே ஸ்பரிசிக்கப்படாதபிருகுமுதலானமகாரிஷிகளும்இவர்களெல்லாரும் சத்துவகுணப்பிரதானளாயிருந்தாலும் பகவானுடைய மாயையினலே மோகிக்கப்பட்டவர்களாய் அந்தப் பகவானுடையசங்கல்பத்தை அறியார்களல்லவா அவானைக்காட்டிலும் நிகிருஷ்டாளான மற்றபேர் அறியார்களென்றதற்குச் சொல்லவேண்டியதென்ன சுதந்திராயும்அதீஸ்வராயும்,மாயாதிபதியாயும், மகாத்துமாவாயுமிருக்கிற அப்படிப்பட்டஸ்ரீஹரியினுடைய மனேகராளான தூதாள் இந்தலோகத்திலே மிகவுஞ் சஞ்சரிப்பார்கள்.

தேவதைகளாலே பூஜிக்கப்பட்டவர்களான அந்த விஷ்ணுவினுடையதூதாள்இதராளாலேகாணக்கூடாத சுரூபங்களையுடையவர்களாய் அந்தவிஷ்ணுவினிடத்திலேபக்திமான்களானபிராணிகளைச் சத்துருக்கள் அக்கினிமுதலானபூதங்கள் நான் இவர்களில்நின்றும் இரட்சிக்கப்படுவர்கள் சாட்சாத்பகவானலேசொல்லப்பட்டசுத்தமானபாகவததர்மத்தை ரிஷிகளும் தேவர்களும் அறியமாட்டார்கள் வாருங்கள்படாளே பிர்மாவும்,நாரதரும் சிவனும்,பிர்மகுமாராளான சனற்குமாரரும் கபிலரும், மனுவும்,பிரகலாதனும்,ஜனகனும்,பீஷ்மரும்,பெலியும் சுகரும்,நானும் ஆகஇந்தப் பன்னிரண்டுபேரும்இந்தச் சுத்தமான பாகவததர்மத்தையறிவோம் பரமாகசியமாயும்சுத்தமாயும் அறியக் கூடாததாயு மிருக்கிற அந்தப் பாகவததர்மத்தைஅறிந்தானகில் மோட்சத்தை யடைவன் வாருங்கள்பிள்ளைகளே அரிநாம வுச்சாரணத்தினுடைய பிரபாவத்தைப்பாருங்கள் அந்தஅரிநாம வுச்சாரணத்தினலே அசாமேளனும் மிருத்தியுபாசத்தில்நின்றும்விடுபட்டான் அவன்மகாபாதகனயிருந்தாலும் மரணகாலத்திலே நாராயணவென்று புத்திரனைக் கூப்பிட்டதினல் பகவானுடையநாமத்தைக் கீர்த்தனைபண்ணினதாக முக்தியை அடைந்தான் ஆகையினலே பகவன்நாமகீர்த்தனத்தினல் புருஷனனவன் சகலபாபத்தில் நின்றும்விடுபட்டு முக்தனய் வீங்வன் வேதத்தினிடத்திலேசிரத்தையும் எக்கியாதி கர்மத்திலே ஆசக்தியுமுடையவர்களான மனுமுதலான இந்தமகாசெனமானது இந்தப்பகவந்நாமகீர்த்தனத்தினுடையபிரபாவத்தைஅறிந்தவர்களன்று.

இந்தப்பிரகாரம் ஸ்ரீமந்நாராயணனிடத்திலே பக்தியோகத்தைச் செலுத்துகின்றவர்கள் நம்முடைய தெ

ண்டத்துக்கு உட்பட்டவாளன்று அவரவர்களுக்குப்பாபம் உண்டாகிறதேயில்லை அப்படிப்பட்ட பேருக்கும் ஒருக்கால் பிரகிருதிவாசனையினாலே பாபம் உண்டாகுமாகில் அதையும் அந்தப்பகவானுடைய நாமகீர்த்தனமேபோக்கடிக்கின்றது அப்படிஅரிபக்தாளாயிருக்கிறவர்களுடைய சமீபத்திலேயும் போகாதீர்கள் அப்படிப்பட்டமுகுந்தனுடைய பாதாரவிந்தங்களிலே சிரத்தையில்லாதவர்களாயும் சுதர்மங்களினாலே சூனியமாயும்நரகத்துவாரமாயுமிருக்கிற கிரகத்திலேஆசக்தியையுடையவர்களான துஷ்டாளை அழைத்துக்கொண்டு வாருங்களென்று தங்களுக்குச்சுவாமியான எமனாலே சொல்லப்பட்டபகவான் மகான்மியத்தைக்கேட்டு ஆச்சரியத்துடனே கூடினமனதை யுடையவர்களாய் அந்தஎமகிங்கரர்ள் அன்றுமுதற்கொண்டு நாம்பாகவதாளுடைய சந்நிதானத்திலேபோனால் நம்மிடஸ்வாமியே நம்மைஅடித்துப்போடுவனென்று பயப்பட்டிருந்தார்கள் புண்ணியகரமான இந்தஇதிகாசத்தை,மலயபர்வதத்திலேயிருந்துகொண்டு ஸ்ரீஹரியைப் பூஜியாநின்றபகவானான அகஸ்தியமகாரிஷியானவர் எனக்குச்சொன்னார்,

## ௪-வது அத்தியாயம்,

சந்தவிருத்தம்.

மற்றவிஸ்வரூபத்தின் மகிழ்ச்சினைச்
சொற்றவேண்டு மெனுஞ்சுயவிச்சையாற்
பெற்றதேசசுக் களுடையபிள்ளையா
யுற்றதெட்சன்வம் சமுரைக்கின்றதே

விஸ்வரூபத்தினுடைய வுற்பத்தியைச் சொல்லவேணுமென்கிற இச்சையினாலேபிரசேதசுக்களுடையபிள்ளையானதெட்சனுடையவமிசம் விஸ்தரிக்கப் படுகிறதென்று சொல்லப்படுகின்றது;

பரிட்சித்து கதாப்பிரசங்கத்தினாலே சுவாயம்பு மனுவினுடைய பிள்ளையானபிரியவிரதனுடைய வங்கிஷத்திலே பகவந்நாமசங்கீர்த்தனப் பிரபாவத்தைக்கேட்டு அந்தப்பிரியவிரதனுடைய வம்மிசவிஸ்தாரத்தைஅறியவேணுமென்று இச்சையினாலே பிரசினம்பண்ணுகின்றான்

பரிட்சித்துவினுடைய வாக்கியம்.

வாரீர்பிர்மரிஷியே சுவாயம்புமனுவந்தரத்திலே தேவாள் அசுராள் மனிதாள் முதலான சிருஷ்டியானது உம்மாலே சங்கிரகமாகச் சொல்லப்பட்டது அந்தசிருஷ்டிவிஸ்தாரத்தையும் பகவானான பரமபுருஷன் தன் சக்தியினாலே எந்தப்பிரகாரம் இந்தச்சிருஷ்டியைச் சிருஷ்டித்தாரோ அந்தச்சக்தியையும் சிருஷ்டிப்பிரகாரத்தையும் உம்மாலே தெரிந்துகொள்ளவிச்சிக்கிறேனென்று பிரசினம்பண்ணாநின்ற பரிட்சித்துவுக்கு வியாசகுமாரரான சுகப்பிரம்மரிஷியானவர் சந்தோஷத்துடனேசொல்லுகின்றார்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய பரிட்சித்துமகாராசாவே, பிராசீனபரிகஷியினுடைய பிள்ளைகளான பிரசேதசுக்கள் பத்துபேரும் எப்போது சமுத்திரமத்தியில்நின்றும் வெளிப்பட்டார்களோ அப்போது விருட்சங்களினாலேசூழப்பட்டுக்காடுமூடின பூமியைப் பார்த்தார்கள் விருட்சங்கள் பொருட்டுக் கோபித்துக்கொண்டவர்களாய்த் தபசினாலேசொலியாநின்ற குரோதத்தை யுடையவர்களான பிரசேதசுக்கள் அந்தவிருட்சங்களைத் தகிக்கவேணுமென்கிற இச்சையினாலே முகத்தினால் வாயுவையும் அக்கினியையுஞ் சிருட்டித்தார்கள், அந்தப் பிரசேதசுக்களுடைய முகத்தில் நின்று முண்டான வாயுவினாலேயும் அக்கினியினாலேயும் தகிக்கப்படாநின்ற அந்தவிருட்சங்களைப் பார்த்துமகானும் ஓஷதிவிருட்சங்களுக்கெல்லாம் ராஜாவாயுமிருக்கிற சந்திரன் பிரசேதசுக்களைக்குறித்துக் கோபத்தைப் போக்கடிக்கிறவன்போல் சொல்லுகிறான் வாருங்கள் மகானுபாவர்களே நீங்கள் தீனங்களான விருட்சங்கள்பொருட்டுத் துரோகம்பண்ணுகைக்கு யோக்கியாளன்று பிரஜைகளை விருத்தி பண்ணவேணுமென்று இச்சை யுடையவர்களான பிரஜாபதிகளாகச் சொல்லப்படுகிறீர்கள், ஆதியிலே பிரஜாபதிகளுக் கெல்லாம் பதியாயும், நாசமில்லாதவராயும், கியானசக்திமானாயும், விபுவாயு மிருக்கிற ஸ்ரீ அரியானவர் விருட்சங்களையும் ஓஷதிகளையும் பட்சியமாகவும் அன்னமாகவுஞ் சிருஷ்டித்தார் அதுகளுக்குள்ளே சஞ்சரியாநின்ற பிராணிகளுக்குஸ்தாபரங்களும் பாதத்தினாலேசஞ்சரிக்கின்றபிராணிகளுக்கும் பாதமில்லாமலிருக்கிற பிராணிகளும் அன்னமாகக் கற்பிக்கப்பட்டிருக்கும் வாருங்கள் நிர்துஷ்டாளான பிரசேதசுக்களே நீங்களோவென்றால் பிதாவினாலேயும் தேவதேவனான பகவானாலேயும்பிரஜாசிருட்டினாலே விருட்சங்களை யெப்படி தகிக்குகைக்கு யோக்கியாளாகிறீர்கள் பெரியோர்களுடைய மார்க்கமான சாந்தியை ஆஸ்ரயித்திருங்கள் ஜொலியாநின்ற கோபத்தையடக்குங்கள் குழந்தைகளுக்கு மாதாபிதாக்களும் கண்களுக்கு இமைகளும், ஸதிரீகளுக்குப்பர்த்தாவும், பிரஜைகளுக்கு ராஜாவும் சந்நியாசிகளுக்குக் கிரகஸ்தனும் அக்கியானிகளுக்குக் கியானிகளும் சுகுர்த்துக்களாயும் பந்துக்களாயுமிருப்பார்கள், பிராணிகளுடைய தேகங்களுக்குள்ளே நியந்தாவாய் அந்தராத்மாவான ஸ்ரீஅரியிருக்கிறார் சமஸ்தத்தையும் அந்த அந்தரியாமியான ஸ்ரீஹரிக்கு ஸ்தானமாகப்பாருங்கள். இப்படிப்பட்ட கியானத்தை யுடையவர்களாயிருந்தீர்களானால் அந்தரியாமியானபகவான் உங்களாலே பூசிக்கப்படுவர் யாதொருத்

தன்தேகத்திலே ஆகஸ்மிதமாக உண்டாகாநின்றும் ஜொலியாநின்றகோபத்தை ஆத்துமவிசாரத்தினாலேஅடக்குகிறானோ அவன் பிரகிருதிகுணங்களான சத்துவாதிகளை அதிக்கிரமியாமலிருப்பன் தீனங்களான விருட்சங்களைத்தகித்தது போதும் இந்தவிருட்சங்களுக்கும்உங்களுக்கும் மங்களமுண்டாகக்கடவதென்று அந்தப்பிரசேதசுக்களைச் சமாதனம்பண்ணி பிர்மலோசனையென்கிற அப்சரஸ்திரீயினுடைய பெண்ணான அந்தஉத்தமகன்னிகையைப் பிரசேதசாளுக்குக் கொடுத்துவிட்டுப்போனான் அந்தப்பெண்ணை வாங்கிக்கொண்டு பிரசேதசுக்கள் பத்துப்பேரும் எதாசாஸ்திரமாக விவாகம்பண்ணிக்கொண்டார்கள்,

வாராய்ராஜாவே அந்தப் பிரசேதசுக்களிடத்தில் நின்றும் அந்தஸ்திரீயினிடத்திலே பிரசேதசுக்களுடையபுத்திரனாக தெக்ஷன்பிறந்தான் அந்தத்தெட்சனுடையபிரஜாசிருஷ்டியினாலே மூன்றுலோகங்களும் பூரிக்கப்பட்டதுகள் பெண்களிடத்திலே வாசற்சல்லியத்தையுடையவனான அந்தத்தெட்சன் தேஜசினாலேயும் மனதினாலேயும் எந்தப்பிரகாரம் பிராணிகளைச்சிருஷ்டித்தானோ அந்தவிர்த்தாந்தத்தையென்னிடத்தில் நின்றும்சாவதானமாகக்கேளும் பிரஜாபதியான தெட்சனானவன் தேவாள் அசுராள் மனுஷியாள் முதலானவர்களாயும் ஆகாசம் பூமி ஜலம் இதுகளைஸ்தானமாக வுடையவர்களாயுமிருக்கிற பிரஜைகளை முன்னேமனதினாலேயே சிருஷ்டித்தான் அந்தமானசமான பிரஜாசிருஷ்டி பூரணமாகவில்லையென்றுபார்த்துப் பிரஜாபதியானதெட்சன் விந்தியபர்வதத்தினுடைய தாழ்வரையிலேபோய் ஒருத்தராலேயும் பண்ணக்கூடாத தபசைப் பண்ணினான், அந்த விந்தியபர்வதத்தின் தாழ்வரையிலே அகமருஷணமென்று பிரசித்தமாய்ப் பாபஅரமான ஒருதீர்த்தமிருக்கிறது அதிலேமூன்றுகாலம் ஸ்நானம்பண்ணிக்கொண்டு தபசினாலே பகவானைச் சந்தோஷிப்பித்து அமுசகுய்யமென்கிறஸ்தோத்திரத்தினாலே அபோக்ஷசனை அந்தப்பகவானை ஸ்தோத்திரம்பண்ணினான்,

வாராய் குருசிரோஷ்டனே இந்தப்பிரகாரம் அந்த அகமருஷணமென்கிற தீர்த்தத்தில் ஸ்தோத்திரங்களினாலே ஸ்துதிபண்ணாநின்ற தெட்சகப் பிரஜாதிக்குப்பக்தவச்சலனானபகவான் கருடாரூடராய்த் தீர்க்கங்களான அஷ்டமகாபுஜங்களை யுடையவராய் சங்கம் சக்கரம் நந்தகம சார்ங்கம் பாசம் கெதை பாணம் சர்மம் இதுகளைத் தரித்துக்கொண்டு பீதாம்பரதாரியாய் காளமேகசியாமளராய் பிரசன்னமானமுகம் நேத்திரம் இதுகளையுடையவராய்க் கண்டத்திலேயிருந்து பாதபரியந்தம் தொங்காநின்ற வனமாலையை யுடையவராய் விளங்காநின்றஸ்ரீவச்சம் கவுஸ்துவம் இதுகளை யுடையவராய் மகத்தாகிய கிரீடம் கடகம் மகரகுண்டலம் இதுகளையுடையவராய் நாரதர் சனகர்முதலாகதேவசிரோஷ்டாளாலேயும் சூழப்பட்டவராய்ப் பிரசன்னமானார் அந்தத்திரிலோகசுந்தரமான ரூபத்தைப்பார்த்துத் தெட்சப்பிரஜாபதியானவன் பயமில்லாதவனாய்ச் சந்துஷடமான மனதையுடையவனாய்ப்பூமியிலே:தெண்டம்போலேபிரணாமம்பண்ணினான் இந்தப்பிரகாரம் பிரணாமம்பண்ணாநின்ற தெட்சப்பிரஜாபதியைப் பார்த்துத் திரிலோகாதிபதியான ஜனார்த்தனன் சொல்லுகின்றார் வாராய்தெட்சனே மகானுபாவனே நீ தபசினாலே சித்தியையுடையவனாய் அதினாலே நம்மிடத்தில் பரமமான பக்தியையடைந்தாய்,

வாராய் தெட்சப்பிரஜாபதியே இயமநியமாதிகளுடனே கூடினதபசானது என்னுடைய இருதயம்அங்கங்களுடனேகூடின மந்திரஜெபமானது என்னுடையசரீரம் தியானாதிவிஷயமான புருஷனுடைய வியாபாரமானது எனதுஆகிருதி நன்றாகப்படாநின்ற கிருதுக்கள் எனதுஅவயங்கள், தர்மமானது என்னுடையமனது தேவதைகளேயெனதுபிராணன்கள் சிருஷ்டிக்குமுன்னே நான்ஒருவனேயிருந்தேன் நம்மையன்றிவேறொன்றில்லை என்னிடத்தில் மாயையினாலே குணமயமான பிரமாண்டமானதுஎப்போதுஉண்டாச்சுதோஅப்போதேஅயோனிசனானபிர்மாவானவன் உண்டானான்தேவதைகளுக்கெல்லாந் தலைவனாயும் என்னுடையசக்தியினாலே பூரணனாயுமிருக்கிற அந்தப்பிர்மாவானவன் சிருஷ்டிகர்மத்திலே யெத்தனப்பட்டனாய்த் தன்னை அசமர்த்தன்போலே யெண்ணிக்கொண்டானோ அப்போது என்னாலேதபசு பண்ணென்றுசொல்லப்பட்டவனாய்யாதொருதபசினாலேஅந்தப்பிர்ம்மாவானவர் ஆதியிலேபிரபஞ்சத்தைச்சிருஷ்டிக்கின்ற உங்களைச்சிருஷ்டித்தான்

வாராய்தெட்சனே பஞ்சசேனனென்கிற பிரஜாபதியினுடைய பெண்ணான அசக்கினியென்றுபெயரையுடையவளான அந்தப்பெண்ணானவள் உனக்குப்பத்தினியாகி ஸ்திரீபுருஷாளுடைய ரதிகர்மத்தை யுடையவளாய் நீஅவளிடத்திலே இந்தப்பிரஜா சிருஷ்டியை மிகவுமுண்டாக்கப்போகிறாய் நீயும்உனக்குக்கீழ்ப்பட்ட சகலமானபிரஜைகளும் என்னுடைய மாயையினாலேஸ்திரீயும் புருஷனுமாகச்சேர்ந்து புத்திராதிகளாக வுண்டாகப்போகிறார்கள் வர்ணாசிரம ஆசாரங்களினாலேநம்மை ஆராதிக்கவும் போகிறார்களென்றுசொல்லி அந்தத்தெட்சப்பிரஜாபதி பார்த்துகொண்டிருக்கும்போதே ஜெகத்காரணமான அந்தப்பகவான் சொப்பனத்திலே காணப்பட்ட அர்த்தம்போலே அவிடத்திலேஅந்தர்த்தானமானார்,

## ருவது அத்தியாயம்

கலிவிருத்தம்,

உரியநாரதர் கபடவுரையினுல்
சுருங்கிப்போனதன் பிள்ளைகள்சோபத்தால்
தெரியதட்சப்பிர ஜாபதியானவன்
அரியநாரதர் தனைச்சபித்தானன்றே

நாரதருடைய கபடவசனங்களினுலே நசித்துப்போ
னதனது பிள்ளைகளுடையசோகத்தினுல்தெட்சப்பிரஜா
பதியானவன் இந்தநாரதனைச் சபித்தானென்று நிரூபி
க்கப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராஜாவே, விஷ்ணுமாயையினுலேவிருத்தி
யடைவிக்கப்பட்ட தெட்சப்பிரஜாபதியானவன்பஞ்சசே
னபுத்திரியான அந்த அக்கினியிடத்திலே அரியசுவாச
ளென்று பெயரை யுடையவர்களாய்ப் பதினுயிரம் பிள்
ளைகளைப்பெற்றுன், அந்தத் தெட்சகுமாரராளான அரி
யசுவாளானவர்கள் சமானங்களான ஆகாரசீலங்களையு
டையவர்களாய்ப் பிதாவானதெட்சனுலேபிராஜாசிருஷ்
டியின்பொருட்டு நியமிக்கப்பட்டவர்களாய் மேற்குத்தி
க்கிலேபோனுர்கள் அந்தமேற்குத்திக்கிலே சிந்துநதி ச
முத்திரங்களுடைய புண்ணியமான சங்கமப்பிரதேசத்
திலேயிராநின்ற மகத்தான முனி சித்தாளாலே சேவிக்
கப்பட்ட நாராயண சரசென்று பிரசித்தமான தீர்த்தத்
தையடைந்து அதில் ஸ்நானம் பண்ணின மாத்திரத்தி
லேமனதில் இராநின்ற காமக்குரோதங்கள்முதலானஏ
யகுணங்களை உதறிப் போட்டவர்களாய் பகவதாராதன
ரூபமானபாரம் அங்கிசியமென்கிறதர்மத்திலேநிஷ்டை
யை யுடையவர்களாய்ப் பிதாவினுடைய ஆக்கினையினு
லேகட்டுப்பட்ட உக்கிரமான தபசைப்பண்ணினுர்கள்.
நாரதமகாரிஷியானவர் பிராஜாசிருட்டியின்பொருட்டு எ
த்தனத்தை யுடையவர்களான அந்தஅரியசுவாளைப்பார்
த்து ஒருவார்த்தை சொல்லுகின்றுர்.

வாருங்கள்அரியசுவாளே நீங்கள்சிறுபிள்ளைகள்மூ
ர்க்காளாயிருக்கிறீர்கள் பூமியினுடைய அந்தத்தைஅறி
யாமல் பிரசைகளைஎப்படி சிருட்டிக்கப்போகிறீர்கள் ஒ
ரு புருஷனையுடையதான அந்த ராச்சியத்தையும் அறி
யாமல் காணப்படாமலிருக்கிறதையும் திரும்பவும் வெ
ளியிலே புறப்படுகிறதையுடையதானபிலத்தையும்,வெ
குரூபத்தை யுடையவளான ஸ்திரீயையும், விபசாரிக்கு
ப்பதியானபுருஷனும் உபய பாரிசங்களிலே பிரவகியா
நின்றநதியையும், தத்துவங்களினுலே அற்புதமானகிர
கத்தையும், ஓரிடத்திலே சித்திரங்களான கதைகளோடு
கூடின அம்சத்தையும், தானேமிகவும்சுழன்றுகொண்
டும் நாவிகன் கத்தியினுலேயும்,வச்சிராயுதங்களினுலே
யும், நிர்மிக்கப்பட்டதுபோல அதிதீட்சணமாயும், திட
மாயும், இருபத்தைந்து தத்துவங்களினுலே ஆச்சரிய
மாயுமிருக்கிற இரகத்தையும், அறியாமல்சர்வக்கியனுயி
ருக்கிற பிதாவினுடைய ஆக்கினையை அனுரூபமாக அ
றியாதவர்களா யிருக்கிற நீங்கள் எப்படி பிரஜாசிருட்டி
யைப் பண்ணப் போகிறீர்களென்று சொல்லிய நாரதம
காரிஷியினுடைய வாக்கியங்களைக்கேட்டு அரியசுவாளா
னவர்கள் சகசமான சக்தியையுடையதானபுத்தியினுலே
தாங்கள்தானே யோசனைப் பண்ணுகின்றுர்கள். பூமியி
னுடைய அர்த்தத்தைக்காணுமலென்று சொன்னவசன
த்துக்குஅர்த்தம் பூமி யென்னப்பட்டது ஆத்மாவுக்குப்
பெந்தகாரணமாயும், அநாதியாயும், லிங்கசரீரமாயு மி
ருக்கிற க்ஷேத்திரமென்று அறியத் தக்கது அந்தத்தை
யென்று சொன்னவசனத்துக்கு அர்த்தம் அந்தக்ஷேத்
திரத்தையினுடைய நாசத்தையறியாமல் மோட்சத்துக்
குவிரோதமான கர்மங்களினுலே என்னஆகவேண்டிய
தென்று அறியத்தக்கது ஒருபுருஷனையுடையதானராச்
சியத்தைஅறியாமல்என்றதற்குஅர்த்தம்அந்தக்ஷேத்தி
ரத்திலே சர்வசாட்சியாயும் தனக்குத்தானே ஆதாரரா
யுமிருக்கிற பரமேஸ்வரரோ ஒருவனுன புருஷன் நித்தி
யமுக்தனுன அந்தப்பரமபுருஷனை அறியாமல்புருஷனு
க்கு ஈஸ்வரனிடத்திலே சமர்ப்பிக்கப்படாமலிருக்கிற க
ர்மங்களினுலே ஆகவேண்டியதென்ன பிலத்தையறியா
மல் என்ற வசனத்துக்கு அர்த்தம் புருஷனுனவன் யா
தொன்றிலே போயடைந்து பாதாளத்தையடைந்தவன்
போலத் திரும்பி வாராமலிருக்கிற சோதி சொரூபமான
அந்தப்பரப்பிரமத்தை யறியாதவனுக்கு நசியாநின்றும்
சொர்க்காதி சாதனங்களாயு மிருக்கிற கர்மங்களினுலே
ஆகவேண்டியதென்ன வெகுரூபையானஸ்திரீயைஅறி
யாமலென்ற வசனத்துக்கு அர்த்தம்புருஷனுடையபுத்
தியானது விபசாரியானவள்போல வெகுவிதமானரூப
த்தையுடையதாயும். மோகத்தைப்பண்ணுகின்ற ராட்ச
சாதிகுணங்களோடு கூடிக்கொண்டிருக்கின்றது, அந்த
ப்புத்தியினுடைய விவேகத்தை யறியாமலிருக்கிற புரு
ஷனுக்கு இவ்விடத்திலே நசித்துப்போகிற கர்மங்களா
லே ஆகவேண்டியதென்ன விபசாரிபதியான புருஷனை
யறியாமல் என்றவசனத்துக்கு அர்த்தம் அந்தப் புத்தி
யினுடைய சங்கத்தினுலே சுவாதந்திரியத்தை விட்டவ
னுயும்துஷ்டையானஸ்திரீயையுடைய புருஷன்போலே
அந்தப் புத்தியினுடைய சுகதுக்காதிகளை அடைந்திருக்
கிறசீவனை அறியாதவனுக்கு அவிவேகத்தினுல் பண்ண
ப்படாநின்ற கர்மங்களினுலே ஆகவேண்டியதென்னஇ
ரண்டுபக்கத்திலேயும் பிரவகியாநின்ற நதியை யறியாம
ல்என்ற வசனத்துக்கு அர்த்தம் சிருஷ்டி லயங்களைப்ப
ண்ணியும் ஜெனனமரணமென்கிறபிரவாகத்திலேவிழு

ந்தபேருக்கு வெளிப் படுகிறதற்கு உபாயமான தபோவிர்த்தியாதிகள் என்னப்பட்ட இருகரையினுடைய சமீபத்திலேகுரோத அகங்காராதிகளினாலே மிகவும்வேகத்தையுடையதாயும் இருக்கிற மாயையை விசாரியாதவனாயும் அதன்வசமாயுமிருக்கிற புருஷனுக்கு அவிவேகத்தினாலே பண்ணப்படாநின்ற கர்மங்களினாலே ஆகவேண்டியதென்ன. இருபத்தைந்து தத்துவ மென்றதற்கு அர்த்தம் இருபத்தைந்து தத்துவங்களுக்கும் பரமபுருஷனானவன் அந்தரியாமியா யிருக்கிறான் இந்தத் தத்துவங்களுக்கு ஆச்சரியரூபமான ஆகாரமாயும் தேகேந்திரியாதிகளுக்குப் பிரவர்த்தனுமா யிருக்கிற அந்தப் பரமபுருஷனை அறியாதவனுக்கில்லாத சுவாதந்திரியத்தைவகித்துப் பண்ணப்படாநின்ற கர்மங்களினாலே ஆகவேண்டியதென்ன அம்சத்தை யறியாமலென்றதற்கு அர்த்தம்ஈஸ்வரனையும் சித்து அசித்துரூபமான வஸ்துவையும் பந்த மோட்சங்களையும் காண்பிக்கின்ற சாஸ்திரத்தைஅறியாமல் வெகுவிதங்களான இந்தக் கர்மங்களினாலே ஆகவேண்டியதென்ன, மேற்படி உற்பவ்வியமென்றதற்கு அர்த்தம் சர்வகாலமும்சுழன்றுகொண்டும் ஜெகத்தைமிகவும் இகழாநின்றும் மகாவேகத்தை யுடையதாயும் சுதந்திரமாயுமிருக்கிற கால சக்ரத்தை யறியாமல்செய்யப்படாநின்ற அசத்துக்களான கர்மங்களினாலே ஆகவேண்டியதென்ன பிதாவினுடைய ஆக்கினையை யறியாமலென்றதற்கு அர்த்தம் இரண்டாஞ்சென்மத்துக்குஎதுவாயும் பிதாவாயுமிருக்கிற சாஸ்திரத்தினுடைய நிவர்த்திமார்க்கத்துக்கு யோக்கியனானபுருஷனுக்குநிவர்த்திமார்க்கத்தை யறிவியாநின்ற ஆஞ்ஞையையறியாத அந்தப் புருஷனானவன் குணமயமான பிரவர்த்திமார்க்கத்திலே விசுவாசத்தையுடையவனாய்ப் பிரஜாசிருஷ்டியிலேயெப்படி பிரவர்த்திப்பனென்று நாரதராலேசொல்லப்பட்டவசனார்த்தத்தை நிச்சயித்தவர்களாய அந்தஅரியசுவரளானவர்கள் எல்லாரும் ஏகரூபமானபுத்தியை யுடையவர்களாய் அந்தநாரதரைப் பிரதட்சண நமஸ்காரம்பண்ணித் திரும்பிவராமலிருக்கிறமார்க்கத்தையடைந்தார்கள், அந்தநாரதமகாமுனியும் சுகப்பிர்மமானபிரணவத்தில் பிரகாசியாநின்ற ரிஷிகேசனுடைய பாதாரவிந்தத்தில் நிச்சலமாகச் சித்தத்தை வைத்து லோகங்களைச் சஞ்சரித்துக்கொண்டிருந்தார் தெட்சப்பிரஜாபதியானவன் சீலத்தையுடையவர்களான பிள்ளைகள் நாரதராலே நாசப்படாமல் போனதைக்கேட்டுமிகவும் வியசனப்பட்டுப் புத்திரசோகத்தையடைந்தான். அந்தத்தெட்சனானவன்பிர்மாவினாலே சமாதானம்பண்ணப்பட்டவனாய்த் திரும்பவும்பஞ்சசேனபுத்திரியான அசக்கினியிடத்தில் சபளாசுவரென்று பெயரையுடையவர்களான ஆயிரம் பிள்ளைகளைப் பெற்றான், மகாவிரதத்தை யுடையவர்களான அந்தச் சபளாசுவரென்கிற பிள்ளைகளும்பிதாவினாலே பிரஜாசிருஷ்டியில் ஆக்கியாபிக்கப்பட்டவர்களாய்த் தங்களுடைய பிராதாக்கள் எந்தச்சரசிலேதபசித்தியை யடைந்தார்களோ அந்தநாராயணசரசையடைந்து அதில் ஸ்நானம்பண்ண மாத்திரத்திலே காமக்குரோதங்கள் முதலான சித்தமலங்களை யுதறிப்போட்டவர்களாய்ப் பரமமானமந்திரத்தை ஜெபித்துக்கொண்டு அந்தத்தீர்த்தத்திலே மகத்தானதபசைப்பண்ணினார்கள்,

வாராய்ராஜசிரேஷ்டனே, இந்தப்பிரகாரம் பிரஜாசிருஷ்டியிலே புத்தியையுடையவர்களான அந்தச்சபளாசுவரையும் நாரதமகாமுனியானவர் அடைந்து முன்போல் அர்த்தாந்தரத்தைத்தெரிவிக்கின்றவசனங்களைச்சொல்லுகின்றார் வாருங்கள்தெட்சகுமாரர்களே என்னுடையஉபதேசத்தைக்கேளுங்கள் பிராதாக்களிடத்திலே வாச்சல்லியத்தையுடையவர்களான நீங்கள் உங்கள் பிராதாக்களுடைய மார்க்கத்தையறியுங்கள் பிராதாக்களுடையமார்க்கத்தைத் தர்மக்கியனாயிருக்கிற எந்தப் பிராதாவானவன் பின்செல்லுகிறானோ அந்தப் புருஷனானவன் புண்ணியத்தையேபந்துவாக உடையவனாய்ப்பிராதுருவச்சலர்களாயிருக்கிற தேவதைகளோடு தேவலோகத்திலேசந்தோஷித்துக்கொண்டிருப்பனென்று அமோகமாகிய தெரிசனத்தை யுடையவரான நாரதமகாரிஷியானவர் இந்தப்பிரகாரம் சொல்லிப்போனார், அந்தச் சபளாசுவாளும் அந்தப் பிராதாக்களுடைய ஆத்மநிஷ்டையினாலே அடையத்தக்கதாயும் பானுக்குஅனுகுணமாயுமிருக்கிறமார்க்கத்தையடைந்து இவர்களும் முன்னவர்களைப்போலத்திரும்பவில்லை இப்படியிருக்கிறசமயத்திலே தெட்சப்பிரஜாபதியானவன் மகத்தாகிய உற்பாதங்களைப்பார்த்துக்கொண்டு முன்போலே நாரதராலே புத்திராள்காணப்படாமற்போனதைக்கேட்டுப்புத்திரசோகத்தினாலே மூர்ச்சை யடைந்தவனாய் நாரதர்பொருட்டுக் குரோதத்தைப் பண்ணி ரோஷத்தினாலே துடியாநின்ற அதரபுட்பங்களையுடையவனாய் நாரதனைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகிறான்,

வாராய்அசத்துவே, சத்புருஷாளுடைய வேஷத்தையுடையவனான உன்னாலே என்னுடையகுழந்தைகளுக்குச் சந்நியாசியினுடைய மார்க்கத்தைக்காண்பிக்கையால்காரியபங்கமாகிவிட்டது வாராய்பாபிஷ்டனே தேவருணம்,பிதுருணம்,ரிஷிருணமென்கிற இந்தருணத்திரயத்தினாலே விடுபடாதவர்களாயும் கர்மத்தினுடைய சுரூபத்தை விசாரியாதவர்களாயுமிருக்கிற பிள்ளைகளுடைய சிரேயசுக்கு இகலோகத்திலேயும் பரலோகத்திலேயும் விகாதமே பண்ணப்பட்டது நீ நிர்த்தயனாயும்

பாலாளுடையமதியைக் கெடுத்தவனும் இருந்துகொண்டிலச்சையில்லாதவனுய்ச் சுவாமியான ஸ்ரீஹரியினுடையகீர்த்தியை நாசம்பண்ணிக்கொண்டு பாகவதாளுடையமத்தியிலே யென்னமாய்ச்சஞ்சரித்துக்கொண் டிருக்கிறாய் ஆனாலும்வியர்த்தமாகக் கியானமில்லாமல்பரமஅங்கிசாளுடைய வேஷத்தையுடையவனை உன்னாலேஇந்தப்பிரகாரம் புத்திபேதிக்கப்பட்டிருந்தா லும்புருஷனுக்குவயிராக்கியம்பிறக்கமாட்டாது புருஷனானவன்விஷயங்களையனுபவியாமல் அந்தவிஷயங்கள் துக்கத்துக்குள்ளவாயிருக்கிறதை அறியமாட்டான் ஆகையினாலேவிஷயங்களையனுபவித்து அந்த விஷயங்கள் துக்கவுருவென்றறிந்து எப்படிவயிராக்கியத்தை அடைவனோ அப்படிஅன்னியனாலேபேதிக்கப்பட்ட புத்தியையுடையவன் வயிராக்கியத்தை யடையமாட்டான். கர்மமரியாதையையுடையவர்களாயும், சாதுக்களாயும், கிரகஸ்தாளாயுமிருக்கிறஎங்களுக்கு நீசகிக்கக்கூடாதான யாதொரு அப்பிரியத்தைச்செய்ததையோ அந்த அப்பிரியமானது எம்மாலேசகிக்கப்பட்டது, வாராய்சந்தானநாசத்தைப்பண்ணினவனே எந்தக்காரணத்தினால் நீஎம்முடையபுத்திராளுக்கு அசிரேயசையேபண்ணினயோ அதனாலே சஞ்சரியாநின்றவுனக்கு லோகங்களிலேஓரிடத்திலேயும் ஸ்தானமில்லாமல் போகக்கடவதென்று தெட்சப்பிரசாபதியானவன் நாரதமஹாரிஷியைச் சபித்தான் சாதுக்களுக்கெல்லாம்சிரேஷ்டரான அந்த நாரதமுனியானவர் அந்தச்சாபத்தை அப்படியேயாகட்டுமென்று அங்கீகரித்தார் அதற்குப்பிரதியாகச்சபிக்குகைக்குத் தான்சமர்த்தராயிருந்தாலும் பொருந்தியிருந்தாரென்கிற சத்புருஷாளுடையமார்க்கம்.

## சு-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

சொல்லுந்தெட்சன் சிருட்டிக்கப்படாநின்ற
வல்லநல்லறு பதுவங்கிசங்களும்
தொல்லைதெட்ச கன்யாவமிசத்திலே
நல்லவிஸ்வன் பிறந்ததைநாட்டுவாம்.

தெட்சனாலேசிருஷ்டிக்கப்படாநின்ற அறுபதுபெண்களுடையவங்கிசங்களும் வெவ்வேறாகக் கீர்த்திக்கப்பட்டதெட்சகன்னியாவமிசத்திலே அதிதிபுத்திரனானதுவஷ்டாவினிடத்தில்நின்றும் விசுவரூபன்பிறந்தவங்கிசங்களுங்கீர்த்திக்கப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராஜாவே, பிற்பாடுபிரசேதசுக்களுடையகுமாரனாய்ப் பிரசேதனென்றுசொல்லப்பட்ட தெட்சப்பிரசாபதி பிர்ம்மாவினாலே சமாதானம் பண்ணப்பட்டவனாய் அசக்கினியென்கிறபெண்ணிடத்திலேநின்றும் அறுபதுபெண்களைப்பெற்றான் அவர்களுக்குள்ளே பத்துப்பெண்களைத்தர்மத்துக்கும், காசிபருக்குப்பதின் மூன்றுபெண்களையும் சந்திரனுக்குமிருபத்தேழுபெண்களையும் பூதாஆங்கீரசு கிருசவாஇவர்களுக்கு இரண்டிரண்டுபெண்களையும்தாட்சியபரென்று நாமாந்தரத்தையடையந்தகாசியபருக்குநாலுபெண்களையும் கொடுத்தான் யாதொருதெட்சகன்னிகைகளுடைய புத்திரபவுத்திராளாலே மூன்றுலோகங்களும் பூரிக்கப்பட்டபிள்ளைகளுடனேகூட அந்தஅறுபதுபெண்களுடைய நாமதேயங்களைச்சொல்லுகிறேன் பானுவென்றும் லம்பையென்றும் கருப்புவென்றும் ஜாமியென்றும் விசுவாவென்ன்று சாத்தியாவென்றும் மருத்துதியென்றும் வசுவென்றும் குமூர்தாவென்றும் சங்கல்ப்பாவென்றும் இந்தப்பத்துப்பேரும் தர்மத்தினுடையஸ்திரீகள் இவர்களுடைய பிள்ளைகளைச் சொல்லுகிறேன்கேளும் பானுவுடைய பிள்ளை வேதரிஷபர் வேதரிஷபருடைய பிள்ளை இந்திரசேனன் லம்பையென்கிறவளுக்கு வித்தியோதன்பிறந்தான் அந்தவித்தியோதனிடத்தில்நின்றும் ஸ்தனயித்துருக்காள்பிறந்தார்கள்கருப்புவென்ற ஸ்திரீயினிடத்தில் சங்கடன்பிறந்தான் அந்தச்சங்கடனுக்குக்கிகடன்பிறந்தான் அந்தக்கிகடனிடத்தில்நின்றும் பூமியினுடையதுர்க்காபிமானியான தேவதைகள்பிறந்தார்கள்ஜாமியினிடத்தில் சொர்க்கனும் சொக்கனிடத்தினின்றும் நந்தியும்பிறந்தார்கள் விசுவாவென்கிறவளிடத்தில் விசுவதேவாள் பிறந்தார்கள் அந்தவிசுவதேவாளை அபுத்திராளாகச் சொல்லுவார்கள் சாத்தியா வென்கிறவளுக்கு சாத்தியகணங்கள் பிறந்தார்கள் சாத்திய கணங்களுக்கு அர்த்தசித்திபிறந்தான் மருத்துதியினிடத்திலே மருத்துவானும் செயந்தனும்பிறந்தார்கள் அந்தச்செயந்தனை வாசுதேவ அக்கிசமாகவும் உபேந்திரனாகவும்சொல்லுவர்கள் வசுவினிடத்திலேஅஷ்டவசுக்கள் பிறந்தார்கள் அவர்களுடைய நாமங்களைச் சொல்லுகிறேன்,

துரோணன் பிராணன் துருவன் அர்க்கன் அக்கினி தோஷன் வாஸ்து விபாவசுஎன்று எட்டுப்பேர்பிறந்தார்கள் துரோணனுக்குஅபிமதியென்கிற ஸ்திரீயினிடத்தில்நின்றும் அருட்சம் சோகம் பயம் இவர்முதலான பிள்ளைகள்பிறந்தார்கள் பிராணனுக்குஉர்சஸ்வதியென்கிற பாரியினிடத்திலே சகன்என்றும் ஆயுசுவென்றும் புதோசவனென்றும் மூன்றுபேர்பிறந்தார்கள் துருவனுடைய பாரியையான தாணியோவென்றால் நானாவிதங்களான புராணங்களைப்பெற்றாள் அர்க்கனுடையபாரியையான அசனையென்கிறவளுக்குஆசைமுதலானபிள்ளைகள்பிறந்தார்கள் அக்கினியினுடைய பாரியையான வசோர்த்தாரையானவள் திரவிணகன்முதலான பிள்ளைகளைப்பெற்றாள் ஸ்கந்தனேவென்றால் அக்கினிக்

குக் கிர்த்திகையினிடத்திலேபிறந்தவன், விசாகன் முத
லானபிள்ளைகளும் அக்கினிக்குப்பிறந்தார்கள் தோஷ
னுக்குப்பாரியை சரவரியானவள் அரியினுடையகலையா
ன சிம்சுமாரனைப்பெற்ருள் வாஸ்துவுக்குப்பாரியையா
ன அங்கிரசியென்கிறவள் சிற்பாசாரியான விசுவகர்மா
வென்கிறவனைப் பெற்ருள் விசுவகர்மாவுக்குச்சாட்சூச
மனுபிறந்தான் சாட்சூசமனுவுக்கு விசுவேசன் முதலா
னபிள்ளைகள்பிறந்தார்கள் விபாவசு வென்கிறவனிடத்
தில் உஷாவென்கிற ஸ்திரீயானவள் வியுஷ்டியையும்
ரோஸஸ்என்கிறவனையும்,ஆதபனையும்பெற்ருள் ஆதப
னிடத்தில் பஞ்சயகமமென்னப்பட்ட திவசம்பிறந்தான்
குமுறதாவினிடத்திலே மேனவூர்திகரளென்கிற தேவக
ணங்கள் பிறந்தார்கள் சங்கல்பையென்கிறவளிடத்திலே
சங்கல்பன்பிறந்தான் சங்கல்பனுக்குக் காமன்பிறந்தான்
பூதருடைய பாரியையானசரூபாவென்பவள் கோடிசங்
கையான ருத்திராளைப்பெற்ருள் மற்ருெருத்தி ரைவத
னென்றும் அசனென்றும் பவனென்றும் பீமனென்று
ம் வாமனென்றும் உக்கிரனென்றும் விருஷாகபியென்
றும் அசைகபாதென்று, அகிற்புத்தியனென்றும், வெ
குரூபனென்றும் மகானென்றும் ஏகாதசரூபனை ருத்
திரனுடைய பாரிஷதாள்கோராளாயும் பிரேதங்களாயு
ம்விநாயகன் இவாள்முதலானவர்களைப்பெற்ருள் ஆங்கீ
ரசுக்குச் சுதாவென்றும் சதிவென்றும் இரண்டுமனைவி
கள் அவர்களுக்குள்ளே சுதாவென்கிறவள்பிதுர்க்களை
ப்பெற்ருள் சதியென்கிறவள் அதர்வஅங்கிரிசுவென்கிற
வேதத்தைப்பெற்ருள் கிரிசாசுவனுக்கு அர்ச்சிசுவென்
றும் திட்சணுவென்றும் இரண்டுமனைவிகள் அவர்களு
க்குள்ளே அர்ச்சிசுவென்கிறவள்கிரிசாசுவா தூமரகேச
னையும் திக்ஷணையென்கிறவள்வேதசிரசையும் தேவனை
யும் வயினனையும் மனுவையும் பெற்ருள்.

தாரட்சியருக்குவினதையென்றும், கத்துருவென்
றும் பதங்கியென்றும் யாமினியென்றும் நாலுமனைவி
கள் அவர்களுக்குள்ளே வினதையென்கிறவள் சாட்சா
த்யெக்ஞேசரான விஷ்ணுவுக்குவாகனமானகெருடனை
யும் சூரியனுக்குச் சாரதியான அருணனையும் பெற்ருள்
கத்துருவென்கிறவள் அநேகநாகங்களைப்பெற்ருள்.பத
ங்கியென்கிறவள் பட்சிகளையும் யாமினியென்கிறவள்ச
ர்ப்பங்களையும் பெற்ருர்கள் சந்திரனுடையமனைவிகளா
ன இருபத்தேழு நட்சத்திரங்களும் அந்தச்சந்திரன்
தெட்சனுடையசாபத்தினலேக்ஷயரோகத்தினல் பீடிக்
கப்பட்டவனய் அந்தக்கிர்த்திகைமுதலான இருபத்தே
ழுமனைவிகளிடத்திலே புத்திரனில்லாதவனக ஆனன்
காசியபருக்குத் திமியென்றும் சரமையென்றும் சிரபி
யென்றும் தாம்பரையென்றும் முனிவென்றும், குரோ
தவசியென்றும் இளாவென்றும் சுரசையென்றும் அரி
ஷ்டையென்றும்;காஷ்டையென்றும்,தனுவென்றும்,அ
திதியென்றும், திமியென்றும், இந்தப்பதின்மூன்றுபே
ரும் காசியபருடையமனைவிகள், அவர்களுக்குள்ளே தி
மியினிடத்தில் சலசெந்துக்களுடைய கூட்டங்களுண்
டாச்சுதுகள். சரமையினிடத்தில்சுவாபதங்களுண்டாச்
சுதுகள் சுரபியினிடத்தில் மகிஷங்களும்கோக்களும்இ
ரண்டுகுளம்புகளுடனேகூடின பிராணிகளும்உண்டா
ச்சுதுகள் தாம்பரையினிடத்தில் வல்லூறு கழுக்கள்மு
தலானதுகள்உண்டாச்சுதுகள். முனியினிடத்தில் அப்சு
ரசுகளுடையகூட்டங்கள் உண்டர்ச்சுதுகள் குரோதவ
சியினிடத்தில் தெந்தசூகமுதலான சர்ப்பங்கள்உண்டா
ச்சுதுகள் இளையினிடத்திலே சகலமானவிருட்சங்களு
ம்பிறந்ததுகள் சுரசையினிடத்திலேயாதுதானளென்ன
ப்பட்ட ராட்சசாள்பிறந்தார்கள் அரிஷ்டையி னிடத்தி
லேயோவென்ருல் கந்தர்வாள்பிறந்தார்கள்-காஷ்டையி
னிடத்திலே ஒருகுளம்பை யுடையதுகளான பிராணிக
ள்பிறந்ததுகள் தனுவினிடத்திலே அறுபத்தொருபேர்
பிள்ளைகள்பிறந்தார்கள் அதிதியினிடத்தில் விவசுவானெ
ன்றும் அரியமாவென்றும்,பூஷாவென்றும், தோஷ்டா
வென்றும்,சவிதாவென்றும்,பகனென்றும்,தாதாவென்
றும்,விதாதாவென்றும்,வருணனென்றும், மித்திரனெ
ன்றும்,சக்கிரனென்றும், உருக்கிரமனென்றும்,இவாள்
பன்னிரண்டுபேரும்பிறந்தார்கள் விவசுவானிடத்தில்நி
ன்றும் சமுக்கியாதேவியானவள் சிரார்த்ததேவனையும்,
மனுவையும்,இரட்டையான எமனையும்,எமியையும்பெ
ற்ருள் அந்தசமுக்கியாதேவிதானே பூமியிலேபெண்கு
திரைரூபத்தைத்தரித்தவளாய் அசுவனிதேவதைகளைப்
பெற்ருள் சாயாதேவியானவள் அந்தவிவசுவனிடத்தில்
சநியேசுரனையும்,சாவர்ணிமனுவையும், தபதியென்கிற
பெண்ணையும்பெற்ருள் அந்தத்தபசியானவள்சமவர்ண
னைப்பார்த்தாவாகவரித்தாள் அரியமாவென்கிறவனுக்கு
மாதுருகாவென்கிறவள் ஸ்திரீயாகி அவாளிருவருக்கும்
கியானவான்களான பிள்ளைகள்பிறந்தார்கள்.

அந்தப்பிள்ளைகளிலே ஆத்துமக் கியானத்தை யு
டையதான மனுஷியசாதியானது பிரமாவினலே சேர்க்
கப்பட்டது யாதொருபூஷாவானவன்முன்னேவீரபத்தி
ரயுத்தத்திலே முறிக்கப்பட்டதந்தங்களையுடையவனய்ப்
பிஷ்டபொசியாகஆன அந்த பூஷாவானவன் தெட்சன்
பொருட்டுக் கோபம்பண்ணுகின்ற ருத்திரனைப்பார்த்து
த் தந்தங்களைப்பிரகாசிப்பித்துக்கொண்டு சிரித்தானே
அப்படிப்பட்ட பூஷாவானவன் அதிபுத்திரனனதுவஷ்
டாவுக்குத் தயித்தியனுக்குத் தங்கையான ரசனையென்
றுபெயரையுடையவளானகன்னிகைபாரியையானள் அ
வாளிருவருக்கும் சன்னிவேசனும்வீரியவானன விசுவ
ரூபனும்பிறந்தார்கள் தேவகணங்களை அவமானம் பண்

ணியும் குருவாயுமிருக்கிற பிரகஸ்பதிக்குச் சத்துருக்களான தயித்தியாள் தங்கைபிள்ளையா யிருந்தாலும் அந்தவிசுவரூபனைப் புரோகிதனாகவரித்தார்கள்.

## எ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பேர்பெற்றகுரு வானபிரகஸ்பதி
யார்விடுத்ததே வதைகளிலார்ந்திடும்
வார்புரோகிதகர் மத்தினுல்வரும்
சீர்புரோகிதம் விஸ்வரூபன்செய்தான்

குருவான பிரகஸ்பதியினால் விடப்பட்ட தேவதைகளினாலே புரோகிதகர்மத்திலே வரிக்கப்பட்ட இந்தவிசுவரூபன் தேவதைகளுக்குப் பௌரோக்கியத்தைப் பண்ணினனென்று சொல்லப்படுகின்றது.

பரிட்சித்துவினுடைய வாக்கியம்.

வீரீர்பகவானே, ஆசாரியான பிரகஸ்பதியினாலேதம்முடைய சிஷியர்களான தேவர்கள் எந்தக் காரணத்தினாலே விடப்பட்டார்கள், அப்படிப்பட்ட குருவிஷயமான சிஷியாளுடைய அக்கிரமத்தைச் சொல்லுமென்று கேளாநின்ற ராஜாவைப்பார்த்துச் சுகர்சொல்லுகின்றார்,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்பரதனே, இந்திரனானவன் திரைலோக்கிய அயிஸ்வரியமாகிற மதத்தினாலே, சத்துக்களுடையமார்க்கத்தைத் தாண்டினவனாய்ச் சப்தமருத்துக்கள், அஷ்டவசுக்கள் ஏகாதசருத்திராள் முதலாகிய இதரதேவதைகளினாலேயும் சேவிக்கப்பட்டவனாய்க்கியானசக்தி முதலான குணங்களை யுடையவனாய் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டிசபாமத்தியிலே சிம்மாசனத்திலே யிருந்துகொண்டு தன்னுடனே அர்த்தசிம்மாசனத்திலே யிராநின்ற இந்திராணியோடு விளங்கிக்கொண்டிருக்கிற இந்திரனானவன் தேவதைகளுக்குந்தனக்கும் பரமாசாரியராயுமிருக்கிற பிரகஸ்பதியைப்பார்த்துப் பிரத்தியுத்தான ஆசனம் இதுமுதலானதுகளாலே யுபசரிக்காமல்ஆசனத்தில்நின்றும் எழுந்திருக்காமற்போனானே அப்போதுஆங்கிரேசினுடைய புத்திரனான பிரகஸ்பதியானவர் சம்பத்தினாலேயுண்டான மதத்தை அறிந்தவராய் அந்தச்சபையில்நின்றும் துரையாகப்புறப்பட்டு மவுனத்தோடு தம்முடையகிரகத்தையடைந்தார், அப்போதுஇந்திரனானவன் தன்னாலேசெய்யப்பட்ட பிரகஸ்பதியினுடையஅவமானத்தை அறிந்தவனாய்ச் சபையிலே தன்னைத் தானேநிந்தித்துக்கொண்டு என்ன காரணத்தினாலே அயிஸ்வரியமத்தனான என்னாலே சபையிலேவந்த ஆசாரியரானவர் திரஸ்கரிக்கப்பட்டாரல்லவா தேவதைகளுக் கெல்லாம் ஈசுவரனானநான் யாதொருதிரைலோக்கிய சம்பத்தினாலே அசுரபாவத்தை யடைவிக்கப்பட்டேன், அப்படிப்பட்ட திரிலோகாதிபதியினுடைய சம்பத்தைப்பண்டிதனான எவன்தான் இச்சிப்பன். ஆனபடியினாலே தேவதைகளுக்கெல்லாம் ஆசாரியரான பிரகஸ்பதியை நான்அக்கியான மில்லாதவனாய் அவருடைய பாதாரவிந்தங்களிலே வணங்குகிறேனென்று நிந்தித்துக்கொள்ளுகின்ற இந்திரனுக்குப்பகவானான பிரகஸ்பதியானவர் தம்முடைய மாய்கையினாலே கிரகத்தில்நின்றும்மறைந்துபோனார். அப்போதுஇந்திரனானவன் தன்னுடைய புத்தியினாலே குருவை யறியக்கூடாதவனாய் மனோதுக்கத்தையடைந்தான். பிரகஸ்பதியானவர் தேவதைகளைவிட்டுவிட்டாரென்றதைக்கேட்டுச் சமஸ்தமான அசுராளும் சுக்கிராசாரியாருடைய மதத்தைஆஸ்ரயித்துத் துர்மதர்களாய் அஸ்திரங்களை யுடையவர்களாய்த் தேவதைகளைக்குறித்து யுத்தம்பண்ணினார்கள், அந்த அசுராளாலே விடப்பட்டபாணங்களினால் இந்திரன்முதலானதேவதைகளெல்லாம் தலையைக் கவிழ்ந்துகொண்டு பிர்மாவைப்போய்ச் சரணமடைந்தார்கள், அப்படிதன்னிடத்தில் சரணமடையப்பட்ட தேவதைகளைப்பார்த்துப்பிரமதேவனானவன் கிருபையினாலே தேவதைகளைச் சமாதானம்பண்ணி ஒருவார்த்தை சொல்லுகின்றான்,

வாருங்கள் சுரசிரேஷ்டாளே, உங்களாலேமகத்தான அமங்கலம் பண்ணப்பட்டது, என்னவென்றால்பிர்மநிஷ்டரான இந்திரிய நிக்கிரக முடையவராயுமிருக்கிற பிரகஸபதியை அயிஸவரியத்தினாலே மதியாமற்போனீர்கள் உங்களுக்குநேரிட்ட அவமானமானதுகுருவை அநாதரவுபண்ணின அன்னியாயமேயல்லாமல் வேறல்ல இந்திரனே முன்னே குருவாயிருக்கிற சுக்கிராசாரியருடையஅதிக்கிரமத்தினாலே துற்பலர்ளாயும்இப்போது அந்தக்குருவை பக்தியினாலே ஆராதித்துவிர்த்தியையடைந்தவர்களாயுமிருக்கிற சத்துருக்களான அசுராளைப்பார் அந்தஅசுராள் குரு பக்தியினாலே யென்னுடைய ஸ்தானத்தையும் கிரகிப்பார்கள், அந்த சுக்கிராசாரியருடைய அர்த்தத்தையும் மந்திரங்களையுமுடைய அசுராள்சொர்க்கத்தை ஒருபொருட்டாக எண்ணுவார்களா ஆகையால் ஆத்மக்கியானியாய் துவஷ்டாவினுடையகுமாரனானவிசுவரூபனைச் சீக்கிரத்தில்புரோகிதனாக அடையுங்கள். இந்த விஸவரூபத்தினுடையஅசுரபட்சத்தைப்பொறுத்தீர்களேயானால் அந்தவிஸவரூபன்உங்களாலே பூஜிக்கப்பட்டவனாய் உங்களுக்கு வேண்டிய பிரயோஜனங்களைப் பண்ணப்போகிறு னென்று பிர்மாவினாலே சொல்லப்பட்டவர்களாய் விசனத்தை விட்டு அந்தவிஸவரூபனையடைந்து ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு சொல்லுகின்றார்கள். வாராய் பிரம்மநிஷ்டனே பிதுர்க்களாயும் அதிதிகளாயுமிருக்கிற பேர்களுடைய சமையோசிதமான இஷ்டமானது உன்னாலேபண்ணத்தக்கது, ஆ

கையினாலே துக்கத்தை யடைந்தவர்களாயிருக்கிற நாங்கள் சத்துருக்களினாலே அடைந்த அவமானத்தை உன்னுடையதபசினாலே போக்கடித்து எங்களைக்காப்பாற்றினால் உன்னைப் புரோகிதனாகவரிக்கிறோம் எப்படிஉன்னாலேசத்துருக்களை ஜெயிக்கத்தக்கதோ அப்படிப் பண்ணக்கடவாயென்று தேவ கணங்களினாலே புரோகித்தியநிமித்தியம் யாசிக்கப்பட்டவனாய் மகாதபசுவியான விஸவரூபனானவன் சிரித்துக்கொண்டு அந்தத்தேவதைகளைப்பார்த்துமதுரமானவாக்கினாலே ஒருவார்த்தைசொல்லுகின்றான்.

வாருங்கள்நாதாளே தர்மசீலாளாலேதபசுக்குநாசகமான பௌரோகித்தியமானது நிந்திக்கப்படுகின்றது. ஆனாலும் லோகநாயகாளானஉங்களாலேயாசிக்கப்படாநின்ற என்னைப்போலொத்தவன் அவர்களுடைசிட்சைக்கு அனுகனா யிருக்கிறவன் எப்படி தள்ளிப் போடுவன்-பூச்சியர்ள் சொன்னவார்த்தையைத் தள்ளிப்போடாமலிருக்கிறதே சிஷிய னானவனுக்குப் பிரயோசனமென்றுசொல்லப்படுகின்றது தனமில்லாத பேர்களுக்குக் கிரிஷிபண்ணுகிற க்ஷேத்திரங்களிலே யுதிர்ந்தும் கிருஷிபண்ணுகிறவனாலே அபேட்சிக்கப்படாம லிருக்கிற நெற்களைப்பொறுக்கிக் கொள்ளுகையாகிற விலவிர்த்தியும் வீதிகளிற்சிந்தின நெற்களைப் பொறுக்கிக் கொள்ளுகிறதாகிறவுஞ்சவிர்த்தி பண்ணுகையுமேயாயும்,வாருங்கள் அதிஸவரர்ள் அந்தத்தனத்தினா லாகியிருந்த கிரகாசிரமத்திலே சாதுக்களுடைய சத்கர்மங்களை நிறைவேற்றாநின்ற நான்நிந்திக்கத்தக்கதான பௌரோக்கியகிர்த்தியத்தை எப்படிசெய்யப்போகிறேன் ஆனாலும் பூர்ச்சியர்களான உங்களாலே பிரார்த்திக்கப்பட்டகாரியம் எவ்வளவு இதற்குப் பிரிதிவசனஞ் சொல்லமாட்டேன் உங்களுடைய சமஸதமான யிஷ்டத்தையும், பிராணன்களினாலேயும், அர்த்தங்களினாலேயும், சாதிக்கிறேனென்று அந்தத் தேவதைகள்பொருட்டு பிரதிக்கினைபண்ணி மகாதபசுவியான விஸவ ரூபனானவன் பௌரோக்கிய கர்மத்தைமகத்தாகிய பிரயத்தினத்தோடு பண்ணினான்-சுக்கிராசாரியருடைய வித்தையினாலே ரட்சிக்கப்பட்டிருக்கிற தேவசத்துருக்களான அசுராளுடைய சம்பத்தை விஸவரூபனானவன் நாராயணகவசமென்கிற வித்தையினாலேபிடுங்கித் தேவேந்திரனுக்குக்கொடுத்து அந்தநாராயண கவசமென்கிறவித்தையை விஸ்வரூபனானவன் தேவேந்திரனுக்கு உபதேசம் பண்ணமாத்திரத்தில் அந்தத்தேவேந்திரனானவன் தனக்குச்சத்துருக்களான அசுரசேனைகளைச்செயித்தான்.

---

## அ-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

கந்தவிந்தரனா ராயணவசத்தால்
சொந்தமகாட் சிக்குஞ்சுகுணனாய்
அந்தநாரா யணக்கவசமதைத்
தொந்தவிஸ்வனிந் திரருக்குச்சொல்லினார்

இந்திரன் நாராயணகவசத்தினாலே ரட்சிக்கப்பட்டவனாய் தெயித்தியாளைஜெயித்தானே அப்படிப்பட்டநாராயணகவசத்தை இந்திரனுக்கு விஸவரூபன் உபதேசித்தாரென்று சொல்லப்படுகின்றது,

பரிட்சித்துவினுடைய வாக்கியம்,

வாரீர்சுகப்பிர்மரிஷியே இந்திரனானவன் கவசத்தினாலேஇரட்சிக்கப்பட்டவனாய் ரதகெஜதுரக பதாதிகளுடனேகூடின சத்துருசேனைகளை விளையாட்டினாலேசெயித்து திறைலோக்கியசம்பத்தை அனுபவித்தானே அப்படிப்பட்ட நாராயணகவசத்தை எனக்குச்சொல்லுகிறார், வாராய்ராஜனே, தேவதைகளினாலே புரோகிதனாகவரிக்கப்பட்ட விஸ்வரூபனானவன் கேளாநின்ற மகேந்திரனுக்குச்சொன்ன நாராயணகவசத்தை ஏகமனதாய் சாவதானமாகக்கேள்,

விஸ்வரூபனுடையவாக்கியம்,

வாரும்மயேந்திரமே காலையுங்கையையும் நன்றாகச் சுத்திசெய்துகொண்டு ஆசமனஞ்செய்துபவுத்திரத்தைத்தரித்து வடக்குமுகமாயிருந்துகொண்டு அஷ்டாக்ஷரம்துவாதசாக்ஷரமந்திரங்களினாலேஅங்கன்னியாசகரன்னியாசம் பண்ணினவனாய் மவுனத்தையுடையவனாய் சுசியாயும் நாராயணசுரூபனாயுமிருக்கிற புருஷனானவன் தெய்வபக்தியோடுங் கூடினவனா யிருந்துகொண்டு பாதங்களிலேயும் முழந்தாள்களிலேயும் துடைகளிலேயும் வயிற்றிலேயும் இருதயத்திலேயும் வட்சிலேயும் முகத்திலேயும் சிரசிலேயும் இந்தயெட்டு இடங்களிலும் பாதாதிகிரமமாக அஷ்டாட்சர மந்திரத்தினது பிரணவமுதலான ஒவ்வொருஅட்சரத்தைஆரம்பத்திலே நாசத்தைப்பண்ணக்கடவன் பிற்பாடுஉபசம்மாரத்திலே சிரசுமுதல் பாதபரியந்தம் நாசம்பண்ணக்கடவன் அங்கின்னியாசத்துக்குத் துவாதசாட்சர வித்தையினாலே பிரணவமுதலான ஒவ்வொரு அட்சரத்தை வலக்கைதனிற் சனிமுதலா யெட்டுவிரல்களிலேயும் அங்குஷ்டங்களினுடைய ஆதியந்தரேகைகளிலேயும் நாசம்பண்ணகடவன் சாடாட்சரமந்திரத்தினுடையபிரணவமுதலான அட்சரங்களை இருதயத்திலே ஓங்காரத்தையும் சிரசிலே விகாரத்தையும் புருவ மத்தியங்களிலே ஷகாரத்தையும் சிகையிலே ணகாரத்தையும்

நேத்திரங்களிலேவெகாரத்தையும், சமஸ்தசந்திகளிலே நகாரத்தையும், நாசம்பண்ணக்கடவன் மகாரத்தைஅஸ்திரமாகத்தியானம்பண்ணி விசர்க்கத்தோடும் படு என்கிறஅட்சரத்தோடும் அந்தமகாரத்தைச் சர்வதிக்குப் பந்தனத்திலே நாசம்பண்ணி புருஷனானவன் மந்திரமூர்த்தியாகஆகின்முன் தியானம் பண்ணத்தக்கவரான பரமாத்மாவைத்தியானம்பண்ணி இந்தநாராயணகவச மந்திரத்தைஜெபிக்கக்கடவன்.

வாராய்இந்திரனே, இந்தநாராயண கவசமானது உனக்குச்சொல்லப்பட்டது இந்தக்கவசத்தையுடையவனாய் அசுரசிரேஷ்டாளைசீக்கிரமாக ஜெயிக்கப்போகிறாய் இந்தக்கவசத்தைத்தரியாநின்ற புருஷனானவன் எவனைக கண்ணாலேபார்த்து காலினாலே ஸ்பரிசிக்கிறானோ அந்தப்புருஷனும் அந்தட்சணத்திலே சகலபயத்தில் நின்றும்விடப்படுவன் இந்தகவசத்தை முன்னே கவுசிகனென்று ஒருபிராமணன்தரித்தவனாய்யோகதாரணையினாலே தன்னுடையசரீரத்தை நிற்சலப்பிரதேசத்திலே விட்டுவிட்டான் எவ்விடத்திலே அவன்தேகத்தை விட்டானோ அந்தப்பிரதேசத்துக்குச்சரியாகஆகாசத்திலே விமானத்திலேறிக்கொண்டு சித்திரரதனனகந்தர்வபதியானவன் அந்தவழியாகப்போகும்போது அந்தட்சணத்திலே விமானத்தோடேகூட தலைகீழாய்விழுந்தான்அந்தக்கந்தர்வன் வாலகில்லியாளுடையவசனத்தினாலே கவசத்தைத்தரியாநின்ற அந்தப்பிராமணனுடைய அஸ்திகளையெடுத்துக்கொண்டு கிழக்கே சரசுவதி நதியிலே போட்டுவிட்டு ஸ்நானத்தைப்பண்ணி ஆச்சரியத்தையுடையவனாய் திரும்பவும் கந்தர்வலோகத்தையடைந்தான் வாராய்ராஜனே. அப்படிப்பட்டகவசத்தை இந்திரனானவன்பெற்று அசுராளைச் செயித்து திரிலோக சம்பத்தைஅனுபவித்தான்.

## ௯-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

வெல்லுமிந்த்ரன் கோபத்தால்விஸ்வரூபன்
சொல்விடுந்துவஷ் டாவினலக்கினி
நல்முகத்தில்விருத் ரனைவாநண்ணியே
அல்லல்தீர ஹரிதோத்ரஞ்செய்தனர்.

இந்திரனதுகோபத்தினாலே விஸ்வரூபன்அடிக்கப்பட்டு பிற்பாடு துவஷ்டாவினாலே அக்கினிமுகத்திலேவிருத்திராசுரனையுண்டாக்கி அந்தவிருத்திராசுரனிடத்தில்நின்றும் பயந்ததேவதைகளினாலேஸ்ரீஹரியினுடைய தோத்திரம்பண்ணப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்பாரதனே, அந்தவிஸ்வரூபனுக்கு சோம்பிதமென்றும் சுராபீதமென்றும் அன்னாதமென்றும் மூன்று சிரசுக்கள் உண்டாச்சுதுகள் அந்தவிஸ்வரூபனானவன் தேவதைகளைக்குறித்து எக்கியம்பண்ணி வணக்கத்தோடு தேவதைகள்பொருட்டு பிரத்தியட்சமாகஅவிர்ப்பாகத்தை இதுஇந்திரனுக்கு இது அக்கினிக்கென்று உரக்கச்சொல்லிக்கொடுத்தான்மாதுர்சினேகத்தினாலே அசுராளை அனுவர்த்தித்தவனாய் அசுராளுக்கு அவிர்ப்பாகத்தைக் கும்மதமாகக்கொடுத்தான் இந்திரனானவன் அந்தவிஸ்வரூபனுடைய தேவயௌனமாயும்கபடமாயுமிருக்கிற அந்தக்கர்மத்தைப்பார்த்து பயந்தவனாய்சீக்கிரமாகக் கோபத்தினாலே அவனுடையசிரசுக்களை அறுத்துப்போட்டான் அந்தவிஸ்வரூபனுடையசோம்பிதமென்கிறசிரசானது கபிஞ்சலமென்கிறபட்சியாச்சுது சுராபிதமென்கிறசிரசு கலிங்கவென்னப்பட்ட பட்சியாச்சுது அன்னாதமென்கிறசிரசானது தித்திரிப் பட்சியாச்சுது இந்திரனானவன் பிர்மஹத்தியைத்தள்ளுகைக்குச்சமர்த்தனாயிருந்தாலும் அந்தப் பிர்மஹத்தியைஅஞ்சலியினாலேகிரகித்து ஒருசம்வச்சரம் அப்படியேயிருந்துசம்வச்சராந்தத்திலே லோகாபவாதத்துக்குப்பயந்தவனாய்அந்தஅபவாதத்தைப் பரிகரிப்பதின்பொருட்டு அந்தப்பிர்மஹத்தியை நாலுபாகமாகப்பண்ணி பூமி ஸ்திரீகள் விருட்சங்கள் ஜலம் - இவாள்பொருட்டுக்கொடுத்துவிட்டான் அந்தநாலுபேருக்குள்ளே பூமியானது மனுஷியாளாலேவெட்டப்பட்டபள்ளம்தானே தூர்ந்துபோகும்படிக்கு இந்திரன்கையில்வரம்பெற்று அந்தப் பிர்மஹத்தியின் நாலத்தொருபங்கைக்கிரகித்தது அந்தப்பிர்மஹத்தியினுடையரூபமே பூமியிலே ஊஷர க்ஷேத்திரமாகக்காணப்பட்டிருக்கிறது ஸ்திரீகள்பிரசவபரியந்தம் கெர்ப்பத்துக்குவிரோதமில்லாமல்சம்போகவரத்தைப்பெற்று அந்தபிர்மஹத்திலே நாலிலொருபங்கைக் கிரகித்துக்கொண்டார்கள் அந்தப்பிர்மஹத்தியேஸ்திரீகளுக்கு மாதந்தோறும் ரசோரூபமாகக்காணப்பட்டிருக்கிறது விருட்சங்கள் களையானது வெட்டப்பட்டிருந்தாலும் திரும்பவும் வெட்டினவிடம்துளிர்க்கும்படியாய்வரம்பெற்று அந்தப்பிர்மஹத்தியினுடைய நாலிலொருபங்கைக்கிரகித்ததுகள், அந்தப் பிர்மஹத்தியினுடையரூபமேவிருட்சங்களிலே பிசினாகக்காணப்பட்டிருக்கிறது ஜலமானது சுரப்பினாலே விருத்தியடையும்படிவரம்பெற்று அந்தபிர்மஹத்தியினுடைய நாலிலொருபங்கைக்கிரகித்ததுகள் அந்த பிர்மஹத்தியினுடைய ரூபமே ஜலங்களிலேகுமிழியும் நுரையுமாகக்காணப்படுகிறது பிற்பாடு இந்திரனாலே கொல்லப்பட்ட விஸ்வரூபனுடையபிதாவான துவஷ்டாவானவன் இந்திரனைக்கொல்லத்தக்கின சத்துருவுண்டாக்குகைக்கு ஆபிசாரிகஹோமத்தைப்பண்ணினான் அந்ததட்சணக்கினியில்நின்றும் பயங்கரமான தெரிசனத்தையுடைய ஒருபுருஷனானவன்

பிரளயகாலத்திலே லோகங்களைச் சங்கரிக்கின்ற எமன்போலஉண்டானான் கறுத்தவர்னத்தையுடையவனும் உருக்கப்பட்ட தாம்பரம்பொலொத்த சிகைமயிர் தாடிமயிர்களையுடையவனும் மத்தியானகாலத்துச் சூரியன்போல எதிர்விழிக்கக்கூடாத கண்களையுடையவனும் மூன்றுசிகைகளுடனேகூடின சூலத்திலேபூமி ஆகாசங்களைக்கோர்த்துக்கொண்டவன்போலநிர்த்தனம்பண்ணிக்கொண்டும் அடிக்கடி கொட்டாவிவிட்டுக்கொண்டுமிருக்கிற அந்தப்புருஷனைப்பார்த்து சமஸ்தமானபேர்களும் பயப்பட்டவர்களாய் பத்துத்திக்கிலேயும் ஓடிப்போய்விட்டார்கள்,

அந்தவிருத்திராசுரனை நாலுபக்கமுஞ்சுற்றிக்கொண்டு தங்களுடைய திவ்வியாஸ்திரங்களினாலே அடித்தார்கள் அந்தவிருத்திராசூரன் தேவதைகளினாலேபிரயோகிக்கப்பட்ட அந்தசஸ்திரங்களை நிசேஷமாகவிழுங்கிப்போட்டான் சமஸ்தமானதேவதைகளும் ஆச்சரியத்தையும் விஷயத்தையும் அடைந்தவர்களாய் அந்தரியாமியானபகவானைஸ்தோரத்திரம்பண்ணுகிறார்கள்பிரிதிவு அப்பு தேயு வாயுவு ஆகாயம் இதுகளும் இதின்மயமான மூன்றுலோகங்களும் அதுகளுக்குஈஸ்வராளான பிர்மாமுதலானவர்களும்நாங்களும்பயந்தவர்களாய் காலரூபியானயாதொருபகவான்பொருட்டு சுதர்மானுஷ்டானமாகிற பூசையைப்பண்ணுகிறோமென்று ஸ்தோத்திரம்பண்ணுகின்ற அந்தத்தேவதைகளுக்குப்பகவானானவர் சங்குசக்கரகெதாதரராக இருதயத்திலேஆவிற்பவித்தார் ஸ்ரீவச்ச கவுஸ்துவங்களையன்றித் தம்முடையசாரூப்பியத்தையுடையவர்களாயும் பதினாறுபேர்களாயுமிருக்கிற சுனந்தாதிகளினால் நாலுபக்கத்திலும் சேவிக்கப்படாநின்றும் சரற்காலத்திலே விகசித்ததாமரசபுஷ்பம்போலொத்த நேத்திரங்களையுடையவராயுமிருக்கிற அந்தப்பகவானை எதிரேபிரத்தியக்ஷமாகப் பார்த்து சமஸ்தமானதேவதைகளும் அந்தபகவத்சந்தெரிசனத்தினாலேயுண்டான ஆனந்தத்தினால்பரவசர்களாய்ப்பூமியில் தெண்டம்போலே பிரணாமம்பண்ணி மெள்ளவெழுந்திருந்து திரும்பவும் ஸ்தோத்திரம்பண்ணுகின்றார்கள் வாரீர்பகவன்நாராயணன் ஆதிபுருஷவாசுதேவமகாபுருஷமகானுபாவ பரமமங்கள் பரமகல்யாண பரமகாருணீக பரம அங்கிசாளான யோகிகளாலே அஷ்டாங்கயோகத்தினால் ஏகாக்கிரசித்தமாகஅறியப்பட்டும் பிரகாசமாயுமிருக்கிற பகவத்பஜனரூப தர்மத்தினாலே நீக்கப்பட்ட அக்கியானமாகிற கதவையுடையதானமனதிலே பிரகாசிக்கின்ற பிரத்தியகஆத்மாவிலேதானேபிரகாசியாநின்ற தம்முடைய சுகானுபவசுரூபரான நீர்அறியக்கூடாதவர்போலவிளங்குகிறீர் இந்தச்சமுசாரபிரவாகத்திலேவிழுந்து காமபாரதந்திரியத்தினால் தம்மாலேபண்ணப்பட்ட புண்ணியபாபரூபகர்மபலத்தை அனுசரித்திருக்கின்றஉம்மை நாமின்னபடியென்றுஅறியமாட்டோம்உம்முடையஆத்மமாயையினாலே முன்னே தேவாள்-மனுஷியாள்-மிருகங்கள்-ஜலஜந்துக்கள் - இந்த அவதாரங்களினாலே அபராதத்துக்குத் தக்கதாகத் தெண்டனைபண்ணினீர் அந்தப்பிரகாரம்துவஷ்டாவினாலேயுண்டாக்கப்பட்ட இந்தவிருத்திராசுரனைக் கொல்லவேணுமென்றுநினைத்தீராகில் இவனையுஞ்சங்காரம்பண்ணக்கடவீரென்று ஸ்தோத்திரம்பண்ணினார்கள்.

இந்தப்பிரகாரம் தேவதைகளினால் செய்யப்பட்ட ஸ்தோத்திரத்தை ஸ்ரீஹரியானவர்கேட்டுசந்தோஷித்து ஒருவார்த்தைசொல்லுகின்றார் வாருங்கள்தேவசிரேஷ்டாளே நான்சந்தோஷித்தனேயாகில் புருஷனுக்குஎது தான் துர்ப்பலமாகாமலிருக்கும் உங்களுக்குநன்மையுண்டாகிறது நீங்கள்போங்கள் தத்தியங்கென்னப்பட்டரிஷியைவத்தையினாலும், விரதங்களினாலும், தபசினாலும், திடமாயிருக்கிற அவருடையசரீரத்தைச்சீக்கிரமாகயாசியுங்கள் அந்ததத்திரியங்கிரிஷியானவர் பிர்மத்தையும் பிரவாககர்மத்தையும் அறிந்தவராய் அசுவனிதேவதைகளுடனே யாதொருபிர்மவித்தையை உபதேசித்த அசுவத்தினுடைய சிரசையுடையவரானஅவரால்சொல்லப்பட்டபடியால் அசுவசிரசென்று பேரை யுடையதான அந்தபிர்மவித்தையானது அந்தஅசுவினிதேவதைகளுக்கு ஜீவன்முக்தாளாயிருக்குகையைப்பண்ணின அந்த பிர்மவித்தையைஉபதேசித்தார், இதுவுமன்றிஅதர்வாயென்கிற ரிஷியினுடையபிள்ளையான அந்தத்தத்திரியங்கிரிஷியானவர் துவஷ்டாவுக்கு என்னுடையசுரூபமான நாராயணகவசத்தை யுபதேசித்தார் அந்தத் துவஷ்டாவானவன் தன்னுடையபுத்திரனான விஸ்வரூபனுக்குஅந்தக்கவசத்தையுபதேசித்தார் அந்தவிஸ்வரூபனிடத்தில்நின்றும் அந்தநாராயணகவசத்தை நீ தரியாநிற்கிறாய் தர்மக்கியராயும் வித்துவானாயுமிருக்கிற அந்ததத்தியங்கிரிஷியானவர் உங்களாலே யாசிக்கப்பட்டவராய் உங்களுக்குத் தம்முடையஅஸ்திகளைக்கொடுக்கப்போகிறார் பிற்பாடு அந்தரிஷியினுடைய அஸ்திகளினாலே விஸ்வகர்மாவினால்பண்ணப்பட்டதாய் ஆயுதசிரேஷ்டமானவச்சிரம்உண்டாகப்போகிறது அந்த வச்சிராயுதத்தினால் நீஎன்னுடைய தேஜசினாலே பூரிக்கப்பட்டவனாய் விருத்திராசுரனுடைய சிரசைச்சேதிக்கப் போகிறாய் அந்த விருத்திராசுரன் அடிபட்டுப்போனபிற்பாடு நீங்கள்-தேஜசுகள்-அஸ்திரங்கள்-ஆயுதங்கள்-சம்பத்துகள் இதுகளையெல்லாம் திரும்பவும் அடையப்போகிறீர்கள் என்னுடையபக்தாளை ஒருத்தரும் இம்சிக்கமாட்டார்கள் உங்களுக்கு மங்களமுண்டாகக்கடவது.

## ௰-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

அத்தியந்த பகவான்றனுக்னேயால்
தத்தியங்கன்ற ு றன்னிடவஸ்தியால்
சித்தமொத்த விஸ்வகர்மாவாற்செயும்
சுத்தவாயுதத் தாலுயிர்சேதித்தார்,

பகவானுலேஆக்கியாபிக்கப்பட்ட இந்திரனுனவன் தத்தியங்கனுடைய அஸ்திகளேயடைந்து அதினலேவிஸ்வகர்மாவினுல் நிர்மிக்கப்பட்ட வச்சிரத்தைக் கொண்டு விருத்திராசுரனே ஜெயித்தானென்று சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரீர்பரீட்சித்தே பகவானுனவர் இந்தப்பிரகாரம் இந்திரனே ஆக்கியாபித்து தேவதைகளெல்லாம்பார்த்து கொண்டிருக்கும்போதே அந்தர்த்தான மாய்விட்டார் பிறகுதேவதைகளினுலே யாசிக்கப்பட்டவனுய் அதறுவ குமாரனுயும், மகானுயுமிருக்கிற தத்தியங்க முனியானவர் பிரீதியோடுசிரித்துக்கொண்டபடியேஒருவார்த்தை சொல்லுகின்றுர். வாருங்கள் தேவதைகளே பிராணிகளுக்கு மரணத்திலே எந்ததுக்கமுண்டோ அதை யறியீர்களா பிராணவியோகதுக்கமானது சகிக்கக்கூடாததல்லவா வெகுநாள்ஜீவிக்கவேணுமென்று இச்சையையுடையபேருக்கு தேகமானது அத்தியந்தம் இஷ்டமல்லவா அப்படிப்பட்ட தேகத்தை சாக்ஷாத் விஷ்ணுதான் யாசித்தாலும் அவருக்கும்எவன்தான்கொடுக்கச் சம்மதிப்பானென்று சொல்லாநின்றதத்தியங்கமுனியைப்பார்த்து தேவதைகள்சொல்லுகிறுர்கள் வாரீர்பிர்மரிஷ்டரே பூததயையுடையவாளாயும் மகான்களாயு மிருக்கிற வும்மைப்போலொத்தவர்களேயாசித்தால் கொடுக்கக்கூடாதவஸ்துயாதிருக்கின்றது லோகமானது சுயகாரியத்தையேபார்த்துக்கொண்டிருக்கும் அதுநிச்சயம் எதிரியினுடைய சங்கடத்தையறியமாட்டாது அறிந்துதேயா இல்யாசிக்கமாட்டாது சமர்த்தனுனபுருஷனுனவன் யாசகனுடையசங்கடத்தையறிந்தானேயாகில் அவனும்இல்லேயென்று சொல்லமாட்டானென்றுசொல்லத் தேவதைகளேப்பார்த்து ரிஷியானவர் சொல்லுகிறுர். வாருங்கள்தேவதைகளே உங்களுடையதர்மத்தைக் கேட்கவேணுமென்று இச்சியாநின்றஎன்னுலே நீங்கள்நிராகரிக்கப்பட்டீர்கள் நான்என்னேத்தன்னிச்சையாய் விட்டுவிடாநின்றபிரியமானதேகத்தை உங்களுக்குக்கொடுக்கிறேன் எந்தப்புருஷன் பூததயையுடையவனுய் அநித்தியமான தேகத்திலே தர்மத்தையும், கீர்த்தியையும், சம்பாதிக்கவில்லையோ அவன்ஸ்தாவரங்களான விருக்ஷங்கள் முதலானதுகளினு[illegible]யும், ஐயோவென்றுவிசனப்படத்தக்கவன் புருஷனுவன் நாய்நரிமுதலானதுகளினுல்பட்சிக்கத்தக்கதுகளாயும் ஆத்மாவுக்கு உபயோக மில்லாதுகளாயும் க்ஷணத்திலேநசியாநின்று மிருக்கிற திரவியம்-புத்திராள்-தேகம்-இதுகளினுலே பிறருக்குஉபகாரம்பண்ணுமலிருக்கிறதே மகத்தானதுக்கமும் மகாநிஷேதுமாகுமென்று அதர்வகுமாரனுன தத்தியங்கி ரிஷியானவர் கியாசைக்திமுதலானகுணங்களேயுடைய பரப்பிர்மத்தினிடத்திலே ஆத்மாவை அடைவிப்பித்துசரீரத்தை விட்டுவிட்டார். பிற்பாடுஇந்திரனுனவன் அந்தரிஷியினுடைய வுடம்பிலேயிராநின்ற எலும்புகளினுலே விசுவகர்மாவினுல் செய்யப்பட்ட வச்சிராயுதத்தை எடுத்துக்கொண்டு பகவானுடையதேஜசோடுகூடினவனுய் ஐயிராவதத்தின்பேரிலேறிக்கொண்டு சத்துருவானஅந்தவிருத்திராசுரனேத்தூரத்தினன். அப்போதுதேவதைகளுக்கும்அசுராளுக்கும் மகாயுத்தமானது திரேதாயுகத்தினுடையமுதலில் நர்மதாதீர்த்தத்திலே உண்டாச்சுது. அந்தயுத்தத்தில் இந்திரனேப்பார்த்து விருத்திராசுரன் முதலானஅசுராள் சகியாமற்போனுர்கள். பிற்பாடுநமுச்சியசம்பரன்-அன்றவாது-விமுத்தாரிஷபன்-அம்பரன் அயக்கிரீவன்-சங்கு-சிரசு-விப்பிறசித்தி-அயோமுகன்-புலோமா-விரிஷபனுவர்-பிரகெதி-எதிவுதக்கரன்- இவர்கள்முதலானவர்கள் திதியினுடையபிள்ளேகளாயும் தனுவினுடையபிள்ளேகளாயுமிருக்கிற அசுராளும்-அனேகமாயிரம்ராக்ஷசாளும் இந்திரனுடையசேனுசமுகத்தைத்தகைந்து பயமில்லாமல் சிங்கநாதங்களேப் பண்ணிக்கொண்டுபீடித்தார்கள்,

தேவசிரேஷ்டாளேக்குறித்து நாலண்டையிலேயும் அஸ்திரசஸ்திரங்களினுலேயும் கத்திகேடய முதலான ஆயுதங்களினுலேயும்,வருஷித்தார்கள் அப்படிஅந்தஅசுராளாலே பிரயோகிக்கப்பட்ட அஸ்திரசஸ்திர சமுகங்கள் வேதத்தோடுகூடின அஸ்தாளான தேவதைகளினுலே ஆகாசத்தில் சகஸ்திரப்பிரவாகமாகச் சேதிக்கப்பட்டதுகளாய் அந்ததேவசேனேயிலேஇருக்கிறவர்களே அடையாமற்போச்சுது பிற்பாடுஅசுராள்பர்வத சிகரங்களினுலேயும், விருக்ஷங்களினுலேயும், கற்களினுலேயும்,வருஷித்தார்கள். அதுகளேயும்முன்போல தேவதைகள்சேதித்துப்போட்டார்கள்.

பிற்பாடுவிருத்திராசுரனே நாதனுகவுடைய அசுராள் தங்களாலேவருஷிக்கப்பட்டசஸ்திரசமுகங்களினுலே அடிக்கப்படாதவர்களான தேவதைகளேப்பார்த்துத் திரும்பவும், விருக்ஷங்களினுலேயும், கற்களினுலேயும், நானுவிதங்களாகப்பீடித்தார்கள். கிருஷ்ணனே அனுகூலமாகவுடையவர்களான தேவகணங்களிடங்களிலேதயித்தியாளால் அடிக்கடி[illegible]ண்ணப்பட்ட சமஸ்த பிரயாசங்களும்வியர்த்தங்களா[illegible] அந்த அசுராள் தங்களு

டையபிரயாசங்கள் வியர்த்தமாகப்போகின்றதைப் பார்த்துயுத்தசமுகத்திலே எஜமானனை விட்டுவிட்டு ஓடிப்போகயத்தனித்தார்கள், அப்போது யுத்தம்பண்ணவேணுமென்று மனதையுடையவிருத்திராசுரன் ஓடிப்போகிறதன்னுடைய சேனாபதிகளைப்பார்த்து சிரித்துகேழ்க்கத்தக்கதாயும்,காலோசிதமாயுமிருக்கிறஒருவசனத்தைச்சொல்லுகிறான். வாரீர் விப்பிரசித்தியே நமுசியே புலோமனே மயனே என்னுடையவார்த்தையைக் கேளுங்கள் பூமியில்ஜெனித்தவனுக்கு மரணம் சித்தமாகவேயிருக்கிறது. இந்தமரணத்துக்குஒன்றும் பிரதிக்கிரியையாகப்பண்ணப்பட்டதில்லை. யுத்தமுகத்திலே மரித்ததினாலே வீரசுவர்க்கமும் எஜசும்உண்டாகிறதானால்அந்தயுக்தமானமரணத்தை எவன்தான் இச்சியாமற்போவன் இந்தலோகத்திலே புருஷனானவன் ஜிதேந்திரியனாயிருந்து யோகமார்க்கத்தினாலே பிர்மத்தினிடத்தில் ஆத்துமாவைச்சேர்த்து சரீரத்தைவிட்டுவிடுகிறதும்யுத்தபூமியிலேபின்னிடையாமல் யுத்தம் பண்ணிச் சரீரத்தைவிட்டுவிடுகிறதும் இவ்விரண்டுமரணங்களும்லபிக்கத்தக்கதன்று சாஸ்திரசம்மதமாயுமிருக்கிறதுகள்,

## யகவது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

அந்தவிந்திர னுடனமர்செய்திடும்
தொந்தவிருத்ரா சுரன்க்யானபக்தியா
லுந்துமாபெலத்தி னெளிர்வுகளை
முந்தவேவரு ணித்துமொழிகுவாம்.

இந்திரனுடனே யுத்தம்பண்ணுகின்ற விருத்திராசுரனுடைய பக்தி-கியானம்-பெலன்- இதுகளின் அதிசயங்களைநன்றாகவர்ணிக்கப்படுகின்றதுகள்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராஜாவே, இந்தப்பிரகாரஞ் சொல்லாநின்றவிருத்திராசுரனுடைய தர்மயுக்தமான வசனத்தைபுத்தியில்லாமல் ஓடாநின்ற அந்த விப்பிரசித்தி முதலான அசுராள் பயப்பட்டவர்களாய்க் கேளாமற்போனார்கள், அசுரசிரேஷ்டனான விருத்திராசுரன் அனுகூல காலத்தையுடையவர்களான தேவதைகளினாலே துரத்தப்பட்டும் நானில்லாதுபோலே ஓடிப்போகாநின்ற அசுரசேனையைப்பார்த்து மிகவும் தாபத்தை யடைந்து பொறுமையையுங் கோபத்தையுமுடையவனாய் இந்திர சத்துருவானவிருத்திராசுரன் அந்தத்தேவதைகளைத் தன்னுடைய பராக்கிரமத்தினாலே தகைந்துமிரட்டி ஒருவார்த்தைசொல்லுகின்றான்,

வாருங்கள்தேவர்களே, பிரஷ்டாபாகத்தில்அடிக்கப்பட்டவர்களாயும்,ஓடாநின்றுமிருக்கிற அசுராளாலே யுங்களுக்குஆகிறதென்ன, தன்னைச்சூரனாக எண்ணுகின்றபேர்களுக்குப் பயப்பட்டுஓடாநின்றபோதிலே அடிப்பதினால் எஜசுமில்லை சொர்க்கமுமில்லை யுத்தத்திலே உங்களுக்குச்சிரத்தையிருந்துதேயாகில் இகலோகசுகத்திலே இச்சையில்லாவிட்டால் என்முன்னேக்ஷணமாத்திரம் நில்லுங்களென்றுசத்துருக்களான தேவகணங்களைத் தன்னுடையவசனத்தினால் மிரட்டிக்கொண்டுமகாபலவானான அசுரன்லோகமெல்லாம்மூர்ச்சையடையத்தக்கதாய் சிங்கநாதத்தைப்பண்ணினான் அந்தச்சிங்கநாதத்தினாலே சமஸ்தமானதேவகணங்களும் மூர்ச்சையடைந்தவர்களாய்ப் பூமியிலேவிழுந்துவிட்டார்கள் பிற்பாடு விருத்திராசுரனானவன் அந்தத்தேவசேனையைக் கால்களினால் துவைத்தான் அதைப்பார்த்துவச்சிரதரனான இந்திரனானவன்மிகவுங் கோபத்தையடைந்தவனாய்எதிரேயோடிவராநின்றவிருத்திராசுரன்மேல்மகத்தான கெதையைச்சுழற்றிப்போட்டான், விருத்திராசுரனானவன் அக்கெதையைத்தன்னுடைய இடதுகையினால் விளையாட்டாகப் பிடித்துக்கொண்டு உக்கிரமானபராக்கிரமத்தை யுடையவனாய் அந்தக்கெதையினால்தானே இந்திரன்ஏறிக்கொண்டிருக்கிறஅயிராவதத்தின்கும்பஸ்தனத்திலடித்தான் அவனந்தயானையை அடித்ததைப்பார்த்து யாவருங்கொண்டாடினார்கள் விருத்திராசுரனுடைய கெதையினாலடிக்கப்பட்ட அந்தஅயிராவதமானது இரத்தத்தைப்பொருக்கிக்கொண்டு இந்திரனோடுகூட ஏழுவில்லிடைப்பிரமாணம் பின்வாங்கிப்போய்விட்டது அந்தமகாரதனைவிருத்திராசுரன் மனவருத்தத்துடன் இருக்கிறஇந்திரன்பொருட்டுத் திரும்பவும் அந்தக்கெதையைப் பிரயோகம்பண்ணவில்லை இந்திரனும அயிராவதத்தோடு எதிரேவந்தான் அந்தவிருத்திராசுரனானவன் திரும்பவும் யுத்தம்பண்ணவேணுமென்கிற இச்சையுடையவனாய் இந்திரனைப்பார்த்து முன்ன அந்தஇந்திரனால்பண்ணப்பட்டகுரூரமாயும் பாபமாயுமிருக்கிற அந்தக்கர்மத்தை நினைத்து சோகமோகாவேசத்தையுடையவனாய்சிரித்துஒருவார்த்தைசொல்லுகிறான்,

கேளாய் இந்திரனே நீ பிர்மஹத்திபண்ணவனாயும் குருஹத்திபண்ணவனாயும் என்னுடையபிராதாவைக்கொன்றவனாயும் எனக்குச்சத்துருவாயுமிருக்கிறநீதெய்வாதீனமாக என்முன்னேவந்துநின்றாய் அடா துஷ்டாளுக்கெல்லாந் தலைவனே உன்னாலே நானிப்போது சீக்கிரத்தில் பிராதாவினுடைய ருணத்தில் நின்றும்விடப்பட்டவனாகப் போகிறேன் எனக்குத் தமையனாயும் ஆத்மக்கியானியாயும். உனக்குக்குருவாயும் தீக்ஷிதனாயுமிருக்கிற விஸ்வரூபனுடைய சிரசுகளைக்கத்தியினால்சேதித்துப்போட்டாய் உன்னைக்கழுகுகள்மிகவும் பட்சிக்கப்போகின்றதுகள் வாராய்மூடனேஎதினால்எதிரேயிரா

நின்ற சத்துருவான என்னிடத்திலே அமோகமான வச்சிராயுதத்தினுல் போடாமலிருக்கிறுய் போட்டால்லுத்தனிடத்திலே பிரயோஜனத்தை யுடையதானயாசனையைப்போல அந்தவச்சிராயுதமானது ந்ஷ்பலமாகப்போமென்று சமுசயிக்கவேண்டாம் ந்ஷ்பலமாகப்போகமாட்டாது வாராய்இந்திரனே உன்னுடைய வச்சிராயுதமானது அரியினுடைய தேசசினுலேயும் தத்தியங்கனுடைய தபசினுல் மிகவும்திக்ஷணமாகப் பண்ணப்பட்டிருக்கின்றது அப்படிப்பட்ட வச்சிராயுதத்தைக்கொண்டு விஷ்ணுவினுலே யேவப்பட்டவனுய் சத்துருவானஎன்னைக்கொல்லக்கடவாய் எவன்பங்கிலே அரியிருக்கிறுனே அவனிடத்திலேயே ஜெபமும்சம்பத்துமுண்டாயிருக்கும் சங்கருஷரானவர் எனக்குசுவாமி நானவருடையசாரூரவிந்தத்திலே எதாயோக்கியமாக மனதை நல்ருகவைத்து உன்னுடைய வச்சிராயுதவேகத்தினுல்சேதிக்கப்பட்டவனுய் விஷயபோகங்களை விட்டவனுய்யோகியினுடைய கதியையடையப்போகிறேன் வாராய் இந்திரனே என்னுடையசுவாமியான பகவானுனவர்பக்தாளுடைய தர்மார்த்த காமவிஷயமான ஆயாசத்துக்குவிகாதத்தைப்பண்ணுவரா பகவானுடைய பிரசாதமானது பக்தியில்லாதவர்களுக்கு துற்லபமாயும் அகிஞ்சனுளுக்குச் சுல்பமாயுமிருக்கின்றது அந்தபகவத் பிரசாதமானது தாமார்த்த காமங்களுடைய விகாதத்தினுலே அறியத்தக்கதென்று இந்திரனைப் பார்த்துச்சொல்லிவிருத்திராசுரனுனவன் பகவானை ஸ்தோத்திரம் பண்ணுகின்றுன் வாரீர்அரியே நானும்முடைய பாதாரவிந்தத்தை ஆசரியாநின்ற தாசாளுக்குக் தாசனுகத்திரும்பவும் ஆகக்கடவேன் என்னுடைய மனமானது பிராணநாதனைஉம்முடைய குணங்களைஸ்மரிக்கக்கடவது என்னுடையவாக்கானது அந்தக்குணங்களையே கீர்த்திக்கக்கடவது நானும்மைவிட்டு சொர்க்காதிபோகங்களை யடையக்கோறவில்லை என்னுடைய மனமானது உம்மையே பார்க்கவேணுமென்று இச்சிக்கின்றது.

## ௰௨-வது அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

அரியமாகேந்த்ர னமர்க்களத்தினில்
விருத்திராசுரன் வதம்விளம்புவாம்

மகேந்திரனது மகாயுத்தத்திலே விருத்திராசுரனுடையவதம் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்ராஜாவேஇந்தப்பிரகாரம்யுத்தத்திலேதேகத்தைவிடவேணுமென்று இச்சித்தும் சத்துருஜெயத்தைக்காட்டிலும் மாணத்தையே சிரேஷ்டமாகஎண்ணியிருக்கின்ற விருத்திராசுரனுனவன் சூலத்தைக்கையிலெடுத்துக்கொண்டு மகேந்திரனுக்கு எதிராகவந்து அந்தச்சூலத்தை வேகத்தினுலேசுழற்றிமகேந்திரன்பேரிலேபோட்டு அட்டகாசம்பண்ணி வாராய் மகாபாபியே நீஇந்நேரம் நிஹதமாய்ப்போவாயென்றுகோபத்தினுலே சொன்னுன் ஆகாசத்தில் சுழலாநின்றகிரகங்களைப்போலவும் எரிந்துகொண்டு வராநின்ற கொள்ளிக்கட்டைபோன்ற அந்தச்சூலத்தைப்பார்த்து மகேந்திரனுனவன் அதைரியப்பட்டவனுய் நூறுகணுக்களையுடையதான வச்சிராயுதத்தினுலே அந்தச்சூலத்தைச் அறுத்துப்போட்டு அந்தஅசுரனுடைய ஒருபுயத்தையும் சேதித்தான் அப்போது விருத்திராசுரனுனவன் கோபத்தையுடையவனுய் வச்சிரஅஸ்தனுய்தேவசிரேஷ்டனுன இந்திரனைக் கதையினுல் தாடையிலடித்தான், அப்போது இந்திரனுடைய அஸ்தத்திலே யிராநின்ற வச்சிராயுதமானது நழுவிக்கீழேவிழுந்தது அதுகண்டு ஆகாசத்திலேயிராநின்றதேவர்கள் முதலானவர்களும் அந்தவிருத்திராசுரனுடைய யுத்தத்திலே அத்தியற்புதமான அந்தகர்மத்தைக் கொண்டாடினுர் இந்திரனுடைய அந்தச்சங்கடத்தையும்பார்த்து ஆஆவென்று மிகவுங்கூப்பிட்டார்கள் பிற்பாடுஇந்திரனுனவன் லச்சையையுடையவனுய் சத்துருவினுடைய சந்நிதானத்திலே தன்னுடையஅஸ்தத்தில்நின்றும் நழுவிப்போன அந்த வச்சிராயுதத்தைத்திரும்பவும் கிரகியாமலிருந்தான் அப்போது அந்த இந்திரனைப்பார்த்து விருத்திராசுரனுனவன் ஒருவார்த்தை சொல்லுகின்றுன்,

வாராய் இந்திரனே வச்சிராயுதத்தை யெடுத்துக்கொண்டு உன்னுடையசத்துருவான என்னை அடிக்கக்கடவாய் வியசனப்படுகின்றதற்கு இதுகாலமன்று ஜெகத்வுற்பத்தி ஸ்திதிசங்காரகர்த்தாவாயும், அநாதியாயும், சர்வக்கியராயுமிருக்கிற பரமபுருஷன் ஒருவனையன்றி ஆயுதங்களையெடுத்துக்கொண்டு யுத்தம்பண்ணுகின்றபராதீனமானதேகத்தை யுடையவர்களாயுமிருக்கிறபேர்களுக்குளப்போதும் ஜெயமுண்டாக மாட்டாது, பிரகிருதிபுருஷன் மகதத்துவமும், அகங்காரம், பஞ்சபூதங்கள், இந்திரியங்கள், அந்தக்கரணம், இதுகளிந்தப், பிரபஞ்சத்தினுடையசிருஷ்டி ஸ்திதிலயங்களிலே ஈஸ்வரனுடைய அனுக்கிரகத்தையன்றி சமர்த்தங்களாகிறதில்லை, இதுகளையறியாத அவிவேகியானவன் ஆத்மாவையேஈஸ்வரனுக எண்ணிக்கொள்ளுகிறுன்ஈசுவரன்பிராணிகளினுலே பிராணிகளைச்சிருஷ்டிக்கின்றுர் பிராணிகளினுலே பிராணிகளைச் சங்கரிக்கின்றுர்புருஷன்கோருமலிருந்தாலும் அவனுக்கு அந்தக்காலத்திலேதுக்கமரணமுதலானது உண்டாகின்றதுபோல ஆயுசுகீர்த்தி ஐசுவரியம் இதுகளெல்லாம்அந்தக்காலத்திலேயுண்டாகும் ஆகையினுலே புருஷனுனவன்கீர்த்தி அபகீர்த்தி,

ஜெயம் அபஜெயம் துக்கம் மரணம்இதுகளிலேசமபுத்தியாயிருக்கத்தக்கவன் சத்துவமென்றும், ரசசுஎன்றும் தமசுஎன்றும் சொல்லப்பட்டஇம்மூன்றும் பிரகிருதியினுடைய குணங்களேயொழிய ஆத்ம குணங்களன்றுஅந்த மூன்றுகுணங்களுக்கும் பரமாத்மாசாட்சியாக எவன்அறிகிறானோ அவன் அந்தக்குணங்களிலே கட்டுப்படுகிறதில்லை. வாராய்இந்திரனே யுத்தத்திலே அறுக்கப்பட்ட ஆயுதம்புஜம் இதுகளையுடையவனாயும், உன்னாலே ஜெயிக்கப்பட்டவனாயும் திரும்பவும் உன்னுடையபிராணனை அரிக்கவேணுமென்கிற இச்சையினாலேஎன்பலத்துக்குத்தக்கதாக யத்தனம்பண்ணிக்கொண்டிருக்கிற என்னைப்பார் இந்தயுத்தமானது பிராணனைப்பந்தியமாகவும் பாணங்களை பாச்சிகையாகவும் வாகனங்களை காய்கள்வைக்கிற ஸ்தானமாகவுடையதாயிருக்கிற தியூகமாகவிருக்கின்றது இந்தயுத்தமென்னப்பட்டதியூகத்திலே இவனுக்குஜெயமுண்டாகும் இவனுக்கபஜெயமுண்டாகுமென்று அறியப்படமாட்டாதென்று சொல்லாநின்ற கபடமில்லாத விருத்திராசுரனுடைய வார்த்தையைக்கேட்டு இந்திரனானவன் சிலாகித்துக்கொண்டு வச்சிராயுதத்தை யெடுத்துக் கொண்டவனாயும் , கர்வத்தைவிட்டவனாயும் சிரித்து அந்தவிருத்திரா சுரனைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகிறான்.

வாராய்அசுரனே நீசித்தியடைந்தவனாகவும்சர்வப்பிராணிகளுக்கும் சுகுர்தராயும் ஜெகதீஸ்வரனாயுமிருக்கிறபரமாத்மாவைச் சர்வப்பிரகாசத்தினாலேயும் ஆஸ்ரயித்தவனாகவும் ஜென்மங்களை மோகிப்பிக்கின்ற விஷ்ணுமாயையைத் தாண்டினவனாகவு மிருக்கிறாய் இராஜசுபாவத்தை யுடையவனான உனக்குப் பகவானாயும் சர்வாந்திரியாமியாயு மிருக்கிற வாசுதேவனிடத்திலேதிடமான புத்தியுண்டானது மகத்தான் ஆச்சரியமல்லவா, ஸ்ரீஹரியினிடத்திலே எவனுக்குப் பக்தியுண்டாயிருக்கிறதோ அவனுக்கு அதிசொல்பங்களான சொர்க்காதிசுகங்களினாலே என்ன ஆகவேண்டியதென்று யுத்தத்திலேசமர்த்தாளாயிருக்கிற இந்திரனும் விருத்திராசுரனும்தர்மத்தை அறியவேணுமென்கிற விச்சையினாலே ஒருவருக்கொருவர் வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு யுத்தம்பண்ணினார்கள் அப்போது சத்துருக்களை இம்சியாநின்ற விருத்திராசுரன் பரிசமென்கிற ஆயுதத்தை இடதுகையினாலே சுழற்றி இந்திரன்மேலே பிரயோகித்தான் அந்தஇந்திரனானவன் விருத்திரா சுரனுடைய கெதையையும் யானைத்துதிக்கைக்குச் சமானமானகையையும் ஏககாலத்திலே நூறுகணுக்களுடனே கூடினவச்சிராயுதத்தினாலே சேதித்துப்போட்டான் அப்படிசேதிக்கப்பட்ட கைகளையுடைய தோள்களில்நின்றும் இரத்தங்களைப் பெருக்கிக்கொண்டு இறகுகளில்லாத பர்வதம்போலவிளங்கினான் அந்த அசுரனானவன்கீழ்தாடையைப் பூமியிலேயும் மேல்தாடையைஆகாசத்திலேயும் வைத்துக்கொண்டு ஆகாசம்போலவே கம்பீரமானதனதுவாயினாலே மகாசர்ப்பமானது யானையைவிழுங்குறாப்போலஅந்த இந்திரனைவிழுங்கினான் அப்படிவிருத்திராசுரனாலே விழுங்கப்பட்ட இந்திரனைப்பார்த்து பிர்மாமுதலான சகலதேவர்களும் துக்கத்தையடைந்தவர்களாய் ஆகஷ்டமென்று கூப்பிட்டார்கள் அசுரேந்திரனான விருத்திராசுரனாலே விழுங்கப்பட்டிருக்கிற இந்திரனானவன் நாராயணகவசத்தினாலேயும் யோகமாயப்பிரபாவத்தினாலேயும், ரட்சிக்கப்பட்டவனாய் பரிக்காமல்வச்சிராயுதத்தினாலே அவனுடைய வயிற்றைப்பிளந்துகொண்டு வெளிப்பட்டு சத்துருவின்பேரில் வச்சிராயுதத்தைவிட்டான் சீக்கிரமான வேகத்தை யுடையதான அந்தவச்சிராயுதமானது சப்தித்துக்கொண்டுபோய் அந்தவிருத்திரா சுரனுடையசிரசை அறுத்துப் பூமியிலேதள்ளிவிட்டது அப்போது ஆகாசத்திலே துந்துபிவாத்தியங்கள் முழங்கினதுகள் தேவர்கள்முதலானவர்களும் புஷ்பவருஷம் வருஷித்தார்கள் அந்தவிருத்திராசுரனுடையதேகத்தில்நின்றும்வெளிப்படாநின்ற ஆத்மதேஜசானது சமஸ்தமான தேவதைகளும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே லோகாதீதரானபகவானை அடைந்தது,

## ௰௩-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

அரியவிருத்ரப் பிர்ம்மஹத்தியாகிற
பெருமகாதம சாற்பின்னும்வெகுகாலம்
இருமோகத்தை யடைந்திடுமிந்திரன்
கரியவிஷ்ணுவி னற்கடாக்ஷப்பட்டான்

விருத்திரப்பிர்மஹத்தியாகிற மகாதமசினாலே வெகுகாலம் மோகத்தையடைந்திருந்த இந்திரனானவன்ஸ்ரீமகாவிஷ்ணுவினாலே ரட்சிக்கப்பட்டானென்று சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராஜனே இந்தப்பிரகாரம் விருத்திராசுரனானவன் அதமாய்ப்போனபின்பு இந்திரன்ஒருத்தனைத்தவிர லோகபாலாளுடனே கூடின மூன்றுலோகங்களுஞ் சகல இந்திரியசவுக்கியத்தை யுடையவர்களாயும் விருத்திராசுரனாலே யுண்டானவசனத்தை விட்டவர்களாயுமானார்கள் பிற்பாடு பிர்மா ருத்திரன் முதலான தேவர்களும் தங்கள்தங்கள் ஸ்தானத்தை யடைந்தார்களென்று சொல்லாநின்ற சுகப்பிர்ம ரிஷியைப்பார்த்து பரிட்சித்துமகாராஜன் கேழ்க்கின்றான் வாரீர்பிர்மரிஷியே, இந்திரனுடைய துக்கத்துக்கு நிமித்தத்தைக் கேழ்

க்கின்றான். வாரீர்பிர்மரிஷியே, இந்திரனுடைய துக்கத்துக்கு நிமித்தத்தைக் கேழ்க்கவேணுமென்று இச்சிக்கிறேன். எதினால் தேவதைகளெல்லாஞ் சுகத்தையடைந்தார்கள் இந்திரனுக்குதுக்கம் எதினால்உண்டாச்சுதுஅதைச்சொல்லவேணுமென்று பிரசினம்பண்ணுகின்றராஜாவைப்பார்த்து சுகப்பிர்மரிஷியானவர்சொல்லுகிறார் வாராய்ராஜனே ரிஷிகளுடனேகூட சமஸ்தமானதேவதைகளும் விருத்திராசுரனுடைய பராக்கிரமத்தினாலே மிகவும்பயந்தவர்களாய் அவனைக்கொல்லுகைக்கு இந்திரனையாசித்தார்கள் அப்போது இந்திரன் பிர்மஹத்திக்குப்பயந்தவனாய் அவனைக் கொல்லஒப்பாமல் தேவதைகளைப்பார்த்து ஒருவார்த்தைசொன்னான்,ஸ்திரிகள்-பூமி ஜலம்-விருக்ஷங்கள் இவர்கள்என்னிடத்தில் அனுக்கிரகத்தினாலே விசுவரூபனுடையவதத்தினாலுண்டான பாபத்தை நாலுபிரகாரமாகப்பிரித்து கிரகித்துக்கொண்டார்கள், விருத்திரஹத்தியினாலுண்டான தோஷத்தை எங்கேநான் போக்கடித்துக்கொள்ளுவேனென்று சொல்லாநின்ற இந்திரனுடைய வசனத்தைக் கேட்டு ரிஷிகள் சொல்லுகின்றார்கள். வாராய்இந்திரனே உனக்கு அஸ்வமேதம்பண்ணிவைக்கிறோம் உனக்குமங்களமுண்டாகக்கடவது நீபயப்படாதே அஸ்வமேதத்தினாலே மகாபுருஷனாயும்,பரமாத்மாவாயுமிருக்கிற நாராயணனைபிரீதிபண்ணிவைத்து ஜெகத்தையெல்லாம் வதைத்திருந்தாலும் அப்பாபத்தில்நின்றும்விடுபடுவாய் பிர்மஹத்தி பிதுர்ஹத்தி-கோஹத்தி-மாதுர்ஹத்தி-குருஹத்தி இதுகள்முதலான ஹத்திகளைப்பண்ணி மகாபாவியாயிருக்கிறவன் பகவானுடையகீர்த்தனத்தினாலேசகலபாபத்தில்நின்றும், விடுபட்டு சுத்தியடைந்திருக்கிறான் அப்படிப்பட்டபகவானையுத்தேசித்து எங்களால்பண்ணிவைக்கப்பட்ட அஸ்வமேதமாகிற மகாகிறுதுவினாலே நீ சிர்த்தையுடனேகூடினவனாய் பகவானை ஆராதித்தவனாய்பிர்மாமுதலான சகலபிரபஞ்சத்தையும் சங்கரித்திருந்தாலும், அந்தலோகத்திலே அகப்படாமலிருப்பாய்அப்படியிருக்க துஷ்டனான விருத்திராசுரனுடைய நிகிரகத்தினாலேஉண்டானபாவத்தை ஸ்பரிசிக்கமாட்டா யென்பதற்குக் கேழ்க்கவேண்டிய தெல்லாவென்று பிராமணாளாலேஏவப்பட்டவனாய் இந்திரனானவன் சத்துருவான விருத்திராசுரனைச்சங்கரித்தான். அந்தவிரு[illegible]திராசுரனானவன் சங்கரிக்கப்பட்டபிற்பாடு பிர்மஹத்[illegible]னது இந்திரனையடைந்தது அந்ததேவப்பிராமணனை [illegible] விக்கப்பட்ட பிர்மஹத்தியாதோஷத்தினா[illegible]பத்தையடைந்திராநின்ற இந்திரனைத் தவிரிய முதலான குணங்களும்சுகிப்பிக்கமாட்டாமற்போச்சுதுகள். பிற்பாடு அந்தஇந்திரனானவன் சண்டாளஸ்திரீயைப்போல ரூபத்தையுடையதாயும், பின்னே [illegible]நின்ற அவயவங்களை யுடையதாயும், க்ஷயரோகத்தினாலே வியாபிக்கப்பட்டதாயும் இரத்தவஸ்திரத்தைத் தரித்துக்கொண்டிருக்கிறதாயும் நரைத்தலைமயிர்களைவிரித்துக்கொண்டு நில்லு நில்லென்று சொல்லிக்கொண்டுவராநின்ற அந்தப் பிர்மஹத்தியைப்பார்த்து இந்திரனானவன்சீக்கிரமாக மானச்சரசுக்குள்ளே பிரவேசித்து அந்தமானச்சரசினுடைய ஜலங்களில்மறைந்துகொண்டு அந்தப்பிர்மஹத்தியில்நின்றும் மோட்சத்தையிச்சித்து ஆயிரம்சம்வச்சரம் தாமரைக்கொடிநூல்களிலே வாசம்பண்ணிக்கொண்டிருந்தான்.

யாதொரு காரணத்தினாலே இந்திரனுக்கு அவிற்பாகங்களைக்கொடுக்கிறதற்கு அக்கினிதூதனானானோ அந்தஅக்கினிக்கு ஜலத்திலே பிரவேசமில்லாதபடியினால் அந்தஆயிரம்சம்வச்சரமும் அவிற்பாகத்தையடையாமலேயிருந்தான். அந்த ஆயிரம் சம்வச்சரமும் அகண்டமண்டலாதிபதியான நகுஷசக்கிரவர்த்தியானவன் வித்தை-தபசு-யோகம்-இதுகளுடைய பலத்தினாலேசொர்க்கபாலன சாமர்த்தியத்தையுடையவனாய் சொர்க்கத்தை ரட்சித்துக்கொண்டிருந்தான் அந்தநகுஷனானவன்சம்பத்தினாலேயும் அயிஸ்வரியத்தினாலேயும், உண்டானமதத்தினால் மூடபுத்தியையுடையவனாய் இந்திரனுடைய பாரியையான சசிதேவியினாலே சர்ப்பஜென்மத்தையடைவிக்கப்பட்டான் பிற்பாடுஇந்திரனானவன் பிராமணவாக்கியத்தினாலே அழைக்கப்பட்டவனாய் சத்தியபரிபாலகரான அரியினுடைய தியானத்தினாலே பாபத்தைப் போக்கடித்துக்கொண்டவனாய் சொர்க்கத்தையடைந்தான்அந்தப்பிர்ம்மஹத்தியா தோஷமோ வென்றால் விஷ்ணுசக்திரூபமாயும்ஈசானியதிக்குக்குதேவதையாயுமிருக்கிற ருத்திரனாலேரட்சிக்கப்பட்டஇந்திரனைசாமர்த்தியமில்லாததாய்க்கொண்டுதிரஸ்கரிக்கப்படாமலிருந்தது வாராய்ராஜனே பிர்மரிஷிகள் அந்தஇந்திரனையடைந்து மகாபுருஷஆராதனரூபமான அசுவமேதத்தினாலே எதாசாஸ்திரமாகத் தீக்ஷைபண்ணுவித்து பிரமவாதிகளினாலேபண்ணப்பட்ட அந்தஅஸ்வமேதத்தில்மகேந்திரனாலே சர்வதேவமயரான மகாபுருஷரானவர்பூசிக்கப்பட்டிருக்குகையில் விருத்திரவததோஷமானது மகத்தாயிருந்தாலும் அந்தமகாபுருஷஆராதனத்தினாலே சூரியனைக்கண்டபனியைப்போல நாசத்தை அடைவிக்கப்பட்டது அந்தஇந்திரனுடையபிரமகத்தியா மோட்சத்தைப் பிரிதிபாதியாநின்றுயிருக்கிற இந்த வுபாக்கியானத்தை சர்வகாலமும் கியானிகள்படித்தார்களாகிலும் பர்வதங்கள்தோறும் பக்திசிரத்தாபூர்வமாக இந்தவுபாக்கியானத்தைக்கேட்டாலும் அவர்களுக்கு எசசு-ஆயுசு - சத்துருஜெயம்-பாபநிவர்த்தி சர்வமங்களங்கள் இவைகளெல்லாம் உண்டாம்.

## ௰௪-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

சித்ரகேதுவுக் குச்செல்வநாயகி
புத்திரன்மரித்துப் போகையிலங்கே
உற்றவாற்சல்லி யத்தாலுண்டாகிய
சுத்தமாமந்தச் சோகத்தைச்சொல்லுவாம்.

சித்திரகேதுவுக்கு மகாப்பிரயாசத்தினுலே அடைய ப்பட்டபுத்திரன் மரித்துப்போகையில் அந்தப் புத்திர னிடத்தில் அதிவாற்சல்லியத்தினுலுண்டானமகத்தான சோகமானது சொல்லப்படுகின்றது.

பரிட்சித்துவினுடைய வாக்கியம்,

வாரீர்பிர்மநிஷ்டரே, ரசோகுணத்தையும்,தமோ குணத்தையும், சுபாவமாகவுடையவனுயும்,பாபியாயுமி ருக்கிற விருத்திராசுரனுக்குப் பகவானுன நாராயணனி டத்தில் திடமானபக்தி யெதினுலேஉண்டாச்சுது சுத்த சத்துவகுணத்தையுடையவர்களானதேவாளுக்கும் சுத் தமானஅந்தக்கரணத்தை யுடையவர்களான ரிஷிகளுக் கும்,முகுந்தனுடைய சரணுரவிந்தத்திலே பக்தியுண் டாகிறதில்லேயே அப்படியிருக்க அந்தவிருத்திராசுரனு னவன் பயங்கரமானமகாயுத்தத்திலே கிருஷ்ண னிடத் தில் திடமானபக்தியையுடையவனுக எப்படியானுன்இ தில்எனக்குமகத்தாகிய சமுசயமுண்டாயிருக்கின்றபடி யால் அதை நிவர்த்திசெய்யவேணுமென்று சொல்லா நின்ற பரிட்சித்துவினுடைய பிரசினத்தைக்கேட்டு பக வானுன சுகப்பிர்மரிஷியானவர் ஒருவார்த்தைசொல்லு கிருர்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரர்ய் ராஜாவே, சூரசேனதேசத்தில் பிரசித்த னுய் அகண்டமண்டலாதிபதியாய் சித்திரகேதுவென்று ராஜனிருந்தான் அந்தராஜனுக்கு கோடிஸ்திரீகள் பாரி யைகளாகவுண்டாயிருந்தாலும், அவர்களிடங்களிலேபு த்திரசம்பத்தையடையாமற்போனுன்-ரூபம்-அவதாரிய ம்-யௌவனம்-வித்தை-அயிஸ்வரியம்-கியான்ம்இதுகள் முதலான சமஸ்தகுணங்களுடனேஇருந்தும் மனது ச ந்தோஷத்தை யடையாமற் போச்சுது ஒருநாள் இந்த லோகங்களெல்லாம் சஞ்சரியாநின்ற பகவானுனஅங்கிர ரசமகாரிஷியானவர் சுவயஇச்சையினுலே அந்தசித்திர கேதுவினுடைய கிரகத்தை அடைந்தார். மகாபுத்திமா னுன சித்திரகேதுவானவன் அவரைக்கண்டு எதிர்கொ ண்டு அர்க்கியமுதலானதுகளினுலே யதாசாஸ்திரமாக ப்பூசித்து ஆதித்தியத்தையும்பண்ணுவித்து சுகாசனத் திலேயிராநின்ற அந்தரிஷியினுடைய சமீபத்திலே தா னும்இருந்தான், அந்தஅங்கிரசுமகாரிஷியும், இந்தப்பி ரகாரம்பூசியாநின்ற ராஜாவைக்கொண்டாடிச் சொல்லு கிருர், வாராய்மகாராஜனே உனக்கும் உன்னுடையமந் திரிமுதலானபிரகிருதிகளுக்கும் ஆரோக்கியமும் க்ஷே மமும்உண்டாயிருக்கிறதாவென்றும் உன்னுடைய காந் தியீனமான முகத்தைப்பார்த்தால் உன்னமனோரதபூ ர்த்தியில்லாதவனுய்ப் பார்க்கிறேனென்றும், சர்வகியரா ன ஆங்கிரசுரிஷியினுலே கேழ்க்கப்பட்டவனுய் புத்திரா ர்த்தியான சித்திரகேதுவானவன் வணக்கத்துடனேபிர ணமம்பண்ணி அந்தரிஷியைக் குறித்து ஒருவார்த்தை சொல்லுகிருன்.

வாரீர்பகவரனே, தபசு-கியானம்-சமாதி- இதுகளி னுலே சகலபாபங்களையும் நாசம்பண்ணுநின்ற யோகிக ளான உங்களைப்போலொத்தபேருக்கு பிராணிகளிலே உள்ளும்புறம்புமாயிருக்கிற அர்த்தமானது எதுதான் அறியப்பட்டதல்ல, ஆனுலும் என்மனதிலே யிருக்கிற தைச்சொல்லுகிறேன் லோகபாலாளாலேயும், பிரார்த் திக்கத்தக்கதுகளான சாம்பிராச்சியம்-அயிஸ்வரியம்-இ துகள் அபுத்திரனுன என்னைச் சந்தோஷிப்பிக்க வில்லே ஆனபடியினுல் என்னை ரட்சிக்கக்கடவீர் பூர்வீகாளான நம்முடைய பிதுர்பிதாமகாதிகளுடனேகூட அடையப் பட்டதாய் தாண்டக்கூடாததான நரகத்தைப் புத்திரனு லேயெப்படித்தாண்டுவமோ அந்தப்பிரகாரம் எனக்கு அனுக்கிரகம் பண்ணக்கடவீரென்று அந்த ராஜாவினு லேபிரார்த்திக்கப்பட்டவராய் துவஷ்டாவினுடையசறு வைப்பண்ணிவைத்து அந்தச்சறுவினுலே அந்தத்துவ ஷ்டாவானவரைக்குறித்து யக்கியம்பண்ணிவைத்துஅந் தச்சித்திரகேதுவினுடைய ஸ்திரீகளுக்குள்ளேமுதல்ப ட்டமகிஷியான கிறுதத்துதி யென்று பேரையுடையவ ளுக்கு அந்தரிஷியானவர் அந்த யக்கியசேஷமான சறு வைக்கொடுத்து சித்திரகேதுவைப்பார்த்து வாராய் ரா ஜனே, உனக்குச்சந்தோஷத்தையும் துக்கத்தையுங்கொ டுக்கத்தக்கவனுய் ஒருபிள்ளைபிறக்கப் போகிருனென் றுசொல்லி அந்தரிஷியானவர்போய்விட்டார்.

பிற்பாடுசித்திரகேதுவினுடைய பட்டமகிஷியான அந்தகிறுதத்துதியும், அந்தயக்கியசேஷத்தி னுடையப க்ஷணத்தினுலே கெர்ப்பத்தைக்கிரகித்து சுக்கிலபட்சத் துச்சந்திரன்போல நாள்தோறும்மெள்ளமெள்ள விர்த் தியடைந்து பிரசவகாலத்திலே புத்திரன்பிறந்தான் அந் தப்புத்திரோச்சவத்தினுலே ராஜாவானவன் சந்துஷ்ட னுய்ஸ்நானம்பண்ணி சுசியாயலங்கரித்துக்கொண்டுபிரா மணுளாலே ஆசீர்வசனங்களைச்செய்வித்து அந்தப்பிள் ளைக்குச் சாதகர்மத்தைப்பண்ணிவைத்துபிராமணுளுக் குவேண்டியதானங்களைக்கொடுத்து அந்தப்பிள்ளையினி டத்திலே மிகவும்பிரீதியாய் நாள்தோறும்விர்த்தியடை ந்தது. தாயாரானகிறுதத்துதிக்கும் அந்தப்புத்திரனிட த்திலே பிரீதியானது மிகவும் உண்டாச்சுது சக்கள

ந்திகளுக்கோவென்றால் புத்திரன்வேறுமென்கிற இச்சையுண்டாச்சுது நாள்தோறும் அந்தக் குழந்தையைச் சீராட்டிக்கொண்டிராநின்ற அந்தச்சித்திரகேதுவுக்குப் பிள்ளையைப்பெற்ற அந்தஸ்திரீயினிடத்தில் எப்படிப்பட்ட பிரீதியுண்டாயிருந்ததோ அப்படிப்பட்டபிரீதிமற்றஸ்திரீயினிடங்களி லில்லாமற்போச்சுது அந்தஸ்திரீகள்புத்திரனையுடையசக்களத்தியினிடத்திலேபொறாமையினாலேயும் தங்களுக்குப்பிள்ளையில்லையென்கிறதுக்கத்தினாலேயும், ராஜாவினுடைய அனாதரவினாலேயும்விசனத்தையடைந்தவர்களாய்த் தங்களைநிந்தித்துக்கொண்டார்கள்,

இந்தப்பிரகாரம், சக்களத்தியினுடைய புத்திரசம்பத்தினாலே மிகவும்தகிக்கப்படாநின்றும்,ராஜாவுக்குஇஷ்டமில்லாதவராயுமிருக்கிற அந்தஸ்திரீகளுக்கு மகத்தான த்வேஷம்உண்டாகி ராஜாவின்பேரில் கோபமுடையவர்களாய் அந்தப்பிள்ளைக்கு விஷத்தைக் கொடுத்தார்கள், தாயான கிறுதத்துதியானவள் சக்களத்திகளுடைய பாபகர்மத்தையறியாதவளாய் பிள்ளை தூங்குகிறானென்றேயெண்ணிக்கொண்டு கிரகத்திலேசஞ்சரித்துக்கொண்டிருந்தாள், பிள்ளைவெகுநேரமாகத்தூங்குகிறானென்றுஅறிந்து புத்திசாலியான அந்தக் கிறுதத்துதியானவள் தன்பிள்ளையை எடுத்துக்கொண்டு வரும்படி முலைகொடுக்குந்தாதியை ஏவினாள், அந்தத் தாதியானவள் படுத்துக்கொண்டிராநின்ற அந்தக் குழந்தையினிடத்திற்குப்போய் அதுஉயிர்நீங்கியிருப்பதைக்கண்டுஐயோவென்றுபூமியில்விழுந்து அலறிஅழுகின்றதாதியினுடையத்தொனியைக்கேட்டு அந்தப்பிள்ளைக்குத்தாயான ராஜமகிஷியானவள் சீக்கிரமாகப் புத்திரனிடத்தில் வந்து செத்துக்கிடக்கிற அந்தப்பிள்ளையைப்பார்த்து மிகுந்தசோகத்தினாலே பூமியில்விழுந்து பிடவை தலைமயிர்நழுவிப்போக மூர்ச்சையடைந்தாள் பிற்பாடு ராஜாவினுடையஅந்தப்புறத்திலே யிருக்கிற ஸ்திரீக்கள் புருஷாள் சமஸ்தசெனங்களும்அந்தரோதனத்தைக்கேட்டு ஓடிவந்து மிகவும் விசனத்தையுடையவர்களாய் துக்கத்தையடைந்தார்கள் அந்தக்குழந்தையைக்கொன்றுபோட்டசக்களத்திகளும் எல்லாரையும்போலக்கபடமாகஅழுதுகொண்டிருந்தார்கள், பிற்பாடு அந்தராஜாவும் ஒருத்தராலேயுங்காணப்படாத மரணநிமித்தத்தையுடையவனாயிருக்கிற பிள்ளைசெத்துப்போனான் என்கிறவார்த்தையைக்கேட்டு புத்திரனிடத்தில் வாற்சல்லியத்தினாலேதுக்கமுடையவனாய் மூர்ச்சையடைந்து மந்திரிமுதலான சமஸ்தமான செனங்களாலேசூழப்பட்டவனாய் பிரக்ஞையில்லாதவனாய் ஓடிவந்து செத்துக்கிடக்கிற அந்தக்குழந்தையினிடத்திலேவிழுந்து பெருமூச்சுவிட்டுக் கண்ணீரைப்பெருக்கி ஒன்றுஞ் சொல்லமாட்டாமல் விசனப்பட்டுக்கொண்டிருந்தான், அப்போது அந்தராஜமகிஷியானவள் மகாதுக்காக்கிராந்தனான பர்த்தாவையும் வங்கிஷத்துக்குஒருவனையும் மரித்துப்போயிருக்கிற புத்திரனையும்பார்த்து ஜெனங்களுக்கும் இராஜாவுக்கும் மந்திரிமுதலானபிரகிருதிகளுக்கும்மனதிலே மகாதுக்கமுண்டாக்கத்தக்கதாய்பிரலாபித்தாள். குங்குமக்குழம்பினால் அலங்கரிக்கப்பட்ட ஸ்தனங்களிரண்டையும் மையுடன்கூடின கண்ணீர்களினால் நனைத்துக்கொண்டும் நழுவாநின்றபூமாலைகளையுடையதான தலைமயிர்களை விரித்துக்கொண்டும் துக்கத்தினால் துணையிழந்த பட்சிபோல மதுரமானசுவரத்துடனே அழத்தொடங்கினாள் வாராய்குழந்தாய் அநாதியாயிருக்கிறஎன்னையும் சோகத்தினால்தபியாநின்ற உன்னுடையபிதாவையும் விட்டுவிடுகிறதற்கு யோக்கியனன்று, உன்னால்புத்திரீனாலே தாண்டக்கூடாத யாதொருநரகத்தை நாங்கள்சீக்கிரமாகத்தாண்டுவோமோ அப்படிப்பட்ட நரகத்தைநிர்த்தயனானஎமனாலே நீஅடையவேண்டாம், வாராய்குழந்தாய் எழுந்திருராஜகுமாரனே உன்னுடையஸ்னேகிதாளான இந்தப்பிள்ளைகள் விளையாடுவதற்கு உன்னையழைக்கிறார்கள் வாராய்ராஜகுமாரனே வெகுபோதாகதூங்குகிறாய் பசித்திருக்கிறநீசாப்பிடவா ஸ்தன்னியத்தைப் பானம்பண்ணு, உனதுவாய்மொழியால் எங்களுடையதுக்கங்களைப்போக்கடியென்று இந்தப்பிரகாரம்பிரலாபங்களிலே புத்திரனைக்குறித்து அந்த ராஜமகிஷியானவள் ரோதனம்பண்ணுகையில் சித்திரகேதுவென்கிற அந்த ராஜாவும் சோகத்தினால் தபிக்கப்பட்டவனாய கண்டத்தைவிட்டழுதான். அந்தராஜாவும்ராஜமகிஷியும் பிரலாபிக்கிறதைப்பார்த்து அவர்களை உபசீவித்துக்கொண்டிருக்கிற ஸ்திரீபுருஷாள் சமஸ்தமான பேர்களும் மிகவுமழுதார்கள், அந்தப்பட்டணமெல்லாம்,மூர்ச்சையடைந்ததாகவாச்சுது, இந்தப் பிரகாரம் மூர்ச்சையடைந்ததாயும்,பிரக்ஞையில்லாமலும் அநாதையாயுமிருக்கிற அந்தப்பட்டணத்து ஜெனத்தைக் கியானதிருஷ்டியினாலேபார்த்து ஆங்கிரசுமகாரிஷியானவர் நாரதமகாரிஷியுடனேகூட அவ்விடத்தில்வந்தார்.

## ௰௫-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

வெற்றியாங்கீ ரசரிஷிவிமலனோ
டுற்றிருக்கும்யாழ் வலோனுபதேசத்தாற்
சித்திரகேதுவின் சீர்சோகமானது
சுத்தமாய்ப்போக் கடித்ததைச்சொல்லினார்,

ஆங்கிரசு மகாரிஷியுடனேகூடிக்கொண்டிருக்கிற நாரதமகாரிஷியினுடைய தத்துவவுபதேசத்தினாலேசித்தி

ரகேதுவினுடைய சோகமானது போக்கடிக்கப்படுகின்றதென்று சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாரீர்மகாராசனே மரித்துப்போயிருக்கிற அந்தக்குமந்தை சந்நிதானத்திலே மூர்ச்சாக்கிராந்தனாய் மிருதன்போலேயிருக்கின்ற அந்தராசாவைப்பார்த்து ஆங்கிரசுமகாரிஷியும்நாரதமகாரிஷியும்,தத்துவவசனங்களினாற்போதித்து அவனுடையதுக்கந் திரும்படியாக ஒருவார்த்தை சொல்லுகின்றார்கள்,

ஓய்ராஜேந்திரா நீ-எவனைப்பார்த்துத் துக்கிக்கிறையோ இவனுனக்கு என்னஆகவேணும் நீ-இவனுக்கென்னஆகவேணும்,நீ-இவனுக்குப் பிதாவென்றிருந்தையேயானால் இவன் பூர்வஜென்மத்தில் ஒருவன்பிள்ளையாயிருந்துமரணதாபத்தினால் அவர்களைவிட்டுஇந்தஜென்மத்தில் உனக்குப்பிள்ளையானான். இனி வருகிறஜென்மத்தில் எவனுக்குப் பிள்ளையாகப்போகிறானோ அதுநியமமில்லை,எப்படியானால் பிரவாகத்தினுடையவேகத்தினால்மணங்கள் கூடிக்கூடிப் பிரிந்துபோகிறதுகளோ அப்படியிந்த ஜீவாத்துமாக்களுங் காலவேகத்தினால் கூடிகூடிப்பிரிகின்றதுகள், பரமாத்மாவானவர் பூதங்களினால் பூதங்களைச்சிருஷ்டிக்கின்றார், பூதங்களால் பூதங்களைரட்சிக்கிறார் பூதங்களினால்பூதங்களைச் சம்மரிக்கிறார் தம்மால் சிருஷ்டிக்கப் பட்டதுகளாயும் பராதீனங்களாயுமிருக்கின்ற அந்தப்பூதங்களினால் அபேட்சையில்லாதவராயிருந்தாலும் லீலையினால் இந்தப்பிரகாரம் பண்ணிக்கொண் டிருக்கிறார்,

வாராய்ராஜாவே பிதாவினுடைய தேகத்தினாலே புத்திரனுடைய தேகமானது மாதாவினுடைய தேகத்தில்நின்றும் வித்தாகவுண்டாகின்றது,சீவனோவென்றால்பூமிமுதலானதுபோல நித்தியனாகவிருக்கிறான் தேகமென்றும்-தேகியென்றும் இந்தவிபாகமானது நானாவிதமானரூபஜென்மம்-நாசம்-சுகம்-துக்கம்-இதுமுதலான அசத்தான தர்மங்கள் அக்கினிக்குத் தகிக்கப்படானின்றதாரினுடையகிலபிகாதி விகாரங்களைப்போல ஆத்மாவுக்கு அசத்தான தேகசம்பந்தத்தினாலே காணப்படுகின்றதுகள், ஆகையினாலே புருஷனானவன் சொர்ப்பனத்தைப்போல இதரவிஷயங்களைச் சிந்தியாமலிருக்கக்கடவன் இதுவெல்லாம் மனதினாலே கல்பிக்கப்பட்டதேயல்லாமல்வேறொன்றுமில்லை நானென்றும் எனதென்றஅபிமானத்தை விட்டுவிடு சர்வாந்தரியாமியாயும்ஈஸ்வரனாயுமிருக்கிற வாசுதேவனிடத்திலே மனதை வைக்கக்கடவாயென்று-நாரதர்-ஆங்கிரசு-இவர்களுடைய வாக்கியங்களினாலே தேறுதல்பண்ணப்பட்டிருக்கிற சித்திரகேதுவென்கிற ராசாவானவன் துக்கத்தினாலே வாடியிருக்கிறமுகத்தை கையினாலே துடைத்துக்கொண்டு ஒருவார்த்தைசொல்லுகிறான் வாருங்கள்ரிஷிகளே, நீங்களார், கியானசம்பன்னனாய்ப் பூச்சியாளுக்கும் பூச்சியாளாவிருக்கிறீர்கள் அவதூதவேஷத்தினாலே உங்களுடையசுரூபத்தை மறைத்துக்கொண்டுஇங்கேவந்தீர்கள் பகவானுக்குஇஷ்டர்களாய் பிரம்மநிஷ்டர்களானபாகலதாளும்-சனற்குமாரர்-நாரதர்-ரிபு-ஆங்கிரசு-தேவலர்-அசிதர்-அவாந்தரதமசு-வியாசர்-மார்க்கண்டேயர்- கவுதமர்-வசிஷ்டர்-பகவானானபரசுராமர்-கபிலர்-சுகர்-துருவாசர் இவர்கள்முதலான ரிஷிகளும் என்னைப்போலொத்தஅக்கியானிகளுக்குக் கியானோபதேசத்துக்காகப் பூமியிலே சஞ்சரித்துக்கொண் டிருப்பார்கள் ஆனபடியினாலே நரபசுவாயும், மூடப்புத்தியாயும், மகா அக்கியானத்தினாலே முழுகியிருக்கிறஎனக்கு நீங்கள்ரட்சகர்களாய்வந்தீர்கள் கியானமாகிறதீபம் உங்களாலேஉண்டாக்கப்படுமென்று சொல்லாநின்றஇராசாவைப்பார்த்து ஆங்கிரசுமகாரிஷியானவர்சொல்லுகின்றார், வாராய்ராஜனே நான்புத்திரகாமனுனஉனக்குப் புத்திரனைக் கொடாநின்றஆங்கிரசு இவரோ சாட்சாத் பிரம்மகுமாரரான நாரதமகாமுனிவர், அக்கியானத்தினாலே புத்திரசோகத்தில்முழுகினவனாயும், பகவானுக்குப்பக்தனாயுமிருக்கிறநீதுக்கத்திலே முழுகியிருக்கிறாயென்றறிந்து உனக்குஅனுக்கிரகம் பண்ணுகிறதின்பொருட்டு நாங்களிருவரும் இங்கேவந்தோம், பூர்வம் நான்வந்தபோதே பரமமான கியானத்தையுனக்கு உபதேசிக்கவேணுமென்றே உன்னுடைய கிரகத்துக்குவந்தேன், உனக்குப்புத்திரனிடத்திலேயிருக்கிற ஆசையையறிந்து புத்திரனையேகொடுத்தேன், இப்போது பிள்ளையைப்பெற்றவர்களுடைய துக்கமானது உன்னாலேயும் அநுபவிக்கப் பட்டுதல்லவா பாரியை-கிரகம்-தனங்கள்-நானாவிதமான ஐஸ்வரியசம்பத்துக்கள் அனித்தியங்களாயும், சொர்ப்பனம்போலவும், மனதினாலே உண்டாக்கப்பட்டதுகளாய்நசித்துப்போகின்றதுகள், கர்மவாசனைகளினாலே விஷயங்களைத்தியானம் பண்ணுகின்றவனுடைய மனதில்நின்றும் கர்மமூலமாகவே விஷங்களுண்டாகின்றதுகள் ஆகையினால்ஸ்திரமான மனதினாலே ஆத்மதத்துவத்தைப் பராமரித்து அநித்தியமானதேகத்திலே நித்தியாத்மாவென்கிறவிசுவாசத்தை விட்டு சாந்தியை யடையக்கடவாயென்று ஆங்கிரசுநாலே உபதேசிக்கப்பட்டஆத்மதத்துவமானது பகவத்கடாட்சமில்லாமல் சித்தியாதென்று ஈஸ்வரர்கடாட்சம்வருகிறதற்காக நாரதமகா ரிஷியானவர் ராஜாவுக்கு மந்திரோபதேசம்பண்ணுகின்றார்.

நாரதமகாரிஷியினுடையவாக்கியம்,

வாராய்ராஜனே, என்னுடைய இந்தரகசியமானமந்திரத்தைப் பரிசித்தனாயிருந்து கிரகிக்கக்கடவாய் இந்தமந்திரத்தை ஜெபியாநின்ற நீ-ஏழுராத்திரிக்குள்ளே

சிருஷ்டி-திதி-சங்காரகர்த்தாவான சங்கருஷணரைக் காணப்போகிருய் அந்தச்சங்கருஷணருடைய பாதமூலத்தைஆஸ்ரயித்துப் பூர்விகளானருத்திரன்முதலானமகானுபாவாள்-தேவன்-மனுஷ்யனென்கிறபொய்யானபேதக்கியானத்தைவிட்டு அந்த ட்சணத்திலே சமாதிகருனியமான அந்தச் சங்கருஷணருடைய மகாத்மியத்தை யடைந்தார்கள் அந்தச் சங்கருஷணருடைய பரமமகத்துவத்தை சீக்கிரமாகஅடையப்போகிருய்,

## யசுவது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

ஆதமிருதன மந்தப்பாலனிட
சேதில்வசனத்தாற் சித்திரகேதுவை
ஓதுசோகமி லாதவனயுறப்
போதும்வித்தைப் புகன்றனர்தாமரோ

மிறுதனன அந்தப் பாலனுடைய வசனத்தினல் தானே சித்திரகேதுவைச் சோகமில்லாதவனகப் பண்ணி நாரதர் ஆதிசேஷனைச் சந்தோஷிப்பியாநின்ற மகாவித்தையே உபதேசித்தாரென்றுசொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் பரிட்சித்தும்கா ராஜனே, தேவரிஷியான நாரதர் மிறுதனனஇராஜகுமாரனைத் துக்கியாநின்ற ராஜாவுக்கும் அவனுடைய பந்துக்களுக்குங் காண்பித்து அந்தச்சிசுவைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிருர் வாராய் சீவாத்மாவே, உனக்குநன்மையுண்டாகக்கடவது உன்னிமித்தமாகத் துக்கத்தினலே தபிக்கப்படாநின்ற தாயார்-தகப்பனர்-பந்துக்கள்-ஞாதிகள்- இவர்களைப் பார்-உன்னுடைய இந்தச்சரீரத்திலே பிரவேசித்துச்சுகுர்துக்களால் சூழப்பட்டவனய் மிகுந்தஆயசையடைந்து பிதாவினுடைய சம்பத்துகளைச் சிங்காதனத்திலிருந்துகொண்டு அனுபவியென்று சொல்லாநின்ற நாரதமகாரிஷியினுடையவாக்கியத்தைக்கேட்டு மிறுதனனஅந்தப்பாலன் சொல்லுகிருன்.

வாரீர் பிரம்மநிஷ்டமோ புண்ணியபாபரூபகர்மங்களினலே-தேவர்கள்-திரியக் மனுஷ்யாள் இவர்களுடையயோனிகளிலே சுழலாநின்றவெனக்கு எந்தஜென்மத்திலேஇவாள்மாதாபிதாக்களானர்கள்,சகலபிராணிகளும் ஒன்றுக்கொன்றுகிரமமாகப் பந்துவென்றும் ஞாதியென்றும்-சத்துருவென்றும்-இப்படியாகவிருக்கின்றூர்கள். சீவித்துக்கொண் டிராநின்ற பசுவாதிவஸ்துக்களானது எவனண்டையிலே எவ்வளவுகாலமட்டுமிருக்கிறதோ அவ்வளவுமட்டுமே யெனதென்கிறசம்பந்தமுண்டாயிருக்கும்,இந்தப்பிரகாரம் சீவனனவன் புத்திராதிசம்பந்தத்தையடைந்திருந்தாலும் ஜென்மாதிசூனியனயும் நான்இவனுடையபிள்ளையென்கிற அபிமான சூனியனயுமிருப்பன்என்று சொல்லிப்போட்டு அந்தசீவனனவன்புறப்பட்டுப்போனன், அப்போதுஅவடத்திலே அவனுடைய ஞாதிகளெல்லாரும் ஆச்சரியத்துடனே கூடினவர்களாய் அந்தச்சிசுவினிடத்திலேசிநேகபாசத்தையும் சோகத்தையும் விட்டவர்களாய்அந்தச்சிசுவினுடையதேகத்தையெடுத்துக்கொளுத்திசெய்யத்தக்ககாரியங்களைச்செய்து-சோகம்-மோகம்-பயம் ஆர்த்தி இவைகளைக்கொடாநின்ற விடக்கூடாதசிநேகத்தை விட்டுவிட்டார்கள்,

வாராய்மகாராஜனே பாலனைக்கொன்ற அந்தஸ்திரீகளும் மகாலச்சையை யுடையவர்களாய் பாலஹத்தியாதோஷத்தினலே காந்தியீனர்களாய்பிராமணர்களாலேவிதிக்கப்பட்ட பாலஹத்தியாவிரதத்தையும்யமுனதிதீரத்திலே சீவனுடையவசனத்தைநினைத்துக்கொண்டுதுவேஷத்தைவிட்டவர்களாய் ஆஸ்ரயித்தார்கள் அந்தச்சித்திரகேதுவும்பிராமணருடையவசனங்களினலே ஆத்மதத்துவத்தைஅறிந்தவனய் யமுனநதியிலேஎதாசாஸ்திரமாக ஸ்நானஞ்செய்து தேவரிஷி பிதுர்த்தர்ப்பணமுதலான கிரிகைகளையும் பண்ணி மவுனத்துடனே சிதேந்திரியனய்ப் பிரம்மபுத்திரர்களான நாரதரையும், ஆங்கிரசுமகா ரிஷியையும் வந்தனம்பண்ணினன், அப்போது நாரதமகா ரிஷியானவர் சந்துஷ்டராய் அந்தச்சித்திரகேதுவுக்குப்பிரம்மவித்தையைஉபதேசிக்கின்றூர் கியானசக்திமுதலான குணங்களையுடையவராயும், வாசுதேவராயும்,பிரத்தியுமனராயும்,அனிருத்தராயும், சங்கருஷ்ணராயும், விக்கியானரூபராயும்,பரமானந்த மூர்த்தியாயும் பானுவநிஷ்டராயும்,சாந்தராயும், சுவானந்தானுபவத்தினலே விசேஷமாக ராகத்துவேஷமுதலான ஏயகுணங்களை விட்டவராயுமிருக்கிற உமக்குப் பிரணமம்-மண்மயமான கடமுதலானதுகள் மண்ணிலே பிறந்து மண்ணிலேயிருந்து மண்ணிலே லயிக்கிறுப்போலஇந்தப்பிரபஞ்சமானது யாதொரு பிர்மத்திலே லயத்தையடைகிறதோ அப்படிப்பட்டபரம்பிர்மமான உமக்குப்பிரணமம் சமஸ்தமான பாகவதசிரேஷ்டசமுகங்களுடையகமலமுகளம்போலொத்தகைகளினலே அர்ச்சிக்கப்பட்ட இரண்டுசரணரவிந்தங்களையுடையவரோபரமாகாசமென்னப்பட்ட வுத்தமஸ்தானத்தை இருப்பிடமாகவுடையவரோ பகவானயும், மகாபுருஷராயும் மகாவிபூதியாயுமிருக்கிற உமக்குப் பிரணமமென்றுபிரபன்னராயும்,பக்தனயுமிருக்கிற சித்திரகேதுவுக்கு இந்தமந்திரத்தையுபதேசித்து நாரதமுனியானவர் ஆங்கிரசுடனேகூட சத்தியலோகத்தையடைந்தார்.

வாராயமகாராஜனே அந்தச்சித்திரகேதுவும் நாரதரால்சொல்லப்பட்ட வித்தையை ஏழுநாள் ஜலத்தையேபானம்பண்ணிக்கொண்டு தயிரியத்தையுடையவன

ய்மந்திரத்தைஜெபித்தான் பிறகு எழாநாளிராத்திரிமுகிலிலே மந்திரசித்தியடைந்து பின்னையும்சிறிதுநாளைக்குப்பின்பு வித்தையினால்உண்டாகாநின்ற மனோவேகத்தையுடையவனாய் தேவதேவனான ஆதிசேஷனுடையசரணாரவிந்த சந்நிதானத்தையடைந்து தாமரைக்கிழங்குபோலே வெளுத்தநிறமாயும் நீலவஸ்திரதாரியாயும் பிரகாசமான கிரீடம் தோள்வளை அரைநாண் கங்கணம் இதுகளையுடையவராயும் பிரசன்னமானமுகத்தையும், சிவந்தநேத்திரங்களையுடையவராயும், சிருஷ்டிஸ்திதி-சங்காரகர்த்தாவாயுமிருக்கிற சங்கருஷண மூர்த்தியைக்கண்டான் அந்தச்சங்கருஷணமூர்த்தியினுடைய சந்தெரிசனத்தினாலே சமஸ்தபாபங்களையும் போக்கி நிர்மலமான அந்தக்கரணத்தையுடையவனாயும் - பக்திரசத்தினாலே பிரவகியாநின்ற ஆனந்தபாஷபங்களுடனேகூடினவனாயும், புளகாங்கிதசரீரத்தையுடையவனாயும், அந்த ஆதிபுருஷனைச்சேவித்தபின்பு புண்ணியகீர்த்தியான சங்கருஷணமூர்த்தியினுடைய பாதாரவிந்தங்களைச்சேவிக்கச் சமர்த்தனாகாமலிருந்து புத்தியினாலே மனதை ஸ்திரம்பண்ணிக்கொண்டு பிரகாசியாநின்ற வாக்கையுடையவனாய் ஜெகத்குருவான பகவானைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகிறான்.

வாரீர் ஒருவராலும் ஜெயிக்கப்படாதவரே சமமானபுத்தியையுடையவர்களாயும் ஜெயிக்கப்பட்ட மனதையுடையவர்களாயுமிருக்கிற சத்புருஷாளாலே நீர் ஜெயிக்கப்பட்டீர், அவாளும் உம்மாலேஜெயிக்கப்பட்டவர்களாகின்றார்கள் ஜெகத்தினுடைய சிருட்டி திதி சங்காரம் அனுப்பிரவேசம் நிக்கிரகம் அனுக்கிரகம் இவையெல்லாம் உம்முடையலீலையேவிஸ்வத்துக்குசிருஷ்டாக்களான பிர்மா ருத்திரன் நவப் பிரஜாபதிகள் இந்திரன் இவர்களெல்லாம் தனித்தனியே உம்முடையஅங்கிசபூதாளாகவிருக்கிறபேர், ஆகிலும் அக்கியானமூலமான அகங்கார மமகாரங்களினாலே அந்தச் சிருஷ்டிமுதலான வியாபாரங்களிலே நாங்களே யீஸ்வராளென்று வியர்த்தமான சண்டைபோடுகின்றார்கள் அதிசூட்சுமமானமூலகாரணமென்ன அதிஸ்தூலமான அந்தியமானகாரியமென்ன இதுகளுடைய ஆதிமத்தியாந்தங்களிலேநீரே யிருந்துக்கொண்டு நீர் ஆதிமத்தியாந்தமில்லாத வஸ்துவாகக்காணப்படாநின்ற காரியங்களுக்கு ஆதியிலேயும் அந்தத்திலேயும் எது அபாயமில்லாமலிருக்கிறதோ அதுவே மத்தியகாலத்திலேயுமிருக்கிறது பிரிதிவு அப்புதேயு வாய்வு ஆகாசம் மகதகத்துவம் அகங்கார தத்துவம்என்று சொல்லப்பட்ட ஒன்றுக்கொன்றுதேசகுணாதிகங்களான இந்தயேழுகளிலேயும் சூழப்பட்டிருக்கிற அண்டகோசமானதுஅனேகங்கோடி பிர்மாண்டங்களுடனேகூட யாதொன்றுவும்மிடத்திலே சுழன்றுகொண்டிருக்கின்றது வாரீர்பகவானே உம்முடைய தெரிசனத்தினால் மனுஷ்யாளுக்குச் சகலபாபக்ஷயமும் உண்டாகிறது உம்முடையநாமத்தை ஒருக்கால்கேட்டதினாலே சண்டாளனும் சங்காரத்தில்நின்றும்விடுபடுகிறான் ஆகையினால் நானிப்போது உம்முடைய தெரிசனத்தினால் இருதயத்தலிராநின்ற சகலபாபங்களையும் போக்கடித்துகொண்டவனானேன் உம்முடையபக்தரான தேவரிஷியாகிய நாரதரால் உபதேசிக்கப்பட்ட மந்திரத்தினால் உம்முடைய சந்தெரிசனமுண்டாச்சுது இல்லாவிட்டால் எபபடியுண்டாகப்போகின்றதென்று சித்திரகேதுவினால் ஸ்தோத்திரம்பண்ணப்பட்ட பகவானான அனந்தரானவர் சந்தோஷத்தையடைந்தவராய் அந்த வித்தியாதரபதியான சித்திரகேதுவைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகிறார்,

வாராய்சித்திரகேதுவே உனக்கு நாரதராலேயும் ஆங்கிரசுவாலேயும் நம்முடையவிஷயமான உபதேசம்பண்ணப்பட்டு அந்தவித்தையினாலேயும் நம்முடைய சந்தெரிசனத்தினாலேயும் நீ சித்தனாகின்றாய் நானே சர்வபூதங்களுக்கும் அந்தராத்மாவாகவும் பிரகாசனாகவும் காரணனாகவுமிருக்கிறேன் சப்தப்பிர்மமென்றும்பரப்பிர்மமென்றும் இவ்விரண்டும் என்னுடைய சாசுவதமானசரீரங்கள் லோகத்திலே பரமாத்மாவை வியாபித்திருக்கிறவனாகவும் பரமாத்மாவினிடத்திலே லோகத்தையிருக்கிறதாகவும் இவ்விரண்டும் என்னாலேவியாபிக்கப்பட்டதாகவும் என்னிடத்திலேயே கல்பிக்கப்பட்டதாகவும் அறியத்தக்கது எப்படியானால் தூங்காநின்றபுருஷன்சொற்பனத்திலே பிரபஞ்சத்தையெல்லாம் தன்னிடத்திலேபார்க்கிறான் அவன்தானே யெழுந்தவனாய் தன்னை இந்தலோகத்தில் ஏகதேசத்திலேயிருக்கிறவனாகஅறிகிறான் அப்படி சாகிரணமுதலான சீவனுடைய அவஸ்தைகளை யெல்லாம் பரமாத்மாவினுடைய மாயாகாரியங்களாக வறிந்து இந்த அவஸ்தாதிரையத்துக்குசாக்ஷியான அந்தபரமாத்மாவை நினைக்கக்கடவன் தூங்காநின்றபுருஷன் யாதொரு பரமாத்மசுரூபத்தினாலே நித்திராகாலத்தில்தன்னுடைய சொற்பனத்தையும் இந்திரியங்களினால் அறியக்கூடாததான சுகத்தையும் அறிகிறானோ அந்தப்பரமாத்மாவாக என்னை அறியக்கடவாய் யோகசாஸ்திரத்தை யறிந்தவர்களாயும், வேதவித்துக்களாயுமிருக்கிறபேர்களாலே சர்வப்பிரகாரத்தினாலேயுந் தன்னுடைய பரமபுருஷார்த்தமானது அறியத்தக்கது, சீவாத்மபரமாத்மாக்களுடையசம்மந்தத்தை சாக்ஷாத்கரிக்க யாதொன்றுண்டோ இதுவேபரமபுருஷார்த்தமென்று அறியத்தக்கது என்னாலேசொல்லப்பட்ட இந்தப் பரமார்த்தமான வசனத்தை சிரத்தையுடனேதரித்தவனாய் விஷயபோகங்களிலே ஆசையைவி

ட்டவனாய் சாஸ்திரக்கியானத்தையும், பரமாத்மசாட்சாத்காரத்தையும் உடையவனாய் சீக்கிரமாகச் சித்தியடையப்போகிறாயென்று ஜெகத்பதியாயும் விஸ்வரூபியாயுமிருக்கிற அரியானவன் சித்திரகேதுவைப்பார்த்து இந்தப்பிரகாரம் ஆக்யாபித்து அவன்பார்த்துக்கொண்டிருக்கும்போதே அவடத்திலேதானே அந்தர்த்தானத்தையடைந்துவிட்டார்,

## யஎ வது அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்,

சித்தசாரணர்களாலே ஸ்தௌத்தியஞ்செய்யப்பட்ட
பெற்றிகொள்விமானந்தன்னில் மேவிடுஞ்சித்ரகேது
சத்தியைவகித்தவீசன் தன்னையேளனமாய்ச்சாற்ற
வெற்றிடுஞ்சாபமேற்றுப் பிறந்தனன்விருத்ரனாக

சித்தசாரணாளாலே ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவனாய்விமானத்திலே சஞ்சரியாநின்ற சித்திரகேதுவொருக்கால்பார்வதியுடனேகூடின ருத்திரனைக்கண்டு ஏளனம்பண்ணிபார்வதியினுடைய சாபத்தினாலே விருத்திராசுரனாய்வந்து பிறந்தானென்று சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்ராஜனே சங்கருஷணமூர்த்தியானபகவான் எந்தத்திக்கிலே அந்தர்த்தானமானாரோ அந்தத்திக்கை நோக்கிப் பிரணாமத்தைப்பண்ணி வித்தியாதரனானசித்திரகேதுவானவன் வித்தியாதர லோகாதிபதியாய் சஞ்சரித்துக்கொண்டிருந்தான் அவன் ஆயிரங்கோடி சம்வச்சரம் ஒன்றினாலேயுந் தடுக்கப்படாத பெலத்தையும், இந்திரியபெலத்தையும் உடையவனாய் சித்தாளாலேயும்,சாரணாளாலேயும், முனிகளாலேயும். ஸ்தோத்திரம்பண்ணப்பட்டவனாய் மகாயோகத்தோடு கூடினவனாய்சங்கல்பமாத்திரத்தினாலே நானாப்பிரகாரங்களாகிய இஷ்டசித்திகளையுடையதான குலபர்வதங்களுடைய தாழ்வரைகளிலே வித்தியாதரஸ்திரீகளோடுகூட பகவானை ஸ்ரீஹரியை காளம்பண்ணி கிரீடித்துக்கொண்டிருந்தான்;ஒருக்கால் அந்தச் சித்திரகேது வானவன் விஷ்ணுவினாலே கொடுக்கப்பட்டதாயும், பிரகாசியாநின்று மிருக்கிற விமானத்தினாலே சஞ்சரித்துக்கொண்டு சித்தசாரணாலே சூழப்பட்டவராயும் மடியிலேபார்வதியை வைத்துக்கொண்டு பாகுக்களினாலே ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு மகாரிஷிகளுடைய சதசிலேயிராநின்றருத்திரனைக்கண்டுபார்வதிகேட்டுக்கொண்டிருக்கஅவருடைய சந்நிதானத்திலே சிரித்து ஒருவார்த்தை சொல்லுகிறான் இந்தகிரீனோவென்றால் லோகங்களுக்கெல்லாம் சாக்ஷாத்குருவாகவிருக்கிறான் மனுஷியாளுக்கெல்லாம் தர்மங்களைச் சொல்லத்தக்கவன்தேவதைகளுக்கெல்லாம் சிரேஷ்டன் சபையிலே தன்னுடைய ஸ்திரீயான பாரியை ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு ஜடாதரனாய் உக்கிரமான தபசையுடையவனாய் பிர்மவாதியாய்சபாநாயகனாயலச்சையில்லாமல் பிராகிருகபுருஷனைப்போலஸ்திரீயைமடிமேல் வைத்துக்கொண்டிருக்கிறான் என்றுசொன்னான் அப்போதுகெம்பீரமான கியானத்தையுடைய பகவானானருத்திரனும் சித்திரகேதுவினுடைய வசனத்தைக்கேட்டுச் சிரித்துக்கொண்டுசும்மாயிருந்தார் சதசிலேயிருக்கிறபேரும் அவரைப்போலவே மவுனிகளாயிருந்தார்கள் இந்தப்பிரகாரம் அந்தருத்திரனுடைய பிரபாவத்தைஅறியாமல் அந்தவித்தியாதரன் மிகவும்அமங்களமான வசனத்தைச்சொல்லுகையில் பார்வதியானவள் கோபத்தினாலே துஷ்டனாயும் தன்னைச்சிதேந்திரியனாயு மெண்ணியிராநின்ற அந்தவித்தியாதரனைப்பார்த்துஒருவார்த்தை சொல்லுகிறாள்.

இந்தலோகத்திலே வித்தியாதரனானவன்இப்போதுலச்சையில்லாமலும் துஷ்டர்களாயுமிருக்கிறஎங்களைப்போலொத்தவர்களுக்குத் தெண்டநாயகனா சிட்சைபண்ணத்தக்கினபிரபுவா, சாஸ்திரத்தை அதிக்கிரமித்திராநின்றஇந்தச்சீவனை எவர்களும் நிஷேதிக்கமாட்டாமற்போனார்களா, நாரதர்முதலான சமஸ்தரிஷிகளும் தியானம்பண்ணத்தக்கதான பாதாரவிந்தத்தையுடையவர்களாயும் ஜெகத்குருவாயும் பாதர்மமூர்த்தியாயுமிருக்கிறருத்திரனை க்ஷத்திரியாதமனான இந்தவித்தியாதரனானவன் தயிரியவனாய் கியானிகளான பிர்மாதிகளையும் தெரியாதவர்களாகப்பண்ணிப்போட்டுதெண்டனைபண்ணுகிறானல்லவா, ஆகையினாலே வணக்கமில்லாதஇந்தவித்தியாதரனானவன் சத்புருஷாளாலே உபாசிக்கப்பட்ட வைகுண்டனுடைய பாதமூலசேவைக்குயோக்கியனன்று, வாராய்துஷ்டபுத்தியையுடையவனே நீபாபிஷ்டமான அசுரஜென்மத்தையடையக்கடவாயென்று சபிக்கப்பட்டவனாய் அந்தச்சித்திரகேதுவானவன் விமானத்தில்நின்றுமிறங்கிப் பார்வதியைச் சிரசினாலே வணங்கி க்ஷமைகொண்டு ஒருவார்த்தைசொல்லுகின்றான்.

வாராய்அம்பிகையே, உன்னுடைய சாபத்தைஅஞ்சலியினாலேவாங்கிக்கொண்டேன் தேவதைகளாலே மனுஷியாளுக்கு யாதொன்றுசொல்லப்பட்டதோ அது அவனுக்கு ஜென்மாந்தரகர்மத்தினுடைய பலமாகும்,சமுசாரசாகரத்திலே சுழலாநின்ற பிராணியானது அக்கியானத்தினாலே மோகிக்கப்பட்டதாய் சமஸ்தஜென்மங்களிலேயும் சுகதுக்கத்தை அநுபவிக்கும்,இந்த ரசஸ்தமோகுணப் பிரவாகரூபமான சங்காரத்திலேசாபமேது,அனுக்கிரகமேது, சொர்க்கமேது, நரகமேது, துக்கமேது, பகவானொருவனே சம்மந்தமில்லாதவனாய்த்தம்முடையமாயையினாலே பிராணிகளைசிருஷ்டிக்கின்றார்

அந்தப்பிராணிகளுக்கு அவனவன் கர்மானுகுணமாகச் சுகதுக்கம்-மோக்ஷம்-இதுகளையும்-சிருஷ்டிக்கின்றார் அந்தஈஸ்வரனுக்குப் பிரீதிதானேது, கோபந்தானேது ஆனாலும் அந்தஈஸ்வரனுடையமாயாகாரியமான புண்ணியபாபரூபகர்மமானது இந்தப்பிராணிகளுக்கு சுகம்-துக்கம்-மோட்சம்-மரணம்-ஜென்மம்-இதுகளையுடையதான சம்சாரத்தையுண்டாக்குகின்றது. வாராய்கோபத்தையுடையமகாதேவியே, நான் உன்னைச்சாபத்தைவிடுவித்துக்கொள்ளுகைக்கு க்ஷமைகொள்ளவில்லை, பின்னை என்னவென்றால் என்னாலேசொல்லப்பட்ட யாதொருவார்த்தையை நல்லதல்லவென்று எண்ணினையல்லவா அது உன்னாலேபொறுக்கத்தக்கதென்று பார்வதிபரமேஸ்வரனை க்ஷமைகொண்டு அந்தச்சித்திரகேதுவானவன்அவாள்ஆச்சரியத்தோடு பார்த்துக்கொண்டிருக்கும்போதே விமானரூடனாய்ப் புறப்பட்டுப்போனான்,

பிற்பாடுபகவானான ருத்திரனானவர் தேவரிஷிகள் தயித்தியாள்-சித்தாள் இவர்களெல்லாருங்கேட்டுக்கொண்டிருக்கப் பார்வதியைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறார், வாராய்பெண்ணே ஆச்சரியமானலீலைகளைப்பண்ணுகின்றஸ்ரீஹரியினுடைய தாசதாசர்களாயும்விரக்தாளாயுமிருக்கிற மகாத்துமாக்களுடைய மகாத்துமியத்தைப்பார்த்தையா, நாராயணனையே சரணமாகவடைந்த சமஸ்தமானபேரும் சொர்க்கம்-மோட்சம்-நரகம் இதுகளிலே சமானமானபுத்தியை யுடையவர்களாய் ஒன்றுக்கும் பயப்படுகிறவர்களன்று பிராணிகளுக்குச்சரீரசம்பந்தத்தினாலே சுகதுக்கங்கள் ஜென்மமரணங்கள் சாபானுக்கிரகங்களென்கிறதொந்தங்கள் ஈஸ்வரனுடையமாயையினாலேயுண்டாகின்றதுகள்பகவானானவாசுதேவனிடத்திலே பக்தியைப் பண்ணிக்கொண்டும் கியானவயிராக்கியங்களுடைய பலத்தையுடையவர்களானபாகவதாளுக்கு இந்தலோகத்திலே விசேஷித்துக்கோறத்தக்கவஸ்துவொன்றுமில்லை நானும்பிர்ம்மாசனற்குமாரர் நாரதர் பிர்ம்மபுத்திரர்களான மகாரிஷிகள் மற்றுமுள்ள தேவசிரேஷ்டாளும் யாதொருபகவானுடைய அங்கிசாஅங்கிசபூதர்களாய் நான்சுதந்தர யீசனென்றும்தனித்தனியே அபிமானத்தை யுடையவர்களாய் அந்தப்பகவானுடைய சுரூபத்தையும் செயலையுமறியோம் அப்படிப்பட்ட பகவானுக்கு இந்தமகாபக்தனான சித்திரகேதுவானவன் இஷ்ட பக்தனாயும், சர்வத்திரசம்புத்தியையுடையவனாயும், காமக்குரோதங்கள் முதலானஏயகுணசூனியனாயுமிருக்கின்றான் நானும்அந்தஅச்சுதனுக்குப்பிரியபக்தனாகவிருக்கிறேன், ஆகையினால் மகாபுருஷனுடைய பக்தாளாயும், சாந்தாளாயும், சமதெரிசிகளாயும், மகாத்மாக்களாயுமிருக்கிற புருஷாளிடங்களிலே ஆச்சரியப் படவேண்டிய தில்லையென்று சொல்லுகின்றபரமேஸ்வரனுடைய வார்த்தையைக்கேட்டு பார்வதியானவள் சாந்தமான விருதயத்தையுடையவளானாள் சித்திரகேதுவானவன் பிரதி நாசம்சண்ண சமர்த்தனாயிருந்தாலும், பார்வதியினால் தனக்குநேரிட்ட சாபத்தைச்சிரசினால்கிரகித்தான் இதுவே சத்புருஷாளுடைய லட்சணமல்லவா அந்தச்சித்திரகேதுவானவன் கியானவிக்கியானங்களையுடையவனாய், அசுரஜென்மத்தை யடைந்தவனாய், விருத்திரனென்று பிரசித்தமான பெயரையுடையவனாய், துவஷ்டாவினுடைய தெட்சணாக்கினியினால்பிறந்தான், வாராய்பரிட்சித்தே நீ-யாதொன்று நம்மைக்கேட்டையோ அந்தப்பிரசனத்துக்கு உத்திரம் சமஸ்தமுஞ் சொல்லப்பட்டது அந்தப்பாகவதனை விருத்திராசுரனுக்குஅசுரஜென்மத்துக்குக்காரணமுஞ்சொல்லப்பட்டது. விஷ்ணு பக்தாளுக்குள்ளே மகாத்மாவான சித்திரகேதுவினுடைய புண்ணியகரமா யிருக்கிறஇந்த இதிகாசத்தையும் விஷ்ணுபக்தாளுடையபிரபாவத்தையும்கேளாநின்ற புருஷனானவன்சங்காரத்தில்நின்றும்விடப்படுவன்,

## ௰௮-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

அதிதியின்றனைத் தாம்பிள்ளைகள் முதல்
மதுரமாரெட்டுப் பேர்களின்வம்சமும்
திதியின்கெர்ப்பமும் தேவேந்திரனறைசெயும்
அதிமருந்துக்கள் பேதமரற்றுவாம்.

அதிதியினுடையஐந்தாம்பிள்ளைகள்முதற்கொண்டுமற்றஎட்டுபேருடைய வங்கிஷமும் சொல்லுமிடத்தில்திதியினுடையகெர்ப்பமும் தேவேந்திரனாலேபண்ணப்பட்ட மருத்துக்களுடைய பேதமுஞ் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராஜனே, சவிதாவினுடைய பாரியையான பிறசனியானவள் சாவித்திரிகையும் மூன்றுவியாகிருதிகளையும், அக்கினிஹோத்திரத்தையும், பசுபாகத்தையும், சோமத்தையும், சாதுர் மாசியத்தையும், பஞ்சமகாயெக்கியங்களையும்பெற்றாள், பகவானுடைய பாரியையான சித்தியானவள் மகிமாவையும் விபுவையும், பிரபுவையும்சிரேஷ்டமான விருதக்தையுடையவளான ஆசுசியென்கிற உத்தமமான ஒருபெண்ணையும்பெற்றாள், குருவும்சினவாலியும் ராகாவும் அனுமதியும் இவாள்நாலுபேரும் தாதாவினுடைய ஸ்திரீகள் இந்நாலுபேரும்சாயமதெரிசம் பிறுதகபூரணமாசம் என்னப்பட்ட இந்தநாலுபிள்ளைகளையும், கிரமமாகப் பெற்றார்கள் விதாதாவானவன் கிரியை யென்கிற பாரியிடத்திலே பஞ்சசித்தியென்கிற அக்கினிகளைப்பெற்றான் வருணனுடையபாரி

ஜைசருஷிணியானவள் பிருகுரிஷியைப்பெற்றாள் மகாயோகியான வால்மீகமகாமுனியும், புற்றிலே யிருந்து வருணனுக்கேபுத்திரனாகவுண்டானார் அகத்தியரும் வசிஷ்டரும்-ஊர்வசியினுடைய சந்நிதானத்திலே ஸகலமானமித்திரா வருணனுடையரேஜஸை அடைந்தவர்களாய் கும்பத்திலே அவாளுக்கே புத்திராளாகப் பிறந்தார்கள்-ரேவதியென்கிற ஸ்திரீயி னிடத்திலே மித்திரனானவன்உற்சறகனையும், அரிஷ்டனையும், பிப்பலனையும் பெற்றான், இந்திரன் பவுலோமியென்கிற ஸ்திரீயினிடத்திலேசெயந்தனென்றும், ரிஷபனென்றும் மிட்டுவானென்றும், மூன்றுபிள்ளைகளைப்பெற்றான் மாயாவாமனரூபியான திரிவிக்கிரமதேவருக்கு கிர்த்தியென்கிற ஸ்திரீயினிடத்திலே மகாகீர்த்திமான்களான சவுபகன்முதலானபிள்ளைகள்பிறந்தார்கள்,கபடவாமனமூர்த்தியாயும்காசிபருக்கு அதிதியினிடத்திலேபிறந்தவராயும் மகாத்மாவாயுமிருக்கிற அந்தஉருக்கிரம தேவருடைய குணப்பிரபாவலீலைகளையெல்லாம்எட்டாவதுஸ்கந்தத்திலேசொல்லுகிறேன்,

இனிமேல்காசியபருக்கு திதியினிடத்திலேபிறந்தவாளான தயித்தியாளை உனக்குசசொல்லுகின்றேன், யாதொருதயித்தியாளுக்குள்ளேஸ்ரீமானாயிருக்கிறபிரகலாதன்-பெலிஇவாளிருவருமே மகாபாகவதாளானார்கள் அந்தத்தயித்தியாளுடைய வங்கிஷத்தைச் சொல்லுகிறேன்-திதிக்கு இரணியகசிபுவென்றும்- இரணியாட்சனென்றும்- பிரசித்தாளாய் தயித்தியாளாலே வணங்கப்பட்டவர்களாய் இரண்டுபிள்ளைகள் பிறந்தார்களென்று மூன்றாவதுஸ்கந்தத்திலேயே சொல்லப்பட்டதல்லவா,அவர்களுக்குள்ளே இரணியகசிபுவுக்குபாரியாயும் ஜென்பனுடையபெண்ணானகியாதுவென்றஸ்ரீயானவள் பிரகலாதன்-அனுகிலாதன்-சமகிலாதன்-கிலாதன்-என்கிறநாலுபிள்[illegible]ளையும்-சிம்மிகியென்றஒருபெண்ணையும்-பெற்றாள்- அந்தசிம்மிகியானவள் விப்பிரசிதுவென்கிற பர்த்தாவுக்குஇராகுவென்கிற பிள்ளையைப்பெற்றாள்ஸ்ரீஅரியானவர் சக்கிரத்தினாலே தேவதைகளோடு அமிர்தபானம்பண்ணாநின்ற அந்த ராகுவினுடைய சிரசை அறுத்துப்போட்டாரல்லவா,சமகிலாதனுக்குமதியென்கிறபாரியானவள் பஞ்சசேனனென்கிற பிள்ளையைப்பெற்றாள்-கிலாதனுக்கு தெமனியென்கிற பாரியையானவள் வாதாபிஇல்வலன்என்கிற இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள்-அனுகிலாதனுக்கு சூசமியென்கிற ஸ்திரீயினிடத்திலே பாஷகிலனும்மகிஷனும் பிறந்தார்கள், பிரகலாதனுக்கு விரோசன்பிறந்தான் விரோசனனுக்குதேவியென்கிற ஸ்திரீயினிடத்திலே பலிச்சக்கிரவர்த்தி பிறந்தான். பலிச்சக்கிரவர்த்திக்கு அசனை யென்கிற ஸ்திரீயினிடத்திலே பாணன்முதலாய் நூறுபிள்ளைகள் பிறந்தார்கள்-அந்தப்பலியினுடைய கீர்த்திகரமான பிரபாவத்தை இனிமேல் சொல்லப்போகிறோம், அந்தப்பாணன்ருத்திரனை ஆராதித்து பிரமதகணங்களுக்குள்ளே முக்கியனான யாதொருபாணாசுரனுடைய பக்கத்திலேஸ்ரீபகவானன்ருத்திரன்இப்பவும்புரபாலகனாயிருக்கிறானல்லவா திதிக்கு நாற்பத்தொன்பதுபேர் மருத்துககளென்கிறபுத்திராள்பிறந்தார்கள், அந்த நாற்பத்தொன்பதுபேரும் அபுத்திராளாய் இந்திரனாலேதேவதத்துவத்தையும் அடைவிக்கப்பட்டார்களென்று சொல்லாநின்ற சுகப்பிர்மரிஷியைப்பார்த்து பரிட்சித்துமகாராஜன் கேழ்க்கின்றார் வாரீர்குருவே அந்தத் திதிபுத்திராளான மருத்துக்கள் உற்பத்திசித்தமான அசுரபாவத்தைவிட்டு இந்திரனால் தேவசாமியத்தை எப்படி அடைவிக்கப்பட்டார்கள், அவாள்என்னநன்மைசெய்தார்கள், அதை இந்தரிஷிகளும்என்னுடனேகூட அந்த மருத்துக்களுடைய உபாக்கியானத்தைக்கேழ்க்கக் கோறியிருக்கின்றார்கள் அதை நமக்குத்தெரியப்படச்சொல்லவேணுமென்று கேளாநின்ற பரிட்சித்துமகாராஜாவைப் பார்த்து சுகப்பிர்ம்மரிஷி சொல்லுகின்றார்.

வாராய்இராஜனே திதியானவள்இந்திரசகாயமான விஷ்ணுவினாலே கொன்றுவிட்ட புத்திராளைப்பார்த்து சோகத்தினால்ஜொலியாநின்ற கோபாக்கினியினாலேசிந்திக்கின்றதாவது எப்போது நான்பிராதாக்களைக்கொன்றவனையும், குரூரமான கடினசித்தனையும்,பாபியாயும்இந்திரியவசியனாயு மிருக்கிற இந்திரனைக் கொல்லுவித்து சுகமாக நித்திரைபண்ணப்போகிறேன்-அந்தஇந்திரனுடைய மதத்தைப்போக்கடிக்கத்தக்கவனான பிள்ளையானவன்எனக்கெந்த தர்மத்தினாலே உண்டாவனோஅப்படிப்பட்ட தர்மம்பர்த்துரு சிசுருஷையென்றெண்ணிக்கொண்டு அந்தஅபிப்பிராயத்தினாலேதிதியானவள் பர்த்தாவான காசியபருக்கு சிசுருஷையினாலேயும் பிரீதியினாலேயும், பிரியத்தைப்பண்ணி காசியபருடைய மனதை வசிகரித்தாள், அந்தக்காசியபர் வித்துவானாயிருந்தாலும் சமர்த்தை அந்த ஸ்திரீயினாலே வசிகரிக்கப்பட்டவராய் மோகத்தையடைந்து நல்லது உன்னுடையஇஷ்டத்தைச்செய்துகொடுக்கிறேனென்று சொன்னார், ஸ்ரீகளிடத்திலே இது ஆச்சரியமன்று பிர்மாவானவர் ஆதியிலேசங்கமில்லாத பூதங்களைப்பார்த்துந் தன்னுடையதேகத்திலே பாதியைஸ்ரீயாகப்பண்ணினார்-யாதொருஸ்ரீயினாலே புருஷாளுடையபுத்தி அபகரிக்கப்படுகிறதோ அந்தப்பிரகாரம் திதியினாலே சிசுருஷைபண்ணப்பட்டவராய் பகவானானகாசியபர் மிகவும்சந்துஷ்டராய் அவளைக்கொண்டாடி ஒருவார்த்தை சொல்லுகின்றார்.

வாராய்சுந்தரமான துடையையுடையவளே நிற்துஷ்டையாயிருக்கிறவளே உனக்குநான் சந்துஷ்டனானேன் இஷ்டமானவரத்தைக் கேழ்க்கக்கடவாயென்று சொல்லுகின்ற பர்த்தாவைப்பார்த்துதிதியானவள்சொல்லுகிறாள், வாரீர்பிரம்மநிஷ்டரே எனக்குநீர்வரத்தைக்கொடுக்கிறவரேயாகில் புத்திரளைப் பறிகொடுத்த நான்யாதொருஇந்திரனாலே என்னுடையபுத்திராள் கொல்லப்பட்டார்களோ அப்படிப்பட்ட இந்திரனைக் கொல்லத்தக்கவனையும், நாசமில்லாதவனையுமிருக்கிற புத்திரனை வரிக்கிறேன்என்று சொல்லாநின்ற திதியினுடைய வசனத்தைக்கேட்டு காசியபர் துக்கத்தை யுடையவராய் மனதிலே பரிதாபத்தையடைந்து கொஞ்சம் கோபத்துடனே கூடினவராய் தம்மைத்தாமே நிந்தித்துக்கொண்டு அந்

ததிதியைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்ருர் வா
ராய்மங்களமான ரூபத்தையுடையவளேநம்மாலேசொ
ல்லப்பட்ட இந்தசம்வச்சர விரதத்தை யெதாசாஸ்திர
மாகக் குறைவில்லாமல் தரித்தாயாகில் உனக்குஇந்திர
னைக் கொல்லத்தக்கினவனாய் ஒருபுத்திரன் உண்டாகப்
போகிருன், அந்தவிரதபூர்த்தியில்லாமற் போச்சுதாகி
ல்அந்தப்புத்திரனே தேவதைகளுக்கு பந்துவாகப்போ
கிருனென்றுசொல்லுகின்ற பர்த்தாவைப்பார்த்துதிதி
சொல்லுகின்ருள், இந்தவிரதத்தைச் சொன்னபிரகார
மேதரிக்கிறேன் எனக்கந்தவிரதத்தை யுபதேசியுமென்
றுசொல்லுகின்ற திதியைப்பார்த்து காசியபர்சொல்லு
கின்ருர், வாராய்திதியே இந்தவிரதத்தினுடைய முறை
மையைச் சொல்லுகிறேன்கேள் இந்தவிரதத்திலேபிரா
ணிகளைவதைசெய்வதும் ஜலத்திலேயிறங்கி ஸ்நானம்ப
ண்ணுவதும் துற்சனுளுடனே வார்த்தை சொல்வதும்
மலினவஸ்திரத்தைத் தரிப்பதுமாகாது பத்திரகாளிக்கு
நிவேதனம்பண்ண அன்னத்தையும் மாங்கிஷத்தையும்
சூத்திரன்கொண்டுவந்தவஸ்துக்களையும் தூரஸ்திரீயினு
லேபார்க்கப்பட்ட அன்னத்தையும், இரண்டுகைகளால்
தீர்த்தத்தையெடுத்து சாப்பிடலாகாது சாந்தியகாலங்
களிலே தலைமயிரை விரித்துக்கொண்டும் மேல்வஸ்திர
மில்லாதவர்களாயும் வெளியிலே சஞ்சரிக்கலாகாதுபா
தங்களைச் சுத்திபண்ணிக்கொள்ளாமலும் வடக்கு மேற்
காகத்தலைவைத்தும் நிர்வாணமாயும்-சந்தியாகாலங்களி
லேயும், சயனம்பண்ணக்கூடாது சமஸ்தமானமங்களத்
துடனேகூடினவளாய் பிராதகாலத்திலே போஜனத்து
க்குமுன்னேபசுக்களையும், பிராமணுளையும், மகாலட்சு
மியையும், விஷ்ணுவையும், பூசிக்கவேணும்இந்தபுத்தி
ரோற்பத்தி காமான்விரதத்தை ஒருசம்வச்சரம்சாஸ்தி
ரந்தப்பாமல் தரித்தாயாகில் உனக்குஇந்திரனைக்கொல்
லத்தக்கனவனாய்ஒருபுத்திரனுண்டாகப்போகிருனெ
ன்றுகாசியபராலேசொல்லப்பட்ட அந்தவிரதத்தை அ
ப்படியேசெய்கிறேனென்று திதியானவள் அங்கீகாரம்
பண்ணினவளாய்காசியபரிடத்தில்நின்றும்கொர்ப்பத்தை
யுந்தரித்து அனந்தவிரதத்தையுந்தரித்தாள்,

வாராய்ராஜனே இந்திரனும்தனக்குச்சிறியதாயாரா
ன திதியினுடைய அபிப்பிராயத்தையறிந்து ஆசிரமத்தி
லேயிராநின்ற அந்தத்திதியை சிசுரூஷையினுலே யுபச
ரித்துக்கொண்டு நாள்தோறும் தபோவனத்தில் நின்று
ம்புஷ்பம்-பலம்-கந்தமூலம்சமித்து தெர்ப்பை தீர்த்தம்-
இதுமுதலானதுகளையெல்லாம்அந்தந்தக்காலங்களிலே
கொண்டுவந்து கொடுத்துக்கொண் டிருந்து அதிதிதே
வியினுடைய விரதத்துக்கு விக்கினஞ்செய்யவேணுமெ
ன்று இச்சையையுடையவனாய் இந்திரன்கபடனாய் மிரு
கத்தைக்கொல்லுகைக்கு வேடன் சமயம்பார்த்துக்கொ
ண்டிருப்பதுபோலவெகுநாள் சிசுரூஷைபண்ணிக்கொ
ண்டிருந்தும் அந்தத்திதியினுடைய விரதத்துக்கு விகா
தத்தையடையாதஇந்திரன் நமக்குஎப்போது க்ஷேமம்
உண்டாமென்று சிந்தித்துக்கொண்டிருக்கும்போது ஒ
ருநாள்சந்தியாகாலத்திலே திதிதேவியானவள்விரதத்தி
னுலேஇளப்பையடைந்து அசுசியாம்ஆசமனம்பண்ணு
மல்கைகால்அலம்பாமல் தெய்வத்தினுலேமோகிக்கப்ப
ட்டவளாய்நித்திரைபண்ணினுள் அந்தச்சமயத்தில்யோ
கசாஸதிரம் அறிந்தவனான இந்திரனானவன் நித்திரையி
னுலே பரவசமாயிருக்கிற திதியினுடைய உதரத்தில்
யோகமாயையினுலே பிரவேசித்துச்சுவர்ணச்சாயலான
அந்தத் திதியினுடைய கெர்ப்பத்தை வச்சிரதினுலே
ஏழுகண்டமாகஅறுத்தான் அப்படி அறுக்கப்பட்டகெ
ர்ப்பங்களை அழாதே அழாதேயென்று சொல்லிக்கொ
ண்டு திரும்பவும் ஒவ்வொரு கண்டத்தை எவ்வேழாக
அறுத்தான், வாராய்இராஜனே இந்திரனுலேசேதிக்கப்
பட்ட சமஸ்த கெர்ப்பங்களும் அஞ்சலி பந்தத்துடனே
கூடினதுகளாய் இந்திரனைப்பார்த்துவாராய்இந்திரனே
எங்களைஎதற்காக இமிசிக்கிருய் உனக்கு நாங்கள் பிரா
தாக்களாக விருக்கிருேமென்று சொல்லினதுகள்அதற்
குஇந்திரனும் வாருங்கள்மருத்துக்களே பயப்படாதீர்க
ள்நீங்கள் எனக்குபிராதாக்களாக விருக்கிரீர்கள் என்று
சொல்லி அந்தமருத்துகணங்களைத்தனக்குப் பாரிஷதா
ளாகப்பண்ணினுன், திதியினுடைய அந்தக் கெர்ப்பமா
னது வச்சிராயுதத்தினுலே வெகுப்பிரகாரமாகச்சேதிக்
கப்பட்டிருந்தாலும் ஸ்ரீநிவாசனுடைய கிருபையினுலே
மரித்துப்போகாமலிருந்ததுயாதொருகாரணத்தினுலே
கொஞ்சம்குறைச்சலாக ஒருசம்வச்சரம் திதியினுலே ப
கவான்அர்ச்சிக்கப்பட்டாரோ அந்தக் காரணத்தினுலே
அந்தமருத்துக்கள் இந்திரனுடனேகூட அன்பதுதேவ
தைகளாகஆனுர்கள், அந்த மருத்துக்கள் இந்திரனுலே
மாதாவினுடைய அபராதத்தையெண்ணுமல்எக்கியபா
கிகளாகப்பண்ணப்பட்டார்கள், மகா பதிவிருதையான
அந்தத்திதியும் நித்திரையைவிட்டு எழுந்திருந்து அக்கி
னிபோலப் பிரகாசித்துக் கொண்டும் இந்திர னுடனே
கூடிக்கொண்டுமிருக்கிற தன்னுடையபிள்ளைகளைப்பார்
த்து மிகவும்சந்தோஷத்தை யடைந்தவளாய்இந்திரனை
ப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்ருள் வாராய்குழ
ந்தாய் நான்தேவாளுக்குப்பயத்தைப்பண்ணத்தக்கவனா
ன ஒருபிள்ளையைக்கோறி ஒருத்தராலேயும்பண்ணக்கூ
டாத இந்தவிரதத்தை நான்பண்ணினேன், இப்படியிரு
க்கநாற்பத்தொன்பதுபிள்ளைகளெப்படியானுர்கள்,வாரா
ய்இந்திரனே உன்னுலே இதற்குக்காரணம் அறியப்பட்
டிருந்துதாகில் அபத்தத்தைச் சொல்லாமல் எதார்த்தத்
தைச்சொல்லென்றுசொல்லாநின்ற திதிதேவியைப்பா
ர்த்து இந்திரன் சொல்லுகிருன்.

வாராய்தாயாரே உன்னுடைய அபிப் பிராயத்தை
யறிந்துஉனதுசமீபத்திலிருந்துகொண்டுஒருசமயத்தை
யடைந்தவனாய் உன்னுடையகெர்ப்பத்தைச் சேதித்துப்
போட்டேன், தன் பிரயோசனத்திலேயே புத்தியை யு
டையபுருஷன் தர்மத்தையறியமாட்டானல்லவாஎன்னு
ல்சேதிக்கப்பட்ட உன்னுடைய கெர்ப்பமானது ஏழுபி
ள்ளைகளாச்சுது, அவாளும் ஒவ்வொருத்தர் ஏழுபிரகா
ரமாகச் சேதிக்கப்பட்டவர்களாய் மரியாமல்தேவதைத்து
வத்தையடைந்தார்கள், வாராய் தாயாரே, மூர்க்கனான
என்னுடைய இந்ததுஷ்ட கிருத்தியத்தை க்ஷமிக்கக்கட
வாய் தெய்வாதீனமாக உன்னுடைய கெர்ப்பமானதும
ரித்துத் திரும்பவும் சீவித்ததென்று சொல்லி இந்திர
னானவன் சந்துஷ்டையான அந்தத் திதியினுலே சுத்த
இருதயத்துடனே அனுக்கியைப் பண்ணப்பட்டவனாய்

ஆந்தமருத்துக்களுடனேகூடி அந்தத் திதிதேவியைப் பிரணாமம்பண்ணி சொர்க்கலோகத்தையடைந்தான்வாராய்ராஜனே நீயேன்னைப்பார்த்து யாதொருபிரசனம்பண்ணினையோ அந்தப் பிரசனத்துக்குச் சமாதானமான மருத்துக்களுடைய பரமமங்களமான சென்மமானதுசர்வமும்உனக்குச் சொல்லப்பட்டது இன்னம் யென்ன சொல்லத்தக்கது.

## யகூ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

ஓதுங்காசிபராலுற்றதேவிக்கு
யாதொருவிரத மனுஷ்டித்ததோ
சீதரன்சந்தோஷ கரமாயவ்விரதமே
பேதமின்றிப்பிர காசமாய்ச்செப்பினர்,

காசிபராலே திதிதேவிக்கு யாதொருவிரதம் உபதேசிக்கப்பட்டதோ ஸ்ரீஅரிசந்தோஷகரமான அந்த விரதமேலோகத்துக்கு இதத்தின்பொருட்டுப் பிரகாசமாகச் சொல்லப்படுகின்றது,

பரிட்சித்துவினுடைய வாக்கியம்,

வாரீர்பிரம்மகிஷ்டரே,உம்மாலேயாதொருபுமஸ்வனமென்கிற விரதமானது சொல்லப்பட்டதோ அந்த விரதத்தினலே ஸ்ரீஅரியானவர் பிரசன்னமாவாரோ அப்படிப்பட்ட விரதத்தினுடையபிரகாரத்தை அறியவேணுமென்று பிரசனம்பண்ணுகின்ற ராஜாவைப்பார்த்துச்சுகர்சொல்லுகிறர்,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்ராஜனே மார்க்க சிரமாசத்திலே சுக்கிலபட்சப்பிரதமையிலே ஸ்திரீயானவள் பர்த்தாவினுடைய அனுமதியைக்கொண்டு சர்வபலசாதனமான இந்த விரதத்தை ஆரம்பிக்கக்கடவள், அந்த ஸ்திரீயானவள் மருத்துக்களுடையஉற்பத்தியையுங்கேட்டுபிராமணருடைய அனுமதிகொண்டு ஸ்நானம்பண்ணி வெளுத்த தந்தங்களையுடையவர்களாய் அலங்காரங்களைச்செய்து சுப்பிரமான இரண்டுவஸ்திரங்களைத்தரித்துக்கொண்டு பிராதக்காலத்திலே போஜனத்துக்குமுன்னேஸ்ரீமகாஇலட்சுமியுடனேகூட பகவானைப்பூசிக்கக்கடவள், அந்தப் பூஜைக்குண்டான மந்திரமாவது வாரீர் பூர்ணபகவானே காமனே உமக்குச்சகலமும் பரிபூரணமாயிருக்கிற தல்லவா-ஒன்றிலும் அபேட்சையில்லாதவராயும் மகாசம்பத்துக்களுக்கெல்லாம் பதியாயும் அணிமாதிஅஷ்டஅயிஸ்வரியங்களுடனேயுங்கூடின உமக்குப்பிரணாமம் ஈசனே நீர்-யாதொருகாரணத்தினலேகிருபையுடனேயும்-அயிஸ்வரியத்துடனேயும்-தேஜசுடனேயும்-மகாத்மியத்துடனேயும்-பராக்கிரமத்துடனேயும்-மற்றுமுள்ள சமஸ்தகுணங்களுடனேயுங் கூடினவராய் சமஸ்தமான தேவதைகளாலேயுஞ் செயிக்கப்பட்டவரா யிருக்கிறீர், இந்தமந்திரத்தினலே நாள்தோறும் விஷ்ணுவுக்கு ஆவாகனம்-அர்க்கியபாத்தியம் - ஆசமனம்-ஸ்நானம்- வஸ்திரம்-உபவீதம்-பூஷணம்-கெந்தம்-தூபம்-தீபம்- நிவேதனம்-இதுகள்முதலான சகல உபசாரங்களையுஞ் சித்த சமாதானத்தோடு கூடினவர்களாய்ச்செய்யக்கடவள். அந்தப்பூஜைபண்ணி மீந்த அவிஸை பகவானை வுமக்கு நமகாசுவாகாவென்று இந்தமந்திரத்தைச்சொல்லி பன்னிரண்டுஆகுதிகளை ஓமம்பண்ணக்கடவள். இந்தப் பிரகாரம் சகலஅபீஷ்டங்களையுங்கொடாநின்ற ஸ்ரீமகாலட்சுமியையும், ஸ்ரீஹரியையும் நித்தியமாகப்பக்தியினலே சம்பத்தைக்கோருகின்றஸ்ரீயானவள் பூசிக்கக்கடவள்,

இந்தப்பிரகாரம் ஸ்ரீமகாலட்சமியுடனேகூட வரதனை ஸ்ரீநிவாசனையும் ஸ்தோத்திரஞ்செய்து ஆத்மசமர்ப்பணமும்பண்ணி அர்ச்சிக்கக்கடவள், அப்படிபகவானுக்குப்பூசிக்கப்பட்ட திரவிய சேஷத்தை முகந்துவிட்டு ஸ்ரீஅரியை புனர்பூசைபண்ணி தன்னுடையபுருஷனையும் பரமபக்தியினலே ஸ்ரீ அரிரூபமாகவெண்ணி உபசாரங்களினலேபூசித்துப் பிரணாமம் பண்ணக்கடவள், அந்தப்பர்த்தாவும் தான்மிகவும் பிரீதியுடையவனய் பத்தினியினுடைய நானவிதமான அந்தப் பூஜாகாரியங்களுக்கு அனுகூலனயிருக்கக்கடவன் யாதொருகாரணத்தினலே தம்பதிகளுக்குள்ளே ஒருவராலே பண்ணப்பட்ட பூசையாயிருந்தாலும் இருவருக்கும் அதின் பலன் உண்டாமல்லவா-ஸ்திரீயானவள் விரதாசனத்துக்கு அயோக்கியையாயிருந்தாளேயாகில் பர்த்தாவானவன்அந்தவிரதத்தைப் பக்தியுடையவனய் ஆசரிக்கக்கடவன்,வாராய்ராஜனே, விஷ்ணுவினுடைய இந்தவிரதத்தைஒருக்காலும் விட்டுவிடாமலிருக்கக்கடவன், பிற்பாடு பகவானை எதாஸ்தானத்திலே உத்துவாசனம் பண்ணினவனய் அந்தப்பகவன்நிவேதித்த அன்னத்தை முன்னேஆத்மசுத்தியர்த்தமாகவும் சர்வகர்மபலப்பிராப்திநிமித்தமாகவும் பூசிக்கக்கடவன், இந்தப் பூஜாவிதியினலே பனிரண்டுமாதத்துடனேகூடின சம்வச்சரத்தைத்தள்ளினவளாய் பிற்பாடு கார்த்திகைமாதத்திலே கடைசி தினத்துக்குமுன்னுளில் பிராதகாலத்திலே ஸ்நானம்பண்ணி சுசியாயிருந்துகொண்டு முன்போலவே ஸ்ரீஅரியை ஆராதனம்பண்ணி க்ஷீரத்தினலே பக்குவம் பண்ணப்பட்ட அவிசுனலே ஆச்சியத்துடனேகூட பாறுணஸ்தாலிபாகப்பிரகாரமாக ஓமஞ்செய்து பிராமண போஜனம்பண்ணிவைத்து அவர்களாலே ஆசீர்வசனங்களைப் பெற்று பந்துக்களுடனேகூட மவுனியாய்ப் புசிக்கக்கடவன் பிற்பாடு சந்தானத்தையும் சவுபாக்கியத்தையுங்கொடாநின்றஅந்த அவிசுனுடைய சேஷத்தைப் பத்தினி கையில் கொடுக்கக்கடவன், இந்தப்பிரகாரம் புருஷனனவன் இந்தலோகத்திலே ஸ்ரீஅரியினுடைய இந்தவிரதத்தைஎதாசாஸ்திரமாக ஆசிரயித்துச் சகலமனோரதங்களையும் அடைவன், வாராய்ராஜனே, மகத்தாயும்-புண்ணியகரமாயுமிருக்கிற இந்தமருத்துக்களுடைய உபாக்கியானமும்திதியினுடையவிரதமும் நம்மாலே உனக்குச் சொல்லப்பட்டது.

ஆறுவதுஸ்கந்தம்

முற்றிற்று.










நன்ருக. குருவாழ்க. குருவேதுணை.

# ஸ்ரீமகாபாகவதபுராணம்.

## ஏழாவதுஸ்கந்தம்.

### முதலாவது-அத்தியாயம்.

மட்டுவிருத்தம்,

கருணைவாரிக் கடவுண்வராகமாய்
இரணியாட்சனை யிம்சைசெய்தாரரோ,
இரணியாட்சனுடைய வதம்சொல்லப்படுகின்றது,

பரிட்சித்துவினுடைய வாக்கியம்,

வாரீர்பிரம்மநிஷ்டரோ, சகலபிராணிகளுக்கும் புக
லிடமாயும்-அனுகூலமாயும் - அனுகூலத்தைச் சிந்திக்
கிறவராயும், இராநின்றபகவானனவர் தாம்இந்திரன் நி
மித்தியமாய் தயித்தியாளையெல்லாம் பிரதிகூலமான பு
ருஷன்போல எப்படிக்கொன்ருர், சாட்சாத் பரமானந்
தசுரூபராயும், ரஸஸமோகுண சூன்னியராயு மிருக்கிற
இந்தப்பகவானுக்குத் தேவகணங்களினுலேஒருபிரயோ
சனமுமில்லை அசுராளிடத்திலே துவேஷமுமில்லை. அ
ந்தநாராயணனுடைய கலியாண குணங்களைக் குறித்து
நமக்குமகத்தாகிய சமுசயமுண்டாயிருக்கிறது நீர் இந்
தச்சமுசயத்தைப் போக்கடிக்குகைக்கு யோக்கியராகவி
ருக்கிரீரென்று பரிட்சித்துவினுலே பிரசினம் பண்ணப்
பட்டு சுகரானவர் சொல்லுகிருர்,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்மகாராஜனே, பகவானிடத்திலே பக்தியை
விருத்திபண்ணுவியாநின்றும் பிரகலாதனுடைய மகாத்
துமியத்தையுடையதாயும் அற்புதமாயுமிருக்கிற ஸ்ரீஹ
ரியினுடையசரித்திரமானது நன்ருகஉன்னுலே பிரசன
ம்பண்ணப்பட்டது, ஆகையால்வியாசருக்குப் பிரணம
ம்பண்ணி நாரதர்முதலான மகா ரிஷிகளினுலே கான
ம்பண்ணப்பட்டும் பரமபாவனமாயு மிருக்கிற ஸ்ரீ ஹரி
யினுடைய கதையைச் சொல்லுகிறேன் ஜெனனமரண
ங்களில்லாதவராயும் இந்திரியங்களினுலே கிரகிக்கத்தக்
கவரன்றி பிரகிருதி விலட்சணராயு மிருக்கிற பகவான்
பிரகிருதியினுடையதுகளான தாமசமுதலானகுணங்க
ளினுல் சூனியராயிருந்தாலும் தமது அனந்தமாயா பிர
கிருதியினுடைய குணத்திலேபிரவேசித்துக்கொல்லுகி
றவனுயும் கொல்லப்படுகிறவனுயு மிருக்கிருர், சத்துவ
மென்றும்-ரசமென்றும்-தமசென்றும்- சொல்லப்பட்ட
து, பிரகிருதியினுடைய குணங்கள் ஆத்துமாவினுடை
யகுணங்களன்று-வாராய்ராஜனே-அந்தச்சத்துவாதி கு
ணங்களுக்கு ஏககாலத்திலே விரிவாயிருக்கிறதும் கொ
ஞ்சமாயிருக்கிறதுமென்கிறதுமில்லை சத்துவத்தினுடை
யவிருத்திகாலத்திலே தேவாளையும், ரிஷிகளையும்ரஜோ
குணத்தினுடைய விருத்திகாலத்திலே அசுராளையும்-
தமோகுணத்தினுடைய விருத்திகாலத்திலே எட்ச ரா
ட்சசாளையும், அந்தந்த காலானு குணங்களைக்கொண்டு
பகவான் அந்தந்ததேகங்களிலே பிரவேசித்துஅவரவர்
களை விருத்தி பண்ணிவைக்கின்ருர், எப்படியானுல் கா
ஷ்டமுதலான பதார்த்தங்களிலே அக்கினியானது வே
ருகஅறியப்படவில்லையோ அப்படி பகவானனவர், தே
வாதிசரீரத்தைக்காட்டிலும் அறியப்படுகிறதில்லை ஆனு
லும் கியானிகள் தேவாதிசரீரங்களிலே பிரவேசித்திரா
நின்ற அந்தப்பரமாத்மாவைக் காரியத்தினுலே அறிகின்
ருர்கள் ஈஸ்வரன் சிவனுக்கு யோகசாதனங்களான தே
வாதிசரீரங்களைச் சிருஷ்டிக்கக் கோறின வனுய்த் தம்மு
டையமாயையானயோகசக்தியினுல்ரசோகுணத்தைவே
ருகச்சிருஷ்டித்திருக்கிருர் விசித்திரங்களான அந்ததே

வாதிசரீரங்களிலே லீலைபண்ணவேணுமென்று இச்சையையுடையவராய் சத்துவகுணத்தை வேறாகச்சிருஷ்டித்திருக்கிறார் சங்கரிக்கவேணுமென்றுஇச்சையையுடையவராய் தமோகுணத்தை வேறாகப் பிரேரிப்பித் திருக்கிறார்,

வாராய் நரதேவனே, சத்தியசங்கற்பனாய் சருவாந்திரியாமியான ஈஸ்வரன்நியமித்த பூதஙளான பிரதானபுருஷாள்பொருட்டு அதுகளுக்கு ஆஸ்ரயமாகவிருக்கின்றகாலத்தை தாமேசிருஷ்டிக்கிறார் யாதொரு காரணத்தினாலே அந்தப்பகவானானவர் சமஸ்தமானகிரிகைகளிலேயும், பிரகிருதிபுருஷாளுடையசம்மந்தத்தை அடையாமலிருக்கிறார், வாராய்இராஜனே இந்தக்காலமானது சத்துவ குணத்தை விருத்திபண்ணிவைக்கிறது ஆகையினாலே ஈஸ்வரனும் சத்துவகுணப் பிரதானான தேவகணங்களை விருத்திபண்ணிவைக்கிறார் தேவதைகளுக்குப்பிரியராயும் மகாகீர்த்தியையுடையவராயு மிருக்கிற அந்தப்பகவானானவர் தேவதைகளுக்குச் சத்துருக்களாயும்-ரஜதமோகுணங்களைச் சுபாவமாக வுடையவர்களாயுமிருக்கிற அசுராளைச் சங்கரிக்கிறார், அந்தப் பகவானானவர் சர்வகாலமும் தம்மாலேசிருஷ்டிக்கப்பட்டபிரபஞ்சத்தினுடைய ஸ்திதிரட்சணார்த்தமாகத் தேவகணங்களுக்குச் சத்துவகுணத்தை விர்த்திபண்ணிவைக்கிறார் வாராய்ராஜனே, ராகத்துவேஷசூன்னியரானபகவானுக்குதேவாளிடத்திலே பிரீதியும்அசுராளிடத்திலேகோபமும் எப்படிகூடுமென்கிற இந்தஅர்த்தத்திலே முன்னே தேவரிஷியான நாரதமுனியினாலே ராஜசூயயாகத்தில் கேளாநின்ற தர்மபுத்திரருக்கு ஒருஇதிகாசம்சொல்லப்பட்டது அதைச்சொல்லுகிறேன்கேளும் தர்மபுத்திரரானவர் ராஜசூயமென்கிறமகாகிருதுவிலேபகவானன வாசுதேவனிடத்தில் அத்தியற்புதமான சிசுபாலனுடைய சாயுச்சியத்தைக்கண்டு மிகவும் ஆச்சரியத்தையுடையவராய் அந்தஎக்கியத்திலே சதசிலேயிராநின்ற நாரதமுனியைப்பார்த்துசகலரிஷிகளும்கேட்டுக்கொண்டிருக்கஇந்தஅர்த்தத்தைத்தர்மபுத்திரர்சொல்லுகிறார்.

தருமபுத்திரர் வாக்கியம்,

வாரீர் நாரதமுனியே, மகாபாகவதாளானவர்களுக்கும் துர்லபையான பரதத்துவமானவாசுதேவனுடைய சாயுச்சியபிராப்தி அந்தக்கிருஷ்ணனிடத்திலே அத்தியந்தம் துவேஷியாகிய சயித்தியனான சிசுபாலனுக்கு எப்படிஉண்டாச்சுது இதுஅத்தியாச்சிரியமாயிருக்கிறது இவைநாங்கள்எல்லாரும் அறியவேணுமென்றுஇச்சிக்கிறோம் வாரீர்தேவரிஷியே முன்னே பகவானை நிந்தித்ததினாலே வேனனென்கிறராஜா பிராமணாளாலே நரகத்திலே தள்ளப்பட்டானல்லவா பாபியானசிசுபாலன் பாலியத்திலே மழலைச்சொல்முதற்கொண்டு இதுவனாக்கும் அந்தக்கோவிந்த னிடத்திலே மிகவும் துவேஷத்தை யுடையவனாயிருந்தான், துற்புத்தியான தெந்தவக்கிரனும் அந்தக் கிருஷ்ணனிடத்திலே அப்படியே யிருந்தான், ஆதிமத்தியாவசான சூனியமாய் பரப்பிரம்மமாகியகிருஷ்ணனை அடிக்கடி துற்பாஷணம்பண்ணுகின்ற சிசுபாலதெந்தவக்கிராளுடைய நாவுகளிலேகுஷ்டரோகம்உண்டாகாமல்நரகத்தையுமடையாமற்போனார்களே அடையக்கூடாத சுரூபத்தையுடையவரான அந்தப்பகவானிடத்திலே சமஸ்தபிராணிகளும் பார்த்துக்கொண்டிருக்கச்சே இவாளிருவரும் எந்தஎதுவினாலே அயிக்கியத்தையடைந்தார்கள் இந்தஅர்த்தத்திலே வாயுவினாலே தீபமானதுஅலைவதுபோல என்னுடைய புத்தியானதுஅலைகிறது இதுஆச்சரியமல்லவாசர்வக்கியராயிருக்கிறநீர் இந்த அர்த்தத்தை எனக்குச் சொல்லக்கடவீரென்று தருமபுத்திரர்கேட்க பகவானானநாரதமுனியானவர் மிகவும்சந்துஷ்டனாய் சதசிலேயிருக்கிறசகலமானபேர்களும் கேட்டுக்கொண் டிருக்கத் தர்மபுத்திரரைப்பார்த்துச் சொல்லுகிறார்,

நாரதர்வாக்கியம்,

வாரீர் தர்மபுத்திரரே பிரகிருதி புருஷாளுடைய அவிவேகத்தினால் இந்தச்சரீரமானது நிந்தை ஸ்தோத்திரம்-பூசை-திரஸ்காரம்-அதுகளைப் பிரயோசனமாகவுடையதாகக் கற்பிக்கப்பட் டிருக்கிறது இந்த லோகத்திலேபிராணிகளுக்குத் தேகாபிமானத்தினாலே நான்எனதென்கிற விபரீதபுத்தியும், தெண்டிக்கிறது திட்டுகிறது இதுமூலமான இம்சையும் உண்டாகிறது நான்யெனது என்கிற இந்தஅபிமானமானதுயாதொருதேகத்தைப்பற்றியுண்டாகிறதோ அந்தத்தேகத்தினுடைய வதத்தினாலே பிராணிவதமென்றுசொல்லப்படுகிறதுதேகாபிமானசூன்னியராயும்-நிர்க்குணராயும்சர்வாந்திரியாமியாயும்-சேதனாசேதன விலட்சணனாயுமிருக்கிறபகவானுக்கு அப்படிநான் எனதென்கிற அபிமானமில்லை அந்த பரமாத்மாவுக்கு எந்தஎதுவினாலே இம்சையானதுகற்பிக்கப்படும், ஆகையினால் பகவானிடத்திலே வயிரமாகிற யோகத்தினாலேயும், பக்தியாகிற யோகத்தினாலேயும்-பயத்தினாலேயும் சிநேகத்தினாலேயும்-காமத்தினாலேயும் அந்தப்பகவானிடத்திலே மனதை வைக்கக்கடவன் வேறாகப் பார்க்கத்தக்கவ னன்று, எப்படியானால் புருஷனானவன் வயிரமாகிற யோகத்தினாலே பகவத் சாயுச்சியத்தையடைகுவனோ அந்தப்பிரகாரம் பக்தியோகத்தினாலேயும் அடையமாட்டானென்று என்னுடையநிச்சயம் மாயையினாலே ஆச்சரியதிவ்யமங்கள விக்கிரகவிசிஷ்டனாயும் ஈஸ்வரனாயு மிருக்கிற கிருஷ்ணபகவானிடத்தில் வயிரத்தினாலே யுண்டான அனவரத தியானத்தினாலே பாபத்தைப் போக்கடித்தவர்களாய் அந்தக்கிருஷ்ணனு

டைய சாருப்பியத்தையடைகின்றார்கள் பக்தியினாலேயும்-துவேஷத்தினாலேயும்-பயத்தினாலேயும்சிநேகத்தினாலேயும்-ஈஸ்வரனிடத்திலேயேமனதைவைத்துசகலபாபத்தையும்விட்டு வெகுபேர்கள் அந்தப்பகவானுடைய கதியையடைந்தார்கள்.

வாராய்ராஜனே- கர்மத்தினாலே கோபிகாஸ்திரீகளும்-பயத்தினாலேகங்கிசனும்துவேஷத்தினாலேசிசுபாலன்முதலானராசாக்களும்-தேகசம்பந்தத்தினாலே விருட்சணிகளும்-சிநேகத்தினாலே நீங்களும்-பக்தியினாலே நாங்களும்,ஆகபாவரும் பகவானாலே அவருடைய கதியை அடைகிறோம் இந்த ஐந்து சம்பந்தத்துக்குள்ளே வேனனானவன் பகவானைக்குறித்து ஒருசம்பந்தத்தையுமுடையவனாக ஆகாமற்போனான்-ஆகையினாலே புருஷனானவன் எந்த உபாயத்தினாலேயாகிலும் ஸ்ரீகிருஷ்ணனிடத்திலே மனதைவைக்கக்கடவன் வாராய் தருமராஜனே உங்கள் சிறியதாயார்பிள்ளைகளான சிசுபாலதெந்தவக்கிராளிருவரும் பூர்வத்திலே விஷ்ணுவினுடையபாரிஷதசிரேஷ்டாளாய் விப்பிரசாபத்தினாலே வைகுண்டத்தில்நின்றும்நழுவினார்களென்று சொல்லாநின்றநாரதமகாமுனியைப்பார்த்துத்தருமபுத்திரர்சொல்லுகிறார்,

வாரீர்மகாரிஷியே அரிதாசானை திரஸ்கரியாநின்றசாப்மானது ஆருடையது அதுஎப்படிப்பட்டது அரிதாசாளுக்குச் சாபத்தினாலே ஜென்மமானதுவிசுவசிக்கத்தக்கதாய்த் தோணவில்லை தேகேந்திரியப் பிராணன்களிலே அபிமானசூன்னியாளாய் சுத்தசத்துவமாய்தேகத்தையுடையவர்களாய் வைகுண்டபுரவாசிகளான பாகவததாசாளுக்கு இந்தப்பிராகிருத தேகசம்பந்தமூலமானஜென்மத்தை எனக்குத்தெரியப்படச்சொல்லுமென்று பிரசனம்பண்ணாநின்ற தர்மபுத்திரனைப்பார்த்து நாரதமகாமுனிவர்சொல்லுகிறார். வாராய்ராஜனே ஒருக்கால் பிரம்மபுத்திராளான ஜனந்தனாதிகள் திரிலோகத்தையுஞ்சஞ்சரித்துக்கொண்டு சுயவிச்சையினாலே விஷ்ணுலோகத்தையடைந்தார்கள்,ஐந்தாறுவயதுபிள்ளைகள்போலதேஜசுடையவர்களாயும்,பூர்விகளானமரீசிமுதலானபேர்களுக்கு முன்னுண்டானவர்களாயும், திகம்பராளாயுமிருக்கிற அந்த ஜனந்தனாதிகளை விஷ்ணுவினுடைய துவாரபாலாள் குழந்தைகளாகயெண்ணித்தடுத்தார்கள்-அதினால் அவாள் கோபத்தையடைந்தவர்களாய் துவாரபாலாளை இந்தப்பிரகாரஞ்சபித்தார்கள்-வாருங்கள்மூர்க்கர்களே பாபிஷ்டாளான நீங்களிருவரும்-ரஜதமோகுணங்களினாலே பரிட்சிக்கப்படாதவிஷ்ணுவினுடைய பாதமூலத்திலே வாசம்பண்ணுகைக்கு யோக்கியாளன்று-ஆகையினால் அசுர யோனியைச் சீக்கிரமாக அடையக்கடவீர்களென்றுசபிக்கப்பட்டவர்களாய்அந்த விஷ்ணுபதத்தில்நின்றும் நழுவிவிழாநின்ற அவாளிருவரும் கிருபாவான்களான அந்தஜனந்தனாதி ரிஷிகளினாலேஉங்களுக்கு மூன்றுஜென்மங்களினாலேதிரும்பவும் இந்தவிஷ்ணுபதத்தை அடையக்கடவீர்களென்று சொல்லப்பட்டார்கள்.

அவாளிருவருமே திதிபுத்திராளாய் தயித்தியதானவர்களாலே வந்தனம்பண்ணப்பட்டவர்களாய் இரணியகசிபுஇரணியாட்சனென்று இருவராய்வந்துபிறந்தார்கள் அவர்களுக்குள்ளே இரணியகசிபுஜேஷ்டன்-இரணியாட்சன்-கனிஷ்டன்-அந்த இரணியகசிபுநரசிங்கமூர்த்தியான ஸ்ரீபகவானாலே சங்கரிக்கப்பட்டான்- இரணியாட்சனும் வராகரூபத்தைத்தரித்துப் பூமியை உத்தாரணம்பண்ணாநின்ற அந்தப் பகவானாலே சங்கரிக்கப்பட்டான். அந்த இரணியகசிபானவன் கேசவப்பிரியனாயும்-புத்திரனாயுமிருக்கிற பிரகலாதனைக் கொல்ல நினைத்து மரணஹேதுக்களான நானாவாதனைகளையுஞ் செய்தான். ஆனாலும் பகவானுடைய தேஜசினாலே வியாபிக்கப்பட்டும் சர்வபூதங்களுக்கும்ஆத்மாவான பரமாத்மாவைஅந்தராத்மாவாக வுடையவராயும்-ராகத்வேஷ முதலானயேயகுணசூனியராயும்-சராசராத் மகங்களான சர்வவஸ்துக்களிலேயுமிராநின்ற அந்தப்பகவானொருவனையே சாட்சாத்கரியாநின்றுமிருக்கிற அந்தப்பிரகலாதனைநானாப்பிரகாரங்களான மரணவுபாயங்களினாலேயும் கொல்லுகைக்குச் சமர்த்தனாகாமற்போனான் பிற்பாடுராக்ஷசாளான அவாளிருவரும் அந்தஜென்மத்தைவிட்டு கேசசியென்கிற ஸ்திரீயினிடத்திலே விசிர்வசுவுக்குப் பிள்ளைகளாய் சர்வலோகபயங்கராளான இராவண கும்பகர்ணாளாகவந்துபிறந்தார்கள்-அந்தஜென்மத்திலேயும் பகவானானவர் தசரதராமனாய்ப்பிறந்து அவர்களுடையசாபவிமோசனார்த்தமாக அவர்களிருவரையும்-சங்கரித்தார்-வாரீர் தருமபுத்திரரே அந்தஸ்ரீராமருடைய பராக்கிரமத்தை மார்க்கண்டேயருடைய வாக்கினாற் கேழ்க்கப்போகிறீர் அவாளிருவரும் இப்போது உங்கள்சிறியதாயார் பிள்ளைகளாகிய சிசுபாலதெந்தவக்கிராளான க்ஷத்திரியர்களாகப் பிறந்தார்கள்-இப்பவும் கிருஷ்ணனுடையசக்கிரத்தினாலே சகல பாபத்தையும்- போக்கடித்துக்கொண்டவர்களாய் சாபத்தில்நின்றும்விடுபட்டவர்களாய்துவேஷமாகிற யோகத்தினாலே மிகவும்திட்சணியமாயிருக்கிற தியானத்தினால் அச்சுதனுடைய சாருப்பியத்தை யடைந்தவர்களாய் திரும்பவும் விஷ்ணு பாரிஷதாளாய்அவருடைய சமீபத்தையடைந்தவர்களென்றுசொல்லாநின்ற நாரதமகா முனிவரைப்பார்த்து உதிஷ்டிரர் சொல்லுகின்றார் வாரீர் பகவானே மகாத்துமாவாயும்-அத்தியந்தப்பிரியனாயும்- புத்திரனாயு மிருக்கிற அந்தப் பிரகலாத னிடத்திலே இரணிய கசிபுவுக்கு துவேஷம்

எதினாலுண்டாச்சுது, யாதொருகாரணத்தினாலே அந்தப்பிரகலாதனுக்கு அச்சுதனிடத்திலேயே சித்தம் உண்டாச்சுதோ இதையெல்லாம் எனக்குச் சொல்லுமென்றுகேட்டார்.

## ௨-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

அஷ்டலட்சுமிக் கார்ந்தமணாளனும்
விஷ்ணுவின்றன் விபூதியாம்லோகத்தை
துஷ்டதானவரைக் கொண்டுபத்ரவம்
இஷ்டமாயிதி காரமியம்பினர்,

விஷ்ணுவினிடத்தில் ரோஷத்தினாலே இரணியகசிபு அந்தவிஷ்ணுவினுடைய விபூதியானலோகத்தை தானவர்களைக்கொண்டு உபத்திரவம் பண்ணுவித்து அந்தவிஷ்ணுவினாலே அடிக்கப்பட்ட பிருதுரு புத்திராதிகளையெல்லாம் இதிகாசங்களினாலே சமாதானம் பண்ணினானென்று சொல்லப்படுகின்றது.

ஸ்ரீநாரதர்வாக்கியம்,

வாரீர் தருமபுத்திரரே, இந்தப்பிரகாரம் பிராதாவான இரணியாக்ஷன் வராகரூபியானபகவானாலே சங்கரிக்கப்படுகையில் இரணியகசிபுவானவன் ரோஷத்தினாலும்சோகத்தினாலும் மிகவும்பரிதாபத்தையடைந்துஉதடுகளைக்கடித்துக்கொண்டு கோபத்தினாலே ஜொலியாநின்ற இரண்டுகண்களினாலேயும் தூம்பரவர்ணமானஆகாயத்தைப் பார்த்துக்கொண்டு பயங்கரங்களான கோரைப்பற்களினாலேயும் உக்கிரதான திருஷ்டியினாலேயும்,பார்க்கக்கூடாத நெறித்தபுருவங்களுடனேகூடினமுகத்தையுடையவனாயும் சதசிலே சூலத்தை யெடுத்துக்கொண்டு தானவாளையெல்லாம்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறான். வாருங்கள்தானவாளே-தயித்தியாளே-திவமூர்த்தனே-திரியக்ஷனே-சம்பரனே - சதபாகுவே-அயக்கிரீவனே-நமுசியே-பாகனே-இல்வலனே - விப்பிரசித்தியே-புலோமாவே-சகுனன்முதலானபேர்களே நீங்களெல்லாரும்என்னுடையவார்த்தையைக்கேட்டுஎனது ஆக்கியாப்பிரகாரம் சீக்கிரமாகச் செய்யுங்கள் தாமதஞ்செய்யவேண்டாம் அப்பிரயோஜகளாயும நமக்குச் சத்துருக்களாயுமிருக்கிற தேவர்களாலே இஷ்டனாயும், சுகிர்தாயுமிருக்கிற என்னுடையபிராதாவானவன்சகலபிராணிகளுக்கும்சமனாயிருந்தாலும் தேவதைகளுக்குச் சகாயமான ஸ்ரீஹரியினாலேகொல்லுவிக்கப்பட்டான் சுபாவத்தைவிட்டவனாயிருந்தாலும், சுத்ததேஜோமயராயிருந்தாலும் மாயையினாலே வராகரூபத்தை யுடையவராயும்,தம்மைஉபாசிக்கிறவனை அனுவர்த்திக்கிறவராயும், பாலனைப்போலே ஸ்திரசுந்தரல்லாயிருக்கிற அந்த ஸ்ரீஹரியினுடையகழுத்தைநம்முடையசூலத்தினாலேசேதித்து அதில்நின்றும் பிரவகியாநின்றரத்தப்பிரவாகத்தினாலே என்னுடையபிராதாவின் துக்கத்தைவிட்டவனாய்த் திருப்தியடைவிப்பிக்கப்போகிறேன் அந்தக்குடிலவிருதயரானவிஷ்ணுவானவர்நாசத்தையடைந்தாராகில்வேரோடேசேதிக்கப்பட்ட விருட்சத்தினுடைய கிளைகள்போல விஷ்ணுவைப் பிராமணனாகவுடைய தேவதைகள்தானே நாசத்தை யடைந்துபோவார்கள் ஆகையினால்நீங்கள்பிராமணாள் க்ஷத்திரியாளாலே விருத்தியடையாநின்ற பூமியையடைந்து தபசு எக்கியம் சுவாத்தியாயம் விரதம் அக்கினிவோத்திரம் இதுகளை பரியாநின்ற பிராமணாளைச் சங்காரம்பண்ணுங்கள்.

விஷ்ணுவானவர் பிராமணாளால் செய்யப்பட்டயக்கியசுரூபராயும் தர்மமயமானபுருஷராயும் தேவர்கள் ரிஷிகள் பிதுர்க்கள் இதரப்பிராணிகள் இவர்களுக்கும் தாமத்துக்கும் பரமகதியாயிருக்கிறவர் ஆனபடியினால் எங்கெந்த தேசங்களிலே பிராமணாள் கோக்கள் வேதங்கள் வர்ணாசிரமதர்மங்கள் இவையெல்லாம் உண்டாயிருக்கிறதுகளோ அந்தந்த தேசத்தைப்போய்க்கொளுத்துங்கள் அங்கங்கேயிருக்கிறபேரைச் சேதியுங்களென்று சொல்லாநின்ற இரணியகசிபுவினுடையஆக்கினையைச் சிரசினாலே வகித்துக்கொண்டுஅந்தத்தயித்தியதானவாளெல்லாம் பிரஜைகளைநாசம்பண்ணி பட்டணங்கள்கிராமங்கள் இடச்சேரிகள் எத்தியானவனங்கள் க்ஷேத்திரங்கள்தோப்புகள் ரிஷிகளுடைய ஆசிரமங்கள் கிரிஷிபண்ணுகிறபேர்களுடைய ஸ்தானங்கள்ரதத்தின் ஸ்தானங்கள் கோஸதானங்கள் இதுகளையெல்லாம் தகித்தார்கள். சிலபேர் மண்வெட்டிகளினாலே தடாகங்கள் பிரகாரங்கள் கோபுரங்கள் இதுகளையெல்லாம் பேதித்தார்கள் பிரஜைகளுக்கு சீவனசாதனங்களானவிருட்சங்களையெல்லாம் சிலபேர்கோடாலிகளினாலே சேதித்தார்கள்சிலபேர்எரியாநின்ற கோரக்கொள்ளிகளைக்கொண்டு கிரகங்களையெல்லாம் தகித்தார்கள் இந்தப்பிரகாரம இரணியகசிபுவினுடைய சேவகாளான தயித்தியதானவாளாலேலோகமெல்லாம் நாசம்பண்ணப்படுகையில் எக்கியபாகங்களில்லாமையால் தேவதைகள் சொர்க்கத்தைவிட்டுப் பூமியிலேபோய் ஒருவருக்குந்தெரியாமல் சஞ்சரித்துக்கொண் டிருந்தார்கள் இரணியகசிபுவும்சோகத்திலே பீடிக்கப்பட்டவனாய் லோகாந்தரகேதனான பிராதாவுக்குச் செய்யத்தக்க பிரேதகிருத்தியங்களையெல்லாம்செய்து அந்தப்பிராதாவினுடைய பிள்ளைகளைச் சமாதானம்பண்ணி சகுனியையும் சம்பிரனையும் திருஷ்டனையும், பூதசந்தாபனனையும், விருகனையும் காலநாபனையும் மகாநாபனையும், அரிஸ்மசுருவையும் உதகேசனையும் இவாளுடைய மாதாவான ருஷாபானுவையும் தாயாரான திதியையும்அழைத்து சௌமிய வசனத்தி

ணுலே தேசகாலங்களை அறிந்தவனுய்அசுரேசனுனஇரணியன் ஒருவார்த்தை சொல்லுகின்ருன்,

வாராய்தாயாரே வாராய்மருமகளேவாருங்கள்புத்திரர்களே வீரனுனஇரணியாக்ஷனேக்குறித்து நீங்கள் சோதிக்கிறதுயுக்தமன்று சூரர்களானபேருக்குச்சத்துருவினுடைய எதிரேவதமானதுசிவாக்கியமாகச் சொல்லப்படுகின்றது வாராய்சோபனமான விரதத்தையுடையவளே, தெய்வசத்தியினுலேயும், பூர்வகர்மத்தினுலேயும் ஒருவிடத்திலே கூட்டுவிக்கப்பட்டவர்களாயும் திரும்பவும் தங்கள்தங்கள் கர்மங்களிலேபிரிக்கப்பட்டவர்களாயுமிருக்கிற பிராணிகளுக்குச் சகவாசமானது அநித்தியமாகவிருக்கிறது ஆத்துமா நித்தியனுயும் நாசமில்லாதவனுயும் சுத்தனுயும் சர்வபரிபூரணனுயும் சர்வக்ஞனுயும் தேகாதிகளேக்காட்டிலும் வேருகவு மிராநிற்கிருன் இப்படிப்பட்ட ஆத்துமாதன்னுடைய மாய்கையினுலே சத்வாதிகுணமயங்களான தேகங்களேச் சிருஷ்டித்துகொண்டு லிங்கதேகத்தைத் தரிக்கின்ருன் எப்படியானுல் சலத்திலே பிரதிபலியாநின்றவிருக்ஷங்கள்அலேயாநின்றஜலத்தினுலே அதுகளும்சலிக்கிறதுகள்போலகாணப்படுகிறதாயும் சுழலாநின்ற நேத்திரத்தினுலே பூமியும்சுழல்கிறதுபோலக் காணப்படுகிறதாகவும் சத்துவாதி குணங்களினுலே மனதுசுழலுகையில் நிர்விகாரனுனபுருஷன் அந்தமனதுடனே காமியத்தையடைந்துசுபாவமாகத் தேகதர்மத்தை யுடையவன்போலக்காணபபடுகிருன் அந்தஆத்மாவுக்குத் தேகத்திலே நான் தேவன் மனுஷியன் பிராமணன் க்ஷத்திரியனென்கிற அபிமானம் யாதொன்றுண்டோ இதுவேஅக்கியானம் இந்தஅக்கியானமூலமாகப் பிரியவஸ்துக்களோடு கூடுகையும், அப்பிரியவஸ்துக்களேவிட்டுப்பிரிகையும். கர்மமும் அந்தக்கர்மமூலமாக நானுயோனிகளிலே பிரவேசமும் அதில்நின்றும் வெளிப்படையாகிற வுற்பத்தியும் விநாசமும்சோகமும் மோகமும்- சிந்தையும் அவிவேகமும் இவையெல்லாம் உண்டாகிறது விசனத்துக்குஏதுவில்லாமல் விருதாவாய் வியசனப்படுகிற இந்த அர்த்தத்திலே பிரேதபந்துக்களுக்கும் எமனுக்கும்சம்வாதரூபமான இந்தஇதிகாசத்தைச் சொல்லுகிறேன், கேளுங்கள் எப்படியென்ருல் உசிநறமென்கிறதேசத்திலே சுவயெக்கியனென்று பிரசித்தனுய் ஒருராஜனிருந்தான் அவன்சத்துருக்களால் யுத்தத்தி லடிபட்டுப்போனுன் பிறகுஅவனே கியாதிகளெல்லாரும்வந்து சூழ்ந்துகொண்டு பாணங்களினுலே சேதிக்கப்பட்ட இரத்தினமயகவசத்தை யுடையவனுயும் நழுவியிருக்கிற ஆபரணங்கள் மாலேகள் இதுகளேயுடையவனுயும் பாணத்தினுலேபிளக்கப்பட்ட இருதயப்பரதேசத்தை யுடையவனுயும் யுத்தபூமியிலே படுத்துக்கொண்டு இரக்தங்களினுலே பூசப்பட்டிருக்கிறவனுயும் தலேமயிர்களே விரித்துக்கொண்டு இருக்கிறவனுயும் நிச்சலமான நேத்திரங்களேயுடையவனுயும் கோப வேகத்தினுலே உதடுகளேக் கடித்துக்கொண்டுமிருக்கிறவனுயும் தூளிகளினுலே மூடப்பட்ட முகாரவிந்தத்தையுடையவனுயும்,தெய்வத்தினுலே இந்தப்பிரகாரம் பண்ணப்பட்ட பதியான அந்த ராஜாவை அவனுடைய ஸ்திரீகளெல்லாருஞ் சூழ்ந்துகொண்டு துக்கிதர்களாய் ஆநாரதா, நாங்கள்தெய்வத்தினுலேகெடுக்கப்பட்டோமேயென்றுசொல்லிக்கொண்டு கைகளினுல் மார்பிலேமிகவும் அடிக்கடி அடித்துக்கொண்டு அந்தப்பதியினுடைய பாதசமீபத்திலே விழ்ந்து உரக்கஅழுதுகொண்டு இஷ்டபர்த்தாவினுடையபாதாரவிந்தத்தில் குசங்களிலிராநின்ற குங்குமக்குழம்புகள் சிவந்திருக்கிறகண்ணீர்களினுலேநனேய கெஜங்கள் ஆபரணங்கள் இதுகளெல்லாம்நழுவிப்போக துக்கம் அதிகரிக்கவிறிட்டுப் பிரலாபிக்கத்தொடங்கினர்கள்.

வாராய்பர்த்தாவே, நித்தயனுன தெய்வத்தினுலே கண்ணுக்குத்தெரியாததிசையை அடைவிக்கப்பட்டாய் முன்னேஉசினறதேசத்திலே யிருக்கிறபேருக்கெல்லாம்சீவனங்களேக் கற்பித்தானல்லவா, இப்போதுஅவர்களுக்குத் தெய்வத்தினுலே துக்கத்தை விருத்திபண்ணுவித்தாய் வாராய்மஹிஷபதியே கிருதக்கியனுயும்மிகவும் சுகிர்தாயுமிருக்கிற உன்னேவிட்டு நாங்களெல்லாரும்எப்படியிருக்கப்போகிறேம் உன்னுடையபாதங்களிலே சிசுருஷைபண்ணிக்கொண்டிருக்கிற எங்களுக்கு நீ அடைந்த அந்தலோகத்திலேஅனுகமனதைக்கொடுக்கக் கடவாயென்று மிருதனுன பதியைஎடுத்து மடியில்வைத்து அந்தஸ்திரீகள் ரோதனம் பண்ணிக்கொண்டிருக்கையில் சூரியனும்அஸ்தமனமானுன். அப்போதுஅவிடத்திலே அந்தமிருதனுனராஜபந்துக்களுடைய பிரலாபத்தைக்கேட்டு எமனுனவன் தானே ஒருபாலகனுகவந்துஅவர்களேப்பார்த்துஒருவார்த்தைசொல்லுகிருன் வயதுசென்றவளாயும் லோகத்தினுடைய ஜனனமரணதியையறிந்துமிருக்கிற இவர்களுடையமோகத்துக்கு என்னசொல்லப்போகிறேம் ஆச்சரியமாயிருக்கிறது மனுஷியனுனவன் எந்தஅவ்வியக்கத்தி லிருந்தும் வந்தானே அந்தஅவ்வியக்கத்தையேஅடைந்திருக்கிறஅவனேக்குறித்து வியர்த்தமாகத்துக்கிக்கிருர்களல்லவாநாமோ மிகவும்தன்னியர்களாகவிருந்து யாதொருபகவான் கெர்ப்பத்திலே ரக்ஷிக்கப்படுகிறேமோ அந்தப் பகவானே எங்கும்ரக்ஷிக்கிருர் இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தும்-ரட்சித்தும்-சங்கரிக்கிருர் சங்காரத்திலேயும் - ரட்சிக்கிறதிலேயும் - பிரபுவாயிருக்கிற அந்த ஈஸ்வரனுக்கு இந்தப் பிரபஞ்சத்தைக் கிரீடாசாதனமாகச் சொல்லுவார்கள். கிரகத்திலேமாதாபிதாக்கள்முதலானபந்து

வர்க்கங்களினாலே ரட்சிக்கப்பட்டிருந்தாலும் ஈஸ்வரனுடைய கடாக்ஷமில்லாதவன் நசித்துப்போகிறான் தேவாதிசமஸ்ததேகங்களானதுகள் அங்கசரீரநிமித்தமான அந்தக்கர்மங்களினாலேயுற்பத்திகாலத்திலேயுண்டாகிறது விநாசகாலத்திலே நசித்துப்போகிறது அந்தச்சரீரத்திலேயிராநின்ற ஆத்மாவானவன் தேகாதிவிலட்சணனாய் சரீரத்தினுடையஜெனனமரணமுதலான தர்மங்களினாலே சம்பந்திக்கப்படுகிறதில்லை பாஞ்சபவுதிகமாயும்அவிவேகத்தினாலே ஆத்மாவென்று கிரகிக்கப்பட்டு மிருக்கிற இந்தத்தேகமானது ஜெலபரமாணுக்களினாலேயுண்டானநீர்க்குமிழிகளும் பாரதிப் பரமாணுக்களினாலுண்டானகடபடாதிகளும் தேஜசுபரமாணுக்களினாலேயுண்டான கடககுண்டலாதிகளுந் திரும்பவும் நசிக்கிறதுபோலப்-பிரிதிவு-அப்பு-தேசசு-இதுகளினாலே யுண்டான இந்தச்சரீரமும் ஆவிர்ப்பவித்து நசிக்கிறது ஆத்மாவோவென்றால் ஒருக்காலும் நசிக்கிறதில்லை எப்படியானால் ஆகாசமானது சர்வத்தையும்வியாபித்துக்கொண்டிருந்தாலும் ஒன்றுடனேயும் சங்கத்தை யடையாமலிருக்கிறதுபோலப் புருஷனும் சமஸ்தமான தேகாந்திரியாதிகளை ஆஸ்ரயித்திருந்தாலும் அதுகளைக் காட்டிலும் வேறாகத்தானேயிருக்கிறான்.

வாருங்கள்மூடர்களே, உங்களுடையபர்த்தாவான அந்தச்சுவயக்கியனானவன் இவடத்திலே படுத்துக்கொண்டிருக்கிறானா என்னவென்றுதுக்கிக்கிறீர்கள் உங்களுடையரோதனத்தைக் கேழ்க்கிறவனெவனோ பிரிதிவசனஞ்சொல்லுகிறவனெவனோ அந்தப்புருஷன் இவடத்திலே ஒருக்காலுங் காணப்படப்போகிறதில்லை இந்தத்தேகத்திலே சாவேந்திரியங்களுடைய வியாபாரத்துக்குஏதுவாயும் முக்கியனாயுமிருக்கிறபிராணனானவன்கேழ்க்கவுமாட்டான் பிரதிவசனஞ்சொல்லவுமாட்டான் இந்தச்சரீரத்திலே யாதொரு ஆத்மாவானவன் தேகேந்திரியங்களினாலே சகலமான அர்த்தத்தையும் பார்த்துக்கொண்டிருந்தானோ அந்தஆத்மாவானவன் பிராணதேகாதிகளுக்குவேறாய் விலட்சணனாக விருப்பன் பஞ்சபூதங்கள்-இந்திரியங்கள்-மனதுகள்-இதுகளுடனேகாணப்படாநின்றும் நானாவிதங்களாயுமிருக்கிற இந்தத் தேகங்களை தேகாகதிகளைக்காட்டிலும் வேறாயும் நித்தியனாயுமிருக்கிற ஆத்மாவானவன் நான்எனதென் றெண்ணுகிறான் தன்னுடையவிவேகபலத்தினாலே நான்எனதென்கிற அபிமானத்தைவிட்டுவிடுகிறானல்லவா இந்த ஆத்மாவானவன் எந்தமட்டுக்கும்தேகத்திலே நான்எனதென்கிற அபிமானத்தையுடையவனாகவிருக்கிறானோஅந்தமட்டுக்குமந்த ஆத்மாவுக்குக் கர்மமானது பந்தயேதுவாகவிருக்கிறது ஆகையினாலே தேகதர்மத்தைஅடைந்திருக்குகையும் அதினாலே கிலேசமும் இந்த ஆத்மாவுக்கு அக்கியானமூலமாக வுண்டாகிறது எப்படியானால் சொற்பனம் மனோரதங்கள் அபத்தமோ அதுபோலே சத்வாதிகுணகாரியங்களான சுகமுதலானதுகளிலே எதார்த்தமென்கிற புத்தி யாதொன்றுண்டோ இந்தஅபிநிவேசமானது அபத்தமென்றும் இந்திரியங்களினால்உண்டாகாநின்ற சுகமுதலான சமஸ்தமும் ஆத்மாவுக்கு அபத்த மென்றும் அறியத்தக்கது ஆகையினாலே ஆத்மாவை நித்தியனாகவும் தேகத்தை அனித்தியமாகவும், அறியாநின்ற கியானிகள் வியசனப்பட்டார்கள் இப்படிப்பட்டகியானம் திடமாயில்லாததினாலே வியசனப்படுகிறபேர்களுடைய சுபாவமாகவிருக்கிறதுகாட்டிலேவேடனானவன் பட்சிகளுக்கெல்லாம்மிருத்தியுவாக ஈஸ்வரனாலேபண்ணப்பட்டவனாய் அங்கங்கேவலையைப்பரப்பிக்கொண்டு மிருகங்களுக்கு மாங்கிஷமுதலானதினாலே ஆசையை யுண்டாக்கிக்கொண் டிருந்தான்.

இப்படி யிருக்கையில் ஸ்திரீயும் புருஷனுமாய்ச்சஞ்சரித்துக்கொண்டிருக்கிற குலிங்கபட்சிகளில் பெண்பட்சியானது மாங்கிஷாதிகளினாலே வஞ்சிக்கப் பட்டதாய்அவனுடையவலையிலே காலகெதியினால்அகப்பட்டது அப்படிஅகப்பட்டிருக்கிற பெண்பட்சியைப்பார்த்து புருஷ பட்சியானது மிகவும் சினேகத்தினால் துக்கித்துக்கொண்டு அந்தஆபத்தில்நின்றும் விடுவிக்க அசமர்த்தமாய் தீனமாயிருந்துகொண்டு பாரியைக்குறித்துப் பிரலாபித்து, அகோதெய்வத்துக்குத் தயையில்லாமற்போச்சுதே அநாதனான என்னைக்குறித்துத் துக்கிக்கின்றஇந்தப்பட்சியினாலே என்னசெய்யப்போகிறதுஅந்தத்தெய்வமானதுசீக்கிரமாகஎன்னையுங்கொண்டுபோகட்டும்அற்பபாக்கியனாயும்ஸ்திரீசூநியனாயும்மகாதுக்கத்தோடேசீவியாநின்றுமிருக்கிற இந்தச்சரீரத்தினாலே எனக்கென்னபிரயோசனம் நான் தாயில்லாமலும் இறகு முளையாமலுமிருக்கிறகுஞ்சுகளை யென்னமாய்ரட்சிக்கப்போறேன், பாக்கியயீனங்களான என்னுடைய குஞ்சுகள் கூண்டிலேயிருந்து தாயைப்பார்த்துக்கொண் டிருக்குமல்லவாவென்று பிரலாபியாநின்றும் ஸ்திரீவியோகத்தினாலே கண்ணீரைப்பெருக்கிக்கொண்டும் துக்கிதுக்கொண்டுமிருக்கிற அந்தப்பட்சியை வேடன்மறைவாகஇருந்துகொண்டு காலத்தினாலே ஏவப்பட்டவனாய் பாணத்தினாலடித்துப்போட்டான்.

இந்தப்பிரகாரம் புத்தியீனர்களாயும் உங்களுடைய நாசத்தை அறியாதவர்களாயும் துக்கித்துக்கொண்டிருக்கிறநீங்கள் அனேகவருஷங்களாலேயும் இந்தப்பர்த்தாவை யடையப்போகிறதில்லையென்று பாலவேஷங்கொண்டஎமனானவன்சொல்லி மறைந்துபோய்விட்டான். அப்போது சமஸ்தமான அந்தஸ்திரீகளும் கியாதிகளும்ஆச்சரியத்தையுடைய மனதுடனேகூடினவர்களா

யச் சர்வ பதார்த்தத்தையும் அனித்தியமாகவும் எதார்த்தமல்லவென்றும் அறிந்தகியாதிகளும் அந்தசுவயக்கியனுக்குப் பிரேதபிதுர்காரியங்களென்னவுண்டோ அதுகளையெல்லாம்செய்தார்கள் ஆகையினலே நீங்கள் அன்னியனைக்குறித்தும் தன்னைக் குறித்தும் துக்கிக்கவேண்டாம்-தானுவதார்-அன்னியனுவதார்-தன்னுடையதாவதெது. அன்னியனுடையதாவதெது, பிராணிகளுக்குத் தானென்றும், அன்னியனென்றும், தன்னுடையதென்றும், அன்னியனுடையதென்றும், அபின்வேசமானது, விருதா அக்கியானமேயொழிய வேறில்லையென்று இரணியன் சொன்னன்.

வாராய்தருமபுத்திரரே, இந்தப்பிரகாரஞ்சொல்லுகின்றதயித்தியபதியான இரணியனுடையவாக்கியத்தைக் கேட்டு மருமகளுடனேகூட திதிதேவியானவள் க்ஷணத்திலே புத்திரசோகத்தை விட்டு தத்துவத்திலே மனதைத்தரித்தாளென்று நாரதமகாமுனியானவர் திருவாய்மலர்ந்தருளினர்,

## ௩-வது அத்தியாயம்,

கலிவிருத்தம்.

உற்றகசிபுவி னுக்கிரமாந்தபசினற்
பெற்றிடும்லோகத் தைப்பிர்ம்மாவானவர்
சற்றாச்சர்ய மடைந்துசந்துஷ்டனய்
நற்றவ்வரங்களை நண்ணினனரோ.

இரணியகசிபுவினுடைய உக்கிரமானதபசினலேதகிக்கப்பட்டலோகத்தைப் பிரம்மாவானவர்பார்த்து ஆச்சரியத்தையடைந்து சந்துஷ்டனய் அவனுக்குவேண்டிய வரங்களைக்கொடுத்தானென்று சொல்லப்படுகின்றது.

நாரதர் வாக்கியம்.

வாரீர்தருமபுத்திரரே இரணியகசிபுவானவன்தன்னைஒருத்தராலேயும் ஜெயிக்கப்படாதவனகவும் சேராமரணருனியராகவும் தனக்குச் சமானமில்லாதவனகவும் ஜெகத்துக்கெல்லாம் ஏகராஜாவாகவும் இராச்சியபாரம் பண்ணவேணுமென்று கோறி அந்த இரணியகசிபுவானவன் மந்தரபர்வதத்தினுடைய தாழ்வரையிலே உயரஎடுக்கப்பட்ட பாகுக்களை யுடையவனய் ஆகாசத்திலே திருஷ்டியையுடையவனய் கால்பெருவிரலாலே பூமியிலேநின்றுகொண்டு மகாஉக்கிரமான தபசைச்செய்து தன்னுடைய சடையினது காந்தியினலேயும் கிரணங்களினலேயும்-பிரளயகாலத்துச் சூரியன்போலவிளங்கினன், இந்தப்பிரகாரம் அந்த இரணியகசிபுவானவன் தபசுபண்ணுகையில் முன்னலே அந்த இரணியனுக்குப்பயப்பட்டு பூமியிற் கண்ணிலேபடாமல் சஞ்சரித்துக்கொண்டிருந்த தேவதைகள் திரும்பவும் தங்களுடைய ஸ்தானங்களை அடைந்தார்கள், இப்படி தபசுபண்ணுகின்ற அந்த இரணியகசிபுவினுடைய சிரசில்நின்றும் தபோமயமான அக்கினியானது தூமத்துடனேகூட உண்டானதாய் லோகங்களை நாலுபக்கமும் பரவினதாய் தகிப்பித்தது அப்போதுநதிசமுத்திரங்களெல்லாம்கலங்கினதுகள் திவிபங்கள் பர்வதங்களுடனே கூடின பூமி நடுங்கிற்று, கிரகங்களுடனே நட்சத்திரங்கள் விழுந்தது கள்பத்துத்திக்குகளிலும்ஜொலிப்பித்ததுகள்-தேவதைகள் அவனுடைய தபோஅக்கினியினலே தகிக்கப்பட்டவர்களாய் சுவர்க்கத்தை விட்டுப் பிரம்மலோகத்தை யடைந்து பிரம்மாவைப்பார்த்து விக்கியாபனம் பண்ணுகிருர்கள்,

வாரீர்தேவதேவனே ஜெகத்பதியே- தயித்தியேந்திரனன இரணியனுடையதபசினல் தகிக்கப்பட்டவர்களாய் சொர்க்கத்தி லிருக்கக்கூடாமையா யிருகின்றது வாரீர்நிரதிசை மகாத்மியத்தையுடையவரே- லோகங்கள்அவனுடையதபோ அக்கினியினலேநாசத்தையடைவதற்குமுன்னே அதற்கொருசாந்தியைப்பண்ணும்ஒருத்தராலுஞ் செய்யக்கூடாத தபசைப் பண்ணுகின்றஅந்தஇரணிய கசிபுவினுடைய சங்கற்பமானதுஉமக்குத்தெரிந்திருந்தாலும்எங்களுக்குத் தெரிந்தவரையில்சொல்லுகிருேம் என்னவென்ருல் பிரம்மாவானவர்சராசரசொரூபமான இந்தப்பிரபஞ்சத்தைத் தபசினலேயும்-யோகத்தினலேயும் சமாதியினலேயும் சிருஷ்டித்துச்சமஸ்தமான ஸ்தானங்களைக் காட்டிலும் உத்தமஸ்தானமான சத்தியலோகத்திலே எப்படி யிருக்கிருரோஅப்படிநானும் விர்த்தியடைந்து தபோயோக சமாதியினலே-காலம்-ஆத்மா-இதுகள் நித்தியமானபடியினலே நமக்கும் அப்படிப்பட்ட பிரபுத்துவத்தைச் சம்பாதிக்கக்கடவேன். இந்தப் பிரபஞ்சத்தைத் தேவஅசுராள்முதலான பிராணிகளால் வித்தியாசமாக ஸ்தாபித்து முன்போலிராமல் பண்ணிப் போடப்போகிறேன், காலத்திலகப்பட்டதாயும் கற்பாந்தகால மிராநின்ற துருவன்முதலானபேர்களுடையஸ்தானங்களினல்பிரயோஜனமென்னவென்று இந்தப்பிரகாரம் சங்கற்பித்தவனய் அந்த இரணியகசிபுவானவன் பண்ணக்கூடாத தபசைப்பண்ணுகிருனென்று கேட்டோம் ஆகையினலே வாரீர்திரிலோகேஸ்வரனே, இந்தவிஷயத்தில் எதுயுக்தமோ அதைநீர்தானே சீக்கிரமாகப் பண்ணக்கடவீர் வாரீர்ஜெகத்பதியே உம்முடைய சர்வோத்தமமான ஆதிபத்தியமானதுபிராமணளுக்கும்பசுக்களுக்கும்-சுபத்தின்பொருட்டும்-சுகத்தின்பொருட்டும் அயிஸ்வரியத்தின்பொருட்டும்-க்ஷேமத்தின்பொருட்டும்-ஜெயத்தின் பொருட்டும்இருக்கிறதல்லவாவென்று விக்கியாபனம்பண்ணதை நாரதமகாமுனிவரானவர் தர்மபுத்திரருக்குச் சொல்லிப் பின்னையுஞ் சொல்லுகின்ருர்.

நாரதர் வாக்கியம்;

வாரீர் தர்மராஜனே இந்தப்பிரகாரம் தேவதைகளினாலே விக்கியாபனம் பண்ணப்பட்டவனாய் பகவானான பிர்ம்மாவானவர் பிற்பாடு தெக்ஷன்முதலான நவப்பிரஜாபதிகளினால்சூழப்பட்டவனாய் தயித்தியேஸ்வரனான இரணியகசிபுவினுடைய ஆஸ்ரமத்தையடைந்து அதின்மத்தியிலே புற்றுக்களாலும் திரணங்களாலும மூங்கில்களாலுமறைக்கப்பட்டவனாயும் எறும்புகளினால்பக்ஷிக்கப்படாநின்ற சர்மம் மாங்கிஷம் இரத்தம் இருதயப்பிரதேசத்திலிருக்கிற கொழுப்புகள் இவைகளையுடையவனாயுமிருக்கிற அந்த இரணியகசிபுவைப் பார்த்து மிகவும்மாச்சரியத்தை யுடையவராய் ஒருவார்த்தை சொல்லுகின்றார் வாராய் காசியபுத்திரனான இரணியகசிபுவே உனக்குமங்களம் தபசித்தியுண்டாகக் கடவது தபசைவிட்டெழுந்திரு உனக்கு வரத்தைக்கொடுக்கவந்தேன் உனக்கிஷ்டமானவரத்தைக்கேள் நானுன்னுடைய அத்தியற்புதமான இந்தத்தைரியத்தைப்பார்த்தேன் காட்டெருக்களினால் பிடுங்கப்பட்ட தேகத்தையுடையவனான உன்னுடையபிராணன்கள் அஸ்திகளை ஆஸ்ரயித்துக்கொண் டிருக்கிறதுகள் இப்படிப்பட்டதபசைப் பூர்விகளானரிஷிகளும்பண்ணவில்லை இனிமேலொருவரும் பண்ணப்போகிறதுமில்லை எவன்தான் 'திர்த்தபானமும்பண்ணாமலிருந்துகொண்டு பிரான்களைத் திவ்வியவருஷத்தினால் நூறுவருஷந்தரிப்பன் வாராய் திதிநந்தனனே தபசிகளுக்குஞ்செய்யக்கூடாமலிருக்கிற உன்னுடையதபசினால்ஜெயிக்கப்பட்டேன் ஆகையால்வாராய்அசுரசிரேஷ்டனேஉனக்கு வேண்டியவரங்களெல்லாங்கொடுக்கிறேன் மனனசீலனான உனக்கு நித்தியனானஎன்னுடையதெரிசனம் வியர்த்தமாகப் போகிறதல்லவென்று பிர்மாவானவர்சொல்லி எறும்புகளினால்பக்ஷிக்கப்பட்டதேகத்தையுடைய இரணியகசிபுவை அமோகமானவீரியத்தையுடையதாயும் திவ்வியமாயுமிருக்கிற கமண்டலசலத்தினால் புரோக்ஷித்தார்.

இரணியகசிபுவாக்கியம்.

இந்தப்பிரகாரம் புரோக்ஷித்தபிற்பாடு அந்தஇரணியகசிபுவானவன் மூங்கிற்புதறினாலேசூழப்பட்டபுற்றில்நின்றும் காந்தி மனோபலம் சரீரபலம் இதுகளுடனேகூடினவனாய் சர்வஅவயவங்களுனேகூடி வச்சிரம்போலத் திடமானசரீத்தையுடையவனாய் எவ்வனபுருஷனாய் உருக்கிவிட்ட தங்கம்போலொத்த காந்தியையுடையவனாய் காஷ்டத்தில்நின்றும் ஜொலியாநின்ற அக்கினிபோலஎழுந்திருந்து ஆகாசத்தில்அம்சவாகனத்தின்பேரிலேயிராநின்ற பிர்மாவைப்பார்த்து அவரைக் கண்டதினாலே மகாசந்தோஷத்துடனே கூடினவனாய்பூமியில் சிர்சினாலேபிரணமம்பண்ணிஎழுந்திருந்துஅஞ்சலிபந்தம்பண்ணி வணக்கத்தை யுடையவனாய் கண்களினாலே பிர்மாவைப்பார்த்துக்கொண்டுஆனந்தபாஷபத்தினாலே புளகாங்கிதனாய் தழைதழைத்தசொல்லுகளினாலே இரணியகசிபுவானவன் ஸ்தோத்திரம்பண்ணுகிறான்.

கற்பாந்தத்திலே காலத்தினால் சிருஷ்டிக்கப்பட்டதாயும் பிரகிருதிகுணமாயும் மகாந்தகாரமாயுமிருக்கிற தமோகுணத்தினாலே சூழப்பட்டிருக்கிற இந்தஜெகத்தை சுவயம்பிரகாசரானபகவான் தம்முடையதேஜசுனாலேபிரகாசிப்பித்து அந்தபகவான் திரிமூர்த்திரூபமாயிருந்துகொண்டு இந்தத்தேகத்தைச்சிருஷ்டித்தும் ரக்ஷித்தும். சங்கரித்தும், சத்துவரஜஸ்தமோகுணங்களுக்கு ஆஸ்ரயராயும் மகாபுருஷராயுமிருக்கிறஅந்தப்பரமாத்மாவுக்குப் பிரணமம்பண்ணுகிறேன், ஆதியாயும், காரணமாயும் கியானவிக்கியானமூர்த்தியாயும் பிராணேந்திரியமனோபுத்திவிகாரங்களினாலே பிரகாசிக்கப்பட்ட சுரூபத்தையுடையவராயுமிருக்கிற வுமக்குப் பிரணமம், நீரோஸ்தாவரசங்கரூபமான பிரபஞ்சத்துக்குச்சூத்திராத்மரூபத்தினாலே நியந்தாவாகவிருக்கின்றீர் ஆகையினாலேபிரஜைகளுக்கு ரக்ஷகராயிருந்து அந்தப் பிரஜைகளுடைய சித்தத்திற்கும் கியானத்திற்கும் மனதிற்கும், இந்திரியங்களுக்கும் பாதியாகஆகின்றீர். ஆகாசாதிபஞ்சபூதங்களுக்கும் அதுகளுடையசப்தாதி விஷயங்களுக்கும் வாசனைகளுக்கும் ஈஸ்வரனாகவிருந்து நீரோ நாலுஹோதாக்களையுடையதான எக்கியகர்மவிஷயமானமந்திரங்களினாலேயும் மூன்றுவேதசுரூபமானசரீரத்தினாலேயும் அக்கினிஷ்டோமமுதலான எக்கியங்களை விஸ்தாரமாகப்பண்ணுகிறீர் பிராணிகளுக்கெல்லாம் அந்தராத்மாவாயும் அநாதியாயும் சர்வக்கியராயும்தேசகாலங்களினாலே அளவிடக்கூடாதமகிமையை யுடையவராயும் அகண்டசுரூபராயுமிருக்கிற பரமாத்மாவாகவிருக்கிறீர் நீரோ நிர்விகாரராயும் கியானசுரூபராயும் பரமேஸ்வரராயும் சென்மில்லாதவரர்யும் அளவில்லாதவராயும்நியந்தாவாயுமிருக்கிறீர் வேதம், உபதேசம்முதலானதசமஸ்த வித்தைகளும் வேதாகங்களும் உம்முடைய சரீரங்களாகவிருக்கிறதுகள் இந்தபிர்மாண்டத்தைக்கெர்ப்பத்திலேயுடையவராயும், பிரகிருதியைக்காட்டிலும் பராராயுமிருக்கிற பரப்பிர்மமாகவிருக்கிறீர்,

வாரீர்விபுவே காரியமான இந்தப்பிரபஞ்சம்உமக்குச்சரீரமாகவிருக்கிறது, அந்தச்சரீரத்தினாலே இந்திரியம் பிராணன்மனது இதுகளுடையகுணங்களை நீர்பரமேஸ்வரராகவிருந்துகொண்டு அநுபவிக்கிறீர். வாரீர் அநந்தரே மனோவாக்குகளுக்கும் விஷயமல்லாதரூபத்தையுடையவரான வும்மாலே இந்தஜெகத்தானதுவியாபிக்கப்பட்டிருக்கிறது ஜீவப்பிரகிருதிகளைச்சரீரமாகவு

டையவராயும் பகவானுயுமிருக்கிற உமக்குப்பிரணாமம் வாரீர்வாதோத்தமனே எனக்கு வேண்டிய வரங்களைக் கொடுக்கிறவரே யானால் உம்மாலே சிருஷ்டிக்கப்பட்ட பிராணிகளில்நின்றும் எனக்குமரணமில்லாம லிருக்கத் தக்கது, எப்படியானால்உள்ளேயும்,வெளியிலேயும் பகலிலேயும், ராத்திரியிலேயும், பூமியிலேயும்,ஆகாசத்திலேயும், உம்மாலேயும்சிருஷ்டிக்கப்படாமல் யாதொன்றிருக்கிறதோ அதினாலேயும், ஆயுதங்களினாலேயும்,மனிதர்களாலேயும், மிருகங்களாலேயும், பிராணனில்லாதவஸதுக்களாலேயும்பிராணன்களுடனே கூடினவஸ்துக்களினாலேயும்,சுரராளாலேயும்,அசுரராளாலேயும்சர்ப்பசாதிகளினாலேயும் எனக்குமரணமுண்டாகாம லிருக்கத்தக்கது யுத்தத்திலேஎனக்குச்சமானமில்லாமலிருக்குகையும் சகலபிராணிகளுக்கும் நானொருவனேபிரபுவாயிருக்குகையும்கொடுக்கக்கடவீர், சமஸ்தமானலோகபாலாளுடையஐசுவரியத்தையும்,தபசு-யோகம்- இதுகளினாலே மகாப்பிரபாவத்தையுடையபேர்கள்ஒருக்காலும் நசியாமலிருக்கிற அணிமாதிஐசுவரியத்தையும்,உமக்கிருப்பதைப்போல எனக்குக்கொடுக்கக்கடவீரென்று இரணியகசிபுவானவன் ஸ்தோத்திரம்பண்ணினான்,

## ௬-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

பேசிடுங்கசிபு வானோன்வரம்பெற்று
பாசமாம்சதஸ லோகபாலாளையும்
நேசமாய்ச்செயித் துவிஷ்ணுவின்னிட
தாசில்த்வேஷத்தி னலறைந்திட்டதே.

இரணியகசிபுவானவன்வரங்களைப்பெற்றுசதஸலோகபாலாளையும்ஜெயித்து விஷ்ணுவினிடத்தில் துவேஷத்தினாலே அந்தலோகபாலாளைப்பீடித்தானென்றுசொல்லப்படுகின்றது.

நாரதர்வாக்கியம்,

வாராய்தர்மபுத்திரனே, பிர்மாவானவர் இந்தப்பிரகாம் இரணியகசிபுவினாலே வரிக்கப்பட்டவராய் அவனுடையதபசினாலே சந்தோஷத்தையடைந்து ஒருவராலும்அடையக்கூடாமலிருக்கிற அந்தவரங்களை அவனுக்குக்கொடுத்து அவனைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறார்,

பிர்ம்மதேவர்வாக்கியம்,

வாராய்குழந்தாய் நீஎந்தவரங்களைஎன்னிடத்தில் கேட்கிறையோ அந்தவரங்கள் புருஷாளுக்கு அடையத்தக்கதன்று ஆனாலும் அன்னியாளுக்கு மிகவும் துல்லபங்களான இந்தவரங்களைக்கொடுத்தேனென்று சொல்லி பிர்மாவானவர் அசுரசிரேஷ்டனான இரணியகசிபுவினாலே பூசிக்கப்பட்டவராய் தம்முடைய லோகத்தையடைந்தார்,

நாரதர்வாக்கியம்,

இந்தப்பிரகாரம் பிர்மதேவரிடத்தில்நின்றும் சகலவரங்களையும்பெற்றிருக்கிற அந்த இரணியகசிபுவானவன்சொர்னம்போலொத்த சரீரத்தையுடையவனாய் பிராதாவினுடையவதத்தை நினைத்துக்கொண்டு பகவானிடத்தில் துவேஷத்தைப்பண்ணினான் பிற்பாடு அந்த இரணியகசிபுவானவன் சமஸ்தமானதிக்குகளையும் மூன்றுலோகங்களையுஞ்செயித்து - தேவாள்-அசுராள்-மனுஷியாள்-கெந்தருவாள்-உரகங்கள்-கெருடமான்கள்-சித்தாள் சாரணாள்-வித்தியாதராள்-ரிஷிகள்-பிதுர்க்கள்-மனுக்கள் எக்ஷாள்-ராக்ஷசாள்-பிசாசங்கள்-பிரேதங்கள்- பூதசிரேஷ்டங்கள் சகலபிராணிகளிலே சிரேஷ்டங்களா யிருக்கப்பட்டதுகளையும் செயித்து சுவாதீனம் பண்ணிக்கொண்டு சமஸ்தத்தையுஞ் செயித்தவனாய் லோகபாலாளுடையஸ்தானங்களை அவர்களுடைய தேஜசுடனேகூட அபகரித்தான் தேவோத்தியான ஸ்திரீயோடே கூடிக்கொண்டிருக்கிறசுவர்க்கத்தை ஆக்கிரமித்தவனாய்விசுவகர்மாவினாலே நிருமிக்கப்பட்டதாயும் திரைலோக்கிய சாம்பிராச்சிய லட்சுமிக்கிருப்பிடமாயும்சர்வசம்பத்துகளுடனேயும் கூடிக்கொண்டிருக்கிற சாக்ஷாத் தேவேந்திரனுடையகிரகத்திலே வாசம்பண்ணிக்கொண் டிருந்தான் அந்த இந்திரனுடையகிரகத்திலே பவழங்களினாலேகட்டப்பட்ட படிகளையுடையதுகளான மரகதமாணிக்கங்களினாலேயிழைக்கப்பட்ட பூமிகளும் ஸ்படிகமயங்களானசுவர்களும் விசித்திரமான மேற்கட்டு வஸ்திரங்களும் பதுமராகமயங்களான ஆசனங்களும் பால்நுரைக்குச்சமானமான முத்துமாலைகளினாலே அலங்கரிக்கப்பட்டதாயுமிருக்கிற சயனங்களும் சோபனமான தந்தங்களையுடையவர்களான தேவஸ்திரீகள் காற்சிலம்புகளினாலேநாலுபக்கத்திலேயும்,சப்திக்க ரத்தினமயங்களானபிரதேசங்களிலே சுந்தரமானதங்கள்முகத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்டமகேந்திரகிரகத்திலே மகாபலசாலியாயும் தைரியத்தையுடையவனாயும் மிகவுந்தீவரமான ஆக்கினையையுடையவனாயும் லோகங்களையெல்லாம்ஜெயித்து ஏகராஜாவாயு மிருக்கிற அந்த இரணியகசிபுவானவன் தன்னாலேதாபத்தைஅடைவிக்கப்பட்டதேவாள்முதலான சமஸ்தமான பேராலேயும் வணக்கப்பட்ட பாதயுகளத்தையுடையவனாய் விகசித்துக்கொண்டிருந்தான்.

வாரீர் தருமராஜனே, மிகவும் பரிமளித்துக்கொண்டிருக்கிற மத்தியபானத்தினாலேமதித்தவனாயும் சுழன்றுகொண்டும் சிவந்துமிருக்கிற நேத்திரங்களை யுடையவனாயும், தபோயோக பலங்களினாலே உண்டான் சா

மார்த்தியங்களுக் கிருப்பிடமான அந்த இரணியகசிபுவைதிரிமூர்த்திகளைத்தவிர சமஸ்தலோகபாலாளும்உலப்பைகளுடனே கூடின அஸ்தங்களை யுடையவர்களாய் உபாசித்துகொண்டிருந்தார்கள், வாராய்பாண்டுபுத்திரனேபராக்கிரமத்தினுலே மகேந்திரனுடையசிங்காசனத்திலேறியிருக்கிற இரணியகசிபுவை விசுவாவசு தும்புருநாரதர் இவாள்முதலான-கந்தருவாள்-சித்தாள்-ரிஷிகள்-விக்கியாதராள்-அப்சரசுக்கள் இவாள் அடிக்கடி கானத்து- வமிகவும் ஸ்தோத்திரம்பண்ணிக்கொண்டுமிருந்தார்கள். அந்தஇரணியகசிபுவானவன்தானேபிராமணுதி வர்ணங்களிலேயும் பிர்ம்மசரியாதிஆசிரமத்தையுடையவர்களாலேயும், வெகுதெட்சணைகளையுடையதான எக்கியங்களினுலேயும், ஆராதிக்கப்பட்டவனுய்தன்னுடையதேஜசினுலே அவிற்பாகங்களைக் கிரகித்துக்கொண்டிருந்தான், அப்போது அந்தஇரணியகசிபுவுக்குபூமியானது உழுது பயிரிடாம லிருக்கச்சேயும், சகலமானபயிர்களையும், உடையதாயிருந்தது சொர்க்கமோவென்றுல் அவனுக்குவேண்டிய இஷ்டங்களைக்கொடுத்துக்கொண்டிருந்தது, ஆகாசமானது நானுவித ஆச்சரியங்களுக்கும் இருப்பிடமாயிருந்தது, லவணம்-இட்சு-சுரா-சற்பி-ததி-க்ஷீரம் -சலில மென்னப்பட்ட ஏழுசமுத்திரங்களும் சமுத்திர பத்தினிகளான நதிகளும் அலைகளால் ரத்தினசமூகங்களைக்கொடுத்ததுகள், பர்வதங்களானதுகள் தாழ்வரையில் கிரீடா யோக்கியமான ஸ்தானங்களைத்தரித்ததுகள், விருட்சங்களானதுகள் சகல ரிதுக்களிலேயும் உண்டாகாநின்ற பலபுஷ்பங்களைத் தரித்ததுகள். அந்த இரணியகசிபுவானவன் தானொருத்தனே சமஸ்தலோகபாலாளுடைய வெவ்வேறுன தகனசோஷணுதிகுணங்களைத் தரித்தான், இந்தப்பிரகாரம் ஜெயிக்கப்பட்ட சமஸ்த திக்குகளை யுடையவனுயும் தானேயேகராஜாவாயுமிருக்கிற இரணியகசிபுவானவன் இந்திரியபரவசனுய் இஷ்டமானவிஷயங்களை யெதேஷ்டமாகஅனுபவித்துக்கொண்டு திருப்தியில்லாமலும் அயிஸ்வரியமத்தனுயும், கர்வியாயும், சாஸ்திரத்தை அதிக்கிரமித்துநடவாநின்றும், பிரம்மநிஷ்டாளுடைய சாபத்தையடைந்தவனுயுமிருக்கிற இரணியகசிபுவுக்கு வெகுவானகாலங்காண்டிப்போச்சுது, அந்தஇரணியகசிபுவினுடையஉக்கிரமான ஆக்கினைக்குப்பயப்பட்டவர்களாய்லோகபாலாளுடன்கூடின சமஸ்தலோகங்களும்வேறேரட்சகனை அடையாதவர்களாய் அச்சுதனையே சரணமாக அடைந்து சாந்தாளாயும், நிர்மலாளாயுமிருக்கிறசந்நியாசிகள்யாதொருவைகுண்டத்தையடைந்து திரும்பவும்பிறக்கிறதில்லையோ அப்படிப்பட்ட வைகுண்டத்துக்குப்பிரணுமமென்று தேவாதிகள் சமஸ்தமானபேரும்நிட்சித்தாளாய் பரிசுத்தமான மனதுடனே கூடினவர்களாய் பகவானிடத்திலேவைக்கப்பட்டபுத்தியையுள்ளவர்களாய்வாய்வுபோஜனம்பண்ணிக்கொண்டுநித்திரையைவிட்டவர்களாய் ரிஷிகேசனைத்தியானபூர்வகமாக ஸ்தோத்திரம்பண்ணினுர்கள். கியானசத்திமுதலான குணங்களையுடையவராயும் மகாபுருஷனுயும், மகாத்மாவாயும், விசுத்தக்கியானனந்த அனுபவசந்தோஷத்தையுடையவராயுமிருக்கிறசுவாமிக்குப்பிரணுமமென்று மந்திரத்தினுல்தியானம்பண்ணுகின்ற அந்ததேவதைகள்முதலானபேருக்குமேககெற்சனைபோல்திக்குகளையெல்லாம்சதியாநின்றும்சாதுக்களுக்கெல்லாம் அபயஸ்தங்கொடுத்துக்கொண்டுமிருக்கிற ஒருஅசரீரிவாக்கானது உண்டாயிற்று,

வாருங்கள்தேவசிரேஷ்டாளே பயப்படாதீர்கள்உங்களெல்லாருக்கும் க்ஷேமம்உண்டாகக்கடவது, நம்முடையசந்தெரிசனமானது சமஸ்தபிராணிகளுக்கும் சகலசிரேயசுக்களையும், அடையும்பொருட் டல்லவா அந்தராட்சசஅதமனுன இரணியகசிபுவினுடைய துர்நடத்தையானதுஎன்னுலே அறியப்பட்டிருக்கிறது அதற்குச்சாந்திபண்ணப்போகிறேன், காலத்தைப்பார்த்துக்கொண்டிருங்கள் எப்போது அந்த அசுரனுக்குவேதங்களிடத்திலும், தேவதைகளிடத்திலும், கோக்களிடத்திலும், பிராமணுளிடத்திலும், சத்புருஷாளிடத்திலும், தர்மத்திலும், என்னிடத்திலும்மிகவும்துவேஷமுண்டாச்சுதோ ஆகையினுலேஅவன்சீக்கிரமாகநசித்துப்போகப்போகிருன், நிர்வயிரனுயும், ராகத்வேஷாதிசூனியனுயும், மகாத்மாவாயும், தன்னுடையபுத்திரனுயுமிருக்கிற பிரகலாதனனுக்கு எப்போது துரோகம் பண்ணுகிருனே அப்போதுபிர்மாவினுடையவரங்களினுலே பலவானுயிருந்தாலும் அந்த இரணியகசிபுவைக் கொல்லப்போகிறேனென்று லோககுருவான அரியினுலேசொல்லப்பட்டவர்களாய் தேவதைகளானவர்கள் அந்தப்பகவானைப்பிரணுமஞ்செய்து பயத்தைவிட்டவர்களாய் திரும்பிவந்தார்கள், அதற்குப்பிற்பாடு அந்ததயித்தியபதியானஇரணியகசிபுவுக்கு மகாஅற்புதாளான நாலுபிள்ளைகள் பிறந்தார்கள்.

அவர்களுக்குள்ளே பிரகலாதனன் குணத்தினுலேசிரேஷ்டனுயிருந்தான், அதெப்படியென்றுல் பெரியவாளைஉபாசிக்கிறவனுயும், பிராமணுளைதெய்வமாகவுடையவனுயும், சிலவானுயும், சத்தியசந்தனுயும்- ஜிதேந்திரியனுயும், சர்வபூதங்களுக்கும் ஆத்மாவைப்போல ஏகனுய்பிரியசுகுர்தாயும், சமனுயும்-தாசனைப்போல் பெரியோர்களுடைய பாதாரவிந்தத்திலேவணங்கினவனுயும் பிதாவைப்போல் தீனவாற்சல்லியத்தையுமுடையவனுயும் பிராதாவைப்போல சமனுளிடத்திலேசிநேகத்தையுடையவனுயும், பெரியவாளிடங்களிலே ஈஸ்வரபக்தியை யுடையவனுயும் வித்தைஅர்த்தம் ஜென்மம்ரூபம் இதுகளினுலேபூரணனுயும் அபிமானம்கெர்வம் இதுகளி

னலேவஞ்சிக்கப்பட்டவனும், வியசனங்களிலேபயப்படாமலிருக்கிற மனதை யுடையவனும் கேழ்க்கப்பட்டும்பார்க்கப்பட்டு மிருக்கிற விஷயங்களிலே இச்சையில்லாதவனும் சப்தாதி விஷயங்களிலே வஸ்துபுத்தியில்லாதவனும் நிக்கிரகிக்கப்பட்ட இந்திரியப்பிராண சரீரபுத்திகளை யுடையவனும். சர்வகாலமும் சாந்தமான காலத்தையுடையவனும் அசுரனயிருந்தும்அசுரபாவமில்லாதவனும் இப்படிப்பட்டகுணங்களினலே சர்வகாலமும் பிரகலாதனன் சிரேஷ்டனயிருந்தான்.

வாரீர்தர்மராஜனே அந்தப்பிரகலாதனிடத்திலே மகத்துக்களுடைய குணங்களானதுகள் கவிகளினலேஅடிக்கடிகிரகிக்கப்பட்டிருக்கிறதுகள் பகவானன்வாசுதேவனிடத்திலே அந்தப்பிரகலாதனுக்கு சுபாவீகமாகப்பக்தியுண்டாகி அந்தப்பாலனயிருக்கையிலும்பாலியலீலைகளைவிட்டவனய் மூடன்போல பகவானிடத்திலே மனதைச் சமர்ப்பித்திருக்கிறபடியினலே அந்த ஸ்ரீகிருஷ்ணனுகிறகிரகத்தில் கிரகிக்கப்பட்ட மனதையுடையவனய்ஜெகத்தை இப்படிப்பட்டதென்று அறியாமலிருந்து கோவிந்தனலே கிரகிக்கப்பட்ட இருதயத்தையுடையவனய்போஜனம்பண்ணமலும் சயனித்துக்கொள்ளாமலும்பானம்பண்ணமலும், வார்த்தை சொல்லாமலிருந்தாலும் வைகுந்தனுடைய சிந்தையோடுகூடின புத்தியையுடையவனய் ஒருக்கால் ரோதனம்பண்ணுகிறவனும் கோவிந்த குணனுபவத்திலே யுண்டான சந்தோஷத்தையுடையவனய் நகைக்கிறதும் கானம்பண்ணுகிறதும் கண்டத்தைவிட்டு உரக்கக் கூப்பிடுகிறதும் இலச்சையில்லாமல் நிர்த்தனம்பண்ணுகிறதும் அந்தக்கிருஷ்ணனுடைய தியானத்தோடு கூடினவனய் தன்மயனயிருந்து அகிஞ்சனளான பிரபன்னருடைய சகவாசத்தினலே அடையப்பட்ட புண்ணிய கீர்த்தியான் பகவானுடைய பாதாரவிந்தசேவையினலே ஆத்மாவுக்குமிகவும் சுகத்தை விஸ்தரித்துக்கொண்டு துஷ்டாளுடைய சகவாசத்தினலே தைரியத்தையடைந்த அன்னிய புருஷனுடையமனதுக்கும் சுகத்தைப்பண்ணினன்,

வாராய்ராஜனே மகாத்மாவாயும் மகா பாகவதனயுமிருக்கிறபிள்ளையான அந்தப்பிரகலாதனிடத்திலே இரணியகசிபுவானவன் துரோகத்தைப்பண்ணினனென்று சொல்லுகின்ற நாரதமகாமுனியைப் பார்த்துத் தருமபுத்திரர்சொல்லுகின்றர்.

தருமபுத்திரர்வாக்கியம்.

வாரீர்தேவரிஷியேசோபனமானவிரதத்தையுடையவரே சாதுவாயிருக்கும் புத்திரனன பிரகலாதனனுக்குப்பிதாவான இரணியகசிபு எதற்காகத் துரோகத்தைப்பண்ணினனே அதைஉம்மிடத்தில்நின்றும்அறியவேணுமென்று இச்சிக்கிறேன் லோகத்திலே புத்திரவாற்சல்லியத்தை யுடையவர்களானபிதாக்கள் பிரதிகூலாளாயும் சுகியாளாயுமிருக்கிற பிள்ளைகளைச் சிட்சிக்கிறநிமித்தியமாக வெறுத்துக் கொள்ளுவர்கள் சத்துருவைப்போலதுரோகத்தைப் பண்ணமாட்டார்களல்லவா, அனுகூலாளாயும், ராகத்வேஷாதி சூனியாளாயும் பிதாவேதெய்வமாகவுடையவர்களாயுமிருக்கிறபுத்திரர்களுக்குச்சொல்லவேண்டியதென்ன வாரீர்பிர்மநிஷ்டரே புத்திரவிஷயத்திலேபிதாவானவன்மரணத்தின்பொருட்டாகதுவேஷத்தைச் செய்தான்என்கிற இந்த அர்த்தத்தைக்கேழ்க்கவேணு மென்கிற இச்சையைப் போக்கடியுமென்று தர்மபுத்திரரானவர் நாரத மகாமுனியுடன் சொன்னர்,

## ரு-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

குருவினற்சொலுங் கோதிலாவித்தைவிட்
டருமைவிஷ்ணுவின் தோத்ரவாசக்தியார்
பெருமைசேர்ப்பிரகலாதனைக்கசிபானேன்
குரூரசர்ப்பத்தாற் கொல்லுகைச்சொல்லுமாம்.

குருவினலே சொல்லப்பட்ட வித்தையைவிட்டுவிஷ்ணுவினுடைய ஸ்தோத்திரத்திலே ஆசக்தியையுடையவனனபிரகலாதனனை இரணியகசிபுவானவன்சர்ப்பமுதலானதுகளினலே கொல்லுகைக்குச் சமர்த்தனகாமற்போனனென்று சொல்லப்படுகின்றது.

நாரதர்வாக்கியம்,

வாரீர் தர்மபுத்திரனே அசுரர்ளாலே பகவானன சுக்கிராசாரியன் பவுரோகித்தியகர்மத்தின்பொருட்டுவரிக்கப்பட்டவனல்லவா அந்தச் சுக்கிரா சாரியருடைய சண்டனென்றும், அமர்க்கனென்றும், பிரசித்தாளான இரண்டுபிள்ளைகள் தயித்தியராஜனன இரணியகசிபுவினுடைய கிரகத்திலே வாசம் பண்ணிக்கொண் டிருந்து இவாளிருவரும் இராஜாவான இரணிய கசிபுவினலே வித்தியாபியாச நிமித்தமாக விடப்பட்ட பாலனன பிரகலாதனையும்,பின்னையும், படிக்கத்தக்கவர்களானசிலஅசுரபுத்திராளையும், ராஜநீதிகளைப் படிப்பித்தார்கள், அந்தசுக்கிர புத்திராளுடைய பள்ளிக்கூடத்திலே குருவினலே யாதொன்று சொல்லப்பட்டதோ அதைப் பிரகலாதனன்கேட்டு அவாள்சமீபத்திலேபடித்தான்தானென்றும் பிறத்தியானென்றும் வித்தியாச மில்லாத அபிமானத்தை ஆஸ்ரயமாகவுடைய குருவினலே சொல்லப்பட்ட அந்தக்கிரந்தத்தைமனதினலே நன்றாகஎண்ணவில்லை.

வாராய்தர்மபுத்திரனே ஒருக்கால் அசுரராஜனன அந்தஇரண்யகசிபுவானவன்பிள்ளையானபிரகலாதனனை மடியிலேவைத்துக்கொண்டு குழந்தாய்நீயாதொன்றை

நல்லமார்க்கமாயெண்ணியிருக்கின்றையோ அதைச் சொல்லக்கடவாயென்று கேளாநின்ற தகப்பனைப்பார்த்துப் பிரகலாதனன்சொல்லுகிறான் வாராய் அசுரராஜனே நானெனதென்கிற அகங்காரமமகாரங்களினாலே சர்வகாலமும் தொந்தமனதையுடையவர்களானபிராணிகளுக்கு ஆத்மநாசமானகிரகாஸ்ரமமாகிற பாழுங்கிணற்றைவிட்டுத் தபோவனத்தையடைந்து ஸ்ரீஹரியைப்பஜனம்பண்ணவேணுமென்கிற இந்தமார்க்கத்தைநல்லதாகஎண்ணுகிறேனென்றுசொல்ல அந்த இரணியாசுரனானவன் சத்துருவானவிஷ்ணுபக்ஷத்தை ஆஸ்ரயித்திருக்கிற பிரகலாதனனுடையவார்த்தைகளைக்கேட்டுச் சிரித்தவனாய் அன்னியர்களுடையபுத்திகளினாலே பாலனுடையபுத்தியானது பேதிக்கப்பட்டுப்போச்சுதென்று எண்ணிக்கொண்டு குருபுத்திரர்களைப்பார்த்துச்சொல்லுகிறான் குருவினுடையகிரகத்திலே வேறொருவேஷங்களினாலே மறைந்துகொண்டிராநின்ற விஷ்ணுபக்தர்களானபாகவதர்களாலே இவனுடையபுத்தியானது பேதிக்கப்படாமல் உங்களாலேயாவது நன்றாகவிசாரிக்கப்படட்டுமென்று ஆக்கியாபித்துக் குருகுலத்துப்பிள்ளையை அனுப்பிவைத்தான், பிற்பாடு இரணியகசிபுவினுடைய புரோகிதாள் தங்கள் கிரகத்திலேவந்த பிரகலாதனனை அழைத்துக் கொண்டாடி மிருதுவானநல்லவார்த்தைகளினாலேகேட்கின்றார்கள்,

குருபுத்திராள்வாக்கியம்,

வாராய்குழந்தாய்பிரகலாதனனே, உனக்குநன்மையுண்டாகக்கடவது, உள்ளபடிக்குச்சொல்லு அபத்தஞ் சொல்லாதே கூடப்படிக்கிறபிள்ளைகளைவிட உனக்குமாத்திரமிந்தவிபரீத புத்தியானது அன்னியர்களாலே போதிக்கப்பட்டதோ, அல்லதுசுதாவாயுண்டாச்சுதோ வாராய்வம்ஸிஷத்தைச்சந்தோஷிப்பியாநின்றபுத்திரனே இதைக்கேழ்க்கவேணுமென்று இச்சியாநின்றோம், குருவாயுமிருக்கிற எங்களுக்குச் சொல்லக்கடவாயென்று கேளாநின்ற குருபுத்திரர்களைப்பார்த்துப்பிரகலாதனன் சொல்லுகிறான்,

பிரகலாதனன்வாக்கியம்,

கேளுங்கள்குருபுத்திரர்களே, எந்தப்பகவானுடையமாயையினால் மோகிக்கப்பட்ட புத்தியையுடையவர்களான உங்களுக்குத் தன்னவனென்றும் பிரத்தியானென்றும் இந்தஅசத்தான் ஆக்கிரமானது பண்ணப்பட்டிருக்கிறதோ அப்படிப்பட்டபகவான்பொருட்டுப்பிரணாமம்பண்ணுகிறேன் அந்தப்பகவான் எப்போதுஅனுகூலமாகிறாரோ அப்போதுபுருஷாளுக்குப் பசுபுத்தியைப்போல இவன்வேறு நான்வேறென்கிற அசத்தானஇந்தப்பேதப்புத்தியானது தள்ளப்பட்டுப் போகிறது அறியக்கூடாதசெயலையுடையவரான அந்தப் பரமாத்துமாவானவர் தன்னவனென்றும், பிரத்தியானென்றும், விவேகசூனியர்களாலே சொல்லப்படுகிறார் எந்தப்பரமாத்மவிசாரத்திலே வேதவாதிகளான பிர்ம்மாதிகளும், மோகிக்கிறார்களோ அந்தப்பரமாத்மாவேஎன்னுடைய புத்தியைப்பேதிக்கிறான், வாரீர்பிராமணனே இரும்பானது அயஸ்-காந்தம் சமீபத்தி லிருக்கச்சேதானே எப்படிச்சுழலுமோ அந்தப்பிரகாரம்என்னுடையமனதானது சக்கிரபாணியினுடைய சந்நிதானத்தில் சுயவிச்சையாகவே பேதிக்கிறதென்று மகாமதியான அந்தப் பிரகலாதனன் இவ்வளவுவார்த்தையைக் குருவின்பொருட்டுச்சொன்னார், அந்தத்தயித்தியகுருவானவன் கோபத்தையடைந்து தீனனாய்ப் பிரகலாதனனைப்பார்த்து மிரட்டிஒருவார்த்தைசொல்லுகின்றார்.

குருவாக்கியம்,

அடா பிரம்பைக்கொண்டுவாடா, நமக்குஅபகீர்த்திஉண்டாக்குகிறவனையும், குலநாசகனையும், துற்புத்தியையுடையவனையுமிருக்கிறவனுக்குத்தண்டனையேசெய்யத்தக்கது, அசுரகுலமாகிற சந்தனவனத்திலேபிரகலாதனனாகிற ருஷவிருக்ஷம்பிறந்தது, அந்தச் சந்தனவனத்தை வேரோடேநாசம்பண்ணுகிற கோடாலியாயிருக்கிறவிஷ்ணுவுக்கு இந்தப்பயல் கோடாலிக் காம்புபோலாகின்றானென்று அந்தப் பிரகலாதனனை நானாவிதமாகமிரட்டி தர்மார்த்தகாம மோக்ஷங்களைவிவரித்துச்சொல்லாநின்ற சாஸ்திரங்களைச்சொல்லிவைத்தார் பிற்பாடு அந்தக்குருவானவர் பிரகலாதனனைச் சாமபேததானதண்டமென்கிற சதுர்விதவுபாயங்களை அறிந்தவனாகஎண்ணி தாயாராலேஸ்நானஞ்செய்வித்து அலங்கரிக்கப்பட்டிருக்கிற அவனைதயித்தியேந்திரனான இரணியகசிபுவினுடையசமீபத்திலேயழைத்துக்கொண்டுபோய்க்காண்பித்தான். அந்தஇரணியகசிபுவும் தன்னுடையகாலிலேநமஸ்கரியாநின்றபாலகனைச் சந்தோஷத்துடனே ஆசீர்வசனஞ்செய்து கைகளினாலேதழுவிக் கட்டிக்கொண்டு பரமசவுக்கியத்தையடைந்தான். வாரீர் தர்மபுத்திரரே, பிற்பாடு அந்தப்பிரகலாதனனை மடியிலேஎடுத்து வைத்துக்கொண்டு உச்சிமுகந்து ஆநந்தபாஷ்பங்களினாலே அவனைநனைத்து மலர்ந்தமுகத்தையுடையவனாய்ச் சொல்லுகிறான்,

இரணியகசிபுவாக்கியம்,

வாராய்பிரகலாதனனே, தீர்க்காயுளையுடையவனே நீஇதுவரையில் குருவினிடத்தில்நின்றும் யாதொருவித்தையை அப்பியாசித்தையோ அதிலே சாரமாயிருக்கிற ஒன்றைச்சொல்லென்றுகேட்கின்ற தகப்பனைப்பார்த்துப் பிரகலாதனன்சொல்லுகின்றான்,

பிரகலாதனன்வாக்கியம்.

வாராய் எனதுபிதாவே, விஷ்ணுவினுடைய நாம

சிரவணமும், கீர்த்தனமும், ஸ்மரணமும், கயிங்கரியமும் அர்ச்சனமும், வந்தனமுஞ்செய்தகர்மத்துக்குப் பகவதர்ப்பணமும் இந்தப்பிரகாரம் ஒன்பதுவிதமானபக்தியானது புருஷனாலே அவ்வியசிக்கப்பட்டுதேயானால் அதைச்சாரமாயிருக்கிறஅர்த்தம் அவ்வியசிக்கப்பட்டுதென்றெண்ணுகிறேனென்று சொல்லுகின்ற பிரகலாதனனுடைய வசனத்தைக்கேட்டு இரணிய கசிபுவானவன் ரோஷத்தினாலே அதரந்துடிக்கக் குருபுத்திரனைப் பார்த்துச்சொல்லுகிறான்.

இரணியகசிபுவாக்கியம்,

வாராய்பிராமணோத்தமனே, உனக்குதுற்புத்தியுண்டானதென்ன சத்துருவான விஷ்ணுபட்சத்தைஆஸ்ரயித்தவனும், அசத்தாயுமிருக்கிறஉன்னாலேஎன்னையும்அனுகரவுபண்ணி நம்முடையபிள்ளையானவன் அசாரமாயிருக்கிறஅர்த்தத்தை அத்தியயனம்பண்ணிவைக்கப்பட்டான். லோகத்திலே அசாதுக்களானவர்கள் துஷ்டமான சினேகத்தை யுடையவர்களாயும் கபடவேஷத்தையுடையவர்களாயுமிருப்பர்களல்லா, அவர்களுக்குத் துவேஷமானது காலாந்தரத்திலே பிர்மஅத்தியாதிபாபங்களைப்பண்ணினபேர்களுக்கு க்ஷயரோக முதலான வியாதியுண்டாவதுபோலஉண்டாகின்றதென்று சொல்லுகின்ற இரணியகசிபுவைப்பார்த்துகுருபுத்திரன்சொல்லுகிறான்,

குருபுத்திரன்வாக்கியம்.

வாராய் இந்திரசத்துருவே, உன்னுடைய பிள்ளையானவன் நான்சொல்லிவைத்ததையுஞ் சொல்லவில்லை அசலார்சொல்லியதையுஞ் சொல்லவில்லை, இவனுக்கு இந்தக்கியானம் சுபாவசித்தமாகவிருக்கிறது வாராய்ராஜாவே, கோபத்தையடக்கு நம்மிடபேரிலே தோஷத்தையெண்ணாதேயென்று குருபுத்திரன்சொன்னபின்பு இரணியாசுரன் மறுபடியும் பிள்ளையைப்பார்த்து ஒரு வார்த்தைசொல்லுகின்றான்.

இரணியகசிபுவாக்கியம.

வாராய்பாபியே, உனக்கிந்த துஷ்டபுத்தியானது குருமுகமாகவுண்டாகாமற்போனால் பின்னையாரிடத்தில்நின்றும் உண்டாச்சுதென்று கேட்கின்ற இரணியகசிபுவைப்பார்த்துப் பிரகலாதனன்சொல்லுகின்றான்.

பிரகலாதனன்வாக்கியம்.

கிரகத்திலேசெய்யவேண்டிய சங்கற்பத்தையுடையவர்களாயும் ஒருக்காலும்விஷயானுபவத்தினாலே திருப்தியையடையாத இந்திரியங்களினால்சங்காரத்திலேஅடையாநின்றும் அந்தச்சுங்காரத்தில் அடிக்கடி அனுபவித்ததையேஅனுபவித்துமிருக்கிறபேர்களுக்கு ஸ்ரீகிருஷ்ணனிடத்திலேபுத்தியானது தங்களாலேயும் குருவினாலேயும்உண்டாகிறதில்லை, துஷ்டசித்தர்களாயும் சம்பாதிவிஷயங்களிலே அபிமானத்தையுடையவர்களாயிருக்கிறபேர்கள் ஈசனுடையவாக்குரூபமான மகத்தான கயிற்றினாலே கட்டப்பட்டபேர்களாய்குருடராலே அழைத்துக்கொண்டுபோகப்பட்ட குருடரானவர்கள் எப்படிமார்க்கத்தை அறியமாட்டார்களோ அப்படிப் பிரபன்னாலே அடையத்தக்கவரான ஸ்ரீவிஷ்ணுவை அறியமாட்டார்கள், இப்படிப்பட்டபேர்களுடைய புத்தியானது மகானுபாவர்களையும், நிஷ்காமனுமிருக்கிற பாகவதர்களுடைய பாதரஜசுனாலே எந்தமட்டுக்கும் அபிஷேகத்தைக்கோராமலிருக்கிறதோ அந்தமட்டுக்கும் உருக்கிரமனான ஸ்ரீமந்நாராயணனுடைய பாதாரவிந்தத்தை யடையமாட்டாதென்றுசொல்லி மவுனத்தை யடையாநின்றபுத்திரனை இரணியகசிபானவன் ரோஷத்தினாலே மூடமனதையுடையவனாய் தன்மடியிலேநின்று பூமியிலேதள்ளிவிட்டுப்பின்னையுஞ்சகிக்கக்கூடாதகோபத்தையும்சிவந்தகண்களையுமுடையவனாய் ஒருவார்த்தைசொல்லுகின்றான்.

இரணியகசிபுவாக்கியம்.

வாருங்கள்அசுரர்களே, கொல்லுகைக்குயோக்கியனை இவனைச்சீக்கிரமாகக்கொன்றுபோடுங்கள், இல்லாவிட்டால் தேசத்தைவிட்டுத் துரத்திவிடுங்கள், இந்தப் பிரகலாதனானவன் மித்திரர்களையும் சுவஜனங்களையும்விட்டுவிட்டுத் தன்னுடைய சிறியதகப்பனைக் கொன்ற விஷ்ணுவினுடையபாதங்களைத் தாசன்போலப் பூசிக்கிறான் ஆகையினாலே இவனை என்னுடையபிராதாவைக்கொன்றவன், ஐந்துவயதாயிருக்கிற இந்தப் பிரகலாதனனானவன் விடக்கூடாமலிருக்கிற மாதா பிதாக்களுடைய சிநேகத்தையும் விட்டுவிட்டான். அப்படிப்பட்ட துஷ்டனாயிருக்கிறவன் அந்தவிஷ்ணுவுக்குத் தான் பிரீதிவரும்படியாய் எந்தநன்மையைச்செய்யப்போகிறான், சத்துருவானாலும் அவிழ்தம்போல இதத்தைச் செய்தானேயாகில் அவனேபுத்திரனென்று அறியத்தக்கது தன்சரீரத்திலே பிறந்தபிள்ளையானாலும் ரோகம்போல ப்பிரதிகூலத்தைச் செய்தானேயாகில் சத்துருவென்று அறியத்தக்கது, சரீரத்திலேயாதொருஅவயவம் தேகத்துக்கு உபத்திரவகாரியாயிருக்கிறதோ அந்த அவயவமானது சேதித்துப்போடத் தக்கதல்லவா, அந்த அங்கத்தைச் சேதித்துப்போட்டதினாலே மற்றஅங்கங்கள் சுகமாகஜீவிக்குமல்லவா ஆகையினாலே மித்திரன்போல வேஷதாரியாயும் சத்துருவாயுமிருக்கிற இந்தப்பிரகலாதனனைவனைப் போஜனம்-சயனம்-ஆசனம் - இதுகளிலே விஷப்பிரயோகமுதலான சமஸ்த வுபாயங்களினாலேயும் கொல்லத்தக்கதென்று இரணியகசிபுவினாலே ஆக்கியாபிக்கப்பட்டவர்களாய் சூலபாணிகளாயும் தீக்ஷணமான தந்தங்களை யுடையவர்களாயும், பயங்கரமான

முகத்தை யுடையவர்களாயும் தாம்பர வனமான தாடி தலைமயிர்களை யுடையவர்களாயுமிருக்கிற அந்த அசுரா ள்பயங்கரமான அட்டகாசத்தைப் பண்ணினவர்களாய் வெட்டு குத்தென்று சொல்லிக்கொண்டு அங்கேயிராநி ன்றபிரகலாதனனைச் சூலங்களினாலேசகலமர்மஸ்தலங் களிலேயுங்குத்தினார்கள் அப்போது சர்வாந்திரியாமியா யும்,ஙியானசக்திமுதலான குணங்களையுடையவராயும்ப ரப்பிர்மமாயுமிருக்கிற ஸ்ரீமந்நாராயணனிடத்திலேவைக்க ப்பட்டமனதையுடையவனானபிரகலாதனிடத்திலேஅந் தஅசுராளுடைய செயல்களெல்லாம் தேவதாபக்தியில் லாதவனுடைய சத்கர்மங்களைப்போலவியர்த்தமாய்விட் டதுகள். வாரீர்தர்மநந்தனே, அசுராள் அவனைக்கொல்ல வேணுமென்றுஎத்தனப்பட்ட அந்தப்பிரயாசம்வியர்த்த மாய்ப்போவதால் தயித்திய:திபதியான இரணியகசிபு வானவன்-சங்கையுடையவனாய் நிற்பந்தத்துடன் அவனை க்கொல்ல உபாயத்தைச் செய்தான். என்னவென்றால் அந்தஇரணியகசிபுவானவன் திக்கெஜங்களாலும்சர்ப்ப ங்களாலும் அபிசாராதிபிரயோகங்களாலும்-மாய்கைக ளாலும், அவயம்பந்தனாதிகளாலும், பர்வத சிகரங்களி ல்நின்று தள்ளிவிடுகையாலும், விஷப் பிரயோகங்களா லும், போஜனங்கொடாம லிருப்பதாலும்-பனி வாய்வு- அக்கினி-ஜலம்-இதுகளாலும் நிரபராதியான அந்தப் பி ரகலாதனைக் கொல்லச்சமர்த்தனாகாமல் தீர்க்கமானமன தையடைந்து இந்தப்பிள்ளையானவன் நம்மால்வெருவி தமாகச் சபிக்கப்பட்டான்- கொல்லத்தக்க வுபாயங்களு ம்அனேகங்களாகப் பண்ணப்பட்டதுகள்-ஆனாலும் பிர கலாதனானவன் தன்னுடையபிரபாவத்தினாலேயே அந் தந்தஉபத்திரவங்களாலும் அபிசாரங்களாலும் விடப்ப ட்டவனாய் சமீபத்திலிருந்துகொண்டு பாலனானாலும் நி ற்பயசித்தனாகவிருந்து என்னுடைய சத்துரு பாவத்தை சிசிகமகாவிஷ்ணுவினுடைய மத்தியபுத்திரனை சுனஸ்செப னானவன் அம்பரிஷமகாராஜாவுக்கு விற்கிரையம் பண் ணப்பட்டவனாய் தன் மாதாபிதாக்களுடைய அபகாரத் தை யெப்படி நினையாமலிருந்தானோ அப்படியாகநினைக் கவில்லை ஆகையால் இந்தப்பிள்ளை அளவிடக்கூடாதபி ரபாவத்தை யுடையவன் ஒன்றுக்கும் பயப்படத்தக்கவ னல்ல நிச்சயமாக இவனுடைய விரோதத்தினால் நமக்கு மிருத்தியுண்டாகுமோ என்னமோவென்று சிந்தனையி னாலேதேஜஸில்லாதவனாய கவிழ்ந்துகொண் டிராநின்ற இரணியாசுரனைப்பார்த்து சுக்கிரன் புத்திரரானசண்ட ன்அமர்க்கன்- இவர்கள் ஏகாந்தத்தில் சொல்லுகின்றா ர்கள்.

அசுரநாயகனே உன்னால் புருவங்களுடையநெறிப்பி னால்பயப்படாநின்ற சமஸ்தலோக பாலர்களை யுடையதா னஇந்த மூன்றுலகமும் ஜெயிக்கப்பட்டது அப்படிப்ப ட்ட உனக்கு வியசனப் படத்தக்க தொன்றுமில்லை சுக் கிராசாரியர் வருகிறபரியந்தம் இந்தப் பிள்ளையானவன் பயப்பட்டுவோடிப்போகாமலிருக்கும்படிகயிறுகளால்க ட்டிவைக்கக்கடவாயென்று குருபுத்திராள்சொன்னதை க்கேட்டு அப்படியே செய்கிறேனென்று அங்கீகரித்து அவாளைப்பார்த்துச் சொல்லுகிறான்.

குருபுத்திரர்களே நீங்கள்இவனுக்கு ராஜதர்மங்களை யும் கிரகஸ்ததர்மங்களையும்-உபதேசியுங்களென்று இர ணிய கசிபுவினாலே சொல்லப்பட்டவர்களாய் பிற்பாடு அந்தக்குருபுத்திராள் மிகவும் வினயத்துடனே கூடின அந்தப்பிரகலாதனனுக்குத் தர்மார்த்தகாமங்களைவரிசை யாகமிகவும் உபதேசித்தார்கள்.குருக்களினாலேதனக்கு உபதேசிக்கப்பட்ட அந்ததர்மார்த்தகாமங்களை சாரமா கஎண்ணாமல் தன்னோடு சமானவயதை யுடையவர்களா யும் விளையாடவேணுமென்கிற இச்சையை யுடையவர் களாயுமிருக்கிற பாலாளாலே அழைக்கப்பட்டவனாய்ம காபுத்திமானாயும்அவாளுடையஜெனனமரணங்களைஅ றிந்தவனாயுமிருக்கிற அந்தப் பிரகலாதனானவன் கிரு பையினாலே அந்தப்பாலாளை யழைத்து மிருதுவசனத் தினாலே அவாளிடத்திலே சிரித்துக்கொண்டவர்க்கேஇ தோபதேசம்பண்ணுவன் அவாளெல்லா மவனிடத்தில் கவுரவத்தினாலே விளையாடுகிற சாமக்கிரிகைகளையெல் லாம்விட்டுவிட்டுவிஷயப்பிரமனுளானகுருபுத்திரரால் சொல்லப்பட்ட வசனங்களினால் தூஷிக்கப்படாதபுத்தி யையுடையவர்களாய்அந்தப்பிரகலாதனிடத்திலேயே வைக்கப்பட்ட இருதயத்தையும்-நேத்திரங்களையும், உ டையவர்களாய் அந்தப் பிரகலாதனை அனுசரித்துக் கொண்டிருந்தார்கள், வாராய்ராஜேந்திரனே மகாதயா ளுவாயும் மகாவாச்சல்லிய முடையவனாயும் பாகவதனா யுமிருக்கிறஅந்தப்பிரகலாதனானவன் அந்தப்பிள்ளைகளை ப்பார்த்து ஒருவார்த்தை சொல்லத் தொடங்கினான்.

## கூ-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

கற்றிடுங்குரு ராசியின்கார்யத்திற்
சொற்றிடுங்கியா பகத்திற்சுகிக்கையில்
குற்றமிற்பிரக லாதன்குமாரரை
நற்றயையொடு நன்குபதேசித்தார்.

குருவானவர் கிரகத்தினுடைய காரியத்திலேவியாபித் திருக்கையில் பிரகலாதனன் தயித்தியகுமாரர்களைஅழை த்துத் தயைபண்ணிகாரதராலேதனக்குச்சொல்லப்பட் டபாகத்துவத்தை அவர்களுக் குபதேசித்தா னென்று சொல்லப்படுகின்றது.

பிரகலாதனன்வாக்கியம்,

வாருங்கள்பிள்ளைகளே இந்த லோகத்திலே புத்தி மானானவன் கவுமாரவயதிலேதர்னே பாகவத தர்மங்க

ளைப்பண்ணக்கடவன் மனுஷியஜென்மம் கிடைக்கத்தக்க தன்று புருஷார்த்தசாதனமான அந்தஜென்மம் கிடைத்தபோதைக்கும் அனித்தியமாயிருக்கும் ஆகையினால் சர்வாந்திரியாமியான விஷ்ணுவானவர் சர்வபூதங்களுக்கும் பிரியசுகிர்தாஇன்றபடியால் புருஷனுக்கு அந்தவிஷ்ணுவினுடையபாதசேவையே யோக்கியமாயிருக்கின்றது-வாருங்கள் தயித்தியகுமாரர்களே பிராணிகளுக்குத் தேகசம்பந்தத்தினாலே இந்திரியசம்பந்தசுகமானது பசுவாதிபிராணிகளிலேயும்,அதிஷ்டவசனத்தினாலேயுண்டாகின்றது-சமர்த்தனாகியபுருஷனானவன் சங்காரத்தில் மிதியோடுகூடினவனாய் சரீரபலம விபத்தையடையாமல்பூரணமாய் எந்தமட்டு மிருக்கிறதோ அவ்வளவிலே க்ஷேமத்தின்பொருட்டு எத்தனம்பண்ணக்கடவன் புருஷனுக்குப்பூரணமான ஆயசானது நூறு இந்தப்புருஷனானவன் இராத்திரியிலே மகாநித்திரையை யடைந்தவனாய் சயனித்துக்கொண்டிருக்கிறபடியால் இந்திரியஜெயமில்லாத அந்தப்புருஷனுக்கும் பாதிவயதான வியர்த்தமாகப்போகிறது-மூடனாய் பால்ய- கவுமாரத்திலே-விலைபண்ணிக்கொண்டிருக்கிற புருஷனுக்கு இருபதுவயதுவிளையாட்டிலேபோகிறது வார்த்திகத்தினாலே ஆக்கிரமிக்க தேகத்தையுடையவனாயும்-பெலவீனனாயு மிருக்கிறஅவனுக்கு இருபதுவயதுபோகிறது மிகுந்தவயதெல்லாம்-கிரகங்களிலே ஆசக்தனாயும்-பரம புருஷார்த்தத்தைச் சிந்தியாதவனாயுமிருக்கிற அவனுக்குப் பூரிக்கக்கூடாமலும் துக்கரூபமாயுமிருக்கிற காமத்தினாலேயும் பலவத்தான மோகத்தினாலேயும்போகிறது கிரகங்களிலேஆசக்தனாயிருக்கிற எந்தப்புருஷன்தான் திடங்களானபாரியாபுத்திராதி சினேக பாசங்களினாலே கட்டப்படும் இந்திரியஜெய மில்லாதவனாயுமிருக்கிற தன்னை விடுவித்துக்கொள்ளுகிறதற்குச் சமர்த்தனாகமாட்டான்-பிராணன்களைக் காட்டிலும் யாதொரு அர்த்தம் இஷ்டமோ அந்தஅர்த்தத்தைச் சோரனும் சேவகனும்-வர்த்தகனும்-இவான்மிகவும் பிரீதிவிஷயங்களானபிராணன்களுக்கு ஹானிவந்தாலும் வரட்டுமென்று ஒப்புக்கொண்டு சம்பாதிக்கிறார்கள்.

அப்படிப்பட்டஅர்த்தத்தில் ஆசையைஎவன்தான்விடமாட்டுவான்-தன்னாலே தயைபண்ணப்பட்டஇஷ்டபாரியினுடையரகசியமானசங்கத்தையும்-மனோக்கியங்களாயும்-இதங்களாயு மிருக்கிற வார்த்தைகளையும் சினேகத்தினால்கட்டப்பட்டவனாய் ஸ்நேகிதாளுடைய சகவாசத்தையும், பிள்ளைகளுடைய மழலைச்சொற்களில் பரவசமான மனதையுடையவனாய் அந்தப்பிள்ளைகளையும் - மனோக்கியங்களான பெண்களையும்-பிராதாக்களையும் கூடப்பிறந்தபெண்களையும்- தீனரான மாதாபிதாக்களையும்-மனோக்கியங்களாயும்-விஸ்தாரமாயு மிருக்கிற உபகரணங்களை யுடையதான கிரகங்களையும் குலபரம்பரையாய்வந்திருக்கிற சீவனவிர்த்திகளையும் பசுக்களையும்-பிருத்தியவர்க்கத்தையும் நினைந்து இதுகளைஎப்படிவிட்டுவிடுகிறதென்று ஆசையினால்கர்மங்களை செய்துகொண்டிருப்பதியடையாமலிருக்கிற கர்மங்களை யுடையவனாய் சிசுனம்உடல்தம்நாவு இதுகளிலேயுண்டாகாநின்றசுகத்தையேஅதிகமாகஎண்ணிக்கொண்டுகரையில்லாதமோகத்தை யுடையவனாயுமிருக்கிற புருஷனானவன் எப்படிதான் விர்த்தியனாகுவன், குடும்பபோஷணத்தின்பொருட்டாக செய்யாநின்றதன்னுடைய ஆயுசையும் புருஷார்த்தமானமோட்சத்தையும் அதற்குச்சாதனமாகவிதிக்கப்பட்ட பக்தியையும்- விஷயங்களிலே ஆசக்தனாயிருந்துகொண்டு அறியமாட்டாமலிருக்கிறான்- சர்வகாலத்திலேயும்,சர்வதேசத்திலேயும், ஆத்தியாத்துமிகம், ஆதிபவுதிகம்-ஆதிதெய்விகமென்கிற தாபத்திரையத்தினாலே துக்கப்படாநின்ற மனதையுடையவனாயிருந்தாலும் தன்னுடையசம்சாரத்தில் ஆசக்தியையுடையவனாய்அதிலே வெறுப்பையடையாமலிருக்கிறான் அர்த்தங்களிலேநித்தியமாகஆசையுடையதானமனதையுடையவனாய் பலதிரவியத்தை அபகரிக்கிறவனுக்கு இகலோகத்திலும் பரலோகத்திலும் உண்டாயிருக்கிற தோஷங்களைப்பிரத்தியட்சமாய் சாஸ்திரங்களினாலறிந்திருந்தாலும் இந்திரியங்களை ஜெயிக்கமாட்டாமல் விர்த்தியை அடைகின்றகாமத்துடனேகூடினவனாய் குடும்பியாயிருக்கிற புருஷனானவன் தன்சம்சாரத்தையே அபேட்சிக்கிறான்.

வாருங்கள் அசுரகுமாரர்களே-புருஷனானவன் இந்தப்பிரகாரம் அறிந்தவனாயிருந்தாலும் குடும்பத்தையேபோஷித்துக்கொண்டு ஆத்மவிசாரத்தின் பொருட்டு பிரவிர்த்தியாமலிருக்கிறான், அஞ்ஞானனானவன்எப்படி சம்சாரத்திலேயே மோகத்தை யடைந்திருக்கிறானோ அப்படியே ஞானவானாயிருந்தாலும் தன்னுதென்றும் பிரத்தியனுதென்றும் இந்தப்பிரகாரம் பேதபுத்தியையுடையவனாய் சம்சாரஆசக்தியை யடைந்திருக்கிறான்.எந்தஸ்ரீகளிடத்தில் விலங்குக்குச் சமானமான புத்திராதிரூபமான சிருஷ்டியுண்டாகிறதோ அந்தஸதிரீகளுக்கு விளையாட்டமிருகம்போலும் அவர்கள் இடத்திலேயேஆசையையுடையவனாயிருக்கிற ஞானவானும்ஒருகாலத்திலேயும்தன் ஆத்மாவைச் சம்சாரபாசத்தில்நின்றும்விடுவித்துக்கொள்ளுகைக்குச் சமர்த்தனாகாமலே யிருக்கிறான்.

வாருங்கள் தயித்தியகுமாரர்களே ஆகையினால் விஷயங்களிலேயே பக்தியையுடையவர்களான தயித்தியாளிடங்களிலேசங்கத்தைத் தூரத்திலேதானேவிட்டுவிட்டு ஆதிதேவனான நாராயணனை சரணமாக அடையுங்கள், அந்தநாராயணன் தானே முக்தசங்கங்களாலே இச்சிக்கப்படாநின்ற மோட்சமாகவிருக்கிறார் அந்த சு

சர்வபூதங்களுக்கும் ஆத்மாவாகையாலும், பரிபூரணனாகையாலும் அவனை ஆஸ்ரயித்துச் சந்தோஷிப்பிக்கிறவனுக்கு மிகவும்பிரயாசமில்லை உத்கிருஷ்ட நிகிருஷ்டர்களாயும் ஸ்தாவரமுதல் பிர்மபரியந்தரங்களாயுமிருக்கிற ஜீவாத்மாக்களிலேயும் பூதவிகாரங்களான கடபடாதிகளிலேயும் பஞ்சமகாபூதங்களிலேயும் சப்தாதிகுணங்களிலேயும் குணசாமிய அவஸ்தாரூபமான பிரகிருதியிலேயும் மகதத்துவமுதலானத்திலேயும்நிர்விகாரனுயும் கியானசக்திமுதலான குணங்களையுடையவனுயும் தன்னேடொத்த புருஷாந்தரசூனியனுயும் சர்வ பூதாந்திரியாமியாயும் சர்வோத்கிருஷ்டனுயுமிருக்கிற புருஷோத்தமனே பிரகிருதி சுரூபத்தினுலேயும் சீவசுரூபத்தினுலேயும் வியாப்பியனுயும் வியாபகனுயும் நாமரூபங்களினுல் சொல்லப்படுகிறவராயும் சுபாவத்தில் நாமரூபவிகல்பசூனியராயும் கேவலஅனுபவானந்த சுரூபராயும் குணமயமான மாயசரசிருஷ்டியினுல் மறைக்கப்பட்ட அயிஸ்வரியத்தையுடையவராயுமிருக்கிறார் ஆகையினுல் அதோக்ஷசனுன பகவானுனவர் யாதொருதயையினுல்சந்தோஷிப்பரோ சமஸ்தபிராணிகளிடத்திலேயும்அப்படிப்பட்ட தயையும் சினேகத்தையும் அசுரபாவத்தைவிட்டவர்களாய்ப் பண்ணுங்கள். சர்வகாரணராயும் அநந்தராயுமிருக்கிற நாராயணன்சந்தோஷிக்கப்பட்டாராகில் புருஷனுக்கு அடையக்கூடாம லிருக்கிறவஸ்துஎனதுதானிருக்கிறது சத்துவாதிகுணமூலங்களாயும் எத்தனமில்லாமல் சித்தியாகின்றுமிருக்கிற யாதொருதர்மார்த்தங்களுண்டோ அதுகளினுலே என்னபிரயோசனம் பகவானுடைய சரணாரவிந்தங்களிலே யிருக்கிற மதுவைப்பானம்பண்ணி அதினுலேகானம்பண்ணுகின்ற நமக்கு இச்சிக்கப்படாகின்றும் குணசூனியமாயுமிருக்கிற கைவல்லியமோக்ஷத்தினுலேதான் என்ன பிரயோசனம் தர்மார்த்தகாமமென்கிற யாதொரு திரிவர்க்கம் சொல்லப்பட்டதோ அதுவும் ஆத்துமவித்தையும் நீதிசாஸ்திரமும்-தர்க்கசாஸ்திரமும்-நானுவிதமான சீவனவிர்த்தியும் வேதத்தினுடைய அர்த்தரூபமான இதுகளெல்லாந்தனக்கு அந்தரியாமியான பரமபுருஷனுடைய பிரவர்த்திக்குச்சாதனமாகஆச்சுதேயானுல் அப்போது சத்தியமாகஎண்ணுகிறேன் அடையக்கூடாததாயும் நிர்த்துஷ்டமாயுமிருக்கிற இந்தக்கியானத்தை நரனேச்சகாவாகவுடைய நாராயண மூர்த்தியான பகவானுனவர் பத்ரிகாசமத்தி நாரதருக்கு உபதேசித்தாரோ அந்தக்கியானனந்தமான து பகவானுக்கு ஏகாந்தபக்தாளாயும் அகிஞ்சனுளாயும் அந்தப்பகவானுடைய பாதாரவிந்ததூளிகளினுலே முழுகியிருக்கிற ஆத்துமாவையுடையபேர்களுக்கும் உண்டாகிறது சாஸ்திரக்கியானத்தோடும் யோக்கியானத்தோடும்கூடிக்கொண்டிருக்கிற இந்தக்கியானமுஞ் சுத்தமான பாகவத தர்மமும் தேவதைகளாலே காணத்தக்கினவரான நாரதரிடத்தில் நின்றும் முன்னேநம்மாலேகேட்டு அறியப்பட்டதென்றுசொல்லாநின்ற பிரகலாதனனைப்பார்த்துத் தயித்திய புத்திராள் சொல்லுகின்றார்கள்.

தயித்தியபுத்திராள்வாக்கியம்.

வாராய்பிரகலாதனனே, நாமெல்லோரும் இந்தக்குருபுத்திராளைத்தவிர வேறேகுருவைஅறியோமே. இவர்களேயல்லவா நமக்குப் பாலியந்துடங்கி ஆசாரியர்களாயிருக்கிறார்கள் பாலனுய் அந்தப்புறத்திலே இருக்கின்றவனுக்கு மகாபுருஷசங்கம் கிடைக்கமாட்டாதல்லவா. வாராய்சவுமியனே எங்களிடத்திலே பிரீதியுண்டாயிருந்ததாகில் எங்களுடைய இந்தச் சம்சயத்தைப் போக்கடிக்கவேணுமென்று தயித்தியபுத்திரர்கள் சொன்னுர்கள்.

## எ வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பேதமற்றப்ரக லாதனனுனவன்
மாதுகெர்ப்பத்தி லேயேமாரிஷியினு
லோதிவைத்தக் கியானுபதேசத்தைச்
சூதிலாமற்றுன் சொல்லிவித்தாரரோ.

பிரகலாதனனுனவன் மாதர்கெர்ப்பத்திலே தனக்கு நாரதமகாரிஷியினுலே உபதேசிக்கப்பட்ட கியானத்தைச் சிஷ்யாளான தயித்தியபுத்திராளுக்கு விசுவாசநிமித்தியமாகச்சொன்னுரென்று சொல்லப்படுகின்றது,

நாரதர்வாக்கியம்.

வாரீர்தர்மபுத்திரமகாராஜனே, இந்தப்பிரகாரம்தயித்தியகுமாரர்களாலே பிரசினம்பண்ணப்பட்ட பாகவதனுய் மகானுன பிரகலாதனன்சிரித்துக்கொண்டு நம்முடையவசனத்தை நினைத்துக்கொண்டவனுய் அவர்களைக்குறித்துச் சொல்லுகின்றான்.

பிரகலாதனன்வாக்கியம்.

வாருங்கள் தயித்தியகுமாரர்களே, என்னுடையதகப்பனுர் தவசின்பொருட்டு மந்திரபருவதத்தையடைந்திருக்கையில் தேவர்கள் தானவர்களைக்குறித்து மிகவும் யுத்தசன்னுகத்தைப்பண்ணினுர்கள் எறும்புகளினுல்சர்ப்பமானது பட்சிக்கப்பட்டுப் போனதுபோல் தெய்வாதீனமாக லோககண்டகனுயும் பாபியாயுமிருக்கிறஇந்த இரணியகசிபுவானவன் தன்னுடையபாபத்தினுலே தான்பட்சிக்கப்பட்டுப்போனுனென்றுசந்தோஷத்தினுலே சொல்லிக்கொண்டு யுத்தசன்னுகத்தைப் பண்ணுகின்ற இந்திரன்முதலானதேவர்களுடைய யுத்தசன்னுகத்தைப்பார்த்துஅசுரயூதபாளெல்லாம் அந்தத்தேவர்களாலே பீடிக்கப்பட்டுப் பயந்தவர்களாய் பாரியை புத்திரன் உ

த்தமசினேகிதர்கள் கிரகங்கள் பசுமுதலான கிரயோபகரணங்கள் இவையெல்லாவற்றையும் விட்டுவிட்டவர்களாய்த் தங்கள்பிராணனிடத்திலேயேமிகவும்ஆசையையும்,வேகத்தையும்உடையவர்களாய் எல்லாரும்நாலுதிக்கிலேயும் ஓடிப்போய்விட்டார்கள், அந்தவேளையிலே ஜெபசாலிகளான தேவதைகள் அசுரராஜாவினுடையபட்டணத்தைக் கொள்ளையிட்டார்கள், இந்திரனேயென்றால் ராஜமகிஷியான என்னுடையதாயாரைப்பிடித்துக்கொண்டுபோனான், இந்திரனாலே பிடித்துக்கொண்டு போகப்பட்டும் மிகவும்பயத்தினாலே நடுங்கிக்கொண்டும்குற்றிபட்சிபோலேகதறிக்கொண்டுமிருக்கிறஎன்னுடையதாயாரை அவடத்திலேசுயவிச்சையா வராநின்ற தேவரிஷியான நாரதமகாரிஷியானவர் மார்க்கத்திலேகண்டு தேவேந்திரனைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றார்.

நாரதர்வாக்கியம்.

வாராய்சுரபதியே, நிரபராதியான இந்தஸ்திரீயை நீகொண்டுபோகிறதற்கு யோக்கியமன்று பதிவிரதையாயும் பரதாரமாயுமிருக்கிற இந்தஸ்திரீயைவிட்டுவிடு விட்டுவிடென்றுசொல்லுகின்ற நாரதமகாமுனியைப்பார்த்து இந்திரன்சொல்லுகின்றான்.

இந்திரன்வாக்கியம்,

வாரீர்மகாரிஷியே, இவளுடைய கெர்ப்பத்திலே தேவசத்துருவான இரணியகசிபுவினுடைய சகிக்கக்கூடாததான மகாவீரியமானதிருக்கிறது, இந்தஸ்திரீயானவள் அந்தக்கெர்ப்பத்தைப் பிரசவிக்கிறபரியந்தம் என்னண்டையிருக்கட்டும் பிற்பாடு என்னுடைய பிரயோசனத்தைஅடைந்தவனாய் இவளை விட்டுவிடுகிறேனென்றுசொல்லாநின்ற இந்திரனைப்பார்த்து நாரதமகாமுனிவர்சொல்லுகின்றார்.

நாரதர்வாக்கியம்,

வாராய்இந்திரனே, இவளுடைய கெர்ப்பத்திலேயிருக்கிறசிசுவானவன் ராகத்வேஷாதி சூனியனாயும், தன்னுடையகுணங்களினாலேயே மகானாயும், பாகவதோத்தமனாயும், மகாபெலவானாயும், அநந்தனுடைய தாசனாயும்இருக்கிறான். இவன்உன்னாலேமரணத்தையடையப்போகிறதில்லையென்று நாரதமுனிவராலே சொல்லப்பட்டவனாய் இந்திரனானவன் அந்தரிஷியினுடையவார்த்தையை வெகுமானத்தோடு கிரகித்தவனாய் அந்தஸ்திரீயைவிட்டுவிட்டு அநந்தருடையதாசனான என்னுடையபக்தியினாலே அவளைப் பிரதட்சணம்பண்ணி சொர்க்கத்தையடைந்தான். பிற்பாடு நாரதமகாரிஷியானவர் என்னுடையதாயாரைத் தம்முடைய ஆஸ்ரமத்திலே அழைத்துக்கொண்டுபோய் சமாதானம்பண்ணி ஒருவார்த்தைசொல்லுகின்றார்.

வாராய்பெண்ணே, உன்னுடையபர்த்தா எப்போதுவரப்போகிறானோ அந்தமட்டுக்கும் இவடத்திலேயிருவென்றுசொல்லாநின்ற ரிஷியினுடையவார்த்தையை ஒத்துக்கொண்டவளாய் என்னுடையதாயானவள் அந்தரிஷியினுடையசமீபத்திலே தயித்தியபதியான இரணியகசிபுவானவன் உக்கிரமானதபசைவிட்டு ஒழிந்துவருகிறமட்டுக்கும் நிற்பயமாய் வாசம்பண்ணிக்கொண்டிருந்தாள். பதிவிரதையாயும் கெர்ப்பிணியாயுமிருக்கிற அந்தஸ்திரீயானவள் தன்னுடைய கெர்ப்பத்துக்கு க்ஷேமத்தின்பொருட்டும் தனக்குஇச்சையானபோது பிரசவிக்கிறதின்பொருட்டும் பரமமானபக்தியோடே அந்த நாரதமகாரிஷிக்கு சிசுவிடைப்பண்ணிக்கொண்டிருந்தாள். மகாகிருபாசாலியாயும் சமர்த்தராயுமிருக்கிற அந்தநாரதமகாரிஷியானவர்என்னை உத்தேசித்து அவளுக்குச்சோகநிவர்த்தியின் பொருட்டுத் தர்மத்தினுடையதத்துவமானபகவத்பக்திமார்க்கத்தையும், ஆத்மக்கியானத்தையும் ஆகிய இவ்விரண்டையும் உபதேசித்தார்,

பிறகு வெகுகாலமானதினாலேயும், ஸ்திரீசுபாவத்தினாலேயும், என்னுடைய தாயாருக்கு அந்த உபதேசமானது மறக்கப்பட்டதாய்விட்டது, அந்தரிஷியினாலே அனுக்கிரகிக்கப்பட்டஎன்னை அந்தக்கியாபகமானது இப்போதும்விடாமலேயிருக்கின்றது, என்னுடைய வார்த்தைவிசுவசித்தீர்களேயானால் ஸ்திரீகள்பாலர்கள்இவர்களுக்கும் தேகாதிகளிலேநானென்கிறபுத்தியைப்போக்கடியாநின்ற இந்தக்கியானமும்சிரத்தையும் எப்படி எனக்குஉண்டாச்சுதோ அப்படிஉங்களுக்கும் உண்டாகும் பிறக்கிறது-இருக்கிறது-வளருகிறது- ரூபாந்தரத்தையடைகிறது இளைக்கிறது நசிக்கிறது என்னப்பட்ட இந்த ஆறுவிகாரங்களும் ஆத்மாவானவன்இருந்தாலே தேகத்துக்குக்காணப்படுகிறதுகள், தேகத்தினுடைய தர்மங்களாகவிருக்கிறதுகள் ஆத்மாவினுடையதர்மங்களன்று அதெப்படியென்றால் விருட்சமிருந்தால் பழபுஷ்பங்களுடைய ஆவிர்ப்பாவமானது ஈஸ்வரசொரூபமானகாலத்தினாலேகாணப்படுகிறதுகள்போல இந்த ஆறுவிகாரங்களும் தேகதர்மமாகக்காணப்படுகிறதுகள், ஆத்மாவோவென்றால் நாசமில்லாதவனாயும் விகாரமில்லாதவனாயும் சுத்தனாயும் ஒருவனாயும் தேகாதிகளை அறிந்தவனாயும் தேகாதிகளுக்கு ஆஸ்ரயனாயும் கிரியாசூனியனாயும் சுவயம்பிரகாசனாயும் ஜெகத்காரணமாயும் சர்வத்திரபரிபூர்ணனாயும் ஒன்றோடேயும் சம்மந்தமில்லாதவனாயும் ஒன்றினாலேயும் மறைக்கப்படாதவனாயுமிருக்கிறவன் விவேகத்தைக் கொடாநின்ற இந்தப் பனிரண்டுலக்ஷணங்களினாலேயும் ஆத்மாவைத் தேகாதிகளைக்காட்

டிலும் வேறுபாடாகஅறிந்து புருஷனனவன்தேகமுத லானதில் மோகத்தினலேஉண்டாகாநின்றநான்எனதெ ன்கிற இந்தஅசத்தானபுத்தியைவிட்டுவிடுவன் சொர்ன மெடுக்கிற உபாயமறிந்த சொர்னக்காரனனவன் க்ஷேத் திரங்களிலேசொர்னதாதுக்களோடுகூடிக்கொண்டிருக் கிறகல்லுகளிலே ஊதியெடுக்கிற முதலான உபாயங்க ளினலே சொர்னத்தைஎப்படிஅடைகிருனே அப்படி போலே பரமாத்மாவினுடைய ஆதீனமான காரியகார ணங்களை அறிந்த புருஷனனவன் க்ஷேத்திர மென்று சொல்லப்படாகின்றதேகங்களிலேஆத்மாவையடையத் தக்கதானயோகாதிவுபாயங்களினலேஅந்தப்பரமாத்மா வையடைகின்ருன், மூலப் பிரகிருதி மகதத்துவம் அக ங்காரம் ரூபரசகெந்தஸ்பரிசசப்தம் ஆகஇந்தஎட்டுகளு ம் பிரகிருதிக ளென்று சொல்லப்படுகிறதுகள், சத்து வம்-ரசச-தமசுயென்கிற இந்தமூன்றும்- பிரகிருதியினு டையகுணங்கள்-ஞானேந்திரியங்கள், ஐந்தும்-கர்மேந் திரியங்களைந்தும் மனதும் பிரிதிவ்யாதி பஞ்சமகா பூத ங்களும் ஆகப்பதினறுதத்துவங்களாகச்சொல்லப்படுகி ன்றதுகள்-இதுகளில் அந்தரியாமியா யிருக்கிற ஆத்மா வொருவனென்று கபிலர் முதலான ரிஷீஸ்வராளாலே சொல்லப்பட்டிருக்கின்றதுதேகமோவென்ருலிந்தஇரு பத்துநாலுதத்துவங்களுடைய கூட்டமாகவிருந்துகொ ண்டு ஸ்தாவரமென்றும், சங்கமமென்றும் இரண்டுவித மாகவிருக்கிறது இந்தத் தத்வங்களுடைய கூட்ட சுரூ பமானதேகத்திலேயே அந்தப்பரமபுருஷனனவன்தே காந்திரியாதிகளை விஷேதிக்கிறதினல்அறியப்படுகிருன் புத்தியினுடையவிர்த்திகளானதுகள் சாகாணமென்றும் சொர்ப்பனமென்றும் சுசுப்தியென்றுஞ்சொல்லப்படுகி றதுகள் இந்தச்சாகரணதிபுத்தியினுடையவிருத்திகளா னதுகள்யாதொருத்தரால் அனுபவிக்கப்படுகிறதுகளோ அவரேசாட்சியாயிருக்கிற பரமபுருஷராக விருக்கிருர், திரிகுணத்மகமாயும்சர்வவிஷயத்திலேயும்விழாநின்று ம்-கர்மத்திலுண்டாகின்ற இந்தப்புத்தியினுடைய விரு த்திகளின்சம்பந்தத்தினலே ஆத்மாவினுடைய சுரூபத் தை புஷ்பங்களுடையகெந்தங்களினலே அந்தகெந்தத் துக்கு ஆஸ்ரயமாயிருக்கிற வாயுவைப்போல அறியக்க டவன் இப்படிப்பட்டபுத்தியை துவாரமாக வுடையதா யும், புத்தியினுடைய குணகர்மங்களினல் கட்டப்பட்ட தாயும், அக்கியானமூலமாயுமிருக்கிற சம்சாரமானது எ தார்த்தமாகாமலிருந்தாலும் புருஷனுக்குச் சொர்ப்பன ம்போலுண்டாகிறது, ஆகையினலேஉங்களாலேதிரிகு ணத்மகமானகர்மங்களுக்கு மூலமானஅக்கியானத்தினு டைய தகனமானதுபண்ணத்தக்கது, எதினலென்ருல் புத்தியினுடைய சாகரணதிஅவஸ்தைகளை நாசம்பண் ணுகின்றகியானம் யாதொன்றுண்டோ அந்தக்கியானத் தையேயடையத்தக்கது அப்படிப்பட்ட கியானவிஷயத் தில்அனேகமாயிரம்உபாயங்களுக்குள்ளேஇதுமுக்கிய வுபாயமாகப் பகவானல்சொல்லப்பட்டிருக்கிறது-அது யாதென்ருல் எதாசாஸ்திரமாக அனுஷ்டானம்பண்ண ப்பட்டதர்மங்களாலே பகவானனபரமாத்மாவினிடத்தி ல் சீக்கிரமாகப்பக்தியுண்டாகின்ற தெதுவோ இதுவே முக்கியவுபாயமாகக்கூறப்பட்டிருக்கின்றது, அந்தத்தர் மங்களில் பகவத்பக்தியுண்டாக்கப்பட்டதர்மங்கள் எது களென்ருல் குருசிசுருஷையினலும் சாதுக்களானபாக வதாளுடையசங்கத்தினலேயும்பகவத்குணசரித்திரங்க ளுடையகீர்த்தனங்களினலேயும், காமக்குரோதலோப மோக மதமாச்சரியங்களென்கிறஆறையும் இந்திரிகங்க ளையும்ஜெயிக்கத்தக்க இந்தத்தர்மத்தைச்செய்கிற புரு ஷாளுக்குப்பகவானயும், நியந்தாவாயுமிருக்கிறவாசுதே வனிடத்தில் பக்தியானதுஉண்டாகும், பரமாத்மாவினி டத்திலே புத்தியையுடையவனுப்சமஸ்தகர்மபந்தங்களை விடப்பட்டவனுய் பக்தியோகத்தினலே அக்கியான வா சனைகளைத் தகித்தவனுய் அதோட்சசனனசுவாமியைஅ டைவான்அந்தஈஸ்வரனை இருதயத்திலுபாசியுங்கள்.

வாருங்கள் அசுரர் குமாரர்களே சமஸதபிராணிக ளுக்கும் பிரியராயுமிருக்கிற அந்தஸ்ரீ அரியினுடையஉ பாசனத்திலே மிகவும்பிரயாசமென்ன, சமஸதபிராணி களுக்கும் சாதாரணமாயிருக்கிறவிஷயானுபவங்களின லே என்னபிரயோசனம், சம்பத்தினலேபுருஷனுக்கு என்னசுகத்தைக்கொடுக்கப்போகின்றது ஆகையினலே காணப்பட்டும் கேழ்க்கப்பட்டு மிருக்கிற சர்வாந்திரியா மியான ஸ்ரீமந்நாராயணனை ஆத்ம லாபத்தின்பொருட் டு பக்தியினலே பஜனைபண்ணுங்கள் லோகத்திலே கர் மங்களுடையசங்கற்பமானது சுகத்தையடையும்பொரு ட்டும் துக்கநிவர்த்தியின் பொருட்டுமாக உண்டாயிருக் கின்றது இந்தலோகத்திலேபுருஷனனவன் எந்தச்சரீர த்துக்காக விஷயங்களினலே போகங்களை இச்சிக்கின்ற னே அந்தச்சரீரமானது நாய் முதலானதுகளினலே பட்சிக்கத்தக்கதாயும் அனித்தியமாயுமிருக்கின்றது வா ருங்கள்அசுராளே இந்தலோகத்திலே ஸ்திரீசங்க முத லான அவஸ்தைகளினலேயும், கர்மங்களினலேயும், கி லேசப்படாநின்றபுருஷாளுக்குஎவ்வளவுசுகம்உண்டா கின்றது விசாரித்துப்பாருங்கள்-புருஷனனவன் தேகத் தினலே கர்மங்களைச்செய்கிருன், பிராமணனயிருந்தா லும் தேவனயிருந்தாலும், சீலம்- தானம்-தபசு-யாகம்- ஆசாரம்-விரதங்கள் இதுகளினலெல்லாம் முகுந்தனைச் சந்தோஷிக்கிறதின்பொருட்டு சமர்த்தங்களாக மாட்டா துகள், அந்தஸ்ரீஅரியானவர் நிஷ்காமமானபக்தி ஒன்றி னலேயே சந்தோஷப்படத்தக்கவர் மற்றவையெல்லாம் வேஷமேயல்லாமல்வேறல்ல-சகலபிராணிகளையுங்கன்

னைப்போலேபார்த்து சகலபிராணிகளுக்கும் அந்தரியாமியாயும் நியந்தாவாயுமிருக்கிற ஸ்ரீ அரியினிடத்திலே பக்தியைப்பண்ணுங்கள் எட்சராட்சசாள்-ஸ்திரீகள் -சூத்திராள்-இடையர்-பட்சிகள்-மிருகங்கள்-இவைமுதலான பாபசீவாளெல்லாரும் பகவத்பகதியால் அச்சுதனுடைய சாரூப்பியத்தை யடைந்திருக்கின்றூர்கள், சகலபிராணிகளிலே கோவிந்தனே அந்தரியாமியா யிருக்கிறுரென்றுஅறிந்துகொள்ளுங்கள் இது இந்தலோகத்திலே யிருக்கப்பட்டபுருஷனுக்குப் பரமபுருஷார்த்தமாகச்சொல்லப்பட்டிருக்கின்றது.

## அ வது அத்தியாயம்.

கலிவிருத்தம்,

கசிபுவானேன் கரோமங்கோபத்தாற்
குசைமதிப்பிரக லாதனைக்கொன்றிட
வசையோடெண்ணும் வலுவனைநரசிங்கர்
நிசமதாய்க்கொன்று நிலைபெற்றிட்டாரரோ

இரணியகசிபுவானவன் மிகுந்தகோபத்தினாலே பிள்ளையான பிரகலாதனைக்கொல்ல யத்தனித்தவனாய் நரசிங்கரூபமாக ஆவிர்பவியாநின்றபகவானால்தானேகொல்லப்பட்டானென்றும் அந்தநரசிங்கமூர்த்தியானவர் பிர்மாதிதேவதைகளினாலே ஸ்தோத்திரம்பண்ணப்பட்டாரென்றும் சொல்லப்படுகின்றது.

நாரதர்வாக்கியம்.

வாரீர்தர்மபுத்திரரே, அதின்பிற்பாடு தயித்தியகுமாரரள்எல்லாரும் அந்தப்பிரகலாதனாலேசொல்லப்பட்ட அர்த்தத்தைக்கேட்டு தோஷமில்லாம லிருப்பதினாலே அதைக்கிரகித்து குருவினால்சிட்சிக்கப்பட்டஅர்த்தத்தைக் கிரகியாமற்போனார்கள், பிற்பாடு ஆசாரியபுத்திரனானவன் அந்தஅசுரபுத்திராள் பகவானிடத்திலே நிஷ்டையையுடையதான புத்தியைப்பார்த்துப் பயந்தவனாய் சீக்கிரமாகப்போய்இராஜாவுடன் இந்தவிர்த்தாந்தங்களைச்சொன்னான் இரணியாசுரன் அப்பிரியமான அந்தவசனத்தைக்கேட்டு கோபத்தையுடையவனாய் திரும்பவும் தயித்தியகுமாரர்களுக்கு அன்னியாயமார்க்கத்தையுபதேசியாநின்ற பிள்ளையைக் கொல்லவேணுமென்று சங்கற்பித்து நிந்தாவசனத்துக்கு அயோக்கியனான பிரகலாதனைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றான்,

இரணியகசிபுவாக்கியம்.

வாராய்துஷ்டனே-அதமனே-என தாக்கினையைத்தாண்டிநடவாநின்ற உன்னை எமலோகத்துக் கனுப்புகிறேன்எனக்கு லோகபாலாளுடனேகூடிக்கொண்டிருக்கிற மூன்றுலோகங்களும், நடுநடுங்கிக்கொண் டிருக்கிறதுகள்-அப்படிப்பட்ட என்துவார்த்தையை என்ன பலத்தைப்பற்றித் தள்ளிவிட்டாயென்று சொல்லுகின்ற பிதாவைப்பார்த்துப் பிரகலாதனன்சொல்லுகிறான்,

பிரகலாதனன்வாக்கியம்,

வாராய் ராஜாவே-உத்கிருஷ்டங்களாயும்- நிக்ருஷ்டங்களாயும்,பிர்மாமுதலாயுமிருக்கிறயாதொருபிராணிகளுண்டோ அதுகள் அந்தப்பகவானுடைய ஆதீனமாயிருக்கிறதுகள் அந்தப் பகவானானவர் எனக்குமாத்திரம்பலமாகவிருக்கவில்லை-உன்னினும்பலசாலிகளாயிருக்கிற மற்றபேர்களுக்கும் பலமாக விருக்கிறார்-காலரூபியாயுமிருக்கிறவிஷ்ணு தானேதம்முடையசக்தியினாலே ஜெகத்சிருஷ்டி,ஸ்திதி-சங்காரங்களைப் பண்ணுகிறார். உன்னுடைய இந்தஅசுரபாவத்தைவிட்டு மனதைச் சர்வபிராணிகளிலேயும் சமமாகத்தரிக்கக்கடவாய் உன்னைப்போலொத்த சிலர் ஆத்மாவைஅபகரியாநின்ற காமக்குரோதலோப மகமாச்சரியமென்கிற அனிஷ்ட வர்க்கத்தையும் மனதுமுதலான ஆறுஇந்திரியங்களையும் முன்னேஜெயிக்காமல் பத்துத்திக்குகளும் தன்னாலேஜெயிக்கப்பட்டதுகளா எண்ணி யிருக்கிறார்களென்று சொல்லுகின்ற பிரகலாதனைப்பார்த்து இரணிய கசிபுவானவன்சொல்லுகிறான்.

இரணியகசிபுவாக்கியம்.

வாராய்மந்தபுத்தியையுடையபிரகலாதனனே-மரணக்கிட்டியிருக்கிறவர்களுக்கு இப்படிப்பட்ட அனர்த்தபுத்தியுண்டாகும் என்னைப்பார்க்கிலும்உன்னாலேசொல்லப்பட்ட வேறொருஜெகதீஸவரனெங்கே அவன் எங்குமிருப்பானாகில் இந்த ஸ்தம்பத்திலேயும் காணலாமல்லவா இப்படிப்பிதற்றுவதினாலேஉன்னுடையசிரசை அறுத்துப்போடுகிறேனென்றுகத்தியையுருவிக்கொண்டுசிங்காதனத்தில்நின் றெழுந்திருந்தவனாய் அதிக பலமான தன்னுடையமுஷ்டியினாலே கம்பத்தையறைந்தான் அப்போது அந்தக்கம்பத்திலே அதிகபயங்கரமான ஒருசப்தமுண்டாச்சுது அந்தச் சப்தத்தினாலே அண்டகடாகமும் பிளந்துபோச்சுது.

நாரதர்வாக்கியம்.

வாராய்தர்ம்மபுத்திரனே-பிரம்மாதிதேவதைகளானவர்கள் அப்போதுஉண்டான சப்தத்தினாலே தங்கள் தங்கள் ஸதானங்களைவிட்டுத் தத்தளித்துப்போனார்கள் புத்திரனைக்கொல்லநினைத்த அந்த இரணியகசிபுவானவன் அந்தச்சப்தத்தைக்கேட்டு சபாமத்தியத்திலே அதற்கு ஆஸ்ரயமானவஸதுவைக் காணமற் போனான் பகவானானவர் தம்முடையபக்தனான பிரகலாதனனுடையவசனத்தைச் சத்தியமாகப் பண்ணுகைக்குச் சபையிலிருக்கும் ஸ்தம்பத்திலே மிருகமல்லாமலும் மனுஷிய னல்லாமலுமிருக்கிற மிகவும் அற்புதமானரூபத்தோடு காணப்பட்டார்,

இரணியகசிபுவானவன் இந்தப்பிரகாரம் ஸ்தம்பத்தில்நின்றும் ஆவிற்பவியாநின்றஅந்தநரஹறிரூபத்தைப்பார்த்து இந்தஜெந்துவானது மிருகமுமன்று மனுஷியனுமன்று, காணுதற்கரிய ஆச்சரியமாயும் நரஹறிரூபமாயுமிருக்கிறது, இதென்னஆச்சரியமென்று பார்த்துக்கொண்டிருந்தான், அப்போது பயங்கரமாயும், சுவர்க்கத்தையளாவின சரீரத்தை யுடையதாயும் கொஞ்சமாயும்பருத்துமிருக்கிற கழுத்தை யுடையதாயும் விசாலமான வக்ஷஸ்தலத்தையுடையதாயும், சூட்சுமமான இடையையுடையதாயும், சந்திரகிரணம்போலே வெளுத்தரோமங்களினாலே வியாபிக்கப்பட்டதாயும், நகங்களை ஆயுதமாகஉடையதாயுமிருக்கிற அந்தநரசிங்கரூபத்தைப்பார்த்துக்கொண்டிராநின்ற இரணியகசிபுவினுடைய் எதிரேபகவானானவர் இந்தப்பிரகாரம் ஆவிர்ப்பவித்தார்-பிறகு இரணியகசிபுவானவர் மனோதைரியத்துடன்கதையையுடையவனாய் அட்டகாசம் பண்ணிக்கொண்டு நரசிங்கனானஸ்ரீஹறியின்பேரிலேஎதிர்த்தான், அப்போது அந்த இரணியாசுரனானவன் நரசிம்மனுடைய தீபத்திலேவிழுந்த விட்டிற்பூச்சிபோலக்காணாமல் மறைந்துபோனான், அந்தப்பகவானிடத்திலே இரணியன் காணாமற்போனது ஆச்சரியமன்று யாதொருபகவான்ஆதியிலேஉண்டானபிரளயகால இருளையெல்லாம்தம்முடையதேஜசினாலே விழுங்கிப்போட்டாரோ அப்படிப்பட்டபகவானுக்கு இதுஆச்சரியமன்று, பிற்பாடுஅசுரசிரேஷ்டனான இரணியனானவன் கோபத்தினாலேஓடிவந்துகதையினாலே நரசிம்மனைஅடித்தான், சுவாமியும்தமதுபேரிலேபராக்கிரமியாநின்ற இரணியனை கெருடன்சர்ப்பத்தைக்கிரகிப்பதுபோலக் கிரகித்துக்கொண்டார்.

வாராய்கர்மபுத்திரனே, அப்போது கெருடனிடத்தில்நின்று நழுவியசர்ப்பம்போலச்சுவாமியினுடையஅஸ்தத்தில்நின்றும் இரணியனானவன்நழுவினானப்போதுசமஸ்தமானதேவர்களும் லோகபாலாளும் மேகத்திலேமறைந்து பார்த்துக்கொண்டிருந்தார்கள் அப்படி நழுவியஇரணியனானவன் கத்திகேடயங்களை யெடுத்துக்கொண்டு திரும்பவும்மகாவேகத்தோடு முகுந்தனையெதிர்த்தான், ஸ்ரீஹறியானவர் அந்தஇரணியகசிபுவைப்பிடித்துக்கொண்டு பிடித்தபிடியோடுசபையினுடையவாசற்படியில் துடையின்மேலேதள்ளிக்கொண்டு நகங்களினாலேகிழித்துப்போட்டார், பயங்கரமான லோசனங்களையுடையவராயும், திறக்கப்படாத வாயை யுடையவராயும், தம்முடையநாவிலே அந்தஅரசனுடைய இரத்தத்தையுரிந்தும் இரத்தபிந்துக்களினாலேநனைந்து சிவந்துமிருக்கிற பிடறிமயிர்களையும், முகத்தையு முடையவராயும், குடலை மாலையாவும் தெஜவதத்தினாலே சிம்மம்போலவிளங்கியுமிருக்கிற அந்த நரஹறியானவர் தன்னாலேபிளக்கப்பட்ட இரணியனை விட்டுவிட்டு ஆயுதபாணிகளாகத் தன்பேரி லெதிர்க்காநின்ற அந்த இரணியனுடைய சேனைகளையும் சங்கரித்தார் அதன்பின்பு தன்னோடேயுத்தம்பண்ணுகிறதற் கொருவருமில்லாதவராயும்-ராஜாவினுடைய சிங்காதனத்திலேயிராநின்றும்,உக்கிரத்தை யுடையவராயும், லோகநாதனாயும், பயங்கரமானமுகத்தை யுடையவராயுமிருக்கிற அந்தநரசிங்கனை ஒருத்தருங்கிட்டிவந்து சேவிக்கமாட்டாமற்போனார்கள் தேவர்களும் புஷ்ப வருஷங்களாலே வருஷித்தார்கள் அப்போது இரணிய வதோச்சவத்தைப் பார்க்கவந்த தேவதைகளுடைய விமானக்கூட்டங்களினாலே ஆகாசமெல்லாம்நெருங்கிற்று, தேவதுந்துபிமுதலானவாத்தியங்கள்முழுங்கினது, தேவதைகள்முதலான சமஸ்தமானபேர்களும் அஞ்சலிபந்தனம் பண்ணிக்கொண்டு சிங்காதனத்திலே மகாதேஜசோடு கூடினவராயிருக்கிற நரசிரேஷ்டனான நரசிம்மனை சமீபத்திலே யிருந்துகொண்டுதனித்தனியே ஸ்தோத்திரம்பண்ணிச் சொல்லுகின்றார்கள். வாரீர்நாதனே எங்களுக்குக்ஷேமத்தின்பொருட்டு யாதொருநரஹறிரூபமானது இப்போதுகாணப்படுகின்றது வாரீர்ஈசனே உம்முடையகிரணா யிருக்கிற இந்த தயித்தியனானவன் ஜனகாதிகளாலே சபிக்கப்பட்டானே இவனுடையசங்காரத்தை அனுக்கிரகமாக அறிகிறோம்.

## கூ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

எஞ்சலிற்பிரம்ம னேவும்பவத்தினாற்
கொஞ்சிடுபிரக லாதனன்கோபத்தை
அஞ்சலோடு க்ஷமித்திடுமென்பனாப்க்
கொஞ்சிடுநர சிமனைக்கொண்டாடினார்

பிரமதேவன் தவத்தினாலேயேவப்பட்டபிரகலாதனானவன் கோபத்தை க்ஷமி கிறவனாய் மிகவும்பயங்கரமானநரசிம்மனை ஸ்தோத்திரம்பண்ணினானென்றுசொல்லப்படுகின்றது.

நாரதர்வாக்கியம்.

வாரீர்தர்மநந்தனரே இந்தப்பிரகாரம் பிரம்மருத்திரப்பிரமுகாளான தேவர்கள் முதலான சமஸ்தமானபேரும் கோபாவேஸத்தோடுகூடிகிட்டி அண்டக்கூடாதவரான நரசிங்கனைக்கிட்டுகைக்குச் சக்தியில்லாதவர்கள் சாட்சாத் ஸ்ரீதேவியானவள் தேவதைகளினால்பிரார்த்தித்து அனுப்பப்பட்டவளாய் அந்தமகா அற்புத ரூபத்தைப்பார்த்து முன்னொருக்காலும் பார்க்கப்படாமலும்கேழ்க்கப்படாமலு மிருக்கிற படியினாலே சங்கையையுடையவளாய் கிட்டநெருங்கமாட்டாமற் போனாள் அப்போது பிர்மதேவனானவன்சமீபத்திலிராநின்ற பிரகலா

தனைப்பார்த்து வாராய்குழந்தாய்உன்தகப்பனை இரணியன்பொருட்டு கோபத்தை யடைந்த ஜெகநாதரான ஸ்வாமியைக்கிட்டி க்ஷமைகொள்ளென்று அனுப்பிவைத்தான். மகாபாகவதனான அந்தப்பிரகலாதனன் அப்படியேயாகட்டுமென்று அங்கீகரித்து மெள்ள அந்தநரசிங்கமூர்த்தியண்டைக்குப்போய் அஞ்சலிபந்தனம்பண்ணிக்கொண்டு சாஷ்டாங்கமாகப் பிரணாமம்பண்ணினான் பகவானனவர் கிருபாபரிபூரணராய் தம்முடைய பாதாரவிந்தங்களில் பிரணாமம்பண்ணுகின்ற அசுரபாலனனபிரகலாதனை யெடுத்து தம்முடைய அஸ்தத்தை அவனுடையசிரசிலே வைத்தார், பிரகலாதனானவன் பகவானுடைய கரஸ்பரிசத்தினாலே சகலசுபங்களையும், பெற்றவனாய் அந்தஸ்வாமியினுடைய பாதபத்மத்தை இருதயத்தில் தரித்தவனாய் ஏகாக்கிரமான மனதினாலேயும், பிரீதியினாலேயும் தழைதழைத்த வாக்கினாலேயும் அந்தநரசிம்மபகவானை ஸ்தோத்திரம் பண்ணுகிறான்.

பிரகலாதனன்வாக்கியம்,

சத்துவகுணப் பிரதானமான புத்தியை யுடையவர்களான பிரம்மாமுதலானதேவகணங்களும்-முனிகளும்-கியானிகளும்-யாதொருபகவானை ஸ்தோத்திரம்பண்ணுகைக்குச் சமர்த்தாளன்றிப்போனார்கள், அப்படிப்பட்டபகவான் உக்கிரமான அசுரசாதியையுடையஎன்னாலே எப்படிசந்தோஷிப்பிக்கப்படுவார் ஆனாலும்-தனம்-குலம்-ரூபம்-தபசு-சாஸ்திரக் கியானம்-இந்திரிய நிக்கிரகம்-காந்தி-பிரதாபம்-பிரக்கியாதி அஷ்டாங்கயோகமிதுகளெல்லாம் அந்தப்பரமபுருஷனுடைய ஆராதனத்தின்பொருட்டு சாதனங்களாகமாட்டாதுகளென்று எண்ணுகிறேன் அந்தப்பகவானானவர் கெஜேந்திரனது பக்தி ஒன்றினாலேயே சந்தோஷத்தையடைந்தார் ஆகையினாலே அந்தப்பத்மநாபனுடைய பாதாரவிந்தத்தில் பக்தியில்லாந்த பிராமணனைக்காட்டிலும் பக்தியுடைய சண்டாளனைச் சிரேஷ்டனாகயெண்ணுகிறேன், விஷ்ணுபக்தனாயிருக்கிற சண்டாளனானவன சகல குலத்தையும் பாவனமாகப்பண்ணுகிறான், பிராமணனே வென்றால் தன்னையும், பரிசுத்தம் பண்ணிக்கொள்ளமாட்டான், இந்தப் பகவானனவர் அக்கியானிகளான இந்தஜென்மத்தில் நின்றும்பூஜையை அபேட்சிக்கிறதில்லை ஆனாலும் கிருபானுவாகையால் நான் கிருஷ்ணனாயிருந்தாலும் சங்கையில்லாதவனாய் ஈஸ்வரனுடையமகிமையை என்புத்திஎவ்வளவோ அவ்வளவுஸ்தோத்திரம்பண்ணுகிறேன், வாரீர் ஈசனே பயப்படாநின்ற பிரம்மாமுதலானபேரும் சிரத்தையினாலேயே சத்வமூர்த்தியான உம்முடைய பக்தாளாயிருக்கிறார்கள் அசுரராயிருக்கிற நாங்கள்வயிரபாவத்தினாலே பக்தியுடையவாளன்ற ஆகையால்இந்தக்கோபத்தை அடக்கக்கடவீர், எவன்நிமித்தியமாகஇந்தக்கோபம்உண்டாச்சுதோ அந்த இரணியாசுரன் உம்மாலே சங்காரம் பண்ணப்பட்டான் பராளுக்கும் உபத்திரவத்தைப்பண்ணுகின்ற தேள்-பாம்பு- இதுமுதலான துஷ்டஜாதிகளுடைய வதத்தினாலே சத்புருஷாளும்சந்தோஷிப்பார்களல்லவா, சமஸ்தமான லோகங்களும் இரணியவதத்தினாலே சுகத்தையடைந்தவர்களாய் உம்முடையகோபநிவர்த்தியை அபேட்சித் திருக்கின்றார்கள, வாரீர்நரசிம்மமோ பயங்கரமான முகம் நாக்கு சூரியனையொத்தநேத்திரங்கள் உக்கிரதந்தங்கள் இதுகளை யுடையதாயும், குடலாகிறமாலையோடுகூடினதாயும், சத்துருவைப்பிளவாநின்ற நகங்களையுடையதாயு மிருக்கிற உம்மிடரூபத்தில்நின்றும் நான் பயப்படவில்லை வாரீர் தீனவற்சலனே சம்சாரசாகர துக்கத்தில்நின்றும் நான் மிகவும் பயப்படுகிறேன்.

வாரீர் மங்களமூர்த்தியே யாதொரு காரணத்தினாலேஇஷ்டவஸது வியோகத்தினாலேயும்அனிஷ்டவஸதுவினுடைய கூட்டுறவினாலேயும் உண்டாகாநின்ற சோகாக்கினியினாலே சகலமானயோனிகளிலேயுந்தகிக்கப்படுகிறேன். சோடச விகாரங்களாகிற அறங்களுடனேகூடின இந்தச்சங்சாரசாகரத்திலேஅக்கியானத்தினால்தள்ளப்பட்டும் பிடிக்கப்பட்டும் பிரயன்னனாயுமிருக்கிறஎன்னை உத்தாரணம்பண்ணி உம்முடைய சமீபத்தை அடையும்படிச்செய்யும், இந்தச் சரீரிகளுடைய போகத்தையும், சம்பத்துகளையும், பிரம்மாவினுடைய போகமுதலாகசகல இந்திரியங்களினாலே அனுபவிக்கத்தக்கதாயிருக்கிற விபவத்தையும் அறியாநின்ற நான்காலஸ்வரூபமாயிருக்கிற உம்முடைய மகாசக்தியினாலே துவம்சிக்கப்பட்ட அணிமாதி அஷ்ட அயிஸவரியங்களையும் கோறவில்லை ஆகையால்என்னை உம்முடையபிருத்தியாளான நித்தியமுக்தாளுடைய பாரிசத்தை அடையச்செய்யும்.

வாரீர்முகுந்தனேரஜோகுணத்தினாலேயும், தமோகுணத்தினாலேயும், மிஞ்சியிருக்கிற இந்தஅசுரகுலத்திற்பிறந்த நான்உம்மையிவ்வளவு அவ்வளவென்று சொல்லக்கூடாத கிருபையைஅடைந்தேனே பிம்மா-ருத்திரன்-லட்சுமி-முதலானபேருக்கும் துர்லபமாயும்தமோகுணத்தினாலேயும், மிஞ்சியிருக்கிற பத்ம போலே சகலசந்தாப ஹரமாயுமிருக்கிற யாதொரு உம்முடையகரப்பிரசாதம் என்னுடையசிரசிலேகிருபையினாலேவைக்கப்பட்டுதல்லவா இந்தப் பிரமாதிகள் உத்தமாள் இந்த அசுரன்நீச்சன்என்கிற விக்கியாசமான து அந்தராத்மாவாயும், சுகுர்தாயுமிருக்கிற உமக்கிருக்கவேயில்லை, எப்படியானால் கற்பகவிருட்சமானது தன்னை உபாசியாநின்றபேருக்கு சங்கல்பானுகுணமாகப் பலத்தைக் கொடுக்கின்றதுபோலப் புருஷனுடைய வுபாசனையினால் உம்முடையபிரசாதமுண்டாகின்றது, அதினாலேயும்,இச்சா

னுகுணமாகத் தர்மாதிகளுடைய ஆவிர்ப்பாவமுண்டா
கின்றது உம்முடையபிரசாதத்திலே உத்தமனென்றும்
அதமனென்றும்காரணமன்று, ஆகையினால் சம்சாரமா
கிற பாழுங்கிணற்றிலேவிழுந்திராநின்றும்,தேவரிஷியா
னநாரதராலே பகவத்தாசனாகப்பண்ணி அனுக்கிரகிக்க
ப்படாநின்றுமிருக்கிற நானும்முடைய பக்தாளின் சே
வையை எப்படி விடுவேன்.

இந்தஜெகத்துக்கு ஆதியிலேயும்-அந்தத்திலேயும்
வேறுபட்டவராயிருந்து மத்தியத்திலேயும், நீரேயிருக்
கிரீர் இந்தக்குணப்பிரவாகரூபமான ஜெகத்தை உம்மு
டையமாயையினாலேசிருஷ்டித்து அந்தஜெகத்திலேஅ
னுப்பிரவேசித்தவராய் அந்தந்தக்குணங்களினால் இரட்
சிக்கிறவர்போலவும் சங்கரிக்கிறவர் போலவும் அறியப்
படுகிரீர், பிரளயகாலத்திலே சேஷசயனத்தில்நின்றும்
யோகநித்திரையில்நின்றும், ஒழிந்தவராய் உம்முடைய
நாபியில்னின்றும்-இந்தலோகபத்மமானது உம்மிடத்தி
லேயே அப்பிரகாசமா யிருந்து கொண்டு அதிசூட்சும
மான ஆலம்விரையில்னின்றும்வடவிருட்சம்போல உ
ண்டாகிறது, அந்த லோகபத்மத்திலேபிறந்தபிர்மாவா
னவர் தனக்குப் பிறப்பிடமான பத்மத்தைக் காட்டிலும்
வேறொன்றைக்காணாதவராய் தன்னிடத்திலேவியாபித்
துக்கொண்டிருக்கையில் தனக்குச்செனகாராயிருக்கிறவு
ம்மைதனக்கு வெளியிலேதொடாநின்றுகொண்டுஅந்த
ஜெலத்தில் அநேகசம்வச்சரமுழுகினவனாய் உம்மைஅ
டையாமற்போனான்-இதுயுக்தமே மூளையுண்டானபிற
குபுருஷனானவன் அதற்குள்வியாபியாநின்றவித்தைமு
ளைக்குவெளியிலே வேறாக எப்படிகாணமாட்டுவான்.

வாரீர்ஈசனே, அந்தப்பிர்மாவானவன்மிகவும்ஆச்
சரியத்துடனே கூடினவனாய் திரும்பவும் லோகபத்மத்
தையடைந்தவனாய் உக்கிரமானதபசினாலே வெகுகால
த்துக்குமேல் பரிசுத்தமான அந்தக்கரணத்தையுடைய
வனாய் பஞ்சபூதேந்திரியமனோரூபமான தன்னுடையச
ரீரத்திலேபூமியில்கெந்தத்தைப்போலஅதிசூட்சுமமாக
எங்கும் வியாபித்திருக்கிற அபரிமிதங்களான-முகங்கள்
பாதங்கள்-சிரசுக்கள்-துடைகள்-நாசி-கைகள் - கன்னங்க
ள்=நயனங்கள்=ஆபரணங்கள் = ஆயுதங்கள்=இதுகளி
னாலே சத்துவமூர்த்தியாய் பிரபஞ்சமாகக் காணப்படா
நின்ற பாதாதிஅவயவங்களையுடைய உம்மைப்பார்த்து
சந்தோஷத்தையடைந்தான். அந்தப்பிரம்மதேவனுக்கு
நீர் அயக்கிரிவமூர்த்தியைப்பரியாநின்றுகொண்டுவேத
த்தை அபகரியாநின்றும் மகா பலசாலிகளாயும் ரஸஸ்த
மோகுண மயாளாயிருக்கிற மதுகயிடபாளென்கிற ரா
ட்சசாளை சங்கரித்து வேதங்களை யுபதேசித்தீர் சுத்தசத்
துவத்தை உம்முடையஇஷ்டசரீரமாகச்சொல்லுவார்க
ளல்லவா, தேவதிரியக்கு மனுஷியரிஷியாதிஅவதாரங்க
ளினாலே லோகங்களைப் பாலனம்பண்ணி ஜெகத்துக்கு
விரோதியானபேர்களைச் சங்கரிக்கிரீர்.

வாரீர் சங்காரநதிக்கு அக்கரையிலிருக்கிறவரே அ
கோகஷடப்படுகிறஎன்னை கிருபைபண்ணி இப்போது
அந்தசங்காரமாகிற நதியில் னின்றும் கரை யேறும்படி
செய்து ரட்சிக்கக்கடவீர், இந்தப பிரபஞ்சத்தினுடைய
வுற்பத்திஸ்திதிசங்காரங்களுக்குக் காரணமானஉமக்கு
இந்தசங்காரமாகிற நதியிலே முழுகியிருக்கிறபேரைக்
கரையேறும்படிச்செய்வதில் என்னபிரயாசம்மூடர்களி
டங்களிலல்லவாமகத்துக்கள் அனுக்கிரகம்செயயவேண்
டியது எல்லாரையும்விட்டு என்னைமாத்திரம்இந்தச்சங்
காரநதியில்னின்றும் கரையேறச்செய்வீராகில் உம்மு
டையபக்தாளான இஷ்டஜெனங்களைச்சேவியானின்றஎ
ங்களுக்கு அந்தஉத்தாரணத்தினாலே என்ன பிரயோச
னம்,சிருஷ்டியாதிலீலையையுடையவரே மனனசீலாளா
னரிஷிகளோவென்றால் மோட்சத்தை இச்சித்தவர்களா
ய்நிற்செனமானவனத்திலே விரதத்தை யுடையவர்களா
ய் தபசுபண்ணிக் கொண் டிருக்கிறார்கள். அவ்வளவே
யொழிய வேறொருபிரயோஜனத்திலேஅபேட்சையை
யுடையவர்களன்று தீனனான இந்தச்சமுசாரிகளை விட்
டுநானொருவனுமே முத்தியைக்கோருகிறவனல்லஇந்த
ச்சமுசாரத்திலேயுழலாநின்றபிராணிகளுக்கு உம்மை
த்தவிர வேறொருரட்சகனைப்பார்க்கவில்லை மைதுனமு
தலான கிரகஸ்தாளுடைய சவுக்கியம் யாதொன் றுண்
டோமிகவும் அற்பமாயிருக்கிற அந்தச்சவுக்கியமானது
கைகளுடைய தினவினாலேயுண்டாயிருக்கிற விஷயஇச்
சையையுடையவர்களான சம்சாரிகள் வெகுதுக்கத்தை
யடைந்தவர்களாயிருந்தாலும் அந்தமைதுனசுகத்திலே
திருப்திஅடைகிறதில்லை,தீரனாயிருக்கிறபுருஷன்தானே
உம்முடையபிரசாதத்தினாலே தினவைப்போலமன்மத
பீடையையும் சகிக்கிறான்.

இந்தப்பிரகாரம் பக்தனான பிரகலாதனுடைய பக்
தியினாலே வர்ணிக்கப்பட்ட குணங்களையுடையவராயும்
ஏயகுணசூனியராயுமிருக்கிற பக்தவற்சலனானபகவான்
கோபத்தையடக்கினவராய்பிரணாமம்பண்ணாநின்றபிர
கலாதனைப்பார்த்து சந்துஷ்டனாய் ஒருவார்த்தைசொல்
லுகிறார். வாராய்பிரகலாதனனே, அசுரோத்தமனே உ
னக்குமிகவும் மங்கள முண்டாகக்கடவது வேண்டியவா
த்தைக்கேள் நான் ஆசிரதாளுடையஅபீஷடங்களைப்பூ
சிக்கிறவனாகவிருக்கிறேன், என்னைச்சந்தோஷியாதவனு
க்கு என்னுடையதெரிசனம் கிடைக்கத்தக்கதன்று, வா
ராய்பாகனே இந்தப்பிரகாரம் நானுவிதகாம லோபங்க
ளிலே அடைவிக்கப்பட் டிருந்தாலும் அசுரோத்தமனா

னபிரகலாதனன் பகவானிடத்திலே ஏகாந்தபக்தனுகை யால்வேறொரு பலத்தைக் கோருமலிருந்தான்.

# ௰-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்;

கரியக்காத்தோர் ப்ரகலாதனனைக்காத்து
அருமையாயந்தர்த் தானமடைகையில்
[illegible]
அரனிடத்தி லனுக்கிரகஞ்சொல்லினர்.

ஸ்ரீஹரியானவர் பக்தனை பிரகலாதனனை அனுக்கிரகித்து அந்தரந்தானத்தையடையுகையில் கதாப்பிரசங்கத்தினல் ஸ்ரீஹரியானவர் ருத்திரனிடத்திலே பண்ணப்பட்ட அனுக்கிரகம் சொல்லப்படுகின்றது.

நாரதர்வாக்கியம்.

வாராய்தர்மராசனே, அந்தப்பாலனை பிரகலாதன்னனவன் அந்தவரங்களையெல்லாம் பக்தியோகத்துக்கு [illegible]தமாகஎண்ணினவனுய் பகவானைக்குறித்துச்சிரிப்புடனே ஒருவார்த்தைசொல்லுகிறான். வாரீர் நரசிம்மனே, சுபாவமாகக்கர்மங்களிலே ஆசக்தியையுடையவனென்னை நானுவிதங்களான வரங்களாலேஆசையை உண்டாக்கவேண்டாம் நிர்வேதத்தையடைந்தவனுயும், [illegible]றில்னின்றும் பயந்தவனுயுமிருக்கிற நான் மோட்சத்தைஅபேட்சித்தவனுய்உம்மைச்சரணமாகஅடைந்தேன். நீர் பக்தனுடைய லட்சணத்தையறியவேணுமென்று இச்சையையுடையவராய் பக்தனைச்சமுசாரமூலங்களாயும் இருதயபந்தங்களாயுமிருக்கிற சப்தாதிவிஷயங்களிலே ஏவுகிறீர், வாரீர் புருஷசிரேஷ்டரே, நீர்எனக்கு வேண்டிய வரங்களைக் கொடுக்கிறவரோயாகில் அந்தச் சப்தாதிவிஷயகர்மங்கள் என்னுடைய இருதயத்திலே உண்டாகாமலிருக்கவேணுமென்கிற இந்தவரத்தையே உம்மிடத்தில்னின்றும் வரியானிற்றேனென்று சொல்லாநின்ற பிரகலாதனனைப்பார்த்துபகவான்சொல்லுகிறார்.

ஸ்ரீபகவான் வாக்கியம்.

என்னுடைய ஏகாந்த பக்தர்களான உன்னைப்போலொத்தபாகவதர்கள் என்னிடத்தில்னின்றும்இந்தலோகாந்தரத்திலே அனுபவிக்கத்தக்கதானபலன்களைக் கோருகிறவர்களில்லை ஆனல் இந்தமன்வந்தரகாலமட்டுக்கும்இந்தலோகத்திலே தயித்தியேசுவரர்களுடைய போகங்களையெல்லாம் நீ அனுபவித்துக்கொண்டுனியந்தாவாயிருக்கிறவென்னை எப்போதும்உன்னுடைய இருதயத்திலேவைத்து ஆராதிக்கக்கடவாய் உன்னுலேகானம்பண்ணப்பட்ட இந்தஸ்தோத்திரத்தை எந்தப்புருஷன் உன்னையும் [illegible]த்துக்கொண்டுதிரிகாலங்களில் [illegible] அவனும் கர்மபந்தத்தில்னின்றுவிடப்பட்டு முக்தனுவானென்று சொல்லுகின்றபகவானைப்பார்த்துப் பிரகலாதனன்சொல்லுகிறான்,

பிரகலாதன்வாக்கியம்,

வாரீர்மகேஸ்வரனே, உம்மிடத்தில் [illegible] நான் ஒருவரங்கேட்கிறேன் அதென்னவென்றால் என்னுடையபிதாவான இரணியனென்பவன் உம்முடைய தேஜசைஅறியாதவனுய் மிகவுங்குரூரமான மனதையுடையவனுய்தன்னுடையபிதாவைக்கொன்றீரென்று அசத்தானபுத்தியுடனேகூடினவனுய் உம்முடையபக்தனானஎன்னிடத்திலேயும், துரோகத்தைப்பண்ணியும் சர்வலோககுருவாயும், சிருஷ்டி-ஸ்திதி-சங்காரகர்த்தாவான உம்மைநிந்தித்தான். வாரீர்தீனவற்சலனே என்னுடையபிதாவானவன் சாந்தமான உம்முடைய திருஷ்டியினலே கடாட்சிக்கப்பட்டிருக்கிறதுனுல் தாண்டக்கூடாததாயும் கரையில்லாமலுமிருக்கிற அந்தப்பாபராசியில்னின்றும் பரிசுத்தனாக்கடவனென்றுபிரார்த்தியாநின்றபிரகலாதனனைப்பார்த்து ஸ்ரீஅரியானவர் சொல்லுகின்றார்,

ஸ்ரீபகவான்வாக்கியம்,

வாராய்குலபாவனனே, யாதொருகாரணத்தாலே லோகங்களையெல்லாம் பாவனம்பண்ணுகின்றநீ இந்தஇரணியாசுரனுடைய கிருகத்திலேபிறந்தாயோ அதுகாரணத்தாலே உன்னுடைய பிதாவான இரணியனென்பவன் இருபத்தொருதலைமுறைமையானபிதுர்களுடனேகூட பரிசுத்தனானுன், எந்தவம்சத்திலேநம்முடையபக்தாள் பிறக்கிறார்களோ அந்தக்குலங்கள் மகாபாபிஷ்டங்களாயிருந்தாலும் பரிசுத்தமாகின்றதுகள் வாராய்பிரகலாதனனே, என்னுடையதேகஸ்பரிசத்தாலே சர்வப்பிரகாரத்தினலேயும் பரிசுத்தனானஉன்னுடைய பிதாவுக்குச் செய்யவேண்டியபிரேதகாரியங்களைச்செய்யக்கடவீர். சுபுத்திரனையுடைய இந்த இரணியகசிபுவானவன் உத்தமலோகத்தையடையப்போகிறான்,

வாராய்குமாரா, பிதாவினுடைய சிங்காதனத்திலேறியிருக்கக்கடவாயென்று பகவான் சொன்னபடிக்கே பிரகலாதனனும் தகப்பனுக்குச்செய்யவேண்டிய புத்திரகிருத்தியங்களைச்செய்து பிராமணர்களாலே பட்டாபிஷேகமும்பண்ணப்பட்டவனுய் சுக்கிரனுடையமானஇராச்சியத்தைப் பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தான்,

பிரமதேவர்வாக்கியம்,

பிரமதேவனும் தேவதைகளோடுகூடப்பட்டவனுய் பிரசன்னமுகரானநரசிம்மதேவனைப்பார்த்துஒருவார்த்தைசொல்லுகிறார், வாரீர்தேவதேவனேபாபியாயும் லோகத்தைப்பீடியாநின்றுமிருக்கிற இந்த அசுரனானவன் தெய்வாதீனமாக உம்மாலே சங்கரிக்கப்பட்டான்

அந்த அசுரன் என்னால் சிருஷ்டிக்கப் பட்டதுகளினாலே மரணமில்லாமல் என்னிடத்தில் நின்றும் வரம்பெற்றவனாய்த் தபோயோகபலத்தினால் கர்வியாய் சமஸ்தமான தர்மங்களையும் நாசம்பண்ணினான் அந்த அசுரனானவன் உம்மாலே சங்கரிக்கப்பட்டான், இந்த இரணியனுடைய புத்திரனும் மகாபாகவதனுமாயிருக்கிற பிரகலாதனன் தெய்வாதீனமாகமிருத்தியுமுகத்தில் நின்றும் உம்மாலே விமோசிக்கப் பட்டானென்று சொல்லுகின்ற பிர்மாவைப்பார்த்து ஸ்ரீபகவான் சொல்லுகின்றார்,

ஸ்ரீபகவான்வாக்கியம்.

வாராய்சதுர்முகனே இப்படிப்பட்டவரம் இனிமேல் அசுரர்களுக்கு உன்னாலே கொடுக்கத்தக்கதன்று குரூரமானசுபாவத்தை யுடையபேர்களுக்கு இப்படிப்பட்ட வரங்கொடுக்கிறது பாம்புக்குப்பால்புகட்டி வளர்ப்பது போலாகுமென்று ஸ்ரீஹரியானவர் சொல்லி பிர்மாவினால் பூசிக்கப்பட்டவராய் சர்வபூதங்களுக்குங் காணப்படாதவராய் அந்தர்த்தானமானார், பிற்பாடு பிரகலாதனானவன் பிர்ம்மதேவனையும்-ருத்திரனையும்-பிரஜாபதிகளையும்-தேவர்களை-பகவதம்சமான இவர்களைப்பூசித்துச் சிரசினாலே வந்தனம்பண்ணினான் பிர்ம்மதேவன் சுக்கிராசாரியர்முதலான ரிஷிகளுடனேகூட பிரகலாதனைத் தயித்தியதானவர்களுக்குப் பதியாகப்பண்ணி பிர்ம்மா முதலான தேவர்களெல்லாம்-ஆசீர்வசனஞ்-செய்து ஸ்தோத்திரித்து அவனாலே பூசிக்கப்பட்டவர்களாய்த் தங்கள்தங்கள்ஸ்தானங்களை அடைந்தார்கள் இந்தப்பிரகாரம் விஷ்ணு பாரிஷதர்களான ஜெயவிஜயாள் பிராமண சாபத்தாலே திதிக்குப்புத்திரர்களாகப் பிறந்தவர்களாய் வயிரபாவத்தினால் மனதினாலேயோசிக்கின்ற ஸ்ரீஹரியினாலே சங்கரிக்கப்பட்டார்கள்-திரும்பவும் அந்த ஜெயவிஜயாள் பிராமணசாபத்தினாலேயே கும்பகர்ணனாகவும் இராவணனாகவும்பிறந்து ஸ்ரீராமருடையபராக்கிரமபாலனங்களினாலே விழுந்தவர்களாய் ஸ்ரீராமனையே நினைத்துக்கொண்டு தேகத்தைவிட்டார்கள் பிற்பாடு அவர்களே சிசுபாலதெந்தவக்கிரர்களாகப்பிறந்து ஸ்ரீகிருஷ்ணனாலே சங்கரிக்கப்பட்டவர்களாய் அவருடைய சாயுச்சியத்தை யடைந்தார்கள்,

நாரதர்வாக்கியம்,

வாரீர்தர்மநந்தனரே, உம்மாலேஎது கேழ்க்கப்பட்டதோ அந்தச்சிசுபாலன் ஸ்ரீகிருஷ்ண வயிரிகளுடையசாயுச்சியமான நம்மாலே உமக்குச்சொல்லப்பட்டது, மகானுபாவர்களான ரிஷிகள் பரப்பிர்ம்மரூபியான ஸ்ரீகிருஷ்ணபகவான் மனுஷியரூபியாயிக்கே பிரத்தியக்ஷமாகவாசம்பண்ணுகிறாரென்று உங்களுடைய கிரகத்தைக்குறித்து நாலுதிக்கிலேயுமிருந்து வருகிறார்கள், அப்படிப்பட்ட நீங்களே இந்தப்பூலோகத்திலே மகா பாக்கியத்தைப்பண்ணினபேர்கள் ஸ்ரீகிருஷ்ணரானவர் உங்களுக்குப் பிரியராயும் குருவாயுமிருக்கிறார் இந்தப்பகவானான ஆதிபுருஷனானவர் பூர்வத்தில் மஹாமாயாவியான மயனாலே போக்கடிக்கப்பட்ட ருத்திரனுடைய எசஸ்ஸைத் திரும்பவும் விஸ்தரிப்பித்தாரென்று சொல்லுகின்ற நாரதமகாரிஷியைப்பார்த்துத் தர்மராஜா சொல்லுகின்றார்.

தர்மபுத்திரர்வாக்கியம்.

வாரீர்மகாரிஷியே, ஜெகதீசனான ருத்திரனுடைய கீர்த்தியை மயன் எந்தக்காரியத்திலே போக்கடித்தான் அந்தக்கீர்த்தி ஸ்ரீகிருஷ்ணபகவானாலே திரும்பவும் எப்படிவிஸ்தரிக்கப்பட்டது இதையெனக்குச்சொல்லவேண்டுமென்றுகேட்கின்ற தர்மபுத்திரனைப்பார்த்து நாரதமகாரிஷியானவர் சொல்லுகிறார்,

நாரதர்வாக்கியம்,

வாரீர்யுதிஷ்டிரனே, யுத்தத்திலே ஸ்ரீகிருஷ்ணபகவானாலே விருத்தியை யடைவிக்கப்பட்ட தேவதைகளினால் செயிக்கப்படாநின்ற அசுரர்கள் மாயாவிகளுக்கெல்லாம்பரமகுருவான மயனைச்சரணமடைந்தார்கள், சிருஷ்டியில்சமர்த்தனான அந்தமயனானவன் ஒருத்தராலேயுங்காணக்கூடாத போக்குவரவையுடையதுகளாயும் இன்னபடியென்றெண்ணக்கூடாதஉபகரணங்களையுடையதுகளாயுமிருக்கிற மூன்றுபட்டணங்களைச் சிருஷ்டித்து அவர்களுக்குக்கொடுத்தான் அசுரசேனாபதிகள் பூர்வவயிரத்தை நினைத்துக்கொண்டு அந்தத்திரிபுரங்களோடுகூட கண்ணுக்குக்காணப்படாமலிருந்துகொண்டு லோகபாலர்களோடுகூடின மூன்றுலோகங்களையும் பீடித்தார்கள் பிற்பாடு மூன்றுலோகங்களும் ஈஸ்வரனை அடைந்து வணங்கிச்சொல்லுகிறார்கள்,

வாரீர்தேவனே, உம்முடையவர்களாயும் திரிபுரவாசிகளான அசுரர்களாலே பீடிக்கப்பட்டுமிருக்கிற எங்களையெல்லாம் ரக்ஷியுமென்றுசொன்னார்கள், இந்தப்பிரகாரம் லோகங்களாலே பிரார்த்திக்கப்பட்டு பகவானாயும் சங்காரகர்த்தாவாயுமிருக்கிற ருத்திரனானவன் தேவதைகளைப்பார்த்துப் பயப்படாதீர்களென்று சொல்லி அனுக்கிரகிக்கவராய்த் தனுசிலேசரத்தை சந்தானம்பண்ணி அபிமந்திரித்துத் திரிபுரங்கள்மேலேவிட்டார், அந்தச்சரத்தில்நின்றும் சிலபாணங்களினாலே திரிபுரங்கள் காணப்படாமற்போச்சுதுகள், திரிபுரவாசிகளான அந்த அசுரர்களெல்லாரும் அந்தப் பாணங்களினாலே ஸ்பரிசிக்கப்பட்டு விழுந்திறந்தார்கள், மகாயோகியான அந்தமயனானவன் அவர்களைக்கொண்டு தன்னாலே நிர்மிக்கப்பட்ட அமிர்தரசத்தையுடையதாயிருக்கிற கூபத்திலே போட்டுவைத்தான் அந்தஅசுரர்கள் சித்தாமிர்த ரசத்தினால் ஸ்பரிசிக்கப்பட்டு வச்சிரம்போலே திடகாத்திரர்களாயு

மேகத்தைப் பிளவாநின்ற இடிநெருப்புகள்போல எழு ம்பினார்கள், அப்படிஎழும்பியவர்களைப்பார்த்து வியச னப்பட்டுக்கொண்டிராநின்ற ரிஷபத்துவபனைப்பார்த்து விஷ்ணுவானவர் ஒரு உபாயத்தைப்பண்ணினார் அதெ ப்படியென்றால் அப்போதுபிர்மதேவன்கன்றாகவும்தா ன்பசுவாகவும் ரூபத்தைதரித்தவராய் மத்தியானகால த்தில் திரிபுரபட்டணத்திற்பிரவேசித்துரசகூபத்திலே யிருக்கிறஅமிர்தத்தைச் சேஷமில்லாமல் பானம்பண் ணினார், அங்கஅசுராள்பார்த்துக்கொண்டிருந்தும்மோ கத்தையடைந்தவர்களாய் பசுரூபமான அந்த விஷ்ணு வைநிஷேதியாமலிருந்தார்கள் அதையறிந்து மாயாவியா னமயனானவன்வியசனமில்லாதவனாய்தெய்வகதியையும் ஸ்மரித்தவனாய் அந்தஅமிர்தரசத்தை ரட்சியாநின்றபே ர்களைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகிறான்.

இந்தலோகத்தில் தனக்கும் அன்னியனுக்கும் தெ ய்வத்தினாலேகற்பிக்கப்பட்டிருக்கிறதைப் போக்கடிகை க்குஎவன்தான் இச்சிப்பனென்று சொன்னான் பிற்பாடு ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் தம்முடைய சக்திகளினாலே ருத்திரனுக்கு-ரதம்-சாரதி-குதிரைகள்- தனுசு-சரம்-இ வைமுதலானயுத்தசாதனத்தைச் சிருஷ்டித்துக்கொடுக் க இதுகளைக்கொண்டு ருத்திரனானவன் யுத்தசன்னத் தையுடையவனாய் பகவானுடைய தேஜசினாலேரட்சிக்க ப்பட்டவனாய் அபிசித்தென்கிறமுகூர்த்தத்திலேபேதிக் கக்கூடாத திரிபுரங்களைத்தகித்தான். அப்போது ஆகா சத்திலே துந்துபிவாத்தியம்முழங்கினதுகள், தேவர்க ள்புஷ்பவருஷம்வருஷித்தார்கள் இந்தப்பிரகாரம் திரிபு ராந்தகனானவர் திரிபுரங்களைத் தகித்து பிர்மாதிகளினா லேஸ்தோத்திரம்பண்ணப்பட்டவராய் தம்முடைய ஸ் தானத்தையடைந்தார், ஸ்ரீஹரியினுடையலோகபாலன ங்களாயிருக்கிறவீரியங்களானதுகள் ரிஷிகளினால்கானம் பண்ணப்பட்டு மிருக்கிறதுகளென்று நாரதமஹாரிஷி யானவர்சொன்னார்.

## கக-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

அரியஸ்திரீகட்கு மந்தணர்தங்கட்கும்
தருமசாதாரணமாந்தர்மங்களும்
ஒருமைமுக்கிய முள்ளதுமின்மையும்
தெரியவேதர்ம முஞ்சாற்றுவாமரோ

பிராமணாதிவர்ணங்களுக்கும், ஸ்திரீகளுக்கும்,சாதா ரணமானதர்மங்களும், அதில்முக்கியமாயும்அமுக்கிய மாயுமிருக்கிறதர்மங்களுஞ் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிக்ஷித்தே தர்மபுத்திரரானவர் மகாத்து மாக்களுக்கெல்லாம் அக்கிறகெண்ணியராயும்,பகவானி டத்திலேயே மனதையுடையவராயுமிருக்கிற அந்தத்த யித்தியபதியான பிரகலாதனனுடைய சற்புருஷகோஷ் டியில் கொண்டாட்டப்பட்ட சரித்திரத்தைக்கேட்டு சந் துஷ்டனாய்திரும்பவும் பிர்மகுமாரரான நாரதமகாரிஷி யைப் பிரசனம்பண்ணிச் சொல்லுகிறார்,

வாரீர்ஞானசக்திமுதலான குணங்களையுடைய நார தமகாரிஷியே, எந்ததர்மத்தினால்புருஷன் ஞானபக்தி களை அடைகுவேனோ அப்படிப்பட்டவர்ணாசிரம ஆசா ரங்களோடு கூடினதாயும் அநாதியாயுமிருக்கிற மனே ஷியதர்மத்தைக் கேட்பதற்கு இச்சிக்கிறேன் உம்மைப் போலொத்த பிராமணாள் சிரேஷ்டமாயும் ரகசியமாயு மிருக்கிற தர்மத்தைஅறிவார்கள், இதராளப்படி யறிய மாட்டார்களென்று கேளாநின்ற தர்மபுத்திரரைப் பார் த்து நாரதமாரிஷிசொல்லுகின்றார்,

நாரதர்வாக்கியம்,

வாராய் தர்மபுத்திரமகாராஜனே, வர்ணாசிரமதர்மங் களுக்கு என்னாலேகேழ்க்கப்பட்ட அநாதியான தர்மத் தைச் சொல்லுகிறேன். யாதொருபகவான் தம்முடைய அம்சத்தினால் தர்மத்துக்கு தெக்ஷகுமாரிருனிடத்தில் அவதரித்தவராய் பத்ரிகாசிரமத்தில் தபசுபண்ணிக் கொண்டிருக்கிறார் அந்தப்பகவானைப் பிரணமம்பண் ணி மனுஷியாளுக்கெல்லாஞ்சாதாரணமானதர்மங்களை ச் சொல்லுகிறேன் கேளும் சத்தியமும் தயையும்ஏகா தசியில் உபவாசமும் சவுசமும் க்ஷமையும யுக்தாயுக் த விவேகமும் மனோநிக்கிரகமும் பாகிந்திரிய நிக்கிரக மும் அயிம்சையும் பிரமசரியமும் தானமும் குருவினா லே யுபதேசிக்கப்பட்டமந்திர ஜெபமும் மனோவாக்குக் காயங்கள் ஒருவழிப்பட்டிருக்கின்ற உள்ளத்தைக் கொ ண்டு சந்தோஷமாயிருக்கையும் ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியி னுடைய சிரவணமும் கீர்த்தனமும் சேவையும் இது முதலான முப்பது தர்மங்களும் பிராமணாதிவர்ண ங்களுக்குஞ் சாதாரணமானதர்மங்களில்பிராமணலக்ஷ ணத்தைச் சொல்லுகிறேன் பிர்மதேவன்எவனைப்பிரா மணனாகச் சொன்னாரோகெற்பாதாரமுதலானசமஸ்கா ரங்களுடனே கூடிக்கொண்டிருக்கிறவன் பிராமணனா வன் எக்கியம் அத்தியயனம் தானம் பிரமசரியாதிஆசி ரமங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிறகிரிகைகள் இவைக ள் விசுத்தமான குலத்தினாலேயும் ஆசாரத்தினாலேயும் சுத்தர்களான பிர்ம க்ஷத்திரிய வைசியர்களுக்குத் தர்ம மாக விதிக்கப்பட்டிருக்கிறதுகள், தான்யாகம்பண்ணு கிறதும் ஒருவனுக்குயாகம்பண்ணி வைக்கிறதும், தா ன் அத்தியயனம்பண்ணுகிறதும் ஒருவனுக்குச் சொல் லுகிறதும், தான் தானங்கொடுக்கிறதும், தானம்வாங் குகிறதும்,இவைஆறும் பிராமணனுக்கு விகிதகர்மம்

ராஜாவுக்குத் தானம்வாங்குகிறதுதவிர மற்ற ஐந்துதர்மங்களும் பிராமணர்கள்தவிர இதரவர்ணங்களிலேகப்பம் தெண்டம் உலுப்பை முதலானதுகளை வாங்குகிறது விகிததர்மமாகச்சொல்லப்பட் டிருக்கிறது வைசியனுக்கோவென்றால் நித்தியமாகப் பிராமண குலத்தை அனுவர்த்திக்கிறதும் வியாபாரம்பண்ணுகிறதும் தர்மமாகச்சொல்லப்பட்டிருக்கின்றது, சூத்திரனுக்கோவென்றால் மூன்றுவர்ணங்களுக்கும் சிசுருஷை பண்ணுகிறதே தர்மமாகின்றது, இனிபிராமணனுக்கு நித்தியமாக உபாதானம் பண்ணிக்கொள்ளுகையும் புலத்திலேயுங்கடைவீதிகளிளேயுதிர்ந்துபோகின்றதானியாதிகளைபொறுக்கிக்கொள்ளுகையும் விர்த்தியாகும் சவுரியம் வீரியம் தைரியம் தேஜசு தியாகம் ஆத்துமஜெயம் க்ஷமை பிராமணர்களை தேவதையாகஎண்ணுகை தயை - ரக்ஷணம இவையெல்லாம் ராஜதர்மமாகும்,

தேவர்கள் பிராமணர்கள் விஷ்ணு பசுக்கள் இவர்களிடத்திலேபக்தியும் பிராமணர்முதலான மூன்றுவர்ணங்களையுந் சந்தோஷிப்பிக்கையும் வர்த்தகமும்சாமர்த்தியமும் இவைகளெல்லாம் வைசியலட்சணமாகும், வணக்கமும் எஜமானிடத்திலேசேவிக்கையும், திருடாமலிருக்கையும் சத்தியமும் கோப்பிராமணர் க்ஷணமும்- சூத்திரவர்னத்துக்குத் தர்மமென் றறியத்தக்கது, பக்தியை தேவதையாகவுடையவர்களானஸ்திரீகளுக்குப்பதிசுருஷையும், பதிக்குஅனுகூலமா யிருக்கையும், பதியினுடைய பந்துக்களிடங்களிலேஅனுவர்த்திக்கையும் நித்தியமாகப் பதியினுடையநியமத்தை எதிர்க்குகையும், இந்தப்பிரகாரம் ஸ்திரீயானவள் யோக்கியனானபர்த்தாவைஅடையக்கடவள், இனிமேல், சங்கரஜாதிகளுடைய தர்மம்சொல்லப்படுகிறது வண்ணான் சக்கிலி கைக்கோளன் நட்டுவன் வலைக்காரன் மேதரவன் வேடனென்று எழுவகைப்பட்ட அந்தியசாதியாயும் இவர்களுக்குக் கீழ்ஜாதியாகியசண்டாளன் புலக்கசன் மாதங்கன்முதலான அந்தியசாதிகளாயு மிருக்கிற சங்கர சாதிகளிலே களவு இம்சை இதுகளில்லாதபேர்களானதுஇவர்க்குக்குலக்கிரமமாகவராநின்ற அந்தந்தவிர்த்தியே அவரவருக்குத் தர்மமாகஅறியத்தக்கதென்று வேதாந்தக்கியானிகளினாலே சொல்லப்பட்டிருக்கிறது,

## ௰௨-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்-

பிரமசாரி வானப்பிரஸ்தாளிட
தருமமும்பிரம சரியமுதலான
பொருமவாஸ்ரமங் கட்டும்பொதுவான
அரியதர்மங் களுமறைவாமரோ.

பிரமசாரி வானப்பிரஸ்தர்களுடைய தர்மமும் பிரமசரியமுதலான நாலுஆசிரமங்களுக்கும் பொதுவானசிலதர்மங்களுஞ் சொல்லப்படுகின்றது,

நாரதர்வாக்கியம்,

வாரீர் தர்மபுத்திரமகாராஜனே பிர்ம்மசாரியானவன்குருகுலத்திலேவாசம்பண்ணிக்கொண்டுகுருவினிடத்தில் பயபக்திவிசுவாசமுள்ளவனுயும் காயத்திரியைசெபியாநின்றுகொண்டு சாயம்பிராசா யிரண்டுசந்திகளிலேயும் குரு சூரியன் அக்கினி சுரோத்தமான் இவர்களை உபசரிக்கக்கடவன் முந்தி கிருஷ்ணசனம் சடைதண்டம் கமண்டலம் உபவிதம்-இதுகளையெல்லாம்கையிலே பவுத்திரத்தையுடையவனாய் சாஸ்திரமாகத்தரிக்கக்கடவன், ஸ்திரீகளிடங்களில் அதிக பாஷணத்தைப் பண்ணமலிருக்கக்கடவன் கிரகஸ்தனுக்கோவென்றால் ருதுஸ்நானம்பண்ணியிருக்கிற தன்னுடைய ஸ்திரீயுடனே ரதியும்மதனும்போலவும் மற்றகாலங்களிலேகுருவைஅனுவர்த்திக்குகையும் தர்மமாகிறதுவிருதநிஷ்டாளான சிலபேர்கள் சரீத்துக்குத்தயிலமிடுகை சிரசுக்குத்தயிலமிடுகை உடம்புபிடித்துக் கொள்ளுகை ஸ்திரீகளைப்பார்க்குகை மாங்கிஷபோஜனம் மதுபானம் கெந்தபுஷ்பாதி அலங்காரம்இதுகளையெல்லாம் விடக்கடவர்கள் இந்தப்பிரகாரம் விருதத்தில் நிஷ்டையையுடையவனாய் பிர்மசரியமுதலான நாலுஆசிரமங்களிலே ஒன்றைப்பற்ற அந்தஆசிரமதர்மத்தை ஆசிரியாநிற்கிறவன் வேதாந்தக்கியானியாய்ப் பரப்பிரம்மான ஸ்ரீமந்நாராயணனை அடைகுவன்,

வாரீர் தர்மராஜனே இனிமேல் வானப்பிரஸ்தனுடைய முனிசம்மந்தங்களானநியமங்களையும் சிலநியமங்களைப்பற்றி வானப்பிரஸ்தஆசிரமநிஷ்டனானவன் சீக்கிரமாக ரிஷிலோகமென்னப்பட்டமகாலோகத்தையடைகுவனே அப்படிப்பட்டநியமங்களையும் சொல்லுகிறேன் வானப்பிரஸ்தன் உழுதுவிளைக்கப்பட்ட பூமியில்உண்டானபலன்களையும் உழாதபூமியில்தன்னண்டையே உண்டானபலன்களையும் அகாலத்திலேயுண்டானபலன்களையும்அக்கினிபககுவமானபதார்த்தையும்விட்டுயோக்கியகாலத்தில்அபக்குவமானகந்த மூலமுதலானவஸ்துவையும் சூரியபக்குவமானபலாதிகளையும்பூசிக்கக்கடவன் பனி காற்று அக்கினி மழை வெய்யில் இதுகளைச்சகித்துக்கொண்டு அக்கினிநிமித்தமாகவேபர்னசாலையையாவதுகிரிகுகையாவது ஆஸ்ரயிக்கக்கடவன்தலையில்மயிர்உடலிலேமயிர் நகங்கள் தாடி உடம்பழுக்குசடைகமண்டலம் கிருஷ்ணசனம் தெண்டம்மரவுரிஇதுகளையெல்லாம்தரிக்கக்கடவன் இந்தப்பிரகாரம்வானப்பிரஸ்தனானவன் வனத்திலேபனிரண்டுவருஷம் எட்டுவருஷம்நாலுவருஷம் இரண்டுவருஷம் ஒருவருஷமாகிலும்தபசி

லேயுண்டானகஷ்டத்தினுல் புத்தியெப்படிநசியாமலிருக்குமோ அப்படிசஞ்சரிக்கக்கடவன் வியாதிகளினுலேயும் சிறையினுலேயும் கர்மானுஷ்டானத்தி னுலேயும். கியான அனுஷ்டானத்தினுலேயும்,தான் சமர்த்தனுகாமற்போனுனேயாகில்உபவாசமுதலானவிருத்தத்தை ஆசரிக்கக்கடவன்,

எப்படியென்றுல்அவுபாசனத்தை ஆத்துமாசமானுேபனம்பண்ணிக்கொண்டு அகங்காரமமகாரங்களைவிட்டு பஞ்சபூதசங்காதமானதேகத்தை எதாயோக்கியமாகத் தந்தாமுடையகாரணங்களிலே கூட்டக்கடவன் அதெப்படியென்றுல் புத்திமானுனவன் ஆகாசத்திலே இந்திரியங்களையும் வாயுவினிடத்திலே மூச்சு காதுகளையும் தேசசிலே தன்னுடையசரீரத்தினுள்ளபூஷணத்தையும் அப்புக்களிலே இரத்தம் சிலேஷ்மம்சுக்கிலசுரோணிதங்கள் இதுகளையும் மிகுந்த அஸ்திமாங்கிசமுதலானதுகளைப்பிரிவிதத்துவத்திலேயும் எதில்நின்றும்எதுஎப்படிபிறந்துதோ அந்தப்பிரகாரமே லயிக்கக்கடவன் இந்தப்பிரகாரம் ஸ்தூலசரீரத்தைநசிப்பித்து லிங்கசரீரங்களையும் சொல்லத்தக்க விஷயத்தோடுகூட வாக்கிந்திரியத்தை அக்கினியிலேயும்காரியத்துடனேகூடஅஸ்தயிந்திரியத்தை இந்திரனிடத்திலேயும் நடையோடுகூட பாதவிந்திரியங்களை விஷ்ணுவினிடத்திலேயும் ரதிக்கிரியையுடனேகூட உபஸ்தவிந்திரியத்தைப் பிர்மாவினிடத்திலேயும் மலவிசர்க்கத்துடனேகூடபாயுவிந்திரியத்தை துருத்தியுவினிடத்திலேயும் அந்தந்தஸ்தானங்களை அதிக்கிரமில்லாமல் சேர்க்கக்கடவன் சப்தத்துடனேகூட சிரவணவிந்திரியத்தை திக்குகளிலேயும் ஸ்பரிசத்தோடுகூட தொக்கேந்திரத்தை வாயுவினிடத்திலேயும் ரூபத்தோடுகூடச் சுரிந்திரியத்தைசூரியனிடத்திலேயும் ரசத்துடனேகூட சிருயிந்திரியத்தைஅப்புக்களிலேயும். கெந்தத்துடனேகூட கிராணேந்திரியத்தைப் பூமியிலேயும் சேர்க்கக்கடவன்.

## ௰௩-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்,

எதுமோக்ஷசா தனமாமெதிதர்மம்
வேதமாமவ தூதவிர்த்தாந்தத்தால்
ஓதிநிந்த பசித்தியுடையவன்
வாதையாமவ ஸ்தையும்வர்ணிக்கப்படும்,

மோக்ஷசாதகமான எதிகர்மமும் ஒருஅவதூதவிருத்தாந்தத்தினுலே தபசில் சித்தியையுடையவனதுஅவஸ்தையும் வர்ணிக்கப்படுகின்றது-

நாரதர்வாக்கியம்,

வாரீர் தர்மராஜனே இந்தப்பிரகாரம் வானப்பிரதன் சுதர்மனுஷ்டானத்தில் சக்தனுகாவிட்டால் முன் சொன்னபிரகாரத்தினுலே தியானம்பண்ணிஉபவாசதீட்சையைப் பண்ணக்கடவன். சுதர்மானுஷ் டானத்தில் சக்தனுகில் முன்சொன்னபிரகாரமே தியானம்பண்ணி சன்னியசிக்கக்கடவன், இப்படிதியானம்பண்ணி சன்னியசிச்சுவிரக்தனுய் சரீரத்தைக்கொண்டு அஸ்தானமாகிறகிராம்த்திலே அந்தராத்திரிமாத்திரம் அங்கே வாசம் பண்ணிக்கொண்டு சஞ்சரிக்கக்கடவன், சந்நியாசியானவன் வஸ்திரத்தைத்தரியாமல் கவுபீனமாத்திரந் தரித்தவனுய் ஆபத்தில்லாதவேளையிலே தனக்குஅடையாளமான தெண்டமுதலானதைத்தவிர மற்றொன்றைத்தரிக்கக்கூடாது இந்தப்பிரகாரம் எதியானவன் ஆத்மானுபவபரனுய் வேறொருஆஸ்ரயமில்லாமல்சர்வப்பிராணிகளுக்கும்சுகுர்துய் நாராயணனையே பிராப்தியராகநிச்சயித்தவனுய் ஒருவராகவே சஞ்சரிக்கக் கடவன் சாகிறஅவஸதை சுசுப்திஅவஸ்தை இதுகளுடையசந்தியிலே ஆத்மநிஷ்டனுயிருக்கக்கடவன்- நிச்சயமாகவுண்டாகாநின்றமரணத்தையும் அனித்தியமானபிழைத்திருக்குகையும்,இவ்விரண்டையும் சந்தோஷியாமலிருந்துகொண்டு சிவனசாதனமான சிற்பவித்தைமுதலானதை விட்டவனுயும், வேதத்தினுலே சங்கைபண்ணுநின்றதர்க்கங்களையெல்லாம்விட்டவனுயும், இருக்கக்கடவன். இனிமேல்பரமஅங்கிசாளான எதியினுடைய விசேஷ தர்மம், சொல்லப்படுகிறது, சாந்தனுயும்,சமசித்தனுயுமிருக்கிற எதியினுடையஆசிரமமானது மிகவும்தர்மத்துக்குஎதுவில்லாமையாகையால் தத்துவக்கியானுேகயத்தினுடையஎதியானவன் அந்தஆசிரமத்தை லோகநிமித்தமாகத் தரிக்கவும் விட்டுவிடவுங்கூடும் கியான பரிபக்குவத்தையுடையசந்நியாசியானவன் இதராளாலேஅறியப்படாத ஜாதியாதிவேஷத்தை யுடையவனுயும், பிரயோசன அபேட்சையில்லாதவனுயும், உன்மத்தன்போலவும்-பாலன்போலவும்,பிர்மானுபவத்திலே கியானனுயிருந்தாலும்,ஊமைபோலும் இருந்துகொண்டு மனுஷியாள்எண்ணும்படியாகச்சஞ்சரிக்கக்கடவன் இந்தப்பரம அங்கிசனுடையசரியையிலே பெரியோர்கள்'பிரகலாதனுக்கும் அசகரவிருதநிஷ்டனுனகுருமுனிக்கும் சமவாதரூபமாயும்,புரோதனமாயுமிருக்கிற இந்தஇதிகாசத்தை உதாகரணமாகச்சொல்லுவார்கள் அதெப்படியென்றுல் பகவத்பிரியனுன பிரகலாதனுனவன் லோகங்களுடையநடத்தையை அறியவேணுமென்கிற இச்சையினுலேசிறிதுமந்திரிகளுடனேகூடலோகங்களைச்சஙகரித்துக்கொண்டு சயிகபர்வதத்தினுடையதாழ்வரையிலே காவேரிக்குச்சமீபமான பூப்பிரதேசத்தில்படுத்துக்கொண்டும், அழுக்கடைந்ததேகாலயங்களினுலே மறைந்திருக்கிறபிர்மதேஜசையுடையவனுயுமிருக்கிற ஒரு முனியைக்கண்டான்ஒருவராலேயும் இன்னுனென்று அறியக் கூடாத

முனியைப் பிரகலாதனன் கண்டு வேதவிதிப்படி வணங்கி பிரசனம்பண்ணுகிறான்,

பிரகலாதனன்வாக்கியம்.

வாரீர்முனியே உம்முடைய சரீரத்தைப்பார்த்தால்லோகத்திலே திரவியத்துக்காகவியாபாரங்களைப்பண்ணிதிரவியம் சம்பாதிக்கிறவனுக்கல்லவோதேகம்பருத்திருக்கும்,வாரீர்பிர்மநிஷ்டரே வியாபாரசூனியராய்சயனித்துக்கொண்டிருக்கிற உமக்குச்சரீரமானது எந்தவுதுவினாலே பருத்திருக்கின்றதோ அதைஎனக்குச் சொல்லக்கூடுமானால் சொல்லக் கடவீரென்று பிரகலாதனாலேபிரஸனம்பண்ணப்பட்ட முனியானபிராமணன் அந்தப்பிரகலாதனுடைய வாக்காகிறஅமிர்தத்தினாலேவசிகரிக்கப்பட்டவராய் சிரித்துகொண்டு அந்தப் பிரகலாதனைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றார்.

நாரதர்வாக்கியம்.

வாராய்அசுரசிரேஷ்டனே பெரியோர்களுக்குச்சம்மதனான நீ,கியானதிருஷ்டியினாலேஇந்தவுலகத்தில்மனுஷியாளுடைய பிரவர்த்திநிவர்த்திமார்க்கங்களுடைய பலன்களையும், நன்றாகஅறிந்தேயிருக்கிறாய்ஸ்ரீமந்நாராயணன்பக்தியினாலே உன்னுடையஇருதயத்தில் சார்வதாவாசம்பண்ணிக்கொண்டு அக்கியானமான இருளைச்சூரியன்போலப் போக்கடித்துக்கொண்டிருக்கிறார், ஆகையினால் உன்னுடையபிரஸனங்களை எனக்குத்தெரிந்தமட்டுக்குஞ்சொல்லுகிறேன்,

வாராய்பிரகலாதனனே சங்காரப் பிரவாகத்தைப் பெருக்காநின்றும் ஆசையினாலேகர்மமார்க்கத்தில்பிரவர்த்தியானின்ற நான்முன்னேநானாவிதஜென்மங்களிலே கூட்டிவைக்கப்பட்டேன், அந்தப்புண்ணிய பாபகர்மங்களினாலே சுழலாநின்ற நான் சொர்க்க மோட்சங்களுக்கும் திரியக்ஜென்மங்களுக்கும் மனுஷியஜென்மத்துக்கும்துவாரமாயுமிருக்கிற இந்த மனுஷியஜென்மத்தைத்தன்னிச்சையாக அடைவிப்பிக்கப்பட்டேன், இந்தசீவனுடைய நிரதிசயசுகசுரூபமானது சர்வகர்மங்களுடைய நிவர்த்தியிலே தனக்குத்தானே பிரகாசிக்கிறது கர்மபோகங்களோவென்றால் மனோரத மூலங்களாய்க் கொண்டு அலித்தியங்களென்று பார்த்து வியாபாரத்தைவிட்டவனாய் பிராப்தகர்மபலன்களை அனுபவித்து சயனித்துக்கொண்டிருக்கிறேன், மூடனானவன் ஜலத்திலேயுண்டாகாநின்ற பாசிப்புல்லுகள் முதலானதுகளினாலே மறைக்கப்பட்டிருக்கிற ஜலத்தை அறியமாட்டாமல் விட்டு ஜலம்வேணுமென்கிற இச்சையினால் கானலைக்கண்டு ஜலமென்றுஓடுவதுபோல புருஷன் தன்னிடத்தி லிருக்கிற பரமாத்மாவைவிட்டு அப்பாலே தேடுகிறான்.

வியாதிகளினாலேயும் மனோவியா சங்கத்தினாலேயும் சோராதியுபத்திரவங்களாலேயும் ஒருக்காலும் விடப்படாமலிருக்கிற இந்தமனுஷியனுக்கு மகாபிரயாசத்தினாலேஅடையப்பட்டஅர்த்தகாமங்களினால்என்னபிரயோசனம்-ஆகையினால் நான்இதுகளையெல்லாம் விட்டுத் தனக்குத்தானேயுண்டான சந்தோஷத்துடனேயும், அற்பமாயும், வெகுவாயும், மதுரமாயும், மதுரமில்லாமலிருந்தாலும் சிரத்தையுடனேயாவது சிரத்தையில்லாமலாவது கொடுக்கப்பட்டதையும், பகலிலேயாகட்டும் இராத்திரியிலேயாகட்டும் தனக்குத்தானே பிராப்தமான அன்னத்தைப் பொசித்துக் கொண்டும் பட்டுபீதாம்பரம்கிருஷ்ணசனம் மரவுரி சீரணவஸ்திரம் இதுகளிலே பிராப்தமானதை சந்துஷ்டனாய்த் தரித்துக்கொண்டு,மரத்தினிழலில் பூமியில் கல்லுகளில் உப்பரிகையின்மேல்கட்டிலில் சயனித்துக்கொண்டும் ஸ்நானம்பண்ணினவனாய் கெந்தாதிகளையும், நல்ல வஸ்திரங்களையும் தரித்துக்கொண்டவனாய்-ரதம்-அஸ்வம்-கெஜம்-இதுகளினால் சஞ்சரித்தும், திகம்பரனாய் பிசாசம்போலே சஞ்சரித்துக்கொண்டு மிருப்பேன், சுபாவமாக ஒருத்தன்போலிராமல் வேறுவேறாயிருக்கிறஜெனத்தை நானிந்திக்கிறதுமில்லை, ஸதுதிக்கிறது மில்லை வாராய் பிரகலாதனனே,நீ-மகாபாகவதனாகையால் என்னுடையசரித்திரமானது உனக்குநம்மாலே சொல்லப்பட்டதென்றுசொல்ல அசுரராஜனான பிரகலாதனனானவன் அந்தமுனியினாலேசொல்லப்பட்ட பரம அங்கிசாளுடைய தர்மத்தைக்கேட்டு சந்துஷ்டனாய் அந்தமுனியைபூசித்து அவருடையஅனுக்கைக்கொண்டுதன்னுடையகிரகத்தையடைந்தான்,

## ௰௪-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

தகும்படித்தேச காலவேசத்தினால்
மிகவுஞ்சிரேயசுக் குச்சாதனமான
உகந்திடுங்கிர கஸதனுத்தமமான
இகலுந்தர்ம மெடுத்துவிளம்புவாம்.

தேசகால வேதத்தினாலே மிகவும்சிரேயசுக்குச்சாதனமான கிரகஸதனுடைய உத்தமமானதர்மத்தைச்சொல்லப்படுகின்றது.

யுதிஷ்டிரர் வாக்கியம்.

வாரீர்தேவரிஷியே, சஞ்சாரத்திலேயேமிகவும்பற்றியிருக்கிற புத்தியையுடைய என்னைப்போலொத்த கிரகஸதனானவன் எந்த உபாயத்தினாலே மோட்சசாதனமான இந்த நிவர்த்திமார்க்கத்தைச் சீக்கிரமாகஅடையவன்-அதை யெனக்குச்சொல்லுமென்று கேளாநின்றதர்மபுத்திரனைப்பார்த்து நாரதமகாரிஷியானவர் சொல்லுகிறார்.

நாரதர்வாக்கியம்.

வாரீர்மகாராஜனே, ஜெனங்களுக்குஅனுக்கிரகத்தைப்பண்ணுகின்ற உன்னாலேநல்லபிரசனம் பண்ணப்பட்டது, எந்தத்தர்மத்தினால்கிரகஸ்தனானவன் பந்தயேதுவான கர்மத்தைச் செய்யாமலிருப்பனோ அந்தக்கர்மத்தை எதார்த்தமாகச்சொல்லுகிறேன், கிரகாசிரமநிஷ்டனாயிருக்கிறவன் கிரகஸதாசிரமத்துக்கு யோக்கியங்களான கர்மங்களை வாசுதேவார்ப்பணமாகச் செய்துகொண்டு பாகவதர்களான மகாமுனிகளை யுபாசிக்கக் கடவன் பகவானுடைய கதாமிர்தங்களைச் சிரத்தையுடன் கேட்டுக்கொண்டு சத்துக்களுடைய சகவாசத்தினால் தனக்குத்தானே விட்டுவிடாநின்ற பாரியாபுத்திராதிகளிடங்களில் சங்கத்தைநித்திரைபண்ணி யெழுந்தபுருஷன் சொற்பனத்திற்கண்ட அர்த்தங்களை எப்படி விட்டுவிடுவனோ அப்படிவிட்டுவிடக்கடவன் கியாதிகள்- மாதா-பிதா-புத்திரர்கள்-பிராதாக்கள்-இவர்களெதை இச்சிக்கிறார்களோ அதைமமதையை விட்டவனாய் சந்தோஷிக்கக்கடவன், தனக்குக்கிடைக்கப்பட்ட தானியஞ் சம்பத்துக்களை வைத்துக்கொண்டு தன்னுடைய நித்திய நைமித்திக்கர்மங்களை நடத்தக்கடவன்-மிருகம்-பட்சி-இது முதலான ஜெந்துக்களைத் தன்னுடைய புத்திரர்களைப்போல்ப்பார்க்கக்கடவன், தான் பொசியாநின்ற வஸதுக்களைப்பிறருக்குக்கொடுத்து உண்ணக்கடவன்-யாதொருவன் தனது பாரியாள்நிமித்தம்-மாதா-பிதா-குரு- இவர்களை வஞ்சிக்கிறானோ அவனாலே பகவானானவர் அன்னாதிகளினாலே ஆத்மாவுக்கு சீவன விர்த்தியைப்பண்ணக்கடவன் பொருளிடத்திலே தனதென்கிற அபிமானத்தைவிட்டு நிவர்த்திபராளுடைய மார்க்கத்தைஆசரிக்கக்கடவன்-தேவர்கள்-ரிஷிகள்-பிதுர்க்கள்-பகவான்- இவர்களை நாள்தோறும் ஆராதிக்கக்கடவன் தனவானானபுருஷனானவன் கன்னியாமதத்தில் மாதாபிதாக்களுக்கும் பந்துக்களுக்கும் தன்னுடைய திரவியானுசாரமாக மஹாளயசிரார்த்தத்தைப் பண்ணக்கடவன் ஆகையினால்மனுஷியாள் புண்ணியகாலங்களிலே ஜென்மசாபல்லியங்களான அந்தச்சுதர்மங்களைப் பண்ணிக்கொள்ளக்கடவர்கள்.

வாரீர்தர்மநந்தனனே, இனிமேல்தர்மமுதலானசிரேயசுக்களுக்குச் சாதனங்களான புண்ணிய தேசங்களைச் சொல்லுகிறேன், பகவானுடையபிம்பரூபமாகியசற்பாத்திரமான பிராமணனெங்கே லபிக்கிறானோ அதுவேகர்மங்களுக்கு யோக்கியமான புண்ணியதேசம்-தபசு-வித்தை-நற்செய்கை இதுகளோடுகூடின பிராமணகுலமிருக்கிற விடங்களிலேயும் ஹரியினுடைய பூசையுண்டாயிருக்கிற விடங்களிலேயும், சிரேயசுக்களுக்கு ஸதானமாகவிருக்கிறது, புராணப் பிரசித்தமான கங்கைமுதலானபுண்ணியநதிகள் எங்கேயுண்டாயிருக்கிறதுகளோ அந்தநதிதீரங்களும் சரசுக்களும் பாகவதர்கள் வாசம் பண்ணப்பட்ட புஷ்கரமுதலான க்ஷேத்திரங்களும் இதுகள் தர்மஞ்செய்வதற்குப்புண்ணிய க்ஷேத்திரங்களாகவிருக்கும் இந்தக்ஷேத்திரங்களிலே பண்ணப்பட்ட தர்மமானது புருஷர்களுக்குச் சகஸதிரகுணாதிதங்களான பலன்களைக்கொடுக்கும்.

வாரீர்தர்மபுத்திரரே உம்முடைய இராஜசூயயாகத்திலே தேவரிஷிகளாயும் தபோயோகாதிசித்தர்களாயுமிருக்கிற சனற்குமாரர்முதலானரிஷிகள் இருக்கின்றபோது எந்தக்காரணத்தினாலே ஸ்ரீஅரியேசற்பாத்திரமாகஉக்கிரபூசைக்குப் பாத்திரமாகப் பண்ணப்பட்டார் ஆகையினாலே அந்தஸ்ரீஅரியே முக்கிய பாத்திரமென்று அறியத்தக்கது தேவாள் திரியக்குகள் மனுஷியாள்ஸ்தாவரங்கள்யென்று நாலுவகைப்பட்ட சரீரங்களும் அச்சுதனால் சிருஷ்டிக்கப்பட்டதுகளென்று அறியத்தக்கது இப்படியிருந்தாலும் திரேதாதி யுகங்களிலே மனுஷியாளெல்லாருக்கும் பூசையிலேயேபுத்தியிருக்கிறதைப்பார்த்து பூசார்த்தமாகக் கியானிகளினாலே ஸ்ரீ அரியினுடைய அர்ச்சாவிக்கிரகமானது பண்ணப்பட்டது, சிலபேர் அந்தஅர்ச்சாவிக்கிரகத்திலே ஸ்ரீஅரியைசிரத்தையுடன்பூசையினாலே யுபாசிக்கிறார்கள், இப்படி உபாசிக்கப்பட்டிருந்தாலும் அந்த அர்ச்சாரூபியான பகவான் புருஷத் துவேஷிகளானபேருக்குப் பலத்தைக் கொடுக்கமாட்டான் அந்தப் புருஷாளுக்குள்ளேயும் தபசு வித்தைசந்தோஷம் இந்தக் குணங்களுடனேகூட ஸ்ரீ அரியினுடைய ரூபமானவேதத்தை சர்வகாலமும் பரியாநின்றபிராமணனை உத்தமபாத்திரமாகச்சொல்லுவார்கள், வாரீர்தர்மராஜனே இந்த ஜெகத்துக்குரூபியான ஸ்ரீகிருஷ்ணனுடைய பாததூளிகளினாலேமூன்றுலோகத்தையும் பாவனம் பண்ணுகின்ற பிராமணனையே மகாதெய்வமென்று அறியத்தக்கது.

## ௰௫வது, அத்தியாயம்.

கலிவிருத்தம்.

சொல்லிடுமோட்ச துவாரமானநல
வல்லசமஸ்தவர் ணாஸ்ரமங்களிட
சல்லையின்றி நிபந்தனஞ்சாரமாய்
நல்லசங்கரகித் துரவின்றாரரோ,

மோட்சத்துவாரமான சமஸ்தவர்ணாசிரமங்களுடைய நியந்தனம் சாரமாகச் சங்கிரகித்து வர்ணிக்கப்படுகின்றது,

நாரதர்வாக்கியம்,

வாரீர் தர்மராஜனே சில பிராமணாள் கர்மாநிஷ்டாளாயும், சிலர் தபோநிஷ்டாளாயும் சிலர்வேதாத்திய

யனபராளாயும், சிலர் மனனநிஷ்டாளாயும்சிலர் கியான யோகநிஷ்டாளாயுமிருக்கிறார்கள் இவர்களுக்குள் கியானநிஷ்டனுக்கே கர்மத்தினுடையஅனந்தபலத்தைகோருகின்றபுருஷனாலே பிதுர்க்களை உத்தேசித்துக்கொடுக்கப்பட்ட கவ்வியங்களும் தேவதைகளை உத்தேசித்துக்கொடுக்கப்பட்டஅவ்வியங்களும்கொடுக்கத்தக்கதுசள் அப்படிப்பட்டபாத்திரம் கிடையாமற்போனால் இதராளுக்குள்ளே கியானதாரதம்மியமறிந்து கொடுக்கத்தக்கதுகள், மகதயிஸவரியத்துடனே கூடினவனும் சிரார்த்தம் பண்ணும்போது வசுதேவ ஸ்தானத்தில் இரண்டு பேரையும் பிதுர்ஸ்தானத்தில் மூன்றுபேரையும் வைக்கக்கடவன் யோக்கியாளாகக் கிடையாவிட்டால் இந்த இரண்டு ஸ்தானத்திலேயும், ஸ்தானமொன்றுக்கு ஒருவனையாகிலும்வைத்து சிரார்த்தம் பண்ணக்கடவன், சிரார்த்தம்பண்ணும்போது வெகுபேர் யோக்கியாளிருந்தாலும் முன்சொன்ன நிபந்தனைக்கு மேலே அதிகமானவர்களைவைத்துப் பண்ணக்கூடாது தர்மத்தினுடையதத்துவத்தை யறிந்தவன் சிரார்த்தத்திலே மாம்ஸத்தைக் கொடுக்கலாகாது தானும் புசிக்கலாகாது அன்னங்களினாலே பிதுர்தேவதைகளுக்குத் திருப்தி செய்யவேண்டியது தேவாள்-பிதுர்க்கள்-ஆத்துமசுவஜனம் இவர்களுக்கு அன்னத்தைக் கொடுத்துக்கொண்டு சர்வத்தையும், பகவத்ரூபமாகப்பார்க்கக்கடவன், சிரேஷ்டமானதர்மத்தைக் கோருகின்ற மனுஷியாளுக்கு மனோவாக்குக்காயங்களினாலேயும் பிராணிகளை இம்சியாமலிருக்குகைக்கு ஒப்பானதர்மம்வேறொன்றில்லை தர்மகியான புருஷன் விதர்மமென்றும்,பரதர்மமென்றும், ஆபாசமென்றும் உபதர்மமென்றும்,சலமென்றும் ஐந்துவகைப்பட்டஇந்த அதர்மசாகைகளை விட்டுவிடக்கடவன் இதுகளில் விதர்மமென்னப்பட்டது சுதர்மத்துக்கு விரோதியாயிருக்கும். பரதர்மமென்னப்பட்டது ஒருத்தனாலே யேவப்பட்டவனாய் அவனுக்காகச்செய்யப்பட்ட தர்மமென்றறியத்தக்கது. உதர்ம மென்னப்பட்டது பாஷண்டமென்றும்-டம்பமென்றும்-சொல்லப்படும், சலதர்மமென்னப்பட்டது ஒருதாற்பரியமாகச்சொல்லப்பட்ட சொல்லுக்கு வேறொருஅர்த்தம்பண்ணுகிறதென்றும் அறியத்தக்கது, ஆபாசதர்மமோவென்றால் புருஷாளால் சாஸ்திரங்களைவிட்டுத் தன்னிச்சைப்படி செய்யப்பட்டதுயாதொன்றுண்டோ வர்ணாசிரம தர்மத்துக்கு வேறுபாடான அந்தத்தர்மமானது ஆபாசதர்மமென்றறியத்தக்கது புருஷனானவன்திக்குகளையும் சகலபூமியையும் ஜெயித்து அனுபவித்தாலும் ஆசையினுடைய அந்தத்தை யடையமாட்டான் வெகுசாஸ்திரங்களை அறிந்தவர்களாயும்-சகலசமியத்தைப் போக்கடித்தவர்களாயு மிருக்கிற வெகுபேர்கள் சந்தோஷ மில்லாததினாலே அதோகதியையடைந்தார்கள்,

புருஷனுக்கு இஷ்டமென்னப்பட்ட யாகாதி கர்மங்களும் பூர்தமென்னப்பட்ட தடாகம் ஆலயப் பிரதிஷ்டைமுதலானகர்மங்களும் மோட்சசாதனங்களாகமாட்டாதுகள் யாதொருத்தன் மனதை மோட்சசுவசம்பண்ணிக்கொள்ளுகிறத்திலே எத்தனிக்கிறானோ அவன் விஷயஆசத்தியைவிட்டவனாயும் பிரதிக்கிரகத்தைவிட்டவனாயும்-மனுஷியாளில்லாத விடத்திலே வாசம் பண்ணிக்கொண்டு ஒருவனாய் மாதோகர அன்னத்தை மிதமாக சமபூமியில் சுசியானபிரதேசத்திலே ஸதிரமான ஆசனத்தைஸ்தாபித்துக்கொண்டு அதிலே நெறித்துக்கொண்டுஇருக்கிற அங்கத்தையுடையவனாய் பிரணவத்தை யுச்சரித்துக்கொண்டு சுகமா யிருக்கக்கடவன் இந்தப்பிரகாரம் மூக்குமுனையிலே திருஷடி வைத்தவனாய் எவ்வளவிலேதன்மனதானது சகலகாமங்களையும் விட்டுவிடுகிறதோ அவ்வளவு காலபரியந்தம் பூரகமென்னப்பட்ட சுவாசஆக்கிரிஷணம் கும்பகமென்கிற சுவாசத்தைப் பூரிக்குகையும், ரேசகமென்னப்பட்டசுவாசத்தைவிடுகையும் இதுகளினாலே பிராணபானங்களைநிரோதிக்கக்கடவன் வித்துவானானவன்கர்மகதியினாலே தூஷிக்கப்பட்டும்சஞ்சலமாயுமிருக்கிறமன்தானது எந்தெந்தவிஷயங்களிலே ஓடுகிறதோ அந்தந்தவிஷயங்களில்நின்றும்இழுத்துஅந்தமனதை மெள்ளஇருதயத்தினால் நிறுத்தக்கடவன்,

காமக்குரோதாதிகளினாலே அடிக்கப்படாததாயும் சகலவிஷயங்களில்நின்றும் ஒழிந்தயோகியினுடைய மனதானது பிர்மசுகத்துடனே கூடினதாய் அதைவிட்டு ஒருநாளும் விஷயங்களைக்குறித்து எழும்பாமலேஇருக்குங் கர்மத்தியாகியான கிரகஸதன் விரதத்தியாகியான பிரமசாரி கிராமசேவைபண்ணுகின்ற-தபசி-விஷயஆசக்தியையுடையவனான சந்நியாசி இவர்களெல்லாம் பிர்மசரியமுதலான ஆசிரமிகளுடையவேஷம்போலவேஷத்தையுடையவர்களாய் ஆசிரமஆபாசாளென்று சொல்லப்படுவார்கள்.

யோகியானவனுக்கு மோகம் உண்டாகத்தக்கதன்று-எப்படியானால் பிரதிபிம்பமானது எதார்த்தமானவஸதுவாக இல்லாமலிருந்தாலும்வஸதுபோலேகாணப்படாமலிருக்கிறதோ அப்படி கியானியா யிருக்கிறவனுக்கு இந்திரியங்களினால்அறியப்படாநின்ற சமஸதமானவஸதுக்களும் எதார்த்தமாகஇல்லாமலிருந்தாலும்வஸதுபோல இருக்கிறதுமாத்திரமே லோகத்திலே தேவாதிசரீரங்களில் பிரிதிவுமுதலான பஞ்ச பூதங்களுடைய சங்காதம்-ஆரம்பம்-பரிணாமம் என்கிற இந்தமூன்றிலேயும் ஒருக்ஷேமமுஞ் சித்திக்கமாட்டாது, இந்தப்பிரகாரம் பஞ்சபூதங்களுக்குக் காரணங்களான தன்மாத்திரைகளென்றுசொல்லப்பட்ட சப்தஸபரிசரூபரச கெந்தங்களும் வஸ்துவாகாம லிருக்கிறதுகள்.

வாரீர்தர்மராஜனே, பலாபேட்சை யில்லாமல் மனோவாக்குக்காயங்களினாலே செய்யப்பட்டகர்மங்களைச் சாட்சாத்பரப்பிரம்மமான ஸ்ரீமந்நாராயண னிடத்திலே மனோவாக்குக்காயங்களினால்சமர்ப்பிக்குகையேகிறியாத்துவயிதமென்று சொல்லப்படும், தனக்கும் தன்னுடையபுத்திரமித்திர களத்திராதிகளுக்கும், மற்றுமுள்ள பிராணிகளும், தன்னுடைய புத்திரமித்திர களத்திராதிகளுக்கும் அயிக்பாவனை யாதொன் றுண்டோ அதுவே திரவியாத்துவிதயிதமென்றுசொல்லப்படும், எந்தத்திரவியம் எந்தஉபாயத்தினால் எவிடத்தில்எவனுக்கு நிஷிதமாகாமலிருக்கிறதோ அந்தப்புருஷன் அந்தத்திரவியத்தினாலே சுதர்மங்களைச்செய்யக்கடவன் ஆபத்தில்லாதகாலத்தில்நிஷேத்தங்களாயிருக்கிறவஸ்துக்களினாலே செய்யத்தக்கதன்று வாரீர்தர்மநந்தனனே நீங்கள் தேவதைகளாலேயுந்தாண்டக்கூடாதஆபத்துகளையெல்லாம் பிரபுவான ஸ்ரீகிருஷ்ணனுடைய கடாட்சத்தினாலே தாண்டி ஜெயிக்கக்கூடாத ராஜாக்களையெல்லாம்ஜெயித்து ராஜசூயமுதலான கிறதுக்களைச்செய்திர்கள் அப்படிப்பட்டஸ்ரீகிருஷ்ணனைச் சுதர்மானுஷ்டானபரனான புருஷனானவன் பஜிக்கக்கடவன்.

நான் பூர்வகற்பத்திலே கெந்தர்வாளுக் கெல்லாஞ் சிரேஷ்டனாயும் உப்பறுகணனென்று பெயரினால் பிரசித்தனாயும்-ரூபம்-யௌவனம்-சவுந்தரியம் - பரிமளம்-இதுகளினாலே சகலமானபேருக்கும் இஷ்டமான தெரிசனத்தையுடையவனாயும், ஸ்ரீகளுக்கு நித்தியம்- மிகவும் இஷ்டனாயும்-மகாசம்பத்தில் மதித்தவனாயும்- கானத்திலே சமர்த்தனாயுமிருக்கிற கெந்தர்வனாயிருந்தேன், இப்படியிருக்கிறகாலத்திலே ஒருக்கால் தேவசத்திரமென்கிறமகாகிறுதுவினாலே நவப்பிரஜாதிகளாலேகெந்தர்வாள் அப்சரஸ்திரீகளுடைய கணங்களானதுகள் ஹரிசரித்திரத்தைக் கானம்பண்ணுகிறதற்காக அழைக்கப்பட்டார்கள். அப்போது நானும் அவர்களழைத்துவிட்டதை யறிந்தவனாய் மதத்தினாலேகானம்பண்ணிக்கொண்டுஸ்திரீகளால்சூழப்பட்டவனாய் அந்த எக்கியத்துக்குப் போனேன் அந்தப்பிரஜாபதிகள் அப்போ என்னுடையவுளனத்தைப்பார்த்து நீஏளனம்பண்ணினாயாகையால்நஷ்டஅயிஸ்வரியனாய் சூத்திர ஜென்மத்தைச் சீக்கிரமாக அடையக்கடவாயென்று சபித்தார்கள் அந்தச்சாபத்தினால் தாசியினிடத்திலேஜெனித்தேன் அந்த ஈனஜென்மத்திலேயும், பிர்மக்கியானிகளுடையசிசுரூஷையினாலேயும் அவர்களுடைய சகவாசத்தினாலேயும் திரும்பவும் பிர்மபுத்திரனானேன் உங்களுக்குப்பிரியசுகுர்தராயும் ஏவற்றொழில்செய்கிறவராயுமிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணபகவானானவர் மகத்துக்களாலே தேடப்படாநின்ற பரப்பிர்மமாயிருக்கின்றார், யாதொரு ஸ்ரீகிருஷ்ணனுடைய நிஜரூபமானது பிர்மருத்திராதிகளினாலும் உள்ளபடிக்கு அறிந்து வர்ணிக்கப்படவில்லை. பக்தாளுக்கெல்லாஞ் சரணியரான அப்படிப்பட்டபகவானானவர் மவுனம்-பக்தி-சாந்தி இவைகளினால் பூசிக்கப்பட்டவராய்ப் பிரசன்னமாக்கடவரென்று தேவரிஷியான நாரதரால் சொல்லப்பட்ட வர்ணாசிரம தர்மதத்துவத்தைக்கேட்டு தர்மராஜனானவர் மிகவும்பிரீதியையடைந்தவராய்அந்தநாரதரையும் ஸ்ரீகிருஷ்ணபகவானையும்பூசித்தார், பின்பு நாரதரானவர் ஸ்ரீகிருஷ்ணன்-பாண்டவாள்-இவர்களிடத்திற்செலவு பெற்றுக்கொண்டு புறப்பட்டுப்போனார், வாராய் பரிட்சித்துமகாராஜனே இந்தப் பிரகாரம் தெட்சப்பிரஜாபதியின் பெண்களுடையவங்கிசங்களிலே தேவாசுரமனுஷியாள்முதலாயும் சரசராத்மகமாயு மிருக்கிற பிரபஞ்சங்கள் உண்டாச்சுதுகளோ அப்படிப்பட்ட வங்கிசங்களானதுகள் தனித்தனியே உமக்குநம்மாலே கீர்த்திக்கப்பட்டதுகள்.

## ஏழாவதுஸ்கந்தம்.

### முற்றிற்று.





கஜேந்திரமோக்ஷம்-அ-சு-அ-



சமுத்திரமதனம்-எ-அ-



வாமனவதாரம்-லச-அ-









# ஸ்ரீமகாபாகவதபுராணம்.

## எட்டாவதுஸ்கந்தம்.

### முதலாவது - அத்தியாயம்,

கலிவிருத்தம்.

மன்னிடுமனுவு மனுபுக்திராள்
துன்னிடும்ரிஷி யோடுசுகிதேவாள்
மின்னுமாமுடி வேய்ந்ததேவேந்திரன்
பொன்னரியும்மனு வந்தரம்புகலுவாம்.

மனு-மனுபுத்திராள்-ரிஷிகள்-தேவாள்- இந்திரன்-ஸ்ரீஅரியினுடைய அங்கிசாவதாரமாய் இவாளோடுகூடமனுவந்தரமானது வர்ணிக்கப்படுகிறது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

இந்தப்படியே மனுவந்தரங்கள்தோறும் மனுமுதலானஇந்த ஆறுபேரும் தனித்தனியே வர்ணசிரம விகிததர்மங்களை விருத்திபண்ணியும்-ரட்சித்தும் - அனுஷ்டானம்பண்ணியு மிருக்கிறுர்கள் ஆகையால் மனுவந்தரத்துக்கு விகிததர்மமே லட்சணமென்றுசொல்லப்பட்டிருக்கிறது, சுவாயம்பு மனுவந்தரத்திலே அனந்தனுடைய கலியாணகுணங்களைக் கேழ்க்கவேணு மென்கிற இச்சையை யுடையவனை பரிட்சித்து மகாராஜாவானவர்சுகயோகியைப்பார்த்து பிரஸனம்பண்ணுகிறுர்,

பரிட்சித்துவினுடையவாக்கியம்.

வாரீர்பிர்மகிஷ்டரான சுகயோகியே குருவாகியசுவாயம்புமனுவினுடைய வங்கிஷவிஸ்தாரமும் அந்த மனுவந்தரத்திலே நானுவிதங்களாயும் சுபகரங்களாயு மிருக்கிற சாதுர்வர்ணிய தர்மங்களும் நீர் சொல்லக் கேழ்வியானேன் இனிமேல் எந்த மனுவந்தரத்தில் விசுவசிஷ்டர்களான மரீசி முதலான பிரஜாபதிகளுக்கு மனுகன்னிகைக ளிடங்களிலே புத்திர பவுத்திராதி வங்கிஷங்களுண்டானதும் எந்தெந்த மனுவந்தரங்களில் ஸ்ரீஅரியினுடைய ஜென்மகர்மங்களையும் கேழ்க்கவேண்டு மென்கிற இச்சையுடனே கூடின எனக்குச் சொல்லவேணுமென்று பிரசினம்பண்ணுகின்ற பரிட்சித்துமகாராஜனைப்பார்த்து சுகப்பிரம்மரிஷியானவர் சொல்லுகிறுர்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் பரிட்சித்துமகாராஜனே இந்தக்கல்பத்தில் சுவாயம்புமுதலாகிய ஆறுமனுக்கள் அதிக்கிரமித்துப்போனுர்கள் அவர்களுக்குள்ளேதேவர்திகளுக்கெல்லாம் உற்பத்தியையுடையதான ஆதிமனுவினுடைய வங்கிஷம் உமக்குச்சொல்லப்பட்டது அந்தசுவாயம்புமனுவினுடைய பெண்களாகியஆகூதி தேவஹூதியென்கிறஇரண்டுபேரிடங்களிலேயும் கர்மவுபதேச நிமித்தமாகவும் கியானுபதேச நிமித்தமாகவும் பகவானனவர்கபிலமூர்த்தியாகவும் எக்கியமூர்த்தியாகவும் புத்திரபாவத்தையடைந்தார் அந்த அவதாரங்களுக்குள்ளே கபிலோபாக்கியானமும், சர்வபூதங்களுடைய வுற்பத்தியும், முன்னேசொல்லப்பட்டது, இனிஎக்கியமூர்த்தியாகியபகவான்எதைச்செய்தாரோ அதைச்சொல்லுகிறேன்கேளும்.

கர்மபோகங்களிலே விரக்தராயும்,சதருபையென்கிறவளுக்கு பர்த்தாவாயுமிருக்கிற மனுவானவர் விரக்தியையடைந்தவராய் இராச்சியத்தைவிட்டு பாரியாசகிதராய் தபசுசெய்வதின்பொருட்டு வனத்திற் பிரவேசித்துசுனந்தாதிதீரத்திலே நூறுவருஷம் ஒருகாலால் பூமியைஸ்பரித்துக்கொண்டு ஒருவராலும், செய்யக்கூடாத தபசைச்செய்துகொண்டு சமாதியிலேயிருந்தார், இந்த

பிரகாரம் சபாஙிஷ்டரா யிருக்கின்ற சுவாமியைப்பார்த்து-அசுராளும்-ராட்சதாளும்பசியினுலேபட்சிக்குகைக்குளதிராகலழடிவந்தார்கள் அப்படிவராஙின்றஅசுரராக்ஷசாளேயறிந்து சர்வாந்திரியாமியான எக்கியபகவான் யாமானென்கிற தம்முடைய புத்திராளானதேவராலே சூழப்பட்டவராய்அந்தஅசுரராட்சசாளேச்சங்கரித்துசொர்க்கலோகத்தைத் தாமேஇந்திரனுகப் பரிபாலனம்பண்ணிக்கொண்டிருந்தார், சுவாயம்பு மனுவந்தரத்திலேமனுசுவாயம்புவனும் பிரியவிறுதன் உத்தானபாதனென்கிற மனுபுத்திராளும் யாமானென்கிற தேவாளும் மரீசிமுதலான சப்தரிஷிகளும் எக்கியனென்கிற ஸ்ரீ அரியினுடைய அங்கிசாவதாரமும் அவர் தானே இந்திரனுமாக தர்மப்பிரவர்த்தனஞ்செய்துகொண் டிருந்தார்கள்.

இரண்டாம் மனுவந்தரத்திலே சுவாரோசிஷனென்கிறஅக்கினிபுத்திரனுனவன் மனுவும்அந்தமனுவினுடையபிள்ளேகளும் ரோசனனென்கிறஇந்திரனும்தூஷிதாள்முதலானதேவாகளும் பிர்மவாதிகளானரிஷிகளும் வேதசிரனென்கிற ரிஷிக்குதுஷிதையென்கிறபத்தினியிடத்திலேஅவதரித்து ரிபுவென்றும்பிரசித்தமானஸ்ரீஅரியினுடைய அங்கிசாவதாரமும்இவர்களெல்லாம்தனித்தனியே தர்மப்பிரவர்த்தனம் செய்துகொண்டிருந்தார்கள். கவுமார தெசையை யுடையவர்களாயும், பிரம்மசாரியர்களாயுமிருக்கிற எண்பத்தெண்ணுயிரம் ரிஷிகள் விரதத்தை யுடையவராய் அந்தரிபுவென்கிற பகவானுனுடைய விரதத்தைக்கிரகித்து அனுஷ்டானம்பண்ணிக்கொண்டிருந்தார்கள்,

மூன்ருவது மனுவந்தரத்திலே பிரியவிருத புத்திரனுன உத்தமனென்றுபிரசித்தமானமனுவும் அந்தமனுவினுடைய சவனன்-சிரஞ்செயன்- எக்கியன்-ஒத்திரன்-இவர்கள்முதலான பிள்ளேகளும் பிரமதன்முதலான வஷ்டபுத்திராளான சப்தரிஷிகளும் சத்தியா ளென்றும், வேதசுருதாளென்றும் பத்திராளென்றும்பிரசித்தாளானதேவாளும் சத்தியசித்தென்கிற இந்திரனும் தர்மராஜனுக்கு சூனிறுதையென்கிற ஸ்திரீயினிடத்தில் சத்தியவிருதாளோடுகூட அவதரித்து சத்திய சேனனென்று பிரசித்தானபகவானும் தனித்தனியே தர்மபபிரவர்த்தனஞ் செய்துகொண்டிருந்தார்கள், அந்தச் சத்தியசேனனென்கிறபகவான் சித்தியசித்தென்கிற இந்திரனுக்கு சகாவாய் அசத்தியவாதிகளாயும் சீலமில்லாதவர்களாயும,பூகத்துரோகிகளாயும் அசத்துகளாயுமிருக்கிற எக்ஷராட்சச பூககணங்களேச் சங்கரித்தார்.

நாலாவது மனுவந்தரத்திலேஉத்தமனுக்குப்பிராதாவாகிய தாபசனென்கிறமனுவும் அந்த மனுவினுடைய விருஷனென்றும் கியாதியென்றும் நரனென்றும் கேதுவென்றும், இவர்கள்முதலான பத்துபிள்ளேகளும் சத்தியகானென்றும், அரிகனென்றும் வீராளென்றும்பெயரையுடைய காலவசத்தினுலே நஷ்டங்களானவேதங்களேத்தங்களுடைய தேஜசினுல் தரித்துக்கொண்டு விதிர்த்தியினுடைய புத்திராளாகையால் வைதிறுதிகளென்றும் பிரசித்தாளான தேவர்களும் திரிசிகனென்கிறஇந்திரனும் சோதிறதாமாமுதலான சப்த ரிஷிகளும் அரிமேதசுவென்கிறரிஷிக்கு அரிணியென்கிற ஸ்திரீயினிடத்திலேஅவதரித்து ஸ்ரீஅரியென்று பெயரை யுடையவராயும் முதலேயினுலே பாதத்தில்கிரகிக்கப்பட்டகெஜேந்திரனே விடுவித்தாரோ அந்தப் பகவானும் தனித்தனியே தர்மப்பிரவர்த்தனஞ்செய்துகொண்டிருந்தார்களென்று சொல்லுகின்ற சுகப்பிரம்மரிஷியைப்பார்த்து பரிட்சித்துமகாராசன் சொல்லுகின்றுர்.

பரிட்சித்துவாக்கியம்,

வாரீர்சுகயோகியே பகவானுன ஸ்ரீஅரியானவர்முதலேயினுலே கிரகிக்கப்பட்ட கெஜேந்திரனே எந்தப்பிரகாரம்விடுவித்தாரோ அதைக் கேழ்க்கவேணு மென்று இச்சிக்கிறேன் புண்ணியகீர்த்தியான பகவான் எந்தெந்தக்கதைகளில் கீர்த்திக்கப் படுகிறுரோ அந்தக் கதைகளேபுண்ணியகாங்களாயும்,கிர்த்திகரங்களாயும், தனப்பிரதங்களாயும்,மங்களங்களுக்கெல்லாம்இருப்பிடமாயுமிருக்கும் ஆகையால் அதைச்சொல்லவேணுமென்றுகாத்துவாரத்திலே பிருயோபவேஸம்பண்ணின பரிட்சித்துவுக்கு சுகயோகியானவர் அங்குள்ள பிராமணுளேயும்இராசாவையும், சந்தோஷித்துசதசிலேமகாரிஷிகளெல்லாம் கேட்டுக்கொண்டிருக்க கெஜேந்திர வுபாக்கியானத்தைச் சொல்லத்தொடங்கினுர்,

---

## உ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

தந்தஸ்திரீக ளுடனேசலத்திலே
முந்திகிரீடித்து முனேந்திருக்கங்னே
தொந்தமுதலேயி னுற்சோர்வடைந்திடும்
அந்ததந்தியு மரியைத்தோத்தரித்ததே,

கெஜஸ்திரீகளுடனே ஜலத்திலே கிரீடித்துக்கொண்டிருக்கும்போது தெய்வவசத்தினுலே முதலேயினுல்பிடிக்கப்பட்ட கெஜேந்திரனுல் செய்யப்பட்ட ஸ்ரீ அரிஸ்தோத்திரஞ் சொல்லப்படுகின்றது.

வாராய் பரிட்சித்துமகாராசனே திரிகூட மென்கிறபெயரினுலே பிரசித்தமாயக்ஷிரசமுத்திரத்தினுல்சூழப்பட்டும் காந்தியுடனே கூடினதாயும், பதினுயிரம் யோசனேஉயரத்துடனே கூடினதாயுமிருக்கிறஒருபர்வதசிரேஷ்டம் உண்டாயிருக்கிறது அந்த பர்வதமானது நாலுபக்கங்களிலேயும் பதினுயிரம்யோசனேவிஸ்தாரத்

துடனேகூடினதாயும்-வெள்ளி-இரும்பு-சொர்ணமயமாயுமிருக்கிற மூன்றுசிகரங்களினால் அந்தச்சிரசமுத்திரத்தையும் பத்துத் திக்குகளையும் பிரகாசிப்பித்துக்கொண்டு மற்றும் ரத்தினங்களினாலேயும் நானாவிதவிருட்சங்களினாலேயும் அருவிப்பாச்சல்களினாலேயும் பிரகாசிப்பித்துக்கொண்டிருக்கும், பின்னையும்அந்தப்பர்வதமானது நிர்மலங்களான ஜலங்களையுடையநதிகளோடும் தடாகங்களோடும் நவரத்தின மயங்களான மணல்களையுடைய மணற்குன்றுகளுடனேயுங் கூடிக்கொண்டும் அப்சரஸ்திரீகள்வந்து ஸ்நானம் பண்ணுகையால் அவர்களுடையகெந்தங்களாலேபரிமளித்துக்கொண்டிருக்கும் ஜலங்களையுங்காற்றுக்களையும் உடைத்தாயிருக்கிற அந்தப்பர்வதத்தில் ஒருசரசுஇருக்கின்றது.

அதெப்படிப்பட்டதென்றால் மிகவும் விஸ்தாரமாயும் விகசித்திருக்கிற சொர்ண வனமான கமலங்களையுடைய-ஆம்பல்-கருநெய்தல்- செங்கழுநீர்- சதபத்திரம்_இதுமுதலானபுட்பசம்பத்துகளுடனேசோபித்துக்கொண்டிருக்கிற அந்தச்சரசிலே ஒருக்கால் அந்தத்திரிகூடபர்வதத்தின்காடுகளிலேசஞ்சரியாநின்ற ஒருகஜேந்திரமானது அனேகம்பெண்ணானைகளாலே சூழப்பட்டதாய்ச் சஞ்சரித்துக்கொண்டும் தாகத்தினாலே பீடிக்கப்பட்டதாயும் யானைக்கூட்டங்களினால் சூழப்பட்டதாய் அந்தச்சரசினுடைய சமீபத்தைச் சீக்கிரமாகவந் தடைந்து அந்தகஜேந்திரமானது அச்சரசிலேமுழுகிஜலங்களினால்தன்னுடையதேகத்தை ஸ்நானம்பண்ணிவித்துக்கொண்டு தனது தும்பிக்கைநுனியினால் விசரப்பட்டஜலபிந்துக்களினால் யானைப்பேடுகளையும் குட்டிகளையும் ஸ்நானம் பண்ணிவைத்துக்கொண்டு ஈஸ்வரமாயையினாலே பிராப்தமான சங்கடத்தை அறியாமலிருந்தது,

வாராய்ராஜனே, அந்தச்சரசிலே இந்தப்பிரகாரமிராநின்ற அந்தக்கஜேந்திரனைத் தெய்வத்தினாலேயேவப்பட்டதாயும் பலத்தையுடையதாயுமிருக்கிற ஒருமுதலையானது கோபத்துடனே காலில் பிடித்துக்கொண்டது அப்போது மகாபல்வானா இருக்கிற கஜேந்திரமானது தன்னுடையபலம்எவ்வளவோ அவ்வளவும்முதலையை இழுக்கத்தொடங்கிற்று, அப்படி முதலையினாலேஇழுக்கப்பட்ட கஜேந்திரனைப்பார்த்து பக்கத்திலிராநின்றயானைப்பேடுகளும், யானைகளும். துக்கப்பட்டுக் கொண்டு அந்தக் கஜேந்திரனை விடுவிக்கமாட்டாதுகளாய் வீறிட்டுக்கொண்டிருந்ததுகள். இந்தப்பிரகாரங் கஜேந்திரனுக்கும்,முதலைக்கும், ஆயிரம் சம்வச்சரம் அதிக்கிரமித்தது இவ்வளவுகாலமும் பிராணனோடே கூடிக்கொண்டும், யுத்தம் பண்ணாநின்ற அதுகளைப் பார்த்துத் தேவதைகளும் ஆச்சரியப்பட்டார்கள்,பிற்பாடு அந்தமுதலையினால் சலத்துக்குள்ளேயிழுக்கப்பட்டும் கேவலம்இளைத்துப்போயுமிருக்கிற அந்தக்கஜேந்திரனுக்கு வெருகாலமானதினால்-உச்சாகம்-சரீரபலம்-இந்திரியபலம்-இதுகளுக்கு மகத்தாகியநாசமுண்டாச்சுது சலத்திலிராநின்றமுதலைக்கு அந்தஉற்சாகமுதலான சமஸ்தமும்மிகவும் விர்த்தியடைந்தது,

இந்தப்பிரகாரம் அந்தக் கஜேந்திரமானது பரவசமாய் தெய்வகதியினால் பிராணஆபத்தை யடைந்தபோது சேதனனானபடியினாலே தன்னை அந்தச்சங்கடத்தில்நின்றுவிடுவித்துக்கொள்ளச்சமர்த்தனாகாமல்இந்தப்பிரகாரம் யோசனை பண்ணிற்று எப்படியென்றால் பந்துக்களாயிருக்கிற இந்தக்கஜங்கள் ஆபத்தை யடைந்திருக்கிற என்னைவிடுவிக்குகைக்குச் சமர்த்தங்களன்று ஈஸ்வரனுடையமுதலை ரூபமாயிருக்கிறபாசத்தினால்சூழப்பட்டிருக்கிற நானும் சமர்த்தனன்று ஆனாலும் பிரம்மாதிகளுக்கும் ரட்சகராயிருக்கிற அந்தப் பரமேஸ்வரனையே சரணமாக அடைகிறேன் ஈஸ்வரனானவர் பிரசண்டமானகோபத்தையுடையதாயும் பலவானாயும்-ஓடிவராநின்றுமிருக்கிற காலமாகிற சரபத்தில்னின்றும் மிகவும் பயப்படாநின்றபக்தனை ரட்சிக்கின்றார், அப்போது அந்தப்பரமாத்துமாவினிடத்தில்நின்றும்பயத்தினால்மிருத்தியுவும்ஓடிப்போகின்றான்அப்படிப்பட்டபரமாத்துமாவைச்சரணமாக அடைகிறேன்.

## ௩-வது-அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திண்ணியகெஜேந்திரனாலே ஸ்தோத்திரஞ்செய்யப்பட்ட, அண்ணலாமறியுமந்த க்ஷணத்திலக்கஜேந்திரன்றன்னைத், துண்ணெனமுதலைநின்றும்விடுவித்துச்சாபம்போக்கி, மண்ணினில்மகிட்சிகொண்ட மாகதையதனைச்சொல்வார்.

கஜேந்திரனாலே ஸ்தோத்திரம் பண்ணப்பட்ட ஸ்ரீ ஹரியானவர் அந்தக்கஜேந்திரனை முதலையில் நின்றும் விடுவித்து அந்தமுதலையையும் தேவலசாபத்தில் நின்றும்விடுவித்தாரென்று சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராஜனே, கஜேந்திரனானவன் இந்தப்பிரகாரம்புத்தியினால் நிச்சயம்பண்ணிக்கொண்டு மனதை இருதயப்பிரதேசத்தில் ஸ்திரமாக நிறுத்தி இந்திரத்துமின்னாயிருந்த பூர்வஜன்மத்திலே அப்பியாசிக்கப்பட்ட பரமமாகிய ஸதோத்திரத்தைஜெபிக்கிறான்.

கஜேந்திரன்வாக்கியம்.

யாதொருபகவான் தம்முடைய மாயையினால் பிரகாசமாயும், அப்பிரகாசமாயுமிருக்கிற காரியகாரண ரூபங்களானபிரபஞ்சத்தை ஒருக்காலும் அழிவில்லாத கியானத்தையுடையவராய்சர்வகாலத்திலேயுஞ்சாட்சியா

ய்பார்த்துக்கொண்டும் விரகிருதி விலட்சணனும் சீவனைக்காட்டிலும்பரனும்- சுவயம்பிரகாசனும் சமஸ்த லோகங்களும், லோகபாலாளும்,பிரபஞ்சகாரணங்களான தத்துவங்களும், அந்தமில்லாமலும் ஜெகத்சிருஷ்டி ஸ்திதி சங்காரகர்த்தாவாயுமிருக்கிற பரமாத்மாவினுடைய சுவரூபத்தைக் காணவேணு மென்கிற இச்சையையுடையவர்களாய் மன்னசீர்களான ரிஷிகள் விஷய சங்கத்தைவிட்டவர்களாய் சதாசார நிஷ்டர்களாய் கெடுதலில்லாதபிர்மசரியாதிவிருதத்தைச் சர்வபூதங்களிலேயும் ஆத்மபுத்தியையுடையவர்களாய் வனத்தில் ஆசரிக்கிறார்கள் அப்படிப்பட்ட பரமபுருஷனுக்குக் கர்மமூலமான ஜென்மம்-கர்மம்-நாமம்-ரூபம்-குணம்-தோஷம் இதுகள் ஒன்றுமில்லை.

ஆனாலும் லோகங்களுடைய-சிருஷ்டி-ஸ்திதி- சங்காரங்களுக்காகத்தம்முடையமாயையினால் அந்தஜென்மமுதலானதுகளை அந்தக்காலத்தில் தரிக்கின்றவராயும் ரூபமில்லாதவராயும், அனேகரூபங்களோடுகூடினவராயும், ஆச்சரியகரமான குணசேஷ்டிதங்களையுடையவராயும், வாக்கினாலேயும், மனதினாலேயும், இவ்வளவென்று பரிசோதிக்கலொண்ணாதவராயும், சீவநியந்தாவாயும், மோட்சசுகானுபவக்கியானரூபியாயும். சாந்தரூபியாயும்கோரரூபியாயும், சத்வாதி தர்மங்களை யனுசரிக்கிறவராயும் நிர்விசேஷராயும் சமராயும், கியானந்தரூபியாயும்க்ஷேத்திரக்கியானசீவனுக்கு அந்தரியாமியாய் சர்வத்துக்கும் அதிஷ்டாதாவாய் சர்வக்கியரால் சீவபுருஷ சரீரியாய் சர்வசாட்சியாயும் அநாதியாயும் சர்வ இந்திரியகுணங்களான சப்த- ஸ்பரிச - ரூப-ரச, கெந்தங்களுக்குத் திரஷ்டாவாய் சர்வக்கியானங்களுக்கும் ஏதுவாயும்- சேதனாசேதனாத்மகமாயும், தமக்கொருகாரணாந்தமில்லாதவனாயும்-ஆச்சரியகரமான காரணமாயும் சமஸ்தமானஆகமங்கள்-வேதங்கள்- இதுகளுக்குந் திக்குகளுக்குஞ் சமுத்திரம்போலே புகலிடமாயும் மோட்சரூபியாயு மிருக்கிறபரமாத்மாவானவர் என்னை இந்தச்சங்கடத்தில்நின்றும் விடுவிக்கக்கடவரென்று ஸ்தோத்திரஞ்செய்தான்.

இந்தப்பிரகாரம் நிர்விசேஷவஸ்து சுரூபத்தை ஸ்தோத்திரம்பண்ணுகின்ற கஜேந்திரனை நானாவித தேகாபிமானங்களோடுகூடின பிர்மருத்திராதிகள் முதலான தேவர்களெல்லாரும் எப்போது ஆவிற்பவியாமற்போனார்களோ அப்போதுசேதனாசேதனசரீரியாகையால்சர்வதேவசுவரூபியான ஸ்ரீ அரியானவர் அவடத்திலே ஆவிற்பவித்து கஜேந்திரனாலேபண்ணப்பட்ட ஸ்தோத்திரத்தைக்கேட்டு அவனைப் பிராணசங்கடத்தில்நின்று நீக்கும்பொருட்டு தேவதைகளோடுகூட வேதமயனான கருடனால் வகிக்கப்பட்டவராய் - சக்கிராயுதராய் கஜேந்திரன்முறையிட்டுக்கொண்டிருக்கிறவிடத்திலே சீக்கிரமாக ஆவிற்பவித்தார்.

ஸ்ரீபகவான்வாக்கியம்,

அப்போது சரசுக்குள்ளே மகாபலதத்தான முதலையினால்கிரகிக்கப்பட்டு பிராணசங்கடத்தை யடைந்த அந்தக்கஜேந்திரன் ஆகாசத்திலேசக்கிராயுதராயும் கருடாரூடராயும் ஆவிற்பவியாநின்ற ஸ்ரீ அரியைக்கண்டுதாமரைமலரையொத்த தனது துதிக்கையை உயரவெடுத்துக்கொண்டு மகாப்பிரயாசையோடு அகில ஜெகத்குருவே, நாராயணா பகவானே. உமக்குப் பிரணாமமென்று சொல்லிற்று, அப்போதுபகவான் முதலையினாலே கவ்வப்பட்டு பிராண சங்கடத்தை யடைந்த கஜேந்திரனைப் பார்த்துத் தம்முடையமகத்தாகிய கிருபையினாலேஅதித்துறையாயிறங்கிச் சரசில் முதலையோடுகூடிக்கொண்டிருக்கிற கஜேந்திரனை உத்தாரணம்பண்ணச் சீக்கிரத்தில்முதலையினதுமுகத்தைப்பிளந்து தேவர்களெல்லாரும்பார்த்துக்கொண்டிருக்கக் கஜேந்திரனை முதலையில்நின்று விடுவித்தார்.

## ச-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

அறுசீரடியாசிரியவிருத்தம்.

முரஅரிதன்னாற்சங் கரித்திடு முதலை முன்போல்
அரியகாந்தர்வரூப மடைந்திடச்செய்துதன்னால், இரட்
சிக்குங்கஜேந்திரன்றன்னையெழில்பாரிஷதாளுக்குள்,ஒ
ருவனாய்ச்செய்துஸ்தான முவப்புடனடையச்செய்தார்.

பகவானானவர் தன்னால்சங்கரிக்கப்பட்ட முதலையை எப்போதும்போல கந்தர்வ ரூபத்தை யடையச்செய்து தன்னால்ரட்சிக்கப்பட்ட கஜேந்திரனை தமது பாரிஷதாளுக்குள்ளே ஒருவனாகச்செய்து தம்முடைய ஸ்தானத்தைஅடையச்செய்தாரென்று சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் பரிட்சித்தே, அப்போது பிரம்மருத்திரர்களை பிரதானாகஉடைய தேவர்கள்-ரிஷிகள்- கந்தருவர்கள்-இவர்களெல்லாம் ஸ்ரீ அரியினுடைய அத்தியற்புதமான கஜேந்திரமோட்சத்தைக் கொண்டாடிக்கொண்டு புஷ்பவருஷங்களை வருஷித்தார்கள், தேவதுந்துமிகள் சப்தித்ததுகள், ஸ்ரீ அரியினுடைய சக்கரத்தினால் பிளக்கப்பட்ட அந்தமுதலையும் அக்ஷணத்திலே தேவலரிஷியினுடையசாபத்தில் நின்றும் விடப்பட்டு முன்போலே பரமாச்சரியரூபத்தைத் தரித்து ஊகூவென்றுபெயரையுடைய கெந்தர்வசிரேஷ்டனாய் புண்ணியகீர்த்தியாய் நிர்விகாரா கீர்த்திக்கத்தக்ககுணங்களையுமுடைய பகவானைப்பிரணாமம்பண்ணி சகலமானபேர்களும் பார்த்துக்கொண்டிருக்கக் கெந்தர்வலோகத்தை யடைந்தான்.

கெஜேந்திரனும் பகவானுடையஸ்பரிசத்தினுல்அ க்கியானபந்தத்தில்நின்றும் விடப்பட்டவனுப் பகவானுடைய சாருப்பியத்தையடைந்து சதுர்ப்புஜனுய்பீதாம்பரதாரியானன், அந்தகெஜேந்திரனனவன் முன்னே திரவிடாளிலேசிரேஷ்டனுப் பாண்டியனென்றுபிரசித்தனுகப் பாண்டியதேசாதிபதியாய் இந்திரத் தும்மினனென்று பிரசித்தமான வைஷ்ணவனுய் மலேயபர்வதத்தில்ஆசிரமத்திலிருந்து தபசுபண்ணிக்கொண்டு ஜடாதாரியாய் ஆத்மக்கியானியால் பகவதாராதனகாலத்தில் ஸ்நானம்பண்ணி மவுனவிரதத்தையடைந்து சர்வநியந்தாவாய் ஆசிரதபாபநிவர்த்தகராய் ஆசிரதரிளை ஒருநாளும் நழுவவிடாதகவாமியை யர்ச்சித்துக்கொண் டிருந்தான்.

இப்படியிருக்கின்றசமையத்திலே அந்தஆசிரமத்தில்மகாகீர்த்திமானுயிருக்கிற அகஸ்தியரானவர் அனேகம்சிஷியர்களால்சூழப்பட்டவராய் அவடத்திற் கெழுந்தருளினர் அப்போதுஅவடத்தில் தபசுசெய்துகொண்டிருந்தராஜாவானவர் அர்க்கியபாத்தியாதி வுபசாரங்களினுலே தம்மைப்பூசைபண்ணுமலிருப்பதை அகஸ்தியரிஷியானவர்கண்டு கோபித்துக்கொண்டவராய் அந்தராஜாவின்பொருட்டுஅசத்தாய் அன்னியபரனுப் பெரியவர்களாலே சிட்சிக்கப்படாத புத்தியையுடையஇந்தராஜா வந்தபிராமணனை அவமதித்து கெஜம்போலேஸ்தம்தத்திருக்கையால் அக்கியானஅந்தகாரத்திற் பிரவேசித்து அந்தகெஜம்போலேயே ஆகக்கடவனென்றுசபித்துவிட்டு அகஸ்தியரானவர் சிஷியகணங்களால்சூழப்பட்டவராய்ப்போய்விட்டார். அப்பால் ராஜரிஷியானஇந்திரத்தும்மினனும் அந்தச்சாபத்தை தெய்வகதியால்நேரிட்டதென்றெண்ணிக்கொண்டு ஆத்மக்கியானத்தைநாசம்பண்ணுகின்ற கெஜசென்மத்தைஅடைந்தான்பிற்பாடு ஸ்ரீஹரியினுடைய ஆராதனப்பிரபாவத்தினுல் கெஜஜென்மத்திலேயும் அனுசரிக்கப்பட்ட கியானத்தை யுடையவனுனன் கெருடத்துவஜனன பத்மனுபன் இந்தப்பிரகாரம் கஜேந்திரனேவிமோசித்து தம்முடையபாரிஷதாளுக்குள்ளே ஒருவனுக்கிக்கொண்டு தன்னுேடு கூட கெந்தர்வாள்-சித்தாள்-விபுதாள் இவர்களாலே கானம்பண்ணப்பட்ட அற்புதசரித்திரத்தை யுடையவராய் அத்திபற்புதமான வைகுண்டபுவனத்தைஅடைந்தார். வாராய்மகாராஜனே கீர்த்திகரமாயும் கலிதோஷஹரமாயுமிருக்கிற இந்தகெஜேந்திரமோக்ஷமென்று பிரசித்தமான ஸ்ரீகிருஷ்ணனுடைய பிரபாவமானது உனக்கு என்னுல்சொல்லப்பட்டது.

## ரு-வது-அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தப்பிலாமனுக்களைந்து மாறையுந்தனியாய்ச்சொல்லி விப்பிரசாபத்தினுலே விறல்சம்பத்திழந்தமேலோர் துப்புறும்வாயாற்சொல்லுந் தோத்ரமுமரிபக்தாட்குச் செப்பிடுமுபாக்யானத்தின்செய்தியுஞ்சொல்லுகின்றூர்

ஐந்தாமனுவையும். ஆறுமனுவையும், சொல்லிவிப்பிரசாபத்தினுல் சம்பத்திழந்த தேவதைகளினுலே செய்யப்பட்ட ஸ்ரீஆரிஸ்தோத்திரமும் ஸ்ரீஅரியானவர்தம்முடையபக்தாக்களிடத்தில்பக்ஷபாதத்தினுல்யாதொருகாரியத்திலே ஸ்திரீரூபமானுரோ. அப்படிப்பட்டஅமிர்தமதன உபாக்கியானமுஞ் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராஜனே இந்தஸ்ரீஅரியினுடைய பாபவினசனமான கெஜேந்திர மோக்ஷமென்கிற கர்மமானதுஅறிந்துகொண்டாயல்லவா இனிறைவதமனுவந்தரத்தைச்சொல்லுகிறேன் நான்காவதான தாபசமனுவுக்குச் சகோதரனுகிய றைவதனென்கிற பிரசித்தனனராஜாஐந்தாவது மனுவானுன் அர்ச்சுனன் பெலி - விந்தியன்இவாள்முதலானபேர்கள் அந்தமனுவினுடைய புத்திராள்விபுவென்கிற இந்திரன் பூகரயன் இவாள் தேவகணங்கள் இரணியரோமா வேதசிரசு ஊர்த்தபாகு இவாள்ரிஷிகள் சுப்பிரருடையஸ்திரீயானகுண்டையென்கிறவளிடத்திலே வைகுண்டாளென்கிற அனேகபுத்திராளுடனேகூட பகவான்தாமும் வைகுண்டரென்றுபிரசித்தவராய்அவதரித்தார்லட்சுமிதேவியினுல் பிரார்த்திக்கப்பட்ட அந்தவைகுண்டபகவானுல் இலட்சுமிதேவிக்குப்பிரியத்தைச்செய்யவேணுமென்கிறஇச்சையினுலே சர்வலோகங்களிலேயும் சேவிக்கப்பட்ட வைகுண்டமென்று ஒருலோகம் கற்பிக்கப்பட்டது அந்தவைகுண்டருடைய பிரபாவமும் அவருடைய பிர்மண்ணியத்துவமுதலான குணங்களும் அஷ்டஅயிஸ்வரியங்களுந்திருதியஸ்கந்தத்தில் சனகாதிசர்ப்பபிர சங்கத்தில் சொல்லப்பட்டது பூமியிலேஉண்டான ரேணுக்களைஎவன் அளவிடமாட்டுவனே அவன் விஷ்ணுவினுடைய குணங்களைவர்ணிக்கத்தக்கவன் ஆறுவது மனுவோவென்றால் சட்சுவினுடையபுத்திரனன சாட்சுசமனுவென்றுசொல்லப்படுவன் புருபுருஷன் சத்துயமினன் இவாள் முதலானபேர் அந்தசாட்சுசமனுவினுடைய புத்திராள் அந்தசாட்சுச மனுவந்தரத்திலே மந்தரத்துருமன் இந்திரன் ஆப்பியாள் இவாள் தேவகணங்கள் அவிஷமானுவிரகன் இவாள்ரிஷிகள் அந்தசாட்சுசமனு வந்தரத்தில்ஆதிதேவனனபகவான் வைராஜனுடைய ஸ்திரீயான சம்பூதியினிடத்தில் அதிதயென்றுபெயரையுடையவராய்தம்முடைய அமிசத்தினுலே ஜெகத்திபதியாக அவதரித்தபகவானுல் சமுத்திரத்தைக் கடைந்து தேவதைகளுக்கு அமிர்தம் சாதிக்கப்பட்டது. க்ஷீரசமுத்திரத்தில்சுழலாநின்ற மந்தரபர்வதமானது கூர்மரூபியானபகவானுல் தரிக்கப்பட்டதென்று சொல்லாநின்ற சுகப்பி

ர்ம ரிஷியைப்பார்த்து பரிட்சித்து மகாராஜன் சொல்லுகின்றார்.

பரிட்சித்துவாக்கியம்.

வாரீர்பிர்மரிஷ்டரோ பகவானாலே க்ஷீரசமுத்திரம்ஏதுநிமித்தியம்கடையப்பட்டதும் ஏதுநிமித்தியம் கூர்மரூமத்திநலே மந்தரபர்வதத்தைத் தரித்ததும் அமிர்தம்தேவதைகளினாலே அடையப்பட்டதும் மற்றும்க்ஷீரசாகரத்தில் என்னென்ன உண்டானதும்இந்தஸ்ரீ அரியினுடைய அத்தியற்புதமான சரித்திரத்தையெல்லாம் எனக்குச்சொல்லவேணுமென்று விஷ்ணுராதனனபரிக்ஷித்து மகாராஜனானவன் கேட்டமாத்திரத்தில் சுகப்பிர்மரிஷியானவர் ஸ்ரீஅயினுடைய வீரியத்தைச்சொல்லத்தொடங்கினார்.

சுகப்பிர்மரிஷிவாக்கியம்.

வாராய்பரிட்சித்துமகாராஜனே,யுத்தத்திலேதீக்ஷணங்களான ஆயுதங்களையுடைய அசுராள்கொல்லப்பட்டவர்களாய் தேவதைகள் நிர்ச்சீவர்களாய்விழுந்துஎழுந்திருக்கமாட்டாமற்போனதும், தூர்வாசருடைய சாபத்தினாலே இந்திரனுடனேகூடின மூன்று லோகங்களும்லட்சுமியைஇழந்தபோது யாகாதி கிரிகைகளெல்லாம் நசித்துப்போச்சுதுகள் மகேந்திரன் - வருணன்-முதலானதேவகணங்களெல்லாம் இதைப்பார்த்துத் தாங்களெல்லாரும் ஒன்றாகக்கூடிமந்திராலோசனை செய்துநிச்சயத்தையடையாமற்போனவர்களாய் பின்பு மேருபர்வதசிகரத்தில் பிர்மசபையை யடைந்து பிர்மதேவனுக்குப்பிரணாமம்பண்ணி இந்தவிர்த்தாந்தத்தையெல்லாம் விக்கியாபனம்பண்ணினார்கள்.

பிர்மதேவன்வாக்கியம்

அப்போது பிர்மதேவனானவன் காந்தியீனாளாயும் வீரியயீனாளாயுமிருக்கிற இந்திரன்வாயுமுதலானதேவர்களையும் அமங்களசுரூபமான லோகங்களையும் பெலபுஷ்டிகளோடேகூடின அசுராளையும்பார்த்து மனதினால் பரம்புருஷனைத்தியானஞ்செய்து பிரசன்னவதனனாய்தேவதைகளைப்பார்த்துஒருவார்த்தைசொல்லுகின்றான் நானும்-ருத்திரனும்-நீங்களும்-அசுராள் முதலான பேர்களும்மனுஷியாளும்-திரியக்குகளும்- விருக்ஷங்களும் சுவேதசம்-அண்டசம்-உத்பீஜங்கள்முதலானதுகளும்யாதொருபரமாத்மாவினுடைய அவதாரமானவிராட்புருஷனதுஅம்சமாயும் என்னுடையகலைகளான மரீசிமுதலானபிரஜாபதிகளாலே புத்திர பவுத்திராதி பரம்பரையினால் சிருஷ்டிக்கப்பட்டோமோ அப்படிப்பட்டஈசுரனைநாமெல்லாம்சரணமாக அடைவோம் அந்தப்பரமாத்மாவுக்குக் கொல்லத்தக்கவனென்றும் இரட்சிக்கத்தக்கவனென்றும் உபேட்சிக்கத்தக்கவனென்றும் ஆதரிக்கத்தக்கவனென்றும்இல்லை ஆனாலும் ஜெகத் சிருஷ்டிஸ்திதி சங்காரங்களுக்காக பகவான் அந்தந்தக் காலத்திலே தமோகுணத்தையும், ரசோகுணத்தையும், சத்துவகுணத்தையுந் தரித்தவராகவிருக்கின்றார் இந்தக்காலமோவென்றால் சத்துவமூர்த்தியானபகவான் பிரஜைகளுக்கு விர்த்திபண்ணும்பொருட்டு லோகங்களைச்சவரக்ஷணைபண்ணுகிறகாலமாயிருக்கிறது ஆகையினாலேநாமெல்லாஞ் ஜெகத்குருவான சுவாமியைச்சரணமாக அடைவோம், தேவப்பிரியரான அந்தப்பகவான் நமக்கெல்லாஞ் சுகத்தைக்கொடுக்கப்போகிறாரென்று பிர்மதேவன் தேவதைகளைப்பார்த்துச் சொல்லி பகவானுடைய பிரகிருதியென்னப்பட்ட அந்தகாரத்திலும் பரமான ஸ்தானத்தையடைந்தார். அந்தஅப்பிராகிருதஸ்தானத்திலே ஒருத்தராலேயுங்காணப்படாத சுரூபத்தை யுடையவராயும் வேதவேதாந்தங்களில் பிரசித்தராயுமிருக்கிறபகவானை வேதவாக்கியங்களினாலே சாவதானமான இந்திரியங்களை யுடையவனாய் ஸ்தோத்திரம் பண்ணத்தொடங்கினான்,

சத்தியரூபியாயும், நிர்விகாரமாயும், ஆதியந்தங்களில்லாதவராயும்,சர்வாந்திரியாமியாயும், உபாதிசூனியராயும், இன்னபடியென்று சிந்திக்கக்கூடாதவராயும் மனதைக்காட்டிலும் அதிகவேகத்தையுடையவராயும், வாக்கினாலே அளவிட்டுச்சொல்லப்படாதவராயும் சிரேஷ்டராயும், தேவோத்மராயும், பிராணன்- மனது-புத்தி-அகங்காரம்-இவைகளுக்குச்சாட்சியாயும் சப்தாதிவிஷயங்கள் சுரோத்திராதி இந்திரியங்கள் இவைகளுக்கு நியாமகராயும், நித்திரையில்லாதவராயும்,தேகமில்லாதவராயும் சீவனுடைய தர்மங்களாயுமிருக்கிற வித்தை-அவித்தைகள் இல்லாதவராயும் ஷாட்குண்ணிய பரிபூரணராயும் மூன்றுயுகங்களிலேயும் அவதாரம் பண்ணியும் சுகரூபியாயும், நாசமில்லாதவராயும், பூமியிலே சராயுசமென்றும், நாலுவகைப்பட்ட பூதசிருஷ்டி யுண்டாயிருக்கின்றது.

அப்படிப்பட்ட இந்தப்பூமியானது பரமாத்மாவுக்குப்பாதஸ்தானமாகச்செய்யப்பட்டது, பிரபஞ்சங்களுக்குப்பிராணனாயும், இந்திரியபலமாயும், சரீரபலமாயுமிக்கிறவாயுவானவன் பரமாத்மாவினுடைய பிராணனிடத்தில்நின்றும் உண்டானானே அந்தவாயுவை அனுசரித்துக்கொண்டிருக்கிறோம் யாதொருபரமாத்மாவினுடையமுகத்தில்நின்றும் பிராமணாளும் குய்யத்தில்நின்றும் வேதமும் புஜங்களில் நின்றும் க்ஷத்திரியாளும், பெலமும், துடைகளில்நின்றும் வைசியாளும் வாணிகவிர்த்தியும், பாதங்களில்நின்றும் சூத்திராளும் சிசுருஷையும் உண்டாச்சுதுகள் பிரளயகாலத்தில் பஞ்சமகாபூதங்கள் காலம்பூதகாரியமான பிரபஞ்சம்-குணம்-கர்மம்-இவையெல்லாம் யாதொருத்தனுடையமாயையினால்

உண்டாக்கப்பட்டதுகளோ அந்தப்பரமாத்மா சுக்குராதிகளினால் அறியக்கூடாதாயும்கியானிகளினால்யோகத்தினால் அறியத்தக்கதாயும் யாதொருகாரணத்தினால் ஈசுவரனானவர் புருஷனுக்கு அந்தராத்மாவாயும் இஷ்டசுகுர்தாவாயுமிருக்கிறா ஆகையினால்பகவதற்புதமான கர்மம் நிஷ்பலமாகப்போகிறதில்லைஎப்படியானால்விருட்சத்தினுடையமூலத்தில் ஜலத்தைவிட்டால் சாகோபசாகைகள் அபிவிர்த்தங்களாமோ அப்படிபோல விஷ்ணுவினுடைய ஆராதனம்சமஸ்தபிராணிகளுக்குந் தனக்குந் திருப்திகரமா யிருக்கும் தேசத்தினாலேயும் காலத்தினாலேயும் வஸ்துக்களினாலேயும், அளவிடக்கூடாதவராயும், இன்னபிரகாரமென்றுசொல்லிஒருத்தராலேயுஞ் சிந்திக்கக்கூடாத தம்முடையகர்மத்தை யுடையவராயும் ஏயகுணசூனியராயும் கல்யாணகுணகராயும்சத்துவமூர்த்தியாயுமிருக்கிறவுமக்கு இப்போது பிரணமம்பண்ணுகிறோமென்று ஸ்தோத்திரம் பண்ணினான்.

## ௬-வது அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்,

பேசிடுந்தேவதைக்குப் பிரசன்னராம்பகவானின்றன்
ஆசிலாவாக்யத்தாலே யதிதேவாளசுரரோடு
தேசுறுஞ்சந்திபண்ணி ட்சிராப்திகடைவதற்குப்
பேசியேயத்தனித்த பிரபலவார்த்தைகளைச்சொல்வாம்.

தேவதைகளுக்குப் பிரசன்னரான பகவானுடைய வாக்கியத்தினால் தேவர்கள் அசுரர்கள் இருவரும்சந்திபண்ணிக்கொண்டு க்ஷீராப்தியைக்கடைவதற்குயத்தனஞ் செய்தார்களென்று சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் இராஜனே இந்தப்பிரகாரம் தேவகணங்களினால் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டும் பகவானாயும் ஈஸ்வரனாயுமிருக்கிற ஸ்ரீஅரியானவர் அந்தத் தேவகணங்களுக்குமுன்னே கோடிசூரியனுதித்தாற்போலே ஆவிர்ப்பவித்தார், அப்போது அந்தத்தேஜசினாலே எதிர்விழித்துப்பார்க்கமாட்டாதவர்களாயிருக்கிற சமஸ்தமான தேவகணங்கள் ஆகாசம்-திக்குகள்-பூமி இதுகள் ஒன்றையும் பார்க்கமாட்டாமல் ஆவிர்ப்பவித்திராநின்ற ஈஸ்வரனைக் கண்கொண்டுபார்ப்பதற்குச்சக்தியில்லாதவர்களானார்கள், சதுர்முகனானவன் ருத்திரனோடுகூடதன்முன்னே பத்மதளங்கள்போலச் சிவந்தநேத்திரங்களையுடையதாயும் மரகதமாணிக்கம்போல பச்சைநிறமாயும் நிர்மலமாயும் பத்துமாற்றுத்தங்கம்போலப் பொருக்கென்றநிறத்தையுடைய பீதாம்பரத்தினால் விளங்காநின்றும் மனோகரங்களாயுமிருக்கிறசர்வஅவயவங்களையுடையதாயும்சோபனமானமுகத்தையும் சுந்தரமானபுருவங்களையுடையதாயும், விலையில்லாதமகா மணியுடனேகூடின கிரீடத்தினாலேயும் தோள் வளைகளினாலே பூஷிக்கப்பட்டதாயும் மகரகுண்டலங்களிலே பிரகாசியாநின்றகபோலங்களோடுகூடின முகார விந்தத்தை யுடையதாயும், அரைநூன்மாலை-கங்கணம்-ஆரம்-காற்சிலம்பு இதுகளினாலே பிரகாசியாநின்றும் கவுஸ்துவாபரணம் லட்சுமி வனமாலை இதுகளைக் கண்டத்திலும் வட்சசிலேயும் உடையதாயும், சரீரத்தையெடுத்துக்கொண்டிராநின்ற சுதரிசனமுதலான பஞ்சாயுதங்களினால் உபாசிக்கப்பட்டதாயுமிருக்கிற அந்தச்சுவாமியினுடைய திவ்யதேசத்தைப்பார்த்துப் பூமியில் சாஷ்டாங்கப் பிரணமம் பண்ணுகின்ற சமஸ்ததேவதைகளுடனேயுங்கூட பிர்மாவானவர்ஸ்தோத்திரம்பண்ணுகின்றார்,

பிரமதேவர்வாக்கியம்.

உற்பத்தி-ஸ்திதி-சங்காரங்களில்லாதவராயும், ஏயகுணரகிதராயும் மோட்சசுகத்துக்கெல்லாம் ஒருகடலாயும் மகானுபாவராயு மிருக்கிற ஜெகத்காரணனே உம்முடைய இந்தரூபமானது வேதோக்தமார்க்கத்தினாலேயும், ஸ்மிருதியினதுமார்க்கத்தினாலேயும், சிரேயசைக்கோராநின்ற ஜெனங்களினாலே சர்வகாலமும் பூசிக்கப்பட்டிருக்கின்றது. பிரபஞ்சரூபியான உம்மிடத்திலேளங்களையும் மூன்றுலோகங்களையும் காண்பிக்கிறேன், சுதந்தரராயிருக்கிற நீர் ஆதிமத்தியாந்தங்களிலே பிரகாசித்துக்கொண்டிருக்கையினால் இந்தப்பிரபஞ்சமுமிருக்கின்றது பிரகிருதியைக்காட்டிலும் பாரரா யிருக்கிற நீர் கடத்துக்கு மிருத்திகைபோல இந்தப் பிரபஞ்சத்துக்கு ஆதியும் மத்தியமும் அந்தமுமாகவிருக்கின்றீர் சுவாதீனமனமாயும், உம்மையே ஆசிரயித்துக்கொண்டு மிருக்கிறமாயையினால் இந்தப்பிரபஞ்சத்தையுண்டாக்கி அதற்குள்ளே அணுப்பிரவேசித் திருக்கின்றீர் ஆகையினால்விவேகிகளானபுருஷாள் யோகாப்பியாசத்தினால் நிர்மலமானமனதினாலே குணங்களுடைய பரிநாமம் உண்டா யிருக்கையிலும் உம்மை நிற்குணமாகப் பார்க்கிறார்கள்.

வாரீர்நாதனே, பத்மநாபனே, வெகுகாலமாகப் பிரார்த்திக்கப்பட்ட புருஷார்த்தரூபியாயும்யோகாப்பியாசத்தினாலே அடையத்தக்கவராயும், இப்போதெங்களுக்குப்பிரசன்னராக ஆவிர்ப்பவித்திருக்கிற உம்மைப் பார்த்து நாங்கள் பரமமானசுகத்தையடைந்தோம், நாங்கள் ஏதுக்காக உம்முடையபாதமூலத்தைஆசிரயித்திருக்கிறோமோ அந்தப் பிரமோசனத்தைச் சாதிக்கக்கடவீர், உள்ளும் வெளியிலும் சமஸ்தத்திற்குஞ் சாட்சியாயிராநின்றும் சர்வக்கியராயுமிருக்கிற உமக்கு அறிவிக்கத்தக்கது என்னயிருக்கின்றது, நான் ருத்திரன்தேவாள் முதலானபேர் தெட்சன்முதலிய நவப்பிரசாபதிகள் இவர்களெல்லாம் அக்கினியினுடைய பொறிகள்போலஉம்மு

டையஅங்கிசங்களாகவிருக்கின்றேம் ஆகையினலே பி ராமணுளுக்கும் தேவாளுக்கும் இதைச் செய்யுங்களெ ன்றும், உபதேசிக்கக்கடவீரென்றும், பிர்மாமுதலான தேவதைகளாலே ஸ்தோத்தரிக்கப்பட்டவராய்பகவானு னவர் அவர்களுடைய இருதயத்திலேயிருக்கிற பாவத் தையறிந்து மேககெம்பீரமான வசனத்தினல் அஞ்சலி பந்தம்பண்ணிகொண்டும் சகலவிந்திரியங்களையும் நிக் கிரகித்துமிருக்கிற தேவதைகளைப் பார்த்து பகவானுன வர் அந்தத்தேவதைகளுடைய காரியத்தைச்சாதிக்குகை க்குத் தாம்ஒருவரே சமர்த்தராயிருந்தாலும் சமுத்திர ங்கடைகிறதுமுதலானவியாபாரங்களினல்லீலைபண்ண வேணுமென்று இச்சையை யுடையவராய் ஒரு வார்த் தை சொல்லத் தொடங்கினர்.

ஸ்ரீபகவான்வாக்கியம்.

வாராய் பிரம்மதேவனே, ருத்திரனே,தேவர்களே நீங்களெல்லாரும் சாவதானளாய் சிரேயசுகரமானஎன் னுடையவசனத்தைக்கேளுங்கள் உங்களுக்கெல்லாம்அ பிவிர்த்தியுண்டாகுங்காலமவரையில் இப்போதுஅபிவி ர்த்தியடைந்திராநின்ற அசுராளுடனேகூடநீங்கள்போ ய் சந்திபண்ணிக்கொண் டிருங்கள் பிரயோசனத்தினு டையசித்தியை அடைய வேணுமென்கிற பேர்களாலே காரியம்வந்தவேளையில் சத்துருக்களாலும் சமாதானம் பண்ணிக்கொள்ளத்தக்கது, பிரயோசனம் கைப்புகுந்த பிற்பாடு எலியையும்பாம்பையும்போலே யிருக்கத்தக்க து, அமிர்தம்உண்டாகிறநிமித்தமாகச் சீக்கிரத்தில்எத் தனம் பண்ணுங்கள் அந்த அமிர்தத்தைப் பானம்பண் ணுமல் மரணத்தையடையும் பிராணிகளும், நித்தியத் தையடையும், வாருங்கள் தேவர்களே க்ஷீரசமுத்திரத் தில் சமஸ்தமானதிரணங்கள்-லதைகள் ஔஷதிகள் இ வையெல்லாம்போட்டும் மந்தரபர்வதத்தைமத்தாகவும் வாசுகியென்கிற நாகராசனை மத்துக்கயிராகவுஞ்செய்து என்னைச் சகாயமாகக்கொண்டுஆலசியமில்லாதவர்களா ய்க்கடையுங்கள்-அப்போதயித்தியாளெல்லாம்கேவலம் சிரமத்தையே அடையப்போகிறர்கள் நீங்கள்பலத்தை அடையப்போகிறீர்கள், லோகத்தில் நல்ல வார்த்தையி னலே காரியங்கூடிவருவதுபோலதுவேஷத்தினலேகூ டிவராது ஓய்தேவர்களே அசுராள் எதையிச்சிக்கிறர்க ளோ அதைநீங்கள் சந்தோஷியுங்கள் அப்படிச் சமுத் திரத்தைக்கடைவதினு லுண்டாகின்ற காளகூட விஷத் தில்நின்றும், பயப்படத்தக்கதன்று, அதில்நின்றுமுண் டாகும் வஸ்துக்களிலே உங்களால் ஒருக்காலும் கோப மும்-காமமும்-ரோஷமும்-செய்யத் தக்கதன்று என்று புருஷோத்தமரானவர் தேவர்களைப்பார்த்து இந்தப்பிர காரம் ஆக்கியாபித்து அவர்கள்பார்த்துக்கொண் டிருக் கும்போதே அந்தர்த்தானமானர்,

பிற்பாடு பிர்மதேவனும்-ருத்திரனும் அந்தப் பக வானுக்கு பிரணமம்பண்ணிவிட்டுத்தங்களுடையஸ்தா னத்தை யடைந்தார்கள், தேவர்களும் பெலிச்சக்கிரவர் த்தியையடைந்தார்கள், அப்போது தயித்தியராசனும் புண்ணியகீர்த்தியாயும், விரோதகாலத்தையும்,சமாதா னகாலத்தையும், அறிந்தவனுயு மிருக்கிற பெலிச்சக்கிர வர்த்தியானவன் யுத்தசன்னுகத்தைவிட்டு வந்திராநின் ற சத்துருக்களான தேவதைகளைப்பார்த்து யுத்தசன்னு கம்பண்ணுநின்ற தன்னுடையபாடாளானதயித்தியாளை நிறுத்தினன் அப்போதுதேவர்கள் அசுரசிரேஷ்டாளா லேரட்சிக்கப்பட்டும் மூன்று லோகத்தையும் ஜெயித்த வனுயும், பரம அயிஸ்வரியசம்பன்னனுயுமிருக்கிற பெ லிச்சக்கிரவர்த்தியை யடைந்தார்கள்.

அப்போது மகாபதியான மகேந்திரனனவன்மது ரமான வார்த்தையினல் சமாதானமாகப் பெலிச்சக்கிர வர்த்தியைப்பார்த்து புருஷோத்தமனல் சொல்லப்பட் டஅமிர்தவுற்பத்திவிர்த்தாந்தத்தை எல்லாஞ்சொன்ன ன். இந்திரன் சொன்ன வார்த்தையானது பெலிச்சக்கிர வர்த்திக்கும் அவனுடன்சேர்ந்திருக்கிற அசுரபூகபாளா னசம்பரன்-அரிஷ்டநேமி திரிபுர வாசிகளான காலகே யாதிகள் இவர்களுக்கெல்லாம்இஷ்டமாயிருந்து,தேவர் கள்-அசுரர்கள்-இருவரும் ஒருவர்க்கொருவர் சிநேகம்ப ண்ணிக்கொண்டு மரியாதைகளுடனே அமிர்த நிமித்தி யமாகப் பரமமானபிரயத்தனத்தைப்பண்ணி உழலத்த டியொத்த பாகுகளை யுடையவர்களாயும் சமர்த்தர்களா யும் மதித்துமிருக்கிற அந்தத்தேவர்கள் அசுரர்கள் தங் கள்பராக்கிரமத்தினல் மந்தரகிரியைப் பிடுங்கி சமுத்தி ரத்தினிடத்திற்கொண்டுவந்தார்கள், இந்திரன் பெலிஇ வர்கள்முதலான தேவர்கள்-அசுரர்கள்-வெகுதூரத்திலி ருந்து மந்திரபர்வதத்தை யெடுத்துக்கொண்டுவந்தவர் களாய் அதையெடுக்கச் சமர்த்தா ளாகாமல் இளப்பை யடைந்தவர்களாய் மார்க்கத்தில் விட்டுவிட்டார்கள்.அப் படிவிடப்பட்ட சொர்னமயமான பர்வதமானது கீழே விழுந்து மிகவும்பாரத்தினல் வெகுஅமரர்களையும்,தா னவர்களையும், சூரணமாகப்பண்ணிற்று அப்போது சி ன்னமான மனதை யுடையவர்களாயும் முறிந்திருக்கிற கைகள்-துடைகள்-கழுத்துகள் இதுகளை யுடையவர்களா யுமிருக்கிற தேவ அசுரர்களைஅறிந்து கெருடத் துவச னை ஸ்ரீபகவான் அங்கே ஆவிற்பவித்துக் காயத்தை யு டையவர்களான தேவஅசுரர்களைப்பார்த்துத்தம்முடை யகடாட்சங்களினல் மரண மில்லாதவர்களாயும் விரண மில்லாதவர்களாயும்செய்து அந்த மந்தரபர்வதத்தையு ம் ஒருகையால் விளையாட்டாகக் கெருடன்மேலேஏற்றி வைத்துக்கொண்டு தாமும் ஏறிக்கொண்டு தேவ ரசு ர கணங்களினல் சூழப்பட்ட வ ராய்க்ஷீ ர ச மு த்

திரத்தையடைந்தார் பட்சியிந்திரனாகிய கெருடன்தோளில்நின்றும் பர்வதத்தைக் கீழேயிறக்கிஜெலமத்தியத்தில் தள்ளிவிட்டுப்போனார்.

## எ - வது - அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஓலசீராப்தி தன்னை யுடன்கடைந்திடும்போதுண்டாம்.ஆலகாலத்தைப்பார்த்த அறியமானிடர்பயந்துகோலமாம் பரமாத்மாவைக் குறித்துத்தோத் திரங்கள் செய்யச் சாலருத்திரன் விஷத்தைச் சடுதியிற் பானஞ்செதார்,

க்ஷீராப்தியைக் கடையும்போது அதிலுண்டானகாலகோடிவிஷத்தைக்கண்டு சகலஜனங்களும்பயந்து பரமாத்மாவை ஸ்தோத்திரம்பண்ண ஸ்ரீருத்திர பகவானனவர் அந்தவிஷத்தைப் பானம்பண்ணினரென்றுசொல்லுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராஜனே அந்தத்தேவர்களும் அசுரர்களும்அமுதத்தைக் கோறினவர்களாய் நாகராஜனை வாசுகியையடைந்து உனக்கும் அமிர்தத்தில் பாகம்உண்டாகிறதென்று சம்மதிபண்ணிக்கொண்டு அவனை அந்தமந்தரபருவதத்திலே மத்துக்கயிறுகச்சுற்றி சந்தோஷத்துடனேகூடினவர்களாய்ச் சமுத்திரத்தைக்கடைய உத்தேசித்தார்கள் அப்போது அந்த வாசுகியினுடைய சிரோபாகத்தை ஸ்ரீஹரியானவர் முன்னே பிடித்ததைப் பார்த்துதேவதைகளும் அந்தச்சிரோபாகத்தையேபிடித்தார்கள் அந்தமாகாபுருஷனுடையசெய்கையைதயித்தியபதிகளான அசுரர்கள் சம்மதியாதவர்களாய் நல்லகுலத்தில்ஜென்மத்தினலேயும், கர்மங்களினலேயும் பிரசித்தர்களாயும் வேதசாஸ்திர சம்பன்னர்களாயு மிருக்கின்றநாங்கள் இந்தவாசுகியினுடைய நிஷிதமான வால்புறத்தைப் பிடிக்கிறதில்லையென்று வெறுமையா யிராநின்ற அந்தத் தயித்தியர்களைப்பார்த்துப் புருஷோத்தமரானவர் புன்சிரிப்பை யுடையவராய் தேவதைகளோடுகூடநாகராஜனுடைய தலைப்புறத்தைவிட்டுப் புச்சப்பிரதேசத்தைக் கிரகித்துக்கொண்டார் இந்தப்பிரகாரம் சிரோபாகத்தில்அசுரர்களும் புச்சபாகத்தில் தேவர்களுமாக ஸ்தானவிபாகங்களை யுடையவர்களாய் பரமமாயத்தனத்துடனே கூடினவர்களாய் அமிர்த நிமித்தியத்தில் க்ஷீரசமுத்திரத்தைக கடைந்தார்கள்.

வாராய் பரிட்சித்துமகாராஜனே அந்தச்சமுத்திரத்தைக்கடையும்போது ஆதாரமில்லாமலிருக்கிற அந்த மந்தரபருவதமானது பலவான்களா தேவஅசுரர்களாலே தரிக்கப்பட்டிருந்தாலும் அதிகபாரத்தினுல் ஜலத்துக்குள்ளே முழுகிப்போச்சுது அந்தத்தேவ அசுரர்களப்பலவத்தான தெய்வகதியினுல் தங்களுடையபிரயத்தனம் வியத்தமாகையால் சின்னமானமனதை யுடையவர்களாயும் வாடிப்போன முககாந்தியை யுடையவர்களாயுமானர்கள் அப்போது அபாரமான சக்தியையுடையவராயும் சத்தியசங்கல்பராயுமிருக்கிற பகவானனவர்விக்கினராஜனுடைய கிருத்தியத்தைப்பார்த்து மகத்தாகியஅத்தியற்புதமான கூர்மரூபத்தைத்தரித்து ஜலத்துக்குட்பிரவேசித்து மந்தரபர்வதத்தை உத்தாரணப்பண்ணி பத்துலக்ஷம்யோசனை விஸ்தாரமுடையதான தம்முடையமுதுகினலே மகத்தாகியவேறொரு திவீபமரனதுபோலத் தரித்துக்கொண்டிருந்தார் தேவ அசுரர்களானவர்கள் ஜலத்தில்நின்றும் எழும்பாநின்ற அந்தக்குலாஜலத்தைப்பார்த்துத் திரும்பவும் சமுத்திரத்தைக்கடைவதற்கு யத்தனம்பண்ணினர்கள்.

அப்போது அளவிடக்கூடாத மகிமையை யுடையவராயும் ஆதிகூர்மரூபியாயு மிருக்கிற பகவானனவர்தேவஅசுர சிரேஷ்டர்களுடைய புஜபலத்தினல் இழுக்கப்பட்டும் முதுகிலே சுழன்றுகொண்டுமிருக்கிற அந்தமந்தரபர்வதத்தைத் தாங்கியும் அசுரரூபத்தினல் அசுரர்களுடனே யிருந்துகொண்டு அவர்களுடைய பலவீரியத்தை விர்த்திபண்ணிக்கொண்டும் தேவதாரூபத்தினல் தேவகணங்களுடனேயுங் கூடவிருந்து அவர்களுடையதேஜசை விர்த்திபண்ணியும் அந்தநாகராஜனையும் சிரமம்வராமல் விர்த்திசெய்துகொண்டும் ஒருவராலேயும் அறியப் படாதவராகவேயிருந்தார் அப்போதுபிர்மாருத்திரன் இந்திரன்முதலான தேவதைகள் புஷ்பவருஷங்கள்பொழிந்தார்கள். அப்படிச்சமுத்திரத்தைக் கடையும்போது சிரேஷ்டமான அந்தவாசுகியினுடைய நேத்திரங்கள் முகங்கள் சுவாசங்கள் இதுகளில் நின்றுமுண்டாகாநின்ற புகைகளினலேயும்அக்கினிகளினலேயுநசிக்கப்பட்ட காந்தியை யுடையவர்களாய் பௌலோமகன் காகேயன் பெலி இல்வலன் இவர்கள முதலான அசுரர்களெல்லாங் காட்டுத்தீயினல் தகிக்கப்பட்டசரளவிருட்சம்போலத் தேச சில்லாதவர்களானர்கள் அந்த வாசுகியின் சுவாசாக்கினியினுடைய குணயினலேநசிக்கப்பட்ட காந்தியையுடையவர்களாயும் தூம்பர்வர்னமுள்ள வஸ்திரங்கள் மாலைகள் கவசங்கள முகங்கள் இதுகளையுடையவர்களாயு மிருக்கிற தேவதைகளைக்குறித்துப்பகவானுடைய வசனங்களானமேகங்கள் வருஷித்துக்கொண்டிருந்ததுகள்,

இந்தப்பிரகாரம் தேவஅசுரசிரேஷ்டர்களாலேகடையப்படாநின்ற அந்தச்சமுத்திரத்தில் எப்போதுஅமிர்தம்பிறவாமற்போச்சுதோ அப்போதுபகவானனவர்காமனைமலர்போன்ற தமது கைகளினல் வாசுகியாகியமத்துக்கயிற்றைக் கிரகித்துக்கொண்டு மத்தினல்சமுத்திர

த்தைக்கடைந்தார் தேவஅசுரர்கலால் இந்தப்பிரகாரங் கடையாநின்ற சமுத்திரத்தில்நின்றும் முன்னே ஆலகாலமென்று பெயரையுடையதாய் அதிதீக்ஷணமானகாலகோடிவிஷம்பிறந்து திக்குகள்தோறும் கீழ்மேலும்பரவாநின்று சகிக்கக்கூடாததாயும்உக்கிரமானவேகத்தையுடையதாயுமிருக்கிற அந்த ஆலகாலமென்கிற மகாவிஷத்தைப்பார்த்துப் பயந்தவர்களாயும் ஓடிப்போகாநின்றுமிருக்கிற இந்திராதிகளான பிரஜைகளெல்லாம் ஒருத்தராலேயும் ரட்சிக்கப்படாதவர்களாய் கயிலாயபர்வதத்தில்பார்வதியுடனே எழுந்தருளியிராநின்றசதாசிவனையடைந்து பிரஜைகளெல்லாரும் ஸ்ரீ ஹரியினுடைய பராக்கிரமங்களினால் சிவனை சகுனமாகவும் நிர்க்குணமாகவும் தெட்சன்முதலானபிரஜாபதிகளெல்லாம்அவர்களிருவருக்கும் பேதத்தையெண்ணாமல் ஸ்தோத்திரம்பண்ணினார்கள்,

வாரீர்தேவதேவனே, மகாதேவனே பூதங்களுக்கெல்லாம் அந்தரியாமியாயும் அவைகளை உண்டாக்குகின்றவனே சரணாகெதாளான எங்களைத் திரைலோக்கியத்தையும்தகியாநின்ற விஷத்தில்நின்றும் ரட்சியும்நீர்ஒருவருமே ஜெகத்துக்களுடைய பந்தமோக்ஷங்க ளிரண்டுக்கும் நியந்தாவாயிருக்கிறவர் ஆகையால் சமர்த்தாளானபேர் பிர்பஞ்சாளுடைய இளப்பைப்போக்கடித்துஅகஸ்தியர் முதலானபேருக்கெல்லாங்கியானஉபதேசத்தால்குருவாயிருக்கிற உம்மை அர்ச்சிக்கின்றார்கள். இந்த ஜெகத்துக்குச் சத்துவாதிகுண ரூபமாயிருக்கிற உம்முடையசக்தியினாலே சிருஷ்டி ஸ்திதி - சமகாரங்களைஎப்போதுபண்ணுகிறீரோ அப்போது சுதசித்தக்கியானத்தையுடையவராய் பிர்மா விஷ்ணு சிவன் என்கிறநாமங்களைத்தரிக்கின்றீர், ஸ்தூலசூட்சங்களாகிய தேவதிரியக்காதிரூபங்களை யுண்டாக்கிக்கொண்டுசேதனாசேதனவிலட்சணமாய் ஒருவராலும் அறியப்படாததாயுமிருக்கிறபிர்மமும்நீரே, நானாப்பிரகாரங்களான ஸ்தூலசக்திகளினால் ஜெகத்ரூபமாகப் பிரகாசியாநின்றநீரேஜெகதீஸ்வரன் வேதத்துக்குக் காரணமும்நீரே, ஜெகத்துக்குஆதியான மகதத்துவமும்நீரே, அந்த மகதத்துவத்தில்நின்றும்பிறந்த பஞ்சபூதங்கள் ஏகாதசவிந்திரியங்கள் பஞ்சவிர்த்திப் பிராணன்கள் - இதுகளுக்குக்காரணமாகியசத்வாதிகுணங்களைச் சுபர்வமாகவுடைய அங்ககாரமுநீரே காலமும் சங்கற்பமும் சத்தியமும் தர்மமும்கர்மபலமுநீரே சத்துவரஸஸ்தமேமயமாய் நாசமில்லாமையால் அக்ஷரமென்று சொல்லப்பட்ட பிரதானதத்வத்தையும்,உம்மிடத்திலே யிருக்கிறதாகச் சொல்லுவர்கள்,

அகில தேவதாதிருபியான அக்கினிபகவான் உம்முடைய முகமென்றும் லோகங்களுக்கெல்லாம் உற்பத்திஸ்தானமாகியபூமியைப்பாதபங்கசமாகவும், அகிலதேவதாசுரூபியான உமக்குக் காலத்தைக்கதியாகவும் திக்குகளைக்கர்னங்களாகவும் வருணனை ரஜனேந்திரியமாகவும், ஆகாசத்தைஉமக்குநாபியாகவும் வாயுவை மூச்சுக்காற்றென்றும் சூரியசநதிரா ளிரண்டுகண்களென்றும், ஜெலத்தைரதஸாகவும் சுவர்க்கத்தைச் சிரசாகவும் சமுத்திரங்களை உம்முடையகுட்சியாகவும் பர்வதங்களைச்சரீரத்திலேயிருக்கிற எலும்புகளாகவும் சமஸ்தங்களானஓஷதிலதைகளை உம்முடைய ரோமங்களாகவும் வேதங்களை உமது சப்ததாதுக்களாகவும் தர்மத்தைத்தமதுஇருதயமாகவும் தற்புருஷரும் அகோரம் வாமதேவம் சத்தியோசாதம் ஈசானமென்னப்பட்ட இந்த அஞ்சு மந்திரங்களை உம்முடைய முகங்களாகவும் சொல்லுவார்கள் அப்படிப்பட்டஉமக்கு மன்மதனைத்தகித்ததும்தெட்சயக்கியதுவசம் பண்ணினதும் அனேக பிராணிகளைக்கொல்லாநின்ற காலகோடிவிஷத்தை விழுங்குகிறதும் இதுகளெல்லாமிகவும் சூட்சுமமாகையால் ஸ்தோத்திரத்துக்கு விஷயமேயன்று,ஆகையால் காரியாகாரணரூபமான பிரகிருதியைக்காட்டிலும் வேறாயும் சீவனைக்காட்டிலும் விலட்சணமாயுமிருக்கிற உம்முடையசுரூபத்தைஅறிவதற்குச் சமர்த்தாளல்லாத பிர்மாதிகளெல்லாம்எந்தக்காரணத்தாலே ஸ்துதிக்கப்போகிறார்கள்அவர்களே அப்படிஸ்துதிக்கமாட்டாமல் போகும்போது அவர்களேசிருஷ்டிக்கப்பட்டபேர்களால் சிருஷ்டிக்கப்பட்டநாங்கள்துதிக்க சமர்த்தாளன்று என்கிறதற்குச் சொல்லவேண்டியதென்ன ஆனாலும்உம்முடைய அவதாரமானது லோகத்தினுடைய க்ஷேமத்தின்பொருட்டன்றோ உமதுதரிசனத்திலேயே கிருதார்த்தாளானோமென்று ஸ்தோத்திரம்பண்ணினார்கள்,

ஸ்ரீஉருத்திரபகவான்வாக்கியம்.

இந்தப்பிரகாரம் ஸ்தோத்திரம் பண்ணாநின்ற பிரஜாபதிகளுடைய விசனத்தைப்பார்த்து மிகவும்கிருபையையுடையவராய்ச் சர்வபூதசுகிர்தானமகாதேவன் தம்முடைய இஷ்டநாயகியான பார்வதியைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றார் வாராய் பார்வதியே க்ஷீரசமுத்திரத்தைக் கடைந்ததினாலேயுண்டான காலகோடிவிஷபத்தினால் வந்திருக்கிற பிரஜைகளுடைய மகாவிசனத்தைப்பார் என்னகஷ்டம் பிராணனைக் கோராநின்ற இந்தப்பிரசைகளுக்கு நம்மாலே அபையப் பிரதானம் செய்யத்தக்கது பிராணிகளிடத்தில் தயையை யுடையவனைபுருஷனுக்குச் சர்வாந்தரியாமியான ஸ்ரீ அரியானவர் பிரீதியையுடையவராயிருப்பர்பகவானான ஸ்ரீஅரியானவர்பிரீதியை யுடையவராகில்ஸ்தாபரசங்கங்களுடனேகூடநானும்பிரீதியையுடையவனாவேன் ஆகையால் பிரஜைகளுக்கு மங்களத்தின்பொருட்டாக இந்தக்கால

கோடிவிஷத்தை நான்புசிக்கிறேனென்று பார்வதியின னுமதிகொண்டு விசுவகர்த்தாவான ருத்திரன் அந்த விஷத்தை உள்ளங்கையில் அடங்கினதாகப் பண்ணி விழுங்கினர். அப்போது அந்தக்காலகோடி விஷமானது தன்னைப் பானம்பண்ணுகின்ற ருத்திரனைக் கழுத்திலே கறுப்பையுடையவனாகப்பண்ணி தன்னுடைய வீரியத்தை ருத்திரனுக்குக் காண்பித்தது, அப்படியுண்டாகிய கறுப்பானது ருத்திரனுக்கு ஒரு பூஷணமாகி விட்டது சாதுசனங்கள் லோகத்தினுடையவிசனத்தைப்பார்த்து தாங்களும் விசனப்படுவர்க ளென்பது யாதொன்றுண்டோ அதுவேசர்வாந்தரியாமியான பரம புருஷனுக்கு முக்கியமான ஆராதனமாகவிருக்கின்றது ஜெகத்பூச்சியனும் தேவதேவனுமிருக்கிறசிவனுடைய அந்தவிஷ பக்ஷணத்தைப்பார்த்துத் தெக்ஷன்முதலான பிரஜாபதிகளும் பார்வதியும், பிர்மாவும், வைகுண்ட பகவானும் கொண்டாடினர்கள் ஈஸ்வரன்விஷபட்சணம் பண்ணும்போது கையில்நின்றும்யாதொரு பிந்துக்கள் சிதறியது களோ அந்தவிஷபிந்துக்களை லோகத்திலே விருச்சிகங்கள்முதலானசர்ப்பங்களும்விஷரூபமான ஓஷதிகளும் மற்றும் சிலதுஷ்டபதார்த்தங்களும் கிரகித்ததுகள்.

## அ-வது, அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

க்ஷீராப்திகடைபோதுண்டாம் ஸ்ரீமகாலட்சுமியாலே
ஸ்ரீராமர்வரிக்கையாக திவ்வியவசுராளாலே
சோரதர்மந்திரிபாலிற் றேன்றிடுமமிர்தமான
தாராமலபகரிக்கைப் படுகையினதீதஞ்சொல்வாம்.

க்ஷீராப்தியைக் கடையும்போது அதிலுண்டான ஸ்ரீமகாலட்சுமியினுலே ஸ்ரீமகா விஷ்ணுவானவர் வரிக்கைப்படுகையில் அசுராளாலே தர்மந்திரியினிடத்தில் நின்றும் அமிர்தமானது அபகரிக்கப்படுகையில் விஷ்ணுவினுடைய மயாமோகினிரூபமானது சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்துவே இந்தப்பிரகாரம் அந்தருத்திரனாலே காலகோடிவிஷமானது பானம்பண்ணப்படுகையில் இந்திரன்பெலிமுதலான தேவாள் தானவாள் இவர்களெல்லாரும் சந்தோஷததையடைந்தவர்களாய்த்தங்களுடைய பெலத்தினுல் திரும்பவும் சமுத்திரத்தைக்கடைந்தார்கள் அப்படிக் கடையப்பட்ட அந்தச்சமுத்திரத்திலே முதலில் காமதேனு வுண்டாச்சுது அக்கினிஓத்திரகர்மத்துக்குச் சாதனமான அந்தக் காமதேனுவைபிர்மநிஷ்டாளான ரிஷிகள் பிர்மலோகப்பிராபகமாயிருக்கிறஎக்கியத்துக்குப் பரிசுத்தமான அவிஸ்தும்பொருட்டுக்கிரகித்தார்கள் பிற்பாடு வுச்சைச் சிரவசு என்கிற பெயரையுடையதாய் சந்திரனைப்போல வெளுத்தஒருகுதிரையானது உண்டாச்சுது அந்தக்குதிரையினிடத்திலே பெலிச்சக்கிரவர்த்தி இச்சைகொண்டான், இந்திரனேவென்றால் முன்னலேபண்ணப்பட்டஈசுவரனுடைய சிட்சையினலே அதனிடத்தில் இச்சைகொள்ளவில்லை, பின்பு அயிராவதமென்கிற பெயரையுடைய ஜெகசிரேஷ்டமானது சிறுங்கங்களோடுகூடினகயிலாச பர்வதத்தினுடைய மகாத்மியத்தைத்தன்னுடையதான நாலுதந்தங்களினலே அபகரித்துக்கொண்டுசமுசாரத்தில்நின்றும்வெளிப்பட்டது, பிற்பாடு தேவலோகத்துக்குப்பூஷணமாயும் பூமியிலே யாசகாளுடைய மனோரதங்களை அர்த்தங்களினல் பூரியாநின்றுமிருக்கிற பாரிஜாதவிருட்சமானது அந்தச்சமுத்திரத்தில்நின்றும் பிறந்தது பின்புமனோக்கியமாயிருக்கிறநடையினலேயும், லீலையோடு கூடிக்கொண்டிருக்கிற கடைக்கண் பார்வைகளினலேயும் சுவர்க்கலோகத்திலே யிருக்கின்றவர்களுக்கு ஆனந்தத்தையுண்டாக்கப்பட்ட சர்வாபரண பூஷிதர்களாயும் விலையில்லாத நல்லவஸ்திரங்களை யுடையவர்களாயுமிருக்கிற அப்சரசுக்கள் உண்டானர்கள் பிற்பாடு பகவானிடத்திலே ஆசக்தியையுடையவர்களானசாட்சாத்ஸ்ரீமகாலட்சுமிதேவியானவள் தன்னுடைய காந்தியினல் மின்னற்கொடிபோல திக்குகளைப்பிரகாசிப்பிக்கத்தக்கதாகவுண்டானள் அந்தமகாலட்சுமி தேவியினிடத்திலே தேவாசுரமனுஷியாளெல்லாரும் அந்தமகாலட்சுமியினுடையரூபம்-அவுதாரியம்-எவ்வனம்-வர்னம்-மகிமை-இதுகளினல்இழுக்கப்பட்டமனதையுடையவர்களாய் இச்சைகொண்டார்கள், அந்தலட்சுமிதேவிக்குஇந்திரனனவன் அத்தியற்புதமாகிய ஒருசிங்காசனத்தைக் கொண்டுவந்துகொடுத்தான் மகாநதிகளெல்லாம், திவ்வியரூபங்களைத்தரித்துகொண்டுசுவர்னகும்பங்களினல் சுசியான ஜலத்தைக்கொண்டுவந்துகொடுத்ததுகள் பூமியானவர் அபிஷேகத்துக்குஉசிதங்களான சகலமானஓஷதிகளையுங் கொண்டுவந்துகொடுத்தார் பசுக்கள் பஞ்சகவ்வியகளைக் கொண்டு வந்ததுகள், வசந்தங்களான சைத்திரவைசாகதேவதைகள் பலபுஷ்பங்களைக் கொண்டுவந்துகொடுத்ததுகள், மகாரிஷிகள்-எதாசாஸ்திரமாக லட்சுமிக்கு மகாஅபிஷேகத்தைப்பண்ணிவைத்தார்கள் அப்போது கெந்தர்வாள் மங்களகீர்த்தனங்களைக்கானம்பண்ணினர்கள், அப்சரசுக்கள் நிர்த்தனம்பண்ணினர்கள், வருணன் மகரந்தபாணத்தினல் மதித்த பிரமரங்களையுடைய வைஜயந்தி யென்கிற மாலையைக் கொடுந்தான்,

பிற்பாடு மகாலட்சுமியானவள் மகாரிஷிகளாலேபண்ணப்பட்டசொஸ்திவசனத்தை யுடையவளாய்கருநெய்தல்மாலையைக் கையி லெடுத்துக்கொண்டலச்சையுட

னே புன்சிரிப்பையுடையவளாய்புறப்பட்டு நிர்த்துஷ்டமாயும்சாசுவதமாயும், பின்னேஒருவனிடத்திலேயில்லாமலிருக்கிற கலியாணகுணங்களேயுடையதாயு மிருக்கிற தனக்கு ஸ்தானத்தைத்தேடிக்கொண்டு கெந்தர்வாள்-சித்தாள்-அசுராள்-சுவர்க்கவாசிகள் இவர்கள் முதலானபேர்களுக்குள்ளே அப்படிப்பட்டவஸதுவை அடையாமற்போனுள்- பகவானேவென்ருல் பூர்ணகாம ராகையால் என்னே அபேட்சிக்கிறதில்லேயென்று இந்தப்பிரகாரம் விசாரித்து அந்தஸ்ரீமகா லட்சுமியானவள் பின்னேயொருபுருஷரிடத்திலேஇல்லாத அனந்தகல்லியாணகுணங்களாலே சிரேஷ்டராயும், தமக்குத்தானே ஆசிரியரான படியினலே பிராகிருதமானசத்துவாதிகுணங்களே அதிக்கிரமித்தவராயு மிருக்கிற முகுந்தனேயே தனக்கிஷ்ட நாயகனுகவரித்து அவருடையசேவையினல் கிருதார்த்தையாகக்கடவோமென்றும்பிராகிருதாளானவேருெருவரால் நமக்கென்னபிரயோசனமென்றும்ஸ்ரீமகாலட்சுமியானவள் அவனேயேஆஸ்ராயித்து அந்தஸ்ரீமகா விஷ்ணுவினுடையதோளிலே தனதுகையிலிருக்கிற மங்களகரமான செய்தல்மாலேயைப்போட்டு அந்தப் பகவானுடைய அனுக்கிரகத்தைக்கோறினவளாய் லச்சையும்,புன்சிரிப்பும் இதுகளுடனேயும் மலர்ந்துமிருக்கிற நேத்திரங்களாலே அந்தப்பகவானுடைய வட்சஸ்தலத்தைப் பார்த்துக்கொண்டு அவருடைய சந்நிதானத்திலே யிருந்தாள் அப்போது அந்தப்பகவானுனவர் மகத்தாகியஅயிசுவரியங்களே யுடையவளாயும் மூன்று லோகத்துக்கும் தாயாகியுமிருக்கிற மகாஇலட்சுமிக்கு தம்முடைய பரமமங்களமானமார்பை வாசஸ்தானமாகப் பண்ணினுர் மகாலட்சுமியும் பகவானுடைய வக்ஷஸ்தலத்திலேயிருந்துகொண்டு கிருபாபூரணமான தன்னுடைய கடைக்கண்பார்வையினலே தன்பிள்ளேகளானபிர்மாதிகளேயும் லோகபாலாளுடனேகூடின மூன்றுலோகங்களேயும்,விருத்தியடையச்செய்தாள்-அப்போது-பிர்மா - ருத்திரன் முதலானதேவர்கள்புஷ்பவருஷங்களேவருஷித்துமந்திரங்களினுல் ஸ்தோத்திரம்பண்ணி மகாலட்சுமியினுடைய கடைக்கண்பார்வையால் ரட்சிக்கிக்கப்பட்டவர்களாய் சுகத்தை யடைந்தார்கள்.

வாராய்ராஜனே, பிற்பாடு அந்தச் சமுத்திரத்தில் நின்றும் பத்மம்போன்ற லோசனத்தை யுடையவளாய் கன்னிகாரூபியான சுராதேவதையான வாருணிதேவியுண்டானுள், அந்தவாருணியை ஸ்ரீஅரியினுடைய அனுமதியினுல் அசுராள் கிரகித்துக்கொண்டார்கள்.

பின்பு அமிர்தத்தையுபேட்சியாநின்ற காசியபுத்திரர்களான தேவாசுராளால் கடையப்பட்ட சமுத்திரத்தில்நின்றும் அத்தியற்புதமான ரூபத்தையும் நீண்டும் பருத்துமிருக்கிறபுஜத்தையும்,சங்கம்போன்றகழுத்தையும், செந்தாமரைப்புஷ்பம்போன்ற நேத்திரங்களேயும் பச்சைமேனியையும் எவ்வனத்தையும்,திவ்வியாபரணங்களேயும்,திவ்வியமாலேயையும், பீதாம்பரத்தையும்,முன்நெற்றிமயிர்களேயுமுடையவராயும், அமிர்தபூரணமானகலசத்தைப் பரித்துக்கொண்டவராயும், சாட்சாத்ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய அமிசாவதாரமாயும், தர்மந்திரி பகவானென்று பிரசித்தராயும், ஆயுர்வேதத்தினுடைய களைகண்டவராயும் எக்கிய பாகங்களேப் புசிக்கிறவராயுமிருக்கிற ஒருமகாபுருஷனுண்டானுர்,

சமஸ்தமான அசுரர்களும், அந்த மகாபுருஷனேயும்,அமிர்தகலசத்தையும்பார்த்து சர்வ வஸ்துக்களேயும், அடையவேணுமென்கிற இச்சையை யுடையவர்களாய் அந்த அமிர்தகலசத்தைச் சீக்கிரமாக அபகரித்துக்கொண்டார்கள். அப்படி அசுரர்களாலே அமிர்தகலசமானது அபகரிக்கப்படுகையில் தேவர்களெல்லாம் முகம்வாடிஸ்ரீஅரியைச்சரணமாகஅடைந்தார்கள்,

அப்போது பகவானுனவர் தேவர்களேப்பார்த்துஓ தேவர்களே உங்களுக்கும் அசுராளுக்கும் கலகத்தையுண்டாக்கி என்னுடைய மோகினி ரூபத்தினுல் உங்களுடையஇஷ்டத்தைச் சாதித்துக்கொடுக்கிறேன், விசனப்படாதேயுங்களென்று தேவர்களேச் சமாதானம்பண்ணி அவடத்திலேயே அந்தர்த்தானமானுர் பின்பு அமிர்தத்தில் ஆசையையுடையவர்களான தேவாசுராளுக்கு அமிர்தநிமித்தமாக நான்முன்னே நான்முன்னேயென்று ஒருவர்க்கொருவர்க்குக் கலகம்உண்டாச்சுது அந்தச்சமையத்தில் சமஸ்தமான வுபாயங்களே யறிந்தவராயும் ஜெகநியந்தாவாயு மிருக்கிற பகவானுனவர் அத்தியற்புதமாயும், இன்னபடியென்றுசொல்லக்கூடாததாயும், பார்க்கப்பார்க்க அழகாயும், கருநெய்தல் புஷபத்தையொத்த மேனியையுடையதாயும், சமஸ்தமானஅவயவங்களிலேயும், சவுந்தரியத்தையுடையதாயும், நூதனமான யௌவனத்தினுல் நிறைவேற்றப்பட்ட இரண்டுஸ்தனங்களுடையபாரத்தினுல் கொஞ்சம் வணங்கியும், இளேத்துமிருக்கிற இடையையுடையதாயும் நீலோற்பலத்தையொத்தநேத்திரங்களே யுடையதாயும், நிர்மலமான வஸ்திரத்தினுல்சூழப்பட்ட மணற் குன்றுபோன்ற நிதம்பத்தினுல்விளங்காநின்ற அரைநூல்மாலேயினுல் பிரகாசித்து மனேக்கியமாகச் சப்தித்துக்கொண்டுமிருக்கிற பாதநூபுரங்களேயுடையதாயும், லச்சையோடும் புன் சிரிப்பினுல் அலேக்கப்படாநின்ற புருவங்களுடைய விலாசத்துடனேகூடின கடைக்கண்பார்வையினுல் அசுரசிரேஷ்டர்களுடைய மனதுகளிலே காமத்தை அடிக்கடி விருத்திபண்ணிக்கொண்டிருக்கிற ஜெகன் மோகனமான ஸ்திரீரூபத்தைத்தரித்தார்,

## ௯-வது-அத்தியாயம்·

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கதித்தமோகனரூபத்தைக் கண்டிடுந்தயித்யாளாலே
மதுரமாய்க்கொடுக்கப்பட்ட மகிமையாங்கலசந்தன்னை
விதியுடன்வாங்கிக்கொண்டுவெற்றிமோகினிரூபத்தோர்,
சதிசெய்துதேவதைக்குச் சலியாமற்கொடுத்தாரன்றே·

ஜெகன்மோகரூபத்தினாலே மோகத்தையடைந்ததயித்தியர்களால்கொடுக்கப்பட்ட அமிர்தகலசத்தை வாங்கிக்கொண்டு மோகினிரூபத்தை யுடையபகவான் அவர்களைவஞ்சித்துத் தேவதைகளுக்கு அமிர்தத்தைக் கொடுத்தாரென்று சொல்லப்படுகின்றது,

வாராய் பரிட்சித்துமகாராஜனே இந்தப்பிரகாரம் ஒருத்தருக்கொருத்தர் ஸ்நேகத்தைவிட்டு அமிர்தகலசத்தைப்பிடுங்கி சத்துருபாவத்தினால் திரஸ்கரித்துக்கொண்டுமிருக்கிற அந்தத்தேவஅசுராள் தங்களுக் கெதிராகவராநின்ற அந்தஸ்திரீயைப்பார்த்து இந்த ஸ்திரீயினுடையரூபம் என்னஆச்சரியகரமானது இதுஎன்ன ஆச்சரியகரமானகாந்தி இதுஎன்னஅத்தியற்புதமானயௌவனமென்று அந்தஅசுராளுடைய மனதிலேமன்மதவிகாரத்தையுடையவர்களாய் அந்தஸ்திரீயினருகில்வந்து பத்மதளத்தையொத்த நேத்திரங்களை யுடையவளே நீ யார் எங்கேயிருந்துவருகிறாய் என்னசெய்யக் கோறுகிறாய்நீயாருடைய ஸ்திரீசொல்லு, சுந்தரங்களான உருக்களையுடையவளே எங்களுடைய மனதைக்கலங்குகிறவள்போலிருக்கிறாய், நாங்கள்உன்னைத் தேவாள்-தயித்தியாள்-சித்தாள-கெந்தர்வாள்-சாரணாள்- யோகீஸ்வராள்-மனுஷியாள் இவர்களி லொருவராலேயும், இதுவரைக்கும் பரிக்கிரகிக்கப்படாதவளாக அறிகிறோம் நீ- ஒருவனால் அனுப்பப்பட்டு வந்தையோ, சுயவிச்சையினாலே வந்தையோ, அல்லதுஎங்களுடையசகலமானஇந்திரியங்களுக்கும்-மனதுக்கும்-சந்தோஷத்தை யுண்டாக்கவேணுமென்று இச்சியாநின்ற தயாளுவானவிதியினாலேஏவப்பட்டவளாக வந்தையோ, வாராய்ரூபவதியே அப்படிப்பட்ட நீ யொருவஸ்து நிமித்தமாகச்சண்டைசெய்து கொண்டும் வயிரத்தையுடையவளாயும்கியாதிகளாயுமிருக்கிறஎங்களுடைய வஸ்துவைப்பங்கிட்டுக்கொடு கொடிபோன்ற இடையினையுடையவளே நாங்கள் காசியபருடையபுத்திராள் பிராதாக்கள் ஒருத்தருக் கொருத்தர் பவுரஷத்தை யுடையவளாய், எங்களுக்குச் சண்டையில்லாமலிருக்கும்படி நியாயமாக இந்தவஸ்துவைப்பங்கிட்டுக்கொடுவென்று அந்தஅசுராளாலே பிரார்த்திக்கப்பட்ட மாயாமோகினிவேஷதாரியான ஸ்ரீஹரியானவர்சிரித்து மனோகரமான கடைக்கண் பார்வையினால் அவர்களையே பார்த்துக்கொண்டு ஒருவார்த்தை சொல்லுகின்றார்.

வாருங்கள் அசுராளே மகாரிஷியான காசிபருடையபுத்திராளாயிருக்கிற நீங்கள் எதேச்சையாகச் சஞ்சரியாநின்ற சாரஸ்திரீயான என்னிடத்திலே எப்படி விசுவாசத்தை யுடையவளாகிறீர்களோ பண்டிதாளானபேர் ஒருக்காலும் ஸ்திரீகளிடங்களிலே விசுவாசத்தையடையமாட்டார்களல்லவா, நூதனமாக யிருக்கிற வஸ்துவைத்தேடாநின்ற செந்நாய்களுடைய ஸ்நேகமும் விபசாரிகளான ஸ்திரீகளுடைய ஸ்நேகமும்நித்தியமா யிராதென்று சொல்லுவார்களல்லவாவென்று சொல்லாநின்ற அந்தஸ்திரீயினுடைய வினோதவசனங்களினால் அபகரிக்கப்பட்ட மனதையுடையவர்களான அசுராள் ஒருஅபிப்பிராயத்தினால் கெம்பீரமாகச்சிரித்து அந்தஸ் திரீயின் கையிலே அமிர்த கலசத்தையுங் கொடுத்தார்கள், அப்போது ஸ்ரீஹரியானவர் அந்தஅமிர்தகலசத்தைவாங்கிக்கொண்டு அசுராளைப்பார்த்து நான்செய்வது நன்மையானாலும் துன்மையானாலும் ஒப்புக்கொள்ளுகிறபட்சமானால் உங்களுக்கு நான்இந்த அமிர்தத்தைப் பங்கிடுகிறேனென்று சொல்லாநின்ற மாயாமோகினியினுடையவசனத்தைக்கேட்டு அசுர சிரேஷ்டாள் அவளுடைய அபிப்பிராயத்தை யறியாதவர்களாய் அப்படியே ஆகட்டுமென்று சம்மதித்தார்கள், பிறகுதேவாசுராள்சமஸ்தமானபேரும் ஒருநாள் உபவாசமிருந்து மறுநாள் ஸ்நானமபண்ணி அக்கினி ஹோத்திரத்தைச் செய்து கோப்பிராமண தேவதைகளுக்குப் பூஜை பண்ணி பிராமணாளால் சொஸ்திவசனம பண்ணப்பட்டவாகளாம் இச்சாவைகுணமாக நூதன வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டுசர்வாபரணங்களினால் அலங்கிர்தாளாய் கிழக்குநுனியாகப் பரப்பப்பட்ட தர்ப்பாஸ்திரங்களி லிருந்தார்கள்,

பின்புஅந்தஸ்ரீயானவள் அமிர்த கலசத்தைக் கையிலேதரித்தவளாய் அந்தச் சாலையிலே பிரவேசித்தாள் அப்போதேவாசுராள் சாட்சாத்பரதேவதையானமாயாமோகினியைப்பார்த்து மோகித்தார், அச்சுத ரானவர் தேவாசுரா ளிருவரையும் இரண்டு பந்தியாகப்பண்ணி அவாளைஅந்தப் பந்திகளில்ஸ்தாபித்து அமிர்த கலசத்தைக் கையி லெடுத்துக்கொண்டு வெகுமானத்திலேயும், பிரியவசனங்களினாலேயும், தயித்தியாளைவஞ்சித்து அவர்களை அதிக்கிரமித்துப்போய் அமிர்தத்தைத் தூரத்திலேயிருக்கிற தேவதைகளைப் பானம் பண்ணிவைத்தார், அப்போதுஅந்தஅசுராள் மாயாஸ்திரீயினால்பண்ணப்பட்ட சங்கேதத்தையே பரிபாலனஞ் செய்துகொண்டு அந்தஸ்திரீயினிடத்திலே சிநேகத்தை யுடையவர்களாய் ஸ்திரீயோடுகூட விவாதம்பண்ணினால் அந்தச் சிநேகத்துக்கு விச்சேதம் வாப்போகுதென்று பயந்தவர்களாய் ஒருவிசனத்தையுஞ் சொல்லாமலிருந்தார்கள், அப்போது ராகுவானவன் தேவவேஷத்தினால் மறைக்

கப்பட்ட ரூபத்தையுடையவனாய் தேவசதசிலேயிருந்து
கொண்டு அமிர்தத்தைப் பானம்பண்ணினான் அப்போ
து இவன் அசுரனென்று சந்திரசூரியாளாலே ரூபிக்கப்
பட்டும் அமிர்தபானம் பண்ணிக்கொண்டு மிருக்கிற அ
ந்தராகுவினுடைய சிரசை ஸ்ரீஅரியானவர் தீட்சணமா
னமுனையையுடையதான சக்கரத்தினால்சேதித்துப்போ
ட்டார். அந்தஇராகுவினுடைய உடலானது அந்த அ
மிர்தத்தினால் ஸ்பரிசிக்கப்பட்டதாய் விழுந்துவிட்டது
சிரசோவென்றால் அந்த அமிர்தசம்பந்தத்தினால் தேவ
தத்துவத்தையடைந்தது அந்தச் சிரசைப் பிரம்மதேவ
னானவன் எந்தக்கிரகமானது வயிரபுத்தியையுடையதா
ய்ப் பர்வகாலத்திலே சூரியசந்திராகளை ஆக்கிரமிக்கிற
தோ அந்தராகுக்கிரகமாகப்பண்ணினான். லோகநாயக
ரானஸ்ரீபகவான் தேவர்களாலே அமிர்தம்மிகவும்பான
ம்பண்ணப்படுகையில் அசுர சிரோஷ்டர்க ளெல்லாரும்
பார்த்துக்கொண்டிருக்கும்போது தம்முடையநிஜசொ
ரூபத்தைஅடைந்தார் இந்தப்பிரகாரம் தேவர்கள்அசுர
ர்கள் இவர்களெல்லாருஞ் சமமானதசமசகாலம் மந்தர
பர்வதம் ஓஷதிகள்முதலான கர்மங்கள் புத்தி யிதுகளை
யுடையவர்களாயிருந்தாலும்பலபேதத்தை யடைந்தார்
கள். அவர்களுக்குள்ளே சுவாமியினுடைய பாதாரவிந்
தத்தூளியைப்பற்றின தேவர்கள்மாத்திரமேஅமிர்தபா
னபலத்தைஅடைந்தார்கள், அவர்களுக்குவிரோதிகளா
னதயித்தியர்கள் அந்தஅமிர்தபலத்தைஅடையமாட்டா
மற்போனார்கள்.

## ௰வது-அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தயித்தியாளார்ச்சர்யத்தாற் றக்கதேவதைகளோடு,உ
யுத்தியஞ்செய்யும்போது வுறுதேவதயித்தியாளின்றன்
மயல்மாயையாலேகின்னா ளாயிருக்கையிலப்போது, ப
யில்பக்தியில்லாதார்க்குப் பிராணவியோகத்தைச் சொ
ல்வாம்,

தயித்தியாள் ஆச்சரியத்தினாலே தேவதைகளோடுயு
த்தம்பண்ணுகையில்தேவர்கள் தயித்தியர்களுடையமா
யையினால் கின்னாளாகவிருக்கையில் அப்போதுஸ்ரீஅரி
யானவர் ஆவிற்பவித்தாரென்றும் பக்தியில்லாதபேரு
க்கு அமிர்தப்பிராப்தி யில்லையென்றும் பாகவதர்களிட
ங்களில் துவேஷத்தினால் பகவத்பக்தியில்லாதபேருக்கு
ப்பிராணவியோகமுஞ் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராஜனே இந்தப்பிரகாரம் தானவாள்தயித்
தியாள்-இவர்கள் ஒரு மருமத்தை யத்தனித்தபோதை
க்கும் வாசுதேவனிடத்திற் பக்தியில்லாமையால் அந்த
கர்மபலமான அமிர்தத்தை அடையாமற் போனார்கள்,
ஜெகத் பிரபுவாகிய அந்தப்பகவானும் தம்மிடவர்களா
னதேவர்களை அமிர்தபானம்பண்ணிவித்துஅசுரர்களெ
ல்லாம் பார்த்துக்கொண் டிருக்கும்போது அந்தமோகி
னிரூபத்தைவிட்டுச் சுயரூபத்தைக்கிரகித்துக் கெருடா
ரூடராய்ப் புறப்பட்டுப்போனார் அந்தத்தயித்தியர்களு
ஞ்சத்துருக்களான தேவதைகளுக்குக் கிடைத்தபலத்
தைப்பார்த்து அதைச்சகியாதவர்களாய்த் தேவதைகளை
க்குறித்து ஆயுதபாணிகளா யுத்தத்துக்குப்புறப்பட்டா
ர்கள் பிற்பாடுசமஸ்தமான தேவகணங்களும்அமிர்தபா
னத்தினால் விர்த்தியடைந்தவர்களாய் நாராயணனைக்கெ
தியாக ஆசிரயித்தவர்களாய் சஸ்திரங்களினால் எதிரிட்
டுயுத்தம்பண்ணினார்கள் அப்போது மகாபயங்கரமாயு
ம்மயிர்க்கூச்சு அனையாநின்றுமிருக்கிறதேவாசுரமென்
றுபிரசித்தமான யுத்தமானது சமுத்திரத்திலே யுண்
டாச்சுது அந்தயுத்தத்தில் ஒருத்தருக்கொருத்தர் சத்து
ருக்களாயிருக்கிற தேவஅசுராள் மிகவும்பரபரப்பையு
ள்ள மனதையுடையவர்களாய்ப்பயங்கரமான யுத்தஞ்செ
ய்தார்கள்.

அந்தத்தேவஅசுர யுத்தத்திலே அசுரசேனைகளுக்
கெல்லாம்நாயகனான விரோசனகுமாரன் பெலியானவ
ன்வைகாயசமென்று பெயரையுடையதாயும்காமசாரியா
யும் மயனாலே நிர்மிக்கப்பட்டதாயும், சமஸ்தமானயுத்
தோபகரணங்களோடு கூடினதாயும், நினைத்தவிடத்தி
லேகொண்டுபோய் விடத்தக்கதாயு மிருக்கிற விமானசி
ரோஷ்டத்தின்மே லிருந்துகொண்டு சமஸ்தமான சேனா
பதிகளாலே சூழப்பட்டவனாய் உதயகிரியிலோங்கின்றசந்தி
ரன்போல் விளங்கினார், அந்தப்பெலிக்கு நாலுபாரிசங்
களிலேயும் வாகனங்களின் பேரிலேறிக்கொண்டு சே
னாபதிகளான நமுசி சம்பரன் - பாணன் - விப்பரசித்தி
அயோமுகன் திவிமுறதாகாலநாபன் - பிரஹெதி- ஹெ
தி இல்வலன் சகுனி பூகசுந்தாபனன் - வச்சிரதமிஸ்டிர
ன்விரோசனன் அயக்கிரீவன் சங்கு சிரசுகபிலன்-மேக
துந்துபிதாரகன் சந்திரகிறுக்கி சும்பன் நிசும்பன்செம்
பன் உத்கலன் அரிஷடன் அரிஷடநேமி திரிபுராதிபதி
யான மயன் மற்றுஞ்சில பௌலோமாள் - காலகேயர்க
ள் நிவாதகவசர்கள்முதலான அசுரர்கள் அமிர்தமதன
ம் பண்ணும்போது அமிர்தத்தை யடையாமல் துக்கத்
தையேஅடைந்தவர்களாய் இவர்களெல்லாம் யுத்தமுக
த்திலே கேவலம் மிகவும் தேவர்களைஜெயித்தவர்களாய்
ச் சிங்கநாதங்களைப்பண்ணிமகாதொனியையுடைய சங்
கங்களைப்பூரித்தார்கள்,

அப்போது மிகவுங்கொர்விகளான சத்துருக்களைப்
பார்த்துச் சுவர்க்கலோகாதிபதியான இந்திரன் மிகவுங்
கோபத்தையடைந்தவனாய்அயிராவதமாகிறதிக்கெஜத்தி
ன்பேரிலேறிக்கொண்டு ஆகாசத்தில்அருவிகளுடனே

கூடின உதயகிரியில் சூரியன்போல விளங்கினன் அந்த இந்திரனுக்கு நாலுபக்கங்களிலேயும் நானாவிதமானவாகனங்கள்-துவசங்கள்-ஆயுதங்கள் இதுகளுடனே கூடினவர்களாயும், வாயு-அக்கினி-வருணன்முதலானலோகபாலாளானபேர்கள் தங்களுடையசேனைகளோடு கூடவிருந்துதேவஅசுரர்கள் ஒருத்தருக்கொருத்தர் எதிர்த்துத்திரஸ்காரஞ்செய்து தொந்தயுத்தம்பண்ணினர்கள், அப்போதுஇந்திரனோடு பெலியும் தாரகாசுரனுடனே ஸ்கந்தனும் ஹெதியோடுவருணனும் பிரஹெதியோடு மித்திரனும் காலநாபனுடனேஎமனும் மயனோடுவிசுவகர்மாவும் துவஷ்டாவுடனேசம்பரனும் சவிதாவுடனே விரோசனனும் அபராசிதனோடுநமுசியும் விருஷபறவாவுடனே அசுவனிதேவதைகளும் பாணன்முதலான பெலிபுத்திராள் நூறுபேருடனேசூரியனும் ராகுவோடு சந்திரனும் புலோமாவுடனே அனலனும் இவர்களெல்லாம்ஒருவர்க்கொருவர்எதிர்த்து பலவித ஆயுதங்களைக் கொண்டு தொந்தயுத்தம் பண்ணினர்கள் அந்தத்தேவ அசுரர்களுடைய பாதத்தொனிகளினாலேயும் பண்டிகளினாலேயும் யுத்தபூமியில்நின்றும் எழும்பாநின்ற பயங்கரமானதூளானது திக்குகளையும் ஆகாயத்தையும்சூரியனையும் மறைத்துக்கொண்டு ரத்தப் பிரவாகங்களினால்நனைக்கப்பட்டதுகளாயிருந்ததுகள்,

அந்தயுத்தத்தில் பெலியானவன் பத்து பாணங்களினால்மகேந்திரனையும் மூன்றுபாணங்களினால் அயிராவதத்தையும் நான்கு பாணங்களினால் அயிராவதத்தினுடையபாதரட்சகர்களான நால்குகுதிரைகளையும்,ஒருபாணத்தால் மாவுத்தனையும்பார்த்துப் பிரயோகம்பண்ணினான் இந்திரனும்சிரித்துக்கொண்டு ஆகாயத்தில் ஓடிவராநின்ற அந்தப்பாணங்களை மகாவேகங்களாயும் தீட்சணங்களாயும் அவ்வளவுசங்கையோடு கூடினதாயுமிருக்கிறபல்லவங்களினால் அந்தப்பாணங்களைச் சேதித்துப் போட்டான் பின்புபெலியானவன் சதுகளை விடுத்தானே அதுகளையெல்லாம் இந்திரன்பாணங்களினால் சேதித்துவிட்டான் பின்பு பெலியானவன் அந்தர்த்தானத்தையடைந்து அசுரமாயைச் சிருஷ்டித்தான் அந்தமாயையினால் தேவசேனையின்பேரிலே பர்வதங்களும் விருட்சங்களும்விழுந்ததுகள் ராட்சசிகளும் ராட்சதகணங்களுஞ் சூலங்களைக் கையிலெடுத்துக்கொண்டு நிர்வாணிகளாய் வெட்டுகுத்தென்று சொல்லிக்கொண்டு தேவசேனையில்விழுந்து நானாவிதமான தொந்தரவுசெய்ததினால் தேவசேனையிலிருக்கிறபேர்களெல்லாந் துதிக்க இந்திரன்முதலானதேவர்கள் அந்தமாயா யுத்தத்திற்குப் பிரதிக்கிரியை யறியாதவர்களாய்ப் பகவானையே தியானம்பண்ணினர்கள் அப்படித் தேவர்களால் தியானம்பண்ணப்பட்டவராய் விசுவகர்த்தாவான ஸ்ரீபகவான் அந்தயுத்தபூமியில் கெருடாரூடராய் ஆவிற்பவித்தவுடனே அந்தஅசுரர்களுடைய கிர்த்தியத்தினாலேயுண்டானமாயையெல்லாம் அந்தப்பகவானுடைய மகிமையினால் நித்திரைபண்ணிஎழுந்திருக்கிறவனுக்குச் சொற்பனமானது எப்படிநசிக்குமோ அப்படிநசித்துப்போச்சுதுகள் அப்போது அந்தயுத்தத்தில் கெருடாரூடரானஸ்ரீபகவானைப்பார்த்து சிம்மவாகனனான காலநேமிசூலத்தைச்சுழற்றிப்போட்டான் கெருடனுடையசிரசின்பேரில்விழுவருகின்ற அந்தச்சூலத்தை விளையாட்டினால் கிரகித்துக்கொண்டு திரைலோக்கியாதிபதியான ஸ்ரீபகவான் அந்தச்சூலத்தினால்தானே சிங்கத்தின்பேரிலேயிருக்கிறகாலநேமியையடித்தார் மகா பலவான்களாகிய மாலி-சுமாலி-இவர்களிருவருடைய சிரசுகளுஞ் சேதிக்கப்பட்டதுகள் அந்தயுத்தத்தில் ஸ்ரீபகவான்பேரி லெதிர்த்தவர்கள் ஸ்ரீபகவானுடைய சக்கிரத்தினாலே சேதிக்கப்பட்டார்கள்.

## யகவது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

தக்கதேவசு ராளைத்தகிக்கையில்
திக்கிலார்ந்ததே வர்களைநாரதர்
மிக்கயுத்தத்தில் நின்றும்விலக்கிட
சுக்கிரன்மீந்த பேரைச்சுகிப்பித்தார்,

தேவர்கள் அசுரர்களைநாசம்பண்ணுகையில் நாரதரானவர் தேவர்களை யுத்தத்தில்நின்றும்விலக்கிவிட்டாரென்றும் சுக்கிரன்மீந்தபேரைரட்சித்தாரென்றுஞ் சொல்லப்பட்டது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராஜனே, பிற்பாடு இந்திரன் - வாய்வுமுதலானதேவர்கள் பரமபுருஷனுடையகிருபையினால்பராக்கிரமத்தையுடையவர்களாய் முன்னேதங்களோடெதிர்த்தஅசுரர்களையெல்லாம் முறிய அடித்தார்கள் இந்திரனானவன் கோபாவேசத்தோடு கூடினவனாய்ப் பெலியோடெதிர்த்து வச்சிராயுதத்தைப் பிரயோகித்து அவனோடுஒருவார்த்தைசொல்லுகின்றான் வாராய்மூடனே மாயாவியான உன்னுடையசிரசை நூறு கணுக்களோடு கூடின வச்சிராயுதத்தினால்சேதித்துப்போடுகிறேன்அடிபட்டுப்போனகியாதிகளோடுகூடப் போகிறாயென்று சொல்லுகின்ற இந்திரனுடைய வார்த்தையைக் கேட்டு பெலியானவன்சொல்லுகின்றான்.

பெலிச்சக்கிரவர்த்திவாக்கியம்.

வாராய்இந்திரனே, யுத்தத்திலேயிராநின்றும், காலத்தினால்ஏவப்பட்ட கர்மங்களையுடையவர்களாயு மிருக்கிறபேர்களுக்கெல்லாம், கீர்த்தியும்,ஜெயமும் அபஜெயமும்,மரணமும்இவையெல்லாம்கிரமமாக வுண்டாயி

ருக்கிறது, கியானிகளானவர்கள் இந்தஜெனத்தைக்கால த்தினுல்கட்டுப்பட்டிருக்கிறதாகப் பார்த்து சந்தோஷிக் கிறதுமில்லே விசனப்படுகிறதுமில்லே நீங்களோவென் ருல்விவேகமில்லாதவர்கள் ஜெயாபஜெயங்களிலேதன் னேச்சாதனமாகவெண்ணிக்கொண்டுமிகவும்சாதுக்களா ல்துக்கிக்கத்தக்கவர்களாயுமிருக்கிற உங்களுடைய மர்ம த்தைப்பிளவாநின்றவார்த்தைகளை நாங்கள் கேழ்க்கிறதி ல்லேயென்று இந்திரனேநிராகரித்துச் சூராளாலே கொ ண்டாடப்பட்ட சூரனுனபெலியானவன் காதளவுமிழுத் துவிடப்பட்ட பாணங்களினுல் இந்திரனேயடித்தான்அ ப்போது சத்துருவினுல் திரஸ்கரிக்கப்பட்ட இந்திரனு னவன் அங்குசத்தினுல்குத்தப்பட்ட கெஜம்போல அந் ததிரஸ்கார வசனத்தைச் சகியாமல் அவன்பேரில் அ மோகமானவச்சிரத்தைப் பிரயோகம்பண்ணினுன் அந் தவச்சிராயுதத்தினுல் அடிக்கப்பட்டபெலியானவனேசே திக்கப்பட்ட இறகுகளையுடைய மலேபோலப் பூமியிலே விழுந்தான்.

அப்போதுபெலிக்குச் சகாவாயும் சுகிர்தயுமிருக் கிற சம்பராசுரனுனவன் பூமியில்விழுந்த தன்னுடைய சகாவானபெலியைப்பார்த்து ஸ்நேகத்தைச் சிந்தித்துக் கொண்டு இந்திரன்பேரிலே யெதிர்த்து வேகத்தினுல் இந்திரனேக்கிட்டி கெதையைச்சுழற்றி இந்திரனுடைய கழுத்தெலும்பிலேயும் அயிராவதத்தையும் அடித்தா ன்,அப்படியடிக்கப்பட்ட அயிராவதமானது முழங்கா லேமடித்துக்கொண்டு பூமியிலேவிழுந்துமூர்ச்சையடை ந்தது பிற்பாடு இந்திரன்மாதலியினுல், கொண்டுவரப்ப ட்டஆயிரங்குதிரைபூண்ட ரதத்திலேறிக்கொண்ட வுட னே தானவசிரேஷ்டனுன சம்பராசுரனுனவன் அந்த மாதலிரதங்கொண்டுவந்ததீவரத்தைப்பார்த்து சந்தோ ஷித்து ஆச்சரியப்பட்டவனுய் சொலித்துக்கொண் டிரு க்கிறசூலத்தினுல் மாதலியையடித்தான் அதைக்கண்ட இந்திரன் மிகவுங்கோபத்தையடைந்தவனுய் அந்தசம்ப ராசுரனுடையசிரசை வச்சிராயுதத்தினுல் சேதித்துவி ட்டான்.

அப்படி இந்திரனுல் சேதிக்கப்பட்ட சம்பராசுர னுடையமரணத்தை நாரதரால் கேழ்விப்பட்ட அந்தச் சம்பராசுரனுடையகியாதிகளான நமுசி-வலன்- பாகன்_ என்கிற மூன்றுபேரும் அதிதீவரமாக அவிடத்திற்குவ ந்துவார்த்தைகளினுல் இந்திரனேத் திரஸ்காரம்பண்ணி மேகங்கள்வருஷிப்பதுபோலப் பாணங்களினுல் இந்திர ன்பேரில்வருஷித்தார்கள் அப்போது வலாசுரனுனவன் இந்திரனுடைய ஆயிரங்குதிரைகளேயும் ஆயிரம்பாண ங்களினுல் அடித்தான் பகாசுரனுனவன் ஒருட்சணத்தி லே சந்தானம்பண்ணிவிடப்பட்ட இரண்டு பாணங்களி னுல் இந்திரனுடைய சாரதியை அடித்து ரதத்தையும் பொடியாக்கினுன் நமுசியென்கிறஅரசனும் பதினைந்து பாணங்களினுல் இந்திரனேயடித்து ஜலபூர்ணமானமே கம்போலக் கெர்ச்சித்தான் அசுராளானவர்கள் இந்திர னுக்குநாலுபக்கங்களிலேயும் சரக்கூடத்தினுல் மறைத் துப்போட்டார்கள் அப்போது தேவகணங்களானவர்க ள் சேனேகளோடுகூடினவர்களாய்இந்திரனேக்காணுமல் மிகவும்விசனத்தையடைந்து சமுத்திர மத்தியில் கப்ப லுடைந்தால் அதிலிருக்கப்பட்டஜெனங்கள் முறையிடு வதுபோல முறையிட்டார்கள் பிற்பாடு அந்தஇந்திரனு னவன் அசுவங்கள்-ரதம்-துவசம்-சாரதி - இவர்களோடு கூட அந்தஅசுராளுடைய சரக்கூடத்தில்நின்றும்வெ ளிப்பட்டு சத்துருக்களினுல்பீடிக்கப்பட்ட தன்னுடைய சேனேகளுக்குத்தைரியஞ்சொல்லி சத்துருவைக்கொல் லுகைக்கு வச்சிராயுதத்தைப்பிரயோகித்து. வலன்-பாக ன்-இவர்களுடைய சிரசுக்களேச்சேதித்துவிட்டான்.

வாராய்ராஜனே, நமுசியானவன் அவர்கள் நாசம டைந்ததைப்பார்த்து-பொருமை-துக்கம்- இதுகளோடு கூடினவனுய் இந்திரனேக்கொல்லவேணுமென்றுசூலத் தையெடுத்து இந்திரன்மீதெறிந்தான்அப்போதுஆகா சத்திலே மகாவேகத்தோடுவராநின்ற அந்தச்சூலத்தை அனேகபாணங்களினுல் ஆயிரந்துண்டுகளாகச் சேதித் துஅவனேயும் வச்சிராயுதத்தினுல் கழுத்திலடித்தான் தேவநாயகனுனஇந்திரனுனவன் சத்துருவின்பேரில்விட ப்பட்ட வச்சிராயுதமானது அந்தச் சத்துருவினுடைய சரமத்தை அறுக்கமாட்டாமற்போச்சுது.

அப்போது அத்தியந்தம்வீரியவானுன விருத்திர னேச்சங்கரியாநின்ற அந்த இந்திரனுனவன் நமுசியினு டையகழுத்தினுல் சரமத்தினுல்திரஸ்கரிக்கப் பட்டதை இந்திரனுனவன்பார்த்து நமுசியினிடத்தில் அச்சமுற்ற வனுய்ப் பகவானேக்குறித்துத் தியானம் பண்ணுகிறுன்.

தெய்வயோகத்தினுல் லோகத்துக்கெல்லாம்மோக த்தைக்கொடுக்காநின்ற பரமாத்மாவே ஈதென்னஆச்சரி யம் முன்னே இறகுகளுடனேபறந்துகொண்டிராநின்ற பர்வதங்களுடைய இறகுகளை வச்சிராயுதத்தினுல்சேதி க்கப்பட்டது துவிஷ்டாவினுடைய தயோபலத்தினு லு ண்டான விருத்திராசுரனும் இந்த வச்சிராயுதத்தினுல் சேதிக்கப்பட்டான் பின்னேயும் மகாபலவான்களாயும், சமஸ்தஆயுதங்களினுல் வெட்டப்படாத சர்மத்தையு டையவர்களான சத்துருக்களும் இந்த வச்சிராயுதத்தி னுல்சேதிக்கப்பட்டார்கள் அப்படிப்பட்ட வச்சிராயுத மானது இந்தஅல்பனுன அசுரனிடத்தியத்திலேஎன்னு ல்பிரயோகிக்கப்பட்டு வியர்த்தமாய்விட்டது ஆகையி னுல் அந்தவச்சிராயுதத்தை யெடுக்கிறதில்லே பிர்மநிஷ் டரான ததீசிமகாரிஷியினுடைய தேஜசும் வியர்த்த

மாய்ப் போச்சுதல்லவாவென்று விசனப்பட்டுக்கொண்டிராநின்ற இந்திரனைப் பார்த்து அசரீரியான்வாக்கு உண்டாச்சுது.

அசரீரிவாக்கியம்.

வாராய்இந்திரனே இந்தநமுசியென்னப்பட்ட அசுரனானவன் உலர்ந்த ஆயுதத்தினாலேயும் ஈரமாயிருக்கிறஆயுதத்தினாலேயும், கொல்லத்தக்கவனன்று ஏனென்னில் ஒருக்கால்நம்மாலே இந்த அசுரனுக்கு மேற்சொல்லியஇரண்டுவிதங்களாலேயும், மரணமில்லையென்று வரங்கொடுத்திருக்கின்றோம் ஆகையினால்இவனைக்கொல்லுகைக்கு வேறே ருபாயம் சிந்திக்கத் தக்கதென்று சொல்லாநின்ற அசரீரிவாக்கியத்தைக்கேட்டு இந்திரனானவன் சித்த சமாதானத்தோடு கூடினவனாய் தியானம் பண்ணி பின்புநனையாமலும் உலராமலுமிருக்கிறநுரையை அவனைக்கொல்லச் சாதனமாகப்பார்த்து அந்த நுரையினால் நமுசியினுடைய சிரசைச் சேதித்துப்போட்டான், அப்போது அந்தஇந்திரனை முனிகணங்களெல்லாம்ஸ்தோத்திரம்பண்ணி புஷ்பவ்ருஷங்களை வருஷித்தார்கள். இந்தப்பிரகாரம் மற்றுஞ்சில வாயுவு- அக்கினி-வருணன்முதலானதேவர்களும் தங்களுடனேயெதிர்த்த சத்துருக்களை அஸ்திர சமூகங்களினால் சங்கரித்தார்கள் அப்போது தானவாளுடைய மூலதலநாசத்தைப்பார்த்துபிர்மதேவனால் அனுப்பப்பட்ட நாரதமகா ரிஷியானவர்வந்து தேவதைகளை யுத்தத்தில் நின்றும் ஒழிந்தவர்களாகப்பண்ணி ஒருவார்த்தை சொல்லுகின்றார்,

நாரதர்வாக்கியம்

வாருங்கள்தேவர்களே ஸ்ரீமந்நாராயணருடைய பாதாரவிந்தத்தை ஆசரியாநின்றஉங்களாலேஅமிர்தமும் அடையப்பட்டது, ஸ்ரீதேவியினுடைய கடாட்சத்தினால் சமஸ்தமானபேரும் விர்த்தியையடைந்தீர்கள்-ஆகையினால் யுத்தத்தில் நின்றும் ஒழிந்துவிடுங்களென்றுசொன்னநாரதருடைய வசனத்தைக்கேட்டுகோபத்தையடக்கி அவரதுவசனத்தைப் பூசித்துக்கொண்டு தேவாள்-கெந்தர்வாள்-முதலானபேர்களினால் கானம் பண்ணப்பட்டவர்களாய் சுவர்க்கத்தை அடைந்தார்கள் அந்ததேவாசுரயுத்தத்தில் அடிபட்டவர்கள்போக மற்ற அசுராளெல்லாம் நாரதமகாரிஷியினுடைய அனுமதிகொண்டு மூர்ச்சையை அடைந்திருக்கிற பெலிச்சக்கிரவர்த்தியைக் கிரகித்துக்கொண்டு அஸ்தமானகிரியை அடைந்தார்கள், அப்போது கைகால்கள்முதலான அவயவங்கள் அறுப்பட்டுப்போனவர்களாயிருக்கிற அசுராளைச்சுக்கிராசாரியரானவர் சஞ்சீவினியென்கிற தன்னுடைய வித்தையினால் பிழைப்பித்தார், பெலிச்சக்கிரவர்த்தியும்- சுக்கிராசாரியினால் ஸ்பரிக்கப்பட்டவனாய் திரும்பவு முண்டாகாநின்ற இந்திரியங்கள்-ஞியானம்-இதுகளையுடையவனாய்த் தேவதைகளினாலே ஜெயிக்கப்பட்டவனாக விருந்தாலும் லோகங்களுடையஸ்திலையை அறிந்தவனாகையால்விசனப்படவில்லை,

## ௰௨-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

மோகனரூபங் கொள்ளுமுதிர்ச்சியைத்
தோகைபாகற் கரிதோன்றிடச்செய்து
மோகங்கொண்டிட மூட்டிப்பின்மோகத்தைப்
போகச்செய்தனனென்றுபுகலுவாம்.

மோகினிரூபத்தினுடைய விலாசத்தைப் பார்க்கவேண்டுமென்கிற இச்சையையுடைய ருத்திரனுக்கு ஸ்ரீஅரியானவர் அந்தரூபத்தைக்காண்பித்து அவனைமோகிப்பித்துத்திரும்பவும் அவனுடையமோகத்தைப் போக்கடித்தாரென்று சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் பரிட்சித்து மகாராசனே ஸ்ரீஅரியானவர் மோகினிரூபத்தினால் தானவாளை மோகிப்பித்துதேவகணங்களை அமிர்தபானம் பண்ணிவித்தாரென்கிற விர்த்தாந்தத்தை ருத்திரனானவர் கேட்டு ரிஷபத்தின்பேரிலே பார்வதிசமேதனாய் எழுந்தருளி சமஸ்தபூதகணங்களினாலேயும், சூழப்பட்டவனாய் ஸ்ரீஅரியிருக்குமிடத்தைத் தேடிப்பார்க்கவந்தார் அவ்விடத்தில் அந்தப்பக்கவா [illegible] ருத்திரனானவர் பார்வதியோடு ஆசனத்தி லிருந்துகொண்டு ஸ்ரீஅரியைநன்றாகப்பூசித்து சிரித்துக்கொண்டு ஒருவார்த்தை சொன்னார்.

வாரீர்தேவனே ஜெகத்தில்எள்ளுக்குள்எண்ணெய்போல வியாபித்திருக்கிறவரே ஜெகதீசனே, ஜெகன்மயனே, நிற்குணராயும், பரிபூரணமாயும், சுகசுரூபராயும், சத்துவரஸஸ்தமோகுண சூனியராயும், சோகமில்லாதவராயும்- பிரபஞ்சரூபராயும். பிரபஞ்சத்தினுடையவுற்பத்தி, ஸ்திதி -சங்காரங்களுக்கு யேதுவாயும், சமஸ்தசேனாளாலே தங்களுடைய பலசித்திக்காக அபேட்சிக்கப்பட்டவராயும், பரப்பிர்மமாயு மிருக்கிறவ ராகையால் உம்மைவேதாந்திகள், பிர்மமாகவும், மீமாங்கிசாள்தர்மமாகவும், சிலபேர்பிரகிருதி தத்துவமாகவும், சாங்கியாள் பிரகிருதியைக்காட்டிலும், விலட்சணனான புருஷனாகவும், பாஞ்சராத்திரிகள் விமலவ்த்கிருஷ்ணி ஞியான்-கிரியா-யோக-பிருகு-விசத்தியா-ஈசனும் - அனுக்கிரகாவென்கிற நவசக்தியோடு கூடின பரனாகவும், பாதஞ்சலாள்-சுந்தரனாயும்-நித்தியமாயு மிருக்கிற மகாபுருஷனாகவுமெண்ணுகிறார்கள். பூரணமான ஆசையுடையஇந்தப்-பிரம்மாவும்நானும்-மரீசிமுதலானநவப்பிரஜாபதிகளும் உம்முடைய மகாத்மியத்தை அறியத் தக்கவர்க

னல்ல, உம்மாலேகரிக்கப்பட்ட ஜெகன்மோகன ரூபத்தைதங்காண ஆசைப்பட்டேன். எந்தரூபத்தினுலே தயித்தியாள்மோகித்தார்களோ அப்படிப்பட்ட ரூபத்தைக் காணவேணுமென்கிற ஆசையால் இங்கேவந்தேனென்றுசூலபாணியான ருத்திரனுலே பிரார்த்திக்கப்பட்டவராய் ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் சிரித்து ருத்திரனைக்குறித்து ஒருவார்த்தைசொன்னுர்.

ஸ்ரீமகாவிஷ்ணுவாக்கியம்,

வாரீர் தேவதேவோத்தமனே, அமிர்தகலசத்தை அசுராள் கைப்பற்றியிருக்கையில்ஆசிரதர்களானதேவர்களுடைய காரியசித்தியைப்பாராநின்றஎன்னுல்தயித்தியர்களுடைய மோகனர்த்தமாகஸதிரீவேஷமானதுதரிக்கப்பட்டது, அந்தரூபத்தைப்பார்க்கவேணுமென்றுஇச்சியாநின்ற உனக்குக் காமுகாளுக்குக் கொண்டாடத்தக்கதாயும் மன்மதனை யுண்டாக்குகின்ற அந்த ரூபத்தைக் காண்பிக்கிறேனென்றுசொல்லி பகவானுனவர்அவடத்தில் அந்தர்த்தானமானுர். அப்போதுஈஸ்வரனும்பார்வதியும் நாலண்டையிலேயும் பார்த்துக்கொண் டிருக்கும்போது விசித்திரங்களான புஷ்பங்கள் சிவந்ததுளிர்கள் இதுகளையுடைய மரங்களுடனேகூடின உபவனத்தில்பந்தாடிக்கொண்டும் மிகவும்பிரகாசியாநின்றவெண்[illegible] ருசூட்டப்பட்ட நிகம்பங்களிலிராநின்றஅரைநு[illegible]லையை யுடையவர்களாயும் பந்தாடிவிளையாட்டினுல்மிமிரானின்றும் வணங்கானின்று மருபபதுனுலங்கவும் அலையாநின்ற ஸ்தனங்களுடைய பாரத்தினுலேயும், ஆரங்களுடையபாரத்தினுலேயும், அடிக்கடி இடையானது ஒடிந்துபோவதுபோல மெல்லெனச் சஞ்சரித்துக்கொண்டிருக்கிற அந்த உத்தமஸ்திரீயை ருத்திரனுனவர்பார்த்துச் சஞ்சலமான மனதையுடையவனுயும் தன்னையும், தன்சமீபத்திலிராநின்ற பார்வதியையும், பூதகணங்களையும், மறந்தவனுகி, அந்தஸ்திரீயினுடைய கடைக்கண் பார்வையினுல் தன்னிடத்தில் ஆசையையுடையவள்போல நினைத்து அவளாலே செய்யப்பட்ட மன்மத விகாரத்தையுடையவனுய்ப் பார்வதியும் பார்த்துக்கொண் டிருக்கும்போதே இலச்சை யில்லாமல் அவள்பின்னே தொடர்ந்தான். அவளும் தன்னை அனுசரித்துவராநின்ற ருத்திரனைப்பார்த்து விருட்சங்களில்மறைந்தவராயும் சிரித்துக்கொண்டு சஞ்சரித்துக்கொண்டுமிருந்தாள். அப்போது அவளையனுசரித்துப்போகாநின்ற ருத்திரனும் கலங்காநின்ற இந்திரியங்களையுடையவனுய் ஆனைப்பேடைக்கண்ட மத்தகஜம்போல மன்மத வசத்தையடைந்து அதிகவேகமாகப் பின்சென்றுதன்னை இச்சியாமலிருக்கிற அந்தஸ்திரீயினுடைய பின்னலைப்பிடித்துக்கொண்டு பாகுகளினுல்ஆலிங்கனம்பண்ணிக்கொண்டான்.

அப்போது விஷ்ணுமாயையினுல் நிர்மிக்கப்பட்ட அந்தஸ்திரீயானவள் சீக்கிரமாக நடக்க ஆரம்பித்தாள், ருத்திரனுனவன் பின்துடர்ந்துசெல்லும்போது,தன்னுடையரேதசானது கலிதமாச்சுது, மகாத்மாவாகிய அந்த ருத்திரனுடைய ரேதசானது பூமியில்எங்கெங்கே விழுந்ததோ அந்தந்த விடமெல்லாம் வெள்ளி பொன்களுக்குஸ்தானமாச்சுதுகள். தன்னுடைய ரேதசு நழுவுகையில்அந்தருத்திரன் தன்னைவிஷ்ணுமாயையானது மூடனுக்கிவிட்டதென்று தெரிந்துகொண்டு அந்த மோகத்தில் நின்று நீங்கினுன். பிற்பாடு பரமாத்மாவாகிய விஷ்ணுவினுடைய மகாத்மியத்தை அறிந்தவனுனருத்திரன் அந்தமோகினிலீலையை ஆச்சரியமாகயெண்ணவில்லை அப்போதுஸ்ரீபகவான் பரமசந்தோஷத்தையுடையவராய்த் தம்முடைய அசாதாரணரூபத்தோடேநின்று ஒருவார்த்தை சொல்லுகின்றுர்.

வாராய் தேவசிரேஷ்டனே, எந்தக் காரணத்கால் ஸ்திரீரூபமான என்னுடைய மாயையினுல் மோகிக்கப்பட்டாயோ ஆகையினுல் தெய்வாதீனமாகநீஉன்னுடையசுபாவத்தை யடைந்தாயல்லவா, உன்னைத்தவிர விஷயங்களிலே ஆசையுடைய எந்தப் புருஷன்தான் அந்தந்தலீலைகளைச் சஞ்சலபுத்தியினுல் தாண்டக்கூடாதாயுமிருக்கிற என்னுடையமாயைத் தாண்டமாட்டுவன்ஆகையினுலப்பேர்ப்பொத்த என்னுடைய மாயையானது உம்மையுநதூரஸகரிக்கப் போகிறதில்லையென்று பகவானுகிய ஸ்ரீவச்சாங்கனுலே சத்கரிக்கப்பட்டவனுய் ருத்திரனுனவன் அவரைப் பிரதட்சணம்பண்ணி அவ ரனுமதிகொண்டு தன்னுடைய பிரமத சணங்களுடனே தனது ஸ்தானத்தையடைந்து தானனுபவித்த அந்தவிஷ்ணுமாயையை பார்வதிக்கு ரிஷிசிரேஷ்டர்களெல்லாரும்பார்த்துக்கொண்டிருக்கச்சொன்னுன், வாராய் பார்வதியே, பரதேவதையான பரமபுருஷனுடைய மாயையை நீயும் பார்த்தையே நான்கியாணிகளுக்கெல்லாஞ் சுவாமியாயிருந்தாலும் அந்தவிஷ்ணுமாயைக்குள்ளே அகப்பட்டு மோகித்தேனுதலால் மற்றபேர் அந்தவிஷணுமாயையில்மோகிப்பார்களென்பதற்குச் சொல்லவேண்டியதென்ன ஆகையினுல் ஸ்ரீஅரியே பரமபுருஷராகவிருக்கின்றுர்.

## ௰௩-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

ஏதமற்றயேழா மனுவாதியால்த்
தீதகன்றமனுவந்தரங்களும
போதுமாமனு வந்தரத்திற்புகல்
நீதவாறுவிதங்கள் நிகழ்த்துவாம்.

ஏழா மனுமுதற்கொண்டு மனுவந்தரகளும், அந்தமனுவந்தரங்களில் ஆறுமிதங்களான மனுவந்தரசிருஷ்டிகளும்,தனித்தனியே வர்னிக்கப்படுகின்றன.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் பரிட்சித்துவே இப்போது நடவாநின்றமனுவந்தரத்தில் விவசுவானுடைய புத்திரனுகிய சிரார்த்ததேவன் மனுவென்றுசொல்லப்படுகிறுன் இந்தவைவசுதமனுவுக்குஇட்சுவாகுவென்றும் நிறுகனென்றும் திருஷ்டனென்றும் சையரதியென்றும், நாஷியந்தனென்றும் நபாகனென்றும் திஷ்டனெஷ்றும் கருசகனென்றும் விரஷத்திரனென்றும் வசுமானென்றும் பத்துப்பிள்ளைகள், ஆதித்தியர்கள் வசுக்கள்விசுவதேவர்கள் ருத்திரர்கள் மறுதகணங்கள் அசுவனிதேவதைகள் இவர்கள் தேவர்கள் இவர்களுக்குப்பிரபுவாகிய இந்திரன் புரந்தரன் காசியபர் அத்திரி வசிஷ்டர் விசுவாமித்திரர் கவுதமர் ஜெமதக்கினி பரத்துவாசர் இந்தஏழுபேருஞ் சப்தரிஷிகள் இந்தமனுவந்தரத்திலேயும்காசியபருக்கு அதிதியினிடத்தில் பகவான் தம்முடையஅம்சத்தினுல் வாமனரூபியாக விவசிவாள்முதலான அதிதிபுத்திரர்களுக்குக்கனிஷடராய் அவதரித்தார், இவ்வளவும் ஏழுமனுவந்தரங்களும் சஞ்சேஷபமாகஉமக்கு நம்மாலே சொல்லப்பட்டதுகள் இனி விஷ்ணுசக்திகளான அம்சாவதாரங்களோடுகூடின மனுவந்தரங்களையுஞ் சொல்லுகிறேன்,

வாராய் ராஜனே அதிலே விவசுவானுக்குஇரண்டுபாரியைகள் அவர்களாரென்றுல் முன்னே உனக்குச் சொல்லப்பட்ட விசுவகர்மாவினுடைய பெண்களானசமுக்கியாதேவியும் சாயாதேவியும் அந்தவிவசுவானுக்குப்படவையென்று மூன்றுவதுபாரியையும் வேறே இன்னமும்ஒருத்தியுண்டென்றும்சொல்லுவர்கள் அவர்களுக்குள்ளே சமுக்கியாதேவிக்குஎமமென்றும், எமியென்றும், சிரார்த்தவேனென்றும் மூன்றுபிள்ளைகள்பிறந்தார்கள் சாயாதேவிககுச் சாவர்ணியும் சமவருணருக்குப்பாரியையான தபதியென்கிற வொருபெண்ணும் சவன்சரனும் இந்தமூன்றுபேரும் பிறந்தார்கள், சாயைபடவைக்கு அசுவனிதேவதைகள்பிரந்தார்கள், இவர்களுக்குள்ளே சாயாபுத்திரனுனசாவர்ணியென்கிறதன்மேல் வரப்போகிற எட்டாவதுமனுவந்தரத்திலே மனுவாகப்போகிறுன் நிர்மோகன் விரஸகன்முதலானபேர் அந்த சாவர்ணிமனுவுக்குப்புத்திராளாகப்போகிறுர்கள் அந்த எட்டாவதுமனுவந்தரத்தில் சுதபசுக்களும், விரசாளும் அமிர்தப்பிரபாளும் தேவகணங்களாகப் போகிறுர்கள் விரோசனபுத்திரனுனபலி அவர்களுக்குப்பிரபுவாகிஇந்திரனுகப்போகிறுன், அப்போதுபலியானவன்மூன்றடிதாவென்றுயாசியாநின்ற விஷ்ணுவுக்கு இந்தப்பூமியெல்லாங்கொடுத்து பிற்பாடு சித்திரபதமானஇந்திரபதத்தைஅனுபவித்து மோக்ஷமடையப்போகிறுன் அந்தப்பலியானவன் பூமிதானஞ்செய்ததினுல் பகவானுனவர் சந்தோஷத்தையடைந்து சுவர்க்கத்தைப்பார்க்கிலும்அதிகமான சுதலலோகத்திலே திரும்பவும்வைக்கப்பட்டு இப்பவும் தேவேந்திரனைப்போலவிருக்கிறுன் பரசுராமன், துரோணபுத்திரனுகிய அசுவத்தாமா, கிருபாசாரியார், ரிஷியசிறுங்கர், நம்முடையபிதாவாயும். பகவானுயுமிருக்கிற பாதராயணரென்று பிரசித்தரான வியாசர் இவர்களெல்லாம் எட்டாவதுமனுவந்தரத்திலே சப்தரிஷிகளாகப்போகிறவர்களாய் இப்போது தபசுபண்ணிக்கொண்டுதங்கள்தங்கள் ஆசிரமங்களிலேயிருக்கிறுர்கள் வேதகுப்யருக்கு சாஸ்வதியினிடத்திலே சார்வபூமனென்று பிரசித்தராய்ப் பகவான் தம்முடைய அம்சத்தினுல் அவதரித்துப் புரந்தரனிடத்தில்நின்றும் ஸ்தானத்தைவாங்கி பலிக்குக்கொடுக்கப்போகிறுர்,

ஒன்பதாவது மனுவந்தரத்திலே வருணபுத்திரனுகிய தெக்ஷசாவர்ணிமனுவாகப்போகிறுன்திருதுசேதுதிபதகேதுமுதலான பத்துப்பிள்ளைகள் அந்த மனுவுக்குண்டாகப்போகிறுர்கள் பரர் மரீசி கெற்காள்முதலானபேர் தேவாளாகப்போகிறுர்கள் சுரதனென்கிறவனும் இந்திரனுகப்போகிறுன் துதிமான்முதலானபேர் சப்தரிஷிகளாகப்போகிறுர்கள், ஆயுஷ்மனுவுக்கு, அப்புதாரையென்கிற ஸ்திரீயினிடத்தில் பகவான்ரிஷபராக அவதரிக்கப்போகிறுர். யாதொருரிஷபபகவானுல்கொடுக்கப்பட்டதிறைலோக்கியத்தை சிரதனென்கிறஇந்திரன் அனுபவிக்கப்போகின்றுன்,

பத்தாவதுமனுவந்தரத்திலே உபலோகபுத்திரனுய் மகானுன பிர்மசாவர்ணி மனுவாகப்போகிறுன், பூரிஷேணன்முதலானபேர்அந்தமனுப்புத்திராளாகப்போகிறுர்கள் அவிஷ்மான் முதலானபேர் ரிஷிகளாகப்போகிறுர்கள், அவிஷ்மானென்றும் சுகிர்தியென்றும், சத்தியனென்றும், செயனென்றும், மூர்த்தியென்றும், அப்போது ரிஷிகளாகப்போகிறுர்கள் சுத்திராமான் விபுத்திராள் முதலானபேர் தேவாளாகப்போகிறுர்கள் சம்பு இந்திரனுகப்போகிறுன் விசுவசிருஷடாக்களானபிரஜாபதிகளுடையகிரகத்திலே பகவான் தம்முடைய அம்சாஅம்சத்தினுல் விசூசியென்கிற ஸ்திரீயினிடத்தில் விஷபவச்சேனராக அவதரித்து சம்புவென்கிறஇந்திரனுக்குச் சக்தியைப்பண்ணப்போகிறுர்,

பதினோராவது மனுவந்தரத்திலேதர்மசாவர்ணியென்று ஆத்மக்கியானியாய் ஒருவன் மனுவாகப்போகிறுன். சத்தியதர்மாள்முதலானபத்துபேர் அந்தமனுப்புத்திராகப்போகிறுர்கள், விகங்கமாள் காமாள் - நிர்வாணருசிகள் தேவகணங்களாகப்போகிறுர்கள்வைத்திருதிஅவர்களுக்குப்பிரபுவான இந்திரனுகப்போகிறுன் அருநாள்முதலானபேர்கள் சப்தரிஷிகளாகப் போகிறுர்கள் ஆரியகருக்குவை திருதியென்கிறஸ்திரீயினிடத்தில்பக

வான் தர்மசேதுவென்றுதம்முடையஅம்சத்தினுல்அவதரித்து திரைலோக்கியத்தையுந்தரிக்கப்போகிருர்,

பனிரண்டாவது மனுவந்தரத்திலே ருத்திரசாவர்ணிமனுவாகப்போகிருன் தேவவான் உபதேவன்-தேவசிரேஷ்டன் முதலானபேர் மனுப்புத்திராளாகபபோகிருர்கள் ருதுசாமா இந்திரனுகப்போகிருன் அரிதாமுதலானபேர் தேவாளாகப்போகிருர்கள்தபோமூர்த்திதபசு ஆக்கினியித்தர்கள் முதலானபேர்கள் ரிஷிகளாகப்போகிருர்கள்,சத்தியசகசுக்கு சூனிறுதையி னிடத்திலேபகவான்தம்முடையஅமிசத்தினுல் சுதர்மாவென்று பிரசித்தராய்அவதரித்து அந்தமனுவந்தரத்தைச்சாதிக்கப்போகிருர்.

பதின்மூன்ருவது மனுவந்தரத்தில்ஆத்துமக்கியானியான. தேவசாவர்ணி, மனுவாகப்போகிருன். சித்திரசேனனுன விசித்திரன்முதலானபேர் அந்த மனுப்புத்திராளாகப்போகிருர்கள் சுகாமானென்றும்சுந்திரர்மானென்றும். தேவகணங்களுண்டாகப்போகிருர்கள்திவஸபதி, இந்திரனுகப்போகிருன் நிர்மோகன், தத்துவதரிசிமுதலானபேர்கள் ரிஷிகளாகப் போகிருர்கள் தேவவோத்திராருக்குப் பிரஹதியென்கிற ஸ்திரீயினிடத்தில் பகவான் தம்முடைய அமிசத்தினுல் யோகேசுவரராக அவதரித்து திவஸபதியாகிய இந்திரனுக்குச்சகாயம்பண்ணப்போகிருர்,

பதினுன்காவது மனுவந்தரத்திலே இந்திரசாவர்ணிமனுவாகப்போகிருன் உருகெம்பீரன்வசுமுதலானபேர் அந்தமனுப்புத்திரராகப்போகிருர்கள். பவித்திராளும்,சாட்சுசாளும் தேவாளாகப்போகிருர்கள்சுசியிந்திரனுகப்போகிருன் அக்கினி பாகுசுசி சுக்கிரன் மாகதன்முதலானபேர் ரிஷிகளாகப்போகிருர்கள்,ஸ்ரீஅரியானவர் சத்தராயணருக்குப் பிள்ளையாய்ப் பிரகதபானுவென்று பிரசித்தராய்அவதரித்து எக்கியத்தின்பொருட்டு கிரியாகலாபங்களை விஸ்தரிப்பிக்கப்போகிருர். வாராய்ராஜனே திரிகாலத்தோடுஞ்சேர்ந்த இந்தப் பதினுலுமனுவந்தரங்களும் உனக்குச்சொல்லப்பட்டது இந்தப்பதினுலு மனுக்களில் பிர்மாவினுடைய ஆயிரம்யுகமானகல்பம் அள விடப்பட்டிருக்கின்றது,

## ய௪ - வது அத்தியாயம்.

மட்டுவிருத்தம்,

சத்தமாரிஷிச் சாருமனுபுத்ராள்
சுத்தபேர்களின் செய்கையைச்சொல்லுவாம்,

மனுப்புத்திராள் - சப்தரிஷிகள் முதலான பேர்களுடையசெய்கைகளைச் சொல்லப்படுகின்றது,

பரிட்சித்துவினுடைய வாக்கியம்.

வாசீர் பிர்மரிஷ்டரே, மனுவந்தரங்களிலே பகவான் மனுமுதலானபேர்களை எந்தப்பிரகாரம்எந்தெந்தக்கிரமத்தினுல் ஏவாளெவாளைநியமித்தாரோஅதைஎனக்குச்சொல்லவேணுமென்றுகேட்ட பரிட்சித்துமகாராஜனைப்பார்த்து சுகப்பிர்மரிஷியானவர்சொல்லுகின்ருர்

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் ராஜனே மனுவந்தரங்களில் மனுக்களும் மனுபுத்திராளும் சப்தரிஷிகளும் இந்திரன் முதலான தேவகணங்களும் அந்தந்தக்காலங்களிலேயுண்டான மகாபுருஷனுடைய அமிசாவதாரங்களினுல் நியமிக்கப்பட்டிருப்பார்கள் எக்கியமுதலாகியயாவை சில மகாபுருஷனுடையஅவதாரமூர்த்திகள்சொல்லப்பட்டதுகளோ அதுகளினுல் மனுமுதலானபேர் ஏவப்பட்டவர்களாய் ஜெகத்தினுடைய பரிபாலனத்தை நடத்திவைத்தார்கள் சதுர்யுகத்தினுடைய முடிவிலே காலத்தினுல் நசித்துப்போகாநின்ற சுருதிகளை ரிஷிகள்தபசினுலே பார்த்துப்பிரகாசம்பண்ணிவைப்பார்கள் சிலசுருதிகளில்நின்றும் அனுதியானதர்மம் பிரவர்த்திக்குமோ அந்த நாலுபாகத்தோடுகூடினதர்மத்தை மனுக்கள் ஸ்ரீஹரியினுல்ஏவப்பட்டவர்களாய் அந்தத்தர்மத்தைத் தங்கள்தங்கள் காலத்தில்பூமியிலேபிரவர்த்தித்தார்கள்,

பிரசாபாலாளான மனுப்புத்திராள் புத்திரபவுத்திராதிக்கிரமத்தினுல் அந்தத்தர்மத்தை மனுவந்தரத்தளவும்ரக்ஷிப்பார்கள் இந்திரன் பகவானுல்கொடுக்கப்பட்ட திடமானதிரைலோக்கியசம்பத்தைஅனுபவித்து. மூன்றுலோகங்களையும் பாலனம்பண்ணிக்கொண்டு அவரவருக்கு அபீஷ்டத்தையும் வருஷிப்பன் யுகங்கள்தோறும் ஸ்ரீஅரியானவர் ஜனகாதிசித்தரூபியாய் அவரவருக்குக் கியானத்தை யுபதேசிப்பர், யாக்கியவகர்முதலான ரிஷிரூபத்தைத்தரித்துதெத்தாத்திரேயமமுதலான யோகீஸ்வரரூபத்தையுந்தரித்து கியானகர்மயோகங்களிரண்டையும் உபதேசிப்பார், மரீசிமுதலானவர்பிரஜாபதிரூபியாய்ச். சிருஷ்டியைப்பண்ணுவர். ராஜரூபத்தினுல் சோராளைச்சங்கரிப்பர் காலரூபத்தினுல் சகலபிராணிகளுக்கும் நாசத்தின்பொருட்டு தனித்தனியே சிதோஷ்ணுதிகுணங்களை அடைவர் நாமரூபத்தார்மனவிஷ்ணுமாயையினுல்மோகிக்கப்பட்ட புத்தியையுடையவர்களான இந்தஜனங்களின் நானுவிதங்களான சாஸ்திரங்களினுல் நிரூபிக்கப்பட்டிருந்தாலும் பகவானுனவர்ஒருத்தராலேயும் எதார்த்தமாகஅறியப்படுகிறதில்லை இந்தஅவாந்தரகல்பத்தினுடைய பிரமாணம் கீர்த்திக்கப்பட்டது அந்தஅவாந்தரகல்பத்தில்கியானிகள்பதினுலு மனுவந்தரங்களுண்டென்று சொல்லுவார்கள் அப்படிப்பட்ட அவாந்தரகல்பம் நிரூபிக்கப்பட்டது,

## ௰௫-வது அத்தியாயம்,

கலிவிருத்தம்.

பாலியானுசார் யப்பிரசாதத்தினற்
சொலும்விசுவசித் துயாகத்தைச்செய்து
அலகிலர்ச்சுவர்க்கத் தைச்செய்தவனைக்கண்
டுலவுதேவதை மறைந்ததையோதுவாம்.

பலியானவன் ஆசாரியப் பிரசாதத்தினல் விசுவசித்து யாகத்தைப்பண்ணி சுவர்க்கத்தைச்செய்ததும் அவனைக்கண்டு தேவதைகள் மறைந்ததுஞ் சொல்லப்படுகின்றது,

பரிட்சித்துவாக்கியம்.

வாரீர்மகாரிஷியே, சகலலோகங்களுக்குநியந்தாவாகியபகவான் ஏதுகாரணத்தினல் தரித்திரனைப்போல்பலியினிடத்தில் பூமியில் மூன்றடியையாசித்துஅதைப்பெற்றுக்கொண்டு அவனைக்கட்டினர் பரிபூர்ணரான பகவான் நிரபராதியானபலியைக் கட்டினதைக் கேழ்க்கவேணுமென்று ஆசையுண்டாயிருக்கின்றதென்று பிரசினம்பண்ணுகின்ற பரிட்சித்துவைப் பார்த்து சுகப்பிர்மரிஷியானவர் சொல்லுகின்ருர்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்துமகாராஜனே, பலியானவன்இந்திரனலே சம்பத்துகளையிழந்து அபஜெயப்பட்டவனைப் பிராணனையுமிழந்தவனைத் திரும்பவும் பிருகுவமிசத்தில்பிறந்த மகாரிஷிகளினல் ஜீவிக்கப்பட்டவனைச் சர்வப்பிரகாரத்திலேயும் அந்தப்பிருகுவமிசத்திலே பிறந்த மகாரிஷிகளை மிகவுந்தனங்களைக்கொடுத்து சிஷியனையிருந்து ஆசரயித்தான் மகானுபாவாளாயும் பிருகுவமிசத்திலேபிறந்தவர்களாயுமிருக்கிறஅந்தப்பிராமணாள்மிகவும் அர்த்தங்களினல் பூசிக்கப்பட்டவர்களாய்ச்சுவர்க்கத்தை ஜெயிக்கவேணுமென்று இச்சைகொண்ட அந்தப்பலிச்சக்கிரவர்த்தியை எதாசாஸ்திரமாக அபிஷேகவிதியினல் அபிஷேகம்பண்ணுவித்து அவனைக்கொண்டுவிசுவகித்து யாகம்பண்ணிவித்தார்கள் அப்போது அவிசுக்களினல் ஏசிக்கப்பட்ட வைதிகாக்கினியில்நின்றும் சுவர்னபட்டங்களினல்கட்டப்பட்ட மகத்தாகியரதமும் சூரியாசுவங்களுக்குச்சமானமான குதிரைகளும் சிங்கத்தினல் விளங்காநின்றதுவஜமும் சுவர்னகட்டுகளோடுங் கூடினவொருதனுசும் அட்சயசரங்களையுடைய இரண்டு அம்புருத்தூணியும் திவ்வியமாகிய ஒருகவசமு முண்டாச்சுது அந்தப்பலிக்குப்பிதாமகனனபிரகலாதனன் வாடாதபத்மங்களையுடைய மாலையையும் சுக்கிரன் ஒருசங்கத்தையுங் கொடுத்தார்கள்,

இந்தப்பிரகாரம் பிராமணாளால்சம்பாதிக்கப்பட்ட யுத்தசாமக்கிரிகைகளை யுடையவனும் அவர்களாலே பண்ணப்பட்ட சொஸ்திவசனத்தையுடையவனுயு மிருக்கிற அந்தப்பலிச்சக்கிரவர்த்தியானவன் அவர்களைப்பிரதட்சணம்பண்ணிசேவித்து அவர்கள்கையில் அனுமதிகொண்டு பிரகலாதனையும்சேவித்தான் சேவித்த பிற்பாடுமகாரதனன பலிச்சக்கிரவர்த்தி யானவன் அந்தப்பிருகுவமிசர்களாலேகொடுக்கப்பட்ட திவ்வியரதத்தின் பேரிலேறிச் சோபனமாலையைத்தரித்துக்கொண்டு கவசம்தனுசுகளைகடகம் அம்புருத்தூணி இதுகளை யுடையவனைச் சுவர்னமயமாகிவிளங்கி ரதாரூடாளாயும்கண்களினலே ஆகாசத்தைப்பானம்பண்ணுகிறவர்கள் போலேயும் திக்குகளை அடியோடே பிடுங்கிப்போடுகிறவர்கள்போலவுமிருககிற தயித்தியசேனபதிகளினல் சூழப்பட்டவனைப் பிரபுவானபலிச்சக்கிரவர்த்தி மகத்தாகிய அசுரசேனையை அழைத்துக்கொண்டு ஆகாசம்பூமி இரண்டையும் நடுங்கப்பண்ணுகிறவன்போல சாவசம்பத்துடனேகூடின இந்திரப் பட்டணத்தைக் குறித்துப் போனன் அந்தப்பட்டணம் எப்படி யிருக்கிறதென்ருல்மதுரமாகச் சப்தியாநின்ற பட்சிகளையுடையதாயும்துளிர்கள்-பலன்கள்-புஷ்பங்கள் இதுகளுடையமகாபாரத்தையுடையதான கிளைகளோடுகூடின கற்பகமுதலான விருட்சங்களையுடையதுகளாயுமிருக்கிற நந்தவனம்-உத்தியானவனம்-உபவனங்களினலேயும்தாமரையோடைகளினற்சூழப்பட்டதாயும் அக்கினிவானமானபிரகாரத்தோடேயும் உன்னதங்களான கொத்தளங்களுடனே கூடினதாயும் ஸ்படிகமயமான கோபுரங்களுடனே கூடினதாயும் விசாலமானராஜவீதிகளை யுடையதாயும்விசுவகர்மாவினல் நிர்மிக்கப்பட்டசபைகள் நற்சந்திகள்இதுகளினல் சம்பூர்னமாயும். அனேகமாயிர, விமானங்களினலேயும் வச்சிரங்கள் பவழங்கள் இதுகளினல் இழைக்கப்பட்ட திண்ணைகளை யுடையதான நற்சந்திகளோடு கூடினதாயுமிருக்கிற யாதொரு பட்டணத்தில் நித்தியமான யவ்வனத்தையும் ரூபத்தையும் நிர்மலமான வஸ்திரங்களையும் சர்வாபரண பூஷணங்களையும், உடையவர்களாயிருக்கிற ஸ்திரீகள்சுவாலைகளினலே யக்கினியைப்போல விளங்கினர்கள்,

அப்படிப்பட்டதெய்வீகமானபட்டணத்தைவெளியில் நாலுபக்கங்களிலேயும் அந்தசேனபதியான பெலிச்சக்கிரவர்த்தியானவன் தன்சேனைகளோடுகூடத்தவைந்துசுக்கிராசாரியரால் கொடுக்கப்பட்டமகாதொனியையுடையதான சங்கத்தைப் பூரித்துக்கொண்டு இந்திரனுடைய ஸ்திரீகளுக்குப் பயத்தையுண்டாக்கினன், இந்திரனும் அந்தப்பெலியினுடைய மகத்தாகிய யுத்தசன்னகத்தையறிந்து சமஸ்ததேவகணங்களோடு கூடினவனைப் பிரகஸ்பதியைக்குறித்து ஒருவார்த்தைசொல்லுகின்ருன்.

இந்திரனுடையவாக்கியம்.

வாரீர்பகவானே, நமக்குப்பூர்வசத்துருவான பலியினுடைய யுத்தசன்னாகமானது மிகவும் அசாத்தியமாயிருக்கின்றது, ஆகையால் இந்தப்பலியை ஜெயிக்கக்கூடாதென்றுஎண்ணுகிறேன், இப்பேர்ப்பட்ட பலத்தையுடையவனானபலியை ஒருவனும்யெதிர்த்துயுத்தம்பண்ணுகைக்குச்சமர்த்தனன்று இவனுடையமுகத்தினாற்செகத்தைப் பானம்பண்ணுகிறவன்போலவும், பத்துத்திக்குகளையும் கவளீகரிக்கிறவன்போலவும், திருஷ்டிகளினால் தகிக்கிறவன்போலவும், பிரளயாக்கினிபோல உண்டாயிருக்கின்றான். இந்தநம்முடையசத்துருவானபலியினுடைய சகிக்கக்கூடாத பராக்கிரமத்துக்குக் காரணத்தைச்சொல்லும், எதினாலிந்த யுத்தசன்னாகத்துக்கு மூலங்களான இந்திரியபலம்-மனோபலம்- சரீரபலம்-தேஜசு-இவையெல்லா முண்டாச்சுதோ அந்தக்காரணத்தைச்சொல்லுமென்று இந்திரன் கேட்டதற்குப் பிரகஸ்பதியானவர் கூறுகின்றார்.

பிரகஸ்பதிவாக்கியம்.

வாராய்இந்திரனே, இந்தப்பலியினுடைய அதிசயத்துக்குக்காரணம் நானறிவேன் என்னவென்றால் பிரம்மவாதிகளான பிருகு வமிசத்தார் சிஷியனான பலிக்குத் தேஜசையுண்டாக்கினார்கள், சர்வநியந்தாவான ஸ்ரீ அரியைத்தவிர மற்றநீயும் உன்னைப்போ லொத்த ஒருவனும்இந்தப்பலியை யுத்தத்தில்ஜெயிக்கமாட்டார்கள்ஆகையால் நீங்களெல்லாஞ்சுவர்க்கத்தைவிட்டு வெளிப்பட்டு காலத்தைப் பார்த்துக்கொண்டிருங்கள்பிராமணாளுடையபலத்தினாலே திடமாகியவிக்கிரமத்தை அடைந்திருக்கிற இந்தப்பலியானவன் அவர்களுடைய அவமானத்தினாலே தானே தன்னுடைய பரிவாரத்துடனே நசிக்கப்போகிறானென்று இந்தப்பிரகாரம் இனிவருங்காரியங்களை அறிந்தவரான பிரகஸபதியினால்சொல்லப்பட்ட காரியத்தைகேட்டு காமரூபிகளாயிருக்கிற அந்தத் தேவதைகள்சுவர்க்கத்தைவிட்டுப்போய்விட்டார்கள்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

பிற்பாடுதேவர்களெல்லாரும் மறைந்துபோகையில்விரோசனபுத்திரனானபலியானவன் தேவதைகளுடையபட்டணமான அமராபதியிலே யிருந்துகொண்டு மூன்றுலோகத்தையும், வசப்படுத்திக்கொண்டான். லோகங்களையெல்லாஞ்ஜெயித்தவனையும், சிஷியனையும்-அனுவர்த்திக்கொண்டுயிராநின்ற அந்தப் பலியை சிஷியனிடத்தில் வாற்சல்லியத்தை யுடையவர்களான அந்தப்பிருகுவமிசத்தாரான பிராமணாளது அஸவமேதத்தினாலேயே சிப்பித்தார்கள் - அந்த நூறு அஸ்வமேதத்தினுடைய பிரபாவத்தினால் பலியானவன் மூன்று லோகத்தினாலே யும்ஆச்சரியகரமான கீர்த்தியைத்திக்குகளில்பரவச்செய்துகொண்டு மகாவுதாரத்தை யுடையவனாய்த் தன்னை கிருதகிருத்தியனாக எண்ணினவனாய்ப் பிராமணாளாலே யடைந்தமகாசம்பத்தையனுபவித்துகொண்டிருந்தான்,

## யசுவது அத்தியாயம்.

மட்டுவிருத்தம்,

தாமனும்பரந் தாமனென்போன்செயும்
வாமனவதா ரத்தைவழுத்துவாம்,

ஸ்ரீவாமனவதாரஞ் சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்ராஜனே, இந்தப்பிரகாரம் தேவாள்கண்ணுக்குத்தெரியாமல் சுவர்க்கத்தைவிட்டுப்போனபிறகு தயித்தியாளாலே சுவர்க்கலோகமும்ஆக்கிரமிக்கப்பட்டிருக்கையில் தேவமாதாவாகிய அதிதி தேவியானவள் அனாதையைப்போல பயதாபத்தை அடைந்திருந்தாள்அப்போது ஒருக்கால் பகவானாகிய கசியப்பிரஜாபதி வெகுகாலத்திற்குப்பின்பு சமாதியில்நின்றும், வெளிப்பட்டவராய் அதிதியினுடைய ஆசிரமத்தையடைந்து அவடத்தில் சந்தோஷமில்லாமலிருக்கிற தம்முடையபத்தினியான அதிதியினால் கொடுக்கப்பட்ட ஆசனமுதலாகியபூஜையையுடையவராய் அவளைப் பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றார்,

கசியப்பிரஜாபதி வாக்கியம்,

வாராய்மங்களரூபினியேஇப்போதுலோகத்திலே பிராமணாளுக்கு-கோக்களுக்கு-அமங்கள மொன்றுமில்லையே மிர்த்தியுவினுடைய வசவாத்தியானலோகத்துக்கு-தர்மத்துக்கும்- அமங்களமொன்றுமில்லையே அதிதிகள்கிரகத்தில்வந்து சம்சாரத்திலே விபாசங்கத்தை யுடையவர்களான உன்னாலே பிரத்தியுத்தானாதிகளால்பூசிக்கப்படாதவர்களாய் அந்தக்கிரகத்தில்நின்றும் திரும்பிப்போனார்களோ நான் சமீபத்திலில்லாம லிருக்குகையில் வியாசக்கத்தை யுடையவர்களான உன்னால்ஹோமகாலத்தில்அக்கினிகள் அவிசுனால் ஓமம்பண்ணப்படவில்லையோ அக்கினியினுடைய பூஜையினால் கிரகஸ்தனானவன் சகலமனோரதங்களையும் கொடாநின்ற லோகங்களை அடைகிறானல்லவா சர்வசுரூபியான ஸ்ரீமகா விஷ்ணுவுக்குப் பிராமணனும் அக்கினியும்முகமாக விருக்கிறார்களல்லவா, உன்னுடையபுத்திராளெல்லாம் சுகமாயிருக்கின்றார்களா உனதுமுகத்தினுடைய வாட்டமுதலான லட்சணங்களினால் மனதிலிருக்கப்பட்டவியசனமுதலானதுகளைக் கண்டேனென்று சொல்லாநின்றபர்த்தாவைப்பார்த்து அதிதி தேவியானவள் சொல்லுகின்றாள்,

அதிதிதேவிவாக்கியம்,

ஓய்பிர்மநிஷ்டரே-பிராமணுள்-கோக்கள்-தர்மம்-தர்மார்த்தகாமங்களுக்கு உற்பத்தி ஸ்தானமான இந்தக் கிரகங்கள் இதுகளுக்கெல்லாம் க்ஷேமம் உண்டாகியேயிருக்கின்றது-அக்கினிகள்-அதிதிகள்-பரிஜனங்கள்-சன்னுசிகள்-பிரயோசனத்தை அபேட்சித்துக்கொண் டிருப்பார்கள் இவையெல்லாம் நான்பகவானுகிய உம்மைத்தியானம் பண்ணிக்கொண் டிருக்கிறபடியால் குறைவில்லாமலேயிருக்கின்றது, வாரீர் மரீசிபுத்திரரானகாசியபரே, உம்முடைய மானசபுத்திராளான தேவாசுர தயித்தியப் பிரஜைக ளெல்லாம் சத்துவரஸ் தமசுயென்கிற மூன்றுகுணத்தோடு கூடியிருப்பர்கள், அந்தத் தேவர்கள்முதலான புத்திரர்களிடங்களில் நீர்சமமாகவேயிருக்கின்றீர் வாரீர்பிரபுவே, ஆனுலும் ஈஸ்வரன் பக்தனுக்கேபிரசன்னராவர் ஆகையால் பக்திபண்ணுகின்ற என்னுடையசிரேயசைச்சிந்தியும், சத்துருக்களானதயித்தியர்களால் அபகரிக்கப்பட்ட சம்பத்தையும்ஸ்தானத்தையும்உடையவர்களான பிள்ளைகளையும் என்னையும்ரட்சியும்என்னுடைய ஆயிஸ்வரியம்-காந்தி-எஜசு- ஸ்தானம்-இவையெல்லாம் பிற்பலாளானசத்துருக்களாலே அபகரிக்கப்பட்டதுகள் பிரஜைகளுக்கு க்ஷேமத்தை உண்டுபண்ணுகிறவரோ என்னுடையபிள்ளைகள் அந்தஅயிஸ்வரியமுதலானதுகளைத் திரும்பவும்யெப்படி அடைவர்களோஅந்தப்பிரகாரம் உம்முடையகல்லியாணமான புத்தியினுல் அனுக்கிரகம் பண்ணுமென்று அதிதியினுல் அர்த்திக்கப்பட்டவராய்க் கசியப்பிரஜாபதியானவர்சிரித்துக்கொண்டு அதிதியைப்பார்த்துஒருவார்த்தைசொல்லுகின்றுர்.

வாராய்நல்லமனதை யுடையவளே, விஷ்ணுவினுடையமாயாபலத்தை என்னசொல்லப்போகிறேம்அந்தமாயையினுல் இந்தச்செகத்தானது புத்திராதிபாசங்களினுல்கட்டுப்பட டிருக்கின்றது சர்வ பூதாத்துமாவாகியும்கியானசக்தி பரிபூர்ணராயும், ஜெனர்த்தராயும்,ஜெகத்குருவாயுமிருக்கிற வாசுதேவனைப் பஜனைபண்ணக்கடவாய் தீனதயாளுவாகியஅந்தப்பகவான் உன்னுடைய இஷ்டங்களை நிறைவேற்றுவாரென்று சொல்லாநின்றகசிபபருடையவார்த்தையைக்கேட்டு அதிதிதேவியானவள் சொல்லுகின்றுள்.

அதிதிதேவிவாக்கியம்.

வாரீர்பிரம்மனிஷ்டரே, ஜெகத்குருவானபகவானை எந்தப்பிரகாரம் ஆராதிப்பேன், சத்திய சங்கற்பராகிய அந்தப்பகவான் என்னுடையமனோரதத்தை எந்தப்பிரகாரம் நிறைவேற்றுவார். புத்திராளோடுகூட துக்கப்படாநின்றஎனக்குப் பகவான் எந்தஆராதனத்தினுல் சீக்கிரமாகச்சந்தோஷிப்பரோ அப்படிப்பட்டபகவதாராதனவிதியைஉபதேசியுமென்றுசொல்லாநின்றஅதிதிதேவியைப்பார்த்து கசியபர் சொல்லுகின்றுர்,

கசியப்பிரஜாபதிவாக்கியம்.

வாராய் நல்லொழுக்கமுடையவளே, சதுர்முகனுனவன் எனக்குச்சொன்ன கேசவப்பிரீதிகரமான அந்தப்பயோவிரதத்தையுனக்குச்சொல்லுகிறேன்என்னவென்றுல் பால்குணமாதம் சுக்கிலபக்ஷத்திலேபிரதமைமுதல் பன்னிரண்டுநாள்வரைக்கும் பரமபக்தியோடுகூடினவனுய்ப் புண்டரீகாட்சனைப் பயோவிரதத்தினுல்அர்ச்சிக்கக்கடவன், விரதாரம்பத்துக்கு முதல்நாள் அமாவாசையினன்றைக்கு வராகமுகத்தினுள்கிளரப்பட்ட மிருத்துவினுல் இந்தமந்திரத்தையுச்சரித்துச் சரீரத்தில் பூசிக்கொண்டு நதிப்பிரவாகங் கிடைத்துதேயானுல் அதிலேஸ்நானம்பண்ணி நித்திய நைமித்ய கிரியைகளையுடையவனுய்ச் சித்தசமாதானத்தையடைந்து பூமியிலேயாகிலும்சூரியனிடத்திலாகிலும்ஜெலத்திலேயாகிலும் அக்கினியிலாகிலும் குருவினிடத்திலாகிலும்பகவானை அர்ச்சித்து மந்திரங்களினுல் ஆவாகன முதற்கொண்டு அர்க்கியபாத்தியாதி உபசாரங்களினுல் பகவானைச்சிரத்தையோடுகூடினவனுய்பூசித்து பாலிலே பக்குவமாயும் நெய்-பெல்லம்-இதுகளோடுகூடின சாலிஅன்னத்தைப் பகவானுக்குநிவேதனம்பண்ணி துவாதசாட்சர மந்திரங்களினுலே ஓமம்பண்ணுவித்து பிற்பாடு நூற்றெட்டு ஆவர்த்தி துவாதசாட்சரியைஜெபித்து ஜெகத்பிரபுவானஸ்வாமியைஸ்துதித்துப் பிரதட்சணஞ்செய்து பிரணமம்பண்ணி எதாசக்தியாக இரண்டு பேருக்குக் குறையாமல் பிராமணபோசனம்பண்ணுவித்து மீந்த அன்னத்தைத் தனனுடைய இஷ்டபந்துக்களோடுகூடப்புசித்துஅன்றிராத்திரி பிர்மசரிய நியமத்தை யுடையவனுயிருந்து முதல்நாளையைப்போல் மற்ற பனிரண்டுநாள்பரியந்தம் இந்தப்பயோவிரதத்தைச்செய்து ஸ்ரீஹரியைஆராதித்துஅர்ச்சிக்கக்கடவன். இந்தச்சிரேஷ்டமான பகவதாராதனமானது பிதாமகனுல்முன்னேயெனக்குச்சொல்லப்பட்டது, இப்போதென்னுல் உனக்குச் சொல்லப்பட்டது,

வாராய் மகானுபாவையே நீயும்நன்றுக அனுஷ்டிக்கப்பட்ட இந்தப் பயோவிரதத்தினுல் பரிசுத்தமாயும்-பக்தியையுடையதாயுமிருக்கிற மனதினுல் நிக்கிரகிக்கப்பட்ட ஆத்துமாவையுடையவளாய் நிர்விகாரனுன கேசவனையேஆராதிக்கக்கடவாய், இந்தப் பயோவிரதமேசமஸ்தஎக்கியமாகவும் சமஸ்தவிரதமாகவும் ஈஸ்வரப் பிரீதிகரமான சிரேஷ்டமான தபசாகவும்ஸ்தானமாகவுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது, வாராய் மங்களரூபினியே, அதோட்சசனுகிய பகவான் எந்த விரதத்தினுலே சந்தோஷிக்கிறுரோ, அதுவே சமஸ்தமான நியமங்களும்

தபசு-தானம்-விரதமும்-எக்கியமுமாகும் ஆகையினால் இந்தவிரதத்தைப்பக்தியினாலேயும்,சிரத்தைகளினாலேயும்-ஆசரியிக்கக்கடவாய் ஸ்ரீபகவானுஞ் சந்துஷ்டராய்ச் சீக்கிரமாகவுனக்குஅபீஷ்டத்தைக்கொடுக்கப்போகிறார்

## யஎ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

மாசில்திதியப் பயோவிர்தமானது
ஆசரியப்படுகையி லரியானோர்
பேசுந்திதியி னிஷ்டத்தைப்பூரிக்கிற
காசில்நிமித்தியங் கழறினதாமரோ,

அதிதியினால் அந்தப்பயோதரவிரதமானது ஆசரிக்கப்படுகையில் ஸ்ரீஹரியானவர் அந்தஅதிதியினுடைய இஷ்டத்தைப்பூரிக்கிறநிமித்தியமாக ஆவிர்ப்பவித்தாரென்றுஞ்சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராசனே இந்தப்பிரகாரம் தன்னுடைய பர்த்தாவாகிய கசியபராலே சொல்லப்பட்டவளாய் அந்த அதிதியானவள் பனிரெண்டுநாள் இந்தப்பயோவிரதத்தைச்சோம்பலில்லாதவளாய் ஆசரித்து ஏகாகாரமான பத்தியினால் மகா புருஷனை ஈஸ்வரனைச் சிந்தித்துக்கொண்டு புத்தியாகிற சாரதியையுடையவளாய் இந்திரியங்களாகிற துஷ்டஅசுவங்களைமனதினால்நிக்கிரகித்து மனதையும் ஏகலட்சியமானபுத்தியினால் சர்வாந்தரியாமியாயுங் கியானசக்திமுதலாகிய ஷாட்குண்ணிய பரிபூரணராயுமிருக்கிற வாசுதேவ னிடத்திலே நிறுத்திப்பயோவிரதத்தைஆசரியாநின்ற அந்தஅதிதிக்கு ஆதிபுருஷனாகியபகவான் பிரத்தியட்ச மானார்,

வாராய்ராஜனே, பீதாம்பரதாரியாயும்,சதுர்ப்புஜராயும் சங்குசக்கரகெதாதரராயும், கண்ணுக்குத்தோற்றுகின்ற பகவானைப்பார்த்துச் சீக்கிரமாக வெழுந்திருந்து அதிதியானவள் ஆதரவோடுகூடினவளாய்ப் பிரீதியினாலே, பரவசையாய் அஞ்சலிபந்தம்பண்ணிக்கொண்டு ஸ்தோத்திரஞ்செய்து அந்தப்பகவானைக்கண்டசந்தோஷத்தினால் நடுங்காநின்ற சரீரத்தையுடையவளாயு மிருந்து பின்பு அதிதிதேவியானவள் ஜெகத்குருவா யிருக்கிறசுவாமியை நேத்திரங்களினால் பானம்பண்ணுகிறவள்போலப் பார்த்துக்கொண்டுமெதுவாகத்தழைத்தசொற்களினால் அந்தஸ்ரீஅரியைத்தோத்திரம்பண்ணுகிறாள்.

அதிதிதேவிவாக்கியம்,

வாராய்ஈசனே எக்கியபுருஷனே,அச்சுதா பரிசுத்தனே, பாவமான எஜசை யுடையவனே, மங்களமான நாமதேயத்தையுடையவனே,ஜெகத்ருபியாயும்ஜெகத்தினுடைய உற்பத்தி-ஸ்திதி-சங்காரங்களுக்காக சுவயிச்சையினால்கிரகிக்கப்பட்ட அனந்தசக்திகளைவாய்ந்த மாயாகுணங்களையுடையவராயும், சாவவியாபகராயும்,மகானுயும், அயிஸ்வரியமும்-சுவர்க்கமும்,பூமியும்- பாதாளமும்-அணிமாதி அஷ்டஅயிஸ்வரியமும், தர்மார்த்தகாமங்களும், கேவலக்கியானமும்,இதுகளெல்லாம்சந்துஷ்டரானஉம்மாலே மனுஷியாளுக்குஉண்டாகின்றது,சத்துருஜெயமுதலானவை உண்டாகு மென்பதற்குச் சொல்லவேண்டியதென்னவென்று அதிதியினால்ஸ்தோத்திரம்பண்ணப்பட்டவராயும் சர்வபூதாந்திரியாமியாயு மிருக்கிற புண்டரீகாட்சனை ஸ்ரீபகவான் அந்த அதிதியைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றார்.

ஸ்ரீபகவான்வாக்கியம்,

வாராய் தேவமாதாவே, உன்னால் வெகுகாலமாக அபேட்சிக்கப்பட்ட கோறிக்கையானது என்னால்அறியப்பட்டது. என்னவென்றால் சத்துருக்கர்களால் அபகரிக்கப்பட்ட ஐசுவரியத்தையுடையவர்களாயும், சுவர்க்கத்தில்நின்றும் நழுவினவர்களாயுமிருக்கிறபிள்ளைகளுக்குச்சத்துருஜெயத்தினால் சுவர்க்கப்பிராப்தியை உன்னால் அபேட்சிக்கப்பட்டது, அந்தஅசுரசிரேஷ்டர்களையுத்தத்தில்ஜெயித்து அஷ்டஐசுவரியசம்பன்னர்களானபுத்திரர்களோடுகூட ஓ ரிடத்திலே யிருக்கையை இச்சிக்கின்றாய், யாதுகாரணத்தால் அந்த அசுரசிரேஷ்டர்கள் அனுகூலேசுவரர்களாயுஞ் சமர்த்தர்களாயுமிருக்கிறபிராமணர்களால் இரட்சிக்கப்பட் டிருக்கிறார்களோ அந்தக்காரணத்தால் அவர்களிப்போ தெந்தவிதத்திலும் ஒருத்தராலேயுஞ் ஜெயிக்கப்படமாட்டார்களென்று யென்னுடையநிச்சயம் அவர்களவிஷயத்தில் இப்போதுபராக்கிரமமானது சுகத்தைக்கொடுக்கமாட்டாது ஆனாலும் உன்னுடைய இந்தப்பயோதர அனுஷ்டானத்தினால் சந்தோஷிக்கப்பட்ட என்னால் ஒருவுபாயஞ் சிந்திக்கத்தக்கது, என்னுடையஆராதனம் சிரத்தானுகுணமாகப்பலத்தைக் கொடுக்கிறதாகையால் வியர்த்த மாகமாட்டாது புத்திரர்களை ரட்சிக்கிற நிமித்தியமாக உன்னால் அர்ச்சிக்கப்பட்டு அதற்குயோக்கியமாக ஸ்தோத்திரம்பண்ணப்பட்ட நான் எனதுஅமிசத்தினால் உனக்குப்புத்திரபாவத்தையடைந்து கசியப் பிரஜாபதியினுடைய தபசிலிருந்துகொண்டு உன்பிள்ளைகளை இரட்சிக்கிறேன் உன்னுடையபதியினிடத்தில் என்னை இப்படிப்பட்ட ரூபத்தையுடையவனா யிருக்கிறவனாகப் பாவித்துக்கொண்டு பாபசூனியரான கசியப்பிரஜாபதியை யடையக்கடவாய் இந்தப்பரமமான தெய்வரகசியத்தை ஒருவருக்கும் எந்தவிதத்திலுஞ் சொல்லத்தக்கதன்று, இந்தப் பிரகாரம் பகவானானவர் அதிதிதேவியைப்பார்த்துச் சொன்னவராய் அவ்விடத்திலேயே அந்தர்த்தானமானார்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

அந்ததிதிதேவியானவள் ஜெகத்பிரபுவானஸ்ரீஅரியினுடைய அவதாரத்தை தன்னிடத்திலேயடைந்து கிருதகிருத்தியை யானவள்போல பதியான கசியபரை பரமபக்தியினலேயடைந்தாள் சத்தியசங்கற்பரான அந்தக்கசியபரும் தம்மிடத்தில்பிரவேசிக்கின்ற ஸ்ரீஹரியினுடையஅமிசத்தைச் சமாதியோகத்தினலேயறிந்து தபசினல் வெகுகாலமாகச் சம்பாதிக்கப்பட்ட வீரியத்தை நல்லமனதையுடையவராய்த் தயித்தியர்களைப்போக்கடிக்கத்தக்கதாக அதிதியினிடத்தில் ஸ்தாபித்தார் அதிதியினிடத்தில்கசியபராலே கெறபாதானம்பண்ணப்பட்ட கெற்பத்திலே ஸ்ரீபகவான்பிரவேசித்திருக்கின்றதையறிந்துபிர்மாவானவன் இரகசியமானநாமங்களினல் அந்த ஸ்ரீபகவானை ஸ்தோத்திரம்பண்ணுகின்ருர்,

பிர்மதேவர்வாக்கியம்.

வாரீர்உருகாயனே, பகவானே, உருக்கிரமனே, அதிகமான பதவின்னியாசத்தையுடையவனே, உமக்கு நமஸ்காரம் பிராணதேவதையாயும்ஷாட்குண்ணியபூரணராயும் வேதகெற்பராயும் பிர்மரூபியாயும் மூன்றுலோகங்களையும் நாபியில் உடையவராயும் கோப்பிரமாணர்களுக்குள்ளே வியாபித்திருக்கிறவராயும் சர்வ வியாபகருமாகையால் விஷ்ணுவென்று பெயரையுடையவராயிருக்கிற உமக்குப்பிரணமம் ஜலத்திலேமுழுகாநின்றபேர்களுக்கு ஓடம்போலசுவர்க்கத்தில்நின்றும் நழுவாநின்றதேவதைகளுக்கு நீர்பரமகதியாயிருக்கின்றீர்.

## ௰௮-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

காமனைப்பயின்ற கண்ணனனவன்
வாமனரூபங் கொண்டுமேலோர்களால்
பூமிநாதனெனப் புகழ்ந்தேத்திடச்
சேமமர்ந்தபலி யாற்சிறப்பித்தார்,

பகவான் வாமனரூபமாக அவதரித்து சகலமானபேர்களாலேயும்பூசிக்கப்பட்டவராய் பலியினுடைய எக்கியத்தைஅடைந்தபிற்பாடு எஜமானனபலியினலேயும் பூசிக்கப்பட்டாரென்றுசொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய் பரிட்சித்துமகாராஜனே இந்தப்பிரகாரம் பிர்மதேவனல் ஸ்தோத்திரம்பண்ணப்பட்ட அவதாரகர்மங்களையும் தேவகாரியரூபமான பிரபாவத்தையும், சதுர்ப்புஜராயும் சங்குசக்கர கதாபத்மங்களை யுடையவராயும், பீதாம்பரதாரியாயு மிருக்கிற புண்டரீகாட்சனனபகவான் அந்த அதிதியினிடத்தில் ஆவிர்ப்பவித்தார் சியாமளவர்ணராயும், இரண்டுமகரகுண்டலங்களைக் காதிலேயுடையவராயும், ஸ்ரீவச்சமென்னப்பட்ட மருவை வக்ஷசிலேயுடையவராயும், கங்கணம்,தோள்வளைகிரீடம்,அரைநூல்-மாலை-காற்சிலம்பு இதுகளினல் பூஷிக்கப்பட்டவராயும், வனமாலையோடு கூடினவராயும் கவுஸ்துவமாணிக்கத்தைக் கண்டத்தில்யுடையவராயும்,கசியப்பிரஜாபதியினுடைய கிரகத்திலுண்டான விருளைத்முடையதேஜசினல் போக்கடிக்கப்பட்ட பகவானனவர் புரட்டாசிமாதத்தில் சுக்கிலபட்ச சிரவணத்துவாதசியிலே அபிசித்தென்கிற நட்சத்திரத்தில் அதிதியினிடத்தில்அவதரித்தார்,

எந்தத்துவாதசியில் ஸ்ரீவாமனமூர்த்தியினுடைய அவதாரமோ அந்தத்துவாதசி விஜையத்துவாதசியென்றுசொல்லப்படும்அப்போது தேவதுந்துபிமுழங்கிற்று தேவர்கள்புஷ்பவருஷங்களைப் பொழிந்தார்கள் ரிஷிகள் முனிவர்கள்-சித்தர்கள்-வித்தியாதரகணங்கள்- கின்னராள்-யக்ஷாள்-கிம்புருஷாள்- இவர்களெல்லாம் ஸ்தோத்திரம்பண்ணினர்கள்.

அப்போது அதிதிதேவியானவள்தன்னுடையகெர்ப்பத்தில் அவதரித்த பரமபுருஷனைப்பார்த்து ஆச்சரியப்பட்டு சந்தோஷத்தையடைந்தாள் கசியபிரஜாபதியும் ஆச்சரியத்தையுடையவராய் பார்த்துக்கொண் டிருக்கும்போதே வாமனமூர்த்தியானர் அந்த வாமனமூர்த்தியைப்பார்த்து சந்தோஷமடைந்தவர்களாய் மகாரிஷிகள்கசியப்பிரஜாபதியை முன்னிட்டுக்கொண்டு ஜாதகர்மமுதலான வைதிககர்மங்களை அந்தப் பகவானுக்குச் செய்துவைத்து ரிஷிகளினல் உபநயனம்பண்ணிவைக்கப்படாநின்ற ஸ்ரீவாமனமூர்த்திக்குச் சூரியன் சாவித்திரியைஉபதேசித்தான்பிரகஸ்பதி பிர்மசூத்திரத்தைக்கொடுத்தார் கசியபர் முஞ்சியைக்கொடுத்தார்பூமிகிருஷ்ணாசனத்தைக்கொடுத்து வனங்களுக்குப் பதியானசந்திரன் தெண்டத்தைக்கொடுத்தான் தாயாகிய அதிதிதேவியானவள் கவுபீனவஸ்திரத்தைக் கொடுத்தாள் வேதகற்பனனபிர்மா கமண்டலபாத்திரத்தைக்கொடுத்தான் இந்தப்பிரகாரம் உபநயனம் பண்ணிவைக்கப்பட்ட அந்த வாமனமூர்த்திக்கு எக்ஷராஜனன குபேரன் பாத்திரத்தைக்கொடுத்தான் பகவதியானசாட்சாத் பார்வதியானவள் பிட்சையைக்கொடுக்கசமித்துக்களினல் ஓமம்பண்ணினர்கள்,

அதன்பிற்பாடு அந்தவாமனமூர்த்தியான்பகவானனவர் பலவானனபலிச்சக்கிரவர்த்தி பிருகுவமிசாளான பிராமணளாலே செய்விக்கின்ற அஸ்வமேத யெக்கியசாலையிலேபிரவேசித்தார் அப்போதுஅந்தநர்மதா நதியினுடையவடகரையில் பிருகுவச்ச மென்கிற க்ஷேத்திரத்தில்பலிச்சக்கிரவர்த்தியானவன் அஸ்வமேதமென்கிறயாகத்தை நடத்திவைக்கும்போது அந்தப்பிருகுவமி

சஸ்தராவரிஷிகள் சமீபத்திலேயுதியாநின்ற சூரியனைப் போல அந்தவாமனமூர்த்தியை எஜமானுன பலிச்சக்கிரவர்த்தி முதலானவர்களும் பார்த்துசூரியனே, அக்கினியோ. அல்லதுயாகத்தைப் பார்க்கவேணுமென்கிறஇச்சையினுல் ஜனற்குமாரர் வருகிருரோவென்று தர்க்கித்துக்கொண்டிருக்கும்போது அந்தவாமன மூர்த்தியானபகவான் தெண்டம் சத்திரம் ஜலபூரணமான கமண்டலம் இதுகளைத்தரித்துக்கொண்டுஅஸ்வமேதசாலையில்பிரவேசித்தார் இந்தப்பிரகாரம் எக்கியசாலையில்பிரவேசியாநின்ற சுவாமியைப்பார்த்து சிஷியாளோடுகூடியபிருகுவமிசாளான பிராமணுளெழுந்திருந்து அவனைப்பூசித்தார்கள் எஜமானுன பலிச்சக்கிரவர்த்தியும், சந்துஷ்டனுய்ச் சுவாமியைக்கண்டு அவருக்குஆசனங்கொடுத்து நல்லவர்வரவென்று குசலப்பிரஸனம்பண்ணிபிரணுமஞ்செய்து பகவானுடைய திருவடிகளைஅலம்பிரிஷகாமமாக அர்ச்சித்துச் சகலபாபங்களேயும் போக்கடியாநின்ற அந்தப் பகவானுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தைச் சகலதர்மமும்அறிந்த அந்தப்பலியானவன் சிரசிலேதரித்துக்கொண்டு அந்தப் பகவானைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்ருன்,

பலிச்சக்கிரவர்த்திவாக்கியம்.

வாரீர்பிராமணேத்தமரே. உமக்குநான் செய்யவேண்டியதென்ன உம்மைபிரத்தியக்ஷமாக மூர்த்தீகரித்தபிரமரிஷிகளுடைய தபசாகவே எண்ணுகிறேன் நீர்நம்முடையகிரகத்தில் பிரவேசித்ததினுல் நமது பிதுர்க்களெல்லாம்திருப்தியடையந்தார்கள் அக்கினிவோத்திரங்களும்நன்ருக ஓமங்கள் பண்ணப்பட்டதுகள், உம்முடைய ஸ்ரீபாததீர்த்தங்களினுல் என்னுடைய பாபங்களானதுகள் நாசமாய்விட்டதுகள் இதுநிச்சயம் வாரீர் பிரமசாரியே பிராமணபுத்திரனே மகாபூச்சியனே உம்மை ஏதோவொன்றை யாசிக்கவந்தவராக எண்ணுகிறேன் நீர் எதைஉம்மிட மனதிலெண்ணியாசிக்கவந்தீரோ அதையென்னிடத்தில்நின்றும் நீர் அடையக்கடவீரென்றுபலிச்சக்கிரவர்த்தியானவன் சொன்னுன்,

## ௰௯-வது, அத்தியாயம்.

கலிவிருத்தம்.

ஆர்ந்தவாமன ஹரியினுல்யாசிக்க
நேர்ந்திடும்பலி யானுநீர்கேட்பதைக்
கூர்ந்துகேளெனக் கெடுமைசுக்ராசாரி
தார்ந்திடும்பக வானைத்தடுத்தனர்

வாமனமூர்த்தியான ஸ்ரீஅரியினுல் யாசிக்கப்படுகையில்பலியானவன நீர்கேட்பதைக்கொடுக்கிறேனென்று பிரதிக்கினைபண்ணும்போதுசுக்கிராசாரியானவர்பகவானென்றறிந்து தடுத்தாரென்று சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய் பரிட்சித்துமகாராஜனே இந்தப்பிரகாரம்விரோசனபுத்திரனுன பலியினுடையதர்மமாயும் எதார்த்தமாயுமிருக்கிற வசனத்தைக்கேட்டு பகவானுனவர்பிரீதியையுடையவராய்ச் சந்தோஷித்து ஒருவார்த்தைசொன்னுர்.

ஸ்ரீபகவான்வாக்கியம்.

வாராய் ஜெனங்களுக்கெல்லாம் தேவனே, உனக்குப்பரலோக இதமானதர்மத்தில் பிருகுவமிசர்களான பிராமணுளும் குலவிருத்தனுயும்,மிகவும்சாந்தனுயும் பிதாமகனுயுமிருக்கிற பிரகலாதனும் குருவாயிருக்கின்ருர்கள் அப்படிப்பட்ட உன்னுடைய இந்தவசனம் சத்தியமாயும்,குலத்துக்குயோக்கியமாயும் தர்மயுக்தமாயும்,கீர்த்திகரமாயுமிருக்கிறது, யாசியாநின்ற பிராமணனுக்கு யாதொரு தாதாகொடுக்கிறேனென்று பிரதிக்கினைபண்ணிதிரும்பவில்லையென்று அவமானம்பண்ணுகிருனே அப்படிப்பட்டபுருஷன் இந்தக் குலத்திலேயில்லை யாதொருஉன்னுடையகுலத்தில் பிரகலாதனன் நிர்மலமானஎஜசினுல் ஆகாசத்தில்சந்திரன்போலவிளங்குகிருன் அப்படிப்பட்ட உன்குலத்தில்பிறந்தஇரணியாக்ஷனுனவன் கெதாபாணியாய் பூமியில்ஒருவனுகச் சஞ்சரித்துக்கொண்டு திக்குவிஜையஞ்செய்தபோதும் பகவானுனவர்பூமியைப் பிரளயகாலத்திலிருந்து எடுக்கும்போதும் அந்தஇரணியாக்ஷனை மகாபிரயாசத்தினுல் செயித்தஅப்படிப்பட்ட பிராதாவான இரணியாக்ஷனுடையவதத்தைக்கேட்டு இரணியகசிபுவானவன் கோபித்துக்கொண்டு பிராதாவைக் கொன்றவனைக் கொல்லவேணுமென்று ஸ்ரீஹரியினுடைய ஸ்தானத்தைக் குறித்துப்போனுன் அப்படிவராநின்ற இரணியகசிபுவைப் பார்த்து இவன்நம்மைஎங்கேபோனுலும் விடமாட்டானென்று நிச்சயஞ்செய்துகொண்டு ஓடிவாநின்ற சத்துருவான அந்தஇரணியகசிபுவினுடைய சரீரத்தில் நாசிகாந்தரத்தினுல் உள்ளேபிரவேசித்தார் அப்போது இரணியகசிபுவானவன் அந்தவிஷ்ணுவினுடையஸ்தானத்தையெல்லாம்சுத்திப்பார்த்துஅவரைஅங்கேகாணுமல்கோபித்து அட்டகாசம் பண்ணிக்கொண்டிருந்தும்அவரைக்காண்பதற்கு சக்தியற்றவனுகிவிட்டான் பிரகலாதபுத்திரனுயும் உனக்குப்பிதாவாயும், பிராமணுளிடத்தில் வாற்சல்லியத்தை யுடையவனுயுமிருக்கிற விரோசனனுனவன் பிராமணவேஷங்கொண்ட தேவதைகளால்யாசிக்கப்படவனுய் அவர்களைத் தேவர்களென் றறிந்திருந்தும் அவர்களுக்குத் தன்ஆயுசையெல்லாங் கொடுத்ததான்,

வாராய்தயித்தியேந்திரனே ஆகையினுல் அசுரசிரேஷ்டனுன வுன்னிடத்தில் நின்றும் என்னுடைய அடியி

னால்அளக்கப்பட்ட மூன்றடிபூமியையாசிக்கிறேன், ஜெகதீஸ்வரனும், மகாதாதாவாயுமிருக்கிற உன்னிடத்தில் வேறொன்றைஅபேட்சிக்கவில்லையென்றுசொல்லாநின்ற பகவானைப்பார்த்து பலிச்சக்கிரவர்த்தி சொல்லுகின்றான்,

பலிச்சக்கிரவர்த்திவாக்கியம்.

வாரீர்பிராமணபுத்திரனே, உம்முடையவசனங்களானதுகள் பெரியோர்களுக்குச் சம்மதமாகமாட்டாது நீரோசிறுபிள்ளையாயும் பாலபுத்தியாயு மிருக்கிறபடியினால்சொற்ப பிரயோசனத்தை விரும்புகிறீர் லோகங்களுக்கெல்லாம் லோகநாயகனுகியும் திவிபத்தைக்கொடுக்கதக்கவனுயுமிருக்கிறஎன்னை வார்த்தைகளினால் பூசித்து மூன்றடியையாசிக்கில்நீர் நீர்சிவனத்தைக்கொடாநின்றபூமியை என்னிடத்தில்நின்று எதேஷ்டமாக வாங்கிக்கொள்ளுமென்றுசொல்லாநின்ற பலிச்சக்கிரவர்த்தியைப்பார்த்து ஸ்ரீபகவானனவர் சொல்லுகின்றார்.

ஸ்ரீபகவான்வாக்கியம்,

வாராய்ராஜனே, மூன்றுலோகத்திலேயுஞ் சிரேஷ்டங்களானது எவ்வளவுதேசங்களிருக்கின்றதுகளோ அந்தசமஸ்ததேசங்களும் புருஷனுடையஆசையைப்பூரிக்கத்தக்கதுகளன்றுமூன்றடியில்சந்தோஷத்தைஅடையமாட்டாதபுருஷனனவன் சிரேஷ்டமான சப்ததீபங்களிடத்திலேயும் திருப்தியடையமாட்டான் ஆகையினால் நான்இந்த மூன்றடிகளிலேயே கிருதார்த்த னுவேனென்றுசொல்லாநின்ற வாமன மூர்த்தியைப்பார்த்து பலிச்சக்கிரவர்த்தியானவன் சிரித்துக்கொண்டு உமக்குவேண்டும்வரத்தை வாங்கிக்கொள்ளுமென்றுசொல்லி வாமனரூபியான ஸ்ரீபகவானுக்குப் பூதானம்பண்ணுகைக்கு ஜலபாத்திரத்தைக் கொண்டுவந்தான் அப்போது கியாணிகளுக்கெல்லாந்தலைவனன சுக்கிராசாரியாரானவர் விஷ்ணுவினுடைய நினைப்பை யறிந்தவராய் அவர்பொருட்டுபூமியைக் கொடுக்கப்போகிறவனுயும் அசுரேசுரனுயுஞ் சிஷியனுயுமிருக்கிறபலிச்சக்கிரவர்த்தியைப் பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றார்.

சுக்கிராசாரியர்வாக்கியம்,

வாராய்விரோசனபுத்திரனே, இவர் சாக்ஷாத்ஸ்ரீபகவானுயும் நிர்விகாரமானவிஷ்ணு கசியபரிடத்தில் நின்றும் அதிதிதேவிக்குத் தேவகாரியத்தைச் சாதிக்கிறவராக அவதாரம்பண்ணினர் மேல்வரப்போகிற அனர்த்தத்தையறியாத உன்னால் இவருக்கு யாதொன்றைக் கொடுக்கிறேனென்று பிரதிக்கினை பண்ணப்பட்டதோ அதைநான் நல்லகாரியமாகஎண்ணவில்லை தயித்தியர்களுக்கும் மாதாவாகியஅன்னியாயமானது பிராப்தமாகவிருக்கின்றது இந்த மாயாபிர்ம்மசாரியான ஸ்ரீஹரியானவர் உன்னுடைய ஸ்தானத்தையும் ஐயிஸ்வரியத்தையும், சம்பத்தையும், கீர்த்தியையும், பரிக்கிரகித்துக்கொண்டு இந்திரனுக்குக் கொடுக்கப்போகிறார் விசுவத்தையெல்லாஞ் சரீரமாகவுடைய இந்தப்பகவானனவர் மூன்றடிகளினால் இந்த லோகங்களை யெல்லாம் ஆக்கிரமிக்கப்போகிறார்,மூடனைப்போலச் சர்வத்தையும்விஷ்ணுவுக்குக்கொடுத்துவிட்டு எப்படியிருக்கிறாய் வாராய் பிரபுவே, பூமியை ஓரடியினலேயும் சுவர்க்கத்தை இரண்டாமடியினலேயும் மகத்தாகியசரீரத்தினால்ஆகாசத்தையும் ஆக்கிரமியாநின்ற இந்தப்பகவானுக்கு மூன்றாவதடியை எங்கேகொடுக்கப்போகிறாய், அப்படிப் பிரதிக்கினைபண்ணினதைக் கொடாமற்போகின்ற உனக்கு இருப்பிடம் நரகமெனறே எண்ணுகிறேன் ஏகாக்கிரசித்தமான-தபசு தடாகப்பிரதிஷ்டையும்- தானமும்-எக்கியமும்-இவையெல்லாம் லோகத்தில் புருஷனுக்கு விர்த்தியைஉண்டாக்குகையால் எந்தத் தானத்தில் விர்த்தியானத்துக்கு நாசம்வருகின்றதோ அந்தத் தானத்தைப் பெரியோர்கள்கொண்டாடார்கள்தர்மம்-எசசு-அர்த்தம் காமம்-சுவசெனம்-இவைகளின்பொருட்டு தனத்தைஐந்துகூறுகப்பகர்ந்து அனுபவியாநின்ற புருஷனனவன் இந்தலோகத்திலேயும் பரலோகத்திலேயுஞ் சந்தோஷத்தையடைகுவன், வாராய்அசுரசிரேஷ்டனே ஆனாலும் பிரதிக்கினைபண்ணினதையில்லையென்று எப்படிச்சொல்கிறதென்றால் இருக்குவேதத்தில் சொல்லியிராநின்ற அர்த்தத்தைச் சொல்லுகிறேன்கேள், ஓம்என்று அங்கீகாரமாக யாதொன்றுசொல்லப்பட்டதோ அதுவேசத்தியம் யாதொன்றையில்லையென்றுசொல்லப்பட்டதோ அதுவேஅசத்தியம் சீவித்துக்கொண்டிருக்கிற சரீரமாகிறவிருட்சத்துக்குச் சத்தியமென்கிறதேபுஷ்பபலமாக அறியத்தக்கது இந்தச்சரீரமாகிறவிருட்சமானது சீவித்திராவிட்டால் சத்தியமாகிறபுஷ்பபலமும்உண்டாகமாட்டாதல்லவா சரீரமாகிறவிருட்சத்துக்கு அசத்தியமே வேருயிருக்கின்றது ஆகையினால் வேரோடேகளையப்பட்டவிருட்சமானது சீக்கிரமா யுலர்ந்து கீழே விழுந்து போகின்றதுபோல அசத்தியவசனமில்லாதசரீரமாகிற விருட்சம்அந்தட்சணத்தில்நாசத்தையடைகின்றது இதில்சமுசயமில்லை யாசகன்பொருட்டு கேட்டதெல்லாங் கொடுக்கிறேனென்று அங்கீகரியாநின்ற புருஷனனவன் தன்னுடைய தானயோகத்தின்பொருட்டு தான்சமர்த்தனாகாமற்போவன் இல்லையென்கிற அசத்தியமான சொல்லானது தனக்குஅர்த்தசாதகமாகையால் பூரணமாகவிருக்கின்றது ஆனாலும் யாதொருத்தன் ஒன்றுமில்லையென்றுசொல்லுகிறானே அவன் அபகீர்த்தியையுடையவனுயும் பிழைத்திருக்கச்சேயும் பிரேதத்துக்குச் சமானமாயுமிருப்பன் ஆகையால் ஸ்திரீகளைவசீகரிக்கி

றத்திலேயும்,லீலேகளிலேயும், விவாகங்களிலேயும் தன் ஜீவனநிமித்தியத்திலேயும், பிராணசங்கடத்தி லேயும்' கோப்பிராமணர்களுடைய நிமித்தியத்திலேயும், ஒருவ னையொருவன் இம்சைசெய்யும்போதும் அசத்திய வச னமானது நிஷித்தமல்லவென்று சுக்கிராசாரியாரானவர் சொன்னார்.

## உ௰-வது-அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

பயப்படும்பலிச் சக்கிரவர்த்தியானேன்
வயப்பட்டஹரி யென்றறிந்துமவன்
நயந்திடும்பூமி யைநல்கினனென்றும்
அயர்ந்திடப்பூமி யையளந்தாரரோ,

அசத்தியவசனத்தினால்நின்றும் பயப்படுகின்றபலிச் சக்கிரவர்த்தியானவன் ஸ்ரீஹரியினுடையகபடத்தை அ றிந்தவனானாலும் அவருக்குப்பூமியைக்கொடுத்தாரென் றும் பின்புவிஷ்ணுவானவர் விருத்தியையடைந்து பூமி யைஅளந்தாரென்றுஞ்சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்ராஜனே, அசுரகுலத்துக்குப்பதியான பலி யானவன் சுக்கிரபகவானால் சொல்லப்பட்ட வார்த்தைக ளைக்கேட்டு க்ஷணகாலம்மவுனமாயிருந்து குருவான சு க்கிரபகவானைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகிறான்.

பலிச்சக்கிரவர்த்திவாக்கியம்,

வாரீர்குருவே, யாதொருதர்மமானது தர்மார்த்த காமங்கள்-எஜசு-விருத்தி-இதுகளைநாசம்பண்ணும விரு க்கிறதோ இதுவே கிரகஸ்தாளுடையதர்மமென்றுஉம் மால்சொல்லப்பட்டதெதுவோ அதுஎதார்த்தமேஆனா லும்பிரகலாதனனுடைய பவுத்திரனும் மகாபிரசித்த னுமிருக்கிற நான் தூர்த்தனைப்போலபிராமணனுக்கு க்கொடுக்கிறேனென்றுசொல்லி பிரதிக்கினைசெய்துஅ ர்த்தலோபத்தினால் அந்தப்பிராமணனை எப்படியில்லை யென்று நிராகரிக்கப்போகிறேன் சத்தியத்துக்குமிஞ்சி னதர்மமில்லையல்லவா இந்தப்பூமிதேவியானவள்அசத் தியவாதியானபுருஷனைத்தவிர மற்ற எல்லாவற்றையும் நான்வகிக்குகைக்கு இச்சிக்கிறேனென்று சொன்னாளல் லவா நான் பிராமணனைவஞ்சிப்பதற்கு எவ்வளவு அஞ் சுகிறேனோ அவ்வளவுதுக்கமானநரகத்துக்கும் தரித்தி ரத்துக்கும் பூமியை யிழந்துபோவதற்கும் மரணத்துக் கும் பயப்படமாட்டேன் ததியங்குமுனி சிபிச்சக்கிரவர் த்திமுதலானசற்புருஷாள் விடக்கூடாத பிராணன்களி னாலும் பிராணிகளுக்கு உபகாரத்தைப்பண்ணினார்கள ல்லவா. ஆகையால் சந்தேகமில்லாமல் கொடுக்கத்தக்க தான பூமிமுதலானபொருள்களைக்கொடுக்கலாம்யுத்தத் தில்பின்னுக்குவாங்காதவர்களான ராஜாக்களானவர்கள் காலவித்தியாசத்தினால் அனுபவிக்கப்பட்ட பூமியைமா த்திரம் இழந்துவிட்டார்களேயல்லாமல்அந்தப்பூமியில் பிறவாநின்றஅவர்களுடையகீர்த்தியையும்இழந்துபோ கவில்லை ஆகையால் இந்தப்பிர்ம்மசாரியானவர் வரப்பிர தனனவிஷ்ணுவானாலும் மற்றயாவரானாலும்ஆகட்டும் இவரால்அபேக்ஷிக்கப்பட்டபூமியைக்கொடுக்கிறதேயல் லாமல்பிராமணரூபியாயிருக்கிற ஸ்ரீஹரியை இமிசிக்கி றதில்லைஇந்தப்பகவானானவர்யுத்தத்தில் என்னைச்சங்கரி த்துவிட்டு இந்தப்பூமியை அபகரித்தாலும் என்னால் அவர் சங்கரிக்கப்பட்டாலும் இந்தஇரண்டுவிதத்திலே யும் என்னை கீர்த்தியானதுவிடப்போகிறதில்லையென்று இந்தப்பிரகாரம் தன்னிடத்தில் சிரத்தையில்லாதவனா யும் சத்தியசந்தனாயும், மகாதாதாவயுமிருக்கிற சிஷி யனை அந்தப்பலிச்சக்கிரவர்த்திசொல்வதைச் சுக்கிரா சாரியானவர்தெய்வத்தினால்ஏவப்பட்டவராய்வாராய்மூ டனே என்னை உல்லங்கனம்பண்ணின நீசீக்கிரமாக அ யிஸ்வரியபிரஷ்டனாகப்போகிறாயென்றுசபித்தார்,

இந்தப்பிரகாரம் தன்னுடைய குருவான சுக்கிரா சாரியரால் சபிக்கப்பட்டிருந்தாலும் சத்தியத்தில் நின் றும்சலியாத மகாவுதாரனான பலிச்சக்கிரவர்த்தி யான வன் வாமனபிர்மசாரியை அர்ச்சித்து இந்தப்பூமியைஉ தகதாராபூர்வமாகக்கொடுத்தான் அப்போதுபலிச்சக்கி ரவர்த்தியினுடையபத்தினியான விந்தியாவலியென்கிற வள்சுவாமியினுடையதிருவடிகளை அலம்புகிறநிமித்தி யமாக ஜெலபூர்ணமானசுவர்னகலசத்தைக் கொண்டுவ ந்தாள் எஜமானனான பலிச்சக்கிரவர்த்தியானவனும் அந் தச்சுவாமியினுடைய பாதாரவிந்தயுகளத்தைச் சந்தோ ஷத்தினால்விளக்கி லோகங்களுக்கெல்லாம்பாவனமான அந்த ஸ்ரீ பாததீர்த்தத்தை சிரசிலேவகித்தான், அப் போது ஆகாசத்தில் தேவகணங்கள் கந்தர்வாள்முதலா னவர்களெல்லாம் அந்தப் பலிசக்கிரவர்த்தியினுடைய சிலாக்கியமான தர்மத்தைக் கொண்டாடி துந்துபிமுத லானவாத்தியங்களை முழக்கி புஷ்பவருஷங்களினால் வ ருஷித்தார்கள்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

அப்போது அனந்தனென்று சொல்லப்பட்ட ஸ்ரீ அரியினுடைய சத்துவரசஸ்தமோகுண சுவரூப அந்த ஆச்சரியமான வாமனரூபமானது விர்த்தியடைந்து பூ மி-ஆகாசம் திக்குகள்சுவர்க்கம் பாதாளங்கள் சமுத்திர ங்கள் திரியக்குகள் தேவாள் மனுஷியாள் ரிஷிகள் இவர் களெல்லாம் யாதொருபகவானுடைய சரீரத்தி லிருக்கி றார்களோ அந்தத் திரிவிக்கிரமனுடையஉள்ளங்காலில் பாதாளலோகத்தையும், பாதாளங்களில் பூமியையும். கணைக்கால்களில் பர்வதங்களையும் முழங்கால்களில் ப க்ஷிகளையும் துடைகளில் மருத்துக்களுடைய கூட்டத்

தையும், பீதாம்பரத்தில் சந்தியாகாலத்தையும் குய்யப் பிரதேசத்திலே பிர்ஜாபதியையும், அரையிலேதன்னை யும், மற்றுமுள்ள அசுரானேயும், நாபியில் ஆகாசத்தை யும்-உதரங்களில் சப்தசமுத்திரங்களேயும் மார்பிலே நட்சத்திர மாலேயையும் இருதயத்திலே தர்மத்தையும், இரண்டுஸ்சனங்களில் நிதசத்திகளேயும் மனதிலே சந்திரனேயும், வட்சசிலே பத்மத்தை அஸ்தத்தில்யுடைய வளான ஸ்ரீமகாலட்சுமியையும் கண்டத்தில்சாமமுதலான சமஸ்தவேதங்களேயும் புஜங்களில் இந்திரன்முதலானதேவர்களேயும் கானங்களிலே திக்குகளேயும், சிரசில் ஆகாசத்தையும் கெஜங்களிலே மேகங்களேயும் நாசிகையிலேவாயுவையும், கண்களில் சூரியனேயும்முகத்தில்அக்கினியையும் வாக்கில் வேத சந்தசுக்களேயும், நாவிலே வருணனேயும்-புருவங்களில் விதிநிஷேதங்களிரண்டையும், இமைகளில்ராத்திரியையும், பகலேயும் நெற்றியில் கோபத்தையும் அதரத்தில் லோபத்தையும் தேகிந்திரியத்தில் காமத்தையும், றேதசிலே ஜலத்தையும் பிருஷ்டபாகத்தில் அதர்மத்தையும் அடி வைப்புகளில் எக்கியத்தையும் நிழல்களில் மிருத்துவையும் நகைப்புகளில் மாயையும், ரோமங்களில்கொடிவகைகளும் நாடிகளில் நதிகளேயும் நகங்களில்கற்களேயும் புத்தியிலே பிரம்மாவையும், இந்திரியங்களில் தேவகணங்களேயும், ரிஷிகளேயும், இந்தப்பிரகாரம் அனந்தனுன ஸ்ரீஹரியினுடையசரீரத்தில் நானுவிதங்களான சராசரங்களேயும், அந்தப்பலிச்சக்கிர வர்த்தியானவன் கண்டான்.

வாராய்ராஜனே, விஸ்வரூபியான அந்தப்பகவானிடத்தில் இந்தசமஸ்தமான லோகத்தையும்பார்த்து சகல அசுராளும்மோகத்தையடைந்தார்கள், சகிக்கக்கூடாததேஜசையுடையதான சுதெரிசனமென்கிறசக்கிரமும் மேகம்போல் சப்தியாகின்ற சாரங்கமென்கிற தனுசும், மேகம்போல் கர்ச்சியாநின்ற பாஞ்சசன்னியமென்கிறசங்கமும், மகாவேகத்தோடுகூடின கவுமோதகியென்கிற கெதையும், சதசந்திரமென்கிறகேடையத்தோடுகூடின வித்யாதரமென்கிறகத்தியும் அட்சயங்களான பாணங்களோடுகூடின அம்புறுப்பொதிக ளிரண்டையும், சுனந்தன்முதலான விஷ்ணுபக்தசிரோஷ்டாளும்சமஸ்தமான லோகபாலாளோடுகூடின அந்தப்பகவானேஸ்தோத்திரம்பண்ணிக்கொண்டிருந்தார்கள் திரிவிக்கிரமனுன அந்த பகவானுனவர் பலிச்சக்கிரவர்த்தியினுடைய பூமி முழுமையும் ஒருபாதத்திலேயும், ஆகாசத்தைச் சரீரத்தினுலேயும்திக்குகளைக்கைகளினுலேயும், அளந்துகொண்டு இரண்டாவதான அடியைஅளக்கிற சுவாமிக்கு சுவர்க்கமான இரண்டாவதுஅடி ஆச்சுது-மூன்ருவதான அடிக்குஅணுமாத்திரமாகிலும்ஒன்றுமில்லாமற்போச்சுது அப்போதுதிரிவிக்கிரமனுடையபாதமானதுசுவர்க்கத்துக் குமேலும்போய்மகாலோக-ஜனலோக-தபோலோகங்களேயும்-அதிக்கிரமித்து சத்திய லோகத்தையும் அளாவியது,

## ௨௧-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பகவனுனேன் பலிச்சக்ரவர்த்தியின்
புகழ்பிரதிக்னேப் பூர்னமாகாமையால்
அகமகிழு மவன்யசசுகளேச்
செகமதிற்பிர காசஞ்செய்திலரரோ.

ஸ்ரீபகவானுனவர் பலிச்சக்கிரவர்த்தியினுடையபிரதிக்கினேபூரணமாகாமற் போனதைக்கண்டு அந்தப் பலிச்சக்கிரவர்த்தியினுடைய எசசை லோகத்தில் பிரகாசம் பண்ணிவைப்பதற்கு அவனுடையபந்தமானதுவிஷ்ணுவினுல்பண்ணப்பட்டதென்று சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வர்ராய்ராஜனே, அப்போதுபிரம்மதேவனுனவன் பகவானுடையபாதாரவிந்தத்தைப்பார்த்துநகங்களாகிற சந்திராளால் திரஸ்கரிக்கப்பட்ட தன்னுடைய சத்தியலோகத்தினது காந்தியையுள்ளவனுயும், தானும்அந்தக் காந்திகளினுல் மறைக்கப்பட்டவனுயும்,மரீசிமுதலான நவப்பிரஜாபதிகளும் தபோரீஷ்டான சனந்தன் முதலியயோகிகளும் இவர்களோடு கூடினவனுய் அவடத்தில் வந்துவேதங்கள்-உபவேதங்கள்-நியமங்கள்-நிதிகள்-தர்க்கம்-எதிகாசம்-வேதங்கள்- புராண சங்கிதைகள் இதுகளோடுகூடினவர்களான கியானிகளானவர்கள்பகவானுடைய பாதாரவிந்த ஸ்மரணப்பிரபாவத்தினுல் சத்தியலோகத்தையடைந்து அவர்களும் அந்தப்பகவானுடையபாதாரவிந்தத்தைப் பிரணமம் பண்ணினுர்கள்.

வாராய்ராஜனே அப்போது பிரம்மதேவனுடைய கமண்டலத்திலிராநின்ற ஜலமானதுஅந்தத்திரிவிக்கிரமனுடைய பாதப்பிரட்சாளனம்பண்ணினதினுல் பவித்திரமாகி கங்கையாச்சுது. அந்தக் கங்கையானது ஆகாசத்தில்நின்று மூன்றுலோகத்தில் வியாபித்துப் பாவனம்பண்ணிக்கொண் டிருக்கின்றது-அப்போது அசுராளானவர்மூன்றடி தரவேணுமென்கிறயாசனுநிமித்தத்தினுல்சமஸ்தமானபூமியையும் விஷ்ணுவினுல் அபகரிக்கப்பட்டதைப்பார்த்துத் தங்களுக்குப் பர்த்தாவாயும்-யாகத்திலே தீட்சதனுயுமிருக்கிற பலிச்சக்கிரவர்த்தியினிடத்தில் கோபத்தையுடையவர்களாய் ஒருவார்த்தைசொல்லுகிருர்கள்-இந்தவானப்பிர்மசாரி பிராமணனேயன்றுமாயாவிகளுக்கெல்லாம் தலேவனுனவிஷ்ணுவே பிராமணவேஷத்தினுல் மறைந்துகொண்டுதேவகாரியத்தைப்பண்ண இச்சிக்கிருர்-யாசகராயும் - சத்துருவாயு மிரு

க்கிறஇந்தவிஷ்ணுவினல் யாகத்திலே தீட்சதனுயும்-தெண்டனேயைவிட்டுவிட்டுமிருக்கிறநம்முடையபர்த்தாவானபலிச்சக்கிரவர்த்தியினுடைய சர்வசொத்தும் அபகரிக்கப்பட்டதல்லவா, ஆகையால் இந்தவாமனப்பிரம்மசாரியைக்கொல்லுகிறது நமக்குத்தர்மமே இதினல்நமக்கு பார்த்துருசிசுருஷையும் சித்திக்குமென்று அசுரர்கள்சகலமானபேரும் இந்தப்பிரகாரம்சொல்லி-சூலம்- பட்டசமுதலான ஆயுதங்களேக்கையிலேயுடையவர்களாய்அந்தப்பலிச்சக்கிரவர்த்தியினுடைய ஆக்கினேயைக்கடந்து ஓடிவந்தார்கள்.

அப்படிஓடிவாராநின்ற அசுரயூதபாளேப்பார்த்து சிரித்து விஷ்ணுவினுடைய அனுசராளெல்லாம் ஆயுதபாணிகளாய்நிறுத்தினர்கள் சுனந்தன், நந்தன்-ஜெயன் -விஜையன்-பிற்பலன்-உற்பலன்-குமுதன்-குமுதாட்சன் விஸ்வச்சேனன்-கெருதமான்-ஜெயந்தன்- சுருத்தேவன்-புஷ்பதந்தன் சாதவதன்-பதினுயிரம்யானேபலத்தையுடையஇவர்களெல்லாம் அந்தஅசுரசேனேகளே அடித்தார்கள், அப்போது பலிச்சக்கிரவர்த்தியானவன் மகாபுருஷனுடைய அனுசராளான சுனந்தநந்தாள்முதலானபேர்களால் கொல்லப்படாநின்றும், கோபவேகத்தோடுங் கூடினவர்களாயுமிருக்கிற அந்தஅசுராளேப்பார்த்து சுக்கிராசாரியருடைய சாபத்தை நினேத்துக்கொண்டு அவர்களேவிலக்கி ஒருவார்த்தை சொல்லுகிறுன்.

பலிச்சக்கிரவர்த்திவாக்கியம்,

வாருங்கள்பிரசித்தியே-ராகுவே-ஹெதியே-என்னுடையவார்த்தையைக்கேளுங்கள் நமக்கு இந்தக்காலமானது அனுகூலமான காலமன்று-யாதொரு பகவானுனவன் முன்னலேநம்முடைய விர்த்தியின் பொருட்டு அசுரத்துவேஷியான தேவாளுடைய சுபக்ஷத்தின்பொருட்டுமுயற்சி செய்தாரோ அந்தப்பகவான் இப்போதவர்களுக்குஜெயத்தையும்-நமக்கு அபஜெயத்தையும் கொடுக்கின்ருர்-புருஷனுனவன்-சேனேகள்-மந்திரிகள்- துரகங்கள்-மந்தரங்கள்-அவுஷதங்கள்-இது முதலானவை களினல்சாமதானபேத தண்டங்களென்னப்பட்ட சதுர்விதவுபாயங்களினுலும் காலத்தை அதிக்கிர மிக்கமாட்டான் ஸ்ரீஅரியினுடையஇந்தஅனுசராள்தெய்வபலத்தோடுகூடினவர்களாதலால் உங்களால் ஜெயிக்கப்படமாட்டார்கள்-ஆகையால் நமக்குக்கூடிவருங்கால மெதுவோ அதைப்பார்த்துக்கொண்டிருங்களென்று சொல்லுகின்றராஜாவினுடைய வசனத்தைக் கேட்டு தயித்தியதானவயூதபாளெல்லாம் விஷ்ணு பாரிஷதாளால் பீடிக்கப்பட்டவர்களாய் பாதாளத்தில் பிரவேசித்தார்கள்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

அப்போது ஸ்ரீவிஷ்ணுவினல் அசுரபதியான பலிச்சக்கிரவர்த்தியானவன் நிக்கிரகிக்கப்பட்டிருக்கையில் பூமி-அந்தரிஷம்-திக்குகள் இதுகளில் நாலுபக்கத்திலேயும்மகத்தான ஆ-ஆ-வென்கிறசப்தம் உண்டாச்சுது-அப்போது பகவானுனவர் திட புத்தியாயும் உதாகீர்த்தியாயுமிருக்கிற அந்தப் பலிச்சக்கிரவர்த்தியைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்ருர்,

ஸ்ரீபகவான்வாக்கியம்,

வாராய்அசுரசிரேஷ்டனே-எனக்கு உன்னல் மூன்றடிகொடுக்கப்பட்டதுகள், நம்மால் இரண்டடிகளினல்பூமிஅந்தரிஷதங்களும் ஆக்கிரமிக்கப்பட்டதுகள் மூன்ருவதான அடிக்கு விஷயத்தைத்தரவேணும்கொடுக்கிரேுமென்றுசொன்னதைக் கொடாதவுனக்கு நரகவாசம் இச்சிக்கப்படும் எவன் யாசகன்பொருட்டு அர்த்தத்தைக்கொடுக்கிரேுமென்று பிரதிக்கினேபண்ணி அதைக்கொடுப்பதற்குச்சமர்த்தனுகாமற்போகிருனே அவனுடையமனேரதம்வியர்த்தமே அப்படிப்பட்டவனுக்குச்சுவர்க்கமான தூரமாகி அவன்பாதாளலோகத்திலேவிழுவன்-கொடுக்கிறேனென்று சொன்னவுன்னல்நான்வஞ்சிக்கப்பட்டபடியால் அசதியமலமான நரகத்தைசிலகாலம் அனுபவிக்கக்கடவாயென்று பகவானுனவர் திருவாய் மலர்ந்தருளினர்,

## உஉ-வது-அத்தியாயம்,

கலிவிருத்தம்.

பன்னிடும்பக வான்பிரசன்னராய்த்
துன்னுமாபெலி யைச்சுதலலோகத்தில்
மன்னிடச்செய் தவனுக்குவேண்டிய
இன்னலில்லா வரங்களேயீந்தனர்.

ஸ்ரீஅரியானவர் பிரசன்னராய்பலிச்சக்கிரவர்த்தியைசுதலலோகத்தில்ஸ்தாபித்து அவனுக்கிஷ்டமான வரங்களேக்கொடுத்துத் தாமும்அவடத்திற்போய்அவனுடையதுவாரபாலகனுனென்று சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் பரிட்சித்து மகாராசனே இந்தப்பிரகாரம் பகவானுல் பலிச்சக்கிரவர்த்தியானவன் வஞ்சிக்கப்பட்டுசத்தியந்தப்பாதமனதையுடையவனுய் அப்போதுகெம்பீரமான ஒருவார்த்தை சொல்லுகிறுன்,

பலிச்சக்கிரவர்த்திவாக்கியம்,

உத்தமமான கீர்த்தியையுடையவரே-தேலசிரேஷ்டரே நீர்கபடவாமனமூர்த்தியாய் சிறியவடிவைக்காட்டிபெரியகாலாலளந்துகொண்டும் எனதுவசனத்தை அசத்தியமாகஎண்ணினீர் ஆகையால் எனது வசனமானது அசத்திய மாகாமற்படிக்கு உம்முடைய மூன்ருவதடியையென்னுடைய சிரசில் வைக்கக்கடவீர் நான்என்னபூமியையிழந்தாலும நரகத்தை யனுபவித்தாலும் அபகீர்த்திக்கு மாத்திரம்பயப்படுகின்றேன்ஆனலும் உம்மா

ல்நானிப்போ தடைந்திருக்கும் துன்பத்திற்கு எவ்வள வுபயப்படவில்லே, பாகவதசிரோமணியாயும், பிரசித்த மானஎஜசையுடையவனும் எனக்குப்பாட்டனுயுமிரு க்கிற பிரகலாதனரானவர் உமக்குச்சத்துருவாயிருக்கிற தம்முடையபிதாவினல் நானுவிதஇமசைகளே அடைவி க்கப்பட்டிருந்தாலும் உம்மையேபரமகதியாக ஆஸ்ரயி த்து தேகத்தினுலும் தனத்தினுலும் புத்திராள்முதலா னபேர்களாலும் பாரியினுலும் கிரகங்களினுலும் என் னபிரயோசனமென்று நிற்சயித்து பிரசித்தராயும்மகா னுயும் அகாதமான கியானத்தையுடையவராயும் சத்து க்களுக்கெல்லாம் சிரேஷ்டராயும் எனக்குப்பட்டனுயு மிருக்கிற பிரகலாதனரானவர் ஜெனனமரணத்தில் நின் றும்பயந்தவராய் தயித்தியகுலத்தை நாசம்பண்ணு நின் றஉம்முடைய சாசுவதமான பாதாரவிந்தத்தைப் பற்றி னரல்லவா ஆகையால் நானும்தெய்வ எத்தனத்தினுல் எனக்குச் சத்துருவான உம்முடைய சமீபத்தை யடை ந்தேன்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் பரிட்சித்துமகாராசனே. இந்தப்பிரகாரம் பகவானேப்பார்த்து பலிச்சக்கிரவர்த்தியானவன் சொல் லிக்கொண்டிருக்கும்போது அவடத்தில்பகவானுக்குப் பிரியபக்தனுன பிரகலாதனரானவர் பூர்ணச்சந்திரனுதி த்தாற்போலவந்தார் அப்போது இந்திரசேனனுனபலி ச்சக்கிரவர்த்தியானவன் தனக்குப்பாட்டனுன பிரகலா தனைப்பார்த்து வருணபாசத்தினுல் கட்டப்பட்டவனுய் அந்தப்பிரகலாதருக்குமுன்போலவுபசரியாமல்சிரசினு ல்மாத்திரம்வணங்கினுன் அப்போது மகானுபாவரான பிரகலாதரும் ஸ்ரீஹரியைப்பார்த்து பூமியில் வணக்கத் துடனேவந்து பலிச்சக்கிரவர்த்தியினிடத்தில் பகவானு ல்பண்ணப்பட்ட அனுக்கிரகத்தையும்பார்த்து ரோமா ஞ்சம் ஆனந்தபாஷ்பம் இதுகளேயுடையவராய்பிரகலா தரானவர் சுவாமியைச்சிரசினுல் பிரணமம்பண்ணிஒரு வார்த்தைசொல்லுகிறுர்,

பிரகலாதனன்வாக்கியம்.

வாரீர் பகவானே பூசிக்கப்பட்ட இந்த இந்திரபத மானது உம்மாலேயேகொடுக்கப்பட்டிருந்து திரும்பவு ம் உம்மாலேயேஅபகரிக்கப்பட்டது, யாதொருகாரண த்தினுல் இந்தப்பலியானவன் சம்பத்தாகிற ஆத்மாவி னுடையமகாமோகத்தில்நின்றும் விடுவிக்கப்படானே ஆகையினுல் இப்போதிவனுக்கு உம்மாலேமகத்தாகிய அனுக்கிரகம்பண்ணப்பட்டது அப்படிப்பட்ட பரமாத் மாவாயும்.ஜெகதீஸ்வரனுயும் அகில லோகங்களுக்குச் சாக்ஷியாயும் நாராயணனென்று பிரசித்தராயுமிருக்கிற உமக்குப் பிரணமம்பண்ணுகிறேனென்று அஞ்சலிபந் தம்பண்ணிக்கொண்டிருக்கும்போதுபூச்சியனுன பிர்ம தேவன் சுவாமியைப்பார்த்து ஒருவார்த்தைசொல்ல உ த்தேசிக்கும்போது பலியினுடைய பத்தினியானவிந்தி யாவலிசொல்ல யத்தனித்ததைப் பார்த்து வெறுமையி ருந்தார், அந்தப்பலியினுடைய பத்தினியாயும், பதிவி ருதையாயுமிருக்கிற விந்தியாவலியானவள் வருணபா சத்தினுல்கட்டப்பட்டபதியைப்பார்த்து பயத்தினுலேந டுங்கிவணக்கத்துடனே அஞ்சலிபந்தஞ்செய்துதலேயை யிறங்கிக்கொண்டு பகவானேப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறுள்,

விந்தியாவலிவாக்கியம்.

வாரீர் ஈசனே உமக்குலீலார்த்தமாகஇந்தமூன்று லோகமும் உம்மால்சிருஷ்டித்திருக்கின்றது, அப்படிப் பட்ட இந்தமூன்றுலோகத்திலேயும் கியானலீனுளான சிலபேர் தாங்களேசுவாமியென்கிற புத்தியைக்கொண் டிருக்கிறுர்கள், இந்தஜெகத்தைசிருஷ்டித்தும் ரட்சித் தும் சங்கரித்துக்கொண்டுமிருக்கிற உமக்குலச்சையில் லாதவர்களாயும்.உம்மாலேதள்ளப்பட்ட சுவாதந்திரிய த்தையுடையவர்களாயுமிருக்கிற யுகராள்எதைசமர்ப்பி க்கப்போகிறுர்கள் இதற்குத்தர்மபரியமென்னவென்று ல்,நம்மாலே மூன்றுலோகமும்பகவானுக்குக்கொடுக்க ப்பட்டது மூன்றுவதடிக்கு தேகத்தையுங் கொடுத்துப் பிரதிக்கினேயை நிறைவேற்றப்பட்டதென்று தேகமுத லானவைகளில் சுவாம்மியத்தைவகித்துச்சொல்லாநின் ற இந்தப்பலியானவன் புத்தியீனனுயும்.லச்சையில்லா தவனுயுமாகின்றுன் நீரோ யிந்தமூன்றுலோகத்துக்கும் பதியாகநிற்கின்றீர்ஆகையினுல் புத்தியீனனுன இந்தப் பலியை நீரே கேவலம் கிருபையினுல்பாசபந்தத்தில்நி ன்றும்விடுவித்து ரட்சிக்கக்கடவீரென்று விந்தியாவலி சொன்னதற்குத் தாற்பரியம் பிர்மதேவன்சொல்லுகின் றுன்.

பிர்மதேவர்வாக்கியம்.

வாரீர் பூதங்களேஉண்டாக்கிஅவைகளுக்குநியந்தா வானவரே தேவதேவனே ஜெகன்மயனே - சர்வசொத் தையும் உம்மிடத்தில் சமர்ப்பித்த இந்தப்பலியை விட் டுவிடும்இவன்நிக்கிரகத்துக்குயோக்கியனன்றுஉதாரமா னபுத்தியினுல் சர்வசொத்தும் ஆத்மாவும்சமர்ப்பிக்கப் பட்டது யாதொருபகவானுடைய பாதாரவிந்தங்களில் பக்தியையுடைய புருஷனுனவன் அறுகம் புல்லுடனே கூட ஜலமாத்திரத்தை சமர்ப்பித்து சிரேஷ்டமான பூ சையைப்பண்ணிஉத்தமமானகதியை அடைகின்றுனல் லவா இந்தப்பலியோவென்றுல் உமக்கு மூன்றுலோ கத்தையும் சமர்ப்பித்து உதாரமனதாயுமிருக்கிறவன்எ ப்படிதான் விசனத்தைஅடையமாட்டானென்றுசொல் லாநின்றபிர்மாவைப்பார்த்து ஸ்ரீவாமனரூபியானபகவா னுனவர் சொல்லுகின்றுர்,

ஸ்ரீபகவான்வாக்கியம்.

வாராய்பிர்மதேவனே, நான் யாவனொருவனை அனுக்கிரகிக்கிறேனே அவனுடையஅர்த்தங்களை அபகரிப்பேன் யாவனொருவன் மனுஷியஜென்மத்திலே ஜென்மத்தினாலேயும் கர்மத்தினாலேயும் வயதினாலேயும்ரூபத்தினாலேயும்,வித்தையினாலேயும் அயிஸ்வரிய முதலானவைகளினாலேயும் இந்தச்சீவனுக்குக்கர்வமுண்டாகாமலிருந்துதேயாகில் அவனிடத்தில்என்னுடைய அனுக்கிரகமிருக்கிறதென்று அறியத்தக்கது வாராய்சதுர்முனே தயித்தியதானவசிரோஷ்டனாயும், விஸ்தாரமான கீர்த்தியையுடையவனாயுமிருக்கிற இந்தப்பலியானவன் என்னுடையமாயையைஜெயித்தான், இவன் மகாகஷ்டத்தைஅடைந்தும், ஸ்தானப்பிரஷ்டனாயும், அயிஸ்வரியமிழந்தவனாயும், பந்துக்களால் நிராகரிக்கப்பட்டவனாயும்-சத்துருக்களினால் கட்டப்பட்டவனாயும் வியாதிகளினால்விடப்பட்டவனாயும், யாதனையைஅடைவிக்கப்பட்டவனாயும், குருவினால் மிரட்டப்பட்டும் சபிக்கப்பட்டவனாயுமிருந்தாலும் நல்ல விரதத்தையுடைய இந்தப்பலியானவன்சத்தியத்தைவிடவில்லை, கபட வசனங்களினால்நம்மாலேதர்மம்சொல்லப்பட்டிருந்தாலும்இந்தப்பலியானவன் (வரப்போகிறசாவற்னி மனுவந்தரத்திலே) தர்மத்தைவிடவில்லை, ஆகையினால் தேவர்களாலேயும்அடையக்கூடாதஸ்தானத்தை நம்மால்இவன்அடையப்பட்டான் இந்தப்பலியானவன் வரப்போகிற சாவர்னி மனுவந்தரத்தில் இந்திரனாகப் போகிறான் அதுவரைக்கும்விசுவகர்மாவினால்நிர்மிக்கப்பட்ட சுதலலோகத்தில்இருக்கக்கடவன், வாராய் இந்திரசேனமகாராசனே உனக்குநன்மைஉண்டாகக்கடவது உன்னுடைய ஆக்கினையை அதிக்கிரமியாநின்ற தயித்தியாளை என்னுடைய சக்கிரமானது சங்கரிக்கப்போகின்றது சர்வபூதாந்திரியாமியானநான் பரிஜெனவுபகரணங்களோடுகூடிக்கொண்டிராநின்ற உன்னைச் சர்வகாலத்திலும்ரட்சிக்கப்போகின்றேன்வாராய்வீரனே,நீஅவடத்திலேசர்வகாலமும்சந்நிதானத்திலிராநின்றஎன்னை பார்த்துக்கொண்டிருக்கப்போகிறாயென்று பகவானானவர் திருவாய்மலர்ந்தருளினார்,

## ௨௩ - வது அத்தியாயம்

கலிவிருத்தம்.

பாட்டனானப்ரக லாதனன்றன்னுடன்
வாட்டமிற்பலிச் சக்ரவர்த்தியானோன்
நாட்டமாய்ச்சுதல லோகநண்ணினதும்
ஆட்டமாமிந்த்ர னடைந்தனன்சுவர்க்கத்தை,

பாட்டனான பிரகலாதனோடு கூட பலிச்சக்கிரவர்த்தியானவன் சுதலலோகத்தைஅடைந்தானென்றும் இந்திரனானவன் உபேந்திரனோடேகூட சுவர்க்கத்தை அடைந்துமுன்போலச் சந்துஷ்டராயிருந்தாரென்றுசொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய் பரிட்சித்துமகாராசனே இந்தப்பிரகாரம் சொல்லாநின்ற புராணபுருஷனைக்குறித்துமகானுபாவனாயும்,சமஸ்தசாதுசெனங்களுக்கும்சம்மதனாயுமிருக்கிறபலிச்சக்கிரவர்த்தியானவன் அஞ்சலிபந்தத்துடனே ஆனந்தபாஷ்டங்களினால் வியாபிக்கப்பட்ட நேத்திரங்களையுடையவனாயும், மிகுந்தபக்தியையுடையவனாயும்தளைழத்தசொல்லுகளினாலேயும் ஒருவார்த்தை சொல்லுகின்றான், வாரீர்பகவானே, லோகபாலாளாயும், சத்துவகுணப்பிரதானாளாயுமிருக்கிற தேவர்களாலேயும், அடையப்படாத உம்முடைய அனுக்கிரகமானது அதிநீசனாயும், ராட்சசனாயும், அசுரனாயுமிருக்கிற என்னிடத்தில் அடையப்பட்டிருக்கின்றது. அப்படிப்பட்டமகிமையை என்ன சொல்லப்போகிறேனென்று பலிச்சக்கிரவர்த்தியானவன் ஸ்ரீஅரியைப் பிரணமம்பண்ணி பிற்பாடு ருத்திரனோடுகூடிக்கொண்டிருக்கிற பிரமதேவனையும்பிரணமம்பண்ணி பாசத்தினால்விடப்பட்டவனாய் சந்துஷ்டனாய் தனனவாளான அசுராளோடுகூடசுதலலோகத்தைப்பிரவேசித்தான், அப்போது உபேந்திரரான பகவானானவர் இந்திரனுக்கு சுவர்க்கலோகத்தைத்திரும்பவுங்கொடுத்து அதிதியினுடையகோறிக்கையுமீடேற்றி சகலஜெகத்தையும் பாலனம்பண்ணினார். அப்போதுபகவத்பிரசாதத்தை யுடைய்வனாயும்-வருணபாசத்தினால் விடப்பட்டவனாயும் வம்சோத்தாரகனாயும் பக்தி சிரேஷ்டனாயு மிருக்கிற பிரகலாதனரானவர் ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

பிரகலாதனன்வாக்கியம்.

வாரீர்பகவானே-பிரம்மாதிகளால் சேவிக்கப்படாநின்ற பாதாரவிந்தத்தையுடைய நீர் அசுரர்களான எங்களுக்குக் துவாரபாலரானீர், யாதொருஉம்முடையபாதாரவிந்த மகரந்தசேவையினால் பிரம்மா முதலானபேர்களெல்லாம் ஐசுவரியத்தை யனுபவிக்கின்றார்கள், அப்படிப்பட்ட உம்முடைய தயாபூர்ணமான கடாட்சமார்க்கத்தை மூடபுத்திகளாயும் துஷ்டசாதியிலே பிறந்துமிருக்கிறநாங்களும் எந்த ஏதுவினால் அடைவிப்பிக்கப்பட்டோமென்று சொல்லுகின்ற பிரகலாதனனைப் பார்த்துபகவானானவர் சொல்லுகின்றார்,

ஸ்ரீபகவான்வாக்கியம்.

வாராய்குழந்தாய் பிரகலாதனனே- உனக்கு மங்களமுண்டாகக்கடவது-நீ-சந்துஷ்டனாய் உன்னுடைய பவுத்திரனான பலிச் சக்கிரவர்த்தியோடுகூட சுதலலோகத்தையடைந்து வியாதிகளுக்கெல்லாஞ் சுகத்தை உண்டாக்கக்கடவாயென்றுசொல்லாநின்ற ஸ்ரீபகவானுடைய

ஆக்கினையைப் பிரகலாதனரானவர் அங்கீகரித்துச் சிரசில்வகித்து அஞ்சலியந்தத்தையுடையவராய்பலிச்சக்கிரவர்த்தியோடுகூட ஆதிபுருஷனை ஸ்ரீபகவானைப் பிரதட்சணப்பிரணாமம்பண்ணி அவருடைய அனுமதிபெற்றவனாய் சமஸ்தமான அசுரர்களோடு கூடமகாபிலமானசுதலலோகத்தைப் பிரவேசித்தார் பின்பு நாராயணரான ஸ்ரீஅரியானவர் பிருமவாதிகளான ரித்துக்களுடையாகவில் தம்முடையசமீபத்திலிராநின்ற சுக்கிரனைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றார்,

வாரீர்பிர்மநிஷ்டரே எக்கியகர்மத்தைப் பண்ணாநின்றசிஷியனுக்கு எக்கியவிக்கினம்வந்தது அதைப்பூரணமாகநிறைவேற்றிவையும் கர்மங்களினால்என்னகுறைவுவந்திருக்கிறதோ அதுபிராமணர்களால் பார்க்கப்பட்டமாத்திரத்தில் சம்பூரணமாகும் ஆகையால்அவர்களாலனுஷ்டிக்கப்பட்டது சம்பூரணமாமென்பதற்குச் சொல்லவேண்டியதென்னவென்று இந்தப்பிரகாரஞ் சொல்லாநின்ற ஸ்ரீ பகவானைப் பார்த்து சுக்கிரன் சொல்லுகின்றார்,

சுக்கிரன்வாக்கியம்.

வாரீர்பகவானே, கர்மங்களுக்குப் பிரவர்த்தகனாயும் எக்கியமயபுருஷனாயுமிருக்கிற நீர்என்னுடைய சர்வபாவத்தினாலேயும் பூசிக்கப்பட்டீரோ அப்படிப்பட்டவனுடையகர்மத்திலே குறைச்சலானது எதிலுண்டாகப்போகின்றது லோகத்தில் மந்திர தந்திரங்களினாலேயும் தெசகாலங்களினாலேயும் பாத்திரவஸ்துக்களினாலேயும்,கர்மத்திலுண்டான குறைவுகளெல்லாம்உம்முடைய நாமசங்கீர்த்தனமே சம்பூர்ணமாகப் பண்ணுகின்றது, ஆனாலும் இந்தப்பிரகாரம் ஆக்கியாபியாநின்ற உம்முடைய ஆக்கியயைச்செய்கிறேனென்றுஸ்ரீ அரியினுடையஆக்கியயைச் சந்தோஷித்தவனாய் ஸ்ரீபகவானை சுக்கிராசாரியானவர் பலிச்சக்கிரவர்த்தியினுடைய எக்கியத்தின்குறைவை பிராமணர் ரிஷிகள் இவர்களோடுகூட சம்பூர்ணமாகப்பண்ணினார்.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்பரிட்சித்துமகாராசனே,வாமனரானஸ்ரீஹரியானவர் இந்தப்பிரகாரம் பலியினிடத்தில்நின்றும் பூமியையாசித்துப் பிராதாவான இந்திரனுக்குச்சத்துருக்கர்களால் அபகரிக்கப்பட்ட சுவர்க்கத்தைத் திரும்பவுங்கொடுத்தார் பிரஜாபதிகளுக்கெல்லாம் பதியானபிர்ம்மதேவரானவர்-தேவர்கள்-ரிஷிகள்-பிதுர்க்கள்- மனுக்கள்-தெக்ஷன்-பிருகு-அங்கிரசு-இவர்கள் முதலானவர்களோடும் ருத்திரனோடு சனற்குமாரர்களோடுங்கூடினவராய் கசியபர்-அதிதி-இவர்களுக்குப் பிரீதியின் பொருட்டும் சர்வப்பிராணிகளுக்கு க்ஷேமத்தின் பொருட்டும் லோகங்கள்-லோகபாலாள் - வேதங்கள் - சமஸ்த தேவர்கள் தர்மம்-தபசு-சம்பத்து-மங்களங்கள்-விருத்தங்கள்- சுவர்க்கம்-மோட்சம்-இதுகளுக்கெல்லாம் வாமனமூர்த்தியான ஸ்ரீபகவான்ரக்ஷணத்தில் சமர்த்தராகையால் பதியாகப்பண்ணினார் அப்போது சமஸ்தமானபிராணிகளும் மிகவுஞ்சந்தோஷத்தையடைந்தார்கள் பின்புஇந்திரனானவனும் வாமனமூர்த்தியான ஸ்ரீபகவானை முன்னிட்டுக்கொண்டும் விமானரூடராயும் பிர்மதேவருடையஅனுமதிகொண்டவனாயும் லோகபாலாளோடுங்கூட சுவர்க்கத்தையடைந்தான் அப்போது இந்திரனானவன்உபேந்திரரான வாமனருடைய புஜத்தினால் ரட்சிக்கப்படாநின்றமூன்றுலோகத்தையுமடைந்து பரமமானஐஸ்வரியத்தையடைந்தவனாய் நிற்பயனாகச் சந்தோஷித்துக் கொண்டிருந்தான் வாராய்மகாராஜனே கேழ்க்கிறபேருடையசமஸ்தமான பாபங்களையும் போக்கடிக்கின்றதிரிவிக்கிரமருடைய இந்தச்சரித்திரமானது என்னால் உனக்குச் சொல்லப்பட்டது,

## உ௪-வது-அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்,

மன்னியபிரசங்கத்தால் மச்சியமூர்த்தியான
நன்னயவரியின்லீலை நடந்தபின்சமுத்ரந்தன்னில் (லப்
துன்னியசத்தியவிருதன் துகளில்ரட்சணத்தைச்சொல்
பன்னிடும்புலவரோறே பரிந்திதைக் கேண்மினென்றார்,

கதாப்பிரசங்கத்தினால் மச்சியமூர்த்தியான துஸ்ரீஹரியினுடையலீலையும், பிற்பாடு மகாசமுத்திரத்தில்சத்தியவிருதனுடையரட்சணமுஞ் சொல்லப்படுகின்றது,

பரிட்சித்துவின்வாக்கியம்,

வாரீர்பகவானேஆச்சரியமானசெயலையுடையவரானஸ்ரீஅரியினுடைய பூர்வமானமச்சியாவதார கதையைக்கேழ்க்கஇச்சிக்கிறேன் எதற்காக ஸ்ரீபகவானானவர் கர்மவசியனைன்புருஷனைப்போல லோகத்தில் நிந்திக்கப்பட்டதாயும் தாமசப்பிரகிருதியாயுஞ் சகிக்கக் கூடாதாயுமிருக்கிற மச்சியரூபத்தை யாதுகாரணத்தினாலே தரித்தார் உத்தமகீர்த்தியான இந்தப் பகவானுடைய சரித்திரத்தையெல்லாம் உள்ளபடிஎனக்குச் சொல்லவேண்டுமென்று பிரசினம்பண்ணுகின்றபரிட்சித்துமகாராஜனைப்பார்த்து சுகப்பிர்மரிஷியானவர் ஸ்ரீமகா விஷ்ணுவினுடையமச்சியாவதாரகதையைச்சொல்லத்தொடங்கினார்

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்துமகாராஜனே,சர்வநியந்தாவானஈஸ்வரனானவர்-பசுக்கள்-பிராமணர்கள் - தேவர்கள்-சற்புருஷர்கள்-வேதங்கள்-தர்மம்-அர்த்தம்- இவைகளையெல்லாம்ரட்சிக்க இச்சைகொண்டு நானாவிதரூபங்களைத்தரிக்கின்றார் போனகல்பத்தினுடையஅந்தத்தில்பிர்ம்மாவினுடையசித்திரையினால் உண்டான நைமித்திகவென்

றுசொல்லப்பட்டபிரளயம்உண்டாச்சுது அந்தப்பிரளயத்தில் பூமிமுதலான லோகங்களெல்லாஞ்சமுத்திரத்தில்முழுகிப்போச்சுதுகள் அப்போதுகாலவசத்தினல் நித்திரையையடைந்து சயனிக்கவேணுமென்கிறஇச்சையையுடையவனன பிர்மதேவனுடைய முகத்தில்நின்றும் உண்டாகாநின்ற வேதங்களைச் சமீபத்தில்இராநின்ற அயக்கிரீவாசுரனனவன் அபகரித்தான் அப்போதுஸ்ரீபகவானும் சர்வநியந்தர்வாயுமிருக்கிற ஸ்ரீஅரியானவர் தானவேந்திரனன அயக்கிரீவனுடைய சேஷ்டையையறிந்து மச்சியரூபத்தைத்தரித்தார் அந்தக்காலத்தில்சத்தியவிருதனென்றுபெயரையுடையவனும் மகானும் பகவானிடத்தில் பக்தியுடையவனுமிருக்கிற ஒரு ராஜரிஷியானவன் ஜலத்தையேபானம்பண்ணிக்கொண்டு தபசுசெய்துகொண்டிருந்தான் யாதொரு அந்த சத்தியவிருதனென்கிறராஜாவே இந்தக் கல்பத்தில் விவசுவானுடைய பிள்ளையாயும் சிரார்த்ததேவனென்று பிரசித்தனும் ஸ்ரீஅரியினல் மனுவாகக்கல்பிக்கப்பட்டிருக்கின்றன் அந்தராஜரிஷியானவன் ஒருக்கால் கிருதமாலாநதியில் ஜலதர்பபணஞ் செய்யும்போது அவனுடைய கையில் இராநின்றஜலத்தில் ஒருமச்சியமானது இருந்தது திரவிடதேசாதிபதியான அந்தச் சத்திய விருதனென்கிறராஜரிஷியானவன் தன்கைஜலத்தில்இராநின்ற அந்தமச்சியஜலத்தோடுகூட நதிஜலத்திலே விட்டுவிட்டான்,அப்போது அந்தமச்சியமானதுமகாதயாளுவான அந்தச்சத்தியவிருதனைக்குறித்து, மிகவும் தயினியத்தோடு ஒருவார்த்தைசொல்லிற்று,

வாராய்ராஜரிஷியே-தீனளிடங்களில் வாச்சல்லியத்தையுடையவனே தன்னினத்தைக் கொல்லாநின்றஜலசெந்துக்களில்னின்றும் பயந்திராநின்ற என்னைஇந்தநதிஜலத்தில் எப்படி விட்டுவிடுகிரீரென்று மச்சியமானதுசொல்லவே அந்தச்சத்தியவிருதனனவன்பிரீதியினல்தனக்கு அனுக்கிரகம்பண்ணுகிறநிமித்தியமாக மச்சியரூபத்தைத்தரித்த சுவாமியென்றறியாமல் அந்தமச்சியத்தைத்தான் ரட்சிக்கவேணுமென்றுநினைத்து தயாளுவான சத்திய விருதனென்கிற ராஜரிஷியானவன் மச்சியத்தினுடைய தீனமான வார்த்தையைக் கேட்டு அந்தமச்சியத்தைத் தன்னுடைய கமண்டலசலத்தில்வைத்துக்கொண்டு தனது ஆசிரமத்தை வந்துசேர்ந்தான்-அந்தமச்சியமோவென்றல் அந்தக்கமண்டல ஜலத்தில் ஒருராத்திரியில் மிகவும்பெரிதாகவளர்ந்து கமண்டல ஜலத்தில் அடங்காத சரீரத்தையுடையதாய் ராஜரிஷியைக்குறித்து ஒருவார்த்தை சொல்லியது,

வாராய்ராஜரிஷியே-நானிந்தக் கமண்டலப்பாத்திரத்தில்கஷ்டமாக வாசம்பண்ணமாட்டேன்-எந்த இடத்தில்சுகமாக வாசம்பண்ணுவேனே அப்படிப்பட்ட பெரிதான ஸ்தானத்தைக் கல்பிக்க வேணுமென்று மச்சியமானதுசொல்ல, ராஜரிஷியும் அந்தமச்சியத்தைக் கமண்டலத்தில்நின்றும் எடுத்துப் பெரிதாகியகொப்பறைஜலத்திலேவிட்டார். அந்தக்கொப்பறையிலேயும் அந்தமச்சியமானது ஒரு முகூர்த்தகாலத்தில் மூன்றுமாரளவாகவளர்ந்து அந்தராஜரிஷியைப்பார்த்து இந்தக்கொப்பறையும் எனக்குச்சுகமாக வாசம்பண்ணுகைக்குயோக்கியமன்று, இதைக்காட்டிலும் விஸ்தாரமானவிடத்தையெனக்குத்தரவேணும் உன்னை நான்சரணமாக அடைந்தேனென்றுசொல்ல, அவடத்தில்நின்றும் அந்தமச்சியத்தையெடுத்து ஒருசரசிலேவிட்டான். அப்போது அந்தமச்சியமானது அந்தச்சரசையெல்லாந்தன்னுடைய சரீரத்தில் வியாபித்துக்கொண்டு மகாமச்சியமானது வளந்து அந்த இராஜாவைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லிற்று,

வாராய்ராஜரிஷியே, ஜலத்தையே யிருப்பிடமாக வுடையஎனக்கு இந்தமடுச்செலமும் சுகமாகவாசம் பண்ணுகைக்குப்போதாது-ஆகையால் அகாதமாயும்வடியாமலிராநின்றமடுவிலேயென்னைவிடவேணுமென்றுசொல்லராஜரிஷியும்-அந்தமச்சியத்தை உபாயத்தினல் வடியாமலிராநின்ற மடுக்கள்தோறுங் கொண்டுபோய் விடவும்-அந்தமடுக்களுககுச் சரியாக வளராநின்ற மச்சியத்தைச்சமுத்திரத்தில் கொண்டுபோய்விட்டான்அப்போது அந்தமச்சியமானது ராஜ ரிஷியைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லிற்று, வாராய்விரனே இந்தச்சமுத்திரத்தில்திமிங்கலமுதலான சகலசெந்துக்கள்என்னைப்பட்சித்துவிடும்-ஆகையால் இங்கேயென்னைவிட்டுவிடுகைக்குயோக்கிய மல்லவென்று சமத்காரமாக வார்த்தையைச்சொல்லாநின்ற அந்தமச்சியத்தினல் மோகத்தைஅடைந்தவனய் ராஜரிஷியானவன் அந்த மச்சியத்தைப்பார்த்துஒருவார்த்தை சொல்லுகின்றன்,

வாரீர தேவனே-நீ-ராமச்சியரூபத்தைக்கொண்டுஎன்னைமோகிக்கும்படிசெய்கிரீர் சகலசெந்துக்களில்இவ்வளவுவீரியத்தையுடைய செந்துவானதுஇதற்குமுன்நம்மாலே காணப்பட்டதில்லை கேழ்க்கப்பட்டது மில்லையாதொருநீர் நூறுயோசனைவிஸ்தாரமான ஒருசரசெல்லாம் அடங்க வொருபகலில்வியாபித்தீரோ ஆகையால்நீர் சாட்சாத் நாராயணராயும்-நிர்விகாரராயும் ஆசிரதபாபநிவர்த்தகராயு மிருக்கிற ஸ்ரீஹரியே ஆகவேணும் லோகங்களையெல்லாம் அனுக்கிரகிக்கின்ற நிமித்தமாய் ஜலசெந்துக்களுடைய ரூபத்தைத்தரித்திருக்கின்றீர் ஆகையால்இந்தரூபம் எதற்காகவும்மாலே தரிக்கப்பட்டதோ அதையறியவேணுமென்று இசசிக்கின்றேனென்றுசொல்லாநின்ற சத்தியவிரதனென்கிற ராஜ ரிஷியைப்பார்த்துமச்சிய ரூபியாயும் - பக்தஜெனங்களை இஷ்டாளாகவு

டையவராயும்-செகத்ரட்சகராயும்-செகநாதனானசுவாமியானவர் யுகப்பிரளயத்தில் சமுத்திரத்திலே லீலைபண்ணவேணுமென்கிற இச்சையையுடையவராய்தம்முடையசங்கல்பத்தைச் சொன்னார்.

மச்சாவதாரபகவான்வாக்கியம்.

வாராய்ராஜரிஷியே-இன்றைக்குயேழாநாள் இந்த பூமிமுதலான மூன்றுலோகமும்பிரளயசமுத்திரத்தில்முழுகப்போகின்றது. அப்போது நம்மால்ஏவப்பட்டதாயும் விசாலமாயும் ஒருஓடமானது உன்னைஅடையப்போகின்றது நீயும் சமஸ்தமான ஓஷதிகளையும் நானாவிதங்களானவித்துக்களையும் அந்தவோடத்தில் ஏற்றிக்கொண்டு சப்தரிஷிகளோடும் சர்வபலத்தோடுங்கூடினவனாய் அந்தப்பெரிதான ஓடத்தில் ஏறிக்கொண்டு மகா அந்தகாரமானசமுத்திரத்தில் மகா ரிஷிகளுடைய கடாட்சத்தினால் தீரனாய் சஞ்சரிக்கப்போகிறாய் அப்போது மகாபலவானானவாயுவினால் அலைக்கப்பட்ட அந்தவோடத்தை சமீபத்தில்வாராநின்ற என்னுடையகொம்பிலே சேர்த்து மகாசர்ப்பத்தினால் இழுத்துக் கட்டக்கடவாய் அப்போது நான் ரிஷிகளோடுகூட இராநின்றஉன்னையும் ஓடத்தையு மிழுத்துக்கொண்டு பிரம்மாவினுடையராத்திரிகாலமானது எவ்வளவோஅவ்வளவுகாலமும் சமுத்திரத்தில்சஞ்சரிக்கப்போகிறேன் அப்போது-நீபண்ணப்பட்ட பிரசனங்களினால் பரப்பிர்மசுரூபமான என்னுடையமகிமையை எதார்த்தமாக அறியப்போகிறாயென்று ஸ்ரீஅரியானவர்அந்தராஜரிஷியைப்பார்த்து ஆக்கியாபித்து அவ்விடத்திலேயேஅந்தர்த்தானமானார், அப்போது அந்தராஜரிஷியும் ஸ்ரீஅரியினாலேஆக்கியாபிக்கப்பட்ட காலத்தைப்பார்த்து கிழக்கேநுனியாகத்தெர்ப்பைகளைப்பரப்பிக்கொண்டு அதில் ஈசானியமுகமாயிருந்து மச்சியரூபியான ஸ்ரீஅரியினுடைய பாதாரவிந்தங்களைத் தியானம்பண்ணிக்கொண்டிருந்தான்.

பின்பு சமுத்திரமானதுவருஷிக்கப்பட்ட மேகங்களினால்விர்த்தியடைந்து கரைபுரண்டு பூமியெங்கும் வியாபித்தது, அந்தராஜரிஷியும், பகவத்பாதாரவிந்தத்தைத்தியானம்பண்ணிக்கொண்டிருக்கும்போது தன்னண்டையேவராநின்றவோடத்தைப்பார்த்து அந்தவோடத்தில் ஓஷதிகளையெல்லாமேற்றிக்கொண்டு சப்தரிஷிகளோடுகூட தானுமேறிக்கொண்டான். அப்போது அந்தரிஷிகளெல்லாம் சந்துஷ்டர்களாய் அந்த ராஜரிஷியைப்பார்த்து பகவானுடைய பாதாரவிந்தத்தைத்தியானம்பண்ணுவீராகில் நம்மை இந்தச்சங்கடத்தில்நின்றும் ரட்சிப்பாரென்றுசொல்லாநின்ற அந்தரிஷிகளுடைய வார்த்தையைக்கேட்டுராஜரிஷியும் பகவானையேதியானம்பண்ணிக்கொண்டிருந்தார், பிற்பாடு பகவானானவர் அந்தச்சமுத்திரத்தில் ஒருகொம்பை யுடையவராயும் லட்சம்யோசனைப்பிரமாணமாயுமிருக்கிற சரீரத்தை யுடையவராயும்சுவர்னமயமாயுமிருக்கிற மச்சியமூர்த்தியாக ஆவிர்ப்பவித்தார், அப்போது அந்தரிஷியானவன்ஸ்ரீஅரியினால்எந்தப்பிரகாரம் சொல்லப்பட்டாரோ அந்தப்பிரகாரம் அந்தஓடத்தைக்கயிறுபோலிராநின்றசர்ப்பத்தினாலிழுத்து மச்சியத்தினுடையகொம்பில்சேர்த்துக்கட்டி சந்துஷ்டனாய் மதுசூதனனான சுவாமியைஸ்தோத்திரம் பண்ணினான்.

வாரீர்பகவானே, அநாதியான அவித்தையினால்குழப்பட்ட ஆத்மசுரூபக்கியானத்தையுடையவர்களாயும், அந்த அவித்தியாமுதலான சம்சாரதாபத்திரையத்தினால்பீடிக்கப்பட்டவர்களாயுமிருக்கிறபுருஷாள் இந்தச்சம்சாரத்தில் யாதொருஉம்முடைய அனுக்கிரகத்தினால்ஆசரித்துக்கொண்டு உம்மையேயடைகின்றார்களோ அப்படிப்பட்ட மோட்சப்பிரதரான நீரேஎனக்குப் பரமகுருவாயிருக்கின்றீர் இந்த அக்கியானத்தோடுகூடின ஜெனமானது தன்னுடைய கர்ம பாசத்தினால் கட்டுப்பட்டதாய் சுகிக்கவேணுமென்கிற இச்சையினால்மகாகஷ்டத்தோடுங்கூடின கர்மத்தைப் பண்ணுகின்றது யாதொரு பகவானுடையசேவையினால்புருஷனானவன் அந்தமூடபுத்தியைவிட்டுவிடுகிறானோ அப்படிப்பட்ட பகவானே பரமாசாரியராகநின்றுகொண்டு என்னுடைய இருதயகிரந்தியைபேதிக்கக்கடவீர் எப்படியானால் வெள்ளியானது அக்கினியினுடைய சம்பந்தத்தினால் தன்னுடைய பலத்தைவிட்டுவிட்டு நிஜசொரூபத்தையடைகின்றதோ அப்படிபோல புருஷனானவன் யாதொரு பகவானுடையசேவையினால் மனதினுடைய அக்கியானமாகிறமலத்தைவிட்டுத் தன்னுடையசுரூபத்தையடைகின்றான் நித்தியராயும்,குருவுக்குங்குருவாயுமிருக்கிறஅந்தஈசனான பகவானானவர் எனக்குப்பரமகுருவாகக்கடவர் தேவரீர் பரமார்த்தத்தைப் பிரகாசிப்பியாநின்ற வசனங்களினால் என்னுடைய இருதயத்திலிராநின்ற அகங்காராதிகளைப் பேதித்து தேவரீருடையசுரூபத்தைப் பிரகாசிப்பிக்கக்கடவீரென்றுசொல்லுகின்ற ராஜரிஷியைப்பார்த்து ஆதிபுருஷனாயும்,மச்சியரூபியாயும்,சமுத்திரத்தில்லீலைபண்ணிக்கொண்டிராநின்ற பகவானானவர் ஆத்மதத்துவவுபதேசமும்பண்ணி சாங்கியயோக தர்மக்கியானங்களோடுகூடின மச்சியபுராணத்தையும்சத்தியவிருதனென்கிறராஜரிஷிக்கு உபதேசம்பண்ணினார்.

அந்தராஜாவும்ஓடத்திலேயிருந்துகொண்டு ரிஷிகளோடுகூட சமுசயமில்லாமல்பகவானால் சொல்லப்பட்டசாசுவதமான ஆத்மதத்துவத்தைக் கேட்டார் போனபிரளயத்தினுடைய அந்தத்தில் நித்திரைபண்ணியெழுந்திராநின்ற பிர்மதேவனுக்குப் பகவானானவர் அயக்கிரீவாசுரனைச்சங்கரித்து வேதங்களைத்திரும்பவுங்கொடுத்ததுபோலச்சத்தியவிருதனென்கிறராஜரிஷியானவனும் யோகக்கியானம் ஆத்மக்கியானம்இதுகளோடுகூடினவனாய்ப்பகவானுடையபிரசாதத்தினால் இந்தக்கல்பத்திலே வைவசுதமனுவாக ஆனான்.

எட்டாவதுஸ்கந்தம் - முற்றிற்று.



# ஸ்ரீமகாபாகவதபுராணம்.

## ஒன்பதாவதுஸ்கந்தம்.

### முதலாவது - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

ஆனயிந்துவம் சம்ப்ரவர்த்தகனை
ஈனமிற்சுற் திமினராஜனுக்கு
வானவர்புகழ் ஸ்திரீரூம்வந்தது
ஞானமாக நவிலுவதாகினார்,

சந்திரவம்சப்பிரவர்த்தகனை சுத்தியிமின ராஜனுக்குஸ்திரீரூபம்வந்தது சொல்லப்படுகின்றது.

விஷ்ணுராதனுடையவாக்கியம்,

வாரீர்பிரம்மநிஷ்டரே, உம்மாலேசொல்லப்பட்டிருக்கிற சமஸ்தமனுவந்தரங்களும் என்னால்கேழ்க்கப்பட்டதுகள். அந்தமனுவந்தரங்களில்செய்யப்பட்ட அனந்தவீரியரான ஸ்ரீஅரியினுடைய சரித்திரங்களைக் கேழ்க்கப்பட்டதுகள், திரிவிட தேசாதிபதியான சத்தியவிரதனென்கிற யாதொரு ராஜரிஷியானவன் பூர்வகல்பாந்தரத்தில் மகாபுருஷனான ஸ்ரீபகவானுடையசேவையினால் உத்தமமான கியானத்தையடைந்தானோஅந்தராஜரிஷியே இப்போது வைவசுதமனுவாக இருக்கிறானென்று என்னால்கேழ்க்கப்பட்டது இட்சுவாகுமுதலானராஜாக்கள் அந்தமனுவினுடைய புத்திராளென்று உம்மாலே சொல்லப்பட்டார்கள், அந்தஇட்சுவாகுமுதலானராஜாக்களுடையவம்சத்தையும் வம்சானு சரித்திரங்களையும் நித்தியமாகக்கேழ்க்கவேணுமென்று இச்சையை யுடையவனான எனக்குச்சொல்லக்கடவீரென்று சவுனகமகாரிஷியானவர்கேழ்க்கவே சூதர்சொல்லுகின்றார், வாரீர் சவுனகமகாரிஷியே,இந்தப்பிரகாரம் பிர்மவாதிகளுடையசதசிலே பரிட்சித்துவினால் பிரசினம் பண்ணப்பட்டவராய் பரமதர்மவித்தாயும், இயோனியாயுமிருக்கிற சுகப்பிரம்மரிஷியானவர் ஒருவார்த்தைசொல்லுகின்றார்,

வாராய் பரிட்சித்துமகாராசனே. யாதொருமனுவம்சமானது சவிஸ்தாரமாகச்சொல்லுகைக்கு அநேகவருஷங்களும்போதாது ஆகையாலந்தமனுவம்சத்தில் பிரசித்தாளானவர்களைச்சொல்லுகிறேன் கேளும் எறும்புமுதலாயும்-பிர்ம்மாந்தமாயுமிருக்கிற பிராணிகளுக்கு அந்தராத்மாவாயும், பிரகிருதியைக்காட்டிலும், பராயுமிருக்கிற யாதொரு ஸ்ரீமந் நாராயணருண்டோ அந்த ஸ்ரீமந்நாராயணரோ கல்பாந்தரத்தில் வேறொருபிராணியில்லாமல் தாம்ஒருவரேயிருந்தார், அந்த ஸ்ரீமந் நாராயணருடைய நாபியில்நின்றும் சுவர்னமயமான ஒருபத்மமுகளானது உண்டாயிற்று, அந்தப்பத்மத்திலிருந்து சதுர்முகனான பிரம்மதேவனானவர்உண்டானார் அந்தப்பிரம்மதேவனுடையமனதில்நின்றும் மரீசிப்பிரஜாபதியுண்டானார், அவருக்குக்கசியபர்உண்டானார் அந்தக்கசியபருக்குத் தாட்சாயணியான அதிதியினிடத்தில்விவசுவானென்கிற புத்திரனுண்டானான், அந்தவிவசுவானுக்கு சமுக்கியையென்கிற ஸ்திரீயினிடத்தில்சிரார்த்ததேவனென்கிற மனுவுண்டானான். (விவசுவானுடைய பிள்ளையாகையால் வைவசுதனென்றுஞ்சொல்லப்படும்)அந்தச்சிரார்த்ததேவனென்கிற மனுவானவன்சிரத்தையென்கிற ஸ்திரீயினிடத்தில் இட்சுவாகு வென்றும், நிருகனென்றும் சையாதியென்றும்-திஷ்டனென்றும் திருஷ்டனென்றும், கருஷகனென்றும், நரிஷ்யந்தனென்றும், விருஷேந்திர னென்றும், நரகபானென்றும், கவியென்

றும்பத்துப்பிள்ளைகளைப் பெற்ருன் வசிஷ்டபகவானுன வர் இட்சுவாகுமுதலான பிள்ளைகளுடைய வுற்பத்திக் குமுன்னேபிள்ளையில்லாமலிருக்கிற மனுப்பிரஜாபதிக் குப்புத்திரனுண்டாகிற நிமித்தியமாக மித்திராவருண தேவதையான யாகத்தைப்பண்ணிவைத்தார் அந்தயா கத்தில்பாலேயே ஆகாரமாகவுடையவளாயும் மனுவினு டையபத்தினியாயுமிருக்கிற சிரத்தையானவள் ஹோ தாவைப்பிரணும்பண்ணித் தனக்குப்பெண்ணுண்டா கும்படியாய் ஓமம்பண்ணச்சொல்லி யாசித்தாள் அப் போது அத்துவரியுவினல் ஒப்ஹோதாவே எசிக்கக்கட வையென்று சம்போதிக்கப்பட்டவனுய் ஹோதா சிந்த சமாதானத்தோடேகூடினவனுய் அந்தச் சிரத்தாதேவி சொன்னதை மனதி லெண்ணி அவிஸை யெடுத்துக் கொண்டு வாக்கினல்வஷ்டகாரமந்திரத்தை யுச்சரித்து ஓமம்பண்ணினன் பிற்பாடு பெண் ணுண்டாக வேணு மென்கிறஹோதாவினுடைய நினைப்பினல் இளையென் று ஒருபெண்பிறந்து மனுவானவன் அந்தப் பெண்ணை நோக்கி மனதுசமாதானமில்லாதவனுய் குருவைப்பார் த்துஒருவார்த்தைசொல்லுகின்ருன்.

வைவசுதமனுவாக்கியம்,

வாரீர்பகவானே, பிர்மவாதிகளான வுங்களுடைய கர்மம் எப்படிவிபக்தமர்ச்சுது கர்மத்தில்மந்திரங்கள்வி யர்த்தமாகப்போகிறதில்லேயே இப்படிவிபரீதமாகஎன் னகஷ்டமுண்டாச்சுது நீங்கள்மந்திரத்தை அறிந்தவர்க ளுக்குள்ளே சிரேஷ்டாளானபேர்களாயும் தபசினல்சக லபாபங்களையும் போக்கடித்தவர்களா யிருக்கின்றவர்க ளல்லவா அப்படிப்பட்டவுங்களுக்கு மூடர்களைப்போ லநினைப்பொன்றும் கிரியையொன்றுமாகச்சங்கல்பவை ஷம்மிய மெப்படியுண்டாச்சுதென்று சொல்லுகின்ற ம னுவினுடைய வசனத்தைக்கேட்டு பகவானுன வசிஷ்ட ரானவர் ஹோதாவினுடைய அபசாரத்தையறிந்து சூ ரியபுத்திரனுன மனுவைப்பார்த்து ஒருவார்த்தை சொ ல்லுகின்ருர்,

வசிஷ்டர்வாக்கியம்,

வாராய் வைவசுதமனுவே இந்தச்சங்கல்பத்துக்கு வித்தியாசமானது உன்னுடையஹோதாவின் அதிக்கிர மத்தினலேவந்தது ஆனலும்உனக்குசுபுத்திரனுண்டா கும்படி நானென்னுடைய தேஜசினல் சாதித்துக்கொ டுக்கிறேனென்று இராஜாவுக்குச்சொல்லி மனதில்நிச்ச யித்துக்கொண்டு மகாயெச்சுவியாயும் பூச்சியராயுமிருக் கிற வசிஷ்டமகாரிஷியானவர் அந்த இளையென்கிற பெ ண்ணுக்குப் புருஷரூபம்உண்டாகவேணுமென்கிற இச் சையினல் ஆதிபுருஷனுன பகவானை ஸ்தோத்திரம்ப ண்ணினர் அப்போது சர்வநியந்தாவாயும் பகவானுயு மிருக்கிற ஸ்ரீஅரியானவர் சந்துஷ்டராய் அவருக்குவே ண்டும் வரத்தைக்கொடுத்தார் அந்தவரப்பிரசாதத்தின ல் இளையென்கிறபெண்ணும் சுத்துயி மினனென்கிற பு ருஷசிரேஷ்டனுகஆனன் அந்தச்சுத்துயி மினனென்கிற ராஜா ஒருக்கால் வனத்தில்வேட்டையாட வேணுமென் கிற இச்சையினல்சஞ்சரித்து சிலமந்திரிகளையுங் கூட் டிக்கொண்டு சிந்துதேசத்தில்பிறந்த ஒருஉத்தமஅஸ்வ த்திலேறிக்கொண்டு உத்தமமானதனுசையும் அறபுதங் களானபாணங்களையும் எடுத்துக்கொண்டு கவசத்தை யுந்தரித்து வீரனுனஅந்தராஜாவானவன் வேட்டையா டிவடதிக்கில் மேருவுக்குத் தாழ்வரையில்பகவானுனஉ ருத்திரனுனவன் பார்வதியோடு கிரீடித்துக்கொண்டிரு க்கிறகுமாரவனத்தில் சுத்துயிமினனுனவன் பிரவேசித் தான் அப்படி பிரவேசித்தமாத்திரத்தில் தன்னைஸ்திரீ ரூபமாகவும் தன்னுடையவாகனமான உத்தம அஸ்வத் தைப் பெண்குதிரையாகவும் அவனைப் பின்செல்லா நி ன்றசமஸ்தமானபேர்களும்ஸ்திரீரூபமாகக்கண்டு அவா ள்தங்களுடைய ரூபவித்தியாசத்தைப் பார்த்து ஒருத்த ருக்கொருத்தர் மனேவியாசங்கத்தை அடைந்திருந்தா ர்களென்றுசொல்லுகின்ற சுகப்பிர்மரிஷியைப் பார்த்து பரிட்சித்துவானவன் சொல்லுகின்ருன் வாரீர்பிர்மநிஷ் டரே இப்படிப்பட்டதேசமேது ஆராலே அந்தப்படிப ண்ணப்பட்டது இதைக்கேழ்க்கவேணுமென்றுஇச்சை யையுடையவனுன எனக்கு இந்த விர்த்தாந்தரத்தைச் சொல்லவேணுமென்று கேழ்க்கின்ற பரிட்சித்துவைப் பார்த்து சுகப்பிர்மரிஷியானவர் சொல்லுகின்ருர்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராஜனே, ஒருக்கால் மகாத்பசுகளையுடைய வர்களான ரிஷியீஸ்வராள் தங்களுடையதேஜசினல் தி க்குகளைத் தேஜோமயமாகப்பண்ணிக்கொண்டு ருத்திர னைப்பார்க்கவேணுமென்கிற இச்சையினல்அந்தக்குமா ரவனத்துக்குவந்தார்கள் அப்போது ரிஷிகளைப்பார்த்து நிர்வாணமாயிராநின்ற பார்வதிதேவியானவள் மிகவும் லச்சையையுடையவளாய் பர்த்தாவினுடைய மடியில்நி ன்றுமெழுந்திருந்து சீக்கிரமாக வஸ்திரத்தை யுடுத்திக் கொண்டாள் அந்தரிஷிகளும் கிரீடித்துக்கொண் டிராநி ன்ற பார்வதிபரமேஸ்வராளுடைய சமையத்தைப் பார் த்துத்திரும்பி அவடத்தில்நின்றும் நரநாராயணருடை ய ஆசிரமத்தையடைந்தார்கள் அப்போது பகவானுன ருத்திரனுனவன் பாரியையானபார்வதிகும்பிரியத்தை ப்பண்ணவேணுமென்கிற இச்சையினல் இந்தஸ்தான த்தில் எவன்பிரவேசிக்கிருனே அவன்ஸ்திரீயாகக்கடவ னென்றுசபித்தார் அன்றுமுதற்கொண்டு புருஷாள்அ ந்தவனத்தில் பிரவேசியாமல் விட்டுவிட்டார்கள் ஆகை யினல் சுத்தயிமினராஜாவானவன் அந்தச்சாப விர்த்தா ந்தத்தைஅறியாமல் சமஸ்தமான சேனைகளோடு கூட

அந்தவனத்தில் பிரவேசித்துத்தானும் தன்சேனைகளும் ஸ்திரீரூபத்தைஅடைந்து அந்தவனத்திலேதானே சஞ்சரித்துக்கொண்டிருந்தார்,

பின்பு அவடத்தில்தபசுபண்ணிக்கொண்டிராநின்ற பகவானனபுதனனவன் தன்னுடையஆசிரமசமீபத்தில் ஸ்திரீகளினல் சூழப்பட்டவளாய் சஞ்சரித்துக்கொண்டிராநின்ற அந்தஉத்தம ஸ்திரீயைப்பார்த்து இச்சைப்பட்டான் அந்தஸ்திரீயும் சந்திரனுடையபுத்திரனன புதனைப்பார்த்து இச்சைப்பட்டாள் அப்போது அந்தப்புதனனவன் அந்தஸ்திரீயினிடத்தில் புரூரவசு யென்கிற புத்திரனைப்பெற்றாள்,

இந்தப்பிரகாரம் ஸ்திரீரூபத்தையடைந்த சுத்துயுமினனென்கிற ராஜாவானவன்தன்னுடையகுலத்துக்கு ஆசாரியான வசிஷ்டமகாரிஷியை நினைத்தான் அப்போதுஅந்தவசிஷ்டமகாரிஷியானவர் அந்தச்சுத்துயிமினனுடைய ஸ்திரீரூபத்தைப்பார்த்து மிகவும் கிருபையையுடையவராய் அந்தச்சுத்துயிமினனுக்குப்புருஷரூபத்தை அபேட்சித்து சங்கரனைஸ்தோத்திரஞ்செய்ய அந்தச் சங்கரனும் வசிஷ்டருடைய ஸ்தோத்திரத்தினல் சந்தோஷித்து ஒருவார்த்தைசொல்லுகின்றார்,

வாரீர்வசிஷ்டமகாரிஷியே,உம்முடையசிஷியனன இந்தச்சுத்துயிமினனனவன் உமது தபோபலத்தினல் ஒருமாதம்புருஷனயும் ஒருமாதம்ஸ்திரீயாயும் இந்தப்பிரகாரம் விவஸ்தையோடிருந்துகொண்டு பூமியை ரட்சிக்கக்கடவனென்று இந்தப்பிரகாரஞ் சுத்தயிமினனனவன் ஆசாரியனுடைய அனுக்கிரகத்தினல் ஸ்திரீரூபத்தையும் புருஷரூபத்தையும்அடைந்தவனய் ஜெகத்தையப்பரிபாலனம்பண்ணிக்கொண் டிருக்கும்போது அவனுக்குஉத்கலனென்றும்,கெயனென்றும்,விமலனென்றும் மூன்றுபிள்ளைகளுண்டானர்கள் தர்மிஷ்டர்களான அந்தமூன்றுபேர்களும் தெட்சணராச்சியத்துக்கு ராஜாக்களானர்கள் பின்புசிலகாலஞ்சென்றபின்பு பிரதிஷ்டானபுரத்துஅதிபதியான அந்தச்சுத்துயிமினனனவன் புரூரவசுஎன்கிறபுத்திரற்குப்பூமியைக்கொடுத்து தபசுபண்ணுகிறநிமித்தியமாகத் தபோவனத்திற்பிரவேசித்தான்·

## உ-வது -அத்தியாயம்·

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அரியவைவச்சுதமனுவினையிரண்டுபிள்ளைகட்குள்
வரியவிருமகவரனேர்வயிராக்கியமதனலே
உரியகருஷகன்முதலாயுள்ளவைந்துபேர்களிட
சரிவம்சப்பரம்பரையைச் சஞ்சேபமாய்ச்சொல்வாம்

வைவசுதமனுவினுடைய பத்துபிள்ளைகளுக்குள்ளே இரண்டுபேர்வயிராக்கியத்தினல் அபுத்திரர்களானர்களென்றும்கருஷகன்முதலாகஐந்துபேர்களுடைய வம்சங்கள்கிரமமாய்ச்சஞ்க்ஷேபமாகச்சொல்லப்படுகின்றது·

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் பரிட்சித்துமகாராஜனே இந்தப்பிரகாரம் சுத்துயிமினராஜன் தபோவனத்தையடைந்திருக்கையில் வைவசுதமனுவானவன் புத்திரன்வேணுமென்கிற இச்சையையுடையவனய் யமுனநதி தீரத்தில் நூறுசம்வச்சரம் தபசைப்பண்ணிக்கொண்டு புத்திர நிமித்தமாகத்தேவனயும் ஜெகத்பிரபுவாயுமிருக்கிற ஸ்ரீ அரியையக்கியங்களினல் ஆராதித்துக்கொண்டு தனக்குச் சமானமானகுணத்தையுடையவர்களான இட்சுவாகுமுதலான பத்துபிள்ளைகளைப்பெற்றான் அவர்களுக்குள்ளே விரஷத்திரனனவன் குருவானவசிஷ்டமகாரிஷியினல் பசுக்களைப் பரிபாலனம்பண்ணுகிறதற்கு ராஜாவாகப் பட்டாபிஷேகம்பண்ணப்பட்டவனய் இராத்திரியிலேயும் கத்தியைக் கையிலேயுடையவனய் நித்திரையைவிட்டு ஜாக்கிரதையோடு கோக்களைரட்சித்துக்கொண்டிருந்தான் இப்படியிருக்க ஒருநாளைசமையத்தில் அர்த்தராத்திரிவேளையில் மேகம்வருஷிக்கும்போது ஒரு புலியானது பசுக்களுடையதோழத்தில் பிரவேசித்தது அந்தப்புலியைக்கண்டு படுத்துக்கொண்டிருக்கிற பசுக்களெல்லாமெழுந்திருந்துபயந்து அந்தத்தோழத்தில் நாலுபக்கத்திலேயுஞ் சுழன்றுகொண்டிருந்ததுகள் அந்தப்பெலம்பொருந்தியபுலியானது மந்தையில் ஒருபசுவைப்பிடித்துக்கொள்ள அந்தப்பசுவானது மிகவும் பயப்பட்டதாய் வீறிட்டது, அந்தக்கோவுடைய சப்தத்தைக்கேட்டு விரஷத்திரனனவன் நட்சத்திரப் பிரகாசமுமில்லாத அர்த்தராத்திரியில் கத்தியையுருவி அதிகதுறையாயோடிவந்துபுலியென்றெண்ணிக்கொண்டு பசுவென்றறியாதவனய்க் கபிலைபசுவினுடைய சிரசைச் சேதித்தான்· அந்தப்புலியும் கத்திமுனையினல் காதையறுக்கப்பட்டதாய் மிகவும்பயந்து அந்தமந்தையில்நின்றும் வெளிப்பட்டுமார்க்கத்தில் உதிரத்தைப்பெருக்கிக்கொண்டு ஓடிப்போய்விட்டது சத்துருக்களைக் கொல்லத்தக்கவனன அந்தவிரஷத்திரனனவன் தான் புலியைக் கொன்றுவிட்டதாயெண்ணிக்கொண்டு உதயமானவுடனேதான்கொன்றுவிட்டபசுவைப்பார்த்துமிகவுந் துக்கத்தையடைந்தான், குலகுருவான வசிஷ்டமகாரிஷியானவர் தனக்குத்தெரியாமல் பாவத்தைப்பண்ணினஅந்தவிரஷத்திரனென்கிறராஜாவைப்பார்த்துநீஇந்தப்பாபத்தினல்ராஜாவல்லாமல்சூத்திரனே ஆகப்போகிறயென்று சபித்தார்,

இந்தப்பிரகாரம் தன்னுடைய குருவான வசிஷ்டமகாரிஷியினல் சபிக்கப்பட்டவனய் அந்த ராஜாவானவன்அந்தச் சாபத்தையேற்று கைகட்டியும் சிதேந்திரியனயுமிருந்துகொண்டும் முனிகளுக்குச்சம்மதமானவிரத்தைஆசரித்துபகவானயுநிர்மலனயுமிருக்கிற தேவனிடத்தில் ஏகாந்தமானபக்தியையுடையவனயும் மனதை

டத்தில் ஏகாந்தமானபக்தியையுடையவனும் மனதை ஆத்மாவினிடத்தில்நிறுத்தினவனுயும்சித்தசமாதானத் தோடுகூடினவனுயும்சஞ்சரித்துக்கொண்டிருந்துஅந்த ராஜாவானவன் ஒருநாள்வனத்தில் பற்றிக்கொண்டுஎரி யாநின்றகாட்டுத்தீயைக்கண்டு அதிலேவிழுந்து சரீரத் தைவிட்டுப் பரப்பிர்மத்தையடைந்தான்,

அந்த விரஷத்திரனுக்குத்தம்பியான காவியென்கி றராஜாவும்விஷயங்களில்ஆசையில்லாதவனுய்பந்துக்க ளோடுகூட ராச்சியத்தையும்விட்டு வனத்தையடைந்து சித்தத்தில் சுயம்பிரகாசரானபரமபுருஷனையே தியான ம்பண்ணிக்கொண்டு பால்லியவயதிலேயேபரமகதியை அடைந்தான்-

மனுப்புத்திரனுன கருஷனிடத்தில்நின்றும், காரு ஷாளென்று சிலக்ஷத்திரியாள்பிறந்துஉத்தரதேசத்தை ரட்சித்துக்கொண்டுதர்மவற்சலர்களாய்பிராமணுளையே தேவதைகளாயெண்ணிக்கொண்டிருந்தார்கள், திரஷ்ட னிடத்தில்நின்றும் தாரஷ்டியென்று ராஜகுலம்பிறந்து பூமியில் பிராமணதத்துவத்தைப் பெற்றுர்கள் - நிருக னென்கிறராஜாவுக்கு சுமதியும் அவனுக்குப் பூதச்சோ திசுவும் அவனுக்குவசுவும் அவனுக்குஓகவானும் அவ னுக்குத் தன்னுடொத்தநாமமான ஓகவானென்றுஒரு பிள்ளையும்,ஓகவதியென்று ஒருபெண்ணும்பிறந்தார்கள அந்தஓகவதியென்கிறபெண்ணை சுதெரிசனன் விவாகம் பண்ணிக்கொண்டான்,மனுபுத்திரனுன நரிஷியந்தனுக் குச் சித்திரசேனனும்அவனுக்குதெக்ஷனும்அவனுக்கு மிட்டுவானும் அவனுக்குசனுவனும் அவனுக்குஅந்திர சேனனும் அவனுக்கு விதிஹொத்திரனும் அவனுக்கு சத்தியசிரவசும் அவனுக்கு உக்கிரசிரவசும் அவனுக்கு தேவதத்தனும்பிறந்தார்கள் தேவதத்தனுக்கு அக்கினி வேசனென்று ஒருபிள்ளைபிறந்துகானினனென்றும்சா துகற்னனென்கிறமகாரிஷியாகவுஞ்சொல்லப்பட்டுப்பிர சித்தனுயிருந்தான் அந்தஅக்கினிவேசனுடையவம்சமா னது அக்கினிவயிசியாயனமென்கிற பிராணவர்சமாய் விட்டது இதுவரைக்கும் நரிஷியந்தனுடையவம்சமான து சொல்லப்பட்டது,

திஷ்டனுக்கு மனுப்புத்திரனுன நரபாகனென்று ஒருபிள்ளைபிறந்து கர்மத்தினுல் வைசியனுனுன் அந்த நரபாகனுக்கு பலந்தனனும் பலந்தனனுக்கு வச்சப்பிரீ தியும் அவனுக்குபிருங்கிசுவும் அவனுக்குப்பிரமிதியும் அவனுக்குச்சமித்திரனும் அவனுக்குச்சாட்சுசனும்,அ வனுக்குவிவிங்குசதியும் அவனுக்குறம்பனும் அவனுக் கு கனிநேத்திரமென்று தர்மகிஷ்டனுன ஒருபிள்ளையும் அவனுக்கு மகாதேசசை யுடையவனுன கறந்தமனும் அவனுக்கு விட்சூத்துவும், அவனுக்குமருக்தனென்கி ற சக்கிரவர்த்தியும்பிறந்தார்கள், அங்கிரசுவினுடையபி ள்ளையான சம்வர்த்தனென்கிற மகாரிஷியானவர் மருக் தனென்கிற சக்கிரவர்த்திக்கு அனேகஎக்கியங்களைச்செ ய்துவைத்தார் அந்தச்சோமயாகத்திலே இந்திரன்முத லானதேவர்களும் திருப்தியடைந்தார்கள், அந்தமருத் தனுக்குத் தமனும் அவனுக்குராஜவாத்தனனும், அவ னுக்கு சுத்திரிதியும் அவனுக்குநரனும் அவனுக்குக்கே வலனும் அவனுக்குப்பெந்துமானும் அவனுக்கு வேக வானும் அவனுக்குப்பந்துவும் அவனுக்குத் திரணபிந் துவுமுண்டானுர்கள் அந்தச்சிலாக்கிய, குணங்களோடு கூடின திரணபிந்துவென்கிற மகாராஜாவை அப்சரஸ் திரீயான அலம்புசைபுருஷனுகவடைந்தாள் அந்தஅல ம்புசையினிடத்திலே திரணபிந்துவுக்கு மூன்றுபிள்ளை களும் இனிபிளவென்று ஒருபெண்ணும் பிறந்ததுகள் அந்த இனிபிளயினிடத்தில் விசுரவசுஎன்கிறமகாமுனி குபேரனைப்பெற்றுர், அந்தக்குபேரன் யோகேஸ்வரனு யும் பிதாவாயுமிருக்கிற விசுரவசுவினிடத்தில் நின்றும் பரமமானவித்தையைக் கற்றுக்கொண்டான் திரணபிந் துவுக்கு விசாலனென்றும் சூனியபந்துவென்றும்தூம் பரகேதுவென்றும் மூன்றுபிள்ளைகள்பிறந்தார்கள், அவ ர்களுக்குள்ளே வம்சகர்த்தாவான விசாலனென்கிற ரா ஜாவை சாலியென்கிறபட்டணத்தைச் சிருஷ்டித்தான், அவனுக்குயமசந்திரனும் அவனுக்குத்தூம்பராஷ்டனு ம்-அவனுக்குச்சகதேவனும் அவனுக்குப் பிரசாசுவனு ம்,அவனுக்குச் சோமதத்தனும் பிறந்தார்கள் அந்தச் சோமதத்தனனவன்அனேகஅசுவமேதங்களினுல்எக்கி யபதியானமகாபுருஷனை ஆராதித்து யோகேஸ்வரர்களா ல்அடையப்பட்ட பரமமானகதியையடைந்தான் சோம தத்தனுக்குசுமதியும் அவனுக்கே செனமேசெயனும்பி றந்தார்கள் விசாலனுடைய வம்சத்திற்பிறந்த இந்தரா ஜாக்கள் திரணபிந்துவினுடையகீர்த்தியைப்போலக் கீர் த்தியையுடையவர்களானுர்கள்,

## ௩-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

சோர்விலாமனும் புத்திரனுகிய
ஆர்சையாதியின் வம்சமதனிலே
ஓர்ந்திடுஞ்சுகன் னிகையுபாக்யானமும்
தேர்ந்தறைவதன் சேதியுஞ்சொல்லுவாம்

மனுப்புத்திரனுன சையாதியினுடையவம்சமும் அ திலேசுகன்னியை உபாக்யானமும்அத்தியற்புதமான றைவதனுடையஉபாக்கியானமுஞ்சொல்லப்படுகின்றது

ஸ்ரீபகவான்வாக்கியம்.

வாராய் பரிட்சித்துமகா ராஜனே மனுப்புத்திரனு ன சையாதியென்கிற ராஜாவானவன் தர்மநிஷ்டனுயிரு ந்து அங்கிரசுக்களுடையயக்கியத்தில் இரண்டாம்அகசி

லேசெய்யத்தக்க கர்மத்தைச்சொன்னான், அப்படிப்பட்டசையாதி மகாராஜனுக்குக் கமலம்போன்ற நேத்திரத்தையுடையவளாய்சுகன்னியாவென்கிற ஒரு பெண்ணுண்டானாள், அந்தராஜாவானவன் தன்பெண்ணை அழைத்துக்கொண்டு வனத்திற்போய்சியவனமகாரிஷியினுடைய ஆசிரமத்தையடைந்தான் அந்தச்சுகன்னியாவென்கிறபெண்ணானவள் சகிகளாலே சூழப்பட்டவளாய் அந்த வனத்தில் விருக்ஷங்கள்தோறும் சஞ்சரித்துக்கொண்டு ஒருபுற்றினுடைய துவாரத்திலேமின்மினிப்பூச்சிபோல ப்பிரகாசியாநின்ற இரண்டுதேஜசுக்களைக்கண்டு பால்லியத்தினால் அந்தத்தேசசுக்களை முள்ளினாற்குத்தவே அதில்நின்றும் இரத்தம் பிரவாகித்து அதினால் அந்தக்ஷணத்திலே ராஜாவினுடையசேனைகளுக்கெல்லாம்சலமலங்களைகட்டுப்பட்டதுகள் அப்போதுராஜரிஷியானசையாதியானவன் அந்தச்சேனாசெனங்களைப்பார்த்து ஆச்சரியத்தையுடையவனாய் ஒருவார்த்தைசொல்லுகின்றார்.

வாருங்கள்சனங்களே. பிருகு புத்திரரான சியவனரிஷிக்கு உங்களாலேதாகிலும் அபராதஞ்செய்யப்பட்டதோவென்றுசொல்லாநின்ற அந்தத்தகப்பனைப்பார்த்து சுகன்னியாவென்கிறபெண்பயந்தவளாய் ஒருவார்த்தைசொல்லுகிறாள்;

சுகன்னியா வாக்கியம்.

வாரீர்பிதாவே, என்னாலொன்றுசொல்லப்பட்டது அதென்னவென்றால் இரண்டுஜோதிசுரூபங்கள்முள்ளினால்குத்தப்பட்டதுகளென்றுசொல்லாநின்றபெண்ணினுடையவார்த்தையைக்கேட்டுசையாதிமகாராஜாவானவன் மிகவும்பயந்தவனாய் புற்றிலே மறைந் திருக்கின்ற முனியை மெள்ளமெள்ள க்ஷமைகொண்டு சிறுபெண்ணுகையால் இந்தத் தப்பைப் பொறுக்கவேணுமென்று சொன்னதற்கு அந்தமுனியானவர் இந்தப்பெண்ணுக்கு எத்தனைவயதாச்சுது விவாகமாச்சுதா இல்லையாவென்று கேட்டமாத்திரத்தில் சையாதிமகாராஜாவானவன் அந்த முனியினுடையஅபிப்பிராயத்தையறிந்துகொண்டு அந்தமுனிக்கேதன்னுடையபெண்ணைவிவாகஞ்செய்துகொடுத்து மகாபிரயாசத்தோடு அந்தப்பெண்ணைஅவடத்திலேவிட்டுவிட்டு அந்த முனிகையில் அனுக்கைவாங்கிக்கொண்டு சேனையோடுகூடத்தன்பட்டணத்துக்குவந்துசேர்ந்தான்,

பிற்பாடு அந்தசுகன்னியாவென்கிற பெண்ணானவள்மிகவுங்கோபத்தையுடையவரானசியவனமகாரிஷியைப்பர்த்தாவாக அடைந்து அவருடைய சித்தத்தைஅறிந்தவளாய் பிரமாதத்தையடையாமல் தன்னுடைய சிசுருஷைகளினால் அவரைச்சந்தோஷிப்பித்துக்கொண் டிருந்துசிலகாலத்திற்குப் பின்பு அந்தஆசிரமத்தில் ஒருக்கால் அசுவனிதேவதைகள் வந்தார்கள், அவாளை அந்தச் சியவனரிஷியானவர்பூசித்துஒருவார்த்தைசொல்லுகின்றார், வாருங்கள் சுவர்க்கவயித்தியாளே நீங்கள்சமர்த்தாளல்லவா எனக்கு ஸ்திரீகள்கொண்டாடும்படியான வயசையும்ரூபத்தையும் கொடுப்பீர்களாகில்உங்களுக்கு யக்ஞயத்தில் சோமமான கிரகத்தைக்கொடுக்கிறேனென்றுசொல்லாநின்ற அந்த ரிஷிவார்த்தையைக் கேட்டு அசுவனிதேவதைகளும் நல்லதென்றுசொல்லி அந்தரிஷியைக்கொண்டாடி ஒருவார்த்தைசொல்லுகிறார்கள்.

வாரீர்ரிஷியே, சித்தர்களால் நிர்மிக்கப்பட்டஇந்த மடுவில் நீர்ஸ்நானம்பண்ணுமென்று சொல்லி வார்த்தீகத்தினால் ஆக்கிரமிக்கப்பட்ட சரீரத்தை யுடையவராயும்பிரகாசமாகத்தெரியாநின்ற எலும்புகளும், மடித்துக்கொண்டிராநின்ற தோலுகள்-நரைமயிர்கள்-இதுகளோடுகூடினவராயுமிருக்கிற அந்தரிஷியைக்கையிலே பிடித்துக்கொண்டு அந்த அசுவனிதேவதைகளானவர்கள் அந்தமடுவிலேயிறங்கி ஸ்நானம்பண்ணினார்கள், அப்போது அந்தமூன்றுபேரும் ஸ்திரீகளுக்கிஷ்டமானரூபம்வயது இதுகளையுடையவர்களாயும் பத்மமாலைகளையுங்குண்டலங்களையும் சமமானரூபங்களையும்உடையவர்களாயிருக்கிறபுருஷர்களாக வெளியிலேவந்தார்கள்அப்போதுசுகன்னியாவென்கிற அந்தப் பதிவிரதையானவள் நல்லரூபத்தையும் தேஜசையும்உடையவர்களாயுமிருக்கிற அந்தப் புருஷாளைப்பார்த்து தன்னுடைய பர்த்தாவைஅறியாதவளாய் அசுவனிதேவதைகளைச்சரணமாக அடைந்தாள். அப்போது அந்தஅசுவனிதேவதைகளும அவளுடைய பர்த்தாவைக்காண்பித்து அந்த ரிஷிகையில் அனுக்கைவாங்கிக்கொண்டு விமானரூடாளாய்சுவர்க்கத்தை யடைந்தார்கள்.

வாராய் பரிட்சித்துமகாராஜனே, பிற்பாடு சையாதிமகாராசவானவன் எக்கியம் பண்ணுவதற்காக அந்த சியவனமகாரிஷியினுடைய ஆசிரமத்தையடைந்து தன் பெண்ணினுடைய பாரிசத்தில் சூரியனைப்போல தேஜசையுடையவரான அந்தச்சியவனமகாரிஷியைப்பார்த்து அந்தராசாவானவன் தன்பெண்ணைநோக்கிஆசீர்வாதம் பண்ணாமலும் மனதில் சந்தோஷமில்லாதவனாயும்ஒரு வார்த்தைசொல்லுகிறான். வாராய்பெண்ணே என்னகாரியஞ்செய்தாய் லோகங்களில்நமஸ்கரிக்கப்படாநின்றும் உனக்குப் பதியாயுமிருக்கிற சியவனமகாரிஷியானவரை விர்த்தனென்று வஞ்சனை பண்ணிவிட்டு வழியில் போகாநின்ற அசம்மதனான இந்தசாரபுருஷனை எதுக்காகப் பற்றினாய் துஷ்டையே நல்லகுலத்தில்பிறந்த உனக்குக் குலத்துக்குத்தூஷணமான இப்படிப்பட்டவிபரீதபுத்தியானது எப்படியுண்டாச்சுது - எதினாலே லச்சையில்லாமல்சாரபுருஷனை யடைந்திருக்கிறாயென்றுசொல்லு

தின்றபிதாவைப்பார்த்து ஆச்சரியப்பட்டு புன்சிரிப்பை யுடையவளான அந்தச்சுகன்னியையானவள் ஒருவார்த் தைசொல்லுகிறாள்,

சுகன்னிகைவாக்கியம்,

வாரீர்பிதாவே, இவர் உம்முடைய மாப்பிள்ளையே பிருகுபுத்திரரான சியவனரென்றுசொல்லி அவருக்கு அசுவனிதேவதைகளால்வந்த ரூபலாவண்ணிய சம்பத் தையுஞ்சொன்னாள் பிதாவும் அந்தவார்த்தையைக்கேட் டு மிகவும்பிரீதியையடைந்து பெண்ணை ஆலிங்கனம்ப ண்ணிக்கொண்டான் பிற்பாடுசியவனமகாரிஷியும் வீர னான்சையாதியைக்கொண்டு சோமயாகம்பண்ணிவைத் து அந்தயாகத்தில் சோமபானமில்லாத அசுவனிதேவ தைகளுக்குத் தம்முடையபிரபாவத்தினால் சோமகிரக த்தையும் உண்டாக்கிக்கொடுத்தார் அதைக்கண்டு இந் திரனும் கோபித்துக்கொண்டு சியவனரிஷியைக் கொல் லுகைக்கு வச்சிராயுதத்தையெடுத்தான் அப்போது பா ர்கவரானசியவனரிஷியும் வச்சிராயுதத்தோடு கூடினஇ ந்திரனுடையகையை ஸ்தம்பனமாகப் பண்ணினார் பிற் பாடுசமஸ்தமான தேவதைகளும் முன்னே வயித்தியா ளென்று சோமத்தினுடைய ஆகுதியிலே தள்ளப்பட்டி ருந்த அந்தஅசுவனிதேவதைகளுக்கு சோமகிரகத்தை க்கொடுக்கச் சம்மதித்தார்கள்,

அந்தசையாதிமகாராஜனுக்கு உத்தானபரிகசுஎன் றும், ஆனர்த்தனென்றும், பூரிஷேணனென்றும் மூன் றுபிள்ளைகளபிறந்தார்கள் அவர்களுக்குள்ளே ஆனர்த் தனுக்கு ரேவதன்பிறந்தான் அந்தரேவதனானவன்சமு த்திரமத்தியிலே குசஸ்தலியென்றொரு பட்டணம் நிர் மாணஞ்செய்து அதிலேயிருந்துகொண்டு ஆனர்த்ததே சமுதலானதுகளைப் பரிபாலனம்பண்ணிக்கொண் டிரு ந்தான். அந்தரேவதனுக்கு குமியென்கிறவனை ஜேஷ்ட னாகவுடையவர்களான நூறுபிள்ளைகளும் ரேவதியென் றொருபெண்ணும்உண்டானார்கள் அந்தரேவதராஜாவா னவன்தன்பெண்ணானரேவதியை யழைத்துக்கொண்டு அந்தப்பெண்ணுக்கு பர்த்தா ஆரென்று பிர்மாவைக்கே ழ்க்கவேணுமென்று பிர்மலோகத்தையடைந்தான் அப் போது அந்தப்பிர்மாவினுடையசபையில்சங்கீதம்பாடி க்கொண்டிருக்கையில் தனக்குசமையம் அகப்படாமல் க்ஷணகாலம் அவ்விடத்திலேயிருந்து அந்தச் சங்கீதத்தி னுடையமுடிவிலே பிர்மதேவனைக்கிட்டிப் பிரணாமம்ப ண்ணித் தன்னுடையஅபிப்பிராயத்தைச்சொன்னான்பி ர்மதேவனானவன் அந்தவார்த்தையைக்கேட்டுச்சிரித்து அவனைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றார்.

பிர்மதேவர்வாக்கியம்.

வாராய்ரேவராஜனே, நீஎவர்களுக்கு இந்தப்பெ ண்ணைக் கொடுக்கவேணுமென்று நினைத்திருந்தையோ அவர்களெல்லாம் வெகுநாளைக்குமுன்னே காலகதியை யடைந்தார்கள் அவர்களுடைய புத்திரபவுத்திரரள் இ வர்களுடையவம்சங்களும் இப்போதுகேழ்க்கப்படவில் லை நீயிவ்விடத்தில்வந்தபிற்பாடு இருபத்தேழு சதுர்யுகத் தோடுகூடினகாலமானது நடந்துபோய்விட்டது ஆகை யால்நீர்போய் புருஷோத்தமருடைய அம்சமானது ம காபலவானாகபலராமனென்றும் நாமதேயம்பெற்றுபூபா ரத்தைநீக்குகைக்குப் பூமியிலவதரித்திருக்கிறார் அவரு க்கிந்தப் பெண்ணைக்கொடுவென்று பிர்மதேவனால் ஆக் கியாபிக்கப்பட்டவனாய் றைவதராஜனானவன் அந்தப்பி ர்மதேவனுக்குப் பிரணாமஞ்செய்து தன்னுடையபெண் ணையுங் கூட்டிக்கொண்டு தன்பட்டணத்தை யடைந்தா ன். இராக்ஷசர்களுடைய பயத்தினால் முன்னே திக்குக ளில் ஓடிப்போனவர்களாயுஞ் சுவர்க்கத்தை யடைந்தவ ர்களாயுமிருக்கிற பிராதாக்களினால் விடப்பட்ட தன்னு டையபட்டணத்தில்வந்து சவுந்தரியத்தை யுடையவர்க ளான அந்தரேவதியென்கிற பெண்ணை பலராமருக்குக் கொடுத்து பதரிகாசிரமத்தில் தபசு பண்ணுவதற்காகப் போய்விட்டான்,

## ச. வது, அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நல்லமனுப்புத்திரனும் நரபாகன்றன்கதையும்
சொல்லுமவனமகவாமம் பரிஷனிடதொல்கதையும்
வல்லபவமறுத்ததுறு வாசரிஷியாலளித்த
கொல்லுபிசாசம்மடிக்கப் பட்டதையுங்கூறுவாம்.

மனுப்புத்திரனான நரபாகனுடைய கதையும் அவனு டையபிள்ளையான அம்பரிஷனுடைய கதையும் அவனா ல்துருவாசரிஷியினால் நிர்மிக்கப்பட்ட பிசாசமானது அ டிக்கப்பட்டதையுஞ்சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்துமகாராஜனே நரபசனுடையபிள் ளையானநரபாகனை குருகுலத்திலேயே வெகுநாள் வா சஞ்செய்துகொண்டிருந்தான் அவனுடைய பிராதாக்க ளானவர்கள் குருகுலவாசியான அந்தநரபாகனை நயிஷ் டிகபிர்மசாரியென் றெண்ணிக்கொண்டு தாங்கள்மாத்தி ரமே தனத்தைப்பங்கிட்டுக்கொண்டார்கள் பின்பு குரு குலத்தில்நின்றும்வந்து பாகத்தைஅபேட்சித்தவனாயும் கனிஷ்டனாயும் வித்துவானாயுமிருக்கிற அந்த நரபாகனா னவன் பிராதாக்களைப்பார்த்து எனக்கென்ன பங்குவை த்தீர்களென்றுகேட்டான் அப்போது அந்தப் பிராதாக் களும் உனக்குப்பிதாவை உன்பாகமாகப் பிரித்துவைத் தோமென்றுசொன்னார்கள் அந்தவார்த்தையைக் கேட் டு பிதாவண்டைக்குப்போய் வாரீர் பிதாவே எனது பி ராதாக்களானவர்கள் உம்மை யென்னுடைய பாகமாகப் பிரித்தார்களென்று சொல்ல அதற்குப் பிதாவும் வா

ராய்பிள்ளாய் அவர்கள்சொன்னதை நீஎதார்த்தமாகஎண்ணுதே அவர்கள்உன்னை வஞ்சித்தார்களென்றுசொல்லி,ஆனாலும்என்னை உன்னுடையபாகமாகவைத்தபடியினால்நானுனக்கு ஜீவனஉபாயத்தை உபதேசிக்கிறேன் கேள் என்னவென்றால் இப்போதுபுத்திமான்களானஇந்தஅங்கிரசுரிஷிகள் எக்கியம் பண்ணுகிறார்கள் வாராய்வித்துவானே அவர்கள்அந்த யக்கியத்திலே ஆறுநாள் பண்ணவேண்டியகர்மத்தில் சொல்லத்தக்கதான வேதபாகங்களையறியாமல் மோகித்திருக்கிறார்கள் அந்தமகாத்துமாக்களுக்கு இரண்டுவைசுவதேவசூகத்தங்களையும் பாடம்பண்ணிவை அவர்கள்எக்கியமுகிந்தபிறகு அந்தச்சத்திரயாகஞ்செய்து மீந்ததங்களுடையதனத்தையெல்லாம் உனக்குக் கொடுக்கப் போகிறார்கள் ஆகையால் அவர்களை அடையக்கடவாயென்று பிதாவானவன்சொல்ல அந்தவசனத்தைக்கேட்டு புத்திரனை நரபாகனைவன் அப்படியேசெய்தான் அந்தஅங்கிரசுக்களுஞ்சத்திரயாகஞ்செய்து மிகுந்ததனத்தையெல்லாம் அந்தநரபாகனுக்குக்கொடுத்து சுவர்க்கத்தையடைந்தார்கள்,

அந்தத்தனத்தைக்கிரகியாநின்ற நரபாகனைப் பார்த்துகறுத்தும் சிவந்துமிருக்கிற வர்னத்தை யுடைய ஒருபுருஷனானவன் வடக்கேயிருந்துவந்து இந்தயக்கியவஸ்துவிலேயிருக்கிறதனம் என்னுதென்று அதைக் கேழ்க்கநரபாகனானவன் என்னுதேஇந்தத்தனம் எனக்கு ரிஷிகள்கொடுத்தார்களென்றுசொன்னான் அதற்குஅந்தப்புருஷனானவன் ஆனால் நாமிருவரும் உன்னுடைய பிதாவைப்போய் கேழ்ப்போமென்றுசொல்ல அப்படியே நரபாகனானவன் பிதாவைக்கேட்டான் பிதாவும்எக்கியவஸ்துவில் மிகுந்திராநின்ற தனங்களெல்லாம் ருத்திரனுடையபாகமாக ரிஷிகள்பண்ணினார்கள் ஆகையால் அவனே அந்தத்தனத்துக்கு சுவாமியென்றுசொல்ல அதைக்கேட்டுநரபாகனும் அந்தக்கிருஷ்ணபிங்கள வர்னனானபுருஷனைப் பிரணமஞ்செய்து வாரீர்பிர்மநிஷ்டரே ஈசனே இந்தயக்கியவஸ்துவினால் மிகுந்தகனமெல்லாம்உம்முதென்று என்னுடையபிதாவானவர்சொன்னார் உம்மைச்சிரசினால்வணங்கி க்ஷமைகொள்ளுகிறேனென்று நரபாகன்சொன்னதற்கு அந்தப்புருஷனும் நரபாகனைப் பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றான்,

வாராய்நரபாகனே, உன்னுடையபிதாவானவர்யாதொருதர்மத்தைச்சொன்னாரோ அதைநீயும்சத்தியமாகவேசொல்லுகிறாய் அப்படிப்பட்ட யதார்த்தவாதியாய்மந்திரதிரஷ்டாவான உனக்குச்சனாதனமான பிர்மக்கியானத்தையுபதேசிக்கிறேன் கிரகித்துக்கொண்டு பரமமானஆபத்திலேயும் அசத்தியத்தைச்சொல்லாமலிருக்கக்கடவாய் ஆகையால் இந்த யக்கியத்தில் மிகுந்த தனத்தைநானுனக்குக்கொடுத்துவிட்டேன் அதையும் நீயெடுத்துக் கொள்ளென்றுசொல்லி ருத்திரனானவர்அவிடத்திலேயே அந்தர்த்தானமானார்,

அந்தநரபாகனுக்கு மகாபாகவதனாயும், புண்ணியவானாயும்-அம்பரிஷனென்று ஒருபுத்திர னுண்டானான் அவன் சப்தத்தீவுகளோடுகூடின பூமியையும் அளவில்லாதசம்பத்தையும் ஒப்பில்லாத ஆதிபத்தியமாகிற ஆக்கியாசக்தியையும் பெற்றிருந்தாலும், அந்த அயிஸ்வரியமுதலானதுகளுடைய நாசத்தையறிந்தவனாய் சமஸ்தத்தையும் சொற்பனத்திற்கண்ட வஸ்துவைப்போலஅனித்தியமாகநினைத்து பகவானான வாசுதேவனிடத்திலேயும்,அவருடைய பக்தர்களான சத்புருஷர்களிடங்களிலேயும், பரமமானபக்தியையடைந்தவனாய் இந்தப்பிரபஞ்சமெல்லாம் ஓட்டாங்கச்சிக்குச் சமானமாகவெண்ணிதன்னுடையமனதை ஸ்ரீகிருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களில் ஸ்தாபித்துச் சர்வகாலமுந் தனதுகர்மங்களையெல்லாம் எக்கியபலப்பிரதான பரமபுருஷனிடத்தில் சமர்ப்பித்து இந்தப்பூமியைப் பரிபாலனஞ் செய்துகொண்டிருந்தான், அப்படிப்பட்ட மகாபாகவதனான அம்பரிஷ மகாராசனானவன் சுதர்மமான கர்ம யோகத்தோடுங்கூடினபக்தியோகத்தினால் ஸ்ரீஹரியைச் சந்தோஷிப்பித்துக்கொண்டு மெள்ளமெள்ள சமஸ்தவிஷயங்கள் கிரகங்கள்-பாரியை-புத்திரர்கள்-பந்துக்கள்- ரதகஜதுரகபதாதிகள் அக்ஷயங்களான வஸ்திராபரணாதி ஆயுதங்கள் அனந்தமானபொக்கிஷங்கள் இவைகளையெல்லாம் அநித்தியமென்றுநீக்கினான் அப்போது ஸ்ரீஹரியானவர்அந்த அம்பரிஷனிடத்தில் சந்தோஷப்பட்டவராய் சத்துருக்களுக்குப் பயங்கரமாயிருக்கிற தம்முடைய சக்கரத்தைஅவனுக்குக் கொடுத்தார்.

அந்தவீரனான அம்பரிஷ ராஜாவானவன் தனக்குச் சமானமானசீலத்தையுடைய ஸ்திரீகளோடு கூடிக்கொண்டுஸ்ரீவிஷ்ணுவை ஆராதிக்கவேணுமென்கிறஇச்சையையுடையவனாய் ஒருவருஷபரியந்தம் துவாதசிவிரதத்தைஅனுசரித்து அந்தவிரதத்தினுடைய அந்தத்தில்கார்த்திகைமாதத்தில் மூன்றுநாள் உபவாசத்தோடிருந்து யமுனாநதியில்ஸ்நானத்தைப் பண்ணி மதுவனத்தில்ஸ்ரீஹரியைமூர்ச்சித்துத் திடமானபக்தியினால் சுவர்னங்களினால் அலங்கரிக்கப்பட்டதாயும் நல்லகறவையும் வயதையும் ரூபத்தையும் சாதுக்களாயும் கன்றுகளையுடையதுகளாயும் கறவைப்பாத்திர முதலான உபகாரணங்களோடிருக்கிற அறுபதுகோடி பசுக்களை சத்விருஷர்களானபிராமணர்களுக்குத் தானம்பண்ணி அவர்கள் கிரகங்களுக்கு அனுப்பிவிட்டு அம்பரிஷராஜாவானவன்துவாதசியில் பாரணைபண்ண யத்தனம்பண்ணினான்,

அந்தச்சமயத்தில் சாக்ஷாத்ஸ்ரீபகவானான துருவாசரானவர் அந்தராஜாவுக்கு அதிதியாகவந்தார் அந்தரா

ஜாவும் அதிதியாகவந்த மகாரிஷியைஎதிர்கொண்டுஅர்க்கியபாத்தியாதி உபசாரங்களினுல் எதா சாஸ்திரமாகப்பூசைபண்ணி அவருடைய பாதமூலத்தில் சேவித்துத் தன்கிரகத்தில் அவரைப் போஜனம் பண்ணவேணுமென்று பிரார்த்தித்தான் அவரும் அதைஅங்கீகரித்துமாத்தியானிகஸ்நானமுதலான நித்திய கர்மத்தைப்பண்ணிவருகிறேனென்றுபோய் காளிந்தியினுடைய சுசியானதீரத்தில் ஸ்நானஞ்செய்து பிர்மத்தைத்தியானித்துக்கொண்டிருந்தார். அப்போது அரை முகூர்த்தமாத்திரம் மிகுந்திருக்கிற துவாதசில்பாரணை பண்ணுகிறதற்கு அம்பரிஷனுனவன் தூறுவாசமகாரிஷி வாராமல் காலதாமசமாயிருக்கையில் பிராமணர்களோடு அந்தத்தர்மசங்கடத்தை யோசனை பண்ணினுன். எப்படியென்றால் பிராமணனைவிட்டு பாரணைபண்ணேனுமேயாகில்பிராமண அதிக்கிரமதோஷம் வருகிறது துவாதசியில் பாரணைபண்ணுமற்போனுல் மகத்தாகிய தோஷம்வருகிறது ஆகையால்ஜலபானத்தைப்பெரியவர்கள்அசனதுல்லியமாகவும்,உபவாசதுல்லியமாகவும், சொல்லுவர்களல்லவாவென்று யோசனைசெய்து ராஜரிஷியானஅம்பரிஷனுனவன் மனதில் ஸ்ரீபகவானைத் தியானஞ்செய்து ஜலபாரணையைப்பண்ணிவிட்டு அந்தத் தூறுவாசருடைய வரவைஎதிர்பார்த்துக்கொண்டிருந்தான்- அப்போதுதூறுவாசரும் யமுனுதீரத்தில்நின்றும் ஸ்நானஞ்செய்துவிட்டுவந்து ராஜாவினுல்பூசிக்கப்பட்டவராய் அந்தராஜாசெய்தகாரியத்தை மனதில் அறிந்துகொண்டுகோபத்தினுல் பயங்கரமானமுகத்தை யுடையவராயும் பசியையுடையவராயுமிருக்கிற அந்தமுனியானவர் அஞ்சலிபந்தஞ்செய்துகொண்டிருக்கிற ராஜாவைப்பார்த்துஒருவார்த்தை சொல்லுகின்றுர், இந்தராசாவானவன் அதிதியாய் வந்தஎனக்கு ஆதித்தியஞ்சொல்லிஅன்னங்கொடாமல்புசித்தான் அப்படிப்பட்ட இந்த ராசாவுக்கு அதிதியினுடையபலத்தை இப்போதேகாண்பிக்கிறேனென்றுசொல்லி தூறுவாசரிஷியானவர் ரோஷத்தினுல் ஜொலித்துக்கொண்டு தம்முடையசடையிலே ஒன்றைபபிடுங்கிஅந்தச்சடையினுல் அந்த ராஜாவை நாசம்பண்ணத் தக்கதாகக் காலாக்கினிக்குச்சமானமாக ஒருகிரத்தியை சிருஷ்டித்தார்.

அப்போது கத்தியைக் கையிலேபிடித்துக்கொண்டும் பாதத்தினுல் பூமியைநடுங்கச்செய்துகொண்டும் வராநின்ற அந்தக்கிரத்தியைப் பார்த்து அம்பரிஷனுனவன்பயப்படாமலிருந்தான், அப்போது மகாத்மாவானபரம புருஷனுல் அம்பரிஷனுக்குக் கொடுக்கப்பட்ட சக்கிரமானது கோபத்தினுல்சீறி சர்ப்பம்போலஓடிவராநின்ற அந்தகிர்த்தியைத் தகித்துவிட்டு தூறுவாசரையும் துரத்திக்கொண்டுபோச்சுது அந்தரிஷியானவர் தம்முடையபிரயத்தினம் நிஷ்பலமானதையும்,சக்கிரமானது தன்னைத்துரத்திக்கொண்டுவருவதையும்பார்த்துபயந்தவராய் திக்குகளில்ஓடினுர், அந்தரிஷியைஎங்கேபோனுலும் பின்றொடர்ந்துதுறக்க மேருவினுடையகுகையில் பிரவேசிக்கவேணுமென்றோடினுர், அங்கும்பின்றொடர அந்தத்தூறுவாசமுனியானவர் மிகவும்பயந்தவராய் ரட்சகனைத்தேடிக்கொண்டு பிரம்மதேவரைப்போய்ச்சரணமாகவடைந்து வாரீர்பிரம்மாவே ஸ்ரீஅரியினுடையசக்கிரத்தில்நின்றும் என்னை ரட்சிக்கக்கடவீரென்று சொல்லுகின்ற தூறுவாசமகாமுனியைப்பார்த்துப்பிரமதேவனுனவர் சொல்லுகின்றுர்,

பிரமதேவர்வாக்கியம்.

வாரீர்தூறுவாசரே,நானும்-ருத்திரனும்-தெக்ஷன் பிருகுமுதலான பிரஜாபதிகளும் இந்திரன்முதலியதேவர்களும் யாதொரு அந்தப்பகவானுடையஆக்கினையையடைந்தவர்களாய் அவரால் எங்களுடையசிரசிலேவைக்கப்பட்ட லோகத்தினுடைய க்ஷேமத்தை யெண்ணிக்கொண்டிருக்கிறோம் அப்படிப்பட்ட சுவாமியினுடையபக்தனுக்குத் துரோகம்பண்ணுகின்றவும்மை நான் ரட்சிக்கமாட்டேனென்று பிரம்மதேவனுல்திரஸ்கரிக்கப்பட்டவராய் கைலாசவாசியான சங்கரனைச் சரணமாகவடைந்து ஸ்தோத்திரஞ்செய்ய சங்கரனுனவர் தூறுவாசரைப்பார்த்துச்சொல்லுகின்றுர்,

சங்கரபகவான்வாக்கியம்.

வாராய்குழந்தாய் பரமாத்மாவான பகவானுடைய பக்தனுக்குத் துரோகம்பண்ணவனை இரட்சிப்பதற்குநானும்-சமர்த்தனன்று, நான்-சனற்குமாரர்-நாரதர்- பிரம்மதேவர்-கபிலர்-ஆசூரி-மரீசி முதலான பிரஜாபதிகள்-தபச்சித்தியையுடையவர்களான மற்றுமுள்ளரிஷிகள்நாங்களெல்லாம் சர்வக்கியாளாயிருந்தாலும் யாதொருவிஷ்ணுமாயையினுல் சூழப்பட்டவர்களாயிருக்கின்றோம் ஆகையால்அவரையேசரணமாக அடையக்கடவாயென்றுருத்திரனுல்சொல்லப்பட்டவராய் தூறுவாசமுனியானவர் அந்தக்கைலாசத்தில்நின்றும் யாதொருவைகுண்டத்தில் ஸ்ரீஹரியானவர் இலட்சுமியோடுகூடி வாசம்பண்ணிக்கொண்டிருக்கப்பட்ட அந்தவைகுண்டபதத்தை அடைந்து தூறுவாசரிஷியானவர் அந்தப் பகவானுடைய பாதமூலத்தில்விழுந்து இங்கப்பிரகாரம் ஸ்தோத்திரம்பண்ணுகின்றுன் வாரீர் அச்சுதனே-அனந்தனே சற்புருஷாளுக்கு இஷ்டநாயகனே, விசுவகர்த்தாவே- அபராதியான என்னைரட்சிக்கக்கடவீர் உம்முடையபிரபாவத்தையறியாமல்உமக்குப்பிரியாளானபாகவதாளுக்கு என்னுல் அபராதம்பண்ணப்பட்டது தேவரீரே என்னுடைய துக்கத்துக்கு சாந்தியை பண்ணக்கடவீரென்று சொல்லாநின்ற தூறுவாசமுனியைப்பார்த்து பகவானுனவர் சொல்லுகின்றுர்,

ஸ்ரீபகவான்வாக்கியம்.

வாரீர் முனியே, நான் பரதந்திரமான யானேபோலே பக்தபராதீனனாகவிருக்கின்றேன் ஆகையினாலந்த அம்பரிஷமகாராசனையே சரணமாக அடையக்கடவாய் பக்தாளால்வசீகரிக்கப்பட்ட இருதயத்தை யுடையவனாயும்-பக்தஜெனங்களுக்குப் பிரியனாயுமிருக்கிற நான் சாதுக்களான அந்தப்பக்தாளைவிட்டு என்னுடைய ஆத்மாவையும்இச்சிக்கமாட்டேன், அந்தப்பக்தாளைவிட்டுஎன்னையே ஆசரியித்துக்கொண்டிருக்கிற லட்சுமியையும்அபேட்சிக்கமாட்டேன், என்னுடைய சேவையினாலேயே திருப்தாளாயிருக்கிற பாகவதாள் எனது சேவையினால் அடையப்பட்ட சாலோக்கியமுதலான நாலுவிதமோட்சங்களையும் அபேட்சிக்கிறதில்லை என்னுடைய இருதயத்தில்சாதுக்களும்-சாதுக்களுடைய இருதயத்தில் நானுமாகவிருப்போம்- என்னைவிட்டு வேறொன்றை அவர்களும் அறிகிறதில்லை நானும் அவர்களைவிட்டு ஒன்றையும்அறிகிறதில்லை ஆகையினால்எவனிடத்தில்னின்றும்உனக்குஉபத்திரவம்உண்டாச்சுதோ சீக்கிரமாக அவனையடையக்கடவாய் வாரீர்பிரம்மநிஷ்டரே உமக்கு மங்களமுண்டாகக்கடவது ஆகையால்நீர்நாபாகபுத்திரனானஅந்தஅம்பரிஷனையேஅடைந்து மகாபாகவதனானஅவனை க்ஷமைகொள்ளும் அதினாலேஉமக்கு சாந்தியுண்டாகப் போகின்றதென்று பகவானானவர்திருவாய்மலர்ந்தருளினார்;

## ரு வது-அத்தியாயம்,

கலிவிருத்தம்,

வேதையம்பரிஷ னாலேவும்விஷ்ணுவின்
நீதிலாச்சக்கிரத்தைத் தோத்ரஞ்செய்து
மாததூர்வாச மகரிஷியானவர்
சூதிலாமல் ரட்சிப்பதைச்சொல்லுவாம்,

அம்பரிஷமகாராஜனால்ஏவப்பட்ட விஷ்ணுவினுடையசக்கரத்தை ஸ்தோத்திரம் பண்ணி க்ஷமைகொண்டு தூறுவாசமகாரிஷியானவர் பிராண சங்கடத்தில்னின்றும்ரட்சிக்கப்பட்டதைச் சொல்லுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய் பரிட்சித்துமகாராஜனே-இந்தப்பிரகாரம் பகவானால் ஆக்கியாபிக்கப்பட்டவராய் தூறுவாசமகாரிஷியானவர் சக்கிரதேசசினால் சபிக்கப்பட்டு மகாதுக்கத்தோடு அம்பரிஷ மகாராசனை அடைந்து அவனுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டார், அப்போதுஅம்பரிஷமகாராசனானவன் அந்த தூறுவாசருடைய வியாபாரத்தைப்பார்த்து பாதத்தைப் பிடித்துக் கொண்டதினால் லச்சையுள்ளவனாய் மிகவும்தயையுடனே ஸ்ரீஅரியினுடையசக்கிரத்தை ஸ்தோத்திரம்பண்ணினான், வாரீர் சுதெரிசனரே-தேவரீர்-அக்கினியும்-சூரியனும்-சோதிசுக்களுக்கெல்லாம்பதியான சந்திரனும்-பிரிதிவு-அப்பு தேயு-வாயுவு-ஆகாசங்களும்-சப்தாதி விஷயங்களும் சுரோத்திராதி இந்திரியங்களும்-தர்மமும்-தயிரியமும்- சத்தியமும் அதர்மத்தையேசுபாவமாகவுடையவாளானஅசுராளுக்கு சங்காரகர்த்தாவாயும்-மூன்றுலோகங்களையும் ரட்சிக்கிறவராயுமிருக்கினற நீர்கேதாரகரனை பகவானால்துஷ்டாளுடைய கண்டனத்தின்பொருட்டு நியமிக்கப்பட்டிருக்கின்றீர் ஆகையினால்எங்களுடையகுலத்துக்கு பாக்கியலாபத்தின்பொருட்டு தூறுவாச மகாரிஷிக்கு நன்மையைப்பண்ணக்கடவீர் அதுவேஎங்களுக்கு அனுக்கிரகமாகவிருக்கும் பகவானானவர்ஒருவரே எனக்கு சர்வபூதங்களினாலேயும்-பரமாத்ம திருஷ்டியினால் ஆனரோயாகில் இந்தப்பிராமணனானவர் சந்தாபத்தில்னின்றும்விடப்படக் கடவரென்று ஸ்தோத்திரம் பண்ணுகின்ற அம்பரிஷமகாராஜனுடையபிரார்த்தனையினால் தூறுவாசமகாரிஷியை நாலுப்பக்கத்திலேயுந்தகியாநின்றஅந்தஸ்ரீவிஷ்ணுவினுடைய சுதெரிசனமான்துசாந்தியை யடைந்தது, பிறகுஅந்த தூறுவாசமகாரிஷியும் சக்கிரத்தினாலுண்டான அக்கினியில்னின்றும்விடப்பட்டவராயும்க்ஷேமத்தையுடையவராயும்-அம்பரிஷமகாராஜனை அமோகமான ஆசிர்வாதங்களைப்பண்ணி அவனைஸ்தோத்திரம் பண்ணினார்,

வாராய் அம்பரிஷமகாராசனே இதுமிகவும் ஆச்சரியமாயிருக்கின்றது அனந்தனான ஸ்ரீ மந்நாராயணனுக்கு தாசர்களுடையமகாத்மியம் நம்மால்இப்போது நன்றாகக்காணப்பட்டது யாதொரு காரணத்தினால் அபராதியானஎனக்கும் க்ஷேமத்தைக் கோறுகின்றையோ ஆகையினாலேசாதுக்களுக்குச்செய்யப்போகாதென்கிறது என்னவிருக்கின்றது மகாத்மாக்களுக்கு விட்டுவிடக் கூடாமலிருக்கிறவஸ்து என்னவிருக்கின்றதுமிகவும்தயாளுவான உன்னாலே என்னுடைய பிராணனை ரட்சிக்கப்பட்டேனென்று தூறுவாசமகாரிஷியானவர்சொல்ல அந்த அம்பரிஷமகாராஜாவும் அந்த மகா ரிஷியினுடைய பாதங்களைப்பிடித்து க்ஷமைகொண்டு அவருக்குப்போஜனம்பண்ணிவித்தான் அந்ததூறுவாசமகாரிஷியும் ராஜாவினால்கொண்டுவரப்பட்ட சர்வபோக்கிய வஸ்துக்களோடுகூடின அமிர்தமயமான அன்னத்தைப் பொசித்துத் திருப்தாய் ராஜாவையும் நீர்போஜனம் பண்ணுமென்றுசொல்லி அவன் கையில் அனுக்கியை வாங்கிக்கொண்டு ஆகாசமார்க்கமாக நித்தியமான பிர்மலோகத்தைஅடைந்தார்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்துமகாராசனே, அந்ததூறுவாசமகாரிஷியானவர் சக்கரத்தினால் துரத்தப் பட்டவராய்

லோகங்களையும் சஞ்சரித்துக்கொண்டு எவ்வளவுகாலம் அம்பரிஷ மஹாராஜாவினிடத்தில் வாராமலிருந்தாரோ அதுவரைக்கும் ஒருவருடம்பூர்த்தியாச்சுது ஒருவருட பரியந்தம் அந்த அம்பரிஷமகாராஜாவானவன் தூறுவா சருடையதெரிசனத்தையே அபேட்சித்துத்தீர்த்தத்தை யே ஆகாரமாகச்செய்துகொண்டிருந்தான் பிற்பாடு தூ றுவாசமகாரிஷியானவர் வந்துபோனபின்பு அந்த அம் பரிஷமகாராஜாவும் பிராமணனுக்குப் போஜனம்பண் ணிவைத்து மிகவும்பரிசுத்தமான சேஷத்தைப்பொசித் தான் இப்படிப்பட்ட அனேககுணங்களையுடையவனை அந்தஅம்பரிஷ மகாராஜனானவன் பரமாத்மாவாயும்பர ப்பிர்மமாயுமிருக்கிற வாசுதேவனிடத்தில் நன்ருகப்பக் தியைப்பண்ணி தனக்குச்சமானகுணங்களை யுடையவர் களான பிள்ளைகளிடங்களிலே ராச்சியத்தை விட்டு த போவனத்திலேபிரவேசித்துப் பிரகிருதிகுணங்களான சத்துவரசஸ்தமஸ்த காரிபங்களையெல்லாம் விட்டு ஆத் மாவான வாசுதேவனிடத்தில் மனதைநிறுத்தித் தபசு பண்ணினன்.

## ௬-வது-அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்,

ஓதுசாதன்முதலாக வுறுமாந்தாதாமுடிவாக
நீதிகதாப்பிரசங்கத்தில் நிருபர்மாந்தாதாவினிட (னம்
மாதுபெண்கட்குப்பதியாம் மாசவுரியின்றனுபாக்கியா
தீதிலாமலுரைத்ததனைத் தெரியவுரைக்கற்பாமரோ,

சசாதன்முதலாக மாந்தாதா முடிவாயிருக்கிற ராஜா க்களும் கதாப்பிரசங்கத்தினுல் மாந்தாதாவினுடையபெ ண்களுக்குப்பதியான சவுரியினுடைய உபாக்கியானமு ஞ்சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்பரிட்சித்துமகாராஜனே, அம்பரிஷனுக்கு விருபனென்றும், கேதுமானென்றும், சம்புவென்றும், மூன்றுபிள்ளைகளுண்டானர்கள், விருபனிடத்தில்நின்று ம்பிரஷதசுவனுண்டானன், பிரஷதசுவனுக்குரதிசரனு ண்டானன் அப்புத்திரனை நிதரனுடைய பாரியினிட த்தில் அங்கிரசுவென்கிறரிஷி சந்தானர்த்தமாகப் பிர்ம் மவரசுக்களையுடையவர்களான பிள்ளைகளைப்பெற்றுர் இ வர்கள்ரதிதரனுடைய க்ஷேத்திரத்தில் உண்டானதால் அவனுடையகோத்திரர்களென்றும் அந்த க்ஷேத்திரத் தில் அங்கிரசுனது பிஜத்துக்குப்பிறக்குகையில் ஆங்கி ரசப்பிராமணர்களென்றும் பிள்ளையும்ரதிதர கோத்திர த்தில் பிறந்தவர்களுக்குச் சிரேஷ்டர்களாயும் சொல்ல ப்படுவார்கள், மனுவானவன்ஒருநாள் தும்பும்போதுஅ வனுடைய நாசிகையில்நின்றும் இட்சுவாகு பிறந்தான். அந்த இட்சுவாகுவுக்கு நூறுபிள்ளைகள் பிறந்தார்கள் அவர்களுக்குள்ளே,விகுட்சி,நிமி,தெண்டன்,என்கிறமூ ன்றுபேருந்சிரேஷ்டர்கள். இந்தநூறு பிள்ளைகளுக் கு ள்ளே விந்தியபர்வதத்துக்கும் ஏமவந்தத்துக்கும் மத் தியிலிராநின்ற ஆரியாவர்த்தமென்கிற க்ஷேத்திரத்தில் முன்னே இருபத்தைந்து பிள்ளைகள்பிறந்தார்கள்பின்பு இருபத்தைந்துபிள்ளைகளுண்டானர்கள் மத்தியில் ஜே ஷ்டர்களான மூன்றுபிள்ளைகளுண்டானர்கள் மற்றபே ரெல்லாந் தெட்சணவுத்திராதி தேசங்களில் பிறந்தார்க ள் அந்தஇட்சுவாகு மகாராஜனானவன் ஒருக்கால் அஷ் டகசிரார்த்தஞ் செய்யும்போது சிரேஷ்டனை விகுக்ஷி யைப்பார்த்து வாராய்விகுட்சியே சீக்கிரமாகப்போய் ப ரிசுத்தமான மாமிசத்தைக்கொண்டுவா்வென்று பிள்ளை யை ஆக்கியாபித்தான் அவனும் அதையங்கீகரித்துக் கா ட்டுக்குப்போய் சிரார்த்தயோக்கியங்களான மிருகங்களை யடித்து அதினுல் இளப்பையடைந்தவனுய் பசியினுல் பட்சிக்கவேணுமென்கிற இச்சையையுடையவனுய்ச் சி ரார்த்தத்துக்குக் கொண்டுபோக வேணுமென்கிற கியா பகமில்லாமல் ஒருமுசலைப்பட்சித்துவிட்டு மிகுந்ததை தகப்பனுக்குக்கொண்டுவந்துகாண்பித்தான் அப்போது இட்சுவாகுராஜனனவன் குருவான வசிஷ்டரோடுசொ ல்ல அவர் அந்தமாமிசமானதுஉச்சிஷ்டமாச்சுது ஆகை யால் கர்மத்துக்குயோக்கியமல்லவென்றுசொன்னர் இ ச்சுவாகுவும் குருவானவசிஷ்டரால்சொல்லப்பட்ட புத் திரனுடைய அந்தக் கர்மத்தை யறிந்து கோபத்தினுல் வைதீககர்மத்தைத் தள்ளி நடவாநின்ற அந்தப் பிள்ளை யை தேசத்தில்நின்றுந் துரத்திவிட்டு பின்புஇட்சுவாகு வுங் குருவானவசிஷ்டருடனே சம்வாதம்பண்ணி ராச் சியபோகத்தில்விரக்தனுய் யோகாப்பியாசத்தை யுடை யவனுய்ச் சரீரத்தைவிட்டு யோகாப்பியாசத்தி னுலேயே ஸ்ரீபகவானை அடைந்தான்.

தகப்பனை இட்சுவாகுவும் லோகாந்தரத்தை ய டைந்தபின்பு திரும்பவும் விகுட்சியானவன்வந்துஇந்த ப்பூமியைப் பாலனஞ் செய்துகொண்டு சாதன்என்கிற பேரால்பிரசித்தனுய் ஸ்ரீ அரியையக்கியங்களினுல் எசித் தான் அந்தச்சாதன்என்னப்பட்ட விகுட்சிக்குப்புரஞ்ச யனென்று ஒருபிள்ளையுண்டானன் அந்தப் புரஞ்சயனு னவன் இந்திரவாகனென்றும் ககுஸ்தனென்றும் தன் னுடையகிரிகைகளினுல் நாமங்களைப்பெற்றுன் எப்படி யென்றுல் ஒருகாலத்தில் தேவதைகளுக்குத் தானவர் களோடுகூட லோகங்களுக்கெல்லாம் பயங்கரமானயுத்த முண்டாச்சுது அதிலே வீரனன புரஞ்சயனைத் தவித் தியாளாலே அபஜெயப்பட்ட தேவதைகளானவர்கள் தேவதேவராயும் சர்வாந்தரியாமியாயும் லோகநாயக ராயுமிருக்கிற பகவானுடைய வசனத்தினுல் சகாயமாக வரவேணுமென்று பிரார்த்தித்தார்கள் அப்போது அம்

தபுரஞ்சயனும் எனக்குயுத்தத்தில் இந்திரனானவன்வாகனமாயிருந்தானேயாகில் நான்உங்களுக்குச்சகாயமாகவருகிறேனென்றுசொல்ல அந்தவார்த்தையைக் கேட்டு இந்திரனானவன் லச்சையினால் ஒப்பாம லிருக்கும்போது தேவதேவனான விஷ்ணுவினுடையவசத்தினால் அந்தக்காரியத்துக்கிசைந்து இந்திரனும் ரிஷபரூப மானான் அப்போது புரஞ்சயனானவன் யுக்தசன்னாகத்தோடுகூடினவனாய் இந்திரனாகிற ரிஷபத்தின்பேரி லேறிக்கொண்டு தேவதைகளால் ஸ்தோத்திரம்பண்ணப்பட்டவனாய்பரமபுருஷனான விஷ்ணுவினுடையதேஜசினால் பூரிக்கப்பட்டவனாய் மேற்குத்திக்கிலே தயித்தியாளுடையபட்டணத்தைத் தேவதைகளோடுகூடப்போய் தகைந்துகொண்டான் அப்போதுஇந்திரனுடைய ககுத்துயென்னப்பட்டமுசுப்பிலேயிருந்தபடியினாலே ககுஸ்தனென்றுபெயராயுடையவனானான் அப்போது அசுராளோடு ககுஸ்தனான புரஞ்சயனுக்கு மகாபயங்கரமானயுத்தமுண்டாச்சுது அந்தயுத்தத்தில் யாதொருதயித்தியாள் எதிர்த்துயுத்தம் பண்ணினார்களோ அவர்களைப் பல்லங்களென்கிற பாணங்களினால் எமலோகத்துக் கனுப்பிவைத்தான் அந்தககுஸ்த ராஜாவினுடைய பாணங்களினால் அடிக்கப்பட்டவர்களாய் தயித்தியா ளெல்லாம் எதிரேநிற்கமாட்டாமல் தங்களுடையஸ்தானத்தைவிட்டுபாதாளத்துக்கு ஓடிப்போய்விட்டார்கள் ககுஸ்தராஜனும் அசுராளைசெயித்து அவர்களுடைய தனமுதலானதுகளையெல்லாம் இந்திரனுக்குக்கொடுத்தான் ஆகையால் அந்தராஜாவானவன் சத்துருக்களுடையபட்டணத்தைசெயிக்கையால் புரஞ்சயனென்றும் இந்திரனை வாகனமாகவுடையவனாகையால் இந்திரவாகன னென்றும் இந்திரனுடைய முசுப்பிலேயிருந்து யுத்தம் பண்ணுகையால் ககுஸ்தனென்றுஞ்சொல்லப்பட்ட நாமங்களினால் பிரசித்தனானான்,

அந்தப்புரஞ்சயனுக்கு அனேனசுயென்றுஒருபிள்ளையும், அவனுக்குப்பிருதுவும், அவனுக்கு விசுவகோதனும், அவனுக்குசந்திரனும், அவனுக்கு யுவனாசுவனும், அவனுக்கு சாஸ்வதனென்கிறவனும் உண்டானான் அந்தசாவஸ்தராஜாவினால் சாவஸ்தியென்றொரு பட்டணமானதுநிர்மிக்கப்பட்டது, அந்தசாஸ்வதியென்கிறவனுக்குபிரகதசுவனும், அவனுக்குங் குவலையாசுவனும் உண்டானான் அந்தபலவானான குவலையாசுவராஜனானவன் இருபத்தோராயிரம்பிள்ளைகளோடு கூடினவனாய் உதங்கரிஷிக்குப் பிரீதியார்த்தமாகயுத்தத்தில் துந்துவென்கிற அசுரனை அடித்தபடியால் துந்துமாரனென்றும் பிரசித்தனானான். அப்போது அந்தயுத்தத்தில் துந்துவென்கிற அசுரனுடைய முகாக்கினியினால் இருபத்தோராயிரம் பிள்ளைகளில் திடாசுவன், கபிலாசுவன், பத்திராசுவனென்கிற மூன்றுபேர்தவிர மற்றவர்களெல்லாந் தகிக்கப்பட்டார்கள் திடாசுவனுடையபுத்திரன் அரியசுவன்- அவனுடையபுத்திரன் நிகும்பன் அவனுடைய புத்திரன் பெரிஹணாசுவன்-அவனுடையபுத்திரன் கிரிசாகவன்- அவனுக்குசேனசித்து-அவனுக்கு யுவனாசுவன் பிறந்தான்- அந்தயுவனாசுவனானவன் புத்திரனில்லாமல்விசனத்தையுடையவனாய் நூறுபேரான தன்னுடைய ஸ்திரீகளோடுங்கூட தபோவனத்தை அடைந்தான் அவடத்திலேயிராநின்ற தயாளுக்களான ரிஷிகளானவர்கள் சித்தசமாதானத்தோடு கூடினவர்களாய் யுவனாசுவனுக்குப் புத்திரார்த்தமாக இந்திரயாகத்தைப் பண்ணி வைத்தார்கள்-அந்தராஜாவானவன் அர்த்தராத்திரியில் மிகவும் தாகத்தையுடையவனாய் எக்கியசாலையிற் பிரவேசித்துகும்பத்திலே அபிமந்திரித்திருக்கப்பட்ட ஜலத்தையெடுத்துப்பானம்பண்ணினான் பிற்பாடு நித்திரைபண்ணி யெழுந்திராநின்ற பிராமணாளானவர்கள் சகலசூனியமா யிருக்கிற அந்தகலசலத்தைப்பார்த்துஇந்தபுத்திரோற்பத்தியேதுவான தீர்த்தத்தை யெவன் பானம் பண்ணினானென்றுகேட்டு தெய்வத்தினால் பிரேரிக்கப்பட்டவனாய் ராஜாவே அந்தசலத்தைப் பானம்பண்ணினானென்றறிந்துதெய்வபலமே பிரபல மல்லவாவென்று ஆச்சரியத்தையுடையவர்களாய் அந்தஈஸ்வரனுக்கு நமஸ்காரம் பண்ணினார்கள்,

பிற்பாடுசிலகாலஞ்சென்று பிரசவகாலம்வந்தவுடனே அந்தயுவனாசுவனுடைய வலதுபக்கமானவயிற்றைப்பேதித்துக்கொண்டு சக்கிரவர்த்தியான ஒருபிள்ளை பிறந்தான்-இந்தப்பிள்ளை ஸ்தன்னியத்துக்காக மிகவும்ரோதனம்பண்ணுகின்றானே எதைப்பானம் பண்ணப்போகிறானென்று பிராமணாள் சொல்லுகையில் அப்போது இந்திரன் இந்தச் சிசுவானவன் என்னபானம் பண்ணப்போகிறான் அழாதேயென்று சொல்லிக்கொண்டுதன்கட்டைவிரலை-வாயிலேகொடுத்தான் அந்தச்சிசுவினுடையபிதாவானயுவனாசுவன் தேவப் பிராமணாளுடைய அனுக்கிரகத்தினால் மரித்துப்போகாதவனாய் அவடத்தில் சிலகாலந்தபசுபண்ணி அதனாலேசித்தியையடைந்தான் இந்தமாந்தாதாவுக்கு இந்திரனானவன் திரசதசுயென்று நாமகரணத்தைப் பண்ணினான்- யுவனாசுவனுடைய புத்திரனான மாந்தாதாவானவன சக்கிரவர்த்தியாகிபகவானுடைய தேஜசினால் சப்ததீவுகளோடு கூடின பூமியைத்தானொருவனாகப் பரிபாலனம் பண்ணி அந்த மாந்தாதாவானவன் எக்கியபலப் பிரதாயும் சாவாந்திரியாயுமிருக்கிறசுவாமியைக்கியானங்களினால் ஆராதித்துசசபிந்துவினுடைய பெண்ணான விந்துவதி யென்கிற ஸ்திரீயினிடதில் புருகுசசனையும் அம்ப ரிஷனையும் முசுகுந்தயோக்கியையும்- அவர்களுக்கு உடற்பிறப்பான ஐம்

பது பெண்களேயும் பெற்ருன், அந்த ஐம்பது பெண்களும், சவுபரிமகாரிஷியை அடைந்தார்கள் அந்தச்சவுபரிரிஷியானவர் யமுனுசலத்தில் முழுகி மிகவும் தபசுபண்ணிக்கொண்டு மச்சியங்களானது தங்களுடைய ஸ்திரீகளுடனே சம்போகிபாநின்ற சுகத்தைப் பார்த்துத் தாமும்அப்படியிருக்கவேணுமென்கிறஆசையையுடையவராய் இராசாவான மாந்தாதாவினிடத்திற்குவந்துஉன்னுடையபெண்களிலே ஒருபெண்ணே எனக்குக்கொடுக்கவேணுமென்றுகேட்டார் அந்தராசாவும் வாரீர் பிரம்மரிஷ்டரே பெண்கள்உம்மைசுயம்வரத்தில்அடைந்தார்களேயாகில் அவளே விவாகம் பண்ணிக்கொள்ளுமென்றுசொல்ல அந்தசவுபரிரிஷியானவர் நாம்விருத்தனென்றும் நரைத்தவனென்றும் சரீர நடுங்கலையுடையவனென்றும், ஸ்திரீகளுக்கு அப்பிரியமான ரூபத்தையுடையவனென்றும்யெண்ணிக்கொண்டு ராஜாவினுல் நிராகரிக்கப்பட்டோம், ஆகையினுல் தேவஸ்திரீகளும்இச்சைப்படும்படியான ரூபத்தைத் தரித்துக்கொண்டு ராஜாவினுல் அந்தப்புரத்திலே பிரவேசித்து அந்தஐம்பது பெண்களினுலேயும் தாம் ஒருவரே பர்த்தாவாக வரிக்கப்பட்டார் அப்போது அந்த சவுபரி ரிஷியைக்கண்டமாத்திரத்தில் அவரிடத்திலேயுற்றினமனதையுடையவர்களான பெண்கள் ஒருவர்க்கொருவர் எனக்குனக்கென்று அவர்நிமித்ததில் கலகம்உண்டாச்சுது பிற்பாடு அந்தச்சவுபரிரிஷியானவர் இராஜாவினுல் விவாகம்பண்ணிக் கொடுக்கப்பட்ட ஐம்பது ஸ்திரீகளேயும் அடைந்து தம்முடைய தபோ பலத்தினுல் உண்டாக்கப்பட்ட நானுவிதங்களான விலையுயர்ந்த சாமக்கிரிகைகளுடனே கூடினதாயுமிருக்கிற கிரகங்களில் மகாயோக்கியங்களான மஞ்சங்கள், ஆசனங்கள்-வஸ்திரங்கள் - பூஷணங்கள்-போஜனங்கள்-இவைகளோடு கூடினவராய்அந்தஸ்திரீகளோடு ரமித்துக்கொண் டிருந்தார்,

பிற்பாடு சப்ததீவுகளோடுகூடின பூமண்டலாதிபதியான மாந்தாதா மகாராசாவானவன் சவுபரிமகா ரிஷியினுடைய சம்பத்தைப்பார்த்து ஆச்சரியத்தைஅடைந்தான், றுக்குவேதிகளுக்கு ஆசாரியரான சவுபரிமகாரிஷியானவர் மச்சியசகவாசத்தினுல் பிராப்தமானதன்னுத்மாவினுடைய கெடுதியைப் பார்த்து சதாசாரநிஷ்டனுயிருக்கிற என்னுடைய வினுசனத்தைப்பாருங்கள்ஜலத்திலேமுழுகி தபசுபண்ணிக்கொண்டிராநின்ற எனக்கு ஒருமச்சியத்தினுடைய சகவாசத்தினுல் வெகுகாலமாகத்தரிக்கப்பட்ட தபசானது வியர்த்தமாகப்போச்சுது சகவாசம் பண்ணவேணுமென்று இச்சையிருந்தால் பாகவதாளான சாதுக்களிடத்தில் சங்கத்தைப் பண்ணக்கடவனென்று எண்ணினவராய் வெகுகாலம்கிரகஸ்தாசிரமத்தில் வாசம்பண்ணிக்கொண்டிராநின்ற அந்தச்சவுபரிமகாரிஷியானவர் விரக்திஅடைந்தவராய் சகலத்தையும்விட்டு தபோவனத்திலே அடைந்தார் பதியேதெய்வமாகவுடையவர்களான அவருடையபத்தினிகளும் அவரைப்பின்சென்ருர்கள் அந்தத்தபோவனத்தினுல்மகாவுக்கிரமாயும், சரீரத்தைக் கிருசமாகப் பண்ணுப்போடாநின்ற தபசைப்பண்ணி ஆத்ம சாட்சாத்காரத்தையுடையவராய் தம்முடையஅக்கினிகளே ஆத்மாவினுல்ஆரோபணம்பண்ணிக்கொண்டு தம்முடைய ஆத்மாவையும் பரமாத்மாவோடுசேர்ந்தார் அவருடைய பத்தினிகளும்பதியினுடைய மோட்சகதியைப்பார்த்து அவரிடத்திலேயே லயித்தார்கள்.

## எ-வது-அத்தியாயம்

மட்டுவிருத்தம்.

ஆர்ந்தபுருகு சசனரிச்சந்திரன்
மாந்தாதாவம்சமுஞ் சொல்லுவாமரோ,

புருகுசன் அரிச்சந்திரன்இவர்களுடைய உபாக்கியானமும் மாந்தாதாவம்சமும் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்துமகாராஜனே, மாந்தாதாவினுடையபிள்ளைகளுக்குள்ளே சிரேஷ்டனுன அம்பரிஷனுனவன்தனக்குப்பாட்டனுனயுவனுசுவனுலேபுத்திரனுகசுவிகரிக்கப்பட்டான் அம்பரிஷனுடையபிள்ளை,ஆரிதன்இந்த அம்பரிஷன் யுவனுசுவன்-ஆரிதன் இவாள்மூன்றுபேரும்மாந்தாதாவினுடைய கோத்திரத்துக்குப்பிரவர்த்தகாளாயிருப்பார்கள், புருகுசனுக்கு சர்ப்பங்களானதுகள் தங்களுக்குத் தங்கையான நர்மதையைக் கலியாணம் பண்ணிக்கொடுத்தார்கள், சர்ப்பராஜனுல் ஏவப்பட்ட அந்தநர்மதையினுலே பாதாளத்தை அடைவிக்கப்பட் டிருக்கிற புருகுசனுனவன் பகவானுடைய சக்தியைத்தரித்தவனுய் அந்தப்பாதாளத்தில் கொல்லக்கூடாதவர்களாயிருக்கிற கந்தர்வாளேச் சங்காரம்பண்ணினுன் நர்மதைபுருகுசனேப் பாதாளத்தில் அழைத்துக் கொண்டுபோய் கந்தர்வாளேகொல்லுவித்ததை ஸ்மரிக்கின்றபேருக்கு சர்ப்பத்தில்நின்றும் பயமில்லாம லிருக்கக்கடவதென்றுசர்ப்பங்களினுல் கொடுக்கப்பட்டவரத்தைப்பெற்ருன். அந்தப்புருகுசனுடையபிள்ளைதிரசதசுஅவனுக்குஅனரண்ணியனும், அவனுக்கு அரியசுவனும்அவனுக்குதிரியகுணனும். அவனுக்குத்திரிபந்தனனும், அவனுக்குத் திரிசங்குவென்றும்,பிரசித்தனுன சத்தியவிரதனும் பிறந்தார்கள், அந்தத் திரிச்சங்குவானவன் குருவான வசிஷ்டமகா ரிஷியினுடைய சாபத்தினுல் சண்டாளனுய் திரும்பவும் விசுவாமித்திரனுடைய பிரபாவத்தினுல் சரீரத்தோடுசுவர்க்கத்தைஅடைந்து தேவதைகளினுல் தலைகீழாகத்தள்ளப்பட்டவனுய் திரும்பவும்வி

சுவாமித்திரனுடைய தபோபலத்தினால் அங்கேயேஸ்தாபிக்கப்பட்டவனாய் இப்போதும் ஆகாசத்திலே காணப்பட்டுக்கொண்டிருக்கிறான்.

அந்தத் திரிசங்குவினுடையபிள்ளை அரிச்சந்திரன் அந்த அரிச்சந்திரனிமித்தியமாக ஒருவருக்கொருவர் சாபத்தினால் பாசபட்சியாயும், பகபட்சியாயு மாகாநின்றவசிஷ்ட விசுவாமித்திராளுக்கு வெகுசம்வச்சரம் யுத்தம்உண்டாச்சுது அப்படிப்பட்ட அரிச்சந்திரனானவன் பிள்ளையில்லாமல் துக்கத்தையுடையவனாய்நாரதருடைய வுபதேசத்தினாலே வருணனைச் சரணமாகவடைந்து பிரார்த்தித்து வாராய்பிரபுவே வருணனே எனக்கு வீரியனாய் ஒருபிள்ளைபிறக்கக்கடவன், பிறந்தானாகில்அவனையே புருஷபசுவாகக்கொண்டு உன்னை ஆராதனம் பண்ணுகிறேனென்று பிரார்த்திக்கவருணனும் நல்லதென்று அங்கீகரித்துதன்னுடையஅனுக்கிரகத்தினால் ரோகிதனென்று அரிச்சந்திரனுக்கு ஒருபிள்ளையுண்டாகும்படி அனுக்கிரகஞ் செய்து வருணனானவன் இராஜாவைப்பார்த்து உனக்குப் பிள்ளைபிறந்தானே அந்தப்பிள்ளையினால் என்னை யேசிக்கவேணுமென்றுசொன்னான். அப்போது அரிச்சந்திரனானவன் அந்தவார்த்தையைக்கேட்டு பசுவுக்குப்பாலியம் ஒழிவதற்குமுன்னே சுத்தியில்லை ஒழிந்தபிற்பாடு பரிசுத்தமாக விருக்கும் அப்போது எக்கியம் பண்ணுகிறேனென்று வருணனைப் பார்த்துச் சொன்னான், வருணனும் ஒத்துக்கொண்டு பின்னையுஞ் சிறுதுநாள்பொறுத்துவந்து ராசாவைப்பார்த்து பசுவுக்குப் பாலியமொழிந்துதே இப்போதுஇவனால்என்னை யேசிக்கக்கடவாயென்று சொல்லுகின்றவருணனைப்பார்த்து ராஜாசொல்லுகிறார். பசுவுக்குப்பல்லுமுளைத்தால்பவுத்திரமாயிருக்கும்பல்லுமுளைத்தபிற்பாடு யேசிக்கிறேனென்றுசொன்னான். அதைக்கேட்டு வருணனும் அந்தவேளைபோய் திரும்பவும்சிறிதுநாள்பொறுத்துவந்து பசுவுக்குப்பல்லுமுளைத்துதே இப்போதாகிலும்எக்கியம்பண்ணென்று சொன்னான். அதற்குராசா பசுவுக்குஇந்தப்பல்லுகளெப்போது விழுந்துபோகிறதுகளோ அப்போதுபரிசுத்தமானது அத்தருணத்தில்ஏசிக்கிறேனென்றுசொன்னான், அதையும்வருணன்ஒத்துகொண்டுதிரும்பவும் சிறிதுநாள்பொறுத்துவந்து பசுவுக்குப்பல்லுவிழுந்து போச்சுதுகளே இப்போதுஎக்கியம்பண்ணென்றுசொல்ல அதற்குராசாவானவன் பசுவுக்குஎப்போதிரும்பவும் பல்லுமுளைக்கிறதுகளோ அப்போது சுத்தியுண்டு அக்காலையில் ஏசிக்கிறேனென்றுசொன்னான் அதைக்கேட்டு வருணனும் பின்னையுஞ் சிறிதுநாள் பொறுத்துவந்து பல்லுகள்திரும்பவும் முளைத்துதுகளே இப்போது எக்கியம்பண்ணென்று சொல்லுகின்ற வருணனைப்பார்த்து ராஜாவானவன் சொல்லுகிறான்.

வாரீர் வருணபகவானே, ராசாவாயிருக்கிறபசுவானது கவசதாரணத்துக்கு யோக்கியமாய் யுத்தத்துக்குச் சமர்த்தமாகவிருக்கின்றதோ அப்போது பரிசுத்தியுண்டு அத்தருவாயில் ஏசிக்கிறேனென்று சொல்லாநின்ற வார்த்தையைக்கேட்டு வருணனானவன்இந்தப்பிரகாரம் புத்திர னிடத்தில் பிரீதியினால் அந்தந்தக் காலங்களில் வஞ்சனைபண்ணிக்கொண்டிருக்கிற அரிச்சந்திரனால் அந்தக்காலங்களைப்பார்த்துக்கொண்டிருந்தான், புத்திரனானரோகிதனானவன் பிதாவான அரிச்சந்திரன் வருணனுக்குப்பண்ணியிருக்கிற பிரதிக்கினையை அறிந்து தன்பிராணனிடத்தில் ஆசையையுடையவனாய் தனுசைக்கையிலெடுத்துக்கொண்டு காட்டிலேபோனான் பிறகுதன்பிதாவாகிய அரிச்சந்திரன் வருணனால் மகோதரவியாதியை அடைந்ததாகக் கேட்டுத்திரும்பவும் கிராமத்தில்வரவேணுமென்று இச்சியாநின்ற அந்த ரோகிதனைப்பார்த்துஇந்திரனானவன் போகவேண்டாமென்று தடுத்துபுண்ணிய தீர்த்தங்களைச் சேவித்துக்கொண்டு பூசஞ்சாரம்பண்ணென்று ஆக்கியாபித்தான் அப்படியேஅந்தரோகிதனும் காட்டிலே ஒருசம்வச்சரம் தீர்த்தயாத்திரைபண்ணிக்கொண்டு சஞ்சரித்தான், இந்தப்பிரகாரம் இரண்டு,மூன்று-நான்கு-ஐந்துவருஷங்வரைக்கும் வருஷந்தோறும் பட்டணத்துக்கு வரவேணுமென்று இச்சியாநின்ற அந்தரோகிதனை இந்திரனானவன் விருத்தப்பிராமணரூபமாகவந்து போகவேண்டாமென்று தடுத்தான் பிறகு அந்த ரோகிதனானவன் ஆறுவது சம்வச்சரத்திலேயும் அப்படியேவனத்தில் தீர்த்தயாத்திரைபண்ணி சஞ்சரித்துப் பட்டணத்தைக் குறித்து வரும்போது அசிகிரதனென்கிறவனிடத்தில்நின்றுஞ் சுனசேபனென்கிறகனிஷ்டபுத்திரனைக் கிரையமாகக்கொண்டுஅந்தச்சுனசேபனாகிற புருஷபசுவைப் பிதாவுக்குக்கொண்டுவந்து கொடுத்துச்சேவித்தான் அப்போதுஅந்த அரிச்சந்திரனானவனும் வருணனால் மகோதர வியாதியில் நின்றும் விடுவிக்கப்பட்டவனாய் புருஷமேகத்தினால்வருணன் முதலான தேவர்களை யோசித்தான்.

அந்தயக்கியத்தில் விசுவாமித்திரரானவர் ஓதாவும், ஆத்மக்கியானியான ஜெமதக்கினி ரிஷியானவர் அத்துவரியுவும், வசிஷ்டமகா ரிஷியானவர்பிர்மாவும், அயாசிய ரிஷியானவர் உத்காதாவுமாகஆனார்கள், அந்தஎஜமானான அரிச்சந்திரனுக்கு இந்திரனானவன் சந்துஷ்டனாய்ச் சுவர்னமயமானரதத்தைக்கொடுத்தான், அந்தச்சுனசேபனுடைய மகாத்மியமானது மேலே விசுவாமித்திர சுதோபாக்கியான பிரசங்கத்தினால் சவிஸ்தாரமாகச் சொல்லப்படுகின்றது, பாரியையோடகூடின அரிச்சந்திரனுடைய சத்தியபலத்தையும் தயிரியத்தையும் பார்த்துவிசுவாமித்திரரானவர் மிகவுஞ் சந்தோஷித்து அவனுக்கு

க்கியானத்தையுபதேசித்தார் அந்தராஜாவானவன்சமஸ்தபந்தத்தில்நின்றும்விடப்பட்டவனாய் கியானானந்தமயமாயும் தெசகாலங்களிலே யளவிடக் கூடாததாயும் மனோவாக்குகளினால் சொல்லக்கூடாததாயுமிருக்கிறபரமாத்ம சுருபத்தினால் சிவபாவத்தை விட்டவனாயிருந்தான்.

## அவது, அத்தியாயம்.

கலிவிருத்தம்,

நீத்திடுங்கபில் முனிசிந்தனையினால்
சீத்தவறுபதி னுயிரஞ்சிறுவரும்
ஏத்திடுந்தந்தை யென்னுஞ்சகரற்கு
பூத்தவுற்பத்தி ஸ்தானம்புகலுவாம்,

கபிலமுனியினுடையசிந்தனையினால் தகிக்கப்பட்டஅறுபதினாயிரம் பிள்ளைகளுக்குத் தகப்பனான சகரனுக்கு உற்பத்திஸ்தானமான ரோகிதனுடைய வம்சஞ் சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்துமகாராஜனே, ரோகிதனுக்குஅரிதனும், அரிதனுக்குச்சம்பனும் உண்டானார்கள், அந்தச்சம்பனால் சம்பரபுரிநிர்மிக்கப்பட்டது அப்படிப்பட்டசம்பனிடத்தில்நின்றும் சுவேகனும் அவனுக்குவிறுகனும் அவனுக்குப்பாகனும்பிறந்தார்கள் அந்தப்பாகுகனென்கிறராஜா சத்துருக்களினால் ராச்சியம அபகரிக்கப்படுகையில் பாரியையோடுகூட வனத்திற் பிரவேசித்தான். அவடத்தில்மரணத்தையடைந்த பர்த்தாவுடனே அவனுமரணம்பண்ணக்கோறின அவனுடையபாரியையை அவுருவரிஷியானவர் கெர்ப்பவதியென்றறிந்து அனுமரணஞ்செய்யவேண்டாமென்றுநிறுத்தினர் பின்பு அவளுடையசக்களத்திமார்கள் இவள்கெர்ப்பிணியாயிருக்கிறாளென்று அறிந்து அந்தகெர்ப்ப நாசத்தின்பொருட்டு அன்னத்தில் விஷத்தைக்கலந்து கொடுத்தார்கள் அந்த அவுறவரிஷியினுடைய அனுக்கிரகத்தினால் விஷத்தோடுகூட கெர்ப்பத்திலிருக்கிற பிள்ளைமறியாமல்பிறந்தான் ஆகையால் சகரச்சக்கரவர்த்தியென்று பேர்பெற்றிருந்தான், அந்தச்சகரனுடைய பிள்ளைகளால் இந்தச்சமுத்திரமானது நிர்மிக்கப்பட்டது அந்தச்சகரனானவன் தால்சங்காளேயும் எவனாளேயும் ஹெஅயாளேயும் பெறபராளேயும் சகாளேயும் குருவான அவுறுவருடைய வசனத்தினால்கொல்லாமல்சிலரை மொட்டந்தலைகளாகவும் சிலரைவிரித்தலேமயிரையுடையவர்களாயும் சிலரை பாதிசிரசை சிரைத்தவர்களாகவும், இந்தப்பிரகாரம் விகாரமானவேஷத்தோடு கூடினவர்களாகச்செய்து சமஸ்த தேவரூபியாயும் சர்வாந்தரியாமியாயு மிருக்கிற ஸ்ரீஹரியை அவுறுவரிஷியினால் உபதேசிக்கப்பட்டயோகமார்க்கத்தினால் அசுவமேதங்களினால் ஆராதித்தான்.

அந்தஅசுவமேதத்தில் சரனால்விடப்பட்ட அசுவத்தை இந்திரனானவன் அபகரித்துக்கொண்டு போனான் அப்போது அந்தச்சகரசக்கரவர்த்தியினுடைய கேசினி சுமதியென்கிறஇரண்டுபாரியைகளுக்குள்ளே சுமதி என்கிறவளுடையபிள்ளைகள் அறுபதினாயிரம்பேரும் கெர்விகளாய் பிதாவினுடையஆக்கினேயினால் அந்த அசுவத்தைப் பூமியெங்குந்தேடிக்காணாமல் பூமியைச் சுற்றிலுங்கெல்லினார்கள் அப்போது ஈசானியதிக்கிலேபாதாளத்தில் கபிலமுனியினுடைய சந்நிதானத்தில் அந்தக்குதிரையைக்கண்டு இவன்தான்குதிரையைத்திருடிவைத்துக்கொண்டு அறியாதவன்போல கண்ணை மூடிக்கொண்டிருக்கிறான் மகாபாவி இவனேக்கொல்லவேணுமென்று சொல்லி ஆயுதங்களையெடுத்துக்கொண்டுஎதிரேயோடிவந்தார்கள் அப்போதுகபிலமகாமுனியானவர்கண்ணைத்திறந்துபார்க்க இந்திரனுடையமாயையினால் மூடபுத்தியையுடையவர்களான அந்தஅறுபதினாயிரம்பேரும் மகாமுனியினது அபசாரத்தினால் அடிக்கப்பட்டவர்களாய்அந்தக்ஷணத்தில்தானே தங்கள் தங்களுடைய சரீரத்தில்பிறந்த அக்கினியினால் தகிக்கப்பட்டவர்களாய் பஸ்பமாகப்போனார்கள்,

சகரனுக்குக் கேசினியென்கிறஸ்திரீயினிடத்திலே யுண்டான அசமஞ்சனுக்குப் புத்திரனான அம்சுமானென்கிறவன் பாட்டனாகியசகரனுக்குஅனுகூலனாயிருந்தான் அசமஞ்சசனேவென்றால்பூர்வஜென்மத்தில்யோகியாயிருந்துகொண்டு விஷய சங்கத்தினால் யோகத்தில் நின்று நழுவினவனாய்ச் சகரனுக்குக் கேசினியினிடத்தில் பூர்வக்கியானத்தோடு கூடினவனாய்ப் பிறந்து சகவாசத்தையொழிக்கிறநிமித்தமாக லோகநிந்தியமான கர்மத்தைப்பண்ணிக்கொண்டுங் கியாதிகளுக்குப்பிரியமில்லாமலிருக்கிற காரியத்தைச்செய்துகொண்டும் விளையாடாநின்றபசங்களையெல்லாம் எடுத்து சரசுநதியில் போட்டுக்கொண்டும் ஜனங்களுக்குப் பயங்கரனாயுமிருந்தான்இப்படிப்பட்ட நடத்தையையுடையவனாகையால் பிதாவும் அவனிடத்தில் புத்திரஸ்நேகத்தைவிட்டுத் துரத்திவிட்டான் அப்போதுஅந்த அசமஞ்சனானவன் தனதுயோகப்பிரபாவத்தினால் தன்னாலே சரயுநதியில் போடப்பட்டபிள்ளைகளையெல்லாம் எழுப்பிவிட்டு பின்புசுவயிச்சையாய் புறப்பட்டுப்போனான்,

அப்போது அயோத்தியில்வாசம்பண்ணுகின்றஜனங்களெல்லாம் இறந்துபோய்த் திரும்பவும் பிழைத்தது வந்தபிள்ளைகளைக்கண்டு ஆச்சரியப் பட்டார்கள் அந்தச்சகரமகாராஜாவும் அப்படிப்பட்ட பிள்ளையைத்துரத்திவி

ட்டதனுல் பரியாதாபத்தையடைந்தான் பின்பு அங்கிசுமானுனவன் பாட்டனுனசகரனுல் அசுவமேதக் குதிரையைத்தேடிக்கொண்டுவர அனுப்பிவைக்கப்பட்டவனுய் சிறியதகப்பன்மார்வெட்டின மார்க்கத்தையனுசரித்துப் பாதாளத்தில்போய் அவடத்தில் சாம்பல் குப்பல் கிட்டேயிருக்கிறஅசுவத்தைக்கண்டு அங்கேயிருக்கிற கபிலரூபியான பகவானையும் பார்த்துத் தெளிந்த மனதையுடையவனுய் அவருக்குப் பிரணுமஞ்செய்து அஞ்சலிபண்ணிக்கொண்டு ஸ்தோத்திரம்செய்கின்ருன்,

வாரீர்பகவானே, உலகத்தில் சத்துவரஜஸ்தமோகுணங்களோடுகூடின யாதொருசரீகளுண்டோஅவர்களெல்லாம் உம்முடையமாயையினுல்மோகத்தையடையாநின்ற புத்தியையுடையவர்களாய் தங்களுக்கு அந்தராத்மாவாக இராநின்ற உம்மையறியாதவர்களாய்குணங்களையும் தமசையும்பார்க்கிறபடியால் அவர்கள்மகாஅக்கியானிகளாயிருக்கிருர்கியானுனந்தசுரூபராயும்மாயாகுணநிமித்தங்களான பேதமோகங்களில்லாதவர்களாயும்சனந்தனுதிரிஷிகளினுல் அறியத்தக்கவராயு மிருக்கிற அப்படிப்பட்டஉம்மை மூட்னுனநான் எப்படி அறியப்போகிறேன் வாரீர்சாந்தமூர்த்தியே சத்வாதி காரியங்களானசிருஷ்டியாதி வியாபாரங்களை லட்சணமாகஉடையவராயும் சிருஷ்டிநிமித்தமான நாமரூபங்களில்லாதவராயுங் காரியாகாரணங்களான தத்துவங்களைக்காட்டிலும்விலட்சணராயுங் கியானுேபதேசநிமித்தமாகக்கிரகிக்கப்பட்டகபிலமூர்த்தியை யுடையவராயுமிருக்கிறபுராணபுருஷரானஉம்மைச் சேவிக்கிறே னென்று அங்கிசுமானுல்கீர்த்திக்கப்பட்ட பிரபாவத்தையுடையவரான கபிலபகவானுனவர் அங்கிசுமானைக் கிருபையினு லனுக்கிரகித்து ஒருவார்த்தைசொல்லுகிருர்,

வாராய்குழந்தாய், இதுஉன்னுடையபாட்டனுனசகரனதுஎக்கியபகவான் அசுவம் இதுஉன்னுடையதகப்பன்மார் அக்கினியினுல் தகிக்கப்பட்டவர்களா யிருக்கிருர்கள் இவர்கள்கங்காதீர்த்தத்தினுல் முக்தர்களாய்விடுவார்களல்லாமல் வேறொன்றினுல்முக்தர்களாகமாட்டார்களென்று கபிலபகவான்சொன்னவார்த்தையைக்கேட்டு அந்தஅங்கிசுமானுனவன் அந்தமகாரிஷியைப்பிரதட்சணநமஸ்காரஞ்செய்து சூஷமம்கொண்டு குதிரையைக்கொண்டுவந்து பாட்டனுன சகரனண்டையில் விட்டான் சகரனும் அந்தஅசுவத்தினுல் எக்கியசேஷத்தை நிறைவேற்றி ராச்சியத்தை அங்கிசுமானிடத்தில்விட்டுநிராசையாய் பந்தத்தில்நின்றும் விடுபட்டவனுய் அவுருவரிஷியினுல் உபதேசிக்கப்பட்ட சமாதி யோகத்தினுல் உத்தமமானகதியையடைந்தான்.

---

## கூவது - அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அரியகங்கையையரிபாரி லதிர்ந்திடக்கொண்டுவந்த
பருமணிபதித்தகிரீடப் பகீரதன்பாட்டனுன
உரியவங்கிசுமான்ராஜ னுடன்கட்டுவாங்கர்யந்தம்
தெரிந்திடவம்சபாரம் பரைதனைத்தெரிவிப்பாமே

கங்கைபூமியிலே கொண்டுவந்த பகீரதனுக்குப்பாட்டனுன அங்கிசுமான்ராஜன் முதலாக கட்டுவாங்கராஜாபரியந்தம் வம்சபரம்பரையானதுசொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்துவகாராஜனே அங்கிசுமானுனவன்கங்கையைக்கொண்டுவரவேணுமென்கிறஇச்சையினுல் வெகுகாலம் உக்கிரமான தபசைப்பண்ணி பலசித்தியை அடையாதவனுய் லோகாந்தரத்தை அடைந்தான் அவன்பிள்ளையான திலீபராஜனும் அவனைப்போலவே அனேககாலம் தபசுபண்ணி அசக்தனுய் காலத்தை அடைந்தான், அவன்பிள்ளையான பகீரதனும் மகாதபசைப்பண்ணினுன், அப்போது அந்தப் பகீரதனுக்குக் கங்காதேவி பிரசன்னமாய் உனக்கு வேண்டும் வரத்தைக் கொடுக்கிறேன் கேளென்றுசொல்ல அந்தராஜனுனவன் கங்கையைபிரணுமம்பண்ணி தன்னுடையஇஷ்டத்தைச்சொன்னுன், அதற்குக்கங்காதேவிசொல்லுகிருள்,வாராய்ராஜனே பூமியிலேவிழாநின்றஎன்னுடையவேகத்தைஎவன்தரிக்கிறவன் தரிக்கத்தக்கவனொருத்தன் வேணும்இல்லாவிட்டால் பூமியைப்பிளந்துகொண்டுபாதாளத்தில் போய்விடுவேன் இதுவுமன்றிநான்பூமியை அடைகிறதில்லை பூமியிலேவிழுந்தால் அங்குள்ள மனுஷியாளெல்லாம் தங்களுடையபாபத்தை என்னிடத்திலே சுத்திபண்ணிக்கொள்ளுவார்கள் நான் அவர்களுடைய பாபத்தை எப்படி சுத்திபண்ணிக்கொள்ளப் போகிறேன்இதற்கு நீஒருஉபாயஞ்சொல்லென்று கங்கையானவள்கேட்க பகீரதன்சொல்லுகின்ருன்.

பகீரதன்வாக்கியம்,

வாராய்கங்காதேவியே சாந்தாளாயும், லோகபாவனளாயுமிருக்கிறயோகிகள் தர்மப்பிரவர்த்தகளானசற்புருஷாள் இவர்களெல்லாம் உன்னிடத்திலேவந்து ஸ்நானத்தைப்பண்ணி தங்களுடையசரீரசம்பந்தத்தினுல் உனதுபாபத்தைப் போக்குவர்கள் அவர்களிடங்களிலேசகலபாபத்தையும் பேதிக்கிறவரான ஸ்ரீ அரியிருக்கிருரல்லவா யாதொருருத்திரனிடத்தில் இந்த ஜெகத்தெல்லாம் நூலுகளில் வஸ்திரம்போல குறுக்கும் நெடுக்குமாகக் கோக்கப்பட் டிருக்கிறது, சரீரிகளுக் கெல்லாம் ஆத்மாவான அந்தருத்திரனுனவன் உன்னுடைய வேக

த்தைத் தரிக்கப்போகிருனென்று சொல்லாநின்ற அந்தராஜாவினுடையவார்த்தையைக்கேட்டுகங்காதேவியானவள் அந்தராசாவைப்பார்த்துத் திரும்பவும் ஒருவார்த்தை சொல்லுகின்ருள்.

கங்காதேவிவாக்கியம்.

வாராய்ராஜனே, என்னுடையஜலவேகத்தைத்தரிக்குகைக்கு ஈஸ்வரனை வேண்டிக்கொள்ளென்றுசொல்ல அதைக்கேட்டு பகீரதனும் தபசிஞலேசிவனைச்சந்தோஷிப்பித்தான் பிற்பாடுகொஞ்சகாலத்தில் சர்வலோகங்களுக்கும் ஹிதப்பிரவர்த்தகனை சிவனும் அந்தராஜாவுக்குப்பிரசன்னராய் அவனலேகங்கையைத்தரிக்கவேணுமென்று பிரார்த்திக்கப்பட்டவராயும் அப்படியேஆகட்டுமென்று அங்கீகரித்தவராயும் ஸ்ரீஅரியினுடையபாதசம்பந்தத்தினல் பரிசுத்தமான கங்கையைச் சாவதானமாகச்சிரசிலேதரித்தார். அப்போதந்தராஜரிஷியானபகீரதனும்லோகபாவனியான அந்தக்கங்கையைஎந்ததேசத்தில் தன்னுடையபாட்டன்மார்கள்தேகமானதுகள்பஸ்பமாயிருக்கின்றதுகளோஅந்தப்பிரதேசத்தில்கொண்டுவந்தான் அந்தக்கங்காதேவியும் வாயுவேகமான ரதத்தின்பேரிலேறிக்கொண்டு முன்னேபோகாநின்ற பகீரதனைப்பின்சென்று சகலதேசங்களையெல்லாம் பாவனம்பண்ணிக்கொண்டும் பஸ்பமாக இராநின்ற சகரபுத்திரர்களைத் தன்ஜலங்களினலே நனைத்தாள் அப்போ தந்தக்கங்காஜலஸ் பரிசமாத்திரத்தினல் பிரம்மதெண்டத்தில் அடிக்கப்பட்டவர்களா யிருந்தாலும் சகரபுத்திராளானவர் தங்கேவலம் தேகபஸ்பங்களினலேயே அந்தக்கங்காஜலத்தை ஸ்பரிசித்தமாத்திரத்தில் சுவர்க்கத்தை யடைந்துவிட்டார்கள்.

பிற்பாடு அந்தப்பகீரதனுக்குசிறுதனும், அவனுக்குநாபாபரனும், அவனுக்குசிந்துத்திபனும்- அவனுக்கு அயுதாயுசும்-அவனுக்கு ரிதுபர்னனும்பிறந்தார்களநளனுக்குஸ்நேகிதனை ரிதுபர்னனைவன் அந்த நளராஜனுக்கு அஸ்வித்தையினுடைய மர்மத்தைச்சொல்லிஅவனிடத்தில்னின்றும், அசுவவித்தையைப்பெற்ருன், அந்தரிதுபர்னனுக்குச் சர்வகாமனும், அவனுக்குச் சுதாசனும், அவனுக்குமதயிந்திபதியான சவுதாசனும் பிறந்தார்கள், யாதொருசவுதாசனையே மித்திர சகாயனென்றுசொல்லுவர்கள், அவன்ஒருகாரணத்தினல் கலமாஷபாதகனுகப்பண்ணப்பட்டான்அந்தக்-கலமாஷபாதனென்று சொல்லப்பட்ட சவுதாசனேபுத்திரனில்லாதவனையும் வசிட்டருக்கு அபசாரத்தைப் பண்ணி அவருடையசாபத்தினல் ராட்சசனு மானனென்று சொல்லுகின்றசுகப்பிரம்ம ரிஷியைப்பார்த்து பரிட்சித்துமகாராஜனைவன் சொல்லுகின்ருன்,

பரிட்சித்துவாக்கியம்.

வாரீர்பிரம்மநிஷ்டரே, மகாத்மாவானசவுதாஸனுக்குளதுநிமித்தமாகக் குருவினுடைய சாபமுண்டாச்சுது இதைச் சொல்லக்கடவீரென்று கேட்கின்ற பரிட்சித்துமகாராஜனைப்பார்த்து சுகம்பிரம்மரிஷியானவர் சொல்லுகின்ருர்.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய் பரிட்சித்துமகாராஜனே, அந்தச்சவுதாசனைவன் ஒருக்கால் வேடடையாடும்போது ஒருராட்சசனைச்சங்கரித்துவிட்டான்அந்தராட்சசனுடையபிராதாவானவன் அவன்நிமித்தமாக விசனத்தையடைந்துஅவனைக்கொன்றசவுதாசனுக்குப்பிரதிசிட்சைசெய்யவேணுமென்றுநினைத்தவனய் சுயம்பாகிவேஷத்தைத் தரித்துக்கொண்டு சவுதாசனுடைய கிரகத்திலே யிருந்து ஒருநாளைவேளையில் போஜனம்பண்ணவேணுமென்று இச்சையையுடையவரான வசிஷ்டருக்குப் பக்குவமான நரமாமிசத்தைக் கொண்டுவந்துவைத்தான், பகவானைவசிஷ்டரானவர் தமக்குப் பரிமாரப்பட்ட நரமாமிசத்தைப்பார்த்து அந்தட்சணத்திலே கோபித்துக்கொண்டுராஜாவைநோக்கி நீஎனக்கு நரமாமிசத்தை வைத்தபடியினல் ராட்சசனுகக்கடவாயென்றுசபித்தார் பிற்பாடுவசிஷ்டரானவர் அதை ராட்சசனல் பண்ணப்பட்டதாக வறிந்து அந்த ராஜாவுக்குப் பனிரண்டு வருஷம்வரைக்கும்ராட்சசனயிருக்கக்கடவாயென்றுசொன்னர்,அப்போதந்தராஜாவும்அஞ்சலியில்ஜலத்தையேந்திக்கொண்டுகுருவைச்சபிக்குகைக்கு உத்தியோகித்தவனயும். தன்னுடையபாரியையான மதயிந்தியினல் விலக்கப்பட்டவனயும்-அந்ததீட்சணமானஜலத்தைத் திக்குகள்-பூமி-ஆகாசமிதுகளெங்கும் பிராணிமயமாயிருக்கிறதைப்பார்த்துஜலத்தைவிடுவதற் கிடமில்லாமல் தன்காலிலேவிட்டுக்கொண்டான் உடனே மகாநீலவர்னமான பாதத்தையுடையவனயும், கல்மாஷ் பாதனென்று சொல்லப்பட்டவனயும்-குரு சாபத்தினல் ராட்சசரூபத்தை அடைந்தவனயும்-காட்டில் சஞ்சரித்துக்கொண்டிருக்கும்போது அவடத்தில் கிரீடித்துக்கொண்டிராநின்ற பிராமணனையும்-பிராமண ஸ்திரீயையும், கண்ட கல்மாஷபாதனைவன்பசியினல் பீடிக்கப்பட்டவனய் அவர்களுக்குள்ளே பிராமணனைமாத்திரம் பிடித்துக்கொண்டான் அந்தப்பிராமணனுடைய ஸ்திரீயானவள் தயினியத்தையடைந்தவளாய் ஒருவார்த்தை சொல்லுகின்ருள்.

வாராய்வீரனேநீராட்சசனல்ல சாட்சாத்இட்சுவாவம்சத்தில்பிறந்தஇராஜாக்களுக்குள்ளே மகாவுத்தமனைமதயிந்திபதியான மகாரதனல்லவா, அப்படிப்பட்டநீ அதர்மத்தைச் செய்ய யோக்கிய னன்று புத்திரனைக்கோறிக்கொண்டிராநின்ற எனக்குகிரீடையிலே திர்ப்தி

யடையாமலிருக்கிற என்புருஷனைத் தரவேணும் இந்த மனுஷியதேகமானது புருஷனுக்கு சகல புருஷார்த்தத்தையுங்கொடுக்கின்றது, ஆகையால் இந்தத்தேகத்தினுடையவதமானது சர்வார்த்தங்களுடைய வதமாகச்சொல்லப்படும் வித்துவானும்மகாதபசோடுங்கூடினமகா புருஷனென்று பெயரை யுடையவராயுமிருக்கிற இந்தப்பிராமணனைவர் சர்வபூதங்களிலும் பரமாத்ம புத்தியினால் அந்தப்பூதங்களில் சத்வாதி குணங்களில் மறைக்கப்பட்டிருக்கிற சாட்சாத்பிர்மத்தை ஆராதிக்கவேணுமென்று இச்சையை யுடையவரு யிருக்கிறார், அப்படி தர்மக்கியராயும், பிரம்மசிரேஷ்டராயு மிருக்கிற இந்தப்பிராமணனைவர் ராஜசிரேஷ்டனும், பிரபுவாயுமிருக்கிறஉன்னால் பிதாவுக்குப் புத்திரன்போல எப்படிதான்வதத்துக்கு யோக்கியராவர், அப்படிநீ யிந்தப் பிராமணனைப் பட்சிக்கிறதானால் என்முன்னேபட்சித்துவிடென்றுசொல்லி அநாதையைப் போல பிரலாபித்துக்கொண்டிருக்கிற அவள்முன்னேதானே அந்தசவுதாச ராஜனாகிய ராட்சசனனவன் அந்தப்பிராமணனைப்பட்சித்துவிட்டான்- அந்தப்பிராமணஸ்திரீயானவள் இராட்சசனால் பட்சிக்கப்பட்ட தன்புருஷனைப் பார்த்து கோபத்தையடைந்தவளாய் பாபியான அந்த இராஜாவைநோக்கிச்சபித்தாள் வாராய் துற்புத்தியையுடையவனே - எந்தக்காரணத்தினால் காமத்தினால் பீடிக்கப்பட்ட என துப்ப சூனியரான புருஷரானவர் உன்னால் பட்சிக்கப்பட்டாரோ அந்தக்காரணத்தால் உனக்குஸ்திரீசம்போகத்தாலே மரணமுண்டாகக்கடவதென்று அந்த ஸ்திரீயானவள்மித்திரசகனை சவுதாசனைச்சபித்துபர்த்தாவினுடையசோகத்தையுடையவளாய் அந்தப் புருஷனுடைய அஸ்திகளைசேர்வியாநின்ற அக்கினியிலேபோட்டுத்தானும்அத்துடனேகூட அனுமானம் பண்ணி பர்த்தாவினுடைய கதியை யடைந்தாள்,

பின்பு அந்தராசனனவன் பனிரண்டு வருஷத்துக்குமேல் சாபத்தில்னின்றும் விடுபட்டவனாய் கிரகத்தில் வந்து தன்ஸ்திரீயுடனே கிரீடை பண்ணுகிறதற்கு ஆரம்பித்துத் தனக்குப்பிராமணஸ்திரீயினால் நேரிட்டசாபத்தைத் தன்மனைவிக்குத் தெரிவித்து ஸ்திரீ சம்போகத்தைவிலக்கினான் பின்பு வசிஷ்டமகாரிஷியானவர் அந்த இராஜாவினால் அனுக்கியைப் பண்ணப்பட்டவராய் அவனுடையஸ்திரீயான மதயிந்தியி னிடத்தில் கெர்ப்பத்தையுண்டாக்கினர். அந்தமதயிந்தியும் ஏழுவருஷம் அந்தக்கெர்ப்பத்தைத் தரித்துக்கொண்டு பிரசவியாமலேயிருந்தாள். பின்பு அவளுடைய உதிரத்தை வசிஷ்டமகாரிஷியானவர் கல்லினால் பிரகரித்தபின்பு அவள்அந்தப்பிள்ளையைப்பெற்றாள் அந்தப் பிள்ளையானவன் கல்லினால்பிரகரிக்கப்பட்டுப் பிறந்ததினால் அஸ்மகனென்று சொல்லப்பட்டஅவனிடத்தில்னின்றும் மூலகன்பிறந்தான்-அந்தமூலகனைவன் பரசுராமனைவர் க்ஷத்திரியவதஞ்செய்யும்போது ஸ்திரீகளினால் சூழப்பட்டு ரட்சிக்கப்பட்டபடியினால் நாரீகவசனென்று பேர்பெற்றான்அவனேராஜவம்சத்துக்கு மூலமாகையால்மூலகனென்று பெயரையுடையவனானன் அவனிடத்தில்னின்றும்தசரதனும் அவனுக்கு அயிலபினியும். அவனுக்கு விசுவசகனென்கிறராஜாவும் அவனுக்குக் கட்டுவாங்க சக்கிரவர்த்தியும் பிறந்தார்கள.

ஒருவராலேயும் ஜெயிக்கக் கூடாதவனான அந்தக் கட்டுவாங்க சக்கிரவர்த்தியானவன் தேவதைகளினால்பிரார்த்திக்கப் பட்டவனாய் யுத்தத்தில் தயித்தியர்களையெல்லாம் ஜெயித்தான்-அந்தராஜனனவன் சந்துஷ்டர்களான தேவர்களாலே உனக்குவேண்டிய வரத்தைக்கேளென்றுசொல்ல எனக்குஆயசு இன்னம்யெவ்வளவுகாலமிருக்குது சொல்லுங்களென்றுகேட்டான். அப்போதேவர்கள் இன்னம் ஒரு முகூர்த்தகால மிருக்கு தென்று சொன்னார்கள், அதைக்கேட்டு அவர்கள் கொடுக்கப்பட்ட விமானத்தி லேறிக்கொண்டு அதி வேகமாகத் தன்னுடைய பட்டணத்தைஅடைந்து ஸ்ரீபகவானிடத்தில் தனதுமனதை அனுசந்தானஞ்செய்து ஈசுவரனுடைய மாயையினால் நிர்மிக்கப்பட்டதாயும் கந்தர்வபுரத்துக்குச்சமானங்களாயுமிருக்கிற சத்துவராஜஸ் தமோமயமானதேகங்களிலேயுஞ் சப்தாதிவிஷயங்களிலேயுஞ் சுபாவமாக வேதிடமாயிராநின்ற ஆசக்தியைவிட்டு விசுவகர்த்தாவான சுவாமியினிடத்தில் ஆசக்தியினால் அவரையேசரணமாகஅடைகிறேனென்று ஸ்ரீமந்நாராயணரிடத்தில் பற்றியிராநின்றபுத்தியினால் நிச்சயத்தையுடையவனாய்அந்தக்கட்டுவாங்கனனவன் தேகாபிமான அஞ்ஞானத்தைவிட்டு ஞானத்தை யடைந்தவனாய் பரமாத்மாவை அடைந்தான்.

## ய-வது- அத்தியாயம்,

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கதித்தகட்டுவாங்கராஜன் கண்யவம்சத்திலுற்ற
லுதித்தகுஸ்ரீராமன்றன் தொன்மைவைபவமுமல்லால்
இதமிலாவிலங்கைவேந்தனென்னும்ராவணனைமாய்த்து
பதியயோத்தியினில்வந்து சேர்ந்ததும்பகருவோமே,

கட்டுவாங்கனுடைய வம்சத்திற் பிறந்த ஸ்ரீராமருடையவைபவமும் இலங்கேசனான இராவணனைச் சங்கரித்து அயோத்தியைவந்துசேர்ந்த சரித்திரமுஞ்சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் பரிட்சித்து மகாராஜனே, கட்டுவாங்கனுக்கு திர்க்கபாகுவும் அவனுக்கு ரகுமகாராஜாவும், அவனுக்கு மகாகீர்த்திமானான அஜனும்அவனுக்குத்தசரத

னும் அவனுக்கு சாக்ஷாத்ஸ்ரீபகவானுயும் பிர்மமாயு மிருக்கிற ஹரிவிஷ்ணுவே தேவதைகளால்பிரார்த்திக்கப்பட்டவராய் தம்முடையஅம்சா அம்சத்தினுல் ஸ்ரீராம லட்சுமண பரதசத்துருக்கனுளென்கிறபேரால் நாலுபுத்திரர்களாக அவதாரம்பண்ணினுர்கள்.

தத்துவதெரிசிகளான வால்மீகிமுதலான ரிஷிகளினுல் வெகுப்பிரகாரமாக வர்ணிக்கப்பட்டிருக்கிற அந்தச்சீதாபதியான ஸ்ரீராமருடைய சரித்திரமானது உன்னுல் அடிக்கடிகேழ்க்கப்பட்டிருக்கிறதல்லவா இப்பவும் அந்தச்சரித்திரத்தைச் சங்க்ஷேபமாகச் சொல்லுகிறேன்கேள் கோசலதேசாதிபதியாயுங் கவுசல்லியபுத்திரராயுமிராகின்ற அந்தஸ்ரீராமரானவர் பிதுர்வாக்கியத்தைப் பரிபாலனஞ்செய்வதற்காக ராச்சியத்தைவிட்டுபத்மதளம்போல மிருதுவாயும் பிராட்டியினது திருக்கைகளினுடைய ஸ்பரிசத்தையுங்கூட பெறுததான இரண்டுதிருவடிகளினுல் இளையபெருமாளோடுகூட ரிஷியீஸ்வரர்கள்செய்யாநின்ற பூசையினல் மார்க்கத்திலேசிரம மில்லாதவராய் வனங்கள்தோறுஞ்சஞ்சரித்துக்கொண்டுசூர்ப்பநகையினது நாசிகாச்சேதத்தினுல் அவளாலே ஆசையையுண்டாக்கி இராவணனுல் கொண்டுபோகப்பட்டசீதையினது விரகத்தையுடையவராய் அனுமான்சுக்ரீபன்முகலானபேர்களோடுகூட கடற்கரையிற் சென்றுகோபத்தினுல்உண்டாகாநின்ற புருவநெருப்பினுல்பயப்படாநின்றசமுத்திரத்திற் சேதுப்ந்தனஞ்செய்துஇலங்கையையடைந்து துஷ்டர்களானஇராவணன்முதலிய ராட்சசர்களாகிறகாட்டுக்குக் காட்டுத்தீப்போ லொத்த பராக்கிரமத்தையுடையவரான ஸ்ரீராமச்சந்திர ரானவர் நம்மைரட்சிக்கக்கடவர்,

யாதொருஸ்ரீராமனுல்விசுவாமித்திரருடையயாகத்தில் மாரீசன்முதலானராட்சசசிரேஷ்டர்களெல்லாம் லட்சுமணனும்பார்த்துக்கொண்டேயிருக்கும்போதே யடிக்கப்பட்டார்களோ அந்தஸ்ரீராமரானவர் மிதுலாபட்டணத்தில் லோகத்திலிராநின்றராசாக்களுடையமத்தியில் சீதாபிராட்டியினது சுயம்வரத்தில் மகா பலவான்களான முன்னூறுபேரால் கொண்டுவரப்பட்டஉக்கிரமான ஈஸ்வரனுடையதனுசை லீலையாகவே எடுத்து நாணேறிட்டிழுத்து யானைக்குட்டியானது கருப்பங்கோலை முறிப்பதுபோல ஒடித்துப்போட்டார், அந்தஸ்ரீராமரானவர் தமக்குயோக்கியங்களான குணம்-சீலம்-வயது-குலம் இவைகளை யுடையவர்களாயும் பூர்வம் விஷ்ணுவான தமது வட்சசில் வெகுமானம் பெற்றவர்களாயும் இந்த அவதாரத்தில் சீதையென்றுபெயரையுடையவர்களாயுமிருக்கிற லட்சுமியைஜெயித்து அடைந்தவராய் மார்க்கத்தில் இருதவிர்த்தாந்தத்தைக்கேட்டுக் கோபத்துடனே ஓடிவராநின்றும் இருபத்தொருதரம் பூமியில் ராஜவமிசத்தை வேரோடுகளைந்துவிட்டுமிருக்கிற பரசுராமனுடைய மிகுந்தகர்வத்தைப்போக்கடித்த அந்த ஸ்ரீபகவானுனவர் சத்தியமாகிறபாசத்தினுல் கட்டப்பட்டுமஸ்ரீவசியனுமிருக்கிறபிதாவினது ஆக்கினையை சிரசாய்வகித்துப் பாரியையோடும் தம்பியுடனேயுங் கூட ராச்சியத்தையுஞ் சம்பத்துகளையுஞ் சிநேகிதர்களையும்விட்டுவனத்தையடைந்தார் அந்தவனத்தில் ஸ்ரீபகவானுனவர்கோதண்டபாணியாகச் சஞ்சரித்துக்கொண்டு சீதையைக்கிரகிக்கவேணுமென்று இச்சையையுடையவர்களாயுங் காமாதுரியாயும் இராவணனது தங்கையாயுமிருக்கிற சூர்ப்பநகையை மூக்கையுங்காதையுமறுத்துப் பங்கம்பண்ணி அவளுடையமுக்கியபந்துக்களான கரதூஷண திரிசிரசுக்களையும் அவர்களோடு கூடவந்த பதினுலாயிரம் ராக்ஷசாளையும் வதஞ்செய்து அந்தவனத்தில்சஞ்சரித்துக்கொண்டிருந்தார்.

பின்பு சீதையினுடைய ரூபலாவண்ணியாதிவிர்த்தாந்தத்தைக்கேட்டு மன்மதவிகாரத்தோடுகூடினஇராவணனுல்ஏவப்பட்ட அற்புதமாயுஞ் சுவர்னமயமாயுமிராநின்ற மான்ரூபத்தோடுகூடின மாரீசனுல் ஆசிரமத்தில்நின்றும் வெகுதூரம் இழுக்கப்பட்டவராய் அந்த மாரீசனை தீக்ஷணமானபாணத்தினுல் தெட்சப்பிரஜாபதியை ருத்திரன்சங்கரித்ததுபோலச் சங்கரித்தார்- அப்போதுகாட்டில் சுவர்னம்போலொத்தராட்சசதம்னுன இராவணனுல்விடப்பட்டு சூனியமாயிருக்கிற ஆசிரமத்தில் விதேகராஜனது பெண்ணுனசீதையானவள் அபகரிக்கப்பட்டிருக்கையில் பாரியினதுவிரகத்தையுடையவராய் பிராதாவான லட்சுமணரோடுகூட வனத்தில் தீனனனவன்போலவும் ஸ்திரீயினிடத்தில் ஆசக்தியையுடையபேர்களைப்போலவுஞ் சஞ்சரித்துக்கொண்டு தமதுநிமித்தமாகஇராவணனேடுயுத்தஞ்செய்து அவனுலடிக்கப்பட்டசடாயுவைச் சமஸ்காரஞ்செய்து கவந்தனைச்சங்காரப்படுத்தி வானரங்களோடு சிநேகஞ்செய்து வாலியைக்கொன்று அந்தவானரங்களால் சீதையினது கெதியையறிந்து சுக்கிரீபனுடைய வானரசேனைகளோடு கூடபிர்மருத்திராதிகளினுல் அர்ச்சிக்கப்பட்ட பாதங்களையுடையசுவாமியானவர் சமுத்திரத்தையடைந்தார்,

பின்புஅவ்விடத்தில் திரிராத்திரம் உபவாசத்தோடிருந்துஞ் சமுத்திரராஜனனவன் வராம லிருக்கையில் அவனிடத்தில் ரோஷவிலாசத்தோடுகூடினதாயுஞ்சுழன்றுகொண்டுமிருக்கிற குரூரகடாட்சத்தினது சம்பந்தத்தினுல் இருந்தவிடத்திலிராமல் நாலண்டையிலேயும், உழலுகின்ற மச்சியமுதலைமுதலான சலசெந்துக்களுடையவனும் பயத்தினுல் அடக்கப்பட்ட கோஷத்தையுடையவனுமிருக்கிற சமுத்திரராஜனனவன் ரூபிகரித்து அஞ்சலிபந்தஞ்செய்துகொண்டு சுவாமியினதுபாதாரவிந்தங்களை அடைந்து பிரணமம் பண்ணி ஒரு

வார்த்தைசொல்லுகிருன் வாரீர்நிரநிதியே மகாத்மியத்தோடுகூடினசுவாமியே மந்தபுத்தியான நாங்கள்நிர்விகாராயும் செகத்காரணராயும் ஆதிபுருஷராயுமிருக்கிற உம்மைஇதுவரைக்கும் அறியாமற் போனேம் உம்முடையஆதீனமான சத்துவகுண அம்சத்தினுல் தேவகணங்களும் ரஜோகுண அம்சத்தினுல் பிரஜாபதிகளும் தமோகுணஅம்சத்தினுல் பூதபதிமுதலானபிரஜைகளும்உண்டானுர்கள், அப்படிப்பட்ட உம்மை இப்போது குணங்களுக்குநியந்தாவென்றும் ஜெகத்காரணபூதனென்றும்அறிந்தோம் ஆகையால்தேவரீர்எதேட்சையாக இந்தஜலத்தின்மேலேபோய் விசுவசுவினுடையதேகத்திற்பிறந்த புரிஷம்போ லொத்தவனும் திரைலோக்கியத்தையும் முறையிடப்பண்ணுகின்ற இராவணனை செயித்து வீரபத்தினியானசீதையைஅடையக்கடவீர் உமக்குமார்க்கத்துக்குத் தடங்கலில்லாம லிருந்தாலும் எசவினுடைய விஸ்தாரத்தின்பொருட்டு இந்த ஜலத்தில் சேதுபந்தனம்பண்ணக்கடவீர் உலகத்தில்ராஜாக்கள்இந்தச் சேதுவைப்பார்த்து திக்குவிஜையம் பண்ணுகின்ற உம்முடையு எசசைக்கானம்பண்ணிக்கொண் டிருக்கப் போகிருர்களென்றுசொன்னுன்,

இந்தப்பிரகாரம்சொன்ன வருணராஜனை அனுக்கிரகித்தவராய் அந்தஸ்ரீராமரானவர் விபீஷணருடையபுத்தியினுல் வானரசிரேஷ்டாளுடைய கைகளினுல் வேரோடுபிடுங்கப்பட்டவிருட்சசாகைகளோடுகூடின நானுவிதபர்வதசிகரங்களினுல்சமுத்திரத்தில் சேதுபந்தனம் பண்ணி முன்னுல்சீதையை தேடும்போது அனுமானுலேதகிக்கப்பட்டஇலங்கையைச் சுக்கிரீபன்-நீலன் அனுமான்முதலான வானரசேனைகளோடுகூட அடைந்தார் அப்போதந்த இலங்கையானது வானரசேனையினுல் தகையப்பட்ட கிரீடாஸ்தானங்கள் தானியக்களஞ்சியமுதலானதுகள்-பொக்கிஷம்-உப்பரிகைகள்- இதுகளெல்லாம் யானைக்கூட்டங்களினுல்கலக்கப்பட்ட தாமரைஓடைகள்போல எங்கும் கலக்கப்பட்டதுகள் அப்போதிராவணன் வானரசேனையினுல் எங்கும்வியாபிக்கப்பட்ட இலங்கையைப்பார்த்து நிகும்பன்-கும்பன்- தூமராக்ஷன்-துர்முகன்-தேகாந்தகன் நராந்தகாள்முதலான புத்திரானையும்-பிரகஸ்தன்-அதிகாயன்-அகம்பன் முதலான மந்திரிகளையும்-கும்பகர்ணனையும் கிரமமாகயுத்தத்துக்கனுப்பிவைத்தான்,

அந்தராக்ஷச சேனையைச் சுக்கிரீவன் லட்சுமணர் அனுமான்,கெந்தமாதனன் நீலன்-அங்கதன் - ஜாம்பவான்முதலானபேர்களோடு கூடினவராய் ஸ்ரீராமரானவர் எதிர்த்துயுத்தம்பண்ணினுர் அப்போது ஸ்ரீராமருடையசேனுபதிகளான் அங்கதன்முதலானபேர்களெல்லாம் இராவணனுடைய ரதகஜதுரகபதாதிகளோடுகூடதொந்தயுத்தம்பண்ணி இராவணனுடையசேனுபதிகளையெல்லாம் அடித்தார்கள்-பிற்பாடு ராட்சசனுன இராவணனுனவன்எதிரிகளாலேயுண்டான தன்னுடையசேனுநாசத்தைப்பார்த்து கோபத்தையடைந்து ஸ்ரீராமருக்கு எதிராகவந்து தீட்சணங்களான ஆயுதங்களினுல் அவரையடித்தான், அப்போது ஸ்ரீராமரும்இராவணனைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிருர், வாராய்ராட்சசபுருஷனே, ஏதுகாரணத்தால் மறைவாயிருந்து என்னுடைய ஸ்திரீயானவளை அபகரித்தாய் லச்சையில்லாதவனுயும் நித்தியனுயுமிருக்கிறவுனக்கு அந்தச்சீதாபகார கர்மத்தினுடைய பலத்தைதுஷ்டகர்மத்தைச்செய்தவனை எமனுனவன்தண்டிப்பதுபோல இப்போதுநான்தண்டிக்கிறேனென்று இராவணனைத் திரஸ்கரித்து ஸ்ரீ ராமரானவர் தனுசிலே ஒருஅற்புதமான பாணத்தைச் சந்தானம் பண்ணி விட்டார் அந்தப் பாணத்தினுல் பேதிக்கப்பட்ட இருதயத்தை யுடையவனுய் இராவணனுனவன் பத்து முகங்களினுலேயும் இரத்தத்தைக்கக்கிக்கொண்டுவிமானத்தில்நின்றும்விழுந்தான், அதைப்பார்த்து ஜெனங்களானதுகள் ஆகாவென்றுஆச்சரியத்தையடைந்ததுகள்,

பிற்பாடு இலங்கையில் நின்றும் மண்டோதரியோடுகூடராட்சசஸ்திரீகளெல்லாம்வெளிப்பட்டுரோதனம்பண்ணிக்கொண்டுயுத்தபூமியில் லட்சுமணருடையபாணங்களினுல் அடிக்கப்பட்ட தங்கள் தங்களுடைய பந்துக்களைக் கட்டிக்கொண்டும், மார்பிலே அடித்துக்கொண்டும் மதுரமானசுரத்தோடுரோதனம் பண்ணுகிருர்கள் வாராய்இராவணனே. நாங்கள் தெய்வத்தினுல்அடிக்கப்பட்டோம் உன்னுலேவிடப்பட்டும்சத்துருக்களால்பீடிக்கப்பட்டு மிருக்கிற இந்த இலங்கையானதுயாரைச்சரணமடையப்போகிறது நீ-மன்மதவிகாரத்தையுடையவனுய் அந்தச்சீதையினுடைய பிரபாவத்தினுல் இப்படிப்பட்ட அவஸ்தையை அடைந்தாய்,அப்படிப்பட்டசீதையின்தேஜசினுடைய பிரபாவத்தைமுன்னே அறியாமற் போனையே, இப்போது இலங்கையும் நாங்களும் விதவையாகவும், அநாதாளாகவும் பண்ணப்பட்டோமென்றுராட்சசஸ்திரீகள் வெகுவாகப் பிரலாபித்துக்கொண்டிருக்க-விபீஷணரும் கோசலேந்திரரான ஸ்ரீராமரால் அனுக்ஞைபண்ணப்பட்டவராய் இராவணனுக்குப்பிதுர்மேதவிதியினுல் சமஸ்தகார முதலான கிர்த்தியங்களைச் செய்தான்.

பிற்பாடு ஸ்ரீராமனுனவர் அசோகவனமத்தியில் சிங்சுமா விருட்சத்தின் கீழே யிராநின்ற சீதையைக் கண்டு கிருபைசெய்து பாரியோடு கூட இளையபெருமாள், சுக்கிரீவன் - அனுமான் - முதலான பேர்களோடு புஷ்பக விமானத்தின் பேரி லேறிக் கொண்டு பகவானுன ஸ்ரீராமரானவர் விபீஷணனுக்கு இலங்கையையும், தீர்

க்காயுவையுங் கொடுத்துக்காலசெய்தபிரதிக்கினையைநி
றைவேற்றினவராய் அயோத்திக்குப்போகும்போதுமா
ர்க்கத்திலே லோகபாலாள்வ்ருஷிக்கப்பட்ட புஷ்பங்களி
னுல் சூழப்பட்டவராய் அயோத்தியை அடைந்து பரத
னைப்பார்த்து மிகவுஞ்சந்தாபத்தை அடைந்தார், பரத
ரும் பட்டணத்திலிருக்கிற செனங்கள் மந்திரிகள் இவ
ர்களுடனே ஸ்வாமியினுடையபாதுகைகளைசிரசின்மே
லில் வைத்துக்கொண்டு எதிர்கொண்டுவந்து ஸ்ரீராமரு
டைய பாதுகைகளை எதிரேசமர்ப்பித்து பாதாரவிந்தங்
களில் பிரணமம்பண்ணி பிரீதியினுல்உருகாநின்றமன
தையுடையவராய் ஆனந்தபாஷ்பம் பெருகவைகூப்பிக்
கொண்டிருந்தார்-ஸ்ரீராமரும் பரதனைக்கைகளினுல் ஆ
லிங்கனம்பண்ணிக்கொண்டு தம்முடையநேத்திரசலங்க
ளினுல் பரதனைநனைத்து சகலமானபிரசைகளினுலேயு
ம் சேவிக்கப்பட்டவராய் சீதை இளையபெருமாள்இவர்
களோடுகூட பூச்சியாளானவசிஷ்டர்முதலான பிராம
ணுளைப் பிரணமம்பண்ணினர் அப்போதுஉத்தரகோ
சல தேசத்திலிராநின்றசெனங்கள் வெகுநாளைக்குப்பி
ன் வராநின்றசுவாமியைப்பார்த்து சந்தோஷத்தினுல்யு
த்தரியங்களை விசிறிக்கொண்டு புஷ்பவருஷங்களைவரு
ஷித்து நிர்த்தனம் பண்ணினர்கள்.

அப்போது பரதர்இரண்டுபாதுகைகளையும் விபீ
ஷணசுக்கிரீவாள் சாமரங்களையும் அனுமான்சுவேதசத்
திரத்தையும் சத்துருக்கனர்தனுசையும் அம்புறுப்பொ
திகளையும், சீதைதீர்த்தகமண்டலத்தையும், அங்கதன்
சுவர்ணமான வுறையோடுகூடினகத்தியையும் கேடயத்
தையும் எடுத்துக்கொண்டுவரஸ்ரீராமரும்பிராதாக்களு
டனேகூட மகோச்சவத்தோடுகூடினஅயோத்தியாபட்
டணத்திற் பிரவேசித்து ராஜகிரகத்தில்இராநின்ற தம்
முடைய தாயாரையும்மற்றுமுள்ளமாதாக்களையும்பெரி
யவாளையும் பூசித்துஅவர்களாலும் பூசிக்கப்பட்டார், சீ
தையும் லட்சுமணரும் ஸ்ரீராமரைப்போலவேதாயுமார்
முதலான பூச்சியாளையெல்லாம் பிரணமம்பண்ணினர்
கள் தாய்மாரும்பிராணன்களை அடைந்தசரீரங்கள்போ
லத் தங்களுடையபிள்ளைகளையெடுத்துக்கட்டிமடியிலே
வைத்துக்கொண்டு சந்தோஷத்தையடைந்தார்கள் குரு
வானவசிஷ்டரும் குலவிர்த்தாளுடனேகூடஸ்வாமிக்கு
ச் சடைகளைவிடுவித்துநாலு சமுத்திரத்துத் தீர்த்தங்க
ளாலேயும், மகாநதிதீர்த்தங்களாலேயும் எதாசாஸ்திர
மாக அபிஷேகம்பண்ணினர்.

இந்தப்பிரகாரம் அலங்கரிக்கப்பட்ட ஸ்ரீராமரா
னவர் பிராதாக்களோடும் பாரியையோடுங்கூட விளங்க
ப்பட்டவராய் ராஜசிம்மாசனத்தைக்கிரகித்து பிரசைக
ளை பிதாவைப்போல ரட்சித்தார் அந்தப்பிரசைகளும்
ஸ்ரீராமனைப் பிதாவைப்போலப்பார்த்தார்கள், அப்போ
து நடவாநின்ற திரேதாயுகத்திலே அந்த காலமானது
கிருதயுகத்துக்குச் சமானமாகவிருந்தது அப்போதுஸ்ரீ
ராமரானவர் கிரகஸ்தயோக்கியங்களான தம்முடைய த
ர்மங்களினுல் பிரஜைகளைரட்சித்தார், சீதையும்பிரேமத்
தினுலேயும், சிசுரூஷையினுலேயும்,சீலகுணத்தினுலே
யும்,வணக்கத்தினுலேயும்-லச்சை-பயம்-பக்தி- இதுகளி
னுலேயும்-சாத்துவியாய் இங்கிதகுணமுடையவளாய்ப
ர்த்தாவான ஸ்ரீராமருடையமனதைவசிகரித்தாள்.

## ௰௧வது-அத்தியாயம்

சந்தக்கலிவிருத்தம்.

அரியராமமூர்த்தியானே ரனுசமார்கள்தம்முடன்
பருமயோத்திதன்னில்வாசம் பண்ணிக்கொண்டுயக்கிய
உரியவர்ணுசிரமதர்மங்களுற்ற லோகசிட்சார்த்தந் (ம்
தெரியவேவிசிதமாகச் செய்தாரென்றுசெப்புவாம்,

ஸ்ரீராமமூர்த்தியானவர் தம்பிமாரோடுகூட அயோ
த்தியிலே வாசம்பண்ணிக்கொண்டு யக்கிய முதலான
வர்ணுசிரமதர்மங்களை லோக சிட்சார்த்தமாகச் செய்தா
ரென்று சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் பரிட்சித்துமகாராசனேபகவானுனஸ்ரீராம
ரானவர் வசிஷ்டமகாரிஷியை ஆசாரியராகக்கொண்டுஉ
த்தமமான விதிகளினுல்வாமதேவர்முதலான ரித்விக்கு
களால் பண்ணப்பட்ட யக்கியங்களினுலே சர்வதேவரூ
பியாயும், தேவராயுமிருக்கிற தம்மைக்குறித்துத்தாமே
யேசித்தார், அந்தயெக்கியத்திலே ஹோதாவுக்குக்கிழக்
குத்திக்கையும், பிர்மாவுக்குத்தெட்சணதிக்கையும அத்
துவரியுவுக்கு மேற்குத்திக்கையும், உத்காதாவுக்குவட
க்குத்திக்கையுங்கொடுத்து அந்தத்திக்குகளுக்கு நடுவே
யிராநின்ற சமஸ்தபூமியையும் ஆசாரியருக்குங்கொடுத்
தார் நிஷ்காமனுன பிராமணனே சமஸ்தத்துக்கும்யோ
க்கியனுக விருக்கிருனென்று சமஸ்தத்தையுங் கொடுத்
து வஸ்திர அலங்காரத்தைமாத்திரம் மிகுதியாகவுடை
யவராயிருந்தார்,சீதாதேவியும்அப்படியேசமஸ்தத்தை
யுங் கொடுத்தவளாய் திருமங்கிலியத்தை மாத்திரம் உ
டையவளாயிருந்தாள், அந்தரித்விக்குகளோ வென்றுல்
பிராமணுளையே தெய்வமாகவுடையவரான அந்தஸ்வா
மியினுடைய வாற்சல்லியத்தைப்பார்த்துசந்துஷ்டாளா
ய்அவருக்கே அவைகளையெல்லாம் திரும்பவுங்கொடுத்
துவிட்டு ஒருவார்த்தைசொல்லுகின்றுர்கள்,

வாரீர்பகவானே, லோகேஸ்வரனே, ஏதுகாரண
த்தால் எங்களுடைய இருதயத்திலேபிரவேசித்து உம்
முடையதேஜசினுல் எங்களுடையஅந்தகாரத்தையெல்
லாம் போக்கடிக்கிரீரோ ஆகையினுல்தேவரீரே யெங்க
ளுக்குக்கொடுக்கப்பட்டவரானீர் அன்றியும்தாமே எங்

களுக்குக் கொடுக்கப்பட்டவராயிருக்கையில் வேறேகொடுக்கவேண்டிய தென்ன விருக்கின்றது, பிராமணதேவராயும், சர்வக்கியராயுமிருக்கிற உமக்குப்பிரணமமென்று ஸ்வாமியைப்பார்த்துச்சொன்னார்கள், பிற்பாடொருக்கால் ஸ்ரீராமரானவர் லோகத்தினுடையரக்ஷைக்கையை அறியவேணுமென்கிற இச்சையை யுடையவராய் ராத்திரியில் ஒருத்தருக்குந்தெரியாமல் வீதியிலேசஞ்சரிக்கும்போது தம்முடையபாரியை உத்தேசித்துச்சொல்லாநின்ற ஒருவனுடையவசனத்தைக்கேட்டார், என்னவென்றால் வாராய்துஷ்டையே. அன்னியாளுடையகிரகத்துக்குப் போய்வந்துந் துஷ்டையாயுமிருக்கிறவுன்னை நான் சேர்த்துக்கொள்ளுகிறதில்லை ஸ்திரீவசியரானஸ்ரீராமரல்லவா அயலார்கிரகத்திலே வாசம்பண்ணுநின்றசீதையையவைத்துக் கொண்டாரென்று சொல்லாநின்ற அந்த வார்த்தையைக்கேட்டு ஸ்ரீராமரால்சீதையானவள் காட்டில்விடப்பட்டவளாய் வால்மீகமகாரிஷியுடைய ஆசிரமத்தையடைந்து கெர்ப்பிணியான அந்தச்சீதையானவள் பிரசவகாலத்திலே இரட்டைப்பிள்ளைகளைப்பெற்றாள்.

அப்போது வால்மீகிமகாரிஷியானவர் அந்தப்பிள்ளைகளுக்கு சாதகர்மமுதலான கர்மங்களைப்பண்ணிகுசனென்றும், லவனென்றும், நாமகரணத்தைச்செய்வித்தார் அவர்களும்பிரசித்தர்களாயிருந்தார்கள் லட்சுமணருக்கு அங்கதனென்றும், சந்திர கேதுவென்றும் - இரண்டுபிள்ளைகளும் பரதருக்கு தட்சனென்றும், புஷ்கரனென்றும் இரண்டுபிள்ளைகளும் சத்துருக்கனருக்கு சுபாகுவென்றும்-சுருதசேனனென்றும்-இரண்டுபிள்ளைகளும்பிறந்தார்கள்-பரதரானவர் திக்குவிசையத்தில் அனேககோடி கந்தர்வாளைச்சங்கரித்து அவர்களுடையதனத்தையெல்லாம்கொண்டுவந்து ராஜாவான ஸ்ரீராமருக்குக்காண்பித்தார் சத்துருக்கனரும் மதுவினுடைய புத்திரனை லவணனென்கிற ராட்சசனைச்சங்கரித்து மதுவனத்தில் மதுரையென்றுஒருபட்டணத்தை நிர்மித்தார் பர்த்தாவினால் காட்டிலேவிடப்படாநின்ற அந்தச் சீதாதேவியும் வால்மீகமுனியிடத்தில் இரண்டு பிள்ளைகளையும் ஒப்பிவைத்துஸ்ரீராமருடைய சரணங்களையே தியானஞ்செய்துகொண்டு பிலத்தில்பிரவேசித்தாள் அந்த விர்த்தாந்தத்தைக்கேட்டு பகவானானஸ்ரீராமரானவர் தமதுபுத்தியினால் சோகத்தை யடக்கியிருந்தாலும் அந்தச்சீதையினுடைய அந்தக்குணங்களை நினைத்துக்கொண்டுசோகத்தைச் சகிக்கமாட்டாமற்போனார்,

சீதாவியோகத்துக்குப்பின்பு ஜெகத்பிரபுவான ஸ்ரீராமரானவர் பிரமசரிய விரதத்தைத்தரித்துக்கொண்டு பதின்மூவாயிரவருடம் ஒருநாளும் விச்சின்னமில்லாமலிருக்கிற அக்கினிஹோத்திரக்கைமஞ்செய்தார். தேவதைகளுடைய பிரார்த்தனையினால் பரிக்கிரகிக்கப்பட்ட திவ்வியமங்கள விக்கிரகத்தையுடைய ஸ்ரீராமமூர்த்தியான பகவானுக்கு ஆயுதங்களால் ராக்ஷசர்களைச்சங்கரித்தாரென்றுஞ் சமுத்திரத்தில்சேதுபந்தனஞ் செய்தாரென்றும்வித்துவான்களால் மகாஆச்சரியமாகவர்னிக்கப்படுகின்றது எச்சுஅல்ல ஆனால்சமமும் அதிகமுமில்லாத பிரபாவத்தையுடையஅந்தஸ்ரீராமமூர்த்தியான பகவானுக்குச்சத்துருசங்காரத்தில் வானரர்களுடைய சகாயம் எவ்வளவுசிரவணேந்திரியங்களினால்ஸ்ரீராமனுடைய சரித்திரத்தைத் தியானஞ்செய்யாநின்ற புருஷனானவன் சாந்திகுணநிஷ்டனாய் கர்மபாசங்களினால்விடப்பட்டவனென்று சொன்னார்.

## ௰௨ - வது - அத்தியாயம்.

மட்டுவிருத்தம்,

பார்புகழயோத்தியாளும் பதிதராமபுத்திரன் (வாம்.
சோர்விலாசக்குசனுடைய தொன்மைவம்சஞ்சொல்லு

ஸ்ரீராமபுத்திரரான குசனுடையவம்சமானது சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய் பரிட்சித்துமகாராஜனே குசனுக்கு அதிதியென்று ஒருபிள்ளையும், அவனுக்கு, நிஷதனென்கிறவனும், அவனுக்குநபனென்கிறவனும், அவனுக்குப் புண்டரீகனும் அவனுக்குக்ஷேதெர்மாவும் அவனுக்குதேவாணிகனும் அவனுக்கு அகினனும் அவனுக்குப்பாரியாத்திரனும் அவனுப்பெலஸதனனும் அவனுக்குசூரியஅம்சனனவச்சிரநாபனும் அவனுக்கு சங்கணனும்அவனுக்குவிதுர்த்தியும், அனுவக்கு இரணியனாபன்பிறந்தான், அந்த இரணியனாபனே செயமுனி மகாரிஷிக்கு சிஷியனாய் யோகாசாரியனானஅந்த இரணியனாபனிடத்தில்நின்றும் கோசலபுத்திரரான யாக்கியவர்க்கமுனியானவர் மகாசித்திகளையுடையதாயும், இருதயத்தினுடைய சமுசயகிந்தியைப் போக்கடியாநின்று மிருக்கிற அத்தியாத்துமயோகத்தை அடைந்தாரோ அப்படிப்பட்ட இரணியநாபனுக்கு பஷியனென்றுஒருபிள்ளையும், அவனுக்குதுருவசந்தியென்கிறவனும், அவனுக்குசந்தனனும்,அவனுக்குஅக்கினிவானனும், அவனுக்குசிக்கிரனும், அவனுக்கு மருத்தென்கிறவனும் பிறந்தார்கள், அந்தமருத்தென்கிற ராஜனானவன் கபாலமென்னப்பட்ட கிராமத்திலேயிருந்துகொண்டும் யோகசித்தியை யுடையவனாய் இப்போதும் இருக்கின்றான் அந்தமருத்தானவன் கலியினுடைய முகவில் நஷ்டமாய்ப்போன சூரியவம்சத்தைத்திரும்பவும் உண்டாக்கப்போகிறான். அந்தமருத்துக்குப் பிரசுசுருதனும் அவனுக்குச்சந்தியும் அவனுக்கு அகமரஷணனும் - அவனுக்கு மகசுவானும் - அவனுக்குவிசுவசாகியனும் அவனுக்கு பிரகதபெலன்பிறந்தா

ன். அந்தப்பிரகதபெலனுனவன் பாரதயுத்தத்தில் உன்னுடையபிதாவான அபிமன்னுவினல் சங்கரிக்கப்பட்டான், இட்சுவாகுவினுடைய வம்சத்தில்பிறவாநின்றஇவர்களெல்லாம் அதிக்கிரமித்துப் போனர்கள் இனிமேல் பிறக்கப்போகிறவர்களைச் சொல்லுகிறேன்கேள் அந்தப்பிரகதபெலனுக்கு பிரகதிதிருதனும் அவனுக்கு வுருட்சூகனும் அவனுக்குவச்சப்பிரிதனும் அவனுக்குப் பிரிதிவியோமனும் அவனுக்குப் பானுவும் அவனுக்குத் தேவசேனுதிபதியானபானுவும், அவனுக்குவீரனுனசகதேவனும் அவனுக்குப் பிரகதஸ்வனும் அவனுக்குப் பானுமானும் அவனுக்குப் பிரிதிகாசுவனும் அவனுக்குச்சுப்பிரதிகனும் அவனுக்குமனுதேவனும் அவனுக்குச் சுனக்ஷத்திரனும் அவனுக்குபுசுஷ்கனும் அவனுக்குஅந்தரிக்ஷனும் அவனுக்குச்சுதபஸ்பதும அவனுக்கு அமித்திரசித்தும் அவனுக்குப் பிரகத்துவாசனும் அவனுக்குப் பெறிகசும் அவனுக்குத்தனஞ்செயனும் அவனுக்கு றெணஞ்செயனும் அவனுக்குச் சிரஞ்செயனும் அவனுக்குச் சாக்கியனும் அவனுக்குச்சுத்தோதனும் அவனுக்கு வாங்கலனும் அவனுக்குப்பிரசேனசித்தும் அவனுக்குச் சூத்திரகனும் அவனுக்குக்குணகனும் அவனுக்குச் சுரதனும் அவனுக்குச்சுமித்திரனும் பிறக்கப்போகிறுர்கள் இந்த ராஜாக்கள் பிரகதபலனுடைய வம்சத்தில்பிறக்கப்போகிறவர்கள் இட்சுவாகுவினது இந்தவம்சமானது அந்தச்சுமித்திரனுடைய அந்தமாயுடையதாகநிற்கப்போகின்றது

## ௰௩-வது அத்தியாயம்

மட்டுவிருத்தம்.

சுமையிலாயிட் சுவாகுசுபுத்திரன்
நிமியின்வம்சம் நிகழ்த்துவதாமரோ.

பிர்மக்கியானிகளாகியஜனகர்முதலியபேர்களா லுண்டான இட்சுவாகுபுத்திரன் நிமியினுடையவம்சமானதுஞ்சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்துமகாராஜனே, இட்சுவாகுபுத்திரனுன நிமியானவன் ஒரு சத்திரயாகத்தை ஆரம்பித்தவனுய் வசிஷ்டமகாரிஷியை எக்கியஞ்செய்து வைக்கும்படியாகவரித்தான் அந்தவசிஷ்டமகாரிஷியானவர் நான் முன்னல் இந்திரனல்வரிக்கப்பட்டேன் அந்தஇந்திரனுடையயாகத்தை நிறைவேற்றிவிட்டு வருகிறேன் அதுபரியந்தம்பார்த்துக்கொண் டிருவென்று சொல்லாநின்ற அந்தரிஷியினதுவசனத்தைக்கேட்டு அந்தநிமியானவன் மவுனமாயிருந்தான் வசிஷ்டரும் இந்திரனுக்கு யாகத்தைச்செய்துவைத்தார் பின்பு அந்த நிமியானவன் ஆத்மக்கியானியாகையால் இந்தச் சரீரத்தை அஸ்திரமாக எண்ணிக்கொண்டு வசிஷ்டமகாரிஷி வருவதற்கு முன்னமே வேறேசில ரித்விக்குகளைக்கொண்டு சத்திரயாகத்தைஆரம்பஞ்செய்துகொண்டிருந்தான் அப்போது குருவான வசிஷ்டமகாரிஷியும் இந்திரனுடைய யாகத்தை நிறைவேற்றிவிட்டுவந்து சிஷியனது அக்கிரமத்தைப்பார்த்துத்தானே சர்வக்கியனென் றெண்ணிக்கொண்டிராநின்ற இந்தநிமியினுடைய தேகமானது விழுந்துபோகக்கடவதென்றுசபித்தார் அந்தநிமியுந் தர்மனிஷ்டரான குருவைப்பார்த்து லோபத்தினல் தர்மத்தை அறியாத உமது தேகமும்விழக்கடவதென்று பிரதிசாபங் கொடுத்தான் பின்பு ஆத்மக்கியானியான நிமியானவன் தன்னுடையதேகத்தைவிட்டுவிட்டான் அந்தவசிஷ்டரும் அந்தச்சரீரத்தைவிட்டுவிட்டு உருவசியைக் கண்டமாத்திரத்தில் நழுவாநின்ற மித்திராவருணனுடைய வீரியத்தில் கும்பத்திலேசெனித்தார் பின்புமுனிசிரேஷ்டர்களானவர்கள் அந்தநிமியினது தேகத்தைக் கந்தவஸ்துக்களில்வைத்துக்கொண்டு சத்திரயாகமுடிந்தபின்பு அந்தயாகத்துக்குவந்திராநின்ற தேவர்களைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றுர்,

வாரீர்தேவர்களே நீங்கள்எங்களுக்குப் பிரசன்னருயும் சமர்த்தாளுமானீர்களேயாகில் இந்தராஜாவினுடையதேகம் சீவிக்கக்கடவதென்றுசொன்னர்கள் அந்த தேவாளும் அதைஅங்கீகரித்து அப்படியேஆகட்டுமென்றுசொல்லுகையில் அந்தநிமியானவன்ஒருவார்த்தை சொன்னன் என்னவென்றல் எனக்கு தேகசம்பந்தம் வேண்டாம் ஸ்ரீஹரியினிடத்தில் புத்தியையுடையவர்களான முனிகளானவர்கள் தேகத்தினுடைய சம்பந்தத்தையிச்சியாதவர்களால் மோட்சத்திலேயேஇச்சையையுடையவர்களாய் ஸ்ரீஅரியினுடைய பாதார விந்தத்தையேஇச்சிக்கிறுர்கள் ஆகையால் எனக்கு இந்தத்தேகசம்பந்தம்வேண்டாமென்றுசொல்லாநின்ற அந்தநிமியைப்பார்த்து தேவர்கள்சொல்லுகிறுர்கள் வாராய்நிமியே நீதேகமில்லாதவனுய் பிராணிகளுடைய நேத்திரங்களில் நிமைகொட்டுதல் விழிக்குதல் இவைகளினல் காணப்பட்டவனுய் ஆத்மக்கியானத்தை யுடையவனுய் எதேச்சமாக வாசம்பண்ணக் கடவாயென்று வரங்கொடுத்தார்கள் அப்போது அந்தரிஷிகளானவர்கள் மனுஷியாளுக்கு அருசகபயத்தையெண்ணினவர்களாய் அந்த நிமியினுடைய தேகத்தைக்கடைந்தார்கள் அப்போது அந்தச்சரீரத்தில்நின்றும் ஒருபுத்திரன்பிறந்தான் அந்தப் புத்திரனனவன் ஜெனிக்கையாலே ஜெனகனென்றும்விதேகனுடைய தேகத்தில்பிறந்ததினல் வைதேக னென்றும் கடைதலினல் பிறந்ததினல் மிதிலனென்றுபெயர்பெற்றுன் யாதொருமிதுலனே தன்பெயரால் மிதுலையென்று ஒருபட்டணத்தை நிமித்தான்,

அந்தஜெனகனிடத்தில்நின்றும் உதாவசுவும் அவனுக்குநந்திவற்கனனும், அவனுக்கு சுகேதும், அவனுக்குதேவாாதனும்·அவனுக்குப் பிறுகத்திறுதனும்- அவனுக்குமகாவீரியனுன சுதிறுதியும் அவனுக்கு திருஷ்டகேதுவும்-அவனுக்கு அரியசுவனும். அவனுக்கு மருவும்-அவனுக்குப் பிரணிந்தகனும்- அவனுக்கு கீர்த்திதரனும்-அவனுக்குதேவமீடனும் -அவனுக்கு விதுர்கதனும், அவனுக்கு மகாகிருதியும் - அவனுக்கு கீர்த்திராதனும்-அவனுக்கு மகாரோமனும்-அவனுக்கு சுவர்னரோமாவும்-அவனுக்கு இரஸ்வ ரோமனும் அவனுககுச் சிரத்துவசனும், ஜெனித்தார்கள் அந்தச் சிரத்துவசனுனவன் எக்கிய நிமித்தமாகப் பூமியைக் கலப்பையினுல் உழும்போது அந்தக்கலப்பையினுடைய முகத்தில்சீதைபிறந்தாள்-ஆகையால் அவன் சிறத்துவசனென்று பெயர்பெற்ருன், அவனுக்குச் சத்துவசனும், அவனுக்குத்தர்மத்துவசனும்- அவனுக்குக் கிருதத்துவசனென்றும் மிகத்துவசனென்றும். இரண்டுபிள்ளைகள்பிறந்தார்கள் அவர்களுக் குள்ளே கிருதத்துவசனுக்கு கேசித்துவசனும் மிதத்துவசனுக்கு காண்டிக்கனும் ஜெனித்தார்கள் கிருதத்துவசனுடையபுத்திரனுன கேசித்துவசனுனவன்வேதாந்தக் கியானத்தை யுடையவனுயிருந்தான். காண்டிக்கனுென்ருல் கர்மகாண்டத்தினுடைய தத்துவத்தையறிந்தவனுய் கேசித்துவசனுக்குப்பயந்து ராச்சியத்தை விட்டுப் புறப்பட்டுப் போனுன்.

அந்த கேசித்துவசனுக்குப் பானுமானுமவனுக்கு சதத்தியுமினனும் அவனுக்குசுசியும், அவனுக்குசனத்துவாசனும், அவனுக்கு ஊர்த்தகேதுவும், அவனுக்கு அசனும், அவனுக்குபுருசிதும், அவனுக்குஅரிஷ்டநேமியும் அவனுக்குகிருதாயும், அவனுக்குசுபாருசுவகனும்அவனுக்கு சித்திராதனும் அவனுக்கு மிதுலாபதியானஷேமாலியும்-அவனுக்கு ஏமரதனும் அவனுக்குச் சத்தியபாதனும், அவனுக்கு உபகுருவும், அவனுக்கு அக்கினியினுடைய அம்சமான உபகுபதனும்- அவனுக்கு சாவனனும்-அவனுக்குச்-சுவற்சாயுவும் - அவனுக்குச் சுபாஷணனும்-அவனுக்குசிரதனும்- அவனுக்கு ஜெயனும்-அவனுக்கு விஜையனும்-அவனுக்குக் குறிதனும்-அவனுக்குஅனகனும்-அவனுக்கு விதிஅவ்வியனும்- அவனுக்கு கிக்தியும்-அவனுக்கு விபிலாசுவனும் அவனுக்கு திறுதியும்-அவனுக்கு சிதேந்திரியனுயும்-மகானுயு மிருக்கிற கிறுதியுஞ்செனித்தார்கள். மிதுலனுடையவம்சத்தில் பிறவாநின்ற இந்தராஜாக்கள் வேதாந்தக் கியானிகளாயும்-யோகீஸ்வராளான ரிஷிகளுடைய பிரசாதத்தினுல் கிரகாசிரமங்களிலே யிருந்தாலும் சுதோட்சனுதி தொந்தரிகமில்லாதவர்களா யிருநதார்கள்.

சூரியவம்சம்-முற்றிற்று.

# ௰௪-வது-அத்தியாயம்

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அயிளனமுதலாம்புண்யகீர்த்திகளாமரசர்களுமவற்காசார்ய-கயிலணிந்தவளேயல்பத்நிதாரையினிடத்தினிற்கதித்தகாந்திவீசும்-நயசந்த்ரபீஜத்துக்குப் பிறந்தபுதனுக்குநண்ணும்புரூர்வன்-மயலுறுமூர்வசியிடத்திற்பிறந்த பிள்ளை யறுவரொன வழுத்துவாமே.

அயிளன்முதலான புண்ணியகீர்த்திகளான ராசாக்களும்குருபத்தினியான தாரையினிடத்தில் சந்திரபீஜத்துக்குப் பிறந்தபுதனுக்கு இளையினிடத்தில் பிறக்கையால் அயிளனென்றும் பெயரை யுடையவனுன புரூரவசுவானவன் உருவசியினிடத்தில் ஆயிசுமுதலான ஆறுபிள்ளைகளைப்பெற்ருனென்று சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய் பரிட்சித்துமகர்ராசனே இனிமேல்ஜெகத்பாவனமாயும் புண்ணிய சுலோகாளாயுமிருக்கிற புரூரவசுமுதலான இராசாக்களின்சந்திரவமிசத்தைச்சொல்லுகிறேன்கேள் சகஸ்திரசிரசோடுகூடின மகாபுருஷனுனபகவானுடைய நாபிக்கமலத்தில் பிறந்த பிர்மதேவனுக்குகுணங்களினுற் சமானமானவராய் அத்திரியென்று ஒருபுத்திரன்பிறந்தான் அந்த அத்திரிமகாரிஷியினுடையநேத்திரத்திலுண்டான ஆனந்த பாஷ்பங்களில்நின்றும்அமிர்தமயமான சந்திரன்பிறந்தான். அந்தச்சந்திரனுனவன் பிரம்மதேவனுல்-பிராமணுள்-ஓஷதிகள்நட்சத்திரங்கள் இதுகளுக்கு இராஜாவாகப்பண்ணப்பட்டு மூன்றுலோகத்தையும ஜெயித்து ராஜசூயயாகத்தைப் பண்ணினுன்-அந்தக்கர்மத்தினுல் தாரையென்று பெயரையுடையவளான பிரகஸ்பதியினுடைய பத்தினியை பலாத்காரத்தினுல் அபகரிக்கையால் அப்போதுதேவாசுராளிருவருக்கும் யுத்தமுண்டாச்சுது அந்தகேவாசுர யுத்தத்தில் சுக்கிரனுனவர் பிரகஸ்பதியினிடத்தில் தூவேஷத்தினுல் அசுராளோடுகூட சந்திரனைத் தன்னுடையபட்சமாகக் கிரகித்துக் கொண்டார் ருத்திரனும் பூதகணங்களோடு கூடினவனுய் தனக்குவித்தியாகுருவான அங்கீரசுவினுடைய புத்திரரான பிரகஸ்பதியைகுருபுத்திரனென்கிற ஸ்நேகத்தினுல் தன்னுடையபட்சமாகக் கிரகித்தார்சமஸ்தமான தேவகணங்களோடுங் கூடினவனுய் தேவேந்திரனுனவன் குருவான பிரகஸ்பதியை அனுவர்த்தித்தான்-அப்போதரைநிமித்தியமான தேவாசுராளுக்கெல்லாம்நாசகரமான தாரகமயமான உயுத்தம்உண்டாச்சுது.

பிற்பாடு அங்கீரசுவினுல் விக்கியாபனம் பண்ணப்பட்டவனுய் பிர்மதேவனுனவன் சந்திரனிடத்தில்கோபம்பண்ணிநிந்தித்து தாரையைபர்த்தாவான பிரகஸ்பதிக்

குக் கொடுத்தார் அப்போதுபதியானபிரகஸ்பதியும் தன்னுடையபாரியை கெர்ப்புணியாகஅறிந்து ஒருவார்த்தைசொல்லுகிறான், வாராய் துற்புத்தியேஎன்னுடையக்ஷேத்திரத்தில் அன்னியாளால்உண்டாக்கப்பட்டகெர்ப்பத்தை சீக்கிரமாகவிட்டுவிடு புத்திரனால்அபேட்சியாநின்ற நான்உன்னை பஸ்பமாகப்பண்ணிப்போடவில்லையென்றுசொல்லாநின்ற பர்த்தாவார்த்தையைக்கேட்டுஅந்தத்தாரையானவள்மிகவும்லச்சையையுடையவளாய் சுவர்னசாயலான ஒரு பிள்ளையைப் பெற்றாள் பிறந்த அப்பிள்ளையினிடத்தில் பிரகஸ்பதியும், சந்திரனும் இவாளிருவரும் இச்சைப்பட்டார்கள் பிற்பாடுஎன்னுடையபிள்ளை உன்னுடையபிள்ளையென்று இந்தப்பிரகாரம் அந்தப்பிள்ளைவிஷயத்திலே பிரகஸ்பதி சந்திரன் இவாளிருவரும் விவாதப்படுகையில் சமஸ்தமான தேவாள் ரிஷிகளும் அந்தத்தாரையை இவன் யாருக்குப்பிறந்தவனென்று கேட்டார்கள், அந்தத்தாரையானவளும், லச்சையையுடையவளாய்ஒருஉத்தரமும்சொல்லாமலேயிருந்தாள் அந்தக்குமாரனானவன் மிகவுங் கோபத்தையடைந்தவனாய் தாயாரைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறான்,

வாராய்துஷ்டையே துற்புத்தியேஇந்தஅபத்தமானலச்சையினால் ஒன்றுஞ்சொல்லாம லிருக்கிறாய் சீக்கிரமாக உன்னுடையதப்புநடத்தையைச்சொல்லக்கடவாயென்றுகேழ்க்கும்போதும் வெறுமையாயிருந்தாள்அப்போது பிர்மதேவனானவர்தாரையை ஏகாந்தத்தில்அழைத்துக்கொண்டுவந்து நல்லவார்த்தையினால் சமாதானம்பண்ணிக்கொண்டு இவன் யாருக்குப் பிறந்தவனென்றுகேட்டார் அப்போது சந்திரனுக்குப்பிறந்தவனென்றுமெதுவாகச்சொல்ல சந்திரனும் அந்தபுத்திரனைக்கிரகித்துக்கொண்டான் அந்தப்பிள்ளைக்கு பிர்மதேவன் புதனென்று நாமகரணம்பண்ணினான் அந்தப் பிள்ளையினாலேயும் அதினுடைய கம்பீரமானபுத்தியினாலேயும் நக்ஷத்திரபதியானசந்திரனானவன் சந்தோஷத்தை அடைந்தான் அந்தப்புதனுக்கு இளையென்கிற ஸ்திரீயினிடத்திலே புரூரவசுவுண்டானான் - நாரதமகாரிஷியினால் கானம்பண்ணப்படாகி ற அந்தப் புரூரவசுவினுடைய குணம் ரூபம் அவுதாரியம் சீலம் தனம் பராக்கிரமம் இதுகளையெல்லாங்கேட்டு உருவசியானவள்மன்மதபாணத்தினால் பீடிக்கப்பட்டவளாய் அவனுடைய சமீபத்தைஅடைந்தாள் அந்தப்புரூரவசுவென்கிற ராஜாவும் உருவசியைப்பார்த்து சந்தோஷத்தினால் ஒருவார்த்தைசொல்லுகிறான்.

வாராய் உத்தமஸ்திரீயே நீஇவடத்தில்தானே என்னுடனேகூட ரமித்துக்கொண்டிருக்கக் கடவாயென்றுசொல்லுகின்ற ராசாவைப்பார்த்து உருவசிசொல்லுகின்றாள் வாராய்சுந்தரபுருஷனே உன்னிடத்தில்வைக்கப்பட்ட இந்தஇரண்டு ஆடுகளையும் நீரட்சிக்கக்கடவாய் நானுன்னுடனேகூட ரமித்துக்கொண் டிருக்கிறேன் எனக்கு நெய்யானது பக்ஷணமாகும் உன்னை நான்சம்போககாலந்தவிர இதரகாலத்தில் நிர்வாணமாகப்பார்க்கிறதில்லையென்று உருவசியானவள்சொல்லஅந்தராஜாவும் அப்படியேயாகட்டுமென்று அவன்பிரதிக்கினையை அங்கீகரித்துத்திரும்பவும்ஒருவார்த்தைசொல்லுகிறான் இந்தரூபத்துக்கும் பிரீதிக்கும் என்னசொல்லப் போகிறேன் எவன்தான் தானேவராநின்ற தேவஸ்திரீயானஉன்னையடையாமற்போவனென்றுசொல்லிபுருஷசிரேஷ்டனான அந்தராஜாவானவன் சந்தோஷித்து அந்தஉருவசியோடு தேவர்களுக்கு விகாரஸ்தானமான சயித்திரதமுதலான உத்தியானவனங்களிலேஎதேச்சமாக ரமித்துக்கொண்டிருந்தான்.

பின்பு ஒருக்கால் தேவலோகத்தில் இந்திரனானவன் உருவசியில்லாமல் நம்முடையசமஸ்தானஞ்சோபிக்கவில்லையென்று அந்தஉருவசியையழைத்துக்கொண்டு வருவதற்குக் கந்தர்வாளை அனுப்பினான் அந்தக் கந்தர்வாளும் அந்தராத்திரியில் மகா அந்தகாரத்திலேவந்து ராஜாவினிடத்தில் வைக்கப்பட்டிருந்த உருவசியினது இரண்டுஆடுகளையும் மாயையினால் அபரித்துக்கொண்டுபோனார்கள் அப்போதந்தக்கந்தர்வாளால் அபகரிக்கப்பட்ட தனக்குப்புத்திரர்கள்போலிருக்கின்ற இரண்டு ஆட்டுக்கடாக்களுடைய கூச்சலைக்கேட்டு உருவசியானவள்சொல்லுகின்றாள் மகாவீரனென் றெண்ணிக்கொண்டும் நவிஞ்சகனாகவுமிருக்கிற அப்பிரயோசகனான இந்தநரனால் நான் கெட்டுப்போகின்றேன்சோரர்களால் இரண்டுபிள்ளைகளையொத்தஆடுகளை அபகரிக்கலாச்சுது ராஜனானவன் ஸ்திரீயைப்போல சோரர்களுக்குப் பயந்தவனாய் ராத்திரியில் படுத்துக்கொண்டிருக்கிற இந்த ராஜனானவன் புருஷனேயன்று எனதுசரீரத்தைக் கட்டிக்கொண்டிராநின்ற கைகளைவாங்கு என்னைவிட்டுவிடு விடுகைக்கு மிகவும்பயந்தவனாய் மகாமந்தனாக விருக்கிறாயென்றுசொல்லுகின்ற உருவசியினுடைய வார்த்தைகளினால் மிகவும்நொந்தவனாய் அந்தப்புரூரவசுவானவன் அர்த்தராத்திரியில் கோபத்துடனேகத்தியை யுருவிக்கொண்டு வஸ்திரமில்லாதவனாய் அந்தச் சோரர்களானகந்தர்வாளைத் துரத்திக்கொண்டுபோனான் அந்தக்கந்தர்வாளும் அப்போதவடத்தில் இரண்டு ஆடுகளையும் விட்டுவிட்டு மின்னலைப்பிரகாசிப்பித்தார்கள், அப்போதந்த இரண்டுஆடுகளையுங் கிரகித்துக்கொண்டு வராநின்றும் வஸ்திரவீனனாயுமிருக்கிற அந்தராசாவைப்பார்த்து உருவசியானவள் முன்பண்ணினநிபந்தனைக்குப் பங்கம்வந்ததினால் தேவலோகத்தையடைந்தாள் புரூரவ

சுவும் படுக்கையில் தனது பாரியையான உருவசியைக் காணாமல் மாக விசனத்தை யடைந்தவனாயும், அவளிடத்தில் மனதையுடையவனாயும் சோகித்துக்கொண்டும் உன்மத்தனைப்போல் பூமியெங்குந் திரிந்துகொண்டிருந்தான்,

அந்தராஜனானவன் ஒருக்கால் குருக்ஷேத்திரத்தில் சரஸ்வதிநதிதீரத்தில் அந்தஉருவசியையும்அவளது சகிகளையுங்கண்டு மலர்ந்தமுகத்தையுடையவனாய் அவளைப்பார்த்து மதுரமாக ஒருவார்த்தைசொல்லுகிறான்.

வாராய் ஸ்திரீயே, பயங்கரமானவிடத்தில்என்னை விட்டுவிடுகிறது யோக்கியமல்ல உன்னிமித்தியமாக எனதுஆத்மாவைவிட்டுவிடுகிறேனென்று சொல்லாநின்றபுரூரவசுவைப்பார்த்துஉருவசியானவள்சொல்லுகின்றாள், வாராய்ராஜாவே, ஸ்திரீகளுடையசினேகமானது ஒருபுருஷனிடத்திலேயும். ஸ்திரமாயிராதுலோகத்தில் ஸ்திரீகளானவர்கள், தயையில்லாதவர்களாயும், குரூரர்களாயும் பொறாமையோடுகூடினவர்களாயும், தனக்கு வேண்டியவிஷயத்தில் சாதனையையே பிரியமாகஉடையவர்களாயுமிருப்பர்கள், அற்பகாரிய நிமித்தியத்திலேயும்,விசுவாசத்தையுடையவனான பர்த்தாவையும் பிராதாவையுங்கொன்றுபோடுவர்கள், அக்கியர்களாயிருக்கிற புருஷர்களிடங்களிலேபொய்யாநம்பிக்கையைச்செய்துகொண்டு மனதில் சிநேகமில்லாதவர்களாகவே யிருப்பர்கள் புதிதாயிராநின்றபுருஷனையே கோறிக்கொண்டும் விபசாரிகளாயும் தன்மனதுக்கு இஷ்டமானபடிக்கே நடந்துகொண்டுமிருப்பார்கள் வாராய்ராஜாவே, நீ சம்வச்சராந்தரத்தில் ஒருராத்திரி என்னோடுவாசஞ்செய்யப்போகிறாய் சிரேஷ்டமானபிள்ளைகள் நமக்கு உண்டாகப்போகிறதுகளென்று சொல்லாநின்ற உருவசியை இவள் கர்ப்பிணியென்று எண்ணிக்கொண்டு ராஜாவும் தன்பட்டணத்தைஅடைந்தான்.

பின்பு அந்தராஜனானவன் சம்வச்சராந்தரத்தில் சரஸ்வதிநதிதீரத்துக்குவந்து வீரனுக்குத்தாயாரானஅந்தஉருவசியையடைந்து சந்தோஷத்துடனேகூடினவனாய் ஒருராத்திரி அவளோடுரமித்துக்கொண் டிருந்தான். பின்பு தன்னைவிட்டுப் பிரியமாட்டாமலிருக்கிற அந்தராஜாவைப்பார்த்து உருவசியானவள் ஒருவார்த்தை சொல்லுகிறாள் வாராய்ராஜாவே, நீகந்தர்வாளைஸ்தோத்திரஞ்செய்தையேயானால் அவர்கள் என்னைஉனக்குக் கொடுத்துவிடுவார்களென்று சொல்லாநின்றவார்த்தையைக்கேட்டு ராசாவானவனும் அந்தக்கந்தர்வாளைப் பூசித்து ஸ்தோத்திரஞ்செய்தான் அவர்களும் சந்துஷ்டர்களாய் ஸ்தோத்திரஞ்செய்யாநின்ற அந்தராஜாவுக்கு ஒரு அக்கினிஸ்தாலியைக்கொடுத்தார்கள், அப்போது அந்தராஜாவும் அக்கினிஸ்தாலியை உருவசியாக எண்ணிக்கொண்டு வனத்தில் சஞ்சரித்துக்கொண் டிருந்தான் பின்பு அந்தஸ்தாலியை உருவசியல்லவென் றறிந்துகொண்டு காட்டிலேவைத்துவிட்டு கிரகத்தில்வந்து அவளையே ராத்திரியில் தியானஞ்செய்துகொண்டிராநின்ற அந்தராஜாவினுடைய மனதில் கர்மங்களுக்குப் போதகமாய் மூன்றுவேதமானதுதோன்றிற்று-பின்பு அந்தராஜனானவன் அந்தத்தாலியை வைத்தவிடத்திற்குப்போய் அதைக்காணாமல் அவ்விடத்தில் வன்னிமரத்திலே யுண்டான ஒரு அசுவத்தவிருட்சத்தைப்பார்த்து அந்த அசுவத்தவிருட்சத்தினால் இரண்டுஅரணிகளைச்செய்துகொண்டு அதிலேஉருவசிசாலோக்கியத்தைக் கோறி அக்கினியைக் கடைந்தான்,

மந்திரத்தினால் கீழ் அரணியை உருவசியாகவும்- மேல்அரணியைத் தானாகவும் இரண்டுஅரணிகளுக்கும் நடுவேயிருக்கிறகாஷ்டத்தை அக்கினியைப் பிறப்பிக்கிறதாகவும் பாவனை செய்துகொண்டு கடைந்தான் அப்போதுகடையாநின்ற அந்தராசாவுக்கு அரணியில்நின்றும் அக்கினியுண்டாச்சுது-அந்தஅக்கினியானதுவேதமந்திரங்களினால் சமஸ்காரஞ்செய்யப்பட்டதாய் காறுகபத்தியம்-ஆகமனியம்- தெட்சணாக்கினி யென்று ரூபத்தையுடையதாய் அந்தராஜாவான புரூரவசுவினால்புத்திரனாகக்கற்பிக்கப்பட்டது-அப்போது ராஜாவானவன் அந்தஅக்கினியினால் யக்கியபலத்தைக்கொடுக்கிறவராயும் பகவானாயுமிருக்கிற ஸ்ரீ ஹரியைக்குறித்து உருவசி சாலோக்கியத்தைக்கோறினவனாய் ஏசித்தான்கிருதயுகத்தில் சமஸ்தவாக்குகளுக்கும் பீசபூதமான பிரணவம்ஒன்றேவேதமாயும் நாராயண ரொருவரே தெய்வமாயும்- ஒரே அக்கினியாயும் அசமென்னப்பட்ட ஒரேவர்ணமாயுமிருந்தது வாராய்பரிட்சித்தே திரேதாயுகஆதியில் புரூரவசுவினால் அக்கினியானது மூன்றுரூபமாகவும்வேதமும் மூன்றுரூபமாகவும் உண்டாச்சுது-அந்தப்புரூரவசுராஜனும் அந்த அக்கினியாகிற புத்திரனால் கந்தர்வலோகத்தையடைந்தான்,

## ௰௫ வது, அத்தியாயம்.

கலிவிருத்தம்,

காதிராஜன்றன் கான்முளைப்பேரனும்
கோதிலாப்பரசி ராமன்றன்கோபத்தாற்
சாதுகார்த்த வீரியனைச்சம்ஹரித்தது
ஓதுபுத்ரவம் சத்திலுண்டாக்கினான்.

காதிராஜாவின் பேரனுடைய பிள்ளையான பரசுராமரானவர் கோபத்தினால்கார்த்தவீரியார்ச்சுனனைச்சங்கரித்து அபபடிப்பட்ட காதிராஜனானவன் புரூரவசுவினது புத்திரவம்சத்தினாலே யுண்டானானென்று சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்துமகாராஜனே இளாபுத்திரனை புரூரவசுவுக்கு உருவசியினதுகெர்ப்பத்தில்நின்றும் ஆயுசுவென்றும்-சுறுதாயுசுவென்றும்- சத்தியாயுசுவென்றும்-றேயனென்றும்-விசையனென்றும்- செயனென்றும்-ஆறுபிள்ளைகளுண்டானார்கள் அவர்களுக்குள்ளே சுறுதாயுசுவுக்கு வசுமானும் சத்தியாயுசுக்கு தனஞ்செயனும் றேயனுக்கு துறுதனும்-ஏகனும்-செயனுக்குமிதனென்றும் விசையனுக்குபீமனென்றும், புத்திரருண்டானார்கள் பின்பு பீமனுக்குக்காஞ்சனனும் அவனுக்குஒதுறகனும் அவனுக்குசெனனும் பிறந்தார்கள், அந்தசெனனுவேகங்கையை ஒருவாய்தீர்த்தமாகப் பானம்பண்ணினவன் அந்தசெனனுவுக்குச் சுவயஞ்செயனென்றுஒருபிள்ளையும்அவனுக்குப்பாலகனென்றும்அவனுக்குஅசகனென்றும் அவனுக்குக்குசனும் அவனுக்குச்சாம்பனும் தூர்த்தயனும் வசுவும் குசனுபனும் இந்தநாலுபிள்ளைகள் பிறந்தார்கள் குசாம்பனுக்குக் காதியுண்டானான் அந்தக்காதிக்குச் சத்தியவதியென்று ஒருபெண்பிறந்தது அந்தப்பெண்ணை ரிசிகனென்கிற பிராமணன்வந்து யாசித்தார்,

அப்போது அந்தக்காதிராசனானவன் அந்தப்பிராமணனைப் பெண்ணுக்குச்சமானமானவரல்லவென்றெண்ணி பிருகுபுத்திரரான அந்தரிசிகனைக்குறித்து ஒருவார்த்தைசொல்லுகிறார் வாரீர்ரிசிகரே குசிகனுடையவம்சத்திலேபிறந்த இந்தப்பெண்ணுக்கு ஒருகாதுபச்சைவர்னமாயும் மற்றஅங்கங்களெல்லாம்சந்திரனைப்போல வெளுத்தகாந்தியினையுடையதுகளான ஆயிரங் குதிரைகளைக் கன்னியாதிரவியமாகக்கொடுத்தால் பெண்ணைத் தருகிறேனென்றுசொல்லாநின்ற காதிராசனுடைய அபிப்பிராயத்தை யறிந்துகொண்ட ரிசிகரானவர் வருணனண்டைக்குப்போய் அவனிடத்தில் நின்றும் அப்படிப்பட்டஅசுவங்கள் ஆயிரத்தையுங்கொண்டுவந்து காதிராசனுக்குக்கொடுத்து அவன்பெண்ணான சத்தியவதியைவிவாகம்பண்ணிக்கொண்டார் பிற்பாடு ஒருக்கால்அந்தரிசிகரிஷியானவர் பாரியையானசத்தியவதியினாலேயும்அவளுக்குத்தாயாரானவளாலேயும் புத்திரார்த்தமாக யாசிக்கப்பட்டவராய் பிராமணமந்திரங்களினால்மாமியாருக்கும் க்ஷத்திரியமந்திரங்களினால் தன்னுடையஸ்திரீக்கும் இரண்டுஅவசுகளைப்பாகம்பண்ணி வைத்துவிட்டு ஸ்நானம்பண்ணப்போனார் அப்போது அந்தச்சத்தியவதியானவள் தனக்குப்பண்ணியிருக்கிற அவிசைத்தாயாருக்குக்கொடுத்து அவளுக்காகச்சமைத்த சறுவைத்தான் பட்சித்தாள் பின்பு அந்தரிஷியானவர்வந்து அந்தச்சறுவித்தியாசத்தையறிந்து தம்முடைய பாரியைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகிறார்,

வாராய்பத்தினியே, நீயென்ன விபரீதகாரியத்தைச்செய்தாய் ஆகையால் உன்னுடைய புத்திரன் தெண்டநாயகனாகவும் மகாகுரூரனாகவும் உன்னுடையபிராதாபிர்மக்கியானியாகவும் பிறக்கப்போகிறார்களென்றுஅனுக்கிரகித்தார் பிற்பாடு அந்தரிசிகருககு செமதக்கினி பிறந்தார் அந்தச்சத்தியவதியும் லோகத்தைப்பாவனம்பண்ணுநின்றமகாபுண்ணியமான கவுசிகைநதியானாள் அந்தசெமதக்கினியானவர் ரேணுவினுடையபெண்ணான ரேணுகையை விவாகம்பண்ணிக்கொண்டு அவளிடத்தில் வசுமனன்முதலான பிள்ளைகளைப்பெற்றார் அந்தப்பிள்ளைகளுக்குள்ளே எல்லாருக்குங் கனிஷ்டனாய் ராமனென்றுபிரசித்தராய் ஒருவருண்டானார் அந்த ராமனையே வாசுதேவர்அம்சமாகச் சொல்லுகிறார்கள் அவரேஹேயகுலத்தை நாசம்பண்ணினவர் அவரேஇருபத்தொருஆவிர்த்தி இந்தப்பூமியை ராசசூனியமாகப் பண்ணினவர் அந்தராமன் சொல்பமான அபராதநிமித்தத்திலேயேகர்விதமாயும் பூமிக்குப்பாரமாயும் பிராமணவிரோதியாயும் ராசசதாமசமான சரித்திரத்தையுடையதாயுமிருக்கிற க்ஷத்திரியவம்சத்தை நாசம்பண்ணினவர் அந்த ராமனைப் பகவதம்சமாகச்சொல்லுவர்களென்றுசொல்லுகின்ற சுகப்பிர்மரிஷியைப்பார்த்துபரிட்சித்துமகாராசன்சொல்லுகின்றார்,

பரிட்சித்துவாக்கியம்,

வாரீர் பிர்மநிஷ்டரே, பகவானான பரசுராமருக்குப்புத்தியீனாளானராஜாக்கள் என்ன அபராதம் பண்ணினார்கள் எதினால் அந்தப்பரசுராமரானவர்ராஜகுலத்தை அடிக்கடிவேரோடுகளைந்தார் அதையெனக்குச்சொல்லவேணுமென்றுகேட்கின்ற பரிட்சித்து மகாராஜனைப்பார்த்து சுகப்பிர்மரிஷியானவர் சொல்லுகின்றார்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் பரிட்சித்துமகாராஜனே, ஹேயகுலத்துக்குஅதிபதியாயும் புருஷசிரேஷ்டனாயுமிருக்கிற கார்த்தவீரியார்ச்சுனனானவன் நாராயணஅம்சமான தெத்தாத்திரையபகவானை அனேக சிசுருஷையினால் யுபசரித்து அவராலே ஆயிரங்கையையும் சத்துருக்களால் செயிக்கக்கூடாமலிருக்கையும் க்ஷயமில்லாத இந்திரியபலத்தையும் அணிமாதி அஷ்ட அயிஸ்வரியத்தையும் பெற்று லோகங்களில்ஒருவராலேயும் செயிக்கக்கூடாதவனாகச் சஞ்சரித்துக்கொண்டிருந்தான் அந்தக்கார்த்தவீரியார்ச்சுனனானவன் ஒருக்கால்அனேகஸ்திரீகளால்சூழப்பட்டவனாய் நர்மதாநதிசலத்தில் கிரீடித்துக்கொண்டு அந்தநர்மதாநதியினுடைய பிரவாகத்தைத் தன்னுடையகைகளினால்கட்டினான் அப்போது ராவணனானவன் திக்குவிஜயம்பண்ணிக்கொண்டு வரும்போது மாகிஷ்மதி பட்டணத்துச்சமீபத்தில் நர்மதாநதியில் ஸ்நானம் பண்ணி

தேவபூசைபண்ணிக்கொண்டிருக்க கார்த்தவீரியார்ச்சுனன்கையினால் தடுக்கப்பட்டதாய் ஜலம்எதிர்த்துத்தன்னுடைய பூசாதிரவியங்களையும் சேனையையும் முழுகப்பண்ணினதைப்பார்த்து அவனுடையபராக்கிரமத்தைச்சகியாதவனாக யுத்தம்பண்ணினான் அப்போதுகார்த்தவீரியார்ச்சுனனும் தன்னுடைய ஸ்திரீகளும் பார்த்துக்கொண்டிருக்கும்போது விளையாட்டினால் அபராதியான அந்தராவணனைப்பிடித்துத்தூக்கிக்கொண்டு மாகிஷமதிபட்டணத்தில்கொண்டுபோய்ச் சிறைச்சாலையில் கட்டிவைத்துப் பின்பு குரங்கைப்போலவிட்டுத் துரத்திவிட்டான்,

அந்தக்கார்த்தவீரியார்ச்சுனனானவன் பின்னை ஒருக்கால்செனமில்லாதவனத்தில் வேட்டையாடிக்கொண்டு சுயவிச்சையாகவே ஜெமதக்கினி மகாரிஷியினுடைய ஆசிரமத்தில் பிரவேசித்தான் அந்தரிஷியானவர் மந்திரிகள்-யானைகுதிரைமுதலானசேனைகள் இதுக்களோடுகூடிக்கொண்டிருக்கிற அந்தராஜாவுக்குத் தம்முடையகாமதேனுவினால் பூர்ணமாக ஆதித்தியத்தைப்பண்ணிவைத்தார் அந்தராஜாவும் தன்அயிஸ்வரியத்துக்குமிஞ்சின அவருடையபிரபாவத்தைக்கண்டு அவரைச் சந்தோஷியாமல்அந்தக்காமதேனுவினிடத்தில்ஆசையையுடையவனாய் ரிஷியினுடைய அந்தக்காமதேனுவை கர்வத்தினால் பிடித்துக்கொண்டுவரும்படி மனுஷியாளை ஏவினான் அவர்களும் அந்தப்பசுவை பலாத்காரமாக மாஹிஷமதிபட்டணத்தில்கொண்டுபோய்ச் சேர்த்தார்கள்,

ராஜாவும்ஆசிரமத்தைவிட்டுப்போனபிற்பாடு வெளியிலேயிருந்துவராநின்ற பரசுராமனானவர் அந்த ராசாவினுடைய துர்நடத்தையைக்கேட்டு மிகவுங்கோபத்தையடைந்தவராய் மகாபயங்கரமான கோடாலியையும் தனுசையும் கவசத்தையும், எடுத்துத் துரத்திக்கொண்டுபோனார். அப்படி துரத்திக்கொண்டு வராநின்ற பரசுராமரை ராஜாவானவன்பார்த்து ரதகஜதுரகபதாதிகளோடுகூடின பதினேழு அக்ரோணிசேனைகளை ஏவினான் அந்தப்பதினேழு அக்ரோணிசேனைகளையும், பகவானானபரசுராமரானவர் ஒருவரேசங்காரம் பண்ணினார் அப்போது பரசுராமரால்அதமாய்ப்போனதன்னுடைய ஏழு அக்ரோணி சேனைகளையும்பார்த்து ஹேயராஜனானவன் ரோஷத்தினால் பரசுராமர்பேரில் எதிர்த்து அன்னூறுதனுசுக்களில் ஏககாலத்தில் பாணங்களைப் பிரயோகம்பண்ணினான் அப்போது அஸ்திரபாணிகளுக்கெல்லாந்தலைவரான அந்தப்பரசுராமரும்அந்தத்தனுசுக்களையெல்லாம் ஏககாலத்தில் பாணங்களினால் அறுத்துவிட்டு அந்தக்கார்த்தவீரியார்ச்சுனனுடைய சிரசையும், தன்னுடைய கோடாலியினால்சேதித்துவிட்டார், அப்போது அந்தக்கார்த்தவீரியார்ச்சுனனுடைய புத்திராள் பதினாயிரம்பேரும் பயத்தினாலேஓடிப்போய்விட்டார்கள்,

பிற்பாடு பரசுராமரானவர் கன்றோடேகூடிக்கொண்டிராநின்ற அக்கினிஹோத்திர காமதேனுவை கிரகித்துக்கொண்டு தம்முடைய ஆசிரமத்தையடைந்து அந்தக்காமதேனுவை மாதாபிதாக்களுக்குக்கொடுத்துத்தம்மாலேசெய்யப்பட்ட யுத்தத்தையும் அவர்களுக்குச்சொன்னார் அதைக்கேட்டு ஜமதக்கினியானவர் புத்திரனைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றார் வாராய் பரசுராமா, யாதொருகாரணத்தினால் சர்வதேவ சுரூபியானராஜாவை வியர்த்தமாகக்கொன்றாய் ஆகையால் நீமகாபாபத்தைப் பண்ணினவனானாய், வாராய்குழந்தாய் நாம்பிராமணாளல்லவா பொறுமையினால்சகலஜெனங்களாலேயும் பூசிக்கப்படுகின்றோம் லோககுருவான பிரம்மாவும் பொறுமையினால் உத்தமஸ்தானத்தை அடைந்தாரல்லவா பொறுமையை யுடையவர்களுக்கு சர்வலோகநியந்தாவானபகவானான ஸ்ரீஅரியானவர் சீக்கிரமாகச்சந்தோஷிப்பர் அகண்ட மண்டலாதிபதியான ராஜாவினுடையவதமானது பிராமண வதத்தைப்பார்க்கிலும் பெரிது ஆகையால் வாராய்குழந்தாய் நீஅச்சுதனிடத்தில் மனதையுடையவனாய் புண்ணியதீர்த்த யாத்திரையினால் அந்தப்பாபத்தைப் போக்கடித்துக் கொள்ளக்கடவாயென்று பிதாவான ஜெமதக்கினியானவர்சொன்னார்,

## ௰௬-வது-அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பொருந்திடுங்கார்த்தவீரி யார்ச்சுனபுத்ராளாலே
சரிசமதக்னியானோர் சங்கரித்திடுகைதன்னில்
பரிவுடனரசர்வாதை யடிக்கடிப்பரசிராமன்
விரைவுடன்செய்தாரென்றுவிளம்புதுமிதனின்மாதோ,

கார்த்தவீரியார்ச்சுனபுத்திராளால் ஜெமதக்கினிரிஷியானவர் சங்கரிக்கப்படுகையில் அடிக்கடிராஜாக்களுடையவதமானது பரசுராமனால் பண்ணப்பட்டதென்றும்விசுவாமித்திரர் வம்சமும் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்துமகாராசனே அந்தப்பரசுராமரானவர் பிதாவினால் சிட்சிக்கப்பட்டவராய் அப்படியே செய்கிறேனென்று அங்கீகரித்து சம்வச்சரபரியந்தம்தீர்த்தயாத்திரையைப்பண்ணித் திரும்பவும்ஆசிரமத்தையடைந்தான், பிற்பாடுஒருக்கால் ரேணுகாதேவியானவள் கங்கையையடைய அக்கங்கையில் அப்சரசுக்களோடுகூட கிரீடித்துக்கொண்டும் பத்மமாலையையுடையவனாயுமிருக்கிற கந்தர்வராசனைக்கண்டு அவனிடத்திலே ஆசையை யுடையவளாய் ஓமகாலத்தை மறந்து போனவளாய் அந்தரேணுகையானவள் காலாதிக்கிரமத்தைப்பா

ர்த்து முனியினுடையசாபத்தில்நின்றும் பயந்து சீக்கிரமாக ஆசிரமத்திலேவந்து கலசத்தைரிஷிமுன்னே வைத்துஅஞ்சலிபந்தனம் பண்ணிக்கொண்டுநின்றாள் அப்போது ஜெமதக்கினிரிஷியானவர் தன் ஸ்திரீயினுடைய விபசாரத்தையறிந்து மிகவுங்கோபத்தையடைந்தவராய் புத்திரர்களைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றான்,

வாருங்கள்புத்திரர்களே பாபியானஇவளைக்கொன்றுபோடுங்களென்று சொன்னார் இந்தப்பிரகாரம் பிதாவினால் சொல்லப்பட்டவராய் புத்திரர்களானவர்கள் அந்தக்காரியத்தைச் செய்யாம லிருந்தார்கள், பின்பு பரசுராமரானவர் பிதாவினால் மாதாவையும் பிராதாக்களையும்கொன்றுபோட ஆக்கியாபிக்கப்பட்டவராய் அந்தமுனியினது தபசுசமாதி இதுகளுடைய பிரபாவத்தை மிகவும் அறிந்தவராய் மாதாவோடுகூட பிராதாக்களையும் கொன்றுபோட்டார், அப்போது சத்தியவாதிபுத்திரரான்ஜெமதக்கினிரிஷியானவர் சந்துஷ்டராய் உனக்குவேண்டிய வரத்தைக்கேளென்றுசொன்னார், அப்போது பரசுராமரானவர் கொல்லப்படாநின்றபிராதாக்கள்தாயார்இவர்கள் பிராணனோடு எழுந்திருக்கவும் அந்தவதமானது அவர்களுக்குத் தெரியாமலிருக்கவும் இந்தவரத்தைக்கேட்டார், அப்படியே அந்தரிஷியினுடையஅனுக்கிரகத்தினால் கொல்லப்பட்டவர்கள் நித்திரைதெளிந்தெழுந்தவாள்போல சீக்கிரமாக க்ஷேமத்தை யுடையவர்களாய் எழுந்திருந்தார்கள் அந்தப்பரசுராமரானவர்பிதாவினுடைய தபோவீரியத்தை யறிந்தவராய் பந்துக்களுடைய தவத்தைப்பண்ணினார்-கார்த்த விரியார்ச்சுனனுடையபிள்ளைகளும் தன்பிதாவினுடைய வதத்தை ஸ்மரித்துக்கொண்டு பரசுராமருடைய வீரியத்தினால் திரஸ்கரிக்கப்பட்டவர்களாய் ஓரிடத்திலும் சுகத்தையடையாமற்போனார்கள்,

பிறபாடொருக்கால்பரசுராமனானவர் ஆசிரமத்தில் நின்றும் பிராதாக்களோடுகூட வனத்தை யடைந்திருக்கையில் கார்த்தவீரியார்ச்சுனனுடைய புத்திரர்களானவர்கள் வயிரத்தைத் தீர்த்துக்கொள்ளவேணுமென்று இச்சையையுடையவர்களாய் அந்தச்சமையம்பார்த்துஆசிரமத்திலேவந்தார்கள் பாபபுத்தியையுடையவர்களானகார்த்தவீரியார்ச்சுனபுத்திரர்கள்அக்கினிவோத்திரத்தில் இராநின்றும் உத்தமஸ்லோகரானபகவானிடத்தில் வைக்கப்பட்ட யுத்தியையுடையவராயு மிருக்கிற அந்தஜெமதக்கினி ரிஷியைப்பார்த்துக் கொன்றுவிட்டார்கள்- அப்போதுரேணுகையும்,துக்கசோகங்களினால் மிகவும்பீடிக்கப்பட்டவளாய் தன்னாலே தன்னை அடித்துக்கொண்டு ராமராமராமாவென்று பிள்ளைகளைக் கூப்பிட்டு முறையிட்டாள்-அப்போது பரசுராமர் முதலான பிள்ளைகள் ராமாவென்கிற சப்தத்தைக்கேட்டு மிகவுந்துக்கத்தையுடையவர்களாய் சீக்கிரமாக அந்தஆசிரமத்தையடைந்து கொல்லப்பட்டிருக்கிற பிதாவைக்கண்டு அவர்களும் துக்கம்-ரோஷம்-பொறுமை சோகம்-மோகம் இதுகளினால் மோகத்தை யடைந்தவர்களாய் வாநீர்பிதாவே யெங்களைவிட்டு நீசுவர்க்கத்தை யடைந்தா யல்லவாவென்று வெகுவாகப்பிரலாபித்துபரசுராமரானவர் அந்தப்பிதாவினுடையதேகத்தை பிராதாக்க ளிடத்தில் வைத்துவிட்டு பரசுவையெடுத்துக்கொண்டு க்ஷத்திரியநாசம்பண்ணமனதில் நினைத்து மஹிஷமதி பட்டணத்தை யடைந்து கார்த்தவீரியார்ச்சுன புத்திரர்களுடைய சிரசுக்களைக்கண்டித்து பரசுராமரானவர் பிதாவினுடைய வதநிமித்தமாகப் பூமியிலேயுண்டானக்ஷத்திரியவாளையெல்லாம்அதம்பண்ணிவிட்டு பிதாவினுடைய தேகத்தோடுசிரசைக்கூட்டி அக்கினியில் சமஸ்காரம்பண்ண சர்வதேவனாயிருக்கிற பரமாத்மாவான பிதாவை யெக்கியங்களினால்பூசித்தார்.

அந்தஎக்கியத்திலே ஓதாவுக்குக்கிழக்குத்திக்கையும்பிர்மாவுக்கு தெட்சண திக்கையும், அத்துவரியுவுக்கு மேற்குத்திக்கையும் உத்காதாவுக்கு உத்திரதிக்கையும்-பின்னையும்சிலபேருக்கு மத்தியிலேயிருக்கிறதிக்குகளையும்-காசியபருக்கு மத்தியதேசத்தையும், உபதிரஷ்டாவுக்கு ஆரியவர்த்தக்ஷேத்திரத்தையும், அதற்கப்புறப்பட்டபிரதேசத்தை சதசியாளுக்கும்கொடுத்து சரஸ்வதியென்கிற பிர்மநதியில் அவபிருதஸ்நானஞ்செய்து அதினால் சகலபாபத்தையும்போக்கடித்து மேகங்களினால்மறைக்கப்பட்ட சூரியன்போலவிளங்கினார் அந்த ஜெமதக்கினிரிஷியும், பரசுராமரால் பூசிக்கப்பட்டவராய்நல்லகியானத்தையுடையதான தம்முடையதேகத்தைஅடைந்து ரிஷிகளுடையமண்டலத்தில் ஏழாவதுரிஷியாகவிளங்கினார் ஜெமதக்கினிபுத்திரராயும்-பகவானுயும்-புண்டரீகாட்சனுயுமிருக்கிற பரசுராமரானவர் வரப்போகிற மனுவந்தரத்தில் வேதப் பிரவர்த்தகரான சப்தரிஷிகளுக்குள்ளே ஒருவராகப்போகிறவராய் இப்பவும் மகேந்திரபர்வதத்திலே ராஜதெண்டனையை விட்டுவிட்டுசாந்தியையுடையவராய் சித்தாள்-கந்தர்வாள்-சாரணாள்-இவர்களால் கானம் பண்ணப்படாநின்ற சரித்திரத்தை யுடையவரா யிருக்கிறார்,

இந்தப்பிரகாரம் பிருகு வம்சத்தில் விஸ்வரூபியாயும் பகவானுயுமிருக்கிற ஸ்ரீஅரியானவர் அவதரித்து பூமியினுடையபாரத்தை நீக்கும்படி ராஜாக்களையெல்லாம் வெகுப்பிரகாரமாகச்சங்கரித்தார். காசிராஜனுக்குவிஸ்வாமித்திரனென்று ஒருவருண்டானார், அந்தவிஸ்வாமித்திரரோ தபசினால்க்ஷத்திரிய பாவத்தைவிட்டுபிரம்மதேஜசையடைந்து நூற்றொருபிள்ளைகளைப்பெற்றார்,அவர்களுக்குள்ளே மத்திமபுத்திரனானவன்மதுச்சந்தசஎ

ன்கிற பெயரையுடையவனானன் அவன் முதலாக மற்ற ஜேஷ்டாளான ஐம்பதுபிள்ளைகளும்மதுச்சந்துசுயென்றே சொல்லப்படுவர்கள் அந்த விஸ்வாமித்திரரானவர் அசிகர்த்தனுடைய பிள்ளையாயும், தேவ பக்கியத்திலே தேவர்களால்ரட்சிக்கப்பட்டவனாகையால்தேவராதனென்று பிரசித்தனாயும். பிருகுவம்சத்திலே பிறக்குகையால்பார்க்கவனென்றுஞ் சொல்லப்பட்டிருக்கிற சுனசேபனைபுத்திரனாகக்கிரகித்தார் அந்தசுனசேபன் அரிச்சந்திரனுடைய எக்கியத்தில் புருஷபசுவாக விற்கிரையிக்கப்பட்டவனாய் பிரம்மாமுதலானதேவர்களைஸ்தோத்திரம் பண்ணி அவர்களுடைய பிரசாதத்தினால் பாசபந்தத்தில்நின்றும் விடுவிக்கப்பட்டுதேவதைகளால்இரட்சிக்கப்பட்டு காதியினுடைய வம்சத்தில்தேவராதனென்று பிரசித்தியையடைந்து அந்தசுனசேபனை விஸ்வாமித்திரரானவர் புத்திரனாகக்கிரகித்துதம்முடையபுத்திரரைப்பார்த்து இவனையெல்லாருக்கும் ஜேஷ்டனாகவைத்துக்கொள்ளுங்க ளென்றுசொன்னார், அந்தவார்த்தையை புத்திராளுக்குள்ளே மதுச் சந்தசுயென்று பெயரையுடையவர்களானபிள்ளைகள் உத்தமமாகஎண்ணமற்போனார்கள், அப்போதுவிஸ்வாமித்திரரிஷியானவர்கோபத்தையடைந்தவராய் துற்சனாளானநீங்கள்மிலேச்சர்களாகக்கடவீர்களென்று சபித்தார், அப்போதுமதுச்சந்தசுயென்கிறவன் தனக்குப் பின்பிறந்த ஐம்பதுபேர் தம்பிமாரோடுங்கூட விஸ்வாமித்திரரைப்பார்த்து வாரீர்பகவானே நீர்எங்களை ஜேஷ்டனாகவாவது கனிஷ்டனாகவாவது எப்படிஆக்கியாபிக்கிறீரோ அப்படியேஉம்முடையஆக்கினையிலே யிருக்கிறோமென்றுசொல்லி அந்தசுனசேபனை ஜேஷ்டனாக அங்கீகரித்தார்கள்,

பிற்பாடு விஸ்வாமித்திரரிஷியானவர்சந்தோஷத்தையடைந்து அந்தப்பிள்ளைகளைப் பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறார் வாருங்கள் குசிகாளே எனக்குப்புத்திரனாயும் வீரனாயுமிருக்கிற இந்தத்தேவராதனானவனும்கவுசிகனாயிருக்கின்றான் ஆகையால் உங்களிலொருவனாக அவனைநீங்கள் அனுவர்த்தித்துக் கொண்டிருங்களென்று அனுக்கிரகம்பண்ணினார் அஷ்டகன்-ஆரிதன்-ஜெயந்தன் சுமதன்முதலான மற்றும்சிலபேர் விஸ்வாமித்திரருக்குப் புத்திராளானார்கள்-இந்தப்பிரகாரம் அந்தகவுசிககோத்திரம் விஸ்வாமித்திரர் புத்திராளால் வெவ் வேறாகப்பண்ணப்பட்டது, இந்தக்குசிக கோத்திரமே இந்தப்பிரகாரம் அந்தத்தேவராதனை ஜேஷ்ட புத்திரனாகச் செய்துகொண்டு நானாப்பிரகாரமாக பிரவர பேதத்தையுமடைந்தது,

---

# ௰௭-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

சேயெனும்பூர் வசுசேஷ்டபுத்ரனும்
ஆயுசுனுடை யைந்துபிள்ளைக்குளே
வேயும்ஷத்திர விருத்தன்முதலான
தோயும்நான்கு பேரிடவம்சம்சொல்லுவாம்,

புரூரவசுவினுடைய ஜேஷ்ட புத்திரனான ஆயுசனுடைய ஐந்துபிள்ளைகளுக்குள்ளே ஷத்திரவிருத்தன்முதலானநான்குபேருடையவம்சம்சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்பரிட்சித்துமகாராசனேபுரூரவசுவினுடையஜேஷ்டபுத்திரனான ஆயுசுக்குநகுஷனென்றும்க்ஷத்திரவிருத்தன்யென்றும்-றசியென்றும் - றம்பனென்றும்-அனெனசுவென்றும். ஐந்து பிள்ளைகளுண்டானார்கள், அவர்களுக்குள்ளே ஷத்திரவிருத்தன் வம்சத்தைக் கேளும்-ஷத்திவிருத்தனுடைய புத்திரன்சுகோத்திரன் அவனுக்குக் காசியனென்றும்-குசனென்றும் - திரிச்சமதனென்றும், மூன்றுபிள்ளைகள்கிரிச்சமதனுக்கு சுனகன் பிறந்தான்-அவனுக்கு ரிஷி சிரோஷ்டராயும்-ருக்குவேதியாயுமிருக்கிற சவுனகர்பிறந்தார், காசியனுக்குக்காசிபிறந்தான்-அவனுக்குருஷ்டானும்-அவனுக்கு தீர்த்தபசுவும்அவனுக்கு ஆயுர்வேதத்துக்குப் பிரவர்த்தகராய்எக்கியங்களுக்கு போக்தாவாய் தம்மை நினைத்தமாத்திரத்தில் பாபத்தைப்போக்குகிறவராய் வாசுதேவாசம்மானதர்மந்திரி பகவானுண்டானார்-அவனுக்குகேதுமான்-அவனுக்கு பீமரதனும்-அவனுக்கு திவோதாசனும்- அவனுக்கு துயுமான்பிறந்தான்- அவனே பிறதறனென்றும்-சத்துருசித்தென்றும்-வச்சனென்றும்-றித்ததுவச னென்றும்-குவலையாசுவனென்றும்-பேர்பெற்றான் அவனுக்கு அளற்கன் முதலானபேருண்டானார்கள் அந்த அளற்கனைத்தவிர வேறொருஇராஜாவானவன் யுவாவாய் அறுபத்தாறாயிரம்வருஷம் பூமியைப் பரிபாலனம் பண்ணினவனில்லை அந்தஅளகற்கனுக்கு சந்ததியும், அவனுக்குசுனிதனும்-அவனுக்கு-சுகேதனனும்-அவனுக்கு தர்மகேதுவும்-அவனுக்கு-சத்தியகேதுவும்-அவனுக்கு திஷ்டகேதுவும்-அவனுக்குசுகுமாரனும்-அவனுக்குவிதிகோத்திரனும்-அவனுக்குபற்கனும் அவனுக்கு பாற்கபூமியும் பிறந்தார்கள், இவர்களெல்லாரும் காசிகோத்திரஸ்தாளும்-காசியினுடைய பிறபிதாமகனானஷத்திரவிருத்தனுடைய வம்சத்திலே பிறந்தஇராஜாக்களாக இருக்கின்றார்கள்,

றம்பனுக்கு றபசனென்று ஒருபிள்ளையும்-அவனுக்குகெம்பீரனும் அவனுக்குச் சக்கிரதனும் பிறந்தார்கள் அந்தச்சக்கிரதனுடைய க்ஷேத்திரத்தில் பிராமணவம்சம்உண்டாச்சுது.

இனிமேல் அனனெசுவினுடைய வம்சத்தைக் கேளும் அந்தஅனனெசுவுக்கு சுத்தனென்றும் அவனுக்கு சுசியும் அவனுக்கு பிர்மசாரதியானதிறிக்குத்தும், அவனுக்குச்சாந்தரதனும் பிறந்தார்கள் அந்தச் சாந்தரதன் ஆத்மக்கியானியாய் கிருதகிருத்தியனுனன்,

றசியென்கிறவனுக்கு மகா பெலவான்களாய் அன்னூறுபிள்ளைகளுண்டானார்கள் அந்தறசியானவன்தேவதைகளால் பிரார்த்திக்கப்பட்டவனுய் தயித்தியாளையெல்லாஞ்சங்கரித்து இந்திரனுக்குச்சுவர்க்கத்தைக்கொடுத்தான், பிற்பாடு இந்திரனுனவன் பிரகலாதனுக்குப் பயந்தவனுய் திரும்பவும் அந்தச் சுவர்க்கத்தைக் கொடுத்து அந்தறசிகனுடையபாதங்களைப்பிடித்துக்கொண்டுநான் உன்னவனுகவிருக்கிறேனென்று தன்னையே அந்தறசிகனுக்குச்சமர்ப்பித்தான் பிதாவானறசியானவன் லோகாந்தரத்தையடைந்திருக்கையில் அவனுடையபுத்திராளானவர்கள் இந்திரனல் சுவர்க்கத்தை யாசிக்கப்பட்டவர்களாய் அவனுக்குஅதைக்கொடுக்கவுமில்லை பின்னும் அந்தஇந்திரனுடைய யக்கியபாகங்களையும் கிரகித்துக்கொண்டார்கள் பிற்பாடுஇந்திரனுனவன் தேவகுருவானபிரகஸ்பதியினல் அக்கினியில் அபிசாரஹோமம்பண்ணப்படுகையில் சன்மார்க்கத்தைவிட்டிராநின்ற றசிகனுடையபிள்ளைகளை ஒருவனுகிலுமிராமல் சங்கரித்துவிட்டான் ஷத்திரவிருத்தனுடையபேரனுன குசனுக்குப்பிரிதியும் பிரிதிக்குசஞ்சயனும் அவனுக்கு செயனும் அவனுக்கு கிருகன் அவனுக்கு அரியசுவனன் அவனுக்குசகதேவன் அவனுக்குபீமன் அவனுக்குசெயச்செனன் அவனுக்குசங்கிருதியும் அவனுக்குச்செயனும் அவனுக்கு மகாரதனுன ஷத்திரவிருத்தனுடையபேரனுன தர்மா வுண்டானுன் இவர்களெல்லாம் ஷத்திரவம்சத்திலேயுண்டானராஜாக்கள் இனிநகுஷவம்சத்தாரைச் சொல்லுகிறேனகேட்பாயாக.

## ௰அ-வது-அத்தியாயம்,

கலிவிருத்தம்.

நகுஷபுத்ர யெயாதியினக்கதை
தகுமைந்துபுத்ரர் தனக்குட்கடையவன்
மிகுமெயாதியின் மேன்மைவார்த்திகத்தை
அகமகிழ்ந்துக்ர கித்துக்கொண்டாரரோ.

நகுஷபுக்திரனுன எயாதியினுடையகதையும் அவனுடைய ஐந்துபுத்திரர்களுங்குள்ளே கடைசிபிள்ளையானவன் எயாதியினுடையவார்த்திகத்தைக் கிரகித்துக்கொண்டதையுஞ் சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்துமகாராஜனே, நகுஷனுக்கு எதிரியென்றும், எதியாதியென்றும், சங்கியாதியென்றும் றெயாதியென்றும் எதிஎன்றும் கிறுதிஎன்றும் ஆறுபிள்ளைகளுண்டானர்கள் அவர்களுக்குள்ளேஜேஷ்டனுனஎதியானவன் பிதாவினல்கொடுக்கப்படாநின்ற ராச்சியத்தை அனர்த்தயேதுவென்று அதினுடைய பரிணமத்தையறிந்தவனுய் இச்சியாமற்போனுன். பிதாவானநகுஷனுனவன் சுவர்க்கத்தையடைந்து இந்திராணியான சசிதேவியை இச்சைப்பட்டதினுல்சுவர்க்கத்தில்நின்றும்தள்ளப்பட்டு அகஸ்தியர்முதலானரிஷிகளால் மலைப்பாம்பாயிருக்கையால் எயாதியானவன் ராஜாவாய்பூமியைப் பரிபாலனம்பண்ணிக்கொண்டு தம்பிமார்நான்குபேரையும் நான்குதிக்கும் ரக்ஷகாளாகநேமித்துத் தானும்சுக்கிராசாரியருடையபெண்ணையும் விரஷபரவாவினுடையபெண்ணையும் விவாகமுடித்து பூமியைப்பரிபாலனஞ்செய்துகொண் டிருந்தானென்றுசொல்லாநின்றசுகப்பிர்மரிஷியைப்பார்த்து பரிட்சித்துமகாராசன் சொல்லுகின்றார்,

பரிட்சித்துவாக்கியம்.

வாரீர் நாதா. நன்முளரிபாதா பகவத்பாராயணபோதா பக்தர்க்கனுகூலதாதாபகவானுனசுக்கிராசாரியர் பிர்மரிஷியல்லவாநகுஷபுத்திரனுனஎயாதியோவென்றால் ராசாவாகவிருக்கிறார்- ராசாவுக்கும் பிராம்மணருக்கும் சாதிபேதத்தையுடையதான விவாகமானதுஎதினுலுண்டாச்சுதென்றுகேளாநின்ற ராசாவைப்பார்த்துசுகப்பிர்மரிஷி சொல்லுகின்றார்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளாய் பரிட்சித்து, எண்ணியகருமநண்ணிச்செய்யும் கண்ணியமுள்ள புண்ணியசீலனே ஒருக்கால் தானவேந்திரனுன விருஷபதவாவினுடையபெண்ணுன சற்மஷ்டையானவள் குருவான சுக்கிரனது பெண்ணுன தேவயானையோடுகூட ஆயிரம்சகிகளுடன் கூடினவளாய் நகரசமீபத்திலிராநின்ற உத்தியானவனத்தில்சஞ்சரித்துக்கொண்டு அந்தப்பெண்களெல்லாரும்பட்டுவஸ்திரத்தையவிழ்த்து கரையில்வைத்துவிட்டு தாமரைமடுவிலிறங்கி ஒருத்தர்க்கொருத்தர்மேல் சலத்தையிறைத்துக்கொண்டிருந்தார்கள் அப்போது அந்தஸ்திரிகளானவர்கள் பார்வதியோடுகூட இடபவாகனத்தின்மீதுபோகாநின்ற ருத்திரனைப்பார்த்து லச்சையுடனேகூடினவர்களாய் சீக்கிரமாகக்கரையில்வந்து வஸ்திரங்களை யுடுத்திக்கொள்ளும்போது அவர்களுக்குள்ளே சற்மஷ்டையானவள் குருபுத்திரியான தேவயானையினதுவஸ்திரத்தையறியாதவளாய் தன்னுதாகவெண்ணிக்கொண்டுஉடுத்திக்கொண்டாள் அதைக்கண்டு தேவயானையானவள்சற்மஷ்டையைக்கோபித்துஒருவார்த்தைசொல்லுகிறாள். வாருங்கள்சகிகளே, எனதுதாசியான சற்மஷ்டையினுடைய அயுக்தமானகாரியத்தைப்பாருங்கள் நான் உடுக்

திக்கொள்ளத்தக்க வஸ்திரத்தை எக்கியத்தில் அவிசை நாயெடுத்தாற்போல உடுத்துத்தரித்துக்கொண்டாள், பிராமணனுடைய தபசில் இந்தசெகத்தானது சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றது,

அப்படிப்பட்ட மகாத்மியத்தையுடையவாள் பிராமணாளவர்களுக்குள்ளேயும் நாங்கள் இந்தச் சர்மஷ்டையினுடையதகப்பனுக்குக் குருவாகவிருக்கின்றோம் இப்படியிருக்க நான் உடுத்திக்கொள்ளுகிறவஸ்திரத்தைத்துஷ்டையான இந்தச்சற்மஷ்டையானவள் சூத்திரனானவள்வேதத்தைத் தரிக்குமாப்போலத் தரித்துக்கொண்டாளென்று சொல்லாநின்ற குருபுத்திரியான தேவயானையைப்பார்த்து சற்மஷ்டையானவள் ரோஷத்தினால் பெருமூச்சுவிட்டு உதட்டைக கடித்துக்கொண்டு ஒருவார்த்தைசொல்லுகின்றாள்,

வாராய் பிக்ஷையெடுக்கிறவளே உன்னுடையவிருத்தாந்தத்தையறியாமல் என்னபிதற்றுகிறாய் எனதுகிரகத்தைக்காக்கைபோல்நீ பார்த்துக்கொண்டிருக்கவில்லையாவென்று இப்படிப்பட்ட குரூரமானவசனங்களினால் ஆசாரியபுத்திரியான தேவயானையைத் திரஸ்காரஞ்செய்து சற்மஷ்டையானவள் அந்தத்தேவயானையையுங் கிணற்றில்தள்ளிவிட்டு அவளுடையவஸ்திரத்தையும்எடுத்துக்கொண்டுபோய்விட்டாள்,

எயாதிராஜனானவன் வேட்டையாடி ஜலாபேக்ஷையோடுகூடினவனாய் அந்தக்கிணற்றினிடத்தில்வந்து அதிலிராநின்ற தேவயானையைப் பார்த்து மகாதயாளுவான அந்தராஜனானவன் தன்மேலேயிருக்கிற வஸ்திரத்தை வஸ்திரமில்லாதஅந்தத்தேவயானைகருக்கொடுத்துத் தனதுகையினால்அவளுடையகையைப்பிடித்துக்கொண்டு கிணற்றைவிட்டு வெளியிலேயெடுத்து விட்டான் அப்போது சுக்கிராசாரிபெண்ணானதேவயானையானவள் வீரனான அந்தராஜாவைப்பார்த்து பிரீதியோடு ஒருவார்த்தைசொல்லுகிறாள்.

வாராய்ராஜனே. என்னுடையஅஸ்தமானது உன்னால் பிடிக்கப்பட்டதல்லவா அப்படி உன்னால்பிடிக்கப்பட்ட எனதுஅஸ்தத்தை இனிமேல் வேறொருவன் பிடிக்கப்போகிறதில்லை நம்மிருவருக்கும் இந்தச்சம்மந்தத்தெய்வத்தினால் நடத்தப்பட்டது, மனுஷியர்களால்நடத்தப்பட்டதல்ல ஆகையினால் எனக்குப் பிராமணனால் பாணிக்கிரணஞ் செய்யப்போகிறதில்லையென்று தேவயானையானவள்சொல்ல எயாதிராசனானவன்தனக்குச்சம்மதியில்லாமலிருந்தாலுந் தெய்வவசத்தினால்நேரிட்டபடியினாலேயும் ரூபலாவண்ணியாதிகளினாலேயும்அவளுடையவசனத்தை அங்கீகரித்து எயாதிராஜனானவன் தனதுபட்டணத்திற்குப்போனபின்பு தேவயானையும்விசனப்பட்டுக்கொண்டு தன்னுடையகிரகத்துக்குவந்துபிதாவுக்குச் சர்மஷ்டை சொன்ன குரூர வசனங்களையும் அவள்செய்ததையுஞ்சொன்னாள் அப்போது பகவானான சுக்கிராசாரியரானவர் மகாவிசனத்தையுடையவராய் தன்பௌரோகித்தியகர்மத்தை நிந்தித்துக்கொண்டும் இதைக்காட்டிலும் உஞ்சவிர்த்திசெய்யலாமென்று சிலாகித்து பெண்ணையழைத்துக்கொண்டு பட்டணத்தைவிட்டு வெளிப்பட்டுப்போய்விட்டார்கள் அப்போதுசற்மிஷ்டையினுடைய பிதாவான விறஷபறவாவும் அவர்பட்டணத்தைவிட்டுப் போனதையறிந்து சுக்கிராசாரியனை மார்க்கத்திலேபோய் அவருடைய பாதங்களை வணங்கி க்ஷமைகொண்டான் அப்போது பகவானான சுக்கிராசாரியரும் சாந்தராய் சிஷியனான விறஷபறவாவைப்பார்த்துஒருவார்த்தைசொல்லுகின்றார்.

வாராய்ராஜாவே, எனதுபெண்ணான தேவயானையினுடைய இஷ்டத்தை நிறைவேற்றக் கடவாய் இவளை நான் விட்டுவிடமாட்டேனென்றுசொன்னார் அந்த அசுரராஜனும் நல்லதென்று அங்கீகரித்து அந்தத்தேவயானையைச் சமாதானஞ்செய்கையில் தேவயானையானவள் தன்னுடையமனதிலிருக்கிறதைச் சொல்லுகின்றாள் என்னவென்றால் எந்தப்புருஷனுக்குப் பிதாவினால்கொடுக்கப்பட்டவர்களாய் நான்எங்கேபோகின்றேனோ அங்கே சற்மிஷ்டையானவள் தன்சகிகளோடுகூட எனக்குத்தாசியம்பண்ணக்கடவளென்று தேவயானைசொன்ன வார்த்தையைக்கேட்டு விறஷபறவாவானவன் தன்பெண்ணை அப்படியே தாசியஞ்செய்யும்படியாய் திட்டம் பண்ணினான். அந்தச்சர்மிஷ்டையும் ஆயிரஞ்சகிகளோடு கூட தேவயானைக்குத் தாசிபோலே சிசுருஷைசெய்துக்கொண்டிருந்தாள் பின்பு சுக்கிராசாரியரும் நகுஷபுத்திரனான எயாதிக்குத் தன்பெண்ணை சற்மிஷ்டையோடுகூடக் கொடுத்து ராஜாவைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றார்.

வாராய்ராஜனே நீ ஒருக்காலும் படுக்கையில்சற்மிஷ்டையையடையக்கடவையென்றுசொன்னார் பின்பு ஒருக்கால் அந்தச் சற்மிஷ்டை யானவள் சுக்கிராசாரியருடையபெண்ணையும் ராஜாவுக்குப்பட்டமகிஷியாயுமிருக்கிற தேவயானையைப்பார்த்து ருதுஸ்நானஞ் செய்தவளாய்நினைத்துத் தன்சகியினுடையபதியான ராசாவை ஏகாந்தத்தில் பர்த்தாவாகவரித்தாள் தர்மக்கியனானஅந்த ராசாவும் புத்திரார்த்தமாக ராஜபுத்திரியான சற்மிஷ்டையினால் யாசிக்கப்பட்டவனாய் அவளுடைய மனோரதத்தைப் பூரிக்கச் செய்யவேணுமென்கிற தர்மத்தைப் பார்த்து சுக்கிராசாரியருடைய வசனத்தையும் ஸ்மரித்துக்கொண்டு தெய்வகதியினால்நேரிட்ட அவளுடையசங்கமத்தைஅங்கீகரித்தான் தேவயானையானவள் எதுவென்றும் துறுவசுவென்றும் இரண்டு பிள்ளைகளைப்பெற்

ருள், விறஷபறவாவினுடைய பெண்ணான சற்மிஷ்டை யானவள் துற்கிறனென்றும்-அனுவென்றும்-பூருவென் றும் மூன்றுபிள்ளைகளைப்பெற்ருள், பின்பு தேவயானை யானவள் அசுரபுத்திரியான சறமிஷ்டையினிடத்தில்த ன்பர்த்தாவுக்குப் புத்திரோற்பத்தியை யறிந்து மிகவுங் கோபத்தையடைந்தவளாய் பிதாவினுடைய கிரகத்துக் குப் புறப்பட்டுப்போனுள் அப்போ தவளிடத்தில்மோ கத்தையுடையவனான அந்த ராஜாவும் தன்பாரியாளைப் பின்ருெடர்ந்து நல்வார்த்தை சொல்லிக்கொண்டும பா தத்தைப்பிடித்துக்கொண்டும் சமாதானம் பண்ணமாட் டாமற்போனுள்-அப்போது சுக்கிராசாரியானவர் அந்த ராஜாவைப்பார்த்து கோபித்துக்கொண்டொருவார்த்தை சொல்லுகின்ருர்,

வாராய்ஸ்திரீலோலனே-மூடபுத்தியே மனுஷியா ளுக்கு விகாரத்தைப் பண்ணுகின்ற சிறையானது உன் னையடையக்கடவதென்று சபித்த சுக்கிராசாரியரைப்பா ர்த்து எயாதி ராஜனுனவன் சொல்லுகின்ருன்-வாரீர் பி ரம்மநிஷ்டரே- உம்முடைய பெண்ணான தேவயானையி னிடத்தில் காமபோகங்களை யனுபவித்துஇன்னந்திருப் தியடையாமலிருக்கிறேனென்று ராசாசொன்னதற்குச் சுக்கிராசாரியர்சொல்லுகிருர், வாராய் ராஜனே அப்ப டியானுல் இந்தச்சிறையைத் தரிக்கத்தக்கவனான ஒருவ னுக்குக்கொடுத்து அவனுடைய யௌவனத்தை வாங்கி க்கொண்டு காமத்தை யனுபவிக்கக் கடவாயென் றனுக் கிரகித்தார்-இந்தப்பிரகாரம் சுக்கிராசாரியினுடையவச னத்தினுல் சிறையை மாற்றிக்கொள்ள வரம்பெற்றவனு ய்அந்தராஜனுனவன் தனதுஜேஷ்ட புத்திரனைப் பிரார் த்தித்து வாராய்எதுவே, குழந்தாய் உன்மாதாமகனுகி யசுக்கிரனுல்சபிக்கப்பட்ட இந்தச்சிறையைவாங்கிக்கொ ள் உனதுயௌவனத்தை எனக்குக்கொடு இந்தமட்டுக் குங் காமபோகங்களினுல் நான் திருப்தி யடையவில்லை உன்னுடைய யவ்வனவயதினுல் நான் சிலநாளைக்கு வி ஷயங்களை யனுபவிக்கிறேனென்று சொல்லுகின்ற பிதா வைப்பார்த்து எதுவானவன் சொல்லுகின்ருன்,

வாரீர்பிதாவே-உமக்கு நடுவேவந்தசிறையைநான் தரித்துக்கொண் டிருக்கமாட்டேன், லோகத்தில் புருஷ னுனவன்விஷயசுகத்தையறியாமல்சாந்தியையடையமா ட்டானல்லவா வென்றுசொன்னுன், துறுவசுவும்துர்க் கியனும்-அனுவும்-பிதாவினுல் கேழ்க்கப்பட்டவர்களாய் தர்மத்தையறியாமல் யௌவனத்தை நித்தியமாக எண் ணிக்கொண்டு மிராநின்ற அவர்களும் அதை நிராகரித் தார்கள், பின்புவயதில் குறைந்தவனும் குணத்தில்அ திகனுமிருக்கிற பூருவைப்பார்த்து எயாதிசொல்லுகி ருன்- வாராய் குழந்தாய், நீயும் தமையன்மாரைப்போ ல்என்வார்த்தையை நிராகரித்துப் போடவேண்டாம்இ ந்தச்சிறையை வாங்கிக்கொள்ளென்றுசொல்லாநின்றபி தாவைப்பார்த்து பூருவானவன் சொல்லுகிருன்,வாரீர் மனுஷேந்திரனே லோகத்தில் எந்தப்புருஷன்தான் த ன்னைப் பெருநின்ற பிதாவுக்குப் பிரதியுபகாரஞ் செய் கைக்குச் சமர்த்தனுகிருன் அந்தப்பிதாவினுடைய பிர சாதத்தினுல் புருஷனானவன் பரமமானசுகத்தையடை யுவனல்லவா-லோகத்தில் எவன்பிதாவினது நினைப்பை யறிந்து அதைச்செய்கிருனே அவன் உத்தமபுத்திரன் எவன்வாக்கினுல் சொன்னபிறகுசெய்கிருனேஅவன்ம த்திமபுத்திரன், எவன்பிதா சொன்னதை சிரத்தையில் லாமல் வெறுப்போடுசெய்கிருனே அவன்அதமபுத்தி ரன் பிதாசொன்னதைச் செய்யாமற்போனவன் பிதாவி னுடைய மலத்தோடொப்பாகவிருப்பானென்றுசொல் லிசந்துஷ்டனுய் அந்தப்பூருவானவன்பிதாவினதுசிறை யைவாங்கிக்கொண்டான்,அப்போதுஎயாதிமகாராஜனு ம்பிள்ளையினுடையஎவ்வனத்தை வாங்கிக்கொண்டுஎதா யோக்கியமாக விஷய சுகத்தை அனுபவித்துக்கொண்டு யக்கியபுருஷனும் சர்வதேவமயனுமிருக்கிற ஸ்ரீ அரி யைஎசித்து அனேகவித யக்கியங்களினுல் ஆராதித்து க்கொண்டு இந்தப்பிரகாரம் அனேகமாயும்சம்வச்சரம் மனதுக்குப்பிரீதியை யனுபவித்துக்கொண் டிருந்தாலு ம்மண்டலாதிபதியான அந்தஎக்கியாதிராஜனுனவன் தி ர்ப்தி யடையவில்லை,

## ௰கூ - வது - அத்தியாயம்.

மட்டுவிருத்தம்,

மன்னெயாதி மகாராஜனுனவன்
தன்னடத்தையி னுற்றேவயானையைத்
துன்னிடும்பெண் ணுட்டுக்குச்சமானமாய்
அன்னேன்சொல்லிமுத் தியையடைந்தாரரோ,

எயாதிமகாராஜனுனவன் தன்னுடைய நடத்தையினு ல்தேவயானையைப் பெண்ணுட்டுக்குச் சமானமாகவறி வித்து விரக்தனுய் முத்தியையடைந்தானென்று சொல் லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளாய் அஸ்தினபுரத்துக் கதிபதியாகிய அபிமன்னி யுபுத்திரா, அந்தஎயாதிராஜனுனவன் விஷயசுகங்களை யனுபவித்துக்கொண்டு ஸ்திரீபரவசனுய் தன்னுடையஆ த்மா விஷயானுபவத்தினுல் கெட்டுப்போனதை யறிந்து வெறுப்போடுகூடினவனுய் தனதுபாரியாளுக்கு இந்த க்கதையைச் சொல்லுகிருன்.

வாராய்தேவயானையே பூமியில்என்னைப்போலொ த்தவர்களால் ஆசரிக்கப்பட்ட இந்தக் கதையைக்கேள் வனத்தில் வாசஞ்செய்யாநின்ற சிதேந்திரி யானவர்கள் காமுகனான ஒருவனுடைய நடத்தையைப்பார்த்து சோ

கிப்பார்களோ அப்படிப்பட்டவனதுநடத்தையைச்சொ
ல்லுகிறேன்கேள். எப்படியென்றால் ஒருஆடானது கா
ட்டில் தனக்குப் பிரியமானதை அபேட்சித்து சஞ்சரித்
துக்கொண்டு அவடத்திற் கிணற்றில் விழுந்திராநின்று
ம் தனதுகர்மத்தை யனுபவித்துக்கொண்டு மிருக்கிறஒ
ருபெண்ணாட்டைப்பார்த்து காமத்தையுடையதான அ
ந்தஆடானது அந்தப்பெண்ணாட்டைக் கரையில்யெடுத்
துவிடுவதற்கு உபாயத்தைச்சிந்தித்துக் கரையில்தனது
கொம்புநுனியினால் மண்முதலானதைப் பேர்த்து வழி
செய்தது, பின்பு அந்தப்பெண்ணாடானது அந்தக்கிண
ற்றில்நின்றுங் கரையேறி அந்த ஆட்டைப்பார்த்து இச்
சையடைந்தது, அந்தப் பெண்ணாடோடுகூடிக்கொண்
டிராநின்றும்- மகாபுஷ்டியாயும் தாடியையுடையதாயும்
ரதிக்கிரீடையில் சமர்த்தாயும் விவேகத்தை யுடையதா
யுமிருக்கிற அந்தஆணாட்டைப் பின்னையுஞ்சிறிதுபெண்
ணாடுகள் இச்சித்துக்கொண்டு வந்து சேர்ந்ததுகள் அங்
தச்சிரேஷ்டமான ஆடானது தான் ஒண்டியாகத்தானே
அனேகமாயிருக்கிற அந்தப்பெண்ணாடுகளுக்குரதியை
விர்த்தி செய்துகொண்டு தன்னுடைய சுரூபத்வத மற
ந்ததாய் ரமித்துக்கொண்டிருந்தது,

இந்தப்பிரகாரம் மிகவும்இஷ்டையான வேறொரு
பெண்ணாட்டோடுகூட ரமித்துக்கொண்டிருக்கிற அந்த
ஆட்டுக்கிடாவைப்பார்த்து வேறொருரூபவதியான பெ
ண்ணாடானது அந்தஆட்டினுடையநடத்தையைச் சகிக்
கமாட்டாமல் துக்கத்தையும் அனித்தியமான சினேகத்
தையுமுடையதாயும் இந்திரியலோலனையும் தனக்குப்ப
ர்த்தாவாயு மிருக்கிற அந்த ஆட்டைவிட்டுப் போய்விட்
டது-பின்பு ஸ்திரீவசியமாயும் தீனமாயுமிருக்கிற அந்த
ஆடானது தன்னைவிட்டுப் பிரிந்துபோகாநின்ற அந்தப்
பெண்ணாட்டை க்ஷமைகொள்ளுகைக்கு அனுவர்த்தித்
துமார்க்கத்திலே அதைக்கிட்டி நல்லவார்த்தை சொல்
லியும்,சமாதானமாகாமற்போச்சுது அப்போதுஅவடத்
தில் ஒருயோகியானவன் கோபத்தினால் அந்தஆட்டினு
டைய விருஷணத்தையறுத்துவிட்டுத் திரும்பவும் தன்
னது யோகபலத்தினால்போகயோக்கியமாகும்படித்தொ
ங்காநின்ற அந்தவிருஷணத்தைக் கூட்டிவைத்தான்-அ
ந்தஆட்டுக்கிடாவும் திரும்பவும் விருஷணத்தை யடை
ந்துகிணற்றி லடையப்பட்ட அந்தப் பெண்ணாட்டோடு
வெகுகாலமாய் ரமித்துக்கொண்டு போகங்களினால்இப்
போதைக்கும் திர்ப்தியை யடையாமலிருக்கிறது.

வாராய்தேவயானையே அப்படிபோலநானும் கிண
ற்றிலே அடையப்படாநின்ற உன்னுடையசினேகபாசத்
தினால்கட்டப்பட்டவனாய் உன்மாயையினால்மோகத்தை
யடைந்தவனாய் என்னுடைய ஆத்ம சுரூபத்தையு மறந்
தேன், பூமியில் அனேகவிதங்களான நெல்முதலிய தா
னிய விசேஷங்களும் சுவர்னம்-பசுக்கள் - ஸ்திரீகள்-எ
வ்வளவிருக்கிறதுகளோ இதுகளெல்லாம் காமபரவசனா
னபுருஷனுக்கு மனோரத பூர்த்தியைப் பண்ணமாட்டா
துகள், ஆசையானது கோரப்பட்டவஸ்துக்களுடைய அ
னுபவத்தினால் ஒருக்காலும்ஒழிவை யடையமாட்டாது
நெய்யை அக்கினியில்விடுவதுபோலமேலுமேலும்விர்
த்தியையடையும்-புருஷனானவன் எப்போது சமஸ்தபி
ராணிகளிடங்களிலேயும் காமக்குரோதமுதலான துற்
குணங்களைப் பண்ணமலிருக்கிறானோ அப்போதுசமபு
த்தியான அந்தப்புருஷனுக்கு சமஸ்தமான திக்குகளும்
சுகசுரூபங்களாக நிற்கும், புருஷனானவன் மாதாவானா
லும், புத்திரியானாலும்- உடற்பிறப்பானாலும் - இவர்க
ளோடுகூட-ஏகாந்தத்திலே வாசம்பண்ணாம லிருக்கக்க
டவன-இந்திரியசமுகமானது பெலத்தையுடையதாகை
யால் கியானியானபுருஷனையும் விஷயங்களி லிழுத்துக்
கொண்டுபோகும்-ஒழிவில்லாமல் விஷயங்களை அனுப
வியாநின்ற எனக்குக் குறைவில்லாமல்ஆயிரம்சம்வச்ச
ரம்பூர்னமாச்சுது-ஆனாலும் அடிக்கடி விஷயங்களிலே
யே இப்பவும் ஆசையானது உண்டாகின்றது, ஆகையா
ல்நான்இந்த விஷய ஆசையை விட்டுவிட்டுப் பிர்மத்தி
னிடத்தில் மனதைஸ்திரமாகவைத்து சிதோஷண முத
லான தொந்த துக்கங்களைச் சகித்துக்கொண்டும் அகங்
காரத்தைவிட்டவனாயும் வனத்தில் மிருகங்களோடுகூட
சஞ்சரித்துக்கொண் டிருக்கப்போகிறேனென்று எயாதி
ராஜனானவன் தன்னுடையபாரியையான தேவயானையை
ப்பார்த்துச்சொல்லி புத்திரனானபுருவுக்கு அவனுடைய
எவ்வனத்தைத் திரும்பவுங் கொடுத்து விட்டுத் தன்னு
டைய சிறையையும் தான் வாங்கிக்கொண்டு ஆசையை
யொழிந்தவனாய் அக்கினிதிக்கிலே திரிகியுவையும் தெ
ட்சணதிக்கிலே எதுவையும் மேற்குத்திக்கிலே துறுவ
சுவையும் வடக்குத்திக்கிலே அனுவையும்-இராஜாவாக
ஸ்தாபித்து சமஸ்தமான பூமண்டலத்துக்கும் புருவை
சிரேஷ்டனான இராஜாவாகப் பட்டாபிஷேகஞ் செய்து
வைத்துத் தமையன்மாரையும் அவனுடைய சொற்படி
நடந்துகொள்ளும்படியாக ஸ்தாபித்துதபோவனத்தை
யடைந்து எயாதிமகாராஜனானவன் சமஸ்தவிஷய ச
ங்கத்தையும் விட்டுவிட்டு ஆத்மானு பவத்தினாலே லிங்
கசரீரத்தையும் விட்டவனாய் பரப்பிரம்மமாயும் நிர்மல
மாயு மிருக்கிற வாசுதேவ னிடத்திலே நிஷ்டையை யு
டையவனாய் ஸ்ரீ பகவத்சம்பந்தமான கதியையடைந்தா
ன் பிற்பாடு அந்தத் தேவயானையானவளும் ஸ்திரீ புரு
ஷர்களுடைய ஸ்நேகத்திலே சொல்லப்பட்ட பரியாச
வார்த்தையைப்போ லிராநின்றும் ஆத்மாவுக்கு நிவி
ர்த்திமார்க்க சூசுகமாயு மிருக்கிற இந்த யெதிஹாசத்
தைக்கேட்டு ஆத்மாவுக்கு நிவிர்த்திமார்க்கநிஷ்டையை

யறிந்து அந்தத் தேவயானையானவள் சுக்ருர்துக்களுடை யசகவாசத்தை வழிநடக்கிற பேர்களுக்குத் தண்ணீர்ப் பந்தலிலே க்ஷணப்போதுநேரிடாநின்ற சகவாசத்தைப போல ஈஸ்வராதீனங்களான பிராணிகளுக்குமாயையி னாலேசெய்யப்பட்டதாகஅறிந்து சொர்ப்பன திருஷ்டா நகத்தினாலே சமஸ்தவிஷயங்களிலேயும் சங்கத்தைவிட் டுஸ்ரீகிருஷ்ணபகவானிடத்திலேயே மனதைநிறுத்தி கி யானசக்திமுதலான குணங்களையுடையவராயுமிருக்கிற உமக்குப்பிரணமமென்று தியானம் பண்ணித் தன்னு டையலிங்கசரீரத்தைவிட்டுவிட்டாள்.

## உய-வது-அத்தியாயம்

கலிவிருத்தம்.

தந்தையின்றன னுக்ரகந்தன்னினால்
அந்தசிம்மாதனத் தையடைந்திடும்
தொந்தபுரூரவம் சத்தினிற்றோன்றியே
வந்தமரபரதன வம்சம்சொல்லுவாம்.

பிதாவினுடையஅனுக்கிரகத்தினாலே இராஜசிம்மாத னத்தையடைந்த புருவினுடையவம்சத்திலேயுண்டான துஷ்டியந்தபுத்திரனான பரதனுடையகீர்த்தியானதுசொ ல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்பற்குணபௌத்திரனான பரிட்சித்துமகாரா ஜனே, யாதொருவம்சத்திலே நீபிறந்தையோ அந்த வ ம்சத்திலே வம்சஸ்தர்களான் ராஜரிஷிகளும் பிர்மவம்சி யர்களும் ஜெனித்தார்களோ அப்படிப்பட்ட புருவினு டைய வம்சத்தைச்சொல்லுகிறேன் கேளும் புருவுக்கு ஜென்மசெயனும் அவனுக்குப்பிரசன்னவானும் அவனு க்குப்பிரவீரனும் அவனுக்குமனசுயுவும் அவனுக்குச்சா ருவும் அவனுக்குமகாபுண்ணியவானான சுத்தியுவும் அ வனுக்குவெகுபவனும் அவனுக்குச் செய்யாதியும் அவ னுக்குசெங்காதியும் அவனுக்கு ரவுத்திராசுவனும் ஜெ னித்தார்கள் அந்தரவுத்திராசுவனுக்கு ரிதேயுவென்று ம் கிறிக்ஷேயுவென்றும் ஸதலேயு வென்றும் கிறிதேயு வென்றும் ஜெலேயுவென்றும் சனனதேயு வென்றும் தறமேயுவென்றும் சத்தியேயுவென்றும் விறதேயு வெ ன்றும் வனேயுவென்றும் பத்துபிள்ளைகள் கிறுதாசியெ ன்கிற அப்சரஸ்திரீயினிடத்திலே ஆத்மபூதமான முக் கியப்பிராணனுக்கு தசவிந்திரியங்கள் போலப் பிறந்தா ர்கள் அவர்களுக்குள்ளே அப்பிரதிரதனுக்கு கண்ணுவ ரும் அவருக்குமேதாதியும் அவருக்குவிருக்கு வாமுத லானபிராமணரும் ரிதேயுஞ்ஜெனித்தார்கள்,

சுமதிக்குதுஷ்டியந்தனென்று ஒருவன் பிறந்தான் அந்தத்துஷ்டியந்த மகாராஜனானவன் வேட்டைக்கென் றுபுறப்பட்டுப்போய் கண்ணுவரிஷியினுடைய ஆசிரம த்தையடைந்து அவடத்திலே மகாலட்சுமியைப்போலி ராநின்ற ஒருஉத்தமஸ்திரீயைப்பார்த்து அந்தக்ஷணத் திலேயே மிகவும் மோகத்தையடைந்து தனது ஆயாச மெல்லாந்தீர்ந்து மன்மதனாலேபீடிக்கப்பட்டவனாய்அந் தஸ்திரீயைப்பார்த்து சிரித்துக்கொண்டு மதுரமானவச னத்தினாலே ஒருவார்த்தைசொல்லுகின்றான்.

வாராய் கமலதளம்போலிருக்கிற நேத்திரங்களை யுடையவளே நீயாருடையபெண் உனக்கு ஒருவருமில் லாத இந்தவனத்திலே செய்யவேண்டுவதென்ன நிக்ஷ யமாகஉன்னை இராஜாவினுடையபெண்ணாகஎண்ணுகி றேன் புருவம்சத்திலேபிறந்த இராஜாக்களுடைய மன தானது அதர்மத்திலே பிரவேசியாதல்லவாஆகையால் நீராஜகுமாரியேயாகவேணுமென்றுசொல்லாநின்றதுஷ் டியந்தனைநோக்கி சகுந்தலைசொல்லுகின்றாள்,

வாராய் ராஜனே நான்விஸ்வாமித்திரரிஷிக்கு மே னகையினிடத்திலேசெனித்தவள் அந்தமேனகையினால் இந்தவனத்திலேவிடப்பட்டவளாய் கண்ணுவமகா ரிஷி யினாலேரட்சிக்கப்பட்டிருக்கிறேன் எனதுஉற்பத்தியை ப் பகவானான கண்ணுவமகாரிஷியானவர் அறிவார்உன க்கு நான்செய்யவேண்டியதென்ன ஓபுண்டரீகாக்ஷனே ஆசனத்திலேயிருக்கக்கடவாய் என்னால் செய்யப்படாநி ன்றபூசையை அங்கீகரியுமென்று சொல்லாநின்ற சகுந் தலையைப்பார்த்து துஷ்டியந்தமகாராஜன் சொல்லுகின் றான்,

துஷ்டியந்தமகாராஜன்வாக்கியம்,

வாராய் சோபனங்களான புருவங்களை யுடையவ ளே, குசிகவம்சத்திலேபிறந்த உனக்கு இப்படி யுபசரி க்கிறதுயுக்தமே, ராஜகன்னிகைக ளானவர்கள் தனக்கு யோக்கியமானபர்த்தாவைசுய இச்சையாகவேஅடைவா ர்களல்லவாவென்றுசொல்லாநின்றஅந்தராஜாவினுடை யவார்த்தையைச் சகுந்தலையானவள் அங்கீகரிக்கையில் தேசகாலஞாயங்களையறிந்தவனான அந்த ராஜனானவன் எதாசாஸ்திரப்பிரகாரங் காந்தர்வமாக அப்போதேஅந் தச்சகுந்தலையைப்பாணிக்கிரகணஞ்செய்துகொண்டு அ ந்தராசனானவன் சகுந்தலையினிடத்திலே வீரியத்தைஆ தானம்பண்ணி மற்றுநாள் தன்பட்டணத்துக்குப் போ னான் சிலகாலத்துக்குப்பின்பு சகுந்தலையானவள்புத்திர னைப்பெற்றாள்,

அந்தப்பிள்ளைக்கு கண்ணுவமகாரிஷியானவர் ஜா தகர்மமுதலான வுசிதகர்மங்களைச்செய்தார் அந்தப்பிள் ளையானவன் அந்தஆசிரமத்திலேயே விர்த்தியடைந்து தனதுபெலத்தினாலே சிங்கங்களைப்பிடித்துக்கட்டிவிளை யாடிக்கொண்டிருந்தான் பிற்பாடு அந்தச் சகுந்தலையா னவள் ஒருவராலேயும்அதிக்கிரமிக்கக்கூடாதபராக்கிர மத்தையுடையவனையும் ஸ்ரீஅரியினுடையஅம்சாஅம்ச

த்தினால் ஜெனித்தவனாயுமிராநின்ற அந்தப்பிள்ளையை எடுத்துக்கொண்டு பர்த்தாவினுடைய சந்நிதானத்தை யடைந்தாள்.

அப்போது அந்த துஷ்டியந்த ராஜனானவன் ஞாபகமில்லாதபடியால் நிர்த்துஷ்டாளான அந்தப்பாரியையும் புத்திரனையும் ஆதரணை செய்யாதிருக்க அப்போது ஆகாசத்திலேசமஸ்தபிராணிகளுங்கேட்டுக்கொண்டிருக்க ஒருஅசரீரிவாக்கியமுண்டாயிற்று அதென்னவென்றால் வாராய்துஷ்டியந்தனே லோகத்தில் பிள்ளைக்குத் தாயானவள் தோற்பையைப்போல ஆதாரமாத்திரமேயாகின்றாள் பீஜப்பிரதனாகையால் பிதாவுக்க புத்திரனாகவிருக்கின்றான் எவனாலேபிறந்தானோ அவனே அந்தந்தப்புத்திரனாகவிருக்கின்றான் ஆகையால் நீஇந்தப்பிள்ளையைப்போஷிக்கக்கடவாய் நிற்துஷ்டையானஇந்தச்சகுந்தலையை அவமானம்பண்ணாதே வம்சகர்த்தாவானபுத்திரனானவன் பிதாவை யமலோகத்தில் நின்றும் உத்தாரணம்பண்ணுவன் பீஜப்பிரதனான பிதாவானவனும் புத்திரனை எமனுடையசபையில்நின்றும் ஜெயித்தடைவன் மாதாவானவள் அடையமாட்டாள் இந்தச்சகுந்தலையானவள்சொன்னது எதார்த்தமேயென்று ஆகாயவாணிசொன்ன வசனத்தைக்கேட்டு அந்தத்துஷ்டியந்தராசாவும் பாரியாபுத்திராளிருவரையும் பரிக்கிரகித்துக்கொண்டான்,

பிற்பாடு அந்தப்பரதனும் பிதாவான துஷ்டியந்தன் லோகாந்தரத்தையடைந்திருக்கையில் சக்கிரவர்த்தியாயும் மகாகீர்த்திமானாயுமிருந்து மகாபிஷேகவிதியினாலே பட்டாபிஷேகம்பண்ணப்பட்டவனாய் அனேகயாகங்களைச்செய்து அக்கினிசயனமென்கிற கிருதுவைப்பண்ணி பூமியிலே இருபத்தேழாயிரவருஷம் தனது ஆக்கியாசக்கிரத்தைத் திக்குகளெங்கும் நடப்பித்துக்கொண்டிருந்தான். பிற்பாடு அந்தப்பரதமகாராசனானவன் அயிஸ்வரியத்தையும் சம்பத்தையும் பாரியைகளையும்புத்திரரையும் அனித்தியமென்றெண்ணி சம்சாரசத்திலே வைராக்கியத்தையடைந்து தனக்குவிதேகனுடைய பெண்கள்மூன்றுபேர் இஷடபாரியைகள் அந்தஸ்திரீகளிடத்திலே புத்திரோற்பத்தி யுண்டாயிருக்கையில்அந்தப்பிள்ளைகளைப்பார்த்து பரதனானவன் இந்தப்பிள்ளைகள் எனக்குயோக்கியாளன்றென்றுசொல்லுகையில்அந்தஸ்திரீகளானவர்கள் தங்களிடத்தில் பர்த்தாவுக்குவிபசாரசங்கைபிறந்து தங்களை விட்டுவிடப்போகிறானென்கிறபயத்தினால் அந்தப்பிள்ளைகளைக் கொன்றுபோட்டார்கள் இந்தப்பிரகாரம். பிறக்கப்பிறக்கக் கொன்றுபோடுவதினால் வம்சமானது வியர்த்தமாயிக்கையில் அந்தப்பரதனானவன் புத்திரார்த்தமாக மறுதஸ் தேகமமென்கிற கிறுதுவினால் தேவதைகளைக்குறித்து எக்கியம்பண்ணினான். அப்போது அந்தத்தேவதைகள் பிரசன்னராய் அந்தப்பரதமகாராசாவுக்கு பரத்துவாசனென்று ஒருபிள்ளையைக்கொடுத்தார்கள் தேவதைகளுக்குப் பரத்துவாசனென்கிறபிள்ளை வந்தவழியென்னவென்றால் சொல்லுகிறேன்கேள்,

பிரகஸ்பதியானவர் ஒருக்கால் கெர்ப்பிணியாயும், மாதாவென்றுபெயரையுடையவளாயுமிருக்கிற தன்தம்பியான வுசகச்சனுடைய பாரியினிடத்தில் மைதுனகாரியத்துக்கு யத்தனம்பண்ணினவராய் கெர்ப்பத்திலிராநின்றசிசுவினால் அவ்விடத்தில்வேறொருகெர்ப்பத்துக்கு அவகாசமில்லாமையால் முறையிட்டுத் தகையப்பட்டவராய்க் கோபித்துக்கொண்டு அந்தக்கெர்ப்பத்தைஅந்தகனாகக்கடவையென்றுசபித்து பலாத்காரத்தினால்வீரியத்தை யோனியிலேவிட்டார் அப்போது அந்தவீரியமானது கெர்ப்பத்திலேயிருக்கிறசிசுவினால் தள்ளப்பட்டதாய் யோனிக்குவெளிப்பட்டு பூமியிலேவிழுந்து அந்கட்சணத்திலேயே ஒருபிள்ளையாயிற்று அந்தப் பரபீஜத்துக்குப் பிறந்தபிள்ளையை விபசாரசங்கையினால்தன் பர்த்தா தன்னைவிட்டுவிடப் போகிறானென்கிற பயத்தினால் பரபீஜத்துக்குப்பிறந்த அந்தப்பிள்ளையைவிட்டுவிடவேணுமென்றுநினைத்த அந்தமாதாவைப்பார்த்துதேவர்களானவர்கள் பிரகஸ்பதிக்கும் அந்த மாதாவுக்கும் விவாதரூபமான இந்தச் சுலோகத்தைச் சொன்னார்கள் எப்படியென்றால்,

வாராய்மூடபுத்தியே ஒருவனுடைய க்ஷேத்திரத்தில் மற்றொருவனுடையபீஜத்துக்குப் பிறக்கையால் இருவருக்கும்புத்திரனான இந்தப்பிள்ளையை நீபரிக்கக்கடவாய் உனக்குஅந்தபாத்தா வுன்னை விடப்போகிறானென்றுபயந் தேவையில்லையென்று பிரகஸ்பதியினால்சொல்லப்பட்டவளாய் அந்தமாதாவானவள் பிரகஸ்பதியைப்பார்த்து வாராய்பிரகஸ்பதியே நம்மிருவருக்கும்அன்னியாயத்தினால்பிறந்த இந்தப்பிள்ளையை நான் ஒருத்தியேபரிக்கமாட்டேன் நீயேபரிக்கக்கடவை என்றுசொல்லி அந்தமாதாவானவள் விபசாரத்தினால் பிறந்த அந்தப்பிள்ளையை வியர்த்தமாயெண்ணி விட்டுவிட்டாள் அப்படிமாதாவுக்கும் பிரகஸ்பதிக்கும் விவாதப்பட்டுஅந்தப்பிள்ளையை விட்டுவிட்டுப் போனதினால் அந்தப்பிள்ளைக்குப்பரத்துவாசனென்று பெயருண்டாச்சுது அப்படிஅவர்களிருவராலேயும் விட்டுவிடப்பட்ட பிள்ளையை தேவதைகள்போஷித்துப் பரதனுடையவம்சமானது வியர்த்தமாய்ப்போகுகையில் பரதனுக்குக் கொடுத்தார்கள் ஆகையினால் அவனுக்கு வித்தனென்று பெய ருண்டாச்சுது.

---

## ௨௧-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பூர்க்கிடும்ரந்தி தேவனஜாமீடன்
கூர்ந்தராஜாக்க ளின்கீர்த்தியானது
சோர்தலின்றிவிஸ் தாரமாய்ச்சொல்லிடும்
தேர்ந்தவிததன்வம் சஞ்சொல்லுவாமரோ.

மகாகீர்த்திமான்களான ரந்திதேவன் அசாமீடன்முதலான ராஜாக்களுடைய கீர்த்தியானது விஸ்தாரமாகச் சொல்லப்படுகிற பகதனுடைய புத்திரனை விதாதாவினுடையஅந்தவம்சமானது சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்பரிட்சித்துமகாராஜனே-வி-த-தனுக்கு மன்னியுவென்று ஒருபிள்ளையுண்டானான் அவனுக்குப்பிரகஷத்திரனென்றும் செயனென்றும் மகாவீரியனென்றும், நரனென்றும், கெற்பனென்றும் ஐந்துபிள்ளைகளுண்டானார்கள் அவர்களுக்குள்ளே நரனுக்கு சங்கிரதியென்றுஒருவனுண்டானான் அவனுக்குக் குருவென்றும் ரந்திதேவனென்றும் இரண்டுபிள்ளைகளுண்டானார்கள் அந்தரந்திதேவனுடையஎசசு இகலோகத்திலேயும்பரலோகத்திலேயும் கீர்த்திக்கப் பட்டவனையும் பிரயத்தின மில்லாமல் தெய்வகதிபாகவராநின்றவஸ்துவை அதிதிகளுக்குக்கொடுத்துக்கொண்டும் தான் அனுபவித்துக்கொண்டும், பசியையுடையவனையும் மகாதரித்திரனையும் மிகுந்த தயிரியத்தையுடையவனையும் கஷ்டத்தை அனுபவித்துக்கொண்டுமிருக்கிற அந்தரந்திதேவனானவன் ஒருக்கால் நாற்பத்தெட்டுநாள் ஜலபானம்பண்ணமலிருந்தான், பிற்பாடு உதயகாலத்தில்நெய்யும் எவான்னமும்பாயசமும் தீர்த்தமும் தெய்வகதியாகலபித்தது பசிதாகத்தினால் மகாசங்கடத்தை யடைந்திராநின்றும்அந்த அன்னத்தைப் போசனம்பண்ணவேணுமென்றும் இச்சையுடையவனையுமிருக்கிற அந்தராஜாவுக்கு ஒருபிராமணனானவன் அதிதியாகவந்தார் அப்போது அந்தராஜாவானவன் சகல பிராணிகளையும் ஸ்ரீஹரியாகப்பார்த்துக்கொண்டு அந்த அன்னத்தைப்பகர்ந்து ஆதரவுடனே அந்தப் பிராமணனுக்குக்கொடுத்தான் அந்தப்பிராமணனும் அந்தஅன்னத்தைப்பொசித்துப் புறப்பட்டுப் போனபிறகு அந்தராஜாவானவன் தன்குடும்பத்தோடு அதிதிக்குக்கொடுத்த சேஷத்தைப்பொசிக்கவேணுமென்றிருக்கும்போது ஒருசூத்திரனானவன் அன்னஆர்த்தியாகவந்தான்.

அப்போதுஅந்தராஜனானவன்அவனையும் அரியாகநினைத்துக்கொண்டு அவனுக்கும் அந்த அன்னத்தில் பிரித்துக்கொடுத்தான், அந்தச் சூத்திரனும் அவ்வன்னத்தைப் பொசித்துப் போன பின்பு வேறே யொருபுருஷனானவன் சிலநாய்களைக்கூட்டிக்கொண்டு அதிதியாக வந்துவாசீர்ராஜாவே பசியினால்வருந்துகின்ற எனக்கும் என்னுடையநாய்களுக்கும் அன்னங்கொடுக்கவேணுமென்றுசொன்னான் அப்போது அந்தராஜா அவனையும் ஆதரித்து மிகுந்த அன்னத்தையெல்லாம் சிரத்தையோடு நாய்களுக்கும் அவனுக்குங்கொடுத்தான்பிற்பாடுஒருவனுக்குப் பானம்பண்ணத்தக்கதாகத் தீர்த்தமாத்திரமே மிகுந்தது அந்தத்தீர்த்தத்தைப்பானம் பண்ணப்போகாநின்ற அந்தராஜாவை ஒருமிலேச்சனானவன் அடைந்து மிகவுந் தாகத்தையுடையஎனக்கு இந்தத்தீர்த்தத்தைக் கொடுக்கவேணுமென்றுகேட்டான் அப்போது மகாகீர்த்தியை யுடையவனான அந்த ராஜாவானவன் அவனுடையவசனத்தைக்கேட்டு கிருபையினால் பீடிக்கப்பட்டவனாய் ஒருவார்த்தைசொல்லுகின்றான்-என்னவென்றால் ஈஸ்வரனிடத்தில்நின்றும் அணிமாதிஅஷ்ட அயிஸ்வரியங்களோடு கூடிக்கொண்டிராநின்ற மோக்ஷத்தை நான்கோறவில்லை சமஸ்தபிராணிகளுடைய இருதயத்துக்குள்ளேயிராநின்ற அவர்களுடைய துக்கத்தையெல்லாம் நானனுபவிக்கவேணுமென்று இச்சிக்கிறேன் அவர்களுடையதுக்கத்தை அனுபவியாநின்ற என்னால்அவர்களெல்லாம் துக்கசூனியாளாகவேணுமென்றுஇச்சியாநின்றநான் தாகத்தையுடையஇந்தப்புருஷனுக்கு சீவனஏதுவான இந்தஜலத்தைககொடுப்பதினால் எனக்குப்பசி தாகம் இளைப்பு இதுகளெல்லாம் நிவர்த்தித்துப்போகுமென்றுசொல்லிதாகத்தினால்மரித்துப்போகிறவனானஅந்தராஜாவானவன் அந்தமிலேச்சனுக்கு அந்தத்தீர்த்தத்தைக்கொடுத்தான் அப்போது பலத்தை யிச்சியாநின்றபேருக்குப் பலத்தைக்கொடுக்கத்தக்கவர்களானபிர்மாமுதலிய தேவாளானவர்கள் அந்தராஜாவினுடைய மனதைப் பரிசோதிக்கிறதற்காக முன்னமே மாயையினால் பிராமணாதி ரூபத்தினாலேவந்து பிற்பாடு தங்களுடையநிஜஸ்வரூபத்தைக்காண்பித்தார்கள் அப்படிகாண்பித்தும் அந்தராஜாவானவன் விரக்தனாய் விஷயத்தில் ஆசையில்லாதவனாய் அவர்களுக்குப்பிரணாமஞ்செய்து வாசுதேவனானபகவான்ஒருவனிடத்திலேயேபக்தியினால் மனதைஸ்திரமாகவைத்தான் அப்போது அந்தரந்திதேவனை அனுவர்த்தித்தபேரெல்லாம் அவனுடையசகவாசப்பிரவாகத்தினால் ஸ்ரீமந்நாராயணனையே பரமகதியாகவுடையயோகிகளாகவானார்கள்.

கெற்கனுக்கு காற்பாயணியென்று ஒருவனுண்டானான் அந்தராஜாவினிடத்தில் நின்றும் பிர்மவம்சமானதுண்டாச்சுது மகாவீரியனுக்குஉருக்ஷயனென்றொருவனுண்டானான். அவனுக்குத் திறையாருணியென்றும், கவியென்றும், புஷ்கலாருணியென்றும்மூன்றுபேருண்டானார்கள் இவர்கள்மூன்றுபேரும் ராஜவம்சத்திலே

யிருந்து பிராணகதியையடைந்தார்கள் பிரகஷத்திரனுக்குசுகோத்திரனும் அவனுக்குஅஸ்தியும்உண்டானார்கள் அந்தஅஸ்தியானவன் அஸ்தினபுரத்தை யுண்டாக்கினான் அவனுக்கு அசமீடனென்றும் திவிமீடனென்றும் புருமீடனென்றும் அசமீடனுடைய வம்சத்திலே பிறியமேதன்முதலான பிராமணருண்டானார்கள் அந்தமூன்றுபேர்களுக்குள்ளே அசமீடனுக்குபிறகதிட்சுவும் அவனுக்குசெயத்திரனும் அவனுக்கு விசுவசித்தும் அவனுக்குசெனசித்தும்உண்டானார்கள் அந்தசெனசித்துக்குருசிராசுவனென்றும் திறடஅனுவென்றும்காசியனென்றும்வச்சனென்றும் நான்குபிள்ளைகளுண்டானார்கள் ருசிராசுவனுக்கு பிறதுசெனனும் அவனுக்குபாரனும்நீபனும்உண்டானார்கள் அந்த நீபனுக்கு நூறுபிள்ளைகளுண்டானார்கள் அவர்களுக்குள்ளே சாம்பிலியாதிபதியானசமரன்ஜேஷ்டனாகப்பிறந்தான் அந்த சமரனுக்குப் பாரதன்முதலான மூன்றுபேருண்டானார்கள் பாரதனுக்குப்பிறதியென்று ஒருவனுண்டானான் அவனுக்குசுகுறதியும் அவனுக்குவிப்பிராசனும் அவனுக்குஅணுகனும்உண்டானார்கள் அந்தஅணுகன் சுகருடையபெண்ணான கிருத்தியினிடத்திலே பிறமதத்தனையுண்டாக்கினான் அந்தப்பிறமதத்யோகிசனைப் சரசுவதியென்கிறபாரியினிடத்திலே விசுவச்சேனனென்று ஒருபிள்ளையைப்பெற்றான் அந்தப்பிள்ளையானவன் செயிகிருஷனுடைய வுபதேசத்தினால் யோகதந்திரமென்கிறசாத்திரத்தைப்பண்ணினான் அவனுக்கு உதகசெனனென்று ஒருவ னுண்டானான் அவனுக்குபல்லாதனென்று ஒருவனுண்டானான் இவர்களெல்லாம் பிரகதிசுவினுடைய வம்சத்திலே பிறந்த ராசாக்கள்,

திவிமீடனுக்கு எமினானும், அவனுக்குக் கிறிதுமானும் அவனுக்கு சத்தியதிருதியும் அவனுக்கு திரடனேமியும் அவனுக்கு சுபாரிசுவனும், அவனுக்கு சுமதியும், அவனுக்குசன்னதிமானும் அவனுக்குகிருதியும்உண்டானார்கள் அந்தக்கிருதியே இரணியநாபனிடத்தில்கின்றும் யோகத்தைப்பெற்று பிராச்சியசாமங்களுடையஆறுசங்கிதைகளைக்கானம்பண்ணினான் அவனுக்குஉக்கிராயுதனென்று ஒருவனுண்டானான் அவனுக்கு ஷெமியனும் அவனுக்குசுவிரனும் அவனுக்குப் பிரஞ்சயனும் அவனுக்குப்பாகுரதனும் உண்டானார்கள் புருமீடனுக்குச் சந்தானமேயில்லை அசமீடனுக்கு நளினியென்கிற ஸ்திரீயினிடத்தில் நீலனும் அவனுக்குச் சாந்தியும் அவனுக்குச்சுசாந்தியும் அவனுக்குபுரீசனும் அவனுக்கு அறதனும் அவனுக்கு அறம்மியாசுவனும் உண்டானார்கள், அந்த அறம்மியாசுவனுக்கு முதகலனென்றும் உவினானென்றும், பிரகதிசுவனென்றும் காம்பில்லியனென்றும், சிறஞ்செயனென்றும் ஐந்து பிள்ளைகளுண்டானார்கள் அந்தஅறம்மியாசுவனனவன் தன்னுடையபிள்ளைகள் ஐந்துபேரும் ஐந்து விஷயங்களையும் ரட்சிக்கக்கர்த்தாளென்றுசொன்னான், ஆகையினால் பாஞ்சாலரளென்றுபெயராயுடையவர்களானார்கள் முதகலனிடத்தில்கின்றும் பிர்மவம்சம்உண்டாச்சுது அந்தக்கோத்திரமேமவுத்கல்லியகோத்திரமென்று பெயராயுடையதாச்சுது அறம்மியாசுவபுத்திரனான அந்தமுதலகனிடத்தில்கின்றும் திவோதாசனென்று ஒருபிள்ளையும் அகலிகையென்று ஒருபெண்ணும் இரட்டையாகப் பிறந்தது அந்தஅகலிகையினிடத்திலே கௌதமரிஷிக்கு சந்தானந்தர்பிறந்தார் அந்தச்சந்தானந்தருக்கு தனுர்வேதத்தில் சமர்த்தரான சத்தியதிருதியென்று ஒருபிள்ளையுண்டானார் அவர்பிள்ளை சிரத்துவான் அந்தச்சிரத்துவானேஉருவசியைக்கண்டு கலிதமாகாகின்றஇந்திரியத்தை நாணலிலேவிட்டுவிட்டான் அந்த இந்திரியத்தினாலே துரோணபத்தினியான கிருபியென்று ஒருபெண்ணும் கிருபனென்றுஒருபிள்ளையுண்டானார்கள் அந்த இரண்டு சிசுவையும்வேட்டைக்குவந்தசந்தனமகாராஜனானவன் கண்டுகிருபையினால்எடுத்துக்கொண்டுபோய்ரட்சித்தான்,

## உஉ-வது-அத்தியாயம்

கலிவிருத்தம்,

மன்னிடும்திவோ தாசன்வம்சஞ்சொலிப்
பின்புறிக்ஷவம் சத்திற்பிறந்திடும்
துன்னுநற்சரா சந்தன்விர்த்தாந்தமும்
மன்துரிகியாதனன் கீர்த்தியோதுவாம்,

திவோதாசனுடைய வம்சத்தைச்சொல்லி பிற்பாடுறிக்ஷவம்சத்திலே ஜராசந்தன் விர்த்தாந்தத்தோடுகூட துரியோதனாதிகள் கீர்த்திக்கப்படுகின்றார்கள்.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்மஹாகுணசாலியாகிய பரிட்சித்து மகாராஜனே, முதகலபுத்திரனான திவோதாசனுக்குமித்திராயுவும்-அவனுக்குசிவனனும் அவனுக்கு சுதாசனனும் அவனுக்குசகதேவனும் அவனுக்குசோமகனுஞ்செனித்தார்கள், அந்தச்சோமகனுக்கு நூறுபிள்ளைகளுண்டானார்கள், அவர்களுக்குள்ளே சுகந்தகிறுது வென்கிறவன் ஜேஷ்டன் பிறஷதனென்கிறவன்கனிஷ்டன் அந்தப்பிறஷதனுக்குத்திருபதன் அவனுக்குத் துஷ்டத் தூய்மன் முதலானபுத்திராளும் துரோபதை யென்றொரு பெண்ணுமுண்டானார்கள் துஷ்டத்தூய்மனுக்குத் திருஷ்டகேதுவுண்டானான் இவர்களெல்லாம் அறம்மியாசுவ வசஸ்தரும் பாஞ்சாலவம்சஸ்தருமான ராஜாக்கள் அசாமிடபுத்திரனான றிக்ஷனென்கிறவனுக்கு சமவாணனென்றொருபிள்ளை அவனுக்குத்தபசியென்கிற சூரியகன்னிகையி

ணிடத்திலே குருக்ஷேத்திராதிபதியானகுருவுண்டான
ன் அந்தக்குருவுக்குப் பரிட்சித் தென்றும், சுதனுவென்
றும்-செனனுவென்றும்-நிஷதனென்றும் பிள்ளைகளுண்
டானார்கள்-அவர்களுக்குள்ளே சுதனசுவுக்கு சுகோத்தி
ரனும் அவனுக்குச்சிவனனும் அவனுக்குக்கிறுதியும்-அ
வனுக்குஉபரிசராசுவும் அவனுக்குபிறகதாதன்முதலா
னகுசாபன்-மச்சியன்-பிறத்தியக்கிறன்-செதிமாத்தியன்-
இவர்களுண்டானார்கள் அவர்களுக் குள்ளே பிறகதரத
னுக்கு-சாக்கிரனும்-அவனுக்குவிறஷபனும்-அவனுக்கு பு
ஷ்பவானும்-அவனுக்குசத்தியயிதனும்-அவனுக்கு- றுகு
வும்பிறந்தார்கள்-பிறகதரதனுக்கு வேறொருபாரியினிட
த்திலே இரண்டுபிளப்பாய் ஒரு-சிசுவுண்டாகிமாதாவி
னாலே பட்டணத்துக்கு வெளியிலெறியப்பட்ட அந்தச்
சிசுவைசெனாயென்கிற ராட்சசியானவள்ஏகமாகச்சேர்
த்து பிழைக்ககடவாயென்று சொல்லிலீலைபண்ணுகை
யில்அதுவேசிவனோடுகூடி ஜாராசந்தனானான் அந்தஜரா
சந்தனுக்கு சகதேவனுண்டானான்-அவனுக்குசோமாபி
யும்-அவனுக்கு சுருதசிரவசும் உண்டானார்கள் பரிட்சி
த்துக்குசந்தானமில்லை,செனனுவுக்கு-சுரதனும்-அவனு
க்குவிரோதனும்-அவனுக்குசார்வபூமனும்அவனுக்குசெய
செயனனும்-அவனுக்குருதியும்- அவனுக்கு அனுபாவுக
னும்-அவனுக்குரோதளனும்-அவனுக்கு தேவாதிதியும்
அவனுக்குரிட்சகனும்-அவனுக்கு-பீமசேனனும்- அவ
னுக்கு விரதிபனும்செனித்தார்கள்,

அந்தப்பிரதிபனுக்குதேவாபியென்றும்சக்தனுவெ
ன்றும்-பாகலிகனென்றும்-மூன்றுபிள்ளைகள்-அவர்களு
க்குள்ளே தேவாபியென்கிறவன் பிதுர் சம்மந்தமானரா
ச்சியத்தைவிட்டு வனத்தை யடைந்தான்-பிற்பாடு சந்த
னுவானவன்ராசாவானான் அந்தச்சந்தனுவேபூர்வஜென்
மத்திலே மகாபிஷக்கென்கிறபெயரையுடையவனாயிருந்
துவார்த்தீகத்தையுடைய புருஷாளைத் தன்கைகளினால்
தொட்டமாத்திரத்தில் அவர்களெல்லாம் எவ்வனத்தை
யடைவர்கள்-அதினால்சந்தனுவென்கிறபெயரையுடைய
வனானான்-அந்தச்சந்தனுவினுடைய இராச்சியததில்பன்
னிரண்டுவருஷம் மழையில்லாமற்போகவே பிராமணா
ள் அந்தச் சந்தனுவைப்பார்த்துச் சொல்லுகின்றார்கள்,
வாராய்சந்தனுவே நீமையனானதேவாபியினுடையராச்
சியத்தைஅனுபவிக்கின்றபடியினால் பரிவெத்தாக நிற்கி
றாய் ஆகையினால் இந்தராச்சியத்திலேவருஷமில்லாமற்
போச்சுது-இப்பவும் ராச்சியத்தின்விர்த்தியின்பொருட்
டுதமையனுக்கு ராச்சியத்தைக்கொடுத்துவிடென்று பி
ராமணாளால் சொல்லப்பட்டவனாய் வனத்திலேபோய்
ஜேஷ்டனானதேவாபியை ராச்சியத்தையடைந்துபரிபா
லனம்பண்ணச்சொல்லிப் பிரார்த்தித்தான் இதற்கு மு
ன்னேசந்தனுமந்திரியான அசுவனாமனால்அனுப்பிக்கப்

பட்டசிலபிராமணாளால் பாஷண்டமதத்தை ஆஸ்ரயித்
திரானின்றஅந்தத்தேவாபியும் தேவசந்தரவசனங்களா
னசிலவார்த்தைகளைச் சொன்னான் அதினால்அந்தத்தே
வாபிக்குராச்சிய யோக்கியதையில்லாமற்போச்சுது ஆ
கையால்சந்தனுவுக்கு சந்தோஷமில்லாமற்போனபடியி
னால்அப்போதுராச்சியத்தில் வருணனும்வருஷித்தான்
அந்தத்தேவாபி யோகமார்க்கத்தையடைந்து கலாபக்கி
ராமத்திலேவாசம்பண்ணிக்கொண்டிருக்கிறான்கலியுகா
ந்தத்திலே சந்திரவம்சம்நசித்துப்போகையில் மறுபடி
யும்கிருதயுகாதியிலே அதைஸ்தாபிக்கப்போகிறான்,

பாகலிகனுக்கு சோமதத்தனுண்டானான்- அவனுக்
குப்பூரியென்றும் பூரிசிரவசுவென்றும்சலவென்றும்மூ
ன்றுபிள்ளைக ளுண்டானார்கள்- சந்தனுக்கு கங்கையினி
டத்தில் ஆத்மக்கியானியான பீஷ்மருண்டானார் சமஸ்த
மான தர்மவித்துகளுக்குள்ளெ சிரேஷ்டராயும் மகாபா
கவதராயும் வித்துவானாயும் வீரபூதங்களுக் கெல்லாம்
சிரேஷ்டராயுமிருக்கிற அந்த வீஷ்மரானவர் ஒருக்கால்
யுத்தத்திலே பரசுராமனையும் சந்தோஷிப்பித்தார் உரி
சரவசுவினுடைய வீரியத்தினால் மச்சியகெற்பத்திற் பி
றந்து வலைக்காரரால் போஷிக்கப்படாநின்ற செம்படவ
ன்பெண்ணினிடத்திலே சந்தனுக்குசித்திராங்கதனென்
றும்-விசித்திரவீரியனென்றும், இரண்டுபிள்ளைகளுண்
டானார்கள், அந்தச் சித்திராங்கதனானவன் சித்திராங்கத
னென்கிற கந்தர்வனால் யுத்தத்தில் அடிபட்டுப்போய்வி
ட்டான்-அந்தக்கைவறத கன்னிகையி னிடத்தில் பராச
ருக்கு சாட்சாத் நாராயணஅம்சமான வேதவியாசர் அ
வதரித்தார்-அந்த வேதவியாசரிடத்தில் நின்றும் நான்
இந்தப்பாகவதத்தை அத்தியயனம்பண்ணினேன் அ
ந்தபகவானாயும்-பாதராயணரென்று பிரசித்தராயுமிரு
க்கிறவியாசர் தம்முடைய சிஷியாளான பயிலரிஷி முத
லானபேரையெல்லாம் விட்டுவிட்டு புத்திரனாயும், சாங்
தனாயுமிருக்கிற எனக்குப்பரமகுய்யமான இந்தப்பாகவ
தத்தைச்சொன்னார், விசித்திரவீரியனானவன் சுயம்வர
த்திலேஜெயித்து பீஷ்மால்கொண்டுவரப்பட்டஅம்பி
கை அம்பாலிகை யென்கிற காசிராஜனுடைய இரண்டு
பெண்களையும்-விவாகம்பண்ணிக்கொண்டு அவர்களிட
த்திலே ஆசக்தமான இருதயத்தையுடையவனாய் க்ஷய
வியாதியில் அகப்பட்டுமரித்தான் சந்தானமில்லாதவனா
யும்-பிதாவாயுமிருக்கிற விசித்திரவீரியனுடைய க்ஷேத்
திரத்திலே தாயாரால் வம்சத்தையுண்டாக்கவேணுமெ
ன்று சொல்லப்பட்டவராய் வியாசரானவர் திருதராட்
டிரனையும், பாண்டுவையும்-விதுரனையும்பெற்றார்- அந்
தத்திருதராட்டிரனுக்குக் காந்தாரியென்கிற ஸ்திரீயினி
டததிலே நூறுபிள்ளைகளுண்டானார்கள் அவர்களுக்கு
ள்ளே துரியோதனன்-ஜேஷ்டன்- துச்சலையென்கிற பெ
ண்கனிஷ்டை,

ஒருரிஷியினுடைய சாபத்தினுல் தகையப்பட்டஸ்திரீசம்போகத்தையுடையவனுன பாண்டுவினுடைய பாரியையான குந்தியினிடத்தில்-எமன்-வாய்வு- இந்திரன்-இவர்களுடைய பிரசாதத்தினுல் யுதிட்டிரன்-பீமன்-அர்ச்சுனன் இவர்கள்மூன்றுபேரு முண்டானுர்கள் அசுவனிதேவதைகளுடைய பிரசாதத்தினுல் நகுலசகாதேவாவிரண்டுபேரும் பாண்டுவினுடைய பாரியையான மாத்திரையினிடத்தில் ஜெனித்தார்,

வாரீர் அகண்ட பூமண்டலாதிபதியாகிய மகாராஜனேதுரோபதியினிடத்திலே யுதிஷ்டிரர்முதலான ஐந்துபேருக்கும் உன்னுடையபிதாக்கள் ஐந்துபேரும்ஜெனித்தார்கள்-அவர்களுக் குள்ளே யுதிஷ்டிரருக்குப் பிரதிவிந்தியனும்-பீமசேனனுக்குச் சுதசேனனும்- அர்ச்சுனனுக்குச் சுதகீர்த்தியும்-நகுலனுக்குச் சதானீகனும்-சகாதேவனுக்குச் சுதகர்மாவும்ஜெனித்தார்கள்-அந்தப்பிரகாரமே யுதிஷ்டிராதிகளுக்கு வேறேசிலபாரியைகளிடங்களிலேசிலபேர்ஜெனித்தார்கள் அவர்களுககுள்ளே யுதிஷ்டிரருக்கு கவுரவியென்கிற ஸ்திரீயினிடத்தில்தேவகனும்-பீமசேனனுக்கு இடும்பியி னிடத்தில் கடோற்கஜனும்-அந்தபீமனுக்கு காலியென்கிறஸ்திரீயினிடத்தில் சர்வகேதனும்- சகதேவனுக்குப் பர்வதபுத்திரியான விசையையினிடத்தில் சுகோத்திரனும்-நகுலனுக்குரேணுவதியென்கிற ஸ்திரீயினிடத்தில் நிரமித்திரனும்- அர்ச்சுனனுக்கு உலூபியென்கிற நாககன்னிகையி னிடத்தில்-அரவானும்- மணலூரபதியினிட பெண்ணினிடத்தில் புத்திரிகாதர்மத்தினுல் பப்பிரவாகனனும்- மறுபடியும்-சுபத்திரையெ கிற ஸ்திரீயினிடத்தில் அதிரதாளையெல்லாம் ஜெயிக்கத்தக்கவனுய் உனக்குத் தகப்பனுன அபிமன்னியு வானவன் பிறந்தான்.

அந்தஅபிமன்னியுவுக்கு உத்தரையென்கிற ஸ்திரீயினிடத்தில்நீபிறந்தாய், துரோணபுத்திரனுன அசுவத்தாமாவினுடைய பிரமாஸ்திரத்தினுல் குருவம்சமும்நாசத்தையடையுகையில் நீஒருவனும்ஸ்ரீகிருஷ்ணனுடையபிரபாவத்தினுல் ஜீவனேடுகூட அந்த விபத்தில் நின்றும் விடுவிக்கப்பட்டாய்-வாராய்குழந்தாய் உனக்குஜெனமேஜெயனும், சுதசேனனும்-பீமசேனனும்-வீரியவானுன உக்கிரசேனனும் ஜெனித்தார்கள் அவர்களுக்குள்ளே ஜெனமேஜெயன் உன்னைத் தட்சகனுலே மரணமடைந்தவனுயறிந்து குரோஷத்தோடுகூடினவனுய் சர்ப்பயாகத்தில்சர்ப்பங்களை யக்கினியிலேஓமம்பண்ணப்போகிறுன் அந்தசெனமேசயனுக்கு சதானீகனென்றொருவனுண்டாகி யாக்கியவலக்கிய ரிடத்தில் நின்றும் வேதத்தையும் கிருபாசாரியினிடத்தில் நின்றும் சர்வசாஸ்திரங்களையும் சவுனகரிடத்தில்நின்றும் மேலான ஆத்துமக்கியானத்தையு மடையப் போகிறுன்,

அந்தச்சதானீகனுக்கு சகஸ்ரானிகனும்- அவனுக்கு ஆசுவமேதனும்-அவனுக்கு அசீமகிருஷ்ணனும்-அவனுக்குநிச்சக்கிரனும்-செனிக்கப் போகிறுர்கள், அந்தநிச்சக்கிரன் அஸ்தினுபுரமானது கங்கையிலே முழுகிப்போகையில் கவுசாம்பிகையென்கிற பட்டணத்தில் வாசம்பண்ணப்போகிறுன்- அந்தநிச்சக்கிரனுக்கு வுகதனும்- அவனுக்கு-சித்திரரதனும்-அவனுக்கு-சிரதனும்- அவனுக்கு-விருஷ்டிமானும்-அவனுககு-சுஷேணனும்- அவனுக்கு-சுனிதனும்-அவனுக்கு-நிருஷசுவும்- அவனுக்கு- நளனும் அவனுக்குப்-பாரிப்பிலவனும்-அவனுக்கு-சுனயனும்-அவனுக்கு-மேதாவியும்-அவனுக்கு-நீறுபஞ்செயனும்- அவனுக்கு-அபூர்வனும்-அவனுக்கு-திமியும்-அவனுக்கு- பிறகிதறதனும்-அவனுக்கு-சுதாசனும்-அவனுக்கு, சதானிகனும்-அவனுக்கு-வுதையனனும்-அவனுக்கு - அகீநரகனும்-அவனுக்கு-தெண்டபாணியும்-அவனுக்கு- ஷேமகனும்-உண்டாகப்போகிறுர்கள்-தேவ ரிஷிகளினுல் பூசிக்கப்பட்ட பிறகத ஷத்திரனுடைய வம்சமானது கலியிலே ஷேமகனென்கிற இராஜாவையடைந்து அவனேடு நிற்கப்போகிறது இனிமேல் மஹாராஜாக்கள் சிலபேர் உண்டாகப் போகிறுர்கள், அவர்களைச் சொல்லுகின்றேன் பிரகதாதருக்கு-சராசனங்கரும் - அவருக்கு- சகதேவரும்-அவருக்கு-மாற்சாரியும்-அவருக்கு- சுதசிரவசும்-அவருக்கு-யுதாயுகாயுவும்- அவருக்கு நிரமித்திரும்-அவருக்கு-சுனட்சத்திரரும்-அவருக்கு பிறகத கற்மாவும்-அவருக்கு-செனதித்தும்-அவருக்கு-சுகஞ்செயரும் அவருக்கு-விற்பிறவரும்-அவருக்கு-சுசியும்- அவருக்கு-ஷேமனும் அவருக்கு சுவவிறுதரும்-அவருக்கு-தர்மநேத்திரரும்-அவருக்கு-சிரதரும்-அவருக்கு- திடசேனரும் அவருக்கு-சுமதியும்-அவருக்கு- பெலரும்-அவருக்கு சுனிதரும்-அவருக்கு-சத்தியசித்தும்-அவருக்கு-விசுவசித்தும்-அவருக்கு-றிபுஞ்செயரும் உண்டாகப்போகிறுர்கள். இவர்களெல்லாம் பிறகதரதவம்சரான ராசாக்கள் ஆயிரம்வருஷத்துக்குள்ளே யுண்டாகப்போகிறவர்கள்,

## ௨௩-வது-அத்தியாயம்,

மட்டுவிருத்தம்.

அல்லலில்லா அனுவின்றன்வம்சமும்
செல்லும்நல்ல துறுயுவுவம்சமும்
வல்லமாயெது வம்சந்துடங்கியே
தொல்லைசியமக னுற்பத்திசொல்லுவாம்,

அனுவினுடையவம்சமும் துறுயுவுனுடைய வம்சமும், துறுவசுவினுடையவம்சமும்-கிரமமாகச் சொல்லிபிறபாடு எதுவினுடைய வம்சமும்துடக்கியாமகனுடையஉற்பத்திவரைக்கும் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளீர்பூபதியான பரிட்சித்துமகாராஜனேஎயாதியினுடையபுத்திரனான அவனுக்கு சபாநரனென்றும், சட்சுவென்றும் பரோட்சனென்றும் மூன்றுபிள்ளைகள் அவர்களுக்குள்ளே சபாநரனுக்கு காலநரனும் அவனுக்குசிரஞ்செயனும் அவனுக்கு ஜெனமேஜெயனும் அவனுக்குமகாசாலனும் அவனுக்கு மகாமனசும் ஜெனித்தார்கள் மகாமனசுக்கு வுசிநரனென்றும் திதிட்சுவென்றும் இரண்டுபிள்ளைகள் வுசிநரனுக்கு சிபியென்றும் வனனென்றும் ஷமியென்றும் தெற்பனென்றும் நாலுபிள்ளைகள் அவர்களுக்குள்ளே சிபிக்கு விறஷாதற்பனென்றும் சுவீரனென்றும மத்திரனென்றும் கேகயனென்றும் நாலுபிள்ளைகள் திதிட்சுவுக் குருசத்திரதனும் அவனுக்குவோமனும் அவனுக்குச்சுதபசும்அவனுக்கு பெலியும் உண்டானார்கள் பெலமகாராஜனுடைய ட்சேத்திரத்தில் திறகதபசென்கிறரிஷிக்கு அங்கன்-வங்கன்-களிங்கன்-சுகன்-பண்டரன்-ஆந்தரன்என்று ஆறுபிள்ளைகள்செனித்து அவாளிந்தப்பூமியையடைந்து தங்கள் பேரால் அங்கதேசமுதலான ஆறுதேசங்களையுண்டாக்கினார்கள் அவர்களுக்குள்ளே அங்கனுக்கு நகபானனும் அவனுக்குதிவிரதனும் அவனுக்கு தறமாதரனும் அவனுக்குசித்திரதனும் செனித்தார்கள் அந்தச்சித்திரரதனுக்கு சந்தானமில்லை தறமரதனுக்கு ரோமபாதனென்று ஒருவருண்டானார் அவருக்குசகரவான தெசரதன் தன்னுடைய பெண்ணானசாந்தையை புத்திரசுவிகாரமாகக் கொடுத்தான் அந்தச்சாந்தையென்கிறபெண்ணை றிசியசிருங்கா விவாகம்பண்ணிக்கொண்டார் அந்தஅரணிபுத்திரனை றிசியசிருங்கரை போகஸ்திரீகளானவர்கள் நாட்டியம் சங்கீதம் பூசைஇதுமுதலான உபசாரங்களினால் வருஷத்தோடுகூடப் பட்டணத்துக்கு அழைத்துக்கொண்டுவந்தார்கள் அந்தறிசியசிருங்கரானவர் அபுத்திரரானதெசரதனுக்குப் புத்திரகாமேஷ்டியைப்பண்ணிவைத்து சந்தானத்தையுண்டாக்கினார் ரோமபாதருக்குசதுரங்கரும் அவருக்குப் பிறுதுலாக்ஷனும் அவருக்குப் பிரகதரதரும் அவருக்குப் பிறககர்மாவும் அவருக்குப்பிறகதபானுவும் அவருக்குப் பிறகனமனசும் அவருக்குச் செயதரதரும் செனித்தார்கள்,

ஜெபதரதருக்கு சம்பூதியென்கிற ஸ்திரீயினிடத்தில்விசையரும் அவருக்குக்கிறுதியும் அவருக்குக்கிறுதவிறுதரும் அவருக்குச்சத்திபகர்மாவும் அவருக்குஆதிரதரும் உண்டானார்கள் பிள்ளையில்லாமலிருக்கிற அந்த ஆதிரதனானவன் கங்காதீரத்தில் லீலைபண்ணிக்கொண்டிருக்கும்போது குந்திதேவிக்கு கன்னிகாதெசையில்பிறந்தவனும் அவளால் ஒருபெட்டியில்வைத்து கங்காப்பிரவாகத்தில் விடப்பட்டவனுமிருக்கிற அந்தப்பிள்ளையைத்தனக்குப் பிள்ளையாகவைத்துக்கொண்டான் அவனேகர்னனென்று பெபரையுடையவனான் செகத்பதியான அந்தக்கர்னனுக்கு விறஷசேனனென்று ஒருபிள்ளையுண்டானான் எயாதிபுத்திரனை திறியுவுக்குப்புறுவென்று ஒருபிள்ளையும் அவருக்கு சேதுவும் அவருக்கு ஆறக்கரும் அவருக்குக் காந்தரும் அவருக்கு கறமரும் அவருக்குக் கிறுதரும் அவருக்குக் தூர்மதரும் அவருக்குப்பிரதேசசும் உண்டானார்கள் அந்தப்பிரதேசசுக்குநூறுபிள்ளைகள் அந்தநூறுபிள்ளைகளும் வடக்குதிக்கில் மிலேச்சர்களுக்கு அதிபதியாயிருந்தார்கள.

எயாதிபுத்திரனை துறுவசுவுக்கு வன்னியும் அவனுக்குகெற்கனும், அவனுக்குபானுவரனும் அவனுக்கு திறுசானுவும் அவனுக்குவுதாரபுத்தியானகரந்தமனும் அவனுக்குமறுத்தனும் அவனுக்கு புத்திரனும் செனித்தார்கள் அந்தபுத்திரனவன் பவுரவம்சமானதுஷ்டியந்தனைசிலகாலம்புத்திரனாக அனுபவித்தான் பிற்பாடந்தத்துஷ்டியந்தனைவன் மறுபடியும்ராச்சியத்தைக்கோறினவனாய்தன்னுடையபவரவவம்சத்தில் அடைந்தான்வாராய்நரசிரேஷ்டனே இனிமேல்எயாதியினுடையசேஷ்டபுத்திரனை எதுவினுடையமகாபுண்ணியகரமாயும்மனுஷியாளுடையசமஸ்தபாபங்களையும் போக்கத்தக்கதாயுமிருக்கிற வம்சத்தைச் சொல்லுகிறேன்கேள்,

எதுவுக்குசகஸ்சிரசித்துவென்றும் குரோஷ்டுவென்றும் நளனென்றும் றிபுவென்றும் நாலுபிள்ளைகள்உண்டானார்கள் அவர்களுக்குள்ளே சகஸ்சிரசித்துக்கு சத்துருசித்துவென்று ஒருவன்பிறந்தான் அவனுக்குமகாஅயனென்றும் வேணுஹயனென்றும் ஹேஹய னென்றும் மூன்றுபிளளைகள்பிறந்தார்கள் அவர்களுக்குள்ளே ஹேஹயனுக்குதர்மரும் அவருக்குநேத்திரரும்அவருக்குகுந்தியும் அவருக்கு சொஹஞ்சியும் அவருக்கு மயிஷமானும் அவருக்குபத்திரசெனகரும் பிறந்தார்கள் அந்தப்பத்திரசெனகருக்கு துற்மத னென்றும் தனகனென்றும் இரண்டுபிள்ளைகளுண்டானார்கள் அவர்களுக்குள்ளே தனகருக்கு கிறுதவீரியனென்றும், கிறுதாக்கினியென்றும் கிறுதகர்மாவென்றும் கிறுதோசாவென்றும் நாலுபிள்ளைகள்பிறந்தார்கள் அவர்களுக்குள்ளே கிறுதவீரியருக்கு கார்த்தவீரியார்ச்சுனன்பிறந்தான்சப்ததீபாதிபதியான அந்தக் கார்த்தவீரியார்ச்சுனனானவன் ஸ்ரீஅரியினுடையஅம்சமான தெத்தாத்திரேயரிடத்தில்நின்றும் அணிமாதிஅஷ்டஅயிஸ்வரியங்களுடைய யோகாப்பியாசத்தைப்பெற்ற அந்தக்கார்த்தவீரியார்ச்சுனருடையகதியை எக்கியம்-தானம்-தபசு- யோகம்-சவுரியம்-வீரியம்-ஜெயம்-இதுமுதலான குணங்களாலே ஒருராஜாக்களும் அடையப்போகிறதில்லைஒருக்காலும்ஒருவராலுந்தடுக்கப்படாத பலத்தையுடையவனான கார்த்தவீரியார்ச்சுனனானவன் நாள்தோறும் ஸ்ரீஅரியையேஸ்மரித்துக்கொண்டு எண்பத்தையாயிரவருஷம் இராச்சியபாரம்பண்ணிக்கொண் டிருந்தான், அவனுடைய பதினாயிரம்பிள்ளைகளுக்குள்ளே செயத்துவசனென்றும்சூரசேனனென்றும் விறுஷணனென்றும் மதுவென்றும், ஊறசிதனென்றும் ஐந்துபேர் யுத்தத்திலேமரணத்தையடையாமல்மீந்தார்கள் அவர்களுக்குள்ளே செயத்துவசனுக்கு தாலசங்கன்பிறந்தான் அவனுக்குநூறுபிள்ளைகள்பிறந்து அந்தநூறுபேரும் சகரனாலே சங்கரிக்கப்பட்டார்கள் அவர்களுக்குள்ளேஜேஷ்டனானவன்விதிஹோத்திரன் அர்ச்சுனபுத்திரனை மதுவுக்கு விறுஷணியென்று ஒருவன்பிறந்தான் அவனுக்குவிறுஷணிமுதலாக நூறுபிளளைகளுண்டானார்கள் அவர்களேமாதவர்களென்றும் விறுஷணிகளென்றும் யாதவர்களென்றும்பேர் பெற்றார்கள்,

எதுபுத்திரனை குரோஷ்டுவுக்கு விறசினவானெ
ன்றுஒருவர்பிறந்தார் அவருக்கு அவிபூவென்றும் அவ
ருக்குத்திரிசங்குவும் அவருக்குச்சித்திரரதரும் அவருக்
குமகாயோகியாய் மகாபோகவானாய் சசிபிந்துவென்று
ஒருவர்பிறந்தார் அந்தச்சசிபிந்துவானவர் மகாசக்கிரவ
ர்த்தியாய்பராளாலே செயிக்கப்படாதவராயு மிருந்தார்
அவருக்குபதினாயிரம்பேர்ஸ்திரீகள் அந்தப்பதினாயிரம்
ஸ்திரீகளிடங்களிலேயும் ஒவ்வொருத்திக்கு லட்சம் பி
ள்ளைகள்விழுக்காடு பதினாயிரலட்சம்பிள்ளைகளைப்பெற
ருர் அவர்களுக்குள்ளே பிறுதுகிரவசு பிறுதுகிறதி பி
றுது எசசுமுதலாக ஆறுபேர் பிரதானர் அவர்களுக்
குள்ளே பிறுதுசிரவசுக்கு தர்மனென்றும் ஒருவர்பிற
ந்தார் அவருக்கு நூறுஅஸ்வமேதம்பண்ணுகின்ற உசந
சுவானவர்பிறந்தார் அவருக்கு ருசகன்பிறந்தார் அவரு
க்குபுருசிதுவென்றும் றுக்குமனென்றும் றுக்குமேகு
வென்றும் பிறுதுவென்றும் சாமகனென்றும் ஐந்து பி
ள்ளைகள்பிறந்தார்கள் அவர்களுக் குள்ளே சயிப்பியாப
தியானசாமகனானவர் அபுத்திரராயிருக்கும்போதும்பா
ரியையினுடைய் பயத்தினாலே வேறொரு பாரியை யப
ரிக்கிரியாமலேயிருந்தார் ஒருக்கால் அந்தச் சாமகனான
வர் சத்துகிரகத்தில்நின்றும் ஒருகன்னிகையைக்கிரகித்
துக்கொண்டுவந்தார் அப்போது ரதத்தின்மீதிருக்கிறஅ
ந்தப்பெண்ணைப்பார்த்து சயப்பியானவள் மிகவுங் கோ
பத்தையுடையவளாய் பர்த்தாவைப்பார்த்து ஒருவார்த்
தைசொல்லுகின்றாள்,

வாராய்கபடனே ரதத்தில் நானிருக்கிற விடத்தில்
யாரையேற்றிக்கொண்டு வந்தாயென்றுசொல்லாநின்ற
அந்தஸ்திரீயைப்பார்த்துசாமானானவன்உனதுமாட்டுப்
பெண்ணென்றுசொன்னான்அப்போதுசயிப்பியானவள்
புன்சிரிப்பையுடையவளாய் பர்த்தாவைப்பார்த்து சொ
ல்லுகின்றாள் நான்பிள்ளையைப்பெறாதவளாயிருக்கஎன
க்குமாட்டுப்பெண்ணென்கிறது எப்படி கூடுமென்றாள்
அதற்குஇராஜா சொல்லுகிறான் வாராய்மகிஷியே இனி
மேல் நீயெவனைப்பெறப்போகிறையோஅவனுக்குஇவ
ள்பாரியாளாகப் போகிறாளென்றுசொன்னான்அப்போ
துஅதைக்கேட்டு ராஜாவின்பிராணசங்கடத்தையும்பார்
த்து அவனால்முன்னாலே ஆராதிக்கப்பட்ட விசுவதேவ
ர்களும்பிதுர்களும் ததாஸ்துவென்றுஅநுக்கிரகித்தார்
கள்அந்தச்சயிப்பியும் தேவதாப் பிரசாதத்தி னாலேயும்
பெறப்போகிறாயென்கிற பிரதிவசனமகுர்த்தகுணத்தி
னாலேயும் பிள்ளைப்பெறுகைக்கு பிரதிபந்தகமானபாப
ந்தீர்ந்து கெர்ப்பத்தைத்தரித்து காலத்திலே பிள்ளையும்
பெற்றாள் அவனேவிதற்பனென்று சொல்லப்பட்டான்
அந்தவிதற்பனானவன் தகப்பனாலே சத்துரு கிரகத்தில்
நின்றும் கொண்டுவரப்படும் பதிவிரதையாக இராநின்
ற அந்தசுநுஷையென்கிறபெண்ணை விவாகஞ் செய்து
கொண்டான்,

## உச-வது-அத்தியாயம்

கலிவிருத்தம்.

விதற்பன்மூன்று பிள்ளைகளுற்பத்தியும்
அதுமுதல்நானாப் பிரகாரமாகிய
வதுவைசெய்திடும் வம்சங்களானதும்
மதுராகிஷ்ணருற் பவமும்வழுத்துவாம்

விதற்பனுடையமூன்றுபிள்ளைகளின் உற்பத்திமுதல்
நானாப்பிரகாரங்களான வம்சங்களானது ராமகிருஷ்ண
ருடைய உற்பத்திவரைக்கும் சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்து மகாராஜனே-அந்தவிதற்பனானவ
ன் சுநுஷையென்கிற ஸ்திரீயி னிடத்திலே கறுதகிறு
தாளென்கிற இரண்டுபிள்ளைகளையும் வைதற்பகுலத்து
க்குபிரீதிகாரான-மூன்றாவது ரோமபாதரையும் பெற்
றான் அந்தரோமபாதருக்கு புறுவென்று ஒருவரும்-அ
வருக்குகிறுதியும்-அவருக்குவுசீகனும்-அவருக்கு சேதி
யும்-அவரிடத்தில்நின்றும் சிசுபாலன் முதலான ராஜா
க்களுமுண்டானார்கள் விதற்பருக்கு ஜேஷ்ட புத்திரனா
ன கிறுதருக்குகுந்தியென்று ஒருபிள்ளையும் அவருக்கு
விறுஷணியும்- அவருக்கு நிறுவிறுதியும் அவருக்குத
சாஅருகரும்-அவருக்குவியோமசுதரும்-அவருக்குசீமு
தரும் அவருக்குவிகுறுதியும் அவருக்கு பீமரதரும் அ
வருக்கு நவரதரும் அவருக்குத் தசரதரும் அவருக்குச
குனியும்-அவருக்குகுந்தியும்-அவருக்குதேவாரதியும்அ
வருக்குதேவக்ஷத்திரரும்அவருக்குமதுவும்அவருக்குபு
ருவசனும் அவருக்குஅநுவும் அவருக்குபூருவோத்திர
ரும்அங்கிசுவும்அவருக்குசாத்துவதரும்பிறந்தார்கள்,அ
ந்தச்சாத்துவதனுக்குபசவானனென்றும்பிசியென்றும்
திவ்வியனென்றும் விருஷ்ணி யென்றும் தேவா விருத
னென்றும் அந்தகனென்றும்மகாபோஜனென்றும்எழு
பிள்ளைகள்பிறந்தார்கள் அவர்களு குள்ளேயரமாவனுக்
குநிமரோசியென்றும் கங்கணியென்றும் விறுஷணியெ
ன்றும் ஒரு ஸ்திரீயினிடத்தில் பிறந்தார்கள் மற்றொரு
ஸ்திரீயினிடத்திலே சதசித்தென்றும் சகஸ்திர சித்தெ
ன்றும் அயுதசித்தென்றும் மூன்றுபிள்ளைகள் பிறந்தார்
கள் தேவாவிறுதனுக்கு புறுவென்று ஒருவருண்டானா
ன் அந்தபிதாபுத்திரா ளிருவருக்கும் இந்தச்சுலோகத்
தைச்சொல்லுவர்கள் தூரத்தில் எந்தப்பிரகாரம்சேழ்க்
கப்படுமோ அந்தப்பிரகாரமே சமீபத்திலேயும் பார்க்கி
றோம் மனுஷியாளுக்குள்ளேசிரேஷ்டனானவன்பப்புரு
தகப்பனை தேவவிறுதனைன் தேவாளோடொத்தவ
ன் யாதொரு பப்புறுதேவாவிருதன் இவர்க ளிருவரா
லேயும் பதினாலாயிரத்து அறுபத்தைந்துபேர்உபதேச
பேகத்தால்மோட்சத்தையடைந்தார்கள்மகாபோசனெ
ன்கிறவன் அதிககர்மாத்மாபோசராசாக்களெல்லாம் அ
வருடையவம்சத்தில் பிறந்தவர்கள்,

வாராய்ராசனே-விருஷணிக்கு சுமத்திரரும் -அவ
ருக்குபுதாசித்தும் அவருக்குச்சினியும்-அவருக்கு அன
மித்திரரும் அவருக்கு நிமனரும்-உண்டானார்கள் அந்த
நிமனருக்குச் சத்திராசித னென்றும் பிரசேனனென்று
ம் இரண்டுபிள்ளைகளுண்டானார்கள் அனமித்திரருக்கு
சினியென்றுஒருபிள்ளை அவருக்குசத்தியகனென்றும்அ
வருக்குயுயுகானரும் அவருக்குசெயனும் அவருக்கு கு
ணியும்-அவருக்குயுவந்திரரும் செனித்தார்கள் அந்த அ
னமித்திருக்குபிரசனியென்றுஒருபிள்ளை அவருக்குசு
வபலக்கனென்றும் சித்திரகனென்றும்- இரண்டு பிள்ளைக
ள்சுவபலருக்கருக்கு காந்தினியென்கிற ஸ்திரீயினிடத்தி

ல்அக்குரூரர்முதலாக ஆசங்கனென்றும் சாரமேயனென்றும் மிறுதுரனென்றும் மிறுதுவியென்றும் சலியென்றும்-வறுமதிறுக்குயென்றும்-திருஷ்டவற்மனென்றும்-ஷத்திரபட்சனென்றும்-நிமர்த்தனனென்றும்- சத்துருக்கனனென்றும் கெந்தமாதனனென்றும்- பிரிதிபாகுவென்றும்-பன்னிரண்டுபிள்ளைகளும்-சுசாதையென்று ஒரு பெண்ணும்பிறந்தார்கள்-அக்குறூருக்கு தேவவாவென்றும்-உபதேவனென்றும்-இரண்டு பிள்ளைகள் சித்திரரதையென்கிற ஸ்திரீயினிடத்தில்பிறந்தார்கள்விறுஷணிக்கு பிறுதுவிரதன் முதலானவெகுபேர்பிறந்தார்கள் அந்தகனுக்கு-குகுரனென்றும்-பசமானனென்றும்- சுசியென்றும்-கம்பளபறயிஷனென்றும் நாலுபிள்ளைகள் பிறந்தார்கள் அவர்களுக்குள்ளே குகுரனுக்கு விறுஷணியும்-அவனுக்குவிலோமாவும் அவருக்கு-அனுவும் பிறந்தார்கள், அந்தஅனுவுக்கு துந்துபியும் அவருக்கு தரித்திரும் அவருக்குப்புனர்வசும் செனித்தார்கள்,

அந்தப்புனர்வசுவுக்குஆகுகனென்றொருபிள்ளையும் ஆகுகையென் றொருபெண்ணு முண்டானார்கள்-அந்த ஆகுகனுக்கு-தேவகனென்றும் உக்கிரசேனனென்றும் இரண்டுபிளளைகள் பிறந்தார்கள் தேவகனுக்குதேவ்வரனென்றும்-உபதேவனென்றும்- சுதேவனென்றும்-தேவவறதனென்றும்-நாலுபிள்ளைகளும் அவர்களோடுபிறந்தபெண்கள் திறுத தேவாவென்றும் சாந்திதேவாவென்றும்-உபதேவாவென்றும்-ஸ்ரீதேவாவென்றும் தேவரட்சிதாவென்றும் சகதேவாவென்றும் தேவகியென்றும்-ஏழுபெண்களும்பிறந்தார்கள்-அந்த ஏழுபெண்களையும்-வசுதேவரானவர் விவாகம்பண்ணிக்கொண்டார் உக்கிரசேனனுக்குக் கங்கனென்றும் சுனமாவென்றும்-நிக்குரோதனென்றும் கக்குவானென்றும்சங்குவென்றும்-சபுவென்றும்-ருஷ்டபால னென்றும்-விசிரஷ்டனென்றும்-துஷ்டிமானென்றும் பத்துப்பிள்ளைகளும் கமுசையென்றும் கங்கவதியென்றும் கஙகாவென்றும்சுராபூவென்றும்-ருஷ்டர்பாலிகாவென்றும்-ஐந்து பெண்களும்பிறந்தார்கள் இவர்கள்வசுதேவருடைய தம்பிமாரான தேவபாகன்முதலான பர்களுடைய ஸ்திரீகளானார்கள்.

பசமானருடையபிள்ளையானவிடுகாருக்குசூரனென்றொருவன்பிறந்தான் அவருக்கு சினியும்- அவருக்கு போசரும்-அவருக்கு-இருதிகனும்பிறந்தார்கள் இருதிகருக்குதேவமீடனென்றும்- சத்தனுவென்றும் கிருதவறமாவென்றும் மூன்றுபிள்ளைகள் பிறந்தார்கள் தேவமீடருக்கு சூரனென்று ஒருபிள்ளை அவன் மாரிஷையென்கிறஸ்திரீயினிடத்தில் வசுதேவனென்றும் தேவபாகனென்றும்-தேவபாசனென்றும் தேவசிரவசென்றும்ஆனகனென்றும்-சிரஞ்செயனென்றும்-சியாமகனென்றும் கங்கனென்றும் இஷதகனென்றும் - வசசகனென்றும்- பகனென்றும்-நிற்துஷ்டாளான பத்து பிள்ளைகளைப் பெற்றான். அந்தவசுதேவரானவர் பிறக்கும்போதுதேவதுந்துபிமுழங்கிற்று இந்தவசுதேவர்முதலானபேருக்கு பிருதையென்றும்-சிரதேவாவென்றும்-சிரத கீர்த்தியென்றும்-சிரதசவாவென்றும் ராஜாதிதேவியென்றும்ஐந்துஉடற்பிறப்புகள் இவர்களுக் குள்ளே பிரதையென்கிறவளைப் பிதாவான சூரனானவன் தனக்குச் சகாவாயும் அபுத்திரனுயுமிருக்கிற குந்திராசனுக்குக்கொடுத்தான் அந்தப்பிரதையானவள் தன்னுடையகிரகத்திலே வராநின்ற துருவாசனைப் பூசையினாலே சந்தோஷிப்பித்துஅவரிடத்தில்நின்றும்தேவதைகளைத்தான்வேண்டும்பொழுது அழைப்பித்துக்கொள்ளும்படியான ஒருவித்தையையடைந்தாள்,

அந்தவித்தையைச்சோதிக்கிறநிமித்தியமாகக் கன்னிகையாயிருக்கும்போதேசுசியாயிருந்துகொண்டேசூரியனை மந்திரப்பிரபாவத்தினால்அழைத்தாள் அந்தட்சணத்திலே பிரத்தியட்சமாகவந்தசூரியனைப்பார்த்து பிரதையானவள் ஆச்சரியத்தை யுடையவளாய் ஒருவார்த்தைசொல்லுகின்றாள், வாரீர்தேவனே மந்திரசோதனைக்காக உம்மைக்குறித்துமந்திரத்தைசெபித்தேன் என்னுடையஅபாரதத்தை பொறுத்துக்கொண்டுஉம்முடையஸ்தானத்திற்குப்போமென்றுசொல்லாநின்ற அந்தக்குந்தியைப்பார்த்து சூரியனானவர்சொல்லுகின்றார் வாராய்சோபனமான இடையையுடையவளே தேவதைகளுடையபிரத்தியட்சமானதுவியர்த்தமாய்ப்போகாதுஆனபடியினால் ஒருபிள்ளையை யுண்டாக்குகிறேன் நீகன்னிகையாயிருந்தாலும் உனக்கு யோனிதோஷமில்லாமலிருக்கும்படி அனுக்கிரகம்பண்ணுகிறேனென்றுசொல்லிசூரியனானவர் அந்தப் பிரதையான குந்தியி னிடத்தில் கெற்பாதானம்பண்ணி அந்தட்சணத்தில்ஆகாசத்தையடைந்தார். அப்போதேகுந்திக்கு இரண்டாம்சூரியனைப்போலே ஒருபிள்ளையுண்டானான் குந்தியானவள் லோகத்துக்குப்பயந்தவளாய் துக்கத்தினால் அந்தக் குழந்தையைக் கங்காப்பிரவாகத்திலேவிட்டுவிட்டாள்,

பிற்பர்டு உனக்குப் பாட்டனாயும்-மகா பராக்கிரமசாலியுமான பாண்டுராஜனானவன் அந்தக்குந்தியை விவாகம்பண்ணிக்கொண்டான். சிரதைதேவை யென்கிறவளை கருசதேசாதிபதியான விருத்தசற்மாவானவன் விவாகம்பண்ணிக்கொண்டான் அந்தச் சிரதைதேவியினிடத்திலே தயித்தியனானவன் ரிஷியினால்சபிக்கப்பட்டவனாய் தந்தவக்கிரனென்று பெயரை யுடையவனாய்ப் பிறந்தான் கேகயதேசாதிபதியான திருஷ்டகேதுவானவன் சுதகிறதியென்கிறவளை விவாகம்பண்ணிக்கொண்டுஅவளிடத்தில் சந்தறனன்முதலான ஐந்து பிள்ளைகளைப்பெற்றான் இராசாதிதேவியென்கிற ஸ்திரீயினிடத்தில் செயஸ்துசயனானவன் விந்தாலுவிந்தரளென்கிற இரண்டுபிள்ளைகளைப் பெற்றான் சேதிராசாவான தமகோஷனானவன் சிதசிரசுயென்கிறவளை பாணிக்கிரகணம்பண்ணிக்கொண்டு அவளிடத்தில் சிசுபாலனைப்பெற்றான் அந்தச்சிசுபாலனுடையஉற்பத்திமுன்னாலே சொல்லப்பட்டது தேவபாகனுக்குமுசையென்கிறஸ்திரீயினிடத்தில்சித்திரகேதுவும் பிறகதபலனும்பிறந்தார்கள்-சங்கவதி என்கிறஸ்திரீயினிடத்தில் தேவசிரவசுக்குசுவிரனும்-இட்சுமானும்பிறந்தார்கள்கங்கனிடத்தில்நின்றும்கங்கையென்கிறஸ்திரீயினிடத்திலே பகனும் சத்தியசித்தும் புருசித்தும்பிறந்தார்கள் ருஷ்டிர பாலியினிடத்தில் சிரஞ்செயனுக்குவிரஷன் தற்மருஷணன் முதலானபேரும் பிறந்தார்கள். சியாமகனானவன் சூரபூமியினிடத்தில் இரணி

யகேச இரணியாட்சாளென்கிற இரண்டு பிள்ளைகளைப் பெற்றான் மித்திரகேசியென்கிற அப்சரசினிடத்தில் வச்சனென்கிறவருக்கு விறுகன்முதலானபேரும் செனித்தார்கள் விறுகனனவன் தூருவாட்சியென்கிற ஸ்திரீயினிடத்தில் தட்சன்-புட்சன்-ரசாலுவன்முதலானபேரையுண்டாக்கினன் சமிகரிடத்தில் நின்றும் சுதானினியென்கிறஸ்திரீயானவள் சுமித்திரன்-அர்ச்சுனன் -பாணன்-முதலானபேரைப்பெற்றாள் கோமுகனென்கிறவன் கற்கினிகையென்கிற ஸ்திரீயினிடத்தில் திதுதாமன் செயனென்கிற இரண்டுபிள்ளைகளைப்பெற்றான் பவுரரியெனவும்-ரோகணியெனவும்-இளாவெனவும் தேவகிமுதலானபேர்கள் வசுதேவருடைய பாரியைகள்-பெலனெனவும்-கேதனெனவும்-சாரணனெனவும்-துற்மதனெனவும்-விபுலனெனவும்-துருவனென்கிறபிள்ளைகளையும் கிறுதன்முதலானபேரையும் வசுதேவரானவர் ரோகணியினிடத்திலேயுண்டாக்கினர்-சுபத்திரன்-பத்திரபாகு-துறமதன்-பத்திரன்-பூதன் முதலான பன்னிரண்டுபிள்ளைகள் வசுதேவருக்குப் பவுரவியென்கிறஸ்திரீயினிடத்திலேபிறந்தவாள்-நந்தன்-உபனந்தன்-கிறதகன்- தரன் முதலானபேர் பத்தினாயினுடையபிள்ளைகள்.

கோசலராசாவினுடையபெண்ணனபத்திராயானவள் குலதிலகனன கேசியென்று-ஒருபிள்ளையைப்பெற்றாள்-அஸ்தன்-எமாங்கதன் முதலானபேர்ரோசனையென்கிறவளுக்குப் பிறந்தார்கள் இளையென்கிறவளிடத்திலே எதுசிரேஷ்டாளான உருவலகன்முதலானபேரைப்பெற்றாள்-அந்தவசுதேவரானவர் திருதேவியென்கிற ஸ்திரீயினிடத்திலே திருவிஷ்டனெனவும்-ஒரு பிள்ளையைப்பெற்றார்-பிறசியமன்-பிறசிறதன்முதலானபேர்சாந்திதேவியினுடையபிள்ளைகள்-கல்பவருஷன் முதலான பத்துபேர் உபதேவியினுடையபிள்ளைகள்-வசு அம்சன் சுதனுவர்முதலான ஆருபேர் ஸ்ரீதேவியினுடைய பிள்ளைகள்-நவசாத்திரன்-கேதன்முதலானர் தேவரக்ஷிதியினுடையபிள்ளைகள்-பின்னும்-அந்தவசுதேவரானவர் சகதேவையென்கிற ஸ்திரீயினிடத்தில் புருவிசுரதன்முதலான எட்டுப்பிள்ளைகளைப்பெற்றார், அவர்களாரென்று ல்சாட்சாத்தர்மனும் வசுக்களுமேஅந்தப்பிள்ளைகளாய்ப்பிறந்தார்கள்; தேவகியென்கிறஸ்திரீயினிடத்தில்உதாரபுத்தியான வசுதேவரானவர்கிறதிவந்தனனையும்சுதேஷ்ணனையும் மத்திரசேனனையும்-ருசுவையும்-சமந்தனையும்-பத்திராக்ஷனையும்- சேஷாம்சமான சங்கருஷணனையும் சாட்சாத்ஸ்ரீஅரியாயும் எட்டாவது பிள்ளையாயு மிருக்கிற ஸ்ரீகிருஷ்ணனையும் உனக்குப்பாட்டியாயும்மகானுபாவையாயுமிருக்கிற சுபத்திரையைப்பெற்றாள்,

வாராய்ராஜனே சர்வக்கியராயும் சர்வாந்தரியாமியாயும் சர்வசரீரியாயும் சேதனுசேதன விலட்சணராயுமிருக்கிற இந்தப்பகவானுடைய சென்ம கர்மங்களுக்கு அவரதுமாயையான இச்சையின்றி வேறொருஎதுவுமில்லை அந்தப்பகவானுடைய மாயாலீலாசரித்திரமானது சீவாளுக்கு அநுக்கிரகத்தின்பொருட்டும் பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி-திதி -லயத்தின்பொருட்டும் சம்சாரநிவிர்த்தியிலே பகவத்பிராப்தியின்பொருட்டுமாயிருக்கின்றது அனேகஅக்ரோணிகளுக்குப்பதிகளாயும்,ராசாக்களென்று பேரிட்டுக்கொண்டிருக்கிறஅசுராளால் ஆக்கிரமிக்கப்பட்ட பூமியினுடையபாரத்தை நீக்குகிறதற்காகஅவதரியாநின்ற பகவானன ஸ்ரீகிருஷ்ணரானவர் பலராமருடனே கூடிக்கொண்டுஅபரிமிதங்களாலேயும்தேவசிரேஷ்டாளாலே மனதினலேயும் சிந்திக்கக்கூடாததுகளாயுமிருக்கிற லீலைகளைச்செய்தார்.

கலியிலேசெனிக்கப்போகிற பக்தாளுடையஅநுக்கிரகத்தின்பொருட்டு துக்கம்-சோகம்- அக்கியானம் இதுகளைப்போக்கடித்ததும் பாவனமாயு மிருக்கிற கீர்த்தியை ஸ்தரிப்பித்தார்-போசாள்-விருஷணிகள்-அந்தகாள் மாதவாள்-சூரசேனுள்-தாசாருகாள்- கவுரவாள் - சிரஞ்செயாள்-பாண்டவாள் முதலான சமஸ்த ராஜாக்களினலேயுங்கொண்டாடப்பட்டவராயும் இனியராயுமிருக்கிற அந்தஸ்ரீகிருஷ்ணனன பகவானனவர் ஸ்நேகசூசனன புன்சிரிப்பினலும் கடைக்கண்பார்வைகளினலும்சதுரியவார்த்தைகளினலும் பராக்கிரமலீலையினலும்சர்வாங்கசுந்தரமான திருமேனியினலும் பூலோகத்திலே ஜெனங்களைரமிப்பித்தாரல்லவா அந்த கிருஷ்ணபகவானனவர் பிறந்தமாத்திரத்தில் பிதுர்கிரகத்தைவிட்டு இடைச்சேரியில் சென்று வளர்ந்து சத்துருக்களையெல்லாம்சங்காரம்பண்ணி சிலஸ்திரீகளைவிவாகஞ்செய்துகொண்டு அவர்களிடங்களில்புத்திராளைப்பெற்றுதம்முடையஆக்கியையான வேதமார்க்கங்களை ஜெனங்களுக்கு சிட்சிப்பித்துக்கொண்டு கவுரவாளுக்கு ஒருத்தருக்கொருத்தர் உண்டானகலகத்தினல் அர்ச்சுனனிடத்தில் செயத்தையுண்டாக்கி உத்தவருக்குபரமாங்கிசயோகத்தை உபதேசித்து தம்முடைய திவ்யஸ்தானத்திற்கு எழுந்தருளினர்,

## ஒ ன் ப தா வ து ஸ் க ந் த ம்.

## மு ற் றி ற் று.



பூதேவிபசுரூபமாய்பிரம்மாவைசரணமடைந்தது- ௧-அ-



பிரம்மாதிருப்பாற்கடலில்சுவாமியைதுதிக்கிறது-௨-அ



வசுதேவர்மணக்கோலம்-௧- அ-



நாரதர்சிசுக்களைகொல்லுவிக்கிறது- ௩- அ-



கண்ணன் அவதாரம்-௪-அ-



கம்சன்மாய்கையைவெட்டினது-௫-அ-



பூதகிவதை-௬-அ-



சகடாசூரன்வதை-௭-அ-




நன்றாக. குருவாழ்க. குருவேதுணை.

# ஸ்ரீமகாபாகவதம்.

## தசமஸ்கந்தம்

ஸ்ரீவேதவியாசாயநமஃ.

வியாசம்வசிஷ்ட நப்தாரம்
சக்தேபௌத்ர மகல்மஷம்
பராசராத் மஜம்வந்தே
சுகதாதம் தபோநிதிம்

வியாசம்-வியாசபகவானை, வசிஷ்டநப்தாரம்-வசிஷ்டருக்கு இரண்டாம்பேரனை, சக்தேபௌத்ரம்- சத்திக்கு முதற்பேரனை, அகல்மஷம்-களங்கமற்றவனை, பராசராத்மஜம்-- பராசரருக்குப்புத்திரனை சுகதாதம்-சுகருக்குத்தகப்பனானவனை, தபோநிதிம்-தவத்திற்கு உற்பத்திதானமானவனை, வந்தே-நமஸ்கரிக்கின்றேன்.

ஸ்ரீவேதவியாசருடைய குமாரராயும், சாந்தசமதமாதிகுண பரிபூரணராயும், தபோநிதியாயுமிருக்கின்ற சுகமுனிவரை நெடியகடல்சூழ்ந்த பூமியைக்குற்றமற அரசாளத்தக்கவராயும், சந்திரவம்சோத்துங்கராயுமிருக்கிற பரிக்ஷித்துமகாராசாவானவர் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு அஞ்சலியஸ்தராய் அம்முனிவரைநோக்கி தேவரீரால் சூரியசந்திரர்களுடைய இரண்டு வம்சங்களிலுமுள்ள அரசர்களுடைய அற்புதசரித்திரமும், உத்தமதருமசீலகுணங்களையுடைய யதுமகாராசன்வம்சவிருத்தியும், சவிஸ்தாரமாகச்சொல்லப்பட்டது. அந்தயதுவம்சத்தில் திவ்யாம்சமாகவும் விசுவரூபியாகவும் ஜகத்கர்த்தாவாகவுமான ஸ்ரீபகவான் ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரித்துச்செய்த அற்புதங்களையும்ஸ்ரீபலராமர்ரோஹிணி தேவியினுடையகர்ப்பத்தில்அவதாரஞ்செய்தாரென்றும் இப்போது தேவகி தேவியினுடைய புத்திரரென்றும் இதுமுதலியதுகளை உமது முகாரவிந்தத்தினின்றும் பெருகாநின்ற ஸ்ரீஹரியின் திவ்யகுண கதாமிர்தத்தைப்பானஞ்செய்து கொண்டிருக்கின்றனன்னை மிகவுஞ்சகிக்ககூடாத பசிதாக முதலானது வருந்தச் செய்யவில்லை இன்னமும் அதுகள்பிடிக்காதிருக்கும்படி அவருடைய கிருபாகுணங்களை அடியேனுக்குசவிஸ்தாரமாக அருள்புரிய வேண்டுமென்று விரும்பிய பரிக்ஷித்து மகாராசாவை நோக்கி சுகர்-சொல்லுகின்றார்.

### முதலாவது - அத்தியாயம்.

எழுசீரடி யாசிரியவிருத்தம்.

பரிதிபோலொளிரும் பார்மகளானோர்
பசுவுருவாகியேசென்று
பங்கயத்தவிசி லுறைந்திடும்பிரமன்
பதமலர்தனிற்றுதித்ததுவும்
விரிகடற்சென்று விரிஞனும்விஷ்ணு
விரைமலர்தனைத்துதித்ததுவும்
விண்ணுலகதனி லிருந்தசரீரி
வேதவாக்கியம்பிறந்ததுவும்
தெரிவைதேவகியை வசுதேவர்வதுவை
தெரிந்ததும்கம்சனல் தனக்குத்
தீங்குகள்வருவ தெனத்தெரிந்தசரீ
ரிகள்திருவாய்மலர்ந்ததுவும்
அரிபகாரதராற் கம்சன்றன்சொரூப
மறிந்ததும்வசுதேவருடைய
அறுவர்பிள்ளைகளைக் கொன்றதுமிதனு
லறிந்திடுமென்றனர்மாதோ

பூமிதேவி பசுரூபியாய்ப் பிரமனைச் சரணமடைந்ததும், அவர் திருப்பாற்கடல்சென்று சுவாமியைத் துதி செய்ததும், அப்போது அசரீரிவாக்குண்டானதும், வசுதேவர் தேவகியைவிவாகஞ்செய்ததும், கம்சனுக்குப் பிரதிகூலமாக அசரீரிவாக்குண்டானதும் நாரதரால்கம்சன் தன்சொரூபமறிந்துக்கொண்டு வசுதேவருடைய பிள்ளைகள் அறுவரையுங் கொன்றதும் சொல்லப்படுகின்றது,

கேளும்பரீக்ஷித்துமஹாராசனே, பொறுமையிற்சிறந்த பூமிதேவியானவள் மஹா கர்வத்தையடைந்து அரசரென்று பெயர்பெற்ற கொடிய அசுரர்களினது அனேககோடி சேனாசமுத்திரங்களின் செய்கைகளினுண்டாகின்ற பாபமாகிற பாரத்தினால் வருந்தப்பட்டவளாய்,கோரூபத்தைத்தரித்து மிகுந்ததுக்கத்தையடைந்து சிருஷ்டிகர்த்தாவாகிய பிர்ம்மாவைச்சரணமடைந்து கண்களில் ஜலத்தைப்பெருக்கி தனது வியாகூலத்தை முறையிட்டனள் பிர்ம்மதேவரானவர் பூமிதேவியினது வியசனத்தையறிந்து உருத்திர பகவான்முதல் சமஸ்த தேவர்களுடன் அந்தப் பூமிதேவியை யழைத்துக்கொண்டுக்ஷீராப்திதீர்த்தத்தைச்சேர்ந்துஅவ்விடத்திற்சர்வ நியந்தாவாயும், பரிபூர்ணராயும், ஜெகந்நாதராயுமிருக்கின்ற ஸ்ரீவாசுதேவனை புருஷசூக்த மந்திரங்களால் ஏகாக்கிரசித்தர்களாய் துதிசெய்தார்கள். அப்பொழுதவ்விடத்திலுண்டான அசரீரிவாசகத்தைப்பிர்ம்மாகேட்டுதேவர்களைப்பார்த்து நீங்கள்யாவரும் ஸ்ரீ பகவதாக்ஞையின்படி விரைந்துசெய்க்கடவீர்கள், என்னவெனில்முன்னமே ஸ்ரீபகவான் பூமிதேவியினது வியசனங்களையறிந்து தமது விபாபகத்வமாகிற காலரூப திவ்விய சக்தியைக்கொண்டு பூமிபார நிவர்த்தியின் பொருட்டு இப்பிரபஞ்சத்தில் வசுதேவர்கிரகத்தில் அவதாரஞ்செய்ய சங்கற்பித்திருக்கின்றார் ஆகையால்நீங்கள் யதுவம்சத்தில் ஜனிக்கக்கடவீர்கள். ஸ்ரீவாசுதேவரம்சத்தி லுண்டான அநந்தர் அந்த ஸ்ரீமந்நாராயணனுக்குமுன்னே அவதரிக்கப்போகின்றார் சர்வஜகத்தைமோகிக்கச்செய்கிறபகவான் மாயையானது ஸ்ரீஹரியின் திவ்யாக்ஞையால்காரியார்த்தமாக ஸ்ரீயசோதாபிராட்டியினிடத்தில் அவதரிக்கப்போகின்றது என்று இந்தப்பிரகாரங்கட்டளையிட்டுபின்பு அந்தபூமிதேவியை மதுரமானவசனங்களால் அவள்துக்கத்தைத்தேற்றி தமதுலகத்தையடைந்தார்,

பூர்வத்தில் மதுராபுரியை அரசு செய்துகொண்டிருந்தயதுசிரேஷ்டராகிய சூரசேன மகாராசாவின்புத்திரராகிய வசுதேவர், போஜகுலத்தலைவனுக்ரதேவகனுடைய புத்திரியாகிய தேவகிதேவியை விவாகஞ்செய்துகொண்டு தமது கிரகத்திற்குச்செல்ல கல்யாண கோலத்துடன் இரதத்தின்மீது ஆரோகணஞ் செய்தார்கள் அச்சமயத்தில், உக்கிரசேனமகாராஜனுடைய புத்திரனை கம்சன், சுவர்ணமயமான அநேகஇரதங்கள் முழுத்தனதுஉசிதமான தங்கையினிடத்தில் அன்பு செலுத்தவேண்டுமென்று நல்லிச்சையினால் அந்தவசுதேவருடைய இரதத்திற்கட்டிய குதிரைகளின் கடிவாளக்கயிற்றைப் பற்றிச்சாரத்தியஞ் செய்துகொண்டுவந்தான் உக்கிரசேனமகாராசா அந்தக்காலத்திற்கு உசிதமாகதனதுபுத்திரிகா ரத்நத்தினிடத்தில் மிகவும் அன்பை யுடையவராய்சுவர்ணமாலைகளினா லலங்கரித்தநானூறுயானைகளையும் பதினையாயிரம் அசுவங்களையும், அறுநூறு இரதங்களையும் நல்ல சுந்தரவதிகளான இருநூறு பெண்களையும், பின்னும்வேண்டிய பரிசுகளையும், அருந்தவப்பெண்ணாகிய தேவகிதேவியாருக்கு சீதனமாகக்கொடுத்து சங்கம்-பேரி-மிருதங்கம்-துந்துபிமுதலான மங்கலவாத்தியங்களை சப்திப்பித்தார் இந்தப்பிரகாரம்பிரயாணமாகிவருகின்றபோது ஆகாசமார்க்கத்தில் அசரீரிகம்சனைக்குறித்து கேளாய் புத்தியீனனே நீசாரத்தியஞ்செய்கிறதேரில்வரும் உனதுதங்கையின் கருப்பத்தில் உதிக்கப்போகின்ற அஷ்டமபுத்திரன் ஊழ்வினையின்படிஉன்னை சம்மாரஞ்செய்வானென்று அவன் திக்கிட்டவிளம்பியமாத்திரத்தில் துஷ்டனும் மகா பாபியுமாகிய அந்தகம்சன் தன் அரையிற்கட்டிய உடைவாளையுருவித் தனதுதங்கையாகியதேவகிதேவியின் பின்புறத்தைப்பற்றிக்கொண்டு வெட்டயத்தனிக்கையில்மகானுபாவராகிய வசுதேவர் கம்சனைப்பார்த்து சொல்லுகின்றார்.

மகாசூரர்களாற் புகழத்தக்க குணங்களையுடையவனும், போஜகுலத்திற்குக் கீர்த்தியைச் சம்பாதிக்கிறவனுமாகிய நீ, விவாகசந்தோஷத்தை யடைந்திருக்கின்றவுனதன்புள்ள தங்கையாகிய இப்பாலஸ்திரீயைக் கொலைசெய்யநினைப்பது தருமமோ, ஜநநமரணமுதலிய இருவினைக்கீடான பிராணிகளுக்கு மிருத்துதேவதை அவனவன் சரீரத்துடன் கூட விருந்து பால்ய கௌமார யௌவன வார்த்திபமான பருவங்களினது சமயத்திலாவது மரணத்தையுண்டாக்குகைநிச்சயமாயிருக்கின்றது இன்னுமில்லாமல், சரீர நாசமாகுஞ்சமயத்தில் தனதுகர்மவசத்தினால் அன்னிய தேகத்தைப்பெற்றேபூர்வசரீரத்தை விட்டுவிடுகின்றது, அதெதுபோலவெனில் புருஷன் நடக்கும்போது ஒருபாதத்தைப் பூமியிலூன்றி மற்றொரு பாதத்தைப் பெயர்த்து வைப்பதுபோலும்,புறப்புழுவேறே ஒருதிரணத்தைப்பற்றிக்கொண்டு முன்பு தான் பற்றியிருந்த திரணத்தை விடுவது போலும் இவ்வாத்மா தனதுகரும கதியின்படி வெகுஜன்மங் களைப் பற்றவும் விடவுங் கூடும் ஆ

கையால இப்படி நிச்சியமில்லாத சரீரங்களையுடைய புருஷன். தானபெறவேண்டிய நிச்சியமான மோக்ஷத்தைக்குறித்துஎப்பொழுது மெவர்க்குந் துரோகாநியாய கர்மங்களைச்செய்யாம லிருக்கக்கடவன். இதைமறந்துசெய்யில் தான் பிர்ம்மாவானாலும் பிறருக்குச்செய்த தீவினையின் பயனுண்டாகாமற்போகாது, ஆகையினாலேஇந்த வறுமையுடையவர்களை அன்பாய் இரட்சிக்கத் தக்கின நீ, மணக்கோல சம்பிரமத்துடன் செல்லு மிப்பாவையைவதைசெய்வதுனக்கு நன்மையல்லவென்று வசுதேவர் நானாவித தருமங்களைப் பிரார்த்தனா ரூபமாகச் சொல்லி வேண்டிக்கொண்டும், அந்தக்கம்சன் மூர்க்கனாய்க்கொலைசெயகிற சிந்தையை யுடையவனாகவே யிருந்தான், அப்பொழுது மஹானுபாவரான வசுதேவர் அதையுணர்ந்து அதற்குப்பிரதிசெய்ய மனமில்லாதவராகி தமக்குபிறக்கப்போகின்ற பிள்ளைகளையவனுக்குக் கொடுக்கிறேனென்றுசொல்லி இவளை இப்போது மீட்டுக்கொள்வதே உததமம் என்றுலோசித்து துக்கிதமான சித்தத்துடன் அப்போதலர்ந்த தாமரைப் புஷ்பம் போன்ற முகத்தையுடையவராய் அந்தக்கம்சனைப்பார்த்து மிகுந்தவிசுவாசத்துடன் புன்னகைகொண்டு மிருதுவாயொருவார்த்தை சொல்லுகின்றார். இத்தேவகியினிடத்தில் உனக்குப்பயமில்லையே, அசரீரிவாக்கைக்குறித்து இவளிடத்திலுண்டாகும் புத்திரர்களாலன்றோ உனக்குப்பிராணபய முண்டாயிருக்கின்றது. அந்தப்புத்திரர்கள் ஜனித்த தட்சணம் உன்கையிற் கொடுத்துவிடுகிறேனென்று சொன்னமாத்திரத்தில் கம்சன் அந்த உறுதி வசனத்தைக்கேட்டுத் தனதுதங்கையான தேவகி தேவியை வதைசெய்யாமலொழிந்தான். ஸ்ரீவசுதேவர்மிகவுஞ் சந்துஷ்டராய் கிரகப்பிரவேசஞ்செய்தார்.

பின்பு சர்வதேவ தாஸ்வ ரூபமாகிய அத்தேவகிதேவி வருஷந்தோறுங் கருப்பந்தரித்து எட்டுப் பிள்ளைகளையும் ஒருபெண்ணையுங் கிரமமாகப் பெற்றாள். சத்தியசீலர்களாகிய மகாத்மர்கட்கு சகிக்கக்கூடாததும் பரமாத்ம நிஜதத்வத்தைநன்றாயாராய்ந்துணர்ந்த பரமோத்மஞானிகட்கு இவ்வுலகத்தில் அபேட்சிக்கும் பொருளொன்றுமிராது, ஆகையால்அப்படிப்பட்ட வசுதேவர் சத்தியத்தினின்றும வழுவாதுகீர்த்திமானென்கிற பிரதமபுத்திரனை, அற்பர்கட்கிதுசெய்யலா மிதுசெய்யலாகாதென்கிற ஏற்றத்தாழ்வான செய்கைகளெவ்வுலகத்துமிராதாதலால் அப்படிப்பட்டகுணமுடைய கம்சன் கையிற் கொடுத்துவிட்டார். அவன்வசுதேவருடைய ஆத்மசமபுத்தியையுஞ் சத்தியத்திற் சலியாமலிருப்பதையும் பார்த்து மகாசந்தோஷ இருதயனாய்ப் புன்னகையுடன் இச்சிறுகுழந்தையாலெனக்கு மரணபய மில்லை உமதுஎட்டாவது புத்திரனால் மாத்திரமேமரணபயமாகையால் இக்குழந்தையைக்கொண்டுபோமென, வசுதேவர் அச்சிசுவையெடுத்துக்கொண்டு தமதுகிரகத்திற்குச்சென்றும் துஷ்டனாகிய அந்தக்கம்சன் வார்த்தைகளை யதார்த்தமாக நினையாமலு மிருந்தார.

ஸ்ரீமந்நாரதபகவான் கம்சனுடைய சபாமண்டபத்திற்குவந்து அவனைப்பார்த்துகேளாய்கம்சனே இக்காலத்தில் கோகுலத்திற பிறந்து விருத்தி யடையும் நந்தகோபர்முதலியகோபாலர்களும்- யசோதைப் பிராட்டி முதலிய கோபிகாஸ்திரீகளும், விருஷ்டி-போச-அந்தக- தாசாரஹ சாத்வதாளென்கிற இவ்வைந்துகுலமாகிய யாதவவம்சத்தில் விருத்தியடைகிற வசுதேவர் முதலியவர்களும் தேவகிதேவி முதலியஸ்திரீகளுமாய்-தேவர்கள்-தேவதாஸ்திரீகள்-அப்ஸரஸ்திரீகள்-திவ்யரிஷிகள்முதல்யாவருந்தங்களதேவ அம்சத்துடன்வந்துபிறந்திருக்கின்றனா. லோககண்டர்களாகிய அசுரர்கள்தங்களம்சத்துடன் உனககுத்துணைவர்களாகவும்சேனைசமூகங்களாகவும் இல்வுலகத்திற் பிறந்திருக்கின்றனர். நீயும் பூர்வசன்மத்தில் அசுரனே - இந்தச்சன்மத்தில் அரசனாகிப் பிறந்திருக்கின்றாய், ஆகையால் ஸ்ரீஅரிபூமிபாரத்தைத் தீர்க்கவும் தேவர்களுக்கும் அன்பர்களுக்கும் கருணைசெய்யவும்வேண்டி தேவகிதேவியினது உத்தமகர்ப்பத்தில் அவதாரஞ்செய்து துஷ்டசம்ஹாரமும், சிஷ்ட பரிபாலனமும், செய்யப்போகின்றானென்றுசொல்லி மறைந்தருளினார்.

அதுமுதல் கம்சன்யாதவர்களைத் தேவசமூகங்களென்று நினைத்துத்தன்னை வதைசெய்வதற்கு விஷ்ணுவே தேவகிதேவியின் கர்ப்பத்தில் அவதரிக்கின்றானென்று அசரீரிவாக்கியப்படியும் பூர்வசன்மத்தில் காலநேமி என்னு மகாஅசுரனை தன்னை விஷ்ணுவே சங்கரித்தாரென்று நாரதராலுணர்ந்தும் உடனே வசுதேவரையுந் தேவகிதேவியையும் தந்திரமாய் அழைப்பித்து விலங்கிற்பூட்டித் தனது கிரகத்திற் காவல்வைத்து அவர்களுக்குக்கிரமத்தின்படி பிறக்கயிருக்கின்றபிள்ளைகளாறுவரையும் அரியென்று நினைத்துச்சங்கரித்துயாதவபோஜர்முதலியதங்கள் வம்சஸ்தர்களையும் தனக்குப்பிதாவாயும் பிரபுவாயுமிருக்கிற உக்கிரசேனமகாராசாவையும் நிக்கிரகித்துத் தான் தனது இஷ்ட சனங்களுடன் சூரசேன தேசங்களை அதிக்கிரமித்தநுபவித்துக் கொண்டிருந்தான்.

*

## இரண்டாவது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

தேவதேவகிதிவ்யவயிற்றிடை
ஆவலோடும்வதரித்துஹரி

வேவுகம்சனை வென்றதுர்தேவர்கள்
தேவியுந்துதித்தேற்றல்தெரிவிப்பாம்.

கம்சனைச்சம்ஹாரம்பண்ணுகிறதற்காகத் தேவகிதேவியின் கர்ப்பத்தையடைந்த ஸ்ரீமந்நாராயணன் பிரம்மாதிதேவர்களால் தோத்திரஞ்செய்யப்பட்டாரென்பதுமன்றித் தேவகிதேவியும் ஸ்துதிக்கப்பட்டாளென்பதுஞ் சொல்லப்படுகின்றது.

கேளும்பூபதியே, அந்தக்கம்சன் - பிரலம்பன்- பகாசுரன்-சாணூரன்-திருணாவர்த்தன்-அகாசுரன்-முஷ்டிகன்-அரிஷ்டன்-துவிதன்-பூதனை-கேசி - தேனுகாசுரன்-பாணாசுரன்-நரகாசுரன் ஜராசந்தன்-இவர்கள்முதலியமற்றுஞ் சிலஅசுரர்களோடு சேர்ந்து யாதவர்களமுதலான உத்தமஅரசர்களை மிகவும்உபத்திரவஞ்செய்துகொண்டிருந்தான். அதைஅவர்கள்சகிக்கமாட்டாமல்- குரு-பாஞ்சால-கேகய-சால்வ-விதர்ப்ப-நிஷத-விதேஹகோசல-தேசங்களிற்சென்று சீவித்தனர் சிலர் அவனையே யனுசரித்து சீவித்துக்கொண் டிருந்தனர். அப்பொழுது இந்தக்கம்சன் தேவகிதேவியின் ஆறுசிறுகுழந்தைகளை வதைத்துவிட்டபின்பு, ஸ்ரீ அனந்தபகவான் அம்சமானது தேவகிதேவிகர்ப்பத்திலே வந்து தங்க அதினாற் சந்தோஷமுண்டாகி உடனேமுன்பிறந்த ஆறுபிள்ளைகளை கம்சனிடத்திற் கொடுத்துவிட்டதுபோல்இதையுங்கொடுத்துவிடவேண்டுமேஎன்ற விசனமுண்டாகியிருக்கிற சமயத்தில் ஸ்ரீவிஸ்வரூபியானபகவான் தமமையே பிரபுவாக எம்பினயாதவர்களுக்குக் கம்சனாலுண்டானகுரூரபயத்தை நிவர்த்திசெய்யும்படி திரு வுள்ளங்கொண்டு தமதுயோகமாயைக்கு ஆக்ஞாபிக்கின்றார் வாராய மங்களஸ்வரூபியேகம்சனுடையபயத்தால்வசுதேவராணவர் மறைந்துவைத்திருக்கிற மனைவியர்களில் ரோகிணியென்பவளை பசுக்கள்மிகுதியாய்ப் பரவியிருக்கின்றகோகுலத்திற் கரசராயும் தமக்குஇஷ்டராயுமிருக்கின்ற நந்தகோபருடைய மனையிலமறைத்துவைத்திருக்கிறார், அவள்வயிற்றில் மதுராபுரியில் தேவகிதேவிவயிற்றில் என்துதேஜோமயமான ஆதிசேஷன் ஏழாவதுகெர்ப்பமாயிருப்பதைக்கிரகித்துஅந்தரோகிணிதேவிவயிற்றில் அதைஅமைத்துநீநந்த கோபருடைய பத்தினி யசோதைப்பிராட்டியினிடத்தி லுற்பவிக்கக்கடவாய் நான் எனது அம்சமாய்தேவகிதேவிக்குப் புத்திரனாகஅவதரிக்கப்போகின்றேனென்றுணர்த்தி நீ சர்வ காமியங்களையுந் தருதற்குரிய ஈஸ்வரியாகி-பிரபஞ்சத்தில்பலரும்உன்னை தூபதீப நைவேத்திய முதலான உபசாரங்களைக் கொண்டு பூசித்தும் உனக்கு - துர்க்கா - பத்திரகாளி-விஜயா - வைஷ்ணவி - குமுதா-சண்டிகா - கிருஷ்ணா-மாதவி-கன்னிகா-மாயா-நாராயணி-ஈசானி-சாரதா- அம்பிகா-இன்னும்நாமதேயங்களையும் வைத்து உன்னைத்துதிக்கக்கடவார்கள், அந்த தேவகிதேவி வயிற்றிலிருந்தபிண்டத்தை உன்னால்கிரகிக்கப்படுகிறபடியால் அந்தப்பிள்ளைக்கு சங்கருஷணனென்றும், சர்வசனங்களையும்ரட்சிக்கிற படியாலிராமனென்றும் பராக்கிரமத்தில விசேஷராகையால் பலபத்திரனென்றும் இவ்வுலகத்தி லுத்தமர்கள் துதிக்கக் கடவர்களென்று ஆக்கியாபித்தருளினர்,

உடனேயோகமாயை அவருக்குப்பிரதட்சண நமஸ்காரங்கள்செய்து சுவாமியினுடைய உத்தரவின்படி நடந்துக்கொண்டாள். அப்படிஅந்த யோகமாயையால் அந்தத்தேவகிதேவியின் கர்ப்பம் மாயமானதைச்சனங்களறிந்து கம்சன் முன்ன மாறுபிள்ளைகளைக்கொன்றபயத்தால் இந்தயேழாவதுகர்ப்பமுங் கலங்கிவிட்டதென்று அவனைப்பலவாறுதூஷித்து அதைக்குறித்து அதியாச்சரியத்துடன் ஒருவற்கொருவர் வசனிததுக்கொண்டார்கள். பின்புபகவானாகிய மகாவிஷ்ணுவானவர்-பூமிபாரநிவர்த்திக்காக வசுதேவரது இருதயகமலத்தில் பிரவேசித்ததினால் - சூரியபகவானைப்போல விளங்கிக் கொண்டிருக்கிற வசுதேவரிடத்தினின் றுசுசீலையானதேவகிதேவியானவள் பகவத்ரூபமான கெர்ப்பத்தை யடைந்தாள் அவள்கிழக்குத்திக்கானது ஆனந்தகரமாகிய சூரியதேஜஸைவகித்துஉலகத்திற்பிரகாசிக்கிறதுபோலஅந்தமகா கர்ப்பத்தை பரித்துவிளங்கினாள். அதுகாலத்தில்குளிர்ந்தமுகாரவிந்தத்தையுடைய தேவகிதேவியைக்கம்சன் பார்த்து இந்தப்புண்ணியவதிகர்ப்பத்தில் விளங்குகின்ற இந்தக்குழந்தை என்பிராணனை அபகரிக்கவந்த ஸ்ரீஹரியே இவள்பூர்வத்தில் வகித்தகர்ப்பங்களில் இப்படிப்பட்டவொளியை யடைந்ததாய் நான்கண்டதில்லை, இவள்அன்புள்ள தங்கையாயும் கருப்பவதியாயும் புண்ணியவதியாயுமிருக்கிற இவளை இப்பொழுதேசங்கரிப்போமென்றால், கீர்த்தி-சம்பத்து-ஆயுசு-பராக்கிரமம்இவைமுதலாகிய உத்தமசத்குணங்களை யிழக்கவருமே, இதினால் பிராணனோடே இருக்கினும் இறந்தவனாகவே நினைக்கவரும் பின்னும்-ஜனங்களால் தூஷிக்கப்பட்டு,தேகத்தை விட்டபின்பும் அந்தத்தமசென்கிற நரகத்தையடையவருமென்று யோசித்து - ஸ்ரீஹரியினிடத்தில் விரோதத்தைவைத்த கம்சன் தேவகிதேவியைக் கொல்லவினைத்தகுரூரமாகிய பாபத்தொழிலை நிவர்த்தித்துஸ்ரீஹரியினது திவ்வியாவதாரத்தையே யெதிர் பார்த்துக் கொண்டிருக்குஞ்சமயத்தில், சதுர்முகனும் சங்கரனும இந்திராதிதேவர்களும் ஸ்ரீமந்நாரதாதி சமஸ்தரிஷிகளும் ஆகாயத்தில்எழுந்தருளி இரண்டுகைகளையும் சிரசின்மேல் குவித்துக்கொண்டு-வசுதேவர்-தேவகி தேவிஇவர்களுக்குமாத்திரம் பிரசன்னமாகும்படி ஸ்ரீஹரியை ஸ்துதி செய்யத் தொடங்கினார்கள் சத்தியசங்கற்ப பரிபூரணராயும், சத்திய ஸ்வரூபராயும் பஞ்ச பூதங்களி

...ஜந்துக்களிலும் உள்ளும்புறமும் வியாப்தமாய் அந்தர்யாமியாகிய பரமாத்மாவாயுமிருக்கின்ற உம்மைச் சரணமாக அடைகின்றோம்.

மேலும் இப்பிரபஞ்சமாகிய விருக்ஷத்திற்கு மூலப்பிரகிருதியே விருக்ஷஸ்வரூபமாகியும், சுகதுக்கங்களிரண்டுமே அதில் பழுத்த பலங்களாயும், சத்வ-ரஜஸ்-தமோ குணங்களே மூன்றுமிலைகளாகியும், தர்மார்த்த காமமோக்ஷங்களாநான்கும் ரசமாகவும், கண்கள் முதலிய ஞானேந்திரங்களைந்தும் அடிக்கிளைகளாகவும், பசி-தாக-சோக-மோக-மூப்பு-மரணங்களாறும் சுபாவமாகவும், துவக்கு-சர்ம-அஸ்தி-இரக்த-தசை-மாம்ச-மச்சை இவ்வேழு தாதுக்களும் மேற்பட்டையாகவும், பூதங்களைந்தும் மனம்-புத்தி-அகங்காரம் - மூன்றும் ஆகிய இவ்வெட்டும் மேற்கிளைகளாகவும், நவத்வாரங்கள் கிளைகளினிடையே யிருக்கின்றவெளியாகவும், தசவிதமாகியபிராணவாயுக்கள் இலைகளாகவும், ஜீவாத்மபரமாத்மாக்கள் இதனிடத்தில்வாசஞ்செய்யும் பட்சிகளாகவும், உம்முடையதிவ்வியசங்கற்பத்தாலுண்டாயிருக்கின்றன. இப்படியிருக்கிற சம்சாரமாகிய விருக்ஷத்திற்குத்தேவரீரொருவரே யுற்பத்தி, ஸ்திதி-லய-காரணஸ்வயம்பிரகாசசித்தியவிபுவாயிருக்கின்றீர். உம்முடைய பரம கிருபையினால் பெரியோர்கள்மாயையைவென்று நித்யஸ்வரூபானந்தமானதில் நியானித்து விதேகமுக்தியடைகின்றார்கள், சர்வலோகங்களுக்கும் உற்பத்தி ஸ்தானமாகிய தேவரீரிடத்திலே சமாதியோகவைராக்கிய விலட்சணோத்தம விவேகஞானசீலரிருதயத்தையுடையமஹாத்மாக்கள் மகாபுருஷசேவிதமாகியதிவ்வியலட்சணயுக்தஉமது பாதாரவிந்தசேவையாகிய தெப்பத்தினால் ஜனனமரணசுகதுக்கவாஞ்சைகளைஉற்பத்திசெய்கின்ற சம்சார சமுத்திரத்தைப்பசுவின்கன்றின்குளம்படிபோலச் சுலபமாகத்தாண்டுகின்றார்கள் ஞானசூன்யமனுஜர்களாகிய இதரர்கள்சம்சாரசமுத்திரத்தைக்கடந்து உஜ்ஜீவிப்பதற்குஅவர்களுக்கு உத்தமக்கியானிதிகுணங்களைக்கற்பித்து அவர்களைத்தேவரீருடைய பாதாரவிந்தமாகியஓடத்திலேற்றிஇவ்விடத்தில்யாவருந்துதிக்கச்செய்துதேஹவியோககாலத்தில்பரமபதமாகிறமோட்சத்தை யடைகிறார்கள்.

உமதுவிலட்சணஞான யுக்தபக்தி அதிசயங்களையுடையஸ்ரீமகாபாகவதர்கள்சர்வகால சர்வதேசசர்வாவஸ்தைகளிலும்அன்னியபரங்களாகிய இஷ்டார்த்தங்களையொழித்துப்புருஷார்த்தோத்தம ஸ்ரீபகவந்நாமானுசந்தானமாகியமோட்சசாதனானுஷ்டானத்தை அனுஷ்டிப்பார்களேயல்லாமல்வேறொன்றையுமாசரிக்கமாட்டார்கள். ஸ்ரீபக்தவத்சலரே இந்தஜகத்பரிபாலனத்திலசர்வப்பிராணிகளுக்குந்தகுந்தபடி உத்தமமான கோரிக்கைகளைகிருபைசெய்வதற்குச்சத்குணப்ரதானமாகியும்,மகாபரிசுத்தமாகியுமிருக்கின்றமூர்த்தி ஸ்வரூபங்களைத்தரிக்கின்றீர் அந்தரூபகளின்மூர்த்தியினால் இவ்வுலகசனங்கள்வர்ணாஸ்ரமாசாரதர்மங்களினாலும், வேதங்களினாலும், வேதார்த்தரூப உத்தமசாஸ்திரவிதிகளினாலும், ஸவைதீகக்கிரியாகர்மங்களினாலும். சமாதியோக மார்க்கங்களினாலும், தபசுகளினாலும், தேவரீருக்குத்திருவாராதனத்தைவிலட்சணஞான யுக்தமாய்ச் சமர்ப்பிப்பார்கள், ஆகிலும்தேவரீருடைய விசேஷகிருபையினால் இவ்வுலகத்தில்ஜனித்தபரமபாகவதர்களாகிய பக்த ஜனோத்தமர்கள்தங்கள்சன்மார்க்கரசக்கிரியைகளினால் தேவரீருடையயதார்த்த நிச்சய தத்வார்த்த சாட்சாத்காரங்களை நன்றாயுணர்ந்துசந்தோஷானந்தபரவசத்தை யடைகின்றார்கள். இதுவுமன்றிபாதாமொருபுருஷசிரேஷ்டன்விலட்சணனுஷ்டானஞானபக்திவைராக்கிய விசேஷதர்மத்தினால் தேவரீருடைய ஸ்ரீசரணாரவிந்தங்களில்சமர்ப்பிக்குஞ் சித்தநியதத்தையகித்துத்தனது உத்தமானுஷ்டானகிரியாகாலங்களில ஜன்மஜன்மாந்தரங்களாகிய ஸ்ரீமந்நாமஸ்வரூபகுணவிசேஷங்களையனுசந்தித்துச் சதாகாலட்சேபமாகக்கேள்வியுறுதலும் அனுஜ்ஜீவிக்கின்றதுமன்றிஇதரர்களுக்குஞ் சத்போதனைபோதித்துஉத்தமஞானவிசேஷங்களால்தன்னைப்போலஸ்மரிக்கும்படிவிசேஷவிவேகோதயத்தையுண்டுபண்ணுகிறானோ அம்மகானுபாவன் மறுகாலத்திலேயும் இவ்வுலகத்தில்ஜனிக்கிறதில்லை. வாரீர்ஸ்ரீஹரியே-உமதுபாதாரவிந்ததத்வமாகிற இப்பூமியில் பாபத்தினாலுண்டாகியபாரமானது நிவாரணமாகிறதற்குங்கர்மசம்ஸ்தாபனத்திற்கும்துஷ்டஜனநிக்ரகசிஷ்டஜனபரிபாலனத்திற்கும்,பிரபஞ்சஜனபாக்கியவசத்தினாலும் பரமகிருபையினாலும் திருவவதாரஞ்செய்கின்ற உம்முடையமகாகுணங்களால்பாரம்நீங்கிப்பரிசுத்தமாவதுமன்றி அஞ்சலபதிக்கு ஆதாரமாகியும் ஆர்த்தசனங்களுக்குச்சரணமாயுமிருக்கின்ற...கியஸ்தானமாகியும்மகாலட்சணவிலட்சிதமான-சங்க-சக்ர சார்ங்க கதா-கட்க-சத்திர-சாமர-த்வஜ-கல்பக-அரவிந்த-ரதாங்க-வஜ்ராங்குசாதி-திவ்வியசேகர சின்னங்களினாலும், மங்களகரமாக அலங்கிருதமான திருவடித்தாமரைகள்பதியப்பெற்றபூமண்டலத்தையும் புவர்லோகாதிசுவர்க்கமண்டலங்களையுஞ்சேவிக்கிறதுக்கிருபைசெய்த்தர்களாக அபேட்சித்துக்கொண்டிருக்கிறோம். வாரீர் ஈசனே ஜன்மகர்மகுணியாகிய உமது திவ்யாவதாரங்கள்லீலாகுணங்களன்றிவேறில்லை அவற்றின் கோப்பியங்களாகியதிவ்வியரகசியங்களை ஆராய்ந்தறிவதற்கு வேதபுருஷனுக்கும் எங்களுக்கும் புத்திகோசரமில்லை நித்தியமுக்தானுபவரே-உமதுதிவ்வியகளாம்சலேசமாகிய இச்

சீவாத்மாக்கள் சிருஷ்டி ஸ்திதிசம்மாரகாரணங்களால் சுகதுக்கங்களை அனுபவிக்கச்செய்கிற அத்திவ்வியசக்தி அமிச்சமாத்திரமேயல்லது வேறில்லை அதனால்தம்மை யறியக்கூடவில்லை உமதுசங்கல்ப மாத்திரத்தினால் உம்மைபற்றியாமலேபிரவாகரூபமாய்க் கற்பித்துக்கொண்டிருக்கின்றன தேவரீர்பரமாத்துமாவே தேவப் பிராமண க்ஷத்திரிய திவம்சங்களில் மத்ஸ்யகூர்ம-வராக-நரசிம்ம-வாமன-பரசுராம-ஸ்ரீராம-பலராம-பௌத்த-கற்கியாதி அவதாரங்களைசெய்து தேவரீர்எங்களையும் இம்மூன்று உலகங்களையும்சார்வதா இரட்சித்துக்கொண்டிருக்கிறீர் ஸ்ரீஜகந்நாதரே இப்போதும்கிருபாப்பிரசன்னராயவதரித்துப்பூமிபாரத்தை நிவாரணஞ்செய்து பூமிதேவியையும்எங்களையும்சுபகரமாக இரட்சியும் ஸ்ரீயதுவல்லபா உமக்குசரணாகதியாகச்சாஷ்டாங்கதண்டம் சமர்ப்பிக்கின்றோமென்றுபிரார்த்தித்துப் பின்பு ஸ்ரீதேவகி தேவியைப்பார்த்துத்தெய்வவுபசாரமாகச் சுபவார்த்தைசொல்லுகின்றார்கள், கேளும்திவ்வியமாதாவே-பரமபுருஷராகியஸ்ரீபுருஷோத்தமர்எங்களுக்கும்சர்வ உலகத்திற்கும்விரோதிகளைநாசஞ்செய்துகிருபையோம்இரட்சிப்பதற்குச்சாட்சாத்தமதுநிஜாம்சத்தினால்உமது உத்தமபுண்ணியகர்ப்பத்தில் அவதரிக்கப்போகின்றார் மிகவும்உமக்குமங்களமுண்டாகின்றது மேலும்கம்சனால் நேரிட்டிருக்கின்றபயம்நிவாரணமாகப்போகின்றது உமதுதிவ்வியஉதரத்தில்அவதரிக்கின்றமகாபுருஷலட்சண புத்திரன்யதுகுலத்தவர்களெல்லாரையும்மங்களமாகரட்சிக்கப்போகின்றாரென்றுசந்தோஷமாக ஆசீர்வதித்தனர்.

கேளும் அரசனே-இவ்விதமாகபரமாத்மஸ்வரூபலட்சணராய்விளங்குகின்ற அந்தப்பரமபுருஷனைஸ்துதிசெய்துபிரமருத்திராதிசர்வதேவர்களும்லோகபாலர்களும் மகாரிஷிகளும் அந்தரத்யானமாய்த்தங்கள்யதாஸ்தானங்களுக்குப்போனார்கள்.

## ௩-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்,

கோரகம்சன் கொடுமைதனக்கஞ்சி
சோருந்தாயதந்தை சுற்றத்தவர்க்கெலாம்
தேருநகோகுலத்தில்வசுதேவரால்
ஏரும்பக்கவற சலனெழுந்தருளினர்,

ஸ்ரீஜநார்த்தனரானவர், வசுதேவதேவகிதேவியவர்களால்செய்யப்பட்டஸ்துதிகளை யங்கீகரித்து கம்சனுடைய கொடுமைக்காகப்பயப்படுகின்ற வசுதேவர்முதலானவர்களுந் நந்தகோபர்முதலான கோபாலஜனங்களுக்கும் தமதுசங்கற்பத்திற்கும் பிரீத்யர்த்தமாய்க் கோகுலத்திற் குவசுதேவரால்எழுந்தருளினாரென்றுசொல்லுகின்றது.

பிறகுபகவான் அவதரிக்கிறகாலமான ஆவணிமாசம்கிருஷ்ணபட்சத்து அஷ்டமிதிதி ரோகணிநட்சத்திரம இப்படிப்பட்டசோஷராசிதமான தினத்தில் நவக்கிரகங்கள் உச்சஸ்தானங்களில்வந்துநிற்க எட்டுத்திசைகளும்மங்களவாத்தியங்களொலிக்கசகலநதிகளுந் தெளிந்து குளிர்ச்சியாய்காற்றுவீசசாதுக்கள்மனங்களிக்க ஆகாயத்தில்கந்தருவர்-கின்னரர்-கிம்புருடர்- முதலியவர்கள் கானஞ்செய்ய அப்சரஸ்திரீகள்நடிக்க தேவர்கள்புட்பமாரிசொரியரிஷிகள்சுவஸ்திவசனங்கூற இப்படிப்பட்டசமயத்தில்தேவப்பெண்களை அதிசயித்த தேவகியிடத்தில்நின்று இருள்காலத்தில்சர்வஸ்மாத்பரனானஸ்ரீபகவான் பூரணச்சந்திரன்போன்றஒளிவினிற்சிவாய்தாமரை யிதழ்போன்றகண்களும் சதுர்ப்புஜமும் பஞ்சா யுதமுங்கண்டத்திற்கௌஸ்துவாபரணமும் அரையினிற் பீதாம்பரமுமணிந்து நீலமேகவண்ணராய் நவரத்தினகசிதகிரீடகுண்டலகவசமோதிரங்கடகம் முத்துச்சரமுதலிய திவ்வியாபரணங்களணிந்த திவ்விய சரீரத்துடன் அவதாரஞ்செய்தபுத்திரனுககுவசுதேவர் மங்களார்த்தமாய் கோதானஞ்செய்யகம்சனாற் காவலில்வைக்கப்பட்டவராகையால்பிரத்தியட்சமாய்செய்யக்கூடாதென்று ஆபத்காலத்தில்மானசிகமாய்தானம்பண்ணினாலத்தகுகிறதுவுண்டென்கிறதற்றுபதினாயிரங்கோதானம்மான சிகமாய்சசெய்தனர்.

சகலலட்சணங்களோடும்மனிதனுக்குஇப்படிப்பட்ட புத்திரன்பிறக்கக்கூடுமோவென்றுவசுதேவர்ஆச்சரியப்பட்டுசர்வேசுரனை ஸ்ரீமந்நாராயணனென்று தெரிந்துபக்தியுடன்சாஷ்டாங்கமாய்தெண்டனிட்டு அஞ்சலிஅஸ்தராய்சுவாமியைநோக்கிமகானுபாவனே தேவரீருடைய மாயையாலடியேன்மறந்திருந்தாலுமிப்போதேவரீர் சாதாரணமானசிசுக்களைப்போலிராமல் தேவர்களுக்கும் அரிதற்குஅரிதானசகலலட்சணங்களுடன்திருவவதாரஞ்செய்தபடியால் ஸ்ரீமந் நாராயணனென்று தெரிந்துக்கொண்டேன்-லோகங்களை இரட்சிக்கவேண்டிசத்துவகுணமானவெண்மைபொருந்திய சரீரத்தையும் சிருஷ்டிசெய்யரஜோகுணமானசிவப்பானசரீரத்தையும்சங்கரிக்கவேண்டிதமோகுணப்பிரதானமான ஸ்ரீகிருஷ்ண ரூபத்தைத்தரித்தீர்இப்படிப்பட்ட தெய்வீகமானபலத்துடன்கூடியிருந்தாலும்தேவரீர் தேவகிகர்ப்பத்திலெப்போது அவதரிக்கப் போகிறீரென்று எதிர்பார்த் திருக்கிற

கம்சன்கேட்டால் இந்தட்சணத்தில் உக்கிரமான-ஆயுதமெடுத்துக்கொண்டு கொல்லஓடிவருவானகையால்,தேவரீருக்கு கியாபகபபடுத்தினேனென்றார்.

பின்பு தேவகிதேவியானவள், சுவாமியைநோக்கி சகலசீவராசிகட்கும் அந்தர்யாமியாகவும் ஆதியாகவும அணுவுக்கணுவாயும் மகத்துக்கு மகத்தாகியும் பிரளயகாலத்திலும் அழியாதவராயும் ஆயிரம்யுகத்தைஒருராத்திரியாக உடையபிரம்மாவினுடைய ஆயுசுநூறையும்ஒரிராப்பகலாக உடையவராயும், முகத்திலந்தணரையும் புஜத்தில்க்ஷத்திரியரையும், துடையில் வைசியரையும், பாதத்தில்சூத்திரர்களையும், பிறப்பித்தவராயும, திவ்வியமங்கள விக்கிரகரூபியுமாகையால், கம்சனால்ஆறுபிள்ளைகளையும் பறிகொடுத்ததைநினைத்து நடுங்கிக்கொண்டிருக்கிற எங்கள்பயத்தைநிவர்த்திசெய்யதேவரீரேயோக்கியர் அப்படிப்பட்ட பிரபாவமுடையவராயும்மகாபிரளயத்தில் அனேககோடி அண்டங்களை ஒன்றேடொன்றுகட்டாமல் வைத்திருக்கிறமகிமையையுடையஉம்மைநான் புத்திரனென்றால் இதைவிடஇழிவுவேறுண்டோ ஆதலால் இந்தரூபத்தை மற்றவர்கட்குகாட்சிகொடாதிருக்க அனுக்கிரகிக்கவேண்டும் நான் பெண்பிள்ளை யாகையால் தேவரீருடைய பிரபாவத்தைஎன்னமாக அறியப்போகிறேனென்றாள்.

அப்படிசொல்லிய மாதாவைநோக்கி ஸ்ரீபகவான்,கேளீர் தேவகிதேவியே, சுவாயம்பூமன் வந்தரத்தில் பிரசனியென்று பெயரையுடையநீயும், சுதசென்றுபெயரையுடையவசுதேவரும்-மழை-காற்று-வெய்யிலைப்பாராமல்-யம-நியம-பிராணாயாம-பிரத்தியாகாரதியானதாரண சமாதி-சங்கற்ப-அஷ்டாங்கயோகபலத்தால் களங்கமற்றவர்களாய்சரகையுங் காற்றையும்புசித்து மகாஉபசாந்த இந்திரியமுடையவர்களாய் என்னூற்சகல மநோபீஷ்டங்களையுமடையபன்னீராயிரம்தேவவருடந்தவஞ்செய்தஉங்களிடத்திற் சந்தோஷித்துஇப்போ தவதாரமாகியதுபோற் பிரத்தியட்சமான வென்னைமோட்சத்தை விரும்பாமற் புத்திரனையப்பிறக்கவென்மாயையால்மோகித்துக் கேட்டபடிக்கே வரங்கொடுத்து அந்தர்யானமானபின்புபிர்மாவினால் சிருஷ்டி செய்யுங்களென்று ஆக்கியாபிக்கப்பட்ட உங்களிடத்தில் அப்போதுநான்பிரசனிகர்பனென்று பெயராயவதரித்தேன். அதன் பின் காசிபரும் அதிதியுமான உங்களிடத்தில் உபேந்திரனாகஅவதரித்தேன். இப்பொழுது உங்களுக்கு புனர்ஜன்மகியாபகம்வருவதற்காக இந்தரூபமடைந்தேன் இச்சென்மத்தி லென்னை பிள்ளையென்றும் ஈஸ்வரனென்றும் பாவனைசெய்து நீங்கள் மோட்சமடையப்போகிறீர்கள் இனிநான் சாதாரணமான சிசுவாகிறேனென்று தேவகிதேவி பார்த்திருக்க சிசுவைப்போலானார்.

அப்பொழுதுகோகுலத்தில் யோகமாயையும்யசோதைக்குப்பெண்ணாய்ப்பிறந்தனள். அந்தச்சமயத்தில்முன்னேபகவானு லாக்கியாபித்தபடிவசுதேவர்தம்முடையசிசுவை யசோதைக்குப் பிள்ளையாகக்கொண்டுபோய் வைத்து அவள்பெற்றபெண்ணை தானெடுத்துவரயத்தருணத்தில் தாம்காவலுக்குட்பட்டிருக்கிற விடத்திலுள்ளகதவுகளும் அதைச்சார்ந்த சுற்றுக்கதவுகள்முதலியதும் இரும்பினும்பண்ணி உழல்மரம்போட்டு பத்திரப்படுத்தியிருந்தும், அந்தயோகமாயையின்பலத்தால் சூரியோதயத்தால்விலகியஇருள்போலப்பூட்டுகள் திறந்தும் கால்விலங்குகளும் கழன்றுவிட்டதுமன்றி சகலகாவலாளிகளும் மெய்மறந்து சவத்தைப்போலத்தூங்கினார்கள். அச்சமையத்தில் மேகங்கள் பேரிகைப்போற்சப்தித்து கொஞ்ச மழையைப்பொழிய வசுதேவர்சந்தோஷமாய்ச்சுவாமியை எழுந்தருளப் பண்ணுகிறதை ஆதிசேடன்பார்த்து ஆயிரம்பணாமுடியாற்குடைபிடித்துக்கொண்டுபோயினர்.

அப்பொழுது பயங்கரமானசுழி நுரைஅலையுடனும் பூரணமாய்பிரவாகிக்கிற யமுனையானவள், பூர்வம்சமுத்திரம் ஸ்ரீராமருக்கு லங்கைக்குப்போக வழிவிட்டதுபோலவிட்டனள். அந்தயமுனையைக்கடந்து கோகுலத்திற்சென்று சகலகோபிகைகளுந் தூங்குவதைப்பார்த்துதன்புத்திரனை யசோதையிடத்தில் அவள்தனக்குப்பிள்ளைதான்பிறந்ததென்று எண்ணும்படிவைத்து அவள்பெற்ற பெண்குழந்தையை எடுத்துக்கொண்டுவந்து தேவகிசயனத்தில்வைத்துப்போட்டு தாம் பூர்வம்போலிருந்தனர்.



## ௪-வது - அத்தியாயம்,

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மாய்கையின்வார்த்தைகேட்டு
மதியிலாக்கம்சனென்னேன்
தேய்விலாச்சரியங்கொண்டு
தேவகிவசுதேவற்கும்
ஓய்விலாப்பிரியவார்த்தை
யுரைத்தவர்விலங்கைநீக்கி
ஆய்நயாகாதிகிர்த்திய
மந்தணர்தமைவதைத்தான்.

கம்சன் அந்தயோகமாயையினுடைய வார்த்தையைக்கேட்டுமிகவும் ஆச்சரியத்தையடைந்து, தேவகி வசுதேவர்களை விலங்கினின்றும் விடுவித்து அவர்களுக்கு சிலவுபசாரவார்த்தைகளைசசொல்லி அதன்பின்பு தன்னுடையமந்திரிகளுக்கு அந்தயோகமாயைசொன்னவார்த்தைகளை அறிவித்து பெரியோர்களையும், பிராமணர்களையும், யாகாதிசத்கிர்த்தியங்களையும், துன்பப்படுத்த கட்டளையிட்டானென்று சொல்லுகின்றது.

அப்பால் சிசுஅழுவதைக் காவலாளிகள்கேட்டு துரிதமாய்ச்சென்று கம்சனுக்குச்சேதிசொல்ல. அவன்தனதுசயனத்திலிருந்து எழுந்திருந்து இச்சிசுதனக்குமிருத்தியுவென்றெண்ணிக்கொண்டு தேவகியிருக்கின்றவீட்டைநாடிவருகையில், வழியிறடறுக்கி வீழ்ந்து முடிகலைந்து சமீபத்தில்வந்துநிற்கிற கம்சனைநோக்கி தேவகிதேவியானவள் அக்கினிக்கொப்பானஒளிவுடனிருந்தஎன்பிள்ளைகளறுவரையும்சங்கரித்தீர், மனக்கவலைகொண்டிருக்கிற வெனக்குஒர் பெண்குழந்தைபிறந்தது, இதையாவதுதந்து என் குறையை யீடேற்றென்று வஸ்திரத்தால்அச்சிசுவை மூடிக்கொண்டு வினவுகின்றவளை, அதட்டி-தன்பிராணனைக் காப்பாற்றுகிறநிமித்தம் கையிலிருந்தசிசுவைப்பிடுங்கி இரண்டுகால்களையும் பிடித்து-பந்துத்வம்-பாபம்-தயை-முதலியதைமறந்து கல்லின்மேல்மோதயத்தனஞ் செய்கிறபோது அச்சிசு அவன்கையைவிட்டு ஆகாயத்திலெழும்பி ஆயுதங்களுடன் எட்டுக்கைகளுண்டாய் திவ்யபீதாம்பர திவ்யாபரணம் கந்தம்முதலியதால் அலங்கரிக்கப்பட்டு சித்தசாத்தியர் முதலியவர்களாற் றுதிசெய்ய கம்சனைநோக்கி அடமூடா என்னைச்சங்கரிக்கவும் உன்னாலாகுமோ நீஉன்சத்துருவைக்கொல்லாவிடில் உனக்குமரணம் நிச்சயம் நிச்சயமென்றுசொல்லிவிட்டு பகவதாக்கினையின்படிதான்வெகுஆலயங்களில் வெகுரூபியாயிருந்து ஜனங்களாற் செய்யப்பட்டபூசையைஅங்கீகரித்து அவர்கள்கோறிக்கையையீடேறறிக்கொண் டிருந்தனள்.

கம்சன்சிசுரூபியான யோகமாயை சொன்னதைக்கேட்டுஆச்சரியமுற்று தேவகிவசுதேவர்களிடவிலங்கைவிடுதலைசெய்து அவர்களைநோக்கி, நான் மகா பாபங்களை உங்கள்சிசுக்களைக்கொன்று சம்பாதித்தேன், அவைகளிடஊழ்வினையேகாலனைப்பிறந்து அவனேலேவரப்பட்ட மிருத்யு ஆகாசவாணிபாய்என்னைமோசிக்கொன்றதேயன்றி நான்கொன்றதேயல்ல, நீங்களச்சிசுக்களுக்குவிசனப்படத் தேவையில்லை க்ஷமிக்கத்தக்கதென்று வசுதேவரை வந்தனஞ்செய்தனன். அப்பொழுது தேவகிவசுதேவர்களிருவரும் கம்சனிடத்திற்சந்தோஷித்து உனதுவாக்கின்படியும் வரவேணடியகருமம்வந்து நேருமேயன்றி உம்மிடத்தில் நாங்கள் கோபித்துக்கொள்ளவேண்டியதில்லையென்றுகூற அதைக்கேட்டு கம்சன்சந்தோஷமாய் தன் வீட்டிற்குச்சென்றனன் தேவகிவசுதேவர்களும் தம்மிடகிரகத்திற் சுகித்திருந்தனர்கள்.

அன்றிரவுபோய் மறுநாளுதயத்திற் கம்சன்மந்திரிகளுடன் யோகமாயையாகிய சிசுசொன்னதைக்கூற,அவர்களதுகேட்டு அரசனைநோக்கி தேவர்களுக்குமூலம்விஷ்ணு அவருக்குமூலம்-தர்மம-அந்தணர்கள்வேதங்கள் பசு-யாகம்-தவம்- இதுகளே பலமாகையால் காலதாமசஞ்செயயாமல் இதுகளைக்கெடுத்தால் விஷ்ணுவுக்குப்பலங்குன்றிடும் உமது நாணோசையைக் கேட்ட தேவர்களுநடுங்கி பயந்தோடிப்போவார்கள் நீர் பயந்தவனையும் ஆயுதமில்லாதவனையும் வணங்கினவனையும், அயலானுடனுத்தஞ் செய்கிறவனையுங் கொல்லாமல் தர்மயுத்தஞ்செய்கின்றவர், உமக்கு ஏகாந்தரானவிஷ்ணுவும, காமசரானஉருத்திரனும், தபசியானபிரமனுமஇவர்களொருவரும் சரியானவர்களல்லவென்றுஞ் சொல்லகம்சன் ஆயுள-தர்மம்-கீர்த்தி-பராக்கிரமம் இதுமுதலியவைகள் கெடுதற்கேதுவாகச்செய்கையை நடத்தும்படிமந்திரிக

ட்குடித்தவு பொடுத்தனன் அவர்கள் அப்பொழுதுதங் களுக்கு மிருத்யு சமீபித்ததுதெரியாமல் பிராமணர் களையும்பசுக்களையுந் கொல்லுகிறதைப்பார்த்து பெரி யோர்கள் மனநடுங்கியிருந்தினார்கள்.

---

௫-வது - அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பொருந்தியநந்தகோபர்
புத்திரோத்ஸவகாலத்தில்
திருந்தியதருமமாய்ந்த
தீனைச்சந்தோஷத்தால்
மருவியர்ச்சித்தாரொன்று
மன்னனுங்கம்சனுக்குத்
திறைசெலுத்திநிமித்தந்
தேவரோடுரைத்தல்செப்பும்.

நந்தகோபர் புத்திரோத்ஸவ காலத்தில் மிகவுஞ் சந் தோஷமுடையவராய் கருமங்களை விசாரித் திருக்கும் நல்லவிவேகசீலர்களானபெரியோர்களை விதிப்பிரகாரம் அர்ச்சித்தாரென்றும், அரசனாகியகம்சனுக்குக் கப்பஞ் செலுத்துகிற நிமித்தமாய் மதுரா பட்டணத்திற்குப் போயிருந்த சமயத்தில் வசுதேவரைக்கண்டு பேசியது ஞ்சொல்லுகின்றது.

அப்பால் யசோதைதனக்குப் பிள்ளை பிறந்ததென் று மிகவும் மனங்களித்திருக்கையில் நந்தகோபர், பிரா மணர்களுக்கு கோதானமுதலிய தானங்களாற் சந்தோ ஷிப்பித்து ஜாதகர்மஞ்செய்தனர். கோபிகைகள்யாவரு ம் நல்லவஸ்திரம்ஆபரணம் வாசனை பொருந்திய சந்த னமுதலானவைகள் அலங்கரித்துக்கொண்டு தாமரைம லருக்கொப்பான முகமுடையவர்களாய்வந்துயசோதை யைக்கண்டு அக்குழந்தையைமனங்களிக்கப்பார்த்து ஆ சிர்வதித்து ஏகாந்தத்தில்பாடியுமாடினார்கள் கோபாலர் களும் மனங்களிக்கப்பார்த்து குடங்களிற் பால் தயிர்- நெய்-வெண்ணெய் முதலியதுகளை அனேகமாய்ப் பிராம ணர்களுக்குத் தானஞ்செய்தனர். சுவாமிகோகுலத்திற் கெழுந்தருளினதுமுதல் சகலசம்பத்துகளும் விர்த்திய டைந்தது-நந்தகோபர் பசுக்களைக்காக்கவேறேமனிதனை வைத்துவிட்டு தமது அரசனாகியகம்சனுக்கு கப்பங்கட் டமதுரைக்குவந்தார், அதைவசுதேவர்கேழ்விப்பட்டுர கசியமாய் நந்தகோபரிருக்கிறவிடஞ்சென்று வெகுகளி ப்புடன் ஆலிங்கனஞ்செய்துகொண்டு ஆசனத்திலிருந் து நந்தகோபனைநோக்கி வெகுகாலம் பிள்ளையில்லாதி ருந்த உமக்குப்பிள்ளைபிறந்தது சுகமாயிருக்கின்றதா, மாதமும்மாரி பெய்துரோகமில்லாமல் பசுக்கள்மிகவு ம் பால்கறக்கின்றதா. யசோதைக்கு நிரோகந்திடமாய்மு லைப்பால் விர்த்தியாயிருக்கின்றதா. என்னுடைய குமாரனு மிராமன் உம்மைப்பிதாவாகவெண்ணி தன்தாய் ரோக ணியுடன் சுகித்திருக்கிறானா, என்றுகேட்க அதற்குநந்தகோபர் தான் பிள்ளைபெறப்பார்க்கிறதற்கில்லையென்கிறவிசனத்தினால் வினவுகின்றவசுதேவரைநோக்கிஉமக்குப்பிள்ளைபிறந்ததற்கடை யாளமில்லாமல்-மன்மதனைப்போற் பிறந்த பிள்ளைகளை கம்சன்கொன்றதும் இக்கன்னிகையு மாகாயத்திற்போ ய்விட்டதே பஞ்சபூதங்களான தேக நாசமாகுவதேய ன்றி-ஆத்மாவுக்குநாசமில்லை- ஆன்மாவுக்குரோகம்போ லும்வேறொருரோகத்தைக்கிரகிக்கின்றது-அதற்காகத் துக்கிக்கவேண்டாமென்றுசொல்ல நந்தகோபர் அவரை நோக்கி கோகுலத்தில் வெகுப்பிரமாதம் உண்டாகப் போகிறதென்று எனக்குத்தோற்றுகின்றதாகையால்நீர் சீக்கிரமத்திற் கோகுலத்திற்செல்லுமென்றுகூற அவ்வ ண்ணம் நந்தகோபர்சென்றனர்,

---

௬-வது - அத்தியாயம்,

அறுசீரடியாசிரியவிருத்தம்.

சுந்தரரூபங்கொண்டு
சுரஸ்திரீயின்ரூபமேற்கி
நந்தகோபாலர்வீட்டில்
நாடிபேபகவானுக்கு
அந்தமாய்ப்பாலையூட்டி
யவளுயிரிழந்தாளென்று
தொந்தமாயன்பாய்ச்
சொல்லப்படுகின்றதிதனிலம்மா.

சர்வப் பிராணிகளுக்கும் பயங்கரமாகிய ஸ்வரூபத் தையுடைய பூதனையென்னும் அசுரஸ்திரீ கோபிகாஸ் திரீசனங்களுக்குள் தானொருத்தியாகச்சுந்தரரூபத்தை த்தரித்து இடைச்சேரிக்குவந்து ஸ்ரீநந்தகோபர் கிரகத் தில் பிரவேசித்து ஸ்ரீபகவானுக்குதனதுஸ்தனங்களையூ ட்டி மரணத்தை யடைந்தளென்றுசொல்லுகின்றது.

அப்பால்நந்தகோபர் வசுதேவர் சொன்னது முதல்ம னதில் பயஞ்சனித்து என்ன உற்பாத முண்டாகுமோ, வென்று சங்கித்திருக்கையில்கம்சனாலேவரப்பட்டகோ ரரூபியாயும் முலைப்பால்கொடுத்து சிசுக்களை இரக்கமி ன்றிக் கொல்லுகிறதாயுமிருக்கின்ற பூதனை சர்வ லட்ச ணத்துடன் ஸ்திரீவடிவுகொண்டு மல்லிகை மலரைச்சூ டியும், பருத்தகனத்தால்வளையுமிடையையுடையவளா ய் அரையில்திவ்யபீதாம்பரந்தரித்து காதில்நவரத்தின குண்டலங்களசைய புன்சிரிப்புடன் வருகின்றவளை அ ங்குள்ள கோபாலர்கள்கண்டு மையல்கொண்டு மனமிர

ங்கிநந்தகோபரிட கிரகத்திலிருக்கின்றதுவாரபாலகரை யறியாமல்அவளை உள்ளேகொண்டுபோயவிட்டனர் அப்போதங்குள்ளஸ்திரிகள் திருப்பாற்கடலிற்பிறந்தமகாலட்சுமி நம்மைரட்சிக்கிறநிமித்தம் இக்கிரகத்திற்குவந்தனளென்று அவளழகைப்பார்த்து பிரமித்திருக்க,அச்சமயத்தில் அந்தப்புரத்தில்நீறுபூத்தநெருப்பதுபோல் விளங்குங்குழந்தையை சாதாரணமான சிசுவாகவெண்ணிஅப்பூதனையானவள் குழந்தையின்அருகிற்சென்று தாலாட்டிஎடுத்து மடியில்வைத்துக்கொண்டனள், அவள்உண்மையை அறிந்தஸ்ரீகிருஷ்ணன் தூங்குவதுபோலிருந்தனர் அப்பால்ரோகணியும்-யசோதையும் இன்னமற்றுமுள்ளஸ்திரீகளும் பூதனையைப் பார்த்து இதுவரையிலிப்படி அழகைவாய்ந்தஸ்திரியைக்கண்டதில்லையென்று இவளிடவஞ்சனையை அறியாமல்சவுமிய குணமுள்ள உத்தமஸ்திரியென்று ஆச்சரியப்பட்டிருந்தார்களேயன்றி, அந்தஸ்ரீகிருஷ்ணரூபியான குழந்தையையெடுக்கவேண்டாமென்று சொல்லுவதுமின்றி இச்சிசுவிற்குச்சரியான அழகுள்ளவளாயிருப்பதினலே இவளே இதற்குமாதாவாக இருக்கவேணுமென்று அவளிடரூபத்தைக்கண்டு மயங்கியிருந்தார்கள். அந்தப்பூதனையானவள், குழந்தையைமடியில்வைத்துக் கொண்டு வதைக்கும்படிமுலைப்பால்கொடுக்க அவளுடையஆவியைச்சர்வேஸ்வரனஸ்ரீகிருஷ்ணன் முலைப்பால்வழியாய்உறிய அவள்தன்பிராணனுக்கு கெடுதிவந்ததென்றுயோசித்து உறிகின்றஅக்குழந்தையைநோக்கி அப்பாநீ முலைப்பால் உண்ணது போதும் போதும் விடுமென்றுமுறையமிட்டும் அவர்விடாமல் பாலோடேகூட பிராணனையும்உறிஞ்சுவிட்டனர். அப்போதுபூதனைவீறிட்டு கோடையிடியிடித்தாற்போல திசைகளில் பிரதித்தொனி யுண்டாகும்படி கூச்சலிட்டுமுன்னிருந்த உருவமாறி பயங்கரமாயிருக்கின்ற ரூபமும் செவர்ந்ததலைமயிர்களும் நகத்தைப்போல் மீத்துப்பற்களும் குகைபோன்ற மூக்கும், பெருத்தகாதுகளும், ஸ்தனங்களும் சமுத்திரசுழிபோன்றகண்களுமாய் கைகால்களைப்பரப்பிக்கொண்டுபிராணனையிழந்து விழுந்தனள்.

அந்தப்பூதனையானவள் விழுந்தசத்தத்துக்குப் பயந்து மூர்ச்சையாயிருந்த கோபாலர்கள் சற்றுநேரத்தில் மூர்ச்சை தெளிந்தெழுந்திருந்து நிற்கையில் பூதனை பிணமாயிருக்கிறதையும் அவள்மார்பினில் விளையாடுகிற ஸ்ரீகிருஷ்ணனையுங்கண்டு நடுங்கிஆச்சரியப்பட்டு குழந்தையை எடுத்துவந்துரோகிணியசோதைகளிடத்திலே விட்டார்கள் அப்போதுகோபிகைகள் பசுக்களை ஓட்டிக்கொண்டுவந்து அதின்வாலினல் ஸ்ரீகிருஷ்ணபகவானைச்சுற்றி சாணிபால்நெற்றியில் பொட்டிட்டு அப்பனே நீ விளையாடையில் கோவிந்தனுமபடுக்கையில்மாதவனும் நடக்கையில் ஸ்ரீவைகுந்தனும் - உட்காருகையில் ஸ்ரீயப்பதியும், போசனம் பண்ணுகையில் ஸ்ரீமந்நாராயணனும் - சாகினி- டாகினி - முதலிய பிசாசுகளால் தொந்தரவில்லாமலிருக்கும்படி ஸ்ரீபகவானுடையகேசவாதி இருபத்துநாலுநாமங்களால் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு சிரசுமுதல் இருபத்துநாலு அங்கங்களையும் ரட்சாபந்தனஞ்செய்து ஸ்நானம்பண்ணிவைத்து ஸ்தன்னியயானங்கொடுத்து நவரத்தின மயமான தொட்டிலில் திருக்கண்வளரவிட்டார்கள்- அதப்படியிருக்க நந்தகோபர்பூதனையினுடைய பயங்கரமானதேகத்தைப் பார்த்துமுன்வசுதேவர்சொன்ன வார்த்தைக்குஆச்சரியமுற்றவராய்பூதனையின்சரீரத்தைக்கண்டித்து தூரத்திற்கொண்டுபோய் போட்டுதகிக்கச்சொல்லி உத்தரவுசெய்தனர்அப்படித்தகிக்கின்றபோது பதிதபாவனராயும் விராட் புருஷரூபராயும் சூரியாக்கினிக்குச்சமானமான திருக்கண்களையுடையவராயும்சங்கரேகை சக்ரரேகை வச்சிர ரேகை துவசரேகை-பத்மரேகைமுதலியரேகைகளையுடையவராயும்.ஸ்ரீவத்சமென்கிறமருவோடேகூடியும்முத்துச்சரங்கள்முதலிய திவ்விய பரணங்களாலலங்கரிக்கப்பட்டும் யோகிகளால் தரிசிக்கதுர்லபமாயிருக்கிற ஸ்ரீபகவானுல்ஸ்தன்னியபானஞ்செய்யப்பட்டதினலேஅவள் சரீரம்பரிசுத்தமாகி அகில்-சந்தனம்-புனுகுகஸ்தூரி முதலிய வாசனைகளதிகமுண்டாகி சாசுவித பதவியை அடைந்தாள்.

## எ-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பகவான்கம்சன்றனக்குப்பகையிலாச்
சகடனையுந்த்ரணவர்த்தன்றனையும்
தகித்துத்தாயாமசோதைப்பிராட்டிக்குச்
சுகமுறச்செயவிராட்டினைச்சொல்லினர்.

ஸ்ரீபகவான்கம்சனுக்குசிநேகனாகிய சகடாசுரனையும் த்ருணவர்த்தனையும்- சங்கரித்துதமக்கு மாதாவான ஸ்ரீயசோதாப்பிராட்டிக்குத்தமதுவிராட்டுரூபத்தைக்கிருபையாகத்தோற்றச்செய்தாரென்றுசொல்லுகின்றது.

கேளீர் பரிச்சித்துமகாராசனே ஒருநாள் ஸ்ரீகிருஷ்ணனுடைய ஜன்மநட்சத்திர தினத்தில் யசோதையானவள் கோகுலத்திலுள்ள சகல கோபிகைகளையும் வரவழைத்து கஞ்சக்கருவி-துளைக்கருவி-தோற் கருவி - நரம்புக்கருவியாகியவாத்தியங்கள் முழக்க - பிராமணர்கள் வேதவிதிப்பிரகாரம் மங்கள ஸ்நானஞ்செய்வித்து அலங்கரித்து குழந்தையைத் தொட்டில்

தூங்கவிட்டு அக்ஜன்மநக்ஷத்திர மகோத்சவத்திற்கு வந்திருக்கிற பிராமணர்கள் கோபிகை முதலியவர்க்கு வெகுமதி செய்கின்றகாலையில் பின்னும் கம்சனாலேவப்பட்ட சகடாசுரனானவன் சொர்ணத்தினாலும், வெள்ளியினாலும், உறுதியாய்ச்செய்யப்பட்டிருக்கிற வண்டியைப்போல் உருவங்கொண்டு தொட்டிலின் அருகில்வரசுவாமிசகடாசுரனென்றறிந்துக்கொண்டு பசியினால் அழுகின்றவர்போல் வீறிட்டழ அதற்குள்ளவர்களும்வராமலிருக்கையில் தாமரையிதழ்போன்ற தமது திருவடிகளால் நெருங்கிய அந்தவண்டியை உதைத்தனர், அந்தவேகம்பொறுக்கமாட்டாமல் உரத்தசப்தத்துடன் சகடாசுரன்முறிந்துவிழுந்தனன், யசோதைமுதலிய கோபிகைகளும்நந்தகோபர்முதலியகோபாலர்களும்முறிந்தவோசையைக்கேட்டுபயந்து ஸ்ரீகிருஷ்ணனருகிற்சென்று பார்க்கையில்அக்குழந்தைக்கு பக்கத்துணையாகவிருந்த இடைப்பிள்ளைகளிவர்களைநோக்கி இந்தவண்டில் ஸ்ரீகிருஷ்ணனிட தொட்டியின்சமீபத்தில்வரவும் குழந்தைகால்படவும் முறிந்துவிழுந்ததென்றுசொல்ல அதைக்கேட்டு இந்தவிடத்திற்கு வண்டில்மாத்திரம்வருமா, பாலனாஇந்த ஸ்ரீகிருஷ்ணன் கால்பட்டதினால் முறியுமாவென்று பலவாறுகளெண்ணி இவர்கள்சொல்வது பொய்யென்று அந்தக்குழந்தையின் பிரபாவமறியாதவர்களாகிஏதோபிசாசின்தன்மையாயிருக்கிறதென்றும், நம்மிடகுழந்தை பிழைத்ததே இதுபோதுமென்றும், யசோதையானவள் ஸ்ரீகிருஷ்ணனையெடுத்து மடியில்வைத்துக்கொண்டு பிசாசுமுதலியது மண்டாமலிருக்க பிராமணர்களைக்கொண்டுஓமஞ்செய்து புண்ணியதீர்த்தத்தினாலே அந்தஸ்ரீகிருஷ்ணனுக்கு ஸ்நானமும்இருக்கு-யைத்திரியம்சாமம்அதாவணம எங்கிற நான்குவேதத்திற் சொல்லியிருக்கிறமந்திரங்களால் ரட்சாபந்தனஞ்செய்தும்பிராமணர்களைப்பூசித்தும் அனுப்பினார்கள்.

இப்படிசிலநாள் சென்றபிறகு ஒருநாள்யசோதைஸ்ரீகிருஷ்ணனை மடியில் வைத்துக்கொண்டிருக்கையில்தாங்கக்கூடாத மிகவும் பாரமாயிருப்பதை ஆகுழந்தைக்குஉபத்திரப்பட ஏதோநோயுற்றதென்று யுன்னி அதுநீங்கவேண்டுமென்று ஸ்ரீபகவானைப்பிரார்த்தித்துகுழந்தையைக்கீழேவிட்டிருக்கையில், கம்சனாலேவப்பட்டதிருணாவர்த்தனென்கிற அசுரன்பெருங்காற்றினால்தூளெழுப்பி ஆகாயமெல்லாம் இருண்டுகோகுலத்திலுள்ளயாவரும் ஒருமுகூர்த்தங்கண் விழிக்காதிருக்கும்படிகாற்றடித்துக்கொண்டிருந்துபின்பு சுழற்காற்றுருவமாகஓடிவந்து ஸ்ரீகிருஷ்ணனை எடுத்துக்கொண்டுபோயவிட்டான் அப்போயசோதையானவள கண்கள்தெரியாமல்குழந்தையைவிட்டவிடத்தில் கோபிகைகளுடன் தடவிப்பார்த்து, காணாமையால் மிகவும்துக்கத்தினாலேபெருங்குரல்பாய்ச்சி அழுதுக்கொண்டிருக்கையில் அசுரன்மேருமுதலிய பருவதங்களுடன் அனேகஅண்டங்களை சரீரத்தில்பொருத்தியிருக்கிற சர்வேஸ்வரனாஸ்ரீகிருஷ்ணனை தூக்கிக்கொண்டுபோகிறபோது அவர் வரவரமிகவும் பாரமாகக்கனத்தை அவன்பொறுக்கமாட்டாமல்இது குழந்தையல்லவென்றுவிட்டும் அதுவிடாமல்அவன்கழுத்தைக் கட்டிக்கொண்டு இறுக்கியதினால் அசுரன்நாக்கைக் கடித்துக்கொண்டு கண்பிதுங்கிஅசுரவேடமாய் கல்லின்பேரில்விழுந்து இறந்தான்அவன்மார்பின்பேரிலும் விளையாடிக் கொண்டிருக்கிற ஸ்ரீகிருஷ்ணனைகோபிகைகள் பார்த்துபயந்து குழந்தையையெடுத்துவந்துயசோதைகையில்கொடுத்தார்கள்நமனிடத்தில்நின்றும்விடுபட்ட ஸ்ரீகிருஷ்ணனை நந்தகோபர் வசுதேவருடைய வாக்கியங்களைநினைந்து மனங்குழைந்துஅவர்முதலியகோபாலர்களும் யசோதைமுதலியகோபிகைகளும் பார்த்துவியந்து திரும்பவும் ரட்சாபந்தன முதலியனவுகளைச் செய்திருந்தார்கள்.

ஒருநாள் யசோதையானவள் குழந்தையை மடியில் வைத்துக்கொண்டு அதினுடைய அழகைப்பார்த்துஆனந்தித்திருக்குஞ்சமயத்தில் அக்குழந்தை புன்சிரிப்புகொண்டுகொட்டாவி விடுகிறதைப்போலபவழம்போன்றவாயை ஆவென்றுதிறந்தது அதில் சகலலோகங்களையும்-சகலதிக்குப்பாலகர்கள். சத்தசமுத்திரம், சத்ததீவுசகல நட்சத்திரகணங்கள்-நவக்கிரகங்கள் தேவர்கள்- குலாசலபர்வதங்கள், அஷ்டவசுக்கள், ஏகாதசருத்திராகள், துவாதசாதித்தர்கள் சகலஸ்தாவரஜங்கமங்களும்,தங்கள்வீட்டையும், நந்தகோபர்முதலியபுருஷர்களையும் கோபிகைகளையும், தன்னையும் தன்மடியிலிருக்கிறஸ்ரீகிருஷ்ணனையுங்கண்டு, ஆச்சரியமுற்றுதிடுக்கிட்டுஇவன்மகாபுருஷனேயென்று மனதிற்கொண்டு இக்காட்சியைமகானுபாவர்களே பார்த்து அறியவேண்டுமென்றுகுழந்தைக்கு ஸ்தன்னியத்தைக் கொடுத்து வேடிக்கையாகயிருந்தாள்.

*

## அ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்.

தந்தைதாய்முதலாதியர்தாங்கள்பார்த்
திந்தவிஸ்வரூபங்கண்டதிசயத்
தந்தமாகிய நாமகரணஞ்செய
வந்தனர்காற் கேயமுனிவரே

ஸ்ரீபகவான் தனது விஸ்வரூப தரிசனத்தைக்கண்ட தாயார்முதலிய கோபாலாதிகளும் அதிசயித்துஒருவர்க்கொருவர் சங்கித்திருக்கையில் ஸ்ரீபகவானுக்கு நாமகரணஞ்செய்ய கார்க்கேய மஹாமுனிவர் வந்தனரென்று சொல்லுகின்றது.

இப்படி ஸ்ரீகிருஷ்ணனுடைய மகிமையுள்ளசெய்கைகளைகோபாலர்களுங் கோபிகைகளுங்கண்டு மனங்களித்து ஆனந்தபரவசர்களாயிருக்கிற காலத்தில்மதுராபுரியில்வசுதேவரானவர் யாதவர்களுக்குப் புரோகிதராயுங் குருவாயுமிருக்கிற கார்க்கேயமகா ரிஷியையவரவழைத்து நீர் கோகுலத்திற்குச் சென்று நம்முடைய புத்திரர்களுக்கு ஜாதகரணம நாமகரணமுதலியவைகளை கம்சன்முதலியவர்களுக்குத்தெரியாமல் செய்யவேண்டுமென்றுகூற அவர்அவ்வண்ணம் சர்வக்ஞியராகியும்தபோநிதியாகியுமிருக்கிற ஸ்ரீகிருஷ்ணனைச் சேவிக்கலாமென்றுமிகவும்சந்தோஷித்து ஆனந்தபரவசராய் கோகுலஞ்சென்றனர் அப்போது நந்தகோபரானவர் அந்தகார்க்கேயனைஎதிர்கொண்டு சாஷ்டாங்கதெண்டனிட்டு அர்க்கியபாத்திய முதலியபூசைசெய்து ஆசனத்திலெழுந்தருளப்பண்ணி தேவரீரெழுந்தருளியதினலே அடியேனிடகுடிசையும் குலமும்யானும் பரிசுத்தமாகியிருந்தார்த்தனனேனென்றுஉபசரித்துதன் புத்திரனுக்குநாமகரணமுதலியவை செய்யப் பிரார்த்திக்கையில், ஜோதிடநூலை ஆராய்ந்து மூன்றுகாலமுஞ்சொல்லவல்லவரான கர்காசாரியர் நந்தகோபனைநோக்கி யான்யாதவபுரோகிதனென்று பிரசித்தனானவனகையால் உன்புத்திரனுக்குநாமகரணமுதலியவைசெய்தால், கம்சன் வசுதேவருடையபுத்திரனென்றுதொந்தரைசெய்வானதலால் பிரகாசமாய் செய்யக்கூடாதென்றுசொல்லி, அப்படியேரகசியமாய் சிலகோபாலர்களைவைத்துக்கொண்டு ரோகிணியின்குமாரனுக்குஇராமனென்றும் பலராமனென்றும்-யசோதைகுமாரனுக்கு கிருஷ்ணனென்றும் வாசுதேவனென்றும் பேரிட்டுநந்தகோபனைநோக்கி உனதுபுத்திரனுக்கு அனேகநாமங்களுண்டு அவனைஎவன் அன்புடன்பூசிக்கின்றானே அவனிந்தலோகத்தில் சகலசம்பத்துகளுமடைந்து பரத்தில் அட்சயமானபுண்ணியலோகத்தையு மடைவனென்றுசொல்லி, நந்தகோபரால் பூசிக்கப்பட்டு வெகுமதிபெற்று கர்காசாரியர் மதுராபுரிக்கேகினர், கிருஷ்ணன்சகலதேவர்களையும் தாய்தந்தைமுதலிய சகலகோபாலர்களையும் பாலகிருத்தியங்களால்மனங்களிக்கச்செய்துமுழங்கால்படியிட்டுதவிழுகிறபோது, செந்தாமரைப்புஷ்பத்துக்குச் சமானமாயிருக்கிறதிருவடிகளில்தணடைசதங்கை முதலிய ஆபரணங்கள்சத்திக்க, அணையிலிருக்கின்ற நூபுரங்கள்நழுவ-தெருவில்நடக்கிறவர்கள் பின்னேதவழுகிறதும், பயந்தவனைப்போலதாயாரிடத்தில்ஓடிவருகிறதுமாயிருக்கின்ற குழந்தைகளைத்தாயார்களானரோகிணியசோதைகளெடுத்துமடியில்வைத்து உடம்பில்படிந்திருக்கின்ற புழுதியையும் சாணியையுந்துடைத்து முலைகொடுத்து உச்சியைமுகர்ந்துசிறியபற்களும் பவழம்போன்றஉதடும் காதுவரையில்நீண்டிருக்கிறதிருக்கண்களும் சுருண்டிருக்கிற தலைமயிர்களும், வில்போன்றபுருவங்களும் சந்திரபிம்பம்போன்ற திருமுகமுதலிய அங்கங்களை அடிக்கடிபார்த்தும் மேலும்கன்றுகள்கட்டியிருக்கிற கொட்டிலில்பிரவேசித்துஅதுகளின்வாலைப்பிடித்திழுக்க அதுகள்அவர்களையும்கூடயிழுத்துக்கொண்டு ஓடுவதையும் மான்களைப்பிடித்துக்கொம்புகளை ஒடிக்கின்றதையும் பூனையின்வாயில் கையைக்கொடுக்கிறதும் நெருப்பைத்தொடுகிறதும்சர்ப்பங்களின்வாலைப்பிடித்திழுக்கிறதும் இவைமுதலான அனேகதுஷ்கரச் செய்கைகளையும் தாய்மார்கள் பார்த்து சந்தோஷத்துடன் அவர்களுடைய செய்கைக்குஆசரியப்பட்டுக்கொண்டிருந்தார்கள்.

இப்படிசிலநாள் சென்றபிறகு ஸ்ரீராமகிருஷ்ணர்கள் தத்தித் தொத்தி நடக்கலுற்றார்கள் இடப்பிள்ளைகளைக்கூடஅழைத்துக்கொண்டு வீடுகள்தோறும் பிரவேசித்து-தயிர்-பால்வெண்ணெயகளைப்பட்சித்தும்பழமையாயிருக்கிறபால் முதலியதுகளைச் சிநேகாளுக்கும்குரங்குபூனை இதுகளுக்குக்கொடுத்தும் கைகளைக்கொட்டிக்கொண்டும் கூத்தாடிக்கொண்டும் வெளியில்வந்து விடுகிறதும இப்படி அநேகம்வீட்டினில் ஸ்ரீகிருஷ்ணன்பிரவேசித்து செய்கின்றதுன்பங்களைப்பொறுககமாட்டாமல்கோபிகைகள் எல்லாருமாய் யசோதாபிராட்டியினிடத்தில் சொல்லுகிறாகள்.

வாராய்சாதுவாகிய ஸ்ரீயசோதர் நாங்கள் கன்றுகளை யூட்டவிட்டுப் பால்கறந்துகொண்டுகன்றுகளைக்கட்டிவிட்டுவீட்டிலுள்ள வேலைகளைப் பார்த்துக்கொணடிருக்கிறசமயத்தில் இந்தஸ்ரீகிருஷ்ணனென்பவன்எங்கள்வீட்டிற்குள்ளேநுழைந்து கன்றுகளை அவிழ்த்துவிட்டுமிரட்டிமூலைமூலையாகவோடத்துரத்துகிறான், அவைகள் அம்மா அம்மாவென்றலறிக்கொண்டு ஓடுகிறதினலேஎல்லாருமிரண்டு அதிசயிக்கவேண்டியிருக்கிறது அத்தருணத்தில்எதிரேவந்துநின்று நகைக்கின்றான் ஓஅம்மாஉன்மகனனவன் எங்கள்வீட்டிற்குள் - பால் - தயிர்-வெண்ணெய் முதலியவைகளை வைத்திருக்கும் அறைக்குள்ளேபோய் அவையிருக்குமிடங்கள்தெரிந்து யெல்லாவற்றையும்யெடுத்து பானஞ்செய்தும் உண்டும்ஓ கோபிகாகொஞ்சம் பாலமுது உண்ணத்தருகிறாயோவென்கின்றான்ஓஸ்திரீரத்நமே, நாங்கள் நாள்தோறும் வெளி

த்துவைக்கும் பால்முதலியதுகள் இல்லாமற்போகிறப டியால்அடையாளமாக ஒருவருக்குந்தெரியாமல் உயர மாகக்கட்டியிருக்கின்ற உறியில்வைத்திருந்தோம். அப்படியிருக்க எங்களையறியாமல் இந்தச்சி றுவன் எப்படியோ எடுத்துத்தனக்குப் போதுமா னமட்டுக்கும்புசித்து அவைகளைப் பாண்டமுதலியவற் றோடும் வெளியிலேகொண்டுவந்து சிறுகுரங்குகளுக் குக் கொடுத்துவிட்டு எங்களைப்பார்த்து இதோ உங்கள் பால் முதலானவையுள்ள பானை முதலியவற்றைக் குர ங்குகள் எடுத்துப்போய் பட்சிப்பதைக் கண்டீர்களோ வென்கின்றான், ஓ அரசியே, நாங்களிவன் செய்கைகளை க்கேள்வியுற்று அப்போதைக்கப்போது எங்கள் புத்தி ராதிகளோடு பாலமுதுமுதலியருசிவர்க்கங்களை அனுப வித்துப்போடுகிறோம், அப்படிப்பட்ட எங்கள் வீட்டில் வந்தும் ஒன்றுங்கிடையாதிருப்பதினாலே இந்தப் பாழ் வீட்டுக்கேன்வந்தேனென்று கோபித்துஎங்கள் சிறுகு ழந்தைகளை யடித்துஅழச்செய்து இனியாவது புத்திவ ருமாவென்று சட்டுகின்றான் ஓ அம்மணி எங்கள்பால் முதுமுதலியதுகளை உள்ளறையில் எட்டாமற்கட் டியிருக்கிற உறியில் இதரர்களுக்கு எட்டாமல் பத்திர மாகவைத்திருந்தோம் அதை எப்படியோ அறிந்துஉள் நுழைந்து ஒருவருக்கும்தெரியாமல் உரலைஉருட்டிவந் தமைத்துஅதன்மீது மணைகளையடுக்கிஏறிப்பார்த்தும் அப்படியும்எட்டாமற்போனால் கொம்பெடுத்துறிபீதமாக்கி யதினால்நன்றாகப் பானைத்துளைசெய்து அந்தப்பாண் டங்களையுடைத்துவிடுகின்றான் கோபிஜன வல்லபியா னஸ்ரீயசோதா இந்தஸ்ரீகிருஷ்ணனைச் சாமான்யமாக நி னைக்கப்போகாது எங்கள்மாளிகையில் விசாலமானமே டைமேல்கட்டுவிதானங்களினாலுள்ளறைகள் எல்லாங்க ள்எப்போதுமிகவும் இருட்டாகவேயிருக்கின்றன அத ற்குள்இந்த ஸ்ரீபால கோபாலமூர்த்தி சஞ்சரியாதஇட மில்லை அப்படிச்சஞ்சரிக்கும்போது அந்தஅறைகளின் அந்தகாரங்களைத் தனதுதிவ்விய தேஜசினாலும்திவ்யாப ரணங்களினாலும் உண்டாகிய காந்தியினால்நீக்கிச்செ ய்து அந்தமாளிகைக்கு ஒருமங்கள தீபம்போலவிளங்கி எங்கள்சங்கைநீக்கி அங்கிருக்கின்ற வஸ்துக்களைப்பிர காசிப்பித்து ஒரு நிமிஷத்தில்மின்னல்போல மறைந்து விடுகின்றான் மாராப் மங்களவதியே இந்தஸ்ரீகிருஷ்ண ன்எங்களில்லம்புகுந்து நவநீதங்களைவைத்திருக்குமிட ந்தெரிந்து தான் வைத்தவன்போல எடுத்துக்கொண்டு ஒருமூலையில் யாருக்குந்தெரியாமலுட்கார்ந்து புசித்து க்கொண்டே நகைக்கின்றான் அந்தச்சமயத்தில்நாங்கள றிந்து யாரடாதிருடாவென்று அதட்டினால் யாரடி திரு டனென்று தான்புசித்தமீதியை எங்கள்வாயில்தடவிவா துக்கழைக்கின்றான், அம்மா இந்த ஸ்ரீ கிருஷ்ணன்நவநீ தசோர வியாபாரங்களைச்செய்து எங்கள்கிருகங்களிற்பு குந்து நானாவித மாயையான காரியங்களைச்செய்து ஒ ன்றுமறியாத சாமான்யக் குழந்தையைப்போலும் எங்கள்சொற்களுக்குப் பயந்தவனைப்போலும் எங்களை மிரண்டவிழிகளால் பார்த்துக்கொண்டிருக்கிறான் இ வன் மகாகபடனென்றும் இப்படிக் கிவர்கள் கோள்கள் சொல்லும்போது ஸ்ரீபகவான் பயந்தவனைப்போல தன துதாயின்மார்பினில் தன்னுடைய சிரசை ஒத்திக்கொ ண்டு விளையாட்டைக் கண்டுபார்த்து இந்தக்கோபிகா ஜனங்களின் சொற்களைக்கேட்டு அந்தயசோதாதேவிபு த்திரனிடத்துண்டாயிருக்கின்ற அன்பினாலே அவர்பே ரில்கோபஞ் செய்யாதிருந்தனள்-பின்னும் ஸ்ரீகிருஷ்ண ன்கோபிகைகளின் கிரகங்களில்செய்யுந்தொந்தரவுகளினா ல்அவரவர்களத்தந்தக்கிரகங்களிலும் அவர்களுக்குதனித்த னியாக ஸ்ரீகிருஷ்ணனை விளையாட்டாகப்பிடித்துக்கொ ண்டு இவனுடைய தப்புகளை இவன் தாயினிடத்தில்கை ப்பிடியாய் நிரூபிக்கவேண்டுமென்று எண்ணி அவர்க ளெல்லாரும் அகப்பட்டான் அகப்பட்டானென்கிறசந்தோ ஷத்தினால் நந்தபத்தினிசமுகத்தில்அழைத்துக்கொண் டுவந்தார்கள் அப்பொழுது ஸ்ரீயசோதாப்பிராட்டிதங்க ள்முற்றத்தில் சாவதானமாக ஸ்ரீமுகுந்தனாகியபாலகிரு ஷ்ணனை மடியில்வைத்துக்கொண்டுமுத்தமிட்டுஸ்தன் னியத்தையுண்ணச்செய்து சீராட்டிக்கொஞ்சிக்கொண் டிருக்கின்றதை வந்தவர்கள்பார்த்து ஆ இதென்ன ஆச் சரியமென்றுதங்கள் கையில்பிடித்துவந்த ஸ்ரீகிருஷ்ண பகவானைக்காணாமல் வெட்கித் தலையிறக்கிக்கொண்டொ ன்றுஞ்சொல்லாமல் மின்று மதிக அதிசயத்துடன்தங் கள்தங்கள் வீட்டிற்குச்சென்றார்கள்.

பின்பு ஒருநாள் ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியானவர் தெரு வில்விளையாடிக்கொண் டிருக்கையில் சாதாரணமானசி சுவைப்போல மண்ணைத்தின்பவராக அபிநயங்காட்டின ர்அதை பலராமரும் மற்ற யாதவப்பிள்ளைகளும்பார்த் துயசோதை பிராட்டியிடத்திற்சென்று ஓ அம்மணி உ னதுசுபுத்திரனாகிய ஸ்ரீகிருஷ்ணனானவன் எங்களுடன் விளையாடிக்கொண் டிருக்கும்போது மண்ணைத்தின்னு கிறானென்று சொல்லக்கேட்டு யசோதைப்பிராட்டியான வள் மிகவுங்கோபங்கொண்டுதெருவில்வந்து ஸ்ரீகிருஷ் ணமூர்த்தியி னருகிற்சென்று அவருடையதாமரைபோ ன்றகரத்தைப் பிடித்துக்கொண்டு குழந்தையை அதட் டுகிறவள்போல உரத்தசத்தத்துடன்ஒருவார்த்தைசொ ல்லுகின்றாள், அதாவது அப்பாயிதுவரையில் கோபிய ர்கள் முறையிட்டுக்கொண்டதற்கெல்லாம் அறியாத கு ழந்தையாச்சுதேயென்றுதண்டியாதிருந்தேன் இப்போ துநீகர்மாபிராமல் தெருவில் மண்ணைத் தின்னுகிறதா க உனது தோழர்கள்சொல்லுகிறார்கள் ஆகையால் இத

...ந்தாடியாக் கருக்கவ பிட்சைசெய்யாவிட்டால் இன்னம் இதற்குமேலான குற்றங்களைச் செய்வாய்போலுங் காணுகின்றதென்று சினங்கொண்டு சிலவார்த்தைகளைச்சொன்னாள்.

அப்படிசொல்லிய தாயின்வார்த்தைக்குப் பயந்தவர்போல ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் சொல்லுகிறதாவது நான் மண்ணைத்தின்னவில்லை என்தமையனாகிய பலராமரும் எனதுதோழர்களும் பொய் சொல்லுகிறார்களென்றுசொல்ல, அதைக்கேட்டதாயாகிய யசோதையானவள் உன்வாயைத்திறவென்றுசொல்லஅவர் அப்படியே திறக்க அதில் பதினாலுலகமும் மேருமுதலிய பர்வதங்களும் சப்தசமுத்திரங்களும் சப்ததீவுகளும் சந்திரசூரியர்முதலிய நவக்கிரகங்களும ஏகாதசருத்திரர் துவாதசாதித்தர்களும் அஷ்டவசுக்கள் இந்திரன்முதலியதேவர்களும் அஷ்டதிக்குப்பாலகர் சகலரிஷிகணங்கள் கந்தருவர்-கின்னரர்-கிம்புருடர்-சித்தசாத்தியர்கள்- யக்ஷர்கள்-இராட்சதர்கள்-அசுரர்கள் பசாசுகள-பிதுர்க்கள்-மதுராபுரிமுதலிய பட்டணங்களும், கம்சன்முதலிய யாதவர்களும் கோகுலத்திலுள்ள ஸ்ரீகிருஷ்ணன்பலராமன் முதலியகோபாலர்களும் தன்னையும் ரோகிணிமுதலிய சகலகோபியர்களையும் ஸ்ரீகிருஷ்ணனுடையவாயினிற்கண்டுகைகால் நடுக்கமுற்று பயந்து கண்ணைமூடிக்கொண்டுமூர்ச்சித்து பின்புதெளிந்து யோசனைசெய்கிறாள் இந்த ஸ்ரீகிருஷ்ணன்வாயினில் கண்டதெல்லாம்நிஜமா நமதுமனதில்கிலேசமா அல்லது கனவா, அப்படிகனவு கண்டதற்கு நாம் நித்திரைசெய்யவுமில்லையே முன்புபார்த்தவைகள் இப்போது காணப்படவில்லையே நம்மைப் போலொருவரும் பார்க்கவுமில்லையே நமக்குஇவன்புத்திரன்-தம்பி-மாமன்-மச்சான்-என்கிற கிரமமிருக்கையால் மானிடசெய்கைக்கு உட்படாமல்வாக்குக்கும் மனதிற்கும்எட்டாத ஆச்சரியத்தைக் கண்டமையால் இது சுதமாயைபோலிருக்கிறது இந்த கிருஷ்ணன்நமக்குப்பிள்ளையல்ல சகலலோகாதாரிடியென்று தெரிந்துதோத்திரஞ்செய்கின்றனள் மனோவாக்குக்காயங்களால் அறியவொண்ணாத மகிமையை யுடையவராயும் ஒன்றிலும் இச்சையற்றவராயும் பாசபந்தமில்லாதவராயும் சகலபிராணிகளுடைய மனதில் பாபபுண்ணியங்களுக்குச் சாட்சியாயிருக்கிறவராயும் தன்னிட நாமத்தைச்சொல்லி நமஸ்கரிக்கிறவர்களிட பிர்ம்மஹத்தி முதலிய பாபங்களைப்போக்கி பரிசுத்தஞ்செய்கிறவராயும்பிரபஞ்சத்தை ... தன் திருவடிகளை கமண்டலத்திலிருக்கிறதீர்த்தத்தால் திருமஞ்சனஞ்செய்தபிர்ம்மதேவனுடைய அகம்பாவத்தைப் போக்கினவராயும், தன்னுடையதிருவடி தீர்த்தமாகிற கங்கையைசிரசில்தரித்தும் தன்னிடநாமத்தை இடைவிடாமல் உச்சரித்துக்கொண்டிருக்கிற பரமசிவனைப்பரிசுத்தஞ்செய்துதிவ்வியஞானத்தை உண்டு பண்ணினவராயும் தன்னைக்குறித்துத் தவஞ்செய்தவொருவனுக்கு சாசுவதமான ஐஸ்வரியத்தையும் ஆயிரம்சதுர்யுகம் ஆயுளையுங்கொடுத்த சர்வேஸ்வரனான ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியாய் அவதரித்திருக்கிறாரென்று அடிக்கடிநமஸ்கரித்துதோத்திரஞ்செய்கிற யசோதைப்பிராட்டிக்குத் திரும்பவும்தன்னைப்புத்ரனென்று நினைக்கும்படியானலோகமாய்கையை யுண்டாக்கினார்.

இப்படிநான்குவேதங்கள் முப்பத்திரண்டு ரகசியங்கள்சாங்கியயோகங்கள் அஷ்டாங்கயோகங்கள் கர்மமீமாம்சங்கள் முதலியவைகளால் தோத்திரஞ் செய்யப்பட்டவனென்று அறியாமல் தனக்குப்பிள்ளையென்றே எண்ணிக்கொண்டிருந்தாளென்று அருளிச்செய்கிற சுகமுனிவரைநோக்கிபரிச்சித்து மகாராசாவானவர் யசோதைப்பிராட்டியும் நந்தகோபரும் சகலசீவதயாபர மூர்த்தியானஸ்ரீமந்நாராயணன் தங்களுக்குப் புத்திரனாகப்பிறக்கவும் அவரையெடுத்து மடியில்வைத்துக்கொள்ளவும் அவர்மீது தன்கைகால்கள்படவும் தனதுமுலைகள் அவர்உண்ணவும் அந்த ஸ்ரீகிருஷ்ணனிட விளையாட்டுகளைக்கண்களிக்கக்கண்டு ஆநந்திக்கவும் என்னபுண்ணியஞ்செய்தார்களென்று பிரார்த்திக்கிறபரிச்சித்துமகாராஜாவைநோக்கி சுகயோகி அருளிச்செய்கிறார் முன்ஜென்மத்தில்துரோணனென்றும் வசுமதியென்றும்இரண்டுபேர்கள் தவத்திற் சிறந்தவர்களாயிருந்தார்கள் அவர்களைநோக்கி பிர்ம்மதேவன் நீங்கள்அனேககாலந் தவஞ்செய்தாலுங் கிடையாப்பொருளாயும் சங்குசக்கரகதாகோதண்டந்தரித்தவராயு மிருக்கின்ற ஸ்ரீமந் நாராயணனை உங்களுக்குப்பிள்ளையாக அவதரிக்கப்போகிறார்நீங்கள் கோகுலத்தில் ஜநியுங்களென்று சொல்லுகிறபிர்ம்மதேவனைநோக்கி எங்கள்வீட்டினில் அவதாரஞ்செய்கிறஸ்ரீமந்நாராயணனிடத்தில் பக்திஉண்டாகும்படிஅனுக்கிரகிக்கவேண்டுமென அவ்வாறே அனுக்கிரகித்துதம்மிடலோகஞ்சென்றனர் பின்பு அந்ததுரோணனே இந்தநந்தகோபராயும் அந்த வசுமதியே யிந்த யசோதையாயும் அந்தஸ்ரீமந்நாராயணனே இந்தஸ்ரீகிருஷ்ணனாயும்அவதாரஞ்செய்தார்கள் பூர்வஜன்ம தபோபலத்தினாலும்பிர்ம்மதேவருடைய அனுக்கிரகத்தாலும சுவாமியினிடத்திலிப்படி பக்தி பிறந்ததென்று பரிட்சித்துக்கு அருளிச்செய்தார்,



௯-வது அத்தியாயம்.

---

எழுசீரடியாசிரியவிருத்தம்.

ஒண்டொடியசோதைப்பிராட்டியர் மகிழ
உதரத்திலிருந்திடுஞ்சர்வ
பண்டமதனைத்தும்பக்தவற்சலனும்
பரமனுங்காட்டிடவன்னை
கொண்டுநன்மகிழ்ச்சிகுமாரனைக்கட்ட
கோதிலாக்கயிறுகளெல்லாம்
துண்டுபோதாமல்மயங்கிடச்செய்தார்
சுவாமியென்றிதனிற்சொல்லுமிதே,

ஸ்ரீகிருஷ்ணபகவான் தமது வாத்ஸல்யாதிசய பரமகிருபையால் தமதுதிவ்யவுதரத்திலிருக்கின்ற சர்வப்ரபஞ்சத்தையுங்கண்டு ஆச்சரியத்தையடைந்து இவனை ஸ்ரீவிஸ்வம்பரனென்று ஞானமுடையவளாகச் சந்தை யடைந்த தாயாராகிய யசோதாப்பிராட்டியினிடத்தில் அன்புள்ளவராய் கைக்கப்பட்டுத்தன்னைக்கட்டும்படி அவள் கொண்டுவந்த கயிறுகளெல்லாம் போதாமல் இரண்டு விரற்கடை குறைபடும்படியாகக்கட்டுத் தமது மகிமையைத் தோற்றச்செய்தாரென்று சொல்லுகின்றது.

வாராய் பரதவம்சசிகாமணியே பரீக்ஷித்கோபபத்தினியாகிய யசோதாப்பிராட்டி ஒருநாள் தன் வீட்டிற்பணிசெய்யும் சுந்தரவதிகளாகிய கோபிகைகளுக்கு இதரமான வேலைகளைச்செய்ய நியமித்துத் தானே தயிர்கடையத்தொடங்கி மிகவும்சிறத்திருக்கிற இடையில் கட்டிக்கவுரத்தினகசிதமான வர்ண ஒட்டியாணம் விட்டு விட்டு இலங்க கெம்பீரமாய் பரித்திருக்கின்ற கடிதடத்தின்மேல் தரித்த ஆணிமுத்துகளைக்கோர்த்த வெண்பட்டாடை மேகலையுடன் சுந்தராகாரமாகச் சந்திரகிரணங்களைப்போலப் பிரகாசிக்க புத்ரவாத்ஸல்யத்தினால் பால் சுரந்து பருத்திருக்கின்ற இரண்டு ஸ்தன பாரங்களுங் குலுங்கியசைய அவைகளின்மத்தியில் மாணிக்கமாலைகள் சிக்குப்பட்டுக்கொண்டு திவ்யரத்னங்களிழைத்த கங்கணங்கள் சப்திக்க தயிர்முதுகடையும் நிலைமைத் துக்கயிற்றைப் பற்றியிழுக்கின்ற தாமரைபோன்ற கைகளிசைக்க, இரண்டுசெவிகளிலும் அணியப்பட்டவைகின்ற இரத்னகுண்டலங்களுடைய காந்திகபோலங்களில்பிரகாசிக்க, அவற்றிலுள்ளதொங்கட்டங்கள் ஒன்றோடொன்று நெருங்கும்போது சிறத்வனிகள்செய்யக் களங்கமில்லாத பதினறுகலைகளோடுங்கூடிய பூரணச்சந்திரனுக்கொப்பாகிய முகாரவிந்தத்தில் ஆணிச்சிறுமுத்துச் சரங்களைப்போலச் சிறுவேர்வையொழுகத் தங்கிய அளகபாரத்தி லணிந்திருக்கிற திவ்யபரிமளசுகந்தபுஷ்ப மாலைகள் தளர்ந்துஒவ்வொருபுஷ்பமாகநழுவிச் சாதுவாகவருஷிக்க மஹோத்தமவித்வசனங்கள் தங்களுக்குநேரிடும் ஜனன மரணவல்லைதை நீங்கும்படி ஸ்ரீபாலகோபாலமூர்த்தியினுடைய பாலலீலாகுணகீர்த்தனங்களைப்பாடிச்சந்தோஷிப்பதுபோலத்தன்னுடையதிவ்யபுத்ரனாகிய ஸ்ரீபகவானுடைய குணங்களை ஸ்ரீகிருஷ்ணாமாங்கிதத்துடனும் அடிக்கடி அப்போதுக்கப்போது நினைப்பில் வருகின்றதாகிய அவனுசரிக்கின்றதிவ்யலீலாங்கிதகீதங்களை மஹாமதுரமாகிய மிருதுஸ்வரங்களுடனும் சிரமமில்லாதவளாய் ஆனந்தபரவசையாய் பாடிக்கொண்டு தயிர்கடைந்தார்கள்.

அப்படித்தயிர்கடைந்துகொண்டிருக்கின்ற சமயத்தில், அண்டமுண்டசெவ்வாயனான ஸ்ரீகிருஷ்ண பகவானாகியஇச்சிறுகுழந்தை அதிசீக்கிரமாகத்தவழ்ந்துவந்து மிகவும் பசித்தவனைப்போல முலையுண்ணவபேட்சித்துத்தனது அன்புள்ளதிவ்யமாதாவின் முகாரவிந்தத்தைப்பார்த்து நகைத்துச்சில மோஹனமாகிய வேடிக்கையானலீலைகளைச்செய்து தாய் சிரமப்படுகிறாளென்கிற கிருபையோடு தயிர்கடையுமத்தைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டான் அப்படிப்பிடித்த மாத்திரத்தில் மத்தானது அசையாமல் இவளுடையசக்திய வசப்படாமல் நின்றுவிட்டது இதுதோற்றவொட்டாமல்மோஹனமாக்கலையையைத்தழுகான், அழுகின்றசிறுவனைப்பார்த்துத் தாயானயசோதாப் பிராட்டியானவள் என்னையனே- என்னையாளவந்தவரசே எங்கள்கலிதீர்க்கும் அப்பனே, என்னுயிர்க்குயிரே ஏன் அழுகிறு யென்று எடுத்துக்கொஞ்சி முத்தாடிஉச்சிமோந்து மடியில்வைத்துக்கொண்டு ஸ்வாமியினுடைய முகாரவிந்தத்தைப் பார்த்து நிமிஷநிமிஷத்திற்கும் மிகவும் ஆச்சரியமான மாயாமோகன சௌந்தரியங்களை யனுபவித்து புத்திரனிடத்தில் மிகவும் அன்புகூர்ந்தவளாய் பாலைப் பெருகிக்கொண்டிருக்கின்ற ஸ்தனங்களை யுண்பித்துக் கொண்டிருந்தாள், அந்தவேளையில் அடுப்பில் காயவைத்திருக்கிற பாலமுதுபொங்கியது அதைப்பார்த்து யசோதாப்பிராட்டி உண்டவளாயில்திருப்தியடையாமல்இன்னும் முலையுண்டுகொண்டிருக்கின்ற சிறுகுழந்தையை உபசாரமாகக் கீழேயிறக்கிவிட்டு ஸ்தனத்தின் காம்பின்வழியே சுரந்தபாலொழுகத் துறையாகப்பால்முதைப்பாகமாயிருக்கப்போனாள் அப்பொழுதுநெறித்த தயிரினுடைய சிறுதுளிகள்நிறையப்பட்டிருக்கும் திருமுகமண்டலத்தையுடைய ஸ்ரீபகவான்கோபத்தை வகித்து திருவதரங்களதுடிக்க பவளங்களில் சிறுதுளிகளாக முலைமல்க பிருதுவானகைகளினால் தயிர்கடையும மத்தையெடுத்தெறிந்துவிட்டு அதன்கயிற்றையிளகிலவுக்கொப்பான சிறுபற்களினால் கடித்தறுத்துதறி அங்கிருந்த

குழவிக்கல்லினால் அந்தத்தயிர்பாண்டத்தையுடைத்து அதிலிருந்த தயிரேடுகளையெடுத்துச் சாப்பிட்டுக் கொஞ்சிக்கொஞ்சி அழுதுகொண்டேகாந்தமான ஒருவீட்டைக்குட்போய் அவ்விடத்தில் உயரஉரிச்சுருக்கில் பத்திரமாகச் சேர்த்துவைத்திருக்கின்ற நவநீதகலங்களைத் தான்வைத்தவன்போலக் கண்டுபிடித்து உரலை யுருட்டிக்கொண்டுவந்து நிமிர்த்தி அதன்மேலேறி வெண்ணெயையெடுத்துத் தேவதாந்தரங்களுக்கொப்பாகஅங்குசோரரூபமாய் வந்துவாசஞ்செய்கின்ற சிறுகுரங்குகளுக்குங்கொடுத்துத் தாமும் அமுதுசெய்துகொண்டிருந்தார், உடனேயசோதாப்பிராட்டிபக்குவமாய்ப்பாலமுதைக் காய்ச்சியிறக்கிப்பத்திரமாகவைத்துமிருந்தஅன்புடன் குழந்தையைத்தேடிவந்து பார்க்குமிடத்தில தயிர்பாண்டமுடைபட்டும் மத்துங்கயிறும் சிக்சாக எறியப்பட்டும், அத்தயிரேடுகள் அருமைச் சிறுவிரல்களால் வாரியுண்ணப்பட்டும் தயிர்பெருகிபூமியிலோடப்பட்டு மிருக்கின்றதைக்கண்டு ஸ்ரீபகவானுடையசெல்வக்குழந்தையைக்காணுதவளாய் இளநகையாகச் சிரித்துக்கொண்டு வீட்டிற்குள்ளேதேடிவரும்பொழுதிலொருஉள்ளறையில் உரலின்மேலேறி உரியிலிருக்கின்றவெண்ணெயையெடுத்துக் குரங்குகளுக்குங் கொடுத்துத் தானும்அமுது செய்துகொண்டே சாதாரணமான குழந்தையைப் போலயார்வருகிறார்களோ வென்று அச்சத்துடன்சகதிக்கும் பார்த்துக்கொண் டிருக்கின்றமிரண்டகண்களையுடைய தெய்வமாயசோரசிகாமணி யாகிய புத்திரனைப்பார்த்துப்பிடித்துக்கொள்ளவேண்டுமென்றுசர்வசாட்சிபூதனான ஸ்ரீபகவானுக்குத்தெரியாமல் மெள்ளமெள்ளப் பின்னேயே சாதுவாகச் சந்தடி செய்யாமல் கையிலொரு சிறுகோலைப் பிடித்துக் கொண்டு போனாள், அப்படித்தன்னைப் பிடிக்கவருகின்ற தாயை ஒன்றுமறியாதவன் திரும்பிப்பார்த்தாற்போலப்பார்த்து ஸ்ரீகிருஷ்ணனென்பவர் சீக்கிரமாக அந்தப் பாத்திரத்தில் மீதியாயிருக்கிறவெண்ணெயைக் கையிலேவாரிக் கொண்டு அவ்வுரலைவிட்டிறங்கி வேகமாகக்கிண்கிணி முதலிய பூஷணங்கள்சப்திக்க வோடினார் இவ்விதமாய்இந்தஸ்ரீமாதவன் ஓடுகையில் வேதங்களாலு மறியக்கூடாதமுதல்வனாகியசுவாமியை இப்படிப்பட்டவனிவனென்றறியாதவளாய் தன்னுடையசாமான்யபுத்திரனாக நினைத்திருக்கின்ற யசோதாப் பிராட்டி பிடிக்கவேணுமென்று நினைத்துப்பின்தொடர்ந்து சுகந்தபுஷ்பந்தரித்தகருமேகத்தையொத்த அளகபாரம் அவிழ்ந் தவிழ்ந்து சோரஎடுத்தெடுத்து முடித்துக்கொண்டு உண்டோவில்லையோவென்று காண்போர் சந்தேகிக்கச் சிறுத்துக் கொடிக்கொழுந்து போலிருக்கின்றஇடைதள்ளாடஸ்வர்ணகும்பாகாரபூரித ஸ்தனபாரங்கள் குலுங்கப் பருத்தநிதம்பப்பிரதேசங்கள் அசையமுகாரவிந்தத்தில முத்துமுத்தாகச் சிறுவியர்வை பொழுக, கால்வருந்திச் சிவக்க, யதாசக்தியாகவும் வேகமாகவுந்தொடர்ந்தாள்.

இவ்விதமாகத்தன்னைப் பிடிக்கும்படிதொடர்ந்தோடிவருகின்ற யசோதைப் பிராட்டியாகிய தாயாருடைய கருத்தை யறிந்து ஸ்ரீகிருஷ்ணனென்பவர் தமதுகிருபையினால் இனிமேலோட்டங்காட்டலாகாது தாயானவள் நம்மைத்தொடர்ந்தோடி யிளைத்தாளாதலால்நாம் அகப்பட்டுக்கொள்ள வேண்டுமென்று நினைத்துப் பயந்தவனைப் போலவும் ஓடச்சக்தியில்லாமற் கால் சோர்ந்தவனைப் போலவும் நின்றுவிட்டார் அப்படிநிற்கிற மஹாபரம புருஷோத்தமனை இக்குழந்தையைத் தாயானவள் ஓடி உறுதியாக ஒருகையினால் பிடித்துக்கொண்டு மற்றொருகையிலிருக்கிற சிறுகோலைக்காட்டி அதட்டிப்பயப்படும்படியாக மிரட்டினாள், அப்படிமிரட்டவே அந்தமாயர்கண்ணபிரானாகிய ஸ்ரீபகவான் மகாஅபராதஞ் செய்து மிகவும்பயந்தவனைப்போல நடுநடுங்கிஅஞ்சனந்தீட்டியதிவ்யநயனங்களில் ஜலமொழுகநான்குதிக்குகளையும் மிரண்டுமிரண்டுப்பார்த்து கண்பிசைந்துமதுரமாகிய மழலைக்குரலோசையுடன் அழுதுகொண்டிருந்தார்அப்படிஅழுகின்ற அந்த ஸ்ரீபால கோபால கிருஷ்ணனைப்பார்த்துத் தாயானவள் சர்வவ்யாபகனாகிய அந்தப் பகவானுடைய திவ்யப்ரபாவங்களை யறியாதவளாய் நம்முடையசிறுகுழந்தையானவன் மெத்தவும் பயந்தான் இனிமேல்அதிகமாய் அதட்டலாகாதென்றுநினைத்துக் கையிலேயிருக்கிற சிறுகோலை யெறிந்துவிட்டு அவன் மேலிருக்கிற அன்பினால்இவனைக்கொண்டுபோய்க் கிரஹத்தில் ஓரிடத்தில் பந்தித்திருக்கச்செய்யவேண்டுமென்றுநினைத்துக் கையால்பிடித்தபிடியைவிடாமல் அழைத்துக்கொண்டுவந்தாள் கேளாயஅரசனேசனகாதியோகிகளாலும் பிரமன்முதலியதேவர்களாலும் அறியவொண்ணாதகடவுளை யசோதாப்பிராட்டி புத்ரவாஞ்சையினாலும் கோபகோபீசனங்கள் சொன்ன வாக்கியங்களினாலும் தனது அன்புள்ளபுத்ரன் ஓரிடத்தில் சாமான்யக் குழந்தைகளைப்போல அமர்ந்திராமல் வெகுசஞ்சரியாய்த் துடுக்குகள்செய்கிறானென்கிறநினைவினாலும் மேடுபள்ளங்களில் சஞ்சரித்துத் தூர்த்தனாகி யாதாமொரு அபாயங்களை விளைப்பானென்று அஞ்சுகின்ற எணணத்தினாலும் இவனையிவ்விடத்திற் கட்டிவைக்கிறதே உத்தம மென்று நினைத்துப் பந்திக்கத் தொடங்கிச் சீக்கிரத்தில் ஓராளவாகக் கயிற்றைக் கொண்டுவந்து

ஒருவராயினருகே அழைத்துவந்து அந்த ஸ்ரீ பத்மநாபனுடைய இடையில் கயிற்றைச்சுற்றினாள்.

அப்படிசுற்றியகயிறானது முன் பக்கத்துக்குச்சரியாகவிருந்தது. மறுபடியுஞ்சென்று மற்றோர் தாம்பைக்கொண்டுவந்து முடிந்துசுற்றினாள், அதுவும் ஒருசாணுகுறையவிருந்தது திரும்பவுமோடி ஒரு பெரிய கயிறுகொண்டுவந்து முடிந்துகட்டினாள், அப்போதும் நாலுவிரற்கடை குறைந்ததாகத்தோன்றிற்று. பின்னுமெட்டிஒருபெரியதும்பைத் திரித்துச்சேர்த்துப்பந்தித்தாள் அதுவும் இரண்டுவிரற்கடை குறைந்ததாகத் தோன்றிற்று;இவ்விதமாக அலைந்தலைந்து ஸ்ரீபகவானுடையமாயையிலகப்பட்ட புத்தியையடைந்து தனதுகிரகத்திலிருந்ததும்புகள் தாம்புக்கயிறுகள் அணைக்கயிறுகள்முதலியதுகளைக்கொண்டு வந்ததுமன்றி அங்கிருந்துஅதிசயப்படுகின்ற கோபிகைகளுக்கு ஆக்ஞாபித்து அவர்கள் கொண்டுவந்த கயிறுகளையும் முடிந்துகட்டினாள், எத்தனைகயிறுகளை கொண்டுவந்து முடிந்துகட்டியும், இன்னமும்ஒருவிரற்கடை குறைவாக எட்டியு மெட்டாமலிருந்தது, அப்போதுதாயானவள் மெத்தவும்அலுத்து ஆ, இதென்ன ஆச்சரியம் இவனோ சிறு குழந்தை இவனிடுப்புக்கு இத்தனைக்கயிறுகளும் போதாமலிருப்பானேன் இதென்னகாரணமோ என்னமாயமோவென்றதிசயப்பட்டாள், அவ்வளவில் ஸ்ரீதாமோதரன் தனது அன்புள்ளதாயாகிய யசோதாப்பிராட்டி கயிறுதேடுகிற ப்ரயாசத்தினால்சரீரம்வியர்த்து அளகபாரங்கள்கலைந்துநிவ்பாபரணங்கள் சிக்குப்பட்டு மிகவும்இளைப்புற்று அலைகின்றதையும் கயிறுகளைமுடிந்து வலித்து வலித்து அவள் கைசெவந்து வருந்தப்படுவதையும் கடாட்சித்து தாயினிடத்தில் அன்புள்ளவனையும் பக்தபாராதீனனாகியும் இருக்கின்றவராகையால் தமது திவ்யசக்தியை மறைத்துக் கட்டுக்குட்பட்டார், அப்போது இகழ்களின்பந்தநீங்கியதாமரஸபுஷ்பம்போன்ற தம்முடைய உபயதிருவடிகளை ஒருகரம்பக்தியோடு நினைத்தவர்களை அவர்களுடையபாசபந்தங்களையொழிந்து அனுக்கிரகிக்கின்றகிருபாமூர்த்தியைத் தன்னுடைய புத்திரனென்கிற பாசபந்தமுடைய யசோதாப்பிராட்டியானவள் உரலுடன்பந்தித்தாள் அப்போது அதிககயிறுகள்மிதந்துபோய்விட்டன வாராய மகாராசனே சகல சராசரங்களோடுங்கூடிய அநந்தமாகிய அண்டங்களும் அண்டாதிபதிகளாகியபிரம்மருத்திராதி தேவதைகளும் வசித்துக்கொண்டிருக்கிற ஸ்வாமியினுடைய திருவுதரமாகிய வயிற்றைக் கட்டவும் அந்தப்பகவானைவசஞ்செய்துகொள்ளவும்,அந்தயசோதைக்குச் சக்யமுண்டா, களங்கமற்ற தாய்வருத்தப்படுகிறாளென்று பக்தபராதீனனான ஸ்வாமிகட்டுண்டதேயன்றி வேறில்லை அப்படிப்பட்ட மகிமையுள்ள சுவாமியை யசோதையானவள் கட்டிவிட்டு தன்வீட்டு அலுவலில் பிரவேசித்து பராமுகமாயிருந்தாள். அந்தருணத்தில் வடதிசைத்தலைவனான குபேரனுடைய புத்திரர்களாகிய நளகூபரமணிக்கிரீவர்கள் மிகுந்தசெல்வத்தினாலும் போகத்தினாலும் கர்வத்தினாலும் பூர்வகாலத்தில் ஸ்ரீ நாரதபகவானால் சபிக்கப்பட்டு அச்சாபவசத்தினால் இரட்டையாகிய விருட்சரூபத்தையடைந்து ஸ்ரீநந்தகோபனுடைய கிரகத்தின்பின்புறப்புழைக்கடைத்தோட்டத்தில் விருத்தியடைந்திருந்தார்கள் இவ்விதமாயிருக்கின்ற அந்த இரண்டுவிருட்சங்களையும் ஸ்ரீபக்தபராதீனனாகியஸ்வாமி கிருபையாகப்பார்த்தார்,

## ௰-வது அத்தியாயம்

கலிவிருத்தம்.

நளகூபரமணிக்கிரீவர்கள் நாராயணன்றம்மை
புளகாங்கிதமாகத்தரிசித்தேத்திடும்போதில்
அளவில்லனுக்ரகஞ்செய்தனரந்தஸ்துதிக்காகத்
தளமாகியதுளசித்தெரியலேயணிமேவானே.

நளகூப ரமணிக்கிரீவர்கள் ஸ்ரீகிருஷ்ணபகவானைத்தரிசித்தமாத்திரத்தில் அவர்களுக்குத் திவ்யக்ஞானம்பிறந்துஸ்துதிசெய்துசரணமடையவுடனே அவர்பரவசங்கராய்அனுக்ரஹித்தாரென்று சொல்லுகின்றது,

அப்படி அருளிச்செய்கிற சுகமுனிவனைநோக்கிபரிட்சித்துமகாராசன் தேவரிஷியான நாரதருக்கு கோபம்வரவும்யட்சர்களுக்கு விருட்சரூபமாகவும் என்னகாரணமென்றுவினவுகிற அரசனைநோக்கி சுகமுனிவர் அருளிச்செய்கிறார் குபேரபுத்திரர்களான நளகூபரமணிக்கிரீவர்களிருவரும் வெகு பராக்கிரமசாலிகள் மன்மதனுக்கொப்பான சவுந்தரியவான்கள் இவர்கள் கைலாசத்தில் சிவனுக்குப்பணிவிடை செய்துவருகையில் ஒருநாள்மதுபானஞ்செய்து அந்தபர்வதத்தின் அடிவாரத்தில்வசந்தருதுமுதலிய ஆறு ருதுக்களினாலுண்டான புஷ்பங்கள் பழங்கள் நிறைந்தவனத்தில் கங்காநதியைச்சார்ந்த தாமரை ஓடையில் அப்சரஸ்திரீகளுடன் ஜலக்கிரீடைபண்ணிக்கொண்டிருக்கையில் அவ்விடத்தில் நிர்நிமித்தமாகவந்த நாரதனைக்கண்டு வெட்கிநிர்வாணமாயிருந்தஸ்திரீகள் தங்கள் தங்களுடைய ஆடைகளையெடுத்து அணிந்துக்கொண்டுமறைய இவர்களிருவரும் மத்தியபான மயக்கத்தாலொன்றுந் தெரியாமல் வஸ்திரம் அணிந்துக்கொள்ளாமல் தன்னை எதிர்கொண்டு அர்க்கியபாத்திய முதலியவற்றால் பூஜியாமல் மரம்போல்நின்றவர்களைக்கண்டு நாரதருக்குக் கோபம்வந்து முப்பத்தா

றாயிரவருடம் மருதமரமாயிருந்து பின்பு ஸ்ரீகிருஷ்ணனுடைய திருவடிசம்பந்தத்தால் இந்த பாகவதப்சாரமபோய் பரிசுத்தமாய் சொர்க்கமடைவீர்களென்று சொன்னார் பரிசித்து அதைக்கேட்டு சுகரைநோக்கி பிரமபுத்திரராகியும் பகவத்பக்தர்களுக்குள் முந்தினவராகியுமிருக்கிறநாரதர் நிரபராதிகளாய மத்தியபானமயக்கத்தினுலே மெய்மறந்திருக்கிறவர்கள் பேரில் கோபம்வரக்காரணமென்னவென்று வினவுகின்ற அரசனைநோக்கி சுகமுனிவர்கூறுகின்றார் பக்தர்களை அடித்தாலுந்திட்டினாலும அவமானஞ்செய்தாலும் அவர்களுக்குக் கோபம்வருகிறதில்லை அப்படியிருக்க பகவானிடத்தில் தெரியாமல எவ்வளவு அபராதஞ்செய்தாலும்பொறுப்பார்தன்பக்தர்களிட அவமானத்தைச் சகிக்கவேமாட்டார். அந்தரகசியந்தெரிந்த நாரதமகாமுனி சபிக்கிற வியாஜமாகஅனுக்கிரகஞ்செய்தனர். அனுக்கிரகஞ்செய்யாதவரானல் காலநிர்ணயஞ்சொல்லமாட்டார். அதைகியர்பகத்தில்வைத்த ஸ்ரீகிருஷ்ணன் இஷ்டரானநாரதர்வாக்கியம் பொய்யாகக்கூடாதென்று நிச்சயித்து அந்தஉரலுடன் வெளியில்பிரவேசித்து இரண்டுபிரிவாய் முளைத்திருக்கிறவிருட்சங்களின் நடுவில்புகுந்துபுறப்பட்டபோதுஉரல்வாராமல்முரண்டிக்கொண்டதை வேகமாயிழுக்கஅந்தவேகத்தால் நிலைநிற்கமாட்டாமல் மரம்விழுந்தது.

அதிலிருக்கிற குபேரபுத்திரர்கள் சாபவிமோசனமாய்நித்தியமான யவ்வனத்துடனும் திவ்விய பீதாம்பரம் கிரீடகுண்டலஆரமுதலிய ஆபரணங்களை யணிந்தபூர்வசரீரத்தை அடைந்து நாரதர்வாக்கியத்தைநினைத்துக்கொண்டுசமீபத்திலிருக்கிற ஸ்ரீகிருஷ்ணனைதெண்டனிட்டுஸ்தோத்திரஞ்செய்கின்றார்கள் அப்ராகிர்த திவ்வியமங்களரூபியாயும் சகலபிராணிகளுக்கும் ஆதியாயும்பிரளய காலத்தில் நாசமில்லாமல் நாபிக்கமலத்தில் பிர்ம்மதேவனைசிருஷ்டிசெய்து அவருடைய கோபத்தில் நின்றும்உருத்திரனை சிருஷ்டிசெய்தவராயும் சூட்சுமத்தில் சூட்சுமராகியும் ஸ்தூலத்தில் ஸ்தூலராகியும் சிருஷ்டிஸ்திதி சங்காரங்களுக்குரியவராயும் சேதனசேதனங்களைச்சரீரமாகப்படைத்து சகலலோகத்திற்கும்சுகத்தைக்கொடுக்கிறவராயும் யாதவர்களுக்கு அதிபதியாகியுமிருக்கிற தேவரீரை நமஸ்கரிக்கின்றோம் தேவரீருடைய பிரபாவங்களை எங்களுடையவாக்கினல் கீர்த்தனஞ்செய்யவும் காதுகள் கதைகளைக்கேட்கவும் கைகள் கயிங்கரியஞ்செய்யவும் மனது திருவடிகளைத் தியானிக்கவும் கண்கள் தரிசிக்கவும் இப்படியாகக் கிருபைசெய்யவேண்டும்நாங்கள் கைலாசாதிபனை தொழுதற்குநாரதர் அனுக்கிரகத்தால் கிடைத்த தேவரீருடைய தரிசனமகிமையால் ஜன்மாந்திரத்திற் செய்தபாபமும் நாசமடைந்து மோட்சத்திற் குரியவர்களானோமென்று நமஸ்கரித்து அஞ்சலிசெய்துக்கொண்டு நிற்கின்ற அவர்களை ஸ்ரீகிருஷ்ணசுவாமி கிருபாநோக்கத்துடன் அருளிச்செய்கிறார் நீங்கள் செல்வச்செருக்கினல் கர்வமடைந்த உங்களுக்குநாரதர் தயாளுவானகையால் அனுக்கிரகஞ்செய்தாரென்றுநான் அறிவேன் அவருடையவாக்கியம் சத்தியமாகவேணுமென்று உங்களண்டையில் நான்வந்தேன் இப்போதுநீங்களென்னைப் பணிந்தபடியால் உங்களுடைய பாபம் சூரியோதயத்தால் நாசமடைந்தஇருளபோலாச்சுது என்னிடத்தில் நிரந்தரபக்தியுடையவர்களாய் உங்களிட லோகத்திறகுப் போங்களென்று அனுக்கிரகித்த ஸ்ரீகிருஷ்ணனை பிரதட்சணஞ்செய்து நமஸ்கரித்து திவ்வியமானரூடர்களாய் ஆகாயத்திலெழும்பி தங்களுடையலோகஞ் சேர்ந்தார்கள்.

---

## ௰க - வது - அத்தியாயம்.

---

### அறுசீரடியாசிரியவிருத்தம்.

கோபிகாசனங்களேழுங் கோபாலர்தங்களோடுந்
தாபதநந்தகோபர் தன்னுடும்ப்ரநதைசேர்ந்து
பாபியாம்வச்சாசுர பகாசுரரிருவர்தங்கள்
சாபமும்நீங்கச்சம்ஹரித்தது மிதனிற்சாற்றும்

ஸ்ரீகிருஷ்ணபகவான் கோகுலத்தில் அதிமானுஷபாலகிரீடா லீலாவினோதங்களை யாசரித்துஸ்ரீநந்தகோபர் முதலானகோபால கோபிகாஜனங்களுடன்பிருந்தாவனத்திற்ப்ரவேசித்து வச்சாசுரனையும்பகாசுரனையும்சம்ஹாரித்தாரென்று சொல்லுகின்றது.

வாராய் ஸ்ரீபகவத்கதாவினோத மனோரத மஹாராஜனேகோபிகாஸ்திரீகளாநதமருத விருட்சங்களடிவேரோடே சாய்ந்து விழுந்தபோது உண்டாகிய மகாபயங்கரமான சப்தத்தைக்கேட்டு இது என்னஅதிசயம் நிர்நிமித்தமாய் இடி விழுந்ததோவென்று பயந்து சங்கையுற்று வயிற்றைப் பிசைந்து கையை நெறித்துக்கொண்டு கொடிபோன்ற இடை மெத்தவருத்தப்படத் தக்கதாய் ஓடிவந்தார்கள் கோபாலர்களெல்லாம் உருண்டு திரண்டுவந்தார்கள நந்தகோபர் யசோதை ரோகிணி முதலானவர்களும் அந்தச்சப்தத்தைக் கேட்டு மெத்தவும் பிரமித்தார்கள் இப்படிப்பயந்தஊரிலுள்ள எல்லாருஞ்சேர்ந்து அவ்விடத்திற்கு ஓடிவந்து பூமியில்வீழ்ந்திருக்கின்றஅந்த இரண்டுமருதவிருட்சங்களையும் அவ்விடத்தில்உரலுடன் கட்டப்பட்டவராய் நிற்பவராயினல்லாரையுங்கடாட்சித்துக்கொண்டு பிரத்தியட்சராயிருக்கிறஸ்ரீபாலகோபால கிருஷ்ணனையும்பார்த்து ஆச்சரியத்துடன்இதென்ன உற்பாதமோ ராட்சஸமாயையோ ஒன்று

ந்தெரியவில்லலேயென்று நானுவிதமாக நினைத்துச சஞ்சலமுடையவர்களாய்ப் பயந்துபிரமித்துக் கொண்டிருந்தார்சள். இப்படியிருக்க ஸ்ரீபகவானுடனே நித்தியமாய்கூடி விளையாடிக்கொண்டிருக்கின்ற சிலசிறுபிள்ளைகள் அந்தச்சமயத்தில கொஞ்சதூரத்தில்விளையாடிக்கொண்டிருந்த அவர்கள்ஸ்வாமிஉரலோடு வீட்டின் புறக்கடைத்தோட்டத்திற்குத் தவழ்ந்துவந்ததுமுதலாய் நடந்தசங்கதிகளையெல்லாம்பார்த்துக்கொண்டிருந்தவாகளாகையால்அந்தமரங்கள்விழுந்துகிடக்கிற இடத்தில் வந்துகூட்டமாய்த் திகைத்துக்கொணடிருக்கிறகோபாலர்களிடத்திற்குவந்து ஸ்ரீநந்தகோபர் முதலியஆயர்களைப்பார்த்து ஐயா இந்த ஸ்ரீகிருஷ்ணன் உரலுடனே தவழ்ந்துவந்து இந்த மரங்களுக்கு நடுவே நுழைந்து அப்புறஞ்சேர்ந்து அந்தஉரலைக் குறுக்காகமாட்டி அந்தமரங்களையுதைத்துக்கொண்டு உரலையிழுத்தானுடனே இந்தமரங்களிரண்டும் வேரோடேபறித்து விழுந்தன, அவைகளில்நின்றும் தேசோன்மயமான இரண்டு திவ்ய புருஷர்கள்வந்துசற்றுநேரம் இவனிடத்தில்நின்று வணங்கி வடக்குதிசைநோக்கிப்போனார்கள். இதை நாங்கள் பார்த்துக்கொண் டிருந்தோமென்று சொன்னார்கள்-

அதைக்கேட்டுப் பாலர்களுடைய வசனமென்று அதைமுழுதுஞ் சரியாகநம்பாமல் சந்தேகப்பட்டுக் கொண்டிருந்தார்கள். பின்புஸ்ரீநந்தகோபர்தமது அருந்தவப் புத்திரனாகிய குழந்தைகட்டுடனிருக்கும்போது நாமென்ன இப்படிமயங்கிஇருக்கிறோமென்று துடிதுடித்துக் கொண்டு ஸ்ரீகிருஷ்ணபகவா னிடத்திற்குவந்து சீக்கிரமாக உரலின்கட்டை யவிழ்த்து விடுத்துத் திருமேனியெங்கும்பரிசித்துத் தூளிகளைத்துடைத்துக் கண்களிலேஜலம்பெருக வுள்ளங்களிக்க எடுத்துமார்போடணைத்துக்கொண்டு உச்சிமோந்து செல்வமாக முத்தாடிக் கொண்டிருந்தார்- அத்தருணத்தில் ஸ்ரீயசோதாப்பிராட்டியாகியதாயானவள்கையேந்தியழைத்தாள் அப்போது ஸ்வாமியான குழந்தைநந்தகோபர் மடியில் நின்றுந் துள்ளிக்கீழேயிறங்கித் தாயார்கையின்மேலேறினார்தாயானவள் பிள்ளையை யெடுத்துக்கொண்டு வீட்டிற்குள்ளே போய்விட்டாள, உடனே கோபாலர்கள் கோபிகைகள் தங்கள்தங்களிடம்போய்ச் சேர்ந்தார்கள்,

பின்பு ஸ்ரீபகவான் பிராகிருத சிறு குழந்தையைப் போல மழலைச்சொற்களோடுகூடிய சிலபாடல்களைக் கீதங்களோடும்பாடிக் கைகொட்டி நகைப்பார். சிலமிருதுவசனங்களைச் சொல்வார், கோபஸ்திரீகள தங்களுக்குரியவேலைசெய்யும்படி யேவுவார்களானால் அவர்கள்சொன்னபடி தப்பாமல்அவர்களுக்குச்சந்தோஷமுண்டாக ஏவலுஞ்செய்வார், அந்தக்கோபிகைகள்அப்பாகிருஷ்ணா சங்கீதம்பாடிககொணடே சற்றுநேரங் கூத்தாடென்பார்கள், அப்போது ஸ்வாமியானவர் செந்தாமரை மலர் போன்ற சிறியதிருவடிகள் செவந்துகொப்பளிக்கக் கூத்தாடுவார்-மரக்கால்-முக்காலி- மணை-பாதுகை - மரப் பொம்மை-செப்புத்தட்டுமுட்டுகள்முதலானவைகளைக் கொண்டுவந்துவைத்துக்கொண்டு நகைத்துவினோதமாகவிளையாடுவார், அந்தகோபாலர்களுக்கு மோகனமாகிய பிரீத்யர்த்தமாய்ப் பூச்சிக்காட்டுதல்முதலிய சில அஸ்த அபிநயங்களுடன் கிரீடாலீலைகளைச் செய்வார் பிசைஷக்காரர்களைக்கண்டு பயந்து ஓடி ஒளிக்கின்றவனைப்போல வேடிக்கைகளைக்காட்டுவார். நீர்க் குடங்களில் தன்னிழலைக்கண்டு தாயார்முதலியவர்களுக்கு அதைக் காண்பித்து ஒருசிறுகோலெடுத்து அடிக்கப்போயஅந்தநிழலும கோல்நோக்கக்கண்டு அம்மா அந்தபாபா என்னையடிக்கவருகின்றதென்று சொல்லுவார் இப்படிமாயாப்ராந்தி விளையாட்டுகளைக்காட்டியது மல்லாமல்தமது தாய்தந்தைகளாகியயசோதை நந்த கோபர்களுக்கும்பந்துகளாகிய கோபகோபிகா சனங்களுககும மற்றுமுள்ளவர்களுக்கும் முன்னடந்ததேவமகிமைகள தோன்றாமல் புத்திரவாஞ்சைபிறக்கும்படிச் சிலவேடிக்கைகளான லீலைகளைச்செய்து மறைத்தார்-பின்புஓர்தினத்தில் நாதனாகியஸ்ரீபகவான் வீதியில்விளையாடிக்கொண்டிருந்தார், அந்தச்சமயத்தில் ஒருஅம்மையார் நாவற்பழம்விற்றுள் அக்குரலோசையைக்கேட்டுச் சமஸ்தமானபோகங்களுக்குஞ் சதுர்வித புருஷார்த்தங்களாகிய சர்வாபீஷ்டங்களையுங் கொடுத்தருளாநின்ற ஸ்ரீகிருஷ்ணனாகியவரதன்மிகவும் அதிவேகமாயோடிவந்து தன்னுடைய இரண்டுகரங்களிலும் தானியத்தை யெடுத்துக் கொண்டு கூத்தாடிக்கொண்டேவந்து அந்தப்பழம்விற்கின்ற அம்மையாரைக்கூப்பிட்டு வாராய்கிழவி நானிரண்டுகைகள் நிறையத்தானியங்கொண்டுவந்தேன் உன்படியினால் இந்தத்தானியத்தை யளந்துக்கொண்டுஎனக்குப் பழங்களைத்தரவல்லையோவென்றார், இவர்கூத்தாடிக்கொண்டேவந்தபோது இவர்திருக்கைகளி லிருந்த தானியங்களெல்லாம் மாணிக்க மயமான திருவாழிகளணிந்த திருவிரற்சந்துகளில் சிந்திப்போய்விட்டன, ஆயினும அந்தஸ்ரீதரனாகிய ஸ்ரீ பகவானுடைய கிருபவாஞ்சை பெருகாநின்ற மகாமதுரமாகியவசனங்களைக்கேட்டு அந்தபபழக்காரிஆநந்தித்துச் சந்தோஷத்தை யுடையவளாய் என்னப்பனேவாவென்றும் என்னருந்தெய்வமே வாவென்றும் மிகவும்ஆதரத்துடன் அழைத்து நல்லபழங்களைப்பொருக்கி அபயவரதந்தாங்கி இருக்கத்தக்க இரண்டுகரங்கள நிறையத்தந்தாள், அப்பொழுது ஸ்வாமிதந்த அந்தத்தானியங்கள் மெத்தவுங்கொஞ

சமாயிருந்தபோதிலும அவர்கிருபையால் அவள்கூடை நிறைந்து அவைகளனைத்தும் திவ்யமாணிக்க மணிகளா ய்விட்டன அவற்றைக்கண்டுபிரமித்து நின்றாள் அப்ப டிநின்றவளை ஸ்ரீபகவான்கிருபையாகப் பார்த்து அம்மா உனதுசொம்மே கொடுபோவம்மேயென்று சந்தோஷ மாகப்போகச்சொல்லி யனுப்பிவிட்டு அந்தக்கனிகளைத் தன்னுடன்கூடி விளையாடுகின்ற ஸ்நேகிதர்களாகிய ஆ யாகள் புத்திரர்களானசிறுவர்களுக்குமிகவும் அன்புட னேகொடுத்துத்தாமும் அமுதுசெய்து குரங்குகளுக் கும போட்டுஅந்த கோகுல திருவீதிகளில் விளையாடி க்கொண்டிருந்தார்-

இப்படிக்குச் சிலநாள்சென்றபிறகு ஒருநாள் ஸ்ரீ வஸு பிமூர்த்தபிரானுடைய தாயாகியரோகிணிதேவியானவ ள யமுனாநதிதீர்த்தவோடையில் தீர்த்தமாடி வஸ்திரா பரணாலங்கிருதையாய் வருகின்றமார்க்கதநில்முன்னே மருதமரங்களை வேரோடேசாய்த்து அந்தவிருட்சரூப சித்த புருஷர்களை இரட்சித்த ஸ்ரீகிருஷ்ண பகவானும் பலராமனும்சிலகோபால பாலர்களுடன் கூடி மிகவும் அதிவிநோதமாக வெகுநேரமாய்விளையாடிக்கொண் டி ருந்தார்கள்,

அவர்களைப்பார்த்து அன்புடனேயழைத்தார்கள் அ வர்வார்த்தையை லட்சியம்பண்ணாமலிருக்கையில் வீ ட்டிற்குவந்து யசோதையுடன் சொல்லியனுப்ப அவள் வெளியில்வந்து ஓடிவிளையாடுகிற பிள்ளைகளைக் கண்டு பொட்டாநந்தராய் அரவிந்தாக்ஷா ஓடிவா உனதுதோழன் மார்களும்நீங்களும் இளப்பை அடைந்தீர்கள் விளையா ட்டைநிறுத்தி வாருங்களென்றுகூப்பிடுகிறமாதாவான யசோதையின் குரலைக்கேட்டு விளையாடுவதை விட்டு நின்றார்கள் அப்போது ஸ்ரீகிருஷ்ணனையும் இராமனை யுங் கையைப்பிடித்து இத்தனைநேரம்விளையாடலாமா உனதுபிதாவானவர்கண்டால் கோபித்துக்கொள்ளுவா ரே உங்களுக்கின்றையதினம் சன்மநட்சத்திரமாகையா லதற்கு சிலஇடப்பிள்ளைகளையுமழைத்துக்கொண்டு இ வர்களுடன் மங்களஸ்நானஞ்செய்வித்து திவ்விய பர ணங்களால் அலங்கரித்து அறுசுவை ரசவர்க்கத்து டன்போசனம்புசிப்பித்து ஸ்ரீகிருஷ்ண சுவாமியால் பி ராமணர்களுக்கு அனேககோதான முதலியதுங் கொ டுத்து சந்துருஷ்டி யடைந் திருக்கையில் அப்போ துஸ்ரீபகவானுக்கு ப்ருந்தா வனம்போக இச்சைவந்து கோகுலத்திலிருக்கிற கோபாலர்களிற் சிறந்தவனும் விருத்தனுமாயிருக்கிற கோபாலனிடத்தில் ஆவேசித் து நந்தகோபர்முதலிய கோபாலர்களைநோக்கிமுன்னே கோரரூபியாய் சிசுவைக்கொல்லுகிற பூதனையினுடை ய உபத்திரவத்தில்நின்றும்பின்பு அகாரணமாய்முறிந்த சகடத்தாலும் சுழிகாற்றான அசுரனாலும் பகாசுரனாலும் போதும் இப்போதுமலைபோல்ரணடுவிருட்சஙகள் அ காரணமாய்முறிய அதுகளின்நடுவிலகப்பட்டு தெய்வா தீனமாய் உம்மிடபுத்திரனை ஸ்ரீகிருஷ்ணனை தப்பிப்பி ழைத்தான் இந்தஸ்ரீகிஷ்ணன் பிறந்தநாள்முதல் நித்தி யந்துன்பமே அன்றிக்ஷேமமில்லை. ப்ருந்தா வனத்திற் குப்போனால் க்ஷேமப்படலாமென்று கூறுகின்ற விரு த்தகோபாலன்வசனத்துக்கிசைந்து நந்தகோபர்கோபா லர்களைநோக்கி அவ்வண்ணஞ்செய்ய உத்தரவு செய்த னர். அப்போது சகலகோபாலர்களும் சகல சாமான்க ளோவணடிமுதலியவற்றிலும் தாசிதாசவர்க்கங்கள் வாக னத்தின்பேரிலும் முன்பின்ரட்சிக்கத்தக்கினசூரர்களு டன் பசுக்களையும் சகலஅலங்காரத்துட னிருக்கிற பெ ண்சாதிபுருடனையும் பேரிசங்கம் முதலிய பதினெட்டு வாத்தியங்களுடன் வேதியர்கள்வேதமந்திரஞ் சொல்ல புரோகிதனைமுன்னிட்டுக்கொண்டு ஸ்ரீகிருஷண னிட விளையாட்டை பாட்டாகப்பாடிக்கொண்டும்ரோகிணியு ம்யசோதையும் தேரின்மீதேறி ஸ்ரீகிருஷ்ணனையும்பல ராமனையும் மடியில்வைத்து அவர்களுடையமுகங்களை ப்பார்த்து ஆனந்தக்களிப்புடன் பிருந்தாவனத்திற்குப் போய வேதியர்களைக்கொண்டு வாஸ்துசாந்திமுதலிய துகளைச்செய்து வீடுகள்கட்டி பசுக்களுக்கு இருப்பிட ம்உண்டுபண்ணி புண்ணியாக வாஜனம்முதலியதுகள் செய்து சுகமாயிருந்தார்கள். இராமகிருஷ்ணனிருவரு ம் கன்றுமேய்க்கிறவயதை அடைந்து தங்களுக்குச்சரி யொத்த இடப்பிள்ளைகளைக்கூட அழைத்துக்கொண்டு தங்களிடவிளையாட்டுக்குரியவஸ்துக்களைச்சம்பாதித்து கன்றுமேயக்கையில் சிலகாலம பிள்ளாங்குழலூதவும் ஒருத்தனைஒருத்தர் ஓடிப்பிடித்துக் கொள்ளவும சிலர் விளாம்பழத்தை பறித்தெறிந்துஅதின்பின்னேஓடவும் சிலர்கூத்தாடவும், சிலர்கோபாலர்களுக்கு கம்பளிகளா ல் எருதுகளைப்போல வேடம்போட்டு அதுகளோடே யுத்தம்செய்யவும் எருதுகளைப் போலும் கிளிகள்-மைன க்குருவி-வான்கோழி-மயில் டேங்கை முதலியதுகளை ப்போலக் கூவவும் சிங்கமுதலிய துஷ்ட சந்துகளுக்கு பயந்தவர்களைபோல கன்றுகளைமேய்த்துக் கொண்டு யமுனைக்கரையில் விளையாடிக்கொண்டிருந்தார்கள்.

வச்சாசுரன் கன்றுரூபமாய் வந்தது.

அப்படியிருக்கையில் இராமகிருஷ்ணனைக் கொல்ல வச்சாசுரன் கன்றுஉருவங்கொண்டு கன்றோடேகலந்தி ருப்பதை ஸ்ரீகிஷ்ணன்பலராமருக்குக் காட்டி இவன்வ ச்சாசுரனென்கிறவன் நம்மைக்கொல்ல சமயம்பார்த்தி ருக்கிறானென் றறிவித்து அதின்பின்னங்காலைப் பிடித் துத்தூக்கி விளாமரத்தின் மீதில் மோதி சங்கரித்துப் போட்டார்.

அப்போதுஇ டப்பிள்ளைகள் ஸ்ரீகிருஷணனைத்தே

த்திரஞ்செய்யதேவர்கள் புஷ்பமாரிபொழிந்து துந்துபி வாத்தியமுதலியதுகளை முழக்கிக்கொண்டுசொர்க்கத்திற்குப்போனார்கள் அப்பால் ஸ்ரீகிருஷ்ணன்தோழர்களுடன் கன்றுகளுக்குத்தண்ணீர்காட்டி நிழலில்நிறுத்திய முனைக்கரைமணல் திட்டினில் கட்டமுதை பதார்த்தத்துடன் போஜனஞ்செய்துகரையேறி வருகையில் ஒருஜந்துவை பலராமனும் இடப்பிள்ளைகளும்பார்த்து பயந்தார்கள் அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணன் புன்சிரிப்புடன்கரையேறிவருவதை ஜந்துவாயிருக்கிற அசுரன் பார்த்து கைலாசபர்வதம்போல வெளுத்தசரீரமும்வச்சிரத்துக்கொப்பான மூக்குடன் கொக்குஉருவங்கொண்டுதன்னிடஇறகினால்தூள்களைவாரி இரைத்துக்கொண்டுஸ்ரீகிருஷ்ணனை மூககினால்விழுங்கினான் அப்போது அவன்நெஞ்சில் அக்கினிபோல் கொளுத்த அதைப் பொறுக்கமாட்டாமல் சீழேஉமிழ்ந்தனன் அவன்உமிழ்கிறவரையில் பலராமனும் இடப்பிள்ளைகளும் வருத்தமுற்றார்கள்,

அப்பாலந்த ஸ்ரீகிருஷ்ணன் பகாசுரனைமூக்கைக்கிழித்துக்கொன்றுபோட்டார், அப்போது இடப்பிள்ளைகள் தோத்திரஞ்செய்தார்கள், பலராமனோடிவந்துதம்பியை ஆலிங்கனஞ்செய்து சந்தோஷித்தார், தேவர்கள் புஷ்பமாரிபொழிய, தோழன்மார்களுடன் கன்றுகளையோட்டிக்கொண்டு பிருந்தாவனத்திற்குவந்துசகலகோபாலர்களுடன்இச்சேதிசொல்ல அதுகேட்டு நந்தகோபன் முதலியவர்களிந்த ஸ்ரீகிருஷ்ணன் பிறந்தநாள்முதல் கோகுலத்திலே மகத்தான ஆபத்துகளை அனுபவித்தான் இவடத்திலும் அந்தஆபத்துஒழியவில்லையே இந்தஆபத்துகளுக்கெல்லாம் ஸ்ரீகிருஷ்ணன் தப்பிப்பிழைத்தானல்லவா இனிமேலாகிலும துன்பமில்லாம லிருக்கவேண்டுமென்று பகவானைப்பிரார்த்தித்துமுன்னேஸ்ரீகிருஷ்ணனிடஜாதகபலன் அனேகவிதமா யிருக்குமென்று சொன்னகற்காசாரியர்வாக்கியத்தை நினைத்துக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணனுக்குவருகிற ஆபத்துக்கள் சூரியனைக்கண்டபனிபோலநீங்குமென்று சந்தோஷமா யிருந்தார்கள அப்போதுவனங்களுஞ் செழித்துபசுக்கள இரட்டிப்புபால்கரந்துகொண்டு செழுமையாயிருந்தது,



௰உ-வது - அத்தியாயம்,

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அரிபகாசுரன்றம்மை யதஞ்செய்ததனைக்கேட்டு
அவன்றன்றம்பி
உரியபகாசுரனந்த கிருஷ்ணனையுமுரித்தான்
உறவோர்தம்மை
விரைவினில்பானதமாக்கி வருவனெனக்கம்சனுடன்
விருதுகூறி
வரவவனையுந்துணித்து வானுலகஞ்சேர்த்திட்ட
வயணங்கூறும்

லோகரட்சகரான ஸ்ரீகிருஷ்ணபகவான் மகாபலசாலியாயிருந்த பகாசுரனைச் சம்ஹாரித்ததை அவன்தம்பியாகிய அகாசுரன்கேள்விப்பட்டு வியசனமுற்று கோபமுடையவனாயோசித்து அந்த ஸ்ரீகிருஷ்ணனையும் கோபாலபாலர்கள் யாவரையும்நாசஞ்செய்து விடுகிறேனென்றுகம்சனுடனே சபதஞ்செய்து அவனிடத்தில்செலவுபெற்றுக்கொண்டுவந்தானென்றும், மாயாமூர்த்தியானஸ்ரீபகவான் இந்தத் துராத்மாவாகிய அகாசுரனையும் சம்மரித்தாரென்று சொல்லுகின்றது,

ஒருநாள்காலையில் ஸ்ரீகிருஷ்ணன் இடப்பிள்ளைகளை வேணுநாதத்தினால்கூப்பிட அப்போது சகலரும்நித்திரைதெளிந்து ஸ்ரீகிருஷ்ணனருகில்வர அவர்களோநோக்கி இன்றைக்கு நாமெல்லோரும் வனத்தி லிருக்கவேண்டியிருக்கிறது ஆகாரத்தைசேகரித்துக்கொண்டுவாருங்களென்றுகூறி இராமகிருஷ்ணரிருவருந் தங்கள்கன்றுகளை ஓட்டிக்கொண்டுபோனார்கள் அப்படியேஇடப்பிள்ளைகளும் நானாவித ஆகாரங்களைச்சேகரித்து தங்கள் கன்றுகளையும் ஓட்டிக்கொண்டு நல்லபுல்லுகளுள்ளவனத்துநிழலிலே விட்டுவிளையாடிக்கொண்டிருந்தார்கள அப்போது நவரத்தினங்களாற்செய்த நானாவித பூஷணங்கள் அணிந்துக்கொண்டிருக்கிற ஸ்ரீராமகிருஷணர்கள் தோழன்மார்களுடன் அந்தக்காட்டிலிருக்கிறதுளிர்களையுங்காய்களையும் சிலர்மாலையாகக்கட்டி கழுத்தில்போட்டுக்கொண்டும் சிலர்புஷபங்களினால்அலங்கரித்துக்கொண்டும் சிலர் பூங்கொத்தை தலையிற்சொருகிக்கொண்டும் சிலர் மயில்தோகை அலங்கரித்துக்கொண்டும் சிலர் வெள்ளைக்குன்றிமணி செவப்புக்குன்றிமணிகளை கோவையாககோர்த்து அங்கங்களிலணிந்துக்கொண்டும் யமுனாநதி மணல்திட்டிலே உட்கார்த்து போஜனம்பண்

ணுகையில் பரிகாசமாய் ஒருவனுடைய அன்னத்தைஒ
ருவன் திருடி அவன் கண்டால் கொடுத்துவிடுகிறதும்,
கொஞசதூரம்போய்படுத்து ஒளித்துக்கொள்ளுகிறது
ம சிலர் ஸ்ரீகிருஷ்ணனை ஓடிவந்து சேஷ்டிக்கிறதும்,சி
லர்புள்ளாங்குழல் ஊதுகிறதும். சிலர் அதைப்போலசு
சத்கொட்டுகிறதும், சிலர்மாட்டுக்கொம்பைஊதுகிறது
ம்,பட்சிகளுடைய நிழலை அநுசரித்தோடுகிறதும், அன்
னங்களுக்குச்சரியாய் நடக்கிறதும், மணல் திட்டினில்
கூட்டமாயிருக்கிற கொக்குகளின்நடுவில் உளுக்காருகி
றதும் மயில்களுக்குச்சரியாய் ஆடுகிறதும், சிலர்குரங்
குகளுக்குச்சரியாய மரமேறுகிறதும் அதுகளோடேவி
ளையாடுகிறதும், தவக்களையைப்போலத்தத்தித்தித்தா
ண்டுகிறதும்சிலர்நதிகளிலுந் தடாகங்களிலும்மூழ்கிவி
ளையாடுகிறதும்சலத்திலநிழல்பார்த்துபரிகாசஞ்செய்து
க்கொள்ளுகிறதும், சிலர்தாங்கள கூவுகிறதற்குபிரதித்
தொனிகேட்டால் சண்டைக்குப்போகிறது மிப்படிமிக
வும் ஆச்சரியமான விளையாடல்களைச் செய்தார்கள்.

கேளாய்மகாராசனே பரமயோகீசுரர்களாலும்அடை
வதற்கருமையான ஸ்ரீபகவானை இந்தச்சிறுபிள்ளைகள்த
ங்கள்நேத்திரங்களுக்கு சாக்ஷாத்காரமாக எளிதில் சே
விக்கவும் ஸ்பரிசிக்கவும், ஆலிங்கனஞ்செய்யவும்- கூடி
யுண்ணவும் வேடிக்கையாக யிருக்கவுமான பேற்றைப்
பெற்றார்களே அவர்களைக்குறித்து நானென்னவென்று
தோத்திரஞ்செயவேன்.

அகாசுரன்மலைப்பாம்பாகியது.

இப்படிவிளையாடுகின்ற சிறுவர்களையும்ஸ்ரீபலராமகி
ருஷ்ணர்களையும் கம்சனுக்கினையின்படி வந்து அகாசுர
னனவன்பார்த்து நமபிட சகோதரர்களாகியபகாசுரனை
யும்பூதனையையும்சில மைதுபந்துக்களையுங்கொன்றவன்
இந்த ஸ்ரீகிருஷ்ணனல்லவாவென்று பார்த்து இவனையு
ம்இச்சிறுவர்களையும கன்றுகளையும் ஒருமிக்கவிழுஙகி
நாசஞ்செய்யும்படி உத்தேசித்து பர்வதாகாரமானமலை
ப்பாம்பின்சொரூபத்தை வகித்துகுகையையொத்தநாசி
யையும்வாய்ந்து அகோரமான வாயைத்திறந்து பூமிம
ட்டத்தில்யாவர்களும்நுழையும்படிபடிகளிருப்பதுபோ
லகீழதடும் மேகமண்டலமளாவிய மேலுதடும்மலைச்ச
ந்துகளையொத்த கோரைப்பல்லின் நடுச்சந்துகளும் பர்
வதசிகரம்போன்ற பல்லின் வரிசைகளும் விசாலமார்க்
கமபோலிருக்கிற நாக்கின்பிளப்பும் ஊழிப்பெருங் காற்
றுக்கொப்பாகிய சுவாசஙகளும், எரிகின்ற தீப்போன்ற
கண்களும் விளங்கும்படி இவர்களவருகின்றமார்க்கத்தி
ல் நுழைந்துபோகவழியில்லாமல் படுத்துக்கொண்டிரு
ந்தான் அவனைக்கோபாலர்கள்கண்டு இப்படிப்பட்டஜந்
துவை இதுவரையிற்கண்டதில்லை இதுலோகத்தையெ
ல்லாம் விழுஙகிவிடும்போலிருக்கிறது பகாசுரனைக்கொ
ன்ற சுவாமியிருக்கிறாரென்று பயப்படாமல் அந்தமலை
ப்பாம்பானது இடைப்பிள்ளைகளையும் கன்றுகளையும்விழு
ங்கிப்பின்பு ஸ்ரீகிருஷ்ணனையும் விழுங்கயத்தனமாயிரு
க்கையில் அப்போது ஸ்ரீகிருஷ்ணன்தமக்குத்தோழன்
மார்களாயும் தம்மிடதிருவடிகளைச் சரணமடைந்தவர்க
ளாயுமிருக்கிற இடைப்பிள்ளைகள ஆபத்தைஅடைந்தார்
களே அவர்களைச்சீக்கிரமத்தில்நிவர்த்திசெய்யவேண்டு
மென்றுதிருவுளம்பற்றிஅந்த அகாசுரன்வாயிற்பிரவே
சித்தார் அப்போது சகலதேவர்களும் அகாசுரன்வாயி
ல்ஸ்ரீகிருஷ்ணன் பிரவேசித்தாரே என்னதுன்பம் வரு
மோவென்று விசனப்பட்டுக்கொண டிருக்கையில், அந்
தஅகாசுரன்மெத்தகளிப்புடன் அவர்களைப்புசிக்கயத்த
னித்தான் அவர்களைபட்சிக்கிறதற்குமுன்னமே இவனை
சங்கரிக்கவேண்டுமென்று நிச்சயித்து அவன்வயிற்றில்
விருத்தியடைந்தார், அப்பாலந்தஅசுரன் உள்நுழைந்த
ஸ்ரீகிருஷ்ணன் வளர்தலைப்பொறுக்கமாட்டாமல் நெஞ்
சடைபட்டுகணவிழிபிதுஙகி நாக்கைநீட்டிக்கொண்டுஇ
றந்தான் அப்போது அவன்தலையைப் பிளந்துக்கொண்
டுமுன்னே ஸ்ரீகிருஷணாவந்தார. இடைப்பிள்ளைகளுங்க
ன்றுகளும் அவன்விஷாக்கினியால்வராமலிருக்கையில்
ஸ்ரீபகவான் கிருபைகூர்ந்து கடாட்சித்தார், அந்தப்பார்
வையின் பிரபாவத்தினாலே தொந்தரை நீங்கிவெளியில்
வந்தார்கள். ஸ்ரீகிருஷணனுக்கு விரோதியானாலும்அவ
ர்திருமேனிசமபந்தப் பிரபாவத்தால்சகலபாபமும்போ
ய்அந்தஅசுரனிடத்திலிருந்து ஒரு ஒளிவுண்டாய் ஸ்ரீகி
ருஷணனைபிரதட்சணஞ்செய்து அவரிடத்திலேயே ல
யித்தது அந்த ஆச்சரியத்தை சகலதேவர்களும் பார்த்
துபுஷ்பமாரிசொரிய அப்ஸரஸ்திரீகள் நடனஞ்செய்ய,
கந்தர்வர்கள்கானஞ்செய்ய அப்படிச்சகலவாத்தியங்களு
டன் சுவாமியைத் தோத்திரஞ்செய்து தங்கள் லோகத்
தைஅடைந்தார்கள், இராமகிருஷ்ணாள முதலிய சகல
கோபாலர்களும் கன்றுகளுடன் சுகமாயிருந்தார்கள்,

---

### கந - வது.- அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கோபாலதன்யர்களுங்
கோகுலத்துக்கிருட்டினனுங்குளித்துமூழ்கிப்
பூபாலமன்னவர்போல்
விருட்சத்தின்கீழிருந்துபுராதனத்தைத்

தாபமுடன்புசித்திருககுந்தருணமதிற்
சதுர்முகனுந்தனைமறந்து
பாபமிதென்றென்றுமற்
கன்றினையுஞ்சிறுவரையும்பரித்ததாமால்.

ஸ்ரீகிருஷ்ணபகவானும் கோபால தநயர்களும் குளிர்ந்தநீரோடைகளில் தீர்த்தமாடி எல்லாருமொன்றாகச் சேர்ந்து விருட்சங்களின்கீழ் உட்கார்ந்து தங்கள் தங்கள்சிக்கங்களில்மிகுதியாக வைத்திருந்த தத்தியோ தனங்களை அவரவர்கள் அமுதுசெய்யுந் தருணத்தில் அம்பரவீதியில் நின்றும் ஸ்ரீகிருஷ்ண லீலாநுபவங்களைப்பார்த்துக்கொண் டிருக்கின்ற சதுர்முகபகவான் ஸ்ரீபகவானுடையயோகமாயா விசேஷத்தினால்தன்னைமறந்து இந்தக்கோபால சிறுவர்களையும் கன்றுகளையுங்கொண்டு போயொளித்து ஸ்ரீஸ்வாமியினுடைய லீலைகளைப் பார்த்துக்கொண்டிருந்தானென்று சொல்லுகின்றது.

ஸ்ரீசுகமுனிவர் பரிட்சித்துவை நோக்கி ஸ்ரீகிருஷ்ண சுவாமியின் கதையிலிருக்கிற மதுரமான ரசத்தைஉம்மாலே நன்றாய் அறியப்படுகின்றது, அசத்தா யிருக்கிற விஷயாதிகளில் உம்முடமனதுசெல்லாம லிருப்பதற்கு மெத்தசந்தோஷிக்கிறேனென்று மிகவும்ரகசியமான கண்ணனுடைய கதையைச்சொல்ல ஆரம்பித்தார்

அகாசுரன் வாயினிம்புகுந்து மிகவும் இளப்படைந்திருந்த இடைப்பிள்ளைகளையும், கன்றுகளையும் விசாலமாகியும் மனோக்கியமாகியும் சமீபத்தில்தாமரைப்பொய்கையுடன் மிகவுங்குளிர்ச்சிபொருந்திய யமுனாநதிமணல் திட்டிற்குகன்றுகளை ஓட்டிக் கொண்டும் இடைப்பிள்ளைகளை அழைத்துக்கொண்டும் போய்அந்த இடைப்பிள்ளைகளை நோக்கி ஸ்ரீகிருஷ்ணன் ஒருவார்த்தை அருளிச்செய்கிறார் நாமெல்லாரும்இவ்விடத்தில் போசனம்பண்ணுவோம்நீங்கள் கன்றுகளுக்குத் தண்ணீர்காட்டிகுளிப்பாட்டி சமீபத்திலபுல்லுள்ளவிடத்தில் மேயவிடுங்களென்று ஆக்கியாபிக்க அவ்வண்ணம் செய்துகோபாலபாலர்களும் மணற்குன்றில் தங்கள் சிக்கத்தி லிருக்கிற நானாவிதஅன்னங்களைக் கையி லெடுத்துக் கொண்டு ஸ்ரீகிருஷ்ணனுக்கு நாலுபக்கத்திலுந் தாமரைக் காயைச்சுற்றின இதழ்போல சூழ்ந்துக்கொண்டு அவருடைய முகத்தைப்பார்த்தும் சிலர் அன்னங்களைப்புஷ்பஇதழ்களில் வைத்தும்சிலர் இலைகளிலும் சிலர் மாந்துளிமுதலியவைகளிலும் இப்படிநானாவித பாத்திரங்களில்அன்னங்களைவைத்துக்கொண்டு வெகுகளிப்புடன் போஜனஞ்செய்தார்கள், பின்புஸ்ரீகிருஷ்ணன் தம்முடைய திருக்கையிலிருக்கிற பிள்ளாங்குழலைஅரையிற சொருகிஇடதுகட்கத்தில் வஸ்திரமும்வளைதுகிற மாட்டுக கொம்பும் இடதுதிருக்கையில் தத்தியோதனத்தையும் வைத்துக்கொண்டு சமஸ்தகோபாலர்கள் நடுவிலிருந்து பரிகாச வார்த்தையால் அவர்களைச் சந்தோஷப் படுத்தி பிராகிருத சிசுவைப்போல போசனம்பண்ணுவதை சகலதேவர்களும் ஆகாயத்திலிருந்துபார்த்து ஆச்சரியப்பட்டுக்கொண்டிருந்தார்கள்,

அந்தச்சமயத்தில் எதிரில்மேய்ந்துக்கொண் டிருந்த கன்றுகள்மறைந்துவிட்டன கோபாலர்கள் அந்தக் கன்றுகளைக்காணோமென்று நடுங்கிபோசனம் பண்ணத்தோணாமல் விசாரப்படுகிற சிறுவர்களைநோக்கி ஸ்ரீகிருஷ்ணன் அருளிச்செய்கிறார் நீங்களொன்றுக்கும் வியசனப்படவேண்டாம் உங்கள்கன்றுகளைநான்ஓட்டிக் கொண்டு வருகிறேன் நீங்கள்பயமில்லாமல் போசனஞ் செய்யுங்களென்று சமாதானம்பண்ணிக் கண்ணன் கையிலிருந்த தத்தியோதனத்திற் பாதிபோஜனஞ்செய்து மற்றபாதியை கையிலேதானேவைத்துக்கொண்டு அந்த வனமெல்லாங் கன்றுகளைத்தேடிக் காணாமல்திரும்பவும்போஜனஞ்செய்தவிடத்திற்குவந்தார். அவ்விடத்தில பிள்ளைகளொருத்தருமில்லை அப்படியிருக்கையில் பிரம்மதேவரானவர் அந்தக்கன்றுகளையும்இடைப்பிள்ளைகளையும் மறைத்துவைத்தால் கண்ணன் திருவிளையாடலைப் பார்க்கலாமென்று பர்வசருகையில் அடைத்து விட்டு அந்தரத்தானமாய்ப்போனார் அப்போது சுவாமியானவர் கன்றுகளும்இடைப்பிள்ளைகளும் எங்கே போனார்களோவென்று ஆலோசித்து இதுபிரம்மாவி னுடைய காரியமென்று தெரிந்துக்கொண்டு இந்தக்கன்றுகள் போகாமற்போனால் பசுக்கள்பால்கறவாதே பிள்ளைகள் போகாவிடில் அவர்களின்தாய்தந்தைகள் கோபிப்பார்களேயென்று எத்தனைப்பிள்ளைகள் தமக்குத்தோழன் மார்களாகவிருந்தார்களோஅத்தனை பேர்களையுங் கன்றுகளையும் அங்கபேதமில்லாமலும் வயதிலும்அளவிலும்வண்ணத்திலும் குறியிலும்-நடையிலும்-பேச்சிலும்- தொனியிலும் வஸ்திரபூஷணம்முதலாகியதுகளிலும் எவ்வளவேனும் வித்தியாசந்தோன்றாமலும் கன்றுகளையும் அப்படியேஒன்றுலொன்று குறைவின்றிநூதனமாய் சிருஷ்டிசெய்து அந்தப்பிள்ளைகளோடேதாமும்விளையாடி கன்றுகளையும் ஓட்டிக்கொண்டு வீட்டுக்குப் போனாரென்று அருளிச்செய்கிற சுகமுனிவரைநோக்கி பரிச்சித்துமஹாராசன்கேட்கிறார் இடைப்பிள்ளைகளையுங்-கன்றுகளையும் ஆருடையஅம்சமாய் சிருஷ்டிசெய்தார் இவர்களைச் சிருஷ்டிசெய்தபின்பு பிர்ம்மதேவனால் அபகரிக்கப்பட்ட இடைப்பிளளைகளுங் கன்றுகளும் என்னகதியானார்கள்- அதுகளைவிஸ்தரித்தருளிச்செய்யவேண்டுமென்றுவினவுகிற அரசனைநோக்கி சுகமுனிவர் அருளிச்செய்கிறார்.

கண்ணபிரான் தான் கொஞ்சகாலங் கோபாலர்களாயுங் கன்றுகளாயு மிருக்கவேண்டுமென்றுதிருவுள்ளங்கொண்டபடியே அந்தஉருவமாகவுமானார், பிர்ம்மதே

வனும் மறைத்துவைத்திருக்கப்பட்ட கோபாலர்களுங் கன்றுகளும் மலையின் குகையில் சலத்தின்தன்மையாயிருந்தார்கள் கண்ணனும்தம்மிட அம்சமாயிருக்கிற இடைப்பிள்ளைகளோடே மாயாசொரூபமான கன்றுகளையும்ஓட்டிக்கொண்டு ஊருக்குச் சமீபத்தில் வரும்போது தங்கள்தங்கள் புல்லாங்குழல்களை ஊதினார்கள் அவ்வோசையைக்கேட்ட அவரவர்களுக்குரிய தாய்தந்தைகள்வெளியில்வந்து பார்த்துக்கொண்டிருந்தார்கள அப்போது தங்கள் தங்கள் கிரகங்களில் கன்றுகள் தானே போய்ச்சென்றன கோபாலசிறுவர்களுந்தாமேசென்றார்கள் அந்தப்பிள்ளைகள்வரவைக்கண்ட தந்தைகள் ஆலிங்கனஞ்செய்துகொண்டும் தாய்மார்கள்பிள்ளைகளை அதிக அன்புடன் எதிரோடிவந்து கட்டிக்கொண்டு உச்சிமுகர்ந்துமடியினில்வைத்து முலைகொடுத்து அவர்களுக்கு மங்களஸ்நானஞ்செய்து திலகமிடுதல் தலைவாரிக்கொண்டைமுடித்தல் திருஷ்டிசுற்றல்தண்டைசதங்கை முதலிய ஆபரணங்கள்அணிந்து உபசாரங்களோடே போசனஞ்செய்வித்து இப்படிநாளுக்குநாள் தங்கள் தங்கள்பிள்ளைகளின்பேரில் அன்புவிருத்தியடைந்தவர்களாயிருந்தும் அவர்கள் ஸ்ரீகிருஷ்ணனோடே கலந்துவிளையாடிக்கொண்டிருந்தார்கள், இப்படியே பசுக்களுந் தங்கள்கன்றுகளைக்கண்டு ஓடிவந்து முகர்ந்துசரீரமெல்லாம் நக்கி பாலைஉண்ணக்கொடுத்து மிகவும் அன்போடிருந்தனகள்.

இப்படிஒருவருடம்வரையில் நடந்துகொண்டிருந்த பின்பு ஒருநாள்பலபத்திரன் சகலஇடையர்களோடே கோவர்த்தனபர்வதத்தில் பசுக்கள் யாவையும்ஓட்டிமேய்த்துக்கொண்டிருக்கையில் அப்போது, சமஸ்தபசுக்களும எருதுகளுடன் எக்காளம்போட்டுவாலைஉயரத்தூக்கிக்கொண்டு ஓரோபாய்ச்சலாக இடைச்சேரி அருகில் மேய்த்துக்கொண்டிருக்கிற கன்றுகளருகில் வருகையில் கோபாலர்கள் யாவருங்கூடியவரையிலோடிவந்துபார்த்து பசுக்களைநிறுத்தமாட்டாமற் போனார்கள்அந்தப் பசுக்கள் கன்றுகளைமுகந்து பார்த்து நக்கிக கொடுத்து மடிகொள்ளாமல்சுரந்து கீழேவிழுகிற பாலை ஊட்டக்கொடுத்துக்கொண்டிருந்தனகள் அப்போதுகோபாலர்கள் மிகவும்இளைப்படைந்து கொஞ்சம்வெட்கத்துடன் இடைச்சேரிக்குச் சமீபத்தில் கன்று மேய்த்துக்கொண்டிருந்தபிள்ளைகளிடத்தில் வந்துநீங்கள் சமீபத்தில் கன்றுமேய்த்திருந்தமையால் பசுக்கள்ஓடிவந்ததென்று கோபித்துக்கொண்டு அருகில்வர அவர் கோபந்தணிந்து சந்தோஷத்துடனே பிள்ளைகளைக் கட்டிக்கொண்டு மடியில்வைத்து உடம்பின் தூசியைத் துடைத்து முத்தமிட்டு உச்சிமுகந்து ஆனந்தமடைவதை பலபத்திரன்பார்த்து இதென்ன ஆச்சரியமென்று இந்தக்கன்றுகளிடத்தில் பசுக்களிருக்கிற அன்பும் பிள்ளைகளிடத்தில்கோபாலர்களிருக்கிறவிசுவாசமும்சரியானதாயிருந்தாலும் ஸ்ரீமந்நாராயணன் அம்சாவதாரமாயிருக்கிற கண்ணபிரானிடத்தில் எனக்கு சிநேகம் விருத்தியடைவதுபோல இந்தஇடைப்பிள்ளைகளிடத்திலுங்கன்றுகளிடத்திலும் சிநேகம்விருத்தியாகிற படியால் இவர்களெல்லாரும் பகவதம்சமாயிருக்கவேணுமென்று நிச்சயம்பண்ணி யோகத்தினாலுணரும்போது அத்தனைபேரையும் ஸ்ரீகிருஷ்ணனாகவேகண்டார்.

பின்புபலராமன் ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியினிட சமீபஞ்சென்று தேவரீருடைய பிரபாவத்தை சனகாதிகளுங்கூட அறியமாட்டார்கள், தேவரீர்மாயையால் அடியேனுமிவ்வளவுகாலம் மோகத்தை அடைந்திருந்தேன்,இப்போதேவரீருடைய கிருபா பிரபாவத்தாலே மோகந்தெளிந்து உம்மிடமகிமையைக் கண்டேனென்று தோத்திரஞ்செய்கிற பலபத்திரனைப்பார்த்து தான்சர்வசொரூபியாயிருப்பதையும் அதினுடைய காரணத்தையும் அவருக்குச்சொல்லி மற்றகோபாலர்களுடன்சந்தோஷப்பட்டுக்கொண்டிருக்கையில் பிரம்மாவானவர் பார்த்து நாம்ஒளித்துவைத்தகன்றுகளும்இடைப்பிள்ளைகளும்வெளியில்வந்து விட்டார்களோவென்று ஆச்சரியப்பட்டுஓடிப்போய்மலையின்குகையில் பார்க்கையி லதுகள்அங்கிருக்கக்கண்டுதிரும்பியும்வந் திவர்களைப்பார்க்கிறபோது வயதுரூபம் பூஷணங்கள் ஈடத்தை யெல்லாம் சரியாயிருக்கக்கண்டு இதென்ன ஆச்சரியமென்று யோசனைசெய்து ஒன்றுந்தோணாமலிருந்துஉடனே ஸ்ரீபகவானுடைய கிருபையால் அந்தச்சிறு பிள்ளைகளையுங் கன்றுகளையும் நீருண்டமேகம்போலிருக்கிற சரீரத்துடன் திவ்ய பீதாம்பரமணிந்து நான்குபுஜத்துடன் சங்குசக்ர முதலிய திவ்யாயுதங்கள் கிரீடகுண்டலமுதலிய ஆபரணங்கள்தரித்து ஸ்ரீவத்சமென்கிற மருவுடன்சூரியனுக்கொப்பான காந்தியுடையவர்களாகவே தியானதிருஷ்டியிற் கண்டு ஆனந்தபரவசராய் மெய்ம்மறந்துதெளிந்து அன்னவாகனம்விட்டிறங்கி சொர்ண தண்டத்தைக் கீழே போடுவதுபோல் சாஷ்டாங்கமாகச் சம்மிடநான்கு சிரசிலிருக்கிற கிரீடமணியை ஸ்ரீகிருஷ்ணனிட திருவடிகளில் பொருந்தவணங்கி அஞ்சலி அஸ்தனாய் தோத்திரஞ்செய்கின்றார்,

## ௧௪-வது-அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்,

புரித்திடும்பிரமதேவன் பாலர்கன்றுகளின்சீரைத்
தெரித்திடச்சக்தியற்றுத் தேவகிபுதல்வன்றன்னைக்
கரிதனைக்காத்தமாயாகண்ணனேயண்ணவென்று
பரிவுடன்தோத்தரித்துவிளம்பியஸ்துதியிதாமால்.

சிருஷ்டிகர்த்தாவாகியபிரமதேவன் தம்மாலடைக்கப்பட்டிருக்கிற கோபால சிறுவர்கள்கன்றுகளைக் குறித்தும்இப்போது ஸ்ரீபகவதம்சங்களாககோபகுமாரர்கள்கன்றுகளிதுகளைக்குறித்தும் காரணம்நிச்சயமாக அறிதற்குச்சக்தியற்றவராய் ஸ்ரீகிருஷ்ணபகவானைப் பரமவைதிகவேதாந்தநிர்ணயார்த்தவிசேஷங்களால் ஸ்துதிசெய்தார்

வாரீர் நீலமேகஸ்வரூபரே பீதாம்பரத்தையும் குருவிந்தமணிகளிழைத்த கர்ணபூஷணதி மகரகுண்டலங்களையும் மயூரபிஞ்சங்கள் முதலியசிரோவாபாபரணங்களையும், சுகந்தபரிமள புஷ்பமாலிகைகளையும் அணிந்து முகாரவிந்தத்தில் விளங்கும் அர்த்தசந்திராகார லலாடத்தில்கஸ்தூரிதிலக ஊர்த்வபுண்டரத்திற்குச் சிகரத்நம்போலப் பிரகாசிக்கும்படி முன் னெற்றிச்சுட்டியைத்தரித்துபுள்ளாங்குழல்முதலியவற்றை இடையிற்சொருகிமதுரமாகியவாசனை வீசுகின்றதிருத்துழாய்மாலையைத்தரித்துத் திருவடித்தாமரைகளில் சதங்கைகள் சாமகானஸ்வரம்போலச்சப்திக்க, லீலாமானுஷ விக்ரஹராய்இளங்கன்றுகளைக்காணமல் தேடுகின்ற சாமான்யச்சிறுவனைப்போலபிருந்தாவன மார்க்கங்களில் சஞ்சரித்துக்கொண்டிருக்கிற உம்மை நமஸ்கரிக்கிறேன்.

பூபாரநிவாரணஞ்செய்துதர்மங்களைஸ்தாபித்துச் சாதுஜனங்களைச் சந்தோஷிப்பித்துச்சகலபுவனங்களையும் இரக்ஷிப்பதற்காகவும,சிருஷ்டி ஸ்திதிஸம்ஹாரகர்த்தாக்களான எங்களை அநுக்ரஹிப்பதற்காகவும், ஸ்ரீமஹாபாகவதர்களை இரக்ஷிக்கும்படி திருவவதரித்த அவதாரபரமரஹஸியங்களை அறிந்தநுபவிக்க பரமயோகீந்திரர்களுக்கேயுரிமையாயல்லாமல் அடியேன்முதலிய லோகேசர்களுக்குத்தரமாகுமோ, வேள்விமுதலிய தானதர்மங்களைச் செய்து ஜனித்தபுண்யபுருஷர்கள் ஸ்வர்க்கமடைந்துசுகானுபவங்களை யநுபவித்து மறுபடியும்பிரபஞ்சத்தில்ஜன்மித்துப் பாக்யவந்தர்களா யிருப்பார்களேயல்லாமல் உமது மாயாகுணவிசேஷங்களை அறியத்தகுந்தவர்களாவார்களோ உமதுபரமகிருபையால்ஜன்மாந்தரங்களில்மஹாபுருஷர்களாயிருந்து ஸ்ரீபாகவதாபிமானத்தையுடையவர்களாய் ஜனித்தமகாநுபாவர்கள்சர்வவிசேஷ தருமங்களை யுணர்ந்து சார்வகாலமும்ஸ்ரீபகவத்குணங்களை யநுபவஞ்செய்து நிரபேட்சர்களாய் வேதோக்த கிரமமாகச் செய்த சர்வ கர்மங்களையும் ஸ்ரீகிருஷ்ணார்ப்பணஞ்செய்து சகலமந்திராதிதேவதைகளாலும் அடியேன்முதலியலோககர்த்தாக்களாலும்,மதிக்கப்பெற்றுஸ்ரீபகவானகிய தேவரீருடைய கல்யாணகுணவைபவங்களை யறிந்துப்ரம்மாநந்தத்தையநுபவிப்பதுமன்றி தேகாந்தியத்தில்பரந்தரமவிபவைஸ்வரியங்களையும் அடைகின்றார்கள். ஸ்ரீவிபுவே உம்மை மகான்களாகியும், சத்வக ஞானிகளாகியும், இருக்கின்ற ஸ்ரீமகாபாகவதர்கள் காம்யமானபொருபுருஷார்த்தங்களையுங்கோராமல் உம்முடையதிருவடிகளையேசரணமாகவடைகின்றார்கள். புண்யபல சித்திகளைக்கோறினசிலவான்களாகிய சிலர் தான்யப்பொட்டுகளை மந்தநுத்தசஸ்யராசிகள் தங்களுக்குலபிக்குமயர்ச்சிசெய்கிறதுபோல சத்தகர்மங்களை யாசரித்து மகா மனவருத்தங்களைக்கொண்டு உம்மையன்றி யிதரதேவதைகளால்காம்யமாகியஸ்வல்பபலனை யடைந்து மனதுக்கு சமாதானசுகத்தை யடைகின்றார்களேயல்லாமல் ஸ்ரீபகவத்ப்ராப்திசித்திக்கவிரும்புகிறதேயில்லை ஸ்ரீஅச்சுதரே இந்தப்பிரபஞ்சத்தில் பூர்வம் பலசித்திகளைக்கோறின அநந்தம்யோகிகள யோகாப்பாசங்களைச் செய்து இச்சைப்படி புருஷார்த்தங்களையடைந்து ஞானயோகங்களை யடையாமலிருந்துபின்பு சத்புருஷசகவாசங்களினல் அநந்தமானசகர்மங்களைக் கைங்கரியார்த்தமாகத் தேவரீருக்கு ப்ரீதிசெய்துஅதனல் ஸ்ரீபகவத்பக்தி ஜனிக்கப்பெற்று உடனே வேதோக்தமான பரம வைதீக ஞானத்தைக் கொண்டு ஸ்ரீபகவத்ஸ்வரூபத்தை அறிந்தனுபவித்துத் தக்ஷணத்தில்ப்ரம்மாநந்த வைபவாநிசயமான உமதுதிவ்ய பரந்தாமமாகிய உத்தமகதியையடைகின்றார்கள். ஸ்ரீவைகுண்ட நிகேதனராகிய ஸ்ரீஅநந்தரே பரமமுனீந்திரர்கள் அடுத்துசேவிக்கத்தக்ககல்யாண குண மகாமகிமைகளையும்வேதவேதாந்த சூத்திரங்களாலும் அறிந்தனுபவித்துச்சேவிக்கத் துர்லபமாகிய ஸ்வரூபாதி சயங்களையும் உள்ளவராகிய உமக்கு நமஸ்காரஞ்செய்கிறேன்.

வாரீர் அகிலபுவன கர்த்தாவாகிய பரிசுத்த தத்வநிச்சயத்ரிகாலவேதிகளான மகாவித்வஜனங்கள் அந்தஜன்மார்ச்சிததபோபலத்தினல் மனதைக்கொண்டுஒருகாலத்தில் இப்பூமியிலுண்டாகின்ற பூரேணுக்களையும்ஆகாயத்திலுண்டாகின்ற பனித்திவலைகளையும்க்ரகநட்சத்ராதிகணங்களின் பிரகாசங்களினுடைய பரமாணுக்களையும்அறிந்து அளவிடச் சக்திகொண்டபோதிலும் உமது திவ்யாவதாரங்களின் ரகசியங்களை யறியச் சக்திகொள்ளமாட்டார்கள் இப்பிரபஞ்சத்தில் அவதரித்த மகாநுபாவர்களாகியபுண்யசாலிகளாயிருக்கிறபரமபாகவதோத்தமர்கள் ஸ்ரீபகவத்ஸ்வரூப பரமார்த்த நிச்சயத்தையுணர்ந்து நிஷ்காமர்களாய் இச்சையற்றுஸ்வரூபதர்மமானசகல கைங்கரியங்களிலீடுபட்டு புண்யசாலிகளாய் உமது திருவவதாரமகிமைகளை யுணர்ந்து ஆநந்தித்துமகாபுருஷார்த்தமான பரகதியை யடைவதற்குயோக்கியர்களாகின்றார்கள்.

ஜகந்நாதராயும் பரமாத்மாவாயுமிருக்கின்றதேவரீரிடத்தில் எனது தபோபலத்தினற் பெற்றுக்கொண்ட இந்த அண்டாதிபத்தியகர்வத்தினல் என்னைமறந்து உமது மகிமைகளையறியாமல் வியர்த்தமாய் எனதுசாமர்

த்தியத்தை என்னையனுகிய தேவரீரிடத்திலேயே பிரயோகித்து அபராதஞ்செயதேன், அதைத்திருவுளத்திற் கொள்ளாமல் சேகவனிடத்தில பிரபுவைப்போலும் சிஷ்யனிடத்தில் ஆசாரியனைப்போலும்புத்திரனிடத்தில் பிதாவைப்போலும் க்ஷமித்து ரட்சிக்கவேண்டும்,

இவ்வண்டகோடிகளில் ஒவ்வோரண்டத்திற்குள் அநந்தஸ்வரூபங்களுண்டாயிருக்கின்ற அந்த ஸ்வரூபங்களுக்குள்ளே ஒருஸ்வரூபத்தை யுடையவனாயிருக்கின்றஅடியேன் உமதுவிஸ்வாகார பரிமாணம்சங்களில்பரமாணுவுக்குநிகராவேனே ஸ்வாமீ அடியேன்செய்த அபராதத்தைத் தேவரீரேட்சமித்துத் தேவரீருடையகிருபைக்கும்பாத்திரனாக அடியேனை ரட்சிக்கவேண்டியது ஸ்ரீபத்மகர்ப்பரான லோகாராட்டியரே இப்பிரபஞ்சாதமகமான ஸ்தூலங்களுக்கெல்லாம் மகாஸ்தூலஸ்வரூபியாகியும் தேவரீர் மகாப்பிரளயகாலத்தில் என்னையும் கௌரீதயிதர்முதலிய லோகேசர்களையுமசாவவுலகங்களையும் சர்வசக்தியிலே லயிக்கச்செய்துலோககுருவாய் ஒன்றுமறியாதவனைபபோல மாயாஸ்வரூபராய் அந்தப்பிரளயஜலத்தில் வடபத்ரசயனராய் விஹரித்துநாரங்களையாஸ்ரயித்து அவற்றையே அயனமாகஉடைத்தாய் ஸ்ரீமந்நாராயணனென்று நாமதேயத்தையுடையவராய் என்னையும் லோகேசர்களையும்சர்வவுலகங்களையும்யதாப்பிரகாரம்விளங்கச்செய்து எனக்குஹிரண்யகர்ப்பநாமதேயம்சத்தால் பத்மகர்ப்ப அஜப்பிரம்ஹ சதுர்முகாதிநாமகாணங்களைத் தந்தீர் ஓசதுர்முகப்பிதாவான ஐயனே இந்தப்பிரபஞ்சத்தில் குழந்தையைக்கர்ப்பத்திலே தாங்கிய தாயானவள் சிசுவானது சலிக்கின்றகால பக்குவங்களில் ஒருவேளையுதறிக்கொண்டால் அதனது பதஸ்பரிசத்தைக் குறித்துத் தன்னையுதைத்ததென்றுகுற்றமாகநினைத்து வெறுக்கமாட்டாளே, ஆதலால்அந்தத் தாயைப்போலத் தேவரீருமடியேன்செய்த அபராதங்களை க்ஷமித்தருளவேண்டும்தேவரீர்என்னைஉமதுநாபிக்கமலத்திற்சிருஷ்டித்தீர அப்போதுநான் அந்தநாபிக்கமலத்தில் நின்றும்ஒன்றையுங்காணமல்வெகுகாலவரைக்கும்கீழும்மேலும் அலைந்துஉலாவி யுழன்றுசுழன்றேன்.

ஸ்ரீ யோகீஸ்வரேஸ்வரரே உமது அசிச்சாமாத்திர யோகமாயாசங்கல்பத்தினால் சர்வவுலகங்களையுஞ்சிருஷ்டித்து அவற்றினுள்வ்யாபித்துச் சர்வமுரந்தாமாய்சர்வப்பிரபஞ்சங்களையுந்தம்முள் வஹித்துத தாமவற்றினுட்பிரவேசித்து ஏகராய்ப் பரமாணுஸ்வரூபங்களுக்கெல்லாம்சூட்சமாகாரராய் நித்யராய்விளங்குகின்றீர உமது கிருபையால் சிருஷ்டியாதியில் என்னைக் கடாட்சித்துச் சர்வவேதங்களையும எனக்குஉபதேசித்து உம்முடைய விராட்ஸ்வரூபமகிமைகளை தரிசிக்கச்செய்தீர், அதுபோலஇந்தஅவதாரத்தில் ஸ்ரீவசுதேவதேவகி தேவிகளான தம்பதிகள் உம்மைப் பிள்ளையாகப் பெற்றுக்கொள்ளச செய்ததுமல்லாமல் அவர்கள் உமதுநிஜஸ்வரூபசேவையைக்கண்டு சேவிக்கவும்கிருபைசெய்தீர். அவர்களேமிகுந்த பாக்கியவான்கள் மேலும் ஸ்ரீயசோதாப்பிராட்டிஸமஸ்த ப்ரபஞ்சங்களையும் உமதுநாபிக்கமலத்தில்கண்டுதுதித்து ஆனந்தத்தையடையும்படியருள்செய்தீர், ஆகையினால் இப்படிப்பட்ட உமதுபிரபூர்வாதிசயங்கள்யாவராலுணரத்தக்கது.

ஸ்ரீபரமாத்மாவே இந்தபிரந்தாவன புண்யட்சேத்திரத்திலநீர்ஏகராய் வசித்தீர்நிமிஷத்தில் நிகிலகோபாலபாலர்களாயும் கன்றுகளாயும் ப்ரகாசித்தீர் பின்னும் சர்வஸ்ரூபங்களும் தேவரீராகவேகண்டு சேவிக்கச்செய்தீர் பிறகுயதாப்பிரகாரம் யசோதாப் புத்திரனைப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றீர்,

ஸ்ரீஅநந்தஸ்வரூபாத்மகமானபரமாத்மாவேவிவேகஈனர்கள்தங்கள் அக்ஞானத்தினால் எதிரிலேசென்றும்பழுதையைச் சர்ப்பமென்று பிரமித்து ஞானசிலர்களுடையஅருளைப்பெறாமலும் பழுதையென்று யதார்த்தத்தை யுணராமலும் சர்ப்பப்பிரமை நீங்காமலுமிருக்கிறதுபோல ஸ்ரீபகவானாகிய உம்முடைய ஸ்வரூபதர்மங்களையறியாதவர்களாய் அநித்யமாகவிளங்கும் இப்பிரபஞ்சங்களை நித்தியமாகநினைத்தும் ஜனனமரணாத்மகமான இந்தச்சரீரங்களையே தங்களுக்கு ஆத்மமாகவும் சரீரபோஷணாதி கிருத்தியங்களே புருஷார்த்தமாகநினைத்தவர்களாயும் தங்களாத்மாவையே பரப்பிரம்ஹமாக நினைத்துச் சம்ஸாரபந்தமேமோட்சமாகி அடையத்தக்கவர்களாயுமிருக்கின்றார்கள் அவர்களைப்போல மூடத்வங்களையனுசரித்து அடியேன்என்னென்று சொல்லுவேன். வாரீர் சௌலப்பியராகிய ஸ்ரீபுருஷோத்தமரே-இந்தப்பிரபஞ்சத்தினுள் ஸ்ரீபிருந்தாவனப்பிரதேசங்களில் வாசஞ்செயதுகொண்டிருக்கின்ற பாக்கியங்களை யோசிக்குமளவில் இந்தகோபாலர் கோபிகைகளாகள இவர்களுள்ஒருவருடைய ஸ்ரீபாதரேணு கிடைக்குமாகில்நானும்மற்றுள்ள தேவதைகளும்அளவில்லாதபாபங்களைச்சம்பாதித்த புருஷர்களும் மற்றவைகளும் ஜன்மசாபல்யங்களையடைந்து முக்தியைக்கொடுக்கத்தக்கினபுண்யசாலிகளாய்விடுவோம்உமதுஇவ்வப்ஸ்வரூபத்தைக்கொல்லநினைத்து மாயாரூபமாகிவந்த பூதனைமுதலிய அசுரஜனங்களைச் சம்ஹரித்து அவர்களைக் குலகோத்ராங்களுடனேபக்தர்களுடைய கூட்டத்திலே சேர்த்து ஸ்ரீமகாபாகவதர்கள் அடையத்தக்கஉமது சாருப்பியபதவியை அடையச்செய்தீர்.

வாரீர் சர்வலோக கர்த்தாவான எனதையனே ஸ்ரீகிருஷ்ண குணங்களாகிய மஹிமாதி சயயோக மாயா சேஷ்டித உமது பால லீலாகுண சமர்த்தியாதிரவணந்சரத்தில் யதுவம்சமாகிற தடாகத்தில் உமது பக்த

ஜனங்களினுடையமுகங்களாகிய தாமரைப்புஷ்பங்களை மலரச்செய்யும்படி ஸ்ரீவசுதேவதேவகி கர்ப்பமாகிறபர்வதசிகரத்தில் நின்று முண்டான சூரியபகவானேஸ்ரீபரமபாகவதசத்கோஷ்டிகளாகிற சமுத்திரத்திற்குசந்தோஷங்களை யுண்டுபண்ணும்படி நந்தகோபக கிரகமாகிய ஆகாயத்தில் உதயமாய்வருகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானாகிய பூரணச்சந்திரனே உம்மைநமஸ்கரிக்கிறேன்ஸ்வாமி உமக்குநான்செய்த அபராதங்களைக்குறித்துஎனது பிரம்ஹகல்பரியந்தம் உம்முடையநாமஸ்மரண பூர்வகமாக உமக்குஅனந்த நமஸ்காரங்களைச் செய்கிறேனென்று ஸ்துதிகளைச்செய்தார், கேளீர்பரிக்ஷித்து மகாராசனே இவ்விதமாய் ஸ்ரீசதுர்முகனானவர் ஸ்துதி பூர்வகமாகப்பூசித்து ஸ்ரீபகவானுடைய திருவடித் தாமரைகளுக்குச் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து முன் தாம்வஞ்சித்த காலத்திலிருக்கப்பட்டமணற்குன்றுகளின்மேல் கோபாலகுமாரர்களையும் மேய்த்திருந்தவிடத்தில் கன்றுகளையும்விட்டுவிட்டுச் சமஸ்தமானரிஷிகணங்கள் முதலியயாவரும் ஸ்துதிக்கத்தமது சத்தியலோகத்திற் கெழுந்தருளினார்,

கேளாய்சுகிர்தவானாகிய மகாராசனே அப்போது இந்தக்கோபால சிறுவர்கள தங்கள் தங்கள்திவ்யகரங்களில் ஒருவருஷத்திற்கு முன்னேந்தின தத்யோதன கவளங்களை அப்போது தான்வைத்ததுபோல எண்ணமுடையவர்களாய்த் தங்களுக்கு நற்றுணைவரான ஸ்ரீகிருஷ்ணபகவானை யன்றிப்போசனஞ்செய்ய மனமில்லாதவர்களாய் ஸ்ரீமகாபாகவதர்கள் தங்களுக்குக் கிடைத்த ருசிவர்க்கங்களை ஸ்ரீமாத வார்ப்பிதமாக்காமல் புசியாதவர்களாயெப்படியிருப்பார்களோ அவர்களைப்போல சும்மாவிருந்து ஸ்வாமிவருகின்ற திசையைநோக்கி எங்களுக்குள்ள பிராணசகாயசீக்கிரமாய்வரும சகலகன்றுகளும் யதாஸ்தானமடைந்துசேர்ந்து இதோ சமீபங்களில் மேய்ந்துக்கொண்டிருக்கின்றதென்றுசொல்லி அழைத்தார்கள் அப்போதுபிர்ம்மாவினால் வஞ்சித்துவிடப்பட்ட கன்றுகள சமீபத்திற் மேய்ந்துக்கொண்டேவருமபடியாய் ஓட்டிக்கொண்டுபின்னேவந்த ஸ்ரீபகவானும அதிபிரியத்துடன் புன்னகைகொண்டு கன்றுகளைமேயவிட்டுவந்து அந்தப்பிர்ம்ஹாவினால வஞ்சித்துவிடப்பட்டவர்களாயிருக்கிற கோபாலதனயர்களிடஞ்சேர்ந்து அவர்கள சொல்லும் உபசாரங்களையங்கீகரித்துச்சம்பிரமவார்த்தைகளை வசனித்துக்கொண்டு சந்தோஷித்தராய்ப்போசனஞ்செய்தார்பின்பு அந்தகோபாலகுமாரர்களும் போசனஞ்செய்தார்கள்.

கேளாய்மஹாராசனே, அந்தமகாபுண்யசாலிகளான கோபாலகுமாரர்கள் தங்களுக்குப்பிராணேசரானஸ்ரீகிருஷ்ணபகவானைப்பிரிந்தஒருசம்வத்ஸரகாலமும் அரைக்ஷணகாலமாகக்கழிய ஸ்ரீபகவானுடைய மாயமையினால் மயங்கினின்றார்தோற்றாமலிருந்தார்கள் அவர்களப்படியிருந்ததும் ஆச்சரியமல்ல ஓ அரசனே ஸ்ரீகண்ணபிரானானவர் எல்லாரும்போசனஞ்செய்தானபின்பு கோபாலர்களைஅழைத்துக்கொண்டு கன்றுகளைமேய்த்துக்கொண்டு அங்கங்கேயிருக்கிறகுளிர்ந்தசோப்புகளிலும் வெண்மணற்குன்றுகளிலும் நதிதடாகதீர்த்தங்களிலும் சம்பிரமத்துடன்விளையாடி யதாஸ்தானமாகிய ஸ்ரீபிருந்தாவனத்தில் வந்துசேர்ந்துவேடிக்கையாகலீலைகளைச்செய்துக்கொண்டிருந்தார்கள். அப்படியிருக்கிறசமயத்தில் ஸ்ரீஇருஷிகேசரானவர் அந்தச் சிறுவர்களுக்கு ஒருகுகையைப்போல வுலர்ந்திருக்கின்றஅம்மலைப்பாம்பின் சரீரசமர்த்தைககாட்டி விளையாடிக்கொண்டிருந்தார்- சூரியாஸ்தமான காலம்நேரிட்டது கன்றுகளைச்சேர்த்துக்கொண்டு ஸ்வாமியினுடைய உத்தரவின்படித் திரும்பினார்கள். அத்தருணத்தில்ஸ்ரீபகவானானவர் மயிற்றோகைகள் நானுவிதங்களான புஷபமாலைகள் திருத்துழாய்மாலைகளையணிந்துவேணுவைப்பவளம்போன்றதிருவதரத்தில் வைத்துக்கொண்டெழுந்தருளினார் அவருடன்ஸ்ரீபகவானைச்சிலாகித்துஸ்துதிசெய்துக்கொண்டு சிறுவர்களுமவந்தார்கள். அப்போது லோக குருவாகிய பரமாசாரியனா மஹாபாவனர்களாகிய பிரியசிஷ்யர்கள் ஸ்ரத்தாபக்திவாத்ஸல்யத்துடன் சூழ்ந்துவருகின்றதுபோல இந்தக்கோபாலபாலர்களுடன் திவ்ய கன்றுகளும் ஸ்ரீபகவானைச் சூழ்ந்துக்கொண்டு மதுரஸ்வரங்களை அனுசரித்து அணியணியாகப் பின்தொடர்ந்துவந்தன ஸ்வாமியானவர் கோபாலர்களும்கோபீசனங்களும் நேத்ரோச்சவங்களாகச் சேவித்து ஆநந்திக்கஸ்ரீகோகுலத்தில் பிரவேசித்தார் ஸ்ரீநந்தகோபர்முதலிய கோபாலர்களையும்கோபிகா ஸ்திரீசனங்களையும் கண்டமாத்திரத்தில் அவர்களெல்லோரும்அறிந்து ஆச்சரியப்படும்படியாய இந்தச்சிறுவர்கள் அந்தப்பிருந்தாவனத்தில் மலைப்பாம்பினால் தங்களுக்குநேரிட்டஆபத்தையும் ஸ்ரீகிருஷ்ணபகவானதைவிமோசனஞ்செய்து அம்மலைப்பாமபைச் சம்மரித்துத்தங்களைரட்சித்த விர்த்தாந்தத்தையுஞ் சொன்னார்களென்று சொன்னார். இப்படியாகச்சொல்லிக்கொண்டுவருகின்ற சுகரைப்பார்த்துபரிக்ஷித்துமகாராசன் சொல்லுகின்றார்.

ஸ்ரீகுருசிரேஷ்டரே கோபாலகோபிகாசனங்களுக்குத்தாங்கள்அதிகமாகியவிரதநோன்புகளையநுஷ்டித்துப்பெற்றுக்கொண்ட தங்கள் புத்திரர்களின் மேலுண்டாயிருக்கின்றபிரீதிகளைப்பார்க்கிலும் ஸ்ரீநந்தகோபயசோதாப்பிராட்டிகளுடைய தப்பலப் புத்திரராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில் அநந்தவிதமாக அன்புசெலுத்தியிருக்கும்படி நேரிட்ட காரணமென்ன அதைஎனக்கு கிருபையாகச்சொல்லக் கடவீரென்று கேட்ட மகாராசாவைப்பார்த்து சுகர்சொல்லுகின்றார்,

சகலபிராணிகளுந் தங்கள் தங்களுடைய ஆன்மாவினி டத்தில் அதிக பிரீதி கொள்வதுபோல புத்திர தாராதிகளிடத்தில் பிரீதிகொள்ளார்களாகையால் அந்தஆன்மாவே இந்தஸ்ரீகிருஷ்ணன் சுவாமியாகவே யிருப்பதினால் அதிகப்பிரீதிகொள்வதற்குக் காரணமாச்சுது உலகத்தில் பகவானுடைய திருவடிகளைப்பணித்துதோத்திர முதலியவைகளால் பூசித்தாற் தர்ம்மமுதலிய நான்கு புருஷார்த்தங்களையு மடைந்து நித்தியர்களோடேகூடி சுகமா யிருப்பார்கள.

டுரு - வது - அத்தியாயம்.

கலிவிருத்தம.

கண்ணன்கன்றினைமேய்த்திடுங்காலையில்
அண்ணன்றேனுகாசுரனையதஞ்செய்தும்
வண்ணன்யமுனைமடுகாளிந்தி
நணுகர்வம்பேசக்கியதுகவிலுவாம்,

ஸ்ரீகிருஷ்ணபகவான் பசுக்களைமேய்த்துப் பாவனஞ் செய்துக்கொண்டிருக்கின்ற தருணத்தில் ஸ்ரீபலராமர் தேனுகாசுரனைச் சம்மரித்தும் ஸ்ரீகிருஷ்ணபகவான்ஸ்ரீ யமுனைநதிமடுவில் சஹகுடும்பனாய் வந்திருந்த காளிய நாமதேய சர்ப்பராசனுடைய விஷபங்கஞ் செய்ததுஞ் சொல்லுகின்றது.

பாரத்வேகமுள்ள அரசனே கோகுல பிருந்தாவனத்தில் வாசஞ்செய்துக்கொண் டிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் தமக்குப்பௌகண்டவயதாகிய பருவமடைந்தவுடனே தம்பிமூத்தபிரானகிய ஸ்ரீபலராமருந்தாமும் தங்களுக்குச்சமானவயதுகளையுடைய கோபாலசிறுவர்களுடனேகூடி கோபாலவிபுக்களெல்லாருஞ் சம்மதிக்கஅவ்விடத்திலுள்ள சமஸ்தபசுக்களைமேய்த்துக் கொண்டு ஸ்ரீகண்ணபிரானகியபகவானும்பலதேவப்பிரானும் வேணுகானங்களைச் செய்துக்கொண்டு அந்தப் பசுக்களுக்கும் தங்களுக்கும் திவ்விய பரிமளங்களைத்தரத்தக்கதாயும் மதுரமதுரஸ்வரங்களோடு சப்திக்கத்தக்க விசித்திரவண்டுகள் சூழப்பட்டிருக்கின்ற நானவித புஷ்பங்களுக்கு ஆலயமாயும் மிருகபட்சிசமூகங்களுக் கிருப்பிடமாயும் தாமரைத்தடாகங்களும்பலவிருட்சவனங்களு முள்ளதாயுமிருக்கின்ற ஸ்ரீபிருந்தாரண்ய மாகிய புண்யவனங்களிலே லீலாவினோதார்த்தங்களாகவிளையாடவேண்டுமென்று பிரவேசித்தார்கள், அப்படிப் பிரவேசித்த மாத்திரத்தில் அந்தஸ்ரீகிருஷ்ணபகவான் ஸ்ரீபலபத்திரபகவானைப்பார்த்துச்சொல்லுகின்றார்,

வாரீர்மகாநுபாவரே, இந்தப்புண்யாரண்யமகாலட்சுமி ஸ்ரூபமானது உமதுகிருபைக்குப் பாத்திரமாகஉம்மையுபசரித்து அர்ச்சித்துத்தான் சுகிர்தமடையும்பொருட்டு அனுகூலமான மிருதுதருசிவர்க்கங்களைந் தரநின்ற பலங்களையுடைய குளிர்ந்திருண்ட தோப்புகளிலுள்ள நானவிதவிருட்சங்களை வகித்தும் நிர்மலமாயிருக்கின்றகுளிர்ந்த தீர்த்தங்களையுடைய தடாகங்களைப் படைத்தும் தனக்குப்புத்ரமித்ர களத்திராதி பரிசனங்களைப்போலச் சூழ்ந்திருக்கின்ற நானவிதமதுரஸ்வர வண்டுகள் முதலியமிருகபட்சி சமூகங்களின்சப்தமாகிய மிருதுவசனத்தை வசனித்துக்கொண்டிருக்கின்றது. தனக்குநீசபர்த்தாவாகியும தேவசிரேஷ்டராகியு மிருக்கின்ற நீர்தனது மகாரண்யஸ்வரூபமாகிற கிரகத்திற்கு எழுந்தருளுகின்றவிபவாதிசயக்களைக்குறித்துத் தனது பாபநிவாரணமாகும்பொருட்டு விருட்சங்களாகிய தன்னுடையஸ்வரூபம் வெளிப்படக்குளிர்ந்த மந்தமாருத காற்றுகளை வீசாநின்றவாயுதேவனகிய பாத்திரத்தினல் அம்மகாரண்யத்தி லுண்டாகிய நதீப்பிரவாகத்தின் அலைகளின்திவலைகளைகொண்டு அர்க்கிய பாததியாதி உபசாரங்களைச்செய்துவானப்பிரஸ்தாசிரமதம்பதிகளைப்போலிருக்கின்றஅவ்விருட்சகிளையாகிய அஸ்தங்களினலே அவற்றிலுள்ள புஷ்பபலவிசேஷங்களை உமக்குச்சமர்ப்பித்துச் சகலதேவதா ஸமூகங்களால் அர்ச்சிக்கப்படாநின்ற உமது திவ்ய திருவடித்தாமரைகளுக்குத் தண்டம் சமர்ப்பிக்கின்றதுபோலத்தோற்றுகின்றது ஆதிசேஷாம்ஸமகாபுருஷரீர மகா ருஷிசிரேஷ்டர்கள தங்கள்தபயோக மகாத்மியத்தால் உம்மைத் தியானித்து ஸ்துதிகள்செயவதில் தங்கள்மனதுதிருப்தி யடையாமல் காமரூபர்களாய் இவ்வண்டுகளின் ஸ்வரூபங்களைவகித்து மகாபாவனங்களாகிய உமதுசுகீர்த்திகளைக்கானஞ் செய்வதுபோல வண்டுக் கூட்டங்களெல்லாம் தேவதா வைரீங்கார நாதத்வனிகளால்கீர்த்தனங்களைச் செய்துகொண்டு உம்மையேசூழ்ந்திருக்கின்றன.

தேவபுருஷனால் ஸ்துதிக்கப்படுகின்றதிவ்ய புருஷசிரேஷ்டரே இவ்வன லட்சுமியானவள் தனதுகிரகத்திற்குநீர் எழுந்தருளினீரென்கிற சந்தோஷத்தினல் மயிலுருவங்களைக்கொண்டு ஆநந்தத்துடன் நர்த்தனஞ்செய்வதுபோல் அநேகமயில்கள் கூத்தாடுகின்றன உமது இஷ்டசனங்களாகிய கோபிகாஸ்திரீகள் தங்களகடைக்கண்பார்வையினல் உம்மைச்சேவித்துத்திருப்தியடைவதுபோல இவ்வனலட்சுமியானவள் மான் பேடுருவங்களைக்கொண்டு உம்மைப் பாக்கிறளென்று சொல்லத்தக்கதாய் அநேகம்மான்பேடுகள் உம்மையேபார்த்துக்கொண்டு மேன்மையடைகின்றன ஓ பிரஹ்ம பிரபுவே லோகநாயகரே ஸ்ரீபலதேவரே வாருமென் றழைக்கின்றதுபோல அநேககுயில்கள் உம்மைநோக்கி மதுரஸ்வரமாகச் சப்திக்கின்றன வாரீர் என்னுடைய நற்றுணைவராகிய புருஷ சிரேஷ்டரே இந்தப் புண்

ணியப்பூமியுள்ள-நதிகளும்-நதிதீரங்களும்- மடுக்களும் புண்ணியஒடைகளும் பர்வதங்களும் வனங்களும் ஆரண்யமார்க்கங்களும் வெள்ளை மணற்குன்றுகளும் விஜனஸ்தலங்களும் விருத்திபடைகின்ற சர்வஜந்துக்களும் உம்முடைய திவ்யபாதாரவிந்த ஸ்பரிசத்தினாலும் கிருபாபூரணமான கடாட்சவீட்சண்ணியத்தினாலும் மகாபரிசுத்தத்தையடைந்து மேன்மைகளடையாநிற்கின்றன, வாராய் அரசனே ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் இவ்விதமாய் அர்த்தமகா வனத்தைக்குறித்து வர்ணனைகளைச்செய்து ஸ்ரீபலராமனையும் கோபாலபாலர்களையுங் கூட்டிக்கொண்டு அந்தப்பசுக்களைப் பசும்புல்லுள்ள நதிதீரங்களிலும்பர்வதசிகரங்களிலும் மற்றுமுண்டாகிய ஸ்தலங்களிலும்சார்வதா மேய்த்துச் சந்தோஷித்தராய்விளையாடிக்கொண்டிருந்தார் அப்போது சகலதேவர்களும், ரிஷிகணங்கள்முதலிய தபோமூர்த்திகளாகிய யாவரும் இந்தப்பாவகிருஷ்ணவினோத சரித்திரங்களை ஸ்துதிசெய்துகொண்டிருந்தார்கள் அந்தச்சமயத்தில் இந்தஸ்ரீபகவானாகிய கோபாலமூர்த்தியானவர் ஸ்ரீபல தேவசகிதராய் அவ்வாரண்யங்களிலுள்ள தடாகநதி முதலானவைகளில்மலர்ந்திராநின்றதாமரைமுதலான புஷ்பங்களினுடைய தேன்களையுண்டு மதத்திருக்கின்றவண்டுகள் இனமாகச்சேர்ந்து சந்தோஷமாக ரீங்காரம்பண்ணுகையில்அந்தநாதங்களை யநுசரித்து கீதங்களைப் பாடுவார்ஒவ்வொரிடங்களில் அன்னங்களினுடைய நடைகளையும் ஸ்வரங்களையும் அனுசரித்துத் தானும பிரதித்வனிகளைச்செய்துபாவனையுஞ் சந்தோஷித்துநகைக்கச்செய்வார், சிலவிடங்களில் மயில்கள்தமது சிறகுகளைவிரித்துக்கொண்டு நர்த்தனங்கள் செய்வதைப் பார்த்துத் தாமும்அம்பரவீதியில்நின்று நடிக்கும் தேவப்பெண்கள் நாணும்படியாய்நர்த்தனங்களைச்செய்வார், யானைக்கூட்டங்களுக்குச்சமீபங்களிற்போயத் தாமும் அதுகளைப்போல ஒய்யாரமாகநடந்துகாட்டுவார் சக்கிரவாளமுதலிய பட்சிகளின் சப்தங்களை யநுசரித்துவிளையாடுவார் இப்படியாவருஞ் சந்தோஷிக்கும்படி லீலைகளைச் செய்துக்கொண்டிருக்கிறசமயத்தில் இவர்களுடைய பசுக்கள்யாவும்வெகுதூரத்திற்போய் மேய்வதைக்கண்டு துணைவர்களெல்லாருஞ் சந்தோஷிக்கவும்அந்தப்பசுக்கூட்டங்கள் திருப்தியடையவும்ஸ்ரீகிருஷ்ணபகவான் அப்பசுக்களைப்பூரணச்சந்திரோதயமே-கௌதமீ-கங்காபவானீ-ஸ்ரீபாகீரதி-மகாராசபுத்ரீ-நீலமேகமாலிகையே-சிந்தாமணீ- சர்வஜனமனோகரீ-சர்வமங்கலாகாரீ-பாரதீதேவி-தரித்ரீ-எங்களுக்குசுபத்தைக்கோருகின்ற ஸ்ரீமகாலக்ஷ்மீ-மந்தமாருதீ-மந்தாகினீ-சுபாங்கி-எங்கள்பேரில் தயவுசெய்துகம்பீரமாக நடந்துவாருங்கள லோகமாதாவான பார்வதிதேவி- கமலாட்சி-அரம்பையே-இந்திராணி-கோரத்னமே, வாருங்களென்று இத்யாதி நாமதேயங்களைச்சொல்லி உபசாரமாகஅழைத்தார். அந்தப்பசுக்களெல்லாம் அம்மாவென்றகம்பீரத்வனிகளுடன் வெகுவேகமாய்த்திரும்பிஓடிவந்து ஸ்ரீபகவானைக்கண்டு சந்தோஷத்துடன் சூழ்ந்துகொண்டன. அந்தப்பசுக்களுக்குத்தெளிந்த நீர்நிலைகளில்தாகங்களைத் தணிவித்து ஒருகுளிர்ந்ததோப்பிலிருக்கும்படி கடாட்சித்து பின்பு ஸ்ரீபலராமகிருஷ்ணர்களிருவரும் கோபாலபாலர்களும் அவ்வனப்பிரதேசங்களில் விளையாடிக்கொண்டிருந்து எல்லாரும் இளைப்புற்றுஉட்கார்ந்துக்கொண்டிருந்தார்கள், அப்பொழுது ஸ்ரீபலதேவரானவர் ஒருகோபாலபாலனுடையதுடையின்பேரில் தமதுதிருமுடியை வைத்துக்கொண்டு சயனித்தார்அதைப்பார்த்து ஸ்ரீகிருஷ்ணபகவான் தமதுமூத்தபிரானுக்குச் சந்தோஷமுண்டாகத் திருவடிகளைமெதுவாகவருடி தளிர்களைக்கொண்டு குளிர்ந்த காற்றுவரும்படிவிசிறிச் சகலோபசாரங்களைச்செய்தார் ஸ்ரீபலதேவரும்இளைப்புத்தீர்ந்து தாமும் ஸ்ரீபகவானும் மதுரஸ்வரங்களாகப்பாடியும் ஆடியும்கைகளைக்கொட்டிநகைத்தும்இவ்விதங்களாய் அவ்வனத்தில் விளையாடினார்கள்.

அப்போது கண்ணபிரானானவர் இளைப்புற்று நித்திரைசெய்ய நினைத்தளவில் சிலசிறுவர்கள் தங்கள் துடைகளின்மீதுஉபசாரமாகச் சயனித்துக்கொள்ளச்செய்தார்கள்-அவர்திருமேனியெங்குஞ் சிறுவேர்வையொழுகக் கண்டபொழுது சிலர் இளந் தளிர்களைக்கொண்டு வேர்வையாற்றினார்கள சிலர்சிரத்தையுடன் ஸ்ரீபகவானுடையதிருவடித்தாமரைகளைக் கைகளினால் ஒற்றி வருடினார்கள், இந்தப்பிரகாரம் ஸ்ரீமாதவப்பிரானுக்கு இந்தச சிறுவர்கள் ஸ்ரீபரமபதத்தில் ஸ்ரீஅனந்தகருடவிஷ்வக்சேனாதிநித்யசூரிகள் பிரம்மாநந்தபரவசர்களாய் பிரம்மோபசாரஞ்செய்வதுபோலஉபசரித்து தங்களுடைய அநேகஜன்மங்களில்சம்பாதித்த பாபங்களாகிறவனங்களை ஸ்ரீமாதவனுடைய திருவடியிற்பொருந்திய மனதாகிய அக்நியினால தகிக்கச்செய்துகொண்டார்கள்- அந்தச்சமயத்தில்ஸ்ரீபலராம கேசவர்களுக்குசிலர் தண்டஞ்சமர்ப்பித்துவிநயத்துடன்சொல்லுகின்றார் திவ்யபுருஷசிரேஷ்டர்களே கேளுங்கள் இந்த ஸ்ரீ பிருந்தாரண்ணியத்தின் கொஞ்சதூரத்தில் பனங்காட்டில் மதுரமான கனிவர்க்கங்களைத்தருகின்றது, அக்கனிகள்ஒருவருக்குமுபயோகமில்லாமல் தரையில்விழுந்து வியர்த்தமாகின்றன, அவ்வனத்தில் தேனுகாசுரனென்னும் பெயரையுடையவன்அநேகருடனே வாசமாய் மனுஷ்யர்களைப்பட்சித்துக்கொண்டிருக்கிறான் அதனால் எப்படிப்பட்டபராக்கிரமசாலிகளான தீரர்களும் அத்திசைநோக்குவதில்லை இப்பொழுது தோற்றுகின்றபரிமளம் அவ்வனத்திலுள்ளபழங்களின்வாசனைகளே ஆகையால்நீங்கள் பக்தர்களாகி

யனங்களுக்கு இந்தப்பழங்களை யனுபவிக்கச்செய்யவே ணும்மென்று பிரார்த்திக்கிறகோபாலகுமாரர்களெல்லாரையும் அழைத்துக்கொண்டு அந்த அரண்யமார்க்கங்களைக்கடந்து அவ்வனத்தில்பிரவேசித்தார்கள்.

இராக்கதர் கோசரியுருவமாகின்றது,

ஸ்ரீபலபத்திரமூர்த்தியானவர் அந்த விருட்சங்களைத் தமதிரண்டுகரங்களினால் அதன்கனிகளைப் பூமியில்விழத்தள்ளினர் அதுகளுதிர்கின்ற சப்தங்களைக்கேட்டமாத்திரத்தில் கழுதையுருவமாயிருக்கிற கொடிய வசுரனானவன் கோபமுடன்புறப்பட்டுவருகின்றநடையினால்பூமியதிர்ந்துகுலுங்கத் தனது இரண்டுகாதுகளும் இரண்டுவெட்டிகளைப்போற்காண லால்குச்சானது யமதண்டம்போலத்தோற்ற சகலமான கோபாலகுமாரர்களும் பயப்பிராந்தியடையும்படி ஓடிவந்து பின்புறங்காட்டிப்பின்பாய்ச்சல் பாய்ந்து எதிர்த்துத் தன் பின்கால்களைக்கொண்டுஸ்ரீபலதேவருடைய விசாலமான மார்பின்மீதுகோபத்துடன் உதைத்துத்திரும்பி ஸ்ரீபலராமரைக் கடிக்கவந்தான் அதைஅவர் தப்பித்துக்கொண்டார்அவ்வளவில் அந்தவசுரன் தன்கண்களிலே நெருப்புகளைக் கக்கிக்கொண்டு மகாசௌரியத்துடன் கோபமதிகரித்து மறுபடியுமுதைத்தான் அத்தருணத்தில் ஸ்ரீ பலராமமூர்த்தியானவர் அவனுடைய நால்கால்களையுஞ்சேர்த்துப்பிடித்து லட்சியமாயொருகரமுதறிக் குலுக்கிச்சக்ராகாரமாகச்சுழற்ற அந்தவேகத்தினால் அவன்பிராணனைவிடுக்கச்செய்து ஒருமரத்தின்மீது வீசியெறிந்தார், அந்த அசுரனையுடைய விழுந்த பனைமரம் ஒன்றின்மேலொன்று விழுந்து நாசமடைந்தது.

ஓ ராஜமகாராஜனே ஸ்ரீஅனந்தபகவானானவர்இந்தத் தேனுகாசுரனை லோகோபகாரமாகச் சம்மரித்தும், அதனால் அவனுடைய பந்துக்களாயிருந்த கழுதை ஸ்வரூபங்களையுடைய அனேகங்கொடியவசுரர்கள் இந்தத்தேனுகனைப்பார்த்துத் துக்கித்து மிகவுங்கோபித்து அந்த ஸ்ரீபலராமகிருஷ்ணர்க ளிருவரையுந் தூரத்திக்கொண்டோடிவந்து இவர்களைஇம்சிக்க நினைத்துமகாபராக்கிரமங்களுடன் யுத்தஞ்செயதார்கள, அத்தருணத்தில் இந்தத்திவ்யபுருஷர்க ளிருவர்களும் அந்தக்கழுதை ஸ்வரூபராட்சஸர்களுடைய பின்னங்கால்களைச்சேர்த்துப்பிடித்துச் சக்கராகாரமாகச்சுழற்றி அந்தப்பனைமரங்களில்மோதியறைந்து யாவரையும் சங்கரித்தார்கள்இந்தஸ்ரீபலராமகிருஷ்ணர்களுடைய பராக்கிரமமாகிய பெருங்காற்றினால் விருட்சங்களில்மோதப்பட்டு விழுந்தஇவ்வசுரர்களுடைய சரீரதண்டங்களபூமியில்விழுந்து இறைபட்டுக்கிடக்கின்ற அவ்வனமானது அப்பொழுதுஊழிக்காலத்தில்அந்த மேகங்களால் சூழப்பட்ட ஆகாசத்தைப்போலவிளங்கிற்று, நெடுநாளாய்அந்தக் கனிவர்க்கங்களை ஒருவரையும் பறிக்கவொட்டாமலும்பொறுக்கவொட்டாமலுஞ் செய்துகொண்டிருந்த தேனுகாசுரனையும் அவன்பந்துக்கள் முதலியவர்களையும்ஸ்ரீஅரியானவர்ஸ்ரீபலராமசகிதராயிருந்துநாசஞ்செய்துசகலகோபாலபாலர்களும வேண்டியவரைக்கும் கனிவர்க்கங்களைப்புசித்துச் சாப்பிடும்படிச்செய்து பசுக்களையுமேய்த்து திருப்தியடையச்செய்தார், அந்தச்சமயத்தில்இந்தமகாபுருஷர்கள்செய்த விநோதங்களைப்பார்த்து தேவதைகளும்பாரிஜாத புஷ்பவருஷங்களை வருஷித்தார்கள். துந்துபிவாத்தியங்களைக் கோஷிப்பித்தார்கள், கின்னரஸ்திரீகள்பாடினார்கள். அரம்பையர்கள், நர்த்தனஞ்செய்தார்கள், சித்தசாரணர்கள் தேவகானங்களால் ஸ்துதிசெய்தார்கள் அதன்பின்பு ஸ்ரீகமலலோசனன் ஸ்ரீபலராமருடன் பசுக்களைமடக்கித் திருப்பிக்கொண்டு வேணுகானஞ்செய்துகொண்டு வந்தார்கள்.

இவர்கள் வரவைக்கண்ட கோபிகைகள் உதயமுதல் அஸ்தமனபரியந்தம் ஸ்ரீபகவானைப் பிரிந்திருந்ததாலுண்டாகிய தாபமாகிய கொடும்பசியை யாற்றிக்கொண்டார்கள் இப்படிஅவர்கள் ஆனந்திக்கும்படி காட்டிக்கொண்டு கோகுலத்தில் பிரவேசித்தார், கோபாலபாலர்களும் தங்கள் தங்கள் கிரகங்களுக்கு வந்து சேர்ந்தார்கள் ஸ்ரீரோகிணி யசோதாபுத்திரர்களாகிய ஸ்ரீபலராமகிருஷ்ணர்களிருவர்களும் அந்தத்திருவீதிமார்க்கங்களிலிருக்கின்ற கோபஸ்திரீகள் மிகுந்த பக்திபூர்வகமாகஅர்ச்சித்து ஆசீர்வதிக்கச் சந்தோஷமாகத்தமதுகிரகத்திற்குவந்தார்கள் ஸ்ரீரோகிணியசோதைகளாகியஇருவர்களும் இவ்விரண்டு புத்திரர்களுக்கும் வெந்நீரைக்கொண்டு சிரமங்கள்தீரும்படி தகுந்தஉபசாரங்களைச்செய்து பரிமளமணிந்த திவ்யாபரணங்களை யலங்கரித்துவஸ்திரங்களையுடுத்தி மதுரமாகியபலகாரங்களுடன் அன்னங்களைப் புசிக்கச்செய்து புத்திரர்களுடையமதுரவசனங்களால் திருப்தியடைந்து மிருதுவான சயனங்களையமைத்துப் புத்திரர்களைச் சயனிக்கச்செய்து தாங்களும் சுகநித்திரையிற் சுகித்தார்கள்.

ஓ ராய்ராஜசிகாமணியான பரிச்சித்துமகாராஜனே, இவ்விதங்களாகச் சிலநாள் ஸ்ரீபலராமகிருஷ்ணர்களிருவர்களும் அந்த கோகுலப் பிருந்தாவனத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள இப்படியிருக்கிறநாள்களிலொருநாளேதோ ஒருகாரியமாகபலராமர் கிருஷ்ணபகவானுடன்பிருந்தாவனத்திற்குவராமல் பாடியிலிருந்துவிட்டார் பகவானனவர் சகலகோபாலர்களோடும் பசுக்களையோ



కాళింగమర్దనం (౧౬) అ



వేణునాదం (౨౮) అ



జలక్రీడ (౨౨) అ



గోవర్ధనగిరి



వృషభాసురమర్దన (౩౦) అ



కేశివధం (౩౭) అ



(బలరామసమేతముగా మధురాపురికి పోవుట)



(కుబ్జకు మోక్షమిచ్చినది)



విల్లు విరుచుట (౪౪) అ



గజాసురమర్దనం (౪౩) అ

ட்டிக்கொண்டு ஆரணியமாக்கத்திற்பிரவேசித்து நானுவிதமாக விளையாடிக்கொண்டுபோகும் போது இளைப்புற்றுசசமீபத்திலெங்கும் தீர்த்தமகப்படாமல் தாகமேலிட்டு ஸ்ரீயமுனாநதியின் ஒருபிரிவாகியகாளியனென்னுஞ் சர்ப்பமிருக்குமடுவில் பசுக்களுடன்ஜலபானஞ்செய்து மூர்ச்சையடைந்தார்கள் அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணபகவான் தம்மையேசரணமாக வடைந்திருக்கிற கோபாலகுமாரர்களையும் கோவினங்களையும் தம்மிடகட்டாட்சத்தினல் பிழைப்பித்தார் அப்போது அவர்கள பசுக்களுடன் நித்திரைசெய்தெழுந்தவர்களைப்போலெழுந்திருந்து சந்தோஷமாகச் சஞ்சரிக்கலானார்கள். கோபால குமாரர்கள நாமெல்லாருந்தாபம்பொறுக்கமாட்டாமல்பிராணனுக்குத்துணிந்து ஸ்ரீகிருஷ்ணனென்று நிந்தவிஷசலத்தைச் சாப்பிட்டுமரித்துப்போனோம்பசுக்களும் அப்படியேயாயின இப்படிக் கோக்களோடும் இறந்துபோன நாம்நமதையனுகிய ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய பரிபூர்ணகடாட்சவீட்சண்யத்தினல் பிழைத்தோமல்லவாவென்று அவரைஸ்துதிசெய்துவாழ்த்தினர்கள்

ககூ-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

நெம்படும்யமுனைநதிதீரத்தில்
வாம்படவிருந்தசர்ப்பராசன்றன்
ஆம்படுங்கெருவமாதியந்தமும்
போம்படச்செய்துநிர்த்தனம்புல்லினர்.

ஸ்ரீபகவான்யமுனைநதிதீரமாகிய மடுவில்வந்து சேர்ந்திருந்தகாளியனென்னுஞ் சர்ப்பத்தை நிக்ரஹஞ் செய்து அவனுடையபணுடவிஞுச்சியில் நர்த்தனஞ் செய்தாரென்று சொல்லுகின்றது,

கண்ணன்காளிங்கநிர்த்தனஞ்செய்கிறது

வாராய்மகாராசனே சகலலோகநாயகரானகிருஷ்ணபகவான் காளிந்திமடுவின்விஷதோஷங்களைநீக்கும்பொருட்டுக் காளியசர்ப்பராசனை அம்மடுவில்நின்று வெளிப்படுத்தவும் அந்தப்புண்ணியநதிதீர்த்தம்யாவருக்கும் உபயோகப்படச்செய்யவுஞ் சங்கற்பித்துக்கொண்டு அந்தக்காளியசர்ப்பராசனுடைய மனோபீஷ்டப்பிரகாரம் வரங்களைக்கொடுத்துக் கிருபைசெய்தாரென்று சொல்லியசுகப்பிர்ம்மரிஷியைப்பார்த்துபரிக்ஷித்துமகாராசன் சொல்லுகின்றான்புருஷோத்தமனுடைய திவ்யசரித்திரங்களைக் கேட்கவேண்டுமென்கிற ஆசைமேலிட்டிருக்கின்ற எனதுசெவிக்கானந்தமாகத் தக்கதாகப் பகவானுகிய ஸ்ரீமாதவனனவர் அம்மடுவினுள்அநேகயுகங்களாக வாசஞ்செய்து கொணடிருந்த காளிய சர்ப்ப ராசனை நிக்கிரகஞ்செய்த விதங்களையும் அந்தமகாநதியில் வாசஞ்செய்திருந்த காரணத்தையுஞ்சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்தித்துக்கேட்ட அரசனைப் பார்த்து ஸ்ரீசுகப்பிர்மரிஷி சொல்லுகின்றார்,

கேளும்ஜனநாயகனே யமுனாநதிப்பிரவாகத்தில்பிரிந்தோடுகின்ற ஓர்மடுவில் வாசஞ்செய்கின்ற காளிநாமதேயசர்ப்பராசனுடைய விஷாக்நிச்சுவாலைகளினல் அந்தமடுவின் ஜலமானது எப்போதுங்கொதித்துக்கொண்டிருக்கும் அந்தசலத்துக்கு நேராய்ஆகாசவீதியிற் பறக்கின்ற பட்சிகள்யாவும் விஷ வேகத்தினல் சோகித்துவீழ்ந்தழியும் அந்தசலத்தினலுண்டாகிய அலைகளின் திவலைகளைக்காற்றானது கொண்டுவந்து வீசுதலினல் அம்மடுவின்சமீபஸ்தலங்களில் விருட்சம்-கொடி-செடிபூண்டுமுதலியதும் உண்டாகின்றதேயில்லை ஆயினும் ஒருகடப்பை விருட்சமானது ஸ்ரீபகவானுடைய காசரண ஸ்பரிசங்களுக்கு யோக்கியமாகும்படித்தனதுபூர்வசன்ம புண்யவசமிருந்தபடியால்தெய்வீகமாய்முன்னொருக்கால் அமிர்தகடத்தைகருடபகவானனவர் பூமிக்குக்கொண்டுவரும்போது இக்காரணநிமித்தமாகவேஅந்தவிருட்சத்தின் மீதிரங்கிஅமிர்தஸ்பரிசங்களை யுண்டாக்கி அதற்குவிஷதோஷமில்லாமற்செய்வித்தாரென்று புராணாந்தரங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றபடியேஅந்தவிஷாக்கினியில் நின்றுந்தப்பித்துக்கொண்டு காய்கனிகளுடன் செழிப்பாய்விளங்கிக்கொண்டிருந்தது. இப்படியிருக்கச் சர்வபிரபஞ்சங்களுக்கும் மங்கலமுண்டாகச்செய்யும்படித் திருவவதரித்திருக்கின்றஸ்ரீகிருஷ்ணன்பகவானென்னும் பிரதாபசாலியாகியமகாவீரமகாஉக்கிரமான விஷவீரியத்தையுடைய இந்தக்காளியசர்ப்பராசனை இந்தமடுவில்நின்றுநீக்கவும் இந்தச்சலத்துக்கு இவனால்நேரிட்ட விஷதோஷங்களைப்போக்கி இந்தத்தீர்த்தத்தை யாவருக்குமுபயோகமாகும்படிப்பரிசுத்தஞ்செயயவேண்டுமென்று நினைத்துமுகமலர்ந்து அந்தவிருட்சத்தின் நுனியிற்சென்று நின்றுஅம்மடுவின்சலம்குபகுபகுபவென்றுசப்தித்துத்ததும்ப அந்தஅகாதசலத்தில் குதித்துக்கலக்கினர்,

வாராய்மஹிபாலகா முதல்மனுவந்தரத்திலே வேதங்களை யபகரித்துச்சமுத்திரத்தி லொளித்த சோமுகாசுரனைச் சம்ஹரித்துவேதங்களை யுத்தரிக்கிறநிமித்தம் ஸ்ரீமச்சாவதாரஞ்செய்துமகாப்பிரளயஜலதியில்பிரவேசித்து அந்தசமுத்திரத்தைக்கலக்கின திவ்யமூர்த்தியாகிய ஸ்ரீபகவானுடைய சாதுர்யங்களுக்கு இந்தக்காளிந்தி மடுவுஒருலட்சியமாகுமோ ஆகாதேஆகையால் இப்படிஆளஷிறந்த மகாப்பிரதாப கோபாலகண்ணனா ... வர் அம்மடுவைக்கலக்கும்போது உண்டாகிய ... த்தினல் கொதித்துக்கொணடிருந்த அந்த ஜல ...

பொங்கி நாற்றிசைகளினளவு கோசப்பிரமாணவரையிலத்திக்குகளிலும் அவ்விஷசலத்தினுடைய திவலைகள்மோதின அத்திவலைகள் பரிசிக்கப்பட்டு அவ்வெல்லைக்குள்ளிருந்த சகலபிராணிகளும் வெப்பமடைந்தன விருட்சமுதலாகியதுகளும் தீய்ந்தன இம் மடுவில் அதிசாகசங்களாகிய லீலாசாமார்த்தியத்தினால் கலக்கி விளையாடுகின்ற ஸ்ரீபாலகோபாலகண்டீரவச சிறுவனைப்பார்த்து இந்தச்சர்ப்பேந்திரன் தன்னுடைய இருதயத்தில் நின்றும் கோபாக்கினியாலுண்டாகிய சுவாலைகளைக்கக்கினன் அப்படிக் கக்கினமாத்திரத்தில் அம்மடுவின் சலமெங்கும் பரவிதீவிரமாகக் கொதித்துப் புகையெழும்பிப் பார்க்கின்றவர்களுக்குப் பிராணபீதியையுண்டாக்கத்தக்கதாகத்தோன்றிற்று இப்படிவிஷச்சுவாலையைக்கக்கிய இந்தக்காளியசர்ப்பராசனானவன் இதென்னவாச்சரியம் இவனைப்பார்க்குமளவில் அறியாதசிறுபிள்ளையாயிருக்கிறான் இவன்என்னுடைய விஷச்சுவாலைகளோடுங்கூடிய இந்தமடுவில் நானிருக்கின்றேனென்று எவ்வளவும் லட்சியஞ்செய்யாமல் மகாசூரனாய் இவ்வகாதசலத்திலிறங்கி ஆர்தவெள்ளத்தைமதங்கொண்ட யானையைப்போலக்கலக்கி அல்லகல்லோலஞ்செய்கிறான் ஆதலால் இவ்வுலகத்தாரெல்லாருங் காணும்படி எனது ரோஷாவேஷத்தினுண்டாகி விஷாக்கினியினால் இவனைப்பஸ்மமாகச்செய்து விஷவீரப்பிரதாபக்கீர்த்திகளை வகிக்கிறேனென்று தனக்குள்ளே சபதஞ்செய்துக்கொண்டு வெளியிற் புறப்பட்டு இந்தஸ்ரீகிருஷ்ணபகவானாகிய சுத்தவீரனைநிர்த்தியனைக் கோராகாரமான விஷாக்கினிகளையுடைய தனது கோரைப்பல்லுகளினால்கடித்து ஸ்ரீசேஷசாயியான இந்தப்பாலகோபால திவ்வியசிறுவனுடைய பாதாதிகேசபரியந்தம் சுற்றிக்கொண்டான் அப்படிச் சுற்றிக்கொண்டமாத்திரத்தில் சர்வவியாபகஅந்தராத்ம ஸ்வரூபராகிய ஸ்ரீபகவான் சலியாமல்நின்றுகொண்டிருந்தான் இப்படியிருக்கின்ற ஸ்ரீபகவானைப்பார்த்துக்கோக்களும் மற்றருஷபங்களும் கன்றுகளும்மூர்ச்சையடைந்துசற்றுநேரத்தில்தெளிந்துதுக்கங்கொண்டிருந்தனஇந்தக்கோபாலபாலர்கள் சுவாமியினுடைய பிரபாவங்களையறிதற்குச் சாமர்த்தியமில்லாமையால் மூர்ச்சையடைந்து சற்றுநேரத்தில்தெளிந்து மகாதுக்கிதர்களாய்ஒருவற்கொருவர் அதோபார்த்தீர்களாநமது அருமை சுவாமியான ஸ்ரீகிருஷ்ணனை இந்தப்பாபிஷ்டஸ்வரூபமானது கடித்துத்திருமேனியைச் சுற்றிக்கொண்டு இன்னமும்விடாமலிருக்கின்றதென்றும் ஆஜனார்த்தனா ஆ ஸ்ரீநந்தகோபயசோதாவத்ஸனே, நாங்கள் இனி யென்னசெய்யப் போகிறோம் யாரையடுப்போம் இந்தக்கொடியசாபத்தைவிடுவிக்க யாதொருஉபாயமும் தோற்றவில்லையேயென்றும் பலவாறாகப் பிரலாபித்துக்கொண்டிருந்தார்கள். பசுக்களும்-எருதுகளும்-கன்றுகளும்-தங்கள்பிஷ்டமருங்கெய்வஸ்ரீகிருஷ்ணனைப்பார்த்து வாலசுகங்களை உயரவெடுத்துக்கொண்டு அப்போதேதாங்கள்அம்மடுவிற்சாய்ந்து ஸ்ரீபகவானைவிடுவிப்பது போலத் தங்கள் மேச்சலையொழிந்து சர்வேந்திரியங்களையுஞ்சமர்ப்பித்து அம்மாவென்று வாய்களைத்திறந்து கதறிக்கொண்டிருந்தன.

வாராப்பூபதியே அந்தச்சமயத்தில் பூமிகிடுகிடென்றாடுங்கிற்று ஆகாசத்தில்நின்று குறாக் கொள்ளிகள் வீழ்ந்தன. மண்மாரிபொழிந்தன அந்தஸ்ரீகோகுலத்திலுண்டாகிய சர்வசனங்களுக்குஞ் சரீரங்கள் நடுங்கின. மேலும் ஸ்ரீநந்தகோபர்முதலிய கோபாலர்களியாவருக்கும் இடதுகண்களும் யசோதாப்பிராட்டிமுதலியகோபிகைகள்யாவருக்கும் வலதுகண்களும்துடித்தன, அன்றியும் இவைமுதலாகிய அவசகுனங்களின்னமும்அநேகநேரிட்டன, இவற்றைக்கண்டுபயப்பிராந்த சித்தர்களாய்த் தத்தளித்துக்கொண்டு ஸ்ரீபலராம சகிதர்களாய் ஸ்ரீநந்தகோபர்முதலான கோபாலர்களும் யசோதாதிகோபிகாசனங்களும் ஸ்ரீஅரியினுடைய விருத்தாந்தங்கள் ஒன்றுந்தெரியாதவர்களாய்க் கோபால கோகணசமூஹனாயெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவான் எவ்விடத்தில் என்னவிதமாயிருக்கின்றாரோஒன்றுந்தெரியவில்லையேஎன்றுசங்கித்துஅன்பினால் ஸ்ரீபகவானிடத்தில் ஆரவாரத்துடன் தேடிக்கொண்டு புறப்பட்டார்கள் இப்படிவியாகுலசித்தர்களாய் ஸ்ரீகிருஷ்ணபகவானுடையபிரபாவாதிசயங்களை அறியாதவர்களாய்மார்க்கங்களில் விசனப்பட்டுத் தேடிக்கொண்டு வருகிறவர்களுக்குயாதொருசமாதான மனோதைரியத்திருப்திகளையுஞ்சொல்லாமல் ஸ்ரீபகவானுடைய பிரபாவங்களையறிந்திருக்கின்ற ஸ்ரீபலராம மூர்த்தியானவர் எப்போதும் போலச் சந்தோஷத்துடன் தாமுமொருவராய் வந்துகொண்டிருந்தார், இப்படித்தேடிக்கொண்டு வருகிறவர்கள் அந்த பிருந்தாவன மார்க்கங்களில்எங்கும்கோகணங்களினுடைய குளம்படிகளும் கோபாலர்களுடைய காலடிகளுமாயிருக்கக்கண்டு அவைகளைச்சோதித்துப் பார்த்துவருகையில் இடையிடையில் அங்குசபதுமமுதலிய ரேகைகளோடுங்கூடிய மார்க்காபரணங்களாகியுமிருக்கிற அரியினுடைய பாதாரவிந்தங்களின் அடையாளங்களைக்கண்டு அவைகளை ஒருவற்கொருவர் காண்பித்துக்கொண்டு வெகுதூரமார்க்கங்களைக்கடந்து மகாதுர்ப்பலசங்கடங்களை யுண்டாக்கும்யமுனாநதி மடுவின்சமீபத்திற்குயாவரும்வந்துசேர்ந்தார்கள்-அவர்கள் அப்பொழுது அம்மடுவில் ஜலமத்தியில்சர்ப்பராசனிடத்திலகப்பட்டுக்கொண்டு ரமதுசரதுர்யங்களைக்காண்பிக்காமல் சர்ப்பசரீரபாசத்தினால் பந்திக்கப்பட்டிருக்கின்ற கிருஷ்ண பகவானைக் கண்டு திடுக்கிட்டு ஏக்கங்

கொண்டு-ஸ்ரீகிருஷ்ணா நமாதவா - ஸ்ரீகோவிந்தாவென்று பிரலாபித்து இந்த மடுவினிடத்தில் உம்மைவிட்டு மகா பாவிகளாகிய எங்களைப் பிரிக்கும்படித் தெய்வம் பிரதிகூலமாயிற்றே யென்று தங்களை நிந்தித்து விசனப்பட்டுக்கொண்டிருக்கின்ற கோபாலர்களையும் பசிதாகங்களையொழிந்து மேய்ச்சலை விட்டுக்கண்ணிமையாமல் ஸ்ரீபகவானையே பார்த்துக்கொண்டிருக்கின்ற கோதனங்களையுங்கண்டு எல்லாருந்திடுக்கிட்டெங்கி மஹாகோஷத்துடன் அநேக விதங்களாக ஸ்ரீகிருஷ்ணபகவானை யுத்தேசித்து ஸ்ரீயசோதாப்பிராட்டியைக்கட்டிக்கொண்டு அலறி வியாகுலப்பட்டு ஸ்வாமிசரிதைகளை நினைத்து ஆ கிருஷ்ணாவென்கிறசப்தத்துடன் பிரலாபிக்கத்தொடங்கினார்கள், ஓ கிருஷ்ணா நாங்களெதிராகலந்தமாத்திரத்தில் எங்களுக்கெதிரில் கெம்பிரமாகவருகின்ற நீர்இன்றையதினம் உபேட்சைசெய்தாஎதிரில் வராமலிருக்கின்றதென்னே, உமது சௌந்தரியங்களை நாங்கள்சேவிக்கும்படி எங்களுக்குஸ்வரூபத்தைக்காட்டாமலும் கிருபையாகக்கடாட்சியாமலுமிருக்கின்றீர், நாங்களொருசமயத்தில் ஊடல்களினால்வெறுத்தாலும் அதுகளைத் திருத்திச் சமீபத்திற்குவந்து சந்தோஷிக்கச் செய்கின்ற நீர் இன்னம் வராமலிருக்கின்றதென்னே, நாங்கள்பக்தியினால் ஆகிருஷ்ணாவென்றுஅழைத்தமாத்திரத்தில் ஓகோ பிரியமானவர்களே யென்றுசொல்லுவல்லநீர்இன்றைக்கென்னகாரணத்தினாலோ பேசாமலிருக்கின்றீர், நாங்களும்மைநினைத்தமாத்திரத்தில்அந்த நினைவுக்குச்சரியாய்நிற்கின்ற நீர் இப்பொழுதென்னமோ நினைக்காமலிருக்கின்றீர் என்றுஇவ்விதங்களாக இந்தக் கோபாலகோபிகாஜனங்கள் யாவரும்பிரலாபித்துக்கொண் டிருந்தார்கள்.

அத்தருணத்தில்ஸ்ரீநந்தகோபயசோதாப்பிராட்டிமுதலானவர்கள் ஸ்ரீபகவானைப்பார்த்து அநந்தவிதங்களாகியபாலலீலா சேஷ்டிதங்களைச் சொல்லிப் பிரலாபிக்கின்றார்கள் ஆ எங்களருந்தவப்புத்திரனாகிய ஐயனே, பூர்வம் முப்பதுநாளைய சிறுகுழந்தையில்மஹாமோஹனகாமரூபசுந்தரியாய் வந்தகொடிய ராட்சசியானவள் தன்னிரண்டுகுசங்களிலும் அனைந்துகொண்டிருந்த ஆலாலவிஷத்துடன் அவளுடைய அநந்தபாபசஞ்சித தோஷங்களை முலைப்பாலமுதாகவுண்டு அவள் ஜன்மஸாபல்யமாகப்பரிசுத்தங்களை யுண்டுபண்ணின பரம காருண்யனாகியஉமக்கும் இந்தச்சர்ப்பத்தின்விஷம் நலைக்கேறியதோஐயனேயோ இந்தக் கொடியசர்ப்பராஜன்உன்னைக்கடிக்கும்போது நடுநடுங்கினையோ மிகவுங்குரூரமானவிஷவசத்தைநினைத்து இவ்வுலகத்தை வெறுத்தையோ எங்களைநினைத்து பிரலாபித்துத் துக்கித்தையோ, எங்களருமைபுத்திரனே,குழந்தாய்-ஆ ஸ்ரீகிருஷ்ணாஇந்தக்கோ

ரசர்ப்பந்தானுன்னை எங்களைக்கபயாமல்உன்னைவன்கடித்தான்,நீயொருவன் க்ஷேமமாயிருந்தாலெங்களுக்கிடப்படிப்பட்ட அபாயம் நேரிடாதில் நீ ரட்சிப்பையேயாங்களையெனே, உனக்குதன்மைசெய்ய எங்களுக்கொன்றுந்தோன்றவில்லையே ஸ்ரீகோபகோபீஜனவல்லபா ஸ்ரீ யசோதாவத்ஸலனே இன்றையதினம்நாங்களெல்லாரும் உன்னைத்தரிசனஞ்செய்யவந்திருக்க உனதுகடாட்சவீட்சணையினால் நீ எங்களைப் பாராமலிருப்பதுஎன்னகாரணமோ உனது அபிமானிகள் யாவரும்வந்திருக்கநீபேசாமலிருக்கின்ற கோபமென்னோ நாங்கள்சந்தோஷிக்கும்படி நீ உன்னுடைய திவ்யபாதாரவிந்தங்களிலணிந்த நூபுரசதங்கைகள் சப்திக்க நர்த்தனங்கள் செய்யாமலிருப்பதென்னோ உனது அன்புள்ள தாய்மார்களுங்கோபிகாஜனங்களும் உன்னை அழைக்கவந்திருக்க அவர்களிடத்தில்வந்து செவிகுளிர ஒருவார்த்தையாவது பேசாமலிருப்பது என்னதர்மமோ சொல்வாயென்றுபிரலாபித்து மேலுந் துக்கத்தோடு சொல்லுகின்றார்கள்

எங்கள் மனோரத தவப்பலனாகிய ஆகிருஷ்ணா இனி எங்களுடைய கர்ணேந்திரியங்கள் குளிரவுமனதுதிருப்தியடையவும மாதுரியமாக வார்த்தைசொல்லுகிறவர்கள்யாரிருக்கிறார்கள், எங்கள் சரீரங்களும் கரசரணாதி அவயவங்களும் மகோத்தமதன்யத்தையடைய மேல்விழுந்து சந்தோஷகரமாக விளையாடுகின்றவர்கள் யாரிருக்கின்றார்கள் எங்கள் நயனங்களுக்கு சித்திர விசித்திரமாக அநந்தசாதுர்ய லீலைகளைச்செய்து நாங்கள்கிருதார்த்தர்களாகும்படி கிருபையாகக் கடாட்சிக்கின்றவர்கள் யாரிருக்கின்றாகள் லோககுருவாகிய எங்களையனே, நீ ஸர்ப்பகஷ்டனாகியிருந்தால் இவ்வுலகத்திலெங்களுக்கு இகபரஸாதனார்த் தங்களாகிய க்ஷேமங்களையுண்டுபண்ணுகின்றவர்கள் யாரிருக்கின்றாகள், உனது சம்பந்தங்கள்கிடைத்தபின்பு இனி அன்யசம்பந்தங்களை நாங்கள் எப்படியிச்சிப்போம் நீ உனது ஸ்வரூபசர்மத்துடன்வசிக்கின்றதிவ்வியலோகமெது அதுவே எங்களுக்கு வேண்டுவதேயென்றுசொல்லி துக்கித்தார்கள் இப்படி ஒருவருக்கொருவர் கட்டியணைத்து பிரலாபித்துக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணபகவானுடன் இமடுவிற்பிரவேசித்து ஸ்ரீஜனார்த்தனை பிரீத்யர்த்தமாகஸ்ரீகிருஷ்ணபதத்தை யடைவோமென்று யாவரும் ஏககாலத்தில்தீர்மானித்துக்கொண்டு ஆ ஸ்ரீகிருஷ்ணாவென்றுஅந்தநதியிற் பிரவேசிக்க யத்தனித்தார்கள். அப்படியிருக்கின்றசமயத்தில் ஸ்ரீபகவானாகிய பலபத்திர மூர்த்தியானவர்ஓகோ கோபாலர்களே கோபீஜனங்களேஸ்ரீபகவானுடைய மகிமைகள் ஒருவராலறியக்கூடுமோ ஆகையால்இவ்வுலகத்தின் க்ஷேமத்துக்கு உசிதமாகிய இச்சரியத்தைநீங்களறியீர்கள் ஸ்ரீஜனார்த்தனாகிய பருஷோத்த

நாமனுக்குயாதொரு குற்றமுமில்லை, தங்களைவஹித்திருங்கள், இவ்வவதாரம் விரோதிகளைசிக்ஷிக்கவந்த அவதாரமாதலால் நமது பரமோத்தமகுரு ஸ்வாமியாகிய ஸ்ரீயசோதா வத்ஸருடைய பிரபாவங்களை இன்னமொருதிமிஷத்திலேயேகண்டு சேவிக்கப்போகின்றீர்கள்,என்றுஇவ்விதங்களாகத் தைரியங்களைச்சொன்ன அவர்களையாவரையும் அம்மடுவில் பிரவேசிக்கவொட்டாமல் திருத்தினார்.

இவ்விதங்களாகத் தன்னைக்குறித்துப் பிரலாபிக்கின்றஆயர்களைப்பார்த்து ஸ்ரீகிருஷ்ணபகவான் தாம்சர்வசக்திமானானபோதிலும் லோகமரியாதையின் நீதிக் கிடமாகவஹித்து ஒருமுகூர்த்தகாலம் ஸ்தம்பிதராய் நின்றுபின்பு தமதுவிராட்ஸ்வரூப விஸ்வாகார மகிமைகளைக்கொண்டு ஸ்ரீதிருவிக்கிரம ஸ்வாமியைப்போலத் திவ்ய திருமேனியை விர்த்தியடையச்செய்தார் அவ்வளவில் அந்தச்சர்ப்பராசன் தன்னிடசரீரம் வருத்தத்தையடையச்சகிக்கக்கூடாதவனாய்த் தான்சுற்றிக்கொண்டிருந்தசுற்றுகளைவிட்டு கடிக்கின்றதை யொழிந்து தன்னுடைய பணமண்டலங்களை எடுத்து அந்தத்திவ்யமங்கலவிக்ரஹஸ்வரூபனை நன்றாகப் பார்த்து பெருமூச்சு விட்டுக்கொண்டு நாசிகாரந்திரங்களில் நின்று துர்விஷாக்நிஜ்வாலமாலைகள்புகையோடு மெழும்பப்பிரகாசயினகாஷ்டாகாரத்தைப்போல விளங்கினின்றனன்,

அந்தருணத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான் அவலீலையாகப்பிடித்து எடுத்துக்கொல்ல மனமில்லாமல் அந்தப்புசங்கேந்திரனுடைய கண்களிலிருந்து விஷநீர்கள்வருஷிக்க [illegible] யமாகக்குலாலனுடைய சக்கரத்தைப்போலச்சிறகிறங்கு இடசாரி வலசாரியாகச் சுற்றி அம்மடுவெங்கும் ஓடியோடியலையும்படி அக்கொடியசர்ப்பராசனைச்சீசியெறிந்து வருத்தப்படுத்தினார், மேலும் ஆதிபுருஷரான ஸ்ரீகிருஷ்ணபகவான் அவன்பின்தொடர்ந்து அந்தச் சர்ப்பராசனைப்பிடித்து அவலீலையாகப்பணமண்டலங்களின்மீதுநின்று ஒருகரத்தினால்அவனுடையவாலின் நுனியைப்பற்றித்தாகினமித்துக்கொண்டு அந்தமடுவின் அலைகளினோசையே மதுரத்வனியுள்ள மிருதங்கமாகவும், ஸ்ரீபிருந்தாவனங்களில் வாசஞ்செய்கின்றமாரபட்சிகளின்சுகு தொனிகளே சுகீதகானங்களாகவும் ராஜஹம்ஸசார ஸகுக்குடாதி பட்சிகளினுடைய மனோரம்ய மானத்வனிகளே சுரதாளங்களாகவும் ஆகாசவீதியில் தரிசனஞ் செய்துக்கொண்டிருக்கிறதேவதாகணசமூகங்களே ஸபாஜனங்களாகவும் திவ்யமாணிக்கம்விளங்குகின்ற அந்தக்காளிய ஸமேதய சர்ப்பராசனுடைய அநேகபணமண்டல முகசிரங்களே ரத்னகசிதமானமண்டபமாகவும் அமைந்த அந்தக்காளினுடையபாபங்களைப்போக்கியநுக்ரஹஞ்செய்யும்பொருட்டுத்தமதுதிருவடியினால் விசித்திரங்களாக நர்த்தனஞ்செய்யும்போது விஷமுண்டபென்னக்குக்காவிருக்கும் அந்தப்பணமண்டலங்களில் எதுதலையெடுக்கிறதோ அப்பணமண்டலத்தைமிதித்து ஆகப்பிரசங்கநமதாக்காகத்தலாத்விக்கும்படி நர்த்தனஞ்செய்யத்தொடங்கினார்.

அந்த ஸ்ரீபகவானிட வேகம்பொறுக்கமாட்டாமல்விகாரமாய்வீழிட்டான் அப்போதவன் தலையின்மீதிருக்கிறமாணிக்க ஒளியினால் செவந்திருக்கின்ற அவன்சிரசில் நர்த்தனஞ்செய்கையில் அம்பரவீதியில் அப்ஸரஸ்திரீகள முதலியவர்களில் சிலர் மத்தளங்களடிக்கவும்சிலர் புல்லாங்குழலூதவும் சிலர்வீணைவாசிக்கவும் சிலர் லயைபோடவும், அதற்குத்தக்கபடி ஸ்ரீகிருஷ்ணன்லயைதப்பாமல் அவனிட ஆயிரந்தலைமேலேயும், ஓயாமல் நடனஞ்செய்வதைப்பார்த்து, சித்தசாத்தியர்,கந்தருவர்முதலிய தேவர்கள் ஆச்சரியப்பட்டு புஷ்பமாரிசொரிந்து துதிசெய்தார்கள், அந்தப்புஷ்பவருஷமத்தியில்நின்று நடனஞ்செய்கின்ற கிட்டாவதாரராகிய ஸ்ரீசர்வஸ்வாமியானவர் மிகவும்உத்ஸாஹத்தோடு அதிசயவேகத்துடன் அந்தப்புஜகேந்திரனுடைய பணமண்டலங்களின்மேல்பிரம்மானந்தத் தாண்டவங்கள் செய்யும்போது அந்தக்காளியனானவன் தனதுநிஜகர்வமழிந்து பிரதிமுகங்களிலிருக்கின்ற வாய்களின்வழியே கிரமக்கிரமமாக இரத்தமாம்சங்களைக்கக்கிக் கண்களின்வழியே விஷப்பொறிகளையுதிர்த்து நாசிகளின்வழியே விஷஸ்வரஸங்களைவிட்டுப் பலவீனமுற்றிருக்கின்றதைத் திக்குவிதிக்குகளைப் பார்த்துக்கொண்டு பிராணனைவிடாத சபத்தைப்போலச்சாந்தனித்தனது இருதயத்தில் சிந்திக்கத்தொடங்கினான்.

காளியன் சிந்தனை.

அகோவாச்சரியமாசசரியம்சர்வசரா சராத்மகமாகிய இந்தப்பிரபஞ்சத்திலுள் விருத்தியடையாநின்ற தேவாசுரகந்தர்வாதி சமூகங்களும மனுஷ்யபசுபட்சிவிருட்சமுதலானதுகளும் எனது துர்விஷாக்நிஜ்வாலைகளின்ஸ்பரிசமாத்திரத்தினால்தங்கள்ஸப்பிராணங்களுமொடுங்கிமஹத்தரமாகிய துன்பங்களையடைந்துமரணமடைவர்களே ஆ இதென்னவதிசயம் இப்படிப்பட்ட கொடியவிஷஜ்வாலைகளைச் சகித்து எவ்வளவும் லட்சியஞ்செய்யாமல் இந்த ஸ்ரீகோபால சிறுவன்எனது சஹஸ்ரபணமண்டலங்களையுஞ் சின்னபின்னமாக மிதித்துநர்த்தனஞ்செய்கின்றனன். ஆகையால் இவன் பிராகிருதசம்பந்தமாகிய தேவாதிமகாஜனமனுஷ்ய வர்க்கங்களைப்போலப் பஞ்சபூதாத்மகமான சரீரத்தை யுடையவனல்லன் சர்வாந்தரியாமியாகிய பரப்பிரம்மஸ்வரூபனுமியும் ஸ்ரீதேவிசர்வேஸ்வரனுமியும் எழுந்தருளியிருக்கின்றஸ்ரீ அரியே யாகவேண்டும் அந்த அரிக்கேயல்லாமல் என்னுடைய விஷக் கடூரதனைச் சகிக்க இதரமானவர்க

ளுக்குக்குமாருபோமென்றுநினைத்துத்தியபரியான மபிறந்து மஹாத்தாகிய பீதியையடைந்துவஞ்சனஞ்செய்து மிகவம்மேறாக்கான ஆயசமுற்றிருந்தான்.

வாராய் கூறியதலே இந்தப்பிரகாரம் ஸ்ரீஹரியினுடைய ஸ்ரீசரணாரவிந்த மஹாதிசயப்ரஹரணங்களை அதிகுரூரமாகிய தனதுபணமண்டலமுடிகள் சாய்ந்து சபத்தைப்போலஅசைவற்றவனாய் வீழ்ந்துகிடக்கின்ற இந்தஉரகேந்திரனைப்பார்த்துஇவனுடையபத்நிகளான நாககன்னிகைகள தங்கள்பர்த்தாவாகிய நாதனுக்கு நேரிட்ட உபத்திரவத்தைநினைத்து மனதுநிகிலடைந்துசிந்தாக்கிராந்தைகளாய்க் குசங்களின்பந்தங்களாகிய ரவிக்கைகள்தளரத் திவ்யபூஷணங்களியாவும் அலங்கோலமாய்ச் சிக்குபட்டு அலையக் குசங்களின்மத்தியில்வரிந்திருக்கின்ற மேல்மூன்றுனைகள் சேர்ந்துவிழக் கண்களிலே தாரைதாரையாய் ஜலம்பெருக இனிமேன்னசெய்யப்போகின்றோமென்கிறசிந்தனை மேலிட விசனமடைந்தவர்களாய் ஸ்ரீகோபால சூடாமணியாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானைப்பார்த்துச் சாஷ்டாங்கமாகத்தண்டன்சமர்ப்பித்துத் தங்கள்சிரோபாகத்தி னுச்சியின்மீது இரண்டுகைகளையும் அஞ்சலிசெய்து குழந்தைகளை முன்னிட்டுக்கொண்டு திவ்வியக்கியாஞைதயர்களாய் ஸ்துதிசெய்யத்தொடங்கினார்கள்,

காளியஉரகேந்திரன் பத்நிகளான நாககன்னிகைகளின்ஸ்துதி.

ஜகதீஸ்வரான தேவரீர்விஷயத்திலிந்த காளியன்செய்த அபராதத்தை அநேககோடிஜன்மமெடுத்துந்தீர்க்கமாட்டான், பரமகாருணிகரான தேவரீரிட திருவடிச்சம்மர்தத்தாலிவனிட்சகலபாபங்களுந்துர்நடத்தைகளும் நிவர்த்தியாச்சுது பிரமன்முதலியசகல தேவர்களும் ஸ்ரீமகாலட்சுமியினது கடாட்சத்தை அநேககாலந் தவஞ்செய்து அடைகிறார்க ளப்படிப்பட்டமகாலட்சுமியே வெகுகாலந்தவஞ்செய்தடையத்தக்கதாயிருக்கிறதேவரீருடையதிருவடிகளைச்சார்வகாலமுந் தியானஞ்செய்கிறமகாபுருஷர்களுந் சொர்க்காதிபோகங்கிடைத்தாலும் நூ-கோடி பூமண்டலத்தைஅரசாட்சிசெய்யக்கொடுத்தாலும்ஒன்றையும்விரும்பாமல்தேவரீருடையதிருவடியில்அர்ச்சித்த துளசியைஅபேட்சிப்பார்கள் அப்படிப்பட்ட திவ்யசக்தியை யுடையதிருவடியால்அப்பிரமேயசகறுபுங் கண்டகளையும் மகாபாபியாயுமிருக்கிறஇந்தக்காளியின்சிரசில் நர்த்தனஞ்செய்யும்படி யிவன் பூர்வத்திலெத்தனைகோடிதவஞ்செய்தானோ அந்நிலெம் அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகராயும் ஜகத்காரணராயும் சுருதிஸ்மிருதி இதிஹாசஙுப்யாயு மிருக்கிற தேவரீர்தவிர கியானமில்லாத யிவன்போலொத்த மூடர்கள்செய்த அபராதத்தை ஆர்க்ஷமித்துரட்சிக்கப்போகிறார்கள்,

பரமகிருபாவத்ஸலராகிய ஜகத்விபுவே தீனதயாளுவே, எங்களுக்குப்பர்த்தாவாகிய இவ்வுரகேந்திரன் மஹாத்தமன் க்ஷமிக்கக்கடவீரென்று சொல்லுகின்றோமல்லாம் ஜன்மஸ்பாவமான கண்டசஹிதமாய குரூரபுத்தியும் துராசாரமுஞ் சர்வஜனபயங்கரமுந் [illegible]மாயிருக்கின்றவன்தான் அப்படியிருந்தபோதிலும்உமதுபக்தஜன ஸ்திரீஜாதிகளாகிய எங்களுடைய [illegible]ளை மாங்கல்யசம்பத்தையிழக்கவும் அலங்கோலமாயிருக்கிற [illegible] கிருபாபயோநிதியாகிய உம்மைச்சரணமாக வடைகின்றோம்அனாதைகளாகிய எங்கள்பொருட்டு அவனது அபராதத்தைக்ஷமித்துநீரேவசனஸ்துதிகளை அங்கீகரித்தருமாக [illegible] பதிபிக்ஷையை லபிக்கச்செய்துரட்சிக்கக்கடவீர்கருணையோ நிதியாகியஸ்ரீயப்பதியேஉம [illegible] இந்தக்காளியனனவன் அகங்காரபோகசௌக்யகர்வகுணங்களழிந்துமஹத்தாமாகிய அநேகபணமண்டல முடிகளுஞ் சிதைந்து ஆயசப்பிராசங்களு மொடுங்கி கத் தளித்துக்கொண் டிருக்கின்றான்_ ஆகையால் எங்களைக்குறித்தாவது அல்லது உமதுகிருபாமகிமையைக்குறித்தாவது எங்கள்பர்த்தாவாகிய இந்தச்சர்ப்பராசனிடத்தில் கிருபைகூர்ந்து ஜீவநற்குணங்களையடைந்துய்யும்படி இரட்சிக்கக்கடவீரென்றபிரார்த்தித்தமாத்திரத்தில் ஸ்ரீபகவானும் பாதாரவிந்தத்தாடன நர்த்தனங்களினின்றுஞ் சாந்தராய் இப்பாலெழுந்தருளிக் கிருபாபரிபூரணராய்க் கடாட்சித்தார் அப்படிக்கடாட்சித்தமாத்திரத்தில் அவ்வுரகபதியுஞ் சிலநேரமஆயாசமுற்றிருந்து பின்புசற்று நேரத்தில் தெளிந்துசிவனேடுங்கூடிய பிராணேந்திரியங்களைச் சௌக்கியமாக வடைந்துதனது பணமண்டலமுகங்களை நன்றாகச் சீர்திருத்திக்கொண்டு பெருமூச்சுகளைவிட்டு ஆயாசங்களொழிந்து ஸ்ரீஜலஜநயனரானசுவாமியை நன்றாக உற்றுப்பார்த்துப் பக்தியுடன்சேவித்துத்தனது இரண்டுகரங்களையுங்கூப்பிஅஞ்சலிசெய் துதுதிசெய்யத்தொடங்கினன்,

காளியநாமதேயபுஜகேந்திர னுடைய வாக்கியம்.

வாரீர் ஸ்ரீபகவானேஉமதுதிவ்யசங்கல்பமாத்திரஸ்ருஷ்டிகளில்தமோகுணப்பிரதானர்களாய்கொடியவிஷாக்கினிகளைக்கோரதண்டங்களில் வைத்துக் கொண்டு சர்ப்பசரீராகாரங்களை யுடையவர்களாயிருக்கிறவெங்களால்,இவ்வுலகத்திற்குப் பயங்கரமாகிய கொடியவினைகள்நேரிடுகின்றனவேயல்லது ஒருநன்மையுண்டானங்களுக்குசய நியகேசரமும் விஷசக்திபலத்தாலுண்டான சௌத்ராகாரமும் தைரியகுணரோஷங்களும் மிகுந்தசர்வாதிசயங்களும்விருத்தியடைந்துக்கொண் டிருக்கின்றனவேயல்லாமல் இந்தஜன்மத்தில்லேசமாத்திர மாகிலும்

யாதொருநன்மையும் உண்டாகின்றதேயில்லை ஸ்ரீநளினதளரட்சரே எங்களுக்கு ஸஜாதியமாயிருக்கிறஇந்தத்துஷ்டஸ்வபாவகுணங்கள் ஒருக்காலும்விட்டொழிகின்றதில்லைஅப்படிப்பட்டஎங்களிடத்தில் சர்வலோகசகிதபரார்கிய நீர்உமதுபரமகாருண்யாதி சயத்தினால் சிட்சித்துப்பரமோபகாரார்த்தமான நல்லறிவுதோன்றும்படியருளிச்செய்த உமதுகல்யாணகுணங்களுக்கு நமஸ்கரிக்கின்றேன் வாரீர்புருஷஸ்ரேஷ்டரே சர்வஜனங்களுக்கும்மூலகாரணசம்பூதராகி உமதுபத்மநாபிவிவரங்களில்நின்றும்உண்டாகச் சர்வபிரபஞ்சங்களையும் சிருஷ்டித்தீர் அப்படிப்பட்ட ஆச்சரியகரமான சிருஷ்டி பேதங்களில் ஸஜாதிய தாமசகுணங்களும் சர்ப்பகாரங்களும்குரூரஸ்வபாவங்களுமுள்ளவர்களாய் நாங்கள் சனித்து ஸ்ரீபகவானாகிய உம்முடையமாயாமோஹனதிரோகிதர்களாய் மயங்கிக்குரூரஸ்வபாவங்களான கர்வாந்தகாரத்தில் மூழ்கிப் பிரமித் திருக்கின்றோம் இப்படி நாங்கள் எந்தச்சுகிர்தத்தினால் நன்மார்க்கங்களாகிய பரமதாமங்களையறிந்து அமமாயாசாதுர்யங்களில் நின்றுந்தெளிந்துஉச்சீவிக்கப்போகின்றோம் வாரீர்ஸ்ரீபகவானே அகிலலோககர்த்தாவாகியும் சர்வஸ்வாமியாகியும்விளங்குகின்ற உமதாக்கினையால் நிக்ரஆநுக்ரஅ பூர்வகமாகச்சிட்சித்து எங்களைநியமிக்கக்கடவீர் ஸ்ரீசர்வேஸ்வரரே நிகிலப்பிரம்மாண்டகோடிகளில் தமதுபரமகிருபையால் ஆக்கியாபிக்கப்பட்டபடி நாங்கள்வசித்துக்கொண்டிருக்கின்றோம் ஆகையால் மகத்துக்களாகிய ஸ்ரீபாகவதாபிமான ஸ்ரீபகவத்கிருபைக்குப் பாத்திரமாகத்தக்கபுத்திகோசரங்களை யருளிச்செய்து இரட்சிக்கக்கடவீர் என்னுடையசன்மாந்தரங்களில் என்னையுமறியாமல்எந்தமகாநுபாவர்களுடைய திவ்யாபிமானகிருபாவலோகனாதிசயத்தை நானடைந்தேனோ அந்தமகாபிமானத்தினால் இச்சன்மத்தில் இப்படிப்பட்டஉமதருளின்மகாதிசயசுகிர்தபாக்கியோபதங்கள் கிடைக்கப்பெற்றேன் இவற்றைக்குறித்து என்னென்று சிந்திக்கப் போகின்றேன் ஆத்மாராமர்களாய்த் தீரத்வாதிசயபேட்சைஅற்றகியாணதிசயங்களையுடைய சனகாதிதிவ்ய பரமயோகீந்திரர்கள் வாஞ்சிக்கத்தக்க உமதுதிருவடித் தாமரைகளினுண்டான மகரந்தாஸ்பத ஸ்ரீரேணுக்கள்லபிக்கப்பெற்றுஉச்சீவிக்க இன்னமும் பிரார்த்தித்துக்கொண்டிருக்கின்றார்கள் அப்படிப்பட்டதிவ்ய சம்பந்கரமான ஸ்ரீசரணாரவிந்தா ஸ்ரீதஸ்பரிசங்கள் எனக்குக்கிடைக்கும்படிபெற்றுக்கொண்டேன் இனிஎனக்கு எந்தப்பதமானாலுமென்னஎந்தலோகத்தில் வாசமாயிருக்கச்செய்தபோதிலுமென்ன உமதருளின்வண்ணமேயல்லது வேறில்லையென்று அந்தப் பிரணமங்களைச் செய்து துதித்தனன் வாராய்க்ஷிதீசனாகிய மகாராசனேசர்வகாரிய காரணாத்மகனாகிய ஸ்ரீசர்வேஸ்வரன் இந்தக்காளியசர்ப்பராசனுடையஸ்துதி பூர்வகமான உபசாரவார்த்தைகளையங்கீகரித்து அந்தஉரகேந்திரனுக்கு நியமிக்கின்றான்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்

வாராய் ஸ்ரீபகவத்பக்தனாகிய காளியனே. இன்றுமுதல் இந்தமகாநதிதீரத்தில் யாவரும்ஸ்நானபானங்களைச்செய்து சந்தோஷிக்கவும் கோவர்க்கங்கள மனுஷ்யர்கள் முதலியசீவராசிகளுந் தங்களதாபந் தீரும்படியாய் நீராடித்தாகபானஞ்செய்து திருப்தியடையவும் இந்நதியை விட்டுவிட்டுநீயும்உனது சகுடும்பங்களாகிய புத்ரமித்ர களத்ராதி சர்வபரிவாரங்களும் சமுத்திரத்திலகுப்போய்எனது குணாநுபவங்களைச்செய்துகொண்டு சுகித்திருந்தார்கள. இந்தயமுனாநிமடுவில்உன்னால்நேரிட்டிருந்த பூர்வபயங்களை நீக்கிப் பிரஸ்துதத்தில் நதிதோஷநிவாரணங்களையுஞ்செய்துஇம்மகாநதி தீர்த்தத்தினால் யாவரும்திருப்தியடைந்து புண்யபலன்களை யடையும்படிநம்மாற்செய்யப்பட்ட இந்தப்புண்ய சரித்திரங்களைக் காலையினும்மாலையினுஞ் சுசிர்ப்பூதர்களாய் ஸ்ரீபகவத்பக்தி சகிதத்துடன் குணாநுபவஞ்செய்கின்ற பலப்பிரதர்களான சுகிர்தசனங்களுக்கு ஆநந்ததானாதிபுண்ணியபலங்களுண்டாகும் மேலும்அவர்கள் குரூரசர்ப்பபுஷ்பங்களாலுண்டாகின்ற விஷ தோஷங்களையும் அடையாமலிருக்கக்கடவர்கள்பின்னும்இன்றுமுதல் இப்பிரபஞ்சத்தவர்களில் யாராகினும்இம்மகாநதிபுண்யதீர்த்தத்தில் பக்திசிரத்தையுடன் ஸ்நானங்களைச்செய்து விரோதபவாசஉத்தமா நுஷ்டானபரர்களாய்த்தங்கள்தங்கள் இஷ்டதேவதாபிரார்த்தனைகளைச்செய்து இந்தப்புண்ணியதீர்த்தத்தில் திலதர்ப்பணாதி பிதுர் கிருத்தியங்களையுந் தேவதாயக்ஞங்களையுஞ் செய்துதேவருஷிபித்ருமான வாதிருணங்களைத்தீர்த்து ஸ்ரீபகவத்சமர்ப்பணபுத்தியுக்தசத்விவேக துல்யமானசர்க ளாவார்களானால் அப்படிப்பட்டமகாநுபாவர்கள் தங்கள்வெகுசன்மங்களிற்சம்பாதித்த துக்கசமூகங்களில் நின்றுமவிமுக்தர்களாய்ப் பரகதியையடையக்கடவர்கள

வாராயஉரகேந்திரனே பூர்வத்தில் நீஸ்ரீகருடபகவானுடைய பீதியினாலல்லவா உனதுநிசநிவாஸஸ்தானமாகியரமண கத்வீபத்தைவிட்டு இம்மடுவில் பிரவேசித்திருந்தாய இனியுனக்குச்சத்துருபயமில்லை எனது ஸ்ரீபாதாரவிந்தகுறிகளையடைந்தஉனதுபணாமுடிகளைகண்டமாத்திரத்தில் அந்தப்பட்சிராட்டாகியகருடபகவான் உன்னைமிகவும் விசுவாசமாக ஸ்நேகிப்பாரேயல்லது சத்துருவாகஹிம்சிக்கக்கடவரல்லர் என்று இவ்விதங்களாக ஸ்ரீகோபாலகிருஷ்ணபகவான் கிருபையாகச்சொன்னார்,

இப்படிச் சொன்ன மாத்திரத்தில் அந்தப்புஜகேந்திரன் மகா சந்தோஷாநந்த பரிதனாய்த் தனதுபத்

களுந் தாளும் மிகுந்தபக்திவிசுவாசத்துடன் திவ்யபீதாம்பரரத்னங்களுநி திவ்ய பூஷணங்களையும் திவ்யசாந்தபுஷ்ப தாம்பூலாதிமங்கல திரவியங்களையும் அதலவிதலாதி உபஸ்வர்க்கங்களில் விகசித்திருக்கின்ற சகல மனிதர்களுக்கும் அரிதாய்த்தேவதார ஹமாயிருக்கின்ற மகாபரிமளமாகியஞ்ருநீலோற்பல புஷ்ப மாலையையும் ஸ்ரீ கண்ணபிரானுக்குக் காணிக்கையாகச் சமர்ப்பித்து அந்தஸ்வாமிகிருபையையடைந்து செலவுபெற்றுக்கொண்டு தனது புத்திரமித்ரகளத்ர சமேதர்களுடன் அந்தப்பரிவாரங்கள் தன்னைச் சூழ்ந்துசந்தோஷித்துக்கொண்டு ஆநடவுந்செய்துக்கொண்டுவர ஸ்ரீபகவானுக்குஅடிக்கடி தண்டனிட்டு அஞ்சலிசெய்து துதித்துக்கொண்டு ரமணகநாமதேய ரத்னாகரத்வீபத்தைக்குறித்துச் சென்றான் ஸ்ரீகிருஷ்ணபகவான் அநுக்கிரகத்தால் அந்தஜலத்திற்குவிஷம்போய் பரிசுத்தமாசசு தென்று சுகயோகீந்திரர்சொன்னார்.

## கஎ-வது-அத்தியாயம்.

கலி விருத்தம்,

பண்டுநாளையிற் புள்ளரசன்றனக்
கொண்டபாரதஞ் செய்தகொடுமையும்
மண்டுதீயினைப் பானஞ்செய்துமனங்
கொண்டுரட்சித்த கொள்கையுங்கூறுவாம்.

ஸ்ரீ ஹரிபக்திலப்தனான காளியன் பூர்வத்தில் கருடபகவானுக்கு அபராதஞ் செய்ததையும், ஸ்ரீகிருஷ்ணபகவான் காட்டுத்தீயைப் பானம்பண்ணிச் சகலகோபாலகோபிஜன கோபாலவத்ஸ கோவத்ஸங்களை இரட்சித்ததையுஞ் சொல்லுகின்றது.

வாரீர் தயாபரிபூர்ணரான பிரம்மரிஷிசிரேஷ்டரே, இந்தக்காளியனானவன் தனது நிவாசஸ்தானமாகியரமணகத்வீபத்தை விட்டுத்தங்கள் சுஜாதியர்களான சர்ப்பஜனங்களைத்துறந்து தான்மாத்திரந் தனதுகுடும்பத்துடன்வெளிப்பட்டு வரும்படியாய் கருடபகவான் விஷயத்தில்என்ன அபராதங்களைச்செய்தானந்தச்சரித்திரத்தை விஸ்தாரமாகச் சொல்லவேண்டுமென்று பிரார்த்தித்தான். அவ்வரசனைப்பார்த்து முனீந்திரர்சொல்லுகின்றார்.

கேளீர் மகாபாகவதசிகாமணியாகிய பரீட்சித்துமகாராஜனே அந்தரமணகத்வீபத்தில் வாசஞ்செய்கின்றசகலமான சர்ப்பங்களுந் தங்களுக்குஇந்தச்சர்ப்பங்களுடையபயங்களில்லாம லிருக்கத்தக்கதாகமாதங்கள்தோறும் மகாவிருக்ஷங்களின் அடிவாரங்களிலும் பிலத்வார சமீபங்களிலும் மணற்குன்றுபோலப் பிரகாசிக்கின்றபுற்றுகளின் சமீபங்களிலும்சுசிர்ப்பூதர்களாய்ப் பயபக்திவிசுவாசங்களுடன்சந்தனகர்ப்பூர சுகந்தபுஷ்ப தாம்பூலாதிமங்கல திரவியங்களைக் கொண்டு சர்ப்பங்களை அர்ச்சித்து அறுசுவை ரசவர்க்கங்களைச்சமர்ப்பித்துக்கொண்டிருந்தார்கள். இந்தச்சர்ப்பங்களும் பருவதின புண்ணியகாலங்களதோறும் தங்களுக்குச் சர்வஜனங்களாலும் சமர்ப்பிக்கப்பட்ட அந்தஸத்கார பூஜாபாகங்களைத் தங்களகுலத்திற்கு வைரியாகிய கருடபகவானுக்குச் சமர்ப்பித்து அவரால் யாதொரு அரிஷ்டங்களையுந் தாங்கள் அடையாமலிருக்கத் தங்களை அவர் இரட்சிக்கும்படி யிருந்தார்கள்.

இவ்விதங்களாக நடந்துவருகின்ற காலங்களில்இந்தக்காளிய புஜகேந்திரனானவன்மகாபலபராக்கிரமனாகியும்விஷவீரிய தைரியஸ் தைரியனாகியும் இருப்பதால்கர்வித்துத் தான்மாத்திரம் அந்த வினதைச் சிறுவராகிய பக்ஷீந்திரனை மதியாமலுந்தனது பூஜாபாகங்களைக்கொடாமலும் அலட்சியஞ்செய்துக்கொண்டிருந்தான். அதனால் இந்தவேதபுருஷாம்சபட்சிராட்டாகியகருடபகவான்,கோபோத்தீபிதமானஸராய் அந்தக்காளியினுடைய பணாமண்டல முகங்களைக்கிழித்து சம்ஹரிக்கவேண்டுமென்று உத்தேசித்து அநந்தமானகொடிமுடி சிகரங்களையுடைய ஸ்ரீமகம்மேரு பர்வதராஜனானவன் எழும்பிப்பராக்கிரமாதிசயத்துடன் விஜயஞ்செய்ய வருகின்றதுபோலச் சுவர்ணமயசரீராகார ஸ்வரூபராய் அந்தரமணகத்வீபத்திலுள்ள குகைகளோடுங் கூடிய பர்வதங்களிலுள்ள விருக்ஷங்கள் முதலியவைகள் வேரோடேபறிந்து பறக்கும்படியாகவும் பட்டணங்கள்கிராமங்கள்முதலியவர் சர்வப்பிரதேசங்களும் நடுநடுங்கி அல்லகல்லோலமாகவும் மகாவிசித்திர ரத்னசோபிதாகாரங்களாகிய பட்சத்வயங்களை ஊழிகாலமேகங்களாலுண்டாகிய கோரபயங்கரசப்தவேகப் பெருங்காற்றுகளுண்டாகும்படி வீசிக்கொண்டும் பூமியதிர்ந்து பிரதித்வனிகள் செய்யச் சர்வஜன பயங்கரமாகக் கோஷித்துக்கொண்டுவந்தார்.

இப்படிவருகின்ற இந்தப் பக்ஷீந்திரனைப்பார்த்துச்சர்வஜந்துக்களும் ஆ ஆ வென்று ஆகாரஞ்செய்தார்கள். சிலஉத்தமர்கள் சரணமடைந்துபிரார்த்தித்தார்கள் அந்தச்சமயத்தில் இந்தக்காளியனானவன் மகாதீரபராக்கிரம விஷஜ்வாலாபிலவீரியத்துடன் இந்தப்பக்ஷீந்திரனைப்பார்த்துக் கோபோத்தீபிதனாய்த்தனதுபணாமண்டலமுகங்களை விரித்துக்கொண்டு கண்களில்நின்றுவிஸ்பூலிங்கணங்களுதிரப் புகைகளெழும்ப வாய்களில் நின்றுவிஷரசங்கள் வருஷிக்கப் கோரபயங்கராகாரமாகிய யமபாசத்தைப்போலநாக்குகளை நீட்டிக்கொண்டுமகா உக்கிரகோபத்துடனெழும்பி அந்தப்பட்சிந்திரனுடையசர்வாவயவங்களையுஞ் சின்னபின்னமாகக் கடித்துவிடக்கருதிச் சுவாலைகளுக்கொப்பான விஷரசங்களைமேலுமிழ்ந்து நெருங்கி மகாவருத்தங்களை யடையச்செய்தான். அப்போது அந்தக்கருடபகவான் முன்னிலும் அதிக சௌரிய பராக்கிரம வீரியாதிசய னௌதிராகாரகரா

மிருத்தியுவுக்குச் சமானராய் லேசமாத்திரமாகிலுந் தயையைக் கொள்ளாதவராய் ஊழிகாலருத்திரபகவானைப்போல உக்கிரமானகோபத்தையடைந்து இந்தச் சர்ப்பேந்திரன்பேரிற்பாய்ந்து தரத்தி நகசக பரியந்தம்சரீராவயவங்கள் முறியத்தனது பக்ஷங்களாலறைந்து அவனுடையஅநந்த பணமண்டல முகங்களையுந் தலையெடுக்கவொட்டாமற்கொத்திக்கொத்திக் கிழித்துச்செண்டாடி இரத்தமாம்ஸங்களுதிரும்படி யவன் விஷயங்களைக் கொள்ளைகொண்டு சரீரமாத்தியந்தமும்சல்லடைக்கண்களைப்போலத் தமதுபதநகங்களாலும் மூக்கின்கூர்மையினாலுந் துளைத்துச் சின்னபின்னமாக அடித்தார் அப்படிஅடிக்குஞ்சமயத்தில் இந்தப்புஜகேந்திரன் இளைத்துமகாவருத்தத்தை யடைந்து தனதுகர்வமழிந்து பிராணபீதியுடனே எப்படித் தப்பித்துக்கொள்ளப்போகின்றோமென்று ஏக்கங்கொண்டு யோசித்துச்சமயம்பார்த்துப்பதறிக் கதறிக்கொண்டு ஓடிவந்து இந்தயமுனா நதிமடுவில் பிரவேசித்தொளித்தான் அப்போது கருடபகவான்நல்லது இனிஎப்போதாவது அகப்படமாட்டாயா அந்தச் சமயத்தில் உன்னைச் சம்ஹரிக்கின்றேனென்று சொல்லிப்போனார்,

வாராய்மஹாராசனே இந்தச் சர்ப்பராஜன் இந்தக்கம்பீரமாகிய மடுவிலிருந்தால்பயமில்லாமல்வாழலாமென்றுநினைத்து பிரவேசித்ததற்குக் காரணஞ்சொல்லுகின்றேன், கேளாய்பூர்வத்தில் மகாதபோநிதியாகியசௌபரியென்னும் மகாரிஷியானவர் வெகுகாலமாக இந்தயமுனாநதிதீரத்தில் தவஞ்செய்துகொண்டிருந்தார் அப்படியிருக்கின்ற சமயத்தில் சர்ப்பவைரியாகிய கருடபகவான்மிகவும் பசியினால்வருந்தி இம்மடுவில் பிரவேசித்து இதில் விருத்தியடைந்துக்கொண்டிருக்கின்ற ஜலஜந்துக்களை நிர்த்தயராய்ப் பட்சித்துக்கொண்டிருந்தார் அதைஅந்தச் சௌபரியானவர்பார்த்து அப்பனே பட்சித்ததுபோதும் இனிமேலிதிலிருக்கும் ஜலராசிகளை இம்சிக்கவேண்டாமென்றுசொன்னார். அப்படிச்சொல்லியிருக்கவும் சிலநாள்பொறுத்து ஒருநாள் மறுபடியும்கருடபகவான் அந்தப்புண்யஸரசில்பிரவேசித்து ஜலஜந்துக்களை இம்சித்துப்பட்சித்தார் அப்படிப்பட்சிக்கின்றசமயத்தில் மற்றஅதசேஷமாகிய ஜலஜந்துக்களெல்லாம்மிகுந்தவியாகுலத்தை யடைந்து பிராணபீதியினால் இளைத்தொடுங்கித் தீனத்துவங்களைக்கொண்டிருந்தன அம்மஹாருஷியானவர் இந்த ஜலஜந்துக்களைப்பார்த்து மிகவுந்தயாளுவாய் ஐயோவென்றிரங்கி ஆயாசத்தை யடைந்து இவைகளைக்கொலைசெய்து பட்சிக்காநின்ற இந்தப்பட்சிராசனிடத்தில்மிகவும் கோபோத்தீபிதமானஸராய் அந்தப்பட்சிராசனை யுத்தேசித்து இன்றுமுதல்இந்தமடுவில்பிரவேசித்து இதிலிருக்கின்ற ஜலஜந்துக்களை இம்சித்துப்பட்சித்தீராகில் உமது பிராணவாயுக்கள் சிதறிஉயிரிழந்து போகக்கடவீரென்று சபித்தார அந்தச்சாபகாரணம இந்தக்காளிய சர்ப்பராஜனொருவனுக்குமாத்திரந்தெரியுமல்லது மற்றச்சர்ப்ப சமூஹங்களுக்குத் தெரியாது ஆகையால் இந்தக்காளியனொருவனுமேஇந்நதியிற்பிரவேசித்துத் தனது புத்ரமித்ரகளத்ரபரிவாரங்களை யழைப்பித்துக்கொண்டான்.

வாராய் மஹாராசனே இவையெல்லாமுணர்ந்தசர்வசாக்ஷிபூத சர்வக்கியனாகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் சர்வப்பிராணி ஸம்ரட்சணார்த்தத்தின்பொருட்டு அந்த உரகபதியை அம்மடுவில்நின்றும்வெளிப்படுத்தி அவனுக்கு யாதொரு சத்துருபயமில்லாமலிருக்க அபயப்பிரதானஞ்செய்துமிகவும் சௌக்கியத்தையடைந்து ஸ்ரீபகவத்பக்தியுக்தஸாதுவாயிருக்கும்படி நியமித்தனுப்பிவிட்டுப்பின்புதிவ்வியபரிமளமாகிய நீலோத்பல புஷ்ப மாலையினையும் திவ்யகந்த பீதாம்பராபரணங்களையும் திவ்யமாணிக்கமரகத இந்திர நீலவச்சிரரத்னமாலைகளையும் அணிந்து இராகுகேதுவினால் கிரகிக்கப்பட்டிருந்தசூரியசந்திரர்கள்விடுபட்டு பிரகாசிப்பதுபோல ஸ்ரீ பகவானானவர் அந்தநாகேந்திரனும் நாககன்னிகைகளும்பக்தியுடன்சமர்ப்பித்த திவ்யஸ்வர்ணமய ரத்நாபரணாலங்கிருதத்துடன் தமது திவ்வியஸ்வரூப தேஜசும் பிரகாசிக்க அம்மடுவில்நின்றும் வெளிப்பட்டுச் சகலாப்தஜனசமூஹங்களில்வந்துசேர்ந்தார். அத்தருணத்தில்அவருடையதாய்தந்தைகளாகிய ஸ்ரீயசோதாநந்தகோபர்ரோகிணிசமேதர்களான சகலகோபால கோபிகாஜனங்களாகியசகலாப்தஜனங்களும் மூர்ச்சைதெளிந்து ஆயாசந்தீர்ந்து ஸ்ரீமாதவப்பிரானைப்பார்த்து பிராணலாபத்தையடைந்தஇந்திரியசமூஹங்களைப்போல சந்தோஷித்துப்பரமானந்தபரிதர்களானார்கள். ஸ்ரீபலபத்திரருந்தமது திருத்தம்பியாகிய ஸ்ரீகண்ணபிரானைக்கண்டு களித்துஆனந்தத்துடன்ஆதராதிசயமாகஆலிங்கனஞ்செய்துசந்தோஷித்தார், சகலகோபால கோபிஜனங்கள் யாவரும் நேத்ரோத்ஸவமாக சேவித்துக்கொண்டிருந்தார்கள். விருஷபங்களெல்லாம் மகத்தாகிய செருக்கையடைந்து வால்களைஉயரத்தூக்கித் தலையையெடுத்துக்கொண்டு ஆ ஸ்ரீகிருஷ்ணஜயதுவென்னுமாப்போலக் கர்ஜித்துஉளங்காரித்தன. கன்றுக்குட்டிகள் ஸ்ரீகிருஷ்ணதரிசனகுதூகலத்தினால் அந்த யமுனாதீர்த்தத்தினோரங்களில் வால்களைஉயரவெடுத்துச் சப்தித்துக்கொண்டு இளமான்குட்டிகளைப்போல இடசாரி வலசாரியாயோடி விளையாடிச் சம்பிரமங்களையடைந்தன.

காமதேனுவைப்போலொத்த பசுக்கள்யாவும்தங்கள் போஷகனாகிய ஸ்ரீ கோபால கிருஷ்ண மூர்த்தியானவனைக் கண்ட மாத்திரத்தில் சந்தோஷ பரிதமானஸ

த்தால்சரீரவயவங்கள் பூரித்து ஆ, கோவிந்தா வென்னுமைப்போல அம்மா வென்று சப்தித்துப்பரமாநந்தங்களையடைந்து ஸ்ரீபகவானைசசூழ்ந்திருந்தன, அந்தப்புண்ணியதீர்த்தத்தின்றேரங்களில் பட்டுப்போயிருந்த விருட்சங்கொடிபூண்டுகள்சகலசமூஹங்களுந்தளிர்விடுக்குங்காலமாகிய வசந்தகாலம்சேரிட்டதுபோலத்தளிர்த்தன சகலமிருகபட்சி சமூகங்களும் சூரியோதயகாலசமீபபஞ்சவிஷக்காலத்தைக் கண்டதுபோலக் கலகலவென்று மகாநந்தவைபவத்துடன் நானாவிதமதுரஸ்வரங்களுண்டாகச்சப்தித்தன. அப்பொழுதுசகலபிரம் ஹண்யசனங்களும் புண்யாங்கனைகளாகிய பிராமண ஸ்திரீகளும் ஸ்ரீநந்தகோபயசோதைகள்முதலாகியவர்களைப்பார்த்து உங்கள் பூர்வசன்மங்களினுடைய சுகிர்தவிசேஷஅருந்தவப்பயன்களினால் சர்வப்பிரபஞ்ச மனோகரமாய்விளங்குகின்ற மகாதவப்பலமாகிய உங்களன்புள்ளபுத்ரரத்நமானவர் இந்தக்கொடியசர்ப்பதஷ்டத்தில் நின்றும்விடுபட்டு க்ஷேமமாய்வந்து சேர்ந்தார்.உங்கள்பாக்யோதய புண்ணியவசத்தை என்னென்று துதிக்கப் போகிறோமென்று மிகவும்ஆதரத்துடன் சந்தோஷாநந்தபரிதமனஸர்களாய் ஆசீர்வசனங்களைக் கூறினார்கள். அத்தருணத்தில் ஸ்ரீயசோதாப்பிராட்டி ஸ்ரீகிருஷ்ணபகவான்சமீபத்திற்கு அதிகஅன்புடன் வந்து தனது அருமைச் சிறுவனை ஆலிங்கனஞ்செய்து உச்சிமோந்துதிவ்யதிருமேனியெங்கும் ஸ்பரிசித்துத்தனது இடுப்பின்மீதெடுத்துக்கொண்டு என்னையனே, என்னப்பனே,எங்கள்குலதெய்வமேயென்று முத்தமிட்டுச்சற்றுநேரஞ் சும்மாவிருந்து எங்கள் அருஞ்செல்வப் புத்திரனே உன்னை இக்கொடிய சர்ப்பமானது கக்கும்போது மகத்தாகிய ஆபத்துகளையடைந்து எங்களை நினைத்து துக்கித்தையோ பதறிக்கதறினையோ விதியைவெறுத்தையோ ஏனப்பா இம்மடுவில்இறங்கினாய் நீயெப்போதும் தீரபுருஷனாகித் துணிந்துபிரவேசிக்கின்றவனல்லவா உனது ஆச்சரியகரமான சேஷ்டிதங்களைக்குறித்து நாங்க ளஞ்சுகின்றோமே எங்களைப்பற்றியாவது மற்றப்பிள்ளைகளைப் போல் சாதுவாயிருக்கப்போகாதாவென்று சொன்னாள். இப்படிப்பலவாறு தனதுஆகராதிசயங்களை விளங்கச்செய்து பிரீதியால்நஷ்டகதனை புத்திரனென்னுமாதவனை அடிக்கடி பார்த்துப்பார்த்து ஸ்வப்நத்தில் அடைந்த தனமானது நேராகக்கிடைத்ததுபோல் புத்திரபலப்ராப்தியாகிய ஸ்ரீபகவானையடைந்து அளவிறந்தசந்தோஷாதிசயத்தோடுங்கூடினவளாய் அந்தச்செல்வச்சிறு குமாரனை மடியில்வைத்துஉகந்து ஆசீர்வசனங்களைச் சொல்லிக்கொண்டு அடிக்கடி ஆனந்த பாஷ்பங்களை வருஷித்து நல்ல திருப்தி அடைந்த மனமுடையவளா யிருந்தனள்.

வாராய் ராசேந்திரனே இவ்விதங்களாக யாவருக்கும்ஆநந்தத்தைபடைந்திருக்கும்போது சூரியன் அஸ்தமனத்தைபடைந்தான் அந்தக்காளிந்தி தீரத்தில் அன்றையத்தினம் இராத்திரிநந்தகோபயசோதா தேவிமுதலிய சகலகோபாலகோபீசன ஆபாலவிர்த்தசனங்களெல்லாரும் பசு-கன்று-விருஷபகணங்கள்யாவும் ஸ்ரீபகவத் சந்தர்சன சந்தோஷத்தினால் பசிதாகங்களை மறந்திருந்து மிகவும்பொழுதுபோனபின்பு பசிதாக பீடிதர்களாய் அலுத்தஎவரெவர்கள் எங்கெங்கு எப்படிஎப்படியிருந்தார்களோ அவரவர்கள் அங்கங்குஅப்படி அப்படியே சயனித்துநித்திரைசெய்து கொண்டிருந்தார்கள். பசு-கன்று-விருஷபகணங்கள்யாவும் அப்படியேமெய்மறந்து நித்திரைசெய்தன, அக்கடுநேரத்தில் மகத்தரமாகிய அந்தமகாரண்யப் பிரதேசத்தில் தெய்வீகத்தாலுண்டாகியதாவானலமென்கிற ஒருகாட்டுத் தீயானது உற்பவித்து அம்மகாவனத்திலிருக்கிற விருட்சம் கொடிபூண்டுகள்யாவும் பற்றியெரித்துக்கொண்டு நான்குதிக்கிலும் ஜாச்வல்யமானமாய்ப் பொறிகள்சிதறஅதிகோராகாரமாய் மண்ணும்விண்ணும்புகையெழும்ப ஜ்வலித்துச்சூழ்ந்து அலுத்துத்தங்கள தாபந்தீரும்படிசுகமாக நித்திரைசெய்துகொண்டிருக்கின்ற இந்தநந்தவ் ரஜசமூகபுண்ய சனங்கள்மீதுபாய்ந்தது பாய்ந்தமாத்திரத்தில் யாவருந்திடுக்கிட்டுத் தூக்கந்தெளிந்தெழுந்திருந்து இத்தீயினாலகொளுத்தப்பட்ட வேகத்தைச்சகிக்ககூடாதவர்களாய் பிராணபீதியையடைந்து சர்வசனங்களும் மாயாமனிதபாலராகிய ஸ்ரீஅரியைத்தவிர அன்னியராகியவொரு ரட்சகரையுங்காணமல் ஆ ஸ்ரீகிருஷ்ணா ஆபத்பாந்தவா சரணாகதவத்சலனாகியஸ்ரீபகவானே இந்தா பார்த்தீரா காட்டுத்தீயானது சமீபத்திற்கு வந்துவிட்டின்றது இப்போதேஎங்களுக்குச சகிக்ககூடவில்லையே ஸ்வாமீ இன்னமுபேட்சை செய்கின்றீரோ தகித்துவிடுகின்றதே இதோவந்து சூழ்ந்துகொண்டதேஏககாலத்தில் யாவரும்இவ்வக்நி கணங்களால் மகத்தாகியதுன்பமுற்று அலைகின்றோம்எங்களை நீ யெவ்விதமாகஇரட்சிப்பீரோ அறிகிலோம் ஓபத்மாட்சரோ-ஸ்ரீகிருஷ்ணா-ஓ கோஸ்ரீபலராமரோ நீங்கள்மகாபராக்ரம சாலிகளானஅதிமானுஷ சேஷ்டித தெய்வபுருஷர்களாகையால் சீக்கிரமாக இந்தக்காட்டுத்தீயைக் குளிரச்செய்யுங்கள்உங்களுடைய ஸ்ரீசரணாரவிந்தங்களே கதியென்றும்உங்களுடைய சேவையேபுருஷார்த்தமென்றும் நம்பினபக்தசனங்களாகிய எங்களுக்கு இத்துன்பங்கள் நேரிடலாகுமோ ஓபரமபுருஷர்களே அதியுக்ரமான இந்தத்தாவானலச்சுவாலைகள் முழுதிலுமேல்விழுந்து ஹிம்சியாதபடி. எங்களைரட்சிக்கக்கடவீர்களென்று யாவருமுறையிட்டார்கள் அந்தச்சமயத்தில் ஸ்ரீபகவானவர் தமதுகருணாகடாட்சவீட்சண்யத்தினால் அவர்களுக்குத்துன்பமில்லா திருக்கும்படி கடாட்சித்து ஜகதீஸ்வரனாகியும் ஸ்ரீ

அனந்தகோடி தேஜோமயனாகியும் விளங்கத்தமது நிஜசக்தியாலே சத்தியமானதும் சச்சிதானந்த ஸ்வரூபங்கொண்டு ஒருவருந் தன்னையறியாமல் சங்கல்பிதத்துக்கொண்டு அக்கினியாத்மக அந்தரியாமித்வத்தினால் அந்தக்காட்டுத்தீயை அரைட்சணமாத்திரத்தில் தாம்போக்தாவுங் கர்த்தாவுமாய்ப்பிரதியாதிக்கின்ற வேதார்த்தங்களுக்குச் சாட்சியாய்முழுதும்பானஞ்செய்து ஆபீரதர்களாகிய நந்தகோபசனங்கள்யாவரையுமிரட்சித்தார்.

வாராய் மகாராசனே இவ்விதமாகஸ்ரீபகவானனவர் காட்டுத்தீயைப் பானஞ்செய்து அரண்யமெங்குங்குளிரச்செய்தபின்பு யாவருஞ் சௌக்யத்தை யடைந்திருந்தார்கள் அந்தகோபாலசனங்களின் முகங்களுக் கொப்பாய்த் தாமரைப்புஷ்பங்கள் மலரச்சூரியன்கிழக்குத்திசையிலுதயமானார், ஸ்ரீநந்தகோபரும் கோபாலர்களும் காலையிலெழுந்திருந்து பிருந்தாவனத்திற்கு எதிர்முகர்களாய் ஸ்ரீபகவதம்ச சம்பூதர்களாகிய ஸ்ரீராமகிருஷ்ணர்களுடைய மகாமகிமாதிசய குணங்களைக்குறித்துவிஜயகரனஞ்செய்துக் கொண்டு திக்குவிதிக்குகளிற் பரவ வேணுகானங்கள்முதலிய ஸ்வரங்களைச்சப்தித்து ஸ்ரீகிருஷ்ணபகவானையழைத்துக்கொண்டு சகலகோபாலகுமாரகோபிசன கோகண சமேதர்களாய்ப் பரமானந்தத்துடன் திருவாயர்பாடியை வந்துசேர்ந்தார்கள்.

---

## ௰அ - வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

நண்ணுமிராமகிருஷ்ணனெனுநாமர்கள்
பண்ணும்லீலைக்குரியபராக்ரமம்
கண்டனும்ப்ரலம்பன்றன்சம்மாரமும்
கண்டுபோன்றகதையிதுவாமரோ.

ஸ்ரீராமகிருஷ்ணர்களாகிய மகாபுருஷர்களுடைய அதிமானுஷ கிரீடாலீலைகளுக்கு அநுகுணமாய்த் தோற்றிய வசந்தகால வர்ணனையும் ஸ்ரீபலராமரால் மஹாபராக்கிரமசாலியும் அசுர ஸ்ரேஷ்டனுமாகிய ப்ரலம்பாசுரனுடைய சம்ஹாரமுஞ் சொல்லுகின்றது.

வாராய் ஜனநாயகனே, இந்தஸ்ரீபலராமகேசவமூர்த்திகள் கோபாலபாலவேஷஸ்வரூபர்களாய்ச் சந்தோஷாதிசயமான மனோத்ஸவங்களுடன் சகலபந்துக்களால் செய்யப்பட்ட ஸ்துதிகளைப்பெற்றுக்கொண்டு அளவிறந்த கோசமூகங்களைச சம்ரட்சணஞ் செய்து தங்கள்மாயாசேஷ்டிதங்களால் அநந்தவிசித்திர லீலாவிநோதங்களை யாசரித்துச்சர்வத்திரர்களுக்கும் மனோரம்யமாக விளையாடிக்கொண்டிருந்தார்கள் அப்படியிருக்கின்ற சமயத்தில் ஸ்திரீகளுக்கும் ஓருயிரொன்றுசொல்லமனமொருமித்திருக்கின்ற ஸ்திரீபுருஷர்களையுருகச்செய்யவும் சர்வபிராணிகளுக்குந் தாபங்களையுண்டுபண்ணவும், உத்தராயணகாலந் தோன்றியது.

வாராய் உத்தரானந்தனனே, அக்கிபகவானும்யமனும் நிருதியுமிருக்கத்தக்க தென்றிசையில் வெறுப்பில்லாமல் நித்தியமாய்நடந்ததினாலே முன்னிலும் அதிகமானதாபம மேலிட்டது அதைப்பனியால் தணித்துக்கொள்ளவேண்டுமென்று நினைத்துஇமயமலைப்பக்கத்தில் சேர்ந்தானென்றுசொல்லவும் தன்னுடைய கிரணங்களினால் மலர்ந்து பரிமளிக்கின்ற தாமரைப் புஷ்பங்களைப் பனிகள்வாட்டுகின்றபடியால் பனிமலையோடுசண்டைசெய்யப்போனானென்றுசொல்லவும்.

சூரியபகவான் வடதிசையைச் சேர்ந்தான் இப்படிச்சூரியன் வடதிசையைச்சேர நேரிட்டதாகிய உத்தராயணகாலத்தில் மகரராசியிற்பிரவேசித்த சூரியன் அதைவிட்டுக் கும்பராசியிற்போய் அதிலிருந்துமீனராசியிற்பிரவேசித்தான்.இப்படிச்சூரியபகவான் ராசியைவிட்டுராசிகளிற்பிரவேசிக்குந்தோறும் அந்தஇமந்தகாலசிசிரகாலங்களில் நாளுக்குநாள் அரசுகள் அதிகரித்துப்பகற்பொழுது விருத்தியடைந்தது இரவு அகசுகுறைந்தது இப்படிராசியைவிட்டு வேறுவேறுராசிகளில்வருகிற திவாகரனுடையகதிபேதசஞ்சாரங்களினால் அவனுடைய கிரணங்கள் தினதினங்களில் உஷ்ண விருத்தி யடைந்தன.

அதனால்உலகத்திற்கு அதிகமதிகமாய் உஷ்ணஜ்வாலைமேலிட்டது அந்தக்காலத்தில் ஏரிகள் தடாகங்கள குளங்கள்-குட்டைகள்முதலியவற்றில் நாளுக்கு நாள்சலங்கொஞ்சங்கொஞ்சமாய் வற்றியதுஇப்படி நீர்வளங்களெல்லாம் வற்றவே ஆவினங்கள்சலபானஞ் செய்யுந்தீர்த்தத்துறைகளெங்குஞ் சேறுய்கலுழம்பின உடனேசூரியபகவான் மேஷராசியிற்பிரவேசித்தான்இளவேனிற்காலமாகிய வசந்தகாலம்வந்தது வசந்தமாகியதென்றற்காற்றுந் திரும்புவதற்குமுன்னம் கீழ்க்காற்று வாடைக்காற்றுமாறிக் கொஞ்சம்வேகங்கொண்டு அடித்தன அதனால் இந்தப்பூமியினுடைய சூட்சமாம்சங்களாகிய பூரேணுக்களென்னுந் தூளிகள் எங்கங்கே யெழும்பி ஆகாயமெங்கும் வியாபித்துச்சூழ்ந்திருந்தன. விஷஜந்துக்களாகிய சர்ப்பங்கள்முதலிய குரூரஜந்துக்கள் யாவும் புற்றுகளினிடமாகியபிலத்தில் அடிவாரங்களிற்சென்று பகற்காலமெல்லாந் தங்கி இராக்காலங்களில் வெளியில் வந்து வாயைத்திறந்துக்கொண்டு பட்சிப்பதற்குத் தகுந்த சீதளமந்தமாருதம் வராமல் பெருங்காற்று யிருந்தபடியால் சகிக்கக்கூடாத பிரயாசங்களைக் கொண்டிருந்தன.

சகலமான விருட்சலதா குல்மாதிகள்யாவும்இலைகள் பழுத்து உதிர்ந்தன சர்வஜன சாதாரணவிஹார அந்தஉஷ்ணகாலமானது இவ்வண்ட ரக்ஷிபதியான பிரமதேவன் சர்வத்திர சாதாரணமாக இந்தப் பிரம

ஹாரண்டமென்னும் பெரிய கடாரமாகிய ஒருபாத்திரத்தில் சூரியபகவானுடைய கிரணங்களாகிய உஷ்ணரசங்களைச்சேர்த்துவைத்ததுபோல இவ்வுலகத்தில்விளங்கியது, இவ்விதமாகிய உஷ்ணகாலத்தைவசந்தகாலமென்னும்பேர்கொள்ளச்செய்யும்படி மந்தமாருதமென்னுந்தென்றற்காற்றானது அகஸ்திய பகவானுக்கு வாசயோக்கியமாகிய பொதியமாமலையினுச்சியிற்றோன்றி அம்மலைச்சாரலில் விளங்காநின்ற சந்தனமுதலியவாசனைவிருட்சங்களிலுள்ள கனி-புஷ்ப-கந்தங்களையும- கன்யாகுமரியின் அலைகளினுடைய குளிர்ந்த திவலைகளையுந் தோய்ந்து ஸ்பரிசித்துக் கிரகித்துக்கொண்டு மகாமநோரஞ்சனமாகத்தோற்றி அக்காலத்திற் குரியவனாகிய மன்மதனுக்கு மகுடாபிஷேகஞ் செய்யும்படிப் புறப்பட்டுவந்தது அந்தவசந்தமானது உலகத்திற்பரவியதனால் சிலவிருட்சங்கள் அரும்பெடுத்துப் புஷ்பித்தன, சில விருட்சங்கள்புஷ்பித்து இதழ்களையுதிர்ந்தன சிலமரங்கள் பலகொடிகள்-தளிர்த்துத்தோன்றின அவற்றுள்மாமர முதலியவை இலைபழுத்துதிர்ந்து தளிர்த்துந் தோன்றுகின்றன அவற்றைப்பார்க்குமிடத்தில் வேனிலாகிய புருஷன்வருகின்றதைக் குயில்களாற் சொல்லக்கேட்டமாத்திரத்தில் விருக்ஷங்களாகிய ஸ்திரீகள் முன்கட்டியிருந்த கறுப்புவஸ்திர மங்கலகரமல்லவென்று நீக்கிச் செம்பட்டுவஸ்திரங்களை யுடுத்திக்கொண்டதுபோலவும், பூர்வந்தாங்கள்வேரினாலுண்ட சலத்தையெல்லாங் காலத்துக்குத்தக்கபடியே அக்நிரூபமாக்கித் தங்கள் கிளைகள்தோறுங்காட்டுகின்றது போலவும் விளங்கின அவ்விருட்சங்கள் அரும்பிய தளிர்கள மிகச்சிவந்தும் பின் வெள்ளித்தகட்டையொத்தும் அதற்குமேற் பசுமைகொண்டும் விளங்குகின்றவை எப்படியிருக்கின்றனவென்றால் இந்திரஜால வித்தைக்காருடைய செய்கையையும் ஒத்திருக்கின்றன மேலும் புஷ்பித்த புஷ்பங்களில் நின்றும் மகரந்தப்பொடிகளுதிர்கின்றவை எப்படியிருக்கிறதென்றால் மன்மதனானவன் உலகத்திலுள்ள ஸ்திரீபுருஷர்களியாவரையு மயக்கும்படி மோகனப்பொடி தூவியதை ஒத்திருந்தன மேலும் சர்வஜந்துக்களுக்கும் இந்தவசந்தகாலஇரவுகளில் சாதாரண சஞ்சாரமாகிய மதனரதிகிரீடாவிசேஷங்கள் மிகுதியாகவிளங்கின மேலுஞ்சூரியபகவானானவன் இந்தப்பிரபஞ்சத்திலிடத்தில் விருத்தியடைகின்ற பசுபட்சி விருட்சங்கொடி முதலியசர்வப்பிராணிகளின் சத்துகளைத் தன்கிரணங்களினால் கிரகித்துச் சர்வமனிதஸ்வ பாவங்களுக்குச் சத்துவபலதேஜஸ்களையும் விருட்சலதா குல்மங்களுக்கு உண்டானபலரசாதிகளையும் மற்றவைகளுக்கு அதற்குத்தக்கவைகளையுந் தோன்றச்செய்தனன் அவ்வசந்த காலமானது நேரிட்டமாத்திரத்தில் அந்தபிருந்தாவனங்களில்தென்றற்காற்றானது குளிர்ந்து வீசுகையில் உஷ்ணரசங்கள் தணிந்து சர்வத்ர புண்யஜனங்களும சௌக்ய மடைந்தார்கள்மிருகபட்சிகள் க்ஷேமங்களைக்கொண்டன விருட்சலதாசமூஹங்கள் எப்பொழுதும்வாசனையோடுங்கூடியபுஷ்பங்கள் சகலசுபமங்களாகர சோபிதங்களாக விளங்கின விசித்ரபட்சிகள் கோலாஹலத்வனிகளும் கிளிமுதலியசமூஹங்களினுடைய மகாமாதுரியமாகிய சுஸ்வரங்களும் குயில்முதலிய நானாவிதசுந்தர பட்சிகளினுடையகம்பீர சந்தோஷத்வனிகளும்மயில்முதலியநானாவிதகுதூஹலபட்சிகளினுடைய லோகாநந்த கரங்களாகிய நர்த்தன சிற்றோசைகளும் அங்கங்குநீடாக உபவனங்களில் விகசிதங்களாயிருக்கின்ற தாமரைசாதி நானாவிதஜாதிபுஷ்ப மகரந்தசஹித மதுபானங்களைச்செய்து மதித்தெழும்பின நானாவித விசித்ரரத்ன ஸ்வர்ணமயாகாரஜாதிபேதங்களால் விளங்குகின்ற ஷட்பதஜந்துக்களாகியவண்டுகளின் கம்பீரகீதநாதஸ்வரங்களின் ஓசைகளும்ஏககாலத்தில் சர்வமங்கலகரமாய்ச் சப்தித்தன.

இந்தச்சப்தங்களினால் அந்தப்புண்ணியவனமெங்குஞ்சோபித்து மங்கலஓசைகளோடும் பிரகாசித்தன, அக்காலத்திற் பெய்ந்தமழையினால் ஸ்ரீயமுனாநதியானது விசித்ரமான அலைகளோடுங்கூடிப்ரவாகித்தது அந்தப் பெருவெள்ளஜலம் அங்கங்குள்ள தடாகங்கள்-ஏரிகள்-குளங்கள்-ஓடைகள்-மடுக்கள் இவைகளுக்குப்பாய்ந்தது அதனால் அவைகள்சற்றேறக்குறையஜலசமர்த்தியடைந்தன அத்தீர்த்தவளங்களில் நானாவிதமாகிய செந்தாமரை-வெண்டாமரை-செங்கழுநீர்-கருங்கழுநீர்-செவ்வாம்பல்-வெள்ளாம்பல்-முதலானவைகள் புஷ்பித்துப்பரிமளங்களாய்விளங்கின அந்தத்தென்றற்காற்றானது இவைகளின்மீது வியாபித்து ஸ்பரிசித்துக்கொண்டு அலைகளின்திவலைகளையும் புஷ்பங்களின் மதுகரஸ்பரிசங்களையும்வகித்துக்குளிர்ந்து வீசுதலினாலே அந்தப் பிருந்தாரண்ய பிரதேசங்கள்முழுதும் முன்னடைந்திருந்த உஷ்ணங்கள்தணிந்து குளிர்ந்துவிளங்கின இவ்விதங்களாக மிகவுஞ் சர்வாலங்காரசோபித சுந்தராகாரங்களாகப்பிரகாசிக்கின்ற அந்தக்கோகுல பிருந்தாரண்யத்திற்குஸ்ரீ பலராமகிருஷ்ணமூர்த்திகளிருவரும் மற்றைக்கோபாலஜனங்களுடன் சர்வகோவின் சமூஹங்களையுங்கூட்டிக்கொண்டுபோய்ப் பசுக்களை மேயவிட்டார்கள், அவைகள்மேய்ந்துக்கொண்டிருந்தன அந்தச்சமயத்தில்அந்தக்கோபாலகுமாரர்களும் ஸ்ரீபலராமகிருஷ்ணர்களும்அந்தஅரண்யமார்க்கங்களில் நானாவிதலீலாவினோதங்களாகக்கிரீடித்து அபஹாசிய வார்த்தைகளைப்பேசிநகைத்தும் உத்ஸாஹபௌருஷ வசனங்களால் நிக்கிரித்தும் சித்தசாஞ்சல்யங்களால் யதேச்சையாய்விஹரித்தும் அன்யோன்யர்களாய் ஒருவற்கொருவர் கட்டியணைத்தும், விஹாரசந்தோஷமானஸர்களாய்ச் சுழன்றுசுழன்றோடி

யும்மகாவிருட்சங்களின் நீழல்களில் தங்கிநின்றும்ஒருவற்கொருவர் கண்களைப்பொத்தியொளிப்புக்காட்டியும் அவ்வொளிப்பாட்டத்தி லொருவற்கொருவர் பயங்காட்டியும் விளையாடினார்கள்.

மேலும்கோபாலகுமாரர்கள் தங்களுக்குசுவாதீனபாடங்களாகிய ஸ்ரீகிருஷ்ண கீர்த்தனங்களைப்பாடியும்விளையாடினார்கள். யாவரும் அவ்வாரண்யங்களில் சஞ்சரிக்கிறமிருகங்களை யதட்டியோட்டி அவைகளின்பின்னேடியும்சுஸ்வரங்களைத் தரந்தக்கதாகியபுள்ளாங்குழற்களை நானாவிதமதுர இசைகளுடன் பூரித்தூதியும் கதிவிசேஷங்களாகிய நடைகள் நடந்துகாட்டியும் ஒருவற்கொருவர்ஒடியொளித்தும் வெண்மணற்குன்றுகளைச்சிறுகுப்பலாகச்சேர்த்து மணற்குப்பலாட்டாகிய லீலையில் கால்களுதறியும், தோள்களையுந் துடைகளையுந்தட்டிக் காட்டிப்பந்துகளைவீசி எறிந்து சிறுகோல்களால்தட்டியெறிந்துபிடித்தும் வெண்மணற்குன்றுகளிற் பாய்ந்துகுதித்தும்கோடுகளைக்கிழித்துத் தாவியுந்தாண்டியும்விருட்சங்களின்மீதேறி ருசிபக்குவமான பழங்களைத்தின்று கீழிருந்தவர்களுக் கெறிந்தும், நானாவிதஜாதிமிருக ஸ்வரூபங்களாகக் கற்பித்துவிளையாடியும், மகா விருட்சங்களினுடையகிளைகளின் மீதேறிநின்று அவற்றிலுள்ளபத்ரபலபுஷ்பஜாதிகளுதிரும்படி குலுக்கியுதிர்த்தும், விளையாடினார்கள். அந்தக்கோபால குமாரர்கள் அவ்வாரண்ய மகாவிருட்சப் பொந்துகளிலும் புதர்களிலும் குகைகளையுடைய பர்வதசிகரபொந்துகளிலும் கட்டியிருக்கின்ற தேன்கூண்டுகளைக் குறித்துத்தேனீக்களான மதுபக்ஷிபாதி வண்டினங்களைச் சதுருபாயங்களைச் செய்தோட்டி அத்தேனைக்கிரகித்தும் அதை ஸ்ரீராம கிருஷ்ணர்களுக்குச் சமர்ப்பித்துத் தாங்களும்பானஞ்செய்தும்திவ்யமூர்த்திகளாய் இந்தஸ்ரீராம கிருஷ்ணர்கள் அதிமனோஅரடோலாய்மானமானஸர்களாய்க் கிரீடித்து விளையாடுகின்ற சமயங்களில் ஸ்ரீ பகவான்களைந்துவைக்கின்றதிவ்யாபரணாதிகளைப் பக்தியுடன்பத்திரமாய்வைத்துக் கொண்டிருந்தும், அவருக்கு வேண்டும்பொழுது மிகவும்பிரீதியுடன் அலங்கரித்தும் காகபட்சங்களாகிய இருசெவிகளின்மீது விளங்கிய செல்வச்சிரோபட்ச ராஜாலங்காரசிகைகளை ஒருவற்கொருவர் பற்றிக்கொண்டு ஜட்டிமல்லமுஷ்டி யுத்தங்களைச்செய்தும் ஜயாபஜயங்களைக்குறித்துப்பந்தியங்கள்கூறித் தாங்கள்வைத்தகுறிகளைப்பாய்ந்து ஸ்பரிசித்தும் ஜயித்தவர்கள் அந்தஜயதிரவியத்தை ஸ்ரீபகவானுக்கு காணிக்கையாகச்சமர்ப்பணஞ்செய்தும், வேங்கைப்புலிகளைப்போலத் தாவித் தாவிப்பாய்ந்தும் கம்பீரமாக அசைந்துலாவியும் ஒருவற்கொருவர் உயரஎழும்பித் தங்கள்கால்களினா லுதைத்தும், சேவ்யசேவகமித்ரா மித்ரஸ்வரூப பாவங்களை வகித்து நானாவிதவிசித்ர லீலாவினோத சம்பிரமாதிசயங்களுடன் விஹரித்தும்விளையாடினார்கள். சிலதருணத்தில் நித்யமகாதிசய புண்ணியவான்களாகி கோபாலகுமாரர்களையாவரும்ஒரு குளிர்ந்ததோப்பில் ஒன்றுகச்சேர்ந்துடன்கார்ந்துஇளப்பாறி ஸ்ரீபலராம கிருஷ்ண மூர்த்திகளுக்குப்பக்தியுடன் தண்டன்சமர்ப்பித்துஎங்கள் பராமரிக்கும் நீங்களெங்களை ஆநந்தவிதங்களால்ரட்சிக்கின்றவர்களாகையால்இந்த லீலைகளிலும்நீயமிக்கின்றதிவ்யாக்கியஸ்வரூபபூபாலர்களாய்நின்று எங்களை நியமிக்கக்கடவீர்களென்று பிரார்த்தித்தார்கள், அப்போதுபலராமகிருஷ்ணமூர்த்திகள் புன்னகையுடன் அங்கீகரித்தார்கள். அவ்வளவில் கோபாலகுமாரர்களெல்லாம் அதிசம்பிரமசந்தோஷபரர்களாய்க் கத்கதஸ்வரத்துடன் நானாவிதமுறைகளைக்கூறி நியாயங்களைத்தீர்க்கச்சொல்லிக் கேட்கின்றவர்களும் அந்த விவகாரத்தீர்ப்புகளில்சந்தோஷித்துஸ்துதிக்கின்றவர்களும் சஞ்சாரங்களில் ஸ்ரீபகவானுடைய பாதரட்சைகளாகிய பாதுகைகளைச்சுமந்துக்கொண்டு வருகின்றவர்களுமாய் விளையாடினார்கள்சிலர்மகாவிருட்சங்களினுடைய சிறு கிளைகளைக் கொண்டுவந்து பல்லக்குஸ்வரூபத்தை நிர்மித்து அதற்கங்கமாக நானாவிதகொடிகளைக்கொண்டு பின்னித் தாமரசபுஷ்ப இதழ்கள்முதலிய மல்லிகைமுல்லை ஜாஜிநானாவித சுகந்தபரிமளங்களையுடைய புஷ்பங்களால் விசித்ரரத்ன ஸ்வரூபங்களாய் அலங்காரஞ்செய்து அந்தஆந்தோளிகைகளின்மேல் ஸ்ரீ பலராமகிருஷ்ணர்களை எழுந்தருளச்செய்துசிலர்சுமந்தார்கள் சிலர் திவ்யஅரம்பையர்கள்நாணும்படி அபிநயபூர்வக பரதசாஸ்திர லட்சணயுக்தமாய்நாட்டியங்களைச்செய்தார்கள் சிலர் கிந்நரகந்தர்வாதி ஜனங்களவெட்கிக்கூசும்படி நானாவித மிருதுஸ்வரங்களோடும் பாடினார்கள் சிலர் பட்டுக்களைப்போலப் புகழ்ந்தார்கள் சிலர்வேதாந்தார்த்தநிர்ணய ஸ்ரீபுருஷசூக்தவாக்கியங்களைப்போல முன்னடந்து ஸ்துதிசெய்தார்கள் சிலர்சர்வப்பிரபஞ்ச நியமனசர்வகர்மயாக்கிய ஸங்கேதாகுபாப்திராப்த ஸ்ரீவாசுதேவாக்கிய ஸ்வரூபருக்ய யசஸ்ஸ்யமாதிவேதங்களைப்போல் அந்த ஸ்ரீபலராமகிருஷ்ணர்களால் தங்களுக்குநேரிட்ட அரிஷ்டநிவாரண இஷ்டபலப்பிராப்தமகிமைகளைக்குறித்துக்காயகபாடக ஸ்வரூபர்களாய்த்துதித்தார்கள், சிலர் பக்திவிசுவாசங்களுடன் ஸ்ரீகிருஷ்ணகுணகீர்த்தனங்களைப் பாடினார்கள் சிலர்ஸ்ரீபகவத்ஸ்வரூபர்களுடைய திவ்யவன வத்ஸலசேவையில்ஏகாந்தமக்கிங்கரர்களாய் சேவித்தார்கள் சிலர் ஸ்ரீபலராம கிருஷ்ண குணாதிசயங்களுக்குச் சந்தோஷகரமாகநகைத்தார்கள் சிலர் கல்யாணகுண கீர்த்தனங்களினிசைக்குத் தங்கள் கரங்களால் அபிநயங்களைக் காட்டினார்கள், சிலர் ஆநந்தக் கூத்தாடினார்கள் இவ்விதம்

களாய் அந்தக்கோபாலகுமாரர்களவனவிகாரவசந்தோத்ஸவாசந்திரமஹாராஜபகிரீடாவிசேஷங்களை அநுபவித்தார்கள், பிறகு திவ்யபுருஷசிரேஷ்டர்களாகிய இந்தப் பலராமகிருஷ்ணர்கள் அந்தப்பிருந்தாவன வீதியில்ஜகன்மோஹன சுந்தராகாரர்களாய் தேவகந்தர்வயக்ஷகிந்நரகருடபந்நகர் முதலிய மகாஜனங்கள் அதிசயித்துச் சந்தோஷிக்கும்படியாய் நடனஞ்செய்தார்கள், அப்போது மகாபரிசுத்தமான புண்ய ஜன்மிகளாகிய இந்தக்கோபால குமாரர்களிற் சிலர் வேணுகானங்களைச் செய்தார்கள் சிலர் கலைமான் கொம்பினாற்செய்த துளைக்கருவிகளையூதினார்கள், சிலர் அந்தத் திவ்ய நர்த்தனங்களுக்குச் சரியாய்ப் பாடினார்கள், சிலர் தங்கள் கரங்களையசைத்து அபிநயனங் காட்டினார்கள், சிலர் இந்த்ரச்சாஸ்திரோக்தமானநாட்டியங்களுக்கு மெய்ச்சி இவர்களைப் புகழ்ந்தார்கள், சிலர் மகாதிசயமென்று வர்ணித்துஆச்சரியத்தை யடைந்தவர்களாய்த் தங்களை மறந்து அன்யசிந்தையற்றுசேவித்தார்கள், இவ்விதங்களாக யாவருமொவ்வொரதிசய திவ்யவிஷய கிரியாபரர்களாய்நதிதீரதடாகசமீபங்களிலும், பர்வதநுனி குகைகளிலும், ஏரிகளோரங்களிலும், பசுவினங்களின் மந்தைகளிலும், குளிர்ந்திருக்கிற தோப்புகளிலும், புஷ்ப பலிதங்களான பொதும்பர்களருகிலும், மஹாலீலாடனோத்தியோகாதியநந்தவிசித்ர விளையாட்டுகளைச் செய்துக்கொண்டு பசும்புல்லுகளுள்ளவிடங்களில் தங்கள் பசுக்கூட்டங்களைமேயவிட்டுச்சந்தோஷபரர்களாய்ச் சம்பரமித்திருந்தார்கள்

அப்படியிருக்கிற தருணத்தில் அந்தமஹாவனத்தில்பிரலம்பாசுரனென்னும் பெயரையுடையவொரு கொடியராக்ஷதன் ஸ்ரீ பலராமகிருஷ்ணர்களையும் மற்றுள்ள கோபாலகுமாரர்கள் யாவரையும் ஹிம்சித்து ஜயத்தை யடையவேண்டுமென்கிற நினைப்பைக்கொண்டு தன்னுடைய ராக்ஷஸமாயையினால் ஒருகோபால குமாரனைப் போல்காமரூபனாய் வேஷங்கொண்டு அந்தக்கோபால குமாரர்களெல்லாரும் தங்களி லொருவனென்று நினைக்கும்படி மயக்கிக் கபடமானஸனாய் அவர்களில்வந்து சேர்ந்துகலந்துஸ்நேகித்துக்கொண்டிருந்தனன் அந்தச்சமயத்தில்சர்வக்ஞனாகியும் சர்வமயனாகியும்ஸ்ரீபகவானாகியுமிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் அந்த மாயாவேஷதாரியான் துராத்மாவானவனை அசுரனென்று தமக்குள் அறிந்து அவ்வசுரனைச்சிக்ஷிக்கத்தகுந்த உபாயங்களைச் சங்கல்பித்துக் கொண்டிருந்தும் தாமொன்றும் அறியாதவரைப்போலத் தங்களைக்கொலைசெய்யவந்த அந்தமாயாகோபால பிரலம்பாசுரனையும் ஸஹஸகோபாலனாகவே தாம்பாவித்திருக்கிறதாய்அவன் நினைத்துக்கொள்ளும்படிஅவனுக்குமிகவும் அன்னியோன்யமாகியசிநேகத்தைக் காட்டிச் சகலகோபால குமாரர்களையும்அழைத்துப்பிரியஸ்நேகிதர்களே நமெல்லோரு மொன்றாய்ச்சேர்ந்து இனி அஸ்தமனகாலபரியந்தம்சந்தோஷமாய்ச் சிலசிலகளை யோரிடத்திஸ்தாபித்துக்குறிவைத்துப் பந்துகளடித்து அவ்விளையாட்டினால் வருகின்றஜயாபஜயங்களை யடைந்து அவற்றிற்குத்தக்க பந்தியங்களையநுபவிக்கத்தக்கதாக விளையாடிக்கொண்டிருக்கலாம்வாருங்களென்று சொன்னார், அப்படி விளையாடுவதற்கு யாவரும் ஒத்துக்கொண்டார்கள் உடனே ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் தாமொருபேருத்தியும் ஸ்ரீதாமனென்னும் கோபாலன் தமக்கெதிர்பேருத்தியும், தம்முடையபக்ஷத்தில் மாயாகோபால பிரலம்பன் ஒருபேருத்தியும் அவனுக்கெதிர்பலபத்திரர் ஒருபேருத்தியுமாகத் தலைவர்களா யேற்படுத்திமற்ற கோபாலர்கள் சிறியவுத்திகளானசேவகர்களாகவகுத்து அவர்கள்யாவரையும்கணக்குச்செய்து இரண்டுபட்சத்திற்கு சமமாகப்பாகித்து இரண்டினமாகப் பிரிந்தவர்களுடன் அந்தஸ்ரீபிருந்தாவன மஹாவிசாலமார்க்கப்பிரதேசங்களுக்குச் சென்று மஹாவிருக்ஷங்களையும் சிலாஸ்ரூபங்களையும் லட்சியக்குறிகளாக ஏற்படுத்திக்கைகளிற் பந்துகளேந்திப் பாண்டீரக மென்கிற வடவாலவிருக்ஷத்தினண்டையிற் சேர்ந்தார்களெல்லாரும் இந்தப் பந்துவிளையாடுவோம இவ்வாட்டங்களில் தோற்றவர்கள் வாகனமாகிஜயித்தவர்களைச்சுமந்து பசுக்கூட்டங்கள் அப்புறம்பிரிந்து சிதறிப்போகாமல் அம்மந்தைகளைபிரதட்சணமாகவந்து மடக்குகிறது மகாவிருட்சசிலாலட்சியக்குறிகளைத்தொட்டுப் பிரதட்சணம்பண்ணி யதாஸ்தானத்திற்கு வந்திறங்குகிறதென்று கட்டளையிட்டார் அப்படியே யாவரும் ஒப்புக்கொண்டவர்களாய் விளையாடிக்கொண்டிருக்கின்ற சமயத்தில் ஒருக்கால்இருவர் கட்சிகளிலும் ஜயாபஜயங்கள் நேரிட்டுப்பின்புஸ்ரீகிருஷ்ணபகவான்கட்சிதோற்றது. அப்போதுபலபத்திரர்பக்கலிலிருந்த ஸ்ரீதாமன்தமக்கு அந்தரங்க பக்தனானபடியால் பக்தபராதீனரான சுவாமியானவர் அவனைத் தோளின்மீது வைத்துக்கொண்டார்அப்போதவன்சரீரமாத்திரந் தோளின்மீதிருந்ததேயன்றி மனதானது சுவாமியின்திருவடிகளைப்பற்றியிருந்தது ருஷபனைப்பத்திரசேனனும், ஸ்ரீபலராமனை பிரலம்பனும் வாகனங்களாகிச்சுமந்துகொண்டு முன்சங்கற்பப்பிரகாரம் லட்சியப் பிரதட்சணஞ் செய்யப்போனார்கள்-அவர்களுக்குள் ஸ்ரீதாமனைச்சுமந்துகொண்டுபோன ஸ்ரீகிருஷ்ணபகவானும் ருஷபனைச்சுமந்துகொண்டுபோன பத்திரசேனனும் லட்சியப் பிரதட்சணஞ்செய்து எல்லையிலேவந்து சேர்ந்தார்கள் ஸ்ரீபலராம மூர்த்தியைத் தோள்களிலேசுமந்துகொண்டுபோன, மாயாகோபாலவேஷதாரியான இந்தப்பிரலம்

பாசுரன் லட்சியப்பிரமாணப்படி பிரதட்சணஞ்செய்து வராமல் கபடனுய் வந்திருக்கின்றவனுதலால் அவனைக் கொல்லநினைத்து லட்சியங்களைத் தாண்டிப்போனுன்.

அப்படிப்போகுமளவில்பூர்வம்ஸ்ரீகிருஷ்ணபகவானை த்திருணாவர்த்தனென்னும் அசுரசிரேஷ்டன் எடுத்துக் கொண்டு ஆகாசமார்க்கத்தில்போகும்போது தம்மைச் சுமக்கமாட்டாமல் அவன் அதிக துன்பங்களையடைந்து சுமந்துகொண்டுபோக ஸ்வாமி அவனுக்கு எவ்வளவுபாரமாய்த்தோன்றினரோ அவ்வளவு சுமக்கக் கூடாதபாரமாய்சகலாரிஷ்ட நிவாரண ஜயோத்தமராகிய ஸ்ரீபலராமரானவர் இந்தப் பிரலம்பனுக்குத்தோன்றினர் அப்படித்தோன்றினமாத்திரத்தில் ஈதென்னபர்வதசிரேஷ்டமோவென்றுபிரமித்து மகா சிரமங்களையடைந்து நடக்கமாட்டாதவனுய் அந்தக்கோபால வேஷத்தைவிட்டுத் தன்னுடைய நிஜாகாரமாகிய கொடியராட்சஸஸ்வரூபத்தைவகித்து ஊழிப்பெருங்காற்றின்வேகத்தைப்பார்க்கிலும்அதிகவேகமாய்ஆகாசமார்க்கத்திலெழும்பிப்போனுன் அப்படிப்போகும்போது இவ்வசுராகாரம்மேகத்தைப்போலக்காணப்பட்டது, மின்னலையும்காந்தியையும்வகித்ததுபோலச் சர்வாபரணபூஷிதராகிய ஸ்ரீ பலராமர்இவ்வசுரன் தோளின்மேல் விளங்கினர் அத்தருணத்தில்இந்தப்பிரலம்பனுடைய தோள்களின்மீது உட்கார்ந்துக்கொண்டிருக்கின்ற ஸ்ரீ ஹலாயுதமூர்த்தியாகியபலதேவர் அதிசயித்துத் தைரியத்துடனே தமக்கு வாகனமாகிய கோபாலவேஷப்பிரலம்பனை யுற்றுப்பார்த்தார்அப்போதுசோராகார நீலஸ்வரூபமும் சிரோபாகத்தில்இரத்னங்களிழைத்த ஸ்வர்ணமயமானகிரீடகுண்டலங்களும் நெற்றியிற்போய்வளைந்த புருவங்களும், நெருப்புப்பொறிகள்சிதறுகின்றஇரக்தவர்ணாகாரஜ்வலிதநேத்திரங்களும் மகாபயங்கராகாரமாகிய கோரைப்பல்லுகளும் சரீராவயவங்களில் அசுராலங்காரத்துக்குரிய வலயாதிஆபரணங்களும் அக்கிக்கொழுந்துபோலேஎரிகின்றசிவந்த குச்சுமட்டமான மயிர்களுங்காணப்பட்டன அவைகளைக்கண்டு தவகளைமோசஞ்செய்யவந்ததுஷ்டராட்சஸனென்று தெரிந்துக்கொண்டுசற்றெனினும்வெருவாமல் தீரபுருஷோத்தமராய் க்ஷணப்பொழுதுநிதானித்து அதிவேகமாய் ஆகாயத்திலெழும்பிஅதிசௌரியபராக்ரமகோபத்தினல் விளங்குகிற மனமுடையவராய்த்தமதுமுஷ்டியினுல் அவன் சிரோபாகத்திற்குச்சரியாய்ப்பாய்ந்து கிரீடத்தை ஒருதையினுலேதட்டிவிட்டுஆகண்டலனுகிய இந்திரனுனவன்கோபித்துத் தன்வச்சிராயுதத்தினுல் மகாபர்வதங்களைப் பிளந்து சின்னபின்னஞ்செய்ததுபோல அவனுடைய சிரசுபிளந்து சின்னபின்னமாயழியும்படி ஓரறையறைந்துஒரேகுட்டாககுட்டினர் உடனேஅவ்வசுரன்தலைபிளந்துசின்னபின்னமாகச்சிதைய அவனசரீரமெங்கும் செந்நீராய்ப்பெருகமுகத்தில்நின்றும் இரக்தமாம்ஸங்களொழுகலோகபயங்கரமாகியபிராணபீதியினுல்கதறிக்கொண்டுபூமியில்வீழ்ந்து பிராணனெழிந்துபோக மரணமடைந்தான்.

அப்போது சமஸ்தமான கோபாலர்களும் மகாபல பராக்ரம வீரியசௌர்ய புருஷராயிருக்கின்ற ஸ்ரீ பலராமரால்சம்மரிக்கப்பட்டுப் பர்வதாகாரமாய் வீழ்ந்தவனுகிய தங்கள் ஆயர்களிலொருவனைப்போலே மாயாவேஷதாரியாயிருந்த அந்தப்பிரலம்பாசுரனைப்பார்த்துப்பயந்து பிரமித்து ஆச்சரியத்தையடைந்து பின்பு பலராமனைப்பார்த்து ஓகோ மகானுபாவரே இவ்வுலகத்திற்கு உபகாரார்த்தமாக இந்தக் கபடவேஷதுஷ்டாசுரனைச்சம்மரித்துஎங்களையெல்லாம் ரட்சித்தீர்உமக்குச்சர்வமங்கலமும்உண்டாகக்கடவதென்று ஆசீர்வதித்துஅவரவர்களுக்குத் தகுந்தபடி உபசாரஞ்சொல்லி ஆலிங்கனஞ்செய்துக்கொண்டுஇறந்துபோன பிராதாவானவர்பிழைத்துப் புனர்ஜ்ஜீவிதராய்வரக்கண்டு களித்தாறபோல்மகாசந்தோஷ சம்பிரமாதிசயங்களை யடைந்தார்கள், உடனேஆகாசவீதியில்நின்று, இந்ததிவ்யபுருஷர்களுடைய விசித்திர லீலாவேஷ்டிதங்களை நேத்ரோத்ஸவமாக அநுபவித்துக்கொண்டிருக்கின்ற பலிருதனுதிநாமாங்கித திவ்யபுருஷர்களான தேவதாசமூகங்கள் யாவரும் இவ்வுலகத்திலுள்ளசாதுக்களுக்குஞ் சகலதேவதைகளுக்குஞ்சத்துருவாயிருந்த கொடியசுரனுகிய இந்தப் பிரலம்பாசுரனைவெகு அலட்சியமாக ஒரேமுஷ்டியினுல்சம்அரித்தஸ்ரீபலபத்திரராமனை நானுவிதங்களான தேஸஜாதிபுஷ்பங்களை வருஷித்துத்துதித்தார்கள்.

---

## ௰௯ - வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பிருந்தையுள்முஞ்சாரண்யம்பிரவேசித்துத்
வர்மக்கிரீஷ்ம நிருக்காலவர்ணனை
கர்மமாய்க்காட்டுத் தீயிலகப்பட்ட
தர்மக்கோக்களைக் காத்ததைச்சாற்றுவாம்

ஸ்ரீபிருந்தாவனத்திலுள் முஞ்சாரண்யமென்கிறவனத்திற்ப்ரவேசித்தபோது நேரிட்டகிரீஷ்மகாலவர்ணனையுந்தங்களைச் சூழ்ந்துகொண்ட காட்டுத் தீயிலகப்பட்ட கோபாலர்களுங் கோக்களும் முறையீட்கேட்டு ஸ்ரீ கிருஷ்ணபகவானனவர் அவ் வக்கினியைச் சுவாலையோடும் பானஞ்செய்து அந்தக்கோபாலர்களையுங்கோக்களையும் இரட்சித்தாரென்று சொல்லுகின்றது.

வாராய் பரதகுல சிரேஷ்டனே மேஷராசியிலிருந்த சூரிய பகவான் ரிஷபராசியிற் பிரவேசித்தான்

அவன்ரிஷபராசியிலிருக்கும்போதுசிறுதென்றலாலும் மிழ்க்காற்றினாலும் உலகத்திற்குச் சௌக்கிய முண்டாயிருந்தது. அந்தவிட்டு மிதுனராசியிற் பிரவேசித்தான் அப்போதுசூரியனுடைய அத்யுஷ்ண கிரணங்களால் வெந்தழிந்துபோயினவென்றுசொல்லும்படி வாடைகொன்றல் தென்றல்கோடையென்னும் நான்குதிசைக்காற்றும் ஒடுங்கின ஆயினும் சந்திரகிரணத்திலும்பனிநீரிலும் வெளுறுச்சலத்திலும் மரநிழலிலும் உண்டாகிய குளிர்ச்சியினாலும் சாமரையிலும்- ஆலவட்டத்திலும்-முன்றூனையிலும்மூர்ச்சிலும்உண்டாகியகாற்றினாலும் உலகத்திலுள்ளஆத்மாக்களுக்குக்கொஞ்சஞ் சௌக்கியங்கிடைத்தது அப்போது அக்காலத்தைக் கோடைக்காலமென்னும் பெயர்கொள்ளச்செய்யும்படி மேல்காற்றுத்திரும்பியது அதனால்தூளிகளெழும்பி உலகமெல்லாங் கவியவும் ஆத்மாக்களுக்கு வாய்புலரவும் தேகத்தில்அத்வுஷ்ணம் உண்டாகவும் நேரிட்டது-அப்போதுவிஷஜந்துக்கள் ஜயமடையவும் மற்ற ஆத்மாக்களுக்குச்சந்தோஷமுண்டாகவும் மேகங்கள்தோன்றி இடித்துஜலத்தைவருஷித்தன அதனால்உலகஞ் சௌக்கியத்தையடைந்தது, இப்படிப்பட்டகோடைக்காலத்தில் சமஸ்தமான கோபாலர்களும் பாண்டீர நாமதேய இந்த வடாரண்யத்தில் விளையாட்டில் விருப்பமுள்ளவர்களாய்த்தங்களைமறந்து விளையாடிக்கொண்டிருந்தார்கள்- அந்தச்சமயத்தில் கோவினங்கள்பிரிந்து தங்களுக்கிச்சையானபடி சுவேச்சையாகப் பசும்புல்லுகளை மேய்ந்துக்கொண்டு வெகுதூரஞ்சென்று மிகவுந் தாஹத்தையுந் தாபத்தையுமடைந்தனவாய் அரற்றிக்கொண்டு இஷிகவென்கிற அரண்யத்தைத்தாண்டிப் போயின.

அப்போதுஸ்ரீபலராமாநுஜர்கள் முதலிய சமஸ்தமானகோபாலர்களும் பசுவினங்களைக்காணமல் சிந்தாக்கிரந்தர்களாய் விளையாட்டுகளை யொழிந்து பசுவினங்கள் சென்ற மார்க்கங்கள்தெரியாமல் சிலநேரம் நான்குதிக்குகளிலுந் தேடிக்காணமல் நிமிஷமாத்திரத்தில் நானாவிதங்களாகிய வியாகுலத்தையடைந்து பலதிசையிலும்ஓடிஅலைந்துதிரிந்து பசுவினங்களின்குளம்படிஅடையாளங்களைக்கண்டு அம்மார்க்கங்களைப்பிடித்துப்பலவாறுகத்தேடிப் பார்க்குமளவில் அந்தக்கோவினங்கள் முஞ்சாரண்யத்தில் வழிதெரியாமல்அம்மாவென்றரற்றிக் கோஷிக்கின்றசப்தங்களைக் கேட்டுத் தங்கள் கோதனங்களைக்கண்டுபிடித்து ஓரேமந்தையாகச் சேர்த்து ஆயாசங்களைத்தீர்த்துக்கொண்டு சமஸ்தமான கோவினங்களுடன் தாங்களும்மார்க்கமேபிடித்துத்திரும்பினார்கள். அத்தருணத்தில் ஸ்ரீகண்ணபிரானனவர் நீருண்டகாளமேகமானது விந்தையாகக்கர்ச்சிக் கின்றதுபோல் தமதுதிருவதரத்தில் புள்ளாங்குழலை வைத்துப் பசுக்களுடைய நாமதேயங்களைச் சொல்லி பிரீதியாக அழைத்தார். அந்தஆவினங்களாவும் ஆர்த்தி நீங்கினது போல அம்மாவென்கிற ஆரவாரங்களுடன் பிரதிகோஷைசெய்துக்கொண்டுசந்தோஷத்தினால் ஸ்ரீபகவானைப் பின்தொடர்ந்துவந்தன, அந்தச்சமயத்தில் தெய்வீகமாக ஒருகாட்டுத்தீயானது உண்டாயிற்று அங்கு வீசாநின்ற காற்றினது சஹவேகத்தினால் நான்கு பக்கமும்வியாபித்து எங்கும்புகைகளெழும்ப ஜ்வலித்து ஆகாயமளாவியெரிந்து சர்வஸ்தாவர ஜங்க மாதிகளையுஞ்சூழ்ந்துக்கொண்டு விருத்தியடைந்தது அப்போது சமஸ்தமான கோபாலர்களும் தங்களைச்சூழ்ந்துவாரநின்ற காட்டுத்தீயைப்பார்த்துமிகவும் பயப்ராந்தர்களாயத் திடுக்கிட்டுத் தத்தளித்துத் தப்பித்துக்கொள்ள எந்தத்திசையிலு மார்க்கங்களையுங்காணமல் மிருத்தி யுபயத்தினால் பிடிக்கப்பட்டார்கள் அவர்களைப்போலவேகோக்களும் நடுநடுங்கிக்கொண் டிருந்தன. இப்படி யிருக்கும்போது கோபாலர்கள்யாவரும் ஸ்ரீஹரிநாமகீர்த்தனங்களைச்செய்து தங்கள்மிருத்தி யுபயஜபமாகிய ஆபன்னிவாரணத்தையடைகின்ற ஸ்ரீபாகவதசனங்களைப்போல் ஸ்ரீபலராமசந்திரசகிதராகிய ஸ்ரீகிருஷ்ண பகவானைச்சரணமடைந்து முறையிடத் தொடங்கினார்கள்.

வாரீர் அதிமூர்த்தியான ஸ்ரீகிருஷ்ணபகவானே ஸ்ரீபலராமசந்திரரே இந்தக்காட்டுத்தீயினால் நாங்களும்கோக்களும் தகிக்கப்படாமல் இரட்சிக்கக்கடவீர்களாகிய தேவா உங்களைச் சரணமாக வடைகின்றோம் எங்கள் குலதெய்வமாகிய ஸ்ரீகிருஷ்ணா ஆபத்பாந்தவா-தீன ரட்சகா-சிரோரத்நமே-தீனதயாளுவேஆஸ்ரீதஜனரட்சகா ஸ்ரீபக்தவத்ஸலா-தேவரீருடையநாமாதிசயங்களைப் பலவாறுகத்துதித்து முறையிடுகின்றோம் ஸ்நேகபந்துக்களாகிய எங்களை இந்தத்தாவானலஜ்வாலையில்நின்றும் இரட்சிக்கக்கடவீர் எங்கள்சக்திஉபாயங்களாலேதப்பித்துக்கொள்வதற்கு யாதொன்றுந்தோற்றவில்லையே எங்களுக்கு அதிஉஷ்ணகரமாகிய ஜ்வாலைதாககுகின்றதினால சரீரங்கள் தகிக்கப்படுகின்றன. இனிசகிக்க மாட்டோம் ஆ ஸ்ரீகிருஷ்ணத்வனாயர்க ரட்சிக்கக்கடவீரென்று முறையிட்டுத்துதித்தார்கள்.

வாராய் ஸ்ரீசுபத்ராபௌத்ரனே இவ்விதங்களாக முறையிடுகின்றபந்துக்களுடையதீனவசனங்களைக்கேட்டமாத்திரத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் கடாட்சித்துச் சத்காரவசனங்களினால் தாபங்களைத்தீர்த்து நீங்கள்யாவரும் பயப்படவேண்டுவதில்லை உங்கள்நேத்திரங்களைமூடிக்கொள்ளுங்களென்று நியமித்தருளினார் ஸ்ரீபகவானுடையஆக்கியாபிரகாரம்ஸமஸ்தமானகோபாலர்களும் மிகவுமபயபக்திகளுடன் ஸ்ரீபக்தவத்ஸலனேயென்று திடசித்தர்களாய் யாவருந்தங்கள்நேத்திரங்களைநன்றாகப்பொதிந்துகொண்டார்கள் அத்தருணத்தில் ஸ்ரீயோகீ

ஸ்வரேஸ்வரராகிய ஸ்ரீஹரியானவர் சர்வப்ரபஞ்சமாயாத்மகதம்முவிராட்ஸ்வரூபத்தைவகித்து அந்தக்காட்டுத்தீயை அவலீலையாகப்பானஞ்செய்து அந்தக்கோபாலர்களையுங்கோவினங்களையும் ஒருக்ஷணமாத்திரத்தில் முஞ்சாரண்யத்தில் நின்றுபாண்டீரகமென்னப்பட்ட ஆலமரத்தடியில் தமதுமாயையினுற் கொண்டுவந்துசேர்த்து நேத்திரங்களைவிழித்துப் பார்க்கும்படி நியமித்தருளினர் அவர்களும்அப்படியே விழித்துப்பார்த்து ஸ்ரீபலராம கிருஷ்ணர்கள்ஸஹிதமாய்ச் சமஸ்தமான கோபாலர்களுங் கோவினங்களும் யாதொரு குறைவுமின்றிச் சுரட்சிதமாய் முன்தாங்க ளெல்லாருஞ் சந்தோஷமாய் விளையாடிக்கொண்டிருந்த ஆலமரத்தடியில் வந்துசேர்ந்திருக்கக்கண்டு மகத்தாகிய ஆச்சரியத்தை யடைந்து ஸ்ரீபகவன்யோகமாயாப் பிரபாவங்களை யறிந்து ஆநந்திப்பதற்குச் சக்தியில்லாதவர்களாய்ச் சிலர்அந்தக் காட்டுத்தீயை விழுங்கிநம்மை ரட்சித்தாரோ வென்றூர்கள் சிலர்காட்டுத்தீயைக்குளிரச்செய்வதற்கு மந்திரங்கற்றவரோ வென்றூர்கள் சிலர்ஆயினும்மநுஷ்யாகளாற் றரமோவென்றூர்கள். சிலர்காரியார்த்தமாகஇவ்விடத்தில் வந்தவதரித்த தெய்வசிரேஷ்டர்களேயல்லது வேறல்லவென்றுமகிழ்ந்து துதித்தார்கள்சிலர் இப்படிப்பட்டகாலங்களையுணர்ந்து நம்மைரட்சிக்கிற நிமித்தமாக ஸ்ரீபுருஷோத்தமரோ இந்தஸ்ரீகிருஷ்ணபகவானுகித்திருவவதரித்திருக்கின்றூரென்று சரணமடைந்து ஸ்துதிகளைச்செய்தார்கள்.

இவ்விதங்களாக ஆநந்தபரவசத்துடனிருக்கின்றசமஸ்தகோபாலர்களையும் கோவினங்களையும்சம்பூர்ணமாகச்சட்டரட்சித்து ஸ்ரீகிருஷ்ணபகவானுனவர் கோபாலர்களைப்பார்த்து வாருங்கள்தன்யர்களேசூரியாஸ்தமானகாலம் சமீபமாய்விட்டது இனியாவரும் கோகுலத்திற்குப்போவோம் பசுக்களுடன் புறப்படுங்களென்று நியமித்துத் தாமும்வேணுகானஞ் செய்துக்கொண்டும் ஸ்ரீபலராமரும்வேணுகானஞ்செயது தம்முடன்வரச்சமஸ்தகோபாலர்களுந் தங்களைஸ்தோத்திரங்கள்செய்து முன்பின் சூழ்ந்துவரக்கோவினங்கள் அதிகசந்தோஷாநந்தத்துடன் தம்மைமோர்ந்துக்கொணடு நான்குபக்கங்களிலும் வியூஹாகாரமாய்வரச் சகலகோபாலகோபிகாசன நேத்ரோத்ஸவமாக ஸ்ரீகோகுலத்திற்குட்பிரவேசித்தார் அந்தஸ்ரீபுருஷோத்தமராகிய ஸ்ரீகமல லோசனரைத் தரிசனஞ்செய்யாத ஒருக்ஷணகாலமானது அவரவர்களுக்குள்ளபிரீத்யதிசயத்தினுல்ஒருமஹாயுகம்பொற்றூன்ற அந்தநந்தவ்ரஜத்திலே யிருக்கிறஸ்ரீநந்தகோபயசோதா ரோகிணிதேவிகளும் கோபால கோபிகாசனங்களும் ஸ்ரீபகவானெழுந்தருளக் கண்டமாத்திரத்தில் யாவருங்கண்களிகூர்ந்து ஆனந்தசந்தோஷங்களை யடைந்தார்கள். ஸ்ரீபலராமகிருஷ்ண சகிதாகளாயங்காட்டுத்தீயினின்றும் ஸ்ரீபகவானுடைய பரம கிருபையால இரட்சிக்கப்பட்டுச் சுரட்சிதமாகவந்த ஸ்ரீதாம நாமதேய ஸ்ரீசாமன்முதலிய சமஸ்த கோபாலர்களும் கோவினங்களுடன் நம்தருந்தவப் பயனுகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் சார்வகாலமும் நம்மைரட்சிக்கக்கடவரென்று நிதித்துக்கொண்டு அவரவர்கள் தங்கள்யதாஸ்தானம் வந்துசேர்ந்தார்கள்.

## உ௰ - வது அத்தியாயம்.

கலி விருத்தம்,

புண்ணியபுருஷோத்தமன்செய்திடும்
நண்ணும்லீலைக்குணதிரளிகதைக்
கண்ணுலாம்வருஷச்சரற்காலத்திற்
பண்ணிடுஞ்சவுந்தர்யம்பகருவாம்.

ஸ்ரீபுருஷோத்தமருடைய விசித்திரலீலாகிருணங்களுக்கு மிகவுஞ்சஹாயார்த்தங்களாய்த் தோன்றுகின்ற வருஷகால ஸரத்காலத்தையும்ஸ்வாமியினுடையசௌந்தர்யங்களையும் வர்ணித்துசசொல்லுகின்றது.

வாராய் ஸ்ரீபாகவதோத்தமனுகிய பரிச்சித்துமகாராசனே ஸ்ரீபகவத்கிருபைக்குப் பாத்திரர்களாயிருக்கின்றமஹாபுண்ய புருஷர்களாகிய அந்தக்கோபாலகுமாரர்களியாவரும் தங்கள்தங்கள் கிரஹங்களில்வந்துசேர்ந்து சுகிந்துஸ்திரீபாலவ்ருத்தமஹா சனகோபாலர்களைப்பார்த்து இந்தஸ்ரீராமகிருஷ்ணர்களுடைய சரித்திரங்களையும் சமஸ்தமானகோபாலர்களையும் கோவின் சமூஹங்களையும் முஞ்சாரண்யதர வாக்நியினின்றும் இரட்சித்த மகாருணுதிசயங்களையுஞ் சொன்னூர்கள் அப்போது அவர்களியாவரும் தங்களசெவிக்காநந்தமாகஅந்தச்சரித்திரங்களைக்கேட்டுச் சந்தோஷித்துவாருங்கள கோபாலகுமாரர்களே இந்த ஸ்ரீபலராம கிருஷ்ணர்கள் நம்மையொத்த ஸாதாரணமனுஷ்யர்களல்ல தேவகாரியார்த்தமாகத் திருவவதாரஞ்செய்த மகாபுருஷசிரேஷ்டர்களென்றுசொல்லி ஸ்தோத்திரங்கள் செய்தார்கள.

வாராய்சாதுசனபோஷக சர்வஜனநாதனே, இவ்விதங்களாக ஸ்ரீபகவானுனவர் கௌமாரகிரீடாதிசயங்களைச்செய்து சஞ்சரித்துக்கொண்டிராநின்ற காலத்தில் சூரியபகவான்தான் தென்றிசையைவிட்டு வந்தபிறகு அத்திசையாகிய ஸ்திரீயானவள் சகியாமல்வ்யாகுலப்பட்டுப் பெருமூசசுவிடுகின்றூள் அந்தமூச்சைத்தான் உலகத்தார்தென்றற்காற்றென்று சொல்லுகிறூர்களாதலால் அத்திசையைச் சேர்ந்தவளைமகிழச்செய்ய வேண்டுமென்றுபோனுனென்றுசொல்லவும்தானத்திசையைப்பிரி

தகாட்டுப்பூமிகளிலும் நெரிஞ்சில் முதலியகண்டகமா கியபூண்டுகளின் விளைவுகளுக்கு உபயோகப் பட்டிருந் ததுமேலும இப்பூமியில் ஜலசமர்த்தியால் நானுவிதவி சித்ரவர்ணங்களாகத் தளிர்த்தும்புஷ்பித்தும்விளங்குகி ன்றபுற்கள்-பூண்டுகள்-புதர்கள்-கொடிகள் விருட்சங்கள் முதலிய சர்வஸ்தாவரங்களையுடைய வனங்கள்நானுவித விசித்திர ஆடைகளால் அலங்கரிக்கப்பட்டு அநந்தமான ஆயுதபாணிகளாயிருக்கின்ற ஓரிராஜாவினுடைய சேனைகளைப்போலச் சர்வசம்பத்கரங்களாய்த்தோற்றப்பட் டிருந்த இந்தப் பிரபஞ்சங்களைத் தெய்வாதீனமென்று உணராமல் விவேகஈனர்களாய் முன்செய்த சுகிர்தத்தி னுல்சிலசம்பத்துகளைவகித்து நானெனதென்கிற துரபி மானங்களையுடையவர்களாய் அடுத்தவருக்கும்உபயோ கமில்லாமல் விருத்தியடைந்து பிரகாசிக்கின்றஉலுத்த ர்களைப்போலச் சிலவ்யவசாயக்ஷேத்ரங்கள் அதிகமழை யால்சஸ்யங்கள் நன்ருய் விருத்தியடைந்து பிரயாசப்ப டுகின்ற உழவர்களுக்குப் பலப் பிரயோசனமில்லாமல் நஷ்டபலத்தை வகித்துவிளங்கின.

தாங்கள் பூர்வஜன்மங்களின்பலனை அபேட்சித்தவர் களாய்ஸ்ரீஹரியினுடைய ஸேவையினுலும் தியானஸத் கர்மங்களினுலும் புண்யங்களைச்செய்து இச்சன்மத்தில் எப்பொழுதும் ஆசார உத்தமவம்சங்களில் லோகோப காரிகளாய்விளங்குகின்ற புண்யஜனங்களைப்போலச்சில பூமிகள்தெய்வானுக்கிரகத்தினுல் போதுமான மழையு ண்டாக்கி நல்லஜலத்தையடைந்துநல்லபயிர்களால்விரு த்தியடைந்துவிளங்கின இந்திரிய நிக்ரஹங்களை யடை யாதயோகிகளுடைய மனதுசஞ்சலப்படுவதுபோலநதி கள-மடுக்கள்-கால்வாய்கள்- பூரணமாயிருக்கின்ற ஜலம் வாயுவேகத்தினுல் கலங்கியிருந்தன ஸ்ரீ புருஷோத்தம ஞகியஸ்ரீஅரியினிடத்தில் ஸமாஸ்ரீயணமாகிறஅன்பை ப்பெற்று பக்தியோடேமனதை சுவாமி திருவடியிற்செ லுத்தி சுகதுக்கமுதலிய வினைகளுக் கஞ்சாத தீரத்வத் தைக்கொண்ட மகாபுருஷர்களைப்போல பர்வதங்கள்இ வ்வருஷாகாலத்திலுண்டாகிய மேககர்ஜ்ஜனை முதலிய இடிகளாலும் பெயயப்பட்ட மழையினுலும் அதனுலு ண்டாகிய அருவிஜலத்தினுலும் பேதிக்கப்படாமல்கல ங்காமலிருந்தன.

வேதாத்யயனஞ்செய்கின்றபிராமணச்சிறுவர்கள்வே தங்களைச் சொல்வதையொழிந்து அந்தப் பாடங்களைத் தொடங்கும்போது அவைகள் அந்தச்சிறுவர்களுடைய மனதிற்குச் சந்தேகமுண்டாக்குதல்போல வருஷஜலச மர்த்தியினுல் இவ்வாரண்யபூமி புற்கள்பூண்டுகள்முத லியவற்ருல் மார்க்கங்கள் மறையப்பட்டனவாகிச் சஞ்ச ரிக்கின்ற மனிதர்களுக்குமார்க்கசந்தேகங்க ளுண்டாக் கினசர்வஜனங்களுககும் ஆநந்தகரமாய்த் தோற்றுகின் றமேகபடலங்களினின்றும் பிரகாசிக்கின்றமின்னல்கள் காமத்தில் இச்சையுள்ள புருஷர்களின்சித்தங்களைக்கல ங்கச்செய்யும் வேசிகளினுடையமேனியழகும்குணங்க ளும்இப்படித்தான் நிலையில்லாமலிருக்குமென்று காட் டுவதுபோல அடிக்கடித்தோன்றித்தோன்றி மறைந்தன சூரியமண்டலம்போன்ற இந்திரதநுஸானதுசத்வாதிகு ணங்களால்விருத்தியடையப்பட்ட இந்தப்பிரபஞ்சத்தி ல்சதவாதிகுண சூன்னியர்களாய் விளங்குகின்ற பரமா த்மாவாகிய ஸ்ரீபரமபுருஷன் பிரபஞ்ச ஸம்ரட்சணார்த் தத்தின்பொருட்டுவகித்த ஸ்ரீஹரிஅர அரண்யகற்பாதி ஸ்வரூபங்களுக்குள்ள வர்ணங்களைப்போன் றிருந்தது இவ்வருஷாகாலசுக்லபட்சத்தில் தினங்கள்தோறும்கலை கள்விருத்தியடைந்தும் உலகத்தவர்களுக்குத்தோன்ரு மல்ஆகாயத்தில்சஞ்சரிக்கின்றமேகசமூகங்களால்மறை க்கப்படுகின்றசந்திரனுனவன் சர்வேஸ்வரனுடைய கிரு பையினுல் இப்பிரபஞ்சத்தினிடத்தில்ஸ்ரீபகவதாக்ஞை யைவகித்துமிச்சேதனன்அந்த ஸ்ரீபகவன் மாயாபிரபா வங்களால் தனதுஸ்வரூபக்ஞான தேஜஸை மறைக்கப் பட்டுமாள்குகின்ற தன்மை யிதுதானென்றுகாட்டுகின் றவனைப்போலிருந்தான் ஆகாயங்களெங்கும்பரவி மின் னலுடன் கம்பீரங்களாகக் கர்ஜ்ஜிக்கின்ற சூற்கொண்ட மேகங்களைப்பார்த்துமகத்தாகிய சந்தோஷங்களையடை ந்துசிறகுகளைவிரித்து நர்த்தனஞ்செய்கின்றமயில்களா னவைஇவ்வுலகில் மகாபுண்யசாலிகளாய்ஜனித்துஸ்ரீஅ ரிபஜனையைக் குணனுபவமாகச்செய்துமகா ஆநந்தத்து டன்நர்த்தனஞ்செய்யுந் தன்மைகளைப்போலக்காணப்ப ட்டனநந்தகோபகுமாரனுகிய ஸ்ரீமாதவன் தமதுதிருப் பவளம்போன்ற அதரத்தில்வைத்தூதுகின்ற புள்ளாங் குழலினுடைய வோசையைக்கேட்டு வெட்கப்பட்டுவா யைமூடிக்கொண்டனவென்று சொல்லும்படி குயிற்கூ ட்டங்களெல்லாங் கூவாமல் வாயடங்கியிருந்தன பூமியி லுறைந்திருக்கின்ற பிரவாகங்களைத் தமதுவேர்வைகளி னுல்க்ரகித்து விருத்தியடைந்துசமஸ்தபிராணிகளுக்கு ம்மகோபகாரமாய் நானுவிதரசருசிபலங்களைத்தரத்தக் கதாய் இந்தபிருந்தாவனத்தில் விளங்குகின்றவிருட்சங் கள்சர்வேந்திரியங்களை ஜயித்து மகாபரிசுத்தர்களாய்த் தங்கள் தபப்பிரபாவத்தால் ஸ்ரீபகவானைச் சந்தோஷிப் பித்துஅவருடைய கிருபையால் சர்வபலத்தைக் கொடு க்கத்தக்க சம்பத்தைஅடைந்து அநுக்ரகிக்கின்றதபஸி களைப்போல் விளங்கின,

சர்வ லோகேஸ்வரனுன ஸ்ரீ கண்ணபிரானுனவர் யென்னிடத்தில் லீலா விநோதங்களைச் செய்யப் பாக் கியத்தை நான் பெற்றிருக்கின்றேன் நீ ஸ்வர்க்கத்திலு ள்ளதென்று பெயர் பெற்றிருந்த போதினும் சுவாமி யினுடைய லீலா விநோதங்களை அநுபவிக்கும்



కంసకచసంమర్దనం (౪౪-అ)



రుక్మిణీదేవిగౌరిపూజ (౫౩-అ) రుక్మిణీదేవినియెత్తుకపోవుట రుక్మిణీకల్యాణం



సత్యభామకల్యాణం (౫౬-అ)

பேறு உனக்கில்லாமையால் நீஎனக்குச்சமானமல்லவெ ன்று தெய்வலோகத்திலுள்ள கற்பகவனத்தைப் பார்த் து பிருந்தாவனம்நகைத் தேளனஞ்செய்வதுபோல் அ வ்விடத்திலுள்ள முல்லைக்கொடிகளெல்லாம் அரும்பெ டுத்தன, இந்தப்புண்யாரண்யங்களிலும் மற்ற விடங்க ளிலும் கலங்கிக்குழப்பிச் சேற்றுற்குழப்பட்டிருக்கின் ற நீரோடைகள்சரிகள்முதலாகிய இடங்களில் இனமி னமாய்ச் சேர்ந்துவண்டுக்களையுஞ் சேற்றுப்புழுக்களை யுந்தின்று விருத்தியடைந்து அத்தடங்களைவிட்டகலா மல் திருப்தியடைந்திருக்கின்ற சாரஸப்பட்சி சமூஹங் கள் இவ்வாத்மகோடிகளில் நித்ய ஸம்ஸாரிகள தேஹா பிமானிகளாய்ப் புத்திரமித்ரகளத்ர பந்துவிஷயங்களி ல் துராஸாமோஹ பரவசர்களாய்த் தேஹமே ஆத்மா வென்றும் சரீரபோஷணார்த்தங்களே புருஷார்த்தங்க ளென்றும் பிரமித்திருக்கின்ற அஜ்ஞான சனிதர்களைப் போலவிளங்கின. கலியுகத்தில் பிராமணர்கள் நீசனைய டுத்து உதரபோஷணஞ்செய்வதே முக்கியமாக வெண் ணி வேதசாஸ்திரங்களை மறந்துவிடுவார்கள் அப்போ து பாஷாண்டாள்மீறி வேதத்திற்குவிரோதமான அச த்சாஸ்திரத்தை உபதேசித்து வேதமார்க்கத்தை பேதி ப்பதுபோல மிகுந்தவெள்ளத்தினுல் ஏரிகால் முதலிய துகளின் கரைகள்பேதிக்கப்பட்டது.

இப்பிரபஞ்சத்தில் உபகாரிகளாகிய உத்தமராஜாக்க ள் மந்திரிபுரோஹிதர்கள்முதலிய வித்வஜ்ஜனசத்ஸங் கபரர்களாய் சாஸ்திரங்களையும் நீதிகளையும்ஆராய்ந்து தானதர்ம பரோபகாரிகளாய்ச் சமஸ்தமானசனங்களை யும் தண்ணளியினுல்ரட்சிக்கின்றதுபோல இம்மேகச மூஹங்கள் சூழ்கொண்டெங்குநிறைந்து வாயுவால்கல க்கப்பட்டு சர்வபூமியுங்குளிரச் சர்வஜனங்களுஞ் சந் தோஷித்துத் திருப்தியடையவருஷித்தன. அந்தாரண் யத்தில்வசிக்கின்ற மஹாரிஷிகளும் வானப்ர ஸ்தாசிரோ ஜனங்கள் முதலியவர்களும் திருப்தியடைந்து சந்தோ ஷித்தார்கள் அந்தபிருந்தாவனத்தில் வருஷாகாலத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான் ஸ்ரீபலராமசகிதராய்ச் சமஸ்தமா ன கோபாலர்களுங் கோவினங்களுஞ் சூழ்ந்துவரபிர வேசித்துசசந்தோஷமாகச் சஞ்சரித்துக்கொண் டிருந் தார். பசுவின்கூட்டங்கள் க்ஷீரசமாத்திகளினுல் மெள் ளஉலாவிச்சஞ்சரித்து ஸ்ரீகண்ணபிரானுல் அழைக்கப் பட்ட வோசைகளுக்கு பிரீதியடைந்து தேவாமிர்தத் திற் கொப்பானபாலைத் தாங்கள்சஞ்சரிக்குமிடந்தோறு ந் துளித்துளியாகப் பெருகவிட்டுக்கொண்டு ஸ்ரீபகவா னைப்பிரியாமல் சஞ்சரித்துக்கொண் டிருந்தன: ஸ்ரீபல ராமமூர்த்தியும் கோபால குமாரர்களுக்கூட அழைத் துக்கொண்டு கிருஷ்ணபகவானுனவர் பெருமழை வரு ஷிக்கின்ற சமயங்களில் மழையடைப்பானவிடங்களில் பசுக்களைமடக்கிவிட்டு விருட்சங்களி னடிவாரங்களிலு ம் பர்வதகுகைத்வாரங்களிலும் பிரவேசித்துமிகவும்ம னோரம்யமான லீலாவினோதங்களை யாசரித்துக்கொண் டிருந்தார் அப்போதுகோபாலகுமாரர்கள் அவரவர்கள் கொண்டுவந்த ஊறுகாய்களையும் கந்தமூல பலாதிகளை யும் தத்யோதனமுதலிய விசித்ரான்னங்களையும் எடு த்துப் பாறைகளின்மேளவைத்துஸ்ரீபகவத்பிரீதியாகச் சமர்ப்பித்தார்கள்ஸ்வாமிசாம்கொண்டுவந்ததை பிரசா தித்தார் பின்புஸ்வாமி முதலியயாவரும் சந்தோஷாதிசய பரவசர்களாய்ப் போசனஞ்செய்தார்கள் பின்பு ஒரி டத்தில் இளப்பாரிசம்பிரம வார்த்தைகளைவசனித்துக் கொண்டிருந்தார்கள் இவ்விதங்களாக ஸ்ரீபகவானுனவர் கோகுலபிருந்தாவனங்களில்இந்தவருஷாகாலமெல்லா ம் ஸ்ரீபலராமர்சகிதராய்ச் சகலகோபால கோதனசமூ ஹங்களுடன் லீலாவினோதங்களாகப் பிரதிதினமுஞ்ச ஞ்சரித்துக்கொண்டிருந்தார் இப்படியிருக்கின்ற காலங் களில் சூரியபகவான் கன்னியா ராசியைவிட்டுத் துலா ராசியிற் பிரவேசித்தான் ஆகாயமும்பூமியும் சகல நதி நத பிரவாஹங்களும் தெளிந்துமந்தமாருதத்தையுடை யதாயிருக்கின்ற சரத்ருதுவினுடையலக்ஷணக்குறிகள் விளங்கின இந்தப்பிருந்தாவனத்தில் தீர்யாஸ்ரமிகளா யிருந்து தாரேஷணம தனேஷணம் புத்ரேஷணமென் னும் - ஈஷ்ண திரவியங்களையும் - தேவருணம் - பித் ருருணம் - ருஷிருணம் - மனுஷியருண மென்னும்- ருண நான்குகளையும் பிரகிருதி சம்பந்தத்தி லுண்டா கிய சுகிருத துஷ்கிருதங்களையும் காமக்ரோதாதி அரி ஷ்டவர்க்கங்களையும் தானதர்மம்முதலிய ஆசாரசத்க ர்மங்களையும் அநுஷ்டித்து இல்லறவாழ்க்கைகளைத்து றந்த சந்நியாசிகளைப்போல முன்வருஷருதுவில்நீருண் டு கறுத்தநிறத்தைக்கொண்டு ஆகாயத்தில்பரவி நாடுந கர வனபர்வதசமுத்திரங்களில் நன்றாகவருஷித்துதிரு ப்தியடைந்திருக்கும்படிச்செய்து நிர்மலஸ்வரூபங்களா ன வெள்ளைமேகங்கள்சஞ்சாரங்களொழிந்துவிளங்கின வருஷங்களில் கலங்கலாயிருந்த நதிகள்தடாகங்கள் மு தலியவற்றிலுள்ள ஜலந்தெளிந்து செவ்வாம்பல் வெள் ளாம்பல் செங்கழுநீர்-கருங்கழுநீர் செந்தாமரைவெண் டாமரைவிருத்தியடைந்து புஷ்பித்துஸ்ரீமகாலக்ஷ்மி வீ ட்டைப்போல்விளங்கிய அந்தச்சலமானது இந்திரியநிக் கிரகத்துக்குரிய யோகாம்பரத்தைக் கொண்ட சித்தங்க லங்கிநின்று காலாந்தரத்தில் சித்தந் தெளிந்த யோகபு ருஷனுடைய மனதைப்போல சுபகரமாய்த்தோன்றிய து பிரம்ஹசர்யாஸ்ரமத்தையடைந்து தாய்தந்தையர்க ளைநீக்கிக் குருகுலவாசஞ்செய்வதிலும் வேதாத் யயன ஞ்செய்வதிலும் மாதோஹரஞ்செய்து சரீரபோஷண ங்களைச்செய்து கொள்வதிலும் நானுவிதஸ்ரமங்களால் சித்தசௌக்கிய மில்லாதவர்களாயிருந்து கிரகஸ்தாஸ்ர மங்களையடைந்து மனதுதெளிந்து சுகிக்கின்றபிராம்ம ணச்சிறுவர்களைப்போல சூரியபகவானுடைய கிரணங்

களாலும்மேசுமின் நகாற்றினாலும் ஆகாயமானது தன்னை மறைத்துக் கொண்டிருந்த மேகக்கூட்டம் நீங்க விளங்கியது.

நல்லஆசாரியர்களை அடைந்து குருகுலவாசஞ் செய்து அவ்வாசார்யாநுக்ரகத்தினாலே வேதாந்த ஆத்மஹித தத்வார்த்தங்களை நன்றாய்ப் போதித்து திருப்தியடையச்செய்கின்ற ஆசாரியனைப்போல அந்தவனத்திலுள்ளபர்வதங்கள் வருஷாகால மேகங்களாற் பொழியப்பெற்ற ஜலத்தைவகித்து அந்தஜலத்தினால்தங்களையாஸ்ரயித்த மகாசனங்கள்திருப்தி யடையும்படிச் செய்தன இவ்வுலகத்தில்தேஹாபிமானிகளாய் புத்ரமித்ரகளத்ராதிகளை சாசுவதமாகநினைத்து சூரியபகவானால் கிரகிக்கப்பட்ட ஆயுக்ஷீணங்களை யறியாமல்சஞ்சரிக்கின்ற சேதனர்களைப்போல இம்மகாவனங்களி லுள்ள சிறுஓடைகளிலும் அற்பகடாகங்களிலும் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றஜலஜந்துக்கள் சூரியகிரணங்களினால் ஜலசமர்த்திகள் குறைந்து தங்கள்ஜீவனோபாயங்களற்றுப்போவதை யறியசக்தியில்லாமல் நானாவிதமாகியதாபத்தையடைந்து தபித்துக்கொண்டிருந்தன இவ்வுலகத்தில் ஸ்ரீஅரியினிடத்தில் பக்தியுக்தஅன்புகளையுடையவர்களாயும் துரபிமானங்களை யொழித்தவர்களாகியும் சித்தசுத்தியுடன் விளங்குகின்ற உத்தமக் கியானிகளைப்போல இந்தஅரண்யங்களிலுள்ள நதீநத மடுக்கள் ஓடைகளினுடைய பிரவாஹத்தினால் சேற்றைவகித்து பூப்ரதேசங்களும் சூரியகிரணங்களால்தமது மலினங்களையொழிந்துசாதாரணமாகச் சஞ்சரிக்கும்படி பிரகாசித்தன. சகலாத்ம சமதர்ஸனக்ஞானமுடையவர்களாய்ப் பரோபகாரஎண்ண முடையவர்களாயிருக்கின்றபுண்ய ஜனங்களைப்போல ஸ்ரீபகவானுடைய சஞ்சாரங்களுக்கு யோக்யமான இந்தப்பூமியானதுசேற்றையும் வண்டலையும் உளையையும்விட்டுத் தன்னுள் விளங்கிய கொடிகளிலேயும் புதர்களிலேயும் உண்டாகின்ற மனோரம்யமாகிய புஷ்பங்களையும பலங்களையுந்தந்து சமஸ்தமானவர்களையுஞ்சந்தோஷிக்கச்செய்தது தங்கள்குலசிரேஷ்டனாகியகாளியன்தலையைமிதித்து அவனுடையகர்வத்தை யடக்கிய ஸ்ரீகிருஷ்ணபகவான் வருகின்றாரோவென்று பயத்தினால்சர்ப்பங்கள் தலையைநீட்டியெட்டிப்பார்ப்பதுபோலும் காந்தன்அரும்பெடுத்தன தம்மிடமாகவந்து சஞ்சரிக்கின்ற நந்தகோபநந்தனனைப்பார்த்து வனங்களும் கிரிகளும் வாராய்மாதவா எங்களைப்பரிசுத்தர்களாக்கி ரட்சிக்கவரும் ஐயனேயென்றுகையேந்தி அழைப்பதுபோலக் காந்தள்கள்மலர்ந்தனவனத்தில்சஞ்சரிக்கும்போது யசோதாநந்தனனுடையதிருமேனியின்காந்தி அவ்வனமுழுதும் பரவினாற்போல்காயாவெல்லாம் மலர்ந்தன கிரமக்கிரமமாய உத்தமா சிரமதாமங்களை வகித்து அவற்றிற்குரிய ஸகலகிரியா கர்மதர்மங்களையுமாசரித்து பரமேகாந்தி நிஷ்டனாய் சந்தடியற்று மௌனவிரதத்தை யநுஷ்டித்திருக்கும் முமுட்சுவைப்போல வருஷாகாலத்தில் மேகங்களினின்று முண்டாகின்ற வருஷங்களினாலும் வாயு வேகத்தினாலுங் கலங்கி நானாவிதவிசித்திர அலைகளையும் அகற்றாலுண்டாகின்ற கம்பீரமானவோசைகளையு முடைத்தாயிருந்த சமுத்திரமானது ஸரத்காலம் வாதவுடனே சூரியகிரணங்களாலும் அவற்றின்உஷ்ணவயுவேகங்களினாலும் கலங்கல்தெளிந்து ஆரவாரங்களொழிந்து நிசப்தமாயுங் கம்பீரமாயும்விளங்கிற்று யோகிகளானவர்களமனதை ஒருவிடத்திலும் சலிக்கவொட்டாமல் ஸ்ரீபகவானுடைய திருவடிகளில் நிறுத்தித்தியானிப்பதுபோல பயிர்செய்து வாழ்கின்ற உழவர்களாகிய உத்தம ஸம்ஸாரிகள் தங்களுக்கும்வெகுசனங்களுக்கும் உபகாரார்த்தமாகச சர்வப்ரவாக சலகால்வாய்களுக்குஅணைகளைக்கட்டி ஜலசம்ரக்ஷணஞ்செய்தார்கள்ஸ்ரீகிருஷ்ணபகவான் கோபாலகுமாரர்களுடனே பசுக்களையோட்டிக்கொண்டு வனத்திற்குப்போயிருக்கப்பட்ட பத்தியான காலங்களில் அவருடைய சேவைநீங்கியதாலுண்டாகின்ற மானஷதாபங்களைக்கொண்டிருந்து அஸ்தமனகாலங்களில் அவரெழுந்தருளினவுடனே அங்கஸ்ரீகிருஷ்ண ஸேவாதிருப்தியால் தேகேந்திரிய தாபங்களைநீக்கி பக்திக்ஞானவிசேஷங்களையுடைய சகலகோபாலகோபிஜனங்களைப்போல பூமியிலுள்ள சர்வசனங்களும் சூரியபகவானுடைய கிரணங்களால்தாபத்தை யடைந்து சந்திரபகவானால் தாபம்நீங்கி திருப்தியடைந்தன.

இவ்வுலகில்வேதோக்தமாகிய கர்மகாண்ட முதலியவைகளில் தேர்ந்து சத்வகுணங்களை வகித்துசந்தோஷிக்கின்றவர்களுடைய சித்தத்திற்றோன்றிய சாஸ்த்ரார்த்தங்களைப்போல விந்தை விந்தையாக வியாபிக்கின்ற மேகசமூகங்கள நீங்கப்பட்ட ஆகாயவீதிகளில் நிர்மலமாய்கிரகநட்சத்திர சமூகஙகள் பிரகாசித்துக்கொண்டிருந்தனகோகுலபிருந்தாவனத்தில்சமஸ்தகோபாலகோபிஜன கோவனகோவத்ஸங்கள் தம்மைச்சூழ்ந்து விளங்கும்படி ஸ்ரீபலராமசகிதராய்ப் பூர்ணகிருபாதிருஷ்டியை வகித்துபிரகாசிக்கின்ற ஸ்ரீகிருஷ்ண பகவானைப்போலஅகண்டபண்டலாகாரமாயிருக்கின்றஆகாயவீதியில்நானாவிதங்களாகியநக்ஷத்திரகணங்கள் சூழ்ந்துவிளங்கத்தனது சோடசகலாபாகங்களையுடையபூரணச்சந்திரன் பிரகாசித்தான் ஸ்ரீகிருஷ்ணசேவையில் பரிபூர்ணமனோரதர்களாய் இவ்வனத்தி லுள்ள இளங்காற்றினால் தங்கள் தாபத்தை யொழித்துக கொள்ளமாட்டாதவர்களாய் ஸ்ரீகிருஷ்ணனுடைய ஆலிங்கனத்தை மனதில்தியானித்துத் தபித்துக்கொண்டிருக்கி

ன்ற கோபிஜனங்களைப்போல இந்தப் புண்யபூமியிலிருக்கின்ற மகாஜனங்கள் அந்தசரத்கால சூரியகிரணங்களால் அதிகதாபங்களை யடைந்தார்கள் அப்படி அதிகதாபத்தை யடைந்தவர்கள் முமுட்சுக்களும் பிரபந்தஜனங்களைப்போல அங்கங்குள்ள உபவனங்களிலும் குளிர்ந்திருண்ட இளந்தோப்புகளிலும் நானாவித பரிமளத்தை யுடையபுஷ்பச்சோலைகளிலும் நின்றுவீசாநின்றகாற்றினுல்தங்கள் தாபத்தைத் தீர்த்துக்கொண்டு சௌக்யமடைந்தார்கள் இந்தப் பிருந்தாரண்ணியங்களிலும்மற்றவிடங்களிலுமுள்ள மிருகபட்சிகள் சந்தோஷித்துத்தங்கள்தங்கள்நாயகர்கள் சகிதங்களாகச்சேர்ந்து கிரீடித்தனகர்ப்பமில்லாதவைகள கர்ப்பப்பட்டன கர்ப்பந்தரித்திருந்தவைகள்பெற்று சந்ததிகளோடுவிருத்தியடைந்தன, கர்ப்பங்களோ டிருந்த கோக்க ளவத்ஸங்களையீன்று ஆநந்தபரவசத்துடன் ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குப் பிரீதியாகதேவாமிர்தத்திற்கொப்பாகிய பாலமுதைஅமிர்தமாகக்கறந்தன சர்வஜனங்களும்ஸ்திரீ புருஷர்களுடன் கூடி ஆநந்தபரவசர்களாயிருந்தார்கள கர்ப்பமில்லாதிருந்தவர்கள்கர்ப்பப்பட்டார்கள்.

இப்பூமியையாளுகின்ற அரசனானவன் தனது ஆக்கினையைச்செலுத்துவதினாலே சோரர்கள்ஒடுங்கியடங்குவதுபோல பிரதினமும் சூரியகிரணஜாலங்களினாலே உலகத்திலுண்டாகிய துஷ்டஜந்துக்களும்ஆம்பல்முதலிய சிலபுஷ்பசாதிக கூட்டங்களும் ஒடுங்கியடங்கின அவ்வரசனுடைய ஆக்கினையால்சமஸ்தமான ஜனங்களும் சந்தோஷங்களையடைவதுபோல அக்காலசூரியோதய கிரணங்களால் சமஸ்தமான உலகத்தவர்களுஞ் சந்தோஷித்தார்கள், புஷ்பஜாதிசமூகங்களும் மலர்ந்து பிரகாசித்தன, ஸ்ரீராமகிருஷ்ணர்களால் கடாட்சிக்கும் படியான பூமியில்சமஸ்தமான பயிர்களும்விருத்தியடைந்தன நகரங்களிலும் சர்வோபசாரங்களுடன் சகலதேவதைகளுக்குஉத்ஸவங்கள் நடந்தன இந்தக்கோகுல பிருந்தாவனத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய லீலாவினோதங்களுக்குரிய சகலகோபால கோபீஜனமனோரத நித்யமங்கலமகோத்ஸவங்கள் பிரகாசித்தன, மேலும்ஸத்கர்மயாகவிரத தானதபோமூர்த்திகளான புண்யபுருஷர்கள் இகத்தில்உத்தம சத்கீர்த்திகளை அடைந்து தேகமுடிவுகாலத்தில் தேவதா யோனிஜாதர்களாய் சரீரங்களைப்பெற்றுச் சாவாபீஷ்டங்களையடைந்து விமானாருடர்களாய்ச் சகலபுண்யலோகங்களையடைகின்றதைப்போலவருஷாகாலங்களில் அந்தப்புரத்தில் வசித்துச்சுகிக்கின்றசமயங்கள்தவிர மற்றைக் காலங்களில் நீதிசாஸ்திராநுபவங்கள்செய்துக்கொண்டிருந்த உத்தம அரசர்கள் வருஷாகாலந்தீர்ந்து சாத்காலம்வந்தவுடனே சர்வாலங்காரபூஷிதர்களாய்வாகனாருடர்களாய் வெளிகளிற் சஞ்சரித்துத்தங்கள் இஷ்டார்த்தங்களையடைந்தார்கள யோகீஸ்வரர்களாகியயதிகள் ஒவ்வொரு ஆஸ்ரமங்களையடைந்து வருஷாகால சரத்காலங்களென்னு மிரண்டிருதுக்களிலும் சாதுர்மாஸ்யாதியக்ஞ கர்மங்களை யநுஷ்டித்துக்கொண்டிருந்தார்கள், அன்னியபாக்கிராமசஞ்சாரிகளாகியவியாபாரிகள்தங்கள் யதாஸ்தானங்களினின்று தர்மநீதிகளையும்லாபநஷ்ட கணக்குகளையும ஆராய்ந்துசுகித்துக்கொண்டிருந்து வருஷாகாலங்கள் தீர்ந்து சாத்காலம்வந்தவுடனே அலங்காரபூஷிதர்களாய் வெளிப்பிரதேசங்களில் சஞ்சரித்துத் தங்கள் இஷ்டார்த்தங்களை யடையும்படி வியாபாரங்களைச் செய்தார்கள்.

## உக - வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

சாந்துவீசுஞ் சாத்காலநாளையில்
போந்திடும்யமு னாநதிபுக்கியே
தோந்தகியானஞ் செயத்தொனிகேட்டஸ்திரீ
சேர்ந்துவந்த நிகழ்ச்சியுங்கூறுவாம்

ஸ்ரீஹரியாகிய கண்ணபிரானானவர் இந்தஸரத்காலத்தில்யமுனாதீரங்களில் பிரவேசித்து பிரம்மாநந்த பரவசராய்வேணுகான பூர்வகமான சுஸ்வரங்களைக்கொண்டு வீணாகானுமன்னு முருகச்செய்ததும் அந்ததிவ்யகானதொனிகளைக்கேட்டுச் சர்வகோபகன்னிகா ஸ்திரீகளும் மனதுலயமடைந்து ஸ்ரீகிருஷ்ண குணாநுபவமானகானங்களைச்செய்ததுஞ் சொல்லுகின்றது.

வாராய் மகாராசனே ஸ்ரீஅச்சுதபகவானானவர் ஸ்ரீபலராமஸஹிதராய்ச் சமஸ்தமான கோபாலகோதனசமுகங்களுடன் இந்தச்சரத்காலதினங்களில்நிர்மலங்களாய்த்தெளிந்துவிசித்ரமான அலைகளோடு சப்தித்துக்கொண்டுகம்பீரமாய்ப் பிரவஹிக்கின்ற யமுனாநதிமுதல்யதடாகங்களையும், மலர்ந்திருக்கின்ற தாமரைமுதல்யபுஷ்பஜாதிகளுடைய சுகந்தபரிமளங்களையடைந்து வீசாநின்றதென்றற்காற்றுகளையும்அந்தப்புஷ்பங்களிடத்துண்டாகிய மதுக்களையுண்டு பூப்பொடிகளைத்தூவிக்கொண்டுநானாவிதஸ்வரங்களோடு கானஞ்செய்து அவ்வனங்கள்தோப்புகள் முதலியவனமார்க்கங்களிலுள்ள அநந்தவிதரத்னஸ்வரூபங்களையுமுடைய வண்டினங்களின் ஓசைகளையும்வெகு விசித்ரங்களான மிருகபட்சிகளின் வினோதநாதங்களையும் அநந்தமானவனசர்களையும் ஸ்ரீகோவர்த்தனமுதலிய பர்வதங்களையும் மகாபுருஷர்களையும்கடாட்சித்துக்கொண்டு திரிந்தார் அப்போதுசில புஷ்பக்கொத்துகளையும் இளந்தளிர்களையும் தமதுசிரசிற்றரித்துக்கொண்டார். இன்னுஞ்சிலநாளையில் குவலயாபீடமென்னும்மத்தகஜத்தின் தந்தங்களை யிவ்விதமாகத்தான் பிடு

ங்குவேனென்று காட்டுகின்றவரைப்போல தாழைமலர்களைப்பறித்தார் வெண்டாமரையினுடையமலரும்பருவத்தையுள்ள மொக்கைஇடதுதிருக்கையிற றாங்கியிருந்தபாஞ்சசன்யத்தை வலது திருக்கையிற்றாங்கியதுபோலத்தாங்கிச் செந்தாமரையின் மலர்ந்தபுஷ்பத்தைப்பறித்து வலதுதிருக்கையிலிருந்த சுதரிசனத்தை இடதுதிருக்கையிற் றாங்கியதுபோலத் தாங்கிச்சஞ்சரித்தார் மனோரம்யமுள்ள புஷ்பங்களை கோபிகா ஸ்திரீகளின்கைகளில்கொடுப்பதுபோல அங்குமலர்ந்திருக்கின்ற செங்காந்தட்புஷ்பங்களின்மேல் வைத்தார் இனிமேல்கோபிகாஸ்திரீகளின் கையைப்பிடித்துக்கொண்டு தாம் விளையர்டும்வண்ணம் இதுவென்று காட்டுகின்றவரைப் போலச்செங்காந்தண்மலரைப் பிடித்துக்கொண்டிருந்தார்.

இவையல்லாமல் இன்னும்அநேகவித விசித்ர லீலாவிநோதங்களாய் விளையாடிவனமெங்குங் கோக்களைமேய்த்துவேணுகானஞ்செய்து சஞ்சரித்துக்கொண் டிருந்தார், அந்தச்சாத்காலங்களில் கோப கன்னிகைகளாகிய ஐந்துலட்சங்குடிப்பெணகளியாவரும் ஸ்ரீபகவானுடையவேணுகான ஸ்வரங்களைக்கேட்டு நாளுக்குநாள் ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில் மிகவும்மோகபரவசர்களாகிவீட்டுவேலைகளைப்பாராமல் கூட்டங்கூட்டமாகச்சஞ்சரித்துக்கொண்டு ஸ்ரீபகவானுடைய லீலாகுணங்களை நினைத்துசகிஜனங்களைமுன்னிட்டுக்கொண்டுஸ்ரீகிருஷ்ணனிடத்தில்பற்றின சர்வேந்திரியங்களை யுடையவர்களாய்மனோலயங்களையடைந்துவிளையாடிக்கொண்டிருந்தார்கள் ஸ்ரீகோபாலசக்ரவர்த்தியாகி எழுந்தருளியிருக்கின்றஸ்ரீகிருஷ்ணபகவானனவர் தமதுசிரோபாகத்தில்ரத்தினபூஷணங்களுடன் மயில்தோகைகளினுடையகாந்திகள்விளங்கமுன்னெற்றிச்சுட்டியி னொளிவீசவும் ஜிலுப்பாவுக்குஅலங்கரித்திராநின்ற ஸ்வர்னபுஷ்பங்களும்பரிமளமிகுந்த ஜ சீபுஷ்பங்களும்விளங்கவும் செவிகளி லணிந்தமகர குண்டலங்களி னொளியால் கண்டபாகங்களில் பிரதிபலித்து சுந்தரங்களும் இரத்நகஸ்தூரிதிலகாலங்காரஊர்த்வபுண்டரங்களின் சிங்காரங்களும் ரத்நகுண்டலங்களமைந்த காதுகளையளாவிவிசாலநேத்ரங்களின் பார்வைகளும் மனோரமணீயமாகிய பிரவாளாதரங்களும்அவை விகசிக்கத் தோற்றுகின்ற இளஞ் சந்திரிகைகளையொத்த சிறுபற்களிலுண்டாகிய இளநகையிற்காணப்பட்டசௌரவமும் சங்குபோன்றகண்டத்திலும்விசாலமார்பிலும் பொருந்திய பூஷணங்களின் காந்திகளுடன்வைஜயந்திவனமாலைகள் விளங்கவும்மகாராஜலக்ஷணத்துடனி ருக்கிற அரையினில் அரைநான்மாலையோடும் சதங்கைகளோடுங் கூடிய ஒட்டியாணத்தினு ளிறுகக்கட்டியிருக்கின்ற பீதாம்பரம் பிரகாசிக்கவும் பரமயோகீந்திரர்களுடைய மனதாகிற தாமரைக்காயினிலிருப்பிடமாகவுடைய பதுமமுதலியரேகைகளால் அலங்கிருதமாகியஸ்ரீசரணாரவிந்தங்களையும் சர்வபுவனமோகனகரமாகியும் விசித்ரவர்ணப் பட்டுக்குச்சுகளாலும் அலங்கிருதமாகியும் மதுரஸ்வரங்களை வருஷிக்கின்றதாகியும் விளங்குகின்ற புள்ளாங்குழலைத்தமது திவ்வியாதரத்தில்வைத்து ஜகன்மோகனதிசயங்களை யுண்டுபண்ணும புருவங்களைநெறித்து இரண்டு கன்னங்களும் பூரித்துஸ்ரீபெரியபிராட்டியாரெழுந்தருளியிருக்கின்றதிருமார்பைநெறித்துஸ்வரபேதங்களைக் கற்பிக்கின்ற சாதுர்யங்களினால்தாமரைபோன்ற முகம்பிரகாசிக்க அந்தவேணுவின்ஸ்வரத்துவாரங்களின்மீது இடவலமாகத் தமதுதிருவாகிய விரல்களின்வைப்புதலைக்கொண்டு சங்கீதசாஸ்திரப்படிக்கு ஷட்சு-மத்யம்-தைவத-நிஷாத- பஞ்சம-ருஷப-காந்தாரமென்னும் ஸப்தஸ்வரங்களையுண்டாக்கிராக பேதங்களோடும் சேதனசேதனப் பிரபஞ்சங்களும் அத்திவ்யஸ்வராமிர்தங்களைத் தங்கள்செவிகளை வாயாகப்பானஞ்செய்து மகா சந்தோஷங்களைக்கொண்டுய்யும்படி காந்தர்வதேவதா கீதஸ்வரங்களைத் தமது குழலோசையினற் பாடியருளினு ரிவ்விதமாகப் பாடுகின்ற ஸ்ரீபகவானுடைய மதுரமானதொனியைக் கேட்டமாத்திரத்தில் அந்தப் பிருந்தாவனங்களில் வாசஞ்செய்கின்றதபோமூர்த்திகளும் வனவாசிகளாகியவேடுவர்முதலியஜனங்களும் தினந்தோறும் ஸ்ரீபகவானைப்பிரியாமலவருடையலீலாகுணங்களைத் தங்களுக்கு சீவனமாக அனுபவித்து ஆனந்தித்துக்கொண்டிருக்கும் அசேஷகோபாலர்களும் ஆகாயத்தில்விமானரூடர்களாய்ச்சஞ்சரிக்கின்றதேவகணங்களும் அரம்பையர்முதலியஜனங்களியாவரும் ஸ்ரீபகவானுடைய மதுரஓசைக்குச் சமீபமாகப்பூமியந்தரிக்ஷங்களிற் சூழ்ந்து பசிதாகங்களைவிட்டுசித்திரபதுமைகளைப்போல அசைவற்றுஆழ்ந்துநின்றார்கள் சமஸ்தமான மிருகபட்சிசமூஹங்களும் தமக்குள்ள விரோதங்களைவிட்டு ஆனந்தபரவசங்கொண்டிருந்தன.

வாராய்க்ஷீரப்ருஷனாகிய மஹாராஜாவே, திவ்யாவதாரமூர்த்திகளாகிய ஸ்ரீபலராமகிருஷ்ணர்களை அர்ச்சிப்பதற்குஸ்ரீசதுர்முகபகவானால் ஆக்ஞாபிக்கப்பட்டதிவ்யாப்ஸரசுக்களின்பூர்ணம்சத்தினால் கோகுலத்தில்வந்துற்பவித்திராநின்ற கோபகன்யாஸ்திரீமணிகள் ஸ்ரீஅரியாகியகண்ணனுடைய வேணு கீதங்களைக்கேட்டு யாவருமோரிடத்தில் இனமினமாகச்சேர்ந்து பகவற்குணமோஹனமானவர்களாய்ச் சரீராபிமானத்திற் குரிய பெண்குணமாகிய-நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு-யென்னுநான்குகுணத்துள் முக்யமாய்க் காப்பாற்றத் தகுந்த முதற்குணமாகிய நாணமென்பதை லேசமுங் கொள்ளாமல்விட்டு ஸ்ரீ கிருஷ்ண சுவாமியை தியான பூர்வகமாக ஆலிங்களங்கள் செய்து ஒருவர்க்கொருவர் சரீரபா

வசர்களாய் ஸ்ரீகிருஷ்ணனுடைய சாதுர்யாதி லீலைகளைப் பரிசுத்தமாவதற்காக அநுபவிக்கத்தொடங்கினார்கள்.

வாராய் எனதன்புள்ளசகியேஇந்தஸ்ரீமாதவனானவர் சகலாபரணபூஷிதராய் விளங்கத்தமது பவளம்போன்ற உதட்டில் வேணுவைவைத்துகானங்களைச் செய்கின்றதுஆச்சரியங்களைக்கண்டு இந்தவனத்தி லிருக்கின்ற ஸ்தாவரங்களும்மலயித்து நின்றதேயன்றிச் சலிக்கவில்லையேயென்றாள் வாராய்எனதன்புக்குரியவளேஸ்ரீபுண்டரீகாக்ஷரானவர் பிருந்தாவனத்தில் இடவலமாகசசர்வலோகமோகனகரமாகிய புருவங்களா லபிநயனஞ்செய்து தமதுபத்மகரங்களின் விரல்களைக்கொண்டு சங்கீதசாஸ்திர மூர்த்தியைப்போல வேணுஸ்வர மூலமாய் சங்கீதரசங்களை வருஷிக்கின்றதை இவ்வனவிருட்சங்கள் தங்கள்தாபந்தீர்ந்திருக்கின்ற ஆச்சர்யாதிசயங்களைக் கண்டு களித்தாயோவென்றாள் மற்றொருஸ்திரீ இந்தநந்தகோப தநயனுடைய வேணுநாதத்தைக் கேட்டமாத்திரத்தில் யானைகளும் சிங்கங்களும் மான்களும் புலிகளும் இன்னும்மற்றுமுள்ளமிருகங்களும் விரோத பயங்களைவிட்டு அதிகசிநேகங் கொண்டவைகளைப் போலத் தம்மைத்தாம் மறந்திருக்கின்ற வேடிக்கையைப் பாராயென்றாள் சிலஸ்திரீ மரகத ஸ்தம்பம்போன்ற கம்பீர புஜங்களைத்தரித்த ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய புள்ளாங்குழலோசையைக்கேட்டமாத்திரத்தில் அவரெழுந்தருளியிருக்கும் இடத்திற்குச் சமீபத்திலிருக்கின்ற நதியானது கங்கைக்கொப்பாய்ப்பொங்கி அவருடையதிருவடிமேற் படும்படிஅலையைப் புரட்டுகின்ற வேடிக்கையைப்பாராயென்றாள மற்றொருத்தி அன்புடையவளே இந்தயசோத புத்ராத்நமானவர் ஊதுகின்ற குழலோசையைக் கேட்டமாத்திரத்தில் குளிர்ந்த சிறுதென்றற்காற்றானது அக்நியைப்போலென்னைத்தகிக்கின்றது நான்ஸ்தனங்களின்மேல் தரித்தகலவைச்சாந்து கரிந்ததீய்ந்தது நான்சூடியபுஷ்பங் கருகினசந்திரகிரணம் அழற்குழம்பாக விருக்கின்றது கைவளைகள் சோர்கின்றன இடையாடைகள் நழுவுகின்றது கைகால்கள் துவளுகின்றன இவ்வாச்சரியமென்னசொல்வாயம்மாவென்றாள்-

பின்னொருத்தி பிராணபந்தசகியே காளியநர்த்தன பதாம்புஜரானவர் சப்திக்கின்றகுழலோசையைக் கேட்டவளவில் என்செவிகளுக்குக் குயிலோசையானதுநாராசங்காய்ச்சிச் சொருகியதுபோலிருக்கின்றது புஷ்பங்களைப் பார்த்தால்பயமுண்டாகின்றது மனமிருந்திருந்து பறையறைகின்றது தேகத்தில்பசலையுண்டாகின்றது சந்திரகிரணம் சீதளமாறி உஷ்ணீகரிக்கின்றது இவ்வதிசயமென்ன சொல்லென்றாள் மற்றொருத்திசகிரத்நமோகனதளாக்ஷராகிய கிருஷ்ண பகவானுடைய வேணுகானமதுரஸ்வரங்கள் என்றிரண்டுசெவித்வாரங்களிலும் நுழைந்தமாத்திரத்தில் மாதுகளிப்பையடைந்து என் சரீரமெங்குங்குளிர்ந்தது ஸ்ரீகிருஷ்ணவிரகதாப ஜ்வரம் மேலிட்டதானக்குச் சகிக்கக்கூடவில்லையே எனது சரீரபந்துக்களாகிய சகோதரர்கள் முதலிய ஜனங்களினுக்கினைக்கு அச்சந்தோற்றவில்லையே இதற்கென்ன செய்வேன் நீஎன்னஉபாயஞ்சொல்லுகின்றாயென்றாள் சிலஸ்திரீ சபலாக்ஷீ உன்னைப்போலவேநானும் வெகுகாலமாயநினைத்து மனமுருகி அச்சத்தைவிட்டு ஸ்ரீபகவதாதீனமாகத் துணிந்திருக்கின்றேன் என்னுடன்சொல்லவேண்டுவதில்லை உனக்குஸ்ரீகிருஷ்ணனிடத்தில் அன்பிருப்பது உண்மையானால் உன்பீதிலாஜ்ஜைப்படிக்கு மற்றஉனதுசகீசனங்கள் மெச்சும்படி என்னுடன் கூடவர வருவையாகில் ஸ்ரீநளினதளாக்ஷரிடத்தில் உன்னை முன்னம் சிநேஹஞ்செய்வித்துப்பின்பு நானும் அடைகின்றேனென்றாள் இந்தப்பிரகாரம்அநேகவிதங்களாக ஒருவற்கொருவ ருக்தேசித்து ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் ஆநந்தபரவசர்களாய்ச் சம்பிரம வார்த்தைகளைப் பேசிக்கொண்டு கோபிகாசனங்கள் யாவரும் பிருந்தாவனத்தில் ஸ்ரீகோவிந்தனை தரிசிக்க சமீபவனங்களினின்று அவருடைய விசித்ரலீலைமுதலிய குணங்களையும ஜகன்மோகனகாரதிவ்ய சௌந்தரியங்களையுங் கண்டு களித்து நேத்திரோற்சவமாச ஸேவித்துத்தங்கள்மனதில் கியானபூர்வகமாக நிமிஷ நிமிஷத்திற்குக் கடாக்ஷங்களைச் செய்து மோகபரவசர்களாய்க் தங்களுக்குள்ளொருவர்க்கொருவரைப்பார்த்துத் துதிக்கத் தொடங்கினார்கள்.

வாருங்கள்மிகவும் அன்புடையவர்களே ஸ்ரீபகவானிடத்தில் வைக்கப்பட்டமன துடையவர்களாகிய திவ்யசுந்தரவதிகளே, இப்பொழுது உங்கள்கண்கள் களிதீரப் பார்த்தீர்களா நமக்கெதிரிலிருக்கின்ற ஸ்ரீபுருஷோத்தமர் இந்தப்பிருந்தாவனத்தில் அளவிறந்த கோவினங்கள் சூழ்ந்துநிற்கக் கோபாலசனங்கள மகா சந்தோஷத்துடன் பரமாநந்தபரிதர்களாய்த் தங்கள்சர்[illegible] களையுஞ் சமர்ப்பித்துத்துதிக்க மகாமிருதுவாயுந்தளிர்ச்சிவாயுமிருக்கின்ற மாந்தளிர்களையும் இளந்தவனங்களையும் தாமரைஇதழ்களையும் நானாவிதப்பிமள விசித்ர புஷ்பங்களையுஞ் சேர்த்து மாலையாகவணிந்து திவ்யவஸ்திராபரணாலங்காரராய் வேணுகானங்களைச்செய்து பாதாரவிந்தங்களில் விளங்குகின்ற நூபுரசதங்கைகள் கலீல்கலீலென்று லயப்பிரகாரம்சப்திக்கச் செய்கின்ற விநோதங்களை யென்னென்றுதுதிக்கப் போகின்றோம் நாமென்னசெய்யலாமென்றார்கள்.

வாருங்கள்சகீசன சமூஹங்களே இந்தத்திவ்ய புருஷசிரோஷ்டருடைய ஸ்துதி நமதுவாக்கா லளவிடலாகுமோ நாமெல்லாருமொன்றாகச்சேர்ந்து இப்படிப்பட்ட ஸேவார்த்தங்களைக்கொள்ளப் பூர்வத்தில் ஸ்ரீபுருஷோ

த்தமரைக்குறித்துசெய்த த்போமௌன விரதமென்ஞேவறிகிலோம் அவற்றின்பவலித்திகளே பிரசன்னங்களாய்த்தோற்றுகின்ற இந்தத்திவ்ய மூர்த்தியின் சேவை நமதுநேத்திரங்களுக்கு விசேஷாம்மத்கரங்களாக நேரிட்டனவென்று சொல்லித் துதிசெய்தார்கள் இவ்விதங்களாகச் சிலதருணங்களில் துதித்து ஸ்ரீபகவானைச் சேவித்தமாத்திரத்தில் இகரவிஷயங்களை மறந்து ஸ்ரீகோவிந்தப்பிரானையே யுத்தேசித்துஸ்துதி பூர்வகமாகப் பின்னும்கானங்களைசெய்யத்தொடங்கினர்கள்.

வாராய் வனிதாரத்நமே ஸ்ரீகோபாலகிருஷ்ண சுவாமியின் காரணமில்லாதகடாட்சத்திற் குரியதாய் ஸ்ரீபகவதநுபவங்களையனுபவிக்க இந்தப் பிருந்தாவனத்தில் கேவலம் அசேதனஸ்வரூபத்தை அடைந்தது ஸ்வரங்களைத்தராநின்ற புள்ளாங்குழ லாகாரத்தை யடைந்து ஸ்ரீபகவானுடைய கரங்களையாஸ்ரயித்துச்சர்வேந்திரியத்தையுஞ் ஜயித்தமுமுட்சுவைப்போல ஸ்ரீபகவத் திருவதரங்களைச்சேர்ந்து திவ்யகானங்களி லுண்டான வேதாந்தார்த்த ரஸங்கள்தங்கிய திருப்பவளாதாரச்செல்வங்களைப் பானஞ்செய்துதிருப்தியில்லாமல் விந்தை விந்தையாக ஸப்தஸ்வரத்வாரங்களாகிய நேத்திரங்கள் மூடிமூடித்திறக்கிற இமைக்கொட்டுகின்றகண்களை பபோல அவருடையஸ்ரீமுகாரவிந்தத்துடன் கூடியிருந்தனுபவிப்பதற்கு எவ்விததவங்களைச் செய்ததோ வென்று ஸ்ரீபகவ துபயோகியான இக்குழலாகார மூங்கிலைக்குறித்து எனதுநெஞ்ச மதிசயிக்கின்றதே யென்றாள் ஒரு ஸ்திரீயானவள்.

வாராய் புண்ணியாங்கனையே மகாபுண்ய நதியாகிய யமுனையானது தன்பிரவாஹ ஜலத்துளிகளால் விருத்தியடைந்த மூங்கிற்புதறிலுண்டாகிய இப்புள்ளாங்குழலானது ஸ்ரீபகவானையாஸ்ரயித்துத் தன்னையும்சேதனுசேதனுத்மகமான சமஸ்தஜகங்களையும் இனிக்கச் செய்கின்ற சத்கீர்த்தியைக்கொண்டு தனதுதபோமகிமையினுல் சற்புத்திரனைப்பெற்று ஸ்திரியைப்போல மகாநந்தத்தையடைந்து தனதுஜலத்தி லிருக்கின்ற தாமரைப் புஷ்பங்களில் வாசஞ்செய்துமதுக்களையுண்டு ஆணும்பேடுமாய்க் கூடிமதுராவங்களைச் சப்திக்கின்ற ராஜஹம்சங்களினுடைய மதுரமானசாதங்களைபாட்டாகிறஅமுதங்களாகவும் அந்தப்பத்மங்களே மயிர்க்குச்செறிதலாகவும் தனதுவிசித்ரமான அலைகளேயபிநயங்காட்டுகின்ற கரங்களாகவும் விளங்க ஸ்ரீபகவானுகிய நடனமூர்த்தி செய்கின்றவேணுகானமதுரஸ்வரங்களுக்குச்சகாயியான பாடகியைப்போல விளங்குகின்றது இதைப்பார்த்தாயோ வென்றாள் ஒருகோபபதிவிரதாசிகாமணி

வாராய எனதன்புக்குரிய சகிமணியே ஸ்ரீமந்நாராயணனுடைய பக்தஜனங்களானவர்கள் ஸ்ரீஹரியின்பிரசன்னமான ஸேவைகிடைக்கப்பெற்றமாத்திரத்தில தாங்கள்மனதில் பிரமஹார்ந்தத்தைக்கொண்டு சரீரம் புளகி நேத்திரங்களின் வழியேஆநந்தபாஷ்பங்களை வருஷிக்கின்றதுபோல் இந்தப்பிருந்தாரண்ணிய க்ஷேத்திரங்களினுல் விருத்தியடைகின்றசமஸ்தமான விருட்சங்களும் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய வேணுகானசுவராமிர்தத்தினுல் தழைத்துப்புஷ்பித்து மதுக்களையும் மகரந்தங்களையும் வருஷிக்கின்ற சந்தோஷங்களைப் பாராயென்றாள் ஒருகோபிகாநங்கை.

வாராய் ஸ்ரீமாதவனிடத்தி லன்புள்ளவளே, இனிநானென்னசெய்வேன் எனது நெஞ்சமென்னை வஞ்சித்ததன்றேஎனது பூர்வஜன்மத்தில்நான் ஸ்ரீஹரியைக்குறித்து விரதோபவாஸங்களைச்செய்து அதனுல் மெய்ப்பித்து இச்சன்மத்தையே யடைந்தேனே அக்காலத்தில் இவ்வதிசயத்தை ஒருவருஞ்சொல்லாமற்போனர்களே அப்போதேஎனக்கிந்த ஆச்சர்யானுபவம் தெரிந்திருக்குமாகுல் நான் இந்தக்காளிந்தி நதிதீரத்தில் இம்மூங்கிலின் வம்சத்தில் றேணுஸ்வரூபமாகப் பிறந்து ஸ்ரீமாதவப்பிரானுடைய திவ்வியதிருப்பவளாதாரமிர்தபானத்தைச்செய்து எனது ஜன்மஸபலமாகும்படி திருப்தியடைந்து ஸ்ரீபகவதநுபவங்களைச் செயவேனேயென்று பெருமூச்செறிந்தாள்ஒருகோபாலகன்னிகா சேகரம்.

வார்ாய்ஸ்ரீபகவத் பாதமாகிறதாமரையினுடைய தேனையுண்டு மதித்துவண் டுருவமான விசித்ராங்கனையே இந்தக்காளிந்திநதிதீரத்தில் நந்தகோபருடையஅருந்தவப்புத்திரனுகிய ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய பவளம்போன்ற அதாரமிர்தபானஞ்செய்வதற்கு நான் அநுஷ்டிக்கத்தக்க விரதநோன்புகளை எனக்குப்போதிக்கமாட்டாயோவென்றாள் ஒருகோபகன்னிகா சிந்தாமணி,

வாராய் சுந்தரவதியானபெண்ணே இந்தப் பிருந்தாவனமே ஆகாயமாகவும் ஸ்ரீஜனார்த்தனருடையதிருமேனியே நீருண்டமேகமாகவும் இவருடையவேணுகானஸ்வரங்களே மேககர்ஜ்ஜனையாகவும் பாவித்துக்கொண்டு இவ்வனத்திலுள்ளமயில்னங்கள் சிறகுவிரித்து ஆநந்தநர்த்தனஞ்செய்தலைப்போலஸ்ரீபகவானுடையசிரோபாகத்தி லணிந்திருக்கின்ற மயிர்ப்பிஞ்சங்க ளசைகின்றன இந்தவதிசயங்களையே பாராயென்றாள் ஒருகோபதேஜோவதி,

வாராய் ஸ்ரீகிருஷ்ண கிரகாலங்கார சுந்தரரத்நமே, ஸ்வர்க்கலோகத்தில் தேவேந்திரனுடன்கூடிவாழ்ந்துசுகிக்கும்படியான சசிதேவியினுடைய கேளீக்ருகத்தைப் பார்க்கிலும் இந்தப் பிருந்தாவன மானது ஸ்ரீகிருஷ்ணபாதபத்மமுதலிய விசித்திர ரேகைகளால் அலங்கரிக்கப்பட்டு ஸ்ரீமகாலக்ஷ்மியானவள் அன்புகூறத் தகுந்த புண்ணியபூமியாயும்நமக்குஜன்மஸாபல்யமாயும்வி

ளக்குகின்றனைப்பார்த்தையோவென்று சொல்லி அதிசயித்தாள்ஒருகோபகன்னிகாம்சம்.

வாராய் புண்ணியாங்கனேயே ஜனார்த்தனனுடையஸ்வரூபாதிசயங்களை நேத்திரோற்ஸவங்களாகத் தங்கள்கண்கள் களிதீர ஸேவித்துக்களித்து ஆனந்தித்துஇவருடைய பிள்ளாங்குழலின்மாதுர்யஸ்வராமிர்தத்தைசெவிவ்ரயாகப்பானஞ்செய்து மதோன்மத்தர்களாய்மனோவியாபாரங்களைமறந்து ஆகாயத்தில்தங்கள் தங்கள்விமானங்களி லிருந்தபடி மனோலயமடைந்து திவ்வியவஸ்திரங்கள் தளர அளகபாரத்தினின்று புஷ்பங்கள் நழுவதங்கள்சர்வேந்திரியங்களையும் ஸ்ரீகிருஷ்ணப்ரீதிசெய்து பரமயோகீந்திரரைப்போலவிளங்குகின்றதேவதாஸ்திரீகணங்களைப் பாராயென்றாள் ஒருகோபபத்மகளேத்ரீ.

வாராய்சுகுணவதி இந்தப்பிருந்தாரணியத்தில்விருத்தியடைந்துகொண்டிருக்கின்ற சமஸ்தமிருகங்களும்ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய வேணுகானத்தைசெவியாரக்கேட்டுச் சரீரங்கள்புளகித் தங்கள்ஜாதிக்குரிய ஆகாரங்கொள்ளுதலையும்நடக்கைகளையும் ஒழிந்துவால்களைஎடுத்துக்கொண்டு காதுகளைநீட்டி மருண்டுசெளமியபார்வைகளையடைந்து ஸ்ரீபுருஷோத்தமனைத் தரிசித்து பரம யோகீந்திரர்களைப் போல விளங்குகின்றதைப் பாராயென்றாள் ஒரு கோபாஞ்சனலோகினி.

வாராய் புண்ணியவதியே இந்தக்கன்றுகளானதுபசிதாகத்துடன் தங்கள் தங்கள்தாய்களாகிய பசுக்கூட்டங்களை அடைந்துப் பால் மடிகளைப்பிடித்துஉண்கிறசமயத்தில்தங்கள்பரிபாலகவிபுவாகியஸ்ரீமாதவப்பெருமானுடைய புள்ளாங்குழலின் சுவரமாகிற அமிருததாரைகள் செவிவழியாகவந்து நுழைந்து தங்கள் பசிதாஹங்களைத்தணித்து திருப்தியை யடையும்படிச் செய்தபடியினலேபாலைக்கிரஹிக்கமுட்டியுண்ணுமல் சித்திரங்களிலெழுதிய பிரதமைகளைப்போல ஸ்ரீகிருஷ்ணபகவானுடையஸ்வரூபத்தில் தங்கள் பார்வைகளைச்சமர்ப்பித்து ஜன்மஸாபல்யமான மேன்மையையடைந்து அந்தந்தஸ்தானங்களில் அப்படியப்படியே மனோலயமாக ஆநந்தபாஷ்பங்களை வருஷித்துக்கொண்டுநிற்கின்றனஅவைகளைப்பாருங்கென்றாள் ஒருகோபவனிதாசித்ரம்.

வாராய் திவ்வியசுந்தர ஸ்வரூபபத்மாக்ஷீ ஸ்ரீகோபாலமூர்த்தியினுடைய பரிபாலத்தினால் விருத்தியடைந்திருக்கின்ற பசுவின்சமூஹங்கள் ஸ்ரீகிருஷ்ணபகவான்முரளிகான ரஸாமிர்தங்களைக் காதுகளின்சந்தினால்பானஞ்செய்து திருப்தியடைந்து வால்களைநெறித்து முகங்களைஉயரத்தூக்கி சரீரரோம புளகாங்கிதத்துடன் தங்கள் இருதயாரவிந்தங்களில் ஸ்ரீகிருஷ்ணஸ்வரூபத்தை நிறுத்தி மேய்ச்சலைவிட்டு ஆநந்தபாஷ்பங்களைச் சொரிந்துகொண்டு மெய்மறந்துநேத்திரோற்ஸவமாகத் தரிசித்துக்கொண்டிருக்கின்றன அவைகளைநோக்குதியென்றாளஒருகோப தேஜஸ்வியானவள்.

வாராய ஸ்ரீகிருஷ்ணனை மோகிக்கச்செல்கின்றமோகனங்கீ இந்த அரணியங்களிலுள்ளமகாவிருக்ஷங்களின் கிளைநுனிகள் வாசஞ்செய்துக்கொண் டிருக்கின்றன நானாவிதஜாதிபேத சுகுமார பக்ஷிகளின் சமூஹங்களானவைகமது இருதயேஸ்வரனுடையபுள்ளாங்குழலின்சப்தாமிர்தங்களைக்காதுகளின் சந்துகளினால் கிரகித்துசர்வவியவகாரங்களொழிந்துமகாமௌனீந்திரர்களைப்போலபகவத்ஸ்வரூபத்தை இருதய கமலத்தினிறுத்திச்சலிக்காமல்தங்கள்நேத்திரங்களைமூடிமூடிச் சிறுபார்வையாகப்பார்த்தநுபவித்து மனோலயமடைந்து விளங்குகின்றன அவைகளைப் பாராயென்றாள்ஒருகோபஸௌகுமாரி.

வாராய் சுகுணவதியான வனிதாரத்நமே இந்த ஆகாயவீதிகளில் சஞ்சரிக்கின்ற மேகசமூஹங்களியாவும்ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய வேணுகானகம்பீரமதுரஸ்வரங்களைக்கேட்டுத் திக்குவிதிக்குகளெங்கும் பரிமளிக்கும்படியான புஷ்பமாரிகளைவருஷித்துத்தங்கள் சரீரங்களாகியஸ்வரூபங்களைக்கொண்டு ஸ்ரீபகவானுக்குச் சூரியகிரணங்களாய்நேரிடும்சிரமங்களைத் தோற்றவொட்டாமல்மகாராஜோபசாரமாக வெண்பட்டுக் குடைகளைப்பிடித்து உபசரிக்கின்றவைகளைப்போல ஆகாய மார்க்கத்திற்சூழ்ந்து நிழலைக்கொடுக்கின்றன இந்த ஆச்சரியங்களைப்பார்த்துக் கண்களிப்பாயாக வென்றாள் ஒரு கோபசுகுணவதி.

வாராய்கோபசுகுமாரவதியான புண்ணியாங்கனேயே இந்தப்பிருந்தாவனத்தில் விருத்தியடைந்து வாசஞ்செய்துக்கொண்டிருக்கின்றன வேடஸ்திரீகள் நார்களினால் பின்னிய வஸ்திரங்களையுடுத்தித் தளிர்களையும் சிறகுகளையும்அவயவங்கள் மறையச்சாத்திக்கொண்டு இவ்வனமார்க்கங்களில் வேணுகானங்களைச்செய்துசஞ்சரிக்கின்றஇந்த ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய ஸ்ரீபாதாரவிந்தங்களில் அலங்கிருதார்த்தமாய் தரித்திருக்கப்பட்டிருந்துவனத்திலங்குள்ள புல்லு சொடிபுதறுகளில் ஒட்டிக்கொண்டதாகிய சந்தனபுஷ்ப குங்குமாங்கிதவாசனதிரவியங்கள் கலந்தகலவைச்சேற்றை எடுத்துத்தங்கள ஸ்தனபாரங்களிலும் நெற்றிகளிலும் அணிந்து அந்தாரண்யங்களிலிருக்கின்ற மகாமதுரமான கந்தமூலபலாதிகளைச்சம்பாதித்து நானாவித திவ்யபரிமள வனபுஷ்பங்களைச் சரஞ்சரமாகச்சேர்த்துத்தங்கள் கரங்களிலேந்திக்கொண்டு இந்தத்திவ்விய புருஷ சிரேஷ்டனைப்பிரியாமல்முரளீகானரஸாமிர்தங்களைச்செவிகுளிரப்பானஞ்செயது திருப்தியடைந்த மனமுடையவர்களாய்மெய்மறந்துகுசபாரங்களினால் இடைதுவளும்படி நடந்துவந்

துஇந்தத்திவ்ய மூர்த்திக்கு ஒவ்வொருத்தியாகஅந்தக்க
னிகளையும் புஷ்பசரங்களையுஞ்சமர்ப்பித்து பிரம்ஹா
னந்தபரிதர்களாய்ச்சந்தோஷிக்கின்றார்கள்பார்த்தாயோ
வென்றாள் ஒரு கோபகுல சுகவசனி

வாராய் சர்வாலங்காரசோபிதையான சௌந்தரியவ
தியே ஸ்ரீபலராமசஹிதராகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினு
டையமுரளிகான திவ்யாமிர்த வருஷதாரைகளினால்இ
ந்தபிருந்தாவனங்களிலுள்ள கோவர்த்தனாதி மகாபர்வ
தங்களுங்கடினமாகிய பாறைகளுந் தண்ணீர்போலுரு
கிக்கரைந்தனவன விருக்ஷங்க ளியாவும் களிர்த்துத் த
ழைத்துப்புஷ்பித்தன சமஸ்தமான வனஜன சமூஹங்க
ளும்மிகவுஞ்சந்தோஷாதிசயங்களை யடைந்தார்கள் இ
ந்தத்திவ்ய புருஷருடைய ஸ்ரீசரணாரவிந்தஸ்பரிசசந்ஸ
ஹவாசங்களினால் இந்த அரண்யபூமிபாகங்கள் ஸ்ரீஹரி
தாசர்களாகிய மகாபாகவதர்களைபோல மகா பரிசுத்தங்
களையடைந்தன ஸ்ரீபகவானை அடுத்திருக்கின்ற கோவின
ங்களுக்கு இளம்புல்லுகளைக்கொடுத்துச் சந்தோஷிப்பி
த்தனமகாநதிகளியாவும் மிகவுந் தெளிந்து பிரவாகிக்கி
ன்றஜலங்களினால் தாகங்கள்தீர்த்துத் திருப்தியடையச்
செய்தன வனவிருக்ஷங்களியாவும் புளகிப் பலபுஷ்பவ
ர்க்கங்களைக்கொண்டு தங்கள் சாகைகளாகிற உத்தமகர
ங்களால் ஸ்ரீகிருஷ்ண பிரீத்யர்த்தமானகாணிக்கைகளை
ச்சமர்ப்பித்தன இவ்வனங்களும் வனமார்க்கங்களும்பர்
வதங்களும் குகைகளும் கிரிசிகரபுரோ வீதிகளும் சம
ஸ்தமானவிருக்ஷலதாகுல்மாதிகளும் இவ்வனபூமிகளி
ல்வாசஞ்செய்கின்ற சேதனசேதனத்மகமானமிருகபட்
சிசமூகங்களும் புளகித்தனவாய்ஜன்மபாவங்களையடை
ந்துரஜஸ்தமோகுணங்கலந்த ஜாதீன வரங்களற்றுப்பரிசு
த்தமனமுடைய முமுட்சுக்களைப்போலபிரம்மானந்தப
ரவசங்கொண்டு விளங்குகின்றன. இந்த அதிசயங்களை
ப்பாராயென்றாள் ஒரு கோப கன்னிகாசூடாமணி.

வாராய் பாரதகுலோத்தமனாகிய பரீக்ஷின்மஹாராஜ
னே இவ்விதங்களாக இந்த மனோரம்மிய வதிகளாகிய
கோபகன்யா மணிகளானவர்கள் பிருந்தாவன மார்க்கங
களில் சஞ்சரித்துக்கொண்டிருககின்ற ஸ்ரீபலராமசஹித
ராகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய அதிமானுஷசே
ஷ்டித லீலாகுணாதி சயங்களை ஒருவர்க்கொருவர் பிரம்
மானந்தபரவசர்களாய் வர்ணித்துக்கொண்டு சர்வப்ரப
ஞ்சங்களையும்ஸ்ரீகிருஷ்ணமயமாகவினைத்துபோலாயமா
னமனமுடையவர்களாய்மனோலயங்களையடைந்தார்கள்

## உஉ - வது அத்தியாயம்.

கட்டளைக்கலிப்பா,

பஞ்சலட்சங்குடிப்பெண்களாயினோர்
பக்தவற்சலன் தங்கள்மணாளனாய்
மிஞ்சிடும்படிச்செய்யவேண்டுமென
மேன்மையாங்காத்தியாயனியைக்குறித்
தெஞ்சலில்லாவிரதம்மனுஷ்டிக்க
என்னரிபக்தர்க்குச்சாட்சியாம்படி
அஞ்சனவண்ணனும்மவரிஷ்டம்போல்
அளித்துக்காத்திரட்சித்ததறைகுவாம்

ஸ்ரீசர்வஸ்மார்த்பரராகிய ஸ்ரீகிருஷ்ண பகவானையவ
ர்தம்மை மணாளனாக வரிக்கும்பொருட்டு நந்தவ்ரஜத்தி
லுள்ள பஞ்சலட்சங் குடிப்பெண்களாகியகோபகன்யார
த்நங்கள் மரியாதாவாதனந்தரமாய் ஸ்ரீகாத்யாயனியை
க்குறித்து விரதமநுஷ்டிக்கதற்கு பிரஸன்னராய் அந்தக்
கன்னியாமணிகளுடைய சித்தப்பரிபாகங்கள் ஸ்ரீஹரிப
க்தர்களுக்குச் சாட்சியாகும்படி வஸ்திராபஹாரஞ்செ
ய்து சமதாதிருபையால் மங்கலக்கூறையை யருளியது
போலவஸ்திரங்களும் மனோபீஷ்ட வரங்களுங்கொடுத்
ததையும் அவ்வனத்தில்பிராம்ஹண சமூகங்களால்செ
ய்யப்படுகின்ற யாகசாலைக்குக் கோபால குமாரர்களைய
னுப்புவித்ததையுஞ் சொல்லுகின்றது.

வாராய் உத்தமகீர்த்தியான சீல மகாராஜனே- இவ்வித
ங்களாகவருஷாகால சரத்காலங்களில் ஸ்ரீபகவானவர்
லீலாவினோதங்களாய் வேணுகானங்களைச்செய்துக்கொ
ண்டிருக்கின்றசமயத்தில் சூரிய பகவான் தனுராசியிற்பி
ரவேசித்தான் ஹேமந்தருதுவாகிய பனிக்காலத்தில்வா
டைக்காற்றுகுளிர்ந்து வீசியது ஆகாயவீதிகளில்மேக
ங்கள் சஞ்சரித்துக்கொண்டிருந்ததுபகல் அஹசுகுறை
ந்தது சூர்யபகவானுடைய கிரணங்களுங்குளிர்ந்துகாட்
டியது இராக்காலங்களில் அகசு அதிகரித்து சந்திரகிர
ணங்கள் அதிசீலமாகத்தோன்றின இவ்வுலகத்திலிருக்
கின்றஅக்நித்ரயங்களும் மிகவுங்குளிர்ச்சியுள்ள இச்சீ
தளகாலத்திற்குப்பயந்து ஸ்ரீசம்புவாகிய ஸ்ரீருத்ரபகவா
னுடையபாலநேத்திரத்திலொன்றும் இப்பூமியைச்சூழ்
ந்துக்கொண்டிருக்கின்ற மகா சமுத்திரத்திலொன்றும்
இவ்வுலகத்தில் விருக்கியடைந்திருக்கின்ற சகலமனித
மாளிகைகளிலொன்றும் விளங்கினவேயல்லது சர்வவி
யாபகமாய்த்தமது ஜ்வாலாமாலைகளைப் பிரகாசிப்பிக்கச்
சக்தியற்றதுபோலத்தோன்றின இப்படிப்பட்ட ஹேமந்
தருதுகாலத்தில் கோகுலத்திலுள்ள ஆயர்களியாவரும்
தங்கள்வம்சங்களும் கோக்களும்க்ஷேமத்தையடையும்
பொருட்டுத் தங்களுடைய குலதர்மப்படி அவரவர்கள்
வீட்டிலிருக்கின்ற கன்னியாஸ்திரீகளை நியமித்து அவ
ர்களைக்கொண்டுதங்கள் குலதெய்வமாக விளங்குகின்ற
கௌரீதேவியைக்குறித்து விரதங்களை யநுஷ்டிப்பிக்கி
ன்றது வழககமானபடியால் அவ்வருஷத்து அந்தஹேம
ந்தருதுவிலும்மாதங்களுக்குள் மகோத்தம மாதமாகிய
தநுர்மாதத்தில் முதற்றேதி முதல்பத்துதேதிவரைக்கு
விரதமநுஷ்டிக்கும்படியாய் ஸ்ரீநந்தகோபர்உபாநந்தர்மு
தலியசமஸ்தமான ஆயர்களும் இந்த ஸ்ரீஜனங்களுக்கு
நியமித்தார்கள்.

அப்போது அந்தக்கோபகன்னியாஸ்திரீகள்யாவரும் ஸ்ரீபகவானிடத்தில் பக்திமனமுடையவர்களாய் ஸ்ரீகிருஷ்ணபகவானைத் தங்களுக்கு மணாளனாக வரிக்கவேணுமென்றுவெகுகாலமாய் மனதில் தியானித்துக்கொண்டிருக்கின்றவர்களானபடியால் நல்லசமயம் வாய்த்ததல்லவோவென்று சந்தோஷித்தவர்களாகி ஸ்ரீகிருஷ்ணகுணகீர்த்தனங்களைச் செய்துக்கொண்டு காளிந்தீநதிதீரத்திற்சேர்ந்து தீர்த்தமாடிச் சுசிர்ப்பூதைகளாய் அந்த நதிக்கரையில்திவ்வியமான ஈரமுள்ள மணலைக்கூட்டி ஸ்ரீபகவதிதேவிஸ்வரூபத்தை நிர்மித்து நானாவித திவ்வியாலங்காரங்களையும் மஞ்சட்பொடிமுதலியவிசித்திரகுங்குமங்களையும் மிகவும் பரிமளத்தைத் தராநின்ற புஷ்பங்கள்கூதங்களையும் தூபதீபங்களையும் நானாவிதமாதுர்ய பக்ஷ்ய போஜ்யாதி பலகாரவர்க்கங்களையும், கந்தமூல கனிமுதலிய அரிசிகளையும் ஷோடசோபகாரங்களினால் சமர்ப்பித்து மிகுந்தபக்தியுடன் கைகூப்பிக்கொண்டெதிரில்நின்று தனித்தனியே பகவதீகாத்யாயனீதேவீ மகாமாயா-மகாயோகினீ அதீசுவரீ கௌரீ பவானீ மகாதேவதேவி ஸ்ரீபுருஷோத்தமரானவர் எங்களுக்குமணவாளராக லபித்தமாத்திரத்தில் பால்-தயிர்-வெண்ணெய்மஞ்சட்பொடி சுகந்த தூளனங்கள்மஞ்சள்-நீர்-இவை முதலிய மங்கலதிரவியங்களால் வசந்தங்களாட்டிநிகிலலோகசுபகரமாகிய நானாவித மங்கலவாத்தியங்களுடன் ஷோடசோபசாரங்களைசெய்து சேவிக்கின்றோமென்றுபிரார்த்தனைசெய்து சங்கேதஞ்செய்துக்கொண்டு உபவாசர்களாய் இந்தத்தனுர்மாத முப்பதுநாளும்கிரமகிரமமாய் பஞ்சவுஷக்காலத்திற்குமுன்வந்து அவரவர்கள் முற்றத்தில் அவர்கள் நாமதேயங்களைச்சொல்லி எழுப்பியழைத்துக்கொண்டவர்களாய் யாவரும்தங்கள்குசபாரங்களசைந்தாட இடைகள்துவள மத்தகஜங்களைப்போலும்ராஜஹம்ஸங்களைப்போலும் ஒய்யார நடைநடந்து ஸ்ரீபத்மதளாக்ஷனாகி விளங்குகின்ற ஸ்ரீகிருஷ்ணநாமசங்கீதங்களான சதிர்த்தனங்களைப் பாடிக்கொண்டு சந்தோஷமனமுடையவர்களாய் ஒருவர்க்கொருவர் கைகளைக்கோர்த்துக்கொண்டு யமுனாநதிதீரத்திற்குவந்து மிகவும்பக்திபூர்வமாக இந்தமுப்பதுநாளும் ஸ்ரீபத்திரகாளியைப் பூஜிந்துத் தங்கள்மாளிகையிற் சேர்ந்துஹவிசுகளைப் புசித்துக்கொண்டிருந்தார்கள இவ்விதங்களாக முப்பதுநாளும் விரதயாத்திரையாகச் செல்லும்போது கடைசிநாள் முன்போலவே ஜலஜாக்ஷிகளாகிய கோபகன்னியாஸ்திரீகள் யாவரும் ஸ்ரீகிருஷ்ணகுண கீர்த்தனங்களைச்செய்துக்கொண்டு புன்னகையுடன் கூடினவர்களாய்நதிதீர சமீபத்திற்குவந்துபரிசுத்தமான ஏகாந்தபிரதேசத்தில் தங்கள்விலையுயர்ந்த விசித்திர வஸ்திரங்களைக்களைந்து அடையாளமாக வைத்து நிர்ப்பயர்களாய் அம்மகாநதியிலிறங்கி ஸ்ரீஅரிஹோஹரீயென்று ஸ்ரீபகவன்னாமங்களை தியானித்துக்கொண்டு ஸ்நானங்களைச்செய்து அந்த ஜலமத்தியில் சரஸானந்தத்துடன் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய லீலாகுணவைபவங்களைப்பாடி அச்சலத்தைவாரிவாரி யொருவர்க்கொருவர்ஜலவசந்தங்களாடிஆநந்தங்களை யடைந்தவர்களாய் இச்சகத்திலுள்ளவர்கள் அடைதற்கரிதாகிய பகவத் குணாதிசயங்களையனுபவித்துக்கொண்டிருந்தார்கள் அந்தச்சமயத்தில்சர்வலோகாராட்டியராய் விளங்குகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானானவர்கோபகன்யாஸ்திரீகள் தீர்த்தமாடுகின்ற வைபவங்களை அறிந்து தாம் வெகுதூரத்திலிருந்து ஏதோஒருகார்யார்த்தமாய் வருகின்றவரைப்போலத் தன்னுடன் கூடவந்தவர்களை கண்ஜாடைகளைக்காட்டிஒருபிரதேசத்தில் சந்தடிசெய்யாமலிருக்கச்செய்துதாம் ஒருத்தராகப் புறப்பட்டுசந்தடிசெய்யாமல்மகா மௌனத்துடன் ஆந்தரூலித்துமெதுவாய்உபகாரமாகமறைந்துவந்து தாமே களைந்துவைத்தவரைப்போலச் சர்வத்ரர்களுடையவஸ்திரங்களையும்கிரகித்துக்கொண்டு உடனே களைத்தமதயானையைப்போலக் கம்பீரமாகநடந்துவிட புருஷனைப்போல அந்தவஸ்திரங்களை யெல்லாம் கைகளில் சேர்த்துப்பிடித்துக்கொண்டு தமதுலீலைக்கநுகுணமாய்ஒத்தபருவங்களையுடையஇந்தக்கோபகன்யாகுமரிகளைப்பார்த்து எகத்தாளிகளாகியவார்த்தைகளைச்சொல்லிக்கொண்டு அந்நதிக்கரையில் தழைந்துபுஷ்பித்து விருத்தியடைந்திருக்கின்ற ஒருகடப்பை விருட்சத்தின்மீதுதாவிஏறி அதன்மீதுஇவ்வஸ்திரங்களைவைத்துத் தாம் அவ்விருட்சத்தின்மேல்நின்று அதன் பூர்வகர்ம பாபராசிகளைநீக்கிப் பரிசுத்தஞ்செய்து மோக்ஷத்திற்குக் காரணமாகும்படிக் கிருபைசெய்தார் அத்தருணத்தில்அந்தச்சுந்தரவதிகள் கழுத்தளவு ஜலத்திலிருந்து ஸ்ரீபகவானுடன்சம்வாதமாகச் சிலசுகுமாரவசனங்களை வசனிக்கின்றார்கள்.

ஸ்ரீகோபகன்னியா சமூஹங்களினுடையசம்வாதம்.

வாரீர் ஸ்ரீமுத்துகிருஷ்ண பகவானே, நீரிந்த நந்தவிரஜத்திலவதரித்த எங்கள் மனதையபகரித்ததுமன்றி எங்களுடைய மர்மாவயமான தனங்களையும்அபகரிக்கின்றதுதர்மமோ ஈதென்ன ஆச்சரியம்நாங்கள்களைந்துவைத்த விழுப்புவஸ்திரங்களை ஸ்பரிசிக்க அவற்றைச்சுமந்துபோகக்கூடுமோ உமது கிருபையினால் எங்களை யடிமைகொண்டு எங்கள் இஷ்டங்களைத் தீர்க்கும்படியான அம்மான்மகனாகிய மைத்துனனாகவே யிருக்கின்றீர் ஆகிலும் எங்கள்விழுப்பாகிய வஸ்திரங்களை நீர்தொடத்தகாது இப்போது எங்களை மன்னித்து கிருபையாகக் கொடுத்துஎங்கள்மானதனங்களைநிலைநிறுத்திரட்சிக்கக் கடவீரென்று பிரார்த்தித்தார்கள்.

சிலர் வாரீர் ஸ்ரீகோபாலகிருஷ்ணனே அன்யர்கள் நம்மிடவர்கள் என்பதில்லாத அபேதகுணங்களைவகித்து சர்வத்திரர்களிடத்திலும முறைதப்பினவரோ நன்றாய் விளங்கிற்றே இச்செய்கைசர்வசம்பத்கர நித்யைஸ்வர்ய பிரதனாய்விளங்கவோ சமஸ்தமான சேதனா சேதனங்களுக்கும் ஆகாரபூதையான இப்பூமிதேவியையமஹார்ணவத்தில்மூழ்கிக் கரைந்துபோகாமல்நிலைநிறுத்தவோமாணிடசிம்மனாய்ப் பிரகாசித்துச் சாவாசுரசங்காரங்கள்செய்துபக்தபராதீனராய்க் காட்டி மறைக்கவோ மகாபலிச்சக்கிரவர்த்தியினிடத்தில் யாசிக்கின்றவனைப்போல மாயாச்சிறுகுட்டனாய்வந்து அவனுடைய ஐசுவரியகர்வங்களையபகரித்து ஸ்ரீதிரிவிக்கிரமராய்ப் பிரகாசித்துக்கீர்த்திவகிக்கவோ சகல அரசர்களுக்கும் பிரபுவாய் ராஜராஜேஸ்வரராய்ச் சகலசத்ருசங்காரஞ்செய்து நிகில ஜனங்களையுமிரட்சித்து உத்தரிக்கவோ சர்வகுருஜனங்களுக்கும் குருசிகாமணியாகியமஹாமஹனியகுணாதிசயங்களைவகிக்கவோ அல்லது மிகவும்பேதைகளாகியஎங்களையொத்த ஸ்திரீஜனங்களுக்கு வசியராய்நாங்களிட்டவழக்குக்குரியராய் எங்களுக்குப் பணிசெய்யவோ வறிகின்றிலோம் இவ்வளவுபெருமை வகித்ததுபோதும் எங்களுக்குக்கிருபைசெய்து எங்கள் கலைகளைத் தருவீரென்று வேண்டிக்கொண்டார்கள்.

மேலும் சிலர்வாராய் பக்தவத்ஸலனாகிய ஸ்ரீ கிருஷ்ணாநன்றாயிருந்தது நீசுலபனாய் முன்னமே எங்கள்மனதையபகரித்தாய் கிரமக் கிரமமாய் எங்கள் மர்மாவயவமானதனங்களையும் சுபாவதர்மங்களாகிய நாணங்களையும்வஸ்திரங்களையும் அபகரித்ததுமன்றி எங்கள்சர்வேந்திரியங்களையும் உனக்கு அடிமையாகவெழுதிக்கொண்டாய்பின்பு இன்னமுமென்னசெய்வாயோவென்றார்கள்.

வாராய் ஸ்ரீபத்மதளாக்ஷனாகிய எங்கள் பிரபுவே நீஉனதுரஜோகுணப் பிரபாவங்களினால் இந்தச்சர்வப்பிரபஞ்சங்களிலும் மிகவும் ஆச்சரியங்களாகிய விசித்திர சிருஷ்டிமுதலிய செய்கைகளையாசரிக்கிறவனென்று உன்னுடைய வாக்விஜ்ரும்பண கௌரவத்தால் அறிந்தேயிருக்கின்றோம் உனதுசத்வகுணத்தினால் சகலபுவனங்களையும் மங்கலகரங்களாக ரக்ஷிப்பித்துச் சதுர்வித புருஷார்த்தங்களைக் கொடுக்கத்தக்க ஐசுவரியமுடையவனாகியும் அன்னியர்களால் ஜயிக்க வொண்ணாதவனாகியுமவிளங்குகின்ற உன்னை நாங்கள்நினைத்துத் தியானித்துக்கொண்டேயிருக்கின்றோம் உனது தமோகுண விசேஷத்தினால் பயங்கரமான சக்திகளைவகித்து லோகாரிஷ்டநிவாரணங்களைச்செய்து எப்போதும்போலமூன்றுகுணங்களையும் ஒருமிக்க அடைந்து மிகவுஞ் சோதிர்மயவிக்ரஹனாகியும் ஏகனாகியும் விளங்குகின்றாயென்றுநாங்கள்கேள்விப்பட்டு உன்னையே பர்த்தாவாகச் சிந்தித்துக்கொண்டிருக்கின்றோம் இப்படிப்பட்ட நீமகாமாயாவியாய்விசித்திரலீலாதிசயங்களை யநுஷ்டித்துக்கொண்டு பலமூர்த்தியாய் நானாவித ஜாடைகளைவகித்துஒருவராலும்இப்படிப்பட்ட தன்மையையுடையவனென்றறிதற்கரியவனாகி சற்றுநேரமும் ஒழிவில்லாமல்வியாபித்துச் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்ற உன்னுடையவல்லமைக்குஎங்கள்மனதைச சோதிப்பது தக்கதாகுமோ தயவுசெய்து உன்கடாட்சத்திற்குப்பாத்திரைகளாகிய எங்கள் வஸ்திரங்களைக்கொடுத்தருள்வாய்விபுவேயென்றார்கள்.

சிலர் வாராய்ராசீவதளாக்ஷனே சமஸ்தமான பிரபஞ்சங்களுக்குப் பிரபுவாகியும் உனக்குமேலொரு விபுவில்லாதவனாகியும் ஸமானாதிக்ர ஹிதனாகியும் சர்வோத்கிருஷ்டகுணங்களையுடைய ராஜராஜேசுவர ராஜசிகாமணியாகியும்விளங்குகின்றநீ அபலைகளாகியஎங்கள் வஸ்திரங்களை வாரி யெடுக்கத் தகுமோ, இனியாவது கிருபைசெய்து கொடுத்துவிடுவாய்நாங்களினி யெந்தப்பிரபுவுக்குத் தெரிவித்துச்சலிகை சொல்லிக்கொள்ளப்போகின்றோம் எங்களுக்கும்சமஸ்த பிரபஞ்சங்களுக்கும்பிரபுநீயன்றோவென்றார்கள்.

இவ்விதங்களாக இந்தக் கோபகன்னிகைகள்பிரார்த்தித்தமாத்திரத்தில் மகாமாயா சாதுர்யநடனமூர்த்தியாகியஸ்ரீபகவானானவர் புன்னகையுடன் அந்தக் கன்யாஸ்திரீகளைப் பார்த்துக்கம்பீரமாக ஒருவார்த்தைசொல்லுகின்றார்.

ஸ்ரீபகவத்வாக்கியம்.

வாருங்கள் கோபகன்யா மணிகளே, நீங்களெல்லீரும்வெகுகாலமாயொன்றாகச்சேர்ந்து ஒரேமனதுடையவர்களாய் உங்கள்முன்னோர்களுக்குத் தெரிவியாமல் மனதிலொன்றும் வாக்கிலொன்றுமாய் விரதங்களை யநுஷ்டிக்கின்றீர்கள் உங்களைப்போல விரதமனுஷ்டிப்பவர்கள் எந்தலோகத்திலுங்காணக் கிடைக்கமாட்டார்கள்உங்களுடைய மோசகரமான சித்தவிர்த்தியைக்கொண்டு என்னைத் தூறுசெய்வது என்னசாதுர்யமோ ஆம்நீங்கள்நன்றாய்த்தெரிந்தவர்களே தயவுசெய்து ஜலத்தைவிட்டுவெளியில்வந்து உங்களவஸ்திரங்களை வாங்கிக்கொள்ளுங்களென்றார்.

இப்படிச்சொல்லிய ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய வசனங்களைக்கேட்டமாத்திரத்தில் யமுனாநதி சலத்துடன் வேறுபாடுதெரியாமல் கலந்திருக்கின்ற கறுத்த அளகபாரத்தைப்படைத்த இந்தக் கோபகன்யா சிரோமணிகள் ஒருவர்க்கொருவர் முகாரவிந்தங்களைப்பார்த்து அநந்ததாமரைப் புஷ்பங்களில் அநந்த மூன்றாம்பிறைகள் ஏக காலத்திற் காணப்பட்டாற்போலப்பு

ன்னை செய்துக்கொண்டு இவர் சொல்லுகின்ற மர்மவசனங்களைக் குறித்து வெட்கியும் மஹத்தரமாகிய குளிருக்கஞ்சியும் கழுத்தளவுசலத்திலிருந்துமேடாரைய மானமனதுடையவர்களாய்ச் சிலமதுரமானவார்த்தைகளை வசனிக்கின்றார்கள்.

கோபஸ்திரீகள் வாக்கியம்.

வாராய்ஸ்ரீகிருஷ்ணா நீபதிவிருந்து நாங்கள்சலமாடுகின்றசமயம்பார்த்துஇவ்விடத்திற்கு வந்துலாகவத்துடன் எங்கள்விழுப்புக் கலைகளை நீயேன் தொட்டெடுத்தாய் உனக்கிவ்வளவு எளிதான செய்கையேது எங்கள் நிமித்தார்த்தமாய்த் தான்கற்றுக்கொண்டாயோ, ஆகிலும்நீயறியாத மர்மதர்மங்களுண்டோ நீதர்மக்கியனாயிருந்து இந்தஅதர்மமாகிய விதியையாசரித்தலாகுமோவென்றார்கள் இதுவுமன்றி ஆகிருஷ்ணா எந்தவுலகத்திலும் ஸ்திரீசனங்கள் ஜலமாடும்போது அவ்விடத்திற்கு உத்தமபுருஷர்கள் வரவேமாட்டார்கள் வேறொருவனையும் ஒப்புச்சொல்லப்படாத உன்னைபொத்த வஞ்சகனான சுவாமிநேரிட்டு வந்தபோதிலும் கிருபையில்லாமல் இப்படிப்பட்ட அபஹாஸ்யகாரியஞ் செய்யவேமாட்டார்கள் இப்படிப்பட்டசாதுர்யங்கள் சமஸ்தப்பிரபஞ்சங்களிலும் முன்னம் நடந்ததென்று கேட்டதில்லை இப்போதும் ஒருவரும்ஆதரிக்கமாட்டார்கள் இந்தநிகழ்காலத்திலும் இச்செய்கைகளை நீயொருவன் மாத்திரந்துணிந்து செய்தாயேயல்லாமல் மற்றொருவரு மாசரிக்கவேமாட்டார்கள் ஆகையால்எங்கள்வெகுவேஉனக்குடிகுடியாட்செய்து அடிமைசெய்கின்றோம் சந்தேகமில்லை இப்பொழுது ஸ்ரீயமுனாநதிப்ரவாகத்தினின்று பிரமாணமாகச் சொல்லுகின்றோம் உனது கிருபாபிமான வஸ்திரங்களை யெங்களுக்குக் கொடுத்தருள்வாயென்று துதித்துமேலுஞ் சொல்லுகின்றார்கள்.

வாராய்எங்கள் ஸநாதனாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானே இன்றுமுதல்உனது ஆக்கினையின்படிஅடிமைக்கடிமைகளாய் அடிமைசெய்து எங்களுடைய சர்வேந்திரியங்களையும் உனக்கேகாணிக்கையாகச் சமர்ப்பித்து உனது ஆக்கினையைச் சிரஸாவகித்து அநுஷ்டித்துக்கொண்டு வருகின்றோம் ஆகையால்எங்களைக்கடாட்சித்துஉனது திவ்யாபிமான வஸ்திரங்களைத்தந்து ரட்சிப்பாயென்று பிரார்த்தித்தார்கள் தங்கள்ஸ்தனபாரங்களிலணிந்தசெஞ்சந்தனக்குழம்புகளோடு கலக்கப்பட்டுச்சோனையாற்றுக்கொப்பாய் விளங்குகின்றயமுனாநதியி லிருந்துகொண்டு இப்படி நானாவிதங்களாகப் பிரார்த்திக்கின்றஇவர்களைச் சம்பூரணமாகக் கடாட்சித்து ஸ்ரீபாலகோபால சக்கிரவர்த்திமலர்ந்த தாமரைக் கொப்பான முகமுடையவராய் ஸ்ரீகோபகன்யாசமூஹத்தின் மனதுடைய மர்மங்களான சிலவார்த்தைகளைச் சொல்லுகின்றார்,

ஸ்ரீபகவத் வாக்கியம்.

வாருங்கள் நல்லசுபாவமுள்ள சுந்தரவதிகளே. நீங்கள் உங்கள்முன்னோர்களின்மீது பிரமாணப்படிக்கு எந்தபுருஷனைப் பர்த்தாவாகவரிப்பதற்குப்பரிசுத்தைகளாய்மிகவும் பக்தியுடன்நோன்புகளை யநுஷ்டித்தீர்களோ அந்தஅநுஷ்டானப்படி உங்களிடத்தில் சனித்த தபப்பலமே உங்களுக்குலபித்தது அப்படியிருக்க ஸ்ரீநந்தகோபருடைய புத்திரனாகிய என்னையேன் வெறுக்கின்றீர்கள் எந்தமகாபுருஷனை வரித்துமோகித்தீர்களோ அவனுங்களுடையமர்மதனங்களை யபகரித்தான் வெகுகாலமாய் நீங்களுங்கள்மனோவீதியில் பக்தி பூர்வகமாகச் சிந்தித்துக்கொண்டிருந்த புருஷார்த்தவாஞ்சைக்கு நான்அன்யனோ பிரமாணமாகச்சொல்வீர்களென்றார்.

ஸ்ரீஸ்வாமியினாலே இவ்விதங்களாகச்சொல்லப்பட்ட வசனங்களைக்கேட்டு இந்தக்கோபகன்யா சுந்தர ரத்நங்கள் ஒருவற்கொருவர் தங்கள்முகமாகிற தாமரைப்புஷ்பங்களைப்பார்த்துக்கொண்டு இருதயதாமரைகளில் முக்தியைக்கோறத்தக்கமனதாகிற மன்மதன் தங்கள் இருதயமுதலிய சர்வேந்திரியங்களையும் அபகரிக்கநிர்விண்ய விருதய நிருத்தனைகளாய் மௌனமா யிருந்தார்கள் அப்படியிருக்கின்றவர்களைத் தமது பரமகிருபையினால் மறுபடியுங்கடாட்சித்து லோகேந்திர பரமகுரு சிகாமணியாகிய ஸ்ரீஆரியானவர் சாஸ்திரோக்தகிரமப்படி சிலநீதிவசனங்களோடு ஆத்மஸ்வரூப தர்மத்தையும்தமது சர்வவியாபககுணாதிசயங்களையும்வெளியிட்டுச்சொல்லுகின்றார்.

ஸ்ரீப்பகவத் வாக்கியம்,

வாருங்கள்சுகுணவதிகளாகியகோபகன்யாமணிகளே இன்றுமுதலெப்போதும் எனதுநிரகத்தில் நித்தியமாகவசித்து நந்தகோபயசோதாதேவிகளுக்குப்பணிசெய்து எனக்குஅடிமைகளாய் என்னுடையஆக்கினையைச் சிரஸாகவகித்து அநுஷ்டிப்பீர்களாகில் இப்பொழுதே உங்கள்வஸ்திரங்களைத் தருகின்றேன்ஜலமத்தியி னின்றும் வெளியில்வந்து சிரத்தாபூர்வகமாக வாங்கிக்கொள்ளுங்களென்றார்.

இவ்வண்ணமாகச்சொல்லிய ஸ்ரீபகவானுடையமதுரமாகிய வார்த்தைகளைக்கேட்டமாத்திரத்தில் குளிருக்கஞ்சி ஜலமத்தியினிற் கச்சஹிக்க கூடாதவர்களாயிருக்கின்ற கோபஸ்திரீகளுக்குள் சிலர்குளிருக்குச் சஹிக்கமாட்டாமல் சலத்தைவிட்டு வெளியிற்போகலாம்வாருங்கள்போனவுடனே ஸ்ரீபகவான்நமதுகலைகளைகிருபைசெய்து தருவரென்றுசொன்னார்கள் சிலர்நாம்சலத்தைவிட்டு வெளியிற்சென்றமாத்திரத்தில் நமது அருந்தவப்பயனாகிய ஸ்ரீகோவிந்தமூர்த்தியானவர் நம்முடையலச்சைகளையபசரிப்பரென்று சொன்னார்கள் இந்தப்பிரகா

ரம் ஆனாலும் கருக்கானுலிசாரங்களை யோசித் தவர்களாய் அந்தஜலத்தினின்று சீதளஸ்பரிசவாய்வுவேகத்தினுலுண்டாகிய சரீரநடுக்கத்துடன் என்செய்வோ மென்று சிந்தித்துக்கொண்டிருந்தார்கள் அப்பொழுது காற்றினலசைகின்ற தாமரைப்புஷ்பங்கள் இந்தக்கோபகன்யாஸ்திரீகளினுடைய ஸ்தனங்களின்மேற்படுதல் ஸ்ரீகண்ணபிரானுடைய கரங்கள் இவர்களுடைய ஸ்தனங்களைப்பற்றுதல்போலு மிருக்கின்றது சிலமுகூர்த்தகாலஞ்சென்றபின்பு தங்கள் இருதயங்களைத் திடஞ் செய்துக்கொண்டு யாவருந்துணிந்து அவனிட்டவழக்காய் ஸ்ரீபகவானிடத்தில் வைத்தமனமுடையவர்களாய் மெதுநடையாய் புன்சிரிப்புடன் தீர்த்தபிரவாகத்தினின்றுவெளியில்வந்து வெழ்க்கமில்லாதவர்களாய் அவதூரதாசிரமிகளைப்போல நிஷ்களங்கமானமனதுடையவர்களாய் நின்ருர்கள் இப்படிநிற்கின்ற இந்தகோபஸ்திரீகள் தங்களை ஒருவற்கொருவர் பார்த்துக்கொள்ளும்போது வஸ்திரஈனமா யிருக்கின்ருேமே யென்கிற நினைப்பும் லஜ்ஜையும் தோன்றுகின்றதேயல்லாமல்மற்றைப்பூமியில் பாலகுமாரவிருந்தார்களா யிருக்கின்றவர்களும் ஆகாசவாசிகளாகிய இந்திராதிதேவதாசமூகங்களும் பிர்ம்ஹருத்திராதிகளுமமற்றையாவர்களும்இர்தக் கோப கன்யாஸ்திரீகளைப்பார்ப்பார்களாகில் அவர்கள்கண்களுக்கு இவர்கள்வஸ்திரஈனமாயிருப்பது தெரியாமல்இவர்கள் யாவரும் வஸ்திரபூஷணலங்காரத்துடனிருந்து வார்த்தைசொல்லிக்கொண்டிருக்கிற தாய்க்காணும்படித் தமதுகிருபாபிமானவஸ்திரங்களை இவர்களெல்லாருக்குங் கொடுத்து இவர்களைப்பார்த்து ஸ்ரீபகவானனவர்மகோத்தம தர்மயுக்தமான சிலவார்த்தைகளைச் சொல்லுகின்ருர்.

வாருங்கள் விரதசீலைகளான சுந்தரவதிகளே நான்இந்த ஸ்ரீநந்தவ்ரஜத்தில் ஆவிற்பவித்த நாள்முதல் உங்களுடன் கூடவிருந்தியடைந்துக்கொண்டிருக்கின்றேன் இதுவுமன்றி எனதுநிசாய்சத்தாலும் உங்களுடைய சமபந்தத்தாலும் உங்களுள்ளும்புறம்புமாக வியாபித்துக்கொண்டிருக்கின்றேன் உங்களிடத்தில்ஈானறியாதமர்மங்களுண்டோ உங்கள்மனோவாக்குக்காயமுதலிய சரீரகுணதர்மங்களுக்குாான் அன்யனே ஆகையால்நீங்கள் நன்ருயோசித்துப்பாருங்கள்என்விஷயத்தில்நாணிக்கூசத்தக்க வியவகாரம்எவ்வளவுமில்லைமேலும்நீங்களியாவ்ரும் விரதநிஷ்டைகளில் அன்புடையவர்களா யிருந்து சாஸ்திரோக்த விதிக்குவேறுபாடாகவஸ்திரஈனமாய்இம்மகா புண்யநதியில் இறங்கிஸ்நானஞ்செய்யத்தகுமா ஆதலால்நீங்கள்தெரியாமல் நடந்ததைக்குறிதது பிராயச்சித்தமாக யாவருமிரண்டுகைகளையு மெடுத்துஅஞ்சலிசெய்துஉங்கள்வஸ்திரங்களை வாங்கியுடுத்திக்கொள்ளுங்களென்ருர்,

இவ்விதமாகச்சொல்லிய ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய வசனங்களைக்கேட்டவளவில் இந்தக்கோபிகா ஸ்திரீகள் யாவரும் பிரணுமஞ்செய்ய வொப்புக்கொண்டு ஸ்வாமியினுடைய ஆக்கினைக்குவித்யாசம் நேரிடுவதைத் தங்களுக்குள் யோசியாமல் வந்தனக்கிரமத்தை யுணராமல் ஒருகையினுல் தங்கள்மர்மாவயவங்களை மறைத்து மற்ருெரு ஹஸ்தத்தைச்சேவிக்கத்தக்கதாகக் காட்டினர்கள் அப்படிஒருகையைக் காட்டிய மாத்திரத்தில் ஸ்ரீபகவான் கோபகன்னிகைகளைப்பார்த்து உங்கள்மனோரதங்கள் ஸபலமாகும்படிக்கும் விரதம்பங்கமில்லாமல் நிறைவேறப் பிராயச்சிததத்தின்பொருட்டுஞ் சேவிக்கச்சொன்னதற்கு இன்னுமதிகக்குற்றமுண்டாகவேயொரு ஹஸ்தமெடுத்தீர்கள் அப்படி ஒருகை யெடுத்ததனுல் ஸ்ரீபகவதபசார அபராதமுண்டாகும் இதற்குவிதி யாதொருத்தன் ஸ்ரீபகவானைத்தரிசனஞ் செய்யும்போது வஸ்திரஈனனுகியும் அல்லதுஏகவஸ்திரனுகியும்அரையில் வஸ்ரத்தின்மேல் வஸ்திரத்தை தயிறுக்கிக் கட்டாதவனுகியும் இருக்கிருனே அவனுஞ்சிரத்தையற்று ஒருகையைக்காட்டி எவன்வந்தனஞ்செய்கின்ருனோஅவனும் மகா பராதியாவார்களென்றும் எவனுவது ஒருவன்ஒருவேளை ஒருகைகாட்டிவந்தனஞ்செய்வானுகில் அவனைத் தர்மநிர்ணயம் அந்தஹஸ்தத்தை அறுக்கும்படி சொல்லியிருக்கின்றது நீங்களதுதெரியாமல்செய்தீர்கள் ஆதலால்அதிக அபராதிகளாநீர்கள் இந்தஅபராதங்களெல்லாம் நிவாரணமாகும்பொருட்டு இரண்டு கரங்களையுமுயரவெடுத்துக்கொண்டு சீக்கிரமாகத் தண்டன் சமர்ப்பியுங்களென்றுசொன்னர் அதைக்கேட்டமாத்திரத்தில் தம்மைத்தரிசித்தவர்களுக்கு தானென்கிற அகங்காரம்விடும்படிசசெய்து ஆட்கொள்ளதத்தக்க ஸ்ரீகிருஷணபகவானைபபார்த்து அவருடைய கடாட்சத்தினுல அகங்காரத்தைவிட்டவர்களாய் லேசமும் பற்றில்லாதவர்களுக்கே தமதுநிஜஸ்வரூபதரிசனந் தந்தருளத்தக்க ஸ்வாமியைக்குறித்து இந்தக்கோப கன்னிகைகளும் அந்தஸ்வாமியினுடைய நியமனப்படியே பயபக்தி விசுவாசத்துடன் தங்களிரண்டு கரங்களையுஞ் சிரசின்மீது உயரவெடுத்துப் பத்தாஞ்சலியுடர்களாய் ஸ்திரீகிருஷ்ணசரணமென்று தண்டன்சமர்ப்பித்து ஸ்திரீபகவானுடைய கிருபாமாத்திர பிரசன்னத்வங்களைப்பெற்றுத்தங்கள் ஆடைகளையும் வாங்கியுடுத்திக்கொண்டு திருப்திமனமுடையவர்களாய் ஸ்திரீகிருஷ்ணபகவானைப்பத்தாஞ்சலியுடன் பர்த்தாவென்கிறஇச்சை யுடையவர்களாய்ச் சலியாமல் நின்று பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

அந்தச்சமயத்தில் ஸ்திரீபகவானனவர் வாருங்கள் விரதநிஷ்டைகளை அநுஷ்டித்த மகாலட்சணவதிகளே நீங்களேசொல்லாவிடினும் உங்கள் மனோரதங்கள் இன்னவையென்று எனக்கு நன்ருய்த் தெரியும் நீங்

கள் என்னைப்பர்த்தாவாகவரித்து எனக்குஅடியார்களாய்னாலது சாருப்யபதத்தையடைந்து சுகிகளாய்த்தருவகரணபோகங்களையடைந்து ஆநந்தவிருவுபசார கைங்கர்யங்களைச் செய்யவேண்டுமென்று கோரிவிரதத்தை யநுஷ்டித்தீர்கள ஆகையால் சத்யமாகப்பலகாஞ்சையையிச்சித்துமகோகாரிய தேவதையாகிய அம்பிகாதேவியை சுநுரித்துவிரத மநுஷ்டித்ததற்குப் போகங்களும் என்னைச்சரணமடைந்ததற்குத் தேகாந்தரத்தில் முக்தியும் உங்களுக்கு ஸபலமாகும் நீங்களயாவரும் என்னைத் தியானித்துக்கொண்டு உங்கள் கிரகங்களுக்குச் சென்று சேருங்கள் இன்றுமுதல் அவரவர்களகாலசாறுகுணமாய்ன காந்தசமயங்களில்தியானித்துநினைக்குந்தோறும்நான்பிரசன்னனாய் உங்கள் இஷ்டங்களை திருப்தியடையச் செய்கின்றேனென்று கிருபையாகச்சொல்லிவிடைகொடுத்தருளினர்.

அப்போது அந்தக்கோபகன்யா ஸ்திரீகளும் அவ்வண்ணமே மஹத்தாகிய சந்தோஷ மனமுடையவர்களாகி ஸ்ரீபகவான் வஸ்திராபகாரஞ் செய்ததும் நாணம்விடும்படிச்செய்து பரிகாசமாகப் பேசினதுமாகியஇவைமுதலியசெய்கைகள் தங்களுக்கு விரதம் பங்கமில்லாமல் சிரத்தாபூர்வகமாக நிறைவேறச்செய்துநமதுமனோபீஷ்டங்களைப்பரிபாலித்து இரக்ஷிக்கின்ற நிமித்தியமேயன்றிவேறில்லையென்று நினைத்து திருப்தி மனதுடையவர்களாகி ஸ்ரீபகவானுக்கு யாவரும்சாஷ்டாங்கமாகத்தண்டன்சமர்ப்பித்து நின்றார்கள் இப்படிநிற்கின்ற இந்தக்கன்யா சமூஹங்களைக்குறித்து ஸ்ரீகிருஷ்ணரானவர்சொல்லுகின்றார், வாருங்கள் கோபகன்யாஸ்திரீகளேஎனது ஸ்ரீபாதாரவிந்தங்களின் அன்புடையவர்களாய் ஸ்ரீபகவதியாகிய ஸ்ரீகௌரீதேவியை அடைந்தபடியால் சர்வஇஷ்டத்தையும் கொடுக்கிறவனாகிய எனக்கே பிரீதியாய் எனது அருளினால் உங்களுக்குச் சகலசித்திகளும்உண்டாகும் உங்களுடைய சிந்தையானது காம்யார்த்தங்களை யநுசரித்தபோதிலும் ஸ்ரீபகவத் சமர்ப்பணபுத்தியினால் வறுத்த விதையானது மறுபடியு முளையாததுபோல அற்பஇச்சைஅற்றவர்களாய் என்னையேயடையக்கடவீர்களென்று சம்பூரணமாகக்கடாட்சித்து கிருபையாகச் சொன்னார்அப்போது இந்தப்பதிவிரதாசிரோமணிகளாகிய ஸ்ரீகோபகன்யாசமூகங்கள் ஸ்ரீபகவானை விட்டுப்பிரியமனமில்லாதவர்களாய் ஸ்ரீபகவதாக்கினையினால்சம்பூர்ண இச்சைகளையடைந்து அந்தஸ்ரீகிருஷ்ண பாதாரவிந்தங்களைச்சலனமில்லாத பக்தியுடன் தியானஞ்செய்துகொண்டுதங்கள்சர்வேந்திரியங்களும் ஸ்ரீகிருஷ்ணசௌந்தர்யங்களிற்செல்ல தங்கள்தங்கள் கிரஹங்களுக்குவந்துசேர்ந்தார்கள்.

பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் முன்போலவே சமஸ்தஇடையர்களாகிய கோபாலர்களுடன்கூட பசுக்களோடு பலவனத்தைக்கடந்துசென்று வெகுதூரத்தில் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்ற ஸ்ரீபலராமரிடத்திற் சேர்ந்துஅவருடனே அந்தப்பிருந்தாவன தூரப்பிரதேசங்களிற்பிரவேசித்துப் பசுக்கூட்டங்களை மேய்த்துக்கொண்டுசந்தோஷமாய்விளையாடினார்.

அப்போது மிகவுந்தீக்ஷண்யமான கோடைகாலசூரியகிரணச் சுவாலைகளைப்போலச் சூரியகிரணங்கள் உஷ்ணத்தைத்தந்தன அப்படிக்காய்கின்ற வெய்யிலுக்குச்சகிக்கமாட்டாமல் வருத்தப்படுகின்ற கோபாலகுமாரர்களுடன் ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் அங்கங்குத்தோப்புகளிற்சேர்ந்து தங்களுக்குக் குடைகளைப்போல நிழலைத்தாராநின்றவிருக்ஷசமூஹங்களைக்குறித்துமகா சந்தோஷித்தராய் மிகவு மேன்மையுள்ளவர்களாகிய கோபாலர்களைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றார்.

வாராய் அன்புள்ளசிறுவர்களே சர்வஜனங்களிடத்திலுந்தயாபரிபூர்ண கிருபாமூர்த்திகளான சத்புருஷர்களைப்போல இந்தப் பிருந்தாரண்ணியத்தில் வசிக்கின்ற சகலமனித பசுபட்சி மிருகமுதலிய சீவராசிகளுக்கும் பரோபகாரமாய்விளங்குகின்ற இந்த மகாவிருட்சசமூகங்களானவை மழை-காற்று-வெய்யில்-பனி-ஆகிய இவைகளிலுண்டாகப்பட்ட குளிர்ச்சி-வெப்பம்-காற்றுமுதலியதுகளால் நேரிடுந்துன்பங்களைத் தாங்கள் சகித்துக்கொண்டு தங்களை யாச்ரயித்த நான்முதலியயாவருக்குங்குளிர்ந்தநிழலையும் சுகுமாரமாகிய வாசனைகளையும் காற்றையுந்தந்து துன்பங்களையொழித்துச் சரீராரோக்யங்களுண்டாகும்படிச் செய்கின்றன மேலும் இந்தமகாவிருட்சங்களானவை சகலபிராணிகளுக்கும் தங்கள் சரீரகுணத்தைக்கொண்டு இலைகளாலும் தளிர்களாலும் புஷ்பங்களாலும் பலங்களாலும் நிழலாலும் வேர்களாலும்பட்டைகளாலும் உலர்ந்த காஷ்டங்களாலும் கந்தங்களாலும்-பிசின்களாலும்-பஸ்பங்களாலும்- சகலாபீஷ்டங்களையும் கொடுத்துக்கொண்டு பரோபகாரஸ்வரூபங்களை அடைந்திருக்கின்றன ஆகையால்இவ்வுலகத்தில் உத்தமஜன்மமெடுத்தபுண்யபுருஷசிரேஷ்டர்கள்இவ்விதங்களாக வேதங்களாத்ம குணங்களினாலும் வாக்குமுதலிய சர்வேந்திரியங்களினாலும்தனகனகவஸ்துவாஹனாதி திரவியங்களினாலும் தானாதிசத்கர்மகிரியாகலாபங்களாலும் சர்வபிராணிகளுக்கும்சர்வகாலமும்உபகாரங்களைச்செய்து ஜன்மஸாபல்யங்களையடைந்து சுகிர்தவான்களாய்இகபரசாதனங்களுக்குரிய உத்தமர்களாய் விளங்குவார்களென்றார்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் கன்யாத்மாவாகிய ராஜபுருஷசிரேஷ்டனே, சகலலோக சிகாமணியாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானானவர்

தமதுதுணைவர்களாகியகோபாலர்களுடன் புண்யவசனங்களைப்பேசிக்கொண்டுசந்தோஷசித்தராய்இலைகனிமுதலியதுகளால் விருத்தியடைந்திருக்கின்ற விருட்சங்களின் நிழலில் சஞ்சரித்துக்கொண்டு யமுனா நதிதீரத்தில்சகலகோபாலகோகண சமேதராய்வந்துசேர்ந்தார் ஸ்ரீ பலராமகிருஷ்ண சகிதர்களான இந்தகோபாலர்கள்அந்தயமுனாநதியில் பிரவாகிக்கின்றநிர்மலமாகியும் அதிசிதளமாகியு மிருக்கின்ற தீர்த்தத்தைப் பசுக் கூட்டங்களுக்குப்பானஞ் செய்வித்துத்தாங்களுமதிலிறங்கி மிகவுஞ்சந்தோஷத்துடன் ச்ரம நிவாரணமாகக்குளித்துத் தாபந்நிரத்தீர்த்தபானஞ்செய்து அந்தநதியின்சமீபத்தில் ஒருகுளிர்ந்ததோப்பிலேகோக்களைமேயவிட்டுச்சமஸ்தகோபாலர்களும்பசியினால் பீடிதர்களாய் அவ்விருட்சங்களின்நிழல்களில்சஞ்சரித்து ஓரிடத்தில் சுகாசீனர்களாயிருக்கின்றஸ்ரீபலராம கிருஷ்ணமூர்த்திகளைப்பார்த்துத்தங்கள் இஷ்டங்களைவிண்ணப்பஞ் செய்துகொண்டார்கள்.

தேவதாம்ச புண்ணியஆத்மாக்களாகிய
கோபாலர்களுடையவாக்கியம்.

வாராய் மகாவீர்யதேஜோஜயசாலிகளானஸ்ரீபலராமகிருஷ்ணர்களே நாங்கள் மிகவும் பசித்திருக்கின்றோம் எங்கள் பசிக்கு சாந்தஞ்செய்து ரட்சிக்கக் கடவீர்களென்று பிரார்த்தித்தமாத்திரத்தில்ஜகதீஸ்வரராகிய ஸ்ரீபகவானனவர் கம்ஸ மகாராஜனுக்குப் பயந்து குடும்பசமேதர்களாய் அந்தப்பிருந்தாவனத்தி னருசார்பில்வந்துவானப்பிரஸ்தா சிரமிகளைப்போலவாசஞ்செய்துகொண்டுசொர்க்க விச்சை யுள்ளவர்களாகி நல்லகர்மங்களைவேதோக்த கிரமமாகவும் விதிபூர்வகமாகவும்ரகசியமாய்ச்செய்துகொண்டிருக்கின்றபிராம்ஹண ஜனங்களினுடையபத்நீ சமூகங்கள் தம்மிடத்தில் வைத்திருக்கிற பக்தியதிசயங்களைக்குறித்துத் தாம்பிரசன்னராய் அவர்கள்இஷ்டங்களை திருப்தியடையச்செய்வதற்கு நிச்சயித்துக்கொண்டு மகானுபாவர்களாகிய அந்தக் கோபாலர்களைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றார்.

வாருங்கள் கோபாலர்களே இப்போதுநாம்வாசஞ்செய்கின்ற வனத்திற்குச்சமீபத்தில்பிரம்மநிஷ்டர்களாகிய பிராமணோத்தம ஜனங்கள் ஸ்வர்க்கத்தை விரும்பி ஆங்கிரஸ ஸத்ரயாகத்தைச்செய்து கொண்டிருக்கின்றார்கள். நீங்கள் அந்தயாகசாலைக்குச்சென்றுமிகவும்நாங்கள் பசித் திருக்கின்றோமென்று எங்களிருவருடைய நாமதேயங்களைச்சொல்லிஅன்னமுதலியதுகளைக்கேட்டுவாருங்களென்று நியமித் தனுப்பினமாத்திரத்தில் அந்தக் கோபாலகுமாரர்களும் அதிசீக்கிரமத்தில் அந்தயஞ்சாலைக்குப்போனார்கள்.

## ௨௧-வது அத்தியாயம்.

அறுசீரடியாசிரிய விருத்தம்,

கோபாலகுமாரரெல்லாங் குறைவிலயாகசாலைக்கசா
டமோடேகியன்னந் தனைக்கேட்கக்கூடாதென் றநிபவே
தியருளைக்க நேர்ந்திடுமவர்கள்பத்னி சோபம்போக்கிட
வளித்துச் சுகித்திருந்ததனைச்சொல்வாம்.

கோபால குமாரர்கள் யாகசாலைக்குப்போய் அன்னங் கேட்டதற்குப் பிராம்மணர்கள்கொடுக்கக்கூடாதென்று மறுத்ததையும் அவர்கள்பத்னிகள் பயபக்திவிசுவாசத்துடன் ருசிஅன்னங்களைக்கொண்டுவந்து ஸ்ரீபலராமகிருஷ்ணர்களுக்குச் சமஸ்த கோபாலர்களுக்குஞ்சமர்ப்பித்துமேன்மை அடைந்தவர்களாய் திருப்தியடைந்ததையுஞ் சொல்லுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் உத்தரா நந்தனனுகியபரிட்சின்மகாராஜனே ஸ்ரீபகவானுடைய ஆக்கினையின் பிரகாரம்கோபாலகுமாரர்களயக்கியசாலைக்குச் சமீபத்திற்சென்று அந்தயாகயஜமான்களாகிய பிராமணர்களைக்கண்டு சாஷ்டாங்கமாகத்தண்டனசமர்ப்பித்துத் தங்களிரண்டு கரங்களையுங்கூப்பிஅஞ்சலிசெய்துகொண்டு சொல்லுகின்றார்கள். கேளுங்கள் பூசுரோத்தமர்களே இதற்குச்சமீபாரண்யத்தில்சாதுசஜ்ஜன தேவகோ பிராம்ஹண இதார்த்தமாயவதரித்திருக்கின்ற ஸ்ரீ பலராமகிருஷ்ணர்கள் வந்திருக்கின்றார்கள் அவர்கள் பசியினால்மெலிந்து தங்கள் தாசபூதர்களாகிய எங்களை உங்களிடத்தில் அன்னத்தைவாங்கிக்கொண்டு சீக்கிரமாக வரசசொல்லி நியமித்தனுப்பினார்கள். ஆதலால்வந்தோம் நீங்கள் தயைசெய்து எங்களுக்கு அன்னவிரயஞ்செய்து பசியின்பாதை நிவாரணஞ்செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்,

வாராய் விவேகசீலமகாராசனே இந்தப்பிராம்ஹணோத்தமர்கள் இந்தக் கோபாலர்களையும் ஸ்ரீபலராமகிருஷ்ணர்களையும் சாமான்யபுருஷர்களாகவேயோசித்தார்களல்லது இப்பொழுது இவர்கள் செய்கின்ற ஸ்வர்க்ககாம்யங்களாகிய ஆங்கீரச சத்ரமென்று சொல்லப்படுகின்ற யாகத்திற்கு அதிதேவதைகளாகிய கோபாலர்களென்றும்சர்வயாகஸ்வரூபிகளாய் கர்த்தா போக்தாக்களாகிய ஸ்ரீஜகதீசுவராம்ச ஸ்ரீபலராமகிருஷ்ணர்களென்றும், தாங்கள்பூர்வஜன்ம கர்மவசத்தால் மனதிற்றோற்றமற் கர்மாபி மானங்களையும் தேஹாபி மானங்களையும் வகித்து அலட்சயமாக விருந்தார்கள் இப்படியாக யிருக்கின்றவர்களுடைய நினைப்பை யறிந்து கோபாலர்கள்நிராசர்களாய் ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களுடைய சமுக

த்திற்ருவர்று அவர்களைப்பார்த்து திவ்ய புருஷர்களே யக்கியசொரூபியாகியும் யக்கியபலத்தைக்கொடுக்கின்ற சர்வேஸ்வராம்ஸ ஸம்பூதர்களென்று உங்களையறிந்து கொள்ளாமல் கிரியாஜ்ஞர்களாய் நாங்கள் கேட்டதற்கு உண்டென்றாயில்லையென்றுஞ் சொல்லாமலிருந்தார்களென்று சொல்லிக்கொண்டார்களா இவ்விதவிருத்தாந்தங்களைக்கேட்ட ஸ்ரீபகவானவர் நகைத்துக்கேளுங்கள் கோபாலர்களே நீங்கள்என்விஷயத்தில் அவர்களைக்குற்றமுள்ளவர்களாக நினைக்கவேண்டாம் இப்பொழுது மறுபடியும்நீங்கள் அந்தப்பிராம்ஹணோத்தமர்களுக்குரிய பத்நிகளிருக்கப்பட்ட சாலைக்குச்சென்று அவர்களுடன் எங்களிருவர் நாமதேயங்களையுஞ்சொல்லி அன்னத்தைக்கேளுங்களென்றுசொன்னார் கோபாலர்களும் அந்தப்பிரகாரமே அவ்விடத்திற்குச் சென்று தூரமாக நின்று அம்மனைமீர்காளென் றழைத்தார்கள் அந்தவொலியைக்கேட்டு வெளியில்வந்த அந்தப்பிராம்ஹணஸ்திரீகளுக்கு மிகவும்பயபக்தி விசுவாசத்துடன் சாஷ்டாங்கமாகத் தண்டன்சமர்ப்பித்துஸ்ரீபலராமகிருஷ்ணமூர்த்திகள் சமீபவனத்தில் வந்திருக்கின்றார்கள் உங்களிடத்தில் அன்னம்கேட்கச் சொன்னார்களென்று சொன்னார்கள். அந்தவிரதாங்கனைகளாகிய பிராம்ஹண ஸ்திரீகள் ஸ்ரீகிருஷ்ணபகவான் வந்திருக்கின்றாரென்று கேட்டமாத்திரத்தில் சரீராபிமானங்களை விட்டுச்சர்வமங்கலகர அலங்காரபூஷிதர்களாய் ஸ்ரீகிருஷ்ணகுணகீர்த்தனங்களால் மனோலயமடைந்து ஆனந்த பரவசர்களாய் சமையல்செய்து பாகமாயிருக்கின்ற அடிசில்களையும் நானாவித ருசிரான்னங்களையும் கந்தமூலபலவர்க்கங்களையும் மிகவும்திவ்யபரிமளபுஷ்பமாலைகளையும் பரிசுத்தங்களானபாத்திரங்களில் கிரமக்கிரமமாய் வெகுபத்திரமாய் வைத்துக்கொண்டு கூட்டங்கூட்டமாகப் புறப்பட்டு நதிசமூகங்களின் பிரவாகங்க ளானவை எல்லையுதைத்தடைசேரிட்டபோதைக்கும் அங்கத்தடைக்கு நிற்காமல் வேகமாய்ச்சமுத்திரத்தையடைவதுபோலஸ்ரீஹரி குணகீர்த்தனங்களைச்செய்துகொண்டுவந்தார்கள்.

அந்தச்சமயத்தில் இந்தப்புண்ணியவதிகளுக்குப்பர்த்தாக்கள்-பிராதாக்கள் - முதலிய பந்துஜன பிராம்ஹணோத்தமர்கள்பார்த்து நீங்களெங்களைநிராகரித்துதர்மவிரோதமா யிப்படிப்புறப்படுகிறது யுக்தமன்றுநில்லுங்கள் உங்களுக்குஇப்படிப்பட்ட புத்தி பிரமைகளெப்படியுண்டாயினவென்று பலவிதமாகிய சிலநிந்திமொழிகளைச் சொல்லியும்நிஷ்டுர வசனங்களைப்பேசியும்கோபதாபங்களைக்காட்டியும் மறுத்தார்கள் அப்போது அந்தப் பிராம்மண ஸ்திரீகள் அவர்களைப்பார்த்து அகோ வாருங்கள் பிராம்ஹணோத்தமர்களே நீங்கள் அந்த பலராமகிருஷ்ணர்கள் பகவதம்ஸசிரோஷ்டர்களென்றும்அவர்களைச்சூழ்ந்திருக்கின்ற அந்தக்கோபாலர்களெலாம் சகலதேவதாம்ச சம்பூதர்களென்றும் அறிந்திருக்கின்ற நீங்கள்ஏன் எங்களைத் தடுக்கின்றீர்கள் அவர்கள் இப்படிப்பட்டவர்களென்பதை மறந்து போனீர்களோ பூர்வவினை விதிவசப்படி நீங்கள் அவர்களுடைய மஹிமைகளையறியாமல் சந்தேகப்பட்டுப் பேசுவீர்களாகிலும் எங்களுக்குஸ்ரீபகவத்பக்தி ஜனித்தது அந்தத்திவ்ய புருஷர்களைத்தரிசித்தா லல்லது நிற்கின்ற தில்லையென்றுசொல்லி மகாதைரியத்துடன் நடந்தார்கள்.

அப்படிச்சென்றபிராம்ஹணஸ்திரீகள்யமுனாநதி சமீபத்திற்சென்று அவ்விடத்திற்கோவினங்களைமேய்த்துக்கொண்டு ஆநந்தமானகோபாலர்கள் சூழ்ந்திருக்கஒரு அசோகவிருட்சநிழலின்கீழ் ஒருநிர்மலஸ்தலத்தில் ஸ்ரீ பலராமர் சகிதராயும் நீலமேக வண்ணராயும் சகல பூஷணங்களினல் அலங்கரிக்கப்பட்டிருக்கிற சகலபுவனமோகனகாரராயிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானைத்தங்கள் கலிதீரக்கண்களித்து அந்ததிவ்யமங்கல விக்ரகத்தினுடைய சௌந்தர்யாதிசயங்களைத் தியானத்துடன் மனோஆலிங்கனங்களைச் செய்து திருப்தி அடைந்தவர்களாய் தாங்கள் கொண்டுவந்தவைகளை ஸ்ரீ பகவத்சந்நிதியில்சமர்ப்பித்துச் சேவித்துநின்றார்கள் வாராய்பரிக்ஷின்மகாராஜனே, தயாநிதியாயும்-சர்வசாட்சிபூதராகியும் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீபகவானானவர் தம்மைத் தரிசனஞ்செய்து கடைத்தேறவேண்டுமென்று நினைப்புள்ளவர்களாகியும் தம்முடைய திவ்யஸ்வரூபாதிகல்யாணகுணங்களை யநுபவிக்கின்றவர்களாகியும் தமக்கெதிரில்நின்றுகொண்டிருக்கின்ற இந்தப் பிராம்மணோத்தம பதிவிரதாரத்னங்களினுடைய முகாரவிந்தங்களைத்தமது பரமகிருபாகடாட்ச வீக்ஷண்யத்தினல் பார்த்து புன்னகையுடன் ஒருவார்த்தைசொல்லுகின்றார்வாருங்கள் பிராம்மணோத்தமபத்நிகளே நீங்களியாவரும் குடும்பசமேதர்களாய் பந்துக்களுடன் க்ஷேமமாயிருக்கின்றீர்களா. உங்கள்கிருகங்கள் நித்யகல்யாண மங்கல கரமாக விளங்குகின்றனவா ஸ்ரீஹரியினதுகிருபா கடாட்சத்தால்இன்னமும்அநேகங்களாகக்கண்டவனேஇப்பொழுது என்னைத்தரிசிக்கவந்த உங்களைக்கண்டவுடனே எனக்கு பிரமானந்த திருப்தியுண்டாயிற்று இன்னமும் என்னால் உங்களுக்குவேண்டிய இஷ்டங்களாகிய சதுர்விதபுருஷார்த்தங்களைக் குறித்து இச்சித்தபோதிலும் அதற்குநானே கொடுக்கத்தக்கவனாயிருக்கின்றேன் நீங்கள்என்னைத்தரிசிக்கவிரும்பி வந்தீர்களாகையால் எனது தரிசனமுங்களுக்குப் பரதார்யமேயாகும் இவ்வுலகில் ஸ்ரீபகவானுடைய கிருபைக்குப் பாத்திரர்களாகிய தீரபுருஷர்கள் சகலசராசரபிரபஞ்சங்களுக்கும் அந்தராத்மாவாகியும் சர்வசாட்சியாகியும் சர்வப்பிரியனுகியு

யிருக்கின்ற என்னிடத்தில் பலாபேட்சை யில்லாதவர் களாயந் தங்களுடையஆத்மவறி,பரமபுருஷார்த்தங்க ளைக்குறித்து என்னை அடுக்கின்றார்கள் அவர்களைப்போ லநீங்களும் ஸ்ரீபகவத்பக்தி பரவசர்களாய்பிரகிருதிசம் பந்தமாகிய மாதாபிதாமுதலிய சர்வசம்பந்தங்களையும் என்பொருட்டு நிராகரித்து என்னைத்தரிசனஞ் செய்ய வந்தீர்கள் உங்களுக்குஎன்னுடையஅனுக்கிரகத்தினால் யாதொருகுறைவுமின்றிச் சதுர்விதபுருஷார்த்தங்களை யும் சாட்சாத்காரமா யநுபவிக்கக்கடவீர்கள் கேளுங்க ள் பதிவிரதைகளேமிகவும் மேன்மையை அடைந்திரு க்கின்ற நீங்கள்உங்கள் பர்த்தாக்களைச்சேர்ந்துமற்றுமு ள்ள பிராமணசமூகங்களுடன் ஆரம்பித்நடத்திவரு கின்ற யக்கியத்தை நிறைவேற்றக் கடவீர்கள் மிகவுஞ் சந்தோஷமாய்ச் சீக்கிரமாகப் போய்வாருங்க ளென்று செலவுகொடுத்தார்.

பிராமண பத்நிகள் வாக்கியம்.

இப்படிமகாகம்பீரமாகச் செலவுகொடுக்கின்ற ஸ்ரீப கவானைப்பார்த்து அந்தப்பிராம்மணபத்நிகள் சொல்லு கின்றார்கள் வாரீர்ஸ்ரீபுருஷோத்தமராகிய மகாவிபுவே நீரிப்படிக்குரியமிக்கின்றது தர்மமோ வேதபுருஷனென வர் தமதுஇருதயமாகிய வேதாந்த சூத்திரங்களில் ஸ்ரீ அரியை ஆச்ரயித்தவர்களுக்கு பிரகிருதிசம்பந்த பாச பந்தங்களுண்டாகின்றதில்லையென்றும் அவர்கள்ஸ்திர மில்லாமலும் அற்பமாயுமிருக்கின்ற அபேட்சைகளைய டைகின்றதில்லையென்றும் ஸ்ரீபகவத்வசன பிரகாரத்தி ற்கு பிரதிக்ஞைசெய்து சொல்லியிருக்கின்றாரோ அந்த பிரதிக்ஞையைச் சத்தியமாகச்செய்யக்கடவீர் நாங்கள் உமது சரணாரவிந்தங்களில் அர்ச்சித்ததிவ்யசுகந்தபுஷ் பங்களுடன்கூடிய திருத்துழாய் மாலையினை எங்கள்கே சங்களில் தரிப்பதற்குச்சமஸ்தபந்துபந்தங்களையும்நிரா சையாகவிட்டு உமதுதிருவடித்தாமரைகளைச் சரணமா கவடைந்தோமே எங்களைமறுபடியும் நாங்கள் விட்டுவ ந்த பூர்வாச்ரமமாகிய பர்த்தாக்கள்முதலிய பந்துஜன ங்களையாச்ரயித்து வாழச்சொல்வது தர்மமோ அவர்க ள்எங்களையங்கீகரிப்பார்களோ வாரீர்பாபவிமோசனஞ் செய்கிறகடவுளே உமதுபாதாரவிந்தங்களுக்காட்பட்டு விழுந்திராநின்ற எங்களுக்குவேறேகதியில்லை ஆகையா ல் உமது அடிமைருசியை மென்மேலும் விருத்தியடை யச்செய்து எங்களுக்கு திருவுள்ளப்படிக்கு விதிக்கக்க டவீரென்று பிரார்த்தித்துநின்றார்கள்.

ஸ்ரீபகவான் வாக்கியம்

இப்படியிருக்கின்ற அந்தப்பிராம்மணோத்தம பத்நி னிகளைப்பார்த்து ஸ்வாமி சொல்லுகின்றார் வாருங்கள் மகாசுகிர்த பதிவிரதைகளே உங்களுடைய பதிகளும் மாதாபிதாக்களுமுதலிய சமஸ்தபந்துக்களும் உங்க ளுடைய பக்திபரிசயத்தினால் எனதநுக்கிரகத்தையடை க்கப்பெற்றுக்கொண்டு அவனாளியவனாகிய ததலபயநிசுபா ஹர்களாய் ஸ்ரீபகவத்ப்பிரியதிகரித்து இப்போதுவியா குலப்பட்டுக்கொண்டிருக்கின்றார்கள் அவர்களுக்கு மிக வும் பரமோபகாரிகளாகிய நீங்கள்எனதாக்ஞாப்பிரகா ரத்திற்குச் செல்வீர்களானால்உங்களைப்பார்த்தமாத்திர த்தில் அதிசந்தோஷபரிதர்களாய அங்கீகரித்துதிருப் தியடைவார்கள் மேலும்உங்களியாவருக்கும்நிலபுண் யலோகங்களினுடைய சாம்பிராஜ்யங்களும்என்னால் அ நுக்கிரகிக்கப்பட்டிருக்கின்றன சர்வதேவதாசமூகங்கள் முதலியயாவரும்உங்களைஸ்துதிசெய்துசிலாகிக்கப்போ கின்றார்கள் மேலும்இவையன்றி இவ்வுலகில்ஜனிக்கின் ற உத்தமஜன்மிகளுக்குச கர்வசௌக்யாதி க்ஷேமங்க ளைப்பெற்றுக்கொள்ளுவதற்குத் தேகசம்பந்தமும் தே காநுபந்திகளுடைய கூட்டுறவும்இத்தேசத்தில் ருசியு ம்காரணங்களல்ல அவரவர்கள் பரிசுத்தமான மனதை ஈஸ்வரனிடத்தில் வைப்பதேசர்வ சௌக்கியங்களையும் பெற்றுக் கொள்ளுவதற்குக்காரணமாக விருக்கின்றது ஆகையால்நீங்களும் உங்கள் சர்வேந்திரியங்க ளோடுங் கூடியபரிசுத்தமனதை எனக்குச்சமர்ப்பித்துக் கொண் டு சர்வோத்தமசௌக்கியங்களையும் அனுபவித்துச் சீ க்கிரமாக என்னையேயடையப்போகின்றீர்கள் நீங்கள்உ ங்கள் இரகங்களுக்குச்செல்லுங்களென்றார்.

ஸ்ரீசுகர்வாக்கியம்

வாராய சர்வசுகுணநிபதியான மகாராசனே இந்தப் பிரகாரம் ஸ்ரீபகவானுடைய பரமகிருபாதிசயங்களை ய டைந்த இந்தப்பதிவிரதைகள் ஸ்ரீபகவானைமனதில் தி டமாகத் தியானித்து பிரம்மாநந்த பரிதர்களாய்மறுப டியும் யக்ஞசாலையைக் குறித்துத்திரும்பினார்கள். அப் பொழுது அந்தப்பிராமணர்கள் இவர்களைப்பார்த்து மி கவும் சந்தோஷசித்தர்களாய் இவர்களை ஆதரவுடன்வர வழைத்து உபசரித்துக் கூடவைத்துக்கொண்டு யாகத் தைநிறைவேற்றினார்கள் இந்தப்பிராம்மணோத்தம பத் நிகளில் ஒருமகாநுபாவையானவள் ஸ்ரீகிருஷ்ண பக்தி யினால் ஸ்ரீபகவானைபிரியமனமில்லாமல் ஆஸ்ரீகிருஷ்ணா ஸ்ரீஜனார்த்தனாவென்று இத்தியாதிநாமங்களைத்தவிர இ தராமாகிய அன்யபுருஷார்த்தங்களை மனதில்நினையாமல் பிரகிருதிசம்பந்தமாகியமாதாபிதா பிராத்ருபர்த்தாமு தலிய பந்துஜனத்தை துறந்தவளாய்விளங்கினாள். அந் தப்புண்யாங்கனையைப்பார்த்து அவளுடையபர்த்தாவா கிய புருஷசிரேஷ்டரானவர் இனிமேல்கிருகஸ்ததர்மத் திற்கு இச்சித்தவளல்லவென்று நினைத்துஇம்மகாபத்நி யைத்தாமும்நிவர்த்தித்தார் அப்போதந்தபுண்யாங்கனை யானவள் சர்வதாஸ்ரீபகவானைத்தியானயோகாக்கினியினா லிந்தக்கர்மதேகத்தைவிட்டுஸ்ரீபகவத்வாக்யபிரகாரம் ஸ்ரீயோகீஸ்வரேஸ்வரருடையலோகத்தை யடைந்தாள்.

சர்வஜகத்பிரபுவாகியும் ஷாட்குணைசுவரியசம்பன்னராகியும் பரமதேஜோ நிதியாகியு மிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் அந்த பிராம்மணோத்தமபத்நிகள்மிகவும்பக்திசிரத்தையுடன் கொண்டுவந்து சமர்ப்பித்தான்குவிதருசிரான்னங்களேயும் மற்றுமுள்ளகந்தமூலபலவர்க்கமுதலிய நானவித பதார்த்தங்களேயும்சமஸ்தமான கோபாலர்களுடன்கூட ஸ்ரீபலராமர் சகிதராயிருந்துமிகவும் கிருபாநிதியாகி சந்தோஷமாகப்புசித்து திருப்தராயினர்.

அதின்பிறகு சுவாமியானவர் இவ்வுலக மரியாதைக்கு முந்தின ஜன்மிகளான மனிதர்களுடைய சாமான்ய தர்மங்களேச் சிக்ஷித்து விசேஷ தர்மக்ஞர்களாகச்செய்துதமது திவ்யஸ்வரூப ஸேவையினுலும் சர்வஜன பாபக்ஷயவாக்சாதுர்யத்தினுலும் அதிமானுஷ சேஷ்டிதங்களாகியதிவ்ய லீலாக்கிரீடைகளினுலும் மகாமேன்மையடைந்த ஜன்மங்களாகிய கோவினங்களேயும் மகானுபாவர்களாகிய கோபாலர்களேயும் ஸ்ரீபகவானிடத்தில் பிரீதிகளேயுடைய கோபிகாஸ்திரீகளேயும் ரமிப்பியா நின்றுக்கொண்டு தாம் சர்வப்பிரபஞ்ச பரிசுத்தமுதலிய மகாகம்பீர குணதிசயங்களுடன் சஞ்சரித்துக்கொண்டிருந்தார் அத்தருணத்தில் அந்தமகா பதிவிரதாசனங்களினுடைய பர்த்தாக்களானபிராம்ஹணோத்தமவைதிகஜனங்கள் யாவருமொன்ருகச்சேர்ந்து தங்களுக்குள் ஒருவர்க்கொருவர் சிந்தித்து மிகவும்வியாகுலத்தையடைந்துதங்கள் மனதைவெறுத்துக்கொண்டவர்களாய் மேலும் வசனித்துக்கொள்ளுகின்ருர்கள்.

பிராமணோத்தமர்கள் வாக்கியம்.

வாருங்கள் வைதிகோத்தமர்களே விசுவேசுவரர்களாகியும்இந்தச் சர்வப்பிரபஞ்சங்களு முய்யும்படித்திருவவதரிக்கின்ற ஸ்ரீபலராம கிருஷ்ணமூர்த்திகள்பாதுகாரணத்தினுலேயோ ஏககாலத்தில் நாமெல்லாருங்கடைத்தேறும்படிகிருபைசெய்து மிகுந்தபிரீதியுடன் அன்னத்தையபேட்சித்துநமதுயக்ஞசாலையைக் குறித்துக்கோபாலர்களே யனுப்பிவித்தார்கள். நாம் நமது ஸ்வபாவகுணகர்மத்தினுலவந்தவர்களே மறுத்துநாஸ்தீகதர்மத்தைவஹித்துப்புத்திமந்தர்களாய் ஸ்ரீ பகவ தபசாரத்திற்குப்பாத்திரர்களாய்விட்டோம்.

ஓ அந்தணர்களே மஹாசாஸ்திரத்தினு லுண்டாயிருக்கிறகியானுதிகாரமில்லாத நம்முடைய ஸ்திரீ ஜனங்களாகிய புண்யாங்கனைகளுக்கு ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினிடத்தில் நிஷ்காரணமாய்லபித்த ஸ்ரீபகவத்பக்தியைக்குறித்து யோசிக்குமிடத்தில் மிகுந்த ஆச்சரியகரமாயிருக்கின்றதல்லவா இதுகினைக்குமிடத்தில் நாம்மிகவும் சந்தோஷத்தையடைந்து திருப்திஅடையச்செய்கின்றதே நமக்கிப்படிப்பட்ட பரமோத்மபக்தி ஜனியாமற்போயிற்றே நம்முடைய ஜன்மங்களேக்குறித்தும் ஆத்மாவைக்குறித்தும்நாம்தாபத்தையடைந்து நம்மைநாமேவெறுத்துநிந்தித்துக்கொள்ளவேண்டுமேயல்லாமல்வேறில்லே.

வாருங்கள் பிராமணோத்தமர்களே, ஸ்ரீஜாதிசுவரராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானிடத்தில் உத்தமபக்திஜனியாத நமது பிராம்ஹணோத்தம ஜன்மங்களும் நல்லொழுக்கமுள்ள விரதங்களும்சர்வ சாஸ்திரங்களினுலுண்டான கியானமும்மூன்று வர்ணங்களுக்கும் சிரேஷ்டமாகியவர்ணுதிகாரமுள்ள குலதாமமும இவைகளுக்குரியசத்கர்மங்களும் இந்தக்கர்மதர்மங்களே நன்ருயறிந்தநுஷ்டிக்கும் விவேகங்களும் இவைமுதலிய சர்வகுணங்களுமிருந்தபோதிலும் வியர்த்தமேயாமல்லவோவாருங்கள் மகானுபாவர்களே ஸ்ரீபகவானுடைய திவ்யமாயையானதுமகா யோகீந்திரர்களுக்கும்தபஸ்ஸம்பன்னர்களாகிய ரிஷிகளுக்கும் ஜயிக்கவரியது. ஆகையால் பூர்வஜன்மசுகிர்தகாரணத்தோடும் கூடிய கர்மவசத்தினுல் பிராமஹணோத்தம ஜன்மங்களேவகித்து இதரவர்ணஜனங்களுக்குப் புரோஹிதம்முதலிய குருஜனங்களாயிருந்தும்,கர்மபுருஷார்த்தத்தினிடத்தில் மமதையையடைந்து தன்னுடைய ஸ்ரீபகவத்பக்தி ஹிதானுபவமாகிய ஸ்வர்க்காதியிஷ்டபுண்ய லோகங்களுடைய போகத்தையிச்சித்தவர்களாய்ஸ்ரீ ஹரிமாயா மோகங்களுக்குள்ளானவர்களாயிருக்கின்ருேம்.

வாருங்கள் மகானுபாவர்களாகியபண்டிதர்களே, ஸ்ரீஜகத்குரு சிகாமணியாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில் இந்த மகாபதிவிரதைகளாகியஉத்தமஸ்திரீ ஜனங்களுக்குஸ்ரீ அரியினுடைய காரணமில்லாமல் உண்டானகடாக்ஷத்தினுல் பரமயோகீந்திரர்களுக்கும் லபிக்க வரிதாயிருக்கின்ற ஸ்ரீபகவத் பக்திஜனித்துதிடசித்தங்களுண்டாகித் தன்யர்களாய்விளங்குகின்ருர்கள் பார்த்தீர்களா யாதொருவைதீகநிர்ணய கர்மாநுஷ்டானங்களான உபநயனுதிசமஸ்காரங்களும் ஸந்தியாவந்தன ஔபாசனுதிக்கிரியைகளும் குருகுல வாசத்வமும் தபஜபாதிவைதீகமந்திர தியானங்களும் நிகலசாஸ்திரார்த்த விசாரவேதாந்த க்ஞானங்களுஞ்சுத்தாசாரங்களுமாகிய இப்படிப்பட்ட வேதநிர்ணய கர்மாதிகாரமில்லாத இந்தப்பிராம்ஹணோத்தம பத்நி சமூகங்களுக்கு ஸ்வர்க்க மோக்ஷங்களுக்கு ஹேதுவாகியகிருஹஸ்ததர்மங்களுக்கு சிக்ஷா ஸ்வரூபங்களாகியும் கேவலப்பிரகிருதிபந்த பத்தாதிகாரிகளுடைய மிருத்தியுபாசபாத விமுக்தமாகியும் விளங்காநின்றஉத்தம சுலோகராகியும் யோகிஸ்வரேஸ்வரராகியும் ஸ்ரீபகவானுகியுமிருக்கின்ற இந்த ஸ்ரீகிருஷ்ண பகவானிடத்தில் அசஞ்சலமான பக்திஜனித்ததுஇப்படியவர்களுக்குஜனித்தது ஸ்ரீ பகவத் பராகிருபாதிசயமன்ருே.

வாருங்கள் நிகிலசாஸ்திர சம்பன்னர்களாகிய வைதி
கோத்தமர்களே பெரியபிராட்டியாகிய ஸ்ரீமகாலக்ஷ்மியா
னவள் (அகலகில்லேனிறையுமென்று) சாக்ஷாத்பிரம்ம
னந்த பரமநித்திய விபூதியைசுவர்யஅப்ராக்ருத சர்வசு
பாஸ்ர அநந்த கல்யாண குணகணாதி திவ்ய வைபவாதி
சயங்களைக்கொண்டுபிரபையையும்பிரபாவானையும்போ
லவிளங்கி ஸ்ரீபகவானுடையஸ்தூலஸ்வரூபகாரஇந்தலீ
லாவிபூதியினது ஸம்ரட்சண லோகாதாரணங்களைக் கு
றித்து ஸ்ரீபகவானனவர் அந்தந்தக் காலபக்குவங்களில்
ஆவிர்ப்பவிக்கின்றபடி தானும் ஆவிர்ப் பவிக்கின்றவளா
கையால் அஸ்ரீதசம்ரட்சணார்த்தத்தின்பொருட்டுக்ஷீரச
முத்திரத்தில் திருவவதாரஞ்செய்து தமது ஸம்பூர்ண
பிச்சையின் மனதைக்கொண்டு சர்வவுலகத்திற்கும் உ
லகபதிகளுக்கும் சகல சேதனசேதனங்களுக்கும் ஸர்
வைஸ்வர்ய ஆயுராரோக்கியங்களைத் தம்முடையகடாட்
சவீக்ஷண்யத்தால் கிருபைசெய்து இவ்வுலகமும் உலக
பதிகளாகிய பிரம்ஹாதிகளும் இவர்களுடைய விபவை
சுவர்யங்களும் தமது கடாக்ஷலேஸமாத்திரத்தின லல்
லதுவேறல்லவென்றதற்குச் சாக்ஷியாக இந்தத்தேவதா
ஜனசமூகங்களாகிய பிரம்மாதி தேவஸ பிகர்களுக்குள்
தா மொருவராய் விளங்கிக்கொண்டிருக்கின்ற இங்கச்ச
ம்பூர்ணகாமராகிய ஸ்ரீசர்வைஸ்வர்யனையேயாசிரயித்து
இதரதேவதா சமூகங்கள் அல்பைஸ்வர்ய காமர்களென்
கிறஅர்த்தத்தைச் சாக்ஷாத் காரமாகச்செய்து வேதா
த்வக்ஞானேதைய சாலிகளாகிய மகாநுபாவர்களால்ஸ்து
திக்கப்படுகின்றாள் அப்படிப்பட்ட ஸ்ரீ மகாலக்ஷ்மிக்கு
நாதனாகிய ஸ்ரீபுருஷோத்தமாம்ச ஸ்ரீ கிருஷ்ணபகவான்
நம்மையாவரையுங்குறித்து அன்னம்யாசித்தது நாமுய்யு
ம்பொருட்டு அவாவகித்த பரமகிருபாதிசயமோகனார்த்
தமேயல்லதுவேறல்லவே மேலும் காலங்களுந்தேசங்க
ளும்யக்ஞபுரோடாஸங்கள்முதலிய சமஸ்த திரவியங்க
ளும்அவைகளுக்குரிய மந்த்ரதந்த்ரங்களும்ருத்விகளு
ம்யாகாக்நிகளும் யாகாபிமான தேவதைகளும் யாகயஜ
மானத்வங்களும் க்ருதுக்களும் அந்த க்ருதுக்களின் பூ
ர்ணமானதர்மங்களுமாகிய இவையாவும்ஸ்வரூபங்களா
கவிளங்கப்படுகின்ற ஸ்ரீபகவான்யாவரோ அவரேஇப்பி
ரபஞ்சத்தில் மகாபரிசுத்தமாகிய யதுகுலத்தில் அவதா
ரஞ் செய்தனரென்று ஸச்சாஸ்திரங்களினாலும் மகாநு
பாவர்களாகிய பெரியோர்களாலும் நாம்கேள்விப்பட்டி
ருக்கின்றோம் அப்படிக் கேள்விப்பட்டிருந்தும் மெதுபி
ராகிருதகர்மவசத்தினால்மறைக்கப்பட்டுஅறியாமற்போ
னோமன்றோ.

வாருங்கள் சத்சாஸ்திர சம்பன்னர்களாகியபூசுரோத்
தமர்களே இந்தச் சமஸ்தமானபிரபஞ்சங்களையும தம
து யோகமாயாப் பிரபாவத்தினால்சிருஷ்டித்தும்இரட்சி
த்தும்ஸம் ஹரித்தும் மோஹிக்கச்செய்கின்ற ஸ்ரீபகவா
னுடைய அநந்தகல்யாண குணாதிசய சாதுர்யங்களை ஸ்
வகர்மாபிமான அல்பக்ஞான மோஹிதர்களாகிய நாமெ
ன்னவறியப்போகின்றோமென்று சிந்தாபரர்களாய் ஸ்ச
ர்வக்ஞமூர்த்தியாகிய கிருஷ்ணபகவானுக்கு அநந்தப்பிர
ணாமங்களைசெய்து பிரார்த்திக்கின்றார்கள.

வாரீர் ஸ்ரீ ஜகத்கர்த்தாவாகிய பரமபுருஷரே உமது
யோகமாயாப்பிரபாவ லேஸமாத்திரத்தில் மோஹிக்கப்ப
ட்டபுத்தியை யுடையவர்களாகியும் உம்முடையசௌல
ப்பியாதிசய திவ்வியகல்யாண குணாதிசயங்களையநுபவி
க்கத்தகுமான பக்திபூர்வக பரிசுத்தமான ஸங்ஞானமில்
லாதவர்களாகியும் ஸ்ரீபகவதபிப்ராய கிருபாதிசயபிரபா
வங்களையறியாதவர்களாகியு மிருக்கின்ற எங்கள் அபரா
தங்களை க்ஷமித்து ரட்சிக்கக்கடவீர்களென்று பிரார்த்
தித்தார்கள்.

வாராய் சந்திரகுலதிலகனாகிய மகாராஜனே இந்தப்
பிரகாரம்பிரார்த்தித்த பிராம்மணோத்தமர்கள்மெய்ப்பூ
ர்வகமாய் ஸ்ரீபகவச் சரணாரவிந்தங்களுக்குத் தண்டன்
சமர்ப்பித்துத் தங்கள் அபராதங்களை நினைந்து நினைந்து
மிகவும்துக்கித்தவர்களாய் கிருஷ்ணபகவானைச் சாட்சா
த்காரமாகத் தரிசனஞ்செய்து வரவேண்டுமென்றுபாவ
ருமுத்தேசித்து மறுபடியுங் கம்சராஜாவினுடைய பய
த்தைநினைத்து இன்னமொருசமயத்தில் தரிசனஞ்செய்
துஸாபராதக்ஷமா நிரூபணஞ்செய்துகொள்ளுவோமெ
ன்கிறஎண்ணங் கொண்டவர்களாய் அவரவர்கள்தங்கள
தங்கள் யதாஸ்தானங்களை யடைந்தார்கள்.

---

## உசு - வது - அத்தியாயம்.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

கோகுலமதனிலுள்ள கோபாலசமூஹமெல்லாம்போ
கதேவேந்திரனுக்குப் பிரீதியாய்வருஷந் தோறும்,மேவக
மாய்சசெயும்யாகத்தை வேண்டாமென்றேதடுத்து ஏக
மாய்கோவர்த்தனத்துக்கியற்றென்றுகண்ணன்சொன்னான்

கோகுலத்திலுள்ள கோபாலஜனசமூகங்களால் வரு
ஷந்தோறும் தேவேந்திரனுக்குப் பிரீதியாகச்செய்யப்ப
ட்டஇந்திரயாகத்தை அவ்வருஷமும செய்யும்படிருந்த
கோபர்முதலிய கோப விருத்தர்கள் ஒரிடத்திலிருந்து
யோசிக்குமளவில் கிருஷ்ணபகவானனவர் ஏதோ ஒரு
கார்யார்த்தத்தைத் திவ்விய திருவுள்ளத்திற் சங்கற்பித்
துக்கொண்டு அவர்களைப்பார்த்து இவ்வருஷத்தில்அந்
தயாகத்திற்குப்பதிலாக ஸ்ரீகோவர்த்தன பாவதத்தைபூ
சித்துப்பாதயாகஞ் செய்யுங்களென்று நியமித்தருளி
னதைச் சொல்லுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் உத்ரா வத்ஸலனாகிய பரீட்சின் மகாராஜ
னே, இந்தப் பிரகாரம் அகில தர்சனனாகிய ஸ்ரீ கிரு

ஷ்ணரானவர்ஸ்ரீபலபத்திர சகிதராய் அநந்தமான கோபாலர்களுடன் கூடிக்கோக்களை மேய்த்துக்கொண்டு ஸ்ரீ கோபிகாசன சமூஹகணங்களுக்கு ஆநந்தகரமாக கோகுலத்தில்வந்து சேர்ந்து லீலாமானுஷ விக்ரஹராய் விஹரித்துக்கொண்டிருக்கின்ற காலத்தில் நந்தகோபர் உபநந்தர்முதலாகிய கோபாலப்ரபுக்களியாவருமொன்றாகச்சேர்ந்து வருஷாவருஷம் கிரமமாய்நடத்திக்கொண்டுவந்த மகேந்திரயாகத்தை அவ்வருஷத்திலேயுஞ் செய்யும்படி ஆலோசித்துக்கொண்டு சர்வக்ஞராகியும்சர்வயக்ஞஸ்வரூபியாகியும் இருக்கின்ற ஸ்ரீகிருஷ்ண பகவானிடத்திற்குவந்துகேளாய புத்திரவருஷத்திற்கொருதரம் இந்திரனைக்குறித்து யாகஞ்செய்கிறதுகண்டு நமக்கு தனம்-பசுக்கள்-அதுகளுக்குக் காரணம் புல்லுகளும்-தடாகங்களும் அதுகளுக்குக்குக்காரணம்-மேகம்-அதற்கு அதிபதி-இந்திரன், அவனைச்சந்தோஷிப்பிக்கால் காலத்தில்மழைபொழியச் செய்வான்எல்லாரும்க்ஷேமமாய்விருத்தியடையலாம் ஆகையால்இந்தமகேந்திரயாகத்தை யெப்போதுசெய்யலாமென்றுகேட்டார்கள் அப்படிக்கேட்டநந்தகோபர் முதலியவர்களுடைய மனோ அபிப்பிராயங்கள் தமக்குநன்றாய்த் தெரிந்திருந்த போதிலும் ஒன்றும்தெரியாதவனைப்போல அவர்களுக்குமிகவும் மகாமதுரமாகிய வசனங்களுடன் அனந்தோபசாரங்களைச்செய்து மிகுந்தவினயத்துடன் தண்டன்சமர்ப்பித்து அவர்களைப்பார்த்து அந்தயாகத்தைக்குறித்துச் சிலவார்த்தைகளைக் கேட்கிறார்கள்,

ஸ்ரீபகவத்வாக்கியம்,

வாராய்பிதாவே நீங்கள்என்னபலாபேட்சையைக்குறித்து இந்தக்கர்மங்களைநடத்திவருகின்றீர்கள் அந்தயாகத்திற்குப்பிரதானமாகிய அதிதேவதையார் அதற்கு வேண்டுந்திரவியங்கள்யாவை இந்தயாகத்தைத் தொடங்கி நிறைவேற்றும்வனாயினும் அதைச்செய்யும்படியான அதிகாரிகள் எப்படியிருக்க வேண்டும் அந்தயாகம் யாவனைக்கொண்டு செய்விக்கத்தக்கது இந்தவிரதங்களை எனக்குத்தெரியவேண்டுமல்லவா அதைப்பற்றிக் கேட்டறிந்து கொள்ளவேண்டுமென்கிற இச்சை எனக்குண்டாயிற்று ஆதலாலிந்தயாகத்தை நடத்தத் தக்ககிரமமெல்லாம்எனக்கு நன்றாகத் தெரியும்படி என்மீது கிருபைசெய்து விவரமாய்ச் சொல்லவேண்டும் சர்வத்திரர்களுக்கும் மகோபகாரங்களாகி இருக்கின்றரஹஸ்யார்த்தங்களை இவ்வுலகத்தில் சர்வப்பிராணிகளிடத்திலும் ஆசாபாசங்களில்லாதவர்களாய்ச் சரியானபார்வையுடையவர்களாகியும் தானென்றும் இதரர்களென்றும் நினையாதவர்களாகியும் தேகாபிமானமில்லாதவர்களாகியும் சர்வத்திரர்களிடத்திலும் அன்புசெலுத்துகின்றவர்களாகியும் இருக்கின்றமகோத்தமர்கள் அறியக் கூடாதா ரஹஸ்யதர்மம்என்றுமில்லை ஆகையால மந்திராலோசனைகள்செய்யுங்காலங்களில் மத்தியஸ்தர்களையும் சத்துருக்களையும் ஒழித்துஉத்தமபுருஷர்களோடு [illegible]ன்னிட்டு ஆலோசிக்கவேண்டியது மேலும் சத்கர்மங்களைச்செய்து சத்விகாரங்களைசெய்து அநுஷ்டிக்கின்றவர்களுக்கும் பலசுருதிபேதங்கள எப்படிப்பட்டவை இவற்றின்விவரோத்தம தர்மநுட்பங்களையெல்லாம் யான்அறியும்படிச் சாதுசஜ்ஜன சிகாமணியாகிய தாங்கள் என்னிடத்தில் அன்பைச்செலுத்திக்கொண்டிருக்கின்ற ஐயாவே எனக்குத் தெரிவிக்கலாம் போயிருந்தால் தெரிவிக்கவேண்டியது.

எனதன்புக்குரியபிதாவே அந்தச்சத்கர்மதர்மங்களுக்குரியபாகமானது பெரியோர்களிடத்தில் சாஸ்த்ரோக்தமாக விசாரணைசெய்து நடத்திவரப்பட்டதா அல்லது உலகத்தில் சாதாரணமாய் ஒருவர்நடப்பதைப்பார்த்து மற்றொருவர்நடத்திவருவதுபோல் நடத்திவரப்பட்டதா இந்தவிவரங்களை யெனக்குக்கிருபைசெய்து நன்றாகத்தெரியச்சொல்ல வேண்டுமென்றார்.

நந்தகோபர்வாக்கியம்.

இவ்விதமாகஸ்ரீபகவான் கேட்கவே நந்தகோபர்ஸ்வாமியைப்பார்த்துச்சொல்லுகின்றார். வாராய்எங்கள்இஷ்டங்களைத் திருப்தியடையச் செய்யும்படியாயிற்பவித்த எங்களன்புக்குரிய புத்திரனாகியகுழந்தாய் இவ்வுலகத்திற்கு மழையையேவத்தக்கவனாகிய இந்திரபகவானானவர் பர்ஜன்யரூபத்தை வகித்து ஸ்ரீஹரியினுடைய சங்கல்பசக்தியால் சப்தமேகங்களுக்கும் அதிபதியாகியும் மேகவாகனராகியும் மேகஸ்வரூபராகியும் விளங்குகின்றார் அவருடையஆக்ஞையினாலேதான் இந்தமேகங்கள் சமஸ்தப்பிரபஞ்சங்களிலுமுள்ள தேவ மனுஷ்யாதிசர்வசேதனாசேதன சமூகங்களுக்கும் சர்வஜீவாதாரமாகியும் ஜீவனஸ்தானமாகியும் இருக்கின்ற ஜலத்தைவருஷித்துக்கொண்டு வருகின்றன. அதனால் இவ்வுலகத்திலிருக்கின்ற சகலமகாசனங்களுக்கும் சர்வமேக சமூகங்களுக்கும் பிரபுவாகியும் ஈசுவரனாகியும் இவ்வுலகத்திற்கும் ரட்சகனாகியும் விளங்கிக்கொண்டிருக்கின்ற அந்த இந்திரபகவானைக்குறித்து வருஷாந்தோறும் ஒருநாளை யேற்படுத்திக்கொண்டு அந்நாளில் ஸ்நானஞ்செய்து பரிசுத்தர்களாயிருந்து சிரத்தையோடும் அவராலிவ்வுலகத்தில் வருஷிக்கப்பட்ட அந்தவருஷஜலப்பிரவாகத்தினால் விருத்தியடைந்து சித்தியாகின்ற திரவியங்களைக் கொண்டு இந்தஉந்திரயாகமூலமாய் அவர்திருப்தியடையும்படிசெய்து பூசிக்கின்றார்கள் வாராய் ஆச்சரிய குணநிசயமுள்ளவனாகிய எங்களருமைப்புத்திரனே இப்படிக்குச்சிரத்தையுடன் இந்தஇந்திரயாகத்தைச் சாங்கோபாங்கமாகச் செய்து அந்த இந்திரபகவானை திருப்திய

டையப்பூசித்தவர்கள அவருடைய அநுக்கிரகத்தினல் நானுவிதசப்பத்கரங்களாகிய திரவியங்களைப் பெற்றுக்கொண்டு சர்வதர்மகர்மங்களுக்கும் காரணமாகியதான தர்மமுதலிய புண்யகர்மங்களைச்செய்து இவ்வுலகில் சரீராயோக்யாதி அநந்தபோகபாக்கியங்களையநுபவித்துக்கொண்டவரவர்கள்சரீரங்களில்பலசத்வபுருஷத்வதேஜங்களுண்டாய் விருத்தியடைகின்ருர்கள் மேலும்அந்தப்பர்ஜன்யரூபியாகிய இந்திரபகவானனவர் இன்னமும் அநந்தசௌக்கிய பலன்களை யநுக்கிரகஞ் செய்கின்ருர், அதனல்இந்தநந்தவ்ரஜத்திலுள்ள கோபாலசமூகங்களோடு நாமும்வருஷந்தோறும் அந்த இந்திரயாகத்தை நடத்திக்கொண்டு வருகிறோம் இவ்வுலகத்திலுள்ளவர்கள் யாவராகிலுங் காமாதியரிஷ்டவர்க்கத் தோஷகுணங்களினல் மதித்தவர்களாய் ஆசாபாசமுதலிய குணங்களை வகித்துமகாலோபிகளாயிப்படிப்பட்ட சத்கர்மங்களை விட்டுவிடுவார்களேயாகில் அவர்கள் ஒருக்காலும் க்ஷேமங்களை யடையமாட்டார்களென்று சொன்னர்.

வாராய் கலிபுருஷ சிட்சனகிய புண்யலீலனே சர்வயக்ஞஸ்வரூபியாகியும் சர்வயக்ஞாதிபதியாகியும் விளங்குகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் தாம்சர்வக்ஞபரிபூரணராயிருந்தும் லீலாமானுஷவிக்கிரக சௌலப்யராகியிருப்பதால் லோகமர்யாதாக் கிரமமாகவும் தமது பரமகிருபாதிசயலீலையின்பொருட்டாகவும் ஸ்ரீநந்தகோபர் உபநந்தனர்முதலிய சமஸ்தகோபால சபிகஜனங்களால் இந்தயாகதர்ம கர்மத்தைச் சாங்கோபாங்கமாகப் பலச்ருதியுடன்கேட்டருளி அலர்ந்ததாமரைக்கொப்பான முகமுடையவராய்த் தமது கிருபையாகிற பார்வையினல் நந்தகோபரை மகாகம்பீரமாகவும அவ்விந்திரபகவான் நாணும்படியாகவும் ஒருவார்த்தை சொல்லுகின்ருர்.

ஸ்ரீபகவான்வாக்கியம்.

வாரீர் சாதுஜன சிரோத்நமாகியஎனதன்புள்ளபிதாவே சர்வபிரபஞ்சங்களும் சராசராத்மகஜன்மிகளாகிய சசலபிராணிகளும் ஸ்ரீயப்பதியினுடைய ஸங்கல்பலேஸமாத்திரம் ஆக்ஞாநிரூபக அனதிமாயாநிர்மகமாகவிருக்கின்றன அவ்வாத்மாக்களெல்லாரும் சர்வாத்மவஸ்யப்பிராரப்த ஆகாம்யஸஞ்சித நாமாங்கித பழவினைகளுக்கீடாய் ஜன்மங்களையடைந்து அந்தஜன்மங்களில்சம்பாதித்த கர்மங்களின் பரிபாகத்தின்படி உத்தரோத்தரஜன்மங்களை வகித்து அந்தக்கர்மத்தின் பிரவாகத்தினலேயே நானவிதசுகாநுபவங்களையும்துக்கங்களையும் பயங்களையும் நிர்பயங்களையும் க்ஷேமாதிசயங்களையும் மரணவஸ்தைகளையும் முக்யமாக அநுபவித்துக்கொண்டிருக்கின்றன. அவ்வாத்மாக்களுடையசுகிர்தங்களாகிய கர்மங்களேசுகதுக்காத்மக பலபிரதங்களாயிருக்குமானல் கர்மயினங்களைப் படைத்தராகிய பிராணிகளுக்குத் தமதுகர்மாதிஸயஸதாஸ்வமேதாதி மாகாயாகபல பிரதசுகிர்தத்தினல் பெறறுங்கொண்டலோகாதிபதித்வ லோகேசர்களாகிய இந்திரன்முதலிய லோகபாலர்கள் யாவரானபோதிலும் பலன்களைக்கொடுத்து க்ஷேமங்களைப் பெற்றுக்கொள்ளச் செய்ய மாட்டுவார்களோ ஆகையாலியோசிக்குமிடத்தில் பிரபஞ்சத்தில்தங்கள்தங்கள் கர்மங்களையேமுக்கியமாகச் செய்துகொண்டிருக்கின்ற சர்வ பிராணிகளுக்கும் இந்த இந்திரனலே யாகவேண்டியமுக்கியகாரணங்களென்னவிளங்கின சர்வபிரபஞ்சத்தவர்களும் ஜன்மாந்தரங்களில்சம்பாதித்தசுகிர்த்துஷ்கிர்தக் கிரமங்களினலுண்டாகியபலன் கொடுப்பதற்கு அன்யதாவாக அடைந்தநுபவிக்கவுஞ்சமர்த்தர்களாகமாட்டார்கள் இந்திரன்முதலிய பலன்கொடுக்கிற தேவதைகளுந்தங்கள்மனே பீஷ்டப்பிரகாரம்ஒருவருக்கும் மேலாகியபலன்களைக் கொடுத்து ரட்சிக்கும்படியானபலன் கொடுப்பவர்களாக மாட்டார்கள்.

வாரீர்பிதாவே சர்வப்பிராணிகளும் ஜன்மாந்தர கர்மங்களுக்கு வசியப்பட்டனவாய்ப் பரதந்திரங்களை வகித்து அந்தக்கர்மங்களுக்கு சநுகுணங்களாகிய தேவாசுரமனுஷ்ய பசுபட்சிகீடாதிஜன்மங்களையடைந்து அக்கர்மபாசபத்தத்வத்தைகொண்டு சரீரங்களில் நானவித குணங்களைவகித்து அவ்வளவுசுகதுக்கங்களையநுபவித்து அந்தந்தக்கர்மங்களுக்குத்தகுமான தேவதைகளுக்காட்பட்டு அவைகளுக்கீடான கர்மங்களைச்செய்துஅதற்குத்தகுந்த கதிகளையடைந்து மறுபடியும்அக்கர்மங்களுக்கீடான ஜன்மங்களைவகிக்குமென்பதற் கெவ்வளவுஞ்சந்தேகமில்லை வாரீர்எங்கள்போஷகராகியஸாதுவே இப்பிரபஞ்சத்தி லிவ்விதங்களாக ஜன்மிக்கின்றசர்வஜனங்களும் அந்தந்தக்கர்ம பலத்திற்குத்தக்கபடி மறுபடிஜன்மங்களையடைந்து சுகதுக்கநுபவத்திற்கீடாகச்சிலர்சத்துருக்களாகவும் சிலர்மித்திரர்களாகவும் சிலர் மத்தியஸ்தர்களாகவும் இருக்கப்பெற்றுக் குருவென்றும் தெய்வமென்றும்பாவித்துப் பந்துமித்ரரிதரதாராதிருணவிஷயபந்துசனசமூகங்க ளென்றெண்ணி கிரகக்ஷேத்திர தனதான்யமுதலிய வாகனங்களைக்கொண்டு வஸ்திராபரணலங்கார சோபிதங்களைச்செய்துகொண்டுவிளங்கி நானவிதசிவனேபாயங்களை யடைந்து தங்களையொருவர் பூசிக்கவுந் தாங்கள்மற்றவர்களைப் பூசிக்கவுமிருந்து கர்மங்களுக்கு சுவாதீனப்பட்டவர்களா யிருக்கின்ருர்கள்.

வாரீர் மகாத்மாவாகிய எனதன்புள்ளபிதாவே சர்வஜனங்களுக்கும் அவரவர்கள் அநந்தஜன்மங்களில் சம்பாதித்த கர்மபலன்களே முகமிய தெய்வாகாரங்களாக விளங்கிக்கொண டிருக்கின்றன அந்தக் கர்மங்களு

க்கும், கர்மாதிதேவதைகளுக்கும கர்ம பலன்களுக்கும் சர்வகாரணனாகியும் ஸர்வேஸ்வரனாகியு மிருக்கின்ற ஸ்ரீ பகவானையுமிழந்து போகின்றார்கள் அந்தஜகதீஸ்வரனல் வேதோக்தமாகப் பலபிரதங்களுக்குத்தகுந்தபடிவிதி ர்திருக்கப்பட்ட வைதீகவிதி நியமனமான கர்மபலாநு குணமுக்ய தேவதாந்தரங்களை யமிழ்ந்து போகின்றது மல்லாமல் அவைதிகர்களாய்ப் பாஷண்டதர்ம காமங்களை ஆச்ரயித்துப் பலன்களைப்பெற்றுச் சுகிக்கின்றார்கள் இவர்கள் நடக்கைசொந்தபுருஷனைக் கையறவிட்டு அன்யபுருஷனை யாச்ரயித்துச் சுகிக்கின்ற சோரஸ்திரீகளுடைய நடைக்கைக் கொப்பாயிருக்கின்றது இப்படிசசகிக்கின்றவர்கள ஜன்மகர்மார்திரியங்களில்ஆத்மஇதபுருஷார்த்தங்களான உத்தம க்ஷேமங்களையடையமாட்டார் கள்இதுவுமன்றிச் சாதுர்வர்ண தர்மகர்மாச்ரமவிதிப்படிவிஸ்வாகார ஸ்ரீவிராட்புருஷ ஸ்ரீவாசுதேவ பிரம்மமுகமாகிற தாமரைப்புஷ்பத்தில் நின்றுமுண்டானபிராம்மணோத்தம ஜனங்கள் வேதாத்யயனத்தைச் செய்கிறார் கள்உலகநியதங்களாகிய ஸத்தியசௌகாதிகளுக் கநுகுணமாக அந்தஈஸ்வர புஜாம்ஸதத்வங்களுக்கு ஜனித்த க்ஷத்திரியஜனங்கள் ராசநீதி தண்டநீதி முதலியவீரியதைர்யசௌர்யபராக்ரம புஜபலங்களைச் செலுத்துகிறார்கள் அத்தேவனுடைய ஊருவின் அம்ஸா தத்துவங்களுக்குஉத்பந்தாகளாகிய வைஸ்ப ஜனங்கள் கிருஷிகோரக்ஷண வியாபாராதி வியவகாரங்களைச் செய்கிறார்கள் அப்பரப்பிரம்ஹத்தின் சரணாரவிந்தங்களின் தத்வாம்ஸங்களுக்கு ஏவலாளிகளாகிய் சூத்திர சனங்கள் மேற்சொல்லிய பிரம்மக்ஷத்திரிய வைசியர்களென்னுந்திரிவர்ணாகார குருகணங்களுக்குத் தகுந்த பணிவிடைகளைச் செய்கிறார்கள் இவ்விதமாக நான்குவர்ணத் தவர்களும் தங்கள்தங்கள் வர்ணாச்சிரம தர்மபிரகாரம் கிருத்தியங்களைச்செய்துசீவனோபாயங்களை வகித்துச்சுகித்துக்கொண்டிருக்கின்றார்கள் இவ்விதங்களாயிருக்கிற்சாதுர்வர்ணாச்ரமிகளுக்குள் நாம் கோரட்சணஞ்செய்க்கிருத்யோபாயநிமித்த சீவனங்களைச்செய்து சுகித்துக்கொண் டிருக்கின்றோம்.

வாரீர் உத்தமதர்ம நீதிகளையுணர்ந்தபிதாவேஸ்ரீவிசுவேசுவரனாகிய ஸ்ரீபகவானுடைய ஸத்வரஸ்தமோகுண தத்வங்கள் சிருஷ்டிஉதிதி ஸம்மாராதிசயங்களுக்குக்காரணங்களாயிருக்கின்றன. சேதனா சேதனப்பிரபஞ்சங்களும்ஸ்ரீஅரியினுடைய ரஜோகுணம்ஸ தத்வத்தினால்ஜனித்த இச்சாஸக்தியை வகித்து ஸ்திரீபுருஷ ஸம்யோகத்தைச்செய்ய அதனால் இந்தப்பிரபஞ்சத் தவர்களுடையசந்ததிகள் விளங்குகின்றன. இவர்களின் புண்யபாவங்களுக் கநுகுணமாக அந்தஸ்ரீபகவானுடைய ரஜஸ்ஸத்வதத்வங்களுக்கு ஜனித்த மேகசமூகங்கள் ஸ்ரீசாவே தராக்னுடைய வகித்துரவிசந்திர அங்காரகபாககவாதிக்ரகபேதங்களாலும் பர்ஜன்யாதி தேவதாதியமங்களினாலும். சமுத்ரவனபர்வதங்கள் முதலியசர்வபிரதேசங்களிலுந்தகுந்தபடி வருஷித்து இவ்வுலகத்தை ஜலசமர்த்தியடையச்செய்து சர்வப்பிராணிகளுக்கும்சீவாதாரமாகியத்ருணஸஸ்யாதி நானாவிதருசிவர்க்கங்களை விருத்தியடையச்செய்து அவரவர்கள் மனோபீஷ்ட சித்திகளையநுபவிக்கும்படி அவரவர்களுக்கு இஷ்டங்களைக்கொடுக்கின்றன. ஆகையால் உலகத்தவர்களுக்கு ஸ்ரீவிஸ்வபுருஷனுடைய ஏகாந்தநிர்மித தத்வாதி தேவதையான இந்தஇந்திரபகவானால் ஆகவேண்டியஸம்பூர்ண கர்மபலமென்னவிருக்கின்றது ஒன்றுமில்லையே அதனால் நமது யோக க்ஷேமங்களைக் குறித்து இந்தஇந்திரபகவானையபேட்சித்து நாம் அர்ச்சிக்கவேண்டிய அவசரமில்லை. வாரீர் ஸஜ்ஜனப்பிரியோத்தமராகியபிதாவே, தாம் ராஜ்யாதிகாரங்களும்பட்டணங்களும் தேசங்களும்நகர வாஸங்களுமாகிய யாதொருநிலையுமில்லாமல் யதேச்சாவிகாரிகளாய் நாம்சஞ்சரித்துக்கொண்டிருக்கின்றோம், நாம் அரண்யங்களையேஸரணயமாகவுடையவர்களா எப்போதும்வனங்களிலும்-பர்வதச்சார்புகளிலும்- நதீதீரங்களிலும் நித்தியவாசஞ்செய்துஇப்படிப்பட்ட வனப்பிரதேசங்களில் கோவினங்களைச் சம்ரட்சணஞ்செய்துநினைத்தவிடங்களில் ஆயர்பாடியைநிர்மித்துக்கொண்டு சீவனம்ஸௌக்கியங்களை யநுபவிக்கின்றோம் ஆதலின்முக்கியமாய்நாமாசரித்து அர்ச்சிக்கவேண்டிய கர்மதர்மங்களென்னவெனில் கோக்களின் அதிதேவதைகளுக்கும் கோக்களுக்கும் பிராம்மணருக்கும் அதிதேவதையான ஸ்ரீஅரிக்கும் பிராம்மணர்களுக்கும் அரண்யத்தின் அதிதேவதைகளுக்கும் அரண்யங்களுக்கும்பர்வதத்தின் அதிதேவதைகளுக்கும் பர்வதங்களுக்கும்நதீதீரத்தின் அதிதேவதைகளுக்கும் நதிகளுக்கும் நாம் பூசிக்கவேண்டியதே.

வாரீர் விவேகசீலராகிய பிதாவே இப்பொழுதுநீங்களியாவரும்இந்த இந்திரயாகத்திற்குச் சம்பாதித்த திரவியங்களைக்கொண்டு கோபிராம்ஹணவன நதிபர்வதங்களைக்குறித்து அர்ச்சிக்கவேண்டும் அந்தப் பூசைசெய்யவேண்டிய விபரத்தைச் சொல்லுகிறேன் கேளும் நாமெல்லாரும் பரிசுத்தர்களாய்ப் பயபக்திசிரத்தையுடன் ஸ்ரீஅரியை தியானஞ்செய்துகொண்டுநானாவிதங்களான்னருசிரான்னங்களையும்-அவரை-துவரை-பயறு-காராமணிமுதலிய பருப்பமுதுகளையும் கார்ப்பு-கூர்ப்பு- துவர்ப்பு-தித்திப்பு-புளிப்பு-உரப்பு-என்னும் ஷட்ரஸ ருசிபாகங்களோடு கூடியபொரியல்- துவையல் கூட்டுக்கறி குழம்பு-பச்சடியென்னும் ஐவகையாகிய பலவிதக்கறிய முதலவர்க்கங்களையும் நானாவிதவிசித்திர [illegible]

கபலகாரகினுசுகளையும், கந்தமூலபலாதிரசருத்வர்க்கங்களையும் பாநீயங்களுக்கு யோக்கியமாகப் பஞ்சதாரயுக்தபாலமுதோடு பாகமாக்கபபட்ட பாயசங்களையும், திவ்வியகரமாகப் பாகஞ்செயதமைத்து வைத்துக்கொண்டு சந்தனகுசும தாம்பூலாதி திவ்வியசுகந்தபரிமளதிரவியங்களையும் நானாவித சுகந்தபுஷ்ப விசித்ரமாலைகளையுஞ் சம்பாதித்து வைத்துக்கொண்டு ஸ்ரீநந்தகோகுலத்திலுளளபசுக்கூட்டங்களிடத்திலிருந்து கறந்த பாலமுதுகளையும் தயிர்-வெண்ணெய்- நெய்முதலிய மங்கலதிரவியங்களையுங்கொண்டு பரமவைதீகோத்தம பிரம்ஹநிஷ்டர்களாகிய பிரம்ஹண்ய ஜனசமூகங்களால் ஸ்ரீஜனார்த்தனபிரீத்யர்த்தமாக ஹோமாதி திவ்வியயாகங்களைசெய்துபிறகு அந்தபிரம்ஹண்ய ஜனசமூகங்களுக்குத்தேவோபசாரங்களோடு பக்ஷ்ய-போஜ்ய-லேஹ்ய- சோஷ்யபாநீயங்களோடுங்கூடிய விஷட்ரச யுக்தங்களாகிய ருசிரான்னங்களால் சந்தர்ப்பணையைச்செய்து அவர்கள் ஆத்மதிருப்தியடைந்தபின்பு சந்தன குசுமதாம்பூலாதி தட்சிணாபூர்வகமாக நல்ல உத்தமகோதனங்களை அவர்களுக்குச் சந்தோஷமாகும்படித் தானங்களாகக் கொடுத்துப்பின்பு பூர்க்ராமவன சண்டாள நிஷித்தஜனங்களுக்குத்தகுந்தபடி அன்னவிரயங்களைச்செய்து பசுக்கூட்டங்களுக்கு யதேஷ்டமாகப் புல்லு முதலியவைகளால்திருப்தியடையச்செய்து நாய்முதலிய மிருகங்களுக்குத்தகுந்த ஆகாரங்களைக்கொடுத்து ஸ்ரீகோவர்த்தனாதி பர்வதஅதிதேவதைகளைக் குறித்துப்பர்வதங்களைப்பூஜித்து பிறகுநமது பந்துஜனங்களியாவரும் நம்மைச்சார்ந்த மற்றவர்களும் அலங்காரார்த்தமாகத் திவ்வியவெண்பட்டு வஸ்திரங்களைத் தரித்துத் திவ்யாபரண பூஷிதர்களாய்த்திவ்யசுகந்தபுஷ்பமாலைகளையணிந்து யாவருந்திருப்தியுண்டாகும்படிச் சந்தோஷமாகப் போஜனங்களைச் செய்துபசுக்களையும் பிராமணர்களையும் யாகாக்கினியையும்ஸ்ரீகோவர்த்தனாதி பர்வதங்களையும்பிரதட்சணஞ்செய்துமிகவும்பக்தியுடன் சாஷ்டாங்கமாகநமஸ்காரங்களைச்செய்து திருப்தியடையக்கடவீர்கள்.

வாரீர் கோவைஸ்ய சிரேஷ்டராகியபிதாவே நமதுவர்ணாசிரம தர்மவிதிப்படி இவ்விதங்களாகஆசரிப்பதுஎனக்குயுக்தமென்று தோற்றுகின்ற இவையித்தனையுமுங்களுக்குச் சத்தர்ம யுக்தங்களென்று தோற்றுமாகில் ஆசரித்துநடப்பிக்கக் கடவீர்களென்றார். வாராய் சாதுஜனபிரீதியுள்ள சுபத்ராபௌத்ரனே, காலரூபியானஸ்ரீபகவானானவர் தேவேந்திரனானவன் மூன்றுலகத்திற்கும் அதிபனென்கிற கர்வமடைந்திருக்கின்றதை யறிந்து அவனுடைய கர்வாபகாரஞ்செய்ய இவ்விதங்களாகத்திருவுள்ளம் பற்றினார் அந்தபகவானுடைய அபிப்பிராயத்தையறியாதவர்களாய ஸ்ரீநந்தகோபர் உபநந்தர் முதலியசமஸ்தமான கோபாலர்களும் ஸ்ரீபகவானுடையவாக்கியங்களை மிகவுஞ்சிரத்தையுடன் அங்கீகரித்துக் கொண்டு தாங்களெல்லாரும் ஸ்ரீபகவத்கிருபைக்குப்பாத்திரர்களாய் அந்தஇந்திரயாகத்திற்குச் சம்பாதித்துவைத்திருந்த சமஸ்தமான திரவியங்களையுங்கொண்டுபிராமணர்களுக்கும் பர்வதங்களுக்கும்சமஸ்தான தேவோபசாரங்களுடன்வோமங்களைச்செய்து பூஜித்து அந்தப்பிராம் அனைத்தமர்களியாவருக்கும் மனோபீஷ்டப்பிரகாரம் திருப்தியடையும்படிப் போஜனங்களைசெய்வித்துஸ்வஸ்திவாஜனங்களைப் படிப்பித்துப் பசுக்களுக்குயதேஷ்டமாகப்பசும்புல்லுகளைக்கொடுத்துத் தெளிந்தசுத்தஜலங்களைக்காட்டித் தாகந்தணிவித்தார்கள் பின்பு அந்தப்பசுக்களை முன்னிட்டுக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணபகவானும் சமஸ்தமானகோபாலர்களும் கோபிஜனசமூகங்களும் மகோத்தம பரமவைதீகபிரம்மண்ய சமூகங்களும்சர்வோபசார பூஜாத்திரவியங்களாகியகர்ப்பூரதாம்பூலசுகந்தபுஷ்பங்கள் முதலியவைகளையும்சகலபதார்த்த சம்பன்னங்களாகிய பிரசாதங்களையும் பிண்டியாற்சமைத்த பலவிதமகாரச ருசிவர்க்கபதார்த்தங்களையும் எடுப்பித்துக்கொணடு மகாபர்வத சமீபத்திற்குச் சென்றுஎல்லாரும் ஓரிடத்தில் விடுதியேறபடுத்திக்கொண்டு இறங்கினார்கள். அத்தருணத்தில் சர்வேஸ்வர னாகியும், சர்வலோகசரண்யனாகியும் சர்வவிஸ்வாகரனாகியும்இருக்கின்ற இந்தஸ்ரீகிருஷ்ணபகவானானவா தாம்மகா விலட்சணயுத்தமாகியும் கம்பீரமாகியும்சேவிக்குமவர்களுக்குமனோகரசுந்தரஸ்வரூபமாகியும் விளங்குகின்றஒரு மகாபர்வதாகாரமாக சாட்சாத்கரித்தார்.

வாராய் லேகோத்தரசுகுணசாலியான பரிக்ஷின்மகாராசனேஸ்ரீபகவானானவர் இப்படி ஒருமகா பர்வதாகாரமாகச்சாட்சாத்கரித்ததுமல்லாமல் ஸ்ரீநந்தர்முதலிய இவ்வாயர் சமூகங்களிலும் தாமொருவராய்விளங்கிக்கொண்டுஇவர்களைப் பார்த்துவாருங்கள் மகா புண்யசீலர்களாகியஆயர்களே இதோபாருங்கள் நம்மையெல்லாரையுங்கிருபைசெய்து ரட்சிக்கும்பொருட்டு ஸ்ரீ அரியினுடையஅம்சசம்பூதரான பர்வதாதி தேவதையானவர் பரமகிருபையுடன் சாட்சாத்கரித்திருக்கின்றார் இந்தப்பர்வதாதிதேவதையானவர்க்கு நீங்கள் யாவரும்பக்திசிரத்தையுடன் நன்றாகஅர்ச்சித்து சகல பதார்த்தங்களையுஞ்சமர்ப்பித்துப் பூசியுங்களென்று நியமித்தார் அதைக்கேட்டுஅவர்களும் அப்படியே மிகவும் பயபக்தி சிரத்தையுடன் அர்க்கியபாத்யம் ஆசமன்யம்ஸமர்ப்பித்துமனோபாவமாக ஸ்நானபானஞ் செய்வித்துத் திவ்ய கந்தம் சுகந்த புஷ்பமாலைகளை சாத்திப் பரிமள தூபந் தந்து கர்ப்பூர தீபாராதனைகளைச் செய்து அனந்த திவ்யநாமங்களைச்சொல்லி அர்ச்சித்து டங்காபேரி முரசுமத்தளடமரக காகள வெக்காள பேய்க்காள கௌரீ காள

துத்தாரி சின்ன மிருதங்க கைத்தாள பிரம்ம தாள நாகசுரவீணா வேணு முதலாகிய வாத்தியங்கள் சப்திக்கப் பொன்மலைபோலப் பழவகைகளையுங்கரும்பின்பாகுக்கட்டிகளையும் பலகாரவகைகளையும் பருப்பமுதுமுதலிய கறியமுதுவகைகளையும் குவித்துவெள்ளிமலைபோலச செந்நெலரிசிபிரசாதம் சித்ரான்ன முதலியவைகளைக்குவித்துக் கூன்கூனுகநெய்கறியமுது-சாற்றமுது புத்துருக்குநெய்யமுது-தயிரமுது-பாலமுது - வெண்ணெய்முதலியவைகளைவைத்து அநேகதாம்பாளங்களில் பாகிலைபரிமள திரவியாதிகளைநிறைத்து இவைமுதலியமற்றுள்ள நிவேதனத்திற்குரிய சமஸ்தபதார்த்தங்களையுஞ் சமர்ப்பித்து நிவேதனஞ் செய்தார்கள். அப்போது ஸ்ரீபகவத்ஸ்வரூபமாகிய அந்தமகாகிரிதேவதையானவர் பிரத்யக்ஷஸ்வரூபமாக எதிரிருந்து இந்தக்கோபாலமகாசனங்களால் செய்யப்பட்டபூசைகளை யங்கீகரித்துத் தத்தியோதநங்களைப்புசித்து இவர்கள்செய்தசர்வோபசாரங்களையும் மனோரதித்துச்சந்தோஷித்தார். அத்தருணத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் தாமும்பயபக்திவிசுவாசத்துடன் அத்தேவனைத்துதிசெய்து பின்பு கோபாலர்களைப்பார்த்து வாருங்கள்மகாதன்யோத்தமர்களான ஆயர்களேதிவ்ய காமஸ்வரூபியாய் சாக்ஷாத்திருக்கின்ற ஸ்ரீஅரிஸ்வரூப இந்தமகாதேவனானவர் நம்மிடத்தில் கிருபாப்பிறசன்னராகியும்தயாளுவாகியும் நாம்சமர்ப்பித்த சமஸ்தமானபதார்த்தங்களையும புசித்து நமதுஅர்ச்சனாதிகளை பிரசன்னமாகஅங்கீகரித்தார் இவர்இவ்வுலகத்திலுள்ள ஸாதுஸஜ்ஜனங்களுக்கு சுலபராகியும், லோகத்துரோகிகளான துஷ்டகஷ்டஜனங்களுக்குச்சிட்சகராகியும் அஜேயராகியும் விளங்குகின்றார் பாருங்களென்றுசொல்லிப்பின்னும் அந்தபர்வதஅதிதேவியை அநந்தவிதமாக ஸ்துதிசெய்து சாஷ்டாங்கமாகத் தண்டன்சமர்ப்பித்து எல்லாரையுஞ்சேவிக்கும்படி நியமித்தார் அவர்களெல்லாருஞ்சேவித்து ஸ்ரீகிருஷணசமேதர்களாய்த் துதிசெய்தார்கள்உடனே அந்தப்பர்வதாதி தேவதாஸ்வரூபாரானவர் அந்தர்த்தானமானார் அதன்பிறகுஅவ்விடத்தில் விளங்கிக்கொண்டிருக்கிற பர்வதத்திற்கும் பூசைகளைச்செய்து தூபதீபங்களையும் நானாவிதஸ்ரீகந்தபுஷ்ப ஹாரங்களையுஞ் சமர்ப்பித்துச் சாஷ்டாங்கமாகத் தண்டபிரணாமஞ் செய்தார்கள் பின்புசமஸ்தமானபேருஞ் சர்வாலங்காரபூஷிதர்களாய்க் கோவினங்களையுங் கோவத்ஸங்களையும் விருஷபங்களையும் நன்றாயலங்கரித்துக் கிரிபிரதட்சணஞ் செய்யும்படியத்தனித்தார்கள்.

அப்போதுமிகவும் வேகமாய்ச் சதுர்விதகதிபேதங்களாச் செல்லாநின்ற உத்தமாசுவங்கள்கட்டிய ரதங்களைப்பார்க்கிலும் அதிவேகமாய்ச்செல்லத்தக்க திவ்வியாலங்கிருதங்களோடுங்கூடிய கோரதங்களின்மீதுநானாவிதவிசித்திராலங்காரங்களுடன் ஸ்ரீநந்தகோபர்முதலிய கோபாலப்பிரபுக்கள் ஆரோகணஞ்செய்துகொண்டு அநேகமான சகடுகளில் சிலகோபிகாசனங்களும் சிலகோபாலச்சிறுவர்களும் அலங்காரபூஷிதர்களாயேறிக்கொண்டு சூழ்ந்துவரவும் அதியுசிதமாக அலங்கிருதஞ்செய்யப்பட்ட ஒருவிசித்திரமான ரதத்தின்மீது ஸ்ரீபகவதம்ச ஜகன்மோகனாகார திவ்வியமூர்த்திகளாகிய ஸ்ரீபலராமகிருஷ்ணர்கள் சர்வாபரண பூஷிதர்களாக அலங்காரஞ்செய்துகொண்டு ஸ்ரீயசோதாரோகிணி தேவியர்களாகிய தாய்மார்களுடன் ஆரோகணஞ்செய்துகொண்டு வரவும் அநந்தமான மங்கலவாத்தியங்கள் சுஸ்வரமாய்ச் சப்திக்கவும் பிராம்ஹணோத்தமர்கள் பூரணகலசங்களேந்தி ஆசிகள்கூறவும் பிராம்ஹணசுமங்கலிகள்மங்கலதீபங்களேந்தி சகலமானகோபிகாசனங்களுடன் ஸ்ரீபகவானுடைய திவ்வியகுணபால லீலாதிசயங்களை மதுரஸ்வரங்களாகக் கீர்த்தனங்கள்செய்து பாடிக்கொண்டுவரவும் கோவினங்களும் கோவத்ஸங்களும் சந்தோஷித்துச்சப்தித்துக்கொண்டுவரவும் மதக்கருஷபங்கள்மகாசெருக்குகளுடன் கம்பீரமாகச்சப்தித்துக்கொண்டுவேடிக்கையாகச்சூழ்ந்துவரவும் மிகவுஞ்சந்தோஷபரிதமானசர்களாய்க் கிரிப்பிரதட்சணஞ்செய்தார்கள் பின்பு அந்தக்கோபாலப்பிரபுக்களியாவரும் ஸ்ரீவாசுதேவராகிய ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய திவ்யாக்ஞையை வகித்து கோகுலத்திற்குவந்துசேர்ந்து கோப்பிராம்ஹண சாதுசஜ்ஜனங்களைச்சந்தோஷமாகஅர்ச்சித்துப்பசுக்கள்தொழுவங்களைச்சேரவும் பிராம்ஹணர்கள்தத்தம்மாளிகைகளைச்சேரவும் அனுப்பிவிட்டுத்தத்தமக்குரியஸ்திரீபாலர்களுடன் அவரவர்களுடைய கிருகங்களைக் சேர்ந்து சுகித்தார்கள்.

## உரு - வது அத்தியாயம்.

அறுசீரடியாசிரிய விருத்தம்,

காதலக்குலிசனானோன்கடுஞ்சினங்கொண்டிருந்த
வருக்கர்களெல்லாமதுன்பர்வகித்திடவருஷந்தன்னை
விரைவுடனனுப்பவந்துவருஷிக்கும்வேளைகண்டு
அரியவர்களுக்கோர்துன்பமணுகாமல்காத்தானன்றே.

தேவேந்திரபகவானானவர்மிகவுங்கோபோத்தீபிதமானசராய் ஸ்ரீநந்தகோகுல ஜனசமூஹங்கள்மிகவும்சிரமங்களையடைந்து வருத்தமுறும்படியாக மேகஸமூகங்களைக்கொண்டு மஹாவருஷங்களைவருஷிக்கச்செய்ததையும் ஸ்ரீவிசுவம்பரராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் அவ்விந்திரபகவான் நாணும்படியாக அந்தமகாவருஷங்களினின்றும் ஸ்ரீநந்தவ்ரஜ மஹாசனங்களுக்குயாதொரு

குறைவுநேரிடாமற்படிக்கு அவர்களை ரட்சித்ததையுஞ் சொல்லுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்

வாராய் குருபாண்டவவம்ஸதிலகனாகியமகாராஜனே ஆயர்கள்வழக்கமாய் நடத்திவந்தபூஜையை வேறுபடுத்தியகாரியங்களை யெல்லாந்தெரிந்துகொண்ட அந்தமாகேந்திரனனவர் மிகவும்தாமஸகுணங்களை வகித்துஸ்ரீ நந்தகோபர் முதலிய ஆயர்கள்வருஷந்தோறும்கிரமமாய் நமக்குசெய்துவந்த பூஜையைச்செய்யாமல்ஸ்ரீகிருஷ்ணனுடைய வாக்கியங்களைக்கேட்டுப் பர்வதத்திற்குச் செய்தார்களல்லவா நல்லது ஆகட்டும் இந்தக்கோபால சனஸமூஹங்களையும் பசுக்கூட்டங்களையும் ஸ்ரீகிருஷ்ணன்காப்பாற்றுவதையுமபர்வதங்காப்பாற்றுவதையும் நான்அறிகிறேனென்று அதிககோபோத்தீபிதராய் ஊழிகாலத்திலியாவுமொன்றாகச்சேர்ந்துவருஷித்துஇவ்வுலகத்தையழிக்கவும் மற்றைக்காலங்களில் வருஷந்தோறும் ஒவ்வொன்றாக வருஷித்து இவ்வுலகங்களைக் காப்பாற்றவும் ஸ்ரீபகவானலே நியமிக்கப்பட்டிருக்கின்றனவாகியும் கூட்டத்திற்குப் பிரளயகால மேகமென்னும் பேருநாமதேயத்தையும் தனித்தனிசம்பர்த்தம்-ஆவர்த்தம்-புஷ்காரவர்த்தம்-சங்காரித்தும்-துரோணம்-காளமுகில்-நீலவர்ணமென்னுஞ் சிறப்புப்பெயரையும்படைத்தனவாகியும் விளங்குகின்ற இந்தஊழிகால மேகங்களுக்குப் பூட்டியிருந்த விலங்குகளை விடுவித்து அவைகளையழைப்பித்து ஒருவார்த்தை சொல்லுகின்றார்,

இந்திரபகவான்வாக்கியம்

வாருங்கள்பிரளயகாலசம்வர்த்த சாதிமேகங்களே இப்பிரபஞ்சத்தினுள்விளங்குகின்ற ஸ்ரீபிருந்தாவனசமீபத்தில் வாசஞ்செய்துக்கொண்டிருக்கின்ற இந்தநந்தவிரஜ்ஜனங்கள் கோஸம்ரட்சண பிரபலர்களானமையால்பால முதுதயிரமுது வெண்ணெய் நெய்முதலியமகாருசிபக்குவங்களாகியருசிரான்னங்களைப்புசித்துமதத்துககர்வித்தவர்களாய் மகாபர்வத சமூஹங்களி னுடைய இறகுகளைவெட்டியவற்றின் கர்வங்களைநிஸ்ஸேஷமாகப் போக்கிகர்வாபகாரஞ்செய்தவனாகியும் சகலாசுரப்பிராணச்சேதஞ்செய்த வஜ்ஜிராயுதத்தைத்தரித்த மகேந்திரனாகியும் இருக்கின்ற என்னைமதியாமல் தாய்தந்தையென்றுங் குருதெய்வ மென்றுந் தனக்குச் சமானரிகமென்றுங் கொள்ளத்தக்க இவ்விதங்களாகிய குருஜனபாவங்களை லேசமுங்கொள்ளாமல் தன்னினைவில் தன்னையே பெரியவனாகமதித்திருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணனுடையவார்த்தைகளைநம்பி வருஷந்தோறுங் கிரமமாக எனக்குச் செய்துவந்த பூஜையைச செய்யாமல் அந்தப்பர்வதத்தைப் பூசித்துச்சென்றார்கள்.

பார்த்தீர்களா மேகங்களே இவ்வுலகத்தில் ஆத்மக்ஞான தத்துவங்களாகிய தங்கள்விக்ஞான மயங்களால் சாவகர்மங்களையுந்தகித்து ஜன்மமரணங்களென்னும மகார்ணவத்தைக் கடக்கக்கர்மாதி யாச்சியங்களைச் செய்துகியான யோகத்தையடைந்திருக்கின்ற ஸர்வகர்மதியாஜ்யர்களாகிய ஆத்மக்ஞானிகளைப்போல இந்த நந்தகோபருடைய நந்தனனாகியஸ்ரீகிருஷ்ணனுடைய வாக்கியங்களைக்கேட்டுப் புத்திமந்தப்பட்டவர்களாய்மதத்துவெறிகொண்டுதங்களைமறந்து எனதுபயோகக்கிரமமாகிய யாகத்தைவிஸர்ச்சித்துக் கேவலஸாமான்ய பர்வதபூஜைசெய்து என்னையவமானஞ்செய்தார்கள் இந்தஸ்ரீகிருஷணசகிதகோபாலர்களையும் கோக்களையும் கோவத்ஸங்களையும் அந்தத்திருவாயர்பாடியெல்லையிலிருக்கிற யாவத்துமான பொருள்களையும் பிரவாகத்திலழிந்து சமுத்திரத்திற் சேர்ந்துபோகும்படி சீமூதங்களாய் வருஷியுங்களென்று ஆக்ஞாபித்தார்.

இந்தப்பிரகாரம் ஆக்ஞாபித்தஇந்திரபகவான் தாமும் ஐராவதநாமதேய வெள்ளையானையின் மீது ஆரோகணஞ்செய்து சமஸ்தமான தேவகண சமூகங்களுந் தம்மைச்சூழ்ந்துசேவித்து ஆயுதபாணிகளாய்வர தமதுவஜ்ராயுதத்தை பொருக்காறசுழற்றி ஜாஜ்வல்ய மானமாய்ப் பிரகாசிக்கச்செய்து லேசமாத்திரமாகிலும் பொறுமையில்லாதகோபத்தை வகித்துஊழிப்பெருங்காற்றிற்கு அதிதேவதையான வாயுபகவானைமேகங்களுக்குச்சகாயமாகக்கூட்டி நியமித்தார் இப்படி இந்திரபகவான்நியமித்தமாத்திரத்தில் வாயு பகவானுடைய சகாயத்தைப்பெற்றுக்கொண்ட அந்தச்சண்டப்ரசண்ட ஊழிகால மேகங்கள் ஆயர்பாடியின்மீது அமோகங்களாகிய ஆரவாரங்களுடன் ஆகாயவீதியில்வியாபித்துத் திககுவிதிக்குகளியாவும் பிரமிக்கும்படி மின்னிப் புவன போந்தராளங்கள்நடுங்கும்படிக்குமுறி இடிகளையும் பெருங்காற்றுகளோடுகூடிய சுழல்காற்றுகளையும்மகாந்தகாரமாகிய இருள்களையும்உண்டாக்கிக்கொண்டுபூர்வத்தில்ஸ்ரீமந்நாராயணராகிய ஸ்ரீதிரிவிக்ரமஸ்வாமி சகலசேதனசேதன சமூக பாபநிவாரண சர்வதேவதா சம்ரக்ஷண பிரபாவத்தை வெளியிடும்பொருட்டுத் தமதுஇரண்டாவதடியளந்துகொள்ளபிரகாசித்த இரண்டாவதுபாதபத்மநாவேகத்தினல் அண்டகடாக மானது பிளக்கப்பட்டு அதற்குவெளிச்சமுத்திர ஜலப்பிரவாகத்தில் நின்றும் திக்கஜாகார அளவாகப்பிரவகித்த தாரைகளைப்போன்றவருஷதாரைகளையும் கல்மழைகளையும் இடிமுழக்கத்தோடுங்கூடியபேரிடிகளையும்கல்ப்பித்துவருஷித்தன

அதனல்மேபெள்ளங்கள் சமமாய்ப் போகும்படி பயங்கராகாரமாகிய வெள்ளங்கள்பாய்ந்தோடின அந்தசமயத்தில் ஸ்ரீநந்தவிரஜத்திலுள்ளசகலமானவிருட்சங்கள்-புதர்கள்-வேர்கள்-பறிந்து ஆகாயத்திலெழும்பின மகாபயங்களையடைந்த கோவத்சங்கள் நடுங்கிக் கோவி

ஷணபகவானனவர் இந்தப்பிரகாரம் அந்தமகேந்திரன் தன்னைக்குறித்து இவ்வாயர்கள்செய்யும் இந்திர யாகத்தைச்செய்யாமல் அன்யவிருஷயமாய்ச் செய்தார்களென்றுகோபித்துத் தன்னுக்குள்ளடங்கியபிரளயகாலமேகங்களைவிட்டுப் பெருங் காற்றுகளைச் சகாயமாகக் கூட்டிச் சிலவருஷங்களை வருஷிப்பிக்கின்றானென்றும் அம்மேகங்களுக்குச் சகாயமாய் வந்திருக்கிறானென்று தமது சர்வக்ஞாதிசயத்தினால் அறிந்தும் இவனைக் கர்வபங்கஞ் செய்யவேண்டுமென்றுசங்கல்பித்துக்கொண்டவராய்சொல்லுகிறார். வாருங்கள் நந்தவிரஜஜனசமூகங்களே இப்பொழுது பெய்கின்ற கோரதரமாகிய கல்மழைகளைக்குறித்து நீங்கள்ஒருவரும் அஞ்சவேண்டியதில்லைஉங்களுடைய பிராணேசர்களையுங்குழந்தைகள்முதலியசகலசனங்களையும் கோ-கோவத்ஸங்களையும்பத்திரமாய்ப்பார்த்து அழைத்துக்கொண்டுஎன்னுடன்வாருங்கள்இதோ ஒருநிமிஷத்தில் ஸ்ரீபுண்டரீகாட்சரானவர் மிகவுங் கிருபையுட னிரட்சிக்கப் போகின்றானென்று சொன்னார்,

### கண்ணன் கோவர்த்தனகிரியைக் குடையாக எடுத்தது.

வாராய் அகண்டபூ மண்டலாதிபதியாகிய மகாராஜனே இவ்விதமாய் ஸ்ரீபகவான்நியமித்தமாத்திரத்தில்கோபாலவிருத்தஜனங்கள் முதலியயாவரும் பசுக்கள்கன்றுகளையும் ஸ்ரீபகவத்கிருபையினால் தைரியங்கொண்டு தங்களுடன் கூடவரும்படியழைத்து சகலசாமக்கிரியைகளையு மெடுப்பித்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ண பிரானுடன்சென்று அவர்நியமித்தஇடத்தில்நின்றார்கள் அப்பொழுது அந்த ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் திரிபுவனசமகாரமூர்த்திக்கொப்பாகியஒருபீமபராக்கிரமஸ்வரூபத்தைவகித்துகோவர்த்தன மகாபர்வதத்தை வேரோடும் பிடுங்கித்தமது ஒற்றைத்திருக்கையினாற்றூங்கிகுடையாகப் பிடித்தார். பூர்வகாலத்தில் ஸ்ரீவராகப்பிரானாகி இந்தப் பூமண்டலாகாரத்தைவெண்மையாகியதமதுதந்தக்கோட்டில்பறித்துவந்து ஸ்தாபனஞ்செய்து பிரம்மாதிசகலதேவதைகளும் ஸ்துதிகள்செய்யச் சர்வசேதனசேதனங்களையு மிரட்சித்தவ ராகையால் அந்தப் பகவானுக்கு இந்தமலையைப் பறிப்பது ஒருவருத்தமோ இந்தகோவர்த்தனபர்வதமானது இவர்அஸ்தத்தில் ஒரு மதத்தயானையின் துதிக்கையில் ஓயயாரமாயும் அவலீலையாயும்உயரவெடுத் தேந்தப்பட்ட ஒருதாமரை மொக்கைப்போலவிளங்கிற்று.

வாராய்பரதகுலோத்துங்கனே சர்வலோகசரண்யராகியஸ்ரீஅரியானவர் அநந்த கோடிப் பிரம்மாண்டங்களைப்பந்துகளைப்போலப் பற்றிவிளையாடிவினோதங்களைசெய்கின்றவராகையால் இந்த ஒரு அண்டத்து ளொருஉலகத்தில் ஒதீபத்தில ஒருபர்வதத்தைத்தாங்கியது ஆச்சர்யமன்றுமேலும் அந்தப்பர்வதமானது ஒருசிறுபாலுக்குஒருசிறுகுடைபோலும் ஸ்ரீ அஸ்தத்திலேந்தியஒருசிறு புஷ்பக்கொத்தைப்போலும் விளங்கியது கோபாலசேகரராகிய ஸ்ரீபகவானனவர் இங்கப்பயங்கரமாகியபெருங்காற்றுகளோடுங் கூடியகல்மழைகளினால் நந்தவிரஜத்திலுள்ள சமஸ்தமான கோபிஜன கோபாலர்களும் கோதனங்கள்முதலிய யாவற்றுக்குங்கிஞ்சிற்றும்வருத்தமுறாமல் சௌக்கியமாகவிருந்தும்படி அந்தகோவர்த்தனபர்வதத்தைக் குடையாகப் பிடித்துப் பாதுகாத்தவராய் ஸ்ரீநந்தர்முதலிய கோபாலஜன சமூகங்களைக் கடாட்சித்து ஒருவார்த்தைசொல்லுகிறார்.

வாருங்கள் மாத்ருபித்ருக்களே கோபாலகோபிஜனசமூகங்களே இந்தமகாபர்வதத்தின்கீழ் கோதனங்கள்முதலிய சமஸ்தமானவஸ்து திரவியங்களுடன் யாதொருகுறைவுமின்றி மனதுசந்தோஷத்துடன் அவரவர்களமனோபீஷ்டப்படிக்கு நிர்ப்பயர்களாயிருங்கள் மேலும்நீங்களென்னைக்குறித்து இவன் மிகவும் பாலகனாயிற்றே இந்த மகாபர்வதத்தை என்னமாய் வகிக்கப்போகின்றானென்றுசந்தேகிக்க வேண்டுவதில்லை இப்படிப்பட்டமகாபர்வதங்கள் அனந்தங்களைப்படைத்த சகல சேதனசேதன சமூகங்களோடுங்கூடிய அநந்தகோடிபிரம்மாண்டங்கள்ஏககாலத்திற் புரண்டுருண்டு இந்தப்பர்வதத்தின்மீதுசூழ்ந்தபோதிலும்இம்மகா பர்வதத்திற்குமோராபாயமில்லை எனதுகையுஞ்சலியாது ஆகையால் இதனடியில் சமஸ்தமானபேர்களுஞ் சந்தோஷமாய்ச் சுகமாகவாசஞ்செய்துகொண்டிருங்களென்றார்,

வாராய் பத்ரவதி மணாளனாகியமகாராசனே இவ்விதங்களாகிய ஸ்ரீபகவானுடைய திவ்யவாக்கியங்களைக்கேட்டுஇவ்வாயர்களியாவரும் சமஸ்தமானகோவின் சமூகங்களுடனும் ஸ்ரீ அரியைத்தியானஞ்செய்துகொண்டுநிர்ப்பயர்களாய் அந்தமகாபர்வதத்தினடிவாரத்திற் பிரவேசித்து ஸ்ரீஜனார்த்தனருடைய கருணைகடாட்ச விட்சண்யங்களாகிய குணங்களில் தங்கள் மனதை சமர்ப்பித்துப் பசிதாகமோக சோக மற்றவர்களாய் ஸ்ரீகிருஷ்ண கதாவினோத கல்யாணங்களைக் குணாநுபவஞ் செய்துக்கொண்டிருந்தார்கள்.

வாராய் ராஜேந்த்ரா ரத்னமேசிகரபங்திகளோடுங்கூடிய கோவர்த்தன பர்வதமானது குடைக்குப்பியும் கவிசசிலையுமாகவும் ஸ்ரீகிருஷ்ணபகவானுடையவலது அஸ்தம் ஒருகுடைக்காம்பாகவும் ஜீமூதங்களாய் வருஷிப்பதினாலேபுரண்டுசுற்றிலும்விழுகின்றவருஷதாரைகள்முத்து மாலைகளாகியசுற்றுத்தொங்கற் குச்சுகளாகவும்விளங்க கோபிஜனசமூக முகாரவிந்தங்களின்ஒளியுந்திவ்யாபா

ணங்களினுடைய மேகங்களும் பிரதிபலித்துப்பிரகாசிக்கின்றபடியால் அந்தமலையும் கோபாலசக்ரவர்த்தியாகிய ஸ்ரீபகவானுக்கு நானாவிததிவ்ய ரத்னங்களிழைத்த ஒரு திவ்யசத்ரம்போலச் சமஸ்தஜனமனோரஞ்சனமாகவிளங்கிற்று மேலும்ஸ்ரீபகவானுடைய அஸ்தத்திலொருமலர்ந்ததாமரை புஷ்பத்தைப்போல விளங்குகிற பர்வதத்தின்மீதுவண்டின்சிரேஷ்டங்களைப்போல பிரளயசலத்தை வருஷிக்கின்ற ஸம்வர்த்தாதிமேகங்கள் விளங்கின வாராய்ராஜராஜாதிபதியேஇவ்விதங்களாகஇம்மகாமேகங்களானவை இந்திரபகவானுடைய ஆக்கினையைச்சிரசாவகித்திரவும்பகலுமோயாமல் ஏழுகோராத்திரங்கள்வருஷித்தன அந்தஏழுநாளும்கோக்களாமுதலிய சகல கோபாலசமூகங்கள் ஸ்ரீபகவானுடைய கிருபையினால் சகலசௌக்கியத்துடனும் பிர்ம்மானந்தஸம்பூர்ணத்துடனுந்தசுகமாகவாசஞ்செய்துகொண்டிருந்தார்கள் அதன்பிறகு இந்தஏழுநாளும் ஸ்ரீபகவானானவர்கோவர்த்தன பர்வதத்தைச் சலியாமல் லேசாக சர்வஜனங்களையும் ரட்சித்துக்கொண்டிருக்க இந்திரனானவர் தேவசாரணர்களால்அதிமானுஷங்களாகிய ஸ்ரீகிருஷ்ணகுணசரித்திரங்களைக்கேட்டு மனதில்ஆச்சர்யமும் பயமுந்தோன்றி எண்ணங்கள்குன்றி பிரயோசனமற்றவனாய் மேகஸமூகங்களையழைத்துக்கொண்டுதன்னுடையதானத்திற்சேர்ந்து மேகஸமூகங்களையதாஸ்தானங்களையடையும்படி சமிக்ஞைகொடுத்தனுப்பினார், அதன்பின்பு ஆகாயவீதியானதுபரிசுத்தமாய் மகாபுருஷர்களுடைய மனதைப்போலக்களங்கமற்றதாய் விளங்கியது சூரியகிரணசமூகங்கள் ஆகாயவீதியில்வியாபிக்கச்சமஸ்தமான ஜனங்களும்பயங்கரங்களாகிய ஊழிப்பெருங்காற்றுகளும் மேகங்களும் நீங்கினவென்று ஸ்ரீமாதவப்பிரானைஸ்துதித்தார்கள் கோவர்த்தனதராகிய ஸ்ரீகோபாலசக்ரவர்த்தியானவர் சமஸ்தமானகோபாலஜன சமூகங்களைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றார் வாருங்கள் தன்யர்களாகிய சமஸ்தமான கோபாலசனங்களே ஸ்ரீஹரியினுடைய கிருபையினால்காற்றும்மழையும் பரிஷ்காரமாய்விட்டுநீர்ப்பந்தனசமஸ்தமான பிரவாகங்களும் நதிகளைச்சேர்ந்துசமுத்திரத்தையடைந்தன பூமியெங்கும்ஈரம்நீங்கி சுவரமாய்த்தோன்றுகின்றனஆகையால்நீங்களியாவரும்உங்கள்புத்ரமித்ர களத்ராதிவர்க்கங்களுடன் சர்வதிரவியங்களையுமெடுப்பித்து சகலகோவின்சமூகங்களையுமோட்டிக்கொண்டு ஸ்வஸ்தசித்தர்களாய் வெளிப்பட்டுயதாஸ்தானங்களைச சேருங்களென்றுநியமித்தார்,

வாராய்ராசனே ஸ்ரீபகவான் அப்படிநியமித்த மாத்திரத்தில் யாவரும்அவரவர்கள்ஸ்தானங்களில் சுகமாகவந்துசேர்ந்தார்கள்ஸ்ரீகிருஷ்ணபகவானானவர்எப்போதும்போல அந்தமகாபர்வதத்தைச் சகலபிராணிகளும் பார்த்துக்கொண்டிருக்கையில்முன்போல லகுவாக தன்னிருப்பிடத்தில் அசையாமல்ஸ்தாபனஞ்செய்தார் பிறகுசமஸ்தமான ஆயர்களும்மிகவும்பக்திசிரத்தையுடன் துதிசெய்துஸ்ரீபகவானைஆலிங்கனஞ்செய்துபுகழ்ந்தார்கள்.

புரோகிதர்கள் முதலிய பிராம்மண சமூகங்கள் தம்பதிசமேதர்களாய் மங்களாட்சதைகளைக் கொண்டு அமோகமான வேதமந்திரங்களைச்சொல்லி ஆசீர்வதித்துத் தத்பஞ்சகவ்யாதிகளை யுபசாரமாகஸ்ரீபகவானுக்குச் சமர்ப்பித்துஆநந்தங்களை யடைந்தார்கள் நந்தகோபாலரும் மகாபராக்கிரமசாலியான ஸ்ரீபலராமரும்யசோதாப்பிராட்டியும் ரோஹிணிதேவியும் மிகவும்பிரீதியுடையவர்களாய் ஆலிங்கனாதிஉபசாரத்துடன் ஆசீர்வாதங்களைச்செய்துதுதித்தார்கள் வாராய்மகாநுபாவனாகியராஜசிகாமணியே ஆகாயவீதியில் தேவதாசமூகங்கள்புஷ்பவருஷங்கள் வருஷித்துமகத்தான ஆச்சர்யங்களையடைந்து தேவதுந்துபிமுதலியசர்வதேவவாத்தியங்களையுஞ்சப்தித்தார்கள் தும்புருநாரதாதிமகாபுருஷசனங்கள்மதுரஸ்வரங்களால் ஸ்துதிசெய்து கானங்களைச்செய்தார்கள் சர்வகோபிகாசனங்களும் ஸ்ரீபகவானுடையகுணகீர்த்தனங்களை மகாதிவ்வியஸ்வரங்களாகப்பாடிக்கொண்டுவர ஸ்ரீபலராமசகிதராகிய கோபாலசனங்கள்ஸ்ரீகிருஷ்ணபகவானைச்சூழ்ந்துகொண்டு பிரம்மானந்த சந்தோஷர்களாய் கோகுலத்திற்குவந்தார்கள்.

## உ௰ - வது- அத்தியாயம்.

### கலிவிருத்தம்.

அரியின்திவ்ய குணாதிசயத்தினைத்
தெரியுங்கோப ஜனசமுகாளுககுத்
திரிகுணாநந்த கோபர்தெரிந்திட
வரகுணன்பிர பாபம்வர்ணித்ததே.

ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய அதிமானுஷ சேஷ்டித திவ்யகுணங்களுக்கு மிகவும் ஆச்சரியமான சந்தோஷமும் அன்பும்சங்கையுமடைந்து பலவாறாக வசனிக்கின்றகோபாலஜன சமூகங்களைப்பார்த்துநந்தகோபானவர் கர்க்கமகாருஷியினால் தாமறிந்திருக்கப்பட்டஸ்ரீபகவத்ரஹசியார்த்தங்களைமனதிற்றியர்னித்துஸ்ரீகிருஷ்ண குண பிரபாவங்களை வர்ணித்தாரென்று சொல்லுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்

வாராய்மகாஜனவல்லபனே ஸ்ரீநந்தகோபருடைய சபாப்ரதேசத்தில் கூடியிருக்கின்ற கோபாலஜன சமூகங்களியாவரும் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய அதிமானுஷ சேஷ்டிதலீலாவினோதங்களைக் குறித்து ஆக்சரியாநந்தபரவசர்களாய்,ஸ்ரீநந்தகோபனைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றார்கள்.

கோபாலர்கள்வாக்கியம்.

வாரீர்ஸ்ரீநந்தகோபரே நாமெல்லாரும் ஜன்மாந்தரங்களில் என்னசுகிர்தங்களைச்செய்தோமோ உமதுதபோபலமெப்படிப்பட்டதோ அறியோம்எங்களுக்குப்பிரபுவாகிய இந்தஸ்ரீகிருஷ்ணபகவானானவர் உமதுகிருஹத்தில் திருவவதரித்துமுப்பதுதிவசத்தில் தமது திருக்கண்களைநன்றாய் விழித்துப்பார்க்கப்பருவமல்லாத சிறுகுழந்தைப்பருவத்திலேயே மஹாமாயமோகன காமரூபகொடியராட்சசியினது விஷஜ்வாலையுடன் கூடியபாலமுதை அவளுடைய அநந்தசன்மங்கள்தோறும்சம்பாதித்தபாபமாகிற அரிஷ்டங்களுடன் பலசத்வாதி சமஸ்தபிராணேந்திரியங்களைச் சோஷிப்பித்து அவளை ஜன்மசாபல்யஞ் செய்தார்மூன்றாவது மாதத்தில் சர்வசனமனோகரஇளங்குழந்தைப்பருவத்தில் ஆணிப்பொன்னாற்செய்தவண்ணச் சிறுதொட்டிலுக்கு இரட்சகமாக வைத்தசகடவுருளையில் சகடாசுரனென்றஓரசுரன்மாயாஸ்வரூபத்தாலாவேசித்து அபாயஞ்செய்ய நினைத்ததையறிந்துபசிபொறுக்காமல் கோபித்தழுஞ்சாமான்ய குழந்தையைப் போலச்செவ்விதாகிய சிறுகால்களையுதறியழுது அச்சகடத்தையுதைத்து அவ்வசுரனுடையஜன்மத்தைசுத்தஞ்செய்துமுடித்தார்,

ஒருவருடத்திய குழந்தைப்பருவத்தில் தம்மையபாயஞ்செய்யவந்த திருணாவர்த்தனென்னும் ஓரசுரனை அவன்கண்டத்தையிறுகப்பிடித்து ஆகாசவீதியில் நின்றுகவிழ்ந்துவிழச்செய்து ஜன்மத்தைப்போக்கினார்தவழ்ந்துவிளையாடி வெண்ணெ அபகாரஞ்செய்து கொண்டிருக்கின்ற பருவத்தில்மகாதவசுசீலசமபந்தையானஸ்ரீ யசோதாப்பிராட்டியானவள் தனதுபுத்திர அன்பினால் உரலில்பந்தனஞ்செய்ய அவ்வுரலைஇழுத்துக் கொண்டுபோய் இரட்டையாயிருந்த மருதமரத்தினிற் சந்திப்பிக்கச்செய்து தமதுபாதாரவிந்தஸ்பரிசத்தினால் ஸ்ரீமந்நாரதவாக்கியோத்தாரண நிமித்தம்ஸ்ரீசங்கரகிங்கரர்களாகிய நளகூபரமணிக்ரீவர்களுடைய அந்தமருத விருட்சஜன்மங்களைப்போக்கினார். கோவத்சங்களினுடையபாலன்பருவத்தில் மகாபலவந்தனாகியும் மாயாவியாகியுமிருந்தகொடியதுஷ்ட ராக்ஷஸனாகிய பகாசுரனை முக்கலைப்பற்றி இருபிளவாகப்பிளந்து அவலீலையாகசம்மாரஞ்செய்து அவனசுரசென்மத்தைப்பாலனஞ்செய்தார பின்னும் அப்பருவத்திலேயே மஹாமாயாவியாய்க்கன்றைப்போலக்காமரூபங்கொண்டு தம்மையும்மற்றுமுள்ளகோபாலசிறுவர்களையும் அபாயஞ்செய்யவந்த கொடியதுஷ்டராக்ஷஸனாகிய வத்சாசுரனென்பவனைச்சமயம்பார்த்து அக்கன்றின்ஸ்வரூபக்கால்களைச்சேர்த்துப்பிடித்துச்சுழற்றி விளாமரத்திலறைந்து சம்மரிதது அவனது ஜன்மதோஷத்தையுந்தீர்த்து அச்சிறுவர்கள் வேண்டியவரைக்கும்விளாமரகனிகளைப்புசிக்கும்படிச்செய்தார் பின்புபனங்காட்டிற் பிரவேசித்து அங்குஅனந்தமானஞாதிசமூகசம்பந்துக்களுடன்வாசஞ்செய்து கொண்டிருந்ததுஷ்டராக்ஷசர்களில் முதன்மையானதேனுகாசுரனைசங்காரஞ்செய்யத் திருவுள்ளங்கொண்டு அவ்வனத்தையறிந்துதம்மையும் ஸ்ரீபலராமனையும் கோபாலர்களையும் நலியச்செய்யும்படிக் கழுதைகளாய் ஸ்வரூபித்துவந்த அந்தத்தேனுகனுடைய ஞாதிபந்து சமூகங்களைப்பார்த்து பலராமசகிதராய் தாம்அவ்வன விருக்ஷங்களைவேரோடேபறித்து அவைகளையேஆயுதங்களாகக் கொண்டு அவற்றால்சிலரைச்சம்ஹரித்து முஷ்டிகளாற்சிலரைச்சம்ஹரித்துச் சிலரைவிருட்சங்களி லறைந்து சம்ஹரித்து இப்படிநானாவிதங்களாக யாவரையுஞ் சம்மரித்துப் பின்புஅந்ததேனுகாசுரனோடு பிரபலமான யுத்தஞ்செய்து அவனையுஞ் சம்மரித்து அவ்வனத்தைப்பரிசுத்தஞ்செய்து அதிலுள்ளபலங்களையாவரும புசிக்கச்செய்ததுமன்றி எப்போதும்நிர்ப்பயமாய் வனவாசிகளுக்குவாசஞ்செய்ய மகோபகாரஞ்செய்தார்.

வாரீர்கோகுலாதிபதியே இந்தஸ்ரீகிருஷ்ணபகவானுடைய குணமகிமாதிசயங்களை யோசிக்குமளவில் கேவலம்மனுஷயனாகத் தோற்றவில்லையே இன்னும் ஸ்ரீபகவான்ஸ்ரீபலராமசகிதராய்ச் சமஸ்தமான கோபாலசிறுவர்களுடன்விளையாடிக்கொண்டிருந்து இத்தனைபேரையும் அபாயஞ்செய்யநினைத்து மாயாகோபாலசிறுவனைப்போலகாமரூபத்தை வகித்துவந்திருந்த கபடனாகியபிரலம்பாசுரனைவிளையாட்டாகவே ஸ்ரீபலராமமூர்த்தியைக்கொண்டு ஜன்மசாபல்யமாகச்செய்து யாவரையுமிரட்சித்தார்உடனேதெய்விகமாய் அவ்வனத்தைச் சூழ்ந்துபற்றியெரிந்துகொண்டுவந்த காட்டுத்தீயானது சமஸ்தமானகோபாலசிறுவர்களையும் கோவத்சங்களையுஞ்சூழ்ந்து ஜ்வலித்தபோதுஎன்ன சாதுரியத்தினாலேயோ அந்தத்தாவாக்கினியைக் குளிரச்செய்து யாவரையுமிரட்சித்துமீட்டுக்கொண்டார்மேலும் அகாசுரன்முதலியோருடைய ஹதசமாசாரங்களையுங் கேள்விப்பட்டோம்இவையன்றிஇந்தக்காளிந்தி மடுவாகிய புண்யநதியானதுதன்னிடத்தில்சகுடும்ப சமேதனாகிவந்து வாசஞ்செய்துகொண்டிருந்த காளியனென்னும் நாமதேயத்தைப்படைத்த மகாசர்ப்பராசனுடைய விஷஜ்வாலையினாலேஒருவருக்கும்உபயோகப்படாமலும் சமீபிக்கிறதற்குஒருவருக்குஞ்சக்கியமில்லாமற்போகவும்சமஸ்தமானபேருக்குங்கண்டகமாயுமிருந்ததே அப்படிபட்ட விஷஜ்வாலையோடுங்கூடியமடுவிலிறங்கி அக்காளியசர்ப்பராசனுடைய பணமண்டலங்களைமிதித்து நர்த்தனஞ்செய்தவனுடையவிஷமாகிற அக்கியாலுண்டானகர்வங்களழித்து சாது

வாகச்செய்து அவனுக்குகிரியைசும் பகலர்பக்ஷபரான்டாகக்கல்பித்துத் தருர்பஸ்தாலத்திலசக சும்பர்மோடுவாசஞ்செய்யநியமித்து அந்தமவைப்பரிசுத்தஞசெய்து சமஸ்தமானபேருக்குமுபயோகமாகும்படியாசரித்தார், அவ்விரவினில் அர்த்தராத்திரியோ... நாமெல்லாம் பநிதாகமூர்ச்சிதர்களாய்ச் சோர்ந்திருக்குஞ்சமயத்தில்வந்துசுற்றிக்கொண்ட கொடியதாவாநலங்களை இந்த ஆபத்பாந்தவராகிய நம்மையாளவந்த ஸ்ரீகோபாலகிருஷ்ணசிம்மமான புருஷோத்தமர்எப்படிப்பட்டஸ்வரூபத்தைவகித்தாரோ நாமறியோம் அக்கணத்தில்அக்கொடிய அக்நிஜ்வாலைகளைப் பானஞ்செய்துநம்மையாவரையு மிரட்சித்தார்.

வாரீர்சாதுஜன சிரோரத்நமாகிய எங்கள் விபுவேஜருக்காலும் சேரிடாதஊழிப்பெருங் காற்றுகளும் குமுறல்களும் மின்னல்களுமபேரிடிகளும் கல்மழைகளும் இந்நாளில் ஏககாலத்திலுண்டாக அவற்றினல் இந்த கோகுலத்திலுள்ள கோக்கள் முதலியவைகளோடு நாமெல்லாரும் அலைந்துமெலிந்து அவதிப்பட்டு பிராணபீதிகளையடைந்து நீனர்களாய்த்தத்தளித்து ஆஸ்ரீகிருஷ்ண ரக்ஷரக்ஷயென்று சரணமடைந்தபோது ஏழுவயதுள்ள பாலராயிருக்கின்ற இம்மகாபுருஷரானவர் பரமபதத்தையடைந்த நம்மைக் குளிர்ச்சியோடும்பார்த்து மகாகெம்பீரமாக ஓய்சனங்களே பயப்படாமலிருங்கள் சர்வேஸ்வரராகிய ஸ்ரீஹரியானவர்சமஸ்தமானபேரையுமிரட்சிக்கப்போகின்றுரென்று உட்னேமதித்தகிக்கஜமானது ஒருகுளத்தி லமர்ந்திருக்கின்ற ஒருதாமரைப்புஷ்பத்தைக்கொடியோடும் பறித்தெடுத்துப் பிடித்தாற்போல்நாமெல்லாரும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே இந்தஸ்ரீகோவர்த்தனபர்வதத்தை வேரோடேபறித்துஉயரவெடுத்து நமக்குக்குடையாகப்பிடித்துச்சகலகோக்களையும் சமஸ்தமானசனங்களையுமிரட்சித்தார் இன்னுமிவற்றின்மத்தியில் அனந்தஆச்சரியகரமான அதிமானுஷலீலாசேஷ்டித வைபவாதிசயங்களைசெய்தார் அவைகளையெல்லாமெடுத்துச்சொல்ல எங்களாலாகாதல்ல ஆகையால்நாகளெந்தவிதத்தில் யோசித்தபோதிலும் இவர்மனுஷ்யமாத்திரமென்று தோற்றவில்லை காமியதேவதைகளான பிரம்ஹருத்திராதிதேவதாம்சபுருஷரில் ஒருவரென்றுந்தோற்றவில்லை ஸ்ரீமந்நாராயணனாகிய பரபிரம்ஹமேயென்று நினைத்துச் சங்கையற்றுமோலாயமான மானசர்களாய்சிந்தித்துக்கொண்டிருக்கின்றோமென்று யாவருமேககண்டமாய்ச் சொன்னார்கள் இப்படிச்சொல்லிக்கொண்டிருக்கின்ற கோபாலர்களைப்பார்த்து நந்தகோபர் ஒருவார்த்தை சொல்லுகின்றார்.

ஸ்ரீநந்தகோபர்வாக்கியம்.

வாருங்கள்மகா தன்யோத்தமர்களாகிய இஷ்டபந்துசனங்களே இந்தஸ்ரீகிருஷ்ண பகவானுடைய திருவவதாரகாலத்தில் கர்க்கமகாமுனீந்திரர் எழுந்தருளி நாமகரணசமஸ்காரதிருவிலச்சனை செய்தபிறகுஎனு ஏகாந்தப்பிரதேசத்தில்என்னையழைத்து அவர்சொன்னபிரகாரம்மயுங்களுக்குநான்சொல்லுகின்றேன் நீங்களும்சிரத்தையுடன்கேளுங்கள் இவர்நமதுகிருபாமாத்திரத்தில் சாக்ஷாத்காரமாகி ஸ்ரீபகவானேயெழுந்தருளி உமக்குப்புத்திரனாக விளங்குகிறாரல்லாமல் சாமான்யபுத்திரனல்லர் இவனை அநாதிநிதனராகிய பரமாத்மாவாகத்தியானியுங்கள் இவர்இவ்வுலகத்தி லுள்ளசாதுசஜ்ஜனங்களும்நலிந்துஉலகதர்மங்களும் நீதிதப்பித்தமது ஆசிரிதசனங்கள்மனது சங்கையற்றுத் தியானிக்குங் காலங்கள்தோறும் துஷ்டநிக்ரக சிஷ்டசம்ரக்ஷணங்கள்செய்து ஸர்வதர்மங்களையும் ஸ்தாபிக்கும்பொருட்டு திருவவதரிக்கின்றபரமாத்மஸ்வரூபரேயல்லது மற்றசிறுதெய்வங்களினம்சமுமல்லர்சுயர்தாம்சமானிடஜன்மமுமல்லர் இவருக்குண்டாகிய அவதாரங்களையும் அவ்வவதாரங்களின் அநந்தகல்யாணகுண கணமகிமாதிசயங்களையும்வேதவேதாந்தபுருஷ சூக்தங்களினாலும் அவ்வேதபுருஷனாலும் அளவிட்டுரைக்கக்கூடாதென்றும் வாருங்கள்எனது பிரியமானபந்துக்களே இந்தஸ்ரீகிருஷ்ணபகவானானவர் பூர்வயுகங்களில் தேதீப்யசுவர்ணாகாரத்தையும்சுத்தஸ்படிகம்போன்ற வெளுப்பாகாரத்தையும்திவ்யரத்நமயமாணிக்க செவ்வியபுஷ்பாகாரத்தையும் வகித்துப்பிரஸ்துதத்தில் நீலமேகம்போன்ற ஸ்ரீகிருஷ்ண நாமதேயத்தையுடைய சர்வஜகன்மோகனாகார சுந்தர ஸ்வரூபத்தை யுடையவராய்விளங்குகின்றார் இன்னும்இந்தஸ்ரீமாதவர் பூர்வத்தில்சங்கள்தபோபலத்தினாலே தேவாசுரர்கள் மனிதசன்மங்களைபடைந்து அரசர்களாய் அதிகாரங்களைச்செலுத்தும்போது வேததர்மவிதிகள்மாறிராஜ்யங்கள் அராஜகமாய்ராச்சோரர்களால் உலகசனங்களும் சாதுக்களும்நலி வடைந்தபோது பிருது-ருஷ்பபரததாரு இவர்கள்முதலாகியராசபுருஷசிரேஷ்டாவதாரங்களையும் பக்தசனசம்ரட்சணமாகிய நானாவித அவதாரங்களையுஞ்செய்து ராசசோரசிக்ஷைகளையும பாஷண்டதர்மநிவாரணங்களையும் ஆசிரதவிரோதி நிக்ரங்களையும்செய்தமகாமகிமைகளையுடையதிவ்யமூர்த்தியிவர்தானென்றுஞ்சொன்னார் ஆகையால்கேளுங்கள் சுஜனங்களே இவருடையசரித்ராதிசயங்களில் ஆச்சரியப்படவேண்டுவதில்லை இவைமாத்திரமல்ல இன்னமனேகமதிசயங்களுண்டாகவிருக்கின்றன இவரால்நமக்குநேரிடுந் சங்கடங்களெல்லாமொழியப்போகின்றன.

இந்தஸ்ரீகிருஷ்ணபகவான் ஸ்ரீமந்நாராயணம்ச ஸம்பூதராய்த் திருவவதாரஞ்செய்தருளினரென்று எனக்குப்பிராமண பூர்வகமாகச்சொல்லி கர்க்காமுனிதமதா

சிரமத்திற்கு எழுந்தருளினர் வாருங்கள் உத்தமர்களே நீங்களும் என்னைப்போலவே இந்த ஸ்ரீபகவானுடைய அதிமானுஷ லீலானுபவங்களை மனமுகந்து களித்து ஸ்ரீபகவத்பக்திரஸிகர்களாய் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய கிருபைக்குப் பாத்திரர்களாய் உச்சீவியுங்களென்று சொன்னார்.

வாராய் உத்தராவத்ஸலசத்தமே அந்தகோகுலஜனசமூகங்கள் நந்தகோபரால் இந்தப் பரமாஸ்சர்யார்த்தமெல்லாம் விதிதமாயறிந்து சங்கையற்றுப் பரமாநந்தபரிதர்களாய் ஸ்ரீபகவானையும் நந்தகோபனையும் பூசித்துக்கொண்டிருந்தார்கள். திரிலோகவந்திதனான இந்திரனானவன் தமதுயாகத்தைச் செய்யாமல் பர்வத பூசையைச்செய்த கோபாலர்கள் விஷயத்தில் கோபித்துத்தமது அதிகாரத்திலடங்கிய மேகத்தைவிட்டுச் சிலவருஷங்களை வருஷிப்பித்தும் பெருங்காற்றுக ளடிப்பித்தும் கோகுலத்தவர்களை அகஞ்செய்யநினைத்த நினைப்பையறிந்துச்சாதுக்களாகிய கோபாலஜன ஸமூகங்களையும் கோபிகாசனங்களையும் கோவின்ஸமூகங்களையும் மற்றுமுண்டான சேதனாசேதன ஸமூஹங்களையும் கோவர்த்தனதரராயிரக்ஷித்தபரமகாருணிகோத்தமராகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் இந்திரனைக்கர்வாபஹாரஞ்செய்து க்ஷமித்து அவ்விந்திரனையும்சமஸ்தமானபேரையும் அநுக்ரகித்ததுபோல நமது இந்திரிய தோஷங்களையும்போக்கி நமக்குஸ்ரீபகவத் பக்திவிலட்சண க்ஞான யோகத்தை அநுக்ரகஞ்செய்யக்கடவனென்று சொல்லித்துதித்தனர்.

---

## உஎ - வது - அத்தியாயம்.

### கலி விருத்தம்.

தேநுமிந்திர னேயிகரத்தவன்
சாருதிவ்ய குணதிசயமறந்
தேருங்கோகுலத் தோனையிம்சித்ததால்
பாரபத்மபதந் துதித்தானரோ.

இந்திரபகவானானவர் திரிலோகாதிபதித்வகர்வத்தால் ஸ்ரீபகவானுடைய கல்யாணகுணங்களை மறந்து கோகுலசனங்களை நலியச்செய்ததினாலே அபராதத்தைக்ஷமிக்கச்செய்வதற்காக காமதேனுவை முன்னிட்டு ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்திற்குவந்து கோவிந்தபட்டாபிஷேகஞ்செய்து துதித்தாரென்றுசொல்லுகின்றது

வாராய்கல்புருஷ கர்வாபஹாரனாகிய மகோத்தமராஜவல்லபனே மகாபிரளய வர்த்தகமென்னு மூழிகால மேகங்களைக்கொண்டு கோகுலஜனங்கள் பிராணபீதியடைந்து நலியும்படி கல்மழைகளை வருஷிப்பித்து யதாஸ்தானத்தை யடைந்து தேவசாரணர்களால் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய அதிமானுஷ சேஷ்டித கல்யாண குணங்களைக்கேள்விப்பட்டு மஹத்தாகிய ஆச்சரியத்தையுமபீதியையும் அடைந்த இந்திரனானவன் சாந்தசித்தனாய் அகோரமானகாரியஞ் செய்தேன் ஸ்ரீபகவத் விஷயத்தில் அபராதங்களைச்செய்தேனேயென்று சிந்தித்துமூவுலகராஜ்ய ஐஸ்வரியவிபவத்தை நிந்தித்துநிகர்வசிரோமணியாய் ஏகோதுஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனாத்மக சாவலோகஜகத்ப்ரபுவே உனது கடாட்சவீட்சண்யலேசாம்சங்களையடைந்து லோகபாலர்களாய் இந்தப்பிராகிர்த கர்மவிபவைசுவரியமதத்தினால் எங்களைநாங்கள் மறந்து எங்கள்சிரேயசடசுக்கு இடாவரும் போதெல்லாம் எங்கள் துஷடதன்மையைப் பரமகிருபாமயதிருவுள்ளத்தில் நினையாமல்எப்பொழுதும் இரட்சிக்கின்ற ஸ்ரீஹரீ எங்களபராதங்களை க்ஷமிக்கக் கடவீரென்று துதித்துக்கொண்டு தேவதாசுரபியான காமதேனுவையழைத்துக்கொண்டு பூமியினிடத்தில் வந்து பசுக்கூட்டங்கள பலதிசையினும்பரவிப்பிரிந்துமேயக் கோபாலகுமாரர்கள் அந்தப்பசுக்கூட்டங்களைக் காக்க பலதிசையினும் போயிருக்கத் தனித்துவராயெழுந்தருளியிருக்கின்ற திருத்துழாய்மாலை மார்பராகிய ஸ்ரீகண்ணபிரானைத்தம்முடைய ஆயிரங்கண்களுங் களிகூரக் கண்டு ஆநந்தங்கொண்டு நல்லசமயம் வாய்த்ததென்று உள்ளமுருகி ஸ்வாமிசந்நிதியில்வந்து இரண்டு கரங்களையுங் கூப்பி சூரியமண்டலத்தைப்போல பிரகாசிக்கா நின்ற அநந்தநிவ்ய ரத்நங்களிழைத்த ஸ்வர்ண கிரீடமானது ஸ்ரீரங்கவத்ஸலராகிய ஸ்ரீபகவானுடைய இரண்டு திருவடித்தாமரைகளுக்குத் திருப்பாதுகையைப்போல அலங்காரமாகும்படி ஸாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து இரண்டுகரங்களையும் உயரவெடுத்து அஞ்சலிசெய்து துதிபூர்வகமாகச் சொல்லுகின்றார்.

### இந்திரபகவானுடைய வாக்கியம்

வாரீர்ஸ்ரீஜகதீஸ்வரராகிய ஸ்ரீபகவானே தேவரீர் பிரம்ஹா-சிவன்-நான்முதலியசர்வாத்ம கோடிகளினுடைய அபராதங்களைக்ஷமித்து இரட்சிக்கும் பொருட்டேயல்லது நிகில ஹேயகுணமில்லாதவரான உமது ஸ்வவிரயோசனங்களுக்குக் கல்லவென்று வேத வேதாந்தங்களாலும் வேதபுருஷனாலும் வேதாந்ததத்வக்ஞானிகளுடைய சம்பூரண இருதயங்களினாலும் பிரதிபாதிக்கப்படுகின்றது

வாரீர் துஷ்டஜனநிக்கிரகசிஷ்டபரிபாலக வல்லவரே பிரமன்முதலியலோகேசர்களுக்கும் அடியேன் முதலியதேவதாதி சமூகங்களுக்கும் சர்வப்ர பஞ்சங்களுக்கும் தாயுந்தந்தையுங்குருவுமாகியிருக்கின்ற உமது ஆக்ஞையினால் நாங்கள்ஒவ்வொருலோகங்களுக்கு அதிகாரஞ்செலுத்துகின்றோம்இப்படிஅதிகாரஞ்செலுத்துகின்றநாங்கள்எங்களைநாங்கள் மறந்து கர்வித்து மூடமதிகொண்டவர்களாய்ஸ்ரீசர்வேசுவராகியஉம்முடைய ஆதீ

னே; அந்தமேந்திரியபதிமேந்திராயநக்ரகபராகளாகிய பரம முநீந்திரர்களால் சேவிக்கவுந் துதிக்கவுந்தகுந்தசர்வமங்கலாவக கல்யாணகுணங்களையும், சகல பிராணிகளுந் தமக ளுழ்வினைப்பகுதியான ஜன்மங்களிற் சம்பாதித்த பாவங்களொழிந்துஉய்வதற்கு முக்கியஸ்தானமாகியகங்காப்பிரவாகத்திற்கு உற்பத்தி காரணமாகயிருக்கிற சரணாரவிந்தங்களையுடைய ஸ்ரீவிஸ்வேசராகியும்சர்வப்பிரபஞ்சஸ்வரூபராகி விளங்குகின்றஉம்மை நாங்கள்பரிசுத்தவிலக்ஷண ஞானங்களைவகித்துச் சாசுவதமாகிய பிரம்ஹானந்த சௌக்கியங்கள் இப்படிப்பட்டதென்று உமது அவதார தரிசனப் பிரபாவத்தால்கண்டிருதார்த்தர்களாகின்றோம்,

வாரீர் தேவதேவதேவதாசிரோரத்நமே.நீர் எங்களுக்கும் சமஸ்தமான தேவதைகளுக்கும்சம ரக்ஷணார்த்தமாகத் திருவவ தரிக்கின்றவராய்ப்பிரகாசிக்கின்றவுமக்கு இவ்வண்டாதிபதியாகிய சதுர்முகனுலவா என்னையும் இவ்விந்திரனையும் பார்த்து இவருடைய அபராதக்ஷாபணத்தின்பொருட்டும்.தர்மத்தை நிலைநிறுத்துவதுமுதலிய பூமிபாரநிவாரணத்தின்பொருட்டும், தேவதா சக்ரவர்த்தி நாமமாகியமகேந்திர விபவாதிசயசர்வேந்திராதிபத்திய தேவபட்டத்தைச் சமர்ப்பித்து வரும்படிக்ஞாபித்துக் கோகணசமேதையாகிய என்னையும் இவ்விந்திரனையு மனுப்பினர்,ஸ்ரீயப்பதியாகியதேவரீர் அங்கீகரித்தருள வேண்டுமென்று துதித்து ஸ்வர்ணபாத்திரங்களில் தேவாமிர்தத்திற் கொப்பாகிய க்ஷீரங்களைகறந்து சுகந்தபரிமள திரவியங்களுடன் அமைத்தார்கள்,அச்சமயத்தில் தேவேந்திரனானவன்ஐராவதமென்கிற வெள்ளையானையைச் சமஸ்தபூஷணாலங்காரத்துடன் அழைத்துவந்து தேவசாரணர்களையனுப்பி சகல புண்யதீர்த்தங்களையும் அழைப்பித்துஅநந்தமாகியரிஷிசமூகங்களும்சகலதேவதாகணங்களும் இந்திராணியும்ரம்பைமுதலியஸ்திரீஜனங்களுஞ்சூழக் காமதேனு சகிதராயிருந்துஸ்ரீபுருஷசூக்த வசனங்களைச்சொல்லி அந்த ஐராவதத்தின் மீதுசுரபிக்ஷீரமுதலிய சர்வ புண்யதீர்த்தங்களையும்தேவதுந்துபிமுதலிய சர்வமங்கல வாத்தியங்களுடன்பவனியாகக கொண்டுவந்து அதன்துதிக்கையினு லெடுத்துச்சமர்ப்பிக்க ஸ்ரீபகவானுக்குத் திருவபிஷேகஞ்செய்து நீர்துவட்டி வஸ்திரபூஷண கந்தபுஷ்பாலங்காரங்கள்செய்து கோடிசூரியப்பிரகாசதேவகிரீடத்தைத்திருமுடியிற்சாத்திச்சர்வயக்ஷகிந்நர கருட கந்தர்வர்முதலியவர்கள் ஜபாவிஜைபவாவென்றுதுதிக்க ஸ்ரீகோவிந்தநாமத்தைஸ்ரீகிருஷ்ணபகவானுக்குச்சாத்திஏககண்டர்களாய் ஸ்ரீகோவிந்தாகோவிந்தா ரட்சியும் ரட்சியுமென்றுதுதித்தார்கள் அத்தருணத்தில் தும்புருநாரதாதிகள் ஸ்ரீபகவந்நாமஸ்மரணாதிகானங்களைச் செய்தார்கள். அரம்பையர்கள்முதலிய அப்சரஸ்திரீகள் நர்த்தனஞ்செய்தார்கள்மற்றும்தவதைகள்யாவரும புஷ்பவருஷங்கள்வருஷித்தார்கள் நிகிலருஷிகணங்களும் மவுநிகளும்வேதார்த்தவாக்கியங்களால்ஸ்ரீபகவானுடையஆச்சரியகுணசேஷ்டிதங்களைப்புகழ்ந்துதுதிக்கும்போது இந்தமூன்றுலோகங்களும்சௌக்கியகரங்களாய் விளங்கின சமஸ்தமான கோவினங்களும தேவாமிர்தத்திற் கொப்பாகிய க்ஷீரஸம்ருத்திகளோடுவிருத்தியடைந்தன. நிகில புண்யநதிகளும் ஜலசமர்த்தியாய்அலைகளோடுங்கூடித்தெளிந்து பிரவாஹித்தனசகலமானவிருக்ஷங்களும்நானாவித ருசிபக்குவங்களான பலங்களோடும்பலித்து மதுக்களைவருஷித்தன,சர்வ சஸ்யங்களும்விருத்தியடைந்துபலித்தன.சகலமான கொடிகளும்நானாவிதசுகந்தபரிமளபுஷ்பங்களுடன் விளங்கின, பர்வதாதிகள்யாவும்நானாவிதமணிகண இரத்ந பிரகாசங்களோடுஜ்வலித்தன, அந்த பிருந்தாவனபுண்யப்பிரதேசங்களில் வாசஞ்செய்கின்ற சமஸ்த சேதனசேதனஸமூஹசர்வப்பிராணிகளும் ஆசாபாசங்களைவிட்டு மகாகுணங்களை வஹித்து ஸ்ரீகிருஷ்ணபகவானையேதஞ்சமாகநம்பி விருத்தியடைந்து பிரகாசித்துக்கொண்டிருந்தன, இப்படிப்பட்ட லோக மங்களகரங்களுக்குச் சந்தோஷத்தையடைந்து இவ்விந்திரகாமதேனுசகிதராய் அநந்தமாகிய தேவருஷி சமூஹங்களும்தம்மைச்சூழஸ்ரீகோவிந்தபகவானிடத்தில்அனுக்ஞையைப்பெற்று ஸ்ரீபகவானைத் துதித்துக்கொண்டே தமது ஸ்வர்க்கலோகத்திற்குப் போய்ச்சேர்ந்தார்.

—*—

## உஅ - வது - அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருந்தியநந்தகோபர்திவ்யயேகாதசித்த, னருந்தவமிழைத்துத்தீர்த்தமாடிநிந்த சமயந்தன்னில். கருதியநந்தகோபர் காணமையாலேகண்ணன், வருணலோகத்திற்சென்ற வாறினைச் செப்புவாமே,

நந்தகோபர் ஸ்ரீஹரிதிவசமாகிய ஏகாதசி விரதமனுஷ்டித்து த்வாதசிபஞ்சவுஷக்கால ஸ்நானத்திற்குஸ்ரீயமுனாநதிக்கு எழுந்தருளித் தீர்த்தமாடுகின்ற சமயத்தில் தனுஜ சமயமானையால்வருணப் பிருத்தியனானவன் தனது மாயையினால்ஸ்ரீநந்தகோபரை வருணலோகத்தில் கொண்டுபோயொளித்ததும்கோகுலத்தவர்களுடைய முறைகளைக்கேட்டு ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் வருணலோகத்திற் கெழுந்தருளி ஸ்ரீநந்தகோபரை மீட்டுவந்ததும் கோகுலத்தவர்களுக்கும் ஸ்ரீபரமபதமுதலிய சர்வபுண்யலோகங்களையும் சமஸ்தப்பிரபஞ்சங்களையும் தமதுதிவ்யஸ்வரூபத்தில் ஸேவிக்கும்படிக் கிருபைசெய்ததும் சொல்லுகின்றது,

வாராய் மஹாராஜனே, கோகுல சக்கரவர்த்தியா

இய நந்தகோபரானவர் ஸ்ரீஹரிதிவசவிரதங்களை மிகவும் பக்திசிரத்தையோடு அனுஷ்டிக்கின்ற பரம வைதீகராகையால் ஒருஏகாதசிதிவசத்தில் ஸ்ரீஹரியைப் பூசித்துக்கொண்டிருந்து அன்றுஇராத்திரி காலமெல்லாங்கண்விழித்து தனுஜகாலமென்றுணராமல் பஞ்சவுஷக்காலமென்றுநினைத்துச் சிலகோபாலசனங்களுடன்கூட ஸ்நானத்திற்கு யமுனாநதிக்கெழுந்தருளி ஸ்ரீஹரியென்று சங்கல்பித்துககொண்டு ஸ்ரீகிருஷ்ணாஸ்ரீமாதவா ஸ்ரீகோவிந்தா ஸ்ரீபுருஷோத்தமனே ஸ்ரீபக்தவத்ஸலா சரணமென்று ஸ்ரீபகவந்நாமங்களை ஸ்துதிசெய்து கொண்டுதீர்த்தமாடுகிறசமயத்தில் வருணதேவனுடையபிருத்தியர்களில ஒருவனாகிய ஓர்அரசனானவன் இந்த ஸ்ரீநந்தகோபரைப்பார்த்துத் தனதுமாயாசாதுரியத்தினால்இவரைக்கிரகித்துக்கொண்டு வருணபகவானுடைய சமுகத்தில்சேர்த்தனன் அத்தருணத்தில சமஸ்தமான கோபாலர்களும் நந்தகோபரைக் காணமல் திடுக்கிட்டேங்கியெங்குந்தேடிக்கலங்கி ஸ்ரீபலராம கிருஷ்ணர்களுக்குத் தெரிவித்துஆஆகாரங்களைச்செய்துமுறையிட்டார்கள்.

ஸ்ரீவருணபகவான்வாக்கியம்

வாராய்ராஜயோகியான மகாராசனே ஸ்ரீசர்வக்ஞராகியும் ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் பரமஸாது சிகாமணியாகியும் தமக்குப்பிதாவாகியும் விளங்குகின்றநந்தகோபரைக்குறித்து க்ஷணகாலஞ்சிந்தித்து வருணப்பிரத்தியனால் வருணநகரத்தில் வருணபகவானுடைய சமீபத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றாரென்றறிந்து அந்தக்கோபாலர்களைப்பயப்படா திருங்களென்று அபயப்பிரதானஞ்செய்து ஸ்ரீபகவான்தமது யோகமாயாப் பிரபாவத்தினால் அஷ்டதிக்குபதிகளில் ஒருவராகிய வருணபகவானுடைய மகாநகரத்திற்குளெழுந்தருளினார்ஸ்வாமியெழுந்தருளின சமாசாரத்தைச்சாரணர்களாலறிந்து வருணபகவானனவர் அர்க்கியபாத்தியவாசமனாதி அநேகபூஜாத்ரவியங்களுடன் ஸ்ரீபகவானுக்கெதிர்கொண்டுவந்துதரிசனஞ்செய்து பரமசந்தோஷராகி மிகுந்தபக்தி சிரத்தையுடன் வேதோக்தக்ரமமாக நானாவித தேவோபசாரங்களைச்செய்து திவ்யஷேபமாலிகைகளை சமர்ப்பித்து ஒருவார்த்தைசொல்லுகின்றார் வாரீர்கருணா பயோநிதியாகிய ஸ்ரீமாதவரே யோகேஸ்வரர்களாகிய மகாநுபாவர்களாலும் லோகேஸ்வரர்களாகிய பிர்ம்மாதிகளாலும் சரணமடைந்துய்வதற்குரியனவாகியும் அவர்களுக்கெட்டுதற்கரியனவாகியும் விளங்குகின்றஉமதுபாதாரவிந்தங்கள் பிரத்தியட்சமாக ஒருகோணாதிபதிக்வத்தால்மமதை வகித்திருக்கின்றவென்னையுங்கடாக்ஷித்தருமன்னிந்து இரட்சிக்கும்பொருட்டெழுந்தருளினதால் இங்கேரமானது மகாபாவனங்களையடைந்தது எனது இருதயமும் கிருதார்த்வங்களையடைந்து பிரம்ஹாநந்தசந்தோஷங்களுண்டாகப்பெறநது உமதுஸேவார்த்தங் களினால் நான்சர்வசௌக்யங்களையு மடைந்து சரீரேந்திரியங்களின்தாபஙகளற்று அவைகளைப்பெற்றுக் கொண்டதற்குரிய மகத்தானசௌக்யசுகாதி சயங்களை யடைந்துய்யவும்பெற்றேன்.

இந்தநந்தகோபர் தேவரீருக்குப்பிதாவென்கிறதுதெரியாமல் கொண்டுவந்தார்கள் அந்த அபராதத்தைப் பொறுத்து அடியேனை இரட்சிக்கவேண்டுமென்றுவினவுகிற வருணனைப்பார்த்துசந்தோஷித்துஅவனிடத்தில் சிலவுபெற்றுக்கொண்டு நந்தகோபருடன்யமுனைக்கரைக்குவந்து சேர்ந்தனர்பின்பு நந்தகோபர் கோபாலர்களுடன்தான்வருண லோகத்தை கண்ட அதிசயங்களையும் அந்தவருணனால்ஸ்ரீகிருஷ்ணன் பூசிக்கப்பட்டுபிரதி உத்தரஞ்சொன்னது முதலியதுகளைச்சொல்லிமிகவும்ஆச்சரியப்பட்டு சகலகோபாலர்களும் ஸ்ரீகிருஷ்ணனைப்பூசித்து உத்தமமானகதியை அடையவிரும்பினார்ஸ்ரீகிருஷ்ணன் அவர்களுடையஅன்பை தாமறிந்துமிகவுந் திவ்யதேஜோமயமாகியும் சாசுவதமாகியும ஒன்றினாலுந் துன்பப்பட்டதாகியும் ஆதிமத்தியம் முகிவில்லாதாகியுமிருக்கின்ற தம்மிடநிஜரூபத்தையும் கோடிசூரியசமானர்களாயிருக்கிற நித்தியசூரிகளால் சூழப்பட்டும்அதிசயமான ஐஸ்வரியத்துடனும் அனேககோடிநடபாவிகிணறுகள் நானாவிதமான தாமரைத்தடாகங்கள்நந்தவனங்கள்நித்தியமான சம்பத்துகளால் நிறைந்தும் மகான்களால்அசமாதிமாக்கத்தால் அடையத்தக்கதாயும்சத்புருஷர்கள் சரணாகதிமார்க்கப்படிக்கு ஸ்வாமியைசரணாகதிபண்ணி அடையத்தக்கதாயுமிருக்கிற ஸ்ரீவைகுந்தம் வாக்குக்கும்மனதிர்க்கும்எண்ணவொண்ணாப் பிரபாவமுடையதாயிருந்தாலும் தன்னைப்போலொத்தஅன்பனிருக்கையிலொன்றுங்குறைவில்லையென்பது தெரியப்படுத்தவேண்டி அந்தயமுனைக்கடுத்த பிர்ம்மஹிருதமென்றுபேருடைய மடுவினில் ஸ்ரீகிருஷ்ணஸ்வாமியினிடஆக்கினையின்படி ஸ்நானஞ்செய்துகொண்டிருக்கையில் அவர்கட்கு கியானக்கண்ணைக்கொடுத்துஸ்ரீவைகுண்டலோகத்தையுந்தம்மிட நிஜரூபத்தையுங்காட்சி கொடுத்தனர் அதைக்கண்டுசேவித்து அந்த ஆனந்தத்தினால் ஒருமுகூர்த்தம் பரவசர்களாயிருந்தார்கள் பிறகு ஸ்ரீகிருஷ்ணன்கோபாலர்களை மடுவிலிருந்துகரையேற்றி வீட்டிற்குவந்து சேர்ந்தனர்பின்பு யமுனையில்கண்ட ஆச்சரியங்களை நினைத்துக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணனை ஸ்ரீமந்நாராயணனென்றெண்ணிசகலகோபாலர்களும் அவனையே ஆராதனஞ்செய்துகொண்டிருந்தார்கள்.

## ௨௰-வது- அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பாலகிருஷ்ணன் சுக்கிலபக்ஷவர்ணையும்
சாலகோபியர் செய்யுஞ்சம்வாதமும்
ஏலுஞ்சர்வப்பிர பஞ்சத்தினேறகையும்
மாலன்றன்னவதேர்ந்த தானம்வழுந்துவாம்

இதனுள் சரற்கால சுக்கிலபட்ச சந்திரோதய வர்ணனைகளையும், ஸ்ரீபகவானுடைய வேணுகானஸ்வர மகிமைகளையும் ஸ்ரீகிருஷ்ண கோபிகாஜனஸம்வரதங்களையும் - ராஜக்கிரீடாதி சயங்களினுல்கோபிகாஜன மனோரதானுபவங்களையும், சர்வப்ரபஞ்சமனோலய கோபிகாஜனசித்த சேதனுர்த்தமாக ஸ்ரீபகவதந்தர்த்தானமுஞ் சொல்லுகின்றது.

வாராய் ராஜேந்திரனே,பாமுகிருபா பயோநிதியாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானுனவர் சமஸ்தகோபிகா ஜனங்களின் இஷ்டங்களைப்பூர்த்திசெய்யநிச்சயித்தவராயெழுந்தருளியிருந்தார், இப்படி யிருக்கின்றகாலத்தில் ஒருதிவஸத்தில் அஸ்தமானமாய்சர்வப் பிராணிகளுக்கும் காமபோகங்களை அனுபவிப்பதற்குக் தகுந்தலட்சணயுக்தமன்மதன் புஷ்பசர வருஷங்களை வருஷிப்பதற்குசமயமாகியஇராத்திரி காலம்வந்தது.அப்போது மல்லிகை முல்லைஜாஜி நந்த புஷ்பங்கள் அலர்ந்துபரிமளிந்தனவண்டினங்கள் புஷ்பங்களின்மேல் அணிபணியாகப்பாய்ந்து தேனையுண்டு மகரந்தங்களைப்பூசிக்கொண்டு ரீங்காரவிசைகளைப்பாடின சந்திரகிரணங்களைப் புஜித்துச்சார்வநாதம்பதி சமேசங்களாய்ப்போகங்களை யனுபவித்துக்கொண்டிருக்கத்தக்கசகோர அன்றிலாதிபட்சிகள் கிழக்குத்திசையை விரும்பிப்பார்க்கின்றன மகாசௌந்தரிய வதிகளாகியகோபிகாசனசமூகங்களுக்குஇஷ்டங்களையடையத்தகுந்தகாலலக்ஷணத்திற்குரியவராகியும் சர்வபிராணிகளுடைய மோகாநிபை வாருனைகளைவிருத்தியடையச்செய்கின்ற ஸ்ரீமன்மதபகவானுக்கு வெண்குடை உருவராகியும் இராத்திரிகாலமாகிய ஸ்திரீக்கு மணவாளராகியும் விளங்குகின்ற ஸ்ரீசந்திரபகவானுனவர் கிழக்குந்திக்காகிய உத்தமஸ்திரீயைத்தமதுகிரணங்களாகியகைகளினுல் ஆலிங்கனஞ்செய்து இதுவரைக்கும் பிரிந்திருந்ததினுல்அவளுக்கு உண்டாயிருந்த தாபங்களைத்தீர்த்து உதயமானுர் அந்தச்சந்திர பகவானுனவர் அவ்வுதயகாலத்தில் கீழ்த்திசைமகளுடையமுகாரவிந்தத்திற்கு ஒருகுங்குமதிலகத்தைப் போலவும், விரகிணி ஜனங்களின்மீது யுத்தத்திற்குச் செல்லுகின்ற மன்மதனுக்குச்சுபத்தைக் காண்பிக்கிறதாகஅமைத்திருக்கின்ற பூர்ணகும்பத்திற்கொப்பாகவும் மகாகர்மிகளாகிய ஜனங்களின்மோகமாகிய கொடிகளை அறுக்கத்தக்கின மாரனுடைய சக்ராயுதத்திற்றதிகராகவும் காமகேளிரதிகளில் மூழ்கிபிரமித்துக்கொண் டிருக்கின்ற விரகிணீஜனமிருகங்களைச்சபிப்பதற்கு மதனன்கொண்டுவந்த ஒருமோகதீபமென்னவும் யவ்வனமுடையஸ்திரீபுருஷஜனசமூகங்களின் ஊடல்களாகியகடினமனோரதாரண்யங்களைக் கொளுத்தவஸந்தன்கொண்டுவந்தபெருந்தீயின்கொழுந்திற்குச் சமானமாகவும் விசித்ரமானஸ்வரூபத்தைவகித்து விருத்தமாகியும்சிவந்தநிறத்தைகொண்டுந் தோன்றினுர், உடனேசகோராதிபட்சிஸமூகங்கள் மகத்தானசந்தோஷங்களை யடையத் தக்கதாகத் தமதுகுளிர்ந்த கிரணங்களைவியாபிக்கச்செய்தார்.

வாராய்இராஜோத்தமனே ஸ்ரீபுருஷோத்தம ராகிய ஸ்ரீபகவானுனவர் பிருந்தாவனமகாலட்சுமீ முகாரவிந்தத்திற்கு அலங்காரமாகியநவகுங்குமாங்கித திலகம்போலவிளங்கிய இந்தமண்டலாகார சந்திரோ தயத்தையும் சந்திரகிரணங்கள் அவ்வனமெங்கும்வியாபித்துக் குளிர்ச்சியுண்டாக்குதலையும் அதனுல்ஆம்பல்முதலியநானுவிதசுகந்த பரிமளசுகந்த புஷ்பவினங்கள் சேபிதமாக மலர்ந்து பிரகாசித்துக்கொண் டிருப்பதையும் இவைகளால் அவ்வனலட்சுமியடைந்திருக்கின்ற சௌந்தரியங்களையுங்கண்டு கோபிகாசனத்தின்இஷ்டத்தை பூர்த்திசெய்யத்தக்கவராய் ஸ்ரீயமுனுதீரத்திற்கெழுந்தருளி புன்னகையுடன்மகாகம்பிர மதுர ஸ்வரங்களோடுங் கூடியவேணுவைத்தமது திருவதரத்தில்வைத்து கானங்களைச்செய்து விஹரித்துக்கொண்டிருந்தார் அத்தருணத்தில்அந்தவேணுஸ்வரத்தினுல் அந்தப் பிருந்தாவனத்தில் விருத்தியடைந்து கொண்டிருக்கின்றசகலசேதனுசேதனங்களும் பிரமமாநந்தபரவசத்தைக்கொண்டு விளங்கின.கோகுலத்தில் வாசஞ்செய்துகொண்டிருக்கின்றசமஸ்தமானகோபாலர்களும் கோபிகாசனங்களும் தங்கள்தங்கள்செவியாகிய இந்திரியங்களினுல் அந்த மதுரகானதேவகீதரஸங்களைவாரியுண்டு வேறுவிஷயங்களில்பிரவேசிக்கத்தக்க சித்தசூன்யர்களாயிருந்தார்கள். இந்த கோபிகாசனங்கள் ஸ்ரீகிருஷ்ண விரஹவேதனு தாபங்களைச்சகிக்கமாட்டாமல் பரமயோகிகளுக்கும் விடக்கூடாத சமஸ்தஉலகவாழ்க்கைக்குரிய பிதாபுத்திராதிசர்வசம்பந்தங்களையும் திவ்யாலங்காரங்களுக்குரியதனகனகவஸ்துஆபரணுதிகளையும் போசனசயனுதிசகலானுபவங்களை யும் க்ஷணமாத்திரத்தில் துறந்துவிட்டவர்களாய்ப்புறப்பட்டார்கள் அவர்கள்புறப்பட்டவகையை விவரமாகக்கேளாய்அரசனேசமஸ்தமான கோபிகாசனங்களும்தங்கள்தங்கள் க்ருஹகிர்த்தியங்க ளூற்றமுள்ளவர்களாய்ப்பசுக்களுடைய பாலைக்கறக்கறினைத்துக்கன்றுகளையவிழ்த்துவிட்டார்கள் சிலர்கன்றுகளை ஊட்டவிட்டுக் கறந்துகொண்டிருக்கின்றார்கள்.சிலர்கன்றுகளையணை

த்துப்பாலகறக்க யத்தனமாயிருக்கின்றார்கள சிலர்கன்
றுகளை மறுகாலூட்டவிட்டுக்கட்டினார்கள்- சிலர்கட்டிக்
கொண்டிருக்கின்றார்கள சிலர்கட்டயத்தனமா யிருக்கி
ன்றார்கள் சிலர்பாலின்கலசத்தைஎடுத்துப் போய்அடுப்
பில்வைத்துக் காய்ச்சுகின்றார்கள் சிலர் காய்ச் சிறக்கிக்
கொண்டிருக்கின்றார்கள் சிலர்காய்ச்சுதற்கு யத்தனமா
யிருக்கின்றார்கள் சிலர்பாலேக்காய்ச்சிறக்கிறார்கள் சிலர்
இறக்கப்போகின்றார்கள் சிலர் இறக்கயத்தனமா யிருக்
கின்றார்கள சிலர்காய்ந்தாறினபாலைத் தங்கள் குழந்தை
களுக்கு வார்த்தூட்டினார்கள். சிலர்வார்த்துக்கொண்டி
ருக்கின்றார்கள் சிலர்வார்த்தூட்டயத்தனமாயிருக்கின்
றார்கள் சிலர்காய்ந்தாறினபாலைத் தங்கள்,குழந்தைகளு
க்குவார்த்தூட்டி மிகுதியிற்பிரைசேர்த்தார்கள். சிலர்பி
ரைசேர்த்துக் கொண்டிருக்கின்றார்கள் சிலர்பிரை
சேர்க்க யத்தனமா யிருக்கின்றார்கள் சிலர்தங்கள் ப
ர்த்தாக்களுக்குஉபசாரங்கள்செயதுகொண்டிருக்கின்று
ர்கள் சிலர்உபசாரஞ்செய்தானவர்கள் உபசாரஞ்செய்ய
யத்தனமாயிருக்கின்றார்கள் சிலர்போசனஞ்செயதுகொ
ண்டிருக்கிறார்கள் சிலர்புசித்தானவர்கள் சிலர்புசிக்க ய
த்தனமாயிருக்கின்றார்கள் சிலர்தங்களளகபாரத்தில்சுக
ந்தபரிமளஜாஜி புஷ்பமாலைகளை அலங்கரித்துக்கொண்
டிருந்தார்கள் சிலர்அலங்கரித்துக்கொண்டானவர்கள்சி
லர்அலங்கரித்துக்கொள்ள யத்தனமாயிருக்கின்றார்கள்
சிலர்நவரத்னகசிதமான ஸ்வர்ணாபரணங்களை யணிந்து
கொண்டிருக்கின்றார்கள் சிலர்அணிந்தானவர்கள் சிலர்
அணியயத்தனமாயிருக்கின்றார்கள் சிலர் கோதும்பை
யன்னபாயஸங்கள்முதலிய நாநாவித ருசிவர்க்கங்களாகி
ய விசித்ரசிற்றுண்டிகளைப்பாகஞ்செய்துகொண் டிருக
கின்றார்கள்சிலர்பாகஞ்செய்துஅவரவர்களுக்குவிநியோ
கித்துக்கொண்டிருக்கின்றார்கள் சிலர்விநியோகிக்க வே
ண்டுமென்று யத்தனமாயிருக்கின்றார்கள் சிலர் தங்கள்
சுந்தரமாகிய நேத்திரங்களுக்கு அஞ்சனங்க ளிடுகின்
றார்கள் சிலர்அஞ்சனங்கள் குழைக்கின்றார்கள் சிலர்கு
ழைக்கநினைத்துக்கொண் டிருக்கின்றார்கள் சிலர்தங்கள்
குசபாரங்களில்திவ்யபரிமள ஸ்ரீசந்தனாதி சுகந்தங்களை
யணிந்தார்கள் சிலர் அணிந்துக்கொண்டிருக்கின்றார்கள்
சிலர்அணியயத்தனமா யிருக்கின்றாகள சிலர்வஸ்திரங்
களை நன்றாயுடுத்தினார்கள் சிலர்உடுத்திக்கொண் டிருக்
கின்றார்கள் சிலர்முன்றானையைசசொருகினார்கள் சிலர்
முன்றானையைச் சொருகுகின்றார்கள் அங்கங்குக் கூடி
ச்சந்தோஷித்தமானஸர்களாயிருக்கின்றார்கள்சிலர்ஸ்ரீகி
ருஷ்ணலீலைகளைக்குறித்தும் கருதுகிர்த்தியங்களைக் கு
றித்தும் வசனித்துக்கொண்டிருக்கின்றார்கள் சிலர் இவ்
விதங்களாகக் கோபிகாஸ்திரீ ஜனங்களெல்லாம்தங்கள்
தங்கள்யதாஸ்தானங்களில் விஹரித்துக்கொண் டிருக்கி

ன்றார்கள இப்படியிருக்குஞ்சமயத்தில்ஸ்ரீபகவானுடை
ய முரளிகான மதுரஸ்வரங்கள் செவிகளில் நுழையும்
போது அவற்றுடன்அதிகதுரிதமாய்க் கரும்பு வில்லை
வளைத்து மன்மதன்தொடுத்து விடுகின்றபுஷ்பபாணங்
களும் அந்தஸ்திரீகளினுடைய மார்பில்நுழைந்தனஅ
தனால்அந்தஸ்வரங்களைக்கேட்ட மாத்திரத்தில் தங்கள்
சரீரஸ்மரணங்களைமறந்து க்ருஹகிர்த்தியங்களை யெல்
லாம் எவையெவையெப்படியெப்படியிருந்தனவோ அ
வைகளையப்படியப்படியே விட்டுவிட்டவர்களாய்ஸ்ரீகிரு
ஷ்ணனிடத்தில்வைத்த மனதுடையவர்களாய் ஒருவர்க்
கொருவர் சகிஜனங்களுக்குஞ்சொல்லாமல்அவரவர்கள்
யதேச்சாவிகாரிகளாய்ப் ப்ராதாக்கள் பர்த்தாக்கள் மைத்
துனர்கள்முதலிய பந்துஜனங்களால்தகையுப்பட்டபோ
திலும் லேசமாத்திரமும்அவர்கள் ஆக்ஞைக்கஞ்சாமல்
வேலைக்குறைவையும் யோசியாமல்நிர்மதிகாரணராய்ச்
சர்வசங்க பரித்தியாகிகளைப்போல் வெளிப் புறப்பட்டு
அந்தச்சுகிதத்வனிமார்க்கவேகமாயும், மந்தமாயும் பூரி
த்தஸ்தனங்கள்குலுங்கவும் கொடிபோன்றஇடைதுவள
வும் கூந்தல்சோரவுமேகலைதாழவும்ஸ்ரீகோவிந்தசந்தரி
சனார்த்த குதூஅலபரர்களாய்ஸ்ரீயமுனாநதீதீரசமீபத்தி
ல்வந்துசேர்ந்து சந்திரகிரணங்களைக் குவித்தொத்திரு
க்கின்ற வெண்மணற்குன்றுகளின்மேல் அன்னங்கள்கு
ம்புகும்பாய்வந்து தங்கியதற் கொப்பாகவும் அவ்விடத்
திருக்கின்ற சோலைகளில்விருட்சங்களின் கீழ்வரிசைவ
ரிசையாய்க் கொடிகளிருப்பதற் கொப்பாகவும் நின்றார்
கள் வாராய்நற்குண விவேகசில நரேந்த்ரனே அந்தஸ்ரீ
கோகுலத்தில் இன்னுஞ்சில கிருஹஸ்தாகளாகிய மகா
பாக்கியவான்களினுடைய வீட்டுஸ்திரீசனங்களில் சில
ர்தங்கள் கிருகஸ்தர்களுடைய ஆக்கினையினால் கிருஅத்
தில் நிலவறைகளுக்குள் இருக்கின்றவர்கள் வெளிப்புற
ப்படச்சக்கியமில்லாதவர்களாய் ஸ்ரீகிருஷ்ண பகவத்கு
ணங்களில் மோகித்துதங்கள்மனோவீதியில் ஸ்திரீபுரு
ஷோத்தமனாகிய ஸ்திரீமாதவப் பிரானைத் தங்களன்புக்
குரிய ஜாரபுருஷனாகப்பாவித்து அதனாலுண்டாகியவி
ரஹவேதனைகளிக்குச் சகிக்கமாட்டாமல்தங்கள் ஹரு
தயங்களில் சர்வஜகன்மோகனாகார ஸ்ரீகிருஷ்ணதிவ்யம
ங்கலஸ்வரூபத்தைக் கடாலிங்கனஞ்செய்து மனோசிதர்
களாகி ஸ்ரீபகவதனுபவ சுகலீலைகளை மானஸிகங்களாக
அனுபவித்துமனோலயமடைந்து ப்ரகிருதி பாசபந்தநி
ர்மிதஜன்மபாபபுண்ணியங்கள் நசிக்கத்தட்சணமே தேகங்
களைவிட்டுச் சர்வோத்திரியநிக்ரக பரமயோகீந்திரர்களு
க்கு மடைவதற்கரியமுத்திப்ரதமான ஸ்ரீபரந்தாமமாகி
ய பரமபதானந்தவைபவாதிசயங்களையடைந்தார்களென்

று கிருபையாகச்சொன்னார், அதைக்கேட்ட மாத்திரத்தில் மகாராஜயோகியாகிய பரிட்சின்மகாராசன்ஸ்ரீசுகப்ரம்ஹயோகியைப்பார்த்துச் சொல்லுகின்றார்.

வாரீர்நிர்மலாந்தக் கரணபரிசுத்த இருதய சதாப்ரம்ஹானந்தானுபவ ஸ்ரீசுகப்பிரம்மரிஷியேநீரிப்பொழுது சொல்லியஸ்திரீசனங்கள் ஸ்ரீகிருஷ்ணபகவானைத்தங்களன்புக்குரிய இனியபோகசுகத்திற்குத்தகுந்தஜாரபுருஷனென்று நினைத்தார்களேயல்லது அளவிறந்தநித்யகல்யாணகுணங்களையுடைய சர்வசாட்சிபூதஸ்திரீபரமாத்மாவாகிய பரப்பிரம்மமென்றுநினைக்கவில்லையே அப்படியிருக்க இந்தஸ்திரீ சனங்கள் சர்வபாப விமுக்தர்களாய் சர்வவிகாரஸ்பதங்களுக்குரிய பாஞ்ச பூதிகமான இச்சரீரசன்மதோஷங்களில் நீங்கிநிர்மலாந்தக்கரணபரிசுத்தஇருதயானுபவமோமோட்சசாம்ப்ராச்சியத்தை யெவ்விதமாகவடைந்தார்கள் இதைக்கேட்கும்படி விருப்பங்கொண்டவடியேன்பேரில் கிருபைசெய்துஎன்மனதுசந்தோஷிக்கும்படியாகியும் வேதார்த்ததத்வக்ஞானிகள் ஆனந்திக்கும்படியாகவும் சொல்லியருள வேண்டுமென்று மகாபக்திசிரத்தையுடன் துதித்துப்பிரார்த்தித்தான் இவ்விதமாகப்ராத்தித்த அரசனைப்பார்த்துஸ்ரீசுகயோகீந்திரர்சொல்லுகின்றார்.

வாராய்மகாபரிசுத்தகுணமுள்ள மகாராசனே இந்தக்கோபிகாசனங்கள் முதலியசமஸ்தமான ஸ்திரீசனங்களுஞ்சாமான்யதர்மத்தினலாவது ஸ்ரீகிருஷ்ணப் பிரீத்யர்த்தசத்வ மானஸர்களாய் அன்பைச் செலுத்தினர்களே அவர்களுக்குநித்யாநந்தபரமபதங்கிடைத்தலல்லாமற்போருமோ ஸ்ரீபகவானனவர்வேதாந்ததத்வக்ஞான நிச்சயப்பொருளாகியும் சர்வத்திரசாதாரணராகியும் சர்வபலம்பிரதாதாவாகியு மிருந்தபோதிலும் முக்கியமாய்ச்சமஸ்தபிராணிகளுடைய சன்மாந்திரத்திற் செய்தபாபங்களைப்போக்கி இரட்சிக்கின்ற பிரபாவ சிரேஷ்டராயிருக்கிறார் ஆகையால் அந்தப்பகவானுடைய மகாமகிமாதிசய சுகுணங்கள்ஸ்ரீஅநந்தராலும் வேதபுருஷனலும் அளவிட்டுத்துதிப்பதற்கு அருமையாயிருக்கின்றன ஸ்ரீஅப்பிரமேயராகியும் தம்முடையதிவ்யாவதாரங்களில் அதிமானுஷலீலாசேஷ்டிதங்களையாசரித்தும் அவைகளின் பிரயோசனங்களைத்தான் அடையாதவராகியுமிருக்கின்றபடியால் ஸ்ரீசுகுணமூர்த்தியாய் விளங்காநின்ற இந்தஸ்ரீகோவிந்தமூர்த்தியினுடைய தியான-தரிசன அனுபவங்கள் அடுத்தவர்களாகிய சமஸ்த ஜனங்களும் தேஹசம்பந்தசாமான்ய தோஷங்களகசிக்கமோட்சத்தை யடைவதற்கு ஹேதுவாயிருக்கின்றனவென்று நினைக்கக்கடவாய்.

வாராய்பாதகுலஸேஷ்டனே இன்னும்இந்த ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய அபேட்சையில்லாத சுத்தசத்வாத்மகதிவ்யகல்யாணகுணங்களை நானறிந்தமாத்திரஞ்சொல்லுகின்றேன் சாவதானசித்தமாய்க கேட்பாயாகஇந்த ஸ்ரீபகவானை எந்தஜனங்களானபோதினும் பிதாபுத்திரபர்த்தஸஹோதராதி உலகசாமான்யபந்துசம்பந்தத்தினலாவது குலசத்துருவென்றுநினைத்தாவது இவருடைய ஜகன் மோகனகார ஸ்வரூபத்தினிடத்திலும் திவ்யகுணசக்தியிலும்பிரமித்துமோகித்தாவதுஇவர்சௌரியாதிகுணங்களுக்குப்பயந்து பீதியையடைந்தாவதுஇவருடைய ஹேயகுணராகித்தியசுத்தஸத்வாத்மக பரமகிருபாதிசய நித்யகல்யாண குணங்களுக்கு ஈடு பட்டவர்களாகிய பரமபாகவதர்களினுடைய பக்தியினலாவதுஇன்னும்எந்தவிதத்தினலாவது ஸ்ரீஅரியாகியபரமாத்மாவுக்குப் பக்தர்களாய்விளங்குகின்ற சமஸ்தபிராணிகளும் மோட்சசாம்ராஜ்யத்தையேயடைவார்களென்றுநினைக்கக்கடவாய்.

வாராய்சுசீலகுணராஜரத்நமே இந்தஸ்ரீகிருஷ்ணபகவானனவர் சர்வாத்மாக்களுக்கும் அந்தரியாமியாய்இரட்சித்துக்கொண்டிருக்கின்றதினல் ஸ்ரீபரமபுருஷராகியும் தர்மாதிசிவசமூகங்களையும் பிரகிர்த்தியாதிபதார்த்தங்களையுமடைந்து இவ்வுலகங்களைவிளங்கச் செய்தவராகையால் ஸ்ரீஅஜராகியும் சகலவேதநிர்மித சர்வசத்கர்மங்களுக்கும் மகாயோகதபோதானமௌனவிரதமுதலிய சசீலங்களினல்அணிமாதி சித்திகளையடைந்த பரமயோகீந்திரர்களுக்கும்பரப்பிரம்மசப்தாதிநிரணயவேதார்த்த நிச்சயதத்வக்ஞானிகளுக்கும் இந்தியாதிசர்வத்ரர்களுக்குஞ்சர்வபலன்களையுங்கொடுக்கிறவராகையால் ஸ்ரீயோகீஸ்வரேஸ்வரராகியும் திருவவதரித்திருக்கின்ற ஸ்ரீஅரிஸ்வரூபராய் விளங்குகின்றார்ஆகையால் இவருடையதரிசனஸ்பரிசனங்களை லபிக்கப்பெற்றஸ்தாவரங்களும் விமுக்தாத்மாக்களாய்ப் பரிசுத்தாந்தக்கரணங்களையடைந்த மோட்சாநந்தவைபவங்களைப்பெற்றுஆனந்திக்கும் ஆகையால்நீஉனதுசம்சய நிவாரணங்களை யடைந்து ஸ்ரீபகவானுடைய திவ்ய சரித்திரங்களைச் சேவிக்கானந்தமாய்க் கிரகித்துகிருதார்த்தத்தை யடையக்கடவாய்,

வாராய்மகாநுபாவனே இவ்விதங்களாக ஸ்ரீபகவானுடைய மகாகம்பீரமாதுரிய முரளீகான கீதங்களைக் கேட்டுப்பரவசர்களாய்த் தங்கள்தங்கள் காய்தந்தைதமைலியவர்களால் தடுக்கப்பட்டும் நில்லாமல்கிருதகிர்த்தியங்களைவிட்டு வந்தவர்களாகியஇந்தக்கோபிகாஸ்திரீஜனங்களைப்பார்த்துச் சர்வகுணசாதுரியகருணதிசயஸேஷடராகியஸ்ரீகிருஷ்ணபகவானனவர் தமதுவாக்வைபவங்கள்விளங்க ஒருவார்த்தைசொல்லுகின்றார்.

வாருங்களமகா புண்யவதிகளாகிய கோபிகாஜனங்களே ஆயர்பாடியிலொன்றும் உபத்திரவமில்லையேநீங்கள் இப்படிப்பட்ட இராக்காலத்தில் சிம்ஹசார்த்துவாதி - நானவித பயங்கரமாகிய மிருகங்க

ளும, சாபாதிசானுவிதசுரேபட்சிகளும்சர்ப்பாதிவிஷஜந்துக்களும் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்ற இவ்வனத்தில்வரக்காரணமென்ன அசுரர்கள் வெகுவாய்சஞ்சரிக்கின்றார்கள், நீங்களிவ்விமே லிருக்கக்கூடாது இந்தயமுனைக்கரையில் கொடியினாற்செய்திருக்கின்ற வீடுகளிருக்கின்றது அதில்நீங்கள்நடந்துவந்த இளப்பைத்தீர்த்துக்கொண்டுபோங்கோள் பயம் நாணமச்சங் கொள்ளாதவர்களாய் உங்கள் யதேச்சையாய் நுழைந்துவரத் தகுமோ கும்புகும்பாய் வந்து சஞ்சரித்துக்கொண்டிருக்கின்றீர்களே யிதுகூடுமோ யோசிக்குமிடத்தில் உங்கணடக்கை நன்றாயிருக்கின்றது சீக்கிரமாக உங்கள்கிரகங்களுக்குச் சந்தோஷமாய்ப்போய்ச் சேருங்கள்நீங்கள்இவ்வனத்திற்குவந்துவிட்டபின்பு உங்கள்தாய்தந்தைகளும்சகோதரர்களும் புத்திரர்களும் இஷ்ட சனங்களாகிய சகலபந்துக்களும் உங்களைக்காணமல் அத்துதப்பி எங்கேயோ போய்விட்டார்களேயென்று எவ்விதங்களாகத் தேடுகின்றார்களோ என்ன அவநிந்தைகளைப் பேசுகின்றார்களோ தெரியவில்லையேநீங்கள இப்படிப்பட்டநடக்கைக்குரிய குணங்களைக்கொள்ளுதல்உங்களுக்குத்தகுமாநீங்கள் கொண்டசெய்கை நினைக்குந்தோறும் அதிசயத்தைத்தரத்தக்கதாய் மிகவும் நன்றாயிருககின்றதுஇதென்னவாச்சரியம்உங்கள் கிருஹங்களுக்கு மங்கலதீபம்போன்ற நீங்கள் வெளிப்புறப்பட்டுவீட்டைப்பாழாக்கிஉங்கள் பர்த்தாக்களினுடைய ஆக்ஞாபிமானத்தைக் கடந்து மாமியார்மாமனுருடையமனதைநோகச்செய்துசகோதரர்களினுடையரோஷாபிமானங்களைக்கெடுத்துத்தாய்தந்தைகளினுடைய ஆசாபாசங்களை வெறுத்துச் சமஸ்தமான பந்துக்களும் வெறுப்புற்று ரோசும்படிச் செய்து ஜாரசோரகாமினிகளாய்வந்தீர்களே இந்தநடவடிக்கைஉங்களுக்குத்தக்கதா நல்லகுலஸ்திரீகள்உங்களை உத்தமிகளென்று சொல்லுவார்களோ.

வாருங்கள்நிஷ்களங்க பூரணசந்திரோதய முகாரவிந்தங்களையுடைய சுபாங்கனைகளே ஜாரஸ்திரீகளுக்குண்டாகிய அவதிலட்சணத்திற்குரிய சௌக்கியங்களை நீங்கள்கேள்விப்பட்டதில்லையாபார்த்ததில்லையா கேள்விபார்வையில்லாவிட்டால் நான்சொல்லுகிறேன்கேளுங்கள் இந்த ஜாரஸ்திரீகளினுடைய சோரநடத்தைகளை பிராணநாயகனறிந்தால் உடனே அந்த ஸ்திரீகளுக்குப் பிராணஹானிவரும் நீதியுள்ள வரசனறிந்தால்கோரமாகிய தண்டனைகளைவிதிப்பான் மாமியார்மாமனார்அறிந்தால் சன்மானங்களெல்லாம் அழிந்துபோகும் ராஜபடர்கள் அறிந்தால் காவலில்வைத்து அவமானங்களைச செய்வார்கள்தாய்தந்தைகள் அறிவார்களேயானல் தலையிரக்கங் கொள்ளுவார்கள் சகோதரர்களுணர்வார்களானல் தங்கள்சௌரியங்குலைநது ஆணவமழிந்துநாணப்படுவார்கள்,ஜாரஸ்திரீகளநிந்தால் தூற்றித்தெருவில்வைத்து ஏசுவார்கள் வயிற்றிற்பிறந்த பிள்ளைகளறிவார்களானல் ஆதரிக்கமாட்டார்கள் இஷ்டஜனபந்துக்கள் தெரிந்துகொள்வார்களானல் தங்களினங்களில் சேர்க்கமாட்டார்கள் பிறர்களுணர்வார்களாகில் அலக்ஷியஞ்செய்து சாிந்துப்புவார்கள் ஆகையால்இகத்தில் இந்தஜன்மத்திலேசுகமென்பதுலேசமுங் கிடைக்கமாட்டாது பராநுபவத்திலும்ஜன்மாந்திரங்களிலும் நற்கதிக்குண்டாகிய சௌக்கியாநுபவங்களும நேரிடாது உத்தமகுணலட்சணங்களுக்குரிய கீர்த்திகளுங் கிடையாது நிர்ப்பயானந்த சுகபோகங்கள் இவர்களுக்கு ஒருக்காலும் லபிக்கின்றதில்லை ஆகையால் அருமையாகிய மனுஷ்யஜன்மங்களைஎடுத்தஉத்தமஸ்திரீகளுக்கு இந்தஜாரசோர அல்பபுத்திகளைஒருக்காலும் அடையத்தகாது.

வாருங்கள்புண்யவதிகளே, உத்தமகுலத்திற் பிறந்த பதிவிரதாபக்தியுள்ள உத்தமியானவள் தன்னுடைய அதிருஷ்டானுகூலமாகத் தனக்குநேரிட்டமணவாளன் உத்தமபுருஷசிரேஷ்டனயிருந்தாலும் அல்லது தான்பூர்வஞ்செய்ததவக்குறைவினல் தனக்கு நேரிட்டகணவன் யாதொருநன்மார்க்க நடவடிக்கைகளில்லாதவனயினும் நரைமூப்புகளையுடையவயது சென்றவனயினும் அங்கஈனனைபோதிலும் கேவலம் பாமரனுகியும் புத்திஈனனுகியுமிருந்தபோதிலும் சம்பாதிக்கத்திறமையற்றவனயினும் அப்புருஷனைத்தெய்வமாக நினைத்துப் பயபக்தியைச்செலுத்திச் சந்தோஷத்தையடைந்தவளாகியேஇருப்பாளல்லாமல் உத்தமபுருஷனுகிற்சந்தோஷத்தைக் கொண்டு பக்திசெலுத்துகிறதே யொழியமத்திமஅதமபுருஷனுகிற் றுக்கங்கொண்டு அவமானஞ்செய்து விட்டுவிடுகின்றதென்பதைச் சொப்பனத்திலுங்கொள்கிலள் அந்தவேறுபாடு நினைத்தல்உத்தம ஸ்திரீகளுக்குத்தர்மமல்ல இந்தச்செய்கையைக்குறித்து தெய்வமென்றெண்ணிக்கமாட்டாததன்னுடையபுருஷனைதனக்குத்தெய்வமென்றுநினைத்து அவனைப் பரிபாலனஞ்செய்யாதவளெவளோஅவளே மகாபாபத்திற்குரிய துஷ்டஸ்திரீ அந்ததுஷ்டஸ்திரீயை ஸ்ரீஹரியானவர் இயமன்கையிற்காட்டிக்கொடுப்பார் அந்தஇயமன் கட்டளைப்படி படர்கள அவளைக்கொண்டுபோய் செம்பினலியன்ற பாவைப்பாவீதழுவென நமன்றமர்பற்றிஎன்கிறபடி அக்கினியிலே வந்துஜ்வலித்துக்கொண்டிருக்கின்ற செம்பினல் செய்யப்பட்டபாவையைவிடாமல் தழுவச்செய்து உபத்திரவப்படுத்துகிறதுமல்லாமல் மறுபடி மீளாநரகங்களில்தள்ளிஎப்போதும் அவற்றிலுண்டாகிய வேதனையைநீங்காமல்அனுபவிக்கவுஞ் செய்வார்கள்.

வாருங்கள்புண்யவதிகளே,இந்தஸ்ரீயமுனநதியானது பூர்ணமாய்ப்ரவாஹித்து இவ்வனத்திலுள்ள விருக்ஷம

கொடி-புதர்-முதலியதுகளையும் நானாவிதபரிமளங்களைத்தராநின்ற விசித்ரபுஷ்பச்செடிகளையும்விருத்தியடையச்செய்து அலங்காரமாகத் தளிர்களாலும்விகசித்திருக்கின்ற புஷ்பங்களாலுஞ் சோபித்துஇந்தப்பூர்ணசந்திரோதயத்தினாலும் குளிர்ந்தகாற்றினாலும் சர்வஜனஇருதயானந்தகரமாய் விளங்குகின்றது ஆகையால்மனோவிலாசமாகச் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்றேன் நீங்களுங்கண்டு சந்தோஷித்தீர்கள் இனிமேலாவது இவிடத்தில்நேரப்பட நில்லாமல்சீக்கிரமாக உங்கள் கிருகத்திற்குச்சென்று அழுதுகொண்டிருக்குங் குழந்தைகளை யாதரித்துக்கோவின் கோவத்ஸங்களுக்குப் புல்லு முதலாகியதுங்கொடுத்துப் பாலைக்கறந்துகாய்ச்சிப் பத்திரஞ்செய்துஉங்கள் பர்த்தாக்களுக்குப் பக்தபூர்வகமாகப் பணிவிடைகளைச்செய்து கிருதார்த்தத்வங்களைவகித்துநல்ல மங்கலத்தைப் பெறக்கடவீர்கள் கோகுலத்திற்போய்ச் சேருங்கள் நீங்களெனது ஜகன்மோகனாகாரலீலாகுணங்களுக்கு இச்சித்துவந்தீர்கள் அதனாற்குற்றமில்லை சமஸ்தபிராணிகளும் எனக்குஇஷ்டவினிபோகமாகமேயிருக்கும்ஆயினும் சாசுவதமான கர்மங்களைப்பேசுகின்ற பெரியோர்களின் நீதிக்குஒருகுறைவும் வாராமல் சீக்கிரமாகச்சென்றுஉங்கள்பதிகளைப் பூசித்துக்கொண்டிருங்கள்இனி காலவிளம்பனமாகச் சஞ்சரிக்கவேண்டாம்.

வாருங்கள் நற்குணமடந்தையர்களே எனதுதிவ்யகுணங்களில் இச்சைகொள்ளுகின்றவர்கள்எந்தப்பிராணிகளாயிருந்தபோதிலும் அவர்கள்விஷயத்தில் எனக்குச் சந்தோஷமேயுண்டாகும் தியானத்தினாலாவது உத்தமபக்திசிரத்தையுடன் ஆநந்தத்தைக்கொண்டுகேள்விசெய்வதினாலாவது எனது திவ்யரூபாதிசயங்களைத் தரிசிக்கின்றதினாலாவது காலக்ஷேபமாகக் குணானுபவஞ்செய்கின்றதினாலாவது என்னைமனதினுள்வகித்துப்பக்திசெய்வார்களேயானால் அதுவேஅவர்களுக்குச்சகலாபீஷ்டமனோரதங்களாக விருக்கும் அவர்களுந் சகல பாபவிமோசனர்களாய் முக்திபெறுவார்களாக விளங்குகிறார்கள். ஆகையால்நீங்களும் மகாசுகிர்தர்களாய் சீக்கிரமாயுங்கள்கிருஹத்திற்குச் செல்லுங்களென்றுஞ் சொன்னார்.

வாராய் சத்தியசீலனாகிய மகானுபாவனே இவ்விதங்களாகஸ்ரீபகவானானவர் உத்தம தர்மநீதி வசனங்களால் சிட்சித்துச் சொல்லுகின்ற வார்த்தைகளைக்கேட்டு இந்தக்கோபிகாஸ்திரீ ஜனங்கள்யாவரும்பயப்ராந்தசித்தர்களாய்ப் பெருமூச்செறிந்து முகங்கள்வாடி ஸ்ரீகிருஷ்ண குணத்தமானஸம்ஹ்ருத விரஹதாபாக்நி ஜ்வாலாபீடிதர்களாய் மனமலைந்துதிடுக்கிட்டேங்கிக் கண்களினின்றுந்தாரைதாரையாய் ஜலம்பெருகி ஸ்தனபாரங்களை நீராட்டிக்கொண்டு பூமியில்வழிந்தோட வியசனாக்கிராந்தர்களாய்க் கால்களதுவளச்-சரீரங்கள்நடுங்க இடைகளுசலாட-நாவுறள-வார்த்தைகள்தவற-கன்னத்திற் கைகளை வைத்துக்கொண்டு துக்க சமுத்திரத்தில் மூழ்கினவர்களாய்யாவருமேககண்டமாய் ஸ்ரீபகவானைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றார்கள்.

வாரீர் பக்தவத்ஸலராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானே உமது சௌலப்பாதிசய கிருபாமாத்திரபிரசந்த்வாதி குணங்கள் அஹோ எங்கள்விஷயத்தில்இவ்வளவுகோராகார தூரமாய்விளங்குமென்று நாங்கள்கனவிலும் நினைக்கவில்லையே நாங்கள்சத்தியமாக உம்மையேநம்பிஆச்ரயித்துஉமது பரமகிருபையாகிற அன்பினால்எங்கள் கிருஹநிர்த்தியங்களையும் சர்வேந்திரிய அஞ்ஜலிபதாவிஷயங்களையும் உமக்கேசமர்ப்பித்து அந்தச்சாமான்யதர்மகிர்த்தியங்களில் நின்றும்எளிதில் விடுபட்டவர்களாய்உமதுதிவ்யஸ்ரீசரணாரவிந்தங்களையாசிக்க நாங்கள்தேடியுங்காணமல் இமமுராளீகானதிவ்ய ஸ்வரங்களின்மார்க்கமாக அலைந்துதேடிக்கொண்டு வந்தடைந்தோம் ஆகையால்சர்வசம்பந்த சர்வபாவனஸ்வரூப சர்வாதிபத்ய சர்வாட்டியராகியும் ஸ்ரீசர்வேஸ்வரராகியும் விளங்காநின்ற நீர்தாரேஷணதனேஷண புத்திரேஷணங்களாகிய ஈஷணத்திரயங்களையும் தேவபிதுருஷி மானவாதி கணங்களையும் தங்கள்சர்வேந்திரிய வியாபகங்களையும்அவற்றின்விஷயங்களாகிய இந்திரியங்களின் ருசிவாசனாப்ரயோசனங்களையும் அவைகளுக்குரிய ராகத் வேஷங்களையுந் துறந்துசகல சத்கர்மாதிவேதாத்தியயனயக்ஞயர்கஜபதபயோமௌன வ்ரதங்களையாச்ரயித்து அவைகளின்பலப்ரதங்களைத்தாங்கள் ஸ்வதந்தரித்துஇச்சித்தவர்களாய்இதுமுதலான சர்வதர்மகர்மங்களையும்சர்வேஸ்வரார்ப்பணமாக ஸ்ரீஅரிஸ்வரூபராகிய உமக்கேசமர்ப்பித்து நிர்ப்பரநிர்ப்பயத்துவரானு சந்தானங்களை வகித்துச்சர்வபாரதந்திரரானு குணங்களைலபிக்கப் பெற்றுச்சுத்தசாத்வீகர்களாகியிருக்கின்றபரமஸாதுஜனபரமேகாந்திகளானமுமுட்சு ஜனங்களை கிருபைசெய்து ரட்சிக்கின்றதுபோல் ஸ்ரீகிருஷ்ணகுணத்தில்வைத்த மன துடையவர்களாகியும் கோபிகாஜன ஸமூகங்களாகிய எங்களை உமதுதிவ்யாக்ஞையாகிய வேதத்திற்சொல்லப்பட்டிருக்கிற கர்மபலங்களைக்கொடுக்கத் தக்கதுகளாகிய வியவஹாரதியதிகளைக்காட்டி அனுசரணைசெய்யாமல் நாங்கள்செய்தசாவாபராதங்களையும் மன்னித்து எங்களுடைய சர்வதோஷங்களையும் போக்கிஎங்களை அங்கீகரித்து எங்கள் மனோரதங்களை திருப்திசெய்து இரட்சிக்கக்கடவீர்.

வாரீர் தர்ம ஸ்வரூபராகிய ஸ்ரீ பகவானே, தேவரீருடைய உத்த குணங்களில் ஈடுபட்ட ஸ்திரீ ஜனங்களாகிய யெங்களுக்குப் பதிகளையும் புத்திரர்களையும்

தாய்தந்தைகள் ஸகோதரர்கள் முதலியசமஸ்த பந்துக்களையும் பரிபாலனஞ்செய்து சகலபுண்யங்களையும் சம்பாதிக்கும்படி ஆக்ஞாபித்தீர், அவைசத்தியமே யாகும் ஆயினும் எப்படிப்பட்டவர்களுக்கும் ஆஸ்ரயிப்பதற்கரிய நீர்இப்படிப்பட்டஎங்களுக்குக் கூடக்கிடைத்துச்சமஸ்தமான தேஹகாரிகளும் ஸ்வரூபங்களுங் குணங்களுமாக விளங்குகின்றதுமன்றியில் தேகசம்பந்தத்திற்கேயுரியபிதாபதி புத்திராதிவர்க்கங்களைப்பார்க்கிலும் தேஹானுகுணமாகவும் ஆத்மானுகுணமாகவும் உபாயதர்மத்திற்கொப்பாகிய பதிபுத்திராதி சர்வசம்பந்ததிவ்யஸ்வரூபாதி நாமங்களை நீரேவகித்துநீனர்களுடைய யிஷ்டபலத்தைக் கொடுக்கிறவராய் விளங்குகின்றீ ரென்பது எங்களுக்குத்தோன்றும்படி அறிவைத்தந்து இப்போது பூர்வகர்மங்களைக்காட்டி மறுப்பது என்னதர்மமோ பரமாத்மாவாகிய உம்மையே மகாசாதுரியபுருஷர்களாகிய பரமஸாதுஸஜ்ஜனங்கள் சர்வதாசர்வப்ரியர்களுக்குரிய சர்வானுபவங்களாகவும் களங்கமற்றஸ்வரூபமாகிய திவ்யசுகங்களாகவும் அனுபவித்துக்கொண்டிருக்கின்றார்கள். நீர்சர்வஜகன்மய சாதுரிய மாயாமூர்த்தியாகையால்இவ்வுலகத்திற்குச் சர்வகர்மதர்மங்களையும் ஸ்தாபித்தீர் உமதுபக்தர்களான மகாஜனங்களினுள் கேவலம்சாமான்ய பாரதந்திரகுணங்களுக்குரியபேதைகளாகிய எங்கள்விஷயத்தில் கர்மாதி காரிகளினுடைய தர்மங்களையும்தேஹசம்பந்த மாதாபுத்திரன்முதலியவர்களையுங் காட்டிஸ்ரீபகவானாகியஉம்முடையவிஷயத்தில் எங்களுக்குஉமது நிஷ்காரணமானகிருபையினால்உண்டான அன்புகளைநீரேயொழிக்கநினைப்பது என்னதர்மசங்கல்பமோ ஸ்ரீஹரிஎங்களைக் கிருபைசெய்து எங்கள் தாபங்களைத் தீர்த்துஇரட்சிக்கக்கடவீர்,

வாரீர்ஸ்ரீகிருஷ்ணபகவானே உமதுஸ்ரீபாதார பத்மங்களைக்கண்டு சேவிப்பதற்கு நடையிசைகின்ற எங்கள் பதங்கள்உமது திவ்யாக்ஞைக்கந்நிகரங்களாகி ருகத்தைக்குறித்துச்செல்ல நினைக்கும்போது நடக்கச்சக்தியற்றனவாகி நடைகூடவில்லையேஉமது ஆகாரமாகிற தாமரைப்புஷ்பங்களை ஸ்பரிசிக்கவேண்டுமென்று துணிகின்றஎங்கள்கைகள் இதரகிருத்தியங்களை யாசரிக்கச்சேருகின்றனவே உமதுதிவ்ய வாக்கில்நின்றும் பிரவகிக்கின்ற மகாசுகுமார மதுரபாஷணங்களைக்கேட்டு திருப்தியடைகின்ற எங்கள்செவிகள் அன்னியவசனங்களைக் கேட்க விசையவில்லையே உமதுசர்வஜகன்மோகனாகார திவ்யசுந்தர ஸ்வரூபத்தைச் சேவித்து பிரம்மாநந்தங்களையடைகின்றஎங்கள்நேத்திரங்கள் இதரங்களாகியஅன்னிய ஸ்வரூபங்களைகாணச் சம்மதிக்கவில்லையே உமது சர்வபாபநிவாரண சர்வலோகாரிஷ்ட நிரசனநிதிவ்-

பார்த்தங்களை சொல்லப்பட்டபடியே இவைமுதலிய வ்யாபாரங்களைத் தொடுக்கவிசைந்த எங்கள்வாயிலுள்ள நாவானது அன்யவசனங்களைப் பிதற்றச் சம்மதிக்கவில்லையே நாசகாளினி என்னசெய்யப் போகின்றோம் எங்களசர்வேந்திரியங்களையும் மனோதர்மங்களையுங் கிருபையாக அபகரித்ததிவ்யசுந்தராகாரமுடைய மூர்த்தியே எங்களை அங்கீகரித்துஇரட்சிக்கக்கடவீர்,

வாரீர் ஸ்ரீசர்வலோகைகநாதராகிய ஸ்ரீகிருஷ்ண பகவானே ஸ்ரீபெரிய பிராட்டியாராகிய ஸ்ரீமகாலட்சுமிதேவியினுடைய திவ்யமான ஆகாரமாகிற அரவிந்தங்களுக்கும் திவ்யகமல பத்திரநேத்திரங்களுக்கும் மகாவாசசியர்களாகிய சமஸ்தாத்மாக்களுக்கும் உச்சீவன ஸ்தானமாகிய திவ்யஸ்தலங்களுக்கும் சமஸ்தாவயவ சமூக திருமேனிக்கும் திவ்யாபரணாலங்கார சோபிதமாய் விளங்குகின்றஉம்முடைய திவ்யஸ்ரீசரணாரவிந்தங்களை எங்கள்சன்மார்ச்சித தபோபலத்தினாலேயோ அல்லது உமது நிர்ஹேதுக கிருபாபலத்தினாலேயோ இந்தசன்மத்தில்இவ்வளவு காலத்திற்குப்பின்பு நாங்கள் பாக்கியவசப்பட்டவர்களாயிஆச்ரயிக்கப்பெற்றோமே இப்படியாச்ரயிக்கப்பெற்ற எங்களுக்குத்தேகதர்மங்களாகிய புருஷன்புத்திரன் முதலியஅன்யதர்மங்களைக்காட்டி இன்னமுனுசோதிப்பது என்னதர்மமோ உமதுபரமகிருபாசம்பந்தானுபவங்களைப் பெறாமல்நாங்கள் செல்கின்றதில்லைசிரேஷ்டமாகிய திவ்யதடாகங்களில் நன்றாய்மலர்ந்து பரிமளித்துக்கொண்டிருக்கின்ற திவ்யபத்மபுஷ்பமதுக்களையுண்டு ஆனந்தித்துக்கொண் டிருக்கின்ற சிரேஷ்டமானவண்டினங்கள்; அன்யபுஷ்பங்களை யடைந்துசுகிக்கநினைக்குமோ அவைபோல நாங்களும்உம்மைப்பிரிய மனமில்லாதவர்களாய் அன்யவிச்சை விரும்பாதவர்களா யிருக்கின்றோம்.

வாரீர் ஸ்ரீகிருஷ்ணபகவானே ஸ்ரீமகா லட்சுமியாகிய ஸ்ரீரமாகாந்தாமணியானவள் வெகுகாலந் தபசுசெய்து பக்திஸ்ரத்தையுடன்நானாவிதங்களாகியசுபவிரதங்களையாசரித்து ஸ்ரீஅரியாகியதேவரீருக்கேசமர்ப்பணஞ்செய்து உமதுவிசாலமாகிய வட்சஸ்தலத்தில் நித்தியமாய் வசித்து மிகவும்பரிமளங்களைத்தராநின்றதிருத்துழாய் மாலையுடன்கூடி அகல்கில்லே னிறையுமென்றுதானும் வசித்து ஆஅரவிந்தாட்சரேயென்று உமதுநாமஸ்துதிபூர்வகமாககைங்கரியங்களையாசரித்துக்கொண்டு உமது திவ்யபாதாரவிந்தங்களினுடைய ஸ்ரீமகாபாகவதஜனமூகோல்லாச ஸ்ரீபாததூளிகளைலபிக்கப்பெற்றுக்கொள்வதற்கு இச்சிப்பாளேயாகில்நாங்களடையநினைப்பது குற்றமோகிருபைசெய்யக்கடவீர் உமதுதிவ்யசுந்தர ம

ந்தகால முகாரவிந்தத்தில் விளங்கிபஜகன்பாயாமோகனநினைக்கும் பரமகிருபையாகிய அன்பினால் திருவாய்மலர்ந்தருளுகின்ற திவ்யவசனாமிர்தங்களுக்கும் உமதுகடாட்ச வீட்சண்யாதிசயங்களுக்கும் நாங்கள்தோற்றுஎங்களுக்குத்தேக சம்பந்தர்களாகிய தாய்தந்தைகள் முதலிய பந்தங்களைநிராசைசெய்து எம்மைஆஸ்ரயித்து உமதுபிமான பிரேமாதிசயத்தைக்கொண்டு மன்மதபாணங்களால் அடிபட்டு அலைந்துவந்தஎங்களுக்குஉமது தாஸ்யருசியையருளி இரட்சிக்கக் கடவீர்.

வாரீர்புண்யபுருஷரோ இவ்வுலகத்தில் மிகவுஞ்சாதுரிய சுந்தரவிடபுருஷர்களினுடைய மோகபாசக்கரிலகப்பட்டு அலைந்தவிரகிணீ சனங்களாகியபேதைகளும் பெண்கள்மறுபடியும் அந்தப்புருஷர்களா லாதரிக்கப்பட்டு அவர்களுடன்கூடி சுகித்து ஆனந்தசந்தோஷத்தைக் கொள்ளவில்லையா இதைப்போல தனமேருணங்களெங்களுக்குமாத்திரமுண்டானதல்லவே வாரீர் சர்வஜனமனோரம்ய திவ்யசுந்தர வதனாரவிந்தரே உமது சத்யயோகமாயாசாதுரியாதி சயங்களுக்கு பிரம்மாமுதலியபிரஜாபதிகளும் தேவாசுரகந்தர்வாதிகளும் ஸ்திரீகளால் வசப்பட்டு மோகிதர்களாவார்களேயானால் சாமான்யபேதைகளாகிய நாங்கள்வசப்பட்டலைவதும் அருமையோ என்னசெய்யப்போகின்றோம் ஸ்ரீபுருஷோத்தமரோமன்மதனுகிற அக்கினியினால்வருத்தமுமறுப் பீடிதர்களாயிருக்கின்ற எங்களை ஆதரித்து ஆலிங்கனஞ்செய்துஇரட்சிக்கக்கடவீர்.

வாரீர் ஸ்ரீ அரவிந்தலோசனரே இவ்வுலகத்தில் சன்மங்களை அடைந்தஎந்தப் பிராணிகளானாலும் உமது கிருபாவாத்ஸல்யங்களையடைந்து அறிவுவிளங்கப் பெறுவார்களேயானால் உமதுதிவ்யவிக்ரக சேவையைவிட்டுப்பிரியத்துணிவார்களோ அப்படியிருக்கஎங்கள் மனதைப் பஞ்சபாணனாகிய மன்மதன்கையிற்றாங்கியசெங்கரும்பு வில்லின்றொடுத்துப்புஷ்பசரவருஷங்களை வருஷித்துப்பிளக்கின்றது மல்லாமல்எங்களுடைய சர்வேந்திரியங்களையும் அபகரிக்கின்றான் அவனால் அதிகவருத்தத்தையடைகின்றோம்சகிக்கமாட்டோம்உமக்குத்தாஸபூதர்களாய்ச்சரணமடைந்த எங்களைநீர்ஆதரியாமல் அன்னியனாகிய மன்மதனுக்குக்காட்டிக்கொடுத்துஅவன்உபத்திரவஞ் செய்யும்படிப்பார்க்கின்றீரோ இதுபுருஷதர்மமாகுமா உம்முடையகிருபைக்கு உரித்தாகுமா ஆகையால் வேடன்கையிலகப்பட்ட மான்பேடுகளைப் போலக்காமன் கையிலகப்பட்டுக் கலங்குகின்ற எங்களைப் பயப்படாதேயுங்களென்று ஆதரித்து ரட்சிக்கக் கடவீர்.

வாரீர்ஸ்ரீஆஸ்ரிதஜனரட்சா மணியாகியஸ்ரீபகவானே. உமதுதிவ்யாகாராமிர்த வருஷங்களை எங்களுடன்கூடி எங்கள்சரீரதாபந்தீரவருஷிக்காவிட்டாலும்உமதுலக்ஷ்மீவிலாச நிர்மலமானவிசால வக்ஷஸ்தலத்தை எங்களுடைய குசங்களினால்ஸ்பரிசித்துஎங்களைச்சேர்த்தணையாவிடினும் உமதுசர்வாஸ்ரிதஜன மனோரம்மிய திவ்வியகரங்களினால் எங்கள்அளகபாரத்தில் சுகந்தபுஷ்பமாலைகளை முடிக்காவிடினும் உமதுபரமகிருபாகடாட்சவீட்சண்யத்தினால்எங்கள் முகங்களைக் கடாட்சிக்காவிடினும் உமதுசர்வஜனமனோரஞ்சன ராகிய வசனங்களினால் எங்கள்செவிகளின் கலிதீர வசனிக்காமல் அனுகரஞ்செய்யினும் நாங்கள்எங்கள்சரீரம்பசித்து ஒடுங்கிய மிருதுப்போவோமேயல்லாமல் என்னமாய்ச் சீவிக்கப் போகின்றோம்இனி உம்மைத்தவிர வேறொருவனை அறிவோமா சர்வஜனங்களுக்கும் சாசுவதோத்தமனாகிய எங்கள்விபுவேஎங்கள்தீனவசனங்களாகியஎங்கள்முறைகள் கேட்கவில்லையோ கேட்டும்உபேட்சை செய்கின்றீரோ வாரீர்ஸ்ரீபகவானே உமதுமுகாரவிந்த தரிசனத்தினும் கடாட்ச வீட்சண்யத்தினாலும உமதுதிருக்கரங்களினால் ஸ்பரிசிக்காதபட்ட வேதனையில் உண்டாகிய மகாமாதுரியமான தேவகானகீதஸ்வரங்கள் எங்கள்செவிவழியாக நுழைந்து இருதயங்களைப்பேதித்துக்கலக்கப்பஞ்சபாணனுக்கினை எங்கள்சரீரங்களைத்துதிக்க மன்மதாக்கினிதாபஜ்வரங்களில் நாங்களகப்பட்டுத்தகிக்கப்படலாமா யிறந்துபோகாமல் இப்பொழுதேமுன்னதாய்த்திருவடித்தாமரைகளுக்குச் சரணமாகவடைந்தோம் எங்களையாதரிக்காவிடின் சத்தியமாய்உமது சரணாரவிந்தசாட்சியாய் உமக்கேபிரீதியாய் எங்கள் சரீரங்களைவிட்டுவிடுவோம் எங்கள்முறையைக்கேட்டுக்காப்பாற்றக் கடவீர்.

வாரீர் அம்புஜாட்சராகிய ஸ்ரீகோபிகாசன வல்லபரே இந்தப் பிருந்தாவனத்திலுள்ள சமஸ்தஸ்தாவர ஸ்வரூபங்களாகிய விருக்ஷலதாகுல்மாதிகளும் சமஸ்தமானமிருகபட்சி கோகணசமூகங்களும் உம்மைததரிசனஞ்செய்தமாத்திரத்திலும்உமது கானஸ்வங்களைக் கேட்டமாத்திரத்திலும் மனதுகனிந்துஉட்லுருகிச்சர்வேந்திரியங்களும் லயித்துத்தங்கள் வியாபாரசஞ்சாரங்களையொழிந்து சித்திரத்திலெழுதிய பிரதிமைகளைப்போலஉம்மையேஇச்சித்துமனமுருகி நிற்குமானால் விதி பூர்வகமாக ஜன்மங்களையெடுத்து உமதுகிருபைக்குப் பாத்திரர்களாய்எங்கள் சர்வேந்திரிய வியாபகங்களையும் உமக்கேசமர்ப்பித்து உம்மையேசார்வதா தரிசனஞ்செய்துகொண்டிருந்துஉமது மதுரகீதஸ்வரங்களைக்கேட்டு ஆனந்தித்திருக்கின்ற நாங்கள்உம்மை வாஞ்சித்தடைவதும் ஓராச்சரியமோஎங்களுக்குஆதரவாயொருவார்த்தையுஞ்சொல்லாமலிருக்கின்றீரே யிதென்னகாரணம்.

வாரீர் ஸ்ரீகோபிகாசன ஸமூகதைரிய சித்தாபகாரரே உமதுமகாகெம்பீர மாதுரியமாகிய திவ்யவசனாமிர்த வருஷதாரைகள் எங்களுக்கு லபிக்காவிடில் இந்தப் பஞ்சபாணனுடைய புஷ்பசர வருஷாக்கினியையெவ்விதத்தி லாற்றிக் கொள்ளுவோம் உமதுகிரு

பாபரவையாகிய ஒடையவது எங்களுக்கு லபிக்காவிட்டால் நாங்களஇந்த மன்மதனாலுண்டான மோகமாகியசமுத்திரத்தைத் தாண்டி எப்படிச் சுகானந்தக்கரை ஏறப்போகின்றோம் உமது சந்தோஷமான இளநகையினலுண்டாகிய சந்திரகிரணங்களைநாங்கள பெருவிடில்இந்த அனங்கனுடைய மாயாமோகனவிருளை எவ்விதத்திறகடக்கப்போகின்றோம் உமது திருவதாரத்திலுண்டாகிய திவ்யாமிர்தலௌஷதம் எங்களுக்குக் கிடைக்காவிடில்நாங்களஇந்த மன்மதஜ்வரதாபங்களை எப்படிநிவாரணஞ்செய்துகொண்டு சௌக்கியப்படுவோம்.

வாரீர் ஸ்ரீகிருபாசமுத்திரரே இந்தமாரனனவன் நம்மையொத்த புருஷர்கள்மேல் நாம் ஆண்மைசெலுத்த வேண்டுமேயல்லாமல்ஸ்திரீகள்மேல்புஜபலங்காட்டலாகாதென்கிறஎண்ணம் எவ்வளவுங்கொள்ளாமல்நிர்த்தயனுய்நீர் எதிரிலிருக்கிறதையும் யோசியாமல் அக்கிரமியாய்எங்களைத்தகிக்கின்றனே இதைப்பார்த்துக்கொண்டிருக்தல் உம்முடைய சவுரியத்திற்குத்தகுமா மகாவீரர்கள்தங்களுக்கு யாதொருவிஷயத்திலும் சம்பந்தப்படாத அன்னியர்களைவேறொருவன் வருத்தப்படுத்தக்கண்டாராகளாகில் இரக்கங்கொண்டு தங்கள்சொந்தக்காரியமாய் பிரவேசித்து அவனைச்சயித்து வருத்தப்பட்டவர்களைக் காப்பாற்றுவார்களே அப்படியிருக்கப் பந்துவாகியும் கோகுலநாதனுக்குப் புத்திரராகியும் எங்களை எல்லாந் தாஸ்பர்களாகக் கொண்டவராயும் எங்களைரட்சிக்கத்தக்க சர்வ சுதந்திரங்களையுமுடையவராகியும் புருஷோத்தமராகியும் அதிதீரராகியும்இருக்கின்றநீரிப்படிப்பார்த்திருக்கலாமா தகாதே சீக்கிரமாய் கிருபைகொண்டு உபேட்சைசெய்யாமல் ரட்சிக்கக்கடவீர் நீர் கிருபைசெய்யாவிடில் நாங்களென்னமாய் நிர்வகிப்போம்ஆலசியஞ்செய்யாமல் ஆதரிக்கக்கடவீர்.

வாரீர் ஸ்ரீகமலாக்ஷராகிய ஸ்ரீபகவானே, பூர்வசமஸ்தமானதேவதா சமூஹங்களையும் சாதுசஜ்ஜனங்களையும்விரோதி நிக்கிரகங்களைச்செய்து இரட்சித்தாற்போல் இப்போதும் இந்தஅவதாரத்தில் எங்களுக் கபயஸ்தங்கொடுத்து உமது அஸ்தங்களை எங்களமுடியினும் மார்பினும்வைத்து ஸ்பரிசித்து எஙகள்மோகன மூர்ச்சைகளைத் தவிர்த்து இரட்சிக்கக்கடவீர்நீர்க்கட்டுத்தீயானது ஜ்வாலாமாலைகளை வீசிக்கொண்டுவந்து கோபாலகோபீஜனஸமூகங்களையும் கோக்களையும்வளைத்துக்கொண்டபோது அத்தீயில்நின்றுநீக்கிச் சமஸ்தபிராணிகளையுங் காப்பாற்றினீரே அப்படிப்பட்ட உமக்கு இந்தச்சந்திரகிரணங்களாகிய வெண்ணெருப்பினல் நாங்கள் துன்பமடையாமல் காப்பாற்றுதலுமஅருமையோ வாரீர்சர்வவல்லமையுள்ளமாதவனே பிரசண்ட காற்றுகளோடுங்கூடிய கல்மழையானது சகலப பிராணிகளையும ஏககாலத்திலழிக்கும்படியுண்டானகாலத்தில் கோவர்த்தனத்தையெடுத்துக் குடையாகப்பிடித்துபெருங்காற்றையும் சிலாவருஷத்தையுந்தடுத்து எல்லாப்பிராணிகளையுமிமிஞ்சித்திடையூறுமடையாமல் சுகானந்தபரவசமுறுயும்படிக்காப்பாற்றியவுமக்கு இந்தப்புலிபோற்சீறும் சிறுவாடைக்காற்றையும் மன்மதனல்விடப்பட்டு எங்கள்மேல் அழல்போல்வீசும் அப்புஷ்பமாரியையும் நீக்கிநாங்கள் உள்ளக்களிப்படைய ரட்சித்தலும் பிரயாசமோ.

வாரீர் சகல்புவனதார நாதரே உம்மைவிரும்பாதஅசரவஸ்துவாகிய சிறுவேணுவின் குழலுக்கு மதுரதராமிர்தத்தைக்கொடுக்கக் கருணைகொண்ட நீர்உம்மைஅடுத்து பிரார்த்திக்கின்ற வின்பதுன்பமறியத்தக்க எங்களுக்குப் பரவசானந்தசுகபோக பவளம்போன்ற அதரமாகிற அமுதரசத்தைக்கொடாமலிருப்ப தென்னகாரணமோ கொடியகாளிவிஷ உபத்திரவங்களை நீக்கி யமுனாதீஜலம் சகலசராசராத்மகங்களுக்கும் உபயோகமாகும்படிச்செய்த உமதுமுரளிகான ஸ்வரத்தைக்கேட்டமாத்திரத்தில் எங்களுக்குள்உண்டான விரகவேதனைவிஷதாபத்தை நீக்கிஎங்களுடைய ஆத்மாக்கள் குளிர்ச்சியைக்கொள்ளும்படித் தேவரீருடைய தாமரைபோன்ற கரத்தின் ஸ்பரிசமாகிறசீதளஜலத்தைக் கிருபைசெய்தலுங்கூடாதோ எங்களுடைய பரிதாப வசனங்களாகிய முறைகளைச் செவிகொடுத்து அங்கீகரியாதவர்போலவுபேக்ஷைசெய்வது உமக்கு என்ன தர்மமோநாங்கள்உம்மையாஸ்ரயித்த கேவலம் அன்னியருக்காதீனர்களான ஸ்ரீசன்மிகளாச்சுதே அநியாயமாய் நாங்களழிந்துபோகலாமா இப்படிஉபேட்க்ஷை செய்வீராளுல் நாங்களஇந்தவிரகாக்கினியில் எங்கள்தேகங்களை யொழிக்காவது உம்மையேயாஸ்ரயித்து உமதனுபவங்களை நாங்களடையாமற் போகின்றதில்லையென்று சொன்னார்கள்.

வாராய் மகாராசனே இப்படிக்கோபகன்யாஸ்திரீகள் யாவருமஏககண்டர்களாய்ச் சரீரத்தை ஒழிக்கயத்தனித்தவர்களாய் மன்மதனுடைய புஷ்பசரவருஷ பரவசர்களாய் வசனிக்கின்ற தீனவசனங்களைக் கேட்டமாத்திரத்தில்ஸ்ரீகிருஷ்ணபகவான்முகமலர்ச்சியுடன் புன்னகையாகநகைத்து தம்மிற்றும் திருப்தியடைந்து நிர்மலராயிருந்துகொண்டுஇந்த கோபிகாசனங்களுககு அன்புள்ளருபத்துடன் அவர்களைக் கலந்துவிளங்கினர்.

இப்படி சர்வஜகதீஸ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானனவர்இந்தகோபிகா ஜனங்களினுன்பிரசன்னரானமாத்திரத்தில்அவர்களும் அப்படியே அன்னியவிஷயங்களை மறந்துதாங்கள் ஒருவர்க்கொருவர் விசாரணைகளையு மறந்து ஏககாலத்தில் அந்தஸ்ரீகிருஷ்ணபகவானுடைய ... க்

கண்பார்வையிலுண்டாகிய கிருபாசமுத்திரத்தில் மூழ்கினவர்களாய்த்தங்கள் ஸ்தனபந்தங்களும் அரைநூல்மாலைகளும் தனக்குத்தானே நழுவக்காடாலிங்கனங்களைச் செய்துகேளீவிலாசர்களாய் மானஸ வியோகதாபங்களை நிரவசனித்துத் திருவதராமிர்த பானங்களைச்செய்துதிருப்தமனதுடையவர்களாய் விளங்கினார்கள் பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் மிகவும் மகா சுந்தரவதிகளாகிய கோபிகாஜனங்கள் பிரம்மானந்தங்களை யுடையவர்களாய்த் தம்மைச்சூழ்ந்துகொண்டு பணிசெய்யப்பூரணசந்திரோதய கிரணங்களைவீசாநின்ற இளநகையோடுங்கூடியமுகாரவிந்தத்தை யுடையவராய் நக்ஷத்திரங்களினடுவில்பூரணச்சந்திரன் பிரகாசிப்பதுபோலஅந்தக்கோபிகாஸ்திரீஜன சமூகமத்தியில் பிரகாசித்தார்,

ஒவ்வொருசமயத்தில் ஸ்ரீபகவானனவர் இந்த ஸ்திரீசனங்கள்யாவரும் தம்மைக்குறித்து மாதுரிய குரலோசைகளோடும் மதுரகீதங்களைப்பாட அந்தஸ்வரங்களுக்கிசைந்து சந்தோஷித்து அவைகளுக்குத்தகுந்தபடி அபிநயாதிகளைக்காட்டி நர்த்தனங்களைச் செய்துகொண்டு தமதுமார்பிலணிந்த ஸ்ரீவைஜயந்திமாலையுடன்சர்வாபரணங்களும் ஜ்வலிக்க அந்த பிருந்தாவனமாகிய மங்கையினுடைய மார்பிலணிந்தபதக்கத்தில்சுற்றுத்தொங்கல் முத்துகளைப் போலவும் சுற்றிழைத்த ரத்தினங்களைப் போலவும் மிகவும்யவ்வனமுள்ள கோபிகாசனங்கள்தம்மைச்சூழ்ந்து உபசரித்துக்கொண்டிருகக அவர்களிடையில்நடுநாயக ரத்தினத்தைப்போல விளங்கிநின்றார். செங்குமுதம் வெணகுமுதமென்னும்அல்லிகள்மலர்ந்துபரிமளிக்கச்செய்கின்ற அமுதகிரண சந்திரனுக்கொப்பாகவும் செந்தாமரைவெண்டாமரைகளை மலர்த்திச்சுகந்தம்வீசச்செய்கின்ற ஆயிரங்கிரணசூரியனைப்போலும்யாதொருபொருளிலுந் தோயாதவராயத் தோய்ந்தவனைப் போலுமிருந்து நடிக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவானனவர் சந்திரகிரணத்தைப்போலும் விளங்குகின்றமந்தஹாசசுந்தரவதனர விந்தத்திலுண்டாகும புன் சிரிப்பினலும் பிருகுடிகளுடைய நடிப்பினலும் யாவருக்கு மகிழ்வைத்தருகின்றமதுரமானவசனங்களை நயம்பொருந்தவுரைத்தலினலும் தாமரைநிகர்த்த கடைக்கண்பார்வையினலும் பலவிதஸ்பரிச விநோதத்திலும் அந்தக்கோபகன்னிகாமணிகள் யாவருக்கும் தனித்தனிப் பேரானந்தசந்தோஷத்தையுண்டாக்கினர்.

மேலும்சூத்திரதாரியாய்ச் சகலாத்மாக்களையும்நடிப்பிக்கின்றசர்வவல்லராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் ஒருஸ்திரீயின் கூந்தலைத்திருத்தி முல்லைமாலிகையைத்தரிப்பார்ஒருஸ்திரீயின் முகத்திலுண்டாகியவேர்வையைத்துடைத்துத் திலகந்திருத்துவார் ஒருஸ்திரீயின் முன்னெற்றிமயிரைச் சரியாகத்தள்ளுவார் ஒரு ஸ்திரீக்குச்சிரோபூஷணந்திருத்துவார்ஒருஸ்திரிக்குக்கர்ணபூஷணந்திருத்துவார் ஒருஸ்திரியின் மார்பிலணிந்த பவழமாலை முத்துமாலை-கடலைமணித்தாழ்வடம்-கோதுமைமணித்தாழ்வடம் சந்திரரமுதலியவைகளின் சிக்குகளைவாங்குவார்ஒருஸ்திரியின் அஸ்தபூஷணங்களைத் திருத்துவார்-ஒருஸ்திரிக்கு இடையணியலங்கரிப்பார் ஒருஸ்திரிக்குசசரணவணிகளை முறைப்படுத்துவார் ஒருஸ்திரிக்குஆடைதிருத்துவார் ஒருஸ்திரிக்குக் குசபாரமுஞ்சிருதச்செய்வார் ஒருஸ்திரியைப்பார்த்துஉன் முகத்திற்குஒப்பப்படாமையால்சந்திரன்வெட்கிமேகத்தில்மறைகின்றானென்பார் ஒருஸ்திரியைப்பார்த்துஉன்னுடைய குசபாரங்களுக்குச் சமானப்படாமையால்தாமரைமொக்குகள் உள்ளுடைகின்றனவாரென்பார் ஒரு ஸ்திரியைப்பார்த்து உன்னுடையஅளகபாரத்திற்கு நிகராகாமையால்மேகங்கள்வெட்கி வெளுத்துத்திசாமுகந்தோறும் அலைந்தோடுகின்றனவாரென்பார் ஒருஸ்திரியைபபார்த்துஉன்னுடைய கரசரணங்களுக்கு ஒப்புப்படாமையால்இளந்தளிர்கள்வெட்கித் தொங்குந் தலையுள்ளனவாகவிருக்கின்றனவாரென்பார் இவ்வண்ணமாக அந்தக்கோபிகாவனிதாரத்தினங்கள் யாவருடனும்விளையாடிக்கொண்டிருந்து விசாலமாய் பனிபோன்றவெளுப்பாயும்காமனைநெய்தல் சண்பகமுதலியமலர்களுடையவாசனையுள்ளதென்றற்காற்றுடன் கூடிக்கொண்டிருக்கின்ற மணற்குன்றினிலேறி சிலஸ்திரிகளின் ஸ்தனங்கள் தம்மிடமார்பினில்படும்படி ஆலிங்கனஞ்செய்துகொண்டும்சிலஸ்திரிகளுடையஸ்தனங்களைக் கையினற்பிடித்துக்கொண்டும் சிலர் அரையினிற்கட்டியிருக்கிற வெண்பட்டாடைகள் தாறுமாறுநழுவஅதைப்பார்த்து பரிகாசஞ்செய்யவும்சிலஸ்திரிகளுடைய துடைகளைதம்மிடகைகளினல் தொடவும் சிலபேருடையஸ்தனங்களை தம்மிடநகங்களினல்அலங்கரிக்கவுமிப்படிவிளையாடிக்கொண்டிருந்தார்.

வாராய் விரக்தசிலனகியமகாராசனே இவ்விதங்களாகஸ்ரீபகவதனுபவங்களைப்பெற்றுக்கொண்டிருக்கின்றமகாதன்னியர்களாகிய கோபிகாவனிதாரத்தினங்கள் ஸ்ரீமாதவனிடத்தில்மனதுடைய மன்மதபரவசர்களாய்மதித்துஸ்ரீபகவானனவர் நம்மிடத்திலாசைகொளளும்ப்ராப்தம்ல்பிக்கப்பெற்றோமே இனியிவ்வனுபவங்களையொழிவதில்லையென்று நினைததார்களப்படிஅவர்கள்நினைத்தமாத்திரத்தில் ஜிதேந்திரியரான ஸ்ரீபகவானனவர் இந்தக்கோபிகாஸ்திரி ஜனங்களினுடையகர்வங்கள்பங்கமாகும்படிச்செய்து பின்புபிரசன்னமாய்ரக்ஷிப்பதற்குத்திருவுள்ளத்தில் நிச்சயித்துக்கொண்டு கர்வப்படாதவளாகியிருந்த ஒரு பூங்கொடிபோன்ற மங்கையுடன் சற்றுநேரத்திற்குள்அந்தர்த்தானத்தையடைந்துமறைந்தொழிந்தார்.

———

## ௩௰ - வது- அத்தியாயம்.

கலிவிருத்தம்.

வாசவனர்த்தானமானவுடன்
ஏசிலாக்கோபிகா ஜனமெல்லோரும்
தேசுலாவும்ப்ரந்தா வனத்திற்சென்று
மாசிலாவனத் தேடிமயங்கினர்,

ஸ்ரீபகவானனவர் அந்தர்த்தானமானவுடனேகோபிகா ஜனசமூகங்களையாவரும் ஸ்ரீகிருஷ்ணனுபவ மானஸர்களாய் ஸ்ரீபகவத்வியோக தாபதங்களினால் அந்தப்பிருந்தாரண்யங்கள்தோறுஞ் சஞ்சரித்துவிருக்ஷங்கள்புதறுகள் கொடிகள்வெண்மணற்குன்றுகள் முதலான விடங்களில்தேடி ஸ்ரீகிருஷ்ணகுணங்களையநுபவித்தார்களென்று சொல்லுகின்றது.

வாராய்மகாராசனே இவ்விதமாக ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் அந்தர்த்தானமானவுடனே இந்தச்சுகுமாரவதிகளாகிய கோபிகாசனங்கள தங்களுக்கு ப்ரசன்னராய்த் தங்களைக்கடாக்ஷிங்களஞ்செய்து மதுரமாக வசனித்துக் கொண்டிருந்த மாயமாய்மறைந்துபோன ஸ்வாமியைக் காணமல் கஜேந்த்ரஸேஷ்டனைக்காணுத யானைப் பேடுகளைப்போல் மிகவுந்தாபங்களையடைந்து மதனஜ்வரபீடிதர்களாய்அந்தஸ்ரீபகவானுடைய ஸஞ்சாரங்களாகிய மஹாகம்பீரநடையழகுகளிலும் அவருடையவிலாசபார்வைவிளையாட்டுகளிலும் தங்கள்சித்தத்தைவைத்துதன்மயர்களாய் பித்துப்பிடித்துத்தங்களுக்குள்தாங்களே ஸ்ரீகிருஷ்ணபகவானுகப பாவித்துக்கொண்டு ஸ்ரீபகவத்குணவிசேஷவிளையாட்டுகளால் அந்தவனமெங்குந்திப்பயர்களாய்ச்சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள்இன்னும்சர்வப்ராணிகளுக்கும அந்தராத்மஸ்வரூபராகிய ஸ்ரீபரமாத்மனை இந்தகோபிகாசன வினங்கள்காளிந்தீதீரவனந்தரங்களில் விருக்ஷலதாகுல்மாதி ஸ்தாவரங்களைப்பார்த்து யாவற்றையுந்தங்களைப்போலவே நினைத்துக்கேட்டு ஸ்ரீகிருஷ்ணகீர்த்தனங்களைப் பாடிக்கொணடே தேடிவெகுதூரஞ்சஞ்சரித்தார்கள்,

வாராய்அரசனே அவர்கள்ஸ்தாவரங்களைப் பார்த்து சொல்லியவற்றை விவரமாகச் சொல்லுகிறேன் கேளாய் வாராய் புன்னைவிருட்சரூபியே சர்வசர்ப்பங்களுக்கும் அரசனுகியஸ்ரீஆதிசேஷபகவானல் துதிக்கத்தகுந்த மஹாவிபுவாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானைக் கண்டதில்லையே வென்றாள்ஒருமாது வாராய்திலகவிருட்சமேசமஸ்தப்பிராணிகளினுடைய லலாடத்திற்கும் அழகானதிலகமாகிய ஊர்த்வபுண்டரரூபத்தையுடையவராயும்தமது முன்னெற்றியில்திலகம்போன்ற ரத்தினச்சுட்டியைத்தரித்த ஸ்ரீபகவானைப்பார்க்கவில்லையோவென்றாள ஒருநங்கைவாராய் பந்நாகவிருக்ஷமே சமஸ்த பிராணிகளுக்கும்ஆப்தபந்துவாய் விளங்குகின்றநமது அருமைத்தேவனுகிய ஸ்ரீமாதவப்பிரானைநீகண்டுவார்த்தைசொன்னதில்லையோவென்றாள்ஒருவஞ்சிவாராய்மன்மதவிருட்சசர்வஜகன்மோகனுகார அநந்தகோடி மன்மத ஸ்வரூப அநந்தாச்சரியகுணசேஷ்டித ஸ்ரீருஷிகேசனை நீகூடவில்லையோவென்றாள் ஒருபொற்கொடிவாராய் வம்சவிருட்சமேஸ்ரீயதுகுலவம்சோத்தாரகராகியும சமஸ்தபிராணிகளினுடைய வம்சங்களைவிருத்தியடையச்செய்கின்றவராகியும வம்சாமதேயமதுரஸ்வரங்களைத்தராநின்ற வேணுவின்குழலைத்திருவதரத்தில் வைத்துக்கானஞ்செய்கின்ற நமது ஸ்ரீகண்ணபிரானைக் கணகளிக்கக்கண்டதில்லையோவென்றாள் ஒருதுடியிடைவாராய் ஸ்ரீசந்தனவிருட்சமே சமஸ்தபிராணிகளினுடைய இருதயத்திலின்றும் தாபங்களைத்தீர்த்து மனங்குளிரச் செய்து தமதுகிருபாவாத்சல்யாதி குணங்களினால் தண்ணளியோடு இரக்ஷிக்கின்ற ஸ்ரீகோவிந்தபிரானைக்கண்டுமனமகிழவில்லையோவென்றாள் ஒருபிடிநடைவாராய் குந்தவிருட்சமே மாணிக்கவொளிகொண்டபரஞ்சோதிஸ்வரூபனுகிய ஸ்ரீபரமபுருஷனைப்பார்த்துக் கண்களிக்க வில்லையோவென்றாள் ஒருவல்லி வாராய்இந்திரபூஜவிருட்சமே இவ்விந்திரனுக்குவாழ்வளித்த நமது ஸ்ரீதிருவிக்ரமதேவனைககண்டிருந்தால் எங்களுக்குச் செல்லலாகாதோவென்றாள் ஒருபூங்கோதை வாராய்குவளைவிருக்ஷமே சர்வகுவலயத்திற்கும் சர்வேசுவரனுய நமக்குப்பிரபுவாயிருக்கின்றஸ்ரீகுவலயேசுவரனைநீகூடினதில்லையோவென்றாள். ஒருபூங்குழல் வாருங்கள் பிரியகபாதவிருட்சங்களே சகலபிராணிகளுக்கும் நமக்கும் இருதயரூபமாகிய வாத்ஸல்யாதிபிரியஸ்வரூபராய் விளங்குகின்றநமது ஸ்ரீகிருஷ்ணபகவானைக்கண்டால் எங்களுக்குச்சொல்லிககாட்டிக்கொடுத்து இரக்ஷியுங்களென்றார்கள் அநேககோபிகைகள்.

இப்படிபிரார்த்தன ரூபமாகத்தேடிக்கொண்டுதிரிகின்றவர்களுள் சிலர்மல்லிகைமுதலிய புஷ்பவனங்களே எங்கள்மானமாகிறதனங்களை யபகரித்துக் கொண்டு மறைந்துவைத்திருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானை எங்களவிடுவைநீங்கள் கண்டிருப்பீர்களானல் எங்கள்மீதுகிருபைவைத்து சொல்லிக்காண்பிக்கக்கடவீர்களென்று பிரார்த்தித்தார்கள்.

சிலர்வாரீர் மிகவும் மதுபிந்துக்களையும் மகரந்தங்களையும்வருஷித்துக்கொண்டிராநின்றவர்ஸகஜாதிபுஷ்பக்கொடிகளே நீங்கள்மன்மதனுகிய ஸ்ரீமாதவப் பிரானைக்கண்டதுண்டோவென்றார்கள் சிலர்வாரீர் மிகவுமனோரம்மியமாகப் பரிமளங்களைத்தராநின்ற அசோகபுஷ்பச்செடிகளே ஸ்ரீசுந்தராநந்தகடப்பதரு பஞ்சனைக்காணவில்லையோவென்றார்கள். சிலர்வாரீர் அருண்மயமான

இதழ்களோடுங் கூடிப்பரிமளங்களை வீசாநின்ற காஞ்சனாமதேயபுஷ்பச்செடிகளே சமஸ்த பிராணிகளினுடைய சோகநிவாரண கிருபா வத்ஸலனைப் பார்க்கவில்லையோவென்றார்கள், சிலவாரீர்கள் ஆகாயமளாவியவிருக்ஷங்களை யாஸ்ரயித்துப்படர்ந்து புஷ்பிக்காநின்றகுருவக புஷ்பசாதிகொடிகளே திவ்யகாஞ்சனமயகிரீடத்தையுடைய ஸ்ரீகோவிந்தமூர்த்தியைத் தேடிப்பிடித்துக் காட்டுங்களென்று சொன்னார்கள்.

இவ்விதங்களாகச் சிலநேரந் தேடித்திரிந்து அந்தபுஷ்பவனங்களில் ஸ்ரீகிருஷ்ணபிராந்தர்களாய அந்தபுஷ்பஜாதிவிருட்சங்களை கொடிகளைநன்றாகஉற்றுப்பார்த்து சொல்லுகின்றார்கள் வாருங்கள் ஜாஜிபுஷ்பச்செடிகளாகிய எங்கள்சேடிகளே சர்வவியாபியாகிய ஸ்ரீஹரியைஎங்குகண்டபோதிலும்எங்கள் ஸகீஜனங்களைவிட்டுப்பிரிவதுஉமக்குதர்மமோவென்றுகேட்கக்கடவீர்களென்றார்கள் சிலர் அங்கங்கு உருவெளிதோன்றுகின்றபடியால் இதோஇதோ ஸ்வாமியென்றுஓடிஓடித் தேடிதேடித்திரிந்தனர்கள். சிலர்வாராய் துளசி பிருந்தாவன புண்யவதியே ஸ்ரீஹரிஸ்ரீசரணாரவிந்தங்களுக்கு மிகவும் பிரியமானவளாகையால் ஸ்ரீயசோதாநந்தரானவர்உன்னிடத்திற்குவந்து வஸித்துகொண்டிருப்பாரோ அவருக்குஎங்கள் சமாசசாரங்களைச் சொல்லி எங்கள் இஷடங்களை திருப்தியடையச் செய்வியா யென்றனர்கள் சிலர் வாரீர் சுரபுன்னைவிருட்சங்களே சர்வத்திரர்களாலும் புகழத்தக்கசற்குணங்களையுடைய எங்கள்நாதனைக் கண்டதில்லையோவென்றார்கள்-சிலர்வாருங்கள் மல்லிகைமுல்லைகளே நாங்கள்கீர்த்திக்கத்தகுந்தஎங்கள்நாயகனைக் காட்டலாகாதோ வென்றார்கள்சிலர்வாரீர கிளிகளேஸ்ரீசுகரால்வர்ணித்து ஆனந்திக்கத்தகுந்த எங்கள்சுகபோகியைக்கண்டு நாங்களிலவனதச் சொல்லுங்க ளேனென்றார்கள்சிலர் வாரீர்மான்பேடைகளே நீங்கள்வெகுதூர சஞ்சரிகளாய மருண்ட பார்வைகளோடுங்கூடி ஸ்ரீஹரிக்கு பிரியர்களாய்ச்சந்தோஷத்தோடுவியாபிக்கின்றவர்களாகையால்எங்கள்நாதராகியஸ்ரீ அரியிருக்கின்ற விடத்தைசசொல்லி அவனையெங்களுக்குக்காட்டுவீர்களானால் உங்களுக்கு மகத்தாகியசுகிர்தங்களுண்டாகுமென்றுபிரார்த்தித்தனர்கள்சிலர் இவ்விதங்களாகத்தேடிச் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்றசமயத்தில் இந்தயமுனாதீரத்தில் வெண்மணல்மயமாகியமார்க்கங்களில்ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய ஸ்ரீபாதாரவிந்தஅடையாளங்களைக்கண்டுஆநந்தித்துவாராய்பூமிதேவியேநீஎன்னநோன்புநோற்றனையோ உனதுபூர்வசன்மத்தில் இந்தஸ்ரீபகவானனவர் ஸ்ரீவராஹப்பிரானாகி உன்னை ஆலிங்கனஞ்செய்துஉத்தரித்தனர், பின்புபிரம்மசாரியாகியஸ்ரீவாமனப்பிரானாகித்தமது ஸ்ரீபாதாரவிந்தங்களால் அளந்துஇப்பொழுதுஸ்ரீகிருஷ்ணராகி உமது திருமேனிக்குத் திருவாபரணங்களாகத்தமதுஸ்ரீசரணாரவிந்தசின்னங்களாலலங்கரித்துக்கொண்டிருக்கின்றார்ஆகையால்எங்கள்மேல்தயைசெய்துநாங்களும் அந்தப்பெருமானைப் பிரியாதிருக்கநோற்கும்படிஅந்தநோன்பை எங்களுக்குச் சொல்லிக்கொடுப்பாயாக இல்லாவிட்டால்எங்களுக்குச் சர்வலோகப் பிரபு இருக்கின்றவிடத்தையாவது காண்பித்துஅவர்எங்கள்மேற்கிருபைசெய்யும்படிச்செய்து எங்களைரட்சிப்பாயென்றும் பிரார்த்தித்தனர்கள் சிலர்.

வாராயராஜேந்திரனே இந்தஸ்ரீகோபிகாசனங்கள் இவ்விதங்களாக பித்தமனதுடையவர்களாய்வனமெங்கும் தங்களிஷ்டப்படிக்கு நிர்ப்பயர்களாய் இதரமனோவிர்த்திகளையுமறந்துஸ்ரீபகவானைத்தேடித்திரிந்து எங்குங்காணாமல்மறுபடியும் ஸ்ரீயமுனாதீரத்தில்வந்து அங்குள்ள வெண்மணற்குன்றுகளிலும் ஸ்ரீங்கார வனங்களிலுஞ்சேர்ந்து விரக்தர்களாய்ப் பரமேகாந்திகளானமுமுட்சுக்களைப்போல ஸ்ரீகிருஷ்ண லீலைகளை யாசரித்துக்கொண்டு ஸ்ரீபகவதனுபவங்களையடைந்தனர்கள் அவற்றைப்பகுத்துச்சொல்லுகின்றேன் கேளாய்அந்தச் சுந்தரவதிகளிலொருத்திபூதனையைப்போல் ஸ்ரீபகவானைத் தேடிவந்தனள்ஒருமாது ஸ்ரீகிருஷ்ணபகவானாகியஇளங்குழந்தையைப்போல அவள்மடியிலே படுத்துக்கொண்டு அவளுடையஸ்தனங்களைப் பிடித்துப்பாலமுதுண்டனள் அப்போதுபூதனையைப்போலிருந்தவள்ஐயனேபோதும்போதுமென்றனள் ஒருவனிதைசகடத்தைப்போல்ரூபிகரித்து நின்றனள்ஒருபுண்யவதி பாலமுதுண்ணப்பசித்தழுத ஸ்ரீபகவானைப்போல்படுத்தழுது தன்காலினாலுதைத்தனள் ஒருவிரதசோலை யசோதாப்பிராட்டியைப்போல்உட்கார்ந்து காலைநீட்டினள் ஒருநங்கைஸ்ரீகண்ணபிரானாகிய சிறுகுழந்தையைப்போல் மடியிற்படுத்தனள் அப்போது அசோதையானவள் அந்தக்குழந்தையானவனை மடியில்வைத்துமுத்தாடித்தரையில்விட்டனள் அப்போதுஒருசுந்தரி திருணாவர்த்தஅசுரனேயாகிய சுழற்காற்றைப்போல் சுழன்றோடிவந்து எடுத்துப்போய் உயரவிருந்து அவன்வீழ்ந்தாற்போல வீழ்ந்தனள்ஒருசுந்தரி பகாசுரனைப்போல் ஸ்ரீபகவானைவிழுங்கப்பார்த்துக்கொண்டிருந்தவந்த அவன்மூக்காறகொத்திய சைகையைக்காட்ட ஒருபத்மமுகிஸ்ரீபத்மாக்ஷனைப்போல் ஒருதிரணத்தைப் பிடித்துக் கிழித்து அவளைத்தள்ளினள்.

வாராய் பரதகுலோத்பவனே இரண்டு புண்யவதிகள் ஸ்ரீபலராமனைப் போலும் ஸ்ரீராமாநுஜ ராகிய ஸ்ரீகிருஷ்ணனைப் போலும் ஏற்பட்டிருந்து கோபாலர்களைப்போலும் கோவினங்களைப் போலும் கோவத்ஸங்களைப் போலும் ஏற்பட்டிருக்கிற கோபிகாஜனங்களுடன் நானா விதங்களாகிய வனசஞ்சார விளை

யாட்டுகளை அனுசரித்து வதஸாசுர தேனுகாசுர பிரலம்பாசுரமர்த்தனமுதலிய விளையாட்டுகளைச் செய்து வேணுகானஸ்வரங்களினால் பசுக்களாக யிருக்கிறவர்களையழைத்து ஆதரித்துக்கோபாலர்களா யிருக்கிறவர்களுடன் சரசங்களைச்செய்து அவர்கள்தங்களைப்புகழஅவர்கள் மனோபீஷ்டங்களைநிறைவேற்றினதுபோலாடி மகரவிருக்ஷநிழல்களினும் நதீதீரங்களினுஞ்சிலநேரந் தங்கியிருந்தார்கள் இவ்விதமாகஇந்தக்கோபிகா ஸ்திரீசனங்கள் விளையாடிசஞ்சரித்தார்கள் வாராய் மகாராசனே ஒருகமலாட்சிஸ்ரீபகவானாகிய,சிறுபிள்ளையைப்போலவிருந்தனள். ஒருநித்தியகல்யாணியசோதாப்பிராட்டியைப்போல ஸ்ரீபகவானையழைக்கச் சிலசுந்தரவதிகள் ஸ்ரீபலராமர் முதலியகோபாலச்சிறுவர்களைப்போல வெண்ணெயுண்டான்மண்ணையுண்டானென்று சொன்னார்கள் அப்போது,தாயெனநின்றவள் ஏன்மண்ணைத்தின்னாயென்றுகேட்க நான்மண்ணைத்தின்னவில்லையேயென்று அந்தமாதவன் உலகமுண்ட தன்வாயைத்திறந்து சகலசராசரங்களையுங் காட்டினதுபோல்கிருஷ்ணன் நானென்று நின்றஒருகோபிகை தன்வாயைத்திறந்துகாட்டினாள் அதைப்பார்த்து ஆச்சரியத்தை அடைந்தார்கள் பலபேர்கள்இவ்விதமாய்ச் சந்தோஷித்து நகைத்து விளையாடினார்கள்,

வாராய்பூமீசனே ஒருசீவவதனை ஸ்ரீகண்ணபிரானைப்போல வெண்ணெய்திருடப்புகுந்தனள் சிலர்சுந்தரீரத்தனங்கள் வெண்ணெய்திருடன் வந்தானென்றுசொன்னார்கள்அவ்வளவில்கண்ணன் தன்வாயிலிருக்கின்றவெண்ணெயைவழித்து இவர்கள்வாயிற்பூசினதுபோல் அவள்செய்தாள் யாவருங்கூடிமுறையிட்டதுபோல் அங்குசிலர் முறையிட்டார்கள் ஒருபுண்யாங்கனை யசோதாப்பிராட்டியைப்போல் ஒருதாமரைக்கொடியைக்கையிற்பிடித்துக்கொண்டுஅதட்டினாள் ஒருசுந்திரி கண்பிசைந்தழுதுக்காட்டினாள் ஒருமோகனாங்கி யிவர்களுக்குச் சமாதானங்கள்சொல்லினாள் இவ்விதங்களாகியவிரலில்கட்டினதுமுதலிய சமஸ்தகிரீடைகளையும் ஆதரித்தனர்கள்.

வாராய் விவேகசாலியானநரேந்திரனே ஒருமாதுகாளியசர்ப்பாசனைப்போலவும் சிலகன்னியா ரத்தினங்கள்நாககன்னிகைகளைப்போலவும் ஒருராசீவவதனை ஸ்ரீகோபாலகுமாரனாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானைப்போலவும் வஹித்துநர்த்தனங்களைச்செய்ய அந்தநாக பத்தினீவேஷதாரிகள்ஸ்துதிக்க ஸ்ரீகிருஷ்ணவேஷதாரியானவள் அவர்களைக்கிருபைசெய்து ரட்சித்துஅவர்களை அம்மடுவில்நின்றும்வெளிப்படுத்தி விடைகொடுத்தனுப்பித் தானும்மடுவைவிட்டு வந்தவளைப்போலவுமாடினாள இப்படிஎல்லாருஞ்சந்தோஷித்து விளையாடினார்கள்.

வாராய்புதேந்திரனே ஒருசதுரங்கனையானவள்ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியாகவும்மற்றவர்கள் கோபாலகோவினங்களாகவும் பாவித்துக்கொண்டு காட்டுத்தீயானது வந்துசூழ்ந்ததுபோலவும் அக்காலத்தில்கோபாலாகள முறையிட்டதுபோலவும் ஸ்ரீகிருஷ்ணாரக்ஷிரட்சியென்று யாவருமுறைய்யிட்டார்கள் அந்தஸ்ரீகிருஷ்ண ரூபாங்கனை ஆவென்றுவாயைத்திறந்து கண்ணன்காட்டுத்தீயைக்கவளிகரித்ததுபோல் ஆகாயத்தைக்கவ்ளிகரித்துக் காட்டினாள். அம்மாத்திரத்தில் யாவருஞ் சந்தோஷித்தனர்கள,

வாராய்மனுஜேந்திரனே ஒருமகாகம்பிர சுகுணவதியானவள் கோவிந்தனாகவும் மற்றகோபிகள் யாவரும் கோபாலர்களும் கோவினகோவத்சங்களு மாகவுமிருந்து அகோ ஈதென்ன ஆச்சரியம்எந்தக்காலத்திலுமிப்படிக்கு வருஷித்ததில்லைஸ்ரீகிருஷ்ணா ஸ்ரீமாதவா ஸ்ரீஜனார்த்தனா அபயமென்றுமுறையிட்டார்கள் அந்தஸ்ரீபகவத்ரூபபுண்ணியவதியானவள் ஒருவரும்பயப்படவேண்டியதில்லை வாருங்கள் இந்தப்பர்வதத்தினடியில் நில்லுங்களென்று எம்பிரான்கோவர்த்தனமெடுத்துக் குடையாகப் பிடித்ததுபோல் தன்முன்றானையைவிரித்துஉயரவெடுத்துப் பிடித்துக்காட்டினாள் அவ்வளவில்யாவரும் சந்தோஷமடைந்தார்கள்.

வாராய் ராஜராஜோத்தமனே இவ்விதங்களாக இந்த சமஸ்தமான கோபிகாசனசமூகங்களும் ஸ்ரீகிருஷ்ணலீலாகுணங்களில் ஆழ்ந்துதன்மயதவங்களை யடைந்தவர்களாய் விளையாடினார்கள் மேலும் அந்தக்கோபகன்னிகைகள் அந்தப்பிருந்தாவனமார்க்கங்களிலுள்ளபல்விருட்சங்களையும் புஷபச்செடிகளையும் துளசியாகிய பிருந்தாவனங்களையும் புஷ்பக்கொடிகளையுமபார்த்துச்சின்மயங்களானதங்கள் சகிஜனங்களாகநினைத்து ஸ்ரீகிருஷ்ணபகவானாகிய எங்கள் உத்தமநாயகர்களைப்பார்த்தீர்களா சொல்லுங்களென்றுவினவிக்கொண்டு நிர்ப்பயாநந்தபரிதர்களாய்ச் சஞ்சரித்துஅங்கங்குசிலநேரம் ஸ்ரீகிருஷ்ணலீலாவினோதங்களாகவிளையாடித்தேடிக்கொண்டிருந்தார்கள் அப்படியிருக்கின்ற சமயங்களில் அவ்வனவீதிகளிலும் புஷ்பவனபிரதேசங்களிலும்தோப்புகளினுடைய அடிவாரநிலங்களிலும்எங்கும்வெண்மணற்பாங்குகளாயிருக்கின்றபடியினால் அவ்விடங்களில்படிந்திருக்கிற சங்கரேகைசக்கிரரேகைமுதலிய சேவைகளோடுங்கூடிய மகாராஜலக்ஷண ஸ்ரீசரணாரவிந்தங்களினுடைய அடையாளங்களை அங்கங்கு கண்டுகளித்து ஒருவர்க்கொருவர்காட்டினவர்களாய் நெடுந்தூரந்திரிந்து. தேடி ஸ்ரீபகவானைககாணாதவர்களா யலைகின்ற ஸ்ரீகோபிகாசனங்கள குணானுபவஞ்செய்யத்தொடங்கினார்கள.

வாராய்மெல்லியஇடையினையுடையபூங்கொடியே இதோபார்த்தையா ஸ்ரீபகவானானவா ஒருநாயகிநிமித்தம் அன்புடனே புஷ்பங்களைக்கொய்து கொடுத்து அவளுக்கிதமுண்டாகச் செய்தனர்ஆகையால் அவர் ஸ்ரீபாதாரவிந்தத்தை நன்றாயூன்றிநின்ற அடையாளந் தோன்றுகின்றது.

வாராய்லோகசுபாங்கி இவ்விடத்தில் ஒருஸ்திரீயைத் தமதுபிரியத்தினால சுமந்துசஞ்சரித்து லீலைசெய்தனர் அதனால் ஸ்திரீபுருஷர்களுடைய பாதவடிகள்சிலதூரம்வரையில் காணப்பட்டு இவ்விடங்களில் ஸ்திரீயினுடைய பாதவடையாளம் மறைந்துபோக ஸ்ரீபகவானுடைய பாதசின்னங்கள் மாத்திரம் விளங்கப்பட்டன இதோ இங்கு இறக்கினாற்போ லிருக்கின்றது அந்தச்சாடைகள் இவ்வடையாளங்களாலேதோன்றுகின்றன,

வாராய்எனதன்புள்ளசகியே ஸ்ரீஅச்சுதராகிய கண்ணபிரானனவர் இதோவுட்கார்ந்துஒருமேன்மையையடைந்தஸ்திரீக்குக்கர்ப்பூரதாம்பூல ப்ரசாதத்தைத் தமதுதிருவதரத்தினால்கிருபைசெய்து காடாலிங்கனஞ்செய்திருக்கின்றார் இதோபார்த்தையா இவ்விடத்தில் ஸ்ரீகோவிந்தனும் ஒருகோபிகையுமாகிய இருவரும்உட்கார்ந்து சரசங்களைச்செய்தார்கள் அதனால்ஸ்ரீபகவானுடையபாதம்புயங்களினேரங்களமூர்த்தியதாயூன்றியிருப்பதும் அந்தச்சுந்தரி அஸ்தங்களூன்றித் தாவியிருப்பதும் இவ்விருவர்களும் சரசமாகச்சந்தோஷித்த விவரங்களுந் தோன்றுகின்றன.

வாராய்பத்மாட்சி ஸ்ரீபத்மநாபராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் ஒருசுகுணவதியைவரித்து அவளோடுலீலாவினோத கிரீடைகளைச்செய்தார் அவ்விரண்டு பேரும் நடந்துவந்துயமுனாநதியில் ஜலகமாடினர்கள்இதோ இவர்களிரண்டுபேரும்நதியிலிறங்கின அடையாளமும் மறுபடியும் இருவரும்நதியைவிட்டு வெளிபபட்ட அடையாளமும்இவ்விடங்களில் தோன்றுகின்றனவல்லாமல் இறங்கியதுறையும் ஏறியதுறையும் நேரடியாலும் மாற்றடியாலுங்காணப்படுகின்றன.

வாராய்சுந்தரவதியாகிய தருணீமணியே ஸ்ரீவேணுகானலோலராகிய ஸ்ரீ கோபாலமூர்த்தியானவர் ஒருகலயாணியைவரித்து அவளைக்காமகேளீவிலாசங்களில் சந்தோஷிக்கச்செய்தணைந்தனர் இதோபார்த்தையா இவர்கள் பாதவடிகளும் உத்தரீயத்தின்குச்சுகளிலடையாளமும் முன்றானையினடையாளமுங்காணப்படுகின்றன அவற்றுள்சிலகுறிகள் நன்றாய்த்தோற்றுகின்றனசிலவடையாளங்கள மறைந்துமறையாமலுந் தோன்றுகின்றன அங்கலப்புகளாகிய அடையாளங்களுந் தோற்றுகின்றன.

வாராய்கமலாட்சி மகாநுபாதனாகிய ஸ்ரீபாலகோபாலரானவர்சதியுடன்கூடிக்கொண்டு போனார் அவர்களிருவரும் ஒருவர்க்கொருவர் தோள்களில்கைகளைப்போட்டுக்கொண்டு உல்லாசமாகஉலாவிக்கிரீடித்தனர்களஇவர்களின்நான்குகால்களின் அடையாளங்கள்மாறிமாறிச் சரசங்களாகத்தோன்றுகின்றன-

வாராய்மனோஹரிணி ஸ்ரீகிருபாகராகிய ஸ்ரீதாமோதரமூர்த்தியானவர் ஒருசாதுர்யாங்கனையினிடத்தில்கூடியணைந்து சரசமாடினர் அவ்வடையாளங்கள் இதோ தெரிகின்றன அவற்றுள் புருஷாவயவஜாடைகளும அவைக்குள்ஸ்திரீகளினுடைய அடையாளங்களுங் கலந்துமெலிந்துமாறிமாறித் தோற்றுகின்றன.

வாராய்பூமாதே ஸ்ரீநந்தகோபநந்தனராகிய ஸ்ரீபுருஷோத்தமரானவர் ஒருசாநதசித்தையான காந்தாமணியுடன்மிகவும் மனோகரங்களாகவிளையாடித் தான்பிரிந்துபோக நினைக்கும்போது அநதவுத்தமிஇக்கிதமறிந்துவிட்டுப்பிரிய மனமில்லாதவளாகி ஸ்ரீபகவானுக்குத் தண்டன்ஸமர்ப்பித்து பிரார்த்தித்தாள் அதனால் அவளோடு கலந்தவராயிடைந்தனர் இதோ அவ்வடையாளங்கள் காணுகின்றன பாராய்இவ்விரண்டு பேருங்கலந்தணைந்தவிடமிதுபின்புஸ்வாமி செல்லநினைந்துஎழுந்தடிவைத்தவிடமிது அவள்தண்டன்சமர்ப்பித்த அடையாளமிது இருவரும்அமர்ந்திருந்த ஸ்தலமிதுவிசிதமாகத்தோன்றுகின்றன.

வாராய்இந்துமுகியே மகாலட்சணவதியானஒருஸ்திரீயானவள் அன்புடன்பிரார்த்தித்தழைத்தஸ்ரீபக்தவத்ஸலராகிய ஸ்ரீபரமபுருஷரானவர் அவளுக செதிரில்பிரியமாகநடக்க அவளும்மகா விரஹத்துடன் எதிர்கொண்டுவந்து கடாலிங்கனஞ்செய்துஅணைந்தனள்இதோ பாரத்தையா ஸ்ரீபகவான் இஙகிருந்து புன்னகையாகச் சென்ற அடையாளமும் அந்தச்சிறியவளானவள் பாதவடிகளைவேகமாகவைத்துஓடிவந்த அடையாளமும்இந்தநான்குசரணங்களுமொன்றாய்க்கலந்து சரஸமாகத் தோய்ந்த அடையாளமுங் காணப்படுகின்றன.

வாராய்அலிவேணியே ஒருமதனவல்லியானவள்ஸ்ரீமுகுந்தரைப்பின்தொடர்ந்து பிரார்த்திதது அழைத்தும் அவாதிரும்பாமல் நடக்கும்போது ஓடிச்சென்றுபிடித்துக் கட்டியணைத்தனள்இதோபாரஸ்ரீபகவானுடையபாதவடிகள் தங்காமற்செல்லுகின்ற அடையாளமும்இந்தயவ்வனவதியானவள்வேகமாய்ப் பின்னோடியகாலடிகளினடையாளங்களும்இவ்விருவர்சரணங்களுங்கலந்து காணப்படுகின்ற அடையாளங்களும் இங்கேநின்று சாவதானமாக அவர்கள்கிரீடித்த அடையாளங்களுந் தோன்றுகின்றன வாராய்சபலாட்சியே ஸ்ரீபகவானனவர் இரண்டுசுந்தரவதிகள் தம்மையடுக்கஅவர்களுடையமனது திருப்தியடையும்படி கிரீடித்துச் சஞ்சரித்துக்கொண்டிருந்தார் இதோவிசிதமாகத்தோன்றவில்லையாஸ்ரீகிருஷ்ண பாதாரவிந்தங்கள் நடுவில்தோன்ற இவ்விரண்டு புண்யவதிகளினுடைய காலடிகள்இரண்டு பாரிசங்களிலுந்தோற்ற ஆறுவிதஅடையாளங்களுஞ் சுந்தரமாகத் தோற்றும்படி சிலதூரம்உலாவி ஓரிடத்தி லமர்ந்திருக்கின்றன. என்றுஇவ்விதமாக அடையாளங்களைபபார்த்துப் பேசிக்கொண்டார்கள்,

சத்திய சீலனாகிய மகிபாலகனே இவ்விதங்களாக இந்தகோபிகா சுந்தரீரத்நங்கள் ஸ்ரீபகவானுடையண் பாதாரவிந்த சின்னங்களின் அடையாளங்களைக்

குறித்த ஸ்ரீகோபிகாஜன போகாதிசயங்களை இச்சித்து உடனே ஸ்ரீபகவத்பாதாரவிந்த மகிமாதிசயங்களைக் குனுபவஞ் செய்யத்தொடங்கினார்கள் அவற்றைவிவரமாய்ச்சொல்லுகிறேன் கேட்கக்கடவாய்.

வாராய்பூரணசந்திரோதய முகாரவிந்தையே இதோ இந்தவனபூமிக்கு ஸலக்ஷண லட்சிதங்களாய்விளங்குகின்றஸ்ரீபாதபத்மங்களி னடையாளங்களைப்பார்த்தையா இத்திருவடிகள் ஸநகஸநந்தனஸநத்குமாரஸநத்சுஜாதாதிபரமயோகீந்திரர்களுடைய ஹிருதயாரவிந்தபீடங்களில்அமர்ந்திருந்து அவர்களைப் பிரம்ஹானந்தபரிதர்களாக ஆனந்திக்கச்செய்கின்றனவல்லவா இவைபடும்படி இப்பூமி என்னதவஞ் செய்ததோவென்று துதித்தனள் ஒருகோபிகாமணி.

வாராய் நித்தியகல்யாணியே இந்தயோகீஸ்வரேஸ்வரருடைய ஸ்ரீசரணாரவிந்தங்கள்வேதங்களிலுலவுகின்றனவல்லவா அப்படிப்பட்ட சரணங்களினடையாளங்கள் இந்தவனவீதியினுடைய திருமேனிக்குத்திவ்யாபரணங்களாகப் பிரகாசிக்கின்றனபாராயென்று இச்சித்தனள் ஒருமாதர்சிகாமணி.

வாராய்இளங்கொடியே இந்தஸ்ரீபதமாகியதாமரைமலர்கள்திருப்பாற்கடலாகிய சமுத்திரராசனுடையதவபுத்திரியான ஸ்ரீமகாலட்சுமீதேவியினுடையதிவ்யாவயவங்களுக்குச் சுந்தரமான திவ்யாபரணங்களாகியும் அவளுடையகைங்கரியோபயுக்தமாகியுமவிளங்குகின்றனவல்லவா அப்படிப்பட்டசரணசின்னங்கள் நாம் காணக்கிடைத்தனவென்று களித்தனள்ஒருமோஹனாங்கி.

வாராய்குணரத்நமே இந்தஸ்ரீபரந்தாமருடைய சுந்தரமாயிருக்கிற தாமரைநிகர்த்தபதசின்னங்கள்நித்யஐஸ்வரியஸ்வரூபமோட்சலட்சிமியாகிய முக்திகாந்தா ரத்நமனோமோஹனங்களாகியும் லட்சண முக்கியபதித்வமகாவிபுவாகியும் விளங்குகின்றனவல்லவா இப்படிப்பட்டவைகளைக்காணப்பெற்றும்அவரை இடைவிடாமல்தரிசித்துக்கொண்டிருக்கப் பாக்கியஞ்செய்யாமற்போனேமேயென்று மோகதாபங்களை யடைந்தனள்ஒருஸ்ரீகிருஷ்ணசத்தமானசை,

வாராய்சுபாங்கியே சர்வேஸ்வரனாகிய இந்தகோவிந்தனுடைய ஸ்ரீசரணாரவிந்தங்களின்மகரந்தங்களாகியதிவயரேணுக்களை பிரம்ஹருத்ர இந்திராதி சமஸ்தமானதேவதாஸமூஹங்களும் பரமமுநீந்திரர்களும்தங்கள்சிரசில்தரித்து சகலபுண்யபதவிகளையும் அணிமாதிஐஸ்வரியசித்திகளையும் அடைந்து தன்யர்களானார்கள் அவர்கள் அப்படிப்பட்டபேற்றை யடையும்படி ஸ்ரீசரணாரவிந்தசேணுவை அனுக்கிரகித்த ஸ்வாமியானவர் என்னை நம்மிடத்தில் உபேட்சைசெய்தார்ஆயினும்இவற்றைக்கண்டு தரிசிக்கவாவது செய்தாரோஇதுவும்அவருடைய கடாட்சநதானென்று துதித்துச்சந்தோஷித்தனள்ஒருபிடிநடையாள்இவ்விதங்களாகச்சமஸ்தமானகோபீஜன ஸமூஹங்களும் அவரவர்களுக்கு ஸ்ரீபகவத்கிருபையினால் தோற்றினவேதார்த்த நிர்ணய மகிமார்த்தங்களைத் துதித்துக்கொண்டு சஞ்சரித்தார்கள்.

வாராய் சர்வஜனமனோரதனாகிய மகாராஜனே இந்தப்படி பலவாறாகப்பிரிந்து கோபிகாஜனஸமூகங்கள்யமுனாதீரங்களில்ஸ்ரீபகவானைத்தேடிச்சஞ்சரித்துக்கொண்டுவருகின்ற சமயத்தில் அங்கொரு பிரதேசத்தில்தங்களைவிட்டுப்பிரிந்து தங்களைப்போலவே ஸ்ரீகிருஷ்ணபிரானைத் தேடிக்கொண்டிருக்கின்ற சிலகோப ஸ்திரீஜனங்களைக்கண்டார்கள் பின்புஅவர்களும் இவர்களுங்கூடிக்கொண்டுஸ்ரீகோவிந்தனைத்தேடுகின்றார்கள் இப்படியிருக்கஅந்தவிடத்தில்அந்தஸ்ரீகிருஷ்ணபகவானானவர் ஆத்மானுபவ திருப்தராகிய ஜிதேந்திரியநிர்மலமானஸராகியும் இந்தக்கோபீஜன மோகவாஞ்சைகளில் அகப்படாதவராகியு மிருந்தபோதிலும்இந்தக்கோபிகளுக்கு இசைந்தவரைப்போல விளையாடிக்கொண்டிருந்து அவர்கள் யாவரையும் விட்டுப்பிரிந்து ஒருகோப சுந்தரியுடனேபோய்விட்டாரென்று முன்னமேசொல்லியிருக்கின்றேனல்லவா அந்தஸ்வாமியானவர் அவளிடத்தில் மிகுந்தஆசையுள்ளவரைப்போலவளைச் சிலதூரம் அழைத்துக்கொண்டுபோய் அவளிடத்தில் புருஷவிஷய சேஷ்டாதிசரஸதைரியங்களைக்காட்டி மோஹபரவசையாகிய அந்தக்கோபியினது விஷையாசத்திவெளிப்படும்படிக்கிரீடித்தனர் அப்பொழுது அந்தக்காமினியானவள்இந்தஸ்திரீசனங்களுள் தன்னையே சிரேஷ்ட நாயகியாகநினைத்துஸ்ரீபகவான் தன்மோகத்திலகப்பட்டு பிரியாமல் எல்லாரையுந்துறந்து தன்னிடத்திலேயே யிருக்கின்றாரென்கிற கர்வமனதுடையவளாய் சுவாமியைப்பார்த்து வாராய்கமலாட்சா நான்நடக்கமாட்டேன்கால்நோகிறது என்னை எடுத்துக்கொண்டு உனக்குஇஷ்டமான இடங்களிலெல்லாங் கொண்டுபோய் ரமிக்கக் கடவாயென்று சொன்னாள் அதைக்கேட்டுப்பகவான் நல்லதுஎன்மேல் ஏறிக்கொள்ளென்று குனிந்தார் அப்போது இவள்குதித்தேறப்போனாள் அந்தச்சமயத்தில் ஸ்ரீபகவான் அந்தர்த்தானமாய்மறைந்துபோனார் அவரைக்காணாமல் இவள்மகத்தாகிய விரஹதாபங்களையடைந்து ஆஸ்ரீகிருஷ்ணாஎங்குபோய்விட்டீர் ஆ பிராணேசனே ஆ மனோமன்மதரமணனே எனக்குப்புத்திவந்தது இனியுனக்குத்தாசானுதாசியாகின்றேன் என்னைவந்து காப்பாற்றென்றுபலவாறாகத்துதித்துத் துக்கித்துக்கொண்டிருந்தாள் அப்படியிருக்கின்றவளைப்பார்த்து ஸ்ரீகண்ணபிரானைத் தேடிக்கொண்டுவருகின்ற கோபீஜனங்களுள் சிலர்ஸ்ரீபகவத்விஷய சாதுர்யங்களுககுப்பயந்து நின்றனர்கள இ

ன்னுஞ்சிலர் ஒருவர்க்கொருவர் தங்கள்ஸகீஜனங்களேப் பார்த்துச் சொல்லுகின்றார்கள் இந்தப்பூம் புதரினிடத்திலல்லவா ஸ்ரீபகவானானவர் நம்மைச்சேர்ந்தும்ன்மதானங்களேச்செய்தனர் இந்தவெண்மணற்குன்றுகளின் மீதல்லவா நமதுஸ்ரீபிரியநாயகன் நம்மைக்கடாலிங்கனஞ்செய்து சந்தோஷ திருப்திகளேச் செய்தனர்இந்தக் குளிர்ந்த தோப்பின்சாயல்களிலல்லவா நமதுஸ்ரீசுபமூர்த்திநமதுமான தனங்களை யபகரித்தனர் இந்தமாதவிப் புஷ்பப்பந்தலினிடத்திலல்லவாநமது ஸ்ரீ தயித்யார்த்தகனானவர் திருவதாபானங்களேயருளினர் இந்தப்புஷ்பவனத்திலல்லவா நமதுஸ்ரீரமாரமணன்சுகந்தபுஷ்பங்களேக்கொய்துநமது அளகாபாரங்களில் முடித்தலங்கரித்தனர்என்று அவரவர்களுக்குத் தோன்றியபடி விட்டுப்பிரிந்தவர்களாய்அம்புஜநயனனாகியஸ்ரீகிருஷ்ணபகவானேநினைத்துத்தங்கள் தாபந்தீர்க்குணானுபவஞ்செய்தார்கள இப்படிக் குணானுபவஞ்செய்தவர்களும் மற்றவர்களும அந்தபிருந்தாவன பிரதேசங்க ளனைத்திலும் நிர்ப்பயர்களாய்த் தேடித்திரிந்து எங்குங் காணக்கிடையாமல் மறுபடியும் ஸ்ரீயமுனாதீர்த்தத்திற்கு வந்துசேர்ந்து ஸ்ரீபகவானானவர் பிரச்ன்னமாக வேண்டுமென்று யாவரும் ஏகமாய்ச்சேர்ந்து உத்தேசித்து ஸ்ரீகிருஷ்ணகல்யாணகுணாமிர்த திவ்யகானங்களேச் செய்தனர்கள்,

---

௫௧-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

துன்னிடும்யமு னாநதிதீரத்தில்
மன்னுங்கோபியர் மாதவனேநினைத்
தென்னபாவ மிழைத்திட்டோநாமெலா
மென்றுகண்ணனே யேற்றித்துதிசெய்வார்,

கோபிகாஜனஸமூஹங்கள் ஸ்ரீயமுனாநதீதீரத்தில்வந்துசேர்ந்துஸ்ரீபகவானுடைய திருவவதார அதிசயங்களேயும்தங்களே இதுவரைக்கும்இரட்சித்தஆச்சரியகுணங்களேயும் சொல்லிபிரசன்னராய்த் தங்கள் இஷ்டங்களேத்திருப்திசெய்து இரட்சிக்கவேண்டுமென்றுபிரார்த்தித்ததைச்சொல்லுகின்றது,

ஸ்ரீகோபிகாஜன கீதங்கள்,

வாரீர்ஸ்ரீஅரியாகியஎங்கள்மனோவல்லபரோ இந்தநந்தவ்ரதஜத்தில் நீர் திருவவதரித்தபின்பு கோகுலமானது விருத்தியடைந்து மிகவும்லக்ஷ்மீ விலாசங்களேயுடையதாகவிளங்குகின்றது நாங்கள்யாவரும்உமதுகுணங்களுக்கும் சௌந்தரியங்களுக்கும் ஈடுபட்டுஎங்கள் சர்வேந்திரியங்களேயும் உமக்கேசமர்ப்பித்து உம்முடையமாதுரியவசனங்களுக்கும் உமது ஜகன்மோகனஸ்வரூப சேவைக்கும சர்வதிக்குகளிலுந்தேடியலேந்துகொண்டிருக்கின்றோம் இப்போதுநீர் எங்களுக்குபிரசன்னமாயவந்துஇரட்சிக்கக்கடவீர்,

வாரீர்ஸ்ரீவரதராகிய ஸ்ரீபத்மநாபரோசெந்தாமரைப்புஷ்பத்தின் இதழ்களுக் கொப்பாகிய உமதுநேத்ரங்களின்வீக்ஷண்ய கிருபாதிசயங்களுக்கு பாத்தியர்களாயிருக்கிறஇப்படிப்பட்ட எங்களேநீர் அலேயச்செய்வதுஉமக்குத்தர்மமோ வாரீர் ஸ்ரீபுருஷசிரேஷ்டரோ அபாயஞ்செய்யவந்த விஷஸ்தனமுடையவளாகிய பூதனேயினிடத்திலிருந்தும் அகாசுர அரிஷ்டாசுரவியோமாசுரன்முதலிய அசுரபாதைகளில்நின்றும் விஷமயமான யமுனாதிஜலத்திலிருந்தும் ஊழிப்பெருங் காற்றுகளோடுங்கூடிமின்னல்களேக்காட்டி இடிமுழக்கங்களே வெளிப்படுத்திச் சப்தமேகங்களும்வருஷித்த மஹாவருஷத்திலநின்றும் யாதொருஅபாயங்களுமில்லாமல்தாங்களும் மற்றகோபாலர்களும்கோக்களும் நாசத்தையடையாமல் பிழைத்திருக்கும்படிஎங்களுக்கருளி யாவருஞ்சௌக்கியங்கொள்ளச்செய்தீர்;

வாரீர் எங்கள்பிராணநாதராகிய ஸ்ரீஅரவிந்தலோசனரோநீர் நிச்சயமாக யசோதாப்பிராட்டிக்கு புத்திரரல்லவோசமஸ்த பிராணிகளினுடைய புத்திவிவேகங்களுக்குச்சாட்சிபூதராக விளங்குகின்றவரல்லவா சதுர்முகனால்இந்தப்பிரபஞ்ச சம்ரட்சணார்த்தத்தின்பொருட்டுப்பிரார்த்திக்கப்பட்டுஇந்தவம்சத்தில் உமதுகிருபையினால் திருவவதாரஞ்செய்தருளினீர் நாங்களுமஉமை அடுத்தால் அறிவுவிளங்கிச் சம்சாரபயத்தில்நின்றும்அஞ்சினவர்களாய்உம்மையே சரணமாகவடைந்தோம் ஆகையால்எங்களுக்கு அபயப்ரதானஞ்செய்து சர்வாபீஷ்டங்களேயுமருளிச்செய்கின்ற ஸ்ரீமகாலட்சுமிதேவியினுடைய ஸ்ரீஹஸ்தங்களே ஸ்பரிசிக்கத்தக்க உம்முடைய கையாகிறதாமரைப் புஷ்பங்களே எங்கள் தலேமீதில்வைத்துக்கிருபைசெய்யக்கடவீர்உமது தாஸ்யபூதராயிருக்கின்றஎங்களுக்குஉமதுதிவ்யமோகனசுந்தரவதனாரவிந்தசேவையைக்கிருபைசெய்யக்கடவீர்,

வாரீர் ஸ்ரீபக்தபராதீனரோ உமதுஸ்ரீஆதஜனங்களாகியசமஸ்த பிராணிகளினுடைய அநந்தஜன்மங்களில்சம்பாதித்த பாபராசிகளேநாசஞ்செய்து இரட்சிக்கப்பட்டனவாகியும் மிகவும்புண்ய ஜன்மங்களாகிய பசுவினங்களேப்போஷிக்கும்படி அவற்றின்பின்னேசஞ்சரிக்கத்தக்கனவராகியும் ஸ்ரீமகாலட்சுமிதேவி செய்யப்பட்டகைங்கர்யாதிசயங்களுக்கு ஸ்தானமாகியும்காளியசர்ப்பேந்திரனுடையபணாமண்டலமாணிக்ய மண்டபங்களுககு அலங்காரமாகியும் விளங்காநின்ற உமதுஸ்ரீபாதாம்புஜங்களேஎங்கள்ஸ்தனங்களில்வைத்து எங்கள்மனதிலுண்டாகியவிரகதாபங்களேப் போக்கடிக்கக்கடவீர்,

வாரீர் ஸ்ரீ புருஷோத்தமரோ மகாபுதரஞ்சநீயென்று சொல்லப்பட்ட உம்முடைய திவ்ய சூக்திகளாலும் வேதபுருஷனாலும் வேதாந்தார்த்த நிர்ணயநிச்சயமகாபுருஷர்களாகிய தத்வவேதிகளாலும் கொண்டு ஆடத்தக்கவாக் விஜரும்பணங்களேயுமாகிய மதுரமாகிய வசனகளே யுடையவராகியும் விளங்குகின்ற உமது மகாதிருக்கல்யாண குணங்களில் மோகன மானசர்களாகியும், உம்முடைய தாசீஜனங்களாகியுமிருக்கின்ற

எங்களுக்குஅப்படிப்பட்ட உமது திருவதராமிர்தபானங்களைத்தந்தருளி எங்கள்மனோஜனிதமன்மததாபாக்கினியைத்தணித்து ரட்சிக்கக்கடவீர்.

வாரீர் ஸ்ரீஜனதளாட்சரே நாங்களுமது மகாபாகவதஜனங்களாகியபக்தகோடியில்சேர்ந்தஸ்திரீஜனங்களாலல்லவாஎங்கள் விஷயத்தில்உம்முடையசாதுரியாதிகுணமகிமைகளைக்காட்டத்தகுமோ ஆகையால் இளநகைகளோடுங்கூடிய உமது சுந்தரவதனாரவிந்தத்தை எங்களுக்குப் பிரசன்னமாகக்காட்டி ரட்சிக்கக்கடவீர்.

வாரீர் கோபீஜனமனோவல்லபரோ உமது நித்தியதிவ்யானந்தகல்யாணகுணகணமகிமைகள் ஸ்ரீபெரியபிராட்டியாராகிய ஸ்ரீமகாலக்ஷ்மீதேவிக்குச் சர்வ மங்கலகரமாகியும் ஸ்ரீமகாபாகவத பக்தஜனங்களினுடைய செவிகளுக்கானந்தகரமாகியும் சர்வேந்திரியநிக்ரபரிசுத்தமானஸபரமயோகீந்திரர்களினுடையஇருதயாபகாரகாமாதிஹரிஷ்டவர்க்கசத்ரு நிரசனங்களாகியும் பிரம்ஹமானசீகபுத்ரர்களாகியும் மகாதீர ஜனோத்தமர்களாகியும், நிரபேட்சை நிஷ்காமர்களாகியும் பரமசாதுக்களாகியும் யதேச்சா விகாரிகளாய்ச் சஞ்சரித்து கித்யாத்மதிருப்த ஆத்மாராமர்களாய் விகரிக்கத்தக்கவர்களாயுமிருக்கின்றஸநகாதி பரமமௌனீந்திரர்களுக்குஸ்துதிசெய்துஉஜ்ஜிவிக்கத் தகுந்ததாகியும் நிரந்தரதயஸ்சுசீலனாகிய ஸ்ரீ ஆதிசேஷபகவானுக்கு சீவனமிர்தமாகியும் விளங்குகின்றனஉமது தாஸ்யருசியறியாத சுத்ததமோதத்வாம்சஜனிதாசுரமூட ஜனங்களுக்குக்கிடைப்பதற்குஅருமையாயிருக்கின்றன.

வாரீர்ஸ்ரீஜனார்த்தனரே சுத்ததமோதத்வாம்ச 'ஜனிதர்களுக்குத்தேவரிருடைய நித்தியானந்தகல்யாணகுணமகிமைகிடைக்கவொட்டாமற் செய்வதுபோல எங்கள் விஷயத்திலும் உபேட்சைசெய்யாமல்அனுக்ரகித்துஇரட்சிக்கவேண்டும் உமது முகாரவிந்தங்களில்தோன்றும்இளநகையையும் கிருபாகடாட்சவீட்சண்யங்களையும் உமதுதிவ்யநாமஸ்மரணங்களையும் நித்யகல்யாணகுணத்யானங்களையும் உமது மகா மாதுரியவசனங்களையும நாங்கள்எங்கள்மனதில் மறைப்பில்லாமற்கொண்டு எங்கள்பிள்ளைகளையுங் கணவர்களையும்மறந்து அனுபவித்துக்கொண்டிருக்கின்றோம் இனிஒருக்காலும் இச்சரீரங்களைத்துறந்தாலு மறப்பதில்லைஆகையால்தீனைகளாகியஎங்களுக்குப்பிரசன்னமாகி ரக்ஷிக்கக்கடவீர்,

வாரீர் ஸ்ரீகோபாலசக்கிரவர்த்தி நீர்கோகுலத்திலுள்ளஉத்தமபசுவினங்களை ஓட்டிக்கொண்டு இந்தபிருந்தாவனத்திற்பிரவேசித்து அவைகளைப் பரிபாலனஞ்செய்யும்பொழுது மிகவும்மிருதுவாய் உமது ஸ்ரீபாதாம்புஜங்களில் அவ்வனவீதிகளிலுள்ள பருக்காங்கல்லுகளுறுத்துமப புல்லுகளுந்துமுமபசுமுள்ளுகள்கைதைக்குமே அவற்றால்திருவடிகளுக்கு வருத்தமுண்டாகுமேயென்றாஎங்கள் இருதயங்களில சோகமுண்டாக அதனால்புண்பட்டிருப்போம் அப்படியிருக்கின்றசமயத்தில் சூரியாஸ்தமானகாலத்தைப் பார்த்துக்கொண்டிருக்க நீர் அவ்வசனசஞ்சாரங்களைவிட்டுச் சர்வாபரணபூஷிதராய்எங்கள இருதயங்களை அஞ்சவேண்டாமென்றதற் கொப்பாகஅர்த்தனுதிசயத்தைச் செய்கின்ற அழகியமயிற்றோகைகளும் நீலரத்னச் சுருள்போலப் பின்னலிட்ட முன்னெற்றிமயிர்களில் ஊசலாடுகின்ற பிரகாசசௌந்தரியரத்னச்சுட்டியும் திருப்பவள வதரமத்தியில்விளங்குகின்றபுன்னகையும் கோதூளியினால் பரவியிருக்கிற நீலரத்நாகாரமும் விளங்கும்படியாய் எழுந்தருளிக்கிரமக்கிரமமாய் எங்கள்யாவருக்கும்உமது திவ்யசேவையையலபிக்கச்செய்து எங்களமனோவியசனத்தை நாள்தோறுந்தீர்த்து ரட்சித்துக்கொண்டிருக்கின்றவராசசுதே,அப்படிப்பட்டஉமதுதிவ்யாபிமானங்கள் எங்கொளித்தனவோ வாரீர்சமுத்திரதயாபிராமராகிய சர்வகோபீஜனஸ்ரீஇருதயேஸ்வரரோ உமதுஸ்ரீசரணாரவிந்தயுகளம் மகானுபாவர்களாகிய உமதுபக்தஜனஸ்ரீமகாபாகவதர்களுடையசுப்ரசந்ந இருதயப்பலப்பிரததிவ்ய காமதேனுவாகியும்ஸ்ரீசதுர்முகாதித் திவிஜாஸன்னுத நித்யமங்கலமகோற்சவஜேதீயமானங்களாகியும் ஸ்மரணமாத்திரத்தில் சர்வப்பிராணிகளினுடைய துக்கமர்த்தனங்களாகியஸ்ரீசுபகரங்களாகியும் சமஸ்தலோகங்களுக்கும்அபயப்பிரதங்களாகிய நித்தியபத்தியகரங்களாகியும் விளங்குகின்றன. அப்படிப்பட்டஉமது ஸ்ரீபதாப்ஜசின்னங்களைஉமது தாசிஜனங்களாகிய எங்கள் வக்ஷஸ்தலத்திறகுத்திவ்யாபரணங்களாக அலங்கரித்து ரட்சிக்கக்கடவீர்,

வாரீர் ஸ்ரீருஷிகேசரோ உமதுதிவ்யாருணகாந்திவிசேஷப்ரவாள திருவதரப்ரசாத ஜனிதாமிர்தமானது ஸ்ரீரமாரமணீ இருதயகுதூஹலசுரத லீலாவரதனங்களாகியும்சமஸ்த பிராணிகளினுடையசஞ்சீவனார்த்தசோகநிவாரணங்கள்செய்வதாகியும் மகாதபோபலஜனிதசமஸ்தசேதனாசேதனநிதமாதுரிய ரஸாமிர்தவருஷ தாரைகளைவருஷிக்காநின்ற வம்சவேணுகானானந்தஸஹகாரியாகியும் சமஸ்தகோபீஜன மனோகரஅன்னியராக நிவர்த்தமாகியும விளங்காநின்றது, அப்படிப்பட்ட சஞ்சீவனார்த்தமானதிவ்யௌஷத ரசாயனங்களை எங்களுக்குக்கிருபைசெய்தருளி எங்கள் வியோகதாபங்களைத்தீர்த்து ரட்சிக்கக்கடவீர்.

வாரீர்ஸ்ரீலக்ஷுமீபதி நீர்நாள்தோறும்இந்தபிருந்தாவனபூமியில்-பனி-மழை-காற்று-வெய்யில்களுக்குச்சகித்துசஞ்சரித்துக்கொண்டிருக்கிற பகற்பொழுதுகளில் நிமிஷகாலத்தை ஒருமகாயுகங்களாகநினைத்து மனவருத்

தத்துடன்கழித்து இராத்திரிகாலங்களுக்கு அங்குரார்ப்பணமாகிய சந்தியாகாலத்தைப் பார்த்துக்கொண்டிருந்துசகலகோவின்கோபால சமூகங்கள்சூழ்ந்து வருகிறதினுலுண்டான தூளகளினல் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றஉம்மை எங்கள்கண்கள் கலி தீரும்படி சேவிக்கும்போது அடிக்கடி யிமைகொட்டுதலினலே சேவைக்கு மறைவுநேரிடுவதைக் குறித்து ஐயையோ இந்தப்பிரம்மாவானவர் இந்தக்கண்ணிமைகளை அடிக்கடி மறைக்கும்படி ஏன்படைத்தாரோவென்று பிரமனைத்தூறிக்கொண்டிருக்கிற எங்கள் இருதயங்களை நீர் அறிந்திருந்தும் இப்பொழுது எங்கள் இருதயத்தைச் சோதிப்பது தர்மமோ சீக்கிரமாகப்பிரசன்னமாய் ரக்ஷிக்கக்கடவீர்.

வாரீர் ஸ்ரீகிருஷ்ணபகவானே உமது ஸ்ரீஹஸ்தவிரல்களின் தந்திரபேதங்களிலுண்டாகின்ற புல்லாங்குழலின்கானரசமாகிற அமுதங்கள் எங்கள்செவித்துவாரத்தில்நுழைந்தமாத்திரத்தில்நாங்கள் மோகங்களையடைந்து பரவசர்களாய கிருஹங்களையும் கிருஹகிர்த்தியங்களையு மறந்து வெளிப்படும்பொழுது எங்கள்தேகபந்துக்களாகியகணவர்களும் சகோதரர்களும் புத்திரர்களும்இவர்கள்முதலிய சமஸ்தமான உறவின்முறையாகளும்இந்தராத்திரிகாலத்தில் செல்லுகின்றது தர்மமல்லவென்று சொன்னர்கள். அவர்கள்சொல்லை நாங்களெவ்வளவும்லட்சியஞ்செய்யாமல்உமதுமகதாசரயத்தைநம்பிவந்தஎங்களை இப்படிக்கலையச்செய்வது தர்மமோ இப்படிப்பட்ட நிர்த்தயபுருஷர்களும் எந்தலோகங்களிலாவதுண்டோ.

வாரீர் ஸ்ரீகோபிஜனவல்லபரோ உமது பாதாரவிந்தங்களமெல்லிய செந்தாமரைப்புஷ்பங்களின் இதழ்களைப் பார்க்கிலும் மிகவுமிருதுதரங்களாகியும் மகாசுந்தரங்களாகியுமிருக்கின்றனவல்லவா அவற்றை ஒருவேளைஎங்களுடைய கடினஸ்தனங்களால் ஸ்பரிசிப்போமேயானல்அவைசகிக்கமாட்டாதேயென்று நினைத்துமனதுநிடுக்கிட்டு அஞ்சிக்கொண்டிருக்கின்ற நாங்கள இப்பொழுதுஎவ்விதமான வருத்தத்தை யடைகின்றனவோவென்றுவருத்தப்படும்படியாய் எங்களை விட்டுவிட்டு இந்தவனத்தில்கடினபூமியும் உரத்தகல்லுங் கரடுமுள்ளும் உறுத்தும்படியாய்ச் சஞ்சரிக்கின்றீரோ இதனல்திருவடிவருந்தாதா சர்வசக்திக்குரிய திருவடிகள் இதற்குச்சலிக்குமாவென்பீரோ அவை சலியாதிருந்தபோதிலும் எங்களுக்குச்சகிக்கக்கூடுமோ பிராண வேதையாயிருக்கின்றதேன்னசெயவோம் இந்தக்கோகுலத்துக்குடிப்பெண்களாகியநாஙகள் அனியாயமாகஉமது அன்பினலுண்டாமமன்மதபாணங்கள் எங்களுடைய நெஞ்சிற்றைத்துப் புதைய நாங்கள்பயந்து உமதுஸ்ரீபாதாரவிந்தங்களை அடைந்தோமேஎங்களை இவ்வாரண்யத்தில் அலையவிட்டு நீர் மறைந்திருப்பது என்னதர்மநீதியோ சொல்லுவீர்.

வாரீர் எங்கள்இருதயேஸ்வரரோ எங்களுடையகடின இருதயங்களைக்கரைத்து மெழுகுபோலுருகச்செய்து சார்வதா சர்வபிராணிகளிடத்திலுந் தண்ணளியோடுங் கூடியுருகுகின்ற உமதுபரமகிருபாமய இருதயத்தைக் கடினதரமாகச்செய்தீரே இப்படிச்செய்ததுஎங்கள்சௌபாக்கியத்தினலல்லவா இந்த அதிசயத்தைக்குறித்துநாங்களென்னசொல்லி எங்களை நிந்தித்துக்கொள்வோம்,

வாரீர்தயாநிதியாகிய ஸ்ரீவைகுண்டாதிபதியே இந்திராதிதேவதாஸமூகங்களை மகாசுரஜனங்கள் எதிர்த்துயுத்தஞ்செய்துலையச்செய்கின்ற சமயங்களில்ஸ்ரீலட்சுமீபதியென்று முறையிட்டமாத்திரத்தில் பிரசன்னத்வத்துடன்யுத்தசன்னத்தராய்வந்து அசுரர்களைவதைத்துத் தேவதாஸமூகங்கள் ஜயத்தை அடையும்படிச செய்கின்றீர் கேவலம் அபலைகளாய் இதரநாதர்களைவிட்டு உம்மையே நாதராகநம்பினஎங்களை இட்சுகோதண்டதரனுகியபஞ்சபாணன் புஷ்பசரவருஷங்களினல் எங்களசரீரங்களைத்துளைத்து அருக்கயேந்திரியங்களைப்பேதித்துப் பிராணவேதைகளைச்செய்யும்போது ஆஸ்ரீகிருஷ்ணஸ்ரீகோபிஜன நாதனேயென்று முறையிடுகின்றோமே இன்னமேனேபிரசன்னமாய்வந்து ரட்சியாமல் உபேக்ஷைசெய்கின்றீர் உம்மையேசரணமாகவடைந்து உமதுதாஸதாஸ்யருசியில்மோகித்துத் தைரியத்தைவகித்திருக்கின்ற எங்களிடகர்வாபகாரஞ்செய்ப நீர் எங்களைவிட்டு அந்தர்த்தானமாய் மறைந்தமாத்திரத்தில் இந்தப்பிரபஞ்சங்களைமோகிக்கச்செய்து தன்வசமாகப் படுத்திக்கொள்கின்றமன்மதனைவன் தன்னுடைய தாழைமலராகிய உடைவாளையுருவிக்கொண்டு இந்தகோபிகாஜன ஸமூகத்தில்நுழைந்துவிட்டனனே இனி அவன்செய்யும்பொல்லாங்கைஸகித்துப்பிழைக்கஎங்களுக்குச் சக்தியுமில்லையே அந்தக்கொடியமன்மதனுடைய ஸாகஸங்களுக்குப் பயந்து அன்னிய புருஷார்த்தங்களைக்கோரித் தோஷத்துக்காளாகவுமாட்டோமே நாங்களென்னசெய்வோம் நீர்துணையாய்வந்து எங்களை ரட்சிக்கவேண்டும் இரட்சிக்காவிடில் நாங்கள்யாவரும் உமதுமேலாணைப்படிக்கு உமக்கேதத்தமாக எங்கள்பிராணனை யொழித்துவிடுகின்றோம்என்று இந்தப்ரகாரம் பலவாறுகச்சொல்லிக் கதறிப்பதறிமுறையிட்டார்கள்,

---

## ௫௨-வது அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

குற்றமற்ற கோபிகாஜனங்களின்
சித்தசுத்தங்க ளாகவேசெய்திட்டு
முக்தியைக்கொடுக் கும்முளரிக்கணன்
வெற்றியாய்ரட்சித்திட்டவிதஞ்சொல்வாம்.

ஸ்ரீ அரியானவர் இந்தக் கோபிகா ஜன சமூகங்களின் இருதயங்கள் பரிசுத்தங்களாகவும், இதா இச்சைமுதலியதுகளை ஒழித்ததாகவும்இருக்கும்படிச்செய்து உடனே பிரஸன்னராய் அவர்களினுடைய பூர்வ ஜன்ம

ங்களிறசெய்த தவத்திற்குரிய அனுபவங்களைத் தமது பரமகிருபையினால் தந்தருளி அவர்கள் ஜன்மசாபல்ய மாகும்படிச்செய்துகடாட்சித்துரட்சித்தனனென்றுசொல்லுகின்றது,

வாராயமகாராசனே இவ்விதங்களாகஇந்தகோபிகாஸ்திரீஜன ஸமூஹங்கள் மிகவுந்துக்கிதர்களாய்ஸ்ரீபகவந்நாமங்களை ஸ்மரித்து மதுரஸ்வரங்களோடுங் கீதங்களைப்பாடியும் அவ்வனமெங்குந்தேடியுங் கண்டுதரிசிக்கசமர்த்தர்களாகாமல் வெட்கிக்கர்வங்குன்றி பிரலாபிக்கத்தொடங்கினார்கள் அத்தருணத்தில்ஸ்ரீசர்வசகத்பிராணநாயகராகியஸ்ரீஹரியானவர் மூன்றுலகுக்கும் மோகனாகாரராகியும் சாக்ஷாத்மன்மத ஸ்வரூபராகியும் புன்சிரிப்புவிளங்க நகைத்துக்கொண்டு அந்தக் கோபிஜன ஸமூஹமத்தியில் ஆசசரியமாய்ப் பிரத்யக்ஷமாகச் சாக்ஷாத்கரித்தனர். இப்படிபிரசன்னமாய்நின்ற ஸ்ரீவல்லபனை இந்தகோபிகாசனஸமூகங்களகண்டு-கண களிகூர்ந்துஆனந்தமானஸர்களாய்த் தங்களுக்குச்சோர்ந்துபோய்நின்ற சகதபிராணேந்திரியங்களையும்பெற்றுக்கொண்டவர்களாய்ப் பூரித்துயாவரும் குபீலென் றெழுந்திருந்து இதோஸ்ரீபகவானெழுந்தருளினானென்று சந்தோஷ ஆரவாரங்களுடன் அவரவர்கள்தங்களுக்குத் தோன்றினபடி துதித்துவரிக்கத்தொடங்கினார்கள்,

வாராய்மகாராசனே இந்தகோபிகாசன ஸமூஹங்கள் யாவரும் தனித்தனியேஸ்ரீபகவானை வரித்தவகையைவிவரமாகச்சொல்லுகிறேன் கேளாய்மிகவும்பிரியையான ஒருகோபியானவள் ஆஎனதுபிராணேசரோவாருமென்றுமிகவும்பக்திபூர்வகமாகத்தனதிரண்டுகைகளையுங் கூப்பி அஞ்சலிசெய்து ஸ்ரீபகவானுடைய ஹஸ்தாப்ஜங்களைப்பிடித்துத் தனதிரண்டுகண்களிலுமொத்திகொண்டாள் ஒருகோபசுந்தரீ ரத்நமானவள் மிகவும் ஆவலுடனோடிவந்து ஆசீவிதேஸ்வரரே வந்தீராவென்றுஇரண்டு ஸ்ரீகராரவிந்தங்களைப் பற்றித்தனதுஸ்தனங்களில்சேர்ந்து கொண்டுஆனந்தித்தனள் ஒருவனிதா மணியானவள்ஆஎனதுமனோவல்லபனே இவ்வளவு நேரஞ்சென்றதோ திருவுள்ளமிரங்குதற்கென்று கர்ப்பூரதாம்பூலாதிவாசனதிரவியங்களைத்தனதுகரங்களில்வைத்துக்கொண்டு ஸ்ரீபகவானுக்குச சமர்ப்பித்தனள் ஒருபிரியசுந்தரியானவள் ஆஎனதுசுந்தரபிரியநாயகரேகடாட்சியுமென்றுஸ்ரீபகவானுடைய திவ்வியதிருவடித்தாமரைகளுக்குப் பக்தியுடன்சாஷ்டாங்கமாகத் தண்டன்சமர்ப்பித்துத்தனதிரண்டுஸ்தனங்களால் திருவடிகளாகிறதாமரைமலர்களையொத்திவிரஹதாபங்களைத் தீர்த்துக் கொண்டனள். ஒருபுண்யரமாமணியானவள் ஆஎனது வரசிரேஷ்டரோ இப்படிக்குஞ்செய்யலாமாவென்றுபிணக்கியமனதுடையவளாய் நிஷ்டூரவசனங்களைப் பேசித்தனது சாய்ந்த பார்வையினால்இடைவிடாமல் பார்த்துச் சேவித்துக்கொண்டிருந்தனள ஒருதருணீ சிவரத்நமானவள் ஆஎனது சுந்தரவிபுவே எழுந்தருளுமென்றுஸ்ரீஹரியினுடைய திவ்யமுகசுந்தராமிர்தத்தைத் தனதிரண்டு கண்ணிமைகளையுஞ்சிமிட்டாமல் கண்களென்னும்வாயினாற்பானஞ்செய்துதிருப்தியடையாமல்பார்த்து ஸேவித்துக்கொண்டிருந்தனள ஒருசுந்தர வனிதையானவள் ஸ்ரீஹரியினுடைய திவ்யஸ்ரீபாதாரவிந்தங்களைத்தனது நேத்ரயுகமலர்களினால்பூசித்துசுஜனசிரேஷ்டனைப்போலஸேவித்துஅசைவற்று நின்றுவிட்டனள்ஒருநுட்பமான இடையினையுடையஸ்திரீயானவள் ஆஸ்ரீமாதவாவென்று பெருமூச்செறிந்துபரமயோகீந்திரனைப்போலஸ்ரீபகவானுடையசௌந்தர்யாதிசயங்களைக்கிரமக்கிரமமாகத்தனதிரண்டுகண்களின் வழியேகொண்டுவந்து இருதயத்துக்குள்வைத்து மனதுமுதலிய இந்திரியங்களாகிறகொடிகள் பந்தித்துநிறுத்திக் கண்முதலியஞானேந்திரியத்வாரங்களைச்சிக்கிரமாகமூடிக்கொண்டுஸ்ரீகிருஷ்ணதியானகபாடபந்தமுத்தின்செய்துமாகிறஅகங்காரங்களைவெளியிலேநிறுத்திக்காவல்வைத்துநிர்மலகியானத்தினால் இறுகத்தழுவிக்கடாக்ஷிங்கனஞ்செய்து சரீரபுளகாங்கிதையாய் பரவசத்தையடைந்து ஆனந்தித்துக்கொண்டுநின்றுவிட்டனள் ஒருசுந்தரமாதானவள் ஆஎனது பிராணேசரேஎங்களையிப்படிஅலையச்செய்துநீரொக்குமறைந்துநின்றீரோஈதும்உமக்கொருதர்மந்தானோவென்று இதமும்வெறுப்பும் உண்டாகத்தக்கதான வார்த்தைகளைச்சொன்னாள் ஒருகல்யாண சுந்தரியானவள ஆஸ்ரீஜலஜாக்ஷரோ ஒருநிமிஷமாகிலும் பிரியமனமில்லாத வென்னைப்பிரிந்துபோக நீர்நினைத்தபோதுஉமது ஸ்ரீபாதாரவிந்தங்கள உமக்கெப்படிநடக்க அனுகூலித்தனவோ எனதுமந்தபாக்கியம் அப்படியிருந்தனவென்று தன்னையேநிந்தித்துக்கொண்டனள்ஒருசுபாங்கியானவள் ஆஎனதுபிரியமோகன நாதரோ நீர் என்னைப்பிரியவேண்டுமென்று நினைத்த மாத்திரத்தில் அந்தஜாடையையறிந்த இந்தப்பிராணன் உம்முடன்கூட வரவேண்டுமேயல்லது இந்தத்தேகத்திலிருக்கலாமாநீர்பிரிந்தும் இந்தகடினபிராணன் இதுவரையிலும்இவ்வுடலில்ருசியைவைத்துத் தங்கியிருந்ததேஇதுவும் எனக்கனுகூலமாகிய பிராணன்றானோவென்று நினைத்து வெறுத்துக்குன்றினள் ஒருபுணயாங்கனையானவள் ஆஎனது பிராணேசுவரனே இதுவரைக்குங் கூடிக்கலந்துஉமது மதுரவசனங்களை அனுபவிக்கச்செய்யாமல் உம்மையும் என்னையும்வெவ்வேறு பிரித்துவிட்டதென்று தன்விதியைத்தூறினள் ஒருஉத்தமஸ்திரீமணியானவள் ஆஎனதுமனோநாயகாதிபதியே நீரென்னைவிட்டுப் பிரிந்து அலையச்செய்வதற்குநான் உனதுவிஷயத்திலாவதுஉமது பக்தஜன விஷயங்களிலாவது என்ன அபராதங்களைச் செய்தேன் அப்படிதான்என்னையறியாமல் செய்யப்பட்டபோதிலும்சாவக்ஞனாகியநீர்சிட்சித்து ஆட்கொள்ளா

மல்பிரிந்து அலையச்செய்ததென்ன தர்மமோ சொல்லுமென்றனள் ஒருவிரதசீலையானவள் ஆனதுபிரானே சுவரோ பூர்வஜன்மாந்தரங்களில் என்னநோன்புகளையும் விரதங்களையும் அனுஷ்டித்தேனோமகானுபாவர்களாகியபாகவதர்களுடைய அனுக்கிரகங்களைப்பெற்றேனோ அதனாலேதான்உமதுஸேவை லபிக்கப்பெற்றேனென்று ஆனந்தமடைந்தனள்.

ஒருமதுரவாணியானவள் தனதுதோழியாகியஒருசுபாங்கியைப்பார்த்து வாராய்சகியே இந்தஸ்ரீகிருஷ்ணபகவானனவர் உன்னைப்பிரிகின்றதில்லையென்றுநான்வெகுவாய்நம்பும்படியானபிரதிக்ஞைகளைச்சொல்லிஅதைத்தாமே தவிர்ந்துஎன்னைஅலையச்செய்தனர்இப்பொழுது என்னைப்பிரிந்ததற்கு ஏதுவானசமாதான வார்த்தைகளைச்சொல்லாவிடின்நான் அவருடன் பலவந்தமாய்ப் பேசுகிறதில்லையென்று கீழ்ப்பார்வையுடன்சில ஸ்ரீங்காரவார்த்தையைப்பேசிக்கொண்டிருந்தனள் ஒருபாலாமணியானவள் ஒருபதுமமுகியினுடைய கையைப்பிடித்துக்கொண்டு ஆளனதன்புள்ளஸகியே நமதுவிபுவாகிய ஸ்ரீமாதவப்பிரானை நாம்இருதயசுத்தியுடன்உறுதியாக பற்றினலல்லது அவர்லபிக்கவரிதானவரென்றுசொல்லித் தன்மனதைஸ்ரீபகவானுடைய திருவடியில் சமர்ப்பித்துப் பாவையைப்போல நின்றுவிட்டனள் ஒருமோகனசுந்தரவதியானவள்இந்தஸ்ரீகோபால சூடாமணியானவர் என்னுடன்சொல்லாமல் மறைந்துபோய் என்னையலையச்செய்துவந்தாரல்லவா இவரைப்பார்க்கிறதில்லையென்று தலையைவணங்கிக்கொண்டு சிலநேரமிருந்தாள் அப்போது அவளுடையமனதில் உண்டாயிருக்கிற மன்மததாபமானது அவளுடைய இருதயேந்திரியங்களைக்கலக்கியதனல் பலவந்தமாய் ஸ்ரீகிருஷ்ண என்னையேன்பிரிந்தனையோவென்று முறைசெய்தனள்,

வாராய்மகாராசனே இவ்விதங்களாகஇந்தக்கோபிகாஸ்திரீசனங்களஸ்ரீ பரந்தாமமூர்த்தியைப்பிரசன்னமாகலபிக்கப்பெற்றமுத்தி பந்துகளைப்போல ஸ்ரீபகவானுடையகல்யாணகுணங்களையும்திவ்ய மங்கலவிக்கிரகஸேவையையும் பரமகிருபையினலே லபிக்கப்பெற்றுஸ்ரீபகவத்குணனுபவஞ்செய்தனர்கள் அதின்பிறகு ஸ்ரீரமாகாந்தரானவர் அவ்வனந்தரத்தில் தமதுயோகமாயாசதுர்யங்களினல் அந்தக்கோபிகாசனங்கள் யாவரையும் அழைத்துக்கொண்டுமல்லிகைமுல்லை மந்தார குருக்கத்தி பாரிசாதமுதலிய புஷ்பங்களின்பரிமளங்களோடுங் கூடியகுளிர்ந்ததென்றற்காற்றுகளையும் மகாவிசித்திரரூபங்களுடைய வண்டினங்களின் த்வனிகளையும்சரத்காலபூரணசந்திர கிரணநிழல்களையும்யமுனநதீபிரவாகங்களில் உண்டாகின்றஅலைகளின் பிரதுக்களையும் உடையவைவாகிய மகாபரிசுத்தமாயிருக்கின்ற வெண்மணற்குன்றுகளோடுங்கூடிய ஒருஏகாந்தஸ்தலத்தில் வந்து சேர்ந்தனர்.

அந்தப்பிரதேசத்தில்வந்து சேர்ந்தபின்பு இந்தக்கோபிகாசனங்களில்வேதத்தில் உத்தரபாகங்களாகிய விக்ஞான காண்டங்களிலேயிருக்கின்ற ஸ்ரீசர்வேஸ் வரனுடைய கலயாணகுண நிச்சிதார்த்தங்களைவர்ணித்துவேதபுருஷனுடைய இருதயங்களித்ததுபோலஇந்தஸ்ரீஅரியைசசாக்ஷாத்காரமாய்ச்சேவித்து தங்களதாப ஜ்வரங்களையொழித்துப் பரிபூரணமனதுடையவர்களாய்மிகவுங்குளிர்ந்த பார்வைகளோடுங்கூடிய நேத்திரங்களையுடைய கோபிகாசனங்கள் மிகவும் சந்தோஷங்களையுடையவர்களாய்ச் சிலர்தங்கள்முன்றானைகளை அந்தவெண்மணற்குன்றின்மீதுநன்றாகவிரித்தமைத்துஸ்ரீபகவானைப்பிரார்த்தித்து சுகமாகஇருக்கச்செய்து அவரனுக்ஞையினல் யாவருஞ்சூழ்ந்துஉட்கார்ந்து அவரவர்கள் அங்கங்குதங்கள் இருதயபீடத்திலும் தியானனந்தங்களினல் ஸ்ரீபகவானைச் சுகாசீனராகலகித்தனர்கள்.

வாராய்மகாராசனே மகானுபாவர்களாகியபரமயோகீந்திரர்களுடைய இருதயகமலபீடங்களில் சுகாசீனராய் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ண பகவானனவர் லக்ஷ்மீதேவியானவள் தமதுஸ்வரூபத்தில் பிரகாசிக்க இந்தக்கோபிகாசனங்களின் முன்றானைகளைத் தமக்குச் சுகாசனமாகக்கொண்டு எழுந்தருளிச் தேஜோமயராய் பிரகாசித்துக்கொண்டிருந்தார் அந்தச்சமயத்தில்சமஸ்தமானகோபிகாசனங்களும் அவரவர்கள் தங்களிஷ்டப்படிக்கு ஸ்ரீபகவானுடையசமீபத்திற்கு வந்து சன்மான வார்த்தைகளைச்சொல்லித் தங்கள்கண்களிற சேவித்து நிறபயானந்தர்களாய்த் திருவடித்தாமரைகளைவருடியும திவ்யதிருமேனியை ஸ்பரிசித்தும் ஸ்ரீஅஸ்தங்களைப்பிடித்துக்கொண்டும் மகாமதுரவசனங்களால் சரசங்களாகிய இனியவார்த்தைகளைச்சொல்லியும் உபசரித்து இனியகோப்பியவினயங்களால் ஸ்ரீபகவானைகுறித்து மனதுஸமாதானமாகும்படிசசிலசந்தேகவார்த்தைகளை கேட்கின்றார்கள்.

### கோபிஜனவாக்கியம்

ஸ்ரீகோபாலகுமாரசேகரோ இவ்வுலகத்தில்விருத்தியடைந்து விளங்காநின்ற தேவமனிதர்களில் யாவருள்ளும்செய்துவருகின்ற காமத்தினிலையைக்குறித்துஎங்களுக்குள்சந்தேகமுண்டாயிருக்கின்றது அதைக்கேட்டருளும் தர்மத்தைச்செய்கின்ற சிலர்தங்களை அடுத்தாலும்அடுக்காமறபோனபோதிலும் சாதாரணமாய் உபசரித்துக்கொண்டே யிருக்கின்றார்கள்சிலமகாஜனங்கள் தங்களை அடுக்காவிடினும் பிறர்களைத்தேடிஉபசரிக்கின்றார்கள்தெய்வத்தன்மையாவது பாக்யாதிசயமாவது யாதேனுமொரு அதிகாரங்களையுள்ளசிலரைஅந்நிலையின்றியசிலஜனங்களாவது சமானமான சிலஜனங்களாவது ஒருவர்க்கொருவர் தங்கள்இஷ்டங்களீடேறஅதித்துஉப

சரித்துக்கொள்ளுகின்றார்கள் பின்னேயுஞ் சிலர்தங்களே அடுத்தவர்களே ஆசாபிமானத்திற்கே அரிதாகவியர்த்தர்களாகும்படி விளங்குகின்றார்கள் ஆகையால் இக்கர்மத்தினதிசய மென்னமோ எங்களுக்குக் கிருபைசெய்து சொல்லவேண்டுமென்று மகா கோப்பியமாகவும்உபசாரமாகவும் பிரார்த்தித்தனர்கள் இவ்விதங்களாகச்சொல்லிய கோபிகா ஜனங்களினுடைய மதுரமாகியும் உலகவிதமாகியுமிருக்கின்ற வாக்கியங்களைக்கேட்டுஸ்வாமி ஒருவாக்கியஞ்சொல்லுகின்றார்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாருங்கள்கோபிசுந்தர சஜ்ஜனங்களேஇந்தப்பிரபஞ்சத்தில் எனது யோகமாயாதத்வத்திற்கு ஜனித்தகர்மாதிகாரங்களுக்குத் தகுந்தபடி ஜனித்து விருத்தியடைகின்றதேவமானிடர்முதலிய பிராணிகள் ஜன்மவிழுக்கத்தின்பொருட்டாகவும் ஸ்வர்க்கத்தையடையும் பொருட்டாகவும் ஜன்மசௌக்கியத்தின் பொருட்டாகவும் நரகங்களையடையும்பொருட்டாகவும் முமூட்சுக்களென்றும் ஆப்தகாமர்கள் அல்லது பூர்ணகாமர் களென்றும் அவித்யாஜனிகர்கள் அல்லது அக்ஞர்களாகிய பக்தர்களென்றும் கடினர்களாகியகேவலர்கள் அல்லது சூன்யசித்தர்களாகிய லோகத்துரோகிகளென்றும் நான்குவிதங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றார்கள், அவர்கள் யாரெனில்,

தங்களே அடுத்தவர்களிடத்திலும் அடுக்காதவர்களிடத்திலும் அன்பையும் அருளேயுங்கொண்டு அவர்கள் க்ஷேமத்தையே பார்த்துக்கொண்டு அவர்களாலொருஅபேட்சையும் விரும்பாதவர்களாய் விளங்குகின்ற முமூட்சுக்களாகிய சிலர் ஆத்மாராமர்களாம்.

இவ்வுலக ஜனங்களுக்கு இஷ்டத்தைநடாத்துகின்ற பிதாவைப்போலும் காருண்யசித்தர்களாகிய சுகிர்துக்களேப்போலும் தங்களே அடுக்காதவர்களேப்போலஅடுத்தவர்களே தேடித்தேடிஉபசரித்து ஆதரித்துக்கொண்டிருக்கின்றவர்களாகியபேர்கள் ஸ்வர்க்காதி மோட்சசௌக்கியங்களேயடைந்து சுகிக்கின்றவர்களாகிய பூர்ணகாமர்களென்னும் ஆப்தக்ரமர்களாம்,

ஜன்மசௌக்கியங்களின்பொருட்டு ஒருவர்க்கொருவர் அடுத்துக்கொண்டு தர்மகர்மமுதலிய உபகார பிரத்யுபகாரங்களிஞல் விருத்தியடைந்துகொண்டிருக்கின்றவர்களாகிய சிலர் அவித்யாஜனிதர்களாகிய அக்ஞர்களென்னும்பக்தர்களாம்,

தங்கள்சித்தவிர்த்தியை யுணராமல்பலத்தின் அபேட்சையின்பொருட்டுத் தங்கள் பூர்வஜன்ம குணதோஷங்களிஞல்வந்து அடுத்தவர்கள் அபிமானசிநேகத்தையும்தர்மாதிசுபங்களுக் கேதுவாகியபலப்ரதங்களேயும்பெருமல் வியர்த்தர்களாய்ப் போகச்செய்கின்றவர்களே மிருகங்களேயொத்தவர்கள் அவர்களே கடினர்களாகியகேவலர்களென்னும் சூனியர்களாம அவர்கள் தேவமனதுடையவர்கள்யாரொனினும் லோகத்ரோகிகளென்றுநினைக்கத்தகும்.

வாருங்கள் புண்யாங்கனைகளே இவ்வகைப்பட்ட நான்குவிதபுருஷர்களில் நான்சேர்ந்தவனல்லன் வேறேயாரெனில்சமஸ்தமானபிரபஞ்சங்களுக்கும்பிரஜாபிமானிகளாகிய பிரம்மாதிகளுக்கும் இப் பிரபஞ்சங்களினுள்ளஇந்நான்குவித புருஷர்களுக்கும் காரணனுயிருக்கின்றபரமகாருணிகனு யிருக்கின்றவன்யான் இப்பொழுதுஎன்னிடத்தில் உங்கள்மனேவிருத்திகள் விருத்தியாகும்பொருட்டும் அன்னியகாமமலினங்கள் நீங்கும்பொருட்டும் அந்தர்த்தானமாய்நின்றனன் இன்னுமென்னே அடுத்துஎனது ஊழியருசிகளேயனுபவிக்கின்றமகானுபாவர்களுக்கும்எனது ஸ்வரூபஸேவார்த்தங்களுண்டாகாநின்பிரசன்னனுகின்றதில்லை, ஏனெனில்என்னேஅபேக்ஷையில்லாத புத்திபூர்வகமல்லாமல் எளிதில்ஸேவிப்பார்களேயானல் சேவித்தவர்கள் சேவித்தமாத்திரத்தில்ஸம்பூர்ணகாமர்களாய்த் திருப்தியடைந்து மதித்தளன்னேயுந் தங்களேயுமறந்து எனதருமையான ஸேவார்த்தங்களேயொழிந்து மறுபடியும்அன்னியகாமாபேட்சைகளேயடைந்து அன்னியசேஷங்களேஅடையப்போகின்றார்களென்பதே ஆதலால்என்னேவிரும்பினவர்களெவர்களோ அவர்களேஅபேட்சையில்லாத பரிசுத்தமனதுடையவர்களாகச்செய்து அன்யசேஷமலினங்களே யறுத்துச் சுத்தசத்வாத்மகபரம சாதுர்யபரமேகாந்தி நிஷ்டாபூர்ண முமூட்சுக்களாக மனே தர்மங்களேயுண்டாக்கிஇரட்சிப்பேன், அதேனெனில் தன் சிஷ்யனைபோதிலும்சீவனேஅபேட்சிப்பதே தனமாகிய தேகாபிமானம் நசித்தாலல்லது ஸ்ரீபகவத்கிருபைக்குபாத்திரனுகமாட்டான்அதனுலேதான் எனதுஅன்பர்களாகிய மகாத்மர்கள் இவ்விதங்களாகிய பற்றுகளொழிந்து அபேட்சைஅற்றவர்களாய் என்னுடைய திவ்யஸ்வரூபாதிசய வைபவங்களே குணனுபவஞ்செய்து தியானித்துக்கொண்டிருப்பார்கள்,

வாருங்கள் கோபகன்யாமணிகளே நீங்கள் என்னிடத்தில்வைத்த மனதுடையவர்களாய்த் தேகாபிமானங்களேயொழிந்து தாய்தந்தைகள பர்த்தாபுத்திராதிகளேவிட்டுஎன்னேயடைந்தீர்கள் ஆதலால்உங்களேப்பிரிந்துஅலேயச்செய்யத்தகாது ஆகையால் என்னே மன்னிக்கக்கடவீர்கள் நானெங்குஞ் செல்லவில்லேசர்வவியாபகனுகையால்உங்களுக்குள்ளும் புறம்புமாயிருந்து உங்களுடையவியோகதாப வசனங்களேச் சாக்ஷிபூதனுகக் கேட்டுக்கொண்டிருந்தேன்வாருங்கள்கோபிகாஜன காமினிகளே யாதொருசன்னியாசிகளுக்கு விடுகிறதற்கரிதாகிய தேஹருண சம்மந்தாபிமானங்களேயொழிந்து பற்றற்றஉங்களாத்ம குணதர்மங்களேப் பரமேகாந்திகளாகிய பரம

யோகீந்திரர்களைப்போல எனதுபரமாகச்சமர்ப்பித்தஉங்களுக்கு பிரம்ஹகல்ப மஹாயுகங்கள்வரைக்கும் ஆயுள்பிரமாணங்களைத்தந்து இந்தத்திவ்யஸ்வரூப சுகானந்தவைபவாதிசயங்களை யடையும்படிச்செய்தபோதிலும் திருப்தியாகமாட்டாதாகையால் எனது பரமகிருபையினால்உங்களுடையஇதார்த்தத்தின் பொருட்டே அந்தர்த்தானமாய் நீங்களன்னியபிரத்தியங்களொழிந்துபரவசர்களாகும்படிச்செய்தனன் நீங்கள்சுத்தசாதுக்களாகையால் இக்குற்றங்களைமன்னித்துத் தயாபரிபூர்ணர்களாய்க்கிருபைசெய்து என்னைரட்சிக்கக் கடவீர்களென்றுசொன்னார்,

---

## ௩௩-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

குலத்தில்வாய்ந்தகோ பிஜனமத்தியில்
நிலையிலாயமு னாநிதீரத்தில்
அலைகிலாவிளை யாட்டிடையண்ணலார்
ஜலக்கிரீடைகள் செய்துக்களித்தனர்

ஸ்ரீஹரியானவர் இந்தப் பிருந்தாவன பிரதேசங்களினும்யமுனாநதியினும் தம்மைப் பரிசுத்தமானஸர்களாய் அடுத்தகோபிகாஜன மண்டலமத்தியத்திலிருந்துகொண்டு ராஸக்ரீடைகளினாலும் ஜலக்கிரீடைகளினாலும் அவர்கள்மனோதர்மங்கள் திருப்தியடையும்படியாய் ரமிப்பித்தனென்று சொல்லுகின்றது.

வாராய்மகாராஜனே மகாதன்யர்களாகிய இந்தக்கோபிகாசன ஸமூகங்கள் இவ்விதங்களாக ஸ்ரீபகவானுடையமகாமாதுரிய மனோக்கியங்களான வாக்கியங்களைக்கேட்டு அவருடைய ஸ்வரூப கல்யாணகுண வைபவாதிசயத்தினால்யாவரும் பரிபூரண மனோரதர்களாய்த்தங்களுக்குண்டாகிய வியோகதாபங்களையொழிந்து பூரணானந்தபரிதர்களாய் விளங்கினர்கள். அந்தச்சமயத்தில் ஸ்ரீசர்வலோகநாயகராகியும ஸ்ரீஅனந்தராகியும் விசித்திரவிசுவமூர்த்தியாகியும் விளங்குகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் விமானாரூடர்களாய் அம்பரவீதியில் நின்றும்தம்முடையலீலைகளை சேவித்துக்கொண்டிராநின்றசமஸ்தமானதேவதைகளும் தேவாங்கனைகளும் அப்ஸரஸ்திரீகள்முதலிய திவ்வியாங்கனைகளும் ஆச்சரியப்படும்படியாய் இந்தக்கோபிகா ஸ்திரீஜனங்கள் மண்டலாகாரங்களாகநின்று ஒருவர்தோள்களின்மீது ஒருவர்கரங்களைச்சேர்த்துக்கொள்ளவும் மற்றொருஹஸ்தங்களைஒருவர்க்கொருவர் கோர்த்துக்கொள்ளவுஞ்சொல்லி அவர்கள்பதங்களையுஞ் சரியாகவகுத்து ராசமண்டலங்களைக்கற்பித்து அவர்களைப்பத்மாகாரமாகநிறுத்தித்தான்பத்மத்தின் காலையைப்போல நடுவிலெழுந்தருளிப் பிரகாசத்தோடும் விளையாடினர் இந்தப்பிரகாரம் நானாவித விசித்திரகதிபேதங்களால் சஞ்சரித்துவிளையாடுகின்ற இந்தச்சாதுர்யமாயாமூர்த்தியான ஸ்ரீபகவானென்னும் ஸ்ரீஹரியானவர் தமக்கிருபாரிசங்களினும் திவ்யாபரணாலங்காரபூஷிதர்களாகிய அகளங்கநிர்மல பூரணசந்திரோதய முகாரவிந்தங்களையுடையஇரண்டுசுந்தரஸ்திரீகளதங்களிரண்டுகரங்களினும வீணைகளைப்பிடித்துகெட்டிக்காரர்களாய்மகோத்ஸாரத்துடன் சமஸ்தபிராணிகளின்மனோரஞ்சனமாக மதுரத்வனிகளோடு ஸ்ரீஹரியென்றுபாடத்தாம்மிகவும்அளவில்லாமல் அதிமகாவிநோதசுந்தரநாதங்களைத்தராநின்ற புள்ளாங்குழலைத் தமது திருவகரங்களில்வைத்து அந்தச்சுந்தரீசனங்களினுடைய செங்கழுநீர்ப்புஷ்ப இதழ்களையொத்தவிரல்களின்முனைகளாலுண்டாகிய மதுரலயகதி பேதங்களுக்குமிகவு மன்னியோன்யஸகாயமாய்த் தமதுமுரளீகான மிருதுத்வனிகளைப்பூரித்துக் கானங்களைச்செய்துகொண்டிருந்தார்.

மேலும் ஸ்ரீபகவானானவர் அந்த ராஸமண்டலாதாரதாமரைப் பூவினுடையகர்ணிகாமத்தியப்பிரதேசத்தில் கமலகர்ணிகா நடுநாயகமாய் நின்றுகொண்டிருப்பது மல்லாமல்இன்னும் அந்தக்கோபிகாசனங்கள் எத்தனைபேர்களிருக்கிறார்களோ அத்தனைபேர்களுக்கும் அத்தனைமூர்த்தியாய் அந்தச்சுந்தரீ ரத்னங்களினுடைய கரகமலதோள்களினது ஆலிங்கனத்துக்குள் தாமும்தமதுதோள்களின் ஆலிங்கனத்திற்குள் அந்தச்சுந்தரஸ்திகளுமாகப்பிரகாசித்துப் பரதசாஸ்திரத்திற் சொல்லியிருக்கிறபடி நடனதிகானவித்யாசார மண்டலங்களாகிய ராஸமண்டலத்தை உண்டுபண்ணினார், அதைக் கண்டமாத்திரத்தில்ஆகாசத்திலின்று ஸ்வாமியினுடையலீலைகளைப்பார்த்துக்கொண்டிருக்கின்ற தேவதா சமூகங்கள்யாவரும் ஆச்சரியங்களையடைந்து ஆனந்தபரவசர்களாய்புஷ்பவருஷங்களை வருஷித்தனர்கள்,

அத்தருணத்தில்ஸ்ரீபகவானானவர் அந்தக்கோபிகாசனங்களினுடைய மனோபீஷ்டப்பிரகாரத்திற்கு அனந்தரூபதராய்மிகவும் மிருதுவான தளிர்களோடுங் கூடிய பூங்கொத்துகளினிடைகளில் வாசஞ்செய்து பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற சுந்தரவுருவங்களையுடையபுஷ்பவண்டினங்களைப்போலவும் ஸ்வர்ண மணிமய மலைகளினுடையமத்தியில் விளங்காநின்ற நீலசிகரங்களைப்போலவும்புருஷனிடத்தில் இச்சையாய்சஞ்சரிக்கிற யானைப்பேடுகளுக்குத் திருப்திகரமாய்விளங்குகின்ற மதகஜங்களைப்போலவும் மிகவும்மனோஹரங்களாய்த் தளிர்த்துதழைந்துபுஷ்பித்து விருத்தியடையாநின்ற இளவிருட்சங்களைப்போலவும் மின்னற் கொடிகளினுடைய இடைபோலத்தோற்றுகின்ற நீருண்டு கருத்தமேகங்களைப்போலவும் நதிபிரவாகங்களின் மத்தியில் மனோகர

ங்களையும் [illegible] பாவத்தினுடையசகாயங்களை
ப்போலவும் விளங்கினார்.

இதுவுமல்லாமல் ஜகன்மோகனாகாரஸ்வரூபங்களைய
டைந்து எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீபகவானவர் மல
ர்ந்த செந்தாமரைப்புஷ்பங்களின் இதழ்களுக்கொப்பா
கியும் சந்திரோதயநிர்மலகிரணங்களையுடையதாகியு
ம்ஸநகாதி யோகீந்திரர்களுடைய இருதயதாபங்களைநி
வாரணஞ்செய்யத்தக்கனவாகியும் விளங்குகின்ற ஸ்ரீசர
ணாரவிந்தங்கள் அந்த மாதுஜனங்களினுடையகளிருக்
கொப்பானபாதங்களுடன் ஸமமாகப்பொருந்தநின்று அ
வர்கள்யாவரும் இரண்டுகரங்களையுங்கூப்பி அஞ்சலிசெ
ய்துகொண்டிருக்க அவர்களின்மீதுபுஷ்பங்களையிறைத்
து அலர்ந்தகமலங்களைப்போன்றதமது ஸ்ரீஹஸ்தங்களை
அந்தக் கோபீசனங்களினுடைய மனதை அரிக்கத்தக்
கதுகளாகிய கண்டங்களில் அமைத்துஎவ்வுயிர்களுமம
னங்கரைந்து உருகும்படியாக வேணுகானங்களைப்பாடி
யும்மண்டலாகார ராஜபந்தலீலாவினோதங்களுடன் நர்
த்தனங்களைச்செய்தார். அந்தக்கோபிகாசனங்களும் அ
வரோடுதக்கபிரகாரம் நடித்தனர்கள்,

இந்தகோபிஜனங்களும் ஸ்வாமியுங்கூடிச் சங்கபத்ம
வஜ்ரகந்துக-சாதுர்முக-சக்ரவாள-சதுர்பத்திர-ஸௌப
த்திராகசந்தியாவர்த்த குண்டலீகரண-குளீரபர்தம்எ
ன்று சொல்லப்பட்ட ஒன்பதுவித லக்ஷணங்கள் காண்
போர்க்குத்தோன்றும்படி ராஸகிரீடைகள்செய்யத்தொ
டங்கினவர்களாய் ஏகபாதசமபாத முதலிய சஞ்சாரங்க
ளுடன்உலாவித்திரிந்து வாயுமண்டலங்களினும்சந்திர
மண்டலங்களினும் சுழன்றுசுழன்றெழும்பிஸ்தாவரங்
களைப்போலநின்றும் பின்புசலித்தும் இறங்கி ஸ்வர்ண
கிண்கிணிகளின் சிற்றோசைகளால்சமஸ்தஜனங்களினு
டையசெவிகளுக்கும் ஆனந்தங்களையுண்டாக்கியும் அந
ந்தவிதவிசித்ர பாதகட்டனபேதங்களால்நாட்டியங்களைச்
செய்து அந்தரிக்ஷ ஆகாயத்தில் விளங்குகின்ற புண்ய
லோகசஞ்சார கதி விசேஷங்களைத் தோன்றிச்செய்து
கொண்டும் சுரேந்திரபவனங்களிலுள்ள தேவகதம்பபா
ரிஜாதாதி விருக்ஷங்களினுடையகிளைகளைப்போன்றும்
மனோகரங்களாகியும் திக்கஜங்களையுடைய முகங்களிலி
ருக்கிறதும்பிக்கைகளை எளிதாகச் செய்கின்றனவாகியு
ம்மூவுலகுக்கும் க்ஷேமங்களைப் பண்ணுகின்றதாகியும
விளங்குகின்ற கரங்களிலணிந்த இரத்நகங்கணபூஷண
ங்கள்ஜ்வலிக்க ஹஸ்தங்களினது அபிநயபேதங்களைத
தோன்றச்செய்தும் நடித்தார்கள்.

அப்படிஸ்வாமி நிர்த்திக்கின்றதருணத்தில் ஆகாயத்
திலிருக்கிற தேவகணங்களுக்கும்முனிசிரேஷ்டர்கள்மு
தலானவர்களுக்கும் சந்திரன்முதலிய நட்சத்திரகணங
களுக்கும்ராஸபந்தமஹானுபவம் வாய்க்கப்பெற்றகோ
பீஜனங்களுக்கும் பிருந்தாவன புண்யக்ஷேத்திரத்திலு
ள்ளமிருகபக்ஷி விருட்சகோடி-புதா-முதலியதுகளுக்கு
ம்ஆனந்தத்தைத்தந்த அந்த ராஸபந்த மஹாதிசயவை
பவமானது அமிர்தமதனகாலத்தில் சர்வௌஷதிரசங்
களால்மகாவினோதமாகச் சோபிக்கப்பட்டுச் சகலஜனங்
களுக்கும் சந்தோஷத்தைத்தந்தஇஷ்டத்தைபூர்த்திசெ
ய்துகொண்டிருந்ததைப்போலவும் சமஸ்த [illegible] னிகளி
ன்பாற்கடலை ஸ்ரீராமசந்திர ராஜ்யபரிபாலனகாலத்தை
ப்போலவும் அல்லி ஆம்பல்முதலியபுஷ்பங்கள் மலரச்
செய்து ஆநந்தகரங்களாகத்தோற்றச்செய்கின்ற சம்பூர்
ணசந்திரோதய மண்டலங்களைப்போலவும் கொண்டலங்
காரால்தோற்றுங் கேவ பாரிஜாதங்களைக்கூடியதெய்
வநந்தவனத்தைப்போலவுங்கீர்த்திபுருஷனுடைய சித்தவி
ருத்தியைப்போலவும் நானாவித பிரபந்தநாத்பரியாத்
தங்கள் பிரகாசிக்கின்ற மஹாகவீசுவரனுடைய இருத
யபாகரத்தைப்போலவும் ஸ்ரீவசுதேவநந்தனருடையஸ்
வரூபாநுபவங்களுக்குத் தோன்றின சுரலோகத்தைப்
போலவும் தரணிமண்டலங்களை யளாவியகீர்த்திசோபி
தங்களா விளங்குகின்ற விசிஷ்டபுருஷனுடைய சரிதங்
களைப்போலவும் ஹாரம்முதலியபூஷணங்களையணிந்து
மனோஹரமாகப்பிரகாசிக்கின்ற சுந்தரீரத்நத்தைப்போ
லவும்தேவர்கள்முதலிய அப்சரஸ்திரிகளினுடைய உப
சாரகைங்கர்யங்களுஞ் சஞ்சார சுகுமாரங்களும் அமை
ந்தஸ்ரீகௌரிதேவியினுடைய மந்திரமாகிய நிலயத்தை
ப்போலவும் சகல ஜனமனோரஞ்சனமாய்த் தோற்றப்ப
ட்டிருந்தது.

அந்த ராஸக்கிரீடை செய்கிறசமயங்களில்இந்தகோ
பிகாஜனங்கள் தங்களுடைய மெல்லியஇடைகள் துவண்
டுஊசலாடவும் மஹாமனோஹரமாகிய முகாரவிந்தங்க
ளில்இளஞ்சிறுநகைகள் விளங்கவும் குறுவியர்வைகள்
முத்துகளுக் கொப்பாயரும்பவும் முத்து முதலியநவம
ணியினாலாகியமாலைகள் ஒன்றோடொன்றுகலந்து சுழி
த்துச்சிக்குபடவும் உடைமேலுடுத்த மேகலைகள் தளர்ந்
துசரியவும் சுந்தர நேத்ரங்களினுடைய பார்வைகள்பிர
காசிக்கவும் அளகபாரங்களிலணிந்த பரி[illegible]களோடு
ங்கூடிய கதம்பபுஷ்பமாலைகளிலிருந்தும் புஷ்பங்களொ
ன்றொன்றாய்ச்சரிந்துநழுவவும் தங்கள்திருமேனிகளில
ணிந்தஇரத்நபூஷணங்கள் ஜ்வலிக்கவும் ஸ்ரீ கிருஷ்ணச
கிதர்களாய்யாவரும் ஆனந்தபரவசர்களாய் மதுரத்வனி
யுடன்பாடியும் கதிவிசேஷலயநிதானங்கள் மாறுமல்சக
லதேவஜன நேத்ரோத்ஸவங்களாக நடித்தும்நீலமேகங்
களிடத்திறன்றி அவற்றைச்சூழ்ந்துவிளங்காநின்ற
மின்னற்கொடிகளைப்போலப் பிரகாசித்ததாக இன்னு
ம்களங்கமற்ற கோபிகாஜனங்கள் ஸ்ரீபங்கஜலோசனராகி
யஸ்ரீகிருஷ்ணபகவானுடன்கூடி அவருக்குச் சரியாயல
யக் ஞானங்கள வழுவாமல் நர்த்தனங்களைச் செய்யும்
பொழுது அவர்களரையிற்கட்டிய மேகலா பரணத்தில்
உண்டாகிய வோசைகளும் ஹஸ்தங்களிலந்தக்க

ங்கணங்களின் ஓசைகளும்பதநூபுரங்களின் ஓசைகளும் ஒன்றாய்ச்சேர்ந்து லயக்ஞானமுறைவிளங்கசகலஜனமனோரஞ்சன கர்ணோத்ஸவமாயிருந்தன.

வாராய்ராஜனே மான் பேடுகளினுடைய கண்களுக்கொப்பாகமருண்டு பார்க்கத்தக்கமிகுந்த சுந்தரத்தைப்படைத்த நேத்திரங்களையுடைய இந்தச்சுந்தரவதிகளுடன் அதிகசுந்தராகாரராகிய ஸ்ரீஹரியானவர்நடாத்திக்கொண்டிருக்கின்ற மகாமகிமைகளோடுங் கூடிய ராஸக்கிரீடாதி சயங்களைச்சமஸ்தமான தேவதைகளும் தேவதாஸ்திரீகளுந் தங்கள் விமானங்களில் நின்று மகாஆச்சரியகரங்களாகத் தரிசித்துமகத்தாகிய சந்தோஷாநந்த பரிதர்களாய் புஷ்பங்களைவருஷித்துத் துந்துபிமுதலியவாத்தியங்களையும்ஆகாயத்திலமங்கலகரமாகக்கோஷிப்பித்தார்கள் மேலும்ஸமஸ்தமான கருட காந்தர்வாதிபதிகளும்தங்கள்ஸ்திரீகளுடன்கூடி ஸ்ரீஹரியினுடைய அதிசயானந்தகல்யாண குணங்களை ஸ்துதிசெய்தார்கள் அப்பொழுதுசர்வகிரகநக்ஷத்திராதிபனாகியசந்திரனவர் மிகவுமதிசயானந்தத்துடன் தம்மையும்தமது கதிபேதங்களையுமறந்து ஸ்தம்பித்துச்சலியாமல்நின்றுவிட்டார் நானாவிதமான புஷ்பபரிமளங்களை க்கிரகித்து மந்தகமனமாகவந்து இந்தக் கோபிகாஸ்திரி ஜனங்களுடைய சிறுவேர்வைகளையாற்றி இந்தராஸக்கிரீடாதிசயங்களுக்குச்சந்தோஷத்தையடைந்து தாமும்சகாயமாய்நின்று மிகசௌக்கியாநந்தகரமாகியகுளிர்ச்சியைவீசிஸ்ரீபகவானையும்உபசரித்து அப்புறஞ்செல்ல மனமில்லாமல் நின்றுவிட்டனர். அந்தச்சமயத்தில் ஒருகலியாணியானவள் வீணையினதுதந்திகளைமீட்டி ஸ்வரக்ஞானலயக்திபேதங்கள் வழுவாமல் ஒருராகம் ஆலாபனஞ்செய்யத்தொடங்கி நானாவிதங்களாகஆலாபித்துப் பாடினாள் அப்போதுஸ்ரீபகவானானவர் அந்தராகத்தைக்கேட்டு சந்தோஷிததார்அவ்வனத்திலுள்ளதருக்கள்யாவும் அரும்பெடுத்தன மற்றொரு பூஷனியானவள் மிகவுஞ்சுந்தரங்களாக நர்த்தனங்களைச் செய்து மதுரஸ்வரங்களாகப் பாடித்தனது பதநூபுரசதங்கைகளும்கங்கணாதிபூஷணங்களும் மிகவுமினியனவாகச்சப்திக்க ஸ்ரீபகவானுடன்கூடித் தனதுஸ்தனபார முத்திரைகளை அவருடைய ஸ்ரீஹஸ்தங்களிலொத்தி யுபசரித்துச் சந்தோஷமாய்ச்சுகாநந்தத்தை யடைந்தனள்.

வாராய்அர்ச்சுனபௌத்திரனே ஸ்ரீபகவானானவர் மிகவும் பரிமளங்களோடுங்கூடியசந்தனத்தையும்பூஷணங்களையுமணிந்து கம்பீரமானதமதுபுஜங்களை யொருபுண்யாங்கனையினுடைய தோள்களில்வைத்துக்கொண்டு மிகவும்இலிப்பானைசனமாய்ச் சம்பாஷித்துக் கொண்டிருந்தார் அதனால்அவள்சரீரம் புளகிஆனந்தபரவசத்தை யடைந்துசௌக்கியத்தைக்கொண்டாள் ஒருஸ்திரீசாயகமாக வவள்தனது கமலம்போன்றகரங்களினாலே ஸ்ரீபகவானை ஆலிங்கனஞ்செய்து முகத்துடனமுகஞ்சேர்த்துக்கொண்டாள் அவ்வளவில் ஸ்ரீபகவானானவர் தமதுதிருவதரத்தினால் தாம்பூலபிரசாத தம்பலங்களைக்கொடுததருளினார். ஒருசுந்தரவதி ஸ்ரீபகவானுடைய் குணங்களையபிநயஞ்செய்து விளையாடினாள்அப்போதுஅவள் கொங்கைபாரங்களின்மீது அணைந்த ஆணிமுத்துகளைப்போலத்தேகத்தில் வியர்வையரும்பினதுஅத்தருணத்தில் பாலகோபாலமூர்த்தியானவர் தமதுகரங்களினால அந்தவியர்வையைநிவாரணஞ்செய்தனர் ஒருசுந்தரவதியானவள் நர்த்தனங்களைச்செய்து அலுத்தாள் அப்பொழுது அவளுடையபிரியராகிய ஸ்ரீஜனார்த்தன ரானவர் தமதுஅஸ்தங்களினால் ஸ்பரிசித்து இளப்பை நிவாரணஞ்செய்தனர் ஒருபுண்யாங்கனை ஸ்ரீபகவானுடையநாமங்களைப்பாடியும் ஆடியும்அலுத்தாள் அச்சமயத்தில் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி திருவதரபானங்களையருளியாதரித்தனர் ஒருசுந்தரீதிலகமானவள் கீதங்களைப் பாடிக்கொண்டே ஸ்ரீபகவானை அடைந்தாள் அதைப் பாாத்தமாத்திரத்தில் ஸ்ரீபுருஷோத்தம ரானவர் கடாலிங்கனஞ்செய்து சந்தோஷித்தனர்.

வாராய்அரசனே தயைக் கிருப்பிடமாகிய ஸ்ரீபகவானானவர் அவ்விரவிற்செய்தராசக்கிரீடானுபவத்தில்இந்தகோபிகாசனங்களுடைய தபோபலஇச்சைகளீடேறத்தக்கதாக உற்பவித்துஅவர்களுடைய நர்த்தனமுதலியதினால் சன்மானங்களைச்செய்தனர்அந்தக்கோபிகாஸ்திரீகளும் சந்தோஷித்தார்கள்.

வாராய்மகாராசனே இவ்விதங்களாக இந்தகோபிகாசனங்கள்தங்கள் தங்கள்தவப்பேற்றினால் ஸ்ரீஹரியினுடைய போகங்களில் மிகவும்பரவசர்களாய் அரையிலுடுத்தியபட்டாடைகள்நழுகவும் ஸ்தனங்களின்மீது தரித்தமுன்றானைகள்சோரவும் தங்களைத் தாங்கள் மறந்திருந்தாாகள் அக்காலத்தில் ஆகாயவீதிகளில் வாகனாருடர்களாய்த்தங்கி இந்தஅதிசயங்களைப்பார்த்து சமஸ்தமான தேவதைகளும் அவ்விதங்களாகவே மெய்மறந்து அநதவிமானங்கள்மேல் சித்திரப் பாவைகளைப் போல் சோர்ந்து நின்றுவிட்டனாகள்.அதின்பிறகுஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் கோபஸ்திரீசனங்களெத்தனைபேர்களோஅத்தனைபேர்களுக்கும்அத்தனைரூபியாயஅவர்கள் இச்சைகளை திருப்தியடையச்செய்து அவர்களுடன்கூடி நர்த்தனங்களைச்செய்துபாடியும் சரசமாய்ப்பேசியும் நகைத்தும் அவர்களைச்சந்தோஷிப்பித்தார் அந்தச் சமயத்தில்கோபீஜனங்கள் யாவரும் தங்கள் பூர்வசன்மதபோபயனாய் விளங்குகின்றஎம்பெருமானை ஸ்பரிசித்ததினாலேயுண்டாகிய பேராநந்தக்கடலில் மூழ்கினவர்களாய்ப் பிறவிக்கடலினின்று மோக்ஷக்கரை யேற்றுதற்குரிய தெப்பமாகியதிருவடித்தாமரைகளையுடைய அந்தஸ்ரீபகவானை ஸ்துதிசெய்துகொண்டிருந்தார்.

ஸ்ரீகண்ணனும் -கோபிகைகளும்
ஜலக்கிரீடை செய்கிறது.

வாராய்மகாராஜனே பரம கிருபாமூர்த்தியா யெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீஹரியானவர் ராஸகிரீடைகளில் திருப்தியடைந்தகோபிகைகளைப்பார்த்து அவரவர்களை ஆபூசந்திர யதேச்சையாய் உலாவச்செய்து தாமும்இளைப்பாறிக் கொண்டியமுனாநதியில் ஜலக்ரீடைசெய்ய நிச்சயித்தவராய்அம்மகாநதியிலிறங்கினர் அந்தச்சமயத்தில் கோபிகாஜனங்கள்யாவரும் ஸ்ரீபகவானைத்துதித்துக்கொண்டுஆனந்தபரவசர்களாய் அந்தநதியில் ஸ்ரீபகவானுடன்கூட முன்னும்பின்னுமாக இறங்கினார்கள் சிலர்முழந்தாளமருமஜலத்தில்சிலர்தொடையளவாழத்திற்சிலர்,அரையளவாழத்திற்சிலர்,மார்பளவுஜலத்திற்சிலர்,இப்படிநானாவிதங்களாகஜலத்திலிருந்து ஏகவஸ்திரதரர்களாய்மங்களஸ்நானங்களைச்செய்துகொண்டுஸ்ரீபகவானைப் பார்த்து ஓ ஸ்ரீகிருஷ்ண, நீ எங்களுடையஇரண்டு ஸ்தனங்களுக்கும் ஆனந் தங்களைத்தராநின்றஉன்னுடையகரமாகிற தாமரை மலர்களால் எங்களுடையஸ்தனபாரங்களைத்தொடுவாயாகவென்றுசரசவசனங்களாக அழைத்து அந்தஜலத்தில் விளையாடினார்கள் அந்தச்சமயத்தில் இவர்களுடைய கொங்கைகள் சக்ரவாளைப்பட்சிகளைப்போலவும் நீண்டு செவ்வரிபரந்தகண்கள் கெண்டைமீன்களுக் கொப்பாகவும் நாபிகள்நீர்ச்சுழிகளுக்கொப்பாகவும் குண்டலங்கள் மகரமீன்களுக்கொப்பாகவும்,அந்த நதிப்ரவாகங்களில் தோற்றினார் இன்னுமிவர்கள அந்தநதியிலிறங்கித் தீர்த்தமாடுகிற சமயத்தில் அந்தநதிதேவதையாகிய காளிந்தி தேவியானவள் தனதுபரிசுத்த கரங்களால்இவர்களைச் சன்மானித்து வரவழைத்து அர்க்கியபாத்தியமுதலியஉபசாரங்களைச்செய்து உபசரிக்கின்றதுபோல அந்தநதியானதுநானாவிதமாகிய அலைகளால்அவர்களாயாசங்களைத்தீர்த்துப் பரிசுத்தத்தையும் பரமசௌக்கியத்தையும் அடையும்படிச்செய்து அவர்கள்தீர்த்தமாடுதற்கு மிகவும் அனுகூலப்படும்படி மந்தகதிகளைக்கொண்டு விளங்கியதுபின்னும் அந்தகோகுலநங்கையர்கள் அந்நதியில்மிகவு மானர்தங்கொண்டவர்களா யிருந்து அந்தஜலத்தில் வாசஞ்செய்கின்ற சாரசபக்ஷிகளைப்பார்த்து எங்களுடன்விளையாடவாருங்கள் பட்சிகாளென்று கைகளைநீட்டியழைத்தார்கள்,சிலர்வண்டினங்களை யோட்டியும்சக்கரவாகங்களைப்பிடிக்கவிரும்பியும் கிரீடித்தார்கள்சிலர்.

இப்படிநானாவிதங்களாகஅந்தநதியின்கண்மார்பளவுசலத்திலிருந்துகொண்டுவிளையாடுகின்றசமயத்தில்இவர்களுடைய முகபிம்பங்களும் அந்தச்சலத்தில்அலைகள்தோறுங்காணப்படுகிற சந்திரனுடைய பிரதி பிம்பங்களும் அந்தஸ்திரீகளின் முகங்களுக்குச் சமானமாகிய சந்திரனனவர்இந்தஜலப்பிரவாகமத்தியிலிறங்கி அனேககோபிகைகளுடன் விளையாடுகின்றசர்வலோகேஸ்வரனாகியஸ்ரீகண்ணபிரானுடைய லீலா விளக்கண்டுசந்தோஷத்தினல் மயங்கிய சித்தத்தை யுடையவராய் அந்நதியில் விழுந்து அனேகஸ்வரூபங்களை அடைந்து ஒருவிடத்திலும் நிலையாய்நிறக மனமில்லாமல் அலைகின்றாற்போலவிட்டுவிட்டுப்பிரகாசித்துக்கொண்டிருந்தன அப்போதந்நதியில்விளையாடுகின்றகோபிகாமணிகள்அதின் அலைகள்தோறுங் காணப்படுகின்ற சந்திரபிம்பங்களைப் பார்த்துச்சந்தோஷித்தவர்களாகியும் அந்த பிரவாகத்தில்மலர்ந்துபரிமளம் வீசிக்கொண்டிருக்கின்ற அல்லிமுதலிய புஷ்பங்களில்வாசஞ்செய்து மதுவையுண்டுமகரந்தங்களைப்பூசித்துக்கொணடு அலைகளில் தெறிக்கின்ற ஜலபிந்துக்களின் சிறுதுளிகளால் நனைந்தஇறகுகளோடுங்கூடி மதுபானத்தினலுண்டாகியமயக்கத்தைக்கொண்டு தங்களுடையமுகபிம்பங்களை மலர்ந்த தாமரைப் புஷ்பங்களென்றும் வாய்களைவிரிந்த செவ்வலிகளென்றும் கண்களைப்புஷ்பித்த குவளைகளென்றும் நினைத்து இவைகளில் தேனுண்டாயிருக்கும் பானம் பண்ணலாமென்கிற விருப்பமுற்று ரீங்காரவிசைபாடிக்கொண்டுவந்துதங்கள்முகத்தில் மொயக்கின்றவணடுகளுக்கு அச்சமயத்தில் வெருண்டுபதைத்துச் சலத்தைவாரியிறைத்து அவறறைத்துரத்தியும் சப்தித்துக்கொண்டு சஞ்சரிக்கின்ற வண்டினங்களுடன் தாங்களும் மதுரமுள்ள தொனிகளைச்செய்துகிரீடித்தும் அவ்வலைகளின்ஜலபிந்துக்களால் தாங்கள்நனைத்தும் பூங்கொடிகளைப் போல ஸ்ரீகிருஷ்ணகராரவிந்தஸ்பரிசசலத்துக்கு ஆனந்தித்தும் அந்தத்தெளிந்தசலத்தில் தங்களிஷ்டப்பிரகாரம் சுழன்று சுழன்றோடிக்குளித்துச் சஞ்சரித்தும்புஷ்பங்களை-ஆயுதமாகப்படைத்த மன்மதன்விட்டபுஷ்ப பாணங்களினலுண்டாகியரிணங்களை அழுக்கறககழுவிக் காட்டுவதுபோலத் தஙகள்திருமேனிச்சுந்தரஅவயவங்கள் விளங்கக்காட்டியும் அச்சலத்திலே லீலாபரவசர்களாய் ஸ்ரீபகவானுடன் சரசவசனங்களைப்பேசிச சமீபத்தில்வந்து சலத்தைவாரிவாரியிறைத்தும் அவரிறைக்கும்போது தப்பித்துக்கொண்டும்சிலர் தப்பித்துக்கொள்ளாமல் நின்றும் அச்சலத்தில்தோய்ந்து தாங்களும் பதிலுக்கிறைத்தும் ஸ்ரீபகவானுடைய கரங்களால்அபிஷேகப்பட்டவர்களாகியும் ஆழ்ந்தசலத்திலிறங்கிக்குவித்து விளையாடி சஞ்சரிக்கின்றயானைப் பேடுகளைப்போல ஸ்ரீபகவானுடன் அநநதியில்சஞ்சரித்துககொண்டிருந்தார்கள் இப்படிப்பட்ட சலத்தையுடைய யமுனாநதியில் ஸ்ரீபகவானுடன் இநதபாலாமணிக ளெல்லாரும் தீர்த்தங்களாடி நிர்மலமானமனதுடையவர்களாய் அந்நதியைவிட்டுவெளியில்வந்து வஸ்திரங்களையுடுத்திக்கொண்டு சுகந்தபரிமளங்களையணிந்து சகலாபரணங்களையுந்தரித்தசர்வாலங்கார சோபிதர்களாய் மதசலத்தை அடுத்தயானைப் பேடுகள் சுகத்துடன் கிரீடிக்கின்றனபோல வெணமை

[illegible] ளிடத்தும் ப்ரியமுள்ளவர [illegible] யவர் [illegible] வாங்களி [illegible] விதசுகபோகங்கிரீடைகளை யனுபவித்தார்கள்.

வாராய் [illegible] பாலகோபால [illegible] இந்திரிய சலன [illegible] டையாத பகவானும் [illegible] இந்த ஸ்ரீகோபிகாசனங்க [illegible] ரக்ஷித்தாரென்று சொன்னார் இப்படிச்சொல்லிக்கொண்டுவருகின்ற சுகப் பிரம்மருஷியைப்பார்த்து பரிட்சித்துமகாராசன்ஒருவா ர்த்தைசொல்லுகின்றான்,

பரிட்சித்துமஹாராசன்வாக்கியம்

வாசீர்சுகப்பிரம்மரிஷியே சர்வதர்மங்களுக்கும்கர்த்தா வாகியும் போக்தாவாகியும் விளங்குகின்ற ஸ்ரீபகவானு வவர்இப்படிப்பட்ட மகாதர்மங்களை ஸ்தாபனஞ்செய்ய த்திருவவதரித்து இந்தபோகங்கள் செய்யத் துணிந்தா ரே இதனைப்படிப்பட்ட தர்மமென்று சுமமது திருவுள்ளத் தில் [illegible] சுலீதகம் [illegible] வாரணமாகு ம்படிச்சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்தித்த ம காராசாவைப்பார்த்து சுகர்சொல்லுகின்றார்.

வாராய் ராசனே இவ்வுலகத்தில் சகல திரவியங்களி லும்பிரவேசித்தும் சர்வதிரவியபோக்யராகியும் அவ ற்றின்தோஷங்களை யடையாதவராகியுமிருக்கின்ற அக் கினிபகவானைப்போலபிறர்மனைவியினதுசங்கமசுகபோ கங்களை யனுபவிக்கினும்மஹா தேஜோமய ஸ்வரூபாக ளாகிய சந்திரன்இந்திரன்முதலிய தேவதைகள் அந்த தோஷங்களையடையார்கள் அவர்களைப்போல மானிட ஜனங்கள் பிறர்மனைவியர்கள்மேல் ஆசைகொள்ளுவார் களேயானால் தங்கள்புண்யம் நசித்து அதோகதியை ய டைவார்கள் சிவனைத்தவிரமற்றவர்கள் யாரெனினும் தி ருப்பாற்கடலில்வாசுகியினால் கக்கப்பட்டுவந்தஆலகால விஷத்தைப்பானஞ்செய்வார்களாகில் சஹித்தும்பிழை ப்பார்களோ அப்படிப்போல மகாதேசிகருக்குத் தவங் குன்றினாலும மறுபடியும்மீளுவார்கள் அல்பதேசிகளு டைய தவமழியுமேயானல் மறுபடியுமீண்டு உச்சீவிப் ப தரிதாயிருக்கும்.

வாராய்நரேந்திரனே ஸ்ரீபகவானானவர் ஒருபிராம்ம முகூர்த்தம்வரையில் கோபஸ்திரீசனங்களுக்குத்திருப் தியுண்டாகும்படிச்செய்தபின்பு தம்மையே மணவாள னாகஎண்ணித்துச்சலியாமல்பார்த்துக் கொண்டிருப்பி ரியமனையில்லாதவர்களா யிருந்தபோதிலும் ஸ்ரீபகவதா க்ஞையின்படி தங்கள்தங்கள்மாளிகைகளைச் சேர்ந்தார கள் ஸ்வாமியுந்தமது திருமாளிகையைசேர்ந்தார் அந் தக்கோபால சிரேஷ்டர்களும ஸ்ரீபகவானிடத்தில் வை த்தமனதுடையவர்களாய் இந்தக்கோபிஜன விருத்தாந் தங்களைக்கேட்டவர்களுமன்று மனதில்தோற்றும்படி நினைத்தவர்களுமன்று அவர்களும் ஸ்ரீகிருஷ்ணகுணமகி [illegible] மையை [illegible] பரமஹானந்த பரவசர்களாயச் சந்தோஷித்துக்கொண்டிருந்தார்கள்,

வாராய் பூபனே ஸ்ரீபகவானுங்கோபிகாசனங்களு ஞ்சேர்ந்து நடத்தியபுண்யசரித்திரங்களைக்குணானுபவ ஞ்செய்து ஸ்ரீபகவத்பக்தியை அடைகின்ற புண்ய புரு ஷர்களாரோ அவர்களியாவரேனும் தங்கள் சன்மாந்தர ங்களிற் சம்பாதித்தபாபங்கள் நசிக்க நித்திய சுகானந்த ஸ்ரீபகவத் ப்ராப்தியை யடைவார்கள்.

---

## ௬ச ௳ வது- அத்தியாயம்.

---

ஆட்டலைக்கலிப்பா.

அம்பிகாவனவுஞ்சவத்திற்கரி
யோடுநந்தகோபாலகோபியொடும்
செம்மையாய்ச்சென்றுசேர்ந்தவிடத்தினிற்
செய்யவாங்கிரசரிஷிசாபத்தால்
அம்மலைப்பாம்பாயுற்றுக்கிளந்திடும்
அரவின்வாயிலகப்பட்டநந்தனை
பொம்மெனவிடுவித்ததின்சாபத்தைப்
போக்கிரட்சித்தவாறைப்புகலுவாம்

ஸ்ரீஅரியானவர் அம்பிகாவன வுத்ஸவத்திற்கு நந்த கோபர்முதலிய சகலசனங்களும்போயிருந்த விடத்தில் ஆங்கீரசரிஷிகளினுடைய சாபத்தைப்பெறறுக் கிடந்த மலைப்பாம்பின்வாயிலகப்பட்டநந்தகோபனைவிடுவித்து அதின்சாபத்தை நிவாரணஞ்செய்தாரென்றும் குபேர படனாகிய சங்கசூடனென்கிற துஷ்டயக்ஷனைச்சம்ஹ ரித்துகோபிகாசனங்களை இரட்சித்தாரென்றுஞ் சொல் லுகின்றது.

வாராய்ராஜசேகரனே ஒருநாள்நந்தகோபர் முதலிய கோபாலர்களும் கோபிஜனங்களும் அம்பிகாவனத்தை க்குறித்துக்கோரதங்கள் சகடங்கள்முதலியவாகனங்களுட ர்களாய்ச்சென்று அந்தப்புண்யக்ஷேத்திரத்தில் மகாப ரிசுத்தமாகப்பிரகாசிக்கின்ற சரஸ்வதிநதியில் தீர்த்தமா டிமிகவும் பக்திசிரத்தையுடன் உமா மஹேஸ்வரரைக் கியாணித்துககாணிக்கைகளைச் சமர்ப்பித்துமிகவும் ஆ சரத்துடன் ஸ்ரீஅம்பிகாதேவி ஸ்ரீஅம்பிகாமனோஹரா ஸ்ரீகௌரி ஸ்ரீகௌரீபதே ஸ்ரீஉமாதேவீ ஸ்ரீஉமாமகே ஸ்வரா ஸ்ரீசிவசம்போ சங்கரமஹாதேவா ஸ்ரீசைலவா ணி சாம்பவீ மகாகாளீ கிருபையாக எங்களைஇரட்சிக் கக்கடவீரென்று பலவாறாக ஸ்துதிகளைச்செய்து சாஷ் டாங்கமாகத்தண்டன்சமர்ப்பித்தார்கள்பின்பு அவ்விடத் தில் நந்தகோபரானவர்பிராமணர்களுக்குச் சமாராதன பூர்வகமாக அறுசுவை ரசவர்க்கத்துடன் பக்குவான்ன ங்களையுஞ்சமர்ப்பித்து சந்தனபரிமள புஷ்பாலங்காரத் துடன் கோ-பூ-சொர்ண-வஸ்திரதானங்களையுஞ்செய்து அந்தப்பிராம்மணபூஜைகளைச்செய்து ஸ்ரீகிருஷ்ணார்ப் பணமாகத்தக்கதஞ்செய்தார் பின்பு நந்தகோபர் உபநந் தனர் சந்தனர்முதலிய கோபால பிரபுக்களும் ம

றுமுனையாலேறுமலையடிப்பக்கத்திலமைந்துள்ள ஜலத்தைமாத்திரம்பானஞ்செய்து புண்யக்ஷேத்திரஉபவாசமாகஅன்றிராத்திரி அவ்வனத்தில்வாசஞ்செய்துகொண்டிருந்தார்களப்பிரதி லவ்வனத்தில் வாசஞ்செய்துகொண்டிருக்கின்ற ஒரு மலைப்பாம்பானது மிகவும்பசியையுடையதாய்ச் சுவேச்சையாகச் சஞ்சரித்துக் கொண்டுவந்துஉபவாசராய் நித்திரை செய்துகொண்டிருக்கின்ற நந்தகோபனைப்பற்றி விழுங்கத் தொடங்கிற்று அந்தச்சமயத்தில் நந்தகோபரானவர் ஆ ஸ்ரீகிருஷ்ணா ஆர்த்தஜனரட்சாமணீ சர்ப்பத்தினால் கிரகிக்கப்பட்ட என்னைவிடுவித்து இரட்சிக்கக்கடவீரென்று முறையிட்டார். அப்போது அவ்வாரவாரங்களைக்கேட்டுவிழித்துக்கொண்டுகோபாலஜனங்கள் யாவரும் கூக்குரலுடன்சீக்கிரமாகஓடிவந்து நந்தகோபனைப்பார்த்து மிகவும்பரபரப்பையுடையவர்களாய் அம்மலைப்பாம்பைக் கொள்ளிகளாற்சுட்டார்கள் கோடாலிகளால்மோதிக்கொத்தினார்கள் அவற்றினால் மிகவும் வருத்தத்தை யடைந்தபோதிலும் அக்கொடியமலைப்பாம்பானது நந்தகோபனைவிடாமல்விழுங்கிக்கொண்டிருந்தது அத்தருணத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவானானவர் தீவிரமாகவந்து அந்தப்பாம்பைத் தமது திருவடித்தாமரைகளாலுதைத்தார் அம்மாத்திரத்தில் அந்தப்பாம்பானது தனது ஜன்மாந்திரத்திற்சம்பாதித்த பாபராசிகளில் நின்றும்விடுபட்டதாய் அந்தச் சர்ப்பசரீரத்தைவிட்டு வித்தியாதரஸ்வரூபத்தையடைந்து ஸ்ரீகிருஷ்ணமூர்த்திக்குச் சாஷ்டாங்கமாகத்தண்டஞ்சமர்ப்பித்து மிகவும் பயபக்திவினயத்துடன் நின்றான் அப்படிநிற்கின்ற வித்தியாதரனைப்பார்த்து ஸ்ரீகண்ணபிரான் ஒருவார்த்தைசொல்லுகின்றார்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாராய்சுந்தரபுருஷனே இப்படிப்பட்ட திவ்யஸ்வரூபதரனாகியும் சுபலட்சணலட்சிதனாகியும் விளங்குகின்ற நீயார் உன்னுடைய நாமதேயமென்ன உனதுவாசஸ்தலமெங்கேயிருக்கின்றது இவ்வளவு தேககாந்தியையுடைய உனக்கு இந்தக்கோரமான துஷ்டசர்ப்பரூபமென்ன பாபத்தினால்நேரிட்டது இவ்விதமாகிய கொடிய ஸ்வரூபத்தைத் தாங்கத்தக்கதாக நீசெய்தபொல்லாங்கென்ன இவையெல்லாம் விவரமாய் எனக்குத்தெரியச்சொல்லக்கடவாயென்றுகேட்ட ஸ்ரீபகவானைப்பார்த்து அந்தவித்தியாதரன் மிகவும்விநயத்துடன்சொல்லத்தொடங்கினான்.

வித்தியாதரனுடைய வாக்கியம்.

வாரீர்ஸ்ரீபகவானே நான்சுதரிசனனென்னும் நாமதேயனுடைய வித்தியாதரன் இந்தச்சுந்தராகாரத்துடன் மிகவும் ஐஸ்வரியத்தை யடைந்தவனாகி விமானரூட சஞ்சாரங்களினால்சமஸ்தமான திக்குவிதிக்குகளிலுஞ்சஞ்சரித்துச் சுகபோகங்களையனுபவித்துக்கொண்டு வருகின்ற தருணத்தில் மிகவுங்குரூபிகளைப்போலத் தோற்றப்படுகின்ற ஆங்கிரஸர்களென்னும் மகாரிஷிகளைப்பார்த்து ஏளனமாகநகைத்தேன் அவ்வளவில் அந்தப்புண்யசீலர்களாகிய மகரிஷிபுங்கவர்கள் கோபத்தையடைந்துஎன்னைப்பார்த்து நீ இந்தச் சௌந்தரிய ரூபத்தைக்கொண்டிருப்பதினாலல்லவா எங்களை யிகழ்ந்தாய் ஆதலால் இந்தரூபத்தையிழந்து மலைப்பாம்பாய்க்கிடக்கக்கடவாயென்றுசபித்தார்கள் பின்புநான் எனதுபாபசிந்தையைக்குறித்து வியாகுலப்பட்டு அம்மகாரிஷிகளுடைய சரணாரவிந்தங்களுக்குச சாஷ்டாங்கமாகத்தண்டஞ்சமர்ப்பித்துஇரட்சிக்கவேண்டுமென்று ஸ்தோத்திரங்களைச்செய்தேன்உடனே அவர்கள் கிருபைகூர்ந்தவர்களாய் ஒருவார்த்தைசொன்னார்கள்.

மகாரிஷிகள் வாக்கியம்.

வாராய்வித்தியாதரனே ஸ்ரீமந்நாராயணரானவர் பக்தபராதீனராய் யதுகுலத்தி லவதரித்து எழுந்தருளியிருக்கின்றகாலத்தில் நந்தகோபர்முதலியசமஸ்த கோபாலஜனங்களுடன் தேவதாயாத்திரையினிமித்தியம் இவ்வாரணயத்திற்கு ஓர் தினத்திலெழுந்தருளுவார் அந்த ஸ்ரீஜனார்த்தனருடைய ஸ்ரீபாதாரவிந்த ஸ்பரிசம்உனக்குக்கிடைத்தும அதனால்உனது பாபராசிகள் நசித்துமுன்னிலுமதிக சுந்தராகாரனாகிச் சுகத்தையனுபவிக்கக்கடவாயென்று அனுக்கிரகஞ்செய்தார்களென்றுவிண்ணப்பஞ்செய்து ஸ்ரீபகவானை ஸ்துதிக்கத் தொடங்கினான்.

மகானுபாவனாகியவித்தியாதரனுடைய

வாக்கியம்,

வாரீர் ஸ்ரீபரமகிருபாநிதியாகிய வனஜாட்சரே அத்திவ்யபுருஷர்கள் எனக்கு யதார்த்தமாகவே சாபமுன்னிலையின்எனது ரூபசம்பத்திலுண்டான கர்வத்தைப்பங்கஞ்செய்துமிகவும் சாதுசங்கமத்திற்குரிய சற்குணங்களையடையச்செய்ததுமன்றியில் உமது திவ்யசௌந்தர்யத்தைச் சாட்சாத்காரமாகச் சேவித்து உபாசிக்கவுங்கிருபைசெய்தார்கள் உமதுகல்யாணகுணத்தினாலுமகாலட்சேபவிலட்சணசாதுசங்கமசகவாசத்தினாலும்உமது நாமங்களை அடிக்கடி ஸ்மரணஞ்செய்வதினாலும் சமஸ்தபிராணிகளுடைய பூர்வத்திற்செய்ததோஷங்களநசித்துப்போக மகாதேஜஸ்விகளாய் விளங்குவார்களென்று ஞானிகளால் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது ஆனபடியினால் உமதுசரணாரவிந்தஸ்பரிசம் எனக்குலபித்தமாத்திரத்தில் அந்தப்பிராம்மணோத்தமர்களினுடைய சாபத்தினாலுண்டாகிய சர்ப்பஸ்வரூபமொழிந்து திவ்யரூபத்தையடைந்து தன்னியனானேனென்று துதித்தான்.

ஸ்ரீசுகர் வாக்கியம்,

வாராய் அரசனே இந்தப்பிரகாரம்வித்தியாதரன்துதித்து ஸ்ரீபகவானுக்குப் பிரதட்சண நமஸ்காரங்களைச்

செயது ஸ்ரீபகவானுடைய அனுக்கிரகத்தை யடைந்து
விடைபெற்றுக்கொண்டு தனதுஉலகத்திற்குச் சென்ற
னன்பிறகுநந்தகோபர் மஹாகோரமாகிய மலைப்பாம்பி
ன்வாயில்நின்றும் விடுபட்டுத்தமது ஆயாசங்களைத் தீ
த்துக்கொண்டிருந்தார் அந்தச்சமயத்தில் சகலமானகோ
பாலப்பிரபுக்களும் கோபிகாஜனங்களும்வந்துநந்தகோ
பருக்குஉபசாரங்களைச்செய்துதங்கள்மனோதுக்கங்களை
யாற்றிக்கொண்டு அந்தத்தேவதைக்குமற்றவர்கள்செலு
த்தவேண்டிய காணிக்கைகளயாவுஞ்சமர்ப்பித்துவிட்டு
அந்தஜாத்ரோத்ஸவத்தை நடப்பித்து யாவரும் மறுநா
ளுதயத்தில் பரிசுத்தர்களாய்ப் பாரணைசெய்துகர்ப்பூர
தாம்பூல சுகந்தபரிமள புஷ்பங்களை யணிந்துகொண்டு
அவரவர்கள் தங்களுக்கிசைந்த வாகனங்களில்ஆரோக
ணமாகிசந்தோஷர்களாய் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடை
யதிவ்யகல்யாணகுணங்களைக்கீர்த்தனங்கள்செய்துகொ
ண்டுமறுபடியும் கோகுலத்தில்யாவரும்க்ஷேமத்துடன்
வந்துசேர்ந்தார்கள்.

வாராய்மஹாராஜனே அதன்பிறகுஒருநாளிராத்திரி
பூரணசந்திரோதயமான தருணத்தில் ஸ்ரீபலபத்ரமூ
ர்த்தியும் ஸ்ரீகிருஷ்ணபகவானும் ருசிரான்னங்களைப்பு
சித்து சகலஅலங்காரத்துடன் துளைக்கருவியாகிய புள்
ளாங்குழல்களை இடையிற்சொருகிக்கொண்டு சம்பிரம
வார்த்தைகளைப்பேசி உலாவிக்கொண்டே பிருந்தாவன
த்திலுள்ள புஷ்பங்களால் நிறைந்தஉத்தியான வனங்க
ளுக்கெழுந்தருளி மதுரமாகஸ்வரங்களைப்பாடுகின்றவி
சித்திர வண்டினங்களி னோசைகளையும் மிகவும்பரிமள
மாகிகுளிர்ந்துவீசாநின்றதென்றற்காற்றுகளையும்நன்
ருகவனுபவித்துச் சந்தோஷர்களாயத் தங்கள்புள்ளாங்
குழல்களைத்தமது அதரங்களில் வைத்து ஒருவர்க்கொ
ருவர் மஹா மங்களகரமாகியும் சமஸ்தபிராணிகளினு
டையமனோரஞ்சனமாகியும் இருக்கும்படி நானவிதவி
சித்ரகீதங்களைச்செய்தார்கள் இந்தஸ்ரீகிருஷ்ண பலதே
வமூர்த்திகளிருவரும் பாடுகின்றமுரளிகானத்வனிகளை
க்கேட்டு கோபிகாஜனங்களுள் மனோலயமடைந்துசரீர
ஸ்மரகங்களொழிந்து திவ்ய கானத்தில்வைத்த மனது
டையவர்களாய் அவரவர்கள் புறப்பட்டுஅவ்வனவீதியி
ல்இந்தமூர்த்திகளினுடைய ஸேவார்த்தமாகவந்து அவ
ர்களைக்கண்டு யதேச்சையாய்ச் சிலநேரஞ் சஞ்சரித்து
இந்தக்கானஸ்வராமிர்தங்களைத் தங்கள்செவிகள குளிர
அனுபவித்ததுமல்லாமல் அங்கங்குசித்திரத்திலெழுதி
யபாவைகளைப்போல நின்றுதங்கள் கலைகள்நழுவ அள
கபாரங்களிலணிந்த புஷ்பங்கள்ஒன்றொன்றாய்நழுவியு
திரஇந்தக்கானசுகாதிசயங்களை அனுபவித்துக் கொண்
டுமிருந்தார்கள்;

அந்தச்சமயத்தில் குபேரனுடைய தோழனான சங்க
சூடனென்கிற ஒரு குய்யகன் அவ்விடத்தில்சஞ்சரித்துக்
கொண்டிருந்து இவர்களினுடைய கானங்களையும்இந்த
க்கோபிகாஜனங்களினுடையமனோலயங்களையுங் கண்டு
ஆச்சரிய மனதுடையவனாய் மாயாவித்தியாகர்விதனாகி
தன்மாயாபலத்தினால் இந்தபலராம கிருஷ்ணர்களால்ர
ட்சிக்கப்பட்டவர்களாகிய கோபிகாஜனங்கள் யாவரையு
ம்அபகரித்துக்கொண்டு உத்தரதிசையை நோக்கிநடந்
தான் அத்தருணத்தில் இக்கோபிஜனங்கள்யாவரும்ஸ்ரீ
கிருஷ்ணனிடத்தில் பக்தியுள்ளவர்களாகையால்அந்தக்
குய்யகனுடைய மாய்கையிலகப்படாமல் ஸ்ரீ பகவந்நாம
ங்களைஸ்மரித்து முறையிட்டுப் புலியின்வசத்தி லகப்ப
ட்ட பசுவினங்களைப்போலக் கதறினார்கள் தட்சணம்ஸ்ரீ
பலபத்திரமூர்த்தி ஸகிதராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானான
வர்வாருங்கள் கோபகன்னியாமணிகளே பயப்படாதை
யுங்களென்று அபயப்பிரதானஞ்செய்துபலபத்திரரொ
ருஆச்சாமரத்தைப் பிடுங்கிக்கொண்டுகூடவரத்தாமொ
ருஆச்சாமரத்தைப் பிடுங்கிக்கொண்டு கால மிருத்தியு
வைப்போல பிரகாசித்தவராய் அடா குய்யகனே ஓடா
தேநிற்கக்கடவாயென்று கர்ச்சித்துப் பின்தொடர்ந்தார்.
அம்மாத்திரத்தில் அந்தக்குய்யகன் மனங்கலங்கிப்பிரா
ணபீதியடைந்து இந்தச்சுந்தரீசனங்களைவிட்டு உத்தர
திசையைநோக்கி ஓடத்தொடங்கினான் உடனே ஸ்ரீபக
வானானவர் ஸ்ரீபலதேவரை இந்தமாதுசனங்களுக்குஇர
ட்சகமாகநிறுத்தித் தாம்மாத்திரம்அவனைத்தொடர்ந்து
அடாதுஷ்டப்பயலே நீஎங்கேபோகிறாய் எங்குசென்ற
போதிலும் விடுவதில்லையென்றுசென்று அவன்தனது
மாயாவித்தைகளினால் எந்தஸ்வரூபத்தையடைந்துஎங்
கொளித்தபோதிலும் பூமி ஆகாயங்களில் எங்குஞ்சஞ்
சரித்தோடிமறைந்தபோதிலும் அங்கங்கு அவனுக்கெ
திரில்தோற்றிநின்றார் அப்போது அவன்வாடியே தன
துமாயாவித்தைகளிலழிந்துபிரமித்துநின்றான்உடனே
இந்தஸ்ரீபகவானானவர் தமதுகைகளை முஷ்டியாகப்பிடி
த்துஅவனுடைய தலை பிளக்கும்படிமோதினார் அதுகா
ங்கினமாத்திரத்தில் அவனிறந்து கவிழ்ந்துபூமியின்க
ணமண்கவ்விவிழுந்தான் அத்தருணத்தில் அவன்சிரோ
பாகத்தில் ஒருதிவ்யரத்நமானது ஜாஜ்வல்ய மானமாய்
திக்குவிதிக்குகள் பிரகாசிக்கும்படி ஜ்வலித்துக்கொண்
டிருந்தது அதைகோபீஜனங்கள்முதலிய யாவரும்பார்
த்துக்கொண்டிருக்கையில் ஸ்ரீபகவானானவர் அந்தரத்ந
த்தையபகரித்து அந்தச்சங்கசூடனைச் சம்ஹரித்து அ
வனுடைய தலையில்நின்றுங்கிரகித்ததாகியவேதமணியெ
ன்னுஞ் சிரோரத்நத்தைத் தமக்குமூத்தபிரானாகிய ஸ்ரீ
பலராமமூர்த்திக்குக் காணிக்கையாகச்சமர்ப்பித்துச்சந்
தோஷங்களையுண்டாக்கினார் அவரும்பரமசந்தோஷரா
ய்ஸ்ரீபகவானைக் கடாலிங்கனஞ்செய்து திருப்தியடைந்
தார்பின்பு ஸ்ரீ கிருஷ்ணரானவர் உடனே யாவருஞ்சந்
தோஷர்களாயிருக்க அவர்களெல்லாரையும் அழைத்து
க்கொண்டு கோகுலத்திற்கு வந்துசேர்ந்து வாசஞ்செய்
துகொண்டிருந்தார்.

---

## ௯௫ - வது - அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்,

பதிதபாவனன்பகற் காலத்திற்ப்ரந்தாரண்யத்திற்
கதிதமாய்ச்சஞ்சரிக்க வவணெழுந்திருக்கும்போது
மதுரசவாக்கியகோபி காஜனமாதரெல்லாம்
துதித்தனரடிக்கடிக்குந் தூயனும்பகவன்றன்னை

ஸ்ரீபகவானனவர் பகற்காலத்தில் பிருந்தாரண்யத்தில்சஞ்சரிக்க எழுந்தருளி யிருக்கும்போதுகோகுலத்திலுள்ளகோபிகாசனங்கள்யாவரும் ஸ்ரீஹரியினுடையலீலா விபவாதிசயங்களைத் தியானித்துக்கொண்டு தங்கள் இருதயங்கள் சகிக்கமாட்டாமல் பகற்காலத்தைவெறுத்துமஹாவியாகுலங்களையடைந்து இராத்திரிகாலத்தைத்தங்களுக்கும் பரமோத்தாரகமென்றுநினைத்துத் துதித்தாகளென்று சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் மஹாராஜனே அப்படியிருக்கின்றசமயத்தில் ஸ்ரீபகவான் நாள்தோறும் பகற்காலங்களெல்லாம்வனங்களிலும்இராக்காலங்களில் கோபகன்னிகைகளுடன்விளையாடிக்கொண்டிருந்தார் அப்படிலீலார்த்தமாக விருத்தியடைகின்றகாலங்களில் இந்தக் கோகுலத்திலுள்ள சனங்கள்யாவரும் ஸ்ரீகிருஷ்ணபகவானுடையலீலாவைபவாதிசயகுணங்களை ஒருநிமைப்பொழுதாவதும்மறவாமல்தங்கள்சகிஜனங்களைப்பார்த்து மனோவேதனைகளாறும்படிஅவருடைகுணலீலைகளை ஒருவர்க்கொருவர்பிரீதியாகப்பேசிக்கொண்டு பகற்காலங்களைக்கழித்தார்கள்.

ஓவிரதசீலனாகிய மஹாராஜனே அவைகளைவிவரமாகச்சொல்லுகிறேன் கேட்கக்கடவாய் ஒருகோபசுந்தரியானவள்மற்றொருத்தியைப்பார்த்து வாராய் சகிமணியே, ஸ்ரீபகவானனவர் அந்தயமுனாதீரத்தையடைந்துசந்தோஷபரராய்த் தமதுதிவ்யாம்பரங்களை இறுகப்பிகிந்துநன்றாய்ச்சொருகிக்கொண்டுதமது ஹஸ்தங்களிலும் புஜங்களிலுமணிந்த திருவாபரணங்கள் பிரகாசிக்கப்புஜங்களைத்திருத்திக்கொண்டு ஒருவிருட்சத்தி னடிவாரத்திினின்று கால்மேல் காலைவைத்துக்கொண்டு வேணுவைத்திருவதரத்தில்வைத்து விரல்களுடையவைப்புதலினால்கானங்களைக்கற்பித்து தேவகானகீதங்களைப்பாடுவாரல்லவா அப்படிப்பாடுகின்றசமயத்தில் ஆகாயவீதிகளில்தங்கள பிராணநாயகர்களுடன் கூடிவிமானங்களில் நின்றுஸ்ரீஹரியினுடைய கானருசிகளை யனுபவித்து மதித்து மனோலயமடைந்து ஸ்திரீபுருஷர்கள்யாவரும்தங்களாடைகள் தளர்ந்துநழுவிககொண்டிருக்கச் சோர்ந்துநின்றார்களே அப்படிநின்றவர்களை நீபார்க்கவில்லையாவென்றனள்மற்றொருமாதுஓர் கொடியிடையைப்பார்த்துவாராய்பத்மகந்தியே ஸ்ரீகிருஷ்ணபகவானுடையவேணுநாதமாகிய அமிர்தத்தைச்செவியென்னும்வாயினாற்பானஞ்செய்து இருதயங்குளிர்ந்து சம்பிரமானந்த பரவசத்தைக்கொண்டனவாகி பசுக்கூட்டங்களும்அவைகளின்கன்றுகளும் மற்றுமுள்ள சகல மிருகங்களும்மேய்ச்சல்களொழிந்துசர்வேந்திரியங்களையும் ஸ்ரீமாதவப்பிரானுக்கே சமர்ப்பித்துவிட்டு முகங்களையும்வால்களையும் உயரத்தூக்கிக்கொண்டுநின்று மனஞ்சொக்கியிருக்குமல்லவாவென்று சொல்லி அங்குள்ள விபவங்களைநினைத்தாளுஞ் சோர்ந்தனள்.

பின்னுமொருபுண்யாங்கனை ஓர் பிடிநடையைப்பார்த்துவாராய்கஞ்சாயதாக்ஷி அந்தப்பிருந்தாவனத்தில்சமஸ்தபிராணிகளுக்கு மனோரம்யமுண்டாகும்படி ஸ்ரீபகவானனவர் சுந்தரமுகாரவிந்தபிரசன்னராய்ச்சந்தோஷத்துடன் தேவகான வித்தை வெளிப்பட முரளிகானத்தைச்செய்யும்போது அந்தவனத்திலுள்ள சகோரம்-சக்கரவாகம்-கிரௌஞ்சம்-சாரிகை மயில்-குயில் முதலாகியபட்சிக்கூட்டங்களெல்லாஞ்செவிகொடுத்துக்கேட்டு ஆனந்தத்தைக்கொண்டு தங்கள் வியாபாரங்களைவிட்டு இறகுகளைவிரித்து மயிர்களைச்சிலிர்த்துக் கண்டங்களை நீட்டி மனோலயமடைந்திருக்குமல்லவா அங்குள்ள விருட்சங்களும் கொடிகளும் புதருகளும்கம்பீரமாகநின்று அசையாமலிருக்குமல்லவா மந்தமாருதமிகுந்துசலியாமல் மகாயோகியினுடைய இருதயத்தைப்போலக்கம்பீரமாகவிருக்குமல்லவா நதிபிரவாகங்களின் அலைகள்மிகவும்அதிர்ந்து வீசித்தளும்பாமல் சாந்தபுருஷனுடையஇருதயத்தைப்போல மகாகௌரமாகத் தோற்றிக்கொண்டிருக்குமல்லவாவென்றுசொல்லித்தன் மனசுக்குள்விரகத்தையடைந்து பெருமூச்சுவிட்டனள்.

ஒருசுபாங்கி மற்றொருகோதையைப்பார்த்துவாராய் வனிதாரத்நமே இந்தப்பிரபஞ்சத்துள ஏனோபோதுவிடிகின்றது உதயகிரியின்மீது இந்தச்சூரியபகவான் நாள்தோறும்ஏனுதிக்கின்றானோ இவ்வுலகத்திற்குச்சிருஷ்டிகர்த்தாவான ஸ்ரீசதுர்முகபகவானனவர் ஆதியிலேசிருஷ்டிக்கத் தொடங்குகையில் நிர்த்தயராய்த் தமது காரியோசித கர்மவிருத்தியின்பொருட்டுப் பகலிரவாய்ப் படைத்தபோதிலும் நமதுகண்ணபிரானாகிய ஸ்ரீபகவான் திருவவதரித்தமாத்திரத்தில் எப்போதும் பூரணச்சந்திரன்நிலைத்திருக்கவும் வெளிச்சமுள்ளஇரவேநிலைத்திருக்கவும் போதுவிடியாமலேயிருக்கவும்ஏன்படைக்கவில்லையோ ஸ்ரீகமலாட்சராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய தரிசன ஸ்பரிசனயோக்கியமான இரவாகவே யிருக்கலாகாதோ இந்தப்பகற்காலம் ஏனுண்டாயிற்றோ இப்பகற்பொழுதுதான் எப்போது கழியுமோவென்றுசொல்லி மனது பதைத்துச்சோர்ந்தனள்.

ஒரு வனஜாட்சியானவள் ஓர் துடியிடையைநோக்கி வாராய்கல்யாணியே இந்தப்பகற்பொழுதெப்போதுநீ

ந்கும் ஸ்ரீ ஹரியானவர் மேய்ந்து பசிதணிந்து ஊர்முக
மாகத்திரும்பப்பட்ட பசுக் கூட்டங்களை யோட்டிக்கொ
ண்டு கோகுலமுகமாய்த்திரும்பி எப்போது எழுந்தரு
ளுவாரோ அவருடையமுகாரவிந்த பிரசன்னசுந்தரசே
வார்த்தத்தைப்பெறுவேனோ அவரெப்போது கிருபாக
டாட்சவீக்ஷணமிர்ததாரைகளைஎன்மீதுவருஷிப்பாரோ
அந்தஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய ஸேவாசந்தோஷ
ங்களைப் பிரிந்திருக்கின்ற என்னை இந்தப்பகற்காலத்தில்
மன்மதனனைவன் தனது கருப்புவில்லைவளைத்துசுரும்
புநாணேற்றித் தாமரைமலர்-மாமலர்-அசோகமலர்முல்
லைமலர்-என்னு மிந்நால்வகைப்பாணங்களைத்தொடுத்து
என்னுடைய சரீரங்களைத்துளைத்துத் தாபங்கொள்ளச்
செய்து இருசயங்களைப்பேதித்து மனமலையச்செய்கின்
றனே இனிஐந்தாவதாகிய நீலமலரைத்தொடுத்துஉயி
ரைவாங்குவான்போலிருக்கின்றதே எப்படிஎன்னசெய்
வேன்இப்படிப்பட்ட தாபத்தைஅந்தப்பகவான்எப்போ
துவந்துதானாற்றுவாரோ அவரென்சமீபத்தில்வந்துசன்
மானித்து எனதுமனக்கவலைகளையொழித்துச்சித்தசஞ்
சலங்களை மாற்றிநீ யஞ்சவேண்டாமென்று அபயப்பிர
தானஞ்செய்து என்னைகௌரவமாக அபிமானித்துபி
ரம்ஹானந்தங்களை யுண்டுபண்ணத்தக்க அஸ்தமனகா
லமானது இன்னமெப்போதுதான் நேரிடுமோவென்று
சொல்லித்தத்தளித்து முகம்வாடியிருந்தனள்,

ஒருமகாசுந்தரியானவள் மற்றொருகோமளாங்கியை
ப்பார்த்து வாராய் சுகுண பூஷணலங்காரியான அன்பு
ள்ளசகியே ஸ்ரீபகவானனவர் என்னைப் பிரிந்ததுமுதல்
இதுவரைக்குஞ்சென்ற துருடிகாலமாகியநிமிஷங்களஒ
வ்வொருக்ஷணங்களாகவும் ஒவ்வொருநாழிகைகளாகவு
ம்ஒவ்வொரு முகூர்த்தங்களாகவும் சில நேரவரைக்குந்
தோற்றமாயிருந்தன பிறகோர்நிமிஷம் ஒரு தினமாகத்
தோற்றியது பின்னும்யோசிக்குமளவில்ஓர்நிமிஷம்ஒரு
பட்சமாகவும் ஓர்மாதமாகவும் ஓர்வருஷமாகவும் விளங்
கியதுபின்புவரவர ஒருநிமிஷம் அநேக வருஷங்களாக
வும்ஒருயுகமாகவு மந்தயுகங்கள்நான்கும்ஒன்றாய்ச்சேர்
ந்தஒரு சதுர்யுகமாகியமகாயுகமாகவும்பிறகு அந்தமகா
யுகங்கள் பலவாகவும்பிறகுஅவையிரண்டாயிரஞ்சேர்ந்
தபிரம்ஹதினமாகவும்பின்பு பிரம்ஹகல்பந்த மாகவும்
நினைக்கப்பட்டிருந்ததுஇப்பொழுது அநேக நிமிஷங்க
ளனந்தகோடி கல்ப பேதங்களாய்த் தோற்றப்பட்டிருக்
கின்றனநானென்ன செய்யப் போகின்றேன்? இந்தக் கா
லக்ஷண மிப்படியிருக்குமானால் இந்தப்பிரகாரம் ஒ
ருநாழிகையை யளவிட்டால் எவ்வளவு காலமாகும்ஒரு
நாழிகைக்கே எவ்வளவோ பிரம்ஹகல்ப மாகுமாகில்இ
ன்றைப்பொழுது அஸ்த மிப்பதற்கு எத்தனைகோடி பி
ரம்ஹகல்பங்கள் ஒழியவேண்டுமோதெரிய வில்லையே,
நானென்னமாய் சகித்திருந்து ஸ்ரீபகவானைச் சேவித்து
உஜ்ஜீவிக்கப்போகிறேன் என்றுசொல்லிப் பதைபதை
த்துஉள்ளஞ்சோர்ந்துருகி யேங்கிப் பரிதவித்துப்பெரு
மூச்செறிந்துகண்களிலிருந்து தாரை தாரையாய்ப் பெ
ருகுகின்றஜலம் ஆறாயோட அவ்விடத்திலேயே சோர்
ந்து அங்கனே கொஞ்சந்தெளிந்து துக்கித்துக்கொண்டு
பகற்காலத்தை அதிகதுன்பத்துடன் கழித்துக் கொண்
டிருந்தனள்,

மற்றொரு சௌந்தரியானவள் ஓரஞ்சன லோசனியை
ப்பார்த்து வாராய்மோகனாங்கியே,ஸ்ரீபகவானனவர் ஜக
ன்மோகனாகார சுந்தரரூபதரராய்ச்சர்வலோகத்திற்கும்
ரஞ்சனத்தைத் தருகின்ற வேணுகானத்தைச் செய்து
அந்தக் கீதஸ்வரத்தைக் கேட்டு டோலாயமான சராய
டைந்த நம்முடனே அவ்வனாந்தரத்திலுள்ள புண்ய ந
தீ தீரங்களிலும் குளிர்ந்த சோலைகளிலும் புஷ்பவனங்
களிலும் மற்றுமுள்ள ஸ்தலங்களிலும் பிரவேசித்துந
மது இஷ்டங்களீடேறத் தக்கதாக வேணுகானங்களைப்
பாடியும் மகாராஜலக்ஷணங்களாகியசங்கரேகை முதலி
ய திவ்யரேகாலங்கிருதங்களோடுங் கூடிய தமதுதிருவ
டிகள்இந்தப்பூமிதேவியினுடைய மங்கல சுவரூபமாகி
யஇந்தப்பிருந்தாவன ஸ்தலங்கள் முழுதிலும்படவும்அ
தினால் அந்தஸ்தானங்களெங்கும் அவ்வடையாளங்களை
த்தரங்கிச்சுபகரமாகியரங்கவல்லிகளினால் அலங்காரஞ்
செய்திருக்கின்றபெரியபிராட்டியாராகியஸ்ரீமகாலட்சுமீ
தேவியினுடைய திருமாளிகையைப்போல அலங்கிருத
மாகவும் நிர்த்தனங்களைச்செய்து தமது திவ்யாவயவாக
ர சரணங்களால் செய்யப்பட்ட லக்ஷணவிநயங்களினா
லும சதாசுப்பிரஸன்னவதனாரவிந்தத்திலே தோற்றுகி
ன்ற இளநகையினாலும்பரமகிருபாபரிபூரணாதி சயங்க
ளையுடைய தமதுகடாக்ஷவீட்சணிபங்களைப் படைத்த
சுந்தரமுகாரவிந்தசோபிதங்களினாலும் நம்மையாவரை
யு மோகிப்பித்துஅவரவர்கள் மனோபீஷ்டங்கள் நிறை
வேறத்தக்கசுந்தரரூபங்களை அடைந்துஒருவர்க் கொரு
வர் எதிர்காலத்தைக்கோறிமனமருண்டு அலையாமலும்
ஒருவர்போகத்தை யொருவர் சிந்தித்துஎதிர்பார்த்துச
ஹித்துக்காத்திராமலும ஏககாலத்தில் யாவருந் திருப்
தியடையும்படிச்செய்யத்திருவுள்ளங் கொண்டு அநந்த
மாகிய கோபிகாங்கனைகளுக்குத் தாமுமனந்தராய் ஒரு
வருக்கு மனங்கோணமல்பிரம்ஹானந்தசம்போகருசிக
ளைத்தந்ததுஉள்ளும்புறமபுமுள்ள தாபங்களையாற்றிநம
து அனந்தஜன்மத்தில் சம்பாதித்தபாபராசிகள் நசிக்கு
ம்படிநம்முடன்கூடிநமக்கு திவ்யானந்தசுகபோகங்களை
த்தந்தருளிய ஸ்வாமியைப்பிரியும்படிச்செய்கின்றஇந்த
க்குரூரரூபத்தையடைந்த பகற்காலம் எப்பொழுதுதா
ஞெழியுமோ நமது ஸ்வரூபபர்த்தாவை நேத்ரோத்சவ
மாக சேவித்துகணகளிக்கச்செய்கின்றசூரியாஸ்தமான

தமோதாமய்கூடிய இராக்காலமெப்போது தான்நமதுடையமனங்குளிரத்தோன்றுமோ தெரியவில்லையேயென்று சொல்லித் தத்தளித்துத் துயரமாகியவார்த்தைகளைத் தன்னுவானது தானே தத்தளித்துச் சொல்லிக்கொண் டிருக்கத் துக்கித்துக்கொண்டிருந்தனள் இவ்விதங்களாக அந்தக்கோகுலத்திலுள்ள வனிதாரத்நங்கள் யாவரும் ஸ்ரீஹரியானவர் திருவவதரித்த திவசமுதல் அந்நாள்வரையில் செய்தகல்யாணகுணங்களை நினைத்துக்கொண்டவர்களாய்த் தங்கள்தங்கள் இருப்பிடங்களில் பகற்பொழுதெல்லாம் அந்தஸ்ரீகிருஷ்ணகுண கீர்த்தனங்களைச் செய்து அவர்லீலைகளில் தாங்க ளனுபவித்த சுகானந்தங்களையும் நினைத்துநினைத்து எப்பொழுதும் சர்வேந்திரியங்களையும் அந்தஸ்ரீகிருஷ்ணபகவானுக்கே சமர்ப்பித்து ஸ்ரீகிருஷ்ணபகவான் எழுந்தருளுகின்ற எதிர்காலத்தை மிகவும்ஆதரத்துடன் எதிர்பார்த்துக் கொண் டிருந்தார்கள்

அப்படியிருக்குஞ்சமயத்தில்சூரியபகவானனவர்மேற்குத்திசையிற்சென்றனர் அப்படிச்சந்தியாகாலந் தோன்றினமாத்திரத்தில் அந்தக்கோப ஸ்திரீகள் அங்கங்குதனித்தனியே இனவினமாகச்சேர்ந்து பிரம்ஹானந்தசந்தோஷபராகளாய் ஒருவரையொருவர்பார்த்து வாருங்கள்சகிசனங்களே அதோபாரத்தீர்களா இதுவரைக்கும்நம்மையும் ஸ்ரீகிருஷ்ணபகவானையும் பிரியச்செய்தநமது இருதயங்களுக்குத் தாபத்தைத்தந்த இந்தச் சூரியபகவானனவர் இராத்திரிகாலம் வரச்செயத்தக்கவராய் அஸ்தமான பருவத்தையடைந்தார் நமக்கெல்லாருக்கும் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய வரவைத்தெரிவிக்கின்ற அஸ்தமானகாலங்கள்தோற்றுகின்றன அதோ அந்தபிருந்தாரணயத்திற்குநேரே ஆகாசவீதியில்சர்வலோகமங்கலகர சுபசகுணத்தைப்போல கோவினங்களின் பாதத்தூளிகளெழும்பிமேஹபடலங்களைப் போலக்குறிகள் தோன்றுகின்றன வரவர கோவினங்களின் அம்மாவென்னும் ஆரவாரங்களும்இந்தநந்தவ்ரஜத்திலுள்ள பிரஜைகளினுடைய செவிகள்குளிர்ந் தானந்திக்கும்படியாகக் கேட்கின்றன அந்தநாதங்களைக் கேளுங்கள் இதோ ஸ்ரீபகவான் எழுந்தருளுகின்றார் சீக்கிரமாகவாருங்கள் நேத்ரோத்சவமாக நம்முடையகண்கள் களிதீரச்சேவிக்கலாம் நமதுபிரியராகிய ஸ்ரீபகவானுடைய கிருபையைப்பெற்று யாவரும்உச்சீவிக்கலாம்வாருங்களென்று ஒருவரையொருவர் அழைத்துக்கொண்டு இனவினமாய்ஆவலுடன்வந்துதிவ்ய சேவையைத்தந்து கொண்டெழுந்தருளுகின்ற ஸ்வாமியைத்தரிசித்துச் சந்தோஷானந்தத்தையடைந்தார்கள் ஸ்ரீபுருஷோத்தமரானவர் ஸமஸ்தமான கோபாலர்களும் கோவினங்களுந்தம்மைசசூழ்ந்துகொண்டு வரப்பலராம ஸஹிதராய் கோகுலத்திற்பிரவேசித்தமார்க்கங்களில் தமதுகடாக்ஷ வீக்ஷண்யாமிர்தவருஷங்களினால ஸமஸ்தமான கோபிகா சனங்களினுடைய மனோதாபங்களையாற்றிச் சன்மானித்துக்கொண்டிருந்தகோபருடையகிரகத்தில் பிரவேசித்து யசோதாரோகிணிதேவிகளால் சர்வோபசாரங்களுடன் போஷிக்கப்பட்டிருந்தனர்.

---

## ௩௬-வது-அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

விருஷரூபத்தைக்கொண்ட வெய்யரிஷ்டாசுரன்றன்
னை, அரியவரவனைக் கொன்று அன்பவாக்காத்தா னென்
றும், அரியநாரதராற்கம்சன் அரியின்றன்சரித்திரங்கே
ட்டு, விரைவினிலவனையிங்கு வழையென்றக் குரூரனை
விட்டான்.

ஸ்ரீகிருஷ்ண பகவானனவர் விருஷபாகாரத்தை அடைந்துகோகுலத்திலுள்ள கோபாலர்களையும் கோவினங்களையும் நலியச்செய்த அரிஷ்டாசுரனைச்சம்ஹரித்து யாவரையுமிரட்சித்தாரென்றும்ஸ்ரீமந்நாரதபகவானால் கம்சமஹாராஜன் ஸ்ரீபகவானுடைய திவ்யசரித்திரங்களைக்கேட்டுச் சந்தேகமற ஸ்ரீதேவகீவசுதேவ புத்திரர்களென்றறிந்து ஸ்ரீபலராமகிருஷ்ணமூர்த்திகளைமதுராபுரிக்குஅழைத்துக்கொண்டுவரும்படிமஹாபாகவதோத்தமராகிய அக்குரூரரைப் பிரயாணப்படுத்திஅனுப்பிவித்தாரென்றுஞ் சொல்லுகின்றது.

வாராய்பரீட்சின்மகாராசனே அதின்பிறகு ஒருநாள் அரிஷ்டாசுரனென்பவன் தனதுமாயாவித்தையினாலஆகாசவீதியில வியாபித்துப்பரவாநின்ற மேகங்கள் இனவினமாகவந்து தங்களுக்குஆகாரமாகத் தங்குகின்றபர்வதத்திற்குச் சமானமானமுசிப்பையும் சமஸ்தபிராணிகளுக்கும் பயத்தைச்செய்து கர்ப்பங்களைக் கலங்கப்படுத்தும்படி மேகத்திலிருந்து வெளிப்படுகிற இடிமுழக்கங்களையும் காலபைரவ ஆரவாரங்களையுமொத்த கர்ச்சனைகளையும் சூரியகிரணங்களைமறைத்துக்கடாந்தகாரமான இருளைத்தரும்படித் தூளெழும்பத் தக்கதாய்ப் பூமியிளக்கஉதைக்கின்ற குளம்புகளுள்ள நான்குபாதங்களையும் வேருகளையுடைய விருக்ஷங்களையும் குன்றுகளை யும் பர்வதங்களையும் எதிர்முட்டி நிர்த்தூளிசெய்யத்தக்கவலியடைத்த பர்வதசிகரங்களை யொத்த இரண்டு கொம்புகளையும்காலபாசத்தையொத்த வாலையுமுடையவிருஷபாகாரத்தை அடைந்துஸ்ரீகிருஷ்ணபகவானை ஹிம்சிக்க நினைத்துக்கொண்டு அந்தநந்தவிரஜஜனங்களும் கோவினங்களும்பிராணபீதி யடையும் படியாகத்தலையெடுத்து உங்காரங்களைச் செய்து கர்ச்சித்தும் வாலையுயரத்தூக்கிச் சுழட்டியடித்தும் முன்னங் கால்களினால் பூமியைப்பிளந்தும பின்னுங்கால்களினால் ஒருவருங்கிட்டச்சேரவொட்டாம லுதைத்தும் பர்வதாகார தனதுகொம்புகளினால் வளைத்துமுட்டியும் இவ்விதங்களாகிய கொடியகிர்த்தியங்களைப் பல பலவாகச்செய்து

கோபாலர்களையும் கோவினங்களையும் மேல் விழுந்து வெருட்டினர் கும்பிறகவொட்டாமல் துரத்திமுட்டியோட அடித்துக்கொண்டுகோகுலத்தில் பிரவேசித்தான் அப்போது அவிடத்திலுள்ள சமஸ்தபிராணிகளும் பயந்து பிராணபீதியடைந்தன,

வாராய்மகாதீரனே இப்படிபலவித பொல்லாங்குகளைச்செய்துகொண்டு விருஷப ரூபத்துடன் வருகின்ற அரிஷ்டாசுரனைக்கண்டு மிகவுநடுங்கி கன்றுகள் யாவும் கோவினங்களை அடுத்தன அந்தக்கோவினங்கள்கன்றுகளுடனோடிவந்து மத்தவிருஷப ரூபங்களை யாசிரயித்தன அந்தவிருஷபங்கள் கோவத்ஸகோவினங்களுடன் கோபாலர்களை அடுத்தன அந்தக்கோபாலர்களு மஹத்தாகியபிராணபீதியடைந்து சகலமானகோபஸ்திரீகளுடனே பசுக்கூட்டங்கள்முதலாகிய சமஸ்தபிராணிகளுங்கூடி ஓடிவந்து ஸ்ரீபகவானைச்சேர்ந்து வாரீர் ஸ்ரீகிருஷ்ணதீனபந்தோ எங்களியாவரையு மிரட்சிக்கக்கடவீரென்று சாணமடைந்தார்கள் அப்போதுதீனஜனரக்ஷகராகிய ஸ்ரீபுண்டரீகாக்ஷரானவர் தம்மைநோக்கி இரக்ஷிக்கவேண்டுமென்றுஓடிவருகின்ற சமஸ்தமான ஜனங்களைப்பார்த்து வாருங்கள் எனதன்புள்ள மகாசனங்களே நீங்கள்பயப்படாதிருங்களென்று அபயப்பிரதானஞ்செய்து அவர்கள்யாவரையுந் தமக்குப்பின் தூரமாகப்போகச்சொல்லித் தாமொருவர்மாத்திரமேஅந்தத்துஷ்டனுக்கு முன்னின்றுஅந்தருஷபரூபியான கொடிய அசுரனைப்பார்த்து ஒருவார்த்தைசொலலுகின்றார்.

வாராய்மைந்தனே துராத்மாவே சாது சனங்களாகியும் தீனர்களாகியுமிருக்கின்றகோபாலர்களையும்பேதைகளாகிய ஸ்திரீசனங்களையும் சாதுக்களாய்ச்சஞ்சரித்துக்காட்டிலுள்ள தழைகளையும் புற்களையு மேய்ந்துதிரிகின்றகோவினங்களையும் நலியச்செய்வது என்னசுத்தவீரதர்மமோ.

வாராய்விருஷபாசுரனே இந்தத்திருவாயர்பாடியை முன்போலக் கோபாலர்கள்வாசஞ்செய்கின்ற சேபல்லையென்றுநினைத்தாயேஉன்னைப்பார்க்கிலும்மிகுந்தசௌரிய தைரியபிரதாபசாலிகளான கொடிய துஷ்டசுரர்களாகியமதகஜங்களைச்சம்ஹாரஞ்செய்து விண்ணுமண்ணுஞ்சௌக்கியங்கொள்ளச்செய்து கீர்த்தியடைந்தஸ்ரீ கோபாலகிருஷ்ண சிம்ஹமானது சஞ்சரிக்கிறபாடியென்று நீநினைக்கவில்லையோ நீஉனது அசுரமாயையினால் விருஷபாகாரத்தைத் தரித்துக்கொடியசேஷ்டிதங்களைச்செய்கின்றபடியால்இப்போது என்னெதிரில்தோற்றுகிற இந்தஸ்ரீகிருஷ்ண சார்த்தூலமானது நீதப்பித்துக்கொண்டோடினாலும் உன்னை யினி விடுகிறதில்லை யென்றார்.

வாராய்மானிடசேகரனே இவ்விதமாகச்சொன்னஇந்தகண்ணனானவர் அந்தத்துஷ்டனைப்பார்த்துப் பௌருஷவாக்கியங்களைச் சொல்லிக் கர்ஜ்ஜனைகளைக் காட்டி உங்கரித்துத்தட்டிகையை யிழுத்துக்கட்டிகம்பீரமான மஹா பயங்கரஸ்வரூபமாகிய சர்ப்பேந்திரனுக்கொப்பாகியதமதுபுஜபாருதண்டங்களைநீட்டி மிகவும்பிரியமுள்ள சிநேகிதன் தோளில்கையைவைத்துச் சன்மானிக்கிறதுபோல அவனுடையகண்டத்தின்மேல்வைத்துஸ்ரீஹஸ்தத்தை வளைத்துஅவன்கழுத்தை யிறுகஅழுத்திப்பிடித்துப் பராக்கிரமத்துடன்நின்றார்.

அபபோதுஅந்த அரிஷ்டாசுரனானவன்மிகவும் கோபமுடையவனாய்த் தனதுகாற்குளம்புகளினால் பூமிபிளக்கும்படி யுதைத்து பெருந்தூளிக ளெழும்பச்செய்து வாலைஉயரத்தூக்கிச் சுழற்றிஆகாயத்தில் சஞ்சரிக்கின்றமேகபடலங்களை யெல்லாம்சின்னபின்னப்பட்டோடும்படிப் பறக்கவடித்து இரண்டு கண்களிலும் நெருப்புப்பொறிகள் சிதறத்தலையைவளைத்துக்கொண்டு அசுராந்தகராகிய ஸ்ரீபத்மலோசனரை முட்டித்தள்ளினான்அந்தச்சமையத்தில் யாதவகுஞ்சரராகிய ஸ்ரீபகவானானவரந்தவிருஷபாசுரனுடைய பர்வத சிகரங்களைப்போன்ற இரண்டுகொம்புகளையும்பிடித்துமுன்னேசிலதூரமிழுத்து வலித்துவருத்தப்படுத்திப் பின்புமத்தகஜத்துடன் மும்மதயானையானது எதிர்த்துயுத்தஞ்செய்து நெட்டித்தள்ளினாற்போலப் பதினெட்டு கஜபரமாண தூரத்திற்போய்ச்சுழன்று விழும்படிநெட்டித்தள்ளினார்அம்மாத்திரத்தில் அவ்வசுரனானவன் திருணத்தைப் போலப் போய்வீழ்ந்து சரீரம்வேர்த்து இந்திரியங்கள் கலங்கிப் பெருமூச்செறிந்து சற்றேநிதானித்து ஆயாசந்தீர்த்துக்கொண்டு முன்னிலும்அதிக கோபோத்தீபிதனாய்மகத்தாகிய பராக்கிரமத்துடன் ஸ்ரீஜனார்த்தனரை உங்கரித்துடைகொடுத்துமுட்டினான்.

அத்தருணத்தில் இந்தபகவானானவர்மறுபடியும் அந்தத் துஷ்டவசுரனுடைய இரண்டுகொம்புகளையும்மிகவும்பராக்கிரமத்துடன்பிடித்துவிடாமல்சிலதூரமசெட்டிக்கொண்டுபோய்பூமியில்விழும்படித்தள்ளி மீதேறிமிதித்துநின்று இவ்வுலகத்தில்லோக கண்டர்களாய் ஜனித்திருக்கின்ற கொடியவசுரவினங்களிற்ஆங்காரமாகியகொம்புகள்முறியவும் சாதுஜனங்கள்முதலிய சமஸ்தமானதேவர்களினுடைய க்ஷேமமங்கலகரமாகிய கொம்புகள்விருத்தியடையவும் நேரிட்டசுபசூசனைக் கொப்பாகஇந்தவரிஷ்டாசுரனுடைய இரண்டு கொம்புகளையும்வேருடன்பறித்து அவைகளையேவச்சிராயுதமாகஇரண்டுஹஸ்தங்களிலுந்தாங்கியுறுதியாகப்பிடித்துப் பின்பாய்ச்சல்கொண்டுகிறுகிறென்றுசுழற்றி முன்பாய்த்துவந்து மோதியடித்து உதைத்தார் அவ்வளவில்அந்தமஹாகொடியவிருஷபாசுரனானவன்மூக்கினும் வாயினும் உதிரத்தைக்கக்கிக்கொண்டும் கிடுகிடென்றுநடுங்கி உதைத்துக்கொண்டும் பிராணபீதியையடைந்து மூத்திரமலங்கள் செய்துகொண்டும் ருதரங்கதறிபேரிரைச்சலிட்டு பிராணனைவிட்டான்.

வாராய் மகீசனே அதின்பிறகு சமஸ்தமானபிரஜைகளும் தங்கள்பக்துநேர்ச் சந்தோஷித்தார்கள் ஆகாசத்தில்நின்று ஸ்ரீபகவானுக்கு ஜயங்கோறுகின்றசமஸ்தமானதேவதைகளும் ஆனந்தசந்தோஷங்களையடைந்து இப்புஷ்பங்களை அவர்மேல்வருஷித்தார்கள் ஸ்ரீபகவானவர் ஸ்ரீபலராமரிடத்தில் வந்துசேர்ந்தார்பின்பு இருவர்களும் ஒருவரொருவர் அன்புடன்ஆலிங்கனஞ்செய்துகொண்டு சமஸ்தமான கோபால ஜனசமூகங்களும் மஹாசுந்தரவதிகளான கோபிகாஜனங்களும் தங்களிடத்தில்வந்து சந்தோஷமாகத்துதித்துக்கொண்டுவரகோகுலத்தில்பிரவேசித்து அவரவர்களையும் தங்களதங்கள் கிரஹங்களையடைந்து சுகித்துக்கொண்டிருக்கும்படியனுப்பிவிட்டு தங்கள் மாளிகைசேர்ந்து சந்தோஷமாயிருந்தார்கள்.

வாராய்மஹாராஜனே பிறகொருநாள் யதேச்சாஸிகாரியாய்த் திரிலோகத்திலுஞ் சஞ்சரிக்கின்றவராகியும் ஆசாபாசங்களில்லாதவராகியும் செல்காலம்நிகழ்காலம்வருங்காலமாகிய முக்காலகுணங்களையுணர்ந்தவராகியும் மகாதபோநிதியாகியும்விளங்குகின்றஸ்ரீமந்நாரதபகவானவர் ஸ்ரீமதுராபுரியிற்சென்று கம்சமகாராஜனுடையசபைக்கெழுந்தருளினார் அந்தக்கம்சனானவன்நாரதர் வருகிறதையறிந்தமாத்திரத்தில் எதிர்கொண்டு போய் உபசரித்துத் தகுந்த பூசைகளைச் செய்து அழைத்துக்கொண்டுவந்து ஒரு உசிதாசனத்திலிருக்கும்படிப் பிரார்த்தித்தான் இவர் ஆசனத்திலிருந்தார்பின்பு நாரதரைப்பார்த்துக் கம்சனானவன்வாரீர்முநீஸ்வரரே ஏதாவததிசயங்களுண்டாயிருந்தால் சொல்லவேண்டுமென்றுமிகவும் வணக்கத்துடனேகேட்டான் அப்போதுமகா பாகவதோத்தமராகிய ஸ்ரீமந்நாரதபகவானானவ ரனந்தவிசித்ரசமாச்சாரங்களுண்டென்று சொல்லத்தொடங்கினார்

ஸ்ரீமந்நாரதர்வாக்கியம்.

வாராய் கம்சமகாராசனே பூர்வத்தில் ஆகாசவாணியினுடைய வாக்கின்பிரகாரம் ஸ்ரீஜகதீஸ்வரனாகிய ஸ்ரீஅரியானவர் உனதன்புள்ளதங்கையாகிய தேவகீதேவியினுடைய திருவகரத்திலவதரித்து ஸ்ரீவசுதேவரால் நந்தவ்ரஜத்தையடைந்து விருத்தியடைந்திருக்கின்றார் அவ்விடத்தில் யசோதாப்பிராட்டியினுடையகர்ப்பத்திலாவிர்ப்பவித்துப் புத்திரிரூபத்தைக்கொண்ட ஸ்ரீவிஷ்ணுயோக மாயாசத்தியாகிய பத்திரகாளியை நீசம்ஹரிக்கத்தொடங்கினையே அப்போது அந்தர்த்தானமாய்விட்ட அந்தமகாசத்தியானவள் உனக்குச சொல்லவில்லையாநானும்உனக்குச்சொல்லவில்லையா அவற்றைநீயறிந்திருக்கிறாய்மேலும் இந்தமகாபுண்யவதியாகிய தேவகிதேவியினுடைய ஏழாவதுகர்ப்ப சங்கருஷ்ணம்சசம்பூதர்தான்ஸ்ரீவிஷ்ணுமாயையினால் ரோகிணி தேவியினுடைய திருவுதரத்தில் அவதரித்த ஸ்ரீ பலராமரென்னும் நாமதேயத்தையுடையவராய் ஸ்ரீஹரியாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குமிகவும் சகாயமாயிருந்து இவ்வுலகிலுள்ளகண்டகர்களாகிய அசுரஜனங்களைச் சம்மாரஞ்செய்து அளவிறந்தலீலைகளைக்காட்டி உனது சிநேகிதர்களாகிய அசுரஜனங்களைச் சம்ஹரிக்கின்றார் இப்போது அரிஷ்டாசுரனையும் சம்மரித்தாரென்று சொன்னார்.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய் ராஜேந்திரனே ஸ்ரீமந்நாரதபகவான் இவ்விதமாகச்சொன்னதுமல்லாமல் இன்னும் அநேக அதிசயங்களாகிய ஸ்ரீபகவானுடைய விர்த்தாந்தங்களையும் சொன்னமாத்திரத்தில் அவற்றைக்கேட்டுக்கம்சமகாராசனானவன் பிராணபீதியடைந்து மனங் கலங்கித் தைரியத்தைக்கொண்டு கோபோத்தீபிதனுய்ச் சபிகர்களைப்பார்த்துவாருங்கள் சபிகர்களே இந்தக்கிழவராகியவசுதேவரானவர் என்னைமோசஞ்செய்து தன்வயிற்றிற்பிறந்தபிள்ளையைமொளித்தார் பார்த்தீர்களாவென்று பற்களை நறநறவென்றுகடித்து உடைவாளையுருவிக்கொண்டுவெட்டப்போனான் அப்போது வெட்டக்கூடாமல் கையயர்ந்தது அதனால்சோர்ந்துநின்றான் அத்தருணத்தில்நாரதர் அக்கம்சனைப்பார்த்து வாராய்மகாராசனே அவரினம் வெகுபுண்யங்களைச் செய்யவிருக்கின்றார் அவருனது கைக்கு அசக்கியமானவரல்லர் அவரை வெட்டப்போவதுமரியாதையன்று உனது சத்துருவைஜயிப்பதே உத்தமம் இவரைசூடிப்பாயாகவென்று நிறுத்திச்சமாதானஞ்சொல்லி அந்தர்த்தானமாய்விட்டார்,

பின்பு அந்தக்கம்சமகாராசனானவன் பின்னுந்தாமசனாய்வாருங்கள் பிருத்தியர்களே இந்தவசுதேவதேவகிகள் எங்கேயாவது ஓடிப்போகப் போகின்றார்கள் இவர்களைப்பழையபடியே காராக்ருகத்திலடைத்துவிலங்கிடுங்களென்று ஆக்ஞாபித்துத் தனக்குமிகவும்பிராணசிநேகிதனுகியும் மகாமாயாவியாகியும்க்ரூரனுகியுமிருக்கின்ற கொடிய அசுரனாகிய கேசியென்கிறவனை அழைப்பித்து நந்தவ்ரஜத்தில் வளர்ந்து விருத்தியடைகின்றஸ்ரீபலராமகிருஷ்ணர்களைச் சம்ஹாரஞ்செய்துவரக்கடவாயென்று ஆக்ஞாபித்து அனுப்பிவிட்டுப்பின்பு அந்தச்சபையிலிருக்கின்ற மந்திரிகள்முதலிய ராஜாக்கள்தவிர மற்றுமுண்டாகியமந்திரிகளையும சுத்தவீரர்களான மல்யுத்தத்தில்கைதேர்ந்த மல்லுஜெட்டிகளாகியசாணூர முஷ்டிகாதிகளையும் தனக்குமிகவும் ஆப்தர்களாகியும் அசுரமசஜனிதர்களாகியும் மிகவுங்கொடியக்ரூரர்களாகியும்ராஜ்பாதிகாரங்களைச் செலுத்துகின்ற சாஜலு கோசலாதிஅநந்ததேசாதிபதிகளையும் வரவழைத்து உபசரித்துத் தனது சபையிலாசனங்களி லிருக்கச்செய்து ஒருவார்த்தைசொல்லுகிறான்,

கம்சமஹாராஜனுடையவாக்கியம்.

வாருங்கள் எனதுபிரியமுள்ள சுத்தவீரர்களாகியராஜன்யர்களே இந்தத்திரிலோகங்களிலும இன்னும்எந்தலோகங்களிலு மிருக்கின்றதேவேந்திரன்முதலியதேவதைகளும் அஷ்டதிக்குப்பாலகர்களும் மற்றுமுள்ள சுராசுரர்களும் சமஸ்தமான அரசர்களும்என்னுடன்யுத்தஞ்செய்து ஜயத்தை யடையமாட்டாமல்மண்ணுண்ணுவார்களென்று உங்களுக்குத் தெரிந்திருக்குமல்லவா அப்படிப்பட்ட என்னையிந்த ஸ்ரீகோகுலத்தில் விருத்தியடைந்து பிருந்தாவனத்தில் பசுக்கூட்டங்களை மேய்த்துத்திரிகின்ற ஸ்ரீபலராமகிருஷ்ணர்களென்கிறஇரண்டுசிறுபிள்ளைகள் பசுவின்பாலைக்குடித்துக் காட்டிலுள்ளகந்தமூலபலாதிகளைத் தின்று கொழுத்து மதோன்மத்தர்களாய்ச சம்ஹரிக்கிறோமென்று பௌருஷங்கள்சொல்லித்திரிகின்றார்களாம் இந்த ஆச்சரிய சமாசாரங்களைக் கேட்டீர்களோ வென்றுசொல்லித் தனக்குள்ளிருக்கின்றகோபத்தினாலேசிரித்துஅபகாசியஞ்செய்து சாணூரமுஷ்டிகர்களையழைத்து இன்றுமுதல்இந்தச்சபாமண்டபத்துவாரத்தில் ஆயுதபாணிகளாய் ஜாக்கிரதையாகவிருந்துஅந்த ஸ்ரீ பலராமகிருஷ்ணர்கள் இவ்விடம்வந்துநுழைந்தமாத்திரத்தில் யுத்தஞ்செய்து அவர்களைச்சம்மரித்துவிடுங்களென்று நிஷ்டூரவாக ஆக்ஞாபித்துஅதிகஜாக்கிரதையாகக் காவல்வைத்தனன்.

பின்னும் அந்த மதுராபுரிக்குள்ளிருக்கின்ற தன்னுடைய பட்டத்தானையான குவலயாபீடமென்னும் நாமதேயத்தையடைந்து தேவாசுரர்களுக்கும் பிராண பீதியுண்டாகச்செய்கின்ற மகா பராக்கிரமத்தோடுங்கூடிய அம்[illegible]ப் பாகனாகியும் மிகவும்சுத்தவீரனாகியு மிருக்கிறயானைப்பாகனையழைத்து இன்றுமுதல்நமதுபட்டத்தானையாகிய குவலயாபீடத்துக்கு மும்மதங்களொழுகும்படிக்குத்தக்க ஆகாரங்களைக்கொடுத்துப்போஷித்துமகாபராக்ரம கோபகுணங்களைக்கற்பித்து அதன்துதிக்கையினில்இருப்புலக்கையைக்கொடுத்துநமதுபுரத்துத் துவாரத்தில் அதிஜாக்கிரதையாக வைத்துக்கொண்டிருந்து ஸ்ரீபலராம கிருஷ்ணர்கள் பட்டணத்தில்நுழைகின்றசமயத்தில் நிஷ்டூரவாகஅம்மஹாகஜசிரேஷ்டத்தை அவர்கள்மேற்செலுத்தி அவர்களிருவரையும் இடித்துத்தள்ளித்துவைத்துக் கிழித்துச் சம்ஹரிக்கும்படிச் செய்யக்கடவாயென்றுகண்டிப்பாகஆக்ஞாபித்தான்பிறகு அந்தச்சபிகர்களாகிய அவ்வரசர்களைப்பார்த்து வாருங்கள்சபிகர்களே நான் மகாதேவராகிய ஸ்ரீபசுபதிக்கு பிரீத்யர்த்தமாகவும்எனக்குஅபஜயங்களைவாராமலிருக்கும் பொருட்டாகவும் இந்தச்சதுர்த்தசிபுண்யகாலத்தில் தனுர்யாகஞ்செய்யத் தொடங்குகின்றேன் ஆகையால் அதுயாக முடியுமளவும் நீங்கள்யாவரும்ஜாக்கிரதையாகவிருந்துயாகசம்ரட்சணஞ்செய்யவேண்டியதென்று நல்லவார்த்தைகளைச் [illegible]ர்களுக்கு விடைதந்து அவர்கள் போனபின்பு தானேகாந்தமாய் ஆச்சபையிலிருந்து மிகவுஞ்சாதுவாகியும்மஹாபாகவதோத்தமராகியும் ஏகாந்தசீலராகியு மிருக்கின்ற அக்குரூரரையழைத்துவரும்படி ஏவலாளியையனுப்பினான் அந்தஏவலாளிபோய்ச் சொன்னமாத்திரத்தில்அவர்வந்தார் அவர்வருவதையறிந்து உடனேமிகவும்ஆதரத்துடன் அவருக்கெதிர்கொண்டுபோய் அவருடைய இரண்டுகைகளையும் பிடித்துக்கொண்டு அழைத்துவந்துஅவரைச்சுகாசனத்தி லிருக்கச்செய்து ஒருவார்த்தை சொல்லுகின்றான்,

வாரீர் மஹானுபாவராகிய அக்ரூரரே மஹாகுணசாலியான நீர் சர்வபிராணிகளுக்கும் சௌம்யராகியும் இந்தப்போஜவம்சத்திற்கும் பரம்பரையாய்ஹிதஞ்செய்யததக்கமந்திரிசிரேஷ்டராகியும் எனதுக்ஷேமத்தைசர்வதா கோருகின்றவராகியும் இருக்கின்றீர் ஆகையால் நான்எனது ஆந்தரியமானஇந்தக்காரியத்திற்கு உம்மை அடைகின்றேன் என்விஷயத்தில் எவ்வளவும் வஞ்சனையில்லாமல் என்காரியங்களைமுடித்துத்தரவேண்டும் இந்திராதிதேவ சமூஹங்களயாவரும் எனக்குப்பயந்து ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைச்சரணமடைந்து பிரார்த்தித்தார்களாம் அதனால்அவர்இந்த வசுதேவதேவகீதேவிகர்ப்பத்திலுதித்து நந்தவ்ரஜத்திற் சேர்ந்து ஸ்ரீபலராமஸகிதராய் என்னைச்சம்ஹரிக்கும்பொருட்டு விருத்தியடைகின்றாரென்று கேள்விப்பட்டுநான்அநேகமாயாவிகளைக்கொண்டு அனந்ததந்திரங்களைச் செய்வித்தேனென்னசெய்வித்தும் அவர்கள்நசிக்கவில்லை ஆகையால்இப்போது நீர்விடந்திற்குப்போய் ஸ்ரீநந்தகோபரிடத்தில் கப்பம்வாங்கிக்கொண்டு மஹாராஜா தனுர்யாகஞ்செய்யப்போகின்றார் நீங்களயாவரும்ஆபாலவிருத்தகோபாலஜனங்களுடன் வரக்கடவீர்களென்றுஆக்ஞாபித்து அகத்தியம் உமதுஇரதத்தின்மீது ஸ்ரீபலராமகிருஷ்ணர்களாகிய அவ்விரண்டு சிறுவர்களையுமஏற்றிக்கொண்டுவந்துநமது பட்டணத்திற் சேர்த்துவிடவேண்டும் இவ்வளவுநீர் செய்வீரானால் மஹாமதோன்மத்தவேதண்டசண்டாதண்ட துதிக்கையோடுங்கூடிய நமது பட்டத்தானையாகிய குவலயா பீடத்தைக்கொண்டு சம்ஹரித்துப்போடலாம் அதற்குத்தப்பினல் மிகவுங் கடினர்களாய்க்கோரகிருத்தியங்களோடுங்கூடிய மல்லஜட்டிகளாகியசாணூரமுஷ்டிகர்களைக்கொண்டு அவசியம் சம்ஹரித்துப்போடலாம் அவர்களுக்குத் தப்பிப் பிழைத்தால் அப்போதுஉடனேஎனது சந்திராயுதத்தினால் வெட்டியெறிந்துவிட்டு ஜன்மப்பகையைத் தீர்த்துக்கொண்டு இந்தஸ்திரீ வசுதேவனையும் நசிக்கச்செய்து யது - விருஷ்ணி - போஜ - அந்தக- ஜன தாஸர்களான ராஜவம்சங்களை நாசஞ்செய்து யெனதுதகப்பனாகிய உக்கிரசேனனையும் அவர் தம்பி தேவகனையும் பட்சபா

தமான குணங்களுமியும்படி விலங்கிலிட்டுக்கர்வத்தை யடக்கினது மாமனுராகியஜராஸந்தமஹாராஜாவையும் எனக்குமிகவும் பிராணசிநேகிதர்களாகிய நாகாசுர-பாணுசுர-ஜம்பாசுர-முராசுரர்கள் முதலான இன்னும் அனந்தைத்தியாதிகளையும் சிசுபால-தந்தவக்கிர-ருக்மி-சுயோதன-பவண்டர-சாள்வ-யவன-கோசலாபதிகளாகிய அனந்தமர்யிரந்தேசாதிபதிகளையும் எனக்குச்சகாயமாகவைத்துக்கொண்டு தேவேந்திராதிதேவதா பக்ஷமாகவிருக்கின்ற மற்றைத்தேசாதிபதிகள்யாவரையும்ஹதாஹதஞ்செய்து அவர்களுடையதிராஜ்யங்களைஎன்சிநேகிதர்களுக்கு வெகுமதியாகக்கொடுத்துத்திக்குவிதிக்குகள்யாவும் ஜயித்துச்சத்ருபக்ஷ நாமதேயங்கள்எந்தலோகத்திலு மில்லாமல்ஙருவறுக்துப்போட்டு இந்தப்பூமண்டலத்தை எனதொரு தவளசத்திர நிழலின்கண் அடங்கப்பெற்றுக்கொண்டு ஏகசக்கிராதிபதியாய் ஆக்ஞாசக்கரம் எங்குஞ்செல்லும்படி அரசாட்சிசெலுத்திப் போகபாக்கியசுகாதிசயங்களை யனுபவிப்பேன்.

வரீர்அக்ரூரரே இப்படிப்பட்டபாக்கியாதிசயங்களை நான்அனுபவிக்கவேண்டிய நற்காலம்எனக்கு நேரிட்டிருக்கின்றபடியாலேதான் எனக்குள் இந்தநிச்சயம் பிறந்தது ஆகையால் மகாபுருஷராகியநீரே என்மனோநிச்சயத்தையறிந்து நிறைவேற்றவேண்டும் உம்மையல்லாமல் மற்றேயாரறிந்து நிறைவேற்றப்போகின்றார்கள்நீர் சீக்கிரமாகச் சென்றுஉமது புத்திகோசரத்தால் யாகசமாசாரங்களைச்சொல்லி அந்தவசுதேவ புத்திரர்களாகிய ஸ்ரீபலராமகிருஷ்ணர்களை எந்தவித தந்திரங்க ளாவது செய்து அழைத்துக்கொணடுவரவேண்டுமென் றுபிரார்த்தித்தான்.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்மகிபதி இவ்விதமாய் அந்தக்கம்ஸமஹாராசன்பிரார்த்தித்தமாத்திரத்தில் அந்தஅரசனைப் பார்த்து அக்ரூரர் ஒருவார்த்தை சொல்லுகின்றார்.

அக்ரூரர்வாக்கியம்,

வாராய்கம்ஸமஹாராசனே எனக்குமிகவும்ஆப்தராகிய உமதார்க்கெனுக்கு ஒருகுறைவுவருமாவராதுஆயினும் என்னுடையவாக்கியத்தைக்கேளும் இவ்வுலகத்திலுள்ள மானவர்கள்தங்களையும்பிறரையும்யோசித்தறிகின்றதுமில்லை தெய்வயோகங்களைலேசமாத்திரமானுலும் இன்னவிதமென்று காணவுமாட்டார்கள்தன்பலத்தையும்மந்திரிபலத்தையும்தெய்வபலத்தையுமறியாமல்தன்புத்திக்குத்தோன்றினபடிநடக்கத்துணிவார்கள ஆயினும் ஸ்ரீசர்வேஸ்வரனுடைய சங்கல்பத்தைக்கடக்கஒருவராலுமாகாது உமதுபலாபலம அந்தஈஸ்வரனுக்கே தெரிந்துகொளளத்தக்கதல்லாமல்இந்தஉலகஜனங்களுக்குத் தெரிந்துகொள்ளத்தக்க தன்றுசமஸ்தபிராணிகளுக்குஞ்சுகதுக்கங்களுஞ் சோகமோகங்களும் தன்கடையாக நேரிடுகின்றதேயல்லது இவர்கள் பிரார்த்தித்தபோது நேரிடுகிறதில்லையல்லவா ஆகையால்உமதாக்ஞாப் பிரகாரம் பகைவர்புத்திரர்களாகிய ஸ்ரீபலராமகிருஷ்ணநாமதேய சத்துருக்களை எனதுஸாமர்த்தியத்தினல் ஆகத்தியம அழைத்துக்கொண்டு வருகின்றேனென்றார்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்மகிபதியே அந்தக்கம்சராசனைப்பார்த்துஇவ்விதமாகச் சொன்ன அக்குரூரரானவர் அவனிடத்தில் உத்தரவுபெற்றுக்கொண்டு திவ்யாலங்கார ரதாரோஹணஞ்செயதார்பிறகு அந்தச்சபையில் தனதேகாந்தசிலர்களாயிருந்தசில ஆலோசனைக்கர்த்தர்களாகிய மந்திரிகளையும்அனுப்பிவிட்டு இந்தக்கம்ஸராஜனுந்தனது அந்தப்புரத்திற்கு வந்துவிட்டான்.

---

## ௩௭-வது அத்தியாயம்.

கட்டளைக்கலிப்பா.

கோரகம்சன்றனுக்கினையால்வந்த
  கொடியனும்சுர கேசியென்போனையும்
ஆரபாரமதாய்வந்துகோபால
  ரனைவரையுங்குகையிலொளித்திட
சோரனகியவியோமகாசூரனைத்
  துகளரிச்சம்மரித்தாரிசைவல
நாரதபகவானுல்நடத்திடும்
  நற்செயலாலுளமகிழ்ந்தாரரி.

ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் கம்ஸனுலே ஆக்ஞாபிக்கப்பட்டு வந்தஒருகொடியவசுரனகியகேசியென்கிறதுஷ்டனைச்சம்ஹரித்தாரென்றும் ஸ்ரீமந்நாரதபகவானுல் இனிமேல்நடக்கவருகின்ற மஹாதிசயலீலைகள்யாவரையுங்கேட்டுச்சந்தோஷித்தாரென்றும்பின்புமஹா மாயாவியாய்வந்து சிலகோபாலர்களைப் பர்வதகுகைறயிலொளித்தவியோமாசுரனைச்சம்ஹாரஞ்செய்தாரென்றுஞ்சொல்லுகின்றது.

வாராய்சாதுஜனோத்தமனே முன்னமே அந்தகம்ஸனல் ஏவப்பட்டமிருந்தகொடிய துஷ்டாசுரனகியகேசியென்பவன் அசுவரூபத்தைத்தரித்து லோக பயங்காராகாரமான கோரகிர்த்தியங்களைச் செய்துகொண்டு தனதுசண்டப்ரசண்ட கதிகவேகத்தோடேடக்கத்தக்க நான்குபாதத்திலுமுள்ள குளம்படிகளினல் பூமியைப்பிளந்துதுளிகளை ஆகாசத்திலெழுப்பி எங்குங்காடாந்த காரமாகிய இருள்களையுண்டாக்கி இந்தப்பூமியெல்லாம் கிடுகிடென்றாடுங்கவும்ஸ்ரீஆதிசேஷபகவான் பணமுடிகளைச்சாய்க்கவும் சமஸ்தபிராணிகளும் பிராணபீதியடைந்துதிக்குவிதிக்குகள் தெரியாமல் சிதறியோடவும ஆகாசத்தில்சஞ்சரிக்கின்ற மேகராசிகளும் தேவதாவிமானங்களும அலைந்துசிதைந்து பர்வதசிகரங்களிலும் குகைகளிலும் போயொளிக்கவும் தனதுபற்கள் தோ

ன்றவாயை விரித்துக்கனைத்துப் பிரளயாகினியைப் போலநெருப்புப்பொறிகள் சிதறிமின்னலக்கண்களைவிழித்து மிருத்யுவியினுடையகாலபாசமோஇதுவென்று சமஸ்தபிராணிகளினுடைய இருதயங்களும்பேதிக்கப் பட்டுத்திகிலடையும்படிநீண்டிருக்கின்றவாலாசையினாலேபிரளய ஊழிகால்வாயுவுக்கொப்பாகிய பெருங்காற்றையுண்டாக்கிக்கொண்டுமிகவுங்கொடுமையாகியஇரைச்சலோடும் கோகுலத்தில்வந்துபிரவேசித்தான் அத்தருணத்தில் அந்தநந்தவ்ரஜத்திலுள்ளயாவரும் அவ்வசுரனுடையஆரவாரத்தினாலும் அவனாலுண்டாகியவேகத்தினாலும் ஒன்றுந்தோன்றாமல்பயப்ராந்தசித்தர்களாய் மஹாஆபத்தைகொண்டு ஸ்ரீபகவானைத்துதித்து அழுத்தார்கள்,

அப்போதுஅவ்வசுரனானவன் இந்தக் கோபாலர்கள் முதலிய யாவரையுந்தூரத்திக்கொண்டு ஸ்ரீபகவானெங்கிருக்கின்றாரென்று தேடிவந்தான் அப்படிவராநின்றதுராத்மாவைப்பார்த்து சமஸ்தமானகோபாலர்களையுந் தன்பின்னே யிருக்கும்படிநியமித்துத் தான்முன்னின்று இந்தச்சௌரியராசனானவர் மிருகராசனைப்போல மகாபிரதாபசௌரியதைரிய பராக்கிரமத்துடன்அடாதுராத்மாவே யாரைத்தேடுகின்றனை இதோநானிருக்கின்றேன் காதுக்களைஏன்கலிகின்றாய இனிநீயெங்குஞ்செல்லச்சக்தனாகமாட்டாய் நில்லென்றுதமதுவிசித்திர உத்தரியத்தையும் கச்சையையுமஇறுக்கிக்கட்டியுத்தசன்னத்தராய் நின்றார்அப்போது அவ்வசுரன் அவரைக்கண்டுமஹாபயங்கரமான சிம்மநாதத்துடன் ஆவென்றுவாயைத்திறந்து சமஸ்தமானபல்லாயிரங்கோடி அண்டங்களையும ஓர்கவளமாகவிழுங்கித் தமதுதிருவுதரத்தில் சாசுவதமாகவைத்து இரட்சிக்கின்றஸ்ரீகிருஷ்ணபகவானைவிழுஙகவுங்கடித்துஹிம்சிக்க நினைத்து அவர்மேற்பாய்ந்துவந்தான் அப்படிவரும்போது ஸ்ரீபகவான் அந்தக்கடியைத்தப்பித்துக்கொண்டார் அவ்வளவில்இந்தத்துரகஸ்வரூபதானவன் தனதுகால்களினால் அவரையுதைத்தான் அவர்அதையுந் தப்பிததுக்கொண்டு மிகவும் பராக்கிரமத்துடன் பிருகஸ்ஸாம வித்யா விசேஷத்தால் அவன்கையில்தானகப்படாமல் அவனை இடசாரி வலசாரியாகச்சுழன்று அலையும்படிச்செய்து சமயம்பார்த்து அவனுடையகால்களைச்சேர்த்துப்பிடித்துவாரித்தூக்கிக்கிறுகிறென்று சக்ராகாரமாகச்சுழற்றிஸ்ரீகருடபகவானானவர் ஒருகொழித்துசர்ப்பத்தைப்பிடித்து அதன்கர்வத்தையழிதது வீசியெறிந்தாற்போல இக்கொடியனை நூறுவில்க்கிடை அளவின்பிரமாண தூரத்திற்போய்ச் சுழன்றுவிழும்படிவீசியெறிந்தார் அப்போது நெடுந்தூரத்திலே போய்விழுந்தஇவ்வசுரன் மறுபடிபுரண்டெழுந்திருந்து முன்னிலும் அதிக உக்கிரத்தைக்கொண்டுஉங்கரித்து நாணமில்லாமல் மஹாபராக்கிரமத்துடனம்மேல விழுந்துவந்து அவ்விருக்கண்டயாத்திரத்தில் இந்தக்கோபால குலேந்திரராகிய ஸ்ரீபகவானானவர் இந்தப்பூமண்டலத்தைப் பறித்துக்கொண்டிராநின்ற திககஜேந்திரனுடைய சுண்டரதண்டமகாசம்பிரபிரதாபதுதிக்கையைப்போல விளங்குகின்றதமதுஆஜானுபாகு விலம்பனமான கையைப்பிரசண்டபணமண்டலமுகத்தையுடையசர்ப்ப சிரேஷ்டன்தான்வாசஞ்செய்கிறபுற்றின்குகைத்துவாரத்தில் நுழைவதுபோலஇந்தத்தோஷாசுரனுடைய வாயில்நிறையும்படி நுழைந்தார்

வாராய் சுத்தவீரனாகிய ராஜேந்திரனே ஸ்ரீபகவானானவர் தம்முடையஸ்ரீஅஸ்தத்தை நுழைத்த மாத்திரத்தில் அந்தமகாதுஷடாவசுரனாகிய கேசியானவன் மகத்தான ரோஷசாம்பிராச்சியத்தை யடைந்து தனதுபற்களால் நெறநெறவென்று கடித்தான் அப்போது ஸ்ரீஹரியானவாதமதுபுஜகண்டத்தை வஜ்ரதண்டம்போலச் சலியாமல்நுழையும்படி அவனுடையகர்ப்பத்தில்நுழைத்து அவன்குடலைப்பற்றினார் அப்போது அவனுடைய பற்களயாவும் வஜ்ரத்தைநக்கடித்தாற்போலச் சூர்ணங்களாயுதிர்த்தன அந்தச் சமையத்தில் ஸ்ரீபகவானுடைய இந்தஸ்ரீஅஸ்தமானது அவன்வயிற்றிலுள்ள உறுப்புகளைப்பற்றிக்கொண்டு வரவர அவனுடையஉதரத்திலேயே விருத்தியடைந்துஅபபோதுஅவ்வசுரன்சரீரத்தில் வாயுஸ்தம்பன முண்டாய்க்குன்மவியாதி சம்பவித்ததுபோலப் பிராணவஸ்தைகளையடைந்து வீராவேசங்கள் குன்றிக்கர்வங்களழிந்து முன்பின்தோன்றாமல் இனிஎன்னசெய்வோவென்று ஏக்கமடைந்து விழித்துப்பார்த்துக்கொண்டிருக்கின்றகணமணிகள்பிதுங்கிவெளிவரச் சரீரமெங்கும் வியர்வைகள் ஒழுகக்கால்களையுதறிஉதைத்துக்கொண்டு பிராணபீதியடைந்து பெருங்குரலிட்டிறைக்கவுங் கூடாமல்வெள்ளிரிப்பழம்போலவயிறுவிரிந்து வெடிக்கபிராணனைவிட்டான் அவன்மரணமடைந்தபின்பு இந்தஸ்ரீமாயாமனுஜபாலகராகிய ஸ்ரீஜகதீஸ்வரர்தமது ஸ்ரீஹஸ்தத்தைவெளியில்வாங்கிக் கொண்டார்.

வாராய்வசுமதிநாதனே வீரா வேசத்தோடுங் கூடியந்த கொடியவசுரனாகிய கேசியைஅவலீலையாகச் சம்ஹரித்து பரிசுத்தராய்ப்பராக்கிரமத்தோடு விளங்கா நின்றநளினாக்ஷங்களைப் படைத்த ஸ்ரீகிருஷ்ண ப்ரீத்யர்த்தமாகஆகாசவீதியில் விமானங்களில்நின்று இவருடைய ஜயத்தைக்கோறிக்கொண்டிருந்தசமஸ்தமான தேவதைகளும் புஷ்பவிருக்ஷங்களை இவர்மேல் வருஷித்து இந்த ஸ்ரீகிருஷ்ணனுக்கு மங்கலமுண்டாகக்கடவதென்று துதித்தார்கள் அந்தச்சமயத்தில்உடனே ஸ்ரீஹரிபக்தி விசாரதராகியும் மகாப்பிரபந்த சிரோரத்தின மாகியும் ஸ்ரீபரமபாகவதோத்தமமாகியும்யதேச்சா விகாரராகியுஞ்சஞ்சரித்துக்கொண்டிருக்கின்ற ஸ்ரீமந்நாரதபகவா

ளவர் அவிடத்திற்கெழுந்தருளி மிகவும் ஆச்சர்யதிவ்ய கல்யாணகுணங்களையுடைய இந்தகோவிந்தமூர்த்தியை த்தரிசனஞ்செய்து ஒருஏகாந்த பிரதேசத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் அவரோடும் சுகாசனரா யிருந்து ஸ்ரீபகவானைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றார்.

ஸ்ரீமக்ரூரருடையவாக்கியம்.

வாரீர் ஸ்ரீகிருஷ்ணபகவானே பல்லாயிரங்கோடி அண்டஸ்வரூபங்களாகிய சமஸ்தஜகங்களுக்கும் இச்சகங்களிலுண்டாகிய சேதனு சேதனங்களுக்கும் பரமயோகீந்திரர்களுடைய க்ஞானோ தயங்களுக்கும் விபுவாகிய ஸ்ரீசர்வேஸ்வரரே உமக்குப்பிரணாமம்.

வாரீர் பரமாத்மாவே கீர்காஷ்டங்களில் அக்கினியுந் திலங்களில்தைலமும் இருக்கின்றாற்போல அகிலஜகங்களினும் உள்ளும்புறம்பும் வியாபித்துச் சர்வசாக்ஷிபூதராகியும் தேஜோமயராகியும் விளங்குகின்ற உமக்குப் பிரணாமஞ்செய்கின்றேன்.

வாரீர் ஸ்ரீபகவானே இவ்வுலகத்தில் பூர்வம்ஜனித்திருந்த தைத்யதானவ யக்ஷராட்சஸர் முதலிய அசுரஜனங்கள்தபஸ்ஸம்பந்தர்களாய் அணிமாதிசித்திகளை அடைந்து லோகாதிகாரங்களைச்செய்து உலகத்தைநலியச்செய்துஉம்மாலே அவர்கள்யாவரும் சம்ஹறிக்கப்பட்டு அந்த ஹதசேஷத்தினல் இந்தக்காலத்தில் ராஜன்னியர்களாய்ப்பிறந்து அதிகாரங்களையடைந்து சாதுக்களை நலிந்துஅவ்வாசுர கிர்த்தியங்களையேசெய்துபூமிக்குப்பளுவாகயிருக்கின்றபடியினலல்லவா நீர்திருவவதரித்தீர்அதனுலல்லவா பூபாரநிவாரணங்களை ஆதரித்துக்கொண்டிருக்கின்றீர் இப்போதுஇந்த அசுவரூபியான துஷ்டாசுரகேசியானவனும் ஹதமாயினன் இன்னமும்வியோமாசுரனும் ஹதமாகயிருக்கின்றான்.

வாரீர் ஸ்ரீஹருஷிகேசரே இவையல்லாமல் இனிமேல்மகா பாகவதோத்தமராகிய அக்ரூரர்வந்து தரிசனஞ்செய்து உம்மைமதுராபுரிக்குளழுந்தருளச்செயவார் அவ்விடத்தில்சாணூரமுஷ்டிகாதி அசுரஜெட்டிகளும்சம்ஹறிக்கப்படுவார்கள் குவலயாபீட நாமதேயமத்தகஜமும்சம்ஹறிக்கப்படும் தனுர்யாகபங்கமும் நேரிடும் குப்ஜமாலாகாராதி சம்ரட்சமும் கம்ஸஸம்ஹாரமுஞ்செயவீர்பிறகுசங்கனுடையவதம் - ஜராசந்தயுத்தம்-காலயவனனுடையநிக்கிரகம்-முராசுரன்-நாகாசுரன் பவுண்டரகன் சிசுபாலதந்தவக்ரர்கள் முதலிய அனந்தமாகியராட்சஸசம்ஹாரங்களும் நடக்கவிருக்கின்றன இன்னமுந்தேவபாரிஜாதவிருட்சாபசாரமும் தேவேந்திரனுடைய அபசயமும்நேரிடும் நிருகுமகாராசாவினுடைய சாபத்தை நிவாரணஞ்செய்து அவர்புண்யலோகப் பிராப்தியுள்ளவராய் அதிசயமோட்சமடையச்செய்வது மல்லாமல்மகாவிரதசில பதிவிரதா சிரோமணிகளாகிய அனந்தராஜகன்னியாவிவாக சமபிரமங்களையும் அங்கீகரிப்பீர்ஜாமபவீதேவி கன்னியாரத்நத்துடன் சமைமந்தமணிமாலையாகிய இந்தநகார சங்கிரமுஞ்செய்து ஸ்ரீ துவாரகாபுரியென்னுந் திவ்யநகரத்தில் மகாவிபவ சாமபிராஜ்யாதிசயசந்தோஷராய்ச் சமஸ்தசாதுசன நேத்ரோத்ஸவராய் எழுந்தருளியிருக்கும்போது ஒருபிராம்ஹணோத்தமருக்குஅவருடைய பூர்வசன்மபாபார்த்ததோஷகுணவிசேஷத்தினல் புத்திரன்பிறந்திறந்துபோவான், அதனல்அவர்வந்து முறையிட்டுக்கொள்ளுவார்அப்போதுதேவரீர்அவனையாதரித்து இயமபுரத்திற் கெழுந்தருளிஅந்தப்பிராமணபுத்திரனை யழைத்துவந்து அவருடையபாபத்தைப்போக்கிஅவருக்குப்புத்திரதானஞ்செய்வீர் இன்னும்அனந்தலீலாவிபவாதி சாம்பிராஜ்யாதி சயங்களையடைந்து சமஸ்த தர்மஸ்தாபனங்களைச்செய்வீர் பூபாரநிவாரணார்த்தமாகத் தேவதாம்ஸசத்திய சீலபரமதர்மிஷ்டர்களாகிய பஞ்சபாண்டவர்களுக்குச் சகாயபூதராய்க்காலஸ்வரூபத்தையடைந்து ஆஸ்ரிதபட்சபாதியாகியும்கிருபா வசீரிபராகியும் ஸ்ரீ பார்த்தசாரதியாய்ச்சுயோதனுதிஅநேக அக்ஷோஹிணிதளங்களைச் சங்கரித்துப்பூமிபாரத்தைபொழித்து அசாதசத்துருவாகிய தர்மராசனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்வீர் உமதுகுணங்களை அளவிட்டறிந்து ஸ்துதிசெய்யஆதிசேஷனுக்கும் வேதபுருஷனுக்கும் அரிதாயிருக்குமாகில் யார்தான்முழுதுமறிந்து துதித்தனுபவிக்கத் தக்கவர்கள்,

வாரீர் ஸ்ரீசர்வலோக வர்திஷ்ணரே சமஸ்தபிரபஞ்சங்களையும் சிருஷ்டிஸ்திதி லயாத்மகமாகச்சார்வதா விளங்கச்செய்வதற்கு லீலாகுணாத்மகமான சத்வரசதமோகுணஙகளை அடைந்து ஹரிஹரப்பிர்ம்மாதிஸ்வரூபங்களையடைந்து ஸ்ரீவிஷ்ணுவாகியும்ஜிஷ்ணுவாகியும்ஸஹிஷ்ணுவாகியும் அளவிறந்ததிருக்கல்யாண குணங்களையுடையவராகியும் விளங்குகின்றஉமக்கு சாஷ்டாங்கப்பிரணாமங்களைச்செய்கின்றேன் ரட்சிக்கக்கடவீரென்று நமஸ்கரித்துத்துதித்து அனுக்ஞைபெற்றுக்கொண்டுயதேச்சாசஞ்சரியாய் ஸ்ரீ ஹரிநாமஸ் மரணை செய்துகொண்டேபரமானந்தசந்தோஷராய் அடிக்கடிசேவித்துத்திருப்திமனதுடையவராய் அந்தர்த்தானமாளழுந்தருளினர்உடனே ஸ்ரீபகவானும் இந்தஸ்ரீ நந்தபிரசன கோபாலர்கள்யாவருக்கும் சர்வசுகானந்தங்களையுண்டாக்கி பசுக்களை ரக்ஷித்துக்கொண்டிருந்தார்.

வாராய் மகிபதியேஉடனே ஒருநாள்ஸ்ரீகிருஷ்ணபகவான்முதலிய சமஸ்தமானகோபாலர்களும் பிராதகாலத்தில்கோவின்ங்களை யோட்டிக்கொண்டுபிருந்தாரண்யத்தைச்சேர்ந்து சிலநேரம்பசுக்களைமேய்த்து அவைகள் திருப்தியடைந்தபின்பு ஒருவிடத்தின் மந்தையாகச்சேர்த்துவிட்டு யாவருங்கூடிஒரு பர்வதத்தி னடிவாரத்திற்சேர்ந்து விளையாடத் தொடங்கினவர்களாயச்சிலநேரம்

யாவருஞ்சேர்ந்து விளையாடிக்கொண்டிருந்து பின்பு ஒருவிதமான யோசனையைச்செய்து சாட்சாத் ஸ்ரீபகவான் அரசனாகவுஞ்சில கோபகுமாரர்களைகாரியக்காரர்களாகவும் சிலர் ஆடுகளாகவுஞ் சிலர்சோரர்களாகவுமே ஏற்பாடு செய்துகொண்டு விசித்திரமாக விளையாடிக்கொண்டிருந்தார்கள்.

அக்காலையில்மாயாசுரனுடைய பிள்ளையானமஹாமாயாவியும் பல பராக்கிரமசாலியுமான வியோமாசுரனென்றவன் இந்தச்சோரரூபர்களாகிய கோபாலபாலர்களுக்குள் தானுமொரு கோபாலசோரனைப்போலஉருத்தரித்துக்கொண்டு வெகுநேரம் விளையாடிக்கொண்டிருந்து ஆடுகளைப்போலும் உருவமாயிருக்கின்ற கோபாலசிறுவர்களில் நாலைந்துபேர்தவிர மற்றையாவரையும் ஒருவரொருவராகக்கொண்டுபோய் ஒரு மகாபர்வதக்குகையிலொளித்துத்தனது பலாதிசயத்தினால் ஒரு பெரும்பாறையைக்கொண்டுவந்து அந்தக்குகையின்துவாரத்தை மூடிவிட்டு ஒன்றுமறியாதவனைப்போலவந்து சோரர்களாயிருக்கிற கோபாலகுமாரர்களுடன் கலந்திருந்தான் இவனையும இவன்செய்த கிர்த்தியங்களையும் அறிந்தும் ஒன்றும அறியாதவனைப்போலிருக்கின்ற சர்வக்ஞராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் புன்சிரிப்பைக்கொண்டுமாயாவியாகிய சோரனைப்பார்த்து வாராய் இராட்சஸத்திருடனே உன்னைப்போல இவ்வுலகத்தில்யாவரும்இவ்வளவுசாதுரியமாய்த் திருடவல்லமை கொண்டவர்களிலைநீல்ல நேர்ப்பாய்த்திருடி யாவரையுங் குகையிலொளித்தாயல்லவா மற்றவர்களையுங் கொண்டுபோய்ஒளித்துவிடக்கடவாய் மஹாசுரனேயென்று பேசிக்கொண்டே அவனருகிற்சென்று மிகவும் பராக்கிரமமுள்ளஒரு புருஷசிம்ஹமானது ஒருஅல்ப மிருகத்தைப்பிடித்தது போல அந்தவியோமாசுரனுடைய கண்டத்தை உறுதியாகப் பிடித்துக்கொண்டார்,

வாராய் மகதலாதிபதியேஸ்ரீபங்கஜலோசனராகியஸ்ரீபகவானவர் பிடிக்கும்போது தப்பித்துக்கொள்ளச்சக்தியில்லாமலும் பிடித்துக்கொண்டபின்புவிடுவித்துக்கொள்ளச்சக்தியில்லாமலும்அகப்பட்டுக்கொண்ட இந்தத்துஷ்டசோரனாகிய வியோமாசுரனுக்குக் கண்கள்பிதுங்கமூச்சுப்புறப்படமாட்டாமல் உள்ளடங்கபிராணவஸ்தையான மிகவருத்தமுண்டாயிற்று அதனால்அவன்மாயா ரூபத்தைவிட்டுக் கோராகாரமாகிய நிஜரூபத்தையடைந்துவெகு பராக்கிரமங்களைக்காட்டியும் விடுவித்துக்கொண்டு பிழைக்கத் தன்னாலாகாமல் கால்கைகளையுதறிக்கொண்டு ஒருதரங்கதறி பிராணனைவிட்டான். அதையறிந்து ஆகாயவீதிகளில்நின்ற தேவதாமகாபுருஷர்களமிகவும் சந்தோஷத்தையடைந்து ஸ்ரீபகவானுக்கு மங்கலங்கள்கூறினர்கள். ஸ்ரீஜனார்த்தனர் அந்தப்பர்வதக்குகையினருகிற்போய் அதன்வாயைமூடப்பட்ட அப்பெரும்பாறையைக் காலாலுதைத்துத் தள்ளிவிட்டு அதனுள்ளிருந்த கோபாலர்களையழைத்துக்கொண்டுவெளியில்விட்டார் பின்பு அவர்கள் யாவருந் தத்தக்கப் பசுக்கூட்டங்களை யோட்டிக்கொண்டு கோகுலத்திற்குவந்து சேர்ந்தார்கள்.

## கஅ - வது - அத்தியாயம்.

கலி விருத்தம்,

அரிபஜனைசெய் யக்ரூரரானவ
ரரியையுமவ ரண்ணனையுமினைந்
துருகிநந்தகோ பாலருடனிருந்
தருமையாய்ப்பூசித் தானந்தமெய்தினர்

ஸ்ரீமகாபாகவ தோத்தமராகிய மாயாவதாரமானஸ்ரீ ஸர்வேஸ்வரனுடைய மாயாவதாரமான ஸ்ரீபலராமகிருஷ்ணமூர்த்திகளுடைய லீலா வைபவங்களை நினைத்துநினைத்து ஆனந்தித்துக்கொண்டு மிகவும் சிரத்தாபக்தியுடன்சென்று கோகுலத்திற்பிரவேசித்து நந்தகோபர்முதலியவர்களைத் தரிசனஞ்செய்து தன்யராய்ப்பூசிக்கப்பட்டாரென்றுஞ் சொல்லுகின்றது.

வாராய் பரமதன்யனாகிய பாண்டவம்ச மகாரத்னமே அக்ரூரரானவர் அன்றையதின ராத்திரிமதுராபுரியில்வாசஞ்செய்து மறுநாள்சூரியோதயகாலத்தில் ஸ்ரீபகவத்பக்தியகராய் ஸ்ரீகிருஷ்ணபகவானைமனதில் தியானஞ்செய்துகொண்டுவந்து ஓர்ரதத்தின்மீதேறி நந்தவிரஜத்தைக் குறித்துப் பிரயாணமாய்வரும்போது மார்க்கத்தில்தமக்குள் சிந்தனைசெய்துகொண்டு சந்தோஷித்தராய்த் தமதுமனதைஉத்தேசித்து வாராய் ஸ்ரீபகவத்தரிசனார்த்தத்திற்குரிய எனதுமனமே பூர்வஜன்மங்களில் அருமையான தவஞ்செய்யவில்லை எனக்கெப்படிப்பட்டசஹாயமாயினையோ வாராய்என்துகர்ணேந்திரியமேபகவானுடையதிருக்கல்யாணகுணானுபவதிவ்வியசரித்திரங்களைக்கேட்க மகிழ்ந்தனையோ வாராய நேத்ரேந்திரியமே ஸ்ரீபகவத்விக்ரஹம கோத்ஸவங்களையும் மகானுபாவர்களாகியும்சேவித்துத்தன்யத்தையடைந்தனையோவாராய் ஹஸ்தேந்திரியமேநீஎசனைத்தமர்களுக்குளப்படிப்பட்ட தனங்களைத்தானஞ்செய்தனையோவென்றிவைமுதலிய தமதுபூர்வஜன்மதபோசத்கர்மங்களைத்தியானித்து இச்சன்மத்தில் ஸ்ரீபகவானைத் தரிசிக்கப்பெற்றதமதுமனமுதலிய கரணங்களையெல்லாந் துதித்துக்கொண்டு அகிலசாஸ்திரார்த்தங்களை நன்றாயுணர்ந்தவராகையால் பரமமுநீந்திரர்களுடைய இருதயாரவிந்தங்களில் எழுந்தருளியிருக்கின்ற அந்தராத்மஸ்வரூபராகிய ஸ்ரீபகவானைத் தமதுயோகதிருஷ்டியினாலறியவல்லஇவர் அறிவுக்கறிவாய் விளங்குகின்ற ஸ்ரீபரப்பிரம்ஹமயராகியஸ்ரீஹரியைப்பிரத்தியட்சமாய்ஸேவித்துத்

தரிசனஞ்செய்யத்தமது ஜன்மமும் மனமுங்கரணங்களும் ஸபலங்களாமென்று அவற்றைச் சிலாகித்துக் துதித்துக்கொண்டு வந்தார்.

வாராய்மகிபதியே இப்படி வருகின்ற அக்ரூராளவர் தமக்குள்யோசித்துப் பரிசுத்தமானவர்களாகிய திக்கியருரியனைத்தமது கிருபாதிசயமனதினால் இவ்வுலகத்தாரும் பொருட்டுத் திருவவதாரஞ்செய்யச்செய்து சர்வலோகசரண்யராகியும் ஸ்ரீமகாவிஷ்ணுவாகியும் ஸ்ரீ அச்சுத மூர்த்தியாகியும் விளங்குகின்ற கம்பீரமான சோபனவர்ணங்கோடி ரவிசந்திரகாசப்ரகாசிரணங்களையுடைய ஸ்ரீபாதாரவிந்தங்களையுடைத்திருக்கின்ற ஸ்ரீபகவானையாரோ அங்கத்தேவதேவ தேவதாசக்கரவர்த்தியைப் பணிந்து வரவேண்டுமென்று இந்தக்காரணமாக இந்தக்கம்ஸமகாராசனானவன் நமக்கேதியமிக்கானல்லவா இப்படிப்பட்ட மஹோபகாரத்திற்கு பிரதியாய்நம்மனையாளக்குனைகோடிஜன்மதபோபலங்களை இவனுக்குக்கைக்கொடுத்துச்செய்தபோதிலும் நிகராகுமோ ஆகிலும் இவ்வுலகத்தில் ஸ்ரீபகவத்தரிசனார்த்தம்கிடைக்கச்செய்த இந்தக்கம்ஸமகாராஜனையொக்க அருந்துணைவனையுடைய சஹா எவ்வுலகத்திலாவது எனக்குக்கிடைப்பானோவென்று மஹோபகாரமாகத்துதித்தார்,

வாராய்உத்தராநந்தனனே இந்த அக்ரூராளவர் பின்னுந்தமது இருதயத்தில் ஸ்ரீஸர்வஸ்வதந்திராதிபதியான பகவானானவர் இந்தக்கம்ஸனையுடைய ஏவலினால் அவனுக்குச் சகாயனாய்நம்மையழைக்கக்கொண்டுபோய்க்காட்டிக்கொடுக்கவந்தவனாகையால் இவனும் ஒரு துஷ்டன்தானென்று ஒருகால்நினைப்பாரோ என்றேனே எனது திரிஷ்டமாத்திரத்தில் மனங்களர்ந்து ஐயுற்றுடனே ஐஸ்வயிபோ பேதைநெஞ்சமே என்னினைத்தனை ஸ்ரீபகவானானவர் சகலசேதனாசேதனாத்மக சர்வபூத சமூகங்களில் உள்ளும் புறம்பும்வியாபித்துச் சர்வாந்தர்யாமியாகவும் சர்வசாக்ஷியாகியும் சர்வக்ஞராகியும் பரமகாருணிகராகியும்விளங்குகின்ற தயாநிதி யென்கிறதை மறந்தனையோ வாராய்நன்னெஞ்சமே ஸ்ரீபகவானானவர் என்னைநினைப்பாரோ என்னை ஆக்ஞாபிப்பாரோ நமதுபாக்யாதிசயமெப்படிப்பட்டதோவென்று நீநிந்திக்கவேண்டாமென்று கூறிமுற்றுந்தமது இரதத்தை மந்தகமனமாகச்செலுத்திக்கொண்டு அம்மார்க்கங்களில் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்ற வனமிருகங்களின் அம்சத்திற்கு ஆனந்தித்து வாராய்எனதுஜன்மதன்யமான நற்காலமேநிரவதிகதேஜோமயராயிருக்கிற ஸ்வாமியினுடைய அமிர்தங்களாகிய அமிர்தகிரணங்களையுடைய நிஷ்களானந்த திவ்ய சந்திரபிம்பமாகியும் அப்போதுதான்லர்ந்தசெந்தாமரைப்புஷ்பவிதழ்களைப்போன்ற திவ்ய நேத்திரங்களையும் இரத்தினகுண்டலங்களால் சோபிதங்களான காதுகளையும்படைத்ததாகியும் விளங்குகின்றதிவ்யலட்சணங்களோடுங்கூடிய சுந்தரவதனாரவிந்தத்தைச் சத்தியமாகச்சேவித்து உச்சீவிக்கச்செய்தனையே வாராய் எனது சுகிர்தஇருதயமே இன்றையதினமிராத்திரி நான் நந்தவ்ரஜத்திற்குச்சென்று ஸ்ரீமாதவப்பிரானுடைய திருவடித்தாமரைகளுக்குச் சாஷ்டாங்கதண்டன் சமர்ப்பித்தமாத்திரத்தில் அவர் சர்வமங்கலகரமாகியும் சர்வப்பிராணிகளினுடைய ஊழ்வினைப்பயனாகிய காலபுஜங்கதுஷ்டநிவாரணமாகியும் பக்தஜன இருதயதாபபயநிவாரணமாகியும் ஆஜானுபாஹுவிளம்பனமாகியும் விளங்குகின்றகராப்ஜத்தை எனது சிரசின்மீதுவைத்து அபயப்பிரதானஞ்செய்துகிருபையாக என்னைக் கடாட்சித்து இரட்சிக்காமல் பாராமுகஞ்செய்வாரென்று நினைக்கவேண்டாமென்றார்,

இவ்விதங்களாக அக்ரூராளவர் ஸ்ரீகோவிந்த சந்தர்சன சந்தோஷமனதுடைய வராய்த்தமது திவ்யாலங்காரசித்திர இரதத்தைமிகவுமெதுவாக நடத்திக்கொண்டு அடிக்கடி ஸ்ரீபகவானைத் தியானஞ்செய்துநிர்மானந்தபரிதராய்ச்செல்லும்போது தமக்கெதிரில் ஸ்ரீமகாலக்ஷ்மியினுடைய உத்தியானவனத்தைப்போலிருந்தவனமானது காணப்பட்டது அதைக்கண்டு சந்தோஷசித்தராய் அதனுட்பிரவேசித்து அங்கிருக்கிற சந்தனச்சோலைகளையும் மராமரம்-மாமரம்-பலாமரம்- அகில் விருக்ஷம்-குங்குமவிருக்ஷம்-காலவிருக்ஷம்-அசோகவிருக்ஷம் வடவிருக்ஷம் ஆகியஇவைகளால் நிறைந்ததோப்புகளையும்நானாவிதபுஷ்பங்களைத்தாங்கின்ற பூம்புதருகளின் சாலைகளையுடைய சோலைகளையும் யமுனாநதிப்பிரவாகங்களையும் அநேகதாமரைத் தடாகங்களையும் கிணறுகளையும் சித்திரவிசித்திர மிருகபட்சிசமூகங்களையும்இன்னும் அவ்விடத்தில விளங்குகின்ற சேதனாசேதனாத்மக சமஸ்தவஸ்துக்களுமிராகத்வேஷங்களற்று அன்னியோன்னியங்களாய்ச்சஞ்சரிக்கின்ற திவ்ய லட்சணங்களையும்பார்த்துக்கொண்டும் அந்தவனங்களிலும்மனோரம்யமாகிய வெண்மணற்குன்றுகளின்மீதுந் தரிசனந்தருகின்றஸ்ரீகோவிந்தசரணாரவிந்த திவ்யரேகாங்கிதங்களை நேத்திரங்களாற்சேவித்து ஆனந்தித்துக்கொண்டு கோகுலத்திற்குச்சமீபமாகவந்தார்.

அங்குவரும்போது சூரியபகவானும் அஸ்தமானபர்வதத்திற்குச்செல்ல வுத்தியோகித்தான் அந்தச் சாயங்காலசமயத்தில் பசுவின்கன்றுகள்யதேச்சையாகமேய்ச்சலின்மீது ஆவலாய்ப்பள்ளங்கள்மேடுகள் புதருகளாகிய இவைகளிற்பிரவேசித்து வெகுதூரஞ்சஞ்சரித்துநேத்திரங்களுக்குஅகப்படாமலிருக்கின்றபடியால் அவ்விடத்துள்ள கோபாலசிறுவர்கள் நான்குதிக்குகளிலும்ஓடித்தேடி அவைகளின்நாமதேயங்களைச்சொல்லிசாதிசசப்தங்களால் அழைக்கின்றார்கள் அந்தக் குரலோசைகளையும் பசுக்கூட்டங்கள்மிகவும் மிருதுவாகியபுல்லுகள்முதலியதுகளைமேய்ந்து திருப்தியடைந்து திரும்பும்

போது கன்றுகளின்வரவைக்காணுமல் மிகுந்த ஆதாரதிசயத்தினுல் தேடிப்பாய்ந்து அம்மாவென்கிற அரவங்கள்செய்கின்ற அவ்வோசைகளையுங் கேட்டுக்கொண்டு கோமயங்களைவிட்டுக்கொண்டு கன்றுகளைநினைத்தோடுகின்றபசுக்கூட்டங்களையும் அவைகளை யனுசரித்து அழைத்துக்கொண்டு தங்கள்கைகளிற்கோல்களையும் கயிறுகளையும்எடுத்துக்கொண்டு திரிகின்ற கோபாலர்களையும் பார்த்துகொண்டும் சிலகோபாலர்கள் பசுமந்தைகளுக்கு இருபாரிசங்களிலும் ரட்சிதர்களாய்-வேல்வாள்குந்தம்தோமரம் குடாரம்பாணம்-சராசனம்இவைமுதலாகிய ஆயுதங்களைத்தாங்கிக் காவலாகச்செல்லுகின்றதையும்அக்காவலைக்கடந்து நானுவிதங்களாகியபுற்களைஅபேட்சித்து பாய்ந்தோடித்திரிகின்ற பசுக்கூட்டங்களையும் அப்பசுக்களைமோந்துகொண்டு பாலையுண்டுதுள்ளிவிளையாடித்திரிகின்ற கன்றுகளையும் பொலிப்புள்ளபசுக்களின்மேல்தாவி ஒன்றுங்கொன்று சரசலீலாக்கிரீடைகளினிமித்தம் எதிர்த்துமுட்டிக்கொண்டுயுத்தங்களைச்செய்கின்ற மற்றரிஷபங்களையும் பசுக்கூட்டங்கள்பாடிக்குச்சமீபமாக வரும்போது உண்டாகின்றஆரவாரங்களைக்கேட்டுத் தாய்வருகின்றதென்கிற பேராசையினுலே கொட்டாரங்களில் கட்டியிருக்கின்ற கன்றுகள் சிறுதும்புகளையறுத்துக்கொண்டு புதருகளையும் வேலிகளையுந்தாண்டிப் பசுக்கூட்டங்களையடைந்து பாலையூட்டிமூட்டியுண்கிற வேடிக்கைகளையும் அந்தக்கன்றுகளைப்பார்த்து மிகவுஞ்சீக்கிரமாகப்பிடிக்கஓடுகின்ற கோபாலசிறுவர்களையும்அவர்களுக்கு அந்தக்கன்றுகள் அகப்படாமையினுல் தங்கள்பெரியோர்களாகியகோபாலோத்தமர்களை மிகவும்அவசரமாக வழைக்கின்றஅச்சிறுவர்களின் குரலோசைகளையும் அந்தஆயர்பாடிபிரதேசங்களில்பாலின் கலசங்களைக்கொண்டுபோய்வைத்துக்கொண்டு பசுக்கூட்டங்களையழைத்துவந்து ஓரிடத்தில்நிறுத்திக் கன்றுகளையும்அவிழ்த்து விடுகின்றவர்களையும்காலோடு கன்றுகளையணைத்துகீதங்களைப்பாடிக்கொண்டு கறக்கின்றவர்களையும்சிறுகன்றுகளையணைத்துக்கறந்து பின்னவிழ்த்துப் பாலூட்டிவிட்டு ஊட்டியானபின் அந்தக்கன்றுகளைப்பிடித்துக் கட்டுகின்றவர்களையும் பால்கலசங்களைத் தங்கள்கிரகங்களுககு எடுப்பித்து அனுப்புகின்றவர்களையும் ஸ்ரீபகவத்குண கீர்த்தனங்களைப்பாடியும்ஆடியும் குழல்களையூதியுங் கிரீடித்துச்சந்தோஷமானசர்களாய்ச் சஞ்சரித்துக்கொண் டிருக்கின்றதேவதாம்சபுண்யபுருஷர்களாகிய, கோபாலர்களையுமதங்கள தங்கள்அருந்தவப்பேற்றுல் ஜனித்துவிருத்தியடைகின்ற புத்திரர்களையும் மித்திரர்களையும்மைத்துனர்களையும் மகிழ்நர்களையும் அம்மான்களையும் சகோதரர்களையும் சகோதரிகளையும் தாய்தந்தைகளையும்மற்றமுண்டான சர்வகுபேர்த பாதுஜனங்களையு மறந்து கிருஷகிர்த்தியங்களால் கைம்சாரந்துச்தனைத்ததுருந்தனைமஸ்ரீமாதவனிடத்தில் வைத்தமனை துடையவர்களாய்க் கூட்டங்கூட்டமாகச்சேர்ந்து அங்கங்கொரு சங்கேஸ்தலங்களில வந்துநின்றுபிருந்தாவன மார்க்கங்களையெதிர்பார்த்து ஸ்ரீகிருஷ்ணமகிமாதிசயங்களைப் பேசிக்கொண்டிருக்கும் புண்யவதிகளாகியும் அளவிறந் தவர்களாகியும்தேவஅரம்பையர்களுக்குச் சமான மானவர்களாகியும் தேவதாம்சர்களாகியும் விளங்குகின்ற கோபிகாஜனசமூஹங்களின் கூட்டங்களையும் பசுக்கூட்டங்கள்வனசஞ்சாரங்களையொழித்துத் திரும்பி ஆயர்பாடியைக்குறித்துவரும்போது அந்தமார்க்கங்களில் அந்தப்பசுக்கூட்டங்களின் குளம்படிகளினுல் பிளக்கப்பட்ட தூளிகள் ஆகாயத்திலெழும்பி மேகபடலங்களைப்போல எங்கும் வியாபித்துமறைக்கின்றதையும் அந்தப் பசுக்கூட்டங்கள் அங்கங்குதடாகங்களில்ஜல பானங்களைச செய்து சரீரங்களைநனைத்து உதறிக்கொண்டுவருகின்றதையும்அதனுல்மார்க்கங்களதோறும் சேறுபடுகின்றகோதூளிமயமாகிய அள்ளல்களையும்அங்கங்குதங்குமிடந்தோறும் அந்தப்புண்யபுருஷ கோபாலஜனங்கள் கோவினங்களைநிறுத்திப் பால்கலசங்களை யிறுககிப் பசுக்களில் முலைகளைப்பற்றிக் கறக்கின்றதையும் அச்சமயத்தில்அந்தப்பாலமுத தாரைகள் அந்தந்தப்பாற்கலசங்களில்வீழ்ந்தொலிக்கின்ற ஓசைகளையும் அந்தநந்தகோஷ அனந்தக்குஹ மந்திரத்வாரஉன்னதஸ்தம்பங்களில் ஆட்டினங்களுக்கும் மாட்டினங்களுக்கும் காவலாயஇருப்புச்சங்கிலிகளினுல்கட்டப்பட்டிருக்கின்றநாய்கள்பாதைசாரிகளாகிய நூதனஜனகிர்த்தியங்களைக்கண்டு சீறித்துக்கோபித்துக் குரைத்துக்கொண்டிருக்கின்றசப்தங்களையும்பார்த்துக்கேட்டும் ஆனந்தத்தையடைந்தவராய் வருகின்றூர அப்படிவருகின்ற அக்ரூரராலவர ஸ்ரீபலராமகிருஷ்ண புஜபலபராக்ரம பாருசம் ரட்சணத்தினுலலங்கிருதமாய் விளங்குகின்றஸ்ரீகோகுலமாகிய திருவாயர்பாடியைச் சற்றுதூரத்திற்கண்டு சேவித்துஆனந்தபரவசராய் வரவரச்சமீபமாகவந்தார்அப்படிவரும்போது ஸ்ரீபகவானுடைய ஸ்ரீபாதாரவிந்தங்களினதுஅடையாளங்கள் அங்கங்குவெண்மணற்குன்றுகளிற் பிரகாசங்களாகப் பூமகாலட்சுமியினுடைய திருமேனிக்கு மிகவும நித்தியசோபனமங்களாலங்கிருதங்களான பூஷணங்களைப்போலத்தோற்றுகின்றவிடமெங்கும்இரதத்தைவிட்டிறங்கிதமதிரண்டுகண்களுங்குளிரதரிசனஞ்செய்து மனங்களித்து ஆனந்தபாஷ்பங்க ளொழுக அப்படியேதியானித்துச சேவித்துவீழ்ந்துபுரண்டு அந்தஸ்ரீசரணரவிந்தநூள்களையெடுத்து மேலேதூவிக்கொண்டு பயலச்சைசோகமோகங்களைவிட்டு ஸ்ரீஹரியென்றுபுளகாங்கிதராய்ச சற்றுநேரந்துதித்து அங்கிருந்துபுறப்பட்டு ரதத்தின்மீதேறி ஸ்ரீபலராமகிருஷ்ணமூர்த்திகளை

த்தரிசிக்கவேண்டுமென்கிறமிக்வுமகத்தானஆகராதிசயத்துடன்ஸ்ரீகிருஷ்ணபதத்தில்பக்தியையுடையவராய்நந்தவிரஜத்திற்குச் சமீபமாக வந்துகொண டிருக்கின்றார் அந்தச்சாயங்காலசமயத்தில் அளவிறந்த புண்யபுருஷர்களாகிய கோபால ஜனங்களுடனும் அனேக மாயிரங் கோவின்கன்றுகளுடனும் ஸ்ரீபலராமகிருஷ்ணர்களிருவரும் விசாலநேத்திரங்களை யுடையவர்களாகியும் தங்கள்திருமேனியெங்கும கோதூளிளாகல் மறைந்தசுந்தர அவயவங்களை யுடையவர்களாகியும்சர்வாபரணபூஷிதர்களாகியும் பீதாம்பரத்தையும்நீலாம்பரத்தையு முடுத்திக்கொண் டிருக்கின்றவர்களாகியும் அனர்தவிதங்களான புஷ்பமாலைகளைத் தரித்துப்பருத்து அகன்றுவிளங்குகின்ற புஜங்களையும் மார்புகளையு முடையவர்களாகியும் சர்வஜனமனோகரர்களாகியும் கோகுல கோபிகாஜனங்களினது இச்சைகளை பூர்த்திசெய்கின்றவர்களாகியும்பிரகாசித்துக்கொண்டு இவ்வுலகமாகிய ஸ்ரீ மகா லட்மீதேவிக்கு நேத்திரோத்ஸவமாக எழுந்தருளுகின்றார்கள். அப்படியெழுந்தருளுகின்ற இந்தமூர்த்திகளிருவரையுங்கண்டு தமதிரண்டு கண்களுங்குளிரசேவித்து இரதத்தைவிட்டிறங்கி அந்தக்கோபால கோவின்சமூகங்களில்நுழைந்து இந்தமூர்த்திகளின் சமீபத்தில்வந்துவிநயகாத்திரராய் மிகுந்த பக்தியுடன் சாஷ்டாங்கமாகத்தண்டன்சமர்ப்பித்து ஸ்ரீபகவன் மூர்த்திகளினுடைய அனுக்ஞையைப்பெற்று எழுந்திருந்து தமது சரீரமெங்கும் புளகாங்கிதங் கொண்டவராய நேத்திரங்களில்நின்றுஆனந்த பாஷ்பங்களொழுக அவ்விருவர்களையும்பார்த்து வாருங்கள் திவ்யமங்கல மூர்த்திகளேநீங்கள் சர்வஜகத்காரணர்களாகியும் சர்வஜகத்பதிகளாகியும் சர்வஜகத்பதிகளுக்கும் நியாமகர்களாகியும் சர்வவியாபகர்களாகியும்சர்வபூதேஸ்வரர்களாகியும் சமஸ்தசாதுஜன கோபிராமணப்பிரியர்களாகியும் பிரமன்முதலியசகலதேவதாபிரார்த்தன பூபாரநிவாரணார்த்தமாக எங்கள்ஸ்ரீவசுதேவதேவகிதேவியினது திவ்யோதர பிரகாசாவதார ஸ்ரீபகவத்பிம்பமூர்த்திகளாகியும் விளங்குகின்ற உங்கள் ஸ்ரீசரணாரவிந்தங்களுக்கு அனந்தமான நமஸ்காரங்கள்சமர்ப்பிக்கிறேனென்று துதித்துநின்றார்.

வாராய்மகாராசனே ஸ்ரீபக்தவத்ஸலராகிய ஸ்ரீபகவானனவர் சகலசேதனா சேதனங்களோடுங்கூடியசமஸ்தப்பிரபஞ்சங்களிடத்திலும் இராகத்வேஷங்களற்று மாயாவிக்ருதிகள் தொடராமல் இரட்சிக்கின்றாற்போல்ஸ்ரீமஹாபாகவதோத்தமராகியஇந்தஸ்ரீஅக்ரூரரைத்தமது சக்கராங்கித ஸ்ரீஹஸ்தத்தைநீட்டி ஆலிங்கனஞ்செய்து சங்கரித்தார். உடனே ஸ்ரீபலராமரும் தங்களுக்குப்பிரணாமஞ்செய்து நிற்கின்ற இந்தமகானுபாவராகியஅக்ரூரரைக் கடாலிங்கனஞ்செய்து மிகவும்பிரீதியுடன் ஸ்ரீகிருஷ்ணசகிதராய் அவரையழைத்துக்கொண்டுகோகுலத்திற்பிரவேசித்துத் தங்கள் திருமாளிகையாகியநந்தகிருகத்திற்குப்போய்நந்தகோபருக்குத்தெரியச்செய்தமாத்திரத்தில் அவருஞ் சீக்கிரமாகஎதிர்கொண்டு உபசரித்துக்ஷேமங்களைவிசாரித்து கைகால்கள் சுத்திசெய்யஜலங்கொடுத்து உசிதாசனத்தி லிருக்கச்செய்து அர்க்கியாசமனந்தந்து மதுவர்க்கங்களையும்கோதானத்தையுஞ் சமர்ப்பித்துப் பொற்றாம்பாளத்தில் அவருடைய திருவடித்தாமரைகளுக்குத் திருமஞ்சனஞ்செய்து ஸ்ரீபாததீர்த்தமுட்கொண்டு சற்றுநேரம் லோகோபகாரசிலதர்மங்களைப்பேசிக்கொண்டிருந்துஉடனே ஸ்நானத்திற்குவிடைதந்து அவரைத்தீர்த்தமாடச்செய்து அறுசுவைரஸவர்க்கங்களோடு போஜனஞ்செய்வித்துத் திவ்யபரிமளகர்ப்பூரதாம்பூலம்முதல்யவஸ்திரசந்தன புஷ்பமால்யாதிகள்சமர்ப்பித்து அவர்சந்தோஷமனோரதங்களையடைந்தபின்பு அந்தஅக்ரூரரைப்பார்த்துஒருவார்த்தைசொல்லுகின்றார்.

ஸ்ரீநந்தகோபர்வாக்கியம்.

வாரீர் பரமபாகவதோத்தமராகிய அக்ரூரரேநீங்கள் யாவரும்க்ஷேமமா நமதுராஜாவாகியகம்ச மகாராசாவானவர்தமதன்புள்ள தங்கையாகிய தேவகீபிராட்டியினுடைய அருந்தவப்புத்திரர்களாகிய சிறுவர்களையெல்லாம்மரணமடையும்படிப் பலிசெய்து குரூரகிர்த்தியராய் க்ஷேமத்தை யடைந்திருக்கும்போதுஅந்தத்தேவகீவசுதேவர்களுக்கும் தாசார்ஹர்களாகிய உங்களுக்கும் மற்றுமுள்ளயது-விருஷ்ணி போஜ-அந்தகாதி-பந்துஜனங்களுக்கும் எப்படிக்ஷேமங்கிடைக்கும், உங்கள்யாவருக்கும் அந்தக்கொடிய துஷ்டகுணத்தையுடைய கம்ஸனிதியிலின்றும்மிகவும் சாதுசம்ரட்சணார்த்த உலக அரிஷ்டநிவாரண பரமகிருபாநிதியாயிருக்கின்ற ஸ்ரீஹரியினுடைய கிருபையினால்சீக்கிரமாக க்ஷேமக்ரமாகியமங்கலங்களுண்டாகக் கடவதென்றுசொன்னார்,

சுகர் வாக்கியம்,

வாராய் மஹாராசனே இந்தப்பிரகாரஞ் சொல்லியநந்தகோபரானவர்பின்னர்ஸ்ரீபகவானைப்பிரார்த்தித்துஅக்ரூரரைப்பார்த்து மார்க்காயாசத்தினால் சிரமங்களை யுடைத்தாயிருக்கின்றீர் சயனித்துச் சுகநித்திரை செய்யுமென்று சொல்லி அவரிடத்தில் தாம் செலவுபெற்றுக்கொண்டு சயனகிரஹத்திற்குச்சென்றார் இந்த அக்ரூரரும்நந்தகோபருடைய மாதுர்யமானவசனங்களால்திருப்தியடைந்து மார்க்காயாசங்களொழிந்துசந்தோஷமாகவிருந்தார்,

௫௯ - வது- அத்தியாயம்.

---

எழுசீரடி சந்தக் கலிவிருத்தம்,

குற்றமற்றவக்குரூரகோதிலாதவனுடன்-சித்தமொத்துமெத்தவே குசலப்பிரஸ்னஞ்செய்துபின்-சுத்தகோபி

கஜனங்கள க்ரூர நிந்தைசெய்ததும்-கர்த்தன் மாமதுரைக்கேகக் களித்ததுங்கழறுவாம்,

ஸ்ரீபகவானானவர் அக்ரூரருடனே ஏகாந்தமாய்ச்சில குசலப்பிரசனங்கள்செய்து ஸ்ரீமதுராபுரியைக்குறித்து பிரயாணமானதும் அப்போது கோகுலத்திலுள்ளகோபிகாஜனங்கள் யாவரும் மனோவியாகுலத்தினால் அக்ரூரரை நிந்தாஸ்துதிகள்செய்ததும் ஸ்ரீயமுனாநதியில்அக்ரூரருக்கு விபூகவைகுண்டபிரசன்னதரிசனார்த்தனங்களைலபிக்கச்செய்ததுஞ் சொல்லுகின்றது.

சுகர்வாக்கியம்.

வாராய் சுபத்திராபௌத்திரனே அந்தஅக்ரூரரானவர்ஒரு சுகுமார சயனத்தில் ஏகாந்தராய்ச் சயனித்துக்கொண்டிருக்கின்ற சமயத்தில்ஸ்ரீகிருஷ்ணபகவானானவர்அவரிடத்திற்குவந்து அவரருகில் உட்கார்ந்து மிகவும் உபசரித்துவாரீர் ஸ்ரீஹரிபக்தி பாவனராகிய ஸ்ரீஅக்ரூரரே உங்கள்யாவருக்கும் க்ஷேமமோ நமதுபந்து மித்திர ஜனங்கள் யாவரும்சௌக்கியமாக விருக்கின்றார்களோ புரஜனங்களாகிய சர்வபிராணிகளுஞ் சுகித்திருக்கின்றார்களோ நமதுகோத்திரக்ஞர்கள் யாவரும் மனக்கவலைகளில்லாமலிருக்கின்றார்களோஎனதுநல்லம்மான் முக்திபிதியுடனிருக்கின்றானோவென்று கேட்டார்,

ஸ்ரீபகவான்வாக்கியம்.

பின்பு சிலநேரஞ்சும்மாயிருந்து வாரீர்எங்கள் வம்சசிரேஷ்டராகிய அக்ரூரரே மிகவுஞ்சுகிர்தர்களாகவுந்தீனர்களாகவு மிருக்கின்றஎன்னுடையதாய்தந்தைகளாகிய வசுதேவதேவகீதேவிகளும் உக்ரசேனமஹாராஜாசேவர்கள்முதலாகிய மாதாமகர்களும் க்ஷேமமாயிருக்கின்றார்களோ நான் ஜனிக்கப்போகிறேனென்கிற வியாஜத்தைமனதில் தீர்க்கவைரமாகநிறுத்தி என்னம்மானாகிய கம்ஸமகாராஜன் தீனர்களாகியஎன் தாய்தந்தைகளைக்காராகிரஹத்திலடைந்து இன்னமும் நலியச்செய்கின்றானல்லவா அவர்களென்பொருட்டு இப்படிப்பட்டமனத்துயரங்களை யனுபவித்துக்கொண்டென்னமாய்ப்பிழைத்திருக்கின்றார்களோ,

வாரீர்எங்களுக்கு ஆப்தபந்துவாகியும் தாதாவாகியுமிருக்கின்ற அக்ரூரரே மிகவுந்துஷ்டனாகியும் குலத்துரோகியாகியும் துராத்மாவாகியு மிருக்கின்ற அந்தக்கம்சனானவன் உம்மையிவிடத்திற்கு பிரயாணப்படுத்தியனுப்பும்போது என் தாய்தந்தைகளறிந்து மிகவும்புத்திரவாத்சல்யத்துடன் என்னுடன்சொல்லும்படியான ஆப்தசமாச்சாரங்களேதாவது சொன்னார்களோ மிகவுந்தீனர்களாய்இனியென்ன செய்கின்றதென்று வெறுத்தவர்களாய் ஸ்ரீஹரிநம்மை இரட்சிப்பாரோஉபேட்சைசெய்வாரோவென்று துக்கித்துத் தங்கள் இருதயங்கலங்கிஎப்படிப்பட்ட துன்பமுற்றிருக்கின்றார்களோவிசிதமாகஎனக்குத்தயாபரிபூர்ணராய் தெரிவிக்கக்கடவீர். மிகவும்ஆப்தராகிய நமது சரிசனந்தெய்வாதீனமாக எங்களுக்குஸ்ரீஹரியினுடைய கிருபையினால் கிடைத்தன்றோ ஆகிலும்அந்தக்கம்சமகாராஜன் என்னகாரியார்த்தமாக அனுப்பிவைத்தனன் அதைத் தெரியச்சொல்லக்கடவீரென்றுசொன்னார்.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய்பகோத்தமனே இவ்விதங்களாக ஸ்ரீபகவானானவர்மிகவும் கிருபாபரிபூர்ணராய் மிகவு மாதரவுடன் கேட்டமாத்திரத்தில்அக்ரூரரானவர் ஸ்ரீபகவானுடைய சௌலப்யாதிசயமஹா மஹிமகுணங்களுக்குஆச்சரியப்பட்டுத்தமது இரண்டுநேத்திரங்களினின்றும் ஆனந்தபாஷ்பம் ஆறுகப்பெருகமிகவும் பயபக்திபிரீதி அதிசயமானவராய் ஒருவார்த்தைசொல்லுகின்றார்.

அக்ரூரர்வாக்கியம்.

வாரீர் சர்வலோகசரண்யராகிய ஸ்ரீபகவானேஇந்தத்துராத்மாவாகிய கம்ஸராஜனானவன் யது- விருஷ்ணிபோஜாந்தகாதி வம்சத்தலைவர்களைத் துன்பமுறச்செய்துவைரஞ்செலுத்துவதை என்னாற்சொல்லி முடியாது ஒருநாள்ஸ்ரீமந்நாரதபகவானானவர்கம்ஸமகாராசனுடையசபைக்குவந்து வசுதேவருக்குப்புத்திரர்களாய்நீங்கள் திருவவதரித்த உத்தமசரித்திரங்களையும் திவ்யலீலாமகிமாதிசயகல்யாணகுணங்களையும்யாதவர்களுடையதேவதாம்சாரஹசியங்களையும் கம்ஸன்முதலிய அசுராம்சவிவரங்களையும்சொன்னார், அதைக்கேட்டமாத்திரத்தில்ஸ்ரீவசுதேவர் முதலியவர்களைக் கொலைசெய்ய நினைத்துக்கொல்லாமல்விட்டு அவர்களைக் காராக்கிரஹத்தில் பந்தனஞ்செய்திருக்கின்றான்மேலும் தனக்கிஷ்டர்களாகியதுஷ்ட நாபதிகளையழைத்து மந்திராலோசனைசெய்துதனுர்யாகத்திற்கு யத்தனஞ்செய்தான் தனதுசத்துருக்களாகிய உங்களை நலியச்செய்வதற்கு மத்தகஜமாகிய குவலயாபீடத்தையும் சாணூர முஷ்டிகாதி துஷ்டமல்லஜெட்டிகளையும் கிருதநிர்த்தியர்களாயிருக்கும்படிநியமித்துவைத்திருக்கின்றான் என்னையழைத்து உங்களிருவர்களையும் நந்தகோபர்முதலாகிய ஜனங்களையும் கப்பத்துடன் அழைத்துவரும்படியாயும் ஆக்ஞாபித்தனுப்பினானென்றுசொன்னார்,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

வாராய் மகாராசனே இவ்விதமாக அக்ரூரர்சொன்னமாத்திரத்தில் அப்பொழுதுகிருஷ்ணபகவானும் இவரருகிலிருந்தபலராமருமாகிய இவ்விரண்டுமூர்த்திகளும் கேட்டுமந்தகாசர்களாய் நகைத்து அவரையுபசரித்துச்சுகித்திரைசெய்யச் செலவுகொடுத்துத் தாங்களும் அன்றிராத்திரி நித்திரைசெய்து மறுநாளுதயத்தில்தங்களன்புள்ளபிதாவாகிய நந்தகோபருக்குக் கம்ஸமகாராஜனானவன் தனுர்யாகத்திற்குவரச்சொன்னசமாச்சாரங்களையறிவித்தார்கள் அதைக்கேட்டமாத்திரத்தில் நந்தகோ

பரானவர் கோகுலத்திலுள்ளகோபாலர்களையாவரையும் அழைப்பித்து ஒருவார்த்தைசொல்லுகின்றார்.

நந்தகோபர்வாக்கியம்.

வாருங்கள்கோபால மகாசனங்களே நம்முடையஅரசனாகிய கம்ஸமஹாராசனானவர் தனுர்யாகஞ்செய்கின்றதாய் தம்மையாவரையும் வந்துசேரும்படி ஆக்ஞாபித்திருக்கின்றார் ஆகையால்நாமியாவரும் தரிசனார்த்தமாகப் போகவேண்டும் அதனால் அவரவர்களுக்குத்தகுந்தபடி பால்கலசங்களும் தயிர்முதுருடங்களும் வெண்ணெய்ப்பாத்திரங்களும் நெய்ப்பாண்டங்களுமாகிய வஸ்துக்களையும் அரசனுக்குச்செலுத்த வேண்டிய கப்பமாகிய காணிக்கைகளையுங்கொடுத்து வாருங்கள் நாமெல்லாரும் நாளையுதயத்தில் மதுரா நகரத்திற்குப் பிரயாணமாய்ப்போய்வரவேண்டுமென்று சொன்னார்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்மகானுபாவனாகிய மகாராசனே இப்படியாவருக்கும் ஆக்ஞாபித்துநந்தகோபர் தாமும்பிரயாணாபிமுகராயிருந்தார் அன்றையதினமே அக்ரூரரானவர்நந்தகோபரால்பூசிக்கப்பட்டு ஸ்ரீபலராமகிருஷ்ணமூர்த்திகளிருவரையும் தமதுரதத்தின்மீது ஆரோகணிப்பித்து அழைத்துக்கொண்டுபோகும்படி அந்தநந்தகோபரிடத்தில் செலவுபெற்றுக்கொண்டு பிரயாணாபிமுகராய் இரதாலங்காரஞ்செய்துகொண்டிருந்தார் இப்படியிருக்க அக்ரூரரானவர் ஸ்ரீகிருஷ்ணபகவானையும்ஸ்ரீபலராமமூர்த்தியையும்மதுராநகரத்திற்கு அழைத்துக்கொண்டுபோகும்படிபிரயாணமாயிருக்கிறாரென்கிற சமாச்சாரத்தையறிந்து கோகுலத்திலுள்ள ஸ்ரீஹரி பிரியாகளாகியவைமல்தமானகோபிகாசனங்களும் மனங்கலங்கினவர்களாய் அவரவர்கள்தங்கள்தங்கள் ஸ்ரீபகவானுபவங்களை நினைத்துக்கொண்டு ஏகாந்தஸ்தலங்களில்இனவினமாய்ச்சேர்ந்துகுணானுபவமாகப்பிரலாபிக்கத்தொடங்கி ஒருவரையொருவர்பார்த்து மஹாசுகுணவதிகளாகியபுண்யாங்கனைகளே ஸ்ரீபகவானானவர் இந்தநந்தவ்ரஜத்தில் திருவவதரித்த நாள்முதல் இன்றையவரைக்கும்ஒருநாளாவது நம்மைவிட்டுப்பிரிந்தனரல்லவே இப்போது பிரிந்துபோகின்றாரே அவரைவிட்டுநாமெவ்வனமாய் ஸஹித்திருக்கப்போமென்றுசொல்லி ஸ்ரீபகவானுடைய சுந்தரமுகாரவிந்த ஸேவாதிசயங்களையும்சிறுநகைகளையும் மகாமாதுர்யமான சாதுர்யவார்த்தாதிசயங்களையும் ஸமஸ்தபிராணிகளினுடையமனது தாபங்களாறும்படியான கிருபாகடாட்சவீட்சண்யாதிசயங்களையும்லீலாகுணவைபவாதிசய அதிமானுஷ சேஷ்டிதங்களையும் பரமசயாகுணவிசேஷங்களினாலுண்டாகின்ற சத்காரியங்களையும அவருடையகரமாகிற தாமரைபரிசங்களினாலுண்டாகின்ற தங்களசன்மசாபல்யமானசுகானந்தங்களையும் அங்கங்கு அந்தந்தவிடங்கள்தோறும் ஒருவருடனொருவர்சொல்லிக்கலகலவென்று ஸந்தாபித்தார்கள்ஸ்ரீபகவானைப்போகவொட்டாமல் நிறுத்திக்கொள்ளுவதற்கு யாதோருபாயமுந் தோற்றவில்லையேயென்று முகமண்டலங்கள்வாடி மனந்தளர்ந்து வியசனப்பட்டார்கள்.

வாராய்பூமீசனே ஸ்ரீகோபிகாசனங்கள்வியசனப்பட்டுக்கொண்டுசொல்லியதைவிவரமாகச்சொல்லுகிறேன்கேளாய் அந்தஸ்திரீசனங்களில்சிலர் சிலரைப் பார்த்து வாருங்கள் ஸ்ரீகிருஷ்ணவிரகத்தில்பரிதவிக்கின்றமடமங்கையர்களே இந்தஸ்ரீபுருஷோத்தமர் இவ்விடத்தில்திருவவதரித்தபின்பு இவ்வுலகத்திற்கு சிருஷ்டிகர்த்தாவாகிய சதுர்முகபகவானை நாமெல்லாரும்நமக்குப்பரமோபகாரியாகநினைத்துத்துதித்துக்கொண்டிருந்தோமல்லவா அந்தப்பிரம்மாவானவர் இப்போதுநிர்த்தயராய் நமக்குசர்வவிதங்களினும்போஷகபோக்கியராகியும் பிராணதாரராகியுமிருந்து நம்மைஇரட்சித்துக்கொண்டிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானை இவ்விடத்தில் வசித்துக்கொண்டிராமல்நம்மைவிட்டுப்பிரிந்துஇதரமானஸ்தலங்களில் சென்றுஇருக்கும்படியாக விதித்தவிஷயங்களைக்குறித்து யோசிக்குமளவில்இதுபாலசேஷ்டிதமாகவிருக்கின்றதேயல்லாமல் வேறில்லையே அகோ ஈதென்ன அகிர்த்தியம் பெண்களினருமையறிந்து ஸ்ரீசரசுவதிதேவிக்காகிலும்தெரிவித்து அவளைக்கொண்டுஅந்தப்பிரம்மதேவனுக்குச் சொல்வித்து நமது ஸ்ரீவேணுகோபாலஸ்வாமியை இவ்விடத்தில்நிறுத்தும்படியாராகிலும்முறையிட்டுக்கொள்ளப்போகாதோவென்றார்கள்

சிலர் சிலரைப்பார்த்துவாருங்கள் சிலைகளான சுபாங்கனைகளே நமதருந்தெய்வமாகியும் நமக்குப்பிரிய சகரவாகியும்இருக்கின்ற ஸ்ரீபகவானானவர் தம்மைதவிரில் புருஷார்த்தகளாகவும் சர்வவிதபந்துவாகவும்நம்பியிருக்கின்றபேதைகளாகிய இந்தகோபிகாசனங்களைஎன்னமாய்ப்பிரிந்துதாம்அன்னியதேசத்திற்குச் செல்லுகின்றதென்று சற்றாகிலும்யோசிக்காமல் அவரழைத்தமாத்திரத்தில் ஸ்ரீமதுராநகரத்திற்குளெழுந்தருள இசைந்தாரே ஈதென்னவிதிகாரணமோ இந்தக்கோப விருத்தர்களாகிலும் ஸ்ரீஅம்புஜாக்ஷராகியஸ்ரீபகவானைமாத்திரம் அழைத்துக்கொண்டு போகவேண்டாம் நாங்களெல்லாரும்வருகின்றோமென்று நமதுஸ்ரீவிபுவைநிறுத்திவிடலாகாதாவென்று துக்கித்தார்கள்.

சிலர்சிலரைப்பார்த்து வாருங்கள்மகாதன்யவதிகளாகிய சுகிர்தசனங்களே நமது அன்புள்ளமனோவல்லபராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானை அழைத்துப்போகவிருப்பமாயிருக்கின்ற இந்தமகாபுருஷ சிரேஷ்டருக்கு அக்ரூரரென்கிற நாமதேயஞ்சொல்லத்தகுமோ ஏனெனில் நம் சக்கரதாரராகிய நமதுநாதஸ்வாமியை நம்மைப்பிரித்து அழைத்துக்கொண்டுபோக நினைத்துவந்தவராகையால்இ

வரைக்குரூரரென்றே சொல்லவேண்டுமொழிய இவரை உண்மையாக அக்ரூரரென்று ஒருக்காலுஞ்சொல்லத்தகாது ஆக்ரூரநாமதேயம் இவருக்குக்கிடைத்தது நிஜமே யானால் நமதுகிருஷ்ணபகவானை நமக்காதாரமாக இவ்விடத்திலேயே நிறுத்தி யிருக்கச்செய்து மற்றக்காரியங்களை நிறைவேற்றிக்கொண்டுபோக இவர்நினைக்கமாட்டாரோவென்று தங்களாற்றாமையைச் சொல்லிக்கொண்டார்கள்.

சிலர் சிலரைப்பார்த்து வாருங்கள் சுந்தரீசனங்களே ஸ்ரீஜகன்மோகனாகார ஸ்ரீபரமபுருஷரானவர் அந்தமதுராநகரராஜமார்க்கங்களில் கம்பீரமாகிய நடை நடந்து செல்லும்போது தாமரைப்புஷ்பத்தின் இதழ்களுக்கொப்பாகிய நேத்திரசுந்தரத்தையும் களங்கமற்றபூரணசந்திர பிம்பங்களையொத்த முகாரவிந்தசுந்தரத்தையும்படைத்த பரஸ்திரீஜனங்கள் தங்கள் மாளிகையின்மேடைகளில்நின்று சாளரங்களை நன்றாகத்திறந்து ஸ்ரீபகவானைத்தங்கள்கண்கள குளிரசசேவித்து சுவர்ண மங்களாக்ஷதைகளையும்புஷ்பங்களையும வாரிவாரியிறைத்து ஸ்ரீஹரியினுடைய குணங்களைத் துதிப்பார்க ளல்லவா அவர்கள் அப்படித் துதிப்பார்களேயாகில் ஸ்ரீபகவானுளவர் அந்நகரவாசிகளாகிய நாகரீகஸ்திரீ சனங்களை விசுவாசிப்பாரேயல்லது இந்தபேபல்லையிலிருக்கின்ற நம்மை நினைப்பாரோவென்றும் வியாகுலத்துடன் பேசிக்கொண்டார்கள்.

சிலர்சிலரைப்பார்த்துவாருங்கள் ஸ்ரீகிருஷ்ண பிரிய சுந்தரவதிகளே நமதுஸ்ரீஹரியாகிய ஸ்ரீகிருஷ்ண பகவானனவர் அந்தஸ்ரீ மதுராநகரத்திற்பிரவேசித்துசஞ்சரிக்குந்தருணங்களில் அந்தப்பட்டணத்து ஸ்திரீகளினுடைய திவ்யசுந்தரமுகாரவிந்தங்களில் விளங்குகின்ற மிகுந்தசுந்தரமுள்ள அஞ்சனநேத்திரங்களினுடைய நயவிலாசபார்வைகளிலும்அவர்களுடைய மகாமாதுரிய ஸரஸாலாபசாதுர்ய வசனங்களிலும் விருப்புற்று அவர்களுடைய சுகுமாரமாகியும் மிகவும்பிரிய மாகியுமிருக்கின்ற அதிவினோதவிசேஷ ஸரஸ ஸல்லாபங்களோடுங்கூடிய சிநேகசம்போகாதி சயங்களின் மனோரதித் திருப்பாரேயானல் இவர்இந்தவனாந்தரங்களிலும் பல்லைகளிலும் வாசஞ்செய்துகொண்டிருக்கின்ற நாகரீகமில்லாதபேதைகளாகிய நம்மைமறந்துவிடுவா ரென்பதற்குஞ்சந்தேகமுண்டா இவர்எந்த ஏதுவினல் நம்மையங்கீகரிக்கப்போகின்றார்- இதற்குநாம்என்னசெய்யலாம் அஹோ இவ்வுலகத்திலிருக்கின்ற ராஜபுத்திரர்கள் நூதனஜன பிரியர்களேயன்றிவேறில்லை ஆகையால் இவர்களை யொருக்காலும் நம்பக்கூடாதேயென்று வெறுப்புடனே துக்கித்தார்கள்,

சிலர்பிரம்ஹதேவனுடைய மனஸ்ஸங்கல்பமான தெய்வகதியைக்குறித்து வாராய்தெய்வகதியே தாங்கள் ஜன்மித்தநாள்முதல் ஸ்ரீஹரியினுடையலீலாகுணங்களை அறியாதவர்களாகிய அந்நகரங்களில் வாசஞ்செய்துகொண்டிருக்கின்றசுந்தரஜனங்களுக்கு ஜகத்பிரபுவாகிய இந்தஸ்ரீபகவான் பதியாகும்படிவிதித்துச சர்வகால சர்வதேச சர்வாவஸ்தைகளிலுமஎங்கள் சர்வேந்திரியங்களையும் சர்வபோகங்களையும சர்வானு பவங்களையும் ஸ்ரீகிருஷ்ணனுகவேபாவித்து அந்தஸ்ரீகிருஷ்ணனையே யனுபவித்துக்கொண்டிருந்த எங்களைஏன்வஞ்சித்தனையோ ஓதெய்வமே பின்னையாரு மகப்படவில்லையோ இந்தஆயர்பாடியில் ஸ்ரீபகவதனுபவஞ்செய்துகொண்டிருக்கின்ற பேதைகளாகியஎங்களை வஞ்சிக்கத்தேடி வந்தனையோவென்று அந்தத்தெய்வகதியை வெறுத்துப்புலம்பினார்கள்.

வாராய்மண்டலேஸ்வரனே இவ்விதங்களாகப் பேசிக்கொண்ட கோகுலத்திலுள்ளசகலமான கோபிகாசனங்களும் ஒன்றாகச்சேர்ந்து ஸ்ரீகிருஷ்ணனுடையபிரிவினாலுண்டான மதனதாபங்களால் பீடிக்கப்பட்டு ஒருவர்க்கொருவர் யோசித்துக்கொண்டு சொல்லுகின்றார்கள் அவைகளையுஞ்சொல்லுகின்றேன்கேளாய்.

சிலர்சிலரைப்பார்த்து நாமெல்லாரும் மிகவும் சௌமியராயிருக்கின்ற அக்ரூரரிடத்திற் சென்று எங்களருந்தனமுந் தெய்வமுமாகிய ஸ்ரீபகவானைஎந்தவிதத்திலாவது இவ்விடத்திலேயே யென்றைக்குமிருக்கும்படி நிறுத்திவிட்டுப் போகவேண்டுமென்று பிரார்த்திக்கலாமாவென்றுசொன்னார்கள்.

பின்னுஞ்சிலரைப்பார்த்து தமது சகலமான இஷ்டதெய்வங்களை பூசிப்போமேயானல் அந்தத் தெய்வங்களாகிலும் ஸ்ரீபகவானுடைய பிரயாணத்தைவிக்கினஞ்செய்துநிறுத்தமாட்டாவோவென்று தங்கள் குலதேவதைகளைப் பிரார்த்தித்தார்கள்.

பின்னுஞ்சிலர்சிலரைப்பார்த்து நாமெல்லாரும் ஒன்றாய்ச்சேர்ந்துபோய் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய ஸ்ரீசரணாரவிந்தங்களில்சரணாகதியாகத்தண்டன் சமர்ப்பித்து நம்மைப்பிரிந்து போகாமலிருக்கும்படிப் பிரார்த்திப்போம்வாருங்களென்று சொல்லிக்கங்கள்தங்கள் மெய்மறந்து அளகபாரங்கள்கலைந்துசோரப் புஷ்பங்கள சிந்த இடையிலுடுத்திய ஆடைகளநழுவ நானாவிதங்களாகப் பேசிக்கொண்டு வியசனாக் கிராந்தர்களா யிருந்தார்கள.

வாராய்ராஜேந்திரனே இந்நகரவிர சத்திலுள்ள கோபிகாசனங்கள்யாவரும் துக்காக்கிராந்தர்களாயத் தங்கள்நாணமிழந்து வெறிகொண்டவாகளைப்போலதங்கள் ஹஸ்தங்களைக் கன்னங்களில்வைத்து ஊன்றிக்கொண்டு கண்களில்ஜலம்தாரைதாரையாய் வருஷிக்கப்பரவசர்களாய்க்கொழுகொம்பற்ற பூங்கொடிகளைப்போல மனமலைந்து துக்கித்துக்கொண்டு தங்களைமறந்து வாய்களைத்திறந்து ஆஸ்ரீகிருஷ்ணு எங்களைக்கிருபையாகரட்சிக்ககடவையல்லையோ ஸ்ரீகோவிந்தா மாதவா தாமோதரா எங்களமேல்கிருபையில்லையோவென்றரற்றிக் கூச்

சலிட்டு சுவாமிவிஷயமான கீதங்களாலபரிந்துபாடித்து இத்தார்கள்,

மேலும் ஒன்றாகச்சேர்ந்திருக்கிற இந்தகோபிகாசனங்கள்யாவரும் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் திருவவதரித்தநாள்முதல் அன்றையவரைக்கும் சாதுசம்ரக்ஷணார்த்தமாகவும பூபாரநிவாரணமாகவும் சர்வ ஜகன்மோகனார்த்தமாகவும் அவதரித்த கோமலமாகிய சுந்தராகாரத்தையும் மதுரமதுரபாஷணங்களையும் புன்முறுவலையும் மஹாமனோரஞ்சனமாகவும்நேத்ரோத்ஸவமாகவும் மார்க்கங்களிற்சஞ்சரித்துஉலாவுகின்றகதிபேதங்களோடுங்கூடிய நடையினழகையும் இவைமுதலிய ஸ்ரீபகவானுடையசேஷ்டிதங்களையும ஒருவர்க்கொருவர்வியசனாக்ராந்தர்களாய்ப் பேசிக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணவிரஹத்தினால்பீடிதர்களாய் ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் பலராமசகிதராய் அனந்தமானகோபாலர்களும்கோவின்கோவத்ஸங்களுங் கூடித்தங்களிருவரையுஞ் சூழ்ந்துவர,அந்தப்பசுவினங்களுடைய குளம்படிகளின் தூளிகள்தங்கள் திருமேனியெங்கும்படிந்து பூஷிக்கப்பட்டுமுன்னெற்றிமயிர்கள் காற்றுகளாலலைக்கப்பட்டுச்சுந்தரலலாடத்தில் மனோஹரமாகப்பிரகாசிக்க வேணுகானஞ்செய்துகொண்டுசாயங்கால சமயங்களில்இந்தகோகுலத்தில்புன்முறுவலோடும் கடைக்கண்பார்வைகளோடும் சர்வகோபிகாசன மனோஹரமாகப் பிரவேசிப்பாரோ அந்தநேத்ரோத்ஸவங்கள் இனிநமக்கு லபிக்கப் போகின்றனவாவென்று அந்தநந்தவ்ரஜமெங்குங்கூடிக்கூடி ஸ்ரீகிருஷ்ணகுணாமிர்தகீதங்களைப் பாடிக்கொண்டு பிரலாபித்தார்கள்.

வாராய் பாண்டவவம்சோத்தமனே இவ்விதங்களாக அந்தக்கோபிகாஜனங்கள் யாவருந் தங்களன்னிபதாசித்தவிருத்திகளையுமகிரககிர்த்தியங்களையும் விட்டுலச்சையொழிந்து ஸ்ரீமாதவாவென்றழைத்து மதுரமானஸ்வரத்துடன் கீதங்களைப்பாடி வியசனப்பட்டு ஸ்ரீகிருஷ்ணபகவானுடன்கூடத்தாங்களும் மதுராயாத்திராபிமுகர்களாய்ச் செல்வதற்குச்சித்தமாய்க் காத்திருந்தார்கள்மறுநாள்சூரியோதயகாலத்தில் அக்ரூரரானவர் தமதுநித்தியகர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு இரதாலங்காரஞ்செய்து புறப்படுகின்றசமயத்தில் ஸ்ரீபகவானானவர் தம்மைவிட்டுப்பிரியமனமில்லாமல் தம்முடன்கூடவரயத்தனமாய்ப் பிரலாபித்துக்கொண்டிருக்கின்ற இந்தக்கோபிகா சுந்தரீசனங்கள்யாவரையும் ஒருக்கால் தமதுகிருபாகடாட்ச வீட்சண்ணியத்தால்கிருபையாகப்பார்த்துத் தமக்கிஷ்டமான அன்புள்ள தூதிகாமுன்னிலையில் இதோசமீபத்திலிருக்கின்ற மதுரா நகரத்திறகுப் போய்த் தனுர்யாகசந்தரிசனஞ்செய்து அந்நகரத்தையும்அந்நகரத்திலுள்ள பந்துஜனங்களையும் பார்த்துஅவர்களைச் சந்தோஷிக்கச்செய்து மறுபடியும்சீக்கிரமாகவந்துசேருகின்றேன் இதற்குநீங்களேன் வியாகுலப்படுகின்றீர்கள் நீங்கள்தைரியத்துடனிருந்து மனஸ்ஸமாதானபரர்களாய்ச் செலவுகொடுத்தனுப்புங்களென்று அவர்களுடைய இருதயங்களைத்திருத்திவியாகுலங்களையாற்றி அவர்கள் ஒருவிதசமாதானமாக விடைகொடுக்க ஸ்ரீபலராமஸகிதராய் ஸ்ரீகிருஷ்ணபகவான் ரதாரோஹணஞ்செய்தார் அத்தருணத்தில் நந்தகோபர்முதலிய கோபாலர்கள்யாவரும் தனுர்யாகத்திற்குவேண்டிய நெய் பால் தயிர்முதலிய பாயாசங்களைச் சகடங்களிலேற்றிக்கொண்டு அரசனுக்குக் கட்டவேண்டிய காணிக்கைகளையும் கப்பங்களையும் எடுத்துக்கொண்டு அவர்களும்பிரயாணமாய்ப்புறப்பட்டு வந்தார்கள் அப்பொழுது ஸ்ரீபலராமகிருஷ்ணமூர்த்திகளிருவரும் அக்ரூரசோதிதமான இரதத்தின்மீதுசுகாசீனர்களாய் மதுராநகராபிமுகர்களாகஇரதத்தை நடத்திக்கொண்டுசென்றார்கள் அச்சமயத்தில்இந்தநந்தவ்ரஜத்திலுள்ள கோபிகாஜனங்கள்யாவரும்இனவினமாகச்சேர்ந்து இந்தரதஞ்செல்லுகின்ற அலங்காரத்தையும் ஸ்ரீபகவான் மூர்த்திகளினுடையபின்னடிசேவையையும் சேவித்துக்கொண்டுஒருவர்க்கொருவர்அந்ததிவ்ய ஸேவார்த்தங்களைக்குறித்து ஸ்துதிபூர்வகமாகச்சொல்லித் திருப்தியடைந்தாள்.

வாராய்அரசனே அந்தக்கோபஸ்திரீகள் செய்தஸ்துதியைவிவரமாகச்சொல்லுகிறேன்கேளாய் சிலர்சிலரைப்பார்த்து வாருங்கள் கோபிகாஜனங்களே அதோபார்த்தீர்களா நமதுகண்மணிகளாகிய திவ்யமூர்த்திகளிருவரும்இரதத்தின்மீது பிரகாசிக்கின்றார்கள் அதோவைசயந்திமாலைமுதலிய திவ்யாபரணக்கடைப்பூட்டுகள்விளங்கிஜ்வலிக்கின்றன அதோ இரதாசுவ வேகங்களினாலதூளியெழும்பி ஆகாயத்தை மறைக்கின்றதென்றார்கள் இப்படியே அவரவர்களும் பலவாறாகச் சொல்லிக்கொண்டுகண்ணுக்கெட்டுந்தூரம் எட்டிஎட்டிப் பார்த்துச்சேவித்து இரதம்மறைந்தபின்பு இருதயங்களைத்தைரியப்படுத்திக்கொண்டு ஸ்ரீபகவானுடைய திவ்யலீலாகானுசியங்களைப்பாடிக்கொண்டு தங்கள்தங்கள் கிரகங்களில்வந்துசேர்ந்து ஸ்ரீபகவற்குணங்களை மறவாமல்நாள்களைக் கழித்துக்கொண்டிருந்தார்கள்.

வாராய்அரசனே ஸ்ரீபகவானானவர் ஸ்ரீபலபத்திரமூர்த்திசகிதராய் இரதத்தின்மீது வீற்றிருக்க அக்ரூரரானவர்வாயுவேக மனோவேகமாயிரதஞ்செல்லும்படி மிகவும்பிரம்ஹானந்தத்துடன் சாரத்தியஞ்செய்து வெகுதூரமாகிய பிருந்தாரண்யமார்க்கத்திலிருக்கின்றமஹாபாபவிநாசனியாகிய யமுனாநதீ தீரத்திற்கு வந்துசேர்ந்தார். அவ்விடத்தில் வந்தமாத்திரத்தில் ஸ்ரீபகவானானவர்அக்ரூரரையழைத்து இரதத்தைநிறுத்தச்சொல்லிஸ்ரீபலராமஸகிதராய் இரதத்தைவிட்டிறங்கிஅங்கிருக்கின்றமகாவிருட்சங்களிநிழல்களில் நடந்துவந்துமிகவுந்தெ

விர்த்துப்பிரவகிக்கின்ற காளிந்திநதியிலிறங்கிஇந்தஇரண்டுமூர்த்திகளும் ஸ்ரீசரணாரவிந்தங்களைச்சுத்திசெய்துதீர்த்தங்களைப்புசித்து வெளியில்வந்து அந்தமரா விருக்ஷநிழல்களில்சற்றுநேரமிருந்து சந்தோஷத்துடன்இரதத்தினருகில்வந்து ரதாரோஹணஞ் செய்தார்களுடனே அக்ரூரரானவர் இந்தமூர்த்திகளுக்குத்தண்டன்சமர்ப்பித்து இரதத்தையவர்களிடத்தில் ஒப்பித்து விடைபெற்றுக்கொண்டு அந்த மஹாபுண்யநதியிற் பிரவேசித்துச் சுத்தாசமனங்கள்செய்து விதிபூர்வகமாகிய வேதமந்திரங்களை ஜபித்துஸ்ரீகிருஷ்ண கிருஷ்ணவென்றுசங்கலபமந்திரத்தைச்சொல்லி அந்தக்குளிர்ந்ததீர்த்தத்தில் ஸ்ரீபகவத்பக்தி பரவசராயிறங்கி ஸ்ரீகேசவாயநமாவென்று ஸ்நானஞ்செய்தார் மூழ்கினநிமிஷமாத்திரததில்அக்ரூரர், அச்சலத்தினுள் இந்தஸ்ரீபலராமகிருஷ்ணர்களாகிய திவ்யமூர்த்திகளிருவரும் பிரத்தியட்சமாக விளங்கியிருக்கக்கண்டு திடுக்கிட்டு ஆச்சரியத்தையடைந்துஇவர்களிங்கே எப்படிவந்தார்களென்று நினைத்துச் சீக்கிரமாகவெழுந்து கரையில்வந்து இரதத்தின்மீதிலிருக்கின்றார்களோ இல்லையோவென்று பார்த்தார்பார்க்கும்போது அந்தரதமத்தியத்தில் இவர்கள்மகா கம்பீரமாகஎழுந்தருளி யிருக்கிறதைக்கண்டார்கண்டுசந்தேகித்துநாம்இந்தத்தீர்த்தத்தில்கண்டதுமனோபிராந்தியோ அபத்தமோவென்று மறுபடியும் ஸ்ரீபகவத்ஸங்கல்பமந்திரங்களைத் துதித்துக்கொண்டு அந்தத்திவ்யதீர்த்தத்தில்மூழ்கினர் அந்தத்தீர்த்தத்தில் முன்போலவே அந்தத்திவ்யமூர்த்திகளைச்சேவித்துச் சந்தேஹமனதுடன்கூடினவராய்ப் பலதரம் அங்குமிங்குமாகத்தரிசனஞ்செய்துமனந்திகைத்து மிகவும் ஆச்சரியாநந்தபரிதராய்இந்தகல்யாணசரித்ராதிசய மஹத்குணங்களையுடையபுருஷசிரேஷ்டர்களை இப்படிச்சேவிப்பது இவர்களுடையகிருபாதிசய மகிமைதானென்று நன்றாயூகித்துக்கொண்டுபிரம்மானந்த பரவசத்திலழுந்தி அடிக்கடிவந்துபார்ப்பதையொழிந்து சர்வேந்திரியநிக்ரகராய் அந்நதியில் மூழ்கிஅத் திவ்யபுருஷர்களை மானசீகமென்கிற நேத்ரங்களால் சேவிக்கும்போது அந்த ஜலப்ரவாகத்தின்மத்தியில் ஸ்ரீபலராமரானவர் அனந்தபணாமண்டல மாணிக்கங்களோடுங்கூடிய சிரோபாகங்களையுடைய ஸ்ரீ ஆதிசேஷபகவத் ஸ்வரூபத்துடன் நீலாம்பரதரராய்ச்சித்தசாரணாதிகளும் சர்ப்பசிரேஷ்டர்களும் ஸ்துதிக்கும்படியாய்ப் பிரகாசித்துக்கொண்டிருந்தார்,

இவ்விதமாயிருக்கின்ற ஸ்ரீ ஆதிசேஷபகவானுடைய மடியாகியசிரிய ஆசனத்தின்மீது ஒருநீலரத்ந பர்வதத்தைப்போல நீலமேகசியாமள சுந்தரஸ்வரூப ஸ்ரீபகவானவர் பொற்பீதாம்பரதரராகியும் மரகதவர்ணமயேற்ற விசித்ரஸ்வர்ண ரேகைகளோடுங்கூடிய பச்சைப்பட்டுமுறைகளால் விளங்கியஉத்தரீயங்களை யுடையவராகியும்திவ்யமணிகுண்டலங்கிருத கிரீடபிரகாச சுப்ரப்ரசந்த முகாரவிந்தத்தை யுடையவராகியும் ஆஜானுபாகுவாய் நான்குபுஜங்களை யுடையவராகியும் முக்தா மாணிக்யவனமாலிகையும் ஜாஜ்வல்யமான ஸ்வர்ண ஸ்வரூபாகார ஸ்ரீதேவியும் ஸ்ரீவத்ஸமும் ஸ்ரீகௌஸ்துபமணியும் பிரகாசித்தவிசாலமார்பை யுடையவராகியும் சதுர்முகபகவானுக்கு சேதனசேதன சர்வப்ரபஞ்சங்களுக்கும்ஜன்மஸ்தானமாகிய நாபிக்கமலத்தை யுடையவராகியும் மகாராஜலட்சண சோபிதராகியும் திவ்ய சேகாலங்கிருதங்களையுடைய ஸ்ரீபாதாரவிந்தங்களை யுடையவராகியும் உபயபார்வை ஸ்ரீஅஸ்தங்களில்சங்கசக்ரசாரங்காதிபஞ்சாயுததராகியும் சகலப்பிரபஞ்சத்திற்கும் இதமாகிய கடாட்சவீக்ஷணங்களை யுடையவராகியும் பிரம்மருத்ரஸனகஸநந்தன சனத்குமார ஸனத்சுஜாதாதி முனீந்திரசமூகங்களும்தேவேந்திராதி தேவதாசமூகங்களும் அஷ்டவசுக்களும் அசுவினீ தேவதைகளும் மருத்கணங்களும்ஏகாதசாதி ருத்ரகணங்களும் பித்ருதேவதைகளும்தேவரிஷிகளும் பிரம்மரிஷிகளும்ராஜரிஷிகளும்மனுவாதிகளும் தேவவைமானிகாதி சித்தசாத்திய சாரணகருடகந்தர்வ உரகாதிகணங்களும் தேவதைத்யதானவயட்சராட்சசாதி ஆசுரதமோகணங்களும் ஸ்ரீபரமக்ருபாநிதியேயென்று சூழ்ந்து துதித்துக்கொண்டிருக்கவும்பிரம்மருத்ரவாசவாதி லோகேச லோகபாலர்கள்மிகவும்வினயவிதேயர்களாம் ஸ்ரீபுருஷ ஸூக்தவாக்கியங்களினல் நமோநமோ பரப்ரம்ம ஸ்வரூபாயவென்றும் பிரகலாதநாரதசனகாதிதிவ்யமுனீந்திரர்கள்நமோ நமோ விலக்ஷணவிசிஷ்ட ஞானஸ்வரூபஸ்ரீபரமபுருஷாயவென்றும் ஸ்ரீவசிஷ்டாதிபிரம்மரிஷிகள் நமோநமோ ஸ்ரீயோகீஸ்வரேஸ்வராயவென்றும் மனுமாந்தாதா கயாம்பரீஷாதிராஜரிஷிகள்ஸ்ரீபகவதே ஸர்வபல பிரதாயநமவென்றும் பஞ்சபூதங்களும் பூதாதி தேவதைகளும் சர்வப்ரபஞ்சஸ்வரூபஜன்யமூலப்பிரகிருதிதத்வாத் மகாயநமவென்றும் நாருவிதவிசித்ர தத்வஸ்துதிகளோடு அர்ச்சித்துச்சேவித்துக்கொண்டிருக்கவும் எழுந்தருளியிருந்தார் இப்படிஎழுந்தருளியிருக்கின்ற இந்த ஸ்ரீபரமேஸ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானை அக்ரூரரானவர்ப்ரம்மானந்தபக்திசம்ப்ரமத்துடன் சாஷ்டாங்கமாகத் தண்டன்சமர்ப்பித்துஎழுந்திருந்து தமதிரண்டு கைகளையுங்கூப்பிக்கொண்டு சரீரம்புளகித்து ரோமாஞ்சிதராய்த் தமதிரண்டு நேத்ரங்களில்நின்றும் ஆனந்த பாஷ்பங்கள் தாரைதாரையாய்ப்பெருக மிகவுந்தழுதழுத்த வசனங்களினால்ஸ்ரீபுருஷசூக்தாதி சுருதிவாக்கியங்களைக்கொண்டு அந்தத்திவ்யதர்சன மகிமாதிசயங்களைக்குறித்து ஸ்துதிகளைச்செய்யத்தொடங்கினர்.

## ௬௰ - வது - அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்

பரமபாகவதரானபரிவுளவக்ரூரர்-திரைசெறியமுனைதன்னிற்றேவன்சாக்ஷாத்கரித்து - விரைவுடன் பிரசன்னமானவேணுகானனைவேதார்த்த-வரையினற் றுதிசெய்தாரென் றுன்னியததனைச்சொல்வாம்,

ஸ்ரீபரமபாகவதோத்தமராகிய அக்ரூரர் அந்தஸ்ரீயமுனைநதியில் தமக்குச்சாக்ஷாத்கரித்து பிரசன்னமானசர்வேஸ்வரனுகிய ஸ்ரீகிருஷ்ண பகவானைச்சகுண நிர்க்குணத்மக பரப்பிரம்ஹ ஸ்வரூபார்த்தமாய்வேதார்த்தங்களைகொண்டுஸ்துதிசெய்தாரென்று சொல்லுகின்றது

அக்ரூரர்துதி.

வாரீர்ஸ்ரீபெரிய பிராட்டியாகிய ஸ்ரீமகாலட்சுமீதேவியினுடைய மானசாபகாரமாகிய நித்யமங்கலசோபிததிவ்யமங்கலவிக்ரக சுபாகரசுஸ்லோக ஸ்வரூப ளிபுவேஸமஸ்தஜகங்களுக்கும் ஜகத்பதிகளுக்குங்காரணராகியும் சர்வசேதனசேதனப் பிரபஞ்சங்களையும் ஹஸ்தாக்ரத்தமான பொருள்களைப்போலத் தமதுதிருமேனித்தவங்களுள்ளொடுங்கிக்கொண்டு சமஸ்தலோகபயங்காகாரமாய் மகாஆரவாரங்களுடன் மோதியடித்துவீசாநின்ற அலைகளோடுங்கூடிய மஹாதீரத்தில்சேளிவிலாசமாய்வடசமுத்திரத்தின்மீது யோகநித்திரைசெய்கின்ற ஸ்ரீமந்நாராயணரான உமக்குப்பிரணமங்களைச்சமர்ப்பிக்கின்றேன்.

வாரீர்ப்பிரப்திநாதராகிய ஸ்ரீபுண்டரீகாக்ஷரே உமதுநாபிக்கமலத்தில் இந்தப்பிரபஞ்சங்களினுடையசிருஷ்டிகார்ய நிர்வாகராகியசதுர்முகபகவானும மஹதஹங்கார மாயாஸ்வரூப சக்திதத்வங்களும்அவற்றின் அதிதேவதைகளும் பஞ்சபூதமயங்களாகிய ஆகாசவாயுவாக்னிஜல பூமிதத்வங்களும் பஞ்சபூதாதிதேவதைகளும் மனமுதலிய அந்தக்கரணசதுஷ்டயங்களும் அவற்றின் அதிதேவதைகளும் மானசாதி க்ஞானேந்திரிய கர்மேந்திரியங்களும் இந்திரியாபிமான தேவதைகளும் அவ்விந்திரியங்களின் விஷய தத்வங்களும் விஷயாபிமானதேவதைகளும்ஆகிய இவைமுதலிய உலககாரணங்களாகிய தத்வபீஜங்கள்யாவும் ஏகதேசமாகியஉமதுதிருமேனியினுடைய அவயவஸ்தான மூலப்ரக்ருதி அம்சத்தில் ஜனித்தஅகங்காரதத்வத்தின் களாம்ச வேதாம்சசித்தசித்துகளுக்குக் காரணமாகிய சத்விராசஸ் தமோகுணதத்வங்களும் அவற்றின் கார்யங்களாகிய சிருஷ்டிஸ்திதி ஸம்ஹாராதிவிரபாவங்களும் இந்திரியகுணாத்மக கர்த்ருத்வாதிகுண பூதேஸ்வரராகிய உம்முடையகுணாதிஷ்டானதேவதைகளாகிய ஹரிஹரப் பிரம்ஹேந்திரசூர்யசோம அக்கினிமுதலிய சுராசுராநீகங்களும் இவர்களுடைய கார்யஜனித லோகாலோக அனந்தகோடிபிரம்ஹாண்டங்களும்ஜனித்தன இப்படிப்பட்டபிர்ம்மாண்டகடாகங்களில் தோன்றியஆத்மாக்கள்கிரமக்கிரமமாய்த் தங்கள்சுபாவகர்மவசத்தினல் பந்திதராயக்கப்பட்டுத் தேவாசுரமனித பசுபட்சி ஸ்தாவராதி ஜன்மங்களையடைந்தும் மகருஷிசிரேஷ்ட தபோயோக மோகனவ்ரதயக்ஞயாக ஜபதானசத்யசௌஸ சீலாதியுடையவர்களாகியும் மனுவாதிலோகநீதிதண்டநீதி விதிஅதிகாரபுருஷ சிரேஷ்டர்களாகியும பிராமஹக்ஷத்ரியவைசியசூத்ராதி நானுவிதவிசித்ரசாதியேதங்க ளுள்ளவர்களாகியும் உமதுயோகமாயா பிரபாவங்களால்ஜனித்துவிருத்தியடைந்து தங்கள்தங்கள்கர்மவசத்தில் மோஹிதர்களாகியும் பிரகிருதிபாசபந்த வசத்தர்களாகியும்சுபாசுபகர்மங்களால் இகபரலோகஸ்வர்க்க நாகமுதலிய ஸ்தானங்களை யடைந்துமூடஸ்வ ரூபர்களாகியும் பிர்ம்மாதிசிவஜாதர்களுக்கும் லோகபாலர்களுக்கும்மற்றுமுள்ள மகாஜனங்களுக்கும் சர்வாத்மகபீஜத்தைக்கொடுக்கிறசர்வகாரண சர்வசக்திஸ்வதந்திர சர்வவியாபகாதிஷ்டிததசர்வமய சர்வாதாரசர்வரட்சண கர்த்ருத்வமாய் விசிஷ்டேகாத்ம பரமாத்மஸ்வருபராய் விளங்குகின்ற உம்மையறிந்து உய்யும்படியானக்ஞானசக்தியாதிகளில்லாதவர்களாகியும் இவ்வண்டகோசங்களில் நித்தியபிரவாகருபர்களாய்த்தோன்றியும் விருத்தியடைந்தும் லயித்துக்கொண்டும் நித்யமாகவிளங்கிக்கொண்டிருக்கின்றார்கள் இவர்களுள்சிலர்உம்மை அம்போஜகர்ப்பாதிலோகேஸ்வரர்களிடத்திலும் ஸமஸ்தமானபூத சமூகங்களிலும இவ்வுலகங்களுக்குப் பலத்தைக கொடுக்கிறவர்களாகிய அனந்தமானதேவதா ஸ்வரூபங்களிலும் சதாசர்வசாட்சியாக விளங்கிக்கொண் டிருக்கின்ற சர்வாந்தர்யாமித்வ சர்வாந்தர்க்கதஜோதிஸ்வரூபராகிய ஸ்ரீசர்வேஸ்வரஸ்வருபாயநமா வென்று தியானித்துபிரணமங்களைச்சமர்ப்பிக்கின்றார்கள்-

சிலர்மூன்றுவிதஸ்வருபவேத வேதாங்க விதிப்படி உம்மைத் தேவேந்திராதி தேவதாஸ்வருபிக ளிடத்திலும் சர்வக்ஞயாகதவத்தின் பயன்களைக் கொடுக்கிறவரென்றுதுதித்து ஸ்ரீசர்வபலபிரதாய நமாவென்று பிரணமங்களைச்சமர்ப்பிக்கின்றார்கள்,

சிலர்லோகோபகாரவிருத்தி லயாதிபல ஸ்வருபங்களைக்குறித்து ஸ்ரீசர்வவியாபகத்வ ஸ்ரீவாசுதேவாதிபேதகுண பின்னஸ்வருபராகியும் உமதுவிசித்ர மாயாமோஹனசைவபாசுபதஆர்ஹதசார்வாக சாக்தேய பௌததாதிமதானுதேவதாஸ்வருபராகியும் விளங்குகின்ற உம்மைத்தங்கள் விதிவசத்தாகளாய்அபிமானித்துவத்தித்துதித்துப் பிரணமங்களைச்செய்து சைவாகம நக்னநீலபடாதிகசோதடவாகடாதி மந்திர யந்திரதந்திரஜாலாதி சித்திகளையடைந்து பெருமைகளை வகித்துக்காம்யஜனங்களாலபூசிக்கப்பட்டு விதிப்படி அந்தந்த சாயுஜ்யங்களை யடைகின்றார்கள்,

சிலாஸ்ரீஹரியாகிய உம்முடைய நிர்ஹேதுகஜாயமான பரமகிருபாகடாட்ச லப்தர்களாய்த் தங்கள் தங்கள் ஜன்மாந்தரங்களினுடைய ஆரூடகர்மங்களைநசிக்கச்செய்து ஜனனமரணாதி சம்ஸாரபீஜபலப் பிரததவாஞ்சாமனோமலினங்களை வெறுத்துநிரபேக்ஷ நிர்விகாரபரிசுத்தமானச விலட்சணாத்மபரமாத்ம தத்வப்பிரதிபாத்தியபானசர்களாய் நிஷ்காமர்களையும்சங்யசித்தவர்களையும் சதாசார்யசம்பந்த பிரதிபாத்தியமான விசிஷ்டக்ஞனோபதேசங்களையும் சதாசார்யசமாசிரயணங்களையுமடைந்துஸ்ரீபாஞ்சாரத்ரானுசாரமாக ஸ்ரீவாசுதேவாதிதிவ்யஸ்வரூபபேதங்களாகிய ஸ்ரீவாசுதேவசங்காஷ்ணப்பிரத்யுமன அநிருக்காதிஅவர்கதிவ்விய சுபாசிரயஸ்ரீபகவத்பிம்பாகார திவ்யமங்கலவிக்ரக ஸ்வரூபராகிய உம்மைப்பரமவைதீக விதிப்படிதிருவா ராதனத்துடன் குணானுபவங்களைசசெய்து ஸ்ரீபாகவதாபிமானங்களை யடைந்து ஸ்ரீமந்நாராயணவென்று பெயரையுடையமகாமந்திரதத்பரர்களாய் ஸ்ரீமதேநாராயணாயநமோவென்று சர்வகாலத்திலும் அனுசந்தித்துபிரணாமங்களைச்செய்துசுத்தசத்வாத்மக அப்ராக்ருததிவ்யாவயவஸ்வரூபத்துடன் ஸ்ரீபரந்தாமலோகவாசிகளாய்உம்மையடைந்து பிர்ம்மானந்தபரர்களாய்ச் சரசுவிதாநந்த நித்யசுகத்தையடைகின்றார்கள்.

வாரீர்ஸ்ரீபரமாத்மாவாகிய ஸ்ரீபகவானே உம்மை இவ்வுலகத்திலுள்ள பக்தகேவலஸ்வரூபர்களாகிய மற்றசனங்கள் நானாவிதசாஸ்திர மார்க்கங்களைக்கொண்டு தங்கள் சன்மசௌக்கிய பயன்கொடுக்கிறதுகளை க் குறித்து உம்மைஅனந்த தேவதாந்தரஸ்வரூபங்களாகப்பூசித்துச்சர்வதேவதாஸ்வ ரூபாயநமோவென்று தியானித்துப்பிரணாமங்களைச் சமாப்பிக்கின்றார்கள்

சிலர் சாஸ்திரங்களிலுண்டான சப்தஅர்த்தபேதங்களால் சந்திரபிம்பமானது சலகடாகாசங்களில் பிரதிபிம்பத்து சலனத்தையடைந்துதோன்றுகின்ற சந்திரனைப்போலவேஇவ்வாத்மாவுக்கு அந்தர்யாமியானபரமாத்மபிரதிபாத்தியம் பிராமிகமென்றும் பிராமிகநெளிந்தகேவலவாத்மஸ்வரூபமே முக்கியமென்றும்நிர்க்குணபிரதிபாத்ய ஸ்ரீபகவதனுபவசூன்யமே புருஷார்த்தமென்றும் உமதுபாதசூன்யமாகியசத்வசூன்யநிராசிரயபாவத்தைக்கொண்டு ஆகாசாந்தர்க்கத அக்கினிமார்த்ரத்தைப்போலப் பாவசூன்யப் பெரும்பாழை யடைக்கின்றார்கள்.

வாரீர்சர்வபிரபஞ்ச ஸ்வரூபராகிய ஸ்ரீவிஸ்வாதாரரே இவ்வுலகத்தில் பரிசுத்தங்களாய் பிரவகிக்கின்ற நதிகங்களானவை வெள்ளத்துடன்கூடிச் சமுத்திரத்தையடைகின்றாற்போலச் சர்வப்பிரபஞ்சகர்ம தர்மங்களும் உமதுதிருமேனி தத்வஸ்வரூபங்களி லடைந்துஉமதுசங்கல்ப காலாந்தரங்களில்தோற்றுகின்றன.

வாரீர்ஸ்ரீவாசுதேவரே உமக்குச்சர்வதாமகர்மயக்ஞாதிஸ்வரூபராகிய அக்நிபகவான் முகாரவிந்தஸ்வரூபியாகியும் சோமசூர்யர்கள் நேத்திரங்களாகியும்திக்குவிதிக்குகள் கர்ணேந்திரியங்களாகியும் பூமியானதுதிருவடித்தாமரைகளாகியும் ஸப்தசமுத்திரங்களும்கர்ப்ப ஜலமாகியும் பர்வதாதிகள் சல்யஸ்வரூபங்களாகியும் விருட்சலதாதிகள்உரோமங்களாகியும் இவ்வுலகவியாபகமானவாயுவானது உஸ்வாஸ நிஸ்வாஸங்களோடுங்கூடிய பிராணேந்திரியங்களாகியும் இந்திராதிதேவதா ஸ்வரூபிகள் புசங்களாகியும் மேகசமூஹங்கள் கசங்களாகியும் வருஷதாரைகள் வீர்யங்களாகியும் ஆகாசவீதிகள் நாபிபிரதேசமாகியும இரவும்பகலும் கண்ணிமையின் ஸ்வரூபமாகியும் பிர்ம்மாவானவர் குஹயேந்திரியமாகியும்ஸ்ரீருத்திரபகவான் உமதுசௌர்ய ஸ்தைர்யமாகியும்அண்டமுகடுசிரசாகியும் விளங்குகின்றன இவைமுதலிய விசுவதத்வங்களும் லோகபாலர்களாகிய விசுவபுருஷர்களும்உமதுதிருமேனி தத்வாங்கஸ்வரூபர்களாய் விளங்கிக்கொண்டிருக்கின்றீர் இவ்விதங்களாகிய சேதனசேதனஜந்துசமூகங்களினால் சம்பூர்ணமான அனந்தகோடி அண்டகடாஹங்களும் மஹாபிரவாஹப்பிரளய சமுத்திரத்தில் நிரைநிரையாகச்சஞ்சரித்துக்கொண்டிருக்கின்ற ஜலராசிகளைப்போலவும் அத்திமரத்திற்றோற்றிய கனிசமூகங்களைப்போலவும் எண்ணிக்கையில்லாதஉமதுதிருமேனியினது ரோமகூபதத்வ ஸ்வரூபங்களாகவும் சிருஷ்டிஸ்திதி லயாத்மகமாகவும் பிரவாக ரூபத்தினாலே நித்தியமாகவும் 'விளங்கிக்கொண்டிருக்கின்றன இப்படிப்பட்ட மஹாமஹிமாதி விசித்திரதத்வஸ்வ ரூபராகிய உமக்குப்பிரணாமங்களைச்செய்கின்றேன்

வாரீர் ஸ்ரீஅம்புஜாட்சரே உமதுவிசுவாகார ஸ்வரூபதமோதத்வாம்சங்களில் சனித்ததமோகுண பிரசுரர்களாகிய அசுரஜனபீடைகளால்நலிந்துகொண்டிருக்கின்றஸ்ரீபகவத் ஸத்வாஜாதிகுணாம்ச ஸம்பூதர்களாகியபிரம்மருத்திரேந்திராதி சமூகங்களுக்கும் திருமேனிஸ்வரூபஸ்கடாகிய சகலவிஸ்வதர்மங்களுக்கும் ஹிதலாகமச்சாவதார ஸ்வரூபத்தையங்கீகரித்து தினந்தின மகாப்பிரளயஜலதியில் சஞ்சரித்துவேதாபகாரியான சோமுகாசுரனை ஸம்ஹரித்துவேதங்களைமீட்டுக்கொண்டு ஆதிமனுவாகிய ஸ்வாயம்புவினுடைய விஸ்வஜனாட்சணமாககம்பீரமரக்கலமாகிய ஓடத்தைஇரக்ஷித்த வேதோத்தாரண திவ்யமூர்த்தி ஸ்வரூபராகிய உமக்குப்பிரணாமங்களைச்செய்கின்றேன்.

வாரீர் ஸ்ரீபகவானே இப்பிரபஞ்சாரிஷ்ட சம்பூதர்களாகிய மதுகைடவர்களைச் சமஹரித்து அநத ஸ்ரீசதுர்முகபகவானுக்கு வேதங்களை உபதேசித்த

ஸ்ரீஹயக்ரீவமூர்த்தியாகிய உமக்குச் சாஷ்டாங்கமாகத் தண்டன்சமர்ப்பிக்கின்றேன்.

வாரீர் ஸ்ரீஉபேந்திரரே மிகவும் தபசிரேஷ்டராகிய துர்வாசமகாருஷியினுடைய சாபவசத்தினால்தங்கள்பாக்கியாதிசயங்களை யிழந்ததேவேந்திராதி தேவர்களுக்குச் சம்பத்தைக்கிருபைசெய்யும் பொருட்டு க்ஷீராப்தியில் அமிர்தமதனஞ்செய்த சமயத்தில்மந்தர பர்வதத்தைத் தாங்கி தேவாமிர்தத்தைக் கற்பித்துத் தெய்வசம்பத்துகளை அந்தத் தேவதைகளுக்குக் கிருபைசெய்த ஸ்ரீகூர்மாவதாரமூர்த்தியாகியஉமக்கு அனந்தப்பிரணாமங்களைச்செய்து துதிக்கின்றேன்.

வாரீர் ஸ்ரீஅதோக்ஷஜரே இக்கப்பூமியை ரசாதலத்தில் மூழ்கிப்போம்படிசெய்த ஹிரண்யாக்ஷனைக் குறித்து பிரம்ஹாவானவர் பயந்துஉம்மைத்தியானித்தமாத்திரத்தில் அவருடைய உஸ்வாஸநிஸ்வாசங்களில்நின்று ஸ்ரீவராஹப்பிராணாகித் திருவவதரித்து அவ்வசுரனைச்சம்ஹரித்துப் பூமியைஉத்தாரணஞ் செய்தஉமக்குநித்தியமங்கலமாகிய ஸ்துதிகளுடன் தண்டன் சமர்ப்பிக்கின்றேன்.

வாரீர்ஸ்ரீபக்தவத்ஸலரே இந்திராதிசாதுஜனசம்ரக்ஷணத்தின் பொருட்டும் மிகவும்பரிசுத்தமானஸ ஸ்ரீபாகவதோத்தமராகிய ஸ்ரீபிரஹலாதாழ்வானுடைய ஸ்ரீஹரிபக்தியின் பிரபாவாதிசயத்தின்பொருட்டும் தமருகந்தவிடத்தில் ஸ்ரீநரசிம்ஹமூர்த்தியாக ஆவிர்ப்பவித்து இரண்யகசிபனைச்சம்ஹரித்துப் பக்தபராதீனராய்இரக்ஷித்த ஸ்ரீதீனஜனரட்சாமணியாகிய உமக்குச்சரணாகதியாகதெண்டன்சமர்ப்பிக்கிறேன்.

வாரீர்ஸ்ரீயக்ஞாமூர்த்தியே தேவேந்திராதி தேவதாஸமூஹப் பிரார்த்தனையினால் ஸ்ரீஅதிதி தேவியினுடையகர்ப்பத்தில் ஸ்ரீவாமனாகார மூர்த்தியாய்த் திருவவதாரஞ்செய்துமிகவும்சத்தியசீல மஹோதார புருஷசிரேஷ்ட அசுரேஸ்வரராகிய மஹா பலிச்சக்கர வர்த்தியை மூன்றடிஸ்தலத்தையாசித்து இம்மூவுலகத்தையும் மூன்றடியாக அளந்துகொண்டுஅவற்றை இந்திரனுக்குக் கொடுத்து ஸ்ரீபக்தவத்ஸலராய அந்தப்பலிச்சக்கரவர்த்தியை இரட்சித்துக்கொண் டிருக்கின்ற ஸ்ரீதிரிவிக்ரமஸ்வாமியாகிய உமக்குயுகாயுகங்களதோறும் தண்டன் சமர்ப்பிக்கின்றேன்.

வாரீர் பிரம்ஹண்யாபிமான திவ்யமூர்த்தியே நீர்மிகவும்மஹாதபஸ்சீலராகியஸ்ரீசங்கரரம்ஸஸம்பூதஜமதக்நி மஹாருஷிசிரேஷ்டருடைய தவபுத்திரராய்த் திருவவதரித்துப் பரசாயுதமேந்தி இவ்வுலகத்தில் கர்வவிஷ்டர்களாகியும் ராசசோரர்களாகியும் விருத்தியடைந்துகொண்டிருந்த ராசாக்களைச்சம்ஹரித்துஅந்தராஜைஸ்வரியங்களைப் பிராம்ஹணர்களுக்குத்தானஞ்செய்துஸ்ரீபரசுராமமூர்த்தியாகியஉமக்குஅடிக்கடி பிரணாமங்களைச்சமர்ப்பிக்கின்றேன்.

வாரீர் அம்புஜாட்சரே ஸ்ரீசதுர்முகாதி சகலதேவதாபிரார்த்தனையினாலும் ஸ்ரீஉமாமகேஸ்வரர்களுடைய சம்வாத சாக்ஷீபூதசேவார்த்த நிருபணத்தினாலும் மிகவும்சத்தியசீலராகிய ஸ்ரீதசரதசக்கரவர்த்தியினுடையபாலகபயனாய்த்திருவவதரித்து இராவணாதி இராக்ஷஸ சங்காரங்களைச்செய்து இந்திராதிதேவதா ஜனங்களையிரட்சித்து ஸ்ரீஉமாமகேஸ்வரர்களுக்கு ஸ்ரீராமவிராட ஸ்வரூபசான்னித்தியராய்விளங்குகின்ற வுமக்குக்கல்ப பரியந்தம் பிரணாமங்களைச்செய்கின்றேன்.

வாரீர் ஸ்ரீவிஸ்வமயராகிய கமலலோசனரே திரிபுரதானவர்களழிய ஸ்ரீருத்திரபகவானுடையபாகபலப்பிரதராய்ப் புத்தமூர்த்தியாகித் திரிபுரதானவஸ்திரீகளினுடைய கற்பையோக்கியமாக அங்கீகரித்துஅந்ததானவர்களை யழியச்செய்தும் பூமிபாரநிவாரணங்களைச்செய்தும் ஸ்ரீசதுர்முகாதிதேவதைகளும் பூமிசொரூபதேவதையும் பிரார்த்திக்கப் பூமிபார நிவாரணத்தின்பொருட்டும் சர்வாசிரிதஜனசௌல ப்யாதிசயத்தின்பொருட்டும் ஸ்ரீவசுதேவதேவகிதேவிரோகணிதேவிஇவர்கள் தபோபலபுண்யசுஜாதர்களாகியஸ்ரீபலராமகிருஷ்ணமூர்த்திகளாய்த்திருவவதரித்து ஸ்ரீநந்தகோபாலயசோதாதேவிகளினது தபோபல பிரதராய் விருத்தியடைந்து பூமிபாரநிவாரணங்களைச்செய்து சாதுசனங்களாகியமகோதயக்ஞான ஸ்ரீபரமபாகவதஜனங்களுக்குப் பரமசாதனமாகிய திவ்யார்த்தங்களைப் பிரசாதித்துப்பிரலம்பாசுராதிசகலசுரநிரசனங்களைச்செய்து இரட்சித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீசர்வசுவாமியாகியஉமக்குஊழியூழிதோறும்சரணம்சரணஞ்செய்து பிரணாமங்களைச்சமர்ப்பித்துக்கொண் டிருக்கின்றேன்.

வாரீர்ஸ்ரீகலிதோஷாந்தகாரநிவாரணரே பூர்வயுகங்களில் நஷ்டமான அசுரஜனங்கள்பவிஷ்யாதிகலியுகங்களில் மிலேச்சவூணாதி கிராதவம்சங்களில் ஜனித்துப்பூர்வதர்மகர்ம ஆசுரசம்பத்துசசித்திகளால்இராஜைஸ்வரிய ராஜாதிகாரங்களையடைந்துஅற்பாயுஅல்பதேஜஅற்பமதிகளுள்ளவர்களாய் ஜனிக்கின்ற சனங்களினுடைய வர்ணாசிரமாசாரதர்மங்களை யழித்து வேதத்தை வேறுபடுத்துகிற பாஷண்டதர்மங்களையேபரமஉத்தமமென்று போதித்துலோகசங்கரதர்மங்களால் வர்த்திக்குங்காலபக்குவத்தில் பூபலிததர்மங்கள் நசித்துச்சர்வபிராணிகளும் நலியுஞ்சமயத்தில் சர்வதேவதாகணபிரார்த்தனையினால் ஸ்ரீவிஷ்ணுயசந்நாமதேய பிராம்மணோத்தமருக்குககற்கிஸ்வரூபமூர்த்தியாய்த் திருவவதாரஞ்செய்து அசுராம்சமிலேச்சாதிசனங்களைச் சம்மரித்துக் கிருதயுகாதி தர்மஸ்தாபனங்களைச் செய்து இரட்சிக்கக்கடவீரென்று சுருதிபுருஷவாக்கிய நிர்மித தர்மமூர்த்தியாகிய உமக்குஅனந்தகோடி பிரணாமங்களைச் செய்கின்றேன்.

நமோநமோ ஸ்ரீபன்னகேஸ்வரராகிய ஆதிசேஷ விமானசுகபோகஸ்வரூபரே பரமகிருபா நிதியாகிய கல்ப விருட்சமே என்னைமன்னித்து எனதுமதிகளையங்கீகரி

த்து ரட்சிக்கவேண்டுமென்று திவ்யஸ்துதிகளைசமர்ப்பிக்கிறேனென்று அக்ரூரனானவன் ஜலத்திலிலேசைவசாதித்த சுவாமியையஸ்துதிசெய்து தண்டன் சமர்ப்பித்தனன்.

## ௬௧ - வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

செகமகிழ்ந்திடும்சீர்மதுராபுரிக்
ககமகிழ்ந்துசெலுமந்தவேளையிற்
றுகில்வெளுக்கும்வண்ணானைத் துஞ்சஞ்செய்த
வகையுஞ்சுதர்மமாவரமும்வழுத்துவாம்.

ஸ்ரீகண்ணபிரானானவர் மதுராபுரத்திற் கெழுந்தருளினதும நடுவழியினில் வண்ணானைச் சம்ஹரித்ததும் சுதர்மாவென்கிறவனுக்குச் சுவாமியானவர் வரங்கொடுத்ததுஞ் சொல்லுகின்றன,

கேளீர் பூபதியேஇப்படி அக்ரூரனால்துதிக்கப்பட்ட ஸ்ரீகிருஷ்ணன்வேஷதாரியைப்போல மறைந்துவிட்டார் அப்பால்அக்குரூரன் ஜலத்தைவிட்டுகரையில்வந்துசந்தியாவந்தனமுதலிய கர்மங்களைநிறைவேற்றிஆச்சரியத்துடன் ரதத்தில்உட்கார்ந்த அக்குரூரனைநோக்கிஉன்னைப்பார்க்கையில் என்னமோஒருஆச்சரியத்தைக்கண்டவன்போலிருக்கிறதென்று கூறினசுவாமியைநோக்கிப் பூமியிலும் ஆகாயத்திலும் சகலலோகங்களிலும் என்னஆச்சரியமுண்டோ அதுகளையெல்லாம் தேவரீரிடத்தில்தான் கண்டேனென்று விக்கியாபனஞ்செய்துரதத்திற்குதிரைகளைக்கட்டி அதிவேகமாய்த்தேருர்ந்து மதுரையினுடையசமீபத்தில் வருகையில்ஸ்ரீராமகிருஷ்ணர்களிருவரையும் வழியிலிருக்கிற கிராமவாசிகள் கண்டுபணிந்து திருப்தியடையாமல்கூடவே ஓடிவந்தார்கள் அப்போது நந்தகோபர்முதலியவர்கள் மதுரைக்குச்சமீபத்திலிருக்கிற நந்தவனத்தில் முன்னுதாகச்சென்று சுவாமியை வழிபார்க்கையில் அப்போது சுவாமியானவர் அவிடம்வந்து தேரைவிட்டுக்கீழேயிறங்கி அக்குரூரனுடைய கையைப்பிடித்து அவரைநோக்கி இன்றைக்கிடத்திலிருந்து நாளைதினம்மதுரைக்குவருகிறேன்நீர் மாத்திரம்போவென அப்போது அக்குரூரன் தேவரீரைவிட்டு நான்போகமாட்டேன் பக்தவத்ஸலனாகியும் தேவரீர்பக்தனை அடியேனை ஒழிக்கவேண்டாம் யாதொருவருடையதிருவடித்தீர்த்தத்தைச் சிவன்சார்வகாலமும் சிரசில்தரித்து பரிசுத்தரானாரோ அப்படிப்பட்ட திருவடிகளையுடையதேவரீர்பலராமருடன் அடியேன்குடிசைக்குப்பொன்னடிசாத்தி கிருதார்த்தனைச் செய்யவேண்டுமென்று வினவுகிறஅக்குரூரனைநோக்கி நீர்சுகமாகக் கிரகத்திற்குச்சென்று கம்சனைச்சங்கரித்து பக்தர்களுக்குமனதுசந்தோஷமானவுடன் பலராமருடன் கோபாலர்களையழைத்துகொண்டுவருகிறோமென்று அருளிச்செய்கிறசுவாமிவார்த்தையைக்கேட்டு அக்குரூரன் தம்பெருமானைப் பன்முறை சுவாமியைப் பிரதட்சண நமஸ்காரஞ்செய்து சுவாமியைவிட்டுப் பிரிகிறோமேயென்கிறவிசனத்துடன்மதுரைக்குப்போய் கம்சனுடன்சுவாமிவருகிற சங்கதியைத் தெரிவித்து தம்மிட கிரகத்திற்குப்போனார்.

பின்புஸ்ரீகிருஷ்ணரானவர் அன்றையதினம் அந்தவனத்திலிருந்து மறுநாள்சாயங்காலத்தில் பலராமர்முதலிய கோபாலர்களுடன் ஆகாயத்தை அளாவினபடிகமயமானகோபுரங்களும் மிகவும்விசாலமாகியகதவுகளும் பயங்கரமானஅகழிகளும் சொர்ணமயமானமதில்சுவர்களும் நானாவிதங்களானநந்தவனங்களும் அமராபதிபட்டணத்திற்கொப்பாய் வீதிகளதோறும்மகரதோரணங்கள் டெக்கயங்கள்கட்டி தூபதீபங்களாலலங்கரித்துவாசற்படிக்கு இரண்டுபக்கத்திலும புண்ணியர்கள் கும்பங்களையும் நானாவிதபுஷ்பங்களினாலும் அலங்கரித்துமிகவும்வேடிக்கையாயுமிருக்கிற மதுராபுரியைநாலுபக்கத்திலுஞ் சுற்றிப்பார்த்துக்கொண்டு பலராமசகிதனாய் கோபாலர்களுடன்பிரவேசித்தார் இந்தச் சமாச்சாரத்தைப் பட்டணத்துசனங்கள்கேட்டு மிகவும்பரபரப்புடன் கைகளில் அணிந்துகொள்ளுகிற பூஷணங்களைக்கால்களில் அணிந்துகொண்டும் கால்களில் அணிந்துகொள்வதைக்கைகளிலும் ஒருகண்ணிற்குமையும்ஒருகாதில்குண்டலமுமாகியும் சிலர்போசனம்பண்ணும்போது பாதிவிட்டுவிட்டும் அப்பியங்கனம பண்ணி ஸ்நானஞ்செய்யாமலும் தூக்கத்தைவிட்டுப் பாதிதூக்கத்தி லெழுந்திருந்து மிப்படிககுமெய்மறந்தவர்களாய் ஸ்ரீகிருஷ்ணனை பிரத்தியட்சமாய்அன்புடன்சேவிக்கவேண்டுமென்றுவீதிமுதலி உப்பரிகளிலிருக்கிற ஸ்திரீகளை ஸ்ரீகிருஷ்ணன்பார்த்து நம்மிட திரேக சௌந்தரியத்தையுடைய வொளியினால் அவர்களுடைய மனதை அபகரித்து தம்முடைய கடாட்சத்துக்குப் பாத்திரர்களாளை அவர்களைக்குளிரக்கடாட்சித்து பரிபூரணஇச்சையுடையவர்களாகப்பண்ணி ராஜவீதியில் வருகிற ஸ்ரீராமகிருஷ்ணன்பேரில்உப்பரிகையிலிருந்து புஷ்பமாரிசொரிந்தார்கள் அப்போது பிராம்மணோத்தமர்கள் தயிர்-பால்புஷ்பம் சந்தனம்பூரணகும்பமுதலியவைகளால் பூஜித்து கூட்டங்கூடியிப்படி நாகலோகத்தில் மகோச்சவம்போலெழுந்தருளுகிற ராமகிருஷ்ணனைச் சேவித்து திருப்தியடையாமல் இந்தஸ்ரீராமகிருஷ்ணனுடன் சதாவாசஞ்செய்யும்படி இந்தக்கோபாலர்களுங் கோபிகைகளும் என்னதவஞ்செய்தார்களோ அறியோமென்றுமிகவுங்கொண்டாடினார்கள்.

இப்படி சகலமானவர்களுக்கும் ஆனந்தத்தையுண்டுபண்ணிக்கொண்டு இராஜமார்க்கத்தில் வருகிறபோது வஸ்திரங்களைநன்றாய் வெளுக்கப்பண்ணுகிறதிலும சாயம்போடுவதிலும் கெட்டிக்காரனாயும கம்சனிடவேலைக்காரனாகியுமிருக்கிற வண்ணானைக்கண்டு சுவாமியானவர் அவனை நோக்கி நீ மாதா வல்லவன் வஸ்திரங்களை வெளுக்கப்பண்ணுகிறதில் வெகுகியா

தியுள்ளவனுகையால் எனக்கும் என்தமையனுகிய பலராமருக்கும் யோக்கியமான வஸ்திரங்களைக் கொடுத்தால் நீ வெகுசிரபயை அடைவாயென்று மெதுவாய்க் கேழ்க்கிற சுவாமியைநோக்கி வனங்களிலும் பர்வதங்களிலும் சஞ்சரிக்கிறகோபாலர்களுக்கு இந்தராஜயோக்கியமானவஸ்திரங்கள் யோக்கியமாநீங்கள் கர்வத்தினலே பதட்டமாய்ப் பினத்தினீர்கள் என்னைவஸ்திரங்கேட்டசங்கதியைக் கம்சன்கேட்டால் உங்களைக்காவற்படுத்துவனுகையால் இங்கிராமல் ஓடிப்போங்களென்றுசொல்லுகிறவண்ணுன் வார்த்தையைக்கேட்டு தட்சணம் ஸ்ரீகிருஷ்ணன்தம்பிட இரண்டுதிருக்கைகளினுலும்பிடித்துக்கிழித்தெறிந்துபோட்டார். அப்போதவனுடன் கூடவந்தவர்கள் வஸ்திர மூட்டைகளைப் போட்டுவிட் டோடிப் போனுர்கள் அப்பால்தம்பிட மனதுக்கிஷ்டமான வஸ்திரங்களைத் தோழன்மார்களுக்குக்கொடுத்து மற்றதை இங்கையே போட்டுவிட்டுப்போகையில்ஸ்ரீகிருஷ்ணனிடத்தில்மிக்வும் பக்தியுள்ளசேணியன் ஸ்ரீராமகிருஷ்ணுளிருவருக்கும் நல்லவஸ்திரங்களால் அலங்கரித்தான் அப்போது ஸ்ரீராமகிருஷ்ணர்கள் கறுப்பும் வெளுப்புமான ஆனைகளைப்போலப் பிரகாசித்து அந்தச்சேணியனை நோக்கிநீ இவ்வுலகத்தில் சகலசம்பத்துகளும்அடைந்து பரத்தில்சாஸ்வதமான பதத்தை அடைவாயென்று அனுக்கிரகித்து சுதர்மாவென்கிற புஷ்பமாலைக்காரன் வீட்டிற்குப்போனுர்கள் அப்போதந்த சுதர்மாவென்கிறவன் தன்னிடகிரகத்திற் கெழுந்தருளிய ஸ்ரீராமகிருஷ்ணுளிருவரையுங்கண்டு அதிவேகமாக ஓடிவந்து சாஷ்டாங்கமாகத்தெண்டனிட்டு அர்க்கியபாத்திய முதலியவைகளாற்பூஜித்து ஆசனஞ்சமர்ப்பித்து அதிலெழுந்தருளினபின்பு சர்வோத்தமமான வாசனையுள்ளபுஷ்பமாலைகளையணிந்து திரும்பவுந்தெண்டனிட்டு சுவாமியைநோக்கி விக்கியாபனம் பண்ணுகின்றுன்;

தேவரீரெழுந்தருளியதால் அடியேனுடைய வம்சஸ்தர்களும் யானும் பரிசுத்தர்களாயினேம சகலலோகங்களுக்கும் மூலகாரணராகியும் சகலபூதங்களிடத்திலும் அந்தரியாமியாகியுமிருக்கின்ற தேவரீரைஒருதரம்ஸ்மரித்தமாத்திரத்தில் சகலபாபவிமோசனனுய் மோட்சமடைவான் அப்படிப்பட்ட மகிமையையுடைய கருணைக்கடலானதேவரீர் அப்பிரயோசகனனவடியேனுக்குதேவரீருடைய அன்பர்களானபாகவதர்களினது சகவாசமுந்தேவரீரிடத்தில் பக்தியும் நிரந்தரமா யிருக்கும்படி கிருபைசெய்யவேண்டுமென்று தெண்டனிட்டுதிரும்பவுந்திவ்யபரிமளத்துடன் கூடின புஷ்பமாலைகளைச்சமர்ப்பித்தனன் அதைஅங்கீகரித்து பலராமனுர்தாமும்அலங்கரித்துத் தோழன்மார்களுக்குங் கொடுத்து வெகுசந்தோஷத்துடன் அந்தச்சுதாமனைநோக்கிசந்திரசூரியாகருள்ளவரையில உன்னிட சந்ததிபூமியில்பிரபலமாகியும்உன்னிடகோரிக்கைகளும் ஈடேறும்படி அனுக்கிரத்தேனென்று சகலகோபாலர்களுடன் அவனதுவீட்டைவிட்டுராஜமார்க்கத்திற் கெழுந்தருளினர்.

## சஉ-வது அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பரிமளமிகுந்தசந்தனத்தைப் பார்வேதனுக்கு
உரிமையாய்க்கொண்டுபோகுமுரங்கூந்தன்னைக்கண்ட
அரியானேரதனைவாங்கி யங்கத்திற்பூசிக்கொண்டு
அரிவைகோணலைநிமிர்த்த தல்லால்வில்லையுமுறித்தார்

ஸ்ரீபகவானனவர்கம்சனுக்குச்சந்தனங்கொண்டுபோகிறகூனியைக்கண்டு அவளிடத்தில்சந்தனம்வாங்கிபூசிக்கொண்டதும் அவளிடசரீரத்திலிருந்தகோணலைநிமிர்த்தினதும் தனுசாலையிற்போய்வில்லைமுறித்ததுஞ்சொல்லப்படுகின்றது,

கேளீர்அரசனே இப்படிப்பட்ட ராஜமார்க்கத்தில்ஸ்ரீராமகிருஷ்ணுள் வருகிறபோதுமிகவும் சவுந்தரியமுள்ளமுகத்துடன் திவ்யபரிமளத்துடன்கூடின சந்தனங்கொண்டுபோகிற ஸ்திரீயைக்கண்டு அவளைநோக்கி ஸ்ரீகிருஷ்ணன் வாராய்சுந்தரவதியாகியமாதே நீயாருக்கிப்படிப்பட்ட திவ்யமானசந்தனங் கொண்டுபோகிருய் அதைஎங்களுக்குங்கொடுத்தால் உனக்கு க்ஷேமமுண்டாகுமென்று கண்ஜாடைகாட்டிக்கேழ்க்க அவள்ஸ்ரீபகவானைச்சந்தோஷத்துடன்பார்த்து சாஷ்டாங்கமாகத்தெண்டனிட்டுகேளீர்சுவாமி அடியேன் கம்சனுடையஊழியப்பெண் என்பேர் திருவக்கிரையென்று சொல்லுவார்கள்கம்சனுக்கு சந்தனம்நான் கொடுத்தாலன்றி மற்றவர்கள்கொடுத்தாலும் இஷ்டமாகாதாகையால் அப்படிப்பட்டசந்தனந் தேவரீருக்கே பூசிக்கொள்ளயோக்கியமானது திருவுள்ளம்பற்றவேண்டுமென்றுஅந்தச்சந்தனத்தைச் சுவாமிக்குச்சமர்ப்பித்தனள் அவரதைவாங்கிப்பலராமனுந்தாமும் பூசிக்கொண்டு சந்தோஷத்துடன்அந்தஸ்திரீயினுடைய சரீரத்தின்கூனைநிமிர்த்துகிறதற்கு தம்முடையஇரண்டுபாதங்களினுலே அவளுடையகால்விரலைஅமுத்திக்கொண்டு தமதுகைவிரலால்உதட்டைப்பிடித்து உயரத்தூக்கினர்அப்போதானேமூன்றுகோணல்களும் நிமிர்ந்துசர்வலட்சண சம்பன்னையாய்அப்சரஸ்திரீயைப்போலானுள் அதைச்சமஸ்தஜனங்களுங்கண்டுஸ்ரீகிருஷ்ணனைத் தோத்திரஞ்செய்து பூஜித்தார்கள் அப்போதந்தக் கூனியானவள் ஸ்ரீகிருஷ்ணஸ்வாமியினிடத்தில் கொஞ்சம்புத்திசபலித்து அவருடைய அங்கவஸ்திரத்தைப் பற்றிக்கொண்டு ஒருவார்த்தை சொல்லுகின்றனள்.

கேளீர்சுவாமி ஆயிரம் மன்மதனுக்கொப்பான தேவரீரைவிட்டு இனிஒரு நிமிஷமேனும் பிரிந்திருக்கமாட்

டேன்ஆகையால் அடியேனுடைய சிறுகுடிசைக்கெழுந்தருளிப்பின்புபோகலாமென்றுவினவுகின்றஸ்திரீயை நோக்கி புன்னகையுடன் சொல்லுகிறார் நான்எனதுபந்துசனங்களுக்குஉபகாரஞ்செய்யஒருவிடத்திற்குப்போகின்றேன் அந்தக்காரியமானவுடன் அகத்தியம் உனதுவீட்டிற்குவருகிறேன் நீஎனக்கு மகத்தான உபகாரஞ்செய்தாய் நீமனேவியில்லாமல் வழிநடந்துஇளைப்புடன்வருகிறவர்களுக்கு பணிவிடைசெய்யென்றுபரிகாசமாய்ச்சொல்லி சுவாமியானவர் தம்மிட தோழன்மார்களுடன்இராஜமார்க்கத்தில் சமஸ்தமானவர்களாலும்துதிக்கப்பட்டுக்கொண்டு இந்திர தனுசுக்கொப்பாயும் கந்தபுஷ்பம்முதலியவற்றால் பூசிக்கப்பட்டு வெகுஜனங்களால் இரட்சிக்கப்பட்டுமிருக்கிற தனுசாலைக்குஸ்ரீராமகிருஷ்ணரிருவரும்வரும்போது அவர்களை உள்ளேபோக ஒட்டாமல் அவடத்தியகாவற்காரர்கள்தகைந்தார்கள் அப்போதுஅவர்களைநிராகரித்து அவ்விடத்தி லிருந்தவில்லையெடுத்து கருப்பங்கழியை ஆனைமுறிப்பதுபோல்வில்லையாட்டாக முறித்துப்போட்டார்கள் அந்தத்தொனிஎட்டுத்திசைகளும்நிறைந்தன அப்போதடத்திலிருக்கிறவர்களும்மூர்ச்சித்து ஒருமுகூர்த்தத்திற்குபின்தெளிந்தெழுந்திருந்து சிலர் ஸ்ரீகிருஷ்ணனை அடிக்கவேண்டுமென்றும் சிலர்கொல்லவேண்டுமென்றும் சிலர் காவற்படுத்தவேண்டுமென்றும் சொல்லிச்சூழ்ந்துகொண்டார்கள்அப்போது ஸ்ரீராமகிருஷ்ண ரிருவருங்கடுஞ்சினமடைந்து தாங்கள்ஒடித்திருந்தவில்லை இரண்டுபேருங்கைக்கொண்டு அவர்களைச்சின்னபின்னமாக அடித்துத்துரத்தி சகலகோபாலர்களுடன் நந்தகோபரிருக்கிற உத்தியானவனஞ்சென்று காலபோஜனஞ்செய்து அந்தக்கம்சனுடைய செய்கையைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்கிற யோசனையாகத்தானே அந்தவனத்தில்வீற்றிருந்தார்கள் இப்பால்மதுராபுரிஜனங்கள் ஸ்ரீராமகிருஷ்ணருடைய பராக்கிரமத்தையும் சௌந்தரியத்தையும் பார்த்து திருப்தியடையாமல் வியப்புட னிருந்தார்கள், அப்போதுகம்சனுக்கு கனவிலுங் கண்ணாடியிலும்ஜலத்திலும்தன்சரீரத்தில் சிரசில்லாததாயும்சந்திரன்நாலைந்துதுணுக்கைகளாகவும் விருட்சங்கள் இலையில்லாமல் சூன்னியமாகவும் உழக்கார்ந்தவிடத்தில் பூமிபள்ளமாகவும்நித்திரையில் பிணத்தை ஆலிங்கனஞ்செய்துகொள்வதுபோலும் கழுதைமேலேறி சஞ்சரிக்கிறாப்போலும் தாமரைத்தண்டுகளைப் பக்ஷிக்கிறாப்போலும சப்பாத்திப்பூமாலையைக்கழுத்தில் அணிந்துகொண்டாற் போலும்தைலாப்பியங்கனஞ் செய்துகொண்டாற்போலும் அநேகதுற் சொற்பனங்களைக்கண்டும்ஸ்ரீராமகிருஷ்ணர்கள் வில்லையொடித்துக் காவலாளிகளைத் துரத்தினதைக்கேட்டுமனமடங்கி இராத்திரியெல்லாந்தூங்காமல்விசனப்பட்டுக்கொண்டிருக்கையில் சூரியோதயமாச்சுது,

பின்பு கம்சனானவன் மல்லயுத்தஞ்செய்வதற்கு இடஞ்சிங்காரித்து பட்டணத்திலுள்ள நான்குவர்ணத்தாரையும்வரவழைக்க அவர்களில்பிராம்மணர்கள் ஆசீர்வதிக்கமற்றவர்கள் துதிக்க சகலமந்திரிவர்க்கங்களுடன் பந்துக்கள்புடைசூழ அவரவர்களுக்குத்தகுந்தஆசனங்கொடுத்துஉட்காரவைத்துதூதர்களையனுப்பி நந்தகோபனைவரவழைக்க அவரும் சகலகோபாலர்களுடன்இராஜாவுக்குக்காணிக்கைகொடுத்து ஜயாவிஜீபவா வென்றுசொல்லிஒருஆசனத்திலிருந்தார் அப்போதுபேரிமுதலியசகலவாத்தியங்களுந்தொனிக்கஅந்தச்சபைநடுவிலிருக்கையிலும்கம்சனானவன்மிகவும்பயத்துடன் நடுக்கமுற்றிருந்தான் மல்லகஜெட்டியிற் சிறந்தவர்களான சாணூரன் முஷ்டிகன் முதலியவர்கள் யுக்தமண்டபத்திற்கு வந்து வீரகோஷங்களைக் கோஷித்தார்கள்

## ௪௬ - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

பயிலும்ராமகிருஷ் ணரெனும்பண்பர்கள்
துயின்றெழுந்துமல் யுத்தஞ்செய்வதற்காய்
மயலாய்வந்திடு மார்க்கந்தனில்யானை
ஒயிலுடன்சமர் செய்துருண்டதன்றே

ஸ்ரீராமகிருஷ்ண ரிருவருந் தூங்கி எழுந்திருந்துஅதிகாலையில் மல்லயுத்தஞ்செய்வதற்காகப்பிரயாணமாய் வருகிறதும் வழியில்குவலையாபீடமென்கிறயானையுடன் போர்செய்து சங்கரித்துஞ் சொல்லப்படுகின்றன.

கேளீர்மகாராஜனேஸ்ரீராம கிருஷ்ணரிருவருங்கோபாலர்களை அழைத்துக்கொண்டு மல்லயுத்தஞ்செய்வதற்குஆயத்தமாய் பேரிஅடிக்கிற விடத்திற்குச்செல்லும்போது ஆயிரங்கசத்திற்குச்சமானமானபலமுடையதாயும்பர்வதம்போல ஆகாரமுடையதாயுமிருக்கிற குவலயாபீடமென்கிற யானை குறுக்காக இருக்கக்கண்டு மாவட்டிகாரனைநோக்கி இந்தயானையை வழியைவிட்டப்புறம்ஓட்டுஇல்லாவிடில்உன்னையும்உன்னிட ஆனையையும் யமபட்டணத்திற்கு அனுப்புவேனென்று சொல்லுகிற சுவாமியின்வார்த்தையைகேட்டுகோபங்கொண்டந்தயானையை ஸ்ரீகிருஷ்ணன்பேரிலேவினானப்போதந்த மதயானைஓடிவந்து ஸ்ரீகிருஷ்ணனைதுதிக்கையினாலேபிடித்திழுக்க அதைமெள்ளவிடுவித்துக்கொண்டு அந்தகஜத்தைக்காலாலுதைத்து அதின் காலின்தானே மறைந்துகொண்டார்அப்போதுயானை வெகுகோபங்கொண்டுகாலின்கீழே மறைந்திருக்கிற சுவாமியை திரும்பவும்பற்றஅதையும் இலகுவாய் தப்பித்துக்கொண்டு பின்பக்கத்திற்சென்று வாலைப் பிடித்து இருபத்தைந்துவிரற்கிடைதூரமிழுக்கத் திரும்பவும் அதுசுவாமியைப்பிடிக்கடலப்பக்கமாய்வர அப்போது அவர் வாலோடே கூட

வேலோட்டிக்கொண்டு இடப்பக்கமாயிழுக்கார் அப்போத ந்தயானையிடத்தில் திரும்பினல் வலக்கிலும் வலத்தில் திரும்பினல் இடத்திலுமாகச்சற்றுநேரம்அந்தகஜத்து டன்விளையாடிப்பின்பு அந்த கஜத்திற்கெதிராக ஓடிவந் து அதின்தலை மீதில்குத்தி அதின் கையிலகப்படாமலஓ டிப்போனவர்போல க்ஷணப்போது கீழேபடுத்துக்கொ ள்ள அதைப்பார்த்து ஓடிவந்து இரண்டுகொம்பினுலும் முட்ட அதையும் உபாயமாய்த்தப்பித்துக்கொண்டுபின்ன ங்கால்பக்கம் மறைந்துகொள்ளுகிறதும் அதுகண்டுபிடி த்தால் முன்னேஓடிவந்து தலையின்மீதுகுத்தி காதின்ச ந்தில்மறைந்துகொள்ளுகிறதும் இவ்விதமாக அந்தயா னையின்பிரயத்தனம் ஒன்றுஞ் சாயவொட்டாமற்செய்ய அப்பால்அந்த கஜமானதுமாவட்டிக்காரனலேவப்பட்டு மிகவுங்கோபத்துடன் சுவாமியைத் தாத்துகிறபோது சுவாமிஎதிரேவந்து இரண்டுகைகளாலும் அதன் துதிக் கையைப்பிடித்துக் கீழேயின்றி இரண்டுகொம்புகளையு ம்முறித்துக் கொன்றுபோட்டார்,

பின்னும் அதனுடன்வந்த யானைகளையும் மாவட்டிக் காரர்களையுங்கொன்றுபோட்டு உதிரத்தாலும்மதகஜத் தாலும் சரீரமெல்லாம்நனைக்கப்பட்டுஅந்த யானையின் கொம்பைத்தோளினில் சாத்திக்கொண்டு ஸ்ரீ ராமகிரு ஷ்ணனிருவரும் சகலகோபாலர்களுடன் நட்சத்திரங்க ளாற்சூழப்பட்ட சந்திரன்போலும் கம்சனுடையசபை யில் மல்லயுத்தஞ் செய்யவந்தவர்களுக்குவச்சிராயுதம் போலும் பார்க்க வந்தவர்களுக்கு மனேக்கியமாகியும் அந்தப்புரஸ்திரீகளுக்கு மன்மதன்போலும் தேவகீவசு தேவர்களுக்குப்பாலனகியும் கோபாலர்களுக்குத் தோ ழனகியும் கம்சனுக்கும் அவனைச் சார்ந்தவர்களுக்கும் யமன்போலும் கியான மில்லாதவர்களுக்கு மனிதனக வும் யோகிகளுக்குப் பரதேவதையாகவும் யாதவாகளு க்குஈஸ்வரனகியுமிருக்கின்றசுவாமியானவர் குவலயாபீ டமென்கிற யானையைச்சங்கரித்துத்தடங்கலில்லாமல்ச பையில்வருவதைத் தூதர்கள்மூலமாய்க்கம்சன்கேள்வி யுற்று மிகவும்பயத்தையடைந்தனன் அப்பால் சபையி லிருக்கின்றசனங்கள் சுவாமியினுடைய திவ்வியசவுந்தி ரியத்தைப்பார்த்து சிலர் சுவாமியைத்தியானஞ்செய்து கொண்டும் சிலர்அந்தச்சுவாமியின்சரித்திரங்களைநாவி னல்சொல்லிக்கொண்டும் சிலர் கண்ணுற்பார்த்து ஆலி ங்கனஞ்செய்துகொண்டும் சிலர் கோகுலத்தில் செய்த திவ்யசரித்திரங்களெல்லாங் கேட்டிருப்பீர்களே அதுவு ம்போதாமல் இவடத்திற்குவந்து ஒருவராலும் அசைக் கவொண்ணுத வில்லையொடித்ததும் மலைக் கொப்பான குவலயாபீடமென்கிற யானையைச் சங்கரித்ததும்பிரத் தியட்சமாய்ப் பார்த்திருக்கின்றேம் ஆதலால் இந்தஸ்ரீகி ருஷ்ணன்ஸ்ரீமந்நாராயணனென்றும் பலராமன் ஆதிசே டனகவு மிருக்கவேண்டுமென்றும் மதுராபட்டணத்து ஜனங்கள் சொல்லிக்கொண்டிருக்கையில் அந்தச் சபை யில்நானவிதவாத்தியங்களுடன் வந்திருக்கிற முஷ்டிக னுமசாணூரனும் ஸ்ரீ கிருஷணனைநோக்கி நீங்களிருவ ரும்கைசண்டையில் மெத்தக் கெட்டிக்காரர்களென்று இராஜாகேள்வியுற்று உங்களை வரவழைத்தார் நீங்களு ம்நாமும் கைசண்டைபோடுவோம் அதைப்பார்த்துகம் சன்சந்தோஷிக்கட்டு மென்று சொல்லுகின்ற சாணூர னைநோக்கி ஸ்ரீகிருஷ்ணன் நாங்களிருவரும் பாலர்களா கியும் யுத்தசிட்சையில்லாதவர்களாயு மிருப்பதால் எங் களுக்குச் சமானமானவர்களுடன் நாங்கள் யுத்தஞ்செ ய்கிறேமென்று கூறுகின்ற சுவாமியை நோக்கிமகாப்பி ரபலமானவில்லைவளைத்து இருதுண்டாகஒடித்தும்மலை போன்ற குவலயாபீடத்தைப்பரிகாசமாய்ச் சங்கரித்ததி னலேஉங்கள் பலத்தைத்தெரிந்துகொண்டேன் பலரா மனுடன்முஷ்டிகனும் என்னேடே நீயும் யுத்தஞ்செய் யவேண்டுமென்று ஸ்ரீ கிருஷ்ணனைப்பார்த்து சாணூர ன்சொன்னன்.

## சச-வது-அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்,

தம்பிசாணூரனெடும் தமையன்முஷ்டிகன் தன்னெடும்
வெம்பிடப்போர்புரிந்து விளைந்தவர்களைச்சேதித்து
தம்பியர்கம்சன்றன்னைச் சங்கரித்தவர்க்குச்செய்யும்
சம்பிரமக்கருமந்தன்னைச் சாங்கமாய்ச்செய்தல்சாற்றும்

ஸ்ரீகிருஷ்ணன் சாணூரனுடனும்பலராமர் முஷ்டிக னுடனும் போர்செய்து அவர்களைக்கொன்றதும் பின்பு கம்சனையும் அவன்சகோதரர்களையும் சங்கரித்து அவர் களுக்குச்செய்யவேண்டிய உத்தரகிரியைகளை நிறைவே ற்றினதும்வசுதேவர் தேவகிமுதலியவர்களை காராக்கி ரகத்திலிருந்து வெளிப்படுத்தியதுஞ்சொல்லுகின்றன.

கண்ணனுக்கும்-சாணூரனுக்கும்- உயுத்தம்.

கேளீர் பரதவம்சோற்பவனை பரிட்சித்து மகாராச னேஇப்படி சாணூரனலழைக்கப்பட்ட ஸ்ரீகிருஷ்ணனு ம்முஷ்டிகன லழைக்கப்பட்ட பலராமனும் யுத்தத்திற் குயத்தனப்பட்டார்கள அவர்களைப்பார்த்துகைகளைத்த ட்டிதுடைகளை அறைந்து தோள்களைத் தட்டிக்கொண் டோடிவந்து ஸ்ரீ ராமகிருஷ்ணனிருவரையும் இரண்டு கைகளினலே கட்டிப்பிடித்துஇறுக்கிஇழுத்துக்கொண் டும்விட்டும் ஒருவருக்கொருவர் இடசாரிவலசாரியாய்ச் சுற்றி வெகுவாய்கட்டியிழுத்துக்கொண்டுகால்களால்கா ல்களையுங்கைகளால் கைகளையும்பின்னி அதுகளை ஒரு வர்க்கொருவா லாகவமாய் விடுவித்துக்கொண்டும் ஒரு வரையொருவர் கொல்லவேண்டுமென்று சந்திபார்த்து ஒருவருடையகருத்தை ஒருவருக்குத் தெரியவொட்டா மல்தலைகளால் தலைகளைமுட்டியும் முழங்கால்களால்மு

ருகால்களை ஜீத்தும் மாரோடே மார்முஷ்டியினால் கு
த்தியும் ஒருவர்க்கொருவர் வெகுதூரந்தள்ளியும்ஒருவ
ர்க்கொருவர் ஆகாசத்தில்தூக்கிகீழே போட்டும் கைக
ளால்சலியாமல் பிண்டாகாரமாய்க்கட்டிக்கொண்டுஒரு
வனையொருவன் பலத்தினால் திமிரியும் சரீரமெல்லாம்
வேதனையுண்டாகும்படியான திவ்யசவுந்தரியமுள்ளஸ்ரீ
ராமகிருஷ்ணளிருவரும மல்லயுத்தஞ்செய்கிறதைப்ப
ட்டணத்து ஸ்திரீகள்கண்டு ஒருவர்க்கொருவர் இந்தரா
ஜசபையில் வந்திருக்கிறவர்கள் மிகவும்அன்னியாயம்ப
ண்ணுகிறார்கள், வச்சிராயுதம்போலக் கடினமாயும்மலே
போலும் பருத்துமிருக்கிற சரீரத்தையுடையமல்லாளு
க்கும்மெதுவாய் திவ்வியசவுந்தரியத்தோடே கூடிய மு
கத்தையுடைய ஸ்ரீராமகிருஷ்ணனுக்கும் யுத்தஞ் சரிப்
படுமோஇப்படிப்பட்ட அன்னியாயத்தை இராசாவான
வன்பண்ணச்சொன்னால் அதை இந்தச்சபையிலிருக்கி
றவர்கள வேண்டாமென்றுசொல்லாமல் உபேடிசைசெ
ய்கிறார்களேஇவர்களுக்கு மகத்தாகியபாபமுண்டுசபை
யிலிருக்கிறவர்கள் கியான வைராக்கியத்துடனும் பக்ஷ
பாதமில்லாமலும் வித்தியாவான்களாயும் சத்தியசந்தர்
களாயும்அகங்காரமுதலியதுக ளில்லா தவர்களாயும்தர்
ம்மாதர்மங்களைஉபதேசிக்கத் தக்கவர்களாயுமிருக்கவே
ண்டும் அப்படிப்பட்டசபையில்இருக்கவேண்டுமேயன்
றிஇந்தச்சபையி லிருக்கக்கூடாதென்றுவிசனப்படுகிற
ஸ்திரீகளின் வார்த்தையை வசுதேவதேவகிகள் கேட்டு
பசகளுக்கெங்கே அபாயம் நேரிடுகிறதோவென்று மிக
வும்விசனப்பட்டுக்கொண் டிருந்தார்கள்.

அந்தச்சமயத்தில் சாணூரனை சுவாமிஒருகுத்து குத்
தினார். அப்போதுமிகவும் இளப்படைந்து பெருமூச்சு
விட்டு கண்தெரியாமல்மூர்ச்சித்து அப்பால்சப்பிராணி
த்துகைகளை உருட்டிப்பிடித்து மிகவும்வேகத்தோடே
பருந்தானது மாமிசத்தைத்தூக்குவதுபோல ஓடிவந்து
சுவாமியினுடைய மார்பினில்குத்தினான் அதைப்புஷ்ப
மாலையாலடிக்கப்பட்ட யானையைப்போலச்சட்டை பண்
ணாமல் அவனைஇரண்டு கைகளையும் பிடித்துத்தூக்கிகி
றுகிறுவென்றுசுற்றி பூமியில்மோதினார்அந்தச்சாணூர
ன்வாயினில் ரத்தங்களைக்கக்கிக் கண் விழிபிதுங்கி நாக்
கைக்கடித்து பிராணனை யிழந்துவிழுந்தனன் முஷ்டிக
னும்பலராமனால்மார்பினில் குத்தப்பட்டுஇரத்தங்களை
க்கக்கிக்கீழேவிழுந்து ஹதமானான் அவர்களோடிருந்த
கூடனென்கிற மல்லனை பலராமனும் சலபனையுந் தோ
சலனையும் ஸ்ரீகிருஷ்ணன்கால்களைப்பிடித்துக் கிழித்து
த்போட்டார். பின்னும்அவர்களோடேகூடவந்தவர்கள்
பட்த்தையடைந்து பிராணனிருந்தால் போதுமென்று
திக்குகள்தோறும் ஓடிப்போனார்கள்.

பின்புராமகிருஷ்ண ளிருவருங்கோபாலர்களோடே
விளையாடிக் கொண்டிருக்கிறதை சகலரும் பார்த்து சந்
தோஷக்கர்கள் அப்போதுராசாவானகம்சனுடையவம்மி
கவுாயயத்தைஅடைந்து படாளேநோக்கிதுஷ்டர்களான
வசுதேவகுமாரர்களை அவர்களிடதோழன்மார்களுடன்
இந்தப் பட்டணத்தை விட்டுத்துரத்தி அவர்களுடைய
சொத்துக்களையெல்லாம் பிடுங்கிக்கொள்ளுங்கள் புத்தியி
ல்லாத நந்தகோபனைக் காவற்படுத்தி சாதுவைப்போலி
ருக்கிறவசுதேவனையும்உக்கிரசேனனையுங் கொல்லுங்க
ளென்று ஆக்கியாபிக்கிறகம்சன் வார்த்தையைக்கேட்டு
சுவாமியானவர் மிகவுங் கோபத்துடன் யுத்தரங்கத்தை
விட்டுஆகாயத்தில் கிளம்பிகம்சன் உட்கார்ந்துகொண்டி
ருக்கிற ஆசனத்தில்குதித்தார் அவரைகம்சன் கண்டுப
யந்துதனக்குமிருத்தியு சமீபித்ததென்று தெரிந்துஅந்
தஆசனத்தைவிட்டு எழுந்திருந்து கத்தி கேடயத்தைக்
கையிலெடுத்துக்கொண்டு பருந்தானது ஆகாயத்தில்இ
டதுபக்கமாயும் வலதுபக்கமாயுஞ் சுற்றுவதுபோலப்பூ
மியில்சுற்றிக்கொண்டிருக்கிற கம்சனை ஒருவராலும்சகி
க்கவொண்ணாத வேகத்துடன்கூடின சுவாமியானவர் அவ
னைப்பலவந்தமாய்ப்பிடித்து கிரீடத்தைக் கீழேதள்ளித
லைமயிரைச்சுற்றிக்கொண்டுபுற்றிலிருந்து வெளிப்பட்ட
மகாநாகத்தைக் கருடன்அபகரித்ததுபோல அந்ததுஷ்
டனை கம்சனைப்பிடித்து யுத்தபூமியில் இழுத்துத்தள்
ளினார் அப்போதுகம்சன் அந்தவேகம் பொறுக்கமாட்
டாமல் பிராணனையிழந்தான்.

அவனுக்குப் பிராணன்போயும் சுவாமிக்குக்கோபம
அடங்காமல் யுத்தபூமியெல்லாம் இழுத்துவிட்டார் அ
ந்தககம்சன் சுவாமியைப் பகைவனென்றுஎது சார்வகா
லமும் நினைத்துக்கொண் டிருந்தபடியால் ஸ்ரீ பகவானு
டையசாருப்பியத்தை அடைந்தான். அப்போது சபை
யிலிருக்கிறவர்களெல்லாருங் கம்சன் இறந்துபோனதற்
கு ஆச்சரியப்பட்டுக்கொண்டிருந்தார்கள இப்படி கம்ச
ன்இறந்துபோனசங்கதி அவன் சகோதரர்கள்எட்டுபே
ருங்கேழ்வியுற்று சகிக்கமாட்டாமல் ஸ்ரீ ராமகிருஷ்ண
னுடன்யுத்தத்திற்கு வந்துசூழ்ந்துகொண்டார்கள் அப்
போது பலராமன்பரிகமென்கிற ஆயுதத்தினால்க்ஷணப்
போதில் அவர்களைச்சங்கரித்துப்போட்டார்அப்போது
பிரமன் ருத்திரர்முதலியதேவர்கள் புஷ்பமாரிசொரி
ந்துதுந்துபிவாத்தியமடித்து கோலாகலமாய் சந்தோஷி
த்தார்கள். அப்போ இராமகிருஷ்ணளிருவரும்யுத்தபூ
மியில் விளையாடிக கொண்டிருந்தார்கள். பிறகு கம்சன்
முதலியவர்களுடைய மனைவியர்க ளிந்தச் சங்கதியைக்
கேழ்வியுற்று எல்லாருந் துக்கப்பட்டுக்கொண்டு யுத்த
பூமிக்குவந்தார்கள் அவர்களில் கம்சனுடைய மனைவிய
ர்கள்அந்தக் கம்சனை நோக்கி எங்களுக் கிஷ்டனுகியும்
சகல தர்மங்களையும் அறிந்த நீர் வொரு அபராதமுஞ்
செய்யா திருந்த சிசுக்களைச் சங்கரித்த தோஷத்தா

லந்தஆபத்தையடைந்தீர் உம்மைப்பறிகொடுத்துஇராச்சியத்தையுமிழந்து வைதவியத்தையடைந்த நாங்களும் மரித்தவர்களேயன்றிவேறில்லையென்று நானுவிதமாகச் சொல்லிக்கொண்டு விசனப்படுகிறவர்களை ஸ்ரீகிருஷ்ணன்சமாதானஞ்செய்து மரணத்தையடைந்தவர்களுக்கு சமஸ்காரமுதலியதுகள் செய்யச்சொல்லி ஆக்கியாபித்து தம்மிட தாய்தந்தை முதலியவர்களைக் காவலில்நின்றும் விடுவித்து அவர்களைச் சாஷ்டாங்கமாகத் தண்டனிட்டு பயபக்தியோடே கைகட்டிஎதிரே நின்றார்கள் அவர்களைச்சர்வலோகேஸ்வரர்களென்று தெரிந்துகொண்டு அவர்களை அருகிலழைத்துக் கட்டிக்கொண்டு மிகவும் ஆனந்தத்தையடைந்தார்கள் அப்போது ஸ்ரீராமகிருஷ்ணளிருவரும் மாதாபிதாக்களைபின்னுந்தெண்டனிட்டு கைகூப்பிக்கொண்டுபக்கத்தில்நின்றார்கள்.

## ௪௫-வது-அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அகமதிலன்புகூர்ந்து அரிகிருஷ்ணளிருவராஞோர்
சகம்புகழ்தந்தைதாயைச் சமாதானஞ்செய்துபின்பு, ப
கைவனையொருமையாக்கிப்பண்புடனேசஞ்செய்து, வ
கையிலாதிறந்தபுத்திரன் வந்ததும்வழுத்துவாமே;

ஸ்ரீராமகிருஷ்ணளிருவரும் வசுதேவதேவகிகளைச்சமாதானஞ்செய்ததும் தாங்கள்சகதீஸ்வரா ளென்பதை ஒருவருக்குந் தெரிவிக்காமல் மாயையால்மறைந்திருப்பதும்உக்கிரசேனமகாராசாவைஅரசாட்சிசெய்யச்சொன்னதும் வாயுவுபகவான் தேவலோகத்திலிருக்கிற சுதர்மமென்கிறசபையை மதுராபுரிக்குக் கொண்டுவந்ததும் கம்சனால்துறத்தப்பட்டிருந்து பந்துக்களை வரவழைத்துககொண்டதும் கோபாலர்களுக்குதாம்வசுதேவபுத்திரனென்றுதெரிவித்ததும் சாந்தீபனிடத்தில்வித்தியாப்பியாசஞ்செய்து அவருடைய இறந்துபோன புத்திரனைக்கொண்டுவந்து கொடுத்ததுஞ் சொல்லப் படுகின்றன.

கேளீர்உத்தரகுமாரனே இப்படிபயபக்தியுடன் நிற்கிற ஸ்ரீராமகிருஷ்ணளைவசுதேவகிகள்ஜகதீசுவரர்களென்றெண்ணியிருந்தார்கள் அதைசர்வக்கியரான சுவாமிதெரிந்துகொண்டு இவர்களுக்கிப்பவே நம்மிடத்தில் ஈஸ்வரபக்திஉண்டாயிற்றானல் இல்லற வாழ்க்கையை விட்டு யோகமார்க்கத்தை அனுசரிப்பார்கள் இவர்களுடையகியானத்தை மாயையால் மறைக்கச்செய்யவேண்டுமென்று கருதிஅவர்களைநோக்கி மதுரமாய்ஒருவார்த்தைஅருளிச்செய்கின்றார் கேளீர்மாதாபிதாக்களே உங்களுடைய கற்பத்தில்நாங்களிருவரும் புத்திரர்களாகஜனித்தும் எங்களாலுங்களுக் கொருவிதத்திலும்சவுக்கியமில்லாமற்போச்சுது அதுதானில்லாவிட்டாலும் நாங்கள் சிசுக்களாயிருக்கிறகாலையில் என்னென்னவிளையாடல்களைச்செய்தோமோ அதுகளையும்நீங்கள்கண்ணினுற்பார்க்கவுமில்லையேஉலகத்தில்சிசுக்கள் தாய்தந்தையர்களுக்குச்சந்தோஷத்தை யுண்டுபண்ணி அவர்கள்சீராட்டுகிறதற்குப் பாத்திரர்களாயிருந்து சுகத்தை அடைவார்கள் அப்படியிருக்கநாங்கள்உங்களைவிட்டுப் பிரிந்து காட்டிலேயில் இத்தனைநாள் வெகுகஷ்டங்களை யனுபவித்தும் எங்களுக்குமகத்தானதர்ம்மலோபமும் வந்தது அதாவதுசகல புருஷார்த்தங்களையும் சம்பாதிக்கிறதற்கு முக்கியசாதனமான தேகத்தையுண்டுபண்ணி அவைகட்கு புத்திவருகிறவரையில்போஷித்தல்முதலாகியதும் செய்தமகோபகாரிகளான தாய்தந்தையர்களுக்கு இவனுடைய புருஷாயனூறும்இடைவிடாமல்பணிவிடை செய்தாலும் அந்தஉபகாரத்திற்குஇணையாகமாட்டாது அப்படிப்பட்ட தாய்தந்தையர்களுக்கு உபசாரஞ் செய்யாமல் உபேட்சைசெய்கிறவனையமதூதாள் அவனுடையமாம்சத்தையேபட்சிக்கச்செய்து நரகங்களை யனுபவிக்கும்படி தொந்தரைசெய்வார்கள் அதன்றியும் விருத்தாளான தாய்தந்தையர்களையும்கற்புள்ள மனைவியர்களையும புத்திரர்களையும் ஆசாரியர்களையும் தன்னைச்சரணமடைந்தவர்களையும்பிராமணர்களையும் ஆகிய இவர்களை இரட்சிக்கசக்தியிருந்தும் உபேட்சைசெய்கிறவன் செத்தவனுக்குசசமானன் இவ்விஷயங்களெல்லாந் தெரிந்திருந்தாலும் நாங்களகம்சனுடைய பயங்கரத்தினால் உங்களுக்குப்பணிவிடை செய்யாமலிருந்தோம் இதைப் பொறுத்துக்கொள்ளவேண்டுமென்றுபிரதட்சணஞ்செய்துநமஸ்கரித்த பிள்ளைகளை வாரியெடுத்து மடியினில் வைத்துக்கொண்டு ஆனந்தபரவசத்தை அடைந்தார்கள். இப்படிஅவர்களுக்குத்தங்களுடைய சொரூபகியாபகம் வராமலிருக்கும்படியான வார்த்தைகளைச்சொல்லிசமாதானஞ்செய்து மாதாமகனைஉக்கிரசேன மகாராசாவின்அருகிற்சென்றுஅவனைநமஸ்கரித்து அவனை நோக்கி உம்முடையபுத்திரன் அசுரனாகையால் அநேகம்பசுக்களையும் பிராம்மணர்களையும்சிசுக்களையும்சங்கரித்ததோஷத்தால் அற்பாயுளையடைந்தான் அவனுக்காகத்துக்கிக்கவேண்டாம் நீரினிமேல்இராச்சியபரிபாலனஞ்செய்யவேண்டுமென்று மிகுந்தவணக்கத்துடன் சொல்லிஅவனைச்சிங்காதனத்திலிருக்கசெய்து பட்டாபிஷேகஞ்செய்து யாதவர்களுக்குசசிங்காதன மில்லாமற்போகக்கடவதென்று யயாதிமகாராசா சபித்திருந்தாலும் என்னைப்போலொத்தசேவகன் உமக்கிருக்கும்போதுஅந்தச்சாபமும் உம்மைஇனியணுகாதுஇந்திரன்கூடகப்பங்கட்டுவானென்றுசொல்லி உக்கிர சேனருக்கு எதிராகவேவாயுபகவானைவரவழைத்துநீதேவேந்திரனிடத்திற்குச்சென்று நான்சொன்னதாகஉக்கிரசேனமகாராஜாவு

க்குசுதர்மமென்கிறசபை வேண்டியிருக்குதென்றுசொல்லி கொண்டுவாவென்றாக்கியாபிக்க அவனுமப்படியே இந்திரனிடத்திற்சென்று ஸ்ரீகிருஷ்ணசுவாமி ஆக்கியாபித்தசங்கதியைச்சொல்லஅதைக்கேட்டுதேவேந்திரன் ஸ்ரீகிருஷ்ணஸ்வாமியினுடைய பிரபாவத்தைஅறிந்தவனாகையால் அப்படியேவாய்வுபகவானிடத்தில். அநேகயோசனை தூரம்விசாலமாகியநவரத்தினஸ்தம்பங்களோடுங்கூடிய எவ்விடத்தில்வைத்தாலும்அந்தஇடத்திற்குத்தகுந்தபடி பொருந்தும்படியான தன்மையுள்ள தேவதாநிர்மாணமான அந்தச்சுதர்மமென்கிறசபையைக்கொடுத்தனுப்பினான் வாய்வுபகவானும்அந்தச்சபையைஉக்கிரசேனமகாராசாவினது அரண்மனையிற்கொண்டுவந்துவைத்தான்

பிறகுஉக்கிரசேனமகாராசாவும் அந்தச்சுதர்ம்மமென்கிறசபையிலிருந்து ஸ்ரீகிருஷ்ணஸ்வாமியினதுஉதவியின்பேரில் அரசாட்சிசெய்துகொண்டுவந்தார் ஸ்ரீசநார்த்தரான-சுவாமியானவர் கம்சனுடையபயத்தினால்தேசாந்திரம் ஓடிப்போனபந்துக்களைவரவழைத்துகம்சனால்பகரிக்கப்பட்ட சொத்துக்கள் யாவையும் அவர்களுக்குக்கொடுத்து சாதோஷிக்கச்செய்து ஸ்ரீராமகிருஷ்ணாளிருவரும் நந்தகோபரிருக்கிற உபவனத்திற்குச் சென்று அவரைஆலிங்கனஞ்செய்து ஒருவார்த்தைஅருளிச்செய்கிறார்கள் கேளிர்பிதாவான நந்தகோபரே கம்சனுடையபயத்தால்வசுதேவரானவர் என்னைஉங்கள்கிரகத்தில்கொண்டுவந்துவிட்டார் அதுமுதல்உம்மாலும் மாதாவான யசோதாதேவியாலும்உங்களாத்மாவைக்காட்டிலும் விசேஷஅன்புவைத்து எங்களைப்போஷித்தபடியால் நீங்களேதாய்தந்தையர்கள் ஆகையால்உங்களைநான் ஒருக்காலும்மறக்கமாட்டேன் நீங்களிப்போது கோகுலஞ்செல்லுங்கள் நான்சிலநாள்சென்றுவருகிறேனென்று சொல்லிஅவர்களுக்கும் அவர்களோடே கூடவந்தகோபாலர்களும் திவ்யமான ஆடையாபரணங்களைக் கொடுத்து ஆலிங்கனஞ்செய்யஅவர்கள்ஸ்ரீகிருஷ்ணனைப்பிரியமாட்டாமல் விசனத்துடன்நந்தகோபர் ஸ்ரீராமகிருஷ்ணாளிருவரையும் மடியில்வைத்துஉச்சிமுகந்து ஆலிங்கனஞ்செய்து அவர்களாலனுப்பிவிக்கப்பட்டுக்கொண்டு சகலகோபாலர்களுடன் கோகுலஞ்சென்றனர்.

பிறகுவசுதேவரானவர் யாதவர்களுக்கு புரோகிதரானகற்காசாரியரைவரவழைத்து ஸ்ரீராமகிருஷ்ணாளிருவருக்கும்உபநயனஞ்செய்து பிராமணர்களுக்கும்அநேகம் பசுக்களும் சொர்னங்களும் வஸ்திரம்பூரி முதலியதுகளை அபரிமிதம்மாகக்கொடுத்து போசனஞ்செய்வித்தும் கற்காசாரியருக்கும்அநேகஆடையாபரணங்களைக்கொடுத்துபோசனஞ்செய்வித்துதிருப்திசெய்தனர் இப்படிஉபாயன மானபிற்பாடு ஸ்ரீராமகிருஷ்ணாளிருவரும் பிர்ம்மசரியவிரதத்தைஅனுசரித்து கற்காசாரியருக்குப் பணிவிடைசெய்துகொண்டிருக்கும்போது குருகுலவாசஞ்செய்து வித்தியாசஞ்செயய நிச்சயித்து அவந்திதேசத்தில்வாசஞ் செய்கிறவராகியும் வேதங்களையும் சாஸ்திரங்களையும் உபநிஷத்துக்களையும் தனுர்வேதம் முதலிய சகலகலைகளையுணர்ந்த சாந்தீபினி யென்னும் நாமத்தையுடைய பிராம்மணரிடத்திற்சென்று சாஷ்டாங்கமாகத்தெண்டனிட்டுகைகூப்பிகொண்டு ஒருவார்த்தைசொல்லுகிறார்கள் கேளிர்சுவாமிமகானுபாவரே நாங்களிருவரும் வசுதேவர்புத்திரர்கள்எங்களுக்குஇராமகிருஷ்ணர்களென்றுபெயர் நாங்களிருவரும்-தேவரீரிடத்தில்வித்தியாப்பியாசஞ்செய்ய வந்தோமென்று விண்ணப்பஞ்செய்ய அவர்கள்வார்த்தைகளைக்கேள்வியுற்று இவர்களைப்பார்க்கிறபோது சகலவித்தைகளும் இவர்களுக்குச்சொல்லவேண்டுமென்றுகருதி அவர்களுக்குநான்குவேதங்களையும் ஆறுசாஸ்திரங்களையும்சகல உபநிடதங்களையும் பிரயோகசாஸ்திரம்அன்னூறும் உபசங்காரசாஸ்திரமஅந்நூறும்அதினுடையமந்திரங்களையும் மனுஸ்மிருதிமுதலிய தர்மசாஸதிரங்களையும்ஆறுவிதங்களான இராசநீதிகளையும்ஒருதிரஞ்சொல்ல அதிககூர்மைபொருந்திய புத்தியுள்ளவர்களாகையால்ஒருநாளைக்கு ஒருவித்தையாக அறுபத்துநாலுநாளில் அறுபத்துநாலுகலைகளையும் உணர்ந்துஸ்ரீராமகிருஷ்ணர்களிருவரும்அந்தசாந்தீபினியைநோக்கிஒருவார்த்தைஅருளிச்செய்கிறார்கள் கேளிர்சுவாமிதேவரீருடைய அனுக்கிரகப்பிரபாவத்தினால்சகலகலைகளையுங் கற்றுணர்ந்தோம் இனிமேலெங்களிடத்தில கிருபைகூர்ந்து தேவரீருக்குவேண்டியதைக்கேட்கவேண்டுமென்று வினவுகின்றஸ்ரீராமகிருஷ்ணர்களுடைய முகத்தையுற்றுப்பார்த்துசாந்தீபினியானவர் அவர்களுடையவார்த்தைகளையும்அதிமானிடகிருத்தியங்களையும் யோசித்துணர்ந்து இவர்கள் ஜகதீஸ்வரர்களென்று நிச்சயித்து அவர்களைநோக்கி ஒருவார்த்தை அருளிச்செய்கின்றனர் எனதுபுத்திரன்பிரபாகதீர்த்தத்தில மரணத்தை அடைந்தான் அவனைக் கொண்டுவந்து கொடுப்பதேகுருதட்சணையென்றுசொல்லஅதற்கிசைந்து உத்தரவுபெற்றுக்கொண்டு ஸ்ரீராமகிருஷ்ணர்களிருவரும் இரதத்தின்மீதேறிக் கொண்டு பிரபாகதீர்த்தத்திற்கு நின்றார்கள்இதையறிந்த வருணனானவன் அதிகவேகத்தோடு ஓடிவந்து அர்க்கிய பாத்தியம்முதலியவற்றால் பூசித்துகைகளைக் கூப்பிட்டுக்கொண்டு நிற்கிறவருணனைப்பார்த்து ஸ்ரீகிருஷ்ணன்ஒருவார்த்தைஅருளிச்செய்கின்றனர்.

கேளாய் வருணாமுன்பு பிரபாகதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்யவந்த சாந்தீபியினது குமாரன் இறந்துபோனானே அவன் எனது குருபுத்திரனாகையா

ல்அவனை குருதக்ஷிணையாகக் கொடுக்கவேண்டுமென்று சொல்லி அவனைச்சீக்கிரத்திற் கொண்டுவந்து விடவேண்டுமென்றுசொல்ல அந்தவார்த்தையைக்கேட்டு வருணனானவன் ஸ்ரீபுண்டரீகாட்சனைகணணபிரானைநோக்கிதேவரீருடைய குருபுத்திரனைநான்காணவில்லைசமுத்திரத்தில சங் குருவமாயிருக்கின்ற பஞ்சஜனென்கிற அசுரன்உமது குருபுத்திரனைச்சங்கரித்தான் இவ்வசுரனைச்சம்மரிக்க என்னலாகாதுதேவரீரேஅவனைச்சம்ஹரிக்கவேண்டுமென்றுசொல்லவருணனுடையவார்த்தையைக்கேட்டு பலதேவனை இரதத்திலேயேநிறுத்திவிட்டுசர்வலோகேஸ்வரனை ஸ்ரீகிருஷ்ணசுவாமியானவர்கீழேயிறங்கி சமுத்திரத்திற்பிரவேசித்து அந்தப்பஞ்சஜனைச்சங்கரித்துக் கிழித்துப்பார்க்கையில் தம்மிடகுருபுத்திரன் அவனிடத்தில்தோற்றவில்லை, அவனுடையசரீரமாகியசங்கை எடுத்துக்கொண்டு திரும்பவும் இரதத்தின்மீதேறி பலபத்திரருடன் சையம்நீஎன்கிற யமபட்டணத்திற்குச்சென்று பாஞ்சசன்னியமென்கிற சங்கத்தைப்பூரிததார் அந்தத்தொனியைக்கேட்டு யமதர்மராசன்ஓடிவந்து அர்க்கியபாத்தியாதி பூசையால் உபசரித்துத்தெண்டனிட்டுதுதிசெய்துசுவாமியைப்பார்த்துதேவரீரெழுந்தருளினகாரியத்தை இன்னதென்றுஅடியேனுக்கு ஆக்கியாபிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கயமதர்மனைநோக்கி வாராய்தர்மராசனே எனது குருவாகிய சாந்தீபினியின் குமாரன்பூர்வத்தில் தன் கர்மவசத்தால் மரணத்தையடைந்திருந்தாலும் என்னுடையஅருளால் பிழைத்திருப்பான் அவனைச் சீக்கிரத்தில் கொண்டுவரவேண்டுமென்று ஆக்கியாபித்தனர். அந்தக்ஷணம் யமதருமனும் அந்தப்புத்திரனை யழைத்துவந்து சுவாமியினுடையசமீபத்தில் விட்டனன்அவனையும்இரதத்திலேற்றிக்கொண்டுவந்து சாந்தீபினியின் அருகிற்சென்றுபிரதட்சணஞ்செய்து நமஸ்கரித்துகைகூப்பி உமது கிருபையால் பிரபாகதீர்த்தத்தில் இறந்துபோன குமாரனைக்கொண்டுவந்தோம் அங்கீகரிக்கவேண்டுமென்று குருதக்ஷிணையாகக் கொடுத்து இன்னமும் வேண்டியதைக் கேளுமென்றுசொல்ல ஸ்ரீகிருஷ்ணனைப்பார்த்து சாந்தீபினிசொல்லுகின்றனர்.

கேளிர் பாலகுமாரர்களே இறந்துபோனஎனது புத்திரனைக்கொண்டுவந்து கொடுத்ததேபோதுமானதென்றுசந்தோஷித்து உங்களுக்குக்கீர்த்தியும்நன்மையும்ஆரோக்கியமும் மென்மேலுமுண்டாகக் கடவதென்றுஅனுக்கிரகித்து இனிஉங்கள் கிரகத்திற்குப் போகலாமென்றுவிடைகொடுக்க குருவினுடைய உத்தரவின்படி இரதாரூடர்களாய்வருகின்ற ஸ்ரீ ராமகிருஷ்ணர்களை மதுரையிலிருக்கின்ற ஜனங்கள் பார்த்து சந்தோஷத்தை யடைந்தார்கள்,

---

## ௪௯ - வது- அத்தியாயம்.

---

அறுசீரடியாசிரியவிருத்தம்,

புத்தியான்மிகுந்தகிருஷ்ண பூபதியானோர்நல்ல
உத்தவைவரவழைத்து வுடனேகோகுலத்திற்சென்று
முத்தணியசோலைநந்த கோபாலமுதலியோரை [வாம்
சித்தமொத்திருக்கச்செய்த செய்திகளனைத்துஞ்சொல்

ஸ்ரீகிருஷ்ணசுவாமியானவர்தமக்கு ஆந்தரங்கபக்தனைஉத்தவைவரவழைத்து கோகுலத்திற்குஅனுப்பிநந்தகோபர்முதலிய கோபாலர்களையும் யசோதை முதலிய கோபிகைகளையும் சமாதானஞ்செய்ததைச் சொல்லுகின்றன,

கேளிர் வசுந்தராதிபனைப்ரிட்சித்துமகாராஜனே இல்லறவாழ்க்கையைவிட்டு தம்மிடத்தில் அன்புசெலுத்துகிறவர்களுடைய யோகக்ஷேமத்தைவகிப்பதேசுபாவமாகஉடைய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் கோகுலத்திலிருக்கிற நந்தகோபரிடத்திலும் யசோதாப்பிராட்டியாரிடத்திலும் இல்வாழ்க்கையைவிட்டு தம்மிடத்தில் பரதேவதாபக்தி பண்ணவிட்டாலும் பர்த்தா வென்கிறபுத்தியால்சார்வகாலமுந் தியானித்துக்கொண் டிருக்கின்ற கோபிகைகளிடத்திலும் அன்புகூர்ந்து அவர்களுக்குச் சந்தோஷம் வரும்படியாய்ச் சமாதானஞ்சொல்லி அனுப்பவேண்டுமென்றுகருதி யாதவர்களுக்கெல்லாம் சிறந்தவராயும பிரகஸ்பதிக்குசிஷ்யனையும் புத்திமான்களுக்குள்சிரேஷ்டராயும்தமக்குமந்திரியாயும்அந்தரங்கதோழனையுமிருக்கின்ற உத்தவனைஏகாந்தத்தில் கையைப்பிடித்து அழைத்துககொண்டுபோய் புன்னகையுடனுங் கொஞ்சஞ் சங்கோசத்துடனும் அவனைப்பார்த்து ஒரு வார்த்தை அருளிச்செய்கின்றனர்;

கேளிர் உத்தவரே நீர்கோகுலத்திற்சென்றுஎன்தாய் தந்தையர்களையும் நம்மைவிட்டுப்பிரிந்துகிலேசப்படுகிறகோபஸ்திரீகளையும் நான் இன்னங் கொஞ்சநாளிலே வருகிறேனென்று சொன்னதாய்த் தேறுதல்கள்சொல்லிவரவேண்டுமென்று ஆக்கியாபித்தனர், அப்போ தந்தஸ்ரீபகவானுடைய கருத்தையுணர்ந்து உத்தவரானவர்பிரயாணசித்தராய்த் தேரின்மீதேறிக்கொண்டு வெள்ளிமலைபோலவெளுத்து விளங்குகிற விருஷபங்களாலும்பசுக்களினால்நிறைந்தும் கைலாச பர்வதத்தினுடைய கொடிமுடிகள்போன்றகன்றுகள் எழும்பித்துள்ளிசண்டைபோடுகிறசத்தங்கள் பரிபூரணமாய்நிறைந்தும் சில பசுக்கள்கட்டப்பட்டும் சிலபசுக்களானது தங்கள் வீட்டைஉத்தேசித்து வந்துகொண்டும் சில கோபாலர்களுங்கோபிகைகளுங் கூட்டங்கூட்டமாகக்கூடிஸ்ரீராமகிருஷ்ணர்களுடையமனோகரமானசரித்திரங்களைக் கானம்பண்ணியும் சிலர்பால்கறந்துகொண்டும் சிலர் மங்களஸ்

நாளஞ்செய்து சர்வாலங்கார பூஷிதர்களாய் சூரியன் அக்கினிபிராமஹணர்கள் பிதுருதேவதைகள்முதலியவர்களைப் பிராமணர்களைக்கொண்டு பூசித்து கந்தபுஷ்பதீபங்களினலே உபசரிக்கப்பட்டும் உபவாங்களினல்சூழ்ந்த அலங்காரமாயிருக்கிற கோகுலத்தின் வீதியில்சூரியாஸ்தமனகாலத்தில் வந்தார்,

வருகிறஉத்தவருடையவேகத்தைப்பார்த்துநந்தகோபர்மிகவும சந்தோஷத்தோடே எதிர்கொண்டுவந்துஸ்ரீகிருஷ்ண தூதனென்றுதெரிந்து ஆலிங்கனஞ்செய்துகிரகத்திற்கழைத்துக்கொண்டுபோய்அவரைஸ்ரீகிருஷ்ணனுகப்பாவனைபண்ணி சகலவித பூசைகளுஞ்செய்து மிகவும் பரிசுத்தமான போசனங்களினலே திருப்திசெய்வித்து கந்தபுஷ்பங்களினல்அலஙகரித்து அந்தஉத்தவரைப்பார்த்துநந்தகோபர் ஒருவார்த்தை சொல்லுகிறர்.

வாரீர் தோஷரகிதராகியும் பாகவதோத்தமராகியுமிருக்கிற உத்தவரேஎனக்குத்தோழராகியும் சூர்யகுலோத்துங்கராகியுமிருக்கிற வசுதேவரானவர்பந்தனத்தில்நின்றும் விடுபட்டுபுத்திரர்களோடே சுகமாகவசிக்கின்ருராமகாபாவியான கம்சன் தான்செய்த பாபவசத்திஞல் மரணமடைந்தான ஸ்ரீகிருஷ்ணரானவர் மாதாவான யசோதையையும் பிதாவானஎன்னையும்சகாய்களானகோபாலர்களையும் இந்தக்கோகுலத்தையும் பசுக்களையும்பிருந்தாவனத்தையும் கோவர்த்தன பர்வதத்தையும் எப்போவாகிலும்நினைத்தாரா எங்களைப்பார்க்கிறதற்காகஇன்னமொருதிரம் இவடத்திற்கு வருவாரா அப்போதாகிலும்நாங்களந்த சுவாமியைக்கண்ணுற் பார்ப்போமா தாவாக்கினியால்வந்த இடறிலும்பெருங்காற்றிஞலுண்டானஉபத்திரவங்களிலும் இந்திரனல்நேர்ந்த ஆபத்திலும்ஒவ்வொரு உபத்திரவஙகளாலேயே நாங்கள் மரணத்தையடைவோம் அப்படிப்பட்ட சமயங்களில் இடையூறுவராமல் எங்களைஇரட்சித்த ஸ்ரீ கிருஷ்ணனுடையசரித்திரங்களையும புன்னகையுடன் கூடிய முகாம்புஜத்தையும் சார்வகாலமும நினைத்துக்கொண்டிருக்கின்றஎங்களுக்குஅந்த சுவாமிவிளையாடினபூமியில்திருவடிகளழுந்தியிருப்பதையும் பார்க்கிறபோது மெய்மறந்துஅந்தச்சுவாமியினிடத்திலேயே மனது லயித்துப்போகின்றஒப்பில்லாசசரித்திரங்களை யுடையவர்களான ஸ்ரீராமகிருஷ்ணர்களிரண்டுபேர்களும் அந்தமதுராபுரிக்குப்போய்அவடத்திலும் பதினயிரம்யானைபல முள்ளகம்சனையும் மஹாபலசாலிகளான மல்லர்களையும் குவலையாபீடமென்கிற கஜத்தையும் பின்னும் அநேக இராக்கதரையும்சங்கரித்து கம்சனல்பூஜிக்கப்பட்டிருந்த வில்லையும் முறித்துப்போட்டார். இப்படிப்பட்ட ஆச்சரியமானசரித்திரங்களைச் செய்திருக்கிறபடியால்கற்காசாரியார் சொன்னவண்ணம் அவர்கள சர்வேஸ்வரர்களென்பதற்குச்சந்தேகமில்லையென்று உத்தவரைப்பார்த்து சொல்லி அந்த சுவாமியினிடத்தில்மிகவும் அன்புசெலுத்தினவராகையால்அவரைவிட்டுப் பிரிந்திருக்கிறேமேயென்றுவியசனமுற்றுசோகமேலிட்டு வாய்விட்டாற்றுகின்றநந்தகோபருடன் யசோதாப்பிராட்டியாரும் மிகவும் துக்காக்கிராந்தையாய் ஸ்ரீகிருஷ்ணபகவானுடையசரித்திரங்களைநினைத்துக்கொண்டு கண்ணீர தாரைதாரையாய்ப்பெருகவிட்டுஅழுதனள். இதுகளைப்பார்த்தஉத்தவர் மனம்சகிக்கமாட்டாமல் தாமுங் கொஞ்சம்வியசனமுற்றுகிருஷ்ணசுவாமியருளிச்செய்த சமாதானவார்த்தைகளைஇவர்களைநோக்கி சோகந்தீரும்படிஉரைக்கலுற்ருர்.

வாருங்கள் மகாபுண்பசாலிகளான நந்தகோபயசோதைகளே நீங்களிருவரும் எண்ணிக்கையில்லாத நற்குணங்களையும் பிறர்துக்கித்தால் தேறுதல்சொல்லவல்லவர்களுமான நீங்களேயிப்படி துயரப்படலாமோமேலும்பூமிக்குப் பாரமாயிருக்கின்றஅசுரர்களில்சிலர் தேவர்களால் சாதலில்லாமல் வரம்பெற்றிருப்பதால் அவர்களைச்சங்கரிக்கவேண்டி மகாபாபியாயிருக்கின்றவன் மரணகாலத்தில்தன்னை க்ஷணகாலங் தியானித்தமாத்திரத்தில்அவனுடைய பாபத்தைப்போக்கி சூரியனுக் கொப்பானஒளிவுள்ள விமானருடனைய் அக்ஷயமானபரமபதத்தைஅடையும்படி தந்தருளுகின்ற ஸ்ரீகிருஷ்ணஸ்வாமியானவர்வசுதேவ தேவகிகளிடத்தில் மனிதராகவவதரித்து நீங்கள்தாழ்ந்தசாதியாயிருந்தாலும்பூர்வஞ்செய்தஅருந்தவப்பேற்றல் உங்களிடத்தில் வாசஞ்செய்தனர்அதுவுமபோதாமல்ப்பவுஞ்சுருதிகளாலும்உபநிஷத்துக்களாலும் தேடிக்கண்டுபிடிக்கக்கூடாதஜகதீசனிடத்திலிடைவிடாமல் பக்திசெலுத்துகிறபடியால்உங்களுக்கினிமேல் சம்பாதிக்கவேண்டிய புருஷார்த்தம் ஒன்றுமில்லைசமஸ்தபிராணிகளுடைய இருதயங்களில்வாசஞ்செய்கின்ற சர்வாந்தரியாமியாகையால் உங்களுடையவியசனங்களையுமுணர்ந்து சீக்கிரமத்திலேயேவருவார்.

வாரீர் நந்தகோபரே சமஸ்தபிராணிகளுடையஇருதயத்தில் வாசஞ்செய்கிறது நிஜமானல் எல்லாருக்கும்சமமாகப் பிரத்தியட்ச மாகலாமே யென்றல் தீக்கடைக்கோலில்எப்பொழுதும் அக்கினியிருந்தும் கடைந்தாலன்றிஉதவமாட்டாததுபோலஸ்ரீபகவானும்தியானஞ்செய்தாலன்றி பிரத்தியட்சமாகமாட்டார் அப்படிப்பட்டசுவாமியானவர் வேதங்களாலும் பிரமன்முதலியதேவர்களாலும் அறியவொண்ணுதமகிமையையுடையவராகையால்நம்முடைய பக்தர்களான ஜனங்களெல்லாம் எப்படிஅறிந்து கடைத்தேறப் போகின்றார்களென்று திருவுள்ளங்கொண்டு மச்சாவதாரமுதல் இந்தஸ்ரீகிருஷ்ணவதாரம்வரையிலேயெடுத்த அவதாரமும் கர்மமும்நாமமும்ரூபமும் இதுகளெல்லாம் லீலார்த்தமாகக் கிரகித்துதுஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்செய்தனர் அப்படிப்பட்ட ஈஸ்வரன் உபமுடைய யகிரகத்தில் புத்

நராகவந்திருந்தநீரும் மிகமகிமையுள்ளபராக்கிரமசாலியான ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் உம்மைப்பார்க்கிறதற்காகச் சீக்கிரமாக இந்தக்கோகுலத்திற்கெழுந்தருளப்போகிறாரென்று உத்தவரானவர் நந்தகோபருக்கும் யசோதாபிராட்டியாருக்கும் சமாதானஞ்சொல்லித்தேற்றி அன்றிரவைப்போக்கி மறுநாளுதயமாவதற்குமுன்னம்பரமபாகவதோத்தமர்களான கோபகன்னிகைகளெழுந்திருந்து கைத்தீபங்கொண்டு தங்கள்தங்கள் கிரகங்கடோறும் கோமயஜலங்களினாலே சுத்திசெய்து மொக்குமுதலியதுகளால் அலங்கரித்து தீபங்களைச்சமீபத்தில்வைத்துக்கொண்டு தயிர்கடைய அப்போது தீப ஒளியினால்பிரகாசமுள்ள நவரத்தினங்களாற்செய்த குண்டலங்களும் கைகளிலணிந்திருக்கிற கடகங்களுமசைய தலையிற்சூடிய புஷ்பங்கள்விழ மிகவும் பருத்திருக்கிற கொங்கைகள்குலுங்க மார்பிலணிந்திருக்கிற முத்துச்சரங்கள்சிக்குப்பட உத்தரீயங்கள்ஊசலாட இரண்டுகன்னங்களிலும் சிறுமுத்துபோலவியர்வையுண்டாக அரவிந்த லோசனரான ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய பரமபவித்திரமானசீர்த்தியைக்கானஞ்செய்கிற ஸ்வரமுந்தயிர்கடைகிற தொனியும் உத்தவரானவர்கேழ்வியுற்று மனமகிழ்ச்சிகொண்டு அப்படிப்பட்டசமயத்தில்சகலலோகபூச்சியர்களாகிய பிராம்மணர்களாலே மூன்றுகாலமும் ஆராதிக்கப்படுகின்ற சூரியபகவானுதயமானார்.

உத்தவரானவர் காலையிற்செய்யவேண்டிய நித்தியகர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு மிகவும் உயர்ந்ததாகியும் சூரியனை நிகர்த்தகாந்தியுடனுமிருக்கிற இரதத்தின்மீது வருகிறபோது அதைகண்டு சிலகோபகன்னிகாமணிகள் இந்தஇரதம்எவருடையதோவென்று சந்தேகமுற்று அருகில்வந்துபின்பு மிகவுங் கோபத்தோடொருவருக்கொருவர் கேளுங்களதோழிகளே அக்குரூரனென்றுபெயருடன்கூடியமகத்தானகுரூரன்முன்னாளிவ்விடத்திற்குவந்து நமக்குப்பிராணனாயிருந்த ஸ்ரீகிருஷ்ணபகவானை அழைத்துக் கொண்டுபோனானே அவனிப்போது நமக்குப்பிராணன்போயிருக்குமல்லவாவென்று மதுரையில் ஸ்ரீகிருஷ்ணபகவானால்சங்கரிக்கப்பட்டகம்சனுக்கு உத்தரகிரியைசெய்ய நமது சரீரமாம்சங்களைச்சேகரித்துப் பிண்டப்பிரதானஞ்செய்ய வந்தவனாகத் தோற்றுகின்றது இதைத்தவிர இவ்விடத்தில்வேறுவிதமானகாரியமொன்று மில்லையென்றுசொல்லுகின்றவார்த்தைகளைக்கேட்டுக்கொண்டே உத்தவரானவர்கோகுலத்திற்கு வந்தார்-

## ௪௭-வது- அத்தியாயம்.

கலிவிருத்தம்.

சகலமானகோபிகாசனங்களும்
பகையன்வந்தானெனப்பகர்கின்றதும்
தகைமையாகியவுத்தவனொன்றுதாம்
மிகுகிருஷ்ணன்மதுராபுரிமேவினர்.

ஸ்ரீநந்தவிரஜத்தில் எழுந்தருளி யிருக்கின்ற ஸ்ரீஉத்தவரைசசமஸ்தமானகோபிகாசனங்களுந் தரிசனஞ்செய்து அவரால்ஸ்ரீபகவானுடைய வியோகதாபங்கள்தீர்ந்து மனோநிர்மலமடைந்து விளங்கினார்களென்றும் அந்தப்புண்ணியாங்கனைகளுக்குஅந்த ஸ்ரீஉத்தவரங்குச் சிலநாள் வாசஞ்செய்து ஸ்ரீபகவதுத்தம தத்வார்த்தங்களைப் போதித்துஅவர்களிடத்தில் அனுக்ஞைபெற்றுக்கொண்டு ஸ்ரீராமநகரத்திற்கு வந்து ஸ்ரீபகவானுக்குஸ்ரீகோகுலத்தார் குசலசமாசாரங்களைவிண்ணப்பஞ் செய்தாரென்றுஞ்சொல்லுகின்றது-

ஸ்ரீசுகர்வாக்கியம்

வாரீர்ஸ்ரீபகவத்தத்வார்த்தமானசீகமஹாராசரே மஹாதபஷ் ஸசீலசம்பந்த நிச்சலதத்வார்த்வபுருஷராயும்-ராசரிஷியாயும் ஸ்ரீமகாபாகவதோத்தமராயுமிராநின்றஸ்ரீ உத்தவரானவர் சூரியோதயசமயத்தில் தமது நித்தியானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ஆஜானுபாகு விளம்பனங்களான கரகமலங்களையுடையவராயும் நன்றாயலர்ந்த செந்தாமரைமலர்களைப்போலே மகரகுண்டலங்களையணிந்த காதளாவியசுந்தரநேத்திரங்கள்முதலிய ஞானேந்திரியஸமூதாய முகாரவிந்தத்தையுடையவராயும் ஹாரதராகேயூராதி திவ்யாபரணபத்மமாலாலங்கிருதவிசாலவட்சஸ்தலத்தையுடையவராயும்மஹாகம்பீரகடிதடத்தில் திவ்யபீதாம்பரவஸ்திரதரராயும் மஹாராஜலக்ஷணலட்சிதஜானு அவயவத்தில் வீரகண்டாமணிதரித்தவராயும் நூபுரங்களையணிந்த பதபல்லவங்களை யுடையவராயும் சர்வாலங்காரபூஷிதராயும் புறப்பட்டுச்சமீபத்தில் ஒருகுளிர்ந்தசோலையை நோக்கியெழுந்தருளுகின்றதை அந்தஸ்ரீகோகுலத்திலுள்ளபுண்ணியாங்கனைகளாகிய ஸ்ரீகோபிகாசனங்கள் யாவருங்கண்டு அதிசந்தோஷமானவர்களாய்த் தாங்களொருவர்க்கொருவர் கூடிப்பேசிக்கொண்டார்கள்.

வாருங்கள்சுபாங்கனைகளே இந்தமஹாபுருஷசிரேஷ்டரானவர் நமதுஸ்ரீகண்ணபிரானாகிய ஸ்ரீஅச்சுதருக்குச்சமானமான திவ்யசுந்தரஸ்வரூபத்தையுந் திவ்யபூஷணதிவ்யாம்பரங்களையுடையவராயும் மிகவுஞ்சௌம்மியராயும் திரோத்தமராயுந்தோற்றுகின்றார் மேலும் இந்தத் தந்நியருடையஅனுஷ்டானநடக்கைகளை யோசிக்குமளவில் ஸ்ரீபகவானுக்குமிகுந்த ஆப்தராயும் பிரியபரீதராயும் ஸ்ரீகிருஷ்ணபாதாரவிந்தங்களை ஆஸ்ரயமாகவுடையவராயுந் தோற்றுகின்றாரென்றுபலவாறாகப்பேசிக்கொண்டுஅவர்கள் இனமினமாய்ச்சேர்ந்து மிகவும் பரிசுத்தாந்தக்கரணராகிய ஸ்ரீஉத்தவருடைய சமீபத்திற்குவந்து சிரத்தாபக்தியினயஉபசாரங்களைச்செய்து

நன்றாக அர்ச்சித்துத்தண்டனிட்டு அவருடையமாதுரிய வசனங்களாலேயே அவர் ஸ்ரீராமபதியாகியஸ்ரீகிருஷ்ண பகவானுக்கு மிகவும்ஆப்தசிநேகிதரென்றும் அவரானுக்ஞையினாலெழுந்தருளின புருஷகார ஸ்வரூபவுரானுபாவரென்றுந் தங்கள்மனதுகளங்கமறத்தெளியவறிந்துகொண்டு அவருடையவிலட்சணஸ்வரூபநாமதேயத்தையும் நன்றாகவிசாரித்துக்கொண்டு இந்தஸ்ரீ கோபிகாசனங்கள் யாவருஞ் ஸ்ரீகிருஷ்ணகுணதத்வ மானஸர்களாய் இளநகையாகநகைத்துக்கொண்டு மிகுந்தலச்சையுடன் தங்களினியமதுரவார்த்தைகளால் ஸ்ரீ உத்தவரைப் பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றார்கள்.

ஸ்ரீகோபிகாசனங்களுடைய வாக்கியம்

வாரீர்மகானுபாவராகிய ஸ்ரீஉத்தவரே பரமபுருஷராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் மஹாசுகிருதுக்களாகியதமதுதாய்தந்தைகளைக்குறித்தாவது அவர்களுடைய க்ஷேமசுகாநந்தாதிசயங்களைத் தாமறியும் பொருட்டும் தம்முடைய குசலங்களை அந்தத்தாய்தந்தைகளறிந்து தங்கள் ஹிருதயதாபங்களாறி மனதுகுளிர்ந்து சுகிக்கும் பொருட்டும்ஏழைகளாகியநாங்கள்வாசஞ்செய்கின்றகோபல்லியைக்குறித்தும் இந்தத் ஸ்ரீகோகுலத்திலே ஒருநாளும்பிரவேசியாத மஹாத்மாவாகிய உம்மையனுப்பி எங்களுக்கும்புண்ணியபுருஷ தரிசனங்கிடைக்கும்படி கிருபைசெய்தனரல்லவாவென்று நினைக்கின்றோம் நாங்களும் பூர்வம்ஒருக்காலும் இவ்விடத்தில்உம்மைத்தரிசனஞ்செய்ததேயில்லை நீர்சர்வலோகப்பிரியராகியஸ்ரீபகவானுக்கு ஆப்தபந்துவாகவும் அத்தியந்தம் பிரியசஹாவாகவும் எங்களுக்குத்தோற்றுகின்றீர்.

வாரீர்ஸ்ரீஹரிபதத்தியானமான ஸமஸஹோத்தமரே நாங்களும்பரமகாருணிகராயும் சர்வதோஷ பரிஹார திவ்யகுண போத்ரராயுமிருக்கின்ற ஸ்ரீபகவானை எங்கள் சர்வேந்திரியவியாபகங்களையும் ஸமாப்பித்து ஆஸ்ரயித்திருந்தோம் அந்தஸ்ரீசர்வாஸ்ரயரான ஸ்ரீபகவான்தம்முடையதிருவுள்ளத்தில் என்னசங்கல்பித் திருக்கின்றாரோ எங்களுக்குத்தெரியாதுஇப்பொழுது ஸ்ரீபகவானானவர் மிகவும்பிரியாஸ்ரிதர்களாகியஎங்கள்விஷயத்திலே இந்தப்பிரபஞ்சத்திலுள்ள தருமநிலைப்பிரகாரம ஆதரித்தனரென்று எங்கள்தோஷகுணத்தினால்நாங்கள்சிந்தித்துக்கொண்டிருக்கின்றோம்.

வாரீர் சுசீலராகியஸ்ரீஉத்தவரே இந்த வுலகியற்கையையாதென்றெடுத்துப்பேசுவதுமிகுந்தவிகசிதபரிமள புஷ்பங்களிடத்தில சுகந்தமும்மகரந்தமும் இருந்தால் அம்மலர்களைமுறுக்கவிழ்த்து விகசிக்கச்செய்யாநின்ற வண்டினங்களும் அந்தக்குணங்களிருக்கின்ற வரைக்கும் அம்மலரைநீங்காமலிருந்து அந்தக்குணங்கள மாறினால்அவ்வண்டினங்களும்நீங்கிவிடும் மிகுந்தயௌவனமுள்ள ஒருயுவதியைச்சிநேகித்த ஒருநாயகன் அப்பருவம்நீங்கினால் இவளதுஅன்னியோன்னியம் அஸ்தமிக்கும் அதிகதனமும் யௌவனமுமுள்ள சுந்தராகாரனாகிய ஒருநாயகனைச்சிநேகித்த சுந்தரவதியானயுவதியும் காலவசத்தினால் அந்நாயகனுக்கு அவைமாறினமாத்திரத்தில் இவளுடையஅத்தியந்தப்பிரியமும்நீங்கும் சகலவித்தியாநிபுணசதுரராகிய ஒருஆசிரியரைக்கண்டு கற்கவிரும்பிய மிகுந்தஅன்புள்ளமாணாக்கன் அவரைநீங்காமலடுத்திருந்து தனக்குவேண்டியகல்விகளைக்கிரகித்துக்கொண்டு வரவரலகுவாய்நீங்கிவிடுவான்மஹா சம்பத்தும் நீதியுமுள்ள அரசனையாவது ஒருபிரபுவையாவது ஆஸ்ரயித்திருந்தசனங்கள் அவ்விருவராலும்தைவீகத்தால் அச்செல்வங்கள் நீங்கினமாத்திரத்தில்இவர்களும் வரவரப்பராமுகஞ்செய்து இடைந்துவிடுவார்கள் யக்கியயாகாதிகிருதுகளைச் செய்துபுண்ணியார்த்திகளாயிருக்கின்றஎசமான்களைச் சந்தர்ப்பணாதி தட்சணைகள் நடக்கின்றவரைக்கும் ஆஸ்ரயித்திருந்து அந்த உதாரத்வமொழிந்தமாத்திரத்தில் அந்தயாகங்களுக்குரியரித்விசனங்களும்அவர்களைவிட்டுவிடுவார்கள் தளிர்த்துத்தழைத்து புஷ்பித்துக்காய்த்துப் பலித்துக்கொண்டிருக்கின்ற விருட்சங்களை ஆஸ்ரயித்திருக்கின்றபட்சிஸமூகங்களும் அவைமாறினால் அவற்றைவிட்டுநீங்கிப்போகும்யாதொருஉத்தம கிருகஸ்தாஸ்ரம தருமசிந்தையுடைய ஒருபுருஷனதுகிருஹத்தை ஆஸ்ரயித்த அதிதிகள்காலாந்தரத்திலேஇடுக்கண் வந்தமாத்திரத்தில் கைவிடுவார்கள்ஜாரபுருஷஜயஸ்திரீகளும் தங்களுக்குஜனித்தமோஹவாஞ்சாதிகள்நாளுக்குநாள்அஸ்தமித்தமாத்திரத்தில் அவர்களுமப்படியேஒருவரையொருவர்தியஜித்துவிடுவார்கள் இந்தக்குணங்களையுடைய இவர்களைப்போல இந்தச்சுபாசுபகருமதருமங்களுக்குரிய குணானுஷ்டானங்களை எங்கள்விஷயத்தில் செலுத்தித் தாம்சர்வக்ஞமூர்த்தியாகையால் எங்களகுண தோஷங்களைக்கண்டுதாம்பரமகாருணிகராய்த் தோஷபோக்கிய ஸ்வரூபராயிருந்தும் எங்களைப்பிரிந்துஎங்களுக்கு மனோதாபஜ்வரங்களைக்கற்பித்துக்கொண்டிருப்பதும் ஒருதிவ்யசங்கல்பந்தானோவென்றுதங்கள்நேத்திரங்களில்ஆனந்தபாஷ்பங்களைவருஷித்துக்கொண்டு ஸ்ரீபகவானுடையதிருவவதாரமுதல் பாலியயௌவனகௌமார காலவிசேஷங்களில்ஆஸ்ரயித்த அதிமானுஷசேஷ்டிததிவ்யலீலாவிநோதாதிசயகலியாணகுணசரித்திரங்களையும் திவ்யஸ்வரூபஸேவார்த்தங்களையும் அம்மஹாத்மாவினிடத்தில்விண்ணப்பஞ்செய்து அந்நியதா சிந்தாஸ்மரணையில்லாதவர்களாய் ஸ்ரீபகவானைநினைத்துநினைத்துத்துக்கித்துக்கொண்டிருக்கின்றசமயத்தில்அந்த ஸ்ரீகோபிகாசனஸமூஹங்களின் மிகுதியும்ஸ்ரீகிருஷ்ணபாதபத்மத்தமானஸபாவசாநந்தபரிதைகளானசிலகோபிகாசனங்களானவர்கள்ஸ்வாபதேசத்தில்முமுட்சு குணமனோதர்மானுஷ்டான ஆர்த்தஸ்வரூபமாகவுமந்நியாபதேசத்தில்தா

யசிரயகாபரவ ஊடல்களினுல் தூதிகாகித்தா திஸ்தூத
பூர்வகமாகவும் இந்தஸ்ரீஉத்தவரைப்பார்த்துஇம்மஹா
னுபாவர் ஸ்ரீபகவானுடைய அனுக்ஞையினுல் எழுந்த
ருளினவராகையால் இவரையே ஸ்ரீபகவான் தூதனுப்பி
யஒருவண்டைவிடு தூதைப்போல இவர் ஹிருதய மறி
யும்படி ஒருவார்த்தை சொல்லுகின்றூர்கள்.

ஸ்ரீகோபிசனங்களுடைய(அநநியாபதேச)கல்
பஞலங்காரமாகச் சொல்லியவாக்கியம்

வாராய் ஸ்ரீகிருஷ்ணகுணகல்யாண மஹிமாதிசய சு
கீதங்களைப் பாடித்திரியும் பொற்சிறகுகளையுடைய பிர
மமேகீயேன் இஙகேவர்தாய் அந்தஸ்ரீபகவான்தமதுசர்
வலோக வியாபககுணத்தினுல் தருமாதருமமித்திராமி
த்திர-நியாநியாய குணவிபாகங்களில்லாமல்தம்மையாவ
ரும் ஆஸ்ரயிக்கத்தாமும் எல்லாரையு மாஸ்ரயித்துச்ச
ஞ்சரித்துக்கொண் டிருக்கின்றவராகையால்நீயும்அவரு
டைய குணங்களுக்கிசைந்த பிரமாஸ்வரூபத்தை வகித்
து அந்தக்கல்யாண குணங்களையே ஸ்மரித்துக்கொண்
டிருக்கின்றஉனக்கு அந்தக்குணங்க ளிராமற்போகாது
ஆகையால்அப்படிப்பட்ட உன்னைப்பார்க்கவும் எஙகளு
க்குப்பயம்ஜனிக்கின்றது அவர் அம்மதுராநகரஸ்திரீக
ளுடையகுசங்களிலணிந்த குங்குமக்குழம்புகளில்தோ
யந்தஅவருடைய பாதாரவிந்த மதுவையுண்டு அந்தக்கு
ங்குமக்குழம்புகளைஉன துமீசைகளில்ஸ்பரிசித்துக்கொ
ண்டுவந்து எங்கள்பதங்களைத்தொட்டுஹிதசமாசாரங்க
ளைச்சொல்லிமனங்குளிரச்செய்வதுபோலஉன்வஞ்சனை
யினுல்எங்களை புலரபேக்ஷையையநுசந்திக்கச்செய்யவ
ந்தாயோபோதும்போதுமென்றுசொல்லினுள்ஒருமாது

வாராய் விசித்திரஸ்வரூபத்தையுடைய மதுகாஸ்ரே
ஷ்டமேநீஆஸ்ரயித்திருக்கும் ஸ்ரீபகவானனவர்காலதே
சானுகுணமாக அங்கங்கேவியாபித்துஅந்தந்தகுணங்க
ளைக்கிரகிக்கின்றவரைப்போல நீயும அவர்குணங்களுக்
குத்தக்க ஸ்வரூபத்தைவகித்து அவர்ஆணையைமுன்னி
ட்டுக்கொண்டு நித்தியநைமித்திகாதி கர்மாதிகாரிகளைப்
போலஅஙகஙகு விகசித்திருக்கின்ற புஷ்பங்கள்தோறு
மாறிமாறிச்சஞ்சரித்து அவற்றின்மதுவையுண்டு திருப்
தியடைகின்ற குணங்களுனக்கு முண்டாயிருக்கையால்
அந்தஸ்ரீபகவானுடையகல்யாணகுணமகிமாதிசயமாது
ரிய மதுக்களை யுண்ணும்படி இன்னமு மெங்களுக்குப்
போதிக்கவந்தால் ஐயையோபோதும்போதும் ;நாங்கள்
முன்னுண்ட மயக்கத்தினுல் அவரெங்களை விட்டுப் பிரி
யும்போதெல்லாம் நாங்களடைகின்ற துன்பமான சர்வ
லோகப்பிரியரையான ஸ்ரீ மஹாலட்மீதேவியின் திருவு
ளத்துக்கேதெரியுமல்லது மற்றொருவருந்தெரிந்துகொ
ள்ளமாட்டார்கள் ஆகையால்அம்மஹாலக்ஷமியாகியஸ்ரீ
தேவிதான்இந்த ஸ்ரீபகவானுடையஅகடநாகடனமாயா
மோஹனுதி திவ்யகுணங்களைஸகித்துக்கொண்டுநிரந்த
ரமும்அவருடைய விசாலவக்ஷஸ்தலத்தை யாஸ்ரயித்து
எவ்வாறுவாசஞ்செய்கின்றூர்களோ அறிகின்றிலோமெ
ன்றூள் ஒருபெண்.

வாராய் பிருங்கராஜசிரேஷ்டமே நீ எங்கள்செவிக்கு
இனியசநதோஷாதிசயத்தைக் கற்பிக்கவேண்டுமென்று
ங்கருத்துகொண்டு எங்களை வலமிடமாக்ச்சுழன்று சுழ
ன்றுஉனது மதுரகீதநாதத்தினுல் ஸ்ரீபுராணபுருஷரா
கிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் சுத்தசத்வாத்மகஅப்பி
ராக்கிருததிவ்யமங்கள விக்கிரஹஸ்வரூபதேவதேவோ
த்தமரென்றும் பரமகாருண்ணிய தயா வாத்ஸல்லியரா
கியஸ்ரீபக்தவத்ஸலரென்றும் அதிசயாநந்ததிவ்யகல்யா
ணங்களையுடையவரென்றும் ஸ்ரீபகவந்நாமஸ் மரணங்க
ளைச்செய்துகொண்டிருக்கின்றூய் நாங்களந்தத் திவ்யகு
ணங்களில் அகப்பட்டுழன்று துக்கித்தது;போதும்போ
தும். இப்போதந்த ஸ்ரீபகவானெழுந்தருளியிருக்கின்ற
ஸ்ரீமதுராநகரஸ்திரீஜனங்களிடத்தில் இந்தத்திவ்யகான
கீதங்களைப்பாடுவாயாகில் அவர்களுக்குமிகுந்த ஆச்சரி
யகரமாகவுமிருக்கும் உனக்கும் அவர்கள்வேண்டிய அ
பீஷ்டங்களையுந்தந்து சந்தோஷப்படுத்துவார்களென்று
ள்ஒருஸ்திரீ,

வாராய்மிகுந்த களிப்பையடைந்திருக்கின்ற அளிகு
லநாதோத்தமனே ஸ்ரீ ரமாமணீயதிவ்யமோஹன சந்
தாஸ்வரூபராகியஸ்ரீசௌரியினுடையசர்வஜன மனோர
ஞ்சனமாகியபுன் முறுவலையும் மஹாதிசயங்களைவிளை
விக்கிற புருவநெறிப்புடையதாய்அருள்மடைதிறந்தொ
ழுகுகின்ற கடைக்கண் பார்வையையும் சுவர்க்கமத்திய
பாதாளமாகிய இம்மூன்றுலகத்திலும் ஜன்மித்திருக்கி
ன்றமஹாபுண்ணியவதிகளாகிய பெண்ணுபகாத்தினங்
களில் யார்தான் கண்டுகண்களித்து சேவித்துத்தங்கள்
ஸ்திரீயத்துவாபிமானத்தைவிட்டுப் பரவசர்களாய் விரு
ம்பாதவர்கள் ஆகையினுலன்றோ ஸ்ரீபெரியபிராட்டியா
ராகிய ஸ்ரீமஹாலட்மீதேவியானவர்(அகலகில்லேனிறை
யுமென்று) அவருடைய திவ்ய பாதாரவிந்தங்களிலேத
னதுதிவ்யகரத்தில் விளஙகுந்திவ்யவிகசிதசெந்தாமரை
ப்புஷ்பத்தையொத்தியும் அர்ச்சித்தும் இவைமுதலிய
திவ்யோபசாரகைங்கர்யங்களைச்செய்தும்அந்தஸ்ரீபாதா
ரவிந்ததிவ்யபாரங்களைச் சர்வலோகோஜ்ஜீவனகரமாகி
யதனதிரண்டு குசங்களிலுந திருமுடியிலும்பிரம்ஹா
னந்தலகுஅஹ பரவசத்துடன் தரித்துந் திருப்தமான
னையாய்ச்சந்தோஷத்தை யடைகின்றுளென்றுவேதம
காபுருஷரானவர் களித்துத்துதிப்பாரேயானுல் அப்படி
ப்பட்டபரமகிருபாஜலதியாகிய ஸ்ரீஹரியானவர்கிருபை
செய்வதற்குநாங்கள் நோற்றநோன்பும் நாங்களும் அவ
ருககு லக்ஷியமோவென்றூள் ஒருநாளினட்சி,

வாராய் ஸ்ரீ கேசவாதி திவ்யநாமஸ்மரணை பண்ணிக்
கொண்டிருக்கின்ற கேசகுலாதீஸ்வரனே ஸ்ரீஜகதீஸ்வர

ராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குப் பிரீதியாய் உனதுசுகிருதசாதுரிய தணுதி சயங்களினுல் எங்கள்மனதுஒருவிதசமாதானமாய்த் திருப்தியடையும்பொருட்டு எங்கள் பதாப்ஜங்களை ஸ்பரிசித்து ஸ்ரீபகவானுடைய கலியாண குணங்களைப் போதிக்கத்தொடங்குவந்த விருத்தியை விட்டுவிடுகொங்கள் முன்னமே எங்கள்அநாத புத்திரமித்திரபந்துஜன வாத்ஸல்லியாதிகளையுமகிரஹ க்ஷேத்திரதனதான்யாதி ஐஸ்வரியசம்பத் விஷயங்களையும் ஸ்ரீகிருஷ்ணப்பிரீதியா யவருக்கு மானஸதத்தஞ்செய்துஎங்களுக்குச்சர்வசம்பந்த போகபோக்கியகத்தியந்தர சுகானந்தங்களும் ஸ்ரீகண்ணபிரானேயென்றுநம்பினவர்கள அப்படிப்பட்ட தீனஜனங்களாகிய எங்களை விட்டுப்பிரிந்துகொள்கொம்பில்லாதகொடிகளைப்போல அலையச்செய்துகொணடிருக்கின்ற இந்தஸ்ரீபகவானுடைய குணங்களை மிகுந்ததார்மீகர்களாகிய வேதபுருஷர் ஸ்மிருதிகர்த்தர்கள்முதலானோரும் தர்மமென்று சகிக்கமாட்டார்கள்ஆகையால் உனதுதூதஸம்வாதம்போதும்போதுமென்றுள் ஒருமடவரல்,

வாராய்ஸ்ருதிஷட்கங்களையும்ஸட்பதங்களாகவுடையசஞ்சரீ கஸ்வரூபோத்தமனே இந்த ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய ஷட்விதநித்ய பரிணமங்களையும்இந்தப்பரணமாதிகுணங்களுக்குச் சாஸ்வதமாய்விளங்குகின்றஉபயவிபூதிகளினுடைய ஸ்வரூபத்தினுள் இந்தவிசுவாகாரதர்மஸ்தாபனத்தின்பொருட்டுத் தமது விபவாதிசய திவ்யாவதாரத்தில் ஆசரித்த மாயாமானுஷாதி சேஷ்டிதகுணங்களை நீமறந்தாயோ ஸ்ரீசக்கிரவர்த்திதிருமகனுராகியஸ்ரீராமசந்திரமூர்த்தியானவர் மிகுந்தசௌம்மிய பரமதார்மீகராக விருந்தும்வனத்தில் சஞ்சரிததுப் பிராட்டிக்குரூடுபட்டுஅவருடைய சம்யோகபீடிதையான இராவணனுடைய தங்கையாகிய சுடுசினத்தகொடிய சூர்ப்பநகியைப் பெண்ணென்றால் பேயுமிரங்குமென்பதுசிறிதுமில்லாமல் தாம்பாலசேஷ்டைகுணத்தைவகித்து ஸ்ரீராமாநுஜராகிய இளையபெருமாளைக்கொண்டு பிரதாப்லங்கேசுவரனுகிய இராவணனுடைய கீர்த்தியைப்பங்கஞ்செய்வதுபோல அவளுடையஸ்தனத்தையும்மூக்கையும்பின்னஞ்செய்தும் இனிஎதிரேநின்றால்தலையும்போகுமென்று நினைக்கச்செய்தும்அவள் எண்ணிவந்த நினைப்பைமாற்றி உனக்காராவது சலிகையுண்டாயிருந்தாலழைத்துவா போவென்று துரத்திவிட்டாரே இதுவுமல்லாமல்ஸ்ரீஉபேந்திராகிய ஸ்ரீவாமனமூர்த்தியானவர்ஸ்ரீபிரஹலாதாழ்வானுடைய வம்சோத்தாரகராயும் மிகுந்தஉதாரகுணசீல தர்மிஷ்டராயும் விளங்கிக்கொணடிருந்ததைத்தியபதியாகிய ஸ்ரீமகா பலிசக்கிரவர்த்தியை இந்திராதிதேவதைகள் நிமித்தம் வஞ்சித்துமூன்றடிமண்தானம்வாங்கி இம்மூன்றுலகத்தையுங் கிரகித்து இந்திரற்குக்கொடுத்து இந்தத் தைத்தியேசுவரனையும்பூமிலத்தில்வாசஞ்செய்ய நியமித்தாரல்லவா இந்தஸ்ரீமாதவப் பெருமானுக்கு இவையெல்லாம் பரம தர்மமாகும்போது எங்களாஸ்ரயதரும மென்னமாகுமோ ஆகையாலுனது தூதசங்கீர்த்தனம் போதும் போதுமென்றுள்ஒரு பூங்குழல்

வாராய் ஸ்ரீமாதவபதாம்புஜம் தியானமதுபானமத்தமதுவிரஜோத்தமனே ஸ்ரீ கிருஷ்ணபகவானவர் தமதுதிருவலதரத்தில் முரளியையமைத்துச் சமஸ்தபிராணிமனோரஞ்சன கானமிருதமாக வேணுகானஞ் செய்யும்போதெல்லாம்இந்த ஸ்ரீ பிருந்தாரண்ணியத்திலுள்ளவிசித்திரஸ்வரூபசகல பட்சிசாதிஸமூஹங்களும் இந்தமதுரஸ்வரங்களைக் கேட்டமாத்திரத்தில் தங்களினங்களையும் உணவுகளையும் தேஹாபிமானங்களையும் மறந்துராகத்துவேஷங்களைவிட்டு மெய்சோர்ந்துஅந்தஅமிருததானத்தைப் பிராணுதாரமாகக்கொண்டு ஸ்ரீபகவதனுபவங்களை வீக்ஷணியமாத்திரத்தில்அனுபவஞ்செய்யுமானால் சர்வேந்திரியங்களையுமுடைய நாங்கள் மனோலயமடைவது ஆச்சரியமோ எங்களை இப்படிக்கம்மிடத்திலேஆகப்படச்செய்து பிரிந்துவருத்தப்படுத்துவது என்னதருமமோவென்றுள் ஒருபைந்தொடி.

வாராய்ஸ்ரீபுண்டரீகாட்சருடைய புண்ணிய சுலோகபுளங்காங்கித த்வனியைச்செய்கின்ற புண்டரீகப் பிரியனேஇந்தஇருள் தருமாஞாலத்தில் ஜனித்திருக்கின்றவெங்களைஇந்த ஸ்ரீமாதவப்பெருமானவர் மானைக்காட்டிமானினங்களைப்பிடிப்பதற்கு வலையைவீசிச் சுகீதத்தைப்பாடிக்கொண்டிருக்கின்ற வஞ்சகவனவேடனைப்போல எங்கள்சஜாதீய குலத்தினிலவதரித்துத் தமதுதிவ்யசுந்தர வதனாரவிந்தத்தைக்காட்டியும் மந்தஹாஸத்தோடு மதுர வசனங்களைப்பேசியும் முரளிகான மதுரகீதங்களைப்பாடியும் எங்கள்இருதயங்களை யபகரித்துத் தமது கிருபாமோஹனவலையில்நாங்களகப்படுஞ் சமயம்பார்த்துஎங்களைப்பிரிந்து மனவருத்தமுறச்செய்வது தமக்குப்பரமதருமமென்றே நினைத்துவிட்டாராக்கும் என்றுள்ஒருபூங்கொடி.

வாராய்ஸ்ரீபதுமநாபருடைய ஸ்ரீ பாதபதுமங்களில்வசித்துக்கொண்டிருக்கின்றபராகராஜனே ஸ்ரீஜனார்த்தனசுவாமியானவர் தேகசம்பந்திகளாகியதாய்தந்தைகளையும்சகோதரர்களையும் புருஷாபிமானர்களையும் புத்திரபவுத்திரவர்க்கங்கள்முதலிய ஸர்வபந்துக்களையும்கிருஹக்ஷேத்திரதனதான்ய பூஷணுதிகளையும் போக போக்கியருசிவாக்கங்களையும் ஸ்ரீகண்ணபிரானேயென்று அனுபவிவித்துக் கொண்டு தேஹ சம்பந்தங்களை மறந்து எங்கள்சர்வேந்திரிய வியாபகங்களையும் அவருடையதிவ்யமங்களவிக்கிரஹ சுந்தராகாரத்தில் நிறுத்திச்சேவித்துக் கொண்டிருந்த எங்களை வியோகதாப முஹாஜலதியில் தள்ளி விட்டு இன்னமும் எழுந் தருளி

க்கிருபைசெய்யாமல் உபேட்சைசெய்துகொண்டிருக்கின்ற ஸ்ரீபகவானுக்குரியாவது அவருடைய ஸ்ரீபாதபதுமங்களை சேவித்துஎங்கள்மனோதாபங்களைச் சொல்லி அழைத்துக்கொண்டுவந்து ரட்சிக்கமாட்டாயோ வென்றாள் இப்படிரூபகாலங்காரவர்ணனையாய் ஸ்ரீஉத்தவரைப்பிரமாபாவனையாக்கித் தங்கள்மனோகருமங்களைவிண்ணப்பஞ்செய்து கொண்டிருக்கவேறுசிலர்இந்த ஸ்ரீஉத்தவரைப்பார்த்துச் சொல்லுகின்றார்கள்.

வாரீர்ஸ்ரீபகவத் கல்யாணகுணங்களை யனுபவித்துக் கொண்டிருக்கின்ற மஹோத்தமசீலகுணஉத்தவரே ஸ்ரீ பரமகாருணிகராகிய ஸ்ரீபகவானானவர்ஸ்ரீமதுராநகர ராசரிய லட்சுமியையடைந்து மஹாராஜகுணங்களை வகித்திருக்கின்றாராகையால்இந்தராசகோபால சேகரருக்குநாங்கள்வாசஞ்செய்கின்ற சிறுகுடில்களாகியஇடைக்குடிசைகள் நானாவிதவிசித்திரசௌபானங்களையுடைய ஸ்வர்னத்தாலும் ரத்தினங்களாலும்சோபிதமான மாடமாளிகைகளாகிய அலங்காரவிடுதிகளாகுமோ என்றாள் ஒருமின்னாள்.

வாரீர்ஸ்ரீகிருஷ்ணப்பிரியரே இந்தயதுவம்ச மண்டலாதிபதிக்குநாங்கள் சஞ்சரித்துவிருத்தியடைந்துகொண்டிருக்கின்ற ஸ்ரீநந்தவ்ரஜமாகிய ரேபல்லேயானதுசமஸ்தமானதேசாதிபதிகளும் குடிகளுங்கப்பங்களைச் செலுத்திச்சேவித்துக் கொண்டிருக்கின்ற ராஜதானியாகுமோ என்றாள்ஒருமின்னாள்.

வாரீர்ஸ்ரீமாதவார்ப்பித மானவரே இந்தஸ்ரீதேவகீசிங்கப்பிரானுக்கு நாங்களும்எங்கள்பசுக்களுமூலாவிச்சீவனஞ்செய்துதிருப்தியடைகின்றஇந்தஸ்ரீபிருந்தாரண்ணியமானது, அந்தஸ்ரீமதுராநகரத்திலுள்ளநானாவிதசுகந்தபரிமளத்தை வீசுகின்றஅலர்ந்தபுஷ்பங்களையும்மதுரருசிவாக்கபலங்களையும் சந்திரகாந்தத்திண்ணைகளையுமுடைய சுந்தரஉத்தியான மாகுமோ என்றாள் ஒருமின்னாள்.

வாரீர்ஸ்ரீகோவிந்த தரிசனகுதூஹலரே இந்தஸ்ரீகம்ஸமர்த்தனருக்கு எங்களைப்போஷித்தது ரட்சித்துக்கொண்டிருக்கின்ற ஆடுமாடெருமைகளாகியமூவகைக்கணங்களும் மஹாமனோரமணீயரதகஜதுரகபதாதிகளாகுமோஎன்றாள்ஒருமின்னாள்.

வாரீர்ஸ்ரீதாமோதராஸ்ரித தங்கியரே இந்தஸ்ரீமன்மதஜன்மருககுஇந்தகோபாலவம்சத்தில்ஜனித்துயாதொருநாகரீக சாதுரியநடக்கையும் சுந்தராலங்காரங்கள்செய்துகொள்ளவுந் தெரியாதகோபீஜன ஏழைகளாகியநாங்கள் அந்தப்புண்ணியநகரத்திற்சன்மித்து நகரவாசஞ்செய்து நாகரீகங்களைநன்றாயுணர்ந்து மிகச்சுந்தரவதிகளாயும்நானாவிதவிசித்திரவித்தியாசாதுரியவதிகளாயும் விளங்குகிற அந்தப்புரஜனங்களுக்கொப்பாவோமோ ஆகையால் இந்தஜகன்மோகனாகாரதிவ்வியசுந்தரமூர்த்தியானயாதவப்பிரபுவானவர்இப்படிப்பட்டநூதனப்பிரியர்களிடத்தில் அன்புசெலுத்திஏழைகளாகிய எங்கள்விஷயத்தில் அநாதரவுசெய்தார்இனியிவ்விடத்திற்கெழுந்தருளமாட்டாரென்றாள் ஒருசிற்றிடையாள்.

இந்தப்பிரகாரம்பலவாறுசொல்லித் தாரைதாரையாய்க் கண்கள்நீர்பெருக முறையிட்டார்கள் ஸ்ரீநந்தவ்ரஜத்திலுள்ள ஸ்ரீகோபிகாசனங்கள்யாவரும் அவரவர்களுக்குத்தோன்றியபடி அநேகவிதங்களாகஇவ்வாறுஸ்ரீபகவானுடைய குணகீர்த்தனங்களைச்செய்து ஸ்ரீகிருஷ்ண ஸந்தரிசனமானஸர்களாய்வியாகுலப்படுகின்றவர்களைப் பார்த்துஸ்ரீஉத்தவரானவர்தமதுஇனிய மதுரவசனங்களால்அவர்கள்மனதுதிருப்தியடைந்துதேறும்படிச் சில வார்த்தைசொல்லுகின்றார்,

ஸ்ரீ உத்தவர் வாக்கியம்.

வாருங்கள் ஸ்ரீகோபிகாசன ரத்தினங்களே உங்களை நான்தரிசனஞ்செய்து உங்களுடையதிவ்யகுணபூர்த்திகளையோசிக்குமளவில் எனக்குமிகுந்த ஆச்சரியானந்தகரமாயிருக்கின்றது ஏனெனில்இவ்வுலகத்தினிடத்தில் மஹாமஹநீயமூர்த்திகளாய் அவதரித்திருக்கின்ற பரமயோகீந்திரர்களும் பரமாசாரியகுருசனங்களும்ஸ்ரீபரந்தாமனுகிய பரமாத்மஸ்வரூபபரப்பிரம்மத்தை ஆஸ்ரயித்து அனுபவிக்கத்தக்கருறமறாத திவ்ய குணங்களைப்பெறுவதற்குமிகச்சுசிலசம்பந்த ஜபங்களைசெய்துந்தானவிரதஹோமாதிகளைச்செய்தும்பஞ்சாக்கினிமத்தியில்நின்று மிக அருமையாகியதவங்களைச்செய்தும்ஸ்வாத்தியயனநிவேதங்களையும் மஹாபுண்ணியசாஸ்திராகமபுராணாதிகளையும் அவற்றின்சாராம்ஸங்களாகிய திவ்யரஹஸ்ய கிரந்தங்களையும்காலக்ஷேபமாகக்குனுபவங்கள் செய்தும் பெறாதவர்களாய்ஸ்ரீபகவானுடையநிர்ஹேதுக்கிருபாகடாட்சத்தையே எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றார்கள்.

வாருங்களபுண்ணியாங்கனைகளே நீங்கள்ஸ்ரீசர்வேஸ்வரராயும் அகிலலோகரட்சாமணியாகிய விஸ்வம்பரவிஸ்வாகார விஸ்வமூர்த்தியாயும்சர்வாந்தரியாமியாயும்விளங்கி ஆஸ்ரிதவிரோதிநிரஸனஞ்செய்துசகலபுவனங்களையும் சாதுசஜ்ஜனங்களையும்ரட்சிப்பதற்காகத்தமதுபரமகாருணிகத்தால் மஹாமகிமாவதாரமூர்த்தியாய்த்திருவவதரித்தருளின ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய கல்யாணகுணங்களையாஸ்ரயித்துச்சர்வகாலங்களிலும் அதிசுலபமாகஅனுபவிக்கபெற்ற உங்கள்சுகுணாதிசயங்களை கருதித்து உங்களுக்குத்தாஸபூதனாய் ஸ்ரீபகவானுடையபரமகிருபாதிசயதிவ்யசௌலப்பியகுணங்களுக்கு ஊழிதோறுந்தண்டன்சமர்ப்பிக்கிறேனென்றுசொன்னவராய் வாருங்கள்செந்தாமரைப்புஷ்பஇதழ்களுக் கொப்பாகிய நேத்திரங்களையுடைய ஸ்ரீகோபசுந்தரீ சனங்களே நீங்கள்ஸ்ரீபகவானுடையஸேவார்த்தங்களைக் குறித்துச்சந்தேகங்கொண்டவர்களாய்வியாகுலம்அடையவே

ண்டுவதில்லை ஸ்ரீகிருஷ்ணபகவானுனவர் என்னையழைத்து உங்களிடத்திற்குப்போய்வரும்படிநியமிக்கும்போது அவருங்களைக்குறித்துக்கிருபையாகத் திருவாய்மலர்ந்தருளிய வார்த்தாமிருதங்களை உங்கள்நற்செவிகளாகிய கேள்விவாயகளினுலுண்டு களித்துத்திருப்தி யடையக்கடவீர்களென்று ஸ்ரீபகவானுடையவாக்கியங்களாகச் சொல்லத்தொடங்கினுர்.

ஸ்ரீபகவானருளியபடிஸ்ரீஉத்தவருடையவாக்கியம் .

வாருங்களஸ்ரீரமாமணிதிவ்யாம்ஸ ஸம்பூதர்களாகிய ஸ்ரீகோபிகாசனங்களே நீங்கள்என்னைச்சாமாந்நியருணுருணீபாவபிரியநாயகனென்று ஒருக்காலும்நினைக்கவேண்டுவதில்லை நான்உங்களுக்குளனதுபரமகாருண்ணியவியாகபாதிசயங்களை அனேகவிதமாகமுன்னமேஉங்கள்மனதுதெளியச்சொல்லியிருக்கின்றேன் இப்போது சாதுசஜ்ஜனஇதாத்தமாகவும் லோகதர்மஸ்தாபனத்திற்காகவும் திருவவதரித்தசஹஸ்யசாரியங்களி னிமித்தமாக ஸ்ரீமதுராநகரத்தில் வந்திருக்கின்றநான்இந்தசர்வப்பிரபஞ்சங்களினுடைய சமஸ்தகாரிய காரணங்களுக்கும் பிரதானபுருஷஸ்வரூபகாரணுத்மகமாயிருக்கின்றேன்மேலும்இந்தசர்வப்பிரபஞ்சங்களிலுமுள்ளசராசரங்கள் நானுவிதமாகஸ்வரூபித்து விருத்திலயங்களை யடைவதற்குளனதுமகாமகிமாதிசய சங்கல்பத்தினுலுண்டாகிய பிரகிருதியின்காரியமாகிய மகா பஞ்சபூதங்கள் அந்தச்சராசர காயகரணங்களாய் வியாபித்திருக்கின்றதைப்போலநானும் சர்வாத்மவியாபகனுய்ச்சர்வபூதங்களினுடைய மனப்பிராணபுத்தீந்திரியாதிகளிலும் வியாபித்து அவைகளுககுஆதாரஆஸ்ரயனுயிருந்துகொண்டு சகலாத்துமாக்களும்'எனக்குத்தேகமாகவும்நான்அவைகளுக்கு ஆத்மஸ்வரூபனுய்ச் சலியாமல் நித்யாஸ்ரயனுய் ஸ்ரீஅச்சுதனுய்விளங்கி அசேதனங்களுக்குள்பிரகிருதி சம்பந்தபரவசமாயனுபவருசிவாசனைகளை யடைந்தனுபவித்துக்கொண்டிருக்கின்ற நித்தியநிர்விகாரபரிசுத்தஸ்வரூபாதிசயமுள்ள ஜ்வாத்மநிலையைக் குறித்து வேதவேதாங்க வேதாந்தபிப் பிராயத்தினுல் பிரகிருதிஸ்வரூபத்தினுடைய பேதங்களையும் அந்தசீவாத்மாவினுடையநிஜநித்தியஸ்வரூப தர்மங்களையும்சாட்சாத்பரமாத்மாவாகிய என்னையுந் தோன்றச்செய்து என்னையடைவதற்கும் அடைவதறகரியதுஸ்தரத்திற்கும் வகைகளையுணர்த்தியும் சர்வசாட்சிபூதனுய் சர்வசரா சரங்களையும் படைத்தளித்தழித்துக்கொண்டிருக்கின்ற நான் இல்லாதவிடங்களில்லையாகையால்நஸ்ரீந்தவ்ராஜத்தைவிட்டுத்தூரஸ்தனுய்ப் பிரிந்திருக்கின்றேனென்கிற பிரகிருதிகாரிய மனேவிருத்திகளைஎன்விஷயத்தில் செலுத்தாமல்தியானமாத்திர சமீபஸ்தனுய் நினைக்கக்கடவீர்களென்றுர்.

வாருஙகளஸ்ரீஹரிபக்திமானஸதத்த வரப்பிரசாதஸ்ரீகோகுலவாஸ புண்ணியாங்கனைகளே இவ்வுலகத்தில் இந்திரியசுகங்களையே நித்தியமென்றனுபவித்துக்கொண்டிருக்கின்றசிலசித்தசஞ்சலங்களையுடைய ஜனங்கள் தாங்கள்நித்திரைசெய்யும்போதுகண்டசொப்பனபதார்த்தங்களை நித்திரைதெளிந்தெழுந்தபோதுபிரத்தியட்சமாகக்காணுமையைத் தங்கள்பிராப்தஈனமென்று நினையாதுபொய்ப்பொருளென்றும் அந்தச்சொப்பனபதார்த்தத்தைப்போல இவ்வுலகத்தையும்பொய்யென்றுவிபரீதஞானத்தால் நினைத்துக்கொண்டிருக்கின்றுர்கள் அதுவுமெனது மாயாசங்கல்பமெனநினையுங்கள்நீங்களப்படிநினைக்கவேண்டுவதில்லை சகலேந்திரியவிஷயவியாபாரங்களைநிக்கிரகித்து விட்டுப்பரிசுத்தர்களாகியபறமயோகீந்திரர்களுடையயோகமார்க்கதுல்லியமானசிகங்களில் இவ்வுலகத்தினது விருத்திலயாத்மகமானவிசித்திராதிசயங்கள்முன்னதாகத்தோன்றிய பின்பு அந்தந்தக்காலலட்சணத்திற்கேற்றபடி பிரத்தியட்சமாகத் தோற்றிக்கொண்டிருப்பதுபோலஎன்னையும்எனது சாவவியாபகங்களுக்குரியனவாயென்னை ஆஸ்ரயித்துக்கொண்டிருக்கின்ற சகலசேதனுசேதனுத்மகமான பிரபஞ்சங்கள் சிருஷ்டிஸ்திதி லயாத்மகமாகவிளங்கிக்கொண்டிருப்பினும் பிரவாகரூபம்போலநித்தியமென்றே அவைகளையும் நீங்கள் நினைக்கக்கடவீர்கள்இவ்வுலகத்திற்கும் எவ்வுலகத்திற்கும் நான் தூரஸ்தனல்லனுகையால்உங்களைவிட்டுப்பிரிந்தவனுக என்னைநீங்கள்நினைக்கவேண்டுவதேயில்லைஎன்றுர்,

வாருங்கள்ஸ்ரீபதுமநாபருடைய பதாப்ஜதத்த மானஸபத்மாட்சிகளே இந்தப்பிரபஞ்சத்தில்,உலகஉபகாரார்த்தமாகஎனது திவ்யஸங்கல்பத்தினுல்மேகங்களானவை வருஷிக்க அவ்வருஷசனங்களைக் கொண்டநதீநதங்களானவை அங்கஙகு உலகத்தவர்களுக்கு வேண்டியவனாக் குஞ்சலப்பிரவாகத்தைத்தந்து பாய்ந்தோடி மகாஜலதியை ஆஸரயித்துவந்தடையுமாப்போலமகாயோகீந்திரர்களாகியபுதஜனங்களானவர்கள் ஸாங்கியயோக நிகமாப்பியாஸங்களைச்செய்து தங்கள் இருதயங்களை இயம-நியமாதி-சத்திய தபோகருமங்களிடத்தில்சலியாமல்நிருத்திமனேபரிசுத்தர்களாகியும்.நிகில லோகோபகாரர்களாயும் விளங்கி நிரபேட்சாபரிசுத்தமான ஸர்களாய்என்னொருவனையே தியானித்துஎன்னையே யடைகின்றுர்களாகையால்நீங்களும் அவர்களைப்போலஎனதுபாதாரவிந்தத்தியானமானஸபரிசுத்த இருதரர்களாய் மனக்குறையற்றுஉங்கள்பக்தியோககருமத்தை விருத்திசெய்து என்னையேயடையக்கடவீர்களென்றுர்,

வாருங்கள் ஸ்ரீ ஜனர்த்தனருடைய திவ்யகுணனுபவாதிசயப்பிரியாங்கனைகளே,இவ்வுலகத்திற்குமங்களதீபங்கள்போன்ற நல்லஉத்தமஸ்திரீகளானவர்

கள்தேசாந்தரகதரான தங்கள்தங்கள்நாயகனிடத்தில்த ங்கள்இருதயங்களைச்செலுத்தி தியானித்துக் கொண்டிருப்பார்கள் அல்லவா அவர்களைப்போலநீங்களும் என்னிடத்தில் சமர்ப்பித்தபரிசுத்தமானஸ்பக்தியோகங்கள் மேலுமேலுந் திருடமாகநிறுத்திஎன்னையேதியானிக்கும்பொருட்டும் உங்களைப்போலொத்த சில ஆஸ்ரிதசனங்களைரட்சிக்கும்பொருட்டும் ஸ்ரீமதுராநகரத்திற்குவந்தேனேயல்லது வேறென்றுஆகையால் உங்களுக்குநான் தூரஸ்தனாய்ப் பிரிந்திருக்கிறேனென்று நினையாமல்உங்களுடையநித்தியதியான பரிசுத்த மானஸங்களினால் என்னையே யடையக்கடவீர்களென்றார்.

ஸ்ரீசுகர் வாக்கியம்.

வாரீர்பாதவம்ஸசிகாமணியான பரிட்சின்மஹாராசனே இந்தப்பிரகாரமாக மஹாபாகவதோத்தமராகிய ஸ்ரீஉத்தவரானவர் மஹாபுண்ணியவதிகளாகிய ஸ்ரீகோபிகாஜனங்களைப்பார்த்து ஸ்ரீபகவானானவர் நியமித்தபடிக்குஸ்ரீபகவத்வாக்கியங்கள் யாவற்றையும் சம்பூர்ணமாக அந்தஸ்ரீகோபிகாசனங்களுக்குச்செவிகுளிர்ந்துமனமுருகஸ்ரீபகவானே எதிர்முகமாகநின்று திருவாய் மலர்ந்தருளியதாகச்சொன்னமாத்திரத்தில் அவர்களும் ஸ்ரீபகவானுடையவார்த்தாமிர்தத்தினால் ஸ்ரீகிருஷ்ணப் பிரம்ஹானந்தபரவஸமானஸர்களாய்ச் சந்தோஷித்துத்தேரியும்சர்வலோகங்களும் தரிசனமாத்திரத்தில் மோகிக்கும்படியானஸ்ரீபுருஷோத்தமருடைய அதிரூபசௌந்தரியதிவ்யமங்கள ஸ்வரூபத்தைக்கண்ணாரக்கண்டு நானாவிதசுகாநந்தங்களை நெடுநாளனுபவித்தவர்களாகையால்இந்தஸ்ரீஉத்தவரைப்பார்த்துமேலும்சிலவார்த்தை சொல்லுகின்றார்கள்-

ஸ்ரீகோபிகாசனங்களுடைய வாக்கியம்,

வாரீர்மஹாதந்நியோத்தமராகிய ஸ்ரீஉத்தவரே சர்வலோகைகநாதராகிய ஸ்ரீஹரியானவர்ஸ்ரீமதுராநகரத்தில் க்ஷேமமாயிருக்கின்றாரா இவிடத்திற்கு எப்போது தாம்விசயஞ்செய்யச்சங்கல்பித் திருக்கின்றாரோ தெரியவில்லையே தாம்பரமகாருணிகராகையால் ஒருவேளை ஸ்ரீகோகுலத்தைக்குறித்து எழுந்தருள வேண்டுமென்றுவருகின்றசமயத்தில் அவ்விடத்திலுள்ளநிஜாஸ்தரிசனங்களும் நகரஸ்திரீசனங்களும்ஸகித்துத் தடுக்காமலிருப்பவர்களோநாங்கள் இனியென்னசெய்யப் போகின்றோம் ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குச்சமர்ப்பித்த எங்கள்மனது நிற்கவில்லையேஸ்ரீபகவானுகியபிரம்மதேவன்தயாசூன்யனாய் எங்களையேன்னோ இவ்வுலகத்தில் ஜன்மிக்கச்செய்துஸ்ரீபகவானைப்பிரிந்திருக்கச் செய்தது என்னதருமமோ வென்றுவிதியைவெறுத்து துக்கித்துக் கொண்டுமுறையிட்டார்கள்சிலர்.

வாரீர் ஸ்ரீபதுமலோசனருக்குப் பிரியசஹாவாகிய பரம்பாகவதரே ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் இந்தஸ்ரீகோகுலத்தில் விருத்தியடைந்துஸ்ரீபிருந்தாரணணியபுண்ணியமார்க்கங்களிலும் ஸ்ரீயமுனாதீரங்களிலும்மிகுதியுங்குளிர்ந்துஇருண்டநிழலைத்தராநின்ற விருட்சவனங்களிலும் மஹாபரிமளபுஷ்பபூம்புதர்களிலும் அதிமனோரமமியமாகிய வெண்மணற்குன்றுகளிலும் கோவிஸகோவத்ஸங்களைப் பாலனஞ்செய்துகொண்டு கோபாலச்சிறுவர்களுடன்சம்பூர்ணமனோரதராய் அதிமானுஷலீலாசேஷ்டிதங்களை ஆஸ்ரயித்துக்கொண்டுசஞ்சாரஞ்செய்கின்றகாலங்களில்நாங்களும்ஸ்ரீகிருஷ்ணகுணப்பிராந்தசித்தர்களாய்க் க்ருஹகிருத்தியங்களைமுன்னிட்டுக்கொண்டுஅவ்வனத்திற்பிரவேசித்து ஸ்ரீகிருஷ்ணகுணகீர்த்தனங்களைச்செய்துகொண்டே திருணலதாகுல்மாதிகளையும்பசுவினங்களின்உலர்ந்த சாணவுருவுகளையுஞ் சேர்த்துக்குவிக்கும்போது ஸ்ரீபகவான்ஜகந்மோகனாகாரஸ்வரூபத்தோடுஎழுந்தருளி எங்களைக்கடாக்ஷித்து எங்கள்மனோகருமங்களீடேறும்படியான இனியவார்த்தைகளால்எங்களைசந்தோஷிக்கச்செய்து அந்தர்த்தானமாயெழுந்தருளுவரே இப்போதந்த கிருபாகுணங்களெங்கேயொளித்தனவோ எங்களுக்கோ ஒன்றுந்தோற்றவில்லையே ஸ்ரீகிருஷ்ணஸ்வரூப சுந்தரகுணங்களாகிய மன்மதபாணங்களுக்குத்தத்தமாயிருக்கின்றோமேஸ்ரீபகவான்இவையாவும் மறந்தனரோவென்றுசொன்னார்கள் சிலர்.

வாரீர்ஸ்ரீஅச்சுதபகவானுக்கு மிகுந்தஅந்தரங்கபக்தராகிய அருமைத்துணைவரே ஸ்ரீபகவானானவர் இந்தஸ்ரீபிருந்தாரண்ணியத்தில் ஸ்ரீயமுனாநிஸ்வரூப ஸ்ரீகாளிந்திதீரத்தினிடத்தில் சர்வஜகந்மோஹனாகாரதிவ்யமங்கலவிக்கிரஹ சதுர்ப்புஜராயும்சங்கசக்ராதிதிவ்யாயுதங்களைத் தரித்தவராயும் திவ்யாபரணதிவ்யாம்பரதிவ்யமாலிகாதரராயும் சர்வதேவகணஜேகீயமானங்களாம் சாட்சாத்கரித்துத் தமதுஸ்ரீஅஸ்தத்தில் நித்தியமாகவிளங்குகின்ற ஸ்ரீவேதபுருஷதிவ்யாத்ம அம்சமாகிய வேய்ங்குழலைத் திருப்பவளவதரத்திலமைத்து விண்ணுலகத்தாரும்மண்ணுலகத்தாரும் தங்களிருவினைத் தாபங்களாறிக்குளிர்ந்துசந்தோஷிக்கும்படி மஹாமனோரம்மியமதுரகானஞ்செய்யும்போது நாங்களும்ஸ்ரீகிருஷ்ண கலியாணகுணப் பிரம்ஹானந்தபரவசர்களாய்எங்கள் கிருஹகிருத்தியங்களையும் தேகசம்பந்தமாகியமனோதருமங்கள்யாவையும்பற்றறவிட்டு ஆர்த்தஸ்வரூபர்களாயாஸ்ரயித்த எங்களைஅங்கீகரித்து எங்களமனோரதங்கள் ஈடேறும்படிச்சந்தோஷிக்கச் செய்ததுமல்லாமல் எங்கள்இருதயங்கள்பகவதாதீனதியானங்களால் பாவனமாயுறுதிப்படும்படி அந்தர்த்தானராய்மறைந்துநின்று எங்களகுணதர்மங்களை முற்றவுஞ்சோதித்துஎங்களைக் கடாட்சித்ததமது குணதர்மத்தைமகாநுபாவராகிய உம்முடன் அந்தப்புரப்பிரதேசத்தில் சந்தோஷமாக வாசஞ்செய்து கொண்டிருக்கின்றதருணங்களில் அப்படிப்பட்

டநாஸபூதர்களாகிய எங்களை அவசியம் இரட்சிக்கவேண்டுமென்று கிருபையாகச்சொல்லி நினைப்பரோ என்றார்கள்சிலர்,

வரீர் ஸ்ரீபக்தவத்ஸலருக்கு மிகுந்தபரமாப்தராகிய ஸ்ரீ உத்தவரே, நாங்கள் சிலநாள்களுக்கு முன்ஸ்ரீகிருஷ்ணபகவானை ஆஸரயிக்க வேண்டுமென்றுமனதில் தியானித்துக்கொண்டிருக்கின்ற காலத்தில்அந்தஸ்ரீ பகவத் ஸங்கல்பத்தினால் இந்த ஸ்ரீநந்தவ்ரஜத்தில்மழைபெய்யாமல் அநாவிருஷ்டிதோஷமசம்பவித்தது, அப்போது ஸ்ரீநந்தகோபர்முதலியகோபாலகவிபுக்கள் ஸ்ரீ பகவதாக்ஞையினால் தங்களுக்குக் குலதேவதையான ஸ்ரீ அம்பிகாதேவியைமுன்னிட்டு வருஷதேவதையானபர்ஜ்ஜந்யதேவதாபிரீதியர்த்தமகாவிரதங்களை யனுஷ்டித்துஎங்களையும நோன்புநோற்கும்படி ஆக்ஞாபித்தார் நாங்களும்எங்கள மனோதரங்களீடேறும்படி இப்போதுதான்நல்ல தருணம் வாய்த்ததென்று நிராடங்கமாக வெளிப்பட்டு ஸ்ரீயமுனாநதீ தீரத்திற்குச்சென்று எங்கள் பெரியோர்கள்நியமித்தபடி விரதாங்கங்களை யேற்படுத்திக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணபகவானையே அடைவதற்கு நோற்றோமே யல்லது அந்நிய பலகாங்க்ஷையை நாங்கள் சிறிதேனுங்கருதிநோற்கவேயில்லை, ஆகையால அந்தச்சர்வக்ஞமூர்த்தியான ஸ்ரீபகவானானவர் எங்கள் மனநிலை அறிந்து அந்தநதீதீரத்திற்கெழுந்தருளிநாங்கள் வஸ்திர யீனர்களாய் அந்தப்புண்யநதியில்தீர்த்தமாடிக்கொண்டிருக்கும்போது வஸ்திராபஹாரஞ்செய்து சிட்சித்துச்சிலதருமங்களை எடுத்துச்சொல்லி-ஸ்ரீகோகுலத்தவர்கள் நியமித்தவிரதத்தையுங்காத்து நாங்கள்பாவனர்களாகும்படித் தமக்குத் தண்டன்சமர்ப்பிக்கச்செய்வித்து இனிமேல்நீங்கள் சந்தேகிக்கவேண்டுவதில்லை என்றால் கிருபைசெய்யப்பட்டவஸதிரங்களை யுடுத்திக்கொண்டு உங்கள் கிருஹத்திற்குச்சென்று சந்தோஷமாயிருக்கக்கடவீர்கள், நீங்கள்என்னைத் தியானிக்கும போதெல்லாம் சாட்சாத்கரித்துரட்சிக்கின்றேனென்று திருவாய்மலர்ந்தருளி அவ்வாறேஎங்களை இதற்குமுன்னெல்லாஞ்சந்தோஷிப்பித்தது வந்தஅந்தரங்க சமாச்சாரங்களை நீரும் பகவானும் ஏகாந்தமாயெழுந்தருளியிருந்து சந்தோஷவார்த்தைகளைப் பேசும்போது இந்தச்சங்கதிகளிலேதாவதுஉம்முடன்சொல்லி எங்களைநினைப்பாரோ என்றார்கள்சிலர்

வாரீர்ஸ்ரீபரந்தாமருடைய பாதாரவிந்தத் தியானமான ஸோல்லாஸபரம பாகவதோத்தமராகிய ஸ்ரீஉத்தவரே ஸ்ரீசர்வஜகதீஸ்வரராகிய ஸ்ரீகிருஷ்ண பகவானானவர் ஸ்ரீசூரியபகவானுடைய புத்திரியாகியகாளிந்தீ தீரத்திலே பூரணசந்திரோதயகாலத்தில்ஸ்ரீபிருந்தாரண்ணியமானது நானாவிதசுகந்தபரிபளபுஷ்பங்களை விகசிதமனோரம்மியமாகப் பிரகாசித்துக் கொண்டிருக்க எங்களை அங்கீகரித்து அந்தப்புண்ணியவனலட்சுமிசந்தோஷத்தையடையவும்மனோரதங்களீடேறவும் ராஸக்கிரீடாதிசயங்களுக்குத்தொடங்கித் தேவகணங்களபுஷ்பவருஷங்கள் வருஷிக்கமஹாச்சரியகரமாகியலீலாவிநோதாதிசயங்களை ஆஸ்ரயித்துஎங்களைச்சந்தோஷிக்கச் செய்தார் இப்படிசெய்தஸ்ரீபகவானானவர் உம்மோடுஏகாந்தமாகச்சம்பிரமவார்த்தைகளைப்பேசும்போது ராஸக்கிரீடாதிசய விருத்தாந்தங்களைச் சொல்லி எங்களைக்கிருபையாகநினைப்பாரோவென்றுபிரிவாற்றாமையினால் வியாகுலப்பட்டார்கள்சிலர்,

வாரீர் ஸ்ரீயோகீஸ்வரேஸ்வரருக்குமிகுந்தபிரியசகாவாயும் எங்கள்மனக்கவலைகளைத் தீர்க்கவந்தவராயும் எழுந்தருளியிருக்கின்றமஹாத்மாவாகிய ஸ்ரீஉத்தவரே நீர் தீனஜனங்களாகிய எங்கள்மீது கிருபைசெய்துஸ்ரீபகவானானவர்இந்தஸ்ரீகோகுலத்திற்குச்சீக்கிரமாக எழுந்தருளி எங்கள்யாவரையுங்கடாட்சித்து ரட்சிக்கும்படிப் புருஷதாரஞ்செய்யவேண்டும் இதுவுமல்லாமல்எங்களுடைய மனோரிதானங்களைத்தெரியப் படுத்தவேண்டிய தெவ்விதமெனில் எங்களாப்தபந்துவாயும் சர்வாத்மகுணங்களுக்குரிய எங்கள்பிராணேசராயும் திருவவதரித்திருக்கின்ற ஸ்ரீகோபாலபாலகிருஷ்ண சுவாமியானவர் எங்களை இரட்சிக்கும்பொருட்டுச்சீக்கிரமா யெழுந்தருளாவிடின்எங்கள்சரீரங்கள் இவ்வுலகத்தின்கண் நிமிஷமாத்திரமாயினும் நிற்பதரிதென்று விண்ணப்பஞ்செய்யவேண்டியதுஎங்கள்சரீரங்கள் நசிப்பதற்குமுன்மனோரதங்களழிந்து விடுமென்றும்அம்மனோரதங்களழிவதற்குமுன் எங்கள்சித்தங்கள் இளைத்து தத்தளித்துத்தபித்துவிடுமென்றும்அச்சித்தங்கள் தபித்துவிடுவதற்குமுன் எங்கள்பிராணஸ்தாயியானது கலைகளைந்து பிரிந்துபோய் விடுமென்றும் சொல்லக்கடவீர். அப்படி எங்கள் பிராணனொழிந்தபின்பு சர்வப்பிராணி சமாட்சகராகிய எங்கள் பிராணவிபுவானவர்இவ்விடத்தில் எழுந்தருளுவாராகில் இவ்வுலகத்திலுள்ள மற்றப்பிராணிகள்யாவரும் இந்த ஸ்ரீபகவானைநிர்த்தயனென்று நிந்திப்பார்களென்பதற்குச் சந்தேகமிராது. அப்போது அவர்களுக்கிவர் என்னசமாதானஞ்சொலல்லருளுவர், ஆகையால் சீக்கிரமாகஎழுந்தருளி ஆர்த்தபோஷகராய் இரட்சிக்கும்படி எங்கள்விண்ணப்ப வார்த்தைகளைச் சொல்லி அழைத்துவரவேண்டியதென்றும் பிரார்த்தித்தார்கள் சிலர்.

வாரீர்ஸ்ரீகமலலோசன ருடைய திருக்கலியான குணானுபவமகாத்மாவாகியஸ்ரீஉத்தவரே·பூர்வம்ஸ்ரீபப்பதிக்குபெரியபிராட்டியராகியகமலாதேவியானவள நிஜாஸ்ரித சனங்களாகிய சர்வாத்மாக்களையுங் குறித்து அவர்கள்ஸாபராதங்களைக்ஷமிக்கும்படிபரமதர்ம நிலையைக்காட்டிச்சொல்லுதற்கு இவ்வுலகத்திலுள்ளகாமினிகளாகிய பதிவிரதாஸ்திரீசனங்களையும்அவர்கள்பிராணநாயக

ர்களையும் கருமலாதேவியாகிய தம்மையும் தம்முடைய மனோகரராகிய அவனையும் சாட்சியாகவைத்துச்சொல்லிக் (கிருபாபரிபாலயதா) என்று சர்வப்பிராணிகளையும் ரக்ஷித்து ரட்சிக்கச்சொன்னதுபோல நீரும் ஸ்ரீஹரியாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில் எங்களைக்குறித்து விஹிதோபசாரமாகச்சொல்லவேண்டிய தெவ்வாறென்னில் உம்மையாஸ்ராயித்துத் தங்களங்கிய வியவஹாரங்களை விட்டிருக்கின்ற தீனசனங்களாகிய இந்தஸ்ரீகோபிகாஜனங்களைப்பிரிந்துமனமலையச்செய்வது உமது பரமகாருண்ணியாதிசயதிவ்யகுணங்களுக்குத் தகாதென்றுசொல்லி அழைத்துவரவேண்டும் இதற்குத்தகுந்தவர் நீரேயல்லது மற்றையாரையும்கண்டதில்லையென்றுபிரார்த்தித்தார்கள்சிலர்,

வாரீர் ஸ்ரீமகாமகிமாவதாரராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய ஸ்ரீபதாப்ஜங்களையாஸ்ரயித்தமகாநுபாவராகிய ஸ்ரீஉத்தவரே எங்கள்மனது தபிக்கின்ற விதங்களைச் சொல்லுகின்றோம் அவைகளை ஸ்ரீபகவானுக்குநன்றாகத்தெரியப்படுத்துவதெவ்விதமெனில் எங்கள் பிராணவிபுவாகிய ஸ்ரீபகவானானவர் இந்தஸ்ரீநந்தவ்ராஜத் திருவீதிமார்க்கங்களில் சர்வஜகத்மோகன சுந்தராகாரஸ்வரூபராக எழுந்தருளியுலாவும்போது எங்கள் கண்குளிர நேத்திரோத்ஸவமாகசேவிக்க இனி ஒருக்கால் லபிக்குமோவென்றும் எங்கள்ஸ்ரீகோகுலப்பிரபுவாகியஸ்ரீமாதவப்பிரானானவர் எங்களையாதரித்து எங்களோடு மதுரியமானவார்த்தைகளைக் கிருபைசெய்யவும் எங்கள்செவிகள் அச்செவிச்செல்வத்தையடைந்தானந்திக்கவும்இனியொருநாளுண்டாகுமோவென்றும் எங்கள்ஸ்ரீமந்நாதராகிய ஸ்ரீலட்சுமீவிபுவானவர் எங்கள்சிரங்கள் புளகிக்கவும் எங்களாத்மகுணங்கள் பாவனமடைந்து ஆனந்திக்கவும் ஒருச்சேவித்தமாத்திரத்தில் அவர்ஸ்ரீக்கரங்கள்ஸ்பரிசித்து ஆலிங்கனாதிதிவ்யோபசாரங்களை ஆசரிப்பதற்கும் ஒருதினங்கிடைக்குமோவென்றும் ஆ எங்கள்பிராணேசரே எங்களை இப்படிப்பிரிந்துமனமலையச்செய்வது உமக்குதர்மமோவென்றுகலகவார்த்தைகளைச்சொல்லி நிந்திப்பதும் ஒருபகல் சம்பவிக்குமோவென்றும் ஸ்ரீபகவானானவர் நாங்கள்வாசஞ்செய்துகொண்டிருக்கின்ற ஸ்ரீகோகுலபிருந்தாரண்ணியபுண்ணியவனாபேட்சையினாலாவதுஎழுந்தருளமாட்டாரோவென்றும்எங்கள்இருதயங்கள் மீகாமனில்லாதமரக்கலம்போலஅலைகின்றதென்று விண்ணப்பங்கள்செய்யவேண்டியது இன்னமும் ஸ்ரீபகவானானவர் எங்களைக்குறித்து அந்தரங்கமான சமாசாரங்களை உம்மிடத்திலேகிருபைசெய்திருந்தால் அவற்றை எங்கள்செவிகளும் மனமுதலிய சர்வேந்திரியங்களும் பாவனமாகும்படி சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்தித்து யாவரும் ஏககாலத்தில் ஆஸ்ரீரமாநாதா எங்களருந்தவப்பொருளே ஸ்ரீ பரமகாருணிகாதகமராகிய ஸ்ரீபக்தவத்ஸலரோ என்று இவை முதலிய ஸ்ரீபகவந்நாமங்களை ஸ்மரித்து துக்கித்தார்கள்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரீர் ஸ்ரீமாதவார்ப்பித மானசிக மஹாநுபாவராகிய மகிபதியே அநந்தரம் ஸ்ரீபாகவதோத்தமராகிய ஸ்ரீஉத்தவரானவர் இவ்வுலகத்தில் ஸ்ரீபகவானுடையநிர்ஹேதுக்கடாக்ஷத்துக் கிலக்காய்த்திருவவதரித்திருக்கின்றபரமயோகீந்திரர்களாகிய பாபாசாரியா தங்களுடைய இருதயகமலத்தை நவவிதசம்பந்தயோகத்தினாலும் பக்தியோகத்தினாலும் ஸ்ரீசர்வாந்தரியாமித்துவஸ்வரூபராகிய ஸ்ரீபரமபுருஷருக்கு சமர்ப்பித்து உஜ்ஜீவிக்கின்றார்கள். அவ்வனுபவங்கள் தங்களுக்கியற்கையாய்ப் பெற்று ஸ்ரீபகவத்ஸமர்ப்பித்த பரிசுத்தமானஸ திவ்யாநுஷ்டானபக்தியோக நிஷ்டாபரர்களாயும் பரம குருஜனங்களாயும்விளங்குகின்ற ஸ்ரீ கோபிகாஜன இருதயாநுபவத்திற்குஆச்சரியாநந்த குதூஹலத்தையடைந்து அந்தஸ்ரீநந்தவிரஜத்தில் சிலநாள் வாசஞ் செய்துகொண்டிருந்து தாமும்அந்த ஸ்ரீகோபிகாஜனங்களுடைய ஸ்ரீ பகவத்தியானநிஷ்டாதிசயங்களை ஆஸ்ரயித்து அவர்களுக்குவேதவேதார்த்தாந்த கௌரவங்களினால் ஸ்ரீகிருஷ்ணகுணலீலாவர்ணனைகளைக்குணனுபவஞ்செய்து அசேஷரஹஸ்யார்த்தங்களையும்போதித்து அவர்கள் மனது ஒருவாறுதிருப்தியடைந்தபின்பு அந்தஸ்ரீ கோபிகாஜனங்களிடத்திலும் ஸ்ரீநந்தகோபர்முதலிய கோபாலர்களிடத்திலும் ஸ்ரீயசோதாபிராட்டிமுதலிய தாயர்களிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு அவர்கள் சமர்ப்பித்தகாணிக்கைகளை அங்கீகரித்துத் திவ்யரதாரோஹணஞ்செய்து ஸ்ரீபகவானைத் தியானித்துக்கொண்டே ஸ்ரீமதுராபுரியிற்பிரவேசித்துச் சர்வலோக சமஸ்தஜனபாபஹாரியாயும்ஸ்ரீமதுராநகரவிஹாரியாயும் சர்வசத்துரு ஜன்மதாபஹாரியாயும்விளங்குகின்ற ஸ்ரீசௌரியாகியஸ்ரீகிருஷ்ணஸ்வரூபாநந்தஹரியைத் தரிசனஞ்செய்தமாத்திரத்தில் யதோசித தேவோபசாரங்களைச்செய்து சாஷ்டாங்கமாகத்தண்டன்சமர்ப்பித்து ஸ்ரீநந்தகோபர்முதலியபக்தஜனங்களசமர்ப்பித்த காணிக்கைகளை ஸ்ரீபலராம கிருஷ்ணமூர்த்திகளிருவருக்கும் சமர்ப்பித்துவிட்டுஉக்கிரசேனமஹாராஜருக்குக் கொடுத்தகாணிக்கைகளை அவரிடத்திலேசமர்ப்பித்து ஸ்ரீபகவானால் ஆதரிக்கப்பட்டுச்சந்தோஷசித்தரா எழுந்தருளியிருந்தார்.

## சஅ - வது- அத்தியாயம்.

கலி விருத்தம்,

ஆண்டவனந்த கூனிகிரகஞ்செல
வேண்டியவுப சாரமியற்றினன்
பாண்டவர்கள்தன் க்ஷேமம்பகர்ந்திட
மீண்டுமக்ரூரனை மேவிவிடுத்தனர்.

ஸ்ரீகிருஷ்ணபகவானுடையகிருபா பிரசாதத்தினாலே மிகவுஞ் சௌந்தர்யஸ்வரூபத்தை யடைந்த சைரந்திரியாகிய குப்ஜையினுடைய கிரஹத்திற்கு ஸ்ரீபகவானெழுந்தருளி அந்தக்குப்ஜையினுடைய மனோரதத்தைத் திருப்தியடையச்செய்தாரென்றும் பின்புஸ்ரீபாகவதோத்தமராகிய ஸ்ரீஅக்ரூரருடைய திருமாளிகைக்கு எழுந்தருளி அவருடைய இருதயத்தைச் சந்தோஷிப்பித்து அவரைப் பாண்டவர்களுடைய க்ஷேம சமாசாரங்களை அறிந்துகொண்டுவரும்படி அஸ்திநபுரிக்கு அனுப்பிவித்தாரென்றுஞ் சொல்லுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரீர்பரமபாவனபக்தியதிசயத்தையுடையபரிக்ஷின் மஹாராசரே அநந்தரம் ஸ்ரீபகவானானவர் பூர்வமிந்த ஸ்ரீமதுராநகரத்தில் பிரவேசித்தபோது தமக்குபரிமள திரவியங்களைத்தந்து சந்தோஷிப்பித்துத்திவ்யசுந்தரஸ்வரூபத்தையடைந்த சைரந்திரிஸ்திரியாகிய அந்தக்குப்ஜைக்குத்தாமருளிய வார்த்தையைக் கிருபை செய்யும் பொருட்டுத் தாம்சர்வக்ஞமூர்த்தியாகையால் அவளிருதயத்தையறிந்து அதற்குத்தகுந்தபடிஜகன்மோகனசுந்தராகாரஸ்வரூபத்தை வகித்துஸ்ரீஉத்தவரை அழைத்துக்கொண்டு திவ்யபரிமளத்தைத் தராநின்ற தூபதீபாதிகளாலும் பூர்ணகும்பங்களாலும்நானாவித திவ்யபுஷ்பமாலைகளாலும் அநந்தவிசித்ரஸ்வரூப காமகேளிவிலாசபிம்பங்களாலும் அங்கங்குநிலைக்கண்ணாடிகளாலும்உல்லாசமாய் வாசஞ்செய்யுமிடந்தோறும் குளிர்ந்தசந்திரகாந்தமேடைகளாலும் வீற்றிருப்பதற்குத் தகுந்தஆஸனங்களாலும் ஊஞ்சல்களாலும் சப்பிரகூட மஞ்சங்களாலும் அலங்கரிக்கப்பட்டு ஸ்ரீ கிருஷ்ணபகவான் எப்போதெழுந்தருளுவரோவென்று பிரார்த்தித்துஎதிர்பார்த்துக்கொண்டிருக்கின்ற குப்ஜையினுடைய சித்திரவிசித்திரமாகச் சுவர்ணரத்தினகசித மங்கலமாகியகிரஹத்தைக்குறித்து எழுந்தருளினார். அந்தத்தருணத்தில் அந்தத்திவ்யமோகன சுந்தரவதியானவள் அவ் விசித்திர மோஹனாகார சுந்தரகிரஹத்தில்திவ்யதேஜோமயமன்மதனுக்குஒரு மங்கலதீபம்போலவும் அம்பரத்தில்மின்னுகின்ற ஒருமின்னற்கொடிபோலவும் சர்வ ஜகன்மோகினிதேவதையைப்போலவும் விளங்கி ஒருபொன்னூஞ்சலில்ஊசலாடிக்கொண்டு ஸ்ரீகிருஷ்ண கீர்த்தனங்களைச்சகிகளபாடக்கேட்டு ஆநந்தித்துக்கொண்டிருந்தார்கள் ஸ்ரீபகவானும் ஸ்ரீஉத்தவஸகிதராய் அந்தச்சுந்தரகிரஹத்தில்நுழைந்தார் நுழைந்தமாத்திரத்தில்அந்தச்சுந்தரவதியாகிய புண்ணியாங்கனை யானவள் மேகத்தின் வரவைக்கண்டநீண்டகலாபமயிலைப்போல மஹாசம்பிரமானந்தகுதூஹலத்தை யடைந்தவளாய் அப்பொன்னூசலைப்பொருக்கெனவிட்டிழிந்து திவ்யாபரண பூஷிதைகளான அநங்கமோனசுந்தர சகிஜனங்கள்தன்னைச்சூழ்ந்துவரஒருபூங்கொம்பானது நடைகற்பதுபோல எதிர்கொண்டுநடந்துவந்து நானாவித திவ்யோபசாரங்களைச்செய்துசுவர்ணமணிமய சுந்தராகாரதிவ்யபஞ்ச சயனத்தையுடைய ரத்தினமயதிவ்யமஞ்சத்தில் ஸ்ரீபகவானை எழுந்தருளச்செயதுவிட்டு மஹாத்மாவாகிய ஸ்ரீஉத்தவரை ஒருதிவ்யமணிமயாஸனத்தில் சுகாசீனராய் வீற்றிருக்கச்செய்து அர்க்கியபாத்தியாதி விநயவிதேயஉபசாரங்களால் பக்தியாகப்பூசித்துஅவரிடத்தி லனுக்ஞைபெற்றுக்கொண்டு அந்தத்திவ்யபுண்ணிய தாசியானவள் தனதுதாசீஜனங்கள் தனக்குவிகிதோப சாரங்களைச்செய்து பணிமாற மங்கலஸ்நானஞ்செய்துசுவானவஸ்திரத்தையும்நானாவித திவ்யாபரணங்களையும் எடுத்துஅலங்கரித்துக்கொண்டு லலாடத்தினிடத்தில் கஸ்தூரி திலகந்தீட்டித்தனதுதிவ்யமேனியின்மிகவும் பரிமளங்களைவீசாநின்றகஸ்தூரி-புனுகு-ஜவ்வாதுமுதலிய ஸ்ரீ சந்தனங்களை அணிந்துதிவ்ய சுகந்சகதம்பப் புஷ்பமாலைகளை அளகபாரத்தில்சூடிக்கொண்டு ஸ்ரீபகவானுக்குப்பொற்றும்பாளங்களில் நானாவிததிவ்யரச பூபங்களையும் மஹாருசிவர்க்கங்களாகிய பக்குவபலலட்டுகங்களையும் அமைத்துஏந்திக்கொணடுவந்து ஸ்ரீபகவா னெழுந்தருளியிருக்கின்றதிவ்ய அறைவீட்டில்வைத்து திவ்யகந்தபுஷ்பமாலிகாபரணங்களைத் தன்கரங்களால் அவரைஅலங்கரித்துத் தேவோபசாரங்களைச்செய்து ஏகாந்தத்தில்கர்ப்பூரதாம்பூலாதிகளைமடித்துக்கொடுத்துஉடனே ஸ்ரீகிருஷ்ணசரிதகர்ணாமிர்த கீர்த்தனங்களை வீணாதிகளாற்பாடி ஸ்ரீபகவானுடைய திவ்யமோகனஸ்வரூபசுந்தராகார அவயவாதிசயங்களைக்கணடு அடிக்கடி ஆச்சரியமாக ஸேவித்துமிகுந்த சரசவசனங்களைப்பேசி லஜ்ஜையுடையவர்களாய் அருகிலநின்றுஸ்வாமிதிருவடித்தாமரைகளைத்தனதுகராரவிந்தங்களினால் வருடித்திவ்யசுராடியினால் மெல்லிய காற்றுவரும்படி வீசி உபசரித்து அவரனுக்ஞைக்குக்காத்திருந்த இந்தத்தன்னியவதியாகிய சைரந்திரியைச்சதுர்வித புருஷார்த்தங்களையும் தன்னைச் சரணாகதஞ்செய்கின்றவர்களுக்குத் தயைசெய்கிற ஸ்ரீ பகவானனவர்கடாக்ஷித்து இவள்மனோரத மீடேறும்படிச் சவுஜ்ஞையினால் மஞ்சத்திலிருக்கச்செய்து மதனகேளிவிலாசகிரமாலங்காரத்தோடு அந்ததிவ்ய தாசியினுடையஇருதயபுண்ணிய பலானுபவமாகஸ்வரூபித்துக் கடாலிங்கனாதிசேஷ்டித சம்பாவிதவிசேஷங்களால் அந்தப்புண்ணியபலவாமணியினுடைய இருதயமானது பரமவிலாஸமதனோவுல்லாஸ விசித்திர விப்பிராந்த லீலைகளாலகிரீடித்து இவ்விதங்களாக ஸ்ரீபகவானனவர்மதனகளாசாஸ்திரோக்த கிரமமாக அந்ததிவ்யதாசிரத்தினத்தினுடைய ஜாதிலட்சணத்தையும் அவள் பருவத்திற்குத் தகுந்த காலக்கிரமத்தையும் அவள் காமகளாபா

கதுக்குத்தகுந்த லீலாதி விசேஷங்களையும் அக்காலதேசத்திற்குரிய சேஷ்டிதங்களையும் அவளுடையதாதுவிருத்திக்கும் வயதினளவிற்கும் குணங்களின்கௌரவத்திற்கும் மனமுதலியஇந்திரியங்களின்சஞ்சலமானகுறிகளுக்கும் அவள்இருதயபிதானத்திற்குத் தகுந்தபடி ஸ்ரீசர்வஜ்ஞமூர்த்தியாகையால் அவள் அவாவினளவையறிந்தநானாவித திவ்யாதிசயங்களான அதிமானுஷசேஷ்டிதங்களால்மதன லீலாவிசித்திரகிரீடாதி ரதிபோகசுகாநந்தங்களைத்தந்து சம்பூர்ணமானமனோரததிருப்தி அடைவித்தார் அந்தச்சைரந்திரிசுந்தரியுந்தனக்கு வெகுகாலமாயுண்டாயிருந்த ஸ்ரீகிருஷ்ணஸ்வரூபலாவண்ணியாதிசயங்களில்மோகித்திருந்த மோஹதாபஜ்வரானலங்களாறும்படித்தனது இரண்டுகராப்ஜங்களாலுந்தழுவிஸ்ரீபகவானைக்கடாலிங்கனஞ்செய்து அத்திவ்ய திருமேனி ஸ்பரிசத்தினால்தனது அநங்கஜன்மார்ஜிகபாபதாபங்களையும் இந்தச்சன்மத்திலுண்டாகிய மோகதாபங்களையுந்தீர்த்துக்கொண்டவளாய்ச் சம்பூர்ணமனோரதத்தையடைந்து தனது பூர்வஜன்மத்தில் ஸ்ரீபகவானுடையபூர்வாவதாரஸ்வரூப சௌந்தர்யத்தில் மோகித்து இந்தச்சென்மத்தில்தேவரம்பையினுடைய அம்சத்தையடைந்துசன்மித்தவளாகையால் பரமதபோதன மௌனீந்திரர்களாகிய ஸனகாதிதிவ்யயோகமஹாத்துக்களாலும் அடைந்துய்வதற்கரிய சர்வலோகப்பிரபுவாகியும் லோகராட்டியராயும் பக்தஜனங்கள்வேண்டியதிருவுருவங்கொண்டு அவர்களுடையமனோரதங்களைத்திருப்தி செய்கின்றவராயும் திருவவதரித்துத்தனக்குப் பிரசன்னமான ஸ்ரீபகவத்ஸ்வரூபத்தையனோதும்பரமைஸ்வர்ய பரமலாபநித்தியசுகாநந்த நிர்வாணவிபூதியிலுண்டாகிய பிர்ம்ஹானந்தஆத்மஇதார்த்தநித்தியசுகத்தைக் கோருமல் அந்தத்திவ்யசுந்தரீரத்தினமானவள் ஆதிவ்யமோகன ஸ்வரூபானந்தரே நானும்மைவிட்டுப் பிரிய மாட்டேன் எனக்குஇவ்வதிசயங்களையுடையபேராநந்தத்தைஇன்னமுஞ்சிலநாளிங்கே யெழுந்தருளியிருந்து என்மனதுதிருப்தியடையத் தந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தாள்ஸ்ரீபகவானும் அவள்மனோரதப்படிக்கு வரத்தைத்தந்து சிலநாளங்கேயெழுந்தருளி யிருந்துஅவளால் பூசிக்கப்பட்டு மஹாத்மாவாகிய ஸ்ரீஉத்தவருந்தாமுமாய் அந்தச்சுந்தரீகிரஹத்தில்நின்றும் புறப்பட்டுத்தமதுதிவ்ய திருமாளிகைக்குவந்துசேர்ந்தார்கள்.

மிகுந்த விரக்தசீலராகிய விலக்ஷண ஞானயுக்த
விவேகபரிட்சின் மகாராசனுடைய
வாக்கியம்

வாரீர்எனதுபரமகுருசிகாமணியாயும் நித்தியப்ரம்மசுகாநந்தத்திற்குரிய ஸ்ரீகிருஷ்ணகலியாண குணானுபவசம்பிரமாதிசய குதூஹலராயும்எழுந்தருளி யிருக்கின்றஸ்ரீசுகரே மகாமகிமபரமகிருபாதிசயானந்தஅநந்தகலியாணகுணங்களையுடையவராயும்வேதவேதாந்த ஸ்ரீமந்தவீதிகளில்உலாவுகின்ற நிரவதிகதேஜோமய அடவக்காத்மகராயும் வேதபுருஷனாலும்மற்றுமுள்ளசிவனமுதலியபரமயோகீந்திரர்களாலும் அடைவதற்கரிய ஸ்ரீபரந்தாமராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானை அந்தச்சைரந்திரிஸ்வரூபதிவ்ய தாசியானபுண்ணியாங்கனையானவள் சேவித்துய்ந்து எளிதிலனாந்தனுபவித்தும் அபவர்க்கமயாத்மகனைநித்யசுகாநந்தஸ்ரீபகவல்லாப முக்தமார்ககத்தைக்கோராமல் அஸ்திரகால சௌக்கியத்தைத் தராநின்ற அல்பபோகமாகியாதிசுகத்தையே விரும்பி வரத்தையடைந்தனளே அகோ அந்தசுந்தரியினுடையபூர்வசன்மகர்மபலந்தான்எப்படிப்பட்டதோ கிருபைசெய்யவேண்டுமென்று வினவினர்.

ஸ்ரீசுகர்வாக்கியம்

வாரீர்சர்வப்பிராணிகளிடத்திலும் சமதரிசன ஞானமுள்ள சத்புருஷராகியமகீபதியே ஸ்ரீபகவானுடையபூர்வாவதாரங்களில் தண்டகாரண்ணியவாசிகளானரிஷிகளும் தாருகாவனவாசரிஷிகளும் அவ்வவதார ஸ்வரூபங்களைக்கண்டு சகியாதவர்களாய்ப்பெண்ணுடையுடுக்கவும் பெறவும்அப்போது லபியாதவர்களாய் ஸ்ரீபகவதாக்ஞையினால் காலாநதரமான இந்தத்திவ்யாவதாரகாலத்தில்அடைந்துய்ந்தார்களன்றோ அப்படியேஇந்தப்புண்ணியாங்கனையானவள் பூர்வஜன்மகாரணத்தால் இந்தசன்மத்தில்தேவஅரம்பையினுடைய அம்ஸத்தை வகித்து அந்தவாகனுவிதிப்பிரகாரம் அந்தரதியைகோறிநின்றனள் இந்தஸ்ரீதேவதேவனும் சர்வபலப்பிரதாதாவாயும் மோட்சபலத்திற்கேயுரியஸ்ரீபரந்தாமனையும்விளங்குகின்றவனாயடைந்தபடியால அந்தப்புண்ணியாங்கனைக்கு இந்தஸ்ரீபகவத் ஸ்பரிசம்வீணாவதில்லை அவருடைய நிர்ஹேதுகபரமகாருண்ணியாதிசயத்தினால் காலாந்தரத்தில் கிரமமுக்திமார்ககத்திற்குச்செல்லச்சந்தேகமிராதென்று அந்தநரேந்திரனுடைய மனது திருப்தியடையச்சொல்லியருளினர்.

வாரீர்மகாகுண பூஷணமகாராசனே அநந்தரம்சர்வக்ஞ மூர்த்தியாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் பூபாரநிவாரணஞ்செய்யத் திருவுள்ளத்தில்சங்கல்பித்துக் கொண்டவராய்த் தமக்குமிகுந்தஆப்தராகிய ஸ்ரீஅக்குரூரனை ஹஸ்தினபுரிக்குஅனுப்பவேண்டுமென்று ஸ்ரீஉத்தவனையும் பலராமனையுந்தமக்குச்சகாவாக அழைத்துக்கொண்டு ஒருதிவ்யதினத்தில் ஸ்ரீஅக்குரூரர் திருமாளிகைக்குளெழுந்தருளினர் மஹாத்மாவாகிய ஸ்ரீஅக்குரூரரானவர் தமதுதிருமாளிகையைக்குறித்தெழுந்தருளிய ஸ்ரீஉத்தவஸகித ஸ்ரீபலராமகிருஷ்ணமூர்த்திகளைக்கண்டமாத்திரத்தில்பிரம்ஹானந்த சந்தோஷபரிதரா

ய்ப்பொருக்கெனஎழுந்து எதிர்கொண்டுவந்துநமஸ்கரித்து அஞ்சலிபத்தராய்த்துதித்துச்சர்வோபசாரங்களையுஞ்செய்து அழைத்துக் கொண்டுபோய்த் திவ்யமணியோசனங்களிலிருக்கச்செய்து அர்க்கியபாத்தியாதிசேவோபசாரமாக அர்ச்சித்துஸ்ரீபலராமகிருஷணமூர்த்திகளுக்கு மீண்டும்நமஸ்கரித்து ஸ்ரீஉத்தவனை ஆலிங்கனதிஉபசாரங்களால் சந்தோஷிப்பித்து மிகுந்தபக்தியோடுஇவர்களுடைய ஸ்ரீபாதத்தீர்த்தங்களை ஸ்வீகரித்துப்பிரமஹானந்தசந்தோஷராய் ஸ்துதித்துக்கொண்டு நின்றார் அப்படிநிற்கின்றஸ்ரீ அக்குரூரனை ஸ்ரீபகவான் இருக்கும்படிநியமிக்கஅவரும்அருகில்உட்கார்ந்து வேதவேதாந்தங்களிலே நடிக்கின்றஸ்ரீபகவானுடைய திருவடித்தாமரைகளைத்தமதுமடியிலேற்றி மிருதுவாக வருடிக்கொண்டுஒருவார்த்தைசொல்லுகின்றார்;

ஸ்ரீ அக்குரூரருடையவாக்கியம்

வாருங்களஸ்ரீபலராமகிருஷ்ணமூர்த்திகளாகியதிவ்யபுருஷசிரேஷ்டர்களே இந்தப்பிரபஞ்சத்திற்குப் பாபாரிஷ்டஸ்வரூபிகளாயும் மகாகடினசித்தர்களாயும்பூர்வயுகஅசுராம்ஸர்களாயும் லோகத்துரோக கிருத்தியங்களையுடையவர்களாயும் ஜன்மித்திருந்தகமஸமகாராசன்முதலிய அநேகராட்சஸஜன்மிகளை அவர்கள் துணைவர்களோடு அதமாகும்படிச்சம்ஹரித்து யமபுரத்திற் கனுப்பிஉங்களுடையபாகுபலபராக்கிரமாதி சயத்தினாலும் பரமகாருண்ணியத்தினாலும் தேவதாம்ஸானிதர்களாகியசகலயாதவவம்சங்களையுமுத்தரித்துஇடரைத்தீர்த்து அவர்கள்யாவரையும்நித்தியானந்தசுகபோகத்தையடைந்துய்ந்து சுகிக்கும்படி இரட்சித்தீர்கள்.

வாருங்கள் ஸ்ரீ ஹரியினுடையதிவ்யாம்ஸ பரமாத்மஸ்வரூபாவதாரமகானுபாவர்களே சமஸ்தப்பிரபஞ்சத்திற்கும் விஸ்வாதிபுருஷர்களாயும்விஸ்வ காரணர்களாயும் விஸ்வமயர்களாயும் விளங்குகின்றஉங்களுக்குஸ்வயமாகஒருகாரியகாரணங்களுமில்லைசர்வலோககாரியகாரணங்களுக்கும் உங்களைத்தவிரவேறொருஆதார ஆஸ்ரிதபூதருமில்லையென்று இநதப்பிரகாரம்சிலநேரம ஸ்துதிசெய்துஸ்ரீகண்ணபிரானுடைய திவ்யமங்களவிக்கிரகத்தைத்தனதுகண்கள்களிதீரநேத்ரோத்ஸவமாகநன்றுகச்சேவித்து பக்தியோகபாவசானந்தகு தூஹலராய் வாரீர்ஸ்ரீபரமேஸ்வரரே உமதுரசோகுணப்பிரபாவாதிசயத்தினால் சமஸ்தலோகஸ்வரூபங்களாகிய நிகிலசராசரங்களையும் சிருஷ்டித்து அவைகளின் விருத்தியின்பொருட்டுச்சத்வகுணப்பிரபாவாதிசயத்தினால்சர்வவேதமயகாரண நிசஸ்வரூபத்தைவகித்து விதிநிஷேதவைதீகமார்க்கங்களினாலே சமஸ்தபிரபஞ்சங்களையுமசுஸ்திரமாக ரட்சித்துக்கொண்டிருக்கிறீர்கள் ரசோகுணபிரபாவத்தினால் உமதுகாரியரூபாத்மகமாகிய சராசராத்மசரீரஸ்வபாவங்களுக்குத்தோறறவொடுக்கங்களைச்செய்துகொண்டிருக்கின்றசத்வ சூன்யாத்மகமாகியகாலமாய்அசித்ரூபாத்மகமான மகதாதிபஞ்சபூதாகார தேசஸ்வரூபங்களைவகித்து அவைகளுக்குக்காரிய ஸ்வரூபங்களான சகலவிஸ்வங்களையும்உமதுவிஸ்வாகாரவிராட்ஸ்வரூபத்தி லொடுங்கச்செய்துநீரொருவராகவேபிரகாசித்துக்கொண்டிருக்கின்றீர் அப்படிப்பட்ட உமக்கும்காரியகாரணங்களுண்டோ சர்வகாரியகாரணங்களுக்கும் விபுவாயிருக்கின்றீர்நீர்சர்வாத்மங்களிலும் அந்தர்க்கதராயிருந்துகொண்டுசர்வவிஸ்வங்களையும் விஸ்வபுருஷ விஸ்வாதிகாரிகளையும்சமஸ்தசராசராத்மகமான பூதங்களையும் அநந்தவிசித்திரகாருபேதங்களாக உமதுலேஸாம்ஸசக்திப்பிரபாவத்தினல் சிருஷ்டி ஸ்திதிலயங்களை ஆசரித்துக்கொண்டிருக்கின்றீர்நீர் ஸ்ரீசர்வக்ஞவிக்ஞானமூர்த்தியாகையால்உமதுலேஸாம்ஸசகிதபூதர்களானலோகபாலர்களாகிய சதுர்முகபஞ்சமுகாதி சீவசமூகங்களைப்போலபிரகிருதிகுணகருமபாசபந்த மோகிதங்களை அடையாமல் மார்த்தாண்டனைப்போலச் சாட்சாத்சர்வக்ஞத்துவ விவேகோதயக்ஞான சமூர்த்தியாய்ஸ்ரீபரமாத்மஸ்வரூபராய்நிரவதிகதேசோமயராய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றீர்.

வாரீாஎங்கள்பரமதெய்வமாகிய ஸ்ரீபரந்தாமமூர்த்தியே உமதுதிவ்யசங்கல்பத்தினாலுண்டாகியஇந்தசர்வப்பிரபஞ்சங்களினுள் விருத்திலயங்களுக்குச் சம்பந்தித்துக்கொண்டிருக்கின்ற நித்தியபரிசுத்தசித்தபுருஷநாமதேய சீவாத்மஸ்வரூபமேஎக்காலத்தினும்கிரமக்கிரமாதிகாரகாலங்களினும் அநேகபேததேகங்களைப்பரிக்கிரகித்தும்அவற்றின்கர்மகுணபேதங்களுக்குரியபந்தமோட்சங்கள்தன்னையொட்டாமல்நித்யசுத்தசத்வத்தோடு பிரகாசித்துகொண்டிருக்குமேயாகில அந்தச்சர்வாத்மாக்களுக்கும் அந்தரியாமியாய்த் திவ்யவிபுவாயும ஸ்ரீபரமாத்மஸ்வரூபியாயும்விளங்குகின்றசாட்காத் ஸ்ரீபரமேஸ்வரனாகியஉம்மைஅப்படிபபட்டஜன்மகர்மஙகளும்பந்தமோட்சஙகளும் ஸ்பரசிக்கமாட்டாதெனச் சொல்லவும வேண்டுமோவென்றுசகலவேதவேதாந்தபிப்பிராயங்களையுணர்ந்த மகாத்மாக்கள்ஸ்துதித்துகொண டிருக்கின்றார்கள்,

வாரீர்சுத்தசத்வாத்மக திவ்யதேசோமயாநந்த ஸ்வரூப ஸ்ரீஅச்சுதரே உமதுதிவ்யாக்ஞையினால் ஜனித்தஇவ்வுலகங்களும் இவ்வுலகாதிபதிகளாகிய சதுர்முகபஞ்சமுகாதிதேவப்பிரபுக்களுடைய குணகர்ம அவாந்தர சிருஷ்டிபேதங்களும் ஆகியஇவற்றினுடைய வைகாரிக விசித்திரகோராகாரஸ்வரூபிகள் சன்மித்து நிகிலவேதஸ்ரீபஞ்சராத்திராதிகளுடைய நியதபாபதருமங்களையுங்கைவிட்டு அவ்வேதங்களையும்ஸ்ரீபாஞ்சராத்திராதிகளையும் அவறறையுணர்ந்தொழுகின்ற வேதியர்களையும் நிந்தித்துமோகன நூல்களிறசொல்லியபாஷண்டகர்மிக

ளாய்சனித்து. அந்தபாஷண்டதருமங்களையேஉத்கமதாமமென்றுநம்பிஇவ்வுலகத்திலுள்ளசாதுசஜ்ஜனங்களைாவொதித்துஸ்ரீபரமாத்மாவாகிய ஸ்ரீஅரியினுடையதிவ்யகல்யாண குணங்களைக்குணானுபவஞ்செய்துநம்பு மவர்களைச்சகியாமல்உபதிரவங்களைச் செய்துகொண்டுலோக மோஹனார்த்தமாயுண்டான மாயாவாதிகள் முதலிய வேதவிருத்தார்த்த பாஷண்டர்கள் பூமிக்குப்பாரமாய்க் கர்வித்து உலாவுகின்ற அந்தக்காலங்களில் நீர் திருவவதரித்து வேதங்களையும் ஸ்ரீ பாஞ்சராத்ராதிகளையும் அவற்றிற்சொல்லிய தர்மங்களையும் அவற்றைப்பின்பற்றியவேதியர்கள்முதலிய சர்வசாதுசஜ்ஜனங்களையும்ரட்சித்துக்கொண்டிருக்கின்றவ ராகையால் இப்போதும்பூர்வயுகங்களில் பாஷண்டகர்மங்களையே வகித்திருந்தஅசுரஜனங்கள்யாவரும் அங்கங்கு ராஜவம்சங்களில்பிறந்து அரசுசெலுத்திக்கொண்டு பூர்வகுணவிசேஷத்தாலே துஷ்டசனப்பிரியமானசர்களாய்த் தேவநாம்ஸ சம்பூர சாதுசஜ்ஜனங்களை நலியாநிற்கநீர் ஆஸ்ரிதவிரோதிநிரசனத்தின்பொருட்டும்சர்வபூமிபாரநிவாரணத்தின்பொருட்டும் ஆனகதுந்துபிநாமதேய ஸ்ரீவசுதேவருடையதிருமாளிகையில் திருவவதரித்துஅந்த லோகபீகராசுரசனங்களையெல்லாம் சம்ஹரித்துக்கொண்டு வருகின்றீர்.

வாரீர் கருணாபயோநிதியாகிய ஸ்ரீபகவானேநீர்இவ்வுலகத்தில் திவ்யாவதாரங்களைச்செய்து இம்மூன்றுலகங்களும் இவ்வுலகங்களிலுள்ள தேவர்கள்முதல்ஸ்தாவராந்தமாக சகலஜனங்களும் பாவனமடைந்துய்வதற்கு உமதுசஞ்சாராதி விசேஷங்களையுடைய ஸ்ரீபாதாரவிந்ததீர்த்த சேவையினாலும் வேதஸ்வரூபத்தினாலும் தேவதாதிவிஸ்வரூபத்தினாலும் ஸ்வரூபித்து எழுந்தருளிச்சர்வலோகங்களையும் பாவனஞ்செய்துகொண்டிருக்கின்றீர் இன்றைக்குத் தீனசனங்களாகிய எங்கள்கிரகங்களும்மிக்கபாவனமாகிய தந்நியதை யடைந்ததுகள்.

வாரீர் ஸ்ரீபரமாத்மாவே உம்மைச்சர்வலோகஇதார்த்தமாய் அவதரித்திருக்கின்ற பரமகுருஜனங்களாகியபரமாசாரியாகள் வேதோக்தக்கிரமமாக அர்ச்சித்து உமது பரமகிருபைக்குப் பாத்திரர்களாய்ச்சுத்த சத்வாத்மகமான அப்பிராக்கிருத விககிரஹஸ்வரூப திவ்யானந்தபதவியை அடைகின்றார்கள்.

வாரீர் ஸ்ரீசர்வலோகைக நாதராகிய எங்கள்நாதரத்தினமே எங்கள்சன்மசன்மாந்தரகாலங்களில் எப்படிப்பட்டபுண்ணியாதிசயப் பிரபாவங்களால் சம்பூர்ணமானதவங்களைச்செய்தோமோ தெரியாது இந்தஜன்மத்தில்உமதுநிர்ஹேதுக் கிருபா கடாட்சத்தினால இவ்விடத்தில் உமதுசரணாரவிந்த சேவாமஹிமாதி சயங்களைச்சேவித்து மிகுந்தகிருதார்த்தர்களாய் உய்ந்தோ மல்லவாவென்றுகிவ்பஸ்துதிகளைச் சமர்ப்பித்து வாரீர் ஸ்ரீசௌலப்பியாதிசயதிவ்ய மூர்த்தியாகிய பக்தவாத்ஸல்லிய பரமகிருபாநிதியேநீர் எங்களைக்கிருபைசெய்து உமது பக்தசனங்களாகிய ஸ்ரீமகாபாகவதகோஷ்டியில் சத்ஸஹவர்ஸத்தையுண்டாக்கி உமதுதிருவடித்தாமரைகளில் சமர்ப்பிக்கப்பட்டஎங்கள் சித்தவிருத்தியைச் சலிக்கவொட்டாமல்திருடமாகவிருக்கும்படி ரட்சிக்கக்கடவீரென்று ஸ்துதித்துக்கொண்டிருக்கின்ற ஸ்ரீமகாபாகவதோத்தமராகியஸ்ரீஅக்ரூரருடைய மஹாமதுரவசனதிவ்யஸ்துதிகளையங்கீகரித்து ஸ்ரீபகவானானவர் அதிசுந்தரமந்தஹாசவதனாரவிந்தராய்ச் சம்சாரபந்தசம்மந்தங்களானப்ரேமாதிசய மோகங்களைத் தராநின்ற சில வார்த்தைகளைச் சொல்லுகின்றார்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்

வாரீர் எங்களாப்தோந்த பந்துவாகிய ஸ்ரீ அக்குரூரரேநீர் எங்களுக்குச் சர்வவித பந்துவுமாயும் எங்களைப்போஷிக்கும்படியான பிதாஸ்வரூபராயும் மிகுந்தபிரியமுள்ளவராயும் எங்கள்குலதன சிரேஷ்டராயும்விளங்கிக்கொண்டிருக்கின்றீர நாங்கள்நீர்போஷிக்கத்தக்கஉமதுகிருபைக்குப்பாத்திரர்களாகிய புத்திர வர்க்கங்களாக விருத்தியடைந்துகொண் டிருக்கின்றோம்.

வாரீர் ஸ்ரீஹரிபதத்தியானமானஸோத்தமராகிய ஸ்ரீ அக்ரூரரே இவ்வுலகத்தில் வேதோக்தகருமசாஸ்திரஜ்ஞநியஜ்ஞான சீலர்களாகிய சிலபுண்ணிய ஜனங்களும்பண்டித பாமரஜனங்களும்உய்யும்படி சூரியசோமாதிகிரஹநக்ஷத்திரகாலஸ்வரூபதேவதா கணங்களையும் பிரம்ஹருத்திர வாசவாதிதேவவிபுத்வ கணங்களையும் அஷ்டவசுக்கள்-மருத்கணங்கள்-அசுவனிதேவதைகள்- முதலியபைத்ருகாதி தேவகணங்களையும் ஹவ்யகவ்யாதியஜ்ஞ-யாக- தபோ-ஜப-மௌனவ்விரத-தான -சத்கர்மங்களால்திருப்திசெய்து உபாசிக்கவும் தக்கபலனைப்பெறவும்நியமித்தபடியே அந்ததேவதாஸ்வரூபிகளும்அப்படியேஜன்மாந்தரத்திலுங்காலாந்தரத்திலும் அவரவர்கள் செய்யும்கிருத்தியசத்கர்மங்களுக்குத் தகுந்தபலத்தைக் கொடுத்துஜன்மசௌக்கியத்தையுண்டுபண்ணுவார்கள்.

வாரீர் விரதசீலராகியஸ்ரீஅக்குரூரரேஇவ்வுலகத்தைப்பாவனஞ்செய்வதற்கு ஸ்ரீபகவத்ஸங்கல்பத்தினாலுண்டாயிருக்கிற மஹாபுண்ணிய நதிகளும் அந்த தீர்த்தேவதாஸ்வரூபிகளும் தங்களைக்குறித்துச்சாந்திராயணமாகப்புண்ணியதீர்த்தயாத்திரைகளைச் செய்துநன்றாக அர்ச்சித்து புண்ணியவான்களுக்கு ஜன்மாந்தரத்திலேயேபுண்ணியசித்தையையும்புண்ணிய போகசுகங்களையும் உண்டுபண்ணக்கடவனவாயிருக்கின்றசிலாமய தேவதாஸ்வரூபிகளும்ஸ்ரீபகவத்பிம்பதிவ்ய அர்ச்சாவதாரஸ்வரூபிகளும்இவ்வுலகத்திலுள்ள சேதனாசேதன ஸமஸ்தப்பிராணிகளுமுய்யும்பொருட்டு அஜருத்திர இந்திராதிதேவகணவிபுக்களாலும்தேவ-கருட-காந்தாவ-சித்த-சாத்திய-உரகாதிகண விபுக்களாலும் பரமயோகீந்திரர்களா

கியபிருகு மார்க்கண்டேயாதி ரிஷிசிரேஷ்டர்களாலும்ம னுவாகிராஜரிஷிகளாலும் மஹா புண்ணியபுருஷ சிரே ஷ்டர்களாலும் வேதார்த்தங்களையும் வேதமந்திரங்களை யும்ஆராய்ந்தறிந்து அவ்வேதத்தினுள்அநாதியாய்விள ங்கிக்கொண்டிருக்கின்ற வேதமயஸ்ரூப அர்ச்சாவதார மந்திரபிம்பங்களைத் தங்கள்தங்கள் இஷ்டதேவதாசந்த ரிசினர்த்தமாகவும் ஸ்ரீபரமாத்ம சாத்ருசியமாகவும்வே தவிதிப்படி அந்தத்தெய்வங்களுக்குரிய உபசாரங்களா ய்விமான-மண்டபப்-பிராகார-கூபதடாக- உத்தியானவ ன-சோலைகளையுடைய திவ்யாலயங்களை நிர்மித்து அத ற்குக்கர்ப்பகிரஹ-அர்த்தமண்டப- மஹாமண்டபாதிஸ் தலவிசேஷங்களையும் ஏற்படுத்திப் பிரம்ஹஸ்தலமாகி யஅதிகாரஸ்தலங்களில் திவ்யபிம்பமூர்த்திகளையும்பரி வாரத்வாரபாலகாதி அதிதேவதைகளையும் ஆவாஹன ஞ்செய்து நித்தியோத்ஸவ பிர்ம்ஹோத்ஸவாதி திவ்ய தேசோபசாரங்களால் வைகானஸ ஸ்ரீபாஞ்சராத்திரா நுஸாரமாக அர்ச்சித்தவர்களுக்கும் சேவித்தவர்களுக் கும்அந்ததிவ்யபிம்ப தேவதா மூர்த்திகள் அவரவர்கள் மானஸசித்ததிருட அத்தியவஸாயங்களுக்குத் தகுந்த படிஅன்றைக்கன்று பாபவிநாசங்களையும் சத்கர்ம- சத் ஸங்க-சத்புண்ணிய-சத்புத்தியோகங்களையும்,அருளிஜ ன்மகர்மசுகிர்தங்களையும்ஆரோக்கியங்களையும்திவ்யதே ஜங்களையுந்தந்து ஜன்மாந்தர காலாந்தர தேஹாந்தரங் களில்தாபத்திரயாதி துக்கங்களை நிவாரணஞ்செய்து ச துர்விதபுருஷார்த்த பலப்பிரதமுக்திகாரண பிம்பஸ்வ ரூபிகளாய் ரட்சித்துக்கொண்டிருக்கின்றார்கள்,

வாரீர் மஹாத்மாவாகிய ஸ்ரீஅக்ரூரரே இவ்வுலகத்தி லுள்ளசமஸ்தப்பிராணிகளும ஸேவித்துப் பக்தியுடன் ஆஸ்ரயித்தமாத்திரத்தில் தங்கள்ஜன்மார்ச்சித பாவங்க ளொழித் துய்யும்பொருட்டுத் திருவவதரித்திருக்கின்ற ஸ்ரீபகவத்பதத்தியானமான ஸ்பக்தயோக நிஷ்டர்களாகி யநீரும்உம்மைச்சார்ந்தவர்களும்தரிசன ஸ்பரிசனபோ தனைத்மகமான சத்ஸஹவாஸங்களினால் இவ்வுலகத்தவ ர்களுடைய பாபராசிகளை நசிப்பித்துஉடனேபிரகிருதி பந்தவிமுக்தமாயும் ஸ்ரீபகவதனுபவங்களையுடையதாயு ம்இயங்குகின்ற பரமபதத்திற் குரியவர்களாகும்படித்தி வ்யார்த்தங்களையருளுகின்றீர்கள் இப்படிஉங்களைப்போ லஅந்தத் தேவமய தீர்த்தஸ்வரூபங்களும் தரிசனஞ்செ ய்துஆஸ்ரயித்து மாத்திரத்தில் இப்படிப்பட்டஉத்கிரு ஷ்டமான பரமபுருஷார்த்தங்களை அருள மாட்டாதன வென்று வேதார்த்ததத்வக்ஞான மகாத்மாக்களால்சொ ல்லப்பட்டிருக்கின்றதுஆகையால் அப்படிப்பட்டஸ்ரீபா கவதோத்தமராகிய நீர்எங்கள் மனோபீஷ்டங்களையும்நி றைவேற்றி லோகோபகாரஙகளைச் செய்தருளக்கடவீர் அதென்னவெனில் வாரீர் எங்களாப்தபந்துவே நமக்கு மிகவுஞ் சரீரசம்பந்தமுளள ஆப்தபந்துவாகிய பாண்டு மஹாராஜாவானவர் பரலோகத்தையடைந்தபின்பு எங் கள்நல்லத்தையாயும் வீரபத்தினியாயும் விளங்குகின்ற குந்திதேவியானவள் மிக்கதீனையாய்த் திருதராஷ்டிரம காராஜனுடைய உத்தரவினால் பாண்டவர்களைவனையும் அழைத்துக்கொண்டு அஸ்தினபுரியில்வந்து வாசஞ்செ ய்துகொண்டிருக்கின்றாளாம். அந்த அந்தகரூபரானவ ர்தனதுபுத்திரபாஸவஸ்யராய் துஷ்ட துர்யோதனாதிக ளுடைய துர்ப்போதனைகளைக்கேட்டு அந்தப்புண்ணிய புருஷர்களாகிய பாண்டவர்கள்தனதுபிள்ளைகளைப்போ லச்சகல சௌக்கியங்களையும்பெறும்படி நடப்பிக்கவில்லை யென்றுதோற்றுகின்றபடியால் அவர்களைப்பிரத்தியட் சத்தில்கண்டு அவர்களுடைய குசலப்பிரஸ்னைகளைவிசா ரித்து மிக தங்கிபசீலையும் வீரமாதாவுமாகியகுந்திதேவி க்குவேண்டிய சமாதானங்களைச்சொல்லி மனவியாகூல ங்களைத்தீர்த்து அவ்வரசனுக்கும்மற்றுமுள்ளவர்களுக் கும் பாண்டவர்களைக் குறித்து வேண்டிய தர்மங்களைச் சொல்லி, அவர்களுடைய இருதயத்தின்நிலையைநீர்நன் குயறிந்துவந்தபின்புதான் அவர்கள் க்ஷேமத்தையடை யவேண்டியவிதத்தை ஆலோசிக்கவேண்டும்மேலும்அ வர்களையாதரிக்கவேண்டிய கடமை நம்முடையதாதலா ல்நீரந்தக்கஜபுரிக்கெழுந்தருளிவரவேண்டுமென்றுநிய மித்துவிட்டுஸ்ரீபகவானனவர் ஸ்ரீபலராம உத்தவஸகித ராய்த்தமதுதிருமாளிகைக்கெழுந்தருளி வந்துவிட்டார்

## சகூ - வது-அத்தியாயம்.

கலி விருத்தம்,

அரியவகரூரரஸ்தினபுரஞ்சென்று
திருதராட்டிர னகியதீயன்சேய்
துரியன்வீட்டுமன் றூயநற்கர்னனே
டரியவார்த்தைக ளாடிவந்தாரரே

ஸ்ரீஅக்ரூரரானவர் ஸ்ரீகிருஷ்ணபகவானுடையநியம னத்தினால் கரிநகரத்திற்கு எழுந்தருளிச் சிலநாள் அவ் விடத்திலிருந்து இந்தகௌரவ பாண்டவர்களுடையஇ ருதயங்களை நன்குயறிந்துகுந்திதேவிவாக்கியங்களையுங் கேட்டுப்பின்பு திருதராஷ்டிர மகாராஜனுக்குவேண்டி யதர்மநீதிகளைச்சொல்லி அவர் இருதயத்தையும்அறிந் துக்கொண்டு ஸ்ரீமதுராநகரத்திற்குத் திரும்பிவந்துஸ்ரீ பகவானுக்குவிண்ணப்பஞ்செய்தனவென்பதைச்சொல் லுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரீர் பாண்டவ வம்சோத் தாரகராகிய பரிட்சினு டைய மகிபாலகரே அநந்தரம் ஸ்ரீ மகாபாகவதோத்தம ராகிய ஸ்ரீஅக்ரூரரானவர் ஸ்ரீபகவானுடைய நியமனப் படித்திவ்யரதாரூடராய்க் கௌரவராஜதானியாகிய கஜ நகரத்திற்குயெழுந்தருளிவந்து சேர்ந்தார்

அப்படிச்சேர்ந்து அவ்விடத்திலிருக்கின்ற திருதராஷ்
டிரமஹாராசனையும் பீஷ்மாசாரியரையும்ஸ்ரீவிதுரரை
யும்-சோமதத்தனையும்- பாஹ்லி மஹாராசனையும் துரோ
ணாசாரியரையும் - கிருபாசாரியரையும்- அஸ்வத்தாமா
வையும்-கர்னன்-சகுனி-துரியோதனன்- துஸ்ஸாஸனர்
களாகிய துஷ்டசதுஷ்டயர்கள்முதலிய கௌரவ புத்தி
ராதிபந்துக்களையும் வீரமாதாவாகிய குந்திதேவிசகித
தர்மராஜா பீமார்ச்சுனநகுல ஸஹதேவாதி மற்றபந்து
க்களையும் தமக்கிஷ்ட ஜனங்களாகிய சிநேகர்களையுங்க
ண்டு இவர்களால் யதாயோக்கியமாக வர்க்கியபாத்திய
வந்தனாதிசத்கார பூசைகளை அங்கீகரித்துத் தம்மையா
வருந்குசலப்பிரஸ்னை செய்ய அவர்களுக்குத்தம்முடை
யக்ஷேமாதிசயங்களையும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய
சௌரியதைரிய சௌலப்பியாதிசயதிவ்யகுணங்களையுஞ்
சொல்லிச் சந்தோஷமுண்டாக்கி அந்தபந்துக்களுடை
யகுசலப்பிரஸ்னைகளைத் தாமும்விசாரித்துச்சந்தோஷ
த்தையடைந்தவராய்இவ்விடத்திலிருக்கின்ற திருதரா
ஷ்டிரமஹாராஜாமுதலிய கௌரபாண்டவர்களுடைய
தர்மாதர்மஇருதயங்களை அறியவேண்டிச் சிலநாள்அஸ்
தக்கௌரவராஜதானியாகிய அத்திநகரத்திலே வாசஞ்
செய்துகொண்டிருந்தார். அப்படிவசிக்கின்றதினங்களி
லொருநாள் ஸ்ரீவிதுரரும்ஸ்ரீஅக்ரூரரும் ஒரு ஏகாந்த
ப்பிரதேசத்தில் ஸ்ரீபகவானுடைய கலியாணகுண மகி
மாதிசயங்களைப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவ்விட
த்திற்குமிருந்த சாந்தசீலையான குந்திதேவியானவள்வ
ந்துஸ்ரீமஹா பாகவதோத்தமராகிய ஸ்ரீஅக்ரூரரைப்பா
ர்த்து ஸ்ரீவிதுரரையு முன்னிட்டுக்கொண்டு ஒருவார்த்
தைசொல்லுகின்றாள்,

மஹாவீர மாதாவாகிய குந்திதேவியினுடைய
வாக்கியம்.

வாரீர் எனதுபிராதாவாயும்பிரியபந்துவாயுமிருக்கின்
றஸ்ரீஅக்ரூரரே ஸ்ரீமதுராநகரத்திலெனதுதாய்தந்தை
களும்-பிராதாக்களும்-சகோதரிகளும்- அதிசபோகபஸ்
சுசீலசம்பன்னரும் எனதுபிதாவுமாகிய ஸ்ரீவசுதேவரு
டையபுத்திரர்களாயும் ஸ்ரீபகவத் ஸ்வரூபர்களாயும் வி
ளங்கிக்கொண்டிருக்கின்ற மருமகப்பிரான்களாகிய ஸ்ரீ
பலராமகிருஷ்ண மூர்த்திகளும்எனது சஜ்ஜனங்களும்
நமதுபந்துக்கள்யாவரும் க்ஷேமமாயிருக்கின்றார்களா

வாரீர்மஹானுபாவரே-நீர்இவ்விடத்திற்குவரும்போ
துநமதுதாய்தந்தைகளும் பிராதாக்கள்முதலியபந்துஜ
னங்களும்எங்கள்க்ஷேமத்தைக்குறித்துஏதேனுஞ்சொ
ல்லியிருந்தால் கிருபைசெய்துசொல்லக்கடவீர். நானு
ம்எனதுசந்ததிகளாகிய பாண்டவர்களும் செந்நாய்களி
ருக்கின்றவனத்தில் வாசஞ்செய்கின்ற மானினங்களைப்
போல இந்தகௌரவராசதானியில் வாசஞ்செய்துகொ
ண்டிருக்கின்றோம் எனிப்படிச் சொல்லுகின்றேனேயா
னால்உமது மருமகர்களாகிய பாண்டவர்களுடைய தே
சோவீர்யபலபராக்கிரமாதிசய நற்குணங்களைக்குறித்
தும்சமஸ்த பிராணிகளுக்கும் அவர்களினியவர்களாயு
ஞ்சாதுக்களாயும் சத்யதர்ம சீலாதி புண்ய குணங்களை
யுடையவர்களாயு மிருக்கின்றதைப்பற்றியும் இந்ததுஷ்
டசதுஷ்டயர்களாகிய துரியோதனாதிகள்சகிக்கமனமில்
லாதவர்களாய் உதட்டிலுறவும் நெஞ்சிற்பகையுமாக இ
வர்களோடு வஞ்சனையாய்ச்சிநேகித்து இவர்களுக்கு அ
பாயத்தை விளைக்கவேண்டுமென்னுங் கருத்துடையவ
ர்களாய்த் தக்கசமையம்பார்த்துக்கொண்டுசிலநாள்களு
க்குமுன் கிருஷ்ணசர்ப்பங்களை யழைப்பித்துக்கடிப்பி
த்தார்கள் நித்திரைசெய்யும்போது மஹாலதைகளாலு
ம்மணிக்கயிறுகளாலும் இறுகக்கட்டி அகாதமான ஆழ
த்தையுடைய கங்காநதியில்கவிழ்த்து வீழ்த்திறக்கும்ப
டிதள்ளினார்கள் பின்மிகுந்த அந்நியோந்நியமாய்ச் சி
நேகித்திருந்து விஷத்தையிட்டுக்கொல்ல நினைத்தார்க
ள்தன்னைமறந்து கடாக்ஷித்திரா செய்யுங்கருணத்தில்மி
க்ககூர்மையுள்ள ஆயுதங்களால்குத்திக்கொலைசெய்யவு
ம்நினைத்தார்கள் இப்படியெல்லாம்செய்தும் இவ்வாபத்
துக்களில்நின்று நீங்கிநம்முடைய சிறுவர்கள் பிழைத்
திருக்கின்றார்கள்.

வாரீர்மஹாத்மாவாகிய பிராதாவே ஸ்ரீபகவத்சாந்நித்
யபுருஷஸ்ரேஷ்டர்களாகிய ஸ்ரீபலராம கிருஷ்ணமூர்த்
திகளிருவரும் ஒவ்வொரு விசேஷங்களிலாவதுமற்றனை
ப்போதாவது நல்லத்தைதகுமாரர்களாகிய பாண்டுபுத்
திரர்களையும் மகாதீனத்துவமடைந்திருக்கின்றஎன்னை
யும்நினைப்பார்களா- அநாதர்களாகியஎங்களுக்கு க்ஷேம
த்தைச்செய்து ரட்சிக்கவேண்டுமென்று கிருபையாகச்
சொல்லுவார்களா அவைகளையும் எனக்குக்கதைசெய்
துசொல்லக்கடவீர்,

வாரீர் மஹாசௌமியராகிய சகோதரரே- ஸ்ரீபுண்ட
ரீகாக்ஷராயும் ஸ்ரீபக்தவத்ஸலராயும் விளங்குகின்றஸ்ரீ
ஹரியானவர் இந்தப்பூமிபாரநிவாரண நிமித்தமும் சா
துசஜ்ஜனங்களை ரட்சிப்பதின்பொருட்டும் நமதுயதுவ
ம்சத்தில் திருவவதாரஞ் செய்திருக்கின்றாரென்றுமகா
த்மாக்களாலும் வேத வேதாந்தார்த்தங்களை யுணர்ந்தப
ரமயோகிகளாலுஞ் சொல்லப்பட்டிருக்கின்றபடியி
னால் தீனசந்ததிகளாகிய என்பிள்ளைகளுடைய க்ஷேமத்
தைக்குறித்துச் சகாயமாயிருந்து இவர்கள்பிதுர்பாக
மானராசியத்தை இவர்களபெறும்படிச்செய்து ரட்சி
க்கமாட்டாராவென்று மிகுந்ததீனையாய் நேத்திரங்களி
ல்விபாருலஜலந்ததும்ப ஸ்ரீகிருஷ்ணபகவானைத் தன்ம
னதில்தியானித்து நமஸ்கரித்து ஸ்ரீபகவந்நாமஸ்லோக
ங்களாகிய திருநாமசங்கீர்த்தனங்களால் கலியாணகுண
னுபவங்களைச்செய்து சர்வப்பிரபஞ் சாத்மகராகியும்ச
ர்வலோகபாலகசநாதராயும் சர்வாந்தர்யாமித்வசாவசா
ட்சியாயும் தீனரட்சகராயும் துக்கஹாரணசரணாகதவ

ஸலராயுந் திருவவதரித்திருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணயைது குலநந்தன ஸ்ரீகோவிந்தா மாதவாதாமோதராவென்று தன்இரண்டு நேத்திரங்களாலும் ஆனந்த பாஷ்பங்கள ஆறுய்ப்பெருகச் சிந்தாக்கிராந்தையாய இதோசரணமடைந்தஎன்னை இந்தச்சம்சார தாபத்திரயத்தினலலையப்பண்ணமலும் சத்துருசனமத்தியில்அகப்பட்டுத்துக்கத்தைஅடையாமலும் ரட்சிக்கக்கடவீர் உமதுபக்தஜனங்களாகிய பாண்டவர்களையுங் கைவிடாமற் காப்பாற்றக்கடவீர் என்றுஇவ்விதமாகத்துதித்துத் துக்கிக்கின்றகுந்திதேவியை ஸ்ரீவிதுரசகிதரான ஸ்ரீஅக்ரூரரானவர்பிரியவசனங்களால் வேண்டிய சமாதானஞ் செய்து வாரீர் வீரமாதாவாகிய எங்களன்புக்குரியசகோதரியே நீர்மஹா தந்நியபுண்ணியாங்கனையாகையால் உமக்குத் தேவதாம்ஸர்களாகிய இவ்வியபுத்திரர்கள் ஜனித்திருக்கின்றார்கள். அவர்களுக்கு ஸ்ரீபகவானுடையகிருபைபூரணமாய்லபித்திருக்கின்றது அவர்களும்இனிமேல்மஹாகீர்த்திசம்பத்விபவாதிசயத்தை யடையப்போகின்றார்கள்நீர் ஒன்றுக்குஞ்சிந்தனை செய்ப வேண்டியதில்லையென்றுசுபசகுணங்களான நல்லவார்த்தைகளால்மனதுதிருப்தியடையச்சொல்லி அந்த ஸ்ரீஅக்ரூரரானவர் ஸ்ரீமதுராநகரயாத்திராபிமுகராயச் சகலபந்துமித்திரசுஜனங்களால் சூழப்பட்டிருக்கின்ற திருதராஷ்டிரமகாராஜனிடத்திற்குச்சென்றார். அவரும்இவரை மிகவும் பூசிதமாகஅங்கீகரித்து திவ்யாசனத்தையமைத்து இருக்கச்சொல்லஇவரும் சுகாசீனராயிருந்து அந்தஅம்பிகாபுத்திரனைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றார்.

(ஸ்ரீ அக்ரூரருடையவாக்கியம்.)

வாரீர் கௌரவகுலாதிபதியான மகாராசரோமகாசுத்தவீரப்ரதாப சிகாமணியாயும் சத்தியதர்ம பரிபாலகநற்குணசிரேஷ்டராயுமிருந்த உமது அன்பிற்குரியசகோதரராகிய பாண்டுமகாராஜாவானவர்மனுதர்மப்பிரகாரம்உமக்கு ராச்சியாபிஷேகஞ்செய்து தாம்யுவராசராயிருந்து சகலசத்துருக்களையும ஜயித்துச்சமஸ்தபிராணிகளுந்தர்மார்த்தகாமாதிகளை யடைவதில் ஒருகுறைவும் நேரிடாமல் ரட்சித்துக்கொண்டிருந்து தைவிகமாய்பரலோகத்தையடைந்தார் அப்படிப்பட்ட உத்தமசகோதரராகியதுணைவனையிழந்த நீர்உமது நற்குணாதிசயங்களாலும் மஹாயோதைகளாகிய பீஷ்மவிதுராதிகளாலும்மஹாபுத்தி பலத்தையுடையவராய் இக்குரு குலத்திற்குச்சநாதராய்ச் சமஸ்த பிரஜைகளையும் யாதொருதீங்குமின்றிச் சந்தோஷித்துச் சமஸ்தபிராணிகளிடத்திலுஞ் சத்தியதருமமாக நீதிகளைச்செலுத்தி உமதுசந்ததிகளைப்போலவே அவர் புத்திரர்களையும் நினைத்துமஹாகௌரவத்துடன் சமபாவசித்தராய்அரசுசெலுத்திரட்சிப்பீரானல் விண்ணுலகங்களிலும் மண்ணுலகங்களிலும்வாசஞ்செய்கின்ற சாதுசஜ்ஜனங்களால் புகழப்பட்டுமிகுதியும் அருமையான சுகபோகாநந்தத்தையும் சத்கீர்த்தியையும் வம்சவிருத்தியையுமடைந்து சுகிப்பதற்குச்சந்தேகமில்லை இந்தநற்குணங்களில்லாவிடில் இவையாவுமிழந்துவிடுகிறதுமல்லாமலசமஸ்தபிராணிகளினலும் நிந்திக்கப்பட்டு மீளாநரகதுக்கத்தை யடையவேண்டியதாயிருக்கும் ஆகையால் நீர்உமது புத்திரர்களிடத்திலும் பாண்டுபுத்திரர்களிடத்திலும் சமமான அன்புடையவராய் அவர்களைப்போஷித்து உமது இராச்சியசம்பத்துகளைப் பாகித்துக்கொடுத்து நல்ல விவேகதருமங்களை யறிந்துய்யுமபடி நல்லசஹவாசங்களை ஏற்படுத்திரட்சிக்கவேண்டியகடமை உம்முடைய தன்றே இவ்வுலகத்தில் சனனமடைந்தவர்களில் ஒருவருக்காவது தம்முடைய சம்சார பந்தங்களுக் குரிய தாராபுத்திராதிகளும்பந்துக்களும்கிருஹக்ஷேத்திர தனதான்யாதிசம்பத்துகளால்நிறைந்த ராஜாதிகார போகைஸ்வர்யங்களும்சதமல்லவே ஒருவன்ஜனிக்கவும்மற்றொருவன் மரணத்தையடையவும் ஒருவன்சுகிக்கவும் மற்றொருவன் துக்கிக்கவும்-ஒருவன்புண்ணியவானகவும் மற்றொருவன்பாவியாகவும் இவ்விதமாக இவ்வுலகத்திலுள்ளவர்களெல்லாம்தங்கள் கர்மானுஸாரமாகப் பந்திதர்களாய் ஸ்வர்க்கநரகசுகதுக்கங்களை யனுபவித்துக்கொண்டிருக்கின்றார்கள், மச்சியங்களானதுகள்ஜலப்பிரவாஹத்திலுற்பவித்து அந்தச்சலமே சீவனமாக விருத்தியடைந்து வெகுசந்ததிகளையுடையதுகளாய்ப் பெருகிஅந்தச்சந்ததிகளும் அந்தஜலத்தையேஉண்டு சீவிக்கஇவ்வாறு அவைகள்தங்கள்சீவனத்தையேவிரும்பியிருக்குமாப்போலேமூடசனங்கள் தாங்களார்ச்சித்த தனங்களைச் சத்பாத்திரர்களுக்குதவாமல் தங்கள்துஷ்டசந்ததிகள்அபகரிக்கக்கொடுத்துவிட்டுத் தங்களுக்குயாதொருபுண்ணியகீர்த்தியும் தேடிக்கொள்ளாமல்பிதாபுத்திராதி சம்பந்தங்களையும் அற்றவர்களாய் நாசத்தையடைகின்றார்கள்.

வாரீர்மகீபதியே நீர் இப்படிப்பட்ட மூடமானஸ விவேகத்தையுடையவராய் உம்மா லார்ஜ்ஜிக்கப்பட்டிருக்கிறதிரவியங்களையும்பாரமபரியமாய்விருத்தியடைந்து வருகின்ற இராச்சியாதிகார சம்பத்துக்களையும்சத்புத்திரர்களாகிய பாண்டவர்களைவஞ்சித்து உமதுபுத்திரர்களுக்குமாத்திரங் கொடுப்பீரானல்சர்வப்பிரபஞ்சத்தவர்களாலும்நிந்திக்கப்பட்டு இகபரசௌக்கியாதிசயங்களுக்கும் தூரஸ்தராகவிருப்பீரேயல்லது வேறில்லை ஆகையினல் வாரீர்யெங்களுக்குமிகப்பிரிய பந்துவாகியநரபதியே நீர் அப்படிப்பட்ட நிந்தனைகளைச் சம்பாதித்துக்கொள்ளவேண்டுவதில்லை ஏனெனில் இந்தச்சரீரத்திற்குவொருநிலையில்லை- நதீப்பிரவாகம்போலத் தீர்க்கநிலையில்லாத இந்தத்தேகதருமமானது ஜனனமரணங்களை யடைந்துகொண்டிருக்கின்றது இந்த நிலை யில்லாததேகசம்பந்தமாகிய தாராபுத்திரர்கள் ஒரு புருஷனு

க்ருச்சதமாவார்களோ அல்லது அவனுடையசமபத்தாக ளை ஸ்வதந்திரமாயபகரித்து அனுபவிக்கின்றதுபோல அவன் ஆர்ஜ்ஜித்த பாபங்களையும் பாகித்துக் கொள்ளு வார்களோ நீர் உம்முடைய விவேகசட்சுவினால்நன்றுயா லோசிக்கக்கடவீர் இந்தசர்மாதர்மங்களை மனதில் திட மாகநிறுத்தி உமதுபிரியமுள்ள சகோதரராகியபாண்டு மகாராசனுடைய சதபுத்திரா ரத்தினங்களானபாண்ட வேயர்களுக்கு விகிதாசாரதர்மபாகத்தின்படி அவர்களு க்குச் சேரத்தக்கபாகத்தையும் பாகித்துக்கொடுத்துநீர் நல்லகீர்த்தியையும் உமது வம்சதருமங்களையும் காத்து ரட்சித்துக்கொண்டு பரமசுகாநந்தத்தையடைந்துஇகப ரங்களுக்கு ஒருகுறைவுமில்லாமல் சுகிக்கக்கடவீரென் றுசொல்லிக்கொண்டிருக்கின்ற ஸ்ரீ அக்குரூரரைப்பார்த் து திருதராஷ்டிரமகாராசாவானவர் ஒருவார்த்தைசொ ல்லுகிறார்.

குருகுலத்தரசனுடையவாக்கியம்

வாரீர் எங்கள்பிரியபந்துவாகிய ஸ்ரீ அக்குரூரரே இப் போது எனக்குபரமதருமமாக நீரெடுத்துச் சொல்லிய வார்த்தைகள்யாவும்நிச்சயமேயாகும் மிகவுஞ் சபலசித் தத்தையுடையேனுதலால் எனது இருதயாந்தரங்கத்தி ல் நீசொன்னதுகளிலொன்றும் ஸ்திரமாக நிற்கவேயி ல்லைசுதர்மநாமதேயத்தையுடையபளிங்குப் பாறைகளு ள்ளபர்வதத்தின்மீதுதோற்றிமறைகின்ற மின்னலொளி யைப்போலவும் தேவாமிர்தங்கிடைத்து அதைப்புசித் துதேவாமிர்தமென்றறிந்து சந்தோஷிக்காத மூடமான சகராதமனைப்போலவும் யாதுகாரணமோஎனதுஇருத யமானது புத்திரபாசபந்தபரவசமாய் அடிக்கடிபித்தஞ் சலிக்கின்றது.

வாரீர் மகாசௌமியராகியஸ்ரீ அக்குரூரரே ஈஸ்வர க்ஞைகடந்து நடக்கவுமவிதியைத்தப்பித்துக் கொள்ள வும் ஒருவர்தரமோ ஸ்ரீசர்வலோகைகநாதராயும் சர்வக் ஞமூர்த்தியாயும்விளங்கிக் கொண்டிருக்கின்ற ஸ்ரீஹரி யானவர் இவ்வுலகங்களைச்சிருஷ்டித்தும் ரஞ்சித்துமபி ரளயத்தைச்செய்தும் அந்தந்தக்காலானுகுணமாகஅவை ற்றினுள் வியாபித்துச்சர்வம்பரா யிருந்தும் இப்போதி ந்தக்காலத்திற்குத்தக்கதருமங்களைநிலைநிறுத்தவும்பூமி பாரநிவாரணஞ்செயது சாதுசஜ்ஜனங்களைரட்சிக்கவும் ஸ்ரீதேவகிதேவியினுடைய திருவுதரத்தில் திருவவதா ரஞ்செய்திருக்கின்ற அந்தஸ்ரீஜகந்நாதராகிய சர்வஜகத் பதியான சர்வேஸ்வரனுக்குஉணரத் தக்கதேயல்லாமல் மற்றயாவராலு முணர்தற்கரியஅந்த ஸ்ரீபகவானுடைய மாயாவிசாலத்தை அறிந்துய்ந்துநடக்க என்னாலாகவில் லையே அதற்குயானென்னசெய்வேன் வாரீர்ஸ்ரீ அக்குரூ ரரே அப்படிப்பட்ட ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு அநந்த தேவோபசாரங்களோடு அநந்தமாயிர நமஸ்காரங்களை ச்செய்கின்றேனென்றுசொன்னான்.

ஸ்ரீசுகர் வாக்கியம்

வாரீர்ஸ்ரீமாதவார்ப்பிதமானசு மகாராசரே அநந்தரம் ஸ்ரீஅக்குரூரரானவர் இந்தப்பிரகாரம் அந்தத்திருதரா ஷ்டிரமகாராசனுடைய அபிப்பிராயத்தை யறிந்துகொ ண்டு அவராலும்மற்றுமுள்ள பீஷ்மவிதுராதிபந்துக்க ளாலும் கிருபத்துரோணுஸ்வத்தாமாதிமித்துருஜன ங்களாலும் யதோசிதமாகப்பூஜிக்கப்பட்டு அவர்களிடத்தி ல்செலவுபெற்றுக்கொண்டு திவ்யரதா ரோகணஞ்செய் துஸ்ரீமதுராநகரத்திற்கு வந்துசேர்ந்தார் பின்புமறுநா ளுதயத்தில் ஸ்ரீபகவானுடையசந்நிதியையடைந்துதாம் அஸ்தினபுரத்திற்குப்போய் அவ்விடத்திலுள்ளகௌர வபாண்டவர்களுடைய க்ஷேமசமாச்சாரங்களையும் குந் திதேவியினது விண்ணப்பத்தையும் திருதராஷ்டிரம காராசனுடைய மனநிலையையும்ஸ்ரீபலராமகிருஷ்ணதி வ்யமூர்த்திகளுக்குமிகுதியும் விசதமாகத்தெரிய விண் ணப்பம்பண்ணினார்,

இதுவரைக்கும்பூர்வபாகஸ்ரீபகவத்புண்யகுணானு பவம் சம்பூர்ணம

உத்தரபாகம்.

௫௦ - வது-அத்தியாயம்.

கலி விருத்தம்,

காதனவேதமுடிவில்நடஞ்செயும்
பாதன்தன்னிட்டபக்தனைக்காத்திடு
சூதன்துஷ்டர்களானஅசுரரைச்
சேதித்தேதர்மசிந்தையுவந்தனர்.

கம்சமகாராசன்பத்தினிகள் தங்கள்தாய்வீடுசேர்ந்து கம்ஸமரண சமாச்சாரங்களைஜராசந்தமகாராசனுக்குத் தெரிவித்து ஸ்ரீமதுராநகரத்தின்மீதுகலகத்தை யுண்டு பண்ணினார்களென்பதையும் ஸ்ரீபகவானானவர் அந்தஜ ரா ஸந்தனுடைய அநந்தாக்ஷௌகினி ஸேனைஸமூகங்க ளைப்பதினேழுதரம் அவலீலையாகச்சம்ஹரித்தா ரென் பதையும்மறுபடியும்ஜராஸந்தன்பதினெட்டாவதுதரம் யுத்தத்திற்குவரயத்தனமாயிருக்குந்தருணத்தில் நாரத மஹாருஷியினுடைய பிரேரேபணையினால் கலாயவன னென்கிறமிலேச்சராசனானவன் மூன்றுகோடி மிலேச் சவீர ஸைநியங்களோடு ஸ்ரீமதுராநகரத்தைவந்துசூழ் ந்துகொள்ள ஸ்ரீபகவானானவர்தேவவிஸ்வ கர்மாவினால் ஸ்ரீமத்துவாரகாபுரியை நிர்மித்துஸ்ரீமதுராநகரஜனங்க ளை குடியேற்றினதின்பின்புகாலயவனனோடேயுத்தத்தி ற்குப்பிரவேசித்தாரென்பதையுஞ்சொல்லுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளீர்பரிட்சித்துமகாராசனே ஜராஸந்தனுடையம களான அஸ்தியென்றும் பிராப்தையென்றுமிருக்கின்ற இரண்டுபேர்களைகம்சன்விவாகஞ்செய்திருந்தான் அவர் களிருவருந்தங்களுடைய பர்த்தாவானகம்சனை ஸ்ரீகிரு

ஷ்ணபகவான் கொன்றதினால்மிகவும்விசனத்துடன் தங்களுடைய பிதாவானஜராசந்தனண்டையிற் சென்றுகம்சனுடைய வசனத்தைச்சொல்லி விசனப்படுகின்றபெண்களைப்பார்த்துஜராசந்தன்சகிக்கமாட்டாமல் பூமியில் யாதவர்களென்கிற நாமதேயமில்லாமல் செய்கிறேனென்றுபிரதிக்கினைசெய்து மிகவுங்கோபத்தோடு இருபத்துமூன்றக்குரோணிசேனைகளைக் கூட்டிக்கொண்டுமதுரையை நான்கு பக்கத்திலும்வந்து சுற்றிக்கொண்டான், அதையாதவர்கள்பார்த்து நடுங்கினார்கள் இதுகளைப்பார்த்தஸ்ரீகிருஷ்ணபகவானானவர்தாம் அவதாரஞ்செய்து பூமிபாரநிவாரணஞ் செய்பவராகையால் ஜராசந்தனைக் கொல்லாமல் சேனையைமாத்திரங்கொன்றுபோட்டால் மறுபடியுமிந்தஜராசந்தனால்அனேகசேனைகளைச்சேகரித்துக்கொண்டு வரப்படுமாகையால்சேனைகளைத்தானே சம்மாரஞ் செய்வோமென்று நினைத்துக்கொண் டிருக்கையில் இரண்டுசூரியனுக்கொப்பான ஒளிவுடன்ரவரத்தினத்தாலிழைக்கப்பட்டு சாவாலங்கார சோபிதமாயும்மிகவும்உயர்ந்த துவஜத்துடன்கூடியும் வாயுவுக்குச்சமானமானவேகத்துடன் கத்திசத்திகதைசங்கு சக்கரம் அம்புறாத்தூணிமுதலிய ஆயுதங்களினால்நிறைந்தும்மகாசமர்த்தர்களானசாரதிகளை யுடையதாயுமிருக்கின்றஇரண்டுஇரதங்கள்சுவாமிக்கெதிரே வந்தது அதைப்பார்த்துஸ்ரீ கிருஷ்ணபகவானானவர்சமீபத்திலிருக்கின்றபலதேவரைநோக்கி ஒருவார்த்தை அருளிச்செய்கின்றார்.

கேளீர்சர்வக்கியரானசுவாமி தேவரீருக்குத் தெரியாதஅம்சமொன்றுமில்லாவிடினும் இப்போது நடக்கவேண்டியதற்கு அடியேனுக்குத்தோணினதைக் கியாபகப்படுத்துகிறேன் அதைக்கிருபைசெய்துகேட்கவேணும் இப்போதுதேவரீரை நாதனாகவடைந்திருக்கின்ற யாதவர்கட்குமகத்தான ஆபத்துவந்திருக்கின்றது அதைக் தேவரீரே போக்கடிக்கவேண்டும் மேலுந்தேவரீர் பூமிபாரநிவாரணஞ்செய்யத்தானேயவதரித்தீர் ஆகையால் தேவரீருக்கு இரதமும்சமஸ்த ஆயுதமும் கவசமும்வந்திருக்கின்றது இந்தஇரதத்தின்மீதேறிக்கொண்டுஇந்தச்சத்துருககளைச் சம்ஹாரஞ் செய்யவேண்டு மென்று அருளிச்செய்யஸ்ரீகிருஷ்ணபகவானுடைய வார்த்தைக்கிசைந்து அவருடையமதுரவார்த்தைகளைச்சிலாகித்து யுத்தக்திற்குப்போக இரண்டுபெயரும் கவசங்களைப்பூண்டுகொண்டு இரதத்தின்மீதேறித் தங்களுடைய திவ்வியாயுதங்களையெடுத்துக்கொண்டு நகரத்தைவிட்டுவெளிப்பட்டுவந்தார்கள்.

கேளீர்பரிட்சித்துமகாராசனே இப்படிஇராமகிருஷ்ணர்களிருவரும்வெளிப்பட்டுவந்துசுவாமிசந்திரன்போன்ற வெண்மையுடைய சங்கத்தையெடுத்துப்பூரித்தார் அந்தத்தொனியை ஜராஸந்தனுடைய சேனைகள்கேட்டு காதுகளடைபடவும் குதிரைகள்பயந்து மலமூத்திரங்களைப் பெருகிக்கொண்டும் ஆகாயத்தில பறக்கின்ற பறவைகள்கீழேசுழன்றுமவிழுநததுகளஜராசந்தனும்சோர்வடைந்துஒரு முகூர்த்தத்தின்பின்புஸ்ரீராமகிருஷ்ணனிருவரையுங்கண்டு மிகவுங்கோபத்தோ டொருவார்த்தைசொல்லுகின்றான் வாராய்அடாகிருஷ்ணபுருஷோத்தமனே இதுவரையில்-காட்டிலும்-செடியிலும் மலைகளிலுந்திரிந்தகாலங்கழித்த நீங்களாயுத்தஞ் செய்பவர்கள் இதுவித்தையேஆனாலும் நீ மிகவும் பாலனாயும்அவிவேகியாயு மிருக்கின்றமையால் உன்னுடன் நான்யுத்தஞ்செய்கிறதில்லையென்று பலராமனைப்பார்த்து வாராய் அவிவேகியே நீஎன்னோடே யுத்தஞ்செய்ய வந்தாயல்லவாஎன்னுடையபலந்தெரியாமல்வந்துவிட்டாய் தைரியமுந் துணிவுங்கொண்டு இதோ ஒரு க்ஷணத்திறானேமார்புபிளக்க இரத்தங்களைக்கக்கிக்கொண்டு கீழேவிழுந்துபிராணனைவிட்டு வீரசொர்க்கத்தைஅடையும்படிச்செய்கின்றேன் உனக்குப்பிராணனிடத்தில் ஆசையிருக்குமாகில் இதைவிட்டுச்சீக்கிரமாக ஓடிப்போய்விடுஎந்தக்காலத்திலாவது யாதவர்களும் யுத்தஞ்செய்துசயித்தார்களென்கிறபெயருண்டோநீங்களிரண்டுபேரும்பாலர்களாயுங்கோகுலத்தில்இடையன்வீட்டினில்நன்றாயத்தின்ற கொழுபபினால்உங்களைநீங்கள் மறந்துயமனைப்போலிருக்கின்றஎன்னோடேயெதிர்த்துயுத்தஞ்செய்யவந்தீர்கள் என்றுசொல்லுகின்றஜராசந்தனுடைய வார்த்தையைக்கேட்டு ஸ்ரீகிருஷ்ணபகவான்புன்னகைகொண்டு அருளிச்செய்கின்றார்வாராயடா ஜராசந்தா உலகத்தில் அதிசூரர்கள்இப்படி ஒருவரும்வாயினாற் பிதற்றமாட்டார்கள் செய்கையில்தன்சமர்த்தைக் காட்டுவார்கள்உன்னுடையசூரத்துவமிதினாலேயே நன்றாய்த்தெரிந்துகொண்டேன்நீஒருநாழிகையில்யமபுரத்தைஅடையப்போகிறாய் நீஎனக்குசத்தவீரனாகத்தோன்றவில்லையென்றுசொன்னார் அந்தவார்த்தைகளைக்கேட்டுஜராசந்தன்கண்களைஉருட்டி விழித்துப்பார்த்து சகலசேனைகளோடுங்கூட ஸ்ரீராமகிருஷ்ணனிருவரையும் நான்குபக்கத்திலும் சூரியனைமேகம்சூழ்ந்துகொள்வதுபோலவந்துசுற்றிக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய இரதத்திலகட்டியிருக்கின்ற கருடத்துவஜமும் ஸ்ரீபலராமருடைய இரதத்தில்கட்டியிருக்கின்ற சொர்னபனைக் கொடியும்தெரியாமல்மறைந்து போகும்படி பாணவருஷங்களைவருஷித்தார்கள்,

அதைமதுராபட்டணத்தில் கோபுரங்கள் பேரிலுங்கொத்தளங்கள்பேரிலும்ஏறி வேடிக்கைபார்த்துக் கொண்டிருக்கின்ற மாதர்கள்கண்டுமிகவுமனவருத்தமுற்றுஅயர்ந்தார்கள் பின்னும்ஜராசந்தனுடையசூராகள் தேராள்களாகிய சேனைகள்பாணங்களை ஓய்வில்லாமல்விடுத்து யாதவசேனைகளைச் சின்னபின்னமாய்த் தலைவேறுகால்வேறு கைகள்வேறு உடல்வேறாக அறுபட அடி

த்துத்துன்பஞ்செய்வதைக ஸ்ரீகிருஷ்ணபகவான்பார்த்து சாரங்கமென்கிற தமது வில்லையெடுத்து நாணேற்றிடங்காரஞ்செய்து பாணங்களைச் சந்தானஞ்செய்து காதுவரையிலிழுத்து சத்துருசேனைகள் இதோடுநாசமாகும்படிசொரியப்பலம்பொருந்திய ஆனைகள்கால்களொடிந்து தலைகள்பிளந்தும் துதிக்கைகளறுந்தும் மலைகளைப்போலகீழேவிழுந்தன குதிரைகளின்தலைகள் வெட்டுண்டும்சரீரம் அறுப்பட்டுப்போய்விட்டது காலாள்களிலும்தலைபோனவர்களும் கால்போனவர்களும்- மார்புபிளந்தவர்களுமாகி யுத்தபூமியில்விழுந்து நிறைந்துபோயின இரதங்களும் குத்துக்கால்முறிந்து அச்சுகள்பிளந்து வண்டிகள்முறிந்து துவஜங்களறுபட்டுகுதிரைகளும்போய்சாரதிகளும் அதமாயின அப்போதுசுவாமிகையிலிருந்தவில்லு அக்கினியைக்கக்கிக்கொண்டு மண்டலாகாரமாச்சுழன்றுக்கொண்டிருந்ததேயன்றி பாணப்பிரயோகஞ்செய்வதாய்ப் பிறருக்குத்தெரியாமலே யிருந்தது யுத்தகளத்தில் வெட்டுப்பட்ட வீரர்களுடைய கைகள்அநேகபாம்புகளாகவும்-தலைகளாமைகளாகவும்- வெட்டுப்பட்டகஜங்கள்-சிறியகுன்றுகளாகவும்-வீரர்களணிந்த பூஷணங்களிலிழைத்த நவரத்தினங்கள்-சுக்கான்கல்லுகளாகவும் இரத்தவெள்ளம் பெருக்கெடுத்தோடும்பெரியநதிபோலக்காணப்பட்டது சூரர்களால் இப்படிஜராசந்தனுடைய இருபத்துமூன்றக்குரோணிசேனைகளையுங்கொஞ்சமாவது வருத்தப்படாமற்றுனேசங்கரித்துஜராசந்தனுடைய-இரதம்-குதிரை-சாரதி-துவஜம்வில்லுமுதலியவெல்லாவற்றையும் அறுத்துப்பங்கஞ்செய்து பலராமரானவர் அவனைப்பிடித்துக்கொள்ள அதைஸ்ரீகிருஷ்ணபகவான்பார்த்து இன்னம்அவனால் அநேககாரியமாகவேண்டுமென்று அந்தஜராசந்தனை விட்டுவிடச்சொன்னார். இப்படிக்கு இராமகிருஷ்ணர்களால் விடப்பட்டஜராசந்தன் வெகுதுபரமுற்று மிகுந்தஅவமானப்பட்டுமறுபடியும்தனது இராச்சியத்திற்குப்போகிறதுவென்று மிகுந்தவெட்கத்துடன்வனத்தைநோக்கிதவத்திற்குப்போகப் பிரயத்தனஞ்செய்ய அப்போது சில இராஜாக்கள்கூடி அவனைமறித்து நயவார்த்தைகளினாலே சமாதானஞ்செய்து பட்டணத்திற்கு அழைத்துவந்தார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணர்களிருவரும் யாதவர்களுக்கோருபத்திரமின்றிசம்ரட்சித்து தேவர்கள் புஷ்பமாரிசொரியகந்தருவர் கானஞ்செய்ய அப்சரஸ்திரீகள்நடிக்க ரிஷிகள்வேதபாராயணஞ்செய்ய சங்கமுதலிய அநேகவாத்தியங்கள்முழங்க மார்க்கங்களில் தோரணங்கள்கட்டிதீபஸ்தம்பங்களை நட்டுவீதிகளிற் புஷ்பங்களிறைத்துநான்குபக்கத்திலும்தீபங்கள்தூபங்கள்போட்டுவீடுகடோறுந்துவஜங்களெடுத்துக்கட்டி சர்வாலங்காரமுஞ்செய்து வேதியர்கள்சுவஸ்தி வாசனங்கூற விருதுகணிகள்முகவியபாதவர்கள் மாதவர்களோடேகூட பூரண கும்பங்களையும் புஷ்பங்களையுமெடுத்துக்கொண்டு காணிக்கை கொடுக்க மற்றநாகரீகஸ்திரீகள்யாவருங்கடைக்கண்ணாற்பார்த்து பரமானந்தத்தை அடைய மிகுந்த சந்தோஷத்தோடே ஸ்ரீகிருஷ்ணபகவான் பலராமசகிதராய்மதுராபுரியிற் பிரவேசித்துஜராசந்தனுடைய சேனையில்நின்றுங் கொண்டுவந்தபூஷணங்கள் யாவும்உக்கிரசேனமஹாராஜனுக்குக் கொடுத்துவிட்டுத் தமதுகிரகத்திற்கெழுந்தருளினார்.

கேளீர்பூவல்லபனே அந்த ஜராசந்தன் இப்போதாளத்தனை அக்குரோணிசேனையுடன் யுத்தத்திற்கு வந்தானோ அத்தனைச்சேனைகளுடன் பதினேழுதரம் ஸ்ரீகிருஷ்ணபகவானுடன் யுத்தஞ்செய்யவந்து அந்தச்சுவாமியினுடைய பிரபாவத்தினால் ஜராசந்தன் பராரியாய்ப் போய்விட்டான் பிறகுபதினெட்டாவதுதரம் அந்தப்படிசேனைகளை அவன்தோழன் காலயவனென்னும்அசுரனுடைய மூன்றுகோடி மிலேச்சர்களுடன்கூடவந்து மதுராபுரியைச்சுற்றிக்கொண்டான் அதையறிந்த ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் பலராமரைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றார் கேளீர் சர்வக்கியரான சுவாமி இந்தயாதவர்களுக்கு நம்மைப்பற்றி அநேகஆபத்துகள்வந்தது அதுகளெல்லாந் தேவரீருடைய கடாக்ஷத்தினால் நிவர்த்தியாச்சுது இப்போது சூரனானகாலயவன் பட்டணத்தைவந்து சுற்றிக்கொண்டான் ஜராஜந்தனும்இன்றைக்கோ நாளைக்கோவரப்போகிறான் நாமிருவரும் இக்காலயவனுடன் யுத்தஞ்செய்கிறதருணத்தில் அந்தசராசந்தன் நம்முடையபந்துக்கள் யாவரையுஞ்சங்கரித்துப்போடுவான் அல்லது தனது பட்டணத்திற்காவதுகொண்டுபோய்விடுவான் ஆகலால் மனிதர்கள் பிரவேசிக்கவொண்ணாத ஒருதுர்க்கம் உண்டுபண்ணி அதில்யாதவர்களைவைத்துவிட்டு பிறகுஇந்தக்காலயவனுடன்யுத்தஞ்செய்வோமென்று இருவரும்யோசித்துமேற்றிசையிலுள்ள சமுத்திரமத்தியில் தெற்குவடக்கு பனிரண்டுயோசனையகலமும் கிழக்குமேற்கு இருபத்துநாலுயோசனை நீளமுமுள்ளதாக ஒருதுர்க்கம் நிர்மாணஞ்செய்ய விசுவகர்மனுக்கு ஆக்ஞாபித்தனர். அவனுந்தன்னுடைய முழுசமர்த்தையும் அந்தப்பட்டணம்நிர்மிப்பதில் செலுத்தவேண்டுமென்றுநினைத்து நவரத்தினங்களிழைத்து மேகமண்டலத்தை யளாவும்படி உப்பரிகைகளும் அறைகள்தோறும் படிகங்களாற்படிகள்கட்டிஅமராவதி பட்டணத்திற்கொப்பாய் மகரதோரணங்களைகட்டி தெருக்களில் மரகதங்களாற் கதவுகளிட்டுபவழங்களால் கால்கள்நாட்டிமுத்துச்சரங்களினால்வீடுகள்தோறும் ஜாலர்கள்விட்டு நித்தியமாயிருக்கத்தக்கதாய்நல்லவாசனைபொருந்தியசாம்பிராணித்தூபங்கள் போட்டு தீபமும்வைத்து அதன்மத்தியில் சர்வசிரேஷ்

டமாகஇராஜகிரஹமுண்டுபண்ணி அதற்கிருபக்கமுந்துவாரதேவதைகளிருக்கும்படிக்கமைத்து அனேகவிசித்திரமாக உண்டுபண்ணி விசுவகர்மாவானவன் ஸ்ரீ கண்ணபிரானுடைய சமீபத்திற்குவந்து தண்டனிட்டு அஞ்சலிகூப்பி ஒருவார்த்தை விண்ணப்பஞ்செய்கிறான்.

கேளீர் ஜகத்பதியானசுவாமி-தேவரீருக்குத் தாசனுயிருக்கின்ற அடியேனால் துவாரகையென்று பெயரையுடையஒருபட்டணம்நிர்மிக்கப்பட்டது. அந்தப்பட்டணத்திற்கு தேவரீர் கிருபைசெய்து எழுந்தருளவேண்டுமென்று விக்கியாபனஞ்செய்ய ஸ்ரீகிருஷ்ணபகவானும ப்படியே அங்கீகரித்தனர்பிறகுதேவேந்திரனானவன்முன்புகான்மதுரைக்கு சுதர்மமென்கிறசபை அனுப்பியிருந்ததை இப்போது துவாரகைக்கு எடுத்தனுப்பிவிட்டருனான் ஒருகாதுபசுமையாய் மற்றஅவயவங்கள் வெண்மைபொருந்தியதாயிருக்கின்ற ஆயிரங் குதிரைகளைச்சுவாமிக்கு வெகுமதியாகத் துவாரகைக்கனுப்பகுபேரனும்அந்தப்பட்டணத்தை நவநிதிகளால் நிறைத்துப்போடமற்றலோகபாலர்களும் தங்கள்லோகங்களில் அரிதாயிருக்கின்ற வஸ்துக்களைக்கொண்டுவந்து அந்தப்பட்டணத்தைநிறப்ப இதுகள்யாவையும் அங்கீகரித்துஜகத்குருவான ஸ்ரீவாசுதேவரானவர் தமதுயோகசக்தியினால்மதுரையிலுள்ள சகலபந்துஜனங்களையுங் கொண்டுவந்து துவாரகாபட்டணத்தில் சேரச்செய்துபலராமசகிதராய் மதுரைக்கெழுந்தருளி அந்தப்பட்டணத்தில் நின்றும் வெளிப் புறப்படுகிறவர்போல நிராயுதராய்ப் புறப்பட்டார்கள்.

## ருக - வது — அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பசிதபாவன னென்னும்பரந்தாமன்
கசித்திடும்மல்ல காலயவன்றனை
முசிநம்மல்ல முசுகுந்தனற்போக்கி
விதியுடன்மோக்ஷ வீட்டினைத்தந்தனர்.

ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் காலயவனை முசுகுந்தனால்சம்ஹரிப்பித்து பிறகு அந்தமுசுகுந்தன்தோத்திரஞ்செய்ய அவனுக்கு மோக்ஷப்பிரதானஞ்செய்து அப்படியே துவாரகாபுரத்திற் கெழுந்தருளினுரென்று சொல்லுகின்றன,

கேளீர் அபிமன்னியுகுமாரனான பரிட்சித்துமகாராஜனேஒருநாள் யாதவர்களுக்குப் புரோகிதரான கற்காசாரியரானவர் வைராக்கியத்துடன்இந்திரியநிக்கிரகஞ்செய்தவராகிய யாதவர்களுடையசபையிலிருக்கையில் அவருடையமைத்துனன் இந்தக்கற்காசாரியரைநம்பும்சகனென்றும்இவரால்ஸ்திரீகளுக்கொன்றும்பிரயோசனமில்லையென்றும பரிகாசஞ்செய்தன அவனையாதவர்கள்யாவரும் சொலலவேண்டாமென்று தடுக்காமல்தாங்களும்அவ்வண்ணம் பரிகாசஞ்செய்தார்கள் இதுகண்டுகற்காசாரியருக்குக்கோபமீறி யாதவர்களைநோக்கியேயாதவர்களே நீங்களுங்கொஞ்சங்கூட பயமில்லாமலிப்படிக்கென்னை பரிகாசஞ்செய்தபடியால் உங்களைநாசஞ்செய்ய ஒருபுத்திரனையுண்டுபண்ணுகிறேனென்று பரமசிவனைக்குறித்து உக்கிரமான தவஞ்செய்து அந்த உமாமஹேஸ்வரனுடைய அனுக்கிரகம்பெற்று தமது மனைவியிடத்தில் புத்திரோற்பத்தி செய்யவரும்போது அவரைநெடுங்காலம் புத்திரனில்லாதயவனதேசத்தரசனானவன்கண்டு சாஷ்டாங்கமாகச்சேவித்து மிகவும்நயமுறப்பேசி தனதுபத்தினியிடத்தில்புத்திரோற்பத்தி செய்யவேண்டுமென்று விரும்பினான் அவ்வண்ணமே அந்த இராஜாவின் மனைவியிடத்தில் புத்திரோற்பத்தி செய்தனர் அந்தப்புத்திரனே இந்தக்காலயவனாகையால்தோழனான சராசந்தனுக்குச் சகாயமாய யாதவர்களைக் கொல்ல வேண்டுமென்று மதுராபுரியை வந்துசுற்றிக் கொண்டான்.

இந்தமர்மந்தெரிந்த ஸ்ரீபகவானானவர் துவாரகையிலயாதவர்களை வைத்துப்போட்டு தாம்பலராமசகிதராய்மதுரையில்நின்று வருபவர்கள்போல் நிராயுதராயும் பூரணச்சந்திரன்போன்ற முகத்தினையுடையதிவ்வியபீதாம்பரதரராய் ஸ்ரீவத்சமருவோடு கௌஸ்துபசரணத்துடன் விளங்குகின்றகண்டமும் முழங்கால்வரைக்குந்தொங்குகின்றநான்குகைகளும் மிகவும் சுந்தரமுள்ள திருக்கண்களும் கஸ்தூரிதிலகமுந்தரித்து திவ்யலட்சணசம்பன்னராய் புன்னகையுடன் கால்நடையாகப்புறப்பட்டிருகின்ற ஸ்ரீகிருஷ்ணனைமுன்னால்தனக்குநாரதர்சொல்லியிருந்தகுறிகள் சரியாகவிருக்கக்கண்டு இவனேகிருஷ்ணனாக வேண்டுமென்று கருதி அந்த திரேகசவுந்தரியத்தைப்பார்த்துத் திருப்தியடையாமல் ஆச்சரியமுற்றுதானும்கால்நடையாகவே அவரோடுயுத்தஞ்செயயவேண்டுமென்று எதிராகஓடிவந்தான்-அவனைப் பார்த்து பயந்தவரைப்போல ஓடினார்,

அப்போதந்த காலயவன் தனக்குப் பயந்துஓடினதாகவேஎண்ணிக்கொண்டு அடாகிருஷ்ணா உனதுபராக்கிரமம்இவ்வளவுதானா சூரனானநீ இப்படி ஓடலாமாவென்றுபின்னேடே சொல்லிக்கொண்டு துரத்தினான் அப்போது சுவாமியானவர் கையிலகப்படுகிறவர்போலவெகுதூரமஓடி முசுகுந்தச் சக்கிரவர்த்தி தூங்குகின்றகுகையினிற்புகுந்து மறைந்துகொண்டார் அந்தக்காலயவனுங்குகையினிற்சென்று அதில் சகலாலங்காரத்துடனிருக்கின்ற ஓர்கட்டிலின்மீது மலைபோன்றசரீரத்துடன்நித்திரைசெய்கின்ற முசுகுந்தச் சக்கிரவர்த்தியைஸ்ரீகிருஷ்ணனாகவெண்ணி கோபத்துடன் காலா லோங்கி மார்பினிலுதைத்தனன்,

அப்போதந்த முசுகுந்தனானவன் அனேககாலமாய் நித்திரைப்பண்ணிக்கொண் டிருந்தவனாதலால் மெல்லமெலவெழுந்துகண்களை விழித்து நான்கு திசையிலும்நோ

க்கிப்பார்க்கையி லருகாமையிலிருக்கின்ற காலயவன் கண்ணிற்பட்டான் அப்போதன்னுடைய வயிற்றினிலிருக்கின்ற ஜாடராக்கினியால் காலயவன்பஸ்பமாய் தகிக்கப்பட்டான் இப்படியருளிச்செய்கின்றசுகமுனிவரைநோக்கிப்பரிட்சித்துமகாராசன் வினவுகின்றான்.

கேளீர் பிரமரிஷியே அந்தமுசுகுந்தனானவனுடைய புத்திரன் அவன் இந்தக்குகையிலென்னநிமித்தமாகவந்து நித்திரைசெய்தான் அவனது கண்ணாற்பார்த்த மாத்திரத்தி லிந்தக்காலயவனெப்படி சாம்பலாயினான் இந்த விருத்தாந்தங்களை அடியேனுக்கு விசிதமாகச் சொல்லவேண்டுமென்று பிரார்த்திக்க அரசனைநோக்கி சுகமுநியருளிச்செய்கின்றார், கேளீர் அரசனே இட்சவாகுவம்சத்தில் மகாபுண்ணியசாலியாகி மாந்தாதா வென்றொரு அரசனிருந்தான் அவனுடையமைந்தன் முசுகுந்தனென்கிறவன் சக்கிரவர்த்தியாய் மிகவுந்தர்மசிந்தை யுடையவனும்பகவத்பக்தர்களுக்குள் சிறந்தவனும் தேவேந்திரனுக்கொப்பானபராக்கிரமத்துடன் அயோத்தியா பட்டணத்தை அரசுசெலுத்திவந்தான் அப்படிவருநாளில் ஒருகாலத்திில்தேவர்கள் அசுரர்களாலடிக்கப்பட்டு அந்தவருத்தம்பொறுக்கமாட்டாமல் மகாசூயாளுவானமுசுகுந்தனண்டையிலோடிவந்து இரட்சிக்கும்படிமுறையிட்டார்கள் அப்படியே அத்தேவர்களோடே சொர்க்கலோகத்திற்குச் சென்று அசுரர்களுடையஅச்சமில்லாமல் யாவரையும்சங்கரித்துதேவர்களுடையபயத்தை நிவாரணஞ்செய்துசுப்பிரமணியன் தேவசேனாதி பத்தியத்திற்கு வருமளவுந்தான்சேனாதிபதியாக அந்தச்சொர்க்கத்திற்றானே வாசஞ்செய்தனன்பின்புசுப்பிரமணியன்தேவசேனாதிபதியாக வந்தபின்பு சகலதேவாகளுடன் தேவேந்திரன் இந்தமுசுகுந்தச்சக்கிரவர்த்தியைப்பார்த்து தோத்திரஞ்செய்துசொல்லுகின்றான்கேளீர்ரவிகுலோத்துங்கனான முசுகுந்தச்சக்கிரவர்த்தியே உம்மால்யாங்கள் அசுரர்களுடையதுன்பத்தில் நின்றும்நீங்கி இரட்சிக்கப்பட்டோம் எங்கள்நிமித்தம்உம்முடைய இராச்சியத்தையும்பெண்டீர்புத்திரர்களையும் பந்துக்களையும் சுகத்தையும் நித்திரையையும்ஒழித்து வெகுகஷ்டப்பட்டீர் ஆதலால் உமதிஷ்டத்தைப் பூர்த்திசெய்யவேண்டுமென்று மோட்சத்தைஅருளும்படியான பிரபுஸ்ரீமந்நாராயணனாதலால் அதைமாத்திர மொன்றை விரும்பாமல் உமக்கு வேண்டுவதைக்கேளுமென்று கேழ்க்கமுசுகுந்தச்சக்கிரவர்த்தியானவன் சொல்லுகின்றான்.

இப்போதெனக்கு மிகவும் ஆயாசமா யிருக்கின்றது நன்றாய்நித்திரை செய்யவேண்டுமென அப்போதேவர்கள் அப்படியேநித்திரை செய்வாயாகவென்றருளிப், பின்னும்உம்மை மத்தியிலெழுப்புமெவனானாலும்சாம்பலாய்ப்போகக்கடவதென்று அனுக்கிரகஞ்செய்த அந்தப்பலத்தினால் காலயவன்சகிக்கப்பட்டான் உடனேஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் முசுகுந்தச்சக்கிரவர்த்திக்கு விராட்புருஷ லட்சணரூபமாகப்பிரத்தியட்சமாய்சேவைதந்தனர் அப்போதவனைப்பார்த்து ஆச்சரியமடைந்துவாகனருடராய்ச்சஞ்சரிக்கத்தக்க தேவரீ ரிவ்வனத்தில் இருளடைந்தகுகையிலுந்துறக்கங்களிலுங்கால்நடையாகவென்னநிமித்தமாகச் சஞ்சரிக்கின்றீர் ஒளிக்குளொளியாகிய சூரியனோ அக்கினியோசந்திரனோ தேவேந்திரனோ தேவதேவனானஸ்ரீயப்பதியோ தேககாந்தியால் இக்குகையினிலுள்ள இருளை நாசமடையச்செய்கின்றதேதேவரீருடையசன்ம கர்மங்களை விசிதமாகத் தெரிந்துகொள்ளஅன்புமேலிட்டும் உம்மிடசொரூபத்தினால்பயமுண்டாய்சோர்வுறச்செயகின்றனவென்று சொல்லுகின்றமுசுகுந்தனைப் பார்த்துபுன்னகையுடன்மேகம்போலக்கம்பீரமாய் ஒருவார்த்தைஅருளிச்செய்கின்றார்.

கேளாய்முசுகுந்தச்சக்கிரவர்த்தியேஎன்னுடையஜன்மகர்மங்களை ஒருவருமறியமாட்டார்கள் ஜகத்தைச்சிருஷ்டித்தல்இரட்சித்தல் சங்கரித்தல்இவைகளிலெனக்கு ஜன்மமுங்கர்மமுமிருக்கும் அதைச்சொல்ல ஆரம்பித்தால் உனக்குக்கேட்கஆயுளுமில்லை அறிவதற்குக்கியானமுமில்லை ஆகினும்சங்கிரமமாகச்சொல்லுகிறேன்கேள் இப்புவியில்அசுரர்களமேலிட்டுசகலஜனங்களையும்துன்புறச்செய்து கொண்டிருந்தார்கள் அவ்வசுரபாரத்தைப்பொறுக்கமாட்டாமல் பூமிதேவி பிரமனிடத்தில் முறையிட்டனள் பிரமன் அப்பூமிதேவியை சகல தேவர்களுடனழைத்துக்கொண்டு என்னைக்குறித்துத்துதிசெய்துபூமிபாரத்தைத்தீர்க்கவேண்டுமென்றுபிரார்த்தித்தார்கள் அவர்களிஷ்டத்தைப் பூர்த்திசெய்வதற்காக நான் வசுதேவருக்குப்புத்திரனாக அவதரித்தேன் என்பெயர் வாசுதேவனென்றுசொல்லுவார்கள் காலநேமியென்கிற அசுரன்கம்சனாய்ப்பிறந்திருந்தான் அவன்என்னால் பரிவாரத்துடன்கொல்லப்பட்டான் நீமுன்பு என்னைமிகுந்தபக்தியுடன்ஆராதனஞ் செய்திருந்தாயாதலால் உனக்குப்பிரத்தியட்சமாய் அனுக்கிரகஞ்செய்யவேண்டியும் இந்தக்கண்டகனானகாலயவனைக்கொல்லவேண்டியும் இக்குகையினிற் பிரவேசித்தேன் அந்தக்காலயவனும்நாசமானான் என்னை ஆராதித்தஎமனும்நன்மையையடைவானாதலால்உனக்குவேண்டுவதைக்கேட்டுக் கொள்ளென்று அருளிச்செய்யஸ்ரீகிருஷ்ண பகவானுடைய அமிர்தவார்த்தைகளைக்கேழ்வியுற்று முசுகுந்தச் சக்கிரவர்த்திமிகுந்தசந்தோஷத்துடனெழுந்திருந்து ஸ்ரீகண்ணபிரானைசாஷ்டாங்கமாகத்தண்டன்சமர்ப்பித்துஅஞ்சலிகூப்பிபக்தியுடன்விஞ்ஞாபனஞ்செய்கின்றான் கேளீர் சுவாமி தேவதேவாதேவரீர் ஸ்ரீமந்நாராயணனென்று இப்போதுதான் தெரிந்துகொண்டேன் அடியேன் அரசாட்சிசெய்யுங்காலையில் விருத்தகார்க்கரென்கின்ற ஒருமகாரிஷி

யானவர் இருபத்தெட்டாவது சதுர்யுகத்தில் ஸ்ரீமந்நாராயணன் திருவவதாரஞ்செய்துஉனக்குப்பிரத்தியட்சமாகப்போகிருரென்று சொல்லியிருந்தார் அவ்வண்ணமேதேவரீரைஇப்போது பிரத்தியட்சமாய்ச் சேவித்துகிருதார்த்தனானேன் அடியேன்இதுவரையில் துர்லபமாயும உத்தமமாயுமிருக்கின்ற மாணிடசென்மத்தையடைந்திருந்தும் அதற்குரியமோட்சத்திற்குக்காரணமானதேவரீருடையதிருவடியையும் பாகவதர்களுடைய சகவாசத்தையும் மறந்துநகரத்திற்குக்காரணமான சமுசாரத்தை பரமபுருஷார்த்தமென்றுநினைத்து அறிவின்மையால் பசுவானதுகிணற்றில்முளைத்திருக்கின்ற புல்லைத்தாவிவிழுவதுபோல மோசம்போனேன் எனக்கிதுவரையில் பொல்லாங்கான காலமாயிருந்தால் இராச்சியத்தினிடத்தி லாசையொழியவுமில்லை தேவரீர்பிரத்தியட்சமாய் சேவைசாதிக்கவுமில்லை இப்போதடியேனுக்குசற்கதிக்குரிய காலமாதலால் இராச்சியசம்பந்தமு மற்றுதேவரீருடைய சேவையுங்கிடைத்தது,

இனிமேலுமப்படி மோசம்போகாமல் சாசுவதமாகியும் கோடிசூரியப்பிரகாசமாகியும் ஆனந்தமயமாகியுமிருக்கின்ற மோட்சத்தைத்தராநின்ற தேவரீருடைய திருவடியில்பக்தியும்பாகவதர்களுடைய சகவாசமும் நிரந்தரமாயிருக்கும்படி கிருபைசெய்யவேண்டுமென்றுபிரார்த்திக்க ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் கபடமாய்முசுகுந்தனைப்பார்த் தொருவார்த்தை அருளிச் செய்கின்றார் கேளாய் முசுகுந்தமகாராசனே உனக்குவேண்டியதைக்கேளுமென்றுசொன்னால் வேறொன்றையும்விரும்பாமல்என்னுடையதிருவடியில் பக்தியிருக்க வேண்டுமென்றுகேழ்க்கின்றாய் அதனாலென்ன பிரயோசனத்தைஅடையப்போகிறாயென்று கேட்டருளுகின்ற ஸ்ரீகண்ணபிரானைப்பார்த்து முசுகுந்தன்சொலலுகின்றான் கேளிர் தீனபந்துவானசுவாமிஅடியேன் பூர்வஞ்செயதகர்மவினையால் வெகுகிலேசங்களையனுபவித்துபஞ்சேந்திரியங்களையும் வெல்லமாட்டாமல் அதுகளால்நானுவிசங்களாக இழுக்கப்பட்டுள்ள பிரயாசையினால்தேவரீரைக்கண்டு சரணமடைந்தேன்இப்போதும்உபேட்சைசெய்யாமலடியேனைஎவ்விதமாவது இரட்சிக்கவேண்டுமென்றுசாஷ்டாங்கமாகச்சுவாமியினுடைய இரண்டு திருவடிகளையும்பற்றிக்கொண்டுமெத்ததுயரத்துடன் பிரார்த்திக்கின்றமுசுகுந்தனைப்பார்த்து ஸ்ரீகிருஷ்ணபகவான் அருளிச்செய்கின்றார் வாராய்சார்வபூமனான முசுகுந்தசக்கிரவர்த்தியே நீவிரும்பியபடியே தந்தேன்க்ஷத்திரியதர்மத்திலேதானேயிருந்து தவஞ்செய்து உன்னுடையமற்றஆயுளையும் போக்கடித்துமறுசன்மம்பிராம்மணனாய்ப்பிறந்து நியானுநிசயத்தா லென்னுடைய பதவியைஅடையப்போகிறாயென்று அனுக்ரகஞ்செய்தனர்,

———

## ௫௨ - வது-அத்தியாயம்.

எழுசீரடி யாசிரிய விருத்தம்,

அரியமுசுகுந்தனுக்குஅனுக்கிர
கஞ்செய்துபின்புஅவ்விடம்விட்டு
விரைவுடன் துவாரகைநண்ணி
குண்டினமாநகர்க்கதிபன்வீஷ்மராசன்
அருந்தவத்திலுதித்திடும்ருக்மணி
தேவிக்கலியாணமதனைச்செய்யக்
குரிசிலானவனெண்ணகோதையு
ருக்மணிபகவற்குரைப்பித்தானே,

ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் முசுகுந்தனுக்குஅனுக்கிரகஞ்செய்தபின்பு அவ்விடத்திலிருந்து துவாரகாபுரத்திற்கெழுந்தருளினதும் குண்டிணபுரத்திற்கதிபனான பீஷ்மமகாராசன் தனது அருந்தவப் பெண்ணாகிய உருக்குமணிதேவிக்குவிவாகஞ்செய்யபிரயத்தனஞ்செய்ததும் அப்போதுஉருக்குமணி தேவியானவள் ஒருபிராமணனிடத்தில் ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கு சமாச்சாரஞ்சொல்லியனுப்பினதும் அதைசுவாமியானவர்கேட்டு சந்தோஷித்துபிரதி உத்தரஞ்சொல்லி அனுப்பினதுஞ் சொல்லுகின்றன.

கேளிர் பரதவம்சோத்தவனேஇப்படிக்கு ஸ்ரீகிருஷ்ணபகவானால் முசுகுந்தன்அனுக்கிரகப் பட்டுக்கொண்டுஅவரைதண்டன்சமர்ப்பித்து விடைபெற்று பர்வதகுகையில் நின்றும்வெளிப்பட்டுகுறுகியும் அற்பபலமுமுடையமனிதர்களையும் அற்பவீரங்களை யுடைய பசுக்களையும் அதிகசூட்சமமானவிருட்சங்களையும்பார்த்து மனதில்வைராக்கியம் பிறந்துஸ்ரீபகவானுடையதிருவடிகளில்மனதைசசலிக்கவொட்டாமல்தியானித்துக்கொண்டு கந்தமாதனபர்வதத்திலிருக்கின்ற நரநாராயணாசிரமத்திற்கும்போய்த்தவஞ்செய்யலானான் பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவான் பர்வதகுகையினின்றுவெளிவந்து மதுராபுரத்திற்குப்போய்காலயவனுடன் கூடவந்தமூன்றுகோடிதுலுக்களை ஏககாலத்தில் சங்கரித்து சந்தோஷமாய்மதுரையிலிருக்கையில் சராசந்தன்திரும்பவும் இருபத்துமூன்றக்குரோணி சேனைகளோடே மதுரையைவந்துவளைந்துக்கொண்டனன் அப்போது ஸ்ரீபகவானானவர் அந்தசராசந்தனையும் சேனையையும்பார்த்து பயந்தவரைப்போல பலராமருடன்கோமந்த பர்வதத்தைநாடிஓடினார் அவர்களைப்பார்த்துசராசந்தன் பரிகாசஞ்செய்து பின்றுடர்ந்தோடிவர்தான் அப்போதுராமகிருஷ்ணளிருவரும் மலைப்பின்னுனியிலொளித்துக் கொண்டார்கள் சராசந்தன்பதினொருயோசனை அகலமும் உயரமுமுள்ளஅம்மலையின் ஆதிபந்தந் தேடியுங் கண்டுபிடிக்கமாட்டாமலம்மலையை நெருப்பிட்டுக் கொளுத்தினோமானல் ஸ்ரீராமகிருஷ்ணளிருவரும் ச ா ம் ப லா வா

ர்களென்று நினைத்து அனேககோடி விறகு சுமைகளைக்
கொண்டுவந்து சுற்றிலும்போட்டு நீமூட்டினன் அம்ம
லையில் நான்குதிசையிலும் பற்றிக்கொண்டுபிரளயகால
அக்கினியைப்போல விளங்கியதுஅப்போது ஸ்ரீராமகி
ருஷ்ணர்களிருவரும் ஆகாயமார்க்கமாகச்சராசந்தனுக்
குத்தெரியாமல் பூமியிலிறங்கி சராசந்தனுடையசேனை
களைச் சங்கரித்துப்போட்டு ஏகாந்தமாய் துவாரகாபட்
டணத்திற்குச்சென்றனர்.

பிறகுஜராஜந்தன் ஸ்ரீராமகிருஷ்ணரிருவருமிந்த அ
க்கினியில் மாண்டார்களென்று நிச்சயித்துதிரும்பிவந்
துபார்த்து தனதுசேனைகளெல்லாம் மாண்டிருப்பதுக
ண்டுமனந்தளர்ச்சியுற்று ஆச்சரியத்துடன்தனதுபட்ட
ணத்திற்குச்சென்றான்.

கேளீர் பரிட்சித்துமஹாராஜனே இப்படி துவாரகா
பட்டணத்திற்குப்போய் ஸ்ரீராமகிருஷ்ணர்கள்சுகமாயி
ருக்குங்காலையில் ஆநந்த தேசத்திற்கரசனை ரைவதக
னென்றுபெயருடைய மகாராசனானவன் பிர்மதேவனு
டைய அனுக்கிரகத்தாலுண்டான ரேவதியென்கிறதனை
துகன்னிகையை பலராமருக்கு விவாகஞ்செயதுகொடு
த்தனன், அதின்பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவானனவர்ஸ்ரீரு
க்மணிதேவியை ஆசுரவிதியினால் விவாகஞ்செய்ததை
சுகயோகினியானவர் சொல்லஆரம்பித்தனர்.

கேளீர்அரசனேவிதர்ப்பதேசத்தில்மகாதர்மசிந்தை
யுள்ள பீஷ்மகனென்கிறமகாராசன் அரசுசெலுத்திவந்
தான்அவனுக்கு உருக்குமி உருக்குமீரதன்- உருக்குமீ
பாகு-உருக்குமீகேசி-ருக்குமீநேத்திரனென்றும் ஐந்து
குமாரர்களும் ஸ்ரீமகாலட்சுமியினுடைய அம்சையாய்
சகலலக்ஷண சம்பன்னையான உருக்குமணிதேவியென்
னொருபெண்ணும்பிறந்திருந்தனள். ஸ்ரீருக்மணிதேவி
யானவள் தனதுகிரகத்தினில்வரப்பட்ட பெரியோர்கள்
ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய திவ்விய கல்யாணகுணங்க
ளைச்சொல்லக்கேள்வியுற்று பரமாநந்தமடைந்துஅந்த
க்கண்ணபிரானனபகவானையே தனக்கு உகந்தநாயகரா
கநினைத்து அவருடையதிருவடிகளில்மனமுடையவளா
ய்தியானித்துக்கொண்டிருந்தனள். அக்கருத்தை ஸ்ரீரு
க்குமணிதேவியினுடைய தாய்தந்தையர்களறிந்து அந்
த ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கே விவாகஞ்செய்துகொடுக்க
ச்சம்மதித்திருந்தனர்கள். இவ்வாறேஸ்ரீகிருஷ்ணபகவா
னும்இந்தஸ்ரீருக்மணீதேவியினது சவுந்தரியங்களையும்
நற்குணங்களையும் கேள்வியுற்று அவளேதமக்குஉகந்த
நாயகியென்றுகருதி விவாககாலத்தை எதிர்பார்த்திருந்
தனர்இப்படியிருக்கையில் அந்தபீஷ்மகனுடையமுதற்
புத்திரனுயும்ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு விரோதியாயுமி
ருக்கின்ற உருக்குமியானவள் அந்தஸ்ரீகிருஷ்ணனுக்கு
இந்த ஸ்ரீருக்மணீதேவியைக் கொடுக்கக்கூடாது சேதி
தேசத்திற்கரசனை சிசுபாலனுக்கே கொடுக்கவேண்டு
மென்றுநிச்சயித்திருந்தனன். அதையறிந்த ஸ்ரீருக்கும
ணீதேவியானவள இதைசுவாமிக்கு விக்கியாபனஞ்செ
ய்யவேண்டுமென்றுகருதிஒருபிராம்ஹணனைவரவழை
த்துஅவருடனிந்தச் சங்கதிகள்யாவற்றையுஞ்சொல்லி
அவருக்குவேண்டிய வெகுமதிகளைக்கொடுத்துஒருபத்
திரிகையு மெழுதிக்கொடுத்து அனுப்பினள்.

அவ்வேதியரும் தட்க்ஷணமே விதர்ப்பதேசத்திலின்
றுபிரயாணமாய் துவாரகாநகரத்திற்குச்சென்று ஸ்ரீகி
ருஷ்ணபகவானுடைய திருமாளிகையின் அருகினிற்போ
ய்அவத்திலுள்ள காவலாளிகளுடன் தாம் விதர்ப்பதே
சத்திலிருந்து அரவிந்தாக்ஷனை கண்டசமர்ப்பிக்கவ
ந்தசங்கதியை ஸ்ரீபகவானுடைய சந்நிதியில் விக்கியாப
னஞ் செய்யச்சொல்லியனுப்ப அவர்களுமப்படியே வி
க்யாபனஞ்செய்ய அதைக்கேட்ட ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி
யும் அவ்வந்தணனை அந்தப்புரத்திற்கழைத்துவரச்சொ
ல்லிநவரத்தினத்தாலிழைத்த சொர்ண சிங்காதனத்தை
விட்டெழுந்திருந்து எதிர்கொண்டுவந்து அந்தப்பிராம
ணனுக்கு அர்க்கியபாத்தியமுதலியதால் பூசித்துதாமெ
ழுந்தருளியிருந்தசிங்காதனத்தினி லுட்காரவைத்துஅ
னேககனிவர்க்கமுதலியவற்றால் திருப்தியும்கந்தபுஷ்ப
ங்களால் அலங்காரமுஞ்செய்வித்து தாம்பூலங்கொடுத்
துகட்டிலின்மீ தவளைப்படுக்கச்சொல்லி அவருடையப
க்கத்திற்றாமுட்கார்ந்து அவரைப்பார்த்துஒருவார்த்தை
யருளிச்செய்கின்றனர்;

கேளீர் பூசுரோத்தமரே உமக்குதர்மமானது விகாத
மில்லாமல் விருத்தியடைகின்றனவா, உமதுமனதுஎப்
பொழுதும் சந்துஷ்டியை யடைந்திருக்கின்றனவா உல
கத்தில் தனக்குக்கிடைத்த மட்டுக்கும் மேன்மையாகப்
பாவித்துசந்துஷ்டனாய்தன்னுடையதர்மங்களொன்றை
யும்விடாமல் எவன் அனுஷ்டிக்கின்றானோ அவனிவ்வு
லகத்தில் சகலஇஷ்டத்தையுஞ் சுலபமாகவடைந்து பர
லோகத்திலும் சுகத்தைஅடைவானதலால் அப்படிப்ப
ட்டதர்மம் தேவரீருக்கு குறைவறநடந்து வருகின்றன
வாவென்று கேட்டருளிய ஸ்ரீபகவானுடைய வார்த்தை
களைக்கேழ்வியுற்று அந்தபகவானைப்பார்த்துஅவ்வேதி
யர்சொல்லுகின்றனர் கேளீர்சுவாமி அரவிந்தாக்ஷாதே
வரீருடைய அனுக்கிரகபலத்தினால் சகலதர்மமும்ஒரு
குறைவுமில்லாமல்நடந்துவருகின்றதென்றுசொல்லிஅ
ப்பால் ஸ்ரீருக்குமணீதேவியானவள் சொல்லியிருந்தச
ங்கதிகளை சுவாமிசந்நிதியில் விக்கியாபனஞ்செய்யலுற்
றனர். ஸ்ரீருக்குமணீதேவியானவள் தேவரீரிடத்தில்வி
சேஷஅன்பு செலுத்தியிருக்கிறவண்ணம் அவள் தாய்
தந்தைமுதலியபந்துக்கள் யாவருந் தேவரீருக்கே தன்
னைக்கன்னிகாதானஞ் செய்துகொடுக்க இசைந்திருக்கி
றார்களென்றும் தனக்குமுதற்றமையனனஉருக்குமிஎ
ன்பவன் சிசுபாலனுக்குக்கொடுக்கயத்தனஞ்செய்திருக்
கிறானென்றும்தேவரீருடன் சொல்லச்சொன்னாளென்று
சொல்லிபிறகு ஏகாந்தத்தில் ஸ்ரீருக்குமணீதேவியினு
டைய கையெழுத்துப்பட எழுதிக்கொடுத் திருக்கின்ற
விக்கியாபனப்பத்திரிகையை ஸ்ரீபகவானுடைய திருக்
கையினிற்கொடுக்க அதை அந்த அந்தணரைத்தானே
வாசிக்கச்சொல்லினர் அப்போதந்தபிராம்ஹணர் வாசி
த்தனர்கேளீர் சுவாமிதேவதேவனான ஸ்ரீபகவானே வி
தர்ப்பதேசாதிபனான பீஷ்மனுக்குப்பெண்ணாகிய உரு
க்குமணியென்று பெயரையுடைய வடிவேலுக்குவிவா
ககாலஞ் சமீபித்திருக்கின்றமையால் தேவரீர் சராசரா

க்கமமான இம்மூவுலகிலும் மிகுந்த சௌந்தர்யமுடையவரென்றும் அச்சுதனென்கிற திருநாமத்துடன் விளங்குகின்றவரென்றும் கேள்வியுற்று தேவரீரைச்சீக்கிரத்தில் அடையுகற்கிலலாமல் காலதாமசமாயிருக்கின்றனவேயென்று மனதுவெப்பங்கொண்டு தேவரீருடைய சரித்திரங்களாகின்ற அமுததாரையைச் செவியின் வழியாகக்கிரகித்து அந்ததாபத்தைப் போக்கடித்துக் கொளளுகின்றேன் அப்படிப்பட்டமகிமையையுடையதேவரீருக்குக்கொஞ்சமேனும் இசைந்தவளாகாவிடினும் தயாபரிபூரணசுவாமியாதலால்கிருபைகூர்ந்து அங்கீகரிப்பீரென்கிறவாசையால் விரும்புகின்றேன் சிங்கத்துக்கொப்பான தேவரீருக்கென்று சிருஷ்டித்திருக்கின்றவடியேனை நரிக்கொப்பான சிசுபாலன்வந்து தொடுதற்குமுன்னம் தேவரீர் கிரகித்துக் கொள்ளவேண்டும் அடியேன்முன்ஜன்மத்தில் தடாகபிரதிஷ்டையும்பிராமணர்களுக்குஅநேகதானமும் கங்கைமுதலிய புண்ணியநதியில்ஸ்நானமும் சாந்திராயணமுதலிய விரதங்களும் ஸ்ரீபகவானை ஆராதித்துமிருந்தால்விவாகஞ்செய்வதற்குமுன்னதாகப்பார்வதிபூசைசெய்கிறதற்காகஅடியேனுடைய அந்தப் புரத்தைவிட்டுத் தோழிகளுடன் கால்நடையாகவெளியினில் வருவேன் அப்போது அடியேனைக்கதாக்கிரஜனை தேவரீர் கையைப்பற்றக்கடவீர்தேவரீருடையதிருவடித்தூளியை சம்புவானவர் சிரசில்தரித்தபிரபாவத்தால் கபாலம்எலும்பு இதுகளைப் பூஷணமாகவணிந்திருந்தாலும அசுத்தியையடையாமல் பரிசுத்தராகினர் அப்படிப்பட்ட பிரபாவத்தையுடைய திருவடிகளை அடையாமல் அடியேன்ஜனித்ததற்கென்ன சபலம்சகலவிதத்திலுந் தேவரீரையே புருஷனாக வடைய விரும்புகின்ற வடியேனுடைய கோரிகையையீடேற்றாவிட்டால் பிராணனைவிட்டு எத்தனைஜன்மம் அடியேனையனுக்கிரகிக்கவில்லையோ அத்தனைஜன்மமும் வேறொருபுருஷனைக் கண்ணெடுத்துப்பாராமலதேவரீருடையதிருவடியின்றனே மனதைவைத்து சரீரத்தைமாத்திரம் விட்டுவிடுவேன் அப்படிச் செய்கின்றபோது தேவரீர் தானே அடியேனிடத்தில் கிருபைகூர்ந்து அனுக்கிரகிக்கப்போகின்றீர் ஆதலால் இனிநடக்கப்போகின்றவடியேனுடைய கருத்தைவிக்கியாபனஞ்செய்தேன்தேவரீருடையதிருவுள்ளக் கருத்தின்படியென்று எழுதியிருந்தவிருத்தாந்தங்களையெல்லாம் சுவாமிசந்நிதியில்வாசித்துக்காண்பித்து ஆக்கியாப்பிரகாரம் நடந்துகொள்ளுகிறேனென்றுமறையோனான பிராம்மணன் விக்கியாபனஞ்செய்துகொண்டனன்.

---

## ௫௨ - வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

அரியகிருஷ்ணனு மந்தணர்தன்னுடன்
தெரிவைக்கோதெனச் செப்பியனுப்பிய
பரிவாய்ப்பூசுரன் பாவைக்குச்சொல்லிட
உரியகௌரிநோன் புள்ளத்திலழத்தனள்

ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் பூசுரனுடன் அந்த ஸ்ரீருக்குமணியின் கருத்தின்படி நிறைவேற்றுகிறேனென்றதும் அந்தருக்குமணிதேவியானவள் பிராம்மணன்வரவைஎதிர்பார்த்திருக்கையில் அவ்வந்தணர்பகவானுடையகருத்தைத்தெரிவித்ததும் ஸ்ரீருக்குமணிதேவி கவுரிபூஜைசெய்ததும் அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவான் ஸ்ரீருக்மணிதேவியைகிரகித்துக்கொண்டுபோனதும் அரசர்கள் உயுத்தத்திற்குப் புறப்பட்டதும் சொல்லுகின்றன.

கேளிர் உத்தரகுமாரனே அந்த ஸ்ரீருக்குமணிதேவியினது கருத்தை பிராம்மணனாற் கேட்டுவியுற்று ஸ்ரீபகவானானவர் கொஞ்சம் புன்னகையுடன் அம்மறையோனைநோக்கிஒருவார்த்தை அருளிச்செய்கின்றார் கேளிர் பூசுரோத்தமனே அந்த ஸ்ரீருக்குமணிதேவியினது கருத்தின்வண்ணம் யானும்இராப்பகல் நித்திரையில்லாமலிருக்கின்றேன் உருக்குமியென்பவன் தனது தங்கையாகிய ஸ்ரீருக்குமணிதேவியை சிசுபாலனுக்குக் கொடுக்கவேண்டுமென்று நிசசயித்திருப்பது அந்தசுவயம்வரத்தினில்வந்திருக்கின்ற சகலவரசர்களையும்விட்டு ஸ்ரீருக்மணிதேவியானவள் என்னையே தியானித்துக்கொண்டிருப்பதும்யானறிவேன் தீக்கடைக்கோலேக்கடந்துநெருப்பை எடுப்பதுபோல சகலவரசர்களையும்ஜயித்து அந்த ஸ்ரீருக்குமணிதேவியைக்கொண்டு வருவேனென்று அந்தப் பிராம்ஹணனுடன்சொல்லி தமது சாரதியான தாருகனைப்பார்த்துதேரை அலங்கிருதஞ் செய்துகொண்டுவரும்படிஆக்கியாபிக்க அவ்வாறே சைனியம்-சுக்கிரீவம்- மேகபுஷபம்-வலாஹகமென்று பெயரையுடைய நான்குகுதிரைகளை இரதத்திற்பூட்டி சகல அலங்காரத்துடன் அரண்மனை வாசலிற்கொண்டுவந்துநிறுத்தி சுவாமி சந்நிதியில்வந்துவிக்கியாபனஞ்செய்ய அவரது கேட்டு ஸ்ரீருக்குமணிதேவியா லனுப்பிவிக்கப்பட்டபிராம்ஹணனுடன்இரதத்தின்மீ தெழுந்தருளி துவாரகாபுரத்தைவிட்டுஒரு இராத்திரியிற்றனே விதர்ப்ப தேசத்திற்குவந்துசேர்ந்தனர் அந்தவிதர்ப்பதேசத்திற் கதிகனான பீஷ்மகன்தனதுகுமாரனானஉருக்குமியினுடையவார்த்தையை அதிக்கிரமிக்கமாட்டாமல் சிசுபாலனுக்கே தனது அருந்தவப்பெண்ணாகிய ஸ்ரீருக்மணிதேவியைக்கொடுககவேண்டுமென்று நிச்சயித்துதெருக்களெல்லாம் ஜலந்தெளித்து புஷ்பங்களிறைத்து நான்கு பக்கங்களிலுந் தீபங்களைப்போடுவித்து வீதிகளில் துவஜங்களுந்தோரணங்களுங்கட்டிவைத்து பிதுர்க்களையுந்தேவர்களையும்பிராம்மணர்களைக்கொண்டு விதிப்படி பூஜித்து அநேகபிராம்மணர்களுக்கு போஜனஞ்செய்வித்து ஸ்ரீருக்குமணிதேவிக்கு மங்களஸ்நானஞ்செய்வித்துவிலையுயர்ந்தநூதனவஸ்திரங்களாலும பூஷணங்களாலும் அலங்காரஞ்செய்து-நான்குவேதங்களாலும் பிராம்மணர்களைக்கொண்டு இரக்ஷாபந்தனங்களும புரோகிதர்களால் அதர்வணவேதமந்திரத்தினால் ஓமமும்கிரகசாந்தி முதலியகர்மங்கள்யாவற்றையும் கிரமப்படிசெய்வித்து பிராம்மணர்களுடைய அநேகசொர்னங்கள்வஸ்திரங்கள்பூஷணங்கள் தாம்பூலம்பசுபூமிமுதலியதானங்களைக்கொடுத்தானப்போதுபட்டினத்திலுள்ளசகலசஜனங்களும்பரி

சுத்தமாகஸ்நானஞ்செய்துசந்தபுஷ்பங்களாலலங்காரஞ்செய்துகொண்டுசர்வாபரணபூஷிதர்களாயிருந்தார்கள்.

அப்போது சேதிதேசத்திற்கதிபனான சிசுபாலனானவன் அனேகஅந்தணர்கட்கு வஸ்திரம்-பூஷணம்-தனம் பசுமுதலிய அநேகதானங்களை வெகுவாகக் கொடுத்து தனது இரதகஜதுரகபதாதி சேனைகளோடேகூடி சேதிதேசத்தைவிட்டுப்புறப்பட்டுகுண்டினபுரத்திற்குவந்துசேர்ந்தனன் அப்போதுபீஷ்மகனானவன் சிசுபாலனை அர்க்கியபாத்தியம்முதலியவைகளாற் பூசித்துதனது அரண்மனையிற்றானே நேமித்தவிடுதியி லிருக்கச்சொல்லிப் பிறகுஅவனுடன்கூடவந்தசாலவன்ஜராசந்தன்முதலியவரசர்களையும்பூசித்தனன்.

இப்படிநானாதேசத்தரசர்கள் வந்திருப்பதை ஸ்ரீபலராமர் தெரிந்துகொண்டு ஸ்ரீகிருஷ்ணன் ஒண்டியாய்ப்போயிருப்பதால் ஒருவேளை பிரமாதம்வருமென்றுயோசித்து யாதவசேனைகளைக்கூட்டிக்கொண்டு அவருமொருபக்கலில்வந்து சேர்ந்தனர் அப்போது ஸ்ரீருக்குமணிதேவியானவள் தான் துவாரகைக்குஅனுப்பின பிராம்மணன் வராமையால்மிகவும ஏக்கமுற்றுஒன்றுந்தோன்றாமல் மனக்கவலைகொண்டு பலவாறாகச் சிந்திக்கின்றனள்,

நாம்அனுப்பின பிராம்மணன் துவாரகைக்குப்போய்ச்சேர்ந்தாரோ அல்லது வழியில்நின்றுவிட்டாரோ யில்லை அந்தநிர்தோஷரான ஸ்ரீகிருஷ்ண பகவான் தாய்தந்தையர்களிருக்கையில்நாமெழுதியத்தைக்குற்றமாகவெண்ணி அதினால்விவாகஞ்செயயக்கூடாதென்று திருவுள்ளத்திற்றோன்றினதோ அல்லது தாம்பிரயாணமாய்வருகிறவராயிருந்துஇந்தப்பிராம்மணரையுங் கூடப்போகலாமென்றுநிறுத்திக்கொண்டாரோ அல்லது என்னுடைய துர்ப்பாக்கியத்தால் பிரயாணமாய்வரும்போது மார்க்கத்திலேதேனும் உபத்திரவம்வந்ததோபாக்கியஹீனையானவென்னிடத்தில் ஈஸ்வரனுக்கு அனுக்கிரகஞ் செய்யமனமில்லையோ ஐயோ போனபிராம்மணனும்வரவில்லையேவிவாககாலமும் சமீபித்ததே இந்தப்பார்வதிதேவிக்கும் என்னிடத்தில் அருளில்லையோ யென்பாக்கியமென்னமாயிருக்கின்றனவோதெய்வமேயென்றுபலவாறாகநினைத்துமிகவுந்துயரத்தையடைந்து மனஞ்சோர்ந்திருக்கையில்தன்னுடையஇடதுபக்கம்கண்கரம்தொடைகால்முதலியதுகள் துடிக்கஅதுகள் நற்சகுனமாக விருப்பதையுன்னியோசித்திருக்கிற அந்தச்சமயத்தில் தன்னாலனுப்பப்பட்டிருந்தபிராம்மணர் ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில் விடைபெற்றுமிகவும்சீக்கிரமத்துடன் ஓடிவந்து அந்தப்புரத்தினிற்பிரவேசித்துவிசனப்பட்டுக்கொண்டிருக்கின்ற ஸ்ரீருக்குமணிதேவியைக் கண்டார் அப்போதந்தஅந்தணருடைய முகக்குறியை ஸ்ரீருக்குமணியானவள்கண்டு போனகாரியத்தை அநுகூலஞ்செய்துகொண்டுவந்தவராகநினைத்து நமஸ்கரித்து உபசாரத்துடன்கொஞ்சம்புன்னகைகொண்டு நாணத்துடன்ஒருவார்த்தைசொல்லுகின்றனள்கேளீர் வேதவித்தான பிராம்மணோத்தமரே அந்ததீனதயாளுவான ஸ்ரீகண்ணபிரானானவர் எழுந்தருளினாராவென்று மெல்லிய தொனியுடன்கேட்க ஸ்ரீருக்குமணி தேவியைப்பார்த்துஅந்தப்பிராம்மணர் அந்தஜகத்தீசரான ஸ்ரீகிருஷ்ணபகவான் சமீபத்தினில்வந்திருப்பதையும் சகலவரசர்களும் பார்த்திருக்கையில்உன்னைத்தூக்கிக்கொண்டுபோகிறேனென்று அருளிச்செய்ததையும சொல்லஅதுகேட்டு ருக்குமணிதேவியானவள்ஆனந்தசமுத்திரத்திலாழ்ந்துஇப்படிப்பட்டசந்தோஷமொழியையுரைத்தமறையோனுக்குஎன்னவெகுமதிசெய்யலாமென்றுதேடிஅதற்கிசைந்ததாகத் தனக்குயாதேனுங்கொடுக்கத் தோற்றாமல்தன்னுடைய கடாட்சமெவனுக்கிருக்கின்றனவோஅவனுக்குசகலசெல்வச்செருக்கும் மென்மேலும்உண்டாகின்றனவல்லவா அப்படிப்பட்டமகிமையையுடையநாமே இவரைப்பணிந்தால் இவருக்குயாதேனுங்குறைவின்றியிருப்பாரென்றுகருதி அவ்வந்தணரைப் பக்தியுடன்பிரதக்ஷணஞ்செய்து சாஷ்டாங்கமாகத்தண்டஞ்சமர்ப்பித்தனள்.

இப்படியிருக்கையில்விதர்ப்பதேசத்தரசனானபீஷ்மகன் ஸ்ரீராமகிருஷ்ணாளிருவரையுங்கண்டுமிகுந்தகளிப்புடன்ஸ்ரீகண்ணபிரானானவர் மருமகனாகவிருக்கமனங்கொண்டிருந்தால் அதற்குத்தகுந்தபடி அவர்களுக்குமரியாதைகளைநடத்தவேண்டுமென்றுகருதி அர்க்கியபாத்தியமுதலியவற்றாற்பூசித்துவஸ்திர பூஷணங்களாலலங்கரித்துத் தனதுஅரண்மனையிற்றானே விடுதி விட்டு வெகுமரியாதையுடன் அவர்களையதிலிருக்கச் சொல்லி அவர்களுடன்கூடவந்த யாதவர்களுக்குத்தகுந்தஉபசாரத்துடன் அவரவர்களுக்குயோக்கியமானவிடத்திலிருக்கச்சொல்லி நேமித்துபீஷ்மகனானவன் தனது அரண்மனைக்குச்சென்றனன் அப்பட்டணத்திலுள்ள செனங்களியாவரும் தாங்கள்கண்கள்படைத்தற்குப்பிரயோசனம்இன்றைக்குத்தான் வாய்த்ததென்று புருஷசிம்மனாயும்மகாசௌந்தரியவானாகியு மிருக்கின்றஸ்ரீகண்ணபிரானுடைய முகாரவிந்தத்தைநன்றாகச் சேவித்துணர்ந்து ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளுகின்றார்கள்நமக்குக் கொஞ்சமேனும் புண்ணியமுண்டென்கிறது நிஜமானால் இந்தத்தாமரைக்கண்ணனான ஸ்ரீகிருஷ்ணபகவான்நமதுமாதுசிரோமணியானஸ்ரீருக்குமணிதேவியைமணம்புரியக்கடவரென்றுசொல்லிக்கொண்டார்கள் அப்போ

து அன்னம்போன்ற நடையினையுடையவளும் மின்னற்கொடியைநிகர்த்த மெய்யினைவாய்ந்தவளுங்குயிலினது தொனியினைவாய்ந்த வாக்கினை யுடையவளும் பவளம்போன்றஉதடுகளும் வலம்புரிச்சங்கம்போன்றகழுத்தும் சந்திரபிம்பம்போன்றமுகமும் இருண்டமேகம்போன்றசுருளானதலைமயிர்களும் கலசம்போன்றதனங்களும் நெய்தல்புஷ்பம்போன்ற கண்களும வில்லுபோன்றபுருவங்களும் சிங்கத்தினிடைபோன்றஇடையும் மண ..ன்றுபோன்றபுட்பமும் மாதளம்விரைபோன்ற பல்வரிசைகளும்எள்ளுப்பூப்போன்றமூக்கும்தாமரைபோன்றகால்களின் ஒளிகளும்கற்பகக்கொடிபோன்ற கைகளும் கண்ணாடிபோன்றகன்னங்களும்வாழைமரம்போன்றதுடைகளும சந்தனக்குழம்புபோன்ற குளிர்ச்சியானகடைக்கண்பார்வைகளும் கர்ப்பூரம்போன்ற வெண்மையான புன்னகையுடன்கூடி சுக்லாலங்காரத் துடன் விளங்குகின்றஸ்ரீருக்குமணிதேவியானவள் கவுரிபூசைசெய்ய கோவிலுக்குப்போகவேண்டுமென்றுகருதிஅந்தப்பூசைக்குரியசாமான்களையெடுப்பித்துக்கொண்டு அலங்காரத்துடன் அழகியதோழிகளும்பிராமணஸ்திரீகளும் புடைசூழபுன்னகையுடன் அரையினில் ஒட்டியாணமின்ன காதில்குண்டலங்களசையகையினிற்கங்கணங்களொலிக்ககால்களில் தண்டைசதங்கைகலில்கலீலென்று தொனிக்கஅரண்மனையில் நின்றுந்தனதுதாயாருடன்கால்நடையாய் வெளிப்பட்டு சர்வாந்தரியாமியான ஸ்ரீகண்ணபிரானுடையதிருவடிகளிற்பொருந்தின மனமுடையவளாய்மவுனத்துடன்பேரிசங்கம் நகார் நகபத்துமத்தளம் நாகசுரம் வீணைமுதலியபதினெண்வாத்தியங்களு முழங்கப்பட்டுக்கள் வம்சபரம்பரைகளைச்சொல்லித்துதித்தசூரர்கள் ஆயுதபாணிகளாய் முன்னும்பின்னுமாகக்காக்க இப்படிசகலாடம்பரத்துடன் பார்வதிதேவியினது கோவிலினருகிற்சென்றுகைகால்கள் சுத்திசெய்து சுத்தாசமனத்துடன் கோயிலினுட் பிரவேசித்து பிராமணஸ்திரீகளினல்அந்தப்பார்வதிதேவியினது தரிசனஞ்செய்விக்கபக்தியுடன் நன்ருய்த் தரிசித்து அந்தம்மனைவிதிபபிரகாரம்தூபதீபநைவேத்தியங்களாலும் கந்தபுஷ்ப குங்கும கர்ப்பூர தாம்பூலங்க ளாலும் வஸ்திரபூஷணங்களாலும் உபசாரமாகப்பூசித்துமிகவும்பயபக்தியுடன்கைகட்டிக்கொண்டு எதிர்நின்றுவினயத்துடன் பிரார்த்திக்கின்றனன்.

கேளிர்மகாவரப்ரசாதியான பார்வதிதேவியேஎனதன்புக்குரிய புருஷசிம்மனைவசுதேவகுமாரன்எம்மைமணம்புரியவேண்டுமென்று மிகவும்பிரார்த்தித்துபிறகுபிராமணஸ்திரீகளையும் நமஸ்கரித்துஅவர்களால் ஆசீர்வதிக்கப்பட்டுப்பின்பு அந்தப்பாவதிதேவியைப்பிரதட்சணஞ்செய்து நமஸ்கரித்துவெளியிற் புறப்படுகிறபோது நவரத்தினமிழைத்தமோதிரங்களணிந்து விளங்குகின்றகரத்தினல் தனதுதோழியினுடைய கரத்தைப்பற்றிக்கொண்டுநீண்டகண்களுடன்ஜகன்மோகினியாய்ஸ்ரீபகவானுடைய மாயைபோல்வருகின்ற ஸ்ரீருக்குமணிதேவியை சிலவீரர்களான வரசர்கள்கண்டு மன்மதபாணங்களாலடிப்பட்டுமனந்தாளாமல் மோகித்துநினைவுதப்பி கீழேவிழுந்தார்கள் சிலர்கையினிற்பிடித்து ஆயுதங்களைப் பூமியில்நழுவவிட்டார்கள் சிலர்வாகனத்தின்மீதிருந்து விழுந்தார்கள்சிலர்சித்திரத்திலெழுதியபாவையைப்போல அசைவற்றுநின்ருர்கள் இப்படிபலவாருன அவஸ்தைகளை அடைந்தஅரசர்களை ஸ்ரீருக்குமணிதேவியானவள்கடைக்கண்ணாற்பார்த்துவருகிறபோது அந்தஇராசமண்டபத்திற் கப்புறத்திலிருக்கின்ற ஜநாத்தரான ஸ்ரீகிருஷ்ணபகவானைக்கண்ணாற்கண்டுமானசீகமாம்சேவித்து மகிழ்ச்சியுடனிருந்தனள்அப்போதுசுவாமியானவர் அவளதுகருத்தையுணர்ந்து மூடர்களாயிருக்கின்ற அரசர்களைஅவமதித்துஅவர்களின்மத்தியில் கொஞ்சமேனும் அச்சமில்லாமல் இரதத்தைநடாத்தி பாவைபோன்றஸ்ரீருக்குமணி தேவியினுடைய மெல்லியதளிர்போன்ற கரத்தைப்பற்றித்தமதுஇரதத்தின்மீது வைத்துக்கொண்டு ஸ்ரீபலராமனை முன்னிட்டுக்கொண்டு தேரைமெல்லெனநடாத்துகிறதைப்பார்த்து சகலவரசர்களும் இந்தஅவமானத்தைப் பொறுக்கமாட்டாமல் பார்த்தையா இந்தக் கோபாலன்சிங்கத்துக்கொன்று வைத்தபலியைநரியானது கொண்டு போவதுபோல கொண்டுபோகப்பார்த்திருக்கிறேமநம்மைப்போலமூடர்கள்ஒருவருண்டோவென்று தங்களைத்தாங்களே நிந்தித்துக்கொண்டார்கள்.

---

## ருச - வது - அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

கண்ணனெடுயுத் தஞ்செய்யுங்காவல
ரண்ணலாரை யதஞ்செய்துதுவாரையில்
நண்ணிருக்மணி நானிடக்கல்யாணம்
பண்ணிக்கொண்டா ரெனப்பகர்கின்றதே.

இதுஸ்ரீபகவானனவர் பலபத்திரயாதவ சேனைசகிதராய்ச் சிசுபாலஜராசந்தாதி சுத்தவீர துஷ்டமகீபதிகள் யாவரையும்ஜயித்து ஸ்ரீருக்குமணி பிராட்டியினுடைய தமையனுகிய ருக்மிஎன்பவனையுத்தத்திலமானபங்கஞ்செய்தவனை ரதத்தில்பந்தித்துகூடகொண்டுபோக நினைத்தபொழுதுஸ்ரீபலராமர் கருணையுடன்ருக்மியை விடு

ஸ்ரீபலராமர் கருணையுடன் ருக்மியைப்பிழைப்பித்துஸ்ரீருக்குமணிப்பிராட்டி முகமலர்ச்சியுண்டாகும்படிசிலதத்வார்த்தவார்த்தைகளாலே சமாதானஞ்சொன்னதையும், பின்புஸ்ரீபகவானானவர் ஸ்ரீருக்மணிபிராட்டியை விஜயப்ரதாபத்தோடு ஸ்ரீமத்துவாரகாநகரத்திற்கு அழைத்துக்கொண்டுவந்து சர்வதேவதைகளும் ஸர்வத்திர ஸாதுஸஜ்ஜனங்களும் ராச்சியாதிபதிகளும்ராஜமகிஷிகளும் சந்தோஷித்து ஆனந்திக்கும்படி திருமணம் புணர்ந்ததையுஞ்சொல்லுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளீர் உத்தராந்தனனானபரிட்சித்துமஹாராசனே ஸ்ரீபகவானானவர்ஸ்ரீருக்குமணிதேவியையெடுத்துக்கொண்டுபோவதை சகலவரசர்களும்பார்த்துஇந்தத்துஷ்டனானகோபாலனை விடக்கூடாது இவனுடன் யுத்தஞ்செய்து இவனைக்கொன்றுஉருக்குமணியைதிருடிக்கொள்ளவேண்டுமென்று கருதியெல்லாரும் ஒரு முகமாய்ச்சேர்ந்து கடுஞ்சினத்துடன் கவசங்களைப்பூண்டு இரதாரூடர்களாய் தங்கள்தங்கள் சேனைகளைக்கூட்டிக்கொண்டுவில்லை நாணேற்றிகுணத்தொனிசெய்து பாணவருஷங்களைசொரிந்து ஸ்ரீ கிருஷ்ணனைத் துரத்திக்கொண்டோடிவந்தார்கள் அவர்களைக்கண்டுயாதவசேனைகளுந் தங்கள் வாகனங்கள்பேரிலிருந்து வில்லை வளைத்து நாணேறிட்டு குணத்தொனிசெய்து ஏககாலத்தில் மலையின்பேரில் வருஷதாரைகளைவருஷிப்பதுபோல பாணவருஷங்களைவருஷித்தார்கள் அப்போது ஜராசந்தன்முதலியவரசர்கள்-கத்தி-சக்தி-ஈட்டி-கண்டகோடாலிமுதலியவாயுதங்களை யாதவ சேனைகளின்பேரில் பிரயோகஞ்செய்தார்கள் அதுகண்டுஅபலையான ஸ்ரீருக்குமணிதேவியானவள கொஞ்சம்பயந்து மாதவனை ஸ்ரீ பகவானுடன்வார்த்தைசொல்ல வெழ்க்கப்பட்டுக்கொண்டு அவருடையமுகத்தைப்பார்த்தனள் அப்போதுசுவாமியானவர் ஸ்ரீருக்மணிதேவி பயந்திருப்பதாக நினைத்துக்கொண்டுஅநதம்மனைநோக்கி உன்னுடைய பாடாளானயாதவர்களாலிந்த அரசர்களடிபட்டுப்போவார்கள் நீ ஒன்றுக்கும்பயப்படவேண்டாமென்று சமாதானஞ்செய்தனர் அப்போதுயாதவர்களடிபட்டதை ஸ்ரீ பலராமனும் கதனும்சாத்தகியுங்கண்டு கடுஞ்சினமடைந்து கணகள்செவந்துவில்லைவளைத்து நாணேறிட்டு குணத்தொனி செய்துநாளிகபாணம் நாராசபாண முதலியபாண சமூகங்களால்-இரதம்-கஜம்-பதாதிசேனைகள் சின்னபின்னமாகவடிக்கிறபோது அவர்கள் வாகனங்கள்பேரில்நின்றுந் தலைகள்வெட்டுப்பட்டுநவரத்தினகுண்டலகிரீடங்களோடுங்கீழேவிழுந்தார்கள்சிலர், வில்பிடித்தவண்ணங் கைகளறுபட்டவர்களும் கால்களறுபட்டவர்களுஞ்சரீரங்கள்துண்டுதுண்டாகக் கண்டிக்கப்பட்டவர்களும்பனம்பழம்போல தலைகளறுபட்டு பூமியில் விழுந்தவர்களும பின்னுமஅனேக ஒட்டகங்கள்-யானைகள்-குதிரைகள-பதாதிகள்முதலிய சேனைகளுமடிபட்டு மடிந்தார்கள்.

இப்படியாதவசேனைகளால் நஷ்டமாய்ப் போனவர்கள்போக மற்றவரசர்களு மெதிர்நிற்கமாட்டாமல்ஜராசந்தனைமுன்னிட்டுக்கொண்டு விதர்ப்பதேசத்திற்கு ஓடிப்போய் அவடத்தில் தைரியமடங்கி சந்தோஷமிழந்து மேனிகுலைந்து வாய்வரண்டு சரீரமெலிந்து மனைவியைப்பறிகொடுத்தவன்போல விசனமுற்று சோங்கியிருக்கின்றசிசுபாலனுடைய சமீபத்திற்சென்று ஒரு வார்த்தைசொல்லுகின்றார்கள் கேளீர் சேதிதேசத்திற்கரசனானசிசுபாலமஹாராஜனே நீயேதிப்படி விசனப்படுகிறதுஉம்மைப்போலொத்த தைரியசாலி இப்படிவிசனப்படலாமோ மனிதனுக்கு வாழ்வானது கொஞ்சநாளைக்குக்குன்றிடும்படியாயும், கொஞ்சநாளைக்கு உயர்ந்திடும்படியாயும் ஈஸ்வரன் உண்டுபண்ணுகின்றான் அதற்குநாம்விசனப்பட்டாகவேண்டியதென்னவென்றுசொல்லிக்கொண்டிருக்கையில் அப்போது ஜராசந்தன் சிசுபாலனைநோக்கி ஒருவார்த்தைசொல்லுகின்றான்கேளாய்எனதன்புள்ளதோழனே நான்பதினேழுதரம்இருபத்துமூன்றக்குரோணிசேனைகளைக் கூட்டிக்கொண்டுஇந்தக்கோபாலனான கிருஷ்ணனுடன்யுத்தத்திற்குப்போயினேன்அவன் பதினேழுதரமும்சேனைகள்யாவையுங்கொன்று என்னைமாத்திரங்கொல்லாமல் விட்டுவிட்டான் அவ்வாறே பதினெட்டாவதுதரமும் சேனைகளைக்கூட்டிக்கொண்டுபோனேன் அந்தஸ்ரீகிருஷ்ணனை எதிர்நிற்கமாட்டாமலோடிப்போனேன்ஆகலால் இதெல்லாந் தெய்வசங்கல்பத்தினாலுண்டானதேயன்றி நம்மாலொன்றுமில்லையென்று ஜராசந்தன் சமாதானஞ்சொல்லக்கேட்டுக்கொண்டு சிசுபாலனானவன் தனது பரிவாரங்களுடன்சேதிதேசத்திற்குச்சென்றனன் அவ்வாறேசகலவரசர்களுந்தங்கள் தங்கள்தேசத்திற்குச் சென்றனன்.

பின்பு விதர்ப்பதேசத்திற் கரசனாகிய பீஷ்மகராஜாவினது குமாரர்களுக்குள் முதல்வனான உருக்குமியானவன் தனது தங்கையாகிய ஸ்ரீருக்மணிதேவியை ஸ்ரீகிருஷ்ணனெடுத்துக்கொண்டுபோனது மனம்பொறாமல்அவரைக்கொல்லவேண்டுமென்று கருதி ஒரு அக்குரோணிசேனையைச சேகரித்துக்கொண்டு தனதிரதத்தின்மீதேறி சாரதியைநோக்கிச் சொல்லுகின்றான்.

ருக்குமியினுடையவாக்கியம்.

கேளாய் சாரதியே இப்போதுகிருஷ்ணன் வெகுதூரம்ஓடிப்போய்விட்டான் ஆகலால் நீசீக்கிரந்தில் நமதுஇரதத்தைநடாத்தினால் அவனை என்னுடைய தீட்சணங்களான பாணசமூகங்களால் அடித்து அவனுடையகர்வத்தையும் போக்கிறேனென்று உனக்கு அந்தச்சாரதியும் அவ்வண்ணமே தைக்கியாந்தகனென ஸ்ரீகண்ணபிரானுடைய சமீபத்திற்கொண்டுவந்துநிறுத்தினான் அ

ப்போதுமூடனை உருக்குமியானவன் சர்வாந்தரியாமியானசுவாமியை நோக்கி கேளடா கோபாலர்களுக்குள்ளே நிகிருஷ்டமானவனே நீமுதுகுகாட்டாமல் எனக்கெதிரிலநில்லு உன்னைநான் எனதுபாணத்தால்மார்பைப்பிளந்து ஒரு நிமிஷத்திற்சங்கரிக்கிறேனென்று வில்லை வளைத்துநாணேறிட்டு குணத்தொனிசெய்துமூன்றுநாராசபாணங்களை ஸ்ரீகிருஷ்ணபகவானதுமார்பினிற்பிரயோகஞ்செய்து சொல்லுகின்றனன்,

கேளாய்திருட்டுப்பயலே நீயாருடையபலத்தை அடுத்து எனதன்புள்ளதங்கையான ஸ்ரீருக்குமணிதேவியை எடுத்துக்கொண்டுபோகின்றையோ அந்த பலத்துடன் உனது மார்பையும்பிளந்துசம்ஹரித்துப்போடுகின்றேன் உனக்கு பிராணன்பேரிலாசையிருக்குமாகில் எனது தங்கையைக்கீழேவிட்டு நீயும் இரதத்திலிருந்து கீழேயிறங்கி வில்லையுங் கீழே போட்டுவிட்டு பாதைசாரியாயோடினால்பிழைக்கா யில்லாவிடிலென்னுடையபராக்கிரமத்தைப்பாரென்று இப்படி நானாவிதமாய்ப் பினத்திக்கொள்ளுவதை சுவாமியானவர்கேட்டு கொஞ்சம் புன்னகையுடன்தமது சாரங்கமென்கிறவில்லை நாணேறிட்டு குணத்தொனிசெய்து அந்த உருக்குமியினுடைய வில்லை ஆறுபாணத்தாலும் அவனுடையநான்குகுதிரைகளை எட்டுபாணத்தாலும் சாரதியை இரண்டுபாணத்தாலும் கொடியை மூன்றுபாணத்தாலும் அறுத்துப்போட்டார்.அப்போது உருக்குமியானவன்வேறொருவில்லையெடுத்து நாணேறிட்டு குணத்தொனிசெய்து ஐந்துபாணத்தால் சுவாமியினுடைய திருமார்பினில்தைக்கஎய்தனன் அதுகளை ஸ்ரீகண்ணபிரானானவர்கண்டித்து அவனதுகையிலிருந்த இரண்டாவது வில்லையுங்கண்டித்துவிட்டார்இப்படிவில்லைகையிலெடுக்கையில்தானே கண்டித்துப்போடுவதைப்பார்த்து உருக்குமியானவன் கடுஞ்சினமடைந்து வேறொருவில்லைஎடுத்தான் அதையுங்கண்டித்துப்போட்டார் இப்படிஇருபத்தொருதரம் எடுத்தவில்லை ஸ்ரீகிருஷ்ணபகவான் கண்டித்துப்போட அப்போதந்த உருக்குமியானவன் வெகுகோபத்துடன் பரிகமென்கிற ஆயுதத்தையெடுத்துத் தனதுபலங்கொண்டதுசுழற்றி ஸ்ரீபகவான்மீதினிற் பிரயோகஞ்செய்தனன் சுவாமியானவர் அதையும்பாணங்களாற் கண்டித்துவிட்டனர் அப்பால்-கதை-எரி-ஈட்டி-உலக்கை- சூலம்முதலிய மகத்தானவாயுதங்களை ஜனார்த்தனன் பேரிற்பிரயோகஞ்செய்தனன் அதையும் தம்முடையபாணங்களாலகண்டித்துவிட்டனர் பிறகுஒருகத்தியைகாத்தினிற்கொண்டு இரதத்தைவிட்டுக்கீழேகுதித்து ஸ்ரீபகவானை வெட்டவேண்டுமென்றோடிவந்தனன் அதையும் லோகாபிராட்டியரான ஸ்ரீபகவானானவர் அணுக்களாகக்கண்டித்து அவனதுதலையை அறுக்கதமதுநந்தகமென்கிற கத்தியைக் கரத்திலேந்தினார் அதையறிந்த உலகமாதாவானஸ்ரீருக்குமணிதேவிகண்டுபயந்து நடுநடுங்கிசரணணியரான ஸ்ரீவாசுதேவனதுதிருவடிகளைப்பற்றிக்கொண்டுமிகவும் சோகத்துடன் சுவாமியைத் துதி செய்கின்றனள்.

கேளீர் சுவாமியோகிகளுக்கெல்லாங் கதியாகியும் அப்பிரமேய சொரூபத்தோடுங்கூடிய மங்களகுணங்களை வாய்ந்த தேவரீரோ அடியேனுடைய தமையனைஉருக்குமியை சங்காரஞ்செய்யலாமா அவன்தான் கியானமில்லாமல் தேவரீருடைய திருவடிகளில்அபராதஞ்செய்தால் தேவரீரைச்சரணமடைந்திருக்கின்ற வடியேனிடத்தில்கிருபைகூர்ந்து அவனை யிரட்சிக்கவேண்டுமென்றுமிகவும்பயந்து முகம்வாடிதனது கண்டத்திலிருக்கின்றமாலைகள் நழுவசுவாமியினுடைய இரண்டுதிருவடிகளையும் பிடித்துக்கொண்டு பிரார்த்தித்தனள் மாதுசிரோமணியானஸ்ரீ ருக்குமணிதேவியினிடத்திற்கிருபைகூர்ந்து அந்த உருக்கிமியைக்கொல்லாமல் அவனைப்பிடித்துதமது தேர்க்காலிற்கட்டி விருபமாகக்ஷவரஞ்செய்துவிட்டனர்.

அப்போது யாதவசேனைகளும் அந்தஉருக்குமியினுடைய ஒருஅக்குரோணி சேனையைச்சம்ஹரித்து ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய சமீபத்தில்வந்துகாத்துக்கொண்டிருந்தார்கள அப்போதுமூத்தபிரானானஸ்ரீபலராமரானவர்வாமனரான ஸ்ரீகிருஷ்ணபகவானுடையசமீபத்தில்துறையாகச்சென்று சவம்போன்ற மெய்யினைவாய்ந்துமேனிகுலைந்து தைரியமடங்கி விகாரமான மொட்டந்தலையை அடைந்து விசனத்தினால் கண்கள்செவந்துதீனனாயிருக்கின்ற உருக்குமியைக்கண்டு மிகவுந் தயைகூர்ந்து அவனை விடுவித்து ஸ்ரீ கிருஷ்ணனைப்பார்த்துக்கொஞ்சங் கோபத்தோடேபலராமரானவர் அருளிச்செய்கின்றனர்.

ஸ்ரீபலராமருடையவாக்கியம்.

கேளாய் ஸ்ரீகிருஷ்ணா நீ சிறுபிள்ளைவிளையாட்டாகஎப்பொழுதும் பதட்டமானகாரியத்தையேசெய்கின்றாய் இப்போது நமக்குப்பந்துவாயும்சம்பந்தியாயுமிருக்கின்ற இந்தஉருக்குமியைத் தேரினிற்கட்டிமிகவும் இழிவாயிருக்கிறக்ஷவரஞ்செய்வித்தாயே இது நமக்கேற்குமோ நீசகலவேதசாஸ்திரங்களும் அதினுடைய தத்துவங்களையும்நன்றாகவுணர்ந்து கியானவானென்று பெயர்பெற்று இப்படிப்பட்ட அயோக்கியதையான காரியஞ்செய்ததையே என்னபிரயோசனமென்று கோபித்துக்கொண்டு ஸ்ரீருக்குமணிதேவிக்குச் சமாதானமாகச் சிலவார்த்தைகள்சொல்லுகின்றனர், கேளாய்பதிவிரதாசிரோமணியான ஸ்ரீருக்குமணிதேவியே நீஎங்களிடத்தில்மனவருத்தப்பட வேண்டாம் உன்னுடையதமையன் இந்தஸ்ரீகிருஷ்ணனிடத்தில் அகாரணமாய் விரோதஞ்செய்துகொண்டதற்குள்ள பயனையடைந்தான் அதைப்பொறுத்துக்கொள்ளவேண்டுமென்று அனேகவிதமாய் ஸ்ரீ பலராமரானவர் சொன்னார்.

அப்பால் உருக்குமியானவன் ஸ்ரீ கிருஷ்ணனைச் சங்கரிக்காமலும் ஸ்ரீருக்குமணிதேவியைதிருப்பிக்கொண்டுபோகாமலும் பட்டணப் பிரவேசஞ் செய்கிறதில்லையென்று நாணமுற்று விசனத்துடன் குண்டினபுரத்திற்குப்போகாமல் தான் நூதனமாய் போஜகூடமென்று ஓர்பட்டணமுண்டுபண்ணி அவடத்திலேதானே வாசஞ்செய்தனன்,

   

  

சுபமஸ்து.

# திருக்கல்யாணவிபவம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

மாதவர்கள்யாதவர்கள்மகிழ்ச்சிகூற - மற்றவர்கள்கற்றவர்கள்மகிழ்ந்துச்சேர
ஆதவன்போலொளிர்சிம்மாதனத்தின்மேவும் - அணிபீஷ்மமகாராஜனருள்கவைத்தில்
மாதெனவேவந்துதித்தருக்குமணிக்கும் - மகுணனெனவாய்த்திடும்ஸ்ரீகிருஷ்ணனுக்கும்
கோதிலாக்கல்யாணவிபவந்தன்னை - கூறுவேனற்பதமாய்க்கூறுவேனே.

என்பது சகலபுவன கர்த்தாவாகியும் சர்வாந்தரியாமியாகியும் விளங்கிய ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கும்(விதர்ப்பமா)நகரத்தை அரசாக்ஷி செய்யும் பீஷ்மமகாராஜனது தவப்புத்திரியாகிய ஸ்ரீருக்குமணிதேவிக்கும் நடக்கும்விவாகமகோற்சவத்தின் விபவங்களைக்கூறுகின்றார்.

கேளீர் வீர சூர தீர கெம்பீர உதார மார குபேர ஒய்யார வதிகாரசிகாமணியானபரிட்சித்துமகாராசனே ஸ்ரீகிருஷ்ணபகவான் ஸ்ரீருக்குமணிசமேதராய்யாதவர்களோடு ஸ்ரீபலராமனை முன்னிட்டுக்கொண்டு எழுந்தருளுவதை வேவுகாரர்கள்மூலமாய்உக்கிரசேனமகாராசன் கேள்வியுற்றுவசுதேவ தேவகிகளுடன்களிகூர்ந்து காரியத்தலைவர்களைநோக்கி இப்போதுநமது ஸ்ரீ கிருஷணன் ஸ்ரீருக்குமணிசமேதராய் நகரப்பிரவேசஞ் செய்யப்போகின்றார் ஆகலால்நமதரண்மனைமுதல் பட்டணத்திலுள்ளவீதிகள்யாவும்பந்தல்களிட்டு ஜலந்தெளித்து புஷ்பங்களிறைத்து மகாதோரணங்கள்கட்டி அங்கங்கு பூப்பந்தல்கள் போட்டு தூபங்களுந்தீபங்களும்வைத்து வீடுகள்தோறும் வாழைகமுகுமுதலிய மரங்களால்அலங்காரஞ்செய்விக்கும்படி கட்டளையிட்டு வசுதேவர்முதலியசகலயாதவர்களுடன் வேதியர்கள் ஆசீர்வதிக்க சூதமாகதர்கள் தோத்திரஞ்செய்ய வந்திகள் ஜயா விஜபவாவென்று கட்டியங்கள் கூறவேசியர்கள் நடிக்க,நகார்நகபத்து மேளம்நாகசுரம் வீணைமுதலிய பதினெண்வாத்தியங்கள்முழங்க சத்திரசாமரமுதலியபிருதுகளுடன் ஸ்ரீகிருஷ்ணபகவானை எதிர்கொண்டுபோய பட்டணம்வலம்வரும்போது அப்பட்டணத்திலுள்ள மாதர்கள்சகலஅலங்காரத்துடனே மெத்தைகள் பேரிலும்உப்பரிகைகள்பேரிலுமிருந்து சாளரங்களால்மின்னலுடன் கூடினமேகத்திற் கொப்பாயிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணனையும் ஸ்ரீருக்குமணிதேவியையுங்கண்டுகளித்து ஆனந்திக்கும்படியாய் மகாவைபவத்துடன்வந்து தமது அரண்மனைக்குச்சரியாய் இரதமவிட்டிறங்குகிறசமயத்தில் வண்மையுள்ள பிராமணஸ்திரீகள்வந்து திருஷ்டிகழித்துஅவர்களை உபசாரத்துட னழைத்துக் கொண்டுபோய்நல்ல முகூர்த்தத்தில் அவர்களுக்குநலங்கிட்டுமங்களஸ்நானஞ் செய்வித்து ஸ்ரீகிருஷ்ணனுக்கு ப்ரம்மசரியவிருதத்தைப்போக்கிகிரஸ்தாசிரமத்திற்குரிய கிருத்தியங்களைச்செய்விதது மாலைமாற்றி கன்னிபூசலாடிவிவாகஞ்செய்கின்ற வீட்டினில் ஸ்ரீகிருஷ்ணனையும், ஸ்ரீ ருக்குமணிதேவியையும் உபசாரத்துடன் பிரவேசிக்கச்செய்துஅவடத்திற் புரோகிதனான கற்காசாரியர் முதலிய வேதியர்கள் சொல்லும் மந்திரவிதியின்படி ஓமஞ்செய்துபிராமண ஸ்திரீகள் லக்ஷ்மிகலியாணங்கூற விதிவழுவாமல் ஸ்ரீகண்ணபிரானானவர் ஸ்ரீருக்குமணி தேவியைத்திருமங்கிலியதாரணந்தரித்தனர் அப்போதுபட்டணத்திலுள்ளஜனங்கள் யாவரும் மங்களஸ்நானஞ்செய்துமடிவஸ்திரங்களுடன் சகலாலங்காரங்களையுஞ்செய்துகொண்டு தங்கள்தங்கள்மனைவியர்களுடன்கிருஷ்ணபகவானுக்கும் ருக்குமணிதேவிக்கும்காணிக்கைகளைகொண்டுவந்து சமர்ப்பித்தார்கள் அப்பால் ஸ்ரீ கண்ணபிரானானவர் பிராம்மணர்களுக்கு அனேகம்வஸ்திரபூஷணம்பூமிபசுசாளக்கிராமம் பூரிதக்ஷணை முதலியதானங்களால்திருப்திசெய்து அவர்கள் சந்தோஷித்து ஆசிர்வதித்ததைக்கைக்கொண்டு, விருஷ்ணிகள்-குகுராள்-தாசார்காள்-சாத்துவதாள்-போஜாள் முதலிய யாதவசமேதராய் சந்தோஷத்துடன் போஜனஞ்செய்தனர். இப்படி ஏழுநாளைய முகூர்த்தமுமானபின்பு ஸ்ரீ கிருஷ்ணசுவாமிஸ்ரீருக்குமணிசமேதராய் சங்கீதமேளவாத்தியத்துடன்பாலிகைகளை எடுப்பித்துயாதவர்கள் புடைசூழ வசந்தமாடிக்கொண்டு தடாகத்தினிற் சேர்ப்பித்து, பின்பு கிரகப்பிரவேசமாய்வந்து சுகமாகயிருந்தார்கள்.



பூ, கண்ணபிரான் துவாரகாபுரிக்கேகுக்குகாட்சிதரல்

## ௫௫-வது அத்தியாயம்.

கலிவிருத்தம்.

கோதைதன்னிடங் குமரன்பிறந்ததும்
சூதுசம்பரா சுரனெடுத்தாழியிற்
காதலோடு யெறிந்திடக்கான்மூளைப்
போதுசூரனைப் போக்கினதுஞ்சொல்வாம்

ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு ஸ்ரீ ருக்குமணிதேவியிடத்தில்பிரத்தியுமனன் பிறந்ததும் அவனைச் சம்பாசுரனெடுத்துக்கொண்டேகி சமுத்திரத்திற்போட்டதும் அதை மீன்விழுங்கி பின்புவெளிப்பட்ட பிரத்தியுமனன் அந்தச்சம்பாசுரனைக்கொன்று ஸ்ரீகண்ணபிரானிடத்தில் வந்ததுஞ்சொல்லுகின்றன.

கேளாய் குருகுலோத்துங்கனான பரிட்சித்து மகாராஜனேமுன்பு ஒருகாரணவசத்தினால் மன்மதனானவன்சிவனால் தகிக்கப்பட்டதுமுதல் தேகமில்லாதிருந்துஇந்த ஸ்ரீருக்குமணி தேவியிடத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கொப்பானஉருவத்துடன் ஒருகுழந்தையாய்ப்பிறந்தனன்அவன்பிறந்த பத்துநாளைக்குள்ளாக மகாமாயா வியானசம்பாசுரன் அதுதனக்கு சத்துருவென்றுகருதிகாலம்பார்த்து அவனைத்தூக்கிக்கொண்டுபோய் சமுத்திரத்திற்போட்டு பிழைத்தோமென்று களிப்புடன் தனதுபட்டணத்திற்குச்சென்றனன் அந்தக் குழந்தையை மீன் விழுங்கினது அந்தமீன் செம்படவன்வலைபோடஅதில் அனேகமீன்களுடன் இம்மீனும்சொர்ணம்போன்றஒளியைவிளக்க அம்மீனைவலைக்காரன்பார்த்து அதிக வியப்புடன்இராசாவான சம்பாசுரனுக்குக் கொடுக்க அவன் அதைக்கண்டு வியப்புற்று தனதுபாகசாலைத் தலைவனிடத்திற்கொடுத்து சமையல் செய்யச்சொல்ல அவனுமதைக்கொண்டுபோய்ச்சேதிக்க உள்ளேசிறுகுழந்தையிருக்கக்கண்டு அதிபயத்துடன் அச்சிசுவைஅந்த வீட்டினிலிருக்கின்றமாயாவதியென்கிற மாதுசிரோமணியினிடத்திற் கொடுத்தனன்அவளும் அக்குழந்தையினுடையசௌந்தரியத்தைப்பார்த்து மனங்களிகூர்ந்து வியப்புடன்அதைவளர்த்துவருகையில் அவளிடத்திற்குச்சகலகலைகளையுமுணர்ந்தநாரதமகாமுனியானவர்வந்தனர்அவரைக்கண்டு திடுக்கிட்டெழுந்திருந்து அர்க்கிய பாத்தியம்முதலியவற்றாற்பூசித்து ஆதனஞ்சமர்ப்பித்து அதிலவரைஎழுந்தருளப்பண்ண நாரதர்எதிரே நிற்கின்றமாயாவதியைப்பார்த்து கேளாய்மாதுசிரோமணியே இந்த பாலன் முன்புஉருத்திரபகவானால்தகிக்கப்பட்டிருந்தமன்மதன் இவன்யதாப்பிரகாரம்சரீரத்தையடையவேண்டுமென்று ஜகந்நாதரான ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கும் உலகமாதாவான ஸ்ரீருக்குமணிதேவிக்கும் மைந்தனாக ஜனித்தனன் இவனுக்கு நீ மனைவியாகுதல் நன்றாதலால் உன்னைச்சம்பாசுரன் மனைவியாக்கிக்கொள்ளக் கருத்துகொண்டிருக்கின்றனன் அவனுக்கு நீ உடன்படவேண்டாம்இக்குழந்தைக்கு எவ்வனப்பருவம் வருகிறவரையில்இந்தச் சம்பராசுரனுக்கு ஒருநோன்பு உண்டென்றுசொல்லிபிறகுஇவனைக் கொண்டவனைக்கொன்றுபோட்டுஇந்தமன்மதனுடன் துவாரகைக்குச்சென்றுஇவனைக் கணவனாக வரிக்கக்கடவாயென்றுசொல்லிநாரதமகாமுனியானவர் அந்தரத்தானமானர்.

அப்பாலந்த மாயாவதிக்கு பூர்வக்கியான முண்டாகி தனது புருஷன் சிவனால் தகிக்கப்பட்டதை நினைத்துக்கொண்டு சம்பராசுரனால் சமுத்திரத்திற்போட்டுவிடப்பட்ட புருஷன்தனக்கு ஏகாந்தத்தில் தெய்வக்கதியால் வாய்ந்தானென்று மிகவுங்களிப்புற்று அச்சிசுவைசகல உபசாரத்துடன் போஷித்துக்கொண் டிருந்தனள். இப்படியிருக்கையில் மகாமாயாவியான சம்பாசுரனானவன் அந்தக்கன்னியாரத்தினமாகிய மாயாவதியைநோக்கி உன்னைநான்மணம்புரியக் காதல்கொண்டு போஷிக்கின்ற என்னுடையகருத்தை நீகளவிலுமெண்ணுதிருக்கக் காரணம்யாதென அதற்கவள் உம்மையேயானும்மணம்புரியக்கருதியிருக்கின்றேன் ஆனாலுமெனக் கிப்போதுபதினைந்துவருஷம் புருஷனைவிரும்பாதிருக்கவோர்விரதமுண்டுஅதனையனுஷ்டித்து முடிவானபின்பு உமதுகருத்தின்வண்ணம் இசைவேனென்றுகூற அதை உண்மையாகநம்பி சம்பாசுரனும்விரதமொழியுங்காலத்தை எதிர்பார்த்திருந்தான் இப்படிக்குசிலநாள் சென்றபிறகு இக்குழந்தையான பிரத்தியுமனனுக்கு பால்யம்போய்யவ்வனபருவத்தையடைந்து செந்தாமரையை நிகர்த்தகண்களும்நீண்டகைகளும் புன்னகையுடன் கூடியமுகமும் சௌந்தரியவான்களுக்குள் சிறந்தவனாய் பார்க்கிறவர்கள்மோகங்கொள்ளத் தக்கனவனாயிருக்கிறபிரத்தியுமனனை அந்த மாயாவதிகண்டு கொஞ்சம்நாணத்துடனும்காமலீலைகளுக்குரிய செய்கைகளைப்பாராட்டினாள் அதுகண்டுபிரத்தியுமனன்அந்தமாயாவதியைநோக்கி உன்னையான்அன்னையாகக்கருதியிருக்க இப்போது உனதுசெய்கைமனைவியர்க் குரித்தானதாயிருப்பதினால் இதுயோக்கியமல்லவென்றுசொல்ல அவனைப்பார்த்து மாயாவதி சொல்லுகின்றனள்,

கேளீர்பர்த்தாவே பூர்வத்தில்மன்மதனான நீர் சங்கராலேதகிக்கப்பட்டு அங்கமில்லாதவராகினீர் இப்போது ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு மைந்தனாக அவதரித்துப்பத்துநாளையக் குழந்தைப்பருவமாயிருக்கையில்தானே இந்தச்சம்பராசுரன் றனக்குச்சத்துருவென்றெண்ணிசமுத்திரத்திற்போட அதையோர்மீன்விழுங்க அதுபாகசாலைத்தலைவனிடத்தில்வர அவன்மூலமாய் என்னிடத்தில்

வர்திர்யான் உமது பாரியையான இரதிதேவியாதலால் மனைவியர்க்குரிய செய்கையா லுமக்குக் கியாபகப்படுத்தினேன்.

இப்போது ஸ்ரீருக்குமணீதேவியம்மன் உம்மைக்காணமல் சோகங்கொண்டிருப்பார்களாதலால் சீக்கிரமத்தில்இந்த சம்பராசுரனை வதைத்து துவாரகைக்குச்செல்லவேண்டும் இவனைக்கொல்லுவதற்குவேண்டியவுபாயமானமாயைகளை உமக்குக் கற்பிக்கின்றேன் அந்த மாயையாலிவ்வசுரனைக்கொல்லலாமென்று மாயைகளைக்கற்பித்து அவ்வசுரனைவெல்லச்சொல்லி அனுப்பினள்அப்போதந்தப் பிரத்தியுமனன் சம்பராசுர னண்டையிற்சென்று அவனுக்கு ரோஷம் பிறக்கும்படியான வார்த்தைகளுரைக்க அவனதுகேட்டு கடுஞ்சினமடைந்து எட்டுபட்டைதீர்ந்தகெதையைகரத்திலேற்றுக்கொண்டு கண்களில்நெருப்புப்பொரி பறக்கும்படி பார்த்தோடிவந்துஇடிஇடித்தாற்போல பிரத்தியுமனன் மீதிற்போட்டு அட்டகாசஞ்செய்தனன்.

அப்போது பிரத்தியுமனனுங் கடுஞ்சினங் கொண்டு தனது கெதையினல் சம்பராசுரனுடைய கெதையைப் பொடிசெய்து அவன்மீதுபிரயோகஞ்செய்தனன்அதை அவன் பார்த்துக்கொண்டு ஆகாயத்திற்கிளம்பி தனது மாயையால் கல்மழை பொழியச்செய்தனன் அதனைப்பிரதியுமனன் மனவருத்தமுற்று சத்துவாத்துமனியென்றுபெயரையுடைய தனதுமாயையைப்பிரயோகஞ்செய்து அந்தக்கல்மழையைத்தடுத்து மின்னலுக்கொப்பான கத்தியைக் கரத்தினிற்றங்கி சம்பராசுரனுடைய உரத்துசிரசை இரண்டுபிளவாகக்கண்டித்துவிட்டான் அதைப்பார்த்துதேவர்கள் களிப்புற்று அந்தப்பிரத்தியுமனன் மீதுபுட்பமாரிசொரிந்து துதிசெய்தார்கள் அப்பால்பிரத்தியுமனன் தன்னரண்மனையிற்சென்று இந்தச்சங்கதிகள்யாவும் அந்த மாயாவதிக்குஉரைத்து இருவரும் சந்தோஷத்துடன் ஆகாயத்திற்கிளம்பி மின்னலோடுங் கூடியமேகம்போல்விளங்கிக்கொண்டு ஸ்ரீவாசுதேவருடைய அந்தபுரத்தில் அனேகஸ்திரீகளின் நடுவினில் வந்து குதித்தனர்கள் அவர்கள்அவனைப்பார்த்து ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கொப்பானவண்ணமும்-உருவமும்-ஆபரணமும்சரியாயிருந்தமையால் ஸ்ரீகண்ணபிரானென்றே பிரமித்து மாதர்கள்யாவரும்மூலைக்குமூலையாயோடியொளித்துக்கொண்டார்கள் அப்பால் சற்றுநேரத்தில் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அல்லவென்றுதெரிந்து வியப்புடன் பார்த்துக்கொண்டிருக்கையில் ஸ்ரீமகாலட்சுமியான ஸ்ரீ ருக்குமணிதேவியானவள் அந்தப் பிரத்தியுமனனைக்கண்டு அன்புஅதிகரித்துச் சொல்லுகின்றள் வடிவினிற்சிறந்தஇவனோ எந்தபுண்ணியவதியினுடைய மைந்தனே இந்தபாக்கியவான் என்னகாரணமாக இவடத்திற்குவந்தானே நமக்குமுன்பிறந்தபுத்திரன் பிழைத்திருந்தால் அவனுமிவ்வண்ணமானவயதும் வடிவும் வாய்ந்தவனுகியிருப்பான் இவனைப்பார்த்தா லந்த மைந்தனைப்பேரலுக்காணுகின்றன இக்காலவிடில் நமக்கிவனிடத்தில்விசேஷஅன்பும் இவனைப்பார்த்ததினுலுண்டான உச்சாகமும்இடதுபக்கந்துடிக்கிறதுமான இப்படிப்பட்டசெய்கையுண்டாகமாட்டாது ஆதலாலிவன் நமதுபுத்திரனுகவேயிருக்கலாமென்று ஆலோசித்துக்கொண் டிருக்கையில் ஸ்ரீகிருஷ்ணபிரானனவர் வசுதேவர் தேவகிதேவியைக் கூடஅழைத்துக்கொண்டு அவடத்திற் கெழுந்தருளித மக்கிந்த பிரத்தியுமனனுடைய சரித்திரங்கள்யாவுந்தெரிந்திருந்தும் ஒன்று மறியாதவரைப்போல மவுனியாயிருந்தனர், அந்தச்சமயத்தில் சந்தேகத்தை நிவர்த்திசெய்யத்தக்க மகானுபாவனன நாரதர்அவ்விடத்திற்கெழுந்தருளினர் அவரை ஸ்ரீபகவானனவர் கிரமப் பிரகாரம் பூசித்து ஆதனம்சமர்ப்பிக்க அவரதன்மீதிருந்து அவர்களைநோக்கி அந்தபிரத்தியுமனனுடைய உற்பததியானதுமுதல்அவ்விடத்திற்கு வந்தவரையிலுண்டான சங்கதிகள்யாவுமுரைத்து அவர்களாற் பூசிக்கப்பட்டு தம்முடையயதாஸ்தானத்திற் கெழுந்தருளினர் அப்பால்வசுதேவர் தேவகிமுதலானவர்கள் அந்தப்பிரத்தியுமனனிடத்திலும் மிகவும் அன்புடையவர்களாய் அவர்களுக்கு யதாவிதியாய்மணம்புரிவித்து சந்தோஷத்துடன்சுகமாயிருந்தார்கள்,

## ௫௬-வது-அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

சக்ரசித்தாலப வாதஞ்சார்ந்ததும்
நித்தனுசியமந்த மணியால்நிவர்த்தித்து
சத்தியபாமையும் ஜாமவதிகளைக்
கர்த்தன்கல்யாணஞ்செய்ததுங்காட்டுவாம்.

ஸ்ரீகிருஷ்ணபகவான் சத்திராசித்தனல் அபவாதமடைந்ததும் அதை சியமந்தக மணியால் நிவர்த்தித்துக்கொண்டு ஜாமவதி சத்தியபாமைகளை விவாகஞ் செய்ததுஞ்சொலலுகின்றன.

கேளீர் பரதகுலோத்துங்கனன பரிட்சித்துமஹாராஜனே-துவாரகாபுரத்தில் சத்திராஜித்தனென்றவன் சூரியபகவானுக்குமிகவும் அன்பனுகியும் பக்தனுகியும் ஒருஅரசனிருந்தான் அவனிடத்திற் சூரியபகவானருள் கூர்ந்து ஒருநாளைக்குஎட்டுபாரம் சொர்ணம்கொடுக்கத்தக்கதாயும், வியாதிமுதலியதைப் போக்கத்தக்கதாயும் ஒளியினை வாய்ந்ததாயுமிருக்கின்ற சியமந்தகமென்கிற

ஓர்மணியைக்கொடுக்க அவனதைவாங்கி தனது ஆரத்தினில்வைத்து கண்டத்திலணிந்துகொண்டு பட்டணத்திற்குவருகிறபோது அவனைப்பார்த்து ஜனங்கள்ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்திற்சென்று உம்மைச் சேவிக்கிறதற்காகச்சூரியபகவான் வருகிறானென்றுரைக்க அதுகேட்டுசுவாமியானவர் புன்னகையுடன் அவர்களைப் பார்த்து அவன்சூரியனல்லன் சூரியனாற்கொடுக்கப்பட்டமணியினதுஒளிவுடன் விளங்குகின்ற சத்திராசித்தனென்றருளிச்செய்தனர்.

அந்தசத்திராசித்தன் தனது கிரகத்திற்குச் சென்று வேதியர்களைவரவழைத்து வேதமந்திரங்களை ஜபிக்கச்சொல்லி தேவதாராதனத்தில்அம்மணியையுங்கூடவைத்துக்கொண்டுபூசித்து அவ்வேதியர்கட்கு அளவிறந்த பூரி தட்சணைகளைக் கொடுத்தனுப்பிவிட்டு சந்தோஷத்துடன்சுகித்திருந்தார்கள் ஸ்ரீகிருஷ்ணபகவானவர்அம்மணியை உக்கிரசேனமகாராசனுக்குவாங்கிக்கொடுக்கமனங்கொண்டவராய அதைக்கொடுக்கச்சொல்லிக்கேட்டருளினர்,

அந்தசத்திராசித்தன் அம்மணியின்பேரில் அதிகஆவல்கொண்டிருப்பவனாதலால் அதைக் கொடுப்பதற்கிசையாதிருந்தனன் இப்படிசிலநாள் சென்றபிறகு அந்தச்சத்திராசித்தனுக்குத்தம்பியான பிரசேனன்அம்மணியின்ஆரத்தைக் கண்டத்திலணிந்துகொண்டுகாட்டிற்குவேட்டையாடப்போகையில் அவனைக் குதிரையுடன் ஒருசிங்கங்கொன்று அந்தமணியின் ஆரத்தைக்கொண்டுதனது மலையின் குகைதனிலிருக்கின்ற தன்குட்டியின்தொட்டிலுக்குநடுவில் கட்டிவைத்தது, அப்பால் சத்திராசித்தனென்பவன் வேட்டையாடப்போன தம்பிவாராதிருக்கக்கண்டு மிகக்கிலேசமுற்றுமுன்னால் ஸ்ரீகிருஷ்ணன் இந்தமணியைக்கேட்டதற்குக் கொடாதிருந்தமையால்இப்போது நமதுதம்பியைக்கொன்றுஅம் மணியைக்கிரகித்துக்கொண்டானென்று சொல்லுவதை ஜனங்கள் கேள்விப்பட்டு ஒருவருக் கொருவர் ரகசியமாய் பேசிக்கொண்டிருப்பதை ஸ்ரீகிருஷ்ணபகவானவர்கேட்டுஅந்தஅபவாதத்தை விலக்கிக்கொள்ளவேண்டி அந்தஜனங்களிற்சிலரை அழைத்துக்கொண்டு அந்தப் பிரசேனன்சென்றவழியே காட்டிற்குப்போய் குதிரையுடன்மாய்ந்துகிடக்கின்ற அவனுடையகழுத்தில் அம் மணியைக்காணமல் அவிடத்தில் சிங்கத்தின்காலடியைக்கண்டுஅவ்வடிபோகின்றமார்க்கமேசெல்ல அது குகையினிடம்விட அங்கேபார்க்கையில் அவடத்திலும் மரித்துக்கிடக்கின்ற சிங்கத்தினிடத்தும் அம்மணியைக்காணமல் அவடத்திலொருகாலடியினடிதென்பட அதன்பின் றுடர்ந்துபோகையில் அது ஓர்பிலத்தினடியிற்கொண்டுபோய்விட்டன அப்போது ஸ்ரீ கிருஷ்ணபகவான்தம்முடன் கூடவந்தஜனங்களைபிலத்தின்புறத்தினில்நிறுத்திப்போட்டுதாம்மாத்திரம் அந்தப்பிலத்துவாரத்திற்பிரவேசித்துப்பார்க்கையில் அங்குஒரு குழந்தையினது தொட்டிலின்மீதிற் கட்டியிருக்கின்ற சியமந்தகமணியைக்கண்டு அருகிற்சென்றெடுப்பதை அக்குழந்தையின் தாதியானவள்கண்டு ஓவென்றுகூச்சலிட்டனள் அதுகேட்டுஜாம்பவான் அதிசீக்கிரமத்திலோடிவந்து ஸ்ரீகிருஷ்ணனைக்கேவலம்மானிடனாகவெண்ணி ஒருகுத்துகுத்தினன் அப்போது ஒருவருக்கொருவர் கைகலந்துஆயுதங்களாலும்கரங்களாலும் விருட்சங்களாலடித்துக்கொண்டும்நகங்களாற்கிள்ளியும்-பற்களாற்கடித்தும்-இப்படிக்கு அதிகபயங்கரமாய் இரவும்பகலும் ஓய்வில்லாமல்ஒருவருக்கொருவர் இளைக்காமலும் எவ்வளவுஞ்சோர்வில்லாமல் பலவகையான யுத்தஞ்செய்து வருகையில் இருபத்தேழுநாளாயது இருபத்தெட்டாவது தினத்தில் ஜாம்பவான் ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு சரியா யுத்தஞ்செய்யமாட்டாமல் இளைப்புற்றுதேகமெலிந்து பின்னிட வந்ததை யோசித்து இவன்மனிதனல்லஈஸ்வரனாகவிருக்கவேண்டுமென்றுகருதி அவரைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றான்.

கேளீர்சுவாமி தீனதயாளுவே நாம் பிரமனாயிருந்து சகலதேவர்களையும் சிருஷ்டித்துகாலனாயிருந்து சகலபூதங்களையும் இராவணன்முதலிய இராக்கதரைச்சங்கரிக்கதசரதனுக்கு மைந்தனாகஅவதரித்து விராதன்கரதூஷணன் முதலியவர்களைவென்று வாலியையுமொருபாணத்தினாலெய்து சுக்கிரீபனுக்கு மகுடஞ்சூட்டி வானரசேனைகளைக்கொண்டு ஐந்துநாளில் சமுத்திரத்தில் அணைகட்டி இலங்கையிற்சென்று வெற்றிபெற்று விபீஷணனுக்கு இலங்கையையீந்து மகுடஞ்சூட்டி வானரவீரர்முதலியசேனைகளுடன் சீதாசமேதனாய் திருவயோத்திக்கெழுந்தருளி பட்டாபிஷேகஞ் செய்துக்கொண்டசக்கிரவர்த்திதிருமகனை ஸ்ரீராமனென்றறிந்துகொண்டேன்தேவரீர் யாதுகாரணமாக இவடத்திற்செழுந்தருளியதென்று அடக்கமொடுக்கத்துடன் பக்தியாய்வினவுகின்ற ஜாம்பவானைநோக்கி இந்தத்தொட்டிலிற் கட்டியிருக்கின்ற மாமணியானது சத்திராசித்தனுடையது இதைஅவனதுதம்பி பிரசேனனென்கிறவன் கழுத்தினிற்போட்டுக்கொண்டு வேட்டையாடப்போயினன் அவனை ஒரு சிங்கங்கொன்றுபோட்டு இம்மணியைக் கொண்டுபோயின அதனைமாய்த்து நீகொண்டுவந்திருக்க அந்தப்பிரசேனனையான்கொன்றுஇம்மணியைஎடுத்துக்கொண்டதாக சத்திராசித்தன் அபவாதமாகச் சொன்னமையால்அதைத் தீர்த்துக்கொள்ள சிலஜனங்களுடன் இம்மணிஇவடத்திற்குவந்த மார்க்கத்தைப்பற்றிக்கொண்டுவரஇந்தபிலத்தினுள் அந்தஜனங்கள் பிரவேசிக்கக்கூடா

திருந்தமையால் அவர்களை பிலத்தின் புறத்தியில் நிறுத்திப்போட்டு யான்மாத்திரம் இம்மாமணியைக்கொண்டுபோகவந்தேனென்றுசொல்லி முஷ்டியுத்தத்தினால்சரீரமுழுமையு நோய்கொண்டகாத்திரதேகத்தைவாய்ந்திருக்கின்ற ஜாம்பவானுடைய பாபத்தையும்போக்கி சகலஇஷ்டத்தையுந் தந்தருளாநின்றதமது திருவடிகளால்வருடி ஈரமில்லாதிருக்கும்படிசெய்தனர் அப்பால்ஜாம்பவான்மிகுந்த களிப்புடன் தனது குமாரத்தியானஜாம்பவதியை ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்கு விவாகஞ்செய்து கொடுத்துவிட்டனர்.

இப்பால் ஸ்ரீகிருஷ்ணபகவான் பிலத்துவாரத்தினில் நிறுத்திவைத்தஜனங்கள் பனிரண்டுநாள்வரையில் காத்திருந்துஅப்பால் துவாரகைக்குச்சென்று வசுதேவர்தேவகி முதலியவர்கட்கு இச்சேதியைச் சொல்லி பிறகுகிலேசத்துடன் துற்காதேவிகோவிலுக்குச்சென்று அவளைப்பூசித்து பலிகொடுத்துப்பணிந்து ஸ்ரீகிருஷ்ணபகவான் நலமுடன்வருவராவென்றுவினவ அவளும்சீக்கிரமத்திலேயே வருவாரென்றுரைத்தனள், அதுகேட்டு சனங்கள்கொஞ்சம் சந்தோஷமாயிருக்கையில் ஸ்ரீ கிருஷ்ணபகவானனவர் ஜாம்பவதிசமேதராய் அந்தசியமந்தகமணியையுங் கிரகித்துக்கொண்டு ஜாம்பவானிடத்தில்செலவுபெற்று துவாரகைக்குவந்து வசுதேவர்தேவகி முதலியவர்களைப்பணிந்துஅவர்களையும்சகல ஜனங்களையும்சந்தோஷப்படுத்தி சகலயாதவர்கள்புடைசூழக்கொலுவிருக்கின்ற உக்கிரசேனமகாராசாவினிடத்தில்வந்து சாஷ்டாங்கமாகநமஸ்கரித்து அஞ்சலிகூப்ப எதிரேநிற்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானைக்கட்டி ஆனந்தங்கொண்டு சந்தோஷித்தனர். அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவான் அந்தச்சபைநடுவில்சத்திராசித்தனைவரவழைத்து அவனை நோக்கி யான்உனதுதம்பியைக் கொல்லவில்லையென்று நடந்தசங்கதிகளைத் தம்முடன்கூடவந்தஜனங்களால்தெரியப்படச் சொல்லி அந்த மாமணியை அவனிடத்திற் கொடுத்தனர்.

அவனதைப் பெற்றுக்கொண்டு தனது வீட்டிற்குப் போய்வீணான அபவாதத்தை இந்த ஸ்ரீகிருஷ்ணன்பேரில்சொன்னேமே இதை எவ்விதமாய் நிவர்த்திசெய்துகொள்ளுகிறதென்று தமதுபுத்திரியான சத்தியபாமையை ஸ்ரீகிருஷ்ணசுவாமிக்குக்கொடுத்து அவளுக்குச்சீதனமாக இந்தமாமணியைக்கொடுத்துவிட்டா லிந்தப்பழிதீரும் இல்லாவிட்டால் தீராதென்றுநிச்சயித்துமாது சிரோமணியான தனதுபுத்திரியையும் அந்த சியமந்தக மணியையும் ஸ்ரீ கிருஷ்ணனுக்குக் கொடுத்தனன் ஸ்ரீகண்ணபிரானனவர் அந்தசத்தியபாமையைமாத்திரம்அங்கீகரித்து அவனைநோக்கி நீ புத்திரனனாதலால் உனக்குண்டான சம்பத்துகள்யாவும்இந்தசத்தியபாமையைத்தான்சேரும் அப்போதுயான் பெற்றுக்கொள்ளுகிறேன்இப்போது வேண்டுவதில்லையென்றுஅம்மாமணியை அவனிடத்திலேயே நிறுத்திவைத்துரூபங்களிற்சிறந்தசத்தியபாமை விதியாகவிவாகஞ்செய்துகொண்டனர்.

---

## ௫௭-வது-அத்தியாயம்.

---

கலிவிருத்தம்,

சந்த்ராசித்தனைச் சத்தன்வன்கொன்றதும்
சத்யபாமையும் சாமிக்குச்சொன்னதும்
அத்தன்கண்டவனைச்சம்மரித்ததும்
சுத்தமாயிதிற் சொல்லினதாமரோ,

ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்கு மாமனரான சத்திராசித்தனை சத்தன்வன் கிருதவர்ம்மன்-அக்குரூரன் இவர்களுடைய துற்போதனையால இராக்காலத்தில் சங்கரித்ததும்சத்தியபாமையானவள் அஸ்தினபுரத்தி லிருக்கின்றஸ்ரீகிருஷ்ணசுவாமியிடத்திற்சென்று பிதாவினுடைய மரணத்தைக்குறித்து சொல்லிக்கொண்டதும்அப்பால் சுவாமியானவர் சத்தன்வனைச் சங்கரித்ததுஞ் சொல்லுகின்றது.

கேளீர் உத்தராநந்தனன பரிட்சித்துமகாராசனேஸ்ரீ கிருஷ்ணபகவானனவர் அஸ்தினபுரத்திலிருந்த பாண்டவர்களையுங் குந்திதேவியையும் திருதராஷ்டிரனவன்வாரணவதத்திலிருக்கின்ற அரக்குமாளிகைக் கனுப்பஅவர்களதில் நெருப்புபட்டெறிந்தார்களென்றுசொல்லக்கேட்டுஸ்ரீசுவாமியானவா தமக்குபாண்டவர்களுடையக்ஷேமந்தெரிந்திருந்தும் உலகத்தோடொத்து கொஞ்சம் விசனப்பட்டு ஸ்ரீ பலராமர்சகிதராய் இரதத்தின்மீதேறிக்கொண்டு அஸ்தினபுரத்துக்குச்சென்று வீஷ்டுமர்-திருதராட்டிரன்-விதுரன் - முதலியவர்களைக்கண்டு பாண்டவர்களுக்குவந்த துன்பத்தைக்குறித்து மனம்வருந்திதுக்கித்திருந்தனர். அத்தருணத்தில்அக்குரூரனுங் கிருதவர்ம்மனும் சத்தன்வனிடத்திற்சென்று அற்பமான சத்திராசித்தனிடத்தில் சூரியனைநிகாத்த ஒளியினைவாய்ந்த சியமந்தகமணியிருப்பது நன்றாயிருக்கவில்லைசூரனன உமதிடத்திலிருந்தால் அழகா யிருக்குமென்றுசொன்ன துற்போதனைகளைக்கேட்டுசத்தன்வன்இராக்காலத்தில்நித்திரைசெய்துகொண்டிருக்கின்ற சத்திராசித்தனிடஞ்சென்று அவனுடைய சிரசை இருதுண்டமாகக்கண்டித்து சியமந்தகமணியைக் கைக்கொண்டனன். அதைஅவன் புத்திரியாகிய சத்தியபாமைதெரிந்து அதிகமனோதுக்க முண்டானவளாய் அச்சவத்தை எண்ணெய்க் கொப்பறையில் சாவதானமாய் வைக்கத் திட்டஞ்செய்துபோட்டு இரதாரூடையாய் அஸ்தினபுரஞ்சென்

றுஇரத்தசங்கதிகள்யாவும் ஸ்ரீகண்ணபிரானுக்குச் சொல்லிக்கண்ணீர்விட்டழ அவரதைக்கேட்டு சத்தியபாமைக்காகக் கொஞ்சம் விசனப்பட்டவர்போல அபிநயஞ்செய்துவீஷ்மர் முதலியவர்களிடத்தில் உத்தரவுபெற்றுக்கொண்டு துவாரகைக்குவந்து மாமனுருக்குச் செய்யவேண்டிய கிரியைகளை நிறைவேற்றிவிட்டு சததன்வனைக்கொல்லயோசித்தனர். அவனதுதெரிந்துகொண்டுஅக்ரூரனிடத்து கிருதவர்ம்மனிடத்துஞ்சென்றுஸ்ரீசுவாமியுடன் யுத்தஞ்செய்யச் சகாயமாய் வரவேண்டுமென்று அழைக்க அவர்களெங்கலாலாகாதெனவேஅக்ரூரனிடத்திலந்தமணியைக் கொடுத்துவிட்டு வெகுவேகமாகச் செல்லத்தக்கக்குதிரையின்மீது ஆரோகணித்துக்கொண்டுவிதர்ப்பதேசம்வரையிற்சென்று அப்பால் குதிரைநடக்கமாட்டாமல் தளர்ச்சிகொள்ளவும் கால்நடையாகஓடத்துடங்கினன் அப்போதுஸ்ரீகிருஷ்ணபகவான் சததன்வனைவதைக்குப்போனவிடத்தி லவனைத் துவாரகையிற்காணமல்ஸ்ரீபலராமசகிதராய் இரதமேறிவிதர்ப்பதேசத்திற்குச்சென்று அவனைக்கண்டுபலராமர்நிற்க சுவாமி அவனைத் துரத்திக்கொண்டுபோய் சக்கிரப்பிரயோகஞ்செய்து அவனதுசிரசைத்துணித்துவிட்டுப்பார்த்தபோது அவனிடத்தில அந்த சியமந்தகமணியைக் காணமல் ஸ்ரீகிருஷ்ணன்வர பலராமர் அதனைநினையாமல் அந்தமணியைத் தமக்குக்காட்டக்கூடாதென்று மறைத்துவைத்திருப்பதாகக்கருதி சுவாமியிடத்திற்கோபமாய்அவருடன்சொல்லாமல் விதர்ப்பதேசத்திற்குச்சென்று அவ்வரசனற்பூசிக்கப்பட்டுஅவடத்திலேயேநின்றுவிட்டார் ஸ்ரீகிருஷ்ணசுவாமியுந் துவாரகாபுரிக்குச்சென்று சுகித்திருந்தனர், அப்போதுஅக்ரூரன் தன்னிடத்திலிருக்கின்றசியமந்தகமணியைஎங்கே ஸ்ரீகிருஷ்ணபகவான்கிரகித்துக்கொள்ளுகிறாரோவென்று நினைத்து தீர்த்தயாத்திரைக்குப்போகிறேனென்று உபாயமாய்ஸ்ரீபகவானிடத்தில்விடைபெற்றுக்கொண்டு காசிக்குச்சென்றுகங்கையில் ஸ்நானஞ்செய்து யாகஞ்செய்துகொண்டவடத்திலேயேவாசமாயிருந்தனன். அப்போது துவாரகாபுரத்துஜனங்கள் ஸ்ரீகிருஷ்ணசுவாமி சததன்வனைக்கொன்று மணியைஒருத்தருக்குமறியச்செய்யாமல் மறைத்துவைத்திருக்கிறாரென்று முன்போல அபவாதமாய்ச்சொல்வதைச் சுவாமி கேள்வியுற்று அதையும் நிவர்த்திசெய்து கொள்ளகாசியிலிருக்கின்ற அக்ரூரனைசபைக்குவில்வரவழைத்துஅவரிடமாயிருந்தமணியைஎல்லோரும் அறியவாங்கிகாண்பித்து அவரிடத்திற்றானே கொடுத்துவிட்டனர்.

---

## ௫௮-வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

கண்ணனனவர் காளிந்திமுதலிய  
நண்ணுமொண்டொடி கன்னிகையரைவரை  
விண்ணிலுள்ளோர் வியந்திடக்கல்யாணம்  
பண்ணிக்கொண்டாரெனப்பகர்கின்றதே.

ஸ்ரீகிருஷ்ணபகவான் காளிந்திமுதலிய ஐந்து கன்னிகைகளை விவாகஞ்செய்துகொண்டதைச்சொல்லுகிறது.

கேளீர்அபிமன்னியுபுத்திரனை பரிட்சித்துமகாராசனேஒருநாள் ஸ்ரீகிருஷ்ணபகவான் பாண்டவர்களைப்பார்க்கவேண்டுமென்று சாத்தகிமுதலியயாதவர்களோடே இரதாரூடராய் காண்டபிரஸ்தத்திற் கெழுந்தருளினர் அவரைக்கண்டுபாண்டவர்கள் தங்களாசனம்விட்டெழுந்திருந்துஅதிவேகமாஓடிவந்து சுவாமியைக் கடாலிங்கனஞ்செய்துபூசித்துஅந்தத்திருமேனிசம்பந்தத்தினுணடானஆனந்தபாஷ்பங்களை யுதிர்த்து மனமகிழ்ச்சியுடன் ஆதனஞ்சமர்ப்பித்து அவருடன்கூடவந்தவர்களையுங்கிரமமாகப்பூசித்தார்கள் அப்போதுசுவாமியானவர்சூரசிகாமணியான தாமபுத்திரனையும் கதாயுதத்திற்சிறந்தவனானபீமசேனனையும் மகாபாக்கியவதியான குந்திதேவியையுந்தண்டனிட்டு வில்லாளிகளிற்சிறந்தஅர்ச்சுனனை ஆலிங்கனஞ்செயதுஆதனத்திலெழுந்தருளியிருந்தனர் அப்பால்மன்மதனுக்கொப்பான அழகுடையநகுலனும் சாஸ்திரங்களைமுற்றுமாயுணர்ந்த சகாதேவனும் மாதுசிரோமணியான துரோபதையும்ஸ்ரீகிருஷணபகவானைதண்டன்சமர்ப்பித்தார்கள் இப்படியிருக்க பாண்டவர்களைநோக்கிஸ்ரீகிருஷ்ணபகவான் க்ஷேமங்களைவிசாரிக்க அப்போதுகுந்திதேவியானவள் சொல்லுகின்றனள் கேளிர்சர்வேசுரனை ஸ்ரீகிருஷ்ண தேவரீரை ஒருக்கால்நினைத்தால் அவனுடையபாபங்களைப்போக்கிபரிசுத்தனாக்கிவைக்குந்தன்மையைவாய்ந்த தேவரீரைசர்வகாலமுந்தியானித்துக்கொண்டிருக்கின்ற எங்களுடையகஷ்டநஷ்டங்களுக்குரியவர் தேவரீராயிருக்கஅந்தக்கடமைஎங்களுக்கில்லையென்றுசொல்லினள்.

பின்புதர்மபுத்திரரானவர்சனகாதியோகிகளுங்காணக்கிடையாத அரும்பொருளான ஸ்ரீ கிருஷணபகவானை எளிதில்சேவிக்க பூர்வத்திலென்னதவஞ்செய்தோமோவென்று தமக்குள்தானே ஆன்மஸ்துதிசெய்தனர் இப்படிமழைக்காலமான நான்குமாதமும் ஸ்ரீகிருஷணப்கவானுடன்சுகித்திருந்தார்கள் இப்படியிருக்கையில் அர்ச்சுனனுனவன் கவசகுண்டலத்துடன் ஸ்ரீகிருஷணசமேதனாய்இரதமேறி மனிதசஞ்சாரமில்லாதகாட்டிற்குவிளையா

டப்போய்புலிகாட்டுப்பன்றி முள்ளம்பன்றிமான்முதலியமிருகங்களைவெய்து அந்த அலுப்பினால்தாகமடைந்து இரதத்தைவிட்டு கீழேயிறங்கியமுனையாற்றின் ஜலத்தில்கால்கைகள்சுத்திசெய்து ஆசமனம்பண்ணி தீர்த்தபானஞ்செய்து அவ்விடத்திலேயே உலாவிக்கொண்டிருக்கையில்மின்னற்கொடிபோலச் சகலாபரணபூஷிதையாய் ஒருகன்னிபாரத்தினத்தைக்கண்டு சுவாமியானவர்அர்ச்சுனனைப்பார்த்து இவளாருடையபெண்யாதுகாரணமாக இவ்வனத்திலிருக்கின்றாள் அதைதீரவிசாரித்துவாவென்றனுப்ப அவனுமப்படியேபோய்விசாரிக்கஅந்தக்கன்னியானவள்சொல்லுகின்றாள் லோகசாக்ஷியானசூரியனுக்குப்பெண்ணாகி காளிந்தீயென்கிறநாமதேயத்தைவாய்ந்தவடியேன்தேவதேவனான ஸ்ரீமந்நாராயணனைப் பர்த்தாவாகஅடையவேண்டுமென்று இவ்வனத்திலென்பிதாசூரியபகவான்நிர்மித்துக்கொடுத்திருக்கின்றகிரகத்திலிருந்துதவஞ்செய்கின்றேனென்றுசொல்ல அதைஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில் அறிக்கைசெய்ய அவரும் அவள்சமீபத்திற்சென்று அவளாற்பூஜிக்கப்பட்ட அவளையும் தமதுஇரதத்தில்வைத்துக்கொண்டு அர்ச்சுனனுடன்காண்டவப்பிரஸ்தஞ்சென்று சிலநாளிருக்க அப்போது சுவாமியைநோக்கிபாண்டவர்கள் தங்கள் பட்டணத்தைச் செவ்வையாய் தேவசிற்பியான விசுவகர்மனைக்கொண்டு நிர்மித்துக்கொடுக்கும்படிபிரார்த்திக்க அப்படியே அதிசுவைபவமுள்ள இந்திரப்பிரஸ்தமென்று பெயரையுடையநகரமுண்டுபண்ணிக்கொடுப்பித்து அர்ச்சுனனுக்குசகாயராகிகாண்டவவனத்தைஅக்கினிக்குதிருப்திசெய்வித்துஅவனைக்கொண்டு அனுமக்கொடியுடன் இரதமும் தனுசும்அம்பறாத்தூணிமுதலாகியதைஅர்ச்சுனனுக்குக்கொடுப்பித்து அந்தக்காண்டவவனத்தில்தப்பிப்பிழைத்தமயனைக்கொண்டு ஒருசபைநிர்மித்து தர்மபுத்திரருக்குக் கொடுப்பித்து அவர்கள்கையில் செலவு பெற்றுக்கொண்டுஇரதாரூடராய் சாத்தகிமுதலியயாதவர்களுடன்காளிந்தியை அழைத்துக்கொண்டு துவாரகாபுரத்திற்சென்றுநல்லசுபமுகூர்த்தத்தில் காளிந்தியைவிவாகஞ்செய்துகொண்டனர்.

அப்பால் அவந்திதேசத்திற்கரசனையும் துரியோதனனுக்கு அன்பர்களாயுமிருக்கின்ற விந்தானுவிந்தாள்தமக்குத்தங்கையான மித்திரவிந்தைக்கு சுவயம்வரஞ்சாட்டினார்கள் அதற்குசகலவரசர்களும்வர அவர்களில்ஸ்ரீகிருஷ்ணனையே முக்கியமாகப்பார்த்து தான் மணம்புரியவேண்டுமென்றுகொண்ட எண்ணத்தையறிந்து அப்படிக்கூடாதென்று வெகுவிதமாய் சகோதரர்கள்தடைசெய்தும்கேளாமல் உறுதியா கருத்துகொண்டிருக்கிறமித்திரவிந்தையை ஸ்ரீகிருஷ்ணன்சகல அரசர்களும்பார்க்கத்தேரின்மீதேற்றிக்கொண்டு துவாரகைக்குச்சென்றுநல்லமுகூர்த்தத்தில் விவாகஞ்செய்துகொண்டு சுகமாயிருந்தனர். அப்பால்அயோத்தியாதிபதியான நக்னசித்தென்கிறராஜனுக்கு மகாசௌந்தரியவதியாகசத்தியவதியென்றொருகன்னிகையிருந்தனள் அவளைச்சகலவரசர்களும் வந்து தங்கள் தங்களுக்குப் பாரியையாகக்கொடுக்கச்சொல்லிக்கேட்டுக்கொண்டார்கள் அப்போதந்த இராஜாவானவன்யாருக்கிந்தகன்னிகையைக்கொடுக்கிறது ஒருத்தனுக்குகொடுத்தால் மற்றவர்களொன்றுசேர்ந்து யுத்தத்திற்குவருவார்களென்று தனதுபசுக்களைக் காக்கிறவனையும்யசோதாதேவிக்குத்தம்பியாயுமிருக்கின்றகும்பாண்டனென்றுபெயரையுடைய கோபாலனிடத்திலிருக்கின்றவிருஷபங்கள் ஏழையும் ஆர்ஜயிக்கின்றானோ அவனுக்குதனதுகன்னிகையை விவாகஞ்செய்து கொடுக்கிறேனென்றுசுயம்வரஞ்சாட்டினான் அதுகேட்டுச்சகலவரசர்களும்வந்து கைலாசபர்வதம்போலவெண்மையுடையதாகியும்அசுராம்சமாயுமிருக்கின்ற அந்த ரிஷபங்களுடன் போர்செய்யமாட்டாமல் அபசயப்பட்டுப்போனார்கள அப்பால் கிருஷ்ணபகவான்யாதவசேனைகளை கூட்டிக்கொண்டுஅயோத்தியாபட்டணத்திற்கெழுந்தருளினார் அதுகேட்டுநக்னசித்து மகாராசன்பூரணகும்பத்துடன்எதிர்கொண்டுபூசித்துஆதனத்தில்எழுந்தருளப்பண்ணிதிவ்வியாலங்காரத்துடனிருக்கிற விடுதியமைத்து அதிலிருக்கச்செய்து தகுந்தபடிஉபசரித்தான் அப்போது சத்தியவதியானவள் ஸ்ரீகிருஷ்ணனுடைய சௌந்தரியம்பராக்கிரமமுதலிய கல்யாணகுணங்களைக் கேள்வியுற்று வெகுமோகங்கொண்டு தான் பூர்வஜன்மத்திலாவது இந்த ஜன்மத்திலாவதுகுருவுக்குப்பணிவிடையும்உத்தமபாத்திரத்திற்தானமும் பக்தியாய ஸ்ரீபகவானை ஆராதித்தலும் சத்தியமேயானாலந்த வசுதேவகுமாரரான ஸ்ரீகிருஷ்ணன்எனக்குப்பர்த்தாவாகக்கடவரென்று ஹோமஞ்செய்து பிரார்த்தித்துக் கொண்டிருந்தனள்.

அப்போதுநக்னசித்து மகாராஜாவானவன் அரவிந்தலோசனான ஸ்ரீகிருஷ்ண பகவானையடைந்து அவரைச் சாஷ்டாங்கமாகச்சேவித்து கைகூப்பிக்கொண்டுகேளீர் சகலசிவ தயாபரமூர்த்தியே தேவரீர்அடியேனுடையகுடிசைக்குப் பொன்னடிசாத்தினபடியால் அடியேனும்அடியேனுடையமூதாதைகளான முன்னோர்களும்பரிசுத்தர்களானோம் சகலசெல்வத்திற்குமநிதியான ஸ்ரீமகாலட்சுமியை அடிமைகொண்டவராயும் சர்வவல்லவராயுமிருக்கின்றதேவரீர் ஒன்றுக்கும் பிரயோஜனமற்றவனாயிருக்கின்ற அடியேனிடத்தில் என்னபிரயோஜனத்தை அடைவதற்காக எழுந்தருளியது அதைக்கிருபைகூர்ந்து அருளிச்செய்யவேண்டுமென்றுவினவஅரசனைநோக்கிஸ்ரீபகவானானவர்யான்உமதுகன்னிகையைவிரும்பிவந்தேன் எனக்குகன்னிகாதானஞ்செய்துகொ

டுக்கவேண்டுமென்றுகேட்க அரசன் ஸ்ரீபகவானைப்பார்த்து பெரியபிராட்டியாருக்கிருப்பிடமாயும் சகலகுணங்களுக்கு நிதியாகியும் புருஷோத்தமனாயு மிருக்கின்ற தேவரீரைப் பார்க்கிலும் கன்னிகைக்குப் புருஷன்வேறொருத்தனிருக்கின்றானா ஆனாலிந்த அரசர்களுடைய உபத்திரவத்தினால் ஒருநிபந்தனை செய்திருக்கின்றேன் அதாவது கும்பாண்டனிடத்திலேழு எருதுகளிருக்கின்றது அதுகளை ஜயிக்கின்றவனுக்கு எனது கன்னிகையைக் கொடுக்கிறேனென்று பிரதிக்கினைசெய்திருக்கின்றேன் ஆகலால்தேவரீர் அதுகளைவெல்ல வேண்டியிருக்குதென்று விநயமாய்விக்கியாபனஞ்செய்து நக்னசித்து மகாராஜனுடையவார்த்தைக்கிசைந்துதாம் ஏழுஉருவமாகி அந்தவிருஷபங்கள ஏழையுங்கொம்பைப்பற்றிக் கீழேதள்ளிஎளிதாக க்ஷணத்தில்கட்டிப்போட்டனர்அப்போது அந்தநக்னசித்துமகாராஜன் வெகுசந்தோஷத்துடன்சர்வாலங்காரபூஷிதையான தனதுகன்னிகையை ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு விவாகஞ்செய்து கொடுத்தனன்.

அந்த விவாகமானபின்பு ஸ்ரீகிருஷ்ணபகவான் சத்தியசமேதனாகி துவாரகாபுரிக்கு பிரயாணமாகின்ற அப்போது நக்னசித்துமகாராஜன் அறுபதுலயதுள்ளதாயும்சுவர்னத்தினாற் செய்யப்பட்ட ஆபரணங்களையுடைய அறுபதினாயிரம் யானைகளும் மகாவேகமுள்ள நான்குகுதிரைகள்கட்டின பதினாயிரம் இரதங்களும் ஒன்பதுகோடிகுதிரைகளும் எண்ணிக்கையில்லாத ஆபரணங்களும் காலாள்களுங் கொடுத்தனுவரத்தினமிழைத்த இரதத்தின்மீதுகல்யாணபெண்ணும் பிள்ளையையும்உட்காரவைத்துப்பட்டணம் வலம்வருகிறசெய்தி அந்தக்கோலசகாட்டார்கேட்டுதங்கள் வீடுகளில்கல்யாணம்வந்ததாக எண்ணிமங்களஸ்நானஞ்செய்து பரிசுத்தர்களால் விலையுயர்ந்தஆடையாபரணங்களை அணிந்துகொண்டு கிரகங்கடோறுந் தெருக்களில் ஜலந்தெளித்து புஷ்பங்களிறைத்துதூபதீபங்கள்போட்டுதோரணங்களும் கொடிகளும் வாழைகமுகுமுதலிய மரங்களுங்கட்டி புஷ்பங்களால் அலங்காரஞ்செய்து விநோதமாயச் சிங்காரித்து அந்தகத்தியை ஸ்ரீகண்ணபிரானுக்கும் காணிக்கைசமர்ப்பித்து ஆலஞ்சுழற்றினார்கள்.

இப்படிப்பட்ட வைபங்களுடன் வருவதைஅரசர்கள் கேட்டு பொறாமையால் அந்த ஸ்ரீகிருஷ்ணபகவானுடன்யுத்தத்திற்குவந்து யாதவர்களாலடிக்கப்பட்டு சின்னாபின்னமாகப்போனார்கள் அப்பால்சுவாமியும் சகலசேனைகளுடன் துவாரகைக்குளெழுந்தளிசத்தியுடன் சுகித்திருந்தனர், பிறகுசிலநாள்சென்ற பிறகுகேகயதேசாதிபதியான மகாராஜனுக்கு பத்திரையென்கிற பெண்பிறந்திருந்தனள் அவளை சந்தர்த்தனன்முதலிய தமையன்மார்கள் ஒருமித்துஆலோசித்து ஸ்ரீகிருஷ்ணனுக்கு பலவந்தமாய்க் கொடுத்தார்கள் அவரும்துவாரகாபுரிக்குஅழைத்துக்கொண்டுபோய்யதாசாஸ்திரமாகவிவாகஞ்செய்துகொண்டனர்பிறகுமத்திரதேசத்திற்கரசனுக்குலக்ஷ்மணையென்கிற பெண்ணிருந்தனள் அவளுக்கு சுயம்வரஞ்சாட்டினன் அதற்குசகலஅரசர்களும் வந்திருக்க அந்தக்கன்னிகையை பலவந்தமாய்த்தூக்கிக்கொண்டு துவாரகைவந்துவிவாகஞ் செய்துகொண்டனர் இப்படிஸ்ரீகிருஷ்ணபகவானானவர்ஸ்ரீருக்குமணி- சத்தியபாமை-ஜாம்பவதி-காளிந்தி-மித்திரவிந்தை- சத்தியைபத்திரை-லக்ஷ்மணை- இந்தஎட்டுபேட்ட மகிஷிகளுடன்சுகமாயிருந்தனர்.

## ௫௯ - வது - அத்தியாயம்.

சந்தவிருத்தம்,

திருமால்நரகாசுரன்றன்னைச்
  சேதித்தவனிடமாயிருந்த
அதிதிகுண்டலங்களினாயுங்
  ...

இதுஸ்ரீபகவானானவர் இந்திராதிதேவகணபிரார்த்திதராய்நரகாசுரனை ஜயிக்கயுத்தயாத்திரையாய் புறப்படும்போதுபிரிவாற்றாதுசத்தியபாமாமணிஸ்ரீஹரியைப்பிரார்த்தித்தவருடன்கூடப்புறப்பட்டதையும்,பிராக்ஜோதிஷபட்டணத்தில்பிரவேசித்துநரகாசுரனுடையசேனாதிபதியாகிய முரகாசுரனைஸம்ஹரித்து அவனுடையமாயோபாய பர்சயந்திரங்களை யறுத்து அவன்சுக்ததிகளாகியமிகவுங்கொடிய ராக்ஷஸவீரயூகபதிகளைவென்று அந்தநகரகோபுராட்டாலகங்களைக் கதையினாலடித்துயந்திரங்களையறுத்து எதிர்த்துநின்றஅவனுடைய அசுரசேனாசமூகங்களை ஹதஞ்செய்வித்ததையும், அந்தநரகாசுரனைச் சங்கரித்ததையும்,உடனே பூமிதேவியினுடைய பிரார்த்தனையினால் நரகாசுரபுத்திரனாகிய பகதத்தனுக்குஅபயப்பிரதானஞ் செய்துஅதிதி குண்டலங்களையும்வருணச்சத்திரத்தையும் அவனால்சிறையிலிருந்த பதினாறாயிரங் கன்னியாமணிகளையும் அங்கீகரித்ததையும்,சுவர்க்கத்திற்கு எழுந்தருளிஅதிதிகுண்டலங் களையும்வருணச்சத்திரத்தையுங் கொடுத்துத் தேவதைகளைச்சந்தோஷிப்பித்ததையுஞ், சத்தியபாமாபிரார்த்தனையினு

ல்தேவதைகளைத் தோற்கடித்துத் தேவபாரிசாத விருக்ஷத்தை யபகரித்துக்கொண்டுவந்து அந்தச்சத்தியபாமணியினுடைய உத்தியான வனத்தில்வைத்து விருத்தியடையச் செய்ததையும், பின்புரோஹிணி தேவிமுதலியபதினாறாயிரங்கன்னியா மணிகளையும்வைதிகதருமவிதிப்படிதிருமணம்புணர்ந்து சந்தோஷித்ததையுஞ் சொல்லுகின்றது

கேளீர்அர்ச்சுனபவுத்திரனைபரிட்சித்துமகாராஜனே ஒருநாள்தேவரிஷிகளிற்சிறந்தநாரத மகாமுனியானவர்ஸ்ரீகிருஷ்ணபகவானைச்சேவிக்க வேண்டுமென்று பாரிசாதபுஷ்பத்தை கையிற்கொண்டு துவாரகைசென்றுபக்தியாய்சுவாமிதிருக்கையில்சமர்ப்பித்துநமஸ்கரித்தார்அப்போது ஸ்ரீருக்குமணீதேவியானவள்அந்தப்பாரிஜாத புஷ்பத்தைப்பார்த்துதனக்குக்கொடுக்கச்சொல்லிசுவாமியைப்பிரார்த்தித்தபடியால்அப்படியேகொடுத்துவிட்டனர், அதைப்பார்த்துநாரதரானவர் சத்தியபாமையண்டையில்வந்துதான் கொடுத்தபாரிஜாதபுஷ்பத்தைஉனக்குக் கொஞ்சமேனுங்கொடாமல் ஸ்ரீருக்குணீதேவிக்குமாத்திரந்தந்தார் அந்தச்சுவாமியினுடையபட்சபாதமிப்படியிருக்குதென்றுசொல்லிஅவளால்பூசிக்கப்பட்டுக்கொண்டுசொர்க்கத்திற்குச்சென்றனர்அப்பால் ஸ்ரீகிருஷ்ணபகவான் சத்தியபாமையினுடையகிரகத்திற்கெழுந்தருளினர் அப்போதுசத்தியபாமை யானவள் அந்த அரிதானபாரிஜாதமலரை உருக்குமணீதேவிக்குமாத்திரங்கொடுத்து தனக்குக்கொடாமலிருந்ததைக்குறித்து மனக்கவலைகொண்டுஊடலாயிருந்தனள்

அப்போது ஸ்ரீ பகவானனவர்உருக்குமணிக்கு பாரிஜாதமலரைக்கொடுத்ததற்குநீ விசனப்படாதே உன்னுடையபுறக்கடையில் அந்தவிருக்ஷத்தையே கொண்டுவந்து நாட்டுகிறேனென்று பிரதிக்கினை செய்தருளினார்- அந்தசமயத்தில் தேவராஜாவான தேவேந்திரனானவன் நரகாசுரனால் துன்பப்படுவதை ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில் விக்கியாபனஞ் செய்யவேண்டுமென்றுசத்தியபாமையினுடை கிரகத்திற்குவந்து சுவாமியைச்சாஷ்டாங்கமாக தண்டன்சமர்ப்பித்து உரைக்கலுற்றனன், அதாவதுதனதுதாயாகிய அதிதிதேவியினுடையகுண்டலத்தையும் தனக்குவிளையாட்டுக் குரியதாயிருந்த மணிகூடபர்வதத்தையும் வருணனுடையவெண்குடையையும், இன்னமனேகந் தேவர்களுக்குரிய வஸ்துக்களைப் பறித்துக்கொண்டதுமன்றி அடிக்கடி யெங்களைப் பாதித்துக் கொண்டிருக்கிறான் அவனுடையஉபத்திரவத்தைச்சகிக்க எங்களாற்கூடவில்லை யென்று வருத்தப்படுகிற தேவேந்திரனுடைய வார்த்தைகளைக்கேள்வியுற்று நீஒன்றுக்கும் வருத்தமடைய வேண்டாம் அவனைச்சீக்கிரமத்திலேயே நிக்கிரகிக்கயோசிக்கிறேனென்று அவனைத்தேற்றிஅனுப்பிவிட்டுபிராக் ஜோதிடமென்கிற நரகாசுர பட்டணத்திற்குப்போக நினைவுகொண்டார்.

கேளிர்பாண்டு வம்சோத்துங்கனை பரிட்சித்துமகாராஜனே பூர்வத்தில் ஸ்ரீமந்நாராயணரானவர் வராகரூபியாய் திருவவதாரஞ் செய்தருளினபோது பூமிதேவியானவள் அந்தவராகரூபியானசுவாமியிடத்தில் போகித்து புணர்ச்சிசெய்து நரகாசுரனென்கிற புத்திரனையடைந்தனள் அவன்சாகாமலிருக்கும்படி கிருபைசெய்ய வேண்டுமென்று ஸ்ரீபகவானைவிரும்ப அப்போதுஅவர் பூமிதேவியை நோக்கியிவன் அசுரனாகையால் இவனுக்குஅவ்விதமான வரங்கொடுக்கக்கூடாது இவனைநிக்கிரகிக்கிறகாலத்தில் இவனுடையதப்பிதத்தைஉனக்குமேவுதலைசொல்லி நிக்கிரக்கிறேமென்றுதிருவாய்மலர்ந்தருளியதால்அந்த ஸ்ரீமந்நாராயணனே இந்த கிருஷ்ணபகவானாகவும் அந்தபூமிதேவியினுடைய அம்சமேயிந்தசத்தியபாமையாதலாலிவளுக்கு அவனுடையதப்பிதத்தைத் தெரிவித்துஇவள்உத்தரவின்பேரில் அவனைச்சங்கரிக்க வேண்டுமென்றும் இவளுடன் தேவலோகஞ்சென்று பாரிஜாதவிருக்ஷத்தைக் கொண்டு வரவேண்டு மென்றுங் கருதி சத்தியபாமா சமேதராய் கருடன்மீது ஆரோகணித்துநால்வகையானதுற்கத்துடன் பாதாளலோகமுதல் சொர்க்கலோகம்வரையில் பரவியிருக்கின்ற பிராக்ஜோதிடபட்டணஞ்சென்று கௌமோதகீஎன்கிறகதையால் முதலிலிருக்கின்றகிரிதுற்கத்தைக்கண்டித்துஅப்பால் அக்கினிதுற்கத்தையும் ஜலதுற்கத்தையும்-வாயுதுற்கத்தையும்-வரிசைக்கிரமமாகச் சின்னபின்னப்பட்டுப் போகும்படியாகக்கண்டித்துசக்கரப்பிரயோகத்தினாலும் நந்தகமென்கிற கத்தியாலும்நரகாசுரனுடைய மந்திரியான முறனுடைய பாசத்தையுமதுணித்துவிட்டு கதையாலநதப்பட்டக்கினுடைய மதில்களைபேதித்துக்கொண்டுபோய் பாஞ்சசன்னியமென்கிற சங்கத்தைப்பூரித்தார்-

அதுகேட்டுமுறனென்கிற அசுரன்கடுஞ்சினமடைந்துதானிருந்தவிடம் விட்டெழுந்திருந்துகண்களில்நெருப்புப்பொறிபிறக்க விழித்துக்கொண்டு மூன்றுலகத்தையுமெரித்த உருத்திரன்போல யமதண்டத்திற்கொப்பானசூலத்தைக்கருடன்மீதுபிரயோகஞ்செயதனன் அதை கிருஷ்ணபகவான் மூன்றுபாணங்களைப்பிரயோகஞ்செய்துநான்குதுணுக்கைகளாகக்கண்டித்துவிட்டனர்- அப்போதுமுராசுரனுக்குக் கோபம்மீறி ஆயிரம்பாரம்எழுகினுற்செய்யப்பட்டும் நாலுபக்கமுங் !தங்கப்பட்டமுங்கட்டியும் அனேகபூளைகளடித்தும்-தேவர்கள்- யட்சாள் இராக்கதர்கள்-மானிடர்.முதலியவர்களுடைய உதிரங்க

ளாற்பூசப்பட்டும் யமதண்டம்போலுமிருக்கின்றகதையை இரண்டுகைகளாலுந் தூக்கிசுற்றிக்கொண்டு கிருஷ்ணபகவானுக்கெதிராக ஓடிவந்துநின்று அடாகோபாலா உனக்கிப்போது இதனாலே மரணமென்று சொல்லி எறிந்தான் அதைச்சர்வசக்திமானான ஸ்ரீகிருஷ்ணபகவான் தம்முடைய கௌமோதகியென்கிற கதையாலடித்துப்பொடிசெய்துப்போட்டார்.

அப்போது முராசுரனென்பவன் கையைஉருட்டிப்பிடித்துக்கொண்டு சுவாமியைக்குத்தவேண்டுமென்றோடிவந்தனன். அப்போது ஸ்ரீ கிருஷ்ணபகவான் சக்கிரப்பிரயோகஞ்செய்தவனுடைய சிரசைத் துணித்துவிட்டார். மலைபோன்றதேகத்தையுடையமுராசுரன் அதமானதை அவனுடையகுமாரர்களான தாம்ரன்-அந்தரிக்ஷன்-சிரவணன்-விபாவசு-வசு-நபசுவான்-அருணன்-இவ்வெழுவரும் கேட்டு கஞ்சினமடைந்து தங்களுடைய பிதாவைக்கொன்ற ஸ்ரீகிருஷ்ணனைக்கொல்லவேண்டுமென்று கத்தி-சூலம்-உலக்கை-உழல்-தடி-முதலிய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு பீடனென்கிற சேனாபதியை முன்னிட்டுக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணசுவாமிபேரில் அஸ்திரவருஷங்களைவருஷித்தார்கள், அப்போது சுவாமியானவர் புன்னகையுடன் வருஷாகாலத்து மேகம்போல் சப்திக்கின்றதம்முடையசாரங்கமென்கிற வில்லைவளைத்து நாணேற்றிட்டு குணத்தொனிசெய்து அவர்கள்மீது கிருஷ்ணசர்ப்பங்கள்போல்சீறி விஷாக்கினிகளைக்கக்கிக்கொண்டும் தீட்சணங்களாயுமிருக்கின்ற பாணங்களைப் பிரயோகஞ்செய்து அவர்கள் பிரயோகித்தஆயுதங்களைச்சின்னபின்னமாகக்கண்டித்துவிட்டு அநேகநாராசபாணங்களைப்பிரயோகஞ்செய்து அவர்களைகைவேறுகால்வேறு-உடல்வேறு தலைவேறுகக்கண்டித்து துணித்துவிட்டனர்.

இந்தச்சங்கதிகளை நரகாசுரன்கேட்டு மிகுந்தகோபத்துடன் கண்களசிவந்து நெருப்புப்பொறிபறக்கபற்களாலுதட்டைக்கடித்துக்கொண்டு மதத்துடன்கூடி ஐராவதம்போல்விளங்குகின்ற அனேக ஆனைக்கூட்டங்களைச் சேகரித்துக்கொண்டு மின்னலுடன் கூடின மேகத்தைப்போலசத்தியபாமைசமேதராய் கருடன்மீதுவிளங்குகின்ற ஸ்ரீகிருஷ்ணசுவாமியினது மார்பில் சமரக்கினியென்கிறஒருசத்தியைதன்பலங்கொண்டமட்டுஞ்சுழற்றிவேகமாகஎறிந்தான்-அவனுடன்கூடவந்த சேனைகளும் நானாவிதமான ஆயுதங்களை ஏககாலத்தில் பிரயோகஞ்செய்தார்கள் அப்போது சுவாமியானவர் சாரங்கமென்கிறதனுசில்கழுகினிறகுகள்கட்டின அனேகபாணங்களைப்பிரயோகஞ்செய்து அந்தச்சேனைகளைக்-கைவேறு- கால்வேறு-உடல்வேறு தலைவேறுகக்கண்டித்தும்-இரதம்-யானைகுதிரை-இதுகளின்மீதிருந்து யுத்தஞ்செய்பவர்களோர் சக்கிரப்பிரயோகஞ்செய்து சிரசை சேதித்துவிட்டார். அப்போதுகருடனானவர் தனது பட்சங்களால் ஒருவ [illegible] அப்போதந்த யானைக்கூட்டங்கள் கருடனுக்கெதிர் நின்றுயுத்தஞ்செய்யமாட்டாமல் விதிட்டுவந்த வழியைப்பிடித்துக்கொண்டோடிப்போச்சுதுகள் இப்படிகருடனால் பராரியாயோடுகிற யானைக்கூட்டங்களையும்ஸ்ரீகிருஷ்ண சுவாமியினது பாணத்தாலடிபட்ட சேனைகளையும் பார்த்துநரகாசுரன்கொடியகோபங்கொண்டு வச்சிராயுதத்தை ஸ்தம்பிக்கச்செய்த மகாப்பிரதாபமுள்ளதனதுசக்தியென்கிற ஆயுதத்தை கருடன்மீது பிரயோகஞ்செய்தனன் மேருபர்வதத்தையும் திரணமாகத்தக்கஅடிபட்டும்கொஞ்சமேனும் மலைப்பஞ்செய்யாமலிருந்தனர்.

அதுகண்டு நரகாசுரன்வெகுபொறாமையுடையவனாய்யமதண்டத்திற்குச்சமானமாயும்-அக்கினிமயமாயும்சாணைபிடிக்கப்பட்டும்-பார்க்கப் பயங்கரமாயுமிருக்கின்ற சூலத்தைக்கையிலெடுத்தோங்கி அதில் கட்டியிருக்கின்ற கிங்கிணிகளைத்துடைத்து சப்திப்பித்து அந்தஸ்ரீகிருஷ்ணனைக்கொன்றுபோடுவோமென்று ஓங்கினான் அதைப்பார்த்துசுவாமியானவர் இனிஉபேட்சைசெய்யக் கூடாதென்றுமனதில்நிச்சயித்து அந்தச்சூலம் வருவதற்குமுன்னமேகோடிசூரியனுக்குச் சமானமானஒளியினைவாய்ந்தசக்கிரத்தினால் கஜாரூடனாயிருக்கின்ற நரகாசுரனுடைய நானாவித இரத்தினமயமான கிரீடத்தைவாய்ந்தும்குண்டலமுதலியஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றசிரசானது அறுக்கப்பட்டு பூமியில்விழுந்தது அப்போது ஆகாயத்தில்சகலதேவர்களும் புஷ்பமாரிசொரிந்துதுந்துபிமுதலிய அனேகவாத்தியங்களுடைய சப்தங்கள் எட்டுத்திசைகளும் நிரம்பும்படி அடித்தார்கள் அப்போது பூமிதேவியானவள் ஸ்ரீகிருஷ்ணபகவானால் அதமாய்க்கிடக்கின்ற நரகாசுரனுடையபுத்திரனைபகதத்தனைக்கூட அழைத்துக்கொண்டுஜகத்சுவாமியான ஸ்ரீகிருஷ்ணபகவானுடையமகிமைகளையுணர்ந்தவளாதலால் அவரைக் கண்டு சாஷ்டாங்கமாக தண்டன் சமர்ப்பித்து ஸ்தோத்திரஞ்செய்ய ஆரம்பித்தனள்.

கேளீர் தேவதேவோத்தமனே சுவாமிசமஸ்ததேவர்களாலும் பூசிக்கப்படுகின்ற பிரம்ம உருத்திரர்களால் சார்வகாலமும் ஆராதிக்கப்பட்டவராயும்பக்தர்களைக்காப்பாற்றுவதற்கு சங்குசக்கிரமுதலியபஞ்சாயுதங்களையுந்தரித்தும், மானிடதேகத்தை அடைந்தவராயுமிருக்கின்றீர்பிரமனுக்கு உற்பத்திகாரணமாகிய தாமரைப்புஷ்பத்தைநாபியில்தரித்திருக்கின்றமையால் பத்மநாமனென்றுதிருநாமமுடையவராயும், செந்தாமரைமாலையைக் கண்டத்தில் அணிந்துக்கொண்டிருக்கின்றமையால் [illegible]

கஜமாலியென்றும் தாமரையிதழ்போல்மிருதுவாயும்திவ்வியரேகைகளோடுங்கூடின திருவடிகளையுடையவராதலால்பங்கஜாங்கிரியென்றும்இப்படிப்பட்ட அனேகநாமங்களுடன் விளங்குகின்ற தேவரீருடைய திருவடிகளை இடைவிடாமல் தியானஞ்செய்தவர்களுக்கு அக்கியானமாகிற அந்தகாரத்தைப்போக்கி கியானமாகிற சூரியோதயத்தையுண்டுபண்ணி கடைத்தேற்றும்படியான தயாளுவாயும் சாட்சாத்பரப்பிரம்மசொரூபியாயும் இவ்வளவுபிரமாணமுடையவரென்று மனதினால் அறியவொண்ணாதவராயும், சகலப்பிராணிகளுக்கும் அந்தரியாமியாகியும். இந்திரன்முதலியதேவர்க்களும் திக்குப்பாலகர்களும்தேவரீருடைய அனுக்கிரகபலத்தால் லோகாதிபத்தியங்களை அடைந்தார்கள் அப்படிப்பட்ட மகிமைகளையுடையதேவரீரை மறந்து நானேயஜமானன்என்னாலே தாளிக்க குடும்பம்போஷிக்கப்படுகிறதென்றுஎண்ணிக்கொள்ளும்படியான அக்கியானம் அடியேனுக்குவராமலிருக்கும்படி கிருபைசெய்யவேண்டுமென்று அனேகவிதமாய்த்துதித்து விக்கியாபனஞ்செய்து நரகாசுரனுக்குப்புத்திரனும் தேவரீருக்குப் பவுத்திரனுமிருக்கின்றஇந்தப்பகதத்தன் தேவரீரிடத்தில்பயத்தினால்சேவிக்கமாட்டாமல் சங்கையற்றவனாய் கிலேசப்படுகின்றான் இவனிடத்தில்கிருபைகூர்ந்து தேவரீருடைய அமுதப்பார்வையால் கடாட்சித்து அன்பர்களிடத்தில் அபயப்பிரதானஞ்செய்கின்ற திருக்கைகளினால் ஸ்பரிசித்துஇவன்மேன்மையடையும்படி அருள்செய்யவேண்டுமென்றுபக்திசிரத்தையுடன் பிரார்த்திக்கின்றபூமிதேவிக்குச் சந்தோஷம்வரவேண்டுமென்று அந்தபகதத்தனுக்குஅபயப்பிரதானஞ்செய்து அவனையுங்கூட அழைத்துக்கொண்டுகுபேரனுடைய சம்பத்திலும் அதிகரித்திருக்கின்றநரகாசுரனுடைய பட்டணத்தினுட்பிரவேசித்தனர்முன்பு அந்த நரகாசுரனால்சகல அரசர்களையும் சயித்துக்கொண்டுவந்து வைத் திருக்கப்பட்ட பதினோராயிரத்தறுநூறுஇராசகன்னிகைகளும்சவுந்தரியசிகாமணியானகண்ணபிரானைக்கண்டுமனங்களித்துநாம்பூர்வஞ்செய்ததவப்பேற்றாலிப்படிப்பட்டமகாநுபாவன்தரிசனங்கிடைத்தது நாம்கண்படைத்ததற்குஇன்றைக்குத்தான்பயனைக்கண்டோமிந்த மகாபுருஷனுடையபுணர்ச்சிவெகுதவஞ்செய்தாலன்றி கிடைக்கமாட்டாது. நாமும்பூர்வத்தில் பகவானை பக்திபூர்வகமாகப் பூசித்ததாலிஜமானு லிந்தவசுதேவகுமாரனான ஸ்ரீகிருஷ்ணனே நம்மை விவாகஞ்செய்யவேண்டும் இல்லாவிடில் நாம்பிராணத்தியாகஞ்செய்வதே யோக்கியமென்று சொல்லிக் கொள்ளுகிற அவர்களுடைய கருத்தைசர்வக்கியானஸ்ரீ கிருஷ்ணபகவான் தெரிந்துகொண்டு அவர்களிடத்தில் கிருபைகூர்ந்து அவர்களைவாகனத்தின் மீதேற்றிதுவாரகாபட்டணத்திற்கனுப்பி நரகாசுரனால் அபகரித்துக் கொண்டுவைத்திருந்த வருணனுடைய வெண்குடையையுந் தேவேந்திரனுடைய மணிகூடபர்வதத்தையும் இன்னும்எவர்களிடத்திலெந்தெந்தவஸ்துக்கள் அபகரிக்கப்பட்டனவோ அவைகள்யாவையும் அவரவர்களிடத்தில் கொடுத்துவிட்டு அதிதியினுடைய குண்டலங்களிரண்டையுமெடுத்துக்கொண்டு தேவலோகத்திற்குச் சென்று அவனாற்பூசிக்கப்பட்டு இந்திராணியுங்கூட அழைத்துக்கொண்டு காசியபருடைய ஆசிரமத்திற்குச் சென்று காசியபனையும் அதிதிதேவியையுந் தெண்டனிட்டு அவர்களால் ஆசீர்வதிக்கப்பட்டு குண்டலங்களிரண்டையும் அதிதிதேவிக்குக் கொடுத்து அவர்களிடத்தில்விடைபெற்றுக்கொண்டுமறுபடிதேவலோகத்திற் கெழுந்தருளினார், இப்படிசத்தியபாமைசமேதனாய் எழுந்தருளின ஸ்ரீகிருஷ்ணபகவானை இந்திரனும் இந்திராணியுங்கந்தபுஷ்பதூபதீப நைவேத்தியதாம்பூல முதலியவற்றால் பூசித்தார்கள் அப்போதுசத்தியபாமையானவள் ஸ்ரீகண்ணபிரானைநோக்கி கேட்டீராசுவாமி மகானுபாவரே இந்த இந்திராணியும் அடியேனை சாமான்னியமானமானிடஸ்திரீயாகவெண்ணி எனக்குபாரிஜாத புஷ்பத்தைக்கொடாமல் ஒளித்தாளாதலாலிந்தஅவமானத்தையான் சகிக்கமாட்டேனென்று வெகுளிகமாய் நோக்கிநீயாதுகாரணத்துக்காகஇப்படிக்குவிசனப்படுகிறாய் உனதிஷ்டத்தைச்சொல்லு அப்படியேசெய்கிறேனென்று வெகுளிதமாய்ச்சொல்லுகிற ஸ்ரீபகவானைப்பார்த்து கேளீர் எனதன்பபர்த்தாவே, இந்தஇந்திராணியானவள் தனக்குபாரிஜாதபுஷ்பமிருக்கிற கர்வத்தினால் அடியேனையிப்படிஅவமதித்தாள் அந்தமரத்தை வேரோடேபிடுங்கிக்கொண்டு நமதுதுவாரகாபட்டணத்திற்குக்கொண்டுபோனாற்றான் அவளுக்குங்கர்வபங்கமாகும் அடியேனும் இஷ்டத்தின்படிமுடித்துக்கொள்ளுவேனென்றுசொன்ன சத்தியபாமையினுடைய வார்த்தையைக்கேட்டப்படியே ஆகட்டுமென்று பிரதிக்கினைசெய்து இந்திரனிடத்தில் சிலவு பெற்றுக்கொண்டு துவாரகாபட்டணத்திற்கெழுந்தருளினார்.

அப்பால்சிலகாலசென்றபிறகு நாரதரானவர்மறுபடியும் ஸ்ரீருக்குமணி சமேதரான ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குஒரு பாரிஜாதமாலையைக் கொண்டுவந்து சமர்ப்பித்தனரதை ஸ்ரீபகவான் கிருபையாகக்கிரகித்து ஸ்ரீருக்குமணிதேவிக்குக் கொடுத்துவிட்டார் இதையெல்லாம்சத்திய பாமையினுடைய தோழிப்பெண்ணானவள் பார்த்திருந்து சத்தியபாமையிடஞ்சென்று தான்உருக்குமணிதேவியினது கிரகத்திற்குச் சென்றதும், அவ்விடத்தில் நாரதமாமுனிவர் பாரிஜாதமாலை கொண்டுவந்துஸ்ரீகண்ணபிரானுக்கு சமர்ப்பித்ததும் அதைஸ்ரீருக்குமணி

தேவிக்குக்கொடுத்ததும் அதும்மன்சூடிக்கொண்டதும், அவர்களைநாரதர் தோத்திரஞ்செய்ததும் யான்கண்டேனென்று தோழிப்பெண்சொல்லக்கேட்டுசத்தியபாமையானவள்கொடிய கோபத்துடனிருக்கிற சமயத்தில்நாரதரானவர் ஸ்ரீபகவானிடத்தில் விடைபெற்றுக்கொண்டுசத்தியபாமையினுடையகிரகத்திற்குவந்து அவளாற்பூஜிக்கப்பட்டு அந்த சத்தியபாமையைப் பார்த்தொருவார்த்தைசொல்லுகின்றனர்.

மாதாய் சுபாங்கையான சத்தியபாமையே யான்சொர்க்கத்திலிருந்து அரிதானபாரிஜாத மலரைக்கொண்டுவந்து ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமிக்குக் கொடுத்தேன் அதையும் உருக்குமணீ தேவிக்கேகொடுத்துவிட்டார், நீசுவாமியோடு சொர்க்கத்திற்குச்சென்றபோதுஇந்திராணியும் பாரிஜாதமலரைஉனக்குக்கொடாமல் அவமதித்ததும்சுவாமிக்கும்சம்மதிதானென்றுசொன்ன நாரதருடையவார்த்தையை சத்தியபாமையானவள் கேள்வியுற்றுகடுஞ்சினமடைந்துநாரதரைப்பார்த்துஒருவார்த்தைசொல்லுகின்றனள். கேளீர்தேவரிஷிகளிற்சிறந்த நாரதமாமுனியே,இப்போதுஅந்தஸ்ரீகிருஷ்ணன்பாரிஜாதவிருக்ஷத்தைக் கொண்டுவந்துகொடுத்தாலாச்சுது இல்லாவிடில்பிராணத்தியாகஞ்செய்கிறேனென்று கூறிநாரதரை அனுப்பிவிட்டு தன்சரீரத்தில் அணிந்துகொண்டிருந்தஆபரணங்கள் யாவையும்கழற்றிப்போட்டு நல்லவஸ்திரமுமில்லாமல் குரோதாகிரகத்தினிற் பிரவேசித்திருந்தனள், அந்தச்சமயத்தில்ஸ்ரீபகவான் ஸ்ரீருக்குமணிதேவியினுடையகிரகத்தைவிட்டுசத்தியபாமையினதுகிரகத்திற் கெழுந்தருளிஆஸ்தான மண்டபத்திற்சத்தியபாமையைக் காணாமல்சமீபத்திலிருக்கின்ற ஊழியபெண்ணைக்கேழ்க்கஅப்போதவள் மிகவும்பயபக்தியுடன்ஸ்ரீகிருஷ்ணபகவானை பார்த்துஎன்னமோகோபமாயிருக்கிறாப்போல் காணுகிறதென்றுகூறஅதுகேட்டுஅவளிருக்குமிடஞ்சென்றுஅவளை நோக்கி கேளாய்சத்தியபாமாநீயாதுகாரணத்திற்காக ஒருவிதமாயிருக்கின்றாய் இப்படியிருக்கிறது சரியல்லவென்றுசுவாமி சொல்லக்கேட்டு கடுஞ்சினமாய்சுவாமியைநோக்கி ஒருவார்த்தைசொல்லுகின்றனள.

கேளீர் ஜகத்ரக்ஷகரானசுவாமீ ஒன்று மறியாதவர்போலக்கேட்பதுதேவரீருக்குதர்மந்தானோநாரதமாமுனியானவர் முதல்தடவைபாரிஜாதமலரைக் கொண்டுவந்தபோது அடியேனுக்குக்கொடாமல்வஞ்சித்துஉனக்குஅந்தவிருக்ஷத்தை வேருடன்பிடுங்கிக் கொண்டுவந்துநாட்டுகிறேனென்று பிரதிக்கினைசெய்தீர்-பிறகுதேவலோகத்தி லிந்திராணியா லவமதிக்கப்பட்டபோதும் அந்தமரத்தையெனதுகிரகத்தில் நாட்டுகிறேனென்று பிரதிக்கினைசெய்தீர் இப்போது நாரதர்கொண்டுவந்தமலரைமுறைப்படிக்கு எனக்குக்கொடுக்கவேண்டியது அப்படிக்கில்லாவிட்டாலும் அந்த உருக்குமணிக்கும் அடியேனுக்குமாவது கொடுக்கவேண்டும் அப்படிக்குமில்லாமலந்தஉருக்குமணிக்கே கொடுத்துவிட்டீர் இப்படிப்பட்டஅவமரியாதையையான்சகித்துக்கொண்டுபிராணனைவைக்கமாட்டேனென்று ஓரேபிடிவாதமாய்ச் சொல்லுகிறசத்தியபாமையினுடைய வார்த்தையைக்கேட்டுஸ்ரீகண்ணபிரான் அருளிச்செய்கின்றனர் கேளாய் மாதுசிரோமணியே இன்னமேதாகிலும் என்னாலபராதஞ்செய்யப்பட்டனவோ வென்றுஎண்ணியிருந்தேன் இதற்காகவா இவ்வளவுகோபமாயிருக்கின்றாய்இதோ அதிசீக்கிரமத்தி லழைப்பிக்கிறேனென்று தேறுதல்சொல்லியிருக்கும்சமயத்தில் பிரம்மநிஷ்டர்களிற்சிறந்த நாரதமாமுனியானவர் துவாரகைக்குளெழுந்தருளினர் அவரை ஸ்ரீபகவான் சத்தியபாமைசமேதராய் கிரமப்படிபூஜித்து ஆசனத்திலெழுந்தருளப் பண்ணிதாம்சத்தியபாமைக்குபாரிஜாதவிருக்ஷத்தை தருவிக்கிறோமென்று சொல்லியிருந்த பிரதிக்கினையை நாரதருக்குச் சொல்லிநீர் தேவராஜாவினிடத்திற்சென்று பாரிஜாதவிருக்ஷத்தை சிலநாளைக்குப் பூமியிலிருக்கும்படி அனுப்பிவிக்கவேண்டுமென்றுயான்சொன்னதாகச்சொல்லி அனுப்பவேண்டுமென்றுகூறின ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய வார்த்தைகளைக்கேழ்வியுற்று ஸ்ரீநாரதர்ஒருவார்த்தைஅருளிச்செய்கின்றனர் கேளீர்சுவாமியரங்காமா தேவேந்திரனுக்குஅந்தபாரிஜாத விருக்ஷத்தினிடத்தில் அன்புள்ளவனாய்உருத்திரனை வெகுவாய்பிரார்த்தித்து அவருடைய உத்தியானவனத்திலிருந்துதேவலோகத்திற் கொண்டுபோய், வைத்திருக்கின்றனன் அதினிடத்தில்இந்திரனும்இந்திராணியும் மெத்தஅன்புள்ளவர்களாயிருப்பதினால் அவர்களொருக்காலும் அதைப்பூலோகத்திற்கு அனுப்பமாட்டார்கள்போற் றோன்றுகின்றன வென்று கூறினநாரதருடையவார்த்தையைக்கேள்வியுற்று நீர்போய் யான்சொன்னதாய்ச்சொல்லும அவன் அனுப்பாவிட்டால்எனது கௌமோதகீயென்கிற கதையால்அவனுடையமார்பைப் பிளந்துஅந்தவிருட்சத்தைஅபகரிப்பேனென்று சொன்ன ஸ்ரீ கிருஷ்ணசுவாமியினுடைய வார்த்தையைக்கேட்டுஅப்படியே தேவலோகத்திற்குச்சென்று இந்திரனைக்கண்டு அவனால்பூசிக்கப்பட்டுஆசனம்சமர்ப்பிக்க அதிலிருந்து இந்திரனைப்பார்த்துஸ்ரீகிருஷ்ணன் உன்னைபாரிஜாத விருட்சத்தைதுவாரகாபுரத்திற் கனுப்பச்சொன்னாரென்றார்

அதுகேட்டுதேவேந்திரன் பரிகாசமாய்மானிடன்பாரிஜாததருவைவிரும்பினால்கிடைக்குமா அதைப்பூலோகத்திற்குத்தான் அனுப்பத்தகுமாஅவர்தான் சொன்ன

னும் நீருமினிவுமறந்து சொல்லலாமாவென்று கூறினதேவேந்திரனைப்பார்த்துதிரும்பவுஞ்சொல்லுகின்றார் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய ஆக்கினையின்படிபாரிஜாததருவை அனுப்பினுலாச்சுது இல்லாவிட்டால் தமது கதையால் உனதுமார்பைப்பிளந்து பாரிஜாததருவைக்கொண்டு போகிறதாகஉன்னுடன் சொல்லச்சொன்னாரென்றுசொல்லஅதுகேட்டு தேவேந்திரன் கடுஞ்சினமடைந்துநாரதனைநோக்கிஅந்த ஸ்ரீகிருஷ்ணன்எனதுமார்பைப்பிளந்தாலன்றிபாரிஜாததரு அவருக்குக்கிட்டமாட்டாதென்று கூறினன்அதுகேட்டு நாரதர் துவாரகைக்குச்சென்று ஸ்ரீகிருஷ்ணபகவானுடன் தேவேந்திரன் கூறினவண்ண முரைக்க அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவானனவர்தமதுவாகனமானகருடாழ்வானை நினைத்தருளினார் கருடனும்அதிவேகமாக ஓடிவந்து ஸ்ரீகிருஷ்ணசுவாமியைப் பிரதட்சணஞ் செய்து சாஷ்டாங்கமாகச்சேவித்துகைகட்டிவாய் பொத்திக்கொண்டெதிரே நின்றார் அப்போதுசுவாமியானவர் ஸ்ரீருக்குமணிகுமாரனைபிரத்தியுமனனையும் சாத்தகியையும் கருடன்மீதேற்றிக்கொண்டு கருடாரூடராய் துவாரகையில்நின்று பிரயாணப்பட்டுசொர்க்கத்திற்குச் சென்றுபாரிஜா ததருவை வேருடன்பிடுங்கிக்கொண்டு துவாரகைக் கெழுந்தருளும்போது அதைக்காவலாளிகள் கண்டு தேவேந்திரனுக்குரைக்க அதுகேட்டுஇந்திரன் வச்சிராயுதபாணியாய் ஐராவதத்தின் மீதேறிக்கொண்டு தனதுபுத்திரனைஜயந்தனையும் சிநேகிதனன பிரவரனென்கிற பிராமணனையும் அழைத்துக் கொண்டு ஸ்ரீகிருஷ்ண சுவாமியுடனெதிர்த்து யுத்தஞ்செய்து அவரா லடிக்கப்பட்டு பூமியிலொருமலையின்மீது விழுந்தனன் அப்பால்பிரத்தியுமனன் ஜயந்தனையும் சாத்தகிபிரவரனென்கிறபிராம்மணனையும் ஜயித்தார்கள் பின்பு மறுநாளுதயத்தில்யதாப்பிரகாரம்இந்திரனும் ஸ்ரீகிருஷ்ணனும் அகோரமாய்யுத்தஞ்செய்ய ஆரம்பித்தார்கள் அந்தச்சமையத்தில் அவ்விருவர்களுக்குந் தாய்தந்தையர்களானகாசியப்பிரம்மாவும் அதிதிதேவியும்வந்தார்கள் அவர்களைக்கண்டு இந்திரனும்உபேந்திரனன ஸ்ரீகிருஷ்ணனும்யுத்தத்தைநிறுத்தி வாகனத்தினின்றுங் கீழேகுதித்து ஆயுதங்களைக்கீழேவைத்து அவர்களிருவரையும் சாஷ்டாங்கமாகத்தண்டன்சமர்ப்பித்து அஞ்சலிகூப்பிக்கொண்டு அவர்களைப்பார்த்து நீங்கள்யாதுகாரணத்திற்காகஇவடத்திற்கெழுந்தருளினீர்கள் அதைச்சொல்லவேண்டுமென்று வினவுகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானையும்இந்திரனையும்பார்த்துஒருவார்த்தைசொல்லுகின்றார்கள் நீங்கள்யுத்தஞ்செய்வதை வேண்டாமென்று நிறுத்துவதற்காக இவடத்திற்குவந்தோமென அதற்குஸ்ரீகிருஷ்ணஸ்வாமி அருளிச்செய்தனர்.

ஸ்ரீபகவான்வாக்கியம்.

கேளிர் பிதாவானகாசியபரே முன்புயான் சத்தியபாமைசமேதனாய் இந்தத்தேவேந்திரனுடைய சபைக்குப் போயிருந்தேன் அப்போது இந்திராணியானவள் பாரிசாதபுஷ்பத்தைக்கொடாமல் அவமதித்தனள் அதனால்மித்தங் கிலேசத்தையடைந்த சத்தியபாமைக்கு பாரிசாததருவைக்கொண்டுவந்து தருகுவோமென்றுபிரதிக்கினைசெய்திருந்தேன் அதைநாரதர்மூலமாயிந்த இந்திரனுக்குபாரிசாததருவை கொஞ்சநாளைக்குபூமியிலிருக்கும்படி அனுப்பவேண்டுமென்று தெரிவித்தேன் அதற்குயிவன்பரிகாசஞ்செய்தனுப்பினான் அதுகேட்டு அந்தபாரிசாததருவைக்கொண்டுபோக வேண்டி வந்தவனே அன்றி இந்திரனுடன் யுத்தஞ்செய்ய வந்தவனல்லவென்று கூறுகின்ற ஸ்ரீகண்ணபிரானுடைய வார்த்தைகளைக்கேள்வியுற்றுகாசியபரானவர் தேவேந்திரனைப்பார்த்துவாராய் மகேந்திரா உனதுதம்பியான ஸ்ரீகிருஷ்ணபகவானுடையகருத்தின்படி பாரிசாததருவை அவரிடமாய் கொடுத்துவிடு அவரதுவரையில் பூமியிலிருத்திக்கொள்ளுகிறாரோ அதுவரையில நீஅதைவிரும்பாமலிருக்கவேண்டியது அவர்சாட்சாத் ஸ்ரீமந்நாராயணனென்பது சாபநிமித்தத்தால் உனக்குத்தெரியாமல் போர்செய்தாய்அவர் சகலஉலகங்களையும் இரட்சிக்கவேண்டி மானிடரூபியாய்அவதரித்திருக்கின்றாரவரோ டெனக்கொருநாளும் விரோதஞ்செய்துக்கொள்ளக்கூடாதுயிப்போது அவரோடுவிரோதஞ் செய்துக்கொண்டபடியால் அவரைப்பணிந்து அபராதஞ்செய்துக்கொள் ளென்றுகூறிஸ்ரீ கிருஷ்ணனைப்பார்த்து சொர்க்கலோகந்தவிர இதரலோகங்களுக்கிரான பாரிஜாதமாதலால்கொடுக்கக் கூடாதென்றுதெரியாமற்சொன்னாலும் அவனைசமாதானப்படுத்திவாங்கிக்கொள்ளவேண்டியதாயிருக்கயிப்படி யுத்தஞ்செசெய்தது தர்ம்மமல்லவென்றுகூறினர்.

அந்தச்சமயத்தில் இந்திரனானவன் நவரத்தினமிழைத்ததனதுகிரீடத்தினால் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய திருவடிகளை ஆலஞ்சுற்றுவதுபோல அனேகதண்டம்சமர்ப்பித்துசாபத்தினால்கியானமில்லாமலென்ன அபராதஞ்செய்தபோதிலும் க்ஷமித்துரட்சிக்கவேண்டு மென்று அனேகவிதமாகபிரார்த்தித்துபாரிஜாத விருட்சத்தைசுவாமிக்குகொடுத்துவிட்டுஅவரிடத்தில்அனுமதிபெற்று காசியப்பிரஜாபதியையும் அதிதிதேவியையுங்கூட அழைத்துக்கொண்டு இந்திரன் சொர்க்கத்திற்குச்சென்றனன் இந்தபாரிஜாதாபகரணத்தை அரிவம்சத்தில்விசதமாயச்சொல்லப்படுகின்றன பிறகுஸ்ரீகிருஷ்ணபகவான் துவாரகாபுரத்திற்கெழுந்தருளி வசுதேவர் தேவகி பலராமாமுதலிய பெரியோர்களைப்பணிந்து சத்தியபாமை

யினுடைய கிரகத்திற்குச்சென்று அவளதுதோட்டத்தி லந்தபாரிஜாதசருவைநாட்டி மிகவும்சந்தோஷத்துடன் வாசஞ்செய்துக்கொண்டிருந்தனர் அப்பாலந்தபாரிசாத தருவுஞ்சிலநாளில் காற்றினலலைந்துஸ்ரீருக்குமணியி னதுகிரகத்தின் பக்கமாகசாய்ந்துபுஷ்பம் ருக்குமணிதே வியதும்விருட்சம் சத்தியபாமையதுமாயிருந்தன,

இப்படியிருக்கையில் நரகாசுரனுடைய நகரத்திலி ருந்துகொண்டுவந்த பதினாராயிரத்து அறுநூறு இரா சகன்னிகைகளை தனித்தனி வீடுகளிலமைத்துவைத்து நல்லமுகூர்த்தத்தில் ஒவ்வொருமடந்தைக்கி ஒவ்வொரு உருவமாக தாமிருந்து அவ்வண்ணமே தாய்தந்தைகள் பந்துக்கள்முதலியயாவரும் அந்தந்த கிரகங்களோறுமி ருக்கும்படியாயும் அந்தமாதுகள் தம்மிட கல்லியாணத்தி ற்கெல்லோரும்வந்திருக்கின்றார்கள் மற்றவிடங்களுக்கு ப்போகவில்லையென்று நினைக்கும்படியாயும் அமைத்து அவர்களை சாஸ்திரவிதியின்படி மணஞ்செய்து சந்து ஷ்டியாயிருந்தனர் பிரமன்முதலியவர்களாலறியக்கூடா தபிரபாவமுடைய ஸ்ரீமந்நாராயணனை அந்தமடந்தைய ர்கள்யாவரும் புருஷனாகவடைந்து அவருடையதிருமுக மண்டலசேவையையும் புன்னகையோடுங்கருத்தாய்பா ர்க்கின்றபார்வையையும் பார்த்து அவரோடுபேசுவதிலு ம்புணர்ச்சிசெய்வதிலும் கொஞ்சம் நாணமுடையவர்க ளாய் அந்தசுவாமியின் பணிவிடைகளில் சாக்கிரதையா யவருக்கு ஆதனமும் திருவடிவிளக்கத்தீர்த்தமும் அறு சுவைமுதலியஉணவும் தாம்பூலம் சமற்பிக்கிறதும்திரு வடிகளை வருடுகிறதும் திருவாலவட்டம் சேவிக்கிறதும் சந்தனம்சமற்பிக்கிறதும் புஷபம்சாத்துகிறதும் தலைம யிர்களைநன்றாய்கோதி திருமஞ்சனஞ் செய்விக்கிறதுமு தலிய பணிவிடைகளைச் செய்துக்கொண்டு சுகித்திருந் தனர்கள்.



# ௬௰ - வது - அத்தியாயம்.



கலிவிருத்தம்,

திங்கள்போன்ற உருக்குமணிதேவியைப்
பங்கமானப் பரிகாசவார்த்தையால்
எங்கள்நாத னியம்பிடக்கோபித்த
மங்கைதன்னைச சமாதானமாக்கினர்.

ஸ்ரீகண்ணபிரானனவர் ருக்குமணிதேவியை பரி காசவார்த்தையால் கோபம்வரும்படிசெய்ததும்அதினு ல்கிலேசத்தை அடைந்தஉருக்குமணிதேவியை ஏகாந் தத்தில்சுவாமியானவர் சமாதானஞ்செய்ததும்அப்பால் ஸ்ரீருக்குமணி தேவியானவள் ஸ்ரீகிருஷ்ணபிரானுடை யஇரகசியமாயிருக்கின்ற பிரபாவங்களை வர்ணிக்கப்படு கின்றன.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளீர் புவனேசனன பரிட்சித்துமகாராசனே அ ந்ததுவாரகாபுரத்தில் மிகவும்வுயர்ந்தும் சொற்கலோக ம்போல மகாஅழகுபொருந்திய ஸ்ரீருக்குமணிதேவியி னுடையகிரகத்தில் சொற்ணத்தால்சுவர்வைத்துமகாஅ றபுதமாய்நிருமித்தும் பனிநீர்தெளித்து அகில் சாம்பி ராணிதூபம்போட்டு நந்தவனத்திலுள்ளபாரிசாதம் மு தலியநறுமலர்வாசனையுடன் தென்றற்காற்றுவீசசந்திர காந்திகள் சாளரத்தினல்வர கிளிகள் சுவாமியினுடைய பிரதாபவரிசைகளை மனோகரமாய்சப்திக்க இப்படிஅதி கவினோதமாயிருக்கின்ற சபாமண்டபத்தில் சொற்ணம யமாயும் நவரத்தினமயமாயுமிருக்கின்ற கட்டிலுக்குசந் திரமண்டலம்போன்ற மேற்கட்டுவெள்கட்டி நான்குபக்க ததிலும் முத்துசரங்களைதொங்கவிட்டு மகமலினற்செ ய்திருக்கின்ற பஞ்சணையின் மீது வீற்றிருக்கின்ற சகல லோகேசுவரனைஸ்ரீகிருஷ்ணபகவானுக்குமின்னற்கொ டிபோன்ற இடையினைவாய்ந்த சாட்சாத்மகாலட்சுமியா னருக்குமணிதேவியானவள் காதினில்சூரியன்போன்ற ஒளியினையுடைய இரத்தினகுண்டலங்களசைய நவரத் தினதோள்வளைகள்விளங்க மார்பினில்நட்சத்திரமண்ட லம்போல் முத்துசரங்கள்பிரகாசிக்க கால்களில்சிலம்பு கண்டைமுதலிய பாதசரங்கள்ஒலிக்கமெய்யினில்சத்தி யாகாலசெம்மானத்திற்கு நிகர்த்தவஸ்திரந்துலங்க அ தன்மீதுநவரத்தின ஒட்டியாணம்மின்ன - பிராணிகளு டையதாபத்தைப்போக்கடிக்கின்றசந்திரமண்டலம்போ ன்றமுகத்தினிற் கஸ்தூரி திலகம்விளங்க-கரங்களில் பூ ண்டிருக்கும் நவரத்தினகங்கணங்கள் கலகலவென்றுஒ லிக்க-இவ்வளவுவைபவத்துடன் அநேகஊழியப்பெண் களிருக்க-தானேசுவாமிக்கு கைங்கரியஞ்செய்யவேண்டு மென்றுவிரும்பி நவரத்தினமிழைத்த சாமரத்தைபரப ரப்புடன் சேவிக்கிறபோது கொண்டைதளர்ந்து புஷ்ப ங்களவிழமுகத்தினிற் சிறுமுத்துபோலவேர்க்க-முன்னு ச்சிமயிர்கள்நெற்றியில்விழ அதை தன்னுடைய இடது கையினலொதுக்கிக்கொண்டு தாமேகெதியென்று ஓமே னதாய்நம்பியிருக்கிற ருக்குமணிதேவியைப்பார்த்துஸ்ரீ பகவானனவர் புன்னகையுடன் ஒருவார்த்தை அருளிச் செய்கின்றார்.

கேளாய் மகாராசாவினுடைய புத்திரியான; உருக் குமணியே நீயிப்படிப்பட்ட அயோக்யமானகாரியஞ்செ ய்தாயே உன்னைப்போல பைத்தியக்காரி நானெங்குங் காணவிலேன் குபேரசம்பத்துக்கொப்பான ஐசுவரியமு டையவர்களாயும் மஹா குலத்தி லே பி ற ந் த வ ர் க

ளாயும் சூரர்களாயும ரூபவான்களாயும் உதாரிகளாயு
மிருக்கின்ற சிசுபாலன்முதலிய அரசர்கள்உன்னைவிவா
கஞ்செய்யவலுவில்வர அவ்வண்ணமே உனதுதாய்தந்
தைஅண்ணன் முதலியபந்துக்கள் சிசுபாலனுக்கேகொ
டுக்கஇச்சியித்திருக்க அதற்குவிரோதமாய்அவ்வரசர்க
ளுககுசமானனுகாதவனுயும் சகலவரசர்களுக்கும் பயந்
துசமுத்திரத்தை அடைந்திருக்கிறவனுயும்ஒருவரிடத்
திலும் சம்பந்தமில்லாதவனுய்பலவான்களுக்கு விரோ
தியாயும் ஒருவர்மடத்தையும் அனுசரியாதவனுயும்சிம்
மாசன மில்லாதவனுயும் குணஹீனனுயும்தரித்திரனுயும்
தரித்திரர்களால் பூசிக்கப்பட்டவனுயும் தனவான்களா
ல்பூசிக்கப்பட்டவனுயும்-தரித்திரர்களை பூசிக்கிறவனுயு
ம்உனக்குச்சமான னுகாதவானுயும் பிச்சைக்காரர்களா
ல்துதிக்கப்படுகிற வனுயுமிருக்கின்ற யென்னையேன்வி
வாகஞ்செய்துக்கொண்டாய் யான்சிசுபாலன் முதலியவ
ர்களுடைய கர்வத்தைபங்கஞ்செய்வதற்காக உன்னைக்
கொண்டுவந்தனேயன்றி விருப்பத்தினுலல்லமடந்தைய
ர்களுக்குவிருப்பமில்லாதகணவனிடத்தில் வாசஞ்செய்
வதிலும் மரணமேயோக்கியம்ஆதலாலிப்போதுஉனநி
ஷ்டத்தின்படிஎங்கேயாவதுசென்று சவுக்கியமடையுவ
தைப்பாரென்றுநாராசங்காதிற் சொரிகினுற்போலருளி
சசெய்த வார்த்தைகளைக்கேட்டு மகத்தானதுயரத்துட
ன்செந்தாமரையிதழ்போன்ற தனதுகால்விரலால் பூமி
யைக்கீறிக்கொண்டு பரத்துவாஜபட்சிக்கு நிகர்த்தகண்
களிலிருக்கின்ற மைகரைந்துசொர்ண கலசம்போன்ற
கொங்கைகளைநனைத்துநம்மையிப்படிசொல்லலாமாவெ
ன்கிற சோகமாகிற சமுத்திரத்தில் மூழ்கினவளாய்மூா
ச்சித்து கையிலிருந்த சாமரமும்விசிறியும்நழுவதுயரப்
படுகிறஸ்ரீருக்குமணீதேவியினுடைய சோகத்தைப்பார்
த்துயாம்பரிகாசமாய்ச்சொன்னதைநிஜமாகவெண்ணிக்
கொண்டாளென்று அவளுடையகோராமையைப்பார்த்
து சகிக்கமாட்டாதவராய்ப்பர பரப்புடன் சப்பிரமஞ்ச
த்திலிருந்து கீழேகுதித்து சீக்கிரமத்தில்தேற்றவேண்
டுமென்று நாலுதிருக்கைகளைவாய்ந்தவராய் ஒருதிருக்
கையினுற்றூக்கியும் ஒருதிருக்கையினுல் ஆலிங்கனஞ்
செய்துக்கொண்டும் ஒருதிருக்கையினுல் கூந்தலைச் சீா
திருத்தியும் ஒருதிருக்கையினுல் உடம்பில்படிந்த தூ
ளைத்துடைத்தும இப்படிப்பலவகைப்பட்ட உபசாரத்
தைஅதிசீக்கிரமத்திற்செய்து மூர்ச்சைதெளிவித்துத
னதுஇடையிற்கட்டியபீதாம்பரமானது சேர்ந்துபூமியி
ல்வீழ்வதையும்பாராமல்தூக்கிமடியினில்வைத்துக்கொ
ண்டு மிகுந்தஆதரவுடன் ஒருவார்த்தை யருளிச்செய்
கின்றார்.

ஸ்ரீபகவான்வாக்கியம்,

கேளாயெனதன்புள்ள விதற்பராஜ கன்னிகையே
நீயென்னிடத்தில் சம்பூர்ணமானபக்தியுள்ளவளென்று
யான்நன்றாயுணர்ந்திருந்தும் உன்னைபரிகாசஞ்செய்தா
ல்அதற்கென்ன உதாகரணஞ் சொல்லுகிறையோகேழ்
ப்போமென்றுசம்சாரிகளுக்குரிய வழக்கத்தின்படிசொ
ன்னதேயன்றியதார்த்தமாகச் சொலலவில்லைஅதற்காக
என்பேரில்கோபிக்க வேண்டாமென்று சொல்லுகிறகண்ண
பிரானுடையவார்த்தையைக் கேள்வியுற்றுஇனி
எம்மைநிவர்த்திசெய்ய மாட்டாரென்கிற தைரியத்தினு
லேமுன்புஸ்ரீகிருஷ்ணபிரானைதம்மைஇழிவாய்ச்சொ
ல்லிக்கொண்டவார்த்தைகளைப் பகவத்குணமாகச்சொல்
லலுற்றாள்,

ஸ்ரீருக்குமணிதேவி வாக்கியம்.

கேளிர் தீனதயாளுவான சுவாமிஅடியேனைநோக்
கித்தேவரீர் சிசுபாலன்முதலிய அரசர்களுக்கு சமான
னுகாத என்னையேன்விவாகஞ்செய்துகொண்டாயென்
று அருளிச்செய்தீரே அதற்குஉதாரணஞ் சொல்லுகி
றேன் கிருபையாய்க்கேட்டருளவேண்டுமென்று கூறிச்
சொல்ல ஆரம்பித்தனள் - பிரமன்முதலியதேவர்கள்ஏ
வற்பணிசெய்யவும் கோடானுகோடியண்டங்களைச் சரீ
ரத்திற் படைத்து மிருக்கின்றதேவரீர் முதற்காரணத்
திற்காக இல்லறவாழ்க்கையாகிற சம்சாரத்தைப்பரமசு
கமென்றுநினைத்துமோசம்போகிறவர்களாயும் கழுதை
போல் சுமையெடுத்தும் செக்கிற்பூண்டிருக்கின்ற எரு
துபோலச் சுழன்றும் நாய்போலஅவமானப்பட்டும்சே
வகன்போலஏவற்செய்தும்தோல்களாலும்மயிர்களாலு
ம்நகங்களாலும் எலும்புகளாலும் புழுக்களாலும மல
மூத்திரங்களாலும்வாதபித்தசேத்துமங்களாலும்நிறை
ந்து சீவனேடுகூடிய சவம்போலத்திரியுகிற இரண்டு
கால்மாடுகளான அவ்வரசருக்குச் சரியாவீரோ அப்
படிப்பட்ட அரசர்களைத் தேவரீருடைய கடாக்ஷத்திற்
குப் புறம்பானவர்கள் அடியவார்களேயன்றித் தேவரீரு
டைய திருவடிகள் இடைவிடாமல் பக்திசெலுத்துகின்
ற அடியேன்எனைடையுவேன் இராஜாக்களுக்குப்பயந்து
சமுத்திரத்தை யடைந்தவ னென்பதற்கு-உ-ம்-சாத்து
விகம்முதலியமுக்குணங்களும் மனதுமுதலியபஞ்சே
ந்திரயங்களுக்கும் இதுகளாகிற இராஜாக்களுக்கு எட்
டாதஅகாதமாய ஒருவராலும்அளவிடக்கூடாதஆழமு
டைய பிராணிகளின் இருதயமாகிற சமுத்திரத்தைய
டைந்திருக்கின்றீ-ஒருவரிடத்திலும் சம்பந்தமில்லாதவ
னென்பதற்கு-உ-ம்-பிராணிகளுடைய தேகத்திலும்ஆ
ன்மாவினிடத்திலும் சம்பந்தமில்லாமற்படிக்கு மயமா
னகிரகத்திற்குள்ளே வைத்ததீபத்தைப்போல் கியான

வான்களுக்குத் தேஜோமயமாய்ப் பிரகாசிக்கின்றீர்பலவான்களுக்கு விரோதியென்பதற்கு-உம் - இந்திரியநிக்கிரகஞ்செய்யாதவர்களாகிற பலவான்களுக்குப் பிரத்தியக்ஷமாகாதவிரோதியேயன்றிவேறல்ல- சிம்மாசனமில்லாதவனென்பதற்கு -உ-ம்-இராஜஆசனத் திலிருந்தால் பகவானுடைய திருவடிக்குப் புறம்பாவோமென்று உமதுமுன்னோர்களால் நிக்கிரகிக்கப் பட்டிருக்கின்றமையால்தேவரீருக்கென்னயிழிவுகுணயீனனென்பதற்கு-உ-ம் தேவரீருடைய திருவடித்தாமரைகளில் பெருகியஅமுதத்தைப்பானஞ்செய்கிற பாகவதர்களுடைய மார்க்கத்தையே இந்திரியநிக்கிரகஞ்செய்யாதவர்களாலறியக் கூடாமலிருக்கதேவரீருடைய குணத்தை ஆரறியப்போகின்றார்கள் தரித்திரர்களால் பூசிக்கப்படுகிறவனென்பதற்கு-உ-ம் இகலோகத்திற்குரிய ஐசுவரியத்தைநிலையில்லாததென்று விரும்பாதகியாணிகளாகிற தரித்திரர்களபரலோகத்திற்குரிய மோக்ஷமாகிறஐசுவரியத்தைவிரும்பிதேவரீரைப் பூசிக்கின்றார்கள்- தனவான்களால்பூசிக்கப்படாதவனென்பதற்கு-உ-ம்-நரகத்திற்குரித்தாயிருக்கின்ற ஐசுவரியத்தைவிரும்பி பிரமன்முதலியதேவர்களைப்பூசித்து அந்தஐசுவரியத்தையடைந்து தனவான்களென்று பெயர்பெற்றவர்களால் தேவரீரோன்பூசிக்கப்படுவீர்-தரித்திரனென்பதற்கு-உ-ம்- தேவரீருடையதிருவடிகளைத் தொழுகிறபாகவதர்கள் பிரமன்முதலியதேவர்க்களுடையபட்டணத்தையும் நிக்கிரகித்துஅதற்கும்மேலான மோக்ஷைசுவரியத்தை விரும்பிய தேவரீரைப்பூசிக்கின்றார்கள் அப்படியிருக்க தேவரீரெப்படிதரித்திரராவீர் தரித்திரர்களைப்பூசிக்கிறவனென்பதற்கு உ-ம்இல்லறவாழ்க்கையும்சொற்காதிபோகம்முதலியஐசுவரியமும் நிலையில்லாததென்று நிக்கிரகித்து யமநியமம்முதலிய அஷ்டாங்கயோக நிஷ்டர்களான தரித்திரர்களாகிற பரமயோகிகளை வெகுஆதரவுடன் பூசித்துத்தேவரீருடைய திருவடிகளிற் சேர்ப்பித்துக் கொள்ளுகிறீர் ஒருவர்நடைத்தையும் அனுசரியாதவனென்பதற்கு-உ-ம்தேவரீருடைய நடத்தையைவேதம் முதலியசாஸ்திரங்களனுசரித்திருக்க உபயோகமற்ற மானிடநடத்தையை யாதுகாரணத்திற்காக தேவரீரனுசரிக்கப்போகின்றீர் உனக்குச்சமானமாகாதவனென்பதற்கு உ-ம்-பிரமன்முதலிய தேவர்க்களால் சர்வோத்தமமாயிருக்கிற மோக்ஷைசுவரியத்தை விரும்பிப்பூசிக்கப் படுகிறதேவரீருக்கும் எளிதானஐசுவரியமும் சொர்க்காதி போகத்தையும் அபேட்சித்துப் பூசிக்கப்படுகிறயான்சரியாவேனோ பிச்சைக்காரனால் துதிக்கப்படுகிறவனென்பதற்கு உ-ம்.இல்லறவாழ்க்கையையும் நரகத்திற்குரிய ஐசுவரியத்தையுந் துறந்துபிச்சைக்காரர்களாயிருக்கிறசன்னியாசிகளால் சார்வகாலமுங்கீர்த்தனஞ்செய்யப் படுகின்றீர்பதட்டத்தினாலென்னை விவாகஞ்செய்தாயென்பதற்கு உ-ம் பாயங்களைப்போக்கத்தக்கதான தேவரீருடையதிருவடிகளில்மனதைவைத்து உலகங்களை நிராகரித்துப்பார்த்துஇதில்சாரமானபொருள்தேவரீரொன்றுநன்றாயுணர்ந்து அடைந்தவளே யன்றி பதட்டத்தினாலல்ல எனதிட்டத்திலிருந்தால்கஷ்டப்படுவாயென்பதற்கு-உ-ம்தேவரீரையடைந்து கஷ்டப்படுவதாயிருந்தால்அகண்டமண்டலாதிபதியாகயிருந்து சுகத்தையனுபவித்தபிருதுசக்கிரவர்த்தி பரதசக்கிரவர்த்தி ஸௌச்சக்கரவர்த்தியயாதிமுதலியவர்கள் தங்கள்சுகத்திற் குரித்தான நாடுநகரத்தைத் துறந்துகாட்டிற்குச்சென்று அனேககாலந்தவசுசெய்து யாதுகாரணத்திற்காக தேவரீருடையதிருவடிகளை யடைந்தார்கள்-யானுன்னை விரும்பாதவளென்பதற்கு-உ-ம்தேவரீருக்குஅடியேனாலாகவேண்டியதொன்றுமில்லாவிடினும் கருணைக்கடலான தேவரீர்எம்மையேபர்த்தாவாககோறினவளென்று கிருபைகூர்ந்து அங்கீகரித்ததேபோதுமானது-எவனையாவதுதேடிக்கொள்ளென்பதற்கு-உ-ம்-அடியேன் தேவரீரையோ பர்த்தாவாகமுக்கியமாய்க்கோறியிருக்க இதரமானவர்களை வரித்தேனென்று சொன்னால் காசிராஜபுத்திரியான அம்பையைப்போட்டுக்கிணையாகுமல்லவா-அமுதத்தைவிட்டுவிஷத்தை யபேட்சிப்பதுபோல அப்படிப்பட்ட அபாக்கியத்தையான் செய்யவில்லையென்று ருக்குமணீ தேவியானவள்ஸ்ரீகண்ணபிரானருளிச்செய்தவார்த்தைகளையெல்லாம் பகவத்குணமாகச்சொன்னதுகேட்டு சுவாமியானவர் சந்தோஷசித்தராய் ஸ்ரீருக்குமணிதேவியைப்பார்த்து ஒருவார்த்தையருளிச்செய்கின்றார்.

ஸ்ரீபகவான்வாக்கியம்.

கேளாய் மாதுசிரோமணியேஇப்படிப்பட்டஉனதுமதுரமானவார்த்தையைக்கேழ்க்கக்கருதிஉன்னையான்பரிகாசஞ்செய்தேன்நீ அகாரணமாய்ப் பிராணிகளிடத்திலன்புகூர்ந்து உனதுகடைக்கண்பார்வையாற்பார்த்து சகலசம்பத்துக்களையும் அடையும்படிசெய்கின்ற மகாதயாளுவாகையாலென்னிடத்திலும் அன்புகூர்ந்து உனதுசுயம்வரத்தில்சகல அரசர்களும்வந்திருக்க அவர்கள்யாவரையும் விரும்பாமல்இரகசியமாயஎனதுகருத்தைப்பிராம்மணரிடத்தில் பத்திரிகைமூலமாய் இரவும்பகலும் நித்திரையில்லாமல்உன்மீதுமயலாகி யிருக்கின்றஎனக்குத்தெரியப்படுத்தினையேஅதற்கிணையாய்யானென்னவுபகாரஞ் செய்யப்போகின்றேன் மேலும்உன்னை இரதத்தில் தூக்கிவைத்துக்கொண்டு துவாரகாபுரத்திற்குவருகிறசமயத்தில் உனதுசகோதரனை உருக்குமியானவன்யுத்தஞ்செய்யவந்து என்னால்பரிகாசமாய் ஐங்குடிமிவைத்து க்ஷவரஞ்செய்து அவமானப் படுத்தின

போது கொஞ்சமேனும் என்னிடத்திற் கோபமில்லாமலிருந்தையே அந்தப்பொறுமையினாலுன்னால் நான் ஜயிக்கப்பட்டேன் உன்னைப் போலமாது சிரோமணிஉலகத்தில் நானெங்குங்கண்டிலேன் நீனந்தப்பதவியையடைந்துசுகமாயிருக்கக்கடவாயென்று அனுக்கிரகித்தருளினர்.

கூக-வது-அத்தியாயம்.

கலிவிருத்தம்,

பெற்றபிள்ளையும் பேரன்றன்மார்களும்
வெற்றிபெற்றபிரத்யுமனன்விவாகமும்
பற்றிளப்பல ராமருருக்மியை
வெற்றிசெய்த விதமும்விளம்புவாம்

ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு பதினாயிரத்தறுநூற்றியெட்டுமனைவியர்களிடத்தில் பிறந்தபிள்ளைகளும் பேரன்மார்களும் பிரத்தியுமனனுடைய விவாகமும் அப்பால்அனிருத்தனுடைய கல்யாணஞ் செய்யும்போது பலராமரானவர் கிருஷ்ண சுவாமியினுடைய மைத்துனனுஉருக்குமியை சங்கரித்ததுஞ் சொல்லப்படுகின்றன.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

கேளீர் மகாராசனே அந்தபதினாயிரத்திஅறுநூற்றியெட்டுமனைவியர்களுக்கும் தனித்தனிவீடுகள்அமைத்துவைத்து தாம்அத்தினைஉருவமாய் தங்களிடத்திலிடைவிடாமலிருக்கிறதாக நினைக்கும்படி ரதிக்கிரீடையில்சிறந்தவர்களாயும் இந்தஅண்டத்துக்குள்ளிருக்கின்ற சகலபிராணிகளுடைய மனதை கலங்கும்படிசெய்யவல்லமையுடையவர்களாயிருக்கின்ற அந்தமாதர்களுடையஇஷ்டத்தை நிறைவேற்றி ஒவ்வொருமனைவிக்கு பத்துப்பிள்ளைகள் விழுக்காடு தமக்கு சமானமாக உருவமும மேனியும்பூஷணமும் உடையவர்களாய் பிறந்திருந்தார்கள்அவர்களில் ருக்குமணிதேவிக்கு பிரத்தியுமனன்முதலியபத்துபிள்ளைகளும் சத்தியபாமைக்குபானுமுதலியபத்துபிள்ளைகளும் ஜாம்பவதிக்குசாம்பன்முதலியபத்துபிள்ளைகளும் நக்னசித்தைக்குஅசுவசேனன் முதலிய பத்துபிள்ளைகளும் காளிந்தியென்பவளுக்கு சோமகன் முதலிய பத்துபிள்ளைகளும் லக்ஷ்மணைக்கு கோத்திரவான்முதலிய பத்துபிள்ளைகளும் மித்திரவிந்தைக்குஅரசன்முதலிய பத்துபிள்ளைகளும் பத்திரையென்பவளுக்குஅநலன்முதலிய பத்துபிள்ளைகளும் இப்படியாகஅந்தபதினாயிரத்தறுநூற்றியெட்டுமடைந்தையர்களுக்கும்உற்பத்தியானர்கள். அவர்களில்சவுந்தரியசிகாமணியானமன்மதனாகிய பிரத்தியுமனனனவன் தனது மனைவியாகியஇரதிதேவியானவள் தன்னுடைய அம்மானாகியஉருக்குமிக்கு மகளாகப் பிறந்திருந்தனள் அவளுக்கு விவாகஞ்செய்ய சகலஅரசர்களும்வரவேண்டி சுயம்வரஞ்சாட்டியிருந்தான் அதுகேட்டு ருக்குமணிதேவியானவள் தனதுகுமாரனை பிரத்தியுமனனுக்கு அந்தஉருக்குமவதியைக்கொடுக்கவேண்டுமென்று தனது தமையனைஉருக்குமிக்கு இரகசியமாய்ச்சொல்லியனுப்பியிருந்தனள்அதுகேட்டுத்தனக்குத்தங்கையாகியருக்குமணிதேவியிடத்திலன்புகூர்ந்து அவ்வண்ணமே கொடுக்கநிச்சயித்துகிருஷ்ணன் தனக்கு எவ்வளவுசத்துருவாயிருந்தாலும் அதைலட்சியஞ்செய்யாமல் கருத்தைதெரிவித்தனன் அந்தச்சுயம்வரத்திற்கு பிரத்தியுமனன் போஜகூடமென்கிற பட்டணத்திற்குச்சென்று அந்தச்சுயம்வரத்தில்வந்திருக்கின்ற அரசர்கள்நடுவிலிருக்கின்ற உருக்குமவதியை கிருஷ்ணபகவானது அனுக்கிரகபலத்தால்பலம்விருத்தியடைந்து தைரியத்துடன் அவ் வரசர்களைக்கொசுவாகநினைத்து பருந்தானது மாம்சத்தைக்கிரகிப்பதுபோலஎடுத்தனன் அப்போது உருக்குமியானவன்விரோதத்தைப்பாராட்டாமல் கிருஷ்ணன்முதலியயாதவர்கட்குத்தெரியப்படுத்தி வரவழைத்து அந்தப்பிரத்தியுமனனுக்கு தனதுகுமாரத்தி உருக்குமவதியைமணஞ்செய்துகொடுத்தனன் அப்படியே கிருஷணபகவானுடையகன்னிகைகளைத் தருந்தவிடத்தில் விவாகஞ்செய்துகொடுத்துசுகமாயிருந்தனர் இப்படியிருக்கையில்பிரத்தியுமனனுக்கு உருக்குமவதியிடத்தில் அநிருத்தன்உற்பவித்தனன் அவனுக்கு உருக்குமியினுடைய பௌத்திரியானரோசனையென்பவளையும் அந்தருக்குமணி தேவியிடத்தில் அன்பினால் விவாகஞ்செய்துகொடுக்கநிச்சயித்துஅப்பொழுது விரோதத்தைப் பாராட்டாமல் ஸ்ரீகிருஷணன் முதலியவர்களுக்குத் தெரியப்படுத்தி பத்தினிசமேதர்களாய் எல்லாரையும்வரவழைத்துஅவர்களைவிதிப்பிரகாரம்பூசித்து சாஸ்திரவிதியின்படி விவாகம்நிறைவேற்றினபின்பு சகலமானசம்பந்திகளுக்கும்விருந்துசெய்வித்து சந்தோஷமாயிருக்கையில் அந்தஉருக்குமியென்பவனுக்குத்தோழனைகலிங்கனும்அவனோடேகூடவந்த அரசர்களும் உருக்குமியைப்பார்த்தொருவார்த்தைசொல்லுகிறார்கள்கேளீர் என தன் புள்ளதோழனே இந்தப்பலராமருக்கு சொக்கட்டானாடத் தெரியாதுக்கம்மோடு சொக்கட்டானாடவேண்டுமென்று கருத்துமாத்திரம் மெத்த விருக்கின்றது இவனைநாம் பந்தியம்வைக்கச்சொல்லி அந்தச்சொக்கட்டானாட்டத்தி லிவனைத்தோர்க்கடித்து பந்தியத்தைப் பறித்துக்கொள்ளவேண்டுமென்றுபலராமரை ஆட்டத்திற்கழைத்து அவருடன்ஆடிமுதற்பந்தியம் விராகநூறு இரண்டாம்பந்தியம்விராகன்ஆயிரம் மூன்றாம்பந்தியம் விராகன்பதினா

யிரம்இதுகளோ உருக்குமியானவன்ஜயித்தான் அப்போதுசால்வன்முதலியவர்கள் கைகொட்டிச்சிரித்தார்கள்அதைப்பொறுத்துக்கொண்டு பலராமரானவர் லட்சம்விராகன்பந்தியம்வைத்துஅந்தஆட்டத்தைதாம்ஜயித்தார் அப்போதுஉருக்குமியானவன் தானேபலராமனைஜயித்ததாகச்சபைநடுவிற்சொன்னான் அதற்கும்பலராமர்பொறுத்துக்கொண்டு கோடிவிராகன் பந்தியம்வைத்துஆடிபலராமரேஜயித்தார் அப்பொழுதும் உருக்குமியானவன்தானேஜயித்ததாகச் சொன்னபோது ஆகாசவாணியும்பலராமர்ஜயித்தாரேயன்றி உருக்குமி ஜயிக்கவில்லையென்றுகூற அதையுங்கேளாமல் பலராமரைப்பார்த்துகேளிர்பலராமா இந்த ஆட்டம் புத்திமான்களாடத் தக்கதுஉங்களுக்கு கானகத்திற்றிரிந்து மாடு மேய்க்கவும் கழுதையும்கொக்கையும் கொல்லத்தெரியுமேயன்றி சொக்கட்டாடத்தெரியுமோவென்று உருக்குமியானவன்சபைநடுவிற் பரிகாசமாய்ச்சொன்னதுகேட்டு ஸ்ரீபலராமர்கடுஞ்சினமடைந்து தமதுகையிலிருந்த கலப்பையால் அந்தவுருக்குமியையடித்து சங்கரித்துப்போட்டார்அப்போதுகலிங்கதேசாதிபன் வெகுவாய்ப்பயந்துசபையைவிட்டோடினான் அப்போதுபலராமர் பிச்சென்று அவனைப்பிடித்து சொக்கட்டாடத்தெரியாதென்று பரிகாசஞ்செயதஅவனுடைய பல்லை உதிர்த்துப்போட்டார்தன்னைப்பரிகாசஞ்செய்யச்சே கேட்டுக்கொண்டிருந்த அரசர்களைச்சின்னபின்னமாக அடித்து கைபோனபேர்களுங் கால்போனபேர்களும் மார்பு பிளந்தவர்களுமாகச்செய்து திக்குவிதிக்குகளிற் சிதறவடித்தார் இதைக்கேட்டஸ்ரீகிருஷ்ணன் தமதுமைத்துனனை உருக்குமியை ஏன்சங்கரித்தீரென்றுகேட்டால் பலராமருக்கு கோபம் உண்டாகும அவனைச்சங்கரித்ததற்கும் புகழ்சசியாயிருக்தால்ஸ்ரீருக்குமணிதேவிக்குக் கோபம் வருமென்றுமகானுபாவனான ஸ்ரீகிருஷ்ணன் மௌனமாய்ச்சகலயாதவர்களுடன் வாகனத்தின் மீது ஆரோகணித்து துவாரகைக்குச்சென்று சுகித்திருந்தனர்.

---

௬௨ - வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

விந்தையாகிய விஷ்ணுவின்பேரனும்
அந்தமானவ னுருத்திரன்றனைப்
பந்தபாணசுரன் பந்தனத்தினில்
தொந்தமாய்வைத்தசோர்வினைச்சொல்லுவாம்,

ஸ்ரீகிருஷணபகவானுக்குப்பேரனான அனிருத்திரனானவன் பாணசுரனால் பந்தனத்தில் வைக்கப்படுவதைசசொல்லுகின்றன.

கேளிர் பாதவட்சேரப்பவனான பரிட்சித்து மகாராசனேமகாபலியென்றொருஅரசனிருந்தான் அவனுக்குநூறுபேர் குமாரர்களுண்டாகினர் அவர்களில் முதல்வனானபாணசுரனானவன் மிகுந்தபயபக்தியுடன் சிவனைப்பூசித்தான் அவனதுபூசைக்குசிவன்மெச்சி உனக்குவேண்டியவரத்தைக்கேளென்றுகூற அப்போதந்தப் பாணசுரனானவன்மிகுந்த களிப்புடன் அம்மஹாதேவனைநோக்கிஒருவார்த்தைசொல்லுகின்றனன், கேளீர்எமதாண்டவனானபரமசிவனே நீர்பிரதமகணங்களுடனெனதுபட்டணத்திற்குக்காவலாளியாயிருக்கவேண்டுமென்றுபிரார்த்திக்கின்ற பாணசுரனுடைய கருத்தின்படி யிசைந்துவரங்கொடுத்து அவன்பட்டணத்திற்காவற்காத்துக்கொண்டிருக்கையில் ஒருநாள் பாணசுரனானவன் சிவபெருமானைக்குறித்து உமதருளினால் அடியேனுக்கு பலமுதலிய சகலசம்பத்தும் மென்மேலும பெருகவுண்டாயிற்றுதேவரீர்தவிரமற்றயாவரும் எனக்குநிகராயுத்தஞ்செய்யமாட்டார்கள் தேவரீர்கொடுத்த ஆயிரங்கைகளும்யுத்தஞ்செய்யவேண்டுமென்று விரும்புகின்றது அதெப்போதுநேரிடுமென்று கூறுகின்ற பாணசுரனுடையவார்த்தையைக்கேள்வியுற்று கடுஞ்சினமாய் அந்தப்பாணசுரனைப்பார்த்து நீஎன்னை அகங்கொண்டு கேட்டமையால்உனதுபட்டணத்திலிருக்கின்ற கொடிஎப்போது அறுந்துகீழேவிழுகின்றனவோ அப்போது நீஎன்னிலும்அதிகமானவனுடன் யுத்தஞ்செய்து உனக்குகர்வபங்கமுண்டாகப்போகின்றதென்று தெரிந்துகொளளென்றுகூறுகின்றசிவபெருமானுடைய மொழியைக்கேட்டுபாணசுரன்தனது அரணமனைக்குச்சென்றனன் அவனுக்குஉஷையென்றொரு குமாரத்திபிறந்து நாளொரு வண்ணமாகமிகுந்த ரூபலாவண்ணியத்துடன் வளர்ந்திருந்தனள்அவளொருநாள் தனது அந்தப்புரத்தில்நித்திரைசெய்துகொண்டிருக்கையில் தனதுகனவில் ஸ்ரீகிருஷணசுவாமியினது பௌத்திரனான அனிருத்தன் தன்னுடன்புணர்ச்சிசெய்ததாகக்கண்டு நித்திரைதெளிந்து விழித்துப்பார்க்கையில் அம்மணவாளனைக்காணமல்அவன்மீதுமயலாகி காதல்கொண்டு உணவுநித்திரைமுதலியசுகத்தைநிவர்த்தித்து வியசனைப்படுகின்ற அந்தஉஷாதேவியைப்பார்த்து அவளதுதோழியான சித்திரரேகையானவள்ஒருவார்த்தை சொல்லுகின்றனள் கேளாய்எனதன்புள்ளதோழியே உனது மெலிந்திருக்கிறசரீரத்தையும நடக்கையும் பார்த்தால்கொழுநன்மீதாவிருப்பமுள்ளவளாய்த்தோன்றுகின்றன அதனைஎமக்குக் கூறினால்உனதுகருத்தின்வண்ணங் கூட்டுறவுசெய்கிறேனென்று கூறினகும்பாண்டனுடைய குமாரத்தியான சித்திரரேகையினது வார்த்தைகளைகேழ்வியுற்று அவளைப்பார்த்துஉஷாதேவி ஒருவார்த்தைசொல்லுகின்றனள்.

கோமளமென நன்புள்ள தோழியே உனக்குச் சொல்லத்தகாதவார்த்தை யாதொன்றுமில்லை ஆகிலும்ஒருஇரகசியமானவார்த்தை சொல்கிறேன்கேள் எனதுகனவில் பசுமையானசரீரம்படைத்தவனும் தாமரைநிகர்த்தகண்ணுடையானும் மஞ்சளாடையணிந்துகொண்டுவாசுகி போன்றஉருண்டு திரண்டுநீண்டு வெழுமூண்டிருக்கிற கைகளையுடையவனும் மடந்தையர்களுடைய பாக்கியமாகிறஉருவங்கொண்டிருக்கின்ற ஒருதிவ்விய புருஷன் தனதுஉதடாகிற அமுதத்தைஎனக்குத்தந்துஉண்ணச் செய்துஇப்போது எங்கையோ ஒளித்துக்கொண்டான் ஆகலால் எனக்குஉணவு நித்திரைமுதலிய சுகத்தில்விருப்பமில்லாமலிருப்பதல்ல எனது தேகமெலிந்துவிருசமாகினேனென்றுகூறின உஷாதேவியினது வார்த்தைகளைக்கேட்டு சித்திரரேகைசொல்லுகின்றனள். கோமளனதன்புள்ளசகியே நீ யாதொன்றுக்குஞ் சிந்தனைப்பட வேண்டியதில்லை உனது துக்கத்தை யான்ஆற்றுகிறேன் என்றுஅவளைத்தேற்றி அவடத்திலிருந்துவெளிப்பட்டு பூமியிலுள்ள சகலஅரசர்களையுந் தேவதானவ முதலியவர்களையும் துவாரகாபுரத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான்பிரத்தியுமனன் அநிருத்தன்முதலிய சகலயாதவர்களையும படத்திலெழுதிக்கொண்டுவந்து உஷாதேவிக்குக்காட்ட அவளதனைப்பார்த்து படங்கள்யாவையும் நிவர்த்தித்து பிரத்தியுமனனுடைய படத்தைமாத்திரம் மாமனென்றுகூறி அப்பால்தனதுகனவினிற்கண்ட அநிருத்தனது படத்தைப்பார்த்து நாணமுற்றிருந்தனள் அதனைக்கண்டுசித்திரரேகையானவள் இவளது கனவிற்றோன்றியவன் அநிருத்தனென்றுகருதி உஷாதேவியைநோக்கி யிதோஅந்த மகாபுருஷனை உனதருகிற் சேர்ப்பிக்கிறேனென்றுகூறி ஆகாயத்திற்கிளம்பிதுவாரகாபுரஞ்சென்றுதிரஸ்கரணியென்கிற வித்தையால் அநிருத்தனை சப்பிரகூட மஞ்சத்துடன் தூக்கிக்கொண்டு சோணிதபுரமென்கிற பாணாசுரனுடைய பட்டணத்தில் புருஷனுற் கண்ணெடுத்துப் பார்க்க ஒவ்வாத உஷாதேவி யினது அரண்மனையிற் கொண்டுவந்து சேர்த்து உஷாதேவிக்குக் காட்டினள்அப்போது உஷாதேவியானவள்மரணத்தைஅடைந்தவள்பிழைத் தெழுந்திருப்பதுபோல எழுந்திருந்துபார்த்து ஆனந்தக் கடலிலாழ்ந்தவளாகஅவனைக்கனவினிற்கண்டநாள்முதல் காணுதிருந்தவிரகந்தணிய ஆலிங்கனஞ்செய்துரதிக்கிரீடையில் தனதிஷ்டத்தின்படி அவனுடன்போகித்து சுகித்திருந்தனள்அநிருத்தனும் ரூபலாவண்ணியத்திற்சிறந்த அம்மாதுசிரோமணியினதுபோகத்தில்திருப்திமிகுதியாய் இரவென்றும் பகலென்றும் இத்தனைநாளாச்சு தென்றுந்தோற்றமல் மோகாந்தகாரத்தில்மூழ்கியிருந்தனன்-

இப்படியிருக்கையில அந்தஅந்தப்புரத்தைக்காக்கிற காவலாளிகள் அந்தஉஷாதேவியினது அங்கங்களிலிருக்கின்ற வித்தியாசமான குறிகளையும் அதைத் தெரியவொட்டாமலநாணத்துடன் மறைப்பதுங்கண்டுசம்சயமடைந்து தாமாய் அந்தப்புரத்தை பரிசோதிக்கக்கூடாதென்றுபாணாசுரனுடைய அண்டையிற் சென்றுஅவனைச்சாஷ்டாங்கமாகபணிந்துஅஞ்சலி கூப்பிக்கொண்டு அவனைப்பார்த்தொருவார்த்தை சொல்லுகின்றார்கள் கேளீர்மகாராஜனே,தேவரீர்குமாரத்தியினுடைய அந்தப்புரத்தைக்காக்கச்சொல்லமேமிந்தபடிகாத்திருந்தோம்இப்போதவளுடைய அங்கங்களின் குறிகளைப்பார்த்தால் உமதுகுலத்திற்கு யோக்கியமாயிருக்கவில்லை,அதைவிசிதமாய் ஆராய்ந்துணரஉமதாக் கினையில்லாததினல் தேவரீருக்குத்தெரியப்படுத்தினேமென்றுகூறுகின்ற அந்தப்புரக்காவலாளிகளினது வார்த்தைகளைக்கேட்வியுற்று நமக்கும்இப்படிவாய்க்குமாவென்றுமனவருத்தத்துடனெழுந்திருந்துதனதுகுமாரத்தியாகியஉஷாதேவியினதுஅரண்மனையிற்பிரவேசித்துப் பார்க்கிறபோது உலகங்களுக்குள் முக்கியமான அழகைவாய்ந்தவனுயும பசும்பொன்னிறம்போன்ற தேகத்தையுடையவனுயும் பீதாம்பரதாரியாய்மகா குண்டலங்களை அணிந்து தெளிவுபொருந்திய புன்னகையுடையவனுயும் இருக்கின்றஅநிருத்தன் சவுந்தரியசிகாமணியானஉஷாதேவியுடனேஓராசனத்திலுட்கார்ந்துசொக்கட்டானுடுவதைக் கண்டு வெகுகாயிதாவுடன் கட்டுக்காவலாயிருக்கின்ற காவலாளிகளுக்குத் தெரியாமல்வந்ததுமன்றி இந்தக்கன்னிகையினதுயர்ப்பையுமழித்துக் கொஞ்சமேனும் பயமில்லாமல் சொக்கட்டானுடுகின்றான்பார்த்தையாவென்றுநினைத்துநிற்க சமீபத்தில்வந்து நிற்கின்றபாணாசுரனைப்பார்த்துதிடுக்கிட்டு சொக்கட்டானுடுவதைநிவர்த்தித்துஅவடத்திலிருந்து ஒருகதையைக்கரத்திற்றாங்கி எதிரேநின்றான் அப்போது பாணாசுரனுடன் கூடவந்தஜனங்களாயுதத்தினலநிருத்தனை அடிக்கயத்தனஞ் செய்தார்கள், அவர்களயாவையும் அடித்துத் துரத்திவிட்டான் அதைப்பார்த்துபாணாசுரனுக்குக்கோபமீறி அநிருத்தனை நாகபாசத்தாற்கட்டி சிரச்சாலையிற் போட்டுவிட்டான் அதனைக்கேட்டஉஷாதேவியானவள் மிகவும்மனவருத்தமுற்றிருந்தாள்

## ௬௩ - வது அத்தியாயம்

கலிவிருத்தம்.

உந்துகண்ணபிரானுடனேகியே
அந்நபாணாசுரனையதஞ்செயச்
சிந்தைகூர்ந்துசிவபெருமானுடன்
தொந்தவுஷ்ண சுரமுந்துதித்ததே

ஸ்ரீகண்ணபிரானவர் பாணாசுரனோ டெதிர்த்து அவனது ஆயிரங்கைகளைத்துணித்ததும் சிவபெருமானும் உஷ்ணசுரமும் ஸ்ரீகண்ண பிரானைத்துதித்ததுஞ்சொல்லப்படுகின்றன,

கேளீர்குருகுலோத்தமனானபரிக்ஷித்துமகாராஜனே துவாரகாபுரத்தில் நித்திரைசெய்த அனிருத்தனைக்காணாமையால் அவனை நினைத்துக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணன்முதலிய யாதவர்களும் ஸ்ரீருக்குமணிதேவிமுதலியமாதவர்களும் நான்குமாதமாய் விசனப்பட்டுக்கொண்டிருக்கின்ற சமயத்தில் அவர்களண்டையில் மூன்றுகாலமுஞ் சொல்ல வல்லமையுடைய நாரதமாமுனிபானவர்வந்தனர் அவரைக்கண்டு விதிப்படிக்குப் பூசித்து ஆசனஞ்சமர்ப்பிக்க அவர் அதன்மீதுஉட்கார்ந்து கேளீர்யாதவர்களே சோணிதபுரத்திற்கதிபனானபாணாசுரனது குமாரத்தி உஷாதேவியென்பவள் அநிருத்தனை அபகரித்துக்கொண்டுபோய் தனதுமன்மததாபத்தைச் சாந்தஞ்செய்துகொண்டிருந்தாள் அதுகேட்டு பாணாசுரன்நாகபாசத்தாற்கட்டிசிறைச்சாலையில்வைத்திருக்கின்றான் இதுகளை யானறிவேனென்று கூறுகின்ற நாரதருடைய வார்த்தைகளைக் கேழ்வியுற்றுபிரத்தியுமனன்-சேகிதானன்சாத்தகி-கதன்-சாம்பன்சாரணன்-நந்தன்உபநந்தன்முதலிய யாதவர்கள் பனிரண்டு அக்குரோணி சேனைகளுடன்ஸ்ரீராமகிருஷ்ணரை முன்னிட்டுக்கொண்டு இரதாரூடர்களாய் அதிகத்துறையாய்ப்புறப்பட்டு சோணிதபுரஞ்சென்று அந்தப்பட்டணத்தை நான்குபக்கத்திலுஞ்சுற்றிக்கொண்டு நந்தவனத்திலுள்ள தருக்களைத்துணித்து அகிழைக் குற்று மதில் சுவரை பொடிப் பொடியாயிடிப்பதைப் பாணாசுரன்கண்டுகடுங்கோபங் கொண்டுதானும்பனிரண்டு அக்குரோணிசேனைகளைக் கூட்டிக்கொண்டு வெளிப்பட அப்போது உமாமகேசுவரன் விநாயகன்-சுப்பிரமணியன்முதலிய பிரதமகணங்களையுங்கூட அழைத்துக்கொண்டு ஸ்ரீராமகிருஷ்ணரோடே யுத்தஞ்செய்யவந்தார் இப்படிபாணாசுரனானவன்சிவனுடைய சகாயனாய் யுத்தத்திற்குவந்த ஸ்ரீகிருஷ்ணபகவானுடன்உருத்திரனும் பிரத்தியும்னனுடன் சுப்பிரமண்ணியனும், ஸ்ரீபலராமருடன்பாணாசுரனுடைய மந்திரியான கும்பாண்டனும் சிருபனும் சம்பனுடன் பாணாசுரனும் சாத்தகியுடன் விநாயகரும் இப்படியாக யுத்தஞ்செய்கிறதைப்பார்க்க ஆகாயத்தில்பிரமன் முதலியதேவர்களும்நாரதர்முதலியதேவரிஷிகளும்வந்துபார்த்துக்கொண்டிருக்கையில்அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவானானவர சிவனோடுகூடவந்தசாகினிடாகினி பேதாளமுதலியபிரதமகணங்கள் யாவையும் சின்னபின்னமாகச் சிதறஅடித்தார்; அப்போது பார்வதீபதியானவர்தமதுபிரதமகணங்களைத் தூரத்தினதைப்பார்த்துக் கடுஞ்சினமடைந்து ஸ்ரீகிருஷ்ணபகவான்மீது அநேகபாணங்களைப் பிரயோகஞ்செய்தார் அதனைப்பிரதிஅஸ்திரங்களாற்றுணித்துப்போட்டு ஸ்ரீகிருஷ்ணபிரான்சிவன் மீதுபிரமாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்தனர்அவரும் அந்தப்பிரம்மாஸ்திரத்தையேபிரயோகஞ் செய்துஉடனேவாயுவாஸ்திரத்தைப்பிரயோகித்தார் அதனைஸ்ரீகிருஷ்ணன் பர்வதாஸ்திரத்தாலடித்துப்போட்டார்பிறகு சிவன்அக்கினிபாஸ்திரத்தைப்பிரயோகித்தார் அதைஸ்ரீகிருஷ்ணபகவான் வருணாஸ்திரத்தால் தடைசெய்தார் பின்புசிவன்பாசுபதாஸ்திரத்தைப்பிரயோகித்தார் அதனைஸ்ரீகிருஷ்ணசுவாமி நாராயணாஸ்திரத்தைப் பிரயோகித்துத்தடுத்துவிட்டுமோகனாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்துசங்கரனைமயக்கும்படி செய்தார் அப்போது சம்புவானவர்வெகுமோகத்தை அடைந்து இந்தவேளையில்இந்தக்காரியஞ் செய்யவேண்டுமென்று உணராமல்நிகைப்பூண்டு மிநித்தவர்போல் மயங்கியிருக்கையில் ஸ்ரீகிருஷ்ணபகவான் அவரைவிட்டுபாணாசுரனுடைய சேனையைத்தமது ஆயுதங்களாலடித்துப்போட்டு பாணாசுரனுக்கெதிராகவந்தார் அப்போதுபாணாசுரன் சாத்தகியுடன் யுத்தஞ்செய்வதைவிட்டு ஸ்ரீகிருஷ்ணபிரானுக்கெதிரேஓடிவந்துதனது ஆயிரங்கைகளால்பாண வருஷங்களை ஸ்ரீகிருஷ்ணபகவான்மீதுவருஷித்து சுவாமியினதுதிருவடிமுதல்திருமுடிவரையில் ஊசிநாட்ட விடமில்லாமலடித்தான் அப்போதுஸ்ரீகிருஷ்ணன் தமதுசாரங்கமென்கிறவில்லைவளைத்து அதிலநேக பாணங்களைச் சந்தானஞ்செய்து அந்தப்பாணங்கள் யாவையும் துணித்து அவனுடைய அஸ்திரதனுசையும் சாரதிகுதிரை-கொடிகுத்துக்கால் அச்சக்கள்நெகத்தடி முதலியதுகளை முறித்துப்போட்டு நாராசபாணத்தைப்பிரயோகஞ்செயது அவனதுமார்பைப்பிளந்து தமதுபாஞ்சஜன்னிய மென்கிற சங்கத்தைப்பூரித்தார், அதைபாணாசுரனுடைய அன்னையான கொட்டறியென்பவள் கேட்டுதனது புத்திரனைப்பிழைப்பிக்கவேண்டுமென்று வஸ்திரமில்லாமல் நிர்வாணமாய்த் தலையைவிரித்துக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணனுக்கும் பாணாசுரனுக்கும் நடுவில்ஸ்ரீகிருஷ்ண பிரானைப்பார்த்துக்கொண்டேவந்து நின்றாள் அப்போதுசுவாமிஅவளைப்பாராமல் முகத்தைத் திருப்பிக்கொண்டார்அந்தச்சமயத்தில் பாணாசுரன்யுத்த பூமியைவிட்டு கால்நடையாகப் பட்டணத்திற் கோடிப்போயினன்அப்போது உருத்திரமூர்த்தியானவர் தாமும்தமதுபிரதமகணங்களும்அபஜயப்பட்டதற்கு வியப்புடனிருக்கையில் அவரிடத்திலுண்டான தாபசுரமானது மூன்றுதலை மூன்றுகாலுடன் அதிகபயங்கரமாய் ஸ்ரீகிருஷ்ணபகவானுடன்யுத்தஞ்செய்து ஜயிக்கவேண்டுமென்றுகருதி எதிரேநிற்கிறபோது ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் தமதிடத்திலநி

ன்றும்சீதசுரத்தையுண்டுபண்ணிசிவபிரானுடையதாப
சுரத்துடன்யுத் தஞ்செய்யச்சொல்லியனுப்பினர் அந்தச்
சீதசுரவேகத்தில் தாபசுரம் நிற்கமாட்டாமல் மிகவுந்து
ன்பத்தையடைந்துயாம் ஸ்ரீகிருஷ்ணபகவானைத்தானே
சரணம்புகாவிடில் சுரமுண்டாகமாட்டாதென்றாலோசி
த்து அதிவேகமாக ஓடிவந்து ஸ்ரீகிருஷ்ண ஸ்வாமியை
சாஷ்டாங்கமாகப் பணிந்துமிகவும்பயபக்தி யுடன்தோ
த்திரஞ்செய்யஆரம்பித்தன

கேளீர்ஜகதீசனே அனந்தசக்திமானான தேவரீரைச்
சேவிக்கின்றேன் சர்வேஸ்வரனாய்சகல ஜகத்காரணனா
யிருக்கின்ற தேவரீர்அடியேனிடத்தில் கிருபைகூர்ந்து
தேவரீருடைய ஒளியில்நின்றும்விருத்தியடைந்தசீதசு
ரத்தினுடைய தொந்தரையில்லாமல்அடியேனைஇரட்சி
த்தருளவேண்டும்காலரூபியாகியும்கர்மரூபியாகியும்கர்
மத்தினாலுண்டானபயன்சொரூபியாகியும்சகலசகத்துக்
கும்சாட்சியாகியும்சூத்திரதாரியைப்போலசீவாத்துமா
வைதிருப்புகிறவராகியும் மச்சமுதலிய அவதாரங்களை
யடைந்து யோகிகளையும் ரிஷிகளையும் சாதுக்களையும்
சம்ரக்ஷணஞ்செய்து பூமிக்குப்பாரமாயிருக்கின்றஜரா
சந்தன் முதலியவர்களைச்சங்கரிக்கிறதற்காகஅவதரித்த
தேவரீரைச்சரணமடைகின்றேனென்றுசொல்லுகின்ற
சிவனுடையதாப சுரத்தைப்பார்த்து ஸ்ரீபகவா னொ
ருவார்த்தை அருளிச் செய்கின்றார். கேளாய் தாப
மே, உனது துதிக்கு யான் மெச்சிக்கொண்டேன் இ
னி உனக்கு எனதுசீதசுரத்தினால் துன்பமுண்டாகாது
உன இஷ்டத்தின் படியே சொல்லென்று கூற அது
வும் சுவாமியைத் தெண்டன் சமர்ப்பித்துப் போட்டுசி
வபெருமானிடத்தி லயித்துப்போயின. அப்பால்பாணா
சுரன்இளைப்பாறி வேறொரு இரதத்தி லாரோகணித்து
க்கொண்டு சுவாமிக்கெதிரேவந்துநின்று பாணவருஷங்
களைவருஷித்தான் அப்போது ஜகதீசனான சுவாமியான
வர் சக்கிரப்பிரயோகஞ் செய்து அவனது ஆயிரங்கரத்
தையுங்கண்டித்துவிட்டார் அதைச்சிவபெருமான் கண்
டுஸ்ரீகிருஷ்ணனண்டையிலோடிவந்து தாம்பாணாசுரனு
க்குக்கொடுத்தவரம் பொய்யாகப்போகிறதென்றுபரதே
வதையான ஸ்ரீகிருஷ்ணபிரானைத்துதிசெய்ய ஆரம்பித்
தனர். கேளீர்சுவாமி ஸ்ரீகிருஷ்ணா மூடஜனங்கள் தேவ
ரீருடையமாயையிலகப்பட்டுமோகிதர்களாய் பரப்பிரம்
மமானதேவரீரைமறந்து அடியேன்முதலிய தேவதைக
ளைப்பரதேவதையென்று பிரமித்து பூசைசெய்து நிலை
யில்லாதசொர்க்கமுதலிய போகத்தை அடைகின்றார்கள்
தேவரீரால்யாதொருவர் சம்பூர்ணமாக அனுக்கிரகிக்க
ப்படுகின்றார்களோ அவர்கள் தங்களுடைய யோகபலத்
தினால்இருதயகமலத்தில்சங்குசக்கர கதாபாணியாய்சே
வைசாதிக்கிற தேவரீரைக்காணுவார்களேயன்றி மற்றவ
ர்களப்படிக்குக் காணமாட்டார்கள். விராட் புருஷரான
தேவரீருக்கு சொர்க்கம் நாபியும்முகம்அக்கினியும் திக்
குகள்-காதுகளும்-பூமியே-திருவடிகளும்-ஜலமேசுக்கில
மும்-சந்திரசூரியர்கள்-திருக்கண்களும்-அடியேன்-தே
வரீருடைய கோபமும்-சமுத்திரம்-உதரமும்-இந்திரன்
முதலியதிக்குப்பாலகர் திருக்கைமுதலியஅங்கங்களும்
சகல ஔஷதிகள் சரீரத்தின் ரோமமும் ஆகாயம்-சிரசும்
மேகங்கள்-தலைமயிர்களும்-பிரமதேவன்-புத்தியும்-விச
ர்க்கம்-பிரஜாபதியும்-தர்மமே-இருதயமும்-இப்படி மூவு
லகையும் சரீரமாகப்படைத்ததேவரீர் அடியேன் முதலி
யதேவர்களை இரட்சிக்கவேண்டி இப்படிஅவதரித்திரு
க்கின்றீர், ஆதிமூலப்பொருளாகியும்- சுயம்பிரகாசராகி
யும்-ஆபத்துவாயுமிருக்கின்ற தேவரீருடையதிருவருளி
னால்நானுசிதமான பாபயோனிகளில் ஜனித்ததோஷங்
களைப்போக்கி மேன்மையானமானிடஜன்மத்தைஅடை
ந்து மோட்சத்தைக் கிருபைசெய்யும்படியான தேவரீரு
டையதிருவடியை மறவாமல் ஆராதனஞ்செய்து துதிக்
கின்றவனே மேன்மையானவன் அவனுடைய ஜனனமும்
சபலமானது அவனதுவம்சமும்உத்தமமானது அவனு
க்குநிகரானபாகவதோத்தமனும் ஒருவனுங்கிடையாது
சகலப்பிராணிகட்கும் இஷ்டமாயிருக்கின்றஆன்மாவுக்
கொப்பான தேவரீரை விட்டு வேறொரு தெய்வத்தைத்
தொழுகிறவர்கள் கையிலிருக்கின்ற அமுதத்தை எறிந்
துபோட்டுபிரயாசைப்பட்டு விஷத்தைச் சம்பாதிப்பது
போலாவார்கள். அப்படிப்பட்ட மகிமையைவாய்ந்ததே
வரீருடைய திருவடிபஜனைசெய்கின்றமகாயோகிகள்பர
மபுருஷார்த்தமாயிருக்கின்ற மோட்சத்தை அடைகிறா
ர்களென்றுகருதி அடியேனும் பிரமன்முதலியதேவர்க
ளும் தேவரீரைச் சரணம் அடைந்து மோட்சத்தைவி
ரும்புகிறோம்.

மேலும்இந்தபாணாசுரன் அடியேனுக்குமிகவும்அன்
பன்அவன்நிமித்தத்தில் வெகுவாய் வரங்கொடுத் திருக்
கின்றேன் அதுபொய்யாமலிருக்க தேவரீரும் அனுக்கி
ரகித்து இரட்சிக்கவேண்டுமென்று துதிக்கின்றஉமாப
தியான சிவனைப்பார்த்து வசுதேவகுமாரனான ஸ்ரீ கிரு
ஷ்ணபிரான் ஒருவார்த்தை அருளிச் செய்கின்றார். கே
ளீர்சங்கரரே உமதுகருத்தின்படி இந்தப் பாணாசுரனை
யானும்அனுக்கிரகித்தேன் மேலும் இவனுக்கு இரண்
டாம்பாட்டனான பிரகலாதனனுக்குஉனதுவம்சத்தானை
யான் கொல்லுகிறதில்லையென்று வரங்கொடுத் திருக்கி
ன்றேன் அதினாலும் நான் இவனைச்சங்கரியாமல்இவன
துகர்வத்தைப்போக்க ஆயிரங் கரங்களையுந் துணித்து
நான்குகைகளைநிறுத்தினேன்.நான்குகைகளோடுதேவ
ர்களைப்போல ஒருவராலும் ஜயிக்கக்கூடாமல் உமதுபி
ரமதகணங்களுக்குள் முதல்வனாகியிருக்கக்கடவனென்

றனுக்கிரகஞ்செய்யப்பனா, சுப்பிரமணியரோடும்யுத்தஞ்செய்கின்ற பிரத்தியும்னனால்பிரயோகிக்கப்பட்ட பாணங்கள்சரீரத்தைப்பிளக்க இரத்தங்களைப்பெருக்கிக்கொண்டோடிப்போனர் பாணாசுரனுடைய மந்திரிகளான குப்பாண்டனும்கிருபகர்ணனும் ஸ்ரீபலராமரோடுயுத்தஞ்செய்து அவரது ஆயுதமான உலக்கையா லடிக்கப்பட்டு சரீரங்கள்பிளந்து இரத்தங்களை வாயினாலும்மூக்கினாலுங்கக்கிக்கொண்டு மூர்ச்சித்துவிழுந்தார்கள் அப்போது பாணாசுரனுடைய சேனைகளயாவும் சின்னா பின்னமாய் மூலைக்குமூலையோடிப்போயின அப்போது பாணாசுரனவன்சிதறிப்போன சேனைகளை ஒருமிக்கச்சேர்த்துப்போட்டுதனது நகரத்தினுட்பிரவேசித்து அநிருத்தனையும்உஷாதேவியையும் இரதத்தின்மீதேற்றிக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணபகவானன்னடையில்விட்டு சாஷ்டாங்கமாகத்தெண்டன்சமர்ப்பித்து அடியேன்செய்த அபராதத்தை மன்னித்துஅடியேனுடைய புத்திரியான உஷாதேவியை அங்கீகாரஞ்செய்து அடியேனை இரட்சித் தருளவேண்டுமென்று வினவுகின்ற பாணாசுரனுடைய கருத்தின்வண்ணம் அவன்செய்த அபராதத்தைப்பொறுத்து சிவபெருமானுடன் அவனுக்குவிடைகொடுத்து தாம்தமது பவுத்திரனை அநிருத்தனையும் உஷாதேவியையும் அப்படியேயிரதத்தின்மீதேற்றிக்கொண்டு சகலவாத்தியங்கள்முழங்க வேதியர்களாசீர்வதிக்க தேவர்கள் புட்பமாரிசொரிய-அப்சரஸ்திரீகள்நடிக்க-கந்தருவர்கானஞ்செய்ய இதுமுதலிய வைபவத்துடன் துவாரகைக்குச்சென்று அரண்மனைமுதலிய பட்டணங்கள்யாவும் அலங்கரிப்பித்துசாஸ்திரவிதியின்படி அநிருத்தனுக்கும்உஷாதேவிக்கும்விவாகமகோற்சவம் நிறைவேற்றினர்.



## ௯௪ - வது - அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்,

ஆதவன்தவழுகின்ற வயோத்திமாநகர்க்குவேந்தை
வேதமார்பூசுரன்றன் விரிவுளவோணுகப்
போதவேஜெபிக்கக்கண்ட புண்டரீகாட்சனப்போ
வேதனைதன்னைநீக்கி விளங்கிடுமவாறுசொல்வாம்

அயோத்தியாபட்டணத்திற் கரசனான நிருகமகாராசன்அனேகம் பசுமுதலிய தானஞ்செய்துகொண்டுவந்தவனைஒருபிராம்மணன் அனேககாலம் ஓணான யிருக்கும்படிசபித்ததும் அதைஸ்ரீகிருஷ்ணபகவான் நிவாரணஞ்செய்து ஐசுவரியத்தினால் கர்வித்திருக்கின்ற யாதவர்களுக்குப் பிராமணர்களுடைய மகிமையைத் தெரிவித்துபிரம்மசொத்தை அபகரித்தவனெவனுக்காலும் கடைத்தேறமாட்டானென்பதையுஞ் சொல்லுகின்றது,

கேளீர் பரதவம்சோற்பவனான பரிட்சித்து மகாராசனேஸ்ரீகிருஷ்ணபகவானுடைய கிருபையினால் சகலயாதவர்களும் பயமற்றவர்களாய் துவாரகாபுரத்திற் சமீபத்திலிருக்கின்ற நந்தவனத்திலேவிளையாடி இளைப்புற்றுதாகத்திற்குதீர்த்தம்வேண்டுமென்று வனமெல்லாந்திரிந்தொரிடத்தில் பெரியதூறவிருக்கக்கண்டு ஜலத்தைவிரும்பிஆவலோடு எட்டிப்பார்க்கையில் மலைபோன்றதேகத்தையுடைய ஒருஓணானைக்கண்டு வியப்புற்றுபிரத்தியும்னன்முதலிய ஸ்ரீகிருஷ்ணனுடையகுமாரர்கள்யாவரும்மிகுந்ததயைகூர்ந்து அந்தஓணானை வெளிப்படுத்த அனேகவடங்கள் கயிறுகள் முதலியவற்றாற்கட்டி தங்கள் பலங்கொண்டது தூக்கிப்பார்த்து அசைக்கமாட்டாமல் ஓடிவந்து ஸ்ரீகிருஷ்ணபகவானுடன்சொன்னார்கள் அதுகேட்டுசுவாமி அந்தக்ஷணத்திற்றானேபுறப்பட்டுப்போய்அந்தஓணானைக்கண்டு தமது இடதுதிருக்கையினாலெளிதாக வெளியிலெடுத்துவிட்டார் அந்தகரஸ் பரிசப்பிரபாவத்தினால் சாபத்தினின்றும் நீங்கினவனாய் அந்தநிருகமகாராசன் தனது நிசரூபத்தோடுகூடிய சரீரத்தை வாய்ந்துதனது மணிமயமானகிரீடம் சுவாமியினதுதிருவடியில்படும்படியாய்த் தெண்டன் சமர்ப்பித்து களங்கமற்றவனாய் எதிரேநிற்கின்றநிருகமகாராசனைப்பார்த்து ஸ்ரீகிருஷ்ணன் ஒருவார்த்தை அருளிச்செய்கின்றார்கேளீர்மகாபுருடனே உமது ரூபத்தைப் பார்த்தால் தேவதையைப்போல் காண்கின்றது உமக்கு இப்படிப்பட்டநிகிருஷ்டமான சன்மம்வரக்காரணமென்ன அதைஎனக்குச்சொல்லக்கூடுமானால் விசிதமாய்ச்சொல்லுமென்று கூறுகின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவானைப்பார்த்து நிருகமகாராஜன் ஒருவார்த்தைசொல்லுகின்றான்கேளீர்தேவதேவோத்தமனான சுவாமிஅடியேன் இட்சுவாகுவம்சத்திற்பிறந்தநிருகமகாராசாவென்று பெயருடையவன் தானஞ்செய்பவர்களில் அடியேனைபெரியவர்களில் நினைக்கும்படியாக நற்குணமுடைய தலையீத்துக்கிடாரிகளாயும்நல்லஅழகுள்ளதாயும் காமதேனுவுக்கொப்பாய் பால்கறக்கத்தக்கதுகளாயும் கொம்புகளுக்கு சுவர்ணபட்டங்களும் குளம்புகளுக்கு வெள்ளிப்பூண்களடித்தும்பரிசுத்தமான வெள்ளைவஸ்திரத்தினால் அலங்கரித்தும்பால்கறக்க வெண்கலப்பாத்திரத்துடன் எண்ணிக்கையில்லாதபசுக்களையும் பூமி-சொர்ணம்-இரதம்-யானை- குதிரைகன்னிகைமுதலிய தானங்களை உத்தமகுலத்திற்பிறந்தும்நற்குணம் நல்லொழுக்க முடையவர்களாயும் வைதீகநிஷ்டை ஆகிதாக்கினி உடையவர்களாயும் குடும்பிகளாயும்தரித்திரர்களாயும் தவப்பேற்றை யுடையவர்களாயும்நான்குவேதம் ஆறு சாஸ்திரங்களையும் பிரம்மத்தினு

டைய நிச்சயத்தை நன்றாய் ஆராய்ந் துணர்ந்தவர்களா யும்பிரசித்தர்களாயும்மனைவியர்களுடனிருக்கின்றபிரா ம்மணர்கட்கு உத்தமமான க்ஷேத்திரத்தில் நல்ல புண் ணியகாலங்களில் தானஞ்செய்துகொண்டிருந்தேன் ஒ ருநாள்தானஞ்செய்யும்பசுக்கூட்டத்தில் அதற்குமுந்தி னநாள்தானஞ்செய்த பசுக்கூட்டத்திலின்றும் ஒருபசு தப்பிகலந்தது அதுதெரியாமல் தானஞ்செய்துப்போட் டேன் அதை அந்தப் பிராம்மணோத்தமன் ஓட்டிக்கொ ண்டுபோகையில் பசுவைப் பறிகொடுத்த பிராம்மணன் அப்பசுவை தேடிக்கொண்டு வரும்போது இந்தக்கும்ப லில் தனது பசுவிருக்கக்கண்டு அந்தவேதியனைநோக்கி உமக்கிப்பசுயேது எனதுமந்தையிலின்றும்எப்போது திருடிக்கொண்டு போனீரென்று கூறுகின்ற வேதியனை நோக்கிநிருதமகாராசன் இப்போதுதான்இந்தப்பசுக்கூ ட்டங்களைத் தானஞ்செய்தான்உமதுபசுவையான்திருட வில்லைஉமக்குச்சந்தேகமிருந்தால் நிருதமகாராஜாவினி டத்தில்வந்தால் ருசுப்படுத்துகிறேன் அப்படிக்குருசுப் படுத்தாவிடில் ஒருபசுக்குப்பத்துபசுதருகிறேனென்று வாதாடிக்கொண்டுவந்து எனதுசமுகத்தில் அநேகநாள் காத்திருந்து என்னைக்காணுமற்போகையா லவர்கள்கடு ஞ்சினமடைந்து யாசகர்களாயிருக்கிற எங்களுக்குத்தரி சனங்கொடாமல் அந்தப்புறத்திலேயே யிருப்பதால்நீஇ ன்றுமுதல் அனேககோடிவருடம் ஒருவர் கண்ணுக்குத் தென்படாத ஒருபாழுங்கிணற்றில் ஓணானாயிருக்கக்கட வாயென்றுசபித்தார்கள் அதுகேட்டு அவர்கள்சமீபத்தி ற்குச்சென்று அவர்களைச்சாஷ்டாங்கமாகப்பணிந்து அ வர்களுடையதிருவடிகளை பற்றிக்கொண்டுஒருபசுவுக்கு லட்சம்பசுதருகின்றேன் எனதுசாபத்தைநிவர்த்திசெய் யவேண்டுமென்றுவெகுவிதமாய்ப்பிரார்த்திக்கையிலவ ர்களடியேனிடத்திலன்புகூர்ந்து பக்தவத்சலனானஸ்ரீமந் நாராயணன்ஸ்ரீகிருஷ்ணனாகஅவதரிக்கப்போகிறா ரவர துகரஸ்பரிசத்தினாலுனதுசாபவிமோசனமாகுமென்று கூறியந்தவிவாதப்பட்டபசுவை வேறொருபிராமணனுக் குத் தானஞ்செய்துபோட்டு போய்விட்டார்கள்பிறகுஎ னதுபுத்திரனுக்கு இராச்சியபாரஞ்செய்யப்பட்டங்கட் டிப்போட்டு சாபத்தைஅநுபவிக்கச்சித்தமா யிருக்கை யில் பிணியால்தேகத்திற்கொருஉபத்திரவம்நேர்ந்துஅ துமூலத்தில்யமதூதர்களால் அழைக்கப்பட்டுயமசபை க்குச்சென்று நிற்கையில்அப்போதுயமதருமராஜன் எ ம்மைநோக்கிநீ அநேககோதானமுதலியது செய்திருந் தாலும்பிராமணசாபம் நேர்ந்திருக்கின்றமையால் அந் தச்சாபத்தை முன்னேஅநுபவிக்கின்றீரா அல்லதுதா னஞ்செய்ததினாலுண்டான புண்ணியபயனை அநுபவி க்கின்றீராவென்று கேட்டார்அப்போதடியேன் பாபபய னைமுன்னேஅநுபவிக்கின்றேனென்று சொன்னேனந்த க்ஷணம் என்னைக்கீழேதள்ளச்சொல்லிப்போட்டு அந்த ரத்தானமாய்ப்போனார்.

பிறகுஅடியேன் இப்படிப்பட்டவிகாரரூபமான ஓணா னாகஉருவங்கொண்டுஇந்தகிணற்றில்தானே தேவரீரு டைய திருவடியைத்தியானித்துக்கொண்டிருந்தேன் அ ந்த மகிமையினால்சநகாதியோகிகட்கும் காணக்கிடைக் கதாஅருந்தெய்வமான தேவரீருடைய சேவைகிடைத் ததுஅடியேனைப்போலஅதிருஷ்டசாலிஒருவருக்கிடை யாது வாக்கினாலும் மனதினாலும அளவிடப்போகாதம கிமையை வாய்ந்த திவ்வியசக்திமானான தேவரீர்எவை க்காகாதஅடியேனிடத்தில் கிருபைகூர்ந்து சேவைசாதி த்தபடியால் அந்தணர்சாபமும் அடியேனுக்குவிமோச னமாயின தேவதேவோத்தமனாய்சகலஜகதிற்கும்சுவா மியாய் புருஷோத்தமனால் உத்தமசுலோகனாயுமிருக்கி ன்றதேவரீர் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்வ தற்காகதேவகீகர்ப்பத்திலவதாரஞ் செய்தருளினீர்அடி யேனிடத்தில்கிருபைகூர்ந்துஇரட்சிக்க வேண்டுமென் றுஸ்ரீகண்ணபிரானைத்தோத்திரஞ்செய்து அநேகத்தர ந்தெண்டன்சமர்ப்பித்து அஞ்சலிகூப்பிக் கொண்டுநிற் கையில்அப்போதுமிகவும் வியப்புள்ளதோர் விமானம் ஆ காயவீதியில்வரஅதுகண்டுசுவாமியிடத்தில் விடைபெ ற்று அந்தவிமானத்தின்மீது ஆரோகணஞ்செய்துசகல யாதவர்களும்பார்க்கதிவ் வியசரீரத்துடன் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய அநுக்கிரகத்தினால் சொர்க்கலோகஞ் சென்றனன் அதைப்பார்த்து சகலயாதவர்களும் வியப் பையடைந்தார்கள்அப்போது ஸ்ரீகிருஷ்ணன் யாதவர்க ளைப்பார்த்து கேளுங்கள்யாதவர்களே உலகத்திலிருக்கி ன்ற வஸ்துக்கள் யாவும் செரித்தாலும்பிரம்மசொத்து ஒருநாளும்செரிக்காது ஆலகாலமென்கிற விஷத்தைப் புசித்தவனைமாத்திரங்கொல்லும் அதற்கும்மருந்துஅக ப்படும்பிர்ம்மசொத்தையபகரித்தால் அபகரித்தவனையு ம்அவனதுதாய்தந்தையர்களுடையவர்க்கத்தையும்கொ ல்லும் அதற்குமருந்துயாதொன்றுமில்லை ஆதலால்நம துயாதவர்கள்யாவரும்பிர்ம்மசொத்தை விரும்பவேண் டுவதில்லை பிராம்மணர்கள்துற்பாஷையாய் திட்டினாலு ம் அடித்தாலும் அவர்களிடத்தில்சினங்கொள்ளாமல்ப ணியவேண்டுமேயன்றிஒன்றுஞ் செய்யலாகாது அந்தப் பிராம்மணனிடத்தி லெவன்அபராதஞ்செய்கிறானோஅ வன்எனக்குப்புறம்பானவன் ஆதலால்நீங்களெல்லோரு ம்சகலவிதத்தா லும் யானெப்படி பிராம்மணர்களைச்சே விக்கிறேனோஅப்படியேநீங்களும்பணியுங்களென்றுஸ்ரீ கிருஷ்ணபகவானானவர் பிராம்மணர்களுடையபிரபாவ ங்களையாதவர்களுக்குஉரைப்பவர்போல உலகுக்குத்தெ ரியப்படுத்தி சகலயாதவர்களுடன்துவாரகா புரத்திற் கெழுந்தருளினார்.

## ௬௰௫ வது-அத்தியாயம்.

---

அருசீரடியாசியவிருத்தம்,

கண்ணனால் விரகங்கொண்ட கற்புள்ளஸ்திரீகள்தம்பால்-அண்ணனும்பலராமேந்திரன் அவர்கள் தம்மிடத்திற்சென்று-தண்ணளிக்கிருபைசெய்துசமாதானஞ்செய்வித்துப்பின், புண்ணியநதியைத்தம்பால போக்கியவிபரஞ்சொல்வாம்.

ஸ்ரீபலராமர் கோபிகைகளிடத்திற்குச்சென்றுஸ்ரீகிருஷ்ண சுவாமியினுடைய விரகத்தினால்துன்பப் படுகிற கோபிகை களைச்சமாதானஞ்செய்ததும் யமுனாநதியை ஸ்நானார்த்தமாய் தாமிருப்பிடத்திற்கு கலபையாகிற ஆயுதத்தினால் வரவழைத்ததும்பிறகுஅவர்கள்துதிசெய்ததுஞ் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

கேளீர்தரும சிலனானபரிட்சித்து மகாராஜனேசகல யாதவர்களும் ஸ்ரீகிருஷ்ணபகவானதுசகாயத்தினால்தேவர்களுக்கும் அரிதானஐஸ்வரிய முடையவர்களாய் சுகமாகவிருக்குங்காலையில் ஸ்ரீகிருஷ்ணஸ்வாமியால் அனுப்பவிக்கப்பட்டவராய் ஸ்ரீபலராமரானவர்தமக்கிஷடர்களான கோபாலர்களையுங் கோபிகைகளையும் பார்க்கவேண்டுமென்று இரதாரூடராய்கோகுலத்திற்குச்சென்று பிதாவான நந்தகோபனையும்மாதாவான யசோதாப்பிராட்டியாரையும் சாஷ்டாங்கமாகப்பணிந்து எதிர்நிற்கின்ற ஸ்ரீபலராமனை நந்தகோபரானவர்கட்டாலிங்கனஞ்செய்து மடியினில்வைத்துக்கொண்டுஉடம்பெல்லாந்தடவிமிகுந்தகளிப்புடன் அவனைப்பார்த்து வாராய்யாதவர்களுக்கெல்லாம் இரக்ஷகனாகி இராமனென்கிறதிருநாமத்தோடேவிளங்குகின்ற நீயும்உனக்குச்சகோதரனாயும் எங்களுக்குப் பிராணனாயுமிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணனோடேசுகமாக விருந்து இரட்சிக்கக் கடவாயென்று வாழ்த்தினார்கள். அப்பால் ஸ்ரீபலராமன் பெரியோர்களாயிருப்பவர்களைப்பணிந்துசிறியவர்களால் பணியப்பட்டுசமான வயதுடைய கோபாலர்களால் ஆலிங்கனம்பண்ணப்பட்டபிற்பாடு அவனைப்பார்த்துகோபாலர்களொருவார்த்தைசொல்லுகின்றார்கள். கேளீர்பலராமரே துவாரகாபுரத்தில்வசுதேவர் உக்கிரசேனர் ஸ்ரீகிருஷ்ணன்முதலிய சகலயாதவர்களும் ஸ்ரீருக்குமணிதேவிமுதலியசகலமாதர்களும் சுகமாயிருக்கின்றார்களாவென்று க்ஷேமங்களை விசாரித்துஸ்ரீகிருஷ்ணபகவான் தங்களைபால்லியத்தில் அனேகஆபத்துகளில் நின்றும் இரட்சித்ததுமுதலியவிளையாட்டுகளை நினைத்துத்துதித்துக் கொண்டு அந்தஸ்ரீகண்ணபிரான் எங்களையெப்பவாவது நினைப்பாராவென்று கேழ்க்கையில்அப்போது கோபிகைகள்யாவரும் ஸ்ரீபலராமனைக்கண்டமாத்திரத்தில் ஆனந்தபரவசர்களாய் அவனைச்சூழ்ந்து கொண்டுகேளீர் பலராமரேதுவாரகையில் வசுதேவர்தேவகீமுதலியவர்கள்க்ஷேமமாயிருக்கின்றார்களா ஸ்ரீகிருஷ்ணபிரான் சகலஸ்திரீகளோடேகூட இஷ்டமாய்விளையாடுகிறகாலத்தில்எப்பவாவதுஎங்களையும் தாய்தகைபர்களான யசோதைநந்தகோபனையும் நினைக்கின்றாரா யாங்கள் தாய்தந்தைமாமன்மைத்துனன் முதலியவர்களைத் துறந்துநிலையில்லாதஇவருடையசினேகத்தை நம்பிமோசம்போயும் அவரிடத்திலிருக்கின்ற அன்புமாத்திரம் எங்களைவிட்டு ஒழியவில்லை அந்த ஸ்ரீகிருஷ்ணபிரான் சநகாதியோகிகளையும்மோசப்படுத்துந் தன்மையுடையவராதலால்கியானமில்லாதவர்களாயும் பேதைமைகளாயுமிருக்கின்றயாங்கள்மோசம்போகக் கேழ்க்க வேண்டியதென்ன அவரென்னமோமோகக் காரராயிருந்தாலும் அவருக்கிணையாகஒருவனையுஞ்சொல்லக்கூடாது துவாரகாபுரத்திலிருக்கின்றமாதர்கள் மெத்தவும்புத்திசாலிகளாதலால் எங்களைப்போல மோசம்போகமாட்டார்கள், சுகம்அனுபவிக்கிற அவர்கட்கும்துக்கம்அனுபவிக்கின்ற எங்களுக்கும்பொழுதுமாத்திரம் சமமாய்ப்போகிறதென்றுசொல்லிதங்களுடன் ஏகாந்தவார்த்தை சொன்னதும்அவர்கிரீடித்தது முதலியதுகளை நினைத்துக்கொண்டு குரலைவிட்டழுதார்கள்,

அதைப்பார்த்துபலராமர் ஸ்ரீகிருஷ்ணசுவாமிசொன்னவார்த்தைகளால் அவர்களைத் தேற்றி பிரதக்ஷணஞ்செய்து நமஸ்கரித்து ஸ்ரீகிருஷ்ணபகவான் மதுராபுரத்திற்கெழுந்தருளின பிறகுஜனித்த கோபிகைகளோடேயமுனாநதிதீரத்தில் பூரணகலைகளுடன்கூடியசந்திரனைவாய்ந்ததாயும் மிகுந்தவாசனையொருந்திய புஷ்பங்களினுடைய வாசனையுடன்தென்றல்வீச மகாரம்மியமான வெண்மணற்குன்றினில் ஸ்ரீபலராமர்கிரீடிக்கின்றதைவருணன்தெரிந்துகொண்டுதனது புத்திரியாகியும் அந்தஆதிசேடனான ஸ்ரீபலராமருக்கு மனைவியாகியுமிருக்கின்ற வாருணியென்பவளை யமுனாதீரத்திற்குப் போகச்சொல்லி அனுப்பினான் அப்போதந்த வாருணியானவள் யமுனைஆற்றின் அருகிலிருக்கின்ற கடம்பவிருக்ஷத்தின் அருகிற்சென்று புதரிலிருக்கின்றதேன்கூண்டானதுபரிபக்குவகாலத்தில்வெளியினிற் பெருகுவதுபோல் தேனுருவமாகப் பெருகினள் -அந்தவாசனையுடனும் தாமரைஓடைகளுடைய புஷ்பங்களின் வாசனையுடனும்தென்றல்வீச அதை ஆக்கிராணித்துக் கொண்டேஅவ்வாறுஉற்பத்தியானகடம்பமரத்தின் அருகிற்சென்று அந்ததேனைப் பானஞ்செய்தனர் இப்படிதமக்குமனைவி

யானவாருணியென்கிற மத்தியத்தை கோபிகைகளோடு பானஞ்செய்து பெண்ணைக் கூட்டங்களின்நடுவில்விளங்குகிற ஐராவதம்போல்நின்று கானஞ்செய்கின்றஸ்ரீ பலராமரை ஆகாயத்திலிருக்கின்றசகல தேவர்க்களும் பார்த்து வியப்புற்றுபுஷ்பமாரிசொரிந்து துந்துமிமுதலிய அனேகவாத்தியங்கள்முழங்க தேவரிஷிகள் அந்த ஆதிசேடனுடைய பிரபாவங்களைச்சொல்லி தோத்திரஞ்செய்தார்கள் அப்போது கோபிகைகளுடன் மத்தியபானஞ்செய்து மதித்துகண்கள்சிவக்கஅனேகவிதபுஷ்பங்களினால் அலங்கரிக்கப்பட்டுநீலவஸ்திரமும்கவசகுண்டலமும்வைஜயந்தியென்கிறபுட்பமாலையுந்தரித்துபுன்னகையுடன் விளங்குகின்றஸ்ரீபலராமர்அம்மடந்தையர்களுடன் ஜலக்கிரீடைசெய்ய விரும்பிவெகுதூரத்திலிருக்கின்றயமுனையைதமது அருகிலழைக்கஅதை அவள்கொஞ்சமேனும் லட்சியஞ்செய்யாமற்போகையில்அதுகண்டு பலராமர்கடுஞ்சினமடைந்து தமதுகலப்பையை பிரவகிக்கின்றயமுனாநதியிற் போட்டிழுத்தார் அந்தவேகம்பொறுக்கமாட்டாமல்அதிவேகமாகஓடிவந்துஸ்ரீபலராமரைத்தெண்டன்சமர்ப்பித்து அஞ்சலிகூப்பிஒருவார்த்தைவிக்கியாபனஞ்செய்கின்றனள்.

கேளீர்சுவாமிஉலகரக்ஷகரே கியானமில்லாதபேதைமையான அடியேன்தேவரீருடைய பிரபாவத்தை அறியமாட்டாமலிப்படிப்பட்ட அபராதஞ்செய்தேன் அதை மன்னித்து திருவுள்ளத்திற்கோபமில்லாமல் நடக்கவேண்டியகாரியத்தை இன்னபடியென்று ஆக்கியாபித்தால்அந்தப்படிக்குநடந்து கொள்ளுகிறேனென்றுயமுனையால்பிரார்த்திக்கப் பட்டவனைத் துன்பப்படுத்தாமல்அம்மாதர்களோடு அம்மகாநதியில் ஜலக்கிரீடை செய்து வெளியில்வருகிற ஸ்ரீபலராமருக்குஅவருடையமனைவியான காந்தியென்பவள் நீலவஸ்திரங்களும் பூஷணங்களுங்கொண்டுவந்துசமர்ப்பித்து அலங்காரஞ்செய்தனள் சொர்னத்தினால்அலங்கரிக்கப்பட்ட வெள்ளிதலைபோல்விளங்கிக் கொண்டிருக்கின்ற ஸ்ரீபலராமர் அம்மடந்தையர்களுடையஇஷ்டத்தைப் பூர்த்திசெய்தனர் அம்மாதர்களும் சொர்க்கலோகத்திலும்அடையப்படாதவின்பத்தைபலராமராலடைந்து சுகித்திருந்தார்கள்.

---

### ௬௬ - வது - அத்தியாயம்.

சந்தக்கலிவிருத்தம்.

ஓதிடும்பவுண்டரீக வாசுதேவனென்றிடும்
ஆதவனிடத்திற்பஞ்ச வாயுதங்களுள்ளதால்
நீதநின்னிடத்திருக்கு மாயுதங்களநீக்கென
தூதனொருவன்சுவாமிபோலில் வந்துசொல்வ தாயினன்.

ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில் பவுண்டரீக வாசுதேவனென்கிறவனுடைய தூதன்வந்து சுவாமியைப்பார்த்து எமதாண்டவனான் பவுண்டரீகவாசுதேவனுடையசங்கு சக்கரமுதலியபஞ்சாயுதங்களையும் வாசுதேவனென்கிற பெயரும் நீர் வைத்துக்கொண்டிருக்கின்றமையாலதை நிவர்த்திசெய்துத் தம்மைப்பணிந்தாலன்றி உம்மைப்பிராணனுடன் வைக்கமாட்டோமென்றுசொல்லச்சொன்னாரென்றுகூற அதுகேட்டுஸ்ரீகிருஷணபகவான் அவனுடன் யுத்தத்திற்குப்போய் ஜயித்தாரென்றுஞ் சொல்லுகின்றது.

கேளீர் பரதசிரேஷ்டனான பரிட்சித்து மகாராசனே குருதேசத்திற்கதிபனான பவுண்டரீகனென்கிறஅரசனானவன்தான் வாசுதேவனென்றுந்தனக்குநிகரானவர்கள் உலகத்தில் யாருமில்லையென்று கருதிப்புலியைப்பார்த்துநரி சூடிக்கொண்டதுபோல்ஸ்ரீகிருஷணசுவாமியைப்போல் சங்குசக்கரம் கௌமோதகியென்கிற கதையும் சாரங்கமென்கிறதனுசும் நந்தகமென்கிறகத்தியும் இது முதலியபஞ்சாயுதங்களையும் ஆகாயத்தில் பறக்கும்படியான ஒருயந்திரமானகருடனும் தங்கத்தினாற்செய்து நவுஸ்துவமென்கிற இரத்தினத்தைக் கழுத்தினிற்பூண்டு கொண்டுஇப்படி நானாவிதமாயிருக்கிற பகவத்சின்னங்களைத்தரித்துதன்னிடத்திலிருக்கின்றஒருதூதனைஅழைத்துகேளாய்தூதா நீ துவாரகாபுரஞ்சென்று கிருஷ்ணனென்கிறகோபாலனுடன்யான்சொன்னதாகச்சொல்லு அதாவதுநீ நந்தகோபனுடைய புத்திரனாதலால்உனது குலத்திற்குரியதான மாடுமேய்க்குந் தொழிலைவிட்டுதின்றுகொழுத்து கண்டவனையெல்லா மடித்து உலகத்திலுள்ளமாதர்களுடையகற்பழித்து உலகெலாம் பழிக்கும்படியான காரியங்களைச் செய்கிறதுமன்றிஉலகத்திற்கீஸ்வரனானஎனது வாசுதேவ நாமதேயத்தை உலகத்தாரைப்போல் வைத்துக்கொண்டாலும்எனதுபாஞ்சஜன்னியமென்கிறசங்கம் சுதர்சனமென்கிறசக்கரம் கௌமோதகியென்கிறகதைசாரங்கமென்கிறதனுசுநந்தக மென்கிற கத்திகவுஸ்துவமென்கிற இரத்தினம் வைஜயந்தியென்கிற பூமாலை ஆகாயத்தினிற் பறக்கும்படியான யந்திரமாயொரு சொர்ன கருடன் இவைமுதலிய விருதுகளைநீயாய் சிருஷ்டிசெய்துகொண்டு எம்போலாகவேண்டுமென்றுகருதி யிருக்கின்றாய் கொக்கானது எத்தினை வெண்மை பொருந்தியிருந்தாலும் அன்னப்பறவைக்கிணையாகாததுபோல எனக்கிணையாவையோஎன்போலுனக்குஈஸ்வரனென்கிற கணிசமுண்டாகுமோவீணிலெனையேன்பகைக்கின்றாய் நீயிப்படி தகாதவேலை செய்துக்கொண்டிருக்கின்றமையால் உன்னைச்சிட்சிக்க யாருமில்லையென்றெண்ணவேண்டாம் யான்சித்தமாயிருக்கின்றேன்அதையறிந்து உனது பிராணனிடத்தி லாசையு

ண்டாயிருந்தால் எனது வாசுதேவனென்கிற நாமதேயத்தையும் பஞ்சாயுதமுதலிய சகலத்தையும் நிவர்த்தித்து இந்தவேலைகள் தெரியாமற்செய்தேனென்று என்னைப்பணிந்தால் உன்னிடத்தில் அன்புகூர்ந்து அந்தந்தப்பிழையைமன்னித்துரட்சிக்கிறேனென்று சொன்னதாய்நீ போய்சொல்லென்று தூதனுடன் சொல்லியனுப்பினான்.

அவனுமவ்வண்ணம் ஸ்ரீகிருஷ்ணபிரானண்டையிற் சென்று அம்மொழிகள் யாவையுமுரைக்க அதுகேட்டு அச்சபைதனிலிருந்த யாவரும்நகைத்தார்கள் அப்போதுபுன்னகையுடன் தூதனைப்பார்த்து ஸ்ரீகிருஷ்ணனொருவார்த்தைஅருளிசெய்கின்றார். கேளாய் தூதா நீயெந்தபிருதைதனன்னை நிவர்த்திக்கச் சொன்னயோ அதினுடையமகிமையையும் எந்த வாசுதேவனென்கிற நாமதேயத்தையு மாற்றிக்கொள்ளச் சொன்னையோ அதையும் நானையுத்தத்திற் காணபாயென்றும் யான் யுத்தத்திற்கு சன்னதமாகயிருக்கின்றேன் அவனையும் சாக்கிரதையாகவரும்படி யான்சொன்னதாகச் சொல்லென்றுகூற அதுகேட்டு தூதன் கிருஷ்ணபிரானை பிரதட்சணஞ்செய்துநமஸ்கரித்து அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு பவுண்டரீகவாசுதேவனண்டையிற்சென்று கிருஷ்ணபகவான்அருளிச்செய்த வார்த்தைகள்யாவும் உரைத்தனன் அதுகேட்டு நான்குஅக்குரோணிசேனைகளுடன்காசிதேசத்திற்கதிபனையுங்கூட அழைத்துக்கொண்டு யுத்தத்திற்குவந்தான் அதற்கு முன்னமே ஸ்ரீகிருஷ்ணனும் சன்னதமாகப்புறப்பட்டு-சங்கு-சக்கரம்-கதை-கோதண்டமுதலிய பஞ்சாயுதங்களைத் தரித்துக்கொண்டு ஸ்ரீவத்சமென்கிறமறுவை திருமார்பினில் வாய்ந்தவராய்பீதாம்பரதாரியாய் வனமாலையால் அலங்கரிக்கப்பட்டு கருடக்கொடியுடனிருக்கின்ற திவ்வியஇரதமேறிவிலையில்ல, தஇரத்தினங்களிழைத்தகிரீடத்தையும் குண்டலத்தையுந்தரித்துக்கொண்டுவருகின்றஸ்ரீகண்ணபிரானைக்கண்டுபவுண்டரீகனும்வேஷதாரியைப்போலதனதுவாசுதேவலட்சணத்திற்குரிய விருதுகளுடன்ஸ்ரீகிருஷ்ணஸ்வாமிக்கெதிரேவந்துநின்றான்.

அதுகண்டுஸ்ரீகிருஷ்ணஸ்வாமி வியப்புடன் சிரித்துக்கொண் டிருக்கையில் பவுண்டரீக வாசுதேவனுடைய சேனையானதுஸ்ரீபகவான்மீது சூலங்-கதைமுதலிய ஆயுதத்தையும் நாராசமுதலியபாணத்தையும் பிரயோகஞ்செய்தார்கள் அதற்குஸ்ரீபகவான்கொஞ்சமேனும்சலியாமல்தமதுநாராசபாணங்களாலும் சுதரிசனமென்கிற திவ்வியாயுதத்தினாலும் அவர்களுடையபாணங்கள் ஆயுதங்கள்யாவையும சூரணித்துஅந்தநான்கு அக்குரோணிசேனைகளையுமாய்த்து அவனதுதேர்-குதிரை-சாரதிகொடிமுதலியதுகளைத் துணித்து அவனைப் பாரிபாய்ப் பூமியில்நிறுத்தி அவனைப்பார்த்தொருவார்த்தையருளிச்செய்கின்றார் கேளாய்பவுண்டரீகனேநீமுன்பு தூதனுடன்சொல்லியனுப்பியவண்ணம் யான்செய்கிறேனென்றுஅவனது சககரமுதலிய ஆயுதங்கள்யாவையுந் துணித்துகருடனையுந்தமது கத்தியினாற்கணடித்து அந்தப்பவுண்டரீகனையும அவனுக்குச்சகாயமாய்வந்த காசிராசனையும்மாய்த்துவிட்டுசகல தேவகந்தருவர்சித்தசாத்தியர்முதலியவர்களால் துதிக்கப்பட்டுதுவாரகாபுரஞ்சென்றனர் அந்தப் பவுண்டரீகன் சார்வகாலமும் சுவாமியைதான்துதித்துக்கொண் டிருந்தமையால்யோகிகளடையும்பதவியை அடைந்தான்.

அப்பாலந்த காசிராஜாவின்குமாரனை சுதக்ஷணன் தனதுதந்தையிறந்ததற்குச் செய்யவேண்டிய உத்தரகிரியைகளை நிறைவேற்றி தனதுதந்தையைக்கொன்ற ஸ்ரீகிருஷ்ண பகவானைக் கொல்லவேண்டுமென்று புரோகிதருடன்சிவபெருமானை உத்தேசித்துதவஞ்செய்தனன் அவனுக்குசிவன் பிரசன்னமாகினர். அவரைப்பயபக்தியுடன்பணிந்துகேளிர் எனதன்புள்ள தெய்வமே என்றந்தையைக்கொன்ற ஸ்ரீகிருஷ்ணனைக்கொல்ல வேண்டும் அதற்குத்தக்கஉபாயத்தை அனுக்கிரகிக்க வேண்டுமென்றுகூறின சுதக்ஷணனுடைய வசனத்தைக் கேள் வியுற்றுசிவபெருமானொருவார்த்தைஅருளிச்செய்கின்றார்.

கேளாய்சுதட்சண தட்சிணாக்கினியில் அபிசார விதியினால் ஓமஞ்செய்தால் உனதுகருத்தின்படிபயனடையலாமென்றுகூறி அந்தர்த்தானமாகினர் பிறகுசுதட்சணனும் புரோகிதருடன்தட்சிணாக்கினியில் ஓமஞ்செய்தான் அதில்நின்றும் சிவப்புக்கம்பளிபோலத் தலைமயிரும் அக்கினிபோன்றகண்களும் பயங்கரமான உருவமும்திகம்பரமாயுந தலையைவிரித்துக்கொண்டு சூலத்தைக்கரத்தினிற்றாங்கி ஒருபனைமரப்பிரமாணமான கால்களுடன்பூமிநடுங்கும்படி தட்சிணாக்கினியில் நின்றும் வெளிப்பட்ட அந்தப்பூதத்தை சுதட்சணன் பார்த்து துவாரகாபுரத்தைத்தகிக்கச்சொல்லி அனுப்பினான் அதுகேட்டுஅனேகமாயிரம் பிசாசுகளுடன் துவாரகாபுரத்தைக் சுற்றிக்கொண்டெரிக்க அதுகண்டுஅவடத்திலுள்ளசனங்கள்பயந்து சபைதனில் சதுரங்கமாடிக்கொண்டிருக்கின்றஸ்ரீகண்ணபிரானண்டையிற்சென்று கேளிர்சுவாமி ஜகதீசா இதென்னயுகாந்தகாலம்போல் ஒருஅக்கினியானதுநமதுபட்டணத்தைச் சுற்றிக்கொண்டுதகிக்கின்றன ஆகலாலெங்களை இரட்சிக்க வேண்டுமென்று கிலேசப்படுகின்ற ஜனங்களைப்பார்த்துஅவர்கட்குஅபயப்பிரதானஞ்செய்து தமதுவலதுபக்கத்தில்அஞ்சலிசெய்துகொண்டிருக்கின்ற சக்கரத்தாழ்வானைநோக்கி கேளாய்சுதர்சனநீஅந்தஅக்கினியைப்போக்கி இவர்களுடைய துன்

பச்சை நிவாரணஞ்செய்யென்று ஆக்கியாபித்தனர் அதுகேட்டுமகாபாக்கியமென்றுசொல்லி சூரியனை நிகர்த்த ஒளியினைவாய்ந்தஅந்தசுதர்சனாழ்வான் வெகுவேகமாக ஓடிவந்துஅந்தப் பூதத்தைச் சுற்றிக்கொண்டாரப்போதந்தப்பூதமானது சக்கரத்தாழ்வானுடையவெப்பம்பொறுக்கமாட்டாமல் ஓடத்துடங்க அதைவிடாமல் பின்றுடர்ந்துபோய் அந்தக்காசிராசாவினது மைந்தனானசுதட்சணனையும் அவனதுபுரோகிதனையும் அங்குள்ள சனங்கள்யாவரையும் இந்தப் பூதத்துடன்தகித்து சாம்பலாகச்செய்துவிட்டுச் சுதர்சனாழ்வான்ஸ்ரீகண்ணபிரானுடையசந்நிதானத்தில்வந்து சேர்ந்தனர்.

## ௬௭-வது - அத்தியாயம்,

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பாரியபலராமேந்திரன் ரைவதபர்வதத்தில்
நாரியர்தங்களோடு நண்ணிடுஞ்சமயந்தன்னில்
சீரியதுவிதனென்போன் ஸ்ரீபலராமர்தன்னை
நேரினிற்பரிகாசத்தால் நிந்தித்ததனைச்சொல்வா

ஸ்ரீபலராமர் ரைவதக பருவதத்தில் கோபிகைகளுடன்விளையாடும்போதுவானரதுவிவிதனென்பவன் ஸ்ரீபலராமனைப்பரிகாசஞ்செய்ததும் அவனைஸ்ரீபலராமர்மாய்த்ததுஞ்சொல்லுகின்றன.

கேளிர் இராசசிகாமணியானபரிட்சித்துமகாராசனே பிராக்ஜோதிடாபதியான நரகாசுரனுக்கிஷ்டனாயும் சுக்ரீவனுக்குமந்திரியாயும் மயிந்தனென்கிறவானரருக்குத்தம்பியாயுமிருக்கின்ற துவிவிதனென்கிறவானரன்தனக்குஅன்பனானநரகாசுரனை ஸ்ரீகிருஷ்ணசுவாமிகொன்றனென்று அந்தவிரோதத்தினால் நானாவிதங்களான தேசங்கள பட்டணங்கள்முதலிய விடங்களிலெல்லாம் நெருப்புகளைப்போட்டுக்கொளுத்தி சிலவிடங்களில் பருவதங்களைப்போட்டுநாசஞ்செய்கிறதுமான அக்கிருத்தியங்களை அநேகமாச்செய்துகொண்டு துவாரகை முதலிய சகல தேசத்தையும் உபத்திரவித்துச் சமுத்திரத்தினுடைய மத்தியில இருக்கின்ற பட்டணங்கள் முதலியதுகளை முழுகடித்து கோவர்த்தன பர்வதத்தில் ரிஷிகளுடைய ஆசிரமத்திலிருக்கின்ற மரங்களை முறித்துமானிடரைப்பிடித்து குகைதனிலடைத்துஅக்குகையின் வழிதனைப்பாறைகளாலடைத்து அப்பால்ரைவதகபர்வதத்திற்குச்சென்று கோபஸ்திரீகளுடன் விளையாடிகொண்டிருக்கிற ஸ்ரீபலராமனைக்கண்டு ஒருமரத்தின்மீதேறி புஷ்பங்களை உதிர்த்துஅட்டகாசஞ் செய்தனன் அதுகேட்டு கோபஸ்திரீகள்வியப்புடன்நகைத்தார்கள அவர்களை அவ்வானரன்பார்த்து புருவங்களை நெறித்துக்கொண்டு அவர்களையாவரையும்பரிகாசஞ்செய்து துடுக்குச்செய்யலுற்றான் அதைப்பார்த்து ஸ்ரீபலராமர் அவன்மீது ஒருகல்லையெறிந்தனர் அதைஅவன்தப்பித்துக்கொண்டு ஸ்ரீபலராமருடைய அருகிற்சென்று அவரிடத்திலிருந்தமத்தியத்தினுடைய குடத்தையுமுடைத்து அவருடையவஸ்திரத்தையும்பறித்துக்கோபிகைகளுடைய ஆடையையும்பிடுங்கி சின்னபின்னமாகக் கிழித்தனன் இதுகளைப்பார்த்து ஸ்ரீபலராமர்கடுஞ்சினமடைந்து இனி இவனைச்சங்கரிக்காவிடில் உலகத்தை நாசஞ்செய்வானென்று கருதி உலக்கையுங் கலப்பையுங் கரத்தினிற்றாங்க அதுகண்டு அந்ததுவிவிதன் வேகமாகஓடிவந்தொருஆச்சாமரத்தைவேருடன்பிடுங்கிதனதுபலங்கொண்டதுசுழற்றி ஸ்ரீபலராமரது சிரசின்மீதுமோதினான் அதைப்பலராமர்கரத்திலிருக்கிறமதுசுனந்தமென்கிற உலக்கையால் அந்தவானரனுடைய சிரசிலடித்தார் அந்தஅடியினால்தலைபிளந்து இரத்தம் பெருகுவதையும் லட்சியஞ்செய்யாமல் வேறொரு விருட்சத்தைப் பிடுங்கிக்கொண்டுபலராமரை அடித்தான் அதையும்ஸ்ரீபலராமர் முசலத்தினாற்பிளந்துபோட்டார் அப்போதுவானரன்கடுஞ்சினமடைந்து தனதுஇரண்டுகரத்தினால் ஸ்ரீபலராமரைக்குத்தினான் அதைலட்சியஞ்செய்யாமலிருப்பதுகண்டு பாறைகளைக்கொண்டு அவர்மீதுகல்மழையாகப்பொழிந்தனன் அதையும்உலக்கையினால்சூரணித்து கலப்பையையும் உலக்கையையுங்கீழேவைத்துப் போட்டுவச்சிராயுதத்திற் கொப்பானதமது முஷ்டியினால் அந்தவானரனுடைய கழுத்தினிலோங்கிக்குத்தினார் அந்தக்குத்தினால் வானரனுக்குத்தலைபிளந்து வாயினாலும்மூக்கினாலும் இரத்தங்களைப்பெருக்கிக்கொண்டு பிராணனிழந்தான் அதைப்பார்த்துசகலரிஷிகளும்ஸ்ரீபலராமரைத்துதிசெய்யத்தேவர்கள்புஷ்பமாரி சொரியதுந்துபிமுதலியவாத்தியங்கள் முழங்கஇப்படிசகலசம்பிரமத்துடன் கோபிகைகள்சமேதராய்கோகுலஞ் சென்றுசகலகோபாலர்களையுங்கோபிகைகளையுஞ்சந்தோஷப்படுத்தி அவர்களிடத்தில்சிலவு பெற்றுக்கொண்டுஇரதாரூடராயதுவாரகாபுரத்திற்கெழுந்தருளினர்.

## ௬௮-வது அத்தியாயம்

கலிவிருத்தம்,

சூதுசெய்துரி யோதனராஜனும்
மாதுலக்ஷ்மணைக்குமணஞ்செய்வதாய்
சோதிசேருஞ்சுயம்வரஞ்சாட்டிட
சேதசாம்பனுக்குமணஞ்செய்தனர்

அஸ்தினபுரத்திற் கதிபனான துரியோதன மகாராஜன்தனது குமாரத்தியாளலக்ஷமணைக்குச் சுயம்வரஞ்சாட்டினதும், அதற்கு ஸ்ரீகிருஷ்ணபிரானுடைய குமாரனான சாம்பனென்பவன் சென்று அக்கன்னிகையைபலவந்தமாயெடுத்துக்கொண்டுபோனதும் அவனைகவுரவர்கள்பிடித்துக்காவற் படுத்தியதும ஸ்ரீபலராமனெழுந்தருளி அவனைவிடுவித்து தம்மிடத்தில்கர்வித்த துரியோதனாதிகளை அஸ்தினபுரிபட்டணத்துடன்கங்கையிற்கவிழ்க்க யத்தனித்ததும் அப்போதுசகலவுரவர்களும் ஸ்ரீபலராமரைப்பணிந்துதுதிசெய்து அந்தலக்ஷமணையை சாம்பனுக்கு விவாகஞ்செய்து கொடுத்ததுஞ்சொல்லுகின்றன.

கேளீர்புருவம்சோற்பவனைபரிக்ஷித்து மகாராஜனே உமதுகூட்டஸ்தனானதிருதராஷ்டிரனுடைய மைந்தனாகிய துரியோதனனுக்குலட்சுமணையென்கிற கன்னிகையிருந்தாள் அவளுக்கு துரியோதனன்சுயம்வரஞ் சாட்டுகிறபோது ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய பட்டமகிஷிகளில ஜாம்பவதியினுடைய மைந்தனானசாம்பனென்கிறவன் சகலவரசர்களும் பார்த்திருக்க பலவந்தமாய்லக்ஷ்மணையைத்தூக்கிக்கொண்டேகினன் அதுகண்டுவீட்டுமன்-துரோணன்-துரியோதனன் முதலியகவுரவர்கள்கடுஞ்சினமடைந்து அச்சாம்பன் பாலனாயிருந்தாலும்எம்மைலட்சியஞ்செய்யாமலெவ்வளவதைரியத்துடன்நமதுகன்னியாரத்தினத்தைஎடுத்துக் கொண்டேகினன்இவனைக்காவற்படுத்த வேண்டுமென்றுகருதி அவன்பின்றுடர்ந்து சூழ்ந்துகொண்டுபாண வருஷங்களைவருஷித்தார்கள் அப்போது சாமபன் கொடியகோபங் கொண்டுஅக்கவுரவர்கள் மீதுசரவருஷங்களை வருஷித்துநானாவிதமான சங்கடத்தை யுண்டுபண்ணி"சிங்கமானதுமான்கூட்டத்தைப்பார்ப்பதுபோலப்பார்த்துக் கொண்டிருக்கையில் அவனுடைய காவேகத்தையும் தைரியத்தையும் பராக்கிரமத்தையும்பார்த்து வியப்புற்றுஅவனது சமீபத்திற்சென்று ஒருவன்வில்லையும் ஒருவன்குதிரைகளையும் ஒருவன்கொடியையும் ஒருவன்சாரதியையும் இப்படிப்பலவாறாகச் சின்னபின்னஞ்செய்து அவனைப்பிடித்து காவற்படுத்தினார்கள் அதைச்சகலவேதாந்தசாஸ்திரத்தின் தத்துவத்தையுணர்ந்து சொல்லவல்லவராயிருக்கின்ற ஸ்ரீநாரதமாமுனிவர்கண்டு துவராகாபுரஞ்சென்று இந்தவிருத்தாந்தங்களை ஸ்ரீகிருஷ்ணபகவானுடனும் உக்கிரசேனமகாராஜாவுடனு முரைத்தனர்,

அதுகேட்ட யாதவர்கள் யுத்தத்திற்கு சன்னத்தரானார்கள், அப்போது ஸ்ரீபலராமர் அவர்களைநிறுத்திப்போட்டு உத்தவருடன்இரதாரூடராகி அஸ்தினபுரஞ்சென்று கவுரவர்களால்அர்க்கியபாத்தியமுதலியவற்றால்பூஜிக்கப்பட்டு திருதராஷ்டிரன் முதலியபெரியோர்களை சாஷ்டாங்கமாகப்பணிந்து அவர்களுடைய உத்தரவின்மீது ஆசனத்திலெழுந்தருளிதிருதராஷ்டிரனைப்பார்த்து ஒருவார்த்தைஅருளிச்செய்கின்றார் நீர்மேன்மையான குலத்தினிற்பிறந்து மிகவுந்தர்மசிந்தையுடையவர்களென்று பெயர்பெற்றபெரியோர்களான உங்களுக்குநியாயஞ்சொல்லவேண்டுமோ மிகவும்பாலனாகியும்ஒண்டிக்காரனாகியு மிருக்கின்றசாம்பனுடன் யுத்தஞ்செய்து அவனைக்காவற்படுத்தலாமா நீங்கள்எங்களுக்கு பந்துக்களாயும் இஷ்டர்களாயுமிருப்பதால்உங்களுக்கும்எமக்கும் கலகமாகாதென்று மன்னித்தோம் இனிஒருநிமிஷமேனும்அட்டிசெய்யாமல்சாம்பனையனுப்பிவிடச்சொல்லியெமதண்டலனான உக்கிரசேனமகாராஜா ஆக்கியாபித்தாரென்று ஸ்ரீபலராமர் அருளிச்செய்த வார்த்தைகளைக்கேழ்வியுற்று கவுரவர்கள்கடுஞ் சினமாய் ஸ்ரீபலராமரைப்பார்த்துஒருவார்த்தைசொல்லுகின்றார்கள்.

கேளீர்பலராமா உக்கிரசேன மகாராஜா ஆக்கியாபித்தது நவரத்தினமிழைத்தகிரீடத்திற்குரியசிரசின்மீதுபாதரக்ஷையைவைத்துக்கொள்வதுபோ லிருக்கின்றதுசகலவரசர்கட்கும் புறம்பானவர்களான யாதவர்கள்யாவரிடத்தினும் பணிவிடைசெய்யக் காத்திருப்பவர்களைமேன்மைப்படுத்திபாண்டுமகாராஜனுக்கு குந்தியைவிவாகஞ்செய்துசம்பந்தியென்றுஉபசரித்து போஜனம்படுக்கைமுதலிய உபசாரங்களைச் சமமாகச்செய்து உபயசாமரங்கள்வீசிக்கொண்டு சங்கம்வெண்குடைகள்நவரத்தினமிழைத்த கிரீடங்கள்தரித்துக்கொண்டு சிங்காதனத்திலிருந்து அரசாட்சிசெய்ய அவைகளுக்கெல்லாம்உபேக்ஷைசெய்து மேன்மைப்படுத்தியபடியால் பாம்புக்குப் பால்வார்த்ததுபோலாயிற்று இவர்கள்மெத்த இழிகுலத்தோராதலால்அக்குலத்திற்குரியதாகஎம்மைத்தானேவளைத்துக்கொண்டு இப்படிப்பட்ட அற்பமானவார்த்தைகளைச்சொல்லும்படியாகினேம்ஆதலாலிப்படிப்பட்டதுஷ்டர்களுக்கு மகா ராஜயோக்கியமான சிங்காசனமும் வெண்குடையும் யோக்கியமல்ல சீக்கிரமத்திலியாவையும்பறித்துக்கொண்டு வாருங்களென்றுசொன்னவார்த்தைகளை ஸ்ரீபலராமர் கேழ்வியுற்றுமிகுந்த கோபத்துடன் அக்கவுரவர்களைக்குறித்து ஒருவார்த்தைஅருளிச்செய்கின்றார்.

கேளிர் கவுரவர்களே இப்போதுநீங்கள் கூறினதுநிஜந்தான் கொடியதுஷ்டர்களான உங்களையாகத்திற்குரியபாத்திரத்தைஸ்பரிசித்தசுநகத்தை அடிப்பதுபோல அடிக்கடி சிட்சிக்கயத்தனஞ்செய்தசர்வசக்திமானனஸ்ரீகிருஷ்ணபிரானை சமாதானப் படுத்தியாவரும் ஒருமித்திருக்கவேண்டுமென்று யானேயிவடத்திற்குஒருமைப்

பாடு செய்யவர்இருக்க எனதுக்கருத்தை யறியாமல்தேவேந்திரனிருந்து அரசாட்சிசெய்கின்றசுதர்ம்மமென்கிறசபையிலிருந்துசெங்கோல்செலுத்துகின்றஉக்கிரசேனமகாராஜாவினுடைய ஆக்கினையைஇந்திரன்முதலிய திக்குப்பாலகர் சிரசாகவகித்திருக்க அப்படிப்பட்டமேன்மையுள்ள உக்கிரசேனமகாராஜாவைஇழிவாகச்சொன்னதுமன்றி ஜகதீஸ்வரனன் ஸ்ரீகிருஷணபகவான்சுதர்மமென்கிறசபையையும் தேவதாயோக்கியமாயும் திருப்பாற்கடலிற் பிறந்ததாயுமிருக்கின்றபாரிஜாததருவையும் பூமியிற்கொண்டுவந்து அனுபவிக்கின்றார், அதன்றியானும் பிரமன்உருத்திரன் ஸ்ரீமகாலக்ஷமி முதலியவர்கள் அவருடையதிருவடித்தூளிசிரசில்தரித்து அவரது திருவடியிலுண்டான கங்காதீரத்தில் ஸ்நானஞ்செய்தபிரபாவத்தாலும் யாங்கள்மேன்மை யடைந்திருக்கின்றோம் அப்படிப்பட்ட மகிமைதனைவாய்ந்த ஸ்ரீகண்ணபிரானையும்உக்கிரசேனமகாராஜாவையும் பலவாறு கறிந்தித்தபடியால் நீங்கள்யாவரும்வதத்திற் குரியவர்களேயன்றிவேறல்லவென்று கடுஞ்சினமாய் ஆதிசேடனாகியஸ்ரீ பலராமர்சீக்கிரமத்திலெழுந்திருந்து இவர்களை லட்சியஞ்செய்து போர்செய்யக் கூடாது இந்தஅஸ்தினுபுரத்தையே பேர்த்துகங்கையிற் கவிழ்த்துப்போடுவோமென்று தமதுஆயுதமாகியகலப்பையால் அந்த அஸ்தினுபுரத்திற்குத் தென்புறம்நாட்டிக் கிளப்பினார் அப்போது அந்தஅஸ்தினுபுரம் -ஜலத்தின்மீதிருக் கின்ற தெப்பத்தைப்போல் அசைவதைப்பார்த்து துரியோதனாதிகள்மிகவுந்திகிலடைந்துஇந்தபலராமரைச்சரணமடைந்துசமாதானஞ்செய்தாலன்றியெமக்குப் பிராணன் தக்கமாட்டாதென்றுகருதியாவருமோடிவந்துஸ்ரீபலராமருடைய திருவடிகளைப்பற்றி தெண்டன்சமர்ப்பித்து அஞ்சலிகூப்பிக்கொண்டுதுதிக்கின்றார்கள்,

கேளிர்சுவாமி பலராமா தேவரீருடைய திவ்வியசக்தியை யாங்களுணராமற்செய்த அபராதத்தை மன்னிக்க வேண்டும் சகலஉலகுக்கும் ஆதாரமாகி சிருஷ்டிக்கவும் - இரட்சிக்கவும் சங்கரிக்கவுமாயிருக்கின்ற தேவரீருக் காகவேண்டிய காரியமொன்று மில்லை அக்கியானத்தினாற்செய்த அபராதங்களைமன்னித்து இரட்சித்தருளவேணடுமென்று வினவுகின்ற துரியோதனாதிகளிடத்தில் அருள்கூர்ந்து தமதுகலப்பையை வாங்கிப்போட்டார் இப்போதும்அந்த ஸ்ரீபலராமருடையபிரபாவமிப்படிப்பட்டதென்று தெரியும்படி அந்த அஸ்தினுபுரத்துத் தென்றிசைகிளம்பினபடியே யிருக்கின்றன அப்பாலவர்கள் சாம்பனையும் லட்மணையென்கிறகன்னிகையையும் முன்னிட்டுக்கொண்டு அவர்களுக்கு அங்கமணியாக சொர்னத்தினுடைய ஆபரணத்தால் அலங்கரிக்கப்பட்ட இரண்டுலட்சம் யானைகளும் சர்வாலங்காரங்களோடுங் கூடிய லட்சத்தறுபதினாயிரங் குதிரைகளும்சூரியனைநிகர்த்த ஒளியினையுடைய ஆயிரம் இரதங்களும் நல்ல ரூபலாவண்ணிய சௌந்தரிய வதிகளான ஆயிரம் ஊழியப் பெண்களும் அனேக ஆடையாபரணங்களுங்கொடுத்து சந்தோஷப்படுத்தினார்கள் ஸ்ரீபலராமர்அதுகள்யாவையும்பெற்று தமதுகுமாரனைசாமபனையுமலக்ஷமணையையும் இரதத்தின்மீ தேற்றிக்கொண்டுசகலகவுரவர்களால் துதிசெய்தனுப்பப்பட்டு துவாரகாபுரத்திற்கெழுந்தருளி நடந்த விருத்தாந்தங்கள்யாவையும்ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குரைத்து சாம்பனுக்கும் லக்ஷமணைக்கும் சாஸ்திரவிதியின்படிவிவாகஞ்செயது சுகித்திருந்தனர்.



## ௯௬ வது - அத்தியாயம்.



கலிவிருத்தம்.

ஏககாலத்தி லெஞ்சலிலாக்கணன்
மோகமாகவிவாக முடித்ததை
வேகமாக யாழ்வல்லோனதைக்கேட்டு
சோகமுற்றுத் துதித்ததைச்சொல்லுவாம்.

ஸ்ரீகிருஷ்ணபகவான் பதினாயிரத்து அறுநூறுமாதர்களைஒரேமுகூர்த்தத்தில் விவாகஞ்செய்ததை தவத்திற்சிறந்தநாரதமாமுனிவர் கேள்வியுற்று அவர்கள் யாவரிடத்திலும் ஸ்ரீகிருஷணபகவான்வாசஞ்செய்த ஆச்சரியத்தைக்கண்டு சேவித்து துதிசெயதவிருத்தாந்தங்களைச்சொல்லுகின்றது,

கேளிர் ஜனமேஜயனுக்குத்தந்தையாகிய பரிட்சித்து மகாராசனே! ஸ்ரீகிருஷணபகவான் நரகாசுரனை அதஞ்செய்துகொண்டுவந்த பதினாயிரத்து அறுநூறு இராசகன்னிகைகளை ஒருமுகூர்த்தத்தில்விவாகஞ்செய்ததை தபோநிஷடரான நாரதர்கேள்வியுற்று அம்மடந்தையர்கள்யாவருடனும் வியாபித்திருக்கின்றஸ்ரீகண்ணபிரானது ஆச்சரியகரமானசெய்கையைக்கண்டு சேவிக்கவேண்டுமென்று மிகவும் மனங்களிக்கத்தக்கதான தளிர்களாலும்காய்களாலும் கனிகளாலும்பூரணமாய் நிறைந்திருக்கின்ற விருட்சங்களினது புஷ்பங்களிருக்குந்தேனையுண்டுமகிழ்ந்து ரீங்காரஞ்செய்கின்ற வண்டினங்களாலும் மிகவும்மனதை அபகரிக்கத்தக்கதாய்த் தொனிக்கிறகுயில்கள்-மயில்கள்- தாமரை ஓடைகளிலிருக்கின்ற அன்னங்கள்இவைகளால் நிறைந்தும் அனேகபுஷ்பவாசனைகளுடன்வீசுகின்ற தென்றலுடனுங்கூடிய அநேககந்தவனங்களைவாய்ந்ததாயும் சொர்ணமயமாயும நவரத்தின

ங்களிழைத்ததாயு மிருக்கின்ற ஒன்பதுலட்சம் உப்பரிகைகளும் படிகமயங்களான ஏழுலட்சம்உப்பரிகைகளும்வெள்ளியினலும் காரையினலும் அனேகஉப்பரிகைகளும்விசாலமான தெருக்களும் வித்தியாசமில்லாமல் நூல்பிடித்து சொர்க்கத்திற்குச் சமானமாகச் சகலசம்பத்துக்களாய் நிறைந்து இராசவீதிமுதலியதெருக்களில் பன்னீர்சந்தனம் முதலிய வாசனைவஸ்துக்களைத்தெளித்துபுஷ்பங்களிறைத்து தூபதீபங்கள்போட்டுதோரணங்களும்கொடிகளும் எடுத்துக்கட்டிநான்குபக்கத்திலும் திவ்யாலங்காரங்களுடன் கூடியதுவாரகாபுரத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய மனைவியர்களின் வீடுகளிற் சிறந்தும்விசுவகர்மாவால் நிருமிக்கப்பட்டும்சூரியமண்டலத்திற்குநிகர்த்த உயர்வினை வாய்ந்ததாயும் உத்தமங்களானபவழ ஸ்தம்பங்கள்நாட்டி படிகமயங்களானபொரிக்கூடைகளைவைத்து மரகத மயங்களான சுவர்களைவைத்து அதில்வியப்புடைய மேற்கட்டிகள்கட்டி அதற்குநான்குபக்கத்திலும் முத்துகளினல் ஜாலர்தொங்கவிட்டுபச்சைகளினல்தளவரிசைசெய்து நவரத்தினமிழைத்தஅனேககட்டில்களுக்கு முகமலினல் மெத்தைதிண்டுதலையணைகளும்போட்டு திவ்யமாகிய கண்ணடிகள்கட்டிநல்லஉத்தமவம்சத்திற்பிறந்து மிகுந்தசவுந்தரியசாலிகளாயும்சகலாபரண பூஷிதர்களாயும் யவ்வனவதிகளாயுமிருக்கின்ற ஸ்ரீருக்குமணிதேவியினது பரிசாரகஸ்திரீகளால்நிறைந்ததும்மிகவும் பலபராக்கிரம சாலிகளாயும்திவ்வியாபரணங்களைத் தரித்தும் திவ்வியாயுத பாணிகளாயுமிருக்கின்ற ஸ்ரீ கிருஷணபகவானுடைய பரிசாரகர்களால்நிறைந்தும் நான்குபக்கத்திலும் நவரத்தினதீபங்களைவைத்து அகில்சாம்பிராணிப்புகைகள் சாளரத்தினல்வருவதை மயில்கள்கண்டுமேகங்களென்று பிர்மித்துநடிக்கும்படியாயும் இப்படிசகல சம்பத்துக்களுக்கும் நிதியாயிருக்கின்ற ஸ்ரீருக்குமணீ தேவியினுடையகிரகத்தில்வாசஞ்செய்கின்ற சர்வலோகேசுரனைஸ்ரீ கிருஷணபகவானை மிகவும்பயபக்தியுடன் சகலதர்மத்தையும் அறிந்துஉபதேசிக்கத்தக்க நாரதரானவர் சாஷ்டாங்கமாகச்சேவித்தார் அப்போதுஸ்ரீகிருஷ்ணபகவான்சகல பிராணிகளிலும் பிராமணர்கள் மேலானவர்களென்றும் அவர்களுடையமகிமைக ளிப்படிப்பட்டதென்றுயாவரும் உணர்ந்துபூஜித்து கடைத்தேறவேண்டுமென்று கருதி அனேக ஊழியக்காரர்கள் தம்மைஉபசரிக்கவும் அதைநிவர்த்தித்து சப்பிரகூட மஞ்சத்திலிருந்து எழுந்திருந்துதானே நவரத்தினமிழைத்த ஆசனஞ்சமர்ப்பித்துஅந்நாரதரை அதிலெழுந்தருளப்பண்ணிசாஷ்டாங்கமாகச்சேவித்து அவருடையதிருவடியைவிளக்கி அந்தத்தீர்த்தத்தைச் சிரசினில் புரோக்ஷித்துக்கொண்டு அடியேன்இன்றைக்குத்தான் தன்னியனுனேன் அடியேனுடையதிரேகமஇன்றைக்குப் பரிசுத்தமாச்சுதென்று சத்புருஷாளானவர்கள் தாங்களெவ்வளவுமேன்மையுடையவர்களாயிருந்தாலும் கர்வத்தை அடையாமல் பெரியோர்களைப்பூசிப்பதுபோல் பூசித்துபுன்னகையுடன் ஒருவார்த்தை அருளிச்செய்கின்றார்.

கேளிர் பிர்ம்மத்தையுணர்ந்த நாரதமாமுனிவரே. அபூர்வமாய் யாதுகாரணத்திற்காக எழுந்தருளினீர்எம்மாலாகவேண்டிய காரியத்தை அருளிச்செய்யவேண்டுமென்றுவிரும்புகின்ற ஸ்ரீபகவானைநோக்கிகேளிர்சர்வாந்தரியாமியானசுவாமி தேவரீர் அடியேனுடைய கவுரவத்தைப்பார்த்து பூசித்ததல்ல தேவரீர்செய்கின்றபூசையால்மகிழ்ச்சிகொண்டு அகங்காரமடைந்து கெட்டுப்போகும்படிச்செய்ததுபோலத்தோன்றுகின்றன அடியேனுக்கு தேவரீரிடத்தி லிடைவிடாமல் பக்தியிருக்கும்படி அருள்செய்யவேண்டுமென்று துதிசெய்து தண்டஞ் சமர்ப்பித்துவிடைபெற்று மற்றொருகிரகத்திற் பிரவேசித்தார் அவ்விடத்தில் ஸ்ரீகிருஷ்ணபிரான் உத்தவரென்கிற மந்திரியுடன்சதுரங்கமாடுவதைவிட்டெழுந்திருந்துஸ்ரீருக்குமணிதேவியினுடைய கிரகத்தினில்வந்ததைஅறியாதவரைப்போல க்ஷேமங்களை விசாரிக்க அதுகேட்டு நாரதர் வியப்புற்று உத்தரஞ் சொல்லமாட்டாமல் பின்னையொரு கிரகத்திற்கேக அங்குகிருஷ்ணன்தமதுமனைவியுடன்புத்திரனைத்தாலாட்டுவதைப்பார்த்துமற்றொருகிரகத்தினிற்கேக அங்கு மனைவியோடு மங்களஸ்நானஞ்செய்துஅக்கினிஹோத்திரஞ்செய்துகொண்டிருக்கமற்றொருகிரகத்தில் அதிதிபூஜைசெய்து அவர்கள்அமுதுசெய்தசேடத்தைதமது புத்திரர்களுடன் அமுதுசெய்ய மற்றொருகிரகத்தில் மந்திராலோசனை செய்துகொண்டிருக்க மற்றொருகிரகத்தில புண்ணிய கதைகளான இதிகாசபுராணங்களை ரிஷிகளிடத்திலின்றும் கேட்டுக்கொண்டிருக்க மற்றொருகிரகத்தினில் அநேகமாதர்களுடன்ஜலக்கிரீடைசெய்ய மற்றொரு கிரகத்தினில் தமதுமனைவியை பக்கத்தில் வைத்துக்கொண்டு அவளைநானுவிதமாய்ப் பரிகாசஞ்செய்துகொண்டிருக்கமற்றொருகிரகத்தினில் ஸ்நானஞ்செய்து பரிசுத்தமாய் அந்தணர்கட்குத் தானஞ் செய்துகொண்டிருக்க மற்றொருகிரகத்தினில்தர்மத்திற்குரிய காரியத்தை அனுஷ்டித்துக்கொண்டிருக்க மற்றொருகிரகத்தினில் பிர்மக்கியானஞ்செய்யமற்றொருகிரகத்தில் வசுதேவருக்குப் பணிவிடைசெய்யபின்னையொருகிரகத்தினில் யுத்தத்திற்கு சன்னதமாயிருக்க மற்றொருவிடத்தில் ஸ்ரீபலராமருடன் அன்பர்களுக்குக்ஷேமத்தைக் கோரிக்கொண்டிருக்கமற்றொருவிடத்தில் தமதுகுமாரத்திக்குங் குமாரனுக்கும்மணஞ்செய்வதற்குத் தகுந்தவிடம் விசாரித்துக்கொண்டிருக்கமற்றொரு இல்லறத்தில் தமதுபுத்திரிகளைஅவர்களு

டையவீட்டிற்கு அனுப்பவேண்டியதிற்குரிய ஆடையாபரணங்களமைக்கனுப்ப மற்றொருஅகத்தினில்யாகஞ்செய்துதேவர்களைப் புகழச்செய்ய மற்றொருவீட்டினில் தடாகப்பிரதிஷ்டைசெய்துகொண்டிருக்க மற்றொருவீட்டத்தினில் தேவாலயப்பிரதிஷ்டைசெய்ய மற்றொருகிரகத்தினின்மிகவும்வேட்டையாடிஇளைப்புற்றிருக்கமற்றொருவளகத்தினில் தமதுமனைவியுடன் சிங்காதனத்திலெழுந்தருளியிருக்க மற்றொரு இல்லறத்தினில் தாம்சப்பிரகூடமஞ்சத்தினில் வீற்றிருக்கையில் அம்மனைவியர்சாமரம்வீசப்பட்டுக்கொண்டும் இப்படி பலவாறாகக் கிரகங்கடோறும் ஸ்ரீ கிருஷ்ணபகவான் சேவை சாதிப்பதைக்கண்டு ஸ்ரீபகவானுடைய யோகமாயையினது பிரபாவமிப்படிப்பட்டதென்று உணர்ந்துவியப்புற்றுஸ்ரீநாரதர்ஸ்ரீபகவானைநோக்கி தேவரீருடைய அநுக்கிரகபலத்தினால்பிரமன்முதலிய சகல தேவர்களாலும் அறியவொண்ணாத தேவரீருடைய பிரபாவத்தையான் உணர்ந்தேன்தேவரீரது திவ்வியநாமத்தைக்கானஞ்செய்தும்தேவரீருடையகீர்த்தியை பரிசுத்தமாகிய ஸ்தலங்களில் விநியோகஞ்செய்துகொண்டிருக்கும்படி அடியேனுக்குஅருள்புரியவேண்டுமென்று சாஷ்டாங்கமாகத்தெண்டன்சமர்ப்பித்துவிடைபெற்று சொர்க்கத்திற்கேகினர்,

---

## ௭௰ - வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்;

கண்ணனுற்றே னனுஷ்டிக்குங்கர்மமும்
துண்ணெனச்சரா சந்தன்சிறையினில்
நண்ணிடச்செய்த ராஜரின் றுன்பமும்
பண்ணுமந்த்ராலோசனையும்பகருவாம்.

ஸ்ரீகிருஷ்ணபகவான் அனுஷ்டிக்கும் நித்யகர்மங்களையும் ஜராசந்தனாற் சிறையில்வைக்கப்பட்ட அரசர்கள் தாங்கள் துன்பப்படுவதை தூதன்மூலமாய் ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குத் தெரியப்படுத்தினதும் அப்பால் ஸ்ரீகிருஷ்ணசுவாமி மந்திராலோசனைசெய்ததுஞ் சொல்லுகின்றது.

கேளீர்பூபதியான பரீட்சித்து மகாராசனே துவாரகாபுரத்திலருகில் உத்தியானவனத்திலிருக்கின்ற காலத்தையுணர்த்துங் கோழிகள்கூவிய ஆறுநாழிகைக்குக்கட்டியக்காரர்கள் அரசர்களைத் துதிப்பதுபோலக் கூவுகின்றதை ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய மனைவியர்கள் கேட்டுவியுற்று கடுஞ்சின மடைந்து சர்வேசுவரனுகியிருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவானிடத்திலே தங்களுடையமன்மதவிரகத்தைத் தணித்துக் கொள்வதற்கு முன்னமே அவருக்குப் பொழுது விடிவதைத் தெரியச்செய்துவெளிப்படுத்துகிற படியால் உலகத்தாருக்கு நீங்கள் யாதொருநன்மையுஞ் செய்யாமலிருக்கையினாலே மயக்கக்கட்வர்களென்று கோழியைச்சபித்தார்கள் அக்காலையில ஸ்ரீபகவான் சயனத்தைவிட் டெழுந்திருந்துமுதல் நெய் கண்ணாடிகருங்குரங்கு-பசு-எருது-இவைகளைத்தரிசித்து கைகால்சுத்திசெய்து ஸ்ரீபகவானைத் துதித்துத்தடாகத்திற்கேகிபல் துலக்கி ஸ்நானஞ்செய்யச்சங்கற்பித்து ஸ்நானஞ்செய்துதேவரிஷிபிதுருதர்ப்பணம்பண்ணி திவ்வியபீதாம்பரமணிந்துகொண்டு ஊர்த்துவபுண்டரத்துடன் சந்தியாவந்தனமும் ஜபோபஸ்தானமுஞ்செய்து அக்கினிஹோத்திரமும ஔபாசனமும் நிறைவேற்றுபிரம்மயக்கியமுதலியதுகளைச்செய்து மிகவும்வெண்மைபொருந்தியதேகத்தினைவாய்ந்ததாயும் கொம்புகளிற்சொர்ணபூஷணங்களை அலங்கரித்ததாயும்சாதுவாயும்கெவுருவாகப்பால் கறக்கத்தக்கதுவேயீத்துக்கிடாரியாயுமிருக்கின்ற பசுக்களைநாடோறும்பன்னிரண்டும் இதுமுதலியதுகளை அந்தணர்கட்குப் பதின்மூவாயிரத் தருநூற்றெட்டு வீடுகளிலிருந்து தானஞ்செய்து அவர்களைவலம்வந்துபணிந்து குருபூஜை தேவபூஜைகளைச் செய்துதாம்சகலாலங்காரத்துடன் கூன்குருடுமொண்டிசப்பாணிமுதலியவர்கட்கு பூரிகள்கொடுத்துபெரியோர்களான அந்தணர்கட்குச் சந்தனம்புஷ்பம்தாம்பூல் முதலியதுகளைக் கொடுத்தனுப்பிவைரத்தினமயமாயிருக்கின்ற ஆஸ்தானத்திலெழுந்தருளியிருந்தனர்,

அச்சமயத்தில் சாரதியான தாருகனென்பவன்சைனியசுக்கிரீவ மேகபுஷ்ப வலாஹகமென்று சொல்லப்பட்டநான்குகுதிரைகளையும்இரதத்தினிற்பூட்டிக்கொண்டுவந்து நிறுத்திசுவாமியினது அருகிற்சென்று சாஷ்டாங்கமாகப்பணிந்து மிகவும்பயபக்தியுடன் இரதம்சன்னதமாயிருக்கின்றதென்று கூறஅதுகேட்டுஉடனெழுந்திருந்துஅந்தச்சூதனுடையகையைப் பற்றிகொண்டு அனேகருபியான சுவாமிஒரு உருவமாயிருந்து சகலதையலர்களுடைய மனதைஅபகரித்துஉத்தவசாத்தகிகளுடன் இரதமேறி-பசி-தாகம்-சோகம்-மோகம் - கிழத்தன்மை கோபம்-இதுமுதலியதுகளை நிவர்த்திக்குந்தன்மையையுடையதாயும் உக்கிரசேன மகாராஜனுக்கு அரசாட்சிசெய்வதற் குரியதாயுமிருக்கின்ற சுதர்மமென்கிற சபையிலெழுந்தருளிஉக்கிரசேனனை ஜயத்தொனியால்சந்தோஷப்படுத்திநக்ஷத்திரமத்தியில் விளங்குகின்றபூரணச்சந்திரன்போல் சகலயாதவர்கள் மத்தியில்நவரத்தினசிங்காதனத்திலெழுந்தருளியிருக்கையில் அப்போதுவந்திகளகட்டியங்கூற நாடகால்நடிக்கநாயகர்கள்பாட ஆசியகாரர்கள் பரிகாசவார்த்தைகளுரைக்கவாத்தியக்காரர்கள்சகலவாத்தியங்களுமுழங்க வேதியர்கள்வேதாந்த

னியானவரெழுந்தருளினார் அவரைக்கண்டு ஸ்ரீகிருஷ்ணபகவான் சகல யாதவர்களுட னெழுந்திருந்து சாஷ்டாங்கமாகப்பணிந்து அர்க்கியபாத்தியம்முதலியவற்றாற்பூசித்துஆதனம்சமர்ப்பிக்க அதின்மீதெழுந்தருளின பிறகுஅவரைநோக்கி ஸ்ரீகண்ணபிரான் தேவரீர்சகலவுலகத்திலுள்ளவிருத்தாந்தங்களை நன்றாயுணர்ந்தவராதலால் இப்போதுபாண்டவர்களெங்கேயிருக்கின்றார்கள் அவர்களுடையக்ஷேமத்தைச்சொல்லவேண்டுமென்று ஒன்றுமறியாதவர் போலக்கூறுகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானைப்பார்த்து ஸ்ரீநாரதர்ஒருவார்த்தைவிக்கியாபனஞ் செய்கின்றார் தேவரீருணராதவிருத்தாந்த மொன்றுமில்லாதிருந்தும் அடியேனைக்கேட்டபடியால்தெரிந்தமட்டுக்குங்கியாபகப்படுத்துகிறேன் இந்திரப்பிரஸ்தத்தில பாண்டவர்கள் சுகமாயிருக்கின்றார்கள்அவர்கள் இராஜசூயமென்கிற யாகத்தில்தேவரீரைப்பூசிக்கவேண்டுமென்று கருதியிருக்கின்றார்கள சகலஜகத் பரிசுத்தராகிய தேவரீருடைய திருவடியின் கட்டைவிரலில் நின்றுமுண்டான தீர்க்கம்சொர்க்கலோகத்தில் மந்தாகினியென்றும் பூமியில்கங்கையென்றும்பாதாளலோகத்தில்போகவதியென்றும் பெயருடன் மூன்றுலகத்தையும் பரிசுத்தஞ்செய்யும்படியான பிரபாவத்தையுடைய தேவரீரந்த ராஜசூயயாகத்தில் வேலைவசாதிக்கிறபோதுபிரமன் முதலிய-தேவர்கள்-ரிஷிகள்-அந்தணர்-பரமபாகவதோத்தமர்களான அனேகஅரசர்கள்முதலிய அடியேன்கள யாவருந் தேவரீரைச்சேவித்து பரிசுத்தர்களாகக்காத்திருக்கிறோமென்று விக்கியாபனஞ் செய்த நாரதருடையவார்த்தைகளைக்கேள்வியுற்றுஜராசந்தனைசீக்கிரமத்தில்மாய்க்கவேண்டுமென்றுமனதில் நிச்சயித்துதமக்கு பந்துவாயும்மந்திரியாயும்திருக்கண்ணாயுமிருக்கின்றஉத்தவரைப்பார்த்துஇப்போதிந்தஇராஜதூதன்சொன்னதும் நாரதர்உரைத்ததுங் கேட்டிருந்தீரே இனிநடக்கவேண்டியதற்கு ஆலோசித்துச் சொல்லவேண்டுமென்று சாக்கியரானஸ்ரீபகவானா லாக்கியாபிக்கப்பட்டுஉத்தவரானவர்மிகவும்வினயத்துடன்தலையை இறங்கிக்கொண்டு இரண்டு கரத்தையும் சிரசினிற்கூப்பி ஒருவார்த்தைவிக்கியாபனஞ்செய்கின்றார்.

---

## ஏகவது, அத்தியாயம்.

கலிவிருத்தம்.

அந்தவுத்தவராலோசனையினால்
இந்திரப்பிரஸ்தத்துக்கெழுந்ததும்
காந்தவாண்டக வனத்தைக்காண்டவனால்
வெந்திடச்செய் ததையும்விளம்புவாம்

ஸ்ரீ பகவானுடைய மந்திரியான உத்தவருடைய ஆலோசனையின்மீது ஸ்ரீகிருஷ்ணபகவான் இந்த்ரப்பிரஸ்தத்திற் கெழுந்தருளினதும் அர்ச்சுனனைக்கொண்டுகாண்டவவனத்தை அக்கினிக்குத்திருப்திசெய்வித்து மயனால்தர்மபுத்திரருக்கு சபை நிருமித்துக் கொடுப்பித்ததுஞ் சொல்லுகின்றன,

கேளீர் அரசசிகாமணியே புத்திமான்களிற்சிறந்தஉத்தவரானவர் ஸ்ரீகிருஷ்ணபகவானது திருவுள்ளக் கருத்தையும் யாதவர்களுடைய அபிப்பிராயத்தையுந்தெரிந்துஸ்ரீபகவானைப்பார்த்து விக்கியாபனஞ்செய்கின்றார். பூமண்டலத்திலுள்ள சகல அரசர்களையும்ஜயித்தாலன்றிராஜசூயஞ் செய்யக்கூடாதென்று கருதி தேவரீருடையசகாயத்தை விரும்புகின்ற பாண்டவர்க்குச்சகாயஞ்செய்கின்றநிமித்தமாக யாதவர்களால் சராசந்தனை ஜயிக்கக்கூடாதென்று பூர்வம் ஆகாசவாணிஉரைத்ததும் பொய்யாகாமல் அவனைச்சயிக்கத்தக்கின பலமுடையபீமசேனனை பிராம்மண வேடத்துடன் அழைத்துக்கொண்டுபோய் சேனையிற்பெருத்த ஜராசந்தனை சேனையில்லாமல்தனிமையாய் யுத்தத்திற்குவரும்படி பிரவேசிக்கச்சொல்லி அவனைப் பட்டணம் விட்டு வெளிப்படுத்தி போரினில்மாய்த்து சிறையினிலிருக்கின்ற அரசர்களுடையதுன்பத்தைப்போக்குவது அடியேனுக்கு யோக்கியமாகத் தோன்றுகின்றன சர்வக்கியரான தேவரீருக்கு அடியேன் என்னவிக்கியாபனஞ் செய்யப்போகிறேனென்றுநிர்த்தோஷமாகியுங் கீர்த்திகரமாகியும் சகலஆபத்துக்களையும் போக்குகிறதாகியு மிருக்கின்ற உத்தவருடையவார்த்தைகளைக் கேள்வியுற்று ஸ்ரீ கண்ணபிரான் தாருகனைப்பார்த்து இரதசன்னாகஞ் செய்யச்சொல்லிகட்டளையிட்டு ஸ்ரீருக்குமணிதேவிமுதலிய மனைவியர்களை வாகனத்தின்மீதேற்றிக்கொண்டு வசுதேவ தேவகிதேவிபலராமர் முதலியவர்களிடத்தில்விடைபெற்றுதாருகனாற் கொண்டுவரப்பட்ட இரதத்தின்மீ தெழுந்தருளுகின்ற சுவாமிக்கு ஜராசந்தனை வதைசெய்வதில் இசையுண்டாயிருக்குதென்கிற கருத்தையுணர்ந்து ஸ்ரீநாரதர்பிரதக்ஷண நமஸ்காரஞ்செய்து சொர்க்கத்திற் கெழுந்தருளினார்,

பிறகுஸ்ரீகிருஷ்ணபிரான் சராசந்தனால்துன்பப்படுகிற அரசர்களனுப்பியதூதனைப்பார்த்து கேளாய்தூதனே அந்தத் துராத்மாவான ஜராசந்தனை சீக்கிரமத்திலேயே மாய்த்துப்போடுகிறோம் நீங்கள் யாதொன்றுக்குங்கொஞ்சமேனும் அச்சமில்லாமல்இருங்களென்று அருளிச்செய்தஸ்ரீகண்ணபிரானை பிரதட்சண நமஸ்காரஞ்செய்துவிடைபெற்று சிறையினிலிருக்கின்ற அரசர்களிடஞ்சென்று ஸ்ரீகிருஷ்ணபகவான் அருளிச்செய்தவார்த்தை

கள்யாவுமுரைக்கக்கேட்டு சந்தோஷமடைந்து சுவாமியெப்போது எழுந்தருளப்போகின்றாரென்று எதிர்பார்த்திருந்தார்கள அப்பால் ஸ்ரீகிருஷ்ணபகவான் துவாரகாபுரத்திலிருந்து பிரயாணப்பட்டு ஆநர்த்ததேசத்திலோரிராத்திரிதங்கி மறுநாள் சவ்வீரதேசத்திலிருந்து பிரயாணப்பட்டு மூன்றுநாள்குருக்ஷேத்திரத்திற்சென்று திருஷ்டதுவிதியென்கிற நதியைக்கடந்து பாஞ்சாலதேசஞ்சென்று அவ்விடத்தில்நின்று இந்திரப்பிரஸ்தத்திற்கெழுந்தருளினார் அந்தச்சங்கதியைக்கேட்ட தர்மபுத்திரர்முதலியவர்கள் பிரமன்முதலியதேவர்களும்சநகர்முதலியயோகிகளும் நான்குவேதங்களும் தேடிக் காணக்கூடாத அருந்தெய்வமான ஸ்ரீகிருஷ்ணபகவான்நமக்கு எளிதில் சேவைசாதிக்கக்கிடைத்ததென்று ஆனந்தபரவசர்களாய்தமது இஷ்டர்களுடன் புரோகிதரானதவும்மியாசாரியரை முன்னிட்டு அர்க்கியபாத்தியமுதலியபூசைக்குரிய வஸ்துக்களையும் பூரண கும்பங்களையும் வேதியர்கள் வேதபாராயணஞ்செய்யப் பதினெண்வாத்தியங்களுடன் எதிர்கொண்டுபோய் தர்ம்மபுத்திரர் ஸ்ரீ பகவானைக்கண்டு தமது இரண்டுகரங்களாலும்ஸ்ரீமகாலட்சுமிக்குஇருப்பிடமாயிருக்கின்ற திருமார்புதமதுமார்பினில்படும்படியாக ஆலிங்கனஞ்செய்து அதினால்சகலபாபங்களுந்தொலைந்து சரீரமெல்லாம் மயிர்க்கூச்சிட்டுஆனந்தபரவசராய் மெய்மறந்து பிரமித்திருந்தனர், பீமசேனனும்அவ்வண்ணஞ்செய்து பிரமித்திருந்தனன்.

பிறகுஅர்ச்சுனனும் நகுலசகாதேவர்களும்கிரமமாக ஸ்ரீகிருஷ்ணபகவானைக்கண்டு கண்களில் ஆனந்த ஜலம் பெருகஆலிங்கனஞ் செய்துகொண்டார்கள்ஸ்ரீகிருஷ்ணபகவான் தர்மநந்தனனையும் வீமசேனனையும்சாஷ்டாங்கமாகப்பணிந்து அர்ச்சுனனை ஆலிங்கனஞ்செய்து நகுலசகாதேவர்களால் சேவிக்கப்பட்டுக்கொண்டுபெரியோர்களானபிராம்மணர் முதலியவர்களை அவரவர்கட்குத்தக்கபடிபூசித்தார அப்போதுருகமாதர்கள் சுவாமியைத் துதிசெய்ய ஆகாயத்தில் யட்சகின்னர கந்தருவர்முதலியதேவர்கள புஷ்பமாரிசொரிந்து துந்துபிவாத்தியமுழங்க அப்சரஸ்திரீகள் நடிக்கமகாரிஷிகள துதிக்க வேதியர்கள்பின்புறத்தில் வேதபாராயணங்கூறவீதிகளில்ஜலந்தெளித்து துவஜங்கள சொர்ணமயமான தோரணங்கள்கட்டி பட்டணத்திலுள்ள ஜனங்கள் யாவரும் பரிசுத்தமாய் ஸ்நானஞ்செய்து சர்வாலங்காரத்துடன் பூரணகும்பங்களும் கொழுக்கட்டைகளும் பழங்களு மெடுத்துக் கொண்டுவந்து புண்ணிய சுலோகசிகாமணியான ஸ்ரீகிருஷ்ணபகவானை எதிர்காண இப்படிப்பட்ட சகலசம்பரமதுடன் பாண்டவர்களோடு இரதகஜதுரகபதாதிசேனைகளால்நிறைந்திருக்கின்றஇந்திரப்பிரஸ்தத்துநகரத்தினிராஜமார்க்கத்தில் இரதத்தின்மீதெழுந்தருளுகின்ற சுவாமியைக்கண்டு அங்குள்ளமாதர்களும் யாவரும்சாஷ்டாங்கமாகப் பணிந்து புஷ்பமாரிசொரிந்து ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொள்ளுகின்றார்கள், நாம் வியர்த்தமாய் ஸ்திரீஜன்ம மெடுத்து ஆருக்கென்னபிரயோஜனம், இந்தப்புருஷனிற்சிறந்த ஸ்ரீகண்ணபிரான் ஆலிங்கனம் அதரபானமுதலிய காமலீலைகளைச்செய்ய இம்மடைந்தையர்கள் பூர்வஜன்மத்தில் எத்தனைதவஞ்செய்தார்களோஅறிகிலோம் இவர்களைப்போல அநுபவித்தாலல்லோயாம் ஜன்மமெடுத்ததற்குப் பயனென்றுமாதர்களுரைப்பதைக் கேட்டுக்கொண்டே தர்மபுத்திருடைய அரண்மனையினிற்சென்று அங்குள்ளஜனங்களின் அதிகாரானுகுணமாகப்பூசிக்கப்பட்டுஅந்தப்புரத்தினில் பிரவேசித்து அங்குள்ளமாதர்களாலும் பூசிக்கப்பட்டு தமதுஅத்தையான குந்திதேவியைக்கண்டுசாஷ்டாங்கமாகச் சேவிக்கஅப்போதந்த குந்திதேவியானவள் ஸ்ரீகிருஷ்ணபிரானை இரண்டுகரத்தினாலும் மடியினிலெடுத்து வைத்துக்கொண்டு உச்சிமுகந்து ஆனந்தபாஷ்பம் உதிர்த்தனள் அச்சமயத்தில் துரோபதைசுபத்திரை இவர்களால் நமஸ்கரிக்கப்பட்டு அவர்களைமெத்தஆதரவுடன் உபசரித்து குந்திதேவியினது சமீபத்திலிருக்கின்ற நவரத்தினமயமான சிங்காதனத்தி லெழுந்தருளி யிருந்தனர்அப்பால் குந்திதேவியாலாக் கியாபிக்கப்பட்டதுரோபதைசுபத்திரைஇவர்களிருவரும்ஸ்ரீகிருஷ்ண சுவாமியினதுமனைவியர்கள்யாவரையும்நானாவிதபூஷணங்களாலும் வஸ்திரங்களாலும்சந்தனம் புஷ்பதாம்பூலமுதலியதுகளால் உபசரிக்கப்பட்டுசுகமாயிருந்தார்கள்,இப்படிபாண்டவர்களாலும்குந்திதேவி முதலியமாதர்களாலும்பூசிக்கப்பட்டு சகலமனைவியர்களுடன் ஸ்ரீகிருஷ்ணபகவான் இந்திரப்பிரஸ்தத்திலேயே சுகமாயிருந்தார்இப்படியிருக்கையில்ஒருநாள் ஸ்ரீகிருஷ்ணார்ச்சுனர்இரதத்தின்மீதுஆரோகணித்துக்கொண்டுதேவேந்திரனுடைய நந்தவனமானகாண்டவ வனத்தைஅக்கினிதேவனுக்கு திருப்திசெய்வித்துஅந்த அக்கினிதேவனிடத்தில்நின்றும் அர்ச்சுனனுக்கு இரதமும் காண்டீவமென்கிற தனுசும்வாங்கிக்கொடுத்து அந்தக்காண்டவவனத்திலிருந்த அசுரசில்ப்பியான மயனை அந்த அக்கினியில்நின்றும் தப்பவைத்து அதனால் தர்மராசாவுக்கு தேவராசாவினுடைய சபைக்குநிகர்த்த ஒருசபைநிருமித்துக்கொடுக்கச்சொல்லி அர்ச்சுனனுடன் சிலநாள்வாசஞ்செய்தருளினார்.

## ௭௨-வது அத்தியாயம்,

### எழுசீர்டியாசிரியவிருத்தம்.

உத்தவராலோசனையை நினைத்துக்கொண்டு
ஒன்றானகடவுளதி தூராத்மாவாகப்
பெற்றசராசந்தனைவஞ்சனையினாலே
பீமசேனனைக்கொண்டு மாய்க்கவெண்ணி
ஒத்தபிமார்ச்சுனர்களோடு தானுஞ்சோடாது
உயர்ந்தகுலவேதியராய் வேடங்கொண்டு
யுத்தமதற்கெங்களுடன் தனிமையாக
ஒருவனேவரவேண்டு மெனவிசைத்தார்

ஸ்ரீகிருஷ்ணபகவான் உத்தவருடையஆலோசனையை நினைத்துக்கொண்டு துராத்துமாவான ஜராசந்தனைவஞ்சனையால் பீமசேனனைக்கொண்டு மாய்க்க வேண்டுமென்றுகருதிதாமும் பீமார்ச்சுனர்களும் பிராமணவேடங்கொண்டுஜராசந்தனை தனிமையாய்யுத்தத்திற்குவரவேண்டுமென்று யாசித்ததைச் சொல்லப்படுகின்றது.

கேளீர் மேதினிபதியான பரிட்சித்துமகாராசனே, ஒருநாள்உமது பிதாமகனான தர்மபுத்திரர் பிரம்மத்தையுணர்ந்த வேதியர்கள் ரிஷிகள் அனேகமகுடவர்த்தனர் சேனைத்தலைவர் படைத்தலைவர் பொருளுடைய அனேகவைசியர்கள் பீமசேனன்முதலிய தம்பிமார்களுடன்சபையினில் கொலுவிருக்குங்காலையில் யாகத்திற்சிறந்த இராஜசூயமென்கிற மகாயாகம் எவ்விதமாக நிறைவேறப்போகுமென்று பலவாறுகசிந்தித்துஜகதீசுவரனான ஸ்ரீகண்ணபிரானாலாகவேண்டுமேயன்றி மற்றவர்களாலாகாதென்று நன்றாயுணர்ந்து சபையிலுள்ள யாவருங்கேழ்க்க ஸ்ரீபகவானைப்பார்த்துஒருவார்த்தை விக்கியாபனஞ்செய்கின்றனர். கேளீர் சகலசீவதயாபரமூர்த்தியானசுவாமி யாகத்தினிற்சிறந்த இராஜசூயமென்கிற மகாயாகத்தினால் சகலதேவர்களுக்குந் தேவனாகியும்மோட்சத்தைக்கொடுக்கத்தக்கவராயுமிருக்கின்ற தேவரீரைபூசிக்கவேண்டுமென்று கருதியிருக்கிறேன்மித்திரனென்றும்சத்துருவென்கிறபேதமிலையாமல்யாவரிடத்திலும் வாசஞ்செய்துக்கொண்டு எவர்களெவ்விதமாகவிரும்புகின்றார்களோ அவர்களுடைய கருத்துக் கிசைந்தபடிகற்பகத்தருபோல் கிருபைசெய்தருளிகிற தேவரீருடையஅருளுக்குப்பாத்திரனாயிருக்கின்றஅடியேனுககெந்தபுருஷார்த்தத்தில் குறையிருக்கு மாதலால்கிருபைகூர்ந்து சக்கிரவர்த்திகளாலுஞ் செய்யக்கூடாமலிருந்தயாகசிரேஷ்டத்தை நிறைவேற்றினதாலுண்டாகிய செல்வச்செருக்கை மேன்பாடுசெய்துதெவரீருடையஅருளுகருப்புறம்பான சிசுபாலன்ஜராசந்தன் முதலியவர்களுடைய நிக்கிரகத்தையும் யாவருமடியத்தக்கதாகக்கிருபைகூர்ந்தருளவேண்டுமென்று விரும்புகிற தர்மபுத்திரரைப்பார்த்து ஸ்ரீபகவானொருவார்த்தை அருளிச்செய்கின்றார்.

கேளீர்மகாராஜாவே தர்ம்மபுத்திரரேஉமக்கெப்போது இராஜசூயயாகஞ்செய்ய இஷ்டமுண்டாயிற்றோ அப்போதேஇந்திரன்முதலிய தேவர்களுக்கும் சகலரிஷிகணங்களுக்கும் யான்முதலிய அவ்புருஷர்க்கும் சந்தோஷமாயிற்று இந்தயாகஞ் செய்வதினால் உமக்குமகத்தானகீர்த்தி யுண்டாகப்போகிறது நெடியகடல்சூழ்ந்தலட்சம்யோசனை விஸ்தாரமுடைய பூமண்டலம்யாவையும் அரசுசெலுத்துகிற சகலஅரசர்களையும் ஜயித்துவருஷந்தோறுங் கப்பங்கட்டும்படிசுவாதீனஞ்செய்து கொண்டால் அந்தமகாயாகம் நிறைவேறும் இந்திரன்முதலிய லோகபாலர்களுடைய அம்சங்களாகியும் மகாபலபராக்கிரம சாலிகளாகியும் நினைத்தமாத்திரத்தில் மூவுலகத்தையும் ஜயிக்கத்தக்கவர்களாகியுமிருக்கின்ற தம்பிமார்களும் ஜிதேந்திரியான தேரீருக்கு அடியேனும்சுவாதீனமாகவிருந்து எந்தவேளையிலெந்தக் காரியத்தில் ஆக்கியாபிக்கிரீரோவென்றுகாத்திருக்கஉமக்கெந்தக்காரியத்தில் குறைவுவரும் என்னிடத்தில்பக்தியுள்ளவன் தரித்திரனாயிருந்தாலும் மகத்தானஒளியினை யாயந்து தேவர்கள்கொண்டாடும்படி மேன்மையான்ஸ்திதியிலிருப்பார்களேயன்றி கேவலம் சாமான்னியனாயிருக்கமாட்டான்பக்தியிற் சிறந்தவராயும சகலசம்பத்துக்களுக்கும இருப்பிடமாயுமிருக்கிற உமக்கு இவ்வரசர்களை ஜயித்து சுவாதீனஞ்செய்து கொள்வது பெரிய காரியமல்ல அந்தமகாயாகத்திற்குரிய அலுவல்களை எங்களைக்கொண்டே நிறைவேற்றிக்கொள்ளுமென்று ஸ்ரீகிருஷ்ணபகவான் அருளிச்செய்தவார்த்தைகளைக் கேள்வியுற்றுமிகவுங்களிகூர்ந்து தர்ம்மபுத்திரரானவர் சுவாமியினுடைய கடாக்ஷப்பார்வையினால் ஒருவராலுங்கண்ணெடுத்துப் பார்க்கவொண்ணாத மகாப்பிரபாவத்தையுடைய பீமசேனன்முதலியதமபிமார்களில் சகாதேவனை அழைத்துஅவனுடன் சிலசேனைகளையுங் கூட்டிதிக்கு விஜயஞ்செய்ய தென்றிசைக்கும் நகுலனையும்சிலசேனைகளையுங்கூட்டி மேற்றிசைக்கும் அர்ச்சுனனையும்சில சேனைகளையுங்கூட்டிவடதிசைக்கும் பீமசேனனையும்சிலசேனைகளைக் கூட்டிகீழ்த்திசைக்கும்அனுப்பினார் அவர்கள் அந்தந்திசையிலிருக்கின்ற சகலஅரசர்களையும்ஜயித்து வெகுமானங்களை தர்ம்மபுத்திரருக்குக் கொண்டுவந்து கொடுத்து வருடந்தோறுங்கப்பங்கொடுக்கும்படி திட்டஞ்செய்துவந்ததையும் தர்ம்மபுத்திரருக்குரைக்க அதுகேட்டுமிகவுங்களிகூர்ந்து மகாப்பிரபாவசாலியானஜராசந்தனொருவன் நமக்குஅடங்காமலிருக்கின்றானே அவனை எ

வ்விதமாகச்சுவாசிலப்பமத்திக் கொள்கிறதென்றுவியாகூலப்பட்டுக் கொண்டிருக்கிற தருமபுத்திரனைப்பார்த்துக் கண்ணபிரானென்னுவார்த்தை அருளிச்செய்கின்றார் பீமசேனனையும் அர்ச்சுனனையும் என்னுடன் கூட்டினால் நான்போய் அந்தஜராசந்தனைவென்று உமதிஷ்டத்தை நிறைவேற்றுகிறேனென்றுரைத்த ஸ்ரீபகவானுடைய கருத்துக்கிசைந்து அப்படியே அனுப்பினர் அவர்களையுங்கூட அழைத்துக்கொண்டு நாங்கள்மூவரும் பிராம்மணஉருவமாய் வேடந்தரித்துக்கொண்டு கிரிவிருஜமென்கிற ஜராசந்தனுடையபட்டணத்திற்குச்சென்று வெகுதூரத்திலிருந்துவந்த அதிதிகளைப்போல அந்தஜராசந்தன்பூஜைசெய்யும் சமயத்தில் அவனிடஞ்சென்று கேளீர்மகாதயாளுவாயிருக்கிற ஜராசந்தமகாராஜனேநீர் அதிதிகளுடைய கருத்தின்படிநிறைவேற்றிஅனுப்புகிறகீர்த்தி உலகெல்லாம் வியாபித்திருக்கின்றன அதுகேட்டுயாங்கள் வெகுதூரத்திலிருந்துவந்தோம் உம்மைப்போல்அதிதிகளுடையஇஷ்டத்தைப்பூர்த்திசெய்வார் யாருமில்லை எமக்கிணையானஅதிதிகளும் இதற்குமிஞ்சின காலமுங் கிடைக்கமாட்டாது உலகத்திலபுத்திரனையும்அரசர்களுக்குரியகிரீடத்தையும் புதைத்துவைத்திருக்கிற தனத்தையுங் கேழ்க்கக்கூடாது கேட்டாலுங் கொடுக்கக்கூடாது பொறுமையுள்ளமனிதனுக்குப்பொறுக்கக்கூடாத காரியமென்பதும் துஷ்டனுக்குச் செய்யக்கூடாதஅநுசிதமென்பதும்ஈகையுள்ளவனுக்குக்கொடுக்கக் கூடாதவஸ்துவென்பதும் ஞானியானவனுக்குச்சத்துரு மித்திரனென்பதுங் கிடையாதாகையால்மகாதாதாவாகிய உமக்குயாவுங்கொடுப்பதற் கிசைவதாயிருக்கின்றமையால்இன்னவஸ்துவைக் கேட்கிறோமென்றுமுன்னுதாய்த்தெரிவிக்கவில்லைமனிதன்நிலையில்லாதஇச்சரீரத்தைக் கொடுத்தாகிலும்சாசுவதமான கீர்த்திசம்பாதிக்கிறவன்புருஷனிற்சிறந்தவன் அவர்களாரெனில் அரிச்சந்திரமகாராஜன் விஸ்வாமித்திரனுக்கு வாக்குக்கொடுத்துவிட்டு அது பொய்யாகாம லிருப்பதற்காக இராச்சியத்தையும் சகலசம்பத்துகளையுந் தோற்றுபுத்திரனையும்மனைவியையும் விக்கிரயஞ்செய்துதானுஞ்சண்டாளனுக்கு அடிமையாகிபணிவிடைசெய்துக்கொண்டிருக்கவும் சொன்னபேச்சுதவறாமலிருப்பதற்காகத்தான் படுகிற துன்பத்தைக் கொஞ்சமேனும்லட்சியஞ் செய்யாமலிருந்த மகிமையால்தனதுஅயோத்தியா பட்டணத்திலுள்ள சகலஜனங்களுடன் இந்திரலோகத்தை அடைந்தனன் இதன்றிரந்திதேவனென்கிற புண்ணியவான்கானகத்தினிற் சஞ்சரித்துக்கொண்டுநாற்பத்தெட்டுநாள்ஜலபானஞ் செய்யாமலிருந்து ஒருநாள்கொஞ்சம் ஆகாரங்கிடைக்க அதனைத் தேவேந்திரன் யாசகனைப்போல்வந்துகேழ்க்க அவன்தனது சம்சாரத்துடன்உபவாசமாய்பாதைப் படுவதைக்கொஞ்சமேனும் லட்சியஞ்செய்யாமற் கொடுத்துவிட்ட பிரபாவத்தினால் குடும்பசமேதனாய்ச் சொர்க்கலோகஞ்சென்று பிரமலோகத்தை அடைந்தனன் இதன்றிசிபிச்சக்கரவர்த்தி அரசாட்சி செய்யுங்காலையில் ஒருமாடப்புறாவும் டேகையுஞ்சச்சரவுபட்டு அந்தமாடப்புறாவானது சிபிச்சக்ரவர்த்தியைச் சரணமடைய அதைக் காக்கவேண்டுமென்று கருதியிருக்கின்றசிபிச்சக்கரவர்த்தியைநோக்கி டேகைசொல்லுகின்றன கேளீர்மகாராஜாவான சிபிச்சக்கரவர்த்தியேயான்வெகுபசியோடே இப்புறாவைப் புசிக்கலாமென்று காதலாகிவந்தேன் அதைநீர்காக்கிறேனென்று உம்மிடஞ்சேர்த்துக் கொண்டமையால் யான்பசியுடன்மரணமடைய வேண்டியிருக்கின்றது அப்படியான்இறப்பது உமக்குச்சம்மதமாயிருந்தால்உமதிஷ்டத்தின்படி செய்யுமென்றுகூறினடேகையைப்பார்த்து சிபிச்சக்கரவர்த்திசொல்லுகின்றான் கேளாய்டேகையே அந்தமாடப்புறாவானது சரணமடைந்தபடியால்எனதுபிராணனுள்ளவரையில் யான்விடுகிலேன்உனது பசிதணியுதற்கு வேண்டிய மாம்சத்தைத் தருகிறேன் அதைப்புசித்துஉனதிருப்பிடஞ் செல்லென்றுகூறின அரசனைப்பார்த்து உமதுகருத்தின் வண்ணம்யான் இசையுகிறேன் அப்புறாஎவ்வளவு இடையிருக்கின்றதோ அவ்வளவுமாம்சம்உமது சரீரத்திலிருந்துகொடுத்தாலன்றியான்புசியேனென்றுகூற அரசன் அக்கருத்துக் கிசைந்து அவ்வண்ணம் அம்மாடப்புறாவை ஒருதட்டினில்வைத்துதனது மாமிசத்தை ஒருதட்டினில் வைத்துநிறுக்கையில் அப்போது மாடப்புறாவினது இடை அதிகமாயிருக்கக்கண்டுபின்னுந் தனதுசரீரத்தினிலிருக்கின்ற மாம்சங்களை யாவையுந் துணித்துவைத்தும்போதாமலிருக்கையாலும் சரீரத்திலும்மாம்சமில்லாததினாலும் பிராணனைவிடுவதேயோக்கியமென்று தனதுமைந்தனுக்குமகுடஞ்சூட்டிவித்து இடச்சித்தனாகி திராசுதட்டினில் அம்மாடப்புறாவுக்குசமதையாய்தானேஉட்கார்ந்தனன் அப்போது இடைசரியாயிற்று அரசன் அதுகண்டுடேகையைநோக்கி இனிஉனதிஷ்டத்தின்படி புசித்துபசியைத்தணித்துக் கொள்ளென்றுகூற அதுகேட்டுடேகைஏழுகடலுக்கும் ஏழுதீவுக்கும் அரசனாகியநீர் கவைக்காகாத இந்தமாடப்புறாநிமித்தத்தில் பிராணனைவிடத்துணிவது நன்றாயிருக்கவில்லை அப்படிக்கில்லாவிடினும் அந்தமாடப்புறாஇடைக்குச்சரியாயெனது மாம்சத்தைக்கொடுக்கிறேனென்று எனதுசரீரத்தில்மாம்சமுள்ளவரையில் தந்தேன்இல்லாததுக்குயான் என்னசெய்வேனென்றுரையாமலிப்படியுஞ் செய்வாருண்டோவென்றுகூறின டேகையைப்பார்த்துஅரசன் சொல்லுகிறான் நிலையில்லாத இச்சரீரத்தை நம்பிசாஸ்வதமாயிருக்கி

ன்ற கீர்த்திக்கிடமான சத்தியத்தைவிட்டு என்னமேன்மைஅடையப்போகின்றேன் ஆதலால்சத்தியத்தில்நின்றும் அகலுகிறேனென்று கூறின சிபிச்சக்கரவர்த்தியின் வார்த்தைகளைக்கேள்வியுற்று மிகவுங்களிகூர்ந்து அவ்வரசனைநோக்கி யாங்களிருவரும் இயமனும்அக்கினியும் உன்னைப் பரிட்சிக்கவேண்டி இவ்வுருவமாகவந்து சோதித்தோம் உந்தன்சத்தியத்திற்கு மெச்சினோமென்று தங்கள் நிஜரூபத்தை அடைந்து எதிரில்நின்றனர்அந்தச் சமையத்தில்சகலதேவர்களும் பிர்மதேவனை முன்னிட்டுக்கொண்டுவந்து சிபிச்சக்கரவர்த்தியை அனேகவிதமாகக் கொண்டாடி விமானத்தின் மீதேற்றிக் கொண்டுபோய் வழியனுப்பபிர்மலோகஞ் சென்றனன்.

இதன்றிமகாபலிச்சக்கரவர்த்தியினது யாகசாலையின் ஸ்ரீமந்நாராயணன் வாமனரூபராய் வந்துதனது சகலஐஸ்வரியத்தையும்பரித்து இந்திரனுக்குக் கொடுக்கவேண்டுமென்று கருதியாசகமாகக்கேட்பதுதனதுபுரோகிதரான சுக்கிரனால்கேட்டும்தானும்நன்றா யுணர்ந்திருந்தும்அவ்வேதியனுக்குமூன்றடிமண் தருகிறோமென்றுரைத்தவண்ணம் நடத்தியபிரபாவத்தாலும்வருணபாசத்தாலும் கட்டப்பட்டிருந்தும்முடிவில் தேவேந்திரபட்டத்திற்குரியவனாயும் பெரியோர்களால் துதிசெய்யத்தக்கதாகிய கீர்த்தியைச்சம்பாதித்தான் இதன்றிக்கானகத்தினில் ஓர்மரத்தின்மீது மாடப்புறாக்கள் ஆணும்பெண்ணுமாய் வாசமாய்விளையாடிக் கொண்டிருக்கையில் அதை ஒருவேடன்கண்டு அதுகளைக்கொன்று புசிப்போமென்று அனேகநாளாய் ஆகாரமில்லாமல் அவ்வனமெல்லாந் திரிந்துஇளைப்புற்று சத்துவமில்லாமல் மூர்ச்சித்து அம்மரத்தி னடியில் விழ்ந்தனன் அதுகண்டு ஆண்புறாவானது பெட்டையைப் பார்த்து கேளாய் என்கருவிழியாளே இவ்வேடன் நம்மைக்கொன்று தனது பசியைத் தணித்துக்கொள்ள விரும்பி வெகுநாளாய் இம்மரத்தி னடிவாரத்தில் காத்திருந்து தனது கோறிக்கைநிறை வேறாததால் மூர்ச்சித்துப்பிராணனை விடுவதாயிருக்கின்றான் ஆதலால்நான் அக்கினியில்விழ்ந்து எனது மாம்சத்தா லவனைக்காப்பாற்றுகிறேனென்று கூறின ஆண்புறாவைநோக்கி பெட்டைப்புறாசொல்லுகின்றது கேளிர் எனதன்புள்ளபர்த்தாவே உலகத்தில்கற்புள்ள மங்கையர்கள்கணவனுடன் உடன்கட்டையேறுவது சகஜமான தர்மமாதலால்யானும்உம்முடன் எனதுசரீரத்தை அக்கினியில்போட்டு அந்தமாம்சத்தால் அவ்வேடனைக் காப்பாற்றுகிறேனென்றுகூறின பெண்புறாவினுடைய வார்த்தையைக்களிப்புடன்கேட்டு அவ்வண்ணமிசைந்து இரண்டுபட்சிகளும் அக்கினியில் விழ்ந்து தங்களுடைய மாம்சத்தால் அவ்வேடனுக்குத் திருப்திசெய்வித்து அந்தமகிமையால்அவ்விரண்டுபட்சிகளும் விமானத்தின்மீதேறிச் சொர்க்கலோகஞ்சென்றனன்.

பிறகு அவ்வேடனுக்குங் கியாபகம்வந்து அப்படிப்பட்ட புறாக்களைப்புசித்தும் பூமியி லிருக்கிறதாவென்று தானும் அக்கினியில்விழ்ந்து சகலபாபங்களுந்துலைந்து விமானத்தின்மீதேறிக்கொண்டு சொர்க்கலோகஞ்சென்றனன். முத்கலனென்கிறஒருவேதியன்சம்சாரத்துடன் உபவாசமாய் வயலில்உதிர்ந்தநெற்களைப் பொறுக்கி அமாவாசைதினத்தில் அந்தநெற்களைக்குத்தி பாகஞ்செய்துபகவன் நிவேதனமானபிறகு அதிதிகளையும்விசாரித்துமீந்தஅன்னத்தைத் தாங்கள் புசிப்புக்கொள்வார்கள் அப்படிக்குமிகுராவிட்டால் பின்னும் உபவாசமாயிருந்து அமாவாசைவருகிறவரையில் நெற்பொறுக்கி சேர்த்துஅவ்வண்ணமே விரதமாகநடத்திவந்தார்கள், அதுகண்டுஇந்திரன் அமாவாசைகள்தோறும் அதிதியாகவந்துகொஞ்சமேனும் அன்னம் மிஞ்சவொட்டாமல் ஆறுஅமாவாசைபட்சித்தான் அதற்கு கொஞ்சமேனும்சளையாமல் சந்தோஷமாகக்கொடுத்துக்கொண்டுவந்தாகள் அப்போது தேவேந்திரன்சந்தோஷித்துஅவ்வேதியனைகுடும்பசமேதராய் அழைத்துக்கொண்டுசொர்க்கத்திற்கேகினன் இப்படிவெகுபேர் அனேகம்பெரியோர்களைச்சந்தோஷப்படுத்தி மேலானலோகத்தை அடைந்தது போலநீரும் எங்களிஷ்டத்தை நிறைவேற்றி மேன்மைபெறுமென்றுகூறினஸ்ரீகண்ணபிரானுடைய வார்த்தைகளைக்கேழ்வியுற்றுஇவர்களை எங்கையோகண்டாற்போலிருக்கின்றது இவர்கள்மூவரும் வில்பிடித்துகாய்ப்புள்ளகரங்களை வாய்ந்தவர்களாயிருக்கின்றார்கள் இவர்கள் க்ஷத்திரியாளேயன்றி அந்தணரல்லவென்றுகருதியிவர்கள்யாவராயிருந்து நமது பிரார்த்தனைக்கேட்டாலும்கொடுக்கவேண்டுமென்று நிச்சயித்து அவர்களைநோக்கிகம்பீரமயொருவார்த்தைசொல்லுகிறான். கேளுங்கள அந்தணர்களே உங்கள்மனதி லென்ன இஷ்டமிருக்கின்றனவோ கேளுங்கள் தருகிறேனென்றுகூறின ஜராசந்தனைப்பார்த்து கண்ணபிரானொருவார்த்தை அருளிச்செய்கின்றார்,

## பீமசேனனுக்கும் ஜராசந்தனுக்கும்யுத்தம்.

கேளிர்ஜராசந்தா இவர்களிருவரும் பீமார்ச்சுனர்கள் யான்வசுதேவகுமாரனான ஸ்ரீகிருஷ்ணன் யாங்கள் மூவரும் உன்னையாசிப்பது யாதெனில் நீ சேனையில்லாமல் தனிமையாயுத்தஞ்செய்யவேண்டுமென்றுகருதிவந்தோமென்றுகூறினதுகேட்டு ஜராசந்தன் கொடையிடி யிடித்தாற்போல கெட்டியாய்ச்சிரித்து ஸ்ரீகிருஷ்ணபிரானைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகிறான்கேளாய் கிருஷ்ணனென்னிடத்தில் நீபுடைப்பது கணக்கேயில்லைதப்பல்

படமாட்டாமல் மதுரையைவிட்டோடிப்போய் சமுத்திரமத்தியில் துவாரகையென்கிற பட்டண முண்டுபண்ணி அதனில்வாசஞ்செய்கிறாயாதலால் பயந்தவனான உன்னுடன்யான்யுத்தஞ்செய்யமாட்டேன் இந்தஅர்ச்சுனன்மிகவும்பாலனாகியும்பலத்திலெனக் கிணையாகாதவனாதலால் அவனோடும் யுத்தஞ்செய்யமாட்டேனென்று அலட்சியஞ்செய்து இந்தபீமன் எனக்கிணையாகத் தோற்றுகின்றமையால் இவனோடு யுத்தஞ்செய்கிறேனென்று தனதுமைத்துனனை சகதேவனுக்குப் பட்டங்கட்டி பிறகு ஜராசந்தன் பீமசேனனுக் கொருகதைகொடுத்து தானுமொருகதையை யெடுத்துக்கொண்டு யுத்தத்திற்குஆரம்பஞ்செய்து வலம்புரியிடம்புரியாயும மண்டலாதி காரமாயும் நாட்டியஞ்செய்பவர்கள நடிப்பதுபோலும் இடியிடித்தாற்போல சப்தித்துக்கொண்டும் மலையின் மேற்பட்டால்சூரணமாய்ப் போகும்படியான அடிகளைஒருவரையொருவர் வேகமாகத் தோள்களிலுங் கைகளிலும் மார்பிலும்துடைகளிலும் பாதங்களிலும்அடித்துக்கொண்டுசரீரங்கொஞ்சமேனு மிளையாமல் கதைகளைச் சூரஞ்செய்துகொண்டார்கள்.

இவ்வாறிருவரும் யுத்தசன்னத்தராகிக் கைகளாகிய கதாயுதங்களோடு வீங்கி வெளிப்புறப்பட்டுயுத்தபூமிக்குவந்தார்கள் அப்போது பீமசேனனைநோக்கிஜராசந்தன் அடாபீமசேனாநான் தருமத்தைமுன்னிட்டு உள்ளேயுத்தத்திற்குவந்தேன் ஜாக்கிரதையாயுத்தஞ்செய்யென்றுசொல்ல பீமசேனன் நானு மப்படியே தருமத்தைமுன்னிட்டுவந்தேனாகையால் நீதான்சாக்கிரதையாயிருக்கவேணுமென்றுசொன்னான்.

இவ்வாறு இருவரும் ஒருவரையொருவர்நிக்கரித்துக்கொண்டு யுத்தத்திற்குச்சித்தராகியொருவர்மேலொருவர்பாய்ந்து மதயானைகள்போலும், மலைகள்போலும்திடமாகவும்வலமாகவுஞ்சுற்றி ஒருவனையொருவன்பிடித்துத்தள்ளுகிறதும் எழும்பியடிக்கிறதும் கீழேதள்ளுகிறதும் உயரவெறிகிறதும் கையைப்பற்றியிழுத்துச் சுற்றியெறிகிறதும்கைகளால் குத்துகிறதும்கால்களால்தள்ளுகிறதுமாக நெடுநேரம் யுத்தஞ்செய்யவே இவர்களுடையகைகளால் புடையுண்ட பூமியினின்றும்எழும்பியதூளியானது அந்தகாரம்போலச் சூழ்ந்துகொள்ள இவர்களுடைய அட்டகாசத்தொனிகளினால் எதிரிரைச்சல்போடாநின்ற மலைகளிலிருக்கும் சிங்கமுதலிய மிருகங்கள்பயந்துவீறிட ஆகாயங்களதிர்ந்து பிரளயகாலஸ்திதிபோலிருந்தது. முன்தேவேந்திரனுக்கும் விருத்திராசுரனுக்கும் நடந்த யுத்தத்தைக்காட்டிலு மிது விசேஷமாயேயென்று ஆகாயத்தில் தேவர்சித்தர்சாரணர்முதலாகியவர்வியந்து பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

இவ்விதமாக யாவரும் ஆச்சரியப்படும்படியாய் பீமசேனனும் ஜராசந்தனும் கார்த்திகைமாசத்துக் கிருஷ்ணபக்ஷத்துப் பிரதமையினன்று யுத்தத்துக்கு ஆரம்பித்து பதினைந்துநாள்வரையில் ஓயாமல் யுத்தஞ்செய்துகொண்டுவருகையில் ஒருநாள்யுத்தத்திலே ஜராசந்தன் பீமசேனனைச் சமயம்பார்த்துச் சுற்றித் தள்ளுகையில் இடிக்குச்சமானமாக அவன்மார்பிலொரு குத்து குத்தவே அந்தபீமன் பதைபதைத்து க்ஷணகாலஞ்சோர்ந்து மனதில்தைரியத்தை முன்னிட்டுக்கொண்டிருந்தஆக்குரோஷத்துடனெழும்பி ஜராசந்தன்மேல்விழுந்து லாகவத்தினால் அவனைக்கீழேதள்ளிமார்பிலொரு குத்துகுத்த அக்குத்தினால் வச்சிராயுதத்திலடிக்கப்பட்ட பருவதம்போல் சிதைப்புண்டு க்ஷணகாலம் மூர்ச்சையடைந்து பெருமூச்சுவிட்டெழுந்து கர்ச்சித்து ஆகட்டுமடா பீமசேனா இந்தநிமிஷத்திலுன்னை நாசஞ்செய்கிறேன்சற்றேநில்லென்றுசொல்லிச் சந்துபார்த்து பீமசேனனைக்காலைப்பற்றித் தூக்கிசுற்றியெறிய அந்தபீமனும்ஆகாசமார்க்கத்திற்சுழன்று லாகவமாய் அவன்தலைக்குச்சரியாய் வந்துமயிரைப்பிடித்து இழுத்துக்கீழேதள்ளிக்கொண்டேதானும் பூமியிற்குதித்துச் சத்துருவைப்படியேபரபரவென்றிழுத்துக் கரகரவென்று சுழட்டியெறிய அவன்சமீபத்திலிருந்த மலைகளின்தடங்களில்மோதுண்டுகாயமடைந்து தேகமெல்லாம் உதிரம்பெருகஓடியும்வந்து புலிபோற்பாய்ந்து பீமனுடையமிடற்றைப்பற்றி நெட்டித்தள்ள அவன் நாலைந்து குண்டாங்கரணம்போட்டுக்கொண்டு விழுந்துகைகால்களிலறையப்பட்டும்லட்சியஞ்செய்யாமல் எழுந்து நல்லதுநல்லது ஜராசந்தா நீவெகுசாமார்த்தியவான்போல் சண்டைசெய்கிறாய்உன்னைப் பிருதுலோகத்துக்கு அனுப்புகிறேன்பயப்படாதேயென்று வீரவாதஞ்செய்தான் இவ்வாறேதினந்தோறுந் தங்கள்சாமார்த்தியங்களையும் பலபராக்கிரமங்களையுங்காட்டிஒருவனையொருவன்கொல்லவதற்குத்தருணந்தேடிக்கொண்டு இராப்பகல்களில்ஒருக்ஷணப்பொழுதுமோய்வில்லாமல் யுத்தஞ்செய்தார்கள்,

அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவான் தமது ஒளியினால் பீமசேனன் இளையாமலிருக்கும்படி இரட்சித்துஜராசந்தனைக்கொல்வதற்கு ஆலோசிக்கின்றார் அதாவதுபூர்வத்தில்ஜராசந்தனுடைய தகப்பனானபிருகதிருதனென்பவன் தனக்குப்புத்திரனில்லாமல்ஒருபிர்ம்மரிஷியை அடுத்துபுத்திரனைவிரும்பி வெகுநாள்பூசித்துபிரார்த்தித்தனன் அவரதற்குமெச்சி தமது ஆசிரமத்திலிருக்கின்ற மாங்கனிகளிலொன்றைக் கொய்துகொடுத்து இதைஉனது மனைவிக்குக்கொடுத்தால் புத்திரனுண்டாகுமென்று வாழ்த்தியனுப்பினார் அவனுமவ்வண்ணமே தனதுஇரண்டுமனைவியர்கட்கும் அக்கனியைப்பகுந்துகொடுக்கஅவ

ர்களதைப்புசித்து கற்பதரித்து ஒருசிசுவை ஆளுக்கு பாதியாகஒருகண் ஒருகாதுஒருகை ஒருகாலிப்படிஇரு பிளவாப்பெற்றார்கள் அதுகண்டுமருத்துவச்சிகள் நாற்சந்தியிற்போட்டுவிட்டு அவ்வரசனுக்குகர்ப்பங்கலங்கிவிட்டதென்று கூறிசும்மாயிருந்தார்கள். அந்த நகரவாசியானஜரையென்கிற காளியானவள் மிகவும்சவுந்தரியமுள்ள அத்துண்டங்களைப்பார்த்து இரண்டையும் ஒன்றாய்ச்சேர்த்து ஒட்டிப்பிராண னுண்டாகச்செய்து இக்குழந்தைபதினாயிரம் யானைபலமுடையதாகவும் இப்போதுஒட்டினபிரகாரம் பிளந்தாலன்றி மரணமில்லா திருக்கும்படியாயும் வாழ்த்திவிட்டேகினள் அவ்வரசன்நகரிசோதனைக்குப்போய்வரும்போது அக்குழந்தைஅழுவதைக்கண்டு இன்றையதினம் எமக்குசுவாமி கிருபைசெய்தாரென்று வெகுசந்தோஷத்துடன் வாரிஎடுத்துப் பட்டத்தானையின்மீ தேற்றிக்கொண்டு அரண்மனைக்கேகிசெல்வமாகவளர்த்தனன் இம்மர்மங்களை ஸ்ரீ கண்ணபிரான் நன்றாயுணர்ந்தவராதலால்பீமசேனனுக்குத் தெரியும்படியாக ஒருகிளையை ஒடித்து இரண்டாகக்கிழித்துபீமசேனனுக்கெதிரில்போட்டார். அக்கருத்தை பீமன்தெரிந்துகொண்டு ஜராசந்தனைப்பற்றியிழுத்துக் கீழேதள்ளி இருபிளவாக உற்பத்தியான வண்ணம்பிளந்துபோட்டான். அப்போதுஜனங்கள் ஸ்ரீபகவானையும் பீமசேனனையும் மிகவுங்கொண்டாடி ஆனந்தித்தார்கள். ஸ்ரீபகவான் ஜராசந்தனுடைய குமாரனை சகதேவனுக்குப்பட்டங்கட்டி சிறையிலிருந்த அரசர்களைவிடுவித்து அந்தசகதேவனைக்கொண்டு அவ்வரசர்களைப் பூசைசெய்வித்து சந்தோஷப்படுத்திவைத்தார்,

## ௭௧ - வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்,

சித்தமொத்த சராசந்தனற்சிறை
வைத்திருந்த வரசர்களைத்தேற்ற
பத்தியாகப் பகவானைஎத்திட
சுத்தக்கியானோபஞ் செய்துவைத்தாரரோ.

ஜராசந்தனற்சிறையினில் வைத்திருந்த அரசர்களை உபசரிக்கஅவர்கள் கண்ணனைத்துதித்ததும் அவர்கட்குஸ்ரீபகவான் கியானோபதேசஞ்செய்ததுஞ் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்,

கேளிர் சந்திரவம்சோற்பவனான பரிட்சித்துமகாராஜனே ஜராசந்தனுடைய குமாரனைசகதேவனுக்குப்பட்டங்கட்டி அவனைக்கொண்டுசிறையினில் வைத்திருந்த இருபதினாயிரத்தெண்ணூறு அரசர்களையும்வெளிப்படுத்த அவர்களசிறையிலிருந்துபிரவேசிக்குங் காலையில்ஏந்தவஸ்திரத்துடன் பிரவேசித்தாகளோ ரணமடைந்துஅழுக்கடைந்து மிருக்கின்றஅந்த வஸ்திரத்தையே அணிந்துகொண்டு அன்னமில்லாததால் தேகத்தில் மாம்சமற்று எலும்புநரம்புமேலிட்டு முகம்சிம்பி வெகுவருத்தமடைந்தவர்களாய் ஸ்ரீகிருஷ்ணபகவானைச்சேவித்துசகலதுன்பங்களையும் போக்கிக்கொள்ளவேண்டுமென்று கருதியிருந்தமையால் அவ்வண்ணமேதிவ்வியபீதாம்பரத்தைத்தரித்துக்கொண்டும்ஸ்ரீவத்சமென்கிற மருவுடன் செந்தாமரைக் கண்ணனாய காமேனிவண்ணனாய்தெளிவுபொருந்திய திருமுகத்தையுடைய வராய காதினில்நவரத்தின குண்டலங்களை அணிந்துகொண்டுகரத்தினில்திருவாழி திருச்சங்கேந்தி நவரத்தினகிரீடத்தை சிரசினில்தரித்துக்கொண்டுதிருமார்பினில் நக்ஷத்திரம்போன்றமுத்தாரங்களும் சொர்ணமயமான தோளவளைகளும் கண்டத்தினில்திவ்வியவாசனைபொருந்திய புஷ்பமாலைகளும் நவமாலைகளும்தரித்துக்கொண்டுமிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணனைச்சேவித்துதிருப்தி அடையாமல் அந்தஸ்வாமியினது திவ்வியரூபங்களைக்கணனாற்கண்டு சேவிக்கிறவர்கள்போலும் அரவிந்தமாமுகத்தைநாவினாற்பானஞ்செய்பவர்கள்போலுமதிருவடியில் அர்ச்சித்ததுளசியைமூக்கினால் முகருகிறவர்கள்போலும் கரங்களினால்சுவாமியைஆலிங்கனஞ்செய்து கொள்ளுகிறவர்கள்போலும் இப்படி ஸ்ரீபகவானுடையசேவையினாலுண்டான ஆனந்தத்தினால்களங்கமற்றவர்களாய் சுவாமியைநோக்கிதுதிசெய்ய ஆரம்பித்தார்கள்.

கேளிர்தேவ தேவோத்தமனான சுவாமிமகாபல்சாலியான அந்தஜராசந்தனெங்களுக்கு நல்லஉபசாரஞ்செய்தானேயன்றி அபசாரங்கொஞ்சமேனுஞ் செய்யவில்லை அவனெங்களைக்கொண்டுவந்து இச்சிறையில் வைத்தபடியால்தேவரீரிடத்தில் மிகுந்தபக்திபிறந்து வாக்குக்கும்மனதுக்கும் எட்டாதஅருந்தெய்வமானதேவரீருடையசேவைகிடைத்தது கானல்போன்றஇந்த ஐஸ்வரியத்திலிடத்திலாசையில்லாமலும் துக்கத்திற்கும் ரோகத்திற்கும்இருப்பிடமானஇந்த தேகத்தினிடத்தில் ஆசையற்றிருக்கும்படியாயுங் கிருபைசெய்யவேண்டும்எத்தனைகோடிவருடம் அநுபவித்தாலும்மறுபடியும்கூதயிக்கத்தக்கதாயிருக்கின்றசொர்க்கமும் வேண்டாம்ஒருநாளும்அழிவில்லாதிருக்கின்ற மோக்ஷத்திற்குரியதேவரீருடையதிருவடியிலிடைவிடாமல் பக்தியிருக்கும்படிஅருளசெய்யவேண்டுமென்று சுவாமியினுடையஇர

ண்டு திருவடிகளையும் பற்றிக்கொண்டு பிரார்த்திக்க அவரசர்களைப்பார்த்து ஸ்ரீபகவான் ஒருவார்த்தைஅருளிச் செய்கிறார்முன்பு சிலர்இராச்சியத்தினிடத்திலாசையை வைத்துக் கெட்டுப்போனார்கள் அவர்களில்கார்த்தவீரியார்ச்சுனன் ஜமதக்கினிமுனியுடைய காமதேனுவைபலவந்தமாய் அபகரித்ததினால் பரசுராமனால் வெட்டப்பட்டான்நகுஷன்தேவராஜாவாக இருக்குங்காலையில்இந்திராணியை மனைவியாகவரித்து அவளண்டைக்குச்செல்லசப்தரிஷிகளையும் வாகனமெடுக்கச்சொல்லி அவமதித்தபடியால் மலைப்பாம்பாகி அநேகநாள் பூமியில்வசித்தான்வேனனென்பவன் ஐஸ்வரியமதத்தினால்யாகஞ்செய்வதில்தனக்குப்பாகங்கொடுக்கச்சொல்லி பிராம்மணர்களைத்தொந்தரைசெய்த அன்னியாயத்தால்அந்தணர்களால்கொல்லப்பட்டான் இராவணன்ஐஸ்வரிய மதத்தினால் சீதாபிராட்டியாரை எடுத்துக்கொண்டுபோய் அசோகவனத்தில்வைத்த அன்னியாயத்தால் சக்கரவர்த்தித்திருமகனான ஸ்ரீராமனால் கொல்லப்பட்டான் நரகாசுரனானவனதிதி தேவனுடைய குண்டலத்தையும்வருணனுடைய வெண்குடையையும் அபகரித்தபடியால்என்னாற்கொல்லப்பட்டான்நீங்களிதுகள் யாவற்றையுமறிந்துணர்ந்துசம்சாரனிடத்திலாசையையொழித்துநெறியாகஅரசுசெலுத்தி லாபநஷ்டங்களைச் சமமாகவெண்ணி என்னிடத்தில் வைத்தமனத்தைவேறொரு விடத்திலே செலுத்தாமலிருப்பீர்களாகில்முடிவில்என்னுடையபதவியை அடைவீர்களென்று வாழ்த்தி ஜராசந்தனுடைய புத்திரனான சகதேவன் மூலமாய் அநேகதாசிதாசர்களைக்கொண்டும் மங்களஸ்நானஞ் செய்வித்து தலைமயிர்களைச்சிக்கெடுத்து உத்தமமான ஆடையாபரணங்களால் அலங்கரித்து அறுசுவைரசவர்க்கத்துடன் போஜனஞ்செய்வித்து திவ்வியசந்தன புஷ்பங்களினால் அலங்காரஞ்செய்து தாம்பூலங்கொடுப்பித்து சரதகால நக்ஷத்திரங்கள்போல ஒளியினை வாய்ந்த அவ்வரசர்களை இரதத்தின் மீதிலேற்றி அவர்களுடைய தேசத்திற்கனுப்பினார் அவர்களும சுவாமியினுடையதிவ்விய கல்லியாணகுணங்களைத்துதிசெய்துகொண்டே தங்களுடையதேசத்திற்குச்சென்று பகவானுடையஆக்கினையின் வண்ணம் அரசுசெலுத்திவந்தார்கள்பிறகு சகதேவனனேகம்யானைக்குதிரைகள்தேர்கள்-இரத்தினங்கள்-ஆபரணங்கள் இவைகளை எடுத்துக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி முதலானோரிருக்குமிடத்திற்குவந்து அவர்களைப்பார்த்து ஓ மகாபுருஷர்களே எனக்கியைந்தமாத்திரம் இந்தத்திரவியங்களைக் கொண்டுவந்தேன் மனம்பெரிதுபண்ணி இவைகளை அங்கீகரித்துயுதிஷ்டிரமகாராஜாவினுடையயாகத்திற்கு உபயோகப்படுத்தவேண்டுமென்று பிரார்த்திக்கக்கேட்டுமகிழ்ச்சியுடன் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி முதலியமூவரும் அவைகளைக்கைக்கொண்டு அவனி டத்தில் செலவுபெற்று இந்திரப்பிரஸ்தத்திற்குச்சென்று சங்கத்தைப்பூரிக்க அதுகேட்டதர்மபுத்திரர்சத்துருசங்காரஞ்செய்துவருகிறார்களென்று களிப்படைந்திருக்கிறவரை ஸ்ரீகிருஷ்ணன் பீமார்ச்சுனர்களுடன்வந்துதெண்டன்சமர்ப்பிக்கஅவர்களைப்பார்த்து யுதிஷ்டிரர்பலஆசிகள்கூறித்தழுவி அணைத்துசந்தோஷப்பட்டார்,

⸻ ✳ ⸻

## எச வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

செய்யராஜசூயகத்தைச்செய்ததும்
கையிலாநிலைய வைத்திடுங்கண்ணனை
வையமேசிசுபாலன் பகர்ந்ததும்
ஐயனவனையதஞ் செய்ததுஞ்சொல்வாம்

ஸ்ரீகிருஷ்ணஸ்வாமியானவர் தருமபுத்திரரை இராஜசூயயாகஞ் செய்யச்சொல்லி ஆக்கியாபித்துவேதியர்களைக் கொண்டுயாகத்திற்கு ஆரம்பஞ்செய்ததும் அக்கிரபூஜாநிமித்தமாய் கலகமுண்டானதும்அப்போதுசிசுபாலன் ஸ்ரீகிருஷ்ணபகவானை அநேகவிதமாய் தூஷித்ததும்அவனை ஸ்ரீபகவான்சங்கரித்ததுஞ் சொல்லப்படுகின்றது.

கேளீர் புவனபதியானபரீட்சித்துமகாராஜனேபின்பு ஸ்ரீகிருஷ்ணபகவான் யுதிஷ்டிரரைப்பார்த்துஓமகாராஜனே உமதனுக்கிரகபலத்தினால் பீமசேனன்ஜராசந்தனைச்சங்காரஞ்செய்து சிறையிலிருந்த அரசர்களைவிடுவித்துவெகுதிரவியங்களைக்கொண்டுவந்தான் உமதாக்கினைப்படியானும்அர்ச்சுனனுங் கூடப்போயிருந்து ஒருதீங்கும் வரவொட்டாமற்காத்துவந்தோமென்று சொல்லக்கேட்டு யுதிஷ்டிரர்கிருஷ்ணா உம்முடைய பரிபூரணகிருபையைநாங்கள்பெற்றிருக்குமளவில் ஒருகுறைவும் நேரிடாது சகலகாரியங்களும் நிறைவேறும் ஆனபடியால்ஜராசந்தன் முடிந்ததும்அதிசயமோ பீமசேனனாலேயும்அர்ச்சுனனாலேயும் என்றதும்எல்லாம் உமதுதேஜோபலமேயன்றிவேறில்லைஇயல்பாகஅடுத்தவரைக்காப்பவராகியஉமது பெருமையையென்னாற் புகழத்தக்கதோசகல மேன்மைகளுமென்றனுக்குக்கிடைத்தன இவைக்குறித்துஎன்னாலுமக்குச்செய்யத்தக்கது யாதொன்றுமில்லை இப்படியேஎல்லாவற்றையும் நிறைவேற்றிக்காத்தருளவேண்டும்நீர்எங்களிடத்தில் பரிபூரணகிருபைவைத்துசெய்த சகாயத்தினாலேசகலராஜாக்களுங் கீழ்ப்படுத்தப்பட்டார்கள்பூமியெல்லாம் சுவாதீனத்திலிருக்கிறது

தனங்கள் அளவற்றதுகளாயிருக்கின்ற மேன்மையும் புகழுமுண்டாயிருக்கின்றன ஒருகுறைவுமில்லை ஆனபடியினாலேஇந்தத்தனங்களையெல்லாம் பிராம்மணவிஷயத்திலும் அக்கினிவிஷயத்திலும் உபயோகித்து கிருதார்த்தனாகவேண்டுமென்று நினைக்கின்றேன் அதற்கு நீர்கட்டளையிட்டுக் கூடவேயிருந்துசகலகாரியங்களையு நிறைவேற்றவேண்டும்எக்காலத்திலும்எக்காரியங்களும்எங்களுக்குஉம்மைவிடகதிவேறில்லை ஆகையால்எனக்குஇராஜசூயயாகத்திற்காகக்கட்டளையிட்டு என்தம்பிமார்களைக்கூடவைத்துக்கொண்டு வேண்டிய காரியங்களைச்செய்து ரட்சிக்கவேண்டுமென்று விநயத்தோடுதருமபுத்திரர்சொல்லும்வார்த்தையைக்கேட்டுஸ்ரீகிருஷ்ணன்சொல்லுகிறார் ஓமகாராஜனேஉமது நன்னெறியினால்சகலமுங் கூடிவரும் அந்தச்சாமிராச்சியத்திறகு நீரேதகுந்தவரன்றி மற்றையார்தான் தகுவார்ஆதலாலேஅவசியம்நீர்இப்போதுயாகத்திற்பிரவேசிக்கவேண்டும்ஒருகுறைவும்நேரிடாதுநீர்எந்தக்கட்டளையிட்டாலும்சிரத்தால்வகித்துநடக்ககாத்திருக்கின்றேன்உமக்குவரும்மேன்மைதான்எங்களுடையமேன்மை உமக்குஇந்தக்காரியம்நிறைவேறினபின்புதான் நாங்களெல்லாரும் கிருதார்த்தர்களாவோம் ஆனபடியினாலேவிசாரப்படாமல் யாகத்தை யாரம்பித்து நடப்பிக்கவேண்டு மென்று ஸ்ரீ கிருஷ்ணபிரானானவர் சொல்லியதைக் கேட்டு யுதிட்டிரர் வெகுசந்தோஷப்பட்டு ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து ஓ கிருஷ்ண, எங்களிடத்தில் மிகுந்தகிருபையினாலே நீர் சொல்லிய வார்த்தைகளைக் கேட்க மிசவுமானந்தமாயிற்றுஅந்தப்பிரகாரமேசகலபாரங்களையும்வகித்து யாகத்தைநிறைவேற்றுமென்று சொல்லித் தம்பிமாரையழைத்துயாகத்திற்கு வேண்டியவைகளைச் சித்தப்படுத்தும்படி கட்டளையிட்டார்.

அப்போதுதமையனிட்ட கட்டளையின்படி சகதேவனானவன் யாகத்துக்குவரும் பிராமணர்முதலியநான்கு சாதியாருக்கும்வேண்டிய சகலபதார்த்தங்களைச்சித்தப்படுத்தும்படியாயும் பாகஞ்செய்கிறபேர்களை விசாரிக்கும்படியாயும் தங்கள்சாரதிகளுக்குத் திட்டஞ்செய்துதான் தவுமியமகாமுனியின்சொற்படி நல்லபூமியில் வெகுவிலாசமாகவும் அழகாகவும் பலமாகவும்சாஸ்திரவிதிக்குஒத்ததாகவும் யாகசாலையைநிருமித்தான். அன்றியும் வரும்ஜனங்களுக்கு வாசத்திற்காக வெகுவீடுகளை நிருமாணஞ் செய்வித்தான்,

பின்னுமந்தயாகசாலைகள் சொர்ணத்திலும்- வெள்ளியினாலும்-பவழங்களாலும்-ஸ்தம்பங்கள்நாட்டி பந்தலுக்குமுகமலினால் வஸ்திரங்கட்டி முத்துச் சரங்களினால் ஜாலாதொங்கவிட்டு அநேகநவரத்தினமயமான தோரணங்களும் வாழைகமுகு முதலியவற்றால்அலங்காரஞ்செய்துயாகத்திற்குரிய சிருக்குசிருவ முதலிய பாத்திரங்கள்யாவும் சொர்ணமயமாகச்செய்து சொர்க்கலோகம் போலவிளங்குகிற பாகவதரிற்சிறந்த தருமபுத்திரமகாராஜாவினதுயாகசாலையில் தேவேந்திரன் முதலிய சகலதிக்குப்பாலகரும் பிரமன்உருத்திரன்முதலானோரைமுன்னிட்டுக்கொண்டுவந்து சேர்ந்தார்கள் அநேக கோடிகாலந்தவஞ்செய்தாலும் பிரத்தியட்சமாகாதபிரமன் உருத்திரன்முதலியவர்கள் எளிதி லெப்படி வந்தார்களென்றால்சர்வேஸ்வரனை ஸ்ரீகிருஷ்ணபகவான்சேவகனைப்போலஏவற்பணிசெய்கையில் அவர்கள்வந்தது ஆச்சரியமேஅல்ல இப்படி யாகத்துக்குவேண்டிய காரியங்கள்நடந்துகொண்டிருக்கையிலே ஸ்ரீ வேதவியாசமகாமுனிஅவிடம் எழுந்தருளினர், அவரையுதிட்டிரர் நமஸ்காரஞ்செய்து சுவாமிஎங்கள்குலகுருவே தேவரீர்முன்னம ஆக்கியாபித்திருந்தபடிக்கு ஸ்ரீகிருஷ்ணனுடையசகாயத்தினாலே ராசாக்களையுஞ்செயித்துவெகுதிரவியங்கள்கொணர்ந்து இராசசூயயாகத்துக்கு ஆரம்பஞ்செய்திருக்கிறேன் தேவரீரதை எப்படி நடத்தவேண்டுமோ அப்படிநடத்தும்படிதயைசெய்யக்கோருகிறேனென்று சொல்லக்கேட்டு அப்படியே யாகட்டுமென்று அங்கீகரித்துயாகத்துக்குவேண்டிய ரித்துவிக்குகளையேர்ப்படுத்தினர். யாராரை எப்படியென்றால் சுமாவென்கிறமகாமுனிவரை உத்காதாகவும் பைலரென்கிறவரையும் தவுமியரென்கிறவரையும் ஹோதாக்களாகவும் யாக்கியவல்லியரை அத்துவரியுவாகவும் சைப்பியரென்கிறவரைப் பிரமாவாகவும்நியமித்துத் தாமும்பிரமாவாகஇருக்கவொப்புக்கொண்டார் இந்தரிஷிகளுடையபுத்திரபவுத்திரர் இவர்களெல்லாம் அந்தநாலுரித்துவிக்குகளுக்குக்கணமாக நியமிக்கப்பட்டார்கள்,

இவ்விதமாக வேதவியாசர் சிஷியபரம்பரையோடுகூடவைதிகங்களை நடத்தச் சித்தமாயிருந்தார், பின்புமகாராஜாவினுடைய ஆக்கினையினாலே சகதேவன் சகலதேசத்துராஜாக்களையும் அழைத்துவரும்படி யோக்கியராகிய தூதரையனுப்பிவித்தான் அன்றியும் தங்கள்தேசத்திலும்மற்றுமாச்சிரமங்களிலும் இருக்கிற பிராமணர் க்ஷத்திரியர்முதலிய யாவரையும் அழைத்துவரத்தகுந்தபேரை யேவினான்.

இப்படிச் செய்யவேண்டிய சகலகாரியங்களையும் சக்கிரமதைசெய்து தமையனாரிடத்திற்சென்று கட்டளையின்படிஎல்லாம் சித்தமாயிற்றென்று சொல்லக்கேட்டயுதிட்டிரர்திருப்தியடைந்து தவுமியமா முனிவரையும் வியாசர் முதலாகியபேர்களையும் பார்த்துக் கைகூப்பிக்கொண்டு சுவாமிகளே யாகத்துக்குவேண்டியகாரியங்களெல்லாம் சித்தமாயின இனியடியேனுக்குச்செய்யவேண்டியதைகட்டளையிடவேண்டுமென்று சொல்ல. அது

கேட்டுவேதங்களேமூர்த்திகரித்து வந்தவையென்றுசொல்லத் தக்கமுனிவர்கள் புண்ணியாகவாசனஞ்செய்துயாகசாலையைச் சுத்திசெய்து வேதிகைகள்போட்டு ராசாவைப்பார்த்து இனிநீர் தீட்சையிற்பிரவேசிக்கலாமென்றுசொல்லக்கேட்டு யுதிட்டிரர் நகுலனையழைத்துநீ அஸ்திநபுரி பட்டணத்திற்குப்போய் பீஷ்மர்முதலாகியபேர்களையழைத்துக்கொண்டு வாவென்று கட்டளையிட்டு ரிஷிகளைப்பார்த்துச்சித்தமா யிருக்கிறேனென்றுசொல்லவே அந்தமகாரிஷிகள் கேட்டைநட்சத்திரத்தின்நாலாம்பாதத்தோடுகூடிய நன்முகூர்த்தத்திலேயுதிட்டிரமகாராசனுக்குப் பூரணமாகிய கிருஷ்ணாசனம் போர்த்துமான்கொம்பைக் கையிற்கட்டி விதிப்படி தீட்சைசெய்வித்தார்கள்-அந்தமகாராசன் அவர்களால்தீக்ஷைசெய்விக்கப்பட்டுமகாநுபாவராகியவெகுப்பிராம்மணர் சொஸ்திவாசனஞ்சொல்லிச் சூழ்ந்துவர யாகசாலையிற் பிரவேசித்தார் அப்போது பீமசேனார்ச்சுனர்கள் மந்திரிகளோடுகூடி யாகசாலைக்குவந்து வெகுதட்சணைகள்கொடுத்தார்கள்.

இப்படியிருக்க நானாதேசங்களிலிருந்து பிராமணர் முதலாகியபேர்கள்வரத் தலைப்பட்டார்கள் அஸ்திநபுரியிலிருந்து துரியோதனனானவன் துச்சாதனன்முதலிய தம்பிமார்களுடனே வெகுகாணிக்கைகள் கொண்டுவந்தான்-பீஷ்மன்-திருதராஷ்டிரன்-விதுரர்- துரோணா-கிருபர்-அசுவத்தாமா-பாக்லிகன்-சோமதத்தன்பூரி-பூரிசிரவன்-முதலானோர்களும்உசிதமாக அநேகந்தனங்களைக்கொண்டுவந்தார்கள்-இவர்களையெல்லாம் பீமார்ச்சுனதிகள்கிருஷ்ணன்முதலானோருடனேசேர்ந்துஎதிர்கொண்டுதகுந்தபடி மரியாதைசெய்ய அவர்களும் இராசாவைக்கண்டுசுதந்தரமாய் யாகத்திற்குவேண்டிய சன்னகங்களிலிருந்தார்கள், இவர்களுமன்றி-கர்னன்- சல்லியன்-சகுனி-பலராமன்- துருபதன்முதலாகிய சகலராசாக்களும் புத்திரமித்திரகளத்திராதிகளுடனே வந்தார்கள். பாண்டியமகாராசன் தன்மகனையும்பேரனையுமழைத்துக்கொண்டுவந்தான்.

இவ்வாறுவந்தராசாக்களுக்கெல்லாம்சகதேவன்தனித்தனியே விடுதிகளைச்சித்தப்படுத்தி வேண்டியவுபசாரங்கள்செய்தான். அப்போது அந்தயிந்திரப்பிரஸ்தநகரமானது-யானை-குதிரை-மனிதர்களால் நிறைந்து கடல்போல்இரைச்சலடைந்து இதுவே யொருலோக மென்னும்படிவிளங்கிற்று. வந்தராசாக்களெல்லாம்அநேகரத்தினமுதலாகிய காணிக்கைகளைக்கொண்டுவந்து கொடுத்துமகாராசாவைப்பார்த்து சந்தோஷமடைந்தார்கள் அந்தயுதிஷ்டிரர் யாவராலுஞ்சூழப்பட்டு ஆகாசத்தில் சகலகிருகங்கள் சூழசூரியன் எப்படிவிளங்குவானோ அப்படிவிளங்கினர். அந்தயாகசபையில்ஒருபக்கத்தில்வேதகோஷ்டமும்-ஒருபக்கத்தில வித்துவான்களுடையபிரசங்ககோஷ்டமும்- ஒருபக்கத்தில் வந்திகள் விருதோதுங்கோஷடமும் ஒருபக்கத்தில்வாத்தியகோஷ்டமுமாகநாதமேமுற்றும் வியாபித்ததுபோலிருந்தது.

இப்படிப்பட்ட யாகசாலையிலே யாகம்நடக்க ஆரம்பமாயிற்று அப்போதுதருமபுத்திரர் விதுரரைச்சகலவஸ்துக்களும் ரசவர்க்கங்களும் வைத்துக்கொண்டுகொடுக்கச்சொல்லியும் அசுவத்தாமாவையும்-சஞ்சயனையும் வந்த பிராமணரை விசாரிக்கச்சொல்லியும்-யுயுச்சு என்கிறவனையும்-பீமசேனனையும்-சாத்தகியையும்-மடப்பள்ளிவிசாரிக்கச்சொல்லியும் பீஷ்மத்துரோணாதிகளை எல்லாவற்றையும் மேல்விசாரணைசெய்யும்படிக்கும்துச்சாதனனைப் பந்திவிசாரிக்கும்படிக்கும் துரியோதனனை அவரவர்களுக்குச் செய்யவேண்டியதான வெகுமானவஸ்துக்களைச் சித்தப்படுத்தும்படிக்கும் கிருபாசாரியரை வருகிறதிரவியங்களை வாங்கி வைக்கும்படிக்கும் இப்படியேஅந்தந்தக்காரியங்களிலே யவரவர்களை நியமித்தார் அப்படியே யாவருந்தங்கள் தங்களுக்கிட்ட பணிவிடையைஜாக்கிருதையாய்நடத்திவந்தார்கள் குந்திசுபத்திரை முதலானஸ்ரீகள் யாகத்திற்குவந்த பிராமணக்ஷத்திரியஸ்திரீகளுக்குச் சகலவுபசாரஞ்செய்து பூசிப்பதற் சித்தமாயிருந்தார்கள். ஸ்ரீகிருஷ்ணன் வரும்வேதியர்க்குப் பாதப்பிரக்ஷாளனஞ்செய்கிற காரியம் என்னுதென்று தாமேயேற்றுக்கொண்டு மிகவுமன்போடு அந்தநற்செய்கையைச்செய்துவந்தார், இவைகளினாலேவந்தவர்கள் எல்லாம்மிகுந்த திருப்தியடைந்துஇப்படியொருகாலத்திலுமோரிடத்திலும் போஜன முதலாகியவைகளின் விசாரணைநடந்ததில்லை ருசியுமிருந்ததில்லை செல்வமுங்கண்டதில்லையென்று புகழ்ந்தார்கள் அதன்றியும்அந்தப் போசனசாலையில் கொடுங்கள் கொடுங்களென்றும் புசியுங்கள் புசியுங்களென்றும் பாண்டவர்களுடையஜனங்கள்சொல்ல வந்தபேர்கள்போதும்போதும்திருப்தி திருப்தியென்று மறுமொழிசொல்லபெருங்கூச்சலுண்டாயிற்று.

இப்படிக்கு ஒருகுறைவுமின்றி அந்தராசசூயம்நடந்துவருகையில் ரித்துவிக்குகள் விதிப்படியேகாற்கபத்தியம்-ஆகவநீயம்-தட்சிணாக்கினி - ஷப்பியாக்கினி ஆவசதாக்கினி-தாரியாக்கினியென்கிற ஆறு அக்கினிகளையும் வளர்த்திப் பூசைகள்செய்து அநேகசமித்துக்களாலும் நெய்முதல்யவைகளாலும் ஆகுதிசெய்தார்கள் வேதியர்கள்நான்குவேதங்களையும் பாராயணஞ்செய்துவந்தார்கள் இந்தயாகத்தில் வானத்திலிருக்குந் தேவர்களும் பூமியிலிருக்குந்தேவர்களும் பூரணதிருப்தியடைந்துமகிழ்ந்துவாழ்த்தினார்கள் இப்படியிருக்க சுத்தியையென்கிற ஒருவிதயாகச்சடங்குசெய்யவேண்டி நாள்வந்தது அன்

குந்த கோபத்தை யடைந்து முகம் படபடத்து நிற்க அவனைச்சார்ந்த அரசர்களும் முகங்கன்றி ஒருவர்முகத்தை யொருவர்பார்த்துக்கொண் டிருந்தார்கள்- இப்படிப்பட்ட அரசர்களைநோக்கிச் சிசுபாலன் யுத்தஞ்செய்யவேண்டியசம்மதியைக்காட்டயாவருங்கிருஷ்ணனோடுயுத்தஞ்செய்ய யத்தனப்பட்டார்கள்அதையறிந்தும்பகவான்சும்மாயிருந்தார் அச்சகதேவன் பின்புமுறையேபிராமணர்-க்ஷத்திரியர்முதலானபெயாவரையும் தகுந்தபடி பூசித்து அந்தயாகச்சடங்கை நிறைவேற்றினான் இதைக்கண்டு சிசுபாலன் வெகுபொருமைகொண்டு தன்னோடிணங்கிய அரசரைநோக்கிஓராசாக்களே நீங்களேன்அஞ்சுகிறீர்கள் நீங்களேவெகு சாமர்த்திய முள்ளவர்கள்நான் உங்களுக்குத்தகுந்தசேனாபதியாயிருக்கின்றேன்ஆனபடியினாலே நம்மையாவரையும் அவமானஞ்செய்தபாண்டவர்களையும் அவர்களைச்சார்ந்தவர்களையும்பீஷ்மன்முதலான துஷ்டரையும் இங்கேதானேகொன்றுகீழேதள்ளிவிட்டு யாகத்தையும் கெடுத்துவிடுவோமென்றுசொல்ல அதைக்கேட்ட துஷ்டஅரசர்களெல்லாம் சண்டைக்குயத்தனப்பட்டு ஆரவாரஞ்செய்யவேதருமபுத்திரர்தமது யாகத்திற்குஇடையூறுநேரிட்டதென்று மனங்கலங்கி மிகுந்தபயத்துடனே பீஷ்மாச்சாரியரைப்பார்த்து பிதாமாரே இப்போது ராசமண்டலம் மிகவுங்கோபித்து யுத்தத்திற்கு ஆயுத்தமா யிருக்கிறதே இதனாலேவெகுபேர்கள் வீணாய்நசிக்கிறதுமன்றிநம்முடையயாகத்திற்குவிரோதம் வருகிறதுபோற் காண்கிறதே-இப்படிக்கெல்லாம் நேரிடாமலிருக்கும்படி நான்செய்யவேண்டிய உபாயம்யாது நீர் உரைக்கவேண்டு மென்று கேட்கஅந்தக்குருகுல பிதாமாரேகேள் தருமபுத்திரா நீயொன்றுக்குமஞ்சவேண்டாம்ஸ்ரீகிருஷ்ணனென்னுஞ்சிங்கம்அதோயிருக்கிறதுபார் இவ்வளவு ராசகோலாகாலத்திலும் ஏதாகிலுஞ்சற்றஞ்சிக் கண்ணெடுத்துப்பார்க்கின்றதா அலட்சியமாகவேநினைத்துப் புன்னகைகொண்டுவிளங்குகின்றது, இந்த நாய்க்கூட்டம்காலங்கிட்டியபடியால் வீணாய்க்குலைக்கின்றதுசுகமாய்க்குலைக்கட்டும்அதனால் யாருக்கென்ன ஸ்ரீகிருஷ்ணன் இந்தப்பாவிகளையெல்லாம் ஒருநொடியிற் சங்கரிக்கப்போகிறார் ஆனபடியினாலே நீர்யோசிக்கவேண்டாம் என்று சொல்லக்கேட்டுத் தருமபுத்திரர் சமாதானமாயிருக்கச் சிசுபாலன்பீஷ்மரைப்பார்த்து அடாகிழவா உனக்கேதுபுத்திஇப்படிகெட்டது இத்தனைநாளும் நீவெகுவிவேகமுள்ளவனென்றும் நினைத்திருந்தேன் இப்போது நீசொல்லியபேச்சைக்கேட்டால் சிறுபிள்ளைக்குங் கீழ்ப்பட்டவனாகத்தோற்றுகிறது அல்லதுபைத்தியந்தான்பிடித்ததோஅல்லதுகாலங்குறுகியபடியால் தாறுமாறாகப் பிதற்றுகின்றனையோ அடாபாவி கொஞ்சமும் குலாபிமானமும்சூராபிமானமுமில்லை தைரியசாலிகளாகிய இராசாக்களையுங்கூட பொய்சொல்லியேன் பய முறுத்துகிறாய் இதிலஉனக்கு வெட்கமுண்டாகாமற்போனதற்கு யான் ஆச்சரியப்படுகிறேன் நீஇழிகுலப் பிறப்புடையவனாதலால்அற்பனாகியும் அயோக்கியனாகியுமிருக்கிற ஒருஇடையனைப்புகழ்ந்தாய் ஐயோ ஏனிப்படிஉன்பிழைப்பு வீணாய்ப்போச்சுதா இப்படிப்பட்ட மகாமூடனாகியஉன்னிடத்தில் தருமோபதேசங் கேழ்க்கவந்த பாண்டவர்களுக்கும் அதுதகுதிதான் இல்லாவிட்டால்அந்தக்கடைக்குட்டிப்பயல் காலைதலைமேல்வைக்கிறேனென்றுபிதற்றுவானா அவன்அற்பனென்று உபேட்சைசெய்தேன்இல்லாவிட்டால் நீதானெனக்கெவ்வளவு இந்தப் பாண்டவர்கள்தானெவ்வளவு மற்றவர்தானெவ்வளவு ஆகிலும் பாம்புக்குட்டிகளைக்கண்டவிடத்தில் தலையை நசுக்கவேண்டுமென்று பெரியோர்சொல்வதுபோல் உங்களையெல்லாந் தலை யெடுக்கவொட்டாமல் அடிக்கவேண்டியது அவசியந்தான் அதற்குஇத்தனைநாளும் காலம்நேரிடாமற்போயிற்று இப்போதுநேரிட்டபடியால் அப்படியே செய்கிறேன் இதெல்லாமிருக்கட்டும் நீஎவனைப்புகழ்ந்தாயேஅதைக்கேட்டு இந்தக் o குண்டகர் எவனைப்பூசித்தார்களோ அவன்அற்பனென்றும் மோசக்காரனென்றும்-துடுக்கனென்றும்-யாவரும்-அறிவார்கள, நீயும்அறிவாய்அறிந்திருந்தும் கெடுமதியினாலேயோ கெருவத்தினாலேயோ மயக்கத்தினாலேயோ சிறப்பித்துச்சொன்னாய்நீசொல்லிய சரித்திரங்களில் பலவெறும்பொய்தான்ஆகிலும்அவைகளாலும் இவனுக்குமிகுந்தபெருமையைநீகாணேன். இவனைத்தெய்வமாகச்சொன்னாய் இவன்வெண்ணெய்க்கும்பாலுக்கும் தயிருக்கும் ஆய்ச்சியர்மத்தினால்மொத்துண்டதும் திருடியகப்பட்டுக் கட்டுண்டதும் கோவலரும்கோவியரும் இட்ட பணிசெய்து கோணக்கூத்தாடி இரந்துண்ணதும்பிறர்மனைவியராகியகோபிகைகளோடு கூசாமல் காமசுகங்களைப்புணர்ந்ததுமுதலியதை நிந்தையாகச்சொன்ன பேச்சைக்கேட்டு ஸ்ரீகிருஷ்ணபகவான் நரியினுடையபேச்சை லட்சியஞ்செய்யாத சிங்கத்தைப்போலிருந்தார்,

சிசுபாலன்-கண்ணன்பேரில்-யுத்தத்துக்குப்புறப்படல்,

ஸ்ரீபகவானுடைய நிந்தையும் பாகவதர்களுடையநிந்தையையுங் கேட்டுக்கொண்டிருப்பவருக்குச்சகல புண்ணியமும் க்ஷயித்துபாலத்திற்குரியவனாவனென்று தர்மசாஸ்திரத்தில சொல்லியிருப்பதுதெரிந்தபெரியோர்கள்செவிகளை இரண்டுகரங்களால் மூடிக்கொண்டு இந்தப்பாவிக்கு எப்போது மரணம் வரப்போகுதென்று

---

o குண்டகாளென்றால் புருஷ னிருக்கும்போதே விபசாரஞ்செய்துபெற்றபிள்ளைகள்.

சொல்லிக்கொண்டே அந்தச் சபையைவிட்டு அப்பாலே போய்விட்டார்கள். அதுகண்ட பாண்டவர்கள்கேகயராள் முதலானோருக்குக்கோபமுண்டாகிதனுர்பாணங்களை எடுத்துக்கொண்டு இரதாரூடர்களாய் யுத்தத்திற்குச் சன்னுத்தா ளானர்கள். அப்போது ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர்பாண்டவர்முதலானோரையுத்தத்திற்குப் போகவேண்டாமென்று தடுத்து,தம்துசாரதியான தாருகனைத் தேர் கொண்டுவரும்படி நியமிக்க அவன் சைனிய-சுக்கிரீவ - மேகபுஷப- வலாகம் - என்கிற நான்கு குதிரைகள் கட்டி கருடத்துவஜம் நாட்டி வெகு பிரகாசமாய் விளங்காநின்ற ரதத்தைக்கொண்டு வந்து சித்தப்படுத்த சுவாமி பார்த்து வெகு சந்தோஷத்துடனே பெரியோர்களெல்லாந் துதிக்க. பாண்டவர்ஜயஜயவென்றுகூற, பீஷ்மர் கைலாகுகொடுக்கச் சபையைவிட்டுவந்து திவ்யரதத்தின் மேலேறினர் சிசுபாலனும் ரதத்தின்மேலேறித்தன்பரிவாரத்துடனேசபையைவிட்டு யுத்தம்பண்ணும்படியாகிய விடத்திற்குவந்தான், ஸ்ரீகிருஷணனும் அவ்விடம் வந்துசேர்ந்தார்.

கிருஷ்ணபகவானுக்கும் - சிசுபாலமகாராஜனுக்கும் உயுத்தம்.

இவ்வாறுகயுத்தபூமியில் உதயபருவதத்தின் சிகரத்தில் சூரியனுதித்தா லெப்படியோ அப்படிக்குத் திவ்விய ரதத்திலேறி விளங்காநின்ற ஸ்ரீகிருஷணனைப் பார்த்துச்சகலமானபேரும் அவர்தேஜசுக்குஅஞ்சி இவர் சாக்ஷாத் நாராயண மூர்த்திதான் சந்தேகமில்லை இந்தச்சிசுபாலன் இனி பிழைக்க மாட்டா னென்று நினைத்துசுவாமியைக் கும்பிட்டார்கள். சத்துருக்களும் அந்தப்பிரகாசத்தை நோக்கி மனங்கலங்கினர்கள். அப்போது பாண்டவர்களும் மற்றுமனேக யோக்கிய ராஜாக்களும் சுவாமியைச் சூழ்ந்துநிற்க. அவர்களைப் பார்த்து ஓ மகாராஜர்களே நீங்கள் இடைந்திருந்து யுத்தவேடிக்கையைப் பாருங்கள் நெருங்க வேண்டாமென்றுகூற அந்தச்சமயத்தில் யுத்தபூமியில்நிற்கும் சிசுபாலனுக்கு சில அபசகுனங்க ளுண்டாயின, அவைகளைச் சொல்லுகிறேன் கொள்ளிவாய்நரிகள் அவனைச்சுற்றி ஊளையிட்டன. பூமி நடுங்கிற்று,எதிர்முகமாகப் பெருங்காற்றுவீசிற்று, வெறுவானத்தினின்றும் இடிகள்விழுந்தனகுறைக்கொள்ளிகள் விழுந்தன, பூமியில் பயங்கரமாகிபஒசையொன்று உண்டாயிற்று, பர்வகால மில்லாமலிருக்கப் பகலிலேயே இராகு சந்திரனை மறைத்தது அவன்தேரிற் கட்டியிருக்கிற கொடியின் நுனியில்கழுகுவந் துட்கார்ந்தது, இன்னும் மாமிசந்தின்னும் பலவகையான பறவைகளும் அவன்தேரைச் சுற்றிச் சஞ்சரித்தன,

இவ்விதமாக அனேக உற்பாதங்கள் உண்டாகப் பார்த்தும் சிசுபாலன் லட்சியஞ்செய்யாமல் கவசமுதலானவைகளைப்பூண்டு கையில வில்லெடுத்துக் கொண்டு கெர்ச்சனை செய்துநின்றான், பீஷ்மர்பாண்டவர்முதலியபேர்கள் இவ்வுற்பாதங்களைக்கண்டு வெகு சந்தோஷப்பட்டார்கள், மற்றுஞ் சிலர் பயப்பட்டார்கள், இப்படியிருக்க சிசுபாலனனவன் உதடுதுடிக்கக் கிருஷ்ணனை நோக்கிச் சொல்லியதாவது அடாகிருஷ்ணு எனக்குநீயொருவன்தான் முக்கியசத்துரு, உன்னைக்கொன்றுநாற்கடல்சூழ்ந்த இபபூமியைச் சத்துருவின் உபத்திரவமில்லாமல் ஆளுகிறேன், வெகுநாளாய் இந்த அபிப்பிராயமிருந்தது. அதற்கு இன்றைக்குத்தான் தைவாதீனமாய் ஏது உண்டாயிற்று. இப்போது எங்கேயும் ஓடாமல்நில்லு சீக்கிரத்தில் உன்னைச் சங்காரஞ்செய்து அப்புறம் இந்தக்கிழப்பாவியையும் மூடப்பாண்டவர்களையும் கொன்று திருப்தியடைந்து அரசர்களின் அபகீர்த்தியைப் போக்கடிக்கிறேன் என்று சொல்லிக் கையிலிருக்கும் வில்லைவளைத்து நாணேற்றி நாணோசைகொணடு கூர்மையுடையனவைகளும்,கணுக்குறுகியவைகளும், பொற்பட்டங் கட்டியவைகளும். வெகுபளபளப்போடு கூடியனவைகளுமா யிராநின்ற அனேகபாணங்களைச் சந்தானஞ்செய்து அம்பெடுக்கிறதும் வில்லில் தொடுக்கிறதும் விடுகிறதும ஒருவருங் காணக்கூடாமலிருக்கும்படியாகிய வேகமாய்க் கண்ணன்மீதில் கோடைமழை சொரிவதுபோற் சொரிந்தான், ஸ்ரீகிருஷ்ணன் அவைகளை யங்கீகரித்துத் தமது சாரங்கவில்லில்அனேகபாணங்களைத் தொடுத்துச் சிசுபாலனை நோக்கி அடா சிசுபாலா நீஇத்தனைநாழிகைச் சரங்களை வருஷித்தாயே இப்போது நானுன்பேரிற் சில சரங்களைப் போடுகிறேன் அவைகளின் திறத்தைப்பாரென்றுசொல்லி பத்து இருபது-நூறு-இப்படிக்குக் கூட்டங் கூட்டமாய்ப் பிரயோகித்தார், அந்தப்பாணங்கள்இடிவிழுந்தாற்போல் மார்பின் மேலேவிழவே அந்தச்சேதிராஜன் ஒருமுகூர்த்தகாலம்நெருப்பில் வீழ்ந்தபுழுப்போல்துடித்து மறுபடியும் மனவலிமையோடு உதட்டைக்கடித்துக்கொண்டு குரூரமாகிய பாணங்களை வருஷித்தான், கிருஷணன் அவைகளையெல்லாம்துணடித்து அவன்மீதில் மறுபடி நூறுபாணங்களைப் பிரயோகித்தார் அவைகளைச்சிசுபாலன் கிட்டவர வொட்டாமற்றடுத்துத்தள்ளி ஆறுபாணங்களைப் பிரயோகித்தான், அவ்வாறுபாணங்கள் மேலே விழுந்தமர்த்திரத்திலே கண்ணன்வெகுகோபமடைந்துஆக்கினேயம் - பர்ச்சன்னியம் வாயவியம்-முதலாகிய சில அஸ்திரங்களை விடுத்தார் சேதிராஜனனவன் அந்த அஸ்திரங்களையெல்லாம் பதிலஸ்திரங்களினலே தடுத்து கிருஷ்ணனுடையதேர்-குதிரை-கொடி-சாரதி சக்கரம்-இவைகளிலொன்றுந்

தெரியாம லிருக்கும்படி அம்புகளைச் சொரிந்து சிங்க நாதஞ்செய்து கண்ணனைக்குறித்து அடா கிருஷ்ணாயி தோபார் ஒருபாணத்தை யெய்கிறேன் இதுதான் உன்னையமலோகத்திற்கு அனுப்பப்போகிறது மார்புபிளந் துகீழேவிழ இந்தப்பீஷமன் பாண்டவர்யாவரும்நுக்கு த்துடனேநீபோகுமிடத்திற்கு வரப்போகிறார்கள்- இப்படிசெய்துநான்கம்சன்-ஜராசந்தன்நரகன்முதலாகிய பேர்களுக்கு மித்திரனாயிருந்த கடனைத்தீர்த்துக்கொள்ளுகிறேன் என்றுசொல்லி தீக்ஷண்மாகியவொருநாராச பாணத்தைப் பிரயோகித்து இந்திரசித்துப்போல் மாயாபலத்தனாலே தேரோடுகூட ஆகாயத்தில் மறைந்திருந்துகொண்டு ஓயாமல் சரமாரிபொழிந்தான் யாதவசிரோமணியும் அந்த நாராச பாணத்தையு மற்றுமவன் விட்ட பாணங்களையும் பொடிப்பொடி யாகச்சிதைத்துத்தள்ளிச் சிசுபாலனைக் குறித்து அடாசேதிபதிகளில் அதமனாகிய பேதாய்.ஓடாதே நின்று சூரத்தனத்தைக் காட்டு,நீ.வெகு குணசாலியான படியினாலேதான் ஜராசந்தன் முதலாகிய சிநேகிதருக்குக்கடன் தீர்க்கிறேனென்று புறப்பட்டாய்.நீஅஞ்சாதே இப்படிக்கடன்தீர்ப்பதைக் காட்டிலும் அவர்களோடுகூடசேருவது நன்மையாதலால் ஒருநிமிஷத்தில் அப்படியே உன்னையனுப்புகிறே னென்றுசொல்லித் தாமும் அவனைப்போலவேமாயையால் மறைந்துநின்று அனேகஅஸ்திரங்களை விடுத்தார். அவைகளைஅவன் பிரதிஅஸ்திரங்களாலே தடுத்தான்,

இவ்விதமாக இருவரும் மாயையால் ஆகாசத்தில் மறைந்து இரண்டுசிங்கங்கள் ஒன்றோடொன்று யுத்தஞ்செய்வதுபோல் யுத்தஞ் செய்துக்கொண்டிருக்க பூமியிலிருக்கிற பேர்களெல்லாம் வீரரைக்காணாமல் அம்புகள்மாத்திரம் கீழேவிழக்கண்டு ஆச்சரியப்பட்டு ஜயம்-பராஜயம்-ஒன்றுந் தெரியாமையாலே திகைத்துமனதில் தங்கள் தங்கள் பக்ஷத்திற்கு நன்மைகூறிக்கொண்டிருந்தார்கள்,அப்படியேஆகாயத்தில் தேவர்முதலியபேர்களெல்லாம் ஓகோ.இப்படிப்பட்ட அதிசயயுத்தத்தை நாமிதுவரையில் கண்டதில்லையே ஜயிப்புந்தோர்ப்பும்இருக்கட்டும்நாம் சண்டையைப் பார்க்கவந்தோமே அதுகூடவன்றோ கிடைப்பது அரிதாயிற்றுஎன்று சொல்லித் தாங்களும மாயையினால்அந்தமாயாயுத்தத்தைக்காணமுயன்றார்கள்.இப்படியிருக்கச்சிசுபாலன்மூன்றுநாராசபாணங்களினால்கிருஷ்ணனையடித்தான் அவருமூன்று நாராசங்களினாலே அவைகளைத்துண்டித்துவேறிரண்டுநாராசங்களாலே அவன்மார்பில் அடித்தார்,அப்படி அடிக்கப்பட்டுச் சிசுபாலன் கண்ணனை ஏழுபாணங்களாலே ஒருதரமடித்து மற்றொரு நாராசத்தாலே மார்பிலடித்து வேறுநாலுபாணங்களாலேநாங்கு குதிரைகளையும் ஐந்துபாணங் களினாலே சாரதியையும் அடித்து அட்டகாசஞ் செய்தான், இப்படியிருவரும் நெடுநேரம் போர்செய்கையில் ஸ்ரீகிருஷ்ணன் அனேக அம்புகளைப் பொழிந்து சிசுபாலனுடையதேர் குதிரை-சாரதி-முதலானவைகள் மறைந்துபோகும்படியாகவும் அவன் மெய்சோரும்படி யாகவும் அடித்துக் கெர்ச்சனைசெய்யவே அந்தத் தமகோஷபுத்திரன் மிகுந்தக்ரோஷமும் பொறாமையுங் கொண்டு இனிபாணங்களினால் நான் சண்டைசெய்யத் தரமில்லையென்று நினைத்து மகாதீக்ஷணமாகியவொரம்பில்ஆக்கினேய அஸதிரத்தைத் தொடுத்தாள. அதைக்கண்ணன் வருணாஸ்திரத்தினாலேதடுக்க அவன் குபேராஸ்திரம்பிரயோகம்பண்ண. அதையு மவர் மற்றொரு குபேராஸதிரத்தால் தடுக்க. யமாஸதிரம் பிரயோகஞ்செய்ய.அதையமாஸ திரத்தினாலேயேதடுக்க அவன்காந்திருவாஸ்திரம் பிரயோகிக்க, அதையவ்வனாஸ் திரத்தினாலேதடுக்க மறுபடிமானவஸதிரம்விட, அதையும் அதனாலேமறுக்க, வாயுஅஸதிரத்தையும் வாயு அஸதிரத்தினால் நிறுத்த.பின்பு அவன் ருத்திராஸ்திரம் விடுக்க. அதை மற்றொரு ருத்திராஸ திரத்தால் தடுக்க, இந்திராஸதிரத்தையும் இந்திராஸ திரத்தாலேதடுக்க. பின்பு வைஷ்ணவாஸ்திரம் பிரயோகிக்க. அதை மற்றொரு வைஷணவாஸதிரத்தால் தடுத்தார்,

இவ்வாறு சிசுபாலனும் கிருஷணனும் பிரயோகாஸ்திரங்கள் ஐந்நூறும் உபசம்ஹாராஸதிரங்க ளந்நூறும் பிரயோகிக்கவே அவ்வஸதிரங்க ளெல்லாம் ஒன்றையொன்று அழிக்கிறநிமித்தம் வியாபித்ததினாலேஉலகமெல்லாம் தீமூட்டப் பட்டதுபோல் தவித்து நின்றது அப்போது சிசுபாலன் தான் பிரயோகஞ்செய்த அஸதிரங்க ளெல்லாம் கிருஷணனுடைய அஸதிரங்களாலே நாசமடையக்கண்டு ஒருமாயையை விடுத்தான்.அந்தமாயையினாலே கதாயுதங்கள்-குண்டாந் தடிகள்குறுந்தடிகள-கத்திகள்-சுருளகத்திகள். சிறுகத்திகள்பட்டாக்கத்திகள்-ஈட்டிகள்-எறியீட்டிகள்- வல்லயங்கள்-வேலாயுதங்கள்-சூலங்கள்-முதலாகிய சகல ஆயுதங்களும் நாலுபக்கங்களிலு மிருந்து பலசாலிக ளாகிய வீரரால்எறியப்பட்டா லெப்படியோ அப்படிக்கு ஓய்வில்லாமல் கிருஷணன்மீதில்வந்துவீழ்ந்தன.அப்போதுபூமியிலுள்ளோரும் வானத்திலுள்ளோரும் கிருஷ்ணனுக்கு அபயம் நேரிட்டதென் றஞ்சினார்கள் அந்தப்பகவானே அவ்வளவாயு தங்களையும் தன்மீதில் விழவொட்டாமல் அம்புகளினால் தடுத்துத்துண்டந்துண்டமாகத்துண்டித்துப்பூமியில் தள்ளினார்பின்பு சேதிராஜன்மற்றொரு மாயையைப்பிரயோகித்தான் அதனாலேவெகு உயரத்

திலிருந்து அளவற்ற பெரியபாறுங்கலலுகள் வெகுவே கமாய்க் கண்ணன் தேர்மீதில் வந்துவிழ்ந்தன. அவைக ளையும்கிருஷணன் வச்சிராஸதிரம் பிரயோகம் பண் ணிச் சூரணமாகிப் போட்டார், இப்படிக்கு அதுவும் வீணாய்ப்போகவே அவன் மறுபடியுமொருமாயையை விடுத்து ஊழிகாலத்தி லெப்படிப் பெய்யுமோ அப்ப டிக்கு அவர்ரதத்தின்மேற் மழைபெய்யச்செய்தான் அ தையவர்வாயுவாஸதிரத்தினுற் சிதறஅடித்தார்.

இவ்வண்ணமாகச் சிசுபாலனுடையசகலமாயைகளை யும் வீணாக்கிச் சிங்கம்போல்ஆரவாரஞ் செய்தார்அப் போது கிரகணம்விட்ட சந்திரனைக்கண்டா லெப்படி யோ அப்படிக்குக் கண்ணனைக்கண்டு தேவர்கள் களித் து மலர்களைச் சொரிந்தார்கள், அப்படிக்குக்கிருஷ்ண ன் கெர்ச்சித் ததைக்கேட்டுத் தன்முயற்சிகள்யாவும்வீ ணாய்ப்போனதையும் பார்த்துப்பொறுமை மிகுந்தும றுபடியும் மாயையில்லாமல் விளக்கமாகவேவில்லெடு த்துக்கொண்டே சண்டைக்குவந்தான், வரவேயாதவ சிகாமணியும் அப்படியே வில்லெடுத்து ஒருமுகூர்த்த காலம் சண்டைசெய்தார், பின்புசிசுபாலன் அளவில்லா மல் வெகுண்டுஎதிரியைநோக்கி-அடா இடையாமூடா திருடா, மோசக்காரா, பழிகாரா. வெறியா, அற்பா, நீ இனிமேல் இவ்வுலகத்தைவிட்டு லோகாந்தரமடைந்து புண்ணியபுருஷர் அனுபவிக்கும் மேன்மைகளையும்பா பச் செய்கைகளுக்கீடாக உனக்குக்கிடைக்கும் பயன்க ளையும் பார்த்துவயிறெறிந்து நெஞ்சுழன்று மெய்சோ ரப் பலதுன்பங்களையும் அனுபவியென்று உதடுதுடிக் க முகம்படபடக்கப்பேசி பலவிதஅம்புகளையும் வில் லில் தொடுத்து விடுத்தான் அந்த அம்புகளினுலேகண் ணனுடையதிருமேனியெல்லாம் ஜல்லடைபோல்துளை பட்டுப் புண்ணுகி உதிரம்பெருகமறுபடியும் அப்புண் களிலேயே மேன்மேலும் அம்புகளேறக் கண்திறக்கக் கூடாமலும் மூச்சுவிடக்கூடாமலும்போனது மன்றி தேரென்றும் குதிரையென்றும் ஒன்றுந்தெரியாமல்மு ழுவதும் அம்புகளாகவே காணப்பட்டன அதனுலேசு வாமி சோர்ந்து தேர்த்தட்டின்மீதில்கம்பத்தைக் கைக ளாற்பிடித்துக்கொண்டு மெய்பதைக்கவிருந்தார், இதை க்கண்டு சிசுபாலன் அட்டகாசஞ்செய்து கிருஷ்ணுபோ ய்விட்டாயா வென்றுசொன்னுன் இதையெல்லாம் பார் த்தயாவரும் ஐயையோ அநியாயம்என்று கண்களில்நி ன்றும் நீர்வடியக்கதறினுர்கள்

இப்படி அன்பர் கதறுவதையும் பகைவர் களித்துப் பேசுவதையும் சுவாமிசேர்ந்திருப்பதையும் பார்த்துஅ வருடைய சாரதியாகியதாருகன் அவரைநோக்கிசுவாமி தேவரீர் மகாமகா சூரர்கள் எத்தனைபேர்களோடேயுத் தஞ்செய்யப்பார்த்திருக்கிறேனெருயுத்தத்திலும்தே வரீர் இப்படிக்குச்சோர்ந்து போனதில்லை இப்படிப்ப ட்ட யுத்தமும்பார்த்ததில்லைஇந்தப்பாவி யாவரும்அதி சயிக்கச்செய்கிறுனே இதென்ன ஆச்சரியம்இப்போது நானும் குதிரைகளும் தேவரீருடைய மகிமையினுலே உயிர்வைத்துக்கொண் டிருக்கிறுேமே யல்லதுஎங்களு டைய சக்தியினுலில்லை அதுவொழிந்தது இனிஉயிர்நிற்ப து வருத்தமாயிருக்கின்றது தேவரீருடையஅன்பர்யா வரும் கதறுகிறுர்கள் ஏனிப்படியபேக்ஷை செய்கிறது தேவரீருடையபிரபாவத்திற்கு இவனெருபொருளோ இப்படிக்குச்செய்வதை நோக்கினுல் ஒருவிலையென்று காணகிறது உபேக்ஷக்கு இதுசமயமன்று ஆதலால் இந்தப்பாவியை இப்போதேசங்கரித்து விளங்கவேண் டும் என்றுசொன்னுன், அதுகேட்டு ஸ்ரீகிருஷ்ணன்சா ரதியைப்பார்த்துஅடாதாருகா நானிப்போதுஉபேக்ஷை செய்யவில்லை மற்றென்னவென்றுல் அவனுக்குஆயுளி ன்முடிவாகிய முகூர்த்தத்தை எதிர்பார்க்கிறேன் இவ னியாரென்றுல் முன்னம் கிருதயுகத்திலே இவன்இர ணியகசிபுவாகியிருந்து நரசிங்கரூபியாகிய என்னுலே கொல்லபபட்டுப் பின்புதிரேதாயுகத்தில் இராவணனு யிருந்து ஸ்ரீராமரூபியாகியஎன்னுலே கொல்லப்பட்டா னே அவன்தான்இவன் ஆனபடியினுலேதான் இவனு க்குஅவ்வளவு சௌரியமும் பலமும்செருக்கும் இருக் கின்றன, இன்னமுங்கேள் இவன் என்னுடையலோகத் திலிருக்குந் துவாரபாலகரி லொருவன் துர்வாசமகா முனியின் சாபத்தினுல் பூமியிற்பிறக்கவேண்டி எனக் கு மித்திரனுயிருந்து வெகுகாலம்பூமியி லிருப்பதைக் காட்டிலும் சத்துருவாயிருந்து கொல்லப்பட்டால் சீக் கிரத்தில் திவ்யலோகஞ் சேரலாமென்று சத்துருவாக ப்பிறக்கும்படி ஒப்புக்கொண்டு மூன்றுசெனனங்களு ம்சத்துருவாகவந்து பிறந்தான். இந்த முகூர்த்தத்திலே அந்தச்சாபம் விமோசனமாகி நற்கெதியடையப்போகி றுன், யாவரும் பார்க்கப்போகிறுர்கள்- ஆகையால் இ தோ அவனைச் சங்கரிக்கிறேன் அஞ்சாதேஎன்றுசொல் லிஉறங்கிக்கொண்டிருந்த சிங்கம்விழித்துப் பிடரிமயிர் களைச்சிலுப்பி நிமிர்ந்துகர்ச்சிப்பதுபோல் முன்போல் இரதத்தின்தட்டில் இறுமாப்புடன் உட்கார்ந்து அட்ட காசஞ்செய்து சங்கத்தையெடுத்து ஆகாசமும்திசைக ளும்பிளந்துபோகும்படித் துவனிசெய்யவே யாவருமம னக்களிப்படைந்து ஸ்ரீகிருஷ்ணு ஜயஜயவென்று கூறி னுர்கள் அந்தமங்களகோஷத்தைக் கண்ணன்கேட்டு வெகு சந்தோஷத்தோடு சுதரிசனமென்னுஞ் சக்கரத் தைக் கையிலெடுத்துப் பிரயோகித்தார், பிரயோகிக்க வே அந்தச்சக்கரமானது அனேககோடிசூரியர்உதித்த துபோல் சொல்லக்கூடாதபிரகாசம்பொருந்திஆயிரமா

ங்களிலிருந்து ஆயிரஞ்சுவாலைகள் எழும்பித்திசைகளிலிருக்கும் இருளைக்கூடத்துரத்தப்பிரளய காலருத்திரன் அனேகம் வாய்களைத்திறந்து நாக்குகளைநீட்டிக்கொண்டு வருவதுபோல் பயங்கர ரூபத்தோடு சொலித்துக்கொண்டு தேவர்களும் - முனிவர்களும் போற்றப் புறப்படக்கண்டு சிசுபாலன் தைரியத்தை விடாமல்தன்வலிமை முழுவதையுங்கொண்டு இன்னதென்றில்லாமல்சகல ஆயுதங்களையும்கூட்டங் கூட்டமாய்வருஷிக்க, அவைகளை யந்தச்சக்கரம் விழுங்கிக்கொண்டே சமீபத்தில் வருகையிலும் சிசுபாலன் மற்றுமாயுதராசிகளைப்பொழிய அவைகளும காய்ந்தஇரும்பில்வீழ்ந்த நீர்த்துளிகள்போல் அச்சக்கராயுதத்தில் சுவறிப்போக்கண்டு யாவரும் இனிசிசுபாலன் பிழைப்பதில்லையென்று கோலாகலமாய்ப்பேச அப்பேச்சுகளைக் கேட்டசிசுபாலன் அந்தச்சக்கரத்தின் மீதில்வெகுபொருமைகொண்டவனாகித் தடுக்கும்படியாகிய பிரயத்னஞ்செய்துகொண்டிருக்கையிலேயே அந்தத்திவ்யாயுதமானது அந்தச் சிசுபாலனுடைய சிரத்தையறுத்துக் கீழேதள்ளிவிட்டது, வச்சிராயுதத்தினால் வெட்டப்பட்டபெரிய மலையின் சிகரம்போல் அந்தத்தலைகிரீட குண்டலங்களோடு கீழேவிழுந்தபோது சத்துருக்களுடைய கண்ணீர்த்துளிகளும் கீழேவிழுந்தன,உடனேஸ்ரீகிருஷ்ணன்மீதில் யாவருடைய பார்வைகளும்தேவர்கள் சொரிந்த கற்பகமலர்களும் வீழ்ந்தன இவ்வாறு உலகங்களுக்கெல்லாம் மார்பிலடித்த ஆணிபோலிருந்தசிசுபாலனைச் சங்கரித்ததுகண்டு தேவர்களும் முனிவர்களும்அரசர்களும்ஸ்ரீகிருஷ்ணனைத்தோத்திரஞ்செய்தார்கள்,தேவதுந்துபிவாத்தியங்கள் முழங்கின அச்சரமாதர்கள் ஆடினார்கள், கந்திருவர்பாடினார்கள், பாண்டவர்முதலாகிய இஷ்டர்வந்தாலிங்கனஞ் செய்தார்கள், பகைவர்பற்கடித்துக்கைபடித்துப்பெருமூச்சுவிட்டுத்தீயவிழித்துநோக்கினார்கள், இப்படிக்குக்கோலாகலமா யிருக்குங்காலத்தில் அந்தச்சிசுபாலனுடைய தேகத்தில்நின்றும்ஒரு சோதியானதுயாவரும்பார்த்துக்கொண்டிருக்கையிலே கிளம்பிஸ்ரீகிருஷ்ணனை வலமாகவந்து அவர்திருமேனியில்புகுந்துமறைந்தது,

இந்தச்சிசுபாலன் மூன்றுஜன்மத்திற்கு முன்இரணிய கசிபனாகப் பிறந்திருந்தான் அவனைச்சங்கரிக்கஸ்ரீமந்நாராயணன் நரசிங்கமூர்த்தியாக அவதரித்துச்சங்கரிக்கஅவன் பிராணனைவிடும்போது இந்தஜந்துவுக்குபதின்மடங்கு ரூபமாயிருந்து சங்கரிக்கவேண்டுமென்றுநினைத்துக்கொண்டே பிராணனைவிட்டான் அதினால்பத்துதலை இராவணனாகப் பிறந்தான்அப்போது ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீராமாவதாரஞ் செய்தருளியுத்தத்திற்சங்கரிக்கும்போது அந்தஸ்ரீராமனை பலவானானக்ஷத்திரியனென்று கருதிஇவனுக் கிணையாயிருந்து சங்கரிக்கவேண்டுமென்று நினைத்துக்கொண்டே பிராணனைவிட்டபடியால் உத்தமமானக்ஷத்திரியஜாதியில் சிசுபாலனாகப்பிறந்தான்,இந்தச்சிசுபாலனை அந்த ஸ்ரீமந்நாராயணனேஇந்தஸ்ரீகிருஷ்ணனாக அவதரித்துசங்கரிக்கும்போதுசர்வேசுரனென்றுபாவனைசெய்துபிராணனைவிட்டபடியால் அவனுடைய ஆவி தேஜோமயமாய் ஸ்ரீபகவானிடத்திலேயே லயித்துப்போயின அதைக்கண்டுசகலமானபேரும் ஆச்சரியப்பட்டு திக்குப்பிரமைகொண்டு இதென்ன அதிசயம் எங்குங்கண்டதில்லை பீஷ்மாசாரியர்சொல்லியது சரியே,இவர்சகல சராசரங்களையும்படைத்துஅளித்துஅழிக்குங் காரணப்பொருளே யென்றுநினைத்து மனோவாக்குக் காயங்களினாலேசுவாமியை வணங்கி பீஷ்மர்முதலானோரையும்துதித்தார்கள் அன்றியும் போகிகளும் முனிவர்களும் தேவர்களும்வேதங்களினாலே தோத்திரஞ்செய்தார்கள், கின்னரர்கிம்புருஷர்கந்திருவர் முதலானோர்யாழிசைத்துப்பாடினார்கள், சித்தர்-சாரணர்-முதலியோர் விருதுகூறினார்கள்இப்படியிருக்க தருமபுத்திரர் ஸ்ரீகிருஷ்ணனைக் கண்டுஆனந்தபாஷ்பத்துடனே துதித்துஅவர்முகக் குறிப்பினாலேதன்தம்பியாகிய சகதேவனைநோக்கிச் சிசுபாலனுக்குச்செய்யவேண்டிய பிரேதக்கிரியைகளைச் செவ்வையாகநடத்தும்படி ஆக்கியாபித்தார்அப்படியே அந்தச்சகதேவனும்பீமார்ச்சுன நகுலரும்அந்தச் சிசுபாலனுக்குஅவன்புத்திரனாகிய திருஷ்டகேது என்பவனைக்கொண்டு சரமக்கிரியைகளை வெகுசிறப்பாய் நடத்தினார்கள்பின்புஸ்ரீகிருஷ்ணனும் பாண்டவர்களும்அந்தத்திருஷ்டகேதுவுக்குச் சேதிராச்சிய பட்டாபிஷேகஞ்செய்வித்தார்கள்

இவ்விதமாகச் சத்துருசங்காரமானவுடனே தருமபுத்திரர்-சகலமுனிவர்கள்-மறையோர்-அரசர்- முதலாகியபேர்களுடனேகூட யாகத்தைநிறை வேற்றத்துவக்கி ஸ்ரீகிருஷ்ணனுக்கு முதற்பூசைசெய்தபின்னே முறையேநாரதர்-பருவதர்-வியாசர்-தவுமியர்-பைலர்- வைசம்பாயனர்-சுமந்து-சைமுனிமுதலானபெரியோர்களுக்கும். பாகிலிகன்-சோமமதத்தன்- முதலாகிய அரசர்களுக்கும், வைசியர்களுக்கும். சூத்திரர்களுக்கும் தகுந்தபடிபூசைசெய்து பலதானங்களும்-தட்சிணைகளுங்கொடுத்துயாவருக்கும் அறுசுவைகளோடு கூடிச்சிறந்த அன்னமுதலியவற்றை யிடுவித்தார் அந்தயாகத்தில்அன்னங்களும்-கறிகளும்- பலகாரங்களும்-மலைமலையாகக் காணப்பட்டன, நெய்-தயிர்-பால்முதலானவைகள்மடுமடுவாகத் தேங்கின, வந்தஜனங்களெல்லாம் தருமவான்களும்-கல்வியுடையவர்களும்-நல்லொழுக்கமுடையவருமாகவே யிருந்தார்கள். வேதியரெல்லாம் நான்குவேதங்

களையும் ஆறு அங்கங்களையும்சகல சாஸ்திரங்களையும்கற்றவராகவே யிருந்தார்கள், மேலும் அவர்கள்நன்றாய்ப்புசித்து மனக்களிப்புடனே ஒருவரோடொருவர் சாஸ்திரங்களிற் கட்சிசொல்லிப் பிரசங்கித்துக்கொண்டிருந்தார்கள், மேலும்அந்தயாகத்தில் லக்ஷம்பிராமணர் புசித்தால் அதற்கடையாளமாகச் சங்கத்தை ஒருகரம் ஊதுகிறதுண்டு அப்படிக்குச்சங்க மூதியதற்குக்கணக்கில்லாமலிருந்தது,அன்றியும் மகாராசாக்களும் பெருமையும்நாணமும்விட்டுத் தாங்கள்தானே மனக்களிப்புடன் புசிப்போர்க்கு அன்னமுதலாகிய வைகளைப்பரிமாறுவதும் உபசரிப்பதுமா யிருந்தார்கள் யாகத்திற்கு வந்தயாவரும் தத்தமது இஷ்டங்களைப்பெறறு வெகுசந்தோஷத்துடன் நல்லபூஷணங்களினாலும் வஸ்திரங்களினாலும் அலங்காரம் பொருந்திதேவதைகள்போலவிளங்கினமையால் அந்தயாகசாலை சுவர்க்கலோகத் தோடொத்திருந்தது அவ்விடத்தில்சகல காரியங்களுக்கும் வெள்ளிப்பாத்திரங்களும் பொற்பாத்திரங்களுமேயிருந்தன யூபஸ்தம்பங்களும் வேதிகைகளும் அதின்சாமக்கிரிகைகளும் யாவும்சுவர்னமயங்களாகவும் ரத்தினமயங்களாகவு மிருந்தனஅந்தயாகசாலையைச்சுற்றி இலங்கையிலிருந்துகொண்டுவந்த பொற்பனைகளைநாட்டி அவைகளில் முததுத்தோரணங்களும் பவளத்தோரணங்களும்கட்டப்பட்டிருந்தன, தானத்திற்காககாமதேனுவுக்கொப்பாகிய அனேகம்பசுக்கூட்டங்களும்திரவியங்களின்குப்பைகளும் மற்றும்வஸ்திரபூஷணங்களின்ராசிகளும் அந்தயாகசாலைக்கு ஆபரணம்போலிருந்தன இப்படிப்பட்ட பலசிறப்புடனே அந்தமகாயாகத்தைரித்துவிக்குகள் வேதவிதிப்படி ஒருகுறைவுமின்றி ஐந்துதினங்களிலே நிறைவேற்றினார்கள்

---

## எ௰௫-வது - அத்தியாயம்,

### சந்தவிருத்தம்.

தருமராஜன் ராஜசூயயாகஞ்செய்ததன்பின்பு
திருநிறைந்துவிளங்குஞ் சீரைக்கண்டிடுந்துரியனும்
மருமமாகமனதில்வைத்து மயங்கிருக்கும்வேளையில்
கருதுபீமனோடுபாஞ்சாலி கலுக்கெனநகைத்தனர்

யுதிஷ்டிரமகாராஜா இராஜசூயயாகஞ்செய்த பிறகு அவபிரதஸ்நாநஞ்செய்ததும் அந்ததர்மபுத்திரருடையசம்பத்தைப்பார்த்துப் பொறுக்கமாட்டாததுரியோதனன் மயன்நிர்ம்மித்த சபைதனில்பிரமித்து நின்றதும் அதுகண்டபீமசேனனும் துரோபதையும்நகைத்ததும் அதுமூலமாக ஸ்ரீகிருஷ்ணபகவான் பூபாரநிவாரணஞ் செய்ததுஞ்சொல்லுகின்றது

### ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளீர் பரிட்சித்துமகாராஜனே உனதுபாட்டனானதர்மபுத்திரன் இராஜசூயயாகத்தைநிறைவேற்றினபிறகு அவபிரதஸ்நானஞ்செய்யக் கங்கைக்குப் போகும்போது அநேகலட்சங்கஜங்கள்பேரில் சொர்னங்களாலும்வெள்ளிகளாலுஞ்செய்தநகாராநகப்பத்துகளையும் அனேக ஒட்டகங்கள் குதிரைகள்மீதில் நானாவிதமான வாத்தியங்களுமடித்துக்கொண்டு முன்னேபோனார்கள்அதின்பிறகுஅணிஅணியாய்அனேகஅரசர்கள் நால்வகைச்சேனைகளாற் சூழப்பட்டுமுன்செல்லயுதிஷ்டிரனுக்குபந்துவானயாதவர்கள் முதலானோர்தாமரைமலருக்கொப்பானவண்ணமுடைய பனிரண்டுலக்ஷம் யானைகளின்மீதில்ஆயுதபாணிகளான சூரர்களேறிக்கொண்டு கணக்கில்லாத காலாள்கள் இராஜாவுக்கு இரக்ஷணார்த்தமாய்ப்புடைசூழ, ரித்துவிக்குகள் பெரியோர்கள் உபாத்தியாயர் பிராமணசிரேஷ்டர்கள் சொஸ்திவாஜனங்கூற,கந்தருவர் முதலானோர்வீணைபாட; அச்சரமாதர்கள் நடனஞ்செய்ய, தேவர்கள்மலர்சொரிய அந்நாட்டிலுள்ளஜனங்கள் ஸ்நானஞ்செய்துபரிசுத்தர்களாய் சர்வாலங்காரத்துடன் உத்தமமானவஸ்திரங்களைத் தரித்தும்தம்பதிசமேதர்களாய்ப் பின்செல்லவிலைமாதர்களும்சகலாலங்காரஞ்செய்துகொண்டு தங்களுடைய சோரபுருஷர்கள்மீதில் மஞ்சணீரை இரைத்துக்கொண்டுபோனார்கள் - பாண்டவர்களுடைய மனைவிசுபத்திரை முதலியவர்களும் ஸ்ரீகண்ணபிரானுடைய மனைவி ஸ்ரீருக்குமணிதேவிமுதலானோரும் வாகனங்கள்மீதேறிக்கொண்டு ஆகாயத்தில்விமானரூடர்களாய்ச் சஞ்சரிக்கின்றஅச்சர மாதர்கள் போல்மிகவும் சௌந்தரியசாலிகளாய் ஒருவருக்கொருவர்மஞ்சணீரையும் குங்குமக்குழம்பையும் பீச்சான்குழலால் வசந்தமாடிக்கொண்டு கொஞ்சம் நாணத்துடன் மகத்தானசந்தோஷத்துடனும்தெளிவுபொருந்தியமுகமுடையவர்களாய்ப்பரிகாசஞ்செய்து கொண்டதுமன்றி கொழுனன்மார்களையும் மைத்துனன் மார்களையும்குங்குமஜலத்தினாலும் மஞ்சணீரினாலும் பீச்சான்குழலால்வசந்தமாடி தேகமாத்தியந்தம் நனைத்துத்தாங்களும் அவர்களால்நனைக்கப்பட்டு அதினால்சகல அங்கங்களுந் தெரியும்படியாயும் கூந்தலவிழ்ந்து அதில்நின்றும்மலர்கள்சோர இப்படிவெகுவிதவிநோத விளையாட்டினால் காமுகர்களை மோகிப்பித்துக்கொண்டு விளையாடிவருகிற மாதர்களாற்புடை சூழப்பட்டு சம்ராட்டானயுதிஷ்டிரன் மகாஔளியினையுடைய இரதத்தின்மீதில் துரோபதிசமேதராயேறிக்கொண்டு புண்ணியபாக்கியோஷங்களுடன் கங்காஸ்நானத்திற்குப்போகிறபோது ரித்துவிக்குகள் தர்மபுத்திரருக்குப் பத்தினிசம்யாஜமென்கிற யாக விசேஷத்தைச் செய்வித்து ஆசமனஞ்செய்யசசொல்லி

மந்திரவித்தாய் அவபிரதஸ்நானஞ்செய்யப்போகிறசமயத்தில் தர்மபுத்திரர்முன்போலவே ஸ்ரீகிருஷ்ணன்முதலாகயாவருக்கும் பூசைசெய்து பதினெண் வாத்தியங்கள் முழங்க,கந்திருவர்முதலானோர் வீணைபாடஅச்சரமாதர்கள் நடனஞ்செய்ய, வந்திகள்புகழ வேதியர்கள் சொஸ்திவாசஞ்சொல்லிச்சூழ்ந்துவர அரசர்களெல்லாம்சத்திரஞ்-சாமரமுதலாகியபணி விடைகள்செய்துவர ஸ்திரீகளும்-புருஷரும்- மங்கலவஸ்துக்களைக்கையிலேந்திக் கோலாகலத்துடன்வர- துவசபதாகங்களும் நால்வகைச்சேனைகளும் சுற்றிக்கொண்டுவரதமது பத்தினியுடனே யாகசாலையினின்றும் புறப்பட்டுப் பரிசுத்தமாகியநதியில் அவபிரதஸ்நானஞ்செய்து வெகுதானங்கள்வழங்கி யாவரும்சம்ராட்டென்று புகழும்படி விளங்கினர்,

கேளும் பரிட்சித்துமகாராஜனே, இவ்விதமாக அந்தராஜசூய யாகமென்னும்பெருங்கடலைக்கண்ணனென்னுங்கப்பலினாலேகடந்து தருமமும்புகழுமாகிய பொருள்களைத்தேடிவெகு சிறப்புப்பொருந்தி விளங்காநின்றதருமபுத்திரமகாராஜன் யாவரையும்நோக்கி உங்களாலேநான் இப்பெருமை பெற்றேனென்று உபசாரமாகச் சொல்லி அவரவருக்குத்தக்கபடிபரிசு கொடுத்தனுப்பினார்,பின்புபீஷ்மாசாரியர். துரோணாசாரியர்-கிருபாசாரியர்-அசுவத்தாமா-டாகிலிகன் சோமதத்தன்-பூரிச்சிரவன்-சல்லியன்-துரியோதனன். அவன்தம்பிமார்கள்-திருதராஷ்டிரன்-விதுரன்-சகுனிகர்ணன்-முதலானபேர்களுக்கெல்லாம்வெகுசிறப்பாகப்பூசைசெய்துகொண்டாடி-உபசரித்து அனேகம்யானைகள் குதிரைகள்-ஆடைகள்-ஆபரணங்கள்-முதலாகிய-பரிசுகள்கொடுத்துஅனுப்பிவித்தார், அப்படியேபலராமர்-வசுதேவர்-அக்குரூரர் பிரத்தியுமனன்-அனிருத்திரன்சாம்பன்-கதன்சாருதேஷணன் முதலானயாதவர்களுக்கும் பூசைசெய்துபரிசு கொடுத்தனுப்பிவித்தார்,மேலும்-துருபதன் பீஷ்மகன்-பாண்டியன்-பகதத்தன்விராடன்-சகதேவன் - திருஷ்டகேது-முதலானோருக்கும் பரிசளித்தனுப்பினார் அன்றியும்தமது தம்பிமார்கள்நால்வரையும்-சாத்தகி- திருஷ்டத்துய்மன் -முதலானபேர்களைத்தங்கள் தேசங்களுக்குப்போகின்ற அரசருக்குவழிவிட்டுஉபசரித்துவரும்படி கட்டளை யிட்டார்அதின்படியே அவர்களுங்கூடவெகு தூரம்போய்வழிவிட்டுஉபசரித்து அவர்களிடத்தில்விடைபெற்றுவந்தார்கள்,அன்றியும்-நாரதர்-பருவதர்தவுமியர் முதலாகியமகாமுனிகளுக்குத் தேவோபசாரஞ் செய்து-தாமேகூடப்போய் வழிவிட்டுவந்தார்.

இவ்வண்ணமாய்ச்சகல தேசங்களையும் ஜெயித்துக் கொணர்ந்தவைகளும் யாகத்திற்குஉலுப்பையாக வந்தவைகளும் பொக்கிஷத்திலிருந்தவைகளுமாகிய எல்லாப்பொருள்களையும் யாகத்திற்காகச் செலவுசெய்துயாவரையும் அனுப்பிவிட்டு ஸ்ரீகிருஷ்ணனோடு தேரின்மேலேறிப் புரத்தையடைந்துவீதிவலமாக மாளிகைசேர்ந்து களித்திருந்தார், இப்படியிருக்கையில் கிருஷ்ணன் தருமபுத்திரரைப்பார்த்து ஓய்ராஜாதிராஜனே, நீர்மகாநுபாவ ரானபடியினாலேஇந்தப்பெரியயாகத்தை நிறைவேற்றிச் சத்துருக்களில்லாமல் அகண்டமண்டலாதிபராய்உமதுபிதாவின்குறைநீங்கிதேவசில்பியானவிசுவகர்ம்மாவினால்நகரமும்அசுரசில்பியான மானால்சபையும் படைத்திருக்கிறபடியால் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும்அருமையாயும் மேன்மையாயுமிருக்கின்ற உமதுசம்பத்தைப்போலநானெங்குங் காண்கிலேனென்றுகூறுகின்றஸ்ரீபகவானைநோக்கிதருமபுத்திரர் கேளீர்சுவாமி ஸ்ரீகிருஷ்ணாநான்கேவலம்அசேதனத்தோடொத்தவன் எனதுதம்பிமார்களுக்கும்மற்றவருக்கென்னமகிமையிருக்கின்றதுஉமது கிருபாகடாட்சம்பெற்றமகிமையொன்றிருந்தபடியினாலேமேன்மைகளெல்லாம்அடைந்தேன்உம்மைப்பூசிப்பதற்கும் உமதுபெருமையைப்புகழ்வதற்கும் நான்வல்லவனோகிருபா சமுத்திரரேயென்றுபதினாயிரத்துஅறுநூற்றெட்டு மனைவியர்களுடன்புடைசூழ்ந்திருக்கிற சுவாமியைத்துதிசெய்து சொர்க்கலோகத்தில்அச்சரமாதர்கள்புடைசூழ இந்திராணியால்பூஜிக்கப்பட்டுஅரசாளுகிறதேவேந்திரன்போலும்இரண்டாவதுலட்சுமிபோலும் உபசரித்துக் கொண்டிருக்கிறதுரோபதிசமேதரானதருமபுத்திரர்நவரத்தினமிழைத்தசிங்காதனத்தின்மீதுஉட்கார்ந்துஇராச்சியத்தைத்தருமவழுவின்றிவெகுபயபக்திகளோடுவேதசாஸ்திரங்களையும் உலகஇயற்கைகளையும் நீதிகளையும்நன்றாய்க்கற்றறிந்துசரியாய்நடக்கத்தக்க வேதியர்களைத்தமதுசபையில்நிரந்தரமாயிருக்கச்செய்து அவர்களின்அனுமதிப்படிகுடிகளுடையயோககேஷமங்களை நடத்திவந்தார்இப்படியிருக்கும்போது காலங்களில்தப்பாமல்மழைபெய்துவந்தபடியால்பூமியெல்லாம்பயிர் நிரம்பியாவருங்குறைவற்றசெல்வமடைந்துதத்தமது நெறிகளில்வழுவாதுநடந்துவந்தார்கள் இப்படிக்குகிருதயுகமென்னும்படிதருமத்தைப்பூரணமாகநடத்திசொல்லத்தரமில்லாதசெல்வச்சிறப்போடுதருமபுத்திரர்அரசாட்சி செய்துவந்தார்.

இப்படியிருக்கதுரியோதனனானவன் தருமபுத்திரருடையஇராஜசூயயாகங் கழித்வுடனேஒருநாள் அவருடையசபையைப்பார்க்கவந்து அதினுடைய உயர்வையும்சிறப்பையும்பிரகாசத்தையும் நவமணிமயமாகியவேலைப்பாடுகளையும் விசித்திரமயமாகிய விலாசத்தையுங்கண்டு ஆச்சரியப்பட்டுஅதில்ஓர்புறத்தில்படிகக்கல்லாற்

செய்த ஒருதாமரைத்தடாகமிருக்க அதுநீர்போற்காணுமல்நிலம் போல்காணப்பட்டபடியால் அதில்சாதாரணமாய்போய் ஜலத்தினில்வீழ்ந்துவஸ்திரங்களை நனைத்துக்கொண்டு பிரமித்துநிற்பதைக்கண்டு சிலயாதவர்களும்பீமசேனனும் துரோபதையுஞ்சிரித்தார்கள்அப்போதுதருமபுத்திரர் அவர்களைப்பார்த்து நகைக்கவேண்டாமென்று நிறுத்தினர், துரியோதனன் முதலானோர் மிகவும்விசனமடைந்து நாணத்துடன் தலையைக்குனிந்துகொண்டுஅஸ்தினபுரஞ்சென்றனர், ஸ்ரீகிருஷ்ணபகவான்பூமிபாரம் நிவர்த்திசெய்யக்காரண மிதுதானென்று தமக்குத்தாமே நிச்சயித்துக்கொண்டு மௌனமாயிருந்தனர்.

---

## எகூ - வது- அத்தியாயம்.

### அறுசீரடியாசிரியவிருத்தம்

அருமையாம் ருக்மணித்தாயவளிட விவாகந்தன்னில்,பெருமைகொள் சால்வனனேன்பிரபலயாதவரை,விளைவிலோர் பூண்டில்லாமல் விளக்கிடவெண்ணங் கொண்டு, பிரத்தியும் மனனைமூர்ச்சைப்போக்கிடச் செய்ததாமே.

சௌபநகராதிபதியான சால்வன் ஸ்ரீருக்குமணீதேவியின் விவாகசமையத்தில் ஸ்ரீபலராமனால் அபஜயப்பட்டுயாதவர்களென்கிறபூண்டில்லாமற்செய்வதற்குசிவனைக்குறித்து தவஞ்செய்துஅவரதுகிருபையால் ஆகாயத்தில் சஞ்சரிக்கும்படியான இரும்பினாற்பட்டணம்நிர்மித்துக்கொடுக்கப்பெற்று அதில்சகல சேனைகளையும் அமைத்து துவாரகைக்குச்சென்று ஸ்ரீகிருஷ்ண பிரானுடையகுமாரனைபிரத்தியுமனனுடன்போர்செய்துதனதுமந்திரியானதுயுமத்சேநனால்மூர்ச்சிக்கச்செய்துபின்புதெளிந்த விருத்தாந்தத்தைச்சொல்லப் படுகின்றது.

### ஸ்ரீசுகர்வாக்கியம்,

கேளீர் பரதவம்சோற்பவனைபரிட்சித்து மகாராஜனே ஸ்ரீகிருஷ்ணபகவான் ஸ்ரீருக்குமணீதேவியைஆசுரவிதியினால் கிரகித்துக்கொண்டு துவாரகைக்குப்போகும்போது ஜராசந்தன் முதலியவர்களுடன் வழிமடக்கினசால்வன் ஸ்ரீபலராமரால் அபஜயப்பட்டு அந்தப்பகையினால் யாதவர்களென்கிறபெயரைபூமியிலில்லாமற்செய்கிறேனென்று பிரதிக்ஞைசெய்து பசுபதியாகியபரமசிவனைக்குறித்து புழுதியை ஆகாரஞ்செய்துகொண்டுஒருவருஷம்வெகுஉக்கிரமான தவஞ் செய்தனன்அத்தவத்திற்குமெச்சிசிவபெருமான் அவனுக்குப்பிரத்தியக்ஷமாகினர் அப்போதவன் ஆனந்தக்கடலிலாழ்ந்தவனாய்சாஷ்டாங்கமாகப்பணிந்து கைகூப்பிதுதிசெய்து நிற்கிறவனை சிவபெருமான்பார்த்து உனதிஷ்டத்தைக் கேள்தருகிறேனென்றுகூற, கருணைக்கடலான சுவாமிவெகுதுஷ்டர்களான யாதவர்கள் அனேகர்களிருக்கின்றார்கள்அவர்களைமாய்ப்பதற்காக ஆகாயத்தில்சஞ்சரிக்கும்படியாயும், மூன்றுயோசனைநிகளமும் ஒருயோசனை அகலமும் வெகுஉயரமான மதில்களுடனும்யக்ஷகின்னர்கிம்புருடர்உரகர்முதலியதேவர்களாலும் அசுரர்களாலும்அபேத்தியமாய் ஒருவராலும்கண்ணெடுத்துப்பார்க்கப்படாததாய் இரதம்கஜம்-துரகம் -பதாதிசேனைகளையமைத்துநினைத்தவிடத்தில் ஆகாயத்தில்சஞ்சரிக்கும்படியாய்இரும்பினலொருபட்டணம்நிருமித்துதரவேண்டுமென்று வினவுகின்ற சால்வனுடைய கருத்துக்கிசைந்து அப்படியேபட்டணம் நிருமித்துக்கொடுககச்சொல்லிஅசுரசிற்பியானமயனுக்கு ஆக்கியாபித்துவிட்டுஅந்தர்த்தானமாகினர். மயனும்சிவபெருமானுடைய ஆக்கினையின்வண்ணமநிர்மித்துக்கொடுத்தனன் அதைப்பெற்றுஇனிசகலயாதவர்களையும் வெல்லலாமென்று தைரியமடைந்து அதில்நால்வகைச் சேனைகளையும்அமைத்துக்கொண்டுதுவாரகாபுரத்தின்மீது தண்டெடுத்துவந்துகோட்டைகள் பேரிலுங்கொத்தளங்கள்பேரிலும்நந்தவனத்திலுள்ள தருக்கள்பேரிலும் ஐந்திராஸ்திரம்யாமியாஸ்திரம். ருவஞாஸ்திரம், ஆக்கினேயாஸ்திரம் குபேராஸ்திரமுதலிய அஸ்திரங்களையும்,கத்தி- சக்திகண்டகோடாலி-உலக்கை-உழல்-தடி-கதைமுதலிய ஆயுதங்களையும்-ஓய்வில்லாமல ஆகாயத்தில்நின்றும் வருஷிக்கிறபோது அந்தத்துவாரகா பட்டணத்திலுள்ளஜனங்கள்கண்டு இதென்னவிபரீதகாலமோவென்று மனக்கலங்கிதிசைதப்பிதிடுக்கிட்டேங்கிதிரிபுரத்தை எரிக்குங்காலையில்உருத்திரனைக்கண்டு பயந்தஜனங்களைப்போல்பயந்து அலைவதைப்பார்த்துஸ்ரீகிருஷ்ணபகவானுடையகுமாரனைபிரத்தியுமனன் அவர்களைப்பயப்படாதையுங்களென்று தேற்றித்தாருகனுடைய குமாரனைஇரதத்தைச் சன்னகஞ்செய்யச்சொல்லி ஆக்கியாபிக்கஅவனுமவ் வண்ணமாகக்கொண்டு வந்துநிறுத்த அதின்மீதுஆரோகணித்துசாத்தகி-சாருதட்சிணன்சாம்பன்-அக்குரூரன்பானுவிந்தன்-சுதன்-முதலியசூரர்களானயாதவசிரேஷடர்களுடன் வெளிப்பட்டுசால்வனோடெதிர்த்தனன்-அப்போதுசால்வன்யாதவர்கள்மீதில்மாயையையனுசரித்துஅனேகபாணங்களை பிரயோகஞ்செய்துவிடுத்தனன்,பிரத்தியுமனன் அதுகள்யாவையுந்தனதுமாயையால்சூரியனைக்கண்ட இருளைப்போல் பறக்கடித்துஅவனுடையசேனாதிபதியானசுத்தியும்னன்மீது இருபத்தைந்துபாணங்களைவிடுத்து மார்பைபிளந்தனன் அந்தத்தெப்பல்பொறுக்கமாட்டாமல்அந்தச்சுத்தியும்னன் உதிரங்களைப்பெருகிக்கொண்டு மூர்ச்சித்து பூமியில்வீழ்ந்தனன்பின்னும்-பிரத்தியுமனன்நூறு பாணங்களைப்பி

ரயோகித்துசால்வனுடையபடைகளைச் சிதறவடித்து அவனதுசாரதியைப் பத்துபாணங்களாலும் குதிரைகளை மூன்றுபாணங்களாலும் அடித்துரோகச்செய்தனன் அப்போதிந்தப்பிரத்தியுமனனுடைய கரலாகவத்தைப்பார்த்துத்தேவர்கள் துதித்துமலர்சொரிந்தார்கள், யாதவர்கள்கண்டுகளித்துவியப்பையடைந்தார்கள், இதைப்பார்த்துசால்வன் பொறாமைப்பட்டு கடுஞ்சினமடைந்து இவனுடனிப்படியுத்தஞ்செய்வதால்பிரயோஜனமில்லை இவனைமாயையால் மோசப்படுத்தி வெல்லவேண்டுமென்று கருதிஅப்படியேஆகாயத்தில் பட்டணத்தோடுகிளம்பி அநேகபாணவருஷங்களைவருஷித்துஉடனே பூமியில்வந்து அனேககணைகளைவிடுத்தான் அப்போதுபிரத்தியுமனன்பதில்கணைதொடுக்கிறசமயத்தில் கண்ணுக்குக்காணாமல் மறைந்து மேகத்திலிருந்துசரவருஷங்களைவருஷித்தான், பிரத்தியுமனன்பாணப்பிரயோகஞ்செய்யுஞ்சமையத்தில் ஒருபட்டணத்தில் அனேக சேனைகளுடனிருப்பவன்போல் தென்பட்டுதிரும்பவும் அநேகபட்டணங்களில்அநேகசேனைகளி லிருப்பவன்போலுந்தென்பட்டான்

அந்தந்தசமையத்திற்குத் தகுதியா யாதவர்களுடன் பிரத்தியுமனன் பாணங்களைவிடுத்துக்கொண்டுவந்தான் அதுகளைத் தப்பித்துக்கொண்டு பர்வதத்தின்மீதி லிருந்துசிலகணைகளைப் பொழிந்தான் அதற்குப்பிரத்தியுமனன் பாணப்பிரயோகஞ் செய்யுஞ்சமையத்தில் ஜலத்தில்மறைந்து அனேககணைகளை யெய்தான் இப்படி நின்றவிடத்தில் நில்லாமலோடிமறைந்து யுத்தஞ்செய்கிறசால்வனைத்தென்படுகிற விடத்திற் சரவருஷங்களைவருஷித்து யெய்தார்கள் அதுகள்யாவையும் தப்பித்துக்கொண்டு சூரியாக்கினிபோல் பிரகாசம்பொருந்திய விஷங்களைக் கக்கிக்கொண்டிருக்கிற அனேகபாணங்களையாதவர்களமீது பிரயோகித்துமாயமாய் மறைந்தனன் அப்போது யாதவர்கள்இந்தச்சால்வனை ஜயித்தால்சகலமேன்மைகளும்பெறலாம் மரணமடைந்தால் வீரசொர்க்கத்தையடையலாம் ஆதலால்இவனுடன் யுத்தஞ்செய்தால்இரண்டுவிதத்திலும் சௌக்கியமிருக்கு தென்று கருதிநிலையாகநின்று யுத்தஞ்செய்த் துடங்கினர்கள் அந்தச்சமையத்தில்முன்பு பிரத்தியுமனனுடையபாணப்பிரகாரத்தினால் மூர்ச்சித்திருந்த சுத்தியுமனனவன் தெளிந்தெழுந்திருந்து ஒருகதையைக்கரத்திற்றாங்கிஓடிவந்துபிரத்தியுமனனுடையமார்பினி லோங்கியடித்தான். அந்தப்பிரகாரத்தினால் மார்புநுறுங்கிமூர்ச்சித்தபிரத்தியுமனனை அவனதுசாரதிகண்டு இரதத்தைத்திருப்பிக்கொண்டப்புறஞ் சென்றனன் அந்தசுத்தியுமனனென்பவன் தேவதானவகந்தருவர்களாற் சாவில்லாமல்வரம்பெற்றுச் சர்வோத்தமபலத்தைவாய்ந்தவனாய் இரண்டாயிரந்துலாம எழுகினற்செய்தகதையை யெடுத்துதனதுபலங்கொண்ட தோங்கிஅடித்ததற்குஇந்தப்பிரத்தியுமனனைபடியால்பிராணனோடேகூடிமூர்ச்சையடைந்தான்மற்றொருவனானால் சூரணமாய்ப்போய்விடுவனாதலால் அந்தப்பிரத்தியுமனன் ஒருமுகூர்த்தத்திற்குமேல்மூர்ச்சைதெளிந்து தனதுசாரதியைப்பார்த்து இப்படிப்பட்டசத்துரு எதிரில்நிற்கிறபோது என்னை அப்புறத்திற்கொண்டுபோய்விட்டையேஇதுமகத்தான அப்பிரதிஷ்டையல்லவோ யாதவவம்சத்திற்பிறந்தவனில்எவனாகிலும் யுத்தத்திற் பின்வாங்கினதுணடோ எனதுபகைவனுக்குச் சந்தோஷம்வரும்படி என்னைபேடியானயஜமானனென்றெண்ணி இரதத்தைத் திருப்பிக்கொண்டுவந்தையேஇந்தயுத்தந்தீர்ந்துநமதுநகரஞ்சென்றவுடன் ஸ்ரீகிருஷ்ணபகவானையும் ஸ்ரீபலராமனையும் கண்டுசேவிக்கும்போது அவர்கள்கேள்விக்கென்ன உத்தரஞ்சொல்லப்போகிறேன்எனதுசகோதரர்கள அவர்களுடைய மனைவியர்கள் முதலானோர் கேட்டால் கண்டுநகைப்பார்களேயென்று சொல்லுகிற பிரத்தியுமனனைப்பார்த்துதருமத்தினுடைய இரகசியத்தையறிந்துசாரதி அப்படிக்குச்செய்தனேயன்றி எனதிச்சையாய்உமக்கு ஆயாசம்வரும்படி நான்செய்யவில்லை யஜமானன் ஆபத்தைஅடைந்திருக்கிற சமயத்தில்சாரதி இரட்சிக்கவேண்டும்சாரதியைச் சார்வகாலமும் யஜமானன்பாதுகாக்கவேண்டும் ஆதலால் இப்போது நீர் இளைப்படைந்திருந்தபடியால் அதுதீருகிறவரையில் அப்புறத்திற்கொண்டுபோனேன் இனியென்னிடத்திற் கோபத்தைப்பாராட்டாமல் எவ்விதமாக ஆக்கியாபிக்கின்றீரோ அவ்வண்ணம்நடக்கச்சித்தமாய்க் காத்திருக்கிறேனென்று விக்கியாபனஞ்செய்தனன்.

## எஎ - வது - அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அந்தநற்பிரத்தியுமனன் ஆச்சரியத்தியுமத்சேனை
கொந்திடமாய்த்துவிட்டுக் கோபாலராணோரப்போ
இந்திரப்பிரஸ்திருந்தஎழில் துவாரகைக்குநண்ணி(ம்
பொந்துசாலுவன்றன்னோடுபோர்புரிந்ததனை சொல்வா

அந்தநற்பிரத்தியுமனன் தியுமத்சேனனைமாய்த்ததும் ஸ்ரீகிருஷ்ணபகவான் இந்திரபிரஸ்தத்தி லிருந்துதுவாரகாபுரத்திற் கெழுந்தருளிசால்வனோடெதிர்த்துப்போர்செய்ததும் அவனதுபட்டணத்துடன் மாய்த்ததுஞ் சொல்லுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளீர் குருவம்சோற்பவனான பரிட்சித்துமகாராஜனேஅந்தப்பிரத்தியுமனனவன் இப்படிச்சொன்னசா

ரதியைநோக்கி அந்ததியுமத்சேன னெவ்விடத்திலிருக்கின்றானோ அதையறிந்துஅவனருகில் இரதத்தைநடத்தென்று ஆக்கியாபித்தனன் அவனுமவ்வண்ணம் அதிவேகத்துடனவன்சமீபத்திற் கொண்டுபோய்நிறுத்த அப்போதனதுசேனைகளைமாய்த்த அந்தியுமத்சேனனைக் கண்டுகடுஞ்சினமடைந்துவில்லை வளைத்துநாணேறிட்டு குணத்தொனிசெய்து எட்டுநாராசபாணங்களை அதிகவேகமாய் பிரயோகித்து நாலுபாணத்தால் நான்குகுதிரைகளையும் ஒருபாணத்தால் சாரதியையும்ஒருபாணத்தால் தனுசையும், ஒருபாணத்தால் டெக்கயத்தையும் ஒருபாணத்தால் அந்தியுமத்சேனனுடையசிரசையும் அறுத்துத்தள்ளிப்போட்டான் அப்போது- கதன்-சாத்தகி-அக்குரூரன் - முதலியயாதவர்கள் அந்தச்சால்வனுடையபடைகளையேககாலத்தில் சின்னபின்னமாகஅடித்துஆகாயத்திலிருந்து சமுத்திரத்தினில் விழச்செய்தார்கள் இப்படிஇருபத்தொன்பதுநாள் தேவாசுரயுத்தம்போல் ஓய்வில்லாமல் மகத்தானயுத்தஞ்செய்துகொண்டிருக்கையில் தருமபுத்திரருடைய இராஜசூயயாகத்திற்குப்போன ஸ்ரீபலராமகிருஷ்ணர்களுக்கு துவாரகாபுரத்தில் வாசஞ்செய்கிற யாதவர்கள் யாவரையும்சங்கரிக்கவேண்டுமென்று சால்வன்வந்துபோர்செய்வதொன்றுமறியாதவராகத்தானே இந்திரப்பிரஸ்தத்தில் சிலநாள் வாசஞ்செய்து தருமபுத்திரரைப்பார்த்து நானிவடம்வந்துநெடுநாளாயிற்று உமதுஉச்சவங்களையெல்லாம்கண்டுகளிக்கப்பார்த்தேன் அவடத்தில்சால்வன் முதலியதுஷ்டர்கள்வந்துதுன்பப் படுத்துவார்களாதலால் துவாரகைக்குச்செல்ல விடைதர வேண்டுமென்று சொன்ன ஸ்ரீகண்ணபிரானை நோக்கிஓகருணைக்கடலே உம்மைவிட்டுப்பிரிந்துநானிருக்கமாட்டேன் ஆகிலும் உமதுகருத்தையுந் தடுக்கமாட்டேனென்று சொல்லிக்கண்களில்நீர்ததும்பவெழுந்து ஆலிங்கனஞ்செய்துகொண்டு புளகமரும்பஸ்தம்பம்போல்நின்றார் கண்ணபிரான் அவருடன்கூட குந்தியிடத்திற்குச்சென்று தண்டனிட்டு அத்தாய்நீபுத்திரரால் வெகுசிறப்பைப் பெற்றாய்நான்போய்வருகிறேனென்று சொல்லிஅவளிடத்தில் ஆசீர்வாதத்தோடுவிடைபெற்று துரோபதைசுபத்திரை யிடத்திற்சென்றுஅவர்கள்பணிந்ததிற்கு ஆசீர்வதித்துஅவர்களிடத்தும் மற்றபந்துக்களிடத்திலும் விடைபெற்றுகிருதவர்மன் முதலியயாதவர்களுடனேபாண்டவர்கள் சூழ்ந்துவரதேர்மேலேறிப்புறப்பட்டு சிலதூரஞ்சென்றுதருமபுத்திரரைப்பார்த்து ஓய்மகாராஜாவே இராச்சியத்தைச்செவ்வையாக ஆண்டுயாவரும் புகழும்படி யிருமென்றுசிலநீதிவசனங்கள் சொல்லிஅனுப்பிவித்து துவாரகாபுரிக்குப் போகும்போதுமார்க்கத்தில் நானாவிதமானஉற்பாதங்களைக்கண்டுகலவரப்பட்டு துவாரகாபுரத்தினில் வந்து அவடத்தில் யாதவர்களில்லாதிருப்பதையும்பட்டணத்திலுள்ளஜனங்கள்கிலேசப்படுவதையும்பார்த்து துவாரபாலகனுடையவசனத்தினால் சால்வன்வந்துயுத்தஞ்செய்வது தெரிந்து பட்டணத்தைஇரட்சிக்கும்படி பலராமனைவைத்துவிட்டுசால்வன்யுத்தஞ்செய்கிறவிடத்திற்கெழுந்தருளினார்.

கண்ணனுக்குஞ்சால்வனுக்கும்யுத்தம்.

அவரைக்கண்டுபிரத்தியுமனன்முதலிய சகலயாதவர்களும் தரித்திரனுக்கு நிதிதென்பட்டால்போலவெகுகளிப்பை அடைந்தார்கள், சால்வனும்சுவாமியைப்பார்த்துஒரேதிரமாய் யாதவப்பூண்டைக்கருவறுக்கச்சமயம்வாய்த்ததென்று சந்தோஷத்தை அடைந்திருந்தனன். அப்போது ஸ்ரீகிருஷ்ணன்தாருகனைப்பார்த்து அந்தமாயாவியான சால்வனெங்கேயிருக்கிறானோ அவடத்திற்குச்சீக்கிரமாகஇரதத்தைக் கொண்டுபோவென்று ஆக்கியாபித்தனர். அவனுமவ்வண்ணம் தனதுசிக்ஷாபலத்தினாலேவெகுசீக்கிரமாகஇரதத்தைக்கொண்டுபோய்நிறுத்த அதுகண்டுசால்வன்கடுஞ்சினமடைந்துசுவாமியின்மீதில் அனேகபாணங்களைப் பிரயோகித்துதாருகன்மீதுயமதண்டத்திற் கொப்பாயும்சர்வகாலமும்சத்துருக்களுடையஉதிரங்களாற்பூசப்பட்டிருக்கின்றசக்தியையெடுத்துவெகுகோபத்துடன்பிரயோகித்தனன், அதைச்சுவாமி ஆகாயத்தில் வரச்சேதானே நூறுதுண்டமாகக்கண்டித்து சால்வன்மீதில்பதினாலு பாணங்களைப்பிரயோகஞ்செய்தனர், இப்படிகரலாகவமாய்ப்பிரயோகித்தஸ்ரீகிருஷ்ணசுவாமியின்துபாணங்களைத்துண்டித்துஒரு நாராசபாணத்தால்சுவாமியினுடையகரத்திற்குலக்காய்விடுத்தான், அதினால்வெகுவருத்தமடைந்துகரத்தினி லிருந்தவில்லுகீழேசோரஉதிரம்ஆறாய்ப்பெருகஇப்படிசங்கடப்படும்படிச்செய்ததைசகலயாதவர்களும்பார்த்து ஹாஹாகாரஞ்செய்து முறையிட்டார்கள்சால்வனும்அவனுடன்கூடவந்தசேனைகளும்வெகுசந்தோஷத்தைஅடைந்தார்கள், அந்தச்சமயத்தில் சால்வன் அட்டகாஸஞ்செய்து ஒருவார்த்தைசொல்லுகிறான். ஓகளடாமூடனனகோபாலா, எனதுதோழனை சுசிபாலனுக்குபீஷ்மகன் குமாரத்தியான உருக்குமணியை விவாகஞ்செய்துவைக்க வேணுமென்று அந்தச்சுயம்வரத்தில்வந்து நாங்களெல்லாரும் பார்த்திருக்கக் கொஞ்சமேனும் பயமில்லாமல் அவளைத்தூக்கிஇரதத்தில்வைத்துக்கொண்டு போனாயல்லோஅப்போது மன்னித்துவிட்டுவிட்டோம், அதைமறந்து இராஜசூயயாகத்திலும் சகலஅரசர்களும் வந்திருக்கயாவரையும் அவமதித்துயீனஜாதியிற் பிறந்தோமென்கிற நாணமற்று வெகுமானம்பெற்றாய் அதன்றி சிசுபாலனை எம்போலியதோழன்

பக்கபலமில்லாதசமயத்தில் சங்கரித்தாய் அந்தஅன்னியாயத்தினு லிப்போயெந்தனருகில்வந்து கிட்டினுய்உன்னைச்சீக்கிரத்தில் யமபுரத்திற் கனுப்புகிறேனென்று கூறிய சால்வனை நோக்கி ஸ்ரீகிருஷ்ணன் புன்னகையுடனீவெகுஅழகாய் கொக்கரிக்கிறாய் உன்னடக்கையெனக்கு நன்றாய்த்தெரியும் நீவாயினுல்பிதற்றுவதில் யான்பயப்படமாட்டேன், கிரியையினுல் காட்டென்றுதமதுகவுமோதகியென்கிற கதையைஎடுத்துபூமியிலூன்றி ஒருகிளம்பாய் ஆகாயத்திற்கிளம்பி சால்வனுடைய மார்புக்கும் கழுத்திற்கும் நடுவில்மோதி அடித்தார் அதினுல்மார்புபிளந்து உதிரம்பெருகுவதை ஸ்ரீகிருஷ்ணனுக்குத்தெரியவொட்டாமல் ஆகாயத்தில்பட்டணத்துடன் கிளம்பிஒருமுகூர்த்தம்மறைந்து மாயையால்ஸ்ரீகிருஷ்ணனுக்குப் பிதாவானவசுதேவருடைய வேலைக்காரனைப்போலொருவனைச் சிருஷ்டித்து தேவகிதேவி அனுப்பினதாகச் சுவாமியின்சமீபத்திற்கனுப்பினுன்.

அவன் ஸ்ரீகிருஷ்ணசுவாமியின் சந்நிதானத்திற்குவந்துகைகூப்பி ஒருவார்த்தை சொல்லுகிறுன் தேவரீருடையபிதாவான வசுதேவரைசால்வன்வந்து பாசத்தாற்கட்டிக்கொண்டுபோனுன் அவரையெந்தவிதத்திலும் விடுவித்துக்கொண்டு வரவேண்டுமென்று உம்முடன் உமதுதாய்சொல்லச் சொன்னுளென்று விக்கியாபனஞ்செய்தான், அதுகேட்டு ஸ்ரீகிருஷ்ணன் மகாபலசாலியான பலராமரைஜயித்து சால்வன்எனதுதந்தையைப்பிடித்துக்கொண்டு போனுனென்றுல் இதென்னமோஆச்சரியமா யிருக்குதென்று சங்கையுற்றுகொஞ்சம் விசனத்துடன் பலவாறுகச் சிந்தித்துக்கொண் டிருக்கையில் ஆகாயத்தில் சால்வனுனவன் வசுதேவரைப் பாசத்தினுற்கட்டிசுவாமிக்கெதிராகக்கொண்டுவந்து கேளடாகோபாலா, உனதுபிதாவான்வசுதேவன்என்னுற்கட்டிக்கொண்டு வரப்பட்டான்நீசூரனுனுலிவனை விடுவித்துக்கொள்ளென் றுரைத்து அவர் பார்த்துக்கொண்டிருக்கையிற்றுனே கத்தியினுல் சிரசைக்கண்டித்துப் போட்டான் அப்போது ஸ்ரீகிருஷ்ணன்சாதாரணமான மானிடன் போலவிசனப்பட்டு கொஞ்சநேரத்தில் அந்தசவுபமென்கிற நகரத்திலிருந்த சால்வனையும் அவனுல்வெட்டுண்டவசுதேவருடைய சரீரத்தையுங் காணுமையாலிதெல்லாம் மாயையென்றுநிச்சயித்துஇனிசால்வனைவைக்கக்கூடாது சீக்கிரத்திலேயேசங்கரிக்க வேண்டுமென்றிருக்கையில் அந்தச்சால்வன்கண்ணுக் கெதிரேவந்துநின்ற ஸ்ரீகிருஷ்ணன் பேரிலும்சாரதிமுதலிய சேனைகளின் மீதும் சரவருஷங்களைப் பொழிந்தான் அதுகண்டுஸ்ரீபகவான் ஒருஅர்த்தசந்திர பாணத்தால் அவனுடையகவசத்தைஅறுத்து தமதுகதையால்அவனதுசவுபமென்கிறபட்டணத்தைப் பொடிப்பொடியாகத் துண்டித்துப் பூமியில்தள்ளினுர். அப்போதுசால்வன்பதாதியாய்ஒருகதையைக் கையிலெடுத்துக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணனைமாய்க்கவேண்டுமென் றோடிவந்தான், அப்போதுஸ்ரீகண்ணபிரான் இரண்டர்த்தசந்திரபாணங்களைப்பிரயோகித்துஅவனதுகதையுடன் இருகரத்தையுந் துணித்து திருவாழிப்பிரயோகத்தினுல் சிரசையுஞ்சேதித்தனர்.

அப்போது சகல யாதவர்கள் கொண்டாட, தேவர்களலர்சொரிந்து துந்துபிவாத்தியமுழங்க,அச்சரமாதர்கள்நடிக்க, இப்படிவெகு ஆடம்பரத்துடனிருக்கிறசமயத்தில் சால்வனுக்கும்சிசுபாலனுக்குந் தோழனுயும்ஸ்ரீகிருஷ்ணபிரானுக்கு அத்தையின் குமாரனுயும்மகாபராக்கிரமசாலியாயு மிருக்கிறதந்தவக்கிரன் கேட்டுகெடுஞ்சினத்தோடு ஸ்ரீகிருஷ்ணனைமாய்த்து தனதுதோழன்மார்களுடைய கடனைத்தீர்த்துக்கொள்ளவேண்டுமென்றுஒருகதையை எடுத்துக்கொண்டு கால்நடையாக ஓடிவந்தான்.

---

## எஅ - வது, அத்தியாயம்.

எழுசீரடி யாசிரியவிருத்தம்.

தந்தவக்ரனையும் விடூரதன்றனையும்
சங்கரித்ததும்பல ராமர்
அந்தமாந்தீர்த்தயாத்திரைப்போன
அவிடத்திற்சூதர்மேற்கடிந்து
பந்துபோற்றலையை யிருபிளவாக
பண்ணதும்மகாரிஷி யானோர்
முந்துசூதனைமுன்போல்பிழைப்பிக்க
முனிந்திடச்செய்தது முரைப்பாம்.

ஸ்ரீகிருஷ்ணபகவான் தந்தவக்கிரன் விடூரதன்இவர்களைச்சங்கரித்ததையும், ஸ்ரீபலராமர் தீர்த்தயாத்திரை போனவிடத்தில் சூதபுராணிகரிடத்தில் கோபித்துக் கொண்டு சிரசைக்கண்டித்ததும்,திரும்பி மகரிஷிகளைப்போதும்போல் சூதனைப் பிழைப்பிக்கச் செய்ததுஞ் சொல்லப்படுகின்றது.

கண்ணனுக்கும் தந்தவக்கிரனுக்கும்யுத்தம்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளீர் சந்தனுவம்சோற்பவனுன பரிட்சித்துமகாராஜனே, சிசுபாலனுக்கும் சால்வனுக்கும்பவுண்டரீகனுக்குந்தோழனுன தந்தவக்கிரனுனவன் தனதுசினேகிதர்களயாவரையும் ஸ்ரீகிருஷ்ணன் சங்கரித்ததைச் சகிக்கமாட்டாமல் கதையைக்கரத்தினிற்றுங்கி ஓடிவருகிறவனைப்பார்த்து தாமும்இரதத்தைவிட்டுக்கீழேகுதித்துதமதுகவுமோதகீயென்கிற கதையை எடுத்துக்கொண்டு

அவனுக்கெதிரே நின்றார், அவனைப்பார்த்து தந்தவக்கிரகன் கடுஞ்சினத் தோடொருவார்த்தை சொல்லுகிறான்-கேளாய்அடாமூடனானவனே இவ்வளவுநாளெனது கண்ணிலகப்படாமல் திருடனைப்போலொளித்திருந்தாய்இன்றையதினம் எனதுகண்ணிற் பட்டபடியாலெந்தன்குறையைத் தீர்த்துக்கொள்ளுகிறேன் இனியுன்னை விடுகிறதில்லை எனதுசினேகிதர்கள் போனவழிஉன்னையும் அனுப்பிவிடுகிறேன் நீயெனக்குஅம்மான் மகனாஇருந்து எனக்குத்தானே மித்திரதுரோகத்தைச்செய்தபடியால் அதற்குப்பயன் இப்போதே காணப்போகிறாயென்று தனதுகதையாலோங்கி ஒருஅடிஅடித்தான் ஸ்ரீகிருஷ்ணன் அதை தாமரைக்கொடியினாலடிபபட்ட மதகஜம்போல அதைலட்சியஞ்செய்யாமல்தமதுகதையால் அவனதுமார்பில் ஓங்கி அடித்தனர், அதைச்சகிக்கமாட்டாமல் மார்புபிளந்து சரீரமுழுதும்நுறுங்கி வாயினால் உதிரங்களைக்கக்கிக்கொண்டு தலைவிரித்துக்கை கால்களைப் பரப்பிக்கொண்டு அத்தனால்பூமியில் வீழ்ந்தனன், சிசுபாலனைப்போல இவனும்துவாரபாலகனாதலால்இவனிடத்திலும்ஒருஜோதிஉண்டாய் ஸ்ரீகண்ணபிரானுடைய திருவடியில் லயித்துப்போயினன்.

அதைச்சகலயாதவர்களுந் தேவதானவர்கள்- கந்தருவர்-சித்தர்-சாத்தியர்-முதலியவர்கள்கண்டு மிகவும்வியப்பைஅடைந்தார்கள், அதுகண்டு அவன்தம்பியான விடூரதன் தனதுசகோதர னிறந்ததைப்பார்த்துச் சகிக்கமாட்டாமல் மிகவும் சோகத்தோடுங் கோபத்தோடுங்கத்திகேடயத்தைஎடுத்துக்கொண்டு ஸ்ரீகிருஷணனைநில்லுநில்லென்று திக்கரித்துக்கொண்டோடிவந்தான்: அப்போது ஸ்ரீபகவான்வேகமாய் சக்கிரப்பிரயோகஞ் செய்துஅவனது சிரசைத் துணித்துவிட்டார், அப்போ தேவரிஷிகளும் பிர்ம்மரிஷிகளும் ஆனந்தக்கூத்தாட, அம்பரத்தினின்றும்பார்மலர்சொரிந்தாட யோகிகளும் வேதியர்களும் வேதபாராயணஞ்கூற, சகலயாதவர்களும்பதினெண்வாத்தியங்களுடன் புடைசூழ இப்படி கோலாகலத்துடன் எழுந்தருளுகிறபோது, பூதனைமுதல் தந்தவக்கிரன் விடூரதன்வரையில் அசுரர்களாதலால் அவர்களைத் தம்மன்றி யாவருங் கொல்லமாட்டார்களென்று தாமேகொன்று இனியெவனாவது தப்பியிருந்தாலும்அவனை யாரையாவதுகொண்டு சங்கரித்துப் போடுவோம் இனிஆயுதமெடுக்கத் தேவையில்லையென்று நிச்சயித்துசகலஜனங்களாற் றுதிக்கபபட்டுக் கொண்டு துவாரகாபுரஞ்சேர்ந்து உருக்குமணிசத்தியபாமை முதலியவர்களுடன்கூடச் சுகமாயிருந்தனர்,

அந்தச்சமையத்தில் பாண்டவர்களும் கௌரவர்களும்யுத்தஞ்செய்ய ஆரம்பித்திருப்பதை நாதர்முகமாய்க்கேள்வியுற்ற ஸ்ரீபலராமர் இங்கிருந்தால் எவர்களுக்காவது சகாயஞ்செய்யவேண்டிவரும் நாமிங்கில்லாமலிருப்பதே யோக்கியமென்று தீர்த்தயாத்திரைக்குப் போகயத்தனஞ்செய்து அனேகம்வேதியர்கள் பிர்ம்மரிஷிகளைக்கூட்டிக்கொண்டு பிரயாணப்பட்டு முதலில்பிரபாசதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து தேவரிஷி பிதுருகணங்களையுத்தேசித்து தர்ப்பணஞ்செய்து சாஸ்வதிநதிக்குச் சென்று பிரதூதகமென்கிற சரசிலும் பிந்து சரசிலும் திருணகூப மென்கிற சரசிலும் சக்கர தீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து அவடத்திற் செய்யவேண்டிய தர்ப்பணங்களைச்செய்துவிட்டு யமுனையி லெத்தனை புண்ணியதீர்த்தங்க ளிருக்கின்றனவோ அதுகளிலும் கங்கையிலுள்ளதீர்த்தங்களிலும ஸ்நானஞ் செய்து அனேகதானங்களை வேதியர்கட்குக்கொடுத்துசகலரிஷிகணங்களுடன் நைமிசாரண்ணியத்தில் சௌநகர்முதலியரிஷிகள் சத்திரயாகஞ்செய்துகொணடிருக்கிறவிடத்திற் கெழுந்தருளினர் அவரைக்கண்டு சகலரிஷிகளுமெழுந்திருந்து சாஷ்டாங்கமாகப்பணிந்துஆதனம்சமர்ப்பித்துஅவர்அதிலெழுந்தருளினபிற்பாடு பிர்ம்மரிஷிகள் யாவருங்கை கூப்பிக்கொண்டிருக்கிறசமையத்தில் ஸ்ரீபலராமர்வியாசருடைய சிஷியனும் உரோமஹருஷணனுக்கு மைந்தனுமிருக்கின்றசூதன் தமக்கு எழுந்திருந்து மரியாதைசெய்யாம லுயர்ந்தஆதனத்தில் அசட்டையாய்உட்காந்திருப்பதைக்கண்டு கடுஞ்சினமடைந்துபிராம்மணஸ்திரீயினிடத்தில் க்ஷத்திரியனுக்குப்பிறந்த சங்கரஜாதியாகவும் தேரூர்வதற்குரியவனாகவுமிருக்கின்ற இந்தச்சூதனுக்கு உயர்ந்தஆதனங்கொடுத்து வேதவியாசராய்ப்பாவனைசெய்துக்கொணடிருக்கின்ற ரிஷிகளைப் பார்த்துகண்கள்செவக்க கைகள்பதைக்கஉதடுகள் துடிக்கஒருவார்த்தை யருளிச்செய்கிறார் கேளீர்பிர்ம்மநிஷ்டர்களானமகரிஷிகளே சங்கரசாதியிற்பிறந்த இவனுக்குஉயர்ந்தஆதனங்கொடுத்து பிர்ம்மநிஷடர்களான நீங்கள்தாழ்ந்தஆதனத்திலிருப்பதினாலேயே இவன்சுகசாதியிற்சிறந்தவனாகவும்இதிகாஸமுதலிய பதினெண்புராணத்தையும் மகரிஷிகளான உங்களுக்கு உபதேசிக்கிறேனென்றுங்கர்வித்திருக்கிறான் வேஷதாரி யானவன் உத்தமப்பிராம்மணவேஷம்போட்டாலும் அவன்சுயம் பிராம்மணனைப்போல் எமது மகிமைகளைக்கண்டுணர்வனோ எவ்வளவு வித்தை கற்றிருந்தாலுஞ் சாதிக்குரியபுத்தியிருக்குமேயன்றி யோக்கியதையுண்டாகமாட்டாது, தருமத்தை நிலைநிறுத்துவதற்குமிப்படிப்பட்ட துஷ்டர்களை நிக்கிரகிப்பதற்கும் அவதரித்திருக்கின்றஎம் போலியவர்களை அலட்சியஞ்செய்த இந்தத்துராத்துமனைச் சங்கரிக்கிறேனென்றுதமதுதிருக்கையிலிருந்த தர்ப்பத்தை அஸ்திரமாக அபிமந்திரித்து அந்தச்சூதனுடைய சிரசின்மேற்பிரயோகித்தனர். அதினால் சூதன்மரணமடைந்து

பூமியில்வீழ்ந்தனன் அதைச் சகலரிஷிகளுங் கண்டுமகாவிசனத்தையடைந்து பலராமரைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றார்கள், இந்தச்சூதர்எங்களுக்குப்புராணஞ்சொல்வதற்காக இருவருக்குப் பிர்ம்மாசநமும் தீர்க்காயுவுங்கொடுத்து உயர்ந்த ஆதனத்தில்வைத்திருந்தோம் அவரைநீர் சங்கரித்த படியால் உமக்குப் பிர்ம்மஹத்தியாகிய மகாபாபம்வந்து சம்பவித்தது.

நீரோ ஈஸ்வரனாகவும் உம்மையே வேதங்கள்ஸ்துதிக்கிறதாகவும், உமதாக்ஞையே வேதமாகவுமிருந்தாலும் அந்தவேதத்தினற் சொல்லப்பட்டிருக்கின்ற பிர்ம்மஹத்தி உம்மையொன்றுஞ்செய்யாவிடினும் அந்தவேதவியமனப்படிக்கு நீர்பிராயச்சித்தஞ் செய்து கொள்ளாவிடில் யாரும் பாபங்களுக்குப் பிராயச்சித்தஞ் செய்துகொள்ளமாட்டார்கள் ஆதலால் உலகசம்ரக்ஷணார்த்தமாக நீர் பிராயச்சித்தஞ் செய்துகொள்ளவேண்டுமென்று கூறுகிறமகரிஷிகளைப்பார்த்து இந்தப் பாபத்திற் கென்னபிராயச்சித்தம் விதிக்கவேண்டுமென்று இஷ்டமிருக்கின்றனவோ அதைச்சொல்லுங்கள் அவ்வண்ணஞ் செய்கிறேனென்று அருளிச்செய்த ஸ்ரீபலராமரைப் பார்த்து இந்தரோமஹருஷணருக்கு தீர்க்காயுவும் பிர்ம்ம தேஜசும் நாங்கள்கொடுத்திருக்கிறோம் அதுவும் நீர்பிரயோகித்த தர்ப்பாஸ்திரமும் அந்த அஸ்திரத்தினு லிவருக்குநேர்ந்த மிருத்தியுவும் பொய்யாகாமலிருக்கும்படி தகுதியாயோசித்து நடத்தவேண்டுமென்று விக்கியாபனஞ்செய்த மகா ரிஷிகளைப்பாரத்து உங்கள் கருத்தின்வண்ணம் அந்தச்சூதன் உக்கிரசிரவசென்று பெயருடையவனாய் ஆயுளுள்ளவனாகவும்தேஜசுள்ளவனாகவும்கியானியாகவுமிருந்து உங்கள்கேள்விக்கு உத்தாரஞ் சொல்லத்தக்கவனா யிருக்கக்கடவனென்று ஆசிகூறி பிழைப்பித்தனர்.

அவரும் நித்திரை விழித்தவன்போ லெழுந்திருந்து ஸ்ரீபலராமரை பிரதக்ஷணஞ்செய்து சாஷ்டாங்கமாகப் பணிந்து கைகூப்பி எதிரில் நின்றுகொண்டு புத்திரனாய் தேவரீருடைய மகிமையைமறந்து அபராதஞ்செய்ததை மன்னிக்கவேண்டும் உலகத்திற்குத் தந்தையானதேவரீர் பொறுத்தருளாமல் யார்பொறுத்துக்கொள்ளப்போகிறார்க ளென்று வெகு விதமாகத் துதித்துப்பணிந்தசூதபுராணிகரிடத்தில்அருள்கூர்ந்து அவருடையதப்பிதத்தைமன்னித்து அவருக்குவேண்டிய புத்திகளைச்சொல்லி-அந்தரிஷிகளைநோக்கி இந்தச் சூதனிடத்தில் நீங்கள்பிர்ம்மதேஜசை ஆவாகனஞ்செய்திருப்பது தெரியாமல் சங்கரித்தபடியால் அந்தஅபராதத்திற்குஉங்களுக்குவேண்டுவதை விரும்புங்கள் அதை நிறைவேற்றுகிறேன் பின்புஇந்தப்பாபத்திற்குப் பிராயச்சித்தம் விதியுங்களென்று அருளிச்செய்த ஸ்ரீபலராமர் வார்த்தைகளைக்கேள்வியுற்று அம்முனிகள் பலராமரைப்பார்த்து வாதாபியென்றும் இல்வலனென்றும் இரண்டு இராக்கதர்களிருந்தார்கள் அவர்களை அகஸ்திய மாமுனிவர்மாய்த்துவிட்டார். அவர்களில் இல்வலனுக்குப் பல்வலனென்கிற புத்திரனிருக்கிறான் அவனெப்பொழுதும் உதிரங்களாலும் மலமூத்திரங்களாலும் மதுமாம்சங்களாலும் வேள்விகளின்குண்டங்களைநிரப்பி யெங்களை ஒருகருமங்களையுஞ் செய்யவொட்டாமல் விகாதஞ் செய்கிற அந்தப்பாபியைச் சங்கரித்தீ ராஜல் எங்களுக்கு வெகுமேன்மைக்கிடமாயிருக்குமென்றுகூறி பாபத்திற்குப்பிராயச்சித்தம் இந்தப் பாரதவருடமென்று சொல்லப்பட்ட ஒன்பதினாயிரம் யோசனை தூரத்தையும ஒருதிரம் பிரதக்ஷணஞ்செய்து அதிலமைந்திருக்கின்ற புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானமும் திவ்விய ஸ்தலங்களிற்சென்று ஸ்ரீபகவானுடைய தரிசனமுஞ் செய்தால் உமதுபிரம்மஹத்திபாபம் நிவர்த்தியாகுமென்று சொன்னதைகேட்டு அவ்வண்ணஞ்செய்வதற்கிசைந்து மிகவுஞ்சந்தோஷத்தை அடைந்திருந்தனர்.

---

## எகூ - வது அத்தியாயம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்

பல்வலனைப்பலராமர் சங்கரித்துப்
பலபலதீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து
நல்லதேசங்களையும் சேவித்துப்பின்
நாட்டமுடன்குருக்ஷேத்திரந் தன்னில்வந்து
மல்லயுத்தஞ்செய்துரியோ தனனும்பீம
மகாராஜன்தனையும்வேண் டாமென்றோத
வல்லவர்களிருவர்களு மதைக்கேளாமல்
மன்னினார்துவாரகையை நண்ணினாரே

ஸ்ரீபலராமர் பல்வலனைச் சங்கரித்து சகலபுண்ணிய தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து சகல திவ்வியதேசங்களையும் சேவித்து துரியோதனனும்பீமசேனனும் கதாயுத்தஞ்செய்கிறகுருக்ஷேத்திரத்திற்குவந்து அவர்களையுத்தஞ்செய்யவேண்டாமென்றுசொல்லியுங்கேளாமல்யுத்தஞ் செய்வதைப்பார்த்து தைவகதி பெரிதென்று துவாரகைக்குச் சென்றதுஞ் சொல்லுகின்றனர்,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளீர்விசித்திரவீரிய குலோற்பவனான பரீட்சித்து மகாராஜனே. இப்படிசகலரிஷிகணங்களுடன் பலராமர் சம்பாஷித்துக் கொண்டிருக்கையில் அந்தப்பல்வலனென்கிற அசுரனானவன் பெருங்காற்றுஉருவமாக ஒருமுகூர்த்தகாலம் மலமூத்திரங்களையும்மதுமாம்சங்களையும்அபரிமிதமாக அடித்துக்கொண்டுவந்துஅந்தமகரிஷி

களுடைய யாகசாலையை நிரப்பஅந்தத் துற்கந்தங்களை ச்சகிக்கமாட்டாமல்அங்குள்ளரிஷிகள் அப்புரம்போய் விட்டார்கள அப்போதந்தப்பல்வலன் ஒருசூலத்தைக் கையிலேந்திக்கொண்டு அஞ்சனமலைபோன்ற சரீரமு ம்,செகப்புக்கம்பளிபோன்றமீசையும் யுகாந்தகாலத்து இயமன்போலக் கோரரூபியா யெதிரில்நிற்கிற பல்வல னை ஸ்ரீபலராமர் பார்த்து அடா துராத்துமாவான பல்வ லா,நீயிப்படிக்குரிஷிகளுடைய வேள்விகளைக்கெடுத்து க்கொண்டிருக்கிறபடியால் உன்னை சிட்சிக்கிறேனென் றுகூறஅதுகேட்டு பல்வலன்கொடிய கோபங்கொண்டு சூலத்தாலொருகுத்து குத்தினன் அதைச்சமாளித்துக் கொண்டு தமது உலக்கையையுங்கலப்பையையும்நினை த்தார், அவ்விரண்டுஆயுதங்களும் அருகில்வந்துநிற்க அதுகளைக்கரத்தினிலேந்தி அந்த அசுரனுக்கெதிரில்வ ந்து அவன்கழுத்தினில்கலப்பையைமாட்டிஉலக்கையா ல்தலையின்மீதடிக்கஅவனதுபொறுக்கமாட்டாமல்அதி கபயங்கரமாகவீறிட்டுப்பிராணனை விட்டான் அதுகண் டுமகரிஷிகள்யாவரும் ஸ்ரீபலராமரை அநேகவிதமாய்த் துதித்துஒருகுடத்தினில்தீர்த்தத்தை அபிமந்திரித்துச் சகலபாபங்களுந்துலைய அவருக்குஅபிஷேகஞ்செய்து எப்பொழுதும் வாடாமலும்வாசனைபோகாமலுமிருக்கி ன்றதுளசிகளாலும்புஷ்பங்களாலுங்கட்டினவைஜயந்தி யென்கிறவனமாலையுந் தாமரைப்பூமாலையும் இரண்டுவ ஸ்திரங்களும் திவ்வியாபரணங்களும் மகரிஷிகளால் வெகுமதிகொடுக்கப்பட்ட அவர்களிடத்தில்சிலவுபெற் றுக்கொண்டு பிர்ம்மரிஷிகளுடன்பிரயாணப்பட்டுகௌ சிகியென்கிறநதிக்குவந்து அவ்விடத்தில் ஸ்நானஞ்செ ய்துசரயுநதியிலும்பிரயாகையிலும்ஸ்நானஞ்செய்து தேவரிஷிபிதுருதர்ப்பணங்களைச்செய்து பிரகலாதாசி ரமத்திற்குச்சென்று ஹரிக்ஷேத்திரத்தைச் சேவித்து கோமதிநதியிலும் கண்டகிநதியிலும்ஸ்நானஞ் செய்து சாளக்கிராம ரூபமாயிருக்கிற ஏரியையுஞ்சேவித்து ஆ ராதனஞ்செய்து கெயையில்கெயாவர்ஜனை செய்துவிட் டுமகேந்திரகிரியில் தவஞ்செய்கிறபரசுராமனைச்சேவி த்துசப்த கோதாவிரியிலும் பிராகியிலும் ஸ்நானஞ்செ ய்து, பம்பாநதியிலும் பீமநதியிலும் மூழ்கி சுப்பி ரமண்ணியனைக் கண்டுகொண்டு ஸ்ரீசைலமென்கிறப ர்வதத்திற் குவந்து அவ்விடத்தில்பிரத்தியட் சமாயிருக்கி றசிவனைத் தரிசித்துவேங்கட கிரியென்றுபெயருடைய முத்திக்ஷேத்திரமான திருமலைக்குவந்து அவ்விடத்திலு ள்ளதீர்த்தங்கள் யாவிலும்ஸ்நானஞ்செய்து அபரிமித மானதனங்களைவேதியர்கட்குத் தானஞ்செய்துஸ்ரீநிவா சனையும் சேவித்துகடிகாசலமென்கிறசோளசிங்கபுரத் திற்கெழுந்தருளிநரசிங்கமூர்த்தியைத்தரிசித்துகாஞ்சி க்ஷேத்திரத்திற்குவந்து திருவநந்தசரசில்ஸ்நானஞ்செ ய்துவரதராஜனைச் சேவித்துதிருவாராதனஞ் செய்து காவேரிதீர்த்தத்திற்குப்போய்காவேரியில்ஸ்நானஞ்செ ய்துஸ்ரீரங்கநகரத்திற்குச்சென்று ஸ்ரீரங்கநாதனைச்சே வித்து அவ்விடத்திலிருந்துவிருஷப்பர்வதமென்கிறஅழ கர்சந்நிதிக்குப்போய்நூபுரகங்கையில் ஸ்நானஞ்செய்து சுந்தரராஜனையுஞ் சேவித்துதென்மதுரைக்குப் போய் வைகைநதியில்ஸ்நானஞ்செய்து திருவணைக்குப்போய் சேதுவில்ஸ்நானஞ்செய்து அந்தணர்கட்கு கோதானஞ் செய்து கிருதமாலையென்கிறநதியிலும் தாம்பிரபரணி யென்கிற நதியிலும்ஸ்நானஞ்செய்துபொதியமாமலையி ல்அகஸ்தியரைக்கண்டு சேவித்து திருவநந்தசயநத்தி ற்குச்சென்றுஸ்ரீபத்மநாபனைச்சேவித்துமேற்குச்சமுத் திரத்தின்ஓரமானகேரளதேசம் திருகர்த்தேசத்தையுந் தாண்டி சிவசாநித்தியமாயிருக்கிறகோகரணக்ஷேத் திரத்திற்குச்சென்று அவ்விடத்திலிருக்கிற புண்ணியதீ ர்த்தங்களில் ஸ்நானஞ்செய்துதிருநாராயணபுரத்திற்கு ச்சென்று செல்வப்பிள்ளை இராயரையுஞ்சேவித்துதிரு ம்பவும்பிரபாசதீர்த்தத்திற்குவந்துஅவ்விடத்திலிருக்கின் றவேதியர்கள் யாவரையும் பணிந்து பாண்டவர்களும் கௌரவர்களும்யுத்தஞ்செய்துயாவரும் மாண்டபின்பு பீமசேனனும்துரியோதனனும் கதாயுத்தஞ் செய்வது கேட்டு குருட்சேத்திரத்திற்குவந்தார் அவரைக்கண்டு பாண்டவர்கள் அர்க்கியபாத்திய முதலியவற்றால் பூசித் து ஆசனத்திலெழுந்தருளச்செய்தபின் துரியோதனனை யும்பீமசேனனையும்பார்த்து இந்தகதாயுத்தசிக்ஷையி ருவருக்கும்சமமாயிருந்தாலும்பீமசேனன்பலத்தில்அ திகன்உபாயத்தில் துரியோதனன் அதிகனானதால்யுத்த ஞ்செய்வதிலிருவரும் சமானமாகவே யிருக்கும்ஜயாப ஜய மிருவருக்கும் சந்தேகமாயிருப்பதினாலே யுத்தத் தில்நின்றும் ஒழியுங்களென்று பலராமர்அருளிச்செய் ததற்கிசையாமல்யுத்தஞ்செய்தார்கள்,

அந்தயுத்தத்தில் பீமசேனன் துரியோதனனுடைய தொடைமுறியவடித்துப் பூமியில்தள்ளினதுபகைதீர அ வனது மவுலியின்மீதுஉதைத்துக் கொண்டிருந்தனன் அதுகண்டதருமனந்தன் கேளாய்பீமாதெரியாப் புத்தி யால்யோசிக்காமலிப்படிச்செய்துவிட்டாய்இனிமேல்எ ந்தக்காலத்திலும் இப்படிவேண்டாமென்று இரங்கி இருவிழிகளிலும் ஜலந்தாரைதாரையாய்ப் பெருகி யோடநின்றுவாடித்தளர்ந்ததையும் பார்த்து ஸ்ரீபலரா மர்மனம்பொறுமல்மதிதாளாமல் ஆறுதகோபமண்டிக் கொண்டு அடாகொடும்பாவியாகியபீமா இவ்வுலகில்க தைபோர் தெரிந்தவர்கள் பழித்து தூஷிக்கும் படிக்கு த்தருமந் தப்பிமுறை புறண்டு இடுப்பின் கீழாகி ய தொடையிலடித்தாயே ஒருவேளைகைதப்பி ப்பட்டு தோவென்றுஞ்சொல்லக்கூடவில்லையே இரண்டுபேர் கதாயுத்தஞ் செய்யுங்காலையில் அரையின்கீழடிக் கலா காதென்றும் சேர்ந்துநின்று விட்டாலப்போதுந் தொ

டலாகாதென்றும் நூல்பேசியிருக்கஅதை யுணர்ந்தவர்கள்மார்க்கம் தப்பிடத்தக்கூசுவார்கள் நீ அச்சங்கூச்சம்நாணமற்றுச்செய்தபோதேஎனக்குவந்த கோபத்தை அடக்கிப் பொறுமையாயிருந்தேன் இப்போதும் அந்தத் துரியோதனன் கீழேவிழுந் திருக்கிறகாலையில் அவனது கிரீடத்தின்மீதுநீஉதைக்கலாமோ இப்படியாகவித்தை உனக்கெவன்கற்றுக் கொடுத்தான் எவ்னபலத்தைக்கண்டு இப்படிக்குச்செய்தாய்இதோஅந்த துரியோதனனுக்குப் பதிலாய்நானே எதிர்த்துயுத்தஞ்செய்துஉன்னைக்கொல்லுகிறேன் அப்பால்துவாரகைக்குச்செல்லுகிறேனென்று கலப்பையைக்கையி லேந்திக்கொண்டுதிடுக்கென்றுவந்தார்

இந்தப்பிரமாதத்தைக்கமலநாபனுகியகண்ணன்கண்டெதிர்சென்று அண்ணன்முன்னின்று மண்ணின்மேல்வீழ்ந்துவணங்கி எழுந்துவெள்ளைவண்ணனுகியமூத்தோனைப்பார்த்து இவடத்தில்வீமனடித்தகதையால்வீழ்ந்துவிட்டதுரியோதனமகாராஜன்பாண்டவர்களுக்குச்செய்தபொல்லாங்குகளை இவ்வளவென்றெண்ணத்தொலையாது அக்கினியிற்பிறந்தபேதைமையாகிய துரோபதையை சபையேற்றிஅவளுடைய வஸ்திரத்தை யுரிந்துபங்கப்படுத்தி வைத்தான் அக்காலத்தில் உங்களைப்போலொத்தவர்கள்கண்ணுல்பார்த்திருப்பீர்களாகில் இப்போது வீமன்உதைத்தஉதையிலுங் கோடிபங்காகஉதைத்து அன்றைக்கேஉயிரைமாய்த்து விடுவீர்கள்அந்தக்காலத்தில் வேறுதிக்கில்லாமல்ஆதெய்வமேயென்றுஇரைந்தழுது அந்தஉத்தமியானவள் அங்கிருந்தஇராஜகூட்டங்களெல்லாரும் அறியும்படியாகபீமனுடையகதையால்உனதுதுடைமுறிந்துஇறக்கக்கடவா யென்று சபித்திருக்கின்ருள் அந்தப் பதிவிரதையினுடைய சாபச்சொல்லானது வீண்போகுமோ இதன்றிபூர்வத்தில்ஒருமுனிவர்இவன்துடைமுறிந்து இறக்கும்படிசபித்திருக்கிருர் இவனுக்கும்வினைப்பயன்படி அனுபவிக்கக்கூடியது ஆதலால்பீமசேனனை வெறுப்பதிற்காரியமில்லைமேலும் பாண்டவர்கள்இப்போதுசெய்தயுத்தத்தில்இந்தப்பாவியாகியதுரியோதனன் செய்தகொடுமைகளை ஆர்சொல்லத்தக்கவர்கள் அபிமன்னனை ஒண்டியாகவளைத்துக்கொண்டுகோடி வீராள்குவிந்துநின்று நல்லகைக்காரனுகிய கர்னன்- துரோணுச்சாரி இவர்களெல்லாரும் மறைந்துமாறுபாடாகப் பின்பக்கம்வந்து வில்லையும்தேரையுமழித்து ஆளைமுழுக்காட்டி உயிர்க்கவிழ்ந்து விழக்காட்டியது தர்மமோஇப்பொழுதும் இந்தத்துரியோதனன்விதிகழிந்துமாளாமல்பீமசேனன்தொடைமேல்அடித்ததிஞலேயோ செத்தான்வேருெருவிதத்திஞல்சாகமாட்டானோஆரெப்படிபோனுலும்நம்வழியைநாம்பார்ப்போமென்றுஉரைத்தவாசுதேவனுடைய வார்த்தையைகேட்டுகோபிப்பாற்பட்டகுளிர்ந்தலஜம்போல்கோபமாறிநெடியதேர்மேலேறியுத்தபூமியைவிட்டு தெய்வகதிபெரிதென்றுநினைத்து நைமிசாரண்ணியத்திற்குச்செல்ல அங்குள்ள ரிஷிகள் பலராமருக்குத்தகுந்தமரியாதையுடன்யாகஞ்செய்விக்க அதற்கவர்மெச்சிபிர்ம்மக்கியானத்தை அவர்களுக்குஉபதேசித்துஅவர்களுடன் அவபிருதஸ்நானஞ்செய்து சந்தோஷமனமுடையவராய் அவர்களிடத்தில் செலவுபெற்றுக்கொண்டுதுவாரகாபுரிக்குச்சென்றனர்.

---

## அ௰ - வது - அத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அந்தணர்குலத்துதித்த அழகியகுசேலனென்போன்
சுந்தரதுவாரகைக்குச்சுவாமியினிடத்திற்செல்ல
சிந்தையிலன்புகூர்ந்துசிறப்புடன்பூசைசெய்து
வந்தவறிளைப்புநீங்கும் வாறினைவழுத்துவோமே

ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குத் தோழனுனகுசேல னென்கிறமறையோன் ஐஸ்வரியத்தைவிரும்பி துவாரகைக்குச்சென்றதும் அவனைஸ்ரீபகவான் சாஸ்திரவிதியின்படிபூசித்து இளைப்பாறின பிறகுதாம்குருகுல வாசஞ்செய்தபோது செய்தகாரியங்களையும் ஆசாரியன்சிஷியனிருக்கவேண்டிய முறைமையைவெளி யிட்டதையுஞ்சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்,

கேளீர்உத்தரன் மருமகனுன பரிட்சித்துமகாராஜனே, திருமாலுக்குத்தோழனும்பிரம்மத்தைநன்ருய்அறிந்தவர்களிற் சிறந்தவராகியும் மகாவிரக்தராய்வஸ்துக்களி லாசையற்றவராகியும் வெகுசாந்தராகியும்தவத்திற் சிறந்தவராகியுமிருக்கின்றகுசேலரென்கிற பிராம்மணேத்தமர் ஒருத்தரையும் யாசிக்காமல்தன் கிடையாய்நேர்ந்த ஆகாரத்தினிடத்தில் வெகுஆசையுடையவராய்க்கொண்டு தருமத்தில் நின்றும்வழுவாதுகிரகஸ்தாசிரமத்திலிருந்தார் அவருடையமனைவிகற்புடையவர்கட்குள் சிறந்தவளாய்பர்த்தாவைப்போல் அன்னமில்லாமல்இளைத்து நரம்புக்கூண்டான சரீரத்தைவாய்ந்தவளாய் தட்டிஞலுதிரும்படியான கந்தலாடையை உடுத்திக்கொண்டு வெகுதரித்திரத்தைஅனுபவிக்கையிலும் கற்புவழுவாமல் கொழுநருடைய ஆக்கினையின்படி பணிவிடைசெய்வதில் வெகுவாஞ்சையுடைய வளாய்பாகஞ்செய்கிறஅன்னத்தைக்கணவனுக்கிட்டு அப்பாத்திரம் அலம்பினதீர்த்தத்தைத்தான் பொசித்து எப்போதும்உபவாசத்துடனிருக்கிறவளாதலால்ஒருநாள்மூர்ச்

சித்துவிழுந்தும்மெய்மறந்தும்முகம்வாடி கைதுவண்டு காலலைந்துயேனிகுலைந்துநினைவுதப்பி வெகுநேரமிருந்துதெளிந்தெழுந்திருந்தாளிந்தத்தரித்திரத்தையெந்தநாளைக்கு நாம்அனுபவிக்கலாம் என்னசெய்தால்தரித்திரம்நிவர்த்தியாகுமென்று யோசித்நாமிப் படிக்குப் புசிப்பில்லாமல் கஷ்டப்படுவதைமகானுபாவனாகியநம்மைஅடிமைகொண்டவருக்குத் தெரியப் படுத்தினால்எதாவதுகோபித்துக்கொள்ளுவரோ அல்லது விசுவாசமாய்க்கேழ்ப்பரோ அறிகிலேன் தெரியப்படுத்தாம லிருப்பது சரியல்லவென்று மனதைத்திடப்படுத்தி அணையினில்சொல்பஆடையும்அச்சமும் உடையவளாதலால்கணவன் முன்வராமல்சரீரத்தை மறைத்துவெளியினில் கொஞ்சம் முகந்தெரியும்படியாக மிகவும்பயபக்தியுடன்ஒருவார்த்தைசொல்லுகின்றாள்'

தேவரீருக்குத் தோழராகியும், ஸ்ரீயப்பதியாகியும், மகா பிரம்மண்ணியராகியும் மகாதாதாவாகியும், தயாளுவாகியும், உலகபூச்சியராகியும், மகானுபவனாகியு மிருக்கின்ற ஸ்ரீகண்ணபிரானை தேவரீரொருக்காலெழுந்தருளிச் சேவித்தால் சகலபுருஷார்த்தங்களும்பெறலாமென்று தோன்றுகின்றன அப்பால் தமக்கிஷ்டப்படி நடத்தலாமென்று வெகுவினயமாயும் நயமாயும்பயபக்தியுடன் மெதுவாய்உரைத்தமனைவியின் வசனங்களைக்கேழ்வியுற்று சந்துஷ்டமனதுடையவராய்இவள்சொன்னபடிசெய்தால் ஜகதீசுவரனான வசுதேவ னுடைய சேவைநமக்குக்கிடைக்கும் அதைக்காட்டிலும்நமக்கென்னபுருஷார்த்தம் வேண்டுமாதலால் துவாரகைக்குச் செல்லவேண்டுமென்று நிச்சயித்து அந்தக்கற்புடைய மங்கையரைப்பார்த்து வேந்தனிடத்திலும் சிசுவனிடத்திலுங் கடவுளிடத்திலும் வெறுங்கையோடு போகக்கூடாது அந்தஸ்ரீகிருஷ்ணன் அரசனாயுங் கடவுளாயுமிருப்பதால் வெறுங்கையோடு காணலாகாது அதற்குகிரகத்திலேதாவது இருக்கின்றனவா வென்றுகேழ்க்க இருக்கின்றது தருகிறேனென்றுசொல்லி அந்தக்ஷணத்தில் ரிஷிகளுடைய நான்கு ஆசிரமத்திற்கேகி நாலுபிடி அவல் வாங்கிக்கொண்டுவந்து அதனைக்கட்டிக்கொடுக்கவஸ்திரமில்லாமல் கிருகங்கடோறுந்திரிந்து அதற்கு ஆதாரமாய்வைக்க ஒருதுண்டு சம்பாதித்து அதினில் வைத்து அதன்மேல் அநேககந்தல்களைச்சுற்றி அதன் மேமல்மரையுரியைச் சுற்றித்தன்னுளனை அந்தணரிடத்திற்கொடுத்தனள், அதைப்பெற்றுக்கொண்டுதுவாரகைக்குப் பிரயாணமாய்ப் போகையில் மகாதரித்திரனாகியும் உபயோகமற்றவனாயு மிருக்கிற நமக்குஅந்தசர்வேசுவரனான ஸ்ரீகிருஷ்ணனுடைய சேவையெப்படி கிடைக்கப்போகுதென்று பலவாறாகச் சிந்தித்துக்கொண்டபடியே துவாரகாபுரத்தினிற் பிரவேசித்து வீதிகளுடைய அலங்காரத்தையும் அங்குள்ளமானிடர்மடந்தையர்களுடைய அழகையும், கடை வீதிகளுடையசிறப்பையும், கோட்டைகொத்தளங்களுடைய **பந்தோபஸ்**தையும், இதுமுதலிய செல்வச்செருக்கை கண்களிக்கப்பார்த்து ஆனந்தித்துக் கொண்டே மூன்றுகோபுர வாசற்களையுந் தாண்டிஸ்ரீகிருஷ்ணபகவா னுடையபதினாறாயிரத்து அறுநூற்றெட்டு மனைவியர்களின் கிருகங்களிற்சிறந்த ஒருகிரகத்தினுட்பிரவேசித்து அநேகமாயிரங் காவற்காரர்கள் காத்திருக்கையில் தடைபடாமல் நாலாங்கட்டினுட்பிரவேசித்துப் போகையில்தூரத்தில் ஸ்ரீருக்குமணீதேவியுடன் நவரத்தின மயமான சப்பிரகூடமஞ்சத்தின்மீது எழுந்தருளியிருக்கின்றஸ்ரீகிருஷ்ணபகவானிந்தக் குசேலனைக்கண்டு எழுந்திருந்துஅதிகவேகமாக ஓடிவந்துஅவரைக்கண்டாலிங்கனஞ்செய்து தமக்குத்தோழராய்ப் பிராம்மணசிரேஷ்டரா யிருக்கின்றஅந்தக்குசேலருடையசரீரசம்பந்தத்தினால்ஆனந்தபாஷ்பங்களை உதிர்த்துதேகம்புளகிக்க அவர்கையைப் பற்றிஅழைத்துக்கொண்டு தமதுமெத்தையின் மீதுஉட்காரவைத்து அர்க்கியபாத்தியமுதலியவஸ்துக்களைத் தாமேகொண்டுவந்து சாஸ்திரவிதிப்படிக்குப் பூசித்து பரிசுத்தமான தீர்த்தத்தைக்கொண்டு அவரது திருவடிகளைவிளக்கி அந்தத்தீர்த்தத்தைத்தமது சிரசில்தரித்துஉத்தமமான ஸ்ரீகந்தத்தாலுந்திவ்யபுஷ்பங்களாலும்அலங்கரித்துநான்குபக்கத்திலும் அக்ருதூபங்களைப் போட்டுசுகந்ததைலத்தினால் தீபங்களைவைத்து விடுதி புஷ்பங்களாலுந் துளசிகளாலும் வெகுவாக அர்ச்சித்து திவ்வியமான உண்டில்கள்புசிப்பித்து தாம்பூலங்களைக் கொடுத்து நல்வரத்தாய்வந்து சேர்ந்தீரே இதுவேபோதுமானதென்றுகூறி அந்தணர்களுடையமகிமைகளையும்சிநேகிதர்களிடத்தில் செலுத்தவேண்டிய அன்பையும்வெளிப்படுத்தவேண்டி அவருடன்சமமாகஉட்கார்ந்துஅவரதுதிருவடிகளைத் தமதுமடியினில் வைத்துக்கொண்டு வந்தஇளப்புத்தீரும்படியாகவருடினார், அந்தச்சமயத்தில் ஸ்ரீருக்குமணீதேவியானவள்கண்ணன் செய்தஉபசாரங்களுக்குத் தானும்உடந்தையாக வெகுவிநயத்துடன் சைத்தியோபசாரமாகத்திருவாலவட்டம்சேவித்துசாமரம் வீசுவதையும்அங்குள்ளமாதர்களகண்டு வியப்பையடைந்து இந்தத்திகம்பரனை வேதியனல்பூர்வஜன்மத்தி லென்னதவஞ்செய்யப்பட்டதோதெரியவில்லை தரித்திரசிரோமணியான இந்தமறையோன்யாவராலும் நிந்திக்கப்பட்டவனா யிருந்தும்சகலலோக பாலகனானமாதவனால் வசுதேவர்பூசிக்கப் படுவதுபோலவெகுஆதரவுடன்பூசிக்கப்படுகிறார் இதென்னமகிமையோ அறிகிலோமென்று ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

அப்போது ஸ்ரீ கண்ணபிரான் அம்மறை யோனை நோக்கி நீர் குருகுலவாசஞ்செய்து சகலவித்தையுங் கற்றுணர்ந்து குருதக்ஷிணை கொடுத்தபின் உமக்குச்சரியொத்த மனைவிவிவாகமாச்சுதா தேவரீருக்கு மண்ணுசை பொன்னுசை பொருளாசை அற்றவனென்றும் நானெப்படி ஒன்றிலும் சம்பந்தப்படாம லிருக்கிறேனே அப்படி யிருக்கத்தக்கவனென்று நான்அறிவேன்உலகில்முதல்குரு பிதாவென்றும் இரண்டாவது குருஉபநயனஞ் செய்வித்து பிர்ம்மோபதேசஞ் செய்கிறவனென்றும் மூன்ருவது குருபிர்ம்மக்கியானத்தை உபதேசிக்கிறவ னென்றும் சொல்லுவார்கள். அவர்களில்பிர்ம்மக்கியானத்தை உபதேசிக்கிற ஆசாரியனுகநானேயிருந்து வர்ணுசிரம ஆசாரந்தப்பாமல் நடத்துகிறசிஷியனுக்குகியானுபதேசஞ்செய்து மோக்ஷத்தை அடையும்படிச்செய்வேன் இந்தச்சம்சாரமாகிற சமுத்திரத்தைத் தாண்டுகைக்குத் தெப்பம்போல் ஆசாரியன்சுலபமாயிருக்க அதையறியாமல் அகண்ட சாம்பிராச்சியத்தையுந்துறந்து அநேககோடிவருஷம் வனத்தில்வெய்யில்கானல்- மழையில்லாமல் காற்றையுஞ்சலத்தையும் சருகுகளையும்ஆதார மாகக்கொண்டுவருத்தப்பட்டுங்கொஞ்சம்பிரமாதத்தினல் அநேகஜன்மங்கள்போகப்பிரதிஷ்டனுகி பூர்வஜன்மநினைப்புடன் யோகிகளுடையமார்க்கத்தைஅநுசரித்து அநேககாலவிளம்பனத்தினல் மோக்ஷத்தையடைவன் அப்படிப்பட்ட பிரயாசமானமார்க்கத்தில் பக்திசெலுத்துகிறவன் புத்திமானுகமாட்டான் ஒருஜன்மத்தில் தானேநல்ல ஆசாரியனைச்சரணமடைந்து அவருடையகிருபையினுல்சுல்பமாய்மோக்ஷமடைகிறவன்தான் கியானி, அப்படிக்கு உபதேசிக்கும்படியான குருகிடைக்காது, அப்படிக்குக் கிடைத்தலும்அவனிடத்தில் பக்திபிறவாது, பக்திபிறந்தாலும் அதற்குஅநேகவித விகாதம்வரும், அப்படிக்குவிக்கினமில்லாவிடினும் உபதேசம்பெறமனம்வராது, அப்படிக்குமனம்வந்தாலும் உபதேசிக்கிறேமென்கிறவர்களுங்கிடையாது, உபதேசிக்கிறேனென்று ஒருவன்ஏர்ப்பட்டால் அவனுக்கு யோக்கியதையிராது, இப்படிக்கு அநேகவிதமான விகாதம்வருமேயன்றி சுல்பமாய்க்கிடைக்காது கலியுகத்தில்அநேகர்கள் டம்பத்தையனுசரித்துதாங்கள்மோக்ஷங்கொடுப்பவர்களாகஎண்ணிஉதரபோஷணைக்காகத் தன்னிடத்தில் பக்தியில்லாதவனைவரவழைத்து அவனுக்குஉபதேசஞ்செய்வித்துஅதினுல்தானுங்கெட்டு அவனையுங்கெடுப்பான், அதில்சரியாயிருக்கிறவன்நீறுபூத்தநெருப்புப்போல் ஒருத்தனுக்குத்தன்யோக்கியதையைத்தெரியப்படுத்துவதில்பிரயோஜனமில்லையென்று தனதுசக்தியைவெளிப்படுத்தாமல் தீர்க்கடைக்கோலி லிருக்கிறஅக்கினியைக் கடைந்தாலன்றிவெளிப்படாததுபோல் தங்களுடன்சகவாசஞ் செய்தாலன்றி தங்களுடையயோக்கியதையைத் தெரியப்படுத்தார்கள் அப்படிப்பட்ட மோக்ஷாதிகாரிகளாகிய ஞானவான்களிடத்தில் ஒருவருடமாகிலும் ஆறுமாதமாகிலும்பணிவிடைசெய்து மெய்ப்பித்துஉபதேசம் பெற்ருல் மோக்ஷம்வருவதற் கென்னசந்தேகம், குருவிருக்கவேண்டியகிரமம் எப்பொழுதும் ஆசாரமுடையவனுயும்ஸ்ரீமந்நாராயணனை பரதேவதையென்றுநிச்சயகியானமுடையவனுயும்பாபமற்றவனுயும்சகலவேதங்களையும்வேதாந்தத்தினுடைய தத்துவத்தையும்நன்ருக அறிந்தவனுயும், பிரமக்கியானியாயும்,சாந்தனுயும் சகலகுணமுடையவனுயும் சத்தியவாதியாயும் வர்ணத்தினுடையவும்ஆசிரமத்தினுடையவும் ஆசாரத்தைவழுவாதவனுகவும்,யோக்கியமான ஜீவனமுடையவனுகியும் டம்பமற்றவனுயும், இந்திரியநிக்கிரகஞ் செய்தவனுயும்,வேதாந்தகாலக்ஷேபத்துடன் கூடினவனுயும்சகல ஜீவராசிகளிடத்திலும்அன்புள்ளவனுகியும், சத்துருமித்திரர்களிடத்தில் சமபுத்தியுடையவனுயும்,பாபஞ்செய்பவரிடத்திலன்புகூர்ந்து பிராயச்சித்த முதலியவைகளைச் செய்வித்துச்சன்மார்க்கத்தில் கொண்டுவரத்தக்கவனுயும்,சகலசாஸ்திரங்களையு மறிந்தவனுயும், வணக்கமுள்ளவனுயும்,படாடோபமாய் வெளிப்படுத்திரியாதவனுயும், ஆசாரியனிருக்கவேண்டும்.

சிஷியக்கிரமம் நல்லபுத்தியுடன்குருவுக்குப் பணிவிடைசெய்கிறவனுயும், நல்லசீவனத்துடன்கூடினவனுயும், பிரமக்கியானத்தை அறியவேண்டுமென்கிற ஆவல்கொண்டவனுயும், அகங்காரமற்றவனுயும் கர்வமில்லாதவனுயும்,எப்போதுகுருவினுடைய அருள்பெறவேமென்று எதிர்பார்க்கிறவனுயும், இந்திரியநிக்கிரகமுள்ளவனுயும், பொருளாசையற்றவனுயும்சொரசொரப்பானவனுயும், வணக்கமுள்ளவனுயும்சிஷியனிருக்கவேண்டும்குருசிஷியர்களிப்படிக்கில்லாமல்ஆயிரம்வருஷம்வருத்தப்பட்டாலும் ஒன்றும்பலிக்கமாட்டாது அப்படிப்பட்டகுரு நானேயன்றிவேறில்லை எனக்குஆரிடத்தில் கிருபைஉண்டாகிறதோ அப்போதுகியானிகளான பெரியோர்களிடத்துலாவேசித்து அவனுக்கு கியானோபதேசஞ்செய்து மோட்சத்தைக்கொடுப்பேன் உலகத்தில்பிராணிகள் பக்திசிரத்தையுடன் அன்புகூர்ந்து என்னை ஆராதிப்பதுபோலக் குருவினிடத்திலும் மானிடனென்றெண்ணுமல் ஆராதித்தார்களேயானல் சாசுவதமானபரமபதத்தைஅடைவார்கள் அப்படிச்செய்யாமல் கேவலம்மானிடனென்றெண்ணினுல் அநேககற்பகாலம்நரகத்தில் விழுந்திருப்பன்எனக்கு குருவினிடத்தில் அன்புகூர்ந்துபணிவிடை செய்பவனிடத்தி லுண்டாயிருக்கிறஅன்புஆயிரம்வேள்விசெய்தவனிடத்திலும் பஞ்சாக்கினிமத்தியில்தவஞ்செய்தவனிடத்திலுமிருக்

கமாட்டாது அப்படிப்பட்ட ஈசுவர சுருபியானகுருசிசு
ருஷைபகவத்கிருபையால் உமக்குநிறைவேறின தல்ல
வாஈாமத்தக்குருவினிடத்தில் வாசஞ் செய்கிறபோதுஒ
ருநாள்நம்மை குருபத்தினியானவள் எரிகரும்புகொண்
டுவரச்சொன்னதற்குக் காட்டிற்குப்போய் விறகுவெட்
டிசூரியாஸ்தமன மாகிறசமயத்தில் ஆளுக்கொருசுமை
யெடுத்துக்கொண்டுபுறப்படுகையில் பிரளயகாலசமுத்
திரம்போ லிருளுடன் மழையுங்காற்றும் இடியும்மின்
னலு முண்டாய்நடுக்கமெடுத்துதிக்கு விதிக்குகள்தெரி
யாமல்ஒருவர்கையை ஒருவர்பற்றிக்கொண்டு இராத்தி
ரிமுப்பதுநாழிகையும் மழையில்நனைந்து அலைந்திருப்
பதைமறுநாள்காலையில்நமதுகுருசேஷ்வியுற்றுநம்மை
த்தேடிக்கொண்டு காட்டிற்குவந்துவருத்தப் படுகிறநம்
மைப்பார்த்துவியப்படைந்து பாலாளானநீங்களென்னி
மித்தமாக இஷ்டமானபிராமணனைக்கூட வெண்ணிப்
பாராமல்இப்படியும்பணிவிடையேபெரிதாகவெண்ணி
ச்செய்பவருமுண்டோஉங்களிடத்திலெனக்கு மகத்தா
ன சந்தோஷமாயிற்றுஉங்களுக்குச் சகலவேதங்களும்
சாஸ்திரங்களும் உபநிஷத்துக்களுடன் தெரிந்துஇக
லோகத்திலும் பரலோகத்திலும் சகலபயன்களையும்சு
ல்பமாக அடையக்கடவீர்களென்று அனுக்கிரகித்தா
ரேஅதுகளையும் நமதுதோழன்மார்களையும் அந்தக்கு
ருவினிடத்தில் கற்றுணர்ந்த கல்விகளையும்மறவாமல்நி
னைத்துக்கொண்டிருக்கிறீருவென்று வினவுகிறஸ்ரீகண்
ணபிரானைப்பார்த்துஸ்ரீ தாமாவென்று பெயருடையகு
சேலன்ஒருவார்த்தை விக்கியாபனஞ் செய்கின்றான்சத்
தியசங்கல்பனாய் ஜகத்குருவாயிருக்கிற தேவரீருடை
யகிருபை அடியேனுக்கு பால்லியத்தில்தானே வாய்த்
தபடியால் அப்பொழுதேசகலஅக்கியான டூம்பாபமும்
தொலைந்துப்போய் பரிசுத்தனாய் இகத்திலும்பரத்திலும்
அடையவேண்டிய புருஷார்த்தங்களைசுல்பமாக அடை
ந்தேன் ஆனால்தேவசொரூபியான கருடபகவானேதே
வரீருக்கு வாகனமாயிருக்க நானுமவேதசாஸ்திரங்களை
க்கற்றுணர்வதற்குக் குருகுலவாசஞ் செய்தேனென்ப
துமாத்திரம் உலகவிடம்பனமா யிருக்குதேயன்றிவேற
ல்லவென்று ஒருவர்க்கொருவர் பால்லியத்திற்செய்தகி
ருத்தியங்களை நினைத்துக்கொண்டு சம்பாஷித்தார்கள்.

---

அக - வது, அத்தியாயம்.

---

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அந்தமாகியகுசேல வந்தணர்கொண்டுவந்த. சுந்தர
வவலைசுவாமி பிடிங்கியேவாயிற்போட, விந்தையாமாட

கூடமேன்மையா மைஸ்வர்யத்தை, தந்துபோவென்ற
னுப்பத் தான்சென்றததனைச்சொல்வாம்

ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமக்குச்சகாவான குசேலர்
கொண்டுவந்த அவலைக்கொடுக்கவெழ்க்கப்பட்டிருக்கை
யில் தாமாய்வாங்கிஒருபிடிபட்சித்து இரண்டாவதுபிடி
பட்சிக்கப்போனதை ஸ்ரீருக்குமணிதேவி தகைந்ததும்
அந்தஒருபிடி அவல்பட்சித்ததற்கு இந்திரன் முதலிய
தேவர்களுக்குந் துல்லபமானஐசுவரியத்தைக் கொடுத்
துஅதைச்சொல்பமென் றெண்ணிகுசேலருடன் சொ
ல்லாமல் அனுப்பினதும். அப்பால்குசேலர் தமதாசிர
மத்திற்குவந்துஆச்சரியத்தைஅடைந்த விருத்தாந்தங்
களைச்சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளீர் உத்தராநந்தனான பரிட்சித்து மகாராஜனே
சர்வபூதாந்தர்யாமியான சுவாமியானவர் அந்தக்குசேல
ர்கொண்டுவந்த அவலைதமக்குக்கொடுக்கவெழ்க்கப்பட்
டிருப்பதையும் ஐசுவரியநிமித்தமாய் தம்மை ஒருக்கா
லும்பூசிக்காம லிருப்பதையும் ஐசுவரியத்தை விரும்பி
மனைவி அனுப்பியதைக் கொஞ்சமேனுஞ் சிந்தையில்
வையா மலிருப்பதையுந் தெரிந்துகொண்டு இவருக்கு
இந்திரன் முதலியதேவர்க்களும் அரிதானசம்பத்தை
க்கொடுக்கவேண்டுமென்று நிச்சயித்து அந்தக்குசேல
னைநோக்கிப் புன்னகையுடனொரு வார்த்தை அருளிச்
செய்கிறார் தேவரீர்வெகுநாள் பொறுத்து இவடற்கெழு
ந்தருளினபடியால் அடியேனுக்கேதாவது பலகா
ரங்கொண்டு வந்திருக்கவேண்டுமே என்னகொண்டுவ
ந்தீர் விசேஷமாய்க்கொண்டுவராததினால் என்னமாகக்
கொடுக்கிறதென்று சங்கோசிக்கிறாப்போ லிருக்கின்ற
து எனக்குவஸ்துவிசேஷமென்றும் அல்பமென்றும்
பேதமில்லை அவர்களுடைய கருத்தின் மீதிலெனக்குதி
ருஷ்டியேயன்றி பதார்த்தினிடத்தில் திருஷ்டியில்லை
அன்புடன் ஒருதுளசிதளமாகிலும் ஒருபுஷ்பமாகிலு
ம்ஒருகனியாகிலும் பரிசுத்தமாகியதீர்த்தமாகிலும்கொ
டுப்பதை விருப்பமாயங்கீகரிப்பேனே யன்றி அன்பில்
லாமல் அமுதத்தைக்கொடுத்தாலும்அங்கீகரிக்கமாட்
டேனென்றுவெகு விதமாகச்சொல்லியுங் கொடுக்கவெ
ழ்க்கப்பட்டு தலையைக்குனிந் திருப்பதைச் சுவாமிபார்
த்துஅவர்கையிலிருந்த அவல் முடிச்சைதாம்தானே இ
தென்னமுடிச்சென்று பலவந்தமாகவாங்கித் தமதுமடி
யில்வைத்துக்கொண்டு அதைஅவிழ்த்துப்பார்த்துஓய்
சகாவே,எனக்குமிகவும் இஷ்டமான இந்தஅவலைக்கொ
ண்டுவந்தும்எனக்குக்கொடாமலிருந்தீரல்லோ இந்தஆ
ச்சரியத்தைஎன்னசொல்லப் போகிறேன்வெகுயோக்கி
யமான இந்தஅவல்எனதுகுக்ஷியிற்போனால்அநேககோ
டிப்பிராணிகளைத்திருப்திசெய்விக்குமென்று சொல்லி

ஒருபிடி அவலை எடுத்து பக்ஷித்து இரண்டாவதுபிடி எடுக்கிறபோது ஸ்ரீ கிருக்குமணி தேவியானவள் ஒருபிடி அவலுக்கே இகத்திலும் பரத்திலு முண்டான சகலசம்பத்துக்களுமிவருக்குச் சுவாதீனமாகப் போயிற்று இந்த இரண்டாவதுபிடி அவலுக்கு நாமல்லோவசியமாகவேண்டுமென்கிற கருத்துட் கொண்டவளாய்ப் சிக்கவேண்டாமென்று தடுத்ததைச் சுவாமியும் நிவர்த்தித்து அந்தக்குசேலருக்குக் கொடுத்த சம்பத்து அவர்கொடுத்த ஒருபிடி அவலுக்கிணையாகா தென்று தமக்குள்ளே திருப்தி யில்லாமையா லதை அவருடன் சொல்லாமல் ஒருநாள் வைத்திருந்து மறுநாள்காலையில் வெகுதூரங் கொண்டுவந்து வழியனுப்பி சேவித்துப்போட்டு துவாரகைக்குச் சென்றனர்,

அப்பாலந்தக்குசேலரும்சுவாமியினு லனுப்பிவிக்கப்பட்டவராய் மார்க்கத்தில்வரும்போது அந்தப்பிரம்மண்ணியதேவனுன கண்ணபிரானுடைய கிருபையும் அவருடைய அன்பும் அவர் பலராமனை வெகு உபசாரத்துடன் பூஜிப்பதுபோல தம்மைப் பூஜித்ததையும் நினைத்துப்பிரமன் முதலிய சகலதேவர்களாலும் அறியவொண்ணுத திருவடிக்கமலத்தையுடைய பெரியபிராட்டியாரானவர் சர்வகாலமும் வாசஞ்செய்கிறதிருமார்பில் தரித்திரர்களின் முதல்வனுன யெனதுமார்பும்சேர்த்து ஆலிங்கனஞ் செய்யும்படி பாக்கியம்பெற்றேனே இதைவிட புருஷார்த்தம்வேறுண்டோ அதன்றிவாக்குக்கும் மனதிற்குஞ் சொல்லவொண்ணு மகிமையை யுடைய நவரத்தின மிழைத்த சப்பிரகூட மஞ்சத்தினில் சூரியகாந்தியின் ஒளியினைவாய்ந்ததிண்டுதலையணைகள் போட்டிருக்கிற மெத்தையின்மீது மானிடரில்கிருஷ்ணனுனவென்னை உட்காரவைத்து அநேகபரிசாரகர்கள் புடை சூழ்ந்திருக்க அவர்தாமே எனது காலைவருடிசந்தன புஷ்ப தூபதீபங்களினு லுபசரித்துப் பூசித்ததுமன்றிசகலபாபமுந் தரித்திரமும் விலகிப்போகும்படியான பார்வையுடைய ஸ்ரீருக்குமணி தேவியாலும் அநேகவிதமாக உபசரிக்கப் பட்டோமே இவ்வள வெல்லாஞ் செய்த சுவாமி யானவர் நமக்கேன் தனத்தைக் கொடுக்கவில்லையென்றுல் தனத்தைக்கொடுத்தால் நல்ல போஜனங்களைச்செய்து அதினுல் சரீரம்மதத்து கர்ம்மமேவிட்டு மூத்திரத்திற்கும் நாற்றத்திற்குமிருப்பிடமாயும் வாயினுல் சொல்வதற்கும் ஒவ்வாத அசுத்தமானயோனியை பரமசுக மென்றுநினைத்து மாதர்களை வெகுவாகச் சம்பாதிக்க விருப்பமுண்டாகி தூண்டிமுள்ளிலிருக்கிற மாம்சத்தைக் கிரகிக்கவந்து மரணமடைகிறமீன்போல் மாயையில்சிக்கி கெட்டுப்போகப்போகிறேனென்று திருவுள்ளத்திற்றுேன்றி கொடாம லிருந்தாரேயன்றிலோபத்தனத்தினுலல்ல ஜனகசக்கரவர்த்திமுதலியவர்கள யோகிகளைப்போல சம்சாரத்திலேயேசம்சாரசம்பந்த மற்றவர்களாய்லாபநஷ்டத்தில் சமபுத்தியுடையவர்களாய் ஞானியா யிருந்தபடியால் அவர்களுக்கு ஐஸ்வரியத்தைக்கொடுத்தால்கெட்டுப்போக மாட்டார்களென்று திரண்டஐஸ்வரியத்தைக் கிருபைசெய்தருளினுர் நம்மைப்போலொத்த நீகிருஷ்ணனுக்குச் சம்பத்திருந்தால் அந்தக் கருணைக்கடலான சுவாமியை நினைக்கும்படியிராது அதினுல் கெட்டுப்போகப்போகிறேனென்று கிருபைகூர்ந்து தனத்தைக்கொடாமலனுப்பினுரென்று சந்தோஷமாகத்தமது ஆசிரமத்திற்குவந்தார், அப்போதந்த ஆசிரமம் சந்திரசூரியாக்கினிகளுடையஒளியினைவாய்ந்த ஆயிரம்ஸ்தூபிகளையும் குபேரனுடைய சைத்திர ரதமென்கிற நந்தவனம்போன்ற நான்குபக்கலும் அலங்காரமாயிருக்கிறவனத்தில் மயில்கள் குயில்கள் முதலிய பட்சிகள் மனதை அரிக்கும்படிகூவ அல்லி ஆம்பல்கருநெய்தல் தாமரைமுதலியதுகளோடும் அன்னப்பறவைகளோடும் பூரணமாய் நிறைந்து வைடூரியம்போல் தெளிந்திருக்கிற அநேக தடாகங்களுடனும் சகலாபரணபூஷிதர்களாய் அப்சரமாதர்களை நிகர்த்த ஊழியப்பெண்களால் வியாபிக்கப்பட்டும் மிகவுந் தேஜோமயமாயிருக்கிற தமதாசிரமத்தைப்பார்த்து இது இன்னதென்று அறியமாட்டாமல் பிரமித்து கொஞ்ச நிதானத்தின்பேரில் தமதாசிரமமென்றறிந்துகொண்டு மெல்லென அருகில்வருகிறவரை ஊழியப்பெண்கள் பார்த்து வேகமாகவோடிகுசேலருடையவரவை அவரதுமனைவியோடுரைக்க அதுகேட்டு அம்மகாபதிவிரதை நமதுமணவாளன் இதுவரையில் வெளியினில் போகாதிருந்தமையால் வெருகஷ்டத்தை யனுபவித்தோம் இப்போதொருதரம் அந்தமகானுபாவன் வெளிப்பட்ட படியால் அகண்ட சாம்பிராச்சியத்தை யடைந்தோம் அப்படிப் பட்ட மகிமையை யுடையவர் த்தாவருகிறுரென்றுவெகுசந்தோஷமாய் சகலலக்ஷணத்துடன் விளங்குகிற ஸ்ரீமகாலட்சுமியைப்போலஅர்க்கியபார்த்திபத்திற்குரியசாமக்கிரிகைகளை எடுத்துக்கொண்டு அநேகதோழிப்பெண்கள் புடைசூழ ஸ்ரீருக்குமணி தேவியாலும் ஸ்ரீபகவானுலும் உபசாரமாய்அலங் கரிக்கப்பட்ட திருமேனியையுடையவராய் சாக்ஷாத்தேவதையைப் போலசிறப்பாய் விளங்குகிறதனது கணவனைக் கண்டு கண்ணை மூடிக்கொண்டு சாஷ்டாங்கமாகச்சேவித்து அர்க்கிய பாத்தியமுதலியவற்றுற் பூசித்தௌதிரில் நிற்பவளைத் தமது மனைவிதானென்று நிதானித்து அவளுடன் இந்திரனுடைய கிரகம்போலிருக்கிற தமதுகிரகத்தினுள் பிரவேசித்து சொர்னத்தினுல் சுவர் வைத்துபவழத்தாற் கால்கள்நாட்டி அனேகவிசித்திரமா யிருக்கிற மெத்தைமேடை மாடமாளிகைகள் அணி அணியா யிருப்பதையும் நவரத்தின மிழை

த்த மஞ்சத்தின்மீதில் திவ்ய பீதாம்பரத்திற் கொப்பாகிய மெத்தை திண்டு தலையணைகளும் போட்டு பவழக்கால்நாட்டி முத்துச்சரங்களை ஜாலராகத் தொங்கவிட்டு தந்தத்தில்நவரத்தினமிழைத்த அனேக ஆதனங்களும் சொர்ணக் காம்புடைய அனேக குடைகளுஞ் சாமரங்களும் படிகமயமாயிருக்கிற சுவர்களில்அநேக இரத்தின தீபங்களை வைத்துவிளங்குகிற தமது கிரகத்தைப் பார்த்து தாம் முன்னிருந்த இருபவையும் நினைத்து இப்படிசம்பத்து உண்டாகிறதற்கு நாமொன்றும் பிரயத்தனிக்கவில்லையே விவசாயஞ் செய்கிற ஜனங்கள் கருத்தைச் சொல்லாமலிருக்கையிற்றானே மேகமானதெப்படிஒரு வருஷத்திற்குவேண்டிய ஜலத்தை இராக்காலத்தில் வருஷித்துச் சொல்லாமலிருக்கின்றதோ அப்படியிந்த ஸ்ரீகிருஷ்ணனும் என்து கருத்திற் கிசைந்தபடி நடத்திநாம சொல்பயமாய் ஒருபிடி அவல்கொண்டுபோனதைமேருவாகஎண்ணி நமக்கிவ்வளவுசம்பத்துக்கொடுத்தும் அதற்கிணையாகாதென்றுநம்முடன்சொல்லாமலிருந்துவிட்டார் கருணைக்கடலான அந்தசுவாமியையொருதரம் சேவித்தாலும் ஒருதரம் அவர்நாமத்தைக்கீர்த்தனஞ்செய்தாலும் அதைவெகுவாகஎண்ணிக்கடைத்தேற்றத்தக்க வரேயன்றி வேறல்லவென்று தமக்குள்ளே நிச்சயித்து அந்தப்பகவானுக்கு அடியார்களாயிருக்கின்றஸ்ரீபாகவதர்களிடத்தி லிடைவிடாமல நிரந்தரப்பக்தியிருக்க வேண்டுமென்று அந்தப் பகவானிடத்தில்தானே பக்திசெலுத்தி முடிவில் தமதுமனைவியுடன் ஸ்ரீகிருஷ்ணனுடைய பதவியையடைந்தார்.

---

அஉ - வது, அத்தியாயம்.

---

அறுசீரடியாசிரியவிருத்தம்.

சகலபந்துக்களோடுஞ் சாந்திடுஞ்சியமந்தத்தில், பகலவன்கிரணத்திற்குப்பரிந்துஸ்நானத்திற்குப்போய்,தகதகென்றொளிரும்பஞ்சபாண்டவர்தங்களோடும், பகவன்கோபியர்களுக்கும்பரிந்துகியானோபஞ்செய்தார்

ஸ்ரீகிருஷ்ணபகவான் சகலபந்துக்களுடன்சூரியகிரணத்திற்கு சியமந்த பஞ்சகமென்கிற புண்ணியதீர்த்தத்திற்கு ஸ்நானஞ் செயயப்போனதும் அவ்விடத்தில்பாண்டவர்கள் கவுரவர்கள் இன்னம்சகலதேசத்தரசர்களும்,நந்தகோபர்முதலிய கோபாலர்களும் யசோதைமுதலிய கோபிகைகளும் சுவாமியைக்கண்டதும்- அந்தக் கோபிகைகளுக்கு சுவாமி கியானோப தேசஞ்செய்தது அதினாலவர்கள் மோக்ஷத்தையடைந்ததுஞ் சொல்லுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளீர் பல்குன பௌத்திரனான பரிட்சித்து மகாராஜனே ஸ்ரீகிருஷ்ணபகவான் துவாரகாபுரத்தில் சுகமாகவசிக்கிறபோது ஜோதிடரிற்சிறந்த கற்காசாரியரானவர் சூரியகிரகணம் பூரணபிரகாசமாய் வருகுமென்று தெரியப்படுத்த அதுகேட்டு ஸ்ரீபலராம கிருஷ்ணர்கள் தம்பதிசமேதர்களாய் சகலயாதவர்களையும் புஷ்பகவிமானம போன்ற இரதத்தின்மீதேற்றிக்கொண்டு சியமந்த பஞ்சகமென்கிற புண்ணியதீர்த்தத்திற்குச்சென்று இரதம்விட்டிறங்கி வேதியர்கள் மூலமாய்ச் சங்கற்பித்துக்கொண்டு அந்தப்புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து உபவாசத்துடன் அந்தணர்களுக்குஅநேகவிதமான தானங்களைக்கொடுத்து திருப்திசெய்து சுத்தமண்டல ஸ்நான மானபின்பு சகலரும்போஜனஞ்செய்து ஒருமரத்தினிழலில் வீற்றிருந்தார்கள் அத்தருணத்தில்சகலதேசத்தரசர்களும்வந்து சுவாமியைக்கண்டுகொண்டார்கள்.

அப்போது குந்திதேவியானவள் தனதுசகோதரனான வசுதேவர் தேவகிமுதலிய சகலயாதவர்களையுங்கண்டு களித்து வசுதேவரைப் பார்த்து நாங்கள் மகத்தான ஆபத்தை அடைந்திருக்குங் காலையில் நீங்களென்னை விசாரிக்காமலிருந்தமையால் தெய்வபலமிருக்குங்காலையில்யாரும் சகாயப்படுவார்கள்தெய்வபலம் விலகினால் யாவரும் விலகிப்போவார்கள் நீங்களும் அந்ததெய்வபலத்தை அனுசரித்து சகாயப்படுகிறவர்களேயன்றினன துசுகதுக்கத்திற்குரியவரல்லவென்று சொல்லுகிற குந்திதேவியைப்பார்த்து வசுதேவர் எனதுசகோதரர்களுக்குள் உன்னிடத்திலவிசேஷஅன்புடையவனாயிருந்தும் கம்சனால் நேர்ந்திருந்ததுன்பத்தினாலஉன்னைவிசாரிக்கக் கூடாமையாயிருந்தேன் அதைமன்னிக்க வேண்டியதென்று சமாதானஞ் சொல்லிக்கொண்டிருக்கையில் பீஷமர்-துரோணர் -கிருபர் - திருதராஷ்டிரன்-துரியோதனன்-முதலியவர்கள்-பாண்டவர்கள்- கேகயர்கள் விராடன்-துருபதன் - விதுரன்பீஷமகன்-நக்னசித்தன் முதலிய சகலஅரசர்களுமவந்து ஸ்ரீகிருஷ்ணனுடைய சகலலட்சுமி விலாச ஸ்தானமாகிய திருமேனியைக்கண்டு தங்கள் மனைவியர்களுடன் சேவித்து அந்தககண்ணபிரானால் பூசிக்கப்பட்டு அந்த ஸ்வாமிக்கு எப்பொழுதும் ஊழியஞ்செய்து கொண்டிருக்கிற இந்தயாதவர்களுடையபாக்கியத்தைஎன்சொல்லப்போகிறோமென்று உக்கிரசேனனைநோக்கிபிரமன்முதலியதேவர்கள்இந்திரியங்களோகத்துடனநேககாலந்துதிசெய்தால் ஒருக்ஷணமாவது காட்சிகொடாமல் ஆகாசவாணியைப்போலுத்தரஞ்சொல்லிமறைந்துபோகிறசுவாமியாரும்சக உலக

த்தையும்பரிசுத்தஞ்செய்யத்தக்கினசங்கையைத்திருவடியிற்படைத்தவராயும் தமதுவசனங்களே வேதமாகவுடையவராயுமிருக்கிற அந்தக்கேசவனன ஸ்ரீகிருஷ்ணன்கீர் நரகத்திற்குரிய சம்சாரத்திலிருந்தும் அவர்சுல்பராய் உமக்குசார்வகாலமும் ஏவற்பணிசெய்யுமபடி பூர்வத்திலென்னபாக்கியஞ்செய்தீரோவென்று உக்கிரசேனமகாராஜாவையும் யாதவர்களேயும் பலவாருகத் துதித்துக்கொண்டிருக்கையில் நந்தகோபர் முதல்யகோபாலர்களும் யசோதைமுதலிய கோபஸ்திரிகளும் ஸ்ரீகிருஷ்ணனண்டையில் வந்தார்கள் அவர்களேக் கண்டுவெகு சீக்கிரமாக ஸ்ரீராமகிருஷ்ணர்கள் சகலயாதவர்களுடன் எழுந்திருந்துஎதிரில்வந்து சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து அவர்களுடையக்ஷேமங்களே விசாரித்தார்கள் அத்தருணத்தில் நந்தகோபரும் வசுதேவரைக்கண்டு ஒருவருக்கொருவர் ஆலிங்கனஞ்செய்து ஆனந்த பரவசர்களா யிருக்கையில் யசோதையானவள் ஸ்ரீகிஷ்ணராமர்களேக்கண்டு வெகுஆவலுடன் அழைத்துமடியில்வைத்துக்கொண்டு அவர்களேவெகு நாளாய்க்காணுதிருந்தகிலேசத்தைவிட்டு வெகுசந்தோஷமாய்உச்சிமுகந்துமுத்தாடி ஆனந்தித்துக்கொண்டிருக்கிற சமையத்தில் தேவகிரோகிணிதேவிகள் இரண்டுபேரும் யசோதை அண்டையில்வந்து அவளேநோக்கி நீ இந்தப்பிள்ளேகளிரண்டையும் உன்பிள்ளேகளாகப் பாவித்துக்காப்பாற்றினதற்கிணையாகநாங்களென்னசெய்யப்போகிறேம்இவர்களுங்களேமாதாவாயும் பிதாவாயும்நினேக்கும்படி இமைகள்கண்களே இரட்சிப்பதுபோலப் பேதமில்லாமல்எப்படிஇரட்சித்தையோ அறிகிலோமென்றுசொல்லிக்கொண்டிருக்கையில் கோபிகைகள்யாவரும்ஸ்ரீகிருஷ்ணனண்டையில்வந்துதாங்களவரைவெகுநாளாய்க்காணுமலிருந்த விசனத்தை நிவர்த்தித்து அவரைச்சாஷ்டாங்கமாகச்சேவித்து திருப்த்திபிறவாமல் கண்கொட்டாமல் பார்த்திருக்கையில் நடுவில்இமை கொட்டவேண்டி அந்தப்பிர்ம்மதேவன் சிருஷ்டிசெய்தானேயென்றுஅவனேநிந்தித்துநேத்திராந்திரத்தினுல் தங்கள்இருதயத்திலிருக்கின்ற கமலத்திலெழுந்தருளியிருக்கிறதாகப்பாவனேசெய்து தியானஞ்செய்தார்கள். அவர்களுடைய கருத்தைக்கண்டு ஸ்ரீகிருஷ்ணபகவான் அவர்களேயேகாந்தத்தில் அழைத்துக் கொண்டுபோய் அவர்களுக்குச்சந்தோஷம்வருபடியாய்ப்புன்னகையுடன் ஒரு வார்த்தை அருளிச்செய்கிருர்.

கேளீர் எனதன்புள்ளதோழிமார்களே வசுதேவர்தேவகி முதலியவர்களுடையதுன்பத்தை நிவர்த்திக்கமதுரைக்குப்போய் வரக்கூடாமல் தடைப்பட்டிருந்த என்னேத் தூஷிக்காமல் நினேக்கிறீர்களாநாம் யாவருந்தெய்வத்திற்குச்சுவாதீனப்பட்டவர்களேயன்றி சுதந்திரர்களல்லாம்மைக்கூட்டிவைத்தும் இப்போதுபிரித்துவிட்டதும் தெய்வச்செயலேயன்றி நம்மால்வருகிறதல்லஆகாயத்தில்மேகமில்லாம லிருக்கையில்வாயுவானவன் ஒரு க்ஷணத்திலேசேர்த்துக்கலேப்பதுபோலும்ஆரத்தினில் பலவாருகவரப்பட்டதிருணங்கள் சுழியிலொன்றுசேர்ந்து பிரிவதுபோலும் மானிடசஞ்சார மில்லாதகாட்டினில் மானிடர்களேச்சேர்க்கவேணுமென்று ஈஸ்வரனுக்கிச்சையுண்டாகினல் தக்ஷணம்ஒரு பிரபுவினிடத்திலாவேசித்து ஒருநகரமாய் சிருஷ்டிப்பித்து தங்கிடையாய் ஜனங்கள்வந்து சேரும்படிச்செய்வன் அந்தஜனங்களேப்பிரிக்கஇச்சையுண்டானல்யாதாவதொருபிரமாதத்தைஜனிப்பித்து க்ஷணத்தில்ஒருவரோடொருவர்சேரவொட்டாமற்செய்வன இதன்றிஒருவீட்டினில்யஜமானுயிருக்கிறவன் தனக்குவேண்டியபோது ஒருத்தனேபிறப்பிக்கச்செய்யவும் பிறந்தவனேவேண்டாமென்றுசொல்லவும்ஒருத்தனக்குப்பிராணன்போவதாயிருந்தால் அதைத்தடுக்கவும் வல்லவனுவானு இப்படிக்கில்லாவிடினும்வீட்டிலுள்ளவர்களுக்குப்பிணிவந்துவருத்தமடைவதை இவன் ஏற்றுக்கொள்ளுவனு அந்தவியாதியானதைக்கொடுக்கவும் பெற்றுக்கொள்ளவுங் கூடாமையாயிருந்தாலும் ஒருத்தருக்குஇராசிகமாய்ஒரு ஆபத்துவந்தாலும் அதைத்தான்ஏற்றுக் கொள்ளுவனுஇப்படியியிருக்கயஜமானனென்பதற்கென்ன அடையாளம்அந்தயஜமானனுனவன்வெகு கஷ்டப்பட்டுபொருள்சம்பாதித்துக்கொண்டுவந்தால்அதற்குமனேவிதான் பாத்தியஸ்தனென்றும் வெகுவாய்சொல்லிக்கொண் டிருப்பார்கள் அதைத்திருடன்அபகரித்துக்கொண்டுபோனல்கூலிவாங்கிவேலேசெய்பவனுக்குக்கூலிகொடாவிடில்நிவர்த்திப்பதுபோலஅந்தமனேவிமைந்தர்கள்தானேநல்வார்த்தை சொல்லியழைத்தால்வெகு பிரயாசத்துடன ஒருதரம்ஏனென்பார்கள்இரண்டாவதுதிரங்கூப்பிட்டால்எப்பொழுதும்உன்னலேப்புத்தானென்று வெறுத்துக்கொள்ளுவார்கள்அப்படிப்பட்டமனேவி மைந்தர்களிடத்தில்அன்புசெலுத்தி என்மனேவி என்மைந்தனென்றும் அவர்களால்வெகுபிரயோஜனத்தைஅடைவதுபோலப்பிரமிக்கிருன் அந்தமனேவியெங்கேயிருந்தவள் இவனுக்கெவ்விதமாய்க்கிடைத்தாள் இதெல்லாம்ஈஸ்வரனுடையசட்டளேயேயன்றிநம்மாலொன்றுமாகாது இந்தப்புத்திரன்மனேவிகள்தேகத்திற்குப்பார்த்தியஸ்தர்களேயன்றி ஆன்மாவுக்குப்பந்துவாக மாட்டார்கள்,உயிர்போய்விட்டால் உலகத்தார்மெய்க்க, திருநிரம்அழுவார்கள் ஆன்மாவுக்குப்பந்து ஸ்ரீமந்நாராயணனுதலால்புத்திமானுனவன்மகாபாகவதர்களிடத்தில்அன்புசெலுத்திஅவர்களுடைய அருள்பெற்றுமோக்ஷமடையவேண்டுமேயன்றிவேறேமார்க்கமில்லேசர்வசக்திமானுனஈசுவரன்என்னேஉங்களுடன்கூட்டுறவுசெய்துபிரித்து விட்டார்களிடத்திற்குயான்வரவேண்டுமென்றுவெகுவி தயத்தினஞ்செய்தாலும்

நிர்ப்பந்தமானவேலையை ஜனிப்பிக்கிறுன்னானுங்களிடத்தில் வராமலிருந்த தற்கும்ஒருசுகுண மிருக்கின்றது அதாவது என்னை ஆதிமத்தியமுடிவு அற்றவனுயுமமுத்தொழிலுடையவனுயு மிருக்கிறஈசுவரனென் றறியுங்கள்என்னிடத்தில் நீங்கள் ஈஸ்வரனென்று பக்திசெய்யாவிடினும் ஜாரயர்த்தாவென்ருவது பக்திசெலுத்தியபடியால்சாசுவதமானபரமபதத்தை அடைவீர்களென்றருளிச்செய்ததைக் கேழ்வியுற்று கோபிகைகளானவர்கள் அந்தச்சுவாமியைநோக்கிசிரேஷ்டர்களானசநகாதிகளாலேதியானஞ்செய்யத்தக்கவரான தேவரீருடையசரணுரவிந்தத்தில் நின்றும் இடைவிடாமல் பக்திஇருக்கும்படிகிருபை செய்யவேண்டுமென்று பிரார்த்தித்து அந்தத்தியானப் பிரபாவத்தினுல் ஸ்ரீகிருஷ்ணனுடைய திருவடிகளை அடைந்தார்கள்.

---

அரு-வது, அத்தியாயம்.

---

சந்தவிருத்தம்.

திருநூதன்மனைவியராகியருக்மணி
  தேவிகண் முதலானோர்
புருவவிலார்ந்திடும் புண்ணியகிருஷ்ணனைப்
  புகழுடன்மணஞ்செய்த
அருமைசேர்கதைகளைத்ரௌபதையிடத்தினி
  லன்புடன்னதைக்கூறத்
தெரிவையரொருவரொடொருவர்கள்புன்னகை
  செய்திருந்ததைச் சொல்வாம்

ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய மனைவிகளான ஸ்ரீருக்குமணிதேவி முதலியவர்கள் ஸ்ரீகிருஷ்ணன் தங்களைவிவாகஞ்செய்த கதைகளைத்துரோபதைக்குச் சொல்லிக்கொண்டதைச் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளீர்பார்த்திவபவுத்திரனை பரிட்சித்து மகாராஜனே, ஸ்ரீகிருஷ்ணன் கோபிகைகளுக்கு கியானோபதேசஞ்செய்தபின்புதர்மபுத்திரரண்டையிற் சென்று அவரவர்களுடைய க்ஷேமங்களை விசாரிக்க அப்போதவர்கள்சுவாமியைநோக்கி தேவரீருடைய திருவடித்தாமரைகளி லுண்டாயிருக்கிறதேனைபாகவதர்கள் மூலமாய்பானஞ்செய்கிற அடியேன்களுக் கொருநாளும் அமங்களமுண்டாக மாட்டாதென்று சொல்லிக்கொண்டிருக்கிறதருணத்தில் அந்தஉத்தமசுலோக சிகாமணியான ஸ்ரீகிருஷ்ணபகவான்காதினில் உரைக்கும்படிதுரோபதையானவள் ஸ்ரீகிருஷணசுவாமியின் மனைவியர்களானஸ்ரீருக்குமணிதேவி முதலியவர்களை நோக்கிஉங்கள் யாவரையும்சுவாமியெவ்விதமாகவிவாகஞ்செய்தருளினுரோ அதைவிசதமாகத் தெரியச்சொல்லவேண்டுமென்றுவினவிய துரோபதையைநோக்கி ஸ்ரீருக்குணிதேவிஉரைக்கின்ருள்என்னைச்சிசுபாலனுக்குவிவாகஞ்செய்துகொடுக்க வேண்டுமென்று சகலஅரசர்களும் யத்தனமாயிருக்கையில் தனக்குவைத்தபலியைச்சுற்றிக்கொண்டிருக்கிறஆடுசேனை லட்சியஞ்செய்யாமல்சிங்கமெடுத்துக்கொண்டுபோவதுபோலஎன்னை இராக்ஷசவிதியிலெடுத்துக்கொண்டுதமதுதிருவடிப்பணிசெய்ய அங்கீகரித்தாரென்ருல் சத்தியபாமைஎனது சிறியதகப்பனை பிரசேனன்சியமந்தகமணிஹாரத்தைகழுத்திளிற் பூண்டுவேட்டைக்கேக அவனைச்சிங்கங்கொன்று அம்மணியைக்கிரகித்து தனதுகுகைக்குச்செல்ல அதனைஜாம்பவன்மாய்த்து அம்மணியைத்தனதுகுகைக்குக் கொண்டுபோனது தெரியாமல் எனதுதகப்பனை சத்திராசித்தன்தன்னைஸ்ரீகிருஷணன் அந்தமணியைக் கேட்டுதான்கொடாமலிருந்தபடியால் தமதுதம்பியைமாய்த்து சுவாமிஅம்மணியைஅபகரித்ததாய்ச் சொன்னஅபவாதத்தைக்கேட்டு சகிக்கமாட்டாமல் அம்மணிசென்ற வழியைதெளிவுபிறந்துதெரிவிக்க சிலரைக்கூட்டிக்கொண்டுஅந்த ஜாம்பவ னிருக்கும் குகையினுட்சென்று அவனைவென்று அவன்மகள்ஜாம்பவதியை விவாகஞ்செய்துஅவளுடன் அம்மணியைப்பெற்றுஎனதுதந்தைக்குக்கொடுத்தனர், அதுகண்டுஎனதுதந்தைஇக்கண்ணனுடையபகையாகாதென்று அம்மணியுடனென்னைவிவாகஞ்செய்துகொடுக்கப்பெற்றுரென்ருள்ஜாம்பவதியென்றந்தையான ஜாம்பவந்தனண்டையில் சியமந்தகமணி நிமித்தமாய்தங்கிடையா யெழுந்தருளினகண்ணனை தசரதன்மைந்தனென்றுணராமல்போரினில்ஸ்ரீராமனென்றறிந்துசாஷ்டாங்கமாகப் பணிந்து அந்தசியமந்தகமணியுடன்விவாகஞ் செய்துகொடுக்கஎன்னை அங்கீகரித்தாரென்ருள் காளிந்திகன்னிகைப்பருவத்தில்ஆதிமூலப்பொருளென்னை மணம்புரியவேண்டுமென்று தவஞ்செய்தஎன்னிடத்தில் அருள்கூர்ந்து அர்ச்சுன சமேதராய்இரதத்தின்மீ தேற்றிக்கொண்டேகி தாசியத்திற் குரியவளாக என்னை அங்கீகரித்தாளென்ருள் மித்திரவிந்தைஎனதுசுயம்வரத்தில்சகலஅரசர்களையும்அவமதித்துஎன்னைஇரதத்தின்மீதேற்றிக்கொண்டேகிவிவாகஞ்செய்துகொண்டாரென்ருள், சத்தியையானவள் எனதுபிதாதன்வசத்தில்வெகு கூர்மைபொருந்திய கொம்புகளைவாய்ந்திருக்கின்ற ரிடபங்களேழையும் வென்றவனுக்குஎன்புத்திரியைக் கொடுக்கிறேனென்று பிரதிக்கினைசெய்திருப்பதுகேட்ட அரசர்கள் அபஜயப்பட்டோடக் கண்ணபிரான் அவைகள்யாவையும் வென்றுஎன்னை தமதுபணிவிடைக்குத் திருவுளம் பற்றினுரென்ருள், பத்தி

ளையானவள் எனதுமாமன் மைந்தனைஸ்ரீகிருஷ்ணபிரானிடத்தி லன்புகூர்ந்திருந்தளென்கருத்துக் கிசைந்தபடிஎன்றந்தை கன்னிகாதனஞ்செயது கொடுத்தாரென்றுள்லட்சுமணையானவளெனதுசுயம்வரத்தினில்மச்சயந்திரங்கட்டி அதையெய்தவனுக்குஎன்னைக் கொடுக்கிறேனென்று கருதியிருந்த என்றந்தையின் கருத்தின்வண்ணம் அந்தயந்திரத்தையெய்து சகலஅரசர்களையும்வென்று பணிவிடைக்கென்னை வரித்தாரென்றுள் நரகாசுரனைவென்று அவன்சிறையினில் வைத்திருந்தபதினாயிரத் தருநூறும்பர்களை ஓரேமுகூர்த்தத்தில் ஸ்ரீகிருஷ்ணபிரான் விவாகஞ்செய்தாரென்றார்கள்

அசு-வது-அத்தியாயம்,

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கோகுலகிருஷ்ணன்சேவைக்கொண்டிட ரிஷிகளெல்லா
மாகுருக்ஷேத்திரத்தில் வந்ததும்மகதைஸ்வர்ய (ம்
யாகத்தைவாசுதேவரவர்களைக்கொண்டுசெய்து
வேகமாயவர்களில்லம் புக்கியவிபரஞ்சொல்வாம்.

சகலபிர்மரிஷிகளும் ஸ்ரீகிருஷ்ணபகவானுடையசேவார்த்தமாகக்குருக்ஷேத்திரத்திற்குவந்ததும் வசுதேவரவர்களைக்கொண்டு யாகத்தைநிறைவேற்றிஅவர்களையும்சகலபந்துக்களையும் பூசித்துஅவரவர்களிருப்பிடத்திற்கனுப்பியதுஞ் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளீர்கிரீடிபவுத்திரனானபரிட்சித்துமகாராஜனே ஸ்ரீருக்குமணிமுதலிய சகலமாதர்களையும் ஸ்ரீகிருஷ்ணபகவான்விவாகஞ்செய்ததை குந்தி-காந்தாரி - சுபத்திரை துரோபதை- முதலியவர்கள்கேட்டு ஆனந்தித்துக்கொண்டிருக்கையில்வியாசர்-நாரதர்-சியவநர்தேவலர்- அசிதர்-விசுவாமித்திரர் - சதாநந்தர்-பரத்துவாசர்-கவுதமர் பரசுராமர்-அவருடையசிஷியர்கள்வசிஷடர்சால்வர்பிருகுபுலஸ்தியர்புலவர்அத்திரி-மார்க்கண்டேயர்பிருகஸ்பதி-திவிதர்திருதர்சதுரர்பிரம்மபுத்திரர்களானஷோடசபிரஜாபதிகள் சந்தாதியோதிகள்-அங்கீரசு-அகஸ்தியர்-யாக்கியவலக்கியர் வாமதேவர் - முதலியரிஷிகள தர்மத்தைநிலைநிறுத்துவதற் கவதரிதிருக்கின்ற ஸ்ரீராமகிருஷ்ணர்களைச் சேவிக்கவேண்டுமென்று குருக்ஷேத்திரத்திற்கு வந்தார்கள் அப்போஸ்ரீகிருஷ்ணன் முதலியசகல அரசர்களுங்கண்டு வேகமாகஎழுந்திருந் தெதிர்கொண்டுபோய் அர்க்யபாத்தியங்களாற் பூசித்துஆசனத்திலெழுந்தருளச்செய்து குசலங்கேட்டு அந்தமகாசபையிலிருக்கிறயாவரையும்பார்த்துஜகதீசுவரனானகண்ணபிரானொருவார்த்தை அருளிச்செய்கிறார்.

கேளீர்பிர்ம ஷித்துக்களான மகாரிஷிகளேபுண்ணியதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்பவனும் விக்கிரகரூபியானபகவானைத் தரிசிப்பவனும் சீக்கிரத்தில்பயன் பெறார்கள்பாகவதர்களுடைய சேவைகிடைத்த தக்ஷணம்சகலபாபங்களையும் போக்கிமோட்சத்திற்குரியவர் களாவார்கள்அப்படிப்பட்ட ஈஸ்வரரூபியான அடியார்களைப்பழித்துஔபாசநவைசுவேதங்களால் அக்கினியையும் சந்தியாவந்தனாதி கர்மஙகளால் சூரியனையும் இன்னமநேகமாகத் தேவர்களைப்பூசித்தபோதிலும் ஒருக்காலும்பயனடைய மாட்டார்கள்,பாகவதர்களை சாமான்னியமான மானிடனென்றும் புண்ணியதீர்த்தங்களைச்சாமான்னியமானஜலமென்றும் நினைத்தவன் இரண்டுகால்கமுளைதயோடொக்கும், மகாபாகவதர்களானஉங்களுடையசேவை எங்களுக்குக்கிடைத்தபடியால்நாங்கள் ஜன்மமடைந்ததற்கு இன்றைக்குத்தான் பயனடைந்தோமென்றருளிச்செய்த ஸ்ரீ பகவானைப்பார்த்துஅம்மகாரிஷிகள்மனங்கலங்கி வெகுநேரமாலோசித்து தேவரீருடைய அனுக்கிரகத்தினால் சகலவேதங்களை யுணர்ந்திருந்தும்பானைமுதலிய பாண்டங்களுக்கு அநேகமானபெயரிருப்பதினால் மண்ணென்கிறபெயரனமற்றிருப்பதுபோலஎங்கள்நிறைந்ததிருமேனியென்பதை மறந்துபிரமிக்கும்படிசெய்தீர், இந்தயாதவர்கள் அருகிலிருந்தும்தேவரீருடைய அருளுக்குப்புறம்பாயிருப்பதினால் காட்சிக்கும்புறம்பாகவே யிருக்கின்றார்கள் அடியேன்கள்தொலைவிலிருந்தும் யாங்கள்செய்த தவப் பேற்றினால் தேவரீருடையஅருளுக்குரியவர்களாயிருந்து காட்சிக்கும் பாத்திரர்களானோம் அப்படியிருக்கதேவரீர்அருளிச்செய்ததினால் யாவரும்பாகவதர்களிடத்திலிவ்வணணம்அன்புசெலுத்தவேண்டுமென்று ஆக்கியாபித்ததுபோலிருக்குதென்றுசொல்லி சகலரிஷிகளும் சுவாமியைப்பிரதக்ஷணஞ்செய்து தண்டஞ்சமர்பித்துஅவரிடத்தில்விடைபெற்றுபிரயாணமாயிருக்க வசுதேவர் அவர்களைப்பிரதக்ஷணஞ்செய்து தண்டனிட்டு அவர்களைப்பார்த்துசகலகர்ம்மத்தில் நின்றும் விடுபடுவதற்கெந்தகர்மஞ்செய்யவேண்டும்அதையெனக்குபதேசிக்கவேண்டுமென்றுகேட்டவசுதேவனைப்பார்த்து மகாரிஷிகள் சமீபத்திலிருக்கிறசர்வசக்தனை ஸ்ரீகிருஷ்ணனைக்கேளாமல்தங்களைக்கேட்டதற்குச் சந்தேகப்பட்டுக்கொண் டிருக்கில்ரிஷிகளைப்பார்த்து நாரதர்பிர்ம்மத்தினுடையதத்துவத்தையறிந்த நம்மைப்போலொத்தவர்க ளிப்போதந்தபகவத்வாக்கியத்தைக்கேட்டுப்பிரமித்திருக்கஅந்தபகவானைஇந்தவசு தேவர்கேவலம்புத்திரனென்று பிரமித்தி

ருப்பதுமன்றி அருகிலும் வாசஞ்செய்கிறபடியால் அவ லாக்காட்டிலும் நம்மைப்பெரியோர்களென்றெண்ணிக் கேட்டகருத்திற்கும் சுவாமி அங்கீகரித்திருந்தமையால் அவர்களைவிக்கு நாம உத்தரஞ்சொல்லவேண்டியதாயி ருக்கின்றனவென்றுகூறினர் பிறகு ரிஷிகள்யாவரும் அ ந்தவசுதேவனைநோக்கி மிகவும்அன்போடு பகவதாராத னஞ்செய்துவந்தா லதற்குமிஞ்சினகர்ம்மமொன்றுமில் லை, அந்தக்கர்ம்மஞ்செய்வதி லொருபயனை அபேட்சியா மல்பகவத்பிரீதி செய்துவிட்டால் மேன்மையான பயன் பெறுவன் இதன்றிஅந்தணர்முதலிய நான்குவர்ணத்தா ரும்மூன்றுகடனுடன் பிறந்திருக்கின்றார்கள் அக்கடன் தீர்ந்தாலன்றிமேன்மைபெறார்,அதாவது-பிர்ம்மசாரியா யிருந்து குருவுக்குப் பணிவிடைசெய்து மெய்ப்பிக்கின் றதுரிஷிகளுடையகடன் நற்குலத்தினிலொருகன்னிகை யைவிவாகஞ்செய்து புத்திரனைப் பெறுவது பிருதிகளு டையகடன் அப்படி புத்திரன் பெறுவது தெய்வச்செய லாயிருந்தாலும் காலத்தில்விவாகமுங்கர்ப்பாதானமுத லியபுருஷப்பிரயத்தினஞ்செய்து தெய்வகதியால் புத்தி ரன்பெறாவிடில் இவனிடத்தில்தோஷமில்லை பிதுருதே வதைகளும்வாழ்த்துவார்கள், யாகஞ்செய்துதேவர்களை ச்சந்தோஷிப்பிக்கின்றது தேவர்களுடையகடன்;இம்மூ ன்றுகடனில் உமக்குரிஷிகளுடைய கடனும் பிதுருக்க ளுடையகடனும் நிவர்த்தியாச்சுது இனி யாகஞ்செய்து தேவர்களுடைய கடனையும் நிவர்த்தித்துக்கொள்ளுமெ ன்றுரைத்தரிஷிகளுடையகருத்திற்கிசைந்து அவர்களை நீங்கள் ரித்துவிக்குகளா யிருந்து நடப்பிவிக்கவேண்டு மென்றுகிறுத்தி யாதவர்களையாகத்திற் குரிய வஸ்துக்க ளைச்சேகரியுங்களென் றுக்கியாபிக்க அவர்களுமவ்வண் ணம்நிறைக்க வசுதேவருக்கு க்ஷவரஞ்செயவித்து மை யிட்டு நவநீதம்பூசி தீட்சைசெய்வித்து சர்வாலங்காரபூ ஷிதர்களான மனைவியர்களுடன் அக்கினியில் ஓமமுத லியகிரியைகளை விதிப்படிமுடித்து பதினெண் வாத்திய ங்களுடன் அவபிருதஸ்நானஞ்செய்வித்தார்கள் யாதவர் கள்பாண்டவர்களுடன் வேதியர்கட்கு தக்ஷணைகொடுத் துதிருப்திசெய்வித்து அவர்க ளாசீர்வதிக்கப்பெற்றுக்க ளித்திருந்தனர்.

வசுதேவர் ஸ்ரீஹரி மாணிக்கபிரானுடைய பிரபாவத் தினால் யாகமாகிய சமுத்திரத்தைத் தாண்டி இராகுவி னிடத்தில்நின்றும்விடுபட்ட சந்திரன்போலத் தெளிவு பொருந்தியமுகமுடையவராய் ரிஷிகளுக்கும் பாண்டவ ர்கள்முதலிய பந்துக்களுக்கும் ஆடை யாபரணங்களைக் கொடுத்து அவர்களுடைய இருப்பிடத்திற்கனுப்பிநந்த கோபனைநோக்கி நீர்மகத்தானஉபகாரஞ்செய்திருந்தும் மறந்துபோகிற எங்களிடத்தில் அன்புகூர்ந்து இத்தயா கத்தைநிறைவேற்றினதேபோதுமானதென்று சிலநாள் நிறுத்தி அவர்களுக்கு வேண்டுபவைகளுதவி செய்தனுப்ப ப்பெற்றுவெள்ளைவண்ணனையுங்கருவண்ணனையும்விட் டுப்பிரிய மனமில்லாதவர்களால் வியசனத்துடன் சகல கோபால கோபிகைகளுடன் ஆயர்பாடிக்குச்சென்றனர் யாதவர்களும்சகலசேனைகளுடன் இரதகஜதுரக ங்களமீதேறிக்கொண்டு துவாரகாபுரஞ்சென்றனர்.

---

## அ௰௫-வது-அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

ஆசிலாராம கிருஷ்ணனவர்களை
வாசுதேவர் தேவகிகள்துதித்ததும்
மோசஞ்செய்கம்சனால் முன்மரித்திடும்
தேசுலாம்பிள்ளை தனைத்தர்ததுஞ்சொலும்.

ஸ்ரீராமகிருஷ்ணர்களிருவரையும் வசுதேவர் தேவகி கள்துதித்ததும் கம்சனா லிறந்துபோன ஆறுபுத்திரர்க ளைவிரும்பினதும் அவர்களைக்கொண்டுவந்துவிட்டு வசு தேவர்தேவகிதேவிகளைச் சந்தோஷிப்பித்ததுஞ் சொல் லுகின்றன,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளீர் சுவேதவாகன பௌத்திரனான பரிட்சித்துமக காராஜனே வசுதேவர்யாகஞ்செய்துதுவாரகைக்குச்செ ன்றபிறகு ஒருநாள் ஸ்ரீராமகிருஷ்ணர்களிருவரும வசு தேவனை சாஷ்டாங்கமாகசசேவித்து வெகுவினயத்து டன்நிற்கிற புத்திரர்களிடத்தில் பக்திகூர்ந்து ரிஷிகளு டையவார்த்தைகளை நினைத்துக்கொண்டுஅவர்களைநோ க்கி நீர்அவதரித்தகாலையில் அடியேனுக்கு மூன்றுஜன் மத்தினுடைய காரணத்தைத்தெரியப்படுத்தி நிஜரூபத் தைகாட்சிகொடுத்திருந்தும் மாயையால் மறைக்கப்பட் டுசமீபத்திலிருக்கிற தேவரீருடைய மகிமையைமறந்து கேவலம்புத்திரனென்றே யெண்ணிநரகத்திற்குரியதா யும்அனேகஜன்மங்களுக்கு இடமாயு மிருக்கிற இந்தச் சம்சாரத்தில்சிக்கி நாமில்லாவிடில் இவர்களைக் காப்பா ற்றுகிறவர்க ளிலலையென்று பிராந்தி கொண்டு சுழலு கிறேன் எனக்குப்பிர்மக்ஞானமில்லாவிடினும் சம்சா ரத்தினிடத்தி லுண்டாயிருக்கின்ற ஆசையை ஒழிப்பி த்துசிர்திருத்தி முக்தி யுண்டாகும்படி அனுக்கிரகிக்க வேண்டுமென்று சாஷ்டாங்கமாகச் சேவித்து வினயத் துடனிற்கிற வசுதேவனைநோக்கி கண்ணபிரான் அசை யும்பொருள் அசையாப்பொருளாயிருக்கின்ற இந்தச்ச மஸ்த பிரபஞ்சங்க ளிடத்திலும் சர்வாந்தரியாமியான ஈஸ்வரன் பரவியிருப்பதுபோல என்னிடத்திலும் பர

வியிருக்கின்றீர் அப்படியிருக்க என்னை சாக்ஷாத்தான ஈஸ்வரனென்று பாவனைசெய்து துதிப்பதுபோல் யாவரிடத்திலும் பக்திசெலுத்திவீராகில் மோட்சத்திற்குரியவராவீரென்று அருளிச்செய்த கருங்கடல்வண்ணனை சுவாமிவார்த்தையைக்கேள்வியுற்று மனதிற்குள்களித்திருக்கையில் தேவகிதேவியானவள்ஸ்ரீகிருஷ்ணபிரானைநோக்கி நீர்குருதட்சணையாக இறந்துபோனமைந்தனைகுருவுக்குத் தந்ததுபோல் கம்சனு லிறக்கப்பட்டிருக்கிற புத்திரர்களறுவரையும் பார்க்கவிரும்புகிறேன் கிருபைசெய்யவேண்டுமென்றுசொன்ன மாதாவின் வார்த்தைக்கிசைந்து ஸ்ரீராமகிருஷ்ணர்களிருவரும்பாதாளலோகஞ்சென்று பலிச்சக்ரவர்த்தியினுடையசபைக்கேகஅப்போது பலிச்சக்ரவர்த்தி இவர்களைப்பார்த்து மெகுகளிப்புடன் அர்க்கியபாத்தியமுதலியவற்றாற் பூசித்து ஆதநத்திலெழுந்தருளச்செய்து அவர்களுக்குசசர்வசொத்தையும் தனதாவியையும் அற்பணஞ்செய்துமேகவண்ணனைப்பார்த்து சகல்வேதங்களுந்தேடிக் கண்டுபிடிக்கலுண்ணாத மகிமையைவாய்ந்ததேவரீர்முடவனுக்குமரத்தினிலிருக்கிற தேன்வாய்த்தாற்போல் சர்வதிருஷ்டனாய் தேவரீரைச்சேவிக்கக்கருத்துகொள்ளாதஅடியேனிடத்திலன்புகூர்ந்து எழுந்தருளிய தேவரீரைச்சேவிக்க இந்தஅக்கினியானகண்யோக்கியமல்ல, தேவரீர்வாமனவதாரஞ் செய்தருளி யாசகனைப்போல அடியேனையொருபிரபுவாகஎண்ணி யாசிக்கிறசமையத்தில் மூடத்தனத்தினால் சொர்க்காதிபோகத்தைவிரும்பி தேவரீருக்குத்தானங் கொடுத்தேனேயன்றி மோட்சத்தை விரும்புதற்குக்கியானமில்லாமற்போயிற்றுஅந்தச்சொர்க்காதிபோகக்கிடைப்பதற்கும் இப்போதுஇருபத்தெட்டுசதுர்யுகமாயிற்று இன்னம்நாற்பத்துமூன்றுசதுர்யுகமாகவேண்டும் அந்த இந்திரதத்துவமும் போய் பரலோகஞ்சென்று பிரமனுடைய ஆயுள்வரையி லிருந்து அப்பாலந்தப் பிரமனுடன் மோட்ச மடையும்படி யானகாலவிளம்பனமாச்சுதேயன்றி சத்துருக்களாயிருந்தும் சீக்கிரத்தில்மோட்சமடைந்த சிசுபாலன் கண்டகர்ணன்முதலியவர்களுக் கிணையாகாமல் மோசம்போயினேன்இனியாவது தேவரீருடைய திருவடியிலிடைவிடாமல்பக்தியிருக்கும்படி கிருபைசெய்யவேண்டுமென்று அநேகதிரந் தெண்டன்சமர்ப்பிக்கின்ற பலிச்சக்ரவர்த்தியைநோக்கி ஸ்ரீகிருஷ்ணபகவான் சுவாயம்பூமன்வந்தரத்தில்மரீசிப்பிரஜாபதிக்கு உணபென்கிறமனைவியிடத்தில் ஆறுபுத்திரர்களபிறந்திருந்தனர், பிரமன்சரஸ்வதியைச்சிருஷ்டித்து மனைவியாக்கிக்கொண்டதற்கு அவர்கள்பரிகாசஞ்செய்தபடியால் அசுரர்களாகும்படி பிரமன்சபித்தனர் இரண்யகசிபனுக்குப் புத்திரர்களாய்ப்பிரகலாதனனுக்குத் தம்பிகளாய்ப்பிறந்துதந்தையைப்போல்தாஙகளும் அகண்ட சாம்பிராச்சியத்தை அனுபவிப்பதற்குத்தவஞ்செயதார்கள் அசுராகள் அவர்களைப் பந்தித்து பாதாளத்திலழுந்தினர்கள், அவர்களாறு மனுவந்தரம்பாதாளத்திற்கிடந்து ஏழாவது மனுவந்தரத்தில் நமதுயோகமாயையால் கிரகிக்கப்பட்டு தேவகீகற்பத்தின்வழியாகப்பிறப்பித்தவர்களைக் கம்சன்உடனே சங்கரித்தான் தேவகிதேவிக்குக் காட்டுவதற்கு இவடத்திலேயேவைத்திருக்கின்றோம் அவர்களைக கொண்டுவரவேண்டுமென்று ஆக்கியாபித்தபடி பலிச்சக்கரவர்த்தி அவர்களறுவரையும் அதி சீக்கிரமத்தில் சுவாமி சந்நிதியிற்கொண்டுவந்துவிட்டுப்பணிந்து நின்றனன் அவர்களைத்தேவகியிடத்திற்கொண்டுவந்துவிட்டனர் தேவகிதேவியானவள் அப்புத்திரர்களைக்கண்டு களிப்படைந்து பகவன்மாயையால் முலைகளிற்பால்சுரந்துவீச ஆவலுடன் அவர்களைஎடுத்து மடியில் வைத்து உச்சிமுகர்து முத்தாடிமுலைகொடுத்தனள் முன்பு சுவாமியினுற் பானஞ்செய்திருந்தமுலையை இப்போதிவர்கள் உண்டபிரபாவத்தினாலும் அவருடைய திருக்கண்ணோக்கம்பாலித்தபடியினாலும் அவர்கள்சாபவிமோசனர்களாய்திவ்வியதேகத்தையடைந்து வசுதேவர் தேவகிதேவிஸ்ரீராமகிருஷ்ணர்களிடத்தில் விடைபெற்றுதேவர்களைப்போலவிமானருடர்களாய் சொர்க்கத்திற்குச்சென்றார்கள்.

---

## ௮௯ - வது, அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

போர்விஜயன் யாத்திரைக்குப்புறப்பட்டு
சோர்விலாத துவாரகைக்குச்சென்று
ஏர்பொருந்துஞ் சுபத்ரையெனுமின்னை
நேர்பெறக் கலியாணம்நிசழ்த்தினன்.

விஜயன் தீர்த்தயாத்திரைக்குப்புறப்பட்டு துவாரகாபுரஞ்சென்று வெள்ளைவண்ணனை அறியாமல் நீலவண்ணனுடைய சகாயனாய் சுபத்திரையை மணஞ்செய்ததை ரேவதீரமணன் கேள்வியுற்று கடுஞ்சினமடைந்ததும் அவரைக்கண்ணபிரான் சமாதானஞ்செய்து சுபத்திரைக்கு அங்கமணி முதலியதுகளை எடுப்பித்து அவளைச்சந்தோஷப்படுத்தியதும் அப்பால் மிதிலாப் பட்டணத்திற்கேகி சுருததேவனையும் பகுளா சுவனையும் சந்தோஷிப்பித்ததையுஞ் சொல்லுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

இப்படி அருளிச்செய்கிற சுகயோகியைப்பார்த்து பரிட்சித்துமகராஜன் எனதுபாட்டனுனதனஞ்சயன்கண்ணபிரானுடைய சகோதரியான சுபத்திராதேவியை எவ்விதமாக விவாகஞ்செய்தார் அதைஅடியேனிடத்தில் கிருபைகூர்ந்தருளிச்செய்யவேண்டுமென்று வினவுகிற அரசனைநோக்கி சுகமுனிவர் அருளிச் செய்கிருர், அர்ச்சுனன் ஒருகாரணத்தினுல் தீர்த்தயாத்திரைக்குப் பிரயாணப்பட்டு சகலபுண்ணியதீர்த்தங்களிலும்ஸ்நானஞ்செய்து பிரபாசதீர்த்தம்வந்து அதிலும் ஸ்நானுதிகளைச்செய்து அந்தணர்களைப் பூசித் தனுப்பிவிட்டு அன்றிராத்திரிபடுத்திருக்குங்கால் யாதவ குலத்தானுகிய கதனென்கிறவன் சுபத்திரையின் ரூபமுதலானவைகளைக்குறித்துச்சொல்லியிருந்ததைநினைத்து அவளைப்பார்க்கக்கருத்துக்கொண்டு யாருந்தன்னையறியாமலிருக்கச் சந்நியாசிவேஷத்துடன் பிக்ஷைசெய்துகொண்டுபோனல் எவ்விதத்திலும் கிருஷ்ணன்மாளிகைக்குள்போய்சுபத்திரையைக்காணலாமென்று மனதில்நிச்சயித்து திருதண்டமும், காஷாம்பரமும், கமண்டலமும், ஜபமாலையுமாகயோகிபோலாகினன், அக்காலத்தில் மேகங்கள் ஆகாயமெல்லாம்படர்ந்து ஸ்ரீகிருஷ்ணன் திருமேனிபோலக்கறுத்தும் அவர் திருக்கையிலிருக்கும் சக்கரத்தின் ஒளிபோன்ற அழகியமின்னல்களுடனும் அவரதுசங்கத்தொனிபோன்றயிடியும் அவருடையசார்ங்கமென்கிற வில்லில்நின்றும்புறப்படுகிறபாணதாரைகள்போன்ற வருஷதாரைகளும் அவருடைய பேரருள்போல் பூமியெங்கும்ஜலப்பிரவாகம்நிறைந்திருக்கவும் அர்ச்சுனனுடையமனதுகாமத்தி லமிழ்ந்ததுபோல் தாமரைகள் நீரினிலமிழ்ந்திருக்கவும் முன்னம்அழகினுல் தன்னைவெற்றிகொண்டஅர்ச்சுனனைக் காமனிப்போது சுபத்திரையென்கிற ஒருஅஸ்திரத்தினுல் வெற்றிகொள்ளப் போகிருனென்கிறமகிழ்ச்சியினுலே அவன்கொடியாகியமீன்கள் துள்ளிக்கொண்டிருக்கவும் சாயல்பற்றித் தங்களுக்குத் தோழியாகிய சுபத்திராதேவிக்கு அர்ச்சுனனென்கிறமகாபுருஷன் வாய்க்கப்போகிருனென்கிற சந்தோஷத்தினுல்மயில்கள்நர்த்தனஞ்செய்யவும், செந்தாழை-குடமல்லிகைகள்மலர்ந்து வண்டுகளுக்குவிருந்திடவும், ஆறுகள்பூரணவெள்ளங்களுடன் சமுத்திரநீரைத் தங்கள்வடிவமாக்கவும் பயிர்கள் கதிர்களின்பாரத்தினுல் தங்கள் சீவனைக்காப்பாற்றும் மேகங்களைக் கும்பிடுவதுபோ லிருக்கவும், இவ்விதமாகமாரிகாலமானது விளங்குமளவில் அர்ச்சுனன் ஓர்ஆலமரத்தின்பொந்திலுட்கார்ந்துகண்ணனைநினைத்தான் அப்போதுகண்ணன் தாமொருவராய்ப் பிரபாசதீர்த்தத்திற்குவந்து அர்ச்சுனனைக்கண்டொருவருக்கொருவர் ஆலிங்கனஞ்செய்துகொண்டு சந்தோஷத்துடன் மனோரம்மியமாகிய காடுகளும் அருவிமடுக்கள்பெரும்பாறைகள்பொருந்திப் பலவிதமிருகங்களும்பட்சிகளும்வாசஞ்செய்யுமிடமாயிருக்கின்ற ரைவதபர்வதத்திற்கொண்டுவந்தமைந்து அவனை அங்கிருக்கும்படியாயும் ஒருவருடன்பேசாமலிருக்கத் திட்டஞ்செய்துஇரகசியமாகத் துவாரகாபுரஞ்சென்றனர்.

சிலநாளைக்குப்பின் அந்தரைவதகபர்வதத்தில் யாதவர்கள்வருடந்தோறுஞ் செய்கிறதிருவிழாநேரிட்டது அம்மலையைச்சுற்றிலும் அழகானவீடுகளினுலும் தீபங்களின்வரிசைகளினுலேயும் இன்னம்பலஅலங்காரங்களினுலே கோடிசூரியப்பிரகாசமாய்விளங்கும் மலைதனில் யாதவர்கள் மங்களஸ்நானஞ்செய்து நல்ல ஆடையாபரணங்களைத்தரித்து வேதியர்கட்குப் பலவிதமான தானங்களைவழங்கி திவ்வியபோஜனங்களைப்புசிப்பித்து சந்தனபுஷ்பதாம்பூலமுதலானவைகளுடன் வேடிக்கையாய் வாகனங்களிலேறிக்கொண்டு அநேகஜனங்களுடனேப் லவாத்தியகோஷங்களோடும், சங்கீதங்களோடும், நாட்டியங்களோடும், நான்குபுறங்களிலும்சுற்றிவர பலராமர்ரேவதிதேவியென்கிற தன் மனைவியோடு மதுபானஞ்செய்து மதத்தினுல் கண்கள்சிவந்து சுழலவிடும்படிபலபேர்களுடன்சுற்றிவர பிரத்தியுமநன்-சாம்பன்முதலியபேர்கள்வேடிக்கையாயிருக்கஅப்போது ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் அநேகமாதர்களுடன் தாமுஞ் செய்யவேண்டிய தானமுதலியவைகளைச்செய்துசந்நியாசிவேடம்பூண்டிருக்கின்ற அர்ச்சுனனையும்பார்த்து அங்குஉலாவிக்கொண்டிருக்கிற சமயத்தில்திருவிழாவுக்காகஅழகாகச்சிங்காரித்துக்கொண்டுசுபத்திரையானவள்தோழிமார்களுடனே அந்தமலையில் சஞ்சரிக்கக்கண்டு அர்ச்சுனனுனவன்காமவிகாரமடையவே ஸ்ரீகிருஷ்ணன் அக்குறிப்பை யறிந்துஅந்தச் சந்நியாசியைப்பார்த்துகாட்டில்தவசியாய்ச் சஞ்சரிக்கின்ற உன்மனம் காமத்தில்மயங்குகிறதுபோலிருக்கின்றது இந்தப்பெண்சுபத்திரையென்றுபெயருடைய எனதுதங்கை என்றந்தைக்கிந்தப்பெண்ணிடத்தில் மிகவும் அன்பாகையால்உனக்கிந்தப் பெண்ணினிடத்தில் கருத்துண்டா யிருந்துதானுல் சொல்லு எங்கள் தகப்பனுருக்குச்சொல்லி உன்கருத்தின்படி நடப்பிக்கிறேனென்றுசொல்ல, அதற்கர்ச்சுனன் என்னபரிகாசஞ்செய்கிறீர் நான் வந்தகாரியமேயிதுவாயிற்றேஇந்தப்பெண் மணியைப்பார்த்துமகாதீரமுடையதவசிகளும் மயங்குவார்களே நான்மயங்குவ தரிதோ அவளெனக்கு மனைவியாவாளேயாகில் சகல மங்களங்களும்வந்தாற்போலேயாம் ஆதலாலென்னிடத்தில்பரிபூரணகடாட்சம்வைத்து அவளைநான்கலியாணம்பண்ணும்படியாகிய வகையைச் சொல்லவேண்டுமென்றுகேட்டான் அதுகேட்டுமாயோன் அரசர்கள் பெண்களை வலி

மையினால் கொண்டுபோகிறதுண்டு அதைப்பெரியோர்கள் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள் ஆதலால்வலிவையினாலெடுத்துக்கொண்டு போய்விடுவதற்குச் சமயமிருக்கிறதுசொல்லுகிறேன் இப்படிநாம் செய்திருக்கிறநிச்சயத்தையாரறியப்போகிறார்கள், பின்பு பார்த்துக்கொள்ளுவோம்என்று நிச்சயஞ்செய்து இந்தச்சேதியை தருமராசனுக்குத்தெரிவிக்கிறநிமித்தம் ரகசியமாய்ச்சிலமனிதரை அனுப்பிவிக்கத் தருமராசன்முதலானவர்களும்இச்செய்தியைக்கேட்டுநல்லகாரியம்அப்படியேநடக்கட்டுமென்று சொல்லியனுப்பிவித்தார்கள்.

கிருஷ்ணன் அர்ச்சுனனை அவ்விடத்திலேயே யிருக்கச்சொல்லிநியமித்துவிட்டுத் தாம் முன்போல் எல்லாருடனேயுங்கூடிக்கொண்டு திருவிழா கழித்தவுடனே துவாரகாபட்டணம் போய்ச்சேர்ந்தார் பற்குனனும் கிருஷ்ணன் தங்கையைக்கண்டதுமுதல் காமவேதனைகொண்டுஅழகாகிய சோலைசூழ்ந்திருக்கிறஒருபாறாங்கல்லின் மீது உட்கார்ந்து சுபத்திரையைத் தியானஞ்செய்துகொண்டிருந்தான்.

இப்படியிருக்க ஒருநாள் ஸ்ரீகிருஷ்ணன் வேட்டைக்குப்போயிருக்கிற பலராமன்-கிருதவர்ம்மன்- சாம்பன்-சாரணன்-பிரத்தும்மனன்-கதன்-சாருதேஷ்ணன்விரேதன்-பானு-நிசிதன்-விபுருது-பிருது-முதலாகிய சிலயாதவவீரர்கள் வேடிக்கையாயந்தப் பருவதத்திற்குப்போயிருக்குமளவில் அவ்விடத்திலிருக்கும் அர்ச்சுன சந்நியாசியைக்கண்டு சந்தோஷப்பட்டு அவர்பக்கத்திற்போய்மிகவும் வினயத்துடனே பணிந்துநிற்க அந்தச் சந்நியாசியும் ஆசீர்வதித்து உட்காருங்களென்றுசொல்லஅங்கிருக்கும் பாறைகளின்மீது உட்கார்ந்துகொண்டுஇவர்யாரோமகானுபாவர் மிகவும்சாந்தமூர்த்தியென்றுமனதில் எண்ணிக்கொண்டிருக்க அவன் ஏன்யாதவவீரர்களேக்ஷேமமாவென்றுகேட்க, பலராமர்சுவாமியினுடையஅநுக்கிரகத்தினாலே க்ஷேமந்தான் தேவரீர் யாரோ எவ்விடத்திலிருந்து ஏதுக்காக இங்கே எழுந்தருளினீரோதெரியவில்லைஆகையால் அதைஅருளிச்செய்யவேண்டுமென்றுகேட்க,சந்நியாசியானவன்நமக்கோரிடமென்றுண்டா பூமியெல்லாம் நம்முடையவிடந்தான் தீர்த்தக்ஷேத்திரங்களையெல்லாம் பார்த்துக்கொண்டு மழையானகையால் இவ்விடத்தில் வந்திருக்கிறேனென்று சொல்லக்கேட்டு ஆனால்சுவாமி அடியேங்கள்செய்ததவந்தான்தேவரீர் இவ்விடம் எழுந்தருளியது தேவரீர்அனேக புண்ணியதீர்த்தங்களையும் ஸ்தலங்களையும் கண்டவராகையால் அவைகளின்சரித்திரம் சொல்லியருளவேண்டுமெனவே சந்நியாசியும் அந்தச்சரித்திரங்களையும்மற்றும்தருமத்துக்கடுத்ததுகளையும், தெய்வபக்திக்கடுத்தகாரியங்களையும், எடுத்துப்பிரசிங்கக்கேட்டு இவர் மகாபெரியவரென்றுநினைத்து எழுந்துவந்தனம்பண்ணிப்பின்பு இவர்களெல்லாங்கூடி இவர்மகா சந்நியாசி வெகுயோக்கியர் நாம்செய்தபுண்ணியவசத்தினால்தான் நமதுதேசத்துக்குவந்தார் ஆகையால் இவர்இந்தமழைக்காலமெல்லாம் சவுக்கியமாயிருக்கும்படியாய் நாம்எந்தவிடத்திலே இருக்கச்செய்யலாமென்று யோசித்துக்கொண்டிருக்குமளவிலே வேட்டைக்குப்போயிருந்த ஸ்ரீகிருஷ்ணன் அவ்விடத்துக்குவந்தார் அவரைக்கண்டு பலராமர் குழந்தாய் கிருஷ்ணா இங்கேஒருசந்நியாசிவந்திருக்கிறார் அவர்இவடத்தில் மிகவும்வருந்துகிறார் இவரை நமதுபட்டணத்தினுள் எவ்விடத்தி லிருக்கச்செய்யலாம் சொல்லென்றுகேட்கக்கண்ணன் அண்ணா நீரிருக்கநான்சொல்வதெப்படி உமக்குளவிடத்தில்வைக்க இஷ்டமோஅவிடத்தில் வைக்கலாமென்று சொல்லக்கேட்டுத் தம்பி சொன்னவிநயவாக்கியத்துக்குச் சந்தோஷப்பட்டுப்பலதேவர் சற்றுயோசித்துக்கிருஷ்ணாஎனக்குத்தோற்றுகிறதைச் சொல்லுகிறேன்கேள்இவர்நமது சுபத்திரையினுடைய கன்னியாமாடத்தில்போஜனம்பண்ணிக் கொண்டு நம்முடைய தோட்டத்திலே கொடிகளினால் கட்டியிருக்கும்அறைகளிலே இந்தமழைக்காலம்கழிக்கிறவரைக்கும் வாசஞ்செய்துகொண்டிருக்கட்டும்உனக்கென்னதோற்றுகிறது சொல்லுயாதவர்களெல்லாம்உன்சம்மதியை எதிர்பார்கிறார்களென்றுசொல்லக்கண்ணனானவர் அண்ணாஉம்முடையசம்மதிக்கும் உத்தரவுக்கும் எதிரில்லை நீரோஎல்லாமறிந்தவர் மகாபுத்தியுள்ளவர்எங்களுக்குப்பெரியவராகையால் நானென்றும் மறுத்துச்சொல்லக்கூடவில்லை ஆகிலும் இப்படிச்செய்வதில் ஒருகுறைவும்வராம லிருப்பதைக்குறித்துக் கொஞ்சம் யோசிக்க வேண்டியதாய்த் தோற்றுகிறதென்று சொன்னார்.

அதுகேட்டுப் பலதேவர்சரிதான் நீ சொல்லுகிறது ஆனால் இந்தச்சந்நியாசி வெகு படித்தவராயும், வெகு யோக்கியராயும், சாந்தமூர்த்தியாயும் காணப்படுகிறார்

உள்ள மெய்படியிருக்கிறதோ யாருக்குத்தெரியும் ஆகையால் கண்ணா நீ இவனையழைத்துக்கொண்டு போய்க் கன்னியாமாடத்தில்விட்டு சுபத்திரைக்குச்சொல்லி அன்னபானமுதலானஉபசாரங்கள்பண்ணிவரும்படித் திட்டம்பண்ணுமென்ற சொல்லைக்கேட்டு ஆனால் அப்படியே செய்கிறேனென்று அந்தக்கபட சந்நியாசியைக்கும்பிட்டு அழைத்துக்கொண்டு வழியில் ஒருவரோடொருவர் வேடிக்கையாய்ப்பேசிச்சிரித்துக்கொண்டே காரியமெல்லாம் சித்தமாய்ப் பயன்படுமென்று சந்தோஷத்துடனே பட்டணத்துக்குட்சென்று கிருஷ்ணன்முன்னம் அர்ச்சுனனைத்தன்வீட்டுக்கழைத்துக் கொண்டு போய்த்தன்மனைவிகளாகிய ருக்குமணி -சத்தியபாமைகளைக்கூப்பிட்டு நாணமுற்றுத் தலைவணங்கி நகைத்துக்கொண்டு நிற்கிறஅர்ச்சுனனைக்காட்டித் தானும்நகைத்துப்பார்த்தீர்களா இவர் மகாபெரிய சந்நியாசி மேலே தரித்துக்கொண்டிருக்கிற காஷாயத்துக்குச் சரியானரூபம் உள்ளத்திலேயுமுண்டு மகானுபாவர் சமையத்துக்குத்தகுந்தபடியிருப்பார் இவரிடத்தில் கபடகிலேசங்கிடையாது இவரின்னாரென்றுஇதுவரைக்குமொருவருக்குந்தெரியாது இவர்மெய்யான தனஞ்சயன்சந்தேகமில்லை இவருக்குநீங்கள் மருமகனுக்குச்செய்யத்தக்கவுபசாரங்களைச் செய்யவேண்டும் அண்ணாவின் உத்தரவின்படிசுபத்திரையினது கன்னியாமாடத்தில் இவரையிருக்கச்செய்து சுபத்திரையைப்பணிவிடை செய்யும்படிநியமிக்கப்போகிறேனென்று சொல்லவே அந்தருக்குமணீ முதலானபேர்களெல்லாம் கொங்கை குலுங்கச்சிரித்துக்கொண்டு-ஆம்-ஆம்-பார்க்கும்போதே தெரிகிறதுவெகுபெரியவர்தான் இப்படிப்பட்டவர் இனிகிடைக்கமாட்டார்சுபத்திரை நல்லபாக்கியஞ் செய்திருக்கிறாள் சந்தேகமில்லை இவரெப்படியிருந்தாலு மிருக்கலாம்போலிருக்கிறது சன்னாசத்துக்குப் பலன்கிடைத்தால்மறுபடியும் இல்லறத்தானாய்விடலாம், ஐயாதுறவியேவாரும்உட்காரும் தாம்பூலம் போட்டுக்கொண்டு வெகுநாளாயிருக்குமே இப்போது தாம்பூலம் போட்டுக்கொள்ளுகிறீரா, இனிபறவாயில்லை வந்தகாரியம் பலிக்கும், காஷாயத்தைக்களைந்து நல்லவஸ்திரம் உடுத்திக்கொள்ளும் நாங்கள் வெளிப்படுத்துகிறதில்லை மறுபடிபோகும்போது காஷாயங்கட்டிக் கொள்ளலாம் எங்கள்வீட்டிலேதான்முதலில் மருவுண்ணவேணும் ஆகையால்சாப்பிடுபிக்ஷை இன்றைக்குவேண்டாம்எப்போதும்நீர்உயர்ந்தவேஷம்போட்டால் பெண்கிடைக்கிறது எப்படியென்றால் பிராமணவேஷம் போட்டபோது துரோபதைகிடைத்தாள், தபசிவேஷம்போட்டபோது நாககன்னியும்-பாண்டியகன்னியும்கிடைத்தார்கள் அப்படியே இந்தச்சந்நியாசிவேஷத்துக்கும் பயன்கிடைக்குமென்றுபரிகாசமாய்ப்பேச அர்ச்சுனனும் சரிதான் உங்கள் நாயகருடைய சிநேஹபலத்தினாலேதான் எனக்குஇப்படிப்பட்ட சாமார்த்தியமேதவிரவேறில்லையென்றிவனும் பலவிதமாய்ப் பரிகாசவார்த்தைகளைப்பேச அந்தக்கண்ணனுடையமனைவிகள் அர்ச்சுனநெடுநாளாய்உன்னை எங்கள் வீட்டில்வரக்காணவேண்டுமென்று ஆசைகொண்டிருந்தோம் இன்றைக்குத்தான் அதுபலித்ததென்றுமிகவும் அன்புடனேபோஜனமுதலான உபசாரங்களைச்செய்தார்கள் பின்புகண்ணன் அர்ச்சுனனைக்கன்னியாமாடத்துக் கழைத்துக்கொண்டுபோய் தன்தங்கையையழைத்து இவர்மகாபெரியவர் நமதுதேசத்துக்கு அதிதியாய்வந்தவர் இவரை நீ உன்மாளிகையில்வைத்துப்பூசித்தால் மிகவும்நல்லதுஉனக்குநல்லபலன்கிடைக்கும் இப்படிதான்முற்காலங்களில் நமதுகன்னியாமாடங்களிலேவெகுபெரியோர்கள்வந்துதவஞ்செய்துகொண்டிருந்தார்கள் அவர்களையெல்லாம் நமதுசந்ததியில் பிறந்தஅனேகம் பெண்கள்பூசித்துவெகு நன்மைகளைப்பெற்றார்கள், ஆகையால்இந்தச்சந்நியாசியைநீவெகுபக்தியுடனேபூசித்துவரவேண்டியதாய் நம்முடையஅண்ணாநியமித்திருக்கிறார் ஆகையால்நீஇந்தப் பெரியவர்எந்தவேளையில் என்னசொல்லுகிறாரோ அதைத்தவறாமல்தகுந்தபடி போஜனமுதலானவைகளால் உபசாரஞ்செய்துவரவேண்டும் இவருக்குத்தவஞ்செய்யநமது தோட்டத்திலிருக்கும் கொடிகளால் கட்டியவீடுதகுந்ததாயிருக்கிறபடியினால் அங்கேயே வாசம்பண்ணிக்கொண்டிருக்கட்டும் என்றுசொல்லக்கேட்டுசுபத்திரையும் அப்படியேசெய்து இவர்சந்தோஷப்படும்படி நடந்துகொள்ளுகிறேனென்று சொன்னாள் அதுகேட்டுயாதவகுலதிலகராகிய கிருஷ்ணமூர்த்தியானவர் அந்தக்கபடசந்நியாசியைத் தோட்டத்திற்கு அழைத்துப்போய் இருக்கவேண்டிய விடங்களையுங்காண்பித்து சுபத்திரையையும் பணிவிடைக்கு அவரிடத்திலொப்புவித்து சந்நியாசியினிடத்தில் உத்தரம்பெற்றுத் திரும்பிஇச்செய்தியைத் தமையனாருக்கும் அறிவித்தார்.

பின்பு அந்தஅர்ச்சுனனானவன் தினந்தோறும் விடியற்காலமுதல் இராத்திரிசயனித்துக் கொள்ளுகிறவரைக்கும்சுபத்திரையினாலேவேண்டிய வுபசாரங்கள்செய்யப்பட்டுவருங்காலத்தில் இடைவிடாமல் சுபத்திரையைப்பார்த்துக்கொண்டிருப்பதினாலும் அவளோடுபேசுகிறதினாலும்அவளுடையநடைசிரிப்புபேச்சுமுதலாகியசெய்கைகளைக்காண்பதினாலும் அவளைக்காண்பதற்குமுன்னிருந்ததைவிடஅதிகமாககாமத்தீயானது எழும்பிஅந்தப்பாண்டுகுமாரனுடையமனதைஎரிக்கவே நாழிகைக்குநாழிகை தேகமானது இளைத்துவெளுத்துத்துவண்டுபோயிற்று

இவ்வாறாகக் காமநோயினாலே மிகவும் அவன்வருத்தமடைந்து மிருந்தாயத்தைச் சகிக்கமாட்டாமல்

பெருமூச்சுவிட்டுநீரிலமிழ்த்தியசுரைக் காயைப்போல் எவ்வளவு அடக்கினாலும் அடங்காமல்தனதுகபடம்வெளிக்குவர அதையெல்லாம்வெவ்வேறுபாவனையினால்மறைத்துக் கொண்டு தன்வேஷத்திற்குத் தகுந்ததாய் ஹரீ- மாதவா- கோவிந்தாவென்று கிருஷ்ணனையே கூவிக்கொண்டிருந்தான் - அந்தச்சுபத்திரையும் மனதிலே அர்ச்சுனன் பேரிலேயே நெடுநாளாய்காதல்கொண்டிருந்தாள்-அதேனென்றால்வசுதேவருடைய குமாரர்களில் ஒருவனாகிய கதன்என்பவன் முன்னொருக்கால்பாண்டவர்கள் பிறந்ததையும் அர்ச்சுனனுடைய ரூபம்சாமர்த்தியம் பெருமை முதலானவைகளையும் சுபத்திரைக்கு நன்றாய்ச்சொல்லியிருக்கிறான் அன்றியும்அந்தயாதவர்களுக்குள்ளே ஒருவரோடொருவர் வீரவாதம்பேசுங்காலத்திலே அந்தஅர்ச்சுனனே எனக்கு நிகரல்லவேநீஎவ்வளவென்றும் வில்வித்தைகற்குங் காலத்தில் நான்அர்ச்சுனனுக்கு அதிகமாயிறேன்பாரென்றும் எவனாகிலும் சௌரியத்தினால் கருவமடைந்தாலப்போது அவனைப்பார்த்து நீ என்னடா அர்ச்சுனனாக நினைத்துக் கொண்டாயோவென்றும்வில் வித்தைகற்கிற பிள்ளைகளைஆசீர்வதிக்குங்கால் அர்ச்சுனனுக்குச் சமானமாகக்கடவாயென்றும் அவ்விடத்தில் பேசுவார்கள் இதுகளையெல்லாம் சுபத்திரை பலதரம்கேட்டிருக்கிறவளாகையால்புருஷர்களுக்குள் அர்ச்சுனனே உயர்ந்தவனென்றெண்ணி அவனையேவிவாகம்பண்ணிக்கொள்ளவேண்டுமென்றுநினைத்திருந்தாள் ஆகலாலேகுருதேசத்தினின்றுயாராகிலும்வந்தால்அவர்களை அர்ச்சுனனுடையசரித்திரங்களைச் சொல்லச்சொல்லிக்கேட்டு அவர்கள்சொல்லுமளவில் மனதில்மிகவுங்களிப்படைவாள் அன்றியும்வெண்மையான வஸ்துவைக்குறித்துயாராகிலும் அர்ச்சுனனென்கிறசொல்லைச் சொல்லும்போது அதையுற்றுக்கேட்பாள் இன்னும்யாராகிலும் தவசிகள்-சோதிடர்குறிசொல்வோர்-முதலானபேர்கள்வந்தால் அவர்களுக்குஉபசாரஞ்செய்து நான்நினைத்திருக்கிற காரியம்கூடிவருமா வாராதாவென்றுகேட்டு அவர்கள்கூடிவருமென்றுசொல்லுமளவில்அர்ச்சுனனைவிவாகஞ்செய்துகொண்டதுபோலவே களித்திருப்பாள்.

இப்படிக்கெல்லாம்ஜாக்கிரத்திலும்-சொற்பனத்திலும்- அர்ச்சுனனைப்பாவனையினாலேகண்டு அவனிடத்திலேயேமனமழுந்தி யிருப்பவளன்றோ ஆனபடியினாலே தினந்தோறும் கபடசந்நியாசியையுற்றுப்பார்க்குமளவில் தான்கேட்டிருக்கிறபடியும் சொற்பனத்தில் காண்கிறபடியும் இவனுடைய ரூபமிருப்பதினாலும் கைகளில் நாணிரைச்சலாலுண்டாகிய காப்புக் காணப்படுகிறபடியினாலும் அர்ச்சுனன்தீர்த்தயாத்திரையாய் பிரபாசம்வரைக்கும் வந்திருக்கிறானென்றுகேட்டிருப்பதினாலும்அந்தயாதவப் பெண்ணின் மனதிற்சந்தேக முண்டாயிற்று அப்படியிருக்கஒருநாள்இந்தச் சந்நியாசியானவன்காலையில்ஸ்நானஞ்செய்துஆசனத்திலுட்கார்ந்துகொண்டு செபம்பண்ணிநிற்குந்தருணத்தில்வசுதேவருடையமகளாகியசுபத்திரைபோய்நமஸ்காரஞ்செய்து சுவாமி தேவரீர்வெகுதேசங்களையும் நதிகளையும் மற்றுமனேகங்களையும் கண்டவரானபடியினாலே அவைகளின்சரித்திரங்களைச் சொல்லவேண்டுமென்றுகேட்கஅர்ச்சுனனும்மிகவும் சந்தோஷித்துகாமப்பார்வைமுதலாகியவிலாசங்களுடனே அநேககதைகளையெல்லாஞ் சொல்லிவரநடுவில் குருதேசத்துச் சங்கதிவருமளவில் சுபத்திரையானவள் சுவாமிஅவடத்தில்முன் காண்டவப்பிரஸ்தமென்றும் இப்போது இந்திரப்பிரஸ்த மென்றும் பெயருடையபட்டணத்தில் எங்கள்நல்லத்தைகுந்திதேவியென்பவளைக்கண்டீரா அவளும்அவளுடையகுமாரர்களும் க்ஷேமமாயிருக்கின்றார்களா அவர்களில்துரோபதிக்காகஏற்பட்டநிபந்தனைபன்பிடி அர்ச்சுனனுக்குத் தீர்த்தயாத்திரைநேரிட்டதாமேஅந்தமகாபுருஷன்மகாசவுக்கியமா யிருந்தவர் நெடுநாளாய் வனாந்திரங்களில் திரிந்து கஷ்டப்பட்டுக்கொண்டு இந்தமழைக் காலத்திலேஎங்கேயிருக்கிறார் தேவரீரும் தீர்த்தயாத்திரை வந்தவராகையால் அவரைஎங்கேயாகிலும்கண்டதுண்டா அல்லது கேட்டதுண்டா இதுகளையெல்லாம் தயைசெய்துசொல்லவேண்டுமென்று கேட்கும்போது அர்ச்சுனன்குறிப்பினாலே அவளுக்குத்தன்னிடத்தில்ஆசையிருப்பதையறிந்து மிகுந்தகாமவெழுச்சியினால்உடம்பெல்லாம் மயிர்க்கூச்சடைந்து நடுக்கமுறத்தொனிதழதழக்கச்சிறுநகைப்புடனே சொல்லுகிறான் அடியதுகுலத்தோர்தவத்திலுதித்த மின்னரசேஉங்களத்தை யாகிய குந்தியைக்கண்டேன் க்ஷேமமாயிருக்கிறாள் அவர்புத்திரர்முதலானபேர்களும் க்ஷேமமாயிருக்கிறார்கள் அந்தஅர்ச்சுனனோ தீர்த்தயாத்திரைமுடிந்தும் இன்னும்தன்தேசம்போய்ச் சேரவில்லை ஆனாலெங்கே யிருக்கிறானென்றால் இப்போது துவாரகாபட்டணத்திலேயேசந்நியாசிவேஷம்பூண்டு ஒருவருக்குந்தெரியாமல் வாசஞ்செய்து கொண்டிருக்கிறான் அடிபொற்கொடியேநீதினம்பார்த்துக் கொண்டிருக்கச்சேயும் அவனையறியாமலிருக்கிறாயென்று சொல்லக்கேட்டுச்சுபத்திரை திடுக்கிட்டாப்போல்பெருமூச்செறிந்து முகத்தைவணங்கிக்கொ

ண்டு தனையைக்காலால் சேதிக்கொண்டுநின்றாள், இப்படிநிற்குமிவளைக்கண்டு அர்ச்சுனன்மிகவன்புடனே அடிபூங்குழலே, நான்தான் அர்ச்சுனன் உனக்கெப்படி என்னிடத்தில்கருத்திருக்கின்றதோ அப்படியே எனக்கும் உன்னிடத்தில் பதின்மடங்கதிகமாய்க்கருத்தமைந்திருக்கிறது உனதுபணிவிடைக்குக் காத்திருக்கிறேன், நல்லநாளிலேதருமவிதிப்படி சாவித்திரியென்பவளைச் சத்தியவானென்கிறவன் விவாகஞ் செய்துகொண்டதுபோல்உன்னைவிவாகஞ்செய்துகொண்டு உன்னுடன்கூடிவாழ்வேனென்றுசொல்லிக் கொடிகளால் கட்டிய அறைக்குள்ளேபிரவேசித்தான்.

பின்புசுபத்திரையானவள் மிகவும் மதிகலங்கி மெய்துவண்டு தன்துபள்ளியறைக்குள்ளேபோய் கட்டிலின்மீது சயனித்துக்கொண்டு மூர்ச்சையடைந்தவள்போல் ஒன்றுந்தெரியாமலிருந்தாள் இப்படியிருக்க ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் இச்செய்தியையெல்லாம் தமதுபேரறிவினல்அறிந்து சுபத்திரைக்கும் அர்ச்சுனனுக்கும் போஜனமிடும்படி ருக்குமணிதேவியையனுப்பஅவளும்இருவருக்கும் போசனத்தைக் கொணர்ந்து பரிமாறி இவ்விருவருடையமனேவியாதியை முற்றுமறிந்துபோனுள், அர்ச்சுனனும்அந்தக்கொடியரையிலேயேயிருந்துகொண்டு உன்மாதம்பிடித்தவன்போலிருந்தான்.

இப்படியிருக்குமளவில் சூரியன் அஸ்தமயத்தையடையவே அர்ச்சுனனையும் சுபத்திரையையும் மோகமென்பது கௌவிக்கொண்டதுபோல்இருளானதுபூமியைக்கவ்விக்கொண்டது, அதைப்பார்த்தால் ஒருவன் மிகுந்தபுண்ணியஞ்செய்துசுவர்க்கலோகமடைந்துமகாபோகங்களையெல்லாமனுபவித்து அந்தப்புண்ணியம் நீங்குமளவில் மறுபடியும் அவனைப் பிறவிப்பாவம் சூழ்வதுபோலிருந்தது. உடனே ஆகாசத்தில் நட்சத்திரங்கள் புறப்பட்டன. அதைப்பார்க்குமளவில் சுபத்திரையின் திரேகத்துவெப்பம்வீசி ஆகாயத்தில்கொப்பளங்கள்புறப்பட்டனபோல்தோன்றிற்று. குளிர்ச்சியும் வெண்மையுமுடைய கிரணங்களைவீசி இருளைத் துரத்தியடித்துக்கொண்டு சந்திரன்உதயமாகியதைப்பார்த்தால் முகத்தினழகினலே தன்னை ஜயித்தவளாகிய சுபத்திரையைத் தன்தோழனுகிய மன்மதன்மிகவும்வருத்துகிறனே இத்தருணத்தில் நாமும்போய் வருத்தி அவள் முகத்தை வாடச் செய்யவேண்டுமென்று வந்ததுபோல் தோன்றிற்று.

இவ்வாறாகச்சந்திரன்உதித்து நிலவுவிளங்குமளவில் அந்தயதுகுலப்பெண்ணானவள் மன்மதன்பிரயோகிக்கிறபுஷ்பபாணங்களினலே தேகமெல்லாம்துளைக்கப்பட்டுச்சகிக்கமாட்டாமல் தான்சயனித்திருக்கிறபுஷ்பசயனமெல்லாம் கருகிப்போகும்படியாகியதாபத்தையடைந்து மூக்கினுனியில்அணிந்திருக்கிற ஆணிமுத்துநீலமணிபோலாகும்படியாகிய பெருமூச்சு விட்டுக்கொண்டு தன்னைத்தொந்தரவுசெய்கிறமன்மதனையும், அவனுடையதோழனுகிய சந்திரனையும் குயில்களையும், தூஷித்து மெய்சோர்ந்து மூர்ச்சித்துக் கிடக்கவே அவளுடைய தோழிமார்களெல்லாம் இதைக்கண்டு விசனமடைந்து தேவகீதேவிக்குஅறிவிக்க, அந்த அம்மனும் ஓடிவந்து மகளைப்பார்த்து மிகுந்ததுயரத்துடனே பெண்ணே நீயேன்இப்படிவருந்துகிறாய் உனக்குண்டாகிய வியாதிக்குத்தகுந்தசிகிச்சைசெய்விக்கிறேன் தைரியத்தையடைந்துநீஇப்போதிருக்கிறபடி இன்னஞ்சிலநேரம்இருப்பாயேயாகில் நாங்களெல்லாம் பெண்ணையிழப்பது மன்றி உயிரையுமிழப்போம் ஆதலால்மகளே கொஞ்சந்தைரியமடைந்து உயிரைக்காப்பாற்று உன்கருத்தை உன்னண்ணன்மார் தகப்பனர் முதலானவர்களுக்கும் தெரிவித்து அப்படியேநடத்துகிறேன் துயரப்படாதேயென்று சொல்லி வசுதேவரிடத்திற்குவந்து ஏகாந்தத்தில் அவரைப்பார்த்து கேட்டீரா நமதுதோட்டத்தில்வந்திருக்கிறசந்நியாசி அர்ச்சுனனென்றுதெரியவருகிறது அதினலேநம்முடைய சுபத்திரை அவனிடத்தில்காதலாலேமிகுந்தவருத்தமடைந்திருக்கிறாள், ஆகையாலே இதற்குத்தகுந்தயோசனை செய்யவேண்டுமென்று சொன்னாள். வசுதேவரும் அதை அக்ரூரன்-ஆகுகன்- கிருஷ்ணன் முதலாகியபேர்களுக்குந் தெரிவித்தார், அதுகேட்டு உக்கிரசேனன் அக்ரூரன்-கதன்-சினி-கிருஷ்ணன்-பிதுருசிரவன்-தேவகீ-ரோகிணி - ருக்குமணி-சத்தியபாமை-அவர்களெல்லாங்கூடி, நன்று யோசித்து ரகசியமாகப் புரோகிதரையழைப்பித்து இதை யவருக்கும் அறிவித்து அவர்யோசனையையும்கேட்டுக்கொண்டு பன்னிரண்டாவதுநாளில் முகூர்த்தம்வைத்துக்கொண்டார்கள்.

பின்பு ஸ்ரீகிருஷ்ணன்இந்தப்பெண்ணை அர்ச்சுனனுக்குக்கொடுக்கப் பலராமர்-உத்தவர் முதலானவர்களுக்குச் சம்மதியில்லாமையால் அவர்கள்இச்செய்தியறியாதிருக்கவேண்டியதற்காகயோசித்து ஒருவிளம்பரஞ்செய்து பறைசாற்றுவித்தார். அதாவதுநம்முடையசுபத்திரைக்குத் தேகத்திலென்னமோ தெய்வீகமாய்உபத்திரவம்உண்டாயிருக்கிறபடியினலே சமுத்திரத்தின்நடுவிலிருக்கிறதீவில் சிவனுக்குமுப்பத்துநாலுநாள் மகாவுச்சவம்நடக்கப்போகிறது அதற்காகஇன்றைக்கு நாலாநாளேயாவரும் தங்கள் குடும்பங்களுடனே அந்தத் தீவு போய்ச்சேரவேண்டியது அன்றியும் யாதவர்களும்தங்கள்தங்கள் சேனைகளுடனேபோய்ச் சேரவேண்டியதென்பதுகேட்டுப் பலராமர்முதலாகிய சகலயாதவர்களும் பட்டணத்தி லிருக்கும் ஜனங்களும் வஸ்திராபரணங்க

ளைப்பூண்டு குதூலகத்துடனே அழகாகிய சீலைகளைக்கட்டிய கொடிமரங்களுடனேகூடி நல்லயந்திரங்களுடைத்தாய் உட்காரவும் படுக்கவும் விளையாடவும் உபயோகமாயிராநின்ற விடங்களையுடைய கப்பல்களின்மேலேறிஅந்தத்தீவுபோய்ச் சேர்ந்தார்கள்.

இப்படியிருக்க சுபத்திரையானவள் ஸ்ரீ கண்ணனிடத்திற்குவந்து அண்ணாநம்முடைய தோட்டத்திலிருக்கிறசந்நியாசி இன்னம் பன்னிரண்டுதினங்க ளிவ்விடத்திலேயேயிருக்கப்போகிறாராமே அவருக்குச் சிஸ்ருஷையார்செய்வார்களென்ன ஸ்ரீகண்ணனும் அம்மணி உன்னையல்லாது யார்செய்வார்கள் நீயே செய்யவேண்டுமென்றுசொல்லி பேரிகைமுதலாகிய வாத்தியங்களுடனே புறப்பட்டுக் கப்பலேறி ஏழுயோசனைஅகலமும்பத்துயோசனைநீளமுமுள்ள அந்தத்தீவையடைந்து எல்லாருடனேகூடி அவ்விடத்துத் திருவிழாவை நடத்தினர். அப்போதுசகலமானபேர்களும் தானதர்மங்களைச் செய்துவேடிக்கையாய் தோட்டங்கள்-அணைகள்-குளங்கள் வாவிகள்-முதலானவிடங்களிலே வாசஞ்செய்து திருவிழாபார்த்துச் சந்தோஷமடைந்துகொண்டிருந்தார்கள்.

இவ்வாறாக முப்பத்துநாலுநாள் அங்கேஉச்சவம்நடந்துகொண்டிருந்தது இப்படியிருக்க அர்ச்சுனனானவன் காரியம்சித்தமாயிற்றென்று மனதிற்சந்தோஷ மடைந்துசுபத்திரையைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறான்;அடிதேன்மொழியே இப்பொழுது உன் தகப்பனார் முதலியயாவரும் திருநாள்பார்க்கப் போயிருக்கிறார்கள் இந்தச்சமயத்திலேதான் நாம்விவாகஞ்செய்துகொள்வதுயுத்தமம் ஆனால்விவாகங்களைப் பெரியோர்கள்பலவிதமாய்ப்பேசியிருக்கிறார்கள் என்னுடையபந்துக்களோ தேசாந்திரத்திலிருக்கிறார்கள் உன்னுடைய பந்துக்களும்யிப்போது தேசாந்திரத்திலிருக்கிறார்கள் ஆகையால் அந்தஎட்டுவித விவாகங்களுள்ளும் ஐந்தாவதாகியகாந்தருவமென்பதுதான் நமக்குஇப்போது இசைந்ததாய்க் காண்கிறது அன்றியும்கன்னிகையைஒருவனுக்குக்கொடுப்பதற்குமுறையே தகப்பன்-உடன்பிறந்தான்-தாயா; அம்மான் தகப்பனுடன்கூடப்பிறந்தவன் - ஆசாரியன்; இவர்களெல்லாம் அதிகாரிகளாயிருக்கிறார்கள். அன்றியும்பெரியோர்கள்விவாகமுறைமையைக்குறித்துச்சொல்லியதைக் கொஞ்சம்சொல்லுகிறேன்கேள் பெண்ணை பெற்றவன் யோக்கியனையழைத்து விதிப்படிகன்னிகையைக்கொடுத்தால் அந்தக் கன்னிகை பத்தினியென்கிற பெயருடையவளாகிறாள் ஒருபெண்சாதி மரித்தபின்தன்னையும் தன்னை அடுத்தபேர்களையும் காப்பாற்றுகிற நிமித்தம் தானேயொருபெண்ணைத்தேடிக் கல்யாணஞ்செய்துகொண்டால் அந்தப்பெண்பாரியையென்றுபெயருடையவளாகிறாள், பிள்ளைகளுக்குத்தகப்பனானவன் குலமுதலானயோக்கியதையுள்ளகன்னிகையைத்தேடிவிவாகஞ்செய்வித்தால் அந்தக்கன்னிகைதாரமென்றுபேருடையவளாகிறாள், சந்ததிநிமித்தமாகஒருவன்ஒருபெண்ணைவிவாகஞ்செய்துகொண்டால் அவள் வசியையென்றுபெயருடையவளாகிறாள். அல்லாமலும்அவளுக்குஜாயையென்கிறபேருமுண்டு, இப்படியிருக்கிறபடியினாலே ஆசையுள்ளபெண்ணை ஆசையுள்ள புருஷன்ரகசியமாய்ச்சேருகிறது தருமமாயிருக்கிறது, அடிமான்விழியே இப்போது நான்சொல்லுகிற காந்தருவவிவாகமானது அக்கினிமுன்பாகச் சடங்குகள்நடத்திசெய்து கொள்ளத்தக்கதாகாமற்போனாலும் நீதயைசெய்து அதைஅங்கீகரிக்கவேணும், ஏனென்றால் உச்சவத்திற்குப்போயிருக்கிற பேர்களெல்லாம் வராமலிருப்பதற்கு முன்னமேநல்லநாள்உத்தராயணம்-வைசாகமாசம்சுக்கிலபக்ஷம்ஹஸ்தநக்ஷத்திரம்-திரிதீயைதிதி- மகரலக்கினம் பவகரணம் - மைத்திரமுத்தம்- இவைகளெல்லாம் கலியாணத்திற்கு எடுத்தமுகூர்த்தங்கள் இவையெல்லாம் இன்றிராத்திரி இசைந்திருக்கின்றன சூரியபகவானும் அஸ்தமயத்துக்குச்சமீபித்திருக்கிறார்ஆகையால்நீமனதைப்பெரிதுபண்ண வேண்டும், ஸ்ரீகிருஷ்ணனேசர்வமும் அறிந்தவர்தான். ஆனால்இந்தவிஷயத்தை யறிந்திருக்கிறாரோஇல்லையோதெரியவில்லையேஇவ்விதமாகத்தருமசங்கடமடைந்து காமனால் வருத்தப்பட்டுப்புலம்பாநின்றஎன்னைக்காப்பாற்ற என்னயோசிக்கிறாயோசொல்லடி கண்ணே யென்றர்ச்சுனன்சொன்னசொலலைக்கேட்டுச் சுபத்திரைகண்ணனைமனதில் நினைத்துஒன்றுஞ் சொல்லாமற் கண்ணீர்மல்கநின்றுகொண்டிருந்தாள்அர்ச்சுனனும் பரிதாபத்துடனே கொடிவீடுசென்றுதன்பிதாவாகியஇந்திரனைநினைத்தான்.

## அருச்சுனமகாராஜனுக்கும்-சுபத்திரைக்கும்

## திருக்கலியாண விபவம்.

இப்படி அர்ச்சுனன் நினைத்தமாத்திரத்திலேதேவேந்திரனானவன் -இயமன்-வருணன்-குபேரன் - அக்கினி வாயு-சூரியன்-சந்திரன்-அஷ்டவசுக்கள்- ஏகாதசருத்திரர்-சித்தர்-சாத்தியர்-கின்னரர்-கிம்புருடர்- முதலாகிய

சகலதேவர்களோடும்,நாரதர்,வசிஷ்டர்-முதலாகியரிஷிகளோடும்,சசிதேவிமுதலாகியதேவ ஸ்திரீகளோடும்கூடிஐராவதத்தின்மீதிலேறிக்கொண்டுதன்மகனிருக்குமிடம்வந்து சேர்ந்தான், கிருஷ்ணனும் சுபத்திரையின்நினைவையறிந்து, அக்ரூரன்-ஆருகன்-கதன்- வசுதேவன் தேவகி-ரோகிணி, ருக்குமணி,சத்தியபாமை-முதலாகியவர்களையும் அழைத்துக்கொண்டுபலராமர் முதலானபேர்கள் தூங்கிக்கொண்டிருக்குந் தருணத்திலே புறப்பட்டுஅவ்விடம்வந்துசேர்ந்து தேவேந்திரன்முதலானபேர்களைக்கண்டு நமஸ்காரஞ்செய்து நல்லவரவுகேட்கதேவராஜன்முதலானவர்களும்க்ஷேமவிடைகொடுத்துக்கிருஷ்ணனைப் பார்த்து நல்லது ஏன்சாவகாசம் பண்ணுகிறீர்சீக்கிரத்தில் காரியத்துக்கு யத்தனப்படவேண்டுமென்று சொல்லவே கிருஷ்ணனும் தம்முடையவர்களைக்கொண்டு கலியாணத்துக்குவேண்டிய சகலசாமக்கிரிகைகளைச் சித்தப்படுத்திதேவர்களுக்கு விண்ணப்பஞ்செய்யதேவராஜன்தன்மகனுக்குமங்களஸ்நானஞ்செய்வித்து நவமணிகளிழைத்துப் பளபளெனவிளங்கும், கிரீடம்-தோள்வளை-ஆரங்கள்வளைகள்-முதலானபலவாபரணங்களும், திவ்வியபீதாம்பரங்களாலும் அலங்காரஞ்செய்து நாரதர்-வசிஷ்டர்-முதலான மகாமுனிகளைக்கொண்டு சுபச்சடங்குகளைச் செய்வித்துநிற்க, கிருஷ்ணனும் தன்தங்கைக்கு நல்லஅலங்காரஞ்செய்வித்துச் சித்தம்பண்ண, சகலவாத்தியமுழக்கத்துடனே பெண்ணையும் பிள்ளையையும் கலியாணமண்டபத்து நடுவேரத்தினங்களழுத்தியபொற்பீடத்தி லுட்காரவைத்துக்காஸ்யபமகாமுனிவர் விதிப்படிஅக்கினியைவளர்த்தி ஓமஞ்செய்ய வதிஷ்டர்முதலாகியரிஷிகளெல்லாம்மந்திரங்களைக்கோஷிக்கநாரதர்முதலாகியரிஷிகளெல்லாம்சபையாய் வேதிகையைச் சூழ்ந்துட்கார்ந்திருக்க, அருந்ததிமுதலாகிய ரிஷிபத்தினிகளும் - இந்திராணிமுதலாகியதேவபத்தினிகளும்-தேவகிருக்குமணி- சத்தியபாமைசாம்பவதி-முதலாகிய யாதவபத்தினிகளும் பாலிகைகளில் விரைகளைவிதைத்துப் பால்கலந்தநீரிடவும் பூரணகும்பங்களும் தீபங்களுமேந்தி மங்கலப்பாடல்களுடனே சூழ்ந்துவரவும் தேவதுந்துபிமுதலாகியபதினெட்டு வாத்தியங்களுமுழங்க அரம்பைஸ்திரீகள் நர்த்தனஞ்செய்ய கந்திருவர்முதலானபேர்களெல்லாம்பாடமகாவிபவமாகக் கலியாணத்தை இந்திரன் ஸ்ரீருஷ்ணன் முதலாகியபேர்கள் நடத்தினார்கள். அர்ச்சுனனும்புரோகிதர் சொற்படியே ஸ்ரீகிருஷ்ணனும் ருக்குமணியுமாகத்தாரைவார்த்து கன்னிகாதனஞ்செய்ய சுபத்திரையைக்கைப் பிடித்துக்கொண்டு அக்கினியையும் வேதிகையையும் ரிஷிகளையும் வலம்வந்து உட்கார்ந்துமங்கிலியங்கட்டி அம்மிமிதித்துப் பொரியிட்டுச் சந்தோஷத்துடனே விவாகஞ்செய்து கொண்டான் உடனேஸ்ரீகிருஷ்ணன்-நாரதர் - காசிபர்-வதிஷ்டர் முதலாகியமகாரிஷிகளையும் அருந்ததிமுதலாகியரிஷிபத்தினிகளையும்பூசித்துப்பலதானங்களும் வழங்கிஇந்திரன் முதலாகிய தேவர்களும் இந்திராணிமுதலாகிய தேவஸ்திரீகளுமாகிய சம்பந்திகளுக்குச் சகலவுபசாரஞ்செய்து பூசித்துச் சகலருக்கும்விருந்துசெய்துநிற்கஅர்ச்சுனன் தன்பெண்சாதியுடனே ரிஷிகளையும் அவர்களுடைய மனைவிகளையும் நமஸ்கரித்துஅவர்களால்ஆசீர்வாதம்பெற்றுப்பின்புஇந்திரன்முதலாகியதேவர்களையும் அவர்மனைவிகளையும்நமஸ்காரஞ்செய்யஅவர்களெல்லாம்பெண்ணுக்குத்தகுந்தபிள்ளை பிள்ளைக்குத்தகுந்தபெண்இப்படியமைந்தது அதிசயமாகையால்ஒருகுறைவுமின்றி இவ்விருவரும் நன்மக்களைப்பெற்று நற்செல்வங்களடைந்து நல்லோர்களுக்குதவி செய்துகொண்டுநெடுநாள் வாழ்கவென்று ஆசீர்வாதஞ்செய்துமணக்கோலத்துடன் விளங்காநின்றமகனையும் மருமகளையும் எடுத்துமுத்தமிட்டு உச்சிமோந்து மருமகளுக்குப் பலபணிகளும் வழங்கினார்கள்.

பின்பு அர்ச்சுனனும்சுபத்திரையும் வசுதேவர்தேவகிமுதலானவர்களை நமஸ்கரித்துஅவர்களாலும் பலஆசிநள்கூறப்பட்டு மணவிருந்துமிடப்பட்டார்கள் இப்படிக்குக் கலியாணம்நிறைவேறியபின்னே இந்திரன்முதலானபேர்களெல்லாம் யாதவர்களிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு தங்கள்பதிபோய்ச்சேர்ந்தார்கள் ஸ்ரீகிருஷ்ணனும் அர்சுனனைக் கூப்பிட்டுநீகல்யாணத்தைச் சேர்ந்தமற்றதீக்ஷையைநிறைவேற்றிப்போட்டு இன்னும்இருபத்திரண்டு தினத்திற்குள்ளாகவே நீசுபத்திரையை அழைத்துக்கொண்டு நமது தேரின்பேரிலேறி இந்திரப்பிரஸ்தம்போய்ச்சேர்ந்துவிடு அன்றியும் இவ்விடத்தில் நீயிருக்கிறவரைக்கும்சங்கியாசிவேஷத்தோடேயிருக்கவேண்டும் நாங்கள்பலபத்திரர்நித்திரை விட்டுயெழுந் திருக்குமுன்னமேஅவ்விடம்போகவேண்டுமாகையால் சிலவுகொடு என்றுசொல்லிசுபத்திரைக்கும்திட்டஞ்செய்துசகலயாதவர்களோடுபுறப்பட்டுத்தீவுபோய்ச்சேர்ந்துவிட்டார்.

பின்புஅர்ச்சுனன்சுவர்க்கராச்சியமடைந்தவன்போல் மகாசந்தோஷத்துடனே சுபத்திரையோடு கூடிப்பலபோகங்களையு மனுபவித்துக்கொண்டு மகாநந்தியடைந்து இருபத்தொருநாள் கழித்தவுடனேதன் மனைவியாகியசுபத்திரையையழைத்து அடியென்பிராணநாயகி, இனிநாம்கிருஷ்ணனுடைய உத்தரவின்படி இந்திரப்பிரஸ்தம்போய்ச்சேரவேண்டுமாகையால் நீஇன்றைக்குவிரதமுடிவுநாளென்றுசொல்லி வேதியர்முதலானபேர்க

ளுக்கு அன்னதானமுதலாகிய பலதானங்களையுஞ் செ
ய்துநீயும்உன்தோழிமார்களுடனே நல்லபூஷண முத
லானவைகளால்அலங்கரித்துக்கொண்டுவேடிக்கையாய்
ப்புசித்துநகரியைப்பிரதட்சிணம் வரவேண்டுமென்று
சகலஆயுதவர்க்கங்களோடுகூடியதிவ்வியரதத்தைச்சித்
தப்படுத்திக்கொண்டு வாவென்றுசொல்ல அந்தப்பூங்
கொடியும் அப்படியேயோக்கியர்களாகிய பிராமணரைய
ழைப்பித்து அவர்களுக்கு அன்னவஸ்திரதட்சிணை தா
ம்பூலமுதலானதுகளையெல்லாங்கொடுத்துப்பூசித்துஅ
வர்களால் ஆசீர்வாதங்களைப் பெற்றுக்கொண்டு பின்பு
தன்பந்துகள்தோழிமார்கள் முதலானபேர்களோடுசேர
சல்லாபங்களுடனேபோசனஞ்செய்து அவர்களுக்கு
ம்சிலபரிசுகொடுத்து ராஜாவின் ஊழியக்காரரையழை
த்து நமதுரதத்தைச்சகல ஆயுதவர்க்கங்களோடுநன்று
ய்அலங்கரித்துக் கொண்டுவாருங்களென்ன அவர்களு
ம்அப்படியே அலங்கரித்துக்கொண்டுவர அதில்தன்வ
ஸ்திரமுதலானவைகளைதாதிகளைக்கொண்டு ஏற்றிவித்
து அர்ச்சுனனிடத்திற்குவந்து என்பிராணநாயகனேஉ
மது வுத்தரவின்படிஇரதத்தைச்சித்தப்படுத்தினேனெ
ன்று சொல்லவே மிகவுஞ் சந்தோஷத்துடனேஅவளை
க்கட்டி முத்தமிட்டுக்கொண்டு போவோம் வாவென்ற
ழைக்கஅப்போது அவள்தன்நாயகனைநோக்கி என்னு
யிராகிய புருடசிங்கமே அடியாள்விண்ணப்பத்தைக்
கேட்டங்கீகரிக்க வேண்டும். அதாவதுகுதிரைகடிவாள
ம்பிடித்து தேர்நடத்துவதில் எனக்குச்சமானமொருவ
ருமிப்பூமண்டலத்திலில்லையென்பார்கள்ஆகலால்நான்
சாரத்தியஞ்செய்கிறேன்அதைஅங்கீகரிக்கவேண்டுமெ
ன்ன. அப்பாண்டவவீரன் பெண்ணரசேமிகச்சந்தோ
ஷமாயிற்று ஆனல்முன்னேபோ யேறென்றுசொல்லி
த் தான்காஷாயங்களைக்களைந்து திவ்வியவஸ்திரந்தரித்
துக்கவசகுண்டலகேயூரங்களையுமணிந்து கத்திகேடய
முதலாகிய ஆயுதங்களுங்கட்டித் தூணிகளைத்தோட்க
ளில்தாங்கி கையில்வில்பிடித்துக் கோடிசூரியப்பிரகாச
மாய் முன்னமேறிக் கடிவாளங்களைக் கைப்பிடித்துநிற்
குஞ் சுபத்திரையினல் விளங்காநின்ற தேரிலேறினன்
இவனேறியமாத்திரத்திலே சுபத்திரைகுதிரைகளைச்ச
வுக்கினலடிக்க அந்தஉத்தமஅசுவங்கள் கருடனும்காற்
றும்தோற்றுப்போகும்படி தேரையிழுத்துக்கொண்டு
போகுமளவில் மாரிகாலத்தில் வானத்திலே மேகங்கள்
முழங்கினலெப்படியிருக்குமோ அப்படிபோலேகிடு கி
டென்று இரதம்கோஷித்துக்கொண்டு செல்லச்சுபத்தி
ரையின் தோழிகள்அவளைப்பார்த்து எமதன்புடையநா
யகீஉனக்குத்தகுந்தபுருஷன் கிடைத்ததற்காகவும்நீஅ
வனேடுகூடவாழ்தற் காகவும்சுவாமியைத்தோத்திரஞ்
செய்கிறேம் அன்றியும் நீமகனைப்பெற்று மகராஜியா
ய்வாழுங்காலங்கள் உன்னைப்பார்க்கும்படி நீ தயை
செய்யவேண்டுமென்று சொல்ல இரதவிரைச்சலைக்கே
ட்டுப் பட்டணத்திலும் அரண்மனையிலுமுள்ள அநேக
ர்ஓடிவந்துபார்த்து நமதுசுபத்திரையையாரோ எடுத்து
க்கொண்டு போகிறுனென்று ஓவென்றுகூச்சல்போட
யாவரும் கும்புகூடியாரடா இவன் நாமெல்லாமிருக்கஅ
ரண்மனையிற்புகுந்து பெண்ணைஎடுத்துக்கொண்டுபோ
கிறுன் என்ன சிலர்இவன்அரண்மனைத்தோட்டத்திலி
ருந்தசந்நியாசியாமென்ன ஆமாம்முன்னமேஅந்தச்சந்
நியாசியைப் பார்க்கும்போதே சந்தேகமுண்டாயிருந்த
து சரியாய்முடிந்ததென்ன சிலர்இவன்பாண்டவரில் ஒ
ருவனுகிய அர்ச்சுனனுமென்ன யாவரும்சரிதான் அவ
னுய்த்தான் காண்கின்றது என்றுபேசிக்கொண்டேஆ
யுதங்களைவீசிப்பின்றொடர்ந்தோட அர்ச்சுனனும்அவ
ர்களாயுதங்களைத்தடுத்துக்கொண்டேபோக இரதம்நா
வதக்கிரிக்குச்சமீபத்தில்போகும்போது அர்ச்சுனன்தா
னிருந்த குகையைத் தன்காதலிக்குக்காண்பிக்க அவளு
ம்நல்ல குகையிது அதைநான்நமஸ்கரிக்கவேணுமென்
றுகொங்கைகுலுங்கச் சிரித்துக்கொண்டே விரைவாய்
த்தேரையோட்டினுள்.

இப்படியிருக்கப் பட்டணத்தைக் காக்கிறநிமித்தம்
ரைவதைப்பருவத்தினருகில் வைக்கப்பட்டிருக்கிறவிபி
ருதுஎன்பவ னித்தேரிரைச்சலையும் பட்டணத்தாரிரை
ச்சலையுங்கேட்டு ஓடிவந்துபார்க்கச் சனங்களெல்லாம்
ஐயையோ அர்ச்சுனன் சந்நியாசிவேஷம்போட்டு மோ
சஞ்செய்து நமதுகுலத்துக்குஇலக்குமி போலிருந்தசு
பத்திரையைத்தூக்கித்தேர்மேல் வைத்துக்கொண்டோ
டிப்போகிறுனென்று கூவுதலையுங்கேட்டுச் சுபத்திரை
தேரோட்டுகிறதையும்பார்த்துமுன்னம் கண்ணன்சொ
ன்னசங்கதியையறிந்திருந்தவனுனலும் வெளிக்குக்கா
ட்டக்கூடாதென்று மிகவிரைவாய்த் தன் சேனைகளைச்
சன்னைப்படுத்திசரமாரிபொழிந்துகொண்டேபின்றொ
டர்ந்தான்.

இவ்வாறுகப் பின்தொடர்ந்து வருவதைக்கண்டு சுப
த்திரையானவள் தன்கணவனைநோக்கி அதோநால்வகை
ச்சேனைகளுடனே விபிருதுதுரத்திக்கொண்டுவருகிறு
ர்அவர்களுடனேஉமக்குயுத்தம்நேரிடுங்கால்நெடுநாளா
ய்என்மனதிலிருந்தகோறிக்கையீடேறுமென்றுசந்தோ
ஷப்படுகிறேன் அதென்னகோறிக்கையென்றால் மகாப
லபராக்கிரமங்களுடைய அர்ச்சுனனுக்கு நாம்யுத்தத்
திலே சாரதியாகி நமது சாமார்த்தியங்களை யெல்லா
ம்உபயோகப்படுத்த வேணுமென்றதுதான் என்றுசொ
ல்ல அர்ச்சுனனும் பெண்ணே மிகவும்சந்தோஷமாயி
ற்று இப்படிப்பட்டசாரதியையடைந்த வீரனுகியஎன்
புஜபலபராக்கிரமத்தைப் பார்த்து நீசந்தோஷப் பட்க

கடவைசேனைகள் வரட்டும் தேரையோட்டென்று சொ
ல்லவே அவளும் தேரைசீக்கிரமாய் ஒட்டினள்.

விபுருதுவனுக்கும்அர்ச்சுனனுக்கும்யுத்தம்.

இப்படிக்குத்தேர் பட்டணத்தைவிட்டுச் சீக்கிரமாய்
ப்போவதைக்கண்டு விபுருதுவானவன் வில்லைவளைத்து
நாணேறிட்டு நாணோசைகொண்டு வரிசை வரிசையாய்
அம்புகளைத் தொடுத்துவிட அர்ச்சுனனும் தன்வில்லி
ல்நாணிபூட்டி பாணங்களைச் சந்தானஞ்செய்துதன்பே
ரில்எதிரிவிட்டபாணங்களை யறுத்துத்தள்ளவேவிபுரு
துகோபங்கொண்டு மறுபடியும் மகா கூர்மை பொருந்
தியசிலபாணங்களைத் தொடுத்துவிடஅவைகளைத்துண்
டந்துண்டமாய் அறுத்துஎதிரியைக் கண்விழித்துப்பா
ர்க்கவொட்டாமல் சரங்களைப்பொழியவேசேனைகளெல்
லாரும் ஒரேமுகமாய்த் திரும்பி சூழ்ந்துகொண்டுகோ
டைகாலத்திடிபோல்கர்ச்சித்துக்-கத்திகள்-ஈட்டிகள்-சூ
லங்கள்- குண்டாந்தடிகள்-முதலான பலவாயுதங்களைச்
சுழற்றியெறிய, யானைகள்- உலக்கைகளைத் துதிக்கைக
ளாற் பற்றிசுழற்றித் தேரின்பேரில்மோத, குதிரைகள்
தங்கள்பேரிலிருக்கிற வீரர்களைத் தூக்கிக்கொண்டுபா
ய்ந்துதேர்க்குதிரைகள்மேல்விழ ரதங்களிலிருக்கும்வீ
ரரெல்லாம் விற்களைவளைத்து அம்புகளைத்தொடுத்துச
ரமாரிபொழிய, அந்தச்சேனைகளுக்குத்தலைவனாகியயா
தவவீரன் சங்கையெடுத்துப் பூரித்துச் சிங்கநாதஞ்செ
ய்து மிகலாவண்ணியத்துடனே வில்லில் அம்புகளைப்
பூட்டி மலையின்பேரில் மேகம் மழையைப் பொழிவது
போல்அத்தேரின்பேரில்பாணவருஷங்களைவருஷித்து
எள்ளளவுசந்துந்தெரியாமல் மறைத்து விடுமளவில்அ
ர்ச்சுனன் மிகவுமாக்குரோஷத்துடனே சங்கமெடுத்தூ
தி வீரகெர்ச்சிதஞ்செய்து சூரியன் மூடிக்கொண்டிருக்
கும்பனிகளைத் தன்கிரணங்களினலே ஒருநிமிஷத்தில்
நீக்குவதுபோல் அந்தப்பாணங்களின் கூட்டத்தைத்த
ன்னம்புகளினலே துணித்துநீக்கிச் சூழ்ந்திருக்கிறசே
னையிலிருக்கும்யானைகள்குதிரைகள்முதலியவைகளைவீ
றிட்டோடும்படியடித்து வீரர்களையெல்லாம் கவசகிரீட
குண்டல ஆயுதங்களில்லாதவர்களாக்கிப் பதைபதைக்
கச்செய்து தேர்களின்சக்கரம்-நுகத்தடி-இருசு முதலா
னவைகளைத் துளைத்துப்பொடியாக்கித்தும்சஞ்செய்து
தலைவனாகிய யாதவவீரனைநோக்கி ஓய்வீரனேஓடாதே
அர்ச்சுனனுடைய வலிமையைக்கணடு போகலாமென்
றுசொல்லி அட்டகாசஞ்செயதுசிலசரங்களைப்பிரயோ
கித்து அவன்தேர்க்குதிரைகளுடைய கழுத்தையும்சா
ரதியின்கழுத்தையுமறுத்துத் துவசத்தைத் துணித்து
கவசத்தைப்பிளந்து வில்லை யொடித்துச் சின்னபின்ன
மாக்கித் தன்மனைவிக் குப்பார்உன்சேனைபடும்பாட்டை

யென்றுகாண்பிக்க, அவளும் சந்தோஷப்பட்டு தேரை
யோட்ட வாரம்பிக்கக்கண்டு விபிருது வானவன் திக்கு
தோறுந்தலைவிரிகோலமாய் ஓடுகிற தன்சேனைகளையெ
ல்லாம் நிற்கும்படிக்கையமர்த்தித் தான்இரதத்தினின்
றுந்திடீலென்று குதித்து அர்ச்சுனநிற்கவேணும் குழ
ந்தாய் சுபத்திராய்நில்லென்றுகூவிக்கொண்டுபோய்அ
ர்ச்சுனனைக்கட்டிக்கொண்டு சொல்லுகிறன், அர்ச்சுன
எனக்கிப்போது மிகவுஞ்சந்தோஷமாயிற்றுஏனென்ற
ல்நீநமது மருமகனகவந்தாயே நீஇவ்விடத்தில்சந்நியா
சிவேஷத்துடனே மறைந்திருந்தசங்கதி கிருஷ்ணனல்
நானறிந்திருக்கிறேன் மேலும் எப்படியாவதுஉனக்குச்
சுபத்திரையைப் பாரியாக்கக் கிருஷ்ணனுக்கு மனதிரு
ந்தது அவரன்றேகுணகுணங்களை நிச்சயிக்கவல்லவர்
ஆகையால் உன்விஷயத்திலேநடந்தசரித்திரமெல்லாம்
எனக்குத்தெரியும் இப்போது நீசுபத்திரையுடனே அ
ஸ்தினபுரிபட்டணத்திற்குப் போகவேண்டியதுந்தெரி
யும்ஆனலும்ஜனங்களுடையகோஷத்துக்காகஉன்னே
டியுத்தஞ்செய்யவந்தேன்அர்ச்சுன நான்சொல்லவேண்
டிய வார்த்தையொன்றிருக்கிறது அதென்னவென்றல்
இந்திரன் சசிதேவியைக் கலியாணஞ்செய்துகொண்ட
துபோல் நீயெங்கள் பெண்ணைக் கலியாணஞ் செய்து
கொண்டுவிளங்குகிறய், ஆகையால் எங்கள்பெண்முக
ங்கோணமல் நடக்கவேணுமென்று கோறுகிறேன் நீசு
கமாய்ப் பட்டணம்போய்ச்சேர்ந்து உன்னண்ணன் தம்
பிமார்முதலாகிய யாவரும்சந்தோஷப்படும்படிவாழக்க
டவாய்என்றுசொல்லிசுபத்திரையைப்பார்த்து அம்மா
நீநல்லபுருஷனை யடைந்தாய் மிகவும்பாக்கியசாலிநீமா
மியார்முதலாகிய பந்துக்களும்புருஷனும்உவக்கும்படி
யாகநற்செய்கைசெய்து வாழக்கடவாய், ஸ்ரீகிருஷ்ணன்
இவடம்வந்தவுடனே சகலவரிசைகளும்இந்திரப்பிரஸ்
தநகரத்திற்குவந்துசேரும்போங்களென்றுசொல்லவே
அர்ச்சுனன் விபுருதுவை நமஸ்கரித்துவிடைபெற்றுதி
வ்யரதத்திலேறிக்கொண்டு முன்போலவேபுறப்பட்டுப்
போனன்.

இப்படி போகும்போதுசகலசைன்னியங்களும் இது
மிகவும்அன்னியாயம் ஊரிலொருவருமில்லாதிருக்கும்
போது பெண்ணைத்திருடிக்கொண்டுபோகலாமா, இது
தானராஜகுமாரனுக்கு லட்சணம், இந்தச் சேனதிபதி
கையிலாகாதவர் ஒருவனைத்தமதுசேனையோ டெதிர்த்
துப்பிடிக்கமாட்டாமற் போனரென்று கூவிக்கொண்டு
திரும்பித்துவாரகாபுரிக்குவந்து சித்தங்கலங்கிசுதர்மை
யென்னுஞ் சபைக்குச் சமீபத்தில்வந்து அச்சபையின்
அதிகாரிகருத் தெரிவிக்க அந்தச்சபைஅதிகாரியும் மி
குந்துஒலிக்கத்தகுந்த பெரியபேரிகையையடிக்க உத்த
ரவுபண்ணினன், அப்படியே யுத்தகாலத்திற்குஅடை

யாளமாகிய அந்தப்பேரிகையை அடிக்கவே அந்தசப்தம்கேட்டமாத்திரத்தில் தீவுகடுவிலிருந்தயாதவர்களியாவரும்மிகவும் கலக்கமுற்று ஒருகாரியமுந்தோற்றாமல் எவனெவன் எந்தவேலைசெய்துகொணடிருந்தானோ அந்தவேலையை அப்படியேவிட்டுவிட்டு ஆசனங்கள்-பாத்திரங்கள்-வஸ்திரங்கள் ஆபரணங்கள் முதலானசகலசாமக்கிரியைகளையும் போட்டுவிட்டு ஒருவரோடொருவர் பேசாமல்அங்கிருந்து ஒருநிமிஷத்துக்குள்ளாகமேற்படிசபையை வந்தடைந்தார்கள். அந்தச்சபையதிகாரிஇவர்களுக்குஅர்ச்சுனன்பெணணைக்கொண்டுபோனதும் விபுருது துரத்திபங்கப்பட்டதும் இச்செய்திகளெல்லாம்தெரிவித்தான் அதுகேட்டு யாதவர்யாவரும் மிகுந்த கோபங்கொண்டு கண்கள்சிவக்க உதடுகளைக் கடித்துக்கொண்டுஆசனத்தில் பொருந்தாமல் எழும்பிஎழும்பி ஓ சேனாதிபதிகளே, ஏன் சும்மாயிருக்கிறீர்கள் சீக்கிரம்-ரதங்கள்-யானைகள்-குதிரைகள-காலாட்கள்- என்கிற நால்வகைசேனைகளையும் சித்தப்படுத்துங்கள், கவசங்களைத்தரியுங்கள், கத்தி-கேடயம்-ஈட்டி-வேல்-வல்லயம் கட்டாரி-வில்-தூணி-முதலியவைகளையுமெடுத்துக்கட்டிக்கொள்ளுங்கள் என்றுகூறவே சேனைகளைச்சேனைத்தலைவர்கள் சித்தப்படுத்தினார்கள். சிலவீரர்கள் தாங்களேயெழுந்திருந்து தங்கள்தங்கள் வாகனங்களைச்சித்தப்படுத்திக்கவசகுண்டலஆயுதமுதலானவைகளுடனே சன்னதப்பட்டுவந்தார்கள்.

இப்படிக்குச்சேனைகளும் வீரர்களும் சூழ்ந்துநிற்க சங்குகள்-காகளங்கள்-பேரிகள்கரிகளின்பிஞ்காரங்கள்-பரிகளின்கனைத்தல்கள்-வீரருடைய சிங்கநாதங்கள்-இரதங்களுடையகோஷங்கள்-இவையாவு மெழும்பிதிக்குகளைச்செவிடுபடச்செய்ய, மதுபானஞ்செய்து மதித்திராநின்ற பலராமர், யாதவவீரர்களைநோக்கி ஓய்வீரர்களே என்னநீங்கள் அறியாதவாகள்போல் குதிக்கிறீர்கள்கிருஷ்ணன் சும்மாயிருக்க உங்களுக்கேனிந்தயோசனை ஆகையால் இவர்கருத்தறிந்து பின்பு இந்தமுயற்சிகளைச்செய்யவேண்டும் ஆனபடியினாலேமகாபுத்திமானாகியகிருஷணன் தன்கருத்தை வெளியிடட்டும்பின்பு அவர்கருத்துக்கிசைந்தபடி நடப்போமென்று சொல்லக்கேட்டு யாவரும்நன்றுநன்று அப்படியேசெய்யவேண்டுமென்றுஅங்கீகரித்து முன்போல யுத்தத்திற்காகக்களைவேன்று இரையாமல் ஆசனங்களி லுட்கார்ந்தார்கள்.

பின்பு பலதேவர் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைப்பார்த்து அப்பா மூன்றுலோகங்களுக்கும் கர்த்தாவாகியும்மூன்றுகாலமறிந்தவனாயு மிராநின்றஸ்ரீகிருஷ்ணா இந்தஜனங்களஇரையுமிரைச்சலேயும் நடந்தகாரியத்தையும்அறிந்திருந்தும் என்னசும்மா விருக்கிறாய் அர்ச்சுனனுக்கு உன்னைப்பற்றி மரியாதைசெய்கிறோமேயல்லது வேறில்லேஅந்தமடையன் காம்மரியாதை பண்ணத்தக்கவனா அவனோகெட்டநினைப்பும் நடக்கையுமுடையவன் குலத்தைக் கெடுக்கப்பிறந்தவன் இல்லாவிட்டால் எவனாகிலும்உண்டவீட்டுக்கு இரண்டு நினைக்கிறவனுண்டாநாமநற்குலத்தில் பிறந்தவராயிருக்க ஆபத்துகளிலுபகாரிகளாகிய நமக்குஇப்படிப்பட்ட அபதாரஞ் செய்யலாமாமேலும் இவாகளுக்கும் நமக்கும்பெரியவர்கள் நாள் முதல் சம்பந்தம்நடந்துவருகிறது.

இத்தனைநாளில் இவன்போல்யாராகிலும்இப்படிப்பட்டசாகசகாரியஞ் செய்திருப்பார்களா இவனிப்படிக்குச்சாகசகாரியஞ்செய்யலாமா, நல்லதுஅந்தத் துஷ்டன் என்னையும்உன்னையுங்கூட எள்ளளவேனுமதியாமல்வீட்டுக்குள்ளேபுகுந்து திருடன்போலபெண்ணைஎடுத்துக்கொண்டுபோனதை நாம் எப்படிச் சகித்திருக்கலாம்' அந்தப் பஞ்சைமனிதன் என் தலைமேல் காலைவைக்கப் பொறுப்பேனோ ஆகையால் இப்பொழுதேபோய்இந்தப்பூமியில் கவுரவவமிசமே இல்லாமற்செய்துவிடுகிறேன், நீசும்மாயிருகிருஷணா, அவன்செய்தஅக்கிரமத்தைக்கொஞ்சமும் பொறுக்கமாட்டேனென்று மிகவும்ஆக்குரோஷத்துடனே பிரளயகாலமேகம்போல கர்ச்சியாநின்றபலராமனையாதவர்களெல்லாம் அனுசரித்துத்தாங்களுமஅப்படிச்செய்வதுதான் நன்றென்றுகூடவேஇறைந்துபேச ஸ்ரீ கிருஷ்ணசுவாமியானவர் யாவரையும் பார்த்துச்சொல்லுகிறார், சற்றேநில்லுங்கள் எனக்குத்தோற்றினதைச்சொல்லுகிறேன் அதை நீங்கள்ஞாபகமாய்க்கேட்கவேணும் நானாய் ஒன்றுஞ்சொல்லக்கூடாதென்றிருந்தேன் அண்ணாவே என்னிஷடத்தைச்சொல்லச்சொல்லி நியமித்தாராகையால்சொல்லுகிறேன்ஆதியில்அந்தகபடசந்நியாசியைக்குறித்துநீங்களெல்லாம் கேட்டபோதே எனக்குச் சந்தேகமாயிருந்தது அந்தப்புறத்திலே கொண்டுவைக்கவேண்டாமென்று சொன்னேன் அதை நீங்கள்கேளாமல் உங்களிஷ்டப்படி செய்துபோட்டீர்கள். அதனாலே இவ்வளவுவருத்தம் நேரிட்டது போனதுபோயிற்று இனியென்ன அந்த யோசனைவேறுயோசனை செய்யவேண்டும். எப்படியும்சுபத்திரைஅர்ச்சுனனுக்குஅம்மான்மகள் கலியாணத்துக்குமுறைதான், அவன்-குலம்-வித்தை-சாமர்த்தியம் முதலான குணங்களினாலே தகுந்தவன்தான், ஆனால் அவன் மோசமானகாரியஞ்செய்ததற்காகநாம்கோபிக்கவேண்டியதாயிருக்கிறது, ஆகிலும்பதறாமல்எதையுஞ்செய்யவேண்டும் இப்படி அர்ச்சுனன்செய்த காரியத்தினாலே நமதுகுலத்துக்குப் பெருமையேயல்லது சிறுமை எவ்வளவுமில்லை, எப்படியென்றால் அர்ச்சுனனேமிகுந்த

லசாலி அவன்நம்மோடெதிர்த்தே இந்தப் பெண்ணைக் கொண்டுபோகலாம், அப்படியிருக்க ரகசியமாய்க்கொண்டுபோனதினலேநாம்மகா வீரரென்றுபெருமையேயாகிறது. அன்றியும் அவன்நாமெல்லாம் பணத்திலே மதிப்புவைத்துக் கன்னிகையைவிற்கப் புகுந்தவர்களென்றுநினைத்து க்ஷத்திரியதருமத்திற் கேற்றபடி கன்னிகையைப் பலவந்தமாய்எடுத்துக்கொண்டுபோனதாயக் காணப்படுகிறது இனிநாமெல்லாருஞ்சேனைகளையழைத்துக்கொண்டு யுத்தத்திற்குத்தான் போனேம்அவனைஜயிக்கப்போறதில்லை, இப்போதிருக்கிறபடியிருந்தால்அவனுக்குநாணம் நமக்குகவுரவம் சண்டைக்குப்போய்த் தோற்றுவந்தால் அதைவிடத்தாழ்வு நமக்குவேறில்லை போனதுபோயிற்று நமதுபெண் தகுந்தபாத்திரத்தில் சேர்ந்ததேயன்றிவேறில்லை ஆகையால் அமைவுடனே நாமுமற்றகாரியத்துக்குச் சம்மதித்தவர்போல் போய்நடத்தவேண்டியதை நடத்தினல்நல்லது இதுதான்எனக்குத்தோற்றுகிறயோசனையுக்தமாயிருந்தால் அங்கீகாரஞ் செய்யுங்கள் இல்லாவிட்டால்உங்களிஷ்டப்படிநடவுங்களென்று பகவான்சொன்ன சொல்லைக்கேட்டு பலராமர்முதலாகிய யாதவவீரர்களும் சரிதான் ஸ்ரீ கிருஷ்ணன்சொல்வது யுக்தியோடுகூடியதாயிருக்கிறதென்று தெரிந்து பேரிகையடித்து யுத்தத்துக்காகவேசித்தப்பட்டார்கள்.

இப்படியிருக்க இந்த ரணபேரிகை சப்தத்தைக் கேட்டமாத்திரத்தில் அர்ச்சுனன்சுபத்திரையைப்பார்த்து அடிபெண்ணே உனது பந்துக்களெல்லாம் யுத்தத்துக்காகவருகிறதுபோல் காண்கிறது, யுத்தபேரிகையின்சத்தங்கேட்கிறது, ஆகையால் ரதத்தைத்திருப்பு சூடியரும் மடையருமாகிய அவர்களையெல்லாந்தும்சம்பண்ணிப்போடுகிறேன் மூடர்கள் தங்களுடைய யோக்கியதையும் எதிரியினுடைய யோக்கியதையும் அறியாமல் விளக்கைக்கண்ட விட்டில்பூச்சிகளைப்போலஓடிவருகிறார்களென்றுகேட்டுச் சுபத்திரைமனங்கலங்கிமுகம்வாடித்தன்கணவனுடைய பாதங்களைப்பிடித்துக்கொண்டுஓ என்னுயிராகியநாயகனே, இப்போதென்பேரில் தயைவைத்து என் வார்த்தையின்படி நடக்கவேண்டும், என்னவென்றால் யாதவர்களை நீர்சங்கரிக்கப் புறப்படுவீரேயாகில் யாதவர்குலத்துக்கு மிருத்துசுபத்திரையென்று எனக்கு மிகுந்தநிந்தைவந்துவிடும் சந்தேகமில்லை அப்படிக்குலத்துக்கெல்லாம்நாசகாரியென்னுநிந்தைபெற்று உலகத்தில் பிழைத்திருக்கலாமோ ஆகையால் மனதைப் பெரிதுபண்ணி இந்திரப்பிரஸ்தப் பட்டணத்துக்கே திரும்புமென்று வேண்டிக்கொள்ளவே அர்ச்சுனன் மிகவும்இரங்கி அவளைக் கட்டிக்கொண்டு பயப்படாதே அடிபின்னிடையே, உன் வார்த்தைக்குக் குறுக்கில்லையென்றுசொல்லி மறுபடியும் தன்பட்டணத்துக்கு இரதத்தைநடத்தக் கட்டளையிட்டான், யாதவர்களும் புறப்பட்டுப் பட்டணத்தைத்தாண்டிவரும்போது மெத்தைகளிலும், மேடைகளிலும், பிரகாரங்களிலும், கோபுரங்களிலும், சர்ப்பங்கள்போல்விழுந்திருக்கிற அர்ச்சுனனுடையஅம்புகளைக்கண்டு ஆச்சரியமடைந்து ஸ்ரீகிருஷ்ணன்சொன்னவார்த்தை மெய்தானென்று எண்ணிக்கொண்டு ரைவதகபருவதத்தின்பக்கத்தில்வந்து அங்கிருக்கிறசேனாதிபதியாகிய விபுருது என்கிறவன் தான்யுத்தஞ்செய்துதோற்றுப்போனதையும் அர்ச்சுனனுடையபராக்கிரமத்தின் விசேஷத்தையுஞ்சொல்லக்கேள்விப்பட்டு ஆகிலும்அர்ச்சுனனைப் பின்தொடரவேண்டுமென்றுநினைத்து அவன்மிகவும் தூரமாகச்சென்றானென்றுநிராசைசெய்து திரும்பித் துவாரகாபுரிகுவந்துசேர்ந்தார்கள்.

அர்ச்சுனனும் துவாரகையைச்சேர்ந்த உத்தியானவனங்களையும்கிரி விருசமென்கிற பட்டணத்தையும் அனேக மலைசெறிவுகளையும் உச்சயனியென்கிற பட்டணத்தையும் அனேகங்காடுகளையும்தேனுமதியென்கிறதீர்த்தத்தையும் அசுவரோகிதமென்கிற தடாகத்தையும் உத்விருத்தமென்கிறமலையையும் அற்புதமென்கிறமலையையும் கடந்துபோய்புரோச்சிருங்கமென்கிறவிடத்திலிருந்து கவுரவதீவென்கிறஆற்றைத்தாண்டிசாள்வதேசம்போய் அங்கிருந்து நிஷத்தேசத்துக்குச் சென்றுஅங்கிருக்கிற தேவாபிருசமென்கிற பட்டணத்தைப் பார்த்துக்கொண்டே தேவாரணியமென்கிறஆரணியம் போய்ச்சேர்ந்தான், அந்தத்தேவாரணியத்திலிருக்கும் முனிவர்கள் அர்ச்சுனனைக்கண்டமாத்திரத்திலே மிகவும்உபசாரஞ்செய்ய அவ்வுபசாரங்களைப்பெற்றுக்கொண்டுபுறப்பட்டுகுருதேசம்போய்ச்சேர்ந்து தன்னண்ணன் தம்பிமாராகிய சிங்கங்கள்வாசஞ்செய்யுங் குகைபோன்றதன் பட்டணத்தைத் தூரத்தில்கண்டுகளிப் படைந்தான்.

பின்பு அந்தஇந்திரப் பிரஸ்தபுரிக்குச்சமீபத்திலிருக்கும் ஓர் இடைச்சேரியிலிறங்கிப் போஜன முதலான

வைகளைச்செய்து சுபத்திரையைநோக்கி அடியதுகுலத்துமின்னரசே இனிநாம்சேரவேண்டியது இந்திரப்பிரஸ்தபுரிதான் ஆகையால்நான்சொல்லுமொருவார்த்தையை நீ யங்கீகரிக்கவேணும் அதாவதுநீ இடைச்சிபோல் வேடம்போட்டுக்கொண்டு நமதுநகரத்திற்குச் செல்லவேண்டும் ஏனென்றால்என்னுடன்கூட நீ மெய்யானரூபத்துடன்வருவாயாகில்ஒருவேளை துரோபதைமனம்நொந்து ஏதாகிலும் கடூரமாகியவார்த்தை சொல்லுவாள்நீதனியேவேறு ரூபத்துடன்போய் அவளைப்பணிவாயேயாகில் நல்வார்த்தை சொல்லுவாள். அவள்முதலிற்சொன்னவார்த்தைக்கு வேறுகடக்கமாட்டாள் ஆகையால் நீ மாறு வேஷத்துடனேவர வேண்டுமென்று சொல்லக்கேட்டுச்சுபத்திரையும் என்கணவனே உமது உத்தரவுக்குத் தடங்கல் செய்வதுண்டோ எப்படிநியமித்தால்அப்படிநடக்கிறேனென்ன அர்ச்சுனன்மிகவுஞ் சந்தோஷப்பட்டு அவ்விடச்சேரியிலிருக்கும் இடையரைக்கூப்பிட்டு இச்சுபத்திரையோடு இடைச்சிகள்யாவரும்நமது நகரத்திற்குக்கூடச்செல்ல வேணடுமென்ன இடையரெல்லாம்ஒரு நிமிஷத்துக்குள்ளே தங்கள்ஸ்திரீகளையெல்லாம் சித்தப்படுத்தினார்கள்

பின்பு அர்ச்சுனன் தன்மனைவிக்குத்தானே ஆய்ச்சிவேஷம்போட்டு அவ்வுருவத்திலும் மிகவழகுடன் விலாசம்பொருந்திவிளங்கும் அவளைக்கட்டியணைந்து ஆச்சியரெல்லாருடனேயுங்கூட்டியனுப்பிவிட்டான் அவளும் அப்படியேஇந்திரப்பிரஸ்தம்போய் அரண்மனைக்குட்சென்று தனதுஅத்தையாகியகுந்திதேவியைநமஸ்காரஞ்செய்து அவளால்ஆசீர்வதிக்கப்பட்டு பின்புதுரோபதியின்பாதங்களில் தெண்டனிட்டு நானுனதுபணிவிடைசெய்பவளென்றாள் அந்தப்பாஞ்சாலிஇந்தக்கன்னியினுடைய ரூபத்தைக்கண்டுவியப்படைந்து சந்தோஷத்துடனேஅவளைப்பார்த்து அடிபெண்ணேநீ உனக்குத்தகுந்தஉத்தமபுருஷனோடு கூடிநன்மக்களைப் பெற்றுச்சக்களத்தியின்விரோதமின்றிவாழக்கடவையென்று ஆசீர்வாதம்செய்யக்கேட்டுச்சுபத்திரையானவள் நீசொன்னவாக்குசரியாயிருக்க வேணுமென்றுசொல்ல அப்படியேயாகட்டுமென்று இவளைவாரியெடுத்துதன் மடியின்மீதிலுட்காரவைத்து உற்றுப்பார்த்து இவளைச்சுபத்திரையென்றறிந்துமனதிற்கோபமில்லாமல் ஆலிங்கனஞ்செய்துகொண்டுகண்ணனைநினைத்து நல்லகாரியஞ்செய்தார்கிருஷ்ணனென்று மிகவுங் கொண்டாடிக்கொண்டிருந்தாள்

இப்படியிருக்க அர்ச்சுனனானவன் அந்தஇடைச்சேரிவிட்டுப்புறப்பட்டுப்பட்டணம்பிரவேசிக்கும்போது யாதவசேனைகளும்கடல்போலிரைந்துக்கொண்டு பின்னோடேவந்துவிட்டன அர்ச்சுனனும அந்தச்சேனைகளோடு கூடிப்பட்டணத்திற் பிரவேசிக்கப் பட்டணத்திலிருப்போரெல்லாம்அர்ச்சுனனைக்கண்டுநெடுநாளானபடியினாலேகாணாதுகண்டதுபோல் அர்ச்சுனனைப்பார்த்துச் சந்தோஷப்படஅர்ச்சுனனும் தனதுபட்டணத்தைப்பார்த்துக்கொண்டே அரண்மனைவாசலில் தேர்விட்டிறங்கிபுரோகிதராகியதௌமியரையும் தமயன்மார்களாகியதருமபுத்திரர்பீமசேனர்களையும்தாயாராகியகுந்தியையும்நமஸ்காரஞ்செய்துதம்பிமார்களாகிய நகுலசகாதேவர்களாலேநமஸ்கரிக்கப்பட்டு அவர்களுக்கு ஆசீர்வாதஞ்செய்தபின்புதன்மனைவியாகிய சுபத்திரையையும அவளுக்காகவந்த யானை-குதிரை-ஒட்டை- முதலானவைகளையும்மகாராஜாவாகிய தன் அண்ணனிடத்தில்ஒப்புவித்தான் அந்தயாதவசேனைவீரர்களும்மகாராஜாவுக்குச்செலுத்தவேண்டியமரியாதைசெய்ய அவரும் இவர்களுக்குத் தக்கபடிமரியாதைகள்செய்து சபையிலுட்காரவைத்துத்தன்தம்பிமார்களுடனே தாமுமிருந்து சுபத்திரையைத்தங்கள்மனைக்குவந்தலட்சுமிதேவியென்றுநினைத்துமிகவானந்தத்தைப்பெற்றிருந்தார்கள் இவ்வாறாகத்தருமபுத்திரர்முதலானவர்கட்கும்குந்திதுரோபதி முதலானவர்கட்கும்சுபத்திரையொருகண் போல்மிகவுமிஷ்டமாயிருந்தாள்.

இவ்வாறாகஅர்ச்சுனன்சுபத்திரையையெடுத்துக்கொண்டுயாதவசேனைகளைஜெயித்துவிட்டுத்தனது நகரம்வந்துசேரப்பலராமர்கிருஷ்ணர்முதலானவரும் தீவிலிருந்துதுவாரகைக்குவந்துஇச்செய்திகேட்டு மிகக்கோபமடைந்து தண்டெடுக்கயெத்தனப்பட்டுக் கிருஷ்ணனுடைய யோசனையினாலேயும் அர்ச்சுனனுடையபராக்கிரமத்தின் பெருமைநினைந்ததினாலேயும் அந்தப்பிரயத்தினத்தை விட்டுச்சும்மா யிருந்தார்கள் இப்படியிருக்கத்துவாரகாபுரியில்சகலமானபேரும்அர்ச்சுனன் சுபத்திரையைக்கொண்டுபோனதற்குக் கிருஷ்ணன்உளவில்லாவிட்டால் இப்படிநடக்காதுதன்தங்கையை அர்ச்சுனனுக்குக்கொடுக்கவேண்டுமென்றுஇப்படிப்பட்டகாரியஞ்செய்வித்தாரென்றுசொல்லிக்கொள்ளக்கேட்டுஸ்ரீகிருஷ்ணன்யாவரும்இப்படிச்செர்ல்லும்போது நானில்லையென்றால் ஒக்குமாவென்றுசமாதானஞ்சொல்லித்தமதுதமயனாரிடத்திற்குவந்து அண்ணாஇதற்குயாவரும் என்பேரில்அபவாதஞ்சொல்கிறார்கள் சொல்லட்டும்இனியார்தான்செய்யவேண்டுவ' தென்னகாரியம் மிஞ்சிப்போயிற்றுஆதலால்நான் பாண்டவர்களுடையபட்டணத்துக்குப்போய் சுபத்திரையைக்குறித்து நடப்பிக்கவேண்டியதுகளை நடப்பித்துவருகிறேனென்றுவிடைகேட்க, அவர்தம்பிகிருஷ்ணாஎனக்கும் அதுகடைமையாகையால்நானும்வருகிறேன்போவோமென்ன, இருவரும்உ

க்கிரசேனன்முதலானபேர்களுடன் இச்செய்திசொல்லிச்செலவுபெற்றுக்கொண்டுநால்வகைச்சேனைகளையும்ஆயுத்தப்படுத்திப் பலஆபரணமுதலானவைகளை யெடுத்துக்கொண்டு பலவாத்தியங்களுமமுழங்கப்புறப்பட்டார்கள் அப்போதுசிலஅடையாளங்களினாலேயும்சுபத்திரையின்தோழிகள் சொன்னஜாடைகளினாலேயும்இந்திரன்முதலானவர்களும்வந்து அர்ச்சுனனுக்கும் சுபத்திரைக்கும் விவாகத்தைநடப்பிப்பார்களென்று தெரிந்துயாதவர்களெல்லாம் மிகவுஞ்சந்தோஷப்பட்டு முன்னதாய்சுபத்திரை தனியேபோகலாகாதென்று கொஞ்சம்சேனையைஅனுப்பினார்கள்அதுதான் அர்ச்சுனன்பட்டணம்பிரவேசிக்கிறதற்குள்ளேபோய்ச்சேர்ந்தது.

இப்படியாகச்சேனையையனுப்பி அக்குரூரன்-கிருதவர்ம்மா-உத்தவர்-சத்தியகன் - சாத்தகி-பிரத்தியும்மனன்-சாம்பன்-நிசுதன்-சங்கு-சாருதேஷ்ணன்-சுதேஷ்ணன்-சல்லி-விபுருது-சாரணன்-கதன்- முதலாகியயாதவர்களெல்லாம் பலராமகிருஷ்ணர்களுடனே மகாசேனைகளைக்கூட்டிக்கொண்டுவெகுசீக்கிரத்தில் இந்திரப்பிரஸ்தம்போய்ச்சேர்ந்திருந்தார்கள்,

இவ்வண்ணமாக இவர்கள்வருகிறசேதிகேட்டுத்தருமபுத்திரமகாராஜன்மிகவும்பரபரப்புடனே புரோகிதர்பிராமணர் முதலாகியபேர்களுடனேஸ்ரீகிருஷ்ணனைஎதிர்கொள்ளநகுலசகாதேவர்களையனுப்பித் தாம்பீமனுடனேபலதேவரையெதிர்கொண்டார்இவ்வாறாகப்பாண்டவர்கள் எதிர்கொள்ள ஒருவரையொருவர்கண்டுமகிழ்ந்துக்ஷேமங்களை விசாரித்துக்கொண்டு மூத்தவர்களைத்தெண்டனிட்டுஇளையவர்களை ஆசீர்வதித்துப்பட்டணத்துக்குப்போய்அரண்மனையைசேர்ந்தார்கள்.

பின்புதருமபுத்திரர் சகலயாதவர்களுக்கும்அவரவர்களுக்குத்தகுந்தபடி பூஜைகளைச்செய்துவிருந்துசெய்வித்தார் பலராமகிருஷ்ணர்கள்வந்ததினாலேகுந்திக்கும்துரோபதைக்கும்உண்டாகியசந்தோஷத்துக்கு அளவில்லைபாண்டவர்களும்இவ்விருவரையுங்கண்டுபேரானந்தமடைந்தார்கள். யாதவர்களும்பாண்டவர்களால் மரியாதைசெய்யப்பட்டுமகளாகிய சுபத்திரையைக்கண்டு சந்தோஷப்பட்டுவாழ்த்தினார்கள்.

பின்புஸ்ரீகிருஷ்ணன்தன்தங்கைக்குவரத்தினங்களிழைத்தசகலஆபரணங்களும் விசித்திரமாகியவஸ்திரங்களும்அனேகபாத்திரங்களும் குதிரைகள் - யானைகள்-ஒட்டகங்கள்-தேர்கள்-பசுமாடுகள்-பல்லக்குகள்-கட்டில்பெட்டி-முதலானதுகளையனேகமாய்ச் சீதனங்கொடுத்தார் மருமகனாகியஅர்ச்சுனனுக்கும்பலபூஷணங்கள்-ஆசனங்கள்-வேலைக்காரர்-முதலான உளுப்பைகளுங்கொடுத்தார்,பலராமர்விசேஷமாகஅர்ச்சுனனுக்குஒருபாதபீடங்கொடுத்தார்.

இப்படியெல்லாம்வரிசைகொடுத்து தங்கையைக்கட்டியணைத்துமுத்தமிட்டுத்துரோபதியினிடத்துக்குஇவளையழைத்துக்கொண்டுபோய்அடி பாஞ்சாலி இவள்உன்னுடையஅடைக்கலம்நீதான்இவளைக்காப்பாற்றவேணுமென்றுசொல்லிக்குந்தியையுங்கண்டுசொல்லி இப்படிச்சிலகாலம்அவ்விடத்திலேபாண்டவர்களோடுகூடமகிழ்ந்துகொண்டுமிகவினோதமாயிருந்துசகலயாதவர்களும் பாண்டவர்களைப் பிரானுக்குத்தோழனையும் அந்தசுவாமியிடத்தில் ஏகாந்தபக்தியுடையவனையும் தவத்திற்சிறந்தவனையும்சகலவேதசாஸ்திரங்களை நன்றாயறிந்தவனையும் ஒருவரையும்யாசிக்காமல்தன்கைக்கிடையாய்ச்சேர்ந்தஆகாரத்திலன்புகூர்ந்து அதிதிகளைத்திருப்திசெய்வித்துசார்வகாலமும்ஸ்ரீகிருஷ்ணதியானஞ்செய்துகொண்டுசுருத்தேவனென்கிறமறையோன் மிதுலாபு[illegible]ட்டணத்தில்வாசஞ்செய்துகொண்டிருந்தான் அ[illegible]துலாபுரி பட்டணத்திற்கரசனான பகுளாசுவனென்பவன் ஆன்மாவினிடத்திலாசையும் அகங்காரமுமற்றவனாய்ஸ்ரீபகவானிடத்தில் நிரந்தரபக்தி செலுத்துகிறவனாய்அந்தச்சுருத்தேவனென்கிற அந்தணனுக்குத்தோழனாயிருந்தான்அவர்களை அனுக்கிரகிக்கவேண்டுமென்று கருத்துகொண்டு தாருகனை இரதத்தைச்சித்தப்படுத்தச்சொல்லி அதன்மீதுட்கார்ந்து வியாசர்-நாரதர்-வாமதேவர்-அத்திரி-பரசுராமர்-அருணி-பிரகஸ்பதி - கணவர்-மைத்திரேயர்-சியவனர்-முதலிய ரிஷிகளுடனெழுந்தருளுகிறபோது உதயகாலத்தில் பிராம்மணோத்தமர்கள் அர்க்கியப்பிரதானஞ்செய்து சூரியனைக்காணுவதுபோல்மார்க்கத்திலிருக்கிறகுருஜாங்கலதேசம்-மச்சதேசம்-பாஞ்சாலதேசம்-காசி-கேகயதேசமிடங்களிலுள்ளஜனங்கள்அர்க்கியபாத்தியங்களாற் பூஜித்துபுஷ்பங்களை இறைத்துகண்டு கொண்ட அந்தஜனங்களுடைய பாபத்தைத்தமது நோக்கினாலாக்கிரமித்து தேவர்கள்பதினெண்வாத்தியங்கள்முழங்க வெகுவைபவத்துடன்மிதுலாபுரிபட்டணத்திற்கெழுந்தருளுவதை அப்பட்டணத்திலுள்ளஜனங்கள்கேள்வியுற்றுச்சந்தோஷித்து அர்க்கியபாத்தியமுதலியவஸ்துக்களும் பூரணகும்பங்களுமெடுத்துக்கொண்டுபூஜித்துரிஷிகளையுஞ்சேவித்தார்கள்.

பிறகுசுவாமிக்குத்தோழனான சுருததேவனென்கிற வேதியனும்அப்பட்டணத்திற் கதிபனானபகுளாசுவனும்இவர்களிருவரும் அந்தஸ்ரீகிருஷ்ண பக்தர்களிலும் தோழன்மார்களிலும்சிறந்தவர்களாகையால் இவர்களிந்

தசுவாமிநம்மைஅனுகிரகிக்கவேண்டிஅவிடத்திற் கெழுந் தருளினுரென்று அதிவேகமாசஓடிவந்துசகலபுருஷார்த்தங்களையுங்கொடுக்கத்தக்கின சுவாமியைச்சாஷ்டாங்கமாகச்சேவித்துசகலவிதபூஜைகளையுஞ்செய்துதங்கள்கிறகங்களுக்கெழுந்தருளவேண்டுமென்றுபிரார்த்தித்தார்கள் அப்போதுசுவாமி இரண்டுரூபமாகவடிவுகொண்டுஇரண்டுபேருடையஅகத்திற்குமெழுந்தருளினுர்அப்போதரசன் சுவாமியை அர்க்கியபாத்தியை முதலியவற்ருற் பூஜித்து நவரத்தினசிங்காதனத்திலெழுந்தருளச்செய்துஅந்தமகாரிஷிகளையும்பூஜித்து ஆதனத்திலெழுந்தருளச்செய்து அவர்களுடையதிருவடிகளை விளக்கிஅந்தத்தீர்த்தத்தைத்தனதுகுடும்பத்துடன்சிரசில்தரித்துக்கொண்டு தூபதீப நைவேத்தியங்களாலும் தாம்பூலமுதலியவைகளாலுந்திருப்திசெய்வித்து சுவாமியைச்சப்பிரகூடமஞ்சத்தின்மீது திருக்கண்வளர்த்தி அவருடைய திருவடிகளைவருடிக் கொண்டே அந்தபகவானைப்பார்த்துசகலபூதாந்தரியாமியாகவும்கர்மசாட்சியாகவும்யோகிகளுக்குதுல்லபராகியும்அடியார்களுக்குசுல்பராகியும் சத்தியசங்கல்பனுயு மிருப்பதால் ஆதியிலருளிச்செய்தவார்த்தைபொய்யாகக்கூடாதென்றும் ஏகாந்தமாய்பக்திசெலுத்துகிறவர்களிடத்தில் விசேஷஅன்புடையவனென்றும் அருளிச்செய்தபடி தப்பாமலெழுந்தருளியதற்குமிகவுந்துதிசெய்து வியப்படைந்தனன்அந்தசுருத்தேவனென்கிறமறையோன் ரிஷிகணங்களைவிசேஷமாய்ப்பூஜிக்காமல்மாதவனைமாத்திரம்விசேஷமாய்ப்பூஜித்தபடியால் அந்தபகவான்அம்மறையோனைநோக்கி இந்தரிஷிகள் எந்தஜலத்தைத்தொடுகிருர்களோஅதுவேபுண்ணியதீர்த்தமாகும்படிச் செய்யத்தக்கின மகிமையையுடையவர்கள் சகலதேவாகளுடைய சொரூபம் யான்-என்னுடையசொரூபம் வேதம் அந்தவேதங்களுடையசொரூபம்மறையோர் அவர்களுக்குமிஞ்சினவர்கள்உலகிலில்லை அவர்களைச்சாமன்னியமானிடர்களென்றெண்ணி அவர்களைப்பழித்து என்னைப்பூஜித்ததினுல்ஒருபயனையுமடையமாட்டார்கள்அவன்தான் எனக்குப்புறம்பு அந்தவேதியர்களிடத்திலிருக்கிறஅன்புஎனக்குயாரிடத்திலுமிராது இப்படிவேதங்களிலுமுறையிட்டிருகிறது அந்தவேதியனைப் பூசிக்கிறவன்தான்ஞானிஅவனேஎனக்குமிகவும்இஷ்டனென்றுஸ்ரீபகவானுலாக்கியாபிக்கப்பட்டுஅந்தச்சுவாமியின் யெதிரில்தானேஅந்தரிஷிகளை அனேகவிதமாய்பூசித்து உபசரித்துசந்தோஷப்படுத்தினுர்கள் ஸ்ரீகிருஷ்ணபகவான் அவடத்தில்சிலநாள்வாசஞ்செய்து அந்தரிஷிகணங்களுடன்துவாரகாபுரிபட்டணத்திற்கெழுந்தருளினுர்.

---

## ௮௭ - வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

அரியநாரா யணரிஷியாருக்கும்
உரியநாரா தருக்குமுண்டாகிய
பெரியசம்வாதப் பேச்சியின்பெற்றியால்
சுருதிகீதையை வர்ணித்துச்சொல்லினுர்.

நாராயணரிஷிக்கும்நாரதமகாரிஷிக்கும் முண்டானசம்வாதத்தினுல்சுருதிகீதையான்து வர்ணிக்கப் படுகின்றது.

பரிக்ஷித்துவாக்கியம்.

பரிக்ஷித்துமகாராஜாவானவர் சுகப்பிரமரிஷியைநோக்கிசுவாமிகளே, வாக்குக்குவிஷயமாகாமலும் நிர்குணமாயும் ஒன்றுடனும்யாதொரு சம்பந்தமுமில்லாமலிருக்கின்றபரப்பிர்மத்தினிடத்தில் குணுதிசயங்களைச்சொல்லிக்கொண்டிராநின்ற சுருதிகளானது ரூடி-லக்ஷணை-யோகமாகிய சம்மந்தங்களொன்றுஞ் சமபவியாதிருக்க அதுகள்சாக்ஷாத்தாகஎந்தப் பிரகாரம்பிரதிபாதித்துக் கொண்டிருக்கின்றதுகளோ அதுகளைக் கிருபைசெய்ய வேண்டுமென்றுகேட்கபிரம்மரிஷிசொல்லுகிருர்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

ஓய்அரசனே, சர்வக்கியரான பரமாத்துமாவானவர் சீவர்களுக்குரூபாதிவிஷயங்களையறிய நிமித்தமாகவும் சொர்க்காதிலோகபோகார்த்தமாகவும்சன்மலட்சணமானகர்மநிமித்தமாகவும் மோக்ஷத்தின்பொருட்டாகவும் புத்திஇந்திரியங்கள் பிராணன்இதுமுதலான உபாதிகளைசிருஷ்டித்தார் சுருதிகள்சர்வக்கியராயும்சர்வவல்லவராயும் சமஸ்தகலியாணகுணங்களுக்கிருப்பிடமாயும் சச்சிதானந்த ரூபராயுமிருக்கிற அப்பரமாததுமாவை யேபிரதிபாதித்துக்கொண்டிருக்கின்றது இப்படிப்பட்ட வேதத்தைஎவர்கள்ஆக்ஷேபகுதர்க்கங்களைப் பண்ணுமல்சிரத்தையுடனேஅத்தியயனம்பண்ணித்தரிக்கின்றுர்களோ அவர்கள்நிஷ்காமிகளாயும் யாதொருபயமில்லாதவருமாகி பரமபதத்தையேயடைவார்கள் இதுவிஷயங்களில்நாரதமகாரிஷிக்கும் நாராயணரிஷிக்கும் சம்வாதரூபமாகியும்அதற்குஸ்ரீமந்நாராயணுற் சொல்லப்பட்டுமிருக்கிற இதிஹாசத்தைச்சொல்லுகிறேன் ஒருகாலத்தில்ஸ்ரீபகவானுடையஏகாந்தபக்தரானநாரதமகாரிஷியானவர்உலோகசஞ்சாரஞ்செய்துக்கொண்டுவருகிறபோதுஇந்திரியநிக்ரகஞ்செய்து தருமக்கியானத்துடன் மானிடருக்குக்ஷேமமுண்டாகும்பொருட்டு கற்பகாலபரியந்தமுந்தபசுபண்ணிக்கொண்டிருக்கிறநாராயணரிஷியைத்தரிசனஞ்செய்து வரவேண்டுமென்கிற வாசை

யினால்அவருடைய ஆசிர்மமடைந்தஅவனைச்சாஷ்ட ங்கமாகப்பிரணாமம்பண்ணி நீர் இப்போது எதுவிஷய ங்களைப்பற்றி என்னைக் கேட்டனையோ அந்த அர்த்தத் தையே அவனைக்கேட்டார் அப்போது நாராயண ரிஷி சொல்லுகிறார்.

ஓய் நாரதமுனியே, சனகலோகவாசிகளாய்ப் பூர்வி காளான பிரம்மரிஷிகளுக்குப் பிரம்மவாத முண்டாயி ருந்து அதற்குப் பகவானானவர் சொல்லியருளியபடியே பூர்வத்தில் சனலோகத்தில் வாசஞ்செய்யாநின்ற பிர்ம மாவினுடைய மானசபுத்திராளான சிரேஷ்டிராளாகிய ரிஷீஸ்வரர்களுக்கு வேதங்களில் முடிவாகச்சொல்லும் பிரம்மததைப்பற்றிய பிரஸ்னையுண்டாச்சுது, அப்போ திருந்தவர்கள் கியானம்-தபசு-சீலம்- இவற்றில் சமானு ளாயிருந்தாலும் தங்களில் ஒருவனைச்சொல்லுகின்றவ ராகவும், மற்றவர்கள் கேட்பவர்களாகவும் கற்பித்து வி சாரித்ததில் சனந்தனர்சொல்லுகின்றார்.

ஓய் ரிஷிகளே, தம்மாலேசிருஷ்டிக்கப்பட்ட இந்தப் பிரபஞ்சத்தை சத்துவரசதமோ மயங்களான சக்திக ளோடுகூடிப் பிரளயகாலத்தில் உபசங்காரம் பண்ணி யோகநித்திரைசெய்பவர்போலிராநின்றபரமாத்துமனு டைய பிரதமசுவாசத்தினின்று முண்டாகாநின்றவேத ங்கள்அந்தப்பரமாத்துமனுடைய அனந்த கலியாணகு ணங்களைச்சொல்லும் வாக்கியங்களினால்அவனையெழு ப்பியதுகள் வாரீர்சுவாமி, ஸ்தாவரசங்கமங்களைச் சரீர ங்களாகவுடையசீவர்களுக்கு அனாதாதி குணங்களை ம றைத்தலின்பொருட்டுச் சத்துவரசதமோ குணங்களா லாகிய அக்கியானத்தை நாசம்பண்ணக்கடவீர், தேவரீ ர் சொரூபத்தினாலேயே சமஸ்த அயிஸ்வரியங்களையும் அடைந்திருக்கிறீர் நீரேசமஸ்த சீவர்களுக்கும்அந்தரியா மியாயிருந்து சக்திகளைவிருத்திசெய்துவைக்கின்றீர் ஆ கையினால் சீவர்கள் கியானமுதலானதினால் சுதந்திரர்க ளாகாம லிருக்கின்றார்கள், வேதமானது சிருஷ்டியாதி காலங்களில் மாயைகளினாலே கிரீடைபண்ணிக்கொண் டிராநின்றும் சத்தியக் கியானானந்த ஸ்வரூபத்தினாலே யுமிராநின்றதேவரீரை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண் டிருக்கின்றது, வேதங்களானது இந்திரன் முதலான சீ வராசிகளுடன்கூடியிருக்கிற இந்தப்பிரபஞ்சம் பரப்பி ர்மத்தினுடைய சேஷமாகையால்பரப்பிர்மமென்றேஅ றியாநிற்கிறது, கடமுதலான காரியங்களுக்கு மண்ணி லுற்பத்திலயங்கள் எப்படியுண்டாகிறதுகளோஅப்படி ப்போலவிகாரமில்லாததாயும் சர்வத்திற்கும்காரணமா யுமிருக்கிற யாதொரு பிர்மத்தினிடத்தினின்றுசமஸ்த மும்உண்டாயிருக்கின்றது.

வேதங்கள் உம்மையே சர்வகாரணரென்றும் பர மார்த்தரூபரென்றும்சொல்லாநிற்கிறது, திரிகுணமான மாயையாகிய நாட்டியப்பெண்களை நிர்த்தனம் பண்ணி வைக்கிறவரேவிவேகிகள், தேவரீர்சர்வகாரணரானபடி யினாலேபரமாத்மரென்று நிச்சயித்துசகலலோகங்களு டையபாபங்களை நாசம்பண்ணுந் தேவரீருடையகீர்த்தி யாகிற அமிர்தசமுத்திரத்தில்முழுகிச்சகலபாபங்களை யும்விட்டுவிடுகிறார்கள்,ஓய்பரமபுருஷரே, உம்முடைய திவ்யஸ்வரூப சாட்சாத்காரமாகிய அந்தக்கரணத்தினு டையதர்மங்களான ராகத்துவேஷாதிகளையும்வார்த்திக முதலானதுகளையும் விட்டவர்களாய் சர்வகாலமும்பரி பூரணானந்தானுபவத்தையுடையதான தேவரீருடைய ஸ்வரூபத்தையே சேவித்துக்கொண்டிருக்கிற அவர்கள் சகலதுக்கத்தையும் விட்டொழிந்தவர்களாகின்றார்கள். யாதொருபிராணிகள் தேவரீரிடத்தில் அசஞ்சலமான பக்தியையுடைத்தாயிருக்கிறார்களோ அவர்களேஜன்ம சாபல்லியத்தையுடையவர்கள். தேவரீர் அந்தரியாமியா யிருப்பதால்உம்மிடத்தில் பக்தி யில்லாதவர்களுடைய அகங்காரமுதலானதுகள் சாமர்த்தியததையுடையதுக ளாய்சமஷ்டிரூபமான பிரம்மாண்டத்தையும் வியஷ்டி ரூபமானதேகத்தையும், சிருஷ்டிக்கத்தக்கதுகளா யிரு க்கின்றது. அன்னமயம்-பிராணமயம்-மனோமயம்-விஞ ஞானமயம் - ஆனந்தமயமான தேகமுதலான வைந்து கோசங்களுக்குமப்பால்யாதொரு பிர்மம்சர்வத்துக்கு மாதாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றதோ ஸ்தூல சூ ட்சமங்களான தேகாதிகளைக்காட்டிலும் பரமமாயும்சா ட்சியாயும் நித்தியமாயும் சத்தியமாயும் தேகமுதலான துற்சம்மந்த மில்லாமலு மிருக்கிற யாதொரு பிர்ம்மம் சொல்லப்படுகிறதோ தேவரீர் அந்தப்பிர்மமயமேயாகா நிற்கிறீர், ரிஷீஸ்வரர்களுடைய சம்பிரதாய மார்க்கங்களி லேஎவர்கள் இரசோகுணத்தினாலே மறைக்கப்பட்டகி யானத்தை யுடையவர்களாயிருக்கிறார்களோ அவர்கள் மணிபூரகமென்னப்பட்ட ஸ்தானத்திலிராநின்றபரப்பி ர்ம்மத்தைத்தியானித்துக்கொண்டிருக்கிறார்கள்கியானி கள்நாடிகளுக்கு ஆசிரியமான இருதயத்திலிருக்குஞ்சூ ட்சமமான பிர்ம்மத்தையே வுபாசிக்கின்றார்கள்அந்தஇ ருதயத்தினின்றும் உம்முடையஆவிற்பவத்துக்குஸ்தா னமாயும்சிரேஷ்டமாயுமிருக்கின்றநாடியானதுமூலாதா ரத்தைப்பற்றிக்கொண்டு இருதயமத்தியினின்று பிர்ம் மரந்தரத்தைக்குறித்துண்டாயிருக்கிற அந்தச்சூட்சும நாடியைகியானிகளடைந்து மிருத்தியுவுக்கு ஏதுவான சமுசாரத்திற்றிரும்பவும்விழாமல்பரப்பிர்ம்மமானதே வரீரையேஉபாசிக்கிறார்கள்.

தேவரீராலே நிருமாணிக்கப்பட்டும் உத்தமமத்திம அதமங்களாகவிருக்கிற தேவமனுஷியாதி தேகமுதலா

னதுகளில் அதுகளுக்குக்காரணராய் முன்னமே அதுகளிலிருந்தாலும் திரும்பவுமதுகளிற் பிரவேசித்துஉத்தமமத்திமாதிஸ்வரூபமாய்விளங்காநிற்கிறதுபோலதேவரீர்அதுகளில்அனுப்பிரவேசித்துஅந்தந்தப்பிரகாரம் பிரகாசிக்கின்றீர், ஆகையால் அசத்துக்களான இந்தத்தேகமுதலானதுகளில் சத்தியமாயும் பரிபூரணமாயும் ஏகரூபமாயுமிருக்கிற உம்முடையஸ்வரூபத்தை நிர்மலமான புத்தியை யுடையோர்களறிந்து இகலோக பரலோகத்திலு மிச்சையில்லாதவர்களாய் உபாசிக்கின்றார்கள்.

தங்கள் தங்களுடைய கர்மங்களால் வருமிந்தத்தேகங்களில் சுகதுக்கங்களை யனுபவிக்காநின்ற சீவனுடைய தத்துவத்தை நன்றாயுணர்ந்த ஞானிகள் தேவரீருடையதிருவடிகளைச் சர்வகாலமுஞ் சேவித்துக்கொண்டிருக்கின்றார்கள் பூமியிலிதுவேவுசிதகர்மமாகவிருக்கின்றது அறியக்கூடாதஆத்துமதத்துவத்தை யறியச்செய்விக்கிறதின்பொருட்டு மகான்கள்தேவரீருடையசரித்திரமானமகத்தான அமிர்தசமுத்திரத்தில்முழுகினால் சிரமபரிகாரத்தை யுடையவர்களாய் தேவரீருடையபாதாரவிந்தங்களில் அம்சங்கள்போலரமித்துக்கொண்டிராநின்றபரமபாகவத கோஷ்டிகளிற்சேர்தலினால் கிரகமுதலானதுகளையும்விட்டுமோட்சத்தையும்விரும்பாமலிருக்கின்றார்கள் உம்மிடசேவைக்கு யோக்கியமானஇந்தச்சரீரமானது ஆத்துமாவைப்போலவும்பிரியம்போலவும்சுவாதீனமாயிருக்கிறதினாலும் பிரசன்னராயும்பிரியராயும் பரமாத்துமாவாயுமிருக்கிறஉம்மிடத்தில்நட்புண்டானதினால் உபாசியாமலிருக்கின்றார்கள் அசத்தானதேகாதிகளுடையவிவேகயீனர்கள் அந்தத்தேகாதிவுபாசனையிலேயேமிகவும் கர்ம்மவாசனையுடையவர்களாய்நிந்திதமானமகாபயத்தையுடைய சமுசாரத்திற்சுழன்றுக்கொண்டிருந்ததினாலே அவர்கள் ஆத்துமகாதகர்களாகின்றார்கள் பிராணன்மனது இந்திரியங்களாகியதுகளைநிக்கிரகித்தவர்களும் திண்ணமான யோகத்தையுடையவர்களுமாகிய ரிஷிகளுடைய இருதயத்தில்யாதொருதத்துவத்தைவுபாசிக்கிறவர்களும் உமமிடஸ்மரணவைராக்கியத்தினால்அந்ததத்துவத்தையேயடைகிறார்கள்ஒப்பிலாதஉமதுபுஜதண்டங்களில்காமபுத்தியையுடையஸ்திரீகளும் அந்ததததுவத்தையே யடைகிறார்கள்சர்வத்திரபரிபூரணரான வும்மையேபார்த்துக்கொண்டிருக்கிறநாங்களும் உம்முடையபாதாரவிந்தஅமிர்தத்தைநன்றாகப்பானம்பண்ணிக்கொண்டுஉம்முடைய கிருபையினாலே அவர்களுக்குச்சமானுளான தன்மையையடைந்தோம்.

ஓய்பகவானே இந்தச்சகத்தில்பூர்வமே யிராநின்றவும்மைபிற்பாடுவுற்பத்திநாசங்களையுடைய எந்தப்புருஷன்தான் அறிவன் உம்மிடத்திலிநின்றும் பிரமனும்பின்பு ஆதிதெய்வீகமென்று பிரசித்தர்களானதேவகணங்களுண்டானார்கள் தேவரீர்எப்போது சமஸ்தபிரபஞ்சத்தையும் ஆகரிஷித்துக்கொண்டு சயனித்துக்கொள்ளுகின்றீரோ அப்போதுஸ்தூலமானஆகாசமுதலானதும் சூட்சுமமானமகத்துவமுமில்லை ஸ்தூல சூட்சுமங்களாலாகியசரீரமும் சிருஷ்டிக்குநிமித்தமானகாலவேகமும் இந்திரியம்பிராணன்முதலானதும்ஒன்றுமில்லை இதுகளைச்சொல்லாநின்றசாத்திரமுமில்லை ஆகையால்தேவரீரேசரணமென்றுசிரவணம்கீர்த்தனமுதலான பக்தியே பண்ணத்தக்கது.

யாதொருவைசேஷிகாள்அசத்தில்நின்றும்யாதொருபாதஞ்சாலாளபரப்பிர்மத்தில்நின்றும்ஜெகத்துக்குஉற்பத்தியையும்நையாயிகாள் இருபத்தொருவிதமானதுக்கங்களையுடையநாசமேமோட்சமென்றும்சாங்கியாள்முதலானவர்கள் ஆத்துமாவில்பேதத்தையுஞ் சொல்லுகிறார்கள்யாதொருமீமாம் சகாளோவென்றால் கர்மபலவிவகாரத்தைச்சத்தியமாகச்சொல்லுகிறார்கள் ஆகியவிவர்கள் ஆரோபிதங்களானபிர்ம்மங்களாற்சொல்பவர்களேயல்லாமல்உள்ளபடியறிந்துசொன்னவர்களன்று புருஷனைவன்சத்துவரசஸ்தமோகுணமயனென்றுகொள்ளும்பேதம்உம்மையறியாததினாலுண்டாகும் அக்கியானத்தினாலேபண்ணப்பட்டது மனதினால்மாத்திரம்பிரகாசிக்கப்பட்டும் திரிகுணஸ்வரூபமானசீவனோடே கூடிக்கொண்டுமிருக்கிற இந்தப்பிரபஞ்சமானது அசத்தாயிருந்துக்கொண்டே சத்தியமாயிருக்கிறஉம்மிடத்தில்சத்துபோலவிளங்காநிற்கின்றது ஆத்துமக்கியானிகள்போக்தாக்களான சீவாள்போக்கியங்களான வஸ்துக்கள்மயமான இந்தப்பிரபஞ்சத்தை பரமாத்துமசொரூபமானபடியினாலே பரமாத்துமாவென்றே அறிகின்றார்கள் சொர்னத்தில் ஆசையையுடையோர்கள்சுவர்னத்தால் கற்பித்தகுண்டலமுதலானதைஸ்வர்னமென்றே கிரகிக்கின்றார்களன்றோ அப்படிஉம்மாலே நிருமாணிக்கப்பட்டிருக்கிற இந்தப்பிரபஞ்சம் பரமாத்துமசொரூபமாகவேநிச்சயிக்கப்பட்டிருக்கின்றது எவர்கள்உம்மையேசகலஆத்துமாக்களுக்கும் அந்தரியாமியாக வுபாசிக்கிறார்களோ அவர்கள்மிருத்தியுவைத்தியஜித்து முக்தா ளாகின்றார்

கள் எவர்கள்உம்மிடத்தில்பக்திபண்ணுகிருர்களோ அ
வர்கள் உண்மையாய்தன்னேயும்இதரானேயும் பாவன
மாகப்பண்ணுகிருர்கள் தேவரீர் இந்திரியசம்மந்தமில்
லாமலேசமஸ்தசீவர்களுடையஇந்திரியசக்திகளேப்பிர
விர்த்தித்துக்கொண்டுசுவயம்பிரகாசராகவேவிளங்குகி
ன்றீர்உம்முடையமாயையான ஆக்கியானத்தையடைந்
தஇந்திரன்முதலானதேவர்களும் ஜெகத்கர்த்தாக்களா
னபிரமன்முதலானவர்களும்தேவரீரைப்பூஜித்துக்கொ
ண்டிருக்கின்ருர்கள்.

பூகண்டங்களுக்கு அதிபதிகளானவர்கள்அந்தந்தம
ண்டலத்திலுள்ளபிரசைகளால் கொடுக்கப்பட்டகப்பங்
களேயனுபவித்துக்கொண்டுஅகண்டமண்டலாதிபதியா
னசக்கிரவர்த்தியைஎப்படிபூசிக்கிருர்களோ அப்படிப்ப
டிப்போலபிர்ம்மாதிகளும் பிரசைகளால்கொடுக்கப்பட்
டஅவ்வியகவ்வியஸ்வரூபமானபூசையையனுபவித்துக்
கொண்டு தேவரீரையேபூசிக்கின்ருர்கள் எவர்கள்எந்த
க்கர்மத்தில் ஆக்கியாபிக்கப்படிருக்கிருர்களோ அவர்
கள்உம்மிடத்தில்நின்றும் பயப்பட்டவர்களாய்அந்தந்த
கர்ம்மத்தைச்செய்துகொண்டிருக்கிருர்கள் அவர்களுக்
குஉம்முடையஆக்கியாப்பிரகாரம்நடக்கின்றதேஉம்மு
டையபூசையாகாநிற்கின்றது.

வாரீர்நித்தியமுக்தரோமாயையைப்பார்க்கிலும்பரரா
யும்சங்கமில்லாதவராயுமிருக்கிற வும்முடையகடாட்ச
த்திஞல் உமக்குமாயையிஞலே லீலையுண்டாகிறதோ
அப்போதுஸ்தாவரசங்கமசாதிகளானதேகங்களேயுடை
யசீவாள்உம்முடையஅந்தக்கடாட்சத்திஞலேயேஉண
டாகாநின்றகர்ம்மநிமித்தமான சரீரங்களேயுடையவர்க
ளாய் விடுகின்ருர்கள் பரமகிருபாசாலியாயும்மனோவா
க்குகளுக்கெட்டாதவராயுமிருக்கிற உமக்குசீவாளில்அ
பேதமானதுகளில்லையன்ருே சீவாத்மாக்கள்தன்தன்சு
யரூபத்திஞலேயேநித்தியாளாயும்சர்வ பரிபூரணுளாயு
மாஞர்களேயாஞல் அவர்களுக்குப்பர தந்திரத்துவமா
னதுகூடாது அவர்கள்உம்மால்சிட்சிக்கத்தக்கவர்களன்
று அப்படியாஞல்ஈஸ்வரன்வேறென்றும் சீவாள்பரதந்
திராளென்றும் கூடும்யென்ருல் பிர்ம்மத்தை யறிவோ
மென்றுசொல்பவர்களுக்கு யாதொருபிர்ம்மம் அறியக்
கூடாததானபடியிஞல்அவர்கள் அறிந்ததென்ற பிர்ம்
மமானதுதன்விகாரமான சீவனுக்குக்காரண மானபடி
யிஞலே அதைவிடாமல் அத்துடனேகூடயிருந்துகொ
ணடுசீவனுக்குநியந்தாவாயிருக்கின்றதிஞல் அந்தப்பிர்
ம்மமானதுவுபாதியிஞல் சீவனென்றபேருடையதாச்சு
துவேதத்தில் சனனமில்லையென்கிற பிரகிருதிபுருஷா
ளுக்குவுற்பத்தியானதுகூடாது அவர்களிருவர்கூடினத்
திஞலேவாயுவும்ஜலமும் சம்பந்தப்பட்டதிஞலே குமி
ழிகளுண்டாகின்றதுபோலபிராணன் முதல [illegible]
யையுடையசீவாளுண்டாகின்ருர்கள் இதஞலவாகளு[illegible]
குச்சன்மமானதுஉண்மையாகாமற்போச்சுது ஆகையா
ல்இந்தசீவாள்காரணஸ்வரூபமானதேவரீரிடத்தில்காரி
யகாரணசுயரூப[illegible]ானவுபாதிகளோடு கூடலயத்தை
யடைகின்ருர்கள் சீவாளிடத்தில் உம்முடையமாயையி
ஞலுண்டாகாநின்றசமுசாரமானது தேவரீரைச்சரண
மாகஅடையாதவாளிடத்தில்சனனமரணமுதலானபய
த்தைச்செய்கிறதானபடியிஞலே அதையறிந்துஅதுஒ
ழியும்பொருட்டுஞானிகள் தேவரீரிடத்திலேயேபக்தி
பண்ணுகின்ருர்கள்.

உலோகத்தில்ஆசாரியருடையதிருவடிகளே ஆசிரயிக்
காமலே இந்திரியங்களின்வசமாய்ச் செல்லவொட்டாம
ல்மனதாகிறகுதிரையை அடக்குகைக்கு எவர்கள்எத்த
னஞ்செய்கின்ருர்களோ அவர்கள்மிக்க சிரமத்தையும்
விசனத்தையுமடைந்தவர்களாய் சமுசாரத்திலழுந்திக்
கிடக்கின்ருர்கள்தேவரீர்சர்வாந்தரசஸ்வரூபரானபர
மாத்மாவாயிருக்கையில்மனுஷயாள்துஸ்ஸகங்களானசு
வசனம்-புத்திராள்-தேகம்பாரியை-தனம்-கிரகம்-பூமிபி
ராணுகியஇதுகளிடத்தில்உண்டாகுமாசையானதுஎ
ன்னபிரயோசனத்தைக்கொடுக்கும்பரமார்த்தசுகத்தை
யறியாமலும் ஸ்திரீகளுடைய விஷயாதி சுகத்தின்பொ
ருட்டுபிரவர்த்தியாநின்றபுருஷாளே உண்மையாகசித்
துப்போகச்செய்யும்இந்தச்சமுசாரத்தில்எந்த அர்த்த
ந்தான்கிடைக்கப்போகின்றது யாதொருரிஷிகள்தேவரீ
ருடையதிருவடிகளிலிடைவிடாமல் ஹிருதயத்தைவை
த்தவர்களாயும் பாபத்தைப்போககடியாநின்றதேவரீரு
டையஸ்ரீபாததீர்த்தத்தை யுடையவர்களாயிருந்தாலும்
பூமியில்மிகவும்புண்ணியதீர்த்தங்களேயும் க்ஷேத்திரங்
களேயும்அன்புடனே சேவிக்கின்ருர்கள் யாதொருபிரா
ணிகள்நித்தியசுகஸ்வரூபராயும் பரமாத்துமாவாயுமிரு
க்கிறதேவரீரிடத்தில் ஒருக்கால்இந்திரியத்தின்வசத்தா
ய்விடாமல்மனதைத்தரிக்கிறவர்களும் கிரகமுதலானதி
ஞல்வருமாசையைவிட்டுவிடுகிருர்களன்ருே ஆகையா
ல்ரிஷீஸ்வராள்சதாகாலமும் சிந்தைவைப்பவர்கள் அப்
படிவிடுவது ஆச்சரியமன்று அழகியசொர்ணத்தினின்று
முண்டானகுண்டலமுதலானவாபரணங்கள்சொர்ண
மாகவேகாணப்படுகிறதுபோல்இந்தப்பிரபஞ்சமானது
ம்சத்தென்றுசொல்லத்தக்கதாய் காணப்படாநின்ற தே
அப்படியாஞலும்அதற்குசத்தென்பதுசித்திக்கமாட்டா
துஎப்படியென்ருல்பிதாவிஞலுண்டானபுத்திராள்முத
லானபேர்களிலும்குலாலஞலுண்டானகட முதலானதி
லும்காரணஸ்வரூபமாயிருத்தலைக் காணப்படாதபடியி
ஞலேஅப்படிசத்தென்பதுங்கூடாது, காரணமேகாரிய
ரூபமாயிருக்கிற தென்பதுங்கூடாது, பழுதையிற்ருே

ன்றும்பாம்பு பழுதையேயல்லதுபாம்பல்லாததுபோல பிரபஞ்சமும் அசத்தேயன்றிசத்தன்று பழுதையிற்பாம்பென்கிறதுஎப்படியெதார்த்தமானவஸ்துவாகவில்லையோஅப்படிபோல அவித்தையென்கிற பிரகிருதியுடனேகூடிக்கொண்டிருக்கிறபரமாத்மா காரணமாகிறகின்றது இப்படியிரண்டினுலுமுண்டாகின்ற பிரபஞ்சம் வஸ்துவன்றுஆகையால்பதார்த்தத்தினுடைய விவகாரத்தின்பொருட்டுபிராந்தியானது அக்கியானத்தினுல்இச்சிக்கப்பட்டிருக்கின்றது.

பாரீர்பகவானே, தேவரீருடைய வேதஸ்வரூப மானவாக்கானது கர்மத்திலே சிரத்தையுடைய ஜனுளை இப்பிரபஞ்சத் தென்றே மோகிப் பிக்கின்றது இந்தப் பிரபஞ்ச மானது சிருஷ்டிக்கு முன்னும் மகாப்பிரளயத்துக்குப்பின்னும் அநித்தியமாகையால் மத்தியில் ஆனந்தஸ்வரூபியான தேவரீடத்தில் அசத்தாகவே விளங்குதென்று நிச்சயிக்கப்பட்டது மிருத்திகையிலும் சொர்னத்திலு முண்டாகும்கடகுண்டல முதலானதுகளுக்குகடமென்றுங் குண்டலமென்றும் பெயர்மாத்திரமேயன்றி மிருத்திகையென்பதும் சொர்ணமென்பதுமஎப்படியெதார்த்தமாயிருக்கின்றதோ அதுபோலபிர்ம்மத்தில்நின்று முண்டாகும்ஆகாசமுதலானதத்துவங்களுக்கும் ஆகாசமுதலானநாமமாத்திரமேயாகையினுல்பிர்ம்மமென்ப தேசத்தியம்இதினுல் அசத்தைச்சத்தியமென்றுணர்பவர்கள்புத்திஹீனளாகின்றூர்கள்,

ஜிவாத்மாவானவன்தேவரீருடைய மாயையினுலே அக்கியானத்தையடைந்துசத்துவாதி குணங்களையும்தேகேந்தரியாதிகளையு மடைந்துபின்பு அதுகளின்தர்மங்களையுமடைந்து மறைக்கப்பட்டஆனந்தாதி குணங்களையுடையவனுய்சமுசாரத்தையடைக்கின்றுன்தேவரீர்சர்ப்பமானது தன்னுடையதாயிருக்கிறதன் சருமத்தையே அபிமானமில்லாமல்எப்படிவிட்டு விடுகின்றதோ அதுபோல மாயையினிடத்தில் அபிமானமில்லாமலிருக்கின்றீர், நித்தியமாகஅடையப்பட்டகியான அயிஸ்வரியாதி குணங்களையும் அளவில்லாமல் விளங்கும் அணிமாதியஷ்ட அயிஸ்வரியங்களையுடையதேவரீர் பரமபதத்திலகாநிற்கின்றிர்,யாதொருளதிஸ்வராள்மனதிலுள்ளகோதிக்கையாகிய வாசனைகளையொழிக்கமா லிருக்கின்றஅசத்துக்களானஅவர்களுடையஇருதயத்தில்தேவரீர்அந்தரியாமியாயிருந்தாலும அவர்களுக்கு அடையப்படாதவராகவே யிருக்கின்றிர், இந்திரியாதிவிஷயங் களில்ஆசக்தாளாயும்யோகமென்கிற வியாசத்தை யுடையவர்களாயுமிருக்கிற அக்கியானிகளுக்குசுசனங்களை ஆசிரயிக்கிறதும் தனமுதலானபொருள்சம் பாதிக்கிறதுமாகிய இக்கிலேசத்தினுல்இகலோகத்திலும் பரமேஸ்வரரான உம்முடையதிருவடிகளை ஆசிரயிக்காததினுல்பரலோகத்திலும் துக்கமேயுண்டாகின்றது தேவரீர்ஸ்வரூபகியகனத்தையுடைய புருஷாளபூர்வபுண்ணிய பாபரூபகர்மங்களுடை பலங்களானசுகதுக்கசமமாதங்களையும்பிரவர்த்திநிவர்த்திமார்க்கங்களைப்போதியாநின்றும் வேதவாக்கியங்களையும்அறியாமலேயிருக்கின்றூர்கள்,

வாரீர்பகவானே, சொர்க்காதிபதிகளான பிரமன்முதலானவர்களும்தேவரீருடையஅந்தத்தையறிந்தவர்களென்று, தேவரீரும்தேவரீருடையஅந்தத்தையறிந்தவரன்றென்றேசொல்லவேண்டுமானுலுமீதாச்சரியம்யாதொருகாரணத்தினுலேயென்மேலுமஅதிகமான ஆவரணங்களையுடைய பிர்ம்மாண்டசமூகங்கள்காலசக்கரத்தினுல் தேவரீர்மத்தியில் ஆகாசத்தில்புழுதிகளானதுபோல் ஏககாலத்தில்தானே சுழன்றுகொண்டிருக்கின்றதுஆகையினுல்தேவரீருடைய அனந்தகலியாணகுணங்கள்அனந்தங்களானபடியாலும்நிற்குணப் பிர்ம்மவிஷயமானபடியாலும் வேதங்கள்பிரபஞ்சநிஷேதமுகமாய் தேவரீரிடத்தில்சமபக்தியையுடையதுகளாய்நிற்கின்றதுவாரீர்நாரதமகாரிஷியே, பிர்ம்மபுத்திராளான சனகாதிகள்இந்தப்பிரகாரம் பரமாத்துமவிஷயமான தத்துவங்களைக்கேட்டுபரமாத்துமாவினுடைய கதியையறிந்துசித்தாளாய்பின்புசனந்தனமகாரிஷியை நன்ருகப்பூஜித்தார்கள் இந்தப்பிரகாரம் வேதங்கள்-உபநிஷத்துக்கள்- புராணங்கள்- இவைகள்பிரமபுத்திராளாயும்ஆகாசத்திலே சஞ்சரியாநின்றும்மகானுபாவர்களாயுமிருக்கின்ற சனந்தனர்முதலானயோகிகளாலேநிச்சயம் பண்ணப்பட்டதுபிரம்மபுத்திரரான நாரதமகாரிஷியே, நீரும்இந்தப்பிரகாரம்ஆத்துமதத்துவத்தை சிரத்தையுடனே கூடதரியாநின்று பரமாத்துமாவினிடத்திலேஸ்திரமானசித்தத்தையுடையவராய்ச்சஞ்சரித்துககொண்டிருக்கக்கடவீர்

ஸ்ரீசுகர்வாக்கியம்.

பாராய்பரிட்சித்துமகாராஜனேமிகவும்நயிஷ்டிகரான அந்தநாரதாமகாரிஷியானவர்இந்தப்பிரகாரம்குருவான ஸ்ரீமந்நாராயண ரிஷியினுலேசொல்லப்பட்ட ஆத்துமதத்துவத்தைக்கிரகித்துமிகவுங்கியானத்தை யுடையவராய்கிருதகிருத்தியராய் சகலபிராணிகளுக்கும் மோக்ஷத்தின் பொருட்டுமங்களகரங்களான லீலாவதாரங்களைத்தரித்த பகவானுயும்நிர்மல மூர்த்தியுமான ஸ்ரீகிருஷ்ணருக்குப்பிரணமம் பண்ணுகிறேனென்று இந்தப்பிரகாரம்அந்தநாரதமகாராரிஷியானவர் ஆதிரிஷியானபகவானைப்பிரணமம்பண்ணிநிர்ம்மலமானஆத்துமாவையுள்ளஅவருடையசிஷியாளையும்பிரணமம் பண்ணிஅவர்ஸைமயில்அனுக்கியை வாங்கிக்கொண்டுஎனக்குசாக்ஷாத்

பிதாவான வியாசபகவானுடைய ஆசிரமத்தைவந்தடைந்து அவரால் பூசிக்கப்பட்டு கொடுக்கப்பட்ட ஆசனத்திலிருந்துகொண்டு தான்நாராயண ரிஷியினிடங் கேட்ட அர்த்தத்தை வியாசர்பொருட்டுச்சொன்னார்.

வாராய்மகாராஜனே, யாதொருதத்துவத்தைக் கேட்டுதத்துவக்கியானமடைந்து இப்படியென்று சொல்லக்கூடாததிற்குணமானபிர்ம்மத்திலுமனது பிரவர்த்திக்குமோ அந்தத்தத்துவமானது உனக்குநம்மால் வர்ணிக்கப்பட்டது யாதொருபகவானனவர்ஜீவாளுக்குசமஸ்தபுருஷார்த்தசித்தியின்பொருட்டுசிருஷ்டி - ஸ்திதி-லயங்களபண்ணத்தக்கதென்று ஆலோசித்து இந்தப்பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி-ஸ்திதி -சங்காரகிருத்தியங்களில்பிரவர்த்தித்திருக்கிறாரோ பிரகிருதி புருஷாளுக்கும் ஈஸ்வரராயிருக்கிறாரோ ஜீவாளுக்குபோகார்த்தமாக இந்தப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்துஜீவிஞெடுகூட அனுப்பிரவேசித்திருக்கிறாரோ ஜீவன்களுக்குப்போகஸ்தானங்களானசரீரங்களை சிருஷ்டித்தாரோ அந்தஜீவன்களுக்குப்போகத்தைக்கொடுத்துக்கொண்டு அதுகளைப்பரிபாலனம்பண்ணுகிறாரோ அப்படிப்பட்ட பிர்ம்மசொரூபியானஸ்ரீபகவானைச்சரணாகதியடைந்து காரணகாரியஸ்வரூபமான அவித்தையைவிட்டு பகவானிடத்தில் இடைவிடாதகியானத்தை யுடையவனாய்ஜீவன் முத்தனாயிருப்பன், அழிவில்லாதசுகானந்தசொரூபத்தினாலே மாயாசம்பந்தமில்லாத அப்படிப்பட்ட ஸ்ரீஹரியைசதாகாலமும் தியானம்பண்ணக்கடவன்.

---

அறுபத்தாறு அத்தியாயம்.

கலிவிருத்தம்.

சிவபெருமான்முன்பஸ்மாசுரனுக்கு
நவமதாய்வரங் கொடுத்துகலிகதிட
பவத்தைதீர்க்கும்பத்மாக்ஷநாராயணன்
அவனைவென்றவருங்கதைசொல்லுவாம்.

சிவபெருமான் பஸ்மாசுரனுக்கு வரங்கொடுத்து சங்கடப்பட்டு ஐவல்லிக்காயினிலொளித்திருந்தவரைஸ்ரீநாராயணமூர்த்தியானவர் அவ்வசுரனைவென்றுவெளிப்படுத்தியதைச் சொல்லுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்

இப்படி அருளிச்செய்கின்ற சுகமுனிவரை நோக்கிசிவபக்தர்கள் ஐசுவரியவான்களாயும் விஷ்ணுபக்தர்கள் விரக்தராயுமிருக்கின்றார்கள்யாதுகாரணத்தினாலிப்படியிருக்கிறார்கள் அதைஅருளிச்செய்ய வேண்டுமென்று வினவுகிற அரசனைநோக்கிசிவனுக்குப்பாதி சரீரம்மடந்தையாயிருப்பதினால் தன்னைக்குறித்துத் தவஞ்செய்வோர்க்குசீக்கிரத்தில்பிரத்தியக்ஷமாய் அவர்களுடைய யோக்கியதையை விசாரியாமலேஇஷ்டமான வரத்தைக்கொடுத்துவிடுவார், இப்படி அனேகமானபேர்கள்இராஜஸதாமசகுணங்களையுடையவர்கள், வரம்பெற்றுசங்கடப்படுத்தியிருக்கின்றார்கள், கேசவபிரான்சாத்துவிகர்களையன்றி மற்றவர்களைமெச்சார், யாரை அனுக்கிரகிக்கவேண்டுமென்று கருதுகிறாரோ அவனுடையசகலஐஸ்வரியத்தையும் பறித்துக்கொண்டு அகங்காரமுதலியதுற்செய்கைகளைக்கருவறுத்து இரட்சிப்பரேயன்றிஎளிதில்இஷ்டத்தைப்பூர்த்திசெய்யமாட்டார்அவர்களால்பின்னிட்டுஒருதுன்பமும் நேரிடாது.

பஸ்மாசுரன்.

சிவபெருமான் வரங்கொடுத்ததில் எதிரிட்ட வினைத்சொல்லுகிறேன்கேள், சகனென்கிற ராக்ஷசனுடையமகன்பஸ்மாசுரனென்பவன் யாரைக்குறித்துத் தவஞ்செய்தால் சீக்கிரத்தில் பயனடையலாமென்று யோசித்திருக்கையில் நாரதமகாமுனிவர் அவனிடம்வந்து அவனுடன்சிவபெருமானைக் குறித்துதவஞ்செய்தால் சீக்கிரமத்தில் பயனடையலா மென்றுரைக்க அதுகேட்டு அவனும் தவத்திற்குரிய வேடங்கள்பூண்டுஇமவத்பர்வதத்தின் தாழ்வரையில் சிவனைக்குறித்து அகோரமானதவஞ்செய்து பின்புதனது சரீரத்தினிலிருக்கின்றமாம்சங்களைத்துண்டித்து அக்கினியில்ஹோமஞ்செய்துபின்புதனதுசிரசைத் துணித்து ஆகுதிசெய்யயத்தனிக்க அப்போது சிவபெருமான்அவன்கையைப்பற்றி உன்தவத்திற்குமெச்சினேன் வேண்டியிருக்கிற வரத்தைக்கேளென்றுரைக்கஅவன்என்யார்தலையில் கையைவைக்கிறேனோ அவன்சாம்பராகும்படி வரங்கொடுக்க வேண்டுமென்று கேட்டான், சிவபெருமான் தீர்க்கமாயோசனை செய்யாமல்அப்படியே தந்தேனென்று சொல்லிவிட்டார், அவனந்தவார்த்தையைச் சோதிக்கவேண்டி சிவன்றலையிற்றானே கையைவைக்கப் போனான் தன்னுடையமெய்ப்புதனக்கே தீங்காய்வந்ததென்று ஓடிப்போகையில் பஸ்மாசுரனும் பின்றொடர்ந்தான் அப்படியேஉலகெலாமோடிநிர்வகித்துக்கொள்ளமாட்டாமல்ஐவல்லிக்காயினிலொளித்தனர்அத்தருணத்தில்பஸ்மாசுரன்இலைஇலையாய்சோதித்துக்கொண்டிருந்தான், இதுகளைக்கண்டுஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் இதென்னபிரமாதமாயிற்றென்றுசீக்கிரமத்தில் பிரம்மசாரியாய்வடிவுகொண்டு அங்கேவந்துநின்று அசுரனைநோக்கி இப்படிக்கேன் அலைகிறாயென்றுகேட்க்க அவன் ... விருத்தாந்தத்தைச்சொல்ல

க்கேட்டு மாதவனுனவர் கலகலவென்று நகைத்துஅடா மூடாமோசம்போனையேஅவனுடையயோக்கியதையை யறிமாலிவ்வளவுகஷ்டப்பட்டுப் பிரயோசன மில்லாமற் போனையேஉனது அயோக்கிதையையானென்னசொல் லப்போகிறேன் அந்தச்சிவனுக்குசத்தியமேதுசவுசமே துமோசக்காரனுச்சுதேமேலும்தக்ஷப்பிரஜாபதியால்பி சாசுகளுக்கு யஜமானனுகும் படிசபிக்கப்பட் டிருக்கி ன்றுன் அதற்குத்தகுந்த புத்திதானேயிருக்கும் உனக் கவன் வரங்கொடுத்தது நிஜமேயானுல் எதிரில்நின்று உத்ரவு சொல்லமாட்டானு அவன்யோக்கி யதையை இதிலறிந்துகொள்ளுஇந்தச்சந்தேகத்தை நிவர்த்தித்து க்கொள்ள அவனைக்கூடத் தேடவேண்டுமோ உனக்குள் ளேபார்த்து தெளியக்கூடாதா வென்றுரைக்கவே அந் தமூடன் இவர்சொல்வது சரிதானென் றெண்ணிதன் தலையின் மீதில் கையைவைத்துக்கொண்டு சாம்பலாகி னன்,அது கண்டுசிவபெருமான்வெளிப்படஅவரைநோ க்கிஇப்படிப்பட்டதுஷ்டனுக்கும்வரங்கொடுக்கலாமோ இனியாவது நிதானித்து வரங்கொடுமென்று சொல்லி இருவரும் தங்களிருப்பிடஞ்சென்றனர்கள்.

## அகூ - வது - அத்தியாயம்.

இரட்டையாசிரியவிருத்தம்.

தமனியச்சார்பினிற்பிர்ம்ஹவாதிகளான
  தபரிஷிக ளொன்றுசேர்ந்து
தனியாகசாலையை யியற்றியக்யாதிகளை
  தான்செய்துகொண்டிருந்து
அமலமாம்பிர்மசபையதனில்சாஸ்திராதிகளை
  யாராய்ந் திருக்குநாளில்
அந்தமுளஜகதீசர் திரிமூர்த்தியவர்களில்
  அதிகரின்னுர்களென்று
சமபிருகுமாமுனீந் திரராற்பரிட்சித்து
  சந்தேக மதைதெளிந்து
சந்தோஷமானதும் துவாரகாநகர்சேர்ந்த
  சகோதரப்பிராமணர்களை
விமலகிருஷ்ணர்ச்சுனர்கள்வைகுந்தாண்ணியே
  விளங்குமப்பிள்ளைகள்தமை
வினாவினிற்கொணடுவந்தவர்பிதாமகிழ்வுற
  விடுத்ததுஞ்சொல்லினனரோ.

இது மேருமலைச்சாரலில்பிரம்ஹவாதிகளா கியமகா ரிஷிகள் யாவருஞ்சேர்ந்து ஒருயாகசாலை கல் பித்துஅந ந்தமஹாயக்கியங்களைச் செய்துகொண்டிருந்து அந்தப் பிரம்மசபையில் சகலமானபுராணேதிகாச சாஸ்திரங்க ளை ஆராய்ந்துகொண் டிருக்கும்போது ஜகதீசர்களாகிய திரிமூர்த்திகளுக்குள் எவர் சுத்தசத்வாத்மக முக்திப்பி ரததேவதா சிரேஷ்டரென்று சத்வாதஞ்செய்து பிருகு மகாமுனீந்திரரால் பரிட்சிக்கப்பட்டு சந்தேகநிவாரண பரதத்வநிர்ணயஞ்செய்துசந்தோஷித்தார்களென்பதை யும், ஸ்ரீமத்துவாரகா நகரத்தைசசேர்ந்தகுசஸ்தலியெ ன்னுமொருபிரதேசத்தில்வாசஞ்செய்துகொண்டிருந்த ஒருபூசுரோத்தமருக்குஇறந்துபோன சிசுக்களை ஸ்ரீகிரு ஷ்ணபகவானுனவர் அர்ச்சுன சகிதராய் ஸ்ரீவியூகவைகு ண்டத்திற்கு எழுந்தருளி அந்தப்பிராம்மண சிசுக்களை க்கொண்டுவந்து அவருக்குச் சமர்ப்பித்துச் சந்தோஷி ப்பிக்கச் செய்தாரென்பதையுஞ்சொல்லுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரீர்சாதுஜனப்பிரியமகாராசரே, இனிப்புராதனபு ண்ணியசரித்திரமொன்றிருக்கிறது, அதைச் சிரத்தை யுடன்கேட்கக்கடவீர், பூர்வத்தில் மிகவுமகிமாதிசய த போமூர்த்திகளாகிய மகரிஷி கணங்கள்மகம்மேருமலை ச்சாரலில் சேர்ந்துமகாயக்கியயாகாதி கிருதுக்களைச்செ ய்துமுடிக்கஆலோசித்து ஒருதிவ்வியயாகவேதிகையை க்கற்பித்து யாகங்களை நிறைவேற்றிக்கொண்டு வருகிற காலத்தில் அம்மகாரிஷிகளுடைய சபாசதனத்தில் வே தவேதாந்தாபிப்பிராய நிகில புராணேதிகாச புண்யகு ணுனுபவஞ்செய்கின்றவர்களில் சிலர்தாமஸபுராணங்க ள்பறபலவாறுகக் கூறுகின்றமையால் தங்கள்தங்களுக் குள்சங்கையுண்டாகி ஒருவர்க்கொருவர்இவ்வுலகத்தில் சிருஷ்டிஸ்திதிலய காரணகர்த்தர்களாகிய ஸ்ரீலட்சுமிப திபவபிதாமக மூர்த்திகளுக்குள் ஒருவன்அகிலகாரண சுத்தசத்வாத்மகபரமாத்ம ஸ்வரூபமுதற்குண முக்கிய தேவதாமூர்த்தியா யிருக்கவேண்டும், அவன்சுத்தசாத் வீகலட்சணமுடையவனும் ராஜஸ் தாமஸகுண மில் லாதவனுமிருப்பன அப்படிப்பட்டவனேபரமபொரு ளாவான், அவன்இன்னுனென்று ஆராயப்புகுவோமெ ன்னில்அத்திரிமூர்த்திகளில் எந்த மூர்த்தியாவதுகோ பங்கொண்டால் நம்மைக்கொல்வானே அதற்குயாம் எ ன்னசெய்கின்றது பின்னே எவன்பரமபொருளாயிருந் தாலென்ன, பரமபொருளாகாவிட்டாலென்ன,இந்தஆ லோசனைநல்லதென்றெண்ணி ஒருவருக்கொருவர் பே சிக்கொண்டு பயசித்தர்களாயிருந்துவிட்டனர்கள், அப் படியஞ்சிய முனிகணங்களில் பிருகுவானவர் ஸ்வேதப ர்வதம்போலநின்று அவர்களைப்பார்த்துசொல்லுகிறார் வாரீர்தபோநிதிகளே நிர்த்தோஷசுத்தசாத்விகலட்சண க்கியான நாயகன் எவர்கள் யாதுகுற்றங்கள்செய்தாலு

ம்அதைத்தோஷமாகத் திருவுளத்தில்கொள்ளுதலேயி
ல்லை, தாமஸராஜஸகுணமுடையதேவதாஸ்வரூபிகள்நா
ம்செய்யும பரீக்ஷார்த்தம் நம்மைஙலியக் கோபிப்பார்க
ளேயாளுல் நாமென்னஅவர்களுக்கு குறைந்ததபோம
ஹிமையுடையவர்களோநாம்அந்தத்தாமஸராஸஜர்களுக்
குஎதிர்சாபந்தந்துஙலியச்செய்யக்கூடாதோ,இந்தப்பிர
ம்மசோதனைக்கு மகநிய்யமூர்த்திகளாகிய உங்களுடை
யபரமகிருபையால் யான்ஒருத்தனேபோதுமென்றுமு
னிகணங்களுக்கு நல்ல வார்த்தைகளைச் சொல்லிவிட்டு
சாட்சியாக சில முனிகணங்களை யழைத்துக்கொண்டு
சென்று திரிபுரதகனஞ்செய்த ஸ்ரீஉமேசருடைய ஸ்வ
பாவத்தை முன்னேயறிவோமென்றுசகலபூதவேதாள
ப்பிரமதகணங்களும்ஸ்வர்ணமணிமயகிரீடதர யட்சகி
ன்னரகந்தர்வாதிதேவதாகணங்களும்கரகமலங்களைக்கு
வித்துவணங்குகின்ற கைலாசக்கிரியைச் சேர்ந்து மகா
தோரணங்களாலலங்கரிக்கப்பெற்றுஅந்தமாயிரகனகசி
கரங்களையுடைய கோபுரவாயிலைச்சார்ந்து ஸ்ரீநந்தியை
நோக்கிஎமதுவரவைஸ்ரீருத்திரபகவானுக்குதெரிவிக்
கக்கடவாயென்றுசொல்லஸ்ரீநந்தியானவர்ஓமுநீந்திரரே
நீர்வந்தசெய்தியை ஸ்ரீலோகேசராகிய உமாகாந்தருக்கு
த்தெரிவிக்கத் தக்கசமயமென்றுசொல்லினர், அதுகே
ட்டுப் பிருகுமுனிவர் ஸ்ரீகைலாசத்திலேயே ஏழுநாள்
காத்திருந்தும் சிவதரிசனங் கிடையாமல்அதிவருத்தமு
ற்றுத்தம்து கியானசட்சுவினுல் பார்க்கையில் சாமவே
தகான லோலராகிய ஸ்ரீபரமசிவனுனவர்ஸ்ரீஉமாதேவி
யோடு சம்போகமோகசாகரத்தில் மூழ்கியிருப்பதைய
றிந்துகோபோத்தீபித மானசராய்யான் ஏழுநாள்மட்டு
ம்இக்கோபுரவாயலில் வந்துகாத்திருக்கவும்தாமசகுண
த்தினுலே எனக்குச்சக்தாரம்சிறிதுஞ்செய்யாமல்காமா
ந்தகாரத்தில் மக்கினர்களாயிருக்கிற ஸ்ரீஉமேசருக்கும்
ஸ்ரீஉமாதேவிக்கும்இலிங்கமும் யோனியும்அற்றுவிழ
க்கடவனவென்று சபித்துச்சென்றனர், வேல்போலும்
நேத்திரங்களையுடைய கௌரியுட்னே சம்போகசாபத்
தைக்கடாது லோகேஸ்வரராகிய ஸ்ரீ பரமசிவனுனவர்
வாயிலில்வந்துசேர்ந்தனர்உடனேநந்தியானவர்ஸ்ரீபசுப
தியினுடையபதாம்புஜங்களுக்குத்தண்டன்சமர்ப்பித்தெ
ழுந்துநின்று ஸ்ரீபிருகுமகாமுனிவர்வந்து காத்திருந்த
தையும் அநந்தரம் அவர்சபித்ததையுஞ்சொல்லக்கேட்
டருளிய நிர்மலானந்த சங்கரபகவானுனவர் அங்கஙகு
நின்றகணநாதர்களைக் கடாட்சித்துத் ,தவசிரேஷ்டராகி
யபிருகுமுனிவரை அழைத்து வாருங்களென்றுசொல்
லியருள அந்தப்பூதநாதர்கள் அதிதுரிதமாகச்சென்று
அந்தமுனிவரையழைத்துவந்தனர், அம்முனிபுங்கவரு
டையவரவைக்கண்ட ஸ்ரீகிரீசரானவர் அவருடையகோ
பத்தைஉபசமனம் பண்ணவேண்டி எதிர்கொண்டுபோ
ய்ஆலிங்கனஞ்செய்ய நெருங்கினமாத்திரத்தில் நெற்றி
யில்புருவரேகைகள் மேல்நிமிரவும், அதிக உக்கிரகோ
பாக்கினியானது அதிகரிக்கவும், இரண்டுநேத்திரங்களு
ம் சாதிலிங்கம்போலச்சிவக்கவும், பிருகுமுனிவர் திரு
நேத்திரருடனேசொல்லுவார்.மசானத்தில்வாசஞ்செய்
தும்பைசாச துர்ச்சங்க சகவாசஞ்செய்தும்சர்மஹஸ்தி
களைத்தரித்தும், சாம்பலை உடலில்பூசியும், காமமோக
த்தில்பரவசப்பட்டும், அசுசியாயிருக்கின்ற நீநாம்மூல
தர்மனைமலரில் உற்பவனுகிய பிரம்மதேவனுடையபுத்
திரனென்னும் மமதைகொண்டு தபஸ்சுசீலனுகியஎன்
னைஸ்பரிசித்து ஆலிங்கனஞ்செய்யவந்தாயோ தீண்டா
தேதூரநில் நில்லென்றுசொல்லஅதுகேட்டுபரமயோ
கியும் மெய்ஞ்ஞானச்செல்வருமாகிய சூலபாணியானவ
ர்தமது இலவமலர்போன்றஇதழ்துடிக்க, ரோமராசிகள்
சிலிர்த்துக்கொள்ள,மேகமுழக்கம்போலபற்களைநறநெ
ன்றுகடித்துதமதுதிருமேனியில்அணிந்தசர்ப்பங்களெ
ல்லாம்விஷங்களைக்கக்க,நெற்றியிலுள்ளஅக்கினிமயநே
த்திரத்தைத்திறந்தனர்அதுகண்டுநின்ற பிருகுவுமஅதி
உக்கிராகாரராய்த் தம்முடைய பாதத்தின்பெருவிரலு
ள்ள நயனுக்கினியால் சிவநேத்திராக்கினியைச் செயங்
கொண்டுமுன்னிட்ட சாபமல்லாமலும் உருத்திரபகவா
னேநீஇனிப் பிராம்மண்ய தெய்வமாகாமற் போகக்கட
வாய்உனக்கு நிவேதித்த நிவேதனமும் பிராம்மணுங்கீ
காரமாகாமற் போகக்கடவதென்று சபித்துவிட்டு அங்
கு நின்றும் புரப்பட்டுச் சத்திய லோகத்துக்குப்போய்
ஸ்ரீசதுர்முகபகவானைக்கண்டுயாதொருவணக்கமுஞ்செ
ய்யாமல்நின்றனர், அந்தப்பாரதி நாயகர்தம்முடையபுத்
திரனுயிருந்தும் இந்தப்பிருகு நமக்குயாதொருவந்தன
முஞ்செய்யாமலிருக்கின்றுனென்று மனவெறுப்புடனி
ருந்தனர். ஸ்ரீ பிருகுமுனிராஜர் பிரம்மதேவரிடத்தில்
ராஜகுணமிருக்கக்கண்ட சர்ப்பத்தைப்போலச் சீறித்த
ம்முடைய பிதாவென்பதையும் சிறிதும்நினையாமல்ஓச
துர்முகனே இன்றுமுதலாக உனக்குப்பூலோகத்திலே
ஆலயப்பிரதிஷ்டையில்லாமற் போகக்கடவதென்று சா
பந்தந்து-அங்குநின்று அதிசீக்கிரமாக ஸ்ரீவைகுண்டத்
துக்குச்சென்று ரத்தினசிரேஷ்டமாகிய பத்மராகரத்தி
னகசிதமாகிய விபூகவைகுண்டத்திருகோயிலுக் கெழு
ந்தருளுதலும் ஜயவிஜயர்களாகிய திருவாயில்காப்பவர்
கள்இவர் ஸ்ரீபகவத்பக்தி பிரேமாதிசயமகநிய்யமூர்த்தி
யென்றுபயந்து யாதோராடங்கமுஞ் செய்யாதிருக்கஉ
ள்ளேபிரவேசித்துஅனேகநித்தசேவிதராய் ஸ்ரீவேதஸ்
வரூபியாகிய வைநதேயரபின்பக்கத்தில்இருசிறகையும்
விரித்துக்கொண்டு,காத்துநிற்க, ஸ்ரீபெரியபிராட்டியார்
திருவடிக்கமலங்களைக் கராம்புஜங்களால் மெல்லெனவ
ருடக்கோடிகோடி சூர்யப்பிரகாசம்வீச நீலமகம்மேரு

கிடந்தாப்போல் ஸ்ரீ யநந்தசயனத்தின்மேல் திருக்கண்வளர்கின்ற சத்துச்சித்தானந்தஸ்வரூபனைத் தமதுபாதத்தினால் எட்டியுதைத்தனர். ஸ்ரீபக்தபராதீனராகிய பகவானானவர் புத்திரர்மேலேவிழத்தாய் உள்ளமகிழ்வதுபோலஅம்முநீந்திரருடைய அல்பபுத்தியைசசிறிதும்பாராட்டாமல் புளகாங்கிதராய் பெருக்கெனஎழுந்து என்னையனே இன்றுஎன்னிமித்தமாகஉன்னுடையபதசரோருகம் நொந்து வாட்டமுற்றதேயென்று இரங்கிக்கொண்டிநின்றனர்.

வாரீர் சத்வகுணநிதியாகிய சத்புருஷ சிரேஷ்ட மகிபதியே "ஸ்ரீ புண்டரீகாட்சரானவர் இந்தப்பிரகாரம்கேட்டுக்கொண்டிருக்கஇந்த ஸ்ரீஹரியேசுத்தசாத்திகபரஞ்சோதியென்று உண்மையுணர்ந்து பிருகுமஹாரிஷியானவர் அந்தஸ்ரீபகவானுடைய பரமகிருபா வாத்சல்லியாதிசயஅத்தியாதரமிருதுமதுரகம்பீரபூசிதவசனங்களால்பரமசுகானந்தராய்ஸ்ரீஹரி, ஸ்ரீமுகுந்தரே, ஸ்ரீமதநந்தகல்யாணகுணநிதீஎன்றுதியானபூர்வகமாய்த்துதித்துத் தமதுதிவ்யநேத்திரங்களில் ஆநந்தபாஷ்பங்கள்வருஷிக்கப் பரமபக்திபரவசத்தராய்த் தண்டன்சமர்ப்பித்தெழுந்துஇரண்டுகரங்களையுஞ் சென்னியின்மேல்குவித்துக்கொண்டு ஸ்ரீசக்கரதரரேசர்வ ஜகத்காரணபரமபொருளை அறியவேண்டி அடியேன்புத்திஹீனத்தால்தேவர்பக்கல்செய்ததோஷத்தை க்ஷமித்தருளுமென்றுவிடைபெற்றுக்கொண்டு தம்முடன்கூட.வந்திருக்கிற மஹரிஷிகணங்கள்சூழ மேருமலைச்சாரலில்யாகங்களைச்செய்துக்கொண்டிருக்கிற பிரம்ஹவாதிகளானமுனீந்திரர்களுடையசபாசதனத்தில்வந்துசேர்ந்துஇவ்வுலககர்த்தர்களாகியமும்மூர்த்திகளுடைய குணநிசயமின்னதென்றும்அவர்களுள் ஸ்ரீஅச்சுதரே பரப்பிரம்மஸ்வரூபமென்றும் அந்தமஹரிஷிகள்யாவருக்கும்சொல்லஅவர்கள்கேட்டுமிகவும் ஆச்சரியமானசத்துடன் அருந்தெய்வபரத்துவபிரபுத்வ சந்தேகநிவாரணமான சிகத்தையடைந்தனர் உடனே அவ்விடத்திலிருந்த அந்த மகாயோகிகள்யாவரும் இந்தத்திருமூர்த்திகளுக்குள் ஸ்ரீசின்மயாகாரராகியும் ஸ்ரீமஹாலக்ஷ்மீ சதீசராகியும்நிருபாநந்தநிர்வந்தியராகியும் நித்தியகல்யாணகுணகணநிசயஸ்வரூபராகியும் ஆதிமத்தியாந்தரஹிதராயும் விளங்கிக்கொண்டிராநின்ற ஸ்ரீபுண்டரீகாக்ஷரைத் தவிரவிதிசிவாதிசர்வப்பிராணிகளினுடைய பரமபரிசுத்ததோஷபோக்கியஅருந்தெய்வஸ்வரூபவிவேகஜன்னியக்கியானயோகபரமபக்தியதிசயவரப்பிரதானங்களைஅருளிச்செய்யாநின்றஸ்ரீசர்வசுவாமிவேறுகிடையாதென்று யதார்த்தஞானசித்தர்களாய்ச்சாந்தசமதமாதி குணங்களைவசித்துச்சர்வேந்திரியநிக்கிரகஞ்செய்து காமக்குரோதாதிஅஷ்டவர்க்ககுணரகிதர்களாகி நிரபேக்ஷக்கியானபோகசித்தியடைந்து மஹாசாதுமூர்த்திகளாய்விளங்கினார்கள்.

அவ்வாறு விளங்கிய மஹரிஷிகள் யாவரும் ஸ்ரீ அரிபாதாரவிந்தத் தியானயோக மானசர்களாயும் ஸ்ரீ பகவானைக்குறித்து அநந்தமான யாகாதிகளை நைரபேக்ஷர்களாய்ச்செய்து அந்தயாகங்களை ஸ்ரீ அரிப்பிரீதியர்த்தமாகச் சமர்ப்பித்துத்தங்கள் வாழ்நாளுள்ளளவும் வேத வேதாந் தாபிப்பிராய சகலபுராணேதிகாச சத்சங்க சத்புண்ய குணானுபவமான சீகர்களாயும் ஸ்ரீசர்வேஸ்வரருடைய திருமேனிச் சம்பந்தமாகிய பிரபஞ்சத்தினிடத்திலும் ராகத்துவேஷமில்லாமல் மஹாமந்திரஸ்வரூப ஸ்ரீமந்நாராயணைக்கியபரம்பிர்ம்மத்தினிடத்தில்தங்களாத்துமாவைக்காணிக்கையாகஈடுசெய்து அந்தஸ்ரீமுகுந்தமூர்த்தியினுடையநிர்ஹேதுகபரமகிருபைக்குப்பாத்திரர்களாகவுமிருந்து ரஜதமோமிசிர குணராகித்யசுத்தசத்வாத்மக ஸ்ரீபரந்தாமபர மைஸ்வரியபரமபரப்பிர்ம சுகாநந்தவைபவோநந்தபதத்தினையடைந்தார்கள்.

வாரீர் ராஜமகேந்திர ராகியமகிபதியே,மகம்மேருச்சாரலில் வாசம்பண்ணிக்கொண்டிருந்த வேதவாதிகளாகிய அம்மஹரிஷிசிரேஷ்டர்கள் இவ்வுலகத்தின் கண் இந்தபிரகாரம் எம்மைப்போலப்பரமசத்வ சமாசிரயணபரபிர்ம்மதத்வநிச்சயசந்தேகநிவாரணக் கியானப்பிரார்த்தனாசிந்தனை யுடையவர்களாயினார்களென்றோ, அந்தச்சர்வஜனோபசாரார்த்தமாகக் குணத்திரைய தேவதாநிச்சயஞ்செய்து சுககதியடைந்தசரித்திரமே உமக்குச் திருஷ்டாந்தமாகக் கடவதென்று அருளிச்செய்தனர்

ஸ்ரீ சூகபுராணிகர்வாக்கியம்

வாருங்கள் நைமிசாரண்ய வாசிகளானமகாரிஷிசிரேஷ்டர்களே, ஸ்ரீவேதவியாசருடைய அருந்தவபுத்திரராகியஸ்ரீசுகப்பிர்ம்மரிஷியினுடைய திவ்யவாக்கினின்றும் உண்டாகாநின்ற திவ்யாமிர்தத்திற்குச் சமானமாயும்அநந்தஜன்மார்ச்சித புண்யபாபத்தினாலுண்டாகின்றசமுசாரபயவிமோசனமாயுமிருக்கின்றஸ்ரீபரம புருஷோத்தமருடையதிவ்யசரித்திரங்களை அடிக்கடிச்செவியுற்றுக்கியானஞ்செய்கின்றபுண்ணியபுருஷசிரேஷடர்கள்ஜனனமரணாதி சமுசாரபயவிமோசனர்களாம்ஸ்ரீஅரிபத்தியானமானசக்கியானத்தையடைந்து ஸ்ரீமுகுந்தருடைய ஸ்ரீபரந்தாமவைபவோன்னதசுகத்தை யடைவர்களென்றுகூறிமேலுஞ் சொல்லுகின்றனர்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரீர்திவ்விய குணப்பிரதீபமகிபதியே, ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் ஸ்ரீமத்துவாரகாநகரத்தில் சர்வயாதவபந்துசனங்களுடன் கூடிச்சந்தோஷசாம்பிராஜ்ஜிய அதி

சயத்தை அனுபவித்துக்கொண்டிருக்கிற காலத்தில்அத்திவ்வியநகரத்தைச்சார்ந்தகுசஸ்தலி என்னும் உபநகரத்தில் சுகித்துக்கொண்டிருந்தஒரு பூசுரோத்தமருடையபத்தினிக்குப்பிரசவமாய் ஜனித்தசிசுவானதுஅப்பொழுதேமிருதமாய்விட்டபடியால் அவ்விப்பிரோத்தமர்மிகவும் சோகாகுலிதசித்தராய்அந்தமிருதியடைந்தகுழந்தையையெடுத்துவந்துராஜதுவாரத்தில்வைத்து அங்கிருக்கின்றராஜபந்துக்களையும் துவாராபாலர்களையும் பார்த்துத்துக்கித்துக்கொண்டுசொல்லுகின்றனர்.

பிராம்மணோத்தமருடையவாக்கியம்.

வாருங்கள் புண்ணியபுருஷர்களே, அரசனானவன்தர்மசாஸ்திர முறைமையயறிந்து நீதிவழுவாமல் அதிகாரஞ்செலுத்துவானே யாகில்பிரஜைகளுக்கு இப்படிப்பட்டதுக்கம் நேரிடமாட்டாதென்று உத்தமசாஸ்திரங்கள் சொல்லுகின்றமையால் நம்மையாவரையும் பரிபாலனஞ்செய்கின்ற அரசனுடைய நன்னீதிவழுவாமலிருக்குமாகின் இப்போதுஎனதுசிசுவுக்குஇப்படிப்பட்டஅவாந்தரமிருதிநேரிடுமோ. க்ஷத்திரியாதமனுகியும் உத்தமதரும சாஸ்திரப்படி நீதிதர்மானனாகியும் துராசாரனுகியும் இந்திரியஜயமின்றி விஷயாசக்தனுகியும்விவேகசூனியனுகியும் அரசுசெலுத்து மவனுடைய ராஜ்ஜியத்தில்வாழுகின்றகுடிகள்என்றைக்குஞ்சுகத்தையடையமாட்டார்களென்று நிந்தித்துக்கொண்டு மறுபடியும்அந்தச் சிசுவையெடுத்தமது யதாஸ்தானம் போய்ச்சேர்ந்தனர்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரீர்பூசுரோத்தம பிரியகுணபூபதியே இந்தப்பிரகார அந்தப்பிராமணோத்தமருக்கு கிரமக்கிரமமாய்எட்டுச்சந்ததிகளுண்டாக, அந்தஎட்டுக் குழந்தைகளும்முன்சொன்னபடி மரித்துப்போக அவர்ராஜதுவாரத்தில் வைத்துத்துக்கித்துராஜநிந்தனைசெய்துசென்றனர் பின்புஒன்பதாவது சந்ததியுண்டாகிஇறக்கஅந்தச்சிசுவையும்முன்போலவே ராஜதுவாரத்தில்வைத்துராஜநிந்தனைசெய்யாநிற்கையில்அங்கு ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய தரிசனார்த்தமாக இந்திரதநயராகிய அர்ச்சுனமாகராஜர்வந்திருந்தனர்-தமது பூர்வகர்மத்தினுல் சிசுக்களை இழந்துராஜதுவாரத்தில் ரோதனஞ்செய்து ராஜநிந்தனைபண்ணிக்கொண்டிருக்கின்ற அந்தவிப் பிரோத்தமரைப் பார்த்துப்பேசுகின்றார்.

அர்ச்சுனமகாராஜன்வாக்கியம்.

வாரீர் ஸ்ரீபூசுரோத்தமரே பிறந்தசிசுக்களை அநியாய அவாந்தரமரணமாகக்கூற்றுவனிடத்தில்பறிகொடுத்து தந்நிலைவதனராய்த் துக்கித்துக்கொண்டிருக்கின்றஉமதுவசனத்தை யோசிக்கையில் உம்முடையதுக்கத்தைத்தீர்ப்பதற்கும் சிசுக்களைமிருதியடையாமல ரக்ஷிப்பதற்கும்இம்மாநகரத்தில் தனுர்த்தனனுகியும் சுத்த வீரனுகியும் உத்தமக்ஷத்திரியதருமநீதிகளை யுணர்ந்துநடப்பிக்கின்றஒராஜனும் இல்லாதுபோலல்லவா தோன்றுகின்றது எந்தராஜ்ஜியத்தில் பிராம்மணர்கள் முதலியசர்வசேதனர்களும் ஜாரசோரவியாதி துர்ப்பிக்ஷங்களையும் அவாந்தரகற்பபாலியமரணாதி அவஸ்தாசோகதுக்கங்களையும்அடைந்துகொண்டிருக்கின்றார்களோ அந்தராச்சியமானதுநசித்துவிடுவதற்கு யாதொருசந்தேகமுமில்லை அவ்வரசனும் ராஜவேஷந்தரித்துவயிறுவளர்த்துக்கொண்டிருக்கின்றகூத்தாடியென்றேமதிக்கத்தக்கவன்.

வாரீர் தீனவதனராகிய விப்பிரோத்தமரே நீர்இனிச் சோதிக்கவேண்டாம் உமதுபத்தினியிடத்துக்கர்ப்பமுண்டாய்ப் பிரசவிக்கவிருக்கின்றசமையத்தில்எனக்குத் தெரிவித்தால் நானவ்விடம்வந்திருந்து உனதுசிசுவைரட்சித்துபிழைக்கும்படி செய்கின்றேன்நானப்படிஉமது சிசுவை உயிர்பிழைக்கச்செய்து ரட்சிக்காவிடில் அக்கினியிற் பிரவேசித்துசரீரத்தியாகம்பண்ணக்கடவேனென்றுபிரமாணபூர்வகமாகச்சொல்லினர்.

பூசுரோத்தமர்வாக்கியம்.

வாரீர்பாண்டவமத்தியராகிய பற்குணமகாராசரே இம்மகாநகரத்திற்கதிபதிகளாகவும் அளவிறந்தபுஜபலபராக்கிரமவீரதீரசௌரியசம்பன்னர்களாகவும் தெய்வீகதேவதாம்சசம்பூதர்களாகவும் விளங்கிக்கொண்டிருக்கின்ற ஸ்ரீபலராமகிருஷ்ணபிரத்தியுமன அநிருத்தாதியாதவவீரர்கள் கேட்டிருந்தும் அவர்கள் என்னகாரியத்தையோசித்தோ இதற்குப்பிரதியுத்தரஞ்சொல்லாதவர்களாய் உபேட்சித்துககொண்டிருக்கஜகதீசர்களாலும், ஆசரிக்கவரிதாகிய இந்தமகத்தான காரியத்தைக்குறித்துநீர் இப்படிப்பட்டபிரதிக்கினைசெய்வதுநலமாகத்தோற்றவில்லை இதுஉம்மாலாகுவது மகாதுஸ்தர மாகுமேயென்றுபேசினர் அப்படிபேசுகின்ற பிராம்மணோத்தமரைப்பார்த்துமறுபடியும்அர்ச்சுனமகாராஜர்பிரதாபமானசத்துடன்சொல்லத்தொடங்கினர்.

இந்திரதநயர்வாக்கியம்,

வாரீர்பிராம்மணோத்தமரே நீரென்னைஸ்ரீபலராமமுராசுராந்தகபிரத்தியும்ன அநிருத்தாதியாதவவீரயூகபதிகளைப்போலநினைக்கவேண்டாம் நான்யெப்படிப்பட்டவனென்றால் விரோதிஜனசமூகவிருதயபீஷணோஜ்வலகாண்டீபமென்னுந்தனுசுனிடத்தில்விஜ அட்சயதூணிரோத்பவதிவ்வியாஸ்திரபரம்பரைகளை அனுசந்தானஞ்

செய்து வருஷித்துச்சத்துரு சைன்னியங்களைப் பிணக்காடாகச்செய்தெரிக்கின்ற மகாவிஜயப்பிரதாய வீரதீரசௌரியஸ்வரூபபார்த்திவமகாராஜனென்று நீர்நினைத்துக்கொள்ளும்அன்றியும் திரிபுராந்தகராகிய பிரதாபருத்திர மூர்த்தியினிடதநில் யுத்தஞ் செய்து ஜயித்தரணரங்கவிஜயதீரபராக்கிரமபுருஷனென்று நீர்நம்பத்தக்கதுநான்மிருதியுதேவதையைஜயித்துஉமதுசந்ததியை ரட்சிக்கிறேனென்று அக்குருவச்சயாதாளஞ சொல்லியருளினர்.

ஸ்ரீசுகர் வாக்கியம்.

வாரீர்விஜயபவுத்திரராகியவிவேகோதயமகாராஜரே உமதுபிதாமாராகிய அர்ச்சுனமகாராசருடையபராக்கிரமவசனங்களைநம்பி அந்தப்பூசுரோத்தமரானவர்மிகவும்விசுவாசத்துடன் சந்தோஷசித்தராய் அவருக்கு ஆசீர்வசனங்களைக் கூறித்துதித்துவிடைபெற்றுக்கொண்டு தமதுகிருகத்திற்குவந்து சுகித்துக்கொண்டிருந்தசிலநாளுக்குப்பின்புமறுபடியும் அவ்விப்பிரோத்தமருடைய பத்தினியானவள் கர்ப்பந்தரித்துக்கிரமமாய்ப்பத்துமாதமுஞ்சென்று பிரசவகாலம் நேரிட்டமாத்திரத்தில் பிராம்மணேத்தரானவர் மிருதியும்விளைவாகஅர்ச்சுனமகாராசனிடத்திற்குவந்து ஆசீர்வதித்துப் பிரசவசமயம் நேரிட்டிருக்கின்றது. பிறக்குங்குழந்தையைப் பாதுகாத்துரட்சிககஇதுசமயமென்றுபிரார்த்திக்க அந்தத்தனுர்த்தனரும்மிகவுஞ்சீக்கிரமாய்த் தீர்த்தமாடிஆசமனஞ்செய்துசூரியபகவானுக்கு அர்க்கியங்கொடுத்துப் பரிசுத்தாந்தக்கரணராய் ஒருசுஸ்தலத்திலிருந்து ஸ்ரீஉமாமகேஸ்வரரைத் தியானஞ்செய்துநமஸகாராதிவந்தனங்களை ஆசரித்துத் தனுர்வேதவிதிப்படிமகாஸ்திரசஸ்திராதிகளும் நிர்ம்மலசுப மந்திரங்களால்மற்றதேவதைகளையும்பூசித்துத்தியானஞ்செய்துகாண்டீபமென்னுந்தனுசைக்கரத்தினிலேந்திநானாவித திவ்யாஸ்திரசஸ்திரங்களுடன்கூடிய அட்சயதுணீரங்களைத்தரித்து அந்தப்பூசுரோத்தமருடன்கூட அவருடைய கிருகத்திற்குவந்து சூதிகாகிரகத்திற்கு வெளியிலிருந்துகொண்டு வில்லைவளைத்துநாணேற்றிட்டுக் குணத்துவனிசெய்துமகாஸ்திராதி ஆயுதசமூகங்களைபபிரயோகித்து அந்தப்பிரசவகிருகத்திற்கு தசதிக்கிலும்நூலிழைநுழையாத நெருக்கமாகச்சரகூடுகட்டி அக்கூற்றுவனைச்சிட்சிக்கநினைத்துத்தனுசினிடத்தில் ஓர்திவ்யாஸ்திரத்தைத் தொடுத்துஎதிர்பார்த்துக் காத்திருக்கையில்அம்மகீசுரோத்தமருடையபத்தினிக்குப் பிள்ளைபிறந்து இரண்டுமூன்றுதரங் கத்தியழுது ஸ்வசரீரத்துடன் அந்தர்த்தானமாய்ச்சென்றுமறைந்தது. அப்பொழுதந்தப் பிரசவகிருகத்திலிருந்தஜனங்கள்-ஆ-ஆ-வென்றஆச்சரியமானசத்தத்துடன் ஸ்ரீகிருஷ்ணகிருஷ்ணவென்று பிறந்தகுழந்தையானது பொந்தியுடன்போய்விட்டதே என்னசெய்வோமென்று துக்கித்தழுதனர்கள். அந்தவிப்பிரோத்தமரானவர்சோககுலிதமானசராய் இந்தப்பிமானுஜனைமதியாமல் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய திவ்ய சமுகத்திற்கு ஓடிவந்து முன்னின்று சுத்தசத்வாத்மகபரமவியோமதிவ்யசுகோன்னதபிரம்மானந்த பரந்தாமபிரபுவாகிய ஸ்ரீ முகுந்தரே, ஸநகஸநந்தனாதிதிவ்யமுனிஜனவினுதஸ்ரீநந்தகோபாலதவதநய அகிலகல்யாணகுணமிர்தானந்தசந்திரகிரணப்பிரபாவாதிசய ஸ்ரீகிருஷ்ணகோவிந்தா ஸ்ரீ அரியென்றுதுதித்து வாரீர்எங்கள்சர்வசுவாமியே, நான்எனதுபுத்திரசம்ரட்ச ணார்த்தமாகத் தமதுபிரதிக்கியாவசனத்தைக்காத்துக்கொள்ளச் சக்தியில்லாத அர்ச்சுனமகாராஜருடைய வாக்கியத்தை நம்பிச் சந்தோஷித்துக்கொண்டிருந்தேனே, ஓகோ எனதுமூடபாசபுத்தியை என்னென்றுவிண்ணப்பஞ்செய்துகொள்வேன், இவ்வுலகத்தில்சர்வாரிஷ்டநிவாரண தர்மஸ்தாபனத்தின்பொருட்டுநிகிலவிஸ்வ ஸ்திதிலயங்களுக்குக்காரணபூதர்களான நீங்கள் சர்வசக்திஸ்வரூபசமர்த்தர்களாகவிருந்தும்என்னகாரணத்தினலோ உபேட்சையாயிருக்க ஒருமனுஷியமாத்திரனுலாகவிருக்குமோ, இந்தப்பாண்டுதநயர்களில்மத்தியமராகிய அர்ச்சுனமகாராசர் தம்முடையதனுர்த்தரபிரபாவத்தையும்-சக்தி வசனத்தையும் அவரால் பிரயோகிக்கும் திவ்விய சஸதிராஸதிரங்களின் மகிமாதிசயத்தையும், ஸ்ரீசங்கரபகவானை ஜயித்துக் கீர்த்தியடைந்ததமது பராக்கிரமத்தையுந் தாமேதுதித்து என்னையும்நம்பும்படிசெய்து தம்மாலாகாது நிர் விண்ணியராய்யோசித்துக்கொண்டுநிற்கின்றூர். இதற்குநானேகாரணனாயிருக்கிறேனென்று நிந்தாஸதுதிகளைச் செய்துதுக்கித்துக்கொண்டிருக்கஉடனே அங்குவந்ததேவேந்திரதநயரானவர் அந்தப்பிராம்மணருடையவாக்கியங்களென்னும் சஸ்திரங்களினல்பாதிக்கப்பட்ட மானசிகத்தை யுடையவராய் அங்கு நிற்க சகிக்காமல் தமக்குத் தேவதேவதாவரப்பிரசாதத்தினல் கிடைத்தயோகவித்தியாப்பிரபாவத்தினலே அந்தக்ஷணத்தில்ஸ்ரீபகவதாக்கியஸ்வரூபராகியயமதர்மராஜனுடையஸம்யமனீபட்டணத்தைச்சேர்ந்து அங்குஅவரால்சத்கரிக்கப்பட்டுஇப்பிராம்மணபுத்திரர்களையாராய்ந்துஅங்கில்லையென்றறிந்துகொண்டபின்புகிரமக்கிரமமாய்இந்திரன் அக்கினி-நிருதி-வருணன்-வாயு-ஈசானன்-முதலிய திக்குத்தேவ

ளைகளுடையதிவ்யநகரங்களுக்குட்சென்று அவ்வங்கு அந்தந்திக்குப்பாலகர்களாகிய திக்குப்பதிகளினால் சத்காரத்தையடைந்து அவ்விடங்களிலுமிருப்பவராக்கு மருளடையதபேர்களில்லாமையையராய்ந்து ம் இவ்வர்ச்சுன மகாராசர் நரபதிகளுடைய புண்ணிய லோகநிவாசஸ்தலங்கள்முதல்சுரபதிகள்-யக்ஷர்கள்-கிம்புருஷர்கள்-நாகலோகநிவாசர்கள்-நிசாசரர்கள்-சித்தர்கள்-சாத்தியர்கள்-விஹங்கேந்திரபதிகள் - குய்யகாதிபூதஜாலங்கள்-பைசாச மண்டலஸ்தலங்கள் மற்றுமுண்டான கர்மகதிஸ்வரூபானுபவங்களைச் செய்யாநின்றவர்களின் அனைத்திலுஞ்சென்று அங்குள்ளவர்களால் பூசிக்கப்பட்டுத்தேடியும் இவ்விப்பிரதநயங்களைக்காணாமல்மனமழன்றுதம்மைத்தாமே வெறுத்துக்கொண்டு ஸ்ரீமத்துவாரகாநகரத்தையடைந்து அஹோநான்செய்தபிரதிக்கினைவியர்த்தமாச்சேயென்றுதுக்கித்துத்தமதுஜன்மத்தைநிந்தித்துக் கொண்டவராய் ஒரு அக்கினிகுண்டத்தைக்கற்பித்துக்குரூரமான அனற்சுவாலைகளைவீசியெரியமூட்டுவித்துத்தமது இஷ்டதெய்வத்துதியுடன்பிரதட்சணப்பிரணாமங்களைச்செய்து அனலத்தில்பிரவேசிக்குஞ்சமயத்தில் ஸ்ரீகமலாக்ஷராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானனவர்சமீபத்திற்குவந்துதிவ்வியசுந்தரமந்தஹாசவதனரவிந்தராய்வாராய்எனதுபிரியசகாவாகியபற்குநமகாராசனே உனதுசரீரத்தைஇவ்வனலத்திற் கிரையாக்க வேண்டாம் உன்னைவெறுத்துநிந்தித்த இப்பூசுரோத்தமர்சந்தோஷத்தையடைந்துதுதிக்கும்படியாய் அவ்விப்பிரதநயர்களிருக்குமஸ்தலத்தையுனக்குக் காண்பித்து மீட்டுத்தருகிறேன்.

வாராய்அர்ச்சுனாவென்று சமாதானஞ்செய்துஅவ்வனலத்தையாற்றிவிட்டு ஸ்ரீபகவானனவர் தமதுதிவ்விய சங்கல்பத்தினால் வாயுஸ்வரூபமாகிய ஒருதிவ்வியரதத்தைநிர்மித்துமந்திர ஸ்வரூபங்களாகிய அசுவங்களைக்கட்டிமாதலிதநயனைச்சாரதியாகநியமித்து அத்தைவீகரதத்தின்மேல்ஸ்ரீபுரந்தரதநயனுடன் உதயாசலத்திலுதிக்குஞ்சூரியபகவானைப்போல ஆரோஹணஞ்செய்தனையுமண்டலமார்க்கமாக இப்பூமியிலுள்ளபுண்ணியநகரங்களையும், வனங்களையும் பர்வதங்களையும், நதிகளையும், பார்த்துக்கொண்டுஏழுசமுத்திரங்களையும் ஏழுதீவுகளையும், அங்கங்குநிற்கின்றகுலாசலபர்வதங்களையும் கடந்துசக்ரவாளகிரி சமீபத்திலிராநின்ற தமோமண்டலத்தில் பிரவேசித்துசசெல்லும்போது அக்குதிரைகள் மந்திராஸ்வங்களுக்குங்கதிதப்பும்படி அந்தகாரமாயிருந்தமையால் அவ்விடத்தில்ஸ்ரீபுண்டரீகாட்சராகியசகரபாணியானவர் அனந்தகோடிரவிகிரணதேஜோமயபிரபாவாதிசயத்துக்குஒப்பென்னலாம் படியானதமது திவ்யாயுதஸ்வரூப ஸ்ரீசுதர்சனப்பிராணகியதிருவாழியாழ்வானைப்பிரயோகித்து அம்மகாந்தகாரத்தைப் பிளந்து முன்னடக்கச்செய்து அம்மார்க்கத்தின் வழியாகத்தமதுதிவ்யரதத்தைநடப்பித்து மகாந்தகாரமண்டலத்தைக்கடந்து ஸ்வாதிவருதைகாலநீருண்டகாலமேகத்தில் நின்றுந்தோன்றுகின்றமின்னற்கொடிகளைப்போல ஒருமகாஜோதிர் மண்டலமானதுதோன்றினமாத்திரத்தில்அந்தத்திவ்யதேஜோமயமகிமாதிசயத்தைப்பார்த்து இந்தக்காண்டவதகனர்த்தாவாகிய அர்ச்சுனமகாராஜாவானவர்தமதுகண்களால் அத்தேஜோமயத்தைப்பார்க்கச்சக்தியற்றவராயப் பிரமித்துக்கண்களைமூடிக்கொண்டு பயந்துடல்நடுங்கும்பொழுது ஸ்ரீபகவானனவர் அவர்முகத்தைஸ்பரிசித்து அஞ்சவேண்டாமென்று திடஞ்சொல்லிப்பார்த்துச சகிக்கும்படியானசக்திகொடுத்தபின்பு சந்தோஷசித்தர்களாய் அப்படிப்பட்ட ஜோதிர்மண்டலத்தைநீங்கி அவ்விடத்தில்மஹதாதிபஞ்சபூதாத்மகபிரகிருதி சம்பந்தகாரணத்திலுண்டாகிய இருவினைகளுக்கிடானஜனனமரணங்களென்னும் சமுசாரதாபத்திரயமகானலச்சுவாலைகளின் அதியுஷ்ணதாபஜ்வராதிதுக்கத்தைநிவாரணஞ்செய்யத்தக்கமிகவும் குளிர்ந்தமகாமாருதம்வீச இப்படிப்பட்டதிவ்யமாருதவேகவியாபகத்தாலுண்டாகிய அலைகளுடன்கூடியமகாப்பிரவாகம் பிரதிமிர்தஸ்வரூபவாரிதியைக்கண்டுமகதாச்சரியகுதூஹலபரர்களாய் அத்திவ்யவாரிதிமத்தியபாகமார்க்கமாய்ச்சிறிதுதூரஞ்சென்றபின்புஅவ்விடத்தில்அநந்தகோடிசூரியோதயப்பிரபாமயவிசேஷ ஜோதிஸ்வரூபமான ஒருதிவ்யதாம நகரத்தைக்கண்டனர்கள் மாணிக்கியவிமானகோபுரமண்டபபிரகாரபிராசாதாதி மணிமயாகாரசகஸ்திரஸ்தம்பநிர்மிதசோபிதமாயும மிகவும்ரமணீயமானவைரத்தினமாளிகாலங்கிர்தமாயும்மஹோந்நியானவனவாபிகூபதடாகாதிவிசித்திரநிர்மிதமாயும்சூரியசந்திரகிரணமயஅநந்ததேஜோவிராஜிதமான மகோன்னதசௌபானங்களுடன் கூடியமாடமாளிகைகளுடையதாயும் அஞானவிபவஅவ்வியயானந்தகரநித்தியைஸ்வரியபிரதமாயும்பரமயோகீந்திரசமனுகமன பரமபாகவதநித்தியநிவாஸஸ்தானபுனராவிருத்தி ரகிதமாயும்விளங்குகின்றஅத்திவ்யபுரத்திரனுள்பிரவேசித்துஅங்கு அனந்ததிவ்யமணிமயாலங்கார அனந்தபண மண்டலமுகபிம்பங்களில் அநந்தவேதசாகாஸ்துதமாகியஅநந்தநேத்திரியங்களையுடையவராகியும் சாத்காலபூர்ணசந்திரகிரணங்களுக்குச் சமானமான திருமேனிக் காந்தியையுடையவராகியும் பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற அநந்தநாமதேயஸ்ரீஆதிசேஷபகவானுடையதிருமேனியாகிய சிம்மாஸனஸ்வரூபராஜிதபர்வதத்தின்மீது ஒரு நீலரத்தினகிரி அமைந்திருப்பதுபோல நீலநீரதசியாமள சர்வமங்கல சுபாங்க நேத்திரோத்சவத்திருமேனியையுடையவரும் சர்வாசிரித ஜனஇருதய சந்தாபநி

வாரணகிருபாமாத்திரப் பிரசன்ன திவ்ய மங்களகுணரும் ஸனகசனந்தனாதி பரமயோகீந்திர இருதயோல்லாஸ சம்பூரண சந்திரகிரணப்பிரபாவ முகாரவிந்தரும்நிகிலஜகத் சாரித்திர கருணாவலோக ஸ்ரீ பத்மதளாயதாட்சரும் ஸ்ரீஇந்திரா உருதயாரவிந்த விகசித அருணோதய பிரபாவிசேஷ மகா மனோகர அதரத்தையுடையவரும்-கடிதடத்தினில் பொற் பீதாம்பரத்தையும்திருத்தோள்களில்கௌசேயமென்னும்வரசதரத்தினகாந்தியுள்ள பட்டுத்தரியத்தினையும் அணிந்தவரும்தமதுதிவ்யதிருமேனி ஆபாதமஸ்தக பரியந்தமும் ஹாரகுண்டல கடககேயூரதிவ்வியமணிமயா லங்கிர்தமகுடகங்கணங்கதமணிமுத்திரிகாவிநூதன நவரத்தினகசித நூபுராதி விசேஷபூஷணதரரும் சர்வசனபாப மகார்னவசோஷண சாதுசஜ்ஜன சத்பக்த போஷகரும்ஜயவிஜய சண்டப்பிரசண்ட கஜமுகவிஷ்வக்ஸேன சுமுகசுமந்தராதிபாரசுவதாபரிஜன நிரந்தரசேவிதரும்ஸ்ரீமதநந்தகருடாதிநித்தியமுக்த ஸ்துதானுபவ நித்தியமங்கள மகோர்ச்சவ ஜேகீபமானரும் சரஸவதசதானந்த கந்தளித இருதயாரவிந்தரும் அரவிந்தவாசினீ வசுந்தராதி ஸ்ரீமதநந்தலக்ஷமீஸ்வரூப சுந்தரீஜன சடமதரும் ஸ்ரீமந்நாரதாதிபரமயோகீந்திர சங்கீர்த்தனாநந்தரும் அநகஅநந்த அப்பிரமேய அசித அவிகார ஆதிமத்தியாந்தரகிதரும்சர்வலோகபாபவிமோசன குணமகானுபாவரும் பரமகருணைசுதாசமுத்திரரும் ஸ்ரீ அச்சுதபரமபுருஷ புருஷோத்தமாதி ஸ்ரீமதநந்த சுஸ்லோகநாமாங்கிதரும் சர்வஜகதுத்பத்திஸ்திதிலய காரணதத்வ ஸ்வரூபரும் கௌஸ்துவாபரணாலங்கிருத ஸ்ரீவத்ச விசாலவக்ஷஸ்தலரும் அஷ்டதிக்தேவ ஆதிதேவதாஸ்வரூப அஷ்டபுஜப் பிரகாரபராக்கிரம தேஜோவிராஜிதரும் சங்கு சக்கரகதாபத்மசார்ங்காதி ஆயுததரரும் அணிமாதிசர்வைசுவரிய சம்பன்னசர்வசக்தி ஜாலசேவிதரும் சங்கரபிதாமகரும் பரமேஷ்டிசனகருமாய் விளங்கிக்கொண்டிருக்கின்றஸ்ரீமந்நாராயணனென்கிற பரப்பிரம்மஸ்வரூபதிவ்வியதேவமூர்த்தியை ஸ்ரீகிருஷ்ணார்ச்சுனர்களிருவரும் தங்கள்நேத்திரோத்ஸவார்த்தமாகக்கண்டுபரமபக்தியதிசயபரமோல்லாசஇருதயாரவிந்தர்களாய்ச் சாஷ்டாங்கமாகநமஸ்கரித்துவிடைபெற்றெழுந்துநின்று தங்கள்சிரத்தின்மீது இரண்டுகராவிந்தங்களையும்கூப்பிஸ்ரீபுருஷசூக்தவேதவேதாந்தவாக்கியங்களால் துதித்துக்கொண்டிருந்தனர்கள். அவ்வாறு துதித்துக்கொண்டிருக்கின்றஇந்தஸ்ரீகிருஷ்ண அர்ச்சுனர்களிருவரையும் தமதுகருணாவலோகவீக்ஷண்யத்தினாலேகடாட்சித்து அவ்வாதிதேவசிகாமணியாகிய சர்வவிசுவாத்மக விசுவம்பர விராட்புருஷ தேவதா சக்கிரவர்த்தியானவர் திருவாய்மலர்ந்தருளுகின்றார்.

ஸ்ரீவிராட்புருஷபகவான்வாக்கியம்.

வாருங்கள் ஸ்ரீகிருஷ்ணார்ச்சுன திவ்வியசிரேஷ்டர்களே நீங்கள் பூலோகத்தில்சர்வபிராணிகளுடைய அரிஷ்டஸ்வரூபர்களாய்ஜனித்த அசுரசனங்களைச்சிட்சித்துத் தர்மஸ்தாபனார்த்தமாகச் சாதுசஜ்ஜனஸ்வரூப சிஷ்டர்களைரட்சிக்கும்பொருட்டு எனதுசுவாம்சாசம்பூதர்களாகியநரநாராயணஸ்வரூபர்களாய்த் திருவவதரித்துஉங்களாலாசரித்துவரும் அதியற்புத அதிமானுஷசரித்திரங்களைவேதவேதாந்தாபிப்பிராயங்களினால் குணானுபவஞ்செய்துகொண்டிருக்கின்ற இம்மகா முனீந்திரர்கள் உங்களிருவரையும் தரிசனஞ்செய்ய இச்சித்துப்பிரார்த்தித்தபடியினால் நீங்களிவ்விடத்திற்கு எழுந்தருளுகின்றநிமித்தம் அந்தப்பூசுரோத்தமருடைய குழந்தைகளை மதுயோகமாயா பிரபாவத்தினால் இங்குஅழைப்பிக்கும்படி யிருந்தது. ஆகையால் அந்தப் பிராம்மணோத்தமருடையகுழந்தைகளை அழைத்துக்கொண்டுபோய் அவருக்குக்கொடுத்துத் தர்மத்தை நிலைநிறுத்திச்சர்வஜகத்பரிபாலனத்தைச்செய்து சீக்கிரம்வருகவென்றுநியமித்துவிடைகொடுத்தருளினார்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரீர் ஸ்ரீநரநாராயணபதபக்தமானஸ நராதிபதியே அந்தஸ்ரீமகநீய பிரபாவாதிசய ஸ்வரூபஸ்ரீவிஸ்வம்பரமூர்த்தியை ஸ்ரீகிருஷ்ணார்ச்சுனர்களிருவரும் அநந்தபிரதட்சண பிரணாமங்களைச்செய்து வேதசூக்திராபிப்பிராயவசனங்களினால் துதிசெய்துவிடைபெற்றுக்கொண்டு இப்பூமிசுரோத்தமருடைய தநயர்களையங்கீகரித்து அந்தவியூஹ வைகுண்டபுரத்திலிருந்து கிரமக்கிரமமாய் அம்மகாமார்க்கத்தைக்கடந்து ஸ்ரீமத்துவாரகாநகரத்திற்கு அதிசீக்கிரகாலத்தோடு எழுந்தருளின உடனேமிகுதியும்சத்கருமசுசீலராகிய அந்தப் பூசுரோத்தமரை அழைப்பித்து அவருடையகுழந்தைகளைச சமர்ப்பித்தமாத்திரத்தில் அந்தப் பிராம்மணோத்தமரும் மகத்தானசந்தோஷசம்பிரமானந்த மானசீகராய் இவர்களைத் துதி



திருணாவர்த்தன்வதம்-எ-அ-



கார்கேயர்சுவாமிக்கிநாமகரணஞ்செய்தது-அ-அ



க்ருஷ்ணன்வரியடித்தது-கூ-அ-



ஸ்வாமிமண்ணுண்டது-கூ-அ-



யமளார்ச்சுனவிமோசனம்-ய-அ-



வத்சாசுரன்வதம்-யக-அ-



பகாசுரன்வதம்-யக-அ-



அகாசுரன்வதம்-யஉ-அ-

౧౧-వ స్కం॥దమున బ్రంహ్మరుద్రాదులు. స్వామిని స్తోత్రము చే॥



స్వామివారు భాగవతసికామణి యైనవుద్ధవునికి తత్వము బోధించి తపస్సుకు పంపుట

செய்து விடைபெற்றுக்கொண்டு தமது கிரகத்திற்குவந்துசேர்ந்து புத்ரோத்சவ சம்பிரமானந்தபரிதராய் அநந்ததானதருமங்களைச்செய்து பந்துசன சமாராதனபரிஇருப்பதராய் வாழ்ந்துசுகித்திருந்தனர்.

அநந்தரம் அர்ச்சுனமகாராசரானவர் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய பரமகிருபாகுண மகிமாதிசயத்தினால் அந்தத்திவ்விய தாமாகிய வியூகவைகுண்டத்திற்குச்சென்றுமகாபுத்ரஜனங்களையும் நியானித்துத் துதிப்பதற்கரியசகல சுபாசிரய வைபவொன்னத ப்ரவதிக்தேசோமய சுத்தசத்துவ பிரவதிகைஸ்வரிய மகிமாதிசயத்தை ஸ்ரீசர்வசரண்ய மஹநிய்யமூர்த்திபாகிய ஸ்ரீபுண்டரீகாக்ஷருடைய சுந்தரமந்தகாசபிரசன்னவதனாரவிந்ததரிசனத்தையும் அடிக்கடிபிரோத்தத்தியானித்து அத்யாத்புதானந்தமான சிகத்துக்கும்துதித்துக்கொண்டிருந்தார்.

வாரீர் ஸ்ரீவாசுதேவ வரப்பிரசாத ஜனிதவசுந்தராதிபதியே, உமதுபிதாமாராகிய பார்த்திவமகாராஜரால்நிஜாஸ்ரிதஜனகல்ப விருக்ஷஸ்வரூப ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய திவ்வியகுண மகிமாதிசயத்தைஸ்ரீமத்துவாரகாநகரத்திலுள்ளசர்வாஸ்திரிபந்துசனங்களுக்குஞ்சொல்லிஅவர்களுடதாமும் ஸ்ரீபகவானுடையபாதாரவிந்தசுபக்திமானசர்களாய அநந்தப்பிரேமைவந்தனங்களோடுதுதித்து ஆனந்தபரவசர்களாய்ச் சுகித்துக்கொண்டிருந்தனர்.

அக்காலத்தில் ஸ்ரீமத்வேத வேதாந்தார்த்த சர்வக்ஞகுணஸ்ரீஅரிராமதேய ஸ்ரீமதநந்த சர்வேஸ்வரஸ்வரூப ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் உத்தமகிரகஸ்தியாய்ப்பரமோத்தமகிருகஸ்ததருமத்தைவகித்து மாகேந்திரமகாசாம்பிராச்சிய விபவாதிசய மகாநைஸ்வரியமகிமாதிசயத்துடன் யதாசாஸ்திர விதியுக்த கிரமமாக வேதத்திலுண்டாகிய யாகாதிவிரதானுஷ்டானங்களைத்தையும்சம்பூர்ணமனோரதராய்த் தபமைக்குறித்துத்தாமேசர்வலோகத்தவர்களுக்கும் அனுஷ்டிக்கும்படி ஆசரித்துக்காண்பித்து இவ்வுலகாரிஷ்டமான ரூபர்களாகிய துஷ்டஜனங்கள் முதலிய சர்வாசுர ஜனங்களையும் சங்கரித்துச்சாதுசஜ்ஜனஞ்சி சர்வோத்தம சனங்களைப் பரிபாலனஞ்செய்து சத்தர்மஸ்தாபன ஸ்வரூபராய்ப் பிரகாசித்துக்கொண்டு பஞ்சலட்சஷோடச சகஸ்திர அஷ்டோத்திரஸ்த்திவ்விய சுந்தரிரத்னகளத்திர ஸ்ரீமகாலட்சுமீஅம்சஸ்வரூபர்கள் அநந்தகோடி புத்திரமித்திராதி பந்துசனங்களோடுகூடிநித்திய சுதானந்தவைபவாதிசயத்தை அனுபவிக்கஅருள்செய்து சர்வசாட்சிபூதசமன்விதராய் வாழ்ந்துகொண்டிருந்தனர்.

## ௯௰ - வது - அத்தியாயம்.

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆதிபகவானெனும் ஸ்ரீகிருஷ்ணனானவர்
அற்புதத்துவாரகையினுள்
அரியமங்களதிவ்விய மஹோற்சவங்களுக்
காரந்தசம்பூர்ணமனதாய்
சேகதிசைவைஸ்வர்ய சம்பத்கரத்துடன்
சுகபோகபாக்யாதியாம்
சுந்தரபதினாறு யிரத்தருநூற்றெட்டு
சுகுணமாமகிஷியர்களும்
நீதயாதவபந்து மந்த்ரிபுத்திரமித்ர
நேர்ந்தபுரோகிதர்கள்சூழ
சேமகமகோத்தமக் கிரமதர்மமதைநண்ணி
நிகிலபரி பாலனார்த்தம்
மாதுபலசேதனர் களுக்குமக்தாச்சரிய
மானநேத் ரோச்சவமதாய்
மங்களமதாகவே விளங்கியேயிருந்ததை
மாமகிழ்ச் சியோடுரைப்பாம்.

இது ஸ்ரீபகவானானவர்ஸ்ரீமத்துவாரகா நகரத்திலுள் சர்வசுபாசிரய திவ்வியமங்கள மகோற்சவங்களுக்குரிய சம்பூர்ணமனோரத போகபாக்கியாதிசயசாவைசுவரியசம்பத்கரத்துடன் பதினாறுயிரத்தருநூற் றெட்டுத் திவ்வியசுந்த்ரமஹிஷிகளும் சகலயாதவர்பந்துஜனங்களும்மந்திரி புத்திரபவுத்திரமித்திர புரோகிதஸர்வாதிசர்வோத்தம பிருத்தியசனங்கள்சூழமகோத்தம கிருஹஸ்தருமத்தைவகித்து லோகாரிஷ்டஜன நிவாரணசாதுசஜ்ஜனபரிபாலனார்த்தம் அநந்தயாக பாகங்களைச்செய்துசர்வதேவதாபாகங்களைச்சமர்ப்பித்து நித்தியநைமித்திகாதிதர்மார்த்தங்களையாசரித்து நித்தியானந்தசர்வசுகபோகசத்திருப்த மானஸராய்ச் சர்வசேதனர்களுக்கும்மகதாச்சரியகரமான நேத்திரோத்ஸவமாக விளங்கிக்கொண்டிருந்தாரென்பதைச் சொல்லுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரீர் ஸ்ரீஅரிசரணாரவிந்த சத்பக்தமானஸமகீபால கோத்தமரே ஸ்ரீநித்தியவிபூதி லீலாவிபூதிநாயகராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானுனவர் ஸ்ரீமத்துவாரகாநகரத்தில்சகலதேவதாம்ஸ ஸம்பூதர்களாயும், மகாரதிக சிரேஷ்டர்களாயும், தெய்வசம்பத்கர வைபவோன்னதசுசீலர்களாயும், மகாபராக்கிரம சௌர்யாதிகுண சுத்த வீரர்களாயுமுள்ள யாதவராசபந்துக்களாகியவிராபூசமதிகளும்பாந்திரிபுரோகிதாகளுஞ்சூழ்ந்து வீற்றிருக்க வந்திமாகதாதிபரிஜனங்கள்புகழ்ந்து துதிக்க ராஜ்ஜியாதிகாரத்தைவகித்து மகாமகிமகேந்திர போகபாக்கியாதிசயபரமசகாலம்தானுபவ திவ்வியஸ்வரூபதரராய் விளங்கிக்கொண்டிருந்தார், சூரியசஸ்திராலை கிரணங்களைப் பழிக்கத்தகக தேஜோமயசுவர்ணரத்திவங்களால் அமைக்கப்பட்ட மாடமாளிகையினிடத்தும் விமானமண்டப கோபுரபிராகார பிராசாத சிகரங்களில் கற்பித்திருக்கின்றபொன்னூஞ்சல்களினிடத்தும்அந்தப்புரமாடமாளிகைகளின் உப்பரிகையின்மேலிடத்தும் சந்திரகாந்த நிவாநிர்மிதசுந்தர கிருகங்களினிடத்தும்வேதிகைகளினிடத்தும், அரசவன்னங்கள் அன்னப்பேடுகளுடன்கூடிச்சம்பிரமானந்த குதூகலத்துடன் சஞ்சரிக்கின்றகுளங்களினிடத்தும் மதித்த யானைக்கன்றுகள்போல வாளைமீன்முதலியஜலசரங்கள் குலவித்திரிகின்றசெங்கழுநீரோடைகளினிடத்தும் ஆமைக்குட்டிகள் செருக்கடைந்து ஓடியொளித்து விளையாடுகின்ற கல்லூற்று ஜலம்பெருகுகின்றவாபிகூபதடாகங்களில்மிகவும்நானாவிதமகாமாதுரியவிசித்திரசுஸ்வரமாகச்சப்திக்கிற சக்கிரவாகசாரசகிரௌஞ்சபாரத்துவாஜபக்குக்குடகருடகோகிலாதிபட்சிகள்வாசஞ்செய்துசுகிக்கத்தக்கமகாமாதுரியரசம்நிறைந்துகனிந்துபரிபக்குவபலங்களையும்சாகோபசாகபத்திரபுஷ்பங்களையுமுடைய தேமா-மருதுவிளா-புளிமா-நாவல்-புந்நாகம். தெங்கு-கமுகு-கதலி-கற்பூரகர்ச்சூர-பலாசசம்சம்பிரதால-தக்கோல-பாரிஜாதம்-பாதிரிசந்தனதிவிருக்ஷசமூஹங்களையுடைய சோலைகளினிடத்தும், திருத்துழாய் - சதபத்திரம்-மரு-மதனபாணம். மல்லிகை-முல்லை-சம்பங்கி-இருவாட்சி முதலிய பூஞ்செடிகளையுடைய நந்தவனங்களினிடத்தும், செங்கழுநீர்செவ்வாம்பல்-நீலோற்பலம்-நெய்தல்-கனகாம்பராதி திவ்வியபுஷ்பங்கள் மலர்கின்றதடாகங்களினிடத்தும், மகாமணிமய நவரத்தின கசிதசுவர்ண சௌபானநிர்மித சந்திரகாந்த வேதிகைகளினிடத்தும்திவ்வியபரிமளத்தைத் தராநின்றவெட்டிவேர்குருவேர்களினால் சுற்றுப்பக்கங்களில அலங்கரிக்கப்பட்டு அமைந்திருக்கும்உசிதாலைசயனாஸ்தானங்களில் இருந்துகொண்டு ஸ்ரீமத் துவாரகாநகராஜபந்துக்கள் முதலிய சுஜனங்கள்ஸ்ரீபகவானுடைய கிருபா சமுத்திரத்தில் மன்னீராடிப் பரிசுத்தாந்தக்கரணபக்தியோகமகனீயதபோபலானுபவர்களாய்ஸ்ரீகிருஷ்ணசரணானுபவமான சித்தத்துடன் அந்தந்தப்போகஸ்தலங்களுக்குத்தக்கசகல போகபாக்கியாதிசயத்தையும் அனுபவித்துக்கொண்டிருந்தார்கள்.

ஸ்ரீகிருஷ்ணபகவானுனவர் பரமோத்தமகிருஹஸ்ததருமத்தை வகித்துக் கிருகமேதியாய் வேதவேதாங்கவிதிவத்பூர்வக அநந்தமானயாகாதிமுகாந்தரத்தால் சகலதேவதா சமூகங்களையும், அசுவன்னியர்த்தி பிதுர்தேவதைகளையும், மகரிஷிகளையும், சர்வபூசுரோத்தமர் களையும் சகலசத்புருஷர்களையும்பசு-பட்சிமிருகாதி-சகலபிராணிகளையும்,திருப்திகரமாகப்பரமசுகானந்தவைபவாதிசயத்தை அனுபவிக்கச்செய்துதா மும்நமதுமஹோந்நதெய்வசம்பத்கர சுசீலாதிநற்குணங்களையுடையவர்களாயும் திவ்யதேவாப்ஸரஸ்திரீகளைப்போன்றசுந்தராங்கிகளாயும் மகாபதிவிரதா சிரோமணிகளாயும் விளங்காநின்றபதினாறாயிரத்தறுநூற்றெட்டுமகாபத்தினிஜனங்களோடுகூடி அவரவர்களுடைய மனோபீஷ்டமஹாரமணீயபிரதேசங்களில்சகலகேளிவிகாரராய் லீலாவிநோதபோகாதிசயங்களால் அத்தனைமகிட்சிகளுக்கும் அத்தனை திவ்வியரூபஸ்வரூபத்தைவகித்து அவர்களுடையஇருதயாரவிந்தங்களை திருப்தியடையச்செய்துகொண்டிருந்தனர். அந்தஸ்ரீபகவானுடைய திருப்பத்தினிகளும் ஸ்ரீஅரவிந்தாக்ஷருடைய திவ்வியபாதாரவிந்தசேவாதிசய கைங்கர்யவிசேஷபக்திமானபீசர்களாய்அவருடைய சுந்தரமந்தஹாசவதனாரவிந்தத்திலுண்டாகாநின்ற மகாமிருதமதுராசாஸ்வாசனந்தாலேயேபரமசுகாநந்தத்தையடைந்து அவருடையகடாக்ஷவீக்ஷண்யத்துக்குப் பாத்திரர்களாகிய பெரும்பாக்கியாதிசயத்தைஅனுபவித்துக்கொண்டிருந்தார்கள்.

வாரீர் ஸ்ரீமாதவார்ப்பித பக்திமானஸமகா ராஜரேஇந்தப்பிரகாரம் ஸ்ரீகிருஷ்ணபதாரவிந்த சேவாநந்தகைங்கரியபக்தியோகக் கியானமானஸர்களாகிய ஸ்ரீபகவத்

ஜனரத்தனங்களானவர்கள் ஸ்ரீகமலாக்ஷனுடைய சுந்தரமந்தஹாஸகருணாகடாக்ஷவீக்ஷண்யமிருதமதுர பாஷணங்களாலே திவ்வியசித்தியபோகாதிசயத்தை யனுபவித்துஸ்ரீகிருஷ்ணானுபவானந்த சமுத்திரத்தில் மூழ்கிஸ்ரீகோவிந்ததாமோதரமாதவாதி திவ்யநாமசங்கீர்த்தனமானஸோத்ஸவைகபரர்களாய் இவ்வுலகதர்மங்களையுடைய தங்கள்தேகானுபத்திகளையும் மறந்துஸ்ரீபகவத் குணானுபவங்களையே செய்துதிருப்தமானஸகதோடு ஒருவர்க்கொருவர் பிரதிபாதித்தத் திவ்யவசனங்களைப் பேசுகின்றேன் கேட்கக்கடவீரென்றுசொல்லுகின்றனர்.

ஸ்ரீபகவத்பத்தினீஜனங்கள்வாக்கியம்.

வாராய்அன்றிலே, ஏனோ இந்தராத்திரியில் எவ்வளவேனும் நித்திரிக்காமல் ஸ்ரீகிருஷ்ணஜனார்த்தனனுடைய மாதவாவென்றுக்குணானுபவஞ் செய்வதுபோலச ஸ்வரமாக ஆரற்றிக்கொண்டிருக்கின்றாய், நாங்கள்எந்த விதத்தில் ஸ்ரீயப்பதியான ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய மகாகம்பீரமான இளநிலாவிரிக்கும் நகையினாலும் திவ்யகருணை பெருகுகின்ற கடைக்கண் பார்வையினாலும் மிருதுமதுரசம்பாஷணங்களாலும அபகரிக்கப்பட்டமான சித்தத்தையுடையவர்களாய்க் கண்ணுறக்கமிழந்துஸ்ரீபகவானுடையசுப்பிரசன்ன முகாரவிந்தசேவார்த்த கரிக்குளிர்பார்த்துக்கொண்டிருப்பது போலநீயும்எங்கள்போலாருத்தியாய் ஸ்ரீபகவதகுணங்களில் ஆழ்ந்துகண்ணுறங்காமல் வருத்தமுற்றிருக்கின்றாய் ஆகையால் இதோசர்வேசுரநம் பெருமாளாகியஸ்ரீமாதவப் பிரானானவர்தாமரஸபுஷ்பஇதழ்களுக்கொப்பானநேத்திரங்களை விழித்துநம்மையாவரையும்கடாட்சித்துப்புன் சிரிப்புடனேமகாமதுர சம்பாஷணங்களாலே நம்மையாதரித்துச் சந்தோஷிக்கசெய்வார் நீவருத்தமுறாமல் எங்களுடன்கூடிஸ்ரீபகவானுடையசேவார்த்தைவகித்தாக்காக்கக்கடவாயென்று அந்தஅன்றிலுடையதுவனிக்கு மருண்டுவார்த்தைசொல்லிக்கொண்டிருந்தனள் ஒருவதாமணி

வாராய்சக்கரவாகப்பட்சியே மிகுதியும் அந்தகாரமானஇரவில் கண்ணுறக்கமின்றிக் கண்களைமூடிக்கொண்டுமிகவும்தைரிய இருதயத்தோடு ஸ்ரீ மகநீயகமலாட்சஸ்ரீஅச்சுதனென்று குணானுபவஞ்செய்வதுபோல் சுஸ்வரமாகக்கூப்பிடுகின்றாயே, நாங்களோவென்றால்ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய தாசியருசியறிந்தவர்களாயக் கண்ணுறக்கமென்பதில்லாமல் திவ்விய சுகபோகங்களுக்குரியஸ்ரீபகவத்குணானுபவ திவ்வியப்பாவினங்களைஸ்ரீஅச்சுதருக்குச் சமர்ப்பித்துஅவர் தம்முடைய திவ்வியத் திருமுடியிலும் திவ்வியத் திருவடித் தாமரைகளிலும் அணிந்தபுஷ்பமாலைகளைக் கிருபையாகவருளிச்செய்ய எங்கள் அளகத்தில்தரித்துச் சம்பிரமித்துச் [illegible]க்குமப்போல நீயும் இருக்கின்றாயென்று [illegible]றது. ஆகையால்நீ எங்களுடன்கூடிக்குணானுபவஞ்செய்வாயானால் ஸ்ரீ [illegible]ந்தரானவர் [illegible]ரசன்ன இருக்கயாவிந்தராய் அவ[illegible]னிக் திருமாலையினைத்தந்துசன்மானிப்பாரென்றாள் ஒருவராங்கனை.

வாராய்சமுத்திரமே நாங்கள் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய சம்சிலேஷசம்போகத்தினால் அவர் திவ்யவிசாலவக்ஷஸ்தலத்தில்அணிந்த சந்தனகுசுமகுங்குமஸ்ரீமகாலட்சுமிகௌஸ்துபாதிகளுடைய சின்னங்களையடைந்து அவர துவியோகத்தினால் வருத்தமுற்றுச் சாகரணத்தையுடையவர்களாய் அவருடைய திவ்வியநாமசங்கீர்த்தனஞ்செய்து கொண்டிருக்கின்றோம் [illegible]யும ஸ்ரீலட்சுமீகாந்தருடைய திவ்வியசின்னங்களைப்பெற்று அவராலே அபகரிக்கப்பட்டமனதையுடையயனாயிருக்கின்றாயோ கண்ணுறக்கமின்றிச் சுவ்விரதநிலையாய் ஜாகரணத்துடன்ஜயதுஜயத தேவோதேவகீநந்தனோ என்பதாகச்சப்தித்துக்கொண்டிருகின்றாய். எங்களுடன்சேர்ந்து ஸ்ரீபகவன்நாமசங்கீர்த்தனஞ் செய்யக்கடவாயென்றனள்ஒருசுகுணவதி.

வாராய் மலயமாருதமே, நாங்கள்ஸ்ரீகோவிந்தருடையகடைக்கண்பார்வையினாலேஅபகரிக்கப்பட்ட மானசீகத்தோடுஇன்றிரவில் அவருடைய சம்சிலேஷத்தினால் வருத்தமுற்றுத் தள்ளாடிய நடையையுடையவர்களாய்த்தபித்துக்கொண்டிருக்க ஸ்ரீபகவான் எழுந்தருளியிருக்கும்இடஞ்சென்று அவரை யழைத்துக்கொண்டுவாராமல்நீயும்எங்களைப்போலவே மந்தகமனத்தைப்பெற்றுமிகுதியும் தபிக்கிறதுபோலக் காணப்பட்டு எங்கள்சாளரவாசலின்வழியாய்மெல்லநுழைந்துஅந்தப்புருஷோத்தமருடைய திவ்ய புஷ்பவனமாலிகா கந்த ரசத்தைக்கொண்டு எங்கள்மீது [illegible]த்துவருத்தமுறச்செய்கின்றாயே இதென்னஉனக்குத் தருமமோவென்றாள் ஒருசுவர்ணாங்கி.

வாராய்சந்திரனே, ஸ்ரீமுகுந்தரானவர் எங்களைப்பிரியாமல்சன்மானிப்பதற்குச் செய்யும் விரதோபவாசத்தினால்இளைத்து இராத்திரிகாலங்களில் ஒருநிலையிலிராமல்உலாவிக்கொண்டு கண்ணுறக்கமிழந்து ஸ்ரீகிருஷ்ணகுணானுபவத்தைச் செய்துகொண்டிருக்கின்றோம் நீயும்எங்களைப்போலவே அவருக்காகவிரதங்களை அனுஷ்டித்துஇளைத்தசரீரமாய் ஒருநிலையில்நில்லாமல் உலாவுகிறதாகக்காணப்படுகிறாய், அப்படிப்பட்ட எங்களிடத்தில்எவ்வளவேனும் இரக்கமில்லாமல் எங்களுக்குச்சகிக்கக்கூடாத உனதமுத கிரணங்களினாலே எஙகள் கால

தருமத்தைப்பாராமல் வருத்தமுறச் செய்கின்றாயேஇதுவும்நீதியோ இப்படிச்செய்வதை யோசிக்குமளவில் எங்களைப்போல ஸ்ரீஹரியையடையவேண்டு மென்பதினாலல்ல ஸ்ரீஉமாநாயகருடைய சிரசின்மேலிருக்கின்றோமென்னுங் கர்வத்தினால்ஸ்ரீமுராந்தகர்பக்கல் அன்புடையவர்களிடத்தில் இவ்விதஅபசாரப்பட்டு அதுகாரணமாக க்ஷயரோகத்தையடைந்து நாளுக்குநாள்கலைகள்குறைந்து காந்தியீனமாய் இளைத்துப் போகின்றாய் நான்சொல்வதைக்கேட்கின்றஇப்போதாவது இதுஉனக்குநீதியல்லவென்றுதோற்றுமாயின் எங்களுடன்கூட ஸ்ரீ சனார்த்தனபிரீதியர்த்தமாகச் சுவ்விரதங்களையாசரித்து ஸ்ரீபகவான்பக்தமகாஜனங்களினுடைய திவ்விபாபிமானத்தில் ஒதுங்கிவர்த்தித்து ஸ்ரீபகவானுடையகிருபையையடைந்து வாழக்கடவாயென்றாள் ஒருமங்கையர்க்கரசி.

வாராய் ஸ்ரீமானனமேகமே உன்னைக்கண்டமாத்திரத்தில்ஸ்ரீகிருஷ்ணவிரகத்தால் சிதைந்துகிடக்கின்றஎங்கள்நெஞ்சுக்கு ரமணீயமாகத் தோற்றுகின்றாய்அன்றியும்ஸ்ரீ அரிபக்தி மானசர்களாகிய ஸ்ரீமகாபாகவதர்கள்ஸ்ரீ அரிசமானர்களென்று சத்சாஸ்திரங்களிற் சொல்லியபடிநீயும் இவ்வுலகத்தில்சனிதத சர்வப்பிராணிகள் விஷயத்திலும்தயாதிகுணங்களைவகித்துச் சராசராத்மகமானஇப்பிரபஞ்சத்தினை உனது மஹோதார ஸ்வபாவசீதளஜலபிந்துக்களால்சகலலோஷ்ணங்களையுந்தணித்து ஆனந்திப்பிக்கின்றாய்-சர்வபிராணிகளினுடைய சீவனாதாரமாகியசகலசஸ்சியங்களையும்ஒஷதிமுதலியசர்வபலப்பிரதங்களையும்விருத்தியடையச்செய்கின்றாய், இக்காரணத்தால் ஸ்ரீ அரியைப்போலப் பரமோபகாரியாயிருக்கையால் நாங்கள் ஸ்ரீயாதவகுலாதீஸ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானையே எங்கள்பிராணாதாரமாகவும்சனாதனதருமமாகவும் நம்பினவர்களாய் அவருடைய வாத்ஸல்லியாதிதிவ்யகலியாண குணானுபவங்களை ஸர்வகாலங்களிலும் நித்யானு சந்தானமாகத் தியானஞ்செய்துகொண்டு அவருடையசுப்பிரசன்னவதனாரவிந்தத் திருப்பவளத்திவ்யவாக்கில்நின்றும் உண்டாகாநின்ற தேவாமிர்தத்திற்கொப்பென்னலாம்படியானமிருதுமதுரசம்பாஷணங்களைவிரும்பிஇரவே பகலாகக்கண்ணுறக்கமின்றிமனமலர்ந்து வருத்தமுற்று அடிக்கடிக்கண்ணீர்பெருகாநின்றோமென்று ஸ்ரீமகாலட்சுமீ புருஷகாரமாகஅவருடன்விண்ணஞ்செய்து இப்பொழுது விடிதற்குமுன்னமே அழைத்துவந்து எங்களுடன்சம்சிலேஷிக்கச்செய்துரட்சிக்கக்கடவாயென்றனள் ஒருமகாபாவநீ.

வாராய்சுகபட்சியே, நாங்கள ஸ்ரீ பகவானைப் பிரிந்து அவனையே தியானித்துக்கொண்டிருக்கின்றதருணத்தில்துருத சஞ்சீவனமாகியும் மகாமதுரமாகியும் எங்கள் இருதயதாபநிவாரணமாகியும்விளங்காநின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய திவ்விய வசனங்களைப்போலஎங்கள் செவிகுளிரவசனித்துக்கொண்டிருக்கிறாய்இம்மட்டோ அவருடைய திருமேனியைப்போலமேனியும் அதரம்போல மூக்கும் உடைத்தாயிருக்கின்றாயே ஆகையால் இபபடிப்பட்ட மஹோபகாரஸ்மிருதிக்குநிகரானபிரியத்தைச்செய்து உனது இருதயகமலத்தைஎவ்விதமாகத்திருப்திசெய்யப்போகின்றேனென்றுவசனித்துக்கொண்டிருந்தனள் ஒரு சுகுணாங்கி.

வாராய் பருப்பதமே, நீஸ்ரீயப்பதியினுடைய ஹேயகுணராகித்திய நிராகாரநிர்க்குணப்பிரதிபாத்தியஅகாரார்த்தஸத்தன்மாத்திராதி நிராலம்பதத்வயோகசிந்தாதத்பரனாய் மௌனவிரதத்தை யவலம்பித்துச்சலியாமல்நின்று பரோபகாரசர்வாத்மகித சகுணப்பிரதிபாத்தியாநந்த அகிலகல்யாணகுணாத்மகங்களான ஸ்ரீபகவத்குணானுபத்தையொழித்து தனியனுபவயோகசித்தியினால்ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய திவ்யசரணாரவிந்தங்களை உனது சிகரங்களால் தரித்து பிரமானந்தத்தையடைய இச்சிக்கின்றாயென்று தோற்றுகின்றது, இது ஆத்மகிதானுபவமன்று நீஎங்களுடன்கூடி ஸ்ரீவசுதேவகுமாருடைய மகாமகிமாதிசய அதிமானுஷ சேஷ்டிததிவ்வியசரித்திரகுண கதாமிர்தங்களைக்குணானுபவஞ்செய்து நாங்கள்அவருடைய ஸ்ரீபாதாரவிந்தங்களை எங்கள்குசபாரங்களில்வகித்துத் திருப்தியடைந்ததுபோலநீயுஞ்சதேசுகரண ஸ்வரூபியாய்க் குசப்பிரதிபாத்திய பக்திஎன்னும்கிரகத்தில்வகித்துச் சர்வாத்மகிதகுணானுபவஞ்செய்யக்கடவாயென்றனள் ஒருசரோஜாட்சி.

வாருங்கள்நதிகளே, நாங்கள்எங்கள் பிரியபர்த்தாவான ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய கடாட்சவீட்சண்ய அமிர்த வருஷதாரைகளை யடையாமலிருக்குங்காலத்தில் சரீரம்வெளுத்துச் சுஷ்கித்து இளைத்துமுகமானதுவாடிமனவருத்தமுற் றிருப்பதுபோலநீங்களும்ஜனரிஷட

சகலஸ்வரூப அனுவிருஷ்டிதோஷத்தினல் அலைகளுட ன்கூடியபிரவாக ஸ்வரூபத்தைஇழந்து மிகவும் மணல மேடிட்டு உலர்ந்துபோகாநின்ற மடுததுறைகளை யுடை யீர்களாய் உங்கள்திருமேனி ஸ்வரூபங்களாகியவாபீகூ பதடாகாதிகளில் ஜலசமுர்த்தியற்றுச்செவ்வாம்பல்செ ங்கழுநீர் கமலமுதலியசம்பத்தில்லாமல் மகா தரித்திர னுடையகிருகத்தைப்போலவிளஙகிப் பரிதபிக்கின்றீர்க ளாகையால் இப்போதாவதுசிக்கிரமாக எங்களுடன்கூ டிஸ்ரீகண்ணபிரானுடைய திவ்யநாம சங்கீர்த்தனங்க ளைச்செய்து சுவ்விரதங்களை யனுஷடிப்பீர்களாகில் ஸ்ரீ பகவதாக்கியாப் பிராபலத்தினல் சர்வஜனரிஷடநிவார ணார்த்தமாகஸ்ரீவசுதேவகுமாரகிருபாசமுத்திரமான து மகோதாரகுண மேகசமூகங்களின் மூலமாய்வருஷங்க ளைவருஷித்து உங்களை மகாப்பிரவாக ஸ்வரூபிகளாகப் பிரகாசிப்பித்து உங்கள்இருதயங்களைச்சந்தோஷிபபிக் கச்செய்து ரட்சிப்பதற்குச் சந்தேகமில்லை என்றனள்ஒ ருதிவ்யசுந்தரி.

வாராய்ஹம்ஸமேகீ ஸ்ரீசர்வலோகசரண்ணியராகிற ஸ்ரீமாதவப்பிரானிடத்திலிருந்து வந்தாயாகையால்அவ ரும்அவருடைய நித்தியானபாயினியாகியஸ்ரீமகாலட்சு மீதேவியும் குசலமாயிருக்கின்றார்களா நிக்ஷேமமா,நா ங்கள்மேது கண்ணபிரானுக்குத் திருவாராதனஞ் செய் துசமர்ப்பித்த தேவாமிர்தத்திற்கொப்பான இநதப்பால முதையும் இவ்வினிய கனிவர்க்கங்களையும்உனக்குமிக வும்பக்தியுடன்சமர்ப்பிக்கின்றோம் அங்கீகரித்துப் புசி த்துத்திருப்தியடைந்தபின்பு ஸ்ரீஅஜிதராகிய நமதுஸ்ரீ அச்சுதபிரானுடைய திவ்யகதா,சுதாரசங்களைக்குணு னுபவமாக எங்களுக்குச்சொல்லிஎங்கள்இருதயங்களு க்குகுதூஹலமுண்டாக்கக்கடவாய் நீஅவரிடத்தில் ஸ்ரீ பெரியபிராட்டியாரால்போஷிக்கப்பட்டுஉபயவேதாத்தி யயனங்களைச் செய்விக்குந்தருணத்தில்அவர்எங்களைநி னைத்து எங்களுக்குச் சேஷத்துவக்கியானத்தைப் போ தித்துத்தம்மைத்தவிரஸ்வஸ்வாமிசம்பந்தமில்லையென் றுதம்மைக்காட்டித் தம்மையுந்தந்து இப்போது எங்க ளைப்பிரிந்து வருத்தமுறச்செய்கிறகாரணங்களுக்குரிய ரகசியவசனங்களைச் சொல்லியிருந்தால் நீ எங்கள்குரு சிகாமணியாயிருந்து எங்களுடன்சொல்லித் திருப்திய டையச்செய்வதுமன்றி ஸ்ரீமகாலட்சுமீதேவியானவள்ந மது புருஷாகார பூதையாகையால் தாம் அகலகில்லே னென்றுதிருமார்பில்வீற்றிருந்து எங்களைப் பிரியச்செ ய்வதுதருமமல்லவென்று அவரிடம் சொல்லக்கடவாய் நீஇப்போதுஎங்கள் பட்சத்திலிருந்துஎங்களைஸ்ரீபகவா னுடையகிருபைக்குப் பாத்திரர்களாகச் செய்வதற்குத் தானேயல்லவா நீஇவ்விடம்எழுந்தருளியதும்என்றன ள்ஒருமகாசுசீலை.

வாராய்பிர்ம்மாவே, நீ யாரைத்தேடுகின்றாய் இதோ நாங்களிருக்கின்றோம், ஸ்ரீ கமநீயகமலாட்சராகிய எங் கள்ஸ்ரீமாதவப்பிரானுடைய திவ்யாக்கினையால்எங்களி டம்எழுந்தருளியது மெய்யானல் அவருடைய ஸ்ரீ சர ணாரவிந்தங்களில் சதுர்முகபஞ்சமுகாதிதேவதாசமூக ங்களால்அர்ச்சித்திருககப்பட்டதிருத்துழாய்முதலியதி வ்யமலர்களின்மகரந்தங்களை எங்கள் மீதிறைத்து நாங்க ள்ஸ்ரீபகவானைப்பிரிந்திருக்கும் தாபங்களாறும்படிஅவ ருடையஅநந்தகலியாண கதாசுதாரசங்களைக் கியானஞ் செய்துஎங்கள் மனவருத்தங்களையொழிபபதுமன்றிநா ங்களஸ்ரீவசுதேவகுமார திவ்விய பதாஸ்ரிததாசியாபே ட்சிதருசிமானசர்களாயும் அநாதிகர்மவாசனைதிருசிபே தங்களிலுண்டாகின்ற அன்னியதாகியான சனகதேகச மபந்தாதிஇதரதர்மங்களைக் கைவிட்டவர்களாயும்சர்வா த்மகிதபரமவைதிக நிர்ணய சுஸ்வவிரதசுசீலைகளாயும் ஸ்ரீகிருஷ்ணசம்சிலேஷநித்திய சுகானந்தத்தையடையு ம்பொருட்டுப் பரிதபித்துக்கொண்டிருக்கின்றோமென் றுபுருஷகாரஞ்செய்து அந்த ஸ்ரீ கோவிந்தப்பிரானை எ ழுந்தருளப்பண்ணுவித்து எங்களைஉஜ்சீவிக்கச்செய்ய க்கடவாய்என்றனள் ஒருமாணிகீமணி.

வாரீர்ஸ்ரீகோவிந்த பதபக்திமானஸமபேதியே இந்த ப்பிரகாரம் ஸ்ரீ அரவிந்தலோசனருடையபத்தினீரத்த னங்களாகிய பதினாயிரத் தறுநூற்றெண்மராகிய ஸ்ரீம காலட்சுமீ அம்ச திவ்யசுந்தரஸ்திரீசனங்கள் ஸ்ரீயோ கீஸ்வரேஸ்வரராகிய ஸ்ரீபகவானிடத்தில் தங்கள்இருத யங்களைச்சமர்ப்பித்து அவனைப்பிரிந்தகாலத்தில்இவ்வா றுபேசுவதும்அவரோடு கூடியிருக்குங்காலத்தில்ஸ்ரீஅ ரவிந்தாட்சருடைய திவ்யஸ்ரீபாதாரவிந்தங்களைப் பூ ங்கொத்துகளைப்போன்ற தங்கள் கராரவிந்தங்களினல் பிடித்துஉபசரித்துகொண்டுசகலோபசாரபணிவிடை களையுஞ் செய்துகொண்டிருக்கின்றதுமன்றிச்சர்வகால சர்வாவஸ்தைகளிலும் அவனையே தரிசனஞ்செய்து அ

வருடைய நித்தியமங்களகலியாணகுண கணமகிமாதிச யத்தைக்கானஞ்செய்துகொண்டு தங்களுக்குப்பரமோத்தமநிஜ பர்த்தாவென்கிறபுத்தியினல் அவருடையசுந்தரமந்தகாசதிவ்விய கிருபாகுண ரஸார்னவத்தில்மூழ்கிஸ்ரீபகவான்மாயாமோகன சிந்தாதத் பாவசர்களாய்ச் சரஸஸல்லாபாதி மிர்துமதுரவாக்கியங்களால்சம்பாஷித்துகொண்டு சரீரசுகானந்த போகபாக்கியாதிசயங்களை அனுபவித்து இகரசுகோர்ந்தபதங்களையும் சரீராபிமானஸமூகாரசுகவாஞ்சைகளையும் மறந்து சரீராந்தியத்தில்ரஜதமோமிசிரகுணாகித சுத்த சத்வாத்மக பரமவ்வியோமளிபரந்தாமத்தில் ஸ்ரீ மகாலட்சுமீ திவ்வியாம்சத்தில்கலந்து பரப்பிரமமாநந்தநற்பர்களாய்ப் பேறுபெற்றனர்கள்.

வாரீர்நற்குணபூஷணநராதிபதியே இவ்வுலகத்தினிடத்தில் ஜன்மித்தபிராணிகளில் நராதமர்களான போதிலும்ஸ்ரீபகவானுடையநிர்ஹேதுக்கிருபாபரவசத்தினல் தங்கள் சரீராபிமானங்களைவிட்டுஸ்ரீ அரிநாமாங்கிதங்களாகியகீர்த்தனங்களைக்கானஞ்செய்து திருப்தியடைந்தவர்கள்மகாமகிமோன்னதபவமாகியஸ்ரீவைகுண்டத்தையடைந்துவாழ்வார்களாயின் ஸ்ரீபகவானையேநிஜபர்த்தாவென்கிற புத்தியினல்இதரவாஞ்சைகளற்றுச் சகலசிசுருஷைகளையுஞ்செய்துஅவருடையதிவ்வியகலியாணகுணகதாசுதாரசங்களையனுபவித்ததிவ்வியபத்தினிஜனங்கள்அடைந்ததைஎடுத்துச்சொல்லவும்வேண்டுமோவென்றுசொல்லிமேலும்அருளிச்செய்கின்றனர்.

வாரீர்ஸ்ரீமாதவார்ப்பிதமானசமகிபதியே, இந்தப்பிரகாரம்ஸ்ரீகிருஷ்ணபகவானனவர்பரமோத்தமகிருகஸ்சதருமத்தை வகித்துவேதவைதிகானுஷ்டானங்களை அனுஷ்டித்துஇவ்வுலகத்திலுள்ளசர்வப்பிராணிகளும்தர்மார்த்தகாமியமோட்சங்களை அடையச்செய்வதுமன்றிமகாத்மமகானுபாவர்களாகிசசாதுசஜ்ஜனங்களுக்குஆசிரயித்துஅடையத்தகுந்ததிவ்யோன்னத பதஸ்தானமதமதுதிவ்வியகலியாணகுணனுபவங்களாலே ஸ்தாபித்துஉலகத்தவர்களுக்குஒருகேவலசம்சாரியைப்போலநடித்தனர். இவ்விதமாகஇந்தஸ்ரீஅரியானவர் தமதுதிவ்வியபத்தினிகளாகியபஞ்சலட்சசதோத்தரஷோடசஸ அஸ்ரசுந்தரிஜனங்களிடத்தில்தாம்அவர்கள்மனேபீஷ்டப்பிரகாரம்அத்தனைத்திவ்விய சுந்தரமூர்த்திஸ்வரூபங்களை வகித்து அவர்களுடைய இருதயாரவிந்தங்களைக் களிக்கச்செய்துஅவ்வொருபத்தினிமணியினிடத்திலும்பத்துப்பத்துச்சுபுத்திராதிகளைப்பெற்றுவாழச்செய்து அவர்களில்ஸ்ரீருக்மணிபிராட்டியாருடைய அஷ்டமகிஷிகளுக்குத்தலைப்பயலைப்பிறக்கச் செய்த ஸ்ரீரயோதபுத்திரசிகாமணிகளுக்குள் ப்ரதியும்னப்பேர் மிகவும்பிரசித்தமானபாருஷபராக்கிரமவிசயசம்பத்விசேஷகீர்த்திகளைவகித்தவர்கள், அவர்களுடையநாமதேயமாவன, பிரதயும்னர்-அநிருத்தர்-தீப்திமான்-பானுதேவர்-சாம்பர்-மித்திரர் - விருகப்பானு - பானுவிந்தர் - உருகர் - அருணர் புஷகரர் - வேதபாகு - சுருதசேதவர் - சுனந்தனர் - சித்திரபாகு - வருத்தர்-மது - வினிக்குரோதனர் - என்பவைகளாம் - இந்தப்பதினெட்டு நாமதேயத்தவர்களும் மகாகீர்த்திமான்களாயும் மகாரதிக சிரேஷ்டர்களாயுமிருந்தார்கள் திரிவிக்கிரியென்னும் குப்ஜா தேவியினிடத்தில ஸ்ரீபகவானுடைய கிருபைக்குமபாத்திரராய்ப்பிறந்த யுபசுலோகரென்னவர் சகலசற்குணங்களாலும்ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குச் சமானராகியும்ஸ்ரீமந் நாரதமகாமுனீந்திரருக்குச் சிஷியராகியும் விளங்கி ஸ்ரீஹரியினிடத்தில் அசஞ்சலமானபக்தி யோக விலக்ஷணஞானமானஸபரமபாகவதநிஷ்டராய்த் தம்மை ஆசிரயித்தவர்களுக்குவேதவேதாந்த வேதசூத்திராபிப்பிராயமகாவிலட்சண ஸ்ரீபகவத்பக்தியோகஅகண்டிததிவ்யஞானர்த்தங்களைப்போதித்துஸ்ரீவைஷ்ணவவிலக்ஷணத்மபரமதார்மீகர்களாக உஜ்ஜிவிப்பிக்கச்செய்வது மன்றிப்பிராமணக்ஷத்திரிய வைசிய சூத்திராதி ஜனங்களும் ஸ்ரீசனங்களும் இராசாதிசனங்களும் பங்குபதிராந்தகாதிபுண்ணியகீனசெனங்களும் இன்னும்எப்படிப்பட்டவர்களும் ஸ்மரணமாத்திரதில் பரமயோகீந்திரர்கள் பரமேகாந்திகள் அடையத்தகுந்தபரமவ்வியோம ஸ்ரீபரந்தாமமுத்திபதத்தை யடைந்துய்வதற்குக்காரணமாகியசரத்துவதந்திரமென்னும்சுத்தசாத்மீக ஸ்ரீவைஷ்ணவ ஸ்மிருதிநாமாங்கிததிவ்விய கிரந்தத்தைச்செய்து அந்தத்திவ்யகிரந்தபோதனையினல்சகலரையும்ரா கத்துவேஷரகிதர்களாக்கி ஸ்ரீஅச்சுதபகவானுடைய திவ்யபாதாரவிந்தபக்தியோடுபரிசுத்தாத்மராயிருந்தனர்.

வாரீகுருகுலாதிபதியே திவ்வியதேவதாம்ஸ மகாபலதேஜோவந்தர்களாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய அருந்தவத்தநயர்களில் சாக்ஷாத்ஸ்ரீபகவானுடைய பத்திமகிஷீரத்தினமாகிய ஸ்ரீ ருக்மணிபிராட்டியாரிடத்தில் ஸ்ரீஹரிகலியாணகுணங்களுக்குசமானமான பிரத்யும்னர்திருவவதரித்துத்தமது அம்மானகிய ருக்மியினுடையபுத்திரிகாரத்தினத்தைத்திருமணஞ்செய்து இந்தத்திவ்யதம்பதிகளிருவருக்குமபதினுயிரம்யானை பலத்துடன்கூடியமகாபராக்கிரமசாலியாகியஅநிருத்தனர்ஜனனஞ்செய்தனர் அவர்மகாதீரகுணேத்தமராய் விருத்திய

மனைவிதிகநிஷ்டபாரதந்திரஸ்வரூபிகளாகிய பரமயோகிகளின்வம்சபரம்பரைகளையும் சத்தியகர்மானுஷ்டான நிரதிகளாகியராஜவம்சபரம்பரைகளையும்மற்றுஞ் சகலப்பிராணிகளையும்பாவனஞ்செய்யும்பொருட்டு அச்சேதனர்களுக்குப் பிரமாதவசமாய்நேரிட்ட சர்வாரிஷ்டங்களையும்போக்கிரக்ஷிக்கின்றதுபோலஸ்ரீசக்கரபாணியினுடையசர்வசமஹாரமூர்த்திஸ்வரூபசக்கராயுதநாமாங்கிதஸ்ரீசுதர்சனப் பிராணனவர் சாதுசஜ்ஜன பீஷடசர்வலோகாரிஷ்டநிவாரணார்த்தமும்பூபாரநிவாரணார்த்தமும்சர்மஸ்தாபனார்த்தமும்இவ்வுலகத்தைப்பரிபாலனஞ்செய்துகொண்டிருக்கின்றார்.

வாரீர்ஸ்ரீமதுசூதனப்பிரியமானஸ்மகாராஜரே இந்த தேவகீபுத்திரஅருந்தெய்வஸ்வரூபரானவர்யாதவபந்துசெனங்கள் முதலியசர்வப்பிராணிகளையும் தமதுஆஜானுபாகுவிளம்பனமானபுஜபராக்கிரமாதிசயகுணமகிமங்களினால்சத்துருஜன நிவாரணார்த்தங்களைச்செய்துசகலதாவரஜங்கமாதிசர்வப்பிராணிகளினுடைய சகலபாபங்களையுமநிவாரணஞ்செய்தருளினார்.

சாதுசஜ்ஜனாதிசர்வாஸ்ரிதஜனங்களையும் ஸ்ரீகோபிகாஜனங்களையும்ஸ்ரீமதுராபுரிநிவாஸராஜ கன்னியாசுந்தரீரத்தினஜனங்களையும்ஸ்ரீமத்தமதுதிவ்வியசுந்தரமந்தகாஸமனோகரமிருதுமதுரலலிதசரசவசனாதிகளாலும்தரிசனஸ்பரசனபோகபாக்கியாதிசயங்களினாலும் திருப்தியடையச்செய்துஅவர்கள்யாவரும்பாவனர்களாய்ப்பிரம்மானந்தபதஸ்வரூபத்தையடைந்துசுகிக்கக் கிருபைசெய்தனர்.

இந்தப்பிரகாரம்ஸ்ரீபரமபுருஷராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானனவர்சாலோக ஹிதத்தின்பொருட்டுத் தமதுலீலாகடாட்சலேசாம்சத்தினால்அங்கீகரிக்கப்பட்ட ஸ்ரீமச்சகூர்மாதி அனந்தாவதாரமகிமாதிசயதிவ்யக்தா சுதாரஸகுணானுபவங்கள்செய்யுமவர்களுடையஜன்மஜன்மார்ஜ்ஜிதபாபராசிகளை நிவாரணஞ்செய்வதுமன்றிஅவர்கள் ஸ்ரீஹரிபக்திமானஸோத்தமர்களாய ஸ்ரீ அச்சுததிவ்வியானந்தபதமாகிய ஸ்ரீபரந்தாமவைபவோன்னதசுகாநந்தத்தைஅடையவும்அருள்செய்வார்.

ஸ்ரீசூதருடையவாக்கியம்.

வாருங்கள்ஸ்ரீசௌனகாதிமகாமுனி ஜனகணசமூகங்களே, இவ்விதமாகஸ்ரீகிருஷ்ணகதாமிர்தசுதாரசங்களை ஸ்ரீவேதவியாசபுத்திரரத்தினமாகியஸ்ரீசுகரானவர்அபிமன்னியதனயசிகாமணிக்குக் கிருபையாகவருளிச்செய்தபடிநாளுங்களுக்குஅவருடைய கிருபாகடாட்சபிரகாசத்தினால்குணானுபவஞ்செய்தேனென்றுருருவந்தனஞ்செய்துஇந்தஸ்ரீபகவத்குணதிவ்யசரித்திராதிசயகதாமிர்தத்தைஇவ்வுலகத்திலயாராயினும் ஸ்ரீபகவத்பக்திமானசர்களாகியும் நம்மைப்போலவேத சம்மதமாகநன்னீராடித்துவாதசஊர்த்துவ புண்டரந்தரித்தும் மகத்திரராஜமாகியஅஷ்டாக்ஷரியைசெபி த்தும்த்வயானுசந்தானஞ்செய்தும்சுகிர்ப்பூதர்களாகி அடிக்கடிச்சார்வதாகாலையிலும்மாலையிலும் சத்சங்கத்துடன் சத்காலசேபஞ்செய்து ஒருவர்க்கொருவர்போதித்தும் குணானுபவஞ்செய்தும் அனுபவித்தவர்கள்சகலபாவினிர்முத்தர்களாய்இகத்தில் தெய்வசம்பத்கரமாகிய அநந்தபோகபாக்கியாதிசயங்களை யனுபவித்துச்சரீராந்தியத்தில் ஸ்ரீஹரிபாதாரவிந்தபக்திமானஸர்களாய்ராகத்துவேஷ யுக்த்தரஜதமோகுணரகித சுத்தசத்வாத்மகநித்ய ஸ்ரீமங்களமகோன்னததிவ்யபரந்தாமவைபவாதிசயத்தையடைந்துய்யக்கடவர்களென்றுஅருளிச்செய்தனர்.

சந்தவிருத்தம்.

வேதமாமறைபோதிடும்நல்ல வேள்வியாளரும்வாழியே- வெற்றிபெற்றிடும்ராஜாராஜரும் வேதமாமுனிவாழியே, ஆதிபாரதக்கதையைக்கேட்டிடும் அன்பன்பரிட்சித்துவாழியே, அரியசூதமாமுனிவரிருடிகளவர்குழாத்துடன்வாழியே, மாதவன்சத்தியபாமைருக்மணி மாதாகோபிகாஜனங்களும்-மன்னும்வசுதேவர்தா யசோதையும்மாபலராமர்வாழியே, காதலாகியபாகவதந்தனில் கண்ணன்சரித்திரமாதலால்-கருத்துடனிதைக்கேட்கும்பாகவதக்கண்யர்களும்வாழியே.

எழுசீரடியாசிரிய விருத்தம்.

அரியபரவெளியைவேதாந்தமுடிவினினிர்த்தமாடிடும்அரியும்வாழி
துரியமணிபூரகச்சோதியிலெழுந்திடும்துகளிலக்குமியும்வாழி
அரனயனொடமரரிந்திராதியருஞ்சித்தசாத்தியர்களவர்களும்வாழி
தெரியவேயார்க்குமிதையச்சிலிட்டீந்திடும்தியாகனனுதினம்வாழியே.

த ச ம ஸ் க ந் த ம் மு ற் று ப் பெ ற் ற து.









நன்றாக. குருவாழ்க. குருவேதுணை.

# ஸ்ரீமகாபாகவதபுராணம்.

## பதினோராவதுஸ்கந்தம்.

### முதலாவது - அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

அற்புதத்தொடு யாதவாளுக்கதி
விப்பிரசாபம் விளம்பிடுகின்றதே,

யாதவர்களுக்கு விப்பிரசாபமானது
சொல்லப்படுகின்றது,

ஸ்ரீசுகர்வாக்கியம்.

**வாராய் பரிட்சித்துமஹாராசனே,** பலராமருடனேயும்யாதவாளுடனேயும் கூடிக்கொண்டிருக்கிறஸ்ரீகிருஷ்ணபகவானானவர் இராஜாக்களுக்குள்ளே மகா கலகமுண்டாகும்படிச் செய்துகொண்டு தைத்தியாளைச்சங்கரித்துப் பூமிபாரத்தைப் போக்கடித்தார் அந்தஸ்ரீகிருஷ்ணரானவர் சத்துருக்களான துரியோதனன்முதலானவர்களாலே கபடமானசூதாடி அவமதிக்கும்துரோபதியினுடைய தலைமயிரைப்பிடித்திழுத்தும், விஷத்தைக்கொடுத்தும் அரக்குமாளிகையில் தகனஞ்செய்வித்ததும். இப்படிப்பட்ட துஷ்கிருத்தியங்களினாலே மனம்வருந்திகோபிக்கப்பண்ணிய யாதொருபாண்டவாளை நிமித்தமாகப்பண்ணிக்கொண்டு இரண்டுசேனைகளில்வரும்படியான அரசர்களைச் சங்கரித்துப் பூமிபாரத்தை நிவர்த்தித்தார்.

சொல்லுதற்கரிய அந்தமகிமையுள்ள பகவானானவர் பின்னும் எவராலும்ஜெயிக்கக்கூடாத யாதவகுலம்நாசமடையாதிருந்துதேயானால் பூமிபாரம் நீங்கியதாக விராதுஎன்னையே ஆசிரயித்து நித்தியமாகமகாவிபவங்களாலேகருவமடைந்திருக்கிற இந்த யாதவகுலத்துக்கு இந்திராதி தேவர்களிடத்தினின்றும் மகா பிரயாசத்தினாலேயும் திரஸ்காரமான துண்டாகமாட்டாது. ஆகையினாலே மூங்கிற் புதருக்குளுண்டாகும் அக்கினியைப்போல இவர்களுக்குள்ளேயே கலகத்தையுண்டாகநாசமடையச்செய்து ஸ்ரீவைகுண்டமென்னும் நம்முடைய லோகமடையவேண்டுமென்று இந்தப்பிரகாரம்நிச்சயித்தவராய் அப்படியே பிராமணாளுடைய சாபமென்கிறவியாஜ்யத்தினாலே தமதுகுலத்தைலயம்பண்ணிவிட்டுஸ்ரீகிருஷ்ணரானவர்உலகங்களுக்குச்சவுந்தரியத்தைத்தராநின்ற தமதுதிவ்விய மங்களமூர்த்தியினாலேமனிதர்களுடைய கண்களையும் தமதுமதுரமானவாக்குகளினாலேஅவர்கள்வாக்குகளையும், தம்மைஸ்மரிக்குமவர்களுடைய மனதையுமஅங்கங்கே வைக்கப்பட்டிருக்கிறதமதுதிருவடிகளைப் பார்க்கிறவர்களுடைய கிரியைகளையும். ஆக்கிரஷித்துக்கொண்டு மேல்சனிக்கின்றபேர்களுக்குண்டாகுந் துக்கங்களினின்று மீளும்பொருட்டுபூமியிலேகவீஸ்வராளாலே வர்ணிக்கப்பட்டுள்ள கீர்த்தியை வியாபிக்கச்செய்து அதினாலே துக்கநிவாரணமாமென்றகீர்த்தியைநிலைக்கச்செய்துவைகுண்டமடைந்தாரென்றுசொல்லுகின்றசுகப்பிர்ம்ம ரிஷியைப்பார்த்து பரிட்சித்துமகாராஜன்சொல்லுகின்றார்.

பரிட்சித்துவாக்கியம்.

பிராமணாளையே தெய்வமாகவும், பெரியோர்களை நித்தியமாகவே சேவைபண்ணிக்கொண்டும் ஸ்ரீகிருஷ்ணரிடத்திலேயே மனதைப் பொருத்தியவர்களுமாகிய அந்தயாதவர்களுக்குப் பிராமணசாபமும், தங்களுக்குள்ளேகலகமுண்டானதும், இதுமுதலானதைச் சொல்லவேண்டுமென்று கேட்கும் அரசனைப்பார்த்துச் சொல்லுகின்றார்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

ஓய்அரசனே ஜனங்களுடையசகலபாவங்களைப்போக்கடிக்கிறவராயும் கர்மங்களைப்பண்ணி காலரூபியாய்வ

சுதேவருடைய கிரகத்திலே வாசம்பண்ணுகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானாலே கருமநிமித்தமாக அழைப்பிக்கப்பட்டும் அதைநிறைவேற்றித் திரும்பவும் அனுப்பிவைக்கப்பட்டுமிருக்கிற ரிஷியீஸ்வரர்கள் பிண்டாரகமென்கிற க்ஷேத்திரத்தையடைந்தார்கள் அவர்கள்-விசுவாமித்திரர்-அசிதர்-கண்ணுவர்-துர்வாசர்-பிருகு-அங்கிரசு காசியபர்-வாமதேவர்-அத்திரி-வசிஷ்டர்-நாரதர்-முதலானரிஷிகளும் அந்தக்ஷேத்திரத்தை யடைந்திருந்தார்கள். அப்போது அவ்விடத்திலிலீலைபண்ணிக்கொண்டிருக்கும் யாதவகுமாரர்கள் சாம்பவதியினுடைய புத்திரனை சாம்பனைகெர்ப்பமுள்ள ஸ்திரீயைப்போல-அலங்காரம்பண்ணி மிருந்தவணக்கமுள்ளவர்களைப்போல அந்தரிஷிகளுடைய சமீபத்தில்வந்துசாஷ்டாங்கமாகப் பிரணமம்பண்ணிச்சொல்லுகின்றார்கள். ஓ உத்தமர்களேஇந்தக்கறுத்தகணகளையும் கர்ப்பத்தினையுமுடைய பெண்ணானவள் தானேகேழ்க்க நாண முடையவளாய் எங்களைக்கேழ்க்கச்சொல்லுகிறாள், அதினால் சுவாமிகளே, புத்திரகாமியாய் பிரசவகாலஞ்சமீபித்திருக்கிறஇந்தப்பெண்ணானவள் பெண்ணைப்பெறுவாளா, பிள்ளையைப்பெறுவாளா அதைச் சொல்லவேண்டுமென்றார்கள், இப்படி பரியாசம்பண்ணப்பட்ட அந்தயாதவர்களைப்பார்த்து ரிஷிகள் மகாகோபங்கொண்டவர்களாய் ஓபுத்திமீனர்களே, இந்தப்பிரதிபெண்ணானவள் பிள்ளையைப் பெறுவதில்லை உங்கள்குலத்தை நாசம்பண்ணத்தக்கயிருப்புலக்கையைப்பெறப்போகிறாளென்று சொன்னசாபத்தைக்கேட்டு சாம்பனுடைய வயிற்றிலேகெர்ப்பிணிபோலக் கட்டியதையவிழ்க்க அந்தவயிற்றிலே இரும்புமயமான உலக்கைத்தடியைப்பார்த்துப்பிரமித்துப்பின்புபயப்பிராந்தியுடையவர்களாய் அந்த முசலத்தைஎடுத்துக்கொண்டு வாடினமுகத்தராய் யாதவர்களால்சூழ்ந்திருக்கிற உக்கிரசேனனாகிய தம்முடைய அரசன்முன்னாகவைத்து நடந்தவிருத்தாந்தத்தையுஞ் சொன்னார்கள துவாரகையிலுள்ள சமஸ்தமானவர்களும் பிராமணசாபத்தைக்கேட்டும் அந்தமுசலத்தைப்பார்த்தும்பயந்தவர்களானார்கள் அப்போது அந்த எதுகுலராஜனானஉக்கிரசேனனானவன்-அந்த முசலத்தைச் சூரணமாக்கிச்சமுத்திரத்திலே எறியச்செய்தான் அந்தப்படியேசெய்துமீந்ததுணுக்கையையும் சமுத்திரத்திலெறிந்தார்கள் அந்தப்பொடிகள் சமுத்திரஅலைகளாலேகரையில் ஒதுங்கிஅங்கேகோரைகளாகமுளைத்தது, அந்தத்துணுக்கையை ஒருமச்சமானதுபட்சித்தது அந்தமச்சம்பின்னும்சிலமச்சியங்களுடனே செம்படவர்கள்வலையில்கப்பட்டது. அவர்கள் அந்த இரும்புத்துணுக்கையை எறிந்துவிட அதுஉலுயதகனென்கிற வேடனுடையபாணத்தினுனியில் கூர்மையாகப் பண்ணிவைத்துக்கொண்டிருந்தான். ஸ்ரீபகவானானவர் அந்தப் பிராமண சாபத்தை [illegible] சமர்த்தரானாலும் தன்னும்படி இச்சையுடையவராய் அதைஇஷ்டமாகவே அங்கீகரித்தார்.

---

## ௨ - வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

புவியினில்நிமிச் சக்கிரபூபதிக்
கவிஹரியெனக் கழறும்யோகிகளசல்
தவர்கள்சொல்லும்பாகவதத்தின்தர்மமும்
அவர்கலட்சண மும்மறைவாமரோ.

நிமிசக்கிரவர்த்திக்கு கவிஹரியென்கிறயோகிகளாலே பாகவத தர்மமும் பாகவதாளுடைய லட்சணமும் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீ சுகர்வாக்கியம்.

வாராய் பரிட்சித்துமகாராசனே, ஸ்ரீஹரிகோவிந்தருடைய புஜங்களாலே இரட்சிக்கப்பட்டிருக்கிற துவாரகாபட்டணத்திலே ஸ்ரீநாரதமகாரிஷியானவர் ஸ்ரீகிருஷ்ணபகவானைத் தரிசிப்பதில் மிகவும்இச்சையுடையவராய்அடிக்கடிவந்துகொண்டிருந்தனர் ஒருக்கால்வசுதேவரானவர் தமதுகிருகத்திலேவந்தநாரதமகாரிஷியைமிகுந்தஅன்புடன் நன்றாகப்பூசித்து சுகமான ஆசனத்திலிருக்கச்செய்து சாஷ்டாங்கமாகப் பிரணமம் பண்ணிச்சொல்லுகின்றார்.

ஸ்ரீவசுதேவர்வாக்கியம்.

தபோநிதியே பாகவதோத்தமரான உமதுசஞ்சாரமானது தீனராயிருக்கிற பிராணிகளுக்கு மங்களத்தின்பொருட்டு உண்டாகாநிற்கிறது தேவதைகளுடைய சரித்திரமானது பிராணிகளது சுக துக்கத்தின்பொருட்டும் உண்டாகாநிற்கிறது அச்சுதரிடத்திலேயேமனதையுடையவர்களான உம்மைப்போலொத்த பாகவதாளுடையசஞ்சார சுகத்தின்பொருட்டே உண்டாகா நிற்கிறது ஆகையினாலே நான் உம்மைத்தெரிசித்ததினாலேயேகிருதார்த்தனானேன் சுவாமி ஆனாலும்யாதொரு தருமங்களாலே உமக்கு ஸ்ரீபகவான் பிரசன்னமானாரோ அப்படிப்பட்ட பாகவததருமங்களைக் கேழ்க்கவேண்டி

யிச்சிக்கின்றேன் பூர்வத்திலேநான் தெய்வமாயையினாலேமோகிக்கப்பட்டவனாய் பூமியிலேபுத்திரன் வேணுமென்கிற இச்சையையுடையவனாகமுத்தியைக்கொடாநின்ற ஸ்ரீபகவானைஉபாசித்தேன் மோக்ஷசாம்பிராச்சியத்தைக்கோறிஉபாசியாமற்போனேன் ஆகையினாலே மகாவிசனங்களையுடையதாயும் பயமுள்ளதாயுமிருக்கிறசம்சாரத்தில்நின்றும்உம்மாலேஅனுவசிகமாகஎனெப்படிவிடுபடுவேனோ அப்படி என்னைரட்சிக்கக்கடவீர் தேவரீர்யாதொருதருமங்களாலே உமக்குஸ்ரீபகவான்பிரசன்னமானாரோ அப்படிப்பட்டதருமங்களைக்கேழ்க்கவேணுமென்று இச்சிக்கிறேன் சொல்லியருளவேண்டுமென்றுபிரார்த்திக்க அந்தசோபனமானவிருதத்தையுடையநாரதமகாரிஷியானவர் ஸ்ரீஅரியினுடைய கலியாணகுணங்களை ஸ்மரித்துக்கொண்டு மிகவும்பிரீதியுடையவராய் அந்த வசுதேவரைப்பார்த்துச் சொல்லுகின்றார்.

ஸ்ரீநாரதர்வாக்கியம்.

வாராய்சாத்துவிதசிரேஷ்டனேபரமகல்லியாணராயும்புண்ணியகரமான கீர்த்தனங்களையுடையவராயும்பகவானாயுமிருக்கிற ஸ்ரீமந்நாராயணரானவரை உம்மாலே ஸ்மரிக்கஞாபகமுடையவனானேனென்று அவரைப்புகழ்ந்து ஆரிஷபாளென்னப்பட்டராஜாக்களுக்கும்மகானுபாவனாயும் விதேககுலத்திலேசெனித்தவனாயு மிருக்கிறநிமிசெனகனுக்கும் உண்டாயிருந்த சம்வாதத்தைச் சொல்லுகிறேன் கேழ்க்கக்கடவாய்சுவாயம்புமனுவினுடையபுத்திரன் பிரியவிருதன்அவனுடையபுத்திரன்ஆக்கினீதிரன் அவனுடையபுத்திரன்நாபிஅவன்புத்திரன்ரிஷபன்அந்தரிஷபனைமோக்ஷதருமத்தைப்பிரவிர்த்திப்பிக்கவேணுமென்கிறஇச்சையினாலே அவதரியாநின்றவாசுதேவருடைய அம்சமாகச்சொல்லுவர்கள்அந்தரிஷபருக்குசகலவேதங்களையும்கற்றுணர்ந்தநூறுபிள்ளைகளுண்டானார்கள் அவர்களில் சிரேஷ்டனாகியபரதனானவன் அநேகநாளரசாண்டுஅதைவிட்டுஸ்ரீமந்நாராயணரிடத்தில் பக்தியுடையவனாய் தபசினாலேஅவரை உபாசித்துமூன்றுசென்மங்களாலேபகவானுடையலோகத்தையடைந்தான் அவனுடையநாமத்தினால்பூர்வம் அஜநாபமென்றுபெயரையுடையஇந்தப்பூகண்டமானது பாரதவருஷமென்றுசொல்லப்படுகிறது மற்றவர்களுக்குள்ளேஒன்பதுபேர்பிர்மாவர்த்தமுதலானஒன்பதுபூகண்டங்களுக்குப்பதிகளாயானார்கள் எண்பத்தொரு பெயர்இந்தப்பாரதவருஷத்துக்குநான்குபக்கத்திலும்கர்மமமார்க்கத்தைப் பிரவிர்த்திப்பியாநின்ற பிராமணராகவானார்கள்,

அந்தஒன்பதுபூகண்டபதிகளானவர்கள்பரமார்த்தத்தைநிரூபித்து பரமாத்துமத்தியானப் பியாசத்தினாலே மிகவுஞ்சிரத்தையுடையவர்களாயும்திகம்பரர்களாயும் ஆத்துமவித்தையிலேசமர்த்தர்களாய் ரிஷீஸ்வரர்களானார்கள், அவர்கள்-கவிஹரி-அந்தரிக்ஷன்-பிரபுத்தன-பிப்பலாயினன்-ஆபிஹோத்திரன்-திரவிடன்-சமசன்- கரபாசனனென்று நாமங்களுடையவர்களாய் ஸ்தூலசூட்சுமரூபமானபிரபஞ்சத்தைப் பகவானுடைய ரூபமாகப்பார்த்துக்கொண்டுபூமியில்சஞ்சரித்தும்ஒன்றிலும் ஆசக்தியில்லாதவர்களாயும் தேவாள்-சித்தாள்-சாத்தியாள்- கந்தருவாள்-ஏக்ஷாள்-நராள்-கின்னராள்- இவர்களுடையலோகங்களிலும் முனீஸ்வராள்-காரணாள்-பூதநாதாள் - வித்தியாதராள்-பிராமணாள்-பசுக்கள்- இவர்களுடையலோகங்களிலேயும்சுவேச்சையாகச்சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள் ஒருகாலத்தில்பாரதவருஷத்திலே ரிஷீஸ்வராளாலேபண்ணப்பட்டிருக்கிறமகானுபாவனான நிமிச்சக்கிரவர்த்தியினுடையஎக்கியசாலையிலே அந்த ஒன்பது யோகிகளும் சுவேச்சையாகவேவந்தார்கள் அவர்களைப் பார்த்துஉடனேநிமிச்சக்கிரவர்த்தி சமஸ்தமரியாதைகளுடனும்பிராமணருமாய்எதிர்கொண்டுஉபசாரமாகவரவழைத்துப்பூசித்துஉயர்ந்தஆசனங்களிலிருக்கச்செய்துஎதாசாஸ்திரமாகப்பூசித்துவணங்கி அந்தமகாயோகிகளைப்பார்த்து பிரீதியுடையவனாய் சாஷ்டாங்கமாகப்பிரணாமம்பண்ணி மகானுபாவர்களே சமுசாரத்தில் க்ஷணமேனுமுண்டாயிருந்தாலும்சச்சங்கதியானதுநிதியாவதுபோலமனிதர்களுக்கு மிகவுமானந்தத்தைச்செய்யாநிற்கிறது ஆகையினாலேஎங்களுக்குக்கேட்கிறதற்குயோக்கியமேயானால்நீங்கள் ஸ்ரீஹரியானவர்யாதொருகர்மங்களாலேபிரசன்னராய்பக்தன்பொருட்டுதம்முடைய சாரூப்பியத்தையுங்கொடுப்பாரோ அப்படிப்பட்டதர்மங்களைச்சொல்லவேண்டுமென்று கேட்டான்நிமிச்சக்கிரவர்த்தியானவனென்றுநாரதமகாமுனிவர்வசுதேவரைப்பார்த்துபின்னுஞ்சொல்லுகின்றார்.

நிமிச்சக்கிரவர்த்திகேட்டதைப்பற்றி அந்த ஒன்பது யோகிகள்கொண்டாடிஅவனைப்பார்த்து அவர்களில்கவியோகிசொல்லுகின்றார் ஓய்அரசனே இந்தச்சமுசாரத்திலேஅசத்தானதேக முதலானத்தில் ஆத்துமபுத்தியினாலேசர்வகாலமும் பயந்தபுத்தியையுடையவனானபுருஷனுக்குஒருவிடத்திலேயும் பயமில்லாதானஅச்சுதருடையபாதாரவிந்தஉபாசனமேபண்ணத்தக்கதென்றும் அதினாலேசமஸ்தபயமும் நிவர்த்தியாகாநிற்கிறதுமனுமுதலானபேர்களுடையமுகத்தினாலேவர்ணாசிரமதர்மங்களைச்சொல்லி அதிரகசியங்களானதர்மங்களானதுகள் பகவானால்தம்முடைய முகத்தினாலேயே அக்கியானிகளானபுருஷாளுக்குச்சுகமாக ஆத்துமலாபத்தின்பொரு

ட்டுஉபாயங்களாகச்சொல்லப்பட்டதுகளோ அந்தத்தர்
மங்களைப்பாகவததர்மங்களென்றுஅறியக்கடவாய் புரு
ஷனானவன் யோகாதிமார்க்கங்களிலே விக்கினங்கள் உ
ண்டாகிறதுப்போல் இந்தபாகவததர்மத்தில் விக்கினமு
ண்டாய்அதினாலேகெடுக்கப்படுகிறதில்லைஅந்தப்பாகவ
ததர்மங்கள்எதுகளென்றால்புருஷனானவன்சரீரத்தினா
லேயும் வாக்குமனது இந்திரியங்களாலேயும்புத்தியாலு
ம்அகங்காரத்தினாலும் சுபாவத்தாலும் யாதொருகர்ம
ங்களைப்பண்ணுகிறானோ அந்தச்சமஸ்தகர்மங்களையும்
ஸ்ரீமந்நாராயணர்பொருட்டு சமற்பணைபண்ணிப்போடு
கிறதேபாகவதத்ர்மமாகநிற்கிறது யாதொருகாரணத்தி
னால்பகவானிடத்தில் பக்திஅவர்சொருபக்கியானம்தே
கத்தையேநானென்றுவிபரீதக்கியானத்தையுமுடையவ
னாயிருக்கின்றஅக்கியானமுள்ள புருஷனுக்குபகவானு
டையமாயையினாலேயேபயமுண்டாகாநிற்கிறது ஆகை
யினால்விவேகியானவன் ஆசாரியனையே பரமாத்துமா
வாகப்பாராநின்றுகொண்டுஏகாந்தபக்தியினாலே அந்த
ப்பகவானையேஆசிரியக்கக்கடவன் தியானம்பண்ணுகின்
றபுருஷனுக்குமனதினால்சொற்பனம்போலவும்மனோர
தம்போலேயும்இல்லாமலிருந்தாலும் இந்தப்பிரபஞ்ச
மானதுதோற்றப்பட்டுக் கொண்டிருக்கின்றது விவேகி
யானவன்கர்மங்களைச்சங்கர்ப்பித்துக்கொண்டும் விகர்ப்
பித்துக்கொண்டுமிருக்கிறமனதை நிரோதம்பண்ணக்க
டவன்அந்தமனோநிரோதமென்னப்பட்ட ஏகாந்தபக்தி
யினாலேசெய்யப்பட்ட ஸ்ரீபகவானுடைய பஜனையினால்
அபயமுண்டாகாநிற்கும் புருஷனானவன் லோகத்திலே
ஸ்ரீஅரியினுடையஅவதாரங்களும் சரித்திரங்களுமான
தைவர்ணிக்காநின்றகீதங்களையும் நாமங்களையும்கானம்
பண்ணிக்கொண்டுலச்சையின்றி இதரசங்கமில்லாதவ
னாய்சஞ்சரித்துக்கொண்டிருக்கக்கடவன்.

இந்தப்பிரகாரம்விரதத்தையுடையவனாய் ஸ்ரீஹரிநா
மகீர்த்தனங்களிலே பிரீதியையுடையவனாயும் அதினால்
மிகவும்உருகின மனதையுடையவனாயும் ஒருக்கால்பக
வானைக்கண்டவன்போலநகையாநின்றும் அந்தபகவா
னைஇந்நாள்வரையிலுமஉபேக்ஷைபண்ணப்பட்டேனெ
ன்றுஅழாநின்றும், அதிகஆசையினாலே கூப்பிடாநின்
றும்சந்தோஷத்தினால்கானம்பண்ணாநின்றும் ஜெயஜெ
யாவென்றுநர்த்தனம்பண்ணாநின்றும் பேய்பிடித்தவன்
போல்பரவசனாகாநிற்பன் ஸ்ரீஅரியையேகதியாகஅடை
ந்தவனாய் ஆகாசம்-வாயு-அக்கினி-ஜலம்-பூமி-சந்திராதி
சோதிரகணங்கள்-இரதபிராணிகள்-திக்குகள் - விருட்ச
ங்கள்-மலைகள்-நதிகள்-சமுத்திரங்கள்- இன்னுமுள்ளச
மஸ்தவஸ்துக்களையும் ஸ்ரீஅரியினுடையசரீரமென்றெ
ண்ணிப்பிரணாமம் பண்ணக்கடவன் இப்படிஅச்சுதரு

டையதிருவடிகளைப்பஜனைபண்ணுகிறபாகவதனுக்குஅ
ந்ததிடமானவுபாசனையினாலே பக்தியும் விரக்தியும்பக
வானுடையசொருபசாக்ஷாத்காரமும் உண்டாகாநிற்கு
ம் அதினாலேபரமமானசாந்தியையடைந்து சாக்ஷாத்ப
ரமபதத்தையேஅடைவன் இப்படிசொல்லியகவியோகி
யின்வார்த்தையைக்கேட்டுநிமிச்சக்ரவர்த்தியானவன்பி
ன்னுங்கேட்கின்றான் வாரீர்மகானுபாவர்களேமானிடர்
களுக்குள்ளே பாகவதனானவன்எப்படிப்பட்ட கர்ம்மநி
ஷ்டையையுடையவனாயிருப்பன் எவ்வகையானசுபாவ
த்தையும்ஆசாரத்தையும் உடையவனாயிருப்பன் எந்த
சின்னங்களாலேபகவானுக்கு இஷ்டனாகவிருப்பன் அ
தைச்சொல்லவேண்டுமெனக்கேட்க ஹரியோகிசொல்
லுகின்றார்.

வாராய்ராஜனே யாதொருபுருஷனானவன் சமஸ்தபி
ராணிகளிலேயும்பகவான் அந்தரியாமியாயிருக்கிறானெ
ன்றும்கலியாணகுணங்களையுடையபரமாத்மாவினிடத்
தில்சமஸ்தபிராணிகளு மிருக்கிறதென்றும் பார்க்கிறா
னோ அவனேபாகவதோத்தமனாகிறான்யாதொருபுரு
ஷனானவன்ஈஸ்வரனிடத்திலேபக்தியையும்பாகவதாளி
டத்தில்சிநேகத்தையும் அஞ்ஞானிகளிடத்தில்கிருபை
யும்சத்துருக்களிடத்தில் உபேக்ஷையையும் பண்ணுகி
றானோ அவன்மத்தியபாகவதனாகிறான் யாதொருபக்த
னானவன் ஸ்ரீஅரியினுடையபிரதிமையிலேயேசிரத்தை
யுடனேகூட பூசையைப்பண்ணாநின்றுகொண்டு பாகவ
தாள்இதரபிராணிகளிடத்திலேயும் பூசியாமலிருக்கிறா
னோஅவன்பிராகிருதபாகவதனாகிறான்யாதொருவன்இ
ந்திரியங்களாலே விஷயங்களைக் கிரகித்தாலும செகத்
தை விஷ்ணுவினுடையமாயாவிலாச மென்றேபார்த்து
அந்தவிஷயாதிகளில்வெறுப்பு விருப்பின்மையாயிருக்
கிறானோ எவன்அரியினுடையஅனுபவித்திலே தேகம்
இந்திரியங்கள-மனது-புத்தி-சென்மநாசம்- பசி-தாகம்-
பயம்-சோகமுதலானசம்சாரதர்மங்களாலேமோகத்தை
யடையாமலிருக்கிறானோ எவன் காமம்கர்ம்மமுதலான
வாசனைகளும் அணுகாமல் அதுகளுக்குப் புறம்பாகிறா
னோ எவன் தபசினாலேயும், வர்ணாசிரமத்தாலும், அக
ங்கொள்ளாமல் உத்தமகுலம் தபசு முதலானது களை
யுடையவனாயிருக்கிறானோ, எவன் ஸ்ரீ ஹரியினுடைய
ஏகாந்த பக்தனாகிறானோ, எவன் தன்னுடைய தென்
றும் இதராளுடைய தென்றும் அபேதமுள்ள மனது
டையவ னெவனோ எவன் ஸ்ரீபகவானுடையபாதாரவி
ந்தமே கதியென்று பிரியாத கியானத்தை யுடையவ
னாய் எப்படிப்பட்ட விஷயாதிகளிலும் சிந்தையை வே

றபடுத்ாதவனுய் ஹரிபஜனையினின்று நிமிஷமேனு ம்சலியாமலிருக்கிறுனே இப்படிப்பட்டசத்குணங்களு டைய் அவனே பாகவதோத்தமன் அவனேவைஷ் ணுேத்தமன் அவனேஸ்ரீஅரியினுடையஏகாந்தபக்தனு கச்சொல்லாநிற்கிருன்,

---

௩ - வது - அத்தியாயம்.

―――(✕)―――

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அரியநிமிச்சக்கிரவர்த்திக்குஅந்தரிஷியோகி யானே ஞுதிக்குரிய பகவானிடமாயாவசனத்தையும்பிரபுத்தவு யர்யோகீந்தரன் பெருமாயையைத்தாண்டுமுபாயத்தை யும்பிப்பலாயனயோகித்தாம். பரத்துவைத்தையும் பக வானுராதனக்கிரமமும்பகர்ந்திட்டாரே.

நிமிச்சக்கிரவர்த்திக்குஅந்தரிஷியோகியானவர்ஸ்ரீபக வானுடையமாயா நிர்வசனத்தையும் பிரபுத்தயோகியா னவர்மாயையைத்தாண்டுமுபாயத்தையும்பிப்பலாயோ கியானவர்பரதத்வத்தையும்ஆவிர்ஹோத்திரயோகியா னவர்பகவானுடையஆராதனக்கிரமத்தையும்சொன்னு ரென்றுசொல்லப்படுகின்றது.

நிமிச்சக்கிரவர்த்திவாக்கியம்.

வாருங்கள்மகானுபாவர்களேபிரம்மாதிகளேயும்மோ கிப்பியாநின்ற ஸ்ரீவிஷ்ணுவினுடையமாயையை அறிய ச்சொல்லவேண்டுமென்றுகேட்க அந்தரிஷியோகியான வர்சொல்லுகிறுர்.

அந்தரிஷிவாக்கியம்.

ஓஅரசனே மகாபரிசுத்தராயிருக்கிற அந்தப்பரமா த்துமாவினிடத்தில்யாதொருகாரணத்தினுலேபரமாத் துமபுத்திதோன்றுமல் பிரபஞ்சந் தோற்றக் கோணிக் கொண்டிருப்பதே அவருடையமாயையாகநிற்கிறதுஅ ந்தஈஸ்வரரானவர்யாதொருமாயையினுலே இந்தப்பிர பஞ்சத்தைச் சிருஷ்டித்தாரோ ஆதிபுருஷரான பகவா னுனவர் தம்மாலேதம்முடையஅம்சரானசீவாளுக்கு ப்போகமோக்ஷங்கள்பொருட்டு பிரிதிவுமுதலானமகா பூதங்களாலே அனேகங்களாயும்சாரயுதமுதலானபிரா ணிகளேச்சிருஷ்டித்தாரோ இதுவேஅவருடையமாயை யாகநிற்கிறது பின்னேயும்இந்தப்பிரகாரம்சிருஷ்டிக்கப் பட்டிருக்கிற பிராணிகளிலே அந்தரி யாமியாகப் பிர வேசித்திராநின்று மனதுமுதலான இந்திரியங்களிலே யும் அனுப் பிரவேசித் திராநின்றும் சப்தாதி குணங் களேச் சீவாத்துமாவை அனுபவிக்கிருரோஇதுவே ஸ்ரீ பகவானுடைய மாயையாகநிற்கிறது, அந்தச்சீவனுன வன்இந்திரியங்களினுலே விஷயங்களேயனுபவியா நின் றஇந்தச்சரீரத்தைத் தானென்றெண்ணிக்கொண்டுஆச க்தியையுடையவனுய் கர்மேந்திரியங்களால் வாசனைக ளோடேகூடியிராநின்ற கர்மங்களேசசெய்து சுகதுக்கரு பமான அந்தப்பலன்களே யனுபவித்துக்கொண்டு இந்த ச்சமுசாரத்திலேபிர்மித்துக்கொண்டிருக்கிருன், இப்ப டியாக அந்தச்சீவனுனவன் அனேகதுக்கத்தைக்கொடா நின்றகர்மகதிகளே யடைந்தவனுய் மகாப்பிரளய பரியந் தம் சனனமரணுதிகளே பரதந்திரனுக அனுபவித்துக் கொண்டிருக்கிருன்,பிரிதிவுமுதலான பூதங்களுக்குப்பி ரளயஹேதுவான துண்டாகுகையில்பகவானுனவர்காரி யகாரணமாயும்ஸ்துலமாயு மிருக்கிறஇந்தப் பிரபஞ்ச த்தைக்காரணமானபிரகிருதியையடைவிப்பிக்கிறதற்கு ஆகிரிஷியாநிற்கிருர். எப்படியானுல்பிரளயகாலத்தில்பூ மியிலனேகவருஷம் மகாகோரமான அனுவிருஷ்டியா னதுஉண்டாகிப்போகிறது அக்காலத்தில் சூரியனுனவ ன்மூன்று லோகங்களேயுந்தகிக்கப்போகிருன்,அப்போ துசங்கருஷ்ணனுடைய முகத்திலேநின்றுண்டாகாநின் றகாலாக்கினியானது அதிகசுவாலையுடையதாய்பாதாள முதல்வாயுவினுலே தகித்துக்கொண்டு விருத்தியாயிரு க்கும், பிற்பாடு பிரளயத்தைப்பண்ணுகின்ற சம்வர்த்த மென்னப்பட்டமேகக்கூட்டமானதுயானேத் தும்பிக்கை யளவாயுள்ள வருஷதாரகைகளாலே அனேகசமவச்சர ங்கள் வருஷிக்கப்போகிறது அதில்பிரபஞ்சமானது லய த்தையடையும்அந்தப்பிரபஞ்சத்திற்கு அபிமானியான இரணிகற்பனுனவன்சூட்சுமகாரணமான பிரகிருதியை யடைவன், அப்போதுசகலமும் லயித்துகாரணமாத்தி ரமேயுண்டாயிருக்கும்.

பிரிதிவுமுதலான மகாபூதங்களுக்குலயம்எப்படிஎன் றுல், வாயுவினுல்கெந்தகுணமானது அபகரிக்கப்பட்டு ப்போகையில் பூமியானது ஜலத்திலேலயத்தையடையு ம்அந்தஜலமும்வாயுவினுலே அபகரிக்கப்பட்டரசகுண த்தையுடையதாய் அக்கினியிலேலயத்தையடையும்சம் வர்த்தமென்னப்பட்ட தபசினுலேரூபகுணமானது அப கரிக்கப்பட்டுப் போகையில்அந்த அக்கினியானதுவாயு விலே லயத்தையடையாநிற்கும்ஆகாசத்தினுல் ஸ்பரிச குணமானது அபகரிக்கப்படுகையில் அந்தவாயுவான து ஆகாசத்திலேலயத்தையடையாநிற்கும், தனக்குக்கா ரணமாயும் காலரூபியாயுமிருக்கிற ஈஸ்வரனுலே சப்த குணமானது அபகரிக்கப்பட்டுப்போகையில்அந்தஆகா சமானது தாமசஅகங்காரத்திலேயும், இந்திரியங்களும் புத்தியும்ராஜசஅகங்காரத்திலேயும் மனதானது இந்தி ரியாபிமானி தேவதைகளோடேகூட சாத்துவீக அகங் காரத்திலேயும்லயத்தையடையாநிற்கிறதுகள் இந்தப்பி

ரகாரம் தன்னுடையகாரியங்களுடன்கூடிக் கொண்டிருக்கிறஅந்தஅகங்காரமானது மகத்துவத்திலே லயத்தையடையாநிற்கிறது மகத்துவமானது பிரகிருதியிலேலயத்தையடையாநிற்கிறது.

பரமாத்துமாவைக் காட்டிலும் மிகவும்வேறாய்பரமாணுமுதலான ஜகத்காரணமான திருக்கின்றது என்கிறகியானம்யாதொன்றுண்டோசிருஷ்டிக்குப்பூர்வம்அசத்தானபிரிதிவுமுதலானபூதங்களுக்குக் காரண்வியாபாரத்தினுலேஜென்மமுண்டாச்சுதென்றறிவதுயாதொன்றுண்டோ காணப்படாநின்ற பிரிதிவுமுதலான இந்தஜெகத்துக்கு நாசகாரணத்தினுலே லயிக்கிறதென் றறிவதுயாதொன்றுண்டோ இதுவேபரமாத்துமாவி னுடையமாயாவிலாசமாகநிற்கிறது.

வாராய்ராஜனே,அனுஷ்டமானமகா சீவவுஷ்ணமுதலானதினுலேஉண்டாகிறகிலேசமும்,மரணயேதுக்களானசர்ப்பம்-சோரால்-முதலானதுஷ்ட பிராணிகளுடையதெரிசனத்தினுலேஉண்டாகா நின்றபயமும் இதினுல்மேலுமேலும்உண்டாகாநின்றகிலேசப்பிரவாகமும்பயப்பிரவாகமு மியாதொன்றுண்டோ இதுவே ஆத்மாவினுடையஅக்கியானமாகநிற்கிறதுவைதீகாள் அசத்தானபிரபஞ்சத்துக்குஉற்பத்தியையும சத்துக்குநாசத்தையும்பரமாத்துமாவைக் காட்டிலும்பிரபஞ்சம் வேறென்றும்பிரமாணிக்கமாகச்சொன்ஞர்களேயானுல் அந்தவைதீகாளுக்கு வேதமானதுஅக்கியானத்தைநாசம்பண்ணிவஸ்துதத்துவத்தைப் பிரகாசிபித்துக்கொண்டிருக்கும்இருந்தாலும்-துஷ்டாளானசோரால் சாராளிவர்களுக்குச்சூரியோதய மானதுவஸ்துதத்துவத்தைப்பிரகாசிப்பித்துக்கொண்டிருந்தாலும் க்ஷேமத்தின்பொருட் டாகாததெப்படியோ அப்படிபோலஅவர்களுக்கு க்ஷேமத்தின்பொருட்டாகமாட்டாது.

ஜலமுதலானதில் காணப்படாநின்ற சந்திரப்பிரதிபிப்பமும் பர்வதமுதலியதுகளில்கேழ்க்கப்படாநின்றபிரதிதொனியும் சிப்பியிற்காணப்படாநின்றவெள்ளியும்,இதுகள்விகாரமில்லாததாயும்சத்தாயுமிருக்கிற பிம்பத்திலேயும்அதிஷ்டானத்திலேயு மில்லேயன்ருே அந்தபிம்பமும்அதிஷ்டான மும்பரிபூரணவஸ்துவான சத்திலேயில்லேயன்ருேகியானத்தைத்தவிரபதார்த்தமென்கிறதும்சுதாவாகயில்லேயன்ருேஅந்தக்கியானத்துக்கோவென்றுல்அநாதியானபடியினுலேயும் சுயம்பிரகாசமான படியினுலேயும்வேறுகாரணமில்லேஓய்அரசனேயென்ருன்அந்தரிஷியோகியானவர்மகாரிஷிகளே மனேசயமில்லாதவர்களாலேதாண்டுதற்கரிய தானஈஸ்வரனுடைய இம்மாயையைசரீரத்திலேகானென்கிறபுத்தியையுடையவர்களான பேர்கள்சுகமாகஎப்படித்தாண்டுவார்களோ அந்தஉபாயத்தையருளுமபடிநிமிச்சக்கிரவர்த்திகேட்க அவர்களில் பிரபுத்தயோகியானவர்சொல்லுகிருர்.

பிரபுத்தயோகிவாக்கியம்.

யாதொருபுருஷனுனவன் துக்கநிவர்த்தியாய் சுகத்தையடையும்பொருட்கொ்மமங்களேப் பண்ணியும் ஸ்திரீயுடனேகூடிக் கொண்டிருக்கிறதினுலு முண்டாகும்வித்தியாசங்களேப்பார்க்கக்கடவன் நித்தியமாகதுக்கத்தைக்கொடுத்தும் மிருத்தியுருபமாயுமிருக்கிற தனங்களாலே அனித்தியமானகிரகம் புத்திராள்- ஆப்தாள்-பசுக்கள் இதுகளாலே ஆத்மாவுக்கு என்னபிரீதியுண்டாகாநிற்கிறது காமத்தினுல்சம்பாதிக்கப்பட்ட சமஸ்தபோகங்களேயும் அனித்தியமென்றே அறியக்கடவன்உத்தமமானசிரேயசையறியவேண்டியவன் சகலவேதார்த்தங்களுடையதத்துவத்தையும்பரமாத்துமாவனுபவத்தையும் அறிந்தஆசாரியனேஆசரிக்கக்கடவன் அந்தஆசாரியனுடையசன்னிதியிலேயேஅவனையே பரமாத்துமாவாகப்பாவனேபண்ணிஸ்ரீஹரியானவர் சந்தோஷமடையும்படியானஅப்படிப்பட்டபாகவத தர்மங்களேக் கபடமில்லாமற்கேட்டுகிரகிக்கக்கடவன்.

சமஸ்தவிஷயங்களினின்றும்சாதுக்களுடையசங்கத்தையும் நிகிருஷ்டாளிடத்திலதயையும்சமனுளிடங்களில்சினேகத்தையும் உத்தமாளிடத்தில் வணக்கத்தையும்பண்ணக்கடவன் சரீரத்தை மிருத்திகை ஜலமுதலியதுகளாலேசுசி செய்வதையும் அந்தரங் கத்திலேடம்பம் அகங்காரங்களே விட்டிருக்கையும் கர்மானுஷ்டானம பொறுமை வேதாத் தியயனம் முதலானதையும்பிரம்மசரியத்தையும் சீவகாருண்ணியம்சுகதுக்கமுதலானதொந்தங்களில்சமானமானதும் சர்வப்பிராணிகளிலுபரமாத்துமா அந்தரியாமியாயிருக்கிருரென்கிறகியானமும்ஏகாந்தசிலனுயிருக்குகையும் கிரகமுதலானதுகளில்அபிமானமில்லாதிருக்கையும் ஆரண்ணியங்களில்விழுந்திராநின்றும் பரிசுத்தமாயுமிருக்கிற மரவுரியைத்தரித்துக்கொள்ளுவதையும் பகவானேப்பிரதிபாதியாநின்றசாஸ்திரங்களில்சிரத்தையும் இதரசாஸ்திரங்களேத் தூஷியாதிருத்தலேயும்பிராணுயாமங்களாலேமனேநிக்கிரகத்தையும், வாக்கு நிக்கிர கத்தையும், காமியகாமாதி யாகத்தினுல் காயநிக் கிரகத்தையும் சத்தியவசனத்தையும்இந்திரியநிக்கிரகத்தையும் ஆசிரயித்துபணக்கடவன் அற்புதமானலீலேயை யுடையவரானஸ்ரீஹரியினுடைய-அவதாரம்-சரித்திரம்-குணம் - இதுகளு

டைய சிரவணத்தையும்- கீர்த்தனைகளையும் - தியானத்தையும்-பண்ணக்கடவன்,ஸ்ரீ அரிக்குப்ரீத்தியர்த்தமாகவேயக்கியமுதலான கர்மங்களைப் பண்ணக்கடவன்,யாகம்-தானம்-தபசு-தடாகபிரதிஷ்டை முதலானகருமங்களையும்-இஷ்டமான கெந்தபுஷ்பமுதலியதுகளையும் பாரியை-புத்திராள்-கிரகம்-பிராணன்-இதுகளையும்பகவானுக்குச்சமர்ப்பணம்பண்ணக்கடவன்.

இந்தப்பிரகாரம் ஸ்ரீகிருஷ்ணனையே நாதனாகவுடையஸ்தாவர சங்கமங்களான பிராணிகளிலேசிநேகத்தையும்-பூசையையும் வைக்கக்கடவன், பாவனமானபகவானுடைய எசசைஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டும்ஆநந்தித்தும் சகலதுக்கங்களினின்றுநிவர்த்தியாய்சுகித்திருக்க அப்பியாசிக்கக்கடவன், பாகவதாளானபேர்கள்சகலலாப சமூகங்களையும் போக்கடியாநின்றஸ்ரீஅரியைஸ்மரித்துக்கொண்டுஒருவர்க்கொருவர் புளகாங்கிதமானசரீரத்தை பக்தியினாலேதரியாநின்றும்ஒருவேளையில்ரோதனம்பண்ணியும்-நகைத்தும்- ஆநந்தித்தும்-நர்த்தனம்பண்ணியும்-கானம்பண்ணியும்- ஒருவேளையில் ஸ்ரீஅரியினுடைய லீலைகளை அபிநயம்பண்ணுவார்கள் இப்படிச்செய்யும் அந்தப்பரமபுருஷனையடைந்துசுகத்தையுடையவர்களாய் வேறு சிந்தையின்றி பாகவத தர்மங்களையாசரிக்கக்கடவன், இதினாலுண்டாகின்ற பக்தியினாலே ஸ்ரீமந்நாராயணனே கதியென்று வெல்லுதற்கரியபகவான் மாயையைசுகமாக வெல்லுவான்என்றிப்படிபிரபுத்தயோகியானவர் சொல்லக்கேட்டு நிமிச்சக்கிரவர்த்திசொல்லுகிறான்.

நிமிச்சக்கிரவர்த்திவாக்கியம்.

கேளுங்கள்மகானுபாவர்களே,பரப்பிரம்மமானதுநாராயணனென்றும்-பகவானென்றும்-பரமாத்துமாவென்றும் சொல்லப்படுகிறதன்றோ நாராயணனென்று பெயரையுடைய அந்தப் பரப்பிர்ம்மத்தினுடைய சுயரூபத்தைச்சொல்லியருளவேண்டுமென்று கேட்கின்ற அந்தவரசனைப்பார்த்துப் பிப்பிலாயன யோகியானவர் சொல்லுகின்றார்.

பிப்பிலாயன யோகிவாக்கியம்.

வாராய்அரசனே, யாதொருபகவானானவர் இந்தப்பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி ஸ்திதிசங்காரங்களுக்குக்காரணமாயும், காரணசூனியராயும், சொற்பனமுதலான அவஸ்தைகளில் அந்தரியாமியாயும் தேகம்- இந்திரியங்கள்-பிராணன்-மனது- இதுகளில் பிரேரணைப்பண்ணப்பட்டு சீவனுடனேகலந்துவிஷயாதிகளில்சஞ்சரித்துக்கொண்டுமிருக்கிறஅந்தநாராயணனைப்பரப்பிர்ம்மமென்றறியக்கடவாய். அப்படிப்பட்டபரப்பிர்ம்மத்தை நேத்திரமுதலான இந்திரியங்களாலும்மனதினாலும் புத்தியாலும்அடையக்கூடாது. வேதமானது தான் பிரமாணமாகநின்றுகொண்டு அந்தப்பரமாத்துமாவாக்குக்கும்மனத்திற்கும் எட்டாதவரென்றும் அவரை இப்படிப்பட்டவரென்றும்சொல்லாமலே அப்பரமாத்துமாவைத்தவிரமற்றவைகளை நிஷேதியாகநின்றுசொல்லிக்கொண்டிருக்கிறது,ஆதியில்ஏகமான அப்பரப்பிர்மமே சத்துவரஜ தமோகுணரூபமானதென்றும். பின்பு கிரியாசக்தியினாலே விராட்புருஷனென்றும் கியான சத்தியினாலே மகதத்துவமென்றும், ஜீவனென்றும். அகங்காரம்இந்திரியம் தேவதைகள்விஷயங்கள்சுகமுதலான கர்மபலன்களாகவுஞ் சொல்லப்படுகின்றது, காரியகாரணங்களுக்கு பரமகாரணமாயிருக்கிற அந்தப் பரப்பிர்மமேசர்வசுயரூபமாக விளங்காநிற்கிறது இந்தப்பரமாத்துமாவானவன் பிறந்ததுமில்லை, இறந்ததுமில்லை, விர்த்தியுமில்லை நாசமுமில்லை, அல்லாமல் பாலியம்யவ்வனமுதலான தேகஅவஸ்தைகளுக்குச் சாட்சியாய் அந்தந்தக்காலங்களைப் பார்த்துக்கொண்டும் சர்வதேசத்திலும்காலத்திலும் நாசமடையாதவனாய் கியானமாத்திர சுவரூபனாயும், சர்வசாட்சியாயும்,நித்தியனாயுமிருக்கின்றான். இப்படிப்பட்ட அந்தப் பரமாத்துமாவாகியநாராயணனையே பரப்பிர்ம்மமென்று அறியக்கடவதென்றார் நிமிச்சக்கிரவர்த்தி பின்னும் அவர்களைப்பார்த்துச்சொல்லுகிறான்.

தபோநிதிகளே, புருஷனானவன் கர்மயோகத்தினால் சமஸ்காரத்தையுடையவனாய் இந்தலோகத்தில சீக்கிரமாகக்கர்மபந்தங்களை விட்டுவிட்டுநிவர்த்திசாதனமான கியானத்தைச்சொல்லக்கடவீர்கள், அல்லாமல் பூர்வத்தில்என்பிதாவான இட்சவாகுமகாராசனுடையசமீபத்திலேபிர்ம்ம புத்திராளான சனகயோகி முதலானபேர்கள்சர்வக்கியாளாயிருந்தும் நானிந்தப்பிரசனத்தையே கேட்டேன் அவர்கள்சொல்லாமற்போன அந்தக்காரணத்தையுஞ் சொல்லக்கடவீர்களென்றான். இப்படிக் கேட்டஅரசனைப்பார்த்து ஆவிரஹோத்திர யோகியானவர்சொல்லுகிறார்.

ஆவிரஹோத்திரயோகி வாக்கியம்.

ஓநிமிச்சக்கரவர்த்தியேகேளும், வேதமானது ஈஸ்வரரிடத்திலேயுண்டானது, அது எந்த தாற்பரியத்தினாலேஎந்த அர்த்தத்தைச்சொல்ல ஏற்பட்டதோஅந்தஅர்த்தத்தையே வேறொரு பிரகாரமாகச் சொல்லிக்கொண்டிருக்கிறது, எப்படியானால் பிதாவானவன்பாலனுக்குஅவிஷதத்தைச்சாப்பிடச்செய்வதற்கு லட்டுகம்முத

லானவைகளாலே இச்சையுண்டாக்கி அவிஷதத்தைச் சாப்பிட்ச்செய்து அந்தஅவிஷதபானத்துக்குலட்டுகெம் பலப்பிராப்தியேபலமாகாமல்ஆரோக்கியமும்பலமாகா நிற்கிறதன்றோ அப்படிப்போலவே தாமும் புருஷனைக் குறித்துசொர்க்கபோகமுதலான பலன்களாலே ஆசையையுண்டாக்கிகர்மதியாகத்தின்பொருட்டேகர்மங்களை விதியாநிற்கிறது, இந்திரியசெயமில்லாத மூடபுருஷனானவன்வேதங்களில் சொல்லப்பட்ட கர்மத்தைஆசரியாமற்போனானேயானால் விகிதகர்மத்தை ஆசரியாமற்போனதாகிற அதர்மகர்ம்மத்தினலே மதிக்கிறதும் சனிக்கிறதுமானதுக்கத்தையடைவன் ஆகையினலே யீசுவரார்ப்பிதமாகவேதோக்தமான கர்மங்களைச்செய்துகர்மத்தியாகரூபமானகியான சித்தியடைவன். யாதொருபுருஷனைவன் சோதிஷ்டோம முதலான காமங்களைப் பண்ணும்படி வேதத்தில்சொல்லியிருக்கிற சொர்க்காதிபலமானது கர்ம்மத்தைசெய்கிறதிலேபிரவிர்த்தியின்பொருட்டுஆகாநிற்கிறது, யாதொருபுருஷனைவன் சீவனுடையஅகங்காரபதத்தைப் போக்கடிக்கவேணுமென்று இச்சிக்கிருனே அவன்பாஞ்சராத்திரமுதலான ஆகமசாஸ்திரத்திலும் வேதத்திலுஞ் சொல்லப்பட்டிருக்கிற விதிகளாலே தேவதேவரான ஸ்ரீகேசவனைஆராதிக்கக்கடவன். ஆராதனக்கிரமமாவது ஆசாரியினிடமாக அனுக்கிரகம்பெற்று அவர்காட்டிக் கொடுக்கின்ற பூசாவிதிக்கிரமத்தையுடையவனுய் அர்ச்சாவதார மூர்த்திகளிலேதனக்கு எந்தமூர்த்திஇஷ்டமாகாநிற்கிறதோ அந்த மூர்த்தியினலே பரமபுருஷனை ஆராதிக்கக்கடவன். ஆராதனகாலத்தில் சுசியாகஸ்ரீபகவானுடைய மூர்த்திக்கு எதிராகவிருந்துகொண்டுபிராணுயாமமுதலானதுகளாலேதேகமுதலாகியதுகளைச் சுத்திசெய்துகொண்டுஅங்கனியாசங்களாலேரக்ஷையையுடையவனுய்ஸ்ரீஅரியைஆராதிக்கக்கடவன் பிரதமத்திலேயே புஷ்பமுதலான பூசாதிரவியங்களைக் குற்றமில்லாதுசோதனைசெய்துவைத்துக்கொண்டு பூமியைக்கோமயத்தினலே சுத்திசெய்துமனதை விஷயாதிகளில்செல்லாமல் சரீரத்தைஸ்தானுதிகளால்சுத்திபண்ணிக்கொண்டு ஆசனத்திருந்துபாத்தியமுதலானபாத்திரங்களை யருகில்வைத்துக்கொண்டுஇருதயத்திலேயாவது அர்ச்சாவதார விக்கிரகத்திலாவதுபூசிக்கக்கடவன். இருதயத்திலே பூசிக்கப்படாநின்றஸ்ரீஅரியை விக்கிரகத்திலே ஆவிற்பவித்ததாய் தியானம்பண்ணி இருதயம்-சிரசு-சிகை-கவசம்-நேத்திரம்-அஸ்திரம்-இந்த மந்திரங்களால்,தேகத்திலேசெய்யப்பட்டஅங்கனியாசத்தையுடையவனுய் சாவதானசித்தனுய்மூலமந்திரத்தினலேஸ்ரீபகவானை ஆராதிக்கக்கடவன் இருதயமுதலான அவயவங்களோடும் சுதெரிசனமுதலானபஞ்சாயுதங்களோடும் பரிவார தேவதைகளோடுமிருக்கிற அந்தந்தமூர்த்தியைஅவரவர்களுடையமந்திரங்களாலே அர்க்கியபாத்தியம்-ஆசமனியம்-ஸ்நானம்-முதலானதுகளாலேயும் வஸ்திரம்-கந்தம்-புஷபம்-திலகம்-தூபதீபநைவேத்தி யங்களாலேயும்எதாசாஸ்திரத்துடன்சம்பூர்ணமாகப் பூசித்து ஸ்தோத்திரஞ்செய்து ஸ்ரீஅரியை பிரணமம்பண்ணக்கடவன், தன்னை அந்த ஸ்ரீபகவானுடைய ரூபமாகத்தியானம்பண்ணிக்கொண்டுஸ்ரீஅரியினுடைய மூர்த்தியைப் பூசிக்கக்கடவன்.

இந்தப்பிரகாரம் எதாஸ்திரமாகப்பூசைபண்ணிஸ்ரீபகவானுக்கு அர்ச்சிக்கப்பட்ட துளசிமுதலானதைசிரசில்தரிததுக்கொள்ளக்கடவன், இந்தப்பிரகாரம் பூசிக்கப்படாநின்ற அந்தப்பகவானைத் தன்னுடையஇருதயத்திலேயும் அர்ச்சிக்கிரகத்தை கோவிலாழ்வார்களிலேயும் எளப்பண்ணிஅந்தப்பூசையைமுடிக்கக்கடவன், யாதொருபுருஷனைவன் அக்கினி-சூரியன்-ஜலம்-இதுமுதலானதுகளிலானலும் அதிதியினிடத்திலானலும் இருதயத்திலானலும் பரமாத்துமாவான ஈசுரனை ஆராதிக்கிறஅந்தப்புருஷன் சீக்கிரமாகமுக்தியையடைவன், மேலும்மீபாலனயிருந்ததனலும் வேதத்தில்சொல்லும்கர்மங்களை எந்தஅர்த்தங்களினல் சொன்னலும்உனக்கு அவகாயப்படாதென்றே அந்தச்சனகயோகி முதலானபேர்களால் அப்போதுசொல்லவில்லையென்று நீயறியக்கடவாய்.

---

## ௬- வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

பகருமாதிற மிடயோகிபகவானுல்
நிகரிலாநிமிச் சக்கிரவர்த்தியைப்
பகையிலாமறபார்த் துப்பகவானிட
தகையுருதவ தாரத்தைச்சாற்றுவாம்.

திரமிடயோகியினல் நிமிச்சக்கிர வர்த்தியைப்பார்த்துஸ்ரீபகவானுடைய அவதாரசரித்திரங்கள் சொல்லப்படுகின்றது.

நிமிச்சக்கிரவர்த்திவாக்கியம்.

வாருங்கள்மகாயோகிகளே, ஸ்ரீ பகவானுடைய அர்ச்சாவதாரங்களிலே இஷ்டமானமூர்த்தியை ஆராதிக்கும்படிசொன்னீர்கள்,ஸ்ரீஅரியானவர்சுயவிச்சையினலே பண்ணப்பட்ட எந்தெந்தஅவதாரங்களாலேஇந்தலோகத்தில்எந்தெந்த லீலைகளைப்பண்ணினரோ, பண்ணிக்கொண்டிருக்கிருரோ, பண்ணப்போகிருரோ, அவைக

ளைச் சொல்லும்படி நிமிச்சக்கிரவர்த்தி கேட்கின்றதை திறமிடயோகியானவர் பார்த்துச்சொல்லுகிறார்.

திறமிடயோகிவாக்கியம்.

ஓய் நிமிச்சக்கிரவர்த்தியேகேளும் யாதொரு புருஷனானவன் அனந்தருடைய அனந்தகலியாணகுணங்களை எண்ணிக்கைக்கொள்ளக் கருதுகின்றவன்மகாமந்தபுத்தியையுடையவன், பூமியிலுள்ள தூள்களை மகாபிரயாசைகொண்டுஎண்ணிக்கைகொண்டாலும்கொள்ளுவன் ஸ்ரீபகவானுடைய குணங்களைஎண்ணத் தொலையாதது ஸ்ரீமந்நாராயணர் தாமேபிரிதிவிமுதலிய பஞ்சமகாபூதங்களாகிய பிர்ம்மாண்டமென்கிற பட்டணத்தை நிர்மாணம்பண்ணி அதில்தமதம்சமாகவேபுருஷனென்கிறநாமத்தை யுடையவராயிருக்கிறார் அவருடையசரீரமேமூன்றுலோகமாயும், அவருடைய இந்திரியங்களேசமஷ்டிவியஷ்டிகளாகிய சீவன்களுக்கு ஞானேந்திரியகர்மேந்திரியங்களாகவும் அவருடையதத்துவக்கியானமேசமஸ்தசீவர்களுக்குக் கியானமாகவும்அவருடைய பிராணனேஸமஸ்த சீவர்களுக்கும் தேவசக்தியும் இந்திரியசக்தியும்கிரியாசத்தியுமாகியும் அவருடைய முச்குணங்களேபிரபஞ்சத்தில் சிருஷ்டிஸ்திதி-சங்காரகிருத்தியங்களுடைய ஆதிகர்த்தாவாகவும்நிற்கின்றார், அந்தஸ்ரீபகவானுடையரசோகுணமே சிருஷடியில்பிரம்மாவாகவும், அவருடைய சத்துவகுணமே ஸ்திதியில்விஷ்ணுவாகவும் அவர்துதமோகுணமேசங்காரத்தில் உருத்திரனாகவும் உண்டாயிற்று,

ஆதிபகவானானவரே ஆதிபுருஷர்,யாதொருபகவானானவர் தெக்ஷனுடைய பெண்ணும் மூர்த்தி யென்றுபெயருடையவளாயுமிருக்கிற தர்மபத்தினியினிடத்திலே நரநாராயணர்களாக அவதரித்து சமதமா குணங்களையுடையவராய் நாரதர்திருஷ்டிகளின்பொருட்டுநிவர்த்திசுவரூபமாயிருக்கிற கர்மபோகத்தை உபதேசியாநின்றுதாகமும் ஆசரித்தாரோ, யாதொருபகவான்இப்போதும்கர்மத்தையே அனுஷ்டானம்பண்ணாநின்றுரிஷிசிரேஷ்டர்களாலே சேவிக்கப்படாநின்ற பாதாரவிந்தங்களையுடையவராயிருக்கிறாரோ தேவேந்திரனானவன்தபசினால் தன்ஸ்தானத்தைக்கிரகிக்கவேணுமென்று இச்சிக்கிறானென்ற சங்கையையுடையவனாய்அவருடையதபசை விக்கினஞ்செய்வதற்கு அப்சரஸ்திரீகள் முதலானபரிஜனங்களோடு செல்லும்படி மன்மதனையேவ, அவன் அப்படியே வசந்தரிதுமந்தமாருதம் இதுகளோடு அந்தபதரிகா சிரமத்தையடைந்துபகவானுடையமகிமையையறியாதவனாய் ஸ்திரீகள்கடைக்கண்பார்வையாகியபாணங்களை எய்தான், ஆதிதேவரான அந்தப்பகவானவர் தேவேந்திரனாலேவப்பட்ட மன்மதனென்றறிந்துகுஞ்சிரிப்புகொண்டு அந்தமன்மதன் முதலானவர்களைப்பார்த்துச்சொல்லுகிறார், மெத்த சமர்த்தனனமன்மதனேபயப்படாதே, மந்தமாருதமே பயப்படாதே, அப்சரஸ்திரீகளேபயப்படாதீர்கள், நம்முடைய ஆதித்தியத்தைக்கிரகித்து இந்தஆசிரமத்தைச் சபலமாகப் பண்ணுங்களென்று அபயப் பிரதானம் பண்ணிநின்ற ஸ்ரீமந்நாராயணர் சொல்லுகையில் மன்மதன்முதலான அந்ததேவாள் மெத்தவும் லச்சையையுடையவர்களாய் மனநடுங்கக்கொண்டு வணங்கிச்சொல்லுகிறார்கள் விபுவேஆத்துமநிஷ்டாள் சேவிக்கும்படியான் பாதபதுமங்களையுடைய உமதிடத்திலே யுண்டாயிருக்கிறஇந்தஇந்திரியஜெயமும், இந்தக்கிருபையும் ஆச்சரியமன்றுஉம்மையேசேவித்துஉம்முடையபரமபதத்தையேயடைகின்றபேர்களுக்கு தேவேந்திரன்முதலானவர்கள் பண்ணும் விக்கினங்களனேகமாயிருக்கிறது, உம்மிடத்தில் பக்தியில்லாமலும்எக்கியாதிகளில் அவிர்ப்பாகம்தேவாளுக்குக் கொடுத்துக்கொண்டுமிருக்கிறபுருஷனுக்கு அவர்களால் யாதொரு விக்கினங்களுண்டாகிறதில்லை, உம்மிடபக்தாளுக்கு உண்டானாலும் அந்தவிக்கினங்கள் வாராவண்ணம்திரஸ்கரித்துஉமதுபரமபதத்தையடைகின்றான், உம்மிடத்தில் பக்தியில்லாதபுருஷாள்பசிதாகமுதலான பாதைகள் ஸ்ரீபோகமுதலான போகங்கள் ரூபமாயிருக்கிறஎங்களைச்செயித்தவர்களானாலும்கரையில்லாச்சமுத்திரத்தைத்தாண்டி ஒருகுளப்படியில்முழுகுவதுபோல முழுகுகின்றார்கள், கோபத்தை நிராகரியாமல் அரிதான தபசைவிட்டு விடுகிறார்களென்று சொன்னார்கள்.

அந்தமன்மதன் முதலானவர்களுடைய சௌந்தரியத்தினாலுண்டாயிருக்கிற கர்வம் பங்கமாகும்பொருட்டு பகவான்தம்முடைய யோகமாயையினாலேசர்வாபரணபூஷிதாளாய் நிர்மாணம்பண்ணப்பட்ட ஸ்ரீகளைக்காண்பித்தார், அவர்கள்சாட்சாத் ஸ்ரீமகாலட்சுமிக் கொப்பாய்விளங்கும் அவர்களைப்பார்த்து அவர்களுடைய சுந்தரம்அவுதாரியகுணம் பிரகாசமுள்ளதை நோக்கி மோகத்தையடைந்து சாஷ்டாங்கமாசப் பிரணாமம்பண்ணுகின்றஅந்த மன்மதன்முதலானயேர்களைபக்தவச்சலரானஸ்ரீபகவானானவர் கருணைகூர்ந்துசொல்லுகின்றார்.மன்மதனே இந்த ஸ்திரீகளில் உங்களுக்கு எவள்பேரில் இச்சை யுண்டாயிருக்கிறதோ அனுரூபையான அந்த ஸ்திரீயைவரிக்கக்கடவீர்கள், இந்தஸ்திரீகளும்சவுந்தரியினாளான எங்களுக்குஅனுரூபாளன்று நாங்களும்சவுந்தரியமுள்ளஇந்த ஸ்திரீகளுக்கு யோக்கியாளன்றென்றுசொன்னீர்களேயானால் சொர்க்கத்துக்குப்பூஷணமாயிருக்கிற இவர்களுக்குள்ளே ஒருஸ்திரீயை வரிக்கக்க

டவீர்களென்ருர். அதைக்கேட்ட மன்மதன் அப்படியேஒப்புக்கொண்டு அந்தபகவானைச் சாஷ்டாங்கமாகப்பிரணாமம்பண்ணி அந்தஸ்த்ரீகளில் உத்தமியாகிய உருவசியையழைத்துக்கொண்டு சொர்க்கத்தையடைந்துதேவசபையில் தேவேந்திரனைநமஸ்கரித்து ஸ்ரீமந்நாராயணருடையதபோபலத்தைச்சொன்ஞர்கள அப்போது தேவேந்திரனுமாச்சரியமுற்று மிகவும்பயத்தையடைந்தான், பகவானன ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் செகத்துக்குமங்களமுண்டாகும்பொருட்டு அவருடையகலையினல்அம்சரூபியாகவும்,தேத்தாத்திரேயராகவும், சனகாதியோகிகளாகவும் எங்களுடையபிதாவான ரிஷபயோகியாகவும்அவதரித்து ஆத்துமதத்துவத்தைச்சொன்ஞர், அந்தவிஷ்ணுவினுடைய அயக்கிரீவ அவதாரத்திலேசகலவேதங்களும் கிரகிக்கப்பட்டதுகள, செகத்மங்களத்தின்பொருட்டுஅவதரித்த மச்சியாவதாரத்தில் மனுவுபூமிதேவி-ஓஷதிகள்-இதுகளை-மகாபிரளயத்தில்இரட்சித்தார்,வராகாவதாரத்திலேஜலத்தினின்றுபூமியைஉத்தாரம்பண்ணி இரணியாட்சதனைச்சங்கரித்தார்-கூர்மாவதாரத்தில் க்ஷீரசமுத்திரத்தைக் கடையும்போதுமுழுகிப்போகாநின்ற மந்தரகிரியைத்தம்முடையமுதுகினில்தாங்கியருளினர், தம்மையே சரணமடைந்தகஜேந்திரனைமுதலைவாயினின்றுரட்சித்தார், நரசிம்மாவதாரத்தில் காசிபப்பிரசாபதிகருசமித்துகளைக்கொண்டுவரப்போய் அங்குசமுத்திரத்தில் முழுகிப்போகாநின்றவாலகில்லியர்யென்றரிஷிகளைஉத்தாரணம்பண்ணிஆபத்தினின்றுவிடுவித்தார்,விருத்திராசூரன்வதையினலுண்டானபிர்ம்மஅத்தியில்முழுகினதேவேந்திரனைஅதினின்றுவிடுவித்துரட்சித்தார். இரணிய கசிபுனுடையகிரகத்தில் தகையப்பட்டிருந்த தேவஸ்திரீகளை விடுவித்துரட்சித்தார், புருஷாள் அபயமடைந்ததினலே அசுரசிரேஷ்டனன இரணியகசிபுவைச் சங்கரித்தார், பின்னும்வாமனரூபியாக அவதரித்து பலிச்சக்கிரவர்த்தியினிடத்தினின்று பூமியைக்கிரகித்து தேவர்களுக்களித்தார, பரசுராமராகஅவதரித்து இருபத்தொருதரம் பூமியில்சர்வக்ஷத்திரியாளை நாசம்பண்ணினர், ஸ்ரீராமாவதாரங்கொண்டு சமுத்திரத்தில் சேதுபந்தனஞ்செய்துஇலங்கைக்கரசனன இராவணனைச்சங்கரித்தார், அந்தச்சீதாபதியான ஸ்ரீராமரானவர்இபபோதுசர்வோத்தமராகவிளங்கா நிற்கிருர்.

அந்தஸ்ரீபகவானனவா பூமிபாரத்தைத்தீர்க்கிறதின்பொருட்டுஎதுவம்சத்தில் அவதரித்துதேவர்களாலும்பண்ணக்கூடாத தான் சரித்திரங்களைப்பண்ணப்போகின்ருர். எக்கியத்துக்கு யோக்கியாளாய் எக்கியங்களைப்பண்ணிக்கொண்டிருக்கிறஅசுராளை புத்தராவதாரம்பண்ணி பாஷண்ட வாதங்களாலே மோசிப்பிக்கப்போகின்ருர், உகாந்தத்தில கற்கியாவதாரம்பண்ணிசூத்திரர்களாயும் பூமிபையாளுபவியாநின்றுமிக்கிறஇராஜாக்களைச் சங்காரம்பண்ணப்போகின்ருரென்றுசொல்லிஇப்படிஅளவில்லாத எசசையுடை யஜெகத்பதியாயுமிருக்கிற ஸ்ரீபகவானுடைய அனேகமாயிருக்கிற அவதாரங்களும் லீலைகளும் வர்ணித்துச்சொல்லவுங்கூடியதோமிமிச்சக்கிரவர்த்தியே யென்ருர்.

## ரு-வது-அத்தியாயம்.

### கலிவிருத்தம்.

சம்சயோகியாற் சாற்றும்பாகவதான்
தம்பதியுங்கற்பாசனயோகியால்
அம்சநான்கு யுகத்திலுமரியின்றன்
விம்சையாரா தனைமும்விளம்புவாம்.

சம்சயோகியினலே பாகவதாளுடையகெதியும், கற்பாசனயோகியினலே நான்குயுகத்திலும் ஸ்ரீ பகவானுடையஆராதனக்கிரமமும் சொல்லப்படுகின்றது.

### நிமிச்சக்கிரவர்த்திவாக்கியம்.

வாருங்கள் ஆத்துமநிஷ்டர்களே, யாதொரு புருஷாள்ஸ்ரீஹரியைஉபாசியாமலும்ஒழியாதகர்மத்தையுடையவர்களாய் இாதிரியசெயமில்லாதவர்களாயு மிருக்கிற அந்தப்புருஷாளுக்கு என்னகெதியென்று பிரசினம்பண்ணுகின்ற நிமிச்சக்கிரவர்த்தியைப்பார்த்துசம்சயோகியானவர் சொல்லுகிருர்.

வாராய்ராஜனே புருஷோத்தமரான அந்தப் பகவானுடையமுகத்தில் அவருடைய சத்துவ குணத்தினல்பிராமணரும் அவரதுபாகுக்களில்சத்துவரசோகுணங்களாலேக்ஷத்திரியாளும் அவருடைய துடைகளில்ரசஸ்தமோகுணங்களாலே வைசியாளும். அவரது பாதங்களில்தமோகுணத்தினல் சூத்திராளும்ஆகியநான்குவர்ணங்களுந்தனித்தனியேயுண்டானர்கள். இந்தவர்ணங்களில்நியர்தாவான பகவானை அக்கியானத்தினல்உபாசியாமலிருக்கிற அவர்கள்வர்ணசிரமதர்மங்களினின்றும்பிரஷ்டாளாய் அதோகதியையடைவார்கள்,அச்சுதருடைய கதையைக்கேளாமல் நாமகீர்த்தனங்களைச் செய்யாமலு மிருக்கிற சூத்திராள் யாவரும் வியர்த்தமானசன்மத்தையுடையவர்களர்ஞர்களேயென்று உன்னைப்போலொத்த மகானுபாவர்க

ளுடையகிருபைக்குயோக்கியாகளாகாநிற்கிருர்கள், பிராமணாள்-க்ஷத்திரியாள்-வைசியாள்-இவர்கள் - உபநயனம்-அத்தியயனம்-ஹரிஉபாசனைக்குஉத்தமமானஅதிகாரமடைந்திருந்தாலும் வேதங்களிலேயிராநின்ற அர்த்தவாதாரங்களில்புத்தியையுடையவர்களாய்கர்மபலன்களிலே மோகத்தையடைகின்ருர்கள் அந்தக்கர்மவிஷயத்திலுமபக்தஏதுவாகாமலிருக்கிறகர்மத்தைப்பண்ணத்தெரியாமல்மூர்க்கர்களாய் தாம்யென்கிற அகங்காரத்தைக்கொண்டு அந்தவேதவாக்கியத்தினுலேயே அப்சரஸ்திரீகளோடும்கிரீடித்துக்கொண்டிருக்கப்போருமென்றும் அச்சுதருடையபக்தாளைப் பீடித்தும் ஸ்திரீசம்போகசௌக்கியத்தையேசிரேஷ்டமாகவும் சகலமும்தம்மாலே அதிதிபூஜையில்லாமலிருக்கிற கிரகங்களில்சாதிக்கப்படுகிறதென்றும உண்டாகிறதென்றும்உண்டாயிருக்கிறதென்றும்வரப்போகிறதென்றும்இவ்விதமாக ஒருவருக்கொருவர் மனோரதங்களைச்சொல்லியும் இது முதலான அக்கியானத் தன்மையுள்ள வார்த்தைகளைச் சொல்லாநிற்கிருர்கள் அவர்கள் அன்னதானம்முதலான சாஸ்திரோக்தமானவிதிகளைவிட்டுடம்பமாக எக்கியங்களையும்யிம்ஸையில்வரும்பாபத்தையறியாமல்பசுக்களைவதைசெய்வதுமாயிருக்கிருர்கள் அவர்கள்தனமுதலான சம்பத்து-பிரபுத்துவம்-குலம்-கல்வி-தியாகம்-ரூபம்-பலம்-கர்மம்-இவைகளால்உண்டாகின்ற கர்வத்தினுலேஈஸ்வரனோடுகூடிக்கொண்டும்சாதுக்களாயுமிருக்கிற பாகவதாளை அவமானம்பண்ணுகிருர்கள்.

லோகத்திலேஸ்திரீசம்போகம்-மதுமாம்சம் இவைகளையனுபவிக்கிறதுபிராணிகளுக்குள்ஆசையினுலேநித்யமாகவுண்டாயிருக்கிறது அனுபவிக்கும்படிவிதியில்லை விவாகமானஸ்திரீயுடனேசம்போகமும்எக்கியத்தில்மாம்சத்தையும்சௌத்திராமணியாகத்தில்மதுவும்கிரகிக்கத்தக்கதென்றும்நியமனம்பண்ணப்படுகின்றது இவைகளைநிவர்த்திப்பதேவேதத்துக்கு இஷ்டமாகாநிற்கிறதுதர்மத்தினுலேகியானமும்பரமாத்தும சாக்ஷாத்காரமும் உண்டாகின்ற அப்படிப்பட்டதர்மத்தைமுக்கியபலமாகவுடையதானஒருவராலேயும்பரிகரிக்கக்கூடாதபராக்கிரமத்தையுடையவனுயுமிருக்கிறமிருத்தியுவைஎண்ணிப்பாராமலிருக்கிருர்கள் சௌத்திராமணீயாகத்திலேமத்தியத்துக்குஆக்கிராணமேவிதிக்கப்பட்டிருக்கிறதுபானமானதுவிதிக்கப்படவில்லை அப்படிதானேயாகத்திலே தேவதைகளையுத்தேசித்து பசுவுக்கு ஆலம்பனமான துவிதிக்கப்பட்டிருக்கிறதுபக்ஷணநிமித்தியமாகப்பண்ணப்பட்ட அந்தப்பசுவதையானது வேதத்திலேவிதிக்கப்படவில்லை ஸ்ரீசம்போகமும்பிரசாநிமித்தியமாகவேவிதிக்கப்பட்டிருக்கின்றதுதனக்குஆசையின் பொருட்டுவிதிக்கப்படவில்லைஆகையினுலே அந்தஅக்யாணிகள்பரிசுத்தமானஇந்தசுதர்மத்தைஅறியாதவர்களாய் துஷ்டாளாயும்தாங்களேதெரிந்தவர்களென்கிறஅகங்காரத்தையுடையவர்களாயும்பசுக்களைக்கொல்லப்பட்ட அந்தஅக்கியானிகள்ஸ்ரீஹரியைத்துவேஷித்தவர்களாய் புத்திராதிகளுடனே அதோகதியைஅடைகிருர்களென்றுசொல்லாநின்றசசம்யோகியைப்பார்த்து நிமிச்சக்கரவர்த்தியானவர் சொல்லுகின்ருர்.

நிமிச்சக்கரவர்த்திவாக்கியம்.

வாரீர்மகாயோகியேஎந்தெந்தக்காலத்திலே அந்தப்பகவானனவர் எப்படிப்பட்டவர்னத்தையுடைய வராயும் எப்படிப்பட்டமூர்த்தியையுடையவராயும்மனுஷியாளால்எந்தநாமங்களினுல் பூஜிக்கப்படுகின்ருரோ அதுகளை எனக்குச்சொல்லக்கடவீரென்றுபிரசினம்பண்ணுகின்ற ராஜாவைபபார்த்துக்கற்பாசனயோகியானவர்சொல்லுகின்ருர்.

கற்பாசனயோகிவாக்கியம்.

**வாராய் மகாராஜனே**-கிரேதாயுகம்-திரேதாயுகம்-துவாபரயுகம்-கலியுகம்-இந்தநான்குயுகங்களிலேயும்நானுவிதங்களானவர்கள்-நாமங்கள்- ஆகாரங்கள் இதுகளையுடையவரான ஸ்ரீஹரிகேசவரானவர் நானுவிதங்களான மார்க்கங்களினுலேபூஜிக்கப்படுகிருர்கிரேதாயுகத்திலே பகவானனவர் சுக்கிலரூபியாயும்நான்குகைகளையுடையவராயும்.சடையையுடையராயும்,மரவுரியை வஸ்திரமாகவுடையவராயும் கிருஷ்ணாசனம்- எக்கியோப வீதம். ஜெபமாலை-தண்டம்கமண்டலம் - இதுகளைத் தரித்துக்கொண்டு பிர்ம்மசாரியாயிருக்கிருர் அப்போதுமனுஷியாள்சமதமாதிகுணங்களையுடையவர்களாயும்மனோநிக்கிரகம்இந்திரிய நிக்கிரகம்-இதுகளோடு தியானததினுலேதேவதேவரான ஸ்ரீஹரியைஅம்சரென்றும் சுபர்ணரென்றும், வைகுண்டரென்றும், தர்மரென்றும். யோகீஸ்வரரென்றும்,அமலரென்றும்ஈஸ்வரரென்றும்புருஷரென்றும், அவ்வியகர்த்தரென்றும் பரமாத்துமாவென்றும், இந்தநாமங்களினுல்பகவானைஸ் தோத்திரம் பண்ணுகின்ருர்கள்.

திரேதாயுகத்திலே பகவானனவர் இரக்தவர்னராயும்நான்குகைகளையுடையவராயும்மூன்றுபுரியையுடைய அரைநூல்மாலையையுடையவராயும்பொன்வர்ணமான கேஜங்களையுடையவராயும், வேதமூர்த்தியாயும்சுருக்குசுருவமுதலானஎக்கியபாத்திரங்களை அவயவமாகவுடையவராயும்எக்கியமூர்த்தியாகவிருக்கிருர்அப்போது தர்மிஷ்டாளாயும் வேதவாதிகளாயுமிருக்கிற மனுஷியாள்சர்வதேவஸ்வரூபரானஸ்ரீஹரியைமூன்றுவேதங்களாலேயும் சொல்லப்பட்டகர்மங்களாலே ஆராதித்துவிஷ்

ணுவென்றும்-எக்கியனென்றும்- பிரசினிகற்பனென்றும்-சர்வதேவனென்றும்-உறுக்கிரமனென்றும்விறஷாகபியென்றும் செயந்தனென்றும்-உருகாயனென்றும் இந்தநாமங்களாலேஸ்தோத்திரம்பண்ணுகிறார்கள்.

துவாபரயுக்த்திலே பகவானானவர்காயாம் பூவர்ணத்தையுடையவராயும்பீதாம்பரதாரியாயும் சக்கிரமுதலான ஆயுதங்களையுடையவராயும் ஸ்ரீவச்சமுதலாயும்பாதம்அஸ்தம்இதுகளிலேயிராநின்றபத்மரேகை முதலான சின்னங்களோடேயும் கௌஸ்துவ முதலானசின்னங்களோடும்விளங்குகின்றார் அப்போதுமனுஷியாள்பரமாத்துமாவைஅறியவேணுமென்கிற இச்சையையுடையவர்களாய்மகாராஜனுடைய சின்னங்களானசத்திர சாமர முதலானதுகளோடு கூடிக்கொண்டும் பரமபுருஷராயுமிருக்கிறபகவானைவை தீகமார்க்கத்தினாலேயும் பாஞ்சராத்திரமுதலான ஆகமமார்க்கத்தினாலேயும் ஆராதிக்கிறார்கள் தேவரென்றும்-சங்கருஷணரென்றும்- பிரத்தியும்னனென்றும்அனிருத்தனென்றும்பகவானென்றும்நாராயணனென்றும்-ரிஷியென்றும்-புருஷனென்றும்-மகாத்மாவென்றும்-விசுவேசுவரனென்றும்-விசுவனென்றும் -சர்வபூதாத்மாவென்றும்-இந்தநாமங்களினால்ஸ்ரீஹரியை ஸ்தோத்திரம்பண்ணுகிறார்கள்.

கலியுகத்திலேஇந்திரநீலமணியையொத்தகாந்தியையுடையவராயும் இருதயமுதலான அங்கங்கள்-கௌஸ்துவமுதலான சின்னங்கள்-சுதரிசனமுதலான ஆயுதங்கள்சுனந்தானந்தர்முதலானபாரிஷிதாள் இதுகளோடுகூடியஸ்ரீ கிருஷ்ணாவதாரரானபகவானைநாமகீர்த்தனம்ஸ்தோத்திரம்இதுகளாலேமுக்கியமாக ஆராதிக்கின்றார்கள்வாராய்ராஜனேபகவானாயிருக்கிறஸ்ரீஅரியானவர்இந்தப்பிரகாரம்யுகங்களுக்குஅனுரூபமாயிக்கிறநாமரூபங்களாலேஅந்தந்தயுகதர்மத்தை அனுவர்த்தித்துமனுஷியாளால்ஆராதிக்கப்படுகிறார்கலியினுடைய குணத்தை அறிந்தபெரியவர்கள்கலியுகத்தையே சிலாகிக் கிறார்கள் யாதொருகலியுகத்திலேசம்சாரத்தில்சுழன்றுகொண்டிராநின்றமனுஷியாளுக்கு ஸ்ரீஹரியினுடையநாமகீர்த்தனத்தைப்பார்க்கிலும்பரமமானலாபம் வேறொன்றுமில்லைஅப்படிப்பட்ட பரமபுருஷார்த்தம உண்டாகிறபடியினாலேகலியுகத்தைசிலாகிக்கிறார்கள்கிருதயுக முதலான யுகங்களிலேயிராநின்ற பிரஜைகளும. கலியுகத்தில்ஜென்மத்தையிச்சிக்கின்றார்கள் இந்தக்கலியுகத்திலே ஸ்ரீமந்நாராயணருடையபக்தாள்ஒவ்வோரிடங்களிலே யிருப்பார்கள்சகல விடங்களிலுமிருக்கமாட்டார்களதிராவிடதேசத்திலேபகவத்பக்தாள்விசேஷமாயிருப்பார்கள்.

நாரதர்வாக்கியம்.

வாரீர்வசுதேவரேஅந்தமிதுலேஸ்வரனானநிமிச்சக்கிரவர்த்தியானவன்இந்தப்பிரகாரம் பாகவததர்மங்களைகேட்டுமிகவும்பிரீதியுடையவனாய் புரோகிதரோடிருந்துகொண்டுபாகவதாளான அந்தரிஷிகளை நன்றாகப்பூஜித்தான்பிற்பாடுஅந்தரிஷிகளசமஸ்தமான ஜெனங்களும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அவடத்திலே அந்தர்த்தானமானார்கள்அந்தநிமிச்சக்கிரவர்த்தியும் அந்தபாகவததர்மங்களை அனுஷ்டானம்பண்ணிக்கொண்டு பரமகதியைஅடைந்தான்நீயும்இந்தப்பாகவததாமங்களை அனுஷ்டானம்பண்ணிககொண்டு பலத்திலேயிச்சையில்லாதவனாயும்ஸ்ரீஹரியினிடத்திலேயே பக்தியையுடையவனாயுமிருந்துக்கொண்டுபரமகதியையடையப்போகிறாய் ஸ்திரீபுருஷாளானஉங்களிருவருடைய எசசினாலேஜெகத்தானது பூரிக்கப்பட்டிருக்கின்றதல்லவா அந்தக்காரணத்தினால்சர்வ நியந்தாவாயும்பகவானாயுமிருக்கிற ஸ்ரீ ஹரியானவர்உங்களுக்குப்புத்திரனாகபோகிறார் அப்போதுஸ்ரீஹரியினிடத்தில் புத்திரஸ்நேகத்தைப் பண்ணுகின்றஉங்களுடைய ஆத்மாவானது அந்தஸ்ரீகிருஷ்ணருடையதெரிசனம்-ஆலிங்கனம்-சம்பாஷணம்-சயனம்-ஆசனம்-போஜனம்- இதுகளாலேபாவனமாகப்பண்ணப்பட்டது அப்பேர்க்கொத்த ஸ்ரீகிருஷ்ணரைஉன்னுடையபுத்திரனாகநினைக்கவேண்டாம்பூமிக்குப்பாரமாயும்அசுராளாயுமிருக்கிற ராஜாக்களைச் சங்சரிக்கிறதின் பொருட்டும்சத்புருஷாளைரக்ஷிக்கிரதின்பொருட்டும்அவதரியாநின்றஸ்ரீகிருஷ்ணருடையஎசசானதுலோகத்திலே பிரசித்தமாயிருக்கின்ற தென்று ஸ்ரீ நாரதர் சொன்னார்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிட்சித்துமகாராஜனேமகானுபாவனானவசுதேவரும்மகானுபாவையானதேவகிதேவியும் இந்தபகவத்சரித்திரத்தைக்கேட்டுமிகவும் ஆச்சரியத்தையுடையவர்களாய்தங்கியானத்தைவிட்டுவிட்டார்கள்யாதொரு புருஷனானவன்நிச்சயமான சித்தத்தை யுடையவனாய்புண்ணியமான இந்தஇதிகாசத்தைக்கேட்டுநன்றாகஅறிகிறானோஅந்தப்புருஷனானவன் இந்தத்தேகத்திலேயேசகலபாபங்களையும் அக்கியானத்தையும் விட்டுமோக்ஷத்தையடைவன்.

---

௫-வது - அத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

தெரியும்பிர்மருத் ராள்முதலாந்தேவாள்
அரியதுவாரகை நண்ணியரிதனைப்
பிரியமாய்த்தோத் தரித்துப்பிரார்த்தனைத்
துரியமாமனத் தாற்றுதித்தாரரோ.

பிர்மருத்திராள்முதலான தேவர்கள் துவாரகைக்குவந்து ஸ்ரீகிருஷ்ணனைப்பிரார்த்தித்துஸ்தோத்திரம்பண்ணுகிறார்களென்றுசொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரிக்ஷித்து மகாராஜனே பிற்பாடு ஜனகாதியோகீஸ்வராள் சசுஷகன்முதலானபிராஜாபதிகள் இவர்களாலேசூழப்பட்டபிரமதேவனும்பூதபவ்வியங்களுக்கு ஈசனானசிவனும்ஸ்ரீகிருஷ்ணனை தெரிசனம்பண்ணவேணுமென்கிறஇச்சையினால்துவாரகையைக் குறித்துவந்தார்கள்தேவகணங்களோடேகூடபகவானானஇந்திரனும்-துவாதசாதித்தாள்-அஷ்டவசுக்கள்-அசுவனி - தேவதைகள-சமஸ்தமானபேர்களும்-ஸ்ரீகிருஷ்ணனைத்தெரிசனம்பண்ணவேணுமென்கிறஇச்சையினால்துவாரகைக்குவந்துதுவாரகையில்அற்புதமுள்ளதெரிசனத்தையுடையவரான ஸ்ரீகிருஷ்ணனைப்பார்த்துத் தெரிசனம்பண்ணிபிர்ம்மாமுதலான அந்தத்தேவர்கள் சுவர்க்கத்தினுடையஉத்தியானவனங்களிலே உண்டாகாநின்றபுஷ்பங்களாலேஎதுசிரேஷ்டனானஸ்ரீகிருஷ்ணனைஅர்ச்சித்துவிசித்திரமுள்ள அர்த்தங்களை யுடையதுகளான ஸ்தோத்திரங்களால்ஸ்தோத்திரம்பண்ணுகின்றார்கள்.

பிர்ம்மாமுதலானதேவதைகளுடையஸ்துதி.

வாரீர்நாதனே தேவரீருடையபாதாரவிந்தத்தை-புத்தி-இந்திரியங்கள்-பிராணன்-மனது-வாக்கு - இதுகளாலேசாஷ்டாங்கமாகப்பிரணமம் பண்ணுகிறோம்சர்வேந்திரியமயமானபாசத்திலேநின்றும் விடுபடவேணுமென்கிறஇச்சையையுடையவர்களாயும்உம்மிடத்தில்ஸ்திரமானபக்தியையுடையவர்களாயுமிருக்கிற யோகிகளாலேஇருதயத்துக்குள்ளேயாதொருபாதாரவிந்தமானது தியானம் பண்ணப்படுகிறதோ அந்தப் பாதாரவிந்தத்தைநாங்கள்சாஷ்டாங்கமாகப்பிரணமம் பண்ணுகிறோம் வாரீர் அச்சுதரே தேவரீர்சத்துவ ரசதமோகுணங்களையுடையதானஉம்முடையமாய்கையினாலே அந்தமாய்கையினுடையகுணங்களில்நியந்தாவாயிராநின்றுஉம்மிடத்திலேயே ஒருத்தராலேயும் மனதினாலேயும் வாக்கினாலேயும் எண்ணக்கூடாதான மகதஹங்காரதத்து முதலான இந்தப்பிரபஞ்சத்தைச்சிருஷ்டித்தும்ரட்சித்தும்சங்கரித்துமிருக்கிறீர் ஆனாலும்தேவரீர் சிருஷ்டிஸ்திதி-சங்காரரூபங்களாகஇந்தகர்மங்களாலேசம்பந்திக்கப்படாமலே யிருக்கிறீர். அப்படிப்பட்டதேவரீருடையபாதாரவிந்தமானது எங்களுடையவிஷய வாசனைகளைத்தகித்துப்போடக்கடவது. வாரீர்ஈசனே, தேவரீருடைய யாதொருபாதாரவிந்தமானது எக்கியம்பண்ணுகிறபேர்களாலே பரிசுத்தமான கைகளால்அவிசை எடுத்துக்கொண்டேஎக்கியத்தில் ஆகவனிய முதலான அக்கினியில் வேதத்தினால் சொல்லப்பட்டிருக்கிற இந்திரன்முதலானதேவதாரூபமாகத்தியானம்பண்ணப் படுகிறதோபரமாத்மாவான தேவரீருடையமாய்கையை அறியவேணுமென்கிற இச்சையை யுடையவர்களான யோகீஸ்வராலேயோகாப்பியாசத்தில்யாதொருபாதாரவிந்தமானது தியானம் பண்ணப்படுகிறதோ அந்தத்திருவடியும்எங்களுடையவிஷயவாசனைகளைநாசம்பண்ணக்கடவது.

வாரீர் அமோகமான வீரியத்தையுடையவரே, விராட்புருஷனானவன்உம்மிடத்தில் நின்றும்சக்தியையடைந்துயாதொரு மாய்கையோடேகூட இந்தப் பிரபஞ்சத்தினுடைய கெற்பத்தைப்போல மகதத்துவத்தைத் தரித்துக்கொண்டிருக்கிறான், உம்மைஅந்தரியாமியாகவுடையவனானஅந்தவிராட்புருஷனானவன் அந்தமாய்கையோடேகூடினவனாய் தனக்குவெளியிலேஅகங்காரமுதலான ஆவர்னங்களோடே கூடிக்கொண்டுஇரணியகற்பனுடையசரீரமாயுமிருக்கிற பிர்மாண்டத்தைச்சிருஷ்டித்தான் அப்படிப்பட்டதேவரீர்விஷயங்களாலே சம்பந்திக்கப்படாதவராகவே யிருக்கிறீர்அன்றியும்தமதுஅமிர்தசொரூபமான கதையாகியஜலத்தைப்பெருக்காநின்றநதிகளும் தமதுதிருவடிகளில் நின்றும் உண்டாகாநின்றகங்கை முதலானநதிகளும்மூன்றுலோகங்களுடையபாபங்களைப் போக்கடிக்கிறதற்குச்சமர்த்தங்களாகவிருக்கிறதுகளென்று இந்தப்பிரகாரம் பிர்ம்மாமுதலானசமஸ்தமானதேவர்களாலேஸ்தோத்திரம்பண்ணப்பட்டவராய் ஸ்ரீஹரியானவர் அவர்களைப்பார்த்து சந்தோஷப்பட்டுஒருவார்த்தைசொல்லுகிறார்

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாருங்கள் தேவர்களே, என்னைக்குறித்துயாதொரு அர்த்தத்தைச் சொன்னீர்களேஇந்த அர்த்தமானதுஎன்னாலேஅறியப்பட்டேயிருக்கின்றது,சமஸ்தமானதேவகாரியமும் நிறைவேற்றப்பட்டுபூமியினுடையபாரமுந்தீர்க்கப்பட்டது, வீரியம்-சவுரியம்-சம்பத்துஇதுகளாலேமிகவும் கர்வித்திருக்கிற இந்தயாதவகுலத்தைச் சங்கரியாமல் ஸ்ரீவைகுந்தத்தையடைவேனே யாகில்மரியாதையைஅக்கிரமித்துநடவாநின்ற இந்தயாதவகுலத்தினாலே லோகமானதுநாசத்தையடைந்துபோம்ஆகையினால் இப்போதிந்தயாதவ குலத்திற்குப் பிராமணசாபத்தினால் நாசமானதுசங்கற்பித்தது. வாராய்பிர்ம்மாவே,இந்தயாதவகுலமானது நாசத்தையடைந்துபோனபிற்பாடுபரமபதத்தையடைந்து உன்னுடைய லோகத்திற்குவருகிறேனென்று ஸ்ரீபகவான்சொன்னமாத்திரத்தில் பிர்மாவானவர் சமஸ்ததேவகணங்களோடே கூடதேவோத்தமரான அந்தஸ்ரீபகவானைச்சாஷ்டாங்கமாகப்பிரணமம்பண்ணி தம்முடையலோகத்தை யடைந்தார். பின்பு பகவானானவர் அந்தத் துவாரகாபட்டணத்

திலேயுண்டாகாநின்ற மகோற்பாதங்களைப் பார்த்துயா தவர்களையழைப்பித்து அவர்களுடன் ஒருவார்த்தைசொல்லுகின்றார்.

வாருங்கள்யாதவர்களே,இவடத்தில் ஆகாயம்-பூமிதிக்குகள்-இதுகளில்நின்றும்- பிரஜைகளுக்குநாச ஏதுக்களான வெகுவுற்பாதங் களுண்டாகின்றதுகள், ஆகையினால் பிழைத்திருக்கவேணுமென்கிற இச்சையையுடையவர்களான நாம்இவடத்திலேவாசம்பண்ணத்தக்கதன்று இப்போதுதானே தாமசம்பண்ணுமல்மகா புண்ணியமான பிரபாசக்ஷேத்திரத்தை யடைகுவோம்தெக்ஷப் பிரஜாபதியினுடைய சாபத்தினால் க்ஷயரோகத்தினால் கிரகிக்கப்பட்டசந்திரனானவன் யாதொருபிரபாசதீர்த்தத்தில் ஸ்நானமபண்ணி அந்தக்ஷணத்தில் அந்தரோகத்தில் நின்றும் முக்தனாய்திரும்பவும் கலைகளுடைய விர்த்தியையடைந்தானோ அந்தப்பிரபாகதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணிதேவரிஷிபிதுர்களுக்குத்தர்ப்பணத்தைச்செய்து மகாயோக்கியர்களா யிருக்கிறபிராமணாளுக்கு இஷ்டரசங்களோடு கூடியஅன்னங்களால் போஜனம்பண்ணுவித்துமிகவும் யோக்கியர்களானஅந்தப்பிராமணாளிடத்திலே மகாதானங்களைப் பண்ணிஅந்ததானங்களால் ஓடத்தாலே சமுத்திரத்தைத்தாண்டுவதைப்போலசகலதுக்கங்களையுந் தாண்டுவோமென்று இந்தப்பிரகாரம் ஸ்ரீபகவானானவர் சொன்னமாத்திரத்தில்அந்தயாதவர்களந்தப்பிரபாசதீர்த்தத்தைக்குறித்துப்போகவேணுமென்று நிச்சயம்பண்ணி னவர்களாயரதங்களை அலங்கரித்தார்கள்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் ராஜனேநித்தியமாக ஸ்ரீகிருஷ்ணனை உபாசியாநின்றும்ஏகாந்தபக்தராயுமிருக்கிறஸ்ரீஉத்தவரானவர் அந்தயாதவர்களுடைய எத்தனத்தையும் பார்த்து, ஸ்ரீ பகவானாலே சொல்லப்பட்ட அந்தவார்த்தையையுங் கேட்டுகோரங்களான அந்தஉற்பாதங்களையும்பார்த்து ஏகாந்தத்தில் ஜெகதீஸ்வராளுக்கும் ஈஸ்வரரான ஸ்ரீபகவானையடைந்துசிரசினாலேஅவருடையதிருவடிகளைஸ்பரிசித்துசாஷ்டாங்கமாகப்பிரணமம் பண்ணிகையைக்கூப்பிக்கொண்டுஅந்தஸ்ரீபகவானைப்பார்த்து ஒருவார்த்தைசொல்லுகின்றார்.

ஸ்ரீஉத்தவருடையவாக்கியம்.

வாரீர்தேவதேவோத்தமரேசகலலோகேசுவரரே புண்ணியசிரவணகீர்த்தனரே தேவரீர்யாதொரு காரணத்தினால்பிராமணசாபத்தைத்தள்ளிவிடுகிறதற்குச்சமர்த்தரானாலும்தள்ளாமல்அங்கீகரித்தீரோ ஆகையினால்இந்தயாதவகுலத்தைச்சங்காரம்பண்ணிக்கொண்டுமனுஷியலோகத்தையும்விட்டுவிடப்போதீர்கான்தேவரீருடையபாதாரவிந்தத்தை அரைக்ஷணமானாலும்விட்டுச்சகிக்கமாட்டேன்வாரீர்நாதனேஎன்னையும உம்முடையலோகமானஸ்ரீவைகுந்தத்தையடைவிப்பிக்கக் கடவீர்ஜெனனமானதுமனுஷியாளுக்குப்பரம மங்களமாயும்காமியர்சமாயுமிருக்கிறதேவரீருடையசரித்திரத்தைக்கேட்டு மற்றொருவஸ்துக்களில் ஆசையைவிட்டு விடுகிறதுசயனம்-ஆசனம்-சம்சாரம்-ஸ்நானம்-லீலைகள்-துக்ஷணம் இதுமுதலானதுகளில் தேவரீரைநித்தியமாகச்சேவித்துக்கொண்டிராநின்றும்பக்தாளாயுமிருக்கிற நாங்கள்பிரியசுகுர்தராயும்அநதராத்மாவாயுமிருக்கிறஉம்மைஎப்படிவிட்டுவிடுவோம் உம்மாலேகொடுக்கப்பட்ட புஷ்பமாலைகள்-சந்தனங்கள்-வஸ்திரங்கள்-அலங்காரங்கள்-இதுகளாலே அலங்கரிக்கப்பட்டவர்களாயும்உம்முடைய நிவேதனசேஷத்தைப்புசியாநின்றும்தாசர்களாயுமிருக்கிறநாங்கள்உமதுமாய்கையை ஜெயிப்போம் பிராணநிரோகத்தையுடை யவர்களாயும் யோகாப்பியாச்சிரமத்தையுடையவர்களாயும் ஊற்தரேதசுக்காளாயும்சாந்தர்களாயும்சன்னியாசியர்களாயு மிருக்கிறரிஷிகள் பிர்ம்மமென்றுபெயரையுடையதாளஉம்முடையஸ்தானத்தை யடைகின்றார்கள்இந்தலோகத்தில்கர்மமார்க்கங்களிற்சுழன்றுகொண்டிராநின்ற நாங்களோவென்றால் உம்முடையபக்தாளோடுகூடஉமதுகதைகளாலேதாண்டக்கூடாதசம்சாரத்தைத்தாண்டப்போகிறோமே இந்தப்பிரகாரம்விக்கியாபனம்பண்ணுகின்றஏகாந்தபக்தரானவுத்தவரைப்பார்த்துபகவானாகிய ஸ்ரீகிருஷ்ணரானவர் ஒருவார்த்தைசொல்லுகிறார்.

---

## எ - வது - அத்தியாயம்,

மட்டுவிருத்தம்.

டவத்தைநீக்கும் பகவானுலுத்தவற்
கவதூதசரிதை யையறைந்தாரரோ.

ஸ்ரீபகவானாலே உத்தவருக்குஅவ தூதசரிதையானதுசொல்லப்படுகின்றது.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்,

வாரீர்உத்தவரானமகானுபாவரே நீரென்னை இந்தயாதவகுலத்தைச்சங்காரஞ்செய்துகொண்டு ஸ்ரீவைகுந்தத்தையடையப்போகிறீரென்றுசொன்னஅர்த்தமானது என்னால்சங்கல்பிக்கப்பட்டதுதான் பிர்மாவும்- ருத்திரனும்-லோகபாலர்களும்-என்னைஸ்ரீவைகுந்தத்தையடையும்படிபிரார்த்திக்கிறார்கள்நான் அம்சத்தினால் ஒருகாரியநிமித்தமாகஇந்தப்பூமியிலவதரித்துஅந்தத்தேவகாரியங்கள்சமஸ்தமும்நிறைவேறப்பட்டதுகள் இந்தயாதவகுலமானதுபிராமணசாபத்தினால் தகிக்கப்பட்டதாய் ஒருவர்க்கொருவர்கலகத்தினாலநாசத்தை யடைந்துபோகிறதுசமுத்திரமானதுஇன்றைக்கேழாந்தினத்தில் இக்தத்துவாரகாபட்டணத்தைமுழுகடிக்கப்போகிறது.

வாரீர்சாதுவேஇந்தலோகமானதுஎன்ஞலென்றைக்குவிடப்படுகிறதோ அன்றைக்கேகஷ்ட மங்களமாயும்கலியுகத்திஞல்ஆக்கிரமிக்கப்பட்டதாயும ஆகப்போகிறது அப்படியென்ஞல்விடபபட்ட இந்தப்பூமியில் நீரும்வாசம்பண்ணத்தக்கதன்றுவாரீர்உத்தவரோ ஜெனமானதுகலியுகத்தில் அதர்மத்திலேயேருசியை யுடையதாக ஆகப்போகிறது நீரோவென்ருல்சுவஜெனங்களிலிராநின்றசமஸ்தசிலேகத்தையும்விட்டுவிட்டு மனதையென்னிடத்தில்ஸ்திரமாகவைத்துசமபத்தியாய் பூமியில்சஞ்சரித்துக்கொண்டிருக்கக்கடவீர் மனதிஞலும்வாக்கிஞலும்கணகளாலும்சிரவணமுதலான இந்திரியங்களாலும்கிரகிக்கப்படாநின்றஇநதப்பிரபஞ்சமானதுமனதினுடையவிகாரமானபடியிஞலேமாய்கையென்றும் அனித்தியமென்றும்அறியக்கடவீர் விஷயங்களிலேஆசக்தமானமனதையுடையபுருஷனுக்குபிரபஞ்சத்தின்புத்தியானது அக்கியானமாகவிருக்கின்றது அந்தஅக்கியானமானதுசுகதுக்கரூபமான குணதோஷங்களோடுகூடிக்கொண்டிருக்கும்இநதிரியங்களா லுண்டாக்கப்பட்டசுகதுக்கரூபமுள்ளகுணதோஷபுத்தியை யுடையவனுயும் அக்கினியாயுமிருக்கிற புருஷனுக்கே விகிதகர்மமென்றும் நிஷித்தகர்மமென்றும்விகிதகர்மத்தியாக மென்னப்பட்டஅகர்ம்மமென்றும்சொல்லப்பட்டிருக்கிறது ஆகையிஞல்ஜெயிக்கப்பட்ட இந்திரியசமுகங்களையுடையவனுயும்மனேநிக்கிரகத்தையுடையவனுயும்விஸ்தாரமான இந்தஜெகத்தைஆத்மாவிலேயும் அந்தஆத்மாவைபரப்பிர்மரூபமானஎன்னிடத்திலேயும்பார்க்கக்கடவீர்சத்கர்மமென்றும்நிஷித்தகர்மமென்றும்இந்தபேதபுத்தியில்லாதவனுனகியானியானவன்தோஷபுத்தியிஞலேநிஷித்தகர்மத்தில்நின்றும்நிவர்த்திக்கிறதில்லேகுணபுத்தியிஞல்விகிதகர்மத்தைப்பண்ணுகிறதுமில்லேஎப்படியாஞல்பாலனுனவன் சங்கல்பவிகற்பரகிதனுய் சிலகர்மங்களைபபண்ணினவனுயுமசிலகர்மங்களைப்பண்ணுதவனுயும் நிவர்த்தித்துமிருக்கிருனே அதுபோலவே கியானியானவன் குணதோஷ புத்தியில்லாதவனுய் கர்மங்களைச்செய்துகொண்டும் கர்மங்களில்நின்றும் நிவர்த்தித்தவனுயுமிருப்பன் சர்வபிராணிகளுக்கும் சுகுர்தனுயும் சமஸ்தமானகுணங்களையுடையவனுயும், வேதாந்தககியானம்ஆத்மானுபவம்இதுகளையுடையவனுயுமிருக்கிறகியானியானவன் பிரபஞ்சத்தைஎன்னுடையஸ்வரூபமாகப்பாா்த்து மறுபடியும்சம்சார துக்கத்தையடையமாட்டானென்று இந்தப்பிரகாரம் பகவானுலே சொன்னதை மகாபாகவதரான உத்தவரானவர்கேட்டு தத்துவத்தை யறியவேணுமென்று இச்சையையுடையவராய் அச்சுதரைச்சாஷ்டாங்கமாகப்பிரணுமம்பண்ணி ஒருவார்த்தைசொல்லுகின்ருர்.

ஸ்ரீஉத்தவர்வாக்கியம்.

வாரீரயோகபலப்பிரதரோ யோகமாகிறரகசியமானகிதியையுடையவரேசன்னியாசரூபமானசர்வசங்கபரித்தியாகமானது எனக்குமோக்ஷத்தின் பொருட்டு சொல்லப்பட்டது. வாரீர்பரிபூர்ணரோ விஷயங்களில்ஆசக்தமானமனதையுடைய போகளாலேஇந்தசமஸ்தகர்மங்களுடைய தியாகமானதுபண்ணப்படமாட்டாது உம்மிடத்தில்பக்தியில்லாதபேர்களால் இந்தசமஸதகர்மத்தியாகமானது பண்ணப்படமாட்டாதென்றெண்ணுகிறேன்நான்என்னுதென்றும் நானென்றும்இப்படிப்பட்டமூடபுத்தியையுடையவனுய் புத்திரமித்திராதிகளோடுகூடிக்கொண்டும்உம்முடையமாய்கையிஞல் பண்ணப்பட்டுமிருக்கிற இந்தத்தேகத்தில் முழுகிக்கிடக்கிறேன்ஆகையிஞலஉம்மால்சொல்லப்பட்டிருக்கிறஇந்தயோகத்தைநானெப்படிசீக்கிரமாகச்சாதிக்கக்கூடும், அதைபக்தனுனஎனக்குசிட்சிக்கக்கடவீர், உம்முடைய மாய்கையிஞலேமோகிக்கப்பட்ட புத்தியையுடையவர்களான பிர்மாமுதலான சமஸ்தபிராணிகளும் விஷயங்களிலேபரமார்த்தமென்கிறபுத்தியையுடையவர்கள். ஆகையால்சகலதோஷசூனியராயும்சர்வக்கியராயும்ஸ்ரீவைகுண்டலோகத்தைஸ்தானமாகவுடையவராயுமிருக்கிறதேவரீரைநான்சரணமாக அடைகிறேனென்று சொல்லாநின்ற உத்தவரைப்பார்த்துஸ்ரீபகவானுனவர்சொல்லுகின்ருர்.

ஸ்ரீபகவானுடைய வாக்கியம்.

வாரீர் உத்தவரோ லோகத்திலேலோகத்தினுடையதத்துவத்தைப்பரிசோதித்து அறிந்திருக்கிறமனுஷியர்தாங்கள்தானே தங்களுடையஆத்மாவை விஷயவாசனைகளில்நின்றும் உத்தாரணம்பண்ணுவர்கள், புருஷனுக்குத்தன்னுடைய ஆத்மாதானேதனக்கு இதாயிதங்களையறிகிறதில் குருவாயிருக்கின்றது யோகானந்தத்திஞலே சமர்த்தாளாயும்சமஸ்த ஜனங்களோடு கூடிக்கொண்டுமிருக்கிறஎன்னைகியானிகளேமிகவும் சாக்ஷாத்கரிப்பர்கள்ஒருகால்-இரண்டுகால்- மூன்றுகால்-நான்குகாலேயுடையதுகளாயும் அனேகம்காலுகளை யுடையதுகளாயும்காலல்லாததுகளாயுமிருக்கிற வெகுசரீரங்கள்பூர்வத்திலே சிருஷ்டித்திருக்கிறதுகள் இந்தச்சரீரங்களுக்குள்ளேமனுஷியசரீரமானதுஎனக்கு இஷ்டமாயிருக்கின்றது அந்தப்புருஷசரீரத்தில விவேகியானபேர்கள் அகங்காரமுதலானதுகளைக்காட்டிலும் வேருகஇராநின்றும் சர்வநியந்தாவாயுமிருக்கிற என்னைஎன்னுலேபிரகாசிக்கப்பட்டுள்ளபுத்தி-அந்தக்கரண முதலானதுகளால் பிரத்தியக்ஷமாக அறிகின்ருர்கள்இநதவிஷயத்தில்பெரியோர்கள்மகாதேஜசையுடையவரான ஒருஅவதூதருக்கும் எதுமகாராஜவுக்கும்சம்வாதரூபமாகிஅனுதியாகிஇந்தஇதிஹாசத்தைச் சொல்லுவர்கள்எப்படி

யென்றால் வித்துவானாயும்தர்மக்கியனாயு மிருக்கிறஎது மகாராஜனானவன் ஒருவிடத்திலேயும் பயமில்லாதவராய்சஞ் சரித்துக்கொண் டிராநின்றும் எவ்வனவயதையுடையவராயு மிருக்கிறஒருஅவதூதப் பிராமணனைப்பார்த்துஒருவார்த்தைசொல்லுகின்றார்.

எதுமகாராஜன்வாக்கியம்.

வாரீர் பிராமணோத்தமரே சாவக்கியராயிருக்கிறீர்எந்தபுத்தியை ஆஸ்ரயித்துபாலனைப்போல இந்த லோகத்தில் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறீர். உமக்குசர்வலோக விலக்ஷணமான இந்தப்புத்தியானதுயாரிடத்திலின்றும் உண்டாச்சுதுலோகத்தில் மனுஷியர்கள்தர்மார்த்தகாமங்களிலேயும் பரமாத்மவிசா ரத்திலேயும் ஆயுசு-எஜசு-சம்பத்து-இதுகள்நிமித்தியமாகப்பிரவிர்த்திக்கிறார்கள் லோகத்தில்தனசக்தியில்லாததினாலேயும் கியானமிலலாததினாலேயும், அரூபத்தினாலேயும் கர்மங்களைச்செய்யாமலிருப்பார்கள் நீரோவென்றால்சக்திமானாயும் கியானவானாயும்நல்ல ரூபத்தையுடையவராயிருந்துஒருதர்மத்தையுஞ்செய்யஇச்சியாமலமூடனைப்போலுமஉன்மத்தன்போலும் பிசாசம்போலும்,சஞ்சரித்துக்கொண்டு காமக்குரோதலோபங்களாகிற காட்டுத்தீயினால்தபிக்கப்படாதவராய்மகா ஆனந்தத்தையுள்ளவராயும்,விஷயபோகங்களில்லாதவராயுமிருக்கிற உமக்கிந்த ஆனந்தமானதுஉண்டானகாரணத்தைஎனக்குச்சொல்லக்கடவீரென்றுமிகவும்வணக்கத்துடனே கேளாநின்றஎதுமகாராஜனைப்பார்த்து அவதூதப்பிராமணரானவர் சொல்லுகின்றார்.

அவதூதப்பிராமணருடையவாக்கியம்-

வாராய்எதுமகாராஜனேஎனக்கு உபதேசமில்லாமல்புத்தியினாலேயே குருவாகக்கிரகிக்கப்பட்டவாள்ஆசாரியா ளனேகம்பேரிருக்கிறார்கள் அவர்களிடத்திலின்றும்இந்தப்புத்தியைக்கிரகித்துமுக்தனாய் இவடத்தில்சஞ்சரித்துக்கொண்டிருக்கிறேன் அவர்களாரென்றால் பூமி-வாயுஆகாசம்-ஜலம்-அக்கினிசந்திரன் - சூரியன்புறா-மலைப்பாம்பு - சமுத்திரம்பதங்கம் - வண்டு-யானை-தேனீ-மான்-மச்சியம்பிங்களை யென்னப்பட்ட தாசீ-குற்றிப்பட்சி-பாலன்குமரி-அம்புசெய்கிறவன் - சர்ப்பம்சிலந்தி-ஊதுவண்டு-இந்த இருபத்துநாலுபேர்களும்எனக்குக்குருவாயிருந்தவர்கள் மகானுபாவாளான இவர்களுடைய நடத்தைகளாலேனான றியத்தக்கஅர்த்தங்களை அறிந்தவனானேன் அதுகளைஉனக்குச் சொல்லுகிறேன் கேழ்க்கக்கடவாய.

எப்படியானால்பூமியானதுபிராணிகளாலே பீடிக்கப்பட்டாலும்அந்தச்சமஸ்தஉபத்திரவங்களையுஞ்சகித்துக்கொண்டிருக்கிறதோ அதுபோலதயிரியசாலியானபுருஷனானவன்தெய்வாதீனங்களானபிராணிகளால் பீடிக்கப்பட்டிருந்தாலும்அந்தப்பிராணிகள் தெய்வாதீனமாயிருக்குகைகயையறிந்துபூமியினுடையவிருதத்தைஆசரித்துசன்மார்க்கத்திலின்றுமசலியாமல்சர்வாகாலமும்பரோபகாரத்தின்பொருட்டு உண்டாகாநின்றசமஸ்தஇச்சைகளையும் உடையவனாயும்பரவுபகாரார்த்தமாக வேஜென்மத்தை யுடையவனாய்பராதீனனாக வேயிருந்துசகிக்கக்கடவன்.

மகாவாயுவினாலேசிட்சிக்கப்பட்டதைச்சொல்லுகிறேன்எப்படியானால்பிராணரூபமான வாயுவானதுபாசரூபமான இந்திரியவிஷயங்களை அபேட்சியாமல்கேவலம்ஆகாரத்தினாலிருக்கிறதுபோலகியானியானபுருஷனானவன்ரூபரசாதிவிஷயங்களை அபேட்சியாமல்பிராணதாரணபாத்திரத்தில்தானேசந்துஷ்டனாக விருக்கக்கடவன்எப்படியென்றால்கியானமானது நசியாமல்விஷயங்களிலேஆசக்தமாகாமலிருககுமோ அந்தப்பிரகாரமஇந்திரியங்களுககு இஷ்டஙகளான விஷயங்களில்பிரீதியையுடையவனாகாமலிருக்கக்கடவன் மகாவாயுவினாலேசிட்சிக்கப்பட்டதைச்சொல்லுகிறேன்எப்படியானால்வாயுவானவன்வனத்திலேயும்அக்கினியிலேயும்தான்சம்மந்திக்கப்படாமல்சஞ்சரிக்கிறானோஅதுபோலக் கியானியானபுருஷனானவன்சுதேக்ஷணமுதலான குணஙகளையுடையதுகளாகியசமஸ்தவிஷயங்களிலேயும் பிரவர்த்தித்துஇஷ்டம் அனிஷ்டமென்கிறபுத்தியில்லாதவனாக இந்தவிஷயங்களில் அகப்படாமலிருக்கக்கடவன்.

ஆகாசத்தினாலேசிட்சிக்கப்பட்டதைச் சொல்லுகிறேன் எப்படியென்றால்சர்வத்திரவியாபகமாயிருக்கிறஆகாசத்திற்குக்கடமுதலானதுகளுடனே சம்மந்தமும்இவ்வளவென்கிறபிரமாணமுமில்லையோ அதுபோலசர்வகாலமும்பகவானிடத்திலே சித்தத்தையுடையவனனையோகியானவன்ஸ்தாவரசங்கமங்களிலேஅந்தரியாமியாயிராநின்றபரமாத்மாவினுடைய தியானத்தினால்பரிபூர்ணனான அந்தப் பரமாத்மாவுக்கு ஸ்தாவராதிதேகங்களோடுசம்மந்தமில்லாமலிருப்பதினாலும்இவ்வளவென்கிறபிரமாண மில்லாமலிருப்பதினாலும் ஆகாசத்தைப்போலவேபாவனைபண்ணக்கடவன் எப்படியானால்வாயுவினாலேஏவப்படாநின்றமேகமுதலானதுகளால்ஆகாசமானதுஸ்பரிசிக்கப்படாமலிருக்கிறதுபோலபிரிதிவு-அப்பு-தேஜோவிகாரங்களாகியும்சாலத்தினாலேசிருஷ்டிக்கப்பட்டுமிருக்கிறதேகமுதலானதுகளாலே புருஷனானவன் ஆகாசம்போலவேஸ்பரிசிக்கப்படாமலேயிருக்கிறானென்றறியத்தக்கது.

ஜலத்தினாலேசிட்சிக்கப்பட்டதைச் சொல்லுகிறேன் அதெப்படியானால் நிர்மலமாயும் - பவித்திரமாயும்-மாதுரியமுதலானகுணங்களோடுகூடிக்கொண்டுமிருக்கிறஜலமானது ஜகத்தைப்பாலனம் பண்ணுகிறதோ அதுபோலநிர்மலனாயும் சுபாவமாகசமஸ்த ஜனங்களிடத்

திலேபிரீதியை யுடையவனுயும் மதுரமான வாக்கையுடையவனுகியும்மனுஷியாளுக்குள்ளே தீர்த்தம்போலப் பரிசுத்தனுயுமிருக்கிறயோகியானவன் ஜலத்தைப்போல-தரிசனம்-ஸ்பரிசனம்-கீர்த்தனம்- இதுகளாலேஸ்நேகிதனைப்பாவத்தினின்றும்பரிசுத்தனுகப்பண்ணுவனென்று அறியத்தக்கது.

அக்கினியினுலே அறியப்பட்டதைச் சொல்லுகிறேன்கேளும் எப்படியானுல் மகாதேஜசை யுடையதாகியும் ஒருவராலேயும்கிட்டக்கூடாததாயுமிருக்கிறஅக்கினியானதுசர்வத்தையும்பட்சிக்கத்தக்கதாயிருந்தாலும் தோஷத்தை யடையாமலே யிருக்கிறது அதுபோல வேகியானுதி ஜெயத்தையுடையவனுயும் மிகவுந்தபசினுலேவிளங்காநின்றும், அண்டக் கூடாதவனுயும்பிரிதிக்கிரகம் பண்ணுதவனுயும் பகவானிடத்திலஸ்திரமானசித்தத்தை யுடையவனுயுமிருக்கிற யோகியானவன் அக்கினிபோலவே சர்வ பட்சகனுயிருந்தாலும் தோஷத்தையடையான், ஒருவிடத்திலே பிரகாசனுயும்ஒருவிடத்திலே அப்பிரகாசனுயும் சிரேயசைக் கோருகின்ற பேர்களுக்குஉபாசிக்கத்தக்கவனுயுமிருக்கிற யோகியானவன் அக்கினியைப்போல தாதாக்களுடைய சஞ்சித பாபங்களையும்வரப்போகிற பாபங்களையும்தகித்துவிட்டுசர்வத்தையும் அனுபவித்துக்கொண்டிருக்கிறுனென்று அறியத்தக்கது.

சந்திரனுலே அறியப்பட்டதைச்சொல்லுகிறேன், எப்படியென்றுல் அறியக்கூடாத கதியையுடைய சந்திரனதுகலைகளுக்கே விருத்திக்ஷயங்க ளுண்டாயிருக்கிறதுகளல்லாமல் சந்திரனுக்கில்லை, (அதுபோல)ஜெனனம்நாசம்-விருத்தி-க்ஷயம்- இதுமுதலானதுகளும் தேகத்துக்குண்டாகிறதேயல்லாமல் ஆத்மாவுக்கில்லையென்று அறியத்தக்கது.

சூரியனுலேசிட்சிக்கப்பட்டதைச்சொல்லுகிறேன்எப்படியென்றுல் சூரியனுனவன் கிரணங்களால் ஜலத்தைக்கிரகித்துத்திரும்பவும்வருஷாகாலத்திலே விடுகிறுன் அப்படிக்கிரகித்துவிடுவதினுல் நானிதைச்செய்தேனென்கிற அகங்காரமில்லாதவனுயிருக்கிறுனே அதுபோலக்கியானியானவன் இந்திரியங்களால் விஷயங்களைக்கிரகித்தும் திரும்புகாலங்களில் அதிதிகளின் பொருட்டுக்கொடுத்தும் என்னுலே இது அடையப்பட்டது இது கொடுக்கப்பட்டதென்கிற அகங்காரத்தையடையாமலிருக்கக்கடவன்.

புறுவினுலே அறிந்ததைச்சொல்லுகிறேன், கியானியானவன் ஒருவிடத்திலேயும் ஒரு பிராணியுடனேயும் மிகவும்ஸ்நேகமும் ஆசக்தியும் பண்ணத்தக்கதன்று பண்ணினுனேயாகில் சின்னமான புத்தியையுடையவனுய்புறுவைப்போலமிகவும்விசனத்தையடைவன்எப்படியாஞல் ஒருகபோதப்பட்சியானதுகாட்டில்ஒருவிருட்சத்தில் கூண்டுகட்டிக்கொண்டு தன்னுடைய ஸ்திரீயோடுகூடசிறிது சம்வச்சரம் அதில் வாசம்பண்ணிக்கொண்டிருந்ததுசினேகத்தினுல் கட்டப்பட்டிருக்கிற இருதயங்களையுடையதுகளாகவும் கிரகஸ்த தர்மத்தையுடையதுகளாகவுமிருக்கிற அந்தக் கபோதபட்சிகள் ஒன்றுக்கொன்று திருஷ்டியோடு திருஷ்டியையும்சரீரத்தோடு சரீரத்தையும் புத்தியோடுபுத்தியையும், இணைவிடாமல்வைத்துக்கொண்டுசயனம்-ஆசனம்-சஞ்சாரம்ஸ்நானம்வார்த்தைகள்-கிரீடைகள்-பட்சணம்-இதுமுதலானதுகளைப்பிரீதியோடுசெய்துகொண்டு அந்தவனங்களிலே நிற்பயங்கரமாகச் சஞ்சரித்துக் கொண்டிருந்து அந்தக் கபோதஸ்திரீயானது பிரதமகெர்ப்பத்தைத்தரித்துபிரசவகாலத்திலேஅந்தக்கூண்டில் முட்டைகளிட்டதுசிலநாளில்அந்தமுட்டைகளிலிருந்துமனோக்கியமான சரீரங்கள் இறக்கைகள் இதுகளை யுடையதுகளான பட்சிகளுண்டாச்சுதுகள் அந்தக்குஞ்சுகளுடைய மனோக்கியங்களான இறக்கைகளாலேயும், மதுரங்களான சப்தங்களாலேயும மாதாபிதாக்களான அந்தப்பட்சிகள்மிகவும் ஆனந்தத்தையடைந்து குஞ்சுகளைப் போஷித்துக்கொண்டிருந்ததுகள், ஒருநாள் குடும்பிகளான அந்தப் பட்சிகள் குஞ்சுகளுக்குப் பட்சணார்த்தமாகப் புறப்பட்டுக்காட்டினிற்போய் நாலுபக்கத்திலேயும்வெகுநேரமாய்ஆகாரத்தைத் தேடிக்கொண்டிருந்ததுகள், அப்போது அந்தக்காட்டில் சஞ்சரித்துக்கொண்டிருந்த ஒருவேடனுனவன் அந்தக்குஞ்சுகளைப்பார்த்து தன்னுடையவலையைப்பரப்பி அந்தக்குஞ்சுகளைப்பிடித்துக்கொண்டான். அந்தஇரண்டுபட்சிகளும் அந்தக் குஞ்சுகளுக்கு ஆகாரத்தைச்சம்பாதித்துக்கொண்டு தங்களுடைய கூண்டிற்குவந்ததுகள், அப்போது அந்தக்கபோதஸ்திரீயானது வலையினுல்சூழப்பட்டும் மிகவும் துக்கத்தையுடையதாயும் கூப்பிட்டுக்கொண்டிருக்கிற தன்னுடைய சிசுக்களைப்பார்த்துபுத்திரவாச்சல்லியத்தை யுடையதாயும்தீனமான மனதையுடையதாயுமிருக்கிறஅந்தப்பெண்பட்சியானதுமோகத்தையுடையதாய் அந்தவலையில் விழுந்துஅகப்பட்டுக்கொண்டது, அப்போதந்தப் புருஷபட்சியானது மிகவும்இஷ்டமாயிருக்கிற அந்தப்புத்திரர்களையும் இஷ்டையானபாரியையும் அந்தவலையிலகப்பட்டிருக்கிறதைப் பார்த்து மகத்தான துக்கத்தை யுடையதாய் ரோதனம்பண்ணி நான் உங்களைஎல்லாம்இழந்துஇந்தச்சூனியமான கிரகத்தில் என்னத்திற்குப்பிழைத்திருக்கவேணும் ஆகையினுலேவலையினுல்சூழப்பட்டதுகளாயும் மிருத்தியுவினுல்பீடிக்கப்பட்டதுகளாயுமிருக்கிற அந்தப் பாரியாபுத்திரர்களைப்பார்த்து மிகவும்மோகத்தையுடையதாய் அந்தவலையிலேதானும்விழுந்துவிட்டது [illegible] வேடனுனவன்அந்தப்பு

ருஷபட்சியையும். பெண்பட்சியையும், குஞ்சுகளேயும பிடித்துக்கொண்டு பூர்ணமனோரதனுய் தன்னுடையகிரகத்தையடைந்தான். இந்தப்பிரகாரம் இந்திரியஜெயமில்லாதவனுயும்விஷயசுகத்திலேயே ஆசக்தியையுடையவனுயுமிருக்கிற புருஷனனவன் குடும்பத்தைப் போஷித்து அந்தக்கபோதபட்சியைப்போல குடும்பத்தோடே நாசத்தையடைகுவன். யாதொரு புருஷனனவன் மோட்சத்துக்கு முக்கியசாதனமான மனுஷியசென்மத்தையடைந்து கபோதப் பட்சியைப்போல கிரகத்திலேயே ஆசக்தசுத்தனு யிருக்கிருனே அவனே ஆரூடபதிதனென்று சொல்லுவார்கள்.

---

அ - வது - அத்தியாயம்.

கலிவிருத்தம்.

அந்தமாமவ தூதவேதியரால
முந்திடும்மலைப் பாம்புமுதலான
செந்துவாலே யறிந்தசீரர்த்தத்தை
விந்தையாக விளம்பிடுகின்றனர்.

அந்தஅவதூதப்பிராமணராலேமலைப்பாம்புமுதலானதினுல் அறிந்தஅர்த்தத்தைச் சொல்லப்படுகின்றது.

அவதூதப் பிராமணர்வாக்கியம்.

வாராய் எதுமகாராசனே பிராப்தகர்மத்தினுடைய அனுபவம் அவசியமுண்டாம, ஆனபடியினுலே அனித்தியமாக வியாபாரங்களால் விருதாவாக ஆயுர்க்ஷயமானது பண்ணத்தக்கதன்று எப்படியானுல் மலை பாம்பினுலே அறிந்ததைச்சொல்லுகிறேன் வாராய்ராசனே புருஷனுக்குஇந்திரியங்களினுல்உண்டாகாநின்றசுகமானதுசுவர்க்கத்திலேயும்நரகத்திலேயும் உண்டாகிறது துக்கமானதுஎப்படிபிரயத்தினமில்லாமல் உண்டாகிறதோ அதுபோலச்சுகமுண்டாகிறது ஆகையினுல்விவேகியானபுருஷன் அந்தச்சுகதுக்கத்தை இச்சியாமலேயிருக்கக்கடவன்புருஷனனவன் மலைப்பாம்பினுடைய விருத்திபோலேவிருத்தியையுடையவனுய் பிரயத்தினமில்லாதவனுய் மகாமதுரமாயிருந்தாலும் ரசமில்லாமலிருந்தாலும் அதிகமாயிருந்தாலும் கொஞ்சமாயிருந்தாலும்எதிர்ச்சையாகலபியாநின்றஆகாரத்தைப்புசிக்கக்கடவன்ஆகாரமானதுஎதிர்ச்சையாகக்கிடையாமற்போச்சுதேயானுல்மலைப்பாம்புபோலவேபிரயத்தினமில்லாதவனுய்தெய்வந்தானே கொடுப்பிக்கிறதென்று தயிரியத்தையுடையவனுய்அனேகந்தினமானுலும்நிராகாரனுய் சயனித்துக்கொண்டுஒன்றையும் இச்சியாம லிருக்கக்கடவன்.

சமுத்திரத்தினுலேஅறிந்தஅர்த்தத்தைச்சொல்லுகிறேன்கியானியானவன்வெளிக்குமிகவும் பிரசன்னராயும் உள்ளே இப்படிப்பட்டவனென்று அறிவதற்குஅசக்கியனுகியும்ஒருத்தராலேயும்அதிக்கிரமிக்கக்கூடாதவனுயும்பரமாத்மாவினுடைய சுவரூபானுபவத்தினுலேமேதசகாலங்களால் அளவிடக் கூடாதவனுயும் ராகத்துவேஷாதிகளில்லாதபடியினுலேகலக்க மில்லாதவனுயுமிருந்துகொண்டுநிச்சலமாகியதேகத்தையுடையதானசமுத்திரம்போலஇருக்கக்கடவன்எப்படியானுல்சமுத்திரமானதுவருஷாகாலங்களிலேநதிகளால் சம்பூர்ணமாய்ப்பூரிக்கப்பட்டிருந்தாலும் விருத்தியடையாமலிருக்கிறது கிருஷ்மகாலத்தில்நதிகளால் பூரிக்கப்படாமலிருந்தாலும்வடிந்துபோகாமலிருக்கிறது அதுபோலஸ்ரீமந்நாராயணபரனுனகியானியானவன் சம்பத்துக்களால் பரிபூர்ணனுயிருந்தால்சந்தோஷியாமலும்சம்பத்தில்லாதவனுயிருந்தால்விசனப்படாதவனுயுமிருக்கக்கடவன்.

விட்டிற்பூச்சியினுல் அறியப்பட்டதைச் சொல்லுகிறேன் இந்திரியஜெகமில்லாதபுருஷனனவன் ஸ்ரீபகவானுடையமாயாசுவரூபமானஸ்திரீயைப்பார்த்து அந்தஸ்திரீயினுடையவிலாசங்களால் வஞ்சிக்கப்பட்டவனுய்மகா அந்தகாரத்திலேவிழுகின்றுன் எப்படியானுல்விட்டிற்பூச்சியானது அக்கினியினுடைய ரூபத்தைப்பார்த்து அதினுல்மோகிக்கப்பட்டதாய்அந்தஅக்கினியிலேவிழுந்துபோகிறதோ (அதுபோல்) மூடனனவன்ஸ்ரீபகவானுடையமாய்கையினுல்செய்யப் பட்டிருக்கிறஸ்திரீகள் சுவர்னம்-ஆபரணம்-வஸ்திரம்-இதுமுதலானதிரவியங்களில்மோகிக்கின்றமனதையுடையவனுய் அதுகளே அனுபவிக்க வேணுமென்கிற புத்தியினுல் விட்டிற்பூச்சியைப்போலவிவேகமில்லாதவனுய்நசித்துப்போகிறுன்.

வண்டினுலே அறிந்ததைச்சொல்லுகிறேன் கியானியானவன் வண்டுபோல இந்தத்தேகமானது எந்தமட்டு மிருக்கிறதோ அந்தமட்டுக்கும் நாலுதிக்கிலேயுங் கொஞ்சங்கொஞ்சம் ஆகாரத்தைக் கிரகித்துக்கொண்டு கிரகஸ்தாளைப் பீடியாதவனுய் வண்டினுடையவிர்த்தியை ஆசரிக்ககடவன் பிரமரமானது சமஸ்தமான புஷ்பங்களில்நின்றும் சககரத்தைக்கிரகிக்கிறதுபோல, சமர்த்தனனபுருஷனனவன்கொஞ்சமாயும் மகத்துக்களாயுமிருக்கிறசமஸ்தசாஸ்திரங்களில் நின்றும்சாரத்தைக்கிரகிக்கக்கடவன் கையைபாத்திரமாகவுடையவனுயும் வயிறுகொண்டமட்டும் பட்சித்துக்கொண்டுமிருக்கக்கடவன்.

யானையினுல்அறிந்ததைச்சொல்லுகிறேன் யானையானதுபெண்ணுனையின்பேரில் மோகத்தினுல்படுகுழியிலேவிழுந்து அகப்பட்டுக்கொள்ளுகிறதோ (அதுபோல சந்நியாசியானவன்மரத்தினுல்நிர்மிக்கபபட்டிருக்கிறஸ்திரீயையும்காலினுலேயும்ஸ்பரிசையாமலிருக்கக்கடவன்ஸ்பரிசித்தானேயானுல் யானைப்பேடினுடையசம்பந்தத்தினுல்யானையைப்போலக்காமத்தினுல் கட்டப்படு

வன் விவேகியானவன் தனக்குநாசஹேதுவாயிருக்கிற ஸ்ரீயையொருக்காலும் அடையாமலிருக்கக்கடவன்,

தேனீக்களாலே அறிந்ததைச்சொல்லுகிறேன் தேனீக்களால் சேர்க்கப்பட்டிருக்கிறதேன்கூண்டையழிக்கின்றபுருஷனானவன்பொசிப்பது போலவுத்தாளாலே சம்பாதிக்கப்பட்டும் ஒருத்தருக்குங்கொடுக்கப்படாமலும் தானனுபவியாமலுமிருக்கிறதனத்தைப்பலவானானவேறொருபுருஷன் அனுபவிப்பன் அவனுக்கும்பலவானையும்கிறகிக்கிறவுபாயத்தையறிந்தவனையுமிருக்கிறமற்றொருபுருஷனானவன் அதைக்கிரகித்து அனுபவிப்பன்மகா பிரயாசங்களினால்சம்பாதிக்கப்பட்டிருக்கிற திரவியங்களால்கிரகத்திலேசவுக்கியங்களைக் கோரிக்கொண்டிராநின்றகிரகஸ்தாளுடைய அன்னத்தைமுன்னேசன்னியாசியானவன்பொசிக்கின்றான் எப்படியானால் தேனீயானது பிரயாசப்பட்டுசம்பாதிக்கப்பட்டதேன்கூண்டையழிகின்றபுருஷனானவன்எப்படிபொசிக்கிறானோ அதுபோற்பொசிக்கின்றான்.

மானாலே அறிந்ததைச்சொல்லுகிறேன், வனத்திலேயேசஞ்சரித்துக்கொண்டிராநின்ற எதியானசன்னியாசியானவன் ஸ்ரீபகவத்கதைகளைக் கேழ்க்கிறதைவிட்டொருகாலத்திலேயும்பிராகிருதகானங்களைக்கேளாமலிருக்கக்கடவன் கேட்டானேயானால் வேடனுடைய கானத்தில் மோகிக்கப்பட்டிராநின்றமானானது அந்தவேடனாலே அடிக்கப்பட்டுப் போகிறதுபோல பிராகிருத கானத்தைக் கேழ்க்கிறவனும்கெட்டுப்போவனென்று அறிந்துகொள்ளக்கடவன்,

மச்சியத்தினாலே அறிந்ததைச்சொல்லுகிறேன். மச்சியமானது தூண்டின்முள்ளிலேவைக்கப்பட்ட மாங்கிஷத்தினுடைய இச்சையினால் அந்தத்தூண்டின்முள்ளைப்பிடித்துநாசத்தையடைகிறதோ (அதுபோல) ஜனமான ரசத்தினால் மோகிக்கப்பட்டதாய் ஜெயிக்கக்கூடாதானாவினுடையசாபல்லியத்தினால் மிருத்தியுவையடைகிறது விவேகிகளானபேர்கள் ஆகாரத்தை இச்சித்தவர்களாய்ரசனேந்திரியம்வினாவாய்மற்ற இந்திரியங்களைச்சீக்கிரமாகஜெயிப்பார்கள் அந்தரசனேந்திரியமோவென்றால்ஆகாரத்தை யிச்சித்திருக்கிறவனுக்கு விருத்தியடையும்ரசனேந்திரியம்வினாவாய்மற்றஇந்திரியங்களினதுஜெயத்தையுடையபுருஷனானவன் எந்தமட்டுக்கும்ரசனேந்திரியத்தைசெயிக்கமாட்டாமலிருக்கிறானோ அந்தமட்டுக்கும் இந்திரிய ஜெயத்தை யுடையவனல்லன், ரசனேந்திரியம் ஜெயிக்கப்பட்டதேயாகில்சமஸ்தஇந்திரியங்களும் ஜேயிக்கபபட்டதாய்விடும்.

பிங்களையென்கிற ஸ்திரீயினுடைய கதையைச் சொல்லுகிறேன் பூர்வத்தில் மிதுலாபட்டணத்தில்பிங்களையென்றொருதாசியிருந்தாள் அவளிடத்தினின்றும்ஒரு அர்த்தத்தை அறிந்தேன் அதென்னவென்றால்விபசாரியான அந்தஸ்திரீயானவள் ஒருநாள் ரதிஸ்நானத்தில்நாயகனானவன் வரப்போகிறானென்று உத்தமமானரூபத்தைத்தரித்தவளாய் தெருவாசற்படியில்வந்துபார்த்துக்கொண்டிருந்து மார்க்கத்திலேவராநின்றதனவான்களானபுருஷர்களைப்பார்த்து எவனாகிலும் ஒருத்தன் நம்மைக்குறித்துப்போகிறானோவென்று நின்றுகொண்டு அர்த்தராத்திரிமட்டுக்கும்பார்த்துக்கொண்டிருந்தும்ஒருவனும்வாராமையினால் அந்தஸ்திரீயினிடத்தில் மிகவும்உத்தமமான வயிராக்கியமொன்றுண்டாகி சிலவார்த்தைகள்சொன்னாள். அதாவது-ஜெயமில்லாதவர்களான என்னுடைய மோகபரம்பரையைப்பாருங்கள், நான் விவேகமில்லாதவளாய் துச்சனான நாயகனிடத்தில் நின்றும் மனோரதத்தையடையவேணுமென்று கோறிக்கொண்டிருக்கிறேன், சமீபத்தில் அந்தரியாமியாயும்நித்தியமாயும் ரதிசவுக்கியத்தைக்கொடாநின்றும்தனப்பிறதாயுமிருக்கிற இந்தப்பரமாத்மாவாகிற நாயகனைவிட்டுவிட்டு இஷ்டத்தைக் கொடுக்கமாட்டாதவனையும், துக்கம்-பயம்-சோகம்-மோகம்-இதுமுதலானதுகளைக் கொடுக்கிறவனையும், துச்சனுமிருக்கிற நாயகனைக்கோறினேனல்லவா நிந்திதமான சீவனத்தையுடையஎன்னாலிந்த ஆத்மாவானதுரதிக்கிரீடா வியாபாரத்தினால்வியர்த்தமாகத்துக்கத்தையடைந்தது. ஆகையினால்இந்தலோகத்திலேயும்பரலோகத்திலேயும் பரமாத்மாவான அச்சுதனைக்காட்டிலும் அன்னியமான மற்றோர்புருஷனையும் சேவிக்கத்தக்கதன்று அந்தஸ்ரீ அரியினாலுண்டாகிய வயிராக்கியத்தைச் சிரசாய்வகித்துக்கொண்டு பிராகிருத மனுஷியாளிடங்களிலும் விஷயங்களிலும் உண்டான துராசைகளைவிட்டுவிட்டு அதீசுரரான ஸ்ரீஅரியையேசரணமாக அடைகிறேனென்று அந்தப் பிங்களை என்னப்பட்டதாசியானவள் நாயகனுடைய இச்சையினாலுண்டாகின்றதுராசையைவிட்டு சாந்தியையடைந்து சயனத்திற்சேர்ந்தாள். வாராய்ராசனே அந்தப்பிங்களையானவள் எப்படிநாயகனுடைய ஆசையைவிட்டுச் சுகமாகநித்திரைபண்ணினாளோ, (அதுபோல) ஆசையே மிகவும்துக்கம், நிராசையேமிகவுஞ் சுகமாயிருக்கின்றது.

---

கூ - வது - அத்தியாயம்;

மட்டுவிருத்தம்.

குற்றமற்ற குறறிப்பட்சிகளாற்
சொற்றிமொர்த்தத்தைச் சொல்வதாயினர்

அந்தஅவதூதப்பிராமணராலேகுறறிப்பட்சிமுதலானதுகளினாலறிந்தஅர்த்தத்தைச்சொல்லப்படுகின்றது.

அவதூதப்பிராமணர் வாக்கியம்.

குறறிப்பட்சியினாலறிந்ததைச்சொல்லுகிறேன்மதுரமாயும்புஷ்டியாயுமிருக்கும மாங்கிஷத்தையுடையதா

னகுறறிப்பட்சியை மாங்கிஷ நிமித்தியமாகக்கொன்று போடுகிறார்கள், விசேஷித்து மாங்கிஷமில்லாதமற்றப் பட்சிகள் சுகமாயிருக்கிறதுகள், ஆகையினால்மாங்கிஷ புஷ்டியில்லாமலிருக்கிறபட்சிகள் சுகப்படுவதுபோலமனுஷியாளுக்கு எந்தெந்தவஸ்து மிகவும்இஷ்டமாயிருக்கிறதோ அந்தவஸ்துவைக்கிரகிப்பதினால் மிகவுந்துக்கமேயாம் இதையறிந்தபுருஷனானவன் அந்தவஸ்துக்களைக்கிரகியாமலிருப்பதினால் அனந்தமான சுகத்தை யடைவன்.

பாலனாலேயறிந்த அர்த்தத்தைச்சொல்லுகிறேன் எப்படியானால்பாலனுக்குமானாபிமானங்கள்கிர்கசிந்தை முதலானதுகளில்லை, அதுபோலவே எனக்குமானாபிமானங்களில்லாமல் பரமாத்மாவினிடத்திலேபிரீதியையுடையவனாய் ஈனிவடத்தில் பாலன்போலவே சஞ்சரித்துக்கொண்டிருக்கிறேன். அக்கியனாயும் இதர இதத்தைக்குறித்து பிரயத்தன மில்லாதவனாயுமிருக்கிற பாலனானவனும் பிரகிருதியைக்காட்டிலும் பரனான ஈஸ்வரனையுபாசிக்கின்ற யாதொருபுருஷனும் இவாளிரண்டுபேரும்நிர்விசனாளாயும் பரமமானஆனந்தத்தில் பரிபூரணாளாயுமிருப்பார்கள்.

குமரியினுடைய கதையைச்சொல்லுகிறேன் ஓரிடத்திலேஒருகுமரியானவள் தன்னுடைய மாதாபிதாக்கள்முதலானபேர்கள் ஒருகாரியார்த்தமாகத்தேசாந்தரம்போயிருக்கையில் அந்தச்சமையத்திலே தன்னை வரிக்கிறநின்பொருட்டு இரகத்திலே வராநின்ற புருஷாளை தான்தானேபூசிதது அந்தப்புருஷாளுக்குப் பட்சணார்த்தமாக ஏகாந்தஸ்தலத்திலே சம்பாநெல்லுகளைக்குத்துகிற அந்தக்குமரியினிட கையிலிராநின்றசங்கவளைகள்மிகவும்சப்தித்ததுகள். பிற்பாடு புத்திமதியான அந்தக்குமரியானவள் பூச்சியாளானபேர்கள் வர்திருக்கும்போதுதான்தானே நெல்லுக்குத்துவது தாரித்திரத்துக்குச்சூசகமென்றும் நிந்திதமென்றும்எண்ணிமிகவும் லச்சையையுடையவளாய் ஒவ்வொருவளையலாயுடைத்துவிட்டு இரண்டுகையிலும் இரண்டிரண்டுவளையல்களைமீதியாக வைத்துக்கொண்டு திரும்பவும்நெல்லைக்குத்தினாள் அப்போதுஅந்தஇரண்டு வளையல்களும மிகவும்சப்தித்ததுகள், அந்தக்குமரியானவள் அதில்ஒவ்வொருவளையலையுடைத்துவிட்டு நெல்லைக்குத்தவே சப்தமுண்டாகாமலிருந்தது, அதுபோல வெகுபேர்களுடைய மத்தியிலே வாசஞ்செய்வது கலகத்துக்குஏதுவாகவிருக்கும்இரண்டுபேர்களாய் வாசம்பண்ணினால் ஒருவருக்கொருவர் வார்த்தையுண்டாயிருக்கும் ஆகையினால் அந்தக்குமரியினுடைய சங்கவளையல்களைப்போலவே விவேகியானவன் ஒருவனாகவே சஞ்சரித்துக்கொண்டிருக்கக்கடவன்.

அம்புபண்ணுகிறவனா லறிந்ததைச்சொல்லுகிறேன் அம்பினுடைய துவயல்டுகிற பக்குவத்திலேநிச்சலமானசித்ததையுடைய அம்புபண்ணுகிறவனானவன் பேரிமுதலான வாத்தியசப்தங்களுடனேகூடசமீபத்திலே போகாநின்ற இராசாவையும் பாராமலிருக்கிறானோ அதுபோல பரமாத்மாவினிடத்திலே நிச்சலமானசித்தத்தையுடையவனான கியானியானவன் வெளியில்தரிசனமுதலானதினாலேயும் மற்றொருகியானமில்லாதவனாய்ஸ்ரீபகவானுடைய ரூபத்தையேயனுபவித்துக்கொண்டிருப்பன்.

சர்பபத்தினாலே தெரிந்துகொண்டதைச் சொல்லுகிறேன்எபபடியானால்-சர்ப்பமானது ஒண்டியாய் சஞ்சரித்துக்கொண்டும் ஸ்தானநியமமில்லாதாயும்- ஜாக்கிரத்தையுடையதாயும் ஏகாந்தவாசியாயும், போனமார்க்கத்தில் விஷத்தையுடையதோ விஷமில்லாததோவென்று ஒருவராலேயும்அறியப்படாததாயுமிருககும். அதுபோல, கியானியானவன் ஒருவனாகச் சஞ்சரித்துக்கொண்டும், நியதமான விடமில்லாதவனாயும், ஆத்மானுபவத்தையுடையவனாயும், ஏகாந்தவாசியாயும், ஒருவராலேயுமறியப்படாத மகிமையையுடையவனாயும், மிதபாஷியாயுமிருக்கக்கடவன்.

சிலந்திப்பூச்சியினுடைய திருஷ்டாந்தத்தைச் சொல்லுகிறேன், சிலந்திப்பூச்சியானது தன்னுடையஇருதயத்தினின்று முண்டாகின்றநூலை முகத்தினால் வெளியிலேபரப்பி சிறுதுகாலம்அதிலேயிருந்துகிரீடைபண்ணிதிரும்பவும்கன்னுக்குள்ளேயேகிரகித்துக்கொள்ளுகிறதுபோல மகேஸ்பரரான ஸ்ரீமந்நாராயணரும்தம்முடையமாய்கையினால் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிபண்ணிதிரும்பவும் தம்மிடத்திலேயே கிரகித்துக் கொள்ளுகின்றார்.

ஊதுவண்டினாலறிந்த அர்த்தத்தைச் சொல்லுகிறேன். ஊதுவண்டினாலே சுவற்றிலே கொண்டுபோய ஒட்டவைக்கப்பட்டிருக்கிற புழுவானது பயத்தினால் அந்த ஊதுவண்டுப்பூச்சியைத்தானே தியானம்பண்ணிக்கொண்டுபூர்வதேகத்தைவிடாமல் அந்தவண்டினுடைய சாரூப்பியத்தை யடைவதுபோலஸ்ரீபகவானுடைய, திவ்வியமங்களமூர்த்தியிலே சமர்ப்பிக்கப்பட்டமனதையுடையபுருஷனானவன் அவருடைய சாரூப்பியத்தையடைகின்றான்.

வாராய்எதுமகாராசனே, இந்தப்பிரகாரம்இந்தஇருபத்திநாலுஆசாரியாகளில்நின்றும் இந்தக்கியானங்களை நானறிந்துகொண்டேன் என்னுடைய தேகத்தினாலும்அறியப்பட்டதைச் சொல்லுகிறேன் கேழ்ககக்கடவாய். வயிராக்கியம்-விவேகம்-இதுகளுக்குக்காரணமாயும் சர்வகாலமும் துக்கத்தையேயுள்ளதானஜெனனமரணங்களையுடையதாயுமிருக்கிற இந்தத்தேகமானதுஎனக்குக்

குருவாயிருக்கின்றது, இந்தத்தேகத்தில்தத்துவங்களை எதார்த்தமாக அறிந்தேன், தத்துவங்களை அறிவதற்கு இப்படி உபகாரியாயிருந்தாலும்இந்தத்தேகமானது நாய்நரிமுதலானதுகளுக்குப் பட்சியமாகவிருக்கிறநிசசயத்தையுடையவனாய் இந்தத்தேகத்தில் ஆசக்தியில்லாதவனாய் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறேன், புருஷனானவன்யாதொருதேகத்திற்குச்சுகத்தைச்சம்பாதிக்கவேணுமென்கிற இச்சையினால்பாரியை-புத்திராள்-தனம்-பசுக்கள்-கிரகம்-பந்துக்கள இவர்கள்முதலானபேர்களைச்சம்பாதித்துப் போஷிக்கிறானோ அப்படி பிரயாசத்தினாலேசம்பாதிக்கப்பட்ட தனங்களையுடையவனான அந்தபுருஷனும் அந்தத்தேகமும் ஆயிசினுடையஅந்தத்தில்நாசித்துப்போகின்றது.எப்படியானால்-விருட்சமானது தன்னைப்போல இன்னம்ஒருவிருட்ச மூண்டாகும்படிக்குபீசத்தையுண்டாக்கிவிட்டு நாசத்தையடைகிறதோ அதுபோல அந்தத்தேகமானது அந்தப்புருஷனுக்குத் தேகாந்தத்துக்கு எதுவானகர்மபீசத்தையுண்டாக்கிவிட்டுநாசத்தையடைகின்றது ஆனபடியினால் சாமார்த்தியபுருஷனானவன் அடிக்கடிவிருத்தியுவை யுடையதான இந்தச்சரீரமானது நாசத்தை யடைவதற்குமுன்னமே சீக்கிரமாக மோட்சத்தின்பொருட்டு எத்தனம்பண்ணக்கடவன். இந்தப்பிரகாரம் உண்டாகாநின்ற வயிராக்கியத்தையுடையவனாயும் கியானஸ்வரூபரானபரமாத்மாவினிடத்தில் நிச்சலமான மனதையுடையவனாயும்சங்கம்அகங்காரமில்லாதவனாயும் நானிந்தப்பூமியில்சஞ்சரிததுக்கொண்டிருக்குறேன், இந்தஇருபத்து நான்குபேர்களும்குருவாக உபதேசம்பண்ணவர்களன்று,பின்னையெப்படியென்றால்- தன்னிடத்திலுண்டாகாநின்ற சமுசயம்விபரீதத்தியானம் இதுகளை அவர்களுடைய நடத்தையைக்கண்டு போக்கடித்துக்கொண்டபடியினாலேஅவர்களெனக்குக் குருவாகியிருக்கின்றார்கள்,நிச்சயமானகியானமானது ஒருவனா லுண்டாகிறதில்லை பலபேருடையஆசாரஙகளைப்பார்த்துநிச்சயகியானமுண்டானபடியினால் அவர்களெல்லாரும்குருவானார்களென்று அவதூதப்பிராமணராலே எதுமகாராசனுக்குச் சொல்லப்பட்டது.

ஸ்ரீகிருஷ்ணருடைய வாகயம்.

வாரீர்உத்தவரே, அந்தஅவதூதப்பிராமணரானதெத்தாத்திரேயமகாயோகியானவர் எதுமகாராசனுக்குஇந்தக்கியானோபதேசங்களைச்சொல்லி அவனால்பூசிக்கப்ட்டுசந்துஷ்டராய் அவன்கையில் அனுக்கிரியைவாங்கிக்கொண்டு எதேச்சமாகப் புறப்பட்டுப்போனார், நம்முடையபூர்விகர்களுக்கு நம்பூர்விகனானஎதுமகாராசனானவன்அந்ததெத்தாத்திரேய மகாயோகியினுடையவாக்கியத்தைக்கேட்டு சர்வசங்கபரித்தியாகத்தை யுடையவனாயும் சமசித்தனுமானான்.

ம் -வது - அத்தியாயம.

கலிவிருத்தம்.

உத்தவற்குவுரியபகவானாற்
றத்துவத்தைச்சொன் னரென்றுசாற்றுவாம்.

ஸ்ரீபகவானானவர்உத்தவருக்குத்தத்துவத்தைச்சொன்னாரென்றுசொல்லப்படுகின்றது.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாரீர்உத்தவரே என்பக்தனானவன் என்னாற் சொல்லப்பட்டிருக்கிற வைஷ்ணவதர்மங்களிலே ஸ்திரமான புத்தியையுடையவனாய் அந்தத்தர்மத்துக்குவிரோதமில்லாமல் வர்ணாசிரம குலாச்சாரங்களை அனுஷ்டிக்கக்கடவன், மீமாங்கிசகாள் மதத்தைப்பற்றி கர்மகார்த்தாக்களாயும் சுகதுக்கங்களை யனுபவித்துக்கொண்டு மிருக்கிறசீவாளனேகாளென்றும் போகஸ்தானலோகங்கள்நித்தியமென்றும், ரூபரசாதிவிஷயங்களும்பிரவாகரூபமாகநித்தியமென்றும்மாயஸ்வரூபமன்று போககாலம் நித்தியமென்றும் லோகங்களையடைவதற்குஉபாயங்களைச்சொல்லாநின்றஆகமசாஸ்திரங்கள்நித்தியமென்றும்போக்தாவான ஆத்மனென்றும்ரூபரசாதிவிஷயங்களும்பிரவாகரூபமாகிறநித்தியமென்றும்மாயாஸ்வரூபமன்றுஎதார்த்தமென்றுஎண்ணினீரேயானால்அப்படிதானேகியானமானதுகடபாதி ஆக்கிரபேதத்தினால்உண்டாகிக்கொண்டேயிருக்கின்றது ஆகையால் பிரவாகரூபக்கியானமானது நித்தியமாகவும் வேறுவேறாகவுமாகின்றதுநித்தியக்கியானஸ்வரூபனாயும் ஈஸ்வரனாயுமிருக்கிறபரமாத்துமாவானவர்வேறேயில்லையென்றுஎண்ணினீரோயானால்சமஸ்தமான சீவாளுக்கும்தேகசம்பந்தத்தினால்ஜனனமுதலானகுணங்கள்-சம்வச்சரம் மாதம்-இதுகளரூபமானகாலத்தினுடைய அவயவத்தினால்அடிக்கடி யுண்டாகிறதுகளென்று சொல்லாநின்ற ஸ்ரீபகவானைப்பார்த்துஉத்தவர்சொல்லுகிறார்.

ஸ்ரீஉத்தவருடைய வாக்கியம்.

வாரீர்ஸ்ரீபகவானே புருஷனானவன்சத்வாதிகுணங்களுடையகாரியமானஇந்திரியங்களில்சூழப்பட்டவனாயிருந்தாலும்இந்திரியங்களுடைய காரியமானகர்மங்களிலேயும்சுகமுதலானதுகளிலேயும் எப்படி அகப்படாமலிருப்பன் இந்தப்பிரசினத்தை எனக்குச்சொல்லக்கடவீர்ஒரு ஆத்மாதானேநித்தியமாகப்பந்தத்தையுடையவனாயும்நித்தியமுக்தனாயுமிருக்கிறானென்றால்இந்தவிஷயத்தில்எனக்குச்சந்தேகமுண்டாயிருக்கின்றது இந்தச்சந்தேகமானது நிவர்த்திகும்படியாகச்சொல்லக்கடவீரென்றார்,

### ௰௩ - வது - அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

சுத்ததத்வத்தைச் சுந்தரகிருஷ்ணனும்
உத்தவற்கு வுரைத்தனர்தாமரோ;

ஸ்ரீகிருஷ்ணபகவான் உத்தவருக்குத்தத்துவத்தைச்சொன்னாரென்றுசொல்லப்படுகின்றது.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாரீர்உத்தவரே ஜீவாத்மாவானவன்பத்தனென்றும்முக்தனென்றும் சொல்லுகிறசொல்லானது என்னுடையசத்வாதிகுணங்களுக்குபாதந்தரனாயிருக்கையினால்சம்பவிக்கின்றதுசுபாவமாகவுண்டானதல்ல அந்தசத்வாதிகுணங்கள்மாயாமூலமானபடியினால் அந்தகுணங்களுக்குநியந்தாவானஎனக்குப்பந்தமுமில்லைமோக்ஷமுமில்லை புருஷனுக்கு-சோகம்-மோகம்-பயம்-துக்கம்தேகவுற்பத்தி இதுகளென்னுடையமாய்கையினாலுண்டாகிறதுஎப்படியானால்சொற்பனமானது புத்தியினுடையவிசாரமேதவிரவேறொன்றுமில்லை(அதுபோல) ஜெனனமரணரூபமானசம்சாரமானது என்னுடையமாய்கையேதவிர சுவாபீகமல்ல புருஷாளுக்குப் பந்தம்- மோக்ஷம்-இதுகள் எனது மாய்கையினால் நிர்மிக்கப் பட்டதுகளாயுமிருக்கிறவித்தைஅவித்தை யென்னப்பட்டகியானக்கியானங்கள்என்னுடையசத்திகளா யிருக்கின்றதுகள் ஆகையினால்கியானியானவன் இந்திரியங்களினால்கிரகிக்கப்படாநின்றவிஷயங்களிலேராகத்துவேஷமுதலானதில்லாதவனாயுமிருப்பன்கியான மில்லாதவனென்றால்பிராருத்தகர்மாதீனமான இந்தச்சரீரத்தில்அபிமானத்தையுடையவனாய்இந்திரியங்களினால்பண்ணப்படாநின்றகர்மத்தினால்நான்பண்ணுகிறேனென்று அகங்காரத்தினால்பத்தனாயிருப்பன்வயிராக்கியத்தையுடையவனாயும்இந்திரியங்களுடையகர்மங்களே யல்லாமல்கர்மசம்மந்தமெனக்கில்லையென்றுஇந்தப்பிரகாரம்கியானத்தையுடையவனாயுமிருக்கிறபுருஷனானவன் அக்கியானிபோலவே-சயனம்-ஆசனம்-சஞ்சாரம்-ஸ்நானம்-தெரிசனம்-ஸ்பரிசனம்-ஆக்கிராணம்-போஜனம்- இதுமுதலானகர்மங்களிலேபந்தப்படுகிறதுமில்லை அந்தவிஷயங்களை இந்திரியங்கள் அனுபவிக்கிறதென்று அதுகளை அனுபவிக்கச்செய்துகொண்டு அதுகளுக்குச்சாட்சியாகவிருப்பன் எப்படியானால்வாயுவானவன் எங்கும்சஞ்சரித்துக்கொண்டிருந்தாலும் ஒன்றிலேயும்சம்மந்தமில்லாமலிருக்கிறான் அதுபோலகியானியானவன் பிரகிருதிகுணங்களுடனேகூடிக்கொண்டிருந்தாலும் அந்தக்குணங்களின்சம்மந்தமில்லாதவனாகவேயிருப்பன் மானாபிமானங்களாலேவற்சிக்கப்பட்டவனாயும் ராகத்துவேஷாதிகுணியனாயும்சமபுத்தியாயுமிருக்கிறகியானியானவன் தன்னைபூஜிக்கிறபேர்களையும் தூஷிக்கிறபேர்களையும் சமமாகஎண்ணக்கடவனென்று இந்தப்பிரகாரம் சொல்லாநின்றபகவானைப்பார்த்துஉத்தவர்சொல்லுகிறார்.

உத்தவர்வாக்கியம்.

வாரீர்லோகநாதரே சற்புருஷர்கள் தங்கள் தங்கள்புத்தியினாலேகற்பிக்கப்பட்டவர்களாய்வெகுபேரிருக்கிறார்கள்எப்படிப்பட்டவன்சற்புருஷனென்று உம்மாலேதிச்சயிக்கப்பட்டிருக்கிறது லோகத்திலே பக்தியும்நானாவிதமாயிருக்கின்றதுஎப்படிப்பட்டபக்திஉமக்குப்பிரீதியாயிருக்கும்நாரதர்முதலானசத்புருஷாளாலேயும்பூஜிக்கப்பட்டபக்தியானதுஎப்படிப்பட்டது இந்தஅர்த்தத்தைஎனக்குச்சொல்லக்கடவீரென்றுபிரார்த்தியாநின்றஉத்தவரைப்பார்த்துஸ்ரீபகவானானவர்சொல்லுகின்றார்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாரீர்உத்தவரே தயாளுவாயும் பிறருடைய துக்கத்தைச்சகியாதவனாயும் சமஸ்த பிராணிகளிடத்தில் துரோகத்தைநினையாதவனாயும் க்ஷமையையும் சத்தியத்தையும்பலமாகவுடையவனாயும்சுக துக்கங்களைச்சமமாகநினைக்கின்றவனாயும் இந்திரியநிக்கிரகத்தையுடையவனாயும்சுவதர்மஅனுஷ்டானபரனாயும் என்னையேமுக்கியமான ஆசிரயமாகவுடையவனாயும்-பசி-தாகம்-சோகம் மோகம்-செனை-மரணம்- இதுகளைச்செயித்தவனாயுமிருக்கிற புருஷனானவன்மிகவும் கியானியாக விருப்பன் தேசகாலங்களாலே அளவிடக்கூடாதவனாயும்சர்வாந்திரியாமியாயும்சச்சிதானந்தரூபியாயு மிருக்கிறஎன்னைநன்றாகஅறிந்தாகிலும்அறியாமலாகிலும்ஏகாந்தபக்தியினால்யாதொருவர்பூஜிக்கின்றார்களோ அந்தப்புருஷாள் என்னுடையபக்தாளுக்குள்ளே யுத்தமர்களாவர்இதுநிச்சயமென்றுஇந்தப்பிரகாரம் சாதுவினுடையலட்சணத்தைச்சொல்லிப் பக்தியினுடையலட்சணத்தைச்சொல்லுகிறார்.

வாரீர்உத்தவரே, என்னுடைய அர்ச்சாவதாரங்கள் பக்தசெனங்கள் இவர்களுடைய தெரிசனம்·பரிசனம்-அர்ச்சனம்·பரிசாரம்-ஸ்துதி-பிரணமம்- ஜென்மாஷ்டமுமுதலானஎன்னுனுடைய அவதாரத் தினங்களிலே ஆனந்தபரவசனாயிருக்கிறது, எனதுஆலயங்களிலேஉச்சவம்பண்ணிவைக்கிறது புஷ்பம் திருத்துழாய் முதலானதுகளை எனக்குக் கொண்டுவந்து சமர்ப்பிக்கிறது சாதுர்மாசியமாகிய ஏகாதசிமுதலான விசேஷதினங்களில்எனது பூஜாபிரதிஷடை இதுகளில்சிரத்தையுண்டாயிருக்கிறது, வைதீகதீட்சைபாஞ்சராத்திரி முதலான ஆகமங்களிலே சொல்லப்பட்ட தீட்சைவிரதங்கள்இதுகளிலேபிரீதியாயிருக்கிறது எனதுஆலயங்களில்செ

கதை-குப்பையில்லாமல் பெருக்குகிறது கோமயத்தினு ல்சுத்திசெய்கிறது, கோமயவுதகத்தினுலேபுரோக்ஷண ம்பண்ணுகிறது, மொக்கிட்டு அலங்கரிக்கிறது தீபங்க ளைப்பிரகாசம் பண்ணுகிறது இதுகள் என்னிடத்தில் வைக்கப்பட்ட பக்திலட்சணமென்று அறியத் தக்கது. வாரீர்உத்தவரே-சூரியன்-அக்கினி- பிராமணன்-பசுக்க ள்-வைஷ்ணவாள்-ஆகாயம்-வாயு-ஜலம்-பூமி-ஆத்மா சர் வப்பூதங்கள் இந்தப்பதினொருபேரும் என்னைப் பூஜிக் கின்றார்கள், எப்படியானால்சூரியனிடத்தில்வேதசூக்த ங்களினாலேயும்-அக்கினியினிடத்தில் அவிசினாலேயும் பிராமணனிடத்தில் ஆதித்தியத்தினாலேயும்- பசுக்களி டத்தில் திரணமுதலானதைக் கொடுக்கிறதினாலேயும் வைஷ்ணவாளிடத்திலே பந்துவைப்போல் சன்மானத் தினாலேயும் இருதையாகாசத்தில்தியானநிஷ்டையினு லேயும் வாயுவினிடத்தில் பிராண திருஷ்டியினாலேயு ம்ஜலத்திலே ஜலமுதலான திரவியங்களால் தர்ப்பண முதலானதினாலேயும் பூமியில் சரகியமந்திரநியாசங்க ளாலேயும்-ஆத்மாவில் அந்தரியாமியானஎன்னைமோக ங்களாலேயும், சர்வபூதங்களிலேயும் அந்தரியாமி பர மாத்மாவென்கிற சமபுத்தியினாலேயும் என்னைப் பூசிக் கக்கடவன் இந்தப்பிரகாரம் இந்தஸ்தானங்களிலே சங் கம்-சக்கரம்-கெதை-பத்மம்-இதுகளோடேகூடிக்கொண் டும்-சதுர்ப்புஜராயும்-சாந்தராயுமிருக்கிறஎன்னுடைய ரூபங்களைத்தியானம்பண்ணி என்னிடத்தில் நிச்சயமா யிராநின்றசித்தத்தையுடையவனாய் அர்ச்சிக்கக்கடவன் வாரீர்உத்தவரே, நீரெனக்குத்தாசனாயும், ஸ்நேகராயும் பந்துவாயுமிருக்கின்றீர், ஆகையினாலே சொல்லக்கூடா தரகசியமானாலும் அதையுமக்குச்சொலலுகிறேனென் றுபகவானவர் சொல்லுகின்றார்.

---

## ௰உ-வது அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

இதுவுங்கிருஷ்ணனியம்பிடுந்தத்வத்தைப்
பதிதராமுத்தவற்குப் பகர்ந்தனர்.

ஸ்ரீகிருஷ்ணபகவானவர் உத்தவருக்குத்தத்துவத் தைச்சொன்னாரென்று சொல்லப்படுகின்றது.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாரீர்உத்தவரே, சர்வசங்கத்தையும்நாசம்பண்ணுகி ன்றசாதுசங்கதியானது எப்படிஎன்னைவசியனாகப்பண் ணுகிறதோ அப்படிஆசனப் பிராணாயாமாதி யோகாப் பியாசமும், தத்துவவிவேகரூபமான சாங்கியக் கியான மும், அம்சைமுதலான தர்மமும் வேதாத்தியயனமும கிரிச்சிரமுதலானதபசும், சன்னியாசமும் அக்கினிகோ த்திரமுதலானயாகங்களும், தடாகம்தோப்புகள்-இது களுடையநிர்மாணமும், தானமும், ஏகாதசியுபவாசமு தலகனவிரதங்களும், தேவதா ஆராதனமும், ரகசியம ந்திரங்களும், கங்கைமுதலான தீர்த்தங்களும், இயம நி யமங்களும், என்னைவசியம்பண்ணமாட்டாதுகள். சச்ச ங்கத்தினால் தயித்தியர்கள்-ராக்ஷசர்கள்- மிருகங்கள்-ப ட்சிகள்-கந்தர்வர்கள்-அப்சரசுக்கள்-நாகங்கள்-சித்தர்கள் சாரணர்-ரஜசதாமச சுபாவங்களானமனுஷியர்கள்-அ ந்தயுகங்களிலே சச்சங்கததினால்என்னுடையபதத்தை யடைந்தார்கள். விருத்திராசுரன்-பிரகலாதனன்-விஷ பர்வர்-பலிச்சக்கிரவர்த்தி-பாணசுரன்-மயன்-விபீஷண ன்-சுக்கிரீபன்-அனுமான்- சாம்புவன்- கெசண்டாயு-து லாதரனென்னப்பட்ட வைசியன்-தர்ம வியாதனென்ன ப்பட்டவேடன்-திரிவிக்கிரியென்னப்பட்ட-குப்சைகோ பாலாள்-கோபஸ்திரீகள்நமக்கு அன்னத்தைக்கொண்டு வந்து கொடுத்த தீட்சதர்களுடைய பாரியைகள். இவ ர்கள்வேதசாஸ்திரங்களை அத்தியயனம்பண்ணினவர்க ளுமன்று, பெரியோர்களுடைய உபாசனையைப் பண் ணினவர்களுமன்று, விரதங்களையுடைய பேர்களுமன் று, தபசுபண்ணினபேர்களுமன்று, அப்படிப்பட்டஇவ ர்கள்சச்சங்கத்தினால் என்னை அடைந்தார்கள்.

யோகாப்பியாசத்தினாலேயும், சாங்கியக்கியானத்தினு லேயும், தானம் விரதம்-தபசு-தனம்- இதுகளாலேயும் மந்திரசெபங்கள்-வேதாத்தியயனங்கள்-சன்னியாசம்இ துகளாலேயும், மனுஷியர்கள்என்னுடையசாரூப்பியத் தையடைந்தார்கள். ஆகையினால்நீர்சுருதிஸ்மிருதிகளா ல்சொல்லப்பட்டிருக்கிற பிரவிர்த்திமார்க்கம் நிவிர்த்தி மார்க்கங்களையும்விட்டு சர்வப்பிராணிகளுக்கும் அந்த ரியாமியான என்னைஒருவனையே சர்வப் பிரகாரத்தினு லேயும்சரணமாக அடையக்கடவீரென்று சொல்லாநி ன்றஸ்ரீபகவானைப்பார்த்து ஸ்ரீஉத்தவர் சொல்லுகிறார்.

ஸ்ரீஉத்தவர்வாக்கியம்

வாரீர்யோகீஸ்வரர்களுக்கு ஈஸ்வரரே முன்னேவிகி த கர்மானுஷ்டானத்தைப் பண்ணச் சொல்லியும் இப் போது சர்வகர்மங்களையும்விட்டு உன்னையே சரணமா க அடையுமென்று சொல்லாநின்ற உம்முடைய வார்த் தையைக்கேட்டு என்னுடைய மனதிலிராநின்ற சந்தே கமானது நிவர்த்தியாகாமலிருக்கிறதென்றுசொல்லாநி ன்றஉத்தவரைப்பார்த்து ஸ்ரீபகவான்சொல்லுகிறார்.

ஸ்ரீபகவானுடைய வாக்கியம்.

வாரீர் உத்தவரே, சீவனுக்கு அந்தரியாமியானஈ ஸ்வரனானவர் ஆதியில்சூட்சமரூபமான ஒருவராகவே யிருந்து காலசக்தியினால் அங்கீகரிக்கப்பட்ட மாயாசக் தியையுடையவராய் சத்வாதிகுணங்களுக்குஆசிரியரா யும்லோகமாகிற பத்மத்துக்குக்காரணமாயும் வெகுரூ பத்தையுடையவர்போலவிளங்கினர். எப்படியானால்வி த்தானதுக்ஷேத்திரத்தையடைந்து விருட்சம்சாகை இ

லைகள்முதலான அனேகரூபமாகக் காணப்படுகிறதோ அப்படிபோல பரமாத்மாவானவர் தம்முடையசக்திஸ்வரூபமான பிரகிருதியை ஆசரியித்து வெகுரூபமான பிரபஞ்சம்போலப் பிரகாசிக்கின்றார், வஸ்திரமானது நூல்களினால் குறுக்கும் நெடுக்குமாயிருக்கிறதுபோலப்பரமாத்மாவினிடத்தில் வியஷ்டி சமஷ்டிரூபமானஇந்தசமஸ்தபிரபஞ்சமும் குறுக்கும் நெடுக்குமாகக்காணப்படுகின்றது,யாதொருபுருஷன் ஆசாரியர்களால்இந்தப்பிரகாரம் வெகுரூபமாயும்பிரகிருதிக்குஆசிரயராயுமிருக்கிற பரமாத்மாவை யறிகின்றானோ அந்தப்புருஷன் வேதங்களுடைய தத்துவார்த்தத்தை யறிந்தவனாவன், விவேகியானநீர் இந்தப்பிரகாரம குருவினுடைய உபாசனையினாலேயும் ஏகாந்த பக்தியினாலேயும் உண்டாகின்ற தத்துவக்கியானமாகிறமகாதீட்சணமானகோடாலியினால் சீவனுக்குஆவரணமாயும் திரிகுணஸ்வரூபனாயுமிருக்கிற லிங்க சரீரத்தைச் சேதித்துப்போட்டு பரமாத்மாவினிடத்தில் நிஷ்டையையுடையவனாய் அவருடைய சாரூப்பியத்தையடைந்து பிற்பாடுதத்துவக்கியானரூபமானசாதனத்தையும்விட்டுவிடக்கடவீர்.

---

௰௬-வது-அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

பின்னுங்கிருஷ்ணன்பேசிமுேத்தவருக்கு
இன்னலின்றி யியம்பினர்தத்வத்தை.

இதுவும் ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் உத்தவருக்குத் தத்துவத்தைச்சொன்னாரென்று சொலலப்படுகின்றது.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாரீர்உத்தவரே,சத்துவம்-ரஜசு-தமசு-என்னப்பட்ட இந்தமூன்றும் பிரகிருதியினுடையகுணங்கள் ஆத்மாவினுடையகுணங்களன்று, ஆகையால்சாத்விகவிர்த்தியினால்ரஜசுதமோ குணங்களைச்செயிக்கக்கடவன்அந்த சாத்விகருணத்தை சாந்திஸ்வரூபமான சாத்துவகுணத்தினாலேயே ஜெயிக்ககடவன், புருஷர்களுக்கு சாத்வீகர்களுடைய உபாசனையினால் பரிசுத்தமானசத்வகுணமானது உண்டாம்,அந்தச்சத்வகுணத்தினால் என்னுடையபக்திஸ்வரூபமான தர்மமானதுண்டாகும், அந்தத்தர்மமானதுரஜோகுணதமோகுணங்களை நாசம்பண்ணிப்போடும், சர்வோத்தமமான சத்வகுணவிர்த்தியானதுண்டாகும், ரஜோகுணம்-தமோகுணம்- நசிக்கப்பட்டுப்போகையில் அதினால்வராநின்ற அதர்மமும் நசித்துப்போம், சாஸ்திரம்-தீர்த்தம்-ஜென்மம்-பிரதேசம் காலம்-கர்மம்-தீட்சை-தியானம்-மந்திரம்-கியானம்-இந்தப்பத்தும் குணத்துக்குக்காரணங்கள். இதுகளுக்குள்ளேஎதைப்பெரியோர்கள் சிலாகிக்கிறார்களோ அதுசாத்வீகமாகும், எதைநிந்திக்கிறார்களோ அது தாமசமாகும். எதைச்சிலாகிக்காமலும் நிந்தியாமலு மிருக்கிறார்களோ அதுராஜசமாகும், புருஷனானவன்சத்துவகுணவிர்த்தியின்பொருட்டு சாத்விகங்களான சாஸ்திரங்கள் முதலானதுகளையே சேவிக்கக்கடவன் சாத்விகங்களெதுவென்றால்-பிரவிர்த்திசாஸ்திரம்- பாஷாண்டசாஸ்திரம்-இதுகளைச்சேவியாமல் நிவர்த்தி சாஸ்திரங்களையே சேவிக்கிறதும், சந்தனம் மத்தியம்இதுகளைச் சேவியாமல்ஸ்ரீபாததீர்த்தம் கங்கைமுதலான தீர்த்தங்களைச்சேவிக்கிறதும், பிரவிர்த்திமார்க்க நிஷ்டாளாயும்துராசாரராளாயுமிருக்கிற பெயரைச்சேவியாமல் நிவர்த்திமார்க்க நிஷ்டாளானபாகவதாளைச்சேவிக்கிறதும், ராசவீதிகளில்சூதுஸ்தானங்கள் இதுகளையாசரியாமல் ஏகாந்ததேசத்தை ஆசரிக்கிறதுகியானமுதலானதிலேபிரதோஷகாலம் அர்த்தராத்திரிஇதுகளை ஆசரியாமல் பிராமணமுகூர்த்தத்தையேஆசரிக்கிறதும், காமியம் அபிசாரமுதலான கர்மங்களைச்செய்யாமல் பகவத்பிரீதியாக நித்தியகர்மங்களைச்செய்கிறதும், சாக்தாள்-சூத்திராள் இவாள்முதலானதீட்சையைஆசரியாமல் வைஷ்ணவதீட்சையைஆசரிக்கிறதும்ஸ்திரீகள்-சத்துருக்கள்இவர் முதலானபேர்களைத் தியானமபண்ணாமல் ஸ்ரீமந்நாராயணனையேதியானம்பண்ணுகிறதும். காமியமந்திரங்கள்-சூத்திரமந்திரங்கள் இதுகளைசசேவியாமல் பிரணவம் அஷ்டாட்சரமந்திரங்களையேசேவிக்கிறதும், தேகம்-கிரகம் முதலானதுகளைச்சிந்தியாமல் பரமாத்மசிந்தையைப்பண்ணுகிறதும் சாத்வீகங்களான இதுகள்புருஷனுக்கு சத்வகுணவிர்த்தியின்பொருட்டு ஆகின்றதுஎப்போது பரமாத்மாவினுடைய சாட்சாத்காரமுண்டாகுமோ எப்போதுஸ்தூலதேக சூட்சுமதேகங்களுக்குக் காரணங்களானசத்வாதிகுணங்கள் நசிக்குமோ அந்தமட்டுக்கும்சாத்விகங்களான நிவர்த்தி சாஸ்திரமுதலானதுகளை ஆசரியிக்கக்கடவன்எப்படியானால், மூங்கில்கள் ஒன்றுக்கொன்று உரைபடுகிறதினாலுண்டாகாநின்ற அக்கினியானதுஅந்தமூங்கில் வனத்தைத் தகித்துப்போட்டுதானும் சாந்தியையடைவதுபோலச் சத்வாதி குணங்களுடையவித்தியாசத்தினாலுண்டாகாநின்ற தேகமும்கியானத்தினாலேதகிக்கப்பட்டதாய் தானே சாந்தியையடையுமென்றுசொல்லாநின்ற பகவானைப்பார்த்து உத்தவர் சொல்லுகின்றார்.

உத்தவருடையவாக்கியம்.

வாரீர்ஸ்ரீ கிருஷ்ணரே மனிதர்கள் சப்தாதிவிஷயங்களைமிகவும்ஆபத்துகளுக்குஸ்தானமென்றறிந்திருக்கிறார்கள் அறிந்திருந்தாலும்நாய்களானதுகள் மிரட்டிஅடித்தாலும்திரும்பவும்வீடுகளில் பிரவேசிப்பதுபோலவும் கழுதைகளானதுகள் பெண்கழுதையினுடையபுறங்கால்களாலேஉதைபட்டாலும்திரும்பவும் அதுகளைஅனுவர்த்திப்பதுபோலவும் ஆடுகளானதுகள்கொல்லுகைக்

குக்கொண்டுபோகும்போது லச்சையில்லாமல் உச்சாக
த்துடனேயிருக்கிறதுபோலவும் சப்தாதிவிஷயங்கள்ஆ
பத்துக்ருஸ்தானமென்று அறிந்திருந்தாலும்அந்தவிஷ
யங்களைமனுஷியர்கள்என்னவிதமாய்அனுபவிக்கின்றார்
களென்றுபிரஸனம்பண்ணுகின்ற உத்தவனைப்பார்த்து
ஸ்ரீபகவானானவர்சொல்லுகின்றார்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாரீர்உத்தவரே விவேகசூனியனான புருஷனுக்குத்
தேகாதிகளில்நானென்கிறவிபரீதபுத்தியானது இருதய
த்தில்நிச்சயமாக உண்டாகின்றதந்த அகங்காரத்தினால்
சத்வகுணப்பிரதானமாயிருந்தாலும் மனதைதுக்கரூப
மானரசோகுணமானதுவியாபிக்கிறது ரசோகுணத்து
டன்கூடிக்கொண்டிருக்கிறமனதினுடைய விகல்பசங்க
ல்பமானதுஉண்டாகிய அந்தசங்கல்பத்தினால்இந்தவிஷ
யத்தினதுரூபம்மகாவுத்தமமாயிருக்கிறது இதினுடை
யசுபாவமானதுமிகவும் ஆச்சரியகரமாயிருக்குதென்று
குணத்தைத்தியானம்பண்ணுகிறதினால் புருஷனுக்குப்
பரிகரிக்கக்கூடாதகாமமானதுஉண்டாகின்றதுபிற்பாடு
இந்திரியஜெயமில்லாதவனும் காமவசியனும் ரசோ
குணத்தினுடையவேகத்தினால் மோகிக்கபட்டிருக்கிற
புருஷனானவன்கர்மங்கள்துக்கஏதுக்களென்று அறிந்தி
ருந்தாலும்அந்தவிஷயங்களை யனுபவிப்பதற்குத்துக்க
த்தையேஉண்டாக்காநின்ற கர்மங்களைப்பண்ணுகிறான்
புருஷனானவன் ரசோகுணதமோகுணங்களால் வியா
பிக்கப்பட்ட புத்தியை யுடையவனாகவே யிருப்பன் ஆ
னாலும் விவேகியான புருஷனோவென்றால் சாக்கிரதை
யுடையவனாய் விஷயங்களில் தோஷபுத்தியினால் மன
தை நிக்கிரகித்து அந்த விஷயங்களில் அகப்படாதவ
னா யிருப்பன் வியர்த்தசஞ்சாரங்களைவிட்டு ஸ்திரமா
ன ஆசனத்தை யுடையவனும் பிராணநிரோதத்தை
யுடையவனும் ஆலஸ்ய மில்லாதவனும் யோகதா
ரணையை யுடையவனுமா யிருக்கிறபுருஷனானவன் திரி
காலத்திலேயும் பரமானந்த ரூபனான என்னிடத்தில்
மனதைச் சமர்ப்பித்துக்கொண்டு மெள்ளமெள்ள ச
மாதிநிஷ்டனாய்விடுவன் விவேகியான புருஷனானவன்
சமஸ்த விஷயங்களில்நின்றும் மனதையிழுத்துபரமா
னந்தஸ்வரூபனான என்னிடத்தில் மனதைநிச்சலமாகச்
சமர்ப்பிக்கப்படுவன் (அதுபோல) என்னுடைய சிஷிய
ர்களான ஜனகர் முதலானயோகிகளால் செய்யப்பட்ட
யோகாப் பியாசமென்றுஞ் சொல்லப் படுகிறதென்று
சொல்லுகின்ற ஸ்ரீபகவானைப்பார்த்து ஸ்ரீஉத்தவர்சொ
ல்லுகின்றார்.

ஸ்ரீ உத்தவருடையவாக்கியம்.

வாரீர்ப்கவானே, தேவரீர் எப்போதெந்தரூபத்தினா
ல்ஜனகாதியோகிகளுக்கு யோகத்தை உபதேசித்தீரோ
அந்தகாலத்தையும் அந்தரூபத்தையும்எனக்குச்சொல்
லக்கடவீரென்று பிரார்த்தியாநின்ற உத்தவனைப்பார்த்
துஸ்ரீபகவானானவர் சொலலுகிறார்.

வாரீர்உத்தவரே, பிர்மாவினுடைய மானசபுத்திரர்க
ளானஜனகாதியோகிகள் பிதாவான பிர்மாவைப் போய
டைந்து யோகமார்க்கத்தினுடைய அறியக் கூடாதநிஷ்
டையைக்கேட்டார்கள். (அதாவது)வாரீர்பிரபுவேமன
தானதுராகத்து வேஷாதிகளால்விஷயங்களிலிருக்கின்
றது. அனுபவிக்கப்பட்ட அந்தவிஷயங்களும் வாசனா
ரூபமாகமனதில் பிரவேசித்திருக்கின்றது, அந்த விஷ
யங்களை அதிக்கிரமிக்கமேணுமென்று இச்சையுடையவ
னையும்மோட்சத்தில் ஆசையையுடையவனையுமிருக்கிற
புருஷனுக்குமனதுவிஷயங்களில் விழாமலும்விஷயங்
கள்மனதில்விழாமலும் எப்படியிருக்கும் அதைச்சொ
ல்லக்கடவீர்களென்று கேளாநின்றசனகாதியோகிகளை
ப்பார்த்துபிர்மாவானவாகர்மத்திலேயேபுத்தியையுடை
யவராய்யாதொரு பரமாத்மாவை அறியாமலிருப்பதினா
ல்இப்படிப்பட்டபிரஸனம்பண்ணினார்களென்றுநினைத்
து அந்தப்பிர்மாவானவா அவர்களுடைய பிரசனத்துக்
குஉத்தரவையறியவேணுமென்கிற இச்சையினால் என்
னைச்சிந்தித்தார். அப்போது நான்அம்சரூபமானஅந்த
பிர்மாவினுடைய சமீபத்தில்ஆவிற்பவிக்கஅந்தஜனகா
தியோகீஸ்வரர்கள் பிர்மாவைமுன்னிட்டுக்கொண்டுஅ
ம்சரூபியானஎன்னைப்பார்த்துசமீபத்தில்வந்துசாஷ்டா
ங்கமாகப்பிரணமம்பண்ணி நீராரென்று கேட்டார்கள்
அப்போதுதத்துவத்தை யறியவேணுமென்று இச்சை
யுடையவர்களான அந்தசனகாதியோகிகளின்பொருட்
டுநான்சொன்னவசனத்தை நீர் கேழ்க்கக்கடவீர்அதெ
ன்னவென்னில்.

வாருங்கள் பிராமணோத்தமர்களே, உங்களுடை
சிரசினமானது பரமாத்மா விஷயமாகப் பண்ணப் பட்
டதாயில்லாவிட்டால் பரமாத்மாவுக்கு உபாதியானதே
கங்கள் விஷயமாகப் பண்ணப்பட்டதா ;பரமாத்மா வி
ஷயமாகப் பணணப்பட்ட தென்றால் பரமாத்மா ஒரு
வரானபடியினாலே பிரஸனம் பண்ணுகின்ற 'உங்களுக்
கும்உத்தரவுசொல்லுகிறவருக்கும்அந்தரியாமியாய் ஆ
சிரயராயிருக்கிறபரமாத்மாஒருவரல்லவாபஞ்சபூதரூப
மானதேகவிஷயமாகப்பிரஸனம்பண்ணப்பட்டாலும்ப
ஞ்சபூதங்களாலுண்டாகாநின்றதேவமனுஷியாதிதேகங்
களபஞ்சபூதகாரியங்களாயிருக்கையில் நீயாரென்றுகே
ளாநின்றஉங்களுடையஇந்தப்பிரஸனமானது வாக்கினு
டையஆரம்பமாத்திரமேதவிர பிரயோசனமில்லையல்ல
வாமனதினாலெயும் வாக்கினாலேயும் மற்றஇந்திரியங்க
ளாலேயும் எந்தெந்த வஸ்துவானது கிரகிக்கப்படுகிற
தோஅந்தந்தவஸ்துவானதுநானாகவேயிருக்கிறேன்என்
னைக்காட்டிலும்வேறேயொன்று மில்லையென்றுபரமாத

மசிருஷ்டியினு லறியக்கடவீர்கள் வாருங்கள் புத்திரர்க
ளே மனதானது விஷயங்களில்பிரவேசித்திருக்கின்றது
விஷயங்களும்மனதிலே பிரவேசித்துக்கொண்டேயிரு
க்கிறதுகளென்றுசொன்னது எதார்த்தமேஇந்தவிஷய
ங்களும்மனதும்இரண்டுங்கூடிக்கொண்டுஎன்னுடைய
ஸ்வரூபனனசீவனுக்குதேகமாயிருக்கின்றது மனதான
து அடிக்கடிவிஷயஙகளுடைய சேவையினல்அந்தவிஷ
யங்களில்விழுகின்றதுவிஷயங்களும் வாசனரூபமாகச்
சித்தத்திலேயுண்டாகின்றதுகள் இப்படியிராநின்ற இவ்
விரண்டையும் என்னுடைய ஸ்வரூபக்கியானத்தை யு
டையவனுப்விட்டுவிடக்கடவன் சாக்ரம் - சொற்பனம்-
சுழுத்தி-யென்னப்பட்ட இந்தமூன்றவஸ்தைகளும்சத்
வாதிகுணங்களாலுண்டாகின்றபுத்தியினுடையவிர்த்தி
கள்சீவனேவென்ருல்அந்தசாக்ரணம் முதலானஅவஸ்
தைகளுக்குவிலட்சணனயும்அந்தஅவஸ்தைகளில்லாத
வனயும்அதுகளுக்குச்சாட்சியாயும்நிச்சயிக்கப்பட்டிரு;
க்கிருன்எப்போதுசீவனுக்கு சஙகாரகாரணமானபுத்தி
யினுடையசம்மந்தமுண்டாயிருக்கிறதோ அந்தப்புத்தி
சம்மந்தமானதுசீவனுக்குக் குணவிர்த்திகளான சாக்ர
ணதிஅவஸ்தைகளைக்கொடுக்கின்றது ஆகையால்பரமா
னந்தரூபனனஎன்னிடத்தில்நிச்சலமானமனதையுடை
யவனுய்சங்காரஏதுவானபுத்திசம்மந்தத்தைவிட்டுவிட
க்கடவன்எபபோது விட்டுவிடுகிருனே அப்போதேவி
ஷயங்களுக்கும்மனதுக்கும் ஒன்றுக்கொன்று சம்மந்த
மில்லாமலிருக்கும்கியானியானவன் அகங்காரத்தினல்
செய்யப்பட்ட இந்தப்புத்திசம்பந்தத்தைத் தனக்குப்பர
மாத்மாவினுடைய ஆனந்தானுபவத்துக்கு விரோதமா
னபடியால்அனர்த்தஏதுவென்றும் துக்கசாகரமென்று
மஅறிந்தவனயும் என்னிடத்திலேயே ஸ்திரமானமன
தையுடையவனுய்சங்காரஏதுவானபுத்தியில் அபிமான
த்தையும் அதினுல்பண்ணப்படாநின்றபோகங்களில்ஆ
சையையும்விட்டுவிடக்கடவன்.

இந்தஜெகத்துக்குவிலாசமானதுமனேவிகாரமானப
டியாலும், நாசத்தையுடைத் தானதாலும், சொற்பனம்
போலவும் மிகவும்சஞ்சலமானபடியினுல்கழற்றப்பட்ட
கொள்ளியினுடையசக்கிராகாரம்போலவும் பிர்ம்மமெ
ன்றுபார்க்கக்கடவன்கியானஸ்வரூபனனை ஒருபரப்பிர்ம்
மமேஅனேகம்போலவிளங்குகின்றதுயாதொருமூன்று
விதமானசத்வாதிகுணங்களுடையபரிணாமத்தினல்பண்
ணப்பட்டபிரபஞ்சபேதமானதுமாயையாயிருக்கின்றது
ஆகையினல்காணப்படாநின்றஇந்தப்பிரபஞ்சத்தில் தி
ருஷ்டியைவையாமல்சங்கல்பசூனியனயும் இச்சையில்
லாதவனயும்மனேவாக்கு காயங்களுடைய வியாபாரத்
தைவிட்டவனுய்பரமாத்மாவின் சுகானுபவத்தையுடை
யவனுகவிருக்கக்கடவன்.

வாருங்கள்பிராமணேத்தமர்களே ஆத்மா அனத்மவி
வேகம் அஷ்டாங்கயோகம் இதுகளுடைய ரகசியத்தை
நானுங்களுக்குசசொன்னேன் உங்களுடையதர்மத்தை
யறியவேணுமென்கிறஇச்சையினல் வந்திராநின்றஎன்
னைசாக்ஷாத்விஷ்ணுவென்று அறியக்கடவீர்கள்நான்சா
ங்கியக்கியானத்துக்கும்அஷ்டாங்கயோகத்துக்கும்சத்தி
யத்துக்கும் அறியப்படாததர்மத்திற்கும் பிரபாவத்துக்
கும்ஸ்ரீமகாலட்சுமிக்கும்கீர்த்திக்கும்இந்திரியநிக்கிரகத்
துக்கும்இதுகளுக்குமுக்கியஆசிரயனுக நிற்பனென்று
சொன்னதைக்கேட்டுஎன்னுல்சந்தேகநிவர்த்திபண்ணி
க்கொள்ளாநின்றஜனகர்முதலானரிஷிகள் பரமமானபக்
தியால்என்னைப்பூஜித்துதோத்திரம்பண்ணினர்கள் அ
ந்தரிஷிகளால்ஸ்தோத்திரம் பண்ணப்பட்டநான்பிர்மா
பார்த்துக்கொண்டிருககும்போதேஎன்னுடையஎதாஸ்
தானமானஸ்ரீவைகுந்தத்தையடைந்தேன்.

---

### ௰௯ -வது - அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

மேலுங்கண்ணன் மிகுத்திடுமுத்தவற்
கேலவேதத்துவத்தையியம்பினர்.

இதுவும்ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் உத்தவருக்குத்த
த்துவத்தைச்சொன்னுரென்றுசொல்லப்படுகின்றது.

உத்தவருடையவாக்கியம்.

வாரீர்ஸ்ரீகிருஷ்ணரேவேதவாதிகள்சிரேயசுக்குச்சாத
னங்களைவெகுவாகச்சொல்லுகின்ருர்கள்அந்தசாதனங்
களுக்குள்சிரெயசைக்குறித்துசமஸ்த சாதனங்களும்வி
கல்பரூபமாகமுக்கியமாயிருக்கின்றதுகளா இலலாவிட்
டால்ஒன்றேமுக்கியமாகவிருக்கின்றதா யாதொருபக்தி
யோகத்தினல்மனதானது சமஸ்தவிஷயங்களிலேயுமச
ங்கத்தைவிட்டுவிட்டு உம்மிடத்திலேயேபிரவேசிக்கின்
றதோஏதுவில்லாமலுண்டாகின்ற அந்தபக்தியோகமா
னது உம்மாலேசிரோயசுக்குச் சாதனமாகச்சொல்லபபட்
டிருக்கின்றது இதுகளெல்லாம்சிரோயசுககு முக்கியசாத
னங்களா இல்லாவிட்டால் ஒன்றே முக்கியமா அதைச
சொல்லக்கடவீரென்று கேளாநின்ற உத்தவனைப்பார்த்
துப்பகவானனவர்சொல்லுகின்ருர்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாரீர்உத்தவரேபிரளயத்திலே வெகுகாலத்திற்குமு
ன்நஷ்டமாயும்வேதமென்றுபெயரையுடையதாயுமிருக்
கிறஇந்தவாக்கானது ஆதியில்என்னல் பிர்மாவின்பொ
ருட்டுச்சொல்லப்பட்டது அந்தப்பிர்ம்மாவினலேசுமக்
குஜேஷ்டபுத்திரனுன மனுவின்பொருட்டு அந்தவேத
மானதுசொல்லப்பட்டதுபிற்பாடுபிருகுமகாரிஷி-மரீசி
அத்திரி ஆங்கீரசு.புலஸ்தியர்-புலகாகிருதுஎன்னப்பட்
ட இந்த ஏழுபிர்ம்மரிஷிகளும் அந்தவேதத்தை கிரகித்

தார்கள் அவர்களிடத்திலின்றும் அவாளுடைய புத்திராளானதேவா-தானவாள்-குய்யகாள்- மனுஷியாள்-சித்தாள்-கந்தர்வாள்-மூதலானசமஸ்த ஜெனங்களும்பிரபித்தார்கள்சத்துவரசஸ் தமோகுணங்களைக் காரணமாகவுடையதுகள்ளான அந்தத்தேவர்கள் முதலான பேர்களுடையபிரகிருதிகளஅனேகவிதங்களாயிருக்கின்றதுகள் அந்தப்பிரகிருதிகளால் தேவர்கள் அசுரமனுஷியர்கள் மூதலானபிராணிகளும்அவர்களுடைய புத்திகளும்வேறுவேறாயிருக்கின்றதுகள்சமஸ்தபிராணிகளுக்கும்அவனவனுடையபிரகிருதிஎப்படிப்பட்டதோ அந்தப்பிரகிருதிக்குஅனுகுணமாகவேதார்த்தவியாக்கியாளரூபங்களாயிருக்கிறவாக்குகளும்விசித்திரங்களாக வுண்டாகிறதுகள்இந்தப்பிரகாரம்பிரகிருதிகள்வேறுவேறாய்விசித்திரங்களாயிருக்கிறபடியால் அத்தியயன மில்லாதவர்களாயிருக்கின்றசிலமனுஷியர்களுடையமதிகள் உபதேசபரம்பரையினல்வேறுவேறா யிருக்கின்றதுகள்சிலபேர்கள்வேதங்களுக்குவிருத்தமான அர்த்தத்தில்புத்தியையுடையவர்களாக விருக்கின்றார்கள் என்னுடைய மாய்கையினல்மோகிக்கப்பட்டபுத்தியையுடையபுருஷர்கள் தங்கள்தங்கள்கர்மானுகுணமாகவும்பிச்சானுகுணமாகவும்சிரேயசுக்குச்சாதனத்தைநானாவிதமாகச்சொல்லுகிறார்கள்மீமாங்கிசகாள்தர்மத்தைச் சிரேயசுக்குச் சாதனமாகவும்காவியஅலங்காரகர்த்தாக்கள் எசசைசிரேயசுக்குச்சாதனமென்றும்யோக சாஸ்திரக்கியாள் சத்தியத்தையும்மனோ நிக்கிரகத்தையும்பரகேந்திரியநிக்கிரகத்தையும் சிரேயசுக்குச்சாதனமாகவும், நீதி சாஸ்திரக்கியாளஅயுஸ்வரியத்தையே புருஷார்த்தமென்றும் பவுத்திரர்கள்தியாகபோகங்களைச் சிரேயசுக்குச்சாதனமென்றும், வைதீகர்கள்-எக்கியம்-தானம்-தபசு-விரதங்கள் இயமனியமங்கள்-இதுகளைச் சிரேயசுக்குச் சாதனமென்றும் சொல்லுகின்றார்கள்.

வாரீர்உத்தவரோ என்னிடத்தில் சமர்ப்பிக்கப்பட்டமனதையுடையவனும், சர்வ விஷயங்களிலேயும்அபேட்சையில்லாதவனுமிருக்கிற புருஷனுக்குப்பரமானந்தரூபனானஎன்னுடைய ஸ்வரூபானுபவத்தினலேயுண்டாகின்றசுகமானது விஷயங்களில் மனதையுடையபுருஷர்களுக்குஎப்படி யுண்டாகப்போகிறது நிஷ்காமனும்சமதமாதி குணங்களை யுடையவனும் சர்வத்திலேயும்பரமாத்ம புத்தியையுடையவனும் என்னுடையஸ்வரூபானுபவத்தினல் சந்துஷ்டமான மனதையுடையவனுமிருக்கிறபுருஷனுக்கு சமஸ்ததிக்குகளும் சுவரூபங்களாகவிருக்கும் என்னிடத்தில் சமர்ப்பிக்கப்பட்டமனதையுடைய புருஷன் பிர்மலோகாதிபத்தியத்தையும்சுவர்க்கலோகாதிபத்தியத்தையும் இச்சியான். வாரீர்உத்தவரோ புருஷனனவன் சிதேந்திரியனய்ஸ்திரீகளின்சங்கத்தையும் ஸ்திரீசங்கமபண்ணுகிறவர்கள் சங்கத்தையும்விட்டு நிர்ப்பயமாயும் நிர்சனமாயுமிருக்கிறதேசத்திலிருந்துகொண்டு ஆலஸ்யமில்லாதவனய்என்னைதியானம் பண்ணக்கடவனென்றுசொல்லாநின்றஸ்ரீபகவானைப்பார்த்து ஸ்ரீஉத்தவர்சொல்லுகிறார்.

ஸ்ரீஉத்தவருடைய வாக்கியம்.

வாரீர் ஸ்ரீஅரவிந்தராட்சரோ, மோட்சத்தைக்கோருகின்றபுருஷனனவன் உம்மை எந்தப்படிக்குஸ்வரூபத்தையுடையவராகத் தியானம்பண்ணுவன், தியானம் பண்ணுகிறகிரமத்தை எனக்குநீர் சொல்லக்கடவீரென்றுபிரார்த்தியாநின்ற உத்தவரைப் பார்த்து பகவானனவர்சொல்லுகின்றார்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாரீர் உத்தவரோ, மிகவும் உயர்ந்திராமலும்தாழ்ந்திராமலும் சமமாயிருக்கிறஆசனத்திலேஅப்படிஇப்படி அசையாமல் சமமான சரீரத்தை யுடையவனயிருந்து கைகளை மடியில்வைத்துக்கொண்டுதன்னுடையமூக்குநுனியிலே திருஷ்டியை வைக்கப்பட்டவனயும் சிதேந்திரியனயும் பிராணனுடைய மார்க்கத்தைப்பூரக்கும்பகரேசகங்களாலேயும் ரேசக்கும்பக பூரகங்களாலேயும் சோதித்துக்கொண்டு மெள்ளமெள்ள யோகாப்பியாசம்பண்ணக்கடவன், மூலாதாரத்தைப் பிடித்துக்கொண்டுசிரசுபரியந்தம் தாமரைக்கொடி நூற்போலவும் சூட்சுமமமாயும் இடைவிடாமல் கண்டா நாதத்துக்குச் சமானமாயு மிருக்கிற ஓங்காரத்தை மனதில் பிராணனல்பிரகாசம்பண்ணிவைத்துபிற்பாடு அந்தஓங்காரநாதத்தில்உதார்த்தநாதத்தைஸ்திரமாகப்பண்ணக்கடவன்இந்தப்பிரகாரம்பிரணவத்தோடுகூடிக்கொண்டிருக்கிறசுவாசநிக்கிரகத்தைத்திரிகாலத்திலேயும்பவ்வத்துதிரம் அப்பியாசம்பண்ணுகிற புருஷனனவன்ஒருமாதத்துக்குப்பிற்பாடுவ்வாசெயத்தையுடையவனவன் சரீரத்துக்குள்ளேயிராநின்றும்ஊர்த்துவநாளமாயும்அதோமுகமாயும்மிர்துவான வாழைப்பூப்போலவுமிருக்கிறஇருதயகமலத்தைஊர்த்துவமுகமாயும்மலர்ந்திருக்கிறதாயும்அஷ்டதளங்களையுடையதாயும்உள்ளேகர்ணிகையையுடையதாயுமாகத் தியானம்பண்ணி அந்தக்கர்ணிகையிலேமுன்னே சூரியனையும் அதின்பிறகுசந்திரனையும்அதின்பிறகுஅக்கினியையும்தியானம்பண்ணக்கடவன்இந்த அக்கினியினுடையமத்தியத்தில் தியானத்துக்குவிஷயமாயும்மங்கள்கரமாயும்பரிபூர்ணமாயும் மனேக்கியங்களாயுமிருக்கிறசதுர்ப் புஜங்களையும் சுந்தரமாயுமிருக்கிறகண்டத்தையும்சோபனங்களானகபோலங்களையும்மனேக்கியமான புன்சிரிப்பையும்கர்ணங்களிலேபிரகாசியாநின்றமகரகுண்டலங்களை யுடையதாயும் பீதாம்பரதாரியாயும்நீலமேகசாமளமாயும்ஸ்ரீவச்சசின்

னத்தையுடையதாயும் ஸ்ரீமகாலட்சுமிக்கு வாசஸ்தானமாயும்-சங்கம்-சக்கரம்-கெதை- பத்மம்-வனமாலை-இதுகளால் அலங்கரிக்கப்பட்டும் ரவைரத்தினமயமாயும்சிலம்புகளால்மிகவும்பிரகாசியாநின்றதிருவடிகளையுடையதாயும்கவுஸ்துவாபரணத்தினுடையதேசஸினுல்பிரகாசியாநின்றகிரீடம்-கடகம்-கடிசூத்திரம்-தோள்வளைகள்-இதுகளால்அலங்கரிக்கப்பட்டுமிருக்கிற என்னுடையரூபத்தைத்தியானம்பண்ணிசர்வாங்கங்களிலேயும் மனதைச்சமர்ப்பிக்கக்கடவன்-இந்தப்பிரகாரம்மிகவும்தீக்ஷணமானதியானத்தினுல்மனதையென்னிடத்திலேயே லயம்பண்ணுகின்றயோகர்க்குதிரஷ்டாவென்றுமதிரிசியமென்றும்தெரிசனமென்றும்இந்தப்பிர்மமானது மிகவுஞ்சாந்தியையடைகின்றது,

---

௰௫ - வது - அத்தியாயம்,

மட்டுவிருத்தம்,

மேதினியில் மிகுத்திடுங்கிருஷ்ணனும்
குதில்தத்துவத் தைச்சொல்லினுரரோ.

இதுவும் ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் உத்தவருக்குத் தத்துவத்தைச்சொன்னுரொன்று சொல்லப்படுகின்றது.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாரீர் உத்தவரே, சிதேந்திரியனையும் ஸ்திரசித்தனையும்சுவாசஜெயத்தை யுடையவனையும்என்னிடத்தில்ஸ்திரமானமனதைச் சமர்ப்பித்திராநின்றயோகிக்குஅணிமாதிசித்தி களுண்டாகுமென்று சொல்லாநின்ற ஸ்ரீபகவானைப்பார்தது ஸ்ரீஉத்தவர்சொல்லுகின்றூர்.

ஸ்ரீஉத்தவருடையவாக்கியம்

வாரீர்ஸ்ரீஅச்சுதரே,யோகிக்கு எப்படிப்பட்டதாரணையினுலே சித்திகளுண்டாம் அந்தத்தாரணை எப்படிப்பட்டது,சித்திகள்எத்தனை இதுகளை எனக்குச்சொல்லக்கடவீரென்று பிரசனம்பண்ணுகின்ற உத்தவரைப்பார்த்துபகவானனவர்சொல்லுகின்றூர்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்

வாரீர்உத்தவரோசித்திகள்பதினெட்டு விதமென்றும் யோகதாரணைகளபதினெட்டுவிதமென்றும்,யோகசாஸ்திரங்களை அறிந்தபெரியோர்களால் சொல்லப்படுகிறது அந்தசித்திகளுக்குள்ளே என்னை ஆசிரயமாக வுடையதுகளானஎட்டுவிதசித்திகள் முக்கியங்களாயிருக்கின்றதுகள்மற்றபத்துசித்திகளும்சத்துவகுண உக்கிருஷ்டத்தைக்காரணமாகவுடையது களாயிருக்கின்றதுகள்அஷ்டசித்திகள் எப்படியென்றுல்,அணிமை-மகிமை-லகிமைஇந்தமூன்றும் தேகத்தினுடையசித்திகள்சமஸ்தபிராணிகளுடைய இந்திரியங்களோடு கூடஅந்தந்த இந்திரியாபிமானி தேவதாரூபமாகச் சம்பந்தப்பட்டிருக்கின்றது

பிராப்தியென்னப்பட்டசித்தி பரலோகத்திலே உண்டாயிருக்கிற வஸ்துக்களிலேயும் இகலோகத்திலே தெரியுனயோக்கியங்களான வஸ்துக்களிலேயும் பூமிக்குள்ளே காணப்படாமல் வைத்திருக்கப்பட்ட வஸ்துக்களிலேசம்போகதெரிசன சாமார்த்தியமானது பிரகாமியசித்தியென்று சொல்லப்படும் மாயையானது சக்தியென்னப்பட்ட சித்திஅந்தமாயையினுடைய அம்சமாயிருக்கிற பிராணிகளுக்கும் அந்தமாயைக்கும்நியாமகனுயிருக்குகைஈசிதாவென்னப்பட்டசித்திசப்தாதி விஷயபோகத்திலேசங்கைப்படாமலிருக்குகை, வசிதைஎன்னப்பட்டசித்திஎங்கெந்தசுகத்தைக்கோருகிருனே அந்தச்சுகத்தினுடைய கரையைக்காண்கிறது பிராகாமியமென்னப்பட்டசித்தி-வாரீர்உத்தவரே இந்தஎட்டுசித்திகளும் எனக்குசுபாவசித்திகளாயும நிரதிசயங்களாயுமிருக்கிறதுகள் சத்துவகுணத்தை ஏதுவாகவுடையதுகளானபத்துசித்திகள்எப்படியென்றுல் இந்தத்தேகத்திலே பசிதாகங்களைஜெயித்திருக்குகை,தூரதேசத்திலேஉண்டாகாநின்ற சப்தங்களைக் கேழ்க்குகைதூரதேசத்திலே யிராநின்றவஸ்துவைப்பார்க்குகை மனோவேகமாகத்தேகம் சஞ்சரிக்குகை தான்கோறின ரூபத்தை எடுக்குகை பரகாயப்பிரவேசம்பண்ணுகை - தனக்குவேணுமென்றபோதுமரணத்தை அடையுகைதேவர்கள் அப்சரஸ்திகளோடகூடகிரீடை பண்ணிக்கொண்டிருக்கிற தைப்பார்க்குகை, சங்கல்பானுரூபமாகஇஷ்டத்தைஅடையுகைஎங்குந்தடையில்லாமலிருக்கிறஆக்கினை, இந்தப்பத்துசித்திகளுமசத்துவகுணதிசயத்தினுலேசித்திக்கிறதுகள்.

க்ஷுத்திரசித்திகள்ஐந்து-எப்படியென்றுல்,பூதபௌஷியவர்த்தமானங்களை அறியுகைசீதோஷணுதிகளைச்சகிக்குகை, பிரத்தியாருடையஇருதய முகலானதுகளை அறியுகை, அக்கினிசூரியன்ஜலம்விஷ முதலானதுகளைஸ்தம்பிக்கப்பண்ணுகை ஓரிடத்திலேயும்அபஜெயப்படாமலிருக்குகை யோகதாரணையினுல் உணடாகாநின்ற இந்தச்சித்திகள்உமக்குஎம்மாலே சொல்லப்பட்டதுகள்எந்தயோகதாரணையினுல் எந்தசித்திஎந்தப் பிரகாரமாகஉண்டாகுமோ அதைச்சொல்லுகிறேன்கேழ்க்கக்கடவீர்.

பிரதிவியாதிபூதங்களில் சூட்சுமரூபியான என்னிடத்திலே சூட்சுமரூபமானமனதை ஸ்திரமாகச் சமர்ப்பித்தும் சூட்சரூபியாகவுபாசியாநின்ற புருஷனவன்என்னுடையஅணிமியென்னப்பட்டசித்தியையடைகுவன் ஆகாசாதிமகாபூதசுரூபனுயும்பரமாத்மாவாயு மிருக்கிற என்னிடத்திலேமகதத்துவரூபமானமனதை ஸ்திரமாகச்சமர்ப்பித்தும் அந்தந்தஆகாசாதி மகாபூதங்களுடைய மகிமையென்னப்பட்டசித்தி யையடைகுவன் வாயுமுதலானமகாபூதங்களுடையபரமாணுசுரூபனை என்னிடத்தில் சித்தத்தைஸ்திரமாகலச்சமர்ப்பித்து யோகியானவன்காலபரமாணு ரூபனை கிமையென்னப்பட்டசித்தியையடைகுவன் வைகாரிகளென்னப்பட்ட அகங்காரசுரூபனை என்னிடத்திலேமன

தைஸ்திரமாகச்சமர்ப்பித்திராநின்ற புருஷனானவன்சர்வேந்திரியங்களுக்கும்அபிமானிதேவதா ரூபமானபிராப்தியென்னப்பட்ட சித்தியையடைகுவன்கிரியா சாலியாயும் ரூத்திரரூபமாயுமிருக்கிறமகதத்துவசுரூபனை என்னிடத்தில் மனதைஸ்திரமாகச்சமர்ப்பிக்கின்றயோகியானவன்எனதுசர்வோத்கிருஷ்டமான பிராகாமியமென்னப்பட்டசித்தியையடைகுவன்திரிகுணமானமாயைக்குநியந்தாவாயும் காலசுரூபனாயும்சர்வாந்தரியாயு மிருக்கிற எனதிடத்தில்மனதைஸ்திரமாகச்சமர்ப்பிக்கின்றயோகியானவன்சீவாளுக்கும்சரீரமுதலானதுகளுக்கும்பிராணரூபமான இசிதாவென்னப் பட்டசித்தியை யடைகுவன்விராட்டு இரணியகற்பன்காரண மென்னப்பட்ட இந்தமூன்றுக்கும் பரராயும் சம்பூர்ணமான அயிஸ்வரியம் - தர்மம்-எஸஸ் - ஸ்ரீமகாலட்சுமி - சம்பூர்ணக்கியான வயிராக்கியங்கள் இந்த ஆறுகுணங்களை யுடையவரானபடியினால் பகவானென்று சொல்லப்பட்டு மிருக்கிற ஸ்ரீமந்நாராயணரான என்னிடத்திலே மனதை ஸ்திரமாகச் சமர்ப்பிக்கிற யோகியானவன் எனதுசாரூப்பியத்தை யுடையவனாய்வசித்துவ மென்னப்பட்ட சித்தியையடைகுவன்நிற்குணபரப்பிர்ம்மரூபமானஎனதிடத்திலேநிர்மலமானமனதைஸ்திரமாகசர்ப்பிக்கின்ற யோகியானவன்பரமானந்தரூபமான பிராகாமியமென்னப்பட்டசித்தியையடைகுவன்,

சத்வகுணத்தைஏதுவாகவுடையதுகளானசித்திகளைச்சொல்லுகிறேன்கேளும் சுவேதத்தீவுப்பதியாயும்பரிசுத்தமானதர்மசுரூபனாயும்சத்வகுணப்பிரதானனாயுமிருக்கிறஎன்னிடத்தில்சித்தத்தை ஸ்திரமாகவைக்கிறபுருஷனானவன்காமக்குரோதாதிகளை விட்டவனாய்சோரமரணமில்லாதவனாய் சுத்தசாத்வீகரூபத்தையடைவன் ஆகாசசுரூபனாயும்சமஷ்டி ரூபனாயுமிருக்கிற என்னிடத்தில்மனதினாலேநாதத்தைத் தியானப்பண்ணாநின்றபுருஷனானவன் அந்தஆகாசத்திலே வியர்த்தங்களாயிருக்கிறசகலபிராணிகளுடையவாக்குகளையும் தூரவிருக்கையிலும்கேட்டுக்கொண்டிருப்பன்நேத்திரத்தைசூரியனிடத்திலேயும்சூரியனைநேத்திரத்திலேயும்ஏகரூபமாகத் தியானம்பண்ணுகிற புருஷனானவன் சகலபிரபஞ்சத்தையும்பார்ப்பன்மனதையும்தேகத்தையும் அதுகளையநுவர்த்தித்துக்கொண்டிருக்கிறவாயுவோடுகூடஎன்னிடத்தில்வியாபித்துயாதொருஎன்னுடைய தியானமானதுபண்ணப்படுகிறதோ அந்தத்தியானத்தினுடையபிரபாவத்தினால்அந்தமனதுஎவ்விடத்திலேபோகிறதோஅவ்விடத்திலேதேகமும்திரிந்துகொண்டிருக்கும்எப்போதுமனதைக்காரணமாகப்பண்ணிஎந்தெந்ததேவதாரூபமாகஆகுகைக்குஇச்சிக்கிறானோ அந்தந்தரூபமாகஆகுவன் யோகியானவன்புறங்காலினால் குற்றத்தை நிரோதம்பண்ணிக்கொண்டுபிராணசரீரியான ஆத்மாவை இருதயம்-மார்பு-கண்டம்-சிரசு-இதுகளிலடைவிப்பித்து பிர்ம்மாந்திரத்தினாலஅந்தஆத்மாவை பிர்ம்மத்தையாவதுபரகாயத்தையாவது மனதினால் யடைவிப்பித்து சரீரத்தைவிட்டுவிடக்கடவன்தேவர்களுடையஉத்தியானவனத்திலேகிரீடிக்கவேணுமென்கிற யோகியானவன்எனதுசுருபமானசுத்தசத்துவரூபத்தைத் தியானம்பண்ணக்கடவன். அப்போதுஅந்தச்சத்துவரூபத்தினுடைய அங்கிசபூகளானதேவஸ்திரீகளவிமானத்துடன்கூடவந்துபூஜிப்பார்களஎன்னையே ஆசிரயமாகவுடைய புருஷனானவன்புத்தியினால்எப்படிஎப்படிசங்கல்பிக்கிறானோசத்தியசங்கல்பமான என்னிடத்தில் மனதை ஸ்திர மாகச்சமர்ப்பிக்கின்ற புருஷனானவன் அந்தந்த இஷ்டத்தை அந்தந்தப்பிரகாரம்அடைவன் யாதொருபுருஷனானவன் சர்வநியந்தாவான என்னுடைய சுவரூபத்தை யடைகிறானோஅந்தப் புருஷனுடைய ஆக்கினையானது எனதுஆக்கினை எப்படியோ அப்படியே ஒருவிடத்திலுமொருத்தராலும் திரஸ்கரிக்கப்படாமலிருக்கும்,என்னுடையபக்தியினால் பரிசுத்தமான சுபாவத்தையுடையவனாயும், யோகதாரணையையுடையவனாயுமிருக்கிறயோகிக்குத் தன்னுடைய பூர்வசென்மங்கள், வரப்போகிற ஜென்மங்கள். மரணங்கள் இதுகளை யுடையதுகளானதிரிகாலவிஷயக் கியானமுமுண்டாயிருக்கும், பிரகிருதியினுடைய குணவிர்த்திகளிலே சங்கமில்லாதவனாயும் தியானசுரூபனாயும்பரமாத்மாவாயுமிருக்கிறஎன்னிடத்தில் மனதைஸ்திரமாகச் சமர்ப்பிக்கின்ற புருஷனானவன் சுகதுக்கமுதலான தொந்தங்களால் திரஸ்கரிக்கப்படாமலிருப்பன்.

வாரீர்உத்தவரே, இந்தப்பிரகாரம் யோக தாரணையினால்என்னை உபாசியாநின்ற யோகிக்குபூர்வம் சொல்லப்பட்ட சமஸ்தமானசித்திகளுமுண்டாகும் என்னிடத்திலேஸ்திரமாக மனதைச் சமர்ப்பித்து உத்தமமான யோகத்தையுடைய புருஷனுக்குஇந்தசித்திகளைமுக்திக்கு விக்கினங்களாகச்சொல்லுவார்கள்,இந்தச்சித்திகளானதுகள் என்னுடைய சாரூப்பியத்தை யடையாநின்ற யோகிக்கு காலட்சேப ஏதுக்களாக யிருக்கின்றதுகள். ஜென்மம்-அவுஷதம்-தபசு-மந்திரங்கள்- இதுகளாலே யாதொருசித்திகளுண்டாகிறதுகளோ யோகாப்பியாசத்தினால்அந்தச் சமஸ்த சித்திகளையும்அடைகுவன்,இந்தஜென்மாதிகளாலே என்னுடைய சாலோக்கிய முதலானமுக்தியையடையமாட்டான், நான் சமஸ்த சித்திகளுக்குங் காரணமாயும்-பிரபுவாயும்ரட்சிதாவாயுமிருக்கின்றேன், நான்மோட்சத்துக்கும்சாங்கியகியானத்துக்கும், தர்மத்துக்கும், வேதவேதிகளானபிராமணாளுக்கும், சமஸ்தசீவாளுக்கும் அந்தரியாமியாயும். ஆத்மாவாயும், ஒன்றினாலேயும், மறைக்கப்படாமலும். பரிபூரணமாயுமிருக்கிற பரமாத்மாவாக யிருக்கின்றேன்.

௰௬ - வது - அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

இதுவுங்கிருஷ்ணனியம்பிடுமுத்தவற்
கதிதமாக வரற்றினதாமரோ.

இதுவுமது ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் உத்தவருக்குத்தத்துவத்தைச்சொன்னுரென்று சொல்லப் படுகிறது

உத்தவர்வாக்கியம்.

வாரீர் ஸ்ரீகிருஷ்ணபகவானே, தேவரீர் சாக்ஷாத்பரப்பிர்ம்மமாயும்-ஆதியந்தசூனியராயும்- சுதந்தரராயும்-சமஸ்தபிராணிகளுக்கும்-சிருஷ்டி-ஸ்திதி-சங்கார கர்த்தாவாயுமிருக்கின்றீர் நானுவிதங்களான பிராணிகளுக்குள்ளே இந்திரியஜெயமில்லாதவர்களாலே அறியக்கூடாதவரானஉம்மை வேதாந்தத்தையறிந்தமகானுபாவாள்சர்வப்பிராணிகளுக்கும் காரணராக வுபாசிக்கின்ருர்கள், ரிஷீஸ்வராள் எந்தெந்தப்பிராணிகளி லெந்தெந்தரூபமாக உம்மையுபாசித்துக்கொண்டு பரமமானசித்தியையடைகிருர்கள், அந்தமகிமைகளை எனக்குச்சொல்லக்கடவீரென்று பிரணமம்பண்ணுகின்ற உத்தவரைப்பார்த்து ஸ்ரீபகவானனவர்சொல்லுகின்ருர்.

ஸ்ரீபக்வானுடையவாக்கியம்

வாரீர் உத்தவரே, குருக்ஷேத்திரத்தில்சத்துருக்களோடு யுத்தம்பண்ண வேணுமென்கிற இச்சையையுடையவனன அர்ச்சுனனனவன் இராச்சியநிமித்தமாக உண்டாகின்றகியாதிகளுடைய வதத்தைஅதர்மமாயும் நித்தியமாயும் அறிந்துஇதனுல் நான் கெட்டுப்போவேனென்றுஅந்த கியாதிவதத்தில் நின்றும் நிவர்த்தித்தவனுயும்பிராகிருதபுத்தியை யுடையவனுயும் அப்போது என்னுலேயுக்திகளால் போதிக்கப்பட்டவனுக இப்போதுநீரெப்படி கேட்டீரோ இந்தப்பிரகாரமேயுத்தமுகத்திலேஅந்தஅர்ச்சுனனனவன் என்னைப்பார்த்துபிரசினம்பண்ணினன். அப்போது நானந்தஅர்ச்சுனனுக்கு எப்படிசொன்னேனே அந்தப்பிரகாரம் உமக்குச் சொல்லுகிறேன் கேழ்க்கக்கடவீரென்றுசொல்லுகின்ருர்.

வாரீர்உத்தவரே, இந்தப்பிராணிகளுக்குநான்அந்தரியாமியாயும்-ஆத்மாவாயும்-சுகுர்தாயும்-ஈஸ்வரனுயுமிருக்கிறேன், நானே சமஸ்தபிராணிகளாகவும்; இந்தப்பூதங்களுடையசிருஷ்டி-ஸ்திதி-சங்காரங்களுக்குக்காரணமாகவும், வசிகரணம்பண்ணுகிறபேர்களுக்குள்காலமாகவும், கதியையுடையபேர்களுக்குக் கதியாகவும், சத்வாதிகுணங்களுக்குள்ளே சத்துவமான பிரதானமாகவும்; மகத்தானவஸ்துக்களிலே மகத்துவமாகவும்- வேதாத்தியயனம்பண்ணுகிறபேர்களுக்குள் இரணியகெற்பனுகவும்-மந்திரங்களுக்குள் திரிமாத்திரையானபிரணவமாகவும். அட்சரங்களுக்குள்ளே அகாரமாகவும். சமஸ்ததேவர்களுக்குள்ளே இந்திரனுகவும். வசுக்களுக்குள் அக்கினியாகவும். ஆதித்தியரில் விஷ்ணுவாகவும். ஏகாதசருத்திராளுக்குள் சங்கரனுகவும். பிர்மரிஷிகளுக்குள்பிருகுவாகவும். இராஜரிஷிகளுக்குள்மனுவாகவும் தேவரிஷிகளுக்குள் நாரதராகவும், தேனுக்குள்காமதேனுவாகவும். சித்தேஸ்வராளுக்குள் கபில ரிஷியாகவும்-பட்சிகளுக்குள்கெருடனுகவும்-பிரஜாபதிக்குள்தெட்சப்பிரஜாபதியாவும்-பிதுர்தேவதைகளுக்குள்அரியமாவாகவும்-தயித்தியர்களுக்குள அசுரேஸ்வரனன பிரகலாதனனுகவும்-பிர்மசரியமுதலான ஆசிரமங்களுக்குள்சன்னியாசமாகவும்சதுர்வர்னங்களுக்குள்பிராமணனுகவும்அஷ்டாங்கயோகங்களுக்குள் மனோநிரோதனுரூபமான சமாதியாகவும்-பிர்மநிஷ்டர்களுக்குள் சனற் குமாரராகவும் தர்மங்களுக்குள் பிராணிகளுக்கு அபயப்பிரதானசமாதியாகவும், பிர்மநிஷ்டர்களுக்குள் சனற்குமாரராகவும் தர்மங்களுக்குள் பிராணிகளுக்கு அபயப்பிரதானதர்மமாகவும்-ஸ்திரீபுருஷமிதுனங்களுக்குள்பிர்மாவாகவும்-மாதங்களுக்குள் மார்கசிரிஷமாதமாகவும்-நட்சத்திரங்களுக்குள அபிசித்தாகவும்-யுகங்களுக்குள் கிருதயுகமாகவும்.பாகவதர்களுக்குள் உம்முடையரூபமாகவும்-ரத்தினங்களுக்குள்-பதுமராகமாகவும்- சுந்தரவஸ்துகளுக்குள் தாமரைமொக்காகவும்வியாபாரத்தையுடையபேர்களுக்குள் தனசம்பத்தாகவும்-சூரியன்-சந்திரன்-நட்சத்திரங்கள்-இவர்களுக்குள்-காந்தியாகவும்-வீரர்களுக்குள் அர்ச்சுனனுகவும் பிராணிகளுக்குள்-உற்பத்தி-ஸ்திதி பிரளயரூபமாகவும்-நானே யிருக்கின்றேன்(ஆகையால்) வாக்கையும்-மனதையும்-பிராணனையும்இந்திரியங்களையும்-புத்தியையும்-நிக்கிரகம்பண்ணி- சத்துவகுணத்துடனேகூடிக்கொண்டிருக்கிறபுத்தியினுல் அந்தப்புத்தியையும் நிக்கிரகம்பண்ணக்கடவீர். இப்படி யிராநின்றநீர்திரும்பவும் சம்சாரமார்க்கத்தை யடையாமலேயிருப்பீர்யாதொரு சன்னியாசியானவன் வாக்குமனதுஇதுகளைப்புத்தியினுல் நன்ருகநிக்கிரகியாம லிருக்கிருனே எந்தச்சன்னியாசியினுடைய விரதம் - தபசு -தியானம் இதுகள் பச்சைப்பானையில வைக்கப்பட்ட சலத்தைப்போலவியர்த்தமாகநசித்துப்போம் (ஆகையினுல்) என்னையேஆசிரயமாகவுடைய புருஷனனவன்எனதிடத்தில்பக்தியினுல்-வாக்கு-மனது-பிராணன் இந்திரியம்இதுகளை-நிக்கிரகிக்கக்கடவன் இதனுல் கிருதகிருத்தியனுகஆவானென்றுஸ்ரீகிருஷ்ணபகவானனவர் உத்தவருக்குச்சொன்னுர்.

---

௰௭-வது-அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

பேதமின்றிப் பின்னுமுத்தவருக்குத்
தீதிலாத்தத்துவஞ்செப்பினரரோ.

இதுவும் ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் உத்தவருக்குத் தத்துவத்தைச்சொன்னதொன்று சொல்லப்படுகின்றது.

ஸ்ரீஉத்தவருடையவாக்கியம்.

வாரீர்ஸ்ரீபகவானே, இந்தக்கல்பாதியிலே வர்ணாசிரம ஆசாரங்களையுடையவர்களான சமஸ்தபிராணிகளுக்கும்உம்முடைய பக்திசாதனதர்மமானது உம்மாலேசொல்லப்பட்டது, எந்தப்பிரகாரமாக அனுஷ்டானம்பண்ணப்படாநின்ற அந்தச் சுதர்மத்தினால் மனுஷியர்களுக்குள் உம்மிடத்தில்பக்தியானதெப்படியுண்டாகும் பூர்வத்திலே அம்சரூபியானவும்மால் பிர்மாவுக்குப் பரமமாயும்சுககரமாயுமிருக்கிற யாதொருதர்மமானதுசொல்லப்பட்டதோபூர்வம் சொல்லப்பட்டிருக்கிற அந்ததர்மமானதுஇப்போது வெகுகாலஞ் சென்றபடியினால் மனுஷியலோகத்திலே விசேஷமாயிருக்கமாட்டாது, யாதொருபிர்மசபையில் வேதமுதலானவித்தைகள் சரீரத்தைத் தரித்துக்கொண்டிருக்கிறதுகளோ அப்படிப்பட்டபிர்மசபையிலேயும் இந்ததர்மத்தைச் சொல்லுகிறவனும் அனுஷ்டானம்பண்ணுகிறவனும் பரிபாலனம்பண்ணுகிறவனும் உம்மைத்தவிர வேறொருவனுமில்லை, அப்படிஉம்மாலே விடப்பட்டிருக்கிற இந்தப்பூதலத்தில்நஷ்டமாய்ப்போன இந்தத்தர்மத்தை எவன் சொல்லப்போகிறான். ஆகையால் தேவரீர் மனுஷியர்களுக்குள் உம்முடையபக்திசாதனமான இந்தத் தர்மமானது எந்தப்புருஷனுக்கு எப்படிவிதிக்கப்பட்டிருக்கிறதோ அந்தப்பிரகாரம்எனக்குச் சொல்லக்கடவீரென்று பிரார்த்தியாநின்ற உத்தவரைப்பார்த்து ஸ்ரீ பகவானானவர் சொல்லுகின்றார்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாரீர்உத்தவரே, உம்முடையஇந்தப்பிரசினமானதுதர்மத்தோடுகூடின வர்ணாச்சிரம ஆசாரங்களையுடையவர்களானமனுஷியர்களுக்கு பக்திசாதனமாயிருக்கின்றது ஆகையினால் அந்ததர்மத்தைச்சொல்லுகிறேன்கேழ்க்கக்கடவீர்பூர்வம்கிருதயுகத்திலேமனுஷியர்களுடையவர்ணமானது அமசமென்றுசொல்லப்பட்டிருக்கும்அப்போதுசமஸ்தபிரஜைகளும் ஜென்மத்தினாலேயே கிருதகிருத்தியாளாகவிருப்பார்கள், ஆகையினால்அந்தயுகத்தைக்கிருதயுகமென்றுசொல்லுவார்கள், அந்தயுகத்திலேபிரணவம் ஒன்றேவேதமாகவும் நானே விருஷபமானதர்ம்மமாகவுமிருந்தோம், மனதுஇந்திரியங்கள் இதுகளுடையதாரணள்பமானதபசில்நிஷ்டையையுடையபேர்கள்சகலபாபங்களையுட் நீக்கினவர்களாயபரிசுத்தனானஎன்னையேதியானம்பண்ணுவார்.

பிற்பாடு திரேதாயுகப் பிரதேசத்திலேவிராட்புருஷனா என்னுடைய சுவாசத்தில்நின்றும் இருதயத்தில்நின்றும் மூன்றுவேதங்களும் ஆவிற்பவித்ததுகள் நானே அந்தவேதத்தில்நின்றும்அத்வரியூஉத்காதாஹோதாஇவர்களையுடையதான யக்கியரூபமாகவானேன். விராட்புருஷ ரூபியானஎன்னுடைய முகம்-பாகு-துடை-பாதம் - இதுகளில்நின்றும் சுவதர்மத்தைச் சின்னமாக வுடையவர்களான பிர்ம - க்ஷத்திரிய - வைசிய - சூத்திராள் - என்னப்பட்ட நான்கு வர்ணங்களு முண்டானார்கள்எனது இருதயத்தில்நின்றும்பிர்மசரியாசிரமும் ஜெகனமென்னப்பட்டஅரையில்நின்றும் கிரகஸ்தாசிரமும்மார்பில்நின்றும்வானப்பிரஸ்தாசிரமும்சிரசில்நின்றும்சன்னியாசாசிரமும் உண்டாச்சுதுகள் மனுஷியர்களுடையபிராமணாதிவர்ணங்கள்பிர்மசரியாதி ஆசிரமங்கள்இதுகளுடைய சுபாவங்களுக்கும் ஜென்மஸ்தானங்களுக்குஅனுரூபமாகஉத்தமமத்திம அதமங்களாகநிற்கிறதுகள்மனோநிக்கிரகம்பாகியெந்திரியநிக்கிரகம் -தபசு-சவுசம்-சந்தோஷம்-பொறுமை- கபடமில்லாமலிருக்குகை என்னிடத்திலே-பக்தி-தயை-சத்தியம், இதுகள்-பிராமணனுடையசுபாவங்கள்-பிரதாபம்-பலம்-தயிரியம்-சவுரியம்-பொறுமை-அவுதாரியம்-உத்யோகம் -சலியாமலிருக்குகை-பிராமணபத்தி- அயிஸ்வரியம் - இதுகள் க்ஷத்திரியசுபாவங்கள் உண்டானவனாயிருக்கை- தானபரனாயிருக்கை - டம்பமில்லாமலிருக்கை - பிராமணசேவைதனவிர்த்தியினால்திர்ப்தியில்லாமலிருக்கை- இதுகள்வைசியனுடையசுபாவங்கள் கோப்பிராமண தேவர்களுக்குகபடமில்லாமல்சிசுருஷைபண்ணுகைஅதினாலேலபித்ததைக்கொண்டுசந்தோஷப்படுகைஇதுகள்சூத்திரனுடையசுபாவங்கள்அனாசாரம்-அசத்தியம்-திருட்டு-இல்லையென்பது-காரணமில்லாத-கலகம்- காமக்குரோதம்-ஆசைஇதுகள்-சண்டாளருடையசுபாவங்கள்-சத்தியம்-திருடாமலிருக்கை-காமக்குரோதலோபங்களில்லாமலிருக்கை-சமஸ்தபிராணிகளிடத்தில் பிரியம்-இதுகள்சமஸ்தவர்ணங்களுக்கும்பொதுவானதர்மம்.

பிர்ம-க்ஷத்திரிய-வைசிய - குலத்திலுண்டானபுருஷனானவன்கெற்பாதான முதலானசமஸ்த சமஸ்காரங்களையும்அடைந்துகிரமமாகஉபநயனம்என்னப்பட்ட இரண்டாம்ஜென்மத்தையடைந்து குருகுலத்திலேவாசம்பண்ணிக்கொண்டுசமதமாதிகுணங்களையுடையவனாய் ஆசாரியனால்அழைக்கப்பட்டவனாய்வேதத்தை அத்தியயனம்பண்ணி வேதார்த்தவிசாரத்தையும் பண்ணக்கடவன்முஞ்சி-அரைநாண்-கிருஷ்ணாசனம்- தெண்டம்-ஜெபமாலை-எக்கியோபவீதம்-கமண்டலம்- குசதெர்ப்பை-இதுகளைத்தரித்தவனாயும்அப்பியங்கஸ்நானமில்லாதபடியினாலேசடையையுடையவனாயும்அழுக்கடைந்தபல்லுகள்-வஸ்திரங்கள்-இதுகளையுடையவனாயும் செவந்தவர்ணமானபீடத்தைவர்ச்சித்தவனாயுமிருந்துகொண்டுபிர்மசாரியானவன் ஸ்நானம்-போஜனம்-ஓமம்-ஜெபம்- மூத்திரபுருஷவிசற்கம்-இதுகளிலே மவுநத்தையுடையவனாயிருக்கக்கடவன்நகங்களையும்பாகுமூலங்களிலேயிரு

க்கிறரோமங்களையும் அரையிலிருக்கிற ரோமங்களையும் சேதியாமலிருக்கக்கடவன்பிர்ம்மசரியவிரதத்தையுடையவன்புத்திபூர்வகமாகஒருக்காலும் றெதசைவிடாமலிருக்கக்கடவன், தானேஸ்கலிதமானுல்தீர்த்தஙகளிலேஸ்நானம்பண்ணிபிராணுயாமத்தையுடையவனுயகாயத்திரிஜெபம்பண்ணக்கடவன்சந்தியாகாலங்களிலேமவுனத்தையுடையவனுயஜெபித்துக்கொண்டுஅக்கினி - சூரியன்-ஆசாரியன்-கோபிராமணன்-குரு-விர்த்தாள் - தேவாள்-இவர்களைப்பரிசுத்தனுய்உபாசிக்கக்கடவன் இப்படிப்பட்டவிரதத்தையுடையவனுய் போகசவுக்கியத்தைவிட்டவனுய்எந்தமட்டுகெகும்அத்தியயனமசம்பூர்ணமாகப்பண்ணப்படுகிறதோ அந்தமட்டுக்கும்நியமத்தைவிடாதவனுய்குருகுலத்திலேயே வாசம்பண்ணக் கடவன் இந்தப்பிர்மசாரியானவன் மூர்த்திகரித்திருக்கிறவேதங்களையுடையபிர்ம்மலோகத்தை யடையவேணுமென்று இச்சிப்பானேயாஞல்நயிஷ்டிகபிர்ம்ம சரியத்தையுடையவனுய்வேததியானத்தின்பொருட்டேதேகத்தைஆசாரியனுக்குச்சமர்ப்பிக்கக்கடவன்,

இந்தப்பிரகாரம்நயிஷ்டிகபிர்மசரியவிரதத்தையுடையவனுய்தீவரமான தபசினுலேகர்மவாசனைகளைத்தகித்துநிஷ்காமனுயிருக்கிறபிர்மசாரியானவன்மகாதேஜசையுடையவனுய்என்னுடையபக்தனுகவிருப்பன், பிற்பாடு எதாசாஸ்திரமாகஅறியப்பட்டவேதார்த்தங்களை யுடையவுபகுருவான்பிர்மசாரியானவன் கிரகஸ்தாசிர்மத்தை யடையவேணுமென்றுஇச்சையையுடையவனுயஆசாரியனுலேஅனுக்ஞைபண்ணப்பட்டவனுய்அப்பியங்கஸ்நான முதலானதைப் பண்ணிக்கொண்டு விரதாசமாவர்த்தனஞ்செய்துக்கொள்ளக்கடவன் பரிசுத்தமான அந்தக்கரணத்தையுடை யபிராமணனுனவன்கிரகஸ்தாசிரமத்தை யடைந்துவானப் பிரஸ்தா சிரமத்தையடையக்கடவன்பரிசுத்தமான சித்தத்தையுடையவனுயிருந்தால்சன்னியசிச்சுக்கொள்ளக்கடவன்என்னுடையபக்தனானவன்ஏதாகிலும்ஒரு ஆசிரமத்தைப்பற்றியிருக்கக்கடவன்கிரகஸ்தாசிர்மத்தைக்கோராநின்றபுருஷனுனவன்சமானமானஜாதியையும் லக்ஷணத்தை முடையவளாயும்வயதிலேதனுக்கு இளையவளாயு மிருக்கிறஸ்திரீயைக்கலியாணம்பண்ணக்கடவன்காமத்தினுலேஅன்னியஜாதியில்கலியாணம்பண்ணவேணுமென்று இச்சையிருந்தால்தன்ஜாதியிலேகலியாணம்பண்ணபிற்பாடுக்ஷத்திரியவைசிய வர்னத்திலே கிரமமாகக்கலியாணம்பண்ணக்கடவன் - எக்கியம-அத்தியயனம்-தானம்-இந்தமூன்றும்பிராமணுள்-க்ஷத்திரியாள்-வைசியாள் - இந்தமூன்று வர்னத்துக்கும் சாதாரண தர்மம் பிரதிக் கிரகம் அத்தியாபனம் - எக்கியம்பண்ணிவைக்கிறது இந்தமூன்றும்பிராமணுளுக்கே தர்மமாகவிருக்கின்றதுகள்பிரிதிக்கிரகம்-தபசு-தேஜசு-எஸசு-இதுகளுக்குநாசகரமாக எண்ணுகிறபிராமணனுனவன் பிரிதிக்கிரகம பண்ணுகிறதைவிட்டுவிட்டு எசன அத்தியாபனங்களாலேயே சிவனம்பண்ணக்கடவன்எசன அத்தியாபனங்களிலேயும்கார்ப்பண்ணியமுதலான தோஷதைதபாராநின்ற பிராமணனுனவன் பலத்திலே உதிர்ந்துபோனதுகளாயும் எஜமானுலேவிடப்பட்டு மிருக்கிறதானியங்களைப் பொறுக்கிஅதினுல்சீவனம் பண்ணக்கடவன் பிராமணனுடைய இந்தத்தேகமானது துச்சமானகாமத்தின் பொருட்டுஉண்டாகப்பட்டதன்று பின்ளையோவென்றால்இந்தலோகத்தில் மகாகஷ்டத்தின்பொருட்டும்தபசின் பொருட்டும் பரலோகத்தில் அனந்தசுகத்தின் பொருட்டும் உண்டாயிருக்கின்றதுகள் புலங்களிலே உதிர்ந்துபோன தானியத்தைப் பொறுக்கி அதினுல்சிவனம் பண்ணுகிறதுசிலவிருத்தியென்று சொல்லப்படும்கடைத்தெருவில்இரைந்துபோய் அதற்குளஜமானுலேவிடப்பட்டுமிருக்கிறதானியத்தைப்பொறுக்கிசீவனஞ்செய்கிறதுஉஞ்சவிருத்தியென்று சொல்லப்படும் இச்சிலவிருத்தியினுலேயும் உஞ்ச விருத்தியினுலேயும் சந்துஷ்டமான சித்தத்தையுடையவனுயும் ஆதித்திய முதலானநிர்மலமான சுவதர்மத்தையனுஷ்டானம்பண்ணி என்னிடத்திலே சமர்ப்பிக்கப்பட்ட மனதையுடையவனுயும் கிரகஸ்தா சிர்மத்தையுடைய புருஷனுனவன்முக்தியையடைவன் - அப்படிக்கில்லாமல் ஆபத்துக்காலமாயிருந்தால் பிராமணனுனவன்வர்த்தகனுடையவியாபாரத்தினுல்மத்திய முதலானதுகள்தவிர மற்றகிரையவிக்கிரைய யோக்கியமானது திரவியங்களாலே வியாபாரத்தினுலாவது அல்லதுக்ஷத்திரியனுடைய விருத்தியினுலேயாகிலும் ஆபத்தைத்தாண்டக்கடவன்-மகா ஆபத்திலேயும் நீசசேவைபண்ணுமலிருக்கக்கடவன்-ஆபத்தையடைந்திருக்கிறவைசியனுனவன் சூத்திரவிருத்தியை ஆசரியித்து சீவிக்கக்கடவன்-சூத்திரனுனவன்நிமந்தக்காரருடையபாய் முடைகிறதுமுதலானவிருத்தியைஆசரியித்துசீவிக்கக்கடவன்-ஆபத்தைத்தாண்டின புருஷனுனவன் ஆபத்துகாலத்திலேசொல்லப்பட்டிருக்கிறநிந்திதகர்மத்தினுல்சீவிக்கஇச்சியாமலிருக்கக்கடவன்,

பின்னும் கிரகஸ்ததர்மங்களைச் சொல்லுகிறேன் கிரகஸ்தாசிர்மத்தை யுடைய புருஷனுனவன் பிர்மஎக்கியத்தினுல் ரிஷிகளையும் - சுதாகார மென்னப்பட்டகர்மங்களாலே பிதுர்க்களையும் சுவாஹாகாரமென்னப்பட்ட கர்மங்களாலேதேவாளையும்-பெலியினுல் பூதங்களையும், அன்ன முதலானதுகளாலே மனுஷியாளையும் - விபவானுசாரமாகத்திருப்தி பண்ணிவைக்கக்கடவன், தேவாள்-பிதுர்க்கள்-ரிஷிகள்-பூதங்கள-மனுஷியாள்- இவர்களை எனதுரூபமாகப்பார்த்துக் கொண்டுபிரமயக்கியமுதலானதுகளால்நாள்தோறும்ஆராதித்துஎன்னிடத்திலேயே மனதையுடையவனுயும் கிரகங்களிலே அதிதிபோலவே வாசம் பண்ணிக்கொண்டும் மமதைஅகங்காக மில்லாத

வனுயு மிருக்கிறபுருஷனானவன் கிரகபாசங்களால்கட்ட
ப்படாதவனுயிருப்பன், யாதொருபுருஷனானவன்கிரகத்
திலேஆசக்தமான புத்தியையுடையவனுய் எனதுமாதா
பிதாக்கள மிகவும்விர்த்தாள்எனது பாரியைமிகவும்பா
லியமான சிசுவையுடையவள்எனது புத்திராள் மிகவும்
பாலாள்நானில்லாமற்போனல் இவர்கள்மிகவும்தீனுள
யும்அனுதாளாயும்துக்கத்தை யுடையவாளாய் எவ்வித
மாய்சீவனம்பணணப்போகிருர்களென்று இந்தப்பிரகா
ரசங்கிரகத்திலே மிகவும்ஆசையினுல் ஆசக்தமான இரு
தயத்தையுடையவனுய்நானென்கிறமூடவுத்தியையுடை
யபுருஷனானவன் கிரகத்தில்திருப்தியில்லாதவனுய்அந்
தப்பாரியாபுத்திராளைகானம்பண்ணிக்கொண்டுமரித்து
மூடமான தாமச ஜென்மத்தையடைகுவன்.

## ௰௮-வது- அத்தியாயம்.

கிங்கரர்போற்றுங் கிருஷ்ணபகவானும்
மன்னுந்தத்துவக்கியானம்வழுத்தினர்

இதுவும்ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் உத்தவருக்குத்த
த்துவத்தைச்சொன்னுமென்று சொல்லப்படுகின்றது

ஸ்ரீபகவானுடையவாக்கியம்

வாரீர்உத்தவரே, வனத்திலேதபசு பண்ணவேணுமெ
ன்கிறஇச்சையையுடையபுருஷனானவன் புத்திராளிடத்
திலே பாரியைவிட்டாகிலும்அல்லது தன்னோடுகூடவா
கிலும் அழைத்துக்கொண்டுவனத்திற்போய் சமதமாதி
குணங்களையுடையவனுய் ஆயிசினுடைய மூன்ரும்பாக
த்தை அந்தவனத்திலேயே வாசம்பணணி அவடத்திலு
ண்டாகாநின்றகந்தமூலபலங்களாலேசீவனம்பண்ணிமர
வுரி-திரணங்கள்-சாகைகள்-கிருஷ்ணுசனம்-இதுகளை வ
ஸ்திரமாகவும் தலைமயிர்-சரீரரோமங்கள்தகம்மீசைசே
கத்திலமுக்த இதுகளோடு தந்ததாவனம்பண்ணுமல்தி
ரிகாலமும்ஜலத்திலே அழுக்குகளைத் தேய்த்துக்கொள்
ளாமல் ஸ்நானமும் பூமியில்சயனித்துக் கொள்ளுதலு
ம்கோடைக்காலத்தில் நான்குபக்கத்திலும் அக்கினியை
ப்போட்டுசூரியனிடத்தில்திருஷ்டியைவைத்துக்கொண்
டும் வருஷாகாலத்திலே வருஷதாரைகளைச் சகித்துக்
கொண்டும், பனிக்காலத்தில் கழுத்துமட்டும் ஜலத்தி
லமுழுகிக்கொண்டும்செந்நெற்களை அரிசியாகச்செய்து
பட்சித்துக்கொண்டும் தபசுபணணக்கடவன்.

வானப்பிரஸ்தாசிரமத்தையுடைய புருஷனானவன்எ
ப்பொழுதுசெனாயினுமேல் சரீரத்தில் நடக்கவலு யுடையவ
னுய்க்கியகர்மானுஷ்டானத்திலேசக்தியில்லாதவனுகி
ருனோ அப்போது அக்கினிஹோத்திரத்தை ஆத்மாவில்
ஆரோபணம்பண்ணிக்கொண்டு என்னிடத்தில் ஸ்திர
மானசித்தத்தையுடையவனுய் அக்கினிப்பிரவேசம்ப
ண்ணக்கடவன், காமத்தினுடைய பலன்களாயுள்ளசுக
ரூபங்களாயுமிருக்கிற சுவர்க்காதி லோகங்களிலே எப்
போதுமிகவும் வயிராக்கியமுண்டாகிறதோ அப்போது
அக்கியஹோத்திராதிமுதலான சமஸ்த கர்மங்களையும்
விட்டுவிட்டுசன்னியாசம்பண்ணிக்கொள்ளக்கடவன்.

சன்னியாசக்கிரம மெப்படியென்ருல் எதாசாஸ்தி
ரமாகஅஷ்டகம் பிரஜாபத்தியமுதலான நயிஷடிகாளா
லேஎன்னைக்குறித்து ஏசித்துசர்வசொத்தையுய திந்து
க்களின்பொருட்டுகொடுத்துவிட்டு அக்கினியைத் தன்
னுடையஆத்மாவிலே ஆரோபணம்பண்ணிக்கொண்டு
நிஷ்காமனுய் சன்னியாசம் பண்ணிக்கொள்ளக்கடவன்
அப்படிசன்னியாசம் பண்ணிக் கொள்ளாநின்ற பிராம
ணனுக்கு தேவாள்புத்திரதாராதிருபமாகவிருந்துகொ
ண்டுஇந்தப்புருஷனானவன் நம்மைவிட்டுவிட்டுபரப்பி
ர்மத்தை யடையப்போகிருனென்கிற அபிப்பிராயத்தி
னுல்விக்கினம்பண்ணுவர்கள், அபபடி விக்கினம்பண்ணி
னுலும்அவர்களையெண்ணுமல் சன்னியாசம் பண்ணிக
கொள்ளக்கடவன், சன்னியாசியானவன்வஸ்திரத்தைத்
தரித்தானேயாகில் கவுபீனமறைய எவ்வளவுவஸ்திரம்
வேணுமோ அவ்வளவு வஸ்திரத்தைத்தரிக்குகைஉத்த
மம்ஆயத்தில்லாதகாலத்திலே தெண்டங் கமண்டலங்க
ளைத்தவிர மற்றொன்றைக்கிரகியாமலும்மார்க்கத்திலே
ஜெந்துமுதலானதுகளில்லாமல் பார்த்துநடந்தும் வஸ்
திரத்தினுல் சோதிக்கப்பட்டு பவித்திரமாயிருக்கிறஜல
த்தைஆசமனம் பானம்பண்ணியும் மனதினுல்நன்ருக
விசாரித்து பரிசுத்தமான ஆசாரத்தை ஆசரிக்கக்கட
வன்சன்னியாசிக்கு மவுனமென்னப்பட்டவாக்குதெண்
டமும், காமியகர்மத்தியாகமென்னப்பட்ட தேகதெண்
டமும்பிராணுயாமமென்னப்பட்ட மனோதெண்டமும்
இந்தமூன்றுமில்லாமல் கேவலம்தரிக்கப்பட்டமூங்கில்
தெண்டத்தினுல் சன்னியாசியாகமாட்டான் பிராமணர்
களில்பதிதாள் முதலானபேர்களை விட்டுவிட்டு இந்தக்
கிரகத்திலேஇன்னது அகப்படுமென்கிறசங்கல்பமில்லா
தவனுய் ஏழுகிரகத்தில்பிட்சைபண்ணிக்கொண்டு எவ்
வளவுலபித்ததோ அதினுல்சந்துஷ்டனுய்கிராமத்துக்
குவெளியிலிருக்கப்பட்ட தடாகத்திற்குப்போய்அவடத்
திலேபாதப் பிரக்ஷாளனம் ஆசமனம்பண்ணிக்கொண்
டுபுரோக்ஷணுதிகளால் பவித்திரமாகப் பண்ணப்பட்டி
ருக்கிறபிக்ஷான்னத்தைவிஷ்ணுபிர்மா அற்கன்பிராணி
கள்இவர்களுக்கு விபாகம்பண்ணிக்கொடுத்துமிகுதிஅ
ன்னத்தை மவுனத்தையுடையவனுய் பொசித்து இதர
சங்கத்தைவிட்டவனுயும் என்னுடையதியானத்தினுல்நிர்
மலமான இருதயத்தையுடையவனுயும்என்னையேசதா
சிந்தித்துபக்தியினுல் இந்திரியங்களை நிக்கிரகித்துகாம
க்குரோதாதிகளை ஜெயித்தவனுய் சஞ்சரித்துக்கொண்
டுஅல்பங்களாயிருக்கிற விஷயசவுக்கியங்களைநீக்கினவ
னுயநந்தமான ஆத்மானுபவசவுக்கியத்தையடைந்தவ

னாய் புண்ணியக்ஷேத்திரங்கள்-நதிகள்-பர்வதங்கள்-வானங்கள்-இதுகளில்சஞ்சரித்துவானப்பிரஸ்தர்களுடையஆசிர்மங்களிலே பிக்ஷைபண்ணிக்கொண்டுசமஸ்தப்பிரயோசனத்தில்நின்றும்ஒழிந்தவனாய் விவேகத்தையுடையவனாயிருந்தாலும் பாலன்போலமானாபிமானமில்லாதவனாய் லீலைபண்ணிக்கொண்டும்மிகவும்சமர்த்தனாயிருந்தாலும் மூடன்போல சஞ்சரித்துக்கொண்டும்வித்துவானாயிருந்தாலும்பித்தன்போலேஏதாகிலும்சொல்லிக்கொண்டும் வேதார்த்தங்களை அறிந்தவனா யிருந்தாலும் நியமாசாரமில்லாதவனாய் சஞ்சரித்துக்கொண்டும்பிரயோசனமில்லாத பிரசங்கங்களிலே ஒருபட்சத்தையும்ஆசரியாமலும் அன்னியர்களால் பண்ணப்பட்டதூஷணங்களைச் சகித்தவனாயும் ஒருவனையும்அவமானம்பண்ணாமலுமிருக்கக்கடவன் எப்படியென்றால்ஒரு சந்திரனானவன் அநேகஜலபாத்திரங்களிலே அநேகமாகக்காணப்படுகிறானோ (அதுபோல) ஒருவராயிருக்கிற பரமாத்மாவே சகலதேகங்களிலேயும் ஆத்மாவிலேயும் அந்தரியாமியாய் அநேக ரூபமாயிருக்கின்றார். அந்தத் தேகங்களும் பஞ்சபூதவிகாரங்களாய் ஏகரூபங்களாயிருக்கின்றதுகள். ஆகையினால்தேகத்தையுத்தேசித்தும் துவேஷம்பண்ணாமலும் திடச்சித்தனாய்காலத்தினாலே அசனமகப்படாமற்போனால் விசனப்படாமலும் அகப்பட்டாற்சந்தோஷப்படாமலு மிருக்கக்கடவன். இந்தப் பிரகாரம்சந்நியாசதர்மத்தைச் சொல்லிப்பின்னும் வயிராக்கியத்தையுடையவனாயும்பரமாத்மதத்துவத்தைஅறியவேணுமென்று இச்சையுடையபுருஷனுக்குச்சொல்லுகின்றார்.

மேலுமேலும் துக்கத்தையுடையதாயிருக்கிறசுகங்களிலேஉண்டாகாநின்ற வயிராக்கியத்தை யுடையவனாயும்பரமாத்ம தத்துவத்தைஅறியவேணுமென்கிறஇச்சையையுடைய ஆத்மக்கியானததை யுடையவனாயும் என்னுடைய சாரூப்பியத்தைஅடையுகைக்கு சாதனத்தைஅறியாதவனாயுமிருக்கிற கியானியானவன்ஆசாரியனைஅடைந்து அந்தஆசாரியனைபரமாத்மாவென்றெண்ணிமிகவும் ஆதரவையுடையவனாய்தான்பரப்பிர்மசுரூபத்தைஅறிகிறவரைக்கும் அந்தஅசாரியனுக்கு சிசுருஷைபண்ணிக்கொண் டிருக்கக்கடவன்,சன்னியாசிக்கு மனோஜெயமானது முக்கியகர்மமாகவிருக்கின்றது;வானப்பிரஸ்தனுக்கு அயிமிசைதபசுபரமாத்மக்கியானம் இதுகள்முக்கியதர்மமாக விருக்கின்றது, கிரகஸ்தனுக்குயாகாதிதர்மமும்பிராணிரட்சணமும்முக்கியதாமமாகவிருக்கின்றது, பிர்மசாரிக்கு ஆசாரிய சிசுருஷைமுக்கியதர்மமாகவிருக்கின்றது, இநதப்பிரகாரம்யாதொரு புருஷனானவன் சுவதர்மத்தினால்நித்தியமாகஎன்னைஆராதித்துமற்றொருவனையும் ஆசரியாமலிருக்கிற அந்தப்புருஷனானவன் சீக்கிரமாகஎன்னிடத்திலேதிடமான பக்தியை அடைகுவன். வாரீர்உத்தவரே சுவதர்மநிஷ்டனாயிருக்கிற புருஷனானவன்எப்படி என்னுடைய பக்தனாய்பரமாத்மாவான என்னை அடைகுவனென்றுநீர்பிரசினம்பண்ணினதற்கு இந்தஅர்த்தமானது உமக்குநன்றாகச்சொல்லப்பட்டது.

---

## ௰௬ -வது - அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

துன்னுநாரதர்தோத்திரஞ்செய்கிருஷ்ணன்
தன்னிகரில்லாத் தத்துவஞ்சொல்லினர்.

இதுவும்ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் உத்தவருக்குத்தத்துவத்தைச்சொன்னாரென்று சொல்லப்படுகின்றது.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாரீர்உத்தவரே யாதொருபுருஷனானவன் பரமாத்மானுபவமுண்டாகிறபரியாதம் ஆசாரியனால் உபதேசிக்கப்பட்ட கியானத்தையுடையவனாயும் அதினாலே பரமதத்துவநிச்சயத்தை யுடையவனாயும்அனுகூலயுக்தியினாலேயும்நிச்சயக்கியானத்தையுடையவனாயிருக்கிறானோஅந்தப்புருஷனானவன் இந்தசெகத்தையும்நிவிர்த்திசாதனத்தையும் மாயாமாத்திரமென்று அறிந்துசன்னியசித்துக்கொண்டு என்னிடத்திலேயே கியான நிஷ்டையையுடையவனாயிருப்பன், ஆகையினால் கியானத்தோடேகூடிக்கொண்டிருக்கிற உம்முடைய ஆத்மாவை அறிந்துஅந்தக்கியானத்தினால் பரமாத்மானுபவத்தையுடையவராயும் ஸ்திரமான பக்தியையுடையவராயும், சமஸ்தத்தையும் விட்டுவிட்டேஎன்னையே இச்சிக்கக்கடவீரென்றுசொல்லாநின்ற ஸ்ரீபகவானைப்பார்த்துஸ்ரீஉத்தவர்சொல்லுகிறார்.

ஸ்ரீ உத்தவருடையவாக்கியம்.

வாரீர் ஸ்ரீவிஸ்வேஸ்வராராகிய ஸ்ரீவிஸ்வமூர்த்தியே-பரிசுத்தமாயும் அநாதியாயும் வயிராக்கியம்ஆத்மானுபவம்இதுகளோடேபிர்மாதிகளாலேயும்தேடத்தக்கதாயுமிருக்கிறஇப்படிப்பட்ட கியானமானதுநிச்சிதமாக எப்படிஉண்டாகுமோ அந்தக்கியானத்தையும் அதற்குச் சாதனமானஉம்முடைய பக்தியோகத்தையும் எனக்கு நன்றாய்ச்சொல்லக்கடவீரென்று பிரார்த்தியாநின்ற உத்தவரைப்பார்த்து ஸ்ரீபகவானானவர் சொல்லுகின்றார்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாரீர்உத்தவரே பூர்வத்தில்தர்மபுத்திரரானவர்சகலதர்மங்களையு மறிநத உத்தமரான பீஷ்மாச்சாரியரைப் பார்த்துநாங்கள் எல்லாரும் கேட்டுக்கொண் டிருக்கும்போதே நீர்இப்போதென்னைக்கேட்ட இந்த அர்த்தங்களைக்கேட்டுபிறபாடு மோட்சதர்மங்களையுங்கேட்டார்அப்போதுபீஷ்மாச்சாரியராலே சொல்லப்பட்டகியானம்

பரமாத்மானுபவம்-வயிராக்கியம்-சிரத்தை-பக்தி- இதுகளுக்குச்சாதனமாயிருக்கிற தர்மங்களை நான் உமக்குச் சொல்லுகிறேன். வாரீர்உத்தவரே, பிரகிருதி- புருஷன் மகதத்துவம்-அகங்காரம்-சப்தாதிவிஷயங்கள் பதினோரிந்திரியங்கள்-பஞ்சமகாபூதங்கள் சத்துரஜஸ்தமோகுணங்கள் இந்த இருபத்தெட்டுதத்துவங்களையும் பிர்மாதிஸ்தாவரபரியந்தங்களான சமஸ்தபிராணிகளிலேயும் விடாமலிருக்கிறதுகளாய் யாதொரு கியான்ததினால்பார்க்கிறானோ இந்தஇருபத்தெட்டு தத்துவங்களிலும் ஒருவரானபரமாத்துமதத்துவததை அந்தரியாமியாயிருக்கிறதாக யாதொருகியானத்தினால் பார்க்கிறானோ அந்தக்கியானமே தத்துவக்கியானமாக விருக்கின்றது இந்தசெகத்தையாதொரு பரமாத்மாவினாலே வியாபிக்கப்பட்டுஅனேகரூபங்களாயிருக்கிறதாக எப்போதுபார்த்தானோயாதொருகியானத்தினால்அநேகரூபமாகப்பாராமல்பரமகாரணமான பரப்பிர்ம சுரூபமாகப் பார்க்கிறானோஅந்தக்கியானமானது விக்கியானமென்று சொல்லப்படும். அவயவங்களையுடையதான காரியங்களுக்குசென்மஸ்திதிலயங்களைப்பார்க்கக்கடவன். உற்பத்தியிலேயும்-லயத்திலேயும். ஸ்திதியிலேயும், யாதொன்றானது காரியமானமிருத்துமுதலானதினால் சிருஷ்டிக்கப்படுகிறஜடமுதலானதை அடைகிறதோ காரியங்களுடையலயத்திலேயும் யாதொன்று மிகுந்திருக்கின்றதோ அதுவேபரமாத்துவதத்துவமென்று அறியக்கடவன்வேதம் பிரத்தியட்சம், ஐதீகம்- அனுமானம் என்றிந்தப்பிரகாரம்நான்குபிரமாணங்கள் வேதமானதெப்படியென்றால் பரமாத்மாவைத்தவிர மற்றொன்றுமில்லையென்கிற அர்த்தத்தைச்சொல்லுகின்றது. பிரத்தியட்ச மெப்படியென்றால்வஸ்திரமுதலானகாரியந்தந்து முதலானகாரணத்தைத்தவிர வேறாகக்காணப்படவில்லையோ(அதுபோல) பரமாத்மாவைத் தவிர பிரபஞ்ச மென்கிறது வேறாக வில்லையென்றறியத்தக்கது, ஐதீகமென்பதுபரமாத்துமா ஒருவனுண்டென்று மகாஜெனங்கள்சொல்லிக்கொள்ளுகிறது பிரசித்தி,அனுமானமென்பது பிரபஞ்சமானது அசத்தியமாயிருக்கின்றதென்பது, இந்த நாலுபிரமாணங்களிலேயும் விகல்பமானது அசத்தியமானபடியினால்புருஷனானவன்சம்பூர்ணமானபரமாத்மதத்துவத்தையேபார்த்து விரக்தியைஅடையக்கடவன்.

வாரீர்உத்தவரே. பக்தியோகமானது பூர்வமேசொல்லப்பட்டிருக்கிறது, ஆனாலும்அந்த பக்தியோகத்திலே மிகவும்பிரீதியையுடையவரான உமக்காகத்திருமபவும் என்னுடைய பக்திக்குப்பரமமான காரணத்தைச்சொல்லுகிறேன் எப்படியென்றால்என்னுடைய கதைகளைக் கேழ்க்கிறதிலே சிரத்தையும் அடிக்கடி என்னுடையகாமகீர்த்தனமும்என்னதுபூஜையிலே நிஷ்டையும்ஸ்தோத்திரமும் கயிங்கரியத்திலே ஆதரவும்சர்வாங்கங்களிலேயும்என்னுடைய பிரணமமும் என்னிமித்தமாக அர்த்தங்கள்-போகம்-சுகம்-இதுகளை விட்டுவிடுகிறதும்,யாகம்-தானம்-ஓமம்-போசனம்-விரதம்-தபசு-இதுகளைஎனக்குப்பிரீதியர்த்தமாகச்செய்கிறதும் இதுகளெல்லாம்என்னுடைய பக்திக்குக்காரணம் மனுஷியாளுக்கு இப்படிப்பட்ட தர்மங்களாலேயும் ஆத்ம சமற்பணையினாலேயும்என்னிடத்திலேஸ்திரமானபக்தியையுண்டாகும்அந்தபக்தனுக்கிதைவிட வேறேபிரயோஜனமென்னவிருக்கின்றது எனதுபக்தியைப் பண்ணுகிறதர்மமே உத்தமமென்று சொல்லுகின்ற ஸ்ரீபகவானைப்பார்த்துஉத்தவர்சொல்லுகிறார்.

ஸ்ரீஉத்தவருடைய வாக்கியம்.

வாரீர்தத்துவசங்காரரே, இயமநியமங்கள்எத்தனைவிதங்களாகச்சொல்லப்படுகிறதுகள், சமம்-தமம்- திதிக்ஷையாகிறது-திருதியாகிறது-தானம்-தபசு-சௌரியம சத்தியம்-ருதம்-சௌக்கியம்-தியாகம்-எக்கியம் - தெட்சணை-புருஷனுக்கு ஸ்ரீமத்தாளபலம்-பாக்கியம்- லாபம்_ உத்தமமானவித்தை-லச்சை-அலங்காரம்-சுகம்-துக்கம் இதுகள-என்ன,பண்டிதன்ஆர்-மூர்க்கனார்-சன்மார்க்கம் துன்மார்க்கம்-சுவர்க்கம்-நரகம்-பர்தா.கிரகம்-இதுகள்என்ன, வாரீர் சத்துக்களுக்குரட்சகரே என்னாலேகேழ்க்கப்பட்ட இந்த அர்த்தங்களைஎனக்குநன்றாகச்சொல்லக்கடவீரென்று கேளாநின்ற உத்தவரைப்பார்த்து பகவானவர்சொல்லுகின்றார்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாரீர்உத்தவரே; அயிம்ஸை-சத்தியம்- பரதிரவியத்தைஅபகரிக்க எண்ணாமலிருக்குகை, விஷயங்களில்ஆசக்தியில்லாம லிருக்குகை லச்சை;நாளைக்குவேணுமென்றுசஞ்சிதம் வைத்துக்கொள்ளாமலிருக்குகை-தர்மத்திலேவிசுவாசம், பிர்மசரியம்-மௌனம்-தயிரியம்- க்ஷமை-அபயம்-இந்தப்பன்னிரண்டும் இயமமென்றுசொல்லப்படும்-தேகசுத்தி- அந்தக்கரணசுத்தி-ஜெபம் -தபசு-ஓமம்-தருமத்திலேஆதரவு,அதிதிபூசை-என்னுடையஆராதனம், தீர்த்தயாத்திரை-பரவுபகாரத்திலே யிச்சை-சந்தோஷம்-ஆசாரியசேவை-இந்தப் பன்னிரண்டும்நியமமென்றுசொல்லப்படும்-வாரீர்உத்தவரே, இந்த இயம நியமங்களானதுகள் ஆச்சரியப் பட்டதுகளாகக் கொண்டு பிரவிர்த்தி நிவிர்த்திமார்க்கத்தை யுடையவர்களானபுருஷர்களுக்கு இச்சாரூபமாக மோட்சத்தையும்அயிகசிரேயசையும் உண்டாகும்புத்திக்குஎன்னிடத்திலே நிஷ்டையையுடையதா யிருக்குகை சமமென்று சொல்லப்படும் இந்திரியங்களுடைய நிக்கிரகமானது தமமென்றுசொல்லப்படும் துக்கத்தைச்சகிக்கிறதுதிதீட்சையென்றுசொல்லப்படும்.நான்கு-உபஸ்தம்- இதுகளு

டையஜெயமானது திருதியென்றுசொல்லப்படும், பூதங்களுக்குதுரோகத்தை விட்டுவிடுகிறதேதானமென்று சொல்லப்படும்.சுகபோகத்திலேஆசையில்லாமலிருக்குகைதபசென்றுசொல்லப்படும்,தனதுசுபாவத்தின்செயமானதுசௌரியமென்று சொல்லப்படும்பிர்மதெரிசனமானது சத்தியமென்றுசொல்லப்படும். சந்தோஷ கரமானவாக்கானது இருதயமென்று சொல்லப்படும். கர்மங்களில்ஆசக்தியில்லாம லிருக்குகை சவுச்சமென்று சொல்லப்படும்கர்மசன்னியாசமானது தியாகமென்றுசொல்லப்படும். மனுஷியாளுக்கு தர்மமானது இஷ்டமானதனமென்றுசொல்லப்படும். பரமேஸ்பரனுனாலேயெக்கியமென்று அறியத்தக்கது எக்கியார்த்தமாகக் கொடுக்கப்பட்டதானமானது தெட்சணையென்று சொல்லப்படும். அந்ததெட்சணை எதுவென்றால் கியானோபதேசம் சுவர்ணாதிகளுடையதானமன்று அந்தக்கியானத்தினாலல்லவாஎக்கியருபரான பகவானுனவர் அடையப்படுகின்றார். மனோநிக்கிரகத்துக்கு ஏதுவான பிராணாயாமமானதுபரமமான பலமென்றுசொல்லப்படும்.எனதுதானம் அயிஸ்வரியம்-தர்மம்-எஜசு-ஸ்ரீமகாலட்சுமி தியானம்-வயிராக்கியம்-இந்தஆறும் பாக்கியமென்றுசொல்லப்படும். எனதுபக்தியானதுஉத்தமமானலாபமென்றுசொல்லப்படும். ஆத்துமாவினிடத்திலே தோணப்படாநின்றபேதத்தினுடைய திரஸ்காரமானது வித்தையென்று சொல்லப்படும். நிஷித்தகர்மங்களிலே நித்தியமென்று அறிகிறது லச்சையென்றுசொல்லப்படும். வயிராக்கிய முதலானகுணங்களானதுகள் அலங்காரமென்றுசொல்லப்படும். சுகதுககங்களை எண்ணாமலிருக்கிறதே சுகமென்றுசொல்லப்படும். விஷயபோகங்களிலேஅபேட்சையானது துக்கமென்றுசொல்லப்படும். பந்தம்-மோட்சம்-இவ்விரண்டையும் எவன் அறிகிறானோ அவனேபண்டி-தன்-தேகம்-கிரகமுதலானதுகளில் நானென்றும்- எனதென்றும்-அபிமானத்தையுடையவன் மூர்க்கனென்றறியத்தக்கது. நிவர்த்திமார்க்கமானதுகள் சன்மார்க்கமென்று அறியத்தக்கது. சத்துவகுணத்தினுடைய விர்த்தியானதுசுவர்க்கமென்றுசொல்லப்படும். தமோகுணத்தினுடையவிர்த்தியானது நரகமென்று சொல்லப்படும். ஆசாரியனைப்பந்துவென்று அறியத்தக்கது அந்த ஆசாரியன் ஆரென்றால் நானென்றறியத்தக்கது,சரீரமேகிரகமென்றறியத்தக்கது,சத்குணங்களையுடையவனே ஆட்டியன். சந்தோஷமில்லாதவனே தரித்திரன், இந்திரியஜெயமில்லாதவனே கிருபணன், சப்தாதிவிஷயங்களில் ஆசக்தியில்லாத புத்தியையுடையவனெவனோ அவனே ஈஸ்வரனென்று அறியத்தக்கது.விஷயங்களிலே ஆசக்தியையுடைய புருஷனெவன் பரதந்திரன். சமமுதலானகுணங்களையுடையவனுமன்று உம்முடையசமஸ்தமான-பிரஸனங்களும் இந்தப்பிரகாரம் மோட்சசாதனமாக நம்மாலேசொல்லப்பட்டதுகள், வெகுவாக வர்ணிப்பதினாலென்ன பிரயோசனம், குணதோஷங்களுடைய லட்சணமிவ்வளவே என்னவென்றால் குணதோஷங்களை அறிகிறதேதோஷம்குணதோஷங்களை அறியாமலிருக்கிறதேசுபாவகுணமாகவிருக்கும்.

---

## உ௰ - ௯௰ - அத்தியாயம்.

### கலி விருத்தம்.

ஆர்ந்திடுங்குணதோஷமறிவதே
பேர்ந்திடுங்குண தோஷமென்றும்புகழ்ச்
சார்ந்ததோஷ மறியாதிருப்பதே
ஓர்ந்தவுத்தவ ருத்தமமென்றனர்.

குணதோஷங்களை அறிகிறதே தோஷமென்றும், குணதோஷங்களை அறியாமலிருக்கிறதே உத்தமமென்றுஞ்சொல்லுகின்ற பகவானைப்பார்த்து உத்தவர்சொல்லுகின்றார்.

ஸ்ரீ உத்தவருடையவாக்கியம்.

வாரீர் அரவிந்தாட்சரே, விதியும்நிஷேதமும்ஈஸ்வரனுனஉம்முடைய ஆக்கியா ரூபமான வேதமல்லவா அந்தவேதமானது விதிகர்மங்களுக்கும்நிஷிதகர்மங்களுக்கும் புண்ணியபாபரூபமான குணதோஷங்களைப் பார்த்துக்கொண்டிருக்கிறது பிராமணாதி வர்ணங்களுக்கும்பிர்மசரியாதி ஆசிரமங்களுக்கும்உத்தம அதமரூபத்தினாலேகுணதோஷரூபமான பேதத்தையும்பார்த்துக்கொண்டிருக்கிறதுஉத்தமவர்ணமான ஸ்திரீகளில்ஈனவர்ணனானபுருஷாளாலே பிறந்தவர்கள்பிரதிலோம்சாளென்று சொல்லப்படுவர்கள், ஈனவர்ணளான ஸ்திரீகளிலேஉத்தமவர்ணனான புருஷர்களாலேபிறந்தவர்கள் அனுலோம்சாளென்று சொல்லப்படுவர்கள், இப்படிப்பட்டபிரதிலோம்ச அனுலோம்சாளுடைய குணங்களையும்பார்த்துக்கொண்டிருக்கிறது, திரவியம்-தேசம்-வயது-காலம்-இதுகளையும் பார்த்துக்கொண்டிருக்கிறது,புண்ணியபாபரூபங்களான கர்மங்களுக்குப் பலமானசுவர்க்கநரகங்களை குணதோஷரூபமாகவே பார்த்துக்கொண்டிருக்கிறது, குணதோஷங்களுடைய பேதமில்லாமலேவிதிநிஷேதரூபமான உம்முடைய வாக்கானது எப்படிசிரேயசுக்கு சாதனமாகவிருக்கின்றது, பிதுர்க்கள் தேவாள்-மனுஷியாள்-இவர்களுக்குஅறியப்படாமலிருக்கிறசுவர்க்கமோட்சங்களிலேஇது இதற்குசாத்தியம்இது இதற்கு சாதனமென்கிற கியானத்திலேயும் உம்முடையவாக்குரூபமான வேதமானதுஉத்தமமானநேத்திரமாகவிருக்கின்றது குணம்தோஷங்களென்கிற பேதக்கியானமானது இல்லாவிட்டால் இந்தஅர்த்தமானது எப்படிகூடும் உம்முடைய ஆக்கியாரூபமானவேதத்தினாலேயே குணதோஷமென்கிற பேதக்கியானமானது உண்டாகின்றதேயல்லாமல் சுபாவமாகஉண்டாகிறதில்

லையல்லவா, அந்தவேதத்திலேயேகுணதோஷமென்கிறபேதத்தியோஜனமாயது விசேஷிக்கப்பட்டதானால் அந்தவிஷயத்திலேமிகவும்சம்சயமுண்டாகின்றது இந்தச்சம்சயத்தைப் போக்கடிக்கக்கடவீரென்று சொல்லாநின்ற உத்தவரைப்பார்த்து ஸ்ரீபகவானவர் சொல்லுகிறார்.

ஸ்ரீபகவானுடைய வாக்கியம்.

வாரீர் உத்தவரே, மனுஷியாளுக்குமோட்சசாதனத்தைவிதிக்கவேணுமென்கிற இச்சையினால்ஞானம்-கர்மம்-பக்தி-இந்தமூன்றுஉபாயங்களும் என்னால் சொல்லப்பட்டிருக்கிறதுகள். இதுகளைத்தவிர மற்றொருஉபாயமுமில்லை ஆனால் இந்தமூன்று உபாயங்களுக்கும்மூன்றுஅதிகாரங்களைச் சொல்லப்படும்இந்தலோகத்திலேகர்மபலம் துக்கரூபமென்றறிந்து அதிலேவயிராக்கியத்தையுடையவர்களாயும் அதற்குச்சாதனமான கர்மத்தைவிட்டவர்களாயுமிருக்கிறபேர்களுக்குக்கியானயோகமானது சித்தியைக்கொடுக்கும். கர்மபலம்துக்கரூபமென்று அறியாமல் அதிலேஆசையையுடையபேர்களுக்கு கர்மயோகமானது சித்தியைக்கொடுக்கும். ஒருபாக்கியாதிசெயலினால்என்னுடையகதைமுதலானதிலேமிகவுஞ்சிரத்தையையுடையவனாயும்கர்மங்களில்வயிராக்கியமில்லாதவனாயும் கர்மபலங்களில்ஆசக்தியில்லாதவனாயுமிருக்கிற புருஷனுக்குப்பக்தியோகமானது சித்தியைக்கொடுக்கும்எந்தமட்டுக்கும்என்கதாசிரவணமுதலானதில் சிரத்தையானது உண்டாகாமலிருக்கிறதோ அந்தமட்டுக்கும்புருஷனானவன்நித்தியநைமித்திககர்மங்களைவிட்டுவிடாமல் பண்ணக்கடவன், புருஷனானவன்விஹிதகர்மங்களைபண்ணுமலிருந்தானேயானால் சுதர்மானுஷ்டானபரனாயும்பலாபிலாஷையில்லாதவனாயுமிருக்கிற அந்தப்புருஷனானவன்யக்ஞங்களால் என்னைக்குறித்துஆராதித்துக்கொண்டுசுவர்க்கபோகங்களையடையான், நிஷித்தகர்மத்தைவிட்டவனாயும் ராகத்துவேஷாதிசூனியனாயும்சுகர்மானுஷ்டானபரனாயுமிருக்கிற அந்தப்புருஷனானவன் இந்தச்சரீரத்திலேயே சுவயிச்சையாகவேபரிசுத்தமான ஞானத்தையாகிலும் என்னிடத்திலேபக்தியையாகிலும் அடைகிறான்பக்திஞானங்களுக்குச்சாதனமான இந்தமனுஷசரீரத்தைச்சுவர்க்கத்திலிருக்கிறபேர்களும் நரகத்திலிருக்கிற பேர்களைப் போலவேயிச்சிக்கிறார்கள் அந்தநரகசரீரமும்சுவர்க்கசரீரமும் பக்திஞானங்களுக்குச்சாதகமல்லவா ஆகையினால்விவேகியானபுருஷனானவன் நரககதியை எப்படிக்கோறமாட்டானோ அப்படியேசுவர்க்ககதியையுங்கோருமலிருக்கக்கடவன்மறுபடியும்இந்தமனுஷியஜென்மசரீரத்தையுங்கோருமலிருக்கக்கடவன் ஏனென்றால் ஒருகாரணத்தினால் தேகாபிமானமுள்ளபுருஷார்த்தத்தில்நின்றும்பிரமாதத்தையடைகிறான் அதினாலேந்தமனுஷிய சரீரத்தைத்திரும்பவுங்கோருமலிருக்கக்கடவன் இந்தமனுஷியசரீரத்தைப்புருஷார்த்தசாதனமென்றறிந்த வித்துவானானவன்மனுஷியஜென்மம் அநித்தியமானாலும் புருஷார்த்தசித்தியைக்கொடுக்கிறதென்றறிந்து இந்ததேகத்தில் ஆசக்தியில்லாதவனாயிருந்துமரணமடைவதற்குமுன்னமே மோக்ஷத்தின்பொருட்டுஎத்தனம்பண்ணக்கடவன்எப்படியானால்பக்ஷியமானது எமன்போலநிர்த்தயர்களாயிருக்கிறபுருஷர்களால்சேதிக்கப்பட்டும்தன்னுடையகூண்டையுடையதாயிருக்கிறதனக்குஆசிரயமான விருக்ஷத்தைஆசக்தியில்லாததாய் விட்டுவிட்டு க்ஷேமத்தையடைகிறதுபோலவிவேகியானவன் அஹோராத்திரங்களாலேசேதிக்கப்படாநின்றஆயுளையறிந்துபயத்தினாலேநடுக்கலையுடையவனாய் அதில் ஆசக்தியில்லாதவனாய்ச்சங்கவர்ஜிதனாய் பரமாத்மாவையறிந்து மோட்சத்தையடைவன்யாதொருபுருஷனானவன்சமஸ்தபுருஷார்த்தங்களுக்கும்மூலமாயும் அநேகம்பிரயத்தனங்களாலேயும் அடையக்கூடாததாயும்சுலபமாயும்மிகவுந்திடமாயுஞ்சமர்த்தாயும்ஆசாரியனாகியஓடக்காரனை யுடையதாயும் நானாகிறஅனுகூலமானவாயுவினாலே யேவப்பட்டுமிருக்கிறமனுஷியசரீரமாகிறஓடத்தையடைந்து சம்சாரமாகிறசமுத்திரத்தைத்தாண்டாமலிருக்கிறானோ அந்தப்புருஷனானவன் ஆத்துமதுரோகியாயிருக்கிறான் இந்தப்பிரகாரம்வயிராக்கியமில்லாத புருஷனுக்குப் பக்திஹேதுவானசாதனமானகர்மயோகத்தைச்சொல்லிவயிராக்கியத்தையுடையபுருஷனுக்குக்கியான யோகத்தைச்சொல்லுகிறார்.

வாரீர்உத்தவரே புருஷனானவன்எப்போதுகர்மங்களிலேதுக்கமேதுவென்றறிந்துபயந்தவனாய் அதினுடையபலன்களிலேயும்வயிராக்கியத்தையுடையவனாகிறானோ அப்போதுஇந்திரியநிக்கிரகத்தை யுடையவனாய்ஒழியாமல்உண்டாகாநின்றபரமாத்மானுபவத்தினாலேமனதை அசஞ்சலமாகபரமாத்மாவினிடத்திலே சமர்ப்பிக்கக்கடவன்எப்போதுமிகவும்பிரமித்துக் கொண்டிராநின்றுஞ்சஞ்சலமாயுமிருக்கிறமனதானது பரமாத்மத்தியானத்தினாலேதைரியத்தையடையாமல் பிரமித்துக்கொண்டிருக்கிறதோ அப்போதுஜாக்கிரதை யுடையவனாய்மெள்ளமெள்ளஅபேக்ஷையைப்பூரித்துவழியாய்சுவாசம்பண்ணிக்கொள்ளக்கடவன் பிராணஜெயத்தையுடையவனாயும்இந்திரியஜெயத்தை யுடையவனாயுமிருக்கிறபுருஷனானவன்மனதுபோனவழியெல்லாம் விடாமலிருக்கக்கடவன்சாக்கிரதையையுடையவனாய் சத்வகுணத்தையுடையதானபுத்தியினாலேமனதைமெள்ள சுவசம்பண்ணிக்கொள்ளக்கடவன்எப்படியானால் அடக்கக்கூடாமலிருக்கிறகுதிரைதனக்குசுவசமாக வேணுமென்றுகோருநின்றபுருஷனானவன் முன்னே அதுபோகிற வழியே

போய்மெள்ளசுவசம்பண்ணிக்கொள்ளுவதுபோலமனதைசுவசம்பண்ணிக்கொள்ளவேணு மென்கிறபுருஷனானவன் அந்தமனதுபோகிறவழியேபோய் மெள்ளமெள்ளசுவசம்பண்ணிக்கொள்ளக்கடவன் இந்தப்பிரகாரம்மனதைசுவாதீனம்பண்ணிக்கொள்ளுகிறதே பரமமானயோகமாகவிருக்கிறது இவ்விதமாகக்கொஞ்சம்சுவாதீனமானமனதையுடையபுருஷனானவன் தத்துவவிவேகத்தினாலேமகத்துவமுதலாய்தேகாந்தமானதத்துவங்களுடையஉற்பத்திக்கிரமத்தையும்பூமிமுதலாய்மகத்துவபரியந்தம்கிரமமாகலயததையும்அறியக்கடவன்மனதானதுஎப்போதுநிச்சலமாகிறதோஅந்தமட்டுக்கும் இந்தப்பிரகாரம்தியானம் பண்ணக்கடவன் அந்தத்தியானத்தினாலே பிறவாநின்றும் நசியாநின்று மிருக்கிற தத்துவங்களுக்கு ஆசிரயமானபரமாத்துமக் கியானமானதுஉண்டாகும், பூர்வம் அந்தப்பரமாத்மக் கியானமில்லாததினால் உண்டாயிருந்த சம்சாரத்தில் மிகவும் விசனத்தையுடையவனையும் அதினாலே மிகவும் வயிராக்கியத்தையுடையவனையும் பிற்பாடு ஆசாரியனால் உபதேசிக்கப்பட்ட அர்த்தத்தி னுடைய பரியா லோசனையையுடைய வனையுமிருக்கிற புருஷனுடைய மனதானது அடிக்கடி ஒழியாமல் ஆசாரியனால் உபதேசிக்கப் பட்ட அர்த்தத்தைச் சித்திக்கிறதினாலே தேகாதியிலேஆத்மபுத்தியைவிட்டுவிடும், இந்தப்பிரகாரம்கியானநிஷ்டையையுடைய புருஷனானவன் இயமநியமமுதலானயோகமார்க்கங்களினாலேயும் சீவபரமாத்மசுவரூபவிசாரத்தினாலேயும்என்னுடையஅர்ச்சனம்தியானமுதலானதுகளாலேயும்பரமாத்மாவானஎன்னையேஸ்மரிக்கக்கடவன் மற்றவுபாயங்களினால்மற்றொருகர்மங்களையும்பண்ணாமலிருக்கக்கடவன் எனதுகியானநிஷ்டையையுடையபுருஷனானவன் பிரமாதத்தினால்நிந்திதமான கர்மத்தைப்பண்ணினானேயானால் அந்தப்பாபத்தையோகாப்பியாசத்தினாலேதகித்துப்போகக்கடவன் அந்தப்பாபவிஷயத்திலேயோகாப்பியாசத்தைத்த விரகிருச்சிரசாந்திராயணமுதலானமற்றொருபிராயச்சித்தமுமில்லைகர்மநிஷ்டையையுடையபுருஷனுக்கு கர்மத்திலேஉண்டான பாபத்துக்கு கர்மநிஷ்டையேபிராயச்சித்தமென்று சொல்லப்பட்டிருக்கிறதுகியானநிஷ்டையையுடையபுருஷனுக்கு அதிலே உண்டாகாநின்ற தோஷத்துக்குக் கியானநிஷ்டையே பிராயச்சித்தமென்றுசொல்லப்பட்டிருக்கிறது விதி நிஷேதகசாஸ்திரங்களால்சொல்லப்படாநின்றகுணதோஷவிதியினாலேசுவபாவமாய்அசுத்தமானகர்மங்களுக்குஅசுத்தியைப்போக்கடிக்க வேணுமென்கிறஇச்சையினாலேநிவர்த்திமார்க்கமானதுபண்ண ப்பட்டிருக்கிறதுஇந்தப்பிரகாரம்கியானநிஷ்டையைச்சொல்லிபக்தனுக்குபக்தியோகத்தைச சொல்லுகிறார். வாரீர்உத்தவரேஎன்னுடையகதைகளில்சிரத்தையை யுடையவனையும்துக்கரூபமான படியினால் கர்மங்களில் பயத்தையுடையவனையும்வைராக்கியமில்லாதவனையும்கர்மபலன்களைத்துக்கரூபங்களென்று அறிந்திருந்தாலும் அதுகளைவிட்டுவிடுவதற்குச்சாமர்த்திய மில்லாதவனையுமிருக்கிறபுருஷனானவன்மிகவும் சிரத்தையை யுடையவனாய் என்னுடையபக்தியினாலேயேசமஸ்தஇஷ்டங்களும்சித்திக்குமென்று திடமானநிச்சயத்தையுடையவனாய்துக்கரூபமானவிஷயங்களை அனுபவித்துக்கொண்டிருந்தாலும்அதுகளில்மிகவும் பிரீதியைப்பண்ணாமல் நிந்தித்துக்கொண்டுஎன்னையே மிகவும்பிரீதியினாலே உபாசிக்கக்கடவன்.

பூர்வஞ்சொல்லப்பட்டிருக்கிறபக்தி யோகத்தினால்என்னை நித்தியமாகவுபாசியாநின்ற கியானியினுடைய இருதயத்தில்நான்சார்வதாயிருக்கையில் இருதயத்திலிராநின்றசமஸ்தகர்மங்களும் நசித்துப்போகா நிற்கிறதுகள் சமஸ்த சுவரூபியான என்னுடைய சாக்ஷாத்காரம் உண்டா யிருக்கையில் அகங்கார ரூபமான இருதயகிரந்தியானது நசித்துப் போகா நிற்கும் சமஸ்தசமுசயங்களும் சேதிக்கப்படும் அந்தக்கியானியி னுடைய சங்கார ஏதுக்களான ஆகாமியசஞ்சித கர்மங்களும் க்ஷயத்தையடைந்துபோம்.ஆகையினால்எனதுபக்தியையுடையவனையும்என்னிடத்தில் சமர்ப்பிக்கப்பட்ட சித்தத்தையுடையவனையுமிருக்கிற யோகிகளுக்குப்பக்தியோகத்தைத்தவிரகியானமும் வைராக்கியமும் மிகவுஞ்சிரேயசுக்குச் சாதனமாகமாட்டாது, கர்மங்களினால் யாதொருசித்தசுத்தி முதலானதுசாதிக்கப் படுகிறதோதபசினால் யாதொருசித்தசுத்தமுதலானதுசம்பாதிக்கப்படுகிறதோகியான வைராக்கியங்களினால் யாதொருசித்தசுத்திமுதலானது சம்பாதிக்கப்படுகிறதோ யோகாப்பியாசத்தினாலும், தானத்தினாலும், தர்மத்தினாலும் தீர்த்தயாத்திரை விரதமுதலானசிரேய சாதனங்களாலேயும் யாதொருசித்தசுத்தி முதலானது சம்பாதிக்கப் படுகிறதோ அந்தசமஸ்தத்தையும் எனதுபக்தியினாலேயே அனாயாசமாகஅடைகுவன்.

சுவர்க்கம்-மோக்ஷம்-ஸ்ரீவைகுந்தம் - இதுகளையும்அனாயாசமாகவே அடைகுவன்இன்னம் எந்தஇஷ்டங்களைக்கோருகிறானோஅதுகளையும் அடைகுவன்:விவேகிகளாயும்எனது ஏகாந்தபக்தர்களாயும் எனதிடத்திலேயேபிரீதியையுடையவர்களாயு மிருக்கிறசாதுக்கள் என்னால்கொடுக்கப் படுகிறதாயிருந்தாலும் பரமபுருஷார்த்தமானமோக்ஷத்தையும் இசயார்கள்சாதுக்களானபேர்கள் ஒன்றைக்கோராமலிருக்கிறதைத்தானேஉத்கிருஷ்டமாகவும், சிரேஷ்டமாகவும்மகத்தாகவும் மோக்ஷமாகவும் மோக்ஷசாதனமாகவுஞ் சொல்லுவார்கள் ஆகையினால்நிஷ்காமனையும்ஆசையில்லாதவனையு மிருக்கிறபுரு

ஷனுக்குளனது பக்தியானதுண்டாகும்எனஇடத்தில்ஏ காந்தபக்தியையுடையவர்களாயும்.ராகத்து வேஷாதிரு ஹியர்களாயும், சமசித்தர்களாயும்,பரனையும்பரமேஸ்வ ரனையுமிருக்கிறஎன்னையே ஆசரியித்தவர்களாயு மிருக் கிறசாதுக்களுக்கு விதிநிஷேதசாஸ்திரங்களால் உண் டாகாநின்றபுண்ணியபாவமுதலானகுணங்களொன்று மில்லை.

வாரீர்உத்தவரே;யாதொருபுருஷர்கள்இந்தப்பிரகார மஎன்னுல்சொல்லப்பட்டிருக்கிறஇந்தச்சாருப்பியபிரா ப்திக்குஉபாயங்களை அனுஷ்டானம்பண்ணுகிறார்களோ அவர்கள் சாசுவதமாயும்சுககரமாயும் மாயாதீதமாயுமி ருக்கிறஸ்ரீவைகுந்தத்தையடைகுவர்கள் யாதொருபரப் பிர்மமுண்டோஅந்தப்பரப்பிர்ம சுவரூபத்தையும்அறி வர்கள்.

---

உக-வது- அத்தியாயம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

சொல்லுமிந்தப்பிரகாரம் நிவர்த்திகர்மா நிஷ்டயுடைச்
சுகிர்தாளுக்கு
வல்லகிரிச்சிரமுதலாம்பிராயச்சித்தக்குணமென்றும்
வடிவிற்கியான
நல்லநிஷ்டை யுடையவர்க்குக் கியானப்பியாசமது
நண்ணுமென்றும்
அல்லலூறும்பாபத்தைக் காண்பித்துத்தூஷணைகள்
அரற்றினரே.

இந்தப்பிரகாரம்நிவர்த்திகர்மநிஷ்டையையுடையபே ர்களுக்குக்கிருச்சிரமுதலான பிராயச்சித்தகுணமென் றும்கியானநிஷ்டையையுடையபேர்களுக்குக் கியானுப் பியாசமானதுசித்திபேதுவானபடியினுல்குணமென்று ம்பக்திநிஷ்டையையுடையபேர்களுக்குக்கதாசிரவணம் நாமகீர்த்தனமுதலானபக்தியே குணமென்றுஞ்சொல் லிக்காமியகர்மநிஷ்டர்களுக்குமகாபாபத்தைக்காண்பிக கிறவராய்அவர்களைத்தூஷிக்கிறுரென்று சொல்லப்படு கின்றது.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்

வாரீர்உத்தவரேயாதொருபேர்கள்பக்திகியானம்கர்ம ம்இந்தஸ்வருபங்களாயிருக்கிறஎன்னுற்சொல்லப்பட்ட இந்தமகாகர்மங்களைவிட்டுவிட்டுஅனித்தியங்களான பி ராணேந்திரியங்களால் துச்சங்களான விஷயபோகங்க ளை அனுபவிக்கிறார்களோ அவர்கள்சங்காரத்தில்நானுவி தஜென்மங்களையடைவர்கள் கியான நிஷ்டை காமநிஷ் டைபக்திநிஷ்டைஇதுகளுடையபேர்களுக்குத்தங்கள்த ங்கள் அதிகாரத்தில்யாதொரு நிஷ்டையுண்டோ அது வேகுணமென்றுசொல்லப்பட்டிருக்கின்றதுஅதற்குவி த்தியாசமானநிஷ்டையானதுதோஷமாய்விடும் பிரவிர் த்திமார்க்கங்களில்இந்தநிச்சயமானதுபண்ணப்பட்டிரு க்கிறதுவஸ்துக்கள்சமானங்களாயிருந்தாலும்திரவியத் துக்குயோக்கியமோஅயோக்கியமோவென்று சந்தேக மூலமாகச்சுபாவிகமானபிரவிர்த்திகர்மவிகாரார்த்தமா கச்சுத்தி அசுத்தியென்னப்பட்டயோகியத்துவமும் அ யோக்கியத்துவமும்இதுமூலமாய்கிரகிக்கத்தக்கதென் றும்விட்டுவிடத் தக்கதென்றும்அது மூலமாய்சுபாசுப மென்னப்பட்டஅர்த்தம்இதுகளும் விதிக்கப்பட்டிருக் கிறதுகள்தர்மருபமானபாரத்தை வகியாநின்றகர்மநிஷ் டர்களுக்குத்தர்மார்த்தமாயும் விவகாரார்த்தமாயும்யா த்திரார்த்தமாயும்இந்தஆசாரமானதுமனுவாதிசுவரூப னுனஎன்னுல்காண்பிக்கப்பட்டிருக்கின்றது வஸ்துக்கள் சமானங்களென்கிறது எப்படியென்முல் பிர்மாமுதல்ஸ் தாவரார்த்தமான சகலபிராணிகளுக்கும் சரீரத்தையு ண்டாக்காநின்றபிரிதிவி-அப்பு-தேயு-வாயு-ஆகாசம்-இ ந்தஐந்தும்காரணங்களாகாநிற்கிறதுகள் சகலபிராணிக ளுக்கும்ஆத்மாவுடன்கூடிக்கொண்டிருக்கிறதுகள்.

வாரீர்உத்தவரேஇந்தப்பிராணிகளுக்கு தர்மாதிபுரு ஷார்த்தசித்தியின்பொருட்டு பஞ்சபூதவிகாரங்களாய்ச மானங்களாயிருந்தாலும் தேகங்களில் வர்ணுசிரமமுத லானதுகள்விஷயங்களால்வேதத்திஞற் கல்பிக்கப்பட் டிருக்கின்றதுகள் வாரீர்உத்தவரேஎன்னுல் கர்மங்களுக் குரியமார்த்தமாகக்கிரகிக்கக்கூடாமலிருக்கிற தேசகால முதலானவஸ்துக்களுக்கும் கிரகிக்கத்தக்கதுகளானதா ன்யமுதலியவஸ்துக்களுக்கும் குணதோஷணங்களான துகள்விதிக்கப்பட்டிருக்கிறதுகள்சுத்தி அசுத்தியாவதெ ப்படியென்முல் தேசங்களுக்குள்ளே கிருஷ்ணசாரமெ ன்னப்பட்ட மானனது எந்தத்தேசத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கயில்லையோஅந்தத்தேசமானது அசுசியா காநிற்கும்பிராமணபக்தியில்லாததேசமானது அசுசியா காநிற்கும்கிருஷ்ணசாரமிருகத்தையுடையதாய்சிரேஷ் டமாயிருந்தாலும் யாதொருதேசமானது சத்புருஷர்க ளால்வஹிக்கப்படாதிருக்கிறதோஅந்த தேசமானது அ சுசியாகாநிற்கும்சத்புருஷர்களையுடையதாயிருந்தாலும் கோமயத்தில்மெழுகிவிளக்கி சுத்திபண்ணப்படாமலி ருக்கிறதேசமானது அசுசியாகாநிற்கும்திர வியசம்பத்தி னுலேசுபாவமாக யாதொரு காலமானது கர்மத்துக்கு யோக்கியமாயிருக்கிறதோ அந்தக்காலமானதுஅந்தக்கர் மத்திலேஉத்தமமாகாநிற்கும்யாதொருகாலத்தில்திரவி யசாமக்கிரியில்லாததினுலேதான்ராச்சியத்துக்கு உபத் திரவத்தால்தான்கர்மம்நடவாமல்நின்றுபோகிறதோயா தொருகாலமானதுசூதக முதலானதினுல் கர்மத்துக்கு யோக்கியமாகாமலிருக்கிறதோ அந்தககாலமானதுஅசு சியாகாநிற்கும்திரவியத்துக்குசுத்திஅசுத்திகள் எப்படி யென்முல்ஜலமுதலானதினுல்சுத்தியும்மூத்திராதிகளு டையசம்மந்தத்தினுல் அசுத்தியமுண்டாகாநிற்கும் இந்

சவஸ்துவானதுசுத்தமோ அசுத்தமோவென்கிற சந்தேகத்தில்பரிசுத்தமென்றுசொல்லாநின்றபிராமணவசனத்னல்அந்தவஸ்துசுத்தியுண்டாகாநிற்கும்பிராமணவசனம்மில்லாவிட்டால் அசுசியாகாநிற்கும்புரோக்ஷண முதலானதினல்புஷ்பமுதலானதற்குசசுத்தியுன்டாகாநிற்குதிபுராதனமான அன்னமுதலானதற்குப்புரோக்ஷணமுதலானதினலேயும்சுசியில்லைபத்துநாள்முதலானகாலத்தினல்நூதனஉதகமுதலானதற்குசுத்தியுண்டாகாநிற்கும்உச்சிஷ்டமுதலானதற்குச்சுத்தியில்லைசண்டாளன்முதலானபேர்களால்நிர்மிக்கப்பட்டிருக்கிற தடாகமுதலானதுபெரிதாயிருந்தால்சுத்தியென்றறியத்தககது அற்பமாயிருக்தால்அசுத்தியென்றறியத்தக்கது.

சூரியகிரணத்தினல் கொடுக்கப்பட்ட அன்னம் சூதகத்தையுள்ள புருஷனுடைய அன்னம் இதுமுதலானதற்கு அசகதனைக்குறித்தேசுத்தி சக்த்தனைக் குறித்து அசுத்தி புத்திரோற்பத்தி முதலானதில் பத்துநாளைக்குமேற்சுத்தி, அதற்குள் அசுத்திகந்தலாயும் அழுக்குப்படிந்து மிருக்கிறவஸ்திரமுதலானதற்குச்சம்பன்னனைக்குறித்தே அசுத்திதரித்திரனைக்குறித்துஅசுத்தியென்றறியத்தக்கது இந்தத்திரவியம்பிராமணவசன முதலானதுகள தேசம்அவஸ்தை இதுகளையனுசரித்து ஆத்மாவுக்கு தோஷத்தைப்பண்ணும் சர்வதாபண்ணமாட்டாது. நிற்பயமானதேசத்திலேயும் ரோசமுதலான அவஸ்தைகளில்லாமலிருக்கையிலும் சூதகியினுடையஅன்னமுதலானதுகள் ஆத்மாவுக்குத்தோஷத்தைப்பண்ணுமே யல்லாமல்சோரர்களால் சூழப்சட்டிருக்கிறவிடத்திலும் பாலியத்திலும் ரோகமுதலான அவஸ்தைகளிலும் தோஷததைப் பண்ணமாட்டாதுகள். தாளியம்-கிரகம்-சமஸமென்னப்பட்டபாத்திரம் -யானைதந்தமுதலானதுஎண்ணெய்-நெய்நூல்-சுவர்னம்பாதரைக்ஷமுதலானதுவீதியிலிருக்கிறசிறுகடங்கள்செங்கற்கள்இதுமுதலானதுகளுக்குக்-காலம்-வாயுஅக்கினி-மிருத்துஜலம் இதுகளுடைய சம்பந்தங்களினல் சுத்தியுண்டாகாநிற்கும்அமேத்தியசம்பந்தத்தை யுடையதானபீடம்பாத்திரம்-வஸ்திரமுதலானதுகள்செதுக்கிறது தேய்க்கிறது புளிமுதலானதினல் சுத்திபண்ணுகிறது இதுமுதலானதினல் அந்த அமேத்தியசம்மந்தத்தையும்கெந்தத்தையும் மலத்தையும்விட்டு சுவரூபத்தையடையாநிற்கும்அதுவே அதுகளுக்குச்சுத்தியாகாநிற்கிறது.

பீடம்முதலானதுகளுக்குஅமேத்திய சம்மந்தமானதுசெதுக்கிறது முதலானதினல் எந்தமட்டுக்கும்போமோஅந்தமட்டுக்குஞ்சுத்திபண்ணக்கடவன்இந்தப்பிரகாரம்திரவியங்களுக்குச்சுத்தியைச் சொல்லிபுருஷனுக்குச்சுத்தியைச்சொல்லுகிருர்ஸ்நானம்தானம்-தபசு-கவுமாரமுதலானஅவஸ்தை-சன்மார்த்தியம்உபநயனமுதலானது-சவுச்சம்சந்தியாவந்தனம்தீக்ஷை முதலியகர்மம்-என்னுடைய கியானமஇதுகளினல் கர்த்தாவானபுருஷனுக்குக்காரியானுசாரமாகச்சத்தி யுண்டாகாநிற்கும்இச்தப்பிரதாரம் பரிசுத்தனுகிபுருஷனனவன் சுவதர்மத்தைஎதாசாஸ்திரமாகஅனுஷ்டானம் பண்ணக்கடவன்சற்குருமுகத்தினல்எதாவத்தாக அர்த்தக்கியானமானதுமந்திரசுத்தியாகாநிற்கும்ஈசுவராற் பணமாவதுகர்மத்துக்குசுத்தியரிசுத்தங்களானதேசம்காலம் - கர்த்தாதிரவியம்-மந்திரம்-கர்மம்இந்த ஆறுகளாலும்தர்மமானதுஉண்டாகாநிற்கும் அபரிசுத்வங்களான இதுகளால்அதர்மமானதுஉண்டாகாநிற்கும்சிலவிடத்தில சாஸ்திரத்தினல்குணமேதோஷமாய்விடும்தோஷமேகுணமாய்விடும் குணதோஷநிமித்தமாகப பண்ணப்பட்ட நியாமக சாஸ்திரமானது குணதோஷங்களுடையபேதத்தையேபாதியாநிற்கிறது.

அதெப்படியென்ருல், ஆபத்தில்தானம் வாங்குகிறதுவிகிதமாகச் சொல்லப்பட்டிருந்தாலும் ஆபத்தில்லாதகாலத்தில் நிஷித்தமானதால் தோஷமாகா நிற்கிறது பிரத்தியானுக்கு விகிததர்மமானது தனக்குத்தோஷமாகாநிற்கும் வயிராக்கியத்தையுடைய புருஷனுக்குப் பாரியாபுத்திராதி குடும்பத்தியாகமானதுவிகிதமாயிருந்தாலும் வயிராக்கியமில்லாத புருஷனுக்குத்தோஷமாகாநிற்கும் இந்தப்பிரகாரம் ஒருவஸ்துவிலேயே குணதோஷங்களை விதியாநின்ற சாஸ்திரமானது அந்தக்குணதோஷங்களுடையபேதத்துக்குபாதகரமாயிருக்கிறதுமத்தியபான முதலானது சாதுக்களுக்குப்பாப ஏதுவாயிருந்தாலும்.ஜென்மத்தினலேயும்,கர்மத்தினலேயும்-பதிதாளாயிருக்கிற பேர்களுக்குப்பாய ஏதுவன்றுஜெனசங்கமானது எதிக்குதோஷகரமாயிருந்தாலும்கிரகஸ்தனுக்குச் சுபாவகுணமாகாநிற்கிறது. எப்படியானல் பூமியில்சயனித்துக்கொண்டிருக்கிறபுருஷனவன்திரும்பவும் பூமியில்விழாமலிருப்பனே அப்படிப்போலசுவபாவகுணமானது திரும்பவும்பாப காரமன்றுஆகையினல்குணதோஷங்களை விதியாநின்றசாஸ்திரங்களுக்குப்பிர விர்த்திகர்மத்தைசூட்சுமம் பண்ணபடியினல்நிவர்த்திமார்க்கத்தையே முக்கியார்த்தமாக அறியத்தக்கது.

ஆகையினல் புருஷனனவன் எந்தெந்தகர்மத்தில்நின்றும் நிவர்த்திககிருனே அந்தந்தக்குணங்களில் நின்றும்விடுபட்டவன்தான் சோகம்-மோகம்-பயம் -இதுகளைப்போக்கடியாநின்ற இந்தநிவர்த்தி மார்க்கமானதுமனுஷியாளுக்குமிகவும்க்ஷேமகரமாகாநிற்கிறது புருஷனுக்கு ரூபாதிவிஷயங்களில்குணபுத்தியினல் ஆசக்தியானதுண்டாகாநிற்கிறது பிற்பாடுவிஷயங்களில் ஆசக்தியினல் அந்தவிஷயத்தில் இச்சையானதுண்டாகாநிற்கும், அந்தயிச்சையினலேயே அவ்விச்சையை எவனல்கொடுக்கப்படுகிறதோ அவனுடன்கூட விவாதமான

துண்டாம். அந்தவிவாதத்திஞல் சகிக்கக் கூடாதான் கோபமுண்டாம் அக்கோபத்தின் பின்னேடேமகத்தானமோகமானதுண்டாம் அந்தமோகத்திஞல் புருஷனுடைய வியாபகமானகாரியாகாரியக் கியானமானதுசூழப்படாதிறகும்.

வாரீர்உத்தவரோ, மோகத்திஞல்சூழப்பட்டு கியானசூனியனுன புருஷனுனவன் நாசத்தை யடைந்தவன் போல ஆகாநிற்கிருன், பிற்பாடு மோகத்தை யுடையவனுயும் யரிச்சவன்போலுமிராநின்ற அந்தப்புருஷனுக்குப் புருஷார்த்தஆனியானது உண்டாகா நிற்கும் புருஷனுனவன் விஷயங்களில் ஆசக்தியினுல்தன்னையுமறியாமற்போகிருன்.பரனையுமறியாமறபோகிருன்.விருட்சத்தினுடையசிவன்போல விருதாவ்ாகசீவியாநின்ற துருத்தியானதுபோல் சுவாசத்தையுடையவனுய்க் கொண்டுசெத்தவன்போலுமிருக்கிருன். இந்தச்சொற்காதிபலத்தைச்சொல்லாநின்றசுருதியானதுமுக்கியமாகப்புருஷார்த்தத்தைச்சொல்லுகிறதன்று விஷயத்தில் அசகதியையுடைய புருஷாளுக்கு மோட்சத்தைச்சொல்லவேணுமென்கிற இச்சையினுல் மத்தியில்சொர்க்காதிபலன்களால்கர்மங்களில் சிரத்தைவருகிற நிமித்தமாகச்சொல்லப்பட்டிருக்கின்றது.

எப்படியாஞல்,அமிர்தந்தைப்பானஞ்செய்கிறபுருஷனுனவன் லட்டுகாதிகளைப்பலமாகக்காண்பித்து அவிஷதபானத்தில் பிரவிர்த்தி பண்ணி வைக்கிருனே அப்படிபோலச்சொர்க்காதி பலத்தைச்சொல்லுகிற சுருதிகர்மத்தில்பிரவிர்த்தி நிமித்தமென்றறியத்தக்கது. எப்படியாஞல்பிதாவினுலிந்த அவிஷதத்தைச்சாப்பிடுஇந்தலட்டுகங்களைத் தருகிறேனென்று இந்தப்பிரகாரஞ்சொல்லப்பட்டவனுய் பாலனுனவன் அந்தஅவிஷ்தத்தைப் பானம்பண்ணுகிருன், அந்தஅவிஷதபானத்துக்குஅந்தலட்டுகலாபமேபலமன்று, ஆரோக்யம் பலமாகாநிற்கிறது அப்படிப்போலக் கர்மகாண்டத்துக்குச சொர்க்காதிபலமேபலமன்றுமோட்சமேபலமாகாநிற்கிறது, மனுஷியாளானபேர்கள் சுபாவமாகப் பசுபுத்திராதிகளிலேயும்-ஆயுசு-இந்திரியம்-பலம்-வீரியம்- இதுகளிலேயும்- தனக்குத்துக்கவதுவான இவர்களிடத்திலேயேஆசக்தமானமனதையுடையவரா யிருக்கின்ருர்கள், வேதமானதுயாதொன்றைச்சொல்லுகிறதோ அதுவேசிரேயசுவென்றுவிசுவாசத்தையுடையவர்களாயும் பரமபுருஷார்த்தத்தையறியாதவர்களாயும் பலயிச்சையினுல் தேவாதிஜென்மங்களில் பிரமித்துக்கொண்டிராநின்றும் மறுபடியும்விருட்சாதிசென்மங்களையடையாநின்றுமிருக்கிற அந்தப்புருஷனைவேதமானது மறுபடியும் அந்தக்கர்மங்களிலேயே எப்படிப்பிரவிர்த்திப்பிக்கும்புத்தியில்லாதசிலபேர்கள் இந்தப்பிரகாரம் வேதத்தினுடைய அபிப்பிராயத்தை யறியாமல்சொர்க்காதிபலத்தைக்காண்பிக்கிறபடியினுல் மிகவுமதுரமாயிருக்கிற பலசுருதியைச் சொல்லுகின்ருர்கள்.

ஆகையினுலவர்கள் புத்தியீனுள் வேதத்தினுடையதாற்பரியத்தையறிந்த வியாசாதிகள் அப்படிச் சொல்லுகிறதில்லை, காமிகளாயும்-தீனுளாயும்-மிகவும் ஆசையையுடையவர்களாயும்-சொர்காதிபலனகளில் பரமபுருஷார்த்தமென்று புத்தியையுடையவர்களாயும் அக்கினியினுல் சாதிக்கத்தக்கதான கர்மங்களில் அபிமானத்தாலேவிவேகயீனர்களாயும் அதினுல் துமாதிமார்க்கத்தையுடையவர்களாயுமிருக்கிற அந்தப் புருஷர்கள்தங்களுடையலோகத்தையுமறியார்கள், கர்மத்திலேயே சிரத்தையுடையவர்களாயும் மிகவும் இந்திரியங்களுக்குப் பிரீதியைச் சம்பாதிப்பதிலேயே ஆசக்தியையுடையவர்களாயுமிருக்கிற அந்தப்புருஷாள் எப்படியாஞல்மகாந்தகாரத்திஞல் விபாபிக்கப்பட்ட நேத்திரத்தை யுடையபேர்கள் சமீபத்திலிருக்கிற வஸ்துவையும்அறியமாட்டார்களோ (அதுபோல) யாதொருஎன்னைக்காட்டிலும் வேருகச்செகத்திலேயோயாதொரு எனதிடத்தில்நின்றும்இந்தச்செகத்து உண்டாச்சுதோ இருதயத்திலேயிராநின்ற அப்படிப்பட்டஎன்னையும் அறியமாட்டார்கள் விஷயங்களிலேயே மனதையுடையஅந்தப்புருஷர்கள் எனதுஆக்கியாரூபமான வேதத்தினுடைய அபிப்பிராயத்தைஅறியாமல்வியர்த்தமாகப்பசுஇம்சையைப்பண்ணுகிருர்கள் அவர்கள்மரித்தபிற்பாடுஅந்தப்பசுக்களாலேயே இம்சிக்கப்படுகிருர்கள்.

வேதத்தினுடைய அபிப்பிராயமென்னவென்ருல் மாம்கிஷபக்ஷணர்த்தமாகவும் சுவர்ககாதி பலார்த்தமாகவும்இம்சையில் ஆசையுண்டாயிருந்துதேயாஞல்அந்தக்கர்மமானது விருதுவான எக்கியமேவேதத்திற்சொல்லப்பட்ட எகனியமன்றென்று. இந்தப்பிரகாரம்வேதார்த்தத்தைக்கேட்டும் காமங்களிலேஅறியாமலிருக்கிருர்கள்.புத்தியீனர்களாயும் இம்சையேகிரீடையாகவுடையவர்களாயுமிருக்கிற அந்தப்புருஷார்த்தங்கள், சுகத்தில்இம்சையினுல் இம்சிக்கப்பட்ட பசுக்களால்எக்கியங்களால்தேவர்களையும் பிதுர்க்களையும்பூதபதிகளையும்எசிக்கிருர்கள். எப்படியாஞல் வர்த்தகனுனவன் தாண்டக்கூடாத சமுத்திரத்தைத்தாண்டி வெகுதனங்களைச்சம்பாதிக்கவேணுமென்கிற இச்சையால் பூர்வம்சித்தமாயிருந்ததனத்தையும் ஓடமுதலானதற்காகச் சிலவழியாநின்றஅந்தஓடமானதுஉடைந்து போனதிஞல்திரவியநாசமுண்டாகி உபயப்பிரஷ்டனுகிருனே (அப்படிப்போல) இந்தலோகத்தில் சொற்பனத்துக்குச்சமானமாயும் அசத்தாயும் சிரவணனந்தமாயுமிருக்கிற சுவர்க்கலோகத்தையும் மற்றமனோரதங்களையும் இருதயத்தில் சங்கல்பித்துக்கொண்டு தனங்களைச் சிலவழியாநிற்கிருர்கள். ஆகையினுல்சத்துவரஜஸ்தமோகுணங்களையுடை

யவர்களாயும் தங்களுக்குச் சாமானர்களாயுமிருக்கிற இந்திரன்முதலானதேவர்களையேஉபாசிக்கிறார்கள். எதாசாஸ்திரமாக என்னைஉபாசியாமலிருக்கிறார்கள், அந்தப்புருஷர்களுடைய சங்கல்பமானது எப்படியென்றால் இந்தலோகத்தில் எக்கியங்களால் தேவர்களை ஆராதித்துசொர்க்கத்திற்குப்போய் தேவபோகங்களையுடையவர்களாய் ரமித்துக்கொண்டிருப்போம்,அந்தப்போகத்தினுடையஅந்தத்தில் திரும்பவும்இந்தலோகத்தில் நல்லவுத்தமவங்கிஷத்தில் பிறந்தவர்களாய் மகா கிரகஸ்தர்களாயிருப்போமென்றுஇந்தப்பிரகாரம்மிகவுஞ்சிரவணத்தமானமனதையும்மிகவும் அகங்காரத்தையுமுடையவர்களாயுமிருக்கிற அந்தமனுஷியர்கள் சம்சாரத்தையேயுடையவர்களாயிருப்பார்கள், மயித்திராதிதேவர்கள்பரப்பிரம்மம் இவர்களைச்சொல்லாநின்ற இந்தவேதங்களானதுகள் சீவாள்பரமாத்மாவினுடைய சேஷபூதர்கள்சம்சாரியாளென்றென்று இந்தஅர்த்தத்தைச்சொல்லாநிற்கிறதுகள், மந்திரங்கள்இந்தஅர்த்தத்தையேவேறொருபிரகாரமாக வெளியிட்டுக் கொண்டிருந்ததுகள்.

இப்படிவேதார்த்தம், ரகசியமாயிருக்கிறதே எனக்குஇஷ்டமாகாநிற்கிறது, சுவரூபத்தினாலேயும், அர்த்தத்தினாலேயும்மிகவும்அறியக்கூடாததாயும்,ஸ்தூலரூபமாயும்-சூட்சமரூபமாயும்-வேதமானது இரண்டுவிதமாயிருக்கும்,அந்தசூட்சமரூபமான வேதமானதுபாராக்கியமென்றும்- பசியந்தியாக்யமென்றும், மத்திமமாக்கியமென்றுமாகாநிற்கிறது, பின்னையும்சமுத்திரம்போலதேசகாலங்களால் அளவிடக் கூடாததாயும், அறியக்கூடாத அர்த்தங்களையுடையதாயும்· பிரவேசிக்கக் கூடாததாயுமிருக்கிறது.தேசகாலங்களாலே அளவிடக்கூடாதவனாயும் விகாரசூனியனாயும் சருவ நியந்தாவாயும் அந்தரியாமியாயுமிருக்கிற என்னாலே,பிரகாசிக்கப்படாநின்ற.அந்தச்சூட்சுமரூபமான வேதமானது சமஸ்தபிராணிகளிலேயும் நாதரூபமாகத் தாமரைக் கொடியில் நூலானதுபோல் காணப்பட்டுக்கொண்டிருக்கிறது

ஸ்தூலரூபமானவேதமானது ஊர்ணநாபியென்னப்பட்டசிலந்திப்பூச்சியானது தன்னுடைய இருதயத்திலிருந்துமுகத்தினால் நூலைவெளியிலபிரகாசிப்பியாநின்றும்மறுபடியும்கிரசிக்காநின்றுமிருக்கிறதுபோலவேபகவனாயும்· வேதமூர்த்தியாயும்- அமிர்தசுரூபனாயும்-நாதோபருதங்களையுடையவனாயும்-இரணியகெர்ப்பமாயுமிருக்கிறபகவானானவர்-ககாரதிவர்ணங்களைக்கல்பியாநின்றமனதினாலே இருதையாகாசத்திலநின்றுவெகுமார்க்கத்தையுடையதாயும், சூட்சுமமான,ஓங்காரத்தில்நின்று-மார்பு-கண்டம்-இதுகள்முதலான அவயவ சமமந்தத்தினால் நன்றாகப்பிரகாசிக்கபபட்ட ககாரமுதலானஇருபத்தைந்துவர்ணம்-அகாரமுதலான பதினாறுவர்ணம்பி-ஷ-ஸ-ஹ-ய-ர-ல-வ-இந்தஅட்சரங்களால்- அலங்கரிக்கப்படும்நானாவிதங்களான லவுகிகவைதிகபாஷைகளால்விஸ்தரிக்கப்பட்டும்,நவ்வாலு அட்சரங்களை அதிகமாகவுடையதுகளான காயத்திரி-உஷ்ணிக்கு-அனுஷ்டுபு-பிறஹதி-பங்தி-திரிஷ்டுப்-செகதி- அத்தியஷ்டி - அதிசக்தி-அதிவிராட்டு-இதுமுதலான சந்தசுகளோடு கூடிக்கொண்டும் அளவிடக்கூடாதாயுமிருக்கிறவேதத்தைச்சிருஷ்டியாநின்றும் மறுபடியும் தாம்தானே உபசங்கரியாநின்றுமிருக்கிறார், இந்தவேதமானது கர்மகாண்டத்தில்விதிவாக்கியங்களினால் எதைவிதிக்கிறதோ தேவகாண்டத்தில் மந்திரவாக்கியங்களினால் எதைபிரகாசிப்பிக்கிறதோ, கியானகாண்டத்தில் நிஷேதிக்கிறநிமித்தமாகஎதை அனுவதிச்சுவிகர்ப்பிக்கிறதோவென்றுஇந்தப்பிரகாரம் இந்தவேதத்தினுடைய தாத்பரியத்தைஎன்னையன்றி மற்றொருபுருஷனறியமாட்டான், ஆனால்என்னிடத்தில் அனுக்கிரகத்தினால் தேவரீரோஎனக்குவேதத்தினுடைய தாத்பரியத்தைச்சொல்லவேண்டிப் பிரார்த்தித்தால்சொல்லுகிறேன்.

வாரீர்உத்வரே, வேதமானது கர்மகாண்டத்தில்விதிவாக்கியங்களால் எக்கியரூபமான என்னையேவிதிக்கிறது-தேவகாகாண்டத்தில் மந்திரவாக்கியங்களால் என்னையேசொல்லுகின்றது, கியானகாண்டத்தில்ஆகாசமுதலானயாதொருபிரபஞ்சமானது விகல்பித்து நிஷேதிக்கப்படுகிறதோ அந்தப்பிரபஞ்சமும்நானேஎன்னைத்தவிரவேறில்லை, சமஸ்தவேதங்களினுடையஅர்த்தமானதுஇவ்வளவே வேதமானது பரமார்த்தசுரூபனான என்னையேஆசரியித்து பிரபஞ்சபேதத்தை மாயா மாத்திரமாகச்சொல்லி நிஷேதித்து அந்தமட்டும்ஒழியாநிற்கிறது,எப்படியானால் அங்குரத்தினுடையரசமானது விஸ்தாரமாகாநின்ற அநேகமானகிளைகள்-சாகைகள்- பத்திரபலங்கள்-இதுகளுண்டாகாநிற்கிறதோ அப்படிபோலபிரணவத்தினுடைய அர்த்தமானநானே அந்தபிரணவத்தினால் விஸ்தாரமாகாநினற சமஸ்தவேத சாகைகாண்டங்களுக்கும் அர்த்தமாகாநிற்கிறேன்.

---

### உஉ-வது- அத்தியாயம்.

#### கலி விருத்தம்.

உத்தவராநே ருளங்களிகூர்ந்து
அத்தியைக்காத்த ஹரியைச்சேவித்து
தத்துவசங்கைகள்தனித்தனியிருப்பதால்
அத்தனேயதன்கருத் தறைதுமியென்றார்.

#### ஸ்ரீஉத்தவருடையவாக்கியம்.

வாரீர் விசுவேஸ்வரரே பிரபுவே-ரிஷிகேசரே-தத்துவங்களுக்குள் எத்தனை தத்துவங்கள் யுக்தமா யிருக்கிறதுகள், தேவரீர் இருபத்தெட்டு தத்துவங்க ளென்று

படிப்பட்ட எனது பிரபாவமும்-பிரபுத்துவமும்-பிலமும்-வியர்த்தமாகாநிற்கிறது, யாதொருபுருஷனுடைய மனதானது ஸ்திரீகளாலபகரிக்கப்பட்டதோ அந்தப்புருஷனுக்குவித்தையினாலும் தபசினாலும்தான் என்னபிரயோசனம்-சந்நியாசத்தினாலும் தியானத்தினாலும்தான் என்னபிரயோசனம்-ஏகாந்தவாசத்தினாலும் ஈளச்சக்கிரவர்த்தியாயிருக்குகையை அடைந்திருந்தாலும் மாடுபோலும்-கழுதைபோலும்-ஸ்திரீகளால் ஜெயிக்கப்பட்டேனென்னது புருஷார்த்தத்தை அறியாதவனையும் மூர்க்கனையும் வித்துவானென்றும் எண்ணிக்கொண்டிருக்கிற என்னைச்சுடவேண்டாமா, அநேகசம்வச்சரங்களாய் ஊர்வசியினுடைய அதராமிர்தத்தைஅனுபவியாநின்ற என்னுடையமனதில் அடிக்கடி உண்டாகாநின்ற காமமானதுஎப்படியானால் அக்கினியானது ஆகுதியால்திருப்தியடையாதோ(அப்படிபோல)திருப்தியடையவில்லை ஆத்துமநிஷ்டர்களுக்கு ஈஸ்வரராயும்பகவானாயுமிருக்கிறஸ்ரீஅரியைத்தவிர மற்ற எந்தபுருஷன்தான் ஸ்திரீயினாலே அபகரிக்கப்பட்ட சித்தத்தைவிமோசித்துக்கொள்ளுகைக்குசமர்த்தனாகிறான். (ஆகையால்) இனிமேல் அந்தஸ்திரீயையேஉபாசிக்கக்கடவன். ஊர்வசியினுடையவேதரூபமான வசனத்தினால் போதிக்கப்பட்டிருந்தாலும் துற்புத்தியாயும் இந்திரியஜெயமில்லாதவனாயுமிருக்கிறஎனதுமனதி லிராநின்ற மகாமோகமானதுநிவிர்த்தியாகாமற்போயிற்று. (எப்படியானால்)பழுதையைப்பார்த்து பழுதைசுவரூபத்தையறியாமல்பாம்பென்றுபுத்தியையுடையவனாய மிகவும் விசனப்படாநின்றபுருஷனுக்கு அந்தப்பழுதையினால் ஒருஅபராதமும்பண்ணப்படவில்லையோ (அப்படிபோல) யாதொருகாரணத்தினால் நான்இந்திரியஜெயமில்லாதவனாக வானேனோ அப்படிப்பட்டஎனக்கு ஊர்வசியினால்என்னஅபகாரம் பண்ணப்பட்டது, நானே அபராதியாகாநிற்கிறேன் மிகவும்மலினமாயும் துர்க்கந்தமுதலானதுகளுக்குஆசிரயமாயுமிருக்கிற இந்தச்சரீரமெங்கேசௌந்தரியமுதலானகுணங்களெங்கே அக்கியானத்தினால் பண்ணப்பட்டதேயல்லாமல்மற்றொன்றுமில்லை யாதொருசரீரமானது மாதா பிதாக்களினுடையதோ-அல்லது பாரியாளுடையதோ.இராஜாவுதோ-அக்கினியினுடையதோ-நாயினுடையதோ-பருந்து கூளியினுடையதோ - ஆத்துமாவுதோ-சினேகிதாளுதோ- என்று நிச்சயிக்கப்படவில்லையோ, அசுத்தமாயும்-முடிவில்கிருமியாயும்-மலமாயும்-பஸ்பமாயும்-போகுகைக்கு யோக்கியமாயுமிருக்கிற இந்தச்சரீரத்தில்யாதொருபேர்கள் இந்தஸ்திரீயினுடைய முகமானது மிகவுஞ்சுந்தரமாயிருக்கிறதென்றும்மனோக்கியமான புன்சிரிப்பை யுடையதென்றும் சோபனமானமூக்கையுடையதென்றும்மோகத்தையுடையவர்களாயிருக்கிறார்களோ-தொக்கு-மாம்ஸம்-இரத்தம்-நரம்புகள்-கொழுப்பு-சலத்தண்ணீர் எலும்புகள் - இதுகளுடையகூட்டமான சரீரத்தில் ரமிக்கிறபேர்களுக்கும் மலம்-மூத்திரம்-முதலானதில் ரமியாநின்றபுழுக்களுக்கும் என்னபேதமிருக்கின்றது. இப்படியறியாநின்றவிவேகியானவன் ஸ்திரீகளிடத்திலும் ஸ்திரீவசியர்களாயிருக்கிறபுருஷர்களிடத்திலும் சங்கிபண்ணாமலிருக்கக்கடவன் விஷயங்களுக்கும் இந்திரியங்களுக்கும்சம்மந்தமுண்டானால்மனதுகலங்கும்இல்லாவிட்டால் கலங்குகிறதில்லை பார்க்கப்படாமலும்கேழ்க்கப்படாமலுமிருக்கிறபதார்த்தத்தினால் மனதுக்குச சாஞ்சல்லியமானதுஉண்டாகிறதில்லை இந்திரியங்களை நிக்கிரகியாநின்ற புருஷனுடையமனதானது நிச்சலமாய்க்கொண்டு சாந்தியையடையும். (ஆகையால்) ஸ்திரீகளிடத்திலும் ஸ்திரீவசியர்களாயிருக்கிற புருஷர்களிடத்திலும் இந்திரியங்களால் ஆசக்தியானதுபண்ணத்தக்கதன்று இந்திரியங்களுடையசமூகமானது வித்வாம்சர்களுக்கும் விசுவாசிக்கத்தக்கதன்று என்னைப்போலொத்த விவேகிகளுக்குவிசுவசிக்கத்தக்கதன்று.

வாரீர்உத்தவரே, அந்தபுரூரவசுவானவன் இந்தப்பிரகாரஞ்சொல்லாநின்று பின்பு அந்த ஊர்வசியினுடையலோபத்தைவிட்டுவிட்டு மனதில் பரமாத்துமாவானஎன்னைத் தியானம் பண்ணாநின்று தியானத்தினால் சகலமோகங்களையும்விட்டதைய் சாந்தியையடைந்தான்(ஆகையால்) புத்திமான் துஷ்டர்களுடைய சங்கதியைவிட்டுவிட்டு சற்புருஷர்களுடைய சங்கதிபண்ணக்கடவன். சற்புருஷர்களானவர்கள் இதோபதேசங்களாலேசத்சங்கதிபண்ணுகிற புருஷனுடையமனோவியாசங்களைப்போக்கடிப்பார்கள். சற்புருஷர்களுடையலட்சணமெப்படியென்றால் நிரபேட்சர்களாயும் என்னிடத்திலேஸ்திரமான சித்தத்தையுடையவர்களாயும், மிகவும்சாந்தியையுடையவர்களாயும் சர்வத்திர சமபுத்திரர்களாயும் மமதையில்லாதவர்களாயும் அகங்காரமில்லாதவர்களாயும் சுகதுக்கங்களைச் சமமாகப்பார்க்கிறவர்களாயும்; பரிக்கிரகமில்லாதவர்களாயு மிருப்பார்கள்.

வாரீர் மகானுபாவரே, மகானுபாவர்களானஅந்தசற்புருஷர்களுடையகோஷ்டியில் எனதுகதைகளானதுகள் நித்தியமாகஉண்டாகிக்கொண்டேயிருக்கும், அந்தக்கதைகளானதுகள்கேளாநின்ற புருஷர்களுடைய பாவத்தைப்போக்கடியாநிற்கும், யாதொருபுருஷர்கள் அந்தக்கதைகளைக் கேழ்க்கிறார்களோ கியானம் பண்ணுகிறார்களோ மிகவும்ஆதரவுடையவர்களாய்சிலாகிக்கிறார்களோ அந்தப்புருஷர்கள்என்னைச்சரணமாகஅடைந்தவர்களாயும் சிரத்தையையுடையவர்களாயுமாகக்கொண்டு என்னிடத்தில்திடமானபக்தியையடைவர்கள், அநந்தகலியாணகுணபரிபூரணராயும் பரப்பிரமமாயும் ஆனந்தானுபவஸ்வரூபமாயுமிருக்கிற என்னிடத்தில் பக்திபண்ணாநின்றசாதுவுக்குவேறே வேண்டியதொன்றுமில்லை எப்படியானால்மிகவும் ஜொலியாநின்ற அக்கினியை யாசரியாநின்றபுருஷனுக்குசீதமும்-பயமும்-அந்தகாரமும்நசித்துப்போகிறதோ (அதுபோல) சாதுவைஆசரியாநின்றபுருஷனுக்குகருமாதிகளில்ஆலசியமும்-சமுசாரபயமும்-அக்கியானமும்-நசித்துப்போகும். எப்படியானா

ல்) ஜலத்தில்முழுகிப்போகாநின்ற பேர்களுக்குத் திடமான ஓடமானது முக்கியமான ஆசிரியமாயிருக்கிறதோ (அப்படிபோல) கோறமான சமுசாரமாகிற சமுத்திரத்தில்முழுகியிராநின்றபேர்களுக்கும் பிர்ம்மவித்துக்களாயும சாந்தர்களாயுமிருக்கிற சத்புருஷர்கள் முக்கியமான ஆசிரியமாகா நிற்கிறார்கள். (எப்படியாலைல) பிராணிகளுக்குஅன்னமே சீவனமாயிருக்கிறதோ (அப்படிபோல) ஆபத்தையடைந்தபேர்களுக்கு நானே இரக்ஷகனாகாநிற்கிறேன், மனிதர்களுக்குத் தர்மமே பரலோகசாதனமான தனமாகாநிற்கிறதோ (அப்படிபோல) சத்புருஷர்கள்தானே சமுசாரத்திலின்றுமபயப்படுகிறபுருஷனுக்குச் சரணமாகாநிற்கிறார்கள். சத்புருஷர்களானவர்கள் புருஷனுக்குச்சகுணநிர்க்குணகியானமாகிறகண்ணைக்கொடுக்கிறார்கள். சூரியனேவென்றால் நக்ஷத்ரமண்டலமாகாநின்று வெளிதிருஷ்டியைக் கொடாநிற்கிறான். சத்புருஷர்களேபந்துக்கள், அவர்களே சமஸ்தம். அவர்களும் சத்புருஷர்களான பரமாத்துமாவானநானேயாகாநிற்கிறேன்.

வாரீர்உத்தவரே, பிற்பாடு அந்தப்புரூரவசுவானவன் இக்சப்பிரகாரம் ஊர்வசியினுடைய தரிசனத்திலேஇச்சையில்லாதவனாய் பரமாத்துமாவினிடத்திலேயே சித்தத்தையுடையவனாய் இந்தப்பூமியிலசஞ்சரித்துக்கொண்டிருந்தான்.

## உ[illegible]-வது- அத்தியாயம்.

மட்டு விருத்தம்,

சகமதிலுள்ள சகலவாத்மர்கள்தாதி
பகவராதனக்கிரமம் பகர்ந்தனரே.

பகவதாராதனக்கிரமத்தைச் சொல்லுகின்றார்.

ஸ்ரீஉத்தவர்வாக்கியம்.

வாரீர் மஹாப்பிரபுவாகிய ஸ்ரீயாதவ சிரேஷ்டரே, தேவரீருடைய ஆராதனரூபமான கிரியாயோகத்தைவக்கு சொல்லக்கடவீர் யாதொருபக்தர்கள் எந்தக்காலங்களில் எந்தப்பிரகாரமாகத் தேவரீரை ஆராதிக்கிறார்களோ அந்தக்கிரமத்தைச சொல்லக்கடவீர் ஸ்ரீபகவானாரதமகாரிஷி-வியாசர்- தேவாசாரியரான பிரகஸ்பதிபகவான்-இவர்கள்முதலான ரிஷீஸ்வரர்களும்தேவரீருடைய ஆராதனத்தை மனுஷ்யர்களுக்குப் பரமபுருஷார்த்தசாதனமாக அடிக்கடிசொல்லுகிறார்கள். உமமுடையமுகாரவிந்தத்திலின்றும உண்டாகாநின்றயாதொரு ஆராதனக்கிரமத்தை ஸ்ரீபகவானானபிரமாவானவர் தமதுபுத்திரர்களான பிருகுமுதலியரிஷிகளின்பொருட்டுச்சொன்னாரோ அந்தப்பிரமாவானவர் பார்வதியின்பொருட்டு யாதொருஆராதனத்தைச்சொன்னாரோ வாரீர்ஸ்ரீபகவானே இந்தபகவதாராதனமான பிராமணாதிவர்ணங்களுக்கும் பிரமசரியாதியாசிரமங்களுக்கும் சமமாயும் ஸ்திரீ சூத்திராதிகளுக்கும் சிரேயசுக்கறமாயுமாகாநிற்கிறதென்று எண்ணுகிறேன் வாரீர்கமலதள நேத்திரரே, விசுவேசுவரருக்கு ஈஸ்வரரே கர்மபந்தநாசகரமான இந்தஉம்முடைய ஆராதனத்தைப்பக்தனையும் மிகவும்ப்ரீதியையுடையவனையுமிருக்கிற என்பொருட்டுசொல்லக்கடவீரென்று பிரார்த்தியாநின்ற உத்தவரைப்பார்த்துச்சொல்லுகின்றார்.

வாரீர்உத்தவரே, கிரந்தரூபமாயும் அனுஷ்டானரூபமாயும் கரையில்லாமலிருக்கிற எனதுபூஜாவிதிக்கு அந்தமில்லை ஆனாலுமசங்க்ஷேபமாக அந்தப்பூஜாவிதியை எதாவத்தாய் கிரமமாகச்சொல்லுகிறேன் கேழ்க்கக்கடவாயெனது பூஜையானது வைதீகமென்றும்- தாந்திரிகமென்றும்-மிசரமென்றும்-மூன்றுவிதமாகவிருக்கும மூன்றுபிரகாரமான இந்தபூஜைக்குள்ளே எந்தபூஜைஇஷ்டமாயிருக்கின்றதோ அந்தபூஜாவிதியினால் என்னையாராதிக்கக்கடவன்.

உபநயனத்துக்கு யோக்கியமானகாலத்தில் வேதோக்தமான உபநயனவிதியை அடைந்திருக்கிற பிராமணன்-க்ஷத்திரியன்-வைசியன்-பக்திசிரத்தையோடுஎன்னையெந்தப்பிரகாரம் ஆராதிக்கவேணுமோ அந்தக்கிரமத்தைச்சொல்லுகிறேன் கேழ்க்கக்கடவீர் பிரதிமைகளிலும்-பூமியிலும்-அக்கினியிலும்- சூரியனிடத்திலும்-ஜலத்திலும்-இருதயத்திலும்- பிராமணனிடத்திலுமபுருஷனானவன் பக்தியுடையவனாய் பரமாத்துமாவான என்னைத்திரவியங்களால்கபடமில்லாமல்ஆராதிக்கக்கடவன் புருஷனானவன் ஆராதனத்துக்குப்பூருவமேதந்ததாவனம்பண்ணிக்கொண்டுதேகசுத்தியின்பொருட்டு ஸ்நானமபண்ணக்கடவான். அந்தஸ்நானமபண்ணும்போதுவைதீகமந்திரங்களாலேயுமமிருத்திகாஸ்நானமுதலானதைப்பண்ணககடவன். பிற்பாடுவேதத்தினால்சொல்லப்படாநின்றசந்தியாவந்தன முதலானவிகித கர்மங்களோடுஎனது ஆராதனத்தைப்பணணக்கடவன்பகவத்பிரீதியார்த்தமாகச்சங்கல்பத்தை யுடையவனாய் கர்மங்களைப்பண்ணி பகவதற்பணம்பண்ணக்கடவன். எனது ஆவிற்பாவத்துக்கு ஸ்தானமானபிரதிமையானது சிலாமயமாயும்தாருமயமாயும் சுவர்ணாதிலோகமயமாயும் புஷ்பமாலைமிருத்துசந்தனம் - இந்தரூபமாயும் சித்திரரூபமாயுமமணலினாற்பண்ணப்பட்டதாயும் இருதயத்தில்மனோமயமாயும் ரத்தினமயமாயும் எட்டுவிதமாயிருக்கும் இந்த எட்டுவிதமான பிரதிமையானது சலமென்றும் அசலமென்றும், இரண்டுவிதமாயிருக்கும்.

வாரீர்உத்தவரே, அசலமாயிருக்கிறபிரதிமையில்எனது ஆராதனத்தில் நித்தியமாய்ஆவாகன விசர்ச்சனங்களில்லைசலமாயிருக்கிற பிரதிமைகளிலே சாளிக்கிராமத்தில ஆவாகனவிசர்ச்சனங்களில்லை மற்றபிரதிமைகளிலேநித்தியமாய் ஆவாகனவிசர்ச்சனங்களைச் செய்யலாம இல்லாவிட்டால் ஒருக்கால்ஆவாகனமபண்ணி விசர்ச்சனங்களசெய்யாமல்பூஜையுஞ்செய்யலாம் மிருத்துருபப்பிரதிமை-நிலோப்பிரதிமை-இந்த இரண்டுபிரதிமைதவிரமற்றப்பிரதிமையிலே திருமஞ்சனம்பணணி வைக்கக்கடவன் இந்தஇரண்டு பிரதிமையிலோவென்றால் அஸ்தத்தினாலே பரிசோதனம்பண்ணக்கடவன் சலத்திலேஇச்சையையுடைய புருஷனானவன் மகாசோபலங்களான சந்தனபுஷ்பமுதலிய திரவியங்களால் எனதுபிரதிமைகளிலேஎன்னுடைய ஆராதனத்தைப்பண்ணக்கடவன் நிஷ்காமனான பக்தனானவன் கெந்தபுஷ்பாதிகள் லபியாமற்போனால் மனதினாலேயே பாவனைபண்ணிஆராதிக்கக்கடவன்.

வாரீர்உத்தவரே இருதயத்திலேயேஎன்னைஆராதிக்கிறபுருஷனானவன் மனதினாலேபகல்பிக்கப்பட்டிருக்கி

றகெந்தபுஷ்பாதி சமஸ்ததிரவியங்களாலேயும் என்னையாராதிக்கக்கடவன் வாரீர உத்தவரே எனதுபிரதிமைகளிலேஸ்தான அலங்காரமுதலான வுபசாரமானதுபணணத்தக்கது பூமியிலென்னையாராதனம் பண்ணும்போது அந்தந்தஸ்தானங்களிலே பிரதானதேவதை பரிவாரதேவதைகளையும் அந்தந்தமந்திரங்களால் ஸ்தாபனமபண்ணிஆராதிக்கிறதுஉத்தமம் அக்கினியிலே ஆச்சியத்தினல்நனைக்கப்பட்டஅவலை ஓமம்பண்ணி ஆராதனம்பண்ணுகிறது உத்தமம்சூரியனிடத்தில் ஸ்தோத்திரம்அர்க்கியப்பிரதான முதலான ஆராதனமானது உத்தமமாகாகிற்கிறது ஜலத்தில் தர்ப்பணமுதலானதுகளாலே ஆராதனமானது உத்தமம்எனது பக்தனாலேசிரத்தையுடனே கொடுக்கப்படாநின்ற தீர்த்தமும்எனக்குமிகவும் இஷ்டமாகாநிற்கும் கெந்தபுஷ்பதுபதீபநைவேத்தியங்கள்எனக்கு இஷ்டமென்கிறதற்குக் கேழ்க்கவேண்டியதென்ன புருஷனானவன் ஸ்நானம்பண்ணி சுசியாய்பூருவமேகெந்தபுஷ்பமுதலான பூஜாதிரவியங்களைச் சம்பாதித்துக்கொண்டவனாய் தெர்ப்பைகளால் ஆசனம்பண்ணிஅதின்மீது கிழக்குமுகமாயாகிலும் வடக்குமுகமாயாகினும் ஸ்திரமானபிரதிமையிலே எதிர்முகமாயிருந்துகொண்டு என்னையாராதிக்கக்கடவன் பிற்பாடுஆசாரியர் முதலானபேர்களைப் பிரணமம் பண்ணிதனக்குஉபதேசமானபடிக்கு மந்திரங்களால் அங்கன்னியாச கரன்னியாசங்களை யுடையவனாய் மூலமந்திரநியா சத்தையுடையதானபிரதிமையை அஸ்தத்தினல் ஸ்பரிசித்துகெந்தபுஷ்ப முதலானநிர்மாலியங்களை விசற்சனம்பண்ணிதிருமஞ்சனதீர்த்தத்தையுடையகலசத்தையும்புரோக்ஷணபாத்திரத்தையும் கெந்தபுஷ்பாதிகளால் அலங்கரிக்கக்கடவன் பிற்பாடுஅந்தபுரோக்ஷண பாத்திரத்திலிராநின்ற தீர்த்தங்களால் திருவாராதனம்பண்ணுகிறஸ்தலத்தையும், கெந்தபுஷ்பமுதலான திரவியங்களையும்தன்னையும் புரோக்ஷித்துக்கொண்டு அர்க்கியபாத்திரம் ஆசமனியபாத்திரம்-பாத்தியபாத்திரம்இதுகளைத்திருமஞ்சனதீர்த்தத்தினலே பூரிச்சுபாத்திய பாத்திரத்திலேசாமைஅறுகு-விஷ்ணுகிராந்தம் இதுகளாலலங்கரிக்கக்கடவன், அர்க்கிய பாத்திரத்திலே - கெந்தம் - புஷ்பம-அக்ஷதை - நவதானியம் - குசாக்கிரம் - திலகம் - கடுகு--அறுகு இந்த யெட்டுகளாலும் அலங்கரிக்கக் கடவன் ஆசமனிய பாத்திரத்தில் சாதிக்காய் - லவங்கம் - ஏலம் - இதுகலால் மீசுரம் பண்ணக்கடவன் பாத்தியம் அர்க்கியம் ஆசமனியம் இந்தமூன்றுபாத்திரங்களையும் கிரமமாக இருதயம் சிரசு - சிகை - இந்த மந்திரங்களாலேயும், காயத்திரியினலேயும், மந்திரிக்கக்கடவன் பிற்பாடு கோஷ்டத்திலே யிராநின்ற வாயுவினலேசோஷிக்கப்பட்டும், ஆதாரத்திலே யிராநின்றஅக்கினியினலே தகிக்கப்பட்டும், மறுபடியும் லலாடத்திலே யிராநின்ற சந்திரமண்டலத்தி னுடைய அமிர்தத்தினலே நனைக்கப்பட்டு அமிர்தமயமாயு மிருக்கிறதேகத்திலேஇருதயகமலத்தி லிராநின்றும் சிரேஷ்டமாயுமிருக்கிற சிவாந்தரியாமியாயும் பிரணவத்தி னுடைய அங்கிசமான நாதாந்தரத்திலே சித்தாகளாலே தியானம்பண்ணப்பட்டிருக்கிற ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைத்தியானம்பண்ணக்கடவன். தனது ஆத்துமாவி லேதியானம்பண்ணப்பட்ட ஸ்ரீமந்நாராயணமூர்த்தியினல்அமிர்தமயமானதேகமயமானது தீபகாந்தியினலே கிரகமானதுபோலவியாபிக்கப்படுகையில் ஸ்ரீமந்நாராயணமூர்த்திவிசுவரூபனயிருந்துகொண்டு தேகத்திலேயே மானசிகமாய்சோடசவுபசாரங்களாலேயும்முன்னே நன்றுகப்பூசித்துபிற்பாடு பிரதிமைகளிலேஸ்தாபனமுத்திரையினலே பிரதிஷ்டைபண்ணி அதில் ஆவிற்பவியாநின்றும் பரிவாரதேவதைகளையுடையவனுயுமிருக்கிற என்னைப்பூசிக்கக்கடவன்.

எட்டுதளத்தையுடையதாயும், மத்தியிலிராநின்றகர்ணிகையில் தாதுக்களாலேயும், முக்குணத்துக்கும் மேலேவைக்கப்பட்டிருக்கிற சோமசூரிய அக்கினிமண்டலங்களாலேயும், பிரகாசித்துக்கொண்டிருக்கிற பத்மத்தை ஆசனமாகக்கல்பித்து அந்தஆசனத்துக்குஅக்கினியாதிநான்குகோணங்களிலேயுமிராநின்றநான்குபாதங்களிலேயும் தர்மக்கியானம் வைராக்கியம்- அயிஸ்வரியம்-இந்தநான்குகளாலேயும் நியாசம்பண்ணி கிழக்குமுதலானதிக்குகளிலே அர்த்தம்-அக்கியானம்- அனைசுவரியம்-இதுகளைப் பாதங்களாக நியாசம்பண்ணிமத்தியத்திலே திரிகுணங்களைநியாசம்பண்ணி அதில் கிழக்குமுதலாகஎட்டுதிக்குகளிலேயும், மத்தியத்திலேயும், விமலா-வுக்கருஷ்ணி-கியானு-கிரியா-யோகா-பிறகு- விசத்தியா-யீசானு-அனுக்கிரகா- யென்னப்பட்ட இந்தநவசத்திகளாலேயும் நியாசம்பண்ணி இந்தப்பிரகாரமாகஎனக்கு ஆசனங்கல்பித்துபுத்திமுக்தி சித்தியின்பொருட்டு வைதீகம்-தாந்திரிகமானஇரண்டுமார்க்கங்களகலேயும் என்பொருட்டுபாத்தியம்-ஆசமனீயம்- அர்க்கியம்-இதுமுதலான உபசாரங்களைப்பண்ணக்கடவன். இற்பாடு சககரம-சங்கு-கதை-கட்கம்-பாணம்-தனுசு- கபிப்பை-முசலம்-இந்தயெட்டு ஆயுதங்களை எட்டுதிக்குகளிலேயுங்கவுஸ்துபாபரணத்தையும் ஸ்ரீவச்சத்தையும் மார்பிலேயும் பூசிக்கக்கடவன் நந்தா-சுனந்தா- பிரசண்டா-சண்டா-காபலை-பலா-குமுதன்-குமுத-தெக்ஷணன் இந்தஎட்டுபேரையும் எட்டுதிக்குகளிலேயும், கருடாழ்வாரைஎதிரேயும், பூசிக்கக்கடவன். துற்கை-விநாயகர் வியாசர்-விஷ்வசேனர்-இவர்களைக்கோணங்களிலேயும் பாகவதர்களைப்பின்பக்கத்திலேயும், இந்திராதி லோகபாலர்களை அந்தந்தஸ்தானங்களில் எனக்கு அபிமுகமாகஸ்தாபித்து புரோக்ஷணுதிகளால்பூசிக்கக்கடவன்.

விபவமுண்டாயிருந்தால் சந்தனம்- வெட்டிவேர்-கர்ப்பூரம்- குங்குமப்பூ - அகில்-கெந்தம் - இதுகளால் வர்ச்சிக்கப்பட்ட சீர்த்தங்களால நித்தியமாக மந்திரங்களாலே எனக்குத்திருமஞ்சனம் பண்ணக்கடவன்-(எப்படியென்றல்) சுவர்னம்-சர்மாயென்னப்பட்ட அனுவாகத்தினலேயும ஜிசிதங்கையென்னப்பட்ட மகாபுருஷமந்திரத்தினலேயும் புருஷசூக்தத்தினலேயும் ராஜஞதிசாமங்களாலேயும்,திருமஞசனம்பண்ணக்கடவன் எனதுபக்தனனவன்வஸ்திரம்-எக்கியோபவீதம்ஆபரணங்கள்பத்திரங்கள்கெந்தபுஷ்பாதிகள் இதுகளாலேமி

கவுமபிரீதியுடனேகூட யதாயோக்கியமாக அலங்காரம்பண்ணக்கடவன். விபவமுண்டாயிருந்து தேவானல்சர்க்கரைப்பொங்கல்-பாயசம்-நெய்-திருப்பணியாரங்கள்-அதிரசம்-மோதகம்-பருப்பு-தயிர்- இதுகள் முதலானதோடுவெகுஜலங்களுடனேகூட மகாநைவேத்தியம்சமர்ப்பிக்கக்கடவன். எண்ணெய்க்காப்பு-பஞ்சாமிருதங்களாலேதிருமஞ்சனம்- அத்துவர்த்தனம்-கண்ணாடி.- நர்த்தாவனம்-திவ்வியமான அன்னம்-திருப்பணியாரம்-நர்த்தனம்-கீதவாத்தியம் இதுகளை ஏகாதசிமுதலானபருவகாலங்களில்பண்ணக்கடவன் விபவமுண்டானால் நித்தியமாகப்பண்ணக்கடவன். அக்கினியில்பூஜை பண்ணுகிற தெப்படியென்றால்-நான்குதுல விஸ்தாரமும்நான்குதுலவுயர்த்தியை யுடையதுகளாயும், முழம் ஆழம்பள்ளத்தையுடையதாயுமிருக்கிற மூன்றுமேம. கலை-வேதிகை-ஆவர்த்தம்-இதுகளோடேகூடிக்கொண்டும் யதாசாஸ்திரமாகப் பண்ணப்பட்டுமிருக்கிற குண்டத்திலே அக்கினியை ஸ்தாபித்து ஜொலித்துக்கொண்டிருக்கிற அந்த அக்கினியை அஸ்தத்தினாலே ஏகமாகச்சேர்த்துத் தெர்ப்பைகளாலே நான்குபக்கமும்பரப்பி புரோக்ஷணம்பண்ணிவியாகிருதிகளாலே சமித்துகளை யதாசாஸ்திரமாக ஓமம்பண்ணி அக்கினிக்குவடவண்டை யோமசாதனங்களான திரவியங்களைவைத்துக்கொண்டுபுரோக்ஷணைபாத்திரத்திலே யிருக்கிற ஜலத்தினாலே அதுகளைப் புரோக்ஷித்து அந்த அக்கினியில் என்னைத்தியானம்பண்ணக்கடவன் உருக்கப்பட்ட சுவர்ணம்போலொத்த தேஜஸையுடையவனையும்-சங்கம்-சக்கரம்-கதை-பதமம் இதுகளாலேவிளங்காநின்ற நான்குபுஜங்களை யுடையவனையும், சாந்தனையும், பீதாம்பரதாரியையும், மிகவும்பிரகாசியாநின்றகிரீடம்-கடகம்-கடிசூத்திரம்- சிரேஷ்டமானதோள்வளைகள்-இதுகளையுடையவனையும், ஸ்ரீவத்சத்தைமார்பிலேயுடையவனையும் பிரகாசியாநின்றகவுஸ்துபாபரணத்தையுடையவனையும் வனமாலையையுடையவனையுமிருக்கிறஎன்னை அந்த அக்கினியிலே தியானம்பண்ணாநின்று ஆச்சியத்தினாலேநனைக்கப்பட்டசமித்துகளை அந்த அக்கினியிலேயோமம்பண்ணி ஆகாரம்ஆச்சியபாகமென்னப்பட்ட எக்கியங்களைச்செய்து வியாகிருதிகளாலே ஓமங்களையும்பண்ணி அஷ்டாட்சரத்தினாலேயும், புருஷசூக்தத்தினாலேயுமமந்திரங்கள்தோறுமவியையெடுத்துஎதாக்கிரமமாக அக்கினியில்ஓமம்பண்ணி பிற்பாடுசிஷ்டமிருந்தது ஓமம்பண்ணிக் காமாதிகளின் பொருட்டு ஓமம்பண்ணிபிற்பாடு அக்கினிமத்தியிலேயிராநின்றபகவானைப்பூஜித்து பிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்து தந்தன்முதலான பாரிஷதர்களின்பொருட்டுஎட்டுதிக்கிலேயும்பெலிகரணம் பண்ணி பிற்பாடுஸ்ரீபகவானை யாதிமேயிருந்துகொண்டு அஷ்டாக்ஷர மந்திரத்தைச்செபித்து ஸ்ரீபகவானுக்கு ஆசமனஞ்செய்வித்து விஷ்வக்சேனரின்பொருட்டு ஸ்ரீபகவான் நிவேதனத்தைச்சமர்ப்பித்து அவருடைய அனுக்ஞையினாலே தானும்போசிக்கக்கடவன். ஏலம்-லவங்கமுதலான வாசனைதிரவியங்களுடன் கூடிக்கொண்டிருக்கிற தாம்பூலத்தைஸ்ரீபகவானுக்குச்சமர்ப்பித்து புஷ்பாஞ்சலிபண்ணி ஸ்தோத்திரஞ்செய்யாநின்றும்-நாமசங்கீர்த்தனம் பண்ணாநின்றும் நர்த்தனம்பண்ணாநின்றும், எனதுலீலைகளை அபிநயம்பண்ணாநின்றும்எனதுகதைகளைச்சொல்லாநின்றும், கேளாநின்றும், இந்தப்பிரகாரமிருந்துகொண்டு வேதோத்தங்களையும் புராணேதிகங்களையுமிருக்கிற நானாவிதங்களான ஸ்தோத்திரங்களினாலே ஸ்தோத்திரம் பண்ணிவாரீர்ஸ்ரீபகவானே பிரசன்னராகக்கடவீர், ரட்சிக்கக்கடவீரென்று தெண்டாகாரமாகச் சிரசினாலே எனது திருவடிகளைஸ்பரிசித்து இரண்டுகைகளையுங்கெட்டியாய்க்கட்டிக்கொண்டு வாரீரீசனே சம்சாரமாகிற சமுத்திரத்திலிருந்து பயப்படாநின்றும் பிரபன்னனயுமிருக்கிறஎன்னைரட்சிக்கக்கடவீரென்று விக்ஞாபனம்பண்ணிக்கொண்டு தண்டாகாரமாகப் பிரணாமம்பண்ணக்கடவன்.

பிற்பாடுசாத்தியங்க திருத்துழாய்முதலானதை என்னாலேகொடுக்கத்தக்கதாக எண்ணி சிரசாயதரித்துக்கொண்டு அப்போதுவெளிச் சுவாசனம்பண்ணத்தக்கதானால் பிரதிமையிலே பிரதிஷ்டை பண்ணப்பட்ட எனது மூர்த்தியை மறுபடியும் தனது இருதயகமலத்திலிருக்கிறதாய் தியானம்பண்ணக்கடவன். அர்ச்சாவிதிக்கிரகங்களிலேஎப்போது எந்தரூபத்திலேசிரத்தையிருக்கிறதோ அப்போது அந்தவிக்கிரகத்திலே என்னையாராதிக்கக்கடவன். யாதொருகாரணத்தினாலே சருவரூபியானநான் சர்வபூதங்களிலேயும்தன்னிடத்திலேயும் அந்தரியாமியாக சதாயிருக்கிறேனோ ஆகையால்பிரதிமையாதிகளிலே முக்கியம் அமுக்கியமென்கிறதில்லை எந்தசுவரூபத்திலே சிரத்தையிருக்கிறதோ அதிலென்னை ஆராதிக்கக்கடவன். புருஷனானவன் இந்தப்பிரகாரம் வேதோக்தங்களையும் பாஞ்சராத்திராதிதந்திரோக்தங்களையுமிருக்கிற கிரியாமார்க்கங்களினால்என்னை ஆராதியாநின்றுகொண்டு இகலோகபரலோகங்களில்கோறப்பட்டசமஸ்தசித்திகளையும் எனதிடத்தில் நின்றும் அடைவன் சாமர்த்தியபுருஷனானவன் எனது அர்ச்சாவதாரவிக்கிரகத்தைப் பிரதிஷ்டைபண்ணி பிராகாரமகாமண்டபமுதலானதுகளைத் திடமாகப் பண்ணிவிக்கக்கடவன். மிகவும்மனோக்கியங்களான புஷ்பவனங்களையும் செய்விக்கக்கடவன். நாளதோறும் பூஜையும்-மகோற்சவம்-பஞ்சபருவங்கள்-வசந்தாதியுற்சவம்- இதுகள் சந்ததமாகநடக்கிறதின்பொருட்டு க்ஷேத்திரங்கள்- கடைத்தெருவுகள்-பட்டணங்கள்கிராமங்கள்-இதுகளைக்கொடுத்துநடப்பியாநின்றபுருஷனானவன் எனது சாரூப்பியத்தையேயடைவன் எனது அர்ச்சாவிக்கிரகத்தைபிரதிஷ்டைபண்ணமாத்திரத்தினால் சக்கிரவாதியாசபபிரப்பம்பிராகாரம மகாமண்டபங்கள் நிர்மாணம்பண்ணிவைத்தால் அதினால்மூன்றுலோகத்தையும் அடைவன். பூஜைமஹோற்சவங்கள்-பஞ்சபருவம்-உற்சவங்கள்- இதுகளைப்பண்ணிவைத்தால் அதினால் பிரமலோகத்தையடைவன், பிரதிஷ்டைமுதலான இந்த மூன்றையும்யாதொருபுருஷன் செய்துவைக்கின்றானோ அவன் எனது சாரூப்பியத்தையேயடைவன், யாதொரு புருஷனானவன்சேவகளுக்கும் நிஷ்காமனாய்க்கொண்டு யாதொருத்தன்என்னைப் பூசிக்கின்றானோ அவனென்னிடத்தில் திடமானபக்தியையடைந்து ஆதலாலென்னுடையசாரூப்பியத்தையேயடைவன், யாதொரு புருஷனானவன் தேவர்களுக்கும் தன்னாற்கொடுக்கப்பட்ட விருத்தியைத்தான் இதராளாலே கரப்பட்டவிருத்தியைத்தான் அபகரிக்கின்றானோ அந்தப்புருஷனானவன் அநேககோடி சம்வச்சர

மும் அமேத்தியத்தைப்பொசிக்கிறபுமூவாய்ப்பிறப்பன் என்து அர்சாவிக்கிரக பிரதிஷ்டை முதலானதுகளைப் பண்ணுகிறவன் அதற்குச்சகாயமாயிருக்கிறவன் அந்த தர்மத்தைப்பண்ணச்சொல்லி பிரேரணைபண்ணுகிறவன் அந்ததர்மத்தைச் சந்தோஷப்படுத்துகிறவன் அந்ததர்மத்தில் சமபாகிகளாயிருக்கிறஇந்தநான்குபேர்களும் பரலோகத்தில் அந்ததர்மத்தினுடையபலமானது அனந்தமாயிருக்கும்.

---

உஅ - வது - அத்தியாயம்,

மட்டுவிருத்தம.

தானவர்முதலாந்தனியோகீஸ்வரர்செய்
கியானயோகத்தைக்கிரமமாய்ச்சொல்லினர்.

கியானயோகத்தைசசொல்லுகிறார்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்

வாரீர்உத்தவரே, புருஷனானவன் பிரபஞ்சத்தைப்பிரகிருதிபுருஷர்களாலே வியாபிக்கப்பட்டிருக்கிறதாய் பாரா நின்றுகொண்டு இதரானுடைய சாந்தங்களாயும்,கோரங்களாயும், மூடங்களாயுமிருக்கிற சுபாவ கர்மங்களைச் சிலாகியாமலுமசிந்தியாமலுமிருககக்கடவன் யாதொருபுருஷனானவன் பாரானுடைய சுபாவகர்மங்களைசசிலாகியாநின்றும் தூஷியாநின்றுமிருக்கிறானோ அந்தப்புருஷனானவன் அசத்தானதேகத்தில் அபிமானப்பட்டபடியினால் கியானநிஷ்டையிலநின்றுமசீக்கிரமாகப்பிரஷ்டனாய்விடுவன்-(எப்படியானால் இந்திரியசமூகமானதுநித்திரையினாலே அபகரிக்கப்பட்டிருக்கையில் சீவனானவன் மனோமாத்திரத்திரத்தைசப்பற்றியிருந்துகொண்டு சொற்பனத்தையடைந்திருக்கிறானோ அந்தமனதும்லயத்தையடைந்துதேயானால சுழுப்தியையடைந்திருக்கிறானோ அப்படியாகவே தேகாபிமானத்தையுடையபுருஷனானவன்லயத்தையடையாநிற்பன் யாதொருவஸ்துவானது வாக்கு முதலான இந்திரியங்களாலே சொல்லபபட்டும பார்க்கப்பட்டும மனதினாலேசிந்திக்கப்பட்டுமிருக்கிறதோ அந்தவஸ்து அசத்தியமாகாநிற்கிறது அசத்தாயிருக்கிறவஸ்துகளுக்குள்ளேநன்மையானதென்னவிருக்கிறது ஆகாதென்னவிருக்கிறது.(எப்படியானால்) பிரதிபிம்பம் பிரதிதொனிசிப்பி வெள்ளியாகக்காணப்படுகிறது, இதுகள் அசத்துக்களாயிருந்தாலும்பிரயோசனப்பிரவிர்த்திகளை பண்ணாநிற்கிறதுகளோ (அப்படிபோல்) தேகமுதலானதுகள்புருஷனுக்குமுத்தியையடைகிறபரியந்தம் பயத்தையே பணணா நிற்கிறதுகள்.

சாவனிபந்தாவாயும்-விசுவரூபியாயும்- ஈஸ்வரராயுமிருக்கிறஸ்ரீஹரியானவர் தம்முடைய ஆத்துமாவை விசுவமாகசசிருஷ்டிபண்ணாநின்று சிருஷ்டிக்கப்பட்டவராயுமிருக்கிறார்-ரட்சியாநின்றுமிருக்கிறார்- ரட்சிக்கபபட்டவராயுமிருக்கிறார்-உபசங்காரம் பண்ணாநின்றுமிருக்கிறார்-உபசங்கரிககப்படுகிறவராயுமிருக்கிறார் ஆகையால்பரமாத்துமாவைத்தவிர மற்றொரு வஸ்துவானதுமில்லை-காணப்படாநின்றும்-அத்தியாத்துமம்- அதிதெய்வம-அதிபூதமென்று மூன்றுசுவரூபத்தையுடையதாயுமிருக்கிற இந்தப்பிரபஞ்சக்கியானமானது அசத்தாகாநிற்கிறது-ஆத்துமாவைக்காட்டிலும்வேறொன்றுமில்லை திரிகுணசுவரூபமாயும் அத்தியாதிபேதத்தை யுடையதாயுமிருக்கிற இந்தப் பிரபஞ்சத்தை மாயாகாரியமாக அறியக்கடவீர். இந்தப்பிரகாரம் என்னால் சொல்லப்படாநின்றஇந்தத்தத்துவக்கியானம- பரமாத்துமாவுமனிதுகளுடைய நிஷ்டையை அறியாநின்ற புருஷனானவன்சிலாகியாமலும் நிந்தியாமலுமிருந்துகொண்டுலோகத்தில்சூரியன்போலச் சமனாகசஞ்சரித்துக்கொண்டிருப்பன் இந்தலோகத்தில் பிரத்தியட்சத்தினாலும் அனுமானத்தினாலும்-வேதத்தினாலும்- அனுபவத்தினாலும் யாதொருவஸ்துவானது உற்பத்தியையுடையதாயுமநாசத்தையுடையதாயுமாக அறியப்பட்டிருக்கிறதோ அந்தவஸ்துவானது அசத்தென்றறிந்து அதில் ஆசத்தியில்லாதவனாய் சஞ்சரிக்கக்கடவனென்றுசொல்லாநின்றஸ்ரீபகவானைப்பார்த்து ஸ்ரீஉத்தவர்சொல்லுகிறார்.

ஸ்ரீ உத்தவருடையவாக்கியம்.

வாரீர்ஈசனே, ஆத்துமாவானவன்பார்த்துக்கொண்டிருக்கிறவனும் சுயம்பிரகாசனுமிருக்கிறவனன்றோ தேகமானதுசடமாயும் பார்க்கப்படுகிறதாயுமிருக்கிறதன்றோ சம்சாரமானது இவ்விருவருக்குஞ்சம்பவியாதன்றோ அப்படிப்பட்ட இந்தச்சம்சாரமானதெவனுக்குண்டாயிருக்கிறதெப்படிகாணப்படுகிறது ஆத்துமாவானவன்நித்தியனும்-திரிகுணனும்- பரிசுத்தனும்-சுயம்பிரகாசனும்-பரிபூரணனும்-அக்கினிபோலப்பிரகாசிக்கிறவனுமாம்-சடமானதேகமானது காஷ்டம்போலப்பிரகாசிக்கிறதாயுமிருக்கிறதன்றோ இவர்களிருவருக்குஞ்சம்பவியாமலேயிருக்கிறசம்சாரமானதெவனுக்குண்டாயிருக்கிறதென்றுகேளாநின்ற உத்தமரைப் பார்த்து ஸ்ரீபகவான்சொல்லுகின்றார்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாரீர்உத்தவரே ஆத்துமாவுக்குததேகம்-இந்திரியங்கள-பிராணன்-இதுகளோடு-சம்மந்தமானதெந்தமட்டுக்கும்உண்டாயிருக்கிறதோ அந்தமட்டுக்கும் எதார்த்தமாயில்லாமலிருந்தாலும் சம்சாரமானது அக்கியானத்தையுடையபுருஷனுக்குண்டாகாநிற்கிறது (எப்படியானால்) வஸ்துவாகாமலிருந்தாலும் அனர்த்தங்களானதுகள்சொற்பனத்தில்காணப்படுகிறதுகளோ (அப்படிபோல)விஷயங்கள்பரமார்த்தமாகஇல்லாமலிருந்தாலும் அந்தவிஷயங்களைச் சிந்தியாநின்ற புருஷனுக்குச் சம்சாரமானது ஒழிகிறதில்லை(எப்படியானால்) நித்திரைபண்ணிக்கொண்டிருக்கிற புருஷனுக்குச சொற்பனமானதுவெகுஅனர்த்தங்களைப்பண்ணாநிற்கிறதோ அந்தசொற்பனகாலேநித்திரை தெளிந்தெழுந்திருந்த புருஷனுக்கு மோகத்தைப் பண்ணாமலிருக்கிறதோ (அப்படிபோல) தேகாதிசம்மந்தசுவரூபமான

னுஷியனுக்கு அடிக்கடி உண்டாகாநின்ற பீடியாநிற்கிறதோ அப்படிபோல வர்ச்சிக்கப்படாமலிருக்கிற ராகத்துவேஷாதிகளையும் அதற்குமூலமான காமங்களையுமுடையதானமனதானது புத்திர தாராதிகளில் ஆசக்தியையுடையவனாயும் அக்கியனாயு மிருக்கிற புருஷனைக் கெடுத்துப்போடாநிற்கும மிகவும்பிரயாசமான யோகமார்க்கத்தையுடையபுருஷனைத் தேவர்களாலே ஏவப்பட்டும் புத்திரதாராதிரூபமாயுமிருக்கிறவிக்கினங்களால்மிகவும் அடிக்கப்படுவாகள.

ஆனாலுமவர்கள ஜென்மாந்தரத்திலேயும் மறுபடியும்பூருவஜென்மத்திலபண்ணப்பட்ட அப்பியாசபலத்தினாலேயோகமார்க்கத்தையே ஆசரிப்பார்களே யல்லாமல் காமமார்க்கத்தைஆசரியார்கள. புருஷனானவன் காமங்களைமரணபரியந்தஞ்செய்யாநிற்கிறான் ஓரொரு கர்மவிசேஷத்தினால் ஏவப் பட்டவனாய் செய்துகொண்டிருக்கிறான் வித்துவானேயென்றால் தேகத்தை யுடையவனாயிருந்து கர்மத்தைச்செய்துகொண டிருந்தாலும்பரமாத்துமானுபவானந்தத்தினாலே இச்சை யில்லாதவனாய அந்தக்கர்மத்திலே ஆசக்தியில்லாதவனாய இருப்பன் பரமாத்துமாவினிடத்திலேயே அசஞ்சலமான புத்தியையுடைய கியானியானவன் நின்றுகொண்டிருந்தாலும்-உட்கார்ந்திருந்தாலும்- நடந்துகொண்டிருந்தாலும்-படுத்துக்கொண்டிருந்தாலும்- மூத்திரபுருஷாதிகளைவிட்டுக்கொண்டிருந்தாலும் - அன்னத்தைப்புசித்துக்கொண்டிருந்தாலும்-சுபாவமாய் தெரிசனஸ்பரிசனங்கள்முதலானதுகளைப் பண்ணிக்கொண டிருந்தாலும் இப்படிக்கிராநின்ற தேகத்தையும் அறியாமலிருப்பன் கியானமில்லாதபோகளுக்கு எதார்த்தமாகக் காணப்படாநின்றவிஷயங்களைக்கியானியானவன் பார்ப்பன் பார்த்தாலும நானாவிதமாகக்காணப்படுகிறபடியினால் சொற்பனம்போல அசத்தாகநிற்கிறதென்று அனுமானத்தினால்தள்ளப்படாநின்ற ஆத்துமாவைத் தவிர மற்றவஸ்துக்களை வஸ்துவாகநினையான் எப்படியானால நித்திரை பண்ணுகிறபுருஷனானவன் நித்திரைதெளிந்தெழுந்திருந்து சொற்பனத்தில் காணப்படாநின்றும் தானேமறைந்துபோகாநின்றுமிருக்கிறவிஷயங்களை அசத்தாக எண்ணுகிறானோ அப்படிபோல ஆத்துமாவைக் காட்டிலும்-வேறாயிருக்கிற வஸ்துவைஅசத்தாக எண்ணுகிறவன்-சங்காரதெசையிலே சத்துவாதிகுணங்கள்-காமங்கள்-இதுகளுடைய காரியமானதேகேந்திரியாதிகள் ஆத்துமாவிலறியப்பட்டதாகவிருந்ததுகளோ அதுகளே பரமாத்துமகியானத்தினால் விநசித்துப்போகாநிற்கிறது ஆத்துமாவேயென்றால ஒன்றினால்கிரகிக்கப்பட்டவனுமன்று ஆகையினால்விகார சூனியனாய் முத்தனாகாநிற்கிறான்.

எப்படியானால் சூரியனுடைய உதயமானது மனுஷியானுடைய நேத்திரங்களின் இருட்டை நாசம்பண்ணுகிறதேயல்லாமல் பூருவமே சித்தமாயிருக்கிற கடாதி விஷயங்களை மறுபடியு முண்டாக்கவில்லையோ அப்படிபோல பரமாத்துமாவான என்னுடைய கியானமானது புருஷனுடைய புத்தியினது அக்கியானத்தைநாசம்பண்ணுகிறதேயல்லாமல் பூருவசித்தமான விகாரசூனியனென்கிறதைமறுபடியு முண்டாக்குகிறதில்லை இந்தஆத்துமாவானவ சுவயம்பிரகாசனாயும்-ஜென்மரகிதனாயும்-நிர்விசேஷனாயும்-தேசகாலங்களால் அளவிடக்கூடாதவனாயும் - சகலபிராணிகளுக்கும் அந்தரியாமியாயும்பரிபூரணராயும்-ஒருவராயும்விகாரசூனியராயும் வாக்குகளுக்கு எட்டாதவருமாயிருக்கிறார்யாதொருஆத்துமாவினால்பிரேரணைபண்ணப்பட்டதுகளாய்வாக்குமுதலான இந்திரியங்கள் வியாபரித்துக்கொண டிருக்கிறதுகளோ அப்படிப்பட்டபரமாத்துமாவினிடத்தில்சமஸ்தமான இந்தப்பேதமான துமனதினுடையபிரமமாகாநிற்கிறது யாதொருகாரணத்தினால்ஆத்துமாவைத்தவிர இந்தப்பேதத்துக்கு ஆசிரயமானது வேறில்லையோ யாதொரு நாமரூபங்களால் காணப்படாநின்றும்பஞ்சபூதசுவரூபமாயுமிருக்கிறதோ அந்தப்பிரபஞ்சமானது சத்தியமென்று சொல்லாநின்றும் நாங்களேபண்டிதர்களென்றெண்ணிக்கொண்டிராநின்றபேர்களுக்குவேதாந்தங்களில இந்தஅர்த்தமானது ஸ்துதியென்றுவியர்த்தமாகப் புத்தியுண்டாகாநிற்கிறது யோகாப்பியாசம்பண்ணாநின்றும்யோகம்நன்றாகப்பிடிபடாமலு மிருக்கிறயோகிக்குத்தேகமானதுமத்தியிலே யுண்டாகாநின்ற ரோகமுதலான உபத்திரவங்களால்பீடிக்கப்பட்டதேயானால் அப்போது அந்தயோகிக்கு இந்த வுபாயமானதுபண்ணத்தக்கது என்னவென்றால்சூரியன்- சந்திரன்- அக்கினி- இவர்களைச்சகிக்கிறபடியினால்தாபசகித்தியாதிகளையும்-பிராணதாரணையோடேகூடிக் கொண்டிருக்கிறஸ்திர ஆசனங்களாலேசிறிதுவாதரோக முதலானதுகளையும் தபசு-மந்திரம்-அவுஷதம்- இதுகளால்பாபக்கிரசம்சரபமுதலானதுகளையும்எனது தியானத்தினாலேயும் கிரகசாந்திகளாலேயும், காமக்குரோதாதிகளையும் யோகேஸ்வரானுடைய அனுவிர்த்தியினால் டம்பமுதலானதுகளையுஞ்செயிக்கக்கடவன்.

சிலபேர்கள இந்தவுபாயங்களாலேயும் மற்றும்சிறிது உபாயங்களாலேயும் தேகத்தைமிகவும் சமர்த்தனையும் ஜராரோக முதலானதுகள் இல்லாததாயும் எவ்வனத்தையுடையதாயும்,ஸ்திரமாயும்பண்ணிக்கொண்டுயோகசித்தியின்பொருட்டுஎத்தனம்பண்ணுவார்கள் அதுவானதுகியானநிஷ்டையையுடையகியானிகளாலே ஆதரவுபண்ணத்தக்கதன்று அந்தயோகசித்தியின்பொருட்டுபிரயாசமானது எப்படியானால்ஸ்திரமாகஇராநின்றவிருட்சத்துக்குப்பலமானதுவிழுந்துபோகாநிற்கிறதோ அப்படிபோலநித்தியனான ஆத்துமாவுக்குச்சரீரமனித்தியமானபடியினால் அந்தஆயாசமானது வியர்த்தமாகாநிற்கிறது நித்தியமாகயோகாப்பியாசம் பண்ணாநின்றபுருஷனுக்குச்சரீரமானது தீர்க்கமாய் ஆரோக்கியத்தையடைந்திருந்ததேயானால்புத்திமானாயு மென்னையேசரணமாக அடையாநின்றுமிருக்கிறபுருஷனானவன் யோகாப்பியாசத்தைவிட்டுவிட்டு அநேகக்காயசித்தியைவிசுவசியாமலிருக்கக்கடவன் இந்தயோகமார்க்கத்தை அனுஷ்டானம்பண்ணாநின்றுமஎன்னையேஆசரியாநின்றும்நிஷ்காமனாயும ஆத்துமசுகானுபவத்தையுடையவனாயு மிருக்கிறயோ

தியானவன்விக்கினங்களாலேகெடுக்கப்படாமலேஎனது சுவரூபத்தையுடையவனென்றசொன்னர்.

உ௯ - வது - அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

ஆகம்முதலாயனுகினம்துதிக்கும்
யோகமார்க்கத்தி னுபாயத்தையுரைத்தார்
யோகமார்க்கவுபாயத்தைச்சொலலுகின்றார்.

ஸ்ரீஉத்தவர்வாக்கியம்

வாரீர்பகவானேவசப்படாதமனதையுடையபுருஷனுக்குஉம்மால்சொல்லப்பட்டஇந்தயோகமார்க்கத்தைபிரயாசத்தினலேயும் அனுஷ்டிக்கக்கூடாததாகஎண்ணுகிறேன்ஆகையினால்வாரீர் அச்சுதரேபுருஷனானவன் பிரயாசமன்றி எப்படி சித்தியடைவனோஅந்தப்பிரகாரம்எனக்குநன்றாகத்தெரியும்படியாய்ச்சொல்லக்கடவீர்.

வாரீர்புண்டரீகாக்ஷரே மிகவுமனதை நிக்கிரகியாநின்றயோகிகளானபேர்கள் அந்நிக்கிரகத்திலேமிகவுஞ்சிரமத்தையுடையவர்களாய்மனதைநிக்கிரகிக்கப்படாமலிருக்கிறபடியினால்மிகவுங்கிலேசத்தையடையாநிற்கிறார்கள்ஆகையினால்வாரீர் அரவிந்தலோசனரே சாரக்கியாளானபரமஹம்சர்களானபேர்கள் ஆனந்தத்தைக்கறவாநின்றதேவரீருடையசரணாரவிந்தத்தையேசுகமாக ஆசிரியாநிற்கிறார்கள் அந்தப்பரமாக்ஷிகள் உம்முடையமாயையினால்மோகிக்கப்பட்டவர்களன்றுயோககர்மங்களால்கர்வத்தையுடையவர்களுமன்றுமற்றபேர்களோவென்றாலஉம்முடையமாயையினால் மோகிக்கப்பட்டவர்களாய்நாங்களேயோகாப்பியாசத்தையுடையவர்களென்றும்நாங்களேகர்மமார்க்கத்திலேசமர்த்தர்களென்றும்மிகவுங்கர்வத்தையுடையவர்களாய் முத்தர்களாகாமலேயிருக்கிறார்கள்தேவரீர்பிர்மாதிசமஸ்தமானதேவர்களுடையஸ்ரீமத்தானகிரீடகோடிகளாலேஸ்பரிசிக்கப்பட்டபாதாரவிந்தத்தையுடையவராய்ஸ்ரீராமாவதாரத்தில்வானரரூபாளானமிருகங்களுடனே கூடபிரீதியினால் சிநேகம்பண்ணிக்கொண்டிருந்தீரோஅப்படிப்பட்ட தேவரீருக்குஅன்னியசரணாளானதாசாளிடங்களில்பக்ஷபாதிகளாயிருக்குமிதுஆச்சரியமோவெனனசமஸ்தசெகத்துக்கும்அந்தரியாமிஆகதுமாவாயும்பிரியராயும்நியந்தாவாயும்ஆதிநாதராயுச்சகல புருஷார்த்தத்தையுங்கொடாநின்றுமிருக்கிறஅப்படிப்பட்டதேவரீரை பல்ச்சக்கரவர்த்திபிரகலாதனன்முதலானபக்தாளிடங்களில் உம்மாற்பண்ணப்பட்டஅனுக்கிரகத்தையறியாநின்றபுருஷனானவன் எவன்றான் ஆசிரியாமற்போவன் யாதொருமிகவுந் துச்சமானசொர்க்காதிபலமானது தேவரீரால்கொடுக்கப்பட்டிருந்தாலும்இந்திரியங்களுக்குச் சுகதுக்கத்தின்பொருட்டும்பின்னேதேவரீரைமறந்துபோறதின் பொருட்டும்உண்டாகாநிற்கிறதோ அப்படிப்பட்டசொர்க்காதிபலத்தைஎவன்தான்கோருவன்எவன்தான்தேவரீரைக்காட்டிலும்வேறானதேவதாந்தரத்தை அயிஸ்வரியத்தின்பொருட்டுத்தான்மோக்ஷத்தின்பொருட்டுத்தான்சேவிப்பன்தேவரீருடையபாதாரவிந்தத்தைச்சேவித்துக்கொண்டிராநின்றஎங்களுக்கெதுதான்துலலபம்.

வாரீர்ஈசனேயாதொரு தேவரீர உள்ளே அந்தரியாமியாயும்,வெளியில்ஆசாரியரூபமாயுமிருந்துசமஸ்தபிராணிகளுக்கும்விஷய ஆசத்தியைப்போக்கடியாநின்றுஉம்முடையசுவரூபத்தைப்பிரகாசம் பண்ணிவிக்கிறீரோபிரமநிஷ்டாளானபேர்களும் தேவரீராலேபண்ணப்பட்டஉபகாரத்தைஸ்மரியாநின்றுமிகவும் விருத்தியடையாநின்றபரமானந்தத்தையுடையவர்களாய்பிர்மாவினுடைய ஆயுசுனலேயும்அப்படிப்பட்டதேவ ருக்குப் பிரிதிவுபகாரத்தைப்பண்ணமாட்டார்கள்.

ஸ்ரீசுகர்வாகியம்.

வாராய்பரிட்சித்துமகாராசனே இந்தப்பிரகாரம்மிகவும்பிரீதியையுடையமனதுள்ளவரானஉத்தவராலேகேழ்க்கப்பட்டவராயுஞ்செகத்தையேலீலாசாமக்கிரியாகவுடையவராயும்தம்முடையசத்திகளான சத்துவாதிகுணங்களால்கிரகிக்கப்பட்ட திரிமூர்த்திரூபத்தை யுடையவராயும்ஈஸ்வரர்களுக்குமீஸ்வரராயும்மிகவும்பிரீதியினால்மனோகரமானபுஞ்சிரிப்பையுடையவராயுமிருக்கிறஅந்தப்பகவானானவர்உத்தவரைப்பார்த்து இந்தப்பிரகாரஞ்சொலலுகின்றார்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்

வாரீர்உத்தவரேபுருஷனானவன் சிரத்தையுடனேயாதொருபாகவத தர்மங்களைக்கேட்டு உபாயாந்தரங்களாலேசெயிக்கக்கூடாதான மிருத்தியுவையும் செயிக்கிறானோமிகவுஞ்சுகரூபங்களானஅப்படிப்பட்டஎனதுதர்மங்களைச்சொல்லுகிறேன்கேழ்க்கக்கடவீர்புருஷனானவன்என்னையேதியானஞ்செய்துகொண்டு என்னிடத்தில்சமர்ப்பிக்கப்பட்ட மனதுபுத்தி இதுகளையுடையவனாய்எனதுதர்மங்களிலேயே ஆசையையுடையவனாய்சமஸ்தமானசுவதர்மங்களையும்துறைப்படாமல்பண்ணக்கடவன்தேவாள் அசுராள்மனுஷியாள இவர்களுக்குள்ளேயாதொருபேர்கள்எனதுபக்தாளானசாதுக்களால் சூழப்பட்டிருக்கிறபுண்ணியதேசங்களை ஆசரிக்கக்கடவன்தனியேயாகிலும்சிறிதுபேரைசேர்த்துக் கொண்டாகிலும் எனக்குப்பிரீதியர்த்தமாகஎனது மகோச்சவமுதலானதுகளைநற்கீதவாத்தியத்துடன்உபசாரங்களோடு கூடச்செய்துவிக்கக்கடவன்நிர்மலமான சித்தத்தையுடையபுருஷனானவன்என்னையேஆகாசம்போல்சமஸ்தபிராணிகளிலேயும்தனது ஆத்துமாவிலேயும் அந்தரியாமியாயு

ம்உன்ருற்னிரியுமபரிபூரணனுயுமிருக்கிற பரமாத்துமாவாகப்பார்கக்கடவன்.

வாரீர்உத்தவரே இந்தப்பிரகாரம்சமஸ்தபிராணிகளேயுமெனதுசுவரூபமாகப்பார்த்து பூசியாநின்று பரிசுத்தமானகியானநிஷ்டையைஆசரியித்தவனுயிராநின்றபுருஷனனவன்கியானியென்றுசொல்லப்படுவன் பிராமணனிடத்திலும-சண்டாளனிடத்திலும்-பிரமசொத்தைஅபகரித்தவனிடத்திலும்பிராமணனின் பொருட்டுக்கொடாதவனிடத்திலும-சூரியனிடத்திலும்-நெருப்புப்பொறியிலேயும்-குரூரவனிடத்திலும் - சாந்தனுயிருக்கிறவனிடத்திலேயும-சமபுத்தியாயிருககிறவன் பண்டிதனென்றுசொல்லப்படுவன் இந்தப்பிரகாரம்மனுஷியாளிடங்களில்அடிக்கடியெனதுபுத்தியைப்பண்ணாநின்றபுருஷனுக்குசீக்கிரமாககலகம்-அசூயை-அவமானம்- அகங்காரம-இதுகள்நசித்துப்போகாநிற்கும்தன்னைப்பார்த்துச்சிரியாநின்றசினேகிதாளேயும்-நான்வுத்தமன்- அவநீச்சனென்கிறதிருஷ்டியையும்- அதனுலுண்டாகாநின்றலச்சையையும்விட்டுவிட்டுநாய்சண்டாளன்பசுகழுதைஇவர்கள்முதல்சமஸ்தபிராணிகளேயும் பரமாத்துமபுத்தியினல்பூமியிலேதெண்டகாரமாகப் பிரணாமம்பண்ணக்கடவன்எந்தமட்டுக்கும் சமஸ்தபிராணிகளிலேயும் பரமாத்துமாவானநான் அந்தரியாமியாயிருக்கிறேனென்கிறபுத்தியானதுண்டாகாமலிருக்கிறதோ அந்தமட்டுக்கும்இந்தப்பிரகாரம்மனோவாக்குக்காயங்களாலுபாசிக்கக்கடவன்,

இந்தப்பிரகாரம்பண்ணாநின்றபுருஷனுக்குச்சமஸ்தபிராணிகளேயும்பரமாத்துமாவாகஅறிகிறபடியினல் உண்டாகாநின்றகியானத்தினல்சமஸ்தமும்பரப்பிரமசுவரூபமாகவேஅறியப்படும்இந்தப்பிரகாரம்பாராநின்றுகர்மபந்தத்தில்நின்றும்விடப்பட்டவனுய் சமஸ்தகாமங்களில்நின்றும்ஒழியக்கடவன்சமஸ்தபிராணிகளிலேயும, நானேஅந்தரியாமியாகஇருக்கிறேனென்கிற யாதொருபுத்தியுண்டோமனோவாக்குக்காயங்களினல் செய்யப்படாநின்றஇந்தப்புத்தியைசமஸ்தஉபாயங்களுக்குள்ளேஉத்தமமானஉபாயமாகாநிற்கிறதென்று என்னுடையநிச்சயம்.

வாரீர்உத்தவரேநிஷ்காமமான எனதுதர்மத்துக்குவிக்கியாசமுதலானதுகளாலேயும் கொஞ்சமாகிலும்நாசமுண்டாகிறதில்லைஇந்தத்தர்மமானது என்னாலேயேநிற்குணமென்றுநிச்சயிக்கப்பட்டிருக்கிறது(எப்படியானல்)பயம்-சோகம-இதுமுதலானதுகளால ஓடிப்போகிறதுவீறிடுகிறதுஇதுமுதலானவியாபாரமானதுவியர்த்தமாகச்செய்யப்படுகிறதோ(அப்படிபோல)யாதொருலவுகிககாரியபிரயாசமானதுவியர்த்தமாகஉண்டாகாநிற்கிறதோ அந்தப்பிரயாசமும்பரமாததுமாவானஎனதிடத்திலேயேபலவிச்சையில்லாமலசமர்ப்பிக்கப்பட்டுதேயானல்அதுவும்உத்தமதாமமாகநிற்கும்சத்தியசுவரூபனுயும்சுகசுவரூபனுயுமிருக்கிறஎன்னை அசத்தாயும்அனித்தியமாயுமிருக்கிற மனுஷியதேகத்தினலே இந்த மனுஷியஜென்மத்தில்உபாசிக்கிறதுயாதொன்றுண்டோ இந்தஉபாசனேயேபுத்தியுடையபோர்களுககுபுத்தியாகாநிற்கிறது, விவேகத்தையுடையபோகளுக்குவிவேகமாகாநிற்கிறதுகேளும்உத்தவரே தேவர்களுக்கும் அறியக்கூடாததாயும்சமஸ்தமாயுமிருக்கிறபிரமநிஷ்டையினுடையஇந்தவுபாயமானதுசஞ்க்ஷேபமாயும விஸ்தாரமாயும் நம்மாலேஉமக்குச்சொல்லப்பட்டது சந்தேகமில்லாமலும் யுக்திகளோடேகூடிக்கொண்டு மிருக்கிறதத்துவக்கியானமும்மிகவும்உமக்குநம்மாலசொல்லப்பட்டது புருஷனனவன்இந்தக்கியானத்தையறிந்து ஒருசமுசயமுமில்லாதவனுய்கர்மபந்தத்தில்நின்றும்விடுபடுவன்யாதொருபுருஷனனவன்என்னுலுத்தரஞ்சொல்லபபடும்அனதியாயும்வேதாந்தரகசியமாயுமிருக்கிற உம்முடையபிரசினரூபமான இந்தவுபாக்கியானத்தை அனுசந்தானம்பண்ணுகிறனே அந்தப்புருஷனனவன் பரப்பிரமத்தையேயடைவன்யாதொருபுருஷனனவன் இந்தஉபாக்கியானத்தைஎனதுபக்தாளிடத்திற் சொல்லுகிறனே பிர்மவிக்கியானத்தைக்கொடாநின்ற அந்தப்புருஷனுககுப்பரிபூரணமானஎனது சுவரூபத்தையே கொடுப்பேன்யாதொருபுருஷனனவன்மிகவு மங்களகாமாயும் பரிசுத்தமாயு மிருக்கிற இந்தவுபாக்கியானத்தை நாள்தோறும் பாராயணம்பண்ணுகிறனே அந்தப்புருஷனனவன் கியானமார்க்கபக்தியினல் சர்வக்கியனுய்க்கொண்டுமிகவும்பரிசுத்தனுய்விடுவன். யாதொரு புருஷனனவன் இந்தவுபாக்கியானத்தைக்கேட்கிறனேயாதொருபுருஷனனவன்மகாசிரமத்தையுடையவனுய்கேழ்க்கிறனேஅந்தப்புருஷன்எனதிடத்தில் அசஞ்சலமானபக்தியைப்பண்ணாநின்று கர்மபந்தமில்லாமல் முக்தனுவான்,

வாரீர்உத்தவராகியசினேகிதரே, உம்மாலே இந்தப்பிரம்மக்கியானமானது நன்ருகத் தரிக்கப்பட்டதா,உம்முடையமனதிலுண்டாகாநின்ற மோகமும்-சோகமும்-பயமும் - போய்விட்டதா - இந்தப் பிர்மக்கியானமானது உம்மாலே டாம்பிகனுக்கும், நாஸ்திகனுக்கும், வஞ்சகனுக்கும், கேழ்க்க வேணுமென்று சிரத்தையில்லாதவனுக்கும். வணக்க மில்லாதவனுக்கும், உபதேசிக்கப்படத்தக்கதன்று. இந்தத்தோஷங்களில்லாதவனுயும்,பிராமணர்களிடத்தில் பக்தியையுடையவனுயும், எனதுபக்தனுயும், சாதுவாயும் பரிசுத்தமானமனதையுடையவனுயு மிருக்கிறவனுக்கு உபதேசிக்கக்கடவன்சூத்திரர்களுக்குப்பக்தியிருந்துதேயாகில் அவர்களுக்கும்உபதேசிக்கத்தக்கது (எப்படியானல்)மதுரமான அமிர்தத்தைப்பானம்பண்ணினவனுக்குப் பின்னையும்

பரமைபண்ணத்தக்கதுவேறில்லையே (அப்படிபோல) தத்துவத்தையறியவேணுமென்கிற புருஷனுக்கு இந்தப்பிர்மோக்கியானத்தை யறிந்துமேலேயறியத்தக்கதொன்றுமில்லை.

வாரீர்உத்தவரே, மனுஷியர்களுக்குக் கியானத்திலும்-கர்மத்திலும்-யோகத்திலும்-கிருஷி முதலானவிருத்தியிலும்-தெண்டநிதியிலும் - தர்மார்த்தகாம மோக்ஷமென்று நான்குவிதமானபுருஷார்த்தமெவ்வளவிருக்கிறதோ அந்தநான்குவிதபுருஷார்த்தமும் நானேயாகாநிற்கிறேன். புருஷனானவன்எப்போது சமஸ்தகர்மத்தியாகத்தையுடையவனாய் சரீரத்தையும் என்பொருட்டு சமர்ப்பித்தவனாயிருக்கிறானோ அப்போது அந்தப்புருஷனானவன் எனது அனுக்கிரகத்துக்குப் பாத்திரனாகாநிற்கிறான்,அதனால் மோக்ஷத்தை யடையாநின்று என்னுடையசாரூப்பியத்தின் பொருட்டுநிச்சயமாக யோக்கியனாகாநிற்கிறான்.

ஸ்ரீ சுகர்வாககியம்.

வாராய்ராஜனே, ஸ்ரீபகவானால் இந்தப்பிரகாரம்காண்பிக்கப்பட்ட யோகமார்க்கத்தையுடையவான அந்த ஸ்ரீஉத்தவரானவர்அப்போது ஸ்ரீபகவானுடைய அந்த வார்த்தையைக்கேட்டுப் பிரீதியினாலேயரி பூரணமான இருதயத்தை யுடையவராயும் ஆனந்தபாஷ்பங்களினாலபரிபூரணமான நேத்திரத்தையுடையவராயும அஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டு ஒன்றுஞ் சொல்லாமலிருந்தார்.

வாராய்பரிக்ஷித்துமகாராஜனே, சிநேகத்தினால்அலைந்துகொண்டிராநின்ற சித்தத்தைதயிரியத்தினால்நிறுத்திதன்னைக்கிருதார்த்தனானேனென்றுஎண்ணிக்கொண்டு சிரசினாலேஸ்ரீபகவானுடைய சரணாரவிந்தங்களாலபரிசித்துக்கொணடு சாஷ்டாங்கமாகப் பிரணாமம்பண்ணி அஞ்சலிபந்தம்செய்துகொண்டு ஸ்ரீபகவானைப் பார்த்து உத்தவர்சொல்லுகிறார்.

ஸ்ரீஉத்தவருடைய வாக்கியம்.

வாரீர்பிர்மாவுக்கும் ஜெனகராகிய ஜெககர்த்தாவே, யாதொருமோகமானது என்னாலே ஆசரிபிக்கப் பட்டிருந்ததோ அந்தமோகமாகிற மகாந்தகாரமானது உம்முடையசன்னிதான மாக்கிரத்தினாலே ஒடிப்போய்விட்டது (எப்படியானால்) அக்கினியினுடைய சமீபத்திலிருக்கிறவனுக்கு சீதபாதையும் அந்தகாரமும் உண்டாகமாட்டாதோ (அதுபோல)எனது அக்கியானமானதுஒடிப்போய்விட்டது. ஆனாலும் கிருபையையுடையவரானஉம்மால் என்பொருட்டு உம்முடையமாயையினால்அபகரிக்கப்பட்டிருந்த கியானமான தீபமானதுதிரும்பவுங்கொடுக்கப்பட்டது, யாதொருபுருஷனானவன் உம்மால் செய்யப்பட்டஅநுக்கிரகத்தையறிகின்றானோ அந்தப்புருஷன்எவன்தான்உம்முடையபாதமூலத்தைவிட்டுவிட்டு வேறொன்றைச்சரணமாகஅடைவன். வாரீர்ஸ்ரீபகவானே தேவரீருடைய மாயையினால் சிருஷ்டிவிருத்தியின்பொருட்டு காசாருகாள். விருஷணிகள்-அந்தகர்கள்-சாத்துவதர்கள்-இவர்களிடத்தில்-எனக்குயாதொருசிநேகபாசமானதுஉம்மாலேயேஆத்துமக்கியானமாகிய கத்தியினால் சேதிக்கப்பட்டுப்போயிற்று.

ஸ்ரீபகவான்வாக்கியம்

வாரீர்மகாயோகிஸ்வரரே,உமதுபொருட்டுபிரணாமம்பண்ணுகிறேன். (எப்படியானால்) எனக்கு முக்தியிலேயும்உம்முடைய சரணாரவிந்தத்தில் ஒழியாமலிருக்கிறபக்தியானதுண்டாகுமோ அந்தப்பிரகாரம் பிரபன்னனானஎன்னைச் சிட்சிக்கக்கடவீரென்று சொல்லாநின்றஸ்ரீஉத்தவருடைய வார்த்தையை அங்கீகரித்து அவரைப்பார்த்து ஸ்ரீபகவான்ஒருவார்த்தைசொல்லுகிறார்.

வாரீர்உத்தவரே,என்னாலாக்கியாபிக்கப் பட்டவராய் பதரியென்றுபெயரையுடையதானஎனது ஆசிரமத்தைக்குறித்துப்போகக்கடவீர். அவடத்திலென்னுடையஸ்ரீபாததீர்த்தமான அளகநந்தையுடைய தெரிசனத்தினாலேயே சுசியாய்க்கொண்டு ஸ்நான ஆசமனங்களாலேயும்சமஸ்தபாபங்களையும் போககடித்தவராய் மரவுரிகளைத்தரித்துக் காட்டிலிராநின்ற கந்தமூலபலங்களைப்பட்சித்துக்கொணடுசுகத்திலிச்சையிலலாதவராய்சீதோஷ்ணமுதலான விஷயங்களைச் சகியாநின்றுகொண்டுகதாசாரசமபன்னராய இந்திரியநிக்கிரகத்தை யுடையவராயும்-சாந்தராயும்-ஸ்திரமானபுத்தியினால்-கியானம்பரமாத்துமானுபவம்இதுகளோடேகூடினவராய்என்னால்உமமுடையபொருட்டு யாதொருதத்துவக்கியானமானதுஉபதேசிக்கப்பட்டதோ அந்த தத்துவக் கியானத்தைத்தாரணம்பண்ணக்கடவீர். எனதிடத்தில்சமர்ப்பிக்கப்பட்டவாக்கு-சித்தம்-இதுகளை யுடையவராய்எனக்குப்பிரீதியின்பொருட்டு சுவதர்மானுஷ்டானபராராகஇருக்கக்கடவீர், பின்புசத்துவரஜ ஸ்தமோ குணங்களை அதிக்கிரமித்து எனது சாரூப்பியத்தையே யடையப் போகிறீர்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரர்ய்மகாராஜனே,அந்தஉத்தவரானவர்சஞ்சாரத்தைவிவர்த்திராநின்ற புத்தியையுடையவரானஸ்ரீகிருஷ்ணரால் இந்தப்பிரகாரஞ்சொல்லப்பட்டவராய் ஸ்ரீபகவானுடைய திருவடிகளில் மூன்றுதரம்பிரதக்ஷணம்பணணிசிரசை ஸ்பரிசித்துக்கொண்டு சாஷ்டாங்கமாகப்பிரணாமமபண்ணி சுகதுக்கங்களில்நின்றும்விடுபட்டவராயிருந்தாலும் புறப்பட்டுப்போகுஞ்சமயத்தில்இளகாநின்றபுத்தியையுடையவராய் கண்ணீர்களால்ஸ்ரீபகவானுடைய திருவடிகளைநனைத்தார் மிகவும்விடக்கூடாதானசிநேகத்தையுடையவராயும் அதினாலவிட்டுப்பிரி

கிறதற்குமிகவும் பயப்படாமலின்றுமிருக்கிற உத்தவரானவர் அந்த ஸ்ரீபகவானை விடுகைக்குச்சாமார்த்தியமில்லாதவராய் வியசனத்தையுடையவராய் ஸ்ரீ பகவானுடைய ஆக்கினையினாலே அவருடையதிருவடிகளைச் சிரசிலதரியாநின்றும அடிக்கடி அந்தப்பகவானைச்சாஷ்டாங்கமாகப்பிரணாமம்பண்ணி மகாதுக்கத்துடன் புறப்பட்டுப்போனார். பிற்பாடுமகாபாகவதரான ஸ்ரீ உத்தவரானவர் அந்தபகவானை இருதயத்திலேயே தரித்துக்கொண்டுபதரிகாசிரமத்தை யடைந்தவராய் செகத்துக்களுக்கு ஐக்கியபந்துவான ஸ்ரீஅரியினால் எந்தப்பிரகாரமாக உபதேசிக்கப்பட்டதோ அந்தப்பிரகாரமாக ஸ்ரீபகவானிடத்தில் சித்தத்தைச்சமர்ப்பித்து சமாதியை யடைந்துஸ்ரீ ஹரியினுடைய வைகுந்தத்தையடைந்துவிட்டார் யோகேஸ்வரர்களாலே சேவிக்கப்படாநின்ற திருவடிகளையுடையவரான ஸ்ரீகிருஷ்ணராலே மகாபாகவதரான ஸ்ரீஉத்தவரின்பொருட்டு சொல்லப்பட்டும் பகவத்பக்திமார்க்கமாகிற ஆனந்தசமுத்திரத்தோடே கூடிக்கொண்டிமிருக்கிற இந்தக்கியானாமிர்தத்தை யாதொரு புருஷனானவன்மிகவுஞ் சிரத்தையுடன் சேவிக்கிறானோ அவனுடையசங்கதியினால் ஜெகத்தின்முக்தியை யடையாநிற்கும்ஆகையால் அவனுக்கு முக்திக்குக்கேழ்க்கவேண்டியதில்லையன்றோ, சகலவேதகர்த்தாவான யாதொருபகவானானவர் பிரவிர்த்திமார்க்கம் நிவிர்த்திமார்க்கம் இதுகளையுடைய புருஷாளின் சங்காரபயத்தையும்ரோகசுவராதிபயத்தையும் போக்கடிப்பதற்குப் பிரமரமானதுபுஷ்பசாரத்தைக் கிரகிக்கிறாப்போல வேதாந்த ரூபமானகிபானவிக்கியானரூபமாயும் சிரேஷ்டமாயுமிருக்கிறஅமிர்தத்தையும கிரகித்தாரோ யாதொருபகவானானவர் இந்தஇரண்டு அமிர்தத்தையும்எதாயோக்கியமாகத்தம்முடையபக்தாளைப்பானம்பண்ணிவித்தாரோசெகத்கர்த்தாவாயும் மகாவிஷ்ணுவென்று பெயரையுடையவராயுமிருக்கிற அந்தப்புருஷோத்தமரைச் சாஷ்டாங்கமாகப்பிரணாமம்பண்ணுகிறேன்.

---

## ௩௦ - வது - அத்தியாயம்.

மட்டு விருத்தம்,

கவுசிக்ர்ஜனகர் சருதுமர்முனிதுதி
மவுசலோபாக்கியா னம்மனைப்புகன்றார்
மவுசலோபாக்கியானஞ் சொல்லப்படுகின்றது

பரிட்சித்துவாக்கியம

வாசீர பிர்ம்மரிஷியே, மகாபாகவதோத்தமரான ஸ்ரீ உத்தவரானவர் பதரிகாசிரமத்தைக்குறித்துப்போனபிற்பாடுசகலலோகநாயகரானஸ்ரீபகவானானவர் துவாரகாபட்டணத்தில் என்னபண்ணினார்தமமுடையகுலமானதுபிராமணசாபத்தினால் ஆக்கிரமிக்கப்பட்டிருக்கையில்யாதவகுலோத்தமரான ஸ்ரீபகவானானவர் சமஸ்தபிராணிகளுடைய நேத்திரமுதலான இந்திரியங்களுக்கு ஆனந்தகாரமான தம்முடைய திவ்வியமங்கள மூர்த்தியைஎந்தப்பிரகாரமாக விட்டுவிட்டார்ஸ்திரீகளானபேர்கள் யாதொருபகவானுடைய திவ்வியமங்கள மூர்த்தியிலே முழுகியிருக்கிற நேத்திரத்தைத் திருப்பவுமெடுக்குகைக்கு சமர்த்தர்களாகாமற் போனார்களோ யாதொருரூபமானது காதுகளுடையரந்திரத்தினாலேபிரவேசியாநின்று சதபுருஷர்களுடைய இருதயத்தில் ஏழுதப்பட்டதுபோல அதைவிட்டுச் சலியாமலிருக்கிறதோ யாதொரு பகவானுடையசவுந்தரியமானது கீர்த்திக்கப்படாநின்றுகொண்டுகவிசுவரர்களுடைய வாக்குகளுக்கு உல்லாச விசேஷத்தையுண்டாகாநிற்கிறதோ அர்ச்சுனனுடைய ரதத்திலிராநின்றயாதொருபகவானுடையதிவ்விய ரூபத்தைப்பார்த்து யுத்தத்தில் அடிபட்டுப்போகாநின்ற இராஜாக்கள்அந்தஸ்ரீபகவானுடையசாரூப்பியத்தையே யடைந்தார்களோ அப்படிப்பட்டதிவ்வியமங்களமூர்த்தியை எந்தப்பிரகாரமாக விட்டார்களென்று கேளாநின்ற பரிட்சித்துமகா ராஜாவைப்பார்த்து சுகபிர்மமரிஷிசொல்லுகிறார்.

சுகப்பிர்மரிஷிவாக்கியம்.

வாராய் ராஜனே,ஸ்ரீகிருஷ்ணரானவர் ஆகாசத்தில் சூரியபரிவேஷமுதலானதுகளாயும், பூமியில்பூசலனமுதலானதுகளாயும் அந்தரிக்ஷத்திலே திக்குகள்பற்றிக்கொண்டெரிகிறது முதலானதுகளாலும், இந்தப்பிரகாரமுண்டாகாநின்ற மகோற்பாதங்களைப்பார்த்து சுதர்மியென்னப்பட்ட சபையிலிராநின்ற யாதவர்களைநோக்கிஇந்தப்பிரகாரமாய் வார்த்தைசொல்லுகின்றார்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

வாருங்கள் யாதவசிரேஷ்டர்களே, துவாரகையில்மிருத்தியுசூசகங்களாயும கோரங்களாயுமிருக்கிற இந்தமகோற்பாதங்களுண்டாயிருக்கிறதுகள் நம்முடையகுலத்துக்குப் பிராமணாளிடத்தில்நின்றும் அதிக்கிரமிக்ககூடாதசாபமும்உண்டாயிருக்கிறது ஆகையால் இவடத்திலிராமல்ஒருமுகூர்த்தகாலமாகிலு மிருக்கத்தகாதவர்களாகிய ஸ்திரீகளும்-பாலர்களும்-விருத்தர்களும்- சங்கத்துவாரத்துக்குப்போகட்டும் நாமோவென்றால பிரபாசதீர்த்தத்தைக் குறித்துப்போவோமே யாதொருக்ஷேத்திரத்தில்சரசுவதியானது மேற்குமுகமாய் பிரவேசியாநிற்கிறதோ அந்தத்தீர்த்தத்திற்போய் ஸ்நானம்பண்ணிபரிசுத்தர்களாய் சித்த சமாதானத்தை யுடையவர்களாய்உபவாசமிருந்துதேவதைகளைத்திருமஞ்சனமுதலானஷோடசோபசாரங்களாலேயுமபூஜைபண்ணுவோம்நாம் பிராமணர்களால் பண்ணப்பட்ட சாந்திகளை யுடையவர்களாய் மகானுபாவர்களான அந்தப்பிராமணர்களையும்-பசுக்கள்-பூமி-சுவர்ணங்கள் - வஸ்திரங்கள்-யா

னைகள்-குதிரைகள்-ரதங்கள்-கிரகங்கள்-இதுகளால் நன்ருகப்பூசிப்போம், சகல அரிஷ்டத்தையும் போக்கடியாநின்றஇந்தவிதியானது உத்தமமாயுங்கலியாணகரமாயுமாகாநிற்கிறது. தேவர்கள் பிராமணர்கள்-பசுக்கள-இவர்களுடைய பூஜைபானது மனுஷியர்களுக்கு மிகவுஞ்சிரேயசுக்கு ஏதுவாகாநிற்கிறது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராசனே, இந்தப்பிரகாரம்சொல்லாநின்றஸ்ரீகிருஷ்ணருடைய வார்த்தையைக் கேட்டு சமஸ்தமான யாதவவீரர்களும் அப்படிதானே செய்வோமென்று அங்கீகரித்து ஓடங்களால் சமுத்திரத்தைத்தாண்டிரதங்களால் பிரபாசக்ஷேத்திரம்வந்து சேர்ந்தார்கள். அந்தக்ஷேத்திரத்தில் சமஸ்தமானயாதவர்களும் எதுசிரேஷ்டரான ஸ்ரீபகவானால் ஆக்கியாபிக்கப்பட்டவர்களாய் பரமமானபக்தியினால் சிரேயசுக்கரமான சமஸ்தகர்மங்களையும்பண்ணினார்கள். பிற்பாடு அந்தக்ஷேத்திரத்தில் தெய்வகெதியினால் விவேகயீனர்களாய் மதுரமான மத்தியத்தைப்பானமபண்ணினார்கள் யாதொரு மத்தியாசத்தினுடைய பானத்தினால்புத்தியானதுதள்ளப்பட்டுப்போமோ அப்படிப்பட்ட மத்தியபானத்தினால் மத்தர்களாயும், மிகவுங்கொர்விதமானமனதையுடையவர்களாயும் ஸ்ரீகிருஷ்ணருடையமாயையினால் மூடர்களாயுமிருக்கிற அந்த எதுவீரர்களுக்கு ஒருவருக்கொருவர்மகத்தாகியகலகமுண்டாச்சுது. அதனால்மிகவும்கோபத்தையுடையவர்களாயும் ஒருவனையொருவன்கொல்லவேணுமென்று ஆக்கிரகத்தையுடையவர்களாய் தனுசுகளாலும்-கத்திகளாலும்-பல்லயங்களாலும் -கெதைகளாலும்-தோமரங்களாலும்-ஈட்டிகளாலும்- யுத்தம்பண்ணினார்கள்-மிகவும் நான்குபக்கமும் சலியாநின்ற டெக்கியங்களையுடையதுகளான் ரதங்களாலும்- யானைகளாலும்-குதிரைகளாலும்-கோவேறு கழுதைகளாலும்-ஒட்டகங்களாலும்-ரிஷிபங்களாலும்-கடாக்களாலும்- மனுஷியர்களாலும்-ஒருத்தருக்கொருத்தர்எதிர்த்துஅர்தயுத்தத்தில்மிகவுங்கர்வத்தை யுடையவர்களையடித்தார்கள்.

எப்படியானால் வனத்தில்யானையானதுதந்தங்களால் எதிரியானயானையைஅடிக்குமோ (அதுபோல)யுத்தம் பண்ணினார்கள். அந்த யுத்தத்தில் பிரத்தியும்னனும்-சாம்பனும்-இவர்களிருவரும், அக்குரூரனும் போசனனும்-இவர்களிருவரும்-அனிருத்தன்-சாத்தகி-இவ்விருவரும்-சுபத்திரன்-சங்கிரமசித்து-இருதிறவரும்-சுசாருகெதன்-இருவரும்-சுமித்திரன்-சுரதன்-இவர்களிருவரும்-சடன்-உல்முகன்-இவ்விருதிறவரும், இந்தப்பிரகாரமாகத்தொந்தயுத்தம்பண்ணினர்கள். இன்னமமற்றுமுள்ளசகசிரசித்து-சுதசித்து-பானு -இவர்கள்முதலான எதுவீரர்களும் முகுந்தரால் மோகிக்கப்பட்டவர்களாய்மத்தியபானமதத்தினால் மிகவும்பலத்தையுடையவர்களாய் ஒருவர்க்கொருவர் தொந்தமாக எதிர்த்து தாசாருகாள் போசர்கள்-அந்தகர்கள்-விருஷணிகள்- சாந்துவதர்கள்-மாதவர்கள்-அற்புதர்கள்-மாதுரர்கள்-சூரசேனர்கள்-விதர்சனர்கள்-குகுராள்-குந்தியாள்-இவர்களும்சிநேகங்களைவிட்டுவிட்டுஒருத்தருக்கொருத்தர்அடித்துக்கொண்டார்கள, புத்திரர்களாயிருக்கிறபேர்கள் விவேகயீனர்களாயிருந்துகொண்டு பிதாக்களுடனும்-பிராதாக்களுடனும்,மருமக்கள்மாருடனும், தவுத்திரர்களுடனும்,சிறியதகப்பன், பெரியதகப்பனுடனும், அம்மான்மாரோடும்எதிர்த்துயுத்தம்பண்ணினர்கள, சினேகிதர்கள்-சிநேகிதாளுடனே-யுத்தம்பண்ணினர்கள்.பந்துக்கள் பந்துக்களோடே யுத்தம் பண்ணினர்கள்,கியாதிகள்தானே கியாதிகளையடித்தார்கள். அந்த யுத்தத்தில் பாணங்கள் ஜபத்தையடைந்துபோகையில் தனுசுகளமுறிந்துபோகையிலசஸ்திரங்கள் க்ஷயித்துப்போகையில்அந்தஎது வீரர்கள்ஒருபிடிகோரைகளைப் பிடிங்கிக்கொண்டார்கள் முஷ்டிகளால் கிரகிக்கப்படாநின்ற அந்தக்கோரைகளானதுகள்வச்சிராயுதத்துக்குச் சமானங்களான உழலைத்தடிகளாய்விட்டதுகள். அதுகளால் ஒருத்தருக் கொருத்தர் அடித்துக்கொண்டார்கள், ஸ்ரீகிருஷ்ணராலேதகையப்பட்டிருந்தாலும் அந்த எதுவீரர்கள் அந்தக்கோரைகளால் அவரையுமடித்தார்கள்.

வாராய்ராஜனே, மிகவுங்கோபத்தையுடையவர்களாயும்விவேகயீனர்களாயும் ஒருவருக்கொருவர் எதிர்த்து யுத்தம்பண்ணுநின்றுமிருக்கிற அந்தஎதுவீரர்கள் பலராமனையும் ஸ்ரீகிருஷ்ணனையும் எதிரியாக எண்ணினவர்களாய் அவர்களையும்அடிக்கிறதற்கு எத்தனம் பண்ணினர்கள்; வாராய்ராசனே பிற்பாடுஅந்த ஸ்ரீராமகிருஷ்ணர்களும் மிகவுங்கோபத்தையுடையவர்களாய் பிடிகோரையை உழலைத்தடியாக உடையவர்களாய்அந்தயுத்தத்தில் சஞ்சரியாநின்றுகொண்டு அடித்தார்கள்பிராமணசாபத்தையுடையவர்களாயும்ஸ்ரீகிருஷ்ணருடைய மாயையினால்சூழப்பட்டமனதையுடையவர்களாயுமிருக்கிறஅந்தஎதுவீரர்களுக்குச் சண்டை நிமித்தமாக உண்டாகாநின்ற கோபமானது குலக்ஷயத்தையேஅடைவிப்பதுஎப்படியானால் மூங்கில்ஒன்றுக்கொன்று இழைந்துஅதினாலுண்டாகாநின்ற அக்கினியானது அந்தவனத்தையெல்லாந் தகித்துப்போடுமோ அப்படிபோலஅந்தக்கோபமானது குலத்தையேநாசம்பண்ணிற்று இந்தப்பிரகாரம் தம்முடையசமஸ்தகுலங்களும்நாசத்தையடைந்துபோயிருக்கையில் மீந்திராநின்ற ஸ்ரீகேசவரானவர்பூமியினுடையபாரம் தீர்க்கப்பட்டுதென்று எணணிக்கொண்டார் பிற்பாடுபலராமரானவர் அந்தச் சமுத்திரத்திலேயே பரமாத்துமத்தியான ரூபமான யோகத்தை ஆசரியித்துத்தம்முடைய ஆத்துமாவைபரமாத்

துமாவினிடத்திலே கூட்டிவைத்து மனுஷியசரீரத்தை விட்டுவிட்டார் பகவானுன ஸ்ரீகிருஷ்ணரானவர பலராமருடையகிரியாணத்தைப்பார்த்துப் பின்பு அசுவத்தவிருட்சத்தையடைந்து பூமியில்மவுனமாயிருந்தார்.

எப்படியெனில் நான்குபுஜங்களையுடையதாயும்மிகவும்விளங்காநின்றும் தனதுதேஜசினல் புகையில்லாதஅ கினியானதுபோல திக்குகளைப் பிரகாசம்பண்ணுநின்றும் ஸ்ரீவச்சசின்னத்தையுடையதாயும்மேகம்போல்சியாமள வர்னமாயும் உருக்கின தங்கம்போலொத்த தேஜசையுடையதான இரண்டு பீதாம்பரத்தினல்சூழப்பட்டும்-மிகவுமங்களகரமாயும, மனேக்கியமான புன்சிரிப்பையுடைய முகாரவிந்தத்தை யுடையதாயும கறுத்தமுன்னெற்றிமயிர்களாலே அலங்கரிக்கப்பட்டும்,வெண்தாமரைப்புஷபங்கள்போல மனேக்கியமானநேத்திரங்களையுடையதாயும்,பிரகாசியாநின்ற மகரகுண்டலங்களையுடையதாயும், கடிசூத்திரம்- எக்கியோபவீதம்-கிரீடம்-கடகம்-தோள்வளைகள்-ஆரம் - சிலம்புகள் இதுகளோடே கூடிக்கொண்டும கௌஸ்துவாபரணத்தினல் மிகவும் விளங்காநின்றும்-வனமாலையினல் சூழப்பட்ட மார்பையுடையதாயும்-சரீரத்தைக் தரித்துக்கொண்டிருக்கிறதமதுபஞ்சாயுதங்களாலேயும்-சூழப்படாநின்றுமிருக்கிற திவ்வியரூபத்தைத் கரியாநின்றுகொண்டு அசுவத்தமூலத்தில் செந்தாமரைப்புஷ்பம்போலொத்தவலதுகாலை இடதுதுடைமேல்வைத்துக்கொண்டிராநின்றஸ்ரீபகவானைப்பார்த்துச் சேரனென்னும் பட்டப்பெயரையுடைத்தான வேடனனவன் முசலத்தில்மீந்திருந்த இரும்பினுடைய துணுக்கையினல்பண்ணப்பட்டபாணத்தையுடையவனய்மிருகத்தினுடையஆகாரம்போலொத்தஆகாரத்தையுடையதானஇந்தப்பகவானுடையதிருவடியைமிருகமென்கிறபுத்தியினுலே அடித்தான் பாபத்தைப்பண்ணுநின்ற அந்தவேடனனவன்நான்குபுஜங்களையுடையவரான அந்தமகாபுருஷனைப்பார்த்துமிகவும்பயந்தவனய் பகவானுடையதிருவடிகளில் சாஷ்டாங்கமாகவிழுந்து இந்தப்பிரகாரம்பிரார்த்தித்தான்.

வேடன்வாக்கியம்.

வாரீர் மதுசூதனரே தேவரீரென்று அறியாதவனும்-பாபியாயுமிருக்கிற என்னுலிந்தஅபராதமானது பண்ணப்பட்டது, வாரீர்உத்தமசுலோகரே பிரபுவேஎனதுஇந்த அபராதத்தை க்ஷமிக்குகைக்குயோக்கியராகாநிற்கிறீர், கியானிகளானபேர்கள் யாதொருஉம்முடைய ஸ்மரணத்தை மனுஷியர்களுடையஅக்கியானமாகிறஅந்தகாரணத்தை நாசம்பண்ணுகிறதாகச்சொல்லுகிறுர்கள். வாரீர்பிரபுவே அபபடிப்பட்ட ஸ்ரீமகாவிஷ்ணுவானஉமக்கு என்னுலேமகா அபராதமானது பண்ணப்பட்டது வாரீர்வைகுண்டரே எப்படியானுல்நான்திருமபவும்இந்தப்பிரகாரம் சத்புருஷாளுக்கு அக்கிரமத்தைப்பண்ணுமலிருப்பேனே அப்படிக்கு மிருகவயிரியாயும்மகாபாபியாயுமிருக்கிற என்னைச்சிக்கிரமாகச் சங்கரிக்கக்கடவீர், யாதொருதேவரீருடையசுவாதீனமானமாயாவிலாசத்தைப்பிர்ம்மாவும் பிர்ம்ம புத்திராளானருத்திரன்முதலானபேர்களும் வேதவித்துக்களான மற்றுமுள்ள மகானுபாவாளும் அறியார்களோ அப்படிப்பட்டசிந்திக்ககூடாதான மாயைக்கு ஆசிரியரான தேவரீருக்கும்பிராமணர் சாபமென்கிற இதனை உம்முடையமாயையினுலே மோகிக்காளாயிருக்கிறீராளாயும்- பாபஜென்மத்தையுடையவர்களாயுமிருக்கிற நாங்கள்என்னவென்றுசொல்லப்போகிறேம். ஆகையினுல் மகா அபராதியான என்னைச்சங்கரிக்கக்கடவீரென்று பிரார்த்தியாநின்ற அந்தவேடனைப்பார்த்துபகவான்சொல்லுகிறுர்,வாராயசேரனே நீபயப்படவேண்டாம எழுந்திருக்கக்கடவாய் எனதுசங்கல்பமே இந்தப்பிரகாரமபண்ணப்பட்டிருக்கிறது நீயானவன் என்னுலே அனுக்கையைப்பண்ணப்பட்டவனய் சுகுர்தத்தைச்செய்தபேர்களுக்குஸ்தானமானசொர்க்கத்தை யடையக்கடவாய் இந்தப்பிரகாரம்சுவயிச்சையினுல்கிரகிக்கப்பட்ட சரீரத்தையுடையவராளாயும் பகவானுயுமிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணபகவானுல்ஆக்கியாபிக்கப்பட்டவனுய் அந்தவேடனனவன்பகவானைமூன்றுதிரம் பிரதக்ஷணம பண்ணி பிரணுமஞ்செய்துவிட்டு விமானத்தினுல் சுவர்க்கத்தையடைந்தான் அப்போது, தாருகனனவன் பகவானுடையமார்க்கத்தைத்தேடிக்கொண்டு வராநின்று அந்தமார்க்கத்தையறியாமல் ஸ்ரீதுளசிகெந்தத்தை யுடையதான வாயுவை ஆக்கிராணம்பணணி அந்தவாயுவுக்கெதிராக அந்தஸ்தானமவந்துசேர்ந்தான். அவடத்தில் அசுவத்தமூலத்தில்சமாதியிலிராநின்றும் ஆத்துமானந்தசுகத்தை யுடையவராயுமிருக்கிற பிரபுவான ஸ்ரீஅரியைப்பார்த்து ரதத்தில்நின்றுமிறங்கிநேத்திரங்களில்பாஷ்பங்களையுடையவனுய்சினேகத்தினுல் உருகாநின்ற மனதையுடையவனுய்ஸ்ரீபகவானுடைய திருவடிகளில் சாஷ்டாங்கமாகப்பிரணமம்பண்ணி ஒருவார்த்தைசொல்லுகிறுர்.

தாருகன் வாக்கியம்.

வாரீர்பிரபுவே தேவரீருடையசரணுரவிந்தத்தைப்பாராமலிருக்கிற என்னுடைய திருஷடியானதுநசித்துப்போயிற்று. (எப்படியானுல்) சந்திரனனவன் அஸ்தமானத்தையடைந்திருக்கையில் அந்தகாரத்தினுல்வியாபிக்கப்பட்டு ஒன்றுந் தெரியாமற்போமே (அப்படிபோல) உம்மைப்பாராமலிருக்கிறஎனதுதிருஷடியானது அந்தகாரத்தில்முழுகிப்போயிற்று. திக்குகளையும் அறியாமற்போனேன், சுகத்தையும் அடையாமறபோனேனென்று இந்தப்பிரகாரஞ் சாரதியானதாருகனனவன் சொல்லிக்கொண்டிருக்கையில் அப்போது கருடாழ்வாராச்சின்னமாகவுடையதான அந்தரதமானது குதிரைகள்-துவசம்-இதுகளையுடையதாய்க்கொணடு மகாவேகத்துடன் அந்தச்சாரதி பார்ததுக்கொணடிருக்கும்போதே ஆகாசத்திலெழும்பிவிட்டது ஆகாசத்திலெழும்பாநின்றஅந்தரதத்தின்பின்னேடே திவ்வியங்களான ஸ்ரீபகவானுடைய பஞ்சாயுதங்களெழும்பிப்போனதுகள், அதனைப்பார்த்து மிகவும் ஆச்சரியப்பட்டுக்கொண்டிருக்கிறமனதையுடையவனுன அந்தச் சாரதியைப்பார்த்து ஸ்ரீபகவான்சொல்லுகின்றுர்.

ஸ்ரீபகவான்வாக்கியம்.

வாராய்சாரதி நீதுவாரகாபட்டணத்துக்குப்போய்பந்துக்களுக்குயாதவாகள்ஒருத்தருக்கொருத்தர் யுத்தம்

பண்ணி அடிபட்டுப்போனதையும்யோகமார்க்கத்தினு ல்பலராமர்பரமபதத்தையடைந்ததையும் நான்இச்சரச ரீரத்தைவிட்டுவிட்டதையுஞ்சொல்லக்கடவாய்பந்துக்க ளோடேகூடிக்கொண்டிருக்கிறநீங்களதுவாரகையிலிரு க்கவேண்டாமெனனுல்விடப்பட்டிருக்கிற இந்ததுவார காபட்டணத்தைச்சமுத்திரமானதுமுழுகிப்போனதாக ப்பண்ணப்போகிறது ஆகையினுல நீங்களசமஸ்தமான பேர்களுங் அவாளவாள்பந்துஜனங்களையும் நம்முடை யமாதாபிதாக்களையும்அழைத்துக்கொண்டு அர்ச்சுனனு லேரட்சிப்பட்டவர்களாய்இந்திரப்பிரஸ்தத்தைப்போய டையுங்களென்றுபந்துகள்பொருட்டுசொல்லக்கடவாய், நீயோவென்றால்எனக்குப்பிரீதிகரமானதர்மத்தை ஆச ரியித்துக்கியானநிஷ்டையையுடையவனுய் ஒன்றிலேயு ம்அபேக்ஷையில்லாதவனுய் இதையென்னுடைய மா யையினுல்பண்ணபபட்ட லீலையாகவறிந்துசாந்தியைய டையக்கடவாயவிருதாவாகத்துககிக்கவேண்டாம்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்ராஜனே இந்தப்பிரகாரம்ஸ்ரீபகவானுற்சொல் லப்பட்டவனுய்அந்தத்தாருகானவன் அந்தப்பகவானை அடிக்கடிபிரதக்ஷணம்பண்ணி அவருடைய திருவடிக ளைத்தன்னுடையசிரசில்வைத்துக்கொண்டுசாஷ்டாங்க மாகப்பிரணமம்பண்ணி விசனப்பட்டுக்கொண்டே து வாரகையைக்குறித்துப்புறப்பட்டுவந்தான்.

---

## ௩௧-வது அத்தியாயம்.

மட்டுவிருத்தம.

அரனயராதிக ளனுதினந்துதிக்கும்
பரமபதப்பிராப்தியைப் பகர்ந்தனமே.

ஸ்ரீபகவானுடையபரமபதப்பிராப்தி சொல்லப்படுகி ன்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளீர் உத்தரன் மருமகனுன பரிக்ஷித்துமஹாராஜ னேபிற்பாடு அவடத்தில்பிர்மாவும் - பார்வதியோடுகூட ருத்திரனும்-தேவேந்திரன்முதலானதேவர்களும்- ஜன காதியோகீஸ்வரர்களும் - மரீச்சிப்பிரஜாபதிமுதலான பேர்களும்-பிதுர்தேவர்கள்-சித்தர்கள்-கெந்தர்வாள்- வி த்தியாதரர்-மகாசர்ப்பங்கள்-சாரணர்கள்- எக்ஷர்கள்-ரா க்ஷசர்கள்-கின்னராள-அப்சரஸ்திரீகள்- மயித்திரேயர் முதலானரிஷிகள்கருடாழ்வார் முதலான சமஸ்தமான பேர்களும் ஸ்ரீபகவானுடைய பரமபதப் பிராப்தியைத் தெரிசனம்பண்ணவேணுமென் றுஇச்சையையுடையவ ர்களாய்சந்தோஷத்துடன்வந்தார்கள்.

வாராய் ராஜனே அந்தபிர்மா முதலான தேவர்கள் விளங்காநின்ற விமானபங்திகளால் ஆகாசத்தைவிடவெ ளியில்லாத தாகச்செயது கொண்டு பரமமான பக்தி யை யுடையவர்களால் ஸ்ரீபகவானுடைய அவதாரத் தையும், சரித்திரத்தையும், கானம்பண்ணுநின்றும். ஸ் தோத்திரம் பண்ணுநின்றும், புஷ்பங்களைவருஷித்தார் கள். சகலலோக நாயகரான ஸ்ரீபகவானும் தம்முடை ய அம்சங்களானபிர்மாதிதேவர்களைப்பார்த்து ஆத்மா வில்ஆத்துமாவை ஏகப்படுத்தி பத்மகளம்போலொத் த நேத்திரங்களை மூடிக்கொண்டார் ஸ்ரீபகவானுனவர் சோகதாரணைதியானம்இதுகளுக்குச் சோபனமானவி ஷயமாயும் லோகாபிராமமாயுமிருக்கிறதிவ்வியமங்கள மூர்த்தியை-அக்கினிசுவரூபமானயோகதாரணையினுல் தகிக்காமல்அந்தத்திவ்வியமங்களமூர்த்தியோடேகூடின வராய் பரமபதத்துக்கெழுந்தருளினுர் அப்போதுசுவர் க்கத்தில் துந்துபிமுதலான வாத்தியங்கள் சப்தித்ததுக ள,ஆகாசத்திலிருந்து புஷ்பவருஷங்கள் விழுந்ததுக ள் சத்தியம்-தர்மம்-தைரியம-கீர்த்தி -இதுகள பூமியை விட்டுவிட்டுஸ்ரீகிருஷ்ணருடனே போயவிட்டதுகள் அ ப்போது பிர்மாமுதலானசமஸ்தமானதேவர்கள் முதலி யபேர்களும் தமமுடைய தேஜசிலேபிரவேசியாநின்று ம்லோகத்தாலேயும் அறியப்படாதகதியையுடையவரா யுமிருக்கிறஸ்ரீபகவானை எங்கேபோனுரோவென்றுயோ சனைபண்ணுநின்றும் அறியமாட்டாமற்போனுர்களபிற் பாடுதமமுடைய பரமபதத்துக்கு எழுந்தருளினுரென் கிறதை யறிந்துமிகவும் ஆச்சரியத்தை யடைந்தார்கள் (எப்படியானுல்)ஆகாசத்தில் மேகமண்டலத்தைவிட்டு ப்புறப்படாநின்ற மின்னலினுடைய கெதியானது மனு ஷியர்களால் அறியப்படவில்லையோ(அப்படிபோல)மே கமணடலத்தையும் பேதித்துக்கொண்டுஸ்ரீவைகுந்தத் தையடையாநின்ற ஸ்ரீகிருஷ்ணருடைய கெதியானதுபி ர்மாமுதலானதேவர்களாலேயும் அறியக்கூடாமற்போ யிற்றுபிர்மாருத்திரன் முதலானபேர்களும் ஸ்ரீஹரியி னுடைய அந்தயோககெதியைப் பார்த்துமிகவுமாச்சர யத்தையுடையவாகளாய்அந்தப்பரமபதப் பிராப்தியை மிகவும்ஸ்தோத்திரம்பண்ணிபிற்பாடு அவரவர்களுல கங்களை யடைந்தார்கள்.

கேளீர்விசித்திரவீரியகுலோற்பவனுனபரிட்சித்தும காராஜனேசராசரணரான ஸ்ரீஹரிகருயாதவர்கள்முத லானபேர்களில் அவதாரம அவதாரசமாபத்தி இதுகளு டைய லீலையானது மாயையினுல் ஆச்சரியமாகப் பண ணப்பட்டதாக அறியக்கடவாய (எப்படியானுல்) வேஷ தாரியானவன் சுவரூபநாசமில்லாதவனுய்த் தானேயிரு ந்துகொண்டு நானவிதங்களான வேஷங்களால் ஜென்ம முதலானதுகளை அனுசரிக்கிறுனே! அப்படிபோல ஸ்ரீப கவானும்மாயையினுலேயே ஜென்மாதிலீலைகளை அனு சரியாநிற்கிறுர். இந்தப்பகவானுனவர் சுவயமாகவே இந் தச்செகத்தைச் சிருஷடித்து அதற்குள் அந்தரியாமியா கப்பிரவேசித்து அநேகலீலைகளைப்பண்ணிமறுபடியும் அந்தத்தில்தம்மிடத்தில்உபசங்காரம் பண்ணிக்கொண் டுதம்முடையமகிமையினுல் ஆனந்தரூபராய்க் கொண் டிருக்கிறுர் யாதொருபகவானுனவர் எமனுலே தன்னு டையலோகத்தையடையப்பட்டகுருபுத்திரனை அந்தம னுஷிய சரீரத்துடன்தானே மறுபடியும் அழைப்பித்தா ரோசரணுகெதரக்ஷகரான யாதொருபகவானுனவர்பிர் மாஸ்திரததினுல் தகிக்கப்பட்ட உன்னையும் ரட்சித்தா ரோயாதொருபகவானுனவர் எமனுக்கும் எமனுனருத் திரனையுஞ் செயித்தாரோயாதொரு பகவானுனவர்வே டனையும் சரீரத்தோடுகூடவே சுவர்க்கத்தையடைவிப் பித்தாரோ அப்படிப்பட்ட அந்தப்பகவானுனவர் தம்மை ரட்சித்துக்கொள்ளுகிறத்திலே சமர்த்தராகாமற்போனவ ராயென்ன இந்தப்பகவானுனவர்சஸ்தானமானசெகத்தினு

டைய சிருஷ்டி-ஸ்திதி-சங்காரங்களில்மற்றென்றைஅபேட்சியாமல்சுவயமாகவேகாரணமாகநிற்கிறார்யாதொருகாரணத்தினல் அனந்தசக்தியுடையவராக இருக்குராரோ ஆனலும் யாதவர்களைச்சங்காரம்பண்ணிவித்து தம்முடைய சரீரத்தைமாத்திரம் இந்தப்பூமியில் மீந்ததாகப்பண்ணுகைக்கு இச்சிக்காமற்போனர். இந்தமனுஷியதேகத்தினல் இனிமேலென்ன காரியமாகவேண்டியிருக்குதென்று அந்தத்தேகத்தைஆத்துமநிஷ்டர்களுக்குஉத்கிருஷ்டமானபரம பதப்பிராப்தியைக் காண்பியாநின்று ஸ்ரீவைகுந்தத்தை யடைவிப்பித்தார்இல்லாவிட்டால்அந்த ஆத்துமநிஷ்டர்களும்பரமபத பிராப்தியையும் அநாதரவுபணணிபோகபலத்தினல்தேகசித்தியைச்செய்துகொண்டு இந்தப்பூமியில்ரமித்துக்கொண்டிருக்குகைக்கு எத்தனம்பண் ணுவர்கள் அப்படிவேண்டாமென்று ஸ்ரீபகவானனவர் தம்முடையதிவ்வியமங்களமூர்த்தியைத்தாம்தானேபரமபதத்தையடைவிப்பித்தார்) யாதொருபக்தனனவன் பிராதக்காலத்தி லெழுந்திருந்து பரிசுத்தனகி ஸ்ரீபகவானுடைய உத்கிருஷ்டமானஇந்தப்பரமபதப்பிராப்தியைக்கீர்த்திககிறனே அந்தப்புருஷனனவன் உத்கிருஷ்டமான அந்தப்பரமபதத்தையேயடைவன்.

வாராயராஜனே பிற்பாடுஸ்ரீகிருஷணா விட்டுப்பிரியாநின்ற தாருகனனவன் துவாரகையைவந்தடைந்து வசுதேவர்உக்கிரசேனர் இவர்களுடையபாதங்களில்விழுந்து தன்னுடைய கண்ணீர்களால் அந்தப்பாதங்களைநனைத்து சமஸ்தளதுவீரர்களுடையநாசத்தையுஞ்சொன்னன்.

வாய்ராஜனே, அந்தவிர்த்தாந்தத்தைக் கேட்கமிகவும்கலங்காநின்ற இருதயத்தையுடையவர்களாய் சமஸ்தமான ஜெனங்களும் சோகமோகங்களை யுடையவர்களாய்மூர்ச்சையையடைந்தவர்களாய்ஸ்ரீகிருஷணருடைவிரகத்தைச் சகியாதவர்களாய்துறையோடே கூடஎவ்விடத்தில்பந்துக்கள்மிருதாளாய் விழுந்திருக்கின்றூர்களோ அவடத்திலோடிவந்தார்கள்தேவகீ-ரோகணி-வசுதேவர் -இவர்கள்புத்திரர்களானஸ்ரீராமகிருஷணர்களைப்பார்த்தவர்களாய் சோகத்தினல்மிகவு மூர்சசையடைந்தவர்களாய் ஸ்ரீபகவானுடைய விரகத்தைச்சகிக்கமாட்டாதவர்களாய் பிராணன்களையும் விட்டுவிட்டார்கள் உக்கிரசேனனும் ஸ்ரீபகவானையே தியானம்பண்ணுகின்றுகொண்டு அப்போது அக்கினிப்பிரவேசமபண்ணினர்ஸ்திரீகள் தங்கள்தங்களபர்த்தாககளைக் கட்டிக்கொண்டுஅக்கினிப்பிரவேசம்பணணினர்கள பலராமருடையஸ்திரீகளும்பர்த்தாவினுடையதேகத்தைக்கட்டிக்கொண்டு அக்கினிப்பிரவேசம் பண்ணினர்கள் வசுதேவருடையபத்தினிகளும்பர்த்தாவினுடையதேகத்தை ஆலிங்கனஞ்செய்துக்கொண்டு அக்கினிப்பிரவேசம்பண்ணினர்கள் ஸ்ரீகிருஷ்ணதேவரின் குமாரர்களுடையஸ்திரீகளும்பிரத்தியுமனன்முதலானதங்கள்தங்கள் பர்த்தாவினுடையதேகங்களை ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு அக்கினிப்பிரவேசஞ்செய்தார்கள் ஸ்ரீகிருஷ்னருடையபத்தினிகளானருக்குமணிமுததானபேர்களும் ஸ்ரீபகவானிடத்திலேயேஸ்திரமானமனதையுடையவர்களாய் அக்கினிப்பிரவேசம்பண்ணினர்கள் அர்ச்சுனனனவன் இஷ்டராயும்சிநேகிதர்களாயுமிருக்கிறஸ்ரீகிருஷ்ணருடையவிரகத்தினல்மிகவும்விசனத்தையுடையவனுயபூர்வத்தில்ஸ்ரீகிருஷ்ணராற்சொல்லப்பட்டும்பரமார்த்தத்துவத்தையுடையதுகளாயிருககிறகீதார்த்தங்களால்தன்னைத்தானே சமாதானம்பண்ணிக்கொண்டான் அந்த அர்ச்சுனனனவன் நஷ்டசந்திகளாயும்அதாளாயுமிருக்கிறபந்துக்களுக்குக்கிரமமாய்எதாவிதியாகப்பிண்டப்பிரதானதாப்பணமுதலானகர்மங்களைச்செய்துவைத்தான்.

வாராய்மகானுபாவனே அந்தட்சணத்தில் சமுத்திரமானதுஸ்ரீமத்தானஸ்ரீகிருஷ்ணனுடையகிரகத்தைவிட்டுவிட்டுஅவரால்விடப்பட்டிருக்கிறதுவாரகாபட்டணம்சமஸ்தத்தையுமுழுகப்பணணிற்று ஸ்மரணமாத்திரத்தினல்சமஸ்தபாபங்களையும்போக்கடியாநின்றும்சர்வங்களுக்கும்மங்களரூபராயும்பகவானயுமிருக்கிறஸ்ரீஹரியானவர்அந்தக்கிரகத்தில் நித்தியமாகசா நித்தியம்பண்ணிக்கொண்டிருக்கிறார் பிற்பாடு அர்ச்சுனனனவன் அசேஷர்களாயிருக்கிறபாலவிருத்தர்களையழைத்துக்கொண்டுஇந்திரப்பிரஸ்தத்தைவந்தடைந்து அவ்விடத்தில்வச்சிரனுக்குப்பட்டாபிஷேகம்பண்ணிவைத்தான்.

வாராய்ராசனேஉன்னுடையபிதாமகாளான தர்மபுத்திராதிகள்அர்ச்சுனனிடத்தில்நின்றும்பந்துக்களுடையவதத்தைக்கேட்டுமகாவிசனத்தையுடையவர்களாய் வங்கிஷோத்தாரகனை உன்னைப்பட்டாபிஷேகம் பண்ணிஸ்தாபித்துசமஸ்தமானபேர்களும் மகாப்பிரஸ்தானம்போனர்கள்.

வாராய்ராசனே யாதொரு புருஷன் பரமமானசிரத்தையுடையவனய்தேவதேவோத்தமரான ஸ்ரீஹரியினுடையஅவதாரத்தையும்சரித்திரங்களையும் கீர்த்தனம்பண்ணுகிறனே அந்தப்புருஷனனவன் சகலபாபங்களில்நின்றுமவிடுபடுவன்இந்தப்பிரகாரம்பகவானனஸ்ரீஹரியினுடையமனோக்கியங்களாயும்உத்தமங்களாயுமிருக்கிறஅவதாரங்களையும்பாமமங்களமாயும் இகலோகபரலோகங்களில்சுகப்பிரதங்களாயுமிருக்கிறபலசரித்திரங்களையும் கீர்ததனமபண்ணுகின்ற மனுஷியனனவன்பரமாங்கிசாளுக்குசரண்ணியரானஸ்ரீகிருஷணரிடத்தில்பரமமானபக்தியையடைவன்.

பதினோராவதுஸ்கந்தம்-முற்றுப்பெற்றது.









நன்ருக    குருவாழ்க.    குருவேதுணை.

# ஸ்ரீமகாபாகவதபுராணம்.

## பன்னிரண்டாவது-ஸ்கந்தம்.

### முதலாவது - அத்தியாயம்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

ஆதியினிலொன்பதா வதுஸ்கந்தத்தி
லரியசந்த்ரவம்சத்தின் கிளைகளான
ஓதுமகரதவம்சம சொலுமிடத்தி
லொளிவீசுஞ்சகதேவனெனும்ராஜற்குப்
பேதமிலாப்பின்புண்டா கப்போகின்ற
பேசுமிருபதுபேரிற் புரஞ்சனீருய்
நீதமுடன்சொலப்பட்ட ததற்குமேலாய்
நிகழரசர்வம்சமதை நிகழ்த்துவாமே.

இதில்பூர்வம் ஓன்பதாவதுஸ்கந்தத்தில் சந்திரவம்சத்தினுடையகிளையான மாகத வம்சமானதுசொல்லப்பட்டவிடத்தில் சகதேவனென்கிற இராஜாவுக்குப்பின்புண்டாகப்போகின்ற இருபதுபேர்களில் புரஞ்சயனபரியந்தம்சொல்லப்பட்டது,அதற்குமேலுண்டாகாநின்றஇராஜவம்சமானது சொல்லப்படுகின்றது.

சுகப்பிர்மரிஷிவாக்கியம்.

கேளீர்வீரசூர தீரகெம்பீர உதாரமார குபேரலயாரவதிகார சிகாமணியான பரிட்சித்துமகாரசனேபிரகலாதனனுடைய வம்சத்தி லுண்டாகப் போகின்றபுரஞ்சயன்என்னும் அரசன்முடிவில் சொல்லப்பட்டிருந்த அவனுடைய மந்திரியானசுனகனென்பவன் அந்தஅரசனைக்கொன்றுவிட்டுபிரத்தியோதனென்றுபெயரையுடையதன்புத்திரனை அரசனுக்குவிற்கப்போகின்ருன்அந்தப்பிரத்தியோ தனுக்குப் பாலகனென்றபுத்திரனுண்டாகப் போகின்ருன். இப்படியே அந்தப்பாலகனுக்கு விசாகயூபனென்றும்அவனுக்குவாசனனென்றும்அவனுக்கு நந்திவர்த்தனனென்றும், உண்டாகப்போகிருன். பிரத்தியோதன்வம்சத்திற்பிறந்தஇந்தஐந்துபேரும், நூற்றுமுப்பத்தெட்டுவருஷம் பூமியையனுபவிக்கப்போகின்ருர்கள். அந்தநந்திவர்த்தனனுக்குச்சுசுனுகனென்பவனும், அவனுக்கு காகபரன்னனென்பவனும், அவனுக்கு க்ஷேமவருணனென்றும், அவனுக்குக்ஷேத்திரக்கியனென்றும் - அவனுக்கு விதிந்திரனென்றும்- அவனுக்கு அசாதகசத்துருவனென்றும் - அவனுக்குதுருபதனென்றும் - அவனுக்குஅற்பகனென்றும்- அவனுக்குநந்திவர்த்தன ஆசயனென்றும் - அவனுக்கு மகாநந்தியென்கிற புத்திரனுண்டாகப்போகின்ருன் ஓய் அரசனேசுசுனுகன் வம்சத்திற்பிறந்த இந்த பத்துராஜாக்களும்கலியுகத்தில் முந்நூற்றருபதுவருடம் பூமியையனுபவிக்கப்போகின்ருர்கள். பின்பு மகாநந்தியினுடையபுத்திரனுமான சூத்திரஸ்திரீ யினிடத்தில்பிறந்தாநந்தனென்பவன்பலவானும்- க்ஷத்திரியவம்ச நாசகனும்-மகாபத்மம்என்னப்பட்டநிதிக்கும் சேனைகளுக்கும்பிரபுவாகிய அவன்மகாபத்மனென்கிற பேரையுமுடையவனகப்போகின்ருன்.

அவனுக்குபிற்பாடு அரசர்கள் சூத்திரர்களாயும் அதர்மிகளாயு மாகப்போகின்ருர்கள். அந்தமகாபத்மனென்னும் அரசனனவன் பரசிராமனைப்போல க்ஷத்திரியர்களைச் சங்காரம்பண்ணிக்கொண்டு ஓரிடத்திலுந் தடையில்லாதஆக்கினையுடைய ஏகசக்கிராதிபதியாய் பூமியைப்பரிபாலனம் பண்ணப்போகின்ருன் அவனுக்குச்சுமாலிமுதலான எட்டுப்புத்திரர்கள் பிறந்து அவர்களிந்தபூமியை நூறுவருடம் அனுபவிக்கப்போகின்ருர்

கள்அப்போது ஒருபிராமணன் விசுவாசத்தை யுடைய
வர்களாயும் பிரசித்தர்களாயுமிருக்கிற நந்தன்முதலாய்
அவன்புத்திரர்களான ஒன்பதுராஜர்க்களையும் நாசம்ப
ண்ணப்போகின்றான். பின்பு கலியுகத்தில் மாவுரியாள்
என்று பெயரை யுடையவர்கள் பூமியை யனுபவிக்கப்
போகின்றார்கள். என்றால் அந்தப்பிராமணன்றானே ச
ந்திரகுபத்தனென்னுமோரு மாவுரியனுக்குப் பட்டாபி
ஷேகஞ்செய்து வைக்கப்போகின்றார், அந்தச்சந்திர கு
பத்தனுக்கு வாரிதாரான அவனுக்கு அசோகவர்த்தனன்
அவனுக்குசுசேசு அவனுக்குதெசாதனன் அவனுக்கு ச
ங்கதன்-அவனுக்குசாலிஞுகன் - அவனுக்குசோமசரும
ர்-அவனுக்குசத்தனுவர் - அவனுக்கு பிரகததுர்த்தனெ
ன்னும்புத்திரனுண்டாகப்போகின்றான் ஆகஇந்தமாவு
ரியாரென்னப்பட்ட இராசாக்களும் நூற்றுமுப்பத்தே
ழுவருடம் பூமியையனுபவிக்கப்போகின்றார்கள் அந்த
ப்பிரகததுர்த்தனுடைய சேனாதிபதி புஷியமித்திரனெ
ன்பவன் அரசனைக்கொன்றுவிட்டுத் தான்ராச்சியபார
ம்பண்ணப்போகின்றான். அவனுக்குச் சுங்கனென்றும்
அவனுக்கு அக்கினிமித்திரன் அவனுக்குசுசியெஷ்டன்
அவனுக்குவச்சமித்திரன்-அவனுக்குநந்தகன்- அவனுக்
குப்புளிந்தன் - அவனுக்குப்பாகவாதன். அவனுக்குத்
தேவஹூதியென்னும் புத்திரனுண்டாகப் போகின்றான்
அந்தசுங்களவம்சத்திற்பிறந்தபத்துராசாக்களும் நூற்று
ப்பநிரண்டுவருடம்பூமியையனுபவிக்கப்போகிறார்கள்.

கேளீர் பற்குனபௌவுத்திரனை பரிட்சித்து மகா
ராஜனே அந்ததேவஹூதிக்குப் பின்பு இந்தப்பூமியானது
கண்ணுவனையடையப்போகின்றது. ஏனென்றால் அந்த
ச்சுங்கன் வம்சத்திற்பிறந்த தேவஹூதியினுடைய மந்திரி
யானகண்ணுவனனவன் பரஸ்திரீலோலகனுகிய தன்எ
ஜமானனைக் கொன்றுவிட்டுத் தானே ராச்சியாதிகாரம்
பண்ணப்போகின்றான் அவனுக்கேவாசுதேவனென்னு
ம்பெயர் அவனுக்குப்பூமித்திரன் அவனுக்குநாராயண
ன் அவனுக்குச்சுசர்மா வாசுதேவன்முதலான இந்நா
ல்வரும்மூந்நூற்று நாற்பத்தைந்துவருடம் பூமியையனு
பவிக்கப்போகின்றார்கள், அந்தக்கண்ணுவவம்சத்திற்பி
றந்தவர்களில் கடைசியான சுசர்மாவென்பவனை அவனு
டையபட்டனும்-பலவானும்- ஆந்திரசாதியாயும்-பெலி
பகனெனப்பெயரை வாய்ந்தவனுமான சூத்திரன்கொன்
றுவிட்டுபூமியைச்சிலகால மனுபவிக்கப்போகின்றான்.
அவனுடைய பிராதாகிருஷ்ணனென்பவன் அரசனாகப்
போகின்றான் அவனுடையபுத்திரன் ஸ்ரீசாதகர்னம் அ
வனுக்குப்பவுன்ர்னமாசன்அவனுக்குலம்போதகன் அவ
னுக்குசிபவுகன் அவனுக்குமேகசுவாதி அவனுக்கு அட
மானன்-அவனுக்கு அரிஷ்டகாமா-அவனுக்கு ஆலயன்
அவனுக்கு-ஸ்தபகன்-அவனுக்குப்புருஷமேரு- அவனு
க்குச்சுனந்தனன்- அவனுக்குக்கோரன் அவனுக்கு வடக
னென்று எண்மருண்டாகப்போகின்றார்கள். அவர்களி
ல்கடைசியில்பிறப்பவனுக்கு சிவசுவாமியென்றுபெயர்
அவனுக்குகோமதிபுத்திரன், அவனுக்குபுரிமான் அவ
னுக்குசாதகர்னன்- அவனுக்குசிவஸ்கந்தன் - அவனுக்கு
எக்கியசீலன்-அவனுக்குவிசையன் - அவனுக்குச்சந்திர
பீசன்-அவனுக்குசுலோமதி இப்படியாய்ப்பிறந்த இந்த
முப்பதுராஜாக்களும் நானூற்றைம்பத்தாறு வருடம்பூ
மியையனுபவிக்கப் போகின்றார்கள் ஓய்இராஜனே, பி
ன்புயேழுஆபிராள் எட்டுவபிறுத்தியர்கள் பத்துகொர்த்
தபிகள்-சங்காள்-முரண்டாள் இவர்கள்முதலா யறுபத்
தெட்டுராஜாக்கள் ஆயிரத்தித் தொண்ணூற்றென்பது
வருடம் பூமியையனுபவிக்கப்போகின்றார்கள், பின்பும
வுனர்கள் பதினோராசர்கள் முந்நூறுவருடம் பூமியைய
னுபவிக்கப்போகின்றார்கள், அவர்களும் மரணமடைந்
தபின்பு கலிங்கலையென்னும் பட்டணத்தில் பூதநந்தன்
எவம்-அரன்-அவனுடையபிராதா-சிசுநந்தி- ஏசாநந்தி-
பிரவிரகன் - இவர்கள்நூற்றாறுவருடமும் பூமியையனு
பவிக்கப்போகின்றார்கள் அந்தப்பூதநந்தன் முதலானவ
ர்களுக்கு பாகுலியர்களென்னும் பதின்மூன்றுபிள்ளைக
ள் இராசாவாகப்போகின்றார்கள் பின்பு புஷியமித்திர
னென்றும் ஒருஅரசன் உண்டாகப்போகின்றான், அவ
னுக்குதுர்மித்திரனென்னும் புத்திரனுண்டாகி அப்ப
டியே ஆந்தரர்களும் கோசலர்களும்-வைடூரியப்பதிகளு
ம் நயிஷர்களும் இவர்கள் அந்தந்த தேசாதிபதிகளாய்
ஏககாலத்தில் இராஜாக்களாகப்போகின்றார்கள். பின்பு
மாகதர்களுக்குவிஸ்வபூர்த்தியென்னும் புத்திரனுண்டா
கிஅவன்புரஞ்சயனென்னும் பெயரையுடையவனாய் பிரா
மணர்களை பிளிந்தரென்றும் எதுவென்றும் மத்திரர்
களென்றும் பெயரையுடைய மிலேச்சர்களாகப் பண்ண
ப்போகின்றான் பின்னும் துற்புத்தியை யுடைய அவ
ன் பிர்ம்மக்ஷத்திரிய வைசியர்களென்கிற விவஸ்தையி
ல்லாதிருக்கிற பிரசைகளைப்பாலனம் பண்ணப்போகி
ன்றான்மகாவீரனான அவனைக்ஷத்திரியகுலத்தைநாசஞ்
செய்துவிட்ட பத்மாவதியென்னும் பட்டணத்தில் வாச
ஞ்செய்துகொண்டு கங்கைமுதல் பிரயாகைபரியந்தமுள்
ளபூமியையாளப்போகின்றான் பின்புசவுராஷ்டிரம்அவ
ந்திஆபிரம் அற்புதம் மானவம்யென்னும் தேசங்களிலு
ள்ளபிராமணர்கள்உபநயனாதி சமஸ்காரங்களில்லாத சூ
த்திரர்களாகி யாளப்போகின்றார்கள் அந்தச் சூத்திர
ர்கள் சமுத்திரதீரம் தந்திரபாகையென்னும் நதிதீ
ரத்தி லுண்டா யிருக்கின்ற காஸ்மீரதேசம் குந்தி
தேசமாகிய இவைகளை அனுபவிக்கப் போகின்றா
ர்கள். மிலேச்சர்களுக்கு சமானர்களான இவர்கள்

ஏககாலத்தில் தேசதேசங்களுக்கு அதிபதிகளாகப்போகின்றார்கள் இவர்கள் அதர்மிகளாயும் அசத்தியவான்களாயும் அற்பதாதாக்களாயும் மிகுந்தகோபிகளாயும், பரஸ்திரீகள்பேரில் மிகுந்தஆசையுடையவர்களாயும் இந்த ராஜாபிறந்தானென்ற வதந்திதேசங்களில் வியாபிக்கிறதின்பின்னேடே மிருதனானென்கிற சப்தத்தையுடையவர்களாயும் அற்பாயுளுடையவர்களாயும் கர்ப்பாதான முதலான சமஸ்காரமில்லாதவர்களாயும் அக்கியானிகளாயும் உண்டாகப்போகின்றார்கள் மிலேச்சஆசாரத்தையுடையஇவர்கள் தனதிகளையபகரிக்கின்றதினால் பிரசைகளைப் பீடிக்கப்போகின்றார்கள் இப்படிப்பட்டஅரசர்களாலும் தேசங்களிலுள்ள மானிடர்களும் அவர்களைப் போலவே சீலம்ஆசாரமிதுகளை அனுசரித்துஅரசர்களால்ஒருவருக்கொருவர் பீடிக்கப்பட்டவர்களாய் நாசமடையப்போகின்றார்கள் என்று சுகப்பிர்மரிஷி பரிட்சித்துமகாராசனுக்குச்சொல்லிமுடித்தார்.



## உ-வது, அத்தியாயம்.



மட்டுவிருத்தம்.

அலகிலாவிளை யாட்டுடையண்ணலாம்
கலியின்தர்மங் கழறினதாமரோ.

கலிதர்மம்சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய் பரிட்சித்துமகாராசனே பலவானான கலியினாலே நாளுக்குநாள்தர்மமும்-சத்தியமும் - சவுக்கியமும் பொறுமையும்-தயையும்-ஆயுளும் - பலமும்-கியானமும்-இதுகள்நசித்துப்போய் கலியுகத்திலே மனுஷியாளுக்கு தனமஜென்மம்-ஆசாரம்-குணம் இவைகள் சிரேஷ்டத்துக்குக் காரணமாயும் - தர்மம் - நியாயம்-இதுகளுடைய விவஸ்தையிலேபெலமேகாரணமாயும் ஸ்திரீகளுடைய ஆசையேகுலம்கோத்திரமின்றி பர்த்தாபாரியை என்கிற விவகாரமேகாரணமாயும், கியானவிற்கிரையாதிவிவகாரத்திலே வஞ்சனையேகாரணமாயும் ஸ்திரீபுருஷர்களுடைய சிரேஷ்டத்திலே ஒருத்தருடையஅதிசாமர்த்தியமேஏதுவாகவும்,பிராமணனென்கிறதில்எக்கியோபவீதமே காரணமாயும் சந்நியாசிஆசிரமங்களையறிவதில்ஆசாரவிசேஷங்களின்றி திரிதண்டமுதலானதே காரணமாயும் ஒருஆசிரமத்தில்நின்று மற்றொருஆசிரமத்திலடைவதில் சுவதர்மானுஷ்டானமில்லாமல் சின்னமே காரணமாயும் அல்பவிர்த்தியுள்ளவன்சொல்லும் ஞாயம் அனியாயமாயும் அதிகமாய்ப்பேசுவதே வித்துவானென்பதற்குக்காரணமாயுமிருக்கும் தரித்திரனாயிருக்குதலே வஞ்சகனாகவும் டம்பாசாரமே பெரியமனுஷியத்தன்மையாகவும்ஸ்திரீபுருஷர்களொருவருக்கொருவர் அங்கிகாரம்பண்ணுவதே விவாகமாகவும் ஸ்நானமேஅலங்காரமாகவும் தூரத்திலேயிருக்கிற மடுமுதலானதே புண்ணிய தீர்த்தமாகவும் சிரசில்ரோமமிருப்பதே சௌந்தரியமாகவும் வயிறுவளர்ப்பதே புருஷார்த்தமாகவும் குடும்பத்தைரட்சிக்கிறதே எசசு தர்மானுஷ்டானமாகவுமிருக்கும்.

வாராய்ராஜனே இந்தப்பிரகாரம் துஷ்டப்பிரஜைகளாலே சூழப்பட்டபூமண்டலத்திலே பிராமணாள் க்ஷத்திரியாள் - வைசியாள் - சூத்திராள் - இவர்களுக்குள்ளே பலமுடையவனெவனோ அவனே அரசனாயிருப்பான்இப்படிதிருடனுடைய தர்மம்போல கர்மத்தையுடையவர்களாயும் லுத்தாளாயும் - நிர்தயாளாயும்உள்ள அரசர்களாலே ஸ்திரீகள்தனம்அபகரிக்கப்பட்டுப்போய் தீனாளானபிரசைகள்-பர்வதம் - காடுகள் இதுகளை ஆசிரயிக்கப்போகின்றார்கள் க்ஷாமத்தினாலேயும் இராஜதெண்டத்தினாலேயும்வருந்தும் பிரஜைகள் - காய்கள் கிழங்குகள் வேர்கள்-மாம்சம் கேழ்வரகுமுதலான அல்பதானியங்கள்பலபுஷ்பாதிகள் இவைகளைப்பொசித்தும் - விசனத்தினாலே-பசி-தாகம் - வியாதிகளுண்டாய்சந்தாபத்தைஅடைவர்கள், மனுஷியாளுக்கு இருபதுவருஷமே பூர்ணாயுசாகாநிற்கும்.

கலிதோஷத்தினாலே மனிதர்களுடைய எண்ணம்பலயீனப்பட்டும் - வர்ணாசிரம ஆசாரங்களுடைய மனுஷியாளுக்கு வேதோக்கமானதர்மம்நசித்தும் பாஷாண்டதர்மம் - பிரபலமாகவும் இராஜாக்கள்திருடருக்குச்சமமாகவும் மனுஷியாளும் சௌரியம்-அசத்தியம் விருதாயிம்சை இவைகள்விருத்தியாயும் பிராமணாதிநான்குவர்ணங்களும், சூத்திராதிகளுக்குச்சமானமாகவும்பசுக்கள் ஆட்டுக்குச்சமானமாகவும் பிரமசரியம்-வானப்பிரஸ்தம் சந்நியாசம்இம்மூன்று ஆசிரமத்தையுடையவர்கள்பிரதிக்கிரகமுதலானதினால் கிரகஸ்தனுக்குச் சமானமாகவும் பந்துக்களுக்குச் சரீரசம்பந்தமாத்திரத்தையே காரணமாயும் தானியம்முதலானதுகள் அணுவுக்குச்சமானமாயும். அசுவத்தமுதலான விருட்சங்கள் வன்னிமரங்களுக்குச்சமானமாயும் மேகங்கள் மின்னல்மாத்திரமுண்டாய்வருஷியாமலும் வீடுகள் - பகவதாராதனம் - அதிதிபூசைமுதலான தர்மசூனியங்களாயும் - ஜனங்கள்-கழுதைநாய்களுக்குள்ள நடத்தையுண்டாகியும் இப்படிக்கலியுகம்பிரவர்த்திந்திருக்கையில் ஸ்தாவரசங்கமரூபமான சகலபிரபஞ்சத்துக்குங்கர்த்தாவாயும் சர்வவியாபகராயும்சர்வநியந்தாவாயுமிருக்கிற ஸ்ரீமகாவிஷ்ணு தர்மத்தைரட்சிப்பதின்பொருட்டும் சத்புருஷர்களுக்குக் கர்மபந்தநி

வர்த்தியின் பொருட்டும் மோக்ஷத்தின்பொருட்டும் ம காணுபாவராயும் விஷ்ணுஎசசுஎன்று சொல்லும் பிராம ணருடைய கிரகத்தில்கற்கி அவதாரம்பண்ணப்போகின் ருர். அணிமாதி அஷ்டஅயிஸ்வரியங்களை யுடையவரா னபகவானுனவர் தேவதத்தமென்னும் அசுவத்தின்பே ரிலேறி அரிதானகத்தியைஎடுத்துக்கொண்டு பூமியிலரா சர்களைப்போல வேஷதாரிகளாயுள்ள திருடர்களையும்து ஷ்டாளான மற்றஅரசர்களைச்சங்கரித்துவிடப்போகிருர் பகவானுடையதிவ்வியமங்களமூர்த்தியிலிராகின்றஸ்ரீசந் தனமுதலான வாயுவை ஸ்பரிசிக்கப்பட்டவர்களாயுள்ள மற்றவர்களுடையமனதுகள் நிர்மலங்களாகப் போகிறது அந்தப்பிரஜைகளுடைய இருதயத்தில் வாசுதேவர்அந் தரியாமியாயிருக்கையில் அந்தப்பிரஜைகளுக் குண்டா கின்ற புத்திராள் காலானுகுணமாக மகத்தானசரீரத் தையுடையவர்களாகப்போகின்றுர்கள்சந்திரன்-சூரியன்-பிரகஸ்பதிஇவர்கள்மூன்றுபேரும்புஷியநக்ஷத்திரத்தில் கூடி ஏகராசியிலிருக்கிற அப்போதேபகவான் அவதா ரகாலமென்றும் அதுவேகிரதாயுகமென்றும் அறியத்த க்கது அப்போது பிரஜைகளுடையசிருஷ்டியும், சாத்து விகமாக உண்டாகப்போகின்றது உன்னுடைய ஜன்மதி னமுதற்கொண்டு நந்தனுக்குப் பட்டாபிஷேகமாகும்பரி யந்தம் ஆயிரத்துநூற்றுப்பதினைந்து சம்வச்சரமென்ற றியத்தக்கது சப்தரிஷிகளுக்குள்ளே இரண்டுபேர்கள்உ தயத்தையுடையவர்கள் அவர்களுக்கு மத்தியில் யாதொ ருநக்ஷத்திரமானது சமானதேசத்திலே யிருக்கிறதாகக் காணப்படுகிறதோ அந்தச்சப்தரிஷிகள் அந்தநக்ஷத்திர த்தோடுகூடினவர்களாய் மனுஷியாளுக்கு நூறுசம்வச்ச ரபரியந்தம் அப்படியேயிருப்பார்கள், அந்தரிஷிகள்உன் னுடையகாலமான இப்போது மகாநக்ஷத்திரத்தி லிருக் கின்றுர்கள்.

எப்போது பகவானுன ஸ்ரீவிஷ்ணுவினுடைய அம்ச மாயும் சத்துவசொரூபமாயுமுள்ள தேகமானது ஸ்ரீவை குண்டத்தையடைந்ததோ அப்போதே கலியானதுண் டானது ஸ்ரீலட்சுமிபதியான ஸ்ரீகிருஷ்ணரானவர்தம்மு டைய பாதபத்மங்களால் ஸ்பரிசித்துக்கொண்டு பூமியி லிருந்தவரையில் அந்தக்கலியானது பூமியைஆக்கிரமி க்குகைக்குச் சமர்த்துள்ளதல்லாமற்போயிற்று, சப்தரி ஷிகள் எப்போதுமகத்தில் சஞ்சரித்துக்கொண்டிருக்கி ருர்களோ அப்போதுதிவ்வியவருஷத்தில் ஆயிரத்திரு நூறுசம்வச்சரமானகலியுகமானது பிரவர்த்தித்ததுஅந் தரிஷிகள் எப்போது மகத்தைவிட்டுப் பூர்வாஷாடத்தை அடைகிருர்களோ அப்போது நந்தனுக்குப்பிற்பாடுபிர த்தியோதனனென்ற அரசன்முதற்கொண்டு கலியுகமா னது பிரவேசித்ததென்று ஞானிகள்சொல்லுவார்கள்.

வாராய் ராஜனே இந்தப்பிரகாரம் இந்தமனுவமசாம னதுயுகங்கள்தோறும் உத்தமம் மத்தியமாதிபேதத்தை யுடையதாகச் சொல்லப்படுகிறதோ அப்படியேபிராம ணாள்-வைசியாள்-சூத்திராள்-இவர்களுடையவம்சங்களு ம்யுகங்கள்தோறும் சொல்லப்படும் அவர்களுடையபெ யர்களும் சரித்திரங்களும் இந்தவம்சத்திலுண்டாகும் ராஜாக்களுடையகீர்த்தியுமே ஸ்திரமாகநிற்கிறது சந்த னுமகாராஜாவினுடைய பிராதாவான தேவாபியும்இலட் சுவாகும் சத்திற்பிறவாநின்ற மநுவென்றராஜாவும் இவ ர்களிருவரும் மகாயோகபலத்தையுடையவர்களாய் கலா பமென்னப்பட்ட கிராமத்தில் இப்போதும் வாசம்பண் ணிக்கொண்டிருக்கிருர்கள் அவர்களிருவரும் கலியுகஅ ந்தத்திலே இந்தப்பூமியில்வந்து ஸ்ரீவாசுதேவராலேவப் பட்டவர்களாய் பிராமணாதிவர்னங்கள் பிரமசரியாதிஆ சிரமங்கள் இதுகளுடன் கூடினதர்மத்தை பூர்வம்போ லவே பிரசித்திபண்ணிவைக்கப்போருர்கள் நான்குயுகங் களும் இந்தக்கிரமமாகவேபிராணிகளிடத்தில் பிரவர்த் தித்துக்கொண்டிருக்கின்றது.

வாராய்ராஜனே நம்மாற்சொல்லப்பட்ட யாதொருரா ஜாக்கள் ஜனங்கள் பூமியில்நான்எனதென்கிற அபிமான த்துடனிருந்து அந்தத்தில் இந்தபூமியைவிட்டு மரணம டைந்துபோனுர்கள் அகண்டமான இந்தப்பூமியானதுஎ னதுபூர்வீகாளான பிதுர்பிதாமகாள் முதலானபேர்களா ல்தரிக்கப்பட்டதாயிருந்து என்னுலேயும் தரிக்கப்படாநி ற்கிறது இதுஎனதுபுத்திரனுக்கும் பௌத்திரனுக்கும்எ ப்படியாகப்போகிறதென்று அவிவேகிகளானவர்கள் பா ஞ்சபௌதிகமான இந்தச்சரீரத்தை ஆத்துமாவாகக்கிர கித்து பூமியையும்என்னுதென்றும் மமதையையடைந் துசரீரத்தையும் பூமியையும்விட்டு மரணத்தையேயடை ந்துபோனுர்கள் வாராய்ராஜனே யாதொருராஜாக்கள்ப ராக்கிரமத்தினுல் பூமியையனுபவித்தார்களோ அவர்க ளுடைய கதைகளைச்சொல்லப்படுகையில் காலத்தினுல் கதாமாத்திரமாக மீறப்பட்டவர்களாய் செய்யப்பட்டார் கள்.

## ௩-வது, அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

வாசமாகிய யிந்தவத்தியாயத்தில்
ராஜதோஷ வர்னனைகள்நவின்றனர்.

இந்தஅத்தியாத்தில் இராஜதோஷங்கள் வர்ணிக்கப்ப டுகின்றது.

சுகப்பிர்ம்மரிஷிவாக்கியம்.

மகாத்துமாவான சுகப்பிர்ம்மரிஷியானவர் பரிட்சித்து மகாராசனைப் பார்த்துச் சொல்லுகின்றுர் அரசனே

பூமிதேவியானவள் அரசர்களைப்பார்த்து நகைக்கின்றவளாயிருக்கின்றாள் எப்படியென்றால் மிருத்துவுக்குலீலாசாமக்கிரிகைகளாயிருக்கிற அரசர்கள் தம்மைச்சயிக்கவேணுமென்று இச்சிக்கின்றார்கள் விவேகிகளாயிருக்கின்றஅரசர்களுக்கு இந்தமனோரதம் வியர்த்தமாகவுண்டாயிருக்கின்றது இதனால்தேகாபிமானமுள்ள அரசர்கள்முன்னே இந்திரியங்களைச்சயித்து பின்புஅரசர்கள்இதரஅரசர்களுடைய மந்திரிகளை வசியம்பண்ணிக்கொள்ளுவோம் தளகர்த்தர்களையும் யானைசேனைபரிவாரங்களையும்ஜயிப்போம் சமுத்திரஞ்சூழ்ந்த அவர்கள்பூமியைச்சுவாதீனம்பண்ணிக்கொள்ளுவோமென்றிப்படிமனோரதத்தினால் கட்டப்பட்டயிருதயத்தையுடையவர்களாய் சமீபத்திலிராநின்ற மிருத்துவைப்றியாம லிருக்கின்றார்கள் சிலஅரசர்கள் ஆசைகொண்டவர்களாய் சமுத்திரத்தினாற்சூழப்பட்டிருக்கிற என்னைச்சயித்து ஓடங்களிற்போய்த்தீபாந்தரத்தையுஞ்சயித்து தனமுதலானதுகளைச் சம்பாதிக்கிறதின்பொருட்டு சமுத்திரத்திற் பிரவேசிக்கின்றார்கள் மனமுதலிய இந்திரியங்களைச் சயித்தவனுக்குசமஸ்தபூமியினுடையசயமானது யெவ்வளவுபலமாகின்றதுஅப்படிப்பட்ட சயத்துக்கு முக்கியபலமாகின்றது மனுக்களும் அவர்கள்புத்திரர்களும் என்னைவிட்டுவிட்டெப்படிவந்தார்களோ அப்படியேபோய்விட்டார்கள் அப்படிப்பட்ட யென்னைபுத்தியீனர்கள் யுத்தத்தில் சயிக்கப்போகின்றார்கள் இந்தராச்சியம் தன்னுடையதென்கிறமமதையினாற்கட்டப்பட்ட மனதையுடையவர்களும் துற்புத்தியையுடையவர்களுமான இவர்களுக்கு என்னிமித்தமானபிதாபுத்திரர்கள் பிராதாக்களான இவர்களுக்கும்பகையுண்டாகின்றது மூடனே இந்தப்பூமிமுழுதிலும் என்னுடையதே உனக்கில்லையென்றுசொல்லும் அரசர்கள்என்னிமித்தமாகவொருவர்க்கொருவர் யுத்தஞ்செய்து மரணமடைகின்றார்கள்.

பிருதுசக்கிரவர்த்தி-புருரவசு-காதி-பாதன்-நகுஷன்-கார்த்தவீரியாச்சுனன்-மாந்தாதா-சகரன்-ராமராஜா-கட்டுவாங்கன்-துந்துமாறன்-இரகு- திருணபிந்து - யயாதி-சையாதி-யந்தனுக்கியன்-பகீரதன்-குவலையாகவன்-ககுஸ்தன்-நயிஷதன்-நிருகன்-இரணியகசிபு- விருத்திராசுரன் உலோகபயங்கரனான இராவணன்-நமுசி-சம்பரன் - நாகாசுரன்-இரணியாக்ஷன்-தாருகாசுரனாகிய இவர்களுமின்னமநேகஅசுரர்களும்-இராஜாக்களும்-சர்வக்கியர்களாயும்-சூரர்களாயும்எவர்களாலும் சயிக்கத்தக்கவர்களும்தகாதவர்களும்மனுஷியர்களுடையநடத்தையை அனுசரித்தவர்களாய்நித்தியமான என்னிடத்தில்மமதைகொண்டிருந்தஅவர்களும் இஷ்டசித்தியில்லாதவர்களாய்த் தானேகாலத்தினால்கதாமாத்திரமாய்ச்சொல்லப்பட்டார்கள் ஓஅன்புள்ளகோமானே அழகியசீமானேஉலகத்தில்கீர்த்தியைப் பூர்த்திசெய்து மரித்துப்போகாநின்ற மகான்களாகிய அந்த இராஜாக்களுடை கதைகள் கியானவைராக்கியங்களைச் சொல்லவேணுமென்கிற இச்சையினாற்சொல்லப்பட்டது மாத்திரமேயன்றி பரமார்த்தமன்று மற்றெதுவென்றால் சகல அசுபங்களையும் நாசஞ்செய்யாநின்ற ஸ்ரீபகவானுடைய குணகீர்த்தனமானது செய்யப்பட்டு அப்பகவானுடைய குணங்களையே ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் சலனமில்லாத பக்தியைக்கோறிய புருஷன்நாள்தோறும் அடிக்கடிகேழ்க்கக்கடவனென்று சொல்லுஞ் சுகப்பிர்ம்மரிஷியைநோக்கி அகமகிழ ஜெகம்புகழ பரிக்ஷித்துமகாராஜன் வணக்கமாகவும் இணக்கமாகவும் சொல்லுகின்றார்.

### பரிட்சித்துமகாராஜன்வாக்கியம்.

கேளும்நாதனே, ஜெகப்பிரக்கியாதனே கலியுகத்தில் பிரஜைகள் எந்தவிதத்தினால் கலியினுடைய்அனேகமானதோஷங்களை நாசம்பண்ணுவர்கள். கிருதயுகமுதலானயுகங்களையும் தருமங்களையும் காலத்தின்பிரமாணங்களையும் சங்காரகாலத்தின் பிரமாணங்களையும் ஈஸ்வரரூபியான காலத்தினுடையகதியையும் மகாத்துமாவானஸ்ரீஹரியினுடைய லீலாவினோதங்களையும் எனக்குத் தெளிவாகும்படிச் சொல்லவேண்டுமென்றுகேட்கஅப்போதுசுகப்பிர்ம்மரிஷியானவர் அதிகசந்தோஷத்துடன்சொல்லுகின்றார்.

### சுகப்பிர்ம்மரிஷிவாக்கியம்.

கேளாய்நன்னயமுள்ளமன்னனேநற்கொடையளிக்குங்கன்னனேகிருதயுகத்தில்சனங்கள்-சத்தியபம்-தயை- தபசு-தானம் - ஆகிய இந்தநாலுபாதங்களாகிய தர்மங்களையே அதிகமும்அனுசரித்து சந்துஷ்டியையும், கிருபையையும் சீவகாருண்ணியமும் சமதமாதிகுணங்களையும் பொறுமையையும் அடைந்தவர்களாய் பரமாத்துமாவினிடத்திலேயே பக்தியையும், ஆத்துமானுபவத்தையும் உடையவர்களாயிருப்பார்கள், திரேதாயுகத்தில்ஜனங்கள் தர்மத்தினுடைய நான்குபாதங்களில் நான்கிலொருஅம்சமான அதர்மத்தினுடையபாதங்களான அசத்தியம்-ஹிம்சை-துக்கம்-கலகம்-இவைகளால்நசித்துப்போகும்அப்போது பிராமணன்-க்ஷத்திரியன்வைசியனான இந்த மூன்று வர்ன்னத்தார்களும் தர்ம்மார்த்தகாமங்களில் பிரீதியுண்டாய்வேதம் வேதார்த்தக்கியானமுடையவர்களாய்ஒருருவரையொருவர்ஹிம்சியாமலும்பிராமணனையே சிரேஷ்டமாக வுடையவர்களாயிருப்பர்கள்: துவாபரயுகத்தில் ஜனங்கள் அதர்மத்தினுடைய பாதங்களான ஹ

ரிம்சை - அசந்தோஷம் - அசத்தியம் - துவேஷம் - இவைகளால் கிரேதாயுகதர்மத்தினுடைய பாதங்களில்பாதிநசித்துப்போகும் அப்போது எசசையும் - சீலத்தையும் - வேதாத்தியயனதில் பிரீதியையுமடைந்து ஆட்டியர்களாயும் - குடும்பவிருத்தியை யுடையவர்களாயும் அகங்காரமில்லாதவர்களாயும் பிராமணர்களும் க்ஷத்திரியர்களும் பிரதான மானவர்களா யிருப்பர்கள், கலியுகத்திலோவெனில் அதர்மத்தினுடைய பாதங்களால்தர்மத்தின்பாதங்களில் மூன்றுபாகங்கள்நசித்து ஒருபாகமிருக்கும் கலியுகாந்தத்தில் யுகங்கள்தோறும் விர்த்தியடையாநின்ற அதர்மத்தினுடையபாதங்களால் அந்தநான்கிலொருதர்மபாகமும் நாசமடைந்து பிரஜைகள்உலுத்தர்களாயும் துராசாரமுடையவர்களாயும் நிர்த்தயர்களாயும், வியர்த்தமான கலத்தையும் பாக்கியஈனத்தையுமடைந்து விஷங்களிற் பிரீதியுடையவர்களாய் சூத்திரஸ்திரீகளிடத்தில் ஆசையையுடையவர்களாயும் சூத்திரர்களையும்செம்மிடவரையும் முக்கியமாகவுடையவர்களா யிருப்பர்கள்.

யுகங்கள்தோறுமிப்படிபேதித்துவரக்காரணமென்னவெனில், புருஷர்களிடத்தில் காணப்படுகிறசத்துவம்இரசசு தமசுயென்னுமுக்குணங்களும் காலரூபியான ஈஸ்வரனாலேவப்பட்டு அதுகள் விருத்தியடைந்திருக்கின்றதால் பேதமுண்டாகின்றது, பிராணிகளுக்குமனது புத்திஇந்திரியங்கள் எப்போது சத்துவகுணத்தில் சேருகின்றதோ எப்போதுகியானம்தபசு இதுகளிலாசை யுண்டாகாநிற்கின்றதோ அப்போது கிருதயுகமென்றும் எப்போது தர்மார்த்தகாமங்களிலும் எச்சிலும் பக்தியுண்டாயிருக்கிறதோ அப்போது ரசோகுணப் பிரதானமானதிரேதாயுகமென்றும், எப்போது சனங்களிடத்தில் லோபத்துவமும்-அசந்தோஷம்-டம்பம்-அகங்காரம்-துவேஷம்-காமியகர்மங்களில் பிரீதியுண்டாயிருக்கிறதோ அப்போது இரசசுதமோகுணங்களைப் பிரதானமாகவுடைய துவாபரயுகமென்றும், எப்போதுசனங்களிடத்தில்வஞ்சனையும்-அசத்தியமும்-ஆலசியமும்-நித்திரையும் ஹிம்சையும்-துக்கமும்-சோகமோகங்களும் பயமும்விருத்தியடைகின்றதோ அப்போது கலியுகமென்றும் அறியக்கடவாய். அந்தக்கலியுகத்தில் மனுஷியர்கள் மந்தபுத்தியும்-அற்பபாக்கியமும்அதிகபோசனமும்-தரித்திரமும் அடைந்துகாமிகளாயிருப்பார்கள் ஸ்திரீகளும்விபசாரிகளாயும் துஷ்டர்களாயுமிருப்பார்கள்மேலும்-தேசங்களில் திருடர்விசேஷித்தலும் - விவேகஈனர்கள் வேதங்களைத்தூஷிப்பதும்-அரசர்கள்பிரசைகளைப் பீடிப்பதுவாயும் பிராமணர்கள்சிசுனவுதரபரர்களாகவும்-பிரமசாரிகள்விருதஈனர்களாயும் - சவுசாசாரவச்சிதளாகவும்இருப்பார்கள். கிரகஸ்தர்கள் பிட்சைபண்ணிக்கொண்டும் வானப்பிரஸ்தர்கள் வனவாசத்தைவிட்டுக் கிராமங்களில்வாசம்பண்ணிக்கொண்டும் சந்நியாசிகள் தனத்தில்மிகவுமாசைகொண்டு மிருக்கப்போகின்றார்கள் ஸ்திரீகளும் குட்டையான சரீரத்தையும் மிகுந்தபோசனத்தையும் வெகுபுத்திரர்களைப் பெறுதலையும் உண்டாய் லச்சையில்லாமலும் கடினவார்த்தையும் திருட்டுவஞ்சனையுடையவர்களாயும் வர்த்தகர்கள் கிரையவிற்கிரையவிஷயங்களில் கபடத்தையுமுடையவர்களா யிருக்கப்போகின்றார்கள் சமஸ்தமானஜனங்கள் ஆபத்தில்லாதகாலத்திலும்நிந்திதமானவிருத்தியை உத்தமமாக எண்ணப்போகின்றார்கள்சர்வோத்தமனானாலும்நிர்த்தனனாயிருக்கிறஎஜமானனை சேவகர்கள்விட் விடுதலும் எஜமான்கள் பரம்பரையாய்ச் சேவித்துக்கொண் டிருந்தாலும் ரோகசம்பத்தினால் மெலிந்துப்போன சேவகர்களையும் விட்டுவிடப்போகின்றார்கள் பாலில்லாதபசுக்களையும் போஷிக்காமல்விட்டுவிடுவார்கள் மனுஷியர்கள் மாதாபிதாக்களையும் பிராதாக்களையும் உடன்பிறந்தபெண்களையும் பந்துக்களையும்விட்டு பாரியாள்மூலமான சிநேகத்தையுடையவர்களாய் மச்சினுமச்சினனிவர்களுடன் ஆலோசனைபண்ணுகின்றும், ஸ்ரீவசியர்களாயும்,தீனர்களாயுமிருக்கப்போகின்றார்கள் சூத்திரர்கள் தபவேடத்தை யுடையவர்களாய்தானமுதலானதுகளை வாங்கப்போறார்கள் தர்மத்தை அறியாதவர்களாய் உத்தமமான ஆசனத்திலிருந்துகொண்டு தர்மத்தைசொல்லப்போகிறார்கள்.

கேளும்அரசனே கலியுகத்தில் பிரஜைகள் நித்தியமாய்விசனத்திலழுந்தின மனதையுடையவர்களாயும் க்ஷாமம்-இராஜதெண்டனை-இவைகளால்அதிகமும் பீடிக்கத்தக்கவர்களாயும் மழையில்லாமல் மகாவியாகூலமடைந்துவஸ்திரம்-அன்னம் பானம்-சயனம்-ஸ்ரீசம்போகம் ஸ்நானம்-பூஷணம்-வாஹனம் - இவைகளொன்றுமில்லாதவர்களாய் பிரகாசம்போலலையப் போகின்றார்கள் இருபதுகலகறைநிமித்தம்மனுஷியாள் ஒருவருக்கொருவர்வைராக்கியம்பண்ணிக்கொண்டு அநேகநாளாய் உடலிரண்டுமுயிரொன்றுபோலிருந்த சிநேகத்தையும்விட்டுசதா அபிலாசைகொண்டிருக்கும் தங்கள் தங்கள் பிராணனையும்விட்டுவிடுவார்கள் அல்லாமல் தங்களுடைய பந்துக்களையுங் கொல்லத்துணிவார்கள் மனுஷியாள்மிகவுந்துற்சாளரயும்சிசுனவுதரபராயணுளாயும்இருந்துகொண்டுவிருத்தாளான தங்கள்மாதாபிதாக்களையும் புத்திராதிகளையும்நல்லகுலத்திற்பிறந்தவளாயும் மகாபதிவிருதைகளாயுமிருக்கிற தங்கள்பாரியையும் ரட்சிக்காமல் விட்டுவிடப்போகின்றார்கள்.

அரசனே, கலியுகத்தில் மனுஷியாள் பாஷாண்டாளாலே பேதிக்கப்பட்ட மனதை யுடையவர்களாய் சகல

லோகநாயகராயும் கர்த்தாவாயும்- பிர்ம்மாதிதேவர்களால்சேவிக்கப்பட்ட பாதாரவிந்தங்களையுடையவர்களாயுப்-பகவானுயுமிருக்கிற ஸ்ரீஅச்சுதரை ஆராதிக்க மாட்டார்கள். மரித்துப்போகிறவராயும்ரோகாதிகளாலதிகமும் பீடிக்கப்பட்டிருந்தாலும், பகவானுடைய நாமத்தையுச்சரியாநின்ற அப்போதே கர்மபந்தத்தில்நின்று விடுபட்டவனுய்ஸ்ரீவைகுண்டஞ் சேர்ப்பிக்கப்படுவன்அப்பேர்க்கொத்த நாமத்தையுடையபகவானைச் சிந்திக்கமாட்டார்கள். புருஷர்களுடைய சித்தத்தில்நின்றுகலியுகதோஷாதிகளையும் துஷ்டமான அன்னமுதலானதுகளாலும் சத்தியசௌசாதிவர்ச்சிதமான கீகடதேசாதிவாசத்தினுலும்பஞ்சேந்திரியங்களாயுமுண்டாகும்சமஸ்ததோஷங்களையும் பகவானை புருஷோத்தமரானவர்(உருக்கப்பட்ட சொர்ன்னத்திலிராநின்ற அக்கினியானது அதில்தாம்பிர திருபமான மலத்தைஎப்படிபோக்கடிக்கின்றதோ அதுபோல தியானம் பண்ணுமவர்களுடைய இருதயத்திலிருந்துகொண்டு அநேகஜென்மங்களில்செய்த சகலபாபங்களையும்நாசஞ்செய்கின்ருர். பகவானைஅநந்தரானவர்இருதயத்திலிருக்கையில் அந்தக்கரணமானது எப்படிபரிசுத்தமடைகின்றதோஅப்படிக்குமந்திரோபாசனைகள் தபசுபிராணுயாமம்- பூசுதயை-தீர்த்தயாத்திரைவிரதங்கள்தானம்ஜெபங்களாகியஇதுகளால் பரிசுத்தமடையமாட்டாது.

அரசனே நீமரித்துப்போகிறவனுயிருந்தாலும்சித்தசமாதானத்தை யுடையவனுய் ஸ்ரீகேசவனைஇருதயத்திலேயே யிருக்கிறவராகத் தியானம்பண்ணக்கடவாய்வாராய்பரிட்சித்து மகாராசனேசர்வாத்துமாவாயும் சர்வகாரணராயும் - பகவானுயுமிருக்கிற புருஷோத்தமரானவர் புருஷர்களாலே மரணசமயத்தில் தியானம்பண்ணப்பட்டவராய் தம்முடையசாரூப்பியத்தையே கொடுப்பர்-கிருஷ்ணகிருஷ்ணவென்று ஸ்ரீகிருஷ்ண நாமசங்கீர்த்தனத்திற்ருனே புருஷனுனவன் சமஸ்தகர்ம்மபந்தத்தினின்றும்விடுப்பட்டவனுய் பரமபதத்தை யடைகின்றனன் கிரேதாயுகத்தில் ஸ்ரீஹரியைத் தியானம் பண்ணுகிறவனுக்கும்-திரேதாயுகத்தில் ஸ்ரீஹரியைக்குறித்து எக்கியாதிகளால் ஆராதிப்பவனுக்கும் துவாபரயுகத்தில் சுவதர்மங்களாலே ஸ்ரீஹரியையாராதிக்கிறவனுக்கும் யாதொரு பலமுண்டோ அதெல்லாம்கலியுகத்தில் ஸ்ரீஹரியினுடைய நாமசங்கீர்த்தனத்திற்ருனே சித்திக்கின்றது.

---

## ச-வது, அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

மதியுடன்ஸ்திதி மன்னுங்காலத்தையும்
பதிலயகாலந் தனையும்பகருவாம்.

ஸ்திதிகாலத்தையும், லயகாலத்தையுஞ் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

ஓய் பரிட்சித்துமகாராசனே பரமாணுமுதல்திவீபரார்த்த பரியந்தமான காலமும் யுகங்களுடையபிரமாணமும்உனக்குப் பூர்வமேசொல்லப்பட்டதன்றே- இனிலயத்தினுடைய பிரகாரத்தைச் சொல்லுகிறேன் கேழ்க்கக்கடவாய், ஆயிரஞ்சதுர்யுகமானது பிரம்மாவுக்கு ஒருபகலென்றும் கல்பமென்றுஞ்சொல்லப்படும்-அந்தப்பகலிற்பதினுன்குமனுக்களுடைய காலம்கிரமித்துப்போகும். நைமித்திகம்பிராகிருதம்-ஆத்தியந்தீகம் - நித்தியம்-என்றுநான்குவிதபிரளயமாயிருக்கும்.

அதில்நைமித்திகப் பிரளயமாவது எப்படியென்ருல், அந்தப்பகலினுடைய அந்தியத்திலே ஆயிரஞ்சதுர்யுககாலமான பிரளயமானதுண்டாகும் அதுபிர்மாவுக்கு ஒருஇராத்திரியென்று சொல்லப்படும், பூலோகம் புவர்லோகம் சுவர்லோகமென்ற மூன்றுலோகங்களும் பிரம்மாவினுடைய ராத்திரியில் லயத்தை யடைந்துபோகிறதுகள், யாதொரு அந்தராத்திரியிலே ஸ்ரீமந்நாராயணரானவர் பிரபஞ்சத்தைத் தம்முடைய குட்சியில்வைத்துக்கொண்டு சேஷதல்பசாயியாய்சயனித்துக் கொள்ளுகின்ருர்-அவருடைய நாபிக்கமலத்தில்பிரம்மாவுஞ் சயனித்துக்கொள்ளுகிருன் - இதற்கு நைமித்திகப் பிரளயமென்றுசொல்லப்படும்.

பிராகிருதப்பிரளயமாவது எப்படியென்ருல் சத்தியலோகவாசியான பிர்ம்மாவினுடைய திவீபரார்த்தகாலமானஆயுளானது சம்பூரணமாகுகையில் பிரிதிவு அப்பு-தேயு-வாயு-ஆகாயம்-அகங்காரம்- மகத்துவமான இந்தஏழும்லயத்தையடையும் அரசனே காலத்தினுல் நாசத்திற்கேதுவுண்டாகுகையில் மகதத்துவமுதலான இந்தஏழுக்குங்காரியமான பிர்மாண்டமான யாதொரு பிரளயத்தில் பிரகிருதியிலே லயத்தையடைகிறதோ அதற்குப்பிராகிருதபிரளயமென்று சொல்லப்படும் அதுஉண்டாகிற கிரமமெப்படியென்ருல் பூமியில் மேகமானதுநூறுவருஷம் மழைவருஷியாமற்போம் அப்போது பிரசைகளுக்கு அன்னங்கிடையாமல் பசிதாகங்களால் பீடிக்கப்பட்டு ஒருத்தரையொருத்தர் பட்சியாநின்றும் க்ஷயத்தை யடைந்துபோகப் போகின்ருர்கள் அப்போதுண்டாகாநின்ற சூரியனுனவன் மிகவுங்கோரமான தனதுகிரணங்களால் சமுத்திரதீரத்தையும் தேகத்தினதுரசத்தையும் பூமியின்சாரத்தையும் மற்றுமுள்ள சமஸ்தரசத்தையும் பானம்பண்ணிப்போடுவன் திரும்பவிடுகிறதில்லை பின்பு சங்கருஷணருடைய முகத்தி லிருந்துண்டாகும் மகாவாயுவேகத்தையுமுடைய பிரளயகா

லாக்கினியானது சாரமற்றிருக்கிற பாதாளமுதலானசமஸ்தலோகங்களையும் சாம்பலாய்ப்பிரகாசிக்கும்படித் தகித்துவிடும், அதன்பின் மகாவேகத்தையுடைய வாயுவானது நூறுசம்வச்சரம் வீசிக்கொண்டிருக்கும் அப்போது ஆகாசமானது புழுதியினுலேசூழப்பட்டு தூம்பரமாய்விடும் அப்போது நானுவர்ணங்களையுடையதான மேகக்கூட்டங்கள் மகாபயங்கரமாகச் சப்தித்துக்கொண்டுநூறுசம்வச்சரம் வருஷங்களை அதிவேகமாய்ப்பொழிந்துகொண்டிருக்கும் பிர்ம்மாண்டத்துக்குள்ளே இராநின்ற சமஸ்தபிரபஞ்சமும் ஏகார்ணவசலத்தினுல் வியாபிக்கப்பட்டதாய்விடும்-சலத்தினுல் வியாபிக்கப்படுகையில் பூமியினுடைய கெந்தகுணத்தை ஆகரிஷித்துக்கொள்ளும்-கெந்தலயத்தையுடையதான பூமி லயத்தையடைந்துவிடும்- பின்புசலத்தினுடைய ரதத்தைத்தேசசானது கிரகித்துவிடும்-ரசமில்லாததானசலமும் லயத்தையடைந்துவிடும்-பிற்பாடுவாயுவானது தேஜசினுடைய ரூபத்தைக்கிரகித்துவிடும்- ரூபத்தையுடையதானதேஜசானதுவாயுவிலே லயத்தையடைந்துவிடும்-வாயுவினுடைய ஸ்பரிசகுணத்தை ஆகாசமானதுகிரகிக்கும் அந்தவாயுவானது ஆகாசத்திலேலயத்தையடைந்துவிடும்-ஆகாசத்தினுடையகுணமானசப்தத்தை தாமசஅகங்காரமானது கிரகிக்கும்-அந்தஆகாசமும் தாமசஅகங்காரத்திலே லயத்தையடையும், அரசனேராஜசஅகங்காரமானது இந்திரியங்களைக்கிரகித்துப்போடும்-சாத்வீகஅகங்காரமானதுஇந்திரியாதிஷ்டானதேவதைகளைக் கியானங்களோடேகூட கிரசித்துப்போடும்-இந்தமூன்றுவிதமான அகங்காரத்தையும் மகத்துவமானது கிரகித்துப்போடும்- அந்தமகதத்துவத்தைச் சத்துவரசதமோகுணங்கள் கிரகித்துப்போடும்-அந்தக்குணங்களை அப்பிராக்கிருதமான பிரகிருதியானது காலரூபியான பரமாத்துமனுலேவப்பட்டதாய் கிரகித்துவிடும்-அந்தப்பிரதானத்திற்கு காலத்தினுடையஅவயதங்களான அகோராத்திரிமுதலானதுகளாலேபரிமாணமுதலான குணங்களில்லாமல் கிரகித்துப்போடும் - அந்தப்பிரதானமானது ஆத்தியந்தசூன்னியமாயும்-விகாரசூன்னியமாயும்-சதாயேகரூபமாயும்-விர்த்திக்ஷயமில்லாததாயும்-காரணமாயுமிருக்கும், அந்தப்பிரதானத்திலேவாக்கும்மனதும்பிரவர்த்திக்கமாட்டாது-அதிலே சத்துவரசதமோகுணங்களுமில்லை-மகதத்துவமுதலானதுகளுமில்லை பிராணன்-புத்தி-இந்திரியங்கள்அதற்குஅபிமானிதேவாளிதுகளொன்றுமில்லை-உலோகசொரூபமானகிரமாணமுமில்லை-சாக்ரம்-சொற்பனம்-சுழுப்தியானஇந்தஅவஸ்தைகளுமில்லை பிரிதிவு-அப்பு-தேயு-வாயு ஆகாசம்-சூரியன்முதலானதுகளுமில்லை, சுழுப்தம்போலவும்சூனியம்போலவும்இன்னபடியென்றுசொல்லக்கூடாதாயிருக்குமென்று அந்தப்பிரபஞ்சகாரணமான பிரதானத்தினுடைய சுவரூபத்தை வேதங்கள்சொல்லுகின்றதுகள், எப்போதுபுருஷன் பிரகிருதியிவர்களுடையசத்துவாதிகுணங்களானதுகள் காலரூபியானபகவானுலேஏவப்பட்டதுகளாயுமிகவும் லயத்தையடைகின்றதுகளோ அந்தலயத்துக்குப்பிராகிருதலயமென்றுசொல்லப்படும்.

ஆத்தியந்தகாலமானது எப்படியென்றுல் - கியானமானதுபுத்தி இந்திரியங்கள்-விஷயங்கள் இதுகளைரூபமாகவும்-இதுகளுக்குஆசிரயமாகவும்-விளங்காநிற்கிறது.காணப்படுகிறபடியினுலேயும் - காரணத்தைக் காட்டிலும் வேறுகஇராதபடியினுலேயும ஜன்மநாசங்களோடே கூடியிருக்கிறபடியினுலேயும் - இந்தப்பிரபஞ்சமானதுவஸ்துவன்று (எப்படியானுல்) தீபம் நேத்திரேந்திய ரூபமானுலும் தேஜோரூபமானபடியினுலே தேஜசைக்காட்டிலும்வேறுகஎப்படியில்லையோ (அப்படிபோல) சீவன் இந்திரியங்கள் விஷயங்களாகிய இவைகள்பரமாத்துமாவினுடைய காரியமானபடியினுலே பரமாத்துமாவைக் காட்டிலும்வேறன்று- காரியத்தைக்காட்டிலும் - காரணமானது வேறுயிருக்கிறபடியினுலே காரணத்தைவிட்டு காரியமானதுவேறில்லை-ஆனபடியினுல் பரமாத்துமாவினுடையகாரியமானபிரபஞ்சமும், பரமாத்துமாவைக்காட்டிலும் வேறுகவில்லை சாக்ரம்- சொற்பனம்சுழுப்தி-என்னும்-மூன்றுஅவஸ்தைகளும் புத்தியினுடைய அவஸ்தைகளென்றுசொல்லப்படும்,இந்தஅவஸ்தைகளாலேவிசுவன்தைசசன் - பிராக்கியனென்னப்பட்ட இந்தப்பேதமானது புருஷனிடத்திலே மாயால்பிதமன்றியில்பரமார்த்தமன்று - என்னுல்எப்படிமேகங்களை ஆகாசத்திலுண்டாகாநின்றும் திரும்பவும் நசியாநின்றுமிருக்கிறதுகளோ (அப்படிபோல) இந்தப்பிரபஞ்சமானது பிர்மத்திலே உண்டாகாநின்றும் லயத்தையடையாநின்றுமிருக்கிறது. ஓஅரசனே சமஸ்தமான காரியபதார்த்தங்களுக்கும்காரணமேசத்தியமென்று சொல்லப்படாநிற்கின்றது-யாதொருபிரபஞ்சமானது காரியகாரணசுவரூபமாகவும் ஒன்றையொன்று ஆசிரயித்திருக்கிறதாகவும் காணப்படுவதினுல் இதுபிரமமேயாகாநிற்கிறது சனம்நாசங்களையுடையதான சமஸ்தமும் பரமார்த்தவஸ்துவன்று பிரகாசியாநின்ற இந்தப்பிரபஞ்சமானது பரமாத்துமப் பிரகாசத்தையன்றியிலே கிஞ்சிற்றுகிலு முண்டென்றுசொல்லகியாயமில்லை உண்டென்று சொல்லப்பட்டாலும் அதுவும்பரமாத்துமாவேயாகாநிற்கின்றது.

மகத்தான ஆகாசத்துக்கும் கடவாகாசத்துக்கும் ஆகாசத்திலேயிருக்கிற சூரியனுக்கும் ஜலத்திலேயிருக்கிற சூரியனுக்கும் வெளியிலுள்ள வாயுவிற்கும் - சரீரத்தி

னுள்ளவாயுவிறகும் பேதமெப்படியோ (அப்படிப்போல) பரமாத்துமாவினுடையபேதவிகாரமென்று அறியத்தக்கது, அப்படியல்லவென்று எண்ணுகிறவன் அவிவேகியாகிறகின்ருன் சுவர்னம் ஆபரணுதிகளால் நாமங்களிவிவகரிக்கப்படுகின்றதுபோல பகவானுனவர் அகங்காரத்தையுடைய ஜனங்களாலே லவுகீக சப்தங்களாலேயும்வைதிகசப்தங்களாலேயும் அனந்தரூபியாகச் சொல்லப்படுகின்ருர். சூரியனுலே உண்டாகியும் பிரகாசிக்கவுமானமேகமானது சூரியனுடைய அங்கிசமானநேத்திரத்துக்கும் சூரியதரிசனத்துக்கு மறைவாக எப்படிநிற்கிறதோ (அப்படிபோல) பரமாத்துமாவினுலேயே உண்டாகியும் பிரகாசிக்கவுமான அகங்காரமானது பரமாத்துமனுடைய அங்கிசமானசிவனுக்கு பரமாத்துமசொரூபதரிசனத்துக்கு பிரதிபந்தமாகாநிற்கின்றது அப்படிதரிசனத்துக்கு மறைவாயிருக்கும் மேகமானது வாயுவினுலேஎப்போது தள்ளப்படுகிறதோ அப்போது நேத்திரத்துக்குசூரியனுடைய சுவரூபம் தரிசனத்துக்குக் காணப்படுகின்றதுபோல பிரதிபந்தமாகவிருக்கிற அகங்காரமானது பரமாத்துமனுடைய விசாரணையினுல் எப்போது நசித்துப்போகிறதோ அப்போது புருஷனுக்குப்பரமாத்தும தரிசனமானது கிடைக்கின்றது.

அரசனே எப்போது இப்படிப்பட்டகியானமாகிற பத்தியினுலே மாயாமயமான அகங்காரமாகிற ஆத்துமபந்தனத்தைச்சேதித்துப்போட்டு பரிபூரணரான அச்சுதருடைய சுவரூபானுபவத்தையுடையவனுகவிருக்கிருனேஅப்போது அந்தப்பரமாத்துமானுபவமானது ஆத்தியந்தப்பிரளயமென்று சொல்லப்படும் நித்தியப்பிரளயமாவது எப்படியென்ருல் சூட்சுமதரிசிகளான சிலகியானிகள் பிர்மாமுதலான சமஸ்தபிராணிகளுக்கும் நித்தியமாகச் சென்மநாசங்களைச் சொல்லுகின்ருர்கள், காலமாகிறபிரவாகத்தின் வேகத்தினுல் அபகரிக்கப்படாநின்ற தேகமுதலானதற்கு விர்த்தி க்ஷயம் அவஸ்தைகள் எப்படி யுண்டாகிறதுகளோ அப்படிபோலவே நித்தியமாகச்சென்மநாசங்களுக்கு ஏதுக்களு முண்டாயிருக்கின்றது ஆத்தியந்தசூனியமாயும் ஈஸ்வரரூபமாயு மிருக்கிறகாலத்திலுண்டாகாநின்ற அந்தஅவஸ்தைகள் காணப்படுகிறதில்லை ஆகாசத்தில் சந்திரன்முதலான கிரகங்களுடையகதியானது காணப்படாமல் அனுமானத்தினுல்எப்படிகல்பிக்கப்படுகிறதோ(அப்படிபோல) தேகத்திலேயும் பால்லியம்-யௌவனம்-முதலானது காணப்படுகிறபடியினுல் மத்தியில்ஜென்மாதி அவஸ்தைகள்கல்பிக்கப்படுகின்றது இதுவேநித்தியபிரளயமென்று சொல்லப்படும்.

கேளீர் பரிட்சித்து மகாராசனே இந்தப்பிரகாரம் நித்தியம்-நைமித்தியம்-பிராகிருதம் - ஆத்தியந்தம் என்கிறநான்குவிதப்பிர்ளயமும் நன்ருகச்சொல்லப்பட்டது, காலத்தினுடைய கதியானதும் இப்படிப்பட்டது, ஜெகத்கர்த்தாவாயும் சகலலோகசரணியராயு மிருக்கிற ஸ்ரீமந்நாராயணருடைய இந்த லீலாவிபூதியானகதைகள் சங்கிரகமாக நம்மாலேசொல்லப்பட்டதுகள். அவருடைய சமஸ்தலீலா விபூதிகளேயும் சொல்லுகைக்கு பிரமனும் சமர்த்தனன்று, நானுவிதமான துக்கமுள்ளசமுசாரசாகரத்தைக்கடக்க இச்சைகொள்ளாநின்ற புருஷனுக்கு பகவானுன புருஷோத்தமருடைய லீலாகதையாகிற அமிர்தரசசேவையாகிய தெப்பமன்றிவேறில்லை.

ஆகையால் ஸ்ரீபகவானுடைய கதாசிரவணமே பண்ணத்தக்கது. நித்தியரான ஸ்ரீபகவான் இந்தப் புராணசங்கீதையைபூர்வத்தில் நாரதமகாமுனிக்குச் சொன்னுர். அவர்வியாசபகவானுக்குச் சொன்னுர், அந்தவியாசரானவர் அதிகபிரீதிகொண்டவராய் வேதத்துக்குச் சமானமானஇந்தப்பாகவதசங்கீதையை எனக்குச்சொன்னுர்.

வாராய் ராசனே, இந்தச்சூதபுராணிகர் நைமிசாரணிய க்ஷேத்திரத்திலே தீர்க்கசத்திரத்தில் சவுனகாதிரிஷியீஸ்வரர்களாலே கேழ்க்கப்பட்டவராய் அந்தரிஷிகளின்பொருட்டு இந்தப்புராண சங்கீதையைச் சொல்லப்போகின்ருர்.



## ௬-வது, அத்தியாயம்.

கலிவிருத்தம்.

அரியநற்பரி க்ஷித்தாமாசர்க்குப்
பிரியமாய்பரப் பிர்மோபதேசத்தால்
நிரணமித்துநிவாரணமானதைப்
பரிவதாகப்பண் ணப்படுகின்றதே.

பரிட்சித்துமகாராஜாவுக்குபரப் பிர்ம்மவுபதேசத்தால் மிருத்தியுபயநிவாரணமானது செய்யப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

கேளாய் பரிட்சித்தே எண்ணியகருமம் நண்ணிச் செய்யும் கண்ணியமுள்ள புண்ணியசீலனே, சகலலோககர்த்தாவான பிர்ம்மாவானவன் யாதொருபகவானுடையசந்தோஷத்திலே யுண்டானுர் சர்வசங்காரகனுன உருத்திரரானவர் யாதொருபகவானுடைய கோபத்தினுலுண்டானுர் விஸ்வரூபியாயும் சர்வநியந்தாவாயும் பகவானுமான ஸ்ரீஹரியானவர் இந்தப்புராணத்தில் அடிக்கடி வர்னிக்கப்படுகிருர், ஆகையினுலே அப்படிப்பட்டவருடைய குணுனுபவங்களைச் சிரவணம் பண்ணிக்கொண்டிராநின்ற உனக்குமற்ருெருவரிடத்தில்லின் ருண்டாகும்பயமேது, நீயோ தன்னியனுகாநிற்கிருய் அரசனே

மரித்துப்போகப் போகின்றேனேயென்கிற அவிவேகத்தை நீவிட்டுவிடக்கடவாய் யாதொருகாரணத்தினால் முன்னேயில்லாமல் இப்போதுண்டான தேகமானதுபோல நீமுன்னேயில்லாமல் இப்போ துண்டானவனன்று நீ நசித்துப்போகப் போகிறதுமில்லை புத்திரபவுத்திராதி ரூபத்தையுடையவனான நீபூர்வமிருந்து வித்தில்நின்றும் முளையுண்டாகின்றதுபோல உண்டாகப்போகின்றவனுமன்று அக்கினியானது காஷ்டத்தையன்றி எப்படிவேறாகவிருக்கின்றதோ அப்படிபோல தேகாதிகளையன்றிநீவேறாகநிற்கிறாய், தேகாதிகளுக்கே சனனமரணமில்லாமல் ஆத்துமாவுக்கு சனனமரணமில்லை சொற்பனத்தில் தன்னுடையசிரச்சேதத்தைத் தானாயே பார்க்கிறான், சாகாணுவஸ்தையிலும் தேகத்துக்கு மரணமுதலானதையும்பார்க்கிறான், ஆகையால் சொற்பனத்தில்சிரச்சேதாதிபோலவே ஆத்துமாவுக்கு சனனமரணமானது பிரமமாத்திரமேயாகாநிற்கின்றது, பரமார்த்தமாக ஆத்துமாவானவன் சனனமரண சூனியனாகாநிற்கிறான். எப்படியானால் கடம் உண்டாகிறத்துக்கு முன்னேமகத்தான ஆகாசரூபமாயிருந்த ஆகாசமானது கடம் உண்டானபின்பு அந்தக்கடத்துள்ளேயுமிராநின்றுதிரும்பவும் அந்தக்கடமானது நஷ்டமாய்ப்போனபிற்பாடு அந்தஆகாசமானது மகத்தான ஆகாசமாகவேயாய்விடுகின்றது (அப்படிபோல) தேகம்உண்டாவதற்குமுன்னே பிர்மமஸ்வரூபியான சீவனும் உண்டாகாநின்ற தேகத்திலிருந்து திரும்பவும் அந்தத்தேகமானது தத்துவக்கியானத்தினால் லயத்தையடையுகையில் அந்தசீவன்பிர்ம்மஸ்வரூபத்தையே யடைகின்றான்.

ஆத்துமாவுக்கு தேகாதிசம்பந்தம் எப்படியென்றால் மனதானது ஆத்துமாவுக்குத் தேகங்களையும் சத்துவாதிகுணங்களையும் காமங்களையும் சிருஷ்டியாநிற்கிறது. அந்தமனதை மாயையானது சிருஷ்டியாநிற்கிறது அதினால்சீவனுக்குச் சம்சாரமானது உண்டாகாநிற்கிறது எப்படியானால் எண்ணெய் அகல் திரி அக்கினி இதுகள் சம்மந்தம் எந்தமட்டுமிருக்கிறதோ அந்தமட்டும் தீபம் என்கிற விவகாரமான துண்டாயிருக்கின்றது, அதுபோலகர்ம்மம் மனது தேகம் ஆத்துமா இதுகள் சம்மந்தம் எந்தமட்டு மிருக்கின்றதோ அந்தமட்டுமே சம்சாரமானதுண்டாயிருக்கும் எண்ணெய் முதலானது நசிக்குமளவில் தீபமானது நாசமடையுமாப்போல் மனதுக்குச் சம்சாரமானது கர்மத்தினாலே நாசத்தையடையாநின்றுமிருக்கின்றது தேகத்தில் அறியப்படாநின்ற ஆத்துமாவோவென்றால் நாசத்தையடைவதில்லை, யாதொரு ஆத்துமாவானவன் ஸ்தூலசூட்சுமதேகங்களுக்குப் பரனாயும்சுவம் பிரகாசனாயும், ஆகாசம்போல் தேகாதிகளுக்கும்ஆதாரனாயும், நிர்விகாரனாயும், நாசமில்லாதவனாயும் உபமானமில்லாதவனாயு மிருக்கின்றான் அரசனே இந்தப்பிரகாரம் தேகத்துள்ளிராநின்ற ஆத்துமாவை நீதானேபகவானுடைய தியானத்தோடே நிச்சயரூபமாயிருக்கிறபுத்தியால் விசாரிக்கக்கடவாய் இப்படி நீயறிந்துகொண்டாயேயானால் பிராமணனால் ஏவப்படாநின்ற தட்சகன்உன்னைப் பஸ்பமாகப் பண்ணிப்போடமாட்டான், மிருத்தியுவுக்களுக்கும் மிருத்தியுவான ஈஸ்வரஸ்வரூபியானஉன்னை மிருத்தியுக்களும் பஸ்பமாகப் பண்ணமாட்டார்கள், நான்யாதொரு தேகாதிகளைக்காட்டிலும் பரமாயும் சுவயம்பிரகாசமாயுமிருக்கிற பிர்ம்மமேயாகாநிற்கிறேன் பரமானந்தசுவரூபமான யாதொருபரப்பிர்ம்மமுண்டோ அந்தப்பரப்பிர்ம்மமும் நானேயாகாநிற்கிறேனென்று இந்தப்பிரகாரம் நிர்விகாரமான பரப்பிர்ம்மமாக ஆத்துமாவைப்பாராநின்று விஷம்பொருந்தியமுகத்துடன் பாதத்திற்கடியாநின்ற தக்ஷகனென்கிற சர்ப்பத்தையும் சரீரத்தையும் பிரபஞ்சத்தையும் பரமாத்துமாவையிட வேறாகப்பார்க்கப்படுவதில்லை.

கேளாய்ராசனே நீவிஸ்வரூபியாயும் சர்வம் நியந்தாவாயுமிருக்கிற ஸ்ரீஹரியினுடைய லீலைகளைக்குறித்துயாதொருபிரசினஞ்செய்தையோ உன்னுடைய பிரசனம்சமஸ்தமும் என்னாற்சொல்லப்பட்டது, நீஇன்னமும் எந்தஅர்த்தத்தைக் கேழ்க்கவேணுமென்று இச்சிக்கின்றையோ அதைக்கேழ்க்கக்கடவாய்.

---

## ௬-வது, அத்தியாயம்.

---

மட்டுவிருத்தம்.

கனமுடன்பரிட்சித்து கடாட்சமும்
ஜனமேயன் சர்ப்பயாகமுஞ்சாற்றுவாம்.

பரிட்சித்துவினுடைய மோட்சமும் ஜெனமேஜெயன் சர்ப்பயாக முதலானதும் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

சௌனகாதி ரிஷிகளே, பரிட்சித்து மகாராசாவானவன், சுகப்பிர்ம்மரிஷியினால் சொல்லப்பட்ட இந்தப்பாகவத புராணத்தைக்கேட்டு சர்வாந்தரி யாமியாயும். சர்வநியந்தாவாயு மிருக்கிற ஸ்ரீஹரியைத் தனது ஆத்துமாவில் பரிபூரணம் பண்ணிக்கொண்டு சுகப்பிர்ம்மரிஷியினுடைய பாதாரவிந்தங்களைத் தனதுசிரசின்மேல் வைத்துக்கொண்டு சாஷ்டாங்கமாகப் பிரணமம் பண்ணிச் சொல்லுகிறான், சுகப்பிர்ம்மரிஷியே, உம்மால் ஜனனமரண சூனியரான ஸ்ரீஹரியினுடைய குணானுபவங்களைக் கேட்டேன் ஆகையினால் நான் தன்னியனானேன், கிருதார்த்தனானேன். உத்தமசுலோகரான பகவானானவர், அடிக்கடி வர்ணிக்கப்படுகிற இந்தப்புரா

ணசங்கீதையை உம்மிடத்தில் ஐயமறநன்ருகக்கேட்டுணர்ந்தேன்நிற்பயமாயும்அனந்தரூபமாயுமிருக்கிற பரப்பிர்ம்மத்தையேயடைந்தேன் ஆகையினுல் தக்ஷகன்முதலானமிருத்தியுகளுக்கு நான்பயப்படமாட்டேன் அடியேனுக்குக் கிருபையுடன் அனுக்கிரைச்செய்யக்கடவீர் வாக்குமுதலான இந்திரியங்களை நியமம்பண்ணிக்கொண்டு சகலகர்மங்கள்கர்மவாசனைகள் இதுகளைவிட்டிராகின்றமனதை ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் வைத்துவிட்டு பிராணனைவிட்டுவிடுகிறேன் சாஸ்திரக்கியானம் பரமாத்துமானுபவம் இதுகளுடையசிஷ்டையினுல் எனது அக்கியானமானது தள்ளப்பட்டுப்போயிற்று சர்வசுகஆசிரயமான பகவானுடையபரமபதம் உம்மால்காண்பிக்கப்பட்டதுஎன் றிப்படிசொல்ல சுகப்பிர்ம்மரிஷியானவர்அந்தராஜாவுக்கு அனுக்கிரைப்பண்ணிவிட்டு ரிஷிகளுடன்கூடயிதேச்சையாகப்புறப்பட்டுப்போனுர்கள்.

கேளும்சௌனகாதிரிஷிகளே பின்பு அந்தப்பரிட்சித்துமகாராஜனும் பரமாத்துமாவினிடத்திலே மனதைபுத்தியினுல் ஸ்திரமாகவைத்து விருக்ஷத்தைப்போலச் சலியாமல் பிராணநிரோதத்தையுடையவனுய் பரமாத்துமாவைத்தியானம்பண்ணி அந்தக்கங்காதீரத்திலே நுனிகள் கிழக்குமுகமாயிருக்கிற தெர்ப்பைகள்மேலே வடக்குமுகமாயிருந்து மகாயோகப்பியாசத்தையுடையவனுயும் விஷயங்களில் ஆசக்தியில்லாதவனுயுமிருந்துகொண்டுபிரம்மஸ்வரூபத்தையடைந்தவனுயிருந்தான் அந்தச்சமயத்தில் பிராமணபுத்திரன் அதிகோபங்கொண்டு ஏவியதக்ஷகனுனவன் ராஜாவைக்கடித்துக் கொல்லவேண்டி வந்துகொண்டிருக்கும்போது விஷசிகிச்சையிற் றேர்ந்தகாசியபரென்கிற பிராமணர் பரிட்சித்துமகாராஜாவை இரட்சித்து அதிகதனங்களைப் பரிசுபெறவெண்ணி வருவதை மார்க்கத்திலறிந்து தான்வடவிருட்சத்தைக்கடித்து பஸ்பமாகச்செய்ததைத் திரும்பவும் பூர்வம்போலெழுப்பினதினுல் இப்பிராமணன் அரசனை இரட்சிப்பதில்சந்தேகமில்லையென்று தக்ஷகனுணர்ந்து அந்தப்பிராமணனுக்குவேண்டிய படிதனங்களால் சந்தோஷிப்பித்துதிரும்பஅவரை வந்தவழியைப்பார்க்க அனுப்பிவிட்டு முன்போல் தக்ஷகன்பிராமணரூபங்கொண்டு அரசனைக்கடித்தனன் பிரம்மஸ்வரூபத்தையடைந்திருக்கின்ற அந்தராஜரிஷியினுடைய தேகமானது அந்தத்தக்ஷகனுடையவிஷாக்கினியினுலே அனேகசனங்கள் பார்த்துக்கொண்டிருக்கிற அந்தக்ஷணத்திலே பஸ்பமாய்விட்டதுஅப்போதுபூமியிலேயும் ஆகாசத்திலும் சமஸ்ததிக்குகளிலும் ஆஆவென்னப்பட்ட சப்தமுண்டானது தேவர்கள் அசுரர்கள் மனுஷியர்கள்முதலானசமஸ்தரும் அதிக ஆச்சரியத்தையடைந்தார்கள் தேவதுந்துபி வாத்தியமுதலானதுகளும் சப்தித்ததுகாந்தர்வர்கள் கானம்பண்ணினுர்கள்அப்சரஸ்திரீகள் நர்த்தனம்பண்ணினுர்கள் தேவர்கள் புஷ்பமாரிசொரிந்தார்கள்.

ஜெனமேஜயமகாராஜன் தன்னுடையபிதா பரிக்ஷித்துதக்ஷகனுல் பஸ்மிக்கப்பட்டதைக்கேட்டு அதிககோபத்தையுடையவனுய் சர்ப்பயாசத்தில் மகாவிஷங்களையுடையசர்ப்பங்களை எதாவிதி யாகஓமம்பண்ணினுர்கள்அந்தயாகத்தில்சொலிக்கும் அக்கினியில் பஸ்பமாகும் அனேகசர்ப்பங்களை தக்ஷகன்பார்த்து பயங்கொண்டுமிகநடுங்கி இந்திரனைச்சரணமாகவடைந்தான் அப்போதுஜெனமேஜயமகாராஜனுனவன் அதமனுன தக்ஷகன்யாதுகாரணத்தினுல் அந்தஎக்கியத்தில் தகிக்கப்படவில்லையென்றுபிராமணர்களைப்பார்த்துச் சொல்ல சர்ப்பமாகியதக்ஷகன் தேவேந்திரனைச் சரணமடைந்து அவனுலே இரட்சிக்கும்படியாய் நிறுத்தப்பட்டிருக்கிறுன் ஆகையால்அக்கினிக் கிரையாகவந்து விழவில்லையென்று அவர்கள் சொல்ல அதைக்கேட்ட கெம்பீரமான புத்தியையுடையமகாராஜன் பிராமணர்களைப்பார்த்து இந்திரனுடன் அந்தத்தட்சகனும் எக்கியத்தில் ஏனின்னமுந்தள்ளப்படவில்லையென்று சொல்ல அதைக்கேட்டபிராமணுள்அந்தப்படி அவர்களிருவரும் அக்கினியில்விழும்படி ஆவாகனம்பண்ணிவாராய் தட்சகனே தேவபதியானஇந்திரனுடனேகூட இந்தஅக்கினியில்வந்து விழக்கடவாயென்றுசொல்ல இந்தக்கொடூரமான வாக்கியத்தைக்கேட்டுப்பயந்து தட்சகனுடன்தானும் தன்னுடையவிமானத்துடனே ஸ்தானத்தைவிட்டு ஆகாசத்தில்நின்றுஎக்கியத்திற்கு நேராகவிழும்படியாயிருக்கின்றதைப் பிரகஸ்பதியானவரறிந்து அந்தஜெனமேஜயமகாராஜனைப் பார்த்துச்சொல்லுகின்றுர்.

பிரகஸ்பதிபகவான்வாக்கியம்.

ஓய்ராஜசிரேஷ்டனே இந்தச்சர்ப்பங்களில் சிரேஷ்டமான தட்சகனுனவனை நீகொல்லுதற்குக்கூடாதுஅவனே அமிர்தபானம்பண்ணவன் வார்த்திகமும் மரணமுமில்லாதவனுயு மிருக்கிறுன் பிராணிகளுக்கு ஜனனமரணமும் பரலோகமும் தனதுகர்மத்திலுண்டாகின்றது தனதுகர்மந்தவிர பிராணிகளுக்குச்சுகதுக்கங்களைக்கொடுக்கிறவன் வேருெருவனுமில்லை சர்ப்பம்-சோரம்-அக்கினிவாயு-ஜலம்-பசி-தாகம்-வியாதிஇவைகளால்-பிராணிகள் - மரணம் - அடைவதுபிராப்தகர்மத்தினுல்வந்தனுபவிக்கவருகிறதேயல்லது வேறில்லை பிராணிகளுடையசுகதுக்கங்களுக்கு நிமித்தமாகவே சர்ப்பமுதலானதுகளால் தன்தன்கருமத்தினுல் ஏவப்படுகிறதே யல்லது அதுகள் அஸ்வதந்திரமாய்ச்செய்ய அதிகாரமில்லைஇம்சைரூபமான இந்தச்சர்ப்பயாகமானது நிறுத்தப்பட்டு

ம்சீவன்களால் ஜென்மாந்தரத்தில் செய்யப்பட்டகாமமே அனுபவிக்கப்படுகின்றது ஆகையால் நிரபராதிகளாயிருக்கிற சப்தங்கள் தகிக்கப்பட்டுப்போகின்றதுகளென்றுஇந்தப்பிரகாரம் பிரகஸ்பதிபகவான்சொல்ல ஜெனமேசய மகாராசன் அதுகளைக்கேட்டு அங்கீகாரம்பண்ணிக்கொண்டுயாகத்தைவிட்டவனாய் அந்தபகவானைப்பூசித்துநின்றான்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வித்துவாம்சர்களுக்கும் இப்படிப்பட்ட மோகம்வருவதுளதனாலென்றால் ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய சிந்திக்கக்கூடாதான மகாமாயையாகாநிற்கின்றது ஜயிக்கக்கூடாததான யாதொருமாயையால் ஸ்ரீமகாவிஷ்ணுவினுடையஅம்சங்களான பிராணிகள்மோகித்து காமக்குரோதாதிகளால் ஒருவர்க்கொருவர் அடிக்கிறவனும் அடிக்கப்படுகிறவனுமா யிருக்கின்றார்கள், ஆனால் இப்படிப்பட்ட பகவான் மாயையாலுண்டான மோகம் பகவானுடைய உபாசனையினாலேயே நிவர்த்திக்கப்படவேண்டும் எப்படியானால் புருஷன் மிகவுங்கபடனாயிருக்கின்றானென்கிற இந்தப்புத்தியிலே மாயையானதுஅடிக்கடிஅனேகவிதமாகச்சொல்லப்படுகின்றது. அந்த மாயையானது ஆத்துமவிசாரம் பண்ணப்படுகிறவிடத்தில்கியானிகளால்பயமில்லாததாககாண்பிக்கப்படவில்லைலயத்தையுடையதாய்மோகாதிகளைப்பண்ணிக்கொண்டிருக்கிறதென்று சொல்லப்படுகிறது அப்படிப்பட்ட மாயையை ஆசிரயமாகவுடையதாயும் நானாவிதமாகவுமிருக்கிற விவாதமானது யாதொரு பகவானிடத்தில்லை சங்கல்ப்ப விகல்பங்களையுடைய மனதும் யாதொரு பரமாத்துமாவிடத்தில்லை யாதொருபகவானிடத்தில் இந்திரியகணங்களோடுகூடகருமமுமில்லை கருமகர்த்தாயிவர்களுக்கு சாத்தியமானபலமும் யாதொருபகவானிடத்திலில்லை கருமம்-கர்த்தா - பலம் - இதுகளுடன்கூடிக் கொண்டிரிக்கிற அகங்காரமும் யாதொருபகவானிடத்திலில்லை பாதிக்கிறவன்பாதிக்கப்படுகிறவன் என்கிற பேதமானதுயாதொருபரமாத்துமாவினிடத்திலில்லை இப்படியே பரமாத்துமாவினுடைய ஸ்வரூபமாகாநிற்கிறது கியானியானவன் அகங்காராதிகளை விட்டுவிட்டு இப்படிப்பட்ட பரமார்த்தஸ்வரூபத்திலேயே ஆனந்தம்பட்டுக்கொண்டிருக்கக்கடவன் பரமாத்துமாவைக்காட்டிலும் வேறானபிரபஞ்சத்தைவிட்டுவிடுகைக்கு இச்சையுடையவர்களாயும் அந்தப்பரமாத்துமாவையன்றி வேறுவஸ்துவினிடம் பிரீதியில்லாதவர்களாயுமிருக்கின்ற கியானிகள் தேகாதியில் நானென்கிற புத்தியைவிட்டுவிட்டு பிரபஞ்சத்தை நிஷேதித்து மனதினால்யாதொரு பரமாத்துமசொரூபத்தைத்தியானித்துஅநுபவிக்கின்றார்கள் அந்தப்பரமாத்துமசொரூபததைத்தய ஸ்ரீவிஷ்ணுவினுடைய பரமபதமென்று சொல்லுகிறார்கள் யாதொரு நான்எனதென்னும்அபிமானமில்லாத அவர்களே இந்தப்பரமபதத்தை யடைவர்கள்அப்படிப்பட்ட அந்தப்பரமபதத்தை அடைவதற்குஉபாயம் நிந்தைகளைச்சகித்தும்ஒருவனை அவமதிக்காமல்இந்தத்தேகத்தை யுத்தேசித்து துவேஷம்பண்ணாமலிருப்பதேயென்றறியக்கடவீர்கள்.

யாதொரு வியாசருடைய பாதாரவிந்த தியானத்தினாலே இந்தப்புராணசங்கிதையை அத்தியயனம்பண்ணினேன் அவர்பொருட்டு சாஷ்டாங்கமாகப்பிரணாமம்பண்ணுகிறேனென்ற சூதபுராணிகரைப்பார்த்துசவுனகமகாரிஷியானவர் பிரசினம்பண்ணுகிறார் முனிவர்களே வியாசபகவானுடைய சிஷியர்களாயும் வேதாசாரியர்களாயும் மகானுபாவர்களாயுமிருக்கிற பயிலர்முதலான ரிஷிகளால்வேதங்கள் எத்தனைவிதமாக விபாகம் பண்ணப்பட்டதென்று அதிவினயத்துடன்கேட்க மிகவன்புடனே அவரைப்பார்த்துசூதர்சொல்லுகின்றார்.

கேளும் சவுனகமகாரிஷியே பரமாத்துமாவினிடத்திலஸ்திரமான அந்தக்காணத்தையுடைய சதுர்முகப்பிர்மாவினது இருதயத்திலிராநின்ற ஆகாசத்தினிடமாயிருந்துநாதமுண்டாச்சுது அந்தநாதம் காதுகளுடைய ரந்திரத்தை மூடினால்நம்மிலுமறியப்படுகின்றது யோகீஸ்வரர்கள் யாதொருநாதப்பிர்மத்தினுடையஉபாசனையினாலே அத்தியாத்துமமென்றும்அதிபூதமென்றும் அதிதெய்வமென்றும் இப்படிமூன்றுவிதமான அந்தக்கரணத்தினுடையமலத்தை உதறிப்போட்டு மோக்ஷத்தையடைகின்றார்கள் அந்தநாதத்திலிருந்து மூன்றுமாத்திரைகளையுடையதாயும் சூட்சுமரூபமாயும் இருதயத்தில் சுயம்பிரகாசமாயுமிருக்கிற ஓங்காரமானது உண்டாச்சுதுயாதொருஓங்காரமானது பகவானாயும் பரப்பிர்ம்மமாயுமிருக்கிறபரமாத்துமாவுக்கே வாசகமாகாநிற்கின்றதுகாதானது மூடப்பட்டிருந்தாலும் இந்திரியவர்க்கங்க ளில்லாமலேகியான சொரூபரான யாதொரு பரமாத்துமாவானவர் இந்த ஓங்காரத்தைக் கேட்டுக்கொண்டிருக்கின்றார், அதுவே அந்தப்பரமாத்துமாவினுடைய வாசகமாகாநிற்கின்றது, யாதொரு ஓங்காரத்தினாலே சம்ஸ்த வாக்குகளும் பிரகாசிப்பிக்கப்படுகின்றது, யாதொரு ஓங்காரத்தினுடைய பிரகாசமானது இருதய ஆகாசத்திலிராநின்ற பரமாத்துமாவில் நின்றும் உண்டாகின்றது, யாதொரு ஓங்காரமானது தனக்குக் காரணமாயும் பரப்பிர்ம்மமாயுமிருக்கிற பரமாத்துமாவுக்கு சாட்சாத்வாசகமாகாநிற்கின்றது அந்த ஓங்காரமானது சமஸ்தமந்திரங்களுக்கும் சூக்ஷும ரூபமாயும் சமஸ்த வேதங்களு

க்குங் காரணமாயும் சர்வதாயேகரூபமாயு மாகாநிற்கிறது

சவுனகமகாரிஷியே, அந்தஓங்காரத்துக்கு அகாரமுதலான மூன்றுவர்ணங்களாயது அந்தவர்ணங்களாலே சத்துவரஜ தமோகுணங்களும் ருக்காதிவேதங்களும் பூலோகபுவர்லோகசுவர்லோகங்களும சாக்கிரம் சொற்பனம்-சுழுத்தியாகிய அவஸ்தைகளுந்தரிக்கப்படுகின்றதுகள்பிரம்மஸ்வரூபியான ஸ்ரீபகவானானவர் அந்தவர்ணங்களில்நின்றும்-ய-ர-ல-வ-பீ-ஷ-ஸ-ஹ-அ-ஆ- இ - ஈ-உ-ஊ-ரி-ரீ-லி-லீ-எ-ஐ-ஒ-ஔ - ககாரமுதலான இருபத்தைந்துவர்ணங்கள் ஹ்ஸ்வம்-தீர்க்கம்-அனுஸ்வாரம் -விசர்க்கம்-முதலானஇதகரூபமான அக்ஷரங்களுடைய சமுகத்தைச்சிருஷ்டித்தார் அந்தப்பிரம்மஸ்வரூபியான ஸ்ரீபகவானானவர் நாலுமுகங்களாலேயும் சப்தவியாகிருதிபிரணவம் இதுகளுடன் கூடிக்கொண்டிருக்கிற நான்குவேதங்களையும் எக்கியங்களைச் சொல்லவேணுமென்கிற இச்சையால்சிருஷ்டித்துபின்பு வேதச்சாரணத்தில் மிகவுஞ்சமர்த்தர்களாயிருக்கிற தம்முடைய புத்திரர்களுக்குஅந்தவேதங்களை அத்தியயனம்பண்ணிவைத்தார் தருமோபதேசகர்த்தாக்களான அந்தமரீசிமுதலானபேர்கள் தங்கள் புத்திரர்கள் பொருட்டு அந்தவேதங்களை யுபதேசித்தார்கள் அந்தவேதங்கள் மகாநியமத்தையுடைய அவரவர்கள்சிஷியர்களான மகாரிஷிகளாலே நான்குயுகங்களிலேயும் பரம்பரையாய்வந்ததுகள் அந்தவேதங்கள் துவாபரயுகாந்தத்தில்வியாசர் முதலானவர்களால் விபாகம்பண்ணப்பட்டது காலத்தினால் அல்பாயுசுக்களாயும் யீனபாலர்களாயும் அற்புத்திகளையுடையவர்களாயுமிருக்கிற ஜனங்களைப்பார்த்து பிரம்மரிஷிகளுடைய இருதயத்திலிராநின்ற அச்சுதரால்ஏவப்பட்டவர்களாய் வேதங்களைவெகுபிரகாசவிபாகம்பண்ணினார்கள்.

சவுனகமகாரிஷியே இந்தவைவசுத மனுவந்தரத்தில் சகலலோகநாயகரான ஸ்ரீபகவானானவர் பிரமன்உருத்திரன்முதலான தேவர்களாலேதர்மத்தை இரட்சிக்கிறதின்பொருட்டு பிரார்த்திக்கப்பட்டவராய் தம்முடையசத்துவாம்சத்தினால் பராசமகாரிஷியி னிடத்தில்நின்றும் சத்தியவதியினிடத்தில் அவதரித்தவர் நின்றும் ஒருவேதத்தைநான்குவிதமாக விபாகம்பண்ணினார் உருக்குவேதம் எசுர்வேதம்-சாமவேதம் - அதர்வணவேதம் - இதுகளுடையராசிகளை சமானமந்திரங்களைப்பிரித்தெடுத்துநான்குசங்கதிகளாகப்பண்ணி மகாபுத்திமானான வியாசரானவர் அந்தவேதங்களையுபதேசிக்க நான்குசிஷியர்களை யழைத்து அவர்களில்பயில்மகாரிஷிக்குருக்குவேதத்தையும்வைசம்பாயன மகாரிஷிக்கு எசுர்வேதத்தையும்சயமுனிமகாரிஷிக்கு சாமவேதத்தையும் சுமுந்துமகாரிஷிக்குஅதர்வணவேதத்தையுமாகவுபதேசித்தார்.

அந்தப்பயிலவமகாரிஷியானவர்தம்மாலேஅத்தியயனம்பண்ணப்பட்டருக்குவேதத்தைஇரண்டாகப்பிரித்துஇந்திரப்பிரமிதியென்பவருக்கும் பாஷ்களருக்கும் உபதேசித்தார் அந்தப்பாஷ்களரானவர் அதைநாலாகப்பிரித்துபோத்தியருக்கும், ஆக்கியவல்லியருக்கும் பராசருக்கும், அக்கினிமாதாவுக்குமாக உபதேசித்தார். அந்தஇந்திரப்பிரமிதியும் தம்மால் அத்தியயனம் பண்ணப்பட்டவேதத்தைத் தம்முடையபுத்திரரான மாண்டுகேயருக்குஅத்தியயனம் பண்ணிவைத்தார் அந்தமாண்டுகேயருடையசிஷியர்வேதமித்திரரானவர் சவுபரிமுதலானபேர்களுக்கு உபதேசித்தார் அதில்மாண்டு கேயருடையபுத்திரரானசாகல்லியரானவர் தம்மால் அத்தியயனம்பண்ணப்பட்டவேதத்தை ஐந்துபாகம்பண்ணி வாக்கியருக்கும்மவுத்கல்லியருக்கும் சாலியருக்கும் கோகல்லியருக்கும்சிசிரருக்குமாக வுபதேசம்பண்ணினார் அந்தச்சாகல்லியருடைய சிஷியரான சாதுகாரணரானவர் தம்மாலேஅத்தியயனம்பண்ணப்பட்ட வேதத்தைநான்காகப்பண்ணிபலாகர்- பைங்கர் - வைதானர்-விரசர்- இவர்கள்நால்வருக்குமாக உபதேசித்தார் பாஷ்களருடைய புத்திரரானவர்தம்மால் அத்தியயனம்பண்ணப்பட்ட வேதங்களில்நின்றும் வாலகில்லியமென்று பெயரையுடைய மூன்றுசங்கிதைகளைப்பண்ணிபாலாயினி-கார்கி-காசரா இவர்கள்மூன்றுபேருக்கும் உபதேசித்தார் உருக்குவேதத்தினுடைய இந்தச்சங்கிதைகளானதுகள் இப்படிப்பட்டபிர்ம்மரிஷிகளாலேதரிக்கப்பட்டதுகள்.

எசுர்வேதத்தினுடைய விபாகம்எப்படியென்றால்வைசம்பாயனமகாரிஷிக்கு நான்குசிஷயர்களுண்டானார்கள் யாதொருகாரணத்தினால் அந்தச்சிஷ்யர்கள்தங்களுடையகுருவுக்குபிர்ம்மகத்தி பாபம்போகிற நிமித்தம் பிர்ம்மத்தியாவிரதத்தை ஆசரியித்ததினாலே அவர்கள் சரகாளென்று பெயரையுடையவர்களானார்கள் வைசம்பாயனருடையசிஷ்ய சிரேஷ்டராகிய யாக்கிய வற்கியனானவர்தம்முடைய ஆசாரியனைப்பார்த்து பலயீனரான இந்தச்சிஷ்யாள் இந்தப்பிர்மத்தியா விரதத்தை அனுஷ்டிக்கிறதினாலே எவ்வளவு ஆகிறது அந்தவிரதத்தைநான் ஒருவனே ஆசரிக்கிறேனென்றார் அதைக்கேட்ட வைசம்பாயனர்அதிககோபங்கொண்டு சிஷ்சனைநோக்கி மூர்க்கனே பிராமணர்களை அவமதிக்குஞ் சிஷ்யனாகிய உன்னாலேஎனக்காகவேண்டிய தொன்றுமில்லை என்னிடமிருந்துஅத்தியயனஞ்செய்யப்பட்ட வேதத்தைவிட்டு அதி சீக்கிரம்அப்புறம்போய் விடக்கடவாயென்று சொல்லஅதைக்கேட்ட அந்தயாக்கிய வற்கியரானவர் அத்தியயனஞ்செய்யப்பட்டவேதத்தைக் கக்கிவிட்டுப்போய்விட்டனர்.

கேளும் சௌனகம்காரிஷியே வைசம்பாயனரிஷியினுடையசிஷ்யாள் அந்தஎசுர்வேதத்தைப்பார்த்துத் தித்திரிபட்சிகளாகரூபங்கொண்டு அந்தவேதங்களைக்கிரகித்தார்கள்அதனுல்மிகவும் மனேக்கியங்களான எசுர்சாகைகள் தைத்திரியமென்று பேராச்சுது யாக்கியவாக்கிய ரிஷியானவர்தம்முடைய குருவினுலே அத்தியயனம் பண்ணப்படாமலிருக்கிற வேதங்களைத் தாமடையவேண்டி யிச்சித்துவேதங்களுக்கு ஈஸ்வரனுன சூரியனைஸ்தோத்திரம்பண்ணினுர்நான்குவகைப்பிறப்பாயிருக்கிற பிராணிகளுடையயிருதயத்தில் ஆத்துமஸ்வரூபராயும்வெளியில் காலஸ்வரூபராயுமிருந்து சம்வச்சரந்தோறும் சலத்தைக்கிரகித்தும்வருஷித்தும் இந்தலோகயாத்திரையையனுபவிக்கிறீர், தேவோத்தமரே, சவிதாவேதிரிகாலத்திலேயும்வேதமார்க்கத்தின்படி ஸ்தோத்திரம் பண்ணுகின்ற பக்தாளுடைய பாபங்களையும், துக்கங்களையும், அக்கியானங்களையும், நாசம்பண்ணுகின்றஉம்முடையமண்டலத்தைத் தியானம்பண்ணுகிறேன் தபனரே, இந்தலோகத்தில் ஸ்தாவரசங்கம சமூகங்களா யிருக்கிற சீவர்களுடைய சடமானமனதை இந்திரியங்கள் பிராணன் முதலான கூட்டத்தைத் தேவரீர் அந்தரியாமி ஆத்துமாவாக விருந்துக்கொண்டு பிரேரணை பண்ணுகிறீர். பரமான கிருபையையுடையவரே நீர் ஒருவராகத்தானே அந்தகாரமான மலைப்பாம்பினுல் விழுங்கிப் பிரேதம்போலப் பிரக்கினையயில்லாம லிருக்கின்ற இந்தலோகத்தைப்பார்த்துக் கிருபையினுலே கடாட்சித்து நாள்தோறு மெழுப்பி திரிகாலத்திலும் சிரேயஸ்கரமாயும் ஸ்வதர்மமாயுமிருக்கிற உம்முடைய வந்தனரூபமான சிரேயசிலேயே பிரவர்த்திப் பியாகிற்கிறீர் நீர் மகாராஜனைப்போல சாராள்-சோராள் - முதலானவர்களுக்குப் பயமுண்டாக்கிக்கொண்டு திக்குப்பாலர்களாலே சமஸ்ததிக்குகளிலேயும் தாமரைமொக்குபோலொத்த அஞ்சலிகளாலே கொடுக்கப்பட்ட அர்க்கியத்தை யுடையவராய் சஞ்சரிக்கின்றீர். நான்இதராளால் அறியப்படாம லிருக்கிற எசுர்வேதங்களை யடையவேணுமென்று இச்சையுடையவனுய் உபாசிக்கிறேனென்றிப்படி ஸ்தோத்திரஞ்செய்ய சூரியனுனவர் அந்தஎசுர்வேதங்களை அத்தியயனம்பண்ணும்படி அநுக்கிரகித்தார் அந்தயாக்கியவர்க்கியர் அபிரிமிதமான அந்தஎசுர் வேதங்களைப் பதினைந்துசாகைகளாகப் பண்ணினுர் அஸ்வரூபியான சூரியனுலே பிடரிமயிர்களினின்றும் விடப்பட்டபடியினுல்-வாசு-ச-னேயமென்று பெயரையுடையதாய் அந்தவேதங்களைக்காணுவாள் மாத்தியந்தினுள் முதலானவர்கள் கிரகித்தார்கள்.

சாமவேதத்தினுடைய விபாகம் எப்படியென்றுல் சாமவேத அத்தியாபகரானசயமுனி மகாரிஷியானவர் தம்புத்திரர் சுமந்துஎன்பவருக்கும் அவர்புத்திரராகியும் தமக்குப் பௌத்திரருமாகிய சுதனுவாவென்பவருக்குமாகஅந்தச்சாமவேதத்தை இரண்டாக விபாகஞ்செய்துஅத்தியயனம் பண்ணிவைத்தார் அந்தச்சயமுனியினுடையசிஷியராயும் மகாபுத்திமானுயுமிருக்கிற சுகவர்மாவானவர் அந்தச்சாமவேதங்களை அத்தியயனம்பண்ணுகின்று அதைஆயிரம் சங்கிதைகளாகப் பண்ணினுர். அவருடையசிஷியாள் இரணியநாபன்பவுஷ்பஞ்சி இவர்களிருவரும் அந்தஆயிரம்சாகைகளையும் கிரகித்தார்கள். வேதவித்தான ஆவந்தியனென்னும் சிஷியனும்அந்தவேதங்களைக் கிரகித்தான். பவுஷ்பஞ்சி ஆவந்தியென்றஇவர்களுக்கு அந்நூறுபேர்சிஷியர்கள் அவர்கள் அந்நூறுபேரும் -அந்தச்சாகைகளை அத்தியயனஞ் செய்தருளினுர்கள், அவர்களைஉதச்சியாளென்று சொல்லுவர்கள் இரணியநாபனுக்கும் அந்நூறுபேர் சிஷியாள் அவர்களும் மற்ற அந்நூறு சாகைகளை அத்தியயனஞ் செய்தருளினுர்கள், அவர்களைப்பிராச்சியாளென்று சொல்லுவர்கள் இலவுகாக்ஷி லாங்கலன்-குல்லியன் - குசிதன்குஷி இவர்கள் ஐந்துபேர்களும் பவுஷ் பஞ்சனுடைய சிஷியர்கள் சிவர்கள் ஒவ்வொருத்தரும் நூறுநூறுசாகைகளாக அத்தியயனஞ் செய்தருளினுர்கள் இரணியநாபனுடையசிஷியனுன கிருதனுனவன் இருபத்துநான்கு சங்கிதைகளை அத்தியயனஞ்செய்து தனதுசிஷியர்களுக்கு உபதேசித்தான், மற்றசாகைகளையும் ஆத்துமக்கியானியானஆவந்தியனுனவன் தனது சிஷியர்களுக்கு அத்யயனஞ்செய்துவைத்தான்.

---

## ௭-வது, அத்தியாயம்.

கலிவிருத்தம்.

அந்தமாகிப விங்கவத்யாயத்திற்
றெருந்தமானவுதர்வணத்தைச்சொலிப்
பொங்கிடும்புராணலட்சணத்தினைச்
சொந்தமாகவே சொல்லினதாம்ரோ.

இந்த அத்தியாயத்தில் அதர்வணவேத விபாகங்களைச்சொல்லி,மேலேபுராணலக்ஷணங்களைச்சொல்லுகிருர்.

பின்னும் சூதபுராணிகர்சொல்லுகின்றுர்.

கேளும் சௌனகமகாரிஷியே, வேதவித்தான அந்தச்சுமந்துமகாமுனியானவர் தாம்அத்தியயனஞ் செய்யாநின்ற அதர்வணவேதத்தைக்கபந்தனென்ற சிஷியனுக்குஅத்தியயனஞ்செய்துவைத்தார், அவரதை இரண்டாக விபாகஞ்செய்து பத்தியனுக்கும் வேததெரிசனுக்கு

மாக உபதேசஞ்செய்பவைத்தார் அந்தவேததெரிசனரானவர் தம்துசங்கிதையை நான்காகவிபாகஞ்செய்துசாலக்காயினி-பிருமவலி-மோதா தாப்பிலாயனர் - இந்தநான்குசிஷ்யர்களுக்கும் ஒவ்வொன்றை அசத்தியயனஞ்செய்துவைத்தார் பத்தியரானவர் தமதுசங்கிதையை மூன்ருகவிபாகஞ்செய்து குமுதன்-சுனகன் சாபாலி இவர்கள் மூன்றுபேருக்கும் அத்தியயனஞ்செய்துவைத்தார் அந்தச்சுனகரானவர் தமதுசங்கிதையை இரண்டாகவிபாகஞ்செய்து பெப்புருவுக்கும் - சயிந்தவரயினருக்குமாகச் சொல்லிவைத்தார்சாவரன்முதலானபேர்கள் சயிந்தவாயனன்முதலிய பேர்களுடைய சிஷ்யாள் நக்ஷத்திரகல்பன்-சாந்திரவர்க்கன்- ஆங்கீரசன்முதலானபேர்கள் அதர்வணவேதபிரவர்த்தர்களாயிருந்தார்கள்.

கேளும்சௌனகமகாரிஷியே புராணகர்த்தாக்களைச் சொல்லுகிறேன் வியாசரானவர் புராணங்களை ஆறுசங்கிதையாகச்செய்து எனதுபிதா அருணனுக்குஉபதேசித்தார் அவரிடத்திலிருந்து வியாசருடையசிஷ்யாள் - திரையாரணி-காசியபர் - சாவர்ணி - அகர்த்தவிருணர்- சிசுபாயனர்-ஆரிதர் - இவர்களறுவரும் அத்தியயனஞ்செய்தருளினர்கள், இவர்களறுவருக்கும் நான்சிஷ்யனுயிருந்துகொண்டு அந்தஆறுசங்கிதைகளையும் அத்தியயனஞ்செய்தேன், காசியபர்சாவர்ணி-அகர்த்தவிருணர்-நான் (சூதர்) ஆகியநால்வரும் வியாசபுத்திரரான சுகப்பிர்ம்மரிஷியினிடத்தில்நின்றுநான்குமூலசங்கிதைகளை அத்தியயனம்பண்ணினேமென்றுசொல்லி சூதபுராணிகர் சொல்லுகிறர், கேளும்சவுனகரிஷியேபிரம்மரிஷிகளால்சொல்லப்படாநின்ற புராணலக்ஷணத்தை வேதசாஸ்திரங்களையனுசரித்துச்சொல்லுகிறேன் ஏகமனதாயிருந்து கேழ்க்கக்கடவீர்.

இந்தப்பிரபஞ்சத்தில் சர்க்கம்-விசர்க்கம்-ஸ்திதி-ரக்ஷணம்-மனுவந்தரங்கள்-வங்கிசம்-வங்கிசானுசரிதம்- சமுஸ்தை-ஹேது-ஆசிரயம் - இந்தப்பத்துலக்ஷணங்களோடிருக்குமென்று புராணலக்ஷணங்களையறிந்தவர்கள் சொல்லுவார்கள் சிலவிடத்தில்புராணங்கள் ஐந்துலக்ஷணங்களையுடையதென்றுசொல்லுவார்கள், எதில்பத்துலக்ஷணங்களுஞ்சொல்லப்படுகிறதோ அதுமகாபுராணமென்றும் எதில்ஐந்துலக்ஷணங்கள் சொல்லப்படுகிறதோ அதுஅற்பபுராணமென்றுஞ்சொல்லப்படும்

சர்க்கமென்பது பிரகிருதியினுடைய சத்துவாதிகுணங்களினது கிருபையினலே மகதத்துவம் அதினலே திரிகுணமான அகங்காரம் அதில்நின்று சூக்ஷமங்களான பூதமாத்திரைகள்-இந்திரியங்கள்விஷயங்கள்- இந்திரியாபிமானி தேவதைகள்சிருஷ்டிகளாகும், விசர்க்கமென்பது பரமபுருஷராலே அனுக்கிரகிக்கப் பட்டிருக்கிற இந்தச்சத்துவமுதலானதுகளுடைய கருமவாசனையைப் பிரதானமாகவும் சராசரப்பிராணி ரூபமாயுமிருக்கிறசிருஷ்டியானது யாதொன்றுண்டோ அவைகளும் வித்தில்நின்றும் வித்துவுண்டாகிறதுபோல பிரவாகரூபமான அந்தத்தேகசிருஷ்டிகாரியமுமாகும் ஸ்திதி - என்பது-சரங்களாயிருக்கிற பிராணிகளுக்கு அசரங்களாயும் சரங்களாயுமிருக்கிற பிராணிகள்சீவனர்த்தமாயிருக்கின்றதாகும் அதிலும்மனுஷியர்களுக்கு சுவபாவமாகிய காமத்தினலும் வேதசாஸ்திரவிதியினலும் யாதொருவிருத்திவிதிக்கப்பட்டிருக்கிறதுமாகும்ரக்ஷணமென்பது-யுகங்கள்தோறும் தேவர்கள்-ரிஷிகள்-மனுஷ்யாள்- பட்சிகள்மிருகாதிகளாகிய இவைகளில்அச்சுதருடைய அவதாரங்களால் வேதவிரோதிகளான அசுராள் சங்கரிக்கப்படுகின்றர்கள் அந்தஅவதாரங்களுடைய லீலையேயாகும்மனுவந்தரமென்பதுமனு-தேவாள்-மனுபுத்திராள்- இந்திராதிதிக்குப்பாலகாள்- ஸ்ரீபகவானுடைய அங்கிசாவதாரங்கள் இந்தஆறுவர்க்கங்களும் எப்போதங்களதிகாரங்களுடனேயிருக்கின்றதுகளோ அப்போதாகும் வங்கிசமென்பது பிர்ம்மாவினிடத்தில் உண்டாகாநின்றும்- பிரசித்தாளாயுமிருக்கிற ராஜாக்களுடையகாலத்திரையத்திலே உண்டாகாநின்ற சந்ததியாகும் வங்கிசானுசரிதமாயென்பது அந்தராஜாக்களுடைய சரிதமும்அவர்கள்வங்கிசத்திற்பிறந்தவர்களுடையசரித்திரமுமாகும்.

சமுஸ்தையென்பது நைமிதிகம்-பிராகிருதம்- நித்தியம்ஆத்தியந்தீகமென்று நான்குவிதமாக இந்தப்பிரபஞ்சத்து சுவபாவமாகவுண்டாகாநின்றலயமாகும்இதுகவீஸ்வராளால்சொல்லப்படும் ஹேதுவென்பது இந்தச்சகத்தினுடையசிருஷ்டி முதலானதுகளுக்கு நிமித்தமாயும் அக்கியானமூலமான கருமங்களுக்குக் கர்த்தாவாயுமிருக்கிற சீவன்ஹேதுவென்றும் சிலர்காமவாசனையையுடையசீவனை ஹேதுவென்றும்சிலர் பிரகிருதியைஹேதுவென்றும்சொல்லுவார்கள், ஆசிரயம்என்பதுசாக்கிரம்-சொற்பனம் சுழுத்திஅவஸ்தைகளில் விஸ்வதைசசபிரார்த்தியனென்கிற மாயாமயங்களான சீவாத்துமாவினுடைய விருத்திகளில் சாக்ஷியாக யாதொருபரமாத்துமாவுக்ுச்சம்மந்தமும் தியானமுதலானதில் அந்தச்சீவவிருத்திகளுடைய சம்மந்தசூனியமுமிருக்கிறதோ அந்தப்பரமாத்துமாவாகும் எப்படியானல் கடமுதலானகாரியங்களில் மண்முதலானதுகூடியிருந்துமிராமலும் எப்படியிருக்கிறதோ அப்படிபோல யாதொரு பிர்மசைதன்னியமானது கெர்ப்பாதானமுதல் மரணபரியந்தங்களான அவஸ்தைகளிலே சாட்சியாகக்கூடியிருந்து மிராமலுமிக்கிறதெதுவோ அந்தப்பிர்மமேயாகும் சித்தமானதுபிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி-ஸ்திதி-சங்காரமாகிபதுகளை

மாயாமயமாகவெண்ணி அந்தப்பிரபஞ்சத்திலே ஆசக்தியில்லாமல் சாக்ரம்-சொற்பனம்- சுழுத்திகளுக்கு ஆசிரயமான அகங்காரத்தைவிட்டுவிட்டு ஸ்வயமாகவேசெய்யும் யோகாப்பியாசத்தினுலே எப்போதுஒழிகின்றதோ அப்போது ஆத்துமஸ்வரூபத்தையறிவன், அப்போது அக்கியானமூலமான சங்சாரமானதுஒழியும் பூதபவுஷ்ய வர்த்தமானங்களையறிந்தமுனிவர்கள்பிராமம் - பாத்துமம்-வைஷ்ணவம்-சைவம் லயிங்கம்காருடம்- நாரதீயம்பாகவதம்-ஆக்கினேயம்-ஸ்காந்தம்-பவுஷ்யம் பிரமகைவர்த்தம்-மார்க்கண்டேயம்-வாமனம்-வராகம்-மச்சியம்-கூர்மம்-பிரமாண்டம்-என்றிப்படிபதினெண்புராணங்களென்றுசொல்லுவார்கள் இப்படி சூத புராணிகர் சொல்லி-கேளும்பிரம்மரிஷியே வியாசருடைய சிஷயர்கள்முதலாயுள்ளவர்களால் அத்தியயனஞ்செய்யப்படாநின்றும் கேழ்க்கின்றவர்களுக்கு பிரம்மதேசசை விருத்தியபண்ணுநின்றுமிருக்கிற வேதசாகைகளுடைய விபாகமானது நம்மாலேசொல்லப்பட்டதென்றுமுடித்தார்.

---

## அ-வது, அத்தியாயம்.

---

மட்டுவிருத்தம்.

மன்னிடுமார்க்கண்டேயருபாக்யான
துன்னிடவேயிதிற்சொல்லினனரோ.

இந்தஅத்தியாயத்தில் மார்க்கண்டேய வுபாக்கியானம் சொல்லப்படுகின்றது.

சவுனகமகாரிஷிவாக்கியம்.

கேளும்சூதரேசாதுவேவேதவித்தானமார்க்கண்டேயரிஷியை சிரஞ்சீவியாகச்சொல்லுகிறார்கள், அவர் இந்த சகத்தானது பிரளயகாலத்தினுலேமூழ்கிய அந்தப் பிரளயத்திலும் என்னமாய்மீந்திருந்தார் இப்பவும் பிராணிகளுக்கு பிராகிருதமுதலான பிரளயங்களில் ஒருபிரளயமாகிலும் உண்டாகவில்லையே இந்தக்கல்ப்பசிருஷ்டியில் நம்மிடகுலத்திலே உண்டாகாநின்ற மார்க்கண்டேயமகாரிஷியானவர் ஒருவராய்ச்சமுத்திரத்தி ஆலிலையின்பேல்ரில் சயனித்துக்கொண்டிராநின்ற அற்புதமாயும்சிசுவாயும் உழன்றுகொண்டிராநின்ற மகாபுருஷனைக்கண்டாரன்றே எங்களுக்குஇந்தஅனுத்தத்திலே மகத்தான சமுசயமுண்டா யிருக்கின்றது நீர்சகலபுராணங்களையுமறிந்தவராகையால் சமுசயத்தை நிவர்த்திபண்ணவேணுமென்றுசொன்னர்.

சூதபுராணிகர் அந்த சவுனகமகாரிஷியைப்பார்த்துச் சொல்லுகிறர், கேளும்மகாரிஷியே, இப்போதுநீ கேட்டப்பிரசினமானது சகலபாபங்களையும்நாசம்பண்ணுநின்றஸ்ரீமந்நாராயணருடைய கதையேயாகையால் இதைக் கேட்கக்கடவீர்.

அந்தமார்க்கண்டேய மகாரிஷியானவர் தம்மிடபிதாவிடத்திலிநின்றும் கிரமமாகச் சாதகருமமுதல்உபநயனபரியந்தமுள்ள சகலசமுஸ்காரங்களையுமடைந்தவர் தருமமாகச்சகலவேதங்களையும் அத்தியயனஞ்செய்து தபசுவேதாத்தியயனம் நஷ்டிகபிரமசரியத்தையுடையவர் சாந்தமானவர் - கமண்டலம் - தண்டம்-எக்கியோபவீதம்-மௌஞ்சிகிருஷ்ணசனம்-செபமாலை - குசதெர்ப்பை இதுகளைத்தரித்தவர்-அக்கினி-சூரியன்-குரு - பிராமணன்தனதுஆத்துமா இதுகளில் ஸ்ரீஹரியைச் சந்தியாகாலங்களிலேபூசிக்கின்றவர், சாயங்காலத்திலும் பிராதகாலத்திலும் பிக்ஷைசெய்துவந்து அதைக்குருவுக்குக்காண்பித்து அவருடையஅனுக்கியைப்பெற்றுக்கொண்டு மௌனமாய் அதைப்பொசிக்கின்றவர் குருவினனுக்கியைஇல்லாவிட்டால் உபவாசமாயிருப்பவர் இப்படிஅனேகமாயிரம்சம்வச்சரம்நிஷ்டைபுரிந்தவர் அவர்ஸ்ரீஹரியைஆராதிப்பவர், பிர்ம்மா- பிருகுமகாரிஷி-ருத்திரன் - தெக்ஷன் பிர்ம்மபுத்திரர்களான சனகாதியோகிகள் - மனுஷ்யாள்-தேவாள்-பிதுர்கள் - மற்றுமுள்ளபிராணிகளும் மிகுந்த ஆச்சரியமடையும்படியாய் எவராலும்ஜெயிக்கக்கூடாத மிருத்தியுவையும் ஜெயித்தவர்தபசு வேதாத்தியயனம்இயமநியமாதிகளால் ராகத்துவேஷாதி நாசமடைந்துள்ள தமதுசுத்தமனதினுல் ஹரியைத்தியானஞ்செய்யப்பட்டவர்.

இந்தப்பிரகாரம் மகாயோகாப்பியாசத்தினுல் சித்தத்தைஸ்ரீஹரியினிடத்தில் சமர்ப்பித்து தபசுசெய்யாநின்றமார்க்கண்டேயமகாரிஷிக்கு ஆறுமனுவந்தரங்களுடையகாலமானது அதிக்கிரமித்தது இந்தஏழாவது மனுவந்தத்தில்-தேவேந்திரன்-அந்தரிஷியினுடைய தபசைபார்த்துத் தபசினுல்எனது அதிகாரத்தையடைய எத்தனம்பண்ணுகிருனெனப்பயந்து அவருடையதபசுக்கு விக்கினஞ்செய்ய-ஆரம்பித்து-கந்தருவாள் - அப்சரஸ்திரீகள் மன்மதன்-வசந்தரிது மலையமாருதம் - லோபம் - மதம்-இவர்களைவிக்கினஞ்செய்யும்படி ஆக்கியாபித்தான் அவர்கள் இமயபர்வதத்தினுடைய உத்திரபாரிசத்தில் புஷ்பபத்திராநதிதீரத்திலே விசித்திரமென்னும் சிலாதலத்திலே, உத்தமவிருக்ஷங்கள் - புண்ணியசீலாளான முனியீஸ்வரர்களால் சூழப்பட்டும், நிருமலமான சரசுக்களையுடையதாயும் அழகியவண்டுகள் கானஞ்செய்யவும்கோகிலங்கள்சப்திக்கவும், மயில்கள் நிர்த்தனஞ்செய்யவும்அம்ச முதலிய பக்ஷிகள் வசிக்கவுமானதாயும், வாயுவா

னவன் அனேகவிதமாயுள்ள புஷ்பங்களின்பரிமளத்தையடைந்தும்பனித்திவலைகளைக்கிரகித்தும் வீசிக்கொண்டிருக்கவும், கீதவாத்தியங்களையுடையகாந்தர்வாள் அனுவர்த்திக்கவும்அப்சரஸ்திரீகளுக்குப் பிரபுவாயுமிருக்கிறமன்மதன் தனுர்ப் பாணங்களையுடையவனுய் காணப்படவுமான ஆசிரமத்தையடைந்து தேவேந்திரனுடையகிங்கராளான அந்தமன்மதன் முதலானபேர்கள் அக்கினிஹோத்திரஞ்செய்துகொண்டும் நேத்திரங்களை மூடிக்கொண்டும்பகவானைத்தியானஞ் செய்துகொண்டும் ஒருவரும்அணுகக்கூடாமல் அக்கினியைப்போலச்சொலித்துக்கொண்டிருக்கிற அந்தமார்க்கண்டேயமகாரிஷியைக் கண்டார்கள்பின்பு அப்சரஸ்திரீகள் அந்தரிஷிக்கெதிரில்கீர்த்தனம்பண்ணினார்கள், காந்தருவாள் - மிருதங்கம் வீணை - பணவமுதலியதுகளால் மனோகரமானவாத்தியஞ்செய்தார்கள்மன்மதனும்-சோஷனம் -மோகனம் - சந்தீபனம்-தாபனம் - மாதனம்-என்கிற ஐந்துமுகங்களையுடைய அஸ்திரத்தைதனுசில் சந்தானம்பண்ணினான் அப்படியேவசந்தருதுவும்-மதமும்-லோபமும்-மற்றுமுள்ளவர்களும் அவர்மனதைச்சலிக்கப் பண்ணினார்கள்அப்போது எதிராகநின்று பந்தடித்துக்கொண்டு ஸ்தனபாரந்தாங்காமல் ஒடிந்துபோகும்படியாய்க்காணப்படும் மகாசூட்சமமான இடையையுடையவளாகவும் அவிழ்ந்த கூந்தலினிடமாயிருந்துநழுகும்புஷ்பமாலையை யுடையவளாகவும்சுழல்கின்றதிருஷ்டியையுமுடைய புஞ்சிகஸ்தலியென்கிற அப்பரஸ்திரீயினுடைய இடையில்ஒட்டியாணபந்தமின்றிநழுகும்வஸ்திரத்தைமலையமாருதமபகரிக்கும்படிப்பட்டசமயத்தில் மன்மதனானவன் அந்தமுனிவரைச்செயித்ததாகவெண்ணிப்பாணத்தையெய்தான்பரமேஸ்வரனிடத்தில் பக்தியில்லாதவனுடைய பிரயத்தனமெப்படிவியர்த்தமாமோ அப்படிபோலஅந்தமன்மதன்முதலானவர்களுடைய செய்கைகளியாவற்றும் வியர்த்தமாகிச்சலனமில்லாதிருக்கிற அந்தரிஷியினுடையதேஜசினாலேதகிக்கப்பட்டு நித்திரைசெய்யுஞ் சர்ப்பத்தைஎழுப்பிவிட்டுபயப்படும்பாலாள்போல மிகவும்பயந்துதேவேந்திரனிடம்போய் தனதுகணங்களுடன் முகம் வாடினவனாய் அந்தமுனியின் பிரபாவத்தை விண்ணப்பஞ்செய்யஅதைக்கேட்ட இந்திரனானவன் மகத்தானஆச்சரியமடைந்தான்.

இப்படிப்பட்ட மகாமகிமையைவாய்ந்த அந்தமார்க்கண்டேயமகாமுனிக்கு அனுக்கிரகஞ்செய்ய ஸ்ரீஹரியானவர் நரநாராயணரூபமாக அங்கேஆவிர்ப்பவித்தார்.என்றால் சுக்கிலகிருஷ்ணவர்ணங்களையும் புதிய கமலம்போலொத்தநேத்திரங்களும் நான்குபுஜங்களும்உடையவர்களாயும்கிருஷ்ணாசனம் மாவுரிகளை வஸ்திரமாகத்தரித்தும்கைகளில் பௌத்திரங்களும் எக்கியோபவீதம்-கமண்டலம் - வேணுதண்டம் பத்மமணியமான ஜெபமாலை சூக்ஷமதத்துமயமான உருமாலை தர்ப்பை முஷ்டி இதுகளைத்தரித்துக்கொண்டு சாக்ஷாத்தபசியாகமின்னல்போன்றதேஜசையுடையவர்களாய் மகானுபாவாளாயிருக்கிறதைப்பார்த்து மகத்தான ஆதரவுடனே அதிசீக்கிரமெழுந்து சாஷ்டாங்கமாகப்பிராணாமம் பண்ணிஅவர்களுடையசந்தரிசனத்தினால் ஆனந்தமடைந்துதேகம் புளகாங்கிதங் கொண்டவராய் அஞ்சலிபந்தஞ் செய்துகொண்டுவணங்கி பக்தி அதிசயத்தினால் ஆலிங்கனம்பண்ணிக்கொள்ளுகிறவர்போல் பெருமலையுடைய அக்ஷரங்களுடனேகூட அவர்களைப்பார்த்து(நமோநமகா) வென்றுசொல்லிக்கொண்டு ஆசனஞ்சமர்ப்பித்து திருவடிகளைவிளக்கி அர்க்கியதீபதூபமுதலான உபசாரங்களைப் பண்ணி நன்றாகப்பூசித்து அவர்களுடையதிருவடிகளில் மறுபடியுஞ் சாஷ்டாங்கமாகப் பிராணாமம்பண்ணி ஸ்துதிக்கிறார்

சர்வலோகநாயகா யாதொருகாரணத்தினால் பிராணிகளுடைய பிராணன் தேவரீரால் ஏவப்பட்டதாய்பிரவர்த்தியாகிறகின்றது அப்படிப்பட்ட, பிராணன் பின்னே டேவாக்குமனது முதலான இந்திரியங்களும் பிரவர்த்திக்கின்றது, பிராகிருதர்களான பிராணிகளுக்கு மாத்திரமன்று பிரம்மாஉருத்திரன்முதலான எனதுபிராணன் முதலானதுகளும்தேவரீரால் ஏவப்பட்டதுகளாய் ஒன்றிலும்ஒருத்தருக்கும்சுவாதந்திரியமிலாது பிரவர்த்தியாகிற்கின்றதுகள் ஆனாலும்வாக்குமுதலான இந்திரியங்களால்உம்மைஉபாசிக்கின்றவர்களுக்குந் தேவரீர்ஆத்துமபந்துவாகின்றீர் பகவானேதேவரீருடைய இந்தமூர்த்திகள் மூன்றுலோகத்தையும் இரட்சிக்கிறதின்பொருட்டும்துக்கநிவர்த்தியின்பொருட்டும் மோக்ஷத்தின்பொருட்டுமுண்டாயிருக்கின்றது இந்தப்பிரபஞ்சத்தைரட்சிக்கிறதின்பொருட்டு மச்சகூர்மாதியான அவதாரங்களைத் தரித்தீர் (அதுபோல) இந்தரூபங்களைத்தரித்ததிலந்திப்பூச்சிநூல்களைசிருஷ்டிக்குந் திரும்பவும் கிரகிக்கிறதுபோல இந்தப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்துத்திரும்பவும்உபசங்காரம்பண்ணிக்கொண்டிருக்கின்றீர்சகலலோகபாலாயும் ஸ்தாவரசங்கமங்களுக்கு நியந்தாவாயு மிருக்கிற தேவரீருடைய திருவடிகளைச் சரணமாக அடைகின்றேன் வேதங்களை யறிந்துணர்ந்த முனிவர்கள் யாதொருதிருவடிகளில் அசஞ்சலமானபக்தியையுடைய பிராணிகளைக்கர்மம் விஷயம் காலம் இவைகளாலுண்டாகாநின்றபாபம் துக்கமுதலானதுகள் அடைவதில்லையென்றே அந்தத்திருவடிகளையே அடிக்கடிஸ்தோத்திரஞ்செய்தும் பிராணாமம்பண்ணியும், அர்ச்சித்தும் தியானஞ்செய்துகொண்டுமிருக்கின்றார்கள்.

ஈசனேசமஸ்தலோகங்களிலும் பயத்தையுடையபிராணிகளுக்குமோக்ஷஸ்வரூபரான தேவரீருடைய திரு

வழிகளை யாசரிக்கிறதன்றி வேருென்றைப்பார்க்கிறதேயில்லை ஆகையால் ஆத்துமஸ்வருபஞியானத்துக்குத் திரைபோலமன்றவாயும் துக்கமாயும் அநித்தியமாயுமிருக்கிற இந்தக்கிரகதேகாதிகளைவிட்டு சத்தியக்கியானனந்தஸ்வருபரானதேவரீருடைய திருவடிகளைச்சரணமாகஅடைகின்றேன் ஆத்துமபந்துவான தேவரீருடையமாயையாலுண்டான சிருஷ்டிஸ்திதி சங்காரங்களுக்குக் காரணங்களாயும்சாத்துவீகராஜச தாமசங்களான திரிமூர்த்திருபமானலீலைகள் தேவரீரால் தரிக்கப்பட்டிருக்கின்றதுகள் அப்படியாஞலும்சாத்துவீகமூர்த்தியானது மோட்சத்தின்பொருட்டு மனுஷியர்களுக்கு உபாசிக்கத்தக்கதாகாநிற்கின்றது மற்றராஜசதாமச மூர்த்திகளானபிரம்மருத்திராள்உபாசிக்கதகக்கவர்களன்று அவர்களை உபாசிக்கிறவர்கள் இஷ்டசித்தியில்லாமல் வியசனத்தில்மூழ்கின்ருர்கள் பகவானே இந்தலோகத்தில் விவேகிகள்தேவரீருடையசாத்துவீகமான ஸ்ரீமந்நாராயணமூர்த்தியையுமஉபாசிக்கின்ருர்கள் யாதொருகாரணத்தினுல் பாகவதர்கள்சத்துவகுணத்தை பரமாத்துமாவான தேவரீருடையஸ்வருபமாகஅறிகிருர்கள் ராஜசதாமசகுணங்களைத்தேவரீருடையஸ்வருபமாக அறியவில்லை யாதொருசத்துவகுணத்தினுல் ஸ்ரீவைகுண்ட லோகமும் அந்தபத்மலோகமாகச்சொல்லப்பட்டாலும்நிர்பயமும்போகமுமுண்டாய்நித்திய ஆத்துமசவுக்கியமுமுண்டாகின்றது பகவானும் பரிபூரணஸ்வருபராயும் விஸ்வருபராயும் விஸ்வகர்த்தாவாயும் பரதேவதையாயும் நாராயணமூர்த்தியாயும் பரிசுத்தராயும் வாக்குநியமமுடையவராயும் சகலவேதமார்க்கப் பிரவர்த்தகராயும் பரமபுருஷருமாயிருக்கிற தேவரீர்பொருட்டும் பிரணமம்பண்ணுகிறேன் துக்கஹேதுக்களான இந்திரியங்களால் பிரமிக்காநின்றபுத்தியையுடைய புருஷனுனவன் தன்னிட இந்திரியங்களிலும் இருதயத்திலும் விஷயங்களிலும்வியாப்தனாகவிருந்தாலும் யாதொருதேவரீரை அறியாமலிருக்கிருன் தேவரீருடையமாயையினுல் சூழப்பட்டபுத்தியையுடைய அக்கியானுன அந்தப்புருஷனும்சகலலோககர்த்தாவானதேவரீரால்பிரவர்த்திக்கப்பட்ட வேதங்களையுணர்ந்து அப்படிப்பட்டதேவரீரையும் சாக்ஷாத்தாக அறிகின்றுன்தேவரீருடைய தத்துவஸ்வருபத்தை விளங்கச்செய்யும்தமதுகியானமானது வேதத்திலுண்டாகாநிற்கின்றது பிரமமாமுதலான யோகீஸ்வரர்களும் சாங்கியயோகமுதலானபிரயத்தனத்தை யுடையவர்களாய் யாதொருதேவரீரையறியமாட்டாமலே மோகிக்கின்ருர்கள் தேகேந்திரியங்களால்மறைக்கப்பட்டகியானசொருபத்தையுடையவராயும்பரமபுருஷராயுமிருக்கிற தேவரீரைப் பிரணமம்பண்ணுகிறேன்.

௯-வது, அத்தியாயம்.

கலிவிருத்தம்.

மகஞ்செய்மார்க்கண்ட மாரிஷியாருக்கும்
சுகபகவானுற் சொல்லிக்காண்பித்திடும்
நகுமாயவை பவமாம்நடத்தையைச்
சுகமுடனேசொல் லப்படுகின்றதே.

மார்க்கண்டேயமகாரிஷிக்கு ஸ்ரீபகவானுலே காண்பிக்கப்பட்டமாயாவைபவமானது சொல்லப்படுகின்றது.

சூதர்வாக்கியம்.

கேளும் சவுனகமகாரிஷியே மார்க்கண்டேயமகாரிஷியானவர் நராராயணஸ்வருபரான ஸ்ரீபகவானை ஸ்தோத்திரஞ்செய்யஅந்தப்பகவான் சந்தோஷமடைந்து சொல்லுகிருர்.

ஸ்ரீபகவானுடையவாக்கியம்.

ஓ பிரம்மரிஷியே எனதிடத்தில் அசஞ்சலமான பக்தியையுடையவரானபடியாலும் சகலநேம நியமங்களால்சித்தியை யுடையவரானீர் நாம்உமதுநைஷ்டிக பிரமசரியத்தினுலேசந்தோஷத்தையடைந்தோம் உமக்குமங்களமுண்டாகக்கடவது எனதிடத்தில் உமக்கிஷ்டமானவரத்தைக்கேட்டுஅடையக்கடவீரென் றருள்செய்யமார்க்கண்டேயர்ஸ்ரீபகவானைப்பார்த்துச்சொல்லுகிருர்.

மார்க்கண்டேயர்வாக்கியம்.

தேவதேவோத்தமரே, பிரபன்னனுடையதுக்கத்தைப்போக்குகின்றவரே அச்சுதரே தேவரீர்எனக்கு பிரத்தியக்ஷமான இந்தத்தரிசனமேபோதும் இதைப்பார்க்கிலும்யான் கோறத்தக்கினவரம் வேறென்றுமில்லை பிராகிருதாளானஜெனங்கள் யோகாப்பியாசத்தினுல் பரிபக்குவமனதினுலே தேவரீருடைய ஸ்ரீமத்தானபாதாரவிந்ததரிசனமடைந்து பிரம்மாமுதலிய தேவர்களாய்விடுகின்ருர்கள் அப்படிப்பட்டதேவரீர் பிரத்தியக்ஷமானீர் ஆனுலும் ஓகமலபத்திராட்சரே புண்ணியசுலோக சிகாமணியே யாதொருமாயையினுலே பிரம்மாமுதலானவர்களுடன்கூடியிருக்கிற இந்தலோகமானதுசத்தியஸ்வருபரானதேவரீரிடத்தில்பேதத்தைப்பார்க்கிறதோ அப்படிப்பட்டமாயை அடியேன்பார்க்க வேணுமென் றிச்சிக்கிறேனென்ருர் நாராயண மூர்த்தியானவர் நம்முடைய மாயையைஉமதிஷ்டத்தின்படி பார்க்கவேபோகின்றீரென்றுசொல்லி புன்சிரிப்புகொண்டு பதரிகாசிரமத்தை நோக்கிப்போனுர். பின்புமார்க்கண்டேயமகாமுனியானவர் அந்தப்பகவானருளியபடி மாயையை அறியவேணுமென்கிற சிந்தனையுடையவராய் தமதாசிரமத்திலிருந்து ஸ்ரீஹரியைத் தியானித்தும்மனோமயங்களான பூசாதிரவியங்களால்பூசித்துக் கொண்டிருந்தார் ஒருக்கால்பிரீதிஅதிசயத்தினுலே வியாபிக்கப்பட்டவராய் ஆராதனத்தையுமறந்திருந்தார்.

குஷ்டவாக்கியம.

அப்படியிருக்கும்போது ஒருக்கால்சாயங்காலம் மகத்தான வாயுவானதுண்டாய் மகாபயங்கரமானமேகங்கள்கற்ஜித்தவுடன் மின்னல்களுடனே தேரின்அச்சுக்குச்சமானமான தாரைகளைநான்குதிக்கிலும் வருஷித்தது சமுத்திரங்களும் அதிவேகமான அலைகளோடுபூமியை வியாபித்து மகரமச்சியங்கள்நீர்சுழிகள் சப்தங்களகாணப்பட்டது தன்னுடன்கூடிக்கொண்டிருக்கிற நான்குவிதமானபிராணிகளும் மற்றுமுள்ள பிராணிகளாத்தியந்தமும் ஜலத்தில்பூமியுடன்முழுகிப்போகின்றதையும்பார்த்து மார்க்கண்டேயமகாமுனியானவர் மிகுந்தவியசனமுடையவராய் அதிகபயத்தையடைந்தார். இப்படிபார்த்துக்கொண்டிருக்கின்றபோதே சமுத்திரமானது வருஷியாநின்ற மேகங்களால்நான்குபக்கமும் பூரிக்கப்பட்டதாய் சமஸ்ததிவீபங்களுடனேபூமி - ஆகாசம்-சொர்க்கம் - நக்ஷத்திரவகண்டங்கள் - மனுஷியாதிபிராணிகளுடனேகூடின மூன்றுலோகமும் ஜலத்தினால்வியாபிக்கப்பட்டதாயிற்று.

அந்தமகார்நவஜலத்தினால் மார்க்கண்டேய மகாமுனியானவர் ஒருவராய்சடைகளைவிரித்துக்கொண்டு சடன்போலவும்-குருடன்போலவும்-பிரமித்துக்கொண்டிருந்தார். பசிதாகமுதலியபாதையாலும் மகரமுதலியமச்சியங்களால் பிடிக்கப்பட்டும் அலைகளினுடைய காற்றினாலேவருந்தியும் அபாரமான அந்தகாரத்தில் நான்குபக்கத்திலும்சுழன்றுகொண்டுமிருக்கின்றவராய் பூமி-ஆகாசம் திக்குகள் ஒன்றுமறியாதவராயும்ஒருவிடத்தில்அலைகளால் மோதப்பட்டும் ஒருவிடத்தில் சோகத்தையும் மோகத்தையும். பயத்தையும்துக்கத்தையும் மூர்ச்சையையுமடைந்தவராய் இப்படிஅநேகமாயிரம் சம்வச்சரமிருந்தார். அந்தமார்க்கண்டேயமகாமுனியானவர்ஒருக்கால் பூமியினுடைய மகோன்னதப்பிரதேசத்தில் நூதனதளிர்கள் நிறைந்துவிளங்காநின்ற கோமளமான வடவிருக்ஷத்தைக்கண்டு அதில் ஈசான்னியத்திக்கிலேயிராநின்றகிளையில் ஒருஇலைமேல் சயனித்துக்கொண்டிராநின்றும் தமதுதேஜசினால் மகாந்தகாரத்தைக் களிகரியாநின்றுமிருக்கிற ஒருசிசுவைப்பார்த்தார் அந்தச்சிசுவானது-நீலவர்ணமாயும்-மகாரம்மியமானதாமரைப்புஷ்பம்போலொத்த முகத்தையும் சங்கம்போல மூன்றுரேகையையுடையகழுத்தையும், விசாலமுள்ளமார்பையும்,சோபனமானநாசிகையையும், சுந்தரமுள்ள புருவங்களையும், சுவாசவாயுவினாலசையாநின்ற முன்னெற்றி மயிர்களையும் சங்கம்போலச்சுழலையுடையகாதுகளில் மாதளம்புஷ்பத்தையும் பவளம்போன்றஅதரத்தினையும் கமலம்போலச்செவந்தகடைக்கண்களையும், மனோக்கியமான புன்சிரிப்பையும் சுவாசத்தால் சலியாமல்வயிற்றிலிராநின்றமடிப்பும் பள்ளமுமாகவிருக்கின்றநாபியையும், அரசிலைபோலிருக்கின்ற திருவயிற்றையும், அழகியவிரல்களையுடையகைகளால் பாதாரவிந்தத்தையெடுத்து வாயினிடமாகவைத்துக்கொண்டு அங்குஷ்டத்தைப் பானம்பண்ணிக்கொண்டும் இப்படிமனோகரமாய்விளங்கும் அந்தச்சிசுவை அந்தமார்க்கண்டேயமகாரிஷியானவர்பார்த்துமிகுந்தஆச்சரியமடைந்தார். கேளும்பிரம்மரிஷியே அந்தரிஷிசிசுவைக் கண்டமாத்திரத்தில் தமக்குண்டாயிருந்தபயம். துக்கம்பிரமையாவற்றும் நீங்கினவராய் புளகாங்கிததேகராய் ஆநந்தபாஷ்பத்துடன் - சிசுவுக்கருகிற்சென்றார் அந்தச்சிசுவினதுசுவாசத்தினால் அந்தமார்க்கண்டேயரிஷியானவர் மசகம்போலச்சரீரத்திற் பிரவேசித்தார்.

அந்தச்சரீரத்துள்ளும், பிரளயத்துக்குப் பூர்வம்போலேயிராநின்ற ஆகாசம் பூமி-அந்தரிக்ஷங்கள்- நக்ஷத்திரகணங்கள்-பர்வதங்கள்-சமுத்திரங்கள்-தீவுகள் பாரதவருஷமுதலான வருஷங்கள்-திக்குகள் - சுரர்கள்அசுரர்கள்வனங்கள்-தேசங்கள்நதிகள்-பட்டணங்கள் - கிராமங்கள்இடைச்சேரிகள் பிராமணர் முதலானவர்ணங்களாகிய இவைகளையும்-அந்தப்பிராமணருடைய விருத்தியையும், வைதீகஆசாரத்தையுடையவர்களான பெரியோர்களையும்வௌளிகோளையும் யுகங்கள்-கல்பங்கள்- இதுகளுடையதானகாலத்தையும் விவகாரத்துக்குக் காரணமானமற்றுமியாதொன்றுண்டோ அதுகளையும் பரமார்த்தம்போல்பிரகாசியாநின்ற சமஸ்தபிரபஞ்சத்தையும்பார்த்தார்பின்னும் இமோர்ப்பர்வதத்தையும் புஷ்பபத்திரியென்னப்பட்ட நதியையும் தம்முடையஆசிரமத்தையும் அதிலிராநின்றமுனிகளையும்பார்த்தார்.

இப்படிப்பார்த்த அந்தமுனியானவர் திரும்பவும் அந்தச்சிசுவினுடைய சுவாசத்தினால் வெளியில்தள்ளப்பட்டு சமுத்திரசலத்திலேவந்துவிழுந்து பூமியினுடைய மகோன்னதப் பிரதேசத்திலே உண்ணியிருக்கிற வடவிருக்ஷத்தையும் அதினுடையபத்திரத்திலே சயனித்துக்கொண்டிருக்குஞ் சிசுவையும் பார்த்து, அந்தச்சிசுவினுடைய பிரீதியினால் அமிர்தம்போன்ற புன்சிரிப்புடனுண்டான கடைக்கண்பார்வையினால் கடாக்ஷிக்கப்பட்டவராய் அந்தமார்க்கண்டேயமகாரிஷியானவர் அந்தச்சிசுவை நன்றாகப்பார்த்து அதிகவாநந்தங்கொண்டவராய் நேத்திரமார்க்கங்களாலே இருதயத்தில் தரிக்கப்படாநின்ற அந்தஸ்ரீஹரியை ஆலிங்கனம்பண்ணுகைக்குக்கிட்டவந்தார். அப்போதே (ஸ்ரீபகவானிடத்தில்பக்தியில்லாதவனுடைய கிரியைநிஷ்பலமாய் எப்படியாமோ அப்படிபோல) சாக்ஷாத்யோகீஸ்வரராயும் சர்வாந்தரியாமியாயுமிருக்கின்ற அந்தச்சிசுவான ஸ்ரீபகவானானவர் அவருக்கு அந்தர்த்தியானமாய்விட்டார். அப்போதே அந்தவ

டவிருக்ஷமும் சமுத்திரஜலமும், பிரளயமும் அந்தக்ஷணத்திலேயே அந்தரத்தியானமாய்விட்டது, அந்தமார்க்கண்டேய மகாரிஷியும் பூர்வம்போலவே தம்முடைய ஆசிரமத்திலேயேயிருந்தார்.

---

## ௰-வது, அத்தியாயம்.

---

மட்டுவிருத்தம்.

ஆத்திமாலையணிந்தமார்க்கண்டராற்
றோத்திரத்தைச்சொலப்படுகின்றதே.

மார்க்கண்டேய மகாரிஷியால்பண்ணப்பட்ட ஸ்தோத்திரஞ்சொல்லப்படுகின்றது.

சூதர்வாக்கியம்.

கேளும் சவுனகமகாரிஷியே அந்தமார்க்கண்டேயமகாரிஷியானவர் ஸ்ரீஹரியேபிரபன்னருக்கு அபயப்பிரதமான தேவரீருடைய பாதகமலங்களைச் சரணமாகவடைகிறேன். எதார்த்தக்கியானம்போலப் பிரகாசியாநின்ற யாதொருதேவரீருடைய மாயையினால் விற்பன்னர்களும் மோகியாநிற்கிறார்களென்று இப்படிஸ்தோத்திரஞ்செய்யாநின்றும் தமது மாயாதெரிசனத்தினால் மிகுந்தசிரமத்தை அடைந்தவராயுமிருக்கிற அந்த ரிஷியை, ஸ்ரீமந்நாராயணரானவர் சிவஸ்ரூபமாக பார்வதிசமேதராய் ரிஷபாரூடராய் சிவகணங்கள்சூழும்படி ஆகாசத்தில் சஞ்சரியாநின்று அந்தமுனியைப்பார்த்தார்கள் அப்போது பார்வதியானவள் சுவாமியைநோக்கிஇங்கேபெருங்காற்று அடித்துநின்றுபோனபின்பு நிச்சலங்களான சலம் மச்சியமுதலியதுண்டாயிருக்கும் சமுத்திரம்போலதேகம் இந்திரியம்மனது இதுகளையுடையஇந்தமார்க்கண்டேய மகாரிஷியைப்பாரும் தேவரீர் தபசிகளுக்கு இஷ்டசித்தியைக் கொடுப்பவரன்றோ இவர்தபசுக்குப்பலத்தைப் பிரத்தியக்ஷமாகக் கொடுக்கக்கடவீரென்றுசொல்ல சுவாமிசொல்லுகிறார் இந்தப்பிர்ம்மரிஷியானவர் இகலோகசிரேயசுக்களையும் மோட்சத்தையும் எவ்வளவுமிச்சித்தவரன்று பகவானையும் நித்திபராயுமிருக்கிற பரமபுருஷரிடத்தில் பரமமானபக்தியை யடைநதிருக்கின்றார். ஆனாலும்சாதுவான இந்தமுனியுடனே நாம்சம்வாதம்பண்ணுவோமென்றுசொல்லி பகவானையும் பக்தபரிபாலகராயும் சமஸ்தவித்தைகளுக்கும் ஈஸ்வரராயும், சமஸ்தபிராணிகளுக்கும் பிரபுவாயுமிருக்கிற உருத்திரரானவர் அவர்சமீபமாய்வந்தார் அப்போது அந்தக்காரணவிருத்திகளை விட்டு பகவத்தியானபரராயிருக்கிற அந்தமுனியானவர் ஜகத்ஸ்வரூபாளான-பார்வதிபரமேஸ்வராள் வந்ததையும் தன்னையும்பிரபஞ்சத்தையும், அறியாமலிருந்தார், அதையுணர்ந்தஈஸ்வரன் அந்தமுனியினுடைய இருதயாகாசத்திற் பிரவேசித்தார், முனியானவர் தமது இருதயத்தில் மின்னற்கொடிபோல பிங்களவர்னமுடையசடையையும், திரிநேத்திரங்களையும் எட்டுக்கைகளையுமுடையவராயும், உதியாநின்றசூரியனைப்போலதேசசையும், வியாக்கிரசருமத்தைவஸ்திரமாகவுமுடையவராய்-சூலம்-தனுசு-பாணம் கத்தி-கேடயம் செபமாலை-டமரகம்-கபாலம்-பரசு இவைகளைத்தரித்தவர்களாயும் காணப்படாநின்ற சிவன்அகாரணமாகப்பிரத்தியட்சமானதைப்பார்த்து ஆச்சரியமடைந்தவராய் தியானத்தில்நின்று நீங்கி இதெதினால் உண்டாயதென்று கண்களைத்திறக்கவே பிரமதகணங்களுடனே பார்வதிசமேதராயவருகின்றஉருத்திரனைப்பார்த்து சாஷ்டாங்கமாகப் பிரணாமம்பண்ணி அவருக்குகுசலப் பிரசினஞ்செய்து ஆசனஞ்சமர்ப்பித்து அர்க்கியபாத்தியம் கந்தம்புஷ்பம்-தீபங்களால் பூசித்து சுவாமியாதொரு உம்மாலேஇந்தச்சகத்தானது சுகத்துடனேயிருக்கின்றது ஆத்துமானுபவத்தினாலே பூரணகர்மரான உமக்குநான் என்னசெய்யப் போகின்றேன் நிர்க்குணராயும் சாந்தராயும சத்துவசகமோகுணஆசிரிபராயுமிருக்கின்ற உமக்கு அனேகமபிரணாமஞ் செய்கிறேனென்றார்.

பக்தரக்ஷகராயும் பகவானுபுமிருக்கிற அந்தமகாதேவரானவர், பரிதுஷ்டராய், பிரசன்னமனதையுடையவராய் புன்சிரிப்புடன் அந்தரிஷியைப்பார்த்து பிர்ம்மா-விஷ்ணு - உருத்திரன் - ஆகியநாங்கள் - பக்தாளுக்கு அபீஷ்டமான வரங்களைக்கொடுக்கத்தக்கவர்கள், எங்கள் தரிசனமோ அமோகமாகாநிற்கும், யாதொரு எங்களிடத்தில்நின்றே மனுஷ்யன் மோக்ஷத்தை யடைகின்றான், சாதுக்களாயும் - சதாசார சம்பன்னராயும் காமக்குரோதாதி சூனியர்களாயும் நிஷ்காமிகளாயும், சகலபிராணிகளிடத்திலேயும், வாற்சல்லியத்தை யுடையவர்களாயும் நிர்வயிராளாய் எங்களிடத்திலே ஏகாந்தபக்தியையுடையவர்களாயுமிருக்கிற யாதொரு பிராமணனை சமஸ்தலோகபாலர்களும், நானும்-பிர்ம்மாவும்சர்வநியந்தாவான ஸ்ரீஅரியும் ஸ்தோத்திரம்பண்ணாநின்றும் பூசியாநின்றும் உபாசியாநின்றுமிருக்கிறார்கள் அப்படிப்பட்ட பிராமணர் எங்களை அணுமாத்திரம்பேதம்பார்க்கிறார்களில்லை ஆகையால்அப்படிப்பட்ட பிராமணனாகியஉங்களைநாங்கள் உபாசிக்கின்றோம் அல்லாமல்புண்ணியதீர்த்தங்களும் மிருத்துசிலாரூபங்களான தேவர்களும் அப்படிப் பாவனஞ்செய்யமாட்டார்கள் தீர்த்தங்களும்தேவர்களும் வெகுகாலம்உபாசிக்கப்பட்டவர்களாய் பின்புபாவனமாகச்செய்கிறார்கள் நீங்களோவென்றால் தரிசனமாத்திரத்தினால் பாவனமாகப்பண்ணுவீர்கள் யாதொருபிராமணர் வேதஸ்வரூபமான எங்களுடைய ஸ்வரூபத்தை ஏகாக்கிரமானசிந்தத்தினாலும் தபசினாலும் அத்தியயனத்திலும் வாக்குமுதலான இந்திரியநிக்கிரகங்களினாலும் தரிக்கிறார்களோ அப்படிப்பட்ட பிராமணனைக் குறித்துப்பிரணாமஞ்செய்கிறோம்மகாபாபிகளாயிருக்கிற

சண்டாளர்களாயும் யாதொருபிராமணனுடைய நாமசிரவணத்தினாலும், தெரிசனத்தினாலும் பரிசுத்தாளாய்விடுகிறார்களென்றார்.

இப்படிதருமமாயும் அமிர்தமாயுமிருக்கிற அந்தச்சிவனுடைய வசனங்களைக்கேட்டு மார்க்கண்டேய மகாமுனியானவர் வெகுகாலமாய் ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய மாயையினால் பிரமிக்கப்பட்டும் பரிசிரமப்பட்டுமிருக்கிறவராகையால் சிவனுடைய அமிர்தவசனத்தினால் கிலேசசாந்தியையுடையவராய் அந்தச்சிவனைப்பார்த்துச்சொல்லுகிறார். பகவானே யாதொருகாரணத்தினால் ஜகதீஸ்வரானும் தங்களுடைய அனுக்கிரகத்துக்குப்பாத்திராளாயிருக்க அந்தப்பிராணிகளைக்குறித்து தாங்கள்தானே பிரணமம்பண்ணுவதும் ஸ்தோத்திரஞ்செய்கிறதுமானால் ஈஸ்வரனுடைய இந்தலீலைபிராணிகளுக்குமிகவுஞ் சிந்திக்கக்கூடாததாய் நிற்கின்றது; பிராணிகளுக்குத் தருமத்தைப்பிரியச்செய்யும்பொருட்டுத் தாங்களே ஆசிரயித்தும் தருமஞ்செய்பவர்களை ஸ்தோத்திரஞ்செய்கின்றீர்கள். உலகசிஷார்த்தமாகச் செய்யப்படாநின்ற இந்தப்பிரணமமுதலானதுகளாலே உம்முடையபிரபாவமானது தேவரீருடைய மாயையினால் மோகிக்கப்பட்டிருக்கிற ஜனங்களால் தூஷிக்கப்படுகிறதில்லை. மாயாவினுடைய கபடம்போல உம்முடைய இந்தப்பிரணமமுதலானதுகளாகா நிற்கிறது, சொற்பனங்கண்டுகொண்டிருக்கிற புருஷன்சொற்பனத்தில்நானாவித சிருஷ்டிகளைச் செய்துகொண்டு ரமித்துக்கொண் டிருக்கிறதுபோல யாதொருபகவானானவர் இந்தப்பிரபஞ்சத்தைச்சிருஷ்டித்து அதில்தாமும் அனுப்பிரவேசித்து கருமங்களைச்செய்யு மிந்திரியங்களினால் தாம்கர்த்தர்போல விளங்கிக்கொண்டுமிருக்கிற அப்படிப்பட்டபகவானுக்குப்பிரணமஞ்செய்கிறேன். நிற்குணராயும் சத்துவாதிகுணநியந்தாவாயும் ஏகராயும் ஆநந்தஸ்வரூபராயும் பிரம்மஸ்வரூபராயும் சகலலோக கர்த்தராயுமிருக்கிற பகவானுக்குப் பிரணமஞ்செய்கிறேன், புருஷனானவன் தேவரீருடைய தரிசனத்தினால் பூர்ணகாமனுயும் சர்வானந்தங்களையு மடைந்தவனாகின்றான், அப்படிப்பட்ட தேவரீருடைய சந்தெரிசனத்தைப் பார்க்கிலும் அன்னியமானஎந்தவரத்தை நான்கேழ்க்கப்போகின்றேன் ஆனாலும்ஒருவரமாத்திரங் கேழ்க்கின்றேன் அதாவது அச்சுதரிடத்திலும் அவர்பக்தர்களிடத்திலும் உமதினத்திலும் அசஞ்சலமான பக்தியைக்கொடுக்கப் பிரார்த்திக்கிறேனென்ற ரிஷியைப்பார்த்து பார்வதியாருடனே சுவாமிஅத்தியந்தப்பிரீதிகொண்டவராய்அவருக்குச் சொல்லுகிறார் ஓய்ரிஷியே ஸ்ரீஅரியினிடத்தில் அசஞ்சலமானபக்தியையுடையவரானீர், ஆகையினால் உம்முடைய அபீஷ்டமானது சிந்திக்கக்கடவது உமக்குக்கல்பாந்தபரியந்தம் புண்ணியமானஎசசு ர சோரமரணமில்லாமலிருக்குகையும் பூதபவுஷிய வர்த்தனமானக் கியானமும்பரமாத்துமானுப்பவமும் பிர்ம்மதேஜசும் புராணசாரியாயிருக்குகையும் உண்டாகக்கடவதென்று திரிநேத்திரங்களையுடைய ஈஸ்வரன் வரங்களைக் கொடுத்துவிட்டு அவருடையதபசு முதலானதுகளையும் அவரனுபவித்த விஷ்ணுமாயாவைபவத்தையும் பார்வதியாருக்குச் சொல்லிப்போயினர். அந்தமார்க்கண்டேய முனிவரும் மகாயோகமகிமையை யுடையவராய் ஸ்ரீஅரியினிடத்தில் ஏகாந்தபக்தியையுடையவராய் இப்போதும் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறார்.

கேளும் சௌனகமகாமுனியே மகாகியானியான மார்க்கண்டேயருடைய சரித்திரமும் அவராலனுபவிக்கப்பட்ட விஷ்ணுமாயாவைபவமும் நம்மால்உமக்குச் சொல்லப்பட்டது. மனுஷியர்களுக்கு சிருஷ்டிபிரளய ரூபமான சங்காரமானது பரமாத்துமாவினுடைய மாயையென்றுஅறியாமலிருக்கிறசிலர் பகவானுடைய இச்சையினால் அந்தரிஷிக்குமாத்திரமே ஆகஸ்மீகமாக உண்டாகாநின்றும் அவராலனுபவிக்கப்பட்டு நானாவித கல்பரூபமாயிருக்கிற இந்தமாயாவைபவத்தை வெகுகாலமாகவும்இதேபிரகாரம் யுகங்கள்தோறும் திரும்பித்திரும்பியுண்டாகிற தாகவும் சொல்லுகிறார்கள். கல்விமான்களோவென்றால் மாயாசிசுரூபியான பகவானுடைய சுவாசநிசுவாசங்களாலே ஏழுதரம் அந்தரிஷியானவர் பகவானுடைய உதரத்திற்பிரவேசித்து வெளிப்பட்டுவந்ததை ஏழுகல்பமாகச்சொல்லுகிறார்கள், ஆகையினால் பிருகுவம்சத்திற்பிறந்திராநின்ற மார்க்கண்டேய மகாமுனிக்கு ஏழுகல்பகாலம் ஆயுளாயிற்றென்று பெரியோர்கள் சொல்லுகிறார்களென்று இந்தப்பிரகாரஞ் சூதபுராணிகர்சவுனமகாமுக்குச்சொன்னர்.

---

## ௰௧-வது, அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

அரியநல்விராட் டண்ணல்ரூபமதைத்
தெரியவேயிதிற் சொல்லினதாமரோ.

விராட்புருஷனுடைய ரூபமானது சொல்லப்படுகின்றது.

சவுனக வாக்கியம்.

பாகவதோத்தமரான சூதரே, சமஸ்தபுராணங்களுடையசித்தாந்தத்தில் தத்துவங்களைநன்று யறிந்தவராயிருக்கின்றீர், சர்வக்கியரா - உம்மைக்கேழ்க்கின்றேம் அதாவது உபாசர்களானபேர்கள் சத்தியக்கியாநந்தஸ்வரூபரான ஸ்ரீயப்பதியினுடைய உபாசனையில் எந்தத்தத்துவங்களாலே திருவடிமுதலான அங்கங்களையும்

ன் ஊற்னனென்கிறஎட்சன் ஆயுசுஎன்கிறமுனி காற்கோடகனென்கிறநாகம் பூருவசித்தியென்கிற அப்சரசு இவர்கள் தைமாசத்தைநடப்பிக்கிறார்கள் பூஷாயென்னப்பட்ட சூரியன் தனஞ்செயனென்கிறநாகம் வாதனென்கிறாட்சதன் சுஷேணனென்கிறகெந்தருவன் ஸ்வருசியென்கிறஎட்சன் கிருதசியென்கிற அப்சரசு. கௌதமரிஷி இவர்கள்மாசிமாசத்தைநடப்பிக்கிறார்கள். சதுரியனென்கிறசூரியன் பரத்துவாசரிஷி பற்சன்னியன் சேனசித்துவென்னும் அப்சரசுவிசுவனென்கிறகெந்தருவன் அயிராவதமென்கிறநாகம் சிறுதென்கிறஎட்சன் இவர்கள்பங்குனிமாசத்தை நடப்பிக்கின்றார்கள் பகவானும் ஆதித்தியரூபியாயுமிருக்கிற ஸ்ரீஹரியினுடைய அயிசுவரியாங்கிசங்களான இவர்கள்சாயங்காலங்களில் விமரியாநின்ற மனுயஷிர்களுடைய பாபத்தை நாள்தோறும் போக்கடியாநிற்கிறார்கள்.

இந்தப்பன்னிரண்டு மாதங்களிலேயும் சூரியனனவர்கந்தருவர்கள் முதலான இந்தஆறுபேர்களுடன் நான்குபக்கமுஞ் சஞ்சரித்துக்கொண்டு இந்தஜங்களுக்கு இகலோகபரலோகங்களில் சுபகரமானபுத்தியைப் பண்ணிக்கொண்டிருக்கிறார் முனியீஸ்வராளானபேர்கள் சூரியரூபியான பகவானைப்பிரதிபாதியாநின்ற ருக்குவேதஎசுர்வேத சாமவேதங்களால் அந்தச்சூரியனை ஸ்தோத்திரஞ்செய்துகொண்டிருக்கிறார்கள், கந்தருவாள்அந்தச்சூரியனைக்குறித்து கானஞ்செய்துகொண்டிருக்கிறார்கள் அப்சரஸ்திரீகள் அவருக்கெதிர் நர்த்தனம்பண்ணுகிறார்கள் நாகங்கள் ரதத்தைத் திடமாகக்கட்டிக்கொண்டிருக்கிறது கள் எக்ஷாள் ரதத்தைக்கட்டி சன்னகஞ்செய்துகொண்டிருப்பார்கள் பலசாலிகளாயிருக்கிற ராக்ஷசாள் பின்பக்கத்திலிருந்து ரதத்தைத்தள்ளிக்கொண்டிருக்கிறார்கள் மிகவும் நிர்மலாளான வாலகில்லியாளென்னப்பட்டஅறுபதினாயிரம் பிர்ம்மரிஷிகள் மாதந்தோறும்அவருக்கெதிர்முகமாயிருந்துகொண்டு விபுவான அந்தச்சூரியனை ஸ்தோத்திரம் பண்ணுகின்றுகொண்டிருக்கிறார்கள்.

வாரீர்பிர்ம்மமுனியே ஜனனமரண மில்லாதவராயும், சர்வநியந்தாவாயும் பகவானுயுமிருக்கிற ஸ்ரீஹரியானவர்இந்தப்பிரகாரம் கல்பங்கள்தோறும் தமதுஆத்துமாவை அநேகரூபமாக விபாகஞ்செய்து இந்தலோகத்தைப்பரிபாலனஞ்செய்துக்கொண்டிருக்கிறார்.

௰௨-வது, அத்தியாயம்.

மட்டுவிருத்தம்.

அந்ததுவாதசஸ் கந்தர்த்தினர்த்தமும்
விந்தையாய்ச்சங்கர மாகவிளம்பினர்.

துவாதசஸ்கந்தத்தினுடைய அர்த்தமும் சங்கிரமாகச் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீசூதர்வாக்கியம்.

பகவற்பக்திரூபமான தர்மத்தின்பொருட்டும் சர்வக்கியரான ஸ்ரீகிருஷ்ணர்பொருட்டும் பிராமணாள்பொருட்டும் பிரணாமஞ்செய்துசாசுவதங்களான இந்தப்பாகவதபுராணத்திற் சொல்லப்பட்ட அர்த்தங்களைச் சொல்லுகிறேன்.

வாரீர் சௌனகாதிமகாமுனிகளே சிவாளுக்குப் புருஷசென்மத்தில் சிரவணமுதலானதற்கு யோக்கியமானயாதொருசரித்திரத்தைக்குறித்து உங்களால் நான் பிரசினஞ்செய்யப்பட்டேனோ ஸ்ரீமகாவிஷ்ணுவினுடையஅத்தியற்புதமான இந்தசரித்திரமானது உங்களுக்கு நம்மாற்சொல்லப்பட்டது இந்தப்புராணத்தில் கியானஅயிஸ்வரியாதிஷாட்குண்ணிய பூர்ணராயும் சர்வபாபங்களையும் போக்கடிக்கிறவராயும் சர்வநியந்தாவாயும் சகலசிவராசியாயுமிருக்கிற ஸ்ரீஹரியானவர் சாட்சாத்தாகச் சொல்லப்படுகிறார்.

இந்தப்புராணத்தில் நிற்குணமாயும் பிரபஞ்சத்தினுடைய உற்பத்திலயங்களுக்கு ஆசிரயராயிருக்கிற பரப்பிர்ம்மமும் அந்தப்பரபிர்ம்மத்தினுடைய கியானமும் அந்தக்கியான சாதனமுஞ்சொல்லப்படுகிறது இந்தப்புராணத்தில் பிரசித்தியான பகவத்பக்திபோகமும் அதினாலுண்டாகப்படாநின்ற வைராக்கியமுஞ் சொல்லப்படுகின்றது.

இந்தப்புராணத்தில்பிரதமஸ்கந்தத்தில்பரிட்சித்துமகாராஜனுடைய ஜென்மமுதலானதும் பிற்பாடுநாரதோபாக்கியானமும் பிராமணோத்தமரான சுகப்பிர்ம்மமுனிக்கும்பரிட்சித்துமகாராஜனுக்குஞ் சம்வாதஞ்சொல்லப்படுகின்றது.

இரண்டாவது ஸ்கந்தத்தில் பிரமநாரதமகாமுனிசம்மாதமும் அற்சாதிமார்க்கெகதியும் பகவதவதாரங்களும், பிரகிருதிகாரியமான மகதத்துவமுதலாய் விராட்டுரூபமும்சொல்லப்படுகின்றது.

மூன்றாவது ஸ்கந்தத்தில் விதுரஉத்தவ சம்வாதமும் விதுரமயித்திரேயாளுடைய சம்வாதமும் புராணசங்கிதர் சிருஷ்டியும்சிருஷ்டிக்குப்பூர்வம் மகாபுருஷரானபரமாத்துமாவினுடைய கேவலாவஸ்தானமும் பிரகிருதிகுணங்களுடைய சஞ்சலரூபமான சிருஷ்டியும்மகதத்துவஅகங்காரமுதலான பஞ்சபூதங்களுடைய சிருஷ்டியும்பிற்பாடு பிரமாண்டத்தினுடைய சிருஷ்டியும் ஸ்தூலசூட்சுமசிருஷ்டியான காலத்தினுடைய சுவரூபமும்பிரளயசமுத்திரத்தில்நின்றும் பூமியினுடைய உத்தாரணமும்இரணியாக்ஷனுடையவதமும் சுவாயம்பு மனுவுக்குச் செனகளான அர்த்தநாரிரூபமான புருஷனுடையஉற்பத்தி

